# பன்னிரு திருமுறை வரலாறு

## இரண்டு பாகங்களும்

## (1-12 திருமுறைகள்)

வித்துவான் **க.வெள்ளைவாரணன்**




**சாரதா பதிப்பகம்,** சென்னை-14.
☎ 044 2811 4402 / 044 2844 3791/ 97907 06548

நூல் கிடைக்குமிடம் : AVAILABLE @ :

**கௌரா புத்தக மையம்**
9, செயின்ட் ஜான் சர்ச்சு வணிக
வளாகம், ராக்கின்ஸ் சாலை,
திருச்சி - 620 001.
9952034876 / 9943428994
04312419584.
**GOWRA PUTHAGA MAIYAM**
9, SAINT JOHN CHURCH COMPLEX,
ROCKINS ROAD, TRICHY - 620 001
99520 34876 / 04312419584.
gowraputhagamaiyam@gmail.com

**கௌரா ஏஜென்ஸீஸ்**
4A/186, V.R. பிள்ளை தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை - 05.
9790706548 / 9790706549
044 28443791.
**GOWRA AGENCIES**
4A/186, V.R. PILLAI STREET,
TRIPLICANE, CHENNAI - 05.
9790706548 / 044 28443791.
gowra09@gmail.com

# பன்னிரு திருமுறை வரலாறு
## PANNIRU THIRUMURAI VARALARU

விலை : ரூ. **1000.00** CODE : **447**

எழுதியவர் :
க.வெள்ளைவாரணன்
பொருள் : வரலாறு

பதிப்பாசிரியர் :
எஸ். கௌமாரீஸ்வரி M.A., M.L.I.S.,
பதிப்பு :
முதற் பதிப்பு – 2008
4ஆம் பதிப்பு – 2016
வெளியீடு :
சாரதா பதிப்பகம்
ஜி–4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை, சென்னை – 600 014.
பக்கம் : 1728
ஒளி அச்சு : ஜெய் ஜீனா
அச்சிட்டோர் :
கிளாசிக் பிரிண்டர்ஸ், சென்னை–2.
ISBN :

AUTHOR :
KA.VELLAI VARANAN
SUBJECT : HISTORY

PUBLISHER :
S.GOWMAREESWARI M.A., M.L.I.S.,
EDITION :
FIRST EDITION - 2008
4TH EDITION - 2016
PUBLISHED @ :
SARATHA PATHIPPAGAM
G-4 SHANTHI APARTMENTS,
#3 SRI KRISHNA PURAM STREET,
ROYAPETTAH, CHENNAI - 600 014.
PAGES : 1728
TYPESET BY : JAIJEENA
PRINTED @ :
CLASSIC PRINTERS, CHENNAI - 2.
ISBN :

# உள்ளுறை

# பதிப்புரை

இந்து மதச் சமயங்கள் பலவற்றுள்ளும் சைவம் தமிழகத்திலும் அயலகத்திலும் பெருஞ்சிறப்புற்று விளங்கிக் கொண்டிருக்கிறது.

"தென்னாடுடைய சிவனே! போற்றி! எந்நாட்டவர்க்கும் இறைவா! போற்றி!" என்று போற்றப்பெறும் சிவனே சைவ சமயத்தின் முழு முதற் கடவுளாவார்.

அவரைப் போற்றிப் பரவுகின்ற பாடல்களை வரிசைப்படுத்தித் தொகுத்து வைத்தவையே **பன்னிரு திருமுறைகள்**.

அந்தப் பன்னிரு திருமுறைகளுள் முதல் மூன்று திருமுறைகள் திருஞான சம்பந்தர் அருளியவை; அடுத்து நான்கு, ஐந்து, ஆறு ஆகிய மூன்று திருமுறைகளை அருளிச் செய்தவர் திருநாவுக்கரசர்; அடுத்து ஏழாவது திருமுறையை அருளிச் செய்தவர் சுந்தர மூர்த்தியாராவார்.

இந்த ஏழு திருமுறைகளே இந்த முதற்பகுதி நூலுள் அடங்கியுள்ளன. இவற்றுடன் திருஞான சம்பந்தர்-திருநாவுக்கரசர் - சுந்தர மூர்த்தியார் ஆகிய இம்மூவரின் வரலாறுகளும் தொகுத்து வழங்கப் பெற்றுள்ளன.

இதனைத் தொடர்ந்து மற்ற ஐந்து திருமுறைகளைக் கொண்ட இரண்டாம் பாகம் வெளிவருகிறது.

இவை - தமிழ்க்கும் - இசைக்கும் - இலக்கியத்திற்கும் சிறப்பளிப்பவை. தமிழ்த் தொண்டிலும் - சைவ நெறிப் பணியிலும் தன்னை ஒப்படைத்துக்கொண்டு உழைத்த சான்றோர் க. வெள்ளை வாரணனார் மிகச் சிறப்பாக இந்நூலை ஆக்கி அளித்துள்ளார்.

மூவர் தேவாரம் பற்றிய இன்றியமையாத செய்திகளை அளித்ததுடன் - மேலும் அறிந்துகொள்ள வேண்டிய பொருட் குறிப்புகள் பலவற்றையும் தொகுத்து எழுதி வழங்கியுள்ளார் அறிஞர் வெள்ளை வாரணனார். எளிய தமிழ் நடையில் இந்நூலை ஆக்கித் தந்துள்ளார்.

அறிஞர் க. வெள்ளை வாரணனாரின் படைப்புகள் - நாட்டுடைமை ஆக்கிய பின்பு முதன் முறையாக இந்த நூலை எங்களது பதிப்பகத்தின் வாயிலாக வெளியிடுவதில் நாங்கள் பெருமகிழ்வெய்துகின்றோம்.

இந்நூலைச் சைவ நெறி அன்பரும் தமிழ்ச் சுவை அறிந்தோரும் - இசை இன்பம் நுகர்பவரும் பெற்றுப் பயனடைவர் என்பது திண்ணம்.

**- பதிப்பகத்தார்**

# முகவுரை

அருளொடு கூடிய சிவபரம்பொருளே திரு; அதாவது பெறத்தக்க செல்வம். அதை நாடி அடைந்ததன் பயனாய் அடியார்கள் பெற்ற இன்பம் அவர்கள் உள்ளத்தினின்றும் தோத்திரப் பாடல்களாக ஊற்றெடுத்து ஆறாய், அருவியாய், பெருவெள்ளமாய்த் தமிழ்நாடு எங்கும் இரண்டாம் நூற்றாண்டு முதல் பன்னிரண்டாம் நூற்றாண்டுவரை பரவி ஓடியது. அத்தோத்திரப் பாடல்களை அருளிச்செய்தவர் திருஞான சம்பந்தர் முதல் சேக்கிழார்பெருமான்வரை உள்ள இருபத்தேழு அருள் ஆசிரியர்கள் ஆவர். அவைகள் தமிழரசர் வேண்டு கோளின்படி பன்னிரண்டாக வகுக்கப் பெற்றுத் தொகுக்கப் பட்டன. அத்தொகையே பன்னிருதிருமுறை என்பது. முறை என்னும் சொல் நூல் என்னும் பொருள்கொண்டு நிற்கின்றது. திருமுறை என்பது நிலையாய செல்வத்தை மக்கள் எளிதாக அடைதற்கு வழி காட்டும் நூல்.

உயிருக்கு அப்பாலாயும், உயிரினுள் உயிராயும் நின்று இலங்கும் இறைவனால் ஆட்கொள்ளப்பட்ட நிலையில் பிறந்த பாடல்களாதலால் திருமுறைகள் சாதாரண சொற்களுக்கு எட்டாத தனிசக்திகொண்டிருப்பது நியதியே. அவைகளில் பல பாடல்கள் அற்புத நிகழ்ச்சிகளின் பொருட்டும் அற்புத சூழ்நிலை களிலும் பாடப்பட்டவை. இப்பொழுதும் இடர் நீங்க வேண்டின் **"மறையுடையாய்"** என்ற பதிகத்தையும், விஷ சுரம் நீங்க வேண்டின் **"அவ்வினைக்கு இவ்வினையாம்"** என்ற பதிகத் தையும், திருமணம் விரும்புவோர் **"சடையாய் எனுமால்"**என்னும் பதிகத்தையும், இவ்வாறு வேறு குறிப்பிட்ட நோக்கங்கள் நிறைவேறுமாறு குறிப்பிட்ட பதிகங்களையும் பாராயணம் செய்து மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் என்று நம்பப் படுகிறது. அது எவ்வாறாயினும், பாடுவோரையும், பாடக்கேட் போரையும் இறையுணர்வில் விரைவில் ஈடுபடச் செய்யும் ஆற்றல் படைத்தது திருமுறை என்பது மக்கள் அனைவரும் அனுபவத்தில் கண்டதோர் உண்மை.

சிவநெறியேயன்றி, இறைவன் ஒருவன் உண்டு என்றும், இறைவன் மீது அன்புகொண்டு வாழ்க்கை நடத்துதலே இன்பத்தின் வழி என்றும் நம்புபவர் எந்த சமயத்தினர் ஆயினும், அவர்கள் அனைவரும் திருமுறைப் பயிற்சியின் மூலம் நலன்கள் பலவும் பெறலாம். இத்தோத்திரப் பாடல்களைப் பயிலும் வாய்ப்புப்பெற்ற கிருத்துவசமயத்தைச் சார்ந்த ஐரோப்பியர், நம் நாட்டவர், பலர் அதன்மூலம் தாங்கள் பெற்ற அரிய அனுபவங்களை வியந்து போற்றியிருக்கின்றார்கள். தங்கள் தங்கள் மொழிகளில் திருமுறைகளின் பல பாகங்களை அவர்கள் மொழி பெயர்த்தும் இருக்கிறார்கள்.

இப்பொழுது வழக்கிலிருக்கும் மொழிகளில் எல்லாம் தமிழே மிகவும் தொன்மையானது; இலக்கிய உயர்வும் உடையது. தமிழ் இலக்கியத்தின் அருமையையும் பெருமையையும் நேரில் தெரிந்து அனுபவிக்க விரும்புவோர் அனை வருக்கும் திருமுறைப் பயிற்சி இன்றியமையாதது. திருமுறைப் பாடல்கள் பொருட் செறிவும், சொல் நயமும், நடையழகும், கொண்டவை. சமயப்பற்று உள்ளவரேயன்றி இலக்கியப் பற்று உடையவரும் திருமுறைப் பாடல்களைப் பயிலுவதால் அகன்ற அறிவும், ஒழுங்குபடுத்தப்பட்ட வாழ்க்கையும் அடைவார்கள்.

இரண்டாம் நூற்றாண்டு முதல் 12-ஆம் நூற்றாண்டு வரை தமிழர்களது வாழ்க்கை எத்தன்மையதாக இருந்தது, எவ்வித குறிக்கோள்களுடன் அவர்களுள் பெரியவர் என்று போற்றப் பட்டவர்கள் வாழ்ந்துவந்தார்கள், அவர்கள் நாகரிகத்தின் பண்பு என்ன என்று அறிய விரும்புபவர்களுக்குத் திருமுறை உறு துணையாகும். தமிழ்நாட்டின் மன்னர், மக்கள், புலவர், சமயங்கள் முதலியவற்றைப்பற்றித் தெரிந்து கொள்ள விரும்பும் வரலாற்று ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் திருமுறை சிறந்த விளக்காகும்.

இவ்வாறு பலவகையான சிறப்புக்களையும் தன்னகத்தே கொண்ட திருமுறையைப்பற்றிய கேள்விகள் பலவற்றிற்குத் தெளிவான விடைகள் கூறுவதற்கு உதவும் ஆராய்ச்சி தமிழ் நாட்டில் தேவையாக இருந்தது. அக்குறையை நிறைவேற்றுவது அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் கடமைகளில் ஒன்றா யிற்று. பல்கலைக்கழகத்தின் தமிழ் ஆராய்ச்சிப் பகுதியினரால் அவ்வாராய்ச்சி செய்யப்பட்டு அதன் பயனாய் இந்நூல் வெளி வருகிறது.

திருமுறை வரலாறு என்னும் நூலின் முதல் பகுதி இது. திருமுறை எப்பொழுது, யாரால், எந்தச் சூழ்நிலையில், வகுக்கப் பட்டுத் தொகுக்கப்பெற்றது முதலிய கேள்விகள் /இந்த

பாகத்திற்கும் அடுத்து வரும் இரண்டாம் பாகத்திற்கும் பொது வானவை. அவை முதற்கண் ஆராயப்படுகின்றன. அதன்பின் இந்தப் பாகத்தில் பன்னிருதிருமுறைகளுள் முதல் ஏழு திரு முறைகளைப் பற்றிய ஆராய்ச்சியும், ஆராய்ச்சியின் முடிவுகளும் விளக்கப்படுகின்றன.

பன்னிரு திருமுறைகளுள் முதல் மூன்று திருமுறைகளை அருளிச் செய்தவர் **திருஞான சம்பந்த சுவாமிகள்** ஆவர். 4,5,6 திருமுறைகளை அருளிச் செய்தவர் **திருநாவுக்கரசு சுவாமிகள்** ஆவர். 7-வது திருமுறையை அருளிச் செய்தவர் **சுந்தரமூர்த்தி சுவாமி**களாவர். இவ்வேழு திருமுறைகளும் தேவாரம் எனவும் அடங்கன் முறை எனவும் வழங்கப்பெறும். இவர்கள் மூவரும் மாணிக்கவாசக சுவாமிகளும் சமயகுரவர் நால்வர் எனப் போற்றப்பெறுவர். இந்நூலில் திருஞான சம்பந்தர், திருநாவுக் கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகளது வரலாறு முதலில் தரப்படுகிறது. அவர்களது காலம் ஆராயப்படுகிறது.

தேவாரத் திருப்பதிகங்கள் சமய நூல்களாகவும், இலக்கிய நூல்களாகவும், இசை நூல்களாகவும், காட்சியளிக்கின்றன. ஒவ்வொரு வகையிலும் அவ்வவ்வகை நூல்களில் தலை சிறந்தவைகளாகத் தேவாரத் திருப்பதிகங்கள் விளங்குகின்றன. இந்நூலில் ஆராய்ச்சிமுறையில் தேவாரத் திருப்பதிகங்களில் நாம் காணும் சமய உண்மைகள் விளக்கப்படுகின்றன; இலக்கிய நயங்கள் ஆராயப்படுகின்றன; பண் நுணுக்கங்கள் எடுத்துக் காட்டப்படுகின்றன. நன்னெறியில் வாழ்வதற்கும் தமிழில் நிறைந்த இலக்கிய அறிவு பெறுவதற்கும் இசைவல்லுநர் ஆவதற்கும் தூய உள்ளம் பெறுவதற்கும், தேவாரத் திருப் பதிகங்களின் துணையே சாலும் என்பது தெளிவுபடுத்தப் பெறுகிறது.

இலக்கிய நூல் என்ற முறையில் தேவாரத் திருப்பதிகங்களை ஆராய்கின்ற இந்நூலின் பகுதி, யாப்பமைதி-செய்யுள் அமைதி, பாவினங்கள் பற்றித் தரும் விளக்கம் மிகவும் அருமையுடையது. இசைநூல்கள் என்ற முறையில் தேவாரத் திருப்பதிகங்களை ஆராய்கின்றபொழுது இசைஅமைப்புப் பற்றியும் பண்கள் பற்றியும் இந்நூலில் பல நுண்ணிய கருத்துக்கள் பாராட்டத்தக்க முறையில் தெளிவுபடுத்தப்பட்டிருக்கின்றன.

தேவாரத் திருப்பதிகங்கள். வெட்டவெளியில் தனித்து இலங்கும் கம்பங்கள் போல் அல்லாது, முன்னும் பின்னும் பக்கங் களிலும் விளங்கும் அழகிய மலைத்தொடர்களின் நடுவே ஓங்கி வளர்ந்து சிறப்புடன் திகழும் சிகரங்கள் போன்றவை. இத்திருப் பதிகங்களுக்கு முன்னும், அழகிய இயல், இசை. நாடக நூல்கள்,

உள்ளன; பின்னும், உள்ளன; அந்நாளினும் உள்ளன. குறட்பாக்களில் உள்ள கருத்துக்கள் பல இசைவடிவம் பெற்று இப்பதிகங்களில் இலங்குகின்றன. இப்பதிகங்களில் பண்களில் பாடப்பெற்ற உண்மைகள் பல மந்திரமாகவும் சாத்திரமாகவும் இதர நூல்களில் விளங்குகின்றன. இவ்வாறு தேவாரத் திருப்பதிகங்களுக்கும், அவைகளுக்கு முன்னும் பின்னும் அருகிலும் உள்ள நூல்களுக்கும் உள்ள தொடர்புகள் இந்நூலில் அழகாக விளக்கப்படுகின்றன.

தேவாரத் திருப்பதிகங்களைப் பற்றிய அறிவுபெற விரும்புவோர் அனைவரும் கற்கவேண்டியதொரு நூல் இந்நூல். தமிழ் மக்கள் அனைவரும் இந்நூலைக் கற்றும் கேட்டும், இதன் பயனைப் பெறுவார்கள் என்று நம்புகின்றேன்.

இவ்வரியதொரு நூலை ஆக்கிய அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழாராய்ச்சிப் பகுதியினருக்கும், குறிப்பாக நிறைந்த சிவபக்தியும், தமிழன்பும், ஆராய்ச்சித் திறனும் உடைய திரு. வெள்ளைவாரணனார் அவர்களுக்கும் பல்கலைக்கழகத்தின் சார்பாக என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
அண்ணாமலைநகர்.
14-12-1961

**வே. சுப்பிரமணியம்,**
துணைவேந்தர்.

# அணிந்துரை

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம், இமயம் முதல் குமரி வரை செந்தமிழும் சிவநெறியும் வளரப் பெருந் தொண்டு புரிந்து வருகின்றது; அது சிறந்த திருவருள் நிலையமாகத் திகழ்கின்றது. இந்த மடத்திற்குச் சீரும் சிறப்பும் மிக்க தமிழ் நூல்கள் இயற்றி அருள்பெற்ற ஆதி குருமூர்த்தி. ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் ஆவார்கள். அவர்களுக்குப் பின் வாழை யடி வாழையாக அருளும் அறிவும் நிறைந்த தலைவர்கள் இத்திருமடத்தின் முதல் ஸ்தானத்தை அலங்கரித்திருக் கிறார்கள் அந்தத் தலைவர்களுள் தமிழுக்கும் சைவத்திற்கும் ஆக்கமான பல நல்ல பணிகளைச் செய்தற்கு வழிவகுத்த அறவோர், ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாதத் தம்பிரான் ஆவார்கள். தமிழ் நூல்களை வெளியிடுவதற்கும், தமிழ் இலக்கியப் பயிற்சிக்கும்; திருமுறைப் பயிற்சிக்கும், சைவ சித்தாந்த சாஸ்திரப் பயிற்சிக்கும், அறக்கட்டளையினைக் காசிவாசி ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாதத் தம்பிரான் அவர்கள் ஏற்படுத்தி அப்பணிகளை அண்ணாமலைப் பல்கலைக்கழக நிர்வாகம் செய்யுமாறு பணியிட்டிருக்கிறார்கள். இந்தக் கட்டளையின்படி சிவஞான போதச் சிற்றுரை, ஞானா மிர்தம் ஆகிய சைவசித்தாந்த நூல்களை உரை விளக்கக் குறிப்புடன் அண்ணாமலைப்பல்கலைக் கழகத்தார் வெளி யிட்டிருக்கிறார்கள்.

இப்பொழுது பன்னிரு திருமுறை வரலாறு இரண்டு பாகங்களாக எழுதப்பெற்று, முதல் ஏழு திருமுறைகளாகிய தேவாரத் திருமுறைகளின் வரலாறு முதற்பகுதியாக வெளியிடப் பெறுகிறது.

இப்பன்னிரு திருமுறைகளும் தமிழ்நாட்டில் சமயத் திற்கும், இலக்கியத்திற்கும் உயிர்நாடியாக விளங்குகின்றன; தமிழ்நாட்டின் சரித்திரத்தையே மாற்றி அமைத்திருக் கின்றன. இத்திரு முறைகள் இசைக்கு இருப்பிடமாக இருக்கின்றன.

இப்பெருமை வாய்ந்த நூலை வெளியிடுவதற்கு உபகாரம் செய்த திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடத்தின் சார்பாக இதன் தலைவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள் நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களுக்கு அண்ணாமலைப் பல்கலைக்கழகம் தனது நன்றியை முதற்கண் காணிக்கை யாகச் செலுத்துகின்றது. அவர்கள் தமிழுக்கும், சைவத் திற்கும், இசைக்கும் செய்திருக்கும் தொண்டு சொல்லால் சொல்லவொண்ணாதது.

இம் முதல்பாகத்தில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய தேவார ஆசிரியர் மூவருடைய வரலாறுகளும் அவர்கள் பாடியருளிய திருப்பதிகங்களின் சிறப்பும் அகச்சான்று களுடன் விரித்து விளக்கப்பெற்றுள்ளன. இதை எழுதியவர்கள் தமிழ் ஆராய்ச்சித்துறை விரிவுரையாளர் திரு. க. வெள்ளை வாரணர் ஆவார்கள். அவருடைய தேவாரப் பற்றும், தமிழில் எல்லாத் துறைகளிலும் சிறந்த புலமையும் தமிழ்நாடு நன்கறியும். ஆழ்ந்தகன்ற அறிவுடையர்; அத்துடன் ஆராய்ச்சிப் புலமையும் ஆய்வுத்திறனும் உள்ளவர்; தெள்ளிய இனிய நடை அவருக்கே உரியது. மூவர் வரலாறுகளையும் அகச்சான்றுகளுடன் இவ்வளவு விரிவாக விளக்கும் நூல் வேறொன்றும் வரவில்லை என்று கருதுகின்றேன். இந்நூலை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் சார்பாக வெளியிடுவதில் மிகவும் மகிழ்ச்சி அடைகின்றேன். இதனை எல்லோரும் வரவேற்பார்கள் என நம்புகின்றேன்.

இங்ஙனம்,

**தி.மூ. நாராயணசாமி பிள்ளை.**

# பதிப்புரை

**சைவத்தின் மேற்சம யம்வே றிலையதிற் சார்சிவமாம்**
**தெய்வத்தின் மேற்றெய்வம் இல்லெனும் நான்மறைச்**
**செம்பொருள்வாய்**
**மைவைத்த சீர்த்திருத் தேவார முந்திரு வாசகமும்**
**உய்வைத் தரச்செய்த நால்வர்பொற் றாளெம்**
**உயிர்த்துணையே.**
**(அருணைக்கலம்பகம்)**

உலகில் வகுக்கப்பட்டுள்ள சைவ முதலாம் அளவில் சமயங்களையும் மேற்சமயங்கடந்த மோன சமரசத்தையும் தன்னுள் அடக்கிக்கொண்டு மேலோங்கி நிற்பது சைவ சித்தாந்தம். இதற்கு முதற்கடவுள் சிவபெருமான். அவன் கடவுள் வரிசையில் முன்னவனாக வைத்து எண்ணப்படுபவன். அவனே முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம்பொருளாயவன்; பொறி வாயிலைந் தவித்தவன். அவன் கூறிய நெறியே பொய்தீர் ஒழுக்க நெறியாகிய **சைவ சித்தாந்த நெறி**. அதுவே சிவனை அடைவிக்கும் சிவநெறி. அவ்வருள் நெறியே எவ்வுயிர்க்கும் பாது காவலாகும் என்பது உறுதி. அந்நெறியினை விளக்க எழுந்த இலக்கியம் பன்னிருதிருமுறைகள். இப் பன்னிரு திருமுறை களுக்கும் ஒரு சிறந்த இலக்கிய வரலாறு இதுவரை வரையப் படாதிருந்தது.

செந்தமிழ்ப் பேரன்பர் டாக்டர் ஆர்.கே. சண்முகம் செட்டி யாரவர்கள் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் துணை வேந்தராக இருந்தபொழுது, திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடத்தின் தலைவர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நிறுவிய அறக்கட்டளையின் சார்பில் 'பன்னிரு திருமுறை வரலாறு' என்ற தொரு நூல் விரிவாக எழுதப்பெறவேண்டுமென்று விரும்பி னார்கள். இப்பணியினைத் தமிழாராய்ச்சித் துறையினர் செய்து நிறைவேற்றுதல் வேண்டுமெனவும் பணித்தார்கள். இப்பணி தமிழாராய்ச்சித்துறை விரிவுரையாளர் திரு. க. வெள்ளை வாரணன் அவர்களுக்கு அளிக்கப்பெற்றது.

திருமுறை நூல்களைக் கற்பதில் அதிக ஆர்வமுடைய அன்பர் வெள்ளைவாரணன் அவர்கள் சைவத்திருமுறைகளை ஆழ்ந்து பயின்று பன்னிரு திருமுறை வரலாற்றினை இரண்டு பகுதிகளாக எழுதியுள்ளார். அவற்றுள் முதல் ஏழு திருமுறை களாகிய தேவாரத் திருமுறைகளின் வரலாறு இப்பொழுது முதற்பகுதியாக வெளியிடப்படுகிறது.

இதன் கண், சைவத் திருமுறைகள் பன்னிரண்டாக அமைந்த வரலாறும், திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய தேவார ஆசிரியர் மூவர் வரலாறுகளும், அவர்கள் வாழ்ந்த காலப்பகுதியும், தேவாரத் திருப்பதிகங்களின் தொகுப்பு முறை, யாப்பமைதி, இசையமைதி, சொற்பொருள் நடையமைதி, பொருட்பாகுபாடு, சங்கநூற் குறிப்புக்கள், திருக்குறளை எடுத்தாண்ட பகுதிகள், தேவார ஆசிரியர்கள் அறிவுறுத்திய திருநெறிக் கொள்கைகள், பாடல் பெற்ற தலங்கள், வைப்புத் தலங்கள் ஆகிய பகுதிகளும் விரிவாக ஆராய்ந்து விளக்கப் பெற்றுள்ளன.

மூவர் தேவாரப் பதிகங்களைப்பற்றி இன்றியமையாது அறிந்துகொள்ள வேண்டிய பொருட் குறிப்புக்கள் பலவற்றையும் தொகுத்துரைக்கும் முறையில் இந்நூல் எழுதப்பெற்றுள்ளது. ஓரளவு தமிழ்ப் பயிற்சியுடையவர்களும் அறிந்துகொள்ளும் நோக்கத்துடன் எளிய தமிழ் நடையில் இந்நூல் அமைந் திருத்தலால், தேவாரத் திருமுறைகளைப் பற்றி அறிய விரும்பும் ஆர்வமுடைய அன்பர்கள் அனைவர்க்கும் இந்நூல் நன்கு பயன்படும் என நம்புகிறேன்.

இங்ஙனம் அரிய பல நூல்கள் வெளிவருதற்கு ஏற்ற வண்ணம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் அறக் கட்டளையினை நிறுவிய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாதத் தம்பிரான் சுவாமிகளது தமிழ்த் திருத்தொண்டு தமிழ்மக்களால் என்றும் நன்றியுடன் போற்றத்தக்கதாகும். அவர்கள் வகுத்த திருத்தொண்டின் நெறியினை அடியொற்றிக் குமரி முதல் இமயம்வரை முந்நூற்றுக்கு மேற்பட்ட நல்லறங்கள் என்றும் நிகழும் வண்ணம் ஐம்பது நூறாயிரம் ரூபாவுக்குமேற்பெரும் பொருளை முதற்பொருளாக அமைத்து, நாட்டு மக்களது கல்விப் பயிற்சிக்கும் தெய்வவழிபாட்டு நெறிக்கும் ஆக்கமாகும் நற்பணிகளை ஊக்கமுடன் புரிந்துவரும் பெருந்தவச் செல்வர், திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடத்தின் தலைவர், திருப்பெருந்திரு காசிவாசி அருள் நந்தித் தம்பிரான் சுவாமிகளின் பொன்னார் திருவடிகளை வணங்கி, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் நன்றியினை அவர்களுக்கு அன்புடன் தெரிவித்துக் கொள்கின்றேன்.

தமிழாராய்ச்சித் துறையின் சார்பில் இத்தகைய தமிழ்ப் பணிகள் பல தொடர்ந்து நிகழும் வண்ணம் ஊக்கமும் ஆக்கமும் உதவி ஆதரித்து வரும் அண்ணாமலைப் பல்கலைக்கழக இணை வேந்தர் செட்டிநாட்டரசர் ராஜா சர் டாக்டர் **M.A. முத்தையா செட்டியார்** B.A.,M.L.A,L.L.D, அவர்களுக்கும், பல்கலைக் கழகத் துணைவேந்தர் உயர்திரு **வே. சுப்பிரமணியம்** அவர்களுக்கும், இந்நூலுக்கு அன்புகூர்ந்து அணிந்துரை உதவிச் சிறப்பித்த உயர் திருவாளர் **தி.மூ. நாராயணசாமி பிள்ளை** M.A.B.L. அவர்களுக்கும் நமது நன்றி உரியதாகும்.

இதனை வனப்புற அச்சிட்டு உதவிய திருச்சிராப்பள்ளி 'கீதாபிரஸ்' உரிமையாளர் அவர்களது பணி சிறப்பாகப் பாராட்டுதற்குரியதாகும்.

**கோ. சுப்பிரமணியபிள்ளை**
*தமிழாராய்ச்சித்துறைத் தலைவர்,*
*அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.*

Prof. S. AGESTHIALINGOM
M.A., Ph.D. (Kerala)
Ph.D. (Indiana - U.S.A.)
Director CAS in Linguistics,
Head, Dept. of Tamil,
Dean, Faculty of Indian Language,
Member of the Syndicate,
Annamalai University.

Annamalainagar,
16-12-1980

தமிழ் இலக்கிய வரலாற்றில் பக்தி இலக்கியங்கள் ஒரு பெரும் பங்கினை வகிக்கின்றன. கி.பி. ஆறாம் நூற்றாண்டு தொடங்கிப் பக்தி இலக்கியங்கள் வளரலாயின. நாயன்மார்களும் ஆழ்வார்களும் தத்தம் சமயங்கள் வளர்தற்கும், இறைவனிடத்தில் ஈடுபடுதற்கும் பக்திப் பாடல்களைப் பாடினர். அவை தேவாரங்களாகவும் திவ்யப் பிரபந்தங்களாகவும் திகழ்கின்றன. திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரமூர்த்திகள் பாடிய பாடல்கள் தேவாரங்கள் எனப்பட்டன. அவற்றை ஏழு திருமுறைகளாக வகுத்தனர். இதனைச் செய்தவர் நம்பியாண்டார் நம்பிகள். மணிவாசகப் பெருந்தகை அருளிய திருவாசகமும், திருக்கோவையும் எட்டாம் திருமுறையாக வகுக்கப்பெற்றது. ஒன்பதாந் திருமுறை பலபெரியோர்களால் பாடப் பெற்றவை. திருமூலரின் திருமந்திரம் பத்தாந் திருமுறை என்று அமைக்கப்பெற்றது. பதினோராந் திருமுறையும் பல பெரியோர்களின் ஆக்கமாகத் திகழ்கின்றது. சேக்கிழாரின் பெரியபுராணம் பன்னிரண்டாம் திருமுறையென வழங்கப்படுகிறது.

வைணவ நூல்களுக்கு ஆறாயிரப்படி, பன்னீராயிரப்படி, இருபத்து நான்காயிரப்படி, முப்பத்தாறாயிரப்படி, என வியாக்கியானங்கள் மிகுந்துள்ளன. பெரியவாச்சான் பிள்ளை போன்று மிகப் பெரியவர்கள் அகலவுரைகளை அழகுற எழுதியுள்ளனர். ஆனால், திருமுறைகளுக்கு உரை எழுதி விளக்கம் செய்வார் இன்மையால் பரவாமல் இருந்தது. இக்குறையினை டி.கே. சுப்பிரமணிய முதலியார் பெரிய புராணத்திற்கு அகல உரை எழுதிப் போக்கினார். எனினும் தேவாரத் திருவாசகங்கள் விரிவான உரை எழுதப்பெறாமல் இருந்தன. பத்தாந் திருமுறையாகிய திருமந்திரத்திற்கு ஒவ்வொரு தந்திரமாக உரை எழுதித் திருவாவடுதுறை ஆதீனம்

வெளியிட்டது. அதுபோன்று, முதல் ஏழு திருமுறைகளைக் குறிப்புரையுடன் தருமை ஆதீனம் வெளியிட்டது. திருமுறைகளை எளிதில் உணரும் வண்ணம் திருமுறை வரலாறு என்ற இப்பெரிய நூலைத் திருமுறைச் செல்வர் க. வெள்ளைவாரணன் அவர்கள் அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் பணியாற்றிய பொழுது எழுதி வெளியிட்டார்கள். இதன் சிறப்புணர்ந்த தமிழக அரசு இந்நூலுக்குப் பரிசளித்துச் சிறப்பித்தது. இதன் முதற் பதிப்பு வந்த சின்னாள்களிலேயே முழுதும் விற்பனை ஆயிற்று. இதனை உணர்ந்த இப்பல்கலைக்கழகம் இது பொழுது இதனை இரண்டாம் பதிப்பாக வெளியிட்டு மகிழ்கிறது. இதன் முற்பகுதி ஒன்று முதல் ஏழு திருமுறை வரையில் அமைந்ததாக விளங்குகிறது. இதன் இரண்டாம் பகுதி எட்டு முதல் பன்னிரண்டு திருமுறைவரை அமைந்ததாக விளங்குகின்றது. தமிழ் மக்கள் இந்நூல்களைப் பெற்றுப் பயன் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன். இந்நூல் திருப்பனந்தாள் அறக்கட்டளை சார்பில் வெளியிடப்பெற்றது. திருப்பனந்தாள் ஆதீனத் தலைவர் தவத்திரு. முத்துக்குமார சாமித் தம்பிரான் சுவாமிகட்கு என் நன்றியினைப் புலப்படுத்திக் கொள்கிறேன். இப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் நீதிபதி டாக்டர். வ.சொ. சோமசுந்தரம் அவர்கள் இப்பதிப்பிற்கு உறுதுணையாயிருந்து உதவினார்கள். அவர்கட்கும் என் நன்றி உரியதாகும். இப் பல்கலைக் கழகப் பதிப்புக் குழுவினர்க்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**ச. அகத்தியலிங்கம்.**

சிவமயம்

# பன்னிரு திருமுறை வரலாறு

## முதற் பகுதி
## (முதல் ஏழு திருமுறைகள்)

## திருமுறை

உலக மக்களுக்கு எக்காலத்தும் திருத்தகவிற்றாகிய உள்ள நிலைமையை வழங்குவதற்குரிய அருள் நூல்களே திருமுறைகளாம். "திருவென்பது பொருளுடைமையும் பொருள் கொணர்ந்து துய்த்தலுமின்றி எஞ்ஞான்றுந் திருத்தகவிற் றாகியதோர் உள்ள நிகழ்ச்சி; அது வினையுள்ளுடைமை யெனவும்படும்" என்றார் பேராசிரியர். எனவே இன்பம் வந்தாலும் துன்பம் வந்தாலும் இரண்டையும் ஒப்பக்கருதும் மனச் செம்மையே இத்திருவென்னுஞ் சொல்லுக்குரிய பொருளென்பது பேராசிரியர் கருத்தாதல் நன்குபெறப்படும். உலக வாழ்க்கையில் உளவாகும் ஆக்கங்களையெண்ணிக் களிப்படைதலும் கேடுகளை நினைந்து அவலமுறுதலும் எல்லோரிடத்தும் பொதுவாகக் காணப்படும் மனவியல்பாகும். இவ்வாறு செல்வக் களிப்பால் மையலுறாமலும் அல்லல் மிகுதியால் சோர்வடையாமலும் இன்பதுன்பம் இரண்டினையும் ஒப்பக்கருதும் நல்லறிவுடையவர்களே திருந்ததவிற்றாகிய உள்ள முடையயோராவர். இத்தகைய பெரியோர்களைக் "கேடும் ஆக்கமுங்கெட்ட திருவினார்"* (*பெரியபுராணம், திருக்கூட்டச் சிறப்பு, 8-ஆம் செய்யுள்.) எனப் போற்றுவர் சேக்கிழாரடிகள்.

திருவுடைப் பெரியோராகிய இவர்கள், எத்தகைய பேரிடர்கள் அடுக்கி வந்தாலும் அவற்றைக் கண்டு ஒரு சிறிதுங் கலங்காத மனவுறுதியுடையவர்கள். இவர்களுக்கு இவ்வுறுதியை வழங்கவல்ல பேரருளாளன், முழு முதற்பொருளாகிய இறைவனொருவனேயாவன். திருவாளனாகிய அப்பெருமான் தோன்றாத் துணையாய் நின்று தன் அடியார்களுக்கு வழங்கும் துளக்கமிலா மனச்செம்மையாகிய இத் தெளிவினையே 'திரு நின்ற செம்மை' யெனப் போற்றுவர் சான்றோர்.* (*திருத் தொண்டத்தொகை, 4-ஆம் திருப்பாடல்.)

சென்றடையாத திருவுடையானாகிய முழுமுதற் கடவுளை வழிபட்டு, அப்பெருமானது திருவருள் வழி யொழுகும் மெய்யடியார்கள் "நான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்"* (*திருமந்திரம் 85-ஆம் திருப்பாட்டு.) என்னும் அருள் நோக்கத்துடன் இறைவனது திருவருளையே கண்ணாகக்கொண்டு தம் அனுபவத்தாற் கண்டுணர்ந்த நல்லொழுக்க நெறியினை எல்லா மக்களுக்கும் அறிவுறுத்தி உலகத்தை நல்வழிப்படுத்துவர். பொறிவாயில் ஐந்து அவித்தானாகிய இறைவன் அருளிய மெய்யான ஒழுக்க நெறியில் நிலைபெற்றொழுகுதல் இப்பெரியோரது இயல்பாகும். இவ்வாறு இறைவன் திருவருளையே பற்றுக்கோடாகக் கொண்டொழுகும் இப்பெரியோரது வாழ்க்கை முறை, சிந்தையின் நிறைவாகிய பெருஞ்செல்வத்தை எல்லோர்க்கும் வழங்குஞ் சிறப்புடையதாதலின், இதனைத் திருநெறியென வழங்குவர் பெரியோர்.

தமிழ் மக்களது தவப்பயனாகத் தமிழ்நாட்டிலே தோன்றி எல்லாம்வல்ல இறைவனது திருவருளால் இத்தகைய திருநெறியினை வகுத்தருளிய சான்றோர்: திருமூலர், காரைக்காலம்மையார், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பியாரூரர், சேரமான் பெருமாள், ஐயடிகள் காடவர்கோன், திருவாதவூரடிகள், திருவெண்காட்டடிகள், நம்பியாண்டார் நம்பி, திருமாளிகைத்தேவர் முதலிய திருவிசைப்பா ஆசிரியர்கள், சேக்கிழார் நாயனார் ஆகிய பெருமக்களாவர். இப்பெரியோர்கள் எல்லாம்வல்லசிவபெருமானது திருவருளின்பத்துள் திளைத்து மகிழும் நிலையில் தாம் துய்த்துணர்ந்த பெருநலங்களையெல்லாம் உலக மக்களனைவரும் பெற்று இன்புறும்படி தெளிவும் இனிமையும் பொருந்திய செந்தமிழ்ப் பாடல்களால் விரித்தருளிச் செய்துள்ளார்கள். அருளாசிரியராகிய இவர்கள் திருவாய்மலர்ந்தருளிய தெய்வத் தமிழ்ப்பாடல்களே திருநெறித் தமிழ் எனவும் திருமுறையெனவும் வழங்கப்பெறுகின்றன.

முறை யென்ற சொல் நூல், பழமை, ஊழ், கூட்டு, கட்டு, முறைமை எனப் பல பொருள்களில் வழங்குவது என்பது "கோசமும் பழமையும் ஊழுங் கூட்டும், ஆர்ப்பும் முறைமையும் முறையெனலாகும்" எனவரும் பிங்கலந்தையால் உணரப்படும். இச்சொல் மேற்குறித்த பொருள்களோடு நியமம், தடவை, உறவு நூற்பகுப்பு, முதலிய பொருள்களில் வழங்குதலை உலக வழக்காலும் நூல் வழக்காலும் நன்கறியலாம். திருமுறையென்ற தொடரிலுள்ள முறையென்பது மேற்காட்டிய பல பொருள்களுள் நூலையும் அதன் உட்பிரிவுகளையுங் குறித்து வழங்குவதாகும். முறைப்பட இயற்றப்பெற்றமையின் முறையென்பது நூற்குப் பெயராயிற்று.

ஏடங்கை நங்கை இறையெங்கள் முக்கண்ணி
வேடம் படிகம் விரும்பும் வெண்டாமரை
பாடுந்திருமுறை பார்ப்பதி பாதங்கள்
சூடுமின் சென்னி வாய்த் தோத்திரஞ்சொல்லுமே.
(1067)

எனவரும் திருமந்திரப்பாடலிலும்,

இறைநிலம் எழுதுமுன் இளைய பாலகன்
முறைவரை வேனென முயல்வ தொக்குமால்
அறுமுக முடையவோர் அமலன் மாக்கதை
சிறியதோ ரறிவினேன் செப்ப நின்றதே.

எனவரும் கந்தபுராண அவையடக்கச் செய்யுளிலும் முறையென்ற சொல் நூலென்ற பொருளில் வழங்கக் காண் கின்கிறாம். "முக்காற் கேட்பின் முறையறிந்துரைக்கும்" என வரும் பழஞ்சூத்திரத்திலும் முறையென்பது நூலென்ற பொருளில் வழங்கியதாகவே கொள்ளலாம்.

மக்கள் அறியவேண்டிய பொருள்களை அறிவுறுத்தி மனக்கோணலைத் தீர்த்துத் தீமையினை விலக்கி நன்றின் பாற் செலுத்தும் மாண்புடைய சொற்களால் முறைப்பட இயற்றப் பெற்றனவே நூலெனச் சிறப்பித்துப் போற்றப்படுவன. மக்களை விலங்கினின்றும் வேறுபிரித்து நன்றுந்தீதும் பகுத்துணரும் மனவுணர்வுடையராக்கி மேம்படுத்துவன அறிவு விளக்கந்தரும் நூல்களாதலின், அந்நூல்களை 'இலங்கு நூல்' எனச் சிறப்பித்தார் திருவள்ளுவர்.* (*'விலங்கொடு மக்கள னையர் இலங்குநூல் கற்றாரோ டேனை யவர்', திருக்குறள்-410) உலக நூல், அறிவனூல் என நூல்களை இருவகையாகப் பகுத் துரைப்பர் பேராசிரியர்.* (*திருக்கோவையார் பேராசிரியர் உரை, முதற் செய்யுள்) உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத நிலமும் பொழுதுமாகிய முதற்பொருளைக் குறித்தும் அம்முதற் பொருளின் கண்ணே கருக்கொண்டு தோன்றும் தாவரம், விலங்கு, பறவை முதலிய கருப்பொருள்களைக் குறித்தும் இப் பொருள்களின் இயல்பினை நன்குணர்ந்து பயன்கொள்ளுதற் கேற்ற மனவுணர்வுபெற்ற மக்கட் குலத்தார் பிறவுயிர்க்குத் தீங் கின்றி இவ்வுலக நலங்களை நுகர்ந்து இன்புறும் ஒழுகலாறாகிய உரிப்பொருளைக் குறித்தும் விளங்கக்கூறுவன உலக நூல் களாகும். இந்நூல்களை இயற்றுதற்குரியோர் வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து இவ்வுலகப் பொருளின் நலந்தீங்குகளை உள்ளவாறு நுனித்துணரும் பேரறிஞராவர். இத்தகைய சான்றோர்களால் இயற்றப்படும் உலக நூல்கள் மக்களது வாழ்க்கை முறையினை மேன்மேல் உயர்த்துவன; உடம்பையும்,

கருவி கரணங்களையும் நன்முறையிற் பயிற்றி இம்மை வாழ்விற்குப் பெரிதும் துணை செய்வன.

காலம் இடம் முதலியவற்றாற் கட்டுண்டு கிடக்கும் மக்களதறிவு, ஐம்பொறியளவிற்பட்ட ஓரொரு பொருளையே உய்த்துணர்ந்து அறிவது. இவ்வுலகிலுள்ள எல்லாப் பொருள் களையும் உள்ளவாறறியும் ஆற்றல் அதற்கில்லை. நாம் வாழும் இவ்வண்டப்பகுதியினையும் இதற்கு அப்பாற்பட்ட பேரண்டங் களையும் இவையெல்லாவற்றிற்கும் ஆதாரமாய் எங்கும் நீக்கமற நிறைந்து உயிர்க்குயிராய் இயக்கி நிற்கும் முழுமுதற் பொருளாகிய இறைவனையும் மக்கள் தமது அறிவொன்றையே துணையாகக் கொண்டு அறிதலென்பது இயலாத செயலாம். இவ்வுலகத்தியல்பினையும் எவ்வுயிர்க்கும் உயிராக எங்கும் நீக்கமற விளங்கும் இறைநிலையையும் உள்ளவாறுணர்த்தும் பேரறிவு, பொருள்தோறும்கலந்துவிளங்கும்இறைவனொருவனுக்கே யுரியதாகும். முற்றறிவுடைய இறைவன், அருளே திருமேனியாகக் கொண்டு தோன்றி அன்பர்க்கு அருளிச் செய்தனவும் தனது திருவருட்டுணையால் ஐம்புலன்களை வென்று முனைப்பின்றித் தன்னை வழிபாடு செய்யும் செம்புலச் செல்வர்களாகிய பெரியோர்களின் உள்ளத்து எழுந்தருளி யிருந்து அவர்கள் வாயிலாக வெளிப்படுத்தியருளினவும் ஆகிய மெய்ந்நூல்களே அறிவனூல்களாம். உடலுக்கு உறுதிதரும் உலக நூல்களைக் காட்டிலும் உயிர்க்குறுதிதரும் இம்மெய்ந் நூல்கள் மிகவும் சிறந்தனவாகும். சைவ சமயத்தவராற் போற்றிப் பயிலப் பெறும் பன்னிரு திருமுறைகளும் மேற்குறித்தவாறு இறைவன் திருவருளால் வெளிப்படுத்தப்பெற்ற சிறப்புடைய மெய்ந்நூல்க ளாதலின், இவற்றை அறிவனூல் எனக்கொண்டு போற்றுதல் பொருத்தமுடையதாகும்.

"உயிராவணமிருந்து உற்று நோக்கி உள்ளக்கிழியின் உருவெழுதி, உயிர் ஆவணஞ் செய்திட்டு உன்கைத்தந்தார் உணரப்படுவாரோடு ஒட்டி வாழ்தி" என்ற வண்ணம் இறைவனை இடைவிடாது நினைந்து அப்பெருமானது பேரறிவே தம்பால் விளங்கப்பெற்றுத் தம்முணர் வென்பது சிறிதுமின்றி இறைவனது பேரறிவினுள் அடங்கி நின்ற சிவஞானிகளாக விளங்கியவர்களே திருஞானசம்பந்தப்பிள்ளை யார், திருநாவுக்கரசர், சுந்தரர் முதலிய அருளாசிரியராவர். அவர்கள் வாயிலாகச் சிவபெருமானே வெளிப்படுத்தியருளிய சிறப்புடையன சைவத் திருமுறைகளாகும். இச்செய்தி "எனதுரை தனதுரையாக" எனத் திருஞானசம்பந்தப் பிள்ளையாரும், "பன்னிய செந்தமிழ் மாலை பாடுவித்தென், சிந்தை மயக்கறுத்த திருவருளினானை" எனத் திருநாவுக்கரசடி களாரும் கூறும் வாய்மொழிகளாலும், சிவபெருமானே

நம்பியாரூரர்க்குப் 'பித்தா' எனவும் "தில்லை வாழ்ந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்" எனவும் அடியெடுத்துக் கொடுத்தும் சேக்கிழார் நாயனாருக்கு 'உலகெலாம்' என அடியெடுத்துக் கொடுத்தும் வெளிப்படுத்தியருளிய சிறப்புடைய நிகழ்ச்சிகளாலும் நன்குணரப்படும். பதினொராந் திருமுறையிலுள்ள திருமுகப் பாசுரம், மதுரைத் திருவாலவாய்த் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள பெருமானடிகளாகிய சிவபெருமானாலேயே திருவாய் மலர்ந்தருளப்பெற்ற சிறப்புடையது. தெய்வத்தமிழ் நூல்களாகிய இத் திருமுறைகளை இறைவனால் அருளிச் செய்யப்பட்ட வேத சிவாகமங்களைப் போன்று இறைவனருளிய மறைகளாகவே கொண்டு போற்றிப் பயிலுதல் வேண்டுமென்பது முன்னோர் துணிபு. இறைவன் அருளிச்செய்தனவாகப் பாராட்டப்படும் வேதங்களை 'எழுதாக்கிளவி' எனவும், இறைவனது திருவருள் பெற்ற திருஞானசம்பந்தப் பிள்ளையார் முதலிய பெருமக்கள் இனிய தமிழாற் பாடியருளிய இத் திருமுறைகளை 'எழுதுமறை' எனவும் வழங்குதல் மரபு. "வண்டமிழால் எழுது மறை மொழிந்த பிரான்" எனப் பெரிய புராணமும், "எழுதுமறை மொழிந்த கழுமல முனிவன்" எனத் தில்லைக் கலம்பகமும் திருஞானசம்பந்தப்பிள்ளையாரைப் போற்று முகமாக அவர் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகங்களை 'எழுதுமறை'எனச் சிறப்பித்தல் காண்க. வேதங்கள் ஐயா என ஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனாகிய முழுமுதற் கடவுளைப் "பீடுடைய பிரமாபுர மேவிய பெம்மான் இவனன்றே" எனத் திருஞானசம்பந்தப் பிள்ளையார் தம்முடைய தந்தையார்க்குக் கையாற் சுட்டிக்காட்டிய எளிமையும் இனிமையும் உடைமையானும், அடியார்கள் இறைவன்பால் வேண்டிய வேண்டியாங்குப் பெறுதற்குத் துணைபுரிந்தும் உலகமக்களது தீராத நோய் தீர்க்கும் மந்திரங்களாகியும் காணுதற்கரிய கடவுளை உலக மக்கள் கண்காணக் காட்டியும் இறைவனது திருவருளை உலகத்தார்க்குத் தெளிவாக விளக்குவன ஆதலானும் வேத நூல்களினும் மேம்பட்டு விளங்குவன இத் தெய்வத்தமிழ்த் திருமுறைகளென்பர் பெரியோர். திருவருட் செல்வமாகிய இத்திருமுறைகளைத் தன்பாற் கொண்ட சிறப்புடைமை கருதி "ஞாலமளந்த மேன்மைத் தெய்வத்தமிழ்" எனச் சேக்கிழார் பெருமானாற் போற்றப் பெறும் பெருஞ் சிறப்பினை நமது தமிழ்மொழி பெற்றுத் திகழ்கின்றது.

திருமுறையென்னும் இப்பெயர் வழக்கினை, "திருமுறையெழுதுவோர் வாசிப்போர்" எனக் கணநாதநாயனார் புராணத்தில் சேக்கிழார் சுவாமிகள் குறிப்பிட்டுள்ளார்கள்.

திருமுறை யென்னுஞ் சொல் வழக்கு மூன்றாங்குலோத்துங்க சோழன் காலத்துக் கல்வெட்டுக்களில்தான் முதன் முதற் காணப் படுகின்றது. இவ்வேந்தன் காலத்துக்கு முன்னுள்ள கல்வெட்டுக் களிலெல்லாம் தேவார ஆசிரியர் மூவரும் பாடியுள்ள திருப்பாடல்கள் திருப்பதியம் எனவே குறிக்கப்பெற்றுள்ளன. எல்லாம் வல்ல இறைவனை இயலிசைத் தமிழ்ப் பாடல்களால் உளமுருகிப் போற்று முகத்தான் அப்பெருமானை அடைந்து இன்புறுதற்குரிய எளிய வழியினை உலகிற்கு அறிவுறுத்திய பெரியோர் தேவார ஆசிரியர்களே ஆவர். "ஆறதேறுஞ் சடையான் அருள் மேவ அவனியர்க்கு, வீறதேறுந் தமிழால் வழி கண்டவன்" எனத் திருஞானசம்பந்தப் பிள்ளையாரைப் பாராட்டிய நம்பியாண்டார் நம்பி, ஞானசம்பந்தப் பிள்ளையார் திருப்பதிக வாயிலாக உலகினர்க்கு அறிவுறுத்திய சமய நெறியினைப் 'பதிகப் பெருவழி'யெனச் சிறப்பித்துப் போற்றியுள்ளார். முழு முதற் கடவுளாகிய சிவபெருமானது பெருஞ் சீர்த்தியும் அப் பெருமான் தன்னடியார்க்கு அருள் வழங்குந் திறமும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நால்வகையாக நிகழும் திருத்தொண்டுகளின் இயல்பும், எல்லாவுயிர்களையும் உய்வித்தல் கருதி உடல், கருவி, உலகு, நுகர்பொருள் என்பவற்றின் உருவாக இறைவனாற் படைத் தளிக்கப் பெறும் இவ்வுலகியற் பொருள்களின் எழில் நலங்களும் ஆகிய பல்வகைப் பொருள்களையும் தொகுத்துரைப்பன இத் திருப்பாடல்களாதலின் இவை பதிகம் எனப்பெயர் பெறுவன ஆயின.

தெய்வப்புலவர் திருவள்ளுவர், தாம் சொல்லக் கருதிய ஒவ்வொரு பொருளையும் பத்துப் பத்துக் குறட்பாக்களால் விளக்கினாற்போன்று தேவார ஆசிரியர்களும் பத்துப் பாடல் களைக் கொண்டது ஒரு திருப்பதிகமாக அருளிச் செய் துள்ளார்கள். திருஞானசம்பந்தர் பாடிய திருப்பதிகங்கள் பதினொரு பாடல்களைக் கொண்டனவாயினும் அவற்றின் இறுதிதோறும் உள்ள பதினோராம் பாடல்களாகிய திருப் பாடல்கள், அவ்வப்பதிகங்கள் பாடப்பெற்ற செவ்வியையும் அவற்றின் பொருள் நலங்களையும் அவற்றைப் பாடிய ஆசிரியரது பெருமையினையும் அப்பதிகங்களைப் பொரு ளுணர்ந்து பயின்று ஓதி இறைவனை வழிபடுவோர் எய்தும் பெரும்பயன்களையும் விளங்கவுரைக்கும் பாயிரம் போன்று அமைந்தனவாதலின், அவ்வப்பதிகத்தின் இறுதிப் பாடல்களைப் பதிகத்தின் வேறாகத் திருக்கடைக்காப்பு என்ற பெயரால் வழங்குவர் சேக்கிழார். திருநாவுக்கரசர் பாடிய திருப்பதி கங்களிற் பெரும்பாலன, பத்துப் பாடல்களால் ஆகியவை.

பாடினோர் பெயரும் பயன் முதலியனவுங்கூறும் திருக்கடைக் காப்புப் பாடல்களைத் திருநாவுக்கரசர் பாடும் வழக்க முடையரல்லர். எனினும் கயிலைமலையிற் சிக்கிய இராவணன் தான் அறியாமையாற் செய்த பெரும்பிழையைப் பொறுத் தருளும்படி சிவபெருமானை வேண்டி இசைபாடி உய்ந்த வரலாற்றைத் தம் பதிகங்களின்இறுதிப் பாடலாகிய பத்தாம் பாடலில் திருநாவுக்கரசர் குறித்துப் போற்றுதலை வழக்கமாகக் கொண்டாராதலின், இராவணனது பேறு குறிக்கும் பத்தாம் பாடல்களே அத்திருப்பதிகத்தைக் காதலாகி ஓதி இறைவனை வழிபடுவோர் எய்தும் பெரும் பயன்களைக் கூறுவனவாக அமைந்துள்ளன. சுந்தரர் தேவாரத்தில், திருஞானசம்பந்தர் திருப்பதிகங்களைப் போன்று திருக்கடைக் காப்புடன் சேர்த்துப் பதினொரு பாடல்களால் இயன்றனவும், திருநாவுக்கரசர் திருப் பதிகங்களைப் போன்று பத்துப்பாடல்களால் இயன்று பத்தாம் பாடலே திருக்கடைக் காப்பாக அமைந்தனவும் என இருதிறப் பதிகங்களும் காணப்படுகின்றன. தேவாரத் திருப்பதிகங்களை ஏட்டில் எழுதித் தொகுத்து முறைப்படுத்திய பின்புதான் அவற்றுக்குத் திருமுறையென்ற பெயர் வழங்கியிருத்தல் வேண்டும். ஆசிரியர் சேக்கிழார் இத்திருப்பதிகங்களைத் திரு முறையென்ற பெயராற் குறித்துப் போற்றுதலை யெண்ணுங்கால் அவர்க்கு நெடுங்காலத்திற்கு முன்பே இத் தெய்வப் பாடல்கள் முறைப்படுத்தப் பெற்றிருந்தன வென்பது நன்கு புலனாம்.

## திருமுறை கண்டது

சைவத் திருமுறைகள் பன்னிரண்டு என வழங்கும் வழக்கம் பன்னிரண்டாந் திருமுறையாகிய திருத்தொண்டர் புராணம் இயற்றப்பெற்ற பின்னரே ஏற்பட்டதென்பது உமாபதி சிவாசாரியார் இயற்றிய சேக்கிழார் புராணத்தால் நன்கு துணியப்படும்.

நம்பியாண்டார்நம்பியின் உதவிபெற்றுத் தேவாரத் திருமுறைகளைத் தில்லைத் திருக்கோயிலிற்கண்டு வெளிப் படுத்திய சோழ மன்னனைத் திருமுறை கண்ட சோழன் எனப் போற்றுவர். அவ்வேந்தர்பெருமானது நன்முயற்சியால் சைவத் திருமுறைகள் தேடித் தொகுக்கப்பெற்ற வரலாற்றை விரித்துக் கூறும் நூல் திருமுறை கண்ட புராணமாகும். இதனை இயற்றியவர் சைவ சித்தாந்த சந்தானாசிரியர் நால்வருள் ஒருவராகிய கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியரென்பது தொன்று தொட்டு வழங்கிவருஞ் செவிவழிச் செய்தியாகும். திருமுறை கண்ட புராணம் நாற்பத்தைந்து செய்யுட்களை

யுடையது. இந்நூலிற் கூறப்பட்ட செய்திகளைச் சுருக்கமாக ஆராய்வோம்.

காவிரிபாயும் சோழவள நாட்டிலே திருவாரூரிலே தியாகராசப்பெருமானை வழிபட்டு அபயகுலசேகரன் என்னும் சிறப்புப்பெயருடைய இராசராசசோழன் சோழநாட்டை ஆட்சி புரிந்துவந்தான். அந் நாளிலே அவனது அவைக்களத்திலே எழுந்தருளிவருஞ் சிவனடியார்கள், மூவர் பாடிய தேவாரப் பதிகங்களுள் தமக்குத் தெரிந்த ஒவ்வொரு திருப்பதிகத்தையே ஓதக்கேட்டுக் கைகளிரண்டும் தலைமேற் குவிந்திடக் கண்களில் தாரைதாரையாக நீர் சொரிய மெய்ம்மயிர் சிலிர்ப்ப நெஞ்சம் நெக்குருக இறைவனை வழிபடும் இன்பநிலை அம் மன்னனுக்கு உளதாயிற்று. தேனினுமினிய தேவாரப் பதிகங்களின் திருவருள் நலத்தில் திளைத்த வேந்தன், மூவர் பாடிய தேவாரத் திருப்பதிகங் களெல்லாவற்றையும் தேடிக் கண்டு ஒரு சேரத் தொகுக்கும் முயற்சியில் ஈடுபட்டான். தேவாரத் திருப்பதிகங்களை எங்குத் தேடியும் அவை முழுதுங்கிடைக்கவில்லை. அதனால் சோழ மன்னன் பெரிதும் வருந்தினான்.

திருநாரையூரிற் பொல்லாப் பிள்ளையார்க்குப் பூசனை புரியும் ஆதிசைவக் குடும்பத்தில் சைவ சமயம் வாழ ஒரு நற்புதல்வர் பிறந்தருளினார். அக் குழந்தை உரிய பருவத்தில் உபநயனஞ் செய்யப்பெற்று வேத முதலிய கலைகளை ஓதிவரும் நாளில், ஒரு நாள் தந்தையார் வேற்றூர்க்குச் செல்ல நேர்ந்தது. அன்று பொல்லாப் பிள்ளையார்க்குச் செய்ய வேண்டிய பூசையைத் தம் புதல்வரைச் செய்யும்படி சொல்லிவிட்டு அவர் வெளியூர்க்குச் சென்றார். தந்தையார் சொல்லியபடி பொல்லாப் பிள்ளையார்க்குப் பூசனை புரியச் சென்ற அவ்விளைஞர், பிள்ளையார்க்குத் திருமஞ்சனம் முதலிய எல்லாஞ் செய்து திருவமுதினைப் பிள்ளையார் திருமுன் வைத்து 'எம்பெருமானே திருவமுது செய்தருளல் வேண்டும்' என வேண்டி நின்றார். பிள்ளையார் திருவமுது செய்யவில்லை. நிவேதனம் என்பது தெய்வத்திற்குத் திருவமுது காட்டுதல் என்னும் பொருளில் வழங்கும் சொல்லாகும். நிவேதிக்குந் திருவமுதை இறைவனே உட்கொள்வான் என்பது அவ்விளங் குழந்தையின் எண்ண மாகும். அவ்வெண்ணத்தால் தூண்டப்பட்ட இளைஞர், 'அடியேன் ஏதேனும் தவறு செய்ததுண்டோ? அடியேன் நிவேதித்த திருவமுதினை உண்ணாதது ஏன்?' என்று சொல்லிக் கொண்டு தமது தலையைக் கல்லிலே மோதப்புக்கார். உடனே பொல்லாப் பிள்ளையார் 'நம்பி பொறு' என்று சொல்லித் தடுத்து, நிவேதன முழுவதையும் உட்கொண்டருளினார். அதுகண்ட இளைஞர் மனமகிழ்ந்து 'எம்பெருமானே இன்று

மிகவும் நேரங்கடந்த நிலையில் அடியேன் பள்ளிக்கூடத்திற்குச் சென்றால் எங்கள் ஆசிரியர் அடிப்பார். ஆதலால் எல்லாக் கலை நூல்களையும் தேவரீரே அடியேனுக்கு ஓதுவித்தல் வேண்டும்' எனக் குறையிரந்து நின்றார். அவர் விரும்பிய வண்ணமே பிள்ளையாரும் அவ்விளைஞர்க்கு எல்லாக் கலைகளையும் ஓதுவித்தருளினார். இங்ஙனம் பொல்லாப் பிள்ளையாரால் ஆட்கொள்ளப் பெற்றமையால் அவ்விளைஞர் நம்பியாண்டார்நம்பியென அழைக்கப்பெற்றுத் திருவிரட்டை மணிமாலை யென்னும் தமிழ்ப் பிரபந்தம் பாடி, தம்மையாட் கொண்ட பொல்லாப்பிள்ளையாரைப் போற்றிப்பரவினார்.

திருநாரையூரில் நிகழ்ந்த இத்திருவருட் செய்தி தமிழ் நாடெங்கும் பரவியது. இதனைக் கேட்டு வியந்த இராசராச மன்னன், திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையாரை வழிபடுதற் பொருட்டுப் பழ வகைகள், தேன், அவல், எள்ளுண்டை முதலிய படைப்புப் பொருள்களை நிறையக் கொண்டு திருநாரையூரை யடைந்து நம்பியாண்டார்நம்பியை வணங்கினான். நம்பியும் மன்னன் விரும்பிய வண்ணம் அவன் கொணர்ந்த நிவேதனப் பொருள்களைப் பிள்ளையார் திருமுன்னர் வைத்த அளவில் அன்பாற் படைத்த அவையெல்லாவற்றையும் பிள்ளையார் திருவமுது செய்தருளினார். அதுகண்டு மகிழ்ந்த மன்னன், நம்பி யாண்டார்நம்பியை வணங்கி, 'வேதியனே சமய குரவர் மூவர் அருளிச் செய்த தேவாரத் திருமுறைகளும் திருத்தொண்டர் வரலாறும் இந்நிலவுலகத்தில் விளக்கம் பெறுதல் வேண்டும்' என வேண்டிக்கொண்டான். வேந்தனது வேண்டுகோளில் அமைந்த அன்பின் திறத்தையுணர்ந்த நம்பியாண்டார்நம்பி, பொல்லாப் பிள்ளையாரை இறைஞ்சி நின்று 'எம்பெருமானே தேவாரத் திரு முறைகள் இருக்கும் இடத்தையும் திருத்தொண்டர்களுடைய வரலாறுகளையும் அடியேனுக்கு அருளிச் செய்தல் வேண்டும்" என வேண்டிக்கொண்டார். அவரது வேண்டுகோளுக்கிசைந்த பொல்லாப்பிள்ளையார், தில்லையில் கூத்தப்பெருமான் திருநடஞ் செய்யும் பொன்னம்பலத்தின் அருகிலே தேவார ஆசிரியர்கள் மூவருடைய அழகிய கைகளின் அடையாளமுள்ள அறையினுள்ளே தேவாரத் திருமுறைகள் வைத்துப் பூட்டப் பெற்றுள்ளன என்று கூறித் திருத்தொண்டர்களுடைய வரலாறு களையும் திருவாய் மலர்ந்தருளினார்.

அருளுரையாகிய அதனைக் கேட்டு மகிழ்ந்த நம்பி யாண்டார்நம்பியும் அபயகுலசேகரனும் தில்லையையடைந்து கூத்தப்பெருமானை வணங்கினார்கள். பின்பு சோழமன்னன் தில்லைச் சிற்றம்பலத்திற்கு மேற்றிசையிலுள்ள அறையிலே தேவாரத் திருமுறைகள் இருத்தலைத் தில்லைவாழ்ந்தணர்

களிடம் தெரிவித்து அவ்வறையைத் திறக்கும்படி வேண்டினான். தேவார ஆசிரியர் மூவருடைய கைகளின் இலச்சினையுடன் பூட்டப்பட்டுள்ள அறையினை அம்மூவரும் வந்தாலன்றித் திறத்தலியலாது எனத் தில்லைவாழந்தணர்கள் கூறினார்கள். உடனே சோழமன்னன் தில்லையம்பலவாணர்க்குச் சிறப்புடைய பூசனை செய்து, தேவார ஆசிரியர் மூவர் திருவுருவங்களுக்கும் வழிபாடியற்றி அத்திருவுருவங்களைத் திருவீதிக்கு எழுந்தருளச் செய்து திருப்பதிகங்கள் சேமித்துவைக்கப்பட்ட அறையின் முன்னர்க் கொண்டுவந்து நிறுத்தி, 'மூவரும் வந்தனர் அறையினைத் திறந்திடுமின்' எனப்பணித்தான். அரசனது ஆணையால் அறை திறக்கப்பட்டது. அவ்வறையினுள்ளே சென்று பார்த்தபொழுது தேவாரப் பதிகங்கள் எழுதப்பெற்ற ஏடுகள் கரையான் புற்றால் மூடப்பட்டுச் சிதைந்த நிலையிலிருந்தன. புற்று மண்ணால் மூடப்பட்டுள்ள அவ்வேடுகளின்மேல் எண்ணெயைச் சொரிந்து அவற்றைப் புறத்தே கொணர்ந்து எடுத்துப்பார்த்த அளவில் அவற்றுட் பெரும்பாலான ஏடுகள் பழுதுபட்டிருந்தன. மன்னன் அளவிலாத் துயரமுற்றான். அந் நிலையில் "தேவாரப் பதிகங்களிலே இக்காலத்துக்கு வேண்டு வனவற்றை மாத்திரம் வைத்துவிட்டு மற்றவைகளைச் செல் லரிக்கச் செய்தோம்" என்றதொரு அருள்வாக்கு அங்குள்ளா ரனைவரும் கேட்கத் தோன்றியது. அதனையுணர்ந்த வேந்தன் ஒருவாறு ஆறுதலடைந்து, செல்லரிக்காது எஞ்சியுள்ள திருப்பதிகங்களை மட்டும் சிதையாமலெடுத்து முன்போலத் தொகுத்துத் தரும்படி நம்பியாண்டார்நம்பியை வேண்டிக் கொண்டான். நம்பியும் மன்னனது வேண்டுகோளுக்கிசைந்து, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்களை முதல் மூன்று திருமுறைகளாகவும், திருநாவுக் கரசுநாயனார் அருளிச் செய்த திருப்பதிகங்களை நான்கு, ஐந்து, ஆறு என மூன்று திருமுறைகளாகவும், சுந்தரமூர்த்திநாயனார் அருளிச் செய்த திருப்பதிகங்களை ஏழாந் திருமுறையென ஒன்றாகவும் வகுத்தருளினார்.

இவ்வாறு தேவாரத் திருப்பதிகங்களை ஏழு திருமுறை களாக வகுத்த பின்பு, மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச் செய்த திருவாசகம், திருக்கோவையார் என்னும் இரண்டு நூல்களையும் எட்டாந் திருமுறையாகவும், திருமாளிகைத் தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பிகாட நம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதர், புருடோத்தமநம்பி, சேதி ராயர் என்னும் ஒன்பதின்மர் பாடிய திருவிசைப் பாப் பதிகங்கள் இருபத்தெட்டும், அவருள் சேந்தனார் பாடிய திருப்பல்லாண் டாகிய பதிகம் ஒன்றும் ஆக இருபத்தொன்பது பதிகங்களையும்

ஒன்பதாந் திருமுறையாகவும், திருமூல நாயனார் அருளிச் செய்த திருமந்திரப் பாடல்களைப் பத்தாந்திருமுறையாகவும், திருவால வாயுடையார் திருமுகப் பாசுரம் முதலிய பிரபந்தங்களைப் பதினொராந் திருமுறையாகவும் வகுத்தருளினார்.

இங்ஙனம் திருமுறைகளை வகுத்த நம்பியாண்டார் நம்பி, தமக்குப் பொல்லாப் பிள்ளையார் உபதேசித்தருளிய வண்ணம் திருத்தொண்டத் தொகையை முதனூலாகக் கொண்டு, தனியடி யார் அறுபத்துமூவரும் திருக்கூட்டத்தாராகிய ஒன்பது தொகை யடியார்களும் ஆகிய திருத்தொண்டர்களின் தொண்டு களையும் அத்தொண்டுகளால் அவர்கள் பெற்ற பேறுகளையும் கட்டளைக் கலித்துறையாப்பினால் அந்தாதியாக அருளிச் செய்தார். பின்னர்த் திருஞானசம்பந்தப் பிள்ளையார் மீது திவந்தாதி, திருச் சண்பை விருத்தம், திருமும்மணிக்கோவை, திருவுலாமாலை, திருக்கலம்பகம், திருத்தொகை என்னும் ஆறு பிரபந்தங்களையும் திருநாவுக்கரச நாயனார் மீது திருவேகாதச மாலையென்னும் பிரபந்தத்தையும் இயற்றி மன்னது விருப்பிற் கிணங்கத் தாம் பாடிய இப்பிரபந்தங்களையும் பதினொராந் திருமுறையிலே சேர்த்தருளினார்.

தேவாரத் திருப்பதிகங்களுக்குரிய பண்முறையினைத் தெரிந்து இசையமைக்க எண்ணிய சோழ மன்னனும் நம்பி யாண்டார்நம்பியும் தில்லைக்கு மேற்கேயுள்ளதும் திருநீலகண்ட யாழ்ப்பாணர் பிறந்தருளியதுமாகிய திருவெருக்கத்தம்புலியூரை யடைந்து, இறைவன் திருக்கோயிலை வலம் வந்து திருமுன் நின்று 'எம்பெருமானே தேவாரத் திருப்பதிகங்களுக்குரிய இன்னிசையினை எங்களுக்கு உணர்த்தியருளுதல் வேண்டும்' என இறைஞ்சிப் போற்றினர். அந் நிலையில் 'திருநீலகண்டப் பெரும்பாணர் மரபிலே பிறந்த பெண்ணொருத்திக்கு இசைத் திறனையளித்துள்ளோம்' என்று ஓர் அருள்வாக்குத் தோன்றியது. அதுகேட்டு அப்பாடினியாரை அழைத்துவந்து கோயில் வாயிலில் நிறுத்தினர். அவ்வளவில் 'இவளைத் தில்லை யம்பலத்திற்கு அழைத்துச்சென்று அங்குத் தேவாரத் திருப்பதி கங்களுக்குப் பண்ணடைவு வகுக்கக் கடவீர்' என மீண்டும் ஓர் அருள்மொழி யெழுந்தது. அதனைக் கேட்ட சோழ மன்னனும், நம்பியாண்டார்நம்பியும் அவ்வம்மையாரைத் தில்லையம்பல முன்றிலில் அழைத்து வந்து தேவாரத் திருப்பதிகங்களுக்குப் பண் வகுக்கச் செய்தார்கள். அங்ஙனமே தேவாரப் பண்களுக்குரிய கட்டளைகள் வரையறுக்கப்பெற்றன. இறைவன் திருவருட் டுணை கொண்டு அம்மையார் வகுத்த இசை மரபே தேவாரத் திருப்பதிகங்களுக்குப் பொருந்திய தெய்வ இசையாகத் தென்னாட்டிற் சிறப்புற்று வளர்வதாயிற்று.

# திருமுறைகண்ட சோழன்

இவ்வாறு நம்பியாண்டார் நம்பியின் துணைகொண்டு தேவாரத் திருமுறைகளைத் தேடித் தொகுத்த சோழவேந்தன், திருவாரூர்த் தியாகேசப் பெருமானை வழிபட்டு ஆட்சி புரிந்தவனென்றும், இராசராசன் அபயகுலசேகரன் என்னும் பெயர்களையுடையவனென்றும் திருமுறைகண்ட புராணம் கூறும். 'ஆயுமறை மொழிநம்பியாண்டார் நம்பி அருள் செய்த கலித்துறை யந்தாதி தன்னைச், சேய திருமுறைகண்ட ராசராச தேவர் சிவாலய தேவர் முதலாயுள்ள, ஏய கருங்கடல் புடை சூழுலகமெல்லாம் எடுத்தினிது பாராட்டிடிற்று' என்பர் அந் நூலாசிரியர். எனவே திருமுறைகண்ட சோழன் இராசரா... னென்னும் பெயருடையவனென்பது, அந்நூலாசிரியர் கருத்தென்பது நன்கு புலனாகின்றது.

இராசராசன் என்னும் பெயருடைய சோழமன்னர் மூவர் இருந்திருக்கிறார்கள். இம்மூவர்களேயன்றி வீரராசேந்திரன், விக்கிரமன் முதலிய சோழ மன்னர்களும் பாண்டியரிற் சிலரும் தம்மை இராசராசன் எனக் கூறிக்கொள்வதைக் கல்வெட்டுக் களிற் காண்கின்றோம். எனவே இராசராசன் என்னும் இப்பெயர் அக்காலத்தில் ஒவ்வொருவர்க்கேயுரிய இயற் பெயராகவும் அரசர் பலர்க்கும் உரிய பொதுப்பெயராகவும் வழங்கியதெனத் தெரிகின்றது. இனி இவ்வேந்தனுக்கு அபய குலசேகரன் என்ற மற்றொரு பெயரும் வழங்கியதாகத் திருமுறை கண்ட புராணம் கூறும். அபயன் என்னும் பெயர் முதற் குலோத்துங்க சோழனையும் அவனுடைய பேரன் இரண்டாங் குலோத்துங்க சோழனையுங் குறித்து வழங்கியுளது. இதுகாறும் ஆராய்ந்து கண்ட அளவிற் குலசேகரன் என்ற பெயர் சோழ மன்னருள் ஒருவர்க்கும் வழங்கியதாகத் தெரியவில்லை. குலசேகரன் என்னும் பெயருடைய சேரமன்னரும் பாண்டிய மன்னரும் இருந்தனரென்பது கல்வெட்டுகளாலும் தமிழ் நூல்களாலும் புலனாகின்றது. ஆகவே அபயகுலசேகரன் என்னும் பெயர், சோழமன்னருள் ஒருவனைக் குறித்து வழங்கிய இயற்பெயரெனக் கொள்ளுதற்கில்லை. திருமுறைகண்ட புராண ஆசிரியர் அம்மன்னனைக் குறித்துப் புகழ்ந்து போற்றிய புனைந் துரையாகவே அப்பெயரைக் கருதவேண்டியுளது.

இராசராசன் என்னும் பெயரை யுளத்துட் கொண்டு, திருமுறை கண்ட சோழன் தஞ்சை இராசராசேச்சரத் திருக் கோயிலைக் கட்டிய முதலாம் இராசராச சோழனே என

ஆராய்ச்சியாளர் பலரும் துணிந்து கூறுவார். முதலாம் இராசராச சோழனுக்கு அருண்மொழித்தேவன் என்ற மற்றொரு பெயரும் உண்டு. "சிந்தையருட் சிவமாகத் தெளிவித்தான் அருட்சென்னி" எனவரும் திருமுறைகண்ட புராணச் செய்யுளில் இவ்வேந்தனை அருட்சென்னி என அந்நூலாசிரியர் குறித்துப் போற்றுதலால் அருள்மொழித்தேவன் என்ற பெயருடைய முதலாம் இராசராச சோழனே திருமுறைகண்ட இராசராச மன்னன் எனக்கொள்ளுதற்கு இடமுண்டாயிற்று. திருமுறை கண்ட புராணத்திற் குறிப்பிடப்பெற்ற இராசராச அபயகுல சேகரன் என்பான் முதல் இராசராச சோழனாவன் என்றும் அவ்வேந்தனே நம்பியாண்டார்நம்பியின் துணைகொண்டு திருமுறைகளைத் தேடிக் கண்டு பின்னர் அவற்றைத் தொகுப் பித்தவன் என்றும் ஆராய்ச்சியாளர் கூறுவாராயினர். அது பற்றியே அம்மன்னனும் திருமுறைகண்ட சோழன் என்று வழங்கப்படுகின்றனன். தமிழகச் சைவ சமய வரலாற்றில் உறுதிப் படுத்தப்பட்டதாகக் கருதப்படும் இக்கொள்கையிற் சில ஐயங்கள் தோன்றுவதால் இதனை மீண்டும் ஆராய்வது இன்றியமை யாததாகும்.

நம்பியாண்டார் நம்பி இயற்றிய பத்து நூல்கள் பதினொராந் திருமுறையிற் காணப்படுகின்றன. அவற்றுள் திருத்தொண்டர் திருவந்தாதி என்பதும் ஒன்றாகும். அது சேக்கிழாரடிகள் திருத்தொண்டர் புராணமாகிய பெரிய புராணம் பாடுதற்கு ஆதாரமாகக் கொண்ட நூல்களுள் ஒன்று. அவ்வுண்மையை,

> அந்த மெய்ப்பதி கத்தடியார்களை
> நந்தம் நாதனாம் நம்பியாண்டார் நம்பி
> புந்தியாரப் புகன்ற வகையினால்
> வந்தவாறு வழாமல் இயம்புவாம்.

என்னும் அவ்வடிகளது திருவாக்கினால் நன்கறியலாம். எனவே திருத்தொண்டர் வரலாற்றை மிகச் சுருக்கமாகக் கூறும் வகை நூலாகிய திருத்தொண்டர் திருவந்தாதி, நம்பியாண்டார் நம்பியினால் இயற்றப்பெற்றது என்பதிற் சிறிதும் ஐயமில்லை. அந்நூல் தொகையடியார் ஒன்பதின்மர், தனியடியார் அறுபத்து மூவர் ஆகிய எழுபத்திரண்டு சிவனடியார் வரலாற்றையும் எண்பத்தொன்பது இனிய பாடல்களிற் கூறுகின்றது. தனி யடியார்களை அறுபத்துமூவர் என்று கணக்கிட்டு முதலில் உணர்த்தியவர் நம்பியாண்டார் நம்பியேயாவர்.

இப்பெரியார், தாம் பாடிய திருத்தொண்டர் திருவந் தாதியில் புகழ்ச் சோழர், இடங்கழியார், கோச்செங்கட் சோழர் ஆகிய அடியார்களைப் பற்றிய பாடல்களில் தம்காலத்துச் சோழ

மன்னன் ஒருவனைக் குறிப்பிட்டுள்ளார். தம்மை அன்புடன் ஆதரித்துப் போற்றி வந்த அரசர், வள்ளல் முதலானோரின் பெயர்கள் என்றும் நின்று நிலவுமாறு அவர்களைத் தம் நூல்களிற் புகழ்ந்து போற்றுதல், நம் தமிழ் நாட்டில் முற் காலத்தில் வாழ்ந்த புலவர் பெருமக்களின் வழக்கம் என்பது தொன்னூலாராய்ச்சி யுடையார் யாவரும் அறிந்த தொன்றாம். அத்தகைய செயல், புலவர்களின் நன்றி மறவாமையாகிய அருங்குணத்தை உணர்த்தும் எனலாம்.

சிவநெறிச் செல்வராகிய நம்பியாண்டார் நம்பியும் தம்மை அன்புடன் ஆதரித்துவந்த ஆதித்தன் என்ற சோழமன்னன் ஒருவனைத் தாம்பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியில் மூன்று பாடல்களிற் பாராட்டியுள்ளார். அப்பாடல்கள்,

'புலமன்னிய மன்னைச் சிங்கள நாடு பொடிபடுத்த
குலமன்னிய புகழ்க்கோகன நாதன் குலமுதலோன்
நலமன்னிய புகழ்ச்சோழன தென்பர் நகுசுடர்வாள்
வலமன்னிய எறிபத்தனுக் கீந்ததோர் வண்புகழே' (50)

'சிங்கத்துருவனைச் செற்றவன் சிற்றம்பல முகடு
கொங்கிற்கனக மணிந்த ஆதித்தன் குலமுதலோன்
திங்கட் சடையர் தமரதென் செல்வ மெனப்பறைபோக்
கெங்கட் கிறைவன் இருக்குவேளூர்மன் இடங்கழியே' (65)

'செம்பொன் அணிந்து சிற்றம்பலத்தைச்சிவ
லோகமெய்தி
நம்பன் கழற்கீழ் இருந்தோன் குலமுதல் என்பர் நல்ல
வம்புமலர்த் தில்லை யீசனைச்சூழ மறைவளர்த்தான்
நிம்ப நறுதொங்கற் கோச்செங்கணானெனும்
நித்தனையே'

என்பனவாம். இவற்றில் அச்சோழன் கொங்கு நாட்டிலிருந்து பொன்கொணர்ந்து தில்லைச் சிற்றம்பலத்தைப் பொன் வேய்ந்தவன் என்றும், புகழ்ச்சோழர் இடங்கழியார், கோச் செங்கட்சோழர் ஆகிய அடியார்களைத் தன் முன்னோர் களாகக் கொண்டவன் என்றும் இவ்வாசிரியர் கூறியிருப்பது உணரற்பாலதாகும். ஆகவே இப்புலவர் பெருமான் அவ்வரசன் காலத்தில் இருந்திருத்தல் வேண்டும் என்பது தேற்றம். இனி, அவ்வேந்தன் யாவன்? என்பது ஆராயற்பாலதாம்.

சோழ மன்னருள் ஆதித்தன் என்னும் பெயருடையார் இருவர் ஆவர். அவர்களுள் முதல்வன், பரகேசரி விசயாலய சோழன் புதல்வனாகிய முதல் ஆதித்த சோழன் என்பான். மற்றையோன், சுந்தரசோழன் மூத்தமகனும் முதல் இராசராச சோழன் தமையனுமாகிய இரண்டாம் ஆதித்த சோழனாவன்

இவனை ஆதித்த கரிகாலன் என்றும் அந்நாளில் வழங்கியுள்ளனர். இவன், தன் தந்தையின் ஆட்சியில் இளவரசனாக இருந்த நாட்களிற் சில அரசாங்க அலுவலாளர்களாற் கொல்லப்பட்டுப் போனான் என்பது, தென்னார்க்காடு சில்லா சிதம்பரம் தாலுக்காவிலுள்ள உடையார்குடியிற் காணப்படும் ஒரு கல்வெட்டால் அறியப்படுகின்றது.* (*Epigraphia Indica Vol. XXI. No.27). எனவே இளவரசனாகிய இவன் இளமைப் பருவத்திற் கொலையுண்டிறந்தமை தெளிவாம். ஆகவே, இவன் சிற்றம்பலத்தைப் பொன்வேய்ந்து சிலலோக மெய்தினான் என்று கூறுவதற்குச் சிறிதும் இடமில்லை. இந்நிலையில் சிற்றம்பலத்தைப் பொன் வேய்ந்தவனாக நம்பியாண்டார்நம்பி குறிப்பிட்ட ஆதித்தன் என்பான் விசயாலய சோழன் புதல்வனும் முதற் பராந்தக சோழன் தந்தையும் கி.பி. 870 முதல் 907 வரையில் சோழ மண்டலத்தை ஆட்சி புரிந்த பெருவேந்தனுமாகிய முதல் ஆதித்த சோழனேயாவன். இவன் பல்லவ அரசனாகிய அபராசித வர்மனைப் போரில் வென்று தொண்டைமண்டலத்தைக் கைப்பற்றிய காரணம் பற்றித் 'தொண்டைநாடு பரவின சோழன் பல்யானைக் கோக்கண்டனாயின ராசகேசரி வர்மன்'* (*South Indian Inscription Vol. III, No.89) என்று வழங்கப்பெற்றுள்ளான். இவன் ஆட்சியிலேதான் சோழநாடு உயர்நிலையை எய்தியது. இவன் கொங்கு நாட்டைக் கைப்பற்றித் தலைக்காடு என்ற நகரையும் பிடித்துக்கொண்டான் என்று 'கொங்கு தேச ராஜாக்கள்' என்னும் வரலாற்று நூல் கூறுகின்றது.* (*செந்தமிழ்-தொகுதி 16, பக்கம் 394). ஆகவே, கொங்கு நாட்டைக் கைப்பற்றிய இம் மன்னர்பிரான்* (*முதற்பராந்தகன் கல்வெட்டுகள் கொங்கு நாட்டிற் காணப்படுதலாலும் அவன் அதனைக் கைப்பற்றியதாகக் கூறிக் கொள்ளாமையாலும் அந்நாடு அவன் தந்தை முதலாம் ஆதித்தனால் கைப்பற்றப்பட்டிருத்தல் வேண்டுமென்பது திண்ணம்). அந்நாட்டிலிருந்து பொன் கொணர்ந்து தில்லைச் சிற்றம்பலத்தைப் பொன் வேய்ந்திருத்தல் வேண்டும் என்பது நன்கு துணியப்படும். இவன் காவிரியாற்றின் இருமருங்கும் பல சிவாலயங்களைக் கற்றளிகளாக அமைத்த சிவபத்தன் என்று அன்பிற் செப்பேடுகள்* (*Ep. Ind. Vol. XV, No. 5, Verse 18.) கூறுவது ஈண்டு அறியத்தக்கது.

இனி, ஆதித்தன் புதல்வன் முதற்பராந்தக சோழன் என்பான், தில்லைச் சிற்றம்பலத்தைப் பொன்வேய்ந்தான் என்று ஆனைமங்கலச் செப்பேடுகளும்* (*Ibid. Vol. XXII, No. 34, Verse 17.) திருவாலங்காட்டுச் செப்பேடுகளும்* (* S.I.I. Vol. III, No. 205, Verse 53.) உணர்த்துகின்றன. கண்டராதித்தர் திருவிசைப்பாவும் இச் செய்தியை உறுதிப்படுத்துகின்றது. எனவே முதற்பராந்தக சோழனது ஆட்சிக் காலத்திலும் தில்லைச் சிற்றம்பலம் பொன் வேயப்பட்டது என்று தெரிகிறது.

முதற் குலோத்துங்க சோழனது ஆட்சியின் 44-ஆம் ஆண்டாகிய கி.பி. 1114-இல் அவன் தங்கை குந்தவையென்பாள் தில்லைக்கோயிலைப் பொன்வேய்ந்தனளென்று அக்கோயிற் கல்வெட்டொன்று அறிவிக்கின்றது. அவன் மகன் விக்கிரம சோழன் என்பான் கி.பி. 1128-ல் சிற்றம்பலத்தைச் சூழ்ந்த திருச்சுற்று மாளிகையையும் திருக்கோபுரத்தையும் பொன் வேய்ந்தான் என்று அவன் மெய்க்கீர்த்தி கூறுகின்றது.* (* S.I.I. Vol. V, No. 458). அவன் படைத்தலைவனாகிய மணவிற்கூத்தன் காலிங்க ராயன் என்பவன் தில்லையிற் பொன்னம்பலத்தைப் பொன் வேய்ந்தான் என்று அங்குள்ள கல்வெட்டுக்களுள் ஒன்று தெரிவிக்கின்றது* (* Ibid. Vol. IV, No. 225.) விக்கிரமசோழன் மகனாகிய இரண்டாங் குலோத்துங்க சோழன் தில்லைச் சிற்றம் பலத்தையும் பிறவற்றையும் பொன்வேய்ந்தான் என்று இராச ராசசோழனுலா உணர்த்துகின்றது.* (* இராசராசசோழனுலா, வரிகள் 59-66).

இவற்றையெல்லாம் கூர்ந்து நோக்குமிடத்து, சோழ மன்னர் ஆட்சிக் காலங்களில் தில்லைச் சிற்றம்பலம் பன்முறை பொன்வேயப்பெற்றிருத்தல் வேண்டுமென்பது நன்கு புலனாம். ஆனால் அதனை முதலில் பொன் வேய்ந்த சோழ மன்னன் முதலாம் ஆதித்தனேயாவன் என்பது நம்பியாண்டார் நம்பியின் திருவாக்கினால் வெளியாகின்றது. இப் பெரியார் தம் காலத்தில் இவ்வேந்தன் அவ்வரும் பணியாற்றிய காரணம் பற்றி அச் செயலைத் தம் திருத்தொண்டர் திருவந்தாதியிற் பாராட்டி யுள்ளனர் என்பது தெள்ளிது. இவர் சிதம்பரத்திற்கு அண்மையி லுள்ள திருநாரையூரிலிருந்தவராதலின் இவ்வரசன் தில்லையிற் புரிந்த அத்திருத் தொண்டில் தாம் நேரிற் கலந்துகொண்டு அதனை அறிந்திருத்தலும் இயல்பேயாம்.

ஆகவே, நம்பியாண்டார் நம்பி இவன் ஆட்சிக் காலமாகிய கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும் பத்தாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்தவராதல் வேண்டும். இக்கவிஞர் பெருமான் அந்நூலிலுள்ள 82-ஆம் பாடலில் இவன் சிவபெருமான் திருவடி நீழலெய்திய செய்தியையும் குறிப்பிடு தலால் இவனுக்குப் பிறகு கி.பி. 907-ல் பட்டம் பெற்ற இவன் புதல்வன் முதற்பராந்தக சோழன் ஆட்சியின் முற்பகுதியிலும் சில ஆண்டுகள் வரையில் இருந்திருத்தல் கூடும்.

இனி, ஆதித்தன் சிங்கள நாடு வென்ற செய்தியொன்று நம்பியாண்டார் நம்பியால் திருத்தொண்டர் திருவந்தாதியிற் சொல்லப்பட்டுள்ளது. அதனை உறுதிப்படுத்தக்கூடிய வேறு சான்றுகள் இந்நாளிற் கிடைக்கவில்லை. எனினும், அதனை எளிதாகத் தள்ளிவிட இயலவில்லை. சோழர் பேரரசை நிறுவும் பொருட்டு வடக்கும் மேற்கும் படையெடுத்துச் சென்று முறையே

தொண்டை மண்டலத்தையும் கொங்கு மண்டலத்தையும் கைப்பற்றித் தன் ஆளுகையின் கீழ்க்கொண்டு வந்த இம்மன்னர் பிரான், தென் கிழக்கேயுள்ள சிங்கள நாடாகிய ஈழமண்டலத்தின் மேலும் படையெடுத்துச் சென்றிருத்தல் கூடும். இவன் புதல்வன் முதற் பராந்தக சோழன் அந்நாட்டின் மேல் படையெடுத்துச் சென்று அதனைக் கைப்பறினான் என்பது, அவன் கல்வெட்டுக்களால் அறியப்படுகின்றது. எனவே ஆதித்த சோழன் முதலில் தொடங்கிய அச்செயலை அவன் புதல்வன் தன் ஆட்சியில் நிறைவேற்றியுள்ளமை குறிப்பிடத்தக்கது. ஆகவே, ஆதித்தனது சிங்கள நாட்டுப் படையெழுச்சியைப்பற்றி நம்பியாண்டார் நம்பி கூறியிருப்பது சிறிதும் புனைந்துரையாகாதென்க.

நம்பியாண்டார் நம்பி முதலாம் இராசராச சோழனைத் தாம் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியிற் குறிப்பிடாமையொன்றே இவர் அவ்வேந்தன் காலத்தவரல்லர் என்பதை நன்கு புலப்படுத்துவதாகும். இந்நிலையில் திருமுறைகண்ட புராணத்தில் தெளிவின்றியமைந்துள்ள இராசராச அபய குல சேகரன் என்ற தொடர், முதல் இராசராச சோழனைக் குறிக்குமென்று கருதுவது பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை. அன்றியும், முதல் இராசராச சோழன் என்பான் நம்பியாண்டார் நம்பியின் துணைகொண்டு சமயகுரவர் மூவர் திருப்பதிகங்களையும் தேடிக்கண்டனன் என்னுங் கொள்கைக்கு முரணாக, அவ்வேந்தனுடைய முன்னோர்களான முதல் ஆதித்தன், முதற் பராந்தகன், உத்தம சோழன் ஆகிய சோழ மன்னர்களின் ஆட்சிக் காலங்களிற் கோயில்களில் மூவருடைய பதிகங்களையும் நாள் தோறும் பாடுவதற்கு நிவந்தங்கள் அளிக்கப்பெற்றுள்ளன. இவ்வுண்மையை அவர்களுடைய ஆட்சியிற் பொறிக்கப் பெற்றுள்ள கல்வெட்டுக்களால் நன்கறியலாம். முதல் ஆதித்த சோழனாட்சியில் கி.பி. 873-ல் திரு எறும்பியூரிலும்* (* Ins.129 of 1914) கி.பி. 876-ல் பழுவூரிலும்,* (* Ins.349 of 1918) முதற்பராந்தக சோழனாட்சியில் கி.பி. 910-ல் திருவாவடுதுறையிலும்,* (* Ins.139 of 1925) கி.பி. 911-ல் அல்லூரிலும்,* (* S. I. I. Vol. VIII, NO. 687) கி.பி. 944-ல் திருத்தவத்துறையிலும்,* (* Ins. 99 of 1929) உத்தமசோழனாட்சியில் கி.பி977-ல் கோனேரிராசபுரம் என்னும் திருநல்லத்திலும்* (S.I.I. Vol.III, No.151A) கி.பி. 984-ல் அந்துவநல்லூரிலும்* (* Ibid No.129) திருப்பதிகங்கள் பாடுவதற்கு நிவந்தங்கள் வழங்கப்பட்டுள்ளன. இவையெல்லாம் முதல் இராசராச சோழனாட்சிக்கு முன்னர் நிகழ்ந்தவையாகும். எனவே அம் மன்னது ஆட்சிக் காலத்திற்குப் பல ஆண்டுகட்கு முன்பே சமயகுரவர் மூவருடைய திருப்பதிகங்களும் கோயில்களிற் பாடப்பெற்று வழக்கிலிருந்து வந்தன என்பது வெளிப்படை.

ஆகவே நம்பியாண்டார் நம்பியின் துணை கொண்டு திருமுறை கண்டவன் முதலாம் இராசராச சோழன் என்று கூறுவது ஏற்புடைத்தன்றாம்.

இதுகாறும் ஆராய்ந்தவாற்றால் நம்பியாண்டார் நம்பி முதல் இரசாராச சோழன் காலத்தில் இருந்தவரல்லரென்பதும், முதல் ஆதித்த சோழன் ஆட்சிக் காலத்திலும் அவன் புதல்வன் முதற் பராந்தக சோழனாட்சியின் முற்பகுதியிலும் இருந்தவராவ ரென்பதும் நன்கு விளங்குதல் காண்க. எனவே இப்புலவர் பெருமான் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும் பத்தாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் நம் தமிழகத்தில் வாழ்ந்தவர் என்பது ஆராய்ச்சிப் பேரறிஞர் திருவாளர் T.V. சதாசிவ பண்டாரத்தார வர்கள் ஆராய்ந்து கண்ட முடிபாகும்.* (* செந்தமிழ்-தொகுதி, 45 பக்கம் 715).

திருமுறைகண்ட புராணத்தின் இறுதிச் செய்யுளில் "திருத் தொண்டர்பதம் துதிப்பாம்" என அந்நூலாசிரியர் தோற்றுவாய் செய்துகொண்டதற்கேற்ப அவ்வாசிரியராற் பாடி முடிக்கப் பட்ட நூல், திருத்தொண்டர் புராணசாரம் என்பதாகும். இது திருத்தொண்டர் புராணமென்னும் பெயருடைய பெரிய புராணத்தின் சாரமாக அமைந் தமையால் திருத்தொண்டர் புராண சாரமென்னும் பெயருடைய தாயிற்று. இந்நூலின் சிறப்புப் பாயிரமாக அமைந்த பாடற் பகுதியில் "அல்லலறுத் தெனை யாண்ட சைவ சிகாமணியார் அருட்புலியூர் உமா பதியார் அருள் செய்தாரே" என வருதலால் திருத்தொண்டர் புராண சாரமென்னும் நூலினை இயற்றிய உமாபதி சிவாசாரியாரே திருமுறை கண்ட புராணத்தையும் இயற்றியவரென்பது நன்கு பெறப்படும். திருத்தொண்டர் புராண சாரத்தையடுத்துக் காணப்படும் திருத் தொண்டர் புராண வரலாறென்னும் சேக்கிழார் புராணத்தைப் பாடியவரும் இப் பெரியாரேயாவர். இச் செய்தி,

**திருக்கிளரும் கயிலைமலைக் காவல் பூண்ட**
**செல்வமலி திருநந்தி மரபில் வந்து**
**கருக்குழியில் எமைவீழா தெடுத்தாட் கொள்ளுங்**
**கருணைமிகு மெய்கண்ட தேவர் தூய**
**மருக்கிளர்தாள் பரவும் அருணந்தி தேவர்**
**மகிழும் மறை ஞானதே வருக்கன்பாகி**
**இருக்கும் உமாபதிதேவர் சேக்கிழார் தம்**
**இசைப்புரா ணமுரைத்தார் என்பமாதோ.**

எனவரும் சேக்கிழார் புராணச் சிறப்புப்பாயிரப் பாடலால் இனிது விளங்கும். இங்ஙனமாகவே சைவத் திருமுறைகள் பன்னிரண்டின் வரலாற்றையும் விளங்க விரித்தருளிய பெரியார் கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியாரே என்பது நன்கு பெறப்படும்.



# திருமுறைப் பயிற்சி

நம்பியாண்டார் நம்பி திருமுறைகளை வகுக்குங்கால் மூவர் திருப்பதிகங்களையும் முன்போலவே ஏழு திருமுறைகளாகவே வகுத்தார் எனத் திருமுறை கண்ட புராணம் கூறுகின்றது. எனவே மூவர் திருப்பதிகங்களும் நம்பியாண்டார் நம்பியின் காலத்திற்கு முன்பே ஏழு பகுதிகளாக வகுக்கப்பட்டிருந்தன என்பது நன்கு பெறப்படும். திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகங்களை அவருடன் சென்ற அடியார்கள் எழுதியும் பாடியும் வந்தனரென்பது வரலாறு. மதுரையில் சமணரொடு வாது செய்யக் கருதிய ஆளுடைய பிள்ளையார், தாம் பாடிய திருப்பாடல்களெழுதப்பெற்ற திருமுறையேட்டிற் கயிறு சாத்திப் பார்த்து எரியிலிட்டு வெற்றி பெருதற்குரிய 'போகமார்த்த' என்ற திருப்பதிகத்தினைத் தெரிந் தெடுத்த செய்தியும், மதுரையிற் சமணரை வாதில் வென்ற பிள்ளையார் திருத்தெளிச்சேரியை அடைந்த நிலையில் புத்தர்கள் கூட்டங்கூடித் தம் தலைவன் புத்த நந்தியுடன் சேர்ந்து பிள்ளையாரது வரவைத் தடுத்த பொழுது, திருஞானசம்பந்தப் பிள்ளையார் பாடியருளும் தேவாரத் திருப்பதிகங்களை எழுதி வரும் இயல்புடைய அடியாரொருவர், 'புத்தர் சமண் கழுக்கையர்' எனத் தொடங்கும் பஞ்சாக்கரத் திருப்பாடலைப் பாடிப் புத்த நந்தியின் மேல் இடிவிழச் செய்தமையும் இவ் வுண்மையினை வலியுறுத்துவனவாகும். இவ்வாறே திருநாவுக் கரசருடன் சென்ற அடியவர்கள் அரசர் பாடியருளிய திருப்பதி கங்களை எழுதியிருத்தல் வேண்டும். இவ்விரு பெருமக்களும் இறைவன் திருவருளிற் கலந்த பின்னர்ச் சீகாழிப் பதியிற் பிறந்த கணநாத நாயனாரால் ஆதரிக்கப்பெற்ற சிவனடியார்கள், அருளாசிரியர் பாடிய திருமுறைகளை எழுதியும் வாசித்துப் பொருள் கூறியும் போற்றிக் காவல் செய்துள்ளார்கள். இவ்வடியார்களால் எழுதி வாசிக்கப்பெற்ற திருமுறைகள் என்பன கணநாத நாயனார்க்கு முன்னிருந்த திருஞானசம்பந் தரும் திருநாவுக்கரசரும் அருளிச்செய்த தேவாரத் திருமுறை களேயாதல் வேண்டும். இப் பெருமக்கள் பாடியருளிய திருப்பதிகங் களெல்லாவற்றையும் இவர்கட்குப் பின்வந்த நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் நன்கு பயின்று இறைவன் திருமுன்னர்ப் பாடி அப் பெருமானது திருவருளை நிரம்பப் பெற்று மகிழ்ந்துள்ளார். இவ்வுண்மை,

'நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக்
கரையனும் பாடிய நற்றமிழ்மாலை
சொல்லியவே சொல்லி யேத்துகப்பானை'

எனவரும் சுந்தரர் வாய்மொழியால் இனிது புலனாதல் காண்க.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடியருளிய தேவாரத் திருப்பதிகங்களை அவருடன் சென்ற அடியார்கள் பயின்று ஏட்டில் எழுதிப் பேணி வைத்துள்ளார்கள். இறைவன் வரவிடுத்த வெள்ளானையின் மீதமர்ந்து கயிலைக்குச் செல்லும் நம்பியாரூரர், தாம் வழியிற் பாடிப் போற்றிய 'தானெனை முன் படைத்தான்' என்ற திருப்பதிகத்தைத் திருவஞ்சைக் களத் திருக்கோயிலிலே சென்று சேர்க்கும்படி வருணனுக்குக் கட்டளையிட்டாரென்பது,

ஊழிதொ றூழிமுற்று முயர் பொன்னொடித்தான் மலையைச்
சூழிசை யின்கரும்பின் சுவைநாவலவூரனவன்
ஏழிசை யின்றமிழா லிசைந் தேத்திய பத்தினையும்
ஆழி கடலரையா அஞ்சையப்பர்க் கறிவிப்பதே.

எனவரும் அப்பதிகத் திருக்கடைக்காப்பால் நன்கு புலனாம். ஆரூரர் கட்டளையினைத் தலைமேற்கொண்டு வருணனும் இத் திருப்பதிகத்தைத் திருவஞ்சைக் களத்திலே கொண்டுவந்து சேர்த்தானெனவும், அவ்வாறே சுந்தரருடன் கயிலை சேர்ந்த சேரமான் பெருமாள் பாடிய திருக் கயிலாய ஞான உலாவைக் கயிலைமால் வரையிற் கேட்டு மகிழ்ந்த மாசாத்தனார் திருப்பிடவூரில் வந்து எல்லோர்க்கும் புலனாக அவ்வுலாப் பிரபந்தத்தை வெளிப்படுத்தியருளினாரெனவும் பெரியபுராணம் கூறுகின்றது. இங்கெடுத்துக் காட்டிய குறிப்புக்களால் தேவார ஆசிரியர் காலத்துப் பாடப்பெற்ற திருமுறைப் பகுதிகள் யாவும் அக்காலத்து ஒருசேரத் தொகுக்கப்பட்டு மக்களால் விரும்பிப் பயிலப்பெற்றன என்பது இனிது விளங்குதல் காணலாம். விஜயநந்தி விக்கிரமனாகிய நந்திவர்ம பல்லவமன்னனது 17-ஆம் ஆட்சியாண்டில் (கி.பி. 750) திருவல்லம் திருக்கோயிலிற் பொறிக்கப்பட்ட 'கல்வெட்டொன்றில்' "திருப்பள்ளித்தாமம் பறிப்பார்க்கும் திருப்பதிகம் பாடுவாருள்ளிட்ட பல பணி செய்வார்க்கும் நெல்லு நானூற்றுக்காடியும்" எனக் குறிக்கப் படுதலால் கி.பி. எட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியிலேயே மூவருடைய தேவாரப்பதிகங்கள் திருக்கோயில்களிற் பாடப் பெற்றுவந்த செய்தி நன்கு புலனாகின்றது. தேவார ஆசிரியர்கள் வாழ்ந்த காலத்தையொட்டியே அவர்களாற் பாடப்பெற்ற திருப் பதிகங்களைத் திருக்கோயில்களில் இசையுடன் பாடுதற்குரிய ஓதுவார்களை நியமித்து அவர்களுக்கு வேண்டும் உணவு உடை

முதலியவற்றிற்கென நிலமும் பொருளும் வழங்கும் வழக்கம் நாட்டில் நிலைபெற்றதென்பதற்கு மேற்காட்டிய நந்திவர்மன் காலத்துத் திருவல்லத்துக் கல்வெட்டே பொருந்திய சான்றாகும். தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு சோழர் ஆட்சியை மீண்டும் நிலைபெறச்செய்த விசயாலயன் முதலாகவுள்ள எல்லாச் சோழமன்னர்களும் பிற்காலப் பாண்டியர்களும் தேவாரப் பாடல்பெற்ற திருக்கோயில்களைக் கற்றளிகளாக்கி அங்கு மூவர் திருவுருவங்களை யெழுந்தருளச் செய்துநாள் வழிபாட்டிற்கும் திருவிழாச் சிறப்பிற்கும் திருக்கோயில்களில் நாடோறும் திருப்பதிகம் விண்ணப்பஞ்செய்தற்கும் வேண்டும் நிவந்தங்களை வழங்கியுள்ளார்கள்.

திருமுறையாசிரியர்களாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருமூலர், காரைக் காலம்மையார், ஐயடிகள் காடவர்கோன், சேரமான் பெருமாள் ஆகிய அருளாசிரியர்களையுள்ளிட்ட அறுபத்து மூன்று தனி யடியார்களின் வரலாறுகளையும் தில்லைவாழந்தணர், முதலிய ஒன்பது தொகையடியார்களின் இயல்பினையும் வகைப்படுத்துக் கூறுமுகமாகத் திருத்தொண்டர் திருவந்தாதி பாடிய நம்பி யாண்டார்நம்பி, தேவார ஆசிரியர்களின் வரலாற்றினையும் அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகங்களில் அமைந்த பொருள் நலங்களையும் தம் நூல்களில் முதன்முதல் தொகுத்து விளக்கியுள்ளார். பல்வேறு திருத்தலங்களில் தனித்தனியே ஓதப் பெற்றுவந்த தேவாரத் திருப்பதிகங்களையெல்லாம் ஒரு சேரத் தேடித் தொகுத்தற்கு நம்பியாண்டார்நம்பியே துணையாக இருந்தார் என்பதற்கு அவர் பாடிய நூல்களே சான்றாக அமைந்துள்ளன. இனித் திருமுறை வகுப்பினைக் குறித்து ஒரு சிறிது ஆராய்வோம்.



# திருமுறைப் பாகுபாடு

மூவர் பாடிய தேவாரத் திருப்பதிகங்களை முன்போலவே ஏழு திருமுறைகளாக நம்பியாண்டார் நம்பி வகுத்தமைத்தபின், திருவாதவூரடிகள் அருளிய திருவாசகம் எட்டாந் திருமுறையாக வைக்கப்பட்டது. திருவாதவூரடிகள் பாடியருளிய திருச் சிற்றம்பலக் கோவையைக் கோவைத் திருவாசகம் என வழங்கும் வழக்குண்மையால்* (* சிவப்பிரகாசம், மதுரைச் சிவப்பிரகாச ருரை.) திருவாசகம் திருச்சிற்றம்பலக் கோவை என்னும் இரண்டி னையும் திருவாசகம் என ஒன்றாகவே கொண்டு பண்டையோர் அந்நூல்களை எட்டாந் திருமுறையாக வகுத்தார்களெனத் தெரிகிறது. திருமாளிகைத் தேவர் முதலிய ஒன்பதின்மர் பாடிய

திருவிசைப்பாமாலை அவற்றையடுத்து ஒன்பதாந் திருமுறையாக வைக்கப்பட்டது. திருமூலர் திருவாய்மலர்ந்தருளிய திருமந்திர மாலை பத்தாந் திருமுறையாக வைக்கப்பட்டது. திருவால வாயு டையார், காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர்கோன், சேரமான் பெருமாள், நக்கீரதேவர், கல்லாடதேவர், கபிலதேவர், பரண தேவர், இளம்பெருமானடிகள், அதிராவடிகள், திருவெண் காட்டடிகள், நம்பியாண்டார்நம்பி ஆகிய பன்னிருவர் அருளிச் செய்த நாற்பது பிரபந்தங்களும் பதினொராந் திருமுறையென ஒருதிருமுறையாகத் தொகுக்கப்பெற்றன. மேற்கூறிய பதினொரு திருமுறைகளையும் நம்பியாண்டார் நம்பியே தொகுத் துதவினார் எனத் திருமுறைகண்ட புராணம் கூறுகின்றது.

ஒன்பதாம் திருமுறையாகிய திருவிசைப்பாப் பதிகங்களிற் பல, நம்பியாண்டார் நம்பி வாழ்ந்த காலத்திற்கு நெடுங்காலம் பிற்பட்டுத் தோன்றிய ஆசிரியர்களாற் பாடப்பட்டனவாகும். இச்செய்தி கங்கை கொண்ட சோழேச்சரம், இராச ராசேச்சரம், திரைலோக்கிய சுந்தரம் முதலிய திருக்கோயில்களைப் போற்றிய திருப்பதிகங்களாற் புலனாகின்றது. தம்காலத்திற்குப் பின்னர் வாழ்ந்த கருவூர்த்தேவர் முதலிய பெரியோர்களாற் பாடப்பெற்ற திருவிசைப் பாத்திருப்பதிகங்களை நம்பியாண்டார்நம்பி ஒன்பதாந் திருமுறையாக வரிசைப்படுத்துதற்கும் அதனையடுத்துத் திருமந் திரத்தைப் பத்தாந்திருமுறையாக வைத்தற்கும் ஒரு சிறிதும் இயைபில்லையென்பது மேற்காட்டிய குறிப்பினாற் பெறப்படும். திருமுறை வகுத்த நம்பியாண்டார் நம்பியே தாம் போற்றிப்பரவும் முன்னோர் நூல்களுடன் தாம் இயற்றிய நூல்களையும் சேர்த்துப் பதினொராந் திருமுறையென்ற பெயரால் ஒரு திருமுறையாகத் தொகுத்திருக்கமாட்டார். எனவே ஒன்பது முதல் பதினொன்றுவரை அமைந்த திருமுறை வகுப்பு, நம்பி யாண்டார் நம்பியால் அமைக்கப்பெற்றதன்றென்பது நன்கு பெறப்படும். ஆகவே நம்பியாண்டார் நம்பியின் காலத்திற்குப் பின்னரும் சேக்கிழார் நாயனார் காலத்திற்கு முன்னரும் வாழ்ந்த சிவநெறிச் செல்வர்களே ஒன்பது முதல் பதினொன்று முடிய வுள்ள திருமுறைகளை வகுத்துத்தந்தனரெனக் கொள்ள வேண்டியுளது.

பதினொராந்திருமுறையில், தேவார ஆசிரியர் மூவர்க்கும் காலத்தால் முற்பட்ட திருமூலர், காரைக்காலம்மையார் ஆகிய பெருமக்கள் அருளிச்செய்தனவும், தேவார ஆசிரியர் காலத்தில் வாழ்ந்த ஐயடிகள் காடவர்கோன், சேரமான்பெருமாள் ஆகிய பெரியோர்கள் பாடியனவும், தேவார ஆசிரியர் காலத்திற்குப் பின் தோன்றிய திருவெண்காட்டடிகள், நம்பியாண்டார் நம்பி முதலியோர் பாடியனவும், காலங்கடந்த தனி முதல்வனாகிய

ஆலவாயில் அவிர்சடைக் கடவுள் பாணபத்திரர் பொருட்டுப் பாடியருளிய திருமுகப் பாசுரமும் ஆகிய அருள் நூல்கள் ஒரு சேரத் தொகுக்கப் பெற்றுள்ளன. இவ்வாறு காலவகையால் வேறுபட்டுள்ள இந்நூல்களையெல்லாம் நம்பியாண்டார்நம்பி ஒரே திருமுறையாகத் தொகுத்திருத்தல் இயலாது. ஆகவே திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் பாடிய தேவாரத் திருபதிகங்களை மட்டுமே நம்பியாண்டார் நம்பி ஏழு திருமுறைகளாகத் தேடித்தொகுத்தாரெனவும், எட்டு முதல் பதினொன்று வரையுள்ள திருமுறைகள் நம்பியாண்டார் நம்பி காலத்திற்குப் பின் தோன்றிய பெருமக்களால் அம்முறையே தொகுக்கப்பெற்றிருத்தல் வேண்டுமெனவும் கொள்ளுதலே வரலாற்றுமுறைக்குப் பெரிதும் பொருந்துவ தாகும். கி.பி. பதினான்காம் நூற்றாண்டில் இயற்றப்பெற்றது திருமுறை கண்ட புராணமாதலின், தேவாரத் திருமுறைகளையே யன்றி நாளடைவில் வகுக்கப்பெற்று வழங்கிய எட்டு முதல் பதினொன்று வரையமைந்த திருமுறைகளையும் நம்பி யாண்டார்நம்பியே வகுத்தாரென அக்காலத்தில் வழங்கிய செய்தியை உடன்பட்டுக் கூறுவதாயிற்று. செவிவழிச் செய்தியினிடையே நுழைந்த இத்தகைய சிறு வேறுபாட்டினைக் காட்டித் திருமுறைகண்ட புராண ஆசிரியர் உமாபதி சிவாசாரி யாரல்லர் எனத் துணிந்து கூறுவாருமுளர். நெடுங்காலத்திற்கு முன் நிகழ்ந்த செய்திகளைக் கூறவந்த எந்த நூலிலும் இத்தகைய சிறிய வேறுபாடுகள் இடம் பெறுதலியல் பாதலின் இஃதொன்றே கொண்டு திருமுறை கண்ட புராண ஆசிரியர் உமாபதி சிவசாரியாரென்று நெடுங்காலமாக. வழங்கிவரும் வரலாற்றுரையினை மறுத்துரைத்தல் பொருந்தாதென்க.

இனி, நம்பியாண்டார் நம்பியால் முறைப்படுத்தப்பட்ட தேவாரத் திருமுறைகள் ஏழனுள் திருஞானசம்பந்தர் திருப்பதி கங்கள் முன்னரும் அவற்றையடுத்துத் திருநாவுக்கரசர் திருப்பதி கங்களும் சுந்தரர் திருப்பதிகங்களும் பின்னரும் அமைதற்குரிய காரணங்களை ஆராய்வோம். திருஞானசம்பந்தப்பிள்ளை யாரும் திருநாவுக்கரசரும் நெருங்கிய நட்புடையவர்களாய் ஒரு காலத்தில் வாழ்ந்தவர்களென்பதும் அவ்விருவருள்ளும் மிக முதிர்ந்த வயதுடையவர் திருநாவுக்கரசரென்பதும் அவ்விரு பெருமக்களது வரலாற்றினை விரித்துக் கூறும் பெரிய புராணத்தால் இனிது விளங்கும். இவ்விரு பெருமக்களும் இறைவன் திருவருளிற் கலந்து மறைந்த சில ஆண்டுகளுக்குப் பின் தமிழ் நாட்டில் திருவவதாரம் செய்தவர் சுந்தரமூர்த்தி சுவாமிகளாவர். இம்மூவருள் திருஞானசம்பந்தர் பாடிய திருப்பதிகங்களை முதல் மூன்று திருமுறைகளாகவும்

திருநாவுக்கரசர் பாடிய திருப்பதிகங்களை நான்கு ஐந்து ஆறாம் திருமுறைகளாவும் இவ்விருவர்க்கும் பின் வந்த சுந்தரர் பாடிய திருப்பதிகங்களை ஏழாந் திருமுறையாகவும் முன்னுள்ள பெருமக்கள் வரிசைப்படுத்தி எழுதி வந்தார்களென்பதும் அம்முறையைப் பின்பற்றியே நம்பியாண்டார் நம்பியும் தம் காலத்திற் கிடைத்த மூவர் திருப்பதிகங்களையும் ஏழு திருமுறை களாக வரிசைப்படுத்தினாரென்பதும் திருமுறை கண்ட புராணத்தாற் புலனாம். சமகாலத்தில் வாழ்ந்தவர்களாகிய திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் என்னும் இருவருள் முதிர்ந்த வயது உடையவர் திருநாவுக்கரசரென்பது எல்லார்க்கும் உடன் பாடாதலின், அவர் பாடிய பதிகங்களை முதலாகக்கொண்டு தேவாரத் திருமுறைகளை ஏன் முறைப்படுத்தியெழுதுதல் கூடாது எனச் சிலர் வினவுதல் கூடும். ஒன்று முதல் ஏழுவரை யமைந்த இத் தேவாரத் திருமுறைகளின் வரிசைமுறை அவ்வாசிரியர்களின் பிறந்தகுலம் வயது முதலிய உலகியல் முறையினை ஒருசிறிதுங் கருதாமல் அப்பெருமக்கள் இவ்வுலக வாழ்வினைத் துறந்து இறைவன் திருவருளிற் கலந்து வீடு பெற்ற கால அடைவினையுளத்துட்கொண்டு அமைக்கப் பெற்றதாகும். திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருநல்லூர்ப் பெருமணத்தில் தம் திருமணத்திற்கு வந்த அடியார் திருக்கூட்டத்தோடு சிவ பெருமானது ஈறில் பெருஞ்சோதியினிற் புகுந்த சில ஆண்டுகள் கழிந்தபின்பே திருநாவுக்கரசர் திருப்புகலூரில் நண்ணரிய சிவானந்த ஞான வடிவேயாகி அண்ணலார் சேவடிக்கீழ் எய்தி யின்புற்றார் என்பது ஆசிரியர் சேக்கிழார் கருத்தாகும். இக்கருத்து திருநாவுக்கரசர் புராணத்தையும் திருஞானசம்பந்தர் புராணத்தையும் ஒருங்கு வைத்து ஆராய்வார்க்கு இனிது விளங்கும். திருநாவுக்கரசர் திருஞானசம்பந்தர் என்னும் இருவருள் முழுமுதற் பொருளாகிய சிவபெருமானது திருவருளை இன்னிசைச் செந்தமிழ்ப் பாடல்களால் முதன்முதற் போற்றியவர் திருஞானசம்பந்தப்பிள்ளையாரே யாவர். தேவாரத் திருமுறைகளுள் முதன்முதல் பாடப்பெற்ற பழமை யுடைய திருப்பதிகம் 'தோடுடைய செவியன்' எனத் தொடங்கும் திருஞானசம்பந்தப்பிள்ளையார் தேவாரமேயாகும். சிவபெரு மானை இன்னிசைத் தமிழால் முதலிற் பாடிப் போற்றினமை யாலும் அப்பெருமான் திருவடியில் முதலிற் கலந்தமையாலும் திருஞானசம்பந்தப்பிள்ளையார் அருளிச்செய்த தேவாரத் திருப் பதிகங்கள் முதல்மூன்று திருமுறைகளாக வகுத்துரைக்கப் பட்டன. திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருநல்லூர்ப் பெருமணத்தில் இறைவன் திருவடியிற் கலந்து மறைந்தபின்னர்த் திருப்புகலூரில் திருநாவுக்கரசர் இறைவன் திருவடிகளிற் கலந்து மறைந்தாராதலின் அவர் பாடியருளிய திருப்பதிகங்களை அடுத்து நான்கு, ஐந்து, ஆறாந் திருமுறைகளாக வரிசைப்படுத்தப்

பட்டன. இவ்விருவர்க்கும் காலத்தாற் பிற்பட்ட சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச் செய்த திருப்பதிகங்கள் அவ்விருவர் திருப் பதிகங்களையடுத்து ஏழாந்திருமுறையாக அமைக்கப்பெற்றன. மாணிக்கவாசக சுவாமிகள் சுந்தரர்க்குக் காலத்தாற் பிற்பட்டவ ராதலின் அவர் பாடியருளிய திருவாசகத்தையும் திருச் சிற்றம்பலக் கோவையையும் சுந்தரர் தேவாரமாகிய ஏழாந்திரு முறையையடுத்து எட்டாந்திருமுறையாக வைத்தது மிகவும் பொருத்தமுடையதேயாகும். சைவசமய குரவர் நால்வரையும் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் என வழங்கும் இம்முறையிலேயே அவர்கட்குப் பின்வந்த பட்டினத்துப் பிள்ளையார் முதலிய பெருமக்களனைவரும் வரிசை பெற வைத்துப் போற்றியுள்ளார்கள். இவ்வாறு வரிசைப் படுத்து எண்ணுதற்கு இப்பெருமக்கள் நால்வரும் ஒருவர்பின் ஒருவராகச் சிவபதமடைந்த கால முறையே காரணமாகும். இக்கருத்தே பொருத்தமுடையதென்பதனைத் தஞ்சை K.S. ஸ்ரீனிவாச பிள்ளையவர்கள் தாமெழுதிய தமிழ் வரலாறு என்னும் நூலில் தெளிவாக விளக்கியுள்ளார்கள்.

திருமுறை யென்னும் இப்பெயர் மூவர் திருப்பதிகங்களுக்கு மட்டுமே வழங்கியதாகும். நம்பியாண்டார் நம்பியின் காலத் திற்குப் பின்புதான் இப்பெயர் திருவாசகம் முதலிய ஏனைய நூல்களுக்கும் உரியதாய் வழங்கப்பெற்ற தென்பது திருமுறை கண்ட வரலாற்றால் நன்கு பெறப்படும்.



# தேவாரம் என்னும் பெயர் வழக்கு

மூவர் திருப்பதிகங்களைத் தேவாரம் என வழங்கும் வழக்கம் இரட்டைப் புலவர்கள் பாடிய ஏகாம்பரநாதருலாவில்தான் முதன்முதற் காணப்படுகின்றது.

> "மூவாதபேரன்பின் மூவர் முதலிகளும்
> தேவாரஞ்செய்த திருப்பாட்டும்"

என்பது அவ்வுலாவிலுள்ள தொடராகும். இத்தொடரில் தேவாரஞ்செய்த திருப்பாட்டு என்புழித் தேவாரம் எனப் பெயர் நிலையில் வைத்துரையாமல் தேவாரஞ் செய்த என வினை நிலையில் வைத்துரைத்தலால் 'திருப்பாட்டு' என்பது மூவர் பாடிய திருப்பாடல்களையும் 'தேவாரஞ் செய்த' என்பது அத்திருப்பாடல்களை இசைப்படுத்திப் பாடிய தொழில் நிலையையும் குறித்து நின்றன எனக் கொள்ளவேண்டியுளது.

மூவர் திருப்பதிகங்களையும் தேவாரம் என்ற பெயரால் முதன் முதல் தெளிவாகக் குறிப்பிட்டு வழங்கியவர் சைவ

எல்லப்ப நாவலராவர். இவர், தாம் பாடிய திருவருணைக் கலம்பகத்தில் சைவசமய குரவர் நால்வரையும் போற்றும் காப்புச் செய்யுளில் "வாய்மை வைத்த சீர்த்திருத் தேவாரமும் திருவாசகமும், உய்வைத் தரச்செய்த நால்வர் பொற்றாள் எம் உயிர்த் துணையே" எனப் பாடிப் பரவுகின்றார். இத் தொடரில் மூவர் திருப்பதிகங்களும் தேவாரம் என்ற பெயராற் குறிக்கப் பட்டிருத்தல் காணலாம். இரட்டையர்க்குக் காலத்தாற் பிற் பட்டவர் எல்லப்பநாவலர். இரட்டையர் ஏகாம்பர நாதருலாவிற் குறிப்பிட்ட திருப்பாட்டும் சைவ எல்லப்பநாவலர் குறிப்பிட்ட தேவாரமும் ஒன்றேயென்பது இங்கெடுத்துக் காட்டிய எல்லப்ப நாவலர் கூற்றால் இனிது புலனாகின்றது. மூவர் திருப்பதிகங் களையும் 'தேவாரஞ் செய்த திருப்பாட்டு' என இரட்டையர் அடைகொடுத்துச் சிறப்பித்தற்குரிய காரணத்தினை ஒரு சிறிது நோக்குவோமாக.

தேவாரம் என்னும் இத்தொடர்க்கு அறிஞர் பலரும் வேறுவேறாகப் பொருள் கொண்டனர். இதனைத் தேவ+ஆரம் எனப்பிரித்து இறைவனுக்கு மாலையாயது எனப் பொருள் கூறுவர். சிலர், தேவார ஆசிரியர் மூவரும் இறைவனுக்கு அணியும் பாமாலைகளாக அழகிய திருப்பதிகங்களைப் பாடிப் போற்றிய திறத்தை இன்னோர் தம் கொள்கைக்கு ஆதாரமாகக் காட்டுகின்றனர். தே+வாரம் எனப் பிரித்துத் தெய்வத்தினிடத்து அன்பை விளைவிப்பது எனப் பொருள் கூறுவர் சிலர். "வாரமாகித் திருவடிக்குப் பணிசெய் தொண்டர் பெறுவ தென்னே" எனவரும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரத்தில் வாரம் என்னும் சொல் இறைவன்பால் மெய்யடியார்கள் வைத்த பேரன்பு என்னும் பொருளில் வழங்கப் பெறுதல் இவண் கருதற்குரியதாகும். கி.பி. 1321 முதல் 1339 வரை படை வீட்டு ராச்சியத்தை யாண்ட மல்லிநாத சம்புவராயன் காலத்துப் புலவர் பெருமக்களான இரட்டையர்களே* (* திரு. தி.வை. சதாசிவ பண்டாரத்தார் எழுதிய தமிழிலக்கிய வரலாறு [13,14,15 ஆம் நூற்றாண்டுகள்] பக்கம் 66) மூவர் திருப்பதிகங்களையும் தேவாரம் என்ற பெயரால் முதன் முதல் வழங்கியுள்ளார்கள். 11, 12-ஆம் நூற்றாண்டுகளில் வரையப்பெற்ற சோழவேந்தர் கல்வெட்டுக் களில் தேவாரம் என்ற சொல் வழிபாடு என்ற பொருளில் வழங்கப்பெற்றுள்ளது. மூவர் திருப்பதிகங்களும் இறை வழி பாட்டிற் பாடப்பெற்று வந்தமை பற்றிக் கி.பி. பதினான்காம் நூற்றாண்டு முதல் அப்பதிகங்கள் தேவாரம் என்ற பெயரால் வழங்கப்பெற்று வருகின்றன வென்றும் அதற்கு முன் அப் பதிகங்கள் தேவாரம் என்ற பெயரால் வழங்கப்பட்டு வந்தன வென்பதற்குக் கல்வெட்டுக்களிலோ அன்றி இலக்கியங்களிலோ

சான்றுகள் கிடைக்கவில்லை யென்றும் திருவாளர் தி. வை. சதா சிவ பண்டாரத்தாரவர்கள் ஆராய்ந்தெழுதிய 'தேவார மென்னும் பெயர் வழக்கு' என்ற தலைப்புடைய கட்டுரையில்* (*செந்தமிழ் 45-ஆம் தொகுதி பக்கம் 121-128) தெளிவாக விளக்கி யுள்ளார்கள். அவர்கள் எடுத்துக்காட்டியபடி தேவாரம் என்ற பெயர் சோழர் கல்வெட்டுக்களில்தான் முதன் முதல் காணப் படுகின்றது. கி.பி. பதினொராம் நூற்றாண்டுக்கு முன் தேவாரம் என்ற சொல் வழிபாடு என்னும் பொருளில் வழங்கியதென்பதற்கு இலக்கியச் சான்றோ கல்வெட்டாதரவோ கிடைக்கவில்லை. எனவே தேவாரமென்ற சொல் சோழ மன்னராட்சிக் காலத்து வழிபாடென்னும் பொருளில் வழங்கப் பெறுதற்குரிய காரணம் யாது என ஆராய்தல் இன்றியமையாததாகும்.

தே என்பது தெய்வம் என்னும் பொருளைக் குறித்து வழங்கும் ஓரெழுத் தொருமொழி. வாரம் என்பது இசையின் கூறுபாட்டினைக் குறித்து வழங்குந் தமிழ்ச்சொல். வாரமாவது முதல்நடை, வாரம், கூடை, திரள் என்னும் இசையியக்கம் நான்கினுள் ஒன்று. மந்தநடையுடையதாய்த் தாழ்ந்து செல்லும் இன்னிசையியக்கம் முதனடையெனப்படும். முடுகிச் செல்லும் விரைந்த நடையினையுடைய இசையியக்கம் திரள் எனப்படும். இவ்விரண்டிற்கும் இடை நிகர்த்ததாய்ச் சொல்லொழுக்கமும் இசையொழுக்கமும் பொருந்திய பாடல் வாரம் எனப்படும். சொற்செறிவும் இசைச்செறிவும் உடைய பாடல் கூடையெனப் படும். இவ்விசையியக்கம் நான்கின் இயல்பினையும் சிலப் பதிகார வுரையில் அரும்பதவுரையாசிரியரும் அடியார்க்கு நல்லாரும் நன்கு விளக்கியுள்ளார்கள். இழுமென ஒழுகிய சொல் நடையும் செம்பாகமாகப் பொருளுணர்த்தும் பொருட்டெளி வும் வாய்க்கப்பெற்ற செய்யுளே வாரம் என்னும் இசையியக்கம் வாய்ந்த பாடலாகுமென்பது அடியார்க்கு நல்லார் முதலிய உரையாசிரியர்களின் கருத்தாகும். இயற் பாட்டுடன் இசைக் கூறுபாடுகளை இசைத்துப் பாடவல்ல இசைப்புலவனை வல்லோன் எனவும் அவனால் இயற்பாடலுடன் புணர்க்கப்படும் இசைக்கூறுபாட்டினை 'வாரம்' எனவும் இயலிசைத் திறத்தில் வன்மையில்லாதவனாற் புணர்க்கப்பெறும் வார இசை சிதைந் தொழியுமியல்பிற்றெனவும் "வல்லோன் புணரா வாரம் போன்றே" எனவரும் உவமையால் ஆசிரியர் தொல்காப்பிய னார் விளங்க வுணர்த்தியுள்ளார்.

இயற்கை வனப்பும் தெய்வ வனப்புமாகிய இருவகை வனப்புகளே இசைப்பாடலுக்குரிய சிறப்புடைப் பொருள் களெனப் பண்டைத்தமிழாசிரியர் கருதினர். இக்கருத் தினாலேயே இசைப்பாடல்கள் யாவும் முதற்பொருளும்

கருப்பொருளுமாகிய உலகியற் பொருள்களின் இயற்கையழகினையும் அவற்றின் உடனாய் விளங்குந் தெய்வ அழகினையும் பொருளாகக் கொண்டு பாடப் பெறுவன வாயின. இசையில் வல்ல பாணர் முதலிய கலைச்செல்வர் தம் இசைத்திறத்தை அவையின்கண் புலப்படுத்தும்பொழுதெல்லாம் இசைப் பாடலுக்குச் சிறப்புடைப்பொருளாய் விளங்கும் முழுமுதற் பொருளைப் போற்றும் தெய்வப்பாடலையே முதன்மையாகப் பாடுவது வழக்கம். பண்டை நாளில் வாழ்ந்த பாணர் முதலியோர் இம்முறையினைத் தொன்றுதொட்டு வரும் இசை மரபாகக் கொண்டு போற்றுதலைத் தமது முதற்கடமையாகக் கடைப்பிடித்து வந்துள்ளனர். இச் செய்தியினைப் பத்துப் பாட்டுள் ஒன்றாகிய மலைபடுகடாத்துள்,

"மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்
நரம்புமீ திறவா துடன்புணர்ந் தொன்றிக்
கடவ தறிந்த இன்குரல் விறலியர்
தொன்றொழுகு மரபிற் றம்மியல்வு வழாஅது
அருந்திறற் கடவுட் பழிச்சிய பின்றை
விருந்திற் பாணி கழிப்பி" (534-39)

எனவரும் அடிகளிற் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் தெளிவாக விளக்கியுள்ளமை காணலாம்.

'வாரம் பாடுதல்' என்பது, இசைப்பாடலாற் கடவுளைப் போற்றி வழிபடுதல் என்ற பொருளில் கடைச் சங்ககாலத்தே வழங்கி வந்ததாகத் தெரிகிறது. சிலப்பதிகார அரங்கேற்று காதையிலே,

"தொன்னெறி யியற்கைத் தோரிய மகளிரும்
சீரியல் பொலிய நீரல நீங்க
வாரம் இரண்டும் வரிசையிற்பாட"

எனவரும் தொடர்க்கு "ஆடிமுதிர்ந்தாராகிய மகளிர் நன்மை யுண்டாகவும் தீமை நீங்கவும் வேண்டித் தெய்வப்பாடல் பாட" என அரும்பதவுரையாசிரியரும் அடியார்க்கு நல்லாரும் பொருள் கூறியுள்ளார்கள். எனவே இத்தொடரில் வந்த வாரம் என்ற சொல் தெய்வப்பாடல் என்ற பொருளில் இளங்கோவடிகளால் ஆளப்பட்டதென்பது நன்கு பெறப்படும். அன்றியும் சிலப்பதி காரத்திற் கடலாடுகாதையில் திருமாலைப்பாடும் தேவபாணியும் இறைவனைப் போற்றும் தேவபாணியும் வருணப் பூதர் நால்வரையும் பரவும் நால்வகைத் தேவபாணியும் ஞாயிறு திங்கள் என்னுந் தெய்வத்தைப் பரவிய தேவபாணியும் கூத்தின் கண் பாடுதற்குரிய இசைப்பாடல்களாகக் கொள்ளப்பட்டன என இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார். பரணியென்பது

பண்ணோடு கூடிய இசைப்பாட்டு. தெய்வத்தைப் பண் பொருந்தப் போற்றிப் பாடிய இசைப்பாடல் தேவ பாணியெனப் பெயர் பெறுவதாயிற்று.

"தேவபாணி முதலாக அரங்கொழிசெய்யுள் ஈறாகவுள்ள செந்துறை விகற்பங்களெல்லாம் புறநாடகங்களுக்குரிய உருவாவன" என அடியார்க்கு நல்லார் கூறுவர்.

தெய்வத்தை முன்னிலையில் வைத்துப் பரவிய பாடலே தேவபாணியென வழங்கும் சிறப்புடையதாகும். இதனை,

"ஏனையொன்றே
தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே"

என்ற செய்யுளியற் சூத்திரத்தில் ஒத்தாழிசைக் கலியின் வகையாகத் தொல்காப்பியர் குறிப்பிடுவர். ஒத்தாழிசைக்கலி முன்னிலையிடமாகத் தேவரைப் பராவும் பொருண்மைத்து என்பது மேற்குறித்த செய்யுளியற் சூத்திரத்தின் பொருளாகும். எனவே தெய்வத்தினை முன்னிலையாகச் சொல்லப்பட்டனவே தேவபாணியாம், அல்லன தேவபாணியெனத்தகா எனவும் தெய்வம் படர்க்கையாயவழிப் புறநிலை வாழ்த்தாம் எனவும், தெய்வம் தன்மையில் சொல்லிற்றாகச் செய்யுள் செய்தல் கூடா தெனவும் கூறுவர் பேராசிரியர். தேவபாணி முத்தமிழ்க்கும் பொதுவென்றும் அஃது இயற்றமிழில் வருங்கால் கொச்சக வொருபோகாய்ப் பெருந்தேவபாணி சிறுதேவபாணியென இருவகைத்தாய் வருமென்றும் அவ்வாறு வரும் தரவினை நிலை யென அடக்கி முதலிலுள்ள தரவினை முகநிலையெனவும் இடையிலுள்ள தரவினை இடைநிலையெனவும் இறுதியில் நிற்பனவற்றை முரிநிலையெனவும் பரவுதற் பொருண்மையால் செய்யுளியலில் ஆசிரியர் பெயர் கொடுத்தாரென்றும் அடியார்க்கு நல்லார் விளக்கங் கூறுவர்.

"கூறிய வுறுப்பிற் குறைபா டின்றித்
தேறிய விரண்டு தேவபாணியும்"

என்பது அடியார்க்கு நல்லார் தரும் உரைமேற்கோளாகும்.

தேவபாணி யென்னும் பெயரையொட்டியே தேவாரம் என்னும் இப்பெயரும் தோன்றி வழங்கியிருத்தல் வேண்டும். தேவபாணி யென்பது முன்னிலையிடத்தில் தெய்வத்தைப் பரவிய செய்யுளைக் குறித்த பெயரென்பது பேராசிரியர் கருத்தாகும். வாரம் என்பது முன்னிலைப் படர்க்கை என்னும் ஈரிடத்திற்கும் பொதுவாகிய தெய்வப் பாடலைக் குறித்து வழங்குவதாகும். வாரமென்னுஞ் சொல்லுக்கு இசையியக்கம் நான்கினுள் ஒன்று என்னும் பொதுப்பொருளும் தெய்வப்

பாடல் என்ற சிறப்புப் பொருளும் உரியனவாதலின். அப் பொது நீக்கித் தெய்வப்பாடல் என்ற சிறப்புப் பொருளையே அச்சொல் தருதல் வேண்டிப் பிற்காலத்தார் அதனைத் தேவாரம் எனச் சிறப்புடை அடைமொழியுடன் சேர்த்து வழங்குவாராயினர். இன்னிசையால் இறைவனைப் பாடிப் போற்றுதலையே பண்டைத்தமிழர் சிறப்புடைக் கடவுள் வழிபாடாகக் கைக் கொண்டொழுகினர். அதனால் தெய்வ இசைப்பாட்டினைக் குறித்த தேவாரம் என்னுஞ்சொல் இறைவனை உளமுருகிப் போற்றும் வழிபாட்டினையும் குறிப்பதாயிற்று.

முதல் இராசராச சோழன் கங்கைகொண்ட சோழன் கங்கைகொண்ட சோழன் முதலிய சோழ மன்னர்கள், மூவர் முதலிகள் பாடியருளிய தேவாரத் திருப்பதிகங்களைக் காதலாகி ஓதி எல்லாம்வல்ல சிவபெருமானை வழிபடும் பதிகப் பெரு வழியில் ஒழுகியவராவர். அன்னோர் தாம் வழிபடுதற்கென அமைத்துக்கொண்ட இறைவன் திருவுருவினைத் தேவாரதேவர் எனவும், திருப்பதிகம் ஓதி வழிபாடு செய்தற்குரிய பூசை யிடத்தினைத் தேவாரத்துச் சுற்றுக்கல்லூரியெனவும், தாம் செய்யும் இறைவழிபாட்டிற்குச் சாதனமாக மூவர் திருப்பதிகங் களையும் இசையுடன் பாடி உள்ளத்திற்கு அமைதியுண்டாக இசைத்தொண்டு செய்பவரைத் தேவாரநாயகம் எனவும் கல் வெட்டுகளிற் குறித்து வழங்கியுள்ளனர். இவ்வாறு கல்வெட்டுக் களில் குறித்து வழங்கியுள்ளனர். இவ்வாறு கல்வெட்டுக்களில் தேவாரம் எனக் குறிக்கப்படும் வழிபாட்டிற்கும் தெய்வப் பாடல் களாகிய மூவர் திருப்பதிகங்களுக்கும் நெருங்கிய தொடர்புண்டு எனலாம். "நம் தேவாரத்துத் திருப்பதியம் பாடும் பெரியான் மறைகேடும் பொருளான அகளங்கப் பிரியனுக்கும்" எனவும் "உறையூர்க் கூற்றத்துத் திருவடகுடி மகாதேவர் ஸ்தான மடம் தேவாரத்துக்குத் திருப்பதியம் விண்ணப்பஞ் செய்யும் அம்பலத் தாடி திருநாவுக்கரையனுக்கும்" எனவும் வரும் கல்வெட்டுத் தொடர்கள்,* (* தென்னிந்திய கல்வெட்டு, தொகுதி VIII, எண் 260, ஷை எண். 675) வழிபாட்டிற்கும் தெய்வப் பாடல்களுக்குமுள்ள நெருங்கிய தொடர்பை நன்கு புலப்படுத்தல் காணலாம். மேற்குறித்த கல்வெட்டுத் தொடரொன்றில் திருவடகுடி மகா தேவர் ஸ்தானமடம் என வழிபாடு நிகழுமிடத்தைக் குறித்தபின் மீண்டும் தேவாரத்துக்கு எனச் சுட்டியதன் கருத்து ஈண்டு நோக்கத்தக்கதாகும். இத்தொடரில் வந்துள்ள தேவார மென்னுஞ் சொல் கடவுள் வழிபாட்டிற்கு இன்றியமையாத தெய்வப்பாடல் பாடுதலாகிய இசைத் தொண்டினைச் சிறப்பாகக் குறித்து நிற்றல் காணலாம். முதல் இராசேந்திரனது ஆட்சி காலத்தில் நாங்கூருடையான் பதஞ்சலிப்பிடாரன்

என்பான் தேவார நாயகம் என அழைக்கப் படும் சிறப்பினைப் பெற்றான் என் அறிகின்றோம்.* (* ஆண்டறிக்கை 1932, எண் 97). பிடாரன் என்னும் சொல், இசை பாடுபவனைக் குறித்து வழங்கும் பெயராகும். எனவே பதஞ்சலி பிடாரன் தேவார நாயகம் என அழைக்கப்பெறுதற்கு அவன் கற்றுவல்ல தெய்வ இசைப்பாடலே கருவியாயமைந்ததென்பது உய்த்துணரப்படும்.

திரிபுவனச்சக்கரவர்த்திகள் இராசராச தேவரது 27-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்றில் திருக்கழுமலம் திருத் தொண்டீஸ்வரமுடைய நாயனார் கோயிலையடுத்துத் "திரு முறைத் தேவாரச்செல்வன்மடம்" என ஒரு திருமடம் குறிக்கப் பட்டுள்ளது. மூன்றாம் இராசேந்திர சோழனது 4-ஆம் ஆட்சி யாண்டில் முன்னியூரில் வரையப்பெற்ற கல்வெட்டில் திருத் தோணிபுரமுடையநாயனார் கோயிலையடுத்துத் 'திருமுறைத் தேவாரச்செல்வன் குகை' என ஒரு திருமடம் இருந்தமை குறிக்கப் பட்டுள்ளது. திருமுறையாகிய தேவாரம் என்ற பொருளிலேயே இத்தொடர்கள் இயைத்துரைக்கப் பெற்று வழங்கியிருத்தல் வேண்டும். இதனால் இரண்டாம் இராசராசசோழன் காலத்தில் தேவாரம் என்ற சொல் திருமுறையாகிய இசைப்பாடலையே குறித்து வழங்கியதென்பது நன்கு புலனாதல் காணலாம். கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வடநாட்டு இசை நூலாசிரியரான சாரங்க தேவரென்பார் தாம் இயற்றிய 'சங்கீத ரத்னாகரம்' என்ற வடமொழி இசை நூலில், மூவர் திருப்பதிகங்களிற் காணப்படும் தமிழ்ப் பண்கள் சிலவற்றைத் 'தேவாரவர்த்தநீ' என்னும் அடைமொழியுடன் குறிப்பிட்டுள்ளார். இக்குறிப்பினை ஊன்றி நோக்குங்கால் அவ்வாசிரியர் வாழ்ந்த காலமாகிய கி.பி. 13-ஆம் நூற்றாண்டிற்கு முன்பே மூவர் திருப்பதிகங்களும் தேவாரம் என்ற பெயராற் சிறப்பித்து வழங்கப்பெற்றன என்பது தெளிவாகத் தெரிகின்றது.

தேவபாணி யென்றாற்போலத் தெய்வத்தைப் பரவும் இசைப்பாடல் என்ற பொருளில் வழங்கியதே தேவாரமென்னும் பெயரென்பதும், இறைவனைப் பண்ணார்ந்த இசையாற் பாடிப் போற்றுதற்கேற்ப அமைந்தவை மூவர் திருப்பதிகங்களாதலின் இவை தேவாரம் என வழங்கப்பெற்றன வென்பதும், தெய்வ இசைப்பாடல்களாகிய இவை இறைவழிபாட்டிற்கு இன்றி யமையாச் சாதனமாக அமைந்தமை கருதி இவற்றுக்கு வழங்கிய தேவாரமென்ற சொல் வழிபாடு என்னும் பொருளிலும் வழங்கப் படுவதாயிற்றென்பதும் மேல் எடுத்துக்காட்டிய குறிப்புக்களால் நன்கு புலனாதல் காணலாம்.



# முதல் இராசராச சோழன் திருமுறைத் தொண்டு

முதல் இராசராச சோழனாட்சியின் 6-ஆம் ஆண்டில் திருநல்லம் கோயிலில் நாடோறும் திருப்பதிகம் பாட இருவர்க்கு நிலமளித்த செய்தி அவ்வூர்க் கோயிலிற் பொறிக்கப்பட்டுள்ளது. இப்பெருவேந்தனது ஆட்சியில் அரசியலதிகாரியாயிருந்த பொய்கைநாடு கிழவன் ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவேந்த வேளான் என்பான் தேவார ஆசிரியர் மூவர் திருவுருவங்களையும் தஞ்சை இராசராசேச்சரத் திருக்கோயிலில் எழுந்தருளச் செய்து நாள் வழிபாட்டிற்கு நிவந்தமளித்துள்ளான். தஞ்சைப் பெரிய கோயிலை நிறுவிய வேந்தர் பெருமானான முதலாம் இராசராச சோழன், அக்கோயிலில் நாடோறும் தேவாரத் திருப்பதியம் பாடுதற்குப் பிடாரர் (ஓதுவார்) நாற்பத்தெண் மரையும் அவர்களுக்குத் துணையாக உடுக்கை வாசிப்போர், மத்தளம் முழக்குவோர் இருவரையும் நியமித்து நிவந்தம் வழங்கியுள்ளான். இச்செய்தி, "ஸ்ரீ ராஜராஜீஸ்வரமுடையார்க்குத் திருப்பதியம்" விண்ணப்பஞ் செய்ய உடையார் ஸ்ரீ ராஜராஜ தேவர் கொடுத்த பிடாரர்கள் நாற்பத்தெண்மரும் இவர்களிலே நிலையாய் உடுக்கை வாசிப்பான் ஒருவனும் இவர்களிலே நிலையாய்க் கொட்டிமத்தளம் வாசிப்பான் ஒருவனும்ஆக ஐம்பதின்மர்க்குப் பேரால் நிசதம் நெல்லு முக்குறுணி நிவந்தமாய் ராஜகேசரியோடொக்கும் ஆடவல்லானென்னும் மரக்காலால் உடையார் உள்ளூர்ப் பண்டாரத்திலே பெறவும்"* (* தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி II எண் 65). எனவரும் கல்வெட்டுப் பகுதியால், நண்குணரப்படும். தேவாரம் பாடுதற்கு நியமிக்கப்பட்ட பிடாரர்கள் ஐம்பதின்மர் பெயர்களும் சிவன் என்ற பட்டத்துடன் மேற்குறித்த கல்வெட்டிற் பொறிக்கப் பட்டுள்ளன. இவர்களிற் பலர் தேவார ஆசிரியர்களின் திருப் பெயர்களையே தமக்குரிய இயற் பெயராகக் கொண்டுள்ள சிறப் பினையெண்ணுங்கால் இவர்கள் விண்ணப்பஞ் செய்யுந் திருப் பதிகங்கள் மூவர் முதலிகள் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத் திருப்பதிகங்களே யென்பது நன்கு விளங்கும். முதலாம் இராசராச சோழனுக்கு முன்னிருந்த சோழ மன்னர் அனைவரும் திருக்கோயில்களில் திருப்பதிகம் விண்ணப்பம் செய்தற்கு நிபந்தம் வழங்கியுள்ளார்ளென்றாலும் அருண்மொழித் தேவனாகிய இவ்வேந்தர் பெருமானைப் போன்று ஐம்பதின்மர் என்ற பெருந்தொகையில் ஓதுவார்களை நியமித்துத்

திருக்கோயில்களில் நாளும் இன்னிசையால் திருமுறைத் தமிழைப் பரவச்செய்ய அவர்கள் திட்டம் வகுத்ததாகத் தெரியவில்லை. தேவாரத் திருமுறைகளைத் தேடி வகைப் படுத்தித் தந்த நம்பியாண்டார் நம்பியின் திருமுறை வகுப்பினை உளத்துட் கொண்டு இயலிசை வல்லார் பலரும் ஒருங்கு கூடிப் பண்பொருந்தப் பாடி இறைவனை வழிபடுதற்குரிய வழிதுறைகளை முதன்முதல் வகுத்துத்தந்த பெருமை முதலாம் இராசராசசோழனுக்கே யுரியதாகும். இவ்வேந்தர் பெருமான் செய்த இத்திருமுறைத் தொண்டினை யுளத்துட்கொண்டே "சேய திருமுறை கண்ட ராசராச தேவர்" எனச் சேக்கிழார் புராணமுடையார் இம் மன்னனைச் சிறப்பித்துப் போற்றியுள்ளார் எனக் கொள்ளுதல் பொருத்த முடையதாகும்.



# தேவாரப் பதிகங்களின் தொகை

திருஞானசம்பந்தர் பாடிய திருப்பதிகங்கள் பதினாறாயிர மெனவும், திருநாவுக்கரசர் பாடிய திருப்பதிகங்கள் நாற்பத் தொன்பதினாயிரமெனவும் சுந்தரர் பாடிய திருப்பதிகங்கள் முப்பத்தெண்ணாயிர மெனவும் திருமுறைகண்ட புராணம் கூறுவதாகக் கருதுவர் சிலர்.

"இணைகொ ளேழெழு நூறிரும் பனுவல்
ஈன்றவன் திருநாவினுக் கரையன்"

எனவரும் தொடரால் சுந்தரமூர்த்தி சுவாமிகளே திருநா வுக்கரசர் பாடிய திருப்பதிகங்களின் தொகையினைக் குறிப் பிட்டுப் போற்றியுள்ளார்,

நின்றியூர் மேயாரை நேயத்தாற் புக்கிறைஞ்சி
ஒன்றியவன் புள்ளுருகப் போற்றுவா ருடையவர
சென்றுமுல கிடர்நீங்கப் பாடியவேழெழுநூறும்
அன்றுசிறப் பித்தஞ்சொற் றிருப்பதிகம் அருள் செய்தார்.*
(* பெரிய -ஏயர்கோன் புராணம் - 150ஆம் பாடல்)

எனவரும் பாடலில் சேக்கிழார் நாயனார் சுந்தரர் கூறிய தொகை யினை விளக்குதல் காண்க.

'ஏழு எழுநூறு இரும்பனுவல்' என்னும் இத்தொடர், நாலாயிரத்துத் தொளாயிரம் பதிகம் என்றே பொருள்படுவ தாகும். இவ்வாறே நம்பியாண்டார்நம்பியும் 'பதிகம் ஏழெழு நூறு பகருமா கவியோகி' எனத் திருநாவுக்கரசரைப் போற்று முகத்தால் அரசர் பாடிய திருப்பதிகங்கள் ஏழு எழுநூறு அஃதாவது நாலாயிரத்துத் தொளாயிரம் என்றே தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். முன்னுள்ள இப்பெருமக்களிருவரும் கூறிய தொகையினை யுளத்துட்கொண்டே,

திருநாவுக் கரையரெனுஞ் செம்மையாளர்
தீயமணர் சிறைநீங்க அதிகைமேவுங்
குருநாமப் பரஞ்சுடரைப் பரவிச்சூலைக்
கொடுங் 'கூற்றாயின' வென்ன எடுத்துக் கோதில்
ஒருமானைத்தரிக்கும் 'ஒருவரையுங்' காறும்
ஒரு நாற்பத்தொன்பதினா யிரமதாகப்
பெருநாமப் புகலூரிற் பதிகங்கூறிப்
மிஞ்ஞுகனார் அடியிணைகள் பெற்றுள்ளாரே.

எனவரும் திருமுறைகண்ட புராணச் செய்யுளுக்கும் உரை காணுதல் வேண்டும். திருநாவுக்கரையரெனுஞ் செம்மையாளர் கூற்றாயின எனத் தொடங்கும் பாடல் முதலாக 'ஒருவரையுமல்லாது' எனத் தொடங்கும் திருப்புகலூர்த் திருத்தாண்டகத்தின் இறுதிச் செய்யுள் ஈறாக நாற்பத்தொன்பதினாயிரம் திருப்பாடல்களைப் பாடினார் என்றே இத்திருமுறை கண்ட புராணச் செய்யுளும் கூறுதல் காணலாம். திருநாவுக்கரசர் பாடிய திருப்பதிகங்கள் பத்துப் பாடல்களைக் கொண்டனவாதலின் நாலாயிரத்துத் தொளாயிரம் திருப்பதிகங்களிலும் நாற்பத்தொன்பதினாயிரம் பாடல்கள் உள்ளனவென்பது பெறப்படும். எனவே திருநாவுக்கரசர் கூற்றாயின என்ற பாடல் முதல் ஒருவரையுமல்லாது என்ற பாடல் ஈறாக நாற்பத்தொன்பதினாயிரம் பாடலாகப் பதிங்கூறினார் எனத் திருமுறைகண்ட புராணத் தொடர்க்குப் பொருள் கொள்ளுதலே சுந்தரமூர்த்தி சுவாமிகள் நம்பியாண்டார் நம்பியென்னும் இவ்விரு பெருமக்கள் கருத்துக்கும் ஏற்புடையதாகும். இவ்வாறே,

"சேடர்மலி காழிநகர் வேந்தர் தாமும்
தேவர்புகழ் திருத்தோணிச் சிவனார்பங்கில்
பீடுடைய உமைமுலைப்பால் அருளாலுண்டு
பிஞ்ஞகனைச் சினவிடைமேற் பெருகக்கண்டு
தோடுடைய செவியன் முதல் கல்லூரென்னும்
தொடைமுடிவாப் பரசமயத் தொகைகள் மாளப்
பாடினார் பதிகங்கள் பாவிலொன்றாம்
பதினாறாயிரமுளதாப் பகருமன்றே."

எனச் சம்பந்தர் பாடற்றொகையினைக் குறிக்கும் திருமுறைகண்ட புராணச் செய்யுளுக்கும் உரைகொள்ளுதல் வேண்டும். இதன் கண் 'தோடுடைய செவியன்' எனத் தொடங்கும் திருப்பதிகம் முதலாகக் 'கல்லூர்ப் பெருமணம்' எனத் தொடங்கும் திருப் பதிகம் ஈறாக உள்ள பதிகங்களைத் திருஞானசம்பந்தப் பிள்ளையார் பாடினாரெனவும், அவர் திருவாய் மலர்ந்தருளிய இத்திரு பதிகங்களிலமைந்த பாடல்களின் தொகை பதினாறாயிரமெனவும் குறிக்கப்பட்டிருத்தல் காணலாம். 'பாவிலொன்றாம்

பதினாறாயிரமுளதாப் பகருமன்றே' என்ற தொடரிற் சுட்டப் பட்ட பதினாறாயிரம் என்ற தொகை பதிகங்களையன்றிப் பாடல் களையே குறித்து நின்றதென்பது பாவிலொன்றாம் பதினா றாயிரம் எனவரும் விளக்கத்தால் இனிது பெறப்படும். ஆகவே திருஞானசம்பந்தர் பாடிய திருப்பதிகங்கள் ஆயிரத்தறுநூறு எனக் கொள்ளுதல் பொருத்தமுடையதாகும்.

பின்புசில நாளின்கண் ஆரூர் நம்பி
பிறங்குதிருவெண்ணெய் நல்லூர்ப் 'பித்தா' வென்னும்
இன்பமுதல் திருப்பதிகம் 'ஊழிதோறும்'
ஈறாய் முப்பத்தெண்ணாயிரமதாக
முன்பு புகன்றவர் நொடிக்தான் மலையிற்புக்கார்.

என வரும் திருமுறைகண்ட புராணச் செய்யுள் "பித்தா பிறை சூடி" எனத் தொடங்கும் பாடல் முதலாக 'ஊழிதோறூழி முற்றும்' என்ற முதற் குறிப்புடைய பாடலீறாக முப்பத் தெண்ணாயிரம் பாடல்களை நம்பியாரூரர் பாடினார் எனக் கூறுகின்றது. இங்கு குறித்த முப்பத்தெண்ணாயிரமென்னுந் தொகை பதிகங்களையன்றிப் பாடல்களையே சுட்டி நின்ற தென்பது 'பித்தா' முதல் 'ஊழிதோறும்' ஈறாய் என முதலும் இறுதியும் பாடல்களையே சுட்டித் தொகை கூறுதலால் விளங்கு கின்றது. எனவே சுந்தரர் பாடிய திருப்பதிகங்களின் தொகை மூவாயிரத்தெண்ணூறு எனப் புலனாகின்றது. அங்ஙனமாகவே திருஞான சம்பந்தர் 1600 பதிகங்களும் திருநாவுக்கரசர் 4900 பதிகங்களும் சுந்தரர் 3800 பதிகங்களும் பாடியருளினார்க ளெனவும் அம்மூவரும் அருளிச் செய்த திருப்பதிகங்களின் தொகை 10300 எனவும் அவற்றின் பாடற்றொகை 103000 எனவும் கூறுதல் ஏற்புடையதாகும்.

தேவார ஆசிரியர்கள் மூவரும் பாடியனவாக மேற்குறித்த எல்லாத் திருப்பதிகங்களும் பிற்காலத்தார்க்குக் கிடைக்கவில்லை. செல்லரித்துச் சிதைந்தமையால் மறைந்தனபோக எஞ்சிய பதிகங்களையே நம்பியாண்டார்நம்பி சோழ மன்னன் ஆதரவு கொண்டு தேடி முன்போல் முறைப்படுத்தி ஏழு திருமுறைகளாகத் தொகுத்தார் எனத் திருமுறைகண்ட புராணம் கூறுகிறது.

பண்புற்ற திருஞான சம்பந்தர் பதிக முந்நூற்
றெண்பத்து நான்கினால் இலங்குதிரு முறை மூன்று,
நண்புற்ற நாவரசர் முந்நூற்றேழ் மூன்றினால்
வண்பெற்ற முறை யொன்று நூற்றினால் வன்றொண்டர்.

எனவரும் திருமுறைகண்ட புராணச் செய்யுள் நம்பியாண்டார் நம்பியால் தேடித்தொகுக்கப்பெற்ற மூவர் திருப்பதிகங்களும் இத்துணையவெனக் கூறுவதாகும். திருஞானசம்பந்தர்

தேவாரப்பதிகங்கள் 384-ஆம் திருநாவுக்கரசர் தேவாரப் பதிகங்கள் 310-ஆம் சுந்தரர் தேவாரப் பதிகங்கள் 100-ஆம் நம்பியாண்டார் நம்பிகளால் தொகுக்கப்பட்டன வென்பது மேற்காட்டிய செய்யுளாற் புலனாகின்றது.

இங்ஙனம் வகுக்கப்பட்ட ஏழு திருமுறைகளும் பண்ணாகிய இசைமுறை பற்றியும் பாவாகிய இயல்முறை கருதியும் முறைப் படுத்தப் பெற்றிருத்தல் வேண்டுமென்பது, இவற்றிற் காணப் படும் பண்களெல்லாவற்றிற்கும் கட்டளையாகிய யாப்பியல் வகை கூறும் திருமுறைகண்ட புராணப் பகுதியால் இனிது புலனாம். சேக்கிழார் நாயனார்க்கு நெடுங்காலத்திற்கு முன்னரே மூவர் தேவாரத் திருப்பதிகங்களும் பண்முறைபற்றிக் கட் டளைகள் வகுக்கப்பெற்று முறைப்படுத்தப்பெற்றிருந்தன வென்பது பெரியபுராணத்தில் மூவர் வரலாறு கூறும் இடங் களில் அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத்திருப்பதி கங்கள் சிலவற்றிற்குப் பண்ணமைதியும்* (*தடுத்தாட் கொண்ட புராணம் 75-ஆம் செய்யுள்) கட்டளைக் கூறுபாடும்* (* திருஞான சம்பந்தர் புராணம் 107-ஆம் செய்யுள்) குறிக்கப் பெற்றிருத்தலால் நன்கு விளங்கும்.

திருஞானசம்பந்தர் பாடியனவாகத் தேடித் தொகுக்கப் பெற்ற திருப்பதிகங்கள் 384-இல் 383 பதிகங்களே முதலில் அச்சிடப்பெற்றன. ஏட்டுச்சுவடிகளிற் காணப்படாது எஞ்சிய திருப்பதிகம் திருவிடைவாய்த் திருப்பதிகம் ஆகும். அஃது அவ்வூர்த்திருக்கோயிற் கல்வெட்டிற் பொறிக்கப்பெற்றுளது. அதனைக் கல்வெட்டாராய்ச்சியாளர் கண்டு படியெடுத்து வெளியிட்டமையால் இப்பொழுது திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருப்பதிகங்கள் முந்நூற்றெண்பத்து நான்கினை யும் பயிலும் வாய்ப்பு நமக்குக் கிடைத்துளது. திருநாவுக்கரசர் பாடிய திருப்பதிகத்தொகையினை 'நண்புற்றநாவரசர் முந்நூற்றேழ் மூன்றினால் வண்பெற்ற முறை' எனத் திருமுறை கண்ட புராணம் கூறும். இத்தொடர்க்குத் திருநாவுக்கரசர் பதி கங்கள் முந்நூற்றேழும் மூன்று திருமுறைகளாக வகுக்கப்பட்டன என்றும் முந்நூற்றேழும் மூன்றும் ஆக முந்நூற்றுப்பத்துப் பதிகங்கள் முறைப்படுத்தப் பட்டன என்றும் இருவகையாகப் பொருள் கொள்ளலாம். அங்ஙனம் கொள்ளுங்கால் திருநாவுக் கரசர் பாடிய திருப்பதிகங்களின் தொகை 307 என்றும் 310 என்றும் இருவேறு வகையாகக் கூறவேண்டியுளது. ஆறுமுக நாவலரவர்கள் திருநாவுக்கரசர் தேவாரப் பதிகங்கள் தலப்பதிகம் 275-ம் பொதுப்பதிகம் 37-ம் ஆக 312 எனக் குறிப்பிட்டுள்ளார்கள். வெளிவந்துள்ள தேவாரப் பதிப்புகள் சிலவற்றில் திருநாவுக்கரசர் திருப்பதிகங்கள் 311 என்றும் 313 என்றும் வேறு

வேறு குறிப்பிடப்பட்டுள்ளன. மேல் எடுத்துக்காட்டிய திருமுறைகண்ட புராணச் செய்யுளில் பதிக வெண்ணிக்கை பிறழ்ந்தமையினாலோ அன்றிப் பிற்காலத்தார் அவற்றை அச்சிடுங்கால் ஒரு பதிகத்திலுள்ள பாடல்கள் சிலவற்றைத் தனிப் பதிகமாக வெளியிட்டமையினாலோ இத்தகைய தொகை வேறுபாடு உண்டாயிருத்தல் வேண்டும். திருமுறை கண்ட புராணம் கூறியதற்கேற்பச் சுந்தரர் திருப்பதிகங்கள் நூறும் அவ்வாறே இன்றும் பயிலப்பெற்று வருகின்றன. எனவே இப்பொழுது வழங்கப்பெற்றுவரும் மூவர் தேவாரப் பதிப்புக் களில் 796 திருப்பதிகங்கள் அடங்கியுள்ளமை புலனாகும். ஏழு திருமுறைகளாக விளங்கும் இத்திருப்பதிகங்களிலுள்ள திருப் பாடல்களின் தொகை 8250 ஆகும். இவைகளே நமக்குக் கிடைத் துள்ள தேவாரத் திருப்பதிகங்களாகும். இவ்வேழு திருமுறை களையும் அடங்கல்முறை என வழங்குவர். மூவர் முதலிகள் திருவாய் மலர்ந்தருளிய பதினாயிரத்துக்கு மேற்பட்ட திருப் பதிகங்களில் இங்குக் குறித்தபடி 796 திருப்பதிகங்களைத் தவிர எஞ்சிய ஒன்பதினாயிரத்துக்கு மேற்பட்ட திருப்பதிகங்கள் தமிழ் மக்களது விழிப்பின்மையால் சிதலரிக்கப்பட்டுச் சிதைவுற்று மறைந்தன என்பது திருமுறைகண்ட வரலாற்றால் வெளி யாகின்றது.

கி.பி. 1070 முதல் 1120 வரையில் ஆட்சிபுரிந்த முதற் குலோத் துங்க சோழனது படைத்தலைவர்களுள் ஒருவனாகிய மணவிற் கூத்தன் காலிங்கராயன் என்பான் சைவசமயகுரவர் மூவரும் பாடிய தேவாரத் திருப்பதிகங்களைச் செப்பேடுகளில் எழுதுவித்துத் திருக்கோயிலுள் சேமமுற வைத்தான். இச்செய்தி.

**முத்திறத்தா ரீசன் முதற்றிறத்தைப் பாடியவா**
**றொத்தமைத்த செப்பேட்டி னுள்ளெழுதி-இத்தலத்தின்**
**எல்லைக்கிரிவாய் இசையெழுதினான் கூத்தன்**
**தில்லைச்சிற் றம்பலத்தே சென்று.**

எனத் தில்லைத் திருக்கோயிலிற் பொறிக்கப்பட்ட கல்வெட்டிற் காணப்படும் வெண்பாவொன்றிற் குறிக்கப்படுதல் காண்க. எனவே திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் பாடியருளிய தேவாரப் பதிகங்களை நம்பியாண்டார் நம்பி தேடிக் கொணர்ந்து திருமுறைகளாகத் தொகுத்தபின்னர் அப்பதிகங்கள் அழிந்து போகாதவாறு, தில்லைப் பெருங் கோயிலில் முதற் குலோத்துங்கன் காலத்தில் அவனுடைய படைத்தலைவன் காலிங்கராயனது நன்முயற்சியால் செப்பேடு களில் எழுதி வைக்கப் பட்டன என்பது இங்கு அறியத்தக்கதாகும்.



# திருமுறை வழிபாடு

தேவாரத் திருமுறைகள் திருக்கோயில்களில் வைத்து வழிபடப் பெற்றுவந்தன. அத் திருப்பதிக ஏடுகள் சிதையாதபடி அவற்றைப் போற்றிக் காப்பதற்குத் தமிழ்ப்புலமைமிக்க தமிழ் விரகரும் அத் திருப்பதிகங்களைப் பொருளுணர்ந்து இசையோடு இறைவன் முன்னிலையிற் பாடிப் போற்றுதற்கு ஓதுவார்களும் அந்நாளில் திருக்கோயில்களில் நியமிக்கப்பெற்றுப் பணிபுரிந்து வந்தார்கள். அவ்வாறு திருக்கோயில்களில் திருமுறை யேடுகளைச் சேமமாக வைத்துப் பூசித்தற்கு இடமாக விளங்கிய மண்டபம், திருக்கைக் கோட்டியென வழங்கப்பட்டு வந்தது. இச் செய்திகளைக் குறிப்பிடும் பழைய கல்வெட்டுக்கள் சில நம் நாட்டுத் திருக்கோயில்கள் சிலவற்றில் பொறிக்கப்பட்டுள்ளன. அத்தகைய கல்வெட்டுக்களுள் ஒன்று, சீகாழியிலுள்ள திருஞான சம்பந்தர் திருக்கோயில் கருப்ப இல்லின் தென்புறத்தே வரையப்பட்டுள்ளது. அது,

“திருபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு 4-ஆவது இராஜராஜ வளநாட்டுத் திருக் கழுமல நாட்டுப் பிரமதேயம் திருக்கழுமலம் கற்கடக நாயிற்று முதல் கிராம காரியஞ் செய்கிற பெருமக்களோம் ஆளுடைய பிள்ளையார் திருமாளிகைத் தமிழ்விரகர் கண்டு இக்கோயில் திருக்கைக்கோட்டியில் எழுந்தருளியிருக்கிற திருமுறைகள் திருக்காப்பு நீக்கி அழிவுள்ளன எழுந்தருளுவிக்கவும் திரு முறைகள் எழுந்தருளுவித்தும் திருமுறை பூசித்தும் இருக்கைக்கு இவ்வூர் காசு கொள்ளா இறையிலியாக விட்ட நிலம் இவ்வூர் சண்டேஸ்வரவதிக்குக் கிழக்கு நின்றான் வாய்க்காலுக்கு வடக்கு முதற்கண்ணாற்று இரண்டாஞ் சதுரத்துக்கீழ் இறையான் குடியால் பாரத்துவாசி ஸ்ரீ காழி நாடுடையான் திருவன்னி யுடையான் நிலத்து விளைநிலம் ....... இந்நிலம் இருமாவரை அரைக்காணி முந்திரிகைக் கொல்லையும் குளமும் கழிக்கடை தீதொழிந்த பிரதான நிலம் குடியிருப்புத் திடர்நிலமும் சுத்த மலிவதிக்கு மேற்கு நின்றான் வாய்க்காலுக்கு வடக்கு முதற் கண்ணாற்று மூன்றாஞ் சதுரத்துப் பாலாசிரியன் இந்நிலத்து வடமேற்கடைய புன்செய் நிலத்து உடைய புன்செய் நிலம் அரைமாவும் உள்படக் கைக்கொண்டு சந்திராதித்தவரை காசு கொள்ளா இறையிலியாகவும் சில்வரி பெருவரி வெட்டி........... கொள்ளாதேமாகவும் சொன்னோம். இந்நிலங் கைக்கொண்டு அனுபவித்துத் திருமுறை திருக்காப்பு நீக்கி இப்படியேம் திருமாளிகையிலே கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்க-

பணியால் ஊர்க் கணக்குப் பட்டன் பிரியன் எழுத்து......"
என்பதாம்.

இஃது அரிய செய்திகளை அறிவிக்கும் ஒரு சிறந்த கல்வெட்டாகும். சீகாழிக் கோயிலிலுள்ள திருக்கைக் கோட்டியில் தேவாரத் திருமுறைகள் வைத்து வழிபாடு செய்யப்பெற்று வந்தன என்பதும், அத்திருமுறையேடுகள் பழுதுற்றபோது, அவற்றைப் புதுக்குதற்குத் தமிழ் விரகர் ஒருவர் இருந்தன ரென்பதும், அவ்வூர்ச் சபையார் அவற்றின் வழிபாடு முதலிய வற்றிற்கு இறையிலி நிலம் அளித்துப் போற்றி வந்தன ரென்பதும் இக்கல்வெட்டினால் நன்கு அறியக் கிடக்கின்றன. இங்ஙனம் சிவாலயங்களில் வைத்துப் போற்றப்பட்டு வந்த தேவாரத் திருமுறைகள் செப்பேடுகளாகவும் ஏட்டுச் சுவடிகளாகவும் இருந்திருத்தல் வேண்டும்.

நாகப்பட்டினம் தாலுகாவிலுள்ள திருக்காறாயிலிற் காணப் படும் ஒரு கல்வெட்டு,* (* கல்வெட்டெண் 454-1908ஆம் ஆண்டு) அவ்வூர் ஆலயத்துத் திருக்கைக் கோட்டியில் திருப்பதிகம் ஓதுவார் சிலர்க்கு உணவளிக்க இறையிலி நிலம் விடப்பட்ட செய்தியை உணர்த்துகின்றது. திருஞானசம்பந்தருக்கும் திருநாவுக்கரசருக்கும் சிவபெருமான் பொற்காசு அளித்தருளிய தலமாகிய திருவீழிமிழலையில் நரசிங்கதேவன் என்ற தலைவன் ஒருவனால் திருக்கைக்கோட்டி மண்டபம் கட்டப்பெற்ற தென்பது அவ்வூரிலுள்ள ஒரு கல்வெட்டால் அறியப்படு கின்றது.* (* கல்வெட்டெண் 414-1908-ஆம் ஆண்டு) இந்நாளில் கோவிலூர் என்று வழங்கப்பெறும் திருவுசாத்தானம் என்னுந் திருப்பதியிலுள்ள திருக்கைக் கோட்டி ஓதுவார்க்கு இராஜ கெம்பீர சோழிய வரையன் என்பான் இறையிலி நிலம் அளித்தனன் என்று அவ்வூரிலுள்ள கல்வெட்டொன்று கூறுகின்றது.* (* கல்வெட்டெண் 203-1908-ஆம் ஆண்டு) எனவே தேவாரத் திருமுறைகள் வைத்துப் பூசிக்கப்பெற்ற கோயில் மண்டபம் திருக்கைக்கோட்டி யென்ற பெயருடன் முற்காலத்தில் வழங்கப்பெற்று வந்தமை இனிது புலனாம்.* (* கல்வெட்டெண்414-1908-ஆம் ஆண்டு; இதன் விரிவினைத் தமிழ்ப் பொழில் 16-ஆம் துணரில் திருவாளர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் எழுதிய திருக்கைக்கோட்டி என்னும் கட்டுரையிற் காண்க.)

மந்திரங்கள் எழுகோடி யாதலின் தேவாரத் திருப்பதி கங்களை ஏழு திருமுறைகளாக வகுத்தனர் என்றும் அந்த மந்திரங்கள் பஞ்சப்பிரமமென்றும் சடங்கமென்றும் சொல்லப் பட்டுப் பதினொன்றாகவும் வருதலால் முன்னர்க் கூறிய தேவாரத் திருமுறைகள் ஏழினோடு திருவாசகம், திருவிசைப்பா, திருமந் திரம், காரைக்காலம்மையார் முதலிய திருவருட் செல்வர்கள்

பாடியருளிய பிரபந்தங்கள் ஆகிய இவற்றையும் முறையே எட்டு முதல் பதினொன்று வரையுள்ள திருமுறைகளாகத் தொகுத்தமைத்தார்களென்றும் திருமுறை கண்ட புராணம் கூறும்.

கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகிய சேக்கிழார் நாயனார் அநபாய சோழ மன்னன் வேண்டுகோளின் படி தில்லையையடைந்து அம்பலவாணரை வணங்கி, அப் பெருமான் 'உலகெலாமுணர்ந்தோதற்கரியவன்' என அடியெடுத்துக் கொடுக்கப் பாடிய சிறப்புடையது. திருத் தொண்டர் புராணமென்னும் பெரிய புராணமாகும். ஆசிரியர் சேக்கிழார் இவ்வருள்நூலைத் தில்லையம்பலவன் முன்னிலையிற் கூடிய சிவனடியார் பேரவையில் விரித்துரைக்கும் பொழுது முற்கூறிய பதினொரு திருமுறைகளும் உறுப்பாகத் தாம் இயற்றிய செய்யுள் உடலாக அதற்குப் பொருள் விரித் துரைத்தாரென்பது வரலாறு. 'திருத்தொண்டர் புராணமெனப் புராணத் திருமுறைக்குத் திருநாமம் சீர்பெற அமைத்திட்டு'(51) எனவும் 'தெள்ளுதமிழ்ச் சேக்கிழார் புராணஞ் செய்த திருமுறையை' எனவும் 'திருத்தொண்டர் புராணமெழுதிய முறையை மறையோர் சிவமூலமந்திரத்தால் அருச்சனை செய்திறைஞ்சி' எனவும் 'செறிமதயானைச் சிரத்தில் பொற்கலத் தோடெடுத்துத் திருமுறையை இருத்தி' எனவும் வருஞ் செய்யுட் களில் பெரியபுராணத்தைத் திருமுறையென்ற பெயரால் உமாபதி சிவாசாரியார் சிறப்பித்துப் போற்றியுள்ளார்.

> மூவோரது திருமுறைகளேழு, திருவாதவூரர் முறையொன்று, இசைப்
> பாவரைந்த முறையொன்று, மூலர் முறையொன்று, பாசுரம தாதியாக்
> கோவை செய்த முறையொன்று, சேவையர் குலாதி நீதிமுறை யொன்றுடன்
> பாவை பாகர் திருவருள் சிறந்தமுறை பன்னிரண்டென வைத்துபின்

என அவ்வாசிரியர் கூறுதலால் சைவத் திருமுறைகள் பன்னிரண்டென வழங்கும் வழக்கம் அவர்க்கு நெடுங்காலத்திற்கு முன்பே இத் தமிழகத்தில் நிலைபெற்று வழங்கியதென்பது நன்கு தெளியப்படும்.

பன்னிரு திருமுறையாசிரியர்களுள் காலத்தால் முற்பட்டவர்கள் பத்தாந் திருமுறையாகிய திருமந்திர மாலையை இயற்றிய திருமூலரும் பதினொராந் திருமுறையிற் காணப்படும் சில பிரபந்தங்களைப் பாடியருளிய காரைக்கால் அம்மையாரும் ஆவர். இவர்கள் இத் தமிழகத்தில் தோன்றி வாழ்ந்தகாலம் கி.பி.

ஐந்தாம் நூற்றாண்டாதல் கூடும் என ஆராய்ச்சியாளர் கருது கின்றார்கள். பன்னிரு திருமுறை ஆசிரியர்களுள் காலத்தாற் பிற்பட்டவர் அருண்மொழித் தேவராகிய சேக்கிழாராவர். அவர் வாழ்ந்தகாலம் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டென்பது பலரும் அறிந்ததே. எனவே கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு முடிய அமைந்த காலப்பகுதியே சைவத் திருமுறைகள் பன்னிரண்டும் தோன்றி வளர்ந்த காலமாகும் இத் திருமுறைகள் பன்னிரண் டையும் அருளிச்செய்த ஆசிரியப் பெருமக்கள் திருமூலர் முதல் சேக்கிழார் ஈறாகவுள்ள இருபத்தெழுவராவர். இப் பெருமக்க ளாற் பாடப்பெற்றனவாக இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ள பன்னிரு திருமுறைகளிலும் ஏறக்குறையப் பதினெண்ணாயிரம் திருப்பாடல்கள் காணப்படுகின்றன.

இங்குக்குறித்த திருமுறைகள் பன்னிரண்டும் இவற்றை இயற்றியுதவிய ஆசிரியப் பெருமக்களது சிவஞான நிறைவின் வெளிப்பாடுகளே யாகும். திருக்கோயிலுள் இருக்கும் திருமேனி களிலும் அடியார் திருவேடங்களிலும் ஆசிரியன் திருமேனி யிலும் இறைவன் வெளிப்பட்டு அருள்புரிவானாதலின் மேற் குறித்த இடங்களில் சிவனைக்கண்டு வழிபடுக எனச் சைவ நூல்கள் விதிக்கின்றன. அம்முறையில் அவனே தானேயாகிய நெறியில் இறை பணி புரிந்த மெய்யடியார்கள் திருவாய்மலர்ந் தருளிய செழும்பாடல்களிலும் இறைவனது திருவருள் வெளிப் பட்டுத் தோன்றுதல் இயல்பாதலின், அவ்வருள் நூலையும் இறைவன் வாய்மொழியாகத் தெளிந்து வழிபடுதல் வேண்டு மென்பதும் ஆன்றோர் துணிபு. இறைவனால் தடுத்தாட் கொள்ளப்பெற்ற சிறப்புடைய நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் தமக்கு முன்தோன்றிச் சிவத்தொண்டு புரிந்த நல்லிசை ஞானசம்பந்தரும் நாவினுக்கரையரும் பாடியருளிய நற்றமிழ் மாலையைப் பாடி இறைவனை வழிபட்ட செய்தியும்*
(* ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம் 44-ஆம் செய்யுள்)
அவருடைய தோழராகிய சேரமான் பெருமாள் நாயனார் திருவஞ்சைக்களத்தில் எழுந்தருளிய இறைவனைத் திருமஞ்சன மாட்டித் திருமாலை முதலியன தொடுத்தணிந்து வழிபடும் போது இறைவனை ஒரு நெறிய மனம்வைத்து உணர்ந்து போற்று தற்குச் சாதனமாக முன்னுள்ள திருஞானசம்பந்தர் திருநா வுக்கரசர் முதலிய அருளாசிரியர் பாடிய திருப்பாட்டுக்களை உளங்கசிந்து ஓதி வழிப்பட்ட செய்தியும்* (* கழற்றறிவார் நாயனார் புராணம் 9-ஆம் செய்யுள்) இராசராச சோழன், கங்கை கொண்ட சோழன் முதலிய தமிழ்ப் பெருவேந்தர்கள் தேவாரம் திரு விசைப்பா முதலிய திருமுறைகளை ஓதி இறைவனை நாடோறும் வழிபட்டு ஆட்சிபுரிந்த வரலாறும், சீகாழி திருவீழிமிழலை

முதலிய திருக்கோயில்களில் இத் திருமுறை நூல்களை எழுந் தருளிவித்து இவற்றை இறைவனாகவே கருதி வழிபடுதற்கேற்ற திருக்கைக்கோட்டி மண்டபம் அமைக்கப்பட்டிருந்தன எனக் கல் வெட்டுக்களிற் காணப்படும் வரலாற்றுக் குறிப்பும் தில்லையில் திருத்தொண்டர் புராணமெழுதிய முறையை மறையோர் சிவ மூல மந்திரத்தால் அருச்சனை செய்து' இறைஞ்சினார்கள் எனத் திருமுறைகண்ட புராணம் கூறும் குறிப்பும் பண்டை நாளில் இத்திருமுறைகளை நம் முன்னோர் சிவத்துவம் வெளிப் பட்டுத் திகழும் சிறந்த அருள் நூல்களாகக்கொண்டு வழிபட்ட வுண்மை யினை இனிது விளக்குவனவாகும். எனவே சிவபூசையின் ஒரு சிறந்த அங்கமாகவே இத்திருமுறை வழிபாடு முன்னுள்ள பெருமக்களால் மேற்கொள்ளப்பட்டு வந்ததென்று தெரிகிறது.

சிவபூசை, அடியார்பூசை, குருபூசை ஆகிய வழிபாடு களுக்கு எத்துணைப் பயன் உண்டோ அத்துணைப் பயன் இத் திருமுறை வழிபாட்டிற்கும் பாராயணத்துக்கும் உண்டென்பர் பெரியோர். சரியை, கிரியை, யோகம், ஞானம் எனப் பலபடி களாக வகுத்துச் செய்யப்படும் சிவவழிபாட்டினைத் தவிர உயிர்கள் உய்தி பெறுதற்கு வேறு சாதனமில்லையென்பது சைவ நூற்றுணிபு. இறைவனது திருவருளாகிய சிவஞானமொன்றி னால்தான் அப்பெருமானை உள்ளவாறு உணர்ந்து வழிபடுதல் கூடும். இறைவன் அருளிய திருவருள் ஞானத்தால் அம் முதல்வனை வழிபடும் பதிகப்பெருவழியினை அமைத்துத் தந்த திருவருட் செல்வர்கள் காரைக்காலம்மையார், திருஞான சம்பந்தப்பிள்ளையார், திருநாவுக்கரசர், சுந்தரர், திருவாத ஊரடிகள் முதலிய திருமுறையாசிரியர்களாவர். சிவஞானி களாகிய அப்பெருமக்களனைவரும் பொறிவாயில் ஐந்தவித்த னாகிய இறைவன் அறிவுறுத்த பொய்தீர் ஒழுக்கநெறி நின்ற செம்புலச் செல்வர்களாதலின், அவர்கள் திருவாய்மலர்ந் தருளிய திருமுறைகள் யாவும் உயர்ந்த ஞான நூல்களாகத் திகழ் வனவாம். இத்தகைய சைவத் திருமுறைகள் பன்னிரண்டினையும் முறைப்படி காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுதலும், பிறரை ஓதும்படி செய்தலும், பிறர் சொல்லத் தாம் கேட்டலும், பிறரைக் கேட்கும்படி தூண்டுதலும், ஞான நூல்களாகிய இவற்றின் பொருள் நலங்களை இடைவிடாது சிந்தித்தலும் என ஐந்து வகையாலும் பயின்று வழிபடுதல் வேண்டுமென்பர் பெரியோர். "ஞானத்தால் தொழுவார்கள் தொழக்கண்டு, ஞானத்தாய் உனை நானுந் தொழுவனே" என்றவாறு சிவஞானம் பெற்ற பெரியோர்கள் அருளிய இத்திருமுறைகளைச் சாதனமாகக் கொண்டு எல்லாம்வல்ல இறைவனை வழிபட்டுப் போற்றும் முறை ஞானபூசையென நூல்களாற் பாராட்டப்படுகின்றது.

"ஞானநூல்தனை யோதல்; ஓதுவித்தல்,
நற்பொருளைக் கேட்பித்தல், தான்கேட்டல், நன்றா
ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும்
இறைவனடி அடைவிக்கும் எழில்ஞானபூசை."

என அருணந்திசிவாசாரிய சுவாமிகள் கூறும் பொருளுரை இவ்வுண்மையை வலியுறுத்தல் காணலாம்.

நிறைமொழி மாந்தராகிய அருளாசிரியர்களால் திருவாய் மலர்ந்தருளப்பெற்ற இத்திருமுறைகள், நன்மை பெருகவும் தீமை நீங்கவும் வேண்டிய மறைமொழிகளாகிய தமிழ் மந்திரங்க ளென்பது அப்பெருமக்களது வரலாற்றினால் இனிதுவிளங்கும். மந்திரம் என்பது தன்னைப் பயில்வாரைப் போற்றிக் காப்பது என் னும் பொருளுடையதென்பர். தமிழ் மந்திரங்களாகிய இத்திரு முறைகளை அன்பினால் ஓதியுணரும் இயல்புடையோர், இவ்வுலக வாழ்க்கையில் நேரும் எல்லாத் தீங்கினையுர் நீங்கி எல்லா நலங்களையும் பெற்று இன்புறுவர். "இம்மையே தருஞ் சோறுங் கூறையும் ஏத்தலாம் இடல் கெடலுமாம், அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு யாதும் ஐயுறவு இல்லையே" என்றவாறு இத்திரு முறைகளை யோதி வழிபடும் இயல்புடையோர் இருமைப் பயன்களையும் ஒருங்குபெற்று மகிழ்வார்களென்பது திண்ணம்.



# திருஞானசம்பந்தர் வரலாறு

சைவத்திருமுறை பன்னிரண்டனுள் முதல் மூன்று திருமுறைகளைத் திருவாய்மலர்ந்தருளிய அருளாசிரியர் ஆளுடைய பிள்ளையாராகிய திருஞானசம்பந்தராவர். கொன்றை மலர் மாலையையணிந்த சிவபெருமான் திருவடிகளையன்றிப் பிறிதொன்றையுங் கருதாத ஒரு நெறிய மனமுடையார் திருஞானசம்பந்தப் பிள்ளையாரென்பது,

"வம்பறா வரிவண்டு மணநாற மலரும்
மதுமலர்நற் கொன்றையான் அடியலாற்பேணா
எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்."

எனவரும் திருதொண்டத் தொகையால் இனிது புலனாம். திருத்தொண்டத் தொகையின் வகையாகத் திருத்தொண்டர் திருவந்தாதி பாடிய நம்பியாண்டார்நம்பி, தாம்பாடிய ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி, திருச்சண்பை விருத்தம், திருமும்மணிக் கோவை, திருவுலா மாலை, திருக்கலம்பகம், திருத்தொகை என்னும் ஆறு பிரபந்தங்களிலும் திருஞான சம்பந்தரது வரலாற்று நிகழ்ச்சிகளை ஆங்காங்கே குறிப்பிட்டுப் போற்றியுள்ளார். சேக்கிழாரடிகள் திருத்தொண்டத் தொகையின் விரியாகத் தாம் பாடிய திருத்தொண்டர் புராணத்துள் திருஞானசம்பந்தப் பிள்ளையார் வரலாற்றினை 1256 செய்யுட்களால் திருஞான சம்பந்தர் புராணமாக விரித்துக்கூறியுள்ளார். திருத்தொண்டத் தொகையாற் போற்றப்பெறும் அடியார்களின் வரலாறுகளை விரித்துரைப்பதாகிய இத் திருத்தொண்டர் புராணம், 4286 செய்யுட்களையுடையதாகும். இதன் கண் திருஞானசம்பந்தர் வரலாறொன்றுமே 1256 செய்யுட்களால் விரிவாகக் கூறப்பெற்றுள்ளது. இது நோக்கியே 'பிள்ளை பாதி புராணம் பாதி' என்னும் பழமொழியும் வழங்கப் பெறுவதாயிற்று.

## தோற்றம்

சோழவள நாட்டிலே பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சைவயம், கழுமலம் என்னும் பன்னிரண்டு திருப் பெயர்களையுடைய சீகாழிப்பதியிலே கௌணிய கோத்திரத்திலே சிவபாதவிருதயர் என்னும் வேதியர் வாழ்ந்து வந்தார். இவர், சிவபெருமான் திருவடிகளை இடைவிடாது நினைந்து

போற்றும் திருத்தகவிற்றாகிய உள்ளமுடைய தவப் பெருஞ் செல்வராதலின், சிவபாத விருதயர் என அழைக்கப் பெற்றார். வேத நெறியினை வளர்க்கும் கடமைபூண்ட இவ்வேதியரது குடும்பம் வழிமுறை வழிமுறையாகச் சைவத்துறையில் உறுதிப்பாடுடையதாய் வளர்ந்த தனிப்பெருஞ் சிறப்புடைய தாகும். இக்குடும்பத்திற் பிறந்த சிவபாதவிருதயர் வேதநெறியும் சைவப் பற்றும் நிரம்பித் தம் குடும்பத்தோடொத்த வேதியர் குலத்துள் தோன்றிய பகவதியாராகிய மறைச்செல்வியாரைத் தமது வாழ்க்கைத் துணையாகக் கொண்டு மனையறம் நிகழ்த்து வாராயினர்.

இவ்விருவரும் தம் முன்னோர் கொண்டொழுகிய சிவநெறியில் அளவிலாப் பற்றுடையராய்ச் சிவபெருமான் திருவடித் துணையன்றி வேறொன்றையுங் கருதாது இறைவனது திருவருள் வண்ணமாகிய திருநீற்றின் ஒளியினை நாடெங்கும் பரப்ப வேண்டுமென்னும் பேரார்வமுடையவர்களாக விளங்கி னார்கள். அந்நாளில் தமிழகத்தில் சமணம் புத்தம் ஆகிய புறச்சமயங்கள் புகுந்தமையால் வேதநெறி வளர்ச்சி குன்றியது. திருநீறு முதலிய சிவசாதனங்கள் விளக்கம் பெறாது அருகின. இந்நிலையினையுணர்ந்த சிவபாத விருதயரும் பகவதியாரும் பெரிதும் கலக்கமுற்றார்கள். புறச்சமய இருளைப் போக்கித் திருநீற்றினொளியினைப் பரப்பவல்ல பெறலரும் புதல்வரைத் தந்தருள வேண்டுமென்று திருத்தோணிபுரத்தில் வீற்றிருந் தருளும் அம்மையப்பரை வழிபட்டு அரிய நோன்பினை இயற்றி னார்கள். இறைவன்பால் அயரா அன்பினராகிய அவ்விருவரது கருத்தும் நிறைவேறும் நிலையிற் பகவதியார் மகப்பேற்றிற்கு உரியவராயினார். ஞாயிறு முதலிய கோள்கள் உச்சநிலையிலே விளங்க அமைந்த நற்பொழுதிலே, சிவபெருமானுக்குரிய திருவாதிரை நாளிலே, சிவநெறியும் மறைவழக்கும் சிறந்து விளங்கவும், தமிழ்மக்கள் செய்த தவம் நிரம்பவும், தவப் பெருஞ் செல்வர்கள் மேற்கொண்ட நற்செயல்கள் இனிது நிறைவேறவும், எத்திசையினும் தென்திசையே உயர்வுபெறவும், அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல்மொழி வழக்கின் துறைகளை வென்று மேம்படவும், இசைத்திறனும் மெய்யுணர்வும் யாண்டும் நிலைபெறவும், இறைவனது திருவருள் விளக்கம் எங்கும் உண் டாகவும், பிறவித் துன்பத்தைப் பெருக்கும் புறச்சமயங்கள் ஒளிமழுங்கிச் சிதையவும், தவநிலைக்குரிய சீகாழிப்பதியிலே, எவ்வுயிர்க்கும் சிவமாந் தன்மையை வழங்கவல்ல ஆளுடைய பிள்ளையார் திருவவதாரஞ் செய்தருளினார். அவரது தோற் றத்தால் எவ்வுயிர்களும் மகிழ்ச்சியுற்றன. பெயரிடுதல், தொட்டி லமர்வித்தல் முதலிய சடங்குகளும் உரிய நாட்களிற் சிறப்பாக நிகழ்ந்தன. பிற்றை நாளில் உமையம்மையாரளிக்கும்

திருமுலைப்பாலைப் பருகி ஞானத் தலைவராய்த் திகழும் நற்பேறுடைய பிள்ளையார்க்கு அன்னையாராகிய பகவதியார் இறைவன் திருவடிகளைப் பரவும் பேரன்பினையே திருமுலைப் பாலுடன் சுரந்து அமுது செய்வித்தார். உலகத்தாரின் நற் பேறாகத் தோன்றிய பிள்ளையார்க்கு ஏனைய காப்புக்கள் மிகை யென்று எண்ணித் திருநீற்றுக்காப்பினை அவர்தம் அழகிய நெற்றியிலணிந்தனர். தாயர் திருமடித்தலத்தும் அழகிய தவிசினிலும் தொட்டிலிலும் மெல்லிய படுக்கையிலும் பிள்ளை யாரை அமர்த்தித் தாலாட்டி வளர்த்தனர்.

மெய்யுணர்வும் செந்தமிழும் தழைக்கத் தோன்றிய பிள்ளையார் இங்ஙனம் வளர்ந்துவரும் நாட்களில், அவர் தவழ்ந்து தலையசைத்தாடிய தோற்றம், 'சிவபெருமான் திருத் தொண்டினையன்றிப் பிறிதொன்றையும் மதித்துரையோம்' என்று கூறுவது போலத் தோன்றியது. இரண்டு கைகளையும் கொட்டி விளையாடிய செயல், 'உலக மக்களே, யாம் சிவநெறி யினையன்றிப் பிற சமய நெறிகளை மதிக்கமாட்டோம். அடியரானீர் எல்லீரும் புறச்சமயங்களிற்புக்கு உழலாது அகன்று உய்வீர்களாக' என விலக்குவது போலவும் பின்னாளில் தாம் திருக்கோலக்கா இறைவர்பாற் பெறும் பொற்றாளத்தினை ஒத்தி இசைபாடுவது இவ்வாறெனக் காட்டுவது போலவும் இருந்தது. முறையற்ற கொள்கையினவாகிய புறச்சமயங்கள் இயக்கமற்றுத் தடைப்படும்படி பிள்ளையார் மதிதவழ் மாளிகை முன்றிலின் மருங்கே தவழ்ந்து விளையாடினார். ஏழிசையும் பலகலையும் எல்லாவுலகங்களும் தத்தமக்கேற்ற வகையால் வாழ்வுபெறப் பிறந்தருளிய பிள்ளையாரைச் சுற்றத்தாரும் தோழிமாரும் 'காழியர்தம் சீராட்டே, கவுணியர் கற்பகமே, வருக வருக' என ஆரா அன்பினால் அழைத்துப் பாராட்டினார்கள். பிறந்து ஓராண்டு நிரம்புதற்கு முன்னரே பிள்ளையார் தளர்நடையிட்டு நடக்கத்தொடங்கினார் பின்னர்த் தாதியர்களின் கைகளைப் பற்றி நடந்து தளர்ச்சி நீங்கிப் பாதம் நிலத்திற் பொருந்த நடந்து விளையாடினார். இரண்டாம் ஆண்டும் நிரம்பியது. இந் நிலையிற் பிள்ளையார் சிறுதேருருட்டியும் தெருவிற் சிறுமி யர்கள் செய்த மணற் சிறு வீடுகளைத் தம் அழகிய பாதங்களால் அழித்தும் விளையாடி மகிழ்வித்தார். பிள்ளையார்க்கு மூன்றாம் ஆண்டு தொடங்கியது. திருத்தொண்டின் பயனாகிய சிவஞானத்தை அளித்தருளுஞ் சிவபெருமானை முன்னைப் பிறவியில் வழிபட்டுப் பிரிந்த பிரிவுணர்வு, பிள்ளையார்க்கு ஒரோருகால் தோன்றுவதாயிற்று. அந்நிலையிற் பிள்ளையார் இருந்தாற் போல் வெருண்டு அழத்தொடங்கினார். அவரது அழுகைக்குறிப்பு இவ்வுலகியற் பொருள்களுக்கு அப்பாற் பட்டதாய் இருந்தது.

## ஞானப்பால் உண்டது

இங்ஙனம் நிகழும் நாளில் ஒருநாள். சிவபாத விருதயர் வேத விதிப்படி நீராடி வருதற்கு வெளியே புறப்பட்டார். பிள்ளை யாரும் அவரைத் தொடர்ந்து பின்சென்றார். அவரைத் தந்தையார் வெகுண்டு விலக்கினார். பிள்ளையார் பிடி வாதமாகத் தாமும் உடன் வரவேண்டுமென்று குறிப்புடை யராய்க் கால்களைக் கொட்டி அழுது நின்றார். 'உன் செய்கை இதுவாகில் உடன் வருக' என்று சொல்லித் தந்தையார் அவரை அழைத்துக் கொண்டு திருத்தோணிபுரத் திருக்கோயிலிலுள்ள பிரமதீர்த்தத்தை அடைந்தார். பிள்ளையாரைக் கரையில் அமரச் செய்து தாம் தடாகத்தில் இறங்கி விரைவில் நீராடித் திரும்புங் கருத்தினராய், செய்தற்குரிய நியமங்கள் பல செய்தார். பிள்ளையார் அவற்றைப் பார்த்துக்கொண்டிருந்தார். சிவபாத விருதயர் நீருள் மூழ்கிச் செபித்தற்குரிய அகமருட மந்திரத்தை ஓதுதற் பொருட்டு நீருள் சிறிது நேரம் மூழ்கியிருந்தார்.

இந்நிலையில் கரையிலமர்ந்திருந்த பிள்ளையார் தம் தந்தையாரைக் காணாது முற்பிறப்பின் நினைவு மூளப் பெற்றுக் கண்களில் நீர் ததும்பக் கைகளாற் பிசைந்து உதடுகள் துடிப்பப் பொருமி அழுபவர், வேறொன்றையும் பாராது திருத்தோணிச் சிகரத்தைப் பார்த்து 'அம்மே அப்பா' என்று அழைத்து அழுதனர். அந்நிலையில் தோணிபுரத்து இறைவர் உமாதேவி யாருடன் விடையின்மீது எழுந்தருளிப் பிரம தீர்த்தக் கரையை யடைந்தார். உமையம்மையை நோக்கி 'அழுகின்ற பிள்ளை யார்க்கு முலைப்பாலைப் பொன் வள்ளத்திலே ஊட்டுக' எனப் பணித்தருளினார். அம்மையாரும் திருமுலைப் பாலைப் பொற் கிண்ணத்திலே கறந்தருளிச் சிவஞானமாகிய இனிய அமிழ் தத்தையுங் குழைத்துப் பிள்ளையார் கையிற் கொடுத்து அவரது அழுகையைத் தீர்த்துப் பாலடிசிலை ஊட்டியருளினார். இவ்வாறு கவுணியப் பிள்ளையார் இளம்பருவத்திலேயே அம்மை யப்பரால் ஆட்கொள்ளப்பெற்றமையால் 'ஆளுடைய பிள்ளையார்' எனவும் தேவர்க்கும் முனிவர்க்கும் கிடைத்தற்கரிய சிவஞானம் பெற்றமையால் 'திருஞானசம்பந்தர்' எனவும் போற்றப் பெறுவாராயினர்.

இங்ஙனம் இறைவரருளால் ஞானவாரமுதம் உண்ட ஆளுடைய பிள்ளையார், உலகிலுள்ள எவ்வகைப்பட்ட பொருள்களையும் தன் நினைவளவானே ஆக்கவல்ல தனி முதல்வன் பிறப்பிறப்பற்ற செம்பொருளாகிய சிவபெருமானொ ருவனே யெனவுணரும் பேருணர்வும், அத்தகைய முழுமுதற் பொருளாகிய இறைவனென்றே கருதி வழிபடத்தக்க

பெருமையுடையார் சிவனடியார்கள் எனத் தெளியும் சிறந்த பேரறிவும் உடையராய், 'இம்முறையால் விளைவது இஃது' என ஆராய்ந்துணரும் தெளிவின்றித் தம் மனம் போனபடி யொழுகும் வலியிலாதாராகிய புறச்சமயத்தாருடைய பாழ்ங் கொள்கைகள் யாவும் சிதறுண்டழியும்படி மெய்ப்பொருளை நிலைநாட்டுந் துணிபுடன் உளங்கிளர்ந்தெழுந்தார்.

அப்பொழுது நிரில் மூழ்கி நியமங்களை விரைவில் முடித்துக் கரையேறிய சிவபாத விருதயர், சிவஞானத்தின் திரு வுருவெனக் கரையிலே நின்றுகொண்டிருந்த ஆளுடைய பிள்ளையாரை அவருடைய செவ்வாயிதழின் இருமருங்கும் பால்வழியும் நிலையிற் கண்டார். 'பிள்ளாய், நீ யாரளித்த பாலடிசில் உண்டனை? எச்சில் கலக்கும்படி உனக்கு இதனை இட்டாரைக் காட்டுக' என்று வெகுண்டு தரையிற் கிடந்த சிறிய குச்சியொன்றை எடுத்து அடிப்பதற்கு ஓங்கினார். சிறிய பெருந்தகையாராகிய பிள்ளையார், தம் உச்சியின்மேற் குவித்த கைவிரலொன்றினால், தம்மெதிரே தோன்றிய தோணிபுரத்து இறைவரைச் சுட்டிக்காட்டி, தம் உள்ளத்துள்ளே பொழிந் தெழுந்த உயர்ஞானத் திருமொழியால், அருமறைப் பொருள் களாகிய உயர்ந்த உண்மைகளையெல்லாந் தமிழ்மக்கள் தெளிவாக உணர்ந்து கொள்ளுதற் பொருட்டு, அளவற்ற மந்திரங்கட்கு மூலமாகிய ஓங்காரத்தினைத் தமிழென்னும் பெயரின் முதல் நிலையாகிய தகர மெய்யுடன் இயைத்துத் தொடங்கிய எழுது மறையாகிய வளமார்ந்த செந்தமிழ்ப் பாடல் களால் உலக மக்களுக்கு மெய்ப்பொருளுணர்வு சிறக்கத் தாய் பாடும் திருப்பாடல்கள் அம்மையப்பரது திருச்செவியிற் சென்று சாரும் தகுதி பெறுதற்கு இறைவரது இடப்பாகத்தமர்ந்த உமை யம்மையாரது தோடணிந்த திருச்செவியைச் சிறப்பித்து,

'தோடுடைய செவியன் விடையேறியோர்தூ வெண்மதிசூடி
காடுடைய சுடலைப்பொடி பூசியென் உள்ளங்கவர்கள்வன்
ஏடுடைய மலரான்முனை நாட்பணிந்தேத்தவருள் செய்த
பீடுடைய பிரமாபுரமேவிய பெம்மான் இவனன்றே'

என்ற திருப்பாடலை முதலாகவுடைய திருப்பதிகத்தைப் பாடி 'எம்மை இது செய்தபிரான் பிரமாபுர மேவிய பெம்மான் இவனே' எனத் தம் தந்தையார்க்கு அடையாளங்களுடன் குறிப் பிட்டருளினார்.

மண்ணுலகில் வாழ்வார்கள் அறியாமையாற் பிழை செய்தாலும் பின் தமது தவறுணர்ந்து இறைவனை உளமுருகிப் போற்றி வழிபடுவாராயின் இறைவனது திருவருள் அவர்களை உய்விக்கும் என்ற உண்மையை அறிவுறுத்தக் கருதிய

பிள்ளையார், இறைவன் வீற்றிருக்கும் திருக்கயிலாயத்தை ஆராயாது எடுக்க முயன்ற இராவணன் அம்மலைக்கீழ் அகப்பட்டு வருந்தித் தன் தவறுணர்ந்து இன்னிசைப்பாடலால் இறைவனைப் போற்ற, இறைவன் அவனுக்கு அருள்புரிந்த பெருங்கருணைத் திறத்தினை இத் திருப்பதிகத்தின் எட்டாந் திருப்பாடலில் எடுத்துரைத்தருளினார். இறைவனை அன் பினால் வழிபடும் அடியார்களுக்கே இறைவனது திருவருள் எளிதிற் கிடைக்கும் என்னும் நல்லுணர்வுடன் அப்பெருமானைத் தொழாது, தாங்களே முதல்வர் எனக் கருதும் வழுவான மனத்தாலே மயக்கமுற்ற திருமாலும் பிரமனும், பன்றியும் அன்னமுமாகி இறைவனுடைய அடியும் முடியும் தேடி அறியாது அயர்வுற்றுப் பின்பு திருவைந்தெழுத்தோதி உய்ந்த செய்தியினை ஒன்பதாவது திருப்பாட்டில் எடுத்துரைத்தார். கலைஞானங்களுக்கெல்லாம் முதல்வராகிய சிவபெருமானது திருவருள் நெறியையறிந்து உய்யும் மெய்யுணர்வின்றித் தம்மில் தாமே நன்மையைத் தேடிக்கொள்ள முயலும் சமணர் புத்தர் ஆகியவர்களுடைய சமய நெறிகள் பழிவிளைக்குங் குற்றமுடை யனவே என்பதனைப் பத்தாந் திருப்பாடலில் தெளிவாக அறிவுறுத்தியருளினார். இவ்வாறு ‘தோடுடைய செவியன்’ எனத் தொடங்கிய திருப்பதிகத்தைப் பத்துப் பாடல்களால் நிறைவு செய்து, பதிகப்பயன் கூறும் பதினொன்றாம் பாடலாகிய திருக்கடைக் காப்பினையும் பாடித் தம் கண்ணெதிரே விசும்பின் கண் விடைமீது தோன்றியருளிய அம்மையப்பரைத் தொழுது நின்றார்.

எல்லையற்ற பிறவிக்கடலைக் கடந்திடும்படி தம்முடைய திருவடித் துணையாகிய புணையினைத் திருஞானசம்பப் பிள்ளையார்க்குத் தந்தருள வந்த சிவபெருமான், உமாதேவி யாருடன் திருத்தோணிபுரத் திருக்கோயிலை நோக்கி எழுந் தருளினார். அது கண்டு ஆளுடைய பிள்ளையாரும் தம் கண்வழி சென்ற கருத்துவிடாது தொடர்ந்து செல்லத் தாமும் திருத்தோணிபுரத் திருக்கோயிலை நண்ணினார். தவம்பல செய்து இவர்க்குத் தாதையெனும் பெருமைபெற்ற சிவபாத விருதயர், பிள்ளையாரை அடித்தற்கு ஓங்கிய சிறிய கோல் தம் கையினின்றும் நெகிழ்ந்து கீழேவிழ, வெருட்சியும் வியப்பும் உடையராய், இருகைகளையும் தலைமேற் குவித்துத் தொழுது, தம் மகனார் பாடியருளும் இனிய அகப்பொருட்டுறை வாய்ந்த செந்தமிழ்ப் பாடல்களின் குறிப்பினையுணர்வாராகித் தம் அருந்தவப் புதல்வரைப் போன்று இறைவனது திருவுரு வுருவினைத் தாம் முழுதுங் காணப்பெற்றிலாராயினும் அப்பெருமானருளால் தம் புதல்வர்க்குண்டாகிய சிவஞானப்

பெருக்கின் விளைவுகளை நேரிற் காணப்பெற்றாராதலின், வியப்புடைய இந்நிகழ்ச்சி பிரமாபுரமேவிய பெம்மானது திருவருளெனவே துணிந்து ஆளுடைய பிள்ளையாரைத் தொடர்ந்து பின்சென்றார். முன்னே சென்ற பிள்ளையார், தோணிபுரத் திருக்கோயிலையடைந்து அங்கு எழுந்தருளிய இறைவன் திருமுன்னர் நின்று "இங்கு எனை ஆளுடையான் உமையாளோடும் எழுந்தருளியிருக்கின்றான்" எனப் பரவிப் போற்றினார். இவ்வியப்புடைய நிகழ்ச்சியையறிந்த அருமறையந் தணர்களும் புகலிநகர மாந்தரும் 'இதற்கு ஒப்பாகிய அற்புதம் வேறு எங்கே நிகழ்ந்துள்ளது' என்று சொல்லிக்கொண்டு திருத்தோணிபுரத் திருக்கோயிலையடைந்து நிலமிசை வீழ்ந்து திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவடிகளை வணங்கிப் போற்றினார்கள். தந்தையார் சிவபாத விருதயர், தம் அருந்தவப் புதல்வராகிய ஆளுடைய பிள்ளையாரைத் தம் தோளின்மேல் அமர்த்திக் கொண்டு, மங்கல வாத்தியங்கள் முழங்க அந்தணர்கள் அருமறை முழக்கஞ் செய்யச் சிவனடியார்கள் போற்றச் சீகாழிப் பதியை வலஞ்செய்து தமது திருமாளிகையை யடைந்தார்.

திருஞானசம்பந்த பெருமான் மூன்று வயதிலேயே உமையம்மையாரளித்த ஞானப்பாலடிசிலுண்டு தேவருக்கும் முனிவருக்கும் தெரிவரிய பொருளாகும் தாவில் தனிச் சிவஞான சம்பந்தராயினார் என்ற இவ் வரலாறு, உலகத்தார்க்குப் பெரு வியப்பைத் தரக்கூடியதேயாகும். ஆளுடையபிள்ளையார், முதன்முதல் திருவாய்மலர்ந்தருளிய 'தோடுடைய செவியன்' என்ற முதற்குறிப்புடைய திருப்பதிகத்திற் பாடல் தோறும் சிவபெருமானை அடையாளங்களுடன் கூறி' எனது உள்ளங் கவர் கள்வன்... பிரமாபுர மேவிய பெம்மான் இவனன்றே' எனத் தெளிவாகச் சுட்டிக் காட்டுதலானும், தமக்கு அருள் செய்யும் பொருட்டுச் சிவபெருமான் பிரமதீர்த்தக் கரையில் எழுந்தருளி வந்த எளிமைத் தன்மையினையும் அவனருளால் ஒரு நெறிய மனம் வைத்துணரும் சிவஞானத்தினையும் அதன் பயனாகத் திருநெறிய தமிழ்பாடும் ஆற்றலையும் தாம்பெற்று மகிழ்ந்த திறத்தினையும்,

அருநெறிய மறைவல்ல முனியகன் பொய்கையலர்மேய
பெருநெறிய பிரமாபுரமேவிய பெம்மானிவன்றன்னை
ஒருநெறிய மனம் வைத்துணர் ஞானசம்பந்த னுரைசெய்த
திருநெறிய தமிழ்வலலவர் தொல்வினை தீர்தலெளிதாமே.

எனவரும் திருக்கடைக்காப்புப்பாடலில் தெளிவாகக் குறிப்பிடு தலானும் 'தோடுடைய செவியன்' என வரும் இத்திருப்பதிகம் உமையம்மையாரளித்த ஞானப் பாலைப் பருகிநின்ற ஆளுடைய பிள்ளையார் 'யாரளித்த பாலடிசில் உண்டனை, எச்சில்

மயங்கிட நினக்கு ஈது இட்டாரைக் காட்டுக' என வெகுண்டுரைத்த தந்தையாரை நோக்கி 'எம்மையிது செய்தபிரான் இவனன்றே' என அடையாளங்களுடன் காட்டும் நிலையிற் பாடியருளியதென்பது நன்கு புலனாகும்.

திருஞான சம்பந்தப் பிள்ளையார் தமது இளம்பருவத்தில் நிகழ்ந்த வியப்புடைய நிகழ்ச்சியாகிய இதனைப் பின்னொரு காலத்தில் நினைந்து போற்றும் நிலையில் தாம் பாடிய திருப்பதிகமொன்றில் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். குலச் சிறையார், மங்கையர்க்கரசியார் என்னும் இருவரது வேண்டு கோட் கிணங்கித் தென்றமிழ்ப்பாண்டி நாட்டிற் சிவநெறியைப் பரப்புதல் கருதி மதுரைக்குச் சென்ற திருஞானசம்பந்தப் பெருமான், சமணர்களை வாதில்வென்று பாண்டியனது கூனை நிமிர்த்துச் சிவனடியார்களுடன் அளவளாவி யமர்ந்திருக் கின்றார். அந்நிலையில் அவரைக் காணவேண்டுமென்னும் பேரார்வத்தால் அவருடைய தந்தையார் சிவபாதவிருதயர் சீகாழிப்பதி யிலிருந்து புறப்பட்டு மதுரைக்கு வந்து பிள்ளையாரைக் காண்கின்றார். தந்தையாரைக் கண்ட சம்பந்தர், சீகாழிப்பதியிலெழுந்தருளிய இறைவனது நலத்தினை வினவும் நிலையில் 'மண்ணினல்லவண்ணம்' என்ற திருப்பதிகத்தைப் பாடுகின்றார். அருந்தவத்தீர் எனக்கு வினவு தெரியாத இளம்பருவத்திலே எழுந்தருளி வந்து அழகிய பொற் கிண்ணத்திலே பாலடிசிலை யூட்டியருளி, அவ்வடிசில் பொல்லா தென்று கூறித் தந்தையார் வெகுளும்படி என்னை ஆட்கொண்டருளிய பிரமபுரத்து இறைவனாகிய பெருந்தகை, எம்பெருமாட்டியுடன் கழுமல வளநகரில் இனிது எழுந்தருளியிருக்கின்றதா? எனத் தம் தந்தையாரை நோக்கி வினவுவதாக அமைந்தது,

> போதையார் பொற்கிண்ணத் தடிசில் பொல்லாதெனத்
> தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்
> காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
> பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே.

எனவரும் திருப்பாட்டாகும். உருவறியாப் பருவத்தே இறைவன் அம்மையப்பனாக எழுந்தருளி வந்து தமக்கு ஞானப்பாலளித்து ஆட்கொண்டருளினமையும், அதனை யுணரப்பெறாத நிலையில் தம் தந்தையார் தம்மை வெகுண்டுரைத்தமையும் ஆகிய நிகழ்ச்சி யினைப் பிள்ளையார் இத்திருப்பாடலில் தெளிவாகக் கூறுதல் காணலாம். அன்றியும் இளம்பருவத்தே இறைவன் அம்மை யப்பராகத் தோன்றித் தம்மையாட்கொண்டருளியது கேட்டுப் பொறாத சமணர் புத்தர் முதலிய புறச்சமயத்தார்கள், தாம் சிவஞானம் கைவரப் பெறாமையால் சிவபெருமானை ஒழியாது பழித்துரைத்தனர் என்பதனை,

'அலையாரும் புனல் துறந்த அமணர் குண்டர் சாக்கியர்
தொலையா தங்கு அலர்தூற்றத் தோற்றங் காட்டி
யாட்கொண்டீர்'

எனத் தலைச்சங்கைப் பெருமானைப் போற்றுந் தொடரால் ஆளுடைய பிள்ளையார் தெளிவாகக் கூறியுள்ளார். திருஞான சம்பந்தப் பிள்ளையார் தமது இளம் பருவத்திலேயே சிவபெரு மானது திருக்கோலத்தைக் கண்ணாரக்கண்டு வழிபட்டுத் திருநெறிய தமிழாற் போற்றிய பேருணர்வுடையாரென்பது, அவர் திருவாய் மலர்ந்தருளிய திருப்பாடல்களாகிய அகச் சான்றுகளால் இனிது புலனாதல் காணலாம்.

இனி, திருஞானசம்பந்தப்பிள்ளையார் அருளிய தேவாரத் திருப்பதிகங்களை ஆர்வமுறப்பாடி இறைவனது உவப்பைப் பெற்றவரும் பிள்ளையார் வாழ்ந்த காலத்தையொட்டித் தமிழ்நாட்டில் தோன்றித் திருநெறித்தமிழ்த்தொண்டு புரிந்த அருளாசிரியருமாகிய நம்பியாரூரர், சிவபெருமான் திருஞான சம்பந்தப் பிள்ளையார்க்கு ஞானவாரமுதம் அருத்திய இத்திரு வருட் செயலை,

ஏன மருப்பினொடும் எழில் ஆமையும் பூண்டுகந்து
வான மதிலரண மலையேசிலையா வளைத்தான்
ஊனமில் காழிதன்னுள் உயர் ஞானசம் பந்தர்க்கன்று
ஞானம் அருள்புரிந்தான் நண்ணுமூர் நனிபள்ளியதே

எனவரும் திருப்பாடலில் எடுத்துரைத்துப் போற்றியுள்ளமை இவண் நினைவுகூரத் தக்கதாகும்.

சீகாழிப் பெருமானைப் பரவிப்போற்றும் திருவெண் காட்டடிகள், ஆளுடையபிள்ளையார்க்குத் தோணிபுரத் திறைவன் அம்மையொடும் தோன்றி அருள்புரிந்த திறத்தை,

தாதையொடு வந்த வேதியச் சிறுவன்
தளர்நடைப் பருவத்து வளர்பசி வருத்த
அன்னோயோ வென்றழைப்ப முன்னின்று
ஞானபோனகத் தருள் அட்டிக் குழைந்த
ஆனாத் திரளை யவன்வயின் அருள
அந்தணன் முனிந்து தந்தார் யாரென
அவனைக் காட்டுவன் அப்ப வானார்
தோடுடைய செவியனென்றும்
பீடுடைய பெம்மா னென்றும்
கையிற் சுட்டிக் காட்ட
ஐயநீ வெளிப்பட்டருளினை யாங்கே.

எனத் திருக்கழுமலமும்மணிக் கோவையில் விரித்துரைத்துப் போற்றியுள்ளார். தளர்நடைப் பருவத்தினராகிய ஆளுடைய

பிள்ளையார், தம் தந்தையாரைத் தொடர்ந்து சென்று வளர்பசி வருத்த அன்னாயோ என அழைத்து அழுதநிலையில், அம்மை யப்பனாகிய இறைவன் எழுந்தருளி வந்து ஞானபோனகத்தினை அருத்தியருள அதனை நுகர்ந்து மகிழ்ந்த ஞான சம்பந்தப் பிள்ளையார், 'தந்தார் யார்' எனறு தம்மை முனிந்த சிவபாத விருதயரை நோக்கித் 'தோடுடைய செவியனென்றும் பீடுடைய பெம்மானென்றும்' அடையாளங்களுடன் கையினாற் சுட்டிக் காட்ட இறைவன் வெளிப்பட்டருளிய அற்புத நிகழ்ச்சி இத் தொடரில் தெளிவாக விரித்துரைக்கப் பெற்றமை காணலாம்.

திருஞானசம்பந்தப்பிள்ளையாரைக் குறித்து நம்பியாண் டார்நம்பி பாடிய பிரபந்தங்களிலும் அற்புத நிகழ்ச்சியாகிய இச்செய்தி இடம் பெற்றுளது.

"அலையார்ந்த கடலுலகத் தருந்திசைதோ றங்கங்கே
நிலையார்ந்த பலபதிகம் நெறிமனிதர்க் கினிதியற்றி
ஈங்கருளி எம்போல்வார்க் கிடர்கெடுத்தல் காரணமா
ஓங்குபுகழ்ச் சண்பையெனும் ஒண்பதியுள் உதித்தனையே.

செஞ்சடை வெண்மதியணிந்த சிவனெந்தை திருவருளால்
வஞ்சியன நுண்ணிடையாள் மலையரையன் மடப்பாவை
நற்கண்ணி அளவிறந்த ஞானத்தை அமிர்தாக்கிப்
பொற்கிண்ணத் தருள்புரிந்தபோன கமுன் நுகர்ந்தனையே.

தோடணிகா தினனென்றும்தொல்லமரர்க் கெஞ்ஞான்றும்
தேடரிய பராபரனைச் செழுமறையின் அகன்பொருளை
அந்திச்செம் மேனியனை அடையாளம் பலசொல்லி
உந்தைக்குக் காண அரன் உவனாமென் றுரைத்தனையே"

என ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகத்தில் நம்பியாண்டார் நம்பி ஞானசம்பந்தப் பிள்ளையாரை முன்னிலைப் படுத்திப் போற்று முகமாகப் பிள்ளையார் இளம் பருவத்திலேயே திருவருள் ஞானம் பெற்றுத் 'தோடுடைய செவியன்' என்னும் திரு நெறிய தமிழ்பாடிய அற்புத நிகழ்ச்சியை விரித்துரைத்தமை காண்க.

இறைவனருளால் ஞானவாரமுதம் பெற்ற திருஞான சம்பந்தப் பிள்ளையார், தாம் முன்னைப்பிறப்பில் இளம் பருவ முதலே சிவபெருமானை வழிபட்டுப் போற்றிய திறத்தையும் அங்ஙனம் மறவாது ஏத்திய தம்மை இறைவன் இவ்வுலகில் மீளப் பிறக்கச் செய்து வினைத் தொடர்பகற்றி ஞானமுலாவு சிந்தையில் திருவருட்பதிவினைச் செய்து ஆட்கொண்டருளிய திருவருட் செய்தியையும்,

"துறக்குமா சொலப்படாய் துருத்தியாய் திருந்தடி
மறக்குமா றிலாத வென்னை மையல்செய்திம் மண்ணின்
மேற்
பிறக்குமாறு காட்டினாய்"

எனவும்,

"கோல மாய நீண்மதிற் கூடலால வாயிலாய்
பாலனாய தொண்டுசெய்து பண்டமின்று முன்னையே
நீலமாய கண்டனே றின்னையன்றி நித்தலும்
சீலமாய சிந்தையிற் றேர்வதில்லை தேவரே"

எனவும்,

"பருவத்தில் வந்து பயனுற்ற பண்பன்"

எனவும்,

"பண்டு நான் செய்த வினைகள் பறையவோர் நெறி அருள்
பயப்பார்"

எனவும்,

"கான லுலாவியோத மெதிர்மல்கு காழி
மிகுபந்தன் முந்தியுணர
ஞான முலாவுசிந்தை யடிவைத் துகந்த
நறையூரின் நம்பன்"

எனவும் வரும் தொடர்களால் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். இக்குறிப்புக்களால் ஆளுடைய பிள்ளையார் பண்டைப் பிறவியி லேயே சிவனடிக்குத் தொண்டுபட்டுப் பாசத் தொடர்பினை அறவே நீக்கியவரென்பது நன்கு பெறப்படும்.

இங்ஙனம் திருஞானசம்பந்தப் பிள்ளையார் முன்னைப் பிறப்பிலேயே பாச நீக்கம் பெற்றவராயினும் தவவேதியராகிய சிவபாதவிருதயரும் அவர் மனைவியார் பகவதியாரும் ஆற்றிய சிவவழிபாட்டின் காரணமாகவும் இந்நிலவுலகத்தில் இறை வனுக்கு இடையறாது தொண்டுபுரிய வேண்டுமெனப் பிள்ளை யார் முன்னைப் பிறவியிற் கொண்டிருந்த பெருவிருப்பங் காரண மாகவும் சிவபெருமான் ஆளுடைய பிள்ளையாராகிய அவரை இவ்வுலகிற் பிறப்பித்தருளினன் என்பது,

'பண்டு திருவடி மறவாப் பான்மையோர் தமைப் பரமர்
மண்டுதவ மறைக்குலத்தோர் வழிபாட்டின் அளித்தருள'

எனவும்,

'பாசம் மற்றில ராயினும் பார்மிசை
ஆசை சங்கரற் காயின தன்மையால்
தேசு மிக்க திருவுரு வானவர்
ஈசனைத் தொழுதே தொழு தேகினார்'

எனவும் வரும் சேக்கிழாரடிகள் வாய்மொழிகளால் இனிது புலனாம்.

> **ஒருமைக்கண் தான்கற்ற கல்வி யொருவற்**
> **கெழுமையும் ஏமாப் புடைத்து (398)**

எனத் தெய்வப்புலவர் திருவள்ளுவர் கூறியவாறு முற்பிறப்பிற் கற்ற கல்வியும் கல்விப் பயனாகிய கடவுள் வழிபாடும் உயிரைத் தொடர்ந்து சென்று பயன்தருதல் ஒருதலையாகலின், ஆளுடைய பிள்ளையார் பண்டுதிருவடி மறவாப் பான்மையாகிய நற்றவத்தின் பயனாக இளம் பருவத்திலேயே இறைவன் திருவருளாற் சிவஞானப் பாலுண்டு திருஞானசம்பந்தப் பிள்ளையாரெனப் போற்றப் பெற்றனரென்க.

மூவாண்டு நிரம்பாத குழந்தைப் பருவத்தினராகப் பிள்ளை யார் இருந்தமையாலும் தளர்நடைப் பருவத்தினராகிய அவர் வளர்பசி வருத்த "அம்மே அப்பா" என அழைத்து அழுதமை யாலும் சிவபெருமான் தாயும் தந்தையுமாகிய திருக்கோலத்துடன் வந்தருளி அக்குழந்தைக்குப் பாலமுதம் ஊட்டும் வாயிலாகச் சிவஞானத்தை நல்கியருளினனென்க, ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலமுடைய சகலராகிய நம்மனோர்க்கு அருள் செய்யும் முறையில் இறைவன் ஆளுடைய பிள்ளையார்முன் மானிட வடிவு கொண்டு தோன்றாது. விடைமேல் உமையொரு பாகராக முன்னின்று அருள் புரிந்ததன் காரணம், பிள்ளையார் நம்மைப்போன்று சகலராய்ப் பிறந்தும் பிரளயாகலர்க்குரிய உபதேசம் பெறும் பக்குவமுடையராயிருந்தமையே யென அறிஞர் கூறுவர்.* (* பல்கலைப் புலவர் கா. சுப்பிரமணிய பிள்ளை யவர்கள் எழுதிய 'திருஞானசம்பந்த சுவாமிகள் சரித்திரம்' பக்கம் 3,8) பண்டை நற்றவத்தாற் றோன்றிப் பரமனைப் பத்தி பண்ணும் தொண்டராகிய சீகாழிப் பிள்ளையார்க்குச் சிவபெருமான் உமாதேவியாருடன் விடைமேல் எழுந்தருளிச் சிவஞானம் வழங்கினன் என்னும் இவ்வரலாறு, முற்செய்தவ விசேடத்தினாற் சாமுசித்தராய்ப் பிறந்து வீடுகாதலிக்குஞ் சிவபத்தரை விஞ் ஞானாகலர் பிரளயாகலரைப் போலக் கொண்டு நூல்வழி யானன்றித் தானே சிவகதியிற் சேர்த்தற் பொருட்டுச் சிவபெரு மான் எளிவந்து அருள்புரிவன்* (* 'பண்டை நற்றவத்தாற்றோன்றிப் பரமனைப் பத்தி பண்ணுந் தொண்டரைத் தானே தூய கதியினில் தொகுப்பன்' - சிவஞானசித்தியார், சுபக்கம் 4-ஆம் பாடல்) என்னும் மெய்ந்நூற்றுணிபுக்கு ஏற்ற இலக்கிய மாதல் தெளிக.

திருஞானசம்பந்தப் பிள்ளையார் ஞானப்பாலுண்டு முதன் முதற் பாடியதெனக் கூறப்படும் 'தோடுடைய செவியன்' என்ற திருப்பதிகம், தந்தையை நோக்கி மைந்தன் கூறிய மொழியாக

அமையாது, பிரமபுரத்துறையும் பெம்மானாகிய உள்ளங்கவர் கள்வனை நினைந்திரங்கும் தலைமகள் கூற்றாக அமைந்திருந்தலால், முனிவுற்ற தாதையாருக்கு இளமகளொருத்தி தன் நிறையழிய வளைசோர உள்ளங்கவர்ந்த கள்வனைக் காட்டி 'இவனே அவன்' எனக் கூறனாளென்பது நெறியாகாதென்றும், பொற்கிண்ணத்தடிசில் பொல்லாதெனத் தாதையார் முனிவுற்ற எல்லையிலே திருஞான சம்பந்தப் பிள்ளையார் பாடிய திருப்பதிகம் வேறொன்றாய் இருக்கலாமென்றுங் கூறுவதுண்டு.*
(* தமிழ்ப்பொழில் 16-ஆம் துணர் பக்கம் 335-341)

தோடுடைய செவியன் என்னும் இத் திருப்பதிகம், பாலூட்டியருள்புரிந்த பெருந்தகை இவனே எனத் தந்தையார்க்குச் சுட்டிக்காட்டுமளவில் நில்லாது உமையம்மையாரளித்த ஞான வாரமுதத்தைத் தாம் பருகிய நிலையிற் பெற்ற சிவாநுபவ இன்பத்தினைப் பிள்ளையார் தம் தந்தையார்க்கு அறிவுறுத்தும் நிலையிலும் அமைந்துள்ளமை காணலாம். தம் பொருட்டு எளிவந்தருளிய பிரமபுரத்திறைவனைத் தம் தந்தையார்க்கு அடையாளங்களுடன் சுட்டிக் காட்டக் கருதிய ஆளுடைய பிள்ளையார், தன்னேரில்லாத் தலைவனாகிய அப்பெருமானைக் கண்டு உயிராகிய தாம்பெற்ற சிவாநுபவமாகிய காதலின் பத்தினைத் தமிழுக்கேயுரிய இனிய அகப்பொருட்டுறையானன்றிப் பிறிதெவ்வாற்றானும் சொல்லால் விளங்கச் சொல்லுதல் இயலாதெனத் துணிந்து 'எம்மை யிதுசெய்த பிரான் இவனன்றே' என இனிய அகப் பொருட்டுறையமைய இத்திருப்பதிகத்தினைப் பாடியருளினா ரென்பதும், இத்திருப் பதிகத்திலமைந்த அகப்பொருட் குறிப்பினைச் சிவபாதவிருதயர் நன்கு ஓர்ந்துணர்ந்து கொண்டாரென்பதும்,

செம்மை பெற வெடுத்ததிருத் தோடுடைய செவியனெனும்
மெய்ம்மை மொழித்திருப்பதிகம் பிரமபுரம் மேவினார்
தம்மை யடையாளங்களுடன் சாற்றித் தாதையார்க்
கெம்மை யிதுசெய்தபிரான் இவனன்றே எனவிசைத்தார்.

எனவும்,

ஈறில்பெருந்தவம் முன்செய்துதாதை யெனப்பெற்றார்
மாறு விழுந்த மலர்க்கை குவித்து மகிழ்ந்தாடி
வேறு விளைந்த வெருட்சி வியப்பு விருப்போடும்
கூறுமருந்தமிழின் பொருளான குறிப்போர்வார்.

எனவும் வரும் பெரியபுராணச் செய்யுட்களால் இனிது விளங்கும். உமையம்மையாரளித்த ஞானப்பாலைப் பருகிப் பாலறாவாயராக நின்ற ஆளுடைய பிள்ளையாரைக் கண்ட சிவபாதவிருதயர்,

எச்சில் மயங்கிட நினக்கு இதனையிட்டாரைக் காட்டுக எனக் கையின் கண் சிறியதொரு பிரம்பினைக் கொண்டு ஓச்சும் நிலையிற் பிள்ளையார் முதன்முதற் பாடிய திருப்பதிகம் தோடுடைய செவியன் என்ற இதுவேயெனத் திருவெண்காட்டு அடிகள், நம்பியாண்டார்நம்பி, சேக்கிழாரடிகள் முதலிய பெருமக்கள் தெளிவாக அறிவுறுத்தியுள்ளமை இங்கு நினைக்கத் தகுவதாம்.

## பிள்ளையாரது முன்னைநிலை

முழுமுதற் கடவுளின் திருமகனாராகிய முருகப் பெருமானே திருஞானசம்பந்தப் பிள்ளையாராக அவதரித்த ருளினாரென்று கவிச்சக்கரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தர் தாம் இயற்றிய தக்கயாகப் பரணியிற் பாராட்டிப் போற்றியுள்ளார். திருப்புகழாசிரியராகிய அருணகிரிநாதர் திருஞானசம்பந்தப் பிள்ளையார் நிகழ்த்திய அற்புத நிகழ்ச்சிகளை முருகப் பெருமான் இயற்றிய திருவிளையாடல்களாகத் திருப்புகழ்ப் பாடல்களிற் புகழ்ந்து போற்றியுள்ளார். இக்கருத்தே கொண்டு திருப்போரூர் சிதம்பர சுவாமிகளும்,

> 'அரனோடு வந்தம்மையளித்த வள்ளப்பாலைப்
> புரைதீரவுண்டவரைப் போதமுறக்கண்டானோ'

என்றாங்கு ஞானசம்பந்தப்பெருமான் வரலாற்று நிகழ்ச்சியை முருகப்பெருமான்மீது ஏற்றிப் போற்றியுள்ளார். சிவநெறி பரப்பும் புதல்வரை வேண்டித் தவம் புரியும் சிவபாதவிருதயர் பகவதியார் ஆகிய அடியார் இருவர்க்கும் அருள்புரியத் திருவுளங்கொண்ட முருகப்பெருமான் சீகாழிப்பதியிலே பிரம தீர்த்தத்தின் ஒரு பக்கத்திலே இளங்குழந்தையாக அருளுருக் கொண்டு எழுந்தருளினன் எனச் சீகாழிப்புராணம் கூறுகின்றது.*

(* 'பூதல மதனிற் காழிநன் னகரிற் புண்டரீகன் தடத்தொருசார், மாதவம் புரிவோர் முன்னிளங்கதிர்போல் மதலையாய்வந்தனன் முருகன்' - சீகாழிப் புராணம்)

திருஞான சம்பந்தர் முருகப்பெருமானது அவதாரமேயென்பது உண்மையாயிருக்குமானால் திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் திருவருளால் திருத்தொண்டத் தொகையிற் போற்றப்பெற்ற சிவனடியார்களின் வரலாறுகளை வகைப்படுத்துணர்த்திய நம்பியாண்டார்நம்பி தாம் பாடிய ஆளுடைய பிள்ளையார் பிரபந்தங்களில் முருகவேள் திருவவ தாரமே ஞானசம்பந்தரென்பதை மறவாது எடுத்தோதிப் போற்றியிருப்பர். அத்தகைய குறிப்பெதுவும் அவர் பாடிய பனுவல்களிற் காணப்படவில்லை. அவர் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியை யடியொற்றித் திருத்தொண்டர் புராணமியற்றிய சேக்கிழாரடிகள் 'பண்டு

திருவடி மறவாப் பான்மையோர்' ஆகிய சீகாழிப் பிள்ளையார், யாவருக்குந் தாயுந்தந்தையுமாகிய அம்மையப்பரளித்த சிவஞானப்பாலுண்டு வளர்ந்தமை பற்றி ஆளுடைய பிள்ளையாராயினார் எனக் கூறியதன்றி முருகனே ஆளுடைய பிள்ளையாராகப் பிறந்தருளினாரென யாண்டுங் கூறவில்லை. திருஞான சம்பந்தப் பிள்ளையார் தாம் திருவாய் மலர்ந்தருளிய திருப்பாடல்களில் முற்பிறப்பிலே இறைவனடிக்குத் தொண்டு பூண்டு வாழ்ந்த சிவனடியாராகவே தம்மைக் குறிப்பிட்டுள்ளார். ஆகவே ஒட்டக்கூத்தர், அருணகிரிநாதர் முதலியோர் திருஞான சம்பந்தப்பிள்ளையாரை முருகப்பெருமனாகக் கொண்டு போற்றியிருப்பது, திருவுடை மன்னரைத் திருமாலாகக் கொண்டு போற்றுவது போன்ற உபசார வழக் கெனவே கொள்ளுதல் வேண்டும்.

இனி, முருகன் ஆணையினால் உரோமச முனிவரென்பார் ஞானசம்பந்தராகப் பிறந்தனரெனப் புலவர் புராணமுடையார் கூறியுள்ளார்.* (* புலவர் புராணம், திருஞானசம்பந்தர் சருக்கம் 4-9) உடல் முழுதும் மயிரடர்ந்த உரோமச முனிவரென்பார் திருக்கழு மலத்தில் எழுந்தருளிய இறைவனைத் தம் முனிவர் குழுவுடன் வழிபாடு செய்து மலமாயின தீர்ந்து இறைவனோடு இரண்டறக் கலந்து இன்புற்ற செய்தியை,

ஒழுகலரி தழிகலியி லூழியுலகு
பழிபெருகு வழியை நினையா
முழுதுடலி லெழுமயிர்கள் தழுவுமுனி
குழுவினொடு கெழுவு சிவனைத்
தொழுதுலகில் இழுகுமல மழியும்வகை
கழுவுமுரை கழுமல நகர்ப்
பழுதிலிறையெழுதுமொழி தமிழ்விரகன்
வழிமொழிகள் மொழிதகையவே.

எனவரும் வழிமொழித் திருவிராகமாகிய திருப்பதிகத்தின் திருக்கடைக்காப்பில் இனிது விளக்கியுள்ளார். சிவபெருமா னோடு இரண்டறக் கலந்த உரோமச முனிவர் மீண்டும் திருஞானசம்பந்தராக இவ்வுலகிற் பிறந்தாரெனக் கூறுதல், சிவஞானச் செல்வராகிய ஆளுடைய பிள்ளையார் வாய் மொழிக்கும் சைவசமயத்தவர்கள் கூறும் மீண்டுவாரா வழி யாகிய வீடுபேற்றின் இயல்புக்கும் முற்றும் முரணாமாதலின் புலவர் புராணமுடையார் கூற்று சிறிதும் பொருத்தமுடைய தாகத் தோன்றவில்லை. 'புகலி நிலாவும் பூசுரன் ஞானசம்பந்தன்' எனவும் 'கழுமல முதுபதிக் கவுணியன்' எனவும் ஆளுடைய பிள்ளையார் தாம் பிறந்தருளிய ஊர், குலம், கோத்திரம் ஆகியவற்றைத் தெளிவாகக் குறிப்பிடுதலாலும், 'கழுமலநாதன்

கவுணியர் குலபதி' என நம்பியாண்டார் நம்பி பிள்ளையாரைப் போற்றுதலாலும் சீகாழிப் பதியில் வேதியர் மரபிலே கவுணிய கோத்திரத்திலே பிறந்தருளியவர் திருஞான சம்பந்தப் பிள்ளை யாரென்பது நன்கு தெளியப்படுமென்க.

## பொற்றாளம் பெறுதல்

உமையம்மையார் அளித்த பாலடிசிலுண்டு திருநெறிய தமிழ் பாடிய திருஞான சம்பந்தப் பிள்ளையார் தமது திரு மாளிகையை யடைந்து அன்றிரவு இறைவன் திருவருளையே யெண்ணியிருந்து மறுநாள் விடியற் காலையில் எழுந்து திருக்கழுமலத் திருக்கோயிலில் வீற்றிருந்தருளும் தாதையாராகிய இறைவரையும் ஞானவாரமுதம் அருத்திய புண்ணியத் தாயாராகிய உமையம்மையாரையும் வணங்கிப் போற்றினார். அருகேயுள்ள திருக்கோலக்காவென்னும் திருப்பதியில் எழுந் தருளிய பெருமானை வணங்கும் விருப்புடன் சென்று திருக் கோயிலை வலம் வந்து இறைவன் திருமுன்னர் நின்று,

மடையில் வாளை பாய மாதரார்
குடையும் பொய்மைக் கோலக் காவுளான்
சடையும் பிறையும் சாம்பற் பூச்சுங்கீழ்
உடையுங் கொண்ட உருவ மென்கொலோ.

எனத் தொடங்கும் இன்னிசைத் திருப்பதிகத்தினைத் தம் மெல்லிய கைம்மலர்களால் தாளமிட்டுப் பாடினார். பிள்ளையார் தம் கையதனால் ஒத்தறுத்துப் பாடுதலைக் கண்ட திருக்கோலக்காவிறைவர், பிள்ளையாருடைய கைகள் வருந்தும் என்று எண்ணித் திருவைந்தெழுத் தெழுதப்பெற்ற செம் பொன்னாலாகிய திருத்தாளத்தினைப் பிள்ளையார் கைத்தலத் திலே வந்து பொருந்தும்படி அளித்தருளினார். ஆளுடைய பிள்ளையாரும் இறைவனருளால் தம்கையகத்து வந்து சேர்ந்த திருத்தாளத்தினைத் தலைமேற் கொண்டு போற்றி மகிழ்ந்து ஏழிசையுந் தழைத்தோங்க அவ்வின்னிசைத் திருப்பதிகத்தினைத் தாளத்துடன் பாடிப் போற்றினார்.

இங்ஙனம் திருக்கோலக்காவில் எழுந்தருளிய சிவபெருமான், திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு உலகவர் காணத் தாளம் ஈந்தருளி, அவர் பாடல் கேட்டுகந்து நாளும் இன்னிசையால் தமிழ் பரப்ப உதவிய இத்திருவருட் செயலை,

நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பும்
ஞானசம்பந்தனுக்கு உலகவர்முன்
தாளம் ஈந்து அவன் பாடலுக் கிரங்குந்
தன்மையாளனை என்மனக் கருத்தை
ஆளும் பூதங்கள் பாட நின்றாடும்
அங்கணன்றனை எண்கண மிறைஞ்சுங்

கோளிலிப் பெருங் கோயிலுளானைக்
கோலக்காவினிற் கண்டு கொண்டேனே.

எனவரும் திருப்பாடலால் நம்பியாரூரர் உளமுருகிப் போற்றி யுள்ளார். இதன்கண் 'உலகவர்முன் தாளம் ஈந்து' என நம்பியாரூரர் தெளிவாகக் குறிப்பிடுதலால் திருஞானசம்பந்தர் பொற்றாளம் பெற்று அருட்செயல் உலக மக்கள் கண்காண நிகழ்ந்ததென்பது நன்கு பெறப்படும்.

கண்ணார் திருநுத லோன்கோலக் காவிற்
கரநொடியாற்
பண்ணார் தரப்பாடு சண்பையர் கோன்பாணி
நொந்திடுமென்
றெண்ணா வெழுத்தஞ்சு மிட்டசெம் பொற்றாளம்
ஈயக்கண்டும்
மண்ணார் சிலர் சண்பை நாதனை யேத்தார்
வருந்துவதே.

எனவரும் ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதியில் அற்புத நிகழ்ச்சியாகிய இதனை நம்பியாண்டார் நம்பி குறித்துப் போற்றினமை இவண் நினைக்கத் தகுவதாகும்.

## பாலைநெய்தல் பாடியது

திருக்கோலக்காவில் பொற்றாளம் பெற்ற ஆளுடைய பிள்ளையார் சீகாழித் திருக்கோயிலையடைந்து 'பூவார் கொன்றை' யெனத் தொடங்கும் திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றித் தமது திருமாளிகை யடைந்தார். பிள்ளையாரைப் பெற்ற தாயாராகிய பகவதியார் பிறந்த திருநனிபள்ளி யென்னும் ஊரிலுள்ள அந்தணர்கள், மூவாண்டில் அருள் ஞானம் பெற்ற பிள்ளையாரது அற்புத நிகழ்ச்சியைக் கேட்டு மகிழ்ந்து மங்கல வாத்தியம் முழங்கச் சீகாழிப்பதியை யடைந்து திருஞான சம்பந்தர் திருவடிகளைப் பணிந்து போற்றினார்கள். திருநனி பள்ளியாகிய தமது ஊருக்கு எழுந்தருள வேண்டும் எனப் பிள்ளையாரை வேண்டிக் கொண்டார்கள். அவர்களது வேண்டு கோளுக்கிசைந்த திருஞானசம்பந்தர் திருத்தோணிபுரத்து இறைவர்பால் விடைபெற்றுத் தாமரைமலர் போலும் மெல்லிய பாதங்கள் தரைமீது பட்டு வருந்தத் திருநனிபள்ளியை நோக்கி நடந்தருளினார். ஆளுடைய பிள்ளையார் அடிமலர் வருந்த நடப்பதும் அவரைப் பிறர் எடுத்துச்செல்லுவதும் பொறாத பேரன்பினராகிய சிவபாத விருதயர், பிள்ளையாரைத் தமது தோளின் மேல் அமர்த்திக்கொண்டு செல்வாராயினர். தந்தையார் தோளின் மேலமர்ந்து செல்லும் திருஞான சம்பந்தர், திருநனிபள்ளியை அணுகிய நிலையில் அந்நகரைச் சுட்டிக்

காட்டி 'எதிரே தோன்றுவதாகிய இப்பதி யாது' எனத் தந்தை யாரை வினவ, அவரும் திருநனிபள்ளியென்றார். அதனை யுணர்ந்த பிள்ளையார் அத்திருப்பதியைத் தொழுது 'காரைகள் கூகைமுல்லை' என்ற முதற்குறிப்புடைய திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார். இத்திருப்பதிகத்தின் பாடல்தோறும் சிவ பெருமான் இனிது வீற்றிருந்தருளும் நகர் வளமார்ந்த இத் திருநனிபள்ளிபோலும்' என வியந்து போற்றி இதன் திருக் கடைக்காப்பில் 'நாரியோர் பாகர் வைகும் நனிபள்ளியை நினைந்து போற்றுவாரது பேரிடர் கெடுதற்கு ஆணைநமது' என்னும் உறுதி மொழியும் வைத்தருளினார்.

**காரைகள் கூகைமுல்லை களவாகையீகை**
**படர்தொடரி கள்ளி கவினிச்**
**சூரைகள் பம்மி விம்மு சுடுகாடமர்ந்த**
**சிவன்மேய சோலை நகர்தான்**
**தேரைக ளாரைசாய மிதிகொள்ளவாளை**
**குதிகொள்ள வள்ளை துவள**
**நாரைகள் ஆரல்வாரி வயன்மேதி வைகு**
**நனிபள்ளி போலு நமர்காள்.**

எனவரும் இத்திருப்பதிகத்தின் முதற் பாசுரத்தின் முதலிரண்டடி களிற் பாலைநில வியல்பும், பின்னிரண்டிகளில் நெய்தல் நிலவியல்பும் இவ்வாறே பின்வரும் பாடல்கள் எல்லாவற்றிலும் மருத நிலத்தொடு தொடர்புடைய நெய்தல் நிலவியல்பும் கூறப்பட்டிருத்தலால் இத்திருப்பதிகம், பாலை நிலமாகவிருந்த திருநனிபள்ளி வளமுடைய நெய்தல் நிலமாக மாறும்படி பாடியருளப் பெற்றதென்ற செய்தி நெடுங்காலமாக வழங்கப் பெற்று வருகின்றது. திருநனி பள்ளியடைந்த திருஞானசம்பந்தப் பிள்ளையார் அவ்வூர் மக்கள் வேண்டிக் கொண்ட வண்ணம் வளமற்ற பாலை நிலமாகிய அவ்வூர் வளமார்ந்த நெய்தல் நிலமாக மாறும்படி திருப்பதிகம் பாடியருளினார் என்ற இவ் வரலாற்றினை,

**"நாத னனிபள்ளி சூழ்நகர் கானக மாக்கியஃதே**
**போதின மலிவய லாக்கியகோன்"***
**(* ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி-17ஆம் பாடல்)**

எனவும்,

**"கள்ளம் பொழில் நனி பள்ளித் தடம்கடம் ஆக்கியஃதே**
**வெள்ளம் பணிநெய்த லாக்கிய வித்தகன்"***
**(* ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம் 4-ஆம் பாடல்)**

எனவும்,

"ஞாலத்தினர் அறிய மன்னுநனி பள்ளியது
பாலைதனை நெய்தலாக்கியும் "*
(* ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை.)

எனவும்,

"தாழுஞ்சரணச் சதங்கைப் பருவத்தே
பாலையும் நெய்தலும் பாடவலான்"*
(* ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை)

எனவும் நம்பியாண்டர் நம்பி தாம் பாடிய பிரபந்ததங்களிற் குறித்துப் போற்றியுள்ளார். இவ்வாறு திருஞானசம்பந்தப் பிள்ளையார் பாலைநிலத்தை நெய்தல் நிலமாக மாற்றிய அற்புத நிகழ்ச்சியைச் சிவஞானம் பிரகாசித்த சிவஞானிகளிடத்திலே விளைந்த சிறப்புடைய நிகழ்ச்சிகளுள் ஒன்றாகக் கொண்டு,

பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்
காலனை அன்றேவிக் காரங்கொண்ட - பாலன்
மரணந் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தங்
கரணம்போல் அல்லாமை காண்.

எனவரும் திருக்களிற்றுப்படியாரில் திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார் முதற்கண் குறிப்பிட்டுப் போற்றியுள்ளார். நம்பியாண்டார் நம்பி பாராட்டிப் போற்றிய இச்சிறப்புடைய நிகழ்ச்சியை அவர்க்குப் பின்வந்த சேக்கிழாரடிகள் திருத்தொண்டர் புராணத்திற் குறிப்பிடாமைக்குரிய காரணம் விளங்கவில்லை. 'காரைகள் கூகைமுல்லை'யென்ற முதற் குறிப்புடைய இத்திருப்பதிகத்தினைத் திருஞானசம்பந்தர் தம் தந்தையார் தோளின்மேல் அமர்ந்திருந்த நிலையிற் பாடினரென்பதும் 'நனிபள்ளி உள்குவார்தம் பேரிடற் கெடுதற்கு ஆணை நமது' என்னும் உறுதிமொழியினைக் கூறியருளினாரென்பதும்,

கடல்வரையோதமல்கு கழிகானல்பானல்
கமழ்காழியென்று கருதப்
படுபொரு ளாறுநாலு முளதாகவைத்த
பதியான ஞானமுனிவன்
இடுபறையொன்ற அத்தர் பியன்மேலிருந்தி
னிசையா லுரைத்த பனுவல்
நடுவிருளாடுமெந்தை நனிபள்ளியுள்க
வினைகெடுதலாணை நமதே.

எனவரும் இத் திருப்பதிகத் திருக்கடைக்காப்புப் பாடலால் இனிது விளங்கும். ஆளுடைய பிள்ளையார் திருநனிபள்ளிக்குப் போம்பொழுது தாமே நடந்துசெல்ல இயலாத இளம் பருவத்தினராயிருந்தமை இத்திருக்கடைக்காப்பினால் நன்கு துணியப் படும்.

## திருநீலகண்ட யாழ்ப்பாணர் தொடர்பு

திருநனிபள்ளியிறைவனை வணங்கிப் போற்றிய ஞானசம்பந்தர் தலைச்சங்காடு, சாய்க்காடு வெண்காடு முதலிய தலங்களை வணங்கி மீண்டும் சீகாழிப்பதிக்கு வந்து சேர்ந்தார். சிலநாட் கழித்துக் காழியின் கீழ் பாலுள்ள மயேந்திரப்பள்ளி, குருகாவூர், திருமுல்லைவாயில் முதலிய தலங்களை வணங்கி மீண்டார். இந்நிலையில் திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அவர் தம் மனைவியார் மதங்கசூளாமணியாரும், கழுமலத் தீசன் கவுணியப் பிள்ளையார்க்கு மூவாண்டில் அருள் ஞானங் குழைத் தூட்டிய அற்புத நிகழ்ச்சி கேட்டுத் திருஞானசம்பந்தரை வணங்குதற்குச் சீகாழிப்பதியை யணைந்தனர். அவ்விருவரது வரவறிந்த பிள்ளையார், அவர்களை எதிரேற்று அழைத்துக் கொண்டு திருத்தோணிபுரத் திருக்கோயிலின் புறமுன்றிலிற் கொடுபோந்து 'ஐயர், இசையமைந்த யாழினை உங்கள் இறைவர்க்கு இயற்றும்' எனப் பணித்தருளினார். திருநீலகண்ட யாழ்ப்பாணர் பிள்ளையாரைத் தொழுது தந்திரி யாழினை வீக்கி இசையாராய்ந்து இறைவற்குகந்த பாணியினை ஏழிசை வல்ல மதங்கசூளாமணியாருடன் பாடி, யாவரும் வியந்து போற்ற யாழிலிட்டு வாசித்துப் போற்றினார். திருநீலகண்ட யாழ்ப் பாணரும் அவர் மனைவியாரும் தங்குதற்கென ஆளுடைய பிள்ளையார் தனியில்லம் அமைத்துக். கொடுத்து நல்விருந் தளித்தார். பிள்ளையார் பாடிய திருப்பதிகங்களைக் கேட்டு உள முருகிய திருநீலகண்ட யாழ்ப்பாணர் அத்திருப்பதிகங்களைத் தம் யாழின் முறைமையில் வாசித்து எவ்வுயிரும் மகிழ்வித்தார்.

தில்லைச்சிற்றம்பலப் பெருமானை வழிபட விரும்பிய திருஞானசம்பந்தர், தந்தையாரும் திருநீலகண்டப் பெரும் பாணரும் அடியார்களும் புடைசூழச் சீகாழிப் பதியினின்றும் புறப்பட்டுக் கொள்ளிடத் திருநதியினைக் கடந்து செல்வ மல்கிய தில்லையில் தென்றிசை வாயில் வழியே உள்புகுந்தார். எழு நிலைக் கோபுரத்தைத்தொழுது போற்றிப் பொன் மாளிகை யினை வலங்கொண்டு பேரம்பலத்தையிறைஞ்சிக் கூத்தப் பெருமான் திருமுன்பு திருவணுக்கன் திருவாயிலையடைந்தார். அண்ணலார் தமக்களித்த மெய்ஞ்ஞானமாம் அம்பலமும் தம் உள்ளத்தில் நிறைந்த ஞானத்தின்கண் நிகழும் ஆனந்தமாகிய ஒரு பெருந்தனிக் கூத்தும் ஆகிய காட்சியைத் தம் கண்ணின் முன் புறக்கண்டு கும்பிட்டார். 'உணர்வின் நேர் பெறவரும் சிவ போகத்தை உருவின்கண் அணையும் ஐம்பொறியளவினும் எளிவர அருள்செய்தனை' என்று கூறித் தில்லையம்பலவனது

திருவருளை வியந்து போற்றினார். 'கற்றாங்கெரியோம்பி' என்ற திருப்பதிகத்தைப் பாடி இறைவனுக்கு உரிமைத்தொழில் புரியும் தில்லைவாழ் அந்தணர்களைச் சிறப்பித்தருளினார்.

உயிர்கள் உய்யும் பொருட்டு இறைவன் ஐந்தொழில் நாடகம் இயற்றும் பேரரங்கமாகத் தில்லை மூதூர் விளங்கு வதாகலின் அப்பதியில் தங்குதற்கு அஞ்சிய பிள்ளையார், அதன் கிழக்கேயுள்ள திருவேட்களத்தைத் தாம் தங்கியிருந்தருளும் இடமாகக் கொண்டு நாடோறும் கூத்தப்பெருமானை வணங்கி வருவாராயினர். அங்கு அமரும் நாளில் திருக்கழிப்பாலை, திருநெல்வாயில் திருவுச்சி (சிவபுரி) ஆகிய தலங்களையிறைஞ்சிப் போற்றினார்.

திருநீலகண்டப் பாணனார் தில்லையம்பலத்தில் ஆடல் புரிந்தருளும் திருவடிகளை அணுகிப் போற்றும் பேற்றினை விரும்பினார். அவர் தம் ஒழுக்கத்தின் விழுப்பத்தினை எண்ணிய ஆளுடைய பிள்ளையார், அன்பு நிறைந்த உள்ளத்தினராய்த் திருநீலகண்டப்பாணரை உடனழைத்துக்கொண்டு தில்லைப்பதி யினுள்ளே புகுந்தருளினார். அந்நிலையில் இறைவனருளால் தில்லைவாழந்தணர் மூவாயிரவரும் சிவகணநாதர்களாய்த் தம்மெதிரே தோன்றுதலைக்கண்டு, தாம் கண்ட அவ்வழகிய காட்சியைத் திருநீலகண்டப் பெரும்பாணர்க்குங் காட்டி யருளினார். தில்லை வாழ்ந்தணர்கள் எதிர் கொண்டு இறைஞ்சத் திருக்கோயிலினுட் புகுந்து மன்றுள் நிறைந்தாடும் மாணக்கக் கூத்தரை வழிபட்டு 'ஆடினாய் நறுநெய்யொடு பால் தயிர்' என்ற முதற் குறிப்புடைய திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார். இத்திருப்பதிகத்தில்,

> **நீலத்தார் கரியமிடற்றார் நல்ல நெற்றி மேலுற்ற**
> **கண்ணினார் பற்று**
> **சூலத்தார் சுடலைப்பொடி நீறணி வார்சடையார்**
> **சீலத்தார் தொழுதேத்து சிற்றம்பலஞ் சேர்தலாற் கழற்**
> **சேவடி கைதொழக்**
> **கோலத்தா யருளா யுன காரணங் கூறுதுமே.**

எனவரும் பாடலில் தாம் தில்லைவாழ்ந்தணர்களைச் சிவகண நாதர்களாகக் கண்ட காட்சியினைப் பிள்ளையார் தெளிவாக விளக்கியுள்ளமை காணலாம்.

திருநீலகண்ட யாழ்ப்பாணர் ஆளுடையபிள்ளையாரைப் பணிந்து 'அடியனேன் பதிமுதலாக வெள்ளாற்றின் கரையி லுள்ள திருக்கோயில்களைப் பணிந்திட வேண்டும்' என வேண்டப் பிள்ளையாரும் அதற்கிசைந்து அடியார் குழுவுடன் தில்லையிலிருந்து மேற்குத்திசை நோக்கிப் புறப்பட்டுத் திரு

வெருக்கத்தம் புலியூரின் எல்லையையடைந்தருளினார். அந் நிலையில் நீலகண்ட யாழ்ப்பாணர் ஞானசம்பந்தரை வணங்கி 'இப்பதி அடியனேன்பதி' என்றார். அதுகேட்டு மகிழ்ந்த பிள்ளையார் 'ஐயர், நீர் அவதரித்திட இப்பதி அளவில் மாவதம் முன்பு செய்தது' எனச் சிறப்புரைத் தருளித் திருக்கோயிலுட்புக்கு இறைவனை வணங்கிச் செழுந்தமிழ்ப் பதிகம் பாடிப் போற்றினார்.

## முத்துச்சிவிகை, குடை, சின்னம் பெறுதல்

அங்கிருந்து புறப்பட்டுத் திருமுதுகுன்றம், திருப்பெண்ணா கடம் ஆகிய தலங்களை வணங்கித் தமிழ் பாடித் திருநெல் வாயிலரத்துறையை நோக்கிப் புறப்பட்டார். இதற்கு முன்னெல்லாம் வழிநடையிளைப்பு நீங்க ஒவ்வொரு சமயம் தம் தந்தையார் தோளின் மேல் அமர்ந்து செல்லும் பழக்கமுடைய ஞானசம்பந்தப் பிள்ளையார், திருவரத்துறையினைக் கைதொழச் செல்லும் இந்நிலையில் அப்பழக்கத்தினை விடுத்து அரத்துறை யண்ணல்பால் வைத்த ஆரா அன்பினால் அப்பெருமானைச் சிந்தைசெய்யும் பெருவிருப்புடன் மலரினும் மெல்லிய திரு வடிகள் தரையிற்பட்டு வருந்த விரைந்து நடந்தனர். அது கண்டு தாதையாரும் பரிவுற்றனர். பிள்ளையார் திருவைந்தெழுத் தோதிக் கொண்டு மாறன்பாடியென்ற ஊரினை அடைதற்குமுன் கதிரவனும் மேல்கடலிற் படிந்தனன். அன்றிரவு திருஞான சம்பந்தரும் அடியார்களும் மாறன் பாடியிலே தங்கினார்கள்.

ஞானசம்பந்தப் பிள்ளையாரது வழிநடை வருத்தத்தினைத் திருவுளங்கொண்ட நெல்லாயிரத்துறை யீசன் அரத்துறை யந்தணரது கனவில் தோன்றி 'ஞானசம் பந்தன் நம்பால் அணைகின்றான். அவனுக்கென முத்துச் சிவிகை, குடை, சின்னம் ஆகியவற்றை நீங்கள் நம்பாற் பெற்றுக்கொண்டு அவனை யடைந்து கொடுப்பீர்களாக' என அருள்செய்து மறைந் தருளினார். அஃதுணர்ந்த அந்தணர் அனைவரும் வியப்புற்று விழித்தெழுந்து தாம்கண்ட கடவுட்காட்சியை ஒருவர்க்கொரு வர் கூறி மகிழ்ந்து விடியற்காலத்தே திருவரத் துறைக் கோயிலைத் திறந்து பார்த்தனர். இறைவன் அருளிய படி முத்துச்சிவிகை, முத்துக்குடை, முத்துச்சின்னம் என்பன இருத்தலைக்கண்டு மகிழ்ந்து அவற்றையெடுத்துக்கொண்டு மங்கலவாத்தியம் முழங்கப் பிள்ளையாரை எதிர் கொண்டழைக்கச் சென்றனர்.

அரத்துறையந்தணர்களுக்கு அருளிய இறைவர், ஞான சம்பந்தப் பிள்ளையார் கனவிலும் தோன்றி 'அரத்துறை வள்ளலார்யாம், யாம் மகிழ்ந்தளிப்பனவற்றை நீ ஏற்றுக் கொள்ளலாம்' எனக்கூறி மறைந்தனர். பிள்ளையாரும் திருவைந் தெழுத்தோதி யெழுந்து காலைக் கடன்களை முடித்து இறைவன் திருவருளை யெண்ணியிருந்தனர். அந்நிலையில் அரத்துறையந்

தணர்கள் ஆளுடைய பிள்ளையாரை யணைந்து 'அரத்துறை யண்ணலார் தந்த பேரருள் தாங்குவீர்' எனப் பணிந்து தமக்கு இறைவர் உணர்த்திய அனைத்தையும் எடுத்துரைத்தார்கள். ஆளுடைய பிள்ளையர் இறைவனது பேரருளை நினைந்து,

எந்தை ஈசனெம் பெருமான் ஏறமர் கடவுளென்றேத்திச்
சிந்தை செய்பவர்க் கல்லாற் சென்றுகை கூடுவதன்றால்
கந்த மாமலர் உந்திக் கடும்புனல் நிவாமல்கு கரைமேல்
அந்தண் சோலைநெல்வாயில் அரத்துறையடிகள் தம் அருளே.

என்ற திருப்பாடலை முதலாகக்கொண்ட திருப்பதிகத்தினைப் பாடி, 'அரத்துறையடிகள் தம் அருளே இது' எனத் துதித்தருளித் திருவைந்தெழுத்தோதி முத்துச் சிவிகையில் ஏறியமர்ந்தார்; குடை நிழற்றத் திருச்சின்னம் ஊதத் திருநெல் வாயிலரத் துறையை யடைந்து சிவிகையினின்றும் இறங்கி, இறைவன் திருமுன்னர் வீழ்ந்திறைஞ்சினார்; என்னையும் பொருளாக இன்னருள் புரிந்தருளும் பொன்னடித்தலத்தாமரை போற்றி யென்றெழுந்தார்.

அரத்துறையீசன் முத்துச்சிவிகையளித்த திருவருட் செயலை நினைந்து ஆளுடைய பிள்ளையார் பாடிய திருப்பதிகம் 'எந்தையீசனெம் பெருமான்' என்ற முதற் குறிப்புடையதாகும். இதன்கண் இவ்வற்புத நிகழ்ச்சி வெளிப்படக் கூறப்படவில்லை. இத்திருப்பதிகம் முழுவதும் இறைவனது திருவருளின் பெருமையை நினைந்து போற்றும் நிலையில் அமைந்திருத்தலால், ஞானசம்பந்தப் பிள்ளையார் தமக்கு முத்துச்சிவிகை அளித்தருளிய அரத்துறையடிகள் தம் அருளை நினைந்து இத்திருபபதிகத்தைப் பாடிப் போற்றினாரெனக் கொள்ளுதல் ஏற்புடையதாகும். திருஞானசம்பந்தர்க்கு அரத்துறை யிறைவர் முத்துச் சிவிகை தந்தருளிய இவ்வரலாற்றினை,

வருந்துங் கொலாங்கழல் மண்மிசை
யேகிடின் என்றுமென்றார்த்
திருந்தும் புகழ்ச்சண்பை ஞானசம்
பந்தற்குச் சீர்மணிகள்
பொருந்துஞ் சிவிகை கொடுத்தனன்
காண் புணரித் திகழ்நஞ்
சருந்தும் பிரான்நம் அரத்துறை
மேய அரும்பொருளே.

என வரும் ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதியில் நம்பி யாண்டார்நம்பி விரித்துக் கூறியுள்ளார்.

திருநெல்வாயிலரத்துறையிற் சிலநாள் தங்கியிருந்து இறை வனைப்போற்றிய திருஞானசம்பந்தர், அடியார் புடைசூழச் சிவிகையிலமர்ந்து பழுவூர், விசயமங்கை, திருவைகா, புறம்பயம்,

சேய்ஞலூர், திருப்பனந்தாள், பந்தணை நல்லூர், ஓமாம்புலியூர்-வடதளி, வாழ்கொளிபுத்தூர், கடம்பூர், நாரையூர், கருப்பறியலூர் முதலிய தலங்களைப் பணிந்து திருப்பதிகம் பாடித் தமது பதியாகிய திருப்பிரமபுரத்திற்கு வந்து சேர்ந்தார்.

## உபநயனச் சடங்கு

திருஞானசம்பந்தப் பிள்ளையார் சீகாழிப்பதியில் அமர்ந்திருக்கும் பொழுது அவருக்கு ஏழாவதாண்டு நடந்தது. ஒரு பிறப்பும் எய்தாதபடி சிவஞானம் பெற்ற பிள்ளையார்க்கு வேதியர்கள் தம் குலத்தின் இருபிறப்பின் நிலைமையினைச் சடங்கு காட்டி எய்துவிக்கும் உபநயனச்சிறப்பினை உலகியல் முறைப்படி செய்தனர். மான்தோலுடன் அமைந்த முப்புரி நூலினை அணிந்து மறைநான்கும் தந்தோம் என்று மந்திரங்கள் மொழிந்த மறையோர்களுக்குப் பிள்ளையார் தம்முடைய புனித வாக்கால் எண்ணரிய வேதங்களை இயம்பியருளினார். மறையோர்கள் தாம்தாம்வல்ல மறைகளில் தமக்கு உண்டான ஐயங்களைப் பிள்ளையாரிடம் கேட்டுத் தெளிவு பெற்றார்கள். மந்திரங்களெல்லாம் தோன்றுவதற்கு ஏதுவாகிய மூலமந்திரம் திருவைந்தெழுத்தே என்னும் உண்மையினை வேதியர்களுக்கு அறிவுறுத்தக் கருதிய திருஞானசம்பந்தப் பிள்ளையார், 'துஞ்சலுந் துஞ்ச லிலாத போதினும்' எனத் தொடங்கும் பஞ்சாக்கரத் திருப்பதிகத்தினைப் பாடியருளினார். அதன் கண்,

மந்திர நான்மறை யாகி வானவர்
சிந்தையுள் நின்றவர் தம்மை யாள்வன
செந்தழ லோம்பிய செம்மை வேதியர்க்
கந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே.

எனவரும் இரண்டாந் திருப்பாட்டில் நால்மறைகளில் வல்ல வேதியர் யாவரும் சந்தியாவந்தன காலங்களிலும் சிறப்பாக அந்திக்காலத்திலும் ஓதவேண்டிய திருமந்திரம் திருவைந்தெழுத்தே என அறவுறுத்தருளிய திறம் குறிக்கொண்டு போற்றத் தகுவதாகும்.

உலகியல் முறைப்படி உபநயனச் சடங்கு நிகழ வேண்டிய பருவம் ஏழாம் யாண்டேயென்பது, 'நிகழும் முறைமை யாண்டேழும் நிரம்பும் பருவம் வந்தெய்தப் புகழும் பெருமை யுபநயனப் பொருவில் சடங்கு முடித்து' எனச் சண்டேசப் பிள்ளையார் புராணத்திற் சேக்கிழார் கூறுதலால் இனிது விளங்கும். வைதிக நூல்களில் ஏழாம் வயதே உபநயனத்திற்குரிய காலமெனக் கூறப்படுதலானும் ஞானசம்பந்தர் மேற்குறிப்பிட்ட பல தலங்களை வணங்கி ஆங்காங்கே பல நாட்கள் தங்கிவந்க

நிகழ்ச்சிகளை நோக்கும் பொழுது அந்நிகழ்ச்சிகளில் மூன் றாண்டுகளேனும் சென்றிருத்தல் வேண்டுமாதலானும் ஞான சம்பந்தர்க்கு ஆறாவது வயது முடிந்து ஏழாம் வயது தொடங்கிய நிலையிலே உபநயனச் சடங்குகள் நடந்திருத்தல் வேண்டு மென்பது நன்கு துணியப்படும்.

## திருநாவுக்கரசரை எதிர்கொண்டு போற்றல்

உபநயனச் சடங்கு முடிந்து பிள்ளையார் சீகாழிப்பதியில் தங்கியிருக்கும்பொழுது தில்லையம்பலப் பெருமானை வணங்க வந்தருளிய திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தப் பிள்ளையார் மூவாண்டிற் சிவஞானம் பெற்ற அற்புத நிகழ்ச்சியை அடியார்கள் சொல்லக் கேள்வியுற்று மகிழ்ந்தார்; பிள்ளையாரைக் காண வேண்டுமென்னும் பேரார்வத்துடன் சீகாழிப்பதிக்கு எழு தருளினார். கல்லே புணையாக் கடலினைக் கடந்த திருநாவு கரசர், தம்மைக் காணும் பொருட்டு பிரமபுரத்து எல்லையில் வந்தணைந்தார் எனக் கேட்ட ஞானசம்பந்தப்பிள்ளையா அன்பர் குழாத்தொடும் அரசரை எதிர்கொண்டழைத்தன உள்ளத்துப் பெருகி வழியும் இடையறாப் பேரன்பும், மூப்பி தளர்ச்சியாலும் சிவானந்த விளைவின் மிகுதியாலும், தி மேனியில் தோன்றிய அசைவும், உடுத்த கந்தையும் மிகையென கருதும் துறவுள்ளமும், உழைப்பே பெரிதெனக்கொண் உழவாரமாம் படையும், இறைவனை இடையறாது நினைந்துரு தலாற் கண்களிலிருந்து மழையெனச் சொரியும் கண்ணீருட பொன்மேனியிற் பூசப்பெற்ற திருவெண்ணீறும் உடையரா ஈறிலாச் சிவவேடத்தோடும் எதிர்வந்து தோன்றினார் திருநாவு கரசர். அவரைக்கண்ட ஞானசம்பந்தப் பிள்ளையார், நே மலிந்தவர் திருவேடத்தினைச் சிவனெனவே தெளிந்து வழிபடு முறைப்படி, இதுகாறும் தம் உள்ளக்கிழியிலே எழுதிப் போற்ற பெற்ற தொண்டர் திருவேடமே இப்பொழுது திருநாவுக்கர ராக உருப்பெற்று எழுந்தருளியது எனக்கொண்டு தொழுத போற்றினார். ஆராவிருப்பினால் எதிரே வந்து வணங்கி திருநாவுக்கரசரைத் தம் எழுதரிய மலர்க்கையால் எடுத்திறைஞ்சி 'அப்பரே' என அழைத்தார். அரசரும் 'அடியேன்' என மகிழ்ந்துரைத்தார். பின்பு பிள்ளையார் திருநாவுக்கரசரைத் திருத்தோணிபுரத் திருக்கோயிலுக்கு அழைத்துச்சென்று இறைவனை வணங்கித் தமது திருமாளிகைக்கு உடன்கொண்டு சென்றார். அரசர்க்கும் உடன் வந்த அடியார்களுக்கும் சிறப்பாக அமுது செய்வித்துப் பிரியா நண்புடன் அளவளாவி மகிழ்ந் திருந்தார். திருநாவுக்கரசரும் சீகாழிப்பதியிற் சிலநாட்கள் தங்கியிருந்து இறைவனை வணங்கிப் போற்றிப் பிரியா

நண்புடைய பிள்ளையார்பால் விடைபெற்றுச் சோழநாட்டுத் திருத்தலங்களை வணங்கச் சென்றனர்.

திருஞானசம்பந்தர் சீகாழியில் தங்கியிருக்கும் நாட்களில் மொழிமாற்று, மாலைமாற்று, வழிமொழி, மடக்கு, இயமகம், ஏகபாதம், இருக்குக்குறள், எழு கூற்றிருக்கை, ஈரடியீரடி வைப்பு நாலடிமேல்வைப்பு, முடுகியலாகிய திருவிராகம், சக்கரம் முதலான மிறைக்கவியாகிய திருப்பதிகங்களைச் சித்திரக் கவிகளுக்குரிய மூல இலக்கியமாகத் திருவாய்மலர்ந்து திருத் தோணிபுரத்து இறைவனைப் போற்றிசைத்தார். இத்திருப் பதிகங்களையெல்லாம் திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அவர் மனைவியார் மதங்கசூளா மணியாரும் யாழிலிட்டுப் பாடிப் போற்றினார்கள்.

## முயலகநோய் தீர்த்தல்

தமிழ்நாட்டிலுள்ள திருத்தலங்கள் எல்லாவற்றிலுஞ் சென்று சிவபெருமானை வழிபட விரும்பிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் தமது விருப்பத்தைச் சிவபாதவிருதயர்க்குத் தெரிவித்தார். அதனையுணர்ந்த தந்தையார் திருஞான சம்பந்தரை நோக்கி 'யான் உம்மைப் பிரிந்து கணநேரமும் தரித்திரேன். இருமைக்கும் இன்பமளிக்கும் யாகமொன்றையும் யான் செய்ய வேண்டியுளது. ஆதலால் சில நாட்கள் உம்முடன் எய்துவேன்' என்றார். பிள்ளையாரும் தந்தையார் கருத்துக்கு இசைந்தனர். திருந்தோணிபுரப் பெருமானை வணங்கி விடை பெற்ற பிள்ளையார் முத்துச் சிவிகையில் ஏறியமர்ந்து திருநீல கண்ட யாழ்ப்பாணர் முதலிய அடியார்கள் தம்மைச் சூழ்ந்து வரத் திருக் கண்ணார் கோயில், புள்ளியிருக்கு வேளூர் முதலிய தலங்களை வணங்கிக் காவிரியின் வடகரை வழியே மேற்றிசை நோக்கிச் சென்று அவ்வழியேயுள்ள திருப்பதிகளெல்லா வற்றையும் பாடிப் போற்றி மழநாட்டிலுள்ள திருப்பாச்சிலாச் சிராமம் என்ற திருப்பதியை அணுகினார்.

அந்நகரில் வாழும் குறுநில மன்னனாகிய கொல்லி மழவன் என்பான், தன் மகள் முயலகன் என்னும் நோயினால் வருந்து வதைக் கண்டு பலவகை மருத்துவங்கள் செய்தும் அந்நோய் தணியாமையால் இறைவன் திருவடியே உறுதுணையெனக் கொண்டு தன் மகளைத் திருப்பாச்சிலாச்சிராமத்து இறைவர் திருமுன்னர் இட்டு வைத்தனன். அவ்வளவில் திருஞானசம் பந்தப் பிள்யைார் அங்கு எழுந்தருள்கின்றார் என்ற செய்தியைக் கேள்வியுற்று அவ்விடத்தைவிட்டு நீங்கிப் பிள்ளையாரைப் போற்றும் பெருவிருப்புடன் தன்நகர் முழுதும் அலங்கரித்து எதிர்கொண்டு இறைஞ்சினான். பிள்ளையார் சிவிகையி

னின்றும் இறங்கிக் திருக்கோயிலை வழிபடச் செல்லும் பொழுது இளங்கொடி போல்வாளாகிய கன்னியொருத்தி உணர்வற்று நிலத்திற்கிடத்தலைக் கண்டு 'இஃது என்ன' என வினவினார், அது கேட்ட மழவன், பிள்ளையாரை வணங்கி நின்று 'இவள் அடியேன் பெற்ற மகள், இவளை முயலக னென்னும் நோய் வருத்துதலால் இறைவன் திருமுன்னர் இட்டு வைத்தேன்' என்றான். அருள்கூர்ந்த சிந்தையராகிய ஆளுடைய பிள்ளையார் பாச்சிலாச்சிராமப் பரமனைப் பணிந்து,

**துணிவளர் திங்கள் துளங்கி விளங்கச்**
**சுடர்ச் சடை சுற்றிமுடித்துப்**
**பணிவளர் கொள்கையர் பாரிடஞ்சூழ**
**ஆரிடமும்பலி தேர்வர்**
**அணிவளர் கோலமெல் லாஞ்செய்து பாச்சில்**
**ஆச்சிராமத் துறை கின்ற**
**மணிவளர் கண்டரோ மங்கையைவாட**
**மயல்செய்வதோ இவர் மாண்பே.**

என்ற திருப்பதிகத்தினைப்பாடி, 'திருநீலகண்டமுடைய அருளாளனாகிய பெருமான் தன்னை வழிபடும் இளநங்கை யாகிய இவளை நோயால் மெலிய வைத்தல் மாண்பாமோ' என வினவிப் போற்றினார். அந்நிலையில் உணர்விழந்து தரைமிசைக் கிடந்த மழவன் மகள் நோய் நீங்கி உணர்வுற்றெழுந்து தன் தந்தையின் பக்கத்தில் வந்து நின்றாள். அது கண்டு கொல்லி மழவன் அளவிலாமகிழ்ச்சியடைந்து தன்மகளுடன் ஆளுடைய பிள்ளையார் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். பிள்ளை யாரும் பிணிதீர்த்தருளிய இறைவன் திருவடிகளை ஒன்றிய சிந்தையுடன் பணிந்து போற்றினார். இவ்வாறு ஆளுடைய பிள்ளையார் கொல்லிமழவன் மகளது முயலகன் என்ற பெரும் பிணியைத் தீர்த்தருளிய அருட்செயலை,

**"மழவன் சிறு மதலை வான்பெருநோய் தீர்த்த**
**குழகன் குலமறையோர் கோமான்"**

என்ற தொடரால் நம்பியாண்டார் நம்பி உளமுருகிப் போற்றியுள்ளார்.

## பனிநோய் தீர்த்தல்

பாச்சில் மேய பரமனைப் பணிந்து போற்றிய ஞான சம்பந்தர் பைஞ்ஞீலி, ஈங்கோய்மலை ஆகிய தலங்களை வணங்கிக் கொங்கு நாட்டிலுள்ள திருக்கொடிமாடச் செங்குன் றூரையடைந்து சிவபெருமானைப் பரவிப் போற்றினார். அதன ருகேயுள்ள திருநணாவை இறைஞ்சித் தமிழ்பாடி மீண்டும் திருச்செங்குன்றூரில் வந்து அமர்ந்திருந்தார். அப்பொழுது

பனிக்கால மாதலால் அந்நாட்டின் இயல்பின்படி தோன்றுவ தாகிய பனியென்னும் சுரநோய் ஆளுடைய பிள்ளையாருடன் வந்த அடியார்களையும் தொடர்ந்து வருத்தியது. அதனை யுணர்ந்த பிள்ளையார் 'இந்நிலத்தின் இயல்பெனினும் இறைவனடியார்களாகிய நமக்கு எய்தப்பெறா' என்று கூறி இறைவனைப் போற்றுபவர், உலகினையழிக்க வந்த கொடிய நஞ்சைத் தன்னகத்தடக்கி இடர் நீக்கியது இறைவனது திருநீலகண்டமாதலால் 'எவ்விடத்தும் அடியார்களைப் பற்றிய இடர்களை நீக்கியருள்வது எம்பிரான் திருநீலகண்டம்' என அதன்மேல் ஆணை வைத்து,

> அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லு மஃதறிவீர்
> 'உய்வினை நாடா திருப்பதும் உந்தமக் கூனமன்றே
> கைவினை செய்தெம் பிரான்கழல் போற்றுதும் நாமடியோம்
> செய்வினை வந்தெமைத் தீண்டப்பெறா திருநீலகண்டம்.

என்ற பாடலை முதலாகக் கொண்ட திருநீலகண்டத் திருப்பதிகத் தினைப் பாடியருளினார். அந்நிலையே பனியென்ற நோய் அவ்வூரில் வாழ்பவர்க்கேயன்றிக் கொங்குநாடு அடங்கலுந் தீர்ந்தொழிந்தது. இச்செய்தியினை,

> 'கொங்கிற் பனிநோய் பரிசனத்தைத் தீர்ப்பித்தும்'

எனவும்,

> மின்னார் குடுமி நெடு வெற் பகங்கொங்கில் வீழ்பனிநோய்
> தன்னார் வழிகெட் டழிந்தமை சொல்லுவர் காண் இறையே
> மன்னார் பரிசனத்தோர் மேற்புகலும் எவர்க்குமிக்க
> நன்னாவலர் பெருமான் அருகாசனிநல்கிடவே.

எனவும் நம்பியாண்டார் நம்பி தமக்குமுன் வழங்கிய தொன்மை வரலாறாகக் குறிப்பிட்டுப் போற்றியுள்ளார்.

## முத்துப் பந்தர் பெறுதல்

திருஞானசம்பந்தர் திருச்செங்குன்றூரிலிருந்து புறப்பட்டுப் பாண்டிக் கொடுமுடி, வெஞ்சமாக்கூடல், கருவூர் ஆனிலை ஆகிய தலங்களைப் பணிந்து பாடினார். பின் சோழ நாட்டை யடைந்து திருச்சிராப்பள்ளி முதலாகக் காவிரியின் தென்கரையி லுள்ள திருப்பதிகளைப் பணிந்துபாடித் திருவலஞ்சுழிக்கு வந்து சேர்ந்தார். அப்பொழுது இளவேனிற் பருவங் கடந்து கதிரவன் கடுவெயிலெறிக்கும் முதுவேனிற் பருவம் தொடங்கியது.

திருவலஞ்சுழியிறைவரை வணங்கிய சம்பந்தர் அடியார் களுடன் பழையாறை மேற்றளியை வணங்கித் திருச்சத்தி முற்றத் துறையும் பெருமானைப்பாடி நண்பகற் பொழுதிலே கடுவெயி

லையும் கருதாது திருப்பட்டீச்சரத் திருக்கோயிலை வணங்கும் பெருவிருப்புடன் மறைந்து நின்று முத்தமிழ் விரகராகிய பிள்ளையாரின் முடிமீது முத்துப்பந்தரினைப் பிடித்து 'எம்மை விடுத்து அருள்புரிந்தார் பட்டீசர்' என்று கூறின. அவ்வானொலியும் முத்துப்பந்தரும் ஆகாயத்தே தோன்றக்கண்ட ஆளுடைய பிள்ளையார், இறைவன் திருவருள் இதுவானால் ஏற்றுக் கொள்ளத் தகுவதேயெனக்கருதி, நிலமிசைப் பணிந்தார். வானத்திலிருந்து இறங்கும் முத்துப் பந்தரினை அடியார்கள் கைக்கொண்டு விரித்துப் பிடித்தார்கள். ஞானசம்பந்தரும் அவ்வழகிய பந்தரின் நிழலை ஈசனெந்தை யிணையடி நீழலெனக் கருதி இனிதமர்ந்து அடியார்கள் புடைசூழத் திருப்பட்டீச்சரத் திருக்கோயிலையடைந்து தமக்கு இனிய நிழல் தந்துதவிய இறைவரை வணங்கித் திருப்பதிகம் பாடிப் பரவியின்புற்றார்.

முதுவேனில் வெப்பம் நீங்க முத்துப்பந்தர் அளித்தருளிய பட்டீச்சரத்து இறைவனை ஞானசம்பந்தப் பிள்ளையார் போற்றிப் பரவிய திருப்பதிகம்,

> பாடல்மறை சூடல்மதி பல்வளையொர் பாகமதில்
> மூன்றொர் கணையால்
> கூடவெரி யூட்டியெழில் காட்டிநிழல் கூட்டுபொழில்
> சூழ் பழசையுள்
> மாடமழ பாடியுறை பட்டிசர மேயகடி கட்டரவினார்
> வேடநிலை கொண்டவரை வீடுநெறி காட்டிவினை
> வீடுமவரே.

என்ற பாடலை முதலாகக்கொண்டதாகும். "பாடும் பாடல் மறையாகவும் திருமுடியிற் சூடுங்கண்ணி வெண்பிறையாகவும் உமையம்மையார் தனது ஒருபாகத்தின் கண்ணே திகழவும் திரியுமியல்பினவாகிய மும்மதில்களையும் ஓரம்பினால் தீயுண்ணச்செய்து (எம்பொருட்டு முத்துப்பந்தரினை) எழில் பெறக் காட்டி (அதனால் வெயில் வெப்பந்தணியும்படி) நிழலைக் கூட்டியருளிய பொழில் சூழ்ந்த பழையாறையின் ஒரு பகுதி யாகிய மழபாடிக் கூற்றிலுள்ள பட்டீச்சரத்தில் வீற்றிருந்தருளும் அரவாபரணராகிய இறைவர், எக்காலத்தும் தமது திரு வேடத்தினை இடைவிடாது நினைந்துருகும் ஒருமையுள்ளத்தை யுடைய அடியார்களை வீடடையும் நன்னெறியிற் செலுத்தி அவர்களைத் தொடரும் இருவினைகளையும் நீக்கியருளும் பேரருளுடையார் என்பது இத் திருப்பாடலின் பொருளாகும். திரிபுரத்தவுணருடைய மும்மதில்களையும் பொடிபட எரித்தருளிய இறைவன், இப்பொழுது எமக்குத் தண்ணிழல் தரும் முத்துப்பந்தரினை எழில்பெறக் காட்டி யருளினான் என்பார், 'மதில் மூன்றொர் கணையால்கூட எரியூட்டி,

எழில்காட்டி நிழல் கூட்டு... கட்டரவினார்' எனக் குறிப்பினால் அறிவுறுத்திய திறம் உய்த்துணரத்தக்கதாகும்.

## உலவாக்கிழி பெறுதல்

திருஞானசம்பந்தர் பட்டீச்சுரத்தினின்றும் புறப்பட்டுப் பல தலங்களையும் பணிந்து போற்றித் திருவாவடுதுறையில் அமர்ந்திருந்தார். அந்நிலையில் அவருடைய தந்தையார் சிவபாத விருதயர் தாம் வேள்வி செய்தற்குரிய காலம் அணுகியதெனத் தெரிவித்து அதற்குரிய பொருள் வேண்டுமெனக் கூறினர். அவரது வேண்டுகோட் கிசைந்த பிள்ளையார் 'எஞ்ஞான்றும் ஈறிலாப் பெருஞ் செல்வத்தைத் தந்தருளுவன ஆவடுதுறையிலமர்ந்த எந்தையார் திருவடி மலர்களன்றோ' என எழுந்து ஆவடுதுறை மாசிலாமணியீசர் திருமுன்பெய்தி நின்று 'நீள்நிதி வேண்டினார்க்கு ஈவதொரு பொருளையும் உடையேனல்லேன். நின் திருவடித் துணையன்றி மற்றொன்றைக் கனவிலும் அறியேன்' எனக்கூறி இறைவனது பேரருளை வினவும் நிலையில்,

> "இடரினுந் தளரினும் எனதுறு நோய்
> தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்
> கடல்தனில் அமுதொடு கலந்தநஞ்சை
> மிடறினில் அடக்கிய வேதியனே
> இதுவோ எமையாளுமா றீவதொன்றெமக்கில்லையேல்
> அதுவோ உனதின்னருள் ஆவடுதுறையரனே"

என நாலடிமேல் வைப்பாகிய திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றினார். இவ்வாறு பொருளை விரும்பி இனிய தமிழ்ப் பதிகத்தைப் பாடிப் போற்றிய ஞானசம்பந்தரது விருப்பத்தினை நிறைவேற்றக் கருதிய இறைவரது திருவருளால் சிவபூதம் ஒன்று, வந்து தோன்றி ஆயிரம் பொன்னடங்கிய பொற்கிழியொன்றை இறைவர் சந்நிதியிலுள்ள பீடத்தின்மேல் வைத்து 'இப்பொற்கிழியானது எடுக்க எடுக்கக் குறையாத உலவாகக்கிழி. இறைவரருளால் உமக்கு அளிக்கப்பெற்றதாகும்' எனக்கூறி மறைந்தது.

ஆவடுதுறையிறைவர் அருளிய உலவாக்கிழியினைத் தலைமேற் கொண்டு போற்றிய ஆளுடைய பிள்ளையார், அப் பொன்முடிப்பினைத் தந்தையார் கையிற் கொடுத்து 'முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானொருவனையே முதல்வனாகக் கொண்டு பண்டை மறைமுறைப்படி செய்தற்குரிய நல்ல வேள்விகளை நீவிர் செய்தற்குமட்டு மன்றித் திருக்கழுமலத்திலுள்ள வேதியரனைவரும் செய்தற்கும் வேண்டும் பொன்களை மேன்மேலும் தந்து வளர்வது இவ்வுலவாக்கிழி' எனக் கூறினார். பொற்கிழியைப் பெற்ற சிவபாத விருதயரும் பிள்ளையார்பால் விடைபெற்றுச் சீகாழிப்பதியை யடைந்தனர்.

*பிள்ளையார் பொன் வேண்டிப் பாடிய திருப்பதிகம் 'இடரினும் தளரினும்' என்ற முதற் குறிப்புடையதாகும். 'ஆவடு துறையில் வீற்றிருந்தருளும் பெருமானே, எனக்கு இடர் வந்துற்றாலும் உடல் தளர்ச்சியுற்றாலும் நோய் தொடர்ந்து வருத்தினாலும் அத்துன்பங்களைச் சிறிதும் பொருட்படுத்தாது நின்திரு வடிகளையே தொழுதெழும் துணிபுடையேன், அடியார்களாகிய எமக்கு ஒன்றுந் தாராதிருக்கும் இதுவோ நீ எங்களை ஆட்கொள்ளும் முறை? யாம் விரும்புவதொரு பொருளை எமக்குத் தந்தருளாயாயின் எளியோமைக் காத்தருளும் நின் அருளினியல்பு அதுவாமோ' என ஆவடுதுறை யிறைவனை வினவும் முறையில் இப்பதிகம் அமைந்துளது. இப்பதிகப் பாடல் தோறும்*

'இதுவோ எமையாளுமா றீவதொன் றெமக்கில்லையேல்
அதுவோ வுனதின்னருள் ஆவடுதுறையரனே'

*என்ற தொடர் நாலடிமேல் வைப்பாக இடம் பெற்றிருத்தாலும் இதன் திருக்கடைக்காப்பில் 'விலையுடையருந்தமிழ்மாலை' எனப் பிள்ளையார் இத் திருப்பதிகத்தினைக் குறிப்பிடுதலாலும் இப்பதிகம் ஆவடுதுறை யிறைவனை நோக்கிப் பொன் வேண்டும் நிலையிற் பாடப்பெற்றதென்பது நன்கு துணியப்படும்.*

*திருவாவடுதுறைப் பெருமான் திருஞானசம்பந்தப் பிள்ளை யார்க்கு ஆயிரம் பொன் நிறைந்த பொற்கிழியினைத் தந்தருளிய அற்புத நிகழ்ச்சியாகிய இதனை, பிள்ளையார்க்குக் கெழுதகை நண்பராகிய திருநாவுக்கரசர்,*

மாயிரு ஞாலமெல்லாம் மலரடி வணங்கும் போலும்
பாயிருங் கங்கையாளைப் படர்சடை வைப்பர்போலும்
காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமலவூரர்க்கம்பொன்
ஆயிரங் கொடுப்பர்போலும் ஆவடுதுறையனாரே.

*எனவரும் திரு நேரிசையிற் புகழ்ந்து போற்றியுள்ளார்.*

'சிந்தையைத்தேனைத் திருவா வடுதுறை யுட்டிகழும்
எந்தையைப் பாட லிசைத்துத் தொலையா நிதியமெய்தித்
தந்தையைத் தீத்தொழில் மூட்டியகோன்'

*எனவும்,*

'மாயிருஞாலத்து மன்னாவடுதுறைபுக்
காயிரஞ் செம்பொ னதுகொண்டும்'

*எனவும்,*

'திருவாவடு துறையிற் செம்பொற்கிழியொன்
றருளாலே பெற்றருளும் ஐயன்'

எனவும் நம்பியாண்டார் நம்பி இவ்வற்புதத்தைத் தாம் பாடிய பிரபந்தங்களிற் குறித்துப் போற்றியிருத்தல் இங்கு நோக்கத்தகுவ தாகும்.

## யாழ்முரி பாடியது

பின்பு திருஞானசம்பந்தர் திருக்கோழம்பம் வைகல் மாடக் கோயில் முதலிய பல தலங்களைப் பணிந்து பாடித் திருத்தருமபுரத்தை யணுகினார். தருமபுரம் திருநீலகண்டப் பெரும்பாணருடைய அன்னையார் பிறந்த ஊராதலின் அங்கு வாழும் அவருடைய சுற்றத்தார் திருஞானசம்பந்தப் பிள்ளை யாரை எதிர்கொண்டு போற்றினார்கள். பெரும்பாணரும் தாம் பிள்ளையார் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகத்தினை யாழிலிட்டு வாசிக்கும் பேறுபெற்றமையைத் தம் சுற்றத்தார்க்கு எடுத்துரைத்தார். அதனைக் கேட்ட உறவினர்கள் 'நீவிர் திருப் பதிகத்தினை யாழிலிட்டுத் தக்க முறையில் வாசிப்பதனால் அதன் இசையாண்டு பரவுவதாயிற்று' எனப் பாணரை நோக்கி முகமனுரை பகர்ந்தார்கள். அவ்வுரை கேட்டுத் திடுக்குற்ற திருநீலகண்டப் பெரும்பாணர், ஞானசம்பந்தப் பெருமானை பணிந்து, திருப்பதிகத்தின் இசை அளவிலடங்காத் தன்மைய தென்பதனைத் தம் சுற்றத்தாரும் பிறரும் அறிந்துய்யும்படி ஒரு திருப்பதிகம் பாடியருளுமாறு வேண்டிக் கொண்டார். அவரது வேண்டுகோட்கிணங்கிய பிள்ளையார், திருப்பதிகத்தின் இசை உலகர் கண்டத்திலும் கருவியிலும் அடங்காத வண்ணம் 'மாதர் மடப்பிடி' என்ற திருப்பதிகத்தைப்பாடித் தருமபுரத்திறை வரைப் போற்றுவாராயினர். திருநீலகண்டப் பாணரும் தாம் என்றும் போலத் தம் கையிலுள்ள யாழ்க்கருவியில் அத்திருப்பதி கத்தினை வாசிக்கத் தொடங்கிய அளவில் அதன் இசை யாழில் அடங்கவில்லை. அஃதுணர்ந்த பெரும்பாணர் நடுக்கமும் பரிவு முற்றுப் பிள்ளையார் திருவடிகளை வணங்கி, 'இவ்வாறு இத் திருப்பதிகத்தின் இசையை யாழில் ஏற்பன் எனச் செப்புதற்குக் காரணமாயிருந்தது, யாழ்க் கருவியாகிய இதனை யான் தொடுதலினால் நேர்ந்த பிழையன்றோ' எனச் சொல்லித் தம் கையிலுள்ள யாழ்க் கருவியினை உடைத்தற்கு ஓங்கினார். பிள்ளையார் அதனைத் தடுத்தருளி யாழைத் தம் கையில் வாங்கிக் கொண்டு, 'ஐயரே நீவிர் யாழை முரிக்கப் புகுவது எற்றுக்கு? சிவபிரானார் திருவருட் பெருமையெல்லாம் இக் கருவியில் அடங்குதல் கூடுமோ? சிந்தையால் அளவுபடாப் பதிகவிசை செயலளவில் எய்தாதாதலின் நீவிர் இந்த யாழினைக் கொண்டே இறைவர் திருப்பதிக விசையினை வந்தவாறு பாடி வாசிப்பீராக' என்று கூறித் தம்கையிலுள்ள யாழினைப் பாணர் கையில் திரும்பக் கொடுத்தருளினார். திருநீலகண்ட யாழ்ப்

பாணரும் அதனைப் பெற்றுக் கொண்டு முன்போன்று தமக்குரிய இசைத்தொண்டினை மேற்கொண்டனர். பின்பு பிள்ளையார் அப்பதியிற் சிலநாள் தங்கிப் பிறதலங்களை வணங்கப் புறப்பட்டுத் திருநள்ளாற்றினையடைந்து 'போகமார்த்த பூண்முலையாள்' என்னுந் திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார். திருநீலகண்டப் பெரும்பாணர் அப்பதிகத்தை யாழிலிட்டு வாசித்தார். அதுகேட்டு யாவரும் மகிழ்ந்தனர்.

யாழிலிடங்காத வண்ணம் பிள்ளையார் பாடிய திருப் பதிகத்தினை முன்னைப் பழக்கத்தினால் மறதியாக வாசிக்கத் தொடங்கிய பாணர், தமது முயற்சி தடைப்பட்ட நிலையில், தமது பிழையுணர்ந்து அப்பிழைக்குக் காரணமாகத் தம் கையிலி ருந்த யாழ்க் கருவியை உடைத்தற்கு ஓங்கினாராக, அதனை யுணர்ந்த திருஞானசம்பந்தர், விரைந்து தடுத்தருளி யாழைத் தம் கையில் வாங்கிக்கொண்டு, சிந்தையால் அளவுபடாத் தெய்வ விசையின் சிறப்பினையுணர்த்தி அவ் யாழினைப் பாணரது கையில் மீளவும் தந்தருளினார் என்பதே வரலாறு. இசைத் திறத்தில் வல்ல நீலகண்ட யாழ்ப்பாணர் தம் கையிலேந்திய யாழென்னும் சிறந்த இசைக்கருவியைத் தாமே முரிக்கப் புகும் எண்ணத்தை யுண்டு பண்ணியது, இன்னிசையால் அளவுபடாத இத்திருப்பதிகமாதலின், ஆளுடைய பிள்ளையார் இத்திருப் பதிகத்தால் பாணரது யாழை முரியப்பண்ணினார் என்றதொரு செய்தியும் உபசாரமாகப் பேசப்பெறுவதாயிற்று.

> **'ஏழிசை யாழை யெண்டிசை யறியத்**
> **துண்டப் படுத்த தண்டமிழ் விரகன்'**

எனவும்,

> **'பாமாலை யாழ்முரியப் பாணழியப் பண்டருள்செய்**
> **மாமான சுந்தரன்வண் சம்பந்தமா முனி'**

எனவும் நம்பியாண்டார் நம்பி ஞானசம்பந்தப்பிள்ளையாரைப் பரவிப் போற்றியுள்ளமை இவ்வுபசார வழக்கினைப் பின்பற்றிய தெனவே கொள்ளுதல் வேண்டும். திருநீலகண்ட யாழ்ப்பாணர் கையிலேந்திய யாழ்க் கருவி தெய்வத்தன்மை வாய்ந்த தென்பனை 'அணங்கமர் யாழ்முரித்து' எனபுழி, 'அணங்கமர்யாழ்' என்னும் அடைமொழியினால் நம்பியாண்டார் நம்பி தெளிவாகப் புலப் படுத்தினமை காணலாம். திருநீலகண்டப்பெரும்பாணர் கையி லுள்ள யாழினை முரிக்க வேண்டுமென்பது திருஞான சம்பந்தப் பிள்ளையார் கருத்தன்று என்பது, யாழினை உடைக்க ஓங்கிய பெரும்பாணரைப் பிள்ளையார் தடுத்துப் பாதுகாத்த செயலால் இனிதுணரப்படும்.

யாழிலடங்காதவாறு திருஞானசம்பந்தர் பாடிய 'மாதர் மடப்பிடி'யென்ற திருப்பதிகம் 'யாழ்முரி' யென்ற பெயரால் தொன்றுதொட்டு வழங்கப்பெற்று வருகின்றது. இப்பெயர் யாழை முரித்ததனால் எய்திய தென்பர் சிலர். அன்னோர் கருதுமாறு யாழைமுரித்த செயல் பிள்ளையார் வரலாற்றில் இடம்பெறவேயில்லை. முரியென்பது ஓரடியில் தொடங்கிய யாப்பியலையும் இசை நடையையும் அவ்வடியிலேயே முரித்து மாற்றி மற்றொரு யாப்பியலும் இசை நடையும் அமையப் பாடப் பெறுவதாகிய இசைப்பாட்டாகும். இதனை முரிவரியென்றுங் கூறுவதுண்டு. இதன் இலக்கணத்தினை,

'எடுத்த இயலும் இசையுந் தம்மின்
முரித்துப் பாடுதல் முரியெனப்படுமே'

எனச் சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியர் காட்டிய மேற்கோட் சூத்திரத்தால் நன்குணரலாம். இங்ஙனம் விரைவில் முரிந்துமாறும் இயலிசை நடையமைந்த வரிப்பாடலை யாழ் முதலிய இசைக்கருவிகளில் வாசித்துக் காட்டுதல் இயலாதாகலின் முரியாகிய இவ்விசைப்பாடலை 'யாழ்முரி' என்ற பெயரால் வழங்குதலுமுண்டு. இவ்வழக்கம்,

"ஆக்கரிய
யாழ்முரி சக்கரமாற் றீரடி முக்காலும்
பாழிமையாற் பாரகத்தோர் தாமுய்ய-ஊழி
உரைப்பமரும் பல்புகழால் ஓங்க உமைகோனைத்
திருப்பதிகம் பாடவல்ல சேயை"

என வரும் ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலையில் 'ஆக்கரிய யாழ்முரி' என நம்பியாண்டார் நம்பி இதனைக் குறிப்பிடுதலால் இனிது விளங்கும்.

## நீலநக்கர், சிறுத்தொண்டர் ஆகிய அடியார்களைப் பாராட்டியது

திருநள்ளாற்றினையிறைஞ்சிப் போற்றிய ஆளுடைய பிள்ளையார் திருச்சாத்தமங்கையை யடைந்த பொழுது திருநீல நக்க நாயனார் பிள்ளையாரை எதிர் கொண்டழைத்துப் பிள்ளையார்க்கும் திருநீலகண்ட யாழ்ப்பாணர் முதலாக அவருடன் வந்த அடியார்களுக்கும் தம் மனையில் திருவமுதமைத்து உபசரித்துப் போற்றினார். பிள்யைார் திருச்சாத்த மங்கையிலுள்ள அயவந்தி என்னுந் திருக்கோயிலில் எழுந்தருளிய இறைவனைப் பாடிப் போற்றிய திருப்பதிகத்தில் 'சாத்தமங்கை அடிகள் நக்கன்பரவ அயவந்தி யமர்ந்தவனே' எனவும் நிறையினார் நீலநக்கன் நெடுமா நகரென்று தொண்டர், அறையுமூர் சாத்த மங்கை' எனவும் வரும்தொடர்களால் திருநீலநக்க நாயனாரைச் சிறப்பித்

தருளினார். பின்பு பல பதிகளையும் பணிந்து பாடித் திருச்செங் காட்டங்குடியை யணுகினார். மன்னவர்க்குப் படைத் தலைவராய்ச் சென்று வாதாவி நகரத்தை அழித்த பரஞ்சோதி யாராகிய சிறுத்தொண்ட நாயனார் பிள்ளையாரை எதிர் கொண்டு போற்றினார். பிள்ளையாரும் அவருடன் அள வளாவிக் கணபதீச்சர மென்னும் திருக்கோயிலில் எழுந்தருளிய பெருமானைப் பணிந்து 'பைங்கோட்டு மலர்ப்புன்னை' யென்னும் பாமாலையைப் பாடிப் போற்றினார். அத் திருப்பதிகத்திற் சிறுத் தொண்ட நாயனாரின் திருத்தொண்டின பெருமையினைச் சிறப்பித்தருளினார்.

## விடந் தீர்த்தல்

சிறுத்தொண்டரால் உபசரிக்கப்பெற்ற திருஞானசம்பந்தர் திருமருகல் என்னுந் தலத்தை யடைந்து இறைவனை வழிபட்டு அங்கு அமர்ந்தருளினார். அந்நாளிலே வணிகனொருவன் கன்னியொருத்தியை உடனழைத்துக்கொண்டு தன்னூர்க்குச் செல்பவன், ஞாயிறு மறைந்த அளவில் வழிச்செலவை நிறுத்தித் திருமருகல் திருக்கோயிலின் ஒருபுறத்திலிருந்த மடமொன்றில் துயிலும்போது நள்ளிரவில் அரவினால் தீண்டப்பட்டு விடந் தலைக்கேறிச் சோர்ந்து வீழ்ந்தனன். அந்நிலையில் அவனுடன் வந்தவள், மணம் செய்யப்பெறாத கன்னியாதலின் அவனைத் தீண்டவும் மாட்டாதவளாய் அழுதரற்றினாள். அவ்வழு குரலைக் கேட்ட ஊரவர் சிலர், விடந்தீர்க்கும் மந்திரம் வல்லாரை யழைத்துவந்து மந்திரித்துப் பார்த்தும் அவ்விடந் தீர்ந்திலது. அதுகண்டு ஆற்றொணாத் துயரமுற்ற அந்நங்கை "வணிகர் குலமணியே, அன்னையையும் அத்தனையையும் விடுத்து உன்னையே என்னுயிரெனக் கொண்டு உடன் போந்தேன். நீயோ அரவினால் இறந்து என்னைவிட்டு அகன்றாய். இத்துன்பத்தைப் போக்குவார் ஒருவரையுங் காணேன். ஆதலின் இனியான் வாழமாட்டேன்" என அழுகின்றவள் பேரறிவினளாதலால் 'உலகத்தார் உய்ய வேண்டிக் கொடிய நஞ்சினையுண்டருளிய பெருமானே! வெந்து சாம்பலாகிய மன்மதனது உயிரை அவன் மனைவி வேண்டப் பரிந்து அளித்தருளிய புண்ணியனே! நின்னை வணங்கிய மறையவன் மேற்சீறிவந்த காலனை உதைத்தருளிய திருவடியை யுடையவனே! என் நாயகனைப்பற்றிய இந்த விடவேகம் நீங்கும்படியும் யான் இத்துன்பக்குழியினின்றும் ஏறி உய்யும் படியும் அருள் செய்தருள்க' என இறைவனை நினைந்து அரற்றுவாளாயினாள். அவள் அரற்றிய அவ்வோசையானது வைகறைப் பொழுதிலே திருமருகற் பெருமானை வழிபட வந்த திருஞானசம்பந்தப் பிள்ளையாரது திருச் செவியிலணைந்தது.

அவரும் அவள் இருந்த திருமடத்தைச் சார்ந்து அவளை நோக்கி, 'நீ அஞ்சாதே, நினது இடுக்கண் இதுவெனக் கூறுக' எனப் பணித்தருளினார். அம்மொழி கேட்ட கன்னி, பிள்ளையார் திருவடியில் வீழ்ந்து கண்ணீர் சொரிந்து நின்று பின்வருமாறு கூறுவாள்:

'என் தந்தை வைப்பூரிலுள்ள தாமன் என்போன், இங்கு அரவினால் தீண்டப்பட்ட இவன் எந்தையின் மருகன். எந்தைக்கு என்னுடன் மகளிர் எழுவர். அவருள் மூத்த மகளை இவனுக்குக் கொடுப்பதாக உறுதி கூறிய என் தந்தை, பொருளாசையாற் பிறனொருவனுக்கு மணஞ்செய்வித்தனன். என்னை யொழிந்த ஏனைய மகளிரும் இவ்வாறே ஒரொருவராகப் பிறர்க்கு மணஞ் செய்விக்கப் பெற்றனர். என் தந்தையை நம்பித் தளர்வுறும் இவனுக்காகப் பரிவுற்ற யான் சுற்றத்தாருக்குத் தெரியாதபடி இவனுடன் போந்தேன். இவனும் இங்குப் பாம்பினால் இறந்தான். யானும் அலைமறியும் கடல் நடுவே கப்பல் கவிழப் பெற்றாரைப் போல் துன்பத்திற்குத் துணையாவார் ஒருவருமின்றிப் புலம்பும் நிலைமையள் ஆயினேன். இந்நிலையிற் சுற்றத்தாரென இங்குத் தோன்றி எம்துயர்நீங்க அருள் செய்தீர்' எனப் போற்றி நின்றாள். அத்துயரச் செய்தியைக் கேட்டு நெஞ்சங்கலங்கிய திருஞான சம்பந்தர், திருமருகலிற் கோயில் கொண்டு எழுந்தருளிய பெருமானைப் பணிந்து 'உடையானே இந்த ஒள்ளிழையாள் உளம் மெலிந்து வருந்துதல் அருட்கடலாகிய நினது திருவுள்ளத் திற்குத் தகுவதாமோ' என நெஞ்சம் நெக்குருகி இறைவன்பால் முறையிடும் நிலையில்,

சடையா யெனுமால் சரண்நீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவளுண் மெலிவே.

எனத் தொடங்குந் திருப்பதிகத்தைப் பாடிப்போற்றினார். அந்நிலையில் வணிகனும் விடம்தீர்ந்து உயிர்பெற்றெழுந்தான். கன்னியும் வணிகனுடன் பிள்ளையார் திருவடிகளில் வீழ்ந்து பணிந்தனள். புகலிவேந்தராகிய பிள்ளையாரும் அவ்விருவர்க்கும் மணம் புணரும் பெருவாழ்வை வகுத்தருளினார். இந்நிகழ்ச்சியை,

வயலார் மருகற் பதிதன்னில் வாளர வாற்கடியுண்
டயலா விழுந்த அவனுக்கிரங்கி யறிவழிந்த
கயலார் கருங்கண்ணி தன்துயர்தீர்த்த கருணை வெள்ளப்
புயலார் தருகையி னானென்னத் தோன்றிடும் புண்ணியமே.

என ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதியில் நம்பியாண்டார் நம்பி குறித்துப் போற்றியுள்ளார்.

பாம்பு தீண்டியிறந்த வணிகனை உய்வித்தற் பொருட்டுப் பாடியருளிய இத்திருப்பதிகம், மருகற் பெருமானைக் காதலித்த மங்கை யொருத்தியின் ஆற்றாமை கூறிச் செவிலியிரங்குதல் என்னுந் துறையில் அமைந்துளதே யன்றி, தன்னுடன் போந்த வணிகன் பாம்பினாற் கடியுண்டிறத்தல் கண்டு ஆற்றாத கன்னியின் துன்ப நிலையைப் புலப்படுத்துவதாக இல்லையே? எனச் சிலர் வினவுதல்கூடும். நிறைமொழி மாந்தராகிய திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர், சுந்தரர் முதலிய அருளாசிரியர்கள் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகங்கள் மறைமொழிகளாகிய மந்திரங்களாதலின், அவையனைத்தும் அவர்கள் கருத்துக்களை வெளிப்படையாகத் தெரிவிப்பனவாக அமைந்திருத்தல் வேண்டு மென்னும் இன்றியமையாமையில்லை. வணிகனுடன் போந்த கன்னியின் துயர்தீர்க்கக்கருதிய ஆளுடைய பிள்ளையார் இறைவனைத் தலைவனாகக் கொண்டு அகப் பொருட்டுறையமையப் பாடிய இந்திருப்பதிகமாகிய மந்திரத்தால் கன்னியின் மாமனாகிய வணிகன் உயிர் பெற்றெழுந்தனன் எனக்கொள்வதே ஏற்புடையதாகும். தமிழுக்கேயுரிய இனிய அகப் பொருட்டுறையமைந்த இத் திருப்பதிகத்தினைப்பாடி விடந்தீர்த்தருளிய இவ்வரலாற்றின் நுட்பத்தினை,

'குவளைக் கருங்கட் கொடியிடை துன்பந்தவிர அன்று
துவளத் தொடுவிடம் தீர்த்த தமிழின் தொகைசெய்தவன்'

எனவரும் திருச்சண்பை விருத்தம் இனிது புலப்படுத்துவதாகும்.

திருஞானசம்பந்தர் திருமருகலில் தங்கியிருக்கும் பொழுது சிறுத்தொண்டநாயனார் அங்கு வந்து திருச்செங்காட்டங் குடிக்கு மீண்டும் எழுந்தருளும்படி பிள்ளையாரை வேண்டிக் கொண்டார். பிள்ளையார் மருகற் பெருமானை வணங்கி விடை பெறச் சென்றார். அப்பொழுது, செங்காட்டங் குடியிற் கணபதீச் சரத்தில் வீற்றிருந்தருளுந் திருக்கோலத்தை மருகற் பெருமான் பிள்ளையார்க்குக் காட்டியருளினார். அது கண்ட பிள்ளையார்,

அங்கமும் வேதமும் ஓதுநாவர் அந்தணர் நாளும் அடிபரவ
மங்குல் மதிதவழ் மாடவீதி மருகல் நிலாவிய மைந்த சொல்லாய்
செங்கயலார்புனற் செல்வமல்கு சீர்கொள் செங்காட்டங்
குடியதனுள்
கங்குல் விளங்கெரி யேந்தியாடுங் கணபதி யீச்சரங் காமுறவே.

எனத்தொடங்கும் திருப்பதிகத்தைப்பாடிப் போற்றித் தம்மை அழைக்க வந்த சிறுத்தொண்டருடன் செங்காட்டங்குடி அடைந்து கணபதீச்சரத் திறைவரைப் பணிந்து அங்குச் சிலநாள் தங்கியிருந்தார். பின்பு தம்முடன் வந்த சிறுத்தொண்டர்க்கு விடையருளித் திருப்புகலூர் தொழச் சென்றார்.

## திருப்புகலூரில் அடியார் திருக்கூட்டம்

முருகநாயனார் எதிர்கொண்டழைக்கத் திருப்புக லூரையடைந்த பிள்ளையார், திருக்கோயிலிற்புகுந்து அங்க மர்ந்தருளிய பெருமானை நெக்குருகு சித்தையுடன் நேர்நின்று துதித்தருளி முருகநாயனார் திருமடத்தில் அமர்ந்திருந்தனர். அங்கமரும் நாளில் புகலூர் வர்த்தமானீச்சரத் திருக்கோயிலை வணங்கித் தாம் பாடிய திருப்பதிகத்தில், முருகநாயனார் மலர் மாலை சாத்தி வழிபட்ட திருத்தொண்டினைக் 'குறிப்பறி முருகன் செய்கோலம்' எனவும் 'முருகன் முப்போதுஞ் செய்முடி மேல் வாசமா மலருடையார்' எனவும் வரும் தொடர்களால் சிறப்பித்தருளினார்.

**'வர்த்தமானீசர் கழல்வணங்கி வாழ்முருகன்**
**பத்தியை யீசன் பதிகத்தே காட்டினான்'**

எனவரும் ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை இக் குறிப்பினை விரித்துரைத்தல் காண்க,

திருநாவுக்கரசர் திருவாரூரிற் புற்றிடங்கொண்ட பெரு மானைப் போற்றிப் புகலூர் தொழப் போந்தார். அரசரது வருகையை யுணர்ந்த ஆளுடைய பிள்ளையார், அடியார் குழுவுடன் அவரை யெதிர்கொண்டழைத்து அளவளாவி மகிழ்ந்தனர். பிள்ளையார் அப்பரை நோக்கி 'அப்பரை இங்கு அணையப் பெறும் பேரருளுடையோம் யாம். ஆரூரை எப் பரிசால் தொழுதுய்ந்தது? என வினவினார். திருநாவுக்கரசர் தாம் திருவாரூரிற்கண்ட திருவாதிரைத் திருவிழாவின் சிறப்பினை' 'முத்துவிதானம்' எனத்தொடங்கும் திருப்பதிகத்தினால் விரித்துக்கூறினார். ஆளுடைய பிள்ளையார், அது கேட்டுத் திருவாரூர்ப் பெருமானைத் தொழுது போற்ற விரும்பினார்; 'ஆரூரைத் தொழுது போற்றி மீண்டு வந்து உம்முடன் மேவுவேன்' என்றுரைத்து அப்பரது இசைவுபெற்றுப் புறப் பட்டார். திருவிற்குடி வீரட்டானத்தைப் பணிந்து 'ஆரூரடை வோம்' எனப்பாடித் திருவாரூரெல்லையில் வந்து சேர்ந்தார். பிள்ளையாரது வருகையையறிந்த ஆரூர் நகர மக்கள் அவரை எதிர் கொண்டு போற்றினார்கள். பிள்ளையார் திருவாரூ ரெல்லையில் சிவிகையினின்றும் இறங்கிச் 'சித்தந்தெளிவீர் காள்' என்ற முதற் குறிப்புடைய திருப்பதிகத்தைப் பாடி மலர் தூவி வழிபட்டார். தம்மை எதிர்கொள வந்த தொண்டர் குழாத்தினை நோக்கி 'அந்தமாயுலகாதியாய்' எனத் தொடங்குந் திருப்பதிகத்தினைப் பாடி 'எந்தைதான் எனை ஏன்று கொளுங் கொலோ' என ஆரா அன்பினால் வினவித் திருக்கோயிலின்

முன்னுள்ள தேவாசிரிய மண்டபத்தை யிறைஞ்சினார். பூங்கோயிலுட்புகுந்து புற்றிடங் கொண்ட பெருமானைப் போற்றி நிலமுறப் பலமுறை பணிந்தார். அங்க அரநெறி யென்னும் திருக்கோயிலில் அமர்ந்த பெருமானைப் பணிந்து மகிழ்ந்தார். பின்பு வலிவலம், கோளிலி, முதலாக அருகேயுள்ள திருப்பதி களைத் தொழுது மீண்டும் திருவாரூரையடைந்து இறைவனை வணங்கியிருந்தார். பின்னர்த் திருநாவுக்கரசரது பேரன்பின் திறத்தை நினைந்து திருப்புகலூர் தொழப் புறப்பட்டுத் திருவாரூரின் புறத்தே செல்பவர், அத்திருப்பதியைப் பிரிய லாற்றா நிலையினராய் அதனையே நோக்கிநின்று, தம் நெஞ்சத்தை விளித்து 'நெஞ்சே நீ மறவாது சிவனது ஆரூர் தொழுவாயாக' என அறிவுறுத்துங் கருத்துடன் 'பவனமாய்ச் சோடையாய்' எனத் தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடிக் கைகூப்பித் தொழுதார். பின்பு பனையூரைப்பணிந்து புகலூரை யடைந்தார். திருநாவுக்கரசர் முருகநாயனார் முதலிய அடி யார்கள் பிள்ளையாரை எதிர் கொண்டழைத்தார்கள். திருஞான சம்பந்தர் முருகநாயனார் திருமடத்தில் நீலநக்கர், சிறுத் தொண்டர் முதலிய அடியார்களுடன் அளவளாவிய மர்ந்திருந்தனர்.

## திருநாவுக்கரசருடன் தலயாத்திரை

ஞானசம்பந்தரும் நாவுக்கரசரும் இறைவன் வீற்றிருக்கும் திருப்பதிகளை வணங்கவெண்ணித் திருப்புகலூரினின்றும் புறப்பட்டார்கள். சிறுத்தொண்டரும் திருநீலநக்கரும் விடை பெற்றுத் தத்தம் ஊருக்குச் சென்றனர். பிள்ளையாரும் நாவுக் கரசரும் புகலூரைத்தொழுது போகும்பொழுது அரசரைப் பிரிதற்கு மனமில்லாத பிள்ளையார், முத்துச்சிவிகை பின் வரத் தாமும் நடந்து சென்றார். அப்பொழுது அப்பரடிகள் பிள்ளை யாரை நோக்கி, 'சிவபெருமான் உமக்களித்த முத்துச் சிவிகையில் எழுந்தருள்வீராக' எனப் பணித்தார். அதுகேட்ட பிள்ளையார் 'இறைவன் திருவருள் அவ்வாறாயின் நீவீர் எங்கே செல்கின்றீரோ யானும் அங்கே அடியார்களுடன் வரக்கருதுகின்றேன்' எனக் கூற அப்பரும், அதற்கிசைந்து முன்னே சென்றனர். பிள்ளையாரும் பரிசனங்களுடன் அவர் பின்னே சென்றார்.

திருநாவுக்கரசருடன் அம்பர் மாகாளத்தையடைந்த பிள்ளையார், அங்கே கோச்செங்கணான் கட்டிய திருவம்பர்ப் பெருந் திருக்கோயிலைப் பாடிப் போற்றினார். பின்பு குங்கிலியக் கலயநாயனார் எதிர்கொண்டு. போற்றத் திருக்கடவூரை யடைந்தார். மார்க்கண்டர்க்காகக் காலனை யுதைத்த வீரட்டப் பெருமானைப் பரவிப் போற்றிக் கலயநாயனார் இல்லத்தில் திருவமுது செய்தருளித் திருக்கடவூர்த் திருமயானத்தைப்

பணிந்திருந்தனர். பின்பு ஆக்கூர் மீயச்சூர், பாம்புரம் முதலிய திருத்தலங்களைப் பணிந்து திருவீழிமிழலையையடைந்தனர். திருமாலின் வழிபாட்டிற்கு உவந்து விண்ணினின்றிழிந்த விமானத்தில் வீற்றிருந்தருளும் மணவாளநம்பியாகிய இறைவனது திருவடிகளைப் பரவிப் போற்றி மகிழ்ந்தார். திருக்கோயிலின் மதிற்புறத் தமைந்த திருமடத்தில் திருநாவுக் கரசரும் அவருடன் வந்த அடியார்களும் தங்கினர். திருக் கோபுரத்தின் வடபாலமைந்த திருமடத்தில் திருஞான்சம்பந்தர் பரிசனங்களுடன் அமர்ந்திருந்தனர். அங்குத் தங்கியிருக்கும் நாளில் ஆளுடைய பிள்ளையார் பேணுபெருந்துறை, திலதைப்பதி என்ற தலங்களைப் பணிந்து பாடினார்.

திருஞானசம்பந்தப் பிள்யைார் திருவீழிமிழலையில் தங்கி இருக்கும்பொழுது அவரைக்காண விரும்பிய காழிநகரமாந்தர் வீழிமிழலைக்கு வந்து பிள்ளையாரைத் தொழுது தங்களுடன் காழிப்பதிக்கு எழுந்தருள வேண்டுமென வேண்டிக்கொண் டார்கள். அவர்களது விருப்பத்தையுணர்ந்த பிள்ளையார் ‘இன்று கழித்து நாளை வீழிமிழலையிறைவர் அருள் பெற்றுப் புறப்படுவோம்’ எனக் கூறி, அன்றிரவு துயிலமர்ந்தார். அந்நிலையில் வீழிமிழலைப் பெருமான் பிள்ளையார்க்குக் கனவில் தோன்றி, ‘யாம் தோணியிலமர்ந்த வண்ணத்தை நீ இன்று வீழிமிழலையிற் காண்பாய்’ என அருள் செய்து மறைந்தனர். துயிலுணர்ந்து வியப்புற்று எழுந்த பிள்ளையார், கைகளைத் தலைமேற் குவித்திறைஞ்சித் திருவீழிமிழலைத் திருக்கோயிலுட் புகுந்து விண்ணிழி விமானத்தின் கண்ணே திருத்தோணிபுரத் திருக்கோலத்தைக்கண்டு மகிழ்ந்து ‘மைம்மரு பூங்குழல்’ என்ற திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார். இத் திருப்பதிகத்தின் பாடல் தோறும் ‘புகலி நிலாவிய புண்ணியனே, மிழலை விண்ணிழி கோயில் விரும்பியது என்கொல் சொல்லாய்’ எனப் பிள்ளையார் இறைவனை நோக்கி வினவிப் போற்றுவதுடன் இப்பதிகத்தின் ஒன்பதாந் திருப்பாடலில் ‘எறிமழுவோடிளமான்கையின்றி யிருந்த பிரான் இதுவென் கொல் சொல்லாய்’ என வரும் தொடரால் மானும் மழுவுங் கைக்கொள்ளாது வீற்றிருந்தருளுந் தோணியப்பரது திருவுரு வத்தை வீழிமிழலையிற் கண்ட அற்புத நிகழ்ச்சியை வெளியிட் டருளிய திறம் உளங்கொளத் தக்கதாகும்.

## வாசித்தீரக் காசு பெறுதல்

திருஞானசம்பந்தர் தம்மை யழைக்கவந்த காழி மறையவர் களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தாம் திருநாவுக்கரச ருடன் வீழிமிழலையில் தங்கியிருந்தனர். அக்காலத்தில் மழை யின்மையால் பஞ்சமுண்டாயிற்று. உயிர்களெல்லாம் பசியால்

வருத்த முற்றன. சிவனடியார்களையும் பசி நோய் வருத்திற்று. அதுகண்டு ஞானசம்பந்தரும் நாவரசரும் 'கண்ணுதலோன் திரு நீற்றுச் சார்வினோர்க்குங் கவலை வருமோ' என்று கருத்திற் கொண்டு சிவனடிகளைச் சிந்தித்து இரவில் துயில் கொண்டனர். அந்நிலையில் வீழிமிழலையிறைவர் அவ்விருவர்க்கும் கனவில் தோன்றி 'நீங்கள் கால நிலைமையால் மனத்தில் வாட்டமடையீர் ஆயினும் உங்களை வழிபடுகின்ற அடியார்களுடைய வருத் தத்தை நீக்கும் பொருட்டு இப்பஞ்சம் நீங்குமளவும் நாம் நாள் தோறும் இத் திருக்கோயிலின் கிழக்குப் பீடத்திலும் மேற்குப் பீடத்திலும் ஒவ்வொரு காசு நுமக்குத் தருகின்றோம். பஞ்சம் நீங்கியபின் அக்காசும் தவிர்வதாகும்' என்று சொல்லி மறைந்தருளினார். ஆளுடைய பிள்ளையார் விழித்தெழுந்து இறைவனருளைப் போற்றித் திருநாவுக்கரசருடன் திருக் கோயிலிற் புகுந்தபோது கிழக்குப் பீடத்திலே காசு இருத்தலைக் கண்டு விருப்புடன் திருவருளைத் தொழுது அதனை எடுத்து 'இறைவனடியாரானார் எல்லாரும் வந்து உண்பார்களாக' என இரண்டு காலங்களிலும் பறைசாற்றித் தெரிவித்து, தம்முடைய திருமடத்தில் வரும் அடியாரனைவருக்கும் நாடோறும் திருவமு தளித்திருந்தனர். அப்பரடிகளும் மேற்குப் பீடத்தில் வைக்கப் படும் காசினை யெடுத்து அவ்வாறே சிவனடியார்களுக்கு நாடோறும் திருவமுதளித்து வந்தனர். இங்ஙனம் நிகழும் நாளில் திருநாவுக்கரசரது திருமடத்திலேயுள்ள அடியார்கள் காலம்பெற அமுது செய்தனர். ஞானசம்பந்தர் திருமடத்திலுள்ள அடி யார்கள் அமுது செய்தற்குக் காலந்தாழ்ந்தது. அஃதுணர்ந்த பிள்ளையார், தம் திருமடத்தில் திருவமுதாக்குவோரை நோக்கி, நாடோறும் அமுதளிக்கக் காலந்தாழ்ப்பதற்குரிய காரண மென்ன எனக்கேட்டார். அதற்கு அவர்கள் பிள்ளையாரைப் பணிந்து, தாங்கள் இறைவன்பாற் பெறும் படிக்காசைப் பெற்றுப் பண்டம் வாங்குவதற்குக் கொண்டு சென்றால் அதற்கு வட்டம் கேட்கிறார்கள். திருநாவுக்கரசர் பெற்ற காசை வட்டமின்றி யேற்றுக் கொள்கிறார்கள். இதுவே காலந்தாழ்த்தற்குக் காரணம் எனக் கூறினர். அதனையுணர்ந்த பிள்ளையார் 'அப்பமூர்த்தி கைத்தொண்டு செய்தலால் அவர் பெறுங் காசு வட்டமின்றி ஏற்றுக்கொள்ளப்பெறுகிறது' என்று சிந்தித்து 'இனிவரும் நாட்களிலே தருங்காசு வாசிதீரும்படி இறைவனைப் பாடிப் போற்றுவேன்' எனத் திருவுளங்கொண்டார். மறுநாட் காலையிலே வீழிமிழலையிறைவனைப் பணிந்து,

**வாசி தீரவே, காசு நல்குவீர்**
**மாசின் மிழலையீர், ஏசலில்லையே.**

என்னுந்திருப்பதிகம் பாடி, வாசியில்லாத நல்ல காசினைப் பெற்றார். அதனைப் பெற்ற அடியார்கள், பண்டம் வாங்குதற்குச்

சென்று கொடுத்தபோது வணிகர்கள், 'இக்காசு மிக நன்று, வேண்டுவன தருவோம்' எனச் சொல்லி உணவுப் பொருளைத் தந்தார்கள். அன்று தொடங்கிப் பிள்ளையார் திருமடத்திலும் அடியார்கள் உரிய காலத்தில் திருவமுது செய்தார்கள். இங்ஙனம் இருவருடைய திருமடங்களிலும் எண்ணிறந்த சிவனடியார்கள் திருவமுது செய்து மகிழ்ந்துறையும் காலத்தே எங்கும் மழை பெய்து நெல் முதலிய தானியங்கள் நிறைய விளைந்தமையால் உயிர்களெல்லாம் துன்ப நீங்கி யின்புற்றன.

பிள்ளையார் திருவீழிமிழலையிறைவரை நோக்கி, 'வாசி தீரவே காசு நல்குவீர்' என வெளிப்படையாக வேண்டுதலால் இத்திருப்பதிகம் பிள்ளையார் பெற்ற படிக்காசின் வட்டந் தீர்தற் பொருட்டு அருளிச் செய்யப்பெற்றதென்பது நன்கு விளங்கும். இங்ஙனம் பாடிப்போற்றிய பிள்ளையாரது வேண்டுகோளைச் செவிமடுத்தருளிய வீழிமிழலைப்பெருமான், பிள்ளையாருக்கு வாசிதீரக் காசளித்தருளினார் என்பது வரலாறு. திருநாவுக்கரசர் தம் கெழுதகை நண்பராகிய திருஞானசம்பந்தரைக் குறித்துப் பேசும் நிலையில்,

> "பாடிப்பெற்ற பரிசில் பழங்காசு
> வாடி வாட்டந் தவிர்ப்பார்"

எனப் புகழ்ந்து போற்றுதலால் இவ்வரலாற்றின் உண்மை நன்கு தெளியப்படும். ஞானசம்பந்தர் பெற்ற காசு வாசியுளதாதற்கு அதன் பழமையே காரணம் என்பதனை, 'பரிசில் பழங்காசு' என்ற தொடரால் அப்பரடிகள் நன்கு விளக்கியுள்ளமை காணலாம்.

சீகாழிப்பதியிற் பெரிய பெருமாட்டியுடன் தோணிமீது வீற்றிருந்தருளும் பெருமானைக் காண விரும்பிய திருஞான சம்பந்தரைக் கழுமல நகர்க்குப்போகவிடாது தோணிபுரத் திருக்கோலத்தை வீழிமிழலை விண்ணிழி விமானத்திலேயே காட்டியருளிப் பிள்ளையாரையும் திருநாவுக்கரசரையும் திருவீழி மிழலையிலேயே தங்கப் பணித்து, பஞ்சம் வந்தபொழுது அவ்விரு பெருமக்களுக்கும் நாடோறும் ஒவ்வொரு காசு தந்தருளிய வீழிமிழலை யிறைவரது பேரருட் செயலைப் பிற் காலத்தில் அத்திருத்தலத்தினை யிறைஞ்சுதற்கு வந்த நம்பி யாரூரர் கேட்டு மகிழ்ந்தார். 'வீழிமிழலையில் வீற்றிருக்கும் பெரியீர், நல்லிசை ஞானசம்பந்தரும் நாவினுக்கரையரும் பாடிய இன்னிசைத் தமிழ்ப்பாடல்களை நீவீர் இருந்த இடத்திலேயே அமைதியாக அமர்ந்து கேட்க வேண்டுமென்னும் பெருவிருப் பத்தால் பெருமக்களாகிய இருவர்க்கும் நாடோறும் படிக்காசு தந்தருளினீர். அவ்விருவரும் பாடிய நற்றமிழ் மாலை சொல் லியவே சொல்லியேத்தும் தொண்டினை மேற்கொண்டவன்

அடியேன். ஆதலால் அடியேனுக்கும் அருளுதல் வேண்டும்' என வினவும் முறையில்,

பரந்த பாரிட மூரிடைப்பலி பற்றிப் பார்த்துணுஞ் சுற்றமாயினீர்
தெரிந்த நான்மறையோர்க் கிடமாய திருமிழலை
இருந்துநீர் தமிழோடிசை கேட்கும் இச்சையாற் காசுநித்தல் நல்கினீர்
அருந்தண் வீழிகொண்டீர் அடியேற்கும் அருளுதிரே.

என வீழிமிழலைப் பெருமானைப் பாடிப் போற்றியுள்ளார்.

இவ்வாறு ஆளுடைய பிள்ளையாரும் அப்பரடிகளும் திரு வீழிமிழலையில் அடியார்களுடன் தங்கியிருந்து இறைவன் அளித்த படிக்காசினைக் கொண்டு பசியால் வருந்திய எல்லார்க்கும் அமுதளித்துத் துயர்கூர் வறுமை துடைத்தருளிய திருவருட் பண்பினால் தான் இவ்வுலகம் நிலைபெறுவதாயிற்று என்ற உண்மையினை,

பாடிய செந்தமிழாற் பழங்காசு பரிசில்பெற்ற
நீடிய சீர்த்திரு ஞானசம்பந்தன் நிறைபுகழான்
நேடிய பூந்திரு நாவுக்கரசோ டெழின்மிழலைக்
கூடிய கூட்டத்தினா லுளதாய்த்திக் குவலயமே.

என்ற பாடலால் நம்பியாண்டார் நம்பி அறிவுறுத்திய திறம் நினைந்து மகிழத்தக்கதாகும்.

## மறைக்கதவம் அடைத்தல்

ஆளுடைய பிள்ளையாரும் அப்பரடிகளும் அடியார் கூட்டத்துடன் திருவீழிமிழலையினின்றும் புறப்பட்டுத் திரு வாஞ்சியம் முதலிய பல தலங்களைப் பணிந்துபாடி அன்பர்கள் எதிர்கொண்டு போற்றத் திருமறைக் காட்டை அடைந்தார்கள். அப் பெருமக்களிருவரும் திருமுறைக் காட்டிலுள்ள திருக் கோயிலை வலஞ்செய்து கோபுரத்துள் நுழைந்து முன்றில் வாயிலை அணுகினார்கள். முன்னாளிலே அருமறைகள் சிவ பெருமான் வழிபாடுசெய்து திருக்காப்பிடப் பெற்ற திருக்கதவை அம்மறைகளை அன்புடன் ஓதும் அடியார்கள் வந்து திறக்கப் பெறாமையினால் அவ்வாயில் அடைக்கப்பட்டே இருந்தது. அந்நிலையில் அன்பர்கள் வேறோர் பக்கத்தில் வாயிலமைத்து அதன் வழியே சென்று வழிபட்டு வந்தனர். இச் செய்தியினை அடியார்கள் சொல்லக் கேட்ட ஆளுடைய பிள்ளையார், திருநாவுக்கரசரை நோக்கி, 'அப்பரே வேதவனப்பெருமானை எப்படியும் இவ்வாயில்வழியாகச் சென்று நாம் வழிபடுதல் வேண்டும். இத் திருக்கதவு திறக்கும்படி நீரே செந்தமிழ்ப் பதிகம் பாடியருளும்' என வேண்டிக் கொண்டார். அப்பரும் பிள்ளையார் வேண்டுகோட் கிசைந்து 'பண்ணினேர் மொழியாள் உமை

பங்கரேரா' என்ற திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார். அப் பதிகப் பாடல்களின் பொருட்சுவையினைத் துய்க்க விரும்பிய மறைக்காட்டு இறைவர், பதிகம் முடியுமளவும் திருக்கதவைத் திறக்கத் தாழ்த்தருளினர். அதுகண்டு வருத்தமுற்ற அப்ப மூர்த்திகள் 'அரக்கனை விரலாலடர்த்திட்ட நீர், இரக்க மொன்றிலீர் எம்பெருமானிரே' என' பத்தாம் பாடலைப் பாடினார். அடைக்கப்பட்டிருந்த திருக்கதவு இறைவர் அருளால் விரைவில் திறந்துகொண்டது. இரு பெருமக்களும் அளவிலா மகிழ்ச்சியுடையராய் அடியார்களுடன் கோயிலினுள்ளே புகுந்து இறைவன் திருமுன்னர் விழ்ந்திறைஞ்சித் திருப்பதிகங்கள் பாடிப் போற்றினார்கள். மறைக்காட்டீசரை வழிபட்டு வெளியே வந்தபின் திருநாவுக்கரசர் ஆளுடைய பிள்ளையாரை நோக்கி 'இத்திருக்கதவம் இறைவனருளால் அடைக்கவும் திறக்கவும் அமையும்படி தாங்கள் இப்பொழுது அடைக்கப் பாடியருளுதல் வேண்டும்' என வேண்டிக்கொண்டார். அதற்கிசைந்த பிள்ளையார்.

**சதுரம்மறை தான்துதி செய்து வணங்கும்**
**மதுரம்பொழில் சூழ்மறைக்காட்டுறை மைந்தா**
**இதுநன்கிறை வைத்தருள் செய்க எனக்குன்**
**கதவந்திருக் காப்புக்கொள் ளுங்கருத் தாலே.**

என்ற திருப்பாடலைப் பாடினார். அந்நிலையில் முன்திறந்திருந்த கதவு தானே அடைத்துக்கொண்டது. அதுகண்டு திருநாவுக்கர சரும் அங்கிருந்த அடியார்களும் இறைவன் திருவருட்டிறத்தை வியந்து போற்றினார்கள். பிள்ளையார் அத்திருப்பதிகத்தின் ஏனைய பாடல்களையும் பாடித் திருக்கடைக்காப்புச் சாத்தினார். பின்பு இருபெருமக்களும் அடியார்களுடன் அங்குள்ள திரு மடத்தில் தங்கியிருந்தனர்.

## வாய்மூர் இறைவர் ஆடல்காட்டியருளல்

அருமறைகளால் திருக்காப்புச் செய்யப்பட்ட திருக்கதவு தம்மால்அரிதில் திறக்கப்பெற்றதும் பிள்ளையாரால் எளிதில் அடைக்கப்பெற்றதும் ஆகிய இரு நிகழ்ச்சிகளையும் எண்ணிய திருநாவுக்கரசர், தாம் இறைவன் திருக்குறிப்பறியாது திறக்கப் புகுந்தது தவறெனக் கருதிய உள்ளத்தினராய்த் திருமடத்தின் ஒருபால் துயில்கொண்டிருந்தார். அப்பொழுது சிவபெருமான் சைவ வேடத்துடன் அரசர்முன் தோன்றி, 'நாம் திருவாய்மூரில் இருப்போம். எம்மைப் பின்தொடர்ந்து வருக' எனக் கூறிப் போயினார். அவரைக் கண்டபொழுதே கைகளைத் தலைமேற் குவித்தெழுந்த அப்பரடிகள், பேரார்வத்துடன் அவரைப் பின் தொடர்ந்து சென்றார். இவ்வாறு அப்பரடிகளை அழைத்துச்

சென்ற இறைவர், அண்மையிலுள்ளார் போற்காட்டி நெடுந் தூரஞ் சென்று வழியிடையே மறைந்தருளினார். அந்நிலையில், திருமுறைக் காட்டில் திருமடத்தில் தங்கியிருந்த ஞானசம்பந்தப் பிள்ளையார் திருநாவுக்கரசரைக் காணாது 'அவர் திருவாய் மூருக்கு எய்தினார்' என அடியார்கள் சொல்லக்கேட்டு அவரைத் தேடிச்சென்றார். வழியிடையே தம்மை அழைத்துப் போந்த இறைவரைக் காணாது வருத்தமுற்ற திருநாவுக்கரசர், தம்மை ஆரா அன்பினால் தேடிவரும் கெழுதகை நண்பராகிய ஞானசம்பந்தரைக்கண்டு மகிழ்ந்தார் 'அருமறைகளால் அடைக்கப்பெற்ற திருக்கதவைக் குறிப்பறியாது திறக்க முற்பட்ட என்னைப் போலன்றித் திருத்தொண்டின் நிலைமை நன்கு செறியப்பாடி அடைப்பித்த செழித்த மொழிவளமுடைய திரு ஞானசம்பந்தப் பிள்ளையார் உதோவந்து நிற்கின்றார். திருவாய் மூர்ப் பெருமான் என்னையன்றி இவரையும் மறைத்துநிற்க வல்லரோ' என வினவும் முறையில்,

திறக்கப் பாடிய என்னினுஞ் செந்தமிழ்
உறைப்புப் பாடி அடைப்பித்தார் உந்நின்றார்
மறைக்க வல்லரோ தம்மைத் திருவாய்மூர்ப்
பிறைக்கொள் செஞ்சடையாரிவர் பித்தரே.

என்ற திருக்குறுந்தொகையைப் பாடிப் போற்றினார். அப்பொழுது திருவாய்மூரிறைவர், திருஞானசம்பந்தப் பிள்ளை யார்க்கு எதிரே தோன்றி ஆடல்காட்டி யருள்புரிந்தார். பிள்ளையார் தாம்கண்ட அற்புதக் காட்சியை,

தளரிள வளரென வுமைபாடத் தாளமிடவோர் கழல்வீசிக்
கிளரிள மணியர வரையார்த் தாடும் வேடக் கிறிமையார்
விளரிள முலையவர்க் கருள்நல்கி வெண்ணீறணிந்தோர் சென்னியின் மேல்
வளரிள மதியமொ டிவராணீர் வாய்முரடிகள் வருவாரே.

எனவரும் திருப்பதிகத்தாற் போற்றித் தெய்வக்காட்சியாகிய அதனை அப்பரடிகளுக்கும் காட்டி மகிழ்ந்தார். இப்பதிகத்துப் பாடல்தோறும் தம் நண்பராகிய அப்பரடிகளை 'இவர்' எனச் சுட்டிக்காட்டி, 'இவரை ஆட்கொண்டருளும் நீர்மையையுடைய திருவாய்மூரிறைவர் இதோ வருகின்றார்' என்ற பொருளமைய 'இவர் ஆள்நீர் வாய்மூரடிகள் வருவாரே, எனப் பிள்ளையார் குறிப்பிட்டுப் போற்றியுள்ளார். இதனால் ஞானசம்பந்தர், திருவாய்மூரடிகள் தமக்குக் காட்டிய ஆடற் கோலத்தைத் தம் நண்பராகிய நாவரசர்க்குக் காட்டிய செய்தி நன்கு புலனாதல் காணலாம். திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் திரு வாய்மூரிற் சில நாளமர்ந்து பெருமானைப் போற்றி மீண்டுந் திருமறைக் காட்டினையடைந்து திருமடத்தில் அமர்ந்திருந்தனர்.

திருஞானசம்பந்தர் திருமறைக்காட்டில் திருநாவுக்கரசருடன் போந்து திருப்பதிகம் பாடித் திருக்கோயிற் கதவினை அடைத்தருளிய அற்புத நிகழ்ச்சியை,

"அடைத்தது
அரைசோ டிசையா அணிமறைக் காட்டுக்
குரைசேர் குடுமிக் கொழுமணிக் கதவே"*
(* ஆளுடைய பிள்ளையார் திருமும் மணிக்கோவை-4)

எனவும்,

"நித்திலங்கள்
மாடத்தொளிரும் மறைக்காட்டிறைகதவைப்
பாடி யடைப்பித்த பண்புடையான் "*
(* ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை)

எனவும் நம்பியாண்டார் நம்பி எடுத்துரைத்துப் போற்றியுள்ளார்.

## மதுரைக்கு எழுந்தருளுதல்

பாண்டி நாட்டிலுள்ள ஆனைமலை முதலிய மலைகளைத் தங்களுக்குரிய இருப்பிடமாகக்கொண்டு வாழ்ந்த சமணர்கள், தங்கள் சமயத்தைப் பரப்புவதுடன் பிற சமயத்தவர்களை யிகழ்ந்தும் வந்தனர். அந்நாளிற் பாண்டிநாட்டை அரசு புரிந்தவன் கூன்பாண்டியன் என்பான். அவன் சமண சமயத்தவர் சூழ்ச்சியிற்பட்டுத் தனக்குரிய சைவசமயத்தை விட்டுச் சமணனா யினான். பாண்டிநாட்டுக் குடிமக்களிற் பலரும் சமணசமயத்தை மேற்கொண்டனர். அங்குள்ள திருக்கோயில்களிற்பல பாழிக ளாகவும் பள்ளிகளாகவும் மாற்றப்பட்டன. மதுரை நகர மாந்தரில் பாண்டிமாதேவியாராகிய மங்கையர்க்கரசியாரும் அமைச்சர் பெருமானாகிய குலச்சிறையாரும் தமக்குரிய சிவ நெறியை நெகிழவிடாது கடைப்பிடித் தொழுகினார்கள். அவ்விருவரும் திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருமறைக் காட்டில் எழுந்தருளியிருத்தலைக் கேள்வியுற்றுப் பிள்ளையாரை வணங்கிவரும்படி தம் பரிசனத்தார் சிலரை மறைக்காட்டிற்கு அனுப்பினார்கள்.

பாண்டிநாட்டிலிருந்து திருமறைக்காட்டிற்கு வந்த பரிசனங்கள், திருஞானசம்பந்தப் பிள்ளையாரைப் பணிந்து தம் நாட்டின் நிலைமையையும் மங்கையர்க்கரசியார் குலச்சிறையார் ஆகிய இவர்களது அன்பு வணக்கத்தையும் தெரிவித்து நின் றார்கள். உடனிருந்த அடியார்கள் சிவநெறி பரப்பப் பாண்டி நாட்டிற்கு எழுந்தருள வேண்டும் எனப் பிள்ளையாரை வேண்டிக்கொண்டார்கள். அது கேட்டு ஆளுடையபிள்ளை யார் திருநாவுக்கரசரைத் தனியே அழைத்துக் கொண்டு

திருமறைக் காட்டுத் திருக்கோயிலுட் சென்று இறைவரைப் பணிந்து மதுரைக்குச் செல்லவேண்டு மென்னும் பெருவிருப் பத்தை நாவரசர்க்குத் தெரிவித்தார். அதனையுணர்ந்த வாகீசர், பிள்ளையாரை நோக்கிப் 'பிள்ளாய், அந்த அமணர்கள் செய்யும் வஞ்சனைக்கு ஓர் எல்லையில்லை என்பதை யானே அனுபவித் திருக்கின்றேன். அன்றியும் ஞாயிறு முதலிய கோள்களும் இப் பொழுது நல்ல நிலைமையில் இல்லை. ஆகவே இப்பொழுது பாண்டி நாட்டிற்கு எழுந்தருள உடன்படுவது ஆகாது' என்று கூறித் தடுத்தருளினார். அதுகேட்ட பிள்ளையார் 'நாம் போற்றுவது நம் பெருமான் திருவடிகளாதலால் நம்பால் எத்தகைய தீங்கும் வாராது' என வற்புறுத்துமுகமாக,

வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள்கங்கை முடிமேலணிந்தென்
உளமே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி
சனிபாம் பிரண்டு முடனே
ஆசறு நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியா ரவர்க்கு மிகவே.

எனத்தொடங்கும் கோளறு திருப்பதிகத்தைப்பாடிக் கோளும் நாளும் தீயவேனும் இறைவனடியார்களுக்கு நன்காம் எனக் கூறியருளினார். இத்திருப்பதிகத்தைச் செவிமடுத்து மகிழ்ந்த திருநாவுக்கரசர், மதுரைப் பயணத்திற்கு உடன்பட்டுப் பிள்ளையார்க்கு முன்னே தாமும் புறப்படத் துணிந்தார். அதனையுணர்ந்த ஞானசம்பந்தர், 'அப்பர், நீர் இச்சோழ நாட்டிலே இறைவரைத் தொழுதிருப்பீராக' எனக் கைகூப்பி வணங்கித்தடுத்தனர். அப்பரடிகளும் பிள்ளையாரது விருப்பத் திற்கிணங்கித் தமது பயணத்தை நிறுத்திக் கொண்டார்.

'வேயுறு தோளி பங்கன்' என்ற இத்திருப்பதிகம், கோள்களாலும் நாள்களாலும் உலகியலில் நேருந்துன்பங்கள் சிவனடியார்களைச் சார்ந்து வருத்தாதபடி ஆளுடைய பிள்ளை யாரால் ஆணையிட்டு அருளிச் செய்யப்பெற்ற தென்பது,

தேனமர் பொழில்கொளாலை விளைசெந்நெல் துன்னி
வளர் செம்பொ னெங்குநிகழ
நான்முக னாதியாய பிரமாபுரத்து
மறைஞான ஞான முனிவன்
தானுறு கோளுநாளும் அடியாரைவந்து
நலியாத வண்ணம் உரைசெய்

ஆனசொன் மாலையோதும் அடியார்கள் வானில்
அரசாள்வர் ஆணை நமதே.

எனவரும் திருக்கடைக்காப்பினால் இனிது விளங்கும். இவ்வாறு சிவனடிகளைச்சிந்தித்து வழிபடும் அன்புடைத் தொண்டராகிய திருநாவுக்கரசடிகள் திருமுன்னே ஆளுடைய பிள்ளையார் கோளறு திருப்பதிகம் பாடி 'ஆணை நமதே' எனக்கூறிய ஒருமைப்பாட்டினை,

'முத்திப் பகவன் முதல்வன் திருவடியை
அத்திக்கும் பத்தரெதிர் ஆணை நம தென்னவலான்'

எனவரும் ஆளுடையபிள்ளையார் திருத்தொகையில் நம்பி யாண்டார்நம்பி ஆர்வமுறப் பாராட்டியுள்ளனர். இங்ஙனம் உறுதிப்பொருளைத் தம்மேல் ஆணையிட்டு அறிவிக்கும் உரவோர் திருஞானசம்பந்தப் பிள்ளையாராதலின் அவரை 'ஆணை நமதென்ற பெருமாள்' என்ற பெயரால் நம் தமிழ் முன்னோர் கல்வெட்டுக்களிற் குறிப்பிட்டுப் போற்றியுள் ளார்கள்.

திருநாவுக்கரசர்பால் விடைபெற்ற திருஞானசம்பந்தர், அடியார்கள் புடைசூழச் சிவிகையிலமர்ந்து அகத்தியான் பள்ளி, கோடிக்குழகர் முதலிய தலங்களை வணங்கிச் சோழ நாட்டிலிருந்து தென்மேற்றிசையை நோக்கிச் சென்று தென் பாண்டி நன்னாட்டையடைந்தருளித் திருக்கொடுங்குன்றத்து இறைவனை வணங்கி மதுரை நகரத்தின் மருங்கே வந்தடைந்தார். பிள்ளையார் வருகையை யறிந்து மகிழ்வுற்ற மங்கையர்க் கரசியார், பிள்ளையாரை எதிர்கொண்டழைக்கும்படி குலச் சிறையாரை முன்னர் அனுப்பினார். மந்திரியாராகிய அவரும் மதுரை நகர எல்லையின் புறத்தே சென்று ஆளுடையபிள்ளை யாரைக்கண்டு நிலமுறப் பணிந்து வீழ்ந்தார். பிள்ளையார் சிவிகையினின்றும் இறங்கி அவரைத் தமது கைகளாற் பற்றி யெடுத்து, 'செம்பியர் பெருமான் குலமகளாகிய மங்கையர் கரசியார்க்கும் திருந்திய தூயநெஞ்சமுடைய அமைச்சராகிய உமக்கும் நம் சிவபெருமானது திருவருள் பெருகும் நன்மை தான் வாலிதே' என வினவினார். அதனைக்கேட்ட குலச்சிறையார் பிள்ளையாரைப் பணிந்து நின்று 'அடியேங்கள் சென்ற காலத்திலே பெற்றுள்ள பழுதடையாத்திறமும், இனி எதிர் காலத்திலே பெறுஞ் சிறப்பும் தேவரீர் இத்தென்றமிழ் நாட்டிற்கு எழுந்தருளிய இந்நிகழ்கால நிகழ்ச்சியினாலே பெற்ற பேறாகும். இதனால் அடியேங்கள் எக்காலத்தும் திருவருளுடையோம் ஆயினோம். நன்மையில்லாத நெறியில் அழுந்திக் கிடக்கும் இந்நாடும் நல்ல தமிழ் வேந்தனாகிய எங்கள் பாண்டிய வேந்தனும்

வெற்றி பொருந்திய திருவெண்ணீற்றினாலே விளங்கும் மேன்மையையும் பெற்றோம். பாண்டிமாதேவியாகிய அரசியாரும் தாங்கள் இங்கெழுந்தருளியதறிந்து அடியேனை இங்குத் தங்கள் திருமுன் அனுப்பினார்கள்' எனக் கூறினார். பிள்ளையார் மதுரையை நெருங்கிய நிலையில் திருவாலவாய் எம்மருங்குள்ளது என வினவினார். அங்கு நின்ற அடியார்கள், கோபுரத்துடன்தோன்றும் அதுவே திருவாலவாய் எனக் கூறினார்கள். அதனைக்கண்ட பிள்ளையார் நிறைந்த பேரன்பினால் நிலமிசைப்பணிந்து 'அன்பராயினார் பரவும் ஆலவாயாவதும் இதுவே' என வியந்து 'மங்கையர்க்கரசி' என்ற முதற் குறிப்புடைய திருப்பதிகத்தைப்பாடி மங்கையர்க்கரசியார் குலச்சிறையார் ஆகிய இருவரது திருத்தொண்டினையும் திருவாலவாய்ப் பெருமான் ஏற்றருளிய திறத்தைச் சிறப்பித்தருளினார். பின்பு குலச்சிறையாருடன் திருவாலவாய்த் திருக்கோயிலை வலங்கொண்டு இறைவர் திருமுன்னின்று 'நீலமாமிடற், றாலவாயிலான், பாலதாயினார். ஞாலமாள்வரே' என்ற திருப்பதிகத்தைப் பாடிப்போற்றினார்.

ஆலவாயிறைவரைப் பணிதற்குத் திருக்கோயிலினுள்ளே புகும் மங்கையர்க்கரசியார், இறைவரைக் கும்பிட்டுக் கோயில் முன்றிலில் அணைந்த திருஞானசம்பந்தப் பிள்ளையாரைக் கண்டு அவருடைய திருவடித்தாமரைகளில் வீழ்ந்து பணிந்தார். பிள்ளையார் எழுதரிய மலர்க்கையால் அவரை எடுத்தார். "யானும் என் நாயகனும் செய்த தவம் என்கொலோ" என மங்கையர்க்கரசியார் மனமுருகிப் போற்றினார். 'புறச்சமயச் சூழலுள்ளே இருந்தும் சிவனடித்தொண்டினை மறவாது வாழும் பெருந்தகையீர், உம்மைக் காணும் பொருட்டே யாம் இங்கு வந்தோம்' எனக் கூறிப் பிள்ளையார் பாண்டிமாதேவியார்க்கு விடைகொடுத்து அனுப்பினார். செல்வமல்கிய திருவாலவாய்த் திருக்கோயிலில் தங்கித் தொண்டுபுரிந்துவரும் அடியார்கள் பிள்ளையாரை அணுகிப் 'புறச்சமய இருள்கெடத் தாங்கள் இங்கெழுந்தருளுதற்கு அடியேங்கள் அளவிறந்த தவ முடையோம்' எனக் கூறிப் போற்றினார்கள். அவர்களுக்கு அருளுரை கூறிய ஆளுடையபிள்ளையார், திருக்கோயிற்புறத்தணைந்து குலச்சிறையார் காட்டிய திருமடத்தில் அடியார்களுடன் அமர்ந்திருந்தார். பாண்டிமாதேவியார் ஆணையின்படி அமைச்சராகிய குலச்சிறையார் ஆளுடையபிள்ளையார்க்கும் அடியார்களுக்கும் நல்விருந்து அளித்தார்.

## சமணரை வாதில் வெல்லுதல்

பகற்பொழுது போய் இராப்பொழுது தொடங்கியது. ஞானசம்பந்தருடன்வந்த அடியார்கள் பாடும் திருப்பதிகத்தின்

இன்னிசை முழக்கம் மதுரை நகரமெங்கும் பரவுவதாயிற்று. அது கண்டு பொறாத சமணர்கள், கூட்டமாகச்சேர்ந்து பாண்டியனை யடைந்து 'மதுரையிற் சைவ வேதியர்கள் கூட்டமாக வந்திருத்தலைக் கண்டமையால் உண்ணா நிலையினர் ஆயினோம்' என அறிவிக்கும் முறையில் 'யாங்கள் கண்டுமுட்டு' என்றனர். இத் துன்பச் செய்தியைக் கேட்டமையால் யானும் உண்ணா நிலைமையினாயினேன் என்பான் 'யானும் கேட்டு முட்டு' என்றான் பாண்டியன். சினமுற்ற அவ்வேந்தன் 'சிவனடியார்கள் இங்கு வந்திருப்பதன் நோக்கம் யாது' என வினவினான். 'சோழ நாட்டிலே சீகாழிப்பதியிலே பிறந்த பார்ப்பனச் சிறுவனொருவன் சிவனிடத்திலே ஞானம் பெற்றவனென்று முத்துச் சிவிகையிலே ஏறியமர்ந்து எங்களை வாதில் வெல்லும் பொருட்டு அடியார்களோடு இங்கே வந்துள்ளான்' எனச் சமணர்கள் கூறினார்கள். 'இதற்கு நாம் யாது செய்வோம்' என்றான் பாண்டியன். 'சம்பந்தன் என்னும் அவ்வந்தணன் தங்கியிருக்கும் மடத்தில் மந்திரவிச்சையினாலே தீப்பற்றும்படி நாம் செய்வோமானால் அவன் இந்த நகரத்திலே இருத்தற்கு அஞ்சி ஓடிவிடுவான்' எனச் சமணர்கள் கூறினார்கள். 'ஆவது இதுவேயாகில் அதனைச் செய்யப் போமின்' என்று கூறி அரசன் அவர்களை அனுப்பினான். அரசனது ஆதரவுபெற்றுச் சென்ற சமணர்கள், தங்கள் மந்திரவன்மையினால் சம்பந்தர் மடத்தில் தீமூட்ட முனைந்தார்கள். மந்திரங்களெல்லாவற்றினும் மிக்கதாகிய திருவைந்தெழுத்தினையோதும் சிவனடியார்கள் தங்கிய திருமடத்தில் சமணருடைய மந்திரங்கள் யாவும் பயன்படாதொழிந்தன. வலியற்ற சமணர்கள் இரவில் மறைந்துசென்று சம்பந்தர் திருமடத்தில் தாமே தீமூட்டினர். மடத்தில் ஒருபகுதி தீப்பற்றியெரிந்தது. அதுகண்டு அஞ்சிய சிவனடியார்கள் விரைந்து தீயினையணைத்து ஞானசம்பந்தர் முன்சென்று முறையிட்டார்கள். அஃதுணர்ந்த பிள்ளையார், சிவனடியார்கள் துயிலும் மடத்தில் பாவிகள் இங்ஙனம் பழுதுசெய்தல் முறையாகுமோ? இத்தீங்கு என்பொருட்டு அவர்களாற் செய்யப்பட்டதாயினும் இறைவனடியார்களைப் பற்றவல்லதோ? இத்தீங்கு அரசன்முறை செய்யாமையால் நேர்ந்ததாகும் எனச் சிந்தித்து, சைவர் வாழ்மடத்து அமணர்கள் இட்ட தீத்தழல் போய்ப் பையவே சென்று பாண்டியனைச் சார்வதாகுக' என ஏவும் கருத்துடன்,

> செய்யனே திருவாலவாய் மேவிய
> ஐயனே யஞ்சலென்றருள் செய்யெனைப்
> பொய்யரா மமணர் கொளுவுஞ்சுடர்
> பையவே சென்று பாண்டியற்காகவே.

என்ற திருப்பதிகத்தைப் பாடியருளினார். பாண்டிமா தேவியாராகிய மங்கையர்க்கரசியாரது மங்கல நாணைப் பாதுகாத்தற் பொருட்டும் மந்திரியாராகிய குலச்சிறையார் மன்னவன்பால் வைத்த அன்பினைக் கருதியும் பாண்டியன்பால் அபராத முறுதலையெண்ணியும் அவன் மீண்டும் சிவநெறியிற் சேர்தற் குரிய நற்பேற்றினை நினைந்து பிள்ளையார் தீப்பிணியைப் பையவே செல்க எனப் பணித்தருளினார். 'நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழி' அவர்கள் கருதிய வண்ணம் நன்மையும் தீமையும் உடனே தரவல்ல தாகலின், மறை முனிவராகிய பிள்ளையார் 'பையவே சென்று பாண்டியற்காக' என இத்திருப்பதிகத்திற் பணித்தவாறு விரிந்த வெந்தழல் வெம்மைபோய்த் தென்னவனாகிய பாண்டியனை மெல்லப் பொருந்தி வெப்பு நோயாக மாறியது.

திருஞானசம்பந்தர் எழுந்தருளிய திருமடத்தில் சமணர்கள் வைத்த தீயானது நீதியல்லா நெறியில் அன்னோர் ஒழுகுதற்கு இடமளித்த பாண்டியனையே பற்றி வருத்தற்குரிய தென்னும் உலகியல் முறையினையொட்டி ஞானசம்பந்தப் பிள்ளையார் இறைவன் திருவருளையெண்ணி இத் திருப்பதிகத்தைப் பாடியருளினார் எனத் தெரிகிறது. இந்நுட்பம்,

அப்ப னாலவா யாதி யருளினால்
வெப்பந் தென்னவன் மேலுற மேதினிக்
கொப்ப ஞானசம் பந்த னுரைபத்தும்
செப்ப வல்லவர் தீதிலாச் செல்வரே

எனவரும் இப்பதிகத் திருக்கடைக் காப்பினால் இனிது விளங்கும். பாண்டிமாதேவியாராலும் குலச்சிறையாராலும் உபசரிக்கப் பெற்று மதுரையில் தங்கிய ஞானசம்பந்தப் பிள்ளையார், அன்றிரவு சமணர்கள் தம்மடத்திலிட்ட தீயினைப் பாண்டியனைப் பற்றி வருத்துக எனப்பணித்தருளிய இந்நிகழ்ச்சியினை,

"பத்திச் சிவமென்று பாண்டியமா தேவியோடும்
கொற்றக் கதிர்வேற் குலச்சிறையுங் கொண்டாடும்
அற்றைப் பொழுதத் தமணரிடு வெந்தீயைப்
பற்றிச் சுடுகபோய்ப் பாண்டியனை என்னவலான்"*
(* ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை)

எனவரும் தொடர்களில் நம்பியாண்டார்நம்பி தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

திருஞானசம்பந்தர் தங்கிய திருமடத்தில் இரவில் சமணர்கள் தீயிட்ட செய்தி பொழுது புலர்ந்ததும் வெளிப்படுவதாயிற்று. அதனைக் கேள்வியுற்ற மங்கையர்க்கரசியாரும் குலச் சிறையாரும் மனநடுக்குமுற்றனர். 'இக்கொடியோர் வாழும்

நாட்டிலே ஞானசம்பந்தப்பிள்ளையாரை வரவழைத்த நாம் இறப்பதே நன்று' எனத் துணிந்தனர். பின்பு திருமடத்திலே தீதின்மை யறிந்து ஒருவாறு ஆறுதல் பெற்றனர். இந் நிலையிலேயே பாண்டி மன்னனை வெப்புநோய் பற்றி வருத்தும் செய்தியைக் காவலாளர்கள் பாண்டி மாதேவியார்க்கும் அமைச்சர்க்கும் விரைந்து தெரிவித்தார்கள். அதுகேட்ட மங்கை யர்க்கரசியாரும் குலச்சிறையாரும் உளநடுக்கமுற்று மன்னனை யடைந்தார்கள். மருத்துவர்கள் தாம் கற்ற பல கலைகளால் மன்னனது நோயைத் தணிக்க முயன்றும் அந்நோய் தணிய வில்லை. தங்கள் சமயப் புரவலனாகிய பாண்டியன் சுரநோயால் வருந்துவதையறிந்த சமண முனிவர்கள், மன்னனையடைந்து அவனது நோய்க்குக் காரணம் தமது தீச்செயலேயென வுணராத வர்களாய், நோய் தணிக்கும் மந்திரங்களைச் சொல்லி மயிற் பீலியால் தடவினார்கள். தம் கையிலுள்ள குண்டிகை நீரைத் தெளித்தார்கள். அதனால் மன்னனது சுரநோய் முன்னையிலும் பன்மடங்கு அதிகரிப்பதாயிற்று. அதுகண்டு வருத்தமுற்ற பாண்டியன், அவர்களைப் பார்த்து 'நீங்கள் ஒருவரும் இங்கே தங்காது போய்விடுங்கள்' என வெகுண்டு கூறி உணர்விழந்து சோர்ந்தான்.

மன்னது சோர்வு கண்டு அச்சமுற்ற மங்கையர்க்கரசியார், அமைச்சரை நோக்கி 'நேற்றிரவு திருஞான சம்பந்தர்க்குச் சமணர்கள் செய்த தீமைதான் இப்படிமுடிந்ததோ' என வருந்திக் கூறினார். குலச்சிறையார் பாண்டியனைப் பணிந்து 'ஞான சம்பந்தர்க்கு அருகர்கள் செய்த தீங்கே இவ்வாறு வந்து மூண்டது. ஞானசம்பந்தப் பிள்ளையாரை அழைத்தால் இந் நோய்தீரும்' என மொழிந்தார். ஞானசம்பந்தர் என்னும் நாம மந்திரம் தன் செவியகத்துப் புக்க அளவிலே அயர்வு நீங்கி உணர்வுபெற்ற பாண்டியன், சமணர்கள் செய்யுந் தீச்செயல்களே தனது நோய்க்கு ஏதுவாயின என எண்ணினான். 'திருஞான சம்பந்தர் அருளால் இந்நோய் அகலுமேல் அறிவேன். யானுற்ற பிணியைத் தீர்த்து வென்றவர் பக்கமே சார்தற்குரியேன். அவ்வாறாயின் அவரை அழைப்பீராக' எனப் பணித்தான். அது கேட்ட மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் மன்னனுக்குத் திருவருட் பேறுண்டாதலையுணர்ந்து மனமகிழ்ச்சி யுடையராய், ஞானத்தின் திருவுருவாய் எழுந்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரை யடைந்து அவருடைய திருவடித் தாமரைகளைப் பணிந்து நின்று, "சமணர்கள் செய்த தீத்தொழில் கேட்டு மிகவும் அஞ்சி வருந்தினோம். அவர்கள் செய்த தீங்கு வெப்பு நோயாகி அரசனைப்பற்றி நின்று மிகவும் வருத்துகின்றது. அமணர்கள் தீர்க்கப்புக்க அளவில் அந்நோய் மேலும் பெருகி வருத்துவ

தாயிற்று. ஆதலால் தாங்கள் அரசன் முன்னர் அமணர்களை வென்றருளின் வேந்தனுயிரும் அடியேங்களது உயிரும் உய்யும்" என விண்ணப்பஞ் செய்தார்கள். அது கேட்ட பிள்ளையார் 'நீவிர் சிறிதும் அஞ்சவேண்டா, யாவரும் கண்டு மகிழும் வண்ணம் அமணர்களை இன்றே வாதில் வென்று தென்னவர் கோமானைத் திருநீறு அணிவிப்போம்' என மொழிந்தருளினார்.

'ஆவதும் அழிவதும் ஆகிய எல்லாம் இறைவன் செயல்' என்னும் உறுதியுடன் திருமடத்திலிருந்து புறப்பட்ட திருஞான சம்பந்தர், திருவாலவாய்த் திருக்கோயிலையடைந்தார். கண்ணாற் பார்க்கத் தகாதகொடியோரை நேரிற் கண்டு வாது செய்தல் ஆலவாய்ப் பெருமானாகிய நினது திருவுள்ளத்திற்கு இயைந்த செயலாகுமா? என இறைவனது திருக்குறிப்பை வினவி யறிந்து கொள்ளும் விருப்பத்துடன்,

**காட்டு மாவ துரித்துரி போர்த்துடல்**
**நாட்ட மூன்றுடையா யுரை செய்வனான்**
**வேட்டு வேள்வி செய்யாஅமண்கையரை**
**ஓட்டி வாது செயத்திரு வுள்ளமே.**

என்ற திருப்பதிகத்தைப் பாடி இறைவனது திருவுள்ளக் குறிப்பினை உணர்ந்துகொண்டார். பின்பு சமணர்களை வாதில் வென்று அழித்தற் பொருட்டும் சிவபெருமானது திருப்புகழே உலகமெல்லாம் பரவச் செய்தற்பொருட்டும் ஆலவாயிறை வனது உடன்பாடு பெற்று அப்பெருமான்பால் விடைபெறுங் கருத்துடன்,

**வேத வேள்வியை நிந்தனை செய்துழல்**
**ஆத மில்லி யமணொடு தேரரை**
**வாதில் வென்றழிக்கத் திருவுள்ளமே**
**பாதி மாதுடனாய பரமனே**

**ஞாலநின்புகழேமிக வேண்டும் தென்**
**ஆலவாயி லுறையுமெம் ஆதியே.**

என்ற திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார். 'வாடல்மேனி அமணரை வாட்டிடக் கூடலாலவாய்க்கோனை விடை கொண்டு' அடியார்கள் புடைசூழச் சிவிகையிலேறியமர்ந்து பாண்டியனது அரண்மனையை அடைந்தருளினார்.

பிள்ளையாரது வருகையை அமைச்சர் பாண்டியனுக்குத் தெரிவித்தார். அதனையறிந்த வேந்தன். தனது நோய்த் துன்பம் சிறிது தணியப்பெற்றவனாய்ப் பிள்ளையார் அமர்தற்கு எனத் தவிசொன்றையிடும்படி சொல்லி அவரை எதிர்கொண்டழைக்க ஏவினன். அவனது செய்கையைக் கண்டு பொறாமையுற்ற சமணர்கள், 'அரசே நமது சமயத்தை நிலை நிறுத்தும் முறை

இதுவோ? நினது தரும நெறியை நீயே காத்தல் வேண்டும். ஞான சம்பந்தரை நோய்தீர்க்க இங்கு அழைத்தனையாயின் அவரும் நாங்களும் சேர்ந்து தீர்க்கும்படி சொல்லி, அவராலே நினது நோய் தீர்க்கப்பட்டதாயினும் எங்களாலும் தீர்க்கப்பட்டதெனச் சொல்லுக' எனக் கேட்டுக்கொண்டார்கள். அவர்களது சூழ்ச்சியை யுணர்ந்த பாண்டியன், 'நீங்கள் இருதிறத்தீரும் உங்கள் தெய்வ சார்பினாலே தீருங்கள். யான் நடுவுநிலை திறம்பி வஞ்சகம் பேசமாட்டேன்' எனத் தெளிவாகக் கூறினான். அவ்வுரை கேட்டுச் சமணர்கள் கலக்க முற்றார்கள். அந்நிலையில் ஞானசம்பந்தப் பிள்ளையார்அங்கு எழுந்தருளினார். வேந்தன் தன் முடியின்பக்கத்தில் இடப்பெற்றிருந்த மணியாசனத்தைப் பிள்ளையாருக்குக் காட்ட அவரும் அதன்கண் அமர்ந் தருளினார். அதுகண்ட சமணர்கள் அச்சமுற்றனர். ஞான சம்பந்தரைக் காணப்பெற்ற நற்பேற்றினால் நோய் வருத்தம் சிறிது தணியப்பெற்ற மன்னன் பிள்ளையாரை நோக்கி 'நுமது ஊர் யாது' என வினவினான். அதற்கு அவர்,

> பிரமனூர் வேணுபுரம் புகலிவெங்குருப் பெருநீர்த்தோணி
> புரமன்னு பூந்தராய் பொன்னஞ் சிரபுரம் புறவம்சண்பை
> அரன்மன்னு தண்காழி கொச்சைவயம் உள்ளிட்டங் காதியாய
> பரமனூர் பன்னிரண்டாய் நின்றதிருக் கழுமலம் நாம் பரவுமூரே.

எனவரும் திருப்பதிகத்தைப் பாடிப் பிரமபுரம் முதலிய பன்னிரண்டு திருப்பெயர்களையுடைய திருக்கழுமலமே நாம் கருதுமூர் என மறுமொழி கூறியருளினார்.

அருகேயிருந்த சமணர்கள், தம் உள்ளத்திற் கொண்ட அச்சத்தை மறைத்துக்கொண்டு கோலும் நூலும் காட்டிப் பிள்ளையாரை வாதுக்கு அழைத்தனர். சம்பந்தர் அவர்களை நோக்கி 'உங்கள் சமய நூற்றுணிபினை உள்ளவாறு பேசுங்கள்' என்றார். அருகர் கூட்டமாக எழுந்து பிள்ளையாரைச் சூழ்ந்து கொண்டு பேசத்தொடங்கினார்கள். அதுகண்டு அச்சமுற்ற பாண்டிமாதேவியார் மன்னனை நோக்கி 'ஞானசம்பந்தரோ சிறுபாலர், சமணர்களோ பலர், நினது வெப்பு நோயை இவர் தீர்த்த பிறகு சமணர்கள் வல்லமையுடையராயின் வாது செய்யலாம்' எனக்கூறினார். பாண்டியன் மங்கையர்க்கரசியாரை நோக்கி 'நீ வருந்தற்க' என்று கூறிச் சமணர்களைப் பார்த்து 'நீங்கள் செய்தற்குரிய வாதம் வேறு என்ன இருக்கிறது? நீங்களும் சிவபத்தராகிய இவரும் என்னுடைய சுரநோயைத் தீர்த்து நீங்கள் தெளிந்துணர்ந்த தெய்வத்தன்மையை என்பால் தெரிவிப்பீராக' என்றான். பிள்ளையார், தம்பால் தாயினும் சாலப்பரிவுடைய மங்கையர்க்கரசியாரை நோக்கி, 'பாண்டிமாதேவியே, என்னைப் பால் மணம்மாறாத பாலன் எனக்கருதி நீ அஞ்சவேண்டாம். திரு

வாலவாயிறைவன் நிலைபெற்ற துணையாய் என்நெஞ்சத்துள் எழுந்தருளியிருக்கும்பொழுது இச்சமணர்களுக்கு யான் எளியேனலேன்' என்னுங்கருத்தமைய,

மானி னேர்விழிமாதராய் வழுதிக்கு மாபெருந்தேவி கேள்
பானல் வாயொரு பாலன் ஈங்கிவன் என்று நீ பரிவெய்திடேல்
ஆனைமாமலை யாதியாய இடங்களிற்பல அல்லல்சேர்
ஈனர்கட் கெளியேனலேன் திருவாலவாயரன் நிற்கவே.

என்ற திருப்பதிகத்தினைப்பாடி அவரது அச்சத்தைப் போக்கியருளினார்.

கூன்பாண்டியன், சம்பந்தரையும் சமணர்களையும் நோக்கி 'நீங்கள் என்னுடைய வெப்புநோயைத் தீருங்கள். தீர்த்தவர் எவரோ அவரே வாதில் வென்றவர்' என்றான். ஆண்மக்களுக்கு இடப்பாகத்திலுற்ற நோயைத் தீர்த்தல் எளிதெனவுணர்ந்த அமணர்கள், மன்னனை நோக்கி 'அரசே நினது இடப்பாகத்து வெப்பினை எங்கள் சமய மந்திரத்தினால் தீர்ப்போம்' என்று சொல்லி இடப்பாகத்திற் பீலிகொண்டு தடவினார்கள். அதனால் மன்னனுக்கு முன்னையிலும் சுரநோய் அதிகப்பட்டது. அஃதுகண்ட வேந்தன், பிள்ளையாரை நோக்க, அரசனது குறிப்புணர்ந்த சம்பந்தர், அவனது வலப் பாகத்தில் அடைந்து, 'திருவாலவாயண்ணல் திருநீறே மருந்தும் மந்திரமுமாகி எல்லாப் பிணிகளையும் போக்கவல்லது' என்னுங் கருத்தினால்,

மந்திரமாவது நீறு வானவர்மேலது நீறு
சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்திலுள்ள நீறு

செந்துவர் வாயுமை பங்கன் திருவாலவாயான் திருநீறே.

என்ற திருநீற்றுப் பதிகத்தை அருளிச்செய்து தென்னவன் மேனியில் திருவளர் நீறுகொண்டு தமது திருக்கரத்தாற் பூசினர். அந்நிலையில் வலப்பாகத்தின் வெம்மை நீங்கியது. இடப் பாகத்தில் முன்னையினும் வெப்பம் இருமடங்காக அதிகரித்தது. அது கண்ட அருகர்கள் நடுக்கமெய்தித் தூரத்தே சென்றனர். அரசன் அவர்களை நோக்கி 'நீங்கள் தோற்றீர்கள் என்னைவிட்டு அகலப் போமின்' எனக்கூறிப் பிள்ளையாரை நோக்கி 'இடப் பாகத்து வெம்மையையும் தாங்களே தீர்த்தருள வேண்டும்' என வேண்டிக்கொண்டான். சம்பந்தர் திருநீறு கொண்டு ஒருமுறை மன்னனது இடப்பாகத்திலே பூசியருளினார். அந்நிலையில் இருபக்கத்து வெம்மையுஞ் நீங்கிச் சுரநோய் அறவே தீர்ந்தொழிந்தது. அரசனும் உய்ந்தனன். பாண்டியமா தேவியாரும் அமைச்சரும் பிள்ளையார் திருவடிகளை வணங்கிப் போற்றினார்கள். வெப்பு நீங்கப் பெற்ற பாண்டியன் எழுந்து

சென்னிமேற் கைகுவித்து ஞானசம்பந்தர் திருவடிகளை வணங்கி 'யான் உய்ந்தேன்' என்றான்.

பாண்டியனது வெப்பு நோயை நீக்கும் ஆற்றலில்லாத சமணர்கள், ஞானசம்பந்தரைத் தருக்க வாதத்தால் வெல்லுதல் இயலாதெனத் தெரிந்து, தீயிலும் நீரிலும் வெல்வதாக எண்ணினார்கள். அவர்களை நோக்கிய திருஞானசம்பந்தர், 'இனி உங்கள் வாய்மையைப் பேசுமின்' என்றார். அது கேட்ட சமணர்கள் 'தருக்கம்பேசி வெல்லவேண்டுவதில்லை, காட்சி யளவையினாலேயே நிறுவுதல் இயலும். இருதிறத்தாரும் தாம் கண்ட பேருண்மையினை ஏட்டிலெழுதி அதனை நெருப்பி லிட்டால் வேவுறா ஏட்டினையுடைய சமயமே மெய்ச்சமயம்' என்றனர். திருஞானசம்பந்தர் அவர்களை நோக்கி 'நீர் உரைத்தது நன்று. அவ்வாறே செய்வோம்' என்றார். அவர் பணித்த வண்ணம் பாண்டியன் தன் பேரவை முன்னர்த் தீக்குண்டம் அமைத்து அதன்கண் தீமூட்டச் செய்தனன். திருஞானசம்பந்தர் சிவபெருமானே மெய்ப்பொருளெனத் தெளிந்து தாம் பாடியருளிய திருப்பதிகங்கள் எழுதப்பெற்ற அடங்கல் முறையினைக் கொணரச்செய்து, இறைவனே பொரு ளெனத் தொழுது அத்திருமுறையினை முடிமிசைக் கொண்டு போற்றித் திருக்காப்பு நாணாகிய கயிற்றை அவிழ்த்து அத்திரு முறையேட்டினை விரித்துப் பார்த்தருளினார். அவ்வளவில்,

போக மார்ந்த பூண் முலையாள் தன்னோடும் பொன்னகலம்
பாக மார்ந்த பைங்கண் வெள்ளேற் றண்ணல் பரமேட்டி
ஆக மார்த்த தோலுடையன் கோவண ஆடையின்மேல்
நாக மார்த்த நம்பெருமான் மேயது நள்ளாறே.

என்ற பாடலை முதலாகவுடைய திருநள்ளாற்றுத் திருப்பதிகம் வந்து நேர்பட்டது. அதுகண்ட பிள்ளையார் அத்திருப்பதிகத்தி னையே விரும்பித் திருநள்ளாற்றுப் பெருமானைத் தொழுது அப்பதிக ஏட்டினைக் கழற்றிக் கையிலே எடுத்துக்கொண்டார். 'என்னை ஆளுடைய இறைவனது திருநாமமே என்றும் நிலை பெற்ற மெய்ப்பொருளாகும் என உலக மாந்தர்க்கு அறிவு றுத்தும் நிலையில் இத்திருப்பதிக ஏடு தீயில் வேவாது நிலை பெறுக' என்று சொல்லித் 'தளிரிள வளரொளி' என்ற திருப்பதிகத்தினைப் பாடி இறைவனை வழிபட்டுப் 'போக மார்த்த பூண்முலையாள்' என்னுந் திருப்பதிக ஏட்டினை யாவரும் காணத் தீயினில் இட்டருளினார்.

இங்ஙனம் ஞானசம்பந்தப் பிள்ளையாரால் தீயிலிடப் பெற்ற ஏட்டில் எழுதப்பட்ட திருப்பதிகம், பரஞானம் அபர ஞான மென்னும் இருதனங்களையுடைய உமாதேவியாரை ஒரு பாகத்திற் கொண்டு விளங்கும் எண்பேருருவினனாகிய சிவ

பெருமானைப் பொருளாகக் கொண்டமையால், கொழுந்து விட்டெரியும் அத்தீயினுள்ளே எரிந்து சாம்பலாகாது பச்சையாய் விளங்கிற்று. அதுகண்ட சமணர்கள் தங்கள் நூற் பொருளெழுதப்பட்ட ஏட்டினை இஃது 'என்னாகுமோ' என்ற கவலையுடன் நெருப்பிலிட்டார்கள். அவர்களால் இடப்பட்ட அவ்வேடு தீயில் வெந்து சாம்பலாயிற்று. திருஞானசம்பந்தர், தாம் தீயில் இட்ட ஏட்டினைக் குறித்த நாழிகைவரை பார்த் திருந்து அதற்கு அழிவின்மைகண்டு, அதனை யாவருங்காண எடுத்தருளினார். அவ்வேடு முன்னையினும் பசுமையும் புதுமை யும் உடையதாய் விளங்கிற்று. பிள்ளையார் தாம் நெருப்பி லிட்ட திருப்பதிக ஏட்டினை அவையத்தார் முன்னே காட்டித் திருமுறையிலே முன்போலக் கோத்தருளினார். இங்ஙனம் தீயிலிட்டும் பச்சையாய் விளங்கியதனால் இது பச்சைப் பதிகம் எனப் போற்றப் பெறுவதாயிற்று.* (* கொச்சைச் சதுரன் தன் கோமானைத் தான் செய்த பச்சைப் பதிகத்துடன் பதினாறாயிரம்பா வித்துப்பொருளை விளைக்க வலபெருமான் - திருத்தொகை.)

இவ்வாறு ஆளுடைய பிள்ளையாரால் தென்னவன் பேரவை முன்னர்த் தீயிலிடப்பெற்று வேவாது பச்சையாய் விளங்கிய பதிகம் 'போக மார்த்த' என்ற முதற்குறிப்புடைய திருநள்ளாற்றுப் பதிகமே யென்பது,

"போகமார்ப்பைக்
காந்துங் கனலிற் குளிர்படுத்துக் கடற்கூடலின்வாய்
வேந்தின் துயர் தவிர்த்தானை"*

(* ஆளுடையபிள்யைார் திருவந்தாதி 71)

எனவரும் நம்பியாண்டார் நம்பி வாய்மொழியால் நன்கு தெளியப் படும். அன்றியும் ஞானசம்பந்தர் இத்திருப்பதிக ஏட்டினைத் தீயிலிடும் பொழுது பாடிய,

தளிரிள வளரொளி தனதெழில் தருதிகழ் மலைமகள்
குளிரிள வளரொளி வனமுலை யிணையவை குலவலின்
நளிரிள வளரொளி மருவுநள் ளாறர்தம் நாமமே
மிளிரிள வளரெரி யிடிலிவை பழுதிலை மெய்ம்மையே.

எனவரும் திருப்பதிகத்தில் தாம் தீயிலிடுவதற்குத் தேர்ந்து கொண்டது, 'போக மார்த்த பூண்முலையாள்' என்ற முதற் குறிப் புடைய திருநள்ளாற்றுப் பதிகமேயென்பதனைக் குறிப்பாக விளக்கியுள்ளார். "இளந்தளிரையொத்த ஒளிவளருந் தனது திருமேனியழகினை உலகப் பொருள்களுக்குத் தந்தருளி அவற் றுடன் பிரிவின்றி விளங்கும் மலைமகளுடைய குளிர்ச்சியும் இளமையும் ஒளியும் பொருந்திய அழகிய கொங்கையிணை யொடு பொருந்துதலால் திருவருளாகிய ஒளியுடன் திகழும் நள்ளாற்றீசராகிய உமையொருபாகரது சிறப்புணர்த்துங்

குறிப்புடைய இப்பதிக ஏட்டினைத் தீயினில் இடில் இப்பதிகப் பாடல்கள் பழுதுறுதலில்லையென்பது திண்ணம்" என்பது இதன் பொருள். இத்திருப்பதிகம் அரசன் முன்னிலையில் வளர்க்கப்பட்ட தீயில் ஏட்டினையிடும் பொழுது பாடப் பெற்றதென்பது,

> சிற்றிடை யரிவைதன் வனமுலை யிணையொடு செநிதரும்
> நற்றிற முறுகழு மலநகர் ஞானசம் பந்தன
> கொற்றவ னெதிரிடை யெரியினில் இட விவை கூறிய
> சொற்றெரி யொருபதும் அறிபவர் துயரிலர் தூயரே.

எனவரும் இதன் திருக்கடைக்காப்புப் பாடலால் நன்கு விளங்கும்.

திருஞானசம்பந்தர் தீயிலிட்டு எடுத்தருளிய ஏடு எரிந்து சிதையாது பச்சையாய் விளங்கியது கண்டு வியப்புற்ற பாண்டியன், சமணர்களை நோக்கி "நீவிர் இட்ட ஏட்டினை எடுத்துக் காட்டுமின்" என்றான். சமணர்கள் தாம் இட்ட ஏட்டினையெடுக்க எண்ணித் தீயருகே சென்றபொழுது தீ முன்னையினும் கொழுந்து விட்டெரிந்தமை கண்டு அஞ்சி விலகினர். அது கண்ட மன்னன் தண்ணிரைக் கொணர்ந்து தீயினை அவிக்கச் செய்தனன். பின்பு சமணர்கள் தீக்குண்டத்தை அணுகித் தாம் இட்ட ஏட்டினைத் தேடிப் பார்த்தனர்; சாம்பலுங்கரியுமன்றி மற்றொன்றையும் காணாது திகைத்து நின்றார்கள். அவர்களை நோக்கிய அரசன் 'இப்பொழுதும் நீவிர் தோற்றிலிரோ' என நகைத்துரைத்தான். அந்நிலையில் அவர்கள் வேந்தனை நோக்கி, 'மன்னவன், ஓர் வாதினை மும்முறை செய்து உண்மை காணுதலே முறையாகும். இருதிறத்தாரும் தத்தம் சமய வுண்மைகளெழுதிய ஏட்டினை ஆற்று வெள்ளத்தில் இட்டால் எவருடைய ஏடு வெள்ளத்தில் எதிரேறிச் செல்கின்றதோ அவ்வேட்டிற்குரியவரே வென்றவராவர்' எனக் கூறினார்கள். அப்பொழுது அமைச்சராகிய குலச்சிறையார் அவர்களை நோக்கி 'இனிமேற் செய்யக்கருதும் வாதில் தோற்றவர்கள் தம் தோல்விக்கு அடையாளமாகப் பெறும் இழப்பு இன்னது என்பதனை இப்பொழுதே உறுதி செய்து கொள்ளுதல் வேண்டும்' என்றார். அதுகேட்டுச் செற்றமடைந்த சமணர்கள் 'யாம் இவ்வாதில் தோல்வியுற்றோமானால் எங்களை இவ்வேந்தனே கழுவேற்றுங் கடமையுடையான்' என வெகுண்டு கூறினர். இச் சபதமொழியினைக் கேட்ட மன்னன், சமணர்களை நோக்கி, 'நீவிர் நும் செய்கையினை மறந்து செற்றத்தால் வாய் சோர்ந்து பேசிவிட்டீர்கள். இனி வைகையாற்றில் ஏட்டினை இடப்போதல் முறை' என்று கூறினான். அரசன் பணித்த வண்ணம் இருதிறத்தாரும் வைகையாற்றின் கரையினை யடைந்தார்கள்.

முன்னே தோல்வியுற்றவர்கள் பின்னும் தோல்வியடைய மாட்டார்கள் என நம்பிய சமணர்கள், அரசனது முன்னிலையில் தங்கள் சமய வுண்மையென 'அஸ்திநாஸ்தி' யென்ற வடமொழி வசனத்தை ஏட்டிலெழுதி, அதனை வைகை யாற்றில் இட்டனர். அவர்களால் இடப்பட்ட ஏடு, ஆற்று வெள்ளத்தில் எதிரேறிச் செல்லமாட்டாது அவ்வெள்ளத்தால் விரைந்து தள்ளப்பட்டுக் கடலை நோக்கிச் சென்றது. ஏட்டினை நோக்கிக் கரை வழியே ஓடிய சமணர்கள் அதனைத் தொடரமாட்டாது திரும்பிவந்து ஞானசம்பந்தரை நோக்கி 'நீவிரும் நுமது சமயவுண்மையை ஏட்டிலெழுதி ஆற்றிலிட்டால் உண்மை காண்போம்' என வுரைத்தனர். அந்நிலையில் பாண்டியன், ஞானசம்பந்தரை நோக்கினான். பிள்ளையாரும் சைவசமயவுண்மைகளைத் தொகுத்துத் திருப்பாசுரமாகப் பாடத் தொடங்கினார்.

வேதநூல்களிற் சொல்லப்படும் ஒழுகலாறு உலகியல் வாழ்வின்பாற் படுமென்பதும், அழிவிலின்பப் பெருவாழ்வாகிய வீடுபேறடைவிப்பதாய் என்றும் சிதைவின்றி நிலைபெற்ற மெய்ந் நெறி சிவநெறியே யென்பதும் ஆகிய சிறந்த வுண்மைகளை, தம்முடைய மதமே சிறந்தெனக் கூறிக் கலகஞ் செய்யுமியல் புடையராய் அங்குள்ள சமணர்கள் அறிய மாட்டார்களா யினும், திருநீறு பூசப்பெற்றுப் பழவினைப்பாசம் நீங்கி இருவினை யொப்புடையனாய் இறைவனையடைந்து இன்புறும் பக்குவ நிலையுற்ற பாண்டியன் அறிதல் வேண்டுமென்னும் பேரருளு டையராகிய திருஞானசம்பந்தர்,

> வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
> வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
> ஆழ்க தீயது எல்லாம் அரன் நாமமே
> சூழ்க வையகமுந் துயர் தீர்கவே,

என்று தொடங்கும் திருப்பாசுரத்தைப் பாடியருளி ஏட்டில் எழுதி அவ்வேட்டினைத் தமது திருக்கரத்தால் வைகையாற்றில் இட்டருளினார். பிறவியெனும் பேராற்றை அருந்தவருள்ளம் எதிர்த்து எதிர்செல்வது போன்று அவ்வேடு வைகைப் பெரு வெள்ளத்தைக் கிழித்து எதிர் ஏகியது. குலச்சிறையார் குதிரை மீது அமர்ந்து வைகையாற்றின் கரைவழியாக அதனைத் தொடர்ந்து சென்றார். இத்திருப்பாசுரத்தில் 'வேந்தனும் ஓங்குக' எனப் பிள்ளையார் பாடியதனால் முன்பு கூனனாயிருந்த பாண்டியன் கூன் நீங்கி, நின்றசீர்நெடுமாறன் ஆயினான்.

தம்மால் வைகையாற்றில் இடப்பட்ட ஏடு எதிரேறி விரைந்து செல்லக்கண்ட பிள்ளையார்,

வன்னியு மத்தமு மதிபொதி சடையினன்
பொன்னியல் திருவடி புதுமல ரவைகொடு
மன்னிய மறையவர் வழிபட அடியவர்
இன்னிசை பாடலார் ஏடகத் தொருவனே.

என்று தொடங்குந் திருப்பதிகத்தைப் பாடிப்போற்றினார். அப்பொழுது அவ்வேடு வைகையின் வடகரையிலமைந்த திருக்கோயிலின் பக்கத்தில் தேங்கிய நீர் நடுவே வந்து நின்றது. அதுகண்ட குலச்சிறையார், குதிரையை விட்டு இழிந்து ஆற்றில் இறங்கி ஏட்டினையெடுத்துத் தலைமேற்கொண்டு, அங்கு வைகைக் கரையிற் கோயில் கொண்டெழுந்தருளிய சிவபெரு மானை யிறைஞ்சி விரைந்து மீண்டார். ஞானசம்பந்தப் பிள்ளை யாரை வணங்கி மீண்டார். ஞானசம்பந்தப் பிள்ளையாரை வணங்கித் தாம் கொணர்ந்த ஏட்டினை நின்றசீர்நெடுமாறன் முதலிய யாவருங் காணக் காட்டினார். அதனைக்கண்டு அங்குள்ளார் அனைவரும் மகிழ்ந்து இறைவனது திருவருளை வியந்து போற்றினார்கள். வைகையாற்றில் எதிரேறிச் சென்ற ஏடு, திருவேடகத் திருக்கோயிலின் பாங்கே அணைந்து நின்ற செய்தி, அப்பொழுது பாடிய 'வன்னியுமத்தமும்' என்ற பதிகத்தின் திருக்கடைக் காப்பில் 'ஏடு சென்று அணைதரும் ஏடகத்தொருவனை' எனவரும் தொடராற் புலனாதல் காணலாம்.

'வாழ்க அந்தணர்' எனத் தொடங்கும் திருப்பாசுரம் தென்னவனாகிய பாண்டியனால் தெளிவிக்கப்பட்டுந் தெளி வடையாத சமணர்கள் தெளிய வேண்டி அவர்களோடு இயற்றும் புனல் வாதத்தில் வையையாற்றில் எதிரேறிச் செல்லும் படி ஏட்டில் எழுதியிடப்பட்டது என்பதனை முத்தமிழ் விரக ராகிய ஞானசம்பந்தப் பிள்ளையாரே,

அற்றன்றி யந்தண் மதுரைத்தொகை யாக்கினானும்
தெற்றென்று தெய்வந்தெளியார் கரைக்கோலை தெண்ணீர்ப்
பற்றின்றிப் பாங்கெதிர்வி னூரவும் பண்புநோக்கில்
பெற்றொன் றுயர்த்த பெருமான் பெருமானுமன்றே.

எனவரும் இத்திருப்பாசுரத்தின் பதினொராந் திருப்பாட்டில் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். இங்ஙனம் ஞானசம்பந்தரால் வைகையில் இடப்பட்ட ஏடு சிவபெருமானது திருவருளால் அந்நதியினில் எதிரேறிச் சென்ற செய்தி,

பருமதில் மதுரைமன் அவையெதிரே
பதிகம தெழுதிலை யவையெதிரே
வருநதி யிடைமிசை வருகரனே
வசையொடு மலர்கெட வருகரனே.

எனவரும் திருக்கழுமலத் திருவியமகப் பதிகத்தின் திருக்கடைக் காப்பில் தெளிவாகக் குறிக்கப்பட்டமையறிக,

'மங்கையிடத்தரனைக் கவிநீரெதிர் ஓட மதித்தருள்செய்
தங்குபுகழ்ச்சதுர் மாமறை நாவளர் சைவசிகாமணி'*
(* ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம் 15-ஆம் செய்யுள்)

எனவும்,

'வைகையாற் றேடிட்டு வானீ ரெதிரோட்டுஞ்
செய்கையால் மிக்க செயலுடையான்'*
(*ஆளுடைய பிள்யையார் திருத்தொகை)

எனவும் நம்பியாண்டார் நம்பி ஆளுடைய பிள்ளையாரைப் போற்றுந் தொடர்களில் வைகையாற்றில் ஏடு எதிரேறிச் சென்றசெய்தி தெளிவாகக் குறிக்கப்பட்டமை காணலாம்.

நின்றசீர்நெடுமாறனாகிய பாண்டியன், தன் அமைச்சரை நோக்கி 'வாதிற் சூளுரைத்துத் தோல்வியுற்ற சமணர்கள் முன்னமே ஞானசம்பந்தர்பால் தீங்கு விளைத்தோராதலின் அவர்கள் செய்துகொண்ட சபதத்தின்படி அவர்களைக் கழு வேறச் செய்தலே முறையாகும்' எனக்கூறினான். ஞானசம்பந்தப் பிள்ளையார் சமணர்கள் மேல் சிறிதும் பகைமையில்லாத வராயினும் அவர்கள் சிவனடியார்கள் இருந்த மடத்திலே தீ வைத்த காரணத்தால் அவர்களுக்கு விதிக்கப்பட்ட தண்டனையை விலாக்காதிருந்தார். அமைச்சர் குலச்சிறையார் கழுத்தறிகளை நாட்டியபின் தோல்வியுற்று நின்ற சமணர் அனைவரும் அத்தறிகளில் ஏறி உயிர் துறந்தனர். பின்னர்ப், பாண்டியனுக்கு ஆளுடைய பிள்ளையார் திருநீறளிப்ப அவன் பணிந்து பெற்றுத் தன்மேனி முழுதும் பூசி மகிழ்ந்தான். அதனைக் கண்ட மதுரை நகரத்தார் அனைவரும் பிள்ளையாரளித்த திருநீறு பெற்றுச் சிவநெறியினை மேற்கொண்டார்கள், புறச்சமய இருள் நீங்கித் திருநீற்றின் ஒளி யாண்டும் பரவியது. அங்கயற்கண்ணியொடும் அமர்ந்த ஆலவாய்ப்பெருமானது திருவருளை யெண்ணி யுளமுருகிய ஆளுடையபிள்ளையார், பாண்டியனும் பாண்டிமா தேவியாரும் அமைச்சரும் அடியார்களும் புடை சூழ்ந்துவர மதுரைத் திருக்கோயிலை வலம்வந்து இறைவன் திருமுன்னர் நின்று 'வீடலாலவாயிலாய்' என்னுந் திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார். சிவநெறியினை மேற்கொண்ட பாண்டியன், சொக்கலிங்கப் பெருமானை யிறைஞ்சி, 'சமணரது மாயையால் மதிமயங்கி மன்னுயிர்த் தலைவனாகிய நின்னை அறியாதிருந்த எளியேனை, ஆட்கொள்ளும் வண்ணம் இனிய அருளாளராகிய ஞானசம்பந்தப் பிள்ளையாரைத் தந்தருளினை' என நெஞ்ச நெக்

குருகிப் போற்றினான். ஆளுடைய பிள்ளையார் திருமடத்துக்கு எழுந்தருளிய பின் அரசனும் அரசியும் அமைச்சரும் பிள்ளையார்பால் விடைபெற்றுத் தத்தமக்குரிய மாளிகையை யடைந்தார்கள். பிள்ளையார் 'ஆலநீழலுகந்த திருக்கையே' என்ற முதற் குறிப்புடைய திருவியமகப் பதிகத்தைப் பாடி, முன்னொரு நாளில் சோமசுந்தரக் கடவுள் திருநீலகண்ட யாழ்ப்பாணர்க்கு பொற் பலகை யிட்டருளிய திறத்தை அதன்கண் குறித்துப் போற்றி, அங்ஙனம் அருள்பெற்ற சிறப்புடையவராகிய திருநீலகண்டப் பெரும்பாணரோடும் அளவளாவியிருந்தருளினார். இத்திருப் பதிகத்தில்,

**நக்க மேகுவர் நாடுமோ ரூருமே**
**நாதன் மேனியன் மாசுண மூருமே**
**தக்க பூமனைச் சுற்றக் கருளொடே**
**தாரம் உய்த்தது பாணர்க் கருளொடே**
**மிக்க தென்னவன் தேவிக் கணியையே**
**மெல்ல நல்கிய தொண்டர்க்கணியையே**
**அக்கினாரமு துண்கல னோடுமே**
**ஆலவாயரனாருமை யோடுமே.**

எனவரும் ஆறாந் திருப்பாடலில் உள்ள 'தக்க பூமனைச் சுற்றக் கருளொடே தாரம் உய்த்தது பாணர்க் கருளொடே' என்ற தொடர், திருநீலகண்டயாழ்ப்பாணரது யாழ் மழையில் நனைந்து கட்டழியாதபடி ஆலவாயிறைவர் பாணர்க்குப் பொற்பலகை யிட்டு அவரது யாழின் ஓசையினை மிகுவித்தருளிய அருட் செயலைக் குறித்தல் காண்க. தமது வேண்டுகோட்கிணங்கிப் பாண்டியனது வெப்பு நோயைத் தீர்த்துச் சால்பினால் மிக்க பாண்டிமாதேவியாரது மங்கலநாணைப் பாதுகாத்தருளிய ஆலவாய்ப் பெருமானது பெருங்கருணைத் திறத்தை இத் திருப்பாடலில் 'மிக்க தென்னவன் தேவிக்கு அணியையே மெல்ல நல்கிய தொண்டர்க்கு அணியையே' எனவரும் தொடரால் ஆளுடைய பிள்ளையார் உளமுருகிப் போற்றியுள்ளமை இவண் நினைக்கத் தகுவதாகும்.

சிவனடியார்கள் தங்கிய திருமடத்தில் நள்ளிரவில் தீயிடுதல் முதலிய தீச்செயல்களைச் செய்து வாதில் தோல்வியுற்ற சமணர்கள் அக்கால அரசியல் நிலைமைக்கேற்பக் கழுவேற்றப் படுதலாகிய அரச தண்டத்தை யடைந்து இறந்தனராகவும் அவர்களது தோல்வியையும் ஆளுடைய பிள்ளையாரது அருள் வெற்றியையும் குறிப்பிடக் கருதிய நம்பியாண்டார் நம்பி, அமணர்கள் கழுவேறி யுயிர்துறத்தற்குக் காரணம் ஆளுடைய பிள்ளையாரது திருவருள் வெற்றியே எனத் தெளிவிக்கும் வகையில்,

'வலிகெழு குண்டர்க்கு வைகைக் கரையன்று வான்கொடுத்த
கலிகெழு திண்டோட் கவுணியர் தீபன்'*
(*ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி 12-ஆம் பாடல்)

எனவும்,

'குழுவா யெதிர்ந்த வுறிக்கைப் பறிதலைக் குண்டர் தங்கள்
கழுவா வுடலங் கழுவின வாக்கிய கற்பகமே.'*
(*ஆளுடைய பிள்ளையார் 28-ஆம் பாடல்)

எனவும் வரும் தொடர்களால் அமணரைக் கழுவேற்றிய செயலை ஆளுடைய பிள்ளையார் மீது ஏற்றிக் கூறியுள்ளார்.

திருஞானசம்பந்தப் பிள்ளையார் சமணர்களைக் கழுவேற்ற வில்லை என்பதும், சமணர்கள் முன்பு ஞானசம்பந்தப் பிள்ளை யார் திருமடத்தில் நள்ளிரவில் தீவைத்துச் சிவனடியார்களைக் கொல்ல முயன்ற பெருங்குற்றத்திற்குரிய கொலைத் தண்டத்தை அவர்களே அநுபவிக்கும்படி செய்தல் அரச நீதியாதல் கருதியும் 'யாங்கள் தோற்பின் எங்களைக் கழுவேற்றுங் கடமையுடையான் இவ்வேந்தனே' எனச் சமணர்கள் தாமே கூறிய சூளுறவு பற்றியும் கழுவேற்றுதலாகிய தண்டனை அக்கால வழக்கத்தின்படி பாண்டி யனால் நிறைவேற்றப்பட்டதென்பதும் பெரிய புராணத்தைப் பயில்வார்க்கு இனிது விளங்கும். தம்பால் தோல்வியுற்ற சமணர்கள் கழுவேறி உயிர் விடாதபடி அவர்களை ஞானசம்பந்தப் பிள்ளையார் தடுத்தருளினாரென்றும் சாவாயினும் வாது செய்யும் இயல்புடைய சமணர்கள் தாங்களே கழுவிலேறி உயிர் துறந்தனரென்றும்பெரும்பற்றப் புலியூர் நம்பி கூறியுள்ளமை இவண் நினைக்கத் தகுவதாகும்.

ஆளுடைய பிள்ளையார் மதுரையில் தங்கியிருக்கும் நாளில், அவரைக்காண விரும்பிய அவருடைய தந்தையார் சிவபாதவிருதயர், சீகாழியினின்றும் புறப்பட்டு மதுரைக்கு வந்து சேர்ந்தார். அப்பொழுது ஞானசம்பந்தர் தம் தந்தையாரை நோக்கி 'அருந்தவத்தீர், குழந்தைப் பருவத்திலே பொற் கிண்ணத்திலே பாலடிசில் ஊட்டி என்னை ஆட்கொண்டருளிய தோணிபுரப் பெருந்தகை எம்பெருமாட்டியுடன் இனிதிருந்ததே' எனக் கழுமலப் பெருமானது நலம் உசாவுதலைப் பொருளாகக் கொண்ட 'மண்ணினல்ல வண்ணம்' என்ற திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார். திருவாலவாய் இறைவரைக் காலங்கள் தோறும் கும்பிட்டு மதுரையில் தங்கியிருந்த பிள்ளையார், பாண்டி நாட்டிலுள்ள ஏனைய தலங்களை வணங்குதற்குப் புறப்பட்டருளினார். அவரைப் பிரிந்துறைதலாற்றாத பாண்டிய னும் மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் அவருடன் தொடர்ந்து சென்றார்கள். ஞானசம்பந்தர் திருப்பரங்குன்றம்,

ஆப்பனூர், திருப்பத்தூர், கானப்பேர், சுழியல், குற்றாலம், நெல்வேலி முதலிய தலங்களை வணங்கித் தமிழ்மாலை பாடிப் போற்றி அடியார்களுடன் திருவிராமேச்சுரத்தை யடைந்தனர். மன்னவனாகிய இராமபிரான் இராவணனைக் கொன்ற பழி நீங்க இராமேச்சுரத்தில் சிவபெருமானைப் பூசனை புரிந்த தொன்மை வரலாற்றினை அமைத்துத் திருப்பதிகம் பாடி இறைவனை வழிபட்டு அடியார்களுடன் அத்தலத்தில் தங்கி யிருந்தார். பாண்டிமாதேவியாரும் குலச்சிறையாரும் அடியார்கள் திருவமுது செய்தற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார்கள். அங்கிருக்கும் பொழுது பிள்ளையார் ஈழமண்டலத்திலுள்ள திருக்கோணமலை, மாதோட்டக்கேதீச்சரம் ஆகிய சிவதலங்களை நினைந்து திருப்பதிகங்கள் பாடிப் பணிந்து போற்றினார்.

பின்பு இராமேச்சுரத்திலிருந்து புறப்பட்டு வடதிசை நோக்கித் திருவாடானை, திருப்புனவாயில் ஆகிய திருப்பதிகளைப் பணிந்து தென்னவனமைச்சர் குலச்சிறையார் பிறந்த பதியாகிய மணமேற்குடியில் எழுந்தருளியிருந்தார். அங்கமரும் நாளிற் பிள்ளையார் சோழநாட்டுத் தலங்களை வணங்கப் புறப்பட்டார். அதுகண்ட மங்கையர்க்கரசியாரும் அரசனும் அமைச்சரும் பிரியா நண்புடன் தொழுது அவருடன் போக ஒருப்பட்டனர். அஃதுணர்ந்த பிள்ளையார், அவர்களது பேரன்பிற்கு உளமுவந்தனராயினும் அவர்களது கடமையினை வற்புறுத்தும் முறையில் அவர்களை நோக்கி 'நீங்கள் பாண்டி நாட்டிலிருந்து சிவநெறியைப் போற்றுவீர்களாக' எனப் பணித்தருளினார். ஆளுடைய பிள்ளையாரது ஆணையை மறுத்தற்கு அஞ்சிய வேந்தன் முதலியோர் பிரிவாற்றாது பிள்ளையாரைத் தொழுது நின்றார்கள். பிள்ளையாரும் அவர்களுக்கு விடை கொடுத்துப் பாண்டிய நாட்டை யகன்று அடியார்களுடன் பொன்னிவளந்தரு நாட்டிற் புகுந்தருளித் திருக்களர், திருப்பாதாளீச்சரம் முதலிய தலங்களை யிறைஞ்சி முள்ளியாற்றின் கரையை யடைந்தார்.

## ஓடம் உய்த்தது

அப்பொழுது முள்ளியாற்றில் மிகப்பெரிய வெள்ளம் வந்தமையால் ஓடம் விடுவோர் ஓடங்களைக் கரையிலே பிணித்து விட்டுப் போய்விட்டார்கள். அங்கு நின்ற ஞானசம்பந்தப் பிள்ளையார், ஆற்றுக்கு அப்பால் தோன்றும் திருக்கொள்ளம்பூதூரிற் கோயில்கொண்டருளிய பெருமானைத் தொழவேண்டுமென்னும் பேரார்வத்தால் உந்தப்பெற்றுக் கரையிலே கட்டப்பட்டிருந்த ஓடத்தைக் கட்டவிழ்த்து அதன்கண் அடியார்களை யேற்றி,

கொட்டமே கமழும் கொள்ளம் பூதூர்
நட்ட மாடிய நம்பனை யுள்க
செல்லவுந்துக சிந்தையார் தொழ
நல்குமாறருள் நம்பனே.

எனவரும் திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றித் தமது நாவன்மையினையே கோலாகக் கொண்டு ஓடத்தைச் செலுத்துவாராயினர். எடுத்த திருப்பதிக்கம் முடிவதற்குள் ஓடம் அக்கரையினையடைந்தது. அடியார்களுடன் திருக்கொள்ளம் பூதூரையடைந்த பிள்ளையார் ஆற்றில் ஓடம் செலுத்தும் வண்ணந் தமக்கு அருள் புரிந்த பெருமானைப் பரவி மகிழ்ந்தனர். 'கொட்ட மேகமழும்' என்ற முதற் குறிப்புடைய திருக்கொள்ளம் பூதூர்த்திருப்பதிகம் ஆற்றில் ஓடத்தைச் செலுத்துதற் பொருட்டுப் பாடப்பெற்றதென்பது, அதன் கண்ட பாடல்தோறும் 'செல்லவுந்துக சிந்தையார் தொழ, நல்குமாறருள் நம்பனே' என ஈரடிமேல் வைப்பாக வரும் தொடரால் நன்கு புலனாம். ஞானசம்பந்தர் இத் திருப்பதிகத்தினைப் பாடிய அளவில் அவர் ஏறியமர்ந்த ஓடம் திருக்கொள்ளம் பூதூர்க்கரையினை அணைந்ததென்பது,

'ஓடம் வந்தணையுங் கொள்ளம் பூதூர்'

எனவரும் இப்பதிகத் திருக்கடைக்காப்பினால் இனிது விளங்கும். இவ்வற்புத நிகழ்ச்சியை,

'நதிப்புனலினெதிர் பஃறியுய்த்தன'*
(* ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம் 35-ஆம் பாடல்)

எனவும்,

'மருவினிய
கொள்ளம்பூ தூர்க்குழகன் நாவா யதுகொடுப்ப
உள்ளமே கோலாக வூன்றினான் '*
(*ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை)

எனவும் வரும் தொடர்களால் நம்பியாண்டார் நம்பி குறிப்பிட்டுப் போற்றியுள்ளார்.

பாண்டியன் அவையிற் சமணரொடு தாம் செய்த அனல் வாதத்திலே எரியில் இட்டும் வேவாத பதிகமுடைய இறைவராகிய நள்ளாற்றீசரை வணங்க விரும்பிய ஞானசம்பந்தர், திருக்கொள்ளம் பூதூரிலிருந்து புறப்பட்டு வழியிலுள்ள பல தலங்களையும் பணிந்து திருநள்ளாற்றினையடைந்தார். இறைவன் திருமுன்னர் நின்று 'எந்தாய், தென்னவன் முன்னிலையில் அமணரோடு செய்த அனல் வாதத்திலே தீயிலிட்ட ஏடு எரியாது பச்சையாகத் திகழும்படி என்னுள்ளத் துணையாய்த் திருவால வாயில் அமர்ந்திருந்தருளியவாறு எங்ஙனம்' என வியந்து

வினவுவார் 'பாடக மெல்லடி' என்னுந் திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றினார்.

## புத்தரை வாதில் வென்றது

பின்பு திருத்தெளிச்சேரியை வணங்கிப் புத்தர்கள் வாழும் போதிமங்கை அருகே வரும்பொழுது சிவனடியார்கள் 'பரசமய கோளரி வந்தான்' என்று சின்னம், காளம் முதலிய பல்லியங்களை இயம்பி ஆரவாரித்தார்கள். அந்த ஆரவாரத்தினைக் கேட்கப் பொறாத புத்தர்கள், தம்சமயக் கல்வியில் மேம்பட்ட புத்த நந்தியென்பவனை அடைந்து முறையிட்டார்கள். இச்செய்தியைக் கேட்டு உளங் கனன்ற புத்த நந்தி என்பான் தேரர் கூட்டத்துடன் அங்கு விரைந்து வந்தான். சிவனடியார்களை நோக்கி 'நீங்கள் எங்களை வாதில் வென்றபின் அல்லவா நுமது வெற்றிக்கு அடையாளமாகிய சின்னம் முதலியவற்றைப் பிடித்தல் வேண்டும்' எனக் கூறித் தடுத்து நிறுத்தினான். அதனைக் கேட்டு மனம் பொறாத அடியார்கள், அந்நிகழ்ச்சியை ஞானசம்பந்தரிடஞ் சென்று தெரிவித்தனர். அதுகேட்ட பிள்ளையார் 'புத்தர்கள் வாதிற் பொருமிடத்து அறிவோம்' என அமைதியாகக் கூறினார். அந்நிலையில் பிள்ளையார் அருளிய திருப்பதிகங்களாகிய திருமுறையினை ஏட்டில் எழுதும் பெருமையுடைய அடியார் ஒருவர், பிள்ளையாரது திருவாக்காகிய,

**புத்தர் சமண்கழுக்கையர் பொய்கொளாச்**
**சித்தத் தவர்கள் தெளிந்து தேறின**
**வித்தக நீறணிவார் வினைப்பகைக்**
**கத்திர மாவன அஞ்செழுத்துமே.**

என்ற திருப்பாட்டினை யோதி, 'இடியிடித்து விழுதலாற் புத்தன் தலை உருண்டு வீழ்க' என வெகுண்டுரைத்தனர். அன்பர் கூறிய மந்திரமாகிய அத்திரவாக்கினால் இடி விழவே புத்தநந்தியின் தலை உடலினின்றும் அறுபட்டு வீழ்ந்தது. அதனைக் கண்டு திடுக்கிட்டு அஞ்சிய புத்தர்கள் சிதறுண்டு ஓடினார்கள். அஃதுணர்ந்த ஞானசம்பந்தர், அடியார்களை நோக்கி 'அரன் நாமமே ஓதுமின்' எனப் பணித்தருளினார். அரகர முழக்கங் கேட்ட புத்தர்கள், மீண்டுங் கூட்டமாகக் கூடிச் சாரிபுத்தன் என்பவனை அழைத்து வந்து பிள்ளையாரை அணுகி மந்திர வாதமின்றித் தர்க்க வாதமே செய்யவேண்டும் எனக் கேட்டுக் கொண்டனர். பிள்ளையாரும் அதற்கிசைந்தருளினார். சத்திர மண்டபத்தில் சிவனடியார்களும் புத்தர்களும் ஒருங்கு குழுமியிருந்தார்கள். புத்தநந்தியின் சிரத்தின்மேல் இடி விழும்படி திருமுறை யோதிய அன்பரும் சாரிபுத்தனும் ஆகிய இருவரும் நிகழ்த்திய வாதத்தில் சாரிபுத்தன் தோல்வியுற்றான்.

அதுகண்டு அங்குள்ள புத்தரனைவரும் தங்கள் கொள்கை தவறென வுணர்ந்து திருஞானசம்பந்தருடைய திருவடிகளை வணங்கிச் சைவரானார்கள் இங்ஙனம் ஞானசம்பந்தர் தம் அடியார்களைக் கொண்டு புத்தரை வாதில் வென்றருளிய செய்தியை ஆசிரியர் சேக்கிழார் பெரிய புராணத்தில் விரித்துரைத்துள்ளார். ஆளுடைய பிள்ளையாரது அடியார் கூட்டத்தை எதிர்த்து நின்று தடுத்த புத்தநந்தி என்பான் ஞானசம்பந்தருடைய திருமுறைப் பாடலாகிய அத்திர வாக்கினால் தலை அறுபட்டு வீழ்ந்த செய்தியை,

'நேர்வந்த
புத்தன் தலையைப் புவிமேற் புரள்வித்த
வித்தகப் பாடல் விளம்பினான்.'

என வரும் ஆளுடைய பிள்ளையார் திருத்தொகையில் நம்பியாண்டார்நம்பி தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

## அப்பரைக்கண்டு மகிழ்தல்

போதிமங்கையிற் சிவநெறி பரப்பிய திருஞானசம்பந்தர் திருக்கடவூரிறைவனைப் பணிந்து அங்கமரும் நாளில் 'அப்பர் எங்குற்றார்' என அடியார்களை வினவினார். அப்பர் திருப்பூந் துருத்தியிலுள்ளார் என அடியார்கள் சொல்லக்கேட்டு அவரைக் காணும் பெருவிருப்புடன் பல தலங்களை வணங்கிக் காவிரித் தென்கரையை யடைந்து திருப்பூந்துருத்திக்குச் செல்வாராயினர். ஆளுடைய பிள்ளையார் வருகின்றார் என அறிந்த அப்பரடிகள், திருப்பூந்துருத்தி எல்லையிலேயே முன் சென்று திருத்தொண்டர் கூட்டத்துடன் தாமும் ஒருவராகக் கலந்து பிள்ளையாரது முத்துச்சிவிகையினைத் தாங்கி வந்தனர். அப்பொழுது ஞானசம்பந்தருள்ளத்திலே ஒருவகை யுணர்ச்சி யுண்டாக 'அப்பர் தாம் எங்குற்றார் இப்பொழுது' என அடியார்களை வினவினார். அவ்வுரை கேட்ட நாவுக்கரசர், நெஞ்சம் நெக்குருகி நின்று 'உம் அடியேன் உம் அடிகள் தாங்கி வரும் பெருவாழ்வு வந்தெய்தப்பெற்று இங்குற்றேன்' என்றார். ஞானசம்பந்தர் விரைந்து சிவிகையை விட்டிறங்கி 'இவ்வாறு செய்தருள்வ தென்னை' எனக்கூறி அப்பரடிகளை வணங்கினார். 'ஞானசம்பந்தர்க்கு எளியேனாற் செய்யத்தக்கது வேறு யாதுளது' எனக் கூறி அப்பரும் உடன் வணங்கினார். அங்கு நின்ற தொண் டர்கள் யாவரும் பெருமக்களிருவரது நண்பின் திறத்தைக் கண்டு உளமுருகி இறைஞ்சிப் போற்றினார்கள்.

நண்பிற்சிறந்த நாவரசருடன் திருப்பூந்துருத்திப் பெருமானைப் பணிந்தேத்திய ஞானசம்பந்தர், திருநாவுக்கரசரது திரு மடத்தில் அமர்ந்திருந்தார். அப்போது அப்பர், பிள்ளையாரை நோக்கி

போக்கும் வரவுமாகிய நிகழ்ச்சியையை வினவினார். பிள்ளையார் பாண்டி நாட்டில் நிகழ்ந்த செயல்களை அரசர்க்கு விரித்துரைத்தார். அவற்றைக் கேட்ட நாவுக்கரசர் பிள்ளை யாரை நோக்கித் 'திருநெறித் தொண்டெனும் வான்பயிர் தழைக்கச்சூழும் பெருவேலி யாயினீர்' எனத்தொழுது போற்றினார். அன்பின் பெருவெள்ளம் அனைய மங்கையர்க் கரசியாரது மாட்சியையும் தவம் பணிகுலச் சிறையாரது தொண்டின் சிறப்பையும் பிள்ளையார் எடுத்துரைத்தார். பாண்டிமாதேவியார் குலச்சிறையார் என்னும் இவர்களது திருத்தொண்டின் சிறப்பினைக் கேட்டு மகிழ்ந்த திருநாவுக்கரசர், அவ்விருவரது தொண்டினையேற்று மகிழும் திருவாலவாயிறை வனைப் பணியும் பெருவிருப்புடையரானார். அப்பரடிகள் தொண்டை நாட்டின் சிறப்பினைச் சொல்லக்கேட்ட ஞானசம்பந்தர், சான்றோர் வாழும் அந்நாட்டிலுள்ள திருத் தலங்களை வணங்க விரும்பினார். வாகீசர் பிள்ளையார்பால் விடை பெற்றுப் பாண்டி நாட்டிற்குப் புறப்பட்டுச் சென்றனர்.

பின்பு திருஞானசம்பந்தர் அடியார்களுடன் காவிரியின் வடகரையையடைந்து நெய்த்தானம், ஐயாறு, பழனம் முதலிய திருத்தலங்களைப் பணிந்து பாடி மறையவர் மகிழ்ந்து எதிர் கொள்ளக் காழிப்பதியையடைந்தார்; சிவிகையிலிருந்து இறங்கித் திருத்தோணிபுரக் கோயிலுட் புகுந்து மாதொரு பாகனார் மலரடி பணிந்தார்; 'உற்றுமை சேர்வது மெய்யினையே' என்னும் திருவியமகத்திருப்பதிகத்தைப் பாடினார். 'மதுரை மன்னவ னாகிய பாண்டியனது பேரவையின் முன்னர்த் திருப்பதிகம் எழுதப்பெற்ற ஏடானது நதியின்மீது எதிரேறிச் செல்லுதற்கு அருளிய இறைவனே' என இத்திருப்பதிகத்திருக்கடைக் காப்பில் பிரமபுரத்திறைவனைப் போற்றி மகிழ்ந்தார். பின்பு தம்மைப் பிரியாது உடன்வரும் பெருங்கேண்மையினராகிய திருநீலகண்ட யாழ்ப்பாணரை விறலியாருடன் அவரது மாளிகையிற் செல்லப் பணித்துத் தம்மைப் பெற்றெடுத்த தாயார் மகிழ்ந்தெதிர் கொள்ளத் தமது திருமாளிகையில் சென்றமர்ந்தார்.

## தொண்டை நாட்டுக்கு எழுந்தருளுதல்

திருவேகம்பப் பெருமானை வணங்க விரும்பிய ஞான சம்பந்தர், தம் தந்தையாரை நோக்கி 'அப்பர், நீர் அருமறை முறைப்படி வேள்வி செய்து இங்கு அமர்ந்திருப்பீராக' எனக் கூறி, அடியார் குழாத்தொடும் சீகாழிப்பதியிலிருந்து புறப்பட்டுத் தில்லைக் கூத்தப்பெருமானைப் பணிந்து. தினைநகர், மாணிகுழி, பாதிரிப் புலியூர், வடுகூர், வக்கரை, இரும்பை மாகாளம் முதலிய தலங்களை யிறைஞ்சித் திருவதிகை வீரட்டானத்தையடைந்தார்.

அப்பொழுது வீரட்டானத்திறைவர், பூதம் பாட நின்றாடும் தமது ஆடற் கோலத்தினைப் பிள்ளையார்க்குக் காட்டி யருளினார். அத்தெய்வக்காட்சியைக் கண்டு உளமுருகிய ஞானசம்பந்தர்,

குண்டைக் குறட்பூதங் குழும அனலேந்திக்
கெண்டைப் பிறழ்தெண்ணீர்க் கெடில வடபக்கம்
வண்டு மருள்பாட வளர்பொன் விரிகொன்றை
விண்ட தொடையலான் ஆடும் வீரட்டானத்தே.

என்ற திருப்பதிகத்தைப் பாடிப்போற்றினார். பின்னர் ஆமாத்தூர், கோவலூர் வீரட்டம், அறையணி நல்லூர் ஆகிய தலங்களை யிறைஞ்சி அண்ணாமலையிதுவென்று அன்பர்கள் காட்டக் கண்டார். திருவண்ணாமலை அழல்வண்ணனாகிய சிவபெரு மானது வடிவுபோன்று தோன்றிய தோற்றத்தைக் கண்ணாற் பருகிக் கைதொழுது மகிழ்ந்த ஞானசம்பந்தர், 'உண்ணாமுலை யுமையாளொடும் உடனாகிய ஒருவன்' என்னும் திருப்பதிகம் பாடினார். பின்னர் அண்ணாமலை மீது வீற்றிருந்தருளும் இறைவனுடைய திருவடித் தாமரைகளைத் தம் முடிக்கணிந்து பேரின்பமடைந்தார். 'பூவார் மலர் கொண்டு' என்னும் பதிகம் பாடிச் சில நாள் அங்கு அமர்ந்திருந்தார்.

## ஆண்பனை பெண்பனையாதல்

பின்பு வடதிசை நோக்கிச் சென்று தொண்டை நாட்டில் திருவோத்தூரையடைந்து இறைவனைப் போற்றியிருந்தார். அந் நாளில் சிவனடியார் ஒருவர் திருஞானசம்பந்தரை வணங்கி நின்று, 'எளியேன் இறைவனுக்கு அடித் தொண்டன், சிவனடி யார்களுக்கெனத் தண்ணீர் இறைத்து வளர்த்த பனைகளுள் ஒன்றேனும் காய்த்திலது. இதனையறிந்த சமணர்கள் இப்பனை களைச் சிவனருளால் காய்க்கும் படி செய்ய முடியுமா என வினவி, என்னை இகழ்ந்துரைக்கின்றார்கள் என முறையிட்டார். அது கேட்ட பிள்ளையார் திருக்கோயிலினுள்ளே போந்து,

பூத்தேர்ந் தாயன கொண்டு நின் பொன்னடி
ஏத்தாதாரில்லை யெண்ணுங்கால்
ஓத்தூர் மேய ஒளிமழுவாளங்கைக்
கூத்தீர் உம்ம குணங்களே.

என்ற பதிகத்தைப் பாடித் திருக்கடைக்காப்பில்,

"குரும்பை யாண்பனை யீன்குலை யோத்தூர்
அரும்பு கொன்றை யடிகளைப்
பெரும்புகலியுள் ஞானசம்பந்தன் சொல்
விரும்புவார் வினை வீடே."

என முடிக்குமளவில், அங்கிருந்த ஆண்பனைகளெல்லாம் பெண்பனைகளாக மாறிக் குரும்பையீன்று காய்த்தன. அதனைக் கண்ட அடியார்கள் அதிசயித்தார்கள். இத்திருவருள் நிகழ்ச்சியை நேரிற்கண்ட சமணர்கள் பலரும் தமது சமயத்தை வெறுத்துச் சிவநெறியை மேற்கொண்டு திருஞானசம்பந்தரை வணங்கினார்கள்,

> 'திருவோத்தூர் ஆண்பனையைப் பெண்பனையா கென்னும்
> பெருவார்த்தை தானுடைய பிள்ளை'*
>
> (* ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை)

என ஞானசம்பந்தரைப் பாராட்டு முகத்தால் இவ்வற்புத நிகழ்ச்சியை நம்பியாண்டார் நம்பி குறிப்பிட்டுள்ளமை காணலாம்.

## காஞ்சி காளத்தி முதலிய தலங்களைப் பணிதல்

திருவோத்தூரிறைவரைப் போற்றிய ஞானசம்பந்தர், திருமாகறல், குரங்கணின்முட்டம் ஆகிய பதிகளைப்பணிந்து காஞ்சிநகர மக்கள் முகமலர்ந்து எதிர்கொள்ளக் கச்சிமா நகரிற் புகுந்து திருவேகம்பத் திருக்கோயிலை வலம்வந்து மங்கை தழுவக் குழைந்த திருவேகம்பப் பெருமானை வணங்கி 'மறையானை' என்னும் பதிகம்பாடித் 'திருவேகம்பத்து உறைவானையல்லது என்னுள்ளம் உள்காது' எனநெஞ்சம் கசிந்து போற்றினார். அறப்பெருஞ்செல்வியாகிய உமையம்மையார் எழுந்தருளிய திருக்காமக் கோட்டத்தை இறைஞ்சி மகிழ்ந்தார். காஞ்சியில் அமர்ந்திருக்கும் பொழுது திருவியமகம், திருவிருக்குக்குறள் முதலிய இன்னிசைப் பதிகங்களால் இறைவனைப் போற்றி இன்புற்றார். கச்சி நெறிக்காரைக்காடு, அனேக தங்காவதம், கச்சிமேற்றளி, திருமாற்பேறு, திருவல்லம், இலம்பையங்கோட்டூர், விற்கோலம், தக்கோலம் (திருவூறல்) முதலிய தலங்களை வணங்கிப் பாடிப் பழையனூர்த் திருவாலங் காட்டின் எல்லையிலே வந்தணைந்தார்.

'இம்மையிலே இவ்வுலகத்தவர் யாவருங் காண எம்மையாளும் காரைக்காலம்மையார் தம் தலையாலே நடந்து போற்றும் அம்மையப்பர் எழுந்தருளிய திருவாலங்காடு இதுவாகும்' எனக்கருதிய ஞானசம்பந்தர் அம் மூதூரினை மிதிக்க அஞ்சி அப்பதியின் மருங்குள்ளதோர் ஊரிலே அன்றிரவு துயில் கொள்வாராயினர். அந்நிலையில் திருவாலங்காட்டு இறைவர் ஆளுடைய பிள்ளையாரது கனவில் தோன்றி 'நம்மைப் பாடுதற்கு மறந்தனையோ' என வினவினார். இடையாமத்தில் துயிலுணர்ந் தெழுந்த பிள்ளையார், இறைவனது திருவருளேயிது வென வுணர்ந்து,

துஞ்ச வருவாருந் தொழுவிப்பாரும் வழுவிப்போய்
நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப்பாரும் முனைநட்பாய்
வஞ்சப் படுத்தொருத்தி வாணாள் கொள்ளும் வகைகேட்டு
அஞ்சும் பழையனூர் ஆலங்காட்டெம்மடிகளே.

என்ற திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார். இப்பதிகம் ஆலங்காட்டிறைவன் நள்ளிரவில் தோன்றியருளியபோது பாடப்பெற்றதென்பது,

"ஆந்தண் பழையனூர் ஆலங்காட்டெம் அடிகளை
வேந்தன் அருளாலே விரித்தபாடல் இவைவல்லார்"

எனவரும் இதன் திருக்கடைக்காப்பினால் இனிது புலனாம்.

பொழுது புலர்ந்தபின் ஞானசம்பந்தர் திருவாலங்காட்டு இறைவனை வணங்கித் திருப்பாசூர், வெண்பாக்கம் ஆகிய தலங்களையிறைஞ்சினார். அன்புருவாகிய கண்ணப்பர் வழி பட்ட காளத்தியிறைவனைக் காணவிரும்பித் திருக்காரிகரை பணிந்து செல்லும் போது அடியார்களை நோக்கி 'எதிரே தோன்றுவதாகிய இம் மலையாது' என வினவ, அவர்கள் அது திருக்காளத்தி மலை என்றனர். அது கேட்ட பிள்ளையார் 'வானவர்கள் தானவர்கள்' என்ற திருப்பதிகத்தைப் பாடி அதன் கண்,

வாய் கலச மாக வழிபாடுசெயும் வேடன் மலராகு நயனம்
காய்கணையி னாலிடந் தீச னடி கூடுகாளத்தி மலையே.

எனக் கண்ணப்பநாயனாரது அன்பின் திறத்தைச் சிறப்பித்துப் போற்றினார். பொன்முகலியாற்றின் கரையை யடைந்து காளத்தி மலை மீதேறிச் சிவபெருமானைப் பணிந்து வீழ்ந்தெழும் பிள்ளையார் தாம் கும்பிட்ட பயன் காண்பார்போல் வில்வேடர் பெருமானாகிய கண்ணப்பநாயனாரைக் கண்டு தாழ்ந்தார். உள்ளத்தில் தெளிகின்ற அன்பின் மெய்ம்மையுருவினையும் அத்தகைய அன்பினுள்ளே நிலைபெற்றுத் தோன்றும் சிவபரம் பொருளையும் ஒருங்கே கண்ட விருப்பம் பொங்கப் புகலிப் பிள்ளையார் பலமுறையும் வீழ்ந்து வணங்கினார். பின்பு காளத்தி மலையினின்றும் இறங்கி அங்குள்ள திருமடமொன்றில் அமர்ந்து பெருமானைக் காலங்கள்தோறும் வழிபட்டிருந்தார். அங்கி ருக்கும் நாட்களில் வடதிசையிலுள்ள திருக்கயிலாயம், கேதாரம், கோகரணம், திருப்பருப்பதம் முதலிய தலங்களை நினைந்து செந்தமிழ்ப் பதிகங்கள் பாடிப் பாவினார். பின்பு 'சந்தமாரகி லொடும்' என்ற பதிகம்பாடி 'எந்தையார் இணையடி என்மனத் துள்ளவே' எனக் காளத்தி இறைவனைப் பணிந்து போற்றினார். அங்கிருந்தும் புறப்பட்டுப் பாலாற்றின் வட கரையையடைந்து திருவேற்காடு என்னும் திருத்தலத்தை யிறைஞ்சினார். பின்பு

அன்பர்கள் எதிர்கொள்ளத் திருவொற்றியூரையடைந்து உம்பர் பிரானைத் தமிழ் மாலைகளாற் போற்றிப் பரவி அப்பதியில் அமர்ந்திருந்தார்.

## எலும்பைப் பெண்ணாக்குதல்

மயிலாப்பூரில் வணிகர் குலத்துள் தோன்றி வாணிகத் தொழிலில் மேம்பட்டு எல்லையில் செல்வ மெய்தினார் ஒருவர். உயிராகிய தம்மையும் உடையானாகிய இறைவனையும் உள்ள வாறறிந்து செம்மையே புரிமனத்தினராய்ச் சிவநேசர் எனும் பெயர் பெற்று விளங்கினார். சிவனடித் தொண்டில் ஈடுபட்டு உருகிய மனமுடைய அவ்வணிகர், உண்மையற்ற புறச் சமயங் களைத் தமிழ்நாட்டைவிட்டு அகற்றவேண்டுமென்னும் உறுதி யுடையவராய் வாழ்ந்தார். சீகாழிப் பதியில் மூவாண்டில் அருள் ஞானம் பெற்ற ஞானசம்பந்தப்பிள்ளையாரது பெருமையினை அடியார்கள் சொல்லக்கேட்டு ஆளுடைய பிள்ளையார் திரு வடிக்கீழ் எல்லையில்லாத பேரன்புடையராயினார். அந்நாளில் சிவ நேசர்க்குப் பெண் மகவு பிறந்தது. அழகிற் சிறந்த அக்குழந் தைக்குப் பூம்பாவையெனப் பெயரிட்டார். பூம்பாவை என்னும் பெயர்பெற்ற அந்நங்கை வளர்ந்து மணப்பருவ மெய்தினாள். திருஞானசம்பந்தர் மதுரைக்குச் சென்று கூன்பாண்டியனது வெப்புநோயையும் கூனையும் தவிர்த்துச் சமணர்களை வாதில் வென்று தென்னாடெங்கும் சிவநெறி பரப்பிய செய்தியை அடியார்கள் சிவநேசர்க்குத் தெரிவித்தார்கள். அதனைக் கேட்டு அளவிலா மகிழ்ச்சியுற்ற சிவநேசர், 'காழிநாடுடையவர்க்கு அடியேன், யான் பெற்றெடுத்த பூம்பாவையையும் ஈட்டிய பெருநிதியையும் என்னையும் அவர்க்கே உடைமையாகக் கொடுத்தனன்' என மொழிந்தார்.

இங்ஙனம் சம்பந்தர்க்கு உரியளெனச் சொல்லப் பெற்ற பூம்பாவை ஒருநாள் கன்னி மாடத்தருகேயுள்ள பூஞ்சோலையில் நறுமலர் கொய்யச்சென்றாள். அப்பொழுது ஒரு பாம்பு மல்லிகைப் பந்தரிலே மறைந்து வந்து அவள் விரலிலே தீண்டியது. அதனையறிந்த தந்தையார், விடந்தீர்க்கும் வன்மையுடைய மருத்துவரையும் மந்திரம் வல்லாரையும் அழைத்து வந்து, மருந்தளித்தும் மந்திரித்தும் வேண்டுவன செய்து பார்த்தார். எனினும் விடம் நீங்காது தலைக்கேறினமையால் அவள் ஆவிசோர்ந்து இறந்தாள். சிவநேசர் அதுகண்ட கலக்கமுற்றா ராயினும் 'திருஞானசம்பந்தர்க்கு இவள் உரியள் என்று கூறின மையால் இனித் துன்பமுற வேண்டியதில்லை' யெனத்தெளிந்து ஒருவாறு துன்பம் நீங்கி 'ஞானசம்பந்தர் இங்கு வரும் வரையிலும் இவளுடம்பைத் தகனஞ்செய்த சாம்பலையும் எலும்பினையும்

ஒரு குடத்திலிட்டுச் சேமித்து வைப்பேன்' எனத் துணிந்தார். அவ்வாறே தன்மகளது உடம்பைத் தீயிலிட்டு வெந்த சாம்பலையும் எலும்பையும் ஒரு குடத்திலே யிட்டுக் கன்னிமாடத்தில் வைத்துப் பூசனை செய்துவந்தார். இந்நிலையில் 'திருஞான சம்பந்தர் திருவொற்றியூரில் அடியார்களுடன் எழுந்தருளி யுள்ளார்' என அவ்வூர் மக்கள் சிவநேசர்க்குத் தெரிவித்தார்கள். அச்செய்தி கேட்டு மகிழ்ச்சியுற்ற சிவநேசர், மயிலாப்பூராகிய தம் பதியை அணிசெய்து ஞானசம்பந்தரை எதிர் கொண்டழைக்கச் சென்றார். சம்பந்தரும் மயிலாப்பூர்ப் பெருமானை வணங்கும் விருப்புடையராய்த் திருவொற்றி ஊரிலிருந்து புறப்பட்டு எதிரே வந்தருளினார். சிவநேசராகிய அவ்வணிகர் காழிப்பிள்ளையார் அமர்ந்தருளும் முத்துச்சிவிகையின் முன்னே வீழ்ந்து வணங்கினார். ஞானசம்பந்தர் சிவிகையிலிருந்து இறங்கித் தம்மை வணங்கி நிற்கும் சிவநேசருடைய செயல்களை அடியார்கள் சொல்லக் கேட்டு அவருடன் திருமயிலாப்பூரை அடைந்தார்.

ஆளுடைய பிள்ளையார், மயிலையிலுள்ள திருக்கபாலீச் சரத்திறைவனை வணங்கிப் புறத்தே போந்து சிவநேசரை நோக்கி, 'ஒருமைவைத்த நல்லுணர்வுடையீர், உம்மாற் பெறப்பட்ட மகளது என்பு நிறைந்த குடத்தினை உலகவர் அறிய இத்திருக் கோயிலின் புறவாயிலிற் கொணர்வீராக' எனப் பணித் தருளினார். சிவநேசரும் வெந்த சாம்பலோடு என்பு நிறைந்த குடத்தினைச் சிவிகையில் வைத்துக் கொணர்ந்து கபாலீச்சரத்து இறைவன் திருமுன்னர் வைத்து வணங்கினார். உலகமாந்தருக்கு உறுதிப் பொருளை உணர்த்தத் திருவுளக்கொண்ட ஆளுடைய பிள்ளையார், மயிலை நகரத்தாரும் புறச் சமயத்தாரும் காணக் கோயில் வாயிலையடைந்து, அங்கு வைக்கப்பட்டுள்ள என்பு நிறைந்த குடத்தைப்பார்த்து இறைவனது திருவருளை நினைந்து, 'மக்கள் அடைதற்குரிய பயன் சிவனடியார்களை அமுது செய்வித்தலும் இறைவனது திருவிழாப் பொலிவுகண்டு மகிழ்தலுமே யென்பது உண்மையானால், பூம்பாவாய் நீ உலகர் முன் உயிர்பெற்றுவருக' எனப் பூம்பாவையை நோக்கி அழைக்கு முகமாக,

மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச்சரமமர்ந்தான்
ஓட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்.

என்ற திருப்பாடலை முதலாகக்கொண்ட திருப்பதிகத்தினைப் பாடியருளினார். ஞானசம்பந்தர் வாக்காகிய இவ்வமுதம் குடத் திலுள்ள அங்கத்திலே பொருந்த அவ்வெலும்பனைத்தும் ஒருருவாய் வடிவு நிரம்பியது. இவ்வாறு முதற்பாடலிலேயே

வடிவு பெற்ற பூம்பாவை, இப்பதிகத்தில் இரண்டுமுதல் ஒன்பது வரையுள்ள எட்டுப் பாடல்களைப்பாடிய அளவில் பன்னிரண்டு வயது உடையளாயினாள். சிந்தையில் தெளிவில்லாத சமணரும் புத்தரும் இச்செய்கை இயல்வதன்று என்று கூறுவார்கள் என்னும் கருத்தமைய,

> உரிஞ்சாய வாழ்க்கை அமண் உடையைப்போர்க்கும்
> இருஞ்சாக்கியர்கள் எடுத்துரைப்ப நாட்டில்
> கருகுசோலை சூழ்ந்த கபாலீச் சரமமர்ந்தான்
> பெருஞ்சாந்தி காணாதே போதியோ பூம்பாவாய்.

என்ற பத்தாந் திருப்பாடலைப் பாடிய அளவில், செந்தாமரை மலர் விரிய அதனுள்ளேயிருந்து எழும் திருமகளைப்போன்று பூம்பாவை குவித்த செங்கையுடன் குடம் உடைய எழுந்து வெளிப் பட்டுத் தோன்றினாள். பிள்ளையார் திருக்கடைக் காப்புச்சாத்தி இறைவனைப் பரவினார். பூம்பாவையைக் கண்ட சிவநேசர், பிள்ளையாருடைய திருவடிகளிலே விழுந்து வணங்கினார். பூம்பாவையும் சிவபெருமானை யிறைஞ்சி ஞானசம்பந்தரை வணங்கி நின்றாள்.

சிவநேசர் திருஞானசம்பந்தரை வணங்கி அடியேன்பெற்ற பூம்பாவையைத் தேவரீர் திருமணஞ் செய்தருளல் வேண்டும்' என வேண்டிக்கொண்டார். அதுகேட்ட பிள்ளையார். அவரை நோக்கி 'நீவிர்பெற்ற பெண் விடத்தினால் இறந்தபின்பு இறைவன் திருவருளால் பூம்பாவையாக யாம் மீண்டும் பிறப்பித்தோம். ஆதலால் இவள் எமக்கு மகளாவாள். எனவே யாம் இவளை மணத்தல் தகாது என மறுத்தார்; சிவநேசர்க்கும் அவருடைய சுற்றத்தார்க்கும் மறை முறையினை எடுத்துரைத்து மயக்கம் நீக்கினார். பிள்ளையார் கூறும் உரை தக்கதென வுணர்க்க சிவ நேசர், பூம்பாவையைப் பிறரெவர்க்கும் மணஞ் செய்துகொடுக்க இசைவின்றிக் கன்னிமாடத்தே இருக்கச் செய்தனர். இறைவன் திருவருளின் வண்ணமாகிய பூம்பாவையும் சிவனருளைச் சிந்தித் திருந்து சிவத்தைச் சேர்ந்தாள் என்பது வரலாறு.

'மட்டிட்ட புன்னையங்கானல்' எனத் தொடங்கும், இத் திருப்பதிகத்தில் சிவபெருமானுக்குத் திங்கள் தோறும் நிகழுஞ் சிறப்புடைய திருவிழாக்களை யெடுத்துக்கூறி, 'இத்தகைய நல்விழாப் பொலிவு கண்டு மகிழாது பூம்பாவாய் இவ் வுலகினைத் துறந்து போன்றனையோ' என வினவும் முறையில் 'போதியோ பூம்பாவாய்' எனப் பாடல்தோறும் ஞானசம்பந்தர் குறிப்பிட்டழைத்தலானும், இதன் திருக்கடைக்காப்பில் 'தேன மர் பூம்பாவைப் பாட்டாகச் செந்தமிழான், ஞானசம்பந்தன் நலம் புகழ்ந்த பத்தும்' என இப்பாடல்கள் பூம்பாவையின் நலம்

புகழ்ந்தனவாகக் கூறப்படுதலானும் இத்திருப்பதிகம் எலும்பைப் பெண்ணாக உருக்கொண்டெழும்படி ஞானசம்பந்தரால் அருளிச் செய்யப்பெற்றதென்பது உய்த்துணரப்படும். இவ்வாறு விடத்தால் இறந்த பூம்பாவையின் அங்கத்தை மீண்டும் உயிர் பெற்றுவருக என அழைத்து இவ்வுலகில் வாழச்செய்த ஆளுடையபிள்ளையாரது அருட்செயலை,

'வெய்ய விடம்
மேவி யிறந்த அயில் வேற்கண் மடமகளை
வாவென் றழைப்பித்திம் மண்ணுலகில் வாழ்வித்த
சீர்நின்ற செம்மைச் செயலுடையான்'

எனவரும் தொடரால் நம்பியாண்டார் நம்பி குறிப்பிட்டுள்ளமை இவண் நினைக்கத் தகுவதாகும்.

## புண்ணியப் பதினாறாண்டு

எண்ணில்லாத பல்லாண்டுகள் படைப்புத்தொழிலை மேற் கொண்ட பிரமனாகிய முதியோன், தன்னாற் படைக்கப்பட்ட திலோத்தமை யென்னும் நங்கையின் பேரழகினைத் தனக்குரிய நான்கு முகங்களாலுங் கண்டு நுகர்ந்தான். திருவருள் நெறியிற் செல்லும் நற்பேறுடைய பதினாறாண்டு இளைஞராகிய ஞானசம்பந்தர், அத்திலோத்தமையினும் நலஞ்சிறந்த பூம்பாவை யினிடத்தே, அவளது மேனி வனப்பினை நோக்காது சிவபெரு மானது திருவருட் பெருவெள்ளத்தை ஆயிரமுகத்தாற் காணுதற் குரியதாகக் கண்டு மகிழ்ந்தார். இந் நுட்பத்தினை,

எண்ணிலாண் டெய்தும் வேதாப் படைத்தவ ளெழிலின் வண்ணம்
நண்ணுநான் முகத்தாற்கண்டான் அவளினும் நல்லாள் தன்பாற்
புண்ணியப் பதினாறாண்டு பேர்பெறும் புகலிவேந்தர்
கண்ணுதல் கருணைவெள்ளம் ஆயிர முகத்தாற் கண்டார்.

என்ற செய்யுளிற் சேக்கிழாரடிகள் தெளிவாக விளக்கியுள்ளார். இவ்வற்புதம் நிகழ்ந்தபொழுது ஞானசம்பந்தப் பிள்ளையார்க்குப் பதினாறு வயது நடைபெற்றதென்பது இப்பாடலால் இனிது புலனாதல் காணலாம்.

திருக்கபாலீச்சரப்பெருமானைப் பணிந்து போற்றிய ஞான சம்பந்தப் பிள்ளையார், சிவநேசர் முதலியோர்க்கு விடை யருளித் திருவான்மியூரடைந்த இறைவனைப் போற்றிச் சில நாள் அங்கமர்ந்திருந்தார். பின்பு இடைச்சுரம், திருக்கழுக்குன்றம், அச்சிறுபாக்கம் அரசிலி, புறவார் பனங்காட்டூர் முதலிய பதிகளைப் பரவிப் போற்றித் தேவர்பிரான் நடம் பயிலுந் திருத் தில்லை நகரடைந்தார். தில்லை வாழந்தணர்கள் எதிர்கொண்டு போற்றத் தில்லைச் சிற்றம்பலவனை யிறைஞ்சிப் போற்றி எல்லை யிலா இன்புற்றார். பின் தில்லைக்கூத்தன்பால் விடைபெற்றுப்

பல தலங்களை வணங்கி வருபவர், சேய்மையிலே சீகாழிப்பதி தோன்றுவதுகண்டு சிவிகையை விட்டு இறங்கி 'வண்டார்குழ லரிவையொடும்' என்ற பதிகத்தைப் பாடிக்கொண்டு அப் பதியின் எல்லையை யடைந்தார். நறுமலர் கொண்டு அருச்சித்து அந்நகரைத் தொழுது 'நம்பன் மேவும் நன்னகர் நலங்கொள் காழி சேர்மினே' எனப்பாடிப் பரவிப் பிரமபுரத்துட் புகுந்தார். தோணிபுரத் திருக்கோயிலை வலங்கொண்டு கோயிலுள்ளே புகுந்து பெரிய பெருமாட்டியுடன் வீற்றிருக்கும் பெருமானைப் பணிந்து போற்றித் தமது திருமாளிகையினில் அமர்ந்திருந்தார்.

## திருமணம்

இங்ஙனம் இருக்கும் நாளிலே திருஞானசம்பந்தரை வணங்கும் விருப்புடன் முருகநாயனார், நீலநக்கநாயனார் முதலிய திருத்தொண்டர்கள் சுற்றத்தாருடன் சீகாழிப் பதிக்கு வந்து சேர்ந்தார்கள். இந்நிலையில் சிவபாதவிருதயரும் சுற்றத்தார் களும் ஒருங்கு கூடித் திருஞானசம்பந்தர் திருமணஞ் செய்து கொள்ளுதற்குரிய பருவமும் இதுவே யென்று எண்ணிப் பிள்ளையாரை அணுகி, 'மறை முறைப்படி வேள்வி பல செய்தற்கு ஒரு கன்னியை மணம் புரிந்தருளவேண்டும்' என வேண்டிக் கொண்டார்கள். அதுகேட்ட பிள்ளையார், சுற்றத் தொடர்ச் சியினை விட்டு நீங்கும் நினைவினராய் 'அது கூடாது' என மறுத்தருளினார். மறையவர்கள் மீண்டும் பிள்ளையாரைக் கைதொழுது 'பெருந்தகையீர், வேதநெறியை மீண்டும் இவ்வுலகில் நிலைபெறச் செய்த பெருமை தங்களுக்கு உரியதே. ஆதலால் அவ்வேத விதிப்படி அந்தணர்க்குரிய அறுதொழில் இயற்றத் திருமணம் செய்யத் தாங்கள் திருவுளங் கொண்டருளல் வேண்டும்' என வேண்டிக் கொண்டார்கள். ஞானசம்பந்தர் இறைவனது திருவருளை நினைந்து, மறைவாழவும் அந்தணர்தம் வாய்மை யொழுக்கம் பெருகுந் துறைவாழவும் திருமணத்திற்கு உடன்பட்டருளினார். அது கண்டு உவமைமிக்க சிவபாத விருதயர், தம்மோடு ஒத்த குலத்தவராய்த் திருநல்லூரில் வாழும் நம்பாண்டார் நம்பியின் திருமகளே ஞானசம்பந்தர்க்கு ஏற்புடைய வாழ்க்கைத் துணையெனக் கருதினார். நல்லூரில் அவர்பால் மகட்பேசச் சென்றார். நம்பாண்டார் நம்பியும் சிவபாத விருதயரை உவகையுடன் எதிர்கொண்டு போற்றித் தம் மகளை ஆளுடைய பிள்ளையார்க்குத் திருமணஞ் செய்து தருவதாக உடன்பட்டுரைத்தார். சிவபாதவிருதயர் சீகாழிக்கு வந்து திருமண நாளை உறுதி செய்துகொண்டு நம்பாண்டார் நம்பிக்கு அறி வித்தார். அவரும் ஏழு நாட்களுக்கு முன் திருமண வினையைத் தொடங்கி முளைப்பாலிகை அமைத்துத் திருநல்லூரில் திருமணப் பொலிவு எங்கணும் விளங்க மங்கல அணி செய்தார்.

திருஞானசம்பந்தப் பிள்ளையார், தோணிமீது பெரிய நாச்சியாருடன் வீற்றிருந்தருளும் பெருமானை இறைஞ்சி விடை பெற்றுச் சிவிகைமீதமர்ந்து உறவினரும் அடியவரும் புடைசூழத் திருநல்லூரையடைந்தார். சிவிகையினின்றும் இறங்கிப் 'பெரு மணம்' என்னுந் திருக்கோயிலில் வீற்றிருந்தருளும் சிவபெரு மானைப் பணிந்து போற்றினார். திருமணக் கோலம் புனைந் தருள வேண்டுமென அன்பர்கள் விண்ணப்பஞ் செய்தனர். அதற்கு இசைந்த பிள்ளையார், கோயிலின் பக்கத்தே அமைந்த திருமடத்திற்போந்து திருமஞ்சனமாடி வெண்பட்டுடுத்துத் திருநீற்றினை நிறையப் பூசி இறைவனது திருவடையாள மாலையினை யணிந்து திருமணக்கோலங் கொண்டருளினார். இங்ஙனம் வதுவைக் கோலம் புனைந்த பிள்ளையார், அடிய வர்கள் புடைசூழச் சிவிகைமீதமர்ந்து மங்கலவாத்தியம் முழங்க, மறையவர்கள் மறைமுழக்கஞ் செய்ய, மகளிர் மணப்பொருள் களையேந்தி யெதிர்கொள்ளத் திருமணப்பந்தர் முன் சார்ந்து சிவிகையியை விட்டு இறங்கிச் சென்று மணப்பந்தரில் இடப்பெற்ற பொற்பீடத்தில் அமர்ந்தருளினார். நம்பாண்டார் நம்பி, தம் மனைவியாருடன் திருஞானசம்பந்தர் திருவடிகளைத் தூய நீரால் விளக்கி அந் நன்னீரையுட் கொண்டு சுற்றத்தார் மேலும் தெளித்தனர்; ஆளுடைய பிள்ளையார் கையில் மங்கல நன்னீர் சொரிந்து யான்பெற்ற அருநிதிப்பாவையாரை ஆளுடையபிள்ளையார்க்கு அளித்தேன்' என உறுதி கூறினார். மங்கல மகளிர் மணமகளை அழைத்து வந்து ஞானசம்பந்தரது வலப்பக்கத்தில் அமரச்செய்தனர். திருநீலநக்கநாயனார், திருஞானசம்பந்தர் திருமுன்பிருந்து சிவபெருமானையிறைஞ்சி வேதவிதிப்படி திருமணச்சடங்குகளை நிகழ்த்தி வைத்தார். ஞானசம்பந்தர் வெண்பொரியினைத் தூவித்தீவலம் வருதலாகிய சடங்கினை நிறைவேற்றும் நிலையில், மணமகளது மலர்க் கையைப்பற்றி 'விருப்புறும் அங்கியாவார் விடையுயர்த்தவரே' யென்னுந் தெளிவுடைய சிந்தையராய், மந்திரமுறையால் வளர்த்த எரியினை வலம் வருபவர், 'இருவினைக்கு வித்தாகிய இந்த இல்வாழ்க்கை வந்து என்னைச் சூழ்ந்துகொண்டதே. இனி இவளோடும் அந்தமில் சிவன்தாள் சேர்வேன்' என்னும் உறுதி கொண்டு, திருப்பெருமணக் கோயிலையடைந்தார். உறவினரும் அடியார்களும் பிறரும் அவரைத் தொடர்ந்து சென்றார்கள்.

## ஈறில் பெருஞ்சோதியினுள் எல்லாரும் புகுதல்

திருப்பெருமணத் திருக்கோயிலை யடைந்த பிள்ளையார், இறைவன் திருமுன்னர் நின்று 'எளியேனை முன்னை நாளில் ஆட்கொண்டருளிய திருவருட் பண்பு இப்பொழுது இறை வனது திருவடியிற் சேர்த்தருளும்' என்னும் நல்லுணர்வுமிகத்

தமது திருமணத்தைக் கண்டோரது பிறவிப்பாசத்தை நீக்குதலே பொருளாகக்கொண்டு,

கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டு மெய்யாய்த்தில
சொல்லூர்ப் பெருமணம் சூடலரேதொண்டர்
நல்லூர்ப் பெருமணம் மேய நம்பானே.

என்ற திருப்பதிகத்தைப்பாடி, 'நாதனே, நல்லூரில் எழுந்தருளி யிருக்கும் நம்பனே, நினது திருவடி நீழலில் எளியேன் சேரும் பருவம் இதுவாகும்' என உளமுருகிப் போற்றினார்.

அப்பொழுது பேரருட்கடலாகிய சிவபெருமான் நல்லூர்ப் பெருமணக் கோயில் தன்னுள் ஒடுங்க அதற்கு மேலோங்கிய தூய பெருஞ் சோதிப்பிழம்பாகத் தோன்றி நின்று, 'ஞானசம்பந்தனே, நீயும் நின் மனைவியும் நினது திருமணங்காண வந்தோர் யாவரும் இந்தச் சோதியினுள்ளே வந்து சேர்மின்' எனத் திருவாய் மலர்ந்து அச்சோதியினுள்ளே புகுதற்கென வாயிலொன்றும் வகுத்துக் காட்டியருளினார். அது கண்ட ஞானசம்பந்தர், உலகத் தார் உய்யும் பொருட்டு நன்னெறியினை அறிவுறுத்தத் திருவுளங் கொண்டு 'ஞான மெய்ந்நெறிதான் யார்க்கும் நமச்சிவாயச் சொல்லாம்' என்று

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் நமச்சி வாயவே.

எனத் தொடங்கும் நமச்சிவாயத் திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றி, 'இம் மணத்தில் வந்தோர் யாவரும் இழிதகைப் பிறவி நோய்தீர இச்சோதியினுள்ளே புகுமின்' என எல்லோரையும் அன்பால் அழைத்தருளினார். பிறவிப் பெருங்கடலிற் பட்டுக் கரைகாணாது வருந்தும் இயல்பினராகிய மக்கள், திருஞானசம் பந்தரது திருமணத்தைக்கண்டு உடன் சேவித்துச் செல்லும் நற்பேற்றினாலே அங்கே தோன்றிய ஈறில் பெருஞ்சோதியிற் புகுந்து பிறவாநெறியாகிய பேரின்ப வாழ்வைத் தலைப்பட் டார்கள். திருநீலநக்கநாயனார், முருகநானார், சிவபாதவிருதயர், நம்பாண்டார்நம்பி, திருநீலகண்டப்பெரும்பாணர் முதலிய திருத்தொண்டர்கள், தங்கள் வாழ்க்கைத்துணைவியாரொடும் சுற்றத்தாரொடும் சோதியிற் புகுந்தார்கள். ஆளுடையபிள்ளை யாருடைய பரிசனங்களும் ஆறுவகைச் சமயத்தினராகிய அருந்த வர்களும் அடியார்களும் முனிவர்களும் பிறரும் இறைவனது ஈறில்பெருஞ் சோதியினிற் புகுந்து இன்புற்றார்கள். இங்ஙனம் திருமணங்காண வந்தோர் யாவரும் சோதியிற் புகுந்த பின்னர்த்

திருஞானசம்பந்தர் தம் காதலியாரைக் கைப்பிடித்து இறைவனது எழில் வளர் சோதியை வலஞ்செய்து அகனுள்ளே புகுந்து சிவபெருமானோடு ஒன்றியுடனானார். உடனே அச்சோதி மறையத் திருப்பெருமணத் திருக்கோயில் முன் போலவே தோன்றியது. காலம் தாழ்ந்துவந்தமையால் சோதியுள் நுழையும் நற்பேறில்லாதவர்கள் கலங்கி நின்றார்கள். விண்ணவர், முனிவர் முதலியோர் தமது ஏசறவுதீர இறைவனை யேத்தி மகிழ்ந்தார்கள் என்பது வரலாறு. இந்நிகழ்ச்சியை,

முத்தமிழ்நூ லெல்லாம் முழுதுணர்ந்த பிள்ளையார்க்
கொத்த மணமிதுவென் றோதித் தமர்களெல்லாம்
சித்தங் களிப்பத் திருமணஞ்செய் காவணத்தே
அற்றைப் பொழுதத்துக் கண்டுட னேநிற்கப்
பெற்றவர்க ளோடும் பெருமணம்போய்ப் புக்குத்தன்
அத்தன் அடியே அடைந்தான் அழகிதே.*

(* ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை)

எனவருந் தொடரில் நம்பியாண்டார் நம்பி தெளிவாகக் குறிப் பிட்டுள்ளமை காணலாம்.

இவ்வரலாற்றில் ஞானசம்பந்தர் தமது திருமணத்தில் உலகியல் முறைப்படி காதலியைக் கைப்பற்றித் தீயினை வலம் வருபவர், சுட்டுணர்வுக்கு அப்பாற்பட்ட இறைவனே தீயுருவில் நின்று அருள் செய்பவன் என்னும் மெய்ம்மையுணர்ந்து திருப்பெருமணத் திருக்கோயிலை வலம் வந்தார் எனக் கூறப்படுதலால், இறைவனொருவனே மெய்ப்பொருளெனக் கொண்ட ஒரு நெறிய மனமுடையார் திருஞானசம்பந்தர் என்பது நன்கு தெளியப்படும்.

ஆளுடைய பிள்ளையார் சுற்றத்தொடர்பின் நீங்கி இறைவன் திருவடியையடைந்து இன்புறுதல் வேண்டுமென்னும் பெருவிருப்பத்தினால் 'கல்லூர்ப் பெருமணம் வேண்டா' என்ற முதற்குறிப்புடைய திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றினா ரென்பது,

'நறும்பொழிற் காழியுள் ஞானசம்பந்தன்
பெறும்பத நல்லூர்ப் பெருமணத்தானை
உறும் பொருளாற் சொன்ன ஒண்தமிழ்'

எனவரும் இப்பதிகத் திருக்கடைக் காப்பினாலும்,

தக்கிருந் தீரன்று தாளால் அரக்கனை
உக்கிருந் தொல்க உயர்வரைக் கீழிட்டு
நக்கிருந்தீர், இன்று நல்லூர்ப் பெருமணம்
புக்கிருந்தீர் எமைப் போக்கருளீரே.

என இறைவனை வேண்டும் நிலையிலமைந்த இப்பதிகத்து எட்டாந் திருப்பாடலாலும் இனிது விளங்கும். யாவரிடத்தும் வைத்த பேரருளால் விரிந்த திருவுள்ளமுடைய ஞானசம்பந்தப் பிள்ளையார், சமணர் சாக்கியர் கூறும் மயக்கவுரையிற் சிக்குண்டு மதிமயங்கும் உலகமக்களை அழைத்து அவர்களது பிணக்கு நீக்கி அவர்கட்கு வீடுபேற்றின்பம் வழங்குதற்பொருட்டு நல்லூர்த் திருப்பெருமணக் கோயிலுக்குள் அழைத்தருளினா ரென்பது,

> ஆதர் அமணொடு சாக்கியர் தாஞ்சொல்லும்
> பேதைமை கேட்டுப் பிணக்குறுவீர் வம்மின்
> நாதனை நல்லூர்ப் பெருமண மேவிய
> வேதன தாள்தொழ வீடெளி தாமே.

எனவரும் இத்திருப்பதிகத்தின் பத்தாம் பாடலால் இனிது புலனாதல்காண்க.

திருஞானசம்பந்தப் பெருமான், தம்முடைய திருமணங் காண வந்தோர் யாவரும் ஈறில் பெருஞ் சோதியுட் புகுந்த பின்னரே தாம் தம் காதலியாருடன் அச்சோதியை வலம் வந்து அதனுள்ளே புகுந்தனர் என்பதனை நோக்குங்கால். அப் பெருந்தகையார் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளர் என்பது நன்கு புலனாம். பிள்ளையாரது பேரருட் சிந்தையை விளக்கக் கருதிய சிவப்பிரகாச சுவாமிகள்,

> 'கொள்ளை கொள்ள வீடுதவிக் கூற்றைப் பிடர் பிடித்துத்
> தள்ளுந் திருஞானசம்பந்தா'

என அழைத்துப் போற்றினமை இங்கு நோக்கத்தக்கதாகும். ஆளுடைய பிள்ளையார் மயிலாப்பூரிற் பூம்பாவையை உயிர் பெற்றெழச் செய்த காலத்து அவர்க்குப் பதினாறு வயது நடை பெற்றதெனச் சேக்கிழாரடிகள் குறிப்பிட்டுள்ளார். பிள்ளையார் அவ்வற்புத நிகழ்ச்சிக்குப்பின் பல தலங்களை இறைஞ்சிச் சீகாழிப் பதிக்கு வருதற்கு ஏறக்குறைய மூன்று திங்களாதல் கூடும். பதினா றாண்டு ஆடவர்க்குரிய மணப் பருவமாதலின் அப்பருவத்தே பிள்ளையார்க்குத் திருமணம் நிகழ்வதாயிற் றென்பதும் அத் திருமண 'நாளிலேயே பிள்ளையார் இறைவனது சோதியிற் கலந்தமையால் அப்பெருந்தகையார் இவ்வுலகில் வாழ்ந்த காலம் பதினாறாண்டென்பதும் நன்கு துணியப்படும்.' 'தென் ஞானசம் பந்தர்க்கு அந்தம்பதினாறறி' என வழங்கும் பழம்பாடற்றொடர் இதனை வலியுறுத்துவதாகும்.



# திருநாவுக்கரசர் வரலாறு

திருநெறிய தமிழாகிய சைவத் திருமுறைகளுள் நான்கு, ஐந்து, ஆறாந் திருமுறைகளைத் திருவாய் மலர்ந்தருளிய அருளாசிரியர் திருநாவுக்கரசராவர். ஆளுடைய அரசராகிய இப்பெருந் தகையார், எஞ்ஞான்றும் திருத்தகவிற்றாகிய பேரின்பத்தைத் தன் அடியார்களுக்கு வழங்கவல்ல சிவனெனு நாமந் தனக்கேயுடைய செம்மேனியம்மானாகிய இறைவனையே சிறப்பீனுஞ் செம் பொருளாகக் கொண்டொழுகிய தெளிந்த சிந்தையுடைய வராவர். இச்செய்தி.

> 'சிவனெனும் ஓசை யல்ல தறையோ வுலகில்
> திருநின்ற செம்மையுளதே'

எனவரும் இவரது வாய்மொழியாலும்,

> 'திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
> திருநாவுக்கரையன்றன் அடியார்க்கும் அடியேன்.'

என நம்பியாரூரர் இவரைப்பாராட்டிப் போற்றுந் திருத் தொண்டத்தொகைத் தொடர் மொழியாலும் இனிது விளங்கும்.

நம்பியாண்டார் நம்பி, திருத்தொண்டத் தொகையின் வகையாகத் தாம் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியிலும் திருநாவுக்கரசு தேவர் திருவேகாதச மாலையென்னும் பனு வலிலும் திருநாவுக்கரசரது வரலாற்றிலுள்ள அற்புத நிகழ்ச்சிகள் சிலவற்றையும் அவர் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகங்களின் சிறப்பினையும் 'திருநாவுக்கரசு' என்னும் திருப்பெயரை மந்திரமாகக் கொண்டு ஓதி அவரை வழிபடும் மெய்யடியார்கள் அடையும் பெருநலங்களையும் விரித்துரைத்துப் போற்றி யுள்ளார். திருத்தொண்டத்தொகையின் விரியாகச் சேக்கிழா ரடிகள் பாடிய திருத்தொண்டர் புராணத்தில் திருநாவுக்கரசரது வரலாறு 429 செய்யுட்களால் திருநாவுக்கரசர் புராணமாக விரித்துரைக்கப் பெற்றுள்ளது. நாவுக்கரசர் திருவாய் மலர்ந் தருளிய தேவாரப் பதிகங்களில் அவரது வாழ்க்கையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள்பல இடம்பெற்றுள்ளன. இக்குறிப்புக்களை ஆதார மாகக்கொண்டு அப்பரடிகளது வரலாற்றையறிந்து கொள்ளுதல் இன்றியமையாததாகும்.

## குடும்ப நிலை

திருமுனைப்பாடி நாட்டிலே தெய்வநெறிச் சிவம் பெருக்குந் திருவாமூர் என்னும் ஊரிலே வேளாண் மரபிற் குறுக்கையர் குடியிலே புகழனார் என்பாரும் அவர்தம் வாழ்க்கைத் துணைவியார் மாதினியார் என்பவரும் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து மனையறம் நிகழ்த்தினார்கள். அவ்விருவருக்கும் திருமகளாகத் திலகவதியார் என்னும் புகழ்ச் செல்வியார் தோன்றினார். திலகவதியார் பிறந்த சில ஆண்டுகளுக்குப் பின் அவர்க்குத் தம்பியாராக மருணீக்கியாரென்பார், அழகில் கலைத்துறை தழைப்ப, அருந்தவத்தோர் நெறிவாழ, ஒளிவிளங்கு கதிர்போல வந்து பிறந்தருளினார். அவரைப்பெற்று வளர்த்த பெரியோர்கள், உரிய நாளிற் பள்ளியிலமர்த்திக் கலை பயிலச் செய்தார்கள். திலகவதியார்க்குப் பன்னிரண்டு வயது தொடங்கி நடைபெற்றது.

உருவும் திருவும் உயர்பேரொழுக்கமும் வாய்ந்த கலிப்பகை யாரென்னும் வேளாண்குடித் தலைவர், திலகவதியாரை மணந்து கொள்ள விரும்பிப் புகழனார்பால் பெரியோர் சிலரை மணம் பேச அனுப்பினார். குணமுங் குலமும் ஒத்தமை கேட்டு மகிழ்ந்து புகழனார், தம் அருமைத் திருமகளார் திலகவதியாரைக் கலிப்பகையார்க்கு மணஞ்செய்து கொடுப்பதாக மகிழ்ச்சியோடு உடன்பட்டார். மணம் பேசச் சென்ற பெரியோர், புகழனாரது இசைவினைக் கலிப்பகையார்க்குத் தெரிவித்தார்கள்.

இங்ஙனம் இருதிறத்தாராலும் உறுதிசெய்யப் பெற்ற திருமணம் நிகழ்வதற்குள் வடநாட்டிலுள்ள பகைமன்னர் சேனை, தமிழ்நாட்டின் மேற் போர் குறித்துப் புறப்படுவதாயிற்று. இப் பகைப்படை யெழுச்சியை முன்னமே குறிப்பாலுணர்ந்த தமிழ்நாட்டு வேந்தன், பேராற்றல் மிக்க கலிப்பகையாரைச் சேனைத் தலைவராக நியமித்துப் படைகளுடன் வடபுலத்திற்கு அனுப்பினான். இங்ஙனம் நாடாளும் வேந்தனுக்கு உற்றுழியுதவு தற்பொருட்டுச் சேனைகளுடன் வடநாடு சென்ற கலிப்பகையார், நீண்ட நாட்கள் அங்கே தங்கியிருந்து பகைவரைப் பொருது வெல்லுந் தொழிலில் ஈடுபட்டு வினைபுரிவாராயினர். இந் நிலையில் இவர்க்குத் திலகவதியாரை மணஞ் செய்து தருவதாக இசைந்திருந்த புகழனார் 'நெருநலுளனொருவன் இன்றில்லை' யெனத் தொன்று தொட்டு வழங்கும் நிலையாமையைப் பொருந்தி ஊழ்வினைப பயனால் நோய்வாய்ப்பட்டு இறந்து விண்ணுலகடைந்தார். அந்நிலையில் அவர் தம் இன்னுயிரனைய மனைவியார் மாதினியார், சுற்றமுடன் மக்களையும் துகளாக எண்ணி உயிர் நீத்துக் கற்புநெறி வழுவாது கணவனாருடன்

சென்றார். இவ்வாறு தந்தையுந்தாயும் இவ்வுலக வாழ்வை நீத்த துன்ப நிலையுட்பட்டுத் துளக்கமுற்ற திலகவதியாரும் மருள்நீக்கியரும் ஆற்றொணாத்துயரில் அழுந்தினார்கள். அறிவினால் மிக்க பெரியோர்கள் உலகியல்பினை யெடுத்துரைத்துத் தேற்ற ஒருவாறு மனந்தெளிந்து தம்தந்தை தாய்க்குச் செய்யவேண்டிய ஈமக் கடன்களைச் செவ்வனே செய்து முடித்தார்கள்.

## தமக்கையர் தவநிலை

இவர்கள் இங்ஙனமிருக்க, வடநாட்டிற் போர் புரியச் சென்ற கலிப்பகையார், பகைவரது போர்க்களத்திலே தமது தறுகணாண்மையினைப் புலப்படுத்தி மாற்றாரை யழித்துத் தம் உயிரைக் கொடுத்துப் பூதவுடம்பை நீத்துப் புகழுடம்பெய்தினார். இத்துன்பச் செய்தி திலகவதியார் செவிக்கு எட்டியது. இதனைக் கேள்வியுற்ற திலகவதியார், என் தந்தையும் தாயும் என்னை 'அவர்க்கே (கலிப்பகையார்க்கே) கொடுப்பதாக இசைந்தார்கள். அந்த முறையால் அவர்க்குரிய பொருளாவேன், ஆதலால் இவ் வுடம்பைத் துறந்து என்னுயிரை அவருயிரோடு இசைவிப்பேன்' எனத் தமது உயிரைவிடத் துணிந்தார். அப்பொழுது அவருடைய தம்பியாராகிய மருள் நீக்கியார், தமக்கையாராகிய திலகவதியார் பாதங்களில் வீழ்ந்து புலம்பினார்; 'அன்னையும் அத்தனும் இறந்த பின்னரும் தமக்கையாகிய உம்மை வணங்கப் பெறுதலினால் யான் இதுகாறும் உயிர்தரித்திருக்கின்றேன்.' இந் நிலையில் ஒன்றுமறியாத என்னைக் கைவிட்டுச் செல்வீராயின் யானும் உமக்கு முன்னே உயிர்துறப்பேன் எனக்கூறி வருந்தினார்.

தம்பியாராகிய மருள்நீக்கியார் இவ்வாறு ஆதரிப்பாரின்றி வருந்தும் இடர்நிலையைக் கண்டு திலகவதியார் உள்ளங்கலங்கினார். தம் தம்பியார் இவ்வுலகிற் புகழுடன் நிலைபெற்று வாழ வேண்டுமெனத் தாம் கொண்ட பேரருளானது, தம்முயிரைத் துறந்து விண்ணுலகடைய எண்ணிய தமது துணிபினை விலக்கினமையால், தம்பியின் பொருட்டு இவ்வுலகில் உயிர்தாங்கியிருப்பதாக உறுதி கொண்டார். இன்னலுறுத்தும் பொன்னினும் மணியினுமாகிய அணிகலன்களைப் பூணாது அனைத்துயிரையும் வாழ்விக்கும் அருளையே அணிகலனாக மேற்கொண்டு மனையின்கண் இருந்தே தவப்பெருஞ்சீலராய்த் தம்பியைப் பேணி வளர்ப்பாராயினர்.

இவ்வாறு இளம்பருவத்தினராகிய மருள்நீக்கியார் தாயுந் தந்தையுமின்றி வருந்தியபொழுது அவருடைய தமக்கையாராகிய திலகவதியார், தம்பியார் உளராக வேண்டுமெனக் கொண்ட பெருங்கருணையால், அவர்க்குத் தாயென அமைந்து அவரைப் பேணி வளர்க்க முன்வந்தமை, இறைவனது திருவருட்

செயலேயாகும். இந்நுட்பத்தினை மருள் நீக்கியாரே தாம் இறைவனருளாற் சமணந்துறந்து சிவநெறியினை மேற்கொண்டு திருநாவுக்கரசராய் விளங்கிய காலத்தில்,

> 'எம்மையாரிலை யானும் உளேனலேன்
> எம்மை யாரும் இதுசெய வல்லரே
> அம்மை யாரெனக் கென்றென் றரற்றினேற்
> கம்மையாரைத் தந்தார் ஆரூர் ஐயரே.'

எனவரும் திருவாரூர்த் திருக்குறுந்தொகையில் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளமை காணலாம். 'எம்மைப் பெற்ற தாயுந் தந்தையும் என்னைவிட்டு இறந்தாராக அவர்கள் இல்லாமையால் யானும் இவ்வுலகில் உயிரோடுளே னல்லேன் என எண்ணும் நிலையில் ஆதரவற்றிருந்தேன். இங்ஙனம் பற்றுக்கோடின்றி வருந்திய என்னை உயிர்க்குயிராக இறைவனையன்றி வேறு யாரும் இவ்வுயர் நிலையில் இருக்கச்செய்ய வல்லரோ? தாயாகிய நிலையிலிருந்து எளியேனை வளர்ப்பார் யார்? எனத் தம்மை நோக்கி அழுதரற்றிய என் பொருட்டு ஆரூரில் எழுந்தருளிய இறைவர், என்னைப் பாதுகாத்தற்குரிய அம்மையாரைத் தந்து அருள் புரிந்தார்' என்பது மேற்காட்டிய திருக்குறுந்தொகையின் பொருளாகும்.

இளமைக் காலத்துத் தம்முடைய இருமுது குரவரும் இறந்து போயினர் என்றசெய்தியை 'எம்மையார்இலை' என்ற தொடராலும், அந்நிலையிற் பாதுகாப்பாரின்றித் தாம் வருந்திய எளிமையினை 'யானும் உளேனலேன்' என்ற தொடராலும், தம் தமக்கையாராகிய திலகவதியார் தமக்குரிய கணவரெனப் பெற்றோரால் உறுதி செய்யப்பெற்ற கலிப்பகையார் போரில் இறந்தமை கேட்டு உயிர்விடத் துணிந்த நிலையில் 'என்னைப் பேணி வளர்க்கும் அன்னையாவார் வேறுயாருளர்' எனத் தாம் அழுதரற்றிய செய்தியை 'அம்மையார் எனக்கு என்றென்று அரற்றினேற்கு' என்ற தொடராலும் அந்நிலையிற் சிவபெருமான், திலகவதியார் உயிர் துறத்தலைத் தவிர்த்து இவ்வுலகில் வாழச் செய்து தம்மைப் பேணிவளர்க்கும் அம்மையாராய்த் தம் பொருட்டுத் தந்தருளினாரென்பதை 'அம்மையாரைத் தந்தார் ஆரூர் ஐயரே' என்ற தொடராலும் திருநாவுக்கரசர் தெளிவாக விளக்கிய திறம் நினைந்து மகிழத் தக்கதாகும். 'அம்மை யாராயினார் ஆரூர் ஐயரே' என்னாது 'அம்மையாரைத் தந்தார் ஆரூர் ஐயரே' என அடிகள் குறிப்பிடுதலால், இறைவனால் மருள்நீக்கியார்க்கு அளிக்கப்பெற்ற அம்மையாராவார், அவரை இளம்பருவ முதற் கொண்டு அன்புடன் வளர்த்து நன்னெறிப் படுத்திய அவருடைய தமக்கையார் திலகவதியாரேயென்பது நன்கு புலனாகும். மருள் நீக்கியாரைப் பெற்ற தாயும் தந்தையும்

இளம்பருவத்தில் இறந்து போயினரெனவும் இந்நிலையில் உயிர்துறக்க எண்ணிய திலகவதியார் தம்பியைப் பாதுகாத்தற் பொருட்டு உயிர் தாங்கியிருந்தாரெனவும் சேக்கிழாரடிகள் கூறுஞ் செய்தி, திருநாவுக்கரசர் வாய்மொழியாகிய இத்திருக் குறுந்தொகையால் உறுதியாதல் காண்க.

## தருமசேனராதல்

இங்ஙனம் திலகவதியாரால் வளர்க்கப்பெற்ற மருள் நீக்கியார், மாசற்ற உள்ளத்திலே கவலை நீங்கப் பெற்றவராய்ப் பருவம் நிரம்பி அறிவு வளரப்பெற்று உலகியலுணர்வும் நன்கு வாய்க்கப் பெற்றார். இளமையும் யாக்கையும் செல்வமும் நிலைமையுடைய அல்ல என வுணர்ந்து நில்லாதனவாகிய இவை நீங்குதற்கு முன்னரே நிலையுடைய நல்லறங்களைச் செய்ய எண்ணினார். வெயில் வெம்மை தணியச் சோலைகளை வளர்த்தும் உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத நல்ல நீர் நிறைந்த குளங்கள் பலவற்றைத் தோண்டியும் வறுமையாற் சென்றிரந்த இரவலர்களுக்கு இல்லையென்னாது வேண்டுவன ஈந்தும் வந்த விருந்தினரை உபசரித்தும் செந்தமிழ் நாவலர்க்குப் பெரும் பொருளைப் பரிசிலாக நல்கியும் இவ்வாறு உலகத்துள்ளார் யாவர்க்கும் இல்லையென்னாது ஈந்து மகிழும் அருளாளரகத் திகழ்ந்தார்.

அக்காலத்தில் சமணசமயத் துறவிகள் பலர். தமிழகத்திற்கு சமண சமயத்தைப் பரப்பவேண்டுமென்னும் பெருவிருப்புடை யாராய்ப் பாடலிபுத்திரம் முதலிய பதிகளிற் சமண் பள்ளிகளும் பாழிகளும் அமைத்துக் கொண்டு வாழ்ந்தார்கள். அவர்கள் தாம் பெற்றுள்ள தருக்கசாத்திர வன்மையாலும் சீவகாருணியமாகிய அருளொழுக்கத்தினைப் போற்றியுரைக்கும் அறிவுரைகளாலும் தமது சமயத்தைத் தமிழ் நாடெங்கும் பரப்புந் தொழிலில் ஈடுபட்டிருந்தார்கள். நில்லாத உலகியல்பு கண்டு இனி நிலையாய வாழ்க்கையில் ஈடுபடுவேனல்லேன் எனத் துணிந்து துறந்தார்தம் தூநெறிக்கட் செல்ல விரும்பிய மருள் நீக்கியார், எல்லாச் சமயங் களுள்ளும் சிறப்புடைய மெய்ச்சமயம் இதுவெனத் தெரிந் துணரும் ஆர்வமுடையராய்ச் சிவபெருமானது திருவருள் கைகூடப்பெறாமையால் கொல்லாமையாகிய நல்லறப் போர்வையில் மறைந்துலவும் சமணசமயத்திற் சேரக் கருதினார். பாடலிபுத்திரம் என்ற ஊரையடைந்து சமணமுனிவர்கள் வாழும் தவப்பள்ளியின் மருங்கு அணைந்தார் அங்குள்ள சமணர்கள், 'பேரின்பமாகிய வீடு பேற்றினை அளிக்கவல்ல மெய்ச்சமயம் எங்கள் சமணசமயமாகிய இதுவே' என மருள் நீக்கியார்க்கு எடுத்துரைத்து அவரைத் தம்சமயத்தில் ஈடுபடுத்த முயன்றார்கள்.

அவர்களது அறிவுரையில் ஈடுபட்டு மருள்நீக்கியார், சமண சமயத்திற் சேர்ந்து அச்சமயத்திலுள்ள அரியபல நூல்களை நன்கு பயின்று தேர்ந்தார். அதுகண்டு மகிழ்ந்த சமணர்கள், அவரைத் தருமசேனர் என்ற சிறப்புப் பெயராற் பாராட்டிப் போற்றி னார்கள். தருமசேனராகிய மருள் நீக்கியார் புத்தரில் ஒரு சாராகிய தேரர்களை வாதில் வென்று சமண சமயத் தலைவர்களில் ஒருவராய் மேம்பட்டு விளங்கினார்.

## திலகவதியார் திருத்தொண்டு

தம்பியார் உளராக வேண்டும் என்ற பேரருளால் மனையின் கண் இருந்து மருள்நீக்கியாரை வளர்த்து வந்த திலகவதியார், தம்பியாகிய அவர் சமணர் சூழ்ச்சியில் அகப்பட்டுச் மண சமயத்திற் சேர்ந்தன ரென்பதைக் கேள்வியுற்றார். இயற்கை யிலேயே சுற்றத் தொடர்பொழியுங் கருத்தினராகிய திலக வதியார், அப்பற்றறுதி இப்பொழுது தானே வந்து சேர்ந் தமையால் தூயசிவ நன்னெறியே சார்வதற்கு நாதன் திருவருளை விரும்பித் திருவதிகைத் திருவீரட்டானத் திருக்கோயிலை அடைந்து, சிவபெருமான் திருவருளையிறைஞ்சிச் சிவ சின்னங்கள் அணிந்து நாடோறும் பொழுது புலர்வதன்முன் திருவதிகைத் திருக்கோயிலில் திருவலகிடுதல், நலமலி ஆன் சாணத்தால் நன்றாக மெழுகுதல், மலர்கொய்து கொடுவந்து மாலைகள் தொடுத்தமைத்தல் முதலிய திருப்பணிகளை விருப்புடன் செய்து இறைவனைப் போற்றியிருந்தார்.

இங்ஙனம் நாடோறும் இறைவனை வழிபட்டிருக்கும் திலக வதியார், தம்முடைய தம்பியார் தீவினைத் தொடர்பால் புறச்சம யத்தை மேற்கொண்டமையெண்ணிப் பெரிதும் வருந்தினார். அதிகைப் பெருமானை இறைஞ்சி நின்று, 'என்னை ஆண்டரு ளினீராகில், அடியேன் பின் பிறந்தவனைப் புறச்சமயப் படுகுழி யினின்றும் எடுத்தாளவேண்டும்' எனப் பலமுறையும் விண்ணப் பஞ்செய்தார். திருவதிகைப் பெருமான், சிவநெறியில் உறைப் புடையராகிய திலகவதியாரது கனவில் தோன்றி 'நீ உன்னுடைய மனக்கவலையைத் தவிர்வாயாக, உன்னுடன் பிறந்த தம்பி முன்னமே முனியாகி எமையடையத் தவமுயன்றான், அன்ன வனை இனிச் சூலைநோயைத் தந்து ஆட்கொள்வோம்' என அருள்செய்து அவ்வண்ணமே தருமசேனர் வயிற்றிற் சூலை நோயினைப் பற்றச் செய்தார்.

## சூலை நோயால் வருத்துதல்

இறைவனருளால் தருமசேனரைப் பற்றிய சூலைநோய், வடவைப் பெருந்தீயும் ஆலகாலமாகிய நஞ்சும் வச்சிரப்படையும் என இங்ஙனம் கொடுமை விளைப்பனவெல்லாம் ஒன்றாகத்

திரண்டு வருத்தினாற்போல் குடரைக் குடைந்து வருத்திற்று. அந்நோயின் வருத்தத்தைப் பொறுக்கலாற்றாத தருமசேனர், நடுக்கமுற்றுப் பாழியறையில் மயங்கி வீழ்ந்தார். அவர் சமண சமயத்தில் தாம் கற்றுவல்ல மந்திரங்களால், அந்நோயினைத் தடுக்கமுயன்றும் அது தனியாது மேன்மேலும் முடுகி வருத்துவதாயிற்று, தருமசேனர் படும் துன்பத்தைக்கண்ட சமணர்கள் பலருங்கூடி 'உயிரைக்கவரும் கொடிய நஞ்சினை யொத்த சூலை நோய் இவரைப்பற்றி வருத்துகின்றதே. இதற்கு இனி நாம் என்ன செய்வோம்' எனப்பெரிதும் உளங்கலங்கி னார்கள். தம் கையிலுள்ள குண்டிகை நீரை மந்திரித்துத் தரும சேனர்க்குக் கொடுத்துக் குடிக்கும்படி செய்தார்கள். மயிற்பீலி கொண்டு காலளவும் தடவினார்கள். அந்நிலையிற் சூலைநோய் முன்னிலும் பன்மடங்கு அதிகரிப்பதாயிற்று. அதுகண்டு சோர் வுற்ற சமணர்கள், 'ஐயோ இனி நாம் என்செய்வோம்' எனக் கலக்கமுற்ற மனத்தினராய், 'இது நம்மாற் போக்குதற்கரிய நோயாகும்' எனச் சொல்லித் தருமசேனரைக் கைவிட்டு அகன்று சென்றனர்.

சூலைநோயாற் சோர்வுற்ற தருமசேனர், தம்மைச் சமணர்க ளெல்லாருங் கைவிட்டு அகன்ற நிலையில் தம்முடைய பழைய உறவினரை யெண்ணினார். அப்பொழுது தம்முடைய தமக்கை யார் திலகவதியாரைப் பற்றிய நினைவுண்டாயிற்று. அந் நிலையில் தமக்கு அடிசிலமைப்பவனை அழைத்துத் தாம்படுந் துன்பத்தைத் தமக்கையாருக்குச் சொல்லிவரும்படி அனுப்பினார் அவனும் அவ்வாறே திலவதிகையடைந்து நந்தவனத்தின் மருங்கே மலர்கொய்யச் செல்லும் அருந்தவச் செல்வியாராகிய திலகவதி யாரைக்கண்டு வணங்கி, 'நும்முடைய தம்பியார் ஏவலால் யான் இங்கு வந்தேன்' எனக் கூறிநின்றான். அது கேட்ட திலகவதியார் 'தீங்குளவோ' என வினவினார். 'சூலை நோய் உயிரை மட்டும் போக்காமல் நின்று குடரை முடக்கித் துன்புறுத்தலால் அமணர் களெல்லாரும் என்னைக் கைவிட்டு விட்டார்கள். இச்செய்தியை எனக்கு முன் பிறந்த தமக்கையார்க்குச் சொல்லி விட்டு இருளாகும் நேரத்தில் இங்கு திரும்பி வா' என்று நும்முடைய தம்பியார் என்னை இங்கு அனுப்பினார் என அவன் கூறினான். அது கேட்ட திலகவதியார் 'நன்றறியார் அமண்பாழி நண்ணு கிலேன் என்ற மறுமொழியை நீ சென்று அவனுக்கு உரைப் பாயாக' என மறுமொழிகூறி யனுப்பினார். அடிசிலாக்கு வோனும் அங்கிருந்து மீண்டு சென்று தருமசேனரை அடைந்து தமக்கையார் கூறியதனைத் தெரிவித்தான்.

## திருவதிகையடைந்து திலகவதியாரைப் பணிதல்

அவன் கூறியதனைக் கேட்ட தருமசேனர், 'இனி இதற்கு யாது செய்வேன்' என அயர்வுற்றார். அப்பொழுது இறைவனது திருவருள் கைகூடப் பெற்றமையால், 'இம்மை மறுமை வாழ்வுக்கு ஒரு சிறிதும் ஒவ்வாத இச் சமண சமயத்தால் தவிராத சூலை நோயின் துயர்கெடச் செம்மை நெறியிலொழுகும் திலகவதி யாருடைய திருவடிகளை வணங்கி உய்வேன்' எனக் கருதினார். அங்ஙனம்கொண்ட மனக்கருத்துத் தம்மைப்பிடித்து எழுப்ப ஒருவாறு சோர்வகன்று எழுந்தார். உடுத்த பாயும் பிடித்த குண்டிகையும் கொடுத்த மயிற்பீலியும் அறவே விட்டு நீங்கத் தூய வெள்ளைத் துணியினை இடையில் உடுத்துத் தமக்குப் பற்றுக்கோடாகக் கை தந்து உடன் வருவாரைச் சமணப் பள்ளியைக் கடந்து நள்ளிரவில் ஒருவரும்காணாவண்ணம் பாடலிபுத்திரத்தினின்றும் புறப்பட்டார். சூலைநோய் பின் தொடரத் தமக்கையாரை அடைந்துய்வேன் என்ற பெருவிருப்பம் ஈர்த்து முன் செல்லத் திருவதிகையில் திலகவதியார் இருந்த திரு மடத்தை அடைந்தார்.

திருமடத்தினுட் சென்ற மருள்நீக்கியார், தம் தமக்கையா ராகிய திலகவதியார் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, 'நமது குலத்திற்தோன்றிய முன்னோர்கள் செய்த நற்றவத்தின் பயனாகத் திகழும் பெரியீர்! இவ்வுடம்பைப் பற்றிய சூலை நோயினைப் பொறுத்தலாற்றாது நும் திருவடிகளைச் சரணடைந்தேன். இனியான் அறியாமையிற்பட்டு மயங்காமல் துன்பக் கடலி னின்றும் பிழைத்துக் கரையேறுதற்குரிய நன்னெறியினை உபதேசித்தருள்வீராக' என விண்ணப்பஞ் செய்தார். தம்பி யாரது மனநிலையினை யுணர்ந்த திலகவதியார், சிவபெருமானது திருவருளை நினைந்துருகிக் கைதொழுது தம்பியாரை நோக்கி 'உறுதிப் பொருளாகிய தெய்வங்கொள்கையில்லாத புறச்சமயப் படுகுழியில் விழுந்து பெருந்துயருழந்தீர் எழுந்தீர்' என மொழிந்தார். அது கேட்ட மருள்நீக்கியார், சூலைநோயுடன் நடுக்க முற்றெழுந்து தொழுதார். திலகவதியாரும் அவரை நோக்கி, 'நும்மைப் பற்றிய இச்சூலைநோய் இறைவனது திருவருளே யென அறிவீராக, தன்னைச் சரணடைந்தாரது பாசத்தளையை நீக்கி இன்னருள் புரியும் இறைவனடிகளைப் பணிந்து பணி செய்யும்' எனப் பணித்தார். மருள்நீக்கியார் தமக்கையாரது அருட்பணியை யேற்றுக்கொண்டு இறைஞ்சி நின்றார். தம் தம்பியார் திருவதிகை வீரட்டானத் திருக்கோயிலிற் புகுதற்குத் தகுதியுடையராம் வண்ணம் திலகவதியார் கயிலைப் பெருமானை நினைந்து அவனது திருவருள் வண்ணமாகிய திருநீற்றினைத் திருவைந் தெழுத்தோதிக் கொடுத்தருளினார்.

பெருவாழ்வு வந்ததெனப் பணிந்தேற்ற மருள்நீக்கியார், திருவாளன் திருநீறாகிய அதனை உருவார அணிந்து தமக்கு உய்யு நெறி தரும் தமக்கையார்க்குப் பின்னே தாமும் புறப்பட்டார்.

## சூலை தீர்த்து ஆட்கொள்ளப் பெறுதல்

நீறணிந்த மருள்நீக்கியாரது அகத்திருளும் நிறைகங்குற் புறத்திருளும் ஒருசேர மாறும்படி தோன்றிய திருப்பள்ளி யெழுச்சிக் காலமாகிய விடியற்காலத்திலே, தவச்செல்வி யாராகிய திலகவதியார், திருவலகும் திருயெழுக்கும் தோண்டியுங் கொண்டு திருவதிகை வீரட்டானத் திருக்கோயிலுள் தம்பியை அழைத்துக்கொண்டு புகுந்தார் உடன்சென்ற மருள்நீக்கியார், திருக்கோயிலைத் தொழுது வலங்கொண்டு நிலமிசை வீழ்ந்து இறைஞ்சினார். அந்நிலையில் இறைவன் திருவருளால் தமிழ் மாலைகளாகிய திருப்பதிகங்களைப் பாடிப் போற்றும் உணர்வு அவர்க்கு உண்டாயிற்று. அவ்வுணர்வினால் தூண்டப்பெற்ற மருள்நீக்கியார், தம்மை மயக்கத்தில் ஆழ்த்தும் சூலைநோய் நீங்கும்பொருட்டுப் புரமெரித்த பெருமானாகிய திருவதிகை யிறைவனை நினைந்து உள்ளத்திலே பேரன்பு பொங்க,

**கூற்றாயின வாறு விலக்க கிலீர்**
**கொடுமை பல செய்தன நானறியேன்**
**ஏற்றாயடிக்கே யிரவும் பகலும்**
**பிரியாது வணங்குவன் எப்பொழுதும்**
**தேற்றாதென் வயிற்றினகம் படியே**
**குடரோடு துடக்கி முடக்கியிட**
**ஆற்றே னடியேன் அதிகைக்கெடில**
**வீரட்டானத் துறையம்மானே.**

எனத் தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார். நிலைபெற்ற பெருவாழ்வைத் தரும் இத்திருப்பதிகத்தைப் பாடிய பொழுது அவரது வயிற்றில் புகுந்து வருத்திய சூலைநோய் விரைவில் நீங்கியது.

சிவனருள் பெற்ற சிறப்புடையராகிய மருள்நீக்கியார், ‘இறைவனது திருவருள் அடியேற்கு உயிருடன் நலத்தையும் அருளியது’ என மகிழ்ந்து முதல்வன் கருணைக் கடலில் மூழ்கி யின்புற்றார்; மெய்ம்மயிர் சிலிர்க்கக் கண்ணீர் மழையெனப் பொழிய நிலைமிசை வீழ்ந்து புரண்டார்; ‘என்றும் வெள்ளம் ஏறாத பெருந்திடரென அமைந்த எளியேன்பால் இவ்வாறு நின் திருவருட் பெருவெள்ளத்தைப் பெருகவிடுதல்தகுமோ’ என இறைவனை உளங்கசிந்து போற்றினார். ‘பொய்ம்மைமிக்க புறச்சமயப் படுகுழியில் விழ்ந்து எழுமாறு இதுவென வுணராது மயங்கிஅவமே செய்து கிடக்கும் எளியேன், மலைமகள்

கேள்வனாகிய சிவபெருமான் திருவடிகளை அடைந்து உய்யும் வண்ணம் இத்தகைய நல்வாழ்வைத் தந்த சூலைநோய்க்குச் செய்யத் தக்க கைம்மாறு யாதுளது?' எனத் தம்மை நல்வழிப் படுத்திய சூலைநோய்க்கு நன்றிதெரிவித்து இறைவனைத் தொழுதார். அந்நிலையில், 'செந்தமிழ்ச் சொன்மலர்களால் இயன்ற திருப்பதிகமாகிய பாமாலையை நீ பாடிய தன்மை யினால் நின்பெயர்' 'நாவுக்கரசு' என உலகேழினும் நிலைபெற்று வழங்குக' என இறைவனது திருவருள் வாக்கு யாவருங் கேட்ப வானின்கண் எழுந்தது.

அத்திருவருள் மொழியினைக் கேட்ட திருநாவுக்கரசராகிய பெருந்தகையார், இத்தனை நெடுங்காலமாக இறைவனை மறந் திருந்த தீவினையாளனாகிய எளியேனால் இத் திருத்தக விற்றாகிய பெருவாழ்வு அடைதற்குரியதோ' என வியந்தார். தனது பேராற்றலை யுணராமல் கயிலையை யெடுத்த இராவ ணனது பிழையைத் திருவுளங் கொள்ளாது சிவபெருமான் அவனுக்கு வாழ்நாளும் வாட்படையும் தந்த பெருங்கருணைத் திறத்தினை யுணர்ந்து போற்றுதவனையே தமக்குரிய கடமையாக மேற்கொண்டு அதிகை வீரட்டானத்துப் பெருமானை வணங்கித் துதித்தார்.

இவ்வாறு மருள்நீக்கியார் புறச்சமய இருள்நீங்கச் சிவநெறியை மேற்கொண்டு திருநாவுக்கரசராகத் திருவருள் பெற்றதனால் உலகம் உய்ந்ததென்று திருவதிகையிலுள்ளார் யாவரும் பெருமகிழ்ச்சியுற்றார்கள். திருநாவுக்கரசர், சிவ சின்னங்களையணிந்து இறைவன் திருவடிகளை இடையறாது நினைக்கும் நல்லுணர்வும், அப்பெருமானது பெருங்கருணைத் திறத்தை விரித்துரைக்கும் நற்சொல்லும், திருக்கோயிலிற் கைத் திருத்தொண்டு புரியும் உழவாரப் படையும் உடையராய், மனமொழி மெய்களாகிய முக்கரணங்களாலும் சிவநெறித் தொண்டு புரிவாராயினர். சிவநெறியில் உறைப்புடைத் தொண்டராகிய திலகவதியார். திருவீரட்டானப் பெருமானை வணங்கி, 'பொய்மைமிக்க புறச்சமயத்தாரது சூழலில் அகப்பட்டு மயங்கிய என் தம்பியை அச்சமயத்தொடக்கினின்றும் மீளும்படி செய்து எங்களைப் பொருளாக ஆண்டுகொண்டருளிய இத்திருவருட்டிறத்தினை இவ்வுலகில் வேறு யார் பெற்றனர்' என வியந்து நெஞ்சம் நெக்குருகிப் போற்றி மகிழ்ந்தார்.

இளைஞராகிய மருள்நீக்கியார், உலக வாழ்வின் நிலையின் மையை நன்குணர்ந்து 'நிலைபேறில்லாத இவ்வுலக வாழ்க்கையில் ஈடுபடுவேனல்லேன்' எனத் துறவறத்தை மேற்கொண்டு பாடலி புத்திரத்திற் சமணர்கள் தங்கியிருக்கும் பள்ளியை யடைந்தா ரெனவும், அதுகண்ட சமணர்கள் மருள்நீக்கியாரைத் தங்கள்

*சமயத்திற் சேர்த்துக்கொள்ளும் பெரு விருப்புடையவர்களாய் 'வீடடையும் நெறியிதுவே' என மெய்ம்மையாக நம்பும் வண்ணம் தங்கள் சமயநூற் பொருளை அவர்க்கு அறிவுறுத்தினார்களெனவும், அவர்களது சமய தத்துவ நூல்களை நன்கு பயின்ற மருள் நீக்கியார் புத்த சமயத்தாருள் ஒரு பிரிவினராகிய தேரர் என்பாரை வாதில் வென்று சமண சமயத் தலைவராய்த் தரும சேனர் என அழைக்கப் பெற்றாரெனவும் பெரியபுராணம் கூறும்.*

*நின்றுண்ணுமியல்பினராகிய சமணர்குழுவிற் சார்ந்த மருள் நீக்கியார், இருந்துண்ணுமியல்பினராகிய தேரர் என்ற வகுப்பாரை வாதில் வென்றாரென்பது இதனால் உய்த்துணரப்படும்.*

*நின்றுண்ணும் பழக்கமுடையவர்களாகிய சமணர்கள், குண்டர் அமணர் என இரு பிரிவினராகத் தேவாரத் திருப்பதிகங்களிற் பேசப்பட்டுள்ளார்.* (* 'அலையாரும் புனல் துறந்த அமணர் குண்டர் சாக்கியர் தொலையாதங் கலர்தூற்றந் தோற்றங் காட்டி யாட்கொண்டீர்'- சம்பந்தர் தேவாரம், 'மனைதுறந்த வல்லமணர் தங்கள் பொய்யும் மாண்புரைக்கும் மனக்குண்டர் தங்கள் பொய்யும் சினை பொதிந்த சீவரத்தர் தங்கள்பொய்யும்' - அப்பர் தேவா.ரம்) இவ்விரு பிரிவினருள் நம் மருள் நீக்கியார் குண்டர் என்பவர் குழுவிலேயே சார்ந்தொழுகினாரென்பது,*

'குண்டனாய்த் தலைபறித்துக் குவிமுலையார்
நகைநாணா துழிதர்வேனை'

*எனவும்,*

'அறந் தெரியா ஊத்தைவாய் அறிவில்சிந்தை
ஆரம்பக் குண்டரோ டயர்த்து நாளும்
மறந்தும் அரன் திருவடிகள் நினைய மாட்டா
மதியிலியேன்,

*எனவும்,*

'பெருகுவித் தென் பாவத்தைப் பண்டெலாங்
குண்டர்கள்தஞ் சொல்லேகேட்டு, உருகுவித்து'

*எனவும் அவர் சமண மதத்தை விட்டு நீங்கித் திருநாவுக்கரசராய் விளங்கியபோது கூறிய வாய்மொழிகளால் இனிது விளங்கும் தாம் குண்டர் குழுவிற் சேர்ந்திருந்த காலத்திற் சமண சமயத் துறவிகளாகிய அமணர்களை யாதரித்து அவர் பொருட்டுப் பெரும்பொருளையும் காலத்தையும் வீணே செலவிட்ட தன்மையினையும் குண்டர்குழுவினின்றும் தம்மைப் பிரித்து ஆட்கொண்ட பேரருளாளன் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானே என்பதனையும்,*

'குண்டாக்க னாயுழன்று கையிலுண்டு
குவிமுலையார் தம்முன்னே நாணமின்றி
உண்டியுகந்து அமணே நின்றார் சொற்கேட்டு
உடனாகி யுழிதந்தேன்'

எனவும்,

'பல்லுரைச் சமணரோடே பலபல காலமெல்லாஞ்
சொல்லிய செலவு செய்தேன்'

எனவும்,

'துறவியென் றவமதோரேன் சொல்லிய செலவு செய்து
உறவினால் அமணரோடும் உணர்விலேன்'

எனவும்,

'குண்டுபட்ட குற்றந் தவிர்த்தென்னையாட்
கொண்டு நற்றிறங் காட்டிய கூத்தனை'

எனவும்,

'குண்டரொடு பிறித்தெனையாட் கொண்டார்'

எனவும் வரும்தொடர்களால்தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். இங்ஙனம் தேவாரப்பதிகங்களிற் காணப்படும் குண்டர் அமணர் என்ற பெயர் வேறுபாடு, இப்பொழுதுள்ள சமண சமயத் தமிழ் நூல்களில் இருப்பதாகத் தோன்றவில்லை. எனவே அமணர் குண்டர் என்னும் இரு திறத்தார்க்குந் தனித்தனியே யுரிய ஒழுகலாறுகளின் வேறுபாட்டினை உணர்தற்கு இயலவில்லை.

திலகவதியார் திருவைந்தெழுத்தோதிக் கொடுத்த திருநீற்றினை அணிந்துகொண்ட மருள்நீக்கியார், தம் தமக்கை யாராகிய அவருடன் திருவதிகை வீரட்டானத் திருக்கோயிலை வலம்வந்து இறைவன் திருமுன்னர் நிலமிசை வீழ்ந்து பணிந்த பொழுது, சிவபெருமான் திருவருளால் உரைத்தமிழ் மாலை யாகிய பாமாலைகளைப் பாடும் உணர்வு அவர்க்குண்டாயிற் றென்பர் ஆசிரியர் சேக்கிழார். திருநாவுக்கரசர் இவ்வாறு இறைவ னருளால் தாம் பாமாலை பாடிப் போற்றும் பயிற்சிபெற்று உய்ந்த நிகழ்ச்சியை,

'நாயேன் முன்னைப்
பந்தமறுத் தாளாக்கிப் பணிகொண் டாங்கே
பன்னியநூல் தமிழ்மாலை பாடுவித்தென்
சிந்தைமயக் கறுத்த திரு வருளினானை'

எனவும்,

'பத்திமையாற் பணிந்தடியேன் தன்னைப் பன்னாள்
பாமாலை பாடப் பயில்வித்தானை'

எனவும் வரும் தொடர்களால் கசிந்துருகிப் போற்றியுள்ளமை இவண் நினைக்கத் தகுவதாகும்.

'கூற்றாயினவாறு விலக்ககிலீர்' என்ற முதற் குறிப்புடைய திருப்பதிகம், தீராத வயிற்றுநோயாகிய கடும் பிணியால் வருந்திய நிலையிற் பாடப்பட்டதென்பது,

'சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்'
'உடலுள்ளுறு சூலை தவிர்த்தருளீர்'
'வலிக்கின்றது சூலை தவிர்த்தருளீர்'

என இப்பதிகத்து வரும் வேண்டுகோளால் நன்கு விளங்கும். தம்மை வருத்திய கடும் பிணியாகிய சூலை நோயினை இறைவன் விரைவிற் போக்கியருளிய அருள் நிகழ்ச்சியை,

'சூலை தீர்த்தடியேனை யாட்கொண்டாரே' (6-96-3)

எனவும்,

'உடலுறுநோய் தீர்த்தென்னை யாட்கொண்டாரே' (6-96-6)

எனவும்,

'இடருறுநோய் தீர்த்தென்னையாட் கொண்டாரே' (6-96-11)

எனவும்,

'உறுபிணியார் செறலொழிந்திட் டோடிப் போனார்' (6-98-5)

எனவும் வரும் தொடர்களால் திருநாவுக்கரசர் தெளிவாக விளக்கியுள்ளமை காணலாம். இங்ஙனம் தமக்கையார் அருளால் சிவநெறியினை மேற்கொண்ட திருநாவுக்கரசர் சூலைதீர்ந்து இறைவன் திருவருளில் திளைத்த திறத்தினை,

புலனொ டாடித் திரிமனத்தவர்
பொறிசெய் காமத் துரிசடக்கிய
புனித நேசத் தொடுதமக்கையர்
புணர்வினாலுற் றுரைசெயக் குடர்
சுலவு சூலைப் பிணிகெடுத் தொளிர்
சுடுவெ ணீறிட் டமணகற்றிய
துணி வினான் முப்புரமெரித்தவர்
சுழலிலே பட்டிடுதவத்தினர்
..........................................................................
அரையதேவத் திருவடிக்களே.

என்ற பாடலில் நம்பியாண்டார் நம்பி நன்கு புலப்படுத்தி யுள்ளமை காண்க.

## ஏதிலார் செய்த வஞ்சனைகளை வென்று மீளுதல்

இவ்வாறு திருநாவுக்கரசர் சிவநெறியிற் சேர்ந்து வாழுந் திறத்தினைப் பாடலிபுரத்திலுள்ள சமணர்கள் கேள்வியுற்று மனம்பொறாராயினர். 'மாறுபட்ட பல சமயங்களையும் வாதில் வென்று நமது சமயத்தை நிலை நிறுத்திய தருமசேனர், தம்மைப் பற்றிய சூலைநோய் இங்கே ஒருவராலும் நீங்காமையால் உய்யும் நெறியை நாடித் திருவதிகையிற் சென்று முன்போலச் சைவராகிச் சூலைநோய் நீங்கி உய்ந்தனர். இனி நமது சமயம் அழிந்தது' என வருத்தமுற்று ஓரிடத்திலே ஒருங்கு கூடினார்கள். 'தருமசேனருக்கு வந்த சூலைநோய் நம் சமயத்தில் ஒருவராலும் நீங்காமல் அவர் சிவநெறியை மேற்கொண்டதனால் நீங்கிய இவ்வுண்மையை நம் வேந்தன்அறிந்தானாயின் நம்மை வெகுண்டு தானும் சைவனாகி நமக்கு நாடொறும் தந்துவரும் உணவு முதலிய வசதிகளையும் நிறுத்தி விடுவான். இனி இதற்கு நாம் யாது செய்வோம்' என்று சொல்லித் தமக்குள்ளே ஆராய்ந்து வஞ்சனையாகிய ஓர் உபாயத்தைத் தெரிந்து கொண்டனர். 'நம் சமணசமயத் தலைவராய்த் திகழ்ந்த தருமசேனர், தம் தமக்கையராகிய திலகவதியார் சைவசமயத்தை மேற்கொண்டிருத்தலால் தாமும் அவர்போல் ஆக விரும்பித் தமக்குச் சூலைநோய் வந்ததாகப் பொய்யே காட்டி அந்நோய் நம்மால் தீர்ந்திலதெனப் பொய் கூறி இங்கு நமக்கு இகழ்ச்சி யுண்டாகத் தம் தமக்கையாரிடத்திற் சென்று சைவராகி நம் சமயத் தெய்வத்தையும் இகழ்ந்துரைத்தனர்' என்றதொரு பொய் வழக்கினைச் சித்திரித்து வேந்தனிடம் முன்னமே சென்று முறையிடுவதே செய்யத்தக்கதெனத் துணிந்தார்கள்.

இங்ஙனம் முடிவுசெய்து கொண்ட அடிகள்மாராகிய அவரெல்லோரும் பல்லவவேந்தனது தலைநகரில் வந்தடைந் தார்கள். அரண்மனையினுள்ளே புகுந்து அரசனை நோக்கி, 'அரசே, எங்களுக்குத் தலைவராய் இருந்த தருமசேனர், தமக்குச் சூலைநோய் வந்ததெனப் பொய் கூறிச் சைவராகி நின் சமயத்தை ஒழித்தார்' என்று கூறினார்கள். அவ்வுரை கேட்டுச் சினமுற்ற பல்லவமன்னன், 'குற்றமிகுந்த உள்ளமுடையவராய்த் தம் சமயத் தைச் சார்தற் பொருட்டு இவ்வாறு சூலைநோய் வந்ததாகப் பொய்கூறிப் புகழ்மிக்க நம் சமயத்தை இகழ்ந்து சிதைத்தல் முறையாமோ? எல்லையற்ற தவமுடைய அடிகளே இத்தகைய குற்றத்திற்கு நம்மால் தரப்படுந் தண்டம் யாது?' என வெகுண்டு வினவினான். அதுகேட்ட சமணர்கள், கொல்லாமையாகிய நல்லறத்தினை மேற்கொண்டு நடிக்கும் இயல்பினராதலின், 'உயர்ந்த நெறியாகிய நமது சமயத்தை அழித்து அரச நீதியாகிய

நின்னுடைய ஆணையையுங்கடந்த பொறியிலியாகிய அவனை நீ தண்டித்து ஒறுத்தல் வேண்டும்' என்றனர். அப்பொழுது பல்லவ மன்னன் தன் அமைச்சர்களை நோக்கி 'இம்முனிவர் களாற் சுட்டப்பட்ட தீயோனைப் பிடித்து என்பாற்கொண்டு வாருங்கள்' எனப் பணித்தான்.

அரசனது பணியினை மேற்கொண்ட அமைச்சர்கள் சேனை வீரருடன் திருவதிகையை நோக்கிச் சென்று சிவனடியா ராகிய திருநாவுக்கரசரையடைந்து 'ஐயன்மீர், நும்மை அழைத்து வரும்படி எம்மை அரசன் ஏவினான்' என்றுரைத்தனர். அது கேட்ட திருநாவுக்கரசர், 'தனக்குவமையில்லாத தலைவனாகிய சிவபெருமானுக்கு மீளா ஆளாய் அவன் திருவடிகளை இடைவிடாது சிந்திக்கும் இயல்புடைய நாம், இவ்வுலகில் வேந்தர் யார்க்கும் குடியாக அடங்கி வாழும் எளிமையுடையோ மல்லோம். இறப்பதனுக்கு ஒரு சிறிதும் அஞ்சோமாதலால் நமனைக்கண்டு சிறிதும் அஞ்சோம். வஞ்சனை பொய் முதலிய குற்றங்கள் அற்றோமாதலின் நரகத்தில் துன்புறோம். இவ்வுலகில் எந்நாளும் இன்பமேயன்றித் துன்பமில்லை. ஆதலால் யாம் அரசனால் அழைக்கப்படும் எளிமையுடையோமல்லோம்' என அமைச்சர்களுக்கு மறுமாற்றம் உரைக்கு முகமாக,

நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலையில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம்
இன்பமே எந்நாளுந் துன்பமில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான
சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்று மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே

எனவரும் திருத்தாண்டகத் திருப்பதிகத்தினைத் திருவாய் மலர்ந்தருளினார். இதனால் இத்திருப்பதிகம் மறுமாற்றத் திருத் தாண்டகம் என்னும் பெயர்த்தாயிற்று. இதன்கண் திருநாவுக் கரசர், தாம் இவ்வுலக வாழ்க்கையில் எத்தகைய தொடர்புமின்றித் தேவாதிதேவனாகிய சிவனொருவனையே சிந்தித்து அவனடி யார்களுக்குத் தொண்டுபட்டு வாழும் உறுதிப்பாட்டினையும் எத்தகைய குற்றமில்லாத தாம் மண்ணாள் வேந்தராகிய எவர்க்கும் அஞ்சவேண்டுவதில்லை யென்பதனையும் தெளிவாக அறிவுறுத்தியுள்ளார். உயர்ந்த ஆடைகளையுடுத்துப் பொன்னும் மணியினுமாகிய அணிகலன்களைப்பூண்டு இவ்வுலகத்தை ஆட்சி புரிந்து பட்டத்து யானைமேல் உலாப்போதும் மன்னரது சொல்வழியடங்கிப் பணிந்தொழுகும் கீழ்மைநிலை எம்ம னோர்க்கு இல்லை என்பார்,

'துகிலுடுத்துப் பொன்பூண்டு திரிவார் சொல்லும்
சொற்கேட்கக் கடவோமோ துரிசற்றோமே'

என்றும்,

'பாராண்டு பகடேறி வருவார் சொல்லும்
பணிகேட்கக் கடவோமோ பற்றற்றோமே'

என்றும் கூறினார். நும்மை அனுப்பியவன் தொண்டை நாட்டினை ஆளும் பல்லவவேந்தன். அவனேயன்றி இந்நாவலந்தீவு முழு வதையும் தன்னடிப்படுத்திய வேந்தர் வேந்தனே நும்மை எம்பால் விடுத்தானாயினும் யாம் அவனைப் பொருளாக மதிக்க மாட்டோம் என்பார்,

"நாவலந்தீவகத்தினுன்கு நாதரான
காவலரே யேவி விடுத்தாரேனும்
கடவமலோம் கடுமையொடுகளவற்றோமே"

என்றார். சமண சமயத் தொடர்பினின்றும் நீங்கிச் சிவனருளில் திளைக்கும் திருநாவுக்கரசர், உலகியற்றொடர்பினை அறவே மறந்த நிலையில்அமைச்சர்களை நோக்கி, 'நின்றுண்பார் எம்மை நினையச் சொன்ன வாசகமெல்லாம் மறந்தோமன்றே வந்தீரார் மன்னவனாவான்றான் ஆரே' என வினவுவதும்,

'உம்மோடு மற்றும் உளராய் நின்ற, படையுடையான் பணி
கேட்கும் பணியோமல்லோம் பாசமற வீசும்படி யோம்நாமே'

எனவும்,

'தேவாதி தேவன் சிவனென் சிந்தை
சேர்ந்திருந்தான் தென்றிசைக்கோன் தானேவந்து
கோவாடிக் குற்றேவல் செய்கென்றாலுங்
குணமாகக் கொள்ளோம் எண்குணத்துளோமே'

எனவும் தமது நிலையைப் புலப்படுத்துவதும்ஆகிய குறிப்புக்களை ஊன்றி நோக்குங்கால், மறுமாற்றத் திருத்தாண்டகமாகிய இத்திருப்பதிகம், அரசனது ஏவலால் தம்மை அழைக்கப் படையுடன் வந்த மந்திரிகளை நோக்கித் திருநாவுக்கரசராற் பாடப் பெற்றதென்பது நன்கு புலனாம்.

திருநாவுக்கரசரது மறுமாற்றத்தினைக் கேட்ட அமைச்சர்கள், அவருடைய திருவடிகளை வணங்கி நின்று, 'பெருந்தகையீர் அரச தண்டத்தினின்றும்யாங்கள் உய்யுமாறு தாங்கள் எம்முடன் வந்தருள வேண்டும்' என வேண்டிக் கொண் டார்கள். அவர்களது வேண்டுகோட்கிணங்கிய திருநாவுக்கரசர் 'ஈண்டு வரும் வினைத் துன்பங்களைப் போக்குதற்கு எம் இறைவனாகிய சிவ பெருமானுளன்' என்னும் உறுதியுடையராய் அமைச்சர்களுடன் சென்றார். அமைச்சர்கள், திருநாவுக்கரசரை

அழைத்து வந்த செய்தியைப் பல்லவ மன்னனுக்குத் தெரிவித்தார்கள். பல்லவன், தன் பக்கத்திலுள்ள சமணர்களை நோக்கி 'இவனுக்குரிய தண்டனை யாது' என வினவினான். அதுகேட்ட சமணர்கள், திருநாவுக்கரசரை நீற்றறையிலிடுதல் வேண்டும் எனக் கூறினார்கள். அரசன் பணித்த வண்ணம் ஏவலாளர் திருநாவுக்கரசரை வெம்மைமிக்க நீற்றறையினுள்ளே அடைத்துத் தாளிட்டுப் பூட்டினார். நீற்றறையுட் புக்க நாவுக்கரசர், தில்லையம்பலத்தில் தாண்டவம் புரியும் தம்பிரானது திருவடி நீழலைத் தலைக்கொண்டு 'ஈசனடியார்க்கு ஈண்டுவரும் துயருளவோ' எனச் சிவபெருமானைத் தியானித்து வழிபட்டு இருந்தார். தன்கண் சார்ந்தாரது உடம்பினை வெந்தொழியச் செய்யும் வெம்மை மிக்க அந்நீற்றறையானது, இவ்வேனிற் பருவத்திலே மதிநிலா வெறிக்கும் மாலைப் பொழுதிலே தென்றலாகிய மென்காற்று வீசும் செங்கழுநீர்த் தடாகம் போன்று குளிர்ச்சியுடையதாய் இனிய யாழொலியினதாய் இறைவன் திருவடிநீழலாகிய அருளின் நீர்மையதாய்த் திருநாவுக்கரசர்க்குப் பேரின்பம் தருவதாயிற்று. ஆனந்த வெள்ளத்தினிடை மூழ்கி அம்பலவர் திருவடித்தாமரையின் அருளாரின்பத்தேனமுதுண்டு தெளிவெய்திய திருநாவுக்கரசர், தம் திருமேனிக்கு எத்தகைய துன்பமுமின்றி இனிதமர்ந்திருந்தார்.

கருவிகரணங்களின் ஆற்றலைத் தடைப்படுத்திச் சிதைக்கும் வெம்மை மிக்க நீற்றறையிலே, திருநீறாகிய கவசமணிந்து சிவனடியே சிந்திக்குஞ் சித்தராய் எத்தகைய துன்பமுமின்றித் திருநாவுக்கரசர் இனி தமர்ந்திருந்த இவ்வற்புத நிகழ்ச்சியை,

**'சிவசம்பத்திடைத் தவஞ்செய்து**
**திரியும் பத்தியிற் சிறந்தவர்**
**திலகன் கற்றசிட்டன் வெந்தொளிர்**
**திகழும் பைம்பொடித்தவண்டணி**
**கவசம் புக்குவைத் தரன் கழல்**
**கருதுஞ் சித்தனிற் கவன்றிய**
**கரணங் கட்டுதற்கடுத்துள்ள**
**களகம் புக்கநற் கவந்தியன்'**

எனவரும் தொடரால் நம்பியாண்டார் நம்பி தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு திருநாவுக்கரசர் நீற்றறையினுள்ளே இறைவனது திருவடிநீழலெனை இன்புற்றமர்ந்த பொழுது,

**மாசில் வீணையும் மாலைமதியமும்**
**வீசு தென்றலும் வீங்கிளவேனிலும்**
**மூசுவண்டறை பொய்கையும் போன்றதே**
**ஈசனெந்தை யிணையடி நீழலே.**

எனத் தொடங்கும் திருக்குறுந்தொகைத் திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினாரென்பர் பெரியோர்.

> **வெய்யநீற் றறையதுதான் வீங்கிளவேனிற்பருவம்**
> **தைவருதன்‌ தென்றலணை தண்கழுநீர்த் தடம்போன்று**
> **மொய்யொளிவெண் ணிலவலர்ந்து முரன்றயா ழொலி யினதாய்**
> **ஐயர் திருவடிநீழல் அருளாகிக் குளிர்ந்ததே.**

எனவும்,

> **மாசில்மதி நீடுபுனல் மன்னிவளர் சென்னியனைப்**
> **பேச இனியானை யுலகாளுடைய பிஞ்ஞகனை**
> **ஈசனை யெம்பெருமானை எவ்வுயிருந் தருவானை**
> **ஆசையி லாராவமுதை அடிவணங்கி யினிதிருந்தார்.**

எனவும் வரும் சேக்கிழார் வாய்மொழிகளில் மாசில் வீணையும்' என்ற இத் திருக்குறுந்தொகையில் சொல்லும் பொருளும் எடுத்தாளப் பெற்றமை இங்கு நினைக்கத் தகுவதாகும்.

ஏழு நாட்கள் சென்றபின் பல்லவ மன்னன் சமணர்களை அழைத்து 'நீற்றறையைத் திறந்து பாருங்கள்' என்றான். அவர்கள் நீற்றறையைத் திறந்தபொழுது அதனுள்ளே திருநாவுக்கரசர் எத்தகைய துன்பமுமின்றி இனிதிருத்தலைக்கண்டு தமக்குள்ளே வியந்தனர். எனினும் அரசனிடத்திற்சென்று 'அரசே, அவன் முன்னே நம்முடைய சமயத்தில் இருந்து பெற்ற மந்திரவலிமை யினாலே வேவாமற் பிழைத்திருந்தான். இனி அவனுக்கு நஞ்சூட்டுவதே தகும்' எனக் கூறினார்கள். அரசனும் 'அவ்வாறே செய்யுங்கள்' எனப் பணித்தான். சமணர்கள் வஞ்சனையால் நஞ்சு கலந்த பாலடிசிலை நாவுக்கரசர்க்கு உண்ணத் தந்தார்கள். இறைவனது திருவைந்தெழுத்தை இரவும் பகலும் மறவாதோதும் மாண்புடைய திருநாவுக்கரசர், சமணர்களது வஞ்சனையைத் தெரிந்து கொண்ட நிலையிலும் 'நாதனடி யார்க்கு நஞ்சமும் அமுதாம்' என்று கூறி, நஞ்சுகலந்த பாலடி சிலை உண்டு இறைவனருளால் எத்தகைய தீங்குமின்றி இனிதிருந்தார்.

கண்ணோட்டமின்றி அமணர் தந்த கொல்லுமியல்பின தாகிய கொடிய நஞ்சினையும் விரும்பியுண்ணத் தக்க நல்ல அமிழ்தமாக மாற்றியருளிய சிவபெருமானது பேரருட்டிறத்தை,

> **துஞ்சிருள் காலை மாலை தொடர்ச்சியை மறந்திராதே**
> **அஞ்செழுத் தோதின் நாளும் அரனடிக் கன்பதாகும்**
> **வஞ்சனைப் பாற்சோறாக்கி வழக்கிலா அமணர் தந்த**
> **நஞ்சமு தாக்குவித்தார் நனிபள்ளியடிகளாரே.**

எனவரும் திருநேரிசையில் திருநாவுக்கரசடிகளார் தெளிவாகக் குறிப்பிட்டுப் போற்றியுள்ளமை காண்க. இவ்வாறு பெயக்

கண்டும் நஞ்சுண்டமைந்த நனி நாகரிகராகிய நாவுக்கரசரது பண்புடைமையினை 'விடம்அடையார் இட ஒள் அமுதாத் துற்றவன்' எனவரும் தொடரால் நம்பியாண்டார் நம்பி நன்கு புலப்படுத்தியுள்ளார்.

நஞ்சினை உண்டும் உயிர் பிழைத்திருந்த நாவுக்கரசரைக் கண்ட சமணர்கள் 'இவனுக்கு நஞ்சமும் அமுதாயிற்று. இனி இவன் பிழைப்பானாகில் நமக்கெல்லாம் நாசமே' என்று நடுக்கமுற்றனர். அரசனிடத்திற் சென்று 'நாம் நஞ்சு கலந்து உண் பிக்கவும் நமது சமயத்திற் கற்றுக்கொண்ட மந்திர வன்மை யினால் நஞ்சு தன்னைக் கொல்லாதபடி' தடுத்துவிட்டான். அவன் இறவாதிருப்பனாயின் எம்முடைய உயிரும் நினது அரசாட்சியும் அழிவது திண்ணம்' என முறையிட்டார்கள். அவ்வுரை கேட்ட பல்லவன் 'இனி அவனைக் கொல்லுதற்குரிய உபாயம் யாது' என வினவினான். 'நின் பட்டத்து யானையைக் கட்டவிழ்த்து அவனுக்கெதிரே விடுவதே செய்யத் தகுவது, என்று சமணர்கள் கூறினார்கள். அரசனும் அங்ஙனமே செய்யப் பணித்தான். கொடியோர், திருநாவுக்கரசர்க்கு எதிரே சினமிக்க மதயானையைக் கட்டவிழ்த்துவிட்டார்கள். திருநாவுக்கரசர், தன்மேல் யானை வரக்கண்டும் சிறிதும் அஞ்சாது சிவபெரு மானைத் தியானித்து அவ்யானையை நோக்கி 'நாம் எல்லா முடைய இறைவர்க்குச் சுற்றத்தார்களாகிய தொண்டர் களாவோம். ஆதலால் யாதொன்றுக்கும் அஞ்சவேண்டுவ தில்லை. இனி யாம் அஞ்சும்படி வருவதாகிய இடையூறெதுவு மில்லை' என அறிவுறுத்தும் கருத்துடன்,

**சுண்ணவெண் சந்தனச் சாந்தும் சுடர்த்திங்கட் சூளாமணியும்**
**வண்ணவுரிமை யுடையும் வளரும் பவள நிறமும்**
**அண்ணலரண் முரணேறும் அகலம்வளாய அரவும்**
**திண்ணன் கெடிலப் புனலும் உடையாரொருவர் தமர்நாம்**
**அஞ்சுவதி யாதொன்றுமில்லை அஞ்ச வருவதுமில்லை.**

எனத் தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடத்தொடங்கி ஒவ்வொரு திருப்பாட்டிறுதியிலும், கெடிலப் புனலும் உடையாரொருவர் தமர் நாம், அஞ்சுவது யாதொன்றுமில்லை. அஞ்ச வருவது மில்லை' என்றுபாடியருளினார். கண்டோர் அஞ்சும்படி அங்கு வந்த யானையானது, அன்புருவாகிய திருநாவுக்கரசரை வலஞ் செய்து அவர்க்கெதிரே நிலத்தில் தாழ்ந்து இறைஞ்சி அவ்விடத்தை விட்டு அகன்றது.

இவ்வாறு சமணர்களால் ஏவப்பட்டுத் தம்மைக் கொல்ல வந்த மதயானை இறைவனருளால் தம்மைக்கொல்லாது மீண்ட தகைமையினைப் பின்னொரு காலத்து நினைந்து உளமுருகிய திருநாவுக்கரசர், மக்களனைவரும் இறைவன் திருவருளைத்

துணையென நம்பி எத்தகைய இடையூறுகளுக்கும் மனங் கலங்காது அச்சமின்றி வாழ்தல் வேண்டுமென்னும் பெருவிருப்பு டையராய், உலக மக்களை நோக்கி 'மக்களே நும் தலைமேல் மலையே வந்து வீழ்ந்தாலும் நீங்கள் நின்ற நிலையினின்றும் ஒரு சிறிதும் கலங்காதிருப்பீராக, எல்லாவுலகுக்கும் தலைவனாகிய சிவபெருமானுடைய சுற்றத்தாராகிய அடியார்களைக் கொலை செய்தலையே தொழிலாகவுடைய மதயானையும் கொன்றிட வல்லதோ? (கொல்லவல்லதன்று)' எனத் தம் அநுபவ வாயிலாக உணர்ந்த உண்மையினை,

> **மலையே வந்து விழினும் மனிதர்காள்**
> **நிலையினின்றும் கலங்கப் பெறுதிரேல்**
> **தலைவானகிய ஈசன் தமர்களைக்**
> **கொலைசெய் யானைதான் கொன்றிடுகிற்குமே.**

எனவரும் திருப்பாடலில் அறிவுறுத்தியுள்ளார். கொல்லுதற் பொருட்டுத் தம்மேல் ஏவப்பட்ட மதயானை இறைவனருளால் தம்மைக் கொல்லாது மீண்ட செய்தியினை இத்திருப்பாடலால் திருநாவுக்கரசர் குறிப்பாக வெளியிட்டருளியதிறம் நினைந்து மகிழத்தக்கதாகும்.

திருநாவுக்கரசரைக் கொல்லாது வணங்கி வலம் வந்து திரும்பிய பட்டத்துயானையைப் பாகர்கள் மீண்டும் அங்குசத்தினாற் குத்தி அவர்மேற் செலுத்தினர். அப்பொழுது அவ்யானை உடன் வந்த பாகர்களைக் கொன்று வீழ்த்திச் சமணர்கள் மேற்சென்று அவர்களிற் சிலரை மிதித்து வருத்தி அங்குள்ளோர் யாவர்க்குந் தீராக்கவலையை யுண்டாக்கிற்று. அங்கிருந்து ஓடித் தப்பிப் பிழைக்க சமணர்கள், மானமிழந்து வருந்தி மன்னனையடைந்து 'தருமசேனன் என்பான், நம் சமயத்திலிருந்து கற்றுக்கொண்ட மந்திர வலியினாலே நாம் ஏவிய யானையைக் கொண்டே நம் வலிமையைச் சிதைத்து மன்னனாகிய நினது புகழுக்கும் இழி வினையுண்டாக்கினான்.' எனக் கூறிப் புலம்பினார்கள். அரசன் சினமுற்று 'இனி அவனுக்குச் செய்தற்குரிய தண்டனை யாது' என வினவினான். அது கேட்ட சமணர்கள் 'அவனைக் கல்லொடு சேர்த்துக் கயிற்றினாற் கட்டிக் கடலில் தள்ளுக' என்றனர். அக்கொடுந்தொழிலுக்கு உடன்பட்ட பல்லவன், கொலைத் தொழிலாளரை நோக்கி 'தீங்கு புரிந்த தருமசேனனைக் காவலொடும் கொண்டு சென்று கருங்கல்லோடு சேர்த்துக் கயிற்றாற் பிணித்துப் படகிலேற்றிச் சென்று கடல் நடுவே தள்ளிவிடுங்கள்' எனக் கட்டளையிட்டான். அரசனது ஆணையினை மேற்கொண்ட ஏவலாளர், சமணர்கள் தம்முடன் வர அரசன் பணித்தவண்ணம் திருநாவுக்கரசரை அழைத்துச் சென்று கல்லோடு பிணித்துப் படகிலேற்றிக் கடல் நடுவிலே

தள்ளிவிட்டுத் திரும்பினார்கள். உறைப்புடை மெய்த் தொண்டராகிய திருநாவுக்கரசர், 'எப்பரிசாயினும் ஆக இறைவனையேத்துவேன்' என்னுங் கருத்துடையராய்ச் சிவபெருமானது திருப்பெயராகிய திருவைந்தெழுத்தினைத் துதிப்பார்,

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணையாவது நமச்சி வாயவே.

எனத் தொடங்கும் நமச்சிவாயத் திருப்பதிகத்தினைப்பாடிப் போற்றினார். எல்லாத் துன்பங்களையும் போக்கவல்லது இறைவனது திருவைந்தெழுத்தே யெனத் திருநாவுக்கரசர் இத் திருப்பதிகத்தைப் பாடிப் போற்றியபொழுது அவரோடு பிணிக்கப்பட்டுக் கடலில் தள்ளப்பட்ட கருங்கல்லானது கடல் மேல் மிதப்பதாயிற்று. அக்கல்லிற் கட்டப்பட்டிருந்த கயிறும் அஃறுந்தொழிந்தது. அந்நிலையில் அக் கருங்கல்லே தெப்பமாக அமைய, அதன் மேல் திருநாவுக்கரசர் இனிதுஅமர்ந்திருந்தார். கடலின் தெய்வமாகிய வருணன், முற்செய்தவத்தால் அலைகளாகிய கைகளால் கல்லே சிவிகையாக வாகீசரைத் தாங்கிக் கொண்டு திருப்பாதிரிப்புலியூரின் மருங்கே கொண்டு வந்து சேர்த்தனன். கடலினின்றும் கரையேறிய திருநாவுக்கரசர், திருப்பாதிரிப் புலியூரிற் சிவனடியார்கள் மகிழ்ந்து எதிர் கொள்ளத் தமக்குத் தோன்றாத் துணையாய் இருந்து இன்னருள் சுரக்கும் தம்பிரானாரைத் திருப்பாதிரிப்புலியூர்த் திருக்கோயிலிற் சென்று வணங்கினார்.

ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாயுடன் றோன்றினராய்
மூன்றாயுலகம் படைந்துகந்தான் மனத் துள்ளிருக்க
ஏன்றான் இமையவர்க் கன்பன் திருப்பாதிரிப்புலியூர்த்
தோன்றாத் துணையாய் இருந்தனன் தன்னடியோங்களுக்கே,

என்று தொடங்கும் திருப்பதிகத்தைப்பாடிப் போற்றினார்.

'சொற்றுணை வேதியன்' எனத் தொடங்கும் நமச்சிவாயத் திருப்பதிகம் சமணர்கள் கல்லொடு பிணித்துக் கடலில் தள்ளிய போது திருநாவுக்கரசடிகளால் அருளிச் செய்யப்பெற்ற தென்பது,

'கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சிவாயவே'

என அப்பதிகத்தொடக்கத்தில் அடிகள் தெளிவாகக் குறிப்பிடுதலால் நன்கு விளங்கும். அன்றியும் தாம் கடலில் தள்ளப்பட்ட நிலையில் கடலிலிருந்து கரையேறும்படி இறைவனது திருவருள் தமக்குத் துணைபுரிந்ததென்னும் உண்மையினை,

'நெடுநீரி னின்றேற நினைந்தருளி, ஆக்கினவா றடியேனை'

எனவும்,

'நெடுநீரி னின்றேற நினைந்தருளி, உருக்கின வாறடியேனை'

எனவும் வரும் தொடர்களால் அடிகள் குறிப்பாகப் புலப்படுத்தி யுள்ளார். சமணர்கள் கல்லோடு பிணித்துத் தம்மைக் கடலில் வீழ்த்தியபோது தாம் சிவபெருமானது திருப்பெயராகிய திருவைந்தெழுத்தை ஓதிக் கரையேறி உய்ந்த செய்தியினை,

கல்லி னோடெனைப் பூட்டி அமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்கவென் வாக்கினால்
நெல்லு நீள் வயல் நீலக் குடியரன்
நல்ல நாமம் நவிற்றியுய்ந்தே னன்றே.

எனவருந் திருப்பாடலில் திருநாவுக்கரசடிகளார் தெளிவாக எடுத்துரைத்துள்ளமை காணலாம்.

இவ்வாறு திருநாவுக்கரசர் 'சொற்றுணை வேதியன்' எனத்தொடங்கும் நமச்சிவாயத் திருப்பதிகத்தினைப் பாடிக் கல்லே புணையாகக் கரையேறிய அற்புத நிகழ்ச்சியைத்

'தெண் கடலிற் பிணியன கல்மிதப்பித்தன........
நாவுக்கரசர் பிரான்றன் அருந்தமிழே' (25)

எனத் திருத்தொண்டர் திருவந்தாதியிலும்,

'நெற்றுணையின் மிதவாமல் கற்றுணையில் வரும் ஆதி' (6)

என ஏகாதச மாலையிலும் நம்பியாண்டார் நம்பி குறிப்பிட்டுப் போற்றியுள்ளார். 'நல்வினை தீவினைகளாகிய இருவகைக் கயிற்றினால் மும்மலமாகிய கற்களுடன் பிணிப்புண்டு பிறவிப் பெருங்கடலில் வீழ்ந்து கரைகாணாது வருந்தும் அறிவிலா மக்களை அத்துன்பக் கடலினின்றும்எடுத்து இறைவன் திருவடிகளாகிய இன்பக்கரையிற் சேர்க்க வல்ல திருவைந்தெழுத்து, இருவினைப் பாசமும் அற்று இறைவன் திருவடி நிழலே சரணெனக் கொண்ட தெளிந்த பேரறிவினராய் திருநாவுக்கரசரை, வலைஞர்களாற் சிறிய படகின் துணைகொண்டு கடத்தற்குரிய இக்கருங் கடலில் ஒரு கல்லின் மேல் மிதக்கச் செய்து, கரையேற்றிய இச்செய்தி வியந்துரைத்தற்குரியதோ' எனச் சேக்கிழார் இவ் வற்புத நிகழ்ச்சியை உளமுருகிப் போற்றியுள்ளார்.

இதுகாறும் எடுத்துக்காட்டிய குறிப்புக்களால் சமணர்கள் திருநாவுக்கரசரை நீற்றறையில் அடைத்தும் நஞ்சு கலந்த பாலடிசிலை வஞ்சனையால் உண்பித்தும்யானையால் இடரச்செய்தும் கல்லோடு பிணித்துக் கடலில் பாய்ச்சியும் செய்த தீமைகளை யெல்லாம் திருநாவுக்கரசடிகளார் சிவபெருமான் திருவருட்

டுணையால் கடந்து உய்ந்த நிகழ்ச்சிகள் அவர் திருவாய்மலர்ந் தருளிய திருப்பாடல்களாகிய அகச்சான்றுகளாலும், அவரைப் போற்றிய நம்பியாண்டார்நம்பி, சேக்கிழாரடிகள் முதலிய பெருமக்களின் வாய்மொழிகளாலும் நன்கு வலியுறுத்தப் பெற்றமை காணலாம்.

தோன்றாத் துணையாயிருந்து தம்மைக் கடலினின்றுங் கரையேற்றிய சிவபெருமானைத் திருப்பாதிரிப்புலியூரில் வழி பட்டிருந்த திருநாவுக்கரசர், திருவதிகை வீரட்டானத்தில் எழுந்தருளிய பெருமானை இறைஞ்சி மகிழவேண்டும் என்னும் பெருவேட்கை யுடையராய்த் திருமாணிகுழி, திருத்தினைநகர் ஆகிய தலங்களை வணங்கித் திருக்கெடில் நதியைக் கடந்து சென்றார். சமணர்கள் செய்த இடர்களை யெல்லாம் இறைவ னருளால் வென்ற திருநாவுக்கரசர் அங்கு எழுந்தருளதலைக் கேள்வியுற்ற திருவதிகை மாந்தர் அனைவரும் நகரை அலங் கரித்து மங்கல வாத்தியம் முழங்க வாகீசரை எதிர்கொண்டு போற்றினார்கள். தூய்மை தரும் வெண்ணீறணியப் பெற்ற பொன்மேனியும், இறைவனது திருவடையாள மாலையாகிய தாழ்வடமும், இறைவன் திருவடிகளை மறவாத சிந்தையும், நெஞ்சமும் நெக்குருகி வெள்ளம் பாய்வதுபோல் அன்பு நீர் பொழியும் கண்களும், திருப்பதிகமாகிய பாமாலை பொருந்திய மலர்போலுஞ் சிவந்த திருவாயும் உடையவராய்த் திருநாவுக் கரசர் திருவதிகை வீதியுள்ளே புகுந்தருளினார். அவரைக் கண்ட மாந்தர்கள் 'கருணையே யுருவான இப்பெருந்தகையாரை நேரிற்கண்டும் சமணர்கள் தீங்கு விளைவிக்கச் செற்றங் கொண்டது எவ்வாறு' என்று கூறித் தொழுது போற்றினார்கள். ஆளுடைய அரசர் திருவதிகை வீரட்டானத் திருக்கோயிலிற் புகுந்து 'திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளை வணங்கிநின்று, தாம் முன்னர்ச் சமண சமயத்திற் சார்ந்தொழுகிய காலத்திற் சிவ பெருமானைப் போற்றாது இகழ்ந்திருந்த தமது அறியாமைக்குப் பெரிதும் வருந்தி,

வெறிவிரவு கூவிளநற் றொங்கலானை
வீரட்டத்தானை வெள்ளேற்றினானைப்
பொறியரவி னானைப் புள்ளூர்தியானைப்
பொன்னிறத்தினானைப் புகழ்தக்கானை
அறிதற் கரியசீர் அம்மான்றன்னை
அதியரைய மங்கை அமர்ந்தான்றன்னை
எறிகெடிவத்தானை இறைவன் றன்னை
ஏழையே னான்பண் டிகழ்ந்த வாறே.

எனத்தொடங்கும் திருத்தொண்டகத் திருப்பதிகத்தைப் பாடிப் பரவினார். இதன் கண் தெய்வங்கொள்கையில் தெளிவு பிறவாத

சமணர்களுடன் கூடித் தமது வாழ்நாளை வீணே கழித்த எளிமையை நினைந்து ஆளுடையவரசர் பெரிதும் மனங் கலங்கின்றார்.

உறிமுடித்த குண்டிகைதங் கையிற்றூக்கி
ஊத்தைவாய்ச் சமணர்க்கோர் குண்டாக்கனாய்க்
கறிவிரவு நெய்சோறு கையிலுண்டு
கண்டார்க்குப் பொல்லாத காட்சியானேன்
மறிதிரை நீர்ப் பவ்வநஞ் சுண்டான்றன்னை
மறித்தொருகால் வல்வினையேன் நினைக்கமாட்டேன்
எறிகெடில நாடர் பெருமான் றன்னை
ஏழையே னான்பண் டிகழ்ந்த வாறே.

எனத் தாம் முன்னாளில் சமண சமயத்திற் சார்ந்தொழுகிய போது சிவபெருமானை நினையாத தமது அறியாமையை எடுத்துக்கூறி யிரங்குகின்றார். இவ்வாறு திருநாவுக்கரசர் தமது ஏழ்மையை நினைந்து வருந்திப் பாடினமையால் இப்பதிகம் ஏழைத்திருத்தாண்டகம் என்னும் பெயருடையதாயிற்று. இதனால் நாவுக்கரசர் தமது வாழ்நாளின் முற்பகுதியில், சமண சமயத்தைச் சார்ந்தொழுகியவரென்பதும் பின்பு சிவனருளால் சைவ நெறியை மேற்கொண்டவ ரென்பதும் இனிது விளங்குதல் காணலாம்.

சமணர்களது சொற்கேட்டுத் திருநாவுக்கரசரைப் பலவாறு துன்புறுத்திய பல்லவ மன்னன், தான் செய்த துன்பங்களை யெல்லாம் வென்றேறிய திருநாவுக்கரசரது பெருமையினைக் கேள்வியுற்றான். தன்னுடைய பழவினைகளாகிய பாசம் நீங்கப் பெற்றமையால் அல்லல் நீங்கித் திவதிகைப் பதியையடைந்து திருநாவுக்கரசர் திருவடிகளை இறைஞ்சிச் சிவநெறியை மேற் கொண்டான். மெய்யுணர்வு கைவரப் பெற்ற காடவனாகிய அம் மன்னன் சமணர் அறிவுறுத்திய நெறி பொய்யென்று உணர்ந்து பாடலிபுத்திரத்திலிருந்த பள்ளிகளையும் பாழிகளையும் இடித்துத் தகர்த்து அவற்றிலுள்ள கற்களைக் கொணர்ந்து திருவதிகையிலே சிவபெருமானுக்குக் 'குணதர வீச்சரம்' என்னுந் திருக்கோயிலை அமைத்து இறைவனை வழிப்பட்டனன் எனப் பெரிய புராணம் கூறும். இங்ஙனம் முன்பு சமணர் சொற்கேட்டுத் திருநாவுக்கரசருக்குப் பலவகை இன்னல்களைச் செய்து, பின்பு அவரது பெருமையுணர்ந்து அவர் திருவடிகளைப் பணிந்து சைவனாகிய பல்லவ மன்னன், கி.பி. 600 முதல் 625 வரை காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு தொண்டை நாட்டை ஆட்சி புரிந்த பெருவேந்தனாகிய மகேந்திரவர்ம பல்லவனே யென்பது வரலாற்றாய்ச்சியாளர் கணிப்பாகும்.

## சூலக்குறி இடபக்குறி பொறிக்கப் பெறுதல்

திருவதிகையில் திருவீரட்டானத் திறைவர்க்குத் தொண்டு புரிந்திருந்த திருநாவுக்கரசர், சிவபெருமான் எழுந்தருளிய திருத் தலங்கள பலவற்றையும் வழிபட விரும்பினார். திருவதிகையி லிருந்து புறப்பட்டுத் திருவெண்ணெய் நல்லூர், திருவாமாத்தூர், திருக்கோவலூர் முதலிய தலங்களை வணங்கித் திருப்பெண்ணா கடத்தையடைந்தார். அங்குத் தூங்கானை மாடம் என்னுந் திருக் கோயிலில் வீற்றிருக்கும் சிவபெருமானைத்தொழுது 'எம் பெருமானே, புன்மை மிக்க நெறியாகிய சமண சமயத்தில் தொடக்குண்டு வருந்திய இவ்வுடம்புடனே இனி உயிர் வாழ்ந்திருக்கத் தரியேன். அடியேன் இவ்வுடம்பினைப் பொறுத்திருப்பதற்கு இசைவாக நின்னுடைய சூலமும் இடபமும் ஆகிய இலச்சினையை என்மேற் பொறித்தருள வேண்டும்' என விண்ணப்பித்துக் கொள்ளும் முறையில்,

பொன்னாற் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம் போற்றிசெய்யும்
என்னாவி காப்பதற் கிச்சையுண் டேலிருங் கூற்றகல
மின்னாரு மூவிலைச் சூலமென் மேற்பொறி மேவுகொண்டல்
துன்னார் கடந்தையுள் தூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே.
கடவுந் திகிரி கடவா தொழியக் கயிலையுற்றான்
படவுந் திருவிர லொன்றுவைத் தாய்பனி மால்வரைபோல்
இடவம் பொறிதென்னை யேன்றுகொள் ளாயிருஞ் சோலைதிங்கள்
தடவுங் கடந்தையுள் தூங்கானை மாடத்தெந் தத்துவனே.

எனவரும் திருவிருத்தமாகிய திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார். அப்பொழுது இறைவனருளால் ஒரு சிவபூதம், பக்கத்திலுள்ளார் யாரும் அறியாதபடி அங்குத் தோன்றி ஆளுடைய அரசர் திருத்தோள்களில் மூவிலைச் சூலமாகிய இலச்சினையை இடப இலச்சினையுடன் பொறித்துச் சென்றது. அதனையுணர்ந்த திருநாவுக்கரசர், மகிழ்ந்து சிவபெருமான் திருவருளை நினைந்து கண்ணீர் சொரிய நிலமிசை வீழ்ந்தெழுந்து ஆர்வம் பெருக உய்ந்தேன் என மொழிந்து இறைவன் திருவடிகளைப் பரவி இன்புற்றார்.

## தில்லைக்கூத்தனை வணங்குதல்

தூங்கானைமாடச் சுடர்க்கொழுந்தாகிய இறைவனை வணங்கி இனிதுறையும் வாகீசர், திருநெல்வாயில் அரத்துறை, திருமுதுகுன்றம் முதலிய தலங்களைப் பணிந்து தமிழ்மாலை சாத்திக் கிழக்குத்திசை நோக்கித் திரும்பி நிவாநதியாகிய வெள்ளாற்றின் கரைவழியே சென்று எல்லையிலாச் செல்வம் நிறைந்த தில்லையம்பலத்திலே திருக்கூத்தியற்றும் கூத்தப்

பெருமானை வணங்கி ஊனாலும் உயிராலும் அடைதற்குரிய உறுதிப்பயனை அடைய விரும்பித் தேனாரு மலர்ச்சோலைத் திருத்தில்லை மருங்கணைந்தார். அறிவிற் பெரியவர் ஆகிய அடிகளார், பெரும்பற்றப் புலியூராகிய தில்லைப்பதியின் மேலை வாயில் வழியாக உட்புகுந்து, சிவமே நிலவிய திருவீதியைத் தொழுது வலங்கொண்டு எழுநிலைக் கோபுரத்தை இறைஞ்சிப் பொன்மாளிகையினை வலம்வந்து, கனகசபையினைக் கண்ணுற்று மன்றுள் நடமாடும் அண்ணலார் திருமுன் அணைந்தார். அப்பொழுது கூத்தப்பிரான் திருநாவுக்கரசரை நோக்கி 'என்று வந்தாய்' என வினவும் அருள் நோக்கத்துடன் காட்சி கொடுத்தருளினார். அத் திருக்குறிப்பையுணர்ந்த திருநாவுக்கரசர், இரண்டு கைகளும் தலைமேற்குவிய, கண்களி னின்றும் ஆனந்தக்கண்ணீர் மழையெனச் சொரிய, மனங்கசிந் துருக, உடல் நிலமிசைப் பலமுறை பணிந்தெழ, மன்றாடும் ஐயன் திருக்கூத்தை எதிர்கண்டு ஆர்வமுறக் கும்பிட்டுக் 'கருநட்ட கண்டனை' யென்னுந் திருவிருத்தம்பாடிப் போற்றினார். கூத்தப்பிரான் தம்மைநோக்கி 'என்று வந்தாய்' என வினவிய அருட் குறிப்பினை,

ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக் கூனமில்லைக்
கன்றிய காலனைக் காலாற் கடிந்தான் அடியவற்காய்ச்
சென்று தொழுமின்கள் தில்லையுட் சிற்றம் பலத்துநட்டம்
என்றுவந்தாயெனும் எம்பெருமான்றன் திருக்குறிப்பே.

என இத்திருப்பதிகத்தின்கண் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு 'என்று வந்தாய்' என இறைவன் தம்மை நோக்கி வினவிய வினாவுக்கு விடை கூறுவார் போல்,

பத்தனாய்ப் பாடமாட்டேன் பரமனே பரம யோகீ
எத்தினாற் பக்திசெய்கேன் என்னைநீ யிகழவேண்டா
முத்தனே முதல்வாதில்லை யம்பலத் தாடுகின்ற
அத்தாவுன் ஆடல்காண்பான் அடியனேன் வந்தவாறே.

எனவரும் திருநேரிசையினைப்பாடித் துதித்தார். தில்லைத் திரு முன்றிலிலும் திருவீதிகளிலும் உழவாரத்தினாற் கைத்தொண்டு புரிந்து 'அன்னம் பாலிக்குந் தில்லைச் சிற்றம்பலம்' என்னுந் திருக்குறுந்தொகை பாடி மகிழ்ந்திருந்தார்.

பின்பு திருவேட்களம் என்னும் திருப்பதியையடைந்து இறைவனைப்பரவித் திருக்கழிப்பாலையை அணுகி மணவாள நம்பியாகிய பெருமானை வணங்கி 'வனபவள வாய்திறந்து வானவர்க்குந் தானவனே என்கின்றாளால்' எனத்தொடங்குந் திருப்பதிக முதலாகப் பலபதிகம் பாடி அங்கே சிலநாள் அமர்ந்திருந்தார். பின் அங்கிருந்து புறப்பட்டு,

பனைக்கை மும்மத வேழ முரித்தவன்
நினைப்பவர் மனங் கோயிலாக் கொண்டவன்
அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனைத்
தினைத்தனைப் பொழுதும் மறந்துய்வனோ.

என்னுந் திருக்குறுந்தொகை பாடிக்கொண்டு தில்லைப்பதியை யடைந்தார். 'அரியானை அந்தணர்கஞ் சிந்தையானை' யெனத் தொடங்கும் பெரிய திருத்தாண்டகம் பாடித் திருக்கோயிலுட் புகுந்து தில்லைச் சிற்றம்பலவானை இறைஞ்சிச் 'செஞ்சடைக் கற்றைமுற்றத் திளநிலாவெறிக்கும்' என்னும் முதற்குறிப்புடைய திருநேரிசையினைப்பாடிப் பரவினார்.

## ஆளுடைய பிள்ளையாரைக்கண்டு மகிழ்தல்

இவ்வாறு திருநாவுக்கரசர் தில்லைச்சிற்றம்பலவனைப் போற்றி மகிழும் நாளில் சீகாழிப்பதியிலே கவுணியப் பிள்ளையார் மூவாண்டில் உமையம்மையாரளித்த ஞானப் பாலுண்டு திருஞானசம்பதராய்த் 'தோடுடைய செவியன்' எனும் திருநெறிய தமிழ்பாடி 'எம்மையிதுசெய்தபிரான் இவனன்றே' எனத் தம் தந்தையார்க்குக் கைவிரலாற் சுட்டிக் காட்டிய அற்புத நிகழ்ச்சியை அடியார்கள் சொல்லக் கேள்வியுற்றார். ஆளுடைய பிள்ளையாரை வணங்க வேண்டு மென்னும் பெருங்காதலால் அப்பொழுதே தில்லைக் கூத்தனை யிறைஞ்சி விடைபெற்று அங்கிருந்து புறப்பட்டுத் திருநாரையூரடைந்து இறைவனைத் தமிழ் மாலையினாற் போற்றிசைத்துச் சீகாழிப்பதியைச் சென்று சேர்ந்தார்.

சூலைநோயினைத் தந்து சிவபெருமானால் நேரே ஆட் கொள்ளப் பெற்ற திருநாவுக்கரசராகிய பெருந்தகையார் சீகாழிப் பதியை நோக்கி வருகின்றார் எனக் கேள்வியுற்ற ஆளுடைய பிள்ளையார், அடியார்களுடன் அரசரை எதிர் கொண்டழைத்தனர். திருஞானசம்பந்தரைக் கண்டு அளவிலா ஆர்வமுற்ற திருநாவுக்கரசர், எதிர் சென்று அவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். ஆளுடைய பிள்ளையார் மலர்போலும் மெல்லிய கைகளால் எடுத்து இறைஞ்சி 'அப்பரே' என அன்பினால் அழைத்தார். அவரும் 'அடியேன்' என்றார். பெருமக்கள் இருவரும் தாங்கள் ஒருவரொருவரைக் காணப் பெற்றதற்கு மிகவும் மகிழ்ந்து உள்ள நிறை காதலினால் ஒருவரொவரிற் கலந்த நட்புரிமையுடையராய், அருட்கடலும் அன்புக் கடலும் இணைந்து வந்தாற்போலவும், சைவ சமயத்தின் இரு கண்கள் போலவும், இறைவனும் உலகம் ஈன்ற அம்மையும் ஆகிய இருவருடைய திருவருளும் ஒருங்கு தோன்றினாற் போலவும் திருத்தோணிபுரத் திருக்கோயிலிற் சென்று

சேர்ந்தார்கள். ஆளுடைய பிள்ளையார், அப்பரை நோக்கி, 'உங்கள் தம்பிரானாரைப் பாடுவீராக' என வேண்டிக் கொண்டார். திருநாவுக்கரசர், பெரிய பெருமாட்டியுடன் தோணிமீது வீற்றிருக்கும் பெருமானைப் 'பார்கொண்டு மூடி'யெனும் முதற் குறிப்புடைய திருவிருத்தம் பாடிப் போற்றினார். பின்பு திருஞானசம்பந்தப் பிள்ளையாரது திருமடத்தில் எழுந்தருளி அவர் அன்புடன் விருந்து செய்து உபசரிக்க அவருடன் அளவளாவி மகிழ்ந்திருந்தார்.

## நல்லூரில் திருவடி சூட்டப்பெறுதல்

இங்ஙனம் பல நாள் அடியார்களுடன் சீகாழிப் பதியில் தங்கிச் சிவபெருமானைப் போற்றி மகிழ்ந்த திருநாவுக்கரசர், சோழநாட்டிலுள்ள சிவதலங்களெல்லாவற்றையும் வழிபட வேண்டுமென்னும் பெருவேட்கை யுடையராய்த் தம்முடைய விருப்பத்தைத் திருஞானசம்பந்தப் பிள்ளையார்க்குத் தெரிவித்து அவருடன் திருக்கோலக்காவிற்குச் சென்று இறைவனை இறைஞ்சிப் போற்றினார். பின்பு ஞானசம்பந்தர்பால் விடைபெற்று அங்கிருந்து புறப்பட்டுக் கருப்பறியலூர், புன்கூர், நீடூர், குறுக்கை, நின்றியூர், நனிபள்ளி ஆகிய தலங்களைப் பணிந்து பாடினார். காவிரியாற்றின் இருகரையிலுஞ் சென்று செம் பொன் பள்ளி, மயிலாடுதுறை, திருத்துருத்தி, வேள்விக்குடி, எதிர் கொள்பாடி, கோடிகா, ஆவடுதுறை, இடைமருது, நாகேச்சரம், பழையாறை முதலிய தலங்களைவணங்கித் திருச்சத்தி முற்றத்தைச் சென்றடைந்தார். மலைமகளாராகிய உமாதேவி யாரது அன்பிற் சிறந்த பூசனையை யேற்று மகிழும் என்றுமினிய பெருமானாகிய சிவக்கொழுந்தீசரை இறைஞ்சி நின்று 'எம் பெருமானே, கொல்லுந் தொழிலுடைய கூற்றுவன் என்னுயிரை இவ்வுடம்பினின்று பிரித்து வருத்துதற்கு முன்னமே நின்னுடைய செந்தாமரை மலர் போலும் அழகிய திருவடிகளை என்தலை மேற் சூட்டியருள்வாயாக' என வேண்டிக்கொள்ளும் முறையில்,

'கோவாய் முடுகி யடுதிறற் கூற்றம் குமைப்பதன்முன்
பூவாரடிச் சுவ டென்மேற் பொறித்துவை போகவிடில்
மூவா முழுப்பழி மூடுங்கண்டாய் முழங்குந் தழற்கைத்
தேவா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே.'

எனவரும் திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார். இவ்வேண்டு கோளைச் செவிமடுத்த சிவபெருமான், நாவுக்கரசரை நோக்கி 'நல்லூருக்கு வா' எனப் பணித்தருளினார். அவ்வருள்மொழி கேட்டு அகமகிழ்ந்த அப்பரடிகள், திருச்சத்தி முற்றத்திற் சிவக்கொழுந்தீசரை மகிழ்ந்திறைஞ்சி அவர் நன்மை பெருக அருளிய அருளிப்பாட்டின் வண்ணம் திருநல்லூரை யடைந்து

இறைவரை வணங்கி மகிழ்ந்தெழுந்தார். அப்பொழுது சிவபெருமான், 'உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம்' என நாவுக்கரசர்க்கு உணர்த்தி, அவர்தம் சென்னிமிசைப் பாதமலர் சூட்டியருளினார். திருநாவுக்கரசர் தமக்கு அருள்புரிந்த இறைவரது பெருங்கருணைத் திறத்தை வியந்து,

நினைந்துருகும் அடியாரை நைய வைத்தார்
நில்லாமே தீவினைகள் நீங்க வைத்தார்
சினந்திருகு களிற்றுரிவைப் போர்வை வைத்தார்
செழுமதியின் தளிர்வைத்தார் சிறந்து வானோர்
இனந்துருவி மணிமகுடத் தேறத்துற்ற
இனமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப்பில்கி
நனைந்தனைய திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே.

எனவரும் திருத்தாண்டகச் செந்தமிழ்மாலை பாடிப் பரவிப் போற்றினார். திருநாவுக்கரசரடிகள் இத் திருப்பதிகத்தில் அமைந்த திருப்பாடல்களின் இறுதிதோறும் 'திருவடி என் தலைமேல் வைத்தார் நல்லூர் எம்பெருமானார் நல்லவாறே' எனத் திருநல்லூரிற் சிவபெருமான் தம் சென்னிமிசைத் திருவடி சூட்டியருளிய அற்புத நிகழ்ச்சியை நினைந்துருகிப் போற்றியுள்ளமை காணலாம். இவ்வருள் நிகழ்ச்சியை,

'நற்றவன் நல்லூர்ச்சிவன் திருப்பாதம்தன் சென்னி வைக்கப் பெற்றவன்'

எனவரும் திருத்தொண்டர் திருவந்தாதியுள் நம்பியாண்டார் நம்பி குறித்துள்ளமை இவண் நினைக்கத்தகுவதாகும்.

## விடந்தீர்த்தல்

சிவபெருமானால் திருவடிசூட்டப்பெற்ற திருநாவுக்கரசர், நல்லூரில் தங்கியிருக்கும் நாட்களில் கருகாவூர், ஆவூர், பாலைத்துறை முதலிய தலங்களைப் பணிந்து போற்றினார். பின்பு நல்லூரினின்றும் புறப்பட்டுத் திருப்பழனப் பெருமானை வணங்கி அருகேயுள்ள தலங்களை யிறைஞ்சவெண்ணித் திங்களூரின் வழியாகச் சென்றார். அப்பொழுது வழியிடையே அமைந்த தண்ணீர்ப்பந்தரை யடைந்தார். அதன்கண் 'திருநாவுக்கரசர் தண்ணீர்ப் பந்தர்' என எழுதப்பெற்றிருத்தலைக் கண்டார். 'இத்தண்ணீர்ப்பந்தரை இப்பெயருடன் இங்கு அமைத்தவர் யார்' என அங்குள்ளவர்களை நோக்கி வினவினார். அதுகேட்டு அங்கு உள்ளவர்கள் 'இத்தண்ணீர்ப்பந்தருடன் இவ்விடத்து எங்கும்உள அறச்சாலைகள், கிணறு, குளம், இளமரச்சோலை முதலிய எல்லாவற்றையும் அந்தணரின் மேம்பட்ட அப்பூதியடிகள் என்பார் திருநாவுக்கரசர் பெயராலேயே செய்த

மைத்தார்' எனக் கூறினார்கள். அப்பரடிகள் 'இவ்வறங்களைச் செய்த அப்பூதியடிகள் எவ்விடத்துள்ளார்' என அவர்களை வினவினார். 'அவர் இத்திங்களூரில் வாழ்பவரே. இப்பொழுது தான் இங்கிருந்து தம்முடைய இல்லத்திற்குச் சென்றுள்ளார். அவ்வீடும் அண்மையிலேயே யுள்ளது' என அருகே நின்றவர்கள் கூறினார்கள். அதனைக் கேட்ட நாவரசர் அப்பூதியடிகள் திருமனைக்கு எழுந்தருளினார்.

சிவனடியாராகிய அவரது வருகையை யுணர்ந்த அப்பூதி அடிகள், அவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கி 'அடியேன் மனையில் அருளுருவாகிய தாங்கள் எழுந்தருளியது என் முன்னைத் தவப்பயனே' என மகிழ்ந்துரைத்தார். 'நாம் திருப்பழனத்திற் கோயில் கொண்டருளிய சிவபெருமானை வணங்கி வரும்பொழுது வழியிலே நீர் வைத்த தண்ணீர்ப் பந்தரைக் கண்டும் இங்ஙனம் நீர் செய்கின்ற பிற அறங்களைக் கேட்டும் நும்மைக் காணவிரும்பி இங்கு வந்தோம்' எனக் கூறிய திருநாவுக்கரசர், 'சிவனடியார்கள் பொருட்டு நீர் வைத்த தண்ணீர்ப்பந்தரிலே நும்முடைய பெயரையெழுதாது வேறொரு பெயரை எழுதியதன் காரணம் யாது? அதனைக் கூறுவீராக' என அப்பூதியடிகளை வினவினார். அவ்வுரையினைக் கேட்டு மனங்கலங்கிய அந்தணராகிய அப்பூதியடிகளார், தம்முன் நின்ற சிவனடியாரை நோக்கி, 'நீர் நன்மொழிகளை அருளிச் செய்திலீர். பழி பாவங்களுக்கு நாணாத இயல்புடைய சமணர் களாகிய கொடியவர்களோடு கூடிப் பல்லவ மன்னன் செய்த வஞ்சனைகளையெல்லாம் சிவனடித் தொண்டின் வன்மையி னாலேயே வென்றருளிய மெய்த் தொண்டராகிய திருநாவுக்கர சரது திருப்பெயரோ வேறொரு பேர்? நம்மை ஆளாகவுடைய சிவபெருமானது திருவடிக்கு விரும்பிப்புரியும் திருத்தொண் டினாலே இப்பிறப்பிலேயே இடர்களையெல்லாம் வென்று உய்யலாம் என்னும் உண்மையை என்னைப் போன்ற எளி யோர்களும் தெளிந்து உய்யும் வண்ணம் சிவத்தொண்டு புரிந்த திருநாவுக்கரசரது திருக்பெயரை யான் எழுத, நீர் இக்கொடுஞ் சொல்லை யான் கேட்கும்படி கூறினீர். அலைகள் பொங்கும் கருங்கடலிலே கல்லையே தெப்பமாகக்கொண்டு கரையேறிய அவருடைய பெருமையை இவ்வுலகில் அறியாதார் யாருளர்? மங்கலமாம் சிவவேடத்துடன் நின்று இவ்வார்த்தை பேசினீர், நீர் எங்குறைவீர்? நீர் தாம் யார்? கூறும்' என வெகுண்டுரைத்தார். இவ்வாறு சினமுற்ற அப்பூதியாரது அன்பின் திறத்தையறிந்த திருநாவுக்கரசர் 'புறச்சமயத்தினின்றும் ஏறும் பொருட்டு இறைவன் சூலை நோயினைத் தந்து ஆட்கொள்ள அடைந்து உய்ந்த தெளிந்த உணர்வில்லாத சிறுமையேன் யான்' என

மொழிந்தார். அவ்வுரை கேட்ட அப்பூதியடிகள் தம்முடைய குலதெய்வமாகிய திருநாவுக்கரசரே இங்கு எழுந்தருளினா ரெனத் தெளிந்து பெருமகிழ்ச்சியுற்றார். மனைவி மக்கள் முதலிய சுற்றத்தாருடன் திருநாவுக்கரசர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கித் தம் இல்லத்தில் திருஅமுது செய்தருள வேண்டும் என வேண்டிக்கொண்டார். அப்பரும் அவருடைய பேரன்புக்கு இசைந்தருளினார்.

அப்பூதியார் விருப்பின் வண்ணம் அவருடைய மனைவியார், அறுவகைச் சுவையும் அமையத் தூய நற்கறிகளாக்கி இனிய திருவமுது சமைத்தார். நாவுக்கரசர் அமுது செய்தருளத் தோட்டத்திற் சென்று வாழைக் குருத்தை அரிந்துவரும்படி தம்புதல்வன் மூத்த திருநாவுக்கரசினை அனுப்பினார். அவனும் 'நல்ல தாய் தந்தை ஏவ நான் இது செய்யப்பெற்றேன்' என்னும் உவகையுடன் விரைந்துசென்று மனைப்படப்பையிற் புகுந்து வாழைக்குருத்தை அரிந்தான். அப்பொழுது அதனடியில் மறைந் திருந்த பாம்பு அவனைத்தீண்டிக் கையிற் சுற்றிக் கொண்டது. அவன் அப்பாம்பினை விரைவில் உதறி வீழ்த்தி விட்டு விடவேகத்தால் தான் கீழே விழுவதற்குமுன், தான் கொய்த குருத்திலையை வீட்டிற்கு சேர்க்கும் கருத்துடன் விரைந்தோடி வந்தான். 'அரசர் அமுது செய்வதற்குத் தடையாகப் பாம்பு தீண்டிய செய்தியை தாய் தந்தைக்குச் சொல்லுதல் கூடாது' என்னுந் துணிவுடன் வீட்டை அடைந்தான். ஏழாம் வேகம் தலைக்கேறுதலால் உரைகுழறிக் கண்ணும் மேனியும் கருகத் தான்கொணர்ந்த வாழைக் குருத்தைத் தாய் கையிற் கொடுத்துக் கீழே வீழ்ந்தான்.

இவ்வாறு தளர்ந்து விழும் மகனை நோக்கிய தாயும் தந்தையும் அவனுடம்பிற் குருதிவழியும் நிலையினையும் விடந்தலைக்கேறி இறந்த அடையாளத்தையுங் கண்டு 'திருநாவுக் கரசர் அமுது செய்தருள்வதற்குத் தடையாகுமே' எனப் பெரிதும் கலக்க முற்றார்கள். இத்துன்பநிலை சிறிதும் புலனகாதபடி அடிகளை அமுது செய்விப்போம் என்னும் உறுதியுடன் பெறலரும் புதல்வனது உடம்பினைப் பாயினுள் வைத்து மூடி வீட்டின்புறத்தே ஒரு பக்கத்தில் மறைத்து வைத்துவிட்டுத் திருநாவுக்கரசரை யடைந்து இறைஞ்சி நின்று 'எம் குடி முழுதும் உய்யக்கொள்வீர் அமுது செய்ய எழுந்தருள வேண்டும்' என அழைத்தார்கள்.

அப்பரடிகளும் அதற்கிசைந்து எழுந்து சென்று ஆசனத்த மர்ந்தார். அப்பூதியார்க்கும் அவருடைய மனைவியார்க்கும் திருநீறளித்து அவர்களுடைய புதல்வர்களுக்குக் கொடுக்கும் பொழுது மூத்த திருநாவுக்கரசரைக் காணாது அப்பூதியாரை

நோக்கி 'நுமது மூத்த புதல்வனை அழையும்' என்றார். 'இப்போது அவன் இங்கே உதவான்' என்றார் அப்பூதியார். அவ்வுரை கேட்ட நாவுக்கரசரது திருந்திய சிந்தையில் சிவனருளால் ஒருவகைத் தடுமாற்றம் உண்டாயிற்று. அரசர் அப்பூதியடிகளை நோக்கி 'என்னுள்ளம் இவ்வுரை கேட்கப் பொறாது. ஏதோ இடையூறு நேர்ந்திருக்க வேண்டும். நிகழ்ந்தது உள்ளவாறுரைப்பீராக' எனப் பணித்தார். அப்பூதியடிகள் அஞ்சி நடுங்கி நின்று 'அடியார் அமுது செய்யத் தடையா யிருப்பினும் நிகழ்ந்தது கூறலே முறை' எனக்கருதித் தன் மைந்த னுக்கு நேர்ந்த துயர்நிலையைக் குறிப்பிட்டார். அத்துன்பச் செய்தியை யுணர்ந்த அப்பர் பெருமான், அப்பூதியடிகளை நோக்கி நீர் செய்தது மிக நன்றாயிருக்கிறது. இவ்வாறு வேறு யார் செய்வார். என்று கூறி எழுந்து சென்று உயிர்நீத்த மூத்த திருநாவுக்கரசின் உடம்பினைத் திருக்கோயிலின்முன் கொணரச் செய்து அவ்வுடம்பினை நோக்கிச் சிவபெருமான் அருள்புரியும் வண்ணம்,

**ஒன்று கொலாமவர் சிந்தை யுவர் வரை**
**ஒன்று கொலா முயரும்மதி சூடுவர்**
**ஒன்று கொலாமிடு வெண்டலை கையது**
**ஒன்று கொலாமவர் ஊர்வது தானே.**

எனத் தொடங்கிச் சிவபெருமானனுடைய அருளுருவாகிய திருமேனிக்கண் அமைந்த அளப்பரிய தோற்றங்களை ஒன்று முதல் பத்தீறாக வைத்து எண்ணும் நிலையிற் பத்துப் பாடல் களால் அமைந்த திருப்பதிகத்தைப் பாடியருளினார். அப்போது உயிர்நீத்த மூத்த திருநாவுக்கரசு, உறக்கம் நீங்கி எழுபவனைப் போன்று உயிர்பெற்றெழுந்து, திருநாவுக்கரசர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். அப்பர்பெருமான் அவனுக்கு அன்புடன் திருநீறளித்தருளினார்.

அப்பூதியடிகளும் அவர்தம் மனைவியாரும் தம்மைந்தன் உயிர்பெற்றெழுந்தமை கண்டும் மனமகிழாது திருநாவுக்கரசர் அமுது செய்தருளக் காலந் தாழ்ந்ததே எனச் சிந்தை நொந்தார்கள். அப்பர் பெருமான் அவர்களது மனக்கருத்தறிந்து அமுது செய்தருள மனைக்கண் எழுந்தருளினார். அதுகண்டு மகிழ்ந்த அப்பூதியடிகளார், திருநாவுக்கரசர்க்குத் திருந்திய வாச நன்னீர் தந்து திருவமுது செய்தருளும் படி வேண்டினார். அப்பொழுது அப்பரடிகள் அவரை நோக்கிப் புதல்வர்களும் நீரும் இங்கு என்னுடன் அமுதுசெய்வீராக' எனப் பணித்தருளினார். அவ் வண்ணமே அப்பூதியடிகளும் அவருடைய புதல்வர்களும் தம் இருமருங்கிலும் அமர்ந்து அமுதுசெய்யத் திருநாவுக்கரசர் அவர்களுடன் திருவமுது செய்தருளினார்.

அப்பூதியடிகளார் உபசரிக்கத் திங்களூரிற் சில நாளமர்ந் திருந்த திருநாவுக்கரசர், அப்பூதியடிகளுடன் திருப்பழனப் பெருமானை வழிபடச் சென்று 'சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள் சொல்லீரே' எனத் தொடங்கும் பாமாலை பாடிப் போற்றினார். அத்திருப்பதிகத்திலே,

வஞ்சித்தென் வளை கவர்ந்தான் வாரானே யாயிடினும்
பஞ்சிக்காற் சிறகன்னம் பரந்தார்க்கும் பழனத்தான்
அஞ்சிப்போய்க் கலிமெலிய அழலோம்பும் அப்பூதி
குஞ்சிப் பூவாய் நின்ற சேவடியாய் கோடியையே.

எனவரும் திருப்பாடலில் அப்பூதியடிகளாரது ஒழுக்கத்தின் விழுப்பத்தினையும் சிவனடித் தொண்டினையும் சிறப்பித் தருளினார். 'என்னை வஞ்சித்து யான் தன் பிரிவினால் வருந்தி இளைத்த நிலையில் என் கைவளைகளைக் கவர்ந்து சென்ற ஆருயிர்த் தலைவனாகிய சிவபெருமான், என் உள்ளம் மகிழ என்பால் எழுந்தருளி வாரானாயினும், பஞ்சினையொத்து மெத்தென்று கால்களையும் சிறகினையுமுடைய அன்னங்கள் பரவி ஆரவாரிக்கும் வளமார்ந்த திருப்பழனமென்னும் பெயர் வாய்ந்த ஊரின் கண்ணே எழுந்தருளியுள்ளான். அவன் தானே வாரானாயினும் யானே அவ்வூர்க்குச் சென்று அவனைக் கண்டு மகிழ்வேன்' எனக்கருதிய தலைமகள், திருப்பழனத்தை யடைந்து இறைவன் முன்னிலையில் நின்று, 'பாவங்கள் அஞ்சியகன்று அழியும் வண்ணம் நல்ல வேள்விகளை யியற்றும் மேதகவுடைய அப்பூதியடிகளது திருமுடியின் கண்ணே அணியப்பெற்ற தாமரை மலராக விளங்கும் செம்மையான திருவடிகளையுடைய பெருமானே, எளியேனை ஏற்றுக்கொள்வாயாக' என வேண்டி யிறைஞ்சும் முறையில் இத்திருப்பாடல் அமைந்துள்ளது. இதனால் திருநாவுக்கரசர் அப்பூதியடிகள்பால் வைத்த பெரு மதிப்பு இனிது புலனாதல் காணலாம்.

இவ்வாறு திருநாவுக்கரசரின் திருவடியே பெருஞ்செல்வ மெனக் கொண்டு, அவருடைய திருப்பெயரால் தண்ணீர்ப் பந்தல் முதலிய பல நல்லறங்களைச் செய்து, ஆண்ட அரசர் பாடியருளிய திருப்பதிகத்திலே இறைவனுக்கு உறவினராம் நிலையில் அப்பூதியென்னும் தன் பெயரிடப்பெற்ற சால்புமிக்க அந்தணர், திங்களூரில் வாழ்ந்த அப்பூதியடிகள் என்பதனை,

தனமாவது திருநாவுக்கரசின் சரணமென்னா
மனமார் புனற்பந்தர் வாழ்த்திவைத் தாங்கவன் வண்ட மிழ்க்கே
இனமாத் தனது பெயரிடப் பெற்றவன் எங்கள் பிரான்
அனமார் வயற்றிங்க ளூரினில் வேதியன் அப்பூதியே.

எனவரும் திருத்தொண்டர் திருவந்தாதியில் நம்பி யாண்டார்நம்பி தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

## ஆரூர்ப்பெருமனை வழிபடுதல்

திருப்பழனத்திறைவரைப் பணிந்து பரவிப்போற்றிய திருநாவுக்கரசர், அவ்வூரிற் பல நாள் தங்கியிருந்து மனமொழி மெய்களால் திருத்தொண்டு செய்து மகிழ்ந்தார். பின்பு தமக்குத் திருவடி சூட்டியருளிய நல்லூர்ப்பெருமனைக் காண விரும்பித் திருநல்லூரடைந்தார். அங்கிருந்து இறைவனைப் பரவிய அப்பரடிகள் திருவாரூர் தொழ நினைந்து வலஞ்சுழி, குடமூக்கு, நாலூர், சேறை, பெருவேளூர், விளமர் முதலிய திருத்தலங் களைப் பணிந்து திருவாரூர் சென்றணைந்தார். 'அமணர்கள் செய்த வஞ்சனைகளெல்லாங் கடந்து கல்லே மிதப்பாகக் கடல் கடந்தேறிய திருநாவுக்கரசர் ஈண்டெழுந்தருளப் பெற்றோம்' எனப் பெருமகிழ்வெய்திய திருவாரூர் நகரத்தார், அப்பரடிகளை எதிர்கொண்டழைத்துப் போற்றினார்கள். தமக்கு அருள்சுரந்த இறைவனது திருவருட் பெருமையை யெண்ணிய திருநாவுக் கரசர், 'அன்பின் பிணிப்புச் சிறிதுமில்லாத கொடியோராகிய புறச் சமயத்தாருடன் கூடி, வந்தடைந்த சூலைநோயினால் அவர்களை விட்டு நீங்கிய எளியேனாற் பெறத்தக்கதோ புற்றிடங் கொண்ட பெருமானாகிய சிவனது அடியார்களுக்குத் தொண்டு செய்யும் பெரும்பேறாகிய இப் புண்ணியம்' என்றதோர் உணர்ச்சிமிக்க,

**குலம்பலம் பாவரு குண்டர் முன்னே நமக் குண்டுகொலோ**
**அலம்பலம் பாவரு தன்புன லாரூ ரவிர் சடையான்**
**சிலம்பலம் பாவரு சேவடியான் திருமூ லட்டானம்**
**புலம்பலம் பாவரு தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே.**

எனவரும் திருவிருத்தத்தைப் பாடித் திருவாரூர்த் திரு வீதியுட் புகுந்தார். அடியார்களுடன் திருக்கோயிலின் தோரண வாயிலையடைந்து தேவாசிரிய மண்டபத்தை இறைஞ்சினார். திரு மாளிகை வாயிலுட் புகுந்து புற்றிடங்கொண்ட பெருமான் திருமுன்னர் நின்று பணிந்து திருத்தாண்டகம் பாடித் துதித்தார். 'கண்டலே கருத்தாய் நினைந்திருந்தேன்' என்னுங் கலைப்பதிகம் பாடிப் பரவினார். திருக்கோயிலை வலம் வந்து புறம்போந்து தேவாசிரிய மண்டபத்தை யடைந்தார்.

**மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான் தாள் தொழாதே**
**உய்யலாம் என்றெண்ணி உறிதூக்கி உழிதந்தென் னுள்ளம் விட்டுக்**
**கொய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ மயிலாலும் ஆரூரனைக்**
**கையினால் தொழாதொழிந்தே கனியிருப்பக் காய்கவர்ந்த கள்வனேனே.**

எனத் தம் செயலற்ற தன்மையைப் புலப்படுத்தும் பழ மொழித் திருப்பதிகத்தைப் பாடி அப்பதியில் அமர்ந்திருந்தார்.

ஆரூர்ப்பெருமானைக் காலங்கள்தோறும் கும்பிட்டுத் திருத்தொண்டு புரியும் திருநாவுக்கரசர், 'பாடிளம் பூதத்தினான்' என்னும் முதற்குறிப்புடைய திருப்பதிகம் முதலாகப் பல பதிகங்களை நெஞ்சம் நெக்குருகிப் பாடிபோற்றினார். ஆரூரில் அரனெறியென்னுந் திருக்கோயிலை யடைந்து இறைவனைத் தமிழ் மாலைகளாற் போற்றி மகிழ்ந்தார். அத்திருக்கோயிலில், நீரால் திருவிளக்கெரித்தும் திருவாரூரிற் பெருமானுக்குத் பங்குனியுத்திரப் பெருவிழாவைச் சிறப்புற நிகழ்த்தியும் திருத் தொண்டு புரிந்த நான்மறைவல்ல அந்தணராகிய நமி நந்தி யடிகளை,

ஆராய்ந் தடித்தொண்ட ராணிப்பொன் னாரு ரகத்தடக்கிப்
பாரூர் பரிப்பத்தம் பங்குனி யுத்திரம் பாற்படுத்தான்
நாரூர் நறுமலர் நாத னடித் தொண்டன் நம்பிநந்தி
நீராற் றிருவிளக் கிட்டமை நீணா டறியுமன்றே.

எனவரும் திருவிருத்தத்துட் பாராட்டிப் போற்றியதுடன் அப்பெருந்தகையாரைத் 'தொண்டர்க்கு அச்சாணியன்னார்' எனவும் சிறப்பித்தருளினார். அங்கிருந்து புறப்பட்டு வலிவலம், கீழ்வேளூர், கன்றாப்பூர் ஆகிய தலங்களைப் பணிந்திறைஞ்சி மீண்டும் திருவாரூர் வந்தடைந்தார். அப்பொழுது ஆரூரில் திரு வாதிரைத் திருநாளில் வீதிவிடங்கப்பெருமான் திருவுலாப் போந் தருளியது கண்டு அடியார்களுடன் வணங்கி மகிழ்ந்திருந்தார்.

## திருப்புகலூரடைதல்

பின்பு திருப்புகலூர்ப் பெருமானை யிறைஞ்ச விரும்பிய நாவரசர் ஆரூரைத் தொழுது நீங்கிப் பல தலங்களையும் பணிந்து பாடித் திருப்புகலூர் மருங்கணைந்தார். அப்பொழுது திருப் புகலூரில் முருக நாயனார் திருமடத்தில் எழுந்தருளியிருந்த திரு ஞானசம்பந்தப் பிள்ளையார், அடியார்களுடன் அப்பமூர்த்தி களை எதிர்கொண்டார். இருவரும் ஒருவரொருவரை வணங்கி மகிழ்ந்தனர். ஆளுடைய பிள்ளையார், திருநாவுக்கரசரை நோக்கி, 'அப்பரே, நீவிர் வரும் நாளில் திருவாரூரில் நிகழ்ந்த பெருமையினை விரித்துரைப்பீராக' என வேண்டினர். அப்பரடி களும் 'வீதிவிடங்கப் பெருமானது திருவளர் ஆதிரை நாளின் பெருமையினை இன்னதன்மைய தென்று எவ்வாறு உரை செய்வேன்' என்று சொல்லி,

முத்து விதான மணிப்பொற் கவரி முறையாலே
பத்தர்க ளோடு பாவையர் சூழப் பலிப்பின்னே

**வித்தகக் கோல வெண்டலை மாலை விரதிகள்**
**அத்தன் ஆரூர் ஆதிரைநாளால் அதுவண்ணம்.**

எனவரும் திருப்பதிகத்தைப் பாடிப் பரவினார். இப்பதிகம் முழுவதும் 'ஆரூர் ஆதிரை நாளால் அது வண்ணம்' எனத் திருவாரூரில் நிகழ்ந்த திருவாதிரைத் திருவிழாவின் பெருமை விரித்துரைக்கப் பெறுதலால் இது திருவாதிரைத் திருப்பதிகம் என வழங்கப் பெறுவதாயிற்று.

இத்திருப்பதிகத்தை அப்பரடிகள் திருவாய்மலர்ந்தருளக் கேட்டு மகிழ்ந்த திருஞானசம்பந்தர், திருவாரூர்ப் பெருமானை இறைஞ்சி மகிழும் பெருவிருப்புடையராய்த் 'திருவாரூர் கும்பிட்டு இங்கு வந்து உம்மொடும் உடனமர்வேன்' என அப்ப மூர்த்திக்குச் சொல்லி அவர்பால் விடைபெற்றுச் சென்றார். திருநாவுக்கரசர் திருப்புகலூரை யடைந்து சிவபெருமானைப் பணிந்து தமிழ்மாலைகள் சாத்திக் கைத்திருத்தொண்டு செய்திருந்தார். அங்குறையும் நாட்களில் செங்காட்டங்குடி, நள்ளாறு, சாத்தமங்கை, மருகல் ஆகிய திருத்தலங்களை யிறைஞ்சி மீண்டார். இந்நிலையில் ஆளுடைய பிள்ளையார் திருவாரூர்ப் பெருமானை யிறைஞ்சி மகிழ்ந்து பல தலங்களை வணங்கித் தம் கெழுதகை நண்பர் திருநாவுக்கரசரை நினைந்து திருப்புகலூர் வந்தடைந்தார். அப்பரடிகள் பிள்ளையாரை எதிர்கொண்டு அழைத்து வந்து முருகநாயனார் திருமடத்தில் அவருடன் அளவளாவி அமர்ந்திருந்தார். அப்பொழுது சிறுத்தொண்டர் நீலநக்கர் ஆகிய அடியார்கள் அங்குவந்து அப்பெருமக்களை வணங்கி மகிழ்ந்தனர்.

## திருஞானசம்பந்தருடன் தலயாத்திரை

சிலநாட் சென்ற பின் திருநாவுக்கரசரும் ஆளுடைய பிள்ளையாரும் திருப்புகலூரினின்றும் புறப்பட்டுத் திருநீலநக்கர், சிறுத்தொண்டர், முருகநாயனார் முதலிய அடியார்கள் விடைபெற்றேகத் திருஅம்பர் என்னுந் திருப்பதியை இறைஞ்சிப் போற்றினார்கள். திருக்கடவூர் சென்று மார்க்கண்டரென்னும் அடியவர் பொருட்டுக் காலனையுதைத்த கடவுளைப் பணிந்து குங்கிலியக்கலயநாயனாரால் உபசரிக்கப்பெற்று அவருடைய திருமடத்திலே அமுது செய்தருளினார்கள். பின்பு திருக்கடவூர்த் திருமயானம், ஆக்கூர்த் தான்றோன்றிமாடம் முதலிய தலங்களைப் பணிந்து திருவீழிமிழலையை அடைந்தார்கள். வீழிமிழலையிலுள்ள பெருமக்கள் எதிர்கொண்டு போற்ற விண்ணிழி விமானத்தில் வீற்றிருந்தருளும் பெருமானை வணங்கி மகிழ்ந்தார்கள். 'செய்யசடையார் தமைச்சேரார் தீங்குநெறி சேர்கின்றார்' என்னும் கருத்தமையத் திருவீழிமிழலையானைச்

சேராதார் தீநெறிக்கே சேர்க்கின்றாரே' எனமுடியும் உய்யுநெறித் தாண்டகத்தினைத் திருநாவுக்கரசர் பாடிப்போற்றினார். அரசரும் பிள்ளையாரும் அடியார் கூட்டத்துடன் இருவேறு திருமடங்களில் அமர்ந்திருந்து வீழிமிழலைப்பெருமானைக் காலந்தோறும் வழிபட்டு மகிழ்ந்தார்கள்.

## படிக்காசு பெறுதல்

அந்நாளில் மழையின்மையாலும் காவிரியில் நீர்ப் பெருக் கில்லாமையாலும் பஞ்சமுண்டாயிற்று. மக்களெல்லாம் பசி யால் வருத்தமுற்றனர். அந்நிலையில் வீழிமிழலைப் பெருமான் திருநாவுக்கரசர்க்கும் திருஞான சம்பந்தர்க்கும் கனவில் தோன்றி 'நீங்கள் காலவேறுபாட்டினால் மனத்தில் வாட்ட மடைய மாட்டீர்கள். எனினும் உங்களைச் சார்ந்து வழிபடும் இயல்புடைய தொண்டர்களுக்கு உணவளிக்கும் பொருட்டு நாம் உங்களுக்குப் படிக்காசு தருகின்றோம்' என்று கூறி விண்ணிழி விமானத்தின் மேற்குப் பீடத்திலும் கிழக்குப் பீடத்திலும் அவ்விருவர்க்கும் நாள்தோறும் படிக்காசு வைத்தருளினார். அப் பெருமக்களிருவரும் இறைவனளித்த படிக்காசினைக் கொண்டு பண்டங்கள் வாங்கித் திருவமுது சமைப்பித்துச் 'சிவனடியார் களெல்லாம் எய்தியுண்க' என இரண்டு பொழுதும் பறைசாற்றி அடியார்களை அமுது செய்வித்துப் பசித் துன்பத்தை மாற்றி யருளினார்கள்.

திருநாவுக்கரசர் சிவபெருமானுக்குக் கைத்திருத் தொண்டுபுரியும் அடியவராதலால் அவர் பெறும் காசி வட்ட மின்றி வணிகர்களால் ஏற்றுக்கொள்ளப் பெற்றது. ஆதனால் அவருடைய திருமடத்தில் நாள்தோறும் உரிய காலத்தில் அடியார்கள் திருவமுது செய்தார்கள். திருஞானசம்பந்தர் இறைவனுக்குத் திருமகனாராதலின் அவர் பெறும் காசு வணி கர்கள்பால் வட்டங்கொடுத்து மாற்றவேண்டியிருந்தது. அது கொண்டு உணவுப் பொருள்களை வாங்கக் காலந் தாழ்த் தமையால் ஞானசம்பந்தர் திருமடத்தில் அடியார்கள் காலந் தாழ்த்து அமுது செய்ய வேண்டிய நிலைமை யேற்பட்டது. அதனை யுணர்ந்த காழிப்பிள்ளையார், வீழிமிழலைப் பெருமானை யிறைஞ்சி 'வாசிதீரவே காசு நல்குவீர்' என வேண்டி வாசியில்லாக் காசு பெற்று அடியார்களை உரிய காலத்தில் திருவமுது செய்வித்தருளினார். பின்னர் எங்கும் மழைபெய்து உணவுப் பொருள்கள் நிறைய விளைந்தமையால் பஞ்சம் நீங்கியது என்ற செய்தி முன்னர் விளக்கப் பெற்றது.

## மறைக்கதவந் திறக்கப்படுதல்

திருநாவுக்கரசரும் திருஞானசம்பந்தரும் திருவீழிமிழலையினின்றும் புறப்பட்டுத் திருவாஞ்சியம் முதலிய திருத்தலங்களை இறைஞ்சிப் போற்றித் திருமறைக்காட்டை அடைந்து திருக்கோயிலை வலம் வந்து, பண்டைநாளில் வேதங்கள் இறைவனை வழிபட்டு அடைந்த திருக்கதவமைந்த திருவாயிலை அடைந்தார்கள். முன்னாளில் வேதங்களால் அடைக்கப்பட்ட திருக்கதவு, வேதங்களில் வல்ல அன்பரொருவரும் வாராமையால் நெடுநாள் திறக்கப்படாதிருந்தது. ஆதனால் அவ்வூரவர் வேறொருவாயிலமைத்து வேதவனப் பெருமானை வழிபட்டு வந்தனர். இச் செய்தியை உணர்ந்த திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசரை நோக்கி, 'அப்பரே, நாம் எப்படியும் நேர்முகமாகவுள்ள இத் திருவாயிலின் வழியே சென்று மறைக்காட்டிறைவரை வழிபடுதல் வேண்டும். ஆதலால் இத்திருக்கதவு திறக்கும்படி நீவிர் திருப்பதிகம் பாடியருளும்' என வேண்டினர். அன்புடைய பிள்ளையாரது விருப்பத்திற்கிசைந்த திருநாவுக்கரசர்,

> **பண்ணினேர் மொழியாளுமை பங்கரோ**
> **மண்ணி னார்வலஞ் செய்மறைக் காடரோ**
> **கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்**
> **திண்ணமாகத் திறந்தருள் செய்ம்மினே.**

என்ற திருப்பதிகத்தைப் பாடினார். செந்தமிழ்ப் பாடல்களாகிய அவற்றின் சுவை நலங்களைத் துய்க்கவிரும்பிய மறைக்காட்டீசர், திருக்கதவு திருக்காப்பு நீக்கக் காலந்தாழ்த்தருளினார். தம் வேண்டுகோட்கிரங்கி இறைவனை திருக்கதவு திறந்தருளாமை கண்டு வருத்தமுற்ற நாவுக்கரசர், 'இராவணனை விரலால் அடர்த்திட்ட நீவிர் ஒரு சிறிதும் இரக்கமுடையீரல்லீர்' என இறைவனை நோக்கிப் பிணங்கிப் பேசும் முறையில்,

> **அரக்கனை விரலால் அடர்த்திட்ட நீர்**
> **இரக்க மொன்றிலீர் எம்பெருமானிரே**
> **சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ**
> **சரக்க விக்கதவந் திறப்பிம்மினே.**

என அத் திருப்பதிகத்தின் இறுதித் திருப்பாட்டினைப் பாடத் தொடங்கினார். அந்நிலையில், பன்னெடு நாட்களாக அடைக்கப்பட்டிருந்த திருக்கதவு இறைவனருளால் திறக்கப் பெற்றது. அப்பொழுது ஆளுடைய பிள்ளையாரும் அப்பரடிகளும் நிலமிசை வீழ்ந்திறைஞ்சி நேர்முகவாயில் வழியே கோயிலுட் புகுந்து மறைக்காட்டீசரை வணங்கி வண்தமிழ்

மாலைகள் பாடிப் போற்றிப் புறம் போந்தனர். அப்பொழுது நாவுக்கரசர் ஞானசம்பந்தரை நோக்கி 'இறைவன் திருவருளால் திருக்கதவு நாடொறும் திறக்கப்பெற்றும் அடைக்கப் பெற்றும் வரும் நிலையில் இந் நிறைகதவம் அடைத்திடும்படி பாடியருளும்' என வேண்டிக் கொண்டார். அதுகேட்ட பிள்ளையார் 'சதுரம் மறை' என்ற முதற் குறிப்புடைய திருப்பதிகத்தினைத் தொடங்கி முதற் பாடலைப் பாட, மறைக்காட்டீசரருளால் திருக்கதவும் விரைவில் அடைக்கப்பெற்றது. அதுகண்டு நாவுக்கரசரும் பிள்ளையாரும் 'நம் பெருமான் அருள்செய்யப் பெற்றோம்' எனப் பெரிதும் மகிழ்ந்து இறைவனைப் போற்றி னார்கள். பிள்ளையார், எடுத்த திருப்பதிகத்தின் ஏனைய திருப் பாடல்களையும் பாடித் திருக்கடைக் காப்புச் சாத்தியருளினர். அன்று முதலாக அத்திருக்கதவு திறத்தலும் அடைத்தலுமாகிய வழக்கத்தைப் பெறுவதாயிற்று.

இவ்வாறு வேதங்களால் வழிபடப்பெற்று அடைக்கப் பட்ட திருக்கோயிற் கதவு அவ் வேதங்களில்வல்ல அன்பர் எவரும் வாராமையால் நெடுங்காலம் திறக்கப்பெறாதிருந்து பின்பு திருநாவுக்கரசர் பாடிய செந்தமிழ்ப் பதிகத்தால் திறக்கப் பெற்றதாகிய இவ்வற்புத நிகழ்ச்சி, பண்டை நான்மறைகளுக்கும் திருநாவுக்கரசர் அருளிய தேவாரத் திருமுறைகளுக்கும் சிறிதும் வேற்றுமையில்லை யென்பதனைத் தெளிவாக வலியுறுத்துதல் காணலாம். திருநாவுக்கரசர் திருவாய் மலர்ந்தருளிய செந்தமிழ் மறைகளாகிய திருமுறைகளின் சிறப்பினை,

> மணியினை மாமறைக்காட்டு மருந்தினை வண்மொழியால்
> திணியன நீள்கதவந் திறப்பித்தன தெண்கடலிற்
> பிணியன கன்மிதப் பித்தன சைவப் பெருநெறிக்கே
> அணியன நாவுக் கரையர் பிரான்றன் அருந்தமிழே.

எனவரும் திருத்தொண்டர் திருவந்தாதியில் நம்பியாண்டார் நம்பி விரித்துரைத்துப் போற்றியுள்ளமை இவண் நோக்கத் தகுவதாகும்.

மறைக்காட்டீசர் திருவருள் பெற்ற ஆளுடைய பிள்ளை யாரும் அப்பரடிகளும் திருமறைக் காட்டிலுள்ள திருமடத்தில் அடியார்களுடன் வந்து அமர்ந்தனர். தாம் அரிதில் திறக்கப் பாடிய தன்மையினையும் ஆளுடைய பிள்ளையார் விரைவில் அடைக்கப்பாடிய எளிமையினையும் கருதிய திருநாவுக்கரசர், 'திருக்கதவு திறக்கத் தாழ்த்ததன் காரணம் இறைவரது திருக் குறிப்பினை யான் உணராது அயர்த்தமையே' எனக் கவலையுற்ற மனத்தினராய், அத் திருமடத்தின் ஒருபால் துயில்கொண்டார்.

## வாய்மூரடிகள் ஆடல் கண்டு மகிழ்தல்

இவ்வாறு அப்பரடிகள் மறைக்காட்டிறைவரை மனத்தின் கண் நினைந்து உறங்கும்பொழுது, சிவபெருமான், பொன்மேனியில் வெண்ணீறு பூசிய சைவ வேடத்தினராய் அவர் கனவிலே தோன்றி, 'அன்ப, யாம் திருவாய்மூரில் இருப்போம், நீ நம்மைத் தொடர்ந்து வருவாயாக' என்று கூறி முன்னே செல்வாராயினர். அந்நிலையில் மெய்யுணர்வு பெற்று விழித்தெழுந்த திருநாவுக்கரசர், 'யான் இருந்த இடத்தில் என்னைத் தேடிக் கொண்டு வந்து தம்மைத் திருவாய்மூர்த் தலைவரென அடையாளங்களுடன் சொல்லி அங்கே வா என்று கூறிப்போயினர், அஃதென்கொல்' என ஐயமுற்று,

எங்கே யென்னை இருந்திடந் தேடிக்கொண்
டங்கே வந்தடை யாளம் அருளினார்
தெங்கே தோன்றுந் திருவாய்மூர்ச் செல்வனார்
அங்கே வாவென்று போனர தென்கொலோ.

என்னுந் திருக்குறுந்தொகையைப் பாடிக்கொண்டு 'எம் பெருமான் அருள் இதுவாயின், யானும் உடன் போவேன்' என எழுந்து வேதவனமாகிய திருமறைக்காட்டினை விட்டு நீங்கி விரைந்து பின் சென்றார். இறைவர், அப்பரடிகளுக்கு முன்னே கனவிற் காட்டிய திருக்கோலத்தோடும் விரைந்து நடந் தருளினார். அதுகண்டு நாவுக்கரசர் அவரைப் பின் தொடர்ந்து விரைந்து சென்றார். இங்ஙனம் நெரிடும் பொழுது விரைந்து நடந்தும் தமக்கு முன் செல்லும் வாய்மூர்த் தலைவரைத் திருநாவுக்கரசர் அணுகப் பெற்றிலர். அந்நிலையிற் சிவபெருமான், அணிமையிலே காட்சி கொடுப்பர் போலப் பொன்மயமான திருக்கோயிலை எதிரே காட்டி, அதனுள்ளே புகுந்து மறைந்தருளினார். திருநாவுக்கரசர், தம்மை அழைத்து வந்த வாய்மூர்த் தலைவர் இடைவழியில் தம்மைவிட்டு மறைந்தமை யெண்ணி மனங்கலங்கினார்.

இந்நிலையில் ஆளுடையபிள்ளையார், தம் அன்புடைய நண்பர் திருநாவுக்கரசரைக் காணாது, அரசர் திருவாய்மூர்க்குச் செல்கின்றார் என அடியார்கள் சொல்லக்கேட்டு, அவரைப் பின் தொடர்ந்து வந்து சேர்ந்தார். தம்பால் வைத்த பேரன்பினால் தம்மைத் தேடி வருகின்ற திருஞானசம்பந்தப் பிள்ளையாரைச் சேய்மையிற் கண்டு மகிழ்ந்து திருநாவுக்கரசர், ஆளுடைய பிள்ளையார் தம்மை அணுகிய நிலையில் 'இறைவர் திருக் குறிப்பறியாது திருக்கதவந் திறக்கப் பாடிய என்னைக் காட்டிலும் செந்தமிழ்த் திறத்தால் நன்கு செறியப்பாடி அடைப்பித்த நயஞ்செறிந்த நன்மொழியாளராகிய ஞானசம்பந்தப் பிள்ளை

யார் இதோ வந்து நிற்கின்றார். எளியேற்கே யல்லாது இப்பெருந் தகையார்க்கும் இறைவர் தம்மை மறைக்கும் வன்மையுடையரோ?' என வினவுங் குறிப்புடன்,

திறக்கப் பாடிய என்னினுஞ் செந்தமிழ்
உறைப்புப் பாடி அடைப்பித்தார் உந்நின்றார்
மறைக்க வல்லரோ தம்மைத் திருவாய்மூர்ப்
பிறைக்கொள் செஞ்சடையாரிவர் பித்தரே.

என்ற திருப்பாடலைப் பாடிப் போற்றினார். அப்பொழுது உமையொரு பாகராகிய இறைவர், ஆளுடைய பிள்ளையார் காண நேரே தோன்றி ஆடல் காட்டி அருள்புரிந்தார். அவ்வழகிய தெய்வக்காட்சியினைக் கண்ட திருஞானசம்பந்தர், 'தளரிளவளரென வுமை பாட' என்ற திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றித் தாம் கண்ட தெய்வக் காட்சியினைத் தம் கெழுதகை நண்பர் திருநாவுக்கரசர்க்குக் காட்டி மகிழ்ந்தார். நண்புடைய ஞானசம் பந்தர் காட்டிய வண்ணம் அம்மை யப்பரது ஆடற் கோலத்தைக் கண்டு மகிழ்ந்த அப்பரடிகள்,

பாட அடியார் பரவக் கண்டேன்
பத்தர் கணங்கண்டேன் மொய்த்த பூதம்
ஆடல் முழவம் அதிரக் கண்டேன்
அங்கை யனல்கண்டேன் கங்கையாளைக்
கோட லரவார் சடையிற் கண்டேன்
கொக்கி னிதழ் கண்டேன் கொன்றை கண்டேன்
வாடற் றலையொன்று கையிற் கண்டேன்
வாய்மூ ரடிகளை நான் கண்ட வாறே.

என்னும் திருத்தாண்டகத்தைத் தொடங்கி இத்திருப்பதிகத்தி லுள்ள திருப்பாட்டிறுதி தோறும் 'வாய்மூரடிகளை நான் கண்டவாறே' எனத் தாம் கண்ட தெய்வக் காட்சியை வியந் துரைத்துப் போற்றிப் பரவினார். இங்ஙனம் நாவுக்கரசர்க்கும் ஞானசம்பந்தர்க்கும் ஆடல் காட்டியருள்புரிந்த இறைவர், அவ்விரு பெருமக்களும் பாடியருளிய செந்தமிழ்ப் பாமாலைகளை அன்புடன் ஏற்று மறைந்தருளினார். நாயன்மார் இருவரும் திருவாய்மூரடைந்து சிவபெருமானை யிறைஞ்சிப் போற்றி அங்குச் சிலநாள் அமர்ந்திருந்தார்கள்.

இவ்வாறு திருநாவுக்கரசர், மறைக்காட்டுத் திருக்கோயிற் கதவினைத் தாம் அரிதில் திறக்கப்பாடியதும் ஞானசம்பந்தர் விரைவில் அடைக்கப்பாடியதும் ஆகிய அருமை எளிமை நோக்கி, 'இறைவர் திருவுள்ளம் அறியாது அயர்த்தேன்' என அஞ்சிக் கவலை கொண்டு திருமடத்தின் ஒருபால் உறங்கும் பொழுது, சிவபெருமான் அவருடைய கனவில் தோன்றித் தன்னை

வாய்மூர்த் தலைவன் எனக் கூறி வாய்மூர்க்கு வா என அழைத்துச் சென்றன ரென்பது,

மன்னு மாமறைக் காட்டு மணாளனார்
உன்னி உன்னி உறங்குகின் றேனுக்குத்
தன்னை வாய்மூர்த் தலைவனா மாசொல்லி
என்னை வாவென்று போனார் அதென்கொலோ.

என அப்பொழுது அப்பரடிகள் பாடிய திருப்பாடலால் இனிது புலனாம் இவ்வாறு தம் கனவிடைத் தோன்றிய இறைவரைக் கண்டு 'நீ யார்' என வினவ அவர் 'நீ கொண்ட அச்சத்தைத் தவிர் வாயாக, உன்னை அழைக்க வந்தேன்' என மறுமொழி பகர்ந்தன ரென்பதனை,

'தஞ்சே கண்டேன் தரிக்கிலாது ஆரென்றேன்
அஞ்சேல் உன்னை அழைக்க வந்தேன் என்றார்'

என்ற தொடரால் அடிகள் குறிப்பிட்டுள்ளார். இங்ஙனம் தம்மை அழைத்துச் செல்லும் வாய்மூர்ப் பெருமானை மிக அண்மையிலே தம் கண்ணெதிரே காணப்பெற்றும் தாம் அவரைப் பின்தொடர்ந்து தேடிய பொழுது அவ்விறைவர் இடை வழியில் மறைந்தருளத் தாம் அவரைக் காணாது கலக்கமுற்ற தன்மையினை,

கழியக் கண்டிலேன் கண்ணெதிரே கண்டேன்
ஒழியப் போந்திலேன் ஒக்கவே யோட்டந்தேன்
வழியிற் கண்டிலேன் வாய்மூரடிகள்தம்
சுழியிற் பட்டுச் சுழல்கின்ற தென்கோலோ.

என்ற பாடலாற் புலப்படுத்தினமை காணலாம். இங்ஙனம் நடு வழியில் இறைவர் மறைந்தமை கண்டு மனங் கலங்கிய திருநாவுக் கரசர், 'இறைவர் நம்முன் தோன்றி வாய்மூருக்கு வா என அழைத்து வந்ததும் பொய்யே' என ஐயுற்றனர் என்பது,

'மாதே வாகிய வாய்மூர் மருவினார் .
போதே யென்று புகுந்ததும் பொய்கொலோ'

எனவரும் அவரது வாய்மொழியாற் புலனாம். வாய்மூர்ப் பெருமானைக் காணாது வழியிடையே வருந்திய அப்பரடிகள், தம்முடைய அரும் பெறல் நண்பராகிய திருஞானசம்பந்தர் தம்மை அன்பினால் தேடிவருதலைச் சேய்மையிற் கண்டு, 'வீழி மிழலை யிறைவரைப் பாடி வாசிதீரக் காசு பெற்ற அப்பெருந் தகையார் என்பால் வைத்த பேரன்பினால் இப்பொழுது என்னைத் தேடி வருதல் போன்று வாய்மூர் இறைவரும் என்மேல் வைத்த பெருங்கருணையால் என்னைத் தேடிவந்து திருவாய்

மூர்க்கு வருவாயாக என்று சொல்லி வழியில் ஒளித்ததும் முறை யாமோ' என ஆளுடைய பிள்ளையாரது பேரன்பின் திறத்தையும் வாய் மூரிறைவரது அருட்செயலையும் நினைந் துருகினரென்பது,

பாடிப்பெற்ற பரிசில் பழங்காசு
வாடி வாட்டந் தவிர்ப்பார் அவரைப் போல்
தேடிக் கொண்டு திருவாய்மூர்க் கேயெனா
ஓடிப் போந்திங் கொளித்தவா றென்கொலோ.

என அவர் அப்பொழுது பாடியருளிய திருப்பாடலால் இனிது விளங்கும். இதன்கண் ஞானசம்பந்தப் பிள்ளையார் தம்மைத் தேடிவந்த அன்பின் செயலை, தம்மைத் திருமறைக்காட்டில் அழைக்கவந்த வாய்மூரிறைவரது அருட்செயலுக்கு நாவுக்கரசர் உவமையாக எடுத்துக்காட்டிய அன்பின் திறம் நினைந்து மகிழத் தக்கதாகும். 'இறைவரை மனத்தின்கண் எண்ணி யான் உறங்கிய நிலையில் அவர் என்னைத் தேடி வந்ததைக் காட்டிலும் யான் ஞானசம்பந்தரை நினையாது வந்த இந்நிலையிலே அன்புடை நண்பராகிய அவர் என்னைத் தேடிவருகின்ற இச்செயலே பெரிதும் மதிக்கத் தக்கது' என்பார், வாய்மூரிறைவர் தம்மைத் தேடி வந்த முன்னிகழ்ச்சிக்கு ஞானசம்பந்தர் தம்மைத்தேடி வருதலாகிய பின்னிகழ்ச்சியை உவமையாகக் கூறிப் போற்றினார். எத்தகைய பெரியோர்க்கும் இறைவனது திருக் குறிப்பு எளிதின் உணரத்தக்கதன்று எனத் தம் நெஞ்சிற்கு அறிவுறுத்துவார், ஞானசம்பந்தர்க்கு வீழிமிழலையிறைவர் வட்டங்கொடுத்து மாற்றவேண்டிய பழங்காசினை முதலில் தந்து, பின் அவர் 'வாசி தீரவே காசு நல்குவீர்' என வேண்டிப்பாட வட்டந்தீர்த்தருளிய நிகழ்ச்சியை எடுத்துரைத்தார். ஞானசம் பந்தர் அப்பரடிகள் பாற் கொண்ட நட்பின் பெருமையும் அப்பர் ஆளுடைய பிள்ளையார்பால் வைத்த பேரார்வமும் மேற் காட்டிய திருக்குறுந்தொகையால் நன்கு புலனாதல் காண்க.

இவ்வாறு சிவபெருமான், திருநாவுக்கரசரைத் திருவாய் மூர்க்கு வருக என அழைத்துவந்து இடைவழியில் மறைந்து பின் ஞானசம்பந்தர் நாவுக்கரசர் ஆகிய இருவருக்கும் ஆடல்காட்டி அருள்புரிதற்குரிய காரணம், திருநாவுக்கரசர் மனக்கவலையுடன் திருமடத்தின் ஒருபால் அஞ்சித் துயில் கொண்டமையேயாம். தாம் பத்துப் பாடல்கள் பாடுமளவும் மறைக்கதவம் திறக்கத் தாழ்த்த அருமையையும் ஞானசம்பந்தர் முதற்பாடலைப் பாடிய அளவில் மறைக்கதவம் அடைக்கப்பெற்ற எளிமையையும் எண்ணி, 'இறைவரது திருக்குறிப்பறியாது நாம் மறைக்கதவந் திறக்கப்பாடியது தவறு' எனத் திருநாவுக்கரசர் கருதினமையே அவர் கொண்ட மனக்கவலைக்குரிய காரணமாகும். நாவுக்கரசர் வேண்டிய வண்ணம் மறைக்காட்டீசர் விரைவில் திருக்கதவந்

திறக்கத் தாழ்த்தமைக்குரிய உண்மையான காரணம், அப்ப ரடிகள் பாடிய செந்தமிழ்ப் பாடல்களின் சுவை நலங்களைத் தாம் துய்த்து மகிழ்தல்வேண்டும் என்னும் பெருவேட்கையே யாமென்பது,

> 'பண்ணினேரு மொழியாளென் றெடுத்துப் பாடப் பயன்துய்ப்பான்,
> தெண்ணீ ரணிந்தார் திருக்காப்பு நீக்கத் தாழ்க்க'

எனவரும் சேக்கிழார் வாய்மொழியால் இனிது விளங்கும்.

இனி, திருநாவுக்கரசர் தாம் முன்னரே உணர்ந்து கொள்ளாத இறைவனது திருக்குறிப்பாக எதனைக் கருதினார் என ஆராய்தலும் இன்றியமையாததாகும். "ஒருவர்பால் ஒன்றைக் குறித்து வேண்டுவோர், அப்பொருள் நலங் குறித்துத் தம் உள்ளத்தில் நன்றாகச் சிந்தித்த பின்னரே அதுபற்றிய தம் வேண்டுகோளைத் தெளிவாக வெளியிடும் ஆற்றல் பெற்றோ ராவர். பண்டை நாட்களில் மறைகளால் அடைக்கப் பெற்று நெடுங்காலமாகத் திறக்கப்படாதிருந்த திருக்கதவினைத் திறந்து நேர்முகவாயில் வழியே சென்று மறைக்காட்டீசரை வழிபடுதல் வேண்டும் என முதன் முதலில் தெளிவாக எண்ணியவர் திருஞானசம்பந்தப் பிள்ளையாராதலின், அப்பெருந்தகையார் என்னைக்காட்டிலும் செந்தமிழ்நலஞ் சிறக்கப்பாடித் திருக் கதவினை அடைப்பித்தருளினார். அவரே திறக்கப்பாடுதற்குரிய உரிமையும் ஆற்றலும் உடையவர். இங்ஙனமாகவும் இதுபற்றிச் சிறிதும் எண்ணாத எளியோன், அன்பிற்சிறந்த ஆளுடைய பிள்ளையாரது வேண்டுகோட்கிசைந்து மறைக்கதவினைத் திறக்கப் பாடியது என் மனத்தொடு பொருந்திய உறுதியான வேண்டுகோளாகாது. என் மனத்திற் பதியாத நிலையில் மறைக் காட்டிறைவரை நோக்கிக் 'கண்ணினாலுமைக் காணக் கதவினைத் திண்ணமாகத் திறந்தருள் செய்ம்மினே' எனவும் 'அரக்கனை விரலால் அடர்த்திட்ட நீர் இரக்கமொன்றிலீர் எம்பெருமானிரே' எனவும் வருந்தி வேண்டியது. இறைவனது திருக்குறிப்பினை யுணராமையாற் செய்த பிழையாகும். இங்ஙனம் பிழையாக நடந்துகொண்ட எளியேனது வெற்றுரையினையும் மெய்யான வேண்டுகோளாக இறைவன் ஏற்றுக்கொண்டு மறைக் கதவினைத் திறந்தருளினன்' என்று இவ்வாறு திருநாவுக்கரசர் தம் நெஞ்சிற் கவலையும் அச்சமும் உடையவராய்ப் பின் வாய்மூரிறைவர் திருவருளால் அக்கவலை தீர்ந்து மகிழ்ச்சியுற்றன ரென்பது, அவர் வாய்மூர்ப் பெருமானைத் தொடர்ந்து சென்று பாடிய திருக்குறுந்தொகைப் பதிகத்தில்,

> 'திறக்கப் பாடிய என்னினுஞ் செந்தமிழ்
> உறைப்புப்பாடி அடைப்பித்தார் உந்நின்றார்'

எனவும்,

'தனக்கேறாமை தவிர்க்கென்று வேண்டினும்
நினைத்தேன் பொய்க்கருள் செய்திடும் நின்மலன்'

எனவும் தம்மைப்பற்றிக் கூறுந் தொடர்களால் நன்கு உய்த்துணரப்படும்.

அப்பரும் ஞானசம்பந்தரும் திருவாய்மூரிறைவரை வணங்கி விடைபெற்றுத் திருமறைக் காட்டில் எழுந்தருளியிருந்தார்கள். அப்பொழுது மதுரையிலிருந்த பாண்டிமா தேவியார் மங்கையர்க்கரசியாரும் அமைச்சர் குலச்சிறையாரும் அனுப்பிய தூதர்கள், திருமறைக்காட்டினை யடைந்து ஞானசம்பந்தரைக் கண்டு வணங்கி நின்று, பாண்டிய நாட்டிற் சமணர்கள் சைவர் களுக்குச் செய்யும் இடையூறுகள் பொறுக்கத் தக்கன அல்ல என்பதை எடுத்துரைத்தார்கள். அது கேட்ட ஞானசம்பந்தர், தென்னாட்டிற் சமணர்கள் செய்யும் தீமைகளை நீக்கிச் சிவ நெறியை நிலை நிறுத்தத் திருவுளங் கொண்டு திருவருள் வண்ணமாகிய திருநீற்றினை நினைந்து பாண்டிய நாட்டிற்குப் புறப்பட்டருளினார். அப்பொழுது அப்பரடிகள், ஆளுடைய பிள்ளையாரை நோக்கி, 'பிள்ளாய், அமணர்கள் செய்யும் வஞ்சனைக்கு ஓர் எல்லையில்லை, மாயத்தில் வல்லவராகிய அவர்கள் எனக்குச் செய்த தீங்கு பலவாகும். அன்றியும் இப்பொழுது கோள்களும் தீயனவாக உள்ளன. ஆதலால் இந் நிலையில் மதுரைக்கு எழுந்தருள உடன்படுதல் பொருந்தாது' எனத் தடுத்தருளினார். அதுகேட்ட பிள்ளையார், 'திரு நீற்றினைப் போற்றும் இயல்பினராகிய மங்கையர்க்கரசி யாரையும் குலச்சிறையாரையும் சென்று காணும் விருப் புடையேன். அங்குத் தீங்கு புரிந்துழலும் அமணர்களது வன்மையைச் சிதைத்துச் சிவநெறியை நிலை நிறுத்தியன்றி மற்றொரு செயலையும் மேற்கொள்ளேன். நும்மீது ஆணை' எனக்கூறி 'வேயுறு தோளிபங்கன்' எனத் தொடங்கும் கோளறு திருப்பதிகத்தைப் பாடினார். அப்பொழுது அப்பரடிகள் 'ஞான சம்பந்தரை நோக்கி' 'நீவீர் அங்குப் போதற்கு என்மனம் ஒருப்பட வில்லை. யானே மதுரைக்குச் சென்று சமணர்களது தீமை யினைச் சிதைத்து வருகின்றேன்' என்றுரைத்து அவர்க்கு முன் புறப்பட்டார். ஆளுடையபிள்ளையார், வேண்டும் அமைதிகளை யெடுத்துக் கூறி அப்பரடிகளைத் தடுத்து நிறுத்தி அவர்பால் அரிதில் விடைபெற்றுப் பாண்டி நாட்டிற்குப் புறப்பட்டருளினார்.

பின்பு திருநாவுக்கரசர் திருமறைக்காட் டீசரை வணங்கி அங்கிருந்து புறப்பட்டு நாகைக்காரோணம் முதலிய பதிகளைப் பணிந்து திருவீழிமிழலையை அடைந்தருளினார். விண்ணிழி

விமானத்தில் வீற்றிருந்தருளும் பெருமானைப் போற்றி மகிழ்ந்தார். பின்பு திருவாவடுதுறை யணைந்து மாசிலாமணியீசர் மலரடிகளை வணங்கி,

மாயிரு ஞாலமெல்லாம் மலரடி வணங்கும் போலும்
பாயிருங் கங்கையாளைப் படர்சடை வைப்பர் போலும்
காயிரும்பொழில்கள் சூழ்ந்த கழுமலவூரர்க் கம்பொன்
ஆயிரங் கொடுப்பார் போலும் ஆவடு துறையனாரே.

எனவரும் திருநேரிசை பாடிக் கழுமலப் பிள்ளையாராகிய திருஞானசம்பந்தர்க்கு ஆவடுதுறை யிறைவர் ஆயிரம் பொன் நிறைந்த உலவாக்கிழியினைக் கொடுத்தருளிய அருட்செயலை நினைந்துருகிப் போற்றினார்.

## எண்ணியது முடிக்கும் உண்ணா நோன்பு

பின்பு திருநாவுக்கரசர் பழையாறை யென்னுந் தலத்தை யடைந்து அங்குச் சமணர்களால் மறைக்கப்பட்ட 'வடதளி' யென்னும் கோயிலின் அருகே சென்ற பொழுது, அவருடைய கைகள் வடதளி யிறைவரைத் தாமே தொழுதன. அந்நிலையில் அங்கு எதிர்ப்பட்டார் சிலர், இது சிவபெருமானுக்கு உரிய திருக் கோயிலே, இவ்விமானம் அமணர்களால் மறைத்துக் கட்டப் பட்ட பொய்யான விமானமே' எனக் கூறினார்கள். அது கேட்டு மனம் பொறாத வாகீசர், அவ் விமானத்தின் அருகே ஓரிடத்தில் அமர்ந்து இறைவன் திருவடிகளைச் சிந்தித்து 'எம்பெருமானிரே, அமணர் வஞ்சனையால் மறைத்த மறைப்பினை யகற்றி அவர் களது ஆற்றலைச் சிதைத்திடுவீராக. அடியேன் நுமது திருமேனி வண்ணத்தைக் கண்டு வணங்கியன்றிப் போகேன்' என உண்ணா நோன்பு மேற்கொண்டிருந்தார்.

சிவபெருமான், பழையாறை நகரத்திலுள்ள வேந்தனது கனவில் தோன்றி, 'நாம் சமணர்களால் வடதளியில் மறைக்கப் பட்டிருக்கிறோம்' என அடையாளங்களுடன் சொல்லி, 'நம்மை நாவுக்கரசு வெளிப்படக் கண்டு கும்பிடும்படியாக நீ முறையற்ற அமணர்களை யழித்துப் போக்குவாயாக' என்றுரைத்து மறைந்தருளினார். விழிப்புற்றெழுந்த மன்னன், தான் கண்ட கனவினை அமைச்சர்களுக்குச் சொல்லி வியந்து இறைவன் அருளிச்செய்த அடையாளத்தின்படியே வடதளியை யடைந்து அங்கு அமணர்கள் செய்த வஞ்சனையைக் கண்டறிந்தான். உறைப்புடைத் திருத்தொண்டராகிய வாகீசர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். வடதளியாகிய திருக்கோயிலை வஞ்சனையால் மறைத்த சமணர்களை யானைகளால் அழித்துப்

போக்கினான். அவர்கள் கட்டிய பொய்யான விமானத்தை நீக்கிச் சிவபெருமானுக்குப் புதியதொரு விமானம் அமைத்து நாள் வழிபாட்டுக்கு வேண்டும். நிபந்தங்களையும் வழங்கி வடதளி யிறைவனை வணங்கி மகிழ்ந்தான்.

இங்ஙனம் இறைவனருளால் தமது எண்ணம் இனிது நிறைவேறியது கண்டு மகிழ்வுற்ற திருநாவுக்கரசர், தலைபறித்து நின்றுண்ணும் இயல்பினராகிய சமணர்கள் தம் வஞ்சனையால் எம்பெருமானை மறைக்க முயன்றனராயினும் நிலையில்லா தாராகிய அவர்களால் நிலையுடைய மெய்ப்பொருளாகிய இறைவனை மறைத்தல் கூடுமோ' என்னுங் கருத்தமைய,

தலையெ லாம்பறிக் குஞ்சமண் கையருள்
நிலையினான் மறைத் தால்மறைக் கொண்ணுமே
அலையி னார்பொழில் ஆறை வடதளி
நிலையி னானடி யேநினைந் துய்ம்மினே.

எனவரும் திருக்குறுந்தொகைப் பதிகத்தினைப் பாடி வடதளிப் பெருமானை வழிபட்டுச் சிலநாள் அங்கு அமர்ந்திருந்தார்.

பழையாறையிலுள்ள வடதளியாகிய சிவபெருமானது திருக்கோயிலைச் சமணர்கள் தம் பொய்கொள் விமானத்தால் மறைத்தனரென்பது மேற்காட்டிய திருக்குறுந் தொகையால் நன்கு புலனாம். அவ் விமானத்தினருகே திருருநாவுக்கரசர் சென்ற பொழுது திருக்கோயிலைத் தொழும் பயிற்சி வாய்ந்த அவருடைய கைகள், தாமே தொழுதன என்ற செய்தி,

'அண்டரைப் பழையாறை வடதளிக்
கண்டரைத் தொழுதுய்ந்தன கைகளே'

எனவரும் அவரது வாய்மொழியால் இனிது விளங்கும். 'வண்ணங்கண்டு நான் உம்மை வணங்கியன்றிப் போகேன்' என்று இறைவனைச் சிந்தித்து உண்ணா நோன்பு மேற் கொண்டிருந்த வாகீசர், தம் பொருட்டுச் சிவபெருமான் வேந்தனது கனவில் தோன்றிப் பழையாறை வடதளியில் அமணர்களால் மறைக்கப் பட்டிருப்பதனை அடையாளங் களுடன் கூறித் தெளிவித்தருளிய செய்தியை,

'அருட்டிறத்தணி யாறை வடதளித்
தெருட்டரைத் தொழத் தீவினைதீருமே'

எனவரும் தொடராற் குறிப்பிட்டமை காணலாம். வடதளியைத் தம் பொய்கொள் விமானத்தால் மறைத்த அமணர்களது வஞ்சனையைக் கண்டுணர்ந்த மன்னன், முறையற்ற செயலில் ஈடுபட்ட அமணர் ஆயிரவரையும் யானைகளால் அழித்துத் துரத்திய செயலை,

'மூக்கினான்முரன் றோதியக் குண்டிகை
தூக்கி னார்குலந் தூரறுத் தேதனக்
காக்கினான் அணி யாறைவடதளி'

எனவும்,

'குண்டரைக் குணமில்லரைக் கூறையில்
மிண்டரைத் துரந்த விமலன்'

எனவும்,

'நீதியைக் கெட நின்றமணேயுணும்
சாதியைக் கெடுமாசெய்த சங்கரன்'

எனவும்,

'ஆளுறா, ஆயிரஞ்சமணும் அழி வாக்கினான்'

எனவும் வரும் தொடர்களால் இறைவனது செயலாகத் திருநாவுக்கரசர் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு வேந்தன் செய்த செயலை இறைவன்மேல் ஏற்றிக் கூறியது, மன்னன் மேற்கொண்டு புரியம் முறை செய்தலாகிய தொழில் இறைவனது தொழிலெனவே கொள்ளப்படுமென்பதும் ஆவதும் அழிவதும் எல்லாம் இறைவன் செயலே யென்பதும் ஆகிய உண்மையினை யறிவுறுத் துங் குறிப்புடையதாதல் காண்க.

## பொதிசோறு பெற்றுப் பசி தீர்தல்

காவிரியின் இருகரையிலும் அமைந்த திருக்கோயில்களை வழிபட எண்ணிய திருநாவுக்கரசர், பழையாறையிலிருந்து புறப்பட்டுத் திருவானைக்கா, திருவெறும்பியூர், திருச்சிராப் பள்ளி, திருப்பராய்த் துறை ஆகிய தலங்களிற் சிவபெருமானைப் பணிந்து போற்றினார். பின்னர்த் திருப்பைஞ்ஞீலியை வழிபடச் செல்லுங்கால் வழியிலே பசியினாலும் தாகத்தினாலும் மிகவும் இளைப்புற்றார். எனினும் சிறிதும் மனந்தளராது சென்றார். அந் நிலையில் அவரது பசி வருத்தத்தை நீக்கத் திருவுளங்கொண்ட சிவபெருமான், வழியிலே ஒரு சோலையையுங் குளத்தையும் உண்டாக்கி வழிப் பயணஞ் செய்யும் அந்தணராகத் திருவுருத் தாங்கிக் கையிற் பொதிசோறு கொண்டு அவ்விடத்தே தங்கி யிருந்தார். திருநாவுக்கரசர் அவரை யணுகியபோது மறையவர், அவரை நோக்கி 'நீர் நீண்டதூரம் வழி நடந்து வந்தமையால் மிகவும் இளைத்திருக்கின்றீர். யான் கொடுக்கும் பொதிசோற்றை உண்டு இங்குள்ள தடாகத்தில் தண்ணீர் பருகி இளைப்பாறிச் செல்வீர்' என்றார். அந்தணர் கூறிய இன்னுரையினைக் கேட்ட நாவுக்கரசர், இறைவன் திருவருளே யிதுவெனக் கருதி, அவர்தந்த பொதிசோற்றினை உண்டு பசிதீர்ந்து தண்ணீர் பருகித் தளர்

வொழிந்திருந்தார். அப்பொழுது அந்தணராய் வந்த இறைவர், அப்பரை நோக்கி 'நீர் எங்கே போகின்றீர்' என வினவினார். திருப்பைஞ்ஞீலிக்குப் போகின்றேன்' என்றார் வாகீசர். அது கேட்ட அந்தணர் 'யானும் அங்கேதான் போகின்றேன்' என்று சொல்லித் திருநாவுக்கரசருடன் கூடிச் சென்று திருப்பைஞ் ஞீலியை யணுகியவுடன் மறைந்தருளினார். அதுகண்டு வியப் புற்ற வாகீசர், 'ஆடல் புரிந்த பெருமான் அடியேனைப் பொருளாகக் கொண்டு அருள்புரிந்த கருணைத்திறம் இதுவோ என நெஞ்சம் நெக்குருகிக் கண்ணீர் சொரிந்து நிலமிசை வீழ்ந் திறைஞ்சித் திருப்பைஞ்ஞீலித் திருக்கோயிலிற் சென்று பரமனைப் பணிந்து திருப்பதிகம் பாடிக் கைத்திருத்தொண்டு செய்திருந்தார்.

## தொண்டை நாடு செல்லுதல்

சிலநாட் சென்றபின் அங்கிருந்து புறப்பட்டுப் பல தலங் களையும் பணிந்து செங்கண் விடையார் அமர்ந்தருளும் திரு வண்ணாமலையை யடைந்து அன்பினாற் கும்பிட்டுப் போற்றி வீடுபேற்றினும் சிறந்த பேரின்பத்தை யெய்தி மகிழ்ந்தார். பின்பு தொண்டைநாட்டுத் திருப்பதிகளைப் பணிந்து போற்றும் ஆர்வமுடன் திருவோத்தூரை யடைந்து முக்கட் பெருமானைப் பரவிப் போற்றினார். மலைமகளார் செய்த வழிபாட்டினை யேற்றருளும் திருவேகம்பப் பெருமானையிறைஞ்சிப் போற்ற விரும்பிக் காஞ்சிநகரத்தின் மருங்கணைந்தார். 'அதிகைப் பெருமானால் சூலைநோய் தந்து ஆட்கொள்ளப் பெற்ற திருநாவுக்கரசர் இங்கு எழுந்தருளப்பெற்றோம்' என்று களிப்புற்ற காஞ்சிநகர மக்கள், திருநாவுக்கரசரை எதிர்கொண்டு போற்றி னார்கள். திருநாவுக்கரசர் திருவேகம்பத் திருக்கோயிலை யடைந்து கச்சியேகம்பரைக் கண்களாற் கண்டு நேர்ந்த மனத்திற் பொருந்தவைத்து,

> **கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்**
> **விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை**
> **அரவாடச் சடைதாழ அங்கையினில் அனலேந்தி**
> **இரவாடும் பெருமானை என் மனத்தே வைத்தேனே.**

எனவரும் திருப்பதிகத்தாற் பரவிப் போற்றினார். திருக்கச்சி மயானம், திருமேற்றளி முதலிய திருக்கோயில்களைப் பணிந்து கைத்திருத்தொண்டு செய்திருந்தார். அங்குறையும் நாளில் திரு மாற்பேறு என்னுந் தலத்தை அடைந்து இறைவனை யிறைஞ்சிக் காஞ்சியில் வைத்த காதலால் 'ஏகம்பன் காண் அவன் என் எண்ணத்தான்' என முடியும் திருத்தாண்டகத்தினைப் பாடிக் கொண்டு திருக்கச்சி யேகம்பத்தைக் கண்டு பணிந்தார். பின் பல தலங்களையும் பணிய விரும்பித் திருக்கழுக்குன்று, திருவான்

மியூர், மயிலாப்பூர், திருவொற்றியூர், திருப்பாசூர், திருவாலங் காடு, திருக்காரிகரை என்னுந் தலங்களை இறைஞ்சிப் போற்றித் தொண்டர்கள் புடைசூழத் திருக்காளத்தி மலையை அடைந்தார். பொன்முகலித் திருநதியாகிய தூய தீர்த்தத்தில் மூழ்கித் திருக் காளத்திமலையின் அடிவாரத்திற் சென்று வீழ்ந்திறைஞ்சி மலையின்மேல் ஏறிக் குடுமித்தேவரைக் கும்பிட்டு, நாதனை 'என்கண்ணுள்ளான்' எனப்போற்றும் திருத்தாண்டகத்தினைப் பாடிப் பரவினார். காளத்தி மலைமீது இறைவனருகே நின்றருளும் அன்புருவாகிய கண்ணப்பநாயனாருடைய திருவடிகளையிறைஞ்சித் தலைமீது குவித்த கையினராய்க் கண்ணீர் சொரியப் பணிந்து புறம்போந்து அம்மலை மேல் திருப்பணிகள் செய்து மகிழ்ந்தார். தென்கயிலை எனப் போற்றப் பெறுந் திருக்காளத்தி மலைமேல் இறைவனைப் பணிந்த குறிப்பினால் வடதிசையில் உள்ள திருக்கயிலாய மலையில் வீற்றிருந்தருளும் இறைவனது திருக்கோலத்தினைக் காண வேண்டுமென்னும் பெருவிருப்பம் திருநாவுக்கரசர்க்கு உண்டாயிற்று.

## திருக்கயிலாய யாத்திரை

கயிலைக் கோலங் காண விழைந்த திருநாவுக்கரசர், காளத்தி நாதரை வணங்கிப் போற்றி மலை, காடு, ஆறு, நாடு என்ப வற்றைக் கடந்து திருப்பருப்பதத்தையடைந்து இறைவனைச் சொன்மாலைகளால் துதித்தார். பின் தெலுங்கு கன்னட நாடு களைக் கடந்து, காடு நதி மலை என்பன நெருங்கியுள்ள நாடுகள் பிற்பட மாளவ தேயத்தை யடைந்தார். அங்கிருந்து வெம்மை மிக்க வழியாகிய சுரங்களைக் கடந்து இலாடம், பைதிரம் ஆகிய தேசங்களை நீங்கிக் கங்கையாறு வளஞ்சுரக்கும் காசிப்பதியினை அடைந்தார். வாரணாசியாகிய அத்திருப்பதியில் எழுந்தருளிய முழுமுதற் கடவுளை யிறைஞ்சித் தம்முடன் வந்த அடியார்களை அங்கே தங்கும்படி பணித்தார். தாம் அதற்கப்பாலுள்ள கற் சுரத்திலும் மனிதர்கள் சென்றறியாத வானுற வோங்கிய காடுகளிலும் இலை, கிழங்கு, கனி முதலியவற்றை யுண்பத னையும் தவிர்ந்து இரவு பகலாக இடைவிடாது நடந்து சென்றார். அதனால் அவருடைய பாதங்கள் பரட்டளவும் தேய்ந்தன. அங்ஙனம் தேய்ந்தும் திருக்கயிலாய மலையிற் பெருமானைக் காண வேண்டுமென்னும் பேரார்வத்தால் தம்முடைய இரண்டு கைகளையும் ஆதரவாகக் கொண்டு தாவிச் சென்றார். அந் நிலையிற் கைகளின் மணிக்கட்டுக்களும் கரைந்து சிதைந்தன. மேலும் ஆர்வம் மிகுதலால் பருக்கைக் கற்கள் நிரம்பிய அவ்வழியில் மார்பினால நகர்ந்து சென்றார். 'மார்வும் தசை நைந்து சிந்த எலும்புகளும் முரிவனவாயின.' பின் புரண்டு

புரண்டு போயினார். அதனால் உடம்பு முழுதும் சிதைத்து தேய்ந்திடவும் அப்பரடிகளது உள்ளம் திருக்கயிலையினைக் காண வேண்டுமென்னும் உறுதியிற் சிறிதும் குறைந்திலது. அவ் வுறுதியினால் மெல்ல நகர்தற்கு முயன்றும் அது கூடாமையால் சொல்வேந்தராகிய அப்பரடிகள் அவ்வழியிலே செயலற்றுத் தங்கினார்.

அப்பொழுது சிவபெருமான், திருநாவுக்கரசரை மீளவும் தமிழ்நாட்டிற்கு அனுப்பி உலகெலாம் உய்ய நிலைபெற்ற இனிய செந்தமிழ்த் திருப்பாடல்களைப் பாடுவித்தற்கும் கயிலைக் கோலத்தைக் கண்டு மகிழ வேண்டுமென்ற ஆளுடைய அரசரது விருப்பத்தை இனிது நிறைவேற்றுதற்கும் திருவுளங்கொண்டு, அவ்விடத்தில் ஒரு தடாகத்தை உண்டாக்கி வற்கலையாடையும் சடைமுடியுமுடைய முனிவர் வடிவத்துடன் அவர்க்கு முன் வந்து நின்று 'நீர் நும்முடைய உடம்பின் அங்கங்களெல்லாம் சிதைந்தழிய இக்கொடிய வெம்மை மிகுந்த காட்டில் எதன் பொருட்டு வந்தீர்' என வினவினார். திருநீறணிந்த முனிவராகிய அவரைக் கண்டு அவர் கூறும் இன்னுரைகளைச் செவிமடுத்த நிலையில் அப்பரடிகளுக்கு உடம்பின் சிதைவாலுண்டாகிய சோர்வு ஒருவாறு நீங்கியது. பேசுதற்குரிய உணர்வு சிறிது உண்டாயிற்று. நாவுக்கரசர் முனிவரை நோக்கி 'முனிவர் பெருமானே, வடகயிலையில் அண்டர்நாயகனாகிய சிவபெரு மான் உமையம்மையாருடன் எழுந்தருளியிருக்கும் திருக் கோலத்தை அவர்க்கு அடியவனாகிய யான் கண்ணாரக் கண்டு கும்பிட வேண்டுமென்னும் விருப்புடன் வந்தேன்' எனக் கூறினார். அதுகேட்ட முனிவர் திருக்கயிலாயமலை யென்பது தேவர்களாலும் அணுகுதற்கரியது; நிலவுலகில் வாழும் மனிதர் களால் அடைதற்குரிய எளிமையுடையதன்று. நீவிர் வெம்மை மிக்க இக்கொடுஞ் சுரத்திலே வந்து என் செய்தீர். இங்கிருந்து மீண்டு போதலே நும்மாற் செய்யத்தக்கது' என மொழிந்தார்.

இங்ஙனம் முனிவர் மொழியக்கேட்ட அப்பரடிகள் 'ஆளும் நாயகனாகிய எம்பெருமான் திருக்கயிலாய மலையில் வீற்றி ருக்குந் திருக்கோலத்தைக் கண்டு வணங்கியல்லது மாளும் இயல்பினதாகிய இவ்வுடம்பைக் கொண்டு இனி மீளேன்' என மறுத்துரைத்தார். அந்நிலையில் முனிவராய் வந்த சிவ பெருமான் அரசரது உள்ளத்தின் உறுதியையறிந்து விண்ணிலே மறைந்து நின்று 'ஓங்கு நாவினுக்கரசனே எழுந்திரு' என உரைத்தருளினார். உடனே அப்பரடிகள் அழிந்த உடலுறுப் பெல்லாம் முன்போல நிரம்பப்பெற்றுத் தீங்கு நீங்கி யெழில் பெற்ற திருமேனியுடன் எழுந்து நின்றார். 'என்னை ஆண்டு கொண்டருளிய அண்ணலே, விண்ணிலே மறைந்து அருள்

புரியும் வேதநாயகனே, கயிலையில் எழுந்தருளியிருந்த நின் திருக்கோலத்தை நான் கண்ணினாற் கண்டு தொழுதற்குத் திருவருள் புரிவாயாக' என்று உரைத்து நிலமிசை வீழ்ந் திறைஞ்சினார். அப்பொழுது சிவபெருமான் அருள்வாக்கினால் அப்பரை யழைத்து 'நீ இப்பொய்கையில் மூழ்கி நாம் கயிலையி லிருந்த காட்சியைத் திருவையாற்றில் கண்டு மகிழ்வாயாக' எனப் பணித்தருளினார்.

## திருவையாற்றிற் கயிலைக்கோலம் கண்டு மகிழ்தல்

இறைவனது அருள்வாக்கினைத் தலைமேற்கொண்டு இறைஞ்சிய திருநாவுக்கரசர், 'இறைவர் காட்டிய பொய்கையில் திருவைந்தெழுத்தோதி மூழ்கித் திருவையாற்றிலுள்ளதோர் தடாகத்திலே தோன்றிக் கரையேறினார். எம்பிரான் தரும் கருணையே இதுவென வுணர்ந்தார். கண்களில் அன்பு நீர் சொரிய இறைவனை வணங்கிச் செல்லும் திருநாவுக்கரசர், திருவையாறாகிய அத்திருப்பதியில் உள்ள நிற்பன நடப்பன ஆகிய எல்லாவுயிர்களும் ஆணும் பெண்ணுமாய்த் துணை யொடும் திகழ்தலைக்கண்டு அவைகளைச் சத்தியும் சிவமுமாகிய தன்மையிற் கண்டு பணிந்து திருக்கோயிலுக்கு முன்னே சென்றார். அப்பொழுது அத்திருக்கோயில் கயிலைமால் வரையாகத் தோன்றியது. அங்கே திருமால், பிரமன், இந்திரன் முதலிய தேவர்கள் அன்பினால் இறைவனைப் போற்றிசைக்கும் தோத்திர வொலியும் மறைமுழக்கமும் எம்மருங்கும் முழங்கின. தேவர், தானவர், சித்தர், வித்தியாதரர், இயக்கர் முதலிய கணங் களும் தவமுனிவர்களும் எவ்விடத்தும் நெருங்கிப் போற்றினார். அரம்பையர் முதலியோர் இசை பாடினர். இறைவரது திரு முன்னர் அவருடைய ஊர்தியாகிய செங்கண்மால் விடை எதிர் நின்றது. பெரிய தேவராகிய நந்தியெம்பிரான் பிரம்பினைக் கையிலேந்தி இறைவரது திருமுன்னிலையிற் பணி செய்து உலா வினார். வெள்ளி மலையின் மேற் பவள மலையொன்று மரகதக் கொடியுடன் விளங்குவது போன்று, திருக்கயிலாயத்திலே செம்மேனியம்மானாகிய சிவபெருமான், நீலமேனிநேரிழை யாகிய உமாதேவியாருடன் வீற்றிருந்தருளினார். அழகிய அத் தெய்வக் காட்சியைக் காணப்பெற்று மகிழ்ந்த திருநாவுக்கரசர், தலைமிசைக் கைகுவித்திறைஞ்சி நிலமிசை வீழ்ந்து பணிந்தார்.

வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
மீளாமே ஆளென்னைக் கொண்டாய் போற்றி
ஊற்றாகி யுள்ளே யொளித்தாய் போற்றி
ஓவாத சத்தத் தொலியே போற்றி
ஆற்றாகி யங்கே அமர்ந்தாய் போற்றி
ஆறங்கம் நால்வேதம் ஆனாய் போற்றி

காற்றாகி யெங்குங் கலந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.

எனவரும் போற்றித் திருத்தாண்டகங்களாகிய பாமாலைகளைப் பாடிப் போற்றினார். எல்லையற்ற திருவருளாகிய இன்பக் கடலில் திளைத்து மகிழ்ந்தார்.

இவ்வாறு தூய தொண்டராகிய திருநாவுக்கரசர் கயிலைத் திருக்கோலத்தைக் கண்டு மகிழும் நிலையில் இறைவர், தாம் காட்டிய கயிலைக் காட்சியை மாற்றித் திருவையாறமர்ந்த பழைய நிலையினைப் புலப்படுத்தியருளினார். அந்நிலையில் அப்பரடிகள் பெரிதும் வருந்தி ஒருவாறு தெளிவுபெற்று இறைவனருளால் தாம் கண்ட கயிலைக் காட்சியை உலக மக்கள் உணர்ந்து மகிழும் வண்ணம்,

மாதர்ப் பிறைக் கண்ணியானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவாரவர் பின் புகுவேன்
யாதுஞ் சுவடுபடாமல் ஐயாறடைகின்றபோது
காதல் மடப்பிடியோடுங் களிறு வருவன கண்டேன்
கண்டேனவர் திருப்பாதங் கண்டறியா தன கண்டேன்.

எனவரும் திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றினார். கயிலைக் கோலங் காட்டியருளிய ஐயாற்றிறைவரைத் தொழுது திருத் தாண்டகம், குறுந்தொகை, நேரிசை, விருத்தம் முதலிய சொன் மாலைகளைப் பாடித் திருத்தொண்டு செய்து அங்கு அமர்ந் திருந்தார்.

அப்பரடிகள் திருக்காளத்தி மலையில் வீற்றிருந்தருளிய இறைவரை வழிபட்ட நிலையில் திருக்கயிலாய மலையைக் கண்டு வழிபட வேண்டுமென்றும் பெருவேட்கை அவருள்ளத்தில் உண்டாயிற்றென்பது, அடிகள் காளத்தி யிறைவரைப் பரவிப் போற்றிய திருத்தாண்டகத்தில்,

'கனத் தகத்தான் கயிலாயத் துச்சியுள்ளான்
காளத்தியான் அவனென் கண்ணுளானே'

எனக் குறிப்பிடுதலால் உய்த்துணரப்படும். அடிகள் வடநாட்டுத் தலங்களை வணங்கிக் கயிலையில் வீற்றிருந்தருளுந் தெய்வக் கோலத்தைக் கண்டு வழிபட வேண்டுமென்னும் பெருவிருப்பத் துடன் காடு, நாடு, மலை முதலியவற்றைக் கைதொழுது செல்லும் வழியிற் சிவபெருமான் தவ முனிவராகத் தோன்றி அவரைத் தடுத்து நிறுத்தி விண்ணிடை மறைந்து நின்று 'இங்குள்ள தடாகத்தில் மூழ்கித் திருவையாற்றில் நம்மைக் காண்பாயாக' என அருள் புரிந்தன ரென்பது,

'வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
மீளாமே ஆளென்னைக் கொண்டாய் போற்றி'

எனத் திருநாவுக்கரசர் கயிலைமலையானைக் கண்டு போற்றிய போற்றித் திருத்தாண்டகத் தொடராலும்,

'வேற்றுமாகி விண்ணாகி நின்றார்மொழி விரும்பி
ஆற்றல் பெற்றவர் அண்ணலார் அஞ்செழுத்தோதிப்
பாற்றடம்புனற் பொய்கையில் மூழ்கினார் பணியால்'

எனவரும் சேக்கிழாரடிகள் வாய்மொழியாலும் நன்கு புலனாம். காடொடு நாடும் மலையும் கைதொழுது போற்றிய திருநாவுக்கரசர், தவமுனிவராய் வந்த சிவபெருமான் பணித்த வண்ணம் அவர் காட்டிய பொய்கையில் மூழ்கினமையால் நிலமிசைக் காற்சுவடுபட நடந்து செல்லாத நிலையில் தாம் திருவையாற்றிற்குச் சென்றமையும், அங்கு வாழும் எல்லாவுயிர்களும் சத்தியுஞ் சிவமுமாக விளங்கிய தெய்வக் காட்சியைக் கண்டமையும் ஆகிய அற்புத நிகழ்ச்சியை,

'ஏடு மதிக்கண்ணியானை ஏந்திழையாளொடும் பாடிக்
காடொடு நாடும் மலையுங் கைதொழு தாடாவருவேன்'

எனவும்,

'யாதுஞ் சுவடுபடாமல் ஐயாறடைகின்றபோது
காதல் மடப்பிடியோடுங் களிறு வருவன கண்டேன்
கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்.'

எனவும் வரும் தொடர்களால் நன்கு புலப்படுத்தியுள்ளார்.

## திருப்பூந்துருத்தியில் திருமடம் அமைத்தல்

திருவையாற்றிறைவரை வணங்கி மகிழ்ந்த திருநாவுக்கரசர், அங்கிருந்து புறப்பட்டு நெய்த்தானம் மழபாடி முதலிய தலங்களைப் பணிந்து பாடித் திருபூந்துருத்தியை அடைந்தார். பூந்துருத்தி மகிழும் பொய்யிலியாகிய பெருமானைத் திருத்தாண்டகம், திருக்குறுந்தொகை, திருவிருத்தம் ஆகிய திருப்பதிகங்களாற் பாடிப் போற்றினார். அங்கே தங்கியிருந்து இறைவனை வழிபடும் பெருவிருப்பத்துடன் அவ்வூரில் திங்களும் ஞாயிறும் தோயும்படி வானுறவோங்கிய திருமடம் ஒன்றைக் கட்டுவித்து இறைவனை வழிபட்டிருந்தார். அந்நாட்களில் பலவகைத் தாண்டகம், பரவுதனித் தாண்டகம், அடைவு திருத்தாண்டகம், திருவங்க மாலை முதலிய செந்தமிழ்ச் சொல்மலர்களாற் சிவபெருமானை அருச்சித்துப் போற்றி மகிழ்ந்தார்.

திருநாவுக்கரசர் இங்ஙனமிருக்க, திருமறைக்காட்டிலிருந்து இவர்பால் விடைபெற்றுச் சென்ற திருஞானசம்பந்தப் பிள்ளையார், பாண்டிய நாட்டின் தலைநகராகிய மதுரையை

அடைந்து சமணர்களை வாதில்வென்று பாண்டியனது கூனை நிமிர்த்தருளித் தென்னாடெங்கும் திருநீற்றின் ஒளிபரப்பி அங்கிருந்து மீண்டு சோழநாட்டுத் தலங்களை வணங்கி வருபவர். அன்பிற் சிறந்த நண்பராகிய அப்பரடிகளைக் காணும் விருப்புடன் 'அப்பர் எங்குற்றார்' என அடியார்களை வினவினார். 'அப்பர் திருப்பூந்துருத்தியில் இருக்கின்றார்' என அடியார்கள் கூறினார்கள். அதுகேட்ட பிள்ளையார், அடியார் கூட்டத்துடன் புறப்பட்டுத் திருப்பூந்துருத்தியின் அருகே வந்தணைந்தார்.

ஞானசம்பந்தர் திருப்பூந்துருத்தியருகே வருதலைக் கேள்வியுற்ற நாவுக்கரசர், பிள்ளையாரை எதிர்கொண்டு போற்ற விரும்பி முன்சென்று, தம்மை இன்னாரென ஒருவரும் அறியாத படி அடியார் கூட்டத்துட் புகுந்து, திருஞானசம்பந்தர் அமர்ந்து வரும் முத்துச் சிவிகையினைத் தாங்கிவந்தார். அப்பொழுது ஞானசம்பந்தர், அடியார்களை நோக்கி 'அப்பர் எங்குற்றார்' என வினவினார். பிள்ளையாரது அன்பின் திறத்தைக் கண்டு நெஞ்சம் நெக்குருகிய அப்பரடிகள், 'உம் அடியேன் உம் அடிகள் தாங்கிவரும் பெருவாழ்வு வந்தெய்தப்பெற்று இங்குற்றேன்' என மொழிந்தார். அது கேட்ட ஞானசம்பந்தப் பிள்ளையார் அச்சமும் வியப்புமெய்திச் சிவிகையினின்றும் கீழே குதித்து அப்பரடிகளை வணங்கினார். அப்பரும் அவர் வணங்குதற்கு முன் விரைந்து வணங்கினார். இவ்விரு பெருமக்களது நட்பின் திறத்தைக்கண்ட அடியார்களெல்லோரும் உளமுருகித் தொழுது போற்றினார்கள். ஆளுடைய பிள்ளையார் அப்பரடிகளுடன் திருப்பூந்துருத்தித் திருக்கோயிலை அடைந்து சிவபெருமானைப் பணிந்து போற்றித் திருமடத்தில் அமர்ந்திருந்தார்.

பாண்டி நாட்டிற் சென்று சமணர்களை வாதில் வென்றதும் பாண்டியனது கூனை நிமிர்த்ததும் தென்றமிழ் நாட்டில் திருநீறு பரப்பியதும் ஆகிய செய்தியையும் பாண்டிமாதேவியாராகிய மங்கையர்க்கரசியாரது சிவபத்தியையும் மந்திரியார் குலச்சிறை யாரது திருத்தொண்டின் பெருமையினையும் திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர்க்கு எடுத்துரைத்தார். அவற்றைக் கேட்டு மகிழ்ந்த திருநாவுக்கரசர், செந்தமிழ்ப் பாண்டி நாட்டினைக் கண்டு வழிபடத் திருவுளங் கொண்டார். தாம் தொண்டை நாட்டிற்குச் சென்று அங்குள்ள திருத்தலங்களை வழிபட்ட செய்தியைக் கூறி, அத் திருக்கோயில்களை வணங்கித் தமிழ் மாலைகளாற் போற்றும் வண்ணம் நண்புடைய ஞானசம்பந் தர்க்கு எடுத்துரைத்தார். அங்ஙனமே ஆளுடையபிள்ளை யாரும் தொண்டை நாட்டுத் தலங்களை வணங்க விரும்பி அப்பரடிகள் பால் விடைபெற்றுச் சென்றார்.

## பாண்டி நாட்டு யாத்திரை

திருநாவுக்கரசர் திருப்பூந்துருத்தியிறைவரை யிறைஞ்சி விடைபெற்றுத் தென்றிசை நோக்கிப் புறப்பட்டுப் பாண்டி நாட்டையடைந்து திருப்புத்தூரை இறைஞ்சிப் போற்றி மதுரையை யடைந்தார். திருவாலவாய்த் திருக்கோயிலைத் தொழுது வலம்வந்து உள்ளே புகுந்து திருந்திய நூற் சங்கத்தில் தமிழாராய்ந்தருளிய சொக்கலிங்கப் பெருமானை வழிபட்டு 'முளைத்தானை யெல்லார்க்கும் முன்னே தோன்றி' எனத் தொடங்கும் திருத்தாண்டகத்தாற் பரவிப் போற்றினார். பாண்டிமாதேவியாராகிய மங்கையர்க்கரசியாரும் அவருடைய கணவரும் வேந்தர் பெருமானுமாகிய நின்ற சீர் நெடுமாறனாரும் மந்திரியார் குலச்சிறையாரும் திருநாவுக்கரசரைக் கண்டு வணங்கி எல்லையிலாப் பெருமகிழ்ச்சியுடையராய்ப் பேரன்புடன் உபசரித்தார்கள். திருநாவுக்கரசர் அங்குச் சிலநாள் தங்கியிருந்து திருநேரிசை திருத்தாண்டகம் முதலிய செந்தமிழ் மலர்களால் திருவாலவாய்ப் பெருமானை அருச்சித்துப் போற்றிக் கைத்திருத் தொண்டு செய்து மகிழ்ந்தார்.

பின்பு திருநாவுக்கரசர் திருப்பூவணத்தை வழிபடச் சென்றார். பூவணத்திறைவர் தமது தெய்வத் திருக்கோலத்துடன் திருநாவுக்கரசர்க்கு எதிரே தோன்றிக் காட்சி தந்தருளினார். அவ்வழகிய தெய்வக் காட்சியைக் கண்டு மகிழ்ந்த அப்பரடிகள்,

**வடிவேறு திரிசூலம் தோன்றுந் தோன்றும்**
**வளர்சடைமேல் இளமதியம் தோன்றுந் தோன்றும்**
**கடியேறு கமழ் கொன்றைக் கண்ணி தோன்றும்**
**காதில் வெண் குழைதோடு கலந்து தோன்றும்**
**இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும்**
**எழில் திகழும் திருமுடியும் இலங்கித் தோன்றும்**
**பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்**
**பொழில் திகழும் பூவணத்தெம் புனிதனார்க்கே.**

எனவரும் திருத்தாண்டகத் திருப்பதிகத்தால் பூவணத்திறைவரை வழுத்திப் போற்றினார். பின்பு திருவிராமேச்சரம், திருநெல் வேலி, திருக்கானப்பேர் முதலாகப் பாண்டி நாட்டிலுள்ள எல்லாத் தலங்களையும் பணிந்து செந்தமிழ்ப் பதிகளாற் பரவிப் போற்றிச் சோழ நாடடைந்து பல தலங்களையும் பணிந்து போற்றித் திருப்புகலூரில் அமர்ந்திருந்தார்.

## அண்ணலார் சேவடிக்கீழ் அமர்தல்

நைந்துருகு சிந்தையராகிய நாவுக்கரசர், புகலூர்ப் பெருமான் திருவடிகளை வணங்கி உழவாரத் தொண்டுசெய்து மகிழ்ந்திருந்தார். அந்நாட்களில் நின்ற திருத்தாண்டகம், தனித் திருத்தாண்டகம், மன்றுறைவார் வாழ்பதிகள் வழுத்து திருத் தாண்டகம் (க்ஷேத்திரக்கோவை), குறைந்த திருநேரிசை, தனித் திருநேரிசை ஆருயிர்த்திருவிருத்தம், தசபுராணத்தடைவு, பாவநாசத் திருப்பதிகம், இறைவனை நேர்பட நின்று அறைகூவுந் திருப்பதிகம் முதலிய பாமாலைகள் அப்பரடிகளால் அருளிச் செய்யப்பெற்றன எனப் பெரிய புராணம் கூறும்.

திருநாவுக்கரசரது உள்ளத் துறுதியை உலகத்தார்க்குத் தெளிவாகப் புலப்படுத்தத் திருவுளங் கொண்ட சிவபெருமான், அடிகள் உழவாரத் தொண்டு புரியுங்கால் அவ்வுழவாரம் நுழைந்த இடங்களிலெல்லாம் பொன்னும் நவமணிகளும் விளங்கித் தோன்றும் படி செய்தனன். ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்கும் உரவோராகிய திருநாவுக்கரசர், பொன்னும் மணிகளுமாகிய அவற்றைப் பருக்கைக் கற்களோடு ஒப்பக் கருதி உழவாரத்தில் ஏந்தி அருகிலுள்ள தாமரைத் தடாகத்தில் வீசியெறிந்தார். அழகிற் சிறந்த அரம்பை ஊர்வசி முதலிய தேவமாதர்கள், மின்னற் கொடிகள் போன்று வானுலகத்தி னின்றும் இறங்கிவந்து வாகீசரது திருமுன் நின்று இன்னிசை பொருந்தப் பாடியும் இன்பச் சுவையினைப் புலப்படுத்தும் ஆடல்களை இயற்றியும் அடிகள்மேல் மலர்களைத் தூவி அவரை அணைபவர் போன்று அணுகியும் கூந்தல்அவிழ இடை நுடங்க ஓடியும் மீண்டும் அவரை நெருங்கியும் இவ்வாறு அப்பரடிகளை மயக்குதற்குப் பெரிதும் முயன்றார்கள். எனினும் இறைவன் திருவடிகளை மறவாது நினைந்து போற்றும் மெய்யுணர்வுடைய தவச் செல்வராகிய திருநாவுக்கரசர், தம் ஒருமை நிலையிற் சிறிதுந் தவறாது தாம் செய்யுந் திருப்பணியில் உறைப்புடையராய் விளங்கினார். தம்மை மயக்கி நிற்றற்குக் காரணமாகிய இருவினைகளை நோக்கி, 'யான் திருவாரூரில் வீற்றிருந்தருளும் அம்மானாகிய இறைவனுக்கு ஆட்பட்டேன் நும்மால் அலைக்கப்படும் எளிமை யுடையே னல்லேன் என்னைத் துன்புறுத்தாதீர்' என்பார்,

பெய்மாயப் பெருங்கடலிற் புலம்பா நின்ற
புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை யரித்துத் தின்பீர்க்
கில்லையே கிடந்ததுதான், யானேல் வானோர்
தம்மானைத் தலைமகனைத் தண்ண லாரூர்த்
தடங்கடலைத் தொடர்ந்தோரை யடங்கச் செய்யும்

எம்மான்றன் அடித்தொடர்வான் உழிதர்கின்றேன்
இடையிலேன் கெடுவீர்காள் இடறேன்மின்னே.

எனவரும் திருத்தாண்டகத் திருப்பதிகத்தை அருளிச் செய்தார். அடிகளது உறுதிப்பாட்டினையுணர்ந்த அரம்பை யர்கள், தங்களாற் செய்யத்தக்கது எதுவுமில்லை எனத் தெளிந்து திருநாவுக்கரசரை வணங்கிச் சென்றார்கள். இச்செய்தி திருநாவுக் கரசர் புராணத்தில் 416 முதல் 424 வரையுள்ள செய்யுட்களால் விரித்துரைக்கப் பெற்றுள்ளது. பொறிவாயில் ஐந்தவித்தானாகிய இறைவனருளிய பொய் தீரொழுக்க நெறி நின்று புலனைந்தும் வென்ற அப்பர் பெருமானது உள்ளத் திண்மையினை விளக்கும் இவ்வற்புத நிகழ்ச்சியினை,

'திருநாவுக் கரசடி யவர்நாடற் கதிநிதி
தெளிதேனொத் தினியசொல் மடவா ரூர்ப்பசி முதல்
வரு வானத் தரிவையர் நடமாடிச் சிலசில
வசியாகச் சொலுமவை துகளாகக் கருதிமெய்
உருஞானத் திரள்மன முருகாநெக் கழுது கண்
உழவாரப் படைகையில் உடையான்வைத் தனதமிழ்
குருவாகக் கொடுசிவன் அடிசூடத் திரிபவர்
குறுகார் புக் கிடர்படு குடர்யோனிக் குழியிலே.

எனவரும் திரு ஏகாதசமாலையில் நம்பியாண்டார் நம்பி எடுத்துரைத்துப் போற்றியுள்ளமை இவண் நினைக்கத் தகுவதாகும்.

திருப்புகலூரிற் சிவபெருமானுக்குத் திருத்தொண்டு புரிந்த மகிழும் திருநாவுக்கரசர், தம் அந்தக்கரணங்கள் புறத்த சொல்லாது உள்ளே யொடுங்கப்பெற்று இறைவன் திருவடியைத் தலைப்படுஞ் செவ்வியினை யெய்தினார். 'புகலூர்ப் பெருமான், தன்னுடைய அடியவனாகிய எளியேனை இனித் தன் திருவடியின்கண் இருத்தி அருள்புரிவன்' என்னும் முன்னுணர்ச்சி மூளப்பெற்றுப் பல திருவிருத்தங்களைப் பாடிப் போற்றினார். இச்செய்தி,

தன்னைச் சரணென்று தாளடைந்தேன் தன் அடியடையப்
புன்னைப் பொழிற்புக லூரண்ணல் செய்வன கேண்மின்களோ
என்னைப் பிறப்பறுத் தென்வினை கட்டறுத் தேழ்நரகத்
தென்னைக் கிடக்கலொட் டான் சிவலோகத் திருத்திடுமே.

எனவரும் திருவிருத்தத்தால் இனிது புலனாதல் காணலாம்.

இங்ஙனம் இறைவன் தம்மைத் திருவடிக்கீழ் விரைவிற் சேர்த்துக்கொள்வான் என்னும் முன்னுணர்வு மூளப்பெற்ற ஆளுடைய வரசர், புகலூர்ப் பெருமானை நோக்கி, 'புண்ணியத்தின் உருவாக விளங்கும் எம்பெருமானே,

உன்னுடைய திருவடிக்கே எளியேனும் வருகின்றேன்' என நெஞ்சம் கசிந்துருகி வேண்டும் நிலையில்,

**எண்ணுகேன் என்சொல்லி எண்ணு கேனோ**
**எம்பெருமான் திருவடியே எண்ணி னல்லால்**
**கண்ணிலேன் மற்றோர் களைகண் இல்லேன்**
**கழலடியே கைதொழுது காணி னல்லால்**
**ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்**
**ஒக்க அடைக்கும்போ துணரமாட்டேன்**
**புண்ணியா உன்னடிக்கே போது கின்றேன்**
**பூம்புகலூர் மேவிய புண்ணியனே.**

எனவரும் திருத்தாண்டகத் திருப்பதிகத்தைப் பாடிப் போற்றி நண்ணரிய சிவானந்த ஞானவடிவேயாகி அண்ணலார் சேவடிக் கீழ் எய்தி இன்புற்றார்.

இங்ஙனம் திருநாவுக்கரசராகிய பெருந்தகையார், திருப்புக லூரிறைவர் திருமுன் நின்று 'உன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே' எனத் தாண்டகச் செந்தமிழாற் போற்றிய நிலையிலேயே இவ்வுலக வாழ்வைத் துறந்து அற வாழியந்தணனாகிய இறைவன் திருவடியைத் தலைக்கூடிய நன்னாள், சித்திரைத்திங்களிற் சதயத்திருநாள் எனப் பெரிய புராணம் கூறும்.



# சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாறு

தேவாரத் திருமுறைகளுள் ஏழாந் திருமுறையாகத் தொகுக்கப்பெற்றுள்ள திருப்பதிகங்களைப் பாடியருளிய அருளாசிரியர், நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளாவர். சிவனடியே சிந்திக்கும் பெருந் திருவினராகிய மெய்யடியார் களின் பேரன்பினையும் அத்தகைய தொண்டர்களுக்கு எளிவந்து அருள்புரியும் இறைவனது பெருங்கருணைத் திறத்தையும் உலகமக்கள் நன்குணர்ந்து உய்திபெறும் வண்ணம் நேசம் நிறைந்த உள்ளத்தால் ஈசனடியார் பெருமையினைப் போற்றி உரைக்கும் திருத்தொண்டத் தொகையென்னும் திருப்பதிகத்தை நம்பியாரூரர் அருளிச் செய்துள்ளார். பலவகை நன்னெறி களிலும் நின்று நிலைபெற்ற பேரன்பினால் தத்தமக்கியன்ற திருத் தொண்டுகளைப் புரிந்து இறைவனடி சேர்ந்த செம்புலச் செல்வர்களாகிய திருத்தொண்டர்களின் திருப்பெயர்களைப் போற்றிப் பரவுவது திருத்தொண்டத் தொகையெனும் இத்திருப் பதிகமாகும். இதனைத் 'தென்தமிழ்ப் பயனாய் வந்த திருத் தொண்டத் தொகை' எனச் சேக்கிழாரடிகள் சிறப்பித்துப் போற்றியுள்ளார்.

திருநாரையூரிற் பொல்லாப் பிள்ளையார்பால் அருள் பெற்ற நம்பியாண்டார் நம்பியென்பார். இத்திருத் தொண்டத் தொகையின் வகையாகத் 'திருத்தொண்டர் திருவந்தாதி' யென்னும் செந்தமிழ்ப் பனுவலை இயற்றியுள்ளார். அருண் மொழித் தேவராகிய சேக்கிழாரடிகள், சுந்தமூர்த்தி சுவாமி களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு திருத் தொண்டத் தொகையின் விரியாகத் திருத்தொண்டர் புராண மென்னும் செந்தமிழ்ப் பெருங்காப்பியத்தை இயற்றியுள்ளார். பெரிய புராணம் என வழங்கும் இப்பெருங்காப்பியம், தொடக்கம் முதல் முடிவுவரை சுந்தரமூர்த்தி சுவாமிகளது வரலாற்றைத் தொடர் பாக விரித்துரைக்கும் முறையில் அமைந்துள்ளது. இந்நூல், சுந்தரர் திருவாய் மலர்ந்தருளிய திருத்தொண்டத் தொகையின் பொருளை விளக்குங் கருத்துடன் அத்திருப்பதிகத்திற் போற்றப் பெற்ற திருத்தொண்டர்களின் வரலாறுகளை முறையே விரித் துரைப்பதாகலின், திருத்தொண்டத் தொகைவிரியெனவும் திருத்தொண்டர்புராணம் எனவும் வழங்கப் பெறுவதாயிற்று. சுந்தரமூர்த்தி சுவாமிகளது வரலாற்றை உணர்ந்து கொள்வதற்கு

அவர் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகங்களும் திருத்தொண்டத்தொகையின் வகையாகிய திருத்தொண்டர் திருவந்தாதியும் அதன் விரியாகிய திருத்தொண்டர் புராணமும் சிறந்த ஆதாரங்களாவன. இவற்றைத் துணையாகக் கொண்டு சுந்தரரது வரலாற்றை ஒரு சிறிது நோக்குவோமாக.

## தோற்றம்

திருக்கயிலாய மலையிலே சிவபெருமானுடைய அடியார்களுள் ஒருவராகிய ஆலால சுந்தரரென்பார், இறைவனுக்கு மலர் கொய்து மாலை தொடுத்தணிதலும் திருவருள் வண்ணமாகிய திருநீற்றினை யேந்தி நிற்றலுமாகிய அணுக்கத் தொண்டினை மேற்கொண்டவராவர். அவர் ஒருநாள் வழக்கம்போல் இறைவனுக்குரிய நறுமலர்களைப் பறித்துவரத் திருநந்தன வனத்தை யடைந்தார். அப்பொழுது உமையம்மையாருடைய சேடியர்களாகிய அனிந்திதை, கமலினி ஆகிய இருவரும் அத் திருநந்த வனத்தில் மலர்கொய்து நின்றனர். ஆலாலசுந்தரர் இறைவனது திருவருளால் அவ்விருவரையுங் கண்டு காதல்கொண்டார். அம்மகளிர் இருவரும் அவ்வண்ணமே சுந்தரரது பேரழகில் ஈடுபட்டுத் தம் உள்ளத்தை அவர்பாற் செலுத்தினார்கள் ஆலாலசுந்தர மகளிர்பாற் சென்ற தம் மனத்தை மீட்டு இறைவனுக்கேற்ற தூய மலர்களைக் கொய்து கொண்டு சிவபெருமான் திருமுன்னர்ச் சென்றார். அங்ஙனமே மகளிர் இருவரும் உமையம்மையார் அணிதற்குரிய நறுமலர்களைப் பறித்துக் கொண்டு சென்றனர்.

எல்லா வுயிர்களுக்கும் உயிர்க்குராய் உள்நின்று அருள் சுரக்கும் சிவபெருமான், ஆலாலசுந்தரரது உள்ளக் குறிப்பினை முன்னரே உணர்ந்தவராதலின் அவரை நோக்கி, 'நீ மாதர்மேல் மனம்வைத்தனை ஆதலால் தென்னாட்டிலே பிறந்து மெல்லியலாராகிய அம்மகளிருடன் காதல் இன்பம் துய்த்து மீள்வாயாக' எனப் பணித்தருளினார். அது கேட்டு உள்ளங்கலங்கிய ஆலால சுந்தரர், கைகளைத் தலைமீது குவித்து இறைவனை இறைஞ்சி நின்று, 'எனது ஆருயிர்த்தலைவனாகிய ஐயனே, நின்னுடைய செந்தாமரை மலர்போலுந் திருவடிகளைப் பிரிந்து வருந்துதற்குக் காரணமாகிய காமத்தாற் சிறுமையுற்ற எளியேன், மயக்கத்தை விளைவிக்கும் மனிதப் பிறவியை யடைந்து மதிமயங்குங் காலத்து, ஆண்டவனாகிய நீ அடியேனைத் தடுத்து ஆட்கொண்டருளுதல் வேண்டும்' என வேண்டிக்கொண்டார். வேண்டுவார் வேண்டுவதே ஈந்தருளும் சிவபெருமானும் அவரது வேண்டுகோளுக்கு இசைந்தருளினார்.

இறைவன் திருவருளால் ஆலாலசுந்தரர், புண்ணியத்தின் விளை நிலமாகத் திகழும் செந்தமிழ்நாட்டிலே திருமுனைப்பாடி

நாட்டின் தலைநகராகிய திருநாவலூரிலே மாதொரு பாகனார்க்கு வழிவழி யடிமைசெய்யும் ஆதிசைவ வேதியர் மரபிலே தோன்றிப் புகழால் மேம்பட்ட சடையனார் என்பார்க்கு அவருடைய அருமைத் திருமனைவியார் இசை ஞானியார்பால் மகவாகத் திவவதாரஞ் செய்தருளினார். பெற்றோர்கள் சிவனருளால் தோன்றிய தம் குழந்தைக்கு நம்பி யாரூரர் என்ற திருப்பெயரிட்டு அழைத்தார்கள். நம்பியாரூரர் நடைகற்கத் தொடங்கித் தெருவிலே சிறுதேர் உருட்டி விளையாடுங்காலத்து அந்நாட்டிலே வாழும் நரசிங்கமுனையர் என்னும் அரசர் அக் குழந்தையின் அறிவொளி திகழும் திருமுகப் பொலிவினைக் கண்டு மகிழ்ந்து பெற்றோராகிய சடையனாரை அடைந்து நெருங்கிய நண்பின் மிகுதியாலே அக்குழந்தையை வேண்டிப்பெற்றுத் தம் அரச பதவிக்குரிய அரசிளங்குமரன் என்ற முறையில் அன்பினால் வளர்த்துவந்தார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் தாம் பாடிய திருப்பதிகங்களில் திருநாவலூரன்* (* சுந்தரர் தேவாரம் 7-6-10) மறையார் தங்குரிசில்* (*சுந்தரர் தேவாரம் 7-25-10), சடையன்றன் காதலன்* (* சுந்தரர் தேவாரம் 7-58-10), இனைஞானி சிறுவன்* (* சுந்தரர் தேவாரம் 7-16-11), எனத் தம்மைக் குறிப்பிடுதலால், இவர் திருமுனைப்பாடி நாட்டிலுள்ள திருநாவலூரில் ஆதிசைவ வேதியராகிய சடையனார்க்கு அவர் தம் வாழ்க்கைத் துணைவியார் இசைஞானியார் திருவயிற்றில் மகவாகத் தோன்றியவரென்பது நன்கு விளங்கும். இவர் தம்மைப் பல இடங்களிலும் ஆரூரன்* (* சுந்தரர் தேவாரம் 7-1-10, 7-2-11, 7-3-10 முதலிய திருக்கடைக் காப்புப் பாடல்கள் பலவற்றிலும் ஆரூரன் என்ற பெயர் குறிப்பிடப் பெற்றுள்ளது. நாவலூரன், ஆரூரான் என்ற இரு பெயர்களுக்கும் உரிய வகையில் 'ஊரன்' என்ற பெயரமைந்த பாடல்களும் உள்ளன.) என்ற பெயராற் கூறிக்கொள்ளுதலை ஊன்றி நோக்குங்கால் இவர்க்குப் பெற்றோர் இட்டழைத்த பெயர் ஆரூரன் என்பது இனிது புலனாம். ஆரூரன் என்னும் இப்பெயர், திருவாரூரிற் கோயில் கொண்டருளிய சிவபெருமானுக்குரிய திருப்பெயராகும்* (*'ஆரூரா என்றென்றே அலறாநில்லே' எனவரும் திருநாவுக்கரசர் தேவாரத் தொடரில் ஆரூரன் என்ற பெயர் இறைவனுக்குரிய திருப்பெயர்களுளொன்றாகக் குறிக்கப் பெற்றமை காண்க.) இத்திருப் பெயரே தமக்குரிய இயற் பெயராக வழங்கப்பெற்றதென்பதனை ஆரூரன் பேர் மூடி வைத்த மன்னுபுலவன்'* (* சுந்தரர் தேவாரம் 7-41-10) சீரூருந்திருவாரூர்ச் சிவன் மேல் சென்னியில் வைத்த ஆரூரன்'* (* சுந்தரர் தேவாரம் 7-87-10, 7-89-11) எனவரும் தொடர்களால் நம்பியாரூரர் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். இவருடைய தந்தையைப் பெற்ற பாட்டனார் ஆரூரன் என்ற இயற்பெயரினை உடையவர் என்பது, சிவ பெருமான் அற்புதப்பழ ஆவணங்காட்டி இவரைத் தடுத்தாட் கொண்ட வரலாற்றால் இனிது விளங்கும். இவருடைய

தாயாராகிய இசைஞானியார் திருவாரூரில் ஞானசிவாசாரி யார்க்கு மகளாகத் தோன்றியவர் எனத் திருவாரூர்க் கோயிலில் வரையப்பட்டுள்ள கல்வெட்டொன்று* (* தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி IV, எண் 397) குறிப்பிடுதலால், சுந்தரருடைய பெற்றோர்க்கும் திருவாரூர்க்கும் நெருங்கிய தொடர்புண்மை புலனாம். இக்குறிப் புக்களைக் கூர்ந்து நோக்குங்கால் சுந்தரர்க்கு அவர்தம் பெற்றோர் இட்டு வழங்கிய ஆரூரன் என்ற பெயர் திருவாரூரிற் கோயில் கொண்டருளிய சிவபெருமானுக்குரிய திருப்பெயரென்பது நன்கு புலனாம். ஆண்மக்களுள் அழகு அறிவு இளமை செல்வம் முதலியவற்றால் யாவரும் விரும்பிப் போற்றத் தக்க சிறப் புடையாரை நம்பியெனச் சிறப்பித்துப் போற்றுதல் மரபாதலின் அம்மரபின்படி தவப் பெருஞ் செல்வராகிய ஆரூரார்க்கு நம்பி யென்ற சிறப்புப் பெயரும் உரியதாயிற்று. எனவே அவர் நம்பியாரூரர் என அழைக்கப்பெறுவாராயினர்.

திருநாவலூரைத் தலைநகராகக்கொண்டு திருமுனைப்பாடி நாட்டினை ஆட்சிபுரியும் நரசிங்கமுனையரையர் என்னும் குறுநில மன்னர், ஆதிசைவ வேதியராகிய சடையனார்பால் அவர் புதல்வர் நம்பியாரூரரை அன்பினால் வேண்டிப் பெற்றுத் தம் அரசிளங்குமரனாக ஆதரித்து வளர்த்து வந்தாரென்பது,

**'நாதனுக்கூர் நமக்கூர் நரசிங்கமுனையரையன்**
**ஆதரித் தீசனுக்காட் செயுமூ ரணிநாவலூரென்**
**றோத நற்றக்க வன்றொண்டன் ஆரூரன்'**

என நம்பியாரூரர் தம்மைப்பற்றிக் கூறும் குறிப்பினால் இனிது விளங்கும்.

இவ்வாறு பெருமைசால் அரசரது பேரன்புக்கு உரிய பிள்ளையாய் வளர்ந்த நம்பியாரூரர். தாம் பிறந்த அந்தணர் மரபுக்கேற்ப முந்நூலணிந்து மறைகள் நான்கும் ஆறங்கங்களும் முதலாகவுள்ள அளவற்ற கலை நூல்களைக் கற்றுத் தெளிந்தார். 'உளங்குளிர் தமிழூரன்'* (* சுந்தரர் தேவாரம் 7-57-12) 'அருங்குலத் தமிழூரன்'* (* சுந்தரர் தேவாரம் 7-72-11) 'நான்மறையங்கம் ஓதிய நாவன்'* (*சுந்தரர் தேவாரம் 7-54-10) 'மன்னுபுலவன் வயல்நாவலர் கோன்'* (* சுந்தரர் தேவாரம் 7-41-10) என நம்பியாரூரர் தம்மைப்பற்றிக் கூறுங்குறிப்புக்களால் இவர், தம் இளமைப்பருவத்தே உள்ளத்தைக் குளிர்விப்பதாய்த் தமக்குரிய தாய்மொழியாகிய தமிழிலுள்ள தொன்னூல்களையும் வடமொழி நூல்களையும் முறையாகப் பயின்று புலமைச் செல்வராய்த் திகழ்ந்தாரென்பது நன்கு தெளியப்படும்.

இங்ஙனம் இளம்பருவத்திலேயே திருவும் கல்வியும் வாய்க்கப்பெற்ற நாவலூர் நம்பியாகிய இப்பெருந்தகையார்,

நரசிங்க முனையரையரது ஆட்சியில் இளவரசராயிருந்து பழகி நாட்டு மக்களுக்கு நலம் பல புரியும் வேந்தராய் விளங்கினார். இச்செய்தி,

'நாடெலாம் புகழ் நாவலூராளி நம்பிவன்றொண்டன்'*
(*சுந்தரர் தேவாரம் 7-64-10)

எனத் தம்மைப் பற்றியும்,

'வேந்தராயுலகாண்டு அறம்புரிந்து
வீற்றிருந்த இவ்வுடல்'*

(*சுந்தரர் தேவாரம் 7-64-6)

எனத் தமது உடம்பைச் சுட்டியும் இவ்வாசிரியர் கூறும் மொழிகளால் இனிது விளங்கும்.

## இறைவனால் தடுத்தாட் கொள்ளப் பெறுதல்

இவ்வாறு திருமுனைப்பாடி நாட்டின் இளவரசராய் விளங்கிய நம்பியாரூரர்க்குத் திருமணப்பருவம் எய்தியது. அவருடைய தந்தையாராகிய சடையனார், தங்கள் குடும்பத்தோடு ஒத்த சிறப்புடைய குடும்பத்தினராய்ப் புத்தூரிலே வாழும் ஆதி சைவ வேதியராகிய சடங்கவி சிவாசாரியாருடைய திருமகளைத் தம் புதல்வர்க்கு மணஞ்செய்து தரும்படி முதியோர் சிலரை அவர்பால் மகட்பேச அனுப்பினார். அஃதுணர்ந்த சடங்கவி சிவாசாரியார், பெருமகிழ்ச்சியுடையராய் முதியோர்களை வரவேற்று உபசரித்தார். தம்முடைய திருமகளை நம்பியாரூரர்க்கு மணஞ்செய்து தருவதாக அன்புடன் கூறினார். முதியோர்களும் அவரது இசைவினைச் சடையனார்பாற் சென்று தெரிவித்தார்கள். அதுகேட்டு மனமகிழ்ந்த சடையனார், திருமண நன்னாளை உறுதிசெய்துகொண்டு நம்பியாரூரரது அரச பதவிக்கு ஒத்த வகையிலே சுற்றத்தார் நண்பர் முதலிய பலருக்கும் திருமணத் திருமுகம் அனுப்பினார். சடங்கவி சிவாசாரியாரும் தம்முடைய ஊராகிய புத்தூரிலே நாவலூர்த் தலைவரது திருமணம் நிகழ்தற்கு வேண்டிய எல்லாவற்றையுங் குறைவறச் செய்து முடித்தார்.

திருமணத் திருநாளின் முதல்நாளில் மணமகனாராகிய நம்பியாரூரர்க்குக் காப்பணிதல் முதலிய மங்கலச் சடங்குகள் மறைமுறைப்படி செய்யப்பெற்றன. மறுநாள் வைகறைப் பொழுதில் துயிலுணர்ந்தெழுந்த நம்பியாரூரர், தமக்குரிய நாட்கடன்களை முடித்துத் திருமஞ்சனமாடினார். மன்னவர் திருவும் தங்கள் வைதிகத் திருவும் பொலியத் திருமணக் கோலங் கொண்டார். சிவபெருமானுடைய திருவடிகளை நெஞ்சத் திருத்தித் திருவெண்ணீறணிந்து மங்கல வாத்தியங்கள் முழங்கக்

குதிரைமீதமர்ந்து நண்பர்களும் சுற்றத்தாரும் சூழ்ந்துபோற்றப் புத்தூரை அடைந்தார். மங்கல மகளிர் நிறைகுட முதலியன ஏந்தி எதிர்கொண்டு அழைத்தார்கள். நம்பியாரூரர் குதிரையை விட்டு இறங்கப்போந்து திருமணப் பந்தருள் மணத்தவிசில் அமர்ந் திருந்தார்.

இங்ஙனமாக, ஆலால சுந்தரரைத் தடுத்தாட் கொள்வதாகத் திருக்கயிலாயத்திலே முன்பு உறுதி கூறிய சிவபெருமான், தாம் கூறிய வண்ணம் நம்பியாரூரரைத் தடுத்தாட்கொள்ள விரும்பி, முதுமை வேதியராகத் திருமேனி கொண்டு, தளர்ந்த நடை யினராய்த் தண்டூன்றித் திருமணப் பந்தருள்ளே நுழைந்தார். அங்குத் திருமணங் காண வந்திருந்த பெருமக்களை நோக்கி, 'சபையோர்களே, யான் கூறும் இம்மொழியைக் கேட்டீராக' என்றுரைத்தார். அவரது வருகையை யறிந்த மறையவர்களும் நம்பியாரூரரும் 'நன்று உமது நல்வரவு, நாங்கள் செய்த தவப் பயனே யாம் நீவிர் சொல்லக் கருதியதனைச் சொல்லுமின்' என்றனர். முதியராய் வந்த அவ்வேதியர், மணமகனாகிய 'நாவலூரரை நோக்கி'எனக்கும் உனக்கும் ஒரு பெருவழக்கு உள்ளது. அதனைத் தீர்த்த பின்னரே நீ திருமணஞ் செய்து கொள்ளுதல் வேண்டும்' எனக் கூறினார். அதுகேட்ட நம்பி யாரூரர், மறையவரை நோக்கி 'என்பால் உனக்கு வழக்கு இருக்குமாயின் அதனைத் தீர்த்தன்றித் திருமணஞ் செய்யேன். அதனை முழுதுஞ் சொல்லுக' என்றார்.

முதியராய் வந்த அந்தணர், அங்குள்ளவர்களைப் பார்த்து 'வேதியர்களே, இவ்வழக்கினைக் கேண்மின், நாவலூரனாகிய இவன், எனக்கு வழிவழி அடியவனாவான்' எனக் கூறினார். அம்மொழியினைக் கேட்டு அங்கிருந்தோர் திடுக்கிட்டனர்; சிலர் 'இவன் யாவன்' என இகழ்ந்து நோக்கினர்; சிலர் வெகுண்டனர்; திருநாவலூரர் 'இம் மறையோன் மொழி மிகவும் நன்றா யிருக்கிதே' எனச் சொல்லி நகைத்தார். அதுகண்ட கிழவர், அவரருகே சென்று 'ஏடா, அக்காலம் உன்பாட்டன் எழுதிக் கொடுத்த அடிமையோலை என்கையில் இருக்கிறது. இக்காரி யத்தை நீ இகழ்ந்து சிரிப்பது ஏன்' எனக் கேட்டார். 'அந்தணர்கள் வேறோர் அந்தணர்க்கு அடிமையாதலென்பது இவ்வுலகில் எங்கும் கேட்டதில்லை. நீ சொல்லவே இன்று புதிதாகக் கேட்டேன். மறையோனாகிய நீ பித்தனோ' என்றார் நம்பி யாரூரர். அது கேட்ட முதியவர் 'யான் பித்தன் ஆயினும் ஆக; பேயன் ஆயினும் ஆக; நீ எத்தனை முறை இகழ்ந்துரைத்தாலும் அவ்வுரைகளால் யான் சிறிதும் நாணமுறுவேனல்லேன். நீ என்னைச் சிறிதும் அறிந்து கொள்ளவில்லையென்பதையே

நின்மொழிகள் புலப்படுத்துகின்றன. வித்தகம் பேச வேண்டாம் பணி செய்ய வேண்டும்' என்றார்.

அப்பொழுது நம்பியாரூரர், 'ஆளோலை யுண்டு' என இவ் வேதியர் கூறும் மொழியின் உண்மையை யறிந்துகொள்ள வேண்டுமென்னுங் கருத்துடையராய், புதியராய் வந்த அவ் வேதி யரை நோக்கி, 'ஓலையைக் காட்டுக'எனக் கூறினார். நீ அவ் வோலையைக் காணுதற்குத் தகுதியுடையையோ? அதனை யான் அவையினர் முன்னிலையிற் காட்டி நீ எனக்கு அடிமை என்பதை உறுதிப்படுத்திய நிலையில் எனக்கு அடிமைத் தொழில் செய்தற்கே யுரியாய்' என்றார் முதுமறையோர். அம் மொழி யினைக் கேட்டு வெகுண்ட நாவலூரர், விரைந்தெழுந்து அவ் வேதியர் கையிலுள்ள ஓலையைப் பறிக்கச் சென்றார். அந்நிலை யில் மறையவராய் வந்த இறைவர், விரைந்து ஓடினார். மாலும் அயனும் தொடர ஒண்ணாத அவரை வலிந்து பின் தொடர்ந்த ஆரூரர், அம்மறையவர் கையிலுள்ள ஓலையைப் பற்றி 'அந்தணர் கள் வேறோர் அந்தணர்க்கு அடிமையாதல் என்ன முறை' என்று சொல்லிக் கிழித்தெறிந்தார். ஓலையைப் பறிகொடுத்த முதியவர், 'இதுமுறையோ' எனக்கூவி அழுதரற்றினார். அப்பொழுது அங் குள்ளவர்கள் அவ்விருவரையும் விலக்கினார்கள். முறையிட்டு வருந்தும் கிழவராகிய மறையவரை நோக்கி, 'உலகில் இல்லாத வழக்கினைக்கொண்டு பிணங்கி நிற்கும் நீவிர் வாழும் ஊர்.எது?' என வினவினார்கள். அதுகேட்ட முதியவர், 'யான் வாழும் ஊர் நெடுந்தூரத்திலுள்ளதன்று. மிகவும் அண்மையிலுள்ளதாகிய திருவெண்ணெய் நல்லூரேயாகும். நம்பியாரூரனாகிய இவன், என்கையிலுள்ள ஓலையை வலிந்து பிடுங்கிக் கிழித்தெறிந் தமையால் எனக்கு அடிமையென்பதைத் தானே உறுதிப்படுத்தி விட்டான்' என மொழிந்தார்.

அம்மொழியினைக் கேட்ட திருநாவலூர், 'இவன் பழைய மன்றாடிபோலும்' என நினைந்து அம்முதியவரை நோக்கி, 'உன்னுடைய ஊர் திருவெண்ணெய் நல்லூரா யிருக்குமானால் உனது பிழைபட்ட வழக்கை அங்கேயே பேசித் தீர்த்துக் கொள்ளலாம்' என்றார். முதியவராய் வந்த மறையவர், 'திரு வெண்ணெய் நல்லூர்க்கே வந்தாலும் அங்கு வாழும் தூய நான் மறையோராகிய அவையத்தார் முன்னிலையில் உன்பாட்டன் எழுதிக்கொடுத்த மூல ஓலையைக்காட்டி நீ எனக்கு அடிமை யென்பதை உறுதிப்படுத்துவேன்' என்று கூறிக் கோலையூன்றிக் கொண்டு முன்னே சென்றார். 'அவரைத் தொடர்ந்து நம்பியா ரூரர் பின் சென்றார்', 'இவ்வழக்கு என்னாகுமோ' எனக் கலக்க முற்ற மனத்தினராய்ச் சுற்றத்தார்களும் உடன் சென்றார்கள்.

திருவெண்ணெய் நல்லூரையடைந்த முதுமறையோர், அங்குள்ள அவையினரை நோக்கி, 'திருநாவலூரனாகிய இவன், எனக்கு அடியான் என யான் காட்டிய அடிமையோலையை வலிந்து பிடுங்கிடக்கிழித் தெறிந்துவிட்டு மூதறிவுடைய அவை யோராகிய நும் முன்னே வந்துள்ளான். இதுவே எனது முறை யீடாகும்' என மொழிந்தார். அது கேட்ட அவையத்தார், அம் முதியவரை நோக்கி 'ஐயா, அந்தணர் அடிமையாதல் இவ்வுலகத் தில் இல்லையே' என்றனர். 'இவன் என் கையினின்றும் வலிதிற் பிடுங்கிக் கிழித்த ஓலை, இவனுடைய தந்தைக்குத் தந்தையாகிய பாட்டனே உளமிசைந்து எழுதிக் கொடுத்ததாகும்' எனக் கூறினார், மறை முதியோர். அந்நிலையில் அவையிலுள்ள பெரியோர்கள், திருநாவலூரரை நோக்கி, நும் பாட்டனார் உளமிசைந்து எழுதிக்கொடுத்த அடிமையோலையை இம்மறை யோன் காட்டினால் அதனை வலிய வாங்கிக் கிழித்தெறிவது நுமக்கு வெற்றியாகுமா? ஊன் சுருங்கி வற்றிய உடலினையுடைய இம்முதியோன் தன் வழக்கினைப் பொருத்தமாக எடுத்துரைத்தான். ஆரூரராகிய உம்முடைய எண்ணம் யாது?' என வினவினார்கள்.

அப்பொழுது ஆழ்ந்த சிந்தனையிலிருந்த நம்பியாரூரர், அவையினரை நோக்கி 'எல்லா நூல்களையும் கற்றுணர்ந்த பெரியீர், யான் ஆதிசைவன் என்பதை நன்குணர்வீர். முதி யோனாகிய இவ்வந்தணன், தனக்கு யான் அடிமையென்று சாதித்தானாயின், இது மனத்தாலுணர்தற்கு எட்டாத மாயை யாகவுள்ளது. என்னால் இதனைத் தெளிந்துணர இயலவில்லை,' எனக் கூறினார். அதுகேட்ட அவையினர், கிழவராய் வந்த மறையவரை நோக்கி, 'நம்பியாரூரரை அடிமை எனக்கூறும் இவ்வுரையினை ஆட்சி, ஆவணம், சாட்சியென்ற மூன்றனுள் ஒன்றைக்கொண்டு நீவிர் இச்சபையின் முன் உறுதிப்படுத்துதல் வேண்டும்' என மொழிந்தனர். 'நாவலூரன் சின மிகுதியால் என் கையிலிருந்து பறித்துக் கிழித்த அடிமைச்சீட்டு படியோலை யாகும். அதன் மூலவோலையை அவையத்தார் முன் காட்டுதற் கென்றே போற்றிவைத்துள்ளேன்' என்றார் கிழவர். 'அங்ஙன மாயின் அவ்வோலையைக் காட்டுக' என அவையோர் பணித்தனர். 'இவன் முன்போற் கிழித்தெறியாதபடி நீங்கள் பார்த்துக் கொள்ள வல்லீராயின் அவ்வோலையைக் காட்டு வேன்' என்றார் மறைமுதியோர். 'நான்மறைவல்ல மறையவரே, நாங்கள் தீங்கு நேராமற் பார்த்துக்கொள்கிறோம்' என அவை யத்தார் கூறினார்கள். முதியவர் மூல ஓலையாகிய ஆவணத்தை அவையத்தார் முன் எடுத்துச் சென்றார். அவையினர் பணித்த வண்ணம் கரணத்தான் அவ்வோலையை வாங்கிப் படிக்கத் தொடங்கினான்.

'திருநாவலூரில் வாழும் அறுமறைவல்ல ஆதி சைவனாகிய ஆரூரன் எழுதியது; வெண்ணெய் நல்லூரில் வாழும் முனிவர் பெருமானாகிய பித்தனுக்கு யானும் என் குடும்பத்தில் வழிமுறை வழிமுறையாக இனி வருபவர்களும் அடித்தொண்டு செய்தற்கு இதுவே ஆவண வோலையாகும். இரு திறத்தேமும் உள்ளம் ஒத்த நிலையில் இதனை எழுதிக் கொடுத்தேன். இதற்கு இவை என் கையெழுத்து' என அழகிய தமிழ் நடையில் எழுதப்பெற்றிருந்த அவ் வாசகத்தைக் கரணத்தான் படித்த பின்னர் அதன் கண் சான்றாளராகக் கையெழுத் திட்டவர்களுடைய கையெழுத்துக் களையும் ஒப்புநோக்கி இவை ஏற்றுக்கொள்ளத் தக்கன என அவையோர் ஒத்துக்கொண்டனர். பின்பு நம்பியாரூரரை அழைத்து 'உம்முடைய பாட்டனாருடைய கையெழுத்து இது தானா என்பதைத் தெளிவாகப் பார்த்தறிவீராக' எனப் பணித்தனர். அப்பொழுது அருகே நின்ற கிழவர், அவையினரை நோக்கி 'முன்னர் ஆவண ஓலையைக் கிழித்துக் குற்றம் புரிந்த இவனா இம்மூல ஓலையைப் பார்த்தறிதற்குத் தகுதியுடையான்? இவனுடைய பாட்டன் எழுதிக்கொடுத்த வேறு கைச்சாத்துக் கிடைக்குமானால் அதனோடு யான் காட்டிய ஓலையிலுள்ள கையெழுத்தினையும் நீங்கள் ஒத்துப்பார்த்து நும்மனத்திற்பட்ட முடிவைச் சொல்லுங்கள்' என்றார். அவையினரும் அவ்வாறே நம்பியாரூரருடைய பாட்டனார் கையெழுத்தாகச் சேமிக்கப் பெற்றுள்ள கைச்சாத்தொன்றைக் கொணரச் செய்து ஒப்பு நோக்கி 'இவ்விரண்டிலும் கையெழுத்து ஒத்திருக்கிறதே, இனி இதற்கு மாறாக ஒன்றும் செய்தற்கில்லை' என்றார்கள்; 'நம்பியாரூரரே, நீர் நான்மறை முனிவராகிய இம் முதியவர் கொணர்ந்த வழக்கில் தோல்வியடைந்து விட்டீர். இனி முறைப் படி இம்முதியவர்க்கு அடிமை செய்தலே நுமது கடமையாகும்' என முடிவு கூறினார்கள். அதுகேட்ட நாவலூரர் 'அறநெறி விழாத அவையோர்களாகிய உங்கள் முடிவு இதுவாயின், இதன்வழி அடங்கி நடப்பதற்குரிய யான் இதனை உடன்படேன் என மறுத்தல் இயலுமோ' என மொழிந்தார்.

அப்பொழுது அவையினர், வழக்கில் வென்ற வேதியரை நோக்கி, 'மறைமுனிவரே, நீவிர் காட்டிய ஆவணத்தில் நும் முடைய ஊர் எங்கள் திருவெண்ணெய் நல்லூராகக் குறிப்பிடப் பெற்றுளதே? உமக்கு இவ்வூரில் தொன்று தொட்டு நிலைபெற்று வரும் மனையும் ஏனைய வாழ்க்கைச் செல்வமும் ஆகியவற்றை எங்களுக்குக் காட்டுதல் வேண்டும்' என்றனர். பொருவரும் வழக்கில் வென்ற புண்ணிய முதல்வராகிய மறையவர், அவை யினரைப் பார்த்து 'உங்களில் ஒருவரும் இதுவரை என்னை அறிந்து கொள்ளாதிருப்பீரானால் என்னுடன் வம்மின்' என்று

சொல்லி, நம்பியாரூரரும் அவையத்தாரும் தம்மைப் பின் தொடர்ந்து வரத் திருவெண்ணெய் நல்லூரிலுள்ள 'திரு வருட்டுறை' என்னும் திருக்கோயிலிற் நுழைந்து மறைந்தார், பின் சென்றோர் யாவரும் அவரைக் காணாது திகைத்து நின்றார்கள்.

உடன்சென்ற நம்பியாரூரர் 'தன்னை அடிமை கொண்ட மறை யோர் இறைவரது திருக்கோயிலிற் புகுந்து மறைந்தது என் கொலோ' என வியப்புற்றுத் தனியே தொடர்ந்து சென்று பெரு விருப்பத்துடன் அவரைக் கூவியழைத்தார். அப்பொழுது மறைய வராய் வந்து தடுத்தாண்டருளிய சிவபெருமான், உமையம்மை யாருடன் விடைமீது விசும்பில் தோன்றி நம்பியாரூரர்க்குக் காட்சி தந்தருளினார். 'நம்பியாரூரனே' நீ முன்னமே நமக்குரிய தொண்டன். நின்மனத்தே மாதரொடு வாழும் காதல்வேட்கை தோன்றினமையால் பின்பு நம்முடைய ஏவலால் இம் மண்ணின் மீது பிறந்தனை, துன்புறுதற்குக் காரணமாகிய இவ்வுலகியல் வாழ்வு நின்னைத் தொடர்ந்து வருத்தாத வண்ணம் நல்லறி வுடைய அவையோராகிய அந்தணர்களின் முன்னிலையிலே நாமே வந்து நின்னைத் தடுத்து ஆட்கொண்டோம்' எனத் திருவாய் மலர்ந்தருளினார்.

இத் திருவருள் வாக்கினைக் கேட்ட நாவலூரர், தாய்ப் பசுவின் கனைப்பினைக் கேட்டு கதறும் கன்றினைப் போன்று அன்பினாற் கதறி, மெய்ம்மயிர் சிலிக்கக் கைகளைத் தலைமேற் குவித்து இறைஞ்சினார். 'மறையவனாக வந்து என்னை வலிய ஆட்கொண்ட இது, தில்லையம்பலத்துள் ஆடும் பெருமா னாகிய நுமது அருட்செயலோ' என நெஞ்சம் நெக்குருகிப் போற்றினார். அந்நிலையிற் சிவபெருமான், அவரை நோக்கி 'நம்முடன் நீ வன்மொழிகளைப் பேசினமையால் வன் றொண்டன் என்ற பெயரைப் பெற்றனை, நமக்கு அன்பினாற் செய்யத்தக்க சிறந்த வழிபாட்டிற்குரிய மந்திரம், சுவை நிறைந்த திருப்பாட்டேயாகும். ஆதலால் இவ்வுலகில் நம்மைச் செந் தமிழ்ப் பாடல்களாற் பாடிப் போற்றுவாயாக' எனப் பணித் தருளினார். அவ்வருளுரையைச் செவிமடுத்த வன்றொண்டர், 'என்னை வழக்கினால் வெல்லுதற்கு வேதியனாகிவந்த கோதிலா அமுதே, நாயேன் நினது திருவருட் பண்பாகிய பெருங்கடலுள் எதனைத் தெரிந்து எத்தகைய சொற்களாற் பாடுவேன்' என இறைவனை நோக்கி உளம் கசிந்து வினவி நின்றார். 'அன்ப, யான் ஓலை காட்டி நின்னை ஆட்கொள்ள வந்தபொழுது நீ, என்னைப் பித்தனென்றே கூறினாய். ஆதலால் என் பெயர் பித்த னென்றே பாடுக' எனச் சிவபெருமான் அருளிச் செய்தார். இறைவனது பெருங்கருணைத் திறத்தை நினைந்துருகிய வன்றொண்டர்.

பித்தாபிறை சூடீ பெருமானேயரு ளாளா
எத்தான் மறவாதே நினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத் தென்பால் வெண்ணெய்
நல்லூரருட் டுறையுள்
அத்தாவுனக் காளாயினி யல்லேனென லாமே. (1)

காரூர்புன லெய்திக்கரை கல்லித்திரைக் கையாற்
பாரூர்புக ழெய்திக்திகழ் பன்மாமணி யுந்திச்
சீரூர்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்டுறையுள்
ஆரூரெனம் பெருமாற்கா ளல்லேனென லாமே. (10)

*எனவரும் செந்தமிழ்ப் பதிகத்தினை இந்தளப் பண்ணில் நிறைந்த தாளத்துடன் இன்னிசை பொருந்தப் பாடிப் போற்றினார். உள்ளத்தைக் குளிர்விக்கும் இத் திருப்பதிகத்தைச் செவிமடுத்து மகிழ்ந்த அருட்டுறையிறைவர், 'இவ்வுலகிற் பல்லாற்றாலும் நம் பொருள் சேர் புகழைப் பாடிப் போற்றுவாயாக' என ஆரூரர்க்கு அருள்செய்து மறைந்தருளினார்.*

*இங்ஙனம் நம்பியாரூரர்க்குத் திருமணம் நிகழவிருக்கும் நற்பொழுதிலே சிவபெருமான் முதிய வேதியராகத் தோன்றி ஆளோலை (அடிமைச் சீட்டு) ஒன்றைக் காட்டி வல்வழக்காடிய செய்தி,*

"வாயாடி மாமறையோதியோர் வேதியனாகி வந்து...

வெண்ணெய் நல்லூரில் வைத்தென்னை யாளுங்கொண்ட"

*என்வரும் ஆரூரர் வாய்மொழியால் இனிது விளங்கும். மறை முதியோர் காட்டிய ஆளோலையின் மெய்ம்மையினைக் கண் டுணர எண்ணிய நம்பியாரூரர், அவ்வேதியரை நோக்கி 'ஓலை யைக் காட்டுக' எனக் கேட்டபொழுது அவர் கொடுக்க மறுத்தத னால் அவரைத் துரத்திச் சென்று அவர் கையிலுள்ள ஓலையைப் பறித்துக் கிழித்தனராக, அவ்வேதியர் திருவெண்ணெய் நல் லூரையடைந்து ஊர்ச்சபையினரிடம் தம்முடைய வழக்கினை யெடுத்துரைத்துச் சபையினரது ஆணையால் ஆரூரரைத் தம் சொல்வழி அடங்கச் செய்து அவருடைய பாட்டனார் எழுதிக் கொடுத்த ஆளோலையென மிகப் பழையதோர் ஆவணத் தினைக் காட்டி அடிமைகொண்டருளிய வரலாற்றினை,*

'அடக்கங்கொண் டாவணங்காட்டிநல் வெண்ணையூர்
ஆளுங்கொண்டார்'

'வெண்ணெய் நல்லூரில், அற்புதப்பழ ஆவணங்காட்டி
அடியனாவென்னை ஆளதுகொண்ட, நற்பதத்தை'

'ஓர் ஆவணத்தால் வெண்ணெய் நல்லூரில்
வைத்தென்னை ஆளுங்கொண்டார்'

எனவரும் தொடர்களில் நம்பியாரூரரே விளக்கமாகக் குறிப்பிட்டுள்ளமை காணலாம்,

நாவலூரரைத் தடுத்து ஆட்கொள்ளுதற்பொருட்டுச் சிவபெருமான் படைத்துக் காட்டியருளிய அற்புதப் பழ ஆவணமாகிய ஆளோலை, இனிய தமிழில் எழுதப் பெற்றிருந்த தென்பது,

> தொழுதும் வணங்கியும் மாலயன் தேடருஞ் சோதிசென்றாங்
> கெழுதுத் தமிழ்ப்பழ ஆவணங்காட்டி யெனக்குன்குடி
> முழுதும் அடிமைவந் தாட்செய் எனப்பெற் றவன்முரல் தேன்
> ஒழுகு மலரினற் றாரெம்பி ரான்நம்பி யாரூரனே.

எனவரும் திருத்தொண்டர் திருவந்தாதியால் இனிது புலனாம்.

இவ்வாறு உலகத்தார் காணத் தமிழ்ப்பழ ஆவணங் காட்டித் தம்மை ஆட்கொண்டருளிய பெருமான், வெண்ணெய் நல்லூரில் 'திருவருட்டுறை' என்னும் திருக்கோயிலிற் புகுந்து மறைந்தருளிய செய்தியை,

> 'அன்றுவந்தென்னை அகலிடத்தவர்முன்
> ஆளதாகவென்று ஆவணங்காட்டி
> நின்று வெண்ணெய் நல்லூர்மிசை யொளித்த
> நித்திலத்திரள் தொத்தினை'

எனவும்,

> 'ஒட்டியாட்கொண்டு போயொளித்திட்ட உச்சிப்போதனை'

எனவும் வரும் தொடர்களில் நம்பியாரூரர் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். 'இப்பொழுது நிகழ்ந்த வழக்கில் நீ நம்முடன் வன்மையாகப் பேசினமையால் வன்றொண்டன் என்ற பெயரினைப் பெற்றனை' என அருட்டுறை யிறையவர் தமக்கு அருள் செய்த திறத்தை,

> 'தன்மையினால் அடியேனைத் தாம் ஆட்கொண்ட நாள் சபைமுன்
> வன்மைகள் பேசிட வன்றொண்டன் என்பதோர் வாழ்வுதந்தார்'

என நம்பியாரூரர் புலப்படுத்தினமை இங்கு நினைக்கத் தகுவதாகும்.

'இவன் பித்தனோ' எனத் தாம் இகழ்ந்து கூறும் நிலையில் இறைவன் எளிவந்து தம்மைத் தடுத்தாண்டு தம் குடி முழுதும் உய்யக் கொண்டருளிய செயலை,

> 'பித்தரை யொத்தொரு பெற்றியர் நற்றவை யென்னைப்பெற்ற
> முற்றவை தம்மனை தந்தைக்குந் தவ்வைக்குந் தம்பிரானார்'

என்ற தொடரில் ஆரூரர் குறிப்பிட்டுப் போற்றியுள்ளார். தம்மைத் தடுத்தாட்கொள்ள எளிவந்தருளிய இறைவனைப்

'பித்தன்' என்ற சொல்லால் ஆரூரர் இகழ்ந்துரைத்தமை இத் தொடரால் இனிது புலனாதல் காணலாம்.

'நீ முன்பு என்னைப் பித்தனென்றே மொழிந்தனை ஆதலால் என்பெயர் பித்தனென்றே பாடுக' என அருட் டுறையிறைவர் பணித்தருள, நம்பியாரூரர், 'பித்தா பிறைசூடி' எனத் தொடங்கும் திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றினா ரென்பது, அப்பதிகத்தில் 'வெண்ணெய் நல்லூரருட்டுறையுள், அத்தா உனக்காளாயினி யல்லேனெனலாமே' எனவும், 'ஆரூரன் எம்பெருமாற்கு ஆளல்லே னெனலாமே' எனவும் நம்பியாரூரர் இறைவனை நோக்கி வினவிப் போற்றுவதாலும்,

> 'அருட்டுறை யத்தற் கடிமைப்பட்டேன் இனியல்ல னென்னும்
> பொருட்டுறை யாவதென்னே யென்ன வல்லவன்'

என நம்பியாண்டார் நம்பி இப்பதிகப் பொருளை விரிந்துரைத் தலாலும் நன்கு புலனாகும். சிவபெருமானுக்கு மீளா அடிமையாய்த் தொண்டுபுரியும் கடமை தமக்கு உண்டென் பதனை இப்பதிகப் பாடல் தோறும் நம்பியாரூரர் உடன்பட்டுப் போற்றியுள்ளமை, அவர் அருட்டுறையிறைவரால் தடுத்தாட் கொள்ளப்பெற்ற அற்புத நிகழ்ச்சியை வலியுறுத்துவதாகும்.

நாவலூர் நம்பியை மணந்துகொள்ள இருந்த புத்தூர்ச் சடங்கவி சிவாசாரியார் திருமகளார், திருமணம் தவிர்ந்தமை யால் நம்பியாரூரரையே தமது வழிபடு தெய்வமாகத் தியானிக் கும் மெய்யுணர்வுடையராய் இவ்வுலக வாழ்வை நீத்து உயர்ந்த சிவலோக வாழ்வாகிய பேரின்பம் எளிதிற் கைவரப்பெற்று இறைவனடி சேர்ந்தார்.

வன்றொண்டராகிய நம்பியாரூரர், தம்மை வலிய ஆட் கொண்டருளிய அருட்டுறை யிறைவரை இறைஞ்சித் தம்முடைய ஊராகிய திருநாவலூரை அடைந்தார்; அங்குக் கோயில் கொண் டருளிய சிவபெருமானைப் பணிந்து செந்தமிழ்ப் பாமாலை பாடிப் போற்றினார்.

## தவநெறி தந்தருள வேண்டுதல்

பின்னர் அருகேயுள்ள திருத்துறையூரையடைந்து அங்குத் திருக்கோயில் கொண்டெழுந்தருளிய சிவபெருமானை நறுமலர் களால் அருச்சித்து வணங்கி 'எளியேன் பிறவிக் கடலில் வீழ்ந்து துயருறா வண்ணம் தடுத்தாட் கொண்டருளிய பெருமானே, ஐம்புலன்களும் ஒடுங்கப்பெற்று நின்னை வழிபட்டு மகிழும் வண்ணம் அடியேற்குத் தவநெறி தந்து அருள்புரிவாயாக' என வேண்டி,

மலையா ரருவித் திரண் மாமணி யுந்திக்
குலையாரக்கொணர்ந் தெற்றியோர் பெண்ணை வடபால்
கலையாரல்குற் கன்னிய ராடுந் துறையூர்த்
தலைவாவுனை வேண்டிக் கொள்வேன் தவநெறியே.

எனவரும் திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றினார். மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்பொறிகளை வழியாகவுடைய ஐந்து அவாவினையும்அடக்கித் தவநெறியிற் செல்லும் பேராற்றல், இறைவனது திருவருள் வழி ஒழுகும் மெய்யடியார்க் கன்றி ஏனையோர்க்கு எய்தலரிது. இவ் உண்மையை யுணர்ந்த நாவலூர் மன்னர், திருத்துறையூர்ப் பெருமானை நோக்கித் தமக்குத் தவநெறி தந்து அருள்புரிய வேண்டுமென இறைஞ்சிப் போற்றினமை இப்பதிகப் பாடல்களால் இனிது விளங்கும்.

## திருவடி சூட்டப் பெறுதல்

திருத்துறையூரிறைவர்பால் தவநெறி வேண்டிப் பெற்ற நம்பியாரூரர், சிவபெருமான் கோயில் கொண்டருளிய எண்ணிலாத் திருத்தலங்களை வணங்கிப் பெரும்பற்றப் புலி யூராகிய தில்லையிற் பொன்னம்பலத்திலே ஆடல்புரிந்தருளும் கூத்தப் பெருமானை வழிபட்டு மகிழ விரும்பிப் புறப்பட்டுப் பெண்ணையாற்றைக் கடந்து ஞாயிறு மறையும் மாலைப் பெழுதிலே திருவதிகைப் பதியின் எல்லையை அடைந்தார். “உலகம் போற்றும் ஆளுடைய அரசராகிய திருநாவுக்கரசர் உழவாரப் படையைக் கையிலேந்திச் சிவபெருமானுக்குத் திருத்தொண்டு புரிந்த சிறப்புடைய பெரும்பதியாகிய திரு வதிகையை என் கால்களால் மிதித்து உள்புக மாட்டேன்” என அன்பும் அச்சமும் கொண்ட நம்பியாரூரர், திருவதிகை நகரத் துள்ளே நுழையாது அப்பதியின் புறத்தே யமைந்த சித்தவட மடத்தில் அடியார்களுடன் தங்குவாராயினார். அங்கிருந்த படியே திருவதிகை வீரட்டானத்து இறைவருடைய திரு வடிகளைச் சிந்தித்துப் போற்றி அன்றிரவு அத்திருமடத்திலேயே துயிலமர்ந்தார். நம்பியாரூரர் நாவுக்கரசர் பாற்கொண்ட பேரன்பின் பெற்றியையுணர்ந்த சிவபெருமான், தளர்ந்த முதுவேதியர் வடிவு கொண்டு ஒருவரும் அறியா வண்ணம் அப் பொதுமடத்தினுள்ளே புகுந்து துயில்கொள்பவன், வன் றொண்டர் முடிமேல் தம்முடைய திருவடிகள் பொருந்தும்படி பள்ளி கொண்டருளினார். அப்பொழுது விழித்துணர்ந்த வன் றொண்டர், மறையவரை நோக்கி, ‘அருமறைவல்ல பெரியோய், உன்னடி என் சென்னியில் வைத்தனையே’ என வினவினார். ‘இவ்வாறு திசையறியாவகை செய்தது என்னுடைய முதுமை நிலையே’ எனக் கூறி, வேதியர் தமது முதுமைத் தளர்ச்சியை

யுடன்பட்டார். அந்நிலையில் வன்றொண்டர் மற்றொரு பக்கம் தலைவைத்துத் துயிலமர்ந்தார் முதுமறையவராய் வந்த அதிகையிறைவர், அங்கும் தம் திருவடியை நீட்டினார். அஃதுணர்ந்த நாவலூரர், 'இங்கு என்னைப் பலகாலும் மிதித்தனை நீயார்!' என மறையாரை நோக்கி வினவினார். அதுகேட்ட மறையவர் 'நீ அறிந்திலையோ' எனக் கூறி மறைந்தருளினார். அந்நிலையில் தம் சென்னியில் திருவடி சூட்டி மறைந்தருளியவர் திருவதிகை விரட்டானப் பெருமானேயெனத் தெளிந்த நம்பி யாரூரர், 'என் பொருட்டு எளிவந்தருளிய இறைவனைக் காணப் பெற்றும் அடியேன் அறியாமையால் இறுமாந்து இகழ்துரைத் தேனே' என வருந்தி,

**தம்மானை யறியாத சாதியா ருளரே**
**சடைமேற்கொள் பிறையானை விடைமேற்கொள் விகிர்தன்**
**கைம்மாவி னுரியானைக் கரிகாட்டி லாட**
**லுடையானை விடையானைக் கறைகொண்ட கண்டத்**
**தெம்மான்ற னடிக்கொண்டென் முடிமேல் வைத்திடு மென்னுந்**
**ஆசையால் வாழ்கின்ற அறிவிலா நாயேன்**
**எம்மானை யெறிகெடில வடவீரட் டானத்**
**துறைவானை யிறைபோதும் இகழ்வன்போ லியானே**

என வரும் திருப்பதிகத்தைப் பாடித் துதித்தார். 'எம் தலைவ னாகிய சிவபெருமான் எப்பொழுதாவது தன் திருவடிகளை என முடிமேற் சூட்டியருள்புரிவான் என்னும் ஆசையால் வாழ்கின்ற நாயேன், அப்பெருமானே, எளிவந்து என் சென்னியில் திருவடி சூட்டியருளிய இந்நிலையில் அவனையறியாது இறுமாந்து இகழ்ந்தேனே' என இத்திருப்பதிகத்தின் முதற் பாடலில் நம்பி யாரூரர் கவன்றுரைத்தமை காணலாம். திருவதிகை வீரட்டானத் திறைவர் திருவடி சூட்டி மறைந்த நிலையில் வன்றொண்டர் இத்திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினா ரென்பது இதனால் நன்கு புலனாம்.

## தில்லைச் சிற்றம்பலவனை வணங்குதல்

திருவதிகையிறைவரால் திருவடி சூட்டப்பெற்ற நம்பி யாரூரர், இறைவனது திருவடிகளை நினைந்து உவகை மீதூர்ந்த உள்ளத்தினராய்த் திருக்கெடில நதியில்மூழ்கிச் சிவபெருமானை வழிபட்டு அந்நதியின் தென்கரையை யடைந்தார். திருமாணி குழி, திருத்தினைநகர் ஆகிய தலங்களை வழிபட்டுத் தேவர் பிரான் திருநடம்புரியும் தில்லைநகரத்தின் புறத்தே யமைந்த தண்ணிழல் தரும் சோலைகளையும் நறுமணம் மிகுந்த நந்த வனங்களையும் மதிலைச் சூழ்ந்து விளங்கும் கிடங்குகளையும் கடந்து, வடதிசை வாயில் வழியாகத் தில்லை நகரத்தினுள்ளே

புகுந்து, சிவனடியார்கள் எதிர்கொண்டு போற்ற அழகிய திருவீதியினை வணங்கி வலம் வந்தார். பெருமதில் சூழ்ந்த செம்பொன் மாளிகையின் நடுவே மேருமலை போன்று ஒளியுடன் விளங்கும் பேரம்பலத்தை வலஞ்செய்து வணங்கினார். அருமறையாகிய வேதத்தின் முதலிலும் நடுவிலும் முடிவிலும் மெய்யன்பர்களுடைய திருவுள்ளத்திலும் திருவளரொளியினதாய்த் திகழும் ஞானமயமான திருச்சிறம்பலத்தின் முன்னேயுள்ள திருவணுக்கன் திருவாயிலையடைந்தார். உலகெலாம் இன்புற மன்றுளே திருவருட் கூத்தியற்றும் கூத்தப்பெருமானைக் கண்டு அன்பு மீதூரத் தலைமீது குவித்த கையினராய்த் திருக் களிற்றுப்படியின் மருங்கே வீழ்ந்து வணங்கினார்.

ஆடவல்ல பெருமானைக் கண்டு கும்பிடும் நம்பியாரூரர், தம் முடைய ஐம்பொறிகளின் அறிவெலாம் கண்களாகிய ஒரு பொறி யினளவிலே சென்று அடங்கவும், முக்குணங்களும் இறைவனது திருவருளுணர்விலே தோய்ந்தமையால் திருந்திய சாத்துவிக குணமேயாகத் திகழவும், திங்களணி சடைப் பெருமான் ஆடியருளும் திருக்கூத்தினால் வந்த எல்லையற்ற பேரின்ப வெள்ளத்திலே திளைத்து, மாறாத பெருமகிழ்ச்சி யினால் மனமலரப் பெற்றார். 'தேய்ந்து இறக்கும் இடர்நிலை யெய்திய பிறைமதியும் தெளிவு பெற்றுக் குறைவிலா ஒளியுடன் வளர்தற்கு இடமாய் விளங்கும் செஞ்சடைக் கடவுளே, நினது திருவருட் கூத்தினைக் கண்டு கும்பிடும் இப்பேறு பெற்றமையால் மண் ணுலகத்தில் வந்த இம் மனிதப் பிறவியே அடியேற்குத் தூய்மையான பேரின்பத்தை நல்குவதாயிற்று' என்று கூறிக் கண்களினின்றும் ஆனந்தக் கண்ணீர் சொரியக் கைகளை உச்சி மேற் குவித்துப் பண்ணினால் நீடி அடிதற்கரிய பெருமை வாய்ந்த இன்னிசைத் திருப்பதிகத்தைப் பாடி இறைவனைப் பரவிப் போற்றினார்.

அப்பொழுது தில்லைச்சிற்றம்பலவர் திருவருளால் 'நீ திருவாரூரில் நம்பால் வருக' என்ற திருவருள்மொழி ஆகாயத்தே தோன்றியது. நாவலூரர் அவ்வருளாணையைச் சிரமேற் கொண்டு கூத்தப் பெருமானைத் தொழுது விடைபெற்றுப் பொன்னம்பலத்தை வலம்வந்து வணங்கி எழுநிலைக் கோபுரத் தையும் திருவீதியையும் இறைஞ்சித் தில்லை நகரத்தின் தென் திசைவாயில் வழியாகப் புறப்பட்டுச் சென்றார். சிவபெருமானது திருவருட்டிறத்தையே நினைந்து செல்லும் நம்பியாரூரர், வழி யிடையேயுள்ள கொள்ளிடத் திருநதியைக் கடந்து திருக்கழுமல மென்னும் சீகாழிப்பதியின் எல்லையை அடைந்தார்.

## காழியின் எல்லையிற் கடவுளைப் போற்றுதல்

அறம் வளர்த்த அம்மையாகிய உமாதேவியார் அளித்த திருமுலைப்பாலுண்டு வளர்ந்து உலகம் உய்யத் திருநெறிய தமிழ் பாடியருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் பிறந்தருளிய சிறப்பும் தூய்மையும் உடையது, திருக்கழு மலமாகிய சீகாழிப்பதியாதலால், அத்திருத்தலத்தைத் தம் பாதங்களால் மிதித்தல் கூடாதெனக் கருதிய வன்றொண்டர், அந்நகரத்தின் புறவெல்லையை வணங்கி அத்திருப்பதியினை வலஞ்செய்வாராயினர். அடியார்கள் பால் ஆரூரர் கொண்ட அன்பின் திறத்தை உணர்ந்து மகிழ்ந்த காழிப்பெருமான் அவர்க்கு எதிரே அம்மையப்பராக விடைமீது தோன்றிக் காட்சி கொடுத்தருளினார். அத்தெய்வத் திருக்கோலத்தைக் கண்டு உளங்குளிர்ந்த நம்பியாரூரர், 'என்னை ஆட்கொண்டருளிய பெருமானைக் கழுமல வளநகரிற் கண்டு கொண்டேன்' என்றும் கருத்தமைய,

சாதலும் பிறந்தலுந் தவிர்த்தெனை வகுத்துத்
தன்னருள் தந்தவெந் தலைவனை மலையின்
மாதினை மதித்தங்கோர் பால்கொண்ட மணியை
வருபுனல் சடையிடை வைத்தவெம் மானை
எதிலென் மனத்துக்கோ ரிரும்புண்ட நீரை
எண்வகை யொருவனை எங்கள் பிரானைக்
காதில்வெண் குழையனைக் கடல்கொள மிதந்த
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே.

எனவரும் திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றினார். இத்திருப்பதிகத்திற் பாடல்தோறும் எங்கள் பெருமானைக் 'கழுமல வளநகர்க் கண்டுகொண்டேனே' என நம்பியாரூரர் குறிப்பிட்டுப் போற்றுதலால் கழுமலத்திறைவர் ஆரூரர்க்குக் காட்சி கொடுத்தருளிய செய்தி இனிது புலனாதல் காணலாம்.

## தம்பிரான் தோழராதல்

சீகாழிப்பதியில் இறைவனது திருவருட்கோலத்தைக் கண்டு மகிழ்ந்த நம்பியாரூரர், திருக்கோலக்கா, திருப்புன்கூர் முதலிய திருத்தலங்களை வணங்கிச் செந்தமிழ்ப் பாமாலை பாடிப் போற்றிக் காவிரியில் நீராடி அதன் தென்கரையை அடைந்தார். மயிலாடுதுறை, அம்பர்மாகாளம், திருப்புகலூர் ஆகிய தலங்களை இறைஞ்சித் திருவாரூரருகே சென்று சேர்ந்தார். அந்நிலையில் திருவாரூரிற் கோயில் கொண்டருளிய இறைவர், ஆரூரில் வாழும் அடியார்களுக்கு முன்னே தோன்றி 'நம் ஆரூரனாகிய வன்றொண்டன் நாம் அழைக்க இங்கு வருகின்றான், நீங்கள் மகிழ்ந்து அவனை எதிர்கொண்டு அழைப்பீராக' என அருள் செய்து

மறைந்தருளினார். இறைவனது திருவருள் இதுவென வுணர்ந்த அடியார்களும் நகர மாந்தரும் திருவாரூரைச் சிறப்புற அலங்கரித்து மங்கல வாத்தியங்கள் முழங்க ஆரூர்த் திருமதில் வாயிற் புறத்துச் சென்று நம்பியாரூரரை. எதிர்கொண்டு வணங்கினார்கள். திருநாவலூரரும், தம்மை எதிர்கொண் டழைத்த அடியார்களைக் கைகூப்பித் தொழுது, 'எந்தையாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பெருஞ்சிறப்புடைய திருப்பதியும் இத்திருவாரூரே, இங்கெழுந்தருளிய இறைவர் எளியேனையும் ஆட்கொண்டருளும் இசைவுடையாரோ என்பதனை அன்பு கூர்ந்து அவர்பால் கேட்டுத் தெரிவிப்பீராக' என வினவி வேண்டும் குறிப்புடன்,

**கரையுங் கடலு மலையுங் காலையு மாலையு மெல்லாம்**
**உரையில் விரவி வருவான் ஒருவன் உருத்திர லோகன்.**
**வரையின் மடமகள் கேள்வன் வானவர் தானவர்க் கெல்லாம்**
**அரையன் இருப்பதும் ஆரூர் அவர் எம்மையும் ஆள்வரோ கேளீர்.**

என வரும் திருப்பதிகத்தைப் பாடிக்கொண்டு திருக்கோயில் வாயிலை அணுகினார். சிவனடியார்கள் வீற்றிருக்கும் சிறப்புடைய தேவாசிரிய மண்டபத்தைக் கைகூப்பித் தொழுதார். புற்றிடங் கொண்ட பெருமான் எழுந்தருளிய திருமூலட்டானத்தைச் சூழ்ந்த திருமாளிகை வாயிலை இறைஞ்சி உள்ளே புகுந்தார். செந்தாமரைமலரில் வீற்றிருக்கும் திருமகளார் மலர் தூவி வழிபாடு செய்யத் திருவருள்புரிந்த பூங்கோயில்அமர்ந்த பெருமான் சேவடிகளை உளங்குளிர இறைஞ்சியதனாலுள தாகிய இன்ப வெள்ளத்திலே மூழ்கி நின்று இன்னிசைத் தமிழ் மாலையினைப் பாடிப் போற்றினார்.

அப்பொழுது யாவரும் கேட்கும்படி 'நம்பியாரூரனே தோழமையாக உனக்கு நம்மைத் தந்தனம், நீ எம்மால் தடுத்தாட்கொள்ளப் பெற்ற அந்நாளில் நீ கொண்ட திருமணக் கோலத்தையே எப்பொழுதும் மேற்கொண்டு இந்நிலவுலகில் இன்புற்று வாழ்வாயாக' என்றதோர் அருள்வாக்கு வானிடையே தோன்றியது. அவ்வருள்மொழியைச் செவிமடுத்த சுந்தரர், 'அடியேனைத் தடுத்தாட்கொள்ள வந்த மறையவனே, ஆரூர மர்ந்த அருமணியே, நாயினும் கடையனாய எளியேனையும் பொருளாகக் கொண்டு நின்திருவடித் தாமரையினைத் தந்தருளி யது, நின் பெருங்கருணைத் திறமல்லவா' என்று கூறிப் புற்றிடங் கொண்ட பெருமானைப் பலமுறையும் வணங்கிப் போற்றினார். வீதிவிடங்கப் பெருமானாகிய தியாகேசர் திருமுன்பு சென்று தொழுது திருமாளிகையை வலஞ்செய்து போந்தார், அன்று முதல் அடியார்களெல்லாம் அவரைத் 'தம்பிரான் தோழர்' என அன்பினால் அழைத்துப் போற்றுவாராயினர். இறைவன்

பணித்த வண்ணம் நம்பியாரூரர், என்றும் திருமணக்கோலப் பெருமாள் எனப் போற்றும் வண்ணம் சுந்தர வேடங்களை யுடைய தவவேந்தராய்ப் பூங்கோயிலமர்ந்த பெருமானை நாடோறும் வழிபட்டு இன்னிசைத் தமிழ் மாலை பாடி மகிழ்ந்திருந்தார்.

இவ்வாறு சிவபெருமான் நம்பியாரூரர்க்குத் தன்னைத் தோழனாகத் தந்தருளிய அற்புத நிகழ்ச்சியை,

**'தன்னைத் தோழமையருளித் தொண்டனேன் செய்த**
**துரிசுகள் பொறுக்கும், நாதனை'** (7-68-8)

எனவும்,

**'என்னுடைய தோழனுமாய் யான் செய்யும்**
**துரிசுகனாக் குடனாகி'** (7-51-1)

எனவும்,

**'என்றனை ஆள் தோழனை'** (7-84-9)

எனவும் வரும் தொடர்களால் தம்பிரான் தோழராகிய சுந்தரர் நெஞ்சம் நெக்குருகிப் போற்றியுள்ளமை இங்கு நினைக்கத் தகுவதாகும்.

## பரவையார் திருமணம்

திருக்கயிலாய மலையிற் பார்வதி தேவியாருடைய சேடியர் களாய் ஆலால சுந்தரராற் காதலிக்கப்பெற்ற மகளிரிருவருள் ஒருவராகிய, கமலினியார் என்பார், திருவாரூரிலே உருத்திர கணிகையர் குலத்துட் பிறந்து பரவையார் எனும் பெயரைப் பெற்றுச் செந்தாமரை மலரில் வாழும் திருமகளே இவ்வாறு தோன்றினாளென்று சொல்லும்வண்ணம் பேரழகுடையராய் வளர்ந்து மங்கைப்பருவ மெய்தினார். உமையம்மையாருடைய பாங்கியருள் ஒருவராய்த் திருவடித்தொண்டு புரிந்த பண்டை யுணர்வு பரவையாரது உள்ளத்திருந்து செலுத்துதலால் அந் நங்கையார் பூங்கோயிலமர்ந்த பெருமானை நாடோறும் வழிபட்டு வரும் கடமையுடையராய் விளங்கினார்.

இவ்வாறு சிவபெருமானை வழிபடுதல் கருதிப் பரவையார் திருவாரூர்த் திருக்கோயிலுக்குச் சென்று வரும் நாட்களில் ஒருநாள், தம்பிரான் தோழராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள், பண்டைப் பிறப்பில் அன்புடையராகிய காதலரை மீளவும் சேர்த்து வைக்கும் நல்லூழாகிய இறைவனது திருவரு ளாணையால் பரவையாரைக் கண்டு காதல் கொண்டார். பரவையாரும் அவ்வாறே பண்டை நல்விதியின் தூண்டுதலால் நம்பியாரூரரைக் கண்டு காதல் கொண்டார். அளவிறந்த காதலால் அவர் தம் உள்ளத்தே நிறைந்த நாணம், மடம், அச்சம்,

பயிர்ப்பு ஆகிய பெண்மைக் குணங்கள் நான்கும் ஒருபுடை சாய்ந்தன. எனினும் இறைவனைத் தொழும் அன்பே அவரது உள்ளத்தை நிறையுடையதாக்கி அவரை இறைவன் திருமுன்னர்க் கொண்டு சேர்த்தது. எனவே பரவையாரும் பூங்கோயிலமர்ந்த பெருமான் திருமுன்னர்ச் சென்று சேர்ந்தார்.

இங்ஙனமாக, பரவையாரது பேரழகில் ஈடுபட்ட நம்பி யாரூரர், அயலே நின்றவர்களை நோக்கி 'என் மனங்கவர்ந்த மயிலியலாகிய இவள் யார்' என வினவினார். அது கேட்டு அங்குள்ளவர்கள் 'அவர் நங்கை பரவையார், வானோர்க்குந் தொடர்வரிய தூய்மையுடையார்' எனக் கூறினார்கள். பரவை யார்பால் எல்லையற்ற காதலுடயராகிய தம்பிரான் தோழர், 'என்னை யாட்கொண்டருளிய இறைவனை யடைந்து எனது கருத்திற்கு இசைவு பெறுவேன்' என்னும் எண்ணமுடையராய், புற்றிடங்கொண்ட பெருமான் திருமுன்னர்ச் சென்றார். நங்கை பரவையார், இறைவனை வணங்கி வலம் வந்து அங்கிருந்து மற்றொரு புறமாகப் புறப்பட்டுப் போயினார். ஆரூர்ப்பெருமான் திருவடிகளை யிறைஞ்சிப் போற்றிய வன்றொண்டர், பரவை யாரைத் தமக்கு வாழ்க்கைத் துணையாகத் தந்தருளும்படி ஆராத காதலினாற் பணிந்து வேண்டினார். 'இறைவனுடைய திரு வடியை யன்றி மற்றெதனையும் விரும்பி யறியாத என்னுள்ளத்தை மயக்கிய இன்னுயிராம் நங்கை எவ்வழியே போயினாள், என்று இவ்வாறு கூறிப் பரவையாரைத் தேடிச் சென்றார்.' 'ஆரூரிற் கோயில் கொண்டருளிய சிவபெருமான் என்னாற் காதலிக்கப் பெற்ற பரவையாரை எனக்குத் தந்து எனது ஆவியை நல்குவர்' என்னும் நம்பிக்கையுடையராய்த் தேவாசிரிய மண்டபத்தின் ஒருபால் அமர்ந்திருந்தார். அந்நிலையில் ஞாயிறு மறைய மாலைப்பொழுதும் வந்தது.

இவர் இங்ஙனமாக, பூங்கோயிலமர்ந்த பெருமானை வணங்கி மீண்ட பரவையார், நம்பியாரூரர்பாற் சென்ற தமது உள்ளத்தை ஒருவாறு மீட்டுக்கொண்டு பெரிதும் மயக்கமுற்றுத் தமது மாளிகையை யடைந்து மலரமளியில் அமர்ந்து தம் அருகிருந்த பாங்கியை நோக்கி, 'நாம் ஆரூர்ப் பெருமானை வழிபடச் சென்றபொழுது நம்மெதிரே வந்தார் யாவர்' என வினவினார். 'மாலும் அயனுங் காணுதற்கரிய சிவபெருமானே இவ்வுலகில் மறையவராகி வந்து வலிய ஆட்கொள்ளப் பெற்ற சைவ முதல் திருத்தொண்டர் தம்பிரான் தோழனார் நம்பி யாரூராரே அவர்' எனப் பாங்கி விடை பகர்ந்தாள். அது கேட்ட பரவையார், 'எம்பிரான் தமரேயோ அவர்' என்றுரைப்பதன் முன்னமே வன்றொண்டராகிய அவர்பாற் கொண்ட காதல்

மேன்மேலும் பெருகி வளர்வதாயிற்று பரவையாரும் அமளியின் மேல் வீழ்ந்து வெதுப்புற்றுப் பலவாறு புலம்பி வருந்தினார்.

இவ்வாறு நம்பியாரூரரும் நங்கை பரவையாரும் ஒருவர்க் கொருவர் கொண்ட பெருங்காதலால் உறக்கமின்றி நள்ளிரவில் தனிமையுற்று வருந்துதல் கண்ட திருவாரூரிறைவர், அன்றிரவே சிவனடியார்கள் முன் தோன்றிப் பரவையாரைச் சுந்தரர்க்குத் திருமணம் செய்து கொடுக்குமாறு பணித்தருளினார்; நம்பி யாரூரரை யடைந்து, 'நங்கை பரவையை உனக்கு வாழ்க்கைத் துணையாகத் தந்தோம். இன்ன வகையே நம்முடைய அடியார் களும் அறிந்துகொள்ளும்படி தெரிவித்துள்ளோம்' என்றருளிச் செய்து, பரவையார் முன்னிலையில் தோன்றி, 'உனக்கும் நம்பியாரூரனுக்கும் நாளை திருமணம் நிகழும்' எனக்கூறி மறைந்தருளினார். மறுநாள் விடியற்காலை இறைவன் பணித்த வண்ணம் சிவனடியார்கள் அனைவரும் ஒருங்கு கூடி அடியார்க்கெளிய சிவபெருமானது திருவருட்டிறத்தை வியந்து போற்றித் தம்பிரான் தோழராகிய நம்பியாரூரருக்கு நங்கை பரவையாரை விதிப்படி திருமணஞ் செய்து கொடுத்தார்கள். இவ்வாறு ஆரூர்ப்பெருமான் திருவருளால் பரவையாரை வாழ்க்கைத் துணையாகப் பெற்ற திருநாவலூரர், அம் மெல்லியலாருடன் அன்பினாற் கலந்து மகிழும் நிலையிலேயே சிவனருட் கடலில் திளைத்து இன்புறும் சிவயோகச் செல்வராய்ச் செந்தமிழ்ப் பாமாலைகள்பாடிச் சிவபெருமானைப் போற்றி மகிழ்வாராயினர். இங்ஙனம் திருவாரூரிற் கோயில் கொண்ட ருளிய பெருளமானடிகள், அன்புடைத் தோழராய் எளிவந்து தோன்றி, நங்கை பரவையாரை வாழ்க்கைத் துணையாகத் தந்தருளிய இத்திருவருட் செயலை,

> எழிசையா யிசைப்பயனா யின்னமுதா யென்னுடைய
> தோழனுமாய் யான்செய்யுந் துரிசுகளுக் குடனாகி
> மாழையொன்கண் பரவையைத்தந் தாண்டானைமதியில்லா
> ஏழையேன் பிரிந்திருக்கேன் என்னாரு ரிறைவனையே.

என நம்பியாரூரர் உளங்கசிந்து பரவிப் போற்றியுள்ளமை காணலாம்.

## தென்றமிழ்ப்பயனாய் வந்த திருத்தொண்டத்தொகை

நம்பியாரூரர் பரவையாருடன் கூடி இறைவனை வழிபட்டு வரும் நாட்களில ஒருநாள், தேவாசிரிய மண்டபத்தில் ஒருங்கு குழுமியிருக்கும் சிவனடியார்களைக் கண்டார். அன்புடைத் தொண்டர்களாகி இவர்களுக்கு யான் அடியனாகும் நாள் எந்நாளோ என்னும் நினைவுடையராய்ப் புற்றிடங்கொண்ட பெருமானை வழிபடுதற்குத் திருக்கோயிலினுள்ளே சென்றார்.

அந்நிலையில் தேவாசிரிய மண்டபத்தில் வீற்றிருக்கும் சிவனடியார்களுள் ஒருவராகிய விறன்மிண்டர் என்பார், வன்றொண்டர் அடியார் திருக்கூட்டத்தைப் பணியாது, நேரே திருக்கோயிலுக்குச் செல்கின்றாரெனக் கருதி, 'சிவனடியார் திருக்கூட்டமானது தன்னைப் பேணாது செல்லும் நம்பியாரூரனுக்கும் புறம்பு; அவனுக்குப் பிரானாகிய சிவபெருமானுக்கும் புறம்பு' என வெகுண்டுறைத்தார்.

இங்ஙனமாக, 'அடியவர்க்கு அடியனாவேன், என்னும் பேரார்வத்துடன் திருக்கோயிலுள் வழிபடச் செல்லும் வன்றொண்டர்க்கு எதிரே ஆரூரிறைவர் தோன்றிக் காட்சி கொடுத்தருளினார். வன்றொண்டரும் தமக்கு எளிவந்தருளிய இறைவரது பெருங்கருணைத் திறத்தை வியந்து பணிந்து போற்றினார். தொண்டர்க்குத் தொண்டராம் நற்பேற்றினைத் திருநாவலூரர்க்கு அளித்தருளத் திருவுளங்கொண்ட இறைவர், அடியார்களது திருத்தொண்டின் திறத்தையும் சால்பினையும் சுந்தரர்க்கு அறிவுறுத்தியருளி,' 'நம்முடைய அடியார்களை முறைப்பட வணங்கி அவர்களது திருத்தொண்டின் திறத்தை விரித்துரைக்கும் திருப்பதிகச் சொன்மாலை பாடிப் போற்றுவாயாக' எனப் பணித்தருளினார். அப்பணியினைத் தலைமேற் கொண்ட வன்றொண்டர், ஆரூரிறைவரையிறைஞ்சி நின்று 'எம் பெருமானே, நின் மெய்யடியார்களது வரலாறு இன்னதென்றும் அவர்தம் பெருந்தகைமை இதுவென்றும் உணராத தமியேன் எங்ஙனம் பாடவல்லேன்? அடியார்களது பொருள் சேர்புகழை விரித்துரைக்கும் திருப்பதிகத்தினைப் பாடும் பரிசினை அடியேற்கு அருள் செய்வாயாக' என வேண்டி நின்றார். மாதொரு பாகராகிய இறைவர், அவரது வேண்டுகோட்கிசைந்து, வேதங்களையருளிச் செய்த தமது திருவாக்கினால்,

'தில்லைவாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்'

என்று அடியெடுத்துக் கொடுத்து மறைந்தருளினார்.

ஆரூரிறைவரால் அடியெடுத்துக் கொடுக்கப்பெற்ற நம்பியாரூரர், தேவாசிரிய மண்டபத்தில் வீற்றிருக்கும் அடியார்களை நெடுந்தூரத்திலேயே கண்டு தாழ்ந்திறைஞ்சி ஈர அன்பினராய் வீரம் மிக்க அவ்வடியார்களது திருப்பெயரை முறையேயெடுத்தோதி அவர்களெல்லார்க்கும் தனித்தனியே 'அடியேன்' எனப் பணிமொழி பகர்ந்து,

தில்லைவா ழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்
திருநீலகண்டத்துக் குயவனார்க் கடியேன்
இலையே யென்னாத இயற்பகைக்கும் அடியேன்
இளையான்றன் குடிமாற னடியார்க்கும் அடியேன்

வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டர்க் கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே.

எனவரும் திருத்தொண்டத் தொகைத் திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றித் தேவாசிரிய மண்டபத்தில் அமர்ந்த சிவனடியார் உளமகிழ அவர்தம் திருக்கூட்டத்தின் நடுவே சென்றணைந்தார்.

இவ்வாறு தாம் இறைவனுக்கு ஆட்பட்டு அவனருளால் அவனுடைய மெய்த்தொண்டர்களாகிய அடியார்களுக்கு ஆட்பட்டு உய்ந்த திறத்தினை,

'ஆட்டான் பட்டமையால் அடியார்க்குத் தொண்டுபட்டு'

எனவும்,

'பண்டே நின்னடியேன் அடியாரடியார்கட்கெல்லாம்
தொண்டே பூண்டொழிந்தேன்'

எனவும் வரும் தொடர்களில் நம்பியாரூரர் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

நம் செந்தமிழ் நாட்டிலே தோன்றி எந்நாட்டவர்க்கும் இறைவனாகிய சிவபெருமானை வழிபட்டு அவனருளே துணையாகப் பெற்றுச் செய்தற்கரிய பேரின்பத்தினை இவ்வுலக மக்கள் அனைவரும் எளிதின் எய்தி இன்புற வழிவகுத்துக் காட்டிய மெய்யடியார்களையும் அவர்தம் திருக்கூட்டத்தினையும் எடுத்துரைத்துப் போற்றுவது. திருத்தொண்டத் தொகையென்னும் இத்திருப்பதிகமாகும். இதனைத் 'தென்றமிழ்ப் பயனாய்வந்த திருத்தொண்டத் தொகை' எனச் சேக்கிழாரடிகள் சிறப்பித்துப் போற்றியுள்ளார். உலகம் உய்யவும் சிவநெறி பெருகவும் திருப்பதிகத்தினை நம்பியாரூரர் பாடியருளும் நற்பேற்றுக்குக் காரணமாக விளங்கியவர், விறன் மிண்ட நாயனாராவர். இச்செய்தி,

'வேறுபிறிதென் திருத்தொண்டத் தொகையாலுலகு விளங்கவரும்
பேறுதனக்குக் காரணராம் பிரானார் விறன்மிண்டரின் பெருமை
கூறுமளவென் னளவிற்றே'

எனவரும் சேக்கிழார் வாய்மொழியால் இனிது புலனாகும்.

## நெல்லிட ஆட்கள் வேண்டிப் பெறுதல்

தேசமுய்யத் திருத்தொண்டத் தொகை பாடியருளிய திருநாவலூர், வாழ்க்கைத் துணையாகிய பரவையாருடன் கூடி ஆரூர்ப்பெருமானை வழிபட்டுத் திருவாரூரில் தங்கியிருந்தார்.

அவரது குடும்பத்திற்கு வேண்டிய செந்நெல் பருப்பு முதலிய உணவுப் பொருள்களைக் குண்டையூர்க்கிழவரெனும் வேளாளர் அன்புடன் அனுப்பி வருவாராயினர். இப்பணி இடையிறாது நிகழ்ந்து வருங்கால் உரியகாலத்தில் மழைபெய்யாமையால் நாட்டிற் பஞ்சம் உண்டாயிற்று. இப்பஞ்சம் குண்டையூர்க் கிழவரையும் பற்றி வருத்தியது. 'சுந்தரமூர்த்தி நாயனார் திருமாளிகைக்கு இன்று நெல் அனுப்புதற்கு இல்லையே' எனப் பெருங்கவலை கொண்ட குண்டையூர்க்கிழவர், அன்று உண்ணா நோன்பினராய் அயர்ந்து துயில்கொண்டார். சிவபெருமான் அவர்க்குக் கனவிலே தோன்றி 'நம்பியாரூரன் பொருட்டு உன்பால் நெல்லைத் தந்தோம்' என்றுரைத்துக் குபேரனை ஏவினார். அவ்வண்ணமே குபேரன் குண்டையூர் முழுவதும் நெல்மலையாகக் குவிந்திடச் செய்தான். மறுநாள் வைகறையில் வழித்தெழுந்த குண்டையூர்க் கிழவர், மலைபோலும் நெற்குவியலைக்கண்டு வியப்புற்று இறைவன் திருவருளைத் தொழுது போற்றினார். 'வன்றொண்டர்க்களித்த இந் நெல்மலையை யாவர் எடுத்துச் செல்ல வல்லவர்? இதனை அவர்க்குத் தெரிவிப்பேன்' என்றெண்ணித் திருவாரூரை நோக்கிச் சென்றார். தம் பொருட்டுக் குண்டையூரில் நெல்மலை அளிக்கப் பெற்றுள்ளதென இறைவன் அறிவிக்க அறிந்த நம்பியாரூரர், குண்டையூரை நோக்கி வந்தார் வழியிடையே வண்றொண்டரைக் கண்ட குண்டையூர்க் கிழவர், அவரை இறைஞ்சி எதிர்கொண்டு தம்மூருக்கு அழைத்து;ச் சென்றார். அவ்வூரை யடைந்து வானளாவ உயர்ந்த நெல்மலையைக் கண்ட தம்பிரான் தோழர், இறைவன் திருவருளை வியந்தார். 'இங்கு நெல் மலையைத் தந்தருளிய சிவபெருமானே இதனை எடுத்துச் செல்லுதற்குரிய ஆட்களையும் தந்தாலல்லது இதனைக் கொண்டு செல்லுதல் இயலாது' என நினைந்து, அண்மையிலுள்ள திருக்கோளிலித் திருக்கோயிலை யடைந்தார். இறைவன் திருமுன் நின்று,

> நீள நினைந்தடியே னுமை நித்தலுங் கைதொழுவேன்
> வாளன கண்மடவா ளவள் வாடி வருந்தாமே
> கோளிலி யெம்பெருமான் குண்டை யூர்ச்சில நெல்லுப் பெற்றேன்
> ஆளிலை யெம்பெருமான் அவை யட்டித் தரப்பணியே.

எனவரும் திருப்பதிகத்தைப் பாடிப்போற்ற நெல்லையெடுத்துச் செல்லுதற்குரிய ஏவலாட்களைத் தரும்படி வேண்டிக் கொண்டார். 'இன்று பகற்பொழுது நீங்கிய பின் நம்முடைய பூதகணங்கள் பரவைவீடு மாத்திரமன்றித் திருவாரூர் முழுவதிலும் நெல்லைக்கொண்டு வந்து குவித்துவிடும்' என்றதோர் அருள்வாக்கு, விசும்பிடை யெழுந்தது. அது கேட்டு மகிழ்ந்த

சுந்தரர், சிவனருளைத் துதித்துப் போற்றித் திருவாரூரை யடைந்து நிகழ்ந்த செய்திகளைப் பரவையார்க்குத் தெரிவித்து மகிழ்ந் திருந்தார். அன்றிரவே பூதகணங்கள் குண்டையூரிலுள்ள நெற் குவியலை வாரிக்கொண்டு சென்று பரவையார் மாளிகையிலுந் திருவாரூர் வீதியிலும் நிரப்பிவிட்டன. மறுநாள் வைகறைப் பொழுதில் துயிலுணர்ந் தெழுந்த பரவையார், தம் மாளிகை யிலும் திருவாரூர் வீதிகளிலும் நிரம்பிய நெற்குவியல்களைக் கண்டு வியப்புற்றார். ஆரூர் மக்கள் அவரவர்கள் மனை முகப்பி லுள்ள நெற்குவியலை அவர்களே வாரிக்கொள்ளலாம் எனப் பறையறைவித்தார்.

பரவையார் பசியால் வருத்தமுற்றதனைக் கண்ட சுந்தரர் அவர் பொருட்டுத் தாம் குண்டையூரிற் பெற்ற நெற்குவியலைக் கொண்டு சேர்த்தற்குரிய பணியாட்களைத் தந்தருள வேண்டு மெனக் கோளிலிப்பெருமான் பால் வேண்டிக்கொண்டன ரென்பது,

> 'கோளிலி யெம்பெருமான் குண்டையூர்ச்சில நெல்லுப் பெற்றேன்
> ஆளிலை யெம்பெருமான், அவை யட்டித் தரப்பணியே'

எனவும்,

> 'பரவையவள் வாடுகின்றாள்'

எனவும்,

> 'பரவை பசிவருத்தமது நீயும் அறிதியன்றே'

எனவும் கோளிலிப்பெருமானை நோக்கி குறையிரந்து வேண்டும் திருப்பதிகத் தொடர்களாலும்

> 'நெல்லிட ஆட்கள் வேண்டி நினைந் தேத்திய பத்தும்'

என அப்பதிகத் திருக்கடைக்காப்பில் வரும் குறிப்பினாலும் இனிது புலனாதல் காணலாம்.

## கோட்புலிநாயனாரால் உபசரிக்கப்பெறுதல்

நம்பியாரூரர் திருவாரூரில் இனிதுறையும் நாட்களில், சோழமன்னனுடைய சேனைத் தலைவராகவும் சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கோயில்களுக்கு வேண்டும் திருவமுதுக் குரிய செந்நெல்லைச் சேர்த்தளிக்குந் திருத்தொண்டினை மேற் கொண்ட தாளாண்மைமிக்க வேளாளராகவும் விளங்கிய கோட் புலியார் என்பார், தமது பதியாகிய நாட்டியத்தான் குடிக்கு எழுந்தருளும் வண்ணம் நம்பியாரூரரை வேண்டிக் கொண்டார். அவரது வேண்டுகோட்கிசைந்த சுந்தரர், திருவாரூரினின்றும் புறப்பட்டுத் திருநாட்டியத்தான் குடியை அடைந்தார் ஆரூரரைக் கோட்புலியார் எதிர்கொண்டு வணங்கி தமது

மாளிகைக்கு அழைத்துச் சென்று முறைப்படி பூசனை புரிந்து திருவமுது செய்து வைத்தார். தம் மக்களாகிய சிங்கடி வனப்பகையென்னும் பெண்கள் இருவரையும் வன்றொண்டர் திருவடிகளில் வணங்கச் செய்து தாமும் வணங்கி நின்று, தம்பிரான் தோழராகிய நீவிர் அடியேன் பெற்ற இப்பெண்கள் இருவரையும் அடிமையாக ஏற்றருளவேண்டும்' என அன்புடன் வேண்டிக்கொண்டார் அவரது அன்பின் திறத்தையுணர்ந்த நம்பியாரூரர், 'இப்பெண்கள் இருவரும் என் குழந்தைகள்' என்று சொல்லி அக்குழந்தைகள் இருவரையும் அன்பினால் அணைத் தெடுத்துத் தம் மடிமீது அமர்த்திக் கொண்டு நெஞ்சம் நெக்குருக உச்சிமலர்ந்து அக்குழந்தைகள் விரும்பிய பொருள்களைக் கொடுத்து மகிழ்ந்தார்.

'இங்ஙனம் கோட்புலியாருடைய புதல்வியரைத் தம் மக்களாக ஏற்றுக்கொண்ட சுந்தரர் அவருடன் திருநாட்டியத் தான் குடிக் கோயிலை யடைந்து ' 'பூணாணாவதோரரவம்' என்ற திருப்பதிகத்தினைப் பாடி, மாணிக்கவண்ணனாகிய இறைவனை வணங்கிப் போற்றினார். நாட்டியத்தான் குடி இறைவனைப் பரவிப் பாடிய இத்திருப்பதிகத் திருக்கடைக் காப்பில் 'கூடாமன்னரைக் கூட்டத்து வென்ற கொடிறன் கோட்புலி' எனத் தம்மை உபசரித்துப் போற்றிய கோட்புலி நாயனாரைச் சிறப்பித்துப் போற்றியதுடன் அவருடைய புதல்வி யாகிய சிங்கடியைத் தாம் மகளாக ஏற்றுக் கொண்டருளிய அன்பின் திறம் விளங்க, நாட்டியத்தான் குடி நம்பியை நாளுமறவாச் சேடார் பூங்குழற் சிங்கடியப்பன் திருவாரூரன்' எனத் தம்மைக் குறிப்பிட்டு மகிழ்ந்தார். இவ்வாறே கோட்புலி யாருடைய மற்றொரு புதல்வியாகிய வனப்பகை என்ற பெண் ணையும் தம் புதல்வியாக ஏற்றுக்கொண்ட திறத்தைப் புலப்படுத் துங் கருத்துடன் தம்மை 'வனப்பகையப்பன்' என்ற பெயரால் பல பதிகங்களிலும் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு கோட்புலி நாயனார் திருநாவலூரரர்க்குச் சிறப்புடைய நண்பராம் பேறு பெற்று விளங்கிய செய்தியை,

'குற்றமறுக்குநங் கோட்புலி நாவற் குரிசிலருள்
பெற்ற அருட்கட லென்றுல கேத்தும் பெருந்தகையே'

எனவரும் தொடரால் நம்பியாண்டார் நம்பி குறிப்பிட்டுள்ளமை இவண் நினைக்கத் தகுவதாகும்.

### பொன்பெறுதல்

நாட்டியத்தான் குடியினின்றும் புறப்பட்டு வலிவலம் என்ற தலத்தையடைந்து மாதொருபாகனாகிய பெருமானைக் கண்டு

மகிழ்ந்த நம்பியாரூரர், 'நன்று மகிழும் சம்பந்தர் நாவுக்கரசர் 'பாட்டுகந்தீர்' என இறைவனைப் போற்றுங் கருத்துடன்,

நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக்
கரசரும் பாடிய நற்றமிழ்மாலை
சொல்லியவே சொல்லி யேத்துகப்பானைத்
தொண்டனே னறியாமை யறிந்து
கல்லியன் மனத்தைக் கசிவித்துக
கழலடி காட்டி யென் களைகளையறுக்கும்
வல்லியல் வானவர் வணங்க நின்றானை
வலிவலந்தனில் வந்து கண்டேனே.

என்ற பாடலால் தமக்கு முற்பட்ட அருளாசிரியர்களாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகிய பெருமக்கள் இருவரும் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத் திருப்பதிகங்களில் சிவபெருமானுக்குள்ள ஈடுபாட்டினைக் குறிப்பிட்டுப் போற்றி மீண்டும் திருவாரூரை அடைந்தார். அப்பொழுது பங்குனி யுத்திரத் திருவிழா அணுகியது. அதனை யுணர்ந்த சுந்தரர் அத்திரு விழாவிற் பரவையார் செலவு செய்தற்குரிய பொன்னைக் கொண்டுவரும் பொருட்டுத் திருப்புகலூரை அடைந்தார். திருக்கோயிலிற் சென்று இறைவனைப் பணிந்து போற்றி அண்மையிலுள்ள திருமடத்திற்குச் செல்லத் திருவுளங் கொண்டு அடியார்களுடன் கோயில் வாயிலிலே சிறிது நேரம் இளைப் பாறியிருந்தார். அந்நிலையில் இறைவன் திருவருளால் அவர்க்கு உறக்கம் வருவதாயிற்று. திருக்கோயில் திருப்பணிக்காக அங்கு அடுக்கி வைக்கப்பட்டுள்ள செங்கற்களைக் கொண்டு வரச் செய்து அவற்றைத் தலைக்கு அணையாகக் கொண்டு அவற்றின் மேல் மேலாடையை விரித்துத் துயில் கொண்டார். பின்பு நம்பியாரூரர் துயிலுணர்ந்தெழுந்தபொழுது தலைக்கு அணையாக அடுக்கிவைத்த செங்கற்கள் எல்லாம் பொன்கட்டிகளாயிருந்தன. அதுகண்டு வியப்புற்ற சுந்தரர் புகலூரிறைவர் திருவருளைத் துதித்துத் திருக்கோயிலினுள்ளே போந்து இறைவனை வணங்கி,

தம்மை யேபுகழ்ந் திச்சை பேசினுஞ்
சார்வினுந் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடாதேயெந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்
இம்மையே தருஞ்சோறுங் கூறையும்
ஏத்தலாம் இடர் கெடலுமாம்
அம்மையேசிவலோகம் ஆள்வதற்
கியாது மையுற வில்லையே.

எனவரும் திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார்.

இங்ஙனம் நம்பியாரூரர் பொய்ம்மையாளரைப் பாடாது புகலூர்ப் பெருமானைப் போற்றிப் பொன்பெற்ற செய்தியினை,

> 'பல்லவை செங்கதிரோனைப் பறித்தவன் பாதம் புகழ்
> சொல்லவன் தென்புக லூரரன்பால் தூய செம்பொன் கொள்ள
> வல்லவன்'

எனவரும் தொடரால் நம்பியாண்டார் நம்பி குறிப்பிட்டுள்ளார்.

நம்பியாரூரரது கருத்தறிந்து அவர் வேண்டிய பொன்னை விரைந்தளித்தமையால் 'எதிரிலின்பம் இம்மையே தருவார்' எனப் புகலூர்ப் பெருமானைச் சேக்கிழாரடிகள் பாராட்டிப் போற்றுவர்.

புகலூரிறைவன் அளித்த பொன்கட்டிகளையெடுத்துக் கொண்டு அடியார்களுடன் அங்கிருந்து புறப்பட்ட சுந்தரர், திருப்பனையூரின் புறத்தே செல்லும் பொழுது அப்பதியிற் கோயில் கொண்டருளிய சிவபெருமான் நம்பியாரூரர்க்கு விருப் புடன் ஆடல்காட்டி யருள்புரிந்தார். அவ்வழகிய தெய்வக் காட்சியைக் கண்டு மகிழ்ந்த வன்றொண்டர், ஆர்வமுடன் எதிர் சென்று வணங்கி,

> மாட மாளிகை கோபுரத்தொடு மண்டபம் வளரும் வளர்பொழிற்
> பாடல் வண்டறையும் பழனத் திருப்பனையூர்த்
> தோடு பெய்தொரு காதினிற்குழை தூங்கத்தொண்டர்
> கள் துள்ளிப்பாட நின்
> றாடுமாறு வல்லார் அவரே அழகியரே.

எனவரும் திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றித் திருவாரூரை யடைந்து தெய்வப் பெருமாளாகிய இறைவரைப் பணிந்து போற்றிப் பரவையாருடன் மகிழ்ந்திருந்தார்.

இறைவன் எழுந்தருளிய திருத்தலங்கள் பலவற்றையும் வழிபட எண்ணிய நம்பியாரூரர், திருவாரூரினின்றும் புறப்பட்டு நன்னிலம், வீழிமிழலை, திருவாஞ்சியம், நறையூர்ச் சித்தீச்சரம், அரிசிற்கரைப்புத்தூர், ஆவடுதுறை, இடைமருது, நாகேச்சரம், சிவபுரம், கலயநல்லூர், குடமூக்கு, வலஞ்சுழி, நல்லூர், சோற்றுத் துறை, கண்டியூர், ஐயாறு, பூந்துருத்தி ஆகிய தலங்களை யிறைஞ்சித் திருவாலம் பொழிலையடைந்து இறைவனை வணங்கியிருந்தார். அன்றிரவு அவர் துயிலும் பொழுது சிவ பெருமான் அவரது கனவில் தோன்றி 'மழபாடிக்கு வருதற்கு மறந்தாயோ' என வினவி மறைந்தருளினார். துயிலுணர்ந் தெழுந்த சுந்தரர் காவிரியைக் கடந்து அதன் வடகரையைச் சேர்ந்து திருமழபாடிக்குப் போய் மழபாடி யிறைவர் திருமுன் நின்று,

பொன்னார் மேனியனே புலித்தோலை யரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர்கொன்றை யணிந்தவனே
மன்னே மாமணியே மழபாடியுள் மாணிக்கமே
அன்னே உன்னையல்லால் இனி யாரை நினைக்கேனே.

என்ற திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார். பின்னர் அங்கிருந்து மேற்றிசை நோக்கிப் புறப்பட்டுக் காவிரியின் இருமருங்குமுள்ள தலங்களை யிறைஞ்ச விரும்பித் திருவானைக்காவை யடைந்தார். சிலந்திக்கு அருள் செய்த திருவானைக்கா இறைவரைப் பணிந்து 'மறைகளாயின நான்கும்' என்ற திருப்பதிகம்பாடி 'ஆனைக்கா அண்ணலைப் பணிவோர் எம்மையும் ஆளாகவுடையார்' எனப்போற்றி மகிழ்ந்தார்.

பின்பு திருப்பாச்சிலாச்சிராமத்தை யடைந்து தமக்குப் பொன்னைத் தந்தருள வேண்டுமென்னுங் குறிப்புடன் சிவபெருமானை வணங்கினார். தாம் விரும்பிய வண்ணம் இறைவன் பொன்னைத் தந்தருளாமையால் இறைவன்பால் முறைப்பாடுடையராய் மனம் புழுங்கி நின்று,

வைத்தனன் றனக்கே தலையுமென்னாவும்
நெஞ்சமும் வஞ்சமொன்றின்றி
உயத்தனன் றனக்கே திருவடிக்கடிமை
யுரைத்தக்கா லுமவனே யொக்கும்
பைத்தபாம் பார்த்தோர் கோவணத்தோடு
பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்
பித்தரே யொத்தோர் நச்சிலராகில்
இவரலா தில்லையோ பிரானார்.

என்ற திருப்பதிகத்தைப் பாடத் தொடங்கிப் பாடல் தோறும் 'இவரலா தில்லையோபிரானார்' என இகழ்ந்து கூறி,

ஏசினவல்ல இகழ்ந்தனவல்ல எம்பெருமானென்றெப் போதும்
பாயினபுகழான் பாச்சிலாச் சிராமத்தடிகளை யடிதொழப் பன்னாள்
வாயினாற்கூறி மனத்தினால் நினைவான் வளவயல் நாவலாரூரன்
பேசினபேச்சைப் பொறுத்திலராகில் இவரலா
தில்லையோபிரானார்.

எனவரும் அப்பதிகத் திருக்கடைக்காப்பில் இவ்வாறு இகழ்ந்துரைத்ததையும் பொறுத்து அருள்புரிதல் இறைவனது கடமையென்பதனை அன்பினால் வற்புறுத்திப் போற்றினார். நேசம் நிறைந்த நெஞ்சகத்தினராகிய அடியார்கள் ஏசினாலும் இகழ்ந்துரைத்தலும் உவகைமிக்கு அருள்புரியும் சிவபெருமான், அன்புடைத் தோழராகிய நம்பியாரூரரது பேரன்பின் வெற்றிக்கு உளமுயவந்து அவர் வேண்டும் பொருட்குவையினைத் தந்தருளினார்.

இவ்வாறு இறைவரை யிகழ்ந்துரைத்தலாகிய புன்மையைச் செய்தநிலையிலும் பேரருளாளராகிய சிவபெருமான் அப் பெரும்பிழையைப் பொறுத்துப் பொன்னைத் தந்தருளிய அற்புத நிகழ்ச்சியை,

**'புன்மைகள் பேசவும் பொன்னைத்தந்தென்னைப் போகம்புணர்த்த**
**நன்மைமயினார்க்கிடமாவது நந்திருநாவலூரே'**

எனத் திருநாவலூர்ப் பதிகத்தில் தம்பிரான் தோழராகிய சுந்தரர் நினைந்துருகிப் போற்றியுள்ளமை இங்கு நினைக்கத் தகுவதாகும்.

பொன்பெற்ற சுந்தரர், பாச்சிலாச்சிராமத்தினின்றும் புறப் பட்டுப் பைஞ்ஞீலி, ஈங்கோய்மலையென்னும் பதிகளைப் பணிந்து கொங்கு நாட்டை அடைந்தார். காவிரிக்குத் தென்கரை யிலுள்ள கறையூர்த் திருப் பாண்டிக் கொடுமுடி என்னும் திருக் கோயிலையிறைஞ்சி 'மற்றுப்பற்றெனக்கின்றி' யென்னும் நமச் சிவாயத் திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார். பின்பு காஞ்சி வாய்ப் பேரூர்த் திருக்கோயிலை யடைந்து வழிபட்டார். அந் நிலையிற் பேரூர்ப்பெருமான், தில்லை மன்றுள் நின்றாடும் தமது திருக்கோலத்தோடு காட்சி கொடுத்தருளினார். அவ்வழகிய காட்சியைக்கண்டு அளவிலாப் பேரின்பமடைந்த சுந்தரர் 'தில்லையம்பலவன் திருக்கூத்தினைக் கண்டு கும்பிடப்பெற்றால் இனிப் புறம்போய் எய்துதற்கு யாதுளது' என்னும் பெருமகிழ்ச்சி யுடையராய்ப் பேரூரினின்றும் புறப்பட்டுத் தில்லையை நோக்கிச் செல்வராயினர். கொங்கு நாட்டுத் திருப்பதியுளொன்றாகிய வெஞ்சமர்க்கூடலை யிறைஞ்சிப் போற்றிச் சோழநாட்டை யடைந்து கற்குடி, ஆறைமேற்றளி, இன்னம்பர், புறம்பயம் முதலிய திருத்தலங்களை யிறைஞ்சி நடுநாட்டில் திருக்கூடலை யாற்றூரை யணுகியவர், அங்குச் செல்லாமல் திருமுதுகுன்றை நோக்கிச் சென்றார். அப்பொழுது கூடலையாற்றூரிற் கோயில் கொண்டருளிய சிவபெருமான், மறையவர் வடிவுகொண்டு வழிப் போக்கராய் வன்றொண்டரையணுகி நின்றார். அந்தணாளரைக் கண்ட சுந்தரர், அவரைப் பணிந்து ஐயரே, யாம் இன்று திருமுதுகுன்றுக்குப் போதற்குரிய வழியினைத் தெரிவித்தல் வேண்டும்' என வேண்டிக் கொண்டார். அது கேட்ட இறைவர், 'கூடலை யாற்றூரை யடையச் சென்றது இவ்வழியே' எனக்கூறி அவர்க்குத் துணையாய்த் தாமும் அவ்வூரெல்லையளவும் உடன் போந்து பின் மறைந்தருளினார். உடன் வந்த அந்தணரைக் காணாத சுந்தரர், அழைத்து வந்து மறைந்த அவர் சிவபெரு மானேயெனத் தெளிந்து,

வடிவுடை மழுவேந்தி மதகரி யுரிபோர்த்துப்
பொடியணி திருமேனிப் புரிகுழ லுமையோடும்

கொடியணி நெடுமாடக் கூடலை யாற்றூரில்
அடிகளில் வழிபோர்ந்த அதிசய மறியேனே.

என்னும் திருப்பதிகத்தைப் பாடிக் கூடலையாற்றூர்க் கோயிலை யடைந்து தமக்கு வழித்துணையாய் வந்த பெருமானை வணங்கிப் போற்றித் திருமுதுகுன்றத்தை அடைந்தார்.

## ஆற்றிலிட்டுக் குளத்தில் எடுத்தல்

திருமுதுகுன்றத் திறைவரை யிறைஞ்சிய நம்பியாரூரர், 'நஞ்சியிடையின்று' என்ற முதற்குறிப்புடைய திருப்பதிகத்தைப் பாடி இறைவன்பால் பொருளை வேண்டிப் பெறும் மனக் குறிப்புடன் 'மெய்யில் வெண்பொடி' என்னும் செந்தமிழ்ப் பதிகத்தைப் பாடினார்.* (* இப்பொழுது கிடைத்துள்ள சுந்தரர் தேவாரத்துள் இம் முதற் குறிப்புடைய பதிகமோ பாடலோ காணப்பெறவில்லை. 'மெய்யை முற்றப்பொடி பூசியோர் நம்பி' எனவரும் நம்பியென்ற திருப்பதிகமே இங்கு 'மெய்யில் வெண்பொடி எனச் சேக்கிழாரடிகளாற் குறிப்பிடப் பெற்றதெனக் கொள்ளுதல் பொருந்தும்'). அப்பொழுது திருமுதுகுன்றப் பெருமான் நம்பியாரூரர்க்குப் பன்னீராயிரம் பொன்களைப் பரிசிலாகத் தந்தருளினார். அவற்றைப் பெற்ற ஆளுடைய நம்பி மீண்டும் இறைவரைப் பணிந்து 'தேவரீர் தந்தருளிய இப்பொன்கள் யாவும் அடியேற்குத் திருவாரூரிலுள்ளார் வியக்கும் வண்ணம் அங்கே வரும்படி செய்தல் வேண்டும்' என வேண்டிக் கொண்டார். அப்பொழுது 'இப்பொன்னெல்லாவற்றையும் மணிமுத்தாற்றி லிட்டுத் திருவாரூர்க் குளத்தில் எடுத்துக்கொள்க' என்றதோர் அருள்வாக்கு எழுந்தது. அவ்வருள்மொழியைச் செவிமடுத்த வன்றொண்டர், தாம் பெற்ற பொன்னின் மாற்றிதற்கு மச்சம் வெட்டி எடுத்துக்கொண்டு பொன் முழுவதையும் மணிமுத் தாற்று நீரினுள்ளே புகவிட்டு, 'அன்று என்னை வலிய ஆட் கொண்ட திருவருளை இதில் அறிவேன்' என்று சொல்லித் தில்லைக் கூத்தனைக் கண்டு கும்பிடும் பேரார்வத்துடன் அங்கிருந்து புறப்பட்டார். கடம்பூரை யிறைஞ்சித் தில்லைப் பதியை யடைந்தார். திருவீதியை வலம் வந்து கோபுரத்தை யிறைஞ்சி உள்ளே புகுந்து பொன்னம்பலத்தில் ஆடல்புரியும் பெருமானை ஆர்வமுறக் கண்டு தொழுதார். 'நன்னெறிக்கண் நின்றார்கள் வழுவி நரகுற்றுத் துன்புறா வண்ணம் தடுத்தாட் கொள்ள வல்ல இறைவனை நமக்கு உரிமையாகப் பெற்றோம்' எனத் தம் நெஞ்சத்திற்கு அறிவுத்தும் நிலையில் 'மடித்தாடும் அடிமைக்கணன்றியே' எனவரும் திருப்பதிகத்தினைப் பாடினார். அப்பதிகத் திருக்கடைக்காப்பில் 'மீகொங்கில் அணிகாஞ்சி வாய்ப் பேரூரர் பெருமானைப் புலியூர்ச் சிற்றம்பலத்தே

பெற்றாமன்றே' எனத் தாம் தில்லையம்பலவன் திருக்கூத்தினைப் பேரூரிற் கண்டு மகிழ்ந்த நிகழ்ச்சியைச் சிறப்பித்துப் போற்றினார்.

தில்லையிற் சிற்றம்பலவன் திருக்கூத்தினைக் கண்டு மாறிலா மகிழ்ச்சியில் திளைத்த நம்பியாரூரர், அங்கிருந்து புறப்பட்டுக் கருப்பறியலூர், மண்ணிப்படிக்கரை, வாழ்கொளிபுத்தூர், கானாட்டுமுள்ளூர், எதிர்கொள்பாடி, வேள்விக்குடி முதலிய தலங்களை யிறைஞ்சிச் செந்தமிழ் மாலைகள் போற்றிசைத்துத் திருவாரூரை யடைந்து பூங்கோயிலமர்ந்த பெருமானை வழிப் பட்டுப் பரவையாருடன் இனிதிருந்தார்.

இங்ஙனம் வைகும் நாளில் ஒருநாள் சுந்தரர், பரவையாரை நோக்கி, திருமுதுகுன்றப் பெருமான் நமக்குத் தந்தருளிய பொன்னை மணிமுத்தாற்று நீரினுள்ளே புகவிட்டு வந்தோம். அப்பொன்திரளை இறைவனருளால் ஆரூர்த் திருக்கோயிலின் மேல் பாலுள்ள குளத்திலேதேடி எடுத்து வருவோம். நீயும் உடன் வருக' என அழைத்தார். அதுகேட்ட பரவையார், முறு வலித்து 'இஃது என்ன அதிசயம்' என்றார். 'நங்கையே, நம் பெரு மானருளால் அப்பொன் முழுவதையும் குளத்திலே எடுத்து உனக்குத் தருவது பொய்யாது' என உறுதி கூறிய நம்பியாரூரர், பரவையாருடன் புற்றிடங்கொண்ட பெருமானை வணங்கித் திருவாரூர்க் கோயிலை வலம்வந்து அதன் மேல்பாலுள்ள திருக் குளத்தின் வடகீழ்க்கரையில் நிற்கும் படி பணித்துத் தாமக் குளத்திலே யிறங்கி முன் முதுகுன்றில் மணி முத்தாற்றிலிட்ட பொன்னைத் தேடினார். அவர் வாயிலாகச் செந்தமிழ்ப் பாமாலையை யணிய விரும்பிய சிவபெருமான், அக்குளத்திலே பொன் விரைவில் தோன்றாதபடி செய்தருளினார். அந்நிலையிற் பரவையார்தம் கணவரை நோக்கி 'ஆற்றிலேயிட்டுக் குளத்திலே தேடுவீர், இறைவன் திருவருளை யறியும் முறை இதுவோ' என நகைத்துரைத்தார் அதுகேட்ட சுந்தரர் 'முதுகுன்றமர்ந்த பெருமானே, பரவையிவள் நகைத்துரையாதபடி தேவரீர் அடி யேற்கு முன் அருளிச் செய்த வண்ணம் செம்பொன்னைத் தந்தருள் வீராக' என வேண்டுவார்,

**பொன்செய்த மேனியினீர் புலித்தோலை யரைக்கசைத்தீர்,**
**முன்செய்த மூவெயிலு மெரித்தீர் முதுகுன்றமர்ந்தீர்**
**மின்செய்த நுண்ணிடையாள் பரவையிவள் தன் முகப்பே**
**என் செய்த வாறடிகேள் அடியேனிட் டளங்கெடவே.**

எனவரும் திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றினார். உம்பரும் வானவரும் உடன் நின்று காண அடியேனுக்குத் திருமுது குன்றத்தில் நீவிர் அளித்த செம்பொன்னை விரைவிற் பெறாது போன தளர்ச்சியினாலுண்டாகிய கையறவாகிய துன்பத்தைப்

பரவையாகிய இவளது முன்னிலையிலே நீக்கியருளுதல் வேண்டும் என்பார்,

உம்பரும் வானவரும் உடனே நிற்கவே எனக்குச்
செம்பொனைத் தந்தருளித் திகழும் முதுகுன்றமர்ந்தீர்
வம்பமருங்குழலாள் பரவையிவள் வாடுகின்றாள்
எம்பெருமான் அருளீர் அடியேன் இட்டளங்கெடவே.

எனக் குறையிரந்துவேண்டினார். இவ்வாறு இத்திருப்பதிகத்தின் எட்டாந் திருப்பாடலளவும் வேண்டியும் இறைவன் பொன்னைத் தந்தருளவில்லை.

ஏத்தாதிருந்தறியேன் இமையோர்தனிநாயகனே
மூத்தாயுலகுக்கெல்லா முதுகுன்றமமர்ந்தவனே
பூத்தாருங் குழலாள் பரவையிவள் தன்முகப்பே
கூத்தா தந்தருளாய் கொடியேனிட்டளங் கெடவே.

என்னும் ஒன்பதாந் திருப்பாடலைப் பாடிய அளவில் இறைவரருளால் பொன்திரள் குளத்தில் அகப்பட்டது. அப் பொன்னைக் கண்ட சுந்தரர், அதனையும் முன் மாற்றறியக் கொணர்ந்த மச்சத்தையும் உரை கல்லில் உரைத்துப் பார்த்த பொழுது பொன் உரையில் தாழ்ந்து காணப்பட்டது. அது கண்ட சுந்தரர் இறைவனை மீண்டும் பதிகம்பாடிப் பரவினார். திருவருளால் அப்பொன் மாற்றுயர்ந்து விளங்கியது. அதனைக் கொண்டு கரையேறிய வன்றொண்டர், பொற்குவையினை ஏவலாட்கள் மூலம் பரவையார் மாளிகைக்கு அனுப்பிவிட்டுப் பூங்கோயிலமர்ந்த இறைவரை வணங்கிப் பரவையாருடன் திருமாளிகையை யடைந்து இறைவரது திருவருட்டிறத்தை யெண்ணி மகிழ்ந்திருந்தார்.

'ஆற்றிலே யிட்டுக் குளத்திலே தேடுதல்' என்பது, தமக்குரிய பொருளைப் பெறுதற்கரிய செய்வகையுணராது மதிகெட்டு அலையும் பேதையரது செயலைக் குறித்து வழங்கும் பழமொழி யாகும். இப்பழமொழியை 'ஆற்றிற் கெடுத்துக் குளத்தினில் தேடிய ஆதரைப் போல்' எனத் திருநாவுக்கரசடிகள் திரு நல்லூர்த் திருவிருத்தத்தில் உவமையாக எடுத்தாண்டுள்ளார். உலகியற் பெற்றியையுணர்த்தும் இப்பழமொழியின் ஆற்றலையும் இறைவன் திருவருட்டுணையினால் மாற்றி விடலாமென்பது நம்பியாரூரர் துணிபாகும். இத்துணிபினை உலக மக்களுக்கு உணர்த்தும் பொருட்டே திருமுதுகுன்றர் அளித்த பன்னீராயிரம் பொன்னையும் மணிமுத்தாற்று நீருட் புகவிட்டு அப்பொன்னை யாவரும் காணத் திருவாரூர்க்குளத்தில் எடுத்துக் காட்டத் திருவுளங்கொண்டார் எனக் கருதவேண்டியுளது.

'அன்றெனை வலிந்தாட்கொண்ட அருளிதில்அறிவேன் என்று,
பொன்திரள் எடுத்து நீருட் புகவிட்டுப் போதுகின்றார்'

எனவரும் சேக்கிழார் வாய்மொழி இக்கருத்தினைத் தெளிவு படுத்தல் காணலாம். இறைவனது திருவருட்டிறத்தை விளக்க நம்பியாரூரர் செய்த இவ் வற்புத நிகழ்ச்சியை,

செழுநீர் வயல்முது குன்றினிற் செந்தமிழ் பாடிவெய்ய
மழுநீள் தடக்கையன் ஈந்தபொன் ஆங்குக்கொள்ளாது வந்தப்
பொழில் நீள் தருதிரு வாரூரில் வாசியும் பொன்னுங் கொண்டோன்
கெழுநீள் புகழ்த்திரு வாரூரனென்று நாங் கேட்பதுவே.

எனவரும் திருத்தொண்டர் திருவந்தாதியில் நம்பியாண்டார் நம்பி தாம்கேட்ட பழைய வரலாறாகக் குறித்துப் போற்றி யுள்ளார்..

இறைவன் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள ஏனைத் திருத்தலங்களையும் வழிபட்டு மகிழ எண்ணிய நம்பியாரூரர், ஆரூரிறைவர்பால் விடைபெற்று நள்ளாறு, கடவூர் வீரட்டம், திருமயானம், வலம்புரம், சாய்க்காடு, வெண்காடு, நனிபள்ளி, செம்பொன்பள்ளி, நின்றியூர், நீடூர், திருப்புன்கூர் அகிய தலங்களையிறைஞ்சித் திருக்கோலக்காவின் எல்லையை யடைந்தார். அப்பொழுது சிவபெருமான் அவர்க்கெதிரே தோன்றிக் காட்சி கொடுத்தருளினார். அத்தெய்வக் காட்சியைக் கண்டு மகிழ்ந்த சுந்தரர், திருஞானசம்பந்தப் பிள்ளையார் தம்முடைய மெல்லிய கைகளால் தாளமிட்டு இன்னிசைத் திருப்பதிகம் பாடியது கண்டு இரங்கிய திருக்கோலக்கா இறைவர் பிள்ளையார்க்குத் திருத்தாளம் அளித்தருளிய செய்தியை,

நாளுமின்னிசை யாற்றமிழ் பரப்பும்
ஞானசம்பந்தனுக்குல கவர்முன்
தாளம்ஈந்து அவன்பாடலுக் கிரங்குந்
தன்மையாளனை என்மனக் கருத்தை
ஆளும் பூதங்கள் பாடநின்றாடும்
அங்கணன்றனை யெண்கணமிறைஞ்சுங்
கோளிலிப் பெருங்கோயிலுளானைக்
கோலக்காவினிற் கண்டுகொண்டேனே.

எனவரும் திருப்பாடலிற் போற்றிசைத்துப் பரவினார்.

## இறைவன் பொதிசோறளித்தருளல்

பின்பு சீகாழிப்பதியைப் புறத்தே வலம்வந்து வணங்கி நின்று அத்திருப்பதியில் திருவவதாரஞ் செய்தருளிய முத்தமிழ் விரகராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவடிகளைப் பரவிப் போற்றிக் குருகாவூர் என்னுந் திருப்பதியை நோக்கிச்

செல்வராயினர். அங்ஙனம் செல்லும் வன்றொண்டர் பசியாலும் நீர் வேட்கையாலும் வருந்துதலையுணர்ந்த சிவபெருமான், வழியிடையே மறையவர் வடிவுடன் தண்ணீரும் பொதிசோறுங் கொண்டுவந்து வெயில் வெப்பம் நீங்க நிழல்தரும் பந்தரையும் உண்டாக்கி நம்பியாரூரரை எதிர்பார்த்திருந்தார். அப்போது சுந்தரர் அடியார் திருக்கூட்டத்துடன் அவ்விடத்தே வந்து பந்தரின் கீழேபோய் அங்குள்ள அந்தணர் பக்கத்திலே 'சிவாயநம' எனத் திருவைந்தெழுத்தோதி அமர்ந்தார். அந்தணராய் வந்துள்ள சிவபெருமான் அவரை நோக்கி 'நீவீர் மிகவும் பசியுடையவராகவுள்ளீர், யான் கொண்டுவந்த இப்பொதி சோற்றையுண்டு தண்ணீர் பருகி இளைப்பாறுவீராக' என வேண்டிக் கொண்டார். சுந்தரரும் அதற்கிசைந்து அவர் அன்புடன் தந்த பொதிசோற்றை வாங்கி அடியார்களுடன் அமுது செய்து உடன்வந்த பரிசனங்களெல்லோரும் உண்ணும்படி செய்தார். அறவாழியந்தணனாகிய இறைவனளித்த பொதி சோறு யாவரும் உண்ணும்படி குறையாது பெருகியது. உண்டு பசிதீர்த்த வன்றொண்டர், உரிய நேரத்தில் உணவளித்து உய்வித்த மறையவரைப் பாராட்டி அடியார்களுடன் அருகே துயிலமர்ந்தார். அந்நிலையில் மறையவராய் வந்த இறைவர், பந்தருடன் மறைந்தருளினார் துயிலுணர்ந்தெழுந்த சுந்தரர், மறையவரைக் காணாது அதிசயித்து, இவ்வாறு வந்து அருள்புரிந்தவர் குருகாவூரிற் கோயில் கொண்டருளிய சிவபெருமானே யெனத்தெளிந்து,

இத்தனை யாமாற்றை யறிந்திலே னெம்பெருமான்
பித்தரே யென்றும்மைப் பேசுவார் பிறரெல்லாம்
முத்தினை மணிதன்னை மாணிக்க முளைத்தெழுந்த
வித்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே.

எனவரும் திருப்பதிகத்தைப் பாடிக்கொண்டு திருக்குருகாவூரை யடைந்து உணவளித்து உயிர்காத்த பெருமானை அன்பினாற் போற்றி மகிழ்ந்தார். உளங்குளிர்ந்து பாடிய தமிழ்மாலையாகிய இத்திருப்பதிகத்திலே,

'ஆவியைப் போகாமே தவிர்த்தென்னையாட் கொண்டாய்'

எனவும்,

'பாடுவார் பசிதீர்ப்பாய் பரவுவார் பிணிகளைவாய்'

எனவும் நம்பியாரூரர் குருகாவூரிறைவர் தமக்கு அருள்செய்த திறத்தைப் பத்தர்கட்குக் குறிப்பிட்டுப் போற்றுதல் இந்நிகழ்ச்சிக் குரிய அகச்சான்றாதல் காணலாம்.

குருகாவூர்ப் பெருமானை வழிபட்ட சுந்தரர், திருக் கழிப்பாலையை யிறைஞ்சித் தில்லையை யடைந்து தில்லைச்

சிற்றம்பலவன் திருக்கூத்தினைக் கண்டு கும்பிட்டு எல்லையிலா இன்பத்தில் திளைத்து மகிழ்ந்தார். பின்பு, திருத்தினைநகரை வணங்கித் தாம் பிறந்த தலமாகிய திருநாவலூரை யடைந்தார். தம் ஆவியினும் அடைவுடைய சிவபெருமான் திருவடிகளை இறைஞ்சிக் 'கோவலனான்முகன்' என்ற திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றி அடியார்களுடன் அப்பதியில் அமர்ந்திருந்தார்.

## தொண்டை நாட்டு யாத்திரை

தொண்டைநாட்டுத் திருத்தலங்களை வழிபட விரும்பிய சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருநாவலூரினின்றும் புறப்பட்டுத் திருக்கழுக்குன்றத்தை வணங்கிச் செந்தமிழ்ப் பதிகம் பாடித் திருக்கச்சூர் ஆலக்கோயிலை யடைந்து அங்கு வீற்றிருக்கும் பெருமானைப் பணிந்து போற்றிக் கோயிற் புறத்தணைந்தார். அப்பொழுது வெயில் வெம்மை மிக்க நண்பகற்பொழுதாகியும் அவர்க்கு அமுது சமைத்தளிக்கும் பரிசனங்கள் அங்கு வந்து சேர வில்லை. அந்நிலையில் நம்பியாரூரர் திருக்கோயிலின் மதிற் புறத்தே ஒருபால் தங்கியிருந்தார். அடியார் பசித்திருக்கப் பொறாத சிவபெருமான், மறையவர் வடிவுடன் அங்கு வந்து வன் றொண்டரை நோக்கி 'நீர் பசியால் மிகவும் வாட்டமடைந் துள்ளீர், யான் சிறிது நேரத்திற்குள் இங்குள்ள வீடுகளில் இரந்து உணவு கொண்டு வருமளவும் இவ்விடத்திலேயே யிருப்பீராக' என்று சொல்லிச் சென்று அண்மையிலுள்ள வீடுகளில் திருவ முதும் கறியும் இரந்து பெற்று நம்பியாரூரரை யணுகி 'இதனை யுண்டு பசி தீரும்' எனக் கொடுத்தருளினார். அந்தணரது பேரன் பைக் கண்ட மகிழ்ந்த சுந்தரர், அவர் தந்த உணவினை விருப்புடன் வாங்கி அடியார்களுடன் அமுது செய்தார். அந்நிலையில் சோறிரந்து கொணர்ந்த மறையவர் விரைவில் மறைந்தார். அதுகண்டு சுந்தரர், தம்பால் மறையவராய் வந்து பசிதீர்த் தருளியவர் சிவபெருமானே யென வுணர்ந்து 'வெம்மை மிகுந்த இவ்வுச்சிப் பொழுதிலே திருவடி வருந்த வீடுதோறும் சென்றி ரந்து எமக்குச் சோறளித்த இப்பெருங் கருணையை என்னென் பேன்' என நெஞ்ச நெக்குருகி மெய்ம்மயிர் சிலிர்ப்பக் கண்ணீரரும்பி மலைமேல் மருந்தாகிய ஆலக்கோயிற் பெருமானைப் பணிந்தார்.

**முதுவாயோரி கதறமுதுகாட் டெரிகொண்டாடல் முயல்வானே**
**மதுவார் கொன்றைப் புதுவீ சூடும் மலையான் மகள்தன் மணவாளா**
**கதுவாய்த் தலையிற் பலிநீ கொள்ளக் கண்டாலடியார் கவலாரே**
**அதுவே யாமா றிதுவோ கச்சூ ராலக் கோயிலம்மானே.**

எனவரும் திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றினார். அங்கிருந்து புறப்பட்டுக் காஞ்சி நகரத்தை யணுகி அந்நகர மக்கள் அன்பி

னால் எதிர்கொண்டு போற்ற அந்நகரத்தினுள்ளே சென்று திரு வேகம்பத்தையடைந்து மலைமகளாரது பூசனையை யேற்ற ருளிய ஏகாம்பரநாதரைக் கண்டு நிலமிசை வீழ்ந்திறைஞ்சினார். ஆராத காதலுடன் திருப்பதிகச் செந்தமிழ் பாடித் துதித்தார். தொண்டர்களுடன் அந்நகரத்திலே சிலநாள் தங்கியிருந்தார்.

காஞ்சியில் தங்கியிருக்கும் நாட்களில் காமக் கண்ணியா ராகிய உமையம்மையார் எழுந்தருளிய திருக்காமக் கோட்டத் தைச் சென்று பணிந்தார். திருமேற்றளித் திருக்கோயிலை யடைந்து திருப்பதிகம் பாடித் துதித்தார். திருவோணகாந்தன் தளியை யிறைஞ்சி,

> நெய்யும் பாலுந் தயிருங்கொண்டு நித்தல் பூசனை செய்யலுற்றார்
> கையிலொன்றுங் காணமில்லைக் கழலடி தொழு துய்யினல்லால்
> ஐவர் கொண்டிங் காட்ட வாடி யாழ்குழிப்பட் டழுந்துவேனுக்
> குய்யுமாறொன் றருளிச் செய்யீர் ஓண காந்தன் றளியுளீரே.

என்னும் திருப்பதிகப் பாமாலை பாடி இறைவர்பால் பொன்னை வேண்டிப் பெற்று மகிழ்ந்தார். கச்சி அனேக தங்காவதம் என்னுந் திருக்கோயிலை யடைந்து செந்தமிழ் பாடித் துதித்தார்.

பின்பு, பனங்காட்டூர், மாற்பேறு, திருவல்லம் முதலிய திருத்தலங்களைப் பணிந்துபோற்றித் திருகாளத்தி மலையை அடைந்தார். அம்மலையை வலம்வந்து அதன் மீதேறிக் காளத்தி யப்பரைக் கைத்தொழுதிறைஞ்சி அவரருகே 'பொங்கிய ஒளியின் நீழற் பொருவிலன் புருவாய்' நிற்கும் கண்ணப்ப நாயனார் திரு வடிகளை வணங்கி மகிழ்ந்து தொண்டர்களுடன் அப்பதியிற் சில நாள் அமர்ந்திருந்தார். அம் மலையிலிருந்த வண்ணமே வட நாட்டிலுள்ள திருப்பருப்பதம், திருக்கேதாரம் முதலிய திருத் தலங்களையும் நினைந்திறைஞ்சிச் செந்தமிழ்ப் பாமாலை பாடிப் போற்றினார். பின்னர் அங்கிருந்து புறப்பட்டுப் பல தலங் களையும் பணிந்து பாடிக் கடற்கரையிலுள்ள திருவொற்றியூரை யடைந்து அங்குக் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் எழுத்தறியும் பெருமானை நாள்தோறும் மூன்று காலங்களிலும் ஆர்வமுறத் தொழுது அப்பதியில் தங்கியிருந்தார்.

## சங்கிலியார் திருமணம்

திருக்கயிலாய மலையிலே உமாதேவியார்க்குப் பணிபுரியும் சேடியர்களாய் முன்னர் ஆலால சுந்தரரைக் காதலித்த மகளிர் இருவருள் கமலினியார் என்பார் திருவாரூரில் நங்கை பரவை யாராய்த் தோன்றி நம்பியாரூரரை மணந்தனர் என்ற செய்தி முன்னர்க் கூறப்பட்டது. மற்றொருவராகிய அனிந்திகையார் என்பார், தொண்டை நாட்டில் ஞாயிறு என்னும் ஊரில் வாழும்

கிழவர் என்ற வேளாளர்க்கு அருமைத் திருமகளாகத் தோன்றிச் சங்கிலியார் என்னும் பெயருடன் வளர்ந்து வந்தார். உமா தேவியார் திருவடிகளிலே நிறைந்த பேரன்புடையராய் வளரும் சங்கிலியார், பெதும்பைப் பருவமெய்தினார். அவருடைய தந்தையார், தம் மனைவியாரை நோக்கி 'நம்முடைய மகளுக்கு அமைந்த வடிவு, பண்பு முதலிய நலன்கள் யாவும் மண்ணுலகில் வாழ்வார்க்கு இசையா வண்ணம் மேற்பட்டுள்ளன. இவளுக்குத் திருமணம் நிகழும் பருவமும் அணுகியது. இதற்கு யாது செய்வோம்' என்றார். அதுகேட்ட மனைவியார் 'இவளுக்கு இசைந்த வகையில் ஒருவரைக் கணவராகத் தேர்ந்து திருமணஞ் செய்து கொடுப்பீராக' எனக் கூறினார். இவ்வாறு தாயும் தந்தையும் தன் திருமணங் குறித்துப் பேசியது கேட்டு அயலே நின்ற சங்கிலியார், 'இவர்கள் பேசும் இவ்வார்த்தை என்திறத்துப் பொருந்தாது. ஈசனருள்பெற்றார் ஒருவர்க்கே யான் மனைவி யாதற்குரியேன், என் கருத்துக்கு மாறாக யாது விளையுமோ' என மனங்கலங்கி மூர்ச்சித்து நிலமிசை விழுந்தார். அது கண்டு தந்தையும் தாயும் பதைபதைத்தோடித் தம் மகளாகிய சங்கிலியைக் கைகளால் தாங்கியெடுத்து முகத்திற் பனிநீர் தெளித்து மூர்ச்சை தெளிவித்து 'நினக்கு நிகழ்ந்த துன்பம் யாது' என வினவினர். உணர்வு தெளியப்பெற்ற சங்கிலியார், 'என் தாயும் தந்தையுமாகிய நீங்கள் இப்பொழுது என் திருமணத்தைக் குறித்துப் பேசிய இவ்வுரை எனக்கு ஏற்புடையதன்று. சிவபெருமான் அருள்செய்த ஒருவரை யான் மணத்தற்குரியேன். இனிமேல் திருவொற்றியூரை யடைந்து இறைவன் திருவருளிற் செல்வேன்' என மறுமொழி பகர்ந்தார். அவரது மனக்கருத் தறிந்த தந்தையும் தாயும் சோர்வுற்று அச்சமும் வியப்பும் உடையவர்களாகித் தம்மகள் சொன்ன அவ்வார்த்தையினை உலகத்தார் அறியாமல் மறைத்தொழுகினார்கள்.

இந்நிலையில், அவர்களோடு குலத்தால் ஒப்புடைய ஒருவன் சங்கிலியாரது தகுதியை யுணராதவனாய் அவரை மணந்து கொள்ள விரும்பி அவருடைய தந்தையார்பால் மகட் பேசி வருவதற்குச் சிலரை யனுப்பினான். அவர்கள் ஞாயிறு கிழவரை யடைந்து சங்கிலியாரை மணம்பேசியபொழுது அவருடைய தந்தையார், தம்முடைய மகளது மனக்கருத்தினை வெளியிடுதல் தகுதியன்றென நினைந்து, தீங்கு நேராத படி வேறொரு வகையால் சமாதானங் கூறி அனுப்பி விட்டார். இவ்வாறு பெண் கேட்க வந்தவர்கள் திரும்பிச் செல்வதற்கு முன்னமே அவர்களை யனுப்பியவன் அங்கு வந்து சால்புமிக்க 'சங்கிலியாரை இகழ்ந் துரைப்பானாயினன், அவனது அடாச் செய்கை கண்டு வெறுப் புற்ற பெரியோர், 'இவன் இறந்தவனை

யொத்தான்' என எண்ணி, அவனை அவ்விடத்தை விட்டு அகற்றினர். அங்ஙனம் சென்ற அவன் விரைவில் இறந் தொழிந்தான். உய்ய வேண்டும் என்ற நினைவுடையவர்கள் சங்கிலியார் திறத்தே இவ்வாறு பேசத்தகாத வார்த்தையைப் பேசமாட்டார்கள் என்னும் மெய்ம்மையை உலகத்தார் அறியும் படி செய்த விதிபோல் இச்செயல் நிகழ்ந்தது.

இதனைக் கேள்வியுற்ற ஞாயிறு கிழவர், அன்பிற் சிறந்த தம் சுற்றத்தாரிடம் தம்மகள் சங்கிலியாரது திருவருள் நினைவினை உள்ளபடி யெடுத்துரைத்து மிகவும் அச்சமுடையவராய் 'இனி சங்கிலியார் எண்ணியவண்ணம் அவரைத் திருவொற்றியூர் சிவத் தொண்டு செய்திருக்கும்படி செய்தல் வேண்டும்' எனத் துணிந்தார். அத்துணிபின்படி சுற்றத்தாருடன் சங்கிலியாரை அழைத்துச் சென்று திருவொற்றியூர் இறைவரைப் பணிந்து அவ்வூர் மக்கள் இசைவு பெற்றுத் திருக்கோயிலின் அருகே கன்னிமாடம் ஒன்று அமத்தார். அதிலே தம் மகள் சங்கிலியாரை அமர்த்தி 'உமக்கு வேண்டிய பணிகளை யாங்கள் செய்ய நீர் சிவபெரு மானுக்குரிய திருத்தொண்டுகளைச் செய்து இக்கன்னி மாடத்திலே உறைவீராக' என இறைஞ்சி வேண்டி அவர்க்கு வேண்டும் வசதிகளைச் செய்து தம்முடைய ஊரையடைந்தார். கன்னி மாடத்திலே வாழும் சங்கிலியார், நாள்தோறும் மூன்று காலங்களிலும் ஒற்றிரியூறைவரைப் பணிந்து திருக்கோயிலில் திரு மாலை தொடுக்கும் மண்டபத்திலே திரையிட்டிருக்கும் இடத்தில் அமர்ந்து அன்பு நாராக அஞ்செழுத்தும் நெஞ்சு தொடுக்க நறுமலர் மாலைதொடுத்து எழுத்தறியும் பெரு மானுக்கு எழில் பெறச் சாத்தும்படி திருத்தொண்டு புரிந்து வருவாராயினர்.

இங்ஙனம் நிகழ்ந்து வரும் நாட்களிலே ஒற்றியூர்ப் பெருமானை வழிபட்டு மகிழும் சுந்தரமூர்த்தி சுவாமிகள், ஒருநாள் அடியார்கள் செய்யும் பலவகைத் திருத்தொண்டு களையும் கண்டு வருபவராகி மலர்மாலை தொடுக்குந் திரு மண்டபத்தை அணுகினார். அப்பொழுது இறைவனுக்குச் சாத்தும்படி தாம் கட்டிய மலர்மாலைகளைக் கொடுத்துவிட்டு மின்னற்கொடி போன்று திரையினுள்ளே மறையும் சங்கிலி யாரை இறைவனருள் கூட்டிய நல்விதியாற் கண்ணுற்றார். சங்கிலி யாரைக் கண்டு காதல்கொண்ட சுந்தரர், மலர்தொடுக்கும் மண்டபத்தை நீங்கிப் புறத்தே ஒருபாற் போந்து, 'என்னை உள்ளம் திரிவித்தாள் இவள் யார் கொல்' என வினவினார், அதனைக் கேட்டு அருகே நின்றவர்கள் 'அவர் தாம் நங்கை சங் கிலியார். பெருகுந்ததவத்தால் சிவபெருமானுக்குரிய திருப்பணி புரியும் கன்னியார்' எனப் பகர்ந்தனர். அம்மொழிகேட்ட

சுந்தரர், 'மகளிர் இருவர் காரணமாக இப்பிறவியை இறைவர் எனக்கு எய்துவித்தருளினார். அவ்விருவருள் ஒருத்தி நங்கை பரவை, மற்றையவள் சங்கிலியாகிய இந்நங்கை' என மன மருண்டார். 'இவளைச் சிவபெருமான்பால் வேண்டிப் பெறுவேன்' எனத் துணிந்து ஒற்றியூர்ப் பெருமான் திருமுன் சென்றார் 'மங்கை பங்கராயிருந்தும் கங்கையைச் சடையிற் கரந்தருளுங் காதலுடைய பெருமானே, இத்திருக்கோயிலில் நுமக்குத் திருமாலை தொடுத்து என் உள்ளத்தை நெகிழ்வித்த சங்கிலியைத் தந்தருளி எனது துயரத்தைத் தீர்த்தருள்வீராக' எனக் குறையிரந்து வேண்டித் திருக்கோயிலின் புறத்தே போய் ஒரு பக்கத்தே கவலையோடு அமர்ந்திருந்தார். அந்நிலையில் ஞாயிறு மறைய இரவுப் பொழுது வந்தெய்தியது. அப்பொழுது ஒற்றியூரிறைவர் வன்றொண்டரை யடைந்து 'இவ்வுலகத்தவர் யாவராலும் அடைதற்கரிய தவச்செல்வியாகிய சங்கிலியை உனக்கு மணஞ் செய்து தருவோம். நீ கொண்ட கவலையை ஒழிக' என அருள் செய்தார். 'ஒன்றும் அறியா நாயேனை அன்று வலிய வந்து வெண்ணெய் நல்லூரில் ஆட்கொண்டருளினீர். இன்றும் எனது உயிர்காக்க இவளை மணஞ் செய்து தர ஏன்று நின்றீர்' என நம்பியாரூரர் ஒற்றியூரிறைவரைப் போற்றி வணங்கினார்.

இவ்வாறு நம்பியாரூரர்க்கு அருள்புரிந்த சிவபெருமான், அன்று நள்ளிரவிலே கன்னிமாடத்தில் துயில் கொள்ளும் சங்கிலியார் கனவிலே தோன்றி, 'சாரும் தவத்துச் சங்கிலியே, யான் சொல்வதனைக் கேட்பாயாக, என்பால் மிகுந்த அன்புடையவனும் அன்று திருவெண்ணெய் நல்லூரில் யாவரும் காண என்னால்தடுத்தாட்கொள்ளப் பெற்றவனும் என் அன்பிற்கினிய தோழனும் ஆகிய சுந்தரன், தனக்கு மனைவியாக உன்னைத் தரும்படி என்னை வேண்டி நின்றான். நீ மகிழ்ச்சியுடன் அவனை மணந்து கொள்வாயாக' எனப் பணித்தருளினார். அவ்வருள் மொழியைச் செவிமடுத்த சங்கிலியார், இறைவன் திருவடிகளில் வீழ்ந்திறைஞ்சி 'எம்பெருமானே, நும்மால் அருளிச் செய்ய பெற்றார்க்கு யான் உரியேன், தங்களது ஆணையைத் தலைமேற் கொண்டேன். என்னை நம்பியாரூரர்க்கு மணஞ் செய்து கொடுக்கும் நிலையில் மலைமகளாரைப் பிரிவின்றி ஒரு பாகத்திற் கொண்டருளிய தங்கள்பால் அடியேன் தெரிவித்துக் கொள்ள வேண்டியதொன் றுண்டு. தம்பிரான் தோழராகிய அவர் திருவாரூரில் மிகுந்த மகிழ்ச்சியுடன் நிலைபெறத் தங்கியிருக்கும் விருப்பமுடையவரென்பதனையும் தாங்கள் அறிந்தருளல் வேண்டும்' என வேண்டிக் கொண்டார். அது கேட்ட இறைவர், சங்கிலியாரை நோக்கி, "பெண்ணே, அவ்வன்

றொண்டன் 'உன்னைப் பிரியேன்' என உனக்கொரு சபதஞ் செய்து தருவான்" எனக் கூறியருளினார்.

பின்பு இறைவர் சுந்தரரை யடைந்து 'நம் சங்கிலிபாற் சென்று நினது விருப்பத்தைத் தெரிவித்தோம், அதற்கு உன்னாற் செய்யத்தக்கதொரு காரியமுளது' என்றார். அதுகேட்டு மகிழ்ந்த சுந்தரர் 'யான் செய்ய வேண்டுவது யாது' என வினவ, "நீ இன்றிரவே அவள்பாற் சென்று 'நின்னைப் பிரியேன்' எனச் சபதஞ் செய்து கொடுத்தல் வேண்டும். இனி இக்காரியத்தில் நாம் செய்யத்தக்கது உண்டாயின் அதனையும் கூறுக" எனப் பணித்தருளினார். சங்கிலியார்பால் தம் மனத்தைப் பறி கொடுத்த நம்பியாரூரர், 'இறைவன் எழுந்தருளிய திருத்தலங்கள் பலவற்றையும் அடைந்து வழிபடும் விருப்புடைய அடியேனுக்கு இவ்வாறு சபதஞ் செய்து கொடுத்தல் பெருந்தடையாகுமே' என்னும் நினைவுடையராய் இறைவரைப் பணிந்து "எம் பெருமானே அடியேன் சங்கிலிக்கு 'நின்னைப் பிரியேன்' எனச் சபதஞ்செய்து கொடுத்தற்காக அவளுடன் திருக்கோயிலில் நும் திருமுன்னர் வரும்பொழுது தேவரீர் அவ்விடத்தைவிட்டு ஆலயத்திலுள்ள மகிழ மரத்தடியின் கீழ் எழுந்தருளியிருத்தல் வேண்டும்' என வேண்டிக்கொண்டார். இறைவரும் அவரது வேண்டுகோளுக்கு இசைந்தருளி, முன்போல் சங்கிலியார் முன் கனவிலே தோன்றி 'நங்கையே, சுந்தரன் உனக்குச் சபதஞ் செய்து தருதற்கு இசைந்துள்ளான். அவன் திருக்கோயிலிலே நம் திருமுன்பு சபதஞ்செய்தற்கு வந்தால் நீ அதற்கு உடன்படாமல் மகிழமரத்தடியிலே சபதஞ்செய்து தரும்படி கேட்பாயாக" என்று கூறி மறைந்தருளினார்.

அந்நிலையிற் சங்கிலியார் விழித்தெழுந்து வியப்புற்றுத் தம்முடைய பாங்கியர்களை எழுப்பித் தமக்குச் சிவபெருமான் கனவிலே தோன்றி அருள்செய்த எல்லாவற்றையும் அவர்களுக்கு எடுத்துரைத்தார். அதுகேட்ட பாங்கியர் அச்சமும் அதிசயமும் பெருமகிழ்ச்சியும் உடையவர்களாய்ச் சங்கிலியாரை வணங்கி னார்கள். அந்நிலையில் இறைவர்க்குத் திருப்பள்ளி யெழுச்சியில் திருமாலை தொடுத்தற்குரிய வைகறைப் பொழுதும் வந் தெய்தியது. சங்கிலியார் சேடியர்களுடன் ஒற்றியூர்த் திருக்கோயி லுக்குச் சென்றார். சங்கிலியார் செல்வதற்கு முன்னரே அவர்க்குச் சபதஞ்செய்து கொடுத்தற் பொருட்டு அவரது வருகையை எதிர்பார்த்திருந்த சுந்தரர். சேடியருடன் வந்த சங்கிலி யாரருகே சென்று தமக்கு இறைவன் அருளிச் செய்தவற்றை எடுத்துரைத்தார்.

சங்கிலியார் நாணத்தால் மறுமொழி கூறமாட்டாது ஒரு புறத்தே ஒதுங்கித் திருக்கோயிலுட் செல்வாராயினர். சுந்தரர்

அவரைத் தொடர்ந்து பின்சென்று 'இனி நான் உம்மைப் பிரியேன் எனச் சபதஞ் செய்தற்பொருட்டு இறைவன் திருமுன்னர் வருவீராக' என அழைத்தார் சங்கிலியார் கண்ட கனவில் நிகழ்ந்தவற்றைக் கேட்டறிந்த பாங்கியர்கள் சுந்தரரை நோக்கி, 'தேவரீர், இதற்காக இறைவன் திருமுன்பு சென்று சபதஞ் செய்வது தகாது' என்றார்கள். அந்நிலையில் நம்பியாரூரர் இறைவனது செய்கையை யறியாது 'மங்கைமீர், நான் வேறு எங்கே சபதஞ் செய்து தரவேண்டும்' என வினவ, இங்குள்ள மகிழமரத்தடியிலேயே சபதஞ் செய்தாற்போதும்' என அவர்கள் மறுமொழி பகர்ந்தார்கள். அது கேட்ட வன்றொண்டர் மன மருட்சியுடையராய் 'இவர்கள் சொல்லியதை மறுத்தால் திருமணம் நிகழாது தடைப்படுதலுங் கூடும். எனவே இதற்கு உடன்படுதலே தகுதி' எனத் துணிந்து 'அவ்வாறே செய்யலாம் வாருங்கள்' என்று அவர்களை யழைத்துக்கொண்டு அவர்களோடு மகிழின்கீழ்ச் சென்று அந்த மகிழமரத்தை மூன்றுமுறை வலம் வந்து சங்கிலியாரை நோக்கி 'இங்கு உன்னைப் பிரியேன்' எனச் சபதஞ்செய்து கொடுத்தார். இவ்வாறு திருநாவலூரர் தம்மை மணத்தற்பொருட்டுத் தெய்வத்தின் முன்னிலையில் சூளுறுதல் கண்ட சங்கிலியார் அச்சூளுறவில் வழுவினால் அவர்க்கு வரும் துன்பத்தினை யெண்ணி, 'தீவினையாட்டியேன் இறைவன் பணியால் இச்செயலைக் கண்டிருந்தேனே' எனப் பெரிதும் மனங்கலங்கி ஒருபக்கத்தே மறைந்து நின்றார். சுந்தரர் சூளுறவு முற்றிய பின் திருக்கோயிலினுள்ளே சென்று இறைவனைப் பணிந்து அருள் நாளும் தர இருந்தீர், நீர் செய்த இச்செயல் மிகவும் அழகாயிருக்கிறது' என்று கூறிப் போற்றி மகிழ்ந்து கோயிற்புறத்து அணைந்தார். பின்பு சங்கிலியார் மலர்தொடுக்கும் மண்டபத்தையடைந்து பூமாலை புனைந்தேத்தும் திருத்தொண்டினை இனிது முடித்து எழுத்தறியும் பெருமானை யிறைஞ்சிப் போற்றித் தம்முடைய கன்னிமாடத்தை யடைந்திருந்தார். அதற்கு முன்னரே ஒற்றியூரிறைவர், அடியார்களுக்குக் கனவிலே தோன்றி, 'நம்முடைய அடியவனாகிய நம்பியாரூரனுக்கு நங்கை சங்கிலியை உலகவர் காணத் திருமணஞ் செய்து கொடுப்பீராக' என அருள் செய்து மறைந்தருளினார். இறைவரது அருளாணைத் தலைமேற்கொண்ட சிவனடியார்கள், பலவகைச் சிறப்புக்களுடன் சங்கிலியாரை நம்பியாரூரர்க்குத் திருமணஞ் செய்து கொடுத்தார்கள். நம்பியாரூரர் தம் வாழ்க்கைத் துணையாகிய சங்கிலியாருடன் கூடி 'ஊழியாம் ஒரு கணந்தான், அவ்வூழி ஒரு கணமாம்' எனக் கருதும் வண்ணம் ஐம்புல இன்பமும் ஆரத்துய்க்கும் அந்நிலையிலேயே இறைவனது திருவருளாகிய பேரின்பக் கடலில் திளைத்து மகிழ்வாராயினார்.

சால்புடைய நங்கையாகிய சங்கிலியை மணந்து கொள்ள விரும்பி முதியோர் சிலரை மணம் பேச அனுப்பினா னொருவன், அந்நங்கையைப் பெற்றோர் தர மறுத்தமையால் இகழ்ந்துரைத்த லாகிய தீமையைச் செய்து விரைவில் இறந்தொழிந்தான் என்பதும், அவன் அங்ஙனம் இறந்து போகவே அங்ஙனம் மகட் பேச விரும்பிய பிற ஆடவர்களும் பெரிதும் அச்சமுற்று மணம் பேச முன் வராமையால் சங்கிலியார்க்கு மங்கல நூலணிதலாகிய திருமணம் தடைப்பட்டதென்பதும், கற்றுத்துறைபோய பொற் றொடி நங்கையாகிய சங்கிலியாரைத் திருவெற்றியூர்த் திருக் கோயிலிற் கண்டு காதல் கொண்ட திருநாவலூரர் அந் நங்கையை மணந்து கொள்ள வேண்டுமென்னும் பெருங்காதலால் ஒற்றியூர்ப் பெருமானைப் பணிந்து அவனது திருவருட்டுணை கொண்டு சங்கிலியாரை மணந்து கொண்டாரென்பதும், இத் திருமணத்தால் 'இருமனைவியாளன் இடர்ப்பாடு' என உலகத்தார் இகழ்ந்துரைத்துச் சிரிக்கும் வண்ணம் தமக்கு ஏற்பட்ட துன்பநிலையினையும் இனிமைதரும் நல் வாழ்வாக நம்பியாரூரர் இறைவனருளால் மாற்றியமைத்துக் கொண்டா ரென்பதும்,

தகுமகட் பேசினோன் வீயவே நூல்போன சங்கிலிபாற்
புகுமணக் காதலினாலொற்றி யூருறை புண்ணியன்றன்
மிகமலர்ப் பாதம் பணிந்தரு ளாலிவ் வியனுலகம்
நகும் வழக்கே நன்மையாப் புணர்ந்தான் நாவலூரரசே.

எனவரும் நம்பியாண்டார் நம்பி வாய்மொழியால் இனிது புலனாகும். தம்பிரான் தோழராகிய நம்பியாரூரர்க்கு வாழ்க் கைத் துணையாதற்கேற்ற தகுதியுடைய சங்கிலியாரைத் தனக்கு மணம் பேசிய அளவிலமையாது அவரை இகழ்ந்துரைத்தலாகிய தீமையைச் செய்தமையால் திடுமென இறந்தொழிந்தான் என்பார், 'தகுமகட் பேசினோன் வீயவே' என்றார். ஈண்டுப் பேசுதல் இகழ்ந்துரைத்தல். "பேசின பேச்சைப் பொறுத்திலரா கில் இவரலாதில்லையோ பிரானார்" என்புழிப் பேசுதல் இப்பொருட்டாதல் காண்க. இங்ஙனம் தகுதியுடைய சங்கிலி யாரை மணம்பேசும் நிலையில் இகழ்ந்துரைத்தோன் இறந்து போகவே அந்நிகழ்ச்சியினைக் கேட்டறிந்த பிறரும் மணம்பேச அஞ்சி விலகினமையால் மங்கல நூலணிதலாகிய திருமணந் தடைப்பட்ட சங்கிலியார் என்பார் 'வீயவே நூல் போன சங்கிலி' என்றார். நூல்போன சங்கிலி என்றது மங்கல நூலணித லாகிய திருமணந் தடைப்பட்ட சங்கிலியார் எனவும், கற்றுத் துறை போய் பொற்புடை நங்கையாகிய சங்கிலியார் எனவும் இரு பொருள் தந்து நிற்றல் அறிந்து மகிழத்தக்கதாகும். சங்கிலியாரை மணந்து கொள்ள விரும்பிய சுந்தரர் ஒற்றியூரிறைவர் திரு

வடிகளைப் பணிந்து அவரருளால் தவச்செல்வியாராகிய சங்கிலியாரை மணந்து கொண்டார் என்பார் 'சங்கிலிபாற், புகுமணக்காதலினால் ஒற்றியூருறை புண்ணியன்றன், மிகமலர்ப் பாதம் பணிந்து அருளால்...புணர்ந்தான்' என்றார். உலகம் நகும் வழக்காவது 'இருமனைவியரை மணப்போன் அவ்விருவருள் ஒருத்திக்கும் நல்லனல்லன்' என உலகத்தாரால் நகைத்துரைக்கப் படும் இடர்நிலையினனாதல். இத்துன்பியல் நிலையையும் ஒற்றியூர்ப் பெருமான் அருட்டுணை கொண்டு இன்ப அன்பினை வளர்க்கும் இனிய நல்வாழ்வாக நம்பியாரூரர் அமைத்துக் கொண்டாரென்பார். 'இவ்வியனுலகம், நகும் வழக்கே நன்மையாப் புணர்ந்தான் நாவலூரரசே' என்றார்.

இனி, கணவனென மணம் பேசி முடிக்கப்பெற்ற மணமகன் இறந்து போகவே கைம்மைநிலை யெய்திய மகளிரைப் போன்று மங்கல நூலிழந்த சங்கிலியாரைச் சுந்தரர் மீண்டும் மணந்து கொண்டமையே 'இவ்வியனுலகம் நகும் வழக்கு' என இப் பாடலிற் சுட்டப்பட்டதெனக் கருதுவாருமுளர். சிவனருள் நிரம்பப் பெற்ற தகுதியுடைய சங்கிலியாரை அத்தகுதி சிறிதும் வாய்க்கப் பெறாதான் ஒருவன் மணம்பேசி யிகழ்ந்தமையால் விரைவில் இறந்தொழிந்தானென்பதும், அவன் இறந்துபோகவே மகட் பேசுதற்குரிய சுற்றத்தார் பிறரும் மணம் பேசுதற்கு அஞ்சி விலகினரென்பதும், எனவே சங்கிலியார்க்குத் திருமணம் நிகழ்தல் தவிர்ந்த தென்பதும் அந்நிலையில் திருவொற்றியூர்ப் பெருமானைப் பணிந்து அவரருளால் பரவையார் கணவராகிய சுந்தரர், பின்முறை வதுவையாகச் சங்கிலியாரை மணந்து கொண்டாரென்பதும், திருத்தொண்டர் திருவந்தாதியாகிய மேற்காட்டிய திருப்பாடலிலும் திருத்தொண்டர் புராணத்திலும் விரித்துரைக்கப்பெற்றன. ஆகவே மகட்பேசியவனுக்குச் சங்கிலி யாரை மணஞ் செய்து கொடுப்பதாகப் பெற்றோர்கள் உடன் பட்டனரெனக் கொள்ளுதற்குச் சிறிதும் இடமில்லையென்பது நன்கு தெளியப்படும். அன்றியும் சங்கிலியாருடைய தந்தை யாராகிய ஞாயிறுகிழவர் தம்மகளார் விருப்பத்திற்கு மாறாக அவரை மணஞ்செய்து கொடுப்பதில்லை யென்னுந் துணி புடையராய்த் திருவொற்றியூரிற் கன்னிமாடம் அமைத்து அதன் கண் சங்கிலியாரை அமர்த்தி அவர் ஒற்றியூர்ப் பெருமானுக்குப் பணிபுரிந்தற்கேற்ற வசதிகளையும் செய்துகொடுத்தார் எனச் சேக்கிழார் நாயனார் ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணத்தில் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். இக்குறிப்புக்களை நுணுகி நோக்குங்கால் சங்கிலியார்க்குப் பெற்றோர்களால் ஒரு பொழுதும் மணம் நிச்சயிக்கப் பெறவில்லையென்பது இனிது விளங்கும். எனவே 'நூல் போன சங்கிலி' என்ற தொடர்க்கு

'மங்கல நூலிழந்து கைம்மை நிலையினரான சங்கிலியார்' என ஒரு சாரார் கூறும் பொருள் வரலாற்று நிகழ்ச்சிக்கும் நம்பி யாண்டார்நம்பி, சேக்கிழாரடிகள் ஆகிய முன்னோர் கூற்றுக்கும் முற்றும் முரணாமென மறுக்க.

சங்கிலியாரை மணக்க விரும்பி ஒற்றியூரிறைவரைப் பணிந்து வேண்டி அவர் பணித்த வண்ணம் 'நின்னைப் பிரியேன்' எனச் சங்கிலியார்க்குச் சபதஞ் செய்து கொடுக்க வேண்டிய இடர்ப்பாட்டில் அகப்பட்ட சுந்தரர், ஒற்றியூர்ப் பெருமானை நோக்கி 'கொன்றை மலர் மாலையணிந்த கடவுளே, அடியேன் நின் திருமுன்னர்ச் சங்கிலிக்குச் சபதஞ்செய்து கொடுக்கும் போது தாங்கள் இவ்விடத்தை விட்டு நீங்கி அயலிலுள்ள மகிழ மரத்தடியில் இருந்தருளல் வேண்டும்' என வேண்ட அதற் கிசைந்த சிவபெருமான், ஆரூரர் அறியாதபடி சங்கிலியாரை அடைந்து 'நங்கையே, நம் வன்றொண்டன் உனக்குச் செய்தற்குரிய சூளுறவை நம் முன்னிலையிற் பெறாது மகிழ மரத்தடியில் ஏற்றுக் கொள்வாயாக' என நடுநிலையில் நின்று அறிவுறுத் தருளினாரென்பது,

"பொன்ன விலுங் கொன்றையினாய் போய் மகிழ்க்கீழ் இரு' என்று
சொன்ன வெனைக்காணாமே 'சூளுறவு மகிழ்க்கீழே'
என்ன வல்ல பெருமானே"

எனவரும் நம்பியாரூரர் வாய்மொழியால் நன்கு தெளியப்படும். இவ்வாறு தம்மாற் காதலிக்கப்பெற்ற சங்கிலியாரைத் தமக்கு மணஞ் செய்வித்தருளிய இறைவனது அருட்செயலை,

"மான்றிகழுஞ் சங்கிலியைத் தந்துவரு பயன்களெல்லாம்
தோன்றவருள் செய்தளித்தாய்"

எனவும்,

"நொய்யேனைப் பொருட்படுத்துச்
சங்கிலியோடெனைப் புணர்த்த தத்துவனை"

எனவும்,

"பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்குமெனக்கும்
பற்றாய பெருமானே"

எனவும் நம்பியாரூரர் நெஞ்சு நெக்குருகிப் பாராட்டிப் போற்றி யுள்ளார். இவ்வாறு சுந்தரர் இறைவனருளைத் துணையாகக் கொண்டு சங்கிலியாரை மணந்து கொண்ட அற்புத நிகழ்ச்சியை,

"துணையும் அளவுமில்லாதவன் றன்னருளே துணையாக்
கணையுங் கதிர்நெடு வேலுங் கறுத்த கயலிணையும்
பிணையும் நிகர்த்தகட் சங்கிலி பேரமைத் தோளிரண்டும்
அணையு மவன்திரு வாரூர னாகின்ற அற்புதனே"

எனவரும் திருத்தொண்டர் திருவந்தாதியில் நம்பியாண்டார் நம்பி குறிப்பிட்டுப் போற்றியுள்ளமை இங்கு நினைக்கத் தகுவ தாகும்.

சங்கிலியாரை மணந்துகொண்ட சுந்தரர், வாழ்க்கைத் துணையாகிய அவருடன் ஐம்புலவின்பங்களை ஆரத்துயக்கும் சிற்றின்ப நிலையிலும் சிவபெருமானது திருவருளாகிய பேரின் பத்தையே நுகர்ந்து மகிழும் சிவயோகியாராகத் திகழ்ந்தார். இச்செய்தி,

"ஓர்ந்தனன் ஓர்ந்தனன் உள்ளத்துள் ளேநின்ற ஒண் பொருள்
சேர்ந்தனன் சேர்ந்தனன் சென்று திருவொற்றி யூர்புக்குச்
சார்ந்தனன் சார்ந்தனன் சங்கிலிமென்றோள் தடமுலை
ஆர்ந்தனன் ஆர்ந்தனன் ஆமாத்தூரையன் அருளதே."

எனவரும் சுந்தரர் வாய்மொழியால் இனிது புலனாதல் காணலாம்.

## கண்களையிழந்து வருந்துதல்

நம்பியாரூரர் சங்கிலியாருடன் திருவொற்றியூரில் மகிழ்ந் துறையும் நாளில் இளவேனிற் பருவம் எய்தியது. தமிழ்ப் பொதியத் தென்றல் சந்தன மணத்துடன் மெல்லென வீசும் அவ்விளவேனிற் காலத்தே திருவாரூரில் வீதிவிடங்கப் பெரு மானுக்கு நிகழும் வசந்த விழாவையும் அத்திருவிழாவில் திருவோலக்கத்திலே நடைபெறும் பரவையாரின் ஆடல் பாடல் களையும் முன்கண்டு மகிழ்ந்த சுந்தரர், ஆரூரில் நிகழவிருக்கும் அவ்வழகிய தெய்வக்காட்சியைக் காணும் பெருவிருப்பத்தால் ஏசற்ற உள்ளத்தரானார். என் உயிர்க்குயிராகிய எழிலாரூர்ப் பெருமானை மூர்க்கனேன் இத்தனை நாள் பிரிந்திருந்தேனே என நைந்த சிந்தையினராய்,

'பக்திமையும் அடிமையையுங் கைவிடுவான் பாவியேன்
பொத்தினநோய் அதுவிதனைப் பொருளறிந்தேன்
போய்த்தொழுவேன்
முத்தினைமா மணிதன்னை வயிரத்தை மூர்க்கனேன்
எத்தனை நாள் பிரிந்திருக்கேன் என்னாரூர் இறைவனையே'

'ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான் செய்யும் துரிசுகளுக் குடனாகி
மாழையொண் கண் பரவையைத்தந் தாண்டானை மதியில்லா
ஏழையேன் பிரிந்திருக்கேன் என்னாரூர் இறைவனையே'

எனவரும் திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றினார்.

மற்றொரு நாள் திருவாரூர் நினைவுமூளப் பெற்ற வன்றொண்டர், உன்னுந்தோறும் உவகையளிக்கும் சிவபெருமானை ஒற்றியூர்த் திருக்கோயிலிற் சென்றிறைஞ்சி அவ்வூரை விட்டு ஆரூர் நோக்கிப் புறப்பட்டார். சங்கிலியார்க்குத் தாம் செய்து கொடுத்த சபதத்திற்கு மாறாக அவரைப் பிரிந்து ஒற்றியூரெல்லையைக் கடந்தபொழுது ஆரூரருடைய இரண்டு கண்களும் ஒளியிழந்து மறைந்தன. வழி தெரிந்து நடக்க முடியாத நிலையில் அவர் மூர்ச்சையடைந்தார். செய்வதறியாது திகைப்புற்ற வன்றொண்டர், 'சங்கிலிபால் சபதம் தவறினமையால் இத்தீவினை விளைந்தது' எனவுணர்ந்து தமது செயலற்ற நிலைமைக்கும் சொன்ன சொல் தவறினமையால் தமக்குண்டாகிய பழிக்கும் நாணி 'இக்கொடுந்துயரம் நீங்க எம்பெருமானைப் பாடிப் போற்றுவேன்' என நினைத்து,

அழுக்கு மெய்கொடுன் திருவடியடைந்தேன்
அதுவு நான்படப் பாலதொன் றானால்
பிழுக்கை வாரியும் பால்கொள்வர் அடிகேள்
பிழைப்பனாகிலும் திருவடிப் பிழையேன்
வழுக்கி வீழினுந் திருப்பெயரெல்லால்
மற்றுநா னறியேன் மறுமாற்றம்
ஒழுக்க என்கணுக் கொருமருந் துரையாய்
ஒற்றியூரெனும் ஊருறைவானே.

எனவரும் திருப்பதிகத்தினைப் பாடித் தமது பிழையினைப் பொறுத்தருளும்படி ஒற்றியூர்ப் பெருமானைப் பரவிப் போற்றினார். இத்திருப்பதிகத்தில்,

'மூன்று கண்ணுடையாய் அடியேன் கண்
கொள்வதே கணக்கு வழக்காகில்
ஊன்றுகோலெனக் காவதென் றருளாய்'

எனவும்,

'கழித்தலைப்பட்ட நாயதுபோல
ஒருவன் கோல்பற்றிக் கறகற இழுக்கை
ஒழித்துநீ அருளாயின செய்யாய்'

எனவும்,

"அகத்திற் பெண்டுகள் நானென்று சொன்னால்
'அழையேல்போ குருடா' எனத்துரியேன்
முகத்திற்கண்ணிழந் தெங்ஙனம் வாழ்வேன்"

எனவும் சுந்தரர் ஒற்றியூர்ப் பெருமானையழைத்துப் பேசும் உரையாடல்கள் இரண்டு கண்களையும் இழந்தமையால் அவர

டைந்த பெருந்துயரத்தை நன்கு புலப்படுத்துவனவாய்ப் படிப்போருள்ளத்தை யுருக்குவனவாகும்.

இங்ஙனம் சுந்தரர் கண்ணிழந்து நெஞ்சங் கலங்கி வருந்திய நிலையிலும் ஒற்றியூரிறைவர் அவர்க்கு விரைந்து அருள் புரிந்திலர். திருவாரூரைத் தொழவிரும்பிய சுந்தரர், உடன்வரும் தொண்டர்கள் வழிகாட்டிக் கொண்டு முன்னே செல்ல வடதிருமுல்லை வாயிலையடைந்தார். சொல்லரும் புகழான் தொண்டைமான் யானையை முல்லைக் கொடியாற் பிணித்து நிறுத்தி அவ்வேந் தனுக்கு எல்லையிலின்பம் வழங்கியருளிய திருமுல்லைவாயிற் பெருமானையிறைஞ்சிக் கண்பார்வையின்றித் தாம் படும் துயரத்தைக் களைந்தருள வேண்டித் 'திருவு மெய்ப்பொருளும்' எனவரும் திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றினார். 'சங்கிலியின் பொருட்டு என் கண்களைக் கவர்ந்துகொண்ட பெருமானே, கண்ணிழந்து வருந்தும் அடியேனது பெருந்துயரத்தைக் களைந் தருள்வாயாக' என வேண்டுவார்,

'வின்பணிந் தேத்தும் வேதியாமாதர் வெருவிட வேழமன்றுரித்தாய்
செண்பகச் சோலைசூழ்திரு முல்லைவாயிலாய் தேவர்தம் அரசே
தண்பொழி லொற்றி மாநக ருடையாய் சங்கிலிக்கா வென்கண்கொண்ட
பண்பநின்னடியேன் படுதுயர் களையாய் பாசுபதா பரஞ்சுடரே'

என இத்திருப்பதிகத்தில் திருமுல்லைவாயி லிறைவரைப் பரவிப் போற்றுதல் இவண் நினைக்கத் தகுவதாகும்.

## ஊன்றுகோல் பெறுதல்

பின்பு நம்பியாரூரர் திருவெண்பாக்கத் திருக்கோயிலை யடைந்து சிவபெருமானுடைய அருட்பண்புகளைச் சிந்தித்து வணங்கி, 'குழையணியப்பெற்று எழில் பெற விளங்கும் திருச் செவியையுடைய பெருமானே 'என்னை வலியவந்து, ஆண்டு கொண்டருளிய இறைவர் யான் அறியாமையாற் செய்யும் பிழைகளையும் பொறுத்தருள்புரிவார்' என்னுந் துணிவுடன் அடியேன் ஏதேனும் பிழை செய்திருந்தால் அப்பிழையை நின் திருவருளாற் பொறுத்தருள் புரிதலே முறை இறைவானாகிய நீ அடியேன்செய்த குற்றத்தைப் பொறுத்தருளாமையால் நினக்கு வரும் பழியையும் எண்ணிப் பாராது என் கண்களைப் படலத்தால் மறையச் செய்தாய். நீ இக்கோயிலினுள்ளே உள்ளாயோ' எனத் தமது மன வருத்தம் தோன்ற வினவி நின்றார். அப்பொழுது அவருடைய தோழராகிய வெண்பாக்கத்திறைவர் கோயிலுள் இருந்துகொண்டே இணக்கமில்லாத மொழியால் 'உளோம் போகீர்' என மறுமொழி கூறி ஊன்று கோலொன்றைக் கொடுத் தருளினார். இச்செய்தி,

பிழையுளன பொறுத்திடுவ ரென்றடியேன் பிழைத்தக்கால்
பழியதனைப் பாராதே படலமென்கண் மறைப்பித்தாய்
குழைவிரவு வடிகாதா கோயிலுளா யேயென்ன
உழையுடையா னுள்ளிருந் துளோம்போகீ ரென்றானே.

பொன்னவிலுங் கொன்றையினாய் போய்மகிழ்க்கீ ழிருவென்று
சொன்னவெனைக் காணோமெ சூளுறவு மகிழ்க்கீழே
என்னவல்ல பெருமானே இங்கிருந்தாயோ வென்ன
ஒன்னலரைக் கண்டாற்போ லுளோம்போகீரென்றானே

மான்றிகழுஞ் சங்கிலியைத் தந்துவரு பயன்களெல்லாம்
தோன்றவருள் செய்தளித்தா யென்றுரைக்க வுலகமெலாம்
ஈன்றவனே வெண்கோயி லிங்கிருந்தாயோ வென்ன
ஊன்று வதோர் கோலருளி யுளோம்போகீ ரென்றானே.

*எனவரும் திருப்பாடல்களால் நம்பியாரூரர் வெண்பாக்கத் திறைவர் செயலை விரித்துரைத்தலால் நன்கு புலனாம்.*

## இடக்கண் பெறுதல்

*இறைவனருள் என்னளவில் இவ்வளவுதான் போலும் என எண்ணி வருத்தமுற்ற சுந்தரர், வெண்பாக்கத்தை விட்டு நீங்கிப் பழையனூரையடைந்தார். அங்கு, காரைக்காலம்மையார் தலையாலே நடந்தெய்திய திருவாலங்காட்டெல்லையினை யிறைஞ்சி நின்று 'முத்தா முத்தி தரவல்ல' என்ற முதற் குறிப்புடைய செந்தமிழ்ப் பதிகத்தைப் பாடிப் பரவினார். பின்பு திருவூறல் என்ற தலத்தைப் பணிந்து கற்றோர் வாழும் காஞ்சி நகரத்தையடைந்தார். உலகமீன்ற பெருமாட்டியாராகிய உமை யம்மையார் எழுந்தருளிய திருக்காமக் கோட்டம் என்னுந் திருக் கோயிலையிறைஞ்சி அறப்பெருஞ் செல்வியாகிய அன்னையின் திருவடிகளைத் துதித்து வணங்கித் திருவேகம்பம் என்னும் ஏகாம்பரநாதர் கோயிலையடைந்தார். கச்சியேகம்பப் பெரு மான் திருமுன்பு எய்தி நின்று 'தேவர்கள் நெடுங்காலம் வாழ வேண்டி அமுதுண்டு மகிழ அவர் பொருட்டு ஆலகால நஞ்சினை யுட்கொண்டருளிய அருளாளனே, கடையவனாகிய அடியேன் பின்விளைவதனை யெண்ணாது செய்த பெரும் பிழையைப் பொறுத்து அடியேற்கு மறைந்த கண்களைக் காட்டியருள் புரிவாயாக' என வேண்டிக் கொண்டு நிலமிசை வீழ்ந்து வணங்கினார். மங்கை தழுவக் குழைந்த பிரானாகிய கச்சியேகம்பர், பொங்கிய பேரன்பால் போற்றிய வன்றொண் டர்க்கு மறைந்த இடக்கண்ணைக் கொடுத்தருளி மலைமகளார் வழிபட்ட தமது திருக்கோலத்தைக் காட்டிய யருளினார். இடக்கண்ணைப் பெற்றமையால் இறைவரது எழில்மேனியைக் கண்டு மகிழ்ந்த சுந்தரர்,*

ஆலந்தானுகந்தமுது செய்தானை
ஆதியை அமரர் தொழுதேத்துஞ்
சிலந்தான் பெரிதும் முடையானைச்
சிந்திப்பாரவர் சிந்தையுளானை
ஏலவார் குழலாளுமை நங்கை
என்றும் ஏத்தி வழிபடப்பெற்ற
காலகாலனைக் கம்பனெம்மானைக்
காணக்கண் அடியேன் பெற்றவாறே.

எனவரும் திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றி உடன் வந்த அடியார்களுடன் இறைவனைக் கும்பிட்டு அந்நகரத்திலே சில நாள் தங்கியிருந்தார். திருவாரூரையடைந்து என்னுயிர்க்குயிராம் பெருமானை என்று காண்பேன் என்னும் ஏக்கமுண்டாக,

அந்தியு நண்பகலும் அஞ்சுபதஞ் சொல்லி
முந்தியெழும் பழைய வல்வினை மூடாமுன்
சிந்தை பராமரியாத் தென்றிரு வாரூர்புக்
கெந்தை பிரானாரை என்றுகொல் எய்துவதே.

என்ற திருப்பதிகத்தைப் பாடிக்கொண்டு காஞ்சியிலிருந்து புறப் பட்டுத் தொண்டை மண்டலத்தைக் கடந்து திருவாமாத்தூரை யடைந்து செந்தமிழ் மாலையாற் போற்றிசைத்துத் திருநெல் வாயில் அரத்துறையிறைவரைப் பணிந்து 'கல்வாயகில்' என்னும் சொன்மாலை பாடித் துதித்துப் பல தலங்களையிறைஞ்சிச் சோழ மண்டலத்தை யடைந்து அடியார்கள் எதிர்கொண் டழைக்கத் திருவாவடுதுறையை யடைந்தார். அந்நிலையில் அவர் மேனியிற் புகர்நோய் (மேக நோய்) தோன்றி வருத்தியது.

திருவாவடுதுறைத் திருக்கோயிலை வலம் வந்து வணங்கிய சுந்தரர், மாசிலாமணி யீசர் திருவடிகளை யிறைஞ்சி நின்று 'அமரர்கள் தலைவனாகிய பெருமானே கண்ணோயுடன் உடல் நோயும் தொடர்ந்து என்னை வருத்துதலால் கருத்தழிந்து கலங்குகின்றேன். நின்னையன்றி எனக்கு உறவாவார் வேறுயாரு ளர்?' என வினவும் நிலையிற் 'கங்கைவார் சடையாய்' எனவரும் திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றினார்.

"கண்ணிலேன் உடம்பில் அடுநோயாற்
கருத்தழிந்து உனக்கே பொறையானேன்"

என இப்பதிகத்தின் இரண்டாந் திருப்பாடலிற் குறிப்பிடுதலால் இவர் கண்ணோயுடன் உடற்பிணி யொன்றினாலும் வருத்த முற்றமை நன்கு பெறப்படும்.

## உடற்பிணி நீங்கப்பெறுதல்

மாசிலாமணி யீசரை அன்புடன் வழிபட்ட வன்றொண்டர் திருத்துருத்தியை யடைந்து இறைவரைப் பணிந்து அடியேனது உடம்பிற் பொருந்திய இந்நோயை ஒழித்தருளவேண்டும்' என வேண்டிக் கொண்டார். அடியார்கள் அன்பினாற்சொல்லிய குறைகளை யறிந்து முடித்தருள வல்ல திருத்துருத்தி யிறைவர் வன்றொண்டரை நோக்கி 'நீ இத்திருக்கோயிலின் வடபாலுள்ள திருக்குளத்திற் குளிப்பாயாக' எனப் பணித்தருளினார். அவ் வருள்மொழியைச் செவிமடுத்த சுந்தரர் இறைவரைத் தொழுது சென்று அத்தீர்த்தத்துள் மூழ்கி நோய் நீங்கி எழுந்து ஒளி திகழும் திருமேனியுடன் கண்டவர்கள் அதிசயிப்பக் கரையேறித் தூய ஆடையுடுத்துத் திருக்கோயிலை வலம்வந்து,

மின்னுமா மேகங்கள் பொழிந்திழிந் தருவி
வெடிபடக் கரையொடுந் திறைகொணர்ந்தெற்றும்
அன்னமாங் காவிரி யகன் கரை யுறைவார்
அடியிணை தொழுதெழும் அன்பராம் அடியார்
சொன்ன வாறறிவார் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் செடியனேன் நாயேன்
என்னைநான் மறக்குமா றெம்பெருமானை
என்னுடம்படும் பிணியிடர் கெடுத்தானை.

எனவரும் பண்ணிறைந்த திருப்பதிகத்தினைப் பாடித் திருத் துருத்தியிலும் அதற்கு அண்மையிலுள்ள திருவேள்விக் குடியிலும் கோயில் கொண்டெழுந்தருளிய இறைவரது திருவருளைப் பரவிப் போற்றினார். இத்திருப்பதிகத்தில்,

'என்னுடம்படும் பிணி இடர் கெடுத்தானை'

எனவும்,

'உற்றநோய் இற்றையே யுறவொழித்தானை'

எனவும்,

'தொடர்ந்தடுங் கடும்பிணித்தொடர்வறுத்தானை'

எனவும் வரும் தொடர்களால் சொன்னவாறறிவாரைப் பாராட்டி மகிழ்தலால் திருத்துருத்தியில் உடல்நோய் நீங்கப் பெற்ற நிலையில் நம்பியாரூரர் இத்திருப்பதிகத்தைப் பாடி யிருத்தல் வேண்டுமென்பது நன்கு துணியப்படும். இங்ஙனம் திரு நாவலூரர் திருத்துருத்தியிற் சொன்னவாறறிவார் திருவருளால் உடம்பிற் புகர்நோய் நீங்கி நலம் பெற்ற செய்தியை,

நிதியார் துருத்திதென் வேள்விக்குடியாய் நினைமறந்த
மதியேற் கறிகுறி வைத்தபுகர் பின்னை மாற்றிடென்று
துதியா அருள்சொன்ன வாறறிவாரிடைப் பெற்றவன்காண்
நதியார் புனல் வயல் நாவலர் கோனென்னும் நற்றவனே.

எனவரும் திருத்தொண்டர் திருவந்தாதி இனிது விளக்குதல் காணலாம்.

## வலக்கண் பெறுதல்

சொன்னவாறறிவார் திருவருளால் உடம்பிற்புகர் நோய் நீங்கி நலம்பெற்ற சுந்தரர், அடியார்களுடன் திருத்துருத்தி யினின்றும் புறப்பட்டுப் பல தலங்களையும் பணிந்து ஒருநாள் மாலைப் பொழுதிலே திருவாரூரை யணுகினார். அங்குப் பரவையுண் மண்டளி யென்னுந் திருக்கோயிலையடைந்து தூவாயர் ஆகிய இறைவரைத் தொழுது 'தூவாயா' என்னும் திருப்பதிகம் பாடி 'எழுத்தொடு சொற்பொருளெல்லாம் கண்டானே. கண்தனைக் கொண்டிட்டுக் காட்டாயே' எனத் தமக்குக் கண்ணைத் தந்தருளும்படி வேண்டிப் புறம்போந்து ஓரிடத்திலே யிருந்தார். பின்பு அர்த்த யாமத்திலே திருவாரூர்த் திருமூலட் டானத்திறைவரை வழிபடச் சென்றார். எதிர் வந்த அன்பர்களை நோக்கி ஆரூர்ப் பெருமானோடு தமக்குள்ள அயன்மை விளங்க வருந்திக் கூறும் நிலையில்,

குருகுபா யக்கொழுங் கரும்புக ணெரிந்தசா
றருகுபா யும்வய லந்தணா ரூரரைப்
பருகுமா றும்பணிந் தேத்துமாறுந்நினைந்
துருகுமா றும்மிவை யுணர்த்தவல் லீர்களே

எனக் கைக்கிளைத்திணை யமைந்த திருப்பதிகத்தைப் பாடிக் கொண்டு தேவாசிரிய மண்டபத்தை யிறைஞ்சிக் கோபுரத்தைக் கைதொழுது உள்ளே புகுந்து புற்றிடங் கொண்ட பெருமான் திருமுன்னர் வீழ்ந்தெழுந்தார். இறைவரது திருமேனியைக் காணத் தமக்கு ஒரு கண் போதாமையால் மனம் வருந்தினார். 'அடியேனைத் துன்பக் கடலினின்றும் கரையேற்றி மற்றைக் கண்ணாகிய வலக்கண்ணையுந் தந்தருள்வீராக' என வேண்டி,

மீளா வடிமை யுமக்கே யாளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போல் உள்ளே கனன்று முகத்தால் மிகவாடி
ஆளாயிருக்கும் அடியார்தங்கள் அல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவாரூரீர் வாழ்ந்து போதீரே.

விற்றுக்கொள்வீர் ஒற்றியல்லேன் விரும்பியாட்பட்டேன்
குற்றமொன்றுஞ் செய்ததில்லை கொத்தையாக்கினீர்

எற்றுக்கடிகேள் என்கண் கொண்டீர் நீரே பழிபட்டீர்
மற்றைக்கண்தான் தாரா தொழிந்தால் வாழ்ந்து போதீரே.

எனவரும் திருப்பதிகத்தினை இறைவனுடன் தமக்குள்ள தோழமைத்திறம் விளங்கப் பாடிப் போற்றினார். உள்ளத்தை யுருக்க வல்ல இத் திருப்பதிகத்தைச் செவிமடுத்த திருவாரூர்ப் பெருமான் திருவுளமிரங்கி நம்பியாரூரர்க்கு வலக்கண்ணையுங் கொடுத்தருளினார். இரு கண்களையும் ஒருங்கே பெற்ற சுந்தரர் பூங்கோயிலமர்ந்த பெருமான் திருமேனியைக் கண்களாரக் கண்டு ஆடிப்பாடித் துதித்துப் பேரின்ப வெள்ளத்தில் திளைத்து மகிழ்ந்தார். பின்னர்ப் புறம்போந்து தேவாசிரிய மண்டபத்தில் தங்கியிருந்தார்.

'மீளாவடிமை' யெனத் தொடங்கும் இத் திருப்பதிகத்தில் "ஏற்றுக்கடிகேள் என்கண் கொண்டீர் நீரே பழிபட்டீர், மற்றைக் கண்தான் தாராதொழிந்தால் வாழ்ந்து போதீரே" எனத் திருவாரூர்ப் பெருமானை நோக்கிச் சுந்தரர் வருந்தி முறையிடுதலை நோக்குங்கால் கச்சியேகம்பர் திருவருளால் இடக்கண் பெற்ற சுந்தரர், திருவாரூர்ப் பெருமானையடைந்து மற்றைய வலக் கண்ணையுந் தந்தருளும்படி இத்திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினாரென்பது நன்கு புலனாம். சுந்தரர், காணுந் தன்மையிழந்த தம்முடைய இரண்டு கண்களையும் இறைவன் மீளவும் காணுமாறு தமக்குக் காட்டியருளிய அற்புத நிகழ்ச்சியை,

பேணா தொழிந்தே னுன்னையல்லாற் பிறதேவரைக்
காணா தொழிந்தேன் காட்டுதியே லின்னங் காண்பனான்
பூணாணரவா புக்கொளியூரவி நாசியே
காணாத கண்கள் காட்டவல்ல கறைக்கண்டனே.

எனவரும் திருப்பாடலின் ஈற்றடியில் தெளிவாகக் குறித்துப் போற்றியுள்ளமை இங்கு நினைக்கத் தகுவதாகும்:

## ஆரூர்ப்பெருமானைப் பரவையார்பால் இருமுறை தூதனுப்புதல்

சுந்தரர் பூங்கோயிலமர்ந்த பெருமானை வணங்கச் சென்ற பொழுது அவருடைய பரிசனங்களிற் சிலர் பரவையார் மாளிகை வாயிலை யணுகினர். தம்மைப் பிரிந்துசென்ற சுந்தரர் திருவொற்றியூரிற் சங்கிலியாரை மணந்துகொண்ட நிகழ்ச்சியைக் கேள்வியுற்ற பரவையார், சினங்கொண்டிருந்தமையால் சென்ற பரிசனங்கள் மாளிகைக்குள் நுழையப்பெறாது மீண்டு தேவாசிரிய மண்டபத்தை யடைந்தனர். சுந்தரரை இறைஞ்சி நின்று 'பெரியீர், தாங்கள் திருவொற்றியூரிலே சங்கிலியாரை மணந்த செய்தி முழுவதையும் பரவையார் முன்னமே கேள்வியுற்றுச்

சினங்கொண்டிருந்தமையால் இப்பொழுது யாங்கள் அவர் மாளிகைப்புறத்திலும் செல்ல வொண்ணாதபடி தடுக்கப்பட்டுத் திரும்பிவிட்டோம்' எனக் கூறினார்கள். அந்நிலையிற் சுந்தரர் பெரிதும் கலக்கமடைந்து 'இனி இதற்கு என் செய்வோம்' என நெடிது நினைந்து தம் மேற் பரவையார் கொண்ட வெகுளியைத் தணித்து வரும்படி உலகியல் நடைமுறைகளை நன்குணர்ந்த பெரியோர் சிலரை அனுப்பினார். சுந்தரரால் அனுப்பப்பெற்ற பெரியோர்கள், பரவையார் மாளிகையை யடைந்து அவ்வம்மை யார் மனங்கொளத் தக்கவகையில் வேண்டும். நியாயங்களை எடுத்துரைத்து 'நீவிர் நம்பியாரூரருடன் முன்போலக் கூடி யிருத்தல் வேண்டும்' என வேண்டினர். சுந்தரர்பாற் செற்றங் கொண்டிருந்த பரவையார், அமைதி கூறவந்த அறிஞர்களை நோக்கி, 'குற்றம் பொருந்திய நம்பியாரூரர்க்குச் சார்பாக நீங்கள் இவ்வாறு கூறுவீர்களாயின் என்னுயிரைத் துறப்பேன்' என வருந்திக்கூறினார். அம்மொழி கேட்டு அவருடைய மன நிலையினை யறிந்து அச்சமுற்ற பெரியோர்கள், சுந்தரர்பாற் சென்று நிகழ்ந்ததனைத் தெரிவித்து அமைந்தனர்.

இங்ஙனமாக, அன்புடைய பரவையாரை அணுகப் பெறாது துன்புற்று வருந்தும் சுந்தரர், எல்லோரும் அயர்ந்து துயிலும் நள்ளிரவிலே தம் தோழராகிய வீதிவிடங்கப் பெருமான் திருவடிகளை நினைந்து போற்றி 'என்னை அடிமை கொண்ட ருளிய பெருமானே, முன்னை வினையால் இத்துன்பத்திற்குக் காரணமாகிய பரவையின்பால் நீரே இந்த இரவுப் பொழுதிற் சென்று அவள் என்பாற்கொண்ட ஊடலைத் தணிவித்தருள் வீராயின் யான் உயிர்தாங்கி யிருத்தல் கூடும். இதுவன்றி என்னாற் செய்யத்தக்கது ஒன்றுமில்லை' என வேண்டிப் போற்றினார். அந்நிலையில் அடியார்களது துன்பத்தினைக் காணப்பொறாத அருளாளராகிய சிவபெருமான், நெடியான் அறியா அடிமலர்கள், நிலத்தில் தோய எழுந்தருளித் தம் தோழராகிய சுந்தரரையடைந்து 'நினது துயரம் யாது' என வினவினார். அருளே திருமேனியாகக் கொண்டு எளிவந்தருளிய இறைவரைக் காணப்பெற்ற சுந்தரர், விரைந்தெழுந்து சென்று அவர்தம் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். 'எம்பிரானாகிய நுமது திருவருளால் அடியேன் திருவொற்றியூரிலே சங்கிலியை மணந்த செய்தி முழுதையும் பரவை கேள்வியுற்றுத் தன் பால் யான் அடைந்தால் தன் உயிரையே விட்டுவிடுவதென்னுந் துணிபுகொண்டுள்ளாள். சிறியேன் உமக்கு அடியவனும் தேவரீர் அடியேனுக்கு நல்லதோழனும் ஆண்டவனும் ஆக இருப்பது உண்மையானால், அறிவிழந்து வருந்தும் சிறியேனது அயர்வு நீங்க இவ்விரவே பரவை வீட்டுக்குத் தூதுசென்று

அவளது ஊடலைத் தீர்த்து அருளுதல் வேண்டும்' எனக் குறையிரந்து வேண்டினார்.

அடியார்களது அன்பினை வேண்டும் இறைவர், வன்றொண்டரது துன்பத்தை நீக்கத் திருவுளங் கொண்டு தம் தோழராகிய அவரை நோக்கி 'நீ வருந்தற்க; யாம் நின்னுடைய தூதனாகி இப்பொழுதே பரவை வீட்டுக்குச் செல்கின்றோம்' எனத் திருவாய் மலர்ந்தருளித் தேவர் முனிவர் முதலியோர் புடை சூழ்ந்துவரப் பரவையார் மாளிகை வாயிலை அடைந்தார். உடன் வந்த சிவகணங்கள் அனைவரும் புறத்தே நின்றனர். இறைவர் தமக்கு வழிபாடு செய்யும் மறைமுனிவர் வடிவுடன் தனித்து உள்ளே சென்று 'பரவையே கதவைத் திறந்திடுக' எனக் கதவினைத் தட்டி அழைத்தார். பூங்கோயிலமர்ந்த பெருமானுக்குப் பூசனைபுரியும் மறைமுனிவரே இவ்வாறு அழைக்கின்றார் என எண்ணிய பரவையார், 'இப்பெரியவர் நள்ளிரவிலே இங்கு வந்தது எக் காரணம் பற்றியோ' என நடுக்கமுற்று அஞ்சிக் கதவைத் திறந்து அங்கு வந்த மறையவரை நோக்கி 'செந்தண்மை பூண்ட அந்தணரே, நீவிர் எம்மையாளும் சிவபெருமானைப் போன்று இங்கு எழுந்தருளியதன் காரணம் என்ன' என வினவினார். அதுகேட்ட மறையவர் 'நங்கையே நான் சொல்வதை நீ மறுக்காமல் செய்வாயானால் சொல்லுவேன்' என்றார். 'நீவிர் சொல்லக் கருதியதனைச் சொல்வீராக, என்னாற் செய்யத்தக்கதாயிற் செய்வேன்' என்றார் பரவையார். 'நம்பியாரூரர் இங்கு வருவதற்கு நீ இசைதல் வேண்டும்' என மறையவர் பணித்தருளினார். அதுகேட்ட பரவையார், 'பங்குனித் திருநாளுக்குப் பொன் முதலியன கொண்டு பண்டுபோல் வருபவராக இங்கு என்னைப் பிரிந்து சென்று திருவொற்றியூரெய்தி அங்கே சங்கிலியாற் பிணிப்புண்டவர்க்கு இங்கு ஒரு சார்பும் உண்டாகுமோ? அவர் பொருட்டு நள்ளிரவிலே நீங்கள் இங்கு வந்து சொன்ன காரியம் மிகவும் நன்றாயிருக்கிறது' என மறுத்துரைத்தார். 'நங்கையே, நீ நம்பியாரூரன் செய்த குற்றத்தினையுளத்திற்கொள்ளாது வெகுளி நீங்கி அவனை அன்புடன் வரவேற்கும் பொருட்டன்றோ யான் உன்னை வேண்டிக் கொண்டது. இதனை மறுத்துரைப்பது முறையாகாது' என மறையவர் வற்புறுத்திக் கூறினார். அவர் கூறியவற்றைக் கேட்ட பரவையார், 'அருமறை முனிவராகிய நீர் பொருத்தமில்லாத இக்காரியத்தின் பொருட்டு நள்ளிரவிலே இங்குவருதல் நுமது பெருமைக்கு ஏற்றதன்று. ஒற்றியூரில் நிலைத்தவுள்ளமுடைய அவர் இங்கு வருவதற்கு ஒரு சிறிதும் இசையமாட்டேன். நீர் விரைவில் இவ்விடத்தை விட்டு அகல்வீராக' எனச் சினந் தோன்றக் கூறினார். அந்நிலையில் மறையவராக வந்த இறைவர்

தம்முளத்துள்ளே நகைத்துக் கொண்டு தமது உண்மை யுருவம் பரவையாருக்குப் புலப்படாமல் மறைத்துத் தம் தோழரது வருத்த நிலையைக் கண்டு மகிழும் வேட்கையினராய்ப் பரவையார் முதலில் மறுத்துரைத்ததையே முடிவாகக் கொண்டு சுந்தரர்பால் திரும்பிச் சென்றார்.

தம் பொருட்டுத் தூதுசென்ற இறைவரை வழியிடையே யெதிர்பார்த்து நின்ற சுந்தரர், இறைவரை யெதிர்கண்டு அவர் தம்முடைய குறையினை இனிது நிறைவேற்றி வருகின்றாரெனப் பெரிதும் மகிழ்ந்தார்; 'அன்று அடியேனைத் தடுத்தாட் கொண்டதற்கு இசையவே இன்று பரவையின் வெகுளியைத் தணித்து வந்தீர்' என மனங்கசிந்து இறைஞ்சிப் போற்றினார். அப்பொழுது சிவபெருமான் வன்றொண்டரை நோக்கி 'யாம் நினது வேண்டுகோளின்படியே பரவை வீட்டுக்குப் போய் அவளுக்குச் சொல்லத்தக்க நியாயங்களை யெடுத்துரைத்தோம் எனினும் அவள் இசையவில்லை' என்றார். அம்மொழியினைக் கேட்டுத் திடுக்குற்ற சுந்தரர், தமக்கு எளிவந்தருளிய இறைவரை வணங்கி 'முழுமுதற்கடவுளாகிய நுமது பணிமொழியினை நும்அடியவளாகிய பரவை மறுக்குந் துணிவுடையவளோ? நீவீர் எனது அடிமைத்திறத்தை விரும்பாவிட்டால் அன்று வலிய வந்து எளியேனை ஆட்கொண்டது எதற்காக? அருளாளராகிய நீர், அடியேன் படும் துயரத்தைக் கண்டிரங்கி என்னை அவள் பாற் சேர்த்திலீராயின், என்னுயிர் விரைவில் நீங்குவது திண்ணம்' என்றுரைத்துத் தளர்ந்து வீழ்ந்தார். தம் தோழராகிய சுந்தரரது தளர்ச்சி கண்டு தரியாத சிவபெருமான், அவரை அருட் கண்ணால் நோக்கி 'நாம் மீண்டும் பரவைபாற் சென்று இப்பொழுதே நீ அவளை அடையும்படிச் செய்வோம். துயர் நீங்கி மகிழ்வாயாக' எனத் தேறுதல் மொழி பகர்ந்து சிவகணங் களுடன் பரவையாரது மாளிகையை யடைந்தார்.

இங்ஙனமாக, பரவையார், தமது வெகுளியைத் 'தணிக்க வந்த மறைமுனிவர் நீங்கியபின் அங்ஙனம் வந்தவர் சிவ பெருமானே யாதல் வேண்டுமெனத் தெளிந்து பெரிதும் அஞ்சினார். 'அந்தோ எம்பெருமானது அருள்வாக்கினை அறியாது மறுத்து ரைத்தேனே' என மனங்கலங்கினார்; 'தம்முடைய தோழருக்காக அருச்சகர் வடிவுகொண்டு எளி வந்த பெருமானைத் தீவினை யாட்டியேன் போற்றாது இகழ்ந்தேன்' என வருந்திப் புலம்பினார்; தம்முடைய பாங்கியரையெழுப்பி மறைமுனிவர் வந்து சென்ற நிகழ்ச்சியினையெடுத்துக் கூறினார். இறைவர் வந்து சென்ற மனைவாயிலை நோக்கிய வண்ணம் துயிலின்றியிருந்தார்.

அப்பொழுது சிவபெருமான், தன்னை யாவரும் உணர்ந்து கொள்ளுதற்குரிய உண்மைத் திருக்கோலத்துடன் தேவர்

முனிவர் சித்தர் முதலானோர் சூழ்ந்து போற்றப் பரவையார் மாளிகைக்கு எழுந்தருளினார். அத்தெய்வக் காட்சியைக் கண்ட பரவையார், விரைந்து எதிர்சென்று சிவபெருமான் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். சிவபெருமான், பரவையாரை நோக்கி 'நங்கையே தோழனாகிய சுந்தரன் நட்புரிமையால் நம்மை ஏவ மீளவும் உன்பால் வந்தோம், நீ முன்புபோல் மறுத்துரையாது நின்பிரிவால் வருத்தமுறும் சுந்தரன் நின்னையடைதற்கு இசைதல் வேண்டும் எனப் பணித்தருளினார். அவ்வருள்மொழியைச் செவிமடுத்த பரவையார், 'இவ்வாறு முழுமுதற் கடவுளாகிய ஆரூர்ப் பெருமானை அலைக்கழித்தேனே' யென மனங்கலங்கிக் கண்ணீர் மல்கி, 'அடியேன் செய்த தவப்பயனால் அருமறை முனிவராக முன்பு வந்தவரும் நீர் தாமோ? இங்ஙனம் நள்ளிருளிலே ஒளிவளர்செய்ய பாதம் தரையிற்பட்டு வருந்த அன்பர்க்காக இங்கும் அங்கும் உழல்வீராகி எளிவந்தருளினீராயின், சிறியேன் இதற்கு உடன் படாமல் வேறு என்செய்வேன்' எனத் தம் இசைவு தோன்றக் கூறியிறைஞ்சினார்.

பரவையாரது பணிமொழியினைக் கேட்டு மகிழ்ந்த இறைவர், 'நங்கையே, நீ நின் பெருந்தன்மைக் கேற்ப நன்றே மொழிந்தனை' எனக்கூறி விரைந்து சென்று சுந்தரரையடைந்தார். தம்பிரான் தோழராகிய நம்பியாரூரர் சிவபெருமானையெதிர் கொண்டு போற்றி எம்பெருமானே, என்னுயிரைக் காவாது இடர்செய்யும்பரவையிடத்திலிருந்து எத்தகைய மறுமொழியினைக் கொண்டு வந்தீர்' எனக் கேட்டார். இறைவரும் வன்றொண்டரை நோக்கி 'நின்மேல் பரவை கொண்ட கோபத்தைத் தணிவித்து வந்தோம்; இனி நீ அவளிடத்திற் செல்லலாம்' எனத் திருவாய் மலர்ந்தருளினார். இறைவனது அருளுரையினைக் கேட்டு மகிழ்ந்த சுந்தரர், 'எந்தைபிரானே, போகம் வீடு என்னும் இருமையின்பத்தினையும் அடியேற்கு வழங்கியருளினீர். இனி எளியேற்கு இடரொன்றுமில்லை' என்று கூறி இறைவன் திருவடிகளில் வீழ்ந்திறைஞ்சினார். தொண்டர்களின் துயர்தீர்த்தருள்புரியும் வீதி விடங்கப் பெருமான் எவ்வுயிரும் களிகூர விடை மீதெழுந்தளித் திருவாரூர்ப் பூங்கோயிலிற் சென்று புகுந்தருளினார். புற்றிடங் கொண்ட பெருமானது திருவருள் பெற்ற நம்பியாரூரர், தம்முடைய பரிசனங்கள் சூழ்ந்து போற்றி உடன்வரப் பரவையார் மாளிகைக்குப் புறப்பட்டருளினார். அன்பிற்சிறந்த பரவையாரும் திருமாளிகையை யணிசெய்து நிறைகுடமும் நல்விளக்கும் நறும்புகையும் கொண்டு பாங்கியர்களுடன் மனைவாயிலிலே நின்று தம் அன்பிற்குரிய நம்பியாரூரரை வணங்கி வரவேற்றார்.

சுந்தரர் பரவையாருடைய செங்கையினைப் பற்றிக்கொண்டு திருமாளிகையினுள்ளே சென்று சேர்ந்தார். உயிரோரன்ன செயிர்தீர் காதலராகிய அவ்விருவரும் வீதிவிடங்கப் பெருமான் தம்பொருட்டுத் தூதராக எளிவந்தருளிய திருவருட் செயலை நினைந்துருகி மாறிலா மகிழ்ச்சியில் திளைத்திருந்தார்கள்.

அடியார்கள் எங்கேயிருந்து நினைந்தாலும் அங்கே வந்து அவர்களோடு உடனாகி நின்று அன்னோரது துன்பத்தைப் போக்கியருளவல்ல அருளாளனாகிய சிவபெருமான், தன் அன்புடைத் தோழர் சுந்தரர் பொருட்டு எழுந்தருளி வந்து தாமரை மலரினும் மெல்லிய தன் திருவடிகள் திருவாரூர்ப் பெரு வீதியின் புழுதியிலே அளைந்து வருந்த நள்ளிரவிலே ஒருமுறைக் கிருமுறை தூது சென்றருளிய இவ்வருட்செயல் நினைக்குந் தோறும் நெஞ்சத்தை யுருக்குவதாகும். தனக்கு உவமையில்லாத தலைவனாகிய சிவபெருமான் தம் பொருட்டுத் தூதனாக எளி வந்தருளிய இச்செய்தியை,

'தூதனை என்றனை ஆள் தோழனை'

எனவும்,

'அடியேற்கெளிவந்த
தூதனைத் தன்னைத் தோழமையருளித்
தொண்டனேன் செய்த துரிசுகள் பொறுக்கும்
நாதனை'

எனவும் வரும் தொடர்களால் நம்பியாரூரர் நெஞ்சம் நெக்குருகிக் குறித்துப் போற்றியுள்ளார். அவருடைய வாய் மொழியாகிய இத்தொடர்களே இவ்வற்புத நிகழ்ச்சியை வற்புறுத்தும் அகச் சான்றுகளாக அமைத்திருத்தல் அறிந்து மகிழத்தக்கதாகும்.

## ஏயர்கோனுற்ற பிணி தவிர்த்தல்

நம்பியாரூரர் தம் மனைவியாகிய பரவையாரது ஊடலைத் தணிவித்தற் பொருட்டு நள்ளிரவில் இருமுறை தூதுசென்று வரும்படி சிவபெருமானை ஏவல் கொண்டார் என்ற இச்செய்தி நாடு முழுவதும் பரவியது. சோழ நாட்டில் திருப்பெரு மங்கலத் திலே வேளாளர் மரபிலே தோன்றிய திருவருட் செல்வராகிய ஏயர்கோன் கலிக்காமநாயனார் இச்செய்தியினைக் கேட்டு உளம் வெதும்பி வருந்தினார். 'எல்லா வுலகத்துக்கும் தலைவனா கிய இறைவனை அடியவன் ஏவல் கொள்வதென்பது மிகவும் நன்றாயிருக்கிறது. இப்படி இறைவனையே ஏவல் கொள்பவன் தொண்டனாம். இக்கொடுஞ் செய்தியைக் கேட்டிருந்தும் யான் உயிர் தாங்கியிருக்கின்றேன். ஒருவன் தன் மனைவியின் பிணக்கத்தைத் தீர்த்து அவளுடன் மகிழவேண்டும் என்னும்

ஆசை காரணமாக இறைவனையே தூதாக அனுப்ப, ஒப்பில்லாத கடவுள் அவனுக்குத் தூதராகி ஒருநாள் இரவு முழுவதும் தம் திருவடிகள் நோவ அலைந்து திரிந்தாராம் வானோராலும் அறிய முடியாத அவ்விறைவர் அடியார்களிடத்துக் கொண்ட அருள் காரணமாகத் தூதுசெல்ல இசைந்தாராயினும் அடியவ னொருவன் அவரை அங்ஙனம் ஏவுதல் என்ன முறை? அரிவை யின் பால் வைத்த ஆசை காரணமாக ஆளுடைய இறைவரைத் தூதராக நடக்கச்செய்து சிறிதும் மன நடுக்கமுறாதிருந்த அவ்வன் றொண்டனைக் காண்பேனாயின் என்ன நேரும்' என்று சொல்லி மிகவும் சினங்கொண்டிருந்தார்.

இவ்வாறு சிவனடியாராகிய ஏயர்கோன் கலிக்காம நாயனார் தம்மிடத்துச் சினங்கொண்டிருத்தலைக் கேள்வியுற்ற நம்பி யாரூரர், இறைவனைத் தம் பொருட்டுத் தூதாக அனுப்பியது பெரும்பிழையென வுணர்ந்தார். தம்மீது கலிக்காமநாயனார் கொண்டிருக்கும் செற்றத்தை நீக்கியருளும்படி சிவபெருமானைப் பல முறையும் இறைஞ்சி வேண்டினார். அவ்விருவரையும் அன்பினால் ஒற்றுமைப்படுத்தத் திருவுளங்கொண்ட சிவ பெருமான், ஏயர்கோன் கலிக்காமநாயனார்க்குச் சூலைநோயை ஏவினார். அந்நோய் கலிக்காமனாரது வயிற்றிற் புகுந்து அழலிற் பழுக்கக் காய்ச்சிய வேலைப் போன்று குடைந்து வருத்தியது. அந்நோயின் கொடுமையைத் தாங்க முடியாது தளர்ச்சியுற்று வாடிய கலிக்காமர், உயிர்க்குயிராகிய சிவபெருமான் திரு வடிகளைச் சிந்தித்துப் போற்றினார். அப்பொழுது இறைவர் அவர் முன்னே தோன்றி, 'உன்னை வருத்தும் இச்சூலை நோய் வன்றொண்டன் வந்து தீர்த்தாலன்றித் தீராது' எனக் கூறி யருளினார். அம்மொழியினைக் கேட்டு வருந்திய கலிக்காமர், இறைவனை நோக்கி 'என் தந்தை, தந்தைக்குத் தந்தை முதலாக வுள்ள எங்குல முன்னோர்க்கெல்லாம் தொழுகுலமாய் விளங்கும் முழு முதற்கடவுள் நீரே யென்னும்துணிபுடன் வழி முறை வழிமுறையாக நும்மை வழிபட்டுவரும் குடியிற்பிறந்த எனது நோயினை நும்மால் வலிந்து ஆட்கொள்ளப் பெற்ற புதியவனாகிய வன்வறாண்டனோ தீர்த்தற்குரியவன்?' இந்நோய் அவனால் தீர்க்கப்படுதலைவிடத் தீராமல் நின்று என்னை வருத்துதலே நன்றாகும். நீவிர் அவ்வன்றொண்டனுக்கேற்ற உறுதியையே செய்தீர்' எனக் கூறினார்.

அந்நிலையில் இறைவர், அங்கிருந்தும் மறைந்தருளி நம்பி யாரூரரையணுகி 'நீ நமது ஏவலால் ஏயர்கோன் கலிக்காமனை யடைந்து அவனை வருத்துகின்ற சூலை நோயினைத் தீர்ப்பாயாக எனப் பணித்தருளினார் அவ்வருளுரையைக் கேட்டு மகிழ்ந்த சுந்தரர், ஆரூரினின்றும் புறப்பட்டுத் தாம் சூலைநோய் தீர்க்க

வரும் செய்தியை முன்னமே கலிக்காமர்க்குத் தெரிவிக்கும்படி ஆளனுப்பினார் வன்றொண்டர் சூலைநோயைத் தீர்க்கும் கருத்துடன் தம்மை நோக்கி வருகின்றார் என வுணர்ந்த ஏயர்கோன் கலிக்காமர், 'இறைவனைத் தூதனாக ஏவல்கொண்டவன் றொண்டன் எனது நோய் தீர்க்க இங்கு வந்தால் நான் செய்வது என்னாகும். அவன் இங்கு வருவதற்கு முன்னரே என்னை வருத்தும் சூலைநோயினை வயிற்றொடும் கிழித்துப் போக்குவேன்' எனத் துணிந்து உடைவாளினால் தமது வயிற்றைக் கிழித்துக் கொண்டு உயிர்நீத்தார். அத்துன்ப நிகழ்ச்சியறிந்து மனந் துளங்கிய அவர் தம் மனைவியார் தம் ஆருயிர் கணவரது பிரிவாற்றாது உடனுயிர்விடத் துணிந்தார். அப்பொழுது 'நம்பியாரூரர் இங்கெழுந்தருளினார்' எனச் சிலர் விரைந்து வந்து கூறினார்கள். அதனைக்கேட்ட அவ்வம்மையார் 'ஒருவரும் அழாதீர்கள்' என வீட்டிலுள்ளார்க்குப் பணித்துத் தம் கணவர் உயிர்நீத்த செய்தியை ஒருவரும் அறியாதபடி மறைத்துவிட்டுச் சுந்தரரை யெதிர்கொண்டழைக்கும் படி சுற்றத்தார்களை யனுப்பினார்.

எதிர்கொண்டழைத்த சுற்றத்தார்களுடன் ஏயர்கோன் மாளிகையையடைந்த நம்பியாரூரர், தமக்குச் செய்யப்பெற்ற அருச்சனையினை விரைவில் ஏற்றுக் கொண்டு 'யான் மிகவும் வருந்துகிறேன். கலிக்காமனாரது சூலைநோயினைத் தீர்த்து அவருடன் அளவளாவியிருத்தற்கு என் மனம் விரைகின்றது' எனக்கூறினார். அப்பொழுது கலிக்காமர் மனைவியார் ஏவலால் அங்குள்ள பணியாளர்கள் சுந்தரரை வணங்கி நின்று பெரியீர், அவர்க்குத் தீங்கொன்றுமில்லை. உள்ளே பள்ளிக் கொள்கின்றார்' என விண்ணப்பஞ் செய்தார்கள். சுந்தரர், அவர்களை நோக்கி 'நீவிர் கலிக்காமர்க்குத் தீங்கெதுவுமில்லையென்றீர், ஆயினும் என் மனம் தெளிவுபெற்றிலது. ஆதலால் யான் அவரை விரைவிற் காணுதல் வேண்டும்' என்றார். அவரது விருப்பத்தை மறுத்தற்கியலாமையால் அவரை ஏயர்கோன் இருந்த அறைக்கு அழைத்துச் சென்றார்கள். அவ்வறையினுள்ளே புகுந்த வன்றொண்டர் குருதிநீர் போசரக் குடர் சரிந்து உயிரின்றி கலிக்காமனாரது உடம்பினைக் கண்டு மனநடுக்கமுற்றார். 'நானும் இவர் முன்பு என்னுயிரைத் துறப்பேன்' எனத் துணிந்து கலிக்காமர் வயிற்றிற் செருகப்பட்டிருந்த குற்றுடைவாளைப் பற்றிக் கொண்டு அவ்வாளினாலேயே தம்முயிரையும் போக்க முனைந்தார். அந்நிலையில் சிவனருளால் ஏயர்கோன் கலிக்காமநாயனார் உயிர்பெற்றெழுந்து வன்றொண்டர் கையிற் பற்றிய வாளினைப் பற்றித் தடுத்தார். அன்பர் உயிர் பெற்றெழுந்தமை கண்டு மகிழ்ந்த வன்றொண்டர், கலிக்காமர் திருவடி

களில் வீழ்ந்து வணங்கினார். ஏயர்கோன் கலிக்காமனாரும் தம் கையிற் பற்றிய வாளினை நிலத்திலே யெறிந்துவிட்டு நம்பி யாரூரர் திருவடிகளில் வீழ்ந்திறைஞ்சினார். இருவரும் எழுந்து நின்று ஒருவரொருவரை அன்பினால் தழுவிக்கொண்டு கெழு தகை நண்பராகிய இறைவனது திருவருளை வியந்து போற்றி னார்கள். பின் நம்பியாரூரர், ஏயர்கோன் கலிக்காமனாருடன் திருப்புன்கூரை யடைந்து இறைவனது திருக்கோயிலை வலம் வந்து வணங்கி 'அந்தணாளனுன்னடைக் கலம்புகுக' என்னும் முதற்குறிப்புடைய திருப்பதிகத்தினைப் பாடிப் பரவினார். தம் அன்புடைத் தோழராகிய ஏயர்கோன் கலிக்காமநாயனாரைப் பற்றிய சூலைநோயாகிய கடும்பிணியைத் தீர்த்தருளிய இறை வனது திருவருட்செயலை இத்திருப்பதிகத்தில்,

ஏதநன்னிலம் ஈரறுவேலி ஏயர்கோன் உற்ற
இரும்பிணி தவிர்த்து'

எனவருந்தொடரால் நம்பியாரூரர் குறிப்பிட்டுப் போற்றி யுள்ளார்.

ஏயர்கோன் கலிக்காமநாயனாரை நண்பராகக் கொண்ட நம்பியாரூரர். அவருடன் திருவாரூரை யடைந்து பூங்கோயில மர்ந்த பெருமானைக் கும்பிட்டு மகிழ்ந்தார். அங்கு நம்பியாரூர ருடன் அளவளாவி மகிழ்ந்த ஏயர்கோன் கலிக்காமர், ஆரூரர் பால் விடைபெற்றுத் தம்முடைய ஊருக்குச் சென்றார். பின்பு சுந்தரர் திருவாரூரினின்றும் புறப்பட்டுத் திருநாகைக் காரோணத் துக்குச் சென்று அங்கு வீற்றிருந்தருளும் இறைவனை யிறைஞ்சி நின்று தமக்கு விலையுயர்ந்த அணிகலன்களும் பிறவும் வேண்டும் என்ற குறிப்புடன்,

பத்தூர்புக் கிரந்துண்டு பலபதிகம் பாடிப்
பாவையரைக் கிற்பேசிப் படிறாடித் திரிவீர்
செத்தார்தம் எலும்பணிந்து சேவேறித்திரிவீர்
செல்வத்தை மறைத்துவைத்தீர் எனக்கொரு நாளிரங்கீர்

முத்தாரம் இலங்கிமிளிர் மணிவயிரக்கோவை
யவைபூணத் தந்தருளி மெய்க்கினிதா நாறும்
கத்தூரி கமழ்சாந்தும் பணித்தருள வேண்டும்
கடல்நாகைக் காரோண மேவியிருந்தீரே.

எனவரும் திருப்பதிகத்தினைப் பாடினார். சுந்தரரது வேண்டு கோளுக்கு இசைந்தருளிய சிவபெருமான், அவருக்குப் பொன்னும் நவமணிகளும் நறுமணப் பொருள்களும் பட்டாடை களும் கடுகிச் செல்லும் குதிரையும் ஆகியவற்றைப் பரிசாகக் கொடுத்தருளினார் விலை மதித்தற்கரிய அப் பொருள்களைப் பெற்று மகிழ்ந்த சுந்தரர், நாகப்பட்டினத்திலிருந்து புறப்பட்டு

நடுவிலுள்ள தலங்களை வணங்கித் திருவாரூரையடைந்து பூங் கோயிலமர்ந்த பெருமானைப் போற்றி மகிழ்ந்திருந்தார்.

### சேரமான் தோழராய் அவருடன் தல யாத்திரை செய்தல்

இங்ஙனமாக, சேரமண்டலத்தை ஆளும் பெருமாக் கோதையாராகிய சேரமான் பெருமாள் நாயனார், நம்பியாரூரது பெருமையினைக் கூத்தப்பெருமான் அறிவுறுத்தியருளக் கேட்டு ணர்ந்து வன்றொண்டராகிய அவரைக் காணவேண்டுமென்னும் பேரார்வத்துடன் தில்லைச் சிற்றம்பலவரை வழிபட்டுத் திருவாரூரை நோக்கி வருவாராயினர். சேரவேந்தரது வருகையை யுணர்ந்த வன்றொண்டர், சிவனடியார்களுடன் அவரை யெதிர் கொண்டழைத்தார். நம்பியாரூரரைக் காணப்பெற்ற சேரமான் பெருமாள், அவருடைய திருவடிகளில் வீழ்ந்திறைஞ்சினார். சுந்தரர், தாமும் சேரவேந்தர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி அவரை இருகைகளாலும் எடுத்துத் தழுவிக் கொண்டார். இங்ஙனம் சேரமான் பெருமாளும் நாவலூர் மன்னரும் உயிர் ஒன்றி உடம்பும் ஒன்றாமென அன்பினால் அளவளாவி மகிழும் தோழமைத் திறத்தைக் கண்ணுற்ற சிவனடியார்கள், திருநாவலூர ராகிய சுந்தரரைச் 'சேரமான் தோழர்' என்ற பெயரால் அழைத்துப் போற்றினார்கள்.

சேரமான் தோழராகிய சுந்தரர், 'கார்கொண்ட கொடைக் கழறிற்றறிவார்' எனத் தம்மால் முன்பு பாராட்டப்பெற்ற சேர வேந்தரது கையினைப் பற்றி யழைத்துக்கொண்டு திருவாரூர்த் திருக்கோயிலை வலம் வந்து வணங்கி உள்ளே புகுந்தார். சேரமான் பெருமாளும் உடைய நம்பியாகிய சுந்தரரைத் தொடர்ந்து சென்று பூங்கோயிலமர்ந்த இறைவர் திருமுன்பு வீழ்ந்திறைஞ்சிக் கண்களில் அன்புநீர் பொழியத் திருமும்மணிக் கோவையென்னும் சொல் மாலை புனைந்து போற்றினார். தாம் பாடிய செந்தமிழ்ப் பனுவலைத் தம் தோழராகிய சுந்தரர் முன்னிலையில் நலம் விளங்கக் கேட்பித்தார். திருவாரூர்த் திருமூலட்டானத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமான், சேரவேந்தர் பாடிய தெய்வத் தமிழ்ப் பனுவலை விரும்பியேற்றுக் கொண்டருளினார்.

நம்பியாரூரர், தம் அன்பிற்கினிய தோழராகிய சேரமான் பெருமாளை அழைத்துக் கொண்டு பரவையாரது திருமாளி கைக்குச் சென்றார். அப்பொழுது பரவையார், திருவிளக்கு நிறைகுடம் முதலிய மங்கலப் பொருள்களுடன் சேரமான் பெருமாளை வணங்கி வரவேற்று சிவனடியார்களுக்கும் உடன் வந்த பரிசனங்களுக்கும் தக்க வகையால் அறுசுவைப் போனகம் அமைத்து அன்புடன் விருந்தளித்து உபசரித்தார். அடியார்கள் மகிழ ஆளுடைய நம்பியும் சேரமான் பெருமாளும் உடனிருந்து

திருவமுது செய்தார்கள் சொல் வித்தகராகிய அவ்விருவரும் செல்வத்திருவாரூர், மேவும் புற்றிடங்கொண்ட பெருமானைப் போற்றி வீதிவிடங்கப் பெருமானது திருவோலக்கச் சிறப்பினைக் கண்டு மகிழ்ந்திருந்தார்கள்.

இங்ஙனம் திருவாரூரில் தங்கியிருக்கும் நாளில் நம்பியாரூரர் பாண்டி நாட்டிலுள்ள திருவாலவாய் முதலிய திருத்தலங்களை வழிபட வேண்டுமென்னும் பெருவேட்கையுடையராய்த் தமது விருப்பத்தினைச் சேரமான் பெருமாளுக்குத் தெரிவித்தார். தம்பிரான் தோழரைப் பிரியாத பெருங்கேண்மையினராய சேர மன்னரும் நமக்கு 'மதிமலி புரிசை'த் திருமுகம் அனுப்பியருளிய திருவாலவா யிறைவரைக் கண்டு வழிபட வேண்டுமென்னும் பேரார்வமுடையராய்ச் சுந்தரருடன் செல்லத் துணிந்தார். ஒத்த உள்ளமுடையார் இருவரும் அடியார்களும் பரிசனம் புடைசூழத் 'திருமறைக்காடு' அகத்தியான் பள்ளி, கோடிக்குழகர் முதலிய ஸ்தலங்களைப் பணிந்து பாண்டி நாடடைந்து திருப்புத்தூரைப் பணிந்து தமிழ் நிலைபெற்ற மதுரை நகரத்தை யடைந்தார்கள்.

அப்பொழுது பாண்டி நாட்டை ஆட்சி புரிந்த வேந்தனாகிய பாண்டியனும் பாண்டியன் மகளை மணந்து வேட்டகத்தில் தங்கியிருந்த சோழ மன்னனும் இவ்விரு பெருமக்களையும் எதிர்சென்று வரவேற்றுத் திருவாலவாய்த் திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்றனர். நம்பியாரூரர் சேரமான் பெருமாளுடன் ஆலவாயிறைவரை வணங்கிச் செந்தமிழ்ப் பாமாலை பாடிப் போற்றினார். 'அடியேனையும் பொருளாகப் பண்ணித் திருமுகப் பாசுரம் பாடிக் கொடுத்தருளிய பேரருளின் எல்லையை அறிந் திலேன்' எனச் சேரமான் பெருமாள் ஆலவாய் அண்ணலைப் பரவித்துதித்தார். பாண்டியன் இவ்விரு பெருமக்களையும் தன் அரண்மனைக்கு அழைத்துச் சென்று அன்புடன் உபசரித்துப் போற்றினான். சுந்தரரும் சேரமானும் சிலநாள் அங்கே தங்கியிருந்து திருவாலவாயிறைவரை வணங்கி மகிழ்ந்தார்கள்.

சுந்தரர், சேர சோழ பாண்டியர்களாய அம்மூவேந்தர் களுடன் திருப்பூவணம் சென்று 'திருவுடையார்' என்னுந் திருப்பதிகம் பாடித் துதித்தார். திருவாப்பனூர், திருவேடகம் முதலிய தலங்களை யிறைஞ்சித் திருப்பரங்குன்றத்தையடைந்து 'கோத்திட்டையும் கோவலும்' எனவரும் திருப்பதிகத்தினைப் பாடிப் பரவினார். இறைவன், நின் திருவடிக்கீழ் நின்று ஆட் செய்யும் அருமையை நினைந்து அஞ்சுகின்றோம்' என்னுங் கருத்தமைய 'அடிகேள் உமக்கு ஆட்செய அஞ்சுதுமே' என இப்பதிகப் பாடல்தோறும் குறித்துப் போற்றினார். இறைவ னுக்குத் தொண்டு செய்யும் அருமையை இப்பதிகவாயிலாகக் கேட்டுணர்ந்த அரசர் மூவரும் அன்பு நீங்கா அச்சமுடன்

நம்பியாரூரரை வணங்கினார்கள். முடியுடை வேந்தர்களாகிய தமிழ் மூவேந்தர் முன்னிலையிலே இத் திருப்பதிகம் திருப்பரங் குன்றத்தில் அருளிச் செய்யப்பெற்ற தென்பது,

அடிகேளுமக் காட்செய வஞ்சுதுமென்
நமரர்பெருமானை ஆரூரனஞ்சி
முடியா லுலகாண்ட மூவேந்தர் முன்னே
மொழிந்தாறு மோர்நான்கு மோரொன்றினையும்
படியா விவைகற்று வல்ல அடியார்
பரங்குன்றமேய பரமனடிக்கே
குடியாகி வானோர்க்குமோர் கோவுமாகிக்
குலவேந்தராய் விண் முழுதாள் பவரே.

எனவரும் இப்பதிகத் திருக்கடைக் காப்பால் இனிது விளங்கும்.

பாண்டிநாட்டுத் தலங்களையெல்லாம் வழிபட விரும்பிய சுந்தரர், சேரமான் பெருமாளுடன் திருப்பரங்குன்றத்தினின்றும் புறப்பட்டபொழுது, அந்நாட்டு மன்னனாகிய பாண்டியன், அவ்விரு பெருமக்களும் தென்னாட்டுத் திருக்கோயில்களை வழிபடுவதற்கு வேண்டிய எல்லா வசதிகளையும் செய்து வைக்கும்படி ஏவலாளர்களை யனுப்பினான். பாண்டியனும் சோழனுமாகிய அவ்விருவேந்தர்களும் சுந்தரர், சேரமான் ஆகிய அவ்விருவரிடத்தும் விடைபெற்று மதுரை நகரத்தையடைந் தார்கள். சுந்தரர், சேரமான் பெருமாளுடன் திருக்குற்றாலம்-குறும்பலா, திருநெல்வேலி முதலிய தலங்களை வழிபட்டுத் திருவிராமேச்சரத்தை யடைந்து இராமபிரானால் வழிபடப் பெற்ற பெருமானைத் திருப்பதிகச் செந்தமிழ் மாலைகளாற் போற்றிசைத்துச் சிலநாள் அங்கே தங்கியிருந்தார். அங்கிருந்த படி ஈழ நாட்டிலுள்ள மாதோட்டக்கே தீச்சரத்தை எண்ணி வழி பட்டுத் திருப்பதிகம் பாடினார். பின் அங்கிருந்து புறப்பட்டுத் திருச்சுழியல் என்ற தலத்தையடைந்து 'ஊனாயுயிர்' என்னும் திருப்பதிகம்பாடி இறைவனை வழிபட்டு அப்பதியில் தங்கி யிருந்தார். அப்பொழுது சிவபெருமான், தம் திருக்கையிலே பொற் செண்டும் திருமுடியிற் சுழியமும் உடையவராகி நம்பியாரூ ரர்க்குக் கனவிலே தோன்றி, 'யாம் இருப்பது கானப்பேர்' என்று கூறி மறைந்தருளினார். எங்குமிலாத் திருவேடத்தைக் கண்டு விழித்தெழுந்த சுந்தரர், தாம் கண்ட கனவுக் காட்சியைச் சேரமான் பெருமாளுக்குத் தெரிவித்துத் திருச்சுழியலிலிருந்து புறப்பட்டு,

தொண்டரடித் தொழலுஞ் சோதியிளம் பிறையுஞ்
சூதன மென்முலையாள் பாகமும மாகிவரும்
புண்டரி கப்பரிசாம் மேனியும் வானவர்கள்
பூசலிடக் கடல்நஞ்சுண்ட கருத்தமருங்

கொண்டலெனத் திகழுங் கண்டமு மென்தோளுங்
கோல நறுஞ்சடைமேல் வண்ணமுங் கண்குளிரக்
கண்டுதொழப் பெறுவ தென்றுகொலோ வடியேன்
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே.

என்ற திருப்பதிகத்தைப் பாடிக்கொண்டு திருக்கானப் பேர்க்குச் சென்று இறைவரை வழிபட்டு அங்குச் சிலநாள் தங்கியிருந்தார். பின் திருப்புனவாயிலை வழிபட்டுச் 'சித்தநீநினை' என்னும் திருப்பதிகம் பாடித் துதித்துச் சோழநாட்டை யடைந்தார். பாம்பணிமா நகரிலுள்ள பாதாளீச்சரம் முதலாகப் பல திருக் கோயில்களை வழிபட்டுச் சேரமான் பெருமாளுடன் திருவாரூரை யடைந்து பரவையார் மாளிகையில் தங்கியிருந்தார்.

பலநாட் சென்றபின் சேரமான் பெருமாள் நாயனார், தம் தோழராகிய சுந்தரரை வணங்கித் தங்கள் நாட்டிற்கு எழுந்தருள வேண்டுமெனப் பலமுறையும் வேண்டிக் கொண்டார். சுந்தரர் அதற்கு இசைந்து சேரமான் பெருமாளுடன் புற்றிடங்கொண்ட பெருமானை யிறைஞ்சி விடைபெற்றுத் திருவாரூரினின்றும் மேற்றிசை வழியாகப் புறப்பட்டுக் காவிரியின் தென்கரை வழியே திருக்கண்டியூரை யடைந்து இறைவனை யிறைஞ்சி மகிழ்ந்தார். அப்பொழுது வடகரையிலிருக்கிற திருவையாறு எதிரே தோன்றக் கண்டு நெஞ்சங் கசிந்துருகிய சுந்தரர், கடல்போற் பெருகும் காவிரியாற்றின் வெள்ளத்தைக் கடந்து தொழ நினைந்தார். சேரமான் பெருமாளும் ஆரூரரை நோக்கி 'இறைவர் எழுந்தருளிய திருவையாற்றினை வழிபட நினைந்து என்னுள்ளம் உருகா நின்றது. நாம் இவ்வாற்றைக் கடந்து ஐயாற்றிறைவரைப் பணிவோம்' எனக் கூறினார். அதுகேட்ட சுந்தரர் ஓடங்கள் செல்லாதபடி காவிரிநதியிற் கரைகடந்து வெள்ளம் பெருகு தலைக் கண்டு கலக்கமுற்று

பரவும் பரிசொன் றறியேனான் பண்டேயும்மைப் பயிலாதேன்
இரவும் பகலும் நினைந்தாலும் எய்தநினைய மாட்டேனான்
கரவி லருவி கமுகுண்ணத் தெங்கங் குலைக்கீழ்க் கருப்பாலை
அரவந்திரைக் காவிரிக்கோட்டத் தையாறுடைய வடிகளோ.

எனவரும் திருப்பதிகத்தினைப் பாடி 'ஐயாறுடைய அடிகளோ' என ஐயாற்றிறைவரை ஆராத காதலால் அழைத்து நின்றார். அப்பொழுது சிவபெருமான், கன்று அழைத்தலைக்கேட்டுக் கதறிக் கனைக்கின்ற பசுவைப் போன்று எல்லோரும் கேட்க 'ஓலம்' என்று உரக்கக் கூறியருளினார். உடனே காவிரிநதியின் வெள்ளம் விலகி நடுவே வழிகாட்டியது. மேற்பக்கத்து வெள்ளம் பளிங்குமலையென விலகி நிற்கக் கீழ்ப் பக்கத்து நீர் வடிந்தோட மணற்பரப்பாயிருந்த நடுவழியைக் கண்டு இறைவனருளை

வியந்து சுந்தரமூர்த்தி சுவாமிகளும் சேரமான் பெருமாளும் அடியார் திருக்கூட்டத்துடன் அவ்வழியே இறங்கிச் சென்று கரையேறி ஐயாறுஅமர்ந்த பெருமானை அன்பினால் இறைஞ்சிப் போற்றிக் காவிரி நதியின் நடுவிலமைந்த அம் மணல் வழியாகவே மீண்டும் வந்துதென்கரையில் ஏறினார்கள். அந்நிலையில் முன் விலகிநின்ற வெள்ளம் தொடர்ந்து செல்வதாயிற்று. இங்ஙனம் காவிரிநதியின் வெள்ளத்தால் உண்டாகிய தடையை விலக்குதற் பொருட்டு நம்பியாரூரர் இத்திருப் பதிகத்தினைப் பாடியருளினா ரென்பது, இப்பதிகத்து,

> கதிர்க்கொள் பசியை யொத்தே நான் கண்டே னும்மைக்
> காணாதேன்
> எதிர்த்து நீந்த மாட்டேனா னெம்மான் றம்மான் றம்மானே
> விதிர்த்து மேக மழைபொழிய வெள்ளம் பரந்து நுறைசிதறி
> அதிர்க்குந் திரைக்காவிரிக் கோட்டத் தையா றுடைய வடிகளோ

எனவரும் திருப்பாடலால் இனிது விளங்கும்.

ஆறுவிலக ஐயாற்றிறைவரைக் கண்டு கும்பிட்டுமகிழ்ந்த அவ்விருபெருமக்களும் வழியிலுள்ள பலதலங்களையும் வணங்கிக் கொங்குநாட்டைக் கடந்து சேர நாடடைந்து மலை நாட்டு மக்கள் மகிழ்ந்தெதிர் கொள்ளக் கொடுங்கோளூரை யடைந்தனர். சேரமான் பெருமாள் தம் தோழராகிய வன் றொண்டரைத் திருவஞ்சைக்களம் என்ற திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்றார். அஞ்சைக்களத் திறைவரைக் கும்பிட்டு மகிழ்ந்த சுந்தரர், 'முடிப்பதுகங்கை' என்னும் திருப்பதி கத்தினைப் பாடித் துதித்துப் புறம்போந்தார். சேரமான் பெருமாள் தம் கெழுதகை நண்பராகிய சுந்தரரைப் பட்டத்து யானையின் மேல் அமரச் செய்து தாம் அவர்பின்னே யமர்ந்து இரு கைகளாலும் வெண் தாமரை வீசிக்கொண்டு தம்முடைய அரண்மனைக்கு அழைத்துச் சென்றார்; பட்டத்து யானையி னின்றும் இறங்கிய நம்பியாரூரரை அரண்மனைக்குள் அழைத்துச் சென்று அரியணையில் அமரச்செய்து தம் தேவி மார்கள் பொற்குடத்தில் நன்னீர் ஏந்திப் பணிசெய்ய வன் றொண்டர் திருவடிகளை விளக்கி நறுமலர் தூவி அருச்சித்தார். உடனிருந்து திருவமுது செய்வித்து உபசரித்தார். இங்ஙனம் பல நாட்கள் சுந்தரரைத் தம் தலைநகரில் அமர்த்திய சேரமான் பெருமாள், செண்டாடுந் தொழில் மகிழ்வும் சிறுசோற்றுப் பெருவிழாவும் பாடல் ஆடல் இன்னியங்கள் முதலாகப் பலவகை மகிழ்ச்சிச் செயல்களும் நிகழச்செய்து தம் தோழராகிய அவரை மகிழ்வித்து அவருடன் அளவளாவி மகிழ்ந்தார்.

## சேரமான்பால் விடைபெற்றுத் திருவாரூர்க்குத் திரும்புதல்

இங்ஙனம் சேரவேந்தரும் சுந்தரரும் அன்பினால் அளவளாவி மகிழ்ந்திருக்கும் நாட்களில் திருவாரூர்ப் பெருமானைக் கண்டிறைஞ்சி யின்புறவேண்டுமென்ற எண்ணம் சுந்தரர்க்கு உண்டாயிற்று. அந்நினைவு மீதூரப்பெற்ற சுந்தரர்,

பொன்னு மெய்ப் பொருளுந் தருவானைப்
போகமுந் திருவும் புணர்ப்பானைப்
பின்னை யென் பிழையைப் பொறுப்பானை
பிழையெலாந்தவிரப் பணிப்பானை
இன்ன தன்மைய னென்றறியொண்ணா
எம்மானை எளிவந்தபிரானை
அன்னம்வைகும் வயற்பழனத்தணி
யாரூரானை மறக்கலுமாமே.

எனவரும் திருப்பதிகத்தினைப் பாடித் தமது ஆற்றாமையினைச் சேரமானுக்குணர்த்தி விடைபெற முயன்றார். தோழராகிய சுந்தரரது உள்ளக் குறிப்பினையுணர்ந்த சேரமான், அவரை நோக்கி 'இன்றுமது பிரிவாற்றேன் என் செய்வேன்' என்றுரைத்து மிகவும் வருந்தினார். சேரமான் பெருமாளைப் பிரியாத பேரன்பினராயசுந்தரர் வேந்தர் பெருமானாகிய அவரை நோக்கி 'இந்நாட்டிற்குளவாம் இடர்நீங்கப் பகைநீக்கி அரசாளுதல் நுமது கடன்' என அன்பினால் அறிவுறுத்தினார். 'இவ்வுலக ஆட்சியும் வானுலக ஆட்சியுமாக அமைந்து எனக்கு இன்பஞ் செய்வன நும்முடைய திருவடித்தாமரைகளே, செல்வத் திருவாரூர்க்கு எழுந்தருளவெண்ணிய நுமது விருப்பத்தை நீக்கவும் அஞ்சுகிறேன்' என்றார் சேரமான் பெருமாள். அது கேட்ட வன்றொண்டர், 'என்னுயிருக்கின்னுயிராம் எழிலாரூர்ப் பெருமானை வன்னெஞ்சக் கள்வனேன் மறந்திரேன்' என்றுரைத்துச் சேரமான் பெருமாளை வணங்கி விடை கொண்டார். சேரமானும் தம் தோழரை வணங்கித் தமது திருமாளிகையிலுள்ள பெரும்பொருள்களைப் பொதிசெய்து ஆட்களின்மேல் ஏற்றுவித்து நெடுந்தூரஞ்சென்று வழியனுப்பினார். சுந்தரரும் தம் நண்பரை அன்பினால் தழுவி நிறுத்தி விடைபெற்று மலை நாட்டை நீங்கிச் சுரங்களையும் காட்டாறுகளையும் கடந்து கொங்குநாட்டுத் தலங்களுள் ஒன்றாகிய திருமுருகன் பூண்டி வழியே போதற்குத் துணிந்து சென்றார்.

அங்ஙனம் செல்லுங்கால் அவ்வூரிற் கோயில் கொண்டருளிய சிவபெருமான், பூதகணங்களை நோக்கி 'நீங்கள் வேடுவராகிச்

சென்று சுந்தரனுடைய பொருள்களைக் கவர்ந்து கொள்மின்' எனப் பணித்தருள அவர்கள் வேடுவர்களாகச் சென்று சுந்தரர்க்கு முன்னாக நிதிக்குவியலைச் சுமந்து செல்லும் சுமை யாட்களை வழிமறித்து அம்பினாலும் வேற்படைகளாலும் அச்சுறுத்தி அவர்களிடமுள்ள பொருள்கள் எல்லாவற்றையும் கவர்ந்து கொண்டனர். பொருளைப் பறிகொடுத்த சுமை யாட்கள், சுந்தரர் அருகே போய்ச் சேர்ந்தார்கள். அதுகண்ட வேடுவர், இறைவனருள் பெற்ற சுந்தரரை அணுகுதற்கு அஞ்சி அவ்விடத்தை விட்டு அகன்றனர். அந்நிலையில் சுந்தரர் திரு முருகன் பூண்டியிலுள்ள திருக்கோயிலுட்புகுந்து இறைவனை யிறைஞ்சி நின்று,

கொடுகு வெஞ்சிலை வடுகவேடுவர் விரவலாமை சொல்லித்
திடுகு மொட்டெனக் குத்திக் கூறைகொண் டாறலைக்குமிடம்
முடுகு நாறிய வடுகர்வாழ் முரகன் பூண்டிமா நகர்வாய்
இடுகு நுண்ணிடை மங்கை தன்னொடும் எத்துக்கிங்
கிருந்தீர் எம்பிரானிரே.

எனவரும் திருப்பதிகத்தைப் பாடிப் பாட்டின் இறுதிதோறும் 'முருகன்பூண்டி மாநகர்வாய் எத்துக்கிங்கிருந்தீர் எம்பிரானிரே' என வினவிப் போற்றினார். உடனே இறைவனருளால் முன் வழிப்பறி செய்த வேடுவர்கள் அனைவரும் தாம் கவர்ந்து கொண்டு சென்ற பொருள்களையெல்லாம் அத்திருக்கோயிலின் வாயிலிலே கொண்டு வந்து குவித்தார்கள். அவ்வரும் பொருள் களைக்கண்டு இறைவன் திருவருளை வியந்த நம்பியாரூரர், அவற்றை முன்போற் பொதிசெய்து முன்னேயெடுத்துச் செல்லும்படி ஏவலாளர்களுக்குக் கூறி, அப்பதியினின்றும் புறப் பட்டுக் கொங்குநாட்டைக் கடந்து திருவாரூரையடைந்தார். பூங்கோயிலுட் புகுந்து புற்றிடங்கொண்ட பெருமானைப் போற்றிப் பரவையாரது மாளிகையில் எழுந்தருளியிருந்தார்.

கொங்குநாட்டில் இரக்கமில்லாத சிந்தையினராகிய வடுக வேடுவர்கள் பல்கி வழிப் போவாரைத் துன்புறுத்தி அவர் பாலுள்ள ஆடை அணிகலன் முதலிய எல்லாப் பொருள் களையும் கவர்ந்துகொண்டு வாழ்ந்தனரென்பதும்* (* இங்ஙனம் ஆறலைப்போர் பல்கிவாழும் கொங்குநாட்டிற் புதியராய்ச் சென்றோன் பாதுகாப்பற்ற நிலையிற் பெரிதும் வருத்தமுற்ற அக்கால நிகழ்ச்சியினை யொட்டியே 'ஏமரார் கொங்கேறினார்' (282) என்னும் பழமொழி யுண்டாயிற்றுப் போலும்). அக்கொடியோர் நிரம்பிவாழும் திருமுருகன் பூண்டி வழியாகப் பெரும்பொருளுடன் வந்த சுந்தரமூர்த்தி சுவாமிகள், அவ்வேடர்களால் நேர்ந்த துன்பத்தை யெண்ணித் திருமுருகன் பூண்டியிற் கோயில் கொண்டருளிய சிவபெருமானைச் செந்தமிழ்ப்பதிகத்தாற் போற்றி வணங்கி

னாராக, வழிப் போவார்க்குத் தீங்கு செய்து வாழும் அவ் வேடர்களும் தம் கொடுந்தொழிலை நீங்கிச் சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய திருவடிகளைப் பணிந்து அடங்கி யொழுகி னார்களென்பதும்,

**'எங்கேனும் போகினும் எம்பெருமானை நினைந்தக்கால்**
**கொங்கே புகினும் கூறைகொண் டாறலைப்பாரிலை'**

எனவரும் சுந்தரர் அநுபவ மொழியாலும்,

**'வேடர்சுற்றம், படுத்தான் திருமுருகன் பூண்டியினிற்**
**பராபரத்தேன் மடுத்தான்'**

என அவரைக் குறித்து நம்பியாண்டார் நம்பி கூறும் இவ் வரலாற்றுக் குறிப்பாலும் இனிது விளங்கும்.

## முதலையுண்ட பாலனை மீட்டுத் தந்தருளுதல்

திருவாரூரிற் புற்றிடங்கொண்ட பெருமானைப் போற்றி மகிழ்ந்திருந்த நம்பியாரூரர், சில நாட் சென்ற பின் தம் கெழுதகை நண்பராகிய சேரமான்பெருமானை நினைந்து மலைநாடு' செல்லத் திருவுளங்கொண்டார். சோழநாட்டைக் கடந்து கொங்குநாடடைந்து திருப்புக்கொளியூர் அவிநாசியென்னுந் தலத்தை யணுகி வீதிவழியாகச் சென்றார். அப்பொழுது அங்கே ஒரு வீட்டில் மங்கலவொலியும் அதற்கு எதிர் வீட்டில்' அழுகை யொலியும் எழுதலைக்கேட்டு அங்குள்ளாரை நோக்கி 'மாறு பட்ட இவ்விரண்டொலியும் ஒருங்கு நிகழக் காரணம் யாது' என வினவினார். அதுகேட்ட வேதியர்கள் சுந்தரரை வணங்கிப் பின்வருமாறு கூறினார்கள்:-

'ஒத்த பருவத்தினராய் ஐந்து வயது நிரம்பப் பெற்ற சிறுவர் இருவர் மடுவிலே குளித்தபொழுது அவ்விருவருள் ஒருவனை முதலை விழுங்கிற்று. மற்றொருவன் அதன் வாயில் அகப் படாது பிழைத்துக்கொண்டான், பிழைத்த சிறுவனுக்கு இவ் வீட்டில் இப்பொழுது உபநயனம் நடைபெறுகின்றது. இம்மங்க வொலி இவனோடொத்தவ யதினனாய் முதலைவாயில் அகப் பட்டிறந்த தம் புதல்வனை நினைப்பித்தமையால் வருந்திய பெற்றோரது அழுகையொலி அவ்வீட்டில் உண்டாயிற்று' என்பது அவர்கள் கூறிய மறுமொழியாகும். அத்துயரச் செய்தி கேட்ட சுந்தரர் சிந்தைகலங்கி நின்றார். அந்நிலையில் புதல்வன் இறந்தமை நினைந்து வருந்தும் வேதியரும் அவர்தம் மனைவியும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் வந்த செய்தியுணர்ந்து அழுகை நீங்கி முகமலர்ச்சியுடன் அங்கு ஓடிவந்து அவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார்கள். அவர்களைக் கூர்ந்து நோக்கிய சுந்தரர், 'புதல்வனை யிழந்தவர்கள் நீவிரோ' எனப் பரிவுடன்

வினவினார். அவர்கள் மீண்டும் சுந்தரரை வணங்கி நின்று 'பெரியீர் அதுமுன்னே நிகழ்ந்து போயிற்று, அது நிற்க, தங்களை நெடுங்காலமாகக் கண்டு வணங்குதற்கு விரும்பியிருந்த எங்களது அன்பு பழுதாகாமல் தாங்கள் இங்கு எழுந்தருளியது எமது தவப்பேறேயாகும்' என மகிழ்ந்துறைந்தார்கள். தன்னை யடைந்தார்களின் இடர்களைக் களைந்தருளவல்ல சுந்தரர், 'இவ்வேதியனும் மனைவியும் தம் மகனையிழந்த துன்பத்தையும் மறந்து யான் இங்கு வந்ததற்காக மனம் மகிழ்கின்றார்கள். இவர்களுடைய புதல்வனை முதலை வாயினின்றும் அழைத்துக் கொடுத்த பின்னரே அவிநாசியில் எழுந்தருளிய எந்தை பிரானை யான் இறைஞ்சுதல் வேண்டும்' என அருளிச்செய்து 'புதல்வனை முதலை விழுங்கிய மடு எங்கேயுளது' என வினவிச் சென்று அம்மடுவின் கரையை யடைந்தார். 'முதலையானது தான் விழுங்கிய புதல்வனை உயிருடன் கரையிற் கொண்டு வந்து தரும் படி அருள் செய்வீராக' எனத் திருப்புக்கொளியூர் அவிநாசியில் எழுந்தருளிய சிவபெருமானை நினைந்து,

> எற்றான் மறக்கேன் எழுமைக்கும் எம்பெருமானையே
> உற்றாயென் றுன்னையே யுள்குகின் றேனுணர்ந் துள்ளத்தால்
> புற்றாடரவா புக்கொளி யூரவி நாசியே
> பற்றாக வாழ்வேன் பசுபதியே பரமேட்டியே.

என்ற திருப்பதிகத்தினைப் பாடத் தொடங்கினார். இப் பதிகத்தில்,

> உரைப்பா ருரையுகந் துள்கவல்லார் தங்களுச்சியாய்
> அரைக்காடரவா ஆதியும் அந்தமும் ஆயினாய்
> புரைக்காடு சோலைப் புக்கொளி யூரவிநாசியே
> கரைக்கான் முதலையைப் பிள்ளைதரச் சொல்லு காலனையே.

எனவரும் நான்காந் திருப்பாடலைப் பாடும்பொழுது காலனாகிய இயமன், மடுவிலிருந்த முதலை வயிற்றிலே முன் விழுங்கப் பட்டிறந்த புதல்வனது உடம்பைச் சென்ற ஆண்டு களின் வளர்ச்சியையுடையதாகச் செய்து அவ்வுடம்பினுள்ளே அப்புதல்வனது உயிரைக் கொண்டுவந்து புகுத்தினான். உடனே முதலையானது மடுவிலிருந்து வெளிப்பட்டு முன்தான் விழுங்கிய புதல்வனைக் கரையிலே கொண்டுவந்து உமிழ்ந்தது. புதல்வனைக் கண்ட தாயார், விரைந்து சென்று தழுவி எடுத்துக் கொண்டார். தாயும் தந்தையுமாகிய அவ்விருவரும் சுந்தரர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார்கள். இத்தகைய அற்புத நிகழ்ச்சியை நேரிற் கண்ட அனைவரும் இறைவனது திருவருட்டிறத்தை வியந்து போற்றினார்கள். முதலை வாயினின்றும் வெளிப்பட்டுய்ந்த மறைச்சிறுவனை நம்பியாரூரர் அவிநாசித் திருக்கோயிலுக்கு

அழைத்துச்சென்று அருளாளராகிய இறைவரைத் தொழுது போற்றி வேதியரது வீட்டிற்கு அழைத்துச் சென்று மங்கல வாத்தியம் முழங்க அப்புதல்வனுக்கு உபநயனஞ் செய்வித் தருளினார்.

திருப்புக்கொளியூர் மடுவில் நீராடிய மறைச் சிறுவ னொருவன் முதலையால் விழுங்கப்பட்டு இறந்து போன துயரச் செய்தி அவ்வூர்க்குச் சென்ற நம்பியாரூரரது திருவுள்ளத்திலே அடங்காக் கவலையை யுண்டு பண்ணிய தென்பது, அவர் அப்புதல்வனை உயிர்ப்பித்தல் வேண்டி அவிநாசி யிறைவரை நினைந்து போற்றிய திருப்பதிகத்துள்,

'வழிபோவார் தம்மொடும் வந்துடன் கூடிய மாணிநீ
ஓழிவதழகோ சொல்லாய் அருளோங்கு சடையானே
பொழிலாருஞ் சோலைப் புக்கொளியூரவி நாசியே
இழியாக் குளித்த மாணி யெனைக்கிறி செய்ததே'

எனவும்,

'புள்ளேறு சோலைப் புக்கொளியூரிற் குளத்திடை
உள்ளாடப் புக்க மாணி யெனைக்கிறி செய்ததே'

எனவும்,

'கரைக்கான் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே'

எனவும் நெஞ்சம் நெக்குருகி இறைவனை வேண்டுதலாற் புல னாம். இங்ஙனம் இனிமை பொருந்திய செந்தமிழ்ப் பதிகத்தைப் பாடி நம்பியாரூரர் முதலையுண்ட பாலனை மீண்டும் உயிர் பெற்றுவரச் செய்தருளிய இவ்வற்புத நிகழ்ச்சியை,

'கொடுந்தான் முதலைகொள் பிள்ளைக்குயிரன்று புக்கொளியூர்த்
தொடுத்தான் மதுரகவியவி நாசியை'

என நம்பியாண்டார் நம்பி குறிப்பிட்டுப் போற்றியுள்ளார்.

## சேரமான் பெருமாளுடன் அளவளாவி மகிழ்தல்

முதலை யுமிழ்ந்த பாலகனுக்கு முந்நூல் சாத்தி மகிழ்ந்த நம்பியாரூரர், தம் அன்புடைத் தோழர் சேரமான் பெருமாளைக் கண்டு அளவளாவி மகிழ வேண்டுமென்னும் பேரார்வத்துடன் மலைநாட்டை நோக்கிச் செல்வாராயினர். நம்பியாரூரர் வஞ்சி நகரத்தை நோக்கி வருதலைக் கேள்வியுற்ற சேரமான் பெருமாள், தம் ஆருயிர்த் தோழராகிய அவரை எதிர்கொண்டு வணங்கி யானைமேலமர்த்தித் தம் நகரத்துக்கு அழைத்துவந்து அரி யணையில் அமரச் செய்து பூசித்துப் போற்றினார். சேர மன்னரால் உபசரிக்கப் பெற்ற சுந்தரர் அவருடன் அருகேயுள்ள

மலை நாட்டுத் தலங்களை இறைஞ்சி அன்பினால் அளவளாவி மகிழ்ந்திருந்தார்.

## திருக்கயிலைக்கு எழுந்தருளுதல்

ஒருநாள் சேரமான் பெருமாள் திருமஞ்சன சாலையில் நீராடிக் கொண்டிருந்தபொழுது நம்பியாரூரர் திருவஞ்சைக் களத்திறைவனை வழிபடச் சென்றார். திருக்கோயிலிற் புகுந்த சுந்தரர், நெஞ்சம் நெகிழ்ந்துருகிக் கண்ணீர்சோர நிலமிசை வீழ்ந்திறைஞ்சி இறைவனை வேண்டுங் குறிப்புடன் 'அஞ்சைக் களத்தில் எழுந்தருளியுள்ள பெருமானே, அடியேன் இவ்வுலக வாழ்க்கையை வெறுத்து நீங்கினேன். அடியேனை நின் திருவடியிலே சேர்த்தருளல் வேண்டும்' எனத் 'தலைக்குத் தலை மாலை' என்ற முதற்குறிப்புடைய திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார். இப்பதிகத்தில் 'வெறுத்தேன் மனைவாழ்க்கையை விட்டொழிந்தேன்' எனத் தமது மனக் கருத்தை வெளிப்பட எடுத்துரைத்தார். அடியார்களின் கருத்தறிந்து முடிக்கவல்ல கயிலைப்பெருமான், சுந்தரரது பாசத்தளையை யகற்றி ஈறிலாப் பேரின்ப வாழ்வைத் தந்தருளத் திருவுளங் கொண்டார். நம்பியாரூரரைத் திருக்கயிலாயத்திற்கு அழைத்து வரும்படி வெள்ளையானையுடன் தேவர்களைத் திருவஞ்சைக் களத்திற்கு அனுப்பியருளினார்.

சிவபெருமானது அருளாணையினைச் சிரமேற்கொண்டு வெள்ளை யானையுடன் திருவஞ்சைக்களத் திருக்கோயில் வாயிலை யடைந்த தேவர்கள், அஞ்சைக் களத்தப்பனை வழி பட்டுக் கோயில் வாயிலையடைந்த நம்பியாரூரரைக் கண்டு வணங்கி நின்று 'தாங்கள் இவ்வெள்ளை யானையில் மீதமர்ந்து திருக்கயிலைக்கு உடனே வருதல் வேண்டுமென்பது சிவபெருமானது அருளிப்பாடாகும். தாங்கள் ஏவியவற்றைச் செய்ய நாங்கள் காத்திருக்கின்றோம்' என விண்ணப்பஞ் செய்தார்கள். இறைவனது திருவருளை யெண்ணிச் செய்வதொன்றும் அறியாது தம்மை மறந்த வன்றொண்டர், ஈசனது அருளாணையை விரைந்து ஏற்றுக் கொண்டார். தேவர்கள் அவரை வலம்வந்து வணங்கி வெள்ளை யானையின் மீது அமர்த்தினார்கள். அண்டர்கள் போற்ற வெள்ளானையில் ஏறிய வன்றொண்டர், தம்முடைய உயிர்த் தோழரும் மன்னுயிர்கள் கூறும் மாற்றங்களை யெல்லாம் உள்ளவாறு உய்த்துணரவல்ல திருவருட் செல்வருமாகிய சேரமான்பெருமாளைத் தம்மனத்திற் சிந்தித்துக் கொண்டு கயிலைக்குப் புறப்பட்டுச் செல்வாராயினர்.

தம் உயிர்த் தோழராகிய சுந்தரர் தம்மை நினைத்துச் செல்லும் பேரன்பின் திறத்தைத் திருவருளாற்றலால் விரைந்

துணர்ந்த சேரமான் பெருமாள், தம் அருகே நின்ற குதிரையின் மீதேறித் திருவஞ்சைக்களத் திருக்கோயிலுக்கு விரைந்து சென்றார்; வெள்ளை யானையின் மீதமர்ந்து விசும்பிற் செல்லும் சுந்தரராகிய தம் தோழரைக் கண்டார். தமது குதிரையின் செவியிலே திருவைந்தெழுந்தினை உபதேசித்தார். அவ்வளவில் அக்குதிரை வான்வழியே செல்லும் ஆற்றல் பெற்றுத்தெய்வத் தன்மை வாய்ந்த வெள்ளை யானையை வலம் வந்து அதற்கு முன்னே செல்வதாயிற்று. அப்பொழுது சேரமான் பெருமாளைத் தொடர்ந்து பின்சென்ற படைவீரர்கள் குதிரை மீது செல்லும் அரசரைத் தம் கண்ணுக்குப் புலப்படும் எல்லை வரையிற் கண்டு பின் காணப்பெறாது வருந்தினார்கள். வேந்தர் பெருமானைப் பிரியாது உடன்செல்ல வேண்டுமென்னும் மனத் திட்பமுடைய அவ்வீரர்கள், தமது உடைவாளினால் தம் உடம்பை வெட்டி வீழ்த்தி வீரயாக்கையைப் பெற்று விசும்பின் மீது எழுந்து சேரமான் பெருமாளைச் சேவித்துச் சென்றார்கள். சேரமான் பெருமாளும் தேவர் குழாமும் முன் செல்லப் பின் சென்ற நம்பியாரூரர்,

தானெனை முன்படைத்தா னதறிந்துதன் பொன்னடிக்கே
நானென பாடலந்தோ நாயினேனைப் பொருட்படுத்து
வானெனை வந்தெதிர்கொள்ள மத்தயானை யருள்புரிந்து
ஊனுயிர் வேறுசெய்தான் நொடித்தான்மலை யுத்தமனே.

எனவரும் திருப்பதிகத்தினைப் பாடிக்கொண்டு திருக்கயிலாய மலையின் தென்றிசை வாயிலையணுகினார்.

அங்கே சேரமான் பெருமாளும் நம்பியாரூரரும் முறையே குதிரையிலிருந்தும் யானையிலிருந்தும் இழிந்து பல வாயில் களையுங் கடந்து திருவணுக்கன் திருவாயிலை யடைந்தார்கள். அவ்வாயிலில் சேரமான் பெருமான் உள்ளே புக அனுமதி யின்றித் தடைப்பட்டு நின்றார். அவருடைய கெழுதகை நண்ப ராகிய சுந்தரர் உள்ளே புகுந்து அம்மையப்பராகிய சிவ பெருமான் திருவடிகளில் வீழ்ந்திறைஞ்சி நின்று 'கங்கை சடைக் கணிந்த கடவுளே, நின் திருவடிகளை வணங்கி மகிழ்தற் பொருட்டுக் கழறிற்றறிவாராகிய சேரமான் பெருமாள் திருவணுக்கன் திருவாயிற் புறத்தே வந்து நிற்கின்றார் என விண் ணப்பஞ் செய்தார். அதனைக் கேட்டு மகிழ்ந்த சிவபெருமான், பெரிய தேவராகிய நந்தியை நோக்கி, 'சேரமானைக் கொணர்க' எனப் பணித்தருளினார். அவரும் விரைந்து சென்று சேரமான் பெருமாளை அழைத்து வந்தார். அழைக்கப்பெற்று வந்த கழறிற்றறிவார், இறைவன் திரு முன்பு வீழ்ந்திறைஞ்சி நின்றார். இறைவர், சேரமானை நோக்கி நீ இங்கு நாம் அழையாதிருக்க வந்தது எது கருதி' என வினவியருளினார். அதுகேட்ட சேர

வேந்தர், இறைவனை யிறைஞ்சி 'எம்பெருமானே, அடியேன் நம்பியாரூரருடைய திருவடிகளைப் போற்றி அவரேறிய வெள்ளானைக்கு முன் அவரைச் சேவித்துக்கொண்டு வந்தேன். நினது திருவருட் பெருவெள்ளம் அடியேனை ஈர்த்துக்கொண்டு புகுதலால் இங்கு நின் திருமுன் வரப்பெற்றேன். எனது பாசத் தளையை அகற்றுதற் பொருட்டு வன்றொண்டரது தோழமையைத் தந்தருளிய பெருமானே, மறைகளாலும் முனிவர்களாலும் அளவிடுதற்கரிய பெருமானாகிய நின்னைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு திருவுலாப்புறம் என்ற செந்தமிழ்ப் பனுவலொன்றைப் பாடி வந்துள்ளேன். இத்தமிழ்ப் பனுவலை நின் திருச்செவியில் ஏற்றருளல் வேண்டும்' என விண்ணப்பஞ் செய்தார். அப்பொழுது சிவபெருமான் சேரனே, அவ்வுலாவைச் சொல்லுக' எனப் பணித்தருளினார். சேரமான் பெருமாள் நாயனாரும் தாம் பாடிய செந்தமிழ்ப் பனுவலைக் கயிலைப் பெருமான் திரு முன்னர் எடுத்துரைத்து அரங்கேற்றினார். சேரர் காவலர் பரிவுடன் கேட்பித்த திருவுலாப்புறத்தை ஏற்றருளிய சிவபெருமான், அவரை நோக்கிச் 'சேரனே நீ நம்பியாரூரனாகிய ஆலால சுந்தரனுடன் கூடி , நீவிர் இருவீரும் நம் சிவகணத் தலைவராய் இங்கு நம்பால் நிலைபெற்றிருப்பீராக' எனத் திருவருள் புரிந்தார். சிவபெருமான் அருளிய வண்ணம் நம்பி யாரூரர் அணுக்கத் தொண்டு புரியும் ஆலால சுந்தரராகவும் சேரமான் பெருமாள் சிவகணத் தலைவராகவும் திருக்கயிலையில் திருத்தொண்டு புரியும் பேரின்ப வாழ்வில் திளைத்து மகிழ்ந்தார்கள்.

நம்பியாரூரரை மணந்து வாழ்ந்த பரவையாரும் சங்கிலி யாரும் சிவபெருமான் திருவருளால் திருக்கயிலையையடைந்து முறையே கமலினியாராகவும் அநிந்திதையாராகவும் ஆகி உமை யம்மையாருக்குத் தாங்கள் முன் செய்து வந்த அணுக்கத் தொண்டினைச் செய்து மகிழ்ந்தார்கள்.

நம்பியாரூரர் திருவஞ்சைக்களத்திறைவரை வணங்கச் சென்ற பொழுது மனைவாழ்க்கையை அறவே வெறுத்து இறைவன் திருவடிகளிற் சேரும் பெருவேட்கையுடையராய் அஞ்சைக்களத்தப்பனைப் பணிந்து வேண்டினாரென்பது,

வெறுத்தேன்மனை வாழ்க்கையை விட்டொழிந்தேன்
விளங்குங் குழைக்காதுடை வேதியனே
இறுத்தாய் இலங்கைக் கிறையாயவனைத்
தலைபத்தொடு தோள்பல இற்றுவிழக்
கறுத்தாய் கடல்நஞ் சமுதுண்டுகண்டம்
கடுகப்பிரமன் தலையைந் திலுமொன்

றுத்தாய் கடலங் கரைமேன் மகோதை
அணியார்பொழில் அஞ்சைக் களத்தப்பனே.

எனத் திருவஞ்சைக்களத்திறைவனைப் பரவிய திருப்பாடலால் இனிது புலனாம்.

எல்லா வுலகங்களையும் பேரூழிக்காலத்தே ஒரு சேர அழித்தலாகிய மகாசங்காரத் தொழிலை மேற்கொண்டமையால் 'நொடித்தான்'* (* நொடித்தல் அழித்தல், நொடித்தான் - மகா சங்காரகாரணனாகிய சிவபெருமான். அவ்விறைவன் எழுந்தருளிய திருமலை கயிலையாதலால் அது நொடித்தான் மலையென்னும் பெயர்த்தாயிற்று) என்ற காரணப் பெயருடன் திருக்கயிலாயமலையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் மனைவாழ்க்கையினை அறவே வெறுத்துத் தன்னைச்சரணடைந்த நம்பியாரூரர்க்கு அருள் புரியத் திருவுளங்கொண்டு அவரைக் கயிலாய மலைக்கு அழைத்துவரும் படி தேவர்களுடன் வெள்ளை யானையை அனுப்பியருளினாரென்பது, அவரது அழைப்பினையேற்று கயிலைக்குச் செல்லும் நம்பியாரூரர் இறைவனருளால் தாம் பெற்ற பெருஞ் சிறப்பினைக் குறித்துப் பாடிய 'தானெனை முன்படைத்தான்' என்ற திருப்பதிகத்தால் இனிது விளங்கும். கயிலைப் பெருமானது ஆணையால் களிற்றுடன் வந்த அமரர்கள், வன்றொண்டரை வலம் வந்து அவரை வெள்ளை யானையின்மேல் அமர்த்தினரென்பது,

வானை மதித்தமரர் வலஞ்செய்தெனை யேறவைக்க
ஆனை யருள்புரிந்தான் நொடித்தான்மலை யுத்தமனே'

எனவும்,

'விண்ணுலகத்தவர்கள் விரும்ப வெள்ளை யானையின் மேல்
என்னுடல் காட்டுவித்தான் நொடித்தான்மலை யுத்தமனே'

எனவும் வரும் அப்பதிகத் தொடரால் இனிது புலனாம். இங்ஙனம் வெள்ளையானையின் மேற்செல்லும் சுந்தரரது யாக்கை ஊனுடம்பால் உளவாம் மாசு நீங்கி இறவா நிலைமைத்தாகிய தூய திருமேனியாய் விளங்கிற்றென்பது,

"வானெனை வந்தெதிர் கொள்ள மத்தயானை யருள்புரிந்து
ஊனுயிர் வேறுசெய்தான்"

எனவும்,

"துஞ்சுதல் மாற்றுவித்துத் தொண்டனேன்
பரமல்லதொரு வெஞ்சின ஆனைதந்தான்"

எனவும் நம்பியாரூரர் தமக்கு இறைவன் செய்த பெருநலத்தை எடுத்துரைத்தலால் நன்கு விளங்கும்.

நம்பியாரூரரைத் தன்மேற்கொண்டு செல்லும் வெள்ளை யானை நிலமெங்கும் அதிர்ந்து அசைய விசும்பும் நிலை கெட்டதிர வழியிடையே எதிர்ப்பட்ட மலை முகட்டின்மேல் அடிவைத்தேறியபொழுது, கடற்றெய்வமாகிய வருணன் சுந்தர ருடைய திருவடிகளில் மலர்தூவி வழிபட்டனன் என்பது,

'நிலைகெட விண்ணதிர நிலமெங்கு மதிர்ந்தசைய
மலையிடை யானையேறி வழியே வருவேனெதிரே
அலைகடலாலரையன் அலர்கொண்டு முன்வந்திறைஞ்ச'

எனவரும் தொடராற் புலனாகும். வேத ஆகமங்களைக் கற்று வல்ல மெய்யடியார்கள் கூறும் அரன் நாமமும் தோத்திரங்களும் வேதவொலியும் எதிர்ந்திசைப்பச் சிவனடித் தொண்டு பூண்ட வாணன் என்பான் சுந்தரரை வரவேற்றனன் என்பதும் இந்திரன், திருமால், பிரமன் முதலிய தேவர்களெல்லாம் சுந்தரரை எதிர் கொண்டழைத்தன ரென்பதும் யானை மேல்வரும் சுந்தரரைக் கண்ட முனிவர்கள் இவன் யார் என இறைவரை நோக்கி வினவ 'இவன் நந்தம் ஆரூரன்' எனச் சிவபெருமான் திருவாய் மலர்ந் தருளினாரென்பதும்,

அரவொலி யாகமங்கள் அறிவாரறி தோத்திரங்கள்
விரவிய வேதவொலி விண்ணெலாம் வந்தெதிர்ந்திசைப்ப
வரமலி வாணன் வந்து வழிதந்தெனக் கேறுவதோர்
சிரமலி யானைதந்தான் நொடித்தான்மலை யுத்தமனே.

இந்திரன் மால்பிரமன் எழிலார்மிகு தேவரெல்லாம்
வந்தெதிர் கொள்ளமத்த யானை யருள்புரிந்து
மந்திர மாமுனிவர் இவன் ஆரென எம்பெருமான்
நந்தமாரூரனென்றான் நொடித்தான்மலை யுத்தமனே.

என நம்பியாரூரர் கூறுமாற்றால் நன்கு தெளியப்படும்.

இவ்வாறு சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவஞ்சைக் களத்தி லிருந்து வெள்ளானையின் மீதமர்ந்து திருக்கயிலை நோக்கிச் சென்றபொழுது சிவபெருமானது திருவருட்டிறத்தை வியந்து பாடிய 'தானெனை முன் படைத்தான்' என்ற இன்னிசைத் திருப் பதிகத்தினை வருணனிடத்திற் கொடுத்தருள, அவன் அத்திருப் பதிகத்தினைத் திருவஞ்சைக்களத்திலே உய்த்துத் தெரிவித்தான் என்பர் சேக்கிழார். இச்செய்தி,

ஊழிதோ றூழிற்று முயர் பொன்னொடித்தான் மலையைச்
சூழிசை யின்கரும்பின் சுவை நாவலவூரன் சொன்ன
எழிசை யின்தமிழா லிசைந் தேத்திய பத்தினையும்
ஆழி கடலரையா அஞ்சை ப்பர்க் கறிவிப்பதே.

எனவரும் இப்பதிகத் திருக்கடைக்காப்பினால் நன்கு வலியுறுதல் காணலாம். இவ்வாறே சேரமான் பெருமாள் நாயனார்

கயிலையில் இறைவன் திருமுன்னர் அரங்கேற்றிய திருக்கயிலாய ஞானவுலாவை உடனிருந்து கேட்ட மாசாத்தனார், அத்தெய்வப் பனுவலை யுளத்துட்கொண்டு சோழ நாட்டிலுள்ள திருப்பிடவூரிலே வெளிப்படச் சொல்லித் தமிழகத்திலே வழங்கச் செய்தனர் எனச் சேக்கிழாரடிகள் வெள்ளானைச் சருக்கத்திலே குறிப்பிட்டுள்ளமை இவண் நினைக்கத்தகுவதாகும்.

சிவபெருமான் அனுப்பிய வெள்ளானையின் மீதமர்ந்து திருவஞ்சைக் களத்திலிருந்து கயிலைக்குப் புறப்பட்ட சுந்தரர், தம் அன்புடைத் தோழராகிய சேரமான் பெருமாளைச் சிந்தையில் நினைத்துக் கொண்டு சென்றாராக, அதனைத் திருவருளாலறிந்த சேரமான்பெருமாள் நாயனார், தம்முடைய குதிரைக்குத் திருவைந்தெழுத்தினை யுபதேசித்து விசும்பின் வழியே செலுத்திச் சுந்தரர் ஏறிச்செல்லும் வெள்ளானைக்கு முன்பாகக் கயிலாய மலையையடைந்தனர் என்பது,

சேரற்குத் தென்னா வலர்பெருமாற்குச் சிவனளித்த
வீரக் கடகரிமுன்புதம் பந்தி யிவுளிவைத்த
வீரற்கு வென்றிக் கருப்புவில் வீரனை வெற்றிகொண்ட
சூரற் கெனதுள்ளம் நன்குசெய்தாய் இன்று தொண்டு பட்டே.

எனவரும் நம்பியாண்டார் நம்பி வாய்மொழியாலும் சுந்தரர் ஏறிச்செல்லும் வெள்ளானைக்குமுன் இவரது குதிரை செல்வதாகத் தஞ்சைப் பெரியகோயிலில் வரையப் பெற்றுள்ள இராசராசசோழன் காலத்து ஓவியத்தாலும் நன்கு தெளியப்படும்.

சேரமான் பெருமாளும் அவர் தோழராகிய நம்பியாரூரரும் தாம் இவ்வுலகில் தங்கியிருந்த மக்கள் யாக்கையுடனேயே தேவர்களாலும் சென்று சேர்தற்கரிய திருக்கயிலாயத்தை அடைந்து மாதொருபாகராகிய சிவபெருமானைக் கண்டு போற்றி அப்பெருமானது திருவளின்பத்தில் திளைத்து மகிழ்ந்தார்களென்பது,

ஞானவாரூரரைச் சேரரையல்லது நாமறியோம்
மானவ ஆக்கையொடும் புக்கவரை, வளரொளிப்பூண்
வானவராலும் மருவற்கரிய வடகயிலைக்
கோனவன் கோயிற் பெருந்தவத்தோர் தங்கள் கூட்டத்திலே.

எனவரும் திருத்தொண்டர் திருவந்தாதியாலும்,

'களையா வுடலோடு சேரமான் ஆரூரன்
விளையா மதமாறா வெள்ளானைமேல் கொள்ள'

எனவரும் திருவிசைப்பாவினாலும் நன்கு வலியுறுத்தப் பெறும் மெய்ம்மை வரலாறாதல் அறிந்து மகிழத்தகுவதாகும்.



# தேவார ஆசிரியர் காலம்

## 1. அப்பரும் சம்பந்தரும்

தமிழகத்திலே பல்லவரென்ற வகுப்பார் புகுந்து நிலை பெறுவதற்கு முன் கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் இறுதியிலே களப்பிரர் என்ற மரபினர் பாண்டி நாட்டிற் புகுந்து அந்நாட்டின் அரசியலைக் கைப்பற்றிக் கொண்டார்களென்பதும், தமிழ் மொழிக்கும் தமிழர் சமயத்திற்கும் இடையூறு விளைத்தார் களென்பதும், மதுரையில் நிகழ்ந்த கடைச்சங்கம் அழிந்த செய்தியாலும் மூர்த்தி நாயனார் வரலாற்றாலும் நன்கு விளங்கும். சமண சமயத்தினரான இக்களப்பிரரால் பாண்டிநாட்டில் விளைந்த இன்னல்கள் பல. இத்தகைய களப்பிரரது கொடுங் கோலாட்சியை யகற்றி மீண்டும் பாண்டியரது பேரரசைத் தோற்றுவித்த பெருந்தகை கடுங்கோன் என்னும் பெயருடைய பாண்டியனாவன். இச்செய்தி வேள்விக் குடிச் செப்பேடு களாலும் சின்னமானூர்ச் செப்பேடுகளாலும் நன்கு தெளியப் படும்.

தமிழரொடு தொடர்பில்லாத அயல்வேந்தராகிய பல்லவர்கள் தமிழ்நாட்டின் வடபகுதியாகிய தொண்டை நாட்டைக் கைப்பற்றிக் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரியத் தொடங்கியது கி.பி. நான்காம் நூற்றாண்டின் பின்னரேயாகும். பல்லவர்கள் கி.பி. நான்காம் நூற்றாண்டிலேயே தமிழகத்திற் புகுந்து ஆளத்தொடங்கினார்களெனினும் அவர் களது ஆட்சி, கி.பி. ஆறாம் நூற்றாண்டுவரை தொண்டை நாடளவிலேயே நடைபெறுவதாயிற்று. முதல் மகேந்திரவர்மன் காலத்திலேதான் பல்லவராட்சி சோழநாட்டிலும் பரவுவ தாயிற்று. கி.பி. ஏழாம் நூற்றாண்டில் மேலைச்சளுக்கிய மன்னனாகிய இரண்டாம் புலிகேசி யென்பான் தொண்டை நாட்டின் மேல் முதல்முதல் படையெடுத்து வந்தான். அவனது போர் நிகழ்ச்சியைப் பற்றிக் கூறும் ஐகோல் கல்வெட்டில் "துள்ளிவிழும் கயல் மீன்களை யொத்த கண்களையுடைய காவிரியாறு, இவனது யானைகளின் மதநீர் விழுந்து தடைப் பட்டுக் கடலிற் செல்ல இயலாமற் போயிற்று. புலிகேசியும் பல்லவப் பனியைப் போக்கடிக்கும் கடுங்கதிரவனாய்ச் சோழ, கேரள, பாண்டியரைக் களிப்புறச் செய்தான்" என குறிக்கப் பட்டுள்ளது. இதனால் இரண்டாம் புலிகேசி பல்லவர்மேற்

படையெடுத்து வந்த செய்தி சோழ, கேரள பாண்டியர்களாகிய தமிழ் மூவேந்தர்க்கும் களிப்பினை விளைத்ததென்பது நன்கு புலனாகின்றது. ஆகவே தமிழ்வேந்தர் பல்லவர் ஆட்சியை அகற்றுதற்குரிய காலங்கருதி யிருந்தனரென்பது நன்கு போதரும். தமிழ்வேந்தர் தளர்நிலையும் அயல் வேந்தர் உயர் நிலையும் பெற்றிருந்த காலத்தில்தான் திருநாவுக்கரசரும் திருஞான சம்பந்தப் பிள்ளையாரும் தமிழகத்திலே திருவவதாரஞ் செய்த ருளினார்களென்பதும், அவ்விரு பெருமக்களும் தமிழ் நாடெங்கும் சென்று தெய்வங்கொள்கையால் விளையும் பெரு நலங்களையும் அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம் முதலிய நற்பண்புகளிற் குறையாது வாழ்தற்குரிய நெறிமுறையினையும் வற்புறுத்தித் தமிழ் மக்களது வாழ்க்கையினை வளம்பெறச் செய்தார்களென்பதும் அவ்விரு பெருமக்களது வரலாற்றால் நன்கு விளங்கும்.

தேவார ஆசிரியர் மூவருள்ளும் முன்னே தோன்றியவர் திருநாவுக்கரசராவர். அவ்வடிகளாரைச் சமணர் சொற்கேட்டு வருத்திய பல்லமன்னன் கி.பி. 600 முதல் 630 வரை காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்த மகேந்திரவர்மனாவான். இவன் இயற்றிய மத்தவிலாசப் பிரஹசனம் என்ற வடமொழி நாடகத்தில் தன் காலத்தில் நிலவிய பாசுபதம், காபாலம், புத்தம் ஆகிய சமயங்களை மேற்கொண்டொழுகிய மக்களை இழித்துக் கூறியுள்ளான். இந்நாடகத்தில் சமண சமய மக்களை இவ்வாறு இழித்துரையாமையால் இவன் இதனை இயற்றிய காலத்தில் சமண சமயச் சார்புடையவனாக இருந்திருத்தல் வேண்டு மென்பது திண்ணம்.

திருச்சிராப்பள்ளிக் குன்றின் மேலுள்ள உச்சிப் பிள்ளையார் கோயிலுக்குப் பின்புறத்தி லமைந்த சமண முனிவர் களின் கற்படுக்கைக்களி லொன்றில் முதல் மகேந்திரவர்மனுடைய சிறப்புப் பெயர் பொறிக்கப் பட்டிருத்தலால்* (* 1938-ஆம் ஆண்டின் தென்னிந்தியக் கல்வெட்டறிக்கை, 2-ஆம் பகுதி 3-ஆம் பாரா; செந்தமிழ் 45-ஆம் தொகுதி, பசு 80-'திருச்சிராப்பள்ளி' என்னும் தலைப்புடைய கட்டுரை) அவ்வேந்தன் சமண சமயத்துறவிகளை ஆதரிக்காதவனென்பதும் அச்சமயத்தின் வழி ஒழுக விரும்பியவனென்பதும் நன்கு தெளியப் படும். கி.பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தொண்டை நாட்டையும் சோழ நாட்டையும் ஆட்சி புரிந்த பல்லவ வேந்த னாகிய இம்மகேந்திரவர்மனே திருச்சிராப் பள்ளிப் பெருங் குன்றைக் குடைந்து அங்கே சிவபெருமானுக்குத் திருக்கோயில மைத்தவனென்பது ஆராய்ச்சியாற் புலனாகின்றது. வட மொழியிற் பெரும்புலமை பெற்று விளங்கிய இவ்வேந்தன், தான் நிறுவிய திருச்சிராப்பள்ளித் திருக்கோயிலில் வடமொழிச்

சுலோகங்கள் சிலவற்றைப் பொறித்துள்ளான். தான் புறச் சமயத்திலிருந்து திரும்பிச் சிவநெறியைக் கடைப் பிடித்துச் சைவ னாகிய தன்மையையும் திருச்சிராப்பள்ளிக் குன்றின்மேல் அமைந்த குகைக்கோயிலிற் சிவலிங்கத் திருவுருவத்தை எழுந் தருளுவித்த செய்தியையும் அச்சுலோகங்களிற் குறிப்பிட் டுள்ளான்,* (* தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி I, 33, 34-ம் கல்வெட்டுக்கள்). இச்செய்திகளை நுணுகி நோக்குங்கால் இவ் வேந்தனது ஆட்சியின் பிற்பகுதியிலே தான் திருச்சிராப்பள்ளிக் குன்றில் இப்பொழுதுள்ள சிவாலயம் அமைக்கப் பெற்றிருத்தல் வேண்டுமென்பதும் அதற்குமுன் இவ்வேந்தன் சமண சமயத்தை மேற்கொண்டொழுகிய காலத்தில் இக்குன்றின்கண்ணே இப் பொழுதுள்ள திருக்கோயில் இருந்திலதென்பதும் நன்கு புலனாம் என்பர்.* (* செந்தமிழ் 45-ம் தொகுதி, பக்கம் 78).

சமணர்களாற் கருங்கல்லினோடு பிணித்துக்கடலில் தள்ளப் பெற்ற திருநாவுக்கரச சுவாமிகள், திருவைந்தெழுத்தினை ஓதி இறைவன் திருவருளால் அக் கருங்கல்லே தெப்பமாகப் பெற்றுக் கடலைக்கடந்து திருப்பாதிரிப்புலியூரருகே கரையேறினார். தமக்குத் தோன்றாத் துணையாயுதவிய பெருமான் எழுந்தருளிய திருக்கோயிலை யடைந்து 'ஈன்றாளுமாய்' எனத் தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார். சமணர்கள் செய்த வஞ்சனைகளையெல்லாங் கடந்து திருநாவுக்கரசர் உய்ந்து கரையேற உதவிய இறைவனது திருவருட்டிறத்தை நன்குணர்ந்த பல்லவ மன்னன், தன்னுடைய பழவினைகளெல்லாம் அற்றொழியத் திருநாவுக்கரசரைப் பணிந்து சைவனாயினான். பாடலிபுத்திரத்திலிருந்த சமணப் பள்ளிகளையும் பாழிகளையும் ஒருசேர இடித்து அவற்றின் கற்களைக் கொண்டுவந்து திருவதி கையில் 'குணபர ஈச்சுரம்' என்ற பெயருடைய திருக்கோயிலைக் கட்டினான் என்பது வரலாறு,

புல்லறிவிற் சமணர்க்காப் பொல்லாங்கு புரிந்தொழுகும்
பல்லவனும் தன்னுடைய பழவினைப் பாசம்பறிய
அல்லலொழிந் தங்கெய்தி ஆண்ட அரசினைப்பணிந்து
வல்லமணர் தமைநீத்து மழவிடையோன் தாளடைந்தான்.*

(* பெரியபுராணம், திருநாவுக்கரசர், செய்யுள் 145)

வீடறியாச் சமணர்மொழி பொய்யென்று மெய்யுணர்ந்த
காடவனுந் திருவதிகை நகரின்கண் கண்ணுதற்குப்
பாடலிபுத் திரத்திலமண் பள்ளியொடு பாழிகளும்
கூட இடித்துக் கொணர்ந்து குணபரஈச்சர மெடுத்தான்.*

(* பெரியபுராணம், திருநாவுக்கரசர், செய்யுள் 146)

எனவரும் சேக்கிழார் வாய்மொழிகளால் இச்செய்தி இனிது புலனாதல் காணலாம்.

குணபரன் என்பது பல்லவ மன்னர்களுள் முதல் மகேந்திர வர்மனைக் குறித்த சிறப்புப் பெயராதல் திருச்சிராப்பள்ளியிலும் தொண்டை நாட்டைச் சார்ந்த வல்லத்திலும் பொறிக்கப் பெற்றுள்ள மகேந்திரவர்மன் காலத்துக் கல்வெட்டுக்களால் இனிது விளங்கும்.* (* தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி II, எண் 72) திருச்சிராப்பள்ளிக் கோயிலிற் பொறிக்கப்பட்டுள்ள வட மொழிக் கல்வெட்டு "லிங்கத்தை வழிபடும் குணபரன் என்னும் பெயர் கொண்ட அரசன் இந்த லிங்கத்தினால் புறச் சமயத்தி லிருந்து திரும்பிய அவனது ஞானம் நெடுங்காலம் நிலைநிற்ப தாகுக" எனக் கூறுதலின், குணபரன் என்னும் பெயருடைய மகேந்திரவர்மன் முன்பு சமண சமயமாகிய புறச்சமயத்தை மேற் கொண்டொழுகிப் பின்பு இறைவன் திருவருளால் சைவனாகித் திருச்சிராப்பள்ளி மலைக்கோயிலைக் கட்டினான் என்பது நன்கு புலனாகும்.* (* தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி I; எண் 33, 34) மேற்காட்டிய குறிப்புக்களால் குணபரன் என்ற தன் பெயரால் திருவதிகையிற் சிவன் கோயிலைக் கட்டிய பல்லவ வேந்தன் முதல் மகேந்திரவர்மனே யென்பது உறுதியாகத் தெரிகின்றது.

திருநாவுக்கரசர் இறைவன் திருவருளால் சமண சமயத் தொடர்பொழியச் சைவ சமயத்தை மேற்கொண்ட காலத்து அவர் முதுமைப் பருவத்தினராக இருந்திருத்தல் வேண்டுமெனத் தோன்றுகிறது. அந்நிலையில் அவர்க்கு அறுபது வயதிற்கு மேற்பட்டிருத்தல் வேண்டுமென்பர் தமிழ் வரலாறு எழுதிய தஞ்சை சீநிவாசபிள்ளையவர்கள். மகேந்திரவர்மன் ஆட்சி கி.பி. 600 முதல் 630 வரையென்று தெரிதலால் மகேந்திரன் பட்டத்தை யேற்ற காலத்தில் திருநாவுக்கரசர் தருமசேனர் என்ற பெயருடன் சமண சமயத்தில் சார்ந்திருந்தாரென்றும் அவருக்கு அப்பொழுது ஏறக்குறைய முப்பது வயது நடந்ததென்றும் கொள்ளலாம். அங்ஙனம் கொள்ளுங்கால் சமணஞ் சார்தற்கு முன் மருணீக்கியார் என்ற இயற்பெயரோடு விளங்கிய அவர் கி.பி. 575-ஆம் ஆண்டிலோ அதற்கு ஒன்றிரண்டாண்டுகள் முன்னோ பின்னோ திருவவதாரஞ் செய்தருளினாரெனக் கொள்ளுதல் பொருத்தமுடையதாகும். இறைவனருளால் சூலைநோய் தீரப் பெற்று திருநாவுக்கரசு என அழைக்கப்பட்ட இப்பெருந் தகையார், தில்லையம்பலவாணனை வழிபட்டுப் போற்றும் நிலையில், சீகாழியில் திருஞானசம்பந்தப் பிள்ளையார் என்னும் இளங்குழந்தை மூவாண்டிலே உமையம்மையாரளித்த ஞானப் பாலைப் பருகித் திருநெறிய தமிழ் பாடிய வியப்புடைய நிகழ்ச் சியை அடியார்கள் சொல்லக் கேட்டார். உடனே தில்லைப் பெருமான்பால் விடைபெற்றுத் திருஞானசம்பந்தப் பிள்ளை யாரைக் காண வேண்டுமென்னும் பெருவிருப்பத்தால் சீகாழிப்

பதிக்குச் சென்றார். அக்காலத்தில் திருநாவுக்கரசரது திருமேனி நிலையினைக் கூறப்போந்த சேக்கிழார்,

> சிந்தையிடை யறாவன்பும் திருமேனி தனிலசைவும்
> கந்தைமிக யாங்கருத்தும் கையுழவாரப் படையும்
> வந்திழிகண் ணீர்மழையும் வடிவிற்பொலி திருநீறும்
> அந்தமிலாத் திருவேடத் தரசுமெதிர் வந்தணைய.

என்ற பாடலால் அவரது உடம்பின் முதுமைத் தளர்ச்சியைத் தெளிவாகக் கூறுகின்றார். திருநாவுக்கரசர் முதன் முதல் சீகாழிப் பதியையடைந்து திருஞானசம்பந்தப் பிள்ளையாரைக் கண்ட காலத்துப் பிள்ளையார்க்கு உபநயனச் சடங்கு முடிந்ததெனப் பெரியபுராணத்திற் கூறப்பட்டுள்ளது. உபநயனம் செய்தற்குரிய பருவம் ஏழாவது வயதெனச் சண்டேசுர நாயனார் புராணத்தில் சேக்கிழார் தெளிவாகக் கூறியுள்ளார். எனவே திருநாவுக்கரசர் சீகாழிக்கு வந்த பொழுது திருஞானசம்பந்தப் பிள்ளையார்க்கு ஏழாவது வயது நிரம்பி எட்டாம் வயது நடந்த தென்பது பெறப்படும்.

சீகாழியில் ஞானசம்பந்தப் பிள்ளையாருடன் அன்பினால் அளவளாவி மகிழ்ந்த அப்பரடிகள் சம்பந்தர்பால் விடை பெற்றுச் சிவதலங்களை வழிபடச் சென்ற பின்பு ஞானசம்பந்தர் சிலகாலம் சீகாழிப்பதியிலே தங்கியிருந்து பலவகை மிறைக் கவிகளையும் செந்தமிழின் மூல இலக்கியமாகப் பாடிப் போற்றி இறைவனை வழிப்பட்டிருந்தனர். பின்பு தாமும் அடியார் குழாத்துடன் சிவதலங்களை வழிபட விரும்பிச் சோழ நாட்டில் காவிரியின் வடகரை வழியாகச் சென்று மழநாடு, கொங்குநாடு ஆகியவற்றிலுள்ள எண்ணிறந்த சிவாலயங்களை இறைஞ்சிப் பாடினார். பின் சோழ நாட்டை யடைந்து காவிரியின் தென்கரை யிலமைந்த திருக்கோயில்களை இறைஞ்சிப்பாடித் திருசெங் காட்டங்குடியை யடைந்தார். அப்பதியிலே பரஞ்சோதி யாராகிய சிறுத்தொண்ட நாயனாரால் உபசரிக்கப் பெற்றுக் கணபதீச்சர மென்னும் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனை இன்னிசைச் செந்தமிழாற் பாடிப் போற்றினார் எனப் பெரிய புராணம் கூறுகின்றது. திருச்செங்கொட்டங்குடித் திருப்பதிகத்தில் ‘செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டன் பணிசெய்ய’ எனவும் ‘கன்னவில்தோட் சிறுத்தொண்டன்’, ‘சிட்டன் சீர்ச் சிறுத் தொண்டன்’, ‘செருவடிதோட் சிறுத்தொண்டன்’, ‘சீராளன் சிறுத்தொண்டன்’ எனவும் சிறுத்தொண்ட நாயானாரைத் திருஞானசம்பந்தப் பிள்ளையார் சிறப்பித்துப் போற்றியுள்ளார். சிறுத்தொண்டன் என்பது இவ்வடியாரது இயற்பெயரன்று; பரஞ்சோதியார் என்பதே இவரது இயற்பெயராகும். இவர் சிவனடியார்கள்பால் மிகவும் சிறுமையுடையராகப் பணிந்

தொழுகிய காரணத்தால் சிறுத்தொண்டர் என அழைக்கப் பெற்றார். இச்செய்தி,

சீதமதி யரவினுடன் செஞ்சடைமேற் செறிவித்த
நாதனடியார் தம்மை நயப்பாட்டு வழிபாட்டால்
மேதகையா ரவர் முன்பு மிகச்சிறிய ராயடைந்தார்
ஆதலினாற் சிறுத்தொண்ட ரெனநிகழ்ந்தார் அவனியின்மேல்.*
(* சிறுத்தொண்டர் புராணம் செய்யுள், 15)

எனவரும் பெரிய புராணச் செய்யுளாற் புலனாதல் காணலாம். சம்பந்தர் திருச்செங்கரட்டங்குடியிற் சென்று சிறுத்தொண்டரால் உபசரிக்கப்பெற்ற காலத்தில் அவருடைய அருமைப் புதல்வர் சீராளதேவர்க்கு மூன்றாம் ஆண்டு நிரம்பி அக்குழந்தையைப் பள்ளி பயில வைத்தார்கள் என்பர் சேக்கிழார்.* (*சிறுத்தொண்டர் புராணம் செய்யுள் 22,23) பரஞ்சோதியார் செங்காட்டங்குடியில் தங்கி மனையறம் நிகழ்த்தி அடியார்களைப் போற்றிச் சிறுத் தொண்டராகத் திகழ்வதற்கு முன்னே அவர், போர்த்துறையில் வல்லவராய் அரசனால் நன்கு மதிக்கப் பெற்றுப் பகைவென்று திறைகொண்டு சேனைத் தலைவராய்த் திகழ்ந்தாரென்பது பெரிய புராணத்தால் நன்கறியப்படும். படைத்தலைவராகிய பரஞ்சோதியார் தம் வேந்தன் பொருட்டுப் போர் மேற்கொண்டு சென்று வடநாட்டில் வாதாபியென்னும் பழைய நகரத்தை அழித்து ஆங்குள்ள பலவகைப் பொருள்களையும் தம் அரசன் முன் கொணர்ந்தார் எனப் பெரியபுராணம் கூறும்.

வாதாபி என்பது மேலைச்சாளுக்கிய நாட்டின் தலை நகராகும். இதனை யிடமாகக் கொண்டு ஆட்சி புரிந்த சாளுக்கிய வேந்தனாகிய இரண்டாம் புலிகேசியென்பான் முதல் மகேந்திர வர்மன் ஆட்சியில் முதன்முறையாகத் தொண்டை நாட்டின்மேற் படையெடுத்து வந்தான். அவன் வந்த காலத்துப் பல்லவ மன்னன் காஞ்சியிலுள்ள கோட்டையில் ஒளிந்துகொண்டானென்று ஐகோல் கல்வெட்டுக் கூறுகின்றது. மகேந்திரன் தன் பகைவர் களைப் புள்ளலூரில் வென்றான் என்று நந்திவர்ம பல்லவன் அளித்த காசாக்குடிச் செப்பேடு கூறுகின்றது. யுவான் சுவாங் என்னும் சீனதேச யாத்திரிகன் கி.பி. 641-ஆம் ஆண்டில் வாதாவி நகர்க்குச் சென்று அங்குச் சிலநாள் தங்கியிருந்த பொழுது தான் கண்ட அந்நகரத்தின் சிறப்பியல்பினைத் தனது யாத்திரைக் குறிப்பில் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளான். அக்குறிப்பினைக் கூர்ந்து நோக்குங்கால் கி.பி. 641-ஆம் ஆண்டிலோ அதற்கு முன்னோ வாதாபி நகரம் அழிந்திருத்தலியலாதென்பது திண்ணம். முதல் மகேந்திரவர்மனுடைய புதல்வனாகிய நரசிங்கப் போத்தரையன் என்பான் தன் நாட்டின்மேல் இரண்டாம் முறையாகப் படை யெடுத்துவந்த சாளுக்கிய வேந்தனாகிய புலிகேசியைப் பரியளம்,

சூரமாரம், மணிமங்கலம் முதலிய ஊர்களிற் பொருது வென்றான். அவ்வளவில் நில்லாது சாளுக்கிய வேந்தனைத் துரத்திச் சென்று அவனது வாதாவி நகரத்தைக் கைப்பற்றி யழித்தான். அவ்வூரில் வெற்றித்தூண் ஒன்றை நாட்டி அதன் மேல் தன் வீரச்செயலைக் கூறும் கல்வெட்டினையும் பொறித்தான்.* (* தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி XI, எண் 1) பல்லவன் வாதாவி நகரத்தில் நாட்டிய அவ்வெற்றித் தூணில் 'மகாமல்ல', 'க்ஷிதிபுஜாம் அக்ரேஸர: பல்லவ', 'ஸ்தம்பம் ஜய' என்ற தொடர்கள் இக்காலத்திலும் அழியாது காணப்படுகின்றன. மகாமல்லன் என்ற சிறப்புப் பெயருடையவனும் அரசர்களில் முதல்வனுமாகிய நரசிங்கவர்ம பல்லவனால் நாட்டப்பட்டது. அவ்வெற்றித்தூண் என்பது அதன்கட் காணப்படும் மேற்காட்டிய தொடர்களால் இனிது புலனாம்.

நரசிங்கவர்ம பல்லவனுடைய படைகள் மேலைச் சாளுக்கிய நாட்டின்மேற் சென்று வாதாவி நகரத்தை யழித்த செயல் கி.பி. 642-இல் நடந்திருத்தல் வேண்டுமென்பர் வரலாற்றாய்ச்சியாளர், நரசிங்கவர்மன் ஆட்சியில் நடந்த இவ்வாதாவிப் போர் இவன் பேரன் பரமேசுரவர்மனால் அளிக்கப்பட்ட கூரம் சாசனத்திற் குறிக்கப்பட்டுளது. இப்பெரும் போரில் நரசிங்கவர்மனுக்குச் சேனைத்தலைவராயிருந்து வியக்கத்தக்க பெருவெற்றியைத் தந்தவர் பரஞ்சோதியாரென்னும் இயற்பெயருடைய சிறுத் தொண்ட நாயனாராவர். வாதாவிப் போரில் இவர் தேடித்தந்த வெற்றியினை,

> **மன்னவர்க்குத் தண்டுபோய் வடபுலத்து வாதாவித்**
> **தொன்னகரந் துகளாகத் துளைநெடுங்கை வரையுகைத்துப்**
> **பண்மணியும் நிதிக்குவையும் பகட்டினமும் பரித்தொகையும்**
> **இன்னன எண்ணில கவர்ந்தே இகலரசன் முன்கொணர்ந்தார்.**

எனவரும் செய்யுளால் சேக்கிழார் பெருமான் விரித்துக் கூறி யுள்ளார்.

இவ்வாறு நரசிங்கவர்மனது படைத்தலைவராயிருந்து வடபுலத்திற்சென்று செய்த பெரும்போரில் வாதாவி நகரத்தை யழித்த பரஞ்சோதியாரே பின்னர் அவ்வேந்தனது விருப்பத்திற் கிசைந்து தமது பிறந்தகமாகிய திருச்செங்காட்டங்குடியை யடைந்து மனைத்தக்க மாண்புடைய மனைவியாராகிய வெண் காட்டு நங்கையருடன் மனையறம் நிகழ்த்திச் சிவனடியார் களுக்குத் திருவமுதளித்துச் சிறுத்தொண்டர் என்னும் சிறப்புப் பெயர் பெற்றுத் திகழ்ந்தாரென்பது பெரிய புராணத்தையும் வரலாற்றுச் சான்றுகளையும் ஒப்பு நோக்கி ஆராய்வார்க்கு இனிது விளங்கும்.

கி.பி. 642-இல் வாதாவி நகரத்தைக் கைப்பற்றிய பரஞ் சோதியார், பல்லவமன்னன் வேண்டுகோட்கிணங்கிச் சேனைத் தலைவர் பதவியிலிருந்து விலகிச் செங்காட்டங்குடியினை யடைந்து மனையறயம் நிகழ்த்துங்கால் அவர்க்குச் சீராளன் என்னும் அருமைப் புதல்வன் பிறந்தது கி.பி. 644-ஆம் ஆண்டி லெனக் கொள்ளலாம். அவனுக்கு மூன்றாம் வயது நிகழ்ந்த கி.பி. 647-ஆம் ஆண்டினையடுத்துத் திருஞானசம்பந்தர் திருச்செங் காட்டங்குடியடைந்து சிறுத்தொண்ட நாயனரால் உபசரிக்கப் பெற்றாரெனக் கருதுதல் பொருத்தமுடையதாகும். உபநயனஞ் செய்யப்பெற்றுச் சீகாழிப்பதியிலிருந்த திருஞானசம்பந்தப் பிள்ளையாரைத் திருநாவுக்கரசர் சந்தித்தபொழுது பிள்ளை யார்க்கு எட்டாம் வயது நிகழ்ந்ததென்பது முன்பு விளக்கப் பட்டது. அதன்பின் சம்பந்தர் மேற்கொண்ட தலயாத்திரையில் ஓராண்டு கழிந்திருத்தல் கூடும். ஆகவே அவர் திருச்செங் காட்டங்குடியில் சிறுத்தொண்டரால் உபசரிக்கப் பெற்ற காலமாகிய கி.பி. 647-இல் அவருக்கு ஒன்பது வயது நடைபெற்ற தெனக் கொள்ளலாம். இங்ஙனம் கொள்ளவே திருஞானசம்பந் தர் திருவவதாரம் செய்தருளியது கி.பி. 638-ஆம் ஆண்டினை யடுத்து நிகழ்ந்ததென்பது ஒருவாறு உய்த்துணரப்படும்.

செங்காட்டங்குடியிலிருந்து புறப்பட்ட சம்பந்தர் திருப்புகலூரில் முருகனார் திருமடத்தில் சிறுத்தொண்டர் நீலநக்கர் முதலிய அடியார்களுடன் தங்கியிருந்தபொழுது திருநாவுக்கரசர் திருவாரூரரை யிறைஞ்சிப் போற்றி வருபவர், ஞானசம்பந்தரை இரண்டாம் முறையாகச் சந்தித்தாரென்பதும், அவ்விருபெருமக்களும் திருக்கடவூர், திருவீழிமிழலை முதலிய பல தலங்களை வணங்கிப்பாடித் திருமறைக்காட்டில் தங்கியிருந்த பொழுது பாண்டி நாட்டிலிருந்து மங்கையர்க்கரசியாராலும் குலச்சிறையாராலும் அனுப்பப்பட்ட தூதர்கள் திருஞான சம்பந்தரை வணங்கிப் பாண்டி நாட்டுக்கு எழுந்தருளும் படி வேண்டிக் கொள்ளப் பிள்ளையாரும் அதற்கு இசைந்து தென்றமிழ் நாட்டிற் சிவநெறி வளர்க்க எழுந்தருளினாரென்றும் கூறுவர் சேக்கிழார். பிள்ளையார் தென்னாட்டிற் சென்று திருவாலவாயிறைவர் திருவருளால் புறச்சமய இருள்நீக்கிச் சிவநெறியை நிலைநாட்டிய காலத்து அவர்க்குப் பத்தாம்வயது நடைபெற்றதெனக் கொள்ளலாம். அக்காலம் கி.பி. 648-ஆம் ஆண்டையொட்டியதாகும். கி.பி. 640 முதல் 670 வரை பாண்டி நாட்டை ஆட்சி புரிந்த வேந்தன் மாறவர்மன் அரிகேசரியென்ற பெயருடைய பாண்டியனாவன். இவன் செழியன் சேந்தன் என்பவனுடைய புதல்வன். இவனைச் சுந்தரபாண்டியனெனவும் கூன் பாண்டியனெனவும் திருவிளையாடற்புராணம் கூறும்.

இவன் சேர வேந்தனையும் குறுநில மன்னர்களையும் பாழி, நெல்வேலி, செந்நிலம் முதலான ஊர்களிற் பொருது வென்றனன் என்றும் சோழர்க்குரிய தலைநகராகிய உறையூரை ஒரு பகலிற் கைப்பற்றினான் என்றும் வேள்விக்குடி செப்பேடுகள் கூறுகின்றன. இக்குறிப்பினை நுணுகி நோக்கிய ஆராய்ச்சியாளர் இவன் முதலில் சோழமன்னனை வென்று உறையூரைக் கைப்பற்றி யிருத்தல் வேண்டுமென்றும் பிறகு அவ்வளவன் வேண்டிக் கொண்டவாறு அவன் மகளார் மங்கையர்க்கரசியாரை மணந்து பகைமை யொழிந்து உறவும் நட்பும் கொண்டிருத்தல் வேண்டு மென்றும் உய்த்துணர்ந்து கூறுவர்.* (* பாண்டியர் வரலாறு, இரண்டாம் பதிப்பு, பக். 41).

மாறவர்மன் அரிகேசரியாகிய இவ்வேந்தன், முதலில் சமண சமயப் பற்றுடைவனாக இருந்து பின்னர் இவனது மனைவியார் மங்கையர்க்கரசியார் மந்திரியார் குலச்சிறையார் ஆகிய இப் பெருமக்களது நன்முயற்சியால் திருஞானசம்பந்தப் பிள்ளை யாரை வணங்கி அவர் திருக்கரத்தால் திருநீறு அணியப் பெற்று வெப்பு நோயும் கூனும் தவிர்ந்து நின்றசீர் நெடுமாறன் என அழைக்கப் பெற்றான் என்பது வரலாறு. 'நிறைக்கொண்ட சிந்தையான் நெல்வேலி வென்ற நின்றசீர் நெடுமாறன் அடி யார்க்கும் அடியேன்' என இவ்வேந்தர் பெருமானைச் சிவனடி யாருள் ஒருவராக வைத்துப் போற்றுவர் சுந்தரமூர்த்தி சுவாமிகள். இத்தென்னவர் பெருமானுக்கு வாழ்க்கைத் துணையாகிய மங்கையர்க்கரசியாரும் மந்திரியாராகிய பெரு நம்பி குலச்சிறை யாரும் திருஞானசம்பந்தப் பிள்ளையாரை மதுரைக்கு அழைத்துப் போற்றித் தெய்வத் தமிழாற் சிவநெறி வளர்த்த பெருந்திருவினரென்பது ஞானசம்பந்தர் வரலாற்றால் நன்கு விளங்கும்.

நின்றசீர் நெடுமாறனுக்கு மகனாகிய கோச்சடையன் ரணதீரன் என்பான் கி.பி. 670 முதல் 710 வரை பாண்டி நாட்டையாண்டான். அவன் கி.பி. 674-இல் வடநாட்டிலிருந்து தமிழ்நாட்டின் மேற்படையெடுத்து வந்த முதலாம் விக்கிர மாதித்தனை மருதூரிலும் மங்கலபுரத்திலும் எதிர்த்துப் பொருது தோல்வியுற்றோடச் செய்தமையும், இரண்டாம் புலிகேசியின் மகனாகிய சாளுக்கிய விக்கிரமாதித்தனைப் பொருது துரத்தும் இப்போர் நிகழ்ச்சியிற் பல்லவ வேந்தனாகிய முதலாம் பரமேசுரவர்மனும் அவன் மகன் இரண்டாம் நரசிம்மவர்மனும் கலந்து கொண்ட செய்தியும் வேள்விக்குடி, கூரம், கேந்தூர் என்னு மிடங்களிற் கிடைத்த பாண்டிய பல்லவ சாளுக்கியர்களின் செப் பேடுகளைக் கொண்டு வரலாற்றாசிரியர்களால் நன்காராய்ந்து முடிவு செய்யப்பட்டுள்ளன.

இனி, கோச்சடையன் ரணதீரன் என்பான், நின்றசீர் நெடுமாறனுக்குப்பின் ஆட்சியுரிமை பெற்றதுபோல முதலாம் பரமேசுரவர்மனும் தன் பாட்டனாகிய வாதாவி கொண்ட நரசிம்மவர்மனுக்குப் பின் இரண்டாண்டுகளில் ஆட்சியுரிமை பெற்றுள்ளான். எனவே கோச்சடையன் ரணதீரனுக்குத் தந்தையாகிய நின்றசீர் நெடுமாறனும் பரமேசுரவர்மன் ஆட்சிக்கு மூன்றாண்டுகளுக்கு முன் மறைந்த வாதாவிகொண்ட நரசிங்கவர்மனும் சாமகாலத்தவரென்பதும், நின்றசீர் நெடுமாறனது வெப்புநோய் நீக்கிய சம்பந்தரும், வாதாவி கொண்ட நரசிம்ம பல்லவனுடைய படைத் தலைவராகிய சிறுத்தொண்டரும். கி.பி. ஏழாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் இத்தமிழகத்தே வாழ்ந்த திருவருட் செல்வர்களென்பதும் நன்கு தெளியப்படும்.

இம்முடிபினை முதன் முதல் ஆராய்ந்து வெளிப்படுத்திய பெருமை மனோன்மணீய ஆசிரியர் சுந்தரம் பிள்ளையவர்களுக்கே யுரியதாகும். அவர்கள் தமது நுண்ணுணர்வினால் ஆராய்ந்து வெளியிட்ட இக்கொள்கை அவர்கட்குப் பின் கிடைத்த சாசனங்களாகிய வரலாற்றுச் சான்றுகளாலும் உறுதி பெற நிலைத்துவிட்டது. சம்பந்தர் காலத்தைப் பற்றிய பிள்ளையவர்களது ஆராய்ச்சி முடிவு ஏனைய சைவத்திருமுறையாசிரியர்களின் காலத்தைக் கண்டறிதற்கும் சிறந்த எல்லைக் கல்லாகத் திகழ்கின்றதென்பதனை வரலாற்றாசிரியர்கள் நன்குணர்வார்கள்.

## 2. சுந்தரர்

நம்பியாரூரர் சிவனடியார்கள் அறுபத்து மூவருள் இறுதியில் வாழ்ந்தவரென்பது அவ்வடியார்களைப் போற்றிப் பரவிய திருத்தொண்டத் தொகைத் திருப்பதிகத்தால் நன்கு விளங்கும். திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் இறைவனது திருவடி நிழலடைந்து இன்புற்ற சில நாட்களுக்குப் பின் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தமிழகத்திலே திருவவதாரஞ் செய்து திருவெண்ணெய் நல்லூர்ப் பெருமானால் தடுத்தாட் கொள்ளப் பெற்றுப் 'பித்தா' என்பது முதல் 'ஊழிதோறூழி' யென்பதீறாக வுள்ள திருப்பாடல்களைப் பாடித் திருக்கயிலையை அடைந்தாரென்பது வரலாறு.

"பின்பு சில நாளின்கண் ஆரூர் நம்பி
பிறங்குதிருவெண்ணெய் நல்லூர்ப் பித்தாவென்னும்
இன்பமுதல் திருப்பதிகம் 'ஊழிதோறும்'
ஈறாய் முப்பத்தொண்ணாயிரமதாக
முன்பு புகன்றவர் நொடித்தான் மலையிற் சேர்ந்தார்"

எனவரும் திருமுறைகண்ட புராணச் செய்யுளால் இவ்வுண்மை புலனாதல் காணலாம்.

திருஞானசம்பந்தபிள்ளையார் திருநல்லூர்ப் பெருமணத்தில் அடியார் குழுவுடன் ஈறில் பெருஞ் சோதியினிற் புகுந்து சில மாதங்கள் கழித்தே திருநாவுக்கரசர் திருப்புகலூரில் நண்ணரிய சிவானந்த ஞானவடிவாகி அண்ணலார் சேவடிக்கீழ் அமர்ந்து இன்புற்றார். இச்செய்தி பெரியபுராணத்திற் கூறப்படும் இவ்விரு பெருமக்கள் வரலாறுகளையும் ஒப்பு நோக்கி ஆராய்வார்க்கு நன்கு புலனாம். திருநாவுக்கரசர் திருவவதாரஞ் செய்தருளிய தாகக் கருதப்படும் கி.பி. 575-ஆம் ஆண்டுடன் அவர் இந்நில வுலகில் வாழ்ந்த காலமாகிய எண்பத்தோராண்டுகளையும் சேர்த்துக் கணக்கிட அவர் திருப்புகலூரில் இறைவன் திருவடியிற் கலந்து மறைந்த காலம் கி.பி. 656-ம் ஆண்டினையொட்டிய தென்பது ஒருவாறு புலனாம். இக்காலப் பகுதியையடுத்து ஒருசில ஆண்டுகளுக்குப் பின் தோன்றியவர் சுந்தரர் என முன்னோர் கூறுதலால் அப்பெருந்தகையார் வாழ்ந்த காலம் கி.பி. ஏழாம் நூற்றாண்டின் பிற்பகுதியும் எட்டாம் நூற்றாண்டின் தொடக்க முமாமெனக் கொள்வது பெரிதும் பொருத்தமுடையதாகும். இம்முடிபினை வலியுத்தற்குரிய சான்றுகள் சில சுந்தரர் பாடிய திருப்பதிகங்களிற் காணப்படுகின்றன.

சுந்தரர், தம் காலத்தில் தமிழகத்திலே பெருவேந்தனாகவும் சிறந்த சிவனடியாராகவும் திகழ்ந்த வேந்தர் பெருமானொரு வனைக் "கடல் சூழ்ந்த உலகெலாங்காக்கின்ற பெருமான் காடவர் கோன் கழற்சிங்கன் அடியார்க்கும் அடியேன்" எனத் தாம் பாடிய திருத்தொண்டத் தொகையில் குறித்துப் போற்றியுள்ளார். இத்தொடரில் அமைந்துள்ள 'காக்கின்ற' என்னும் நிகழ்காலப் பெயரெச்சமானது. இங்ஙனங் குறிக்கப்பட்ட காடவர்கோனாகிய கழற்சிங்கன் சுந்தரர் காலத்தில் வாழ்ந்தவன் என்பதை நன்கு தெளிவிப்பதாகும். காடவர் என்பது பல்லவர் மரபினரைக் குறித்து வழங்கும் பெயர்களுள் ஒன்று. எனவே இங்குக் கழற் சிங்கன் எனப் போற்றப்பட்ட வேந்தர் பெருமான் பல்லவர்குலத் தோன்றலென்பதும் இனிது புலனாம். திருத்தொண்டத் தொகையடியார்களுள் ஒருவராக இக்கழற்சிங்கன் போற்றி வழிபடப் பெற்றிருத்தலைக் கூர்ந்து நோக்குங்கால் இவ்வரசர் பெருமான் சிறந்த சிவபக்தனென்பது நன்கு தெளியப்படும். இப்பெருந் தகைக்கு வழங்கும் கழற்சிங்கன் என்ற பெயரில் உள்ள கழல் என்பது இவரது வெற்றித்திறத்தை விளக்குதற் கியைந்த அடை மொழியாகும். ஆகவே 'சிங்கன் என்பதே இவரது இயற்பெயராகச் சுந்தரராற் குறிக்கப்பட்டதெனக் கொள்ளுதல் வேண்டும். நரசிங்கன் என்ற பெயரைச் சிங்கன் என வழங்கும்

மரபுண்மை சிங்கப்பிரான் சிங்கப்பெருமாள் என்ற பெயர் வழக்கத்தால் நன்குணரலாம். எனவே திருத்தொண்டத் தொகையில் கழற்சிங்கன் எனக் குறிக்கப்பெற்ற பல்லவ வேந்தன் நரசிங்கன் என்ற இயற் பெயரையுடைய தோன்றல் என்பது நன்கு துணியப்படும்.

தேவார ஆசிரியர்கள் காலத்தையொட்டி ஆட்சி புரிந்த பல்லவ வேந்தர்களுள் சிங்கன் என்ற பெயரால் அழைக்கப் பட்டவர் இருவர். அவருள் முதலாமவன் வாதாவிகொண்ட நரசிங்கவர்மன். இரண்டாமவன் இராஜசிங்கன் என வழங்கும் இரண்டாம் நரசிங்கவர்மனாவான். இவ்விருவருள் முதல் நரசிங்கவர்மன் திருஞானசம்பந்தப்பிள்ளையார் காலத்தவன் என்பதும் சிறுத்தொண்டராகிய பரஞ்சோதியார் இவ்வேந்தனது படைத்தலைவராய்ச் சென்று வாதாவி நகரத்தை வென்றன ரென்பதும் முன்னே விளங்கப்பெற்றன. திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் இறைவன் திருவடியடைந்த சில ஆண்டுகள் கழித்துத் தோன்றிய சுந்தரமூர்த்தி சுவாமிகளால் தம்காலத்து வேந்தனாகப் போற்றப்பெற்ற சுழற்சிங்கன் என்பான் முதலாம் நரசிம்மவர்மனாக இருத்தல் இயலாது. எனவே இராசசிங்கன் என அழைக்கப்பெறும் இரண்டாம் நரசிம்மவர்மனே காடவர்கோன் கழற்சிங்கன் எனச் சுந்தரமூர்த்திகளாற் போற்றப் பெற்றிருத்தல் வேண்டும் என்பது உய்த்துணரப்படும். இரண்டாம் நரசிங்கவர்ம னாகிய இவ்வேந்தன் காஞ்சியில் இராசசிம்ம பல்லவவேச்சுரம் என்ற பெயராற் கயிலாசநாதர் கோயிலைக் கட்டியவன் மாமல்லபுரத்தில் இவ்வேந்தன் இராசசிம்ம பல்லவேச்சுரம். க்ஷத்திரியசிம்ம பல்லவேச்சுரம் என்னும் இரண்டு திருக்கோயில்களைக் கட்டியிருத்தலால் இவனுக்கு க்ஷத்திரிய சிம்மன் என்ற பெயரும் வழங்கிய தெனத்தெரிகிறது. இவன் நரசிம்மன், இராசசிம்மன், க்ஷத்திரியசிம்மன் என்ற மூன்று பெயர்களையுடையனாயிருந்தமை பெறப்படுகின்றது. இம் மூன்று பெயர்களிலும் சிம்மன் அல்லது சிங்கன் என்பதே இவனது இயற்பெயராகச் சிறப்பிக்கப்பெற்றிருத்தலைக் காணலாம். இவனுக்குரிய மூன்று பெயர்களுள் ஒன்றை மட்டும் பிரித்துக் கூறாமல் அவை மூன்றையும் உளப்படுத்திக் கூறும் முறையில் இவனது இயற்பெயராகிய சிங்கன் என்பதற்கு முன் இவன் பெற்ற வெற்றித்திறத்தை அறிவிக்கும் கழல் என்னும் அடைமொழியையுஞ் சேர்த்துக் கழற்சிங்கன் என நம்பியாரூரர் சிறப்பித்துப் போற்றினாராதல் வேண்டும்.

காஞ்சிக் கயிலாசநாதர்கோயிலிற் பொறிக்கப்பட்ட வட மொழிக் கல்வெட்டு இராசிம்ம பல்லவனைச் சிவசூடாமணி யென்று புகழ்ந்து போற்றுகின்றது.* (* தென்னிந்தியக் கல்வெட்டு,

தொகுதி I, எண் 24) இவ்வாறே மாமல்லபுரத்தில் அமைந்த இராச சிம்ம பல்லவேச்சுரக் கல்வெட்டும் பனைமலைக் கோயிலிலுள்ள கல்வெட்டும் இவனைச் சிவசூடாமணியென்றே சிறப்பித்துரைக் கின்றன.* (*தென்னிந்தியக் கல்வெட்டு, தொகுதி I, எண் 31, Epigraphi Indica, Vol. XIX, No.18) பரமேச்சுரனே இராசசிங்கப் பல்லவனாக அவதரித் துள்ளாரென்று காசாக்குடிச் செப்பேடு கூறுகின்றது.* (*தென்னிந் தியக் கல்வெட்டு, தொகுதி II, எண் 73) இவ்வேந்தனைப் பரம மாகேச்சுர னென உதயேந்திரச் செப்பேடு உயர்த்துப் போற்றுகின்றது.* (*தென்னிந்தியக் கல்வெட்டு, தொகுதி II, எண் 74) இவன் காஞ்சியிற் கயிலாயத்தை யொத்த பெருங்கோயிலொன்றை யமைத்துச் சிவ பெருமானை வழிபட்ட பெருமையுடையவனென்பது வேலூர்ப் பாளையம் செப்பேட்டிற் கூறப்பட்டுள்ளது.* (*தென்னிந்தியக் கல்வெட்டு, தொகுதி II, எண் 98) இவ்விரண்டாம் நரசிம்மவர்மன் காஞ்சிமா நகரில் எடுப்பித்த கயிலாசநாதர் திருக்கோயிலில் இவனுக்கு அந்நாளில் வழங்கிய இருநூற்றைம்பது பட்டங்கள் பொறிக்கப்பெற்றுள்ளன.* (*தென்னிந்தியக் கல்வெட்டு, தொகுதி I, எண் 25) அவற்றுள் 'சங்கரபக்தன்' 'ஈசுவரபக்தன்' 'சைவசித்தாந்த மார்க்கே' என்பன குறிப்பிடத்தக்கனவாகும். இவற்றுள் இறுதி யிற் குறிக்கப்பட்ட வடசொற்றொடர் சைவசித்தாந்த நெறியைப் பின்பற்றியவன் என்ற பொருளைத் தருவதாகும். "துஷ்யந்தன் முதலான அரசர்கள் தெய்வமொழியைக் கேட்டார் களென்பதில் வியப்பில்லை. நற்குணங்கள் பறந்தோடிப் போன இக்கலியுகத்தில் அத்தகைய அசரீரியை ஸ்ரீ-பரன் (இராசசிம்மன்) கேட்டது வியப்பைத் தருவதே" எனக் காஞ்சிக் கயிலாயநாதர் கோயிலிற் பொறிக்கப்பட்ட வடமொழிக் கல்வெட்டுக் கூறுதலால் இவ்வேந்தர் பெருமான் இறைவனது திருவாக்காகிய அசரீரியைக் கேட்டு மகிழ்ந்த பெருமையுடையவனென்பது உய்த்துணரப்படும். இவ்வாறு இராசசிம்மனாகிய கழற்சிங்கன் அசரீரி கேட்ட வரலாற்றை ஆசிரியர் சேக்கிழார், பூசலார் நாயனார் புராணத்தில் தெளிவாக விரித்துக்கூறியுள்ளார். காடவர் கோமானாகிய வேந்தன் காஞ்சியில் சிவபெருமானுக்குக் கருங்கல்லினாற் கோயில்அமைத்துச் சிவலிங்கப் பெருமானை அங்குத் தாபிக்கக் கருதிய நல்ல நாளில் திருநின்றவூரில் வாழ்ந்த மறையவராகிய பூசலார் நாயனாரும் தாம் பல ஆண்டுகள் நினைந்து மனத்தினால் அமைத்த மனக்கோயிலில் இறைவனை எழுந்தருளச் செய்வதற்கு எண்ணி நிச்சயித்தாரென்பதும், பூசலாரது மனக்கோயிலில் முதன்முதல் எழுந்தருளக் கருதிய சிவபெருமான் அதற்கு முதல் நாள் இரவிலே பல்லவ மன்னன் கனவிலே தோன்றிக் காஞ்சியிலமைத்த கற்றளிக்குக் கடவுள் மங்கலம் செய்யக் குறிப்பிட்டிருந்த அந்நாளை மாற்றி வேறொரு நாளில் அதனைச் செய்யும்படி அறிவுறுத்தி மறைந்தா ரென்பதும் வரலாறு.

"காடவர்கோமான் கச்சிக் கற்றளியெடுத்து முற்ற
மாடெலாஞ் சிவனுக்காகப் பெருஞ்செல்வம் வகுத்தல் செய்வான்
நாடமா லறியாதாரைத் தாபிக்கும் அந்நாள் முன்னாள்
ஏடலர் கொன்றைவேய்ந்தார் இரவிடைக் கனவிலெய்தி,

நின்றவூர்ப் பூசலன்பன் நெடிதுநாள் நினைந்துசெய்த
நன்று நீடாலயத்து நாளை நாம் புகுவோம் நீயிங்
கொன்றியசெயலை நாளையொழிந்துபின் கொள்வாயென்று
கொன்றைவார் சடையார்தொண்டர் கோயில்கொண்
டருளப் போந்தார்."

எனவரும் பூசலார் நாயனார் புராணச் செய்யுட்களால் இதனை நன்குணரலாம். காஞ்சியிலுள்ள கயிலாசநாதர் கோயிற் கல்வெட்டையும் பூசலார் நாயனார் புராணத்தையும் உடன்வைத்து ஆராய்வார்க்குப் பூசலார் புராணத்திற் கச்சிக் கற்றளியெடுத்தவனாகக் கூறப்படும் காடவர் கோமானும் காஞ்சிக்கயிலாயநாதர் திருக்கோயிலைக் கட்டிய இராசசிம்ம பல்லவனும் ஒருவனேயென்பது நன்கு விளங்கும்.

இதுகாறும் கூறிய செய்திகளால் இராசசிம்மனென்னும் இப்பல்லவ வேந்தன் ஈடும் எடுப்புமற்ற சிவபக்தனாகத் திகழ்ந்தவனென்பது நன்கு தெளியப்படும். சிவபெருமான்பால் எல்லையற்ற பேரன்பினைச் செலுத்திய இப்பல்லவ வேந்தனையே சுந்தரர் தாம் பாடிய திருத்தொண்டத் தொகைத் திருப்பதிகத்தில் "கடல் சூழ்ந்த உலகெலாங் காக்கின்ற பெருமான் காடவர்கோன் கழற்சிங்கன் அடியார்க்கும் அடியேன்" எனப் போற்றினாரெனக் கொள்ளுதல் பெரிதும் பொருத்தமுடையதாகும். ஆகவே தம் காலத்தில் அரசுபுரிந்த பெருவேந்தனாகச் சுந்தரராற் பாராட்டப் பெற்ற காடவர்கோன் கழற்சிங்கன் என்பான் காஞ்சிமாநகரிலிருந்து கி.பி. 690 முதல் 720 வரை ஆட்சிபுரிந்த பல்லவ வேந்தனாகிய இரண்டாம் நரசிங்கவர்மனே யென்பது யென்பது நன்கு துணியப்படும்.

நம்பியாரூரரை அன்பினால் மகன்மை கொண்டு வளர்த்தவர் திருநாவலூரைத் தலைநகராகக் கொண்டு திருமுனைப்பாடி நாட்டை ஆட்சிபுரிந்த குறுநில மன்னராகிய நரசிங்க முனையரையர் எனப் பெரிய புராணம் கூறும். முற்காலத்தில் பேரரசர்கள் தமக்குத் திறை செலுத்தும் குறுநில மன்னர்க்கும் அமைச்சர், படைத்தலைவர் முதலியினார்க்கும் பட்டங்கள் வழங்கிச் சிறப்புச் செய்யுங்கால் தம் பெயர்களோடு இணைக்கப் பெற்ற பட்டங்களைக் கொடுப்பது பெரு வழக்காயிருந்தது. இவ்வுண்மை கல்வெட்டுக்களை ஆராய்ந்து பார்த்தால் இனிது விளங்கும். முனையரையன் என்ற சிறப்புப் பெயரின் முன்

அதனை வழங்கிய நெடுமுடி வேந்தனாகிய நரசிங்கனது பெயரும் இணைக்கப்பெற்ற நிலையில் வழங்கிய பெயரே நரசிங்க முனையரையன் என்பதாகும். ஆகவே சுந்தரமூர்த்தி சுவாமிகளை இளம் பருவத்திலே வளர்த்துப் போற்றிய நரசிங்க முனையரையர் என்பார், இரண்டாம் நரசிம்மவர்ம பல்லவனுக்குத் திறை செலுத்திய குறுநில மன்னரென்பது நன்கு தெளியப்படும். எனவே இவரால் ஆதரித்து வளர்க்கப்பெற்ற சுந்தரர் இரண்டாம் நரசிம்மவர்மனாகிய இராசசிம்மன் காலத்தவ ரென்பதும் உறுதியாதல் காணலாம். சுந்தரருடன் கயிலைக்குச் சென்ற கழறிற்றறிவாராகிய சேரமான் பெருமாள் வாழ்ந்த காலமும் சுந்தரர் காலத்தில் உடனிருந்தவர்களாகிய சேமாசி மாறர், விறன்மிண்டர், மானக்காஞ்சாறர், ஏயர்கோன் கலிக்காமர், பெருமிழலைக் குறும்பர், கோட்புலியார், பூசலார் செருத்துணையார் என்னும் நாயன்மார்கள் வாழ்ந்த காலமும் இதுவேயாகும். இம்முடிபினைத் திருவாளர் தி.வை. சதாசிவ பண்டாரத்தாரவர்கள் தமிழ்ப்போழில் மூன்றாந் துணரில் எழுதிய 'சுந்தரமூர்த்திகளது காலம்' என்ற கட்டுரையிலும் செந்தமிழ் 44-ஆம் தொகுதியில் எழுதிய கொல்லம் ஆண்டு, என்ற கட்டுரையிலும் தெளிவாக விளக்கியுள்ளார்கள். திருவாளர் ராவ்சாகிப் மு. இராகவையங்காரவர்களது கொள்கையும் இதுவேயாகும்.* (* ஆழ்வார்கள் காலநிலை 135, 136-ம் பக்கங்களில் அமைந்த அடிக்குறிப் பினை நோக்குக)

இனி, சுந்தரர் வாழ்ந்தகாலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியாகுமெனத் தஞ்சை ராவ்பகதூர் சீநிவாச பிள்ளை யவர்கள் தாமெழுதிய தமிழ் வரலாறு என்னும் நூலிற் குறிப்பிட் டுள்ளார்கள். திருவாங்கூரில் கல்வெட்டாராய்ச்சித் துறைத் தலைவராயிருந்த T.A. கோபிநாத ராயரவர்கள் சுந்தரரது காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியாகுமென்று செந்தமிழ் மூன்றாந் தொகுதியில் வரைந்துள்ளார்கள். சுந்தரர் குறித்த கழற்சிங்கன் என்பான் கி.பி. 830 முதல் 854 வரை ஆட்சிபுரிந்த தெள்ளாறு எறிந்த நந்திவர்மன் என டாக்டர் மா. இராசமாணிக்கனாரவர்கள் கருதுவர். இன்னோர் தமது முடிவுக்கு ஆதாரமாகக் காட்டும் காரணங்களை முறையே ஆராய்வோம்.

(1) சுந்தரமூர்த்திகளும் சேரமான் பெருமாளும் சமகாலத்தவர் என்பது பெரியபுராணத்தால் நன்கறியப்படும். திருவாலவாயில் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுள் தன்பால் அன்புடைய பாண பத்திரருக்குத் திருமுகப் பாசுரம் பாடிக்கொடுத்து அவரைச் சேரமான் பெருமாளிடத்து அனுப்பினாரென்று பெரிய புராணமும் வேம்பத்தூரார் திருவிளையாடலும் தெளிவாய்க் கூறுகின்றன. சேரமான் பெருமாள் காலத்தில் ஆட்சிபுரிந்த

பாண்டியன் வரகுணனென்னும் பெயருடையவனென்பது பரஞ்சோதி முனிவர் திருவிளையாடலால் நன்கறியப்படும். அந்நூலில் வரகுணன் என்ற பெயருடன் பாண்டியன் ஒருவனே குறிக்கப் படுதலால் அவ்வரகுணன் 'முதலாம் வரகுணனாகவே இருத்தல் வேண்டும். இவன் கி.பி. 840-க்கு முன் ஆட்சி புரிந்தவனென்று கொள்வது பொருந்தும் என்பது அன்னோர் கூறும் காரணங் களுள் ஒன்றாகும்.

சுந்தரரும் சேரமான் பெருமாளும் திருவாலவாயிறைவரை வழிபடுதற் பொருட்டு மதுரைக்குச் சென்றிருந்த பொழுது பாண்டிய மன்னனும் அவனுடைய மகளை மணந்து அங்கு விருந்தாக வந்திருந்த சோழனும் அவ்விருபெருமக்களையும் வரவேற்று உபசரித்தனரெனவும் சேர சோழ பாண்டியர்களாகிய அம்மூவேந்தருடன் சுந்தரர் திருப்பரங்குன்றத்தில் இறைவனைப் பாடிப் போற்றினரெனவும் சேக்கிழார் கூறுவர். சுந்தரரையும் சேரமான், பெருமாளையும் வரவேற்றுப் போற்றிய பாண்டியன் இன்ன பெயருடையவனென்றோ அவன் மருமகனாக வந்து தங்கிய சோழமன்னன் பெயர் இதுவென்றோ சேக்கிழார் குறிப்பிட வில்லை. சேக்கிழார்க்குப் பன்னூறாண்டுகள் பிற்பட்டுத் தோன்றிய பரஞ்சோதி முனிவரே சேரமான்பெருமாள் காலத்தவன் வரகுண பாண்டியன் எனக் கூறுகின்றார். மிகப் பிற் காலத்தில் வாழ்ந்தவராகிய அவரது கூற்றை வரலாற்றுச் சான்றென அவ்வாறே ஏற்றுக்கொள்ளுதல் பொருந்தாது. சம்பந்தரால் வெப்பு நோயினின்றும் காப்பற்றப் பெற்ற பாண்டியன் கூன்பாண்டியனாகிய சுந்தர பாண்டியனென்றும் இவனுக்குப் பத்துத் தலைமுறைகட்கு முந்தியவன் அரிமர்த்தன பாண்டியனென்றும் அரிமர்த்தனபாண்டியற்கு நாற்பத்து மூன்று தலைமுறைகட்கு முற்பட்டவன் வரகுண பாண்டிய னென்றும் இப்பரஞ்சோதி முனிவரே தாமியற்றிய திருவிளை யாடற் புராணத்தில் குறிப்பிட்டுள்ளார். அவர் கூற்றினை யுண்மையெனக் கொண்டால் திருஞானசம்பந்தப்பிள்ளையார் காலத்தவனாகிய சுந்தரபாண்டியனுக்கு ஐம்பத்துமூன்று தலை முறைகட்கு முன்பு ஆட்சிபுரிந்தவன் சுந்தரர் காலத்தவனாகச் சொல்லப்படும் வரகுண பாண்டியனெனக் கொள்ள வேண்டி வரும். ஞானசம்பந்தர் இறைவன் திருவடிகளிற் கலந்து மறைந்து சில ஆண்டுகள் கழித்து இந்நிலவுலகிற் பிறந்தருளிய சுந்தரரைச் சம்பந்தர்க்குப் பன்னூறாண்டுகள் முற்பட்டு வாழ்ந்தவராக மயங்கக் கொள்ளுமாறு அமைந்த பரஞ்சோதி முனிவரது திருவிளையாடற் புராணத்தை வரலாற்றுச் சான்றென நம்பிச் சுந்தரர் வாழ்ந்த காலம் இதுவெனத் துணிதல் வரலாற்றாராய்ச் சிக்குச் சிறிதும் ஏற்புடையதன்றாம்.

(2) சேரமான் பெருமாள் சுந்தரருடன் கயிலை சென்றனரெனப் பெரியபுராணம் கூறும். இவர் மகமதிய மதத்தைத் தழுவி மக்காவுக்குப் போயினாரென்று மலையாளத்தில் ஒரு கதை வழங்குகின்றது. இவர் ஆட்சியை விட்டுச் சென்றது முதலாகவே கொல்லம் ஆண்டு துவங்கி எண்ணப்பட்டு வருகின்றதென்பர். கொல்லம் ஆண்டின் துவக்கம் கி.பி. 825-ஆம் ஆண்டாதலால் அவ்வாண்டின் தொடக்கத்தில் ஆட்சியைத் துறந்து சென்றவராகச் சொல்லப்படும் சேரமான்பெருமாளும் அவருடன் திருக்கயிலை சென்றவராகக் கூறப்படும் சுந்தரரும் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்தவராதல் வேண்டும். என்பது அவர்கள் கூறும் மற்றொரு காரணமாகும்.

கொல்லம் ஆண்டென்பது, தமிழ்நாட்டின் பகுதியாகிய பழைய கொல்லம் கடல் கோளால் அழிவெய்திய பிறகு கடற்பெயர்ச்சியால் சேரநாட்டில் தோன்றிய புதிய நிலப்பகுதிக்குக் கொல்லம் என்ற அப்பழைய பெயரையமைத்து அங்கு மக்கள் குடியேறிய ஆண்டு முதலாக எண்ணப்பட்டு வருவதாகும். தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில், 'செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்' எனவரும் சூத்திரவுரையுள் "கூபகமும் கொல்லமும் கடல் கொள்ளப்படுதலின்* (*தொல், சொல், எச். 4, தெய்வச்சிலையார் உரை) குமரியாற்றிற்கு வடகரைக்கண் அப்பெயரானே கொல்லமெனக் குடியேற்றினார் போலும்" எனத் தெய்வச்சிலையார் கூறும் உரைக்குறிப்பாலும் "கொல்லம் தோன்றி இருநூற்றைம்பத்திரண்டாம் ஆண்டு" எனவும், "கொல்லம் தோன்றி இருநூற்றுத் தொண்ணூற்றென்பதாமாண்டு மிதுனத்தில் வியாழன் நின்ற ஆண்டு" எனவும் வரும் கல்வெட்டுத் தொடர்களாலும்* (* திருவாங்கூர்க் கல்வெட்டுத் தொகுதி III, 57, 58) இச்செய்தி வலியுறுதல் காணலாம். கி.பி. 822-இல் நிகழ்ந்த கடல் கோளால் பழைய கொல்லம் அழிந்துவிட்டதென்றும் கி.பி. 825-இல் புதிய கொல்லம் அமைக்கப் பெற்றதென்றும் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். எனவே கி.பி. 825-இல் புதிய கொல்லம் அமைக்கப்பெற்றுக் குடியேறிய காலம் முதற் கொண்டே கொல்லம் ஆண்டு தொடங்கியெண்ணப்பட்டு வருகிறதென்பது தெளியப்படுதலின், சேரமான்பெருமாள் தமது ஆட்சியைத் துறந்து சென்ற ஆண்டாகக் கொல்லம் ஆண்டினைக் கொள்ளுதற்குச் சிறிதும் இடமில்லை யென்க. சேரமான் பெருமாள் மக்காவுக்குச் சென்றார் என உண்மையுணராதார் சிலர் தவறாகப் பேசி வரும் கதை வரலாற்றுக்கு முற்றிலும் மாறுபட்டதென்பதனை எல்லோரும் ஒப்புக் கொள்வர். அங்ஙனமாகவும் அக்கதை சொல்வாரது கூற்றினை ஆதரவாகக் கொண்டு சேரமான் பெருமாள் காலத்தைத் துணிய

முற்படுதல் பொருத்த மற்றதாகும். கொல்லம் ஆண்டு தொடங்கு தற்குச் சிறிதேறக் குறைய நூற்று இருபதாண்டுகளுக்கு முன்பே சேரமான் பெருமாள் தமது ஆட்சியைத் துறந்து திருக் கயிலைக்குச் சென்றிருத்தல் வேண்டுமெனக் கருதுதலே பொருத்தமுடையதாகும்.[1] *(செந்தமிழ் 44-ம் தொகுதி பக்கம் 38)*

3. சுந்தரர் பாடியருளிய தில்லைத் திருப்பதிகத்தில்

"கருமையாற் றருமனார் தமர்நம்மைக் கட்டியகட்டறுப்பிப் பானை
அருமையாந் தன்னுலகந் தருவானை மண்ணுலகங் காவல் பூண்ட
உரிமையாற் பல்லவர்க்குத் திறைகொடா மன்னவரை மறுக்கஞ்செய்யும்
பெருமையார் புலியூர்ச் சிற்றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா மன்றே"

எனவரும் பாடலில் தம் காலத்தில் அரசாண்ட பல்லவ வேந்தனுக்குச் சிற்றரசர் திறை செலுத்துவதை மறுப்பதற்கு இட முண்டாகிய நிலைமையைக் குறிப்பிட்டுள்ளார். இராசசிம்ம பல்லவன் மிக்க பராக்கிரமசாலி. அவனது ஆட்சிக்குட்பட்டி ருந்தவர்கள் அவன்பால் அன்பும் அச்சமுமுடையவர்களாயி ருந்தார்கள். அவனுக்குத் திறை செலுத்துவதை மறுப்போர் எவரும் இருந்ததாக நினைப்பதற்கிடமில்லை. பல்லவராச்சியில் இத்தகைய நிலையேற்பட்ட காலம் தந்திவர்மனது ஆட்சிக் காலமேயெனலாம். இவனது ஆட்சியில் இராஷ்டிரகூட அரசன் மூன்றாம் கோவிந்தன் என்பான் கி.பி. 804-ஆம் ஆண்டில் காஞ்சி நகரத்தின்மேற் படையெடுத்து வந்து வெற்றி பெற்றான். தந்திவர்மன் அவனுக்குத் திறை கொடுக்கும்படி நேரிட்டது. இதற்கு முன்னெல்லாம் தந்திவர்மனுக்குத் திறை செலுத்தி வந்த சிற்றரசர்கள், இவனது தோல்வி நிலை அறிந்து திறை கோடாது மறுப்பதற்கு இடமுண்டாயிற்று. இந்நிலையினையே சுந்தரர் குறிப்பிடுகின்றார். இவ்வேந்தன் திருச்சிராப்பள்ளி 'ஜில்லா ஆலம்பாக்கம் என்ற ஊரில் கயிலாசநாதர் திருக்கோயிலைக் கட்டியுள்ளான். அக்கோயிலில் இவனால் பிரதிட்டை செய்யப் பெற்ற சிவலிங்கத்தின் திருவுருவம் தந்திலிங்கம் என இவன் பெயரால் வழங்கப்பெறுகின்றது. இக்குறிப்பு இவனது சிறந்த சிவ பத்தியை விளக்குவதாகும். சுந்தரமூர்த்தி சுவாமிகள் இப்பல்லவ வேந்தன் பொருட்டுப் பரிந்து தில்லைப் பெருமானை வேண்டியதற்கு இவனது சிவபத்தியே சிறந்த காரணமாகும் என்பது அவர்கள் கூறும் மற்றொரு காரணமாகும்.

மேற்காட்டிய தில்லையம்பலத் திருப்பதிகத்தில் நம் காலத்துப் பல்லவ வேந்தன் போர் வலிமையற்றவனென்றோ அவனுக்குக் குறுநில மன்னர்கள் திறைகொடுக்க மறுத்தார்க ளென்றோ சுந்தரமூர்த்தி சுவாமிகள் குறிப்பிடவேயில்லை. தில்லையம்பலப் பெருமான், தன்பால் அன்புடைய பல்லவ

மன்னனைச் சார்ந்தோர்க்கு அருள்புரிவராகவும், அவ் வேந்தனோடு முரணிப் பகைஞராயினார்க்குக் கடுந்தண்டம் விதிப்பவராகவும் விளங்குந் திறத்தை விரித்துரைப்பதே இத்திருப்பாடலாகும். இதனால் தம் காலத்தில் ஆட்சிபுரிந்த பல்லவவேந்தனது ஒப்புயர்வற்ற சிவபதியின் மாட்சியையும் அதன் பயனாக அவ்வேந்தனுக்குண்டாகிய வெற்றிச் சிறப்பையும் உலக மக்களுக்கு அறிவுறுத்துவதே நம்பியாரூரரின் உள்ளக் கருத்தாதல் நன்கு பெறப்படும். இத்தகைய சிவபத்திச் சிறப்பு இராசசிம்ம பல்லவன்பால் அமைந்திருந்தமை அவன் எடுப் பித்த காஞ்சிக் கயிலாசநாதர் கோயிலிற் பொறிக்கப் பெற்றுள்ள கல்வெட்டால் உறுதிப்படுதலாலும், சுந்தரர் தம் காலத்துப் பல்லவவேந்தனது வெற்றிப் பெரும்புகழ் மண்ணுலகமெல்லாம் பரவிய திறத்தையும் அவனது ஆட்சியின் கீழ்க் கடலாற் சூழப் பட்ட இந் நிலவுலகத்தின் பெருநிலப்பரப்பு அடங்கி அமைதியுற்ற செம்மையையும்,

> "பாரூர் பல்லவனூர் மதிற்காஞ்சி மாநகர்வாய்ச்
> சீரூரும் புறவிற் றிருமேற்றளிச் சிவனை"

எனவும்,

> "கடல் சூழ்ந்த உலகெலாங் காக்கின்ற பெருமான்
> காடவர்கோன் கழற்சிங்கன்"

எனவும் வரும் தொடர்களால் முறையே குறிப்பிடுதலாலும் அவர் காலத்தில் ஆட்சிபுரிந்த பல்லவன் இராசசிம்மன் எனக் கொள்ளுதலே ஏற்புடையதென்க.

4. கழற்சிங்கநாயனார் புராணத்தில் அவ்வேந்தருடைய பட்டத்தரசியைக் குறித்துச் சேக்கிழார் கூறும் கூற்றிலிருந்து அவள் செய்த தவறுகள் இரண்டென்று தெரிகிறது. ஒன்று, வேந்தன் திருவாரூர்ப் பெருமானை வணங்கும்பொழுது உடனிருந்து வணங்காமை மற்றொன்று, பூமாலை கட்டும் மண்டபத்தின் அருகேயிருந்த புதுமலர் இறைவனுக்கு மாலையாகத் தொடுத்தணிதற்குரிய தென்றும் கோயிலிலுள்ள மலரை மோத்தல் முறையன்றென்றும் கருதாது அம்மலரை யெடுத்து மோந்தமை இராசிங்கனுடைய பட்டத்தரசி ரங்க பதாகை யென்பவள் காஞ்சியிற் கயிலாச நாதர் கோயிலிலுள்ள சிறு கோயில்களுள் ஒன்றைக் கட்டியிருகின்றாள். இதனால் அவள் சிறந்த சைவப் பற்றுடையவளென்பது நன்கு தெளியப் படும். ஆகவே திருவாரூர்க் கோயிலில் இறைவனுக்குரிய மலரை யெடுத்து மோந்தவள் இராசசிம்மனுடைய பட்டத்தரசி ரங்க பதாகையாக இருத்தல் இயலாது. மூன்றாம் நந்திவர்மனுடைய பட்டத்தரசியாகிய சங்கா என்பவள் இரட்டப் பேரரசனும்

சமண சமயத்தவனுமாகிய அமோக வர்ஷ நிருபதுங்கனுடைய மகளாவாள். அவளே மன்னனுடன் திருவாரூர்க் கோயிலுக்குச் சென்று அங்குள்ள சிற்பவளங் கண்டு வரும்பொழுது பூமண்டபத்தின் அருகிலுள்ள மலரையெடுத்து மோந்தவளாதல் வேண்டும் என்பாருமுளர்.* (* பெரியபுராண ஆராய்ச்சி, பக்.54-56)

கழற்சிங்கனாகிய வேந்தர்பெருமான் திருவாரூருக்குச் சென்று இறைவனை வழிபட்டபொழுது அவனுடைய பட்டத்தரசியும் அவ் வழிபாட்டிற் கலந்து கொண்டு திருக்கோயிலை வலம்வந்தாளெனவும் அவள் பூத்தொடுக்கும் மண்டபத்தருகே வந்தபொழுது இறைவனுக்கணிதற்கியலாதபடி தூய்மை யிழந்த நிலையிற் கீழே கிடந்த புதுமலரொன்றை யெடுத்து மோந்தாளெனவும் அதனைக்கண்டு பெறாத செருத்துணையார் என்னும் அடியவர் அவளது மூக்கினை யறுத்த நிலையில் அங்கு வந்த வேந்தன், தன் மனைவி செய்த செயல் குற்றமென்பதனை ஒப்புக் கொண்டு அக்குற்றம் புரிதற்குத் துணையாயிருந்த அவளுடைய கையையும் வெட்டினானெனவும் பெரிய புராணம் கூறும். இச்செய்தி இவ்வேந்தர் பெருமானது சிவபத்தியின் மாண்பினைப் புலப்படுத்துவதன்றி இவனுடைய பட்டத்தரசி சமண சமயத்தவள் என்பதை உணர்த்துவதன்றாம். இவ்வரலாற்றிலிருந்து கழற் சிங்கன் பட்டத்தரசியைச் சைவ சமயத்தவள் அல்லள் என்று துணிதற்குரிய குறிப்பெதுவும் இல்லையென்பதும் இவளும் தன் கணவனைப் போன்று சிவனெறியிற் கொண்ட பற்றுக் காரணமாகத் திருவாரூர்த் திருக்கோயிலை யிறைஞ்சுதற்கு வந்தவ ளென்பதும் நன்கு புலனாதல் காணலாம். ஆகவே இச்செய்தியை ஆதாரமாகக் கொண்டு தெள்ளாறெறிந்த நந்திவர்மனைக் கழற் சிங்கநாயனார் எனக் கூறுதல் ஒரு சிறிதும் பொருந்தா தென்க.

பாட்டுடைத் தலைவனாகிய வேந்தனை வீரக்கழலணிந்தவ னென்றும் அரசருட் சிங்கம் போன்றவனென்றும் தம் நூல்களிற் போற்றிப் புகழ்தல் நூலாசிரியர் அனைவர்க்கும் பொதுவாக வுரிய புலமை மரபாகும். அம்மரபின்படி 'அறைகுழல் முடித்த அவனி நாரணன்' எனவும் 'குரைகழல் வீரநந்தி' எனவும் 'பல்லவர் கோன் அரி' எனவும் வரும் நந்திக் கலம்பகத் தொடர்களில் தனித்தனியே கூறப்பட்ட 'கழல்' என்ற சொல்லையும் 'அரி' யென்ற சொல்லையும் 'கழலரி' என ஒன்றாகக் கூட்டி அந்நூலின் பாட்டுடைத் தலைவனாகிய நந்திவர்மனே சுந்தரராற் போற்றப் பெற்ற கழற்சிங்க நாயனார் எனத் துணிந்து கூறுதல் வரலாற்று முறையன்றென்பதே அறிஞர் துணிபாகும். தெள்ளாறெறிந்த நந்திவர்மனுக்கு கழற்சிங்கன் என்னும் பெயர் வழங்கியது உண்மையாயின் அப்பெயரை நந்திக் கலம்பக ஆசிரியரே தம் நூலில் தெளிவாகக் கூறியிருப்பார். அந்நூலில் ஒரிடத்திலேனும்

கழற்சிங்கன் என்றோ சிங்கன் என்றோ பெயர் கூறாது நந்தி யென்பதனையே அவனது இயற்பெயராகக் குறிப்பிட்டுள்ளார். எனவே சுந்தரராற் போற்றப்பெற்ற கழற்சிங்கனை நந்திக் கலம்பகத்தின் பாட்டுடைத் தலைவனாகக்கொள்ளுதற்குச் சிறிதும் இயைபில்லை யென்பது நன்கு தெளியப்படும். சிவனடி யார்களை அவரவர்க்குரிய சிறப்புடைய யியற்பெயராற் குறிப் பிட்டுப் போற்றும் திருத்தொண்டத் தொகையிற் கூறப்பட்ட கழற் சிங்கன் என்ற பெயரை வெறும் புனைபெயராகக் கொள்ளுதல் பொருந்தாது. தம் காலத்தில் ஆட்சி புரிந்த பல்லவனைச் சுந்தரர் கழற்சிங்கன் என்ற பெயரால் தெளிவாகக் கூறியிருக்கவும் அப்பெயரால் வழங்கப்படாத தெள்ளாறெறிந்த நந்திவர்மனைக் கழற்சிங்கனெனக் கொள்ளுதல் ஒரு சிறிதும் பொருந்தாதென்க.

5. சுந்தரர் வட திருமுல்லைவாயிற் பதிகத்திற் குறிப்பிட்ட தொண்டைமான் களிற்றை முல்லைக் கொடியாற் கட்டிய செய்தி, இரண்டாம் நந்தி வர்மனது பட்டவர்த்தனம் என்னும் மதம் பிடித்த யானையைப் பற்றியதாகலாம் என்பர் சிலர்.*
(*பெரியபுராண ஆராய்ச்சி, பக்.58)

இங்ஙனம் எண்ணுதற்கு எவ்விதத் தொடர்புமில்லை யென்பது அத்திருப்பாடலை ஊன்றிப் பயில்வார்க்கு நன்கு புலனாம். அப்பாடலிற் குறிக்கப்பட்ட தொண்டைமானென்பவன், காஞ்சியைப் பல்லவர்கள் கைப்பற்றுதற்கு முன்பு தொண்டை நாட்டை ஆட்சிபுரிந்த தமிழ்வேந்தனாவான். அவனுக்குத் திரு முல்லைவாயிற் பெருமான் அருள்புரிந்த பழைய வரலாற்றையே சுநதரர் தம் பாடலிற் குறிப்பிட்டுப் போற்றியுள்ளார். பல்லவர் குடியினரைத் தொண்டைமான் என வழங்கும் வழக்கம் தேவார ஆசிரியர் காலத்திற்குப் பிற்பட்டதாகும். ஆகவே சுந்தரர் இரண்டாம் நந்திவர்மனைத் தொண்டைமான் என்ற பெயரால் தம் பாடலில் குறிப்பிட்டாரென்னும் இக்கூற்று உண்மை யன்றென்க.

6. சுந்தரரை இராசசிங்கன் காலத்தவராகக் கொள்ளுதற்கு அப்பர்க்கும் இராசசிங்கனுக்கும் உள்ள குறுகிய கால இடை யீடும், இராசசிங்கனாற் கட்டப்பெற்ற காஞ்சிக் கயிலாயநாதர் கோயிலைச் சுந்தரர் பாடாமையும் தடைகளாமென்பர் சிலர்.*
(*பெரியபுராண ஆராய்ச்சி, பக்.59)

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் இறைவன் திருவடி களிற் கலந்த சில ஆண்டுகளுக்குள்ளே சுந்தரர் தமிழகத்தே பிறந்தருளினாரெனத் திருமுறைகண்ட புராணம் கூறிய செய்தி முன்னரே விளக்கப் பெற்றது. அப்பரும் சம்பந்தரும் வாழ்ந்த காலப் பகுதியை யடுத்துத் தொண்டை நாட்டினை ஆட்சிபுரிந்த

வேந்தன் இராசசிங்கனாதலின் அவனே சுந்தரர் காலத்துப் பல்லவன் காடவர்கோன் கழற்சிங்கனாதல் வேண்டுமென்பது இக்குறிப்பினால் மேலும் உறுதி பெறுதல் காணலாம். தேவார ஆசிரியர் மூவரும் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகங்களிற் பெரும் பாலன சிதலரிக்கப்பட்டு மறைந்து போயின என்ற செய்தி திருமுறை கண்ட புராணத்திற் கூறப்பட்டிருத்தலால் சுந்தரர் தேவாரமாக இப்பொழுது வழங்கிவரும் பதிகங்களைத் தவிரக் கயிலாச நாதர் கோயில் முதலிய பிற தலங்களைக் குறித்துச் சுந்தரர் திருப்பதிகம் பாட வரலையெனக் கூறுதல் திருமுறை கண்ட வரலாற்றிற்கு முற்றிலும் முரணா மென்க.

கழற்சிங்கன் வடபுலங்கவர்ந்து திறைகொணர்ந்த பெருவீரன் எனச் சேக்கிழார் கூறும் வரலாற்றுக் குறிப்பு* (*பெரியபுராணம் கழற்சிங்க நாயனார் புராணம் 2-ஆம் செய்யுள்) தெள்ளாறெறிந்த நந்திவர்மனுக்கு ஏற்புடையதாக இல்லை. மேலைச் சாளுக்கிய னாகிய வடபுலவேந்தனை அமரில் வென்ற புகழுடைய இராச சிம்ம பல்லவனுக்கே இச்செய்தி மிகவும் பொருந்துவதாகும். அன்றியும் இவனுடைய சமகாலத்தரசனாகிய கோச்சடையன் ரணதீரன் என்னும் பாண்டியன் மங்கலபுரத்தில் மாரதரைப் பொருதழித்த புகழுடையானென்பதை வேள்விக்குடிச் செப் பேடுகள் விளக்கிக் கூறுகின்றன. மங்கலபுரப் போரில்* (*மங்கலபுரம் என்பது திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் கொள்ளிடத்திற்கு வடகரையிலுள்ள மங்கலம் என்னும் ஊர். (பாண்டியவர் வரலாறு, பக். 46)) பாண்டியனுக்குத் தோற்றோடியவன் மேலைச் சாளுக்கிய வேந்தன் முதல்விக்கிரமாதித்தனாக இருத்தல் வேண்டுமென்பது வரலாற்றாராய்ச்சியாளர் துப்ரே அவர்களது கருத்தாகும்.* (*பாண்டியர் வரலாறு பக்.68) இப்பாண்டியன் கி.பி. 670 முதல் 710 வரை ஆட்சிபுரிந்தவன். இவன் காலத்திலேதான் சுந்தரமூர்த்தி சுவாமிகள் சேரமான் பெருமாள் நாயனாருடன் மதுரைக்குச் சென்று இவனாலும் இவன் மகளை மணந்து மதுரையில் தங்கி யிருந்த சோழமன்னனாலும் உபசரிக்கப் பெற்றுத் திருவால வாய்ப் பெருமானையும் திருப்பரங்குன்றப் பெருமானையும் வழிபட்டுப் போற்றினரென்பது ஆராய்ச்சியாளர் கருத்தாகும்.* (*பாண்டியர் வரலாறு பக்.46). இம்முடிபினை இயைத்து நோக்கு மிடத்துச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் வாழ்ந்த காலம், பல்லவர், பாண்டியர், சோழர், சேரர் என்னும் தமிழ்நாட்டு வேந்தர்கள் அனைவரும் சைவசமயத்தைப் போற்றி வளர்த்த அமைதியான காலமென்பதும் இக்காலப் பகுதியில் தமிழகத்தை யாண்ட வேந்தர்களிடையே சிறுகச் சிறுக ஒற்றுமை நிலவத் தொடங்கிய தென்பதும் ஒருவாறு புலனாகும். சீனதேச யாத்திரிகரொருவர் எழுதியுள்ள யாத்திரைக்குறிப்பில் தமிழ் நாட்டில் இராசசிம்ம

பல்லவன் ஆட்சிக்காலத்தில் பஞ்சம் ஒன்று ஏற்பட்டதாகக் குறிப்பிட்டுள்ளார். இச்செய்தி,

'வையக முற்று மாமழை மறந்து
வயலில் நீரிலை மாநிலம் தருகோம்
உய்யக் கொள்கமற் றெங்களை யென்ன
ஒளிகொள் வெண்முகி லாய்ப்பரந் தெங்கும்
பெய்யு மாமழைப் பெருவெள்ளந் தவிர்த்துப்
பெயர்த்தும் பன்னிரு வேலிகொண் டருளுஞ்
செய்கை கண்டுநின் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழிற்றிருப் புன்கூ ருளானே.'

எனவரும் சுந்தரர் தேவாரத்தாலும்,

'பொன்னம் பலத்துறை புண்ணிய னென்பர் புயல்மறந்த
கன்னன்மை தீரப் புனிற்றுக் கலிக்காமற் கன்றுபுன்கூர்
மன்னு மழைபொழிந் தீரறு வேலிகொண் டாங்கவற்றே
பின்னும் பிழைதவிர்த் தீரறு வேலிகொள் பிஞ்ஞகனே.'

எனவரும் கோயிற் றிருப்பண்ணியர் விருத்தத்தாலும் கோட்புலி நாயனார் வரலாற்றாலும் வலியுறுதல் காணலாம்.

இதுகாறும் எடுத்துக்காட்டிய குறிப்புக்களால் சுந்தர மூர்த்தி சுவாமிகளால் தம் காலத்து வேந்தனாகப் போற்றப்பெற்ற 'காடவர்கோன் கழற்சிங்கன்' என்பான் கி.பி. 690 முதல் 720 வரையில் ஆட்சிபுரிந்த இரண்டாம் நரசிம்மவர்மனாகிய இராச்சிம்ம பல்லவனே என்பது நன்கு புலனாதலின் கி.பி. ஏழாம் நூற்றாண்டின் பிற்பகுதியும் எட்டாம் நூற்றாண்டின் தொடக்க முமாகிய காலப்பகுதியே சுந்தரரும் அவர்தம் உயிர்த் தோழர் சேரமான் பெருமாள் நாயனாரும் வாழ்ந்த காலமென்பது நன்கு துணியப்படும்.



# தேவாரத் திருப்பதிகங்கள்

## 1. தொகுப்புமுறை

தேவார ஆசிரியர் மூவருள் இயலிசைத் தமிழாகிய திருப்பதிகங்களை முதன்முதல் அருளிச் செய்தவர், திருஞான சம்பந்தப்பிள்ளையாராதலின், அவர் அருளிய திரப்பதிகங்கள் முதல் மூன்று திருமுறைகளாகவும், அவர்தம் கெழுதகை நண்பராய் அக்காலத்தில் விளங்கிய திருநாவுக்கரசர் அருளிய திருப்பதிகங்கள் நான்காம் திருமுறை - ஐந்தாந்திருமுறை - ஆறாந் திருமுறை என மூன்று திருமுறைகளாகவும், இவ்விரு பெரு மக்களும் வாழ்ந்த காலப்பகுதியையொட்டிச் சில ஆண்டுகள் பிற்பட்டுத் தோன்றிய நம்பியாரூரர் அருளிய திருப்பதிகங்கள் ஏழாந்திருமுறை என ஒரு திருமுறையாகவும் முறைப்படுத்தப் பெற்ற செய்தி முன்னர் விளக்கப்பெற்றது.

இயலிசைத் தலைவராகிய இப்பெருமக்கள் மூவராலும் அருளிச் செய்யப்பெற்ற திருப்பதிகங்கள் முழுவதும் தேவாரம் என்ற பெயரால் ஒருங்கே தொகுக்கப்பெற்றுப் 'பண்முறை' எனவும் 'தலமுறை' எனவும் இருவேறு முறையில் வரிசைப் படுத்தப்பட்டு வெளிவந்து வழங்குதலை யாவரும் அறிவர். இவ்விரு வகையுள் பண்முறையென்பது, திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பியாரூரர் என்னும் இப்பெருமக்கள் மூவருள் முறையே ஒவ்வொருவரும் அருளிச் செய்த திருப்பதிகங்களில் அமைந்த பண்களை வகைப்படுத்தி ஒவ்வொரு பண்ணுக்கும் உரிய திருப்பதிகங்களைக் கட்டளை விகற்பத்திற்கு இயைய நிரலே தொகுத்து இவ்வாறே மூவர் திருப்பதிகங்களையும் ஏழு திருமுறைகளாக வகுத்தெழுதிய பழைய முறையாகும். தலமுறை யென்பது 'கோயில் திருவேட்களம்' முதலாகத் திருப்பதிக் கோவையிற் குறித்த முறையை யொட்டித் தேவாரப் பாடல் பெற்ற திருத்தலங்களையெல்லாம் தில்லைப்பெருங்கோயில் முதலாக வரிசைப்படுத்தி அந்தத்தலங்களுக்குரிய தேவாரப் பதிகங்களை முற்குறித்த ஏழுதிருமுறைப் பாகுபாட்டிற்கு ஏற்ப முறைப்படச் சேர்த்து அமைத்த முறையாகும்.

இவ்விருவகையுள் முற்கூறிய பண்முறையமைப்பே பழைய ஏட்டுச் சுவடிகளில் இடம் பெற்றுள்ளது. மூவர் தேவாரப்பதிகங் களை ஏழு திருமுறைகளாகப் பகுத்து வழங்கும் திருமுறைப் பகுப்புக்கு அடிப்படையாயமைந்தது இப் பண்முறையமைப்பே

எனக் கருதுதல் பொருந்தும். பண்முறையமைப்பாகிய இதனை ஆதாரமாகக் கொண்டு நோக்கினால்தான் மூவர் திருப்பதிகங் களையும் முதல் ஏழு திருமுறைகளாகப் பகுத்து வழங்கிய நம்முன்னோரது பகுப்பு முறை இனிது விளங்கும். தேவாரத் திருப்பதிகங்களைத் தலைமுறையில் அமைத்துப் பயிலும் வழக்கம் பிற்காலத்தில் தோன்றியதெனவே கருத வேண்டி யுள்ளது. மூர்த்தி, தலம், தீர்த்தம் என்பவற்றை முறையே கண்டு வழிபடும் விருப்புடைய சிவநேசச் செல்வர்கள், தாம் வழிபட விரும்பிய ஒவ்வொரு தலத்திற்கும் அமைந்த தேவாரத் திருப்பதி கங்கள் முழுவதையும் நாள்தோறும் முறையே பாராயணஞ் செய்தற்கு ஏற்ற வண்ணம் முறைப்படுத்தப்பெற்றதே இத்தல முறைப் பகுப்பாகும். இப்பகுப்பு தில்லைப் பெருங்கோயிலை முதன்மைத் திருத்தலமாகக்கொண்டு அமைந்திருப்பது தேவார ஆசிரியர் மூவர் திருவுள்ளத்திற்கும் ஏற்புடையதேயாகும். இது, சிவத்தலங்களெல்லாவற்றிற்கும் முதலில் வைத்துப் போற்றத் தகும் சிறப்புடைய திருத்தலம் என்ற நோக்கத்துடன் தில்லைப் பெருங்கோயிலைப்பற்றி அம் மூவரும் உளமுவந்து பாடிய திருப்பாடற்குறிப்புக்களால் நன்கு புலனாம். இக்குறிப்பினை விளக்கும் முறையில் ‘கோயில் திருவேட்களம் நெல்வாயில் கழிப்பாலை’ எனத் தொடங்கும் திருப்பதிக்கோவை அமைந்தி ருத்தல் அறியத் தக்கதாகும். மேற் குறித்த பண்முறை, தலமுறை என்னும் இருவகை முறைகளுள் தேவார ஆசிரியர் காலந் தொட்டு இடையீடின்றி வழங்கிவருவதும் சைவத் திருமுறைகள் பன்னிரண்டு என்ற பகுப்பிற்கு நிலைக்களமாக அமைந்ததும் பண்முறையே யாதலின் அம்முறையினைப் பின்பற்றித் தேவாரத் திருப்பதிகங்களின் அமைப்பினை நோக்குதல் ஏற்புடையதாகும்.

யாவருக்கும் தாயும் தந்தையுமாகிய அம்மையப்பர் அளித்த ஞானவாரமுதமாகிய பாலைப் பருகிப் பேருணர்விற் பொலியும் ஆளுடைய பிள்ளையார், உள்நிறைந்து பொழிந்தெழுந்த உயர் ஞானத் திருமொழியால் முதன்முதல் திருவாய் மலர்ந் தருளியது, ‘தோடுடைய செவியன்’ எனும் முதற் குறிப்புடைய பிரமபுரத் திருப்பதிகமாகும். ‘யாரளித்த பாலடிசில் உண்டனை? எச்சில் மயங்கிட உனக்கு இதனை இட்டாரைக் காட்டுக’ என வினவிச் கையிற் சிறியதொரு கோல் கொண்டு சிவபாதவிருதயராகிய தந்தையார் தம்மை அடித்தற்கு ஓங்கியபொழுது, சிவஞானம் பெற்ற பிள்ளையார், தம் கண்ணெதிரே விசும்பில் விடையின் மேல் எழுந்தருளிய அம்மையப்பரைத் தம் தந்தையார்க்கு ஒரு சிரு விரலாற் சுட்டிக்காட்டி ‘எம்மை இது செய்த பிரான் பிரமாபுரம் மேவிய பெம்மான் இவனே’ என அடையாளங்களுடன் புலப்படுத்துவதாக அமைந்தது. ‘தோடுடைய செவியன்’ எனும்

இத்திருப்பதிகமாதலின், இதனை 'மெய்ம்மை மொழித் திருப்பதிகம், எனச் சேக்கிழாரடிகள் சிறப்பித்துப் போற்றியுள்ளார். எல்லை யிலா மறைகளுக்கெல்லாம் முதலாக அமைந்தது. ஓமெனும் எழுத்தாகிய பிரணவமாகும் மறைமுதலெழுத்தாகிய 'ஓம்' என்பதிலுள்ள ஓங்காரத்தினைத் 'தமிழ்' என்பதன் முதலெழுத்தாக அமைந்த தகர மெய்யுடன் இணைத்துத் தொடங்கிய சிறப்பு 'தோடுடைய செவியன்' எனும் இத்திருப் பதிகத்துக்கு உண்மையால், 'எல்லையிலா மறைமுதல் மெய்யுடன் எடுத்த எழுதுமறை, மல்லல்நெடுந்தமிழ்' எனப் போற்றப்பெற்று முதற்றிருமுறையில் முதற்றிருப் பதிகமாக முறைப்படுத்தப் பெற்றது.

இத்திருப்பதிகத்திற்குரிய பண் நைவளம் என்பதாகும். இதனை இக்காலத்தார் நட்டபாடை என வழங்குவர். திருஞான சம்பந்தப்பிள்ளையார் முதன் முதற் பாடியருளிய இப்பதிகத்தில் அமைந்த பண் நட்டபாடையாதலின், பிள்ளையார் நட்ட பாடைப் பண்ணிற் பாடியருளிய திருப்பதிகங்கள் யாவும் 'தோடுடைய செவியன்' எனும் இத்திருப்பதிகத்தையொட்டி முதற்றிரு முறையின் முதற்கண் வைக்கப்பெற்றன. ஆளுடைய பிள்ளையார்க்குக் காலத்தால் முற்பட்டவர் காரைக்காலம் மையார். அம்மையார் அருளிச் செய்த திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் இரண்டனுள் 'கொங்கை திரங்கி' என்ற முதற் குறிப்புடைய திருப்பதிகம். நட்டபாடைப் பண்ணில் அமைந்தி ருப்பது போலவே, பிள்ளையார் அருளிய முதல் திருப்பதிகமும் நைவளம் என்ற நட்டபாடைப் பண்ணில் அமைந்திருத்தல் இங்கு ஒப்பு நோக்கியுணரத்தக்கதாகும்.

மூவாண்டிலேயே சிவஞானம் கைவரப்பெற்ற ஆளுடைய பிள்ளையார் அம்மையப்பரை விடைமேற்கண்டு தம் தந்தை யார்க்குக் காட்டும் நிலையில் 'தோடுடைய செவியன்' எனும் இத்திருப்பதிகத்தைப் பாடியபின் அடுத்து நிகழ்ந்த அற்புதச் செயல், திருஞானசம்பந்தர் திருக்கோலக்காவை அடைந்து இறைவனை வணங்கிப்பாடி அப்பெருமானால் அளிக்கப்பட்ட பொற்றாளத்தினைப் பெற்றமையேயாம். உலகத்தவர் கண்டு மகிழ இவ்வியத்தகு செயல் நிகழும் நிலையிற் பாடிய திருப்பதிகம் 'மடையில் வாளை பாய' என்ற முதற் குறிப்புடையதாகும். இப்பதிகம் தக்கராகம் என்ற பண்ணிற் பாடப்பெற்றதாதலின், தக்கராகப் பண்ணமைந்த திருப்பதிகங்கள் யாவும் இதனைச் சாரவைக்கப்பெற்றன. குறிஞ்சிப் பெரும்பண்ணுக்குரிய கைவளம் என்ற முதல் திறத்தின் அகநிலையாக அமைந்தது, நட்டபாடை அதனை யடுத்துப் பாலைப்பெரும் பண்ணுக்குரிய அராகம் என்ற முதல் திறத்தின் அகநிலையாக அமைந்த தக்கராகப் பண் அமைந்

திருத்தல் பொருத்தமுடையதேயாம். தக்கராகப் பண்ணுடன் பெயரால் ஒற்றுமையுடையது பழந்தக்கராகம் என்ற பண்ணாகும். எனவே பழந்தக்கராகப் பண்ணமைந்த பதிகங்கள் தக்கராகப் பதிகங்களை அடுத்துவைக்கப்பட்டன. தக்க கைவசிகம் என்ற பெயரே தக்கேசி எனத் திரிந்ததென்பர்.* (*யாழ் நூல், பக்கம் 285) இப்பெயரொற்றுமை கருதித் தக்கேசிப் பண்ணமைந்த பதிகங்கள் பழந்தக்கராகப் பண்ணமைந்த பதிகங்களை அடுத்து வைக்கப் பட்டன. இனி, பண்டைத் தமிழ்ச் சான்றோர்கள் நானிலத்து ஐந்திணையொழுக்கங்களுக்குச் சிறப்புரிமையுடையவாகப் பகுத்துரைத்த பழைய தமிழ்ப் பண்களுள் குறிஞ்சிப் பண் முதன்மையுடையதாதலின் குறிஞ்சிப்பண்ணிலமைந்த பதிகங்கள் தக்கேசிப் பதிகங்களைச் சாரவைக்கப்பட்டன. குறிஞ்சியொடு பெயரொற்றுமையுடைய பண்கள் வியாழக் குறிஞ்சி, மேகராகக் குறிஞ்சி என்பனவாகும். இவ்விரு பண்களிலும் அமைந்த பதிகங்கள் குறிஞ்சிப்பண்ணுக்குரிய பதிகங்களை அடுத்து முறைப்படுத்தப் பெற்றன. எடுத்த இயலும் இசையும் இடையே முரிந்து மாறுபடுமியல்புடையதாய் அமைந்த இசைப்பாடல் முரி எனப்படும்.* (*"எடுத்த இயலும் இசையும் தம்மின் முரித்துப் பாடுதல் முரியெனப்படும்"- சிலப்பதிகாரம், கானல்வரி அரும்பதவுரை மேற்கோள்) இத்தகைய முரிப்பாடல்களாக அமைந்தது 'மாதர் மடப்பிடி' என்னும் முதற்குறிப்புடைய திருத்தருமபுரப்பதிகமாகும். இயலிசைத் திறத்தில் வேறு பாடுமையால் தமிழம் இசைத்திற் அடங்காத நிலையில் 'யாழ் முரி' எனப் பெயர் பெற்ற இத்திருப்பதிகம், முதற்றிருமுறையில் இறுதித் திருப்பதிகமாக வைக்கப்பெற்றது. எனவே முதற்றிரு முறையாகிய இதன்கண் நட்டபாடை, தக்கராகம், பழந்தக்க ராகம், தக்கேசி, குறிஞ்சி, வியாழக்குறிஞ்சி, மேகராகக்குறிஞ்சி என்னும் ஏழு பண்களுக்குரிய நூற்று முப்பத்தைந்து திருப்பதிகங்களும் யாழ்முரி என்ற திருப்பதிகம் ஒன்றும் ஆக நூற்று முப்பத்தாறு திருப்பதிகங்கள் இடம் பெற்றிருத்தல் காணலாம்.

மூவர் அருளிய தேவாரத் திருப்பதிங்களில், இறைவனது திருவருட் பெருமையினை உலக மக்கள் உணர்ந்து போற்றும்படி வியப்புடைய அருட்செயல்கள் பல நிகழும் வண்ணம் பாடப் பெற்ற திருப்பதிகங்களை அற்புதத் திருப்பதிகங்கள் எனப் போற்றுவர் பெரியோர். மூன்றாம் வயதினராகிய கவுணியப் பிள்ளையார், திருப்பிரமபுரத் திருக்கோயிலுள்ள பிரம தீர்த்தத்துள் மூழ்கி நியமங்கள் செய்யும் தம் தந்தையாரைக் காணப்பெறாது அத்தீர்த்தக்கரையில் நின்று 'அம்மே அப்பா' என அழைத்து அழுதருளியபோது இறைவன் அம்மையப்பராக விடைமீது எழுந்தருளி வந்து பிள்ளையார்க்கு ஞானபோனம் அருந்தியருள

அதன் பயனாக உளங்குளிர்ந்து பாடிய 'தோடுடைய செவியன்' என்னும் பனுவலும், திருக்கோலக்காவில் பொற்றாளம் பெறப் பாடிய 'மடையில் வாளை' என்ற பதிகமும், திருநீலகண்ட யாழ்ப்பாணர் வேண்டிக் கொண்ட வண்ணம் திருப்பதிகத்து இசையாழிலடங்கா வண்ணம் பாடிய 'மாதர் மடப்பிடி' என்னும் யாழ்முரிப்பதிகமும், திருப்பாச்சிலாச்சிராமத்தில் கொல்லி மழவன் மகளைப்பற்றிய முயலகன் எனும் நோய்தீரப் பாடிய 'துணிவளர் திங்கள்' என்ற பதிகமும், கொங்கு நாட்டிற் பனி நோய் நீங்கப் பாடிய 'அவ்வினைக்கிவ்வினையாம்' என்னும் திருநீலகண்டப் பதிகமும், மதுரையிற் சமணரொடு நிகழ்த்திய அனல்வாதத்தில் தீயிலிட்டும் வேவாது பச்சையாய் விளங்கிய 'போகமார்த்த பூண்முலையாள்' என்னும் பச்சைப் பதிகமும், திருவோத்தூரில் ஆண்பனை பெண்பனையாகும் வண்ணம் பாடிய 'பூத்தேர்ந்தாயன' என்ற பதிகமும், திருவீழிமிழலையிற் பெற்ற பழங்காசின் வட்டம்தீரப் பாடிய 'வாசிதீரவே காசு நல்குவீர்' என்ற பதிகமும் இம்முதல் திருமுறையிலுள்ள அற்புதத் திருப்பதிகங்களாகும்.

அன்புடைய அடியார்கள் கூறும் வேண்டுகோளைச் செவி மடுத்து இன்னருள் புரியும் அம்மையப்பனாக விளங்குவோன் எல்லாம் வல்ல முழு முதற்கடவுளே என வலியுறுத்தும் நிலையில் 'தோடுடைய செவியன்' எனத்தொடங்கிய இம் முதல் திருமுறை, ஞானத்திரளாய் நின்ற அவ்விறைவன் திருவடிகளை மனத்தினாற் பேணிப் போற்றி வழிபடும் மெய்யடியார்கள் 'இன்னெடு நன்னுலகெய்துவர்' எய்திய போகமும் உறுவர்கள், 'இடர்பிணி துயர் அணைவிலரே' என இத்திருமுறைப் பனுவல்களை உள்முருகி ஓதுவோர் எய்தும் பயன்களை அறிவுறுத்தும் இனிய திருப்பாடலுடன் நிறைவு பெற்றுளது.

இரண்டாந் திருமுறையில் இந்தளம், சீகாமரம், காந்தாரம், பியந்தைக் காந்தாரம், நாட்டராகம், செவ்வழி என்னும் ஆறு பண்களில் அடங்கிய நூற்றிருபத்திரண்டு திருப்பதிகங்கள் முறைப்படுத்தப் பெற்று உள்ளன. ஒவ்வொரு பண்களிலும் அவற்றுக்குரிய பல கட்டளைகளிலும் திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவதாரம் செய்த திருப்பதியாகிய சீர்காழிப் பதிக்குரிய திருப்பதிகங்களே முதலிடம் பெற்றிருத்தல் காணலாம். மருதப் பெரும்பண்ணின் 'வடுகு' என்னுந் திறத்தின் அகநிலை யாகிய இந்தளப்பண், இத்திருமுறையின் முதற்கண் இடம்பெற்றி ருத்தலை நோக்குங்கால், தெய்வப்பாடல்களுக்குச் சிறப்புரிமை யுடைய பண்களுள் இந்தளமும் ஒன்றென்பது நன்கு புலனாம். காரைக்கால்அம்மையார் அருளிய திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் இரண்டனுள் முதற்பதிகத்திற்குரிய நட்ட

பாடைப்பண் தேவாரத்தில் முதல் திருமுறையில் முதற் பண்ணாக அமைந்திருத்தல் போலவே அம்மையார் அருளிய 'எட்டியிலவம்' என்னும் இரண்டாந் திருப்பதிகத்திற்குரிய இத்தளப்பண் இவ் விரண்டாந்திருமுறையின் முதற் பண்ணாக அமைந்திருத்தல் அறியத்தக்கதாகும்.

பாலை நெய்தல் பாடிய 'காரைகள் கூகைமுல்லை' என வரும் திருநனிபள்ளித் திருப்பதிகமும், திருநெல்வாயில் அரத்துறையீசர் தந்தருளிய முத்துச் சிவிகை, குடை, சின்னம் முதலியவற்றைப் பெற்ற பிள்ளையார், இறைவனது திருவருளை வியந்து போற்றிய 'எந்தையீசன்' என்னும் திருப்பதிகமும், திருமருகல் என்னும் தலத்தில்அரவுதீண்டியிறந்த வணிக னொருவனை உயிர்பெற்றெழச் செய்தல் வேண்டி ஆளுடைய பிள்ளையார் பாடியருளிய 'சடையாயெனுமால்' என்னும் விடந் தீர்த்த பதிகமும், திருமறைக்காட்டில் திருக்கதவம் அடைக்கப் பாடிய 'சதுரம் மறை' என்ற பதிகமும், திருமறைக் காட்டிலிருந்து மதுரைக்குப் புறப்பட்ட பொழுது, 'நாளும் கோளும் தீயன' ஆதலால் எழுந்தருள ஒண்ணாது' என விலக்கிய தம் கெழுதகை நண்பர் அப்பரடிகளுக்கு அமைதி கூறி அவரது இசைவு பெறும் கருத்துடன் பாடிய 'வேயுறு தோளிபங்கன்' எனவரும் கோளாறு திருப்பதிகமும், மதுரையிற் கூன்பாண்டியனது வெப்புநோய் நீங்கப்பாடிய 'மந்திரமாவது நீறு'என்னும் திருநீற்றுப் பதிகமும், திருமயிலாப்பூரில் எலும்பைப் பெண்ணாக்கிய 'மட்டிட்ட புன்னையங்கானல்' என்னும் பூம்பாவைத் திருப்பதிகமும் இவ் விரண்டாந் திருமுறையில் அமைந்த அற்புதத் திருப்பதிகங் களாகும்.

செந்நெலங்கழனிப் பழனத்தயலே செழும்
புன்னை வெண்கிழியிற் பவளம் புரை பூந்தராய்
துன்னி நல்லிமை யோர்முடி தோய்கழலீர் சொலீர்
பின்னு செஞ்சடையிற் பிறைபாம்புடன் வைத்ததே.

என உலக மக்களுக்குரிய செந்நெல் உணவினையும் நறுமலரினையும் குறிப்பிட்டு இறைவன் திருவருட் குறிப்பறிந்து உயிர்கள் தம்முட் பகையின்றி வாழ வேண்டிய நுட்பத்தினையும் அறிவுறுத்தும் திருப்பாடலை முதலாகக் கொண்டு தொடங்கிய இரண்டாந் திருமுறை,

எய்தவொண்ணா இறைவன் உறைகின்ற புகலியைக்
கைதவமில்லாக் கவுணியன் ஞானசம் பந்தன்சீர்
செய்தபத்தும் இவை செப்பவல்லார் சிவலோகத்தில்
எய்தி நல்ல இமையோர்கள் ஏத்த இருப்பார்களே.

என நிறைவுபெற்றிருத்தலை நுணுகி நோக்குங்கால், இறைவனது திருவருள்வழி நின்று எவ்வுயிர்க்கும் அன்பாயொழுகும் மெய்யடி

யார்கள் "வையத்துவாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும், தெய்வத்துள் வைக்கப்படும்" என்னும் தமிழ்மறைக்கு இலக்கியமாகச் சிவலோகத்தில் எய்தி இமையோர்கள் போற்ற இன்புற்றிருப்பார்கள் என இறைவன் வழிபாட்டினாலெய்தும் இருமைப் பயன்களையும் அறிவுறுத்தும் முறையில் இத்திருமுறை அமைந்திருத்தல் இனிது புலனாகும்.

மூன்றாந் திருமுறையில் காந்தாரபஞ்சமம், கொல்லி, கொல்லிக் கௌவாணம், கௌசிகம், பஞ்சமம், சாதாரி, பழம் பஞ்சுரம், புறநீர்மை, அந்தாளிக் குறிஞ்சி என்னும் ஒன்பது பண்களுக்குரிய நூற்றிருபத்தைந்து பதிகங்கள் இடம் பெற்றுள்ளன. சிவத்தலங்கள் எல்லாவற்றிலும் முதலில் வைத்து எண்ணத்தகும் சிறப்புயடையது. சிவநெறிச் செல்வர்களால் 'கோயில்' என வழங்கப்பெறும் தில்லைச் சிற்றம்பலமாதலின் அத்தலத்துக் குரியதும் காந்தாரபஞ்சமப்பண் அமைந்ததுமாகிய 'ஆடினாய் நறு நெய்யொடு பால் தயிர்' என்ற திருப்பதிகம். இத்திருப் பதிகத்தையடுத்துக் காந்தாரபஞ்சமம் என்னும் இப் பண்ணுக் குரிய 'பந்துசேர் விரலாள்' என்னும் முதற்குறிப்புடைய திருப் பூந்தராய் (சீகாழி)த் திருப்பதிகம் அமைந்துள்ளது. இவ்வாறே முதற்றிருமுறையில் குறிஞ்சிப்பண்ணின் இரண்டாம் கட்டளையாக அமைந்த திருப்பதிகங்களில் 'கற்றாங் கெரியோம்பி' என்னும் தில்லைத்திருப்பதிகம் முன்னும் 'நல்லார் தீமேவும்' என்னும் சீகாழிப்பதிருப்பதிகம் பின்னும் அமைந்திருத்தல் காணலாம். ஆளுடைய பிள்ளையார் திருப்பகங்களில் முற்குறித்த இரண்டிடங்களைத் தவிர ஏனைய எல்லாப் பண்களிலும் கட்டளை களிலும் சீகாழிப் பதிக்குரிய திருப்பதிகங்களே முதலிடம் பெற்றிருத்தல் அறியத்தக்கதாகும். ஆளுடைய பிள்ளையார் திருநல்லூர்ப் பெருமணத்தில் தம் திருமணங் காண வந்தோர் அனைவரையும் உடனழைத்துக்கொண்டு திருப்பெருமணத் திருக்கோயிலில் தோன்றிய ஈறில் பெருஞ்சோதியினுள்ளே புகும்பொழுது பாடியருளிய திருப்பதிகம் 'கல்லூர்ப் பெருமணம் வேண்டா' என்னும் முதற் குறிப்புடைய பனுவலாதலின், அதனை மூன்றாந் திருமுறையில் முடிவுத் திருப்பதிகமாகவும் அப்பதிகத் திற்குரிய அந்தாளிக்குறிஞ்சி என்ற பண்ணினை அத்திரு முறையின் இறுதிப் பண்ணாகவும் முன்னுள்ள சான்றோர் முறைப்படுத்தியுள்ளார்கள்.

திருஞானசம்பந்தப் பிள்ளையார், தமக்கு உபநயனச் சடங்கு நிகழ்ந்தபோது, 'மறை நான்கும் தந்தோம்' என்று மந்திரங்கள் மொழிந்த அந்தணர்க்கு 'அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே' என்று அறிவுறுத்தும் முறையில் அருளிச் செய்த பஞ்சாக்கரத் திருப்பதிகமும், தம் தந்தையார் செய்யவிரும்பிய வேள்வியின்

பொருட்டுத் திருவாவடுதுறை யிறைவனைப் பொன்வேண்டி உலவாக்கிழிபெறும் நிலையிற் பாடிய 'இடரினும் தளரினும்' என்ற முதற்குறிப்புடைய திருப்பதிகமும், மதுரையில் அடியார்களுடன் தங்கியிருந்த திருமடத்திற் சமணர் இட்ட தீ 'பையவே சென்று பாண்டியற்காகவே' எனப் பணித்த 'செய்யனே' என்ற திருப்பதிகமும், அங்ஙனம் தீயிட்ட கொடுந்தொழிலாளராகிய சமணரொடு தாம் வாது செய்தற்கு ஆலவாய்ப் பெருமானது திருவுள்ளக் குறிப்பறியப்பாடிய 'காட்டுமாவது', 'வேத வேள்வியை' என்ற முதற் குறிப்புடைய திருப்பதிகங்களும், சமணரொடு நிகழ்த்திய அனல் வாதில் தாம் தீயில் இட்ட ஏடு வேவாவண்ணம் நள்ளாற்றிறைவரைப் பரவிப் போற்றிய 'தளிரிளவளர்' என்ற திருப்பதிகமும், புனல்வாதில் வைகையாற்றில் ஏடு எதிரேறிச் செல்லும் வண்ணம் பாடிய 'வாழ்க அந்தணர்' என்னும் திருப்பாசுரமும், சமணரை வாதில் வென்று சோழநாடடைந்த பின் திருக்கொள்ளம்பூதூர்ப்பெருமானை வழிபட விரும்பி முள்ளியாற்று வெள்ளத்தில் நாவலமே கோலாக ஓடம் உய்க்கும் நிலையிற் பாடிய 'கொட்டமே கமழும்' என்ற திருப்பதிகமும், தம் திருமணங் காண வந்தோர் அனைவரும் ஈனமாம் பிறவிதீர இறைவன் தோற்றுவித்த ஈறில் பெருஞ் சோதியினுள்ளே புகுக' என வழிவகுத்துக் காட்டும் கருத்துடன் அருளிச்செய்த 'காதலாகி' என்னும் நமச்சிவாயத் திருப்பதிகமும், தம்மைச் சார்ந்தவர்களது தீதுறுபிறவிப் பாசந்தீர்த்தல் செம்பொருளாகக் கொண்டு, 'நாதனே, நல்லூர் மேவும் பெருமணநம்பனே, நின் பாதமெய்ந்நீழல் சேரும் பருவம் ஈது' என வேண்டி ஈறில் பெருஞ் சோதியினுள் நிலையிற் பாடிய 'கல்லூர்ப் பெருமணம்' என்னும் திருப்பதிகமும் இம் மூன்றாந் திருமுறையில் அமைந்துள்ள அற்புதத் திருப்பதிகங்களாகும்.

ஆடினாய் நறுநெய்யொடு பால் தயிர் அந்தணர் பிரியாத சிற்றம்பலம்
நாடினாய் இடமா நறுங்கொன்றை நயந்தவனே
பாடினாய் மறையோடு பல்கீதமும் பல்சடைப் பனிகால்
கதிர் வெண்டிங்கள்
சூடினாய் அருளாய் சுருங்க எம தொல்வினையே'

எனத் தில்லைச் சிற்றம்பலவனைப்பரவி வினைத்தொடர் பறுக்கும் வேண்டுகோளாகி திருப்பாடலுடன் தொடங்கிய இம்மூன்றாந் திருமுறை, நல்லூர்ப் பெருமணம் மேவிய நாதனை வழிபட்டு யாவரும் எளிதில் வீடுபேற்றினை எய்தி இன்புறும் நிலையிற் பாடிய திருப்பதிகத்தின் பயனுரைக்கும்,

'நறும்பொழிற் காழியுள் ஞானசம்பந்தன்
பெறும்பத நல்லூர்ப் பெருமணத்தானை

உறும்பொரு ளாற்சொன்ன ஒண்தமிழ் வல்லார்க்
கறும்பழி பாவம் அவல மிலரே'

எனவரும் திருக்கடைக்காப்புப் பாடலுடன் நிறைவு பெற்றிருத்தலை நினைக்குமிடத்து, இவ்வுலக வாழ்வில் நேரும் பழி, பாவங்களை அறுத்து நீக்கி அவலக் கவலையினின்றும் நீங்கி மகிழும் பேரின்ப வாழ்வாகிய வீடுபேற்றினை உலக மக்களுக்கு அளிக்கவல்ல பதிகப் பெருவழியாக விளங்குவன, திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவாய் மலர்ந்தருளிய இம்மூன்று திருமுறைகளும் என்ற நுட்பம் இனிது புலனாதல் காணலாம்.

முற்காலத்தில் இசைத் தமிழ்நூலார் வகுத்துக் காட்டிய நூற்றுமூன்று பண்களுள், (13) செவ்வழி, (17) தக்கராகம், (21) நேர்திறம்-புறநீர்மை, (25) பஞ்சமம், (37) நட்டபாடை, (38)அந்தாளிக் குறிஞ்சி, (41) காந்தாரம், (46) பழம்பஞ்சுரம், (47) மேகராகக்குறிஞ்சி, (49) கொல்லிக்கௌவாணம், (54) பழந்தக் கராகம், (61) குறிஞ்சி, (62) நட்டராகம், (64) வியாழக்குறிஞ்சி, (69) தக்கேசி, (70) கொல்லி, (73) இந்தளம், (76) காந்தாரபஞ்சமம், (80) கௌசிகம், (81) பியந்தைக் காந்தாரம், (82) சீகாமரம், (98) சாதாரி என இருபத்திரண்டு பண்கள் திருஞானசம்பந்தர் அருளிய முதல் மூன்று திருமுறைளிலும் இடம்பெற்றுள்ளன. திருமுறைகண்ட புராணத்தின் படி அச்சிடப்பெற்று வழங்கும் தேவாரப் பண்முறைப் பதிப்பில் முதற்றிருமுறையில் 45-ம் திருப்பதிகமாக அமைந்த 'துஞ்சவருவார்' என்னும் முதற்குறிப்புடைய திருவாலங்காட்டுத் திருப்பதிகம் தக்கராகப் பண்ணுக்குரியதாகக் குறிக்கப் பெற்றுள்ளது. அத் திருப்பதிகம் மூன்றாந் திருமுறையில் ஏழாவது பண்ணாக அமைந்த பழம்பஞ்சுரத்தில் ஆளுடைய பிள்ளை யாரால் அருளிச் செய்யப்பெற்றதாகும். 'துஞ்சவருவார்' என்றே எடுத்த ஓசை சுருதி முறை வழுவாமல் தொடுத்த பாடல்... பஞ்சுரமாம் பழையதிறம் கிழமை கொளப்பாடினார்* (*பெரியபுராணம் திருஞானசம்பந்தர் புராணம் 1010-ஆம் செய்யுள்) எனச் சேக்கிழாரடிகள் தெளிவாகக் குறிப்பிடுதலால் 'துஞ்சவருவார்' என்னும் இத் திருப்பதிகத்திற்குரிய பண், நூற்றுமூன்று பண்களுள் 46 என்னும் எண் பெற்ற பழம்பஞ்சுரமே என்பதும், இப்பொழுது முதல் திருமுறையில் தக்கராகப் பண்ணில் சேர்க்கப் பெற்றுள்ள இப்பதிகம் சேக்கிழாரடிகள் காலத்தில் மூன்றாந் திருமுறையில் பழம்பஞ்சுரப் பண்ணைச் சார்ந்த திருப்பதிகங்களுடன் சேர்க்கப் பெற்றிருத்தல் வேண்டுமென்பதும் நன்கு துணியப்படும். எனவே ஞானசம்பந்தர் அருளிய தேவாரப் பதிகங்கள் அடங்கிய முதல் மூன்று திருமுறைகளிலும் பழந்தமிழ் பண்களாகிய நூற்று மூன்று பண்களுள் மேற்குறித்த இருபத்திரண்டு பண்கள் அமைந் துள்ளமை இனிது புலனாம்.

திருநாவுக்கரசர் அருளிய திருப்பதிகங்களில் பண்ணமைந்த பதிகங்கள் அனைத்தும் நான்காந் திருமுறையென ஒன்றாகவும், திருக்குறுந்தொகைப் பதிகங்கள் அனைத்தும் ஐந்தாந் திருமுறை யென ஒன்றாகவும், திருத்தொண்டகப்பதிகங்கள் அனைத்தும் ஆறாந் திருமுறையென ஒன்றாகவும் இவ்வாறு மூன்று திருமுறை களாக வகுக்கப்பெற்றன. தம்மைப்பற்றி வருத்திய சூலை நோயினைப் பொறுக்கலாற்றாது சமண சமயத்தைத் துறந்து போந்த மருள்நீக்கியார், தம் தமக்கையார் திலகவதியாரைப் பணிந்து திருநீறணிந்து திருவதிகை வீரட்டானத்திறைவரை இறைஞ்சி உரைத் தமிழ் மாலைகள் சாத்தும்உணர்வு பெற்று முதன்முதற் பாடிய திருப்பதிகம் 'கூற்றாயின வாறுவலக்ககிலீர்' என்பதாகும். திருநாவுக்கரசரால் முதலிற் பாடப்பெற்றமை கருதி இது நான்காந் திருமுறையின் முதலாந் திருப்பதிகமாக அமைக்கப் பெற்றது. இப்பதிகத்திற்குரிய பண் கொல்லி என்பதாகும். எனவே கொல்லிப் பண்ணமைந்த பதிகங்கள் இதனைச்சார வைக்கப் பெற்றன. கொல்லி, காந்தாரம், பியந்தைக்காந்தாரம், சாதாரி, காந்தாரபஞ்சமம், பழந்தக்கராகம், பழம்பஞ்சுரம், இந்தளம், சீகாமரம், குறிஞ்சி என்னும் பத்துப் பண்களும், திருநேரிசை, திருவிருத்தம் என்னும் யாப்பியல் விகற்பமும் அமைந்த திருப்பதிகங்கள் இந் நான்காந் திருமுறை பல முறையே தொகுக்கப் பெற்றுள்ளன. இவற்றுள் திருநேரிசை, திருவிருத்தம் என்பவற்றை முறையே நேரிசைக்கொல்லியெனவும் விருத்தக் கொல்லி யெனவும் கொல்லிப்பண்ணில் அடக்குதல் மரபு.

திருநேரிசை யென்பது,

கூவிளம் புளிமா தேமா கூவிளம் புளிமா தேமா எனவரும் கட்டளையடியினையுடைய செய்யுளாகும். அறுசீர்களால் இயன்ற இக் கட்டளையடியில் முதற் சீரும் நான்காஞ் சீரும் ஒரே வழிக் கருவிளம் ஆதலும், இரண்டாஞ் சீரும் ஐந்தாஞ் சீரும் தேமாவாதலும் உண்டெனவும், மூன்றாஞ் சீரும் ஆறாஞ் சீரும் எப்பொழுதும் தேமாவாயே நிற்பன எனவும் இதன் யாப் பமைதியினை விளக்குவர் யாழ் நூலாசிரியர்.* (* யாழ் நூல் பக்கம் 217) நேரிசை என்னும் இப்பெயர், மேற்குறித்த அறுசீர்க்கட்டளை யடியால் அமைந்த யாப்பினைக் குறிப்பதுடன் அதனைப் பாடுதற் கமைந்த சுத்தாங்கமாகிய இசையமைப்பினையும் புலப்படுத்தும் முறையில் அமைந்திருத்தல் காணலாம்.

'நேரிசையாக அறுபதம் முரன்று' 1-75-3 எனவும்,

'நீணமார் முருகுண்டு வண்டினம் நீலமாமலர் கவ்வி நேரிசை
பாணில் யாழ்முரலும் புறவார் பனங்காட்டூர்' 2-53-10

எனவும் வரும் ஆளுடைய பிள்ளையார் திருப்பாடல்களில்

நேரிசை என்னும் இவ்விசையமைப்பு குறிக்கப்பெற்றிருத்தல் காணலாம். இக்குறிப்புக்களை ஊன்றி நோக்குங்கால், வண்டுகள் நறு மலர்களில் மகரந்தப் பொடியையும் தேனையும் மாந்தி அம்மலர்களிற்படிந்து இடையீடின்றி முரல்வது போலும் நேரிய இசையமைந்த திருப்பாடல்கள் நேரிசை என்ற பெயர் பெறுவன என்னும் நுட்பம் இனிது புலனாகும். சிவபெருமானுக்கு உவப்பை விளைக்கும் பண்களுள் கொல்லிப் பண்ணும் ஒன்றென்பதனை,

**'கொல்லியாம் பண்ணுகந்தார் குறுக்கை வீரட்டனாரே'**

4-49-6

எனத் திருநாவுக்கரசர் திருக்குறுக்கைத் திருநேரிசையிற் குறித்துள்ளார். தெய்வ வழிபாட்டிற்குரிய இக்கொல்லிப் பண்ணில் திரு நேரிசைப் பதிகங்களைப் பாடும் வழக்கம் உண்டென்பது, 'நந்தாத நேரிசையாங் கொல்லிக்கு' எனவரும் திருமுறைகண்ட புராணத்தால் உணரப்படும். தேவாரத்தில் வரும் இத்திரு நேரிசை யாப்பும் திவ்யப்பிரபந்தத்தில் வரும் திருக்குறுந்தாண்டக யாப்பும் ஒன்றே யென்பது, இவ்விரு பனுவல்களிலும் அமைந்த திருப் பாடல்களை ஒப்பு நோக்குவார்க்கு இனிது விளங்கும்.

அப்பரடிகள் அருளிய திருப்பதிகங்களில் திருவிருத்தம் என்பது, இக்காலத்தில் கட்டளைக் கலித்துறை என்ற பெயரால் வழங்கப்பெறும் யாப்பாகும். ஐஞ்சீரடி நான்காய், அடிதோறும் முதற்சீர் நான்கும் வெண்டளை பிழையாமல் நிற்க, ஐந்தாம் சீராகிய இறுதிச்சீர் கூவிளங்காய் கருவிளங்காய் என்னும் சீர்களுள் ஒன்றாகப்பெற்று, முதற்சீரின் முதலிசை நேரிசை யாயின் ஓரடிக்கு எழுத்துப் பதினாறும், நிரையசையாயயின் பதினே ழுத்தும் உடையதாய் வரும் செய்யுள் கட்டளைக் கலித்துறை எனப்படும். மேற்குறித்தவண்ணம் எழுத்தெண்ணி வகுக்கப் பெற்ற கட்டளையடிகளால் இயன்ற செய்யுளாதலின் இது கட்டளைக் கலித்துறை யென்னும் பெயர்த்தாயிற்று. பிற்காலத்தாரால் கட்டளைக் கலித்துறை யென்ற பெயரால் வழங்கப் பெறும் இச் செய்யுள், தொல்காப்பியச் செய்யுளியலில் விரித்துரைக்கப் பட்டுள்ள பழைய யாப்பிலக்கணத்தின்படி ஐஞ்சீர் நான்கடியான் வந்த தரவு கொச்சகம் எனப்படும்.

"இனி, நூனவில் புலவர்" என்றதனான், இதனைக் கோவையாக்கி எழுத்தெண்ணி அளவியற்படுத்துச் செய்வனவும் தரவு கொச்சகம், அவற்றுள் ஒரோவெழுத்தும் மிக்குவருவனவும் கொச்சகமாம்,

**திருவளர் தாமரை சீர்வளர் காவிக ளீசர்தில்லைக்**
**குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள்கொண் டோங்கு தெய்வ**

மருவளர் மாலையொர் வல்லியி னொல்கி யனநடைவாய்ந்
துருவளர் காமன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே.

போதோ விசும்போ புனலோ பணிக ளதுபதியோ
யாதோ வறிகுவ தேதுமரிதி யமன்விடுத்த
தூதோ வனங்கன் றுணையோ விணையிலி தொல்லைத்தில்லை
மாதோ மடமயி லோவென நின்றவர்வாழ்பதியே

இவை பதினேழும் பதினாறுமாய் வந்த தரவு கொச்சகம்.

குயிலைச் சிலம்படிக் கொம்பினைத் தில்லையெங் கூத்தப்பிரான்
கயிலைச் சிலம்பிற்பைம் பூம்புனங் காக்குங் கருங்கட் செவ்வாய்
மயிலைச் சிலம்பகண் டியான்போய் வருவன்வண் பூங்கொடிகள்
பயிலச் சிலம்பெதிர் கூய்ப்பண்ணை நண்ணும் பளிக்கறையே.

காரணி கற்பகங் கற்றவர் நற்றுணை பாணரொக்கல்
சீரணி சிந்தா மணியணி தில்லைச் சிவனடிக்குத்
தாரணி கொன்றையன் தக்கோர்தஞ் சங்க நிதிவிதிசேர்
ஊருணி யுற்றவர்க் கூரன்மற் றியாவர்க்கு மூதியமே.

இவை ஒரோவெழுத்து மிக்க தரவு கொச்சகம்"

எனத் தொல்காப்பியச் செய்யுளியல் 155-ஆம் சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர் கூறும் விளக்கம், அவரால் உதாரணமாகக் காட்டப்பெற்ற திருச்சிற்றம்பலக் கோவைச் செய்யுளுக்கே யன்றித் திருநாவுக்கரசர் அருளிய இத்திருவிருத்த யாப்புக்கும் மிகவும் பொருத்தமுடையதாகும்.

விருத்தம் என்பது வடசொல். அச்சொல்லுக்குரிய பல பொருள்களுள் ஒன்றன் நிகழ்ச்சி அல்லது விருத்தாந்தம் என்பதும் ஒரு பொருளாகும். ஒரு பொருளின் விருத்தாந்தமாகிய நிகழ்ச்சியை விரித்துரைக்கும் பனுவலை விருத்தம் என்ற பெயரால் வழங்குதலும் உண்டென்பதும் நரிவிருத்த கிளி விருத்தம், எலிவிருத்தம் எனச் சமண சமயத்தார்க்குரியனவாகத் தேவாரத் திருப்பதிகங்களிற் குறிக்கப்பெறும் நூற்பெயர்களால் இனிது விளங்கும். அப்பரடிகள், இறைவன் பால் முறையிட்டுத் தெரிவித்துக் கொள்ளுதற்குரிய செய்திகளாகவும், இறைவன் செய்த அருட்செயல்களாக உலகத்தார்க்கு அறிவுறுத்த வேண்டிய செய்திகளாகவும் அமைந்த திருத்தகவினவாகிய நிகழ்ச்சிகளைப் புலப்படுத்தும் நிலையில் அமைந்தன இத் திருப்பதிகங்களாதலின், இவை திருவிருத்தம் என வழங்கப் பெற்றன. 'எலிவிருத்தம்' என்ற நூற்பெயரை 'எலியின் தொழிற் பாட்டு'* (* 3-39-5) என ஆளுடைய பிள்ளையார் விரித்துரைத் தலால் இங்கு எடுத்துக் காட்டிய விருத்தம் என்ற சொல்லுக்குப் பாவினத்தின் வகையாகப் பிற்காலத்தில் வழங்கும் விருத்தப்பா

எனப் பொருள் கொள்ளாது ஒன்றன் விருத்தாந்தமாகிய தொழில் நிகழ்ச்சியை விளக்கும் பனுவல் எனப் பொருளு ரைப்பதே இயைபுடையதாதல் காணலாம். புறச்சமயத்தாரால் புனைந்துரை வகையால் இயற்றப்பெற்ற நரிவிருத்தம், கிளி விருத்தம், எலிவிருத்தம் என்பன போன்று வாழ்க்கைக்குப் பெரும் பயன்தராத நிகழ்ச்சிகளை விரித்துரையாது உலகத்தார்க்கு இருமையினும் பெரும்பயன் தரத்தக்க திருத்தகவினவாகிய அருள் நிகழ்ச்சிகளையே விரித்துரைப்பன இத்திருப்பதி கங்களாதலின், நரிவிருத்தம் முதலிய பிறவற்றின் வேறாகத் 'திரு' என்னும் சிறப்புடை அடைமொழியைப் பெற்றுத் திருவிருத்தம் எனப் போற்றப்பெறுவனவாயின. இவ்வாறே, உயர்வற வுயர் நலமுடைய இறைவனால் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களுள் ஒருவராகிய நம்மாழ்வார், திருமாலாகிய பெருமானிடத்தே தாம் கொண்ட பேரன்பின் திறத்தால் தம் உள்ளத்தே விளைந்த அநுபவ நிகழ்ச்சியையும், தம் உள்ளத்தை நெகிழ்வித்த தன்னேரில்லாத் தலைவனாகிய இறைவனைப் பிரிந்து இருள்தருமா ஞாலத்தே இருத்தல் தம்மாற் பொறுத்தற் கரிய துன்பமாதலையும், ஆருயிர் நாயகனாகிய அவனை யடைந்து இன்புறுதற்குத் தடையாயின இவை யென்பதனையும் தம் பெருமானாகிய இறைவனை நோக்கி விண்ணப்பஞ் செய்யும் முறையில் கட்டளைக் கலித்துறையாப்பில் அருளிய பனுவல் திருவிருத்தம் என்ற பெயரால் வழங்குதல் இங்கு நினைக்கத் தகுவ தாகும்.

தொல்காப்பியச் செய்யுளியலின்படி தரவு கொச்சகம் என்றும், பிற்கால யாப்பிலக்கண அமைப்பின்படி கட்டளைக் கலித்துறை என்றும் கூறப்படும் செய்யுளமைப்பில் திருநாவுக் கரசர் பாடிய திருப்பாடல்களைச் சேக்கிழாரடிகள் திருவிருத்தம் என்ற பெயராற் குறித்துள்ளார். எனவே இத்திருப்பதிகங்க ளுக்குத் திருவிருத்தம் என்ற இப்பெயர், ஆசிரியர் சேக்கிழார் காலத்திற்கு முன்னரே நிலைபெற்று வழங்கிய பழமையுடைய தென்பது நன்கு தெளியப்படும்.

சமண சமயத்தைச் சார்ந்த மருள் நீக்கியார், தாம் சூலை நோயினாற் படும் துயரத்தைப் பொறுக்கலாற்றாது அச் சமயத்தை விட்டு நீங்கித் திருவதிகையை யடைந்து, தம் தமக்கையார் அளித்த திருநீற்றினைப் பூசி அதிகை வீரட்டானத்து எழுந்தருளிய பெருமானைப் பணிந்து உரைத்தமிழ் மாலைகள் சாத்தும் உணர்வு பெற்று முதன்முதற் பாடியருளிய 'கூற்றா யினவாறு விலக்ககிலீர்' என்னும் திருப்பதிகமும், தம் சமயத்தை வளர்த்த தருமசேனர் சைவராயினமை கண்டு பொறாது வெகுண்ட சமணர்கள், தம் சமயச் சார்புடைய பல்லவ மன்னன்

துணைகொண்டு பலவகை யின்னல்களைச் செய்பவர் திருநாவுக்கரசரை யானையால் இடறச் செய்தபொழுது தம்மைக் கொல்ல வந்த யானையைக் கண்டு சிறிதும் கலங்காது இறைவன் திருவருளை நினைந்து போற்றிய ‘சுண்ணவெண் சந்தனச் சாந்தும்’ என்ற திருப்பதிகமும், சமணர்கள் திருநாவுக்கரசரைக் கல்லுடன் பிணித்துக் கடலில் தள்ளியபோது அக்கல்லே தெப்பமாக மிதக்கும்படி பாடிய ‘சொற்றுணை வேதியன்’ என்னும் நமச்சிவாயத் திருப்பதிகமும், கல்லே தெப்பமாகக் கடலிலிருந்து கரையேறிய நாவுக்கரசர், திருப்பாதிரிப்புலியூரை யடைந்து தோன்றாத் துணையாயிருத்து தம்மை உய்வித்தருளிய பாதிரிப் புலியூர்ப் பெருமானைப்பரவிப் போற்றிய ‘ஈன்றாளு மாய்’ என்னும் திருப்பதிகமும் அமண் சமயத் தொடக்குடைய உடம்போடு வாழ விரும்பாது அவ்வுடம்பினைத் தூயதாக்கும் வண்ணம் இறைவனது திருவடையாளமாகிய இடபக்குறி, சூலக்குறி என்பவற்றைப் பொறித்தருளும் வண்ணம் பெண்ணா கடத்துத் திருத்தூங்கானை மாடத்து எழுந்தருளிய பெருமானை வேண்டிப் போற்றிய ‘பொன்னார் திருவடிக்கு ஒன்றுண்டு விண்ணப்பம்’ என்னும் திருப்பதிகமும், தம்பாற் பேரன்புடைய அப்பூதியடிகள் திருமனையில் அமுது செய்தருளப் புகும் பொழுது அவர் தம் புதல்வன் மூத்த திருநாவுக்கரசு அரவு தீண்டி யிறக்க அத்துன்ப நிகழ்ச்சியைப் பெற்றோர்கள் மறைக்கவும், இறைவன் திருவருட் குறிப்பால் உணர்ந்து அவன் உயிர் பெற்றெழும் வண்ணம் பாடிய ‘ஒன்றுகொலாம்’ என்ற திருப்பதிகமும், ‘ஆளும் நாயகன் கயிலை கண்டன்றி மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்’ என்னும் உறுதியுடன் கயிலை நோக்கிச் சென்ற திருநாவுக்கரசர், இடைவழியில் தவமுனிவராய்த் தோன்றித் தம்மைத் தடுத்து நிறுத்திய இறைவன் பணித்த வண்ணம் அங்குள்ள குளத்தில் மூழ்கித் திருவையாற்றில் வந்தெழுந்து, எவ்வுயிரும் சத்தியுஞ் சிவமுமாய்த் தோன்றிய தெய்வக் காட்சியைக் கண்டு மகிழ்ந்து பாடிய ‘மாதர்ப்பிறைக் கண்ணியானை’ என்ற பதிகமும் நாலாந்திருமுறையிலுள்ள அற்புதத் திருப்பதிகங்களாகும். இத்திரு முறையில் நூற்றுப் பதின்மூன்று திருப்பதிகங்கள் உள்ளன.

‘கூற்றாயினவாறு விலக்ககிலீர்’ என இறைவனை நோக்கி முறையிடும் நிலையில் தொடங்கிய இந் நாலாந்திருமுறை, ‘காலன் அறிந்தான் அறிதற்கரியான் கழலடியே’ என்ற இனிய தொடருடன் நிறைவு பெற்றிருத்தலை நோக்குங்கால் ‘கூற்றங் குதித்தலுங் கைகூடும் நோற்றலின், ஆற்றல் தலைப்பட்டவர்க்கு’ எனத் தெய்வப் புலவர் அறிவுறுத்திய தவப்பயனாகிய இறவாத இடபப் பெருவாழ்வை நல்கும் திருவருட் சாதனமாவது இத்திரு முறை யென்னும் உண்மை குறிப்பாற் புலனாதல் காணலாம்.

"அன்னம் பாலிக்குத் தில்லைச் சிற்றம்பலம்" என வரும் கோயில் திருக்குறுந் தொகை முதலாக 'வேதநாயகன்' என்ற முதற் குறிப்புடைய ஆதிபுராணத் திருக்குறுந்தொகை யீறாக வுள்ள நூறு திருப்பதிகங்களின் தொகுதி, ஐந்தாந் திருமுறையென வழங்கப் பெறுவதாகும். இத்திருமுறையிலுள்ள பதிகங்கள் யாவும் 'குறுந்தொகை' என்னும் ஒரே யாப்பில் அமைந்த திருப் பாடல்களால் இயன்றனவாதலின் யாப்பமைதி கருதி இவற்றை ஒரே திருமுறையாக நம் முன்னோர் முறைப்படுத்தி யுள்ளார்கள். குறுந்தொகை யாப்பு என்பது, நாற்சீர் நாலடியாய் அடிதோறும் தேமா, புளிமா என்னும் மாச்சீர்களுள் ஒன்று முதற் சீராகவும், கருவிளம், கூவிளம் என்னும் விளச்சீர்களுள் ஒன்று நான்காஞ் சீராகவும், இடையிலுள்ள இரண்டு மூன்றாஞ் சீர்கள் பெரும் பாலும் விளச்சீர்களாகவும் சிறுபான்மை மாச்சீர்களாகவும் அமையவரும் செய்யுள் விகற்பமாகும்.

(1) நாக நாறு நரந்தை நிரந்தன
ஆவு மாரமு மோங்கின வெங்கணும்
சேவு மாவுஞ் செறிந்தன கண்ணுதல்
பாக மாளுடை யாள்பலி முன் றிலே.

(2) செம்பொன் வேங்கை சொரிந்தன சேயிதழ்
கொம்பர் நல்லில வங்கள் குவிந்தன
பொங்கர் வெண்பொரி சிந்தின புன்கிளந்
திங்கள் வாழ்சடை யாள்டிரு முன்றிலே.

(3) மரவம் பாதிரி புன்னை மணங்கமழ்
குரவங் கோங்க மலர்ந்தன கொம்பர்மேல்
அரவ வண்டின மார்த்துட னியாழ்செயும்
திருவ மாற்கிளை யாடிரு முன்றிலே.

எனச் சிலப்பதிகாரம் வேட்டுவ வரியில் வந்துள்ள வரிப் பாடல்கள், இக்குறுந்தொகை யாப்புக்குரிய பழைய இலக்கியங் களாகக் கொள்ளத் தக்கன.

'அன்னம் பாலிக்குந் தில்லைச் சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னன் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோஇப் பிறவியே.'

எனத் திருநாவுக்கரசர் பாடியருளி திருக்குறுந்தொகைப் பாடலையும் மேற்காட்டிய வேட்டுவ வரிப்பாடல்களையும் ஒப்பு நோக்குவார்க்கு அப்பரடிகள் அருளிய இக்குறுந்தொகையாப்பு இளங்கோவடிகள் வாழ்ந்த காலப்பகுதியாகிய, கி. பி. இரண்டாம் நூற்றாண்டிலேயே நாட்டிற் பரவி வழங்கிய தொன்மை யுடையது என்பது நன்கு புலனாகும்.

ஒருமா கூவிளம் கூவிளம் கூவிளம்

என்பது திருக்குறுந்தொகை யென்னுஞ் செய்யுளின் கட்டளை யடியாகும். முதற்சீர் தேமாவாயின் அடிமன் எழுத்துத் தொகை ஒற்று நீக்கிப் பதினொன்றாம்; புளிமாவாயின் பன்னிரண்டாம், ஓரடிக்குள் அமைந்த மூன்று தளைகளுள், முதற்றளை நேரொன் றாசிரியத்தளை; இரண்டு மூன்றும் வெண்டளைகள். மேற் குறித்த எழுத்துக் கணக்கும் தளையமைதியும் வேறுபடாது நிற்கச் சீர்கள் வேறுபட்டு வரலாம்'' என இக்குறுந்தொகை யாப்பின் அமைப்பினை விளக்குவர் யாழ்நூலாசிரியர்.* (*யாழ்நூல், பக்கம் 210) பத்தெழுத்து முதல் பதினான்கெழுத்தளவும் பெற்று வரும் அளவடியாகிய நாற்சிரடியுள் பதினொன்றும் பன்னிரண்டுமாகக் குறைந்த எழுத்துக்களைப் பெற்று வருவன இப் பாடல்களாதலின் இவை குறுந்தொகை யெனப்பெற்றன.* (* 'அளவடி நான்கின கலிவிருத் தம்மே' (யாப்பருங்கலம், செய்யுளில் சூத்-89) என்னும் பிற்கால யாப்பிலக்கண விதியை யொட்டி இத்திருக்குறுந்தொகையைக் கலிவிருத்தம் என்ற பாவினத்துள் அடக்குவாரும் உளர்)

சிவபெருமான் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள திருத்தலங்களையெல்லாம் கண்டிறைஞ்சிக் கைத்திருத்தொண்டு செய்யும் கடமையினை மேற்கொண்ட திருநாவுக்கரசடிகள், இறைவனது பேரருளை நினைந்து ஒரு தலத்திலிருந்து மற்றொரு தலத்திற்கு நடந்து செல்லும்பொழுதும்* (* பெரிய-திருநாவுக்கரசர்-174) அவ்வத் தலங்களிலுள்ள திருக்கோயில்களை அடைந்து உழவாரத் தொண்டு முதலிய திருப்பணிகளைச் செய்யும் போதும்* (*பெரிய-திருநாவுக்கரசர்-171) தம் பெருமானாகிய இறைவனை முன்னிலையாக்கிப் போற்றும் நிலையிலும்* (*பெரிய-திருநாவுக்கரசர்-269) அவ்விறைவனது பொருள்சேர் புகழை உலக மக்களுக்கு எடுத்துரைக்கும் நிலையிலும்* (*'தொழற்பாலதே' என்னும் திருக்குறுந்தொகை முதலிய திருப்பதிகங்களின்பாடல் அமைதியை நோக்கியுணர்க), பாடிப் பரவுதற்கேற்ற சந்தமாக இத்திருக்குறுந் தொகை யாப்பு அமைந்திருத்தல் காணலாம்.

தனக்குவமையில்லாத தலைவனாகிய முழுமுதற்பொருளின் எண்ணிறந்த அருட் குணங்களெல்லாவற்றையும் அப்பெருமான் திருமுன்னரும் தம்முன் உள்ள அன்பர்களுக்கும் பிறர்க்கும் தமது நெஞ்சத்திற்கும் விரித்துரைத்தற்கேற்ற யாப்பமைதி பெற்று விளங்குவன திருத்தாண்டகத் திருப்பதிகங்களாகும். தாண்டகம் என்பது, தொல்காப்பியச் செய்யுளியலின்படி எண்சீரான் வந்த கொச்சக வொருபோகு எனக்கூறப்படும். அடிதோறும் நான் காஞ்சீரும் எட்டாஞ்சீரும் தேமாவாக நிற்ப, மூன்றாஞ்சீரும் ஏழாஞ்சீரும் பெரும்பான்மை தேமாகவும் ஒரோ வழிப் புளி மாவாகவும் அமைய, இவையொழிந்த ஒன்று, இரண்டு ஐந்து,

ஆறாஞ்சீர்கள் பெரும்பாலும் காய்ச்சீர்களாகவும், சிறுபான்மை மாச்சீர் விளச்சீர்களாகவும், வருதல் தாண்டகம் என்னும் பாவின் இயல்பாகும்.

எண்சீரான் வந்த இத் தாண்டகப்பாவில், அடிதோறும் மூன்று, நான்கு, ஏழு, எட்டாம் சீர்களை விலக்கிவிட்டு ஏனைய நான்கு சீர்களையும் இணைத்து நோக்கினால் அப்பாடல் கொச்சகக் கலிப்பா என்னும் யாப்புருவில்அமைதலைக் காணலாம்.* (*யாழ் நூல், பக்கம் 210).

வண்ணங்கள் தாம்பாடி வந்து நின்று
வலிசெய்து வளைகவர்ந்தார் வந்து நம்மைக்
கண்ணம்பால் நின்றெய்து கனலப் பேசிக்
கடியதோர் விடையேறிக் காபா லியார்
சுண்ணங்கள் தாங்கொண்டு துதையப் பூசித்
தோலுடுத்து நூல்பூண்டு தோன்றத் தோன்ற
அண்ணலார் போகின்றார் வந்து காணீர்
அழகியரே ஆமாத்தூர் ஐயனாரே.

எனவரும் திருத்தாண்டகத்தில் அடிதோறும் மூன்று, நான்கு, ஏழு, எட்டாஞ் சீர்களை விலக்கி ஏனைய நான்கு சீர்களையும் இணைத்து நோக்கினால்,

வண்ணங்கள் தாம்பாடி வலிசெய்து வளைகவர்ந்தார்
கண்ணம்பால் நின்றெய்து கடியதோர் விடையேறிச்
சுண்ணங்கள் தாங்கொண்டு தோலுடுத்து நூல்பூண்டு
அண்ணலார் போகின்றார் அழகியரே ஆமாத்தூர்.

என்ற கொச்சகக் கலிப்பாவின் உருவம் வந்து எய்தும். எனவே நாற்சீரடியால் வரும் கலிப்பா அடிதோறும் இடையிலும் ஈற்றிலும் இவ்விரண்டு மாச்சீர்களைப் பெற்று வருதலால் அமைந்த எண்சீரடி யாப்பு இத் தாண்டகப்பாவுக்கு உரிய தென்பது நன்கு புலனாம்.

இவ் யாப்பு, ஆசிரியர் தொல்காப்பியனாரால் ஒற்றும் குற்றுகரமும் நீக்கி நாலெழுத்து முதல் இருபதெழுத்தீறாக வகுத்துரைக்கப்பட்ட பதினேழு நிலத்து ஐவகையடிகளிலும் கழி நெடிலடிக்கு உரிய மேலெல்லையாகிய இருபதெழுத்தென்னும் வரையறையைத் தாண்டி இருபதின் மேற்பட்ட எழுத்தால் மிக்கு வருதலின் தாண்டகம் என்னும் பெயர்த்தாயிற்று. தேவாரத் திருப்பதிகங்களில் இருபதெழுத்தென்னும் இவ்வரையறையைக் கடந்து வருவன பிறவும் உளவேனும் அவையனைத்தும் பண்ணொடு கூடிய இசைப்பாடல்களாதலின் இயல்வகை குறித்த தாண்டகம் என்னும் இப்பெயரினைப் பெறாவாயின.

இனி, வடமொழியில் தண்டகம் என வழங்கும் செய்யுள் விகற்பமே தமிழில் தாண்டகம் என வழங்குவதாயிற்றெனக் கருதுவாரும் உளர். அன்னோர், தமது கருத்துக்கு ஆதாரமாக யாப்பருங்கல விருத்தியுரையாசிரியர் வடமொழி யாப்பிலக்கண விதிகள் சிலவற்றை அப்படியே தமிழிலும் மேற்கொள்ளும் முறையில் தண்டகம் என்ற செய்யுளமைப்பைத் தாண்டகம் என்ற பெயராற் குறிப்பிட்டிருத்தலை எடுத்துக்காட்டுதலுங்கூடும். தேவார ஆசிரியர்கள் வாழ்ந்த காலத்திற்கு நானூறாண்டுகள் பிற்பட்டவர் யாப்பருங்கல விருத்தியுரையாசிரியர். அவ்வாசிரியர் வடமொழியிலக்கண விதிகளைத் தமிழிலும் வைத்துணர்த்த விரும்பி, "இருபத்தேழெழுத்து முதலாக உயர்ந்த எழுத்தடியின வாய் எழுத்தும் குருலகுவும் ஒத்துவருவன அளவியற்றாண்டகம், எழுத்தொவ்வாதும் எழுத்தலகு ஒவ்வாதும் வருவன அளவழித் தாண்டகம்" எனக் குறிப்பிட்டுள்ளார்.* (* யாப்பருங்கல விருத்தி, பக்கம் 447) அவ்வாசிரியரால் தாண்டகம் என்ற பெயருடன் உதாரணமாகக் காட்டப்பட்ட தாண்டகச் செய்யுட்களையும்* (*யாப்பருங்கல விருத்தி, பக்கம் 454-456) அவர்க்கு நெடுங்காலம் முற்பட்ட, அப்பரடிகள் அருளிய திருத்தாண்டகப் பாக்களையும் ஒப்பிட்டு நோக்குங்கால் அவை எழுத்தளவாலும் பரந்துபட்ட ஓசையாகிய 'பா' என்னும் உறுப்பாலும் தம்முள் வேறாதல் புலனாம்.

திருநாவுக்கரசர் அருளிய திருத்தாண்டக யாப்பு, ஒற்றும் குற்றியலுகரமும் நீக்கி எழுத்தெண்ணி வகுக்கப்பட்ட ஐவகை யடிகளுள் கழிநெடிலடிக்கு மேலெல்லையாகிய இருபதெழுத் தென்னும் அளவினைக் கடந்து இருபத்தேழெழுத்திற்கு உட்பட்டு வருவதாகும். யாப்பருங்கல விருத்தியுரையில் தண்டகம் என்ற பெயராற் குறிக்கப்பட்ட வடமொழித் தாண்டக யாப்பு இருபத்தேழெழுத்து முதலாக அவற்றின் மிக்க எழுத்துக்களைப் பெற்று இயல்வதாகும். தேவாரத்திலுள்ள திருத்தாண்டகப் பாடல்கள் கொச்சகம் என்னும் தமிழ்ச் செய்யுளிலக்கணத்தினை அடியொற்றியமைந்தனவாகும். யாப்பருங்கல விருத்தியுரையில் உதாரணமாகக் காட்டப்பட்ட தாண்டகச் செய்யுட்கள் தண்டகம் என்னும் வடமொழிச் செய்யுளிலக்கணத்தினை அடியொற்றிப் பிற்காலத்தில் இயற்றப்பட்ட புதுவகைச் செய்யுட்களாகும். தொல்காப்பியச் செய்யுளியலின்படி செய்யுட்களுக்கு எழுத் தெண்ணி அடி வகுக்குமிடத்து ஒற்றும் குற்றியலிகரமும் குற்றிய லுகரமும் நீக்கி எண்ணுதல் மரபு.* (*தொல் - செய்யுளியல் 44, பேராசிரியர் உரை) வடமொழியில் குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆகிய இச்சிறப்பொலிகள் இல்லாமையால் இவற்றை நீக்கி எழுத் தெண்ண வேண்டுமென்ற வரையறை எழுதற்கு இடமில்லாது

போயிற்று. குற்றியலிகரம், குற்றியலுகரம் என்ற ஒலி நுட்பங்களைக் கருதாது அமைக்கப்பட்ட வடமொழி யாப்பமைதியினை மேற்குறித்த ஒலி நுட்பங்கள் பெருக வழங்கும் தமிழ்ச் செய்யுட்களுக்கு ஏற்றியுரைத்தல் ஒரு சிறிதும் ஏற்புடையதன்றாம். எனவே தமிழ்ச் செய்யுள் இலக்கணத்தை அடியொற்றியமைந்த திருத்தாண்டகப்பாவும் வடமொழித் துண்டக யாப்பினை அடியொற்றிப் புதியன புனைந்த யாப்பருங்கல விருத்தி உதாரணச் செய்யுட்களும் இலக்கண வகையால் தம்முள் வேறுபட்டன என உணர்தல் வேண்டும்.

தமிழ்ச் செய்யுள் வகையாகிய இத்தாண்டக மென்னும் யாப்புக்கு மூல இலக்கியமாக விளங்குவன திருநாவுக்கரசர் பாடிய இத்திருத்தாண்டகப் பாடல்களேயாகும். இத்திருப் பதிகங்களை முதன்முதல் அருளிச்செய்தவர். அப்பரடிகளாதலின் அப்பெருந்தகையாஃரத் 'தாண்டகச் சதுரர்'* (*'தாண்டகச் சதுரராகும் அலர் புகழரசும்'-பெரியபுராணம்-குங்குலிய-32) எனவும் 'தாண்டக வேந்தர்'* (*நால்வர் நான்மணி மாலை) எனவும் போற்றுவர் பெரியோர்.

ஆழ்வார்கள் அருளிச்செயலாகிய நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் திருமங்கையாழ்வார் அருளிய திருப்பாடல்களுள் திருநெடுந்தாண்டகம், திருக்குறுந்தாண்டகம் என இருவகைப் பனுவல்கள் இடம்பெற்றுள்ளன. இவற்றுள் திருநெடுந்தாண்டகம் என்பது திருநாவுக்கரசர் அருளிய திருத்தாண்டக யாப்பில் அமைந்த முப்பது திருப்பாடல்களையுடையதாகும். நெடுந்தாண்டகம் என்பது நெடிய இயற்பாடலாகிய தாண்டகம் என விரியும். திவ்யப் பிரபந்தத்தில் 'நிதியினைப் பவளத்தூணை' என்னும் முதற் குறிப்புடைய பாடல் முதலாக இருபது திருப்பாடல்களையுடைய பனுவல் திருக்குறுந்தாண்டகம் என்பதாகும். இது தாண்டகமாகிய பாவினைப் போன்று இருபதின் மேற்பட்ட எழுத்துக்களையுடைய நெடிய அடிகளைப்பெறாது, இருபதெழுத்திற்கு உட்பட்ட எழுத்துக்களால் இயன்ற அடிகளையுடையதாய்த் தாண்டகம் போலச் சுத்தாங்கமாகப் பரவுதற்குரியதாய்த் தாண்டகப்பாவிற் குறுகிவரும்பாவினால் இயன்றதாதலின் திருக்குறுந்தாண்டகம் என வழங்கப் பெறுவதாயிற்று. வேறுபட்ட செய்யுள் வகையாகிய இவ்விருதிறப் பாக்களையும் 'தாண்டகம்' என ஒரே யாப்பாகக் கொண்டு இலக்கணங்கூறுவர் பன்னிரு பாட்டியலுடையார்* (*"மூவிரண்டேனும் இருநான்கேனும், சீர்வகை நாட்டிச் செய்யுளினாடவர், கடவுளர்ப் புகழ்வன தாண்டகம் அவற்றுள், அறுசீர்குறியது நெடியது எண் சீராம்", "அறுசீ ரெண்சீர் அடிநான் கொத்தங், கிறுவது தாண்டகம் இருமுச் சீரடி, குறியது நெடிய திருநாற்சீரே" பன்னிரு பாட்டியல்).

திருநாவுக்கரசர் அருளிய திருநேரிசைப் பதிகங்களும் திருமங்கையாழ்வார் அருளிய திருக்குறுந்தாண்டகமும் ஒரே யாப்பில் அமைந்தனவாகும். இருபதெழுத்துக்கு மேற்படாது இவ்வெல்லைக்குள் அடங்கிவரும் அடிகளையுடைய இவை தாண்டகம் என்னும் யாப்பிற்குறுகி வேறுபட வந்த யாப்பின என்பதும், இருபதெழுத்தின் மேற்படவரும் அடிகளையுடைய நெடிய இயற்பாடல்கள் திருநாவுக்கரசர் பாடிய திருத்தாண்டகமும் திருமங்கையாழ்வார் பாடிய திருநெடுந்தாண்டகமும் ஆதலின் அவையே தாண்டகம் என்னும் யாப்பிற்குரியன என்பதும், தண்டகம் என்னும் வடமொழிச் செய்யுள் விகற்பத்தை அடியொற்றிப் பிற்காலத்தராற் பாடப்பெற்று யாப்பருங்கல விருத்தியுரையில் மேற்கோளாகக் காட்டப்பட்ட தாண்டகச் செய்யுட்களும் தேவாரத்திலும் திவ்யப் பிரபந்தத்திலும் அமைந்த திருத்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் என்னும் திருப்பாடல் களும் தம்முள் வேறாவன என்பதும் உளங்கொளத்தக்கனவாம்.

"பாடுந்தோறும் நதணங்கள் இரண்டும் கணங்கள் விஜய முடையது தாண்டகமாம். அஃதாவது தனனதனன தானனா தானனா தானனா!!. தானனா தானனா-தானனா என இருபத்தே ழெழுத்தான் வரும் வடமொழித் தாண்டகத்தின் இலக் கணத்தினை, வேங்கடமாகி நமது துர் தண்டிப் பிரகாசிகையிற் கூறினார். அஃது இங்கு ஏற்புடையதல்ல" எனவும்* (* யாழ்நூல்-பக். 220) இத்தாண்டகச் செய்யுள் தொல்காப்பியச் செய்யுளியலின் படி எண்சீரான் வந்த கொச்சக வொருபோகு எனப்படும்* (*யாழ்நூல்-பக். 219) எனவும் யாழ்நூலாசிரியர் கூறிய விளக்கம் இங்கு நோக்கத் தக்கதாகும்.

ஆறாந்திருமுறையாகிய இப்பகுதியில் 'அரியானை அந்தணர்தஞ் சிந்தையானை' எனத் தொடங்கும் கோயில்-பெரிய திருத்தாண்டகம் முதலாக, 'எண்ணுகன் என் சொல்லி எண்ணுகேனோ' எனத் தொடங்கும் இருப்புகலூர்த் திருத் தாண்டகம் ஈறாகத் தொண்ணூற்றான்பது திருப்பதிகங்கள் தொகுக்கப் பெற்றுள்ளன. ஆண்ட அரசராகிய அப்பரடிகள் திருப்புகலூரிற் கைத்திருத்தொண்டு செய்து தங்கியிருக்கும் காலத்துத் திருப்புகலூர்ப் பெருமானை இறைஞ்சிப் 'புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்' என விண்ணப்பஞ் செய்யும் முறையில் மண் முதலாம் உலகேத்த மன்னு திருத்தாண்டக மாகிய 'எண்ணுகேன் என் சொல்லி எண்ணுகேனோ' என்ற முதற்குறிப்புடைய இத்திருப்பதிகத்தைப் பாடிப்போற்றி நண்ணரிய சிவானந்த ஞானவடிவேயாகி அண்ணலார் சேவடிக் கீழ் அமர்ந்திருந்தார் என்பது வரலாறு ஆதலின், அவ்வடிகளார் இறைவன் திருவடி நீழலை எய்தி இன்புறும் நிலையிற் பாடிய

இத்திருப்பதிகம் அப்பர் பாடியருளிய நான்கு, ஐந்து, ஆறாகிய மூன்று திருமுறைகளிலும் முந்நூற்றுப் பன்னிரண்டு திருப்பதி கங்கள் உள்ளன. அவற்றின் மொத்தத் திருப்பாடல்கள் மூவா யிரத்து அறுபத்தாறாகும். நான்காந் திருமுறையில் திருநேரிசை, திருவித்தம் என்ற பகுதிகளிலும் ஐந்து ஆறாந்திருமுறைகளிலும் கோயில் என வழங்கும் தில்லைக்குரிய திருப்பதிகங்கள் முதற்கண் அமைக்கப் பெற்றிருத்தல் காணலாம்.

இனி, ஏழாந்திருமுறை யென்பது, சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகங்கள் அனைத்தையும் கொண்ட ஒரு தொகுதியாகும். இத்திருமுறையில் 'பித்தாபிறைசூடீ' என்னும் திருப்பதிகம் முதலாகதி தானெனை முன்படைத்தான்' என்னும் திருப்பதிகம் ஈறாக நூறு திருப்பதிகங்கள் உள்ளன. இப்பதிகங் களிலுள்ள திருப்பாடல்களின் தொகை ஆயிரத்திரு பத்தாறாகும். இத்திருமுறையில் இந்தளம், தக்கராகம் நட்டராகம், கொல்லி, கொல்லிக் கௌவாணம், பழம் பஞ்சுரம், தக்கேசி, காந்தாரம், பியந்தைக் காந்தாரம், காந்தாரபஞ்சமம், நட்டபாடை, புறநீர்மை, சீகாமரம், குறிஞ்சி, செந்துருத்தி, கவுசிகம் பஞ்சமம் எனப் பதினேழு பண்களுக்குரிய திருப்பதிகங்கள் முறையே தொகுக்கப் பெற்றுள்ளன.

நம்பியாரூரர்க்குத் திருமணம் நிகழவிருக்கும் நற்பொழுதிலே, யாவராலும் காண்டற்கரிய கடவுளாகிய சிவபெருமான், உலகத்தார் காண முதியனாகத் தோன்றித் தனக்கு நம்பியாரூரர் வழிவழியடிமை எனக்கூறி, அற்புதப்பழ ஆவணம் ஒன்றைக் காட்டி, வெண்ணெய் நல்லூர்க்கு வா என அழைத்துப் போந்து அவ்வூர்ச் சபையினர்முன் வழக்குரைத்து வென்று, அங்குள்ளார் யாவரும் காணத் திருஅருட்டுறைத் திருக்கோயிலுட் புகுந்து மறைந்தருளினார். அப்பொழுது, இங்ஙனம் வலிய வந்து தம்மைத் தடுத்தாட் கொண்டருளிய இறைவனது பெருங்கருணைத் திறத்தை நினைந்து நெஞ்சம் நெக்குருகிய வன்றொண்டர், 'என் பெயர் பித்தனென்றே பாடுவாய்' என இறைவன் பணித்தருளிய வண்ணம் முதன் முதற்பாடிப் போற்றிய செந்தமிழ்ப் பாமாலை 'பித்தா பிறைசூடீ' என்னும் திருப்பதிகமாதலின், அஃது இவ்வேழாந்திருமுறையின் முதற்கண் வைக்கப்பெறுவதாயிற்று. இத்திருப்பதிகத்திற்குரிய பண் இத்தளம் ஆதலின் இத்தளப் பண்ணில் அமைந்த பதிகங்கள் இதனைச் சார வைக்கப்பெற்றன.

தம்பிரான் தோழராகிய சுந்தரர், பல தலங்களையும் பணிந்து பண்ணார்ந்த செந்தமிழ்ப் பதிகங்களாற் பரமனைப் பாடிப் போற்றித் திருவஞ்சைக்களப்பெருமானை இறைஞ்சிப் போற்றும் நிலையில், கயிலைப் பெருமான் ஆணையின் வண்ணம் தேவர் முனிவர்களுடன் அங்குவந்த வெள்ளையானையின் மீது

அமர்ந்து திருக்கயிலாயத்திற்குச் சென்றார் என்பது வரலாறு. அப்பொழுது பாடிய திருப்பதிகம், 'தானெனை முன்படைத்தான்' என்பதாகலின், அஃது இவ்வேழாந்திருமுறையின் இறுதிக் கண் வைக்கப்பெற்றது.

திருவெண்ணெய் நல்லூரில் அருட்டுறைப்பெருமானால் தடுத்தாட்கொள்ளப் பெற்ற நம்பியாரூரர், அப்பெருமானது திருவருளின்பத்தில் திளைத்துப்போற்றிய 'பித்தா பிறைசூடீ பெருமானே அருளாளா' என்ற திருப்பதிகத்தினை முதலாகக் கொண்டு தொடங்கிய இவ்வேழாந்திருமுறை, சேரமான் தோழராகிய சுந்தரர் இறைவனது அருளிப் பாட்டின் வண்ணம் திருவஞ்சைக் களத்திலிருந்து வெள்ளானையின் மீதமர்ந்து திரு நொடித்தான் மலையாகிய திருக்கயிலாயத்தை யடைந்து தாம் பெற்ற திருவருளின்பத்தை நிலவுலகத்தார்க்குப் புலப்படுத்தும் நிலையில் ஆழிகடலரையனாகிய வருணனை நோக்கித் திரு வஞ்சைக்களத்தப்பருக்கு அறிவிக்கும்படி பணித்த திருப்பாட லுடன் நிறைவு பெற்றிருத்தல் அறிந்து மகிழத்தக்கதாகும்.

நூறு திருப்பதிகங்களால் இயன்ற இத்திருமுறையில், 'தென்றமிழ்ப் பயனாய்வந்த திருத்தொண்டத்தொகை' முப்பத் தொன்பதாம் திருப்பதிகமாகவும், திருவைந்தெழுத்தின் சிறப் பினையுணர்த்தும் நமச்சிவாயத் திருப்பதிகம் நாற்பத்தெட்டாம் பதிகமாகவும் அமைந்திருத்தல் காணலாம். சிந்தையன் தெளி வினைப் புலப்படுத்தும் ஆற்றல் வாய்ந்தது பஞ்சமம் என்ற பண்ணாகும். சிந்தையில் தெளிவுடையோர் பஞ்சமம் என்னும் இப்பண்ணில் பரமனைப்பாடி மகிழ்வர், "பஞ்சமம் பாடியாடும் தெள்ளியார் கள்ளந் தீர்ப்பார்"* (*4-29-3) என்பது திருநாவுக்கரசர் வாய்மொழி. திருவஞ்சைக்களத்துப் பெருமானைப் பாடிப் போற்றும் நிலையில் 'வெறுத்தேன் மனைவாழ்க்கையை விட்டொழிந்தேன்' என்னும் தெளிவுடைய சிந்தையினராகிய நம்பியாரூரர், அஞ்சைக்களத்திறைவர் பால் விடைபெற்றுத் திருநொடித்தான் மலையை நோக்கிச் செல்லும் பொழுது 'சிந்தையும் தெளிவுமாகித் தெளிவினுட் சிவமுமாகி'* (*4-49-6) என்றவாறு சிவபரம் பொருளைத் தியானிக்கும் நிலையிற் பாடிய 'தானெனை முன் படைத்தான்' என்ற பதிகம் பஞ்சமம் என்ற பண்ணில் அமைந்திருத்தல் மிகவும் பொருத்தமுடையதாகும்.



## 2. யாப்பமைதி

தெய்வஞ்சுட்டிய வாரப் பாடல் (இசைப்பாடல்) தேவாரம் என வழங்கப்பெற்றமை முன்னர் விளக்கப்பெற்றது. இயல் இசைத் தமிழ்ப் பாடலாகிய இத்தேவாரத் திருப்பதிகங்களின் செய்யுள் அமைப்புப் பற்றியும் இசையமைப்புப் பற்றியும் ஓரளவு அறிந்து கொள்ளுதல் இங்கு ஏற்புடையதாகும்.

நமக்குக் கிடைத்துள்ள தமிழ் நூல்களில் மிகவும் தொன்மையும் சிறப்பும் வாய்ந்த இயற்றமிழிலக்கண நூல் தொல்காப்பியம் ஒன்றேயாகும். இடைச் சங்கப் புலவர்களாலும் கடைச் சங்கப் புலவர்களாலும் போற்றிப் பயிலப்பெற்ற இந்நூல், தமிழ் மொழியின் இலக்கண வரம்பினைப் பேணிக்காக்கும் ஆற்றல் வாய்ந்த தனிமுதல் நூலாகக் கி.பி. பத்தாம் நூற்றாண்டுவரை மேற்கொள்ளப் பெற்றதென்பது, தமிழ் இலக்கிய வரலாற்றா ராய்ச்சியாளர் அனைவர்க்கும் ஒப்ப முடிந்த உண்மையாகும். இயற்றமிழ் முதல் நூலாகிய இத்தொல்காப்பியத்தினைப் பெரும் பாலும் அடியொற்றியும் சிற்சில பகுதிகளில் முழுவதும் வேறு பட்டும் பிற்காலத்தில் தோன்றிய யாப்பருங்கலம், யாப்பருங் கலக்காரிகை வீரசோழியம், நேமிநாதம், நன்னூல், பன்னிரு பாட்டியல் முதலிய இலக்கண நூல்கள் தேவார ஆசிரியர்கள் காலத்திற்கு மிகவும் பிற்பட்டனவாதலின் அவ்விலக்கண நூல்கள் தேவாரத் திருப்பதிகங்களின் யாப்பமைதி முதலியவற்றை அறிதற்குச் சிறிதும் துணைசெய்வன அல்ல என்பதும், பண்டைத் தமிழியல் நூலாகிய தொல்காப்பியச் செய்யுளியலிற் கூறப்பட்ட யாப்பியல் மரபே தேவாரத் திருப்பதிகங்களுக்கு மிகவும் ஏற்புடையதென்பதும் முன்னைச் சான்றோர் பலரது துணிபாகும்.

ஆசிரியர் தொல்காப்பியனார், தொல்காப்பியச் செய்யுளி யலின் கண்ணே ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலிப்பா எனப் பாக்கள் நான்கென்றும், அந்நால்வகைச் செய்யுட்களும் அறம், பொருள், இன்பம் என்னும் மும்முதற்பொருள்களையும் கருவாகக்கொண்டு பாடப்பெறுவன என்றும் கூறினார். நால்வகைப் பாக்களுள் ஒன்றாகிய கலிப்பாவினை ஒத்தாழிசைக் கலி, கலிவெண்பாட்டு, கொச்சகக்கலி, உறழ்கலியென நான்காகப் பகுத்து, அந்நால்வகையுள் ஒன்றாகிய ஒத்தாழிசைக்கலியை அம்போதரங்கம் எனவும் தேவர்ப்பராயது எனவும் இருவகை யாக்கி, தேவர்ப்பராயதனை வண்ணகம் எனவும் ஒருபோகு எனவும் இரண்டாக்கி, அவ்விரண்டனுள் ஒரு போகினைக் கொச்சக ஒருபோகு எனவும் அம்போதரங்க ஒருபோகு எனவும்

இருவகையாகப் பகுத்து விளக்கியுள்ளார். தொல்காப்பியச் செய்யுளியலில்,

'தரவின் றாகித் தாழிசை பெற்றும்
தாழிசை யின்றித் தரவுடைத் தாகியும்
எண்ணிடை யிட்டுச் சின்னங் குன்றியும்
அடக்கிய லின்றி யடிநிமிர்ந் தொழுகியும்
யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது
கொச்சக ஒருபோ காகும் என்ப' (செய்யுளில்-149)

எனவரும் நூற்பாவில் கொச்ச ஒருபோகின் இலக்கணம் விரித்துரைக்கப்பெற்றது. 'கலிப்பாவுக்கு உரிய தரவு முதலாயின உறுப்புக்களில் தரவு இன்றித் தாழிசை பெற்றும் தாழிசையின்றித் தரவு முதலாயின உடையதாகியும், எண்ணாகிய உறுப்பினை இடையிட்டுச் சின்னம் என்றதோர் உறுப்புக்குறைந்தும், அடக்கியலாகிய சுரிதகமின்றித் தரவுதானே அடிநிமிர்ந்து சென்றும், இவ்வாறு ஒத்தாழிசைக் கலிக்குரிய யாப்பினும் பொருளினும் வேறுபாடுடையதாகி வருவது கொச்சக ஒரு போகாகும் என்பது மேற்காட்டிய நூற்பாவின் பொருளாகும்.

பல மடிப்புக்களையுடையதாய் அடுக்கியுடுக்கும் உடை வகையினைக் கொய்சகம் எனவும் கொச்சகம் எனவும் வழங்குவர். கொய்சகம் என்னும் பெயருடைய அவ்வுடை போன்று சிறியனவும் பெரியனவும் ஆக விரவி அடுக்கியும் தம்முள் ஒப்ப அடுக்கியும் வரும் செய்யுள் வகையினையே ஆசிரியர் தொல்காப்பியனார் கொச்சகம் என்ற பெயராற் குறித்தார் என்பது பேராசிரியர், நச்சினார்க்கினியர் முதலிய உரையாசிரியர்களின் கருத்தாகும். கொச்சக வொருபோகு என்னும் செய்யுள் விகற்பங்களைக் குறித்துப் பேராசிரியர் கருத்தினையொட்டி நச்சினார்க்கினியர் கூறிய விளக்கங்கள் இங்கு நோக்கத்தக்கனவாகும்.

'தரவின்றாகித் தாழிசை பெற்றும்'

என்பது, தனக்கு இனமாகிய வண்ணகத்திற்கு ஓதிய தரவு இன்றித் தாழிசையே பெற்றும் '(என்பதாம்)', அவை பரணிப் பாட்டாகிய தேவபாணி முதலியன, இது தரவொடுபட்ட தாழிசையிலக்கணமின்றி வேறாய் வரும் என்றதற்குத் 'தரவின்றாகி' எனத் தரவை விலக்கினார்.... இனி **பத்தும் பதினொன்றும், பன்னிரண்டும் ஆகி ஒரு பொருள்மேல் வரும் பதிகப்பாட்டு நான்கடியின் ஏறாது வருதலும்,** அங்ஙனம் வருங்கால் தாழ்ந்த ஓசைபெற்றும் பெறாதும் வருதலும், அவை இருசீர் முதல் எண்சீரளவும் வருதலும் என்றும் இன்னோரன்ன பல பகுதியெல்லாம் வரையறையின்றித் தழுவப்பட்டன. இவ் வேறுபாடெல்லாம் உளவேனும் தாழம்பட்ட ஓசை பெறும் பான்மையவாதலின்

தாழிசையென்றார். இங்ஙனம் தாழிசைப் பேறு விதந் தோதவே ஒழிந்த உறுப்பெல்லாம் விலக்குண்டமை பெற்றாம்'* (*தொல் - செய்யுளியல் 149-ஆம் சூத்திரம், நச்சினார்கினியர் உரை) எனவும் யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடையது, என்பதற்குத் தேவபாணியும் காமமுமேயன்றி வீடும் பொருளாம் என்பது ஆசிரியர் கருத்தாயிற்று* (*சீவக சிந்தாமணி கடவுள் வாழ்த்து நச்சினார்க்கினியர் உரை) எனவும், 'பதிகப்பாட்டிற்கு ஈண்டுக்கூறிய வேறுபாடுகள் திருவாய்மொழி, திருப்பாட்டு, திருவாசகம் என்கின்ற கொச்சக ஒரு போகுகளிற் காண்க. அவை உலக வழக்கன்மையிற் காட்டாமாயினாம்* (*தொல் - செய்யுள் - 149 ஆம் சூத்திரம்)' எனவும் நச்சினார்க்கினியர் குறித்துள்ளார்.

இக்குறிப்புக்களைக் கூர்ந்து நோக்குங்கால் ஈண்டு அவ் வாசிரியரால் 'திருப்பாட்டு' என்ற பெயராற் குறிக்கப்பெற்றவை திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் பாடியருளிய தேவாரத் திருப்பதிகங்களே என்பதும், திருமுறை ஆசிரியர்களும் திவ்யப் பிரபந்த ஆசிரியர்களும் அருளிய திருப்பதிகங்கள் தொல்காப்பியச் செய்யுளியன்படி கொச்சக ஒருபோகு என்னும் யாப்பு வகையைச் சார்ந்தன என்பதும், இத் திருப்பதிகங்கள் ஒரு பொருள்மேல் மூன்றடுக்கி வரும் ஒத்தாழிசை களைப் போன்று பொருளமைப்பில் ஒரு நிகரனவாய்ப் பத்தும் பதினொன்றும் பன்னிரண்டும் ஆகிய பாடல்களையுடைவாய் வருமென்பதும், ஆசிரியர் தொல்காப்பியனார் 'அறமுதலாகிய மும்முதற்பொருள்' எனக் குறித்த உறுதிப்பொருள் மூன்றனுள் ஒன்றாகிய இன்பத்தினைப் பின்னுள்ளோர் காதற்காமமாகிய இவ்வுலக இன்பமும் வீடுபேறாகிய பேரின்பமும் என இரண் டாக்கி உறுதிப்பொருள் நான்கெனக் கொண்டனராதலின் அவ்வகையால் நோக்குமிடத்துத் தேவர்ப்பராவிய இத்திருப்பதி கங்கள் உலக இன்பம் என்ற அளவிலன்றிப் பேரின்பமாகிய வீடுபேற்றினைப் பொருளாகக் கொண்டு பாடப்பெற்றன எனக் கொள்ளுதல் வேண்டும் என்பதும், அறிவனூற்பொருளும் உலக நூல் வழக்கும் என இருதிறப் பொருள்களையும் ஒருங்குணர்த்து முறையில் அமைந்த இத்திருப்பாடல்களை உலக நூல் வழக்கு ஒன்றினையே யுணர்த்தும், ஏனைச் செய்யுட்களைப் போன்று இலக்கண நூல்களில் வெறும் யாப்பியல் அமைதிக்கு உதாரணச் செய்யுட்களாக எடுத்துக் காட்டுதல் மரபன்று என்பதும், இறைவனது திருவருளின் விளைவாகிய இத்திருப்பதிகங்களை இயலிசைச் சந்தப் பாடல்களுக்குரிய மூல இலக்கியங்களாகக் கொண்டு போற்றுதலே பண்டையோர் கொண்டொழுகிய முறை யென்பதும் நன்கு தெளியப்படும்.

யாப்பினும் பொருளினும் வேறுபட வந்த கொச்சகங்களை யெல்லாம் ஒருவரையறைப் படுத்துத் தாழிசை, துறை, விருத்தம் என மூவகை இனமாக்கி, ஆசிரியம், வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்னும் நால்வகைச் செய்யுளோடும் உறழ்ந்து காட்டுவர் பின்வந்த யாப்பிலக்கண நூலாசிரியர்கள். அன்னோரால் ஒருபாவிற்கு இனமென வகுக்கப்பட்டவை மற்றொரு பாவிற்கும் இனமாம் எனக்கொள்ளுமாறு அவற்றின் இலக்கணம் தெளிவின்றி அமைந்திருத்தலால் அவற்றை இன்ன பாவிற்கு இனமாம் என வரையறைப்படுத்துதல் பொருந்தாதெனவும், இங்ஙனம் இனஞ்சேர்த்தற்கு அரியனவாயினும் அவை பெரும்பான்மையும் கலிப்பாவிற்கு ஏற்ற ஓசையே பெற்று வருவன ஆதலின், ஆசிரியர் தொல்காப்பியனார் அவை யெல்லா வற்றுக்கும் ஒரு பரிகாரங் கொடுத்துக் கொச்சகத்துள் அடக்கினா ரெனவும், அதுவே தொன்றுதொட்டு வந்த யாப்பியல் மர பெனவும் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் தக்க காரணங் காட்டி விளக்கியுள்ளார்கள்.

தேவாரப் திருப்பதிகங்களின் ஓசை வேற்றுமையும் சீர்கள் மிக்கும் குறைந்தும் வருதலும் ஆகிய இவ்வியல்புகள் கலிப்பா விற்கே யேற்றனவாதலின் இத்திருப்பதிகப் பாடல்களைக் கலிப் பாவின் வகையென்று அடக்குதலே இவற்றை அருளிச் செய்த பெரியோர்களின் கருத்தாகும். தேவார ஆசிரியர் மூவருள் ஒருவராகிய ஆளுடைய பிள்ளையார், தாம் பாடியருளிய சந்தப் பாடல்களையெல்லாம் இயற்றமிழில் கலிப்பாவின் வகையுள் அடக்கி ஓதியுள்ளமை இங்கு நோக்கத்தகுவதாகும்.

> **அந்தண்பூங் கச்சி யேகம்பனை யம்மானைக்**
> **கந்தண்பூங் காழியூரன் கலிக்கோவையால்**
> **சந்தமே பாடவல்லதமிழ் ஞானசம்**
> **பந்தன்சொற் பாடியாடக்கெடும் பாவமே.**

என ஞானசம்பந்தப் பிள்ளையார் பாடிய திருக்கடைக் காப்புப் பாடல், "கலிக்கோவையால் சந்தமே பாடவல்ல தமிழ் ஞான சம்பந்தன்" என அவரைச் சிறப்பித்துப் போற்றுதலால், அவர் திருவாய் மலர்ந்தருளிய சந்தமலி செந்தமிழ்ப் பதிகங்கள் யாவும் கலிப்பாவின் வகையைச் சார்ந்தன எனத் தெளிவாகப் புலனாதல் காணலாம்.

இனி, இசைத்தமிழ் நூல்களில் இசைப்பாவுற்குரிய இயல்பு களாகக் கூறப்பட்டவற்றுள் தேவாரத் திருப்பதிகங்களுக்குப் பொருந்துவன எல்லாம் இங்கு இயைத்துரைக்கத் தக்கனவாம். இயல் நலமும் இசை நலமும் 'ஒருங்கு வாய்ந்த இனிய பாடல்களை இசைப்பா எனவும் இசையளவுபா எனவும் இரு வகையாகப்

பகுத்துரைத்தல் மரபு.* (*சிலப் - கடலாடு - 35, அடியார்க்கு நல்லார் உரை) நல்லிசைப் புலவரால் முதன்முதல் இயற்றப் பெறும்பொழுதே இயல்வளமும் இசை நலமும் ஒருங்கு அமையப் பாடப்பெற்ற இனிய பாடல்களே இசைப்பா எனப்பெறும். புலவரால் முதற்கண் இயலளவிற் பாடப்பெற்றுப் பின் இசைவல்லாரால் இசையமைத்துக் கொள்ளுதற்கேற்ற சீர் நலம் வாய்ந்த செய்யுட்களை இசையளவுபா என்பர். இவ்விசைப்பாக்கள் பெரும்பான்மையும் இயற்றமிழ் யாப்பமைதியை ஒட்டியே இயற்றப்படுவன. ஆயினும் இசைத்தமிழ் நூல்களிற் கூறுமாறு பண்ணீர்மையை உளத்துக் கொண்டு வேறுவேறு பாடப்பெறும் சிறப்பியல்புடையன வாகும். அகவே இவ்விசை பாடல்கள் இயற்றமிழ் நூல்களிற் கூறப்பட்ட இலக்கண வரையறையைச் சிறுபான்மை கடந்து வருதலும் உண்டு.

"கொன்றை வேய்ந்த செல்வனடி* (*"கொன்றை வேய்ந்த செல்வ னடியிணை என்று மேத்தித் தொழுவோம் யாமே" 'இது பிசியோடு ஒத்த அளவினதாகிப் பாலையாழ் என்னும் பண்ணுக்கு இலக்கணப் பாட்டாகி வருதலிற் பண்ணத்தியாயிற்று' என்றார் இளம்பூரணரும்) என்பது கந்திருவ மார்க்க மாதலின் ஈண்டையிலக்கணமெல்லாம் பெறுதல் சிறுபான்மை எனக்கொள்க" (தொல் செய்-149) எனவும், கந்திருவ மார்க்கத் துவரியும் சிற்றிசையும் பேரிசையும் முதலாயின போலச் செந்துறைப் பகுதிக்கே யுரியவாகி வருவனவும், கூத்த நூலுள் வெண்டுறையும் அராகத்திற்கே உரியவாகி வருவனவும் ஈண்டுக் கூறிய செய்யுள்போல வேறுபாடப் பெறும் வழக்கியல் என்பது கருத்து. இக்கருத்தானே அவற்றை இப்பொழுதும் இசைப்பா என வேறு பெயர் கொடுத்து வழங்கும்" (தொல், செய் - 153) எனவும் வரும் பேராசிரியர் உரைப்பகுதிகள் இங்கு நோக்கத் தக்கனவாகும்.

தொல்காப்பியம் செய்யுளியல் 132-ஆம் சூத்திரவுரையில் இயற்றமிழ் யாப்புவிகற்பமாகிய ஒத்தாழிசைக் கலியின் உறுப்புக் களாய தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம் என்பவற்றுக்கும் இசை நாடகத் தமிழில் வழங்கும் முகநிலை கொச்சகம் முரி என்பன வற்றுக்கும் அமைந்த பெயரொற்றுமையினைப் பேராசிரியர் பின் வருமாறு விளக்குவர்:

"தரவு என்ற பொருண்மை என்னை யெனின் முகத்துத் தரப்படுவது என்ப; அதனை எருத்து எனவுஞ் சொல்லுப... இனி, இசை நூலாரும் இத்தரவு முதலாயினவற்றை முகம், நிலை, கொச்சகம் முரி என வேண்டுப. கூத்த நூலார் கொச்சகம் உள்வழி அதனை நிலைபெற அடக்கி, முகம், நிலை, முரி என மூன்றாக வேண்டும், அவரும் இக் கருத்திற்கேற்ப முகத்திற் படும்

தரவினை முகம் எனவும் இடை நிற்பனவற்றை இடைநிலை எனவும், இறுதிக்கண் முரிந்து மாறும் சுரிதகத்தினை முரி எனவும் கூறினார்" என்பது பேராசிரியர் தரும் விளக்கமாகும். இவ் விளக்கத்தினை அடியொற்றித் தேவபாணியாகிய இசைப்பாட்டின் இயல்புகளாக அடியார்க்கு நல்லார் கூறும் குறிப்புக்கள் இங்கு நோக்கத்தக்கனவாகும்.

"அது (தேவபாணி) முத்தமிழ்க்கும் பொது, அஃது இயற்றமிழில் வருங்கால் கொச்சக வொருபோகாய் வரும். வரும் வழியும் பெருந்தேவபாணி சிறுதேவபாணியென இருவகைத்தாய் வரும்..... அங்ஙனம் வரும் தரவினை நிலையென அடக்கி முகத்திற்படுந் தரவினை முகநிலை எனவும், இடை நிற்பனவற்றை இடைநிலை எனவும் இறுதியில் நிற்பனவற்றை முரிநிலை எனவும் பரவுதற் பொருண்மையாற் பெயர் கொடுத்தார் செய்யுளியலின் கண்ணும் எனக்கொள்க.

இனி, இசைத்தமிழில் வருங்கால் முகநிலை, கொச்சகம், முரி என்ப ஒரு சாராசிரியர். அன்றி இசைப்பா இசையளவுபா என்னும் இரு பகுதியுள் இஃது இசைப்பாவின் பகுதியென்ப. அது பத்து வகைப்படும். செந்துறை, வெண்டுறை, பெருந்தேவபாணி, சிறுதேவபாணி, முத்தகம், பெருவண்ணம், ஆற்றுவரி, கானல்வரி, விரிமுரண், தலைபோகுமண்டிலம். என என்னை?

'செந்துறை வெண்டுறை தேவபா ணிய்யிரண்டும்
வந்தன முத்தகமே வண்ணமே - கந்துருவத்
தாற்றுவரி கானல் விரிமுரண் மண்டிலமாத்
தோற்று மிசையிசைப்பாச் சுட்டு'

என்றார் இசை நுணுக்கமுடைய சிகண்டியாரென்க.

இன்னும் சுத்தம், சாளகம், தமிழ் என்னும் சாதியோசைகள் மூன்றினுடனும் கிரியைகளுடனும் பொருந்தும் இசைப்பாக்கள் ஒன்பதுவகை யென்ப; அவை:- சிந்து, திரிபதை, சவலை, சமபாத விருத்தம், செந்துறை, வெண்டுறை, பெருந் தேவபாணி, சிறு தேவ பாணி, வண்ணம் என இவை.

என்னை?

'செப்பரிய சிந்து திரிபதை சீர்ச்சவலை
தப்பொன்று மில்லாச் சமபாதம்-மெய்ப்படியுஞ்
செந்துறை வெண்டுறை தேவபாணி வண்ணமென்ப
பைந்தொடியாய் இன்னிசையின் பா'

என்றார் பஞ்மரபுடைய அறிவனாரென்னும் ஆசிரியரென்க" எனச் சிலப்பதிகாரம் கடலாடுகாதை உரையில் அடியார்க்கு

நல்லார் இசைப்பாவின் இயல்பினையும் அதன் வகையினையும் குறித்துள்ளார்.

இக்குறிப்புக்களைக் கூர்ந்து நோக்குங்கால், இயற்றமிழில் ஒத்தாழிசைக்கலியின் வகையாய்த் தெய்வத்தைப் பரவிய செய்யுள், இசைத்தமிழில் தேவபாணி என வழங்கப்பெறும் என்பதும், அஃது அடியளவும் இசையளவும் பற்றிப் பெருந் தேவபாணி, சிறு தேவபாணி என இருவகைப்படும் என்பதும், தேவபாணி முதலிய இவ்விசைப்பாக்களை இசை நுணுக்க முடையார் பத்துவகையாகவும் பஞ்ச மரபுடையார் ஒன்பது வகையாகவும் பகுத்துள்ளார்கள் என்பதும் நன்கு புலனாகும்.

செந்துறையாவது, உலகியல் வழக்குப்பற்றி மக்களை இயல்பு வகையாற் புகழும் நிலையில் இயற்றப்பெற்ற இசைப் பட்டாகும். திருஞானசம்பந்தர் பாடியருளிய 'மங்கையர்க்கரசி' என்ற முதற்குறிப்புடைய திருப்பதிகம், வளவர்கோன்பாவையும் பாண்டிமாதேவியும் ஆகிய மங்கையர்க்கரசியாரது சிவபத்தி மாண்பினையும் பாண்டியனுக்கு அமைச்சரும் சிவனடித் தொண் டரும் ஆகிய குலச்சிறையாரது திருத்தொண்டின் சிறப்பினையும் புனைந்துரையின்றி இயல்பு வகையால் உள்ளவாறு புகழ்ந்து போற்றுவதாகும். எனவே இத்திருப்பதித்தினைச் செந்துறை மார்க்கத்துக்கு உரிய இசைப்பாடல்களுக்கு இலக்கியமாகக் கொள்ளலாம்.

வெண்டுறை என்பது, உள்ளதனை உயர்த்துக்கூறும் நோக்கத்துடன் இல்லதனையும் விரவிக்கூறும் புனைந்துரை வகையாகிய நாடகவழக்கினை அடியொற்றி மக்களைப் புகழ்ந் துரைக்கும் இசைப்பாட்டாகும். ஆளுடையபிள்ளையார் அருளிய தேவாரத்துள்,

ஏரிசையும் வடவாலின் கீழிருந்தங் கீரிருவர்க் கிரங்கி நின்று
நேரியநான் மறைப்பொருளை யுரைத் தொளிசேர் நெறியளித்தோன்
நின்ற கோயில்

பாரிசையும் பண்டிதர்கள்பன்னாளும் பயின்றோதும் ஓசை கேட்டு
வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள் பொருட்சொல்லும் மிழலையாமே'

எனவரும் திருப்பாடல், திருவீழிமிலையுள் வாழும் நான் மறையந் தணர்களின் வேதநூற்கல்வியை மிகுத்துக்கூறிப் போற்றும் நிலையில், அவர்கள் இடைவிடாது வேதம் ஓதுதலைக் கேட்ட கிளிகளும் வேதத்திற்குப் பொருள் கூறின எனப் புனைந்துரைத் தமையால் இத்தகைய திருப்பாடல்களை வெண்டுறை மார்க்கம் பற்றிய இசைப்பாவுக்கு இலக்கியமாகக் கொள்ளலாம்.

தேவபாணி இரண்டாவன, தெய்வத்தைப் பரவிய இசைப் பாடல்களாகிய பெருந்தேவபாணி சிறுதேவபாணி என்பன. இவ்விருவகைத் தேவபாணிக்கும் சிலப்பதிகாரம் கடலாடு காதை உரையில் அடியார்க்கு நல்லார் மேற்கோளாகக்காட்டிய உதாரணச் செய்யுட்களைக்கூர்ந்து நோக்குங்கால், நாற்சீரளவுட் பட்டு வரும் அடிகளால் இயன்ற இசைப்பாடல்களைச் சிறுதேவ பாணி எனவும் நாற்சீரின்மிக்கு எண்சீரளவும் வரும் அடிகளால் இயன்ற இசைப் பாடல்களைப் பெருந்தேவபாணி எனவும் வழங்குதல் அவர் கருத்தென்பது உய்த்துணரப்படும். தேவாரத் திருப்பதிகங்களாகிய முதல் ஏழுதிருமுறைகளிலும் நாற்சீரடி யளவுட்பட்டுச் சிறியனவாகவும் ஐஞ்சீரடி முதலாக மிக்குவரும் அடிகளைப் பெற்றுப் பெரியனவாகவும் அமைந்த திருப்பாடல்கள் யாவும் தேவதேவனாகிய முழுமுதற் கடவுளைப் பரவிப் போற்றிய தெய்வப்பாடல்கள் ஆதலின் அவையனைத்தும் தேவபாணி என்னும் இசைப்பாவாகக் கொள்ளத்தக்கனவாகும்.

முத்தகம் என்பது, ஒரே பாடலாய்ப் பொருள் முற்றி நிற்கும் இசைப்பாட்டு. நறுமலர்களால் தொடுக்கப்பெற்ற மலர்மாலை போன்று பொருளால் தொடர்புடைய பாமாலைகளாகிய தேவாரத் திருப்பதிகங்களில் உள்ள ஒவ்வொரு திருப்பாடலும் தனித்தனியே பொருள் முற்றி நிற்கும் தன்மையினையும் உடன் பெற்றிருத்தல் காணலாம்.

வண்ணம் என்பது, பாட்டின் கண்ணே நிகழும் ஓசை விகற்பமாகும். உயிரெழுத்துக்களுள் குறில் நெடில் ஆகிய மாத்திரையளவு பற்றியும் மெய்யெழுத்துக்களுள் வல்லெழுத்து, மெல்லெழுத்து, இடையெழுத்து ஆகிய இனம் பற்றியும் செய்யுளுக்குரிய அசை, சீர், அடி, தொடை முதலிய பிற உறுப்புக்கள் பற்றியும் செய்யுட்கள் வெவ்வேறு ஓசை நலம் உடையனாய்ப் படிப்போர்க்கும் கேட்போர்க்கும் இன்பத் தருவன. இங்ஙனம் ஓதவும் கேட்கவும் சுவை பயக்கும் இனிய ஓசை நலம் வாய்ந்த பாக்கள் வண்ணம் என வழங்கப்பெறும். இவ்வண்ணப் பாக்களை இயற்றமிழ் நூலார் பாஅ வண்ணம் முதலாக முடுகுவண்ணம் ஈறாக இருபது வகையாகப் பகுத் துரைப்பர். இசைத் தமிழ் நூலார் இப்பாக்களைப் பெரு வண்ணம் இடைவண்ணம், வனப்பு வண்ணம் என மூன்றாகப் பகுத்துரைப்பர்.

“வண்ணம் ஒருவகையான் மூன்று வகைப்படும்: பெரு வண்ணம், இடைவண்ணம், வனப்பு வண்ணம் என, அவற்றுள் பெருவண்ணம் ஆறாய்வரும், இடைவண்ணம் இருபத் தொன்றாய் வரும். வனப்பு வண்ணம் நாற்பத்தொன்றாய் வரும்.” என

அடியார்க்கு நல்லார் கூறுதலால் இசை நூலார் கூறும் வண்ணம் மூன்றாதல் ஒருவாறு புலனாகும்.

"எண்ணியநூற் பெருவண்ணம் இடைவண்ணம் வனப்பென்னும்
வண்ணவிசை வகையெல்லாம் மாதுரிய நாதத்தில்
நண்ணிய பாணியும் இயலும் தூக்கு நடைமுதற்கதியிற்
பண்ணமைய எழுமோசை எம்மருங்கும் பரப்பினார்"

(பெரிய - ஆனாயர் - 28)

எனவரும் செய்யுளில் இம் மூவகை வண்ணங்களையும் சேக்கிழா ரடிகள் முறையே குறிப்பிட்டுள்ளார்.

"தண்ணுமூன் றுமுடை யாதிவாழ்கலிக் காழியுள்
அண்ணலந் தண்ணருள் பேணி ஞானசம்பந்தன் சொல்
வண்ணமூன்றுந் தமிழிற்றெரிந்திசை பாடுவார்
விண்ணுமண்ணும் விரிகின்ற தொல்புகழாளரே"

(2-75-11)

எனவரும் ஆளுடைய பிள்ளையார் தேவாரத்துள், இசைத்தமிழ் நூலார் எண்ணி வகைப்படுத்திய வண்ணம் மூன்றென்று குறிக்கப்பெற்றிருத்தல் காணலாம். இங்கே குறிக்கப்பட்ட மூன்று வண்ணங்களின் இலக்கணங்கள் இவையெனத் தெளிவாகத் தெரிந்து கொண்டு அவற்றுக்குரிய தேவாரப் பாடல்கள் இவையென எடுத்துக்காட்ட இயலவில்லை. எனினும் 'வண்ணம் மூன்றுந் தமிழிந்றெரிந்திசை பாடுவார், விண்ணு மண்ணும் விரிகின்ற தொல்புகழாளரே' என ஆளுடைய பிள்ளையார் தாம் பாடிய தேவாரத் திருப்பதிகங்களை இசையுடன் பாடும் முறை இதுவென அறிவுறுத்துதலால் அவர் பாடிய திருப்பதிகங்கள் இசைத்தமிழ்நூலார் எண்ணிய மூவகை வண்ணங்களுக்கும் நிலைக்களமாக அமைந்துள்ளமை நன்கு தெளியப்படும்.

இனி, நாடகத்தமிழில் சுண்ணம், சுரிதகம், வண்ணம், வரிதகம் என்னும் சொல்வகை நான்கினுள் மேற்குறித்த வண்ணமும் ஒன்றாக வைத்து எண்ணப்பட்டுள்ளது. "சொல்வகை நான்கு வகைப்படும்: சுண்ணம், சுரிதகம், வண்ணம், வரிதகம் என, சுண்ணம்-நான்கடியான் வருவது. சுரிதகம் - எட்டடியான் வருவது; வண்ணம் - நானான் கடியான் வருவது. வரிதகம் - முப்பத்திரண் டடியான் வருவது, என்னை?

"சுண்ணம் நான்கடி சுரிதகம் எட்டடி
வண்ணம் நானான்கு வரிதகம் எண்ணான்கென்
றெண்ணிய அடித்தொகை எய்தவும் பெறுமே"

என்றாராகலின்" எனவரும் அடியார்க்கு நல்லார் உரை, பதினாறடிகளால் இயன்ற இசைப்பாடலை வண்ணம் என்ற பெயரால் வழங்கக் காண்கிறோம்.

தாம் சொல்லக்கருதிய பொருளைக் கேட்போரது உள்ளம் விரும்பி ஏற்றுக்கொள்ளும்படி சுவைபெருக வண்ணித்துப் புகழும் நிலையில் இயற்றப்பெற்ற இசைப் பாடல்களை வண்ணம் என வழங்குதல் மிகவும் பொருத்தமுடையதே யாகும். கேட்போரைத் தம் வசமாக்கும் ஆற்றல் வாய்ந்த இசைப்பாடலாகிய வண்ணப்பாடலின் சிறப்பினை,

> **"வண்ணங்கள் தாம்பாடி வந்து நின்று**
> **வலிசெய்து வளை கவர்ந்தார்"** (6-9-1)

எனவரும் திருத்தாண்டகத் தொடரால் திருநாவுக்கரசர் அறிவுறுத்திய திறம் இங்கு நினைக்கத்தகுவதாகும்.

முழுமுதற்கடவுளாகிய இறைவன், பிரிவிலா அடியார்களாகிய அன்பர்களுக்கு அருள் செய்யும் பொருட்டாக அவ்வப் பொழுது தன் திருவருளாற் படைத்துக் கொள்ளும் திருமேனிகளின் எழில் நலத்தையும் அத்திருக்கோலங்களுடன் நிகழ்த்திய ஆற்றல் மிக்க அருட்செயல்களையும் வனப்புற வண்ணித்துப் போற்றும் முறையில் அமைந்த தெய்வ இசைப்பாடல்களை வண்ணம் என்ற பெயரால் வழங்குதல் தேவார அசிரியர்கள் காலத்திற்கு முற்பட்ட சொல் வழக்ககாகும். "குழையணிந்த திருச்செவியினையுடையீர், நும்மை இசைப்பாக்களாகிய வண்ணப் பாடல்களால் பாடிப்போற்றும் அடியார்களுக்கு அவர்கள் அழைப்பதன் முன்னமே எளிவந்து அருள்புரிவீராக" எனத் திருவோத்தூர்ப் பெருமானை வேண்டிப் போற்றும் முறையில்,

> **"குழையார் காதீர் கொடுமழு வாட்படை**
> **உழையாள்வீர் திருவோத்தூர்**
> **பிழையா வண்ணங்கள் பாடி நின்றாடுவார்**
> **அழையாமே யருள் நல்குமே."**

என ஆளுடைய பிள்ளையார் பாடிய திருப்பாடல், இறைவனைப் போற்றும் இயல்பமைந்த வண்ணப்பாக்களின் சுவைநலத்தையும் பயனையும் நன்கு வலியுறுத்தல் காணலாம்.

"இனி, வரிப்பாடலாவது:- பண்ணும் திறமும் செயலும் பாணியும் ஒரு நெறியின்றி மயங்கச் சொல்லப்பட்ட எட்டனியல்பும் ஆறனியல்பும் பெற்றுத் தன் முதலும் இறுதியும் கெட்டு, இயல்பும் முடமுமாக முடிந்து, கருதப்பட்ட சந்தியும் சார்த்தும் பெற்றும் பெறாதும் வரும். அதுதான் தெய்வஞ் சுட்டியும் மக்களைப் பழிச்சியும் வரும்" என்பர் அரும்பதவுரையாசிரியர்.

இங்ஙனம் வரும் வரிப்பாடல்களுள் ஆற்று வரி என்பது, உலகு புரந்து ஊட்டும் நன்னீர்மை வாய்ந்த காவிரி முதலிய ஆறுகளை நோக்கி எழுந்த இசைப்பாட்டாகும். கானல்வரி என்பது, கடற்கரைச் சோலையை நிலைக்களமாகக் கொண்டு பாடப் பெற்ற இசைப்பாட்டாகும். விரிமுரண் என்பது முரிவரியாதல் கூடும். முரிவரியாவது, முன்னே தொடங்கப்பெற்ற இயலமைதி யாகிய யாப்பும் இசையமைதியாகிய பண்ணீர்மையும் பாட்டின் இடையிலே முரிந்து மாறும் வண்ணம் இயற்றப்பெறும் இசைப் பாட்டாகும்.

'எடுத்த இயலும் இசையுந் தம்மின்
முரித்துப்பாடுதல் முரியெனப் படுமே'

என்பது அரும்பதவுரையாசிரியர் காட்டிய மேற்கோட் சூத்திரமாகும். சிலப்பதிகாரத்துள் கானல்வரி, வேட்டுவவரி, ஆய்ச்சியர் குரவை, குன்றக்குரவை, வாழ்த்துக்காதை ஆகிய பகுதிகளில் உள்ள இசைப்பாடல்களிற் பல, மேலே அரும் பதவுரையாசிரியர் கூறிய வரிப்பாடல்களுக்குரிய சிறந்த இலக் கியமாக அமைந்துள்ளன. தேவாரத் திருப்பதிகங்களில் காவிரி முதலிய ஆறுகளின் வளங்களைப் போற்றிப் பரவும் நிலையில் அமைந்த திருப்பாடல் ஆற்றுவரி என்னும் இசைப்பாவுக்குரிய அமைப்பினை ஓரளவு பெற்றிருத்தல் காணலாம்.

"வரைத்தலைப் பசும்பொனோ டருங்கலன்க ளுந்திவந்
திரைத்தலைச் சுமந்துகொண் டெறிந்திலங்கு காவிரிக்
கரைத்தலைத் துருத்திபுக் கிருப்பதே கருத்தினாய்
உரைத்தலைப் பொலிந்துனக் குணர்த்துமாறு வல்லமே"
(2-98-1)

எனவும்,

"கோங்கமே குரவமே கொழுமலர்ப்புன்னையே கொகுடிமுல்லை
வேங்கையே ஞாழலே விம்முபா திரிகளே விரவியெங்கும்
ஓங்குமா காவிரி வடகரை யடைகுரங் காடுதுறை
வீங்குநீர்ச் சடைமுடி யடிகளார் இடமெ‌ன விரும்பினாரே"
(3-91-1)

எனவும் ஆளுடைய பிள்ளையார் பாடிய திருப்பாடல்கள் காவிரி யாற்றின் வளத்தினை இசையொடு தெய்வ நலமும் பொருந்தப் போற்றுவனவாகும்.

கடற்கரைத் தலங்களைப் பற்றிய தேவாரத் திருப்பதி கங்களில் கடற்கானலின் கருப்பொருள்களையும் உரிப்பொருள் களையும் விரித்துரைக்கும் பகுதிகள் கானல்வரியின் தொடர் புடையனவே.

'கலவஞ்சேர் கழிக்கானல் கதிர்முத்தங் கலந்தெங்கும்
அலவஞ்சே ரணைவாரிக் கொணர்ந்தெறியு மகன்றுறைவாய்
நிலவஞ்சேர் நுண்ணிடைய நேரிழையா ளவளோடும்
திலகஞ்சேர் நெற்றியினார் திருவேட்டக் குடியாரே'

(3-66-4)

*எனவரும் திருஞானசம்பந்தர் தேவாரமும்,*

"வனபவள வாய்திறந்து வானவர்க்குந் தானவனே யென்கின்றாளால்
சினபவளத் திண்டோள்மேற் சேர்ந்திலங்குவெண்ணீற்ற
னென்கின்றாளால்
அனபவள மேகலையோ டப்பாலைக் கப்பாலான் என்கின்றாளால்
கனபவளஞ் சிந்துங் கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ"

(4-6-1)

*எனவரும் திருநாவுக்கரசர் தேவாரமும்,*

"தலைக்குத் தலைமாலை யணிந்த தென்னே
சடைமேற் கங்கைவெள்ளந் தரித்த தென்னே
அலைக்கும் புலித்தோல் கொண் டசைந்த தென்னே
அதன்மேற் கதநாகங் கச்சார்த்த தென்னே

மலைக்கு நிகரொப்பன வன்றிரைகள்
வலித்தெற்றி முழங்கி வலம்புரிகொண்
டலைக்குங் கடலங் கரைமேன் மகோதை
அணியார் பொழில் அஞ்சைக்களத்தப்பனே"*

(* "நாற்சீரடியொத்து வருவன மண்டில யாப்பெனப்படும் எனவரும் பேராசிரியருரை (தொல் செய்யுள் - 115) இங்கு நோக்கத்தகுவதாகும்")

*எனவரும் சுந்தரர் தேவாரமும் கடற்கானலின் இயல்பினை விரித் துரைத்தல் காணலாம்.*

'மாதர் மடப்பிடியும் மட அன்னமு மன்னதோர்
நடையுடைம் மலை மகள் துணையென மகிழ்வர்
பூத இனப்படைநின் றிசைபாடவு மாடுவர்
அவர் படர் சடைந் நெடுமுடியதோர் புனலர்
வேதமொ டேழிசை பாடுவராழ்கடல் வெண்டிரை
யிரைந் நுரை கரை பொருது விம்மி நின் றயலே
தாதவிழ் புன்னை தயங்கு மலர்ச்சிறை வண்டறை
யெழில் பொழில் குயில் பயில தருமபுரம் பதியே'

*எனத் திருஞான சம்பந்தர் பாடியருளிய திருத்தரும்புரத் திருப்பதிகம், முன் தொடங்கிய இயலமைதியாகிய யாப்பும் இசையமைதியாகிய பண்ணீர்மையும் இடையிடையே முரிந்து மாறும் இயல்புடைய அடிகளால் இயன்ற இசைப்பாவாதலின்*

இதனை முரிவரிக்கு உரிய சிறந்த இலக்கியமாகக் கொள்ளுதல் பொருந்தும்.

இனி, மண்டிலமாவது பாடலின் முதலும் முடிவும் இயைத்து நோக்கும் வண்ணம் ஒரே பொருட்டொடர் புடையதாய் நாற்சீரடியொத்துவரும் இசைப்பாட்டாகும். திருநாவுக்கரசர் பாடியருளிய திருவிருத்தப் பாடல்கள் யாவும் மண்டிலம் என்னும் இவ்விசைப்பா வகையில் அடங்குவனவாகும்.

இனி, சிந்து என்பது, அடியிரண்டாய்த் தம்முள் அள வொத்து வரும் செய்யுள். மூன்றடியாய்த் தம்மில் அளவொக்கில் திரிபதை எனப்படும். இதனைத் திரிபாதி என வழங்குதல் வீர சாழிய ஆசிரியர். முதலடி, கடையடி, இடையடிகள் குறைந்தும் மிக்கும் வரின் கவலை எனப்படும். நான்கடிகளும் அளவொத்து வருஞ் செய்யுள் சமபாதம் எனப்படும். மேற்குறித்த சிந்து, திரிபதை, கவலை, சமபாத விருத்தம் என்பன, பிற்காலத்தார் வருந்துரைத்த இயல்பற்றிய யாப்பு விகற்பங்களாகும். இவை யாவும் தொல்காப்பியச் செய்யுளின்படி 'யாப்பினும் பொரு ளினும் வேறுபட்ட' கொச்சகக் கலியுள்ளும் பண்ணைத் தோற்று விக்கும் செய்யுள் வகையாகிய பண்ணத்தியுள்ளும் அடங்கு வனவாம்.

இனி, வடநூல்வழித் தமிழாசிரியர் சிலர், இத்தமிழ்ச் செய்யுள் வகைகளுக்கு வடமொழி யாப்பிலக்கண மரபை அடியொற்றி லகு குரு என்னும் எழுத்தமைப்பினைக் கொண்டு புதிய இலக்கணங்களைக் கற்பித்துக் கூறியுள்ளார்கள். தமிழில் பிற்காலத்தவர் ஏற்றியுரைத்த இவ்விருத்த இலக்கணம் வட மொழி நூல்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. வீரசோழிய ஆசிரியர், தமிழில் ஓரளவு சுருங்கக் கூறியுள்ளார்.

தனிக்குற்றெழுத்தாய் வருவது லகு. குற்றொற்று நெடில், நெட்டொற்று ஆக வருவது குரு. குற்றெழுத்து ஈற்றில் நின்ற நிலையிலும் விட்டிசைத்த நிலையிலும் குருவாதலும் உண்டு. லகுவுக்கு ஓரலகும் குருவுக்கு இரண்டலகும் கொள்வர். எனவே இரண்டு லகு கூடி ஒரு குருவாக மதிக்கப்படும் நிலையை அடைவதும் உண்டு. லகு, குரு என்னும் இவ்விரண்டினையும் வைத்து உறழ்தலினால் விருத்த பேதங்களைத் தோற்றுவிக்கலாம்.

விருத்த அடிகள் ஓரெழுத்தாலும் வருதல் உண்டு என்பர் ஒரு சாரார். குறைந்த அளவு நான்கெழுத்தேனும் வந்தாலன்றி ஓர் அடியின் ஓசை நிரம்பாதெனவும், விருத்த அடிகளின் பேரெல்லை ஒற்றுநீக்கி இருபத்தாறெழுத்தெனவும் கொள்வர் வீரசோழிய ஆசிரியர். ஓரெழுத்து முதல் இருபத்தாறெழுத் தளவும் வரும் அடிகளால் இயன்ற செய்யுட்களை முறையே

உத்தம், அதியுத்தம், மத்திமம், நிலை, நன்னிலை, காயத்திரி, உண்டு, அநுட்டுப்பு, பகுதி, பந்தி, வனப்பு, சயதி, அதிசயதி, சக்குவரி, அதி சக்குவரி, ஆடி, அதியாடி, திருதி, அதிதிருதி, கிருதி, பிரகிருதி, அதிகிருதி, விக்குருதி, சங்கிருதி, அபிகிருதி, உற்கிருதி எனப் பெயரிட்டு வழங்குவர் வீரசோழிய உரை ஆசிரியர். இவற்றுக்கு எழுத்தெண்ணுங்கால் ஒற்று நீக்கி எண்ணுதல் வேண்டும்.

இவ்வாறு வடமொழி விதிகளை அடியொற்றி எழுத் தெண்ணி வகுக்கப்படும் செய்யுட்களைத் தமிழியல் முறைப்படி சீர்வகையாற் பகுத்து நோக்குமிடத்து அவற்றின் ஓசையும் சந்தமும் மேலும் வேறுபடுதல் காணலாம். இசைத்தமிழ் உருக்களாகிய தேவாரத் திருப்பாடல்களை அவற்றின் கட்டளை ஓசை வேறு படாது வகைப்படுத்த வேண்டு மாயின், இசைத் தமிழில் ஆளத்தி செய்தற்குரிய அசைச் சொற்களாகிய தென்னா, தெனா, தென்னா தெனா என்பவற்றின் திரிபுகளாக இக்காலத்து வழங்கும் தானா, தனா, தான, தன, தனன, தானன; தனனா, தானனா, தனான, தானான, தனானா, தானானா எனவரும் சந்தக் குழிப்புக்களாகிய சீர்நிலைகளைக் கொண்டு அடி வகுத்தல்அமைவுடையதாகும்.

தன - இரு லகு கொண்டது.

தானா - இரு குரு கொண்டது.

தனா - ஒகு லகுவும் ஒரு குருவும் கொண்டது.

தான - ஒரு குருவும் ஒர லகுவும் கொண்டது.

இவை நான்கும் ஈரெழுத்துக்களால் இயன்றன.

தனன - மூன்று லகு கொண்டது.

தானானா - மூன்று குரு கொண்டது.

தனானா -<br>
தானனா -<br>
தனனா -<br>
தானான -<br>
தனான -<br>
தானன -

} இவை லகுவும் குருவும் விரவி வந்த மூவெழுத்துச் சீர்கள்

இவை எட்டும் மூன்றெழுத்துக்களால் வரும் விருத்த அடிகள் என்பர்.

வே ரம் போய்<br>
மா ரன் சீர்<br>
சே ருங் கால்<br>
நேர் வன் யான்.

இவ்விருத்தம் மூன்று குருவாலாகிய அடிகளால் வந்தது. மேற்குறித்த மூவெழுத்தடிகள் எட்டின் ஈற்றிலும் ஒரு திருவையும் ஒரு குருவையும் தனித்தனியே சேர்த்தால் நான்கெழுத்துக்களால் வரக்கூடிய விருத்த அடிகளின் உருவம் வந்து எய்தும்.

*தனதன, தனாதன, தனதனா, தனாதனா,*
*தனதான, தனாதான, தனதானா, தனாதானா,*
*தானதன, தானாதன, தானதனா, தானாதனா,*
*தானதான, தானாதான, தானதானா, தானாதானா.*

இவை பதினாறும் நான்கெழுத்தால் வரும் விருத்தஅடிகளாம். இவ்வாறே ஐந்து முதலிய எழுத்துக்களால் வரும் அடிகளையும் இங்ஙனம் சந்தக்குழிப்பில் வைத்துப் பெருக்கிக் காணலாம்.

கல்லால் நீழல்
அல்லாத் தேவை
நல்லார் பேணார்
அல்லோ நாமே.

இத்திருப்பாடல் 'தானா தானா' என்னும் நான்கெழுத்தாலாகிய அடிகளால் இயன்றதாகும்.

கருவார் கச்சித்
திருவே கம்பத்
தொருவா வென்ன
மருவா வினையே.

இது, 'தனனா தானா' எனும் ஐந்தெழுத்தாலாகிய அடிகளால் அமைந்ததாகும். இதன் ஈற்றடி 'தனனா தனனா' என ஆறெழுத் தால் வந்தமை காண்க.

அரனை யுள்குவீர்
பிரம னூருளெம்
பரனை யேமனம்
பரவி யுய்ம்மினே.

இது, 'தனன தானனா' என ஆறெழுத்தால் அமைந்த அடிகளை யுடையதாகும்.

மணியார் முதுகுன்றைப்
பணிவா ரவர்கண்டீர்

*பிணியா யினகெட்டுத்*
*தணிவா ருலகிலே.*

இது, 'தனனா தனதானா' என்னும் ஏழெழுத்தாலாகிய அடிகளையுடையதாகும். திருஞானசம்பந்தர் அருளிய இத்திருப் பாடல்கள் 'இருக்கு' எனப் போற்றப்பெறும் வேத மந்திரங்களைப் போன்று இறைவனைப் போற்றும் மறைமொழிகளாய மந்திரங் களாய் அமைந்தமையால் பொருளமைதி பற்றி 'இருக்கு' என்ற பெயரும், இருசீரடியாகிய குறளடிகளால் இயன்றமையால், யாப்பமைதி பற்றிக் 'குறள்' என்ற பெயரும் பெறத் தக்கன வாதலின், இவ்விரு பெயர்களும் ஒருங்கியையப் பெற்றுத் 'திரு இருக்குக் குறள்' என வழங்கப்பெறுவனவாயின.

இனி எழுத்தின் மாத்திரையே யன்றி அவற்றின் வன்மை, மென்மை, இடைமையாகிய ஓசை யமைதியினைக் குறிக்கும் முறையில் தத்த, தந்த தய்ய என முறையே வலலொற்று, மெல் லொற்று இடையொற்றுப் பெற்று இவ்வாறு மூவேறு வாய் பாடுகளாக வழங்கும் வண்ணச் சொற்களும் உள. வண்ணப் பாடல்களில் வழங்கும் தத்த, தந்த, தய்ய என்னும் இவை மூன்றும் சந்தப்பாக்களில் வரும் 'தான' என்பதும் ஒரே மாத்திரையள வினவாம். ஒரு குரு நின்ற இடத்தில் இரண்டு லகு நிற்றலும் சந்தப் பாடல்களுக்குப் பொருந்தும். அஃதாவது 'தான' என்னும் சந்தக் குழிப்பு ஒரேவழி 'தனன' என வருதலும் சந்தப்பாவுக்கு ஏற்கும் என்பதாம்.

மேற்காட்டிய சந்த விகற்பங்களுக்கும் வண்ண விகற்பங் களுக்கும் ஏற்ற சந்தக் குழிப்பு வாய்பாடுகள் பல தேவார காலத் திற்கு முன்பிருந்தே வழங்கி வந்துள்ளன.

**'தென்ன வென்று வரிவண்டிசைசெய் திருவாஞ்சியம்'** 2-7-1
**'தென்னென வண்டினங்கள் செறியார் பொழில்'** 1-106-10
**'தென்னென இசைமுரல் சரிதையர்'** 3-85-3
**'தெத்தென இசை முரல் சரிதையர்'** 3-85-3
**'தும்பி தெத்தே யெனமுரல'** 2-72-5

எனவரும் திருஞான சம்பந்தர் தேவாரத் தொடர்களும்

**'தேத்தெத்தா வென்னக் கேட்டார்'** 4-32-10

எனவரும் திருநாவுக்கரசர் தேவாரத் தொடரும்,

**'தென்னாத் தெனாத் தெத்தெனா வென்றுபாடி'** 7-2-6

எனவரும் சுந்தரர் தேவாரத் தொடரும் முறையே தென்ன, தென்னென, தெத்தென, தெத்தே தேத்தெத்தா, தென்னா

தெனா, தெத்தெனா என்னும் இசைக்குரிய அசைச் சொற்களை எடுத்து ஆண்டுள்ளன. இவ்வாறே,

**'தந்த திந்தத் தடமென் றருவித்திரள் பாய்ந்து போய்'** 2-5-4

எனவும்,

**'தேந்தாமென் றரங்கேறிச் சேயிழையார் நடமாடும்'**

எனவும் வரும் தொடங்களில், தந்த, திந்த, தேம், தாம் என ஆடற்குரிய சதிச் சொற்கள் சிலவற்றை ஆளுடைய பிள்ளையார் குறித்துள்ளார். பிள்ளையார் அருளிய 'பந்தக்கால்' எனத் தொடங்கும் திருத்தாளச் சதித் திருப்பதிகம், இசையுடன் பாடும் அளவிலன்றி நாடக மகளிர் ஆடரங்குகளிற் பாடி யாடுதற்கேற்ற பொருள் பொதிந்த தாளச் சொற் கட்டுகளாக அமைந்திருத்தல் அறிந்து மகிழத்தக்கதாகும்.

இயலிசைத் தமிழாகிய தேவாரத் திருமுறைகளில் ஒவ்வொரு பண்ணிலும் அமைந்த திருப்பதிகங்களில் யாப்பு வகையினைக் கட்டளை என வழங்குதல் மரபு. கட்டளை என்பது, மாத்திரை யளவும் எழுத்தியல் நிலையும் பற்றிச் செய்யுட்களில் அமைந்த ஓசைக் கூறுபாடாகும். சிலப்பதிகாரம் அரங்கேற்று காதை உரையில் 'ஆடல் பாடல் இசையே தமிழே' எனவரும் தொடர்க்குப் பொருள் கூறுமிடத்து, 'தமிழ்' என்பதற்கு 'வடவெழுத்தொரீஇ' இவந்த எழுத்தாலே கட்டப்பட்ட ஓசைக் கட்டளைக் கூறு பாடுகளும் 'என அரும் பதவுரையாசிரியர் விளக்கவுரை கூறுவர். இதனைக் கூர்ந்து நோக்குங்கால் இசைத் தமிழில் வழங்கும்' 'கட்டளை' என்ற சொல், செய்யுட்களில் அமைந்த ஓசைக் கூறுபாட்டினையே குறிப்பதென்பது நன்கு துணியப்படும். ஓசை வகையாகிய இக்கட்டளையமைப்பினை அடியொற்றியே இசைப்பாடல்களின் தாளம் முதலிய பண்ணீர்மை அமைதல் இயல்பு. இந்நுட்பம் 'கட்டளைய கீதக் குறிப்பும்'*

(*வட்டணையுந் தூசியு மண்டலமும் பண்ணமைய எட்டுடன் ஈரிரண்டாண் டெய்தியபின்-கட்டளைய கீதக்குறிப்பும் அலங்காரமுங் கிளரச் சோதித் தரங்கேறச் சூழ் (சிலப்பபதிகாரம்-அரங்கேற்று-அடியார்க்கு நல்லார் உரை மேற்கோள்) என வரும் பழம் பாடற்றொடரால் நன்கு புலனாதல் காண்க.

ஆசிரியர் தொல்காப்பியனார், பாக்களிற் பயிலும் அடிகளை அவற்றில் அமைந்த சீர்வகை பற்றியும், எழுத்தெண்ணி யறிதற்குரிய கட்டளையோசை பற்றியும் பகுத்துக் கூறியுள்ளார். இருசீரடி, குறளடி, மூச்சீரடி, சிந்தடி, நாற்சீரடி நேரடி, ஐஞ்சீரடி நெடிலடி, அறுசீர் முதலாக வரும் அடிகள் கழிநெடிலடி எனப்படும். இங்ஙனம் சீர்களை அடிப்படையாகக் கொண்டு அமைந்த அடிகள் சீர்வகையடிகளாகும். இனி நாற்சீர்களால்

ஆகிய அளவடிகளையே ஒற்றும் குற்றியலிகரமும் குற்றிய லுகரமும் நீக்கி நாலெழுத்து முதல் ஆறெழுத்து வரையமைந்த அடிகள் குறளடி எனவும், ஏழெழுத்துமுதற் ஒன்பதெழுத்தளவும், அமைந்த அடிகள் சிந்தடி எனவும், பத்தெழுத்து முதல் பதினான்கெழுத்தளவும் அமைந்த அடிகள் நேரடி எனவும், பதினைந்து முதல் பதினேழெழுத்தளவும் அமைந்த அடிகள் நெடிலடி எனவும், பதினெட்டு முதல் இருபதெழுத்தளவும் அமைந்த அடிகள் கழிநெடிலடி எனவும் ஆசிரியர் தொல் காப்பியனார் ஐவகையடிகளாகப் பகுத்துள்ளார்.

இங்ஙனம் எழுத்தெண்ணி வகுக்கப்பெற்ற ஐவகையடி களையும் கட்டளையடிகள் என வழங்குதல் மரபு. ஒற்று நீக்கி எண்ணுங்கால் எல்லா அடிகளும் எழுத்தொத்துவரும் கலிப்பா வினைக் கட்டளைக் கலிப்பா எனவும், நெடிலடி நான்கினால் எழுத்தொத்துவரும் கலித்துறையினைக் கட்டளைக் கலித்துறை எனவும், இவ்வாறே கட்டளையாசிரியம் கட்டளை வஞ்சி எனவும் வழங்கும் பாவகைகள் எழுத்தளவாகிய கட்டளை யோசை பற்றிப் பிற்காலத்தார் பகுத்துரைத்தனவேயாகும்.

இயற்றமிழில் சீர்வகைப்பற்றிச் செய்யுட்களின் அமைப்பினைப் பகுத்துணர்தல் எளிது. இசைத் தமிழில் ஓர் எழுத்து மிகினும் குறையினும் இசையமைப்புக்குரிய தாளம் முதலியன மாறுபடும். ஆதலால் நெடில் குறில் ஆகிய எழுத்தளவு பற்றி இசைப் பாக்களின் அமைப்பினைப் பகுத்துணர்தல் வேண்டும். இங்ஙனம் இசைப்பாக்களின் சந்த அமைப்பினை அறிதற்குரிய கருவி பாகத் தான, தன, தானா, தனா முதலாக உள்ள அசைச் சொற்கள் இசைத் தமிழ்ப் பாடல்களுக்குரிய சந்தக் குழிப்புச் சொற்களாக இசையாசிரியர்களால் எடுத்தாளப் பெற்றுள்ளன. முருகப் பெருமானது பொருள்சேர் புகழினைச் சந்தமலிந்த செந்தமிழ்ப் பாடல்களாற் பரவிப் போற்றிய அருணகிரிநாதர், தாம் பாடிய திருப்புகழ்ப் பாடல்களின் இயலமைப்பினையும் இசையமைப்பினையும் பின்னுள்ளோர் எளிதின் உணர்ந்து பாடுதற்கு ஏற்ற வண்ணம் தானா, தனா, தனனா முதலிய இசைக்குரிய அசைச் சொற்களைத் தம் பாடல்களில் ஆங்காங்கு இயைத்துப் பாடியுள்ளார். அவ் ஆசிரியர்க்கு இசை நெறி காட்டிய மூல இலக்கியங்கள் மூவர் முதலிகள் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத் திருப்பதிகங்களாகும். எனவே தேவாரப் பதிகங்களுக்குரிய யாப்பமைதியினையும் நெடில் குறில் என அமைந்த எழுத்துக்களின் மாத்திரையளவினைக் கருத்திற் கொண்டு தான, தன, தானா, தனா முதலியவற்றை வாய்ப்பாடு களாக வைத்து எழுத்தெண்ணி அடிவகுக்கு முகமாக அவற்றின் கட்டளைகளைப் பிரித்தறிதல் இயல்வதாகும்.

திருமுறை வகுத்த நம்பியாண்டார் நம்பி, திருவெருக்கத்தம் புலியூர் திருநீலகண்ட யாழ்ப்பாணர் மரபிற் பிறந்த இசைச் செல்வியாராகிய பாடினியார் ஒருவரைக் கொண்டு மூவர் தேவாரப் பதிகங்களுக்கும் இசையமைத்தார் என்பதும், அவ்வாறு அமைந்த இசைமுறையில் இன்ன இன்ன பண்களுக் குரிய பதிகங்கள் இத்தனை இத்தனை கட்டளைகளை யுடையன என்பதும் திருமுறை கண்ட புராணத்தில் தெளிவாகக் குறிப்பிடப் பெற்றுள்ளன. திருமுறை கண்ட புராணம் கூறும் முறையில் இன்ன இன்ன பண்களில் அமைந்த திருப்பதிகங்களின் கட்ட ளைகள் இத்துணைய என்பதனை விபுலாநந்த அடிகளார் தாம் இயற்றிய யாழ்நூலில் 'தேவார இயல்' என்ற பகுதியில் விரிவாகப் பகுத்துக் காட்டியுள்ளார்கள். அந்நூலிற் கூறப்பட்ட பகுப்பு முறையினை அடியொற்றித் தேவாரத்தில் ஒவ்வொரு பண் களிலும் அமைந்த திருப்பதிகங்களின் கட்டளைப் பகுப்பினைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

## முதலாந்திருமுறை

இனி, தேவாரத் திருமுறை எழனுள் முதல் மூன்று திருமுறை களாக அமைந்த திருஞான சம்பந்தர் திருப்பதிகங்களின் கட்டளை வகைகளை முறையே காண்போம். முதற்றிருமுறையில் முதற் பண்ணாக அமைந்தது நைவளம் என்னும் நட்ட பாடை யாகும். 'தோடுடைய செவியன்' என்பது முதல் 'சிலைதனை நடுவிடை' என்பது ஈறாக இருபத்திரண்டு திருப்பதிகங்கள் நட்ட பாடைப் பண்ணிற் சேர்க்கப் பெற்றுள்ளன. இப்பதிகங்களில் அமைந்த கட்டளைகள் எட்டென்பது 'சொல் நட்ட பாடைக்குத் தொகை எட்டுக் கட்டளையாம்' எனவரும் திருமுறைகண்ட புராணத்தொடராற் புலனாகும். நட்ட பாடைப் பதிகங்களல் அமைந்த எட்டுக் கட்டளைகளையும் பின்வருமாறு ஒவ்வோரடி களில் வைத்துப் பகுத்துக் காணலாம்:-

*கட்டளை 1*

தோடுடை செவி யன்விடை யேறியொர் தூவெண் மதிசூடி
தான தானதன தானன தானன தானா தனதானா

*கட்டளை 2*

தாணுதல் செய்திறை காணிய மாலொடு தண்டா மரையானும்
தானன தானன தானன தானன தானா தனதானா.

*கட்டளை 3*

மைம்மரு பூங்குழற் கற்றைதுற்ற
வாணுதல் மான்விழி மங்கையோடும்
தானன தானன தானதான
தானன தானன தான தானா

*கட்டளை 4*

*தோலுடையான் - வண்ணப் - போர்வை யினான்*
*சுண்ணவெண் ணீறுது தைந்தி லங்கு.*
*தானதனா - தன - தான தானா*
*தானன தானன தான தானா.*

*கட்டளை 5*

*வண்டார்குழ லரிவையொடு பிரியாவகை பாகம்*
*தானாதன தனனாதன தனனாதன தானா.*

*கட்டளை 6*

*குரவங் கமழ்நறுமென் குழலரிவை யவள்வெருவப்*
*தனனா தனதனனா தனதனனா தனதனனா.*

*கட்டளை 7*

*பிறையணி படர்சடை முடியிடை பெருகிய புனலுடை*
*யவனிறை,*
*தனதன தனதன தனதன தனதன தனதன தனதன.*

*கட்டளை 8*

*பிறையணிபடர் சடைமுடியிடை பெருகிய புன*
*லுடையவனிறை*
*தானதனதன தனதனதன தனதனதன தனதனதன.*

*என நட்டபாடைப் பதிகங்களுக்குரிய எட்டுக் கட்டளைகளையும் பகுத்தறியலாம்.*

மேற்குறித்த வண்ணம் கட்டளையோசைகளைப் பகுத்துக் காணுமிடத்துத் 'தானன தானன' என்புழி முன்னுள்ள 'தானன' என்பதன் ஈற்றெழுத்து அடுத்த சீரினை அவாவித் 'தான தனாதன' எனப்பிரிந்திசைத்தலும், 'தானன' என்ப தன் முதலி லுள்ள நெடில் இரு குறிலாகித் 'தனதன' என வருதலும், சில இடங்களில் குறில் விட்டிசைத்து நெடிலாதலும், இம்முறையே 'தான' தனன ஆதலும், 'தனன' தான ஆதலும், 'தானா' தனனா ஆதலும் 'தனனா' தானா ஆதலும், 'தானாதன' என்ற சீரின் விகற்பங்களாய்த் தனனாதன, தனதந்தன, தானந்தன, தத்தந்தன, தத்தாதன, தந்தாதன எனவருதலும் கட்டளையோசைக்கு ஏற்ற வண்ணம் ஒத்த வாய்ப்பாடுகளாகக் கொள்ளத்தக்கனவாம். நட்டபாடைப் பதிகங்களில் வெளிப்படையாகத் தோன்றும் யாப்பு விகற்பங்கள் நான்காம். அவை முறையே 1–3, 4–8, 9–18, 19–22-ஆம் பதிகங்களின் யாப்பாகும். இவை ஒவ்வொன்றும் சீர்களின் எழுத்துக்கள் பிரிந்து இசைத்தலாகிய இசைத்திறத்தால் இருவகையாகி எட்டுக் கட்டளைகளாயினவாறு காண்க.

இனி, இத்திருமுறையில் நட்டபாடையினையடுத்து அமைந்த பண் தக்கராகம். இப்பண்ணில் 23-ஆம் பதிகம் முதல் 46ஆம் பதிகம் வரை இருபத்து நான்கு பதிகங்கள் சேர்க்கப் பெற்றுள்ளன. இவற்றிற் காணப்படும் கட்டளை விகற்பங்கள் ஏழாகும். 'இன்னிசையால் தகுந்தக்கராகத்து ஏழ்கட்டளையாம்' என்பது திருமுறைகண்ட புராணம்.

**தக்கராகம்**

*கட்டளை 1*

*மடையில் வாளை பாய மாதரார்*
*தனனா தானா தானா தானானா.*

*கட்டளை 2*

*விதியாய்விளை வாய்விளை வின்பய னாகிக்*
*தனனாதன தானன தானன தானா.*

*கட்டளை 3*

*அடலே றமருங் கொடியண்ணல்*
*தனனா தனனா தனதானா.*

*கட்டளை 4*

*அந்தமு மாதியு மாகிய அண்ண லாரழ லங்கைய மர்ந்திலங்க*
*தானன தானன தானன தான தானன தானன தானதந்த*
*(முதலடியும் மூன்றாமடியும்)*
*மந்தமு ழவழி யம்ப மலைமகள் காண நின்றாடி*
*தானன தானன தான தானன தானன தான.*
*(இரண்டாமடியும் நான்காம் அடியும்)*

*கட்டளை 5*

*சீரணி திகழ்தரு மார்பில்வெண் ணூலர் திரிபுர மெரிசெய்த செல்வர்*
*தானன தானன தானன தான தனதன தனதன தான.*

எனவரும்.

*பைம்மா தாகம் பன்மலர் கொன்றை பன்றிவெண் கொம்பொன்று பூண்டு*
*தானா தானா தானன தானா தானன தானன தானா.*

எனவருவதும் இக்கட்டளையில் அடங்குதல் காண்க.

*கட்டளை 6*

*வடந்திகழ் மென்முலை யாளைப் பாகம தாக மதித்து*
*தானன தானன தானா தானன தான தனனா.*

*கட்டளை 7*

*குண்டைக் குறட்பூதங் குழும வனலேந்தி*
*தானா தனதானா தனன தனதானா*

எனவரும்.

*விண்டதொடையலான்-ஆடும் வீரட் டானத்தே*
*தான தனதானா - தானா - தானா தானானா.*

என இப்பாட்டின் நான்காம் அடியின் இடையிலே 'ஆடும்' என ஒரு சொல் மிக்கு வந்தமை காண்க.

தக்கராகப் பண்ணுக்குரியனவாக மேற்குறித்த கட்டளைகள் ஏழும் 23-30; 31-33; 34-38; 39, 40, 41, 42, 44; 43; 46-ஆம் பதிகங்களில் முறையே அமைந்திருத்தல் காணலாம். இவற்றிடையே 45-ஆம் பதிகமாக உள்ள 'துஞ்சவருவார்' என்னும் முதற்குறிப்புடைய திருப்பதிகம் பழம்பஞ்சுரம் என்ற பண்ணுக்கு உரியதென்பதும், இப்பதிகம் தக்கராகப் பண்ணிற் சேர்க்கப் பெற்றிருப்பது பிற்காலத்தில் ஏடெழுதுவோர்களால் நேர்ந்த பிழை என்பதும் இங்குச் சிந்திக்கத் தக்கனவாகும். இவ்வுண்மை,

"துஞ்சவரு வருவார் என்றே எடுத்த ஓசைச்
சுருதிமுறை வழுவாமல் தொடுத்த பாடல்
எஞ்சலிலா வகைமுறையே பழையனூரார்
இயம்புமொழி காத்தகதை சிறப்பித் தேத்தி
'அஞ்சனமா கரியுரித்தார் அருளாம்' என்றே
அருளும் வகை திருக்கடைக்காப் பமையச் சாத்திப்
பஞ்சுரமாம் பழையதிறம் கிழமை கொள்ளப்
பாடினார் பாரெல்லாம் உய்யவந்தார்"

(பெரிய திருஞான-1010)

எனவரும் சேக்கிழார் வாய்மொழியால் நன்கு தெளியப்படும்.

பழந்தக்கராகப் பண்ணுக்கு உரியனவாக இத்திருமுறையில் 47 முதல் 62 வரை பதினாறு பதிகங்கள் உள்ளன. இப்பதிகங்களில் அமைந்த கட்டளை விகற்பம் மூன்று எனத் திருமுறை கண்ட புராணம் கூறும். ஆயினும் இவற்றை யாப்பியல்பு ஒன்றே நோக்கி வகைப்படுத்துங்கால் இவை ஆறுவகையாக அமைந்திருத்தல் காணலாம்.

**பழந்தக்கராகம்**

1. *பல்லடைந்த வெண்டலையிற் பலிகொள்வ தன்றியும்போய்*
   *தானதான தானதான தனதன தானதான*
   *(47 முதல் 51 வரையமைந்த பதிககங்கள் ஒரே நீர்மைய)*
2. *மறையுடையாய் தோலுடையாய் வார்சடைமேல் வளரும்*
   *தனதனனா தனதனனா தானதனா தனனா*

*(52-ஆம் பதிகம்)*

3. *தேவராயும் அசுரராயுஞ் சித்தர்செழு மறைசேர்*
   *தானதான தனனதான தானாதன தனனா.*

*(53-ஆம் பதிகம்)*

4. *பூத்தேர்ந் தாயன கொண்டுநின் பொன்னடி*
   *ஏத்தா தாரில்லை யெண்ணுங்கால்*
   *தானா தானன தானன தானன*
   *தானா தானன தானானா.*

*என முன்னுள்ள இரண்டடிகளைப்போலவே பின்னிரண்டடிகளும் வந்து முடிவன 54-58-ஆம் பதிகங்கள்.*

5. *ஒடுங்கும் பிணிபிறவி கேடென்றிவை*
   *யுடைத்தாய வாழ்க்கை யொழியத்தவம்*
   *தனனா தனதனன தானாதனா*
   *தனதான தான தனனாதன*

*(59-ஆம் பதிகம்)*

6. *வண்டரங்கப் புனற்கமல மதுமாந்திப் பெடையினொடும்*
   *தானதன தனதனன தனதான தனதனன.*

*(60-62-ஆம் பதிகங்கள்)*

*மேற்காட்டியவற்றுள் 47 முதல் 53 முடிய உள்ள பதிகங்களிற் காணப்படும் முதல் மூன்று யாப்பு விகற்பங்களும் 60 முதல் 62 வரையுள்ள பதிகங்களிற் காணப்படும் ஆறாவது யாப்பு விகற்பமும் நாற்சீரடியால் இயன்ற கொச்சகக் கலிப்பாக்களாய் இசைவகையால் ஒரே தன்மையினவாக அமைந்துள்ளன. எனவே நால்வகை யாப்பினையும் ஒரே கட்டளையாகக் கொள்ளுதல் ஏற்புடையதாகும். இனி, நான்காவதாகக் குறிக்கப்பட்ட யாப்பும் ஐந்தாவதாகக் குறிக்கப்பட்ட யாப்பும் இருவேறு கட்டளை களாகும். 'பன்னு பழந்தக்கராகப் பண்ணின் மூன்றுளவாம்'*

எனவரும் திருமுறை கண்ட புராணத் தொடரைக் கருத்திற் கொண்டு மேலே குறித்த யாப்புவகை ஆறையும் கூர்ந்து நோக்கின் அவையனைத்தும் முன்குறித்த படி மூன்று கட்டளைகளுள் அடங்குதல் புலனாகும்.

இத்திருமுறையில் 63 முதல் 74 வரையுள்ள பன்னிரண்டு பதிகங்களும் தக்கேசிப்பண்ணுக்கு உரியன. இப்பதிகங்களில் அமைந்த கட்டளைகள் இரண்டாகும்.

## தக்கேசி

*கட்டளை 1*

*எரியார் மழுவொன் றேந்தி யங்கை யிடுதலை யேகலனா*
*தனனா தனனா தானா தானா தனதன தானாதனா.*

*(63-65 ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின)*

*கட்டளை 2*

*பூவார் மலர்கொண் டடியார் தொழுவார் புகழ்வார் வானோர்கள்*
*தானா தானா தனனா தனனா தனனா தானனா.*

எனவரும்.

*(66-முதல் 74 வரையுள்ள பதிகங்கள் ஒரேயாப்பின)*

'உன்னரியதக்கேசிக்கு ஓரிரண்டு வருவித்தார்' என்ற படி தக்கேசிக்கு இரண்டு கட்டளையும் வந்தன.

தக்கேசியை அடுத்துள்ள குறிஞ்சிப்பண். இப்பண்ணுக்கு உரியனவாக 75 முதல் 103 முடிய இருபத்தொன்பது பதிகங்கள் உள்ளன. 'மேவு குறிச்சிக்கு ஐந்து' என்பதனால் இப்பதிகங்களில் வந்த கட்டளைகள் ஐந்தென்பது புலனாகும்.

## குறிஞ்சி

*கட்டளை 1*

*காலைநன் மாமலர் கொண்டடி பரவிக்*
*கைதொழு மாணியைக் கறுத்தவெங் காலன்*
*தானன தானன தானன தனனா*
*தானன தானன தனதன தானா*

*(75-76-ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின)*

*கட்டளை 2*

*பொன்றிரண் டன்ன புரிசடை புரளப்*
*பொருகடற் பவளமொ டழனிறம் புரையக்*
*தானன தான தனதன தனனா*
*தனதன தனதன தனதன தனனா*

*(77-79-ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின)*

*கட்டளை 3*

*கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே*
*தானா தனதானா தனனா தானான.*
*(80-89-ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின)*

*கட்டளை 4*

*அரனை யுள்குவீர்*
*தனன தானனா.*

*என இருசீரடியாகிய குறளடி நான்கினால் இயன்ற பாவாதலின் இதனைத் திருவிக்குக் குறள் எனப்பெயரிட்டு வழங்குவர். தனனா என்பது, 'தானா' எனவும், தானனா என்பது 'தனதானா' எனவும் வரும். 90 முதல் 96 வரையுள்ள பதிகங்கள் ஒரே யாப்பின் பாற் படும்.*

*கட்டளை 5*

*எய்யா வென்றித் தானவ ரூர்மூன் றெரிசெய்த*
*தானா தான தானன தானா தனதான.*

*இதன் கண் அடிமுதற் சீராகிய தானா என்பது, 'தனனா' எனவும், 'தானன' எனவும் 'தனதன' எனவும்வரும். 97 முதல் 102 வரை யுள்ள பதிகங்களைப்பார்க்க 103-ஆம் பதிகத்தின் முதற்பாடலை,*

**தோடுடை யானொரு காதிற் றூய குழைதாழ**
**ஏ(எ) டுடையான் தலைகல னாக விரந்துண்ணும்**
**நா(அ) டுடையான் நள்ளிரு ளேம நடமாடும்**
**கா(அ) டுடையான் காதல்செய் கோயில் கழுக்குன்றே.**

*எனப்பிரித்து வேண்டுமிடங்களில் அளபெடை தந்து மேற் குறித்த கட்டளையுள் அடக்குதல் வேண்டும். இவ்வாறே ஓசை வேறுபடுமிடங்களில் விட்டிசைக்கும் குறிலை நெடிலாக்கியும் அளபெடை தந்தும் வேண்டும் செய்கை செய்து கட்டளைப் பாற்படுத்தல் வேண்டும்.*

*இனி, வியாழக்குறிஞ்சி என்னும் பண்ணில் 104 முதல் 128 வரை இருப்பத்தைந்து பதிகங்கள் உள்ளன. 'வியாழக் குறிஞ்சிக்கு ஆறு' எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால் இப்பதிகங்களில் அடைந்து கட்டளை விகற்பங்கள் ஆறென்பது புலனாம். ஆயினும் திருத்தாளச்சதி, திரு ஏகபாதம், திரு எழுகூற்றிருக்கை என்பனவும் வியாழக் குறிஞ்சிக்கு உரியனவாக அடுத்து வைக்கப் பெற்றிருத்தலால் இப்பதிகங்களில் உள்ள யாப்பு விகற்பங்கள் ஒன்பதாகும். இவற்றுள் ஈற்றில் நின்ற திருத்தாளச்சதி, திரு ஏகபாதம் திரு எழு கூற்றிருக்கை என்னும் இவை மூன்றும் தனித்து எண்ணத்தக்க இயலமைப்புடையன.*

ஆதலானும் இவை தாம் பெறும் பெயர் விகற்பத்தால் வேறு வேறு கட்டளையின என்பது பெறப்படுதலானும் இவை யொழித்து ஏனைய யாப்பு வகை ஆறுமே வியாழக் குறிஞ்சிக் குரிய கட்டளைகளாகத் திருமுறை கண்ட புராண ஆசிரியராற் குறிக்கப்பெற்றன.

**வியாழக்குறிஞ்சி**

*கட்டளை 1*

ஆடல் அரவசைத்தான்-அரு-மாமறை தான் விரித்தான்-கொன்றை
சூடிய செஞ்சடையான்-சுடு-காஅ டமர்ந்தபிரான்
ஏடவிழ் மாமலையாள்-ஒரு-பாக மமர்ந்தடியார் ஏத்த
ஆடிய எம்மிறையூர் புகலிப் பதியாமே.

தான தனதனனா -தன -தானன தானதனா தான
தானன தானதனா -தன -தான -தனதனனா
தானன தானதன -தன -தான தனதனனா தான
தானன தானதனா தனனா நனதானா.

தான தன தனனா, தான தனதானா, தானன தானதனா எனவரும் இருசீர்க் கட்டளைப் பகுதிகளுள் ஒன்று முன்னும் பின்னம் அமைய அவற்றிடையே 'தன' என்னும் அசைச்சீர் நிற்க, முதலடி யிறுதியிலும் மூன்றாமடி இறுதியிலும் 'தான' என ஓரசைச்சீர் பிரிந்து நிற்க, இவ்வாறு முதல் மூன்றடிகளும் வந்து, நான்கா மடியில் முற்குறித்த இருசீர்க் கட்டளைப் பகுதியுள் ஒன்றும் அதனையடுத்துத் 'தனனா தனதானா, தானா தனதானா' 'தானன தானதனா' எனவரும் இருசீர்க் கட்டளைப் பகுதியுள் ஒன்றும் வந்து முடிவது இதன் கட்டளையாகும். பாடல்தோறும் நான்காமடியிற் பின்வந்த 'புகலிப்பதியாமே' என்பதுபோலும் இருசீரினையும் மீண்டும் மடித்துச் சொல்ல அவ்வடியின் ஓசை நிறைந்து நிற்குமாறு காணலாம். 104 முதல் 108 வரைஅமைந்த பதிகங்கள் ஒரே கட்டளையுட்பட்டு அடங்குவன.

*கட்டளை 2*

வாருறு வனமுலை மங்கைபங்கன்
தானன தனதன தானதனா.

(109 முதல் 115 வரையுள்ள பதிகங்கள் இதனுள் அடங்கும்)

*கட்டளை 3*

அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லுமஃதறிவீர்
கூவிளம் கூவிளம் தேமாங்காய் தேமா கருவிளங்காய்

*(116 முதல் 117-ஆம் பதிகங்கள் கட்டளைக் கலித்துறை யாப்பின் பாற்படுவன. 116-ஆம் பதிகத்தின் முதற்பத்துப் பாடல்களும் ஈற்றில் ஏகாரவீறு பெறவில்லை)*

**கட்டளை 4**

| | | | |
|---|---|---|---|
| சுடுமணி | யுமிழ்நாகஞ் | சூழ்தர | வரைக்கசைத்தான் |
| கருவிளம் | புளிமாங்காய் | கூவிளம் | கருவிளங்காய் |

118-ஆம் பதிகமாகிய இது, 'விளம் காய் விளம்காய்' என நாற்சீரடியால் வந்த கொச்சக ஒரு போகு ஆகும்.

**கட்டளை 5**

| | | | |
|---|---|---|---|
| முள்ளின்மேல் | முதுகூகை | முரலுஞ் | சோலை |
| தேமாங்காய் | புளிமாங்காய் | புளிமா | தேமா |

119-ஆம் பதிகமாகிய இது, 'காய் காய் மா மா' என நாற்சீரடியால் வந்த கொச்சக ஒரு போகு. இதன் கண், 'ஆட-லான்' 'பாட-லான்' 'ஓட-லாற்' 'கரட-லாற்' 'பாடெ-லாம்' என இரண்டாமெழுத்தாகிய குற்றெழுத்து விட்டிசைத்து நெட்டெழுத்தின் நீர்மையவாய் நிற்றல் காணலாம்.

**கட்டளை 6**

| | | | |
|---|---|---|---|
| பணிந்தவ | ரருவினை | பற்றறுத் | தருள்செயத் |
| தனதன | தனதன | தனதன | தனதன |

ஈற்றடியிறுதிச் சீர் 'தனனா' என நிற்கும். ஒரு சிலபாடல் களில் இரண்டாமடி யீற்றுச் சீரும் 'தனனா' என நிற்றல் உண்டு. நெகிழ்ந்த ஓசையவாகிய நெட்டெழுத்துக்கள் விரவாது குற்றெழுத்துக்களால் இயன்று இடையறவுபடாது பாடல் முழுவதும் தொடந்து முடியும் நிலையில் முடுகிய ஓசையினை யுடைதாய் வரும் பாடல் அராகம் எனப்படும். இங்ஙனம் முடுகியலாய் வரும் பாவின் ஓசையமைப்பினை 'உருட்டு வண்ணம்' என்பர் தொல்காப்பியர்.* (*'உருட்டு வண்ணம் அராகந் தொடுக்கும்'-தொல் - செய்யுளியல் 232) 120 முதல் 125 வரையுள்ள பதிகங்கள் முடுகியலாகிய அராகமாய் வருதலின் திருவராகம் எனப் பெயர் பெற்றன* (*'மேன்மை நடையின் முடுகு மராகம்' (பெரிய-ஞான,277) எனச் சேக்கிழார் கூறுதலைக் கூர்ந்து நோக்குங்கால் முடுகிய நடையினையுடைமை பற்றியே இப்பெயர் எய்தியதென்பது நன்கு தெளியப்படும்) திருவராகம் என்ற பெயர் பிற்காலத்தில் 'திருவிராகம்' எனத் திரிந்து வழங்குவதாயிற்று.

திருத்தாளச் சதி, (126-ஆம் பதிகம்)

பந்தத்தால் வந்தெப்பால் பயின்றுநின்ற வும்பரப்
பாலே சேர்வா யேனோர்க்கான் பயில்கண முனிவர்களும்

*தத்தத்தா தந்தத்தா தனந்தனந்த தந்தனத்*
*தானா தானா தானானா தன தன தனன தனா*

‘செற்றிட்டே வெற்றிச்சேர்’ என வல்லொற்றுப் பயின்றுவரும், ‘தந்தத்தா’ என்பது ‘தத்தத்தா’ என ‘தத்தத்தா’ என அமையும். ஆடரங்குகளில் மகளிர் பாடிக்கொண்டு நடித்தற்குப் பொருந்திய தாளச் சொற்கட்டுகளாக இப்பதிகம் அமைந்தமையால் இது ‘திருத்தாளச்சதி’ என்னும் பெயர்த்தாயிற்று.

திரு ஏகபாதம் (127-ஆம் பதிகம்)

ஏகம் - ஒன்று, பாதம் - அடி, ஏகபாதம் - ஓரடி, ஓரடியே பொருள் வேறுபட நான்கு முறை மடித்து வந்து ஒரு பாடலாக அமைதலின் ஏகபாதம் என்னும் பெயர்த்தாயிற்று.

*பிரம புரத்துறை பெம்மா னெம்மான்,*

என்ற ஓரடியே நான்குமுறை மடித்து வந்து ஒரு பாடலாக அமைந்தமை காணலாம்.

ஏகபாதம் என்னும் சித்திரகவிக்கு மூல இலக்கியமாக விளங்கும் இத்திருப்பதிகத்துள் 1 முதல் 10 வரையுள்ள பாடல் களும் 12-ஆம் பாடலும் நாற்சீரடிகளாலும், 11-ஆம் பாடல் ஐஞ்சீரடிகளாலும் இயன்று சீர்கள் வேறுபட்டு வருதலின் இதனை வியாழக்குறிஞ்சிக்குரிய கட்டளைகளுள் சேர்த்தெண் ணாது சித்திரகவி யென்னுஞ் சிறப்பு நோக்கித் தனிப்பட எண்ணு தல் முன்னோர் முறையாகும்.

திருஏழுகூற்றிருக்கை (128-ஆம் பதிகம்)

ஒன்று இரண்டு ஒன்று, ஒன்று இரண்டு மூன்று இரண்டு ஒன்று என இவ்வாறு ஒன்று முதல் ஏழு முடியப் படிப்படியாக ஒவ்வொன்று ஏற்றியும் இறக்கியும் இங்ஙனம் ஏழு கூறுகளிலும் எண்கள் இருக்க இயற்றப்படுஞ் செய்யுள் எழுகூற்றிருக்கை எனப்படும். இதனைச் சித்திர கவிகளுள் ஒன்றெனப் போற்றுவர் பெரியோர். “எழுகூற்றிருக்கையாவது ஏழறையாக்கி முறை யானே குறுமக்கள் முன்னின்றும் புக்கும் போந்தும் விளையாடும் பெற்றியான் வழுவாமை ஒன்று முதலாக ஏழிறுதியாக முறையயானே பாடுவது” என்பர் யாப்பருங்கல விருத்தி யுரையாசிரியர், ஏழு கூறுகளாக அறைகளைக் கீறும்போது முதற் கூற்றில் மூன்று அறைகளும், இரண்டாங் கூற்றில் ஐந்து அறைகளும், மூன்றாங் கூற்றில் ஏழு அறைகளும், நான்காங் கூற்றில்ஒன்பது அறைகளும், ஐந்தாங் கூற்றில் பதினொரு அறைகளும், ஆறாங் கூற்றில் பதின்மூன்று அறைகளும், ஏழாங்கூற்றில் அவ்வாறே பதின்மூன்று அறைகளும் கீறி, அவ்வறைகளில் முறையே.

1–2–1

1–2–3–2–1

1–2–3–4–3–2–1

1–2–3–4–5–4–3–2–1

1–2–3–4–5–6–5–4–3–2–1

1–2–3–4–5–6–7–6–5–4–3–2–1

1–2–3–4–5–6–7–6–5–4–3–2–1

என்ற எண்ணமைந்த சொற்றொடர்கள் பொருந்தியிருக்கும்படி இயற்றப்பெறும் செய்யுளாதலின், ஏழுகூற்று இருக்கை எனப் பெயரெய்தியது. இதன்கண் எண்கள் ஈறுதிரிதலும் எண்களைக் குறித்த சொற்களேயன்றி எண்ணுதற்பொருள் அல்லாத பிற சொற்களும் இரட்டுற மொழிதலால் எண்ணுதற்பொருள் தோன்ற அமைதலும் இயல்பென்பர்.* (*மாறனலங்காரம் - சொல்லணியியல், சூ - 48)

ஏழு கூற்றிருக்கை என்னும் இப்பனுவலைப் பாட்டின் தொடக்க எண் முதல் ஈற்றெண்முடிய அமைந்த எண்வரிசைப் படி ஏழு கூறுகளாக எழுதி, அந் நிரல்கள் ஏழினையும் தேரொன்றின் மேற்பரப்பாகவும், பாட்டின் ஈற்றெண் முதல் தொடக்க எண் வரைஅமைந்த எண்களை அவ்வாறே ஏழு நிரல்களாக எழுதி அக்கூறுகள் ஏழினையும் அத்தேரின் அடிப் பரப்பாகவும் கொண்டு 'தேர்ப்பந்தம்' (ரதபந்தம்) என்ற சித்திர கவியாக அமைத்துக் காட்டுதலும் உண்டு. எழுகூற்றிருக்கைச் செய்யுளைத் தேர்ப்பந்தத்தில் அமைத்துக் காட்டுங்கால், தேரின் மேற்பரப்பிலுள்ள முதல் ஏழு நிலங்களும் ஒன்று முதல் எண்ணேறியிறங்கி ஏழிறுதியேறியது, பேரேற்றம் எனவும், அடி பரப்பிலுள்ள பின்னேழு நிலங்களும், அவ்வாறு ஒன்றீறாக இறங்கியது பேரிறக்கம் எனவும் வழங்கப்படும் என்பர் மாறனலங் கார உரையாசிரியர், இவ்விருமுறைகளிலும் செய்யுளிலமைந்த எண்கள் ஏழு கூறுகளாகவே அமைந்திருத்தலால் இதற்கு எழு கூற்றிருக்கை என்ற பெயரே பொருத்தமுடையதாகும்.

ஆளுடைய பிள்ளையார் அருளிய திருஎழு கூற்றிருக்கை என்னும் பனுவல், நாற்பத்தேழடிகளால் இயன்ற இணைக்குறல் ஆசிரியப் பாவாக அமைந்துள்ளது. இதனை எழு கூற்றிருகைக் குரிய மூல இலக்கியம் என்பர் சேக்கிழாரடிகள்.* (*பெரிய திருஞான, 276) எனவே இப்பனுவல், தமிழில் 'எழுகூற்றிருக்கை' என வழங் கும் சித்திர கவிக்குரிய மூல இலக்கியமெனப் போற்றத்தகும் தொன்மையுடைய தென்பது நன்கு துணியப்படும். திருமாலடியா ராகிய திருமங்கையாழ்வார்அருளிச் செய்த திரு எழு கூற்றி

ருக்கையும் பதினொராந்திருமுறைப் பனுவல்களில் ஒன்றாய் நக்கீரதேவ நாயனார் அருளிய திரு எழுகூற்றிருக்கையும் இங்ஙனம் மதித்துப் போற்றத்தகும் தொன்மையும் சிறப்பும் ஒருங்கு வாய்நதனவாகும். யாப்பருங்கல விருத்தியுரையில் மேற்கோளாக வந்துள்ள 'எருபொருட் கிருதுணி புரைத்தனை' என்னும் முதற் குறிப்புடைய பாடலும், மாறனலங்கார வுரையில் மேற்கோளாக வந்துள்ள 'ஒரு தனித்திகிரி என்னும் முதற்குறிப் புடைய பாடலும்' 'எழு கூற்றிருக்கை' என்ற சித்திரகவிக்கு உரிய பிற்கால இலக்கியங்களாகும்.

129 முதல் 135 வரைஅமைந்த ஏழு திருப்பதிகங்களும் மேகராகக் குறிஞ்சி என்ற பண்ணில் அமைந்தன. இப்பதிகங் களிற் காணப்படும் யாப்பு விகற்பங்கள் நான்காகும்.

**மேகராகக் குறிஞ்சி**

சேவுயருந் திண்கொடியான் திருவடியே சரணென்று
சிறந்த அன்பால்

கூவிளங்காய் கூவிளங்காய் கருவிளங்காய் புளிமாங்காய்
புளிமா தேமா

(என முதற்கண் காய்ச்சீர் நான்கும் அடுத்து மாச்சீர் இரண்டும் பெற்று அறுசீரடி நான்கினால் வரும் யாப்பு 129 முதல் 132 வரை அமைந்த பதிகங்களை நோக்குக)

2. வெந்த வெண்பொடிப் பூசுமார் பின்விரி
நூலொரு பால்பொருந்த
தான தானன தானன தானன
தானன தானதனா

(133-ஆம் பதிகம்)

3. கருத்தன் கடவுள் கனலேந்தி யாடும்
தனனா தனனா தனதான தான

(134-ஆம் பதிகம்)

4. நீறு சேர்வதொர்மேனியர் நேரிழை
கூறு சேர்வதொர் கோலமாய்
தான தானன தானன தானன
தான தானன தானனா.

(135-ஆம் பதிகம்)

என முதலடி மூன்றாமடிகள் நாற்சீரினவாகவும் இரண்டாமடி நான்காமடிகள் முச் சீரினவாகவும் வருவன.

'பாவு புகழ் மேகராகக் குறிஞ்சிப் பாலிரண்டு' எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால் இப்பதிகங்களில்

அமைந்த கட்டளைகள் இரண்டு என்பது பெறப்படும். மேற் காட்டிய யாப்பு வகைகள் நான்கினையும் கூர்ந்து நோக்குங்கால் அவற்றுள் முதல் இரண்டும் ஒரோசையாகவும் பின்னிரண்டும் மற்றோர் ஓசையாகவும் ஓசை வகையால் ஒத்து நிற்றல் புலனாகும். எனவே முதல் இரண்டு யாப்பு விகற்பங்களையும் ஒரு கட்டளை யாகவும் பின்னிரண்டு யாப்பு விகற்பங்களையும் மற்றொரு கட்டளையாகவும் அமைத்துக் கொள்ளுதல் ஏற்புடையதாகும்.

*யாழ் முரி (136-ஆம் பதிகம்)*

முதற்றிருமுறையின் ஈற்றில் அமைந்துள்ள இப்பதிகம் இன்ன பண்ணிற்கு உரியதெனத் தெளிவாகக் குறிக்கப் பெறவில்லை. இது,

**மாதர் மடப்பிடியும் மட-அன்னமு மன்னதோர்**
**நடை - யுடைம் - மலை - மகள் துணையெனமகிழ்வர்**
**தான தனத்தனனா - தன - தானன தானனா**
**தனா - தனா - தனா - தனா தனதன தனனா:**

என அடிமுதற்கண் தொடங்கிய இயலும் இசையும் அவ்வடிக் குள்ளேயே முரிந்து மாறுபடும்படி அமைந்தமையால் 'முரிவரி' என்னும் இசைப்பாவின் பாற்படுமென்பது முன்னர் விளக்கப் பெற்றது. ஆளுடைய பிள்ளையார் அருளிய திருப்பதிகங்களின் இசை, அளவுபடா நீர்மையது என்பதனைத் தம் சுற்றத்தார்க்கு அறிவுறுத்த விரும்பிய திருநீலகண்ட யாழ்ப்பாணர், பிள்ளை யாரை வணங்கி யாழிலடங்காவாறு ஒரு திருப்பதிகம் பாடியரு ளும்படி வேண்டிய நிலையில், பிள்ளையாரால் முரிவரியாக அருளிச் செய்யப் பெற்றது. இத் திருப்பதிகமாதலின் இது யாழ் முரி என்னும் பெயர்த்தாயிற்று. தாம் வேண்டியபடி யாழி லடங்கா வண்ணம் இப் பதிகம் பாடப் பெறுவது என்பதனை மறந்த திருநீலகண்டப்பெரும்பாணர், முன்போற் பயிற்சி வயத்தால் இதனையும் யாழிலிட்டு வாசிக்கத் தொடங்கி, பின் இயலாமையுணர்ந்து, 'இவ்வாறு யான் வாசிப்பேன் என முந்துதற்குக் காரணமாயிருந்தது. இவ் யாழ்க் கருவியன்றோ?' என மனம் நடுங்கி அக்கருவியை முரிக்க முயன்றார் என்பது வரலாறு. ஆதலின், அக்குறிப்பு நோக்கி இப்பதிகம் யாழ்முரி என்னும் பெயரெய்தியதுஎனக் கூறுதலும் உண்டு. எடுத்த இயலும் இசையும் இடையே முறிந்து வேறுபடும் இயல்பமைந்த 'முரி' என்னும் இசைப்பா, யாழ் வீணை முதலிய நரம்புக் கருவிகளில் வைத்து எழுத்தெழுத்தாக வாசிக்க ஒண்ணாததாய்ப் பாடலாளர்கள் வாயினால் மட்டும் பாடுதற்கு உரிய அருமை யுடையதாகும். இந் நுட்பத்தினை,

"மோந்தை முழாக்குழல் தாளமொர் வீணை
முதிரவோர் வாய்முரி பாடி" -(1-44-5)

எனவரும் தொடரில் 'வாய்முரி' என்னும் சொற்குறிப்பினால் ஆளுடைய பிள்ளையார் உய்த்துணர வைத்த திறம் உணரத் தக்கதாகும்.

இனி, யாழ்முரி என்ற இப்பதிகப்பெயரினை 'யாழ்மூரி' என ஏடுகளில் எழுதினோரும் அவ்வாறே பதிப்பித்தவர்களும் உண்டு. மூரி என்ற சொல், வலிமை முரண் என்னும் பொருளுடையதாய் 'அடங்காதது' என்ற கருத்தில் வழங்குவது. இக்கருத்தே பற்றி யாழ்க் கருவியில் வைத்து இசைத்தற்கு அடங்காத இசை நலம் வாய்ந்த இத் திருப்பதிகம் 'யாழ் மூரி' என வழங்கப்பெற்ற தென்பது அன்னோர் கருத்தாக இருத்தல் வேண்டும். ஆயினும் இத்திருப்பதிகத்தின் இயலிசையமைதியினைப் புலப்படுத்தும் நிலையில் அமைந்த இப்பெயரின் தொன்மை வடிவம் யாழ்முரி எனவே கொள்ளவேண்டியுளது.

## இரண்டாந் திருமுறை

இதன்கண் இந்தளம் சீகாமரம், காந்தாராம், பியந்தைக் காந்தாரம், நட்ட ராகம், செவ்வழி என்னும் ஆறு பண்களுக்குரிய 122 திருப்பதிகங்கள் முறையே தொகுக்கப்பெற்றுள்ளன. அவற் றுள் 1 முதல் 39 முடிய அமைந்த பதிகங்கள் இந்தளப் பண்ணுக்கு உரியனவாகும். "தேவுவந்த" இந்தளத்தின் செய்திக்கு நான்கு' எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால் இப்பதிகங்களில் அமைந்த கட்டளை விகற்பங்கள் நான்கென்பது பெறப்படும்.

இப்பதிகங்களில் உள்ள யாப்பு விகற்பங்களை முறையே காண்போம்.

### இந்தளம்

**யாப்பு 1**

| | | | | |
|---|---|---|---|---|
| செந்நெ | லங்கழ | னிப்பழ | னத்தய | லேசெழும் |
| தான | தானன | தானன | தானன | தானனா |

இதன்கண் முதற்சீராகிய 'தான' என்பது தனன, தந்த என ஆத லும், அடுத்த சீரின் முதலிலுள்ள நெட்டெழுத்துடன் இணைந்து 'தானனா' ஆதலும், இரண்டாஞ்சீர் தனன ஆதலும், தந்ததன, தானதன என ஒரெழுத்து மிக்கு நிற்றலும் அமையும். 1 முதல் 10 வரை அமைந்த பதிகங்களின் பாடலமைப்பினை நோக்கியுணர்க.

**யாப்பு 2**

| | | | |
|---|---|---|---|
| நல்லானை | நான்மறை | யோடிய | லாறங்கம் |
| தேமாங்காய் | கூவிளம் | கூவிளம் | தேமாங்காய் |

இவ்வாறு முதற்சீறும் நான்காஞ்சீரும் காய்ச்சீர்களாகவும். இரண்டாஞ்சீரும் மூன்றாஞ்சீரும் விளச்சீர்களாகவும், சிறுபான்மை மாச்சீர்களாகவும் அமைய இங்ஙனம் நாற்சீரடியால் வருவன 11 முதல் 16 வரை உள்ள திருப்பதிகங்களாகும்.

**யாப்பு 3**

| | | | |
|---|---|---|---|
| நிலவும் | புனலும் | நிறைவா | ளரவும் |
| தனனா | தனனா | தனனா | தனனா |

எனவரும். சில இடங்களில் 'தனனா' என்பது 'தானா' என அமைதலும் உண்டு. 17 முதல் 24 வரையுள்ள பதிகங்கள் ஒரே யாப்பின,

| | | | |
|---|---|---|---|
| இறுமென் | சாயல் | நுடங்க | நுடங்கி |
| அறுவை | யொளித்தான் | வடிவென் | கோயாம் |
| அறுவை | யொளித்தான் | அயர | வயரும் |
| நறுமென | சாயல் | முகமென் | கோயாம். |

எனச் சிலப்பதிகாரம் ஆய்ச்சியர் குரவையில் வரும் வரிப்பாடல் இக்கட்டளைக்குரிய தொன்மையிலக்கியமாக அமைந்தமை இங்கு ஒப்புநோக்கத் தக்கதாகும்.

**யாப்பு 4**

| | | | |
|---|---|---|---|
| உகலி | யாழ்கட | லோங்கு | பாருளீர் |
| தனன | தானன | தான | தானனா |

எனவரும்.

(25 முதல் 28 வரையுள்ள பதிகங்கள்ஒரே யாப்பின).

**யாப்பு 5**

| | | | |
|---|---|---|---|
| முன்னிய | கலைப்பொருளும் | மூவுலகில் | வாழ்வும் |
| தந்தன | தனத்தனன | தானதன | தானா. |

எனவரும். இதன் முதலிலுள்ள 'தந்தன' என்பது வல்லெழுத்துப் பெற்ற விடத்துத் தத்தன எனவும், நெடில் முதலாயவழி 'தானன' எனவும், குறிலிணையாய் வந்து மெல்லெழுத்துப் பெற்றுத் 'தனந்தன' எனவும் வல்லெழுத்துப் பெற்றுத் 'தனத்தன' எனவும் வரும். அடுத்துள்ள 'தனத்தனன' என்பது, மெல்லெழுத்துப் பெற்றுத் 'தனந்தனன' எனவும் 'நெடில்' முதலாய் நின்று 'தானதன' எனவும் வரும். 'தானதன' என்பது, குறில் முதலாய் நின்று 'தனாதன்ன' எனவும் வல்லெழுத்துப் பெற்றுத் 'தத்ததன' எனவும், மெல்லெழுத்துப் பெற்றுத் 'தந்ததன' எனவும், குறலிணையாய் வந்து வல்லெழுத்துப் பெற்றுத் 'தனத்தனன' எனவும் மெல்லெழுத்துப் பெற்றுத் 'தனந்தனன்' எனவும் வரும். 'தானா' என்பது 'தனனா' எனவும் அமையும். 29 முதல் 34 வரை அமைந்த

திருப்பதிகங்கள் குற்றெழுத்துக்களே மிகப் பயின்று முடுகியலாக அமைந்தமையால் இவை முன் வியாழக் குறிஞ்சிக்குரிய திருவிராகம் என்ற கட்டளை போன்று இந்தளப் பண்ணிற்குரிய திருவிராகம் என ஒரு கட்டளையாகக் கொள்ளப் பட்டன.

**யாப்பு 6**

| | | | |
|---|---|---|---|
| பரவக்கெடும் | வல்வினை | பாரிடஞ் | சூழ |
| தனனாதன | தானன | தானன | தான. |

எனவரும்.

தனனாதன என்பது 'தானாதன' என்றாதலும், ஈற்றிலுள்ள தான என்பது 'தனனா' என்றாதலும், உண்டு. 35 முதல் 37வரையுள்ள பதிகங்கள் ஒரே யாப்பின் பாற்படும்.

**யாப்பு 7**

| | | | | |
|---|---|---|---|---|
| நித்த | லுந்நிய | மஞ்செய்து | நீர்மலர் | தூவி |
| தான | தானன | தானன | தானன | தானா |

-38-ஆம் பதிகம்.

**யாப்பு 8**

| | | | |
|---|---|---|---|
| ஆரூர்தில்லை | யம்பலம் | வல்லம் | நல்லம் |
| வடகச்சியு | மச்சிறு | பாக்கம் | நல்ல. |
| தானாதன | தானன | தானா | தானா |
| தனனாதன | தானன | தானா | தான. |

முற்கூறிய 6, 7 ஆம் யாப்பு விகற்பங்களை இரு முறை மடித்துச் சொல்ல அமைவது எட்டாம் யாப்பு விகற்பம்.

இவற்றுள் 1, 6, 7, 8-ஆம் யாப்பு விகற்பங்கள் (1-10, 35-39-ஆம் பதிகங்கள்) ஒத்த ஓசை வகையால் ஒரு கட்டளையாகவும், 2-ஆம் யாப்பு விகற்பம் (11-16-ஆம் பதிகங்கள்) ஒரு கட்டளையாகவும், 3,4 -ஆம் யாப்பு விகற்பங்கள் (17 -28 - ஆம் பதிகங்கள்) ஒரு கட்டளை யாகவும், திருவிராகப் பதிகங்கள் (29-34 ஆம் பதிகங்கள்) ஒரு கட்டளையாகவும் கொள்ள, இந்தளப் பதிகங்களின் கட்ட ளைகள் நான்காதல் காணலாம்.

சீகாமரம் என்ற பண்ணமைந்தன 40 முதல் 53 வரையுள்ள பதிகங்களாகும். 'தாவில் புகழ்க் காமரத்தின் தன்மை தனக்கிரண் டமைத்தார்' எனத் திருமுறைகண்ட புராணங் கூறுதலால் இப்பதிகங்களில் அமைந்த கட்டளைகள் இரண்டு என்பது பெறப்படும்.

**சீகாமரம்**

**கட்டளை 1.**

*எம்பிரான் எனக்கமுத மாவானுந் தன்னடைந்தார்*
*தம்பிரா னாவானுந் தழலேந்து கையானும்*
*கம்பமா கரியுரித்த காபாலி கறைக்கண்டன்*
*வம்புலாம் பொழிற்பிரம புரத்துறையும் வானவனே.*

என இவ்வாறு தரவு கொச்சகக் கலிப்பாவாக அமைந்தது சீகாமரப் பதிகங்களின் முதற்கட்டளையாகும். 40 முதல் 48 வரையமைந்த பதிகங்கள் இதன் பாற்படுவன.

**கட்டளை 2**

*பண்ணி னேர்மொழி மங்கை மார்பலர்பாடி யாடிய வோசை நாடொறும்*
*கண்ணினே ரயலே பொலியுங் கடற்காழி.*
*தான தானன தான தானன தான தானன தான தானனா*
*தானனா தனனா தனனா தனதானா.*

என முன்னிரண்டடிகளைப் போன்று பின்னிரண்டடிகளும் அமைவது சீகாமரப் பதிகங்களின் இரண்டாங் கட்டளையாகும். இதன் இரண்டாமடியினை,

*கண்ணி னேரயலே - பொலி - யுங்க டற்காழி*
*தான தானதனா - தன - தான தானானா.*

எனப் பிரித்திசைத்தலும் ஏற்புடையதாகும். இதன் கண் முதலடியும் மூன்றாமடியும் எண்சீர்களாகப் பிரிந்திசைக்க இரண்டாமடியும் நான்காமடியும் சீர்கள் குறைந்து வருதலால் அவற்றின் பிற்பாதியாகவுள்ள 'பொலியுங் கடற்காழி' 'அருளாலுங் குறைவிலரே' என்றாற்போலும் தொடர்களை மீண்டும் ஒருமுறை மடித்துக் கூற, அவ்வடிகள் ஓசையால் நிறைவுபெறுதல் காணலாம். 'தனதானா' என்பது, 'தானானா' எனவும் 'தன தனனா' எனவும் 'தானதனா' எனவும் வரும். 49 முதல் 53 வரையுள்ள பதிகங்கள் சீகாமரப் பண்ணின் இரண்டாங்கட்டளையின் பாற்படுவன.

இத்திருமுறையில் 54 முதல் 82 வரையுள்ள பதிகங்கள் காந்தாரப் பண்ணுக்கு உரியனவாகவும், 83 முதல் 96 வரையுள்ள பதிகங்கள் பியந்தைக் காந்தாரப்பண்ணுக்கு உரியனவாகவும் அமைந்துள்ளன. "காந்தாரமாகிய பியந்தையாங் கட்டளைக்கு வாய்ந்தவகை மூன்றாக்கி" எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால், காந்தாரப் பதிகங்களும் பியந்தைக் காந்தாரப் பதிகங்களும் மும்மூன்று கட்டளைகள் பெறுவன எனக் கொள்வர். யாழ் நூலாசிரியர் காந்தாரப் பதிகங்களில் பத்து யாப்பு விகற்பங்கள் காணப்படுகின்றன,

**காந்தாரம்**

**யாப்பு 1**

*உருவார்ந்த மெல்லியலோர் பாக முடையீர் அடைவோர்க்குக்*
*தனதான தானதனா தான தனனா தனதானா.*

*எனவரும். 'தனதான' தானான ஆதலும், 'தானதனா' தானானா ஆதலும் அமையும். 54 முதல் 58 வரையுள்ள பதிகங்கள் ஒரேயாப்பின.*

**யாப்பு 2**

*நலங்கொள் முத்து மணியு மணியுந் திரளோதம்*
*தனனா தானா தனன தனனா தனதானா.*

*'தனனா' தானா ஆதலும், 'தானா' தனனா ஆதலும், 'தனதானா' தானானா ஆதலும் உண்டு. 59 முதல் 64 வரையுள்ள பதிகங்கள் ஒரேயாப்பின.*

**யாப்பு 3**

*கறையணி வேலிலர் போலும் கபாலந் தரித்திலர் போலும்*
*தனதன தானன தானா தனான தனதன தானா.*

*'தனதன' தானன ஆதலும் தான ஆதலும், 'தானன' தனதன ஆதலும், 'தானா' தனனா ஆதலும், 'தனான' தானன ஆதலும், உண்டு. 65 முதல் 69 முடியவுள்ள பதிகங்கள் ஒரே யாப்பின. திருநாவுக்கரசர் தேவாரம் 4-ஆம் திருமுறையில் 2,4-ஆம் எண்ணுள்ள காந்தாரப் பதிகங்கள் மேற்குறித்த யாப்பின் பாற்படுவன.*

**யாப்பு 4**

*பிரமனூர் வேணுபுரம் புகலி வெங்குருப் பெருநீர்த் தோணி*
*கருவிளம் கூவிளங்காய் புளிமா கூவிளம் புளிமா தேமா.*

*என முதற்சீரும் மூன்றாஞ் சீரும் விளச்சீர் மாச்சீர் காய்ச்சீர்களாகவும், இரண்டாஞ் சீரும் நான்காஞ் சீரும் பெரும்பாலும் காய்ச்சீர்களாகவும், சிறுபான்மை விளச்சீராகவும் ஐந்தாஞ் சீரும் ஆறாஞ் சீரும் மாச்சீர்களாகவும் இவ்வாறு ஆறு சீரடிகளால் இயன்றது இவ் யாப்பு விகற்பமாகும்.*

*திங்கதிர் வாண்முகத்தாள் செவ்வாய் மணிமுறுவல் ஒவ்வா வேனும்*
*வாங்குநீர் முத்தென்று வைகலு மான்மகன்போல் வருதிர்*
*வீங்கோதந் தந்து விளங்கொளிய வெண்முத்தம் ஐய விரைசூழ் கானற்*
*பூங்கோதை கொண்டு விலைஞர்போன் மீளும் புகாரே யெம்மூர்.*

*எனச் சிலப்பதிகாரம் கானல் வரியில் வந்துள்ள சார்த்துவரிப் பாடலை ஒத்து அமைந்தது. மேற்காட்டிய பிரமபுரத் திருப்பதிகமாகும். சார்த்து வரியாவது, பாட்டுடைத் தலைவன் ஊராகிய*

பதியொடும் அவனுக்கு அமைந்த பெயரோடும் சார்த்திப் பாடப் பெறும் இசைப்பாட்டாகும்.

> "பாட்டுடைத் தலைவன் பதியொடும் பேரொடும்
> சார்த்திப் பாடிற் சார்த்தெனப் படுமே"

என அரும்பத வுரையாசிரியர் காட்டிய மேற்கோட் சூத்திரம் இவ் வரிப்பாட்டின் இயல்பினை விளக்குவதாகும். மேற்காட்டிய 'தீங்கதிர் வாண்முகத்தாள்' என்ற கானல் வரிப்பாடலில் பாட்டு டைத் தலைவன் சோழன், அவன் ஊர் புகார். அவ்வூரின் வனப்பு ரைப்பதாக அவ்வரிப்பாடல் அமைந்திருத்தல் காணலாம்.

மதுரையிற் கூன்பாண்டியன் அவையில் ஆளுடைய பிள்ளையார் எழுந்தருளியபோது பாண்டிய மன்னன், பிள்ளை யாரை நோக்கி 'நும்பதியாது' என வினவ, அது கேட்ட பிள்ளையார் 'பரமனூராகிய கழுமலமே எமது பதி' என மறுமொழி கூறும் முறையிற் 'பிரமனூர் வேணுபுரம்' எனத் தொடங்கும் இத்திருப்பதிகத்தைப் பாடியருளினார் என்பது வரலாறு. இப்பதிகம் பாட்டுடைத்தலைவனாகிய சிவபெருமான் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள கழுமலம் என்னும் சீகாழிப் பதியின் சிறப்பினை விளக்கும் முறையில் அமைந்திருத்தல் காணலாம். இப்பதிகமும் இதனைத் தொடர்ந்து 71 முதல் 74 வரையுள்ள பதிகங்களும் சிலப்பதிகாரம் கானல் வரியில் உள்ள சார்த்து வரிப் பாடல்களின் அமைப்பினைப் பொருளாலும் யாப்பாலும் அடியொற்றி அமைந்துள்ளன. நாற்சீரடியாகிய கலியடியின் மேல் மாச்சீர் இரண்டு பெற்று வருதல் இப்பதிகங்களின் யாப்பு விகற்பமாகும்.

**யாப்பு 5**

விண்ணி யங்குமதிக் கண்ணியான்-விரி - யுஞ்சடைப்
பெண்ண யங்கொள்திரு மேனியான் - பெரு - மானனற்
கண்ண யங்கொள்திரு நெற்றியான் - கலிக் - காழியுள்
பண்ண யங்கொண்மறை யாளரேத்து - மலர்ப் - பாதனே
தான தந்ததன தானனா -தன - தானனா.

எனவரும். இது,

வாடிய வெண்டலை மாலை சூடி மயங்கிருள்
தானன தானன தான தான தனந்தன.

எனவும்,

காய்ந்த துவும் அன்று காமனை-நெற்றிக்-கண்ணினால்
தான தந்த தந்த தானன-தத்த -தந்தனா.

எனவும் வருவதுண்டு, 75,76-ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின.

**யாப்பு 6**

பீடினாற்பெரி யோர்களும் பேதைமைகெடத் தீதிலா
தானனாதன தானனா தானனாதன தானனா.

77,78-ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின.

**யாப்பு 7**

பவனமாய்ச் சோடையாய் நாவெழாப் பஞ்சுதோய்ச் சட்ட வுண்டு
தனதனா தானனா தானனா தானனா தான தானா.

79-ஆம் பதிகம்.

**யாப்பு 8**

வரிய மறையார் பிறையார் மலையோர் சிலையா வணங்கி
தனன தனனா தனனா தனனா தனனா தனனா.

80-ஆம் பதிகம்.

'தனன' தானா ஆதலும் 'தனனா' தான ஆதலும் உண்டு.

**யாப்பு 9**

பூதத்தின் படையினீர் பூங்கொன்றைத் தாரினீர்,

81-ஆம் பதிகம்,

நான்கு காய்ச் சீர்களால் இயன்ற தரவு கொச்சகக் கலிப்பா, ஒரோவழி விளச்சீரும் பெற்றது.

**யாப்பு 10**

பண்ணி லாவிய மொழியுமை பங்கனெம் பெருமான்
தானா தானன தனதன தானன தனனா.

'தான' தனன் ஆதலும், 'தனதன' தானன ஆதலும், 'தனனா' தானா ஆதலும் அமையும். 82-ஆம் பதிகம்,

மேற்குறித்தவற்றுள் 1,4,7,9-ஆம் யாப்பு விகற்பங்கள் ஓசைத் திறத்தால் ஒரு கட்டளையாகவும் 2, 5-ஆம் யாப்பு விகற்பங்கள் ஒரு கட்டளையாகவும் 3, 6, 8, 10-ஆம் யாப்பு விகற்பங்கள் ஒரு கட்டளையாகவும் கொண்டு காந்தாரப் பதிகங்களை இவ்வாறு மூன்று கட்டளையாக அடக்குதல் ஏற்புடையதாகும்.

இனி, பியந்தைக் காந்தாரப் பதிகங்களின் மூன்று கட்டளைகளைப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

## பியந்தைக்காந்தாரம்

**கட்டளை 1.**

நீலநன் மாமிடற்ற னிறைவன் சினத்த நெடுமா வுரித்தநிகரில்
தானனன தானதத்த தனதந் தனத்த தனனா தனத்த தனனா.

'தானன' தனதன ஆதலும், 'தத்த' தந்த, தான ஆதலும், 'தனத்த' தனனா, தானா ஆதலும் அமையும். 83 முதல் 87 வரையுள்ள பதிகங்கள் ஒரேயாப்பின. திருநாவுக்கரசர் தேவாரம் நாலாந் திருமுறையில் 'சிவனெனும் ஓசை' என்ற முதற்குறிப்புடைய பியந்தைக் காந்தாரப் பதிகம்இக்கட்டளையில் அடங்குதல் காண்க.

**கட்டளை 2.**

துளிமண்டி யுண்டு நிறம்வந்த கண்டன் நடமன்ன துன்னு கடரோன்
தனதந்த தந்த தனதந்த தந்த தனதந்த தந்த தனனா.

எனவருவது 88-ஆம் பதிகம். 'தனதந்த' தனதன, தனதான, ஆதலும், 'தந்த' தத்த ஆதலும் தான ஆதலும் அமையும்.

**கட்டளை 3.**

அறையும் பூம்புன லோடும் ஆட ரவச்சடை தன்மேல்
தனன தானன தானா தானன தானன தானா

எனவரும் 'தனன' தான ஆதலும், 'தான' தனன ஆதலும், 'தானன' தனதன ஆதலும் பொருந்தும். 89 முதல் 96 வரையுள்ள பதிகங்கள் ஒரேயாப்பின.

97 முதல் 112 வரை அமைந்த பதிகங்கள் நட்டராகப் பண்ணுக்கு உரியன. நட்டராகப் பதிகங்களில் நான்கு யாப்பு விகற்பங்கள் உள்ளன.

**நட்டராகம்**

**யாப்பு 1**

நம்பொ ருள்நம் மக்க ளென்று நச்சி யிச்சை செய்து நீர்
தந்த தந்த தந்த தந்த தந்த தந்த தந்தனா.

'தந்த' என்பது தான எனவும், தனன எனவும் தத்த எனவும் தய்ய எனவும் வருதல் பொருந்தும். 97 முதல் 101 வரைஉள்ள பதிகங்கள் ஒரே யாப்பின. 99, 100, 101-ஆம் பதிகங்களில்,

இன்று நன்று நாளைநன் றென்று நின்ற விச்சையால்
தந்த தந்த தானனா தந்த தந்த தத்தனா.

என்றாங்கு வரும் அடிகள் மேற்குறித்த யாப்பின் பாற்பட்டனவேயாகும்.

**யாப்பு 2**

அன்ன மென்னடை யரிவையொ டினிதுறை யமரர்தம் பெருமானார்
தந்த தந்தன தனதன தனதன தனதன தனதானா.

'தந்த' என்பது தான, தனன எனவும், 'தந்தன' என்பது தானன, தனதன எனவும். 'தனதன' என்பது தானன எனவும் வருதல் அமையும். 102 முதல் 110 வரை அமைந்த பதிகங்கள் ஒரே யாப்பின.

**யாப்பு 3**

*தளரிள வளரென வுமைபாடத் தாளம் மிடவோர் கழல்வீசி*
*தனதன தனதன தனதானா தானா தனனா தனதானா.*

*111-ஆம் பதிகம், 'தானா - தனனா' என்னுஞ் சீர்கள், தம்மொடு மாத்திரை யளவொத்த 'தனதன - தன தன' என வருதலும், மேற் குறித்த ஓசை யமைதிக்கேற்பப் பிறவாறு வருதலும் அமையும்.*

**யாப்பு 4**

*மாதொர் கூறுகந் தேற தேறிய - ஆதி யானுறை யாடானை*
*தான தானன தான தானன - தான தானன தானானா.*

என முன்னீரடிகள் போன்று பின்னீரடிகளும் வரும். 112-ஆம் பதிகம்.

*'வன்னட்ட ராகத்திற் கேய்ந்தவகை யிரண்டாக்கி'*

எனத் திருமுறைகண்ட புராணம் கூறுதலால் நட்டராகப் பதிகங்கள் இரண்டே கட்டளைகளுள் அடக்கப்பெற்றன என்பது நன்கு புலனாகும். மேற்காட்டிய நான்கு யாப்பு விகற்பங்களும் முதலாவது ஒரு கட்டளையாகவும் ஏனைய மூன்றும் ஓசை யொப்புமை கருதி மற்றொரு கட்டளையாகவும் அடக்குதல் பொருந்தும்.

**செல்வழி**

இதன் கண் 113 முதல் 122 வரையுள்ள திருப்பதிகங்கள் செல் வழிப் பண்ணுக்கு உரியனவாகும். இவற்றின் கட்டளையடிகள்,

*பொடியிலங்குந் - திரு - மேனியா ளர்புலி யதளினர்*
*தனனதானா - தன - தானனா தானன தனதனா.*

என வருவன. 'தனன' தான ஆதலும், 'தானனா' தனதனா ஆதலும், 'தனதனா' தானனா ஆதலும் அமையும். இக்கட்டளை யடியினை,

*பொடியிலங் குந்திரு மேனியா ளர்புலி யதளினர்*
*தனதன தானன தானனா தானன தனதனா.*

என ஐஞ்சீரடியாகப் பிரித்துப் பாடுதலும் உண்டு. 'செவ்வழி யொன்றாக்கி' எனத் திருமுறைகண்ட புராணம் கூறுதலால் இப் பதிகங்கள் பத்தும் ஒரே கட்டளையின் பாற்படுவன என்பது நன்கு தெளியப்படும். எனினும் 121-ஆம் பதிகப்பாடல்களிற் சில அடிகள் எழுத்துக் குறைந்துள்ளன. அவை சீர்வகையால் ஒத்த ஓசையாக அமைதலின் மேற்குறித்த வண்ணம் ஒரே கட்டளையுள் அடக்குதல் பொருந்தும்.

## மூன்றாந் திருமுறை

இத்திருமுறையில் முதற்பண்ணாக அமைந்தது காந்தார பஞ்சமம் என்பதாகும். 1 முதல் 23 வரையுள்ள பதிகங்கள் இப் பண்ணுக்கு உரியன. இப்பதிகங்களிற் காணப்படும் யாப்பு விகற் பங்கள் ஐந்தாகும்.

### காந்தார பஞ்சமம்

**யாப்பு 1**

ஆடினாய்-நறு-நெய்யொடு பால்தயில் அந்தணர்-பிரி-
யாதசிற் றம்பலம்
நாடினாய் இடமா - நறுங் - கொன்றை நயந்தவனே
தானனா-தன-தானன தானனா தானனா-தன-தானன தானனா
தானனா தனனா-தன-தான தனதனனா.

என முன்னிரண்டடிகளைப் போலப் பின்னிரண்டடிகளும் வரும். இதனை,

ஆடி னாய்நறு நெய்யொடு பால்தயிர் அந்த ணர்பிரி யாதசிற் றம்பலம்
நாடி னாயிடமா - நறுங் - கொன்றைந யந்தவனே
தான தானன தானன தானன தான தானன தானன தானன
தான தானதன - தன - தானன தானதனா.

எனப் பிரித்துப் பாடுதலும் உண்டு. 1,2-ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின, இதன் கண் இரண்டாந் திருமுறையில் 49-ஆம் எண்ணுள்ள சீகாமரப் பதிகம் போன்று முதலடியும் மூன்றாமடியும் நீண்டு நிற்க இரண்டாமடியும் நான்காமடியும் சீர்கள் குறைந்து வருதலால் அவ்வடிகளின் ஈற்றிலுள்ள 'நறுங்கொன்றை நயந்தவனே', 'சுருங்க எம தொல்வினையே' என்றாற் போலும் தொடர்களை மீண்டும் ஒருமுறை மடித்துக் கூற அவ்வடிகள் ஓசையால் நிறைவு பெறுதல் காணலாம்.

**யாப்பு 2**

இயலிசையெனும் பொருளின்றி மாம்
புயலன மிடறுடைப் புண்ணியனே
கயலன வரிநெடுங் கண்ணியொடும்
அயலுல கடிதொழ அமர்ந்தவனே
கலனாவது வெண்டலை கடிபொழிற் கச்சிதன்னுள்
நிலனாடொறு மின்புற நிறைமதி யருளினனே.

இப்பதிகம்,

'தனதன தனதன தானதனா'

என மூச்சீரடி நான்கினால் இயன்ற செய்யுளாய், அதன் மேல்,

*'தனனாதன தானன தனதன தானதனா'*

என நாற்சீர்களால் இயன்ற அடி யிரண்டினை வைப்பாகப் பெற்று வந்தமையால் 'நாலடிமேல் வைப்பு' என்னும் பெயர்த் தாயிற்று. நான்கடிகளால் ஆகிய பாடலின் மேலாக இரண்டடியாக வைக்கப்பெற்ற இவ்வுறுப்பு, முன்னுள்ள பாடலின் பொருளை முடித்துக் கூறுவதாகும். இவ்வுறுப்பு நாலடிச் செய்யுளின் மேல்வரின் நாலடிமேல் வைப்பு எனவும், ஈரடிச் செய்யுளின் மேல்வரின் ஈரடிமேல் வைப்பு எனவும் வழங்கப்பெறும். இத்திரு முறையில் 3,4,108-ஆம் பதிகங்கள் நாலடிமேல் வைப்பாகவும், 5,6-ஆம் பதிகங்கள் ஈரடிமேல் வைப்பாகவும் அமைந்துள்ளன. இரண்டடிகளாக அமைந்த இவ்வுறுப்பு, ஒத்தாழிசைக் கலிப் பாவின் முடிவில் அதன் பொருளை முடித்துக் கூறும் முறையில் அமைந்த சுரிதகம் போன்று முன்னுள்ள பாடலின் பொருளை முடித்துக் கூறும் நிலையில் அச் செய்யுளின் மேல் வைக்கப் பெற்றது. ஆதலின் 'வைப்பு' என வழங்கப் பெறுவதாயிற்று.*

(*போக்கியல் வகையாகிய சுரிதகம் 'வைப்பு' எனவும் வழங்கப்பெறும். அது தரவோடு ஒத்த அளவினதாகியும் அதனிற் குறைந்த அளவினதாகியும் குற்றந் தீர்த்த பாட்டின் இறுதி நிலையை உரைத்து வரும் என்பர் தொல்காப்பியர் (தொல் - செய்யுளியல் - சூ.136,137))

**யாப்பு 3**

*தக்கன் வேள்வி தகர்த்தவன் பூந்தராய்*
*மிக்க செம்மை விமலன் வியன்கழல்*
*சென்று சிந்தையில் வைக்க மெய்க்கதி*
*நன்ற தாகிய நம்பன் தானே.*

இப்பதிகம்,

*தான தான தனதனா தானனா*
*தான தான தனனா தனதனா.*

என இரண்டடிச் செய்யுளாய், அதன்மேல்

*தான தானன தான தானன*
*தான தானன தானா தானா.*

என ஈரடி வைப்பாய் வருதலின் ஈரடிமேல் வைப்பு என்னும் பெயர்த்தாயிற்று.

*ஆடி னாய்நறு நெய்யொடு பால்தயிர்*
*அந்த ணர்பிரி யாதசிற் றம்பலம்*
*தான தானன தானன தானன*
*தான தானன தானன தானன.*

என முற்காட்டிய முதல் யாப்பின் கட்டளை யடியினை இரண்டாகத் துணித்த நிலையில் அமைவது இம்மூன்றாம்

யாப்பாதல் காண்க. 'கொட்டமே கமழும்' என்னும் முதற் குறிப்புடைய ஆறாம் பதிகத்தின் ஈரடி மேல் வைப்பாகிய உறுப்பு.

செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே.

என ஈற்றடி முச்சீராய் வந்தமை காண்க.

**யாப்பு 4**

கண்ணுத லானும்வெண் ணீற்றினா னுங்கழ லார்க்கவே
தானன தானானா தனனா தானன தானனா.

எனவரும். இதனை,

கண்ணுத லானும்வெண் ணீற்றி னானுங் - கழ - லார்க்கவே

எனப் பிரித்திசைத்தலும் பொருந்தும். இப்பாடலில் நான்கு அடிகளிலும் முறையே 'கழ' 'பரஞ்' 'புக' 'பெரு' என்பன மோனை ஒன்றிய அசைச் சொற்களாய்ப் பிரிந்திசைத்தல் உணரத் தக்கதாகும். 7 முதல் 12 வரையுள்ள பதிகங்கள் ஒரே யாப்பின.

**யாப்பு 5**

| | | | |
|---|---|---|---|
| மின்னன | எயிறுடை | விரவ | லோர்கடந் |
| தானன | தனதன | தனன | தானனா. |

எனவரும். 13 முதல் 23 வரையுள்ள பதிகங்கள் ஒரே யாப்பின. விளம் விளம் மா விளம் என்னும் சீர்களைப் பெற்று வருவது இவ் யாப்பு விகற்பமாகும். இது திருநாவுக்கரசர் அருளிய 'முளைக் கதிரிளம் பிறை', 'சொற்றுணை வேதியன்' என்னும் முதற் குறிப்புடைய காந்தார பஞ்சமப் பதிகங்களில் அமைந்திருத்தல் அறியத்தக்கதாகும். ஆளுடைய பிள்ளையார் அருளிய காந்தார பஞ்சமப் பதிகங்களுக்கு உரியனவாக மேல் எடுத்துக் காட்டிய யாப்பு விகற்பங்கள் ஐந்தனுள் முதல் மூன்று யாப்பு வகைகளும் ஒத்த ஓசையின ஆதல் பற்றி ஒரு கட்டளையாகவும், நான்காம் யாப்பு ஒரு கட்டளையாகவும், ஐந்தாம் யாப்பு ஒரு கட்டளை யாகவும் கொள்ளத்தக்கன. 'காந்தார பஞ்சமத்தின் கட்டளை மூன்றாக்கினார்' எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலைக் கூர்ந்து நோக்குங்கால் காந்தார பஞ்சமப் பதிகங்களை மேற் குறித்த வண்ணம் மூன்று கட்டளையாகக் கொள்ளுதலே முன்னோர் கருத்துக்கு ஏற்புடையதாதல் நன்கு புலனாம்.

24 முதல் 41 வரையுள்ள பதிகங்கள் கொல்லிப் பண்ணைச் சார்ந்தன ஆகும். 'கொல்லிக்கு நாலாக்கி' எனத் திருமுறைகண்ட புராணம் கூறுதலால் கொல்லிக்குரிய பதிகங்கள் நான்கு கட்டளை பெறுமென அறிகின்றோம்.

## கொல்லி

### கட்டளை 1

*மண்ணினல் லவண்ணம் வாழலாம் வைகலும்*
*தானனா தானனா தானனா தானனா*

எனவரும். 'தானனா' தனதனா ஆதலும் பொருந்தும். 24 முதல் 36 வரையுள்ள பதிகங்கள் ஒரே யாப்பின. (ஏழந்திருமுறையில் 37-ஆம் பதிகம் கொல்லிப் பண்ணின் முதற் கட்டளையைச் சார்ந்த தாகும்).

### கட்டளை 2

*கரமு னம்மல ராற்பு னல்மலர் தூவி யேகலந் தேத்துமின்*
*தனன தானன தான தானன தான தானனா தானனா.*

எனவரும் 'தனன' தான ஆதலும் 'தானன' தனதன ஆதலும் அமையும். 37 முதல் 39 வரையுள்ள பதிகங்கள் ஒரே யாப்பின.

### கட்டளை 3

மேற்குறித்த வண்ணம் எழுசீர்களாகப் பிரிந்திசைக்கும் யாப்பினையே,

*கரமுனம் மலராற்புனல் மலர்தூவியே கலந்தேத்துமின்*
*தனதனா தனதானனா தனதானனா தனதானனா.*

என நாற்சீரடியாகப் பகுத்திசைத்தலும் பொருந்தும். ஆதலின் இப் பகுப்பினைக்கொல்லிப் பண்ணின் மூன்றாவது கட்டளை யாகக் கொள்வர்யாழ் நூலாசிரியர்.* (*யாழ்நூல் பக்கம் 242)

சுந்தரர் அருளிய ஏழாந் திருமுறையில் 33 முதல் 36 வரை அமைந்த கொல்லிப் பதிகங்கள் இங்கே எடுத்துக் காட்டிய கொல்லிப் பண்ணின் இரண்டு மூன்றாம் கட்டளைகளின் அமைப்பினைத் தழுவியன ஆகும்.

### கட்டளை 4

*கல்லால் நீழல்*
*தானா தானா.*

என இருசீர்க் குறளடி நான்கினால் வரும். 'தானா தானா' என்பது, தனனா தானா எனவும், தானா தனனா எனவும், தனனா தனனா எனவும் வருதல் பொருந்தும். 40,41-ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின. இருசீர்க் குறளடி நான்கினால் இயன்ற திருப்பாடல் களையுடைய இப்பதிகங்கள் திரு இருக்குக் குறள் என வழங்கும் பெயர்க்காரணம் முன்னர் விளக்கப்பெற்றது.

## கொல்லிக் கௌவாணம்

மூன்றாந் திருமுறையில் 42-ஆம் பதிகம் கொல்லிக் கௌவாணம் என்ற பண்ணுக்கு உரியதாகும். இது,

*நிறைவெண் டிங்கள் வாண்முக மாதர் பாட நீள்சடை*
*தனன தான தானன தான நான தானன.*

எனவரும் கட்டளையடியினால் இயன்றது. 'தன்ன' தான ஆதலும் அமையும். திருமுறை கண்ட புராணத்தில் 'கொல்லிக்கு நாலாக்கி" எனக் கூறியதன்றிக் கொல்லிக் கௌவாணமாகிய பதிகம் தனியே ஒரு கட்டளை பெறுமெனக் குறிப்பிடாமையால், இக்கௌவாணப் பதிகத்தையும் கொல்லிப் பண்ணின் கட்டளையாகக் கொண்டு 24 முதல் 36 வரையுள்ள பதிகங்கள் கொல்லியின் முதற் கட்டளை, 37 முதல் 39 வரையுள்ளவை இரண்டாங் கட்டளை, 40,41-ஆம் பதிகங்கள் மூன்றாங் கட்டளை, கொல்லிக் கௌவாணப் பதிகம்நான்காங் கட்டளை எனக் கருதுதற்கும் இடமுண்டு. எனினும் கொல்லி என்பது, மருதப் பெரும்பண்ணின் 'நவிர்' என்னுந் திறத்தின் புறநிலையாய்ப் பண்வரிசையில் 70 என்ற எண்பெற்றும், கௌவாணம் என்பது குறிஞ்சிப் பெரும்பண்ணின் அகநிலையாய்ப் பண்வரிசையில் 49 என்ற எண் பெற்றும் நின்ற இருவேறு பண்களாதலானும் இவ் விரு பண்களையும் ஒன்றெனக் கொள்ளின் பண்களின் தொகை நூற்றிரண்டு எனப்பட்டுப் பண்கள் நூற்று மூன்று என்னும் பழங்கொள்கை வழுப்படுமாதலானும் கொல்லியும், கொல்லிக் கௌவாணமும் இரு வேறு பண்கள்எனக்கொண்டு கட்டளை வகுப்பதே ஏற்புடையதென்பது யாழ் நூலாசிரியர் துணிபாகும்.*

(*யாழ்நூல் பக்கம் 243)

43 முதல் 54 வரையுள்ள பதிகங்கள் கௌசிகப் பண்ணுக்கு உரியன. ' கவுசிகத்துக் கூறும் வகை சொல்லி லிரண்டாக்கி' எனத் திருமுறைகண்ட புராணம் கூறுதலால் இப்பதிகங்கள் இரண்டு கட்டளை பெறும் என அறிகின்றோம்.

## கௌசிகம்

### கட்டளை 1

*சந்த மார்முலை யாடன கூறினார்*
*தான தானன தானன தானனா*

எனவரும். 43 முதல் 51 வரையுள்ள பதிகங்கள் ஒரே யாப்பின. மேற்குறித்த கட்டளையடியின் இரண்டாஞ்சீராகிய 'தானன' என்பது 'தான தன' என வருதலும் உண்டு. 46-ஆம் பதிகம்,

*முத்தி லங்குமுறு வல்லுமை யஞ்சவே*
*தான தானதன தானன தானனா.*

என வந்தமை காண்க. திருநாவுக்கரசர் அருளிய திருக்குறுந் தொகைப் பதிகங்கள் யாவும் மேற்குறித்த கவுசிகப் பண்ணின் முதற் கட்டளையின்பாற் படுவனவாகும்.

**கட்டளை 2**

*வீடலால வாயிலாய் விழுமியார்கள் நின்கழல்*
*தானதான தானனா தனனதான தானனா.*

எனவரும். 'தான தான' என்பது தனன தான ஆதலும், 'தானனா' தனதனா ஆதலும், 'தனன தான' 'தான தான' ஆதலும் அமையும். 52,53-ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின. 54-ஆம் பதிக மாகிய திருப்பாசுரத்தில் நாற்சீரடிகளால் இயன்ற பாடல்களும் ஐஞ்சீரடிகளால் இயன்ற பாடல்களும் விரவியுள்ளன. எனினும் ஓசை யொப்புமை நோக்கி இப்பதிகப் பாடல்களைக் கவுசிகப் பண்ணின் முதற் கட்டளையில் அடக்குதல் பொருந்தும்.

'விரையார் கொன்றையினாய்' என்னும்முதற் குறிப்புடைய 55-ஆம் பதிகம், திருமுறையேடுகளிலும் வெளி வந்த அடங்கன் முறைப் பதிப்புக்களிலும் கௌசிகப் பண்ணுக்குரிய கடைசிப் பதிகமாகப் பஞ்சமம் என்ற பண்ணமைந்த பதிகங்களின் முன்னர் வைக்கப் பெற்றுள்ளது. எனினும் இப்பதிகத்தின் இயலிசை யமைப்பினைக் கூர்ந்து நோக்குங்கால் இப்பதிகம் பின்வரும் பஞ்சமம் என்ற பண்ணுக்குரிய இயலமைப்புடையதாகவே தோற்றுதல் புலனாம். எனவே இது (55-ஆம் பதிகம்) முதல் 66 வரையுள்ள பதிகங்கள் பஞ்சமம் என்னும் பண்ணுக்கு உரியன எனக் கொள்ளுதல் ஏற்புடையதாகும். இப்பதிகங்களில் மூன்று யாப்பு விகற்பங்கள் காணப்படுகின்றன.

**பஞ்சமம்**

**யாப்பு 1**

*விரையார் கொன்றையினாய் - விட - முண்ட மிடற்றினனே*
*தனனா தானதனா - தன - தான தனதனனா.*

எனவருவது 55-ஆம் பதிகம்.

மேற்காட்டிய யாப்பில் 'தனனா' என்பது, 'தனதன' எனவும் 'தானன' எனவும் ஓரெழுத்து மிக்கும், இரண்டாஞ் சீராகிய 'தானதனா' என்பது 'தான தானா' என ஒரு மாத்திரை மிக்கும். நான்காஞ்சீராகிய 'தான' என்பது 'தானன' என ஓரெழுத்து மிக்கும். ஐந்தாஞ்சீராகிய 'தனதனனா' என்பது தானதானா எனவும் வருவது பஞ்சமப் பதிகத்தின் இரண்டாம் யாப்பாகும்.

**யாப்பு 2**

*இறையவன் ஈசனெந்தை - இமை -யோர்தொழு தேத்தநின்ற*
*தனதன தானதானா -தன - தானன தானதானா.*

*எனவரும். 56 முதல் 62 வரையுள்ள பதிகங்கள் ஒரே யாப்பின. சுந்தரர் அருளிய ஏழாந் திருமுறையில் 79 முதல் 100 வரையுள்ள பஞ்சமப்பதிகங்கள் ஆளுடைய பிள்ளையார் அருளிய இப் பஞ்சமப் பதிகங்களின் யாப்பினை அடியொற்றி யமைந்திருந்தல் காணலாம். இயல்வகை யொன்றே பற்றி நோக்குமிடத்து இப் பதிகங்கள் கட்டளைக் கலித்துறை யாப்பில் அமைந்திருத்தல் அறியத்தக்க தாகும்.*

**யாப்பு 3**

*பைங்கோட்டு மலர்ப்புன்னைப் பறவைகாள் பயப்பூரச்*
*தேமாங்காய் புளிமாங்காய் புளிமாங்காய் புளிமாங்காய்.*

*எனக் காய்ச்சீர் நான்கு பெற்றுவந்த தரவு கொச்சகக் கலிப்பா. 63-66 ஆம் பதிகங்கள் ஒரே நீர்மைய. 'தூங்கிசை சேர் பஞ்சமத்திற்கு ஒல்லையினில் ஒன்றாக்கி' எனத் திருமுறைகண்ட புராணம் கூறுதலின் பஞ்சமத்திற்குரியனவாக மேற்காட்டிய மூவகை யாப்பினையும் ஓசையொப்புமை நோக்கி ஒரு கட்டளையாக அடக்குதல் முறையாகும்.*

*67 முதல் 99 வரையுள்ள பதிகங்கள் சாதாரிப் பண்ணுக்கு உரியன. இப்பதிகங்களில் உள்ள யாப்பு விகற்பங்கள் ஐந்தாகும்.*

**சாதாரி**

**யாப்பு 1**

*சுரருலகு நரர்கள் பயில் தரணிதல முரணழிய அரண மதில்முப்*
*தனனதன தனனதன தனனதன தனனதன தனன தனனா.*

*எனவரும். இப்பதிகப் பாடல்கள் குற்றெழுத்துப் பயின்று முடுகியலாய், அடிமுதற்சீரின் இரண்டாமெழுத்து சீர்தோறும் ஒன்றி வழியெதுகையாய் வந்தமையால் 67-ஆம் பதிகமாகிய இது, 'வழிமொழித் திருவிராகம்' என்னும் பெயர்த்தாயிற்று. இதன் திருக்கடைக்காப்பில் 'கழுமல நகர்ப், பழுதிலிறையெழுது மொழி தமிழ்விரகன் வழிமொழிகள்' எனக் குறிக்கப் பெறுதலால், இப்பதிகம் வழியெதுகை யாதல் பற்றி 'வழிமொழி' என்னும் பெயர் பெற்றமை இனிது புலனாம். இவ்வாறே இதனை யடுத்துள்ள 68-ஆம் பதிகமும் 'வாளவரி கோளபுலி கீளதுரி தாளின்மிசை நாளுமகிழ்வர்' என்றாங்கு வழியெதுகை பெற்றி ருத்தல் காணலாம். வழியெதுகை பெற்று வண்ணத்தின் இயல் புடையனவாக அமைந்த இப்பதிகங்களில் 'தனனதன' என்பது,*

தானதன, தந்ததன, தத்ததன, தனத்தன, தனந்தன, தனாதன என வருதலும் அமையும். 69 முதல் 80 வரையுள்ள பதிகங்கள் மேற் குறித்த 67,68-ஆம் பதிகங்க்ளைப் போன்ற யாப்பினவேனும் அவ்விரு பதிகங்களைப் போன்று சீர்கள் தோறும் வழியெதுகை பெறாமல் முடுகியலளவாய் வருதலின் 'திருவிராகம்' என வழங்கப் பெறுவனவாயின.

**யாப்பு 2**

மேற்குறித்த கட்டளையடி போன்று முதல் நான்கு சீரும் அமைய ஐந்தாஞ்சீராகிய ஈற்றுச்சீர் மட்டும் 'தானா' என வருவது சாதாரிப் பண்ணின் இரண்டாம் யாப்பாகும்.

| | | | | |
|---|---|---|---|---|
| சங்கமரு | முன்கைமட | மங்கையொரு | பாலுடன்வி | ரும்பி |
| தந்ததன | தந்ததன | தந்ததன | தானதன | தானா. |

எனவரும். 81 முதல் 83 வரையுள்ள பதிகங்கள் ஒரே, யாப்பின.

**யாப்பு 3**

| | | | | |
|---|---|---|---|---|
| பெண்ணிய | லுருவினர் | பெருகிய | புனல்விர | வியபிறை |
| தந்தன | தனதன | தனதன | தனதன | தனதன. |

எனவரும் 'தந்தன' ததனன ஆதலும் 'தனதன' தானன ஆதலும் பொருந்தும். மேல் முதற்றிரு முறையில் வியாழக் குறிஞ்சிக்குரிய கட்டளைகளுள்,

| | | | |
|---|---|---|---|
| பணிந்தவ | ரருவினை | பற்றறுத் | தருள்செயத் |
| தனதன | தனதன | தானன | தனதன. |

என நாற்சீரடியாக வந்த திருவிராக யாப்பின்மேல் 'தனதன' என்னும் மசீர் சேர்ந்து ஐஞ்சீரடியாக அமைந்த சாதாரிக்குரிய இத்திருவிராக யாப்பாகம். 84 முதல் 88 வரையுள்ள பதிகங்கள் இந்த யாப்புக்குரியனவாம்.

**யாப்பு 4**

| | | | | |
|---|---|---|---|---|
| திருந்துமா | களிற்றிள | மருப்பொரு | திரண்மணிச் | சந்தமுந்தி |
| தனதனா | தனதனா | தனதனா | தனதனா | தந்ததனா |

எனவரும். 'தனதனா' என்பது, தானனா, தத்தனா, தந்தனா ஆதலும், 'தந்ததனான' என்பது, தனனதானா, தானதானா, தத்ததானா ஆதலும் பொருந்தும். 89 முதல் 93 வரையுள்ள பதிகங்கள் ஒரே யாப்பின.

**யாப்பு 5**

| | | | |
|---|---|---|---|
| விண்ணவர் | தொழுதெழு | வெங்குரு | மேவிய |
| கண்ணவென் | பொடியணி | வீரே | |
| தானன | தனதன | தானன | தானன |
| தானன | தனதன | தானா. | |

என முன்னிரண்டடிகளைப் போன்று பின்னிரண்டடிகளும் வரும். 'தானன' தனதன ஆதலும், 'தனதன' தானன ஆதலும், 'தானா' தனனா ஆதலும் அமையும். 94 முதல் 99 வரையுள்ள பதிகங்கள் ஒரே யாப்பினவாகும. இப்பதிகங்களின் பாடல்கள், முதலடியும் மூன்றாமடியும் நாற்சீர் கொண்ட அளவடியாக அமைய, இரண்டாமடியும் நான்காமடியும் முச்சீர் கொண்ட சிந்தடியாகிய முக்காலடியால் முடிந்தமையின் 'திருமுக்கால்' என வழங்கப் பெறுவனவாயின.

இங்ஙனம் அளவடியும் சிந்தடியும் உறழ்ந்து இடைமடக்காய் வந்த இச் செய்யுள் வகையினை ஆசிரியத் துறையென வழங்குவர். பிற்கால யாப்பிலக்கண ஆசிரியர்.* (*வீரசோழியம் - யாப்புப் படலம்.16. உரை நோக்குக.)

இத்திருமுறையில் 100 முதல் 116 வரையுள்ள பதிகங்கள் பழம் பஞ்சுரம் என்ற பண்ணுக்கு உரியன. திருமுறைகண்ட புராணத்தில் ஆளுடைய பிள்ளையார் அருளிய பதிகங்களுக்கு அமைந்தன எனக் கூறப்பெற்ற பண்களில் சாதாரி என்ற பண்ணையடுத்துப் புறநீர்மை என்ற பண் குறிக்கப்பெற்றுளது. எனினும் தேவாரத் திருமுறையேடுகளிலும் இதுகாறும் வெளிவந்த பதிப்புக்களிலும் சாதாரிக்கும் புறநீர்மைக்கும் இடையிலே பழம் பஞ்சுரம் என்ற பண்ணமைந்த பதிகங்கள் பதினேழும் கௌசிகம் என்ற பண்ணுக்குரியதாகக் குறிக்கப்பெற்ற 'மாலைமாற்று' என்ற பதிகம் ஒன்றும் இடம் பெற்றுள்ளன. ஞானசம்பந்தர் அருளிய பதிகங்களில் பழம்பஞ்சுரம் என்ற பண் அமைந்திருப்பது பற்றியும் அப்பதிகங்களுக்குரிய கட்டளை வகை பற்றியும் திருமுறைகண்ட புராண ஆசிரியர் தெளிவாகக் குறிப்பிடவில்லை. எனினும் ஆளுடையபிள்ளையார் திருவாலங்காட்டின் உள்ளே செல்லாது அவ்வூரெல்லையில் தங்கிய பொழுது பாடிய 'துஞ்ச வருவார்' என்னும் முதற் குறிப்புடைய திருப்பதிகத்தினைக் குறிப்பிடக் கருதிய சேக்கிழாரடிகள்,

> "துஞ்ச வருவார்" என்றே எடுத்த ஓசை சுருதி முறை வழுவாமல்
> தொடுத்த பாடல் ....
> பஞ்சுரமாம் பழையதிறம் கிழமைகொள்ளப்பாடினார்"*
> (* பெரிய - திருஞான சம்பந்தர் 1010)

என அப்பதிகம் பழம் பஞ்சுரப் பண்ணில் பாடப்பெற்ற செய்தியைத் தெளிவாகக் கூறியுள்ளார். எனவே ஞானசம்பந்தர் பாடிய பதிகங்களில் பழம் பஞ்சுரம் என்ற பண்ணமைந்த பதிகங்கள் உள என்பது நன்கு துணியப்படும். 'துஞ்சவருவார்' என்ற பதிகத்திற்குரிய பழம் பஞ்சுரம் என்ற பெயரை ஒருவர் சொல்ல மற்றவர் கேட்டு விரைவாக எழுதும் நிலையில்

பெயரொப்புமையால் அது பழந்தக்கராகம் என எழுதப்பட்டுப் பின் அப்பதிகம் தக்கராகப் பண்ணுடன் இணைந்து முதற்றிரு முறையில் முறைமாறிக் கோக்கப் பெற்றிருத்தல் வேண்டும் எனவும், இவ்வாறு பழம் பஞ்சுரப் பதிகங்கள் முறையிலமைந்த பழம் பஞ்சுரப் பதிகங்களின் கட்டளை விகற்பம் திருமுறை கண்ட புராணத்தில் இடம் பெறாது விடுபட்டிருத்தல் வேண்டும் எனவும் கருத வேண்டியுளது. இனி, பழம் பஞ்சுரப் பதிகங்களின் கட்டளை வகையினைக்காண்போம்.

**பழம்பஞ்சுரம்**

**யாப்பு 1**

*கரும்பமர் வில்லியைக் காய்ந்து காதற் காரிகை மாட்டருளி*
*தனதன தானன தான தான தானன தானதன.*

எனவரும். ‘தனதன’ தானன ஆதலும், ‘தான’ தனனா ஆதலும். ஈற்றிலுள்ள ‘தானன தானதன’ எனவரும் இரு சீர்களும் ‘தனனா தனதானா’ எனவும் ‘தனதன தானதனா’ எனவும் ‘தனனா தன தனனா’ என வருதலும் அமையும். 100 முதல் 107 வரையுள்ள பதிகங்கள் ஒரே யாப்பின.

**யாப்பு 2**

வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
*தான தானன தானன தானனா.*

எனவரும் 108-ஆம் பதிகம், நான்கடிப் பாடலாய் அதன் மேல் ஈரடிகள் வைப்பாகப் பெற்று வந்தமையால் நாலடிமேல் வைப்பு என வழங்கப் பெறுகின்றது. இதன் கண் ‘தான’ தனன ஆதலும், ‘தானன’ தனதன ஆதலும் பொருந்தும். திருநாவுக்கரசர் அருளிய திருக்குறுந்தொகை இதே யாப்பினதென்பதும் இதற்கு மூல இலக்கியமாக அமைந்தன சிலப்பதிகாரத்தில்

‘நாக நாறு நரந்தை நிரந்தன’

என்பது முதலாக வரும் வேட்டுவ வரிப்பாடல்கள்என்பதும் முன்னர் விளக்கப்பெற்றன.

**யாப்பு 3**

*மண்ணது வுண்டரி மலரோன் காணா*
*தானன தானன தனனா தானா.*

என வருவது 109-ஆம் பதிகம். இதன் கண் ‘தானன’ என்பது தனதன ஆதலும் ஒரோவழித் ‘தானான’ ‘தானனா’ ஆதலும், ‘தனனா தானா’ என்பது ‘தான தானா’ ஆதலும் பொருந்தும்.

**யாப்பு 4**

*வரமதேகொளா வுரமதேசெயும் புரமெரித்தவன் பிரம நற்புரத்*
*தரனனாமமே பரவுவார்கள்சீர் விரவு நீள்புவியே.*

என்பது,

*தனன தானனா தனன தானனா தனன தானனா தனன தானனா*
*தனன தானனா தனன தானனா தனன தானதனா.*

என ஈரடியாய் வரும். முதலடியில் 'தனன தானனா' என்பது நான்கு முறையும் இரண்டாமடியில் இரண்டு முறையும் வந்து அதன்பின் 'தனன தானதனா' என முடிவது இவ்யாப்பு விகற்பமாகும். இதன்கண் 'தனன' என்பது தான ஆதலும் பொருந்தும். 11C, 111-ஆம் பதிகங்கள் ஒரே நீர்மைய, மேற்காட்டிய யாப்பினின்றும் இரண்டாமடி சிறிது வேறுபட்டு வருவது.

*பரசு பாணியர் பாடல் வீணையர் பட்டினத்துறை பல்லவ*
*னீச்சரத்*
*தரசு பேணி நின்றார் - இவர் - தன்மை அறிவாரார்.*

என்னும் 112-ஆம் பதிகமாகும். இதன் ஈற்றடி,

*அரசு பேணிநின்றார் - இவர் - தன்மை அறிவாரார்*
*தனன தான தானா - தன - தானா தனதானா.*

எனவரும்.

*'இவர் - தன்மை அறிவாரார்'*

என்பதனை மீண்டும் ஒருமுறை இசைத்துப் பாடப்பாடலின் இசை நலமும் பொருள் நலமும் சிறந்து விளங்குதல் காண்க.

**யாப்பு 5**

*(திரு இயமகப் பதிகங்கள்)*

113 முதல் 116 வரையுள்ள பதிகங்கள் யமகம் என்னும் சொல்லணி யமைந்தன. யமகம் என்பது, ஓரடியில் முன் வந்தசொல்லோ தொடரோ வேறொரு பொருள்பட மீண்டும் அதே அடியில் மடக்கி வருவது. இதனை 'மடக்கு' எனவும் வழங்குதல் உண்டு. யமகம் என்பது வடசொல். அதன் முதலெ ழுத்தாகிய யகரம் தமிழியல் முறைப்படி மொழிக்கு முதலில் வாராது; 'யவ்விற்கு இய்யும்' (நன்னுல் - பதவியல் சூ. 21) என்றபடி இகரத்தை முதலிற் பெற்று இயமகம் என வழங்கப்பெறும். ஈண்டு அது திரு என்னும் சிறப்புடை அடைமொழி பெற்றுத் திரு இயமகம் என வழங்கப் பெற்றது.

*உற்றுமை சேர்வது மெய்யினையே உணர்வது நின்னருள் மெய்யினையே*
*தானன தானன தானதனா தனதன தானன தானதனா.*

என அறுசீரடியால் இயன்றது 113-ஆம் பதிகம்.

*பாயுமால்விடை மேலொரு பாகனே பாவை தன்னுரு மேலொரு பாகனே*
*தான தானன தானன தானனா தான தானன தானன தானனா.*

எனவும்,

*ஆல நீழ லுகந்த திருக்கையே யான பாட லுகந்த திருக்கையே*
*தான தான தனன தனதனா தான தான தனன தனதனா.*

எனவும், எண் சீரடிகளால் இயன்றன. 114, 115-ஆம் பதிகங்கள்,

*ஒன்று கொன்றைநஞ் சடையதே தூய கண்டநஞ் சடையதே*
*தான தானனா தனதனா தான தானனா தனதனா.*

என அறுசீரடியால் இயன்றது 116-ஆம் பதிகம்.

சீர்வகையால் வேறுபட்ட இப்பதிகங்கள்நான்கும் இசை பற்றிய ஓசைத் திறத்தால் ஒத்திருத்தல் பற்றி ஒரே கட்டளையாகக் கொள்ளத் தக்கனவாகும். இவற்றின் முதலடிகளாக மேற்காட்டிய அடிகளில் 'மெய்யினையே', 'பாகனே', 'இருக்கையே', 'நஞ்சடையதே' எனவரும் சொற்கள், முறையே மடக்கி வந்தமை காணலாம். அவற்றுள் 'மெய்' என்பது உடம்பு உண்மைத் தன்மை எனவும், 'பாகன்' என்பது ஊர்தியாகக் கொண்டு நடத்துபவன் - ஒருபாகத்திற்கொண்டவன் எனவும், 'இருக்கை' என்பது இருத்தல் - இருக்கு என்னும் வேதத்தினை எனவும், 'நஞ்சடையதே' என்பது நல்லசடையின் கண்ணது, நஞ்சு அடையப் பெற்றது எனவும் இருவேறு பொருள்களிற் பயின்றுள்ளமை உணர்தற்குரியதாகும். இவ்வாறே இப்பதிகங்களிலுள்ள பாடல்களின் அடிதோறும் ஒரு சொல்லோ தொடரோ மடக்கி வந்து 'இயைபு' என்னும்தொடைநலம் பொருந்த 'யமகம்', என்னும் சொல்லணிக்கு உரிய மூல இலக்கியமாய் அமைந்தமையால் இத்திருப்பதிகங்கள் 'திரு இயமகம்' எனப் பெயர் பெறுவனவாயின. இவற்றுக்குத் திரு இயமகம் என்ற இப்பெயர் சேக்கிழாரடிகள் காலத்திற் முற்பட்டு வழங்கிய தொன்மையுடையதாகும்.

இனி, மேற்குறித்த பழம்பஞ்சுரம் என்ற பண் திருமுறை கண்ட புராணத்தில் ஞானசம்பந்தர் தேவாரப் பதிகங்களுக்கு உரியதாகக் கூறப்படாமையால் இப்பண்ணுக்குரிய 100 முதல் 116 வரையுள்ள பதிகங்களையும் முன்னுள்ள 67 முதல் 99 வரையமைந்த பதிகங்களுடன் சேர்த்துச் சாதாரிப் பண்ணுக்கு உரியனவாகக் கொண்டு 'சாதாரிக்கு ஒன்பதா' எனத் திருமுறை கண்ட புராணம் கூறியபடி பின்வருமாறு ஒன்பது கட்டளையாக அடக்குவர் யாழ் நூலாசிரியர்.* (*யாழ் நூல் - பக்கம் 245 47)

I (67-83), II (84-88), III (89-93), IV (94-99), V (100-107), VI (108), VII (109), VIII (110-112), IX (113-116) என்பன சாதாரிப் பண்ணுக்கு அமைந்த ஒன்பது கட்டளைகளாகும்.

117-ஆம் பதிகம் 'மாலை மாற்று' என்னும் சித்திர கவிக்குரிய மூல இலக்கியமாக அமைந்துளது. ஒரு மாலைக்கு அமைந்த இரு தலைப்புக்களுள் எதனை முதலாகக் கொண்டு நோக்கினாலும் அம்மாலை ஒரேதன்மையதாய்த் தோன்றுமாறு போல, ஒரு செய்யுளை முதலிலிருந்து வாசித்தாலும் அன்றி இறுதி தொடங்கி வாசித்தாலும் அதே செய்யுளாக அமையும்படி ஒத்த எழுத்துக்களை நிரலே பெற்றிருப்பது 'மாலைமாற்று' என்ற செய்யுளாகும்.

*யாமா மாநீ யாமாமா யாழீ காமா காணாகா*
*காணா காமா காழீயா மாமா யாநீ மாமாயா.*

என்பது மாலைமற்றுத் திருப்பதிகத்தின் முதற்பாடலாகும். ஈரடி களாக அமைந்த இப்பாடலில் முதலடியை இறுதி தொடங்கி வாசித்தால் அஃது இரண்டாமடியாக அமைதலும், இரண்டா மடியை இறுதி தொடங்கி வாசித்தால் அது முதலடியாக அமைதலும், இவ்விரண்டடிகளையுமே முதலிலிருந்து வாசித் தாலும் இறுதியிலிருந்து வாசித்தாலும் ஒரே பாடலாக அமைதலும் காணலாம். கவுசிகப் பண்ணுக்கு உரியதெனக் குறிக்கப்பெற்ற இப்பதிகம், முன் கவுசிகத்திற்கு உரியதென எடுத்துக் காட்டப்பெற்ற, 'வீட லாலவாயிலாய்' என்ற பதிகத் தினை ஓசை வகையால் ஒத்திருத்தல் உணரத்தக்கதாகும். இப் பதிகத்தினைப் பண்ணடைவு பற்றிக் கவுசிகப் பதிகங்களோடு சார வைத்தல் முறையாயினும் பண்ணமைதியினை மட்டும் நோக்காது சித்திரகவி யென்னும் சிறப்பொன்றே கருதி மாலைமாற்றுக் திருப்பதிகமாகிய இது திருவியமகப் பதிகங்களின் பின் வைக்கப் பெற்றது.

## புறநீர்மை

118 முதல் 123 வரையுள்ள பதிகங்கள் புறநீர்மை என்ற பண் அமைந்தன. 'புல்லும் இசைப் புற நீர்மைக்கு ஒன்றாகப் போற்றி னார்' எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால்இவை ஆறும் ஒரே கட்டளையின் பாற்படும் என்பது நன்கு விளங்கும்.

*மடல்மலி கொன்றை துன்றுவா ளெருக்கும்*
*வன்னியும் மத்தமுஞ் சடைமேல்*

*தனதன தானா தானனா தனனா*
*தானனா தானனா தனனா*

எனவரும். விளம் மா விளம் மா விளம் விளம் மா என எழுசீர்க் கழிநெடிலடிகளால் இயன்றது இதன் கட்டளையமைப்பாகும்.

**அந்தாளிக்குறிஞ்சி**

*124, 125-ஆம் பதிகங்கள் அந்தாளிக் குறிஞ்சி என்ற பண்ணுக்கு உரியன. 'அந்தாளிக்கு ஒன்றாக்கி' எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால் இவ்விரு பதிகங்களும் ஒரே கட்டளை யமைப்புடையன என்பது புலனாம்.*

*சுண்ண வெண் ணீறணி மார்பிற் றோல்புனைந்*
*தானனா தானன தானா தானனா.*

எனவரும். 'தானன' தானா ஆதலும் தனதன ஆதலும், 'தானா' தானன ஆதலும் அமையும். மேற்குறித்த பதிகங்கள் இரண்டில் 'கல்லூர்ப் பெருமணம்' என்ற பதிகம், ஆளுடைய பிள்ளையார் திருநல்லூர்ப் பெருமணத்தில் தம் திருமணங்காண வந்த அன்பர்கள் எல்லோரையும் உடன் அழைத்துக் கொண்டு அங்கே தோன்றிய ஈறில் பெருஞ்சோதியினுள்ளே புகும் பொழுது அருளிச் செய்யப் பெற்றது ஆதலின், அவர் பாடியருளிய பதிகங்களின் முடிவில் வைக்கப்பெற்றது.

இனி, திருஞானசம்பந்தர் அருளிய திருப்பதிகங்களில் திருமுறை யேடுகளில் இன்றித் திருவிடைவாசல் கோயிற் கல்வெட்டிலிருந்து வெளிவந்துள்ளனன.

*மறியார்கரத் தெந்தையம் மாதுமை யோடும்*
*பிரியாதபெம் மானுறை யும்மிட மென்பர்*
*பொறிவாய்வரி வண்டுதன் பூம்பெடை புல்கி*
*வெறியார்மல ரிற்றுயி லும்விடை வாயே.*

எனவரும் திருப்பதிகம்,

*தனனாதனா தானன தானன தானா.*

என்னும் கட்டளை யமைப்புடையதாய், முதற்றிரு முறையில் 30 முதல் 33 வரையுள்ள தக்கராகப் பதிகங்களையும்இரண்டாந் திருமுறையில் 35 முதல் 37 வரையுள்ள இந்தளப்பதிகங்களையும் ஒத்திருத்தலால் அவ்விரு பண்களில் ஏதேனும் ஒன்றிற் பாடுதற் கேற்ற இசையமைப்புடையதாகக் கொள்ளுதல் பொருந்தும்.

## நான்காந் திருமுறை

திருநாவுக்கரசர் அருளிய தேவாரத் திருப்பதிகங்கள் நான்கு ஐந்து ஆறாந் திருமுறைகளாக வகுக்கப் பெற்றுள்ளமை முன்னர் விளக்கப் பெற்றது. நான்காந் திருமுறையில் 113 திருப்பதிகங்கள் உள்ளன. 'வாகீசர் அருந்தமிழின் முந்தாய பல தமிழுக்கு ஒன்றொன்றா மொழிவித்து' எனத் திருமுறை கண்ட புராணம்

கூறும். இதனைக் கூர்ந்து நோக்குங்கால், திருநாவுக்கரசர் அருளிய தேவாரத்துள் பல பண்கள் ஒவ்வொரு கட்டளையே பெற்றிருத்தலும் ஒருசில பண்கள் ஒன்றுக்கு மேற்பட்ட கட்டளைகளைப் பெற்றிருத்தலும் ஒருவாறு உய்த்துணரப்படும்.

நான்காந் திருமுறையில் முதற்பதிகமாக விளங்குவது 'கூற்றாயினவாறு விலக்ககிலீர்' என்னும்முதற் குறிப்புடைய கொல்லிப் பண்ணாகும்.

*கூற்றாயின வாறு விலக்ககிலீர் கொடுமைபல செய்தன நானறியேன்*
*தானாதன தான தனத்தனனா தனனாதன தானன தானதனா.*

என அறு சீரடியால் வருவது இதன் கட்டளை யமைப்பாகும்.

*கூற்றா யினவா றுவிலக் ககிலீர் கொடுமை பலசெய் தனநா னறியேன்*
*தானா தனனா தனனா தனனா தனனா தனனா தனனா தனனா.*

என இதனையே எண் சீரடியாகப் பகுத்திசைத்தலும் உண்டு.

## காந்தாரம்

இத் திருமுறையில் 2 முதல் 7 வரையுள்ள பதிகங்கள் காந்தாரப் பண்ணுக்கு உரியன. இப்பதிகங்களில் அமைந்த யாப்பு விகற்பங்கள் மூன்றாகும்.

### யாப்பு 1

*சுண்ணவெண் சந்தனச் சாந்தும் சுடர்த்திங்கட் சூளா மணியும்*

*தானன தானன தானா தனதானா தானா தனனா.*

எனவரும், 'தானன' என்பது தனதன, தனான என ஆதலும், 'தானா' என்பது தனனா ஆதலும், 'தனானா' தானா ஆதலும் அமையும் 2 முதல் 4 வரையுள்ள பதிகங்கள் ஒரே யாப்பின. 2-ஆம் பதிகத்தில்,

*அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை.*

என்ற அடியும், 3-ஆம் பதிகத்தில்,

*கண்டேனவர்திருப் பாதம் கண்டறி யாதன கண்டேன்*

என்ற அடியும் பாடல்தோறும் நாலடிமேல் ஓரடி வைப்பாக அமைந்துள்ளன.

### யாப்பு 2

*மெய்யெலாம் வெண்ணீ று சண்ணித்த மேனியான்*
*தாள்தொ ழதே*

*தானனா தானான தானனா தானனா தானா தானா*

எனவரும், 'தானனா' என்பது தானா, தனதான, தனதனன என ஆதலும், 'தானா' தனனா ஆதலும் அமையும். காய்ச்சீர் நான்கு பெற்ற தரவு கொச்சகக் கலிப்பாவின் பின் அடிதோறும் இரண்டு மாச்சீர் பெற்று வருவது இவ் யாப்பாகும். 5,6-ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின.

**யாப்பு 3**

கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்
தனதானா தானானா தனதானா தனதான.

எனக் காய்ச்சீர் நான்கு பெற்று வரும் தரவு கொச்சகம். இம் மூவகை யாப்பும் ஓசைத் திறத்தால் ஒரே கட்டளையாக அடங்கும்.

## பியந்தைக் காந்தாரம்

இதன்கண் எட்டாவது பதிகம் பியந்தைக் காந்தாரமாகும்.

சிவனெனு மோசையல்லதறையோ வுலகிற் றிருநின்ற
செம்மை யுளதே
தனதன தானதான தனனா தனனா தனதான தான தனனா.

எனவரும். இப் பதிகம் ஆளுடைய பிள்ளையார் அருளிய இரண்டாம் திருமுறையில் 84 முதல் 86 வரையுள்ள பியந்தைக் காந்தாரப் பதிகங்களுக்குரிய கட்டளையமைப்பினை யுடையதாகும். 'தனதன' தானன எனவும், 'தான' தனன எனவும், 'தனனா தனனா' தனதான தான எனவும் வருதல் உண்டு.

## திருவங்கமாலை

ஒன்பதாம் பதிகம் சாதாரிப் பண்ணுக்கு உரியதாகும்

தலையே நீ வணங்காய் - தலை - மாலை தலைக் கணிந்து
தலையா லேபலி தேருந் தலைவனைத் -தலையே நீவணங் காய்.
தனனா தானதானா- தன - தான தனா தனனா
தனனா தானன தான தனாதன - தனனா தானதானா,

எனவரும். ஈரடியாக வரும் இப் பதிகப் பாடல்கள் மூன்றாந் திருமுறையில் 56 முதல் 62 வரையுள்ள பஞ்சமப் பதிகங்களின் யாப்பினை முதலடிக்குரிய யாப்பாகவும் முதற்றிரு முறையில் 'பூத்தேர்ந் தாயன கொண்டு நின் பொன்னடி' என்பது முதலாக வரும் பழந்தக்கராகப் பதிகங்களின் முதலாம் மூன்றாம் அடிகளின் அமைப்பினை இரண்டாமடியின் முற்பாதியாகவும், முதலடியின் முற்பாதியாக உள்ள தொடரையே இரண்டா மடியின் பிற்பாதியாகவும் பெற்றன. சிறுவர்களும் எளிதிற் பொருளுணர்ந்து இசையுடன் பாடி மகிழும் நிலையில் அமைந்

திருத்தல் இப்பதிகத்தின் தனிச் சிறப்பாகும். எண் வகைப்பட்ட குணங்களையுடைய இறைவனது திருவடியினை வணங்காத தலைகள், தத்தமக்கு உரிய புலனுணர்வினைக் கொள்ளும் ஆற்றலை இழந்த ஐம்பொறிகள் போலச் சிறிதும் பயனில்லாதன என்பார்,

கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.

என்றார் தெய்வப்புலவர். காணாத கண், கேளாத - செவி முதலியன போல, இறைவனை வணங்காத தலைகளும் பயனில என்பதாம். இவ்வாறு சிறப்புடைய அங்கமாகிய தலைமேல் வைத்துக் கூறினாரேனும், உடலுறுப்புக்கள் என்ற இனம் பற்றி இறைவனை வாழ்த்தாத நா, அவனது பொருள்சேர் புகழுரைகளைக் கேளாத செவிகள் முதலிய ஏனைய அங்கங்களும் அவ்வாறே பயனில என்பதும் குறிப்பினாற் கொள்ள வைத்தார். இக்குறிப்பினை நன்குணர்ந்து மக்கள் எல்லோரும் தம்முடைய தலை, கண், செவி, மூக்கு, வாய், நெஞ்சு, கைகள், யாக்கை, கால்கள் ஆகிய அங்கங்கள் யாவும் இறை வழிபாட்டில் எளிதில் ஈடுபட்டு இன்புறும் இயல்பினவாகத் திருந்திப் பொறிவாயில் ஐந்தவித்தான் அருளிய ஒழுக்க நெறியில் ஒழுகும் வண்ணம் திருநாவுக்கரசரால் அருளிச் செய்யப்பெற்றது, 'திரு அங்கமாலை' என்னும் இத்திருப்பதிகமாகும். கடவுள் வழிபாட்டில் ஈடுபடுதற்கேற்ற தகுதி பெற்றமையால் திருத்தகவினவாக விளங்கும் தலை, கண் முதலிய அங்கங்களின் சிறப்பியல்பினை முடிமுதல் அடிவரை வரிசையாக விரித்துரைத்தல்பற்றி இப்பதிகம் திரு அங்கமாலை யென்னும் பெயர்த்தாயிற்று. அங்கா - உறுப்பு, மாலை - இயல்பு, வரிசை.

**காந்தார பஞ்சமம்**

இத்திருமுறையில் 10, 11 என்னும் எண்ணுள்ள பதிகங்கள் காந்தார பஞ்சமம் என்ற பண்ணில் அமைந்தன.

முளைக்கதிர் இளம்பிறை மூழ்க வெள்ளநீர்
தனதன தனதன தான தானனா

என இவ்வாறு விளம், விளம், மா, விளம் என நாற் சீரடிகாளல் நடப்பது இக் கட்டளையாகும். 10, 11-ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின.

**பழந்தக்க ராகம்**

12, 13 - ஆம் பதிகங்கள் பழந்தக்கராகம் என்ற பண்ணுக்கு உரியன.

*சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள் சொல்லீரே*
*தானானா தனதான தனதனனா தானானா.*

எனக் காய்ச்சீர் நான்கு கொண்ட அடிகளால் ஆகிய தரவு சொச்சகமாக அமைந்தன. இத்திருப்பதிகங்கள் இவற்றின் கட்டளையடியினை முன்னே குறித்த வண்ணம் பதினைந்தெழுத்தால் இயன்றதாகக் கொள்வர் யாழ் நூலார்.

## பழம் பஞ்சுரம்

14,15-ஆம் பதிகங்கள் பழம் பஞ்சுரம் என்ற பண்ணுக்கு உரியன. இப்பண்ணமைந்த பதிகங்களில் இரண்டு யாப்பு வடிவங்கள் உள்ளன.

### யாப்பு 1

*பருவரை யொன்று சுற்றி யரவங்கை விட்ட*
*இமையோ ரிரிந்து பயமாய்*
*தனதன தான தான தனதான தான*
*தனனா தனன தனனா.*

எனவரும். இத்திருமுறையில் முன்வந்த 'சிவனெனுமோசை' என்ற பியந்தைக் காந்தாரப் பதிகத்தின் யாப்பினை ஒத்தமைந்தது இத்திருப்பதிகத்தின் யாப்புக்கும், 14-ஆம் பதிகமாகிய இது சிவனது அநாதி முறைமையான பழைய வரலாறுகள் பத்தினையும் விரித்துரைத்துப் போற்றுவதாதலின் 'தசபுராணம்' என்னும் பெயருடையதாயிற்று.

### யாப்பு 2

*பற்றற் றார்சேர் பழம்பதியைப் பாசூர் நிலாய பவளத்தை*
*தானா தானா தனதனனா தானா தனான தனதான:*

எனவரும். இது மூன்றாந் திருமுறையில் 41-ஆம் எண்ணுள்ள 'நிறைவெண்டிங்கள்' என்னும் கொல்லிக் கௌவாணப் பதிக யாப்பினைப் பெரிதும் ஒத்திருத்தல் காணலாம். 15-ஆம் பதிகம் இறைவனது திருவருட் பெருமையினை யெண்ணி நெஞ்சம் நெக்குருகிப் போற்றி வழிபடும் மெய்யன்பர்களது பண்டைப் பிறப்பின் தீவினையாகிய பாவம் நீங்குதலைக் குறிக்கொண்டு பாடப்பெற்றதாதலின் 'பாவநாசத் திருப்பதிகம்' என்னும் பெயருடையதாயின்று. இதன் இறுதித் திருப்பாடலில் 'எந்தைபெம்மான் என்னெம்மான் என்பார் பாவம் நாசமே' என இத்திருப்பதிக வழிநின்று இறைவனைப் பரவிப் போற்றுவோர் அடையும் பயன் அறிவுறுத்தப் பெற்றிருத்தல் காணலாம்.

## இந்தளம்

16 முதல் 18 வரையுள்ள பதிகங்கள் மூன்றும் இந்தளப் பண்ணில் அமைந்தன.

செய்யர்வெண் ணூலர் கருமான் மறிதுள்ளும்
தேமாங்காய் தேமா புளிமா புளிமாங்காய்.

என வெண்டளை பிழையாது பன்னிரண் டெழுத்துக்களாலாய நாற்சீரடியாக வருதல் இப்பதிகச் செய்யுளின் கட்டளையடியாகும். பாடலின் ஈற்றடி நேரசை முதலாகத் தொடங்கின்,

ஒன்றுகொ லாமவர் ஊர்வது தானே

என ஓரெழுத்துக் குறைந்து பதினோரெழுத்துக்களாலும், நிரையசை முதலாகத் தொடங்கின்,

இரண்டுகொ லாமவர் எய்தின தாமே.

எனப் பன்னிரண்டெழுத்துக்களாலும் வரும். மேற்குறித்த எழுத்தளவும் வெண்டளையும் பிழையாது நிற்க, மாச்சீர் விளச்சீர் காய்ச்சீர்கள் விரவி வருதல் இவ்யாப்பின் அமைப்பாகும். 16-ம் பதிகத்தின் மூன்றாமடியினை

மெய்யர்மெய்ந் நின்றவர்க் கல்லா தவர்க்கென்றும்
தேமாங்காய் கூவிளம் தேமா புளிமாங்காய்.

எனப் பிரித்திசைத்து வெண்டளை பிழையாமை கண்டு கொள்க.

எத்தீ புகினும் எமக்கொரு தீதிலை
தெத்தே யெனமுரன் றெம்முள் உழிதர்வர்
முத்தீ யனையதொர் மூவிலை வேல்பிடித்
தந்தீநி றத்தார் அரனெறி யாரே.

என்பது 17-ம் பதிகத்தின் முதற்பாடல். இதன் முதலடியில் 'எத்தீ புகினும்' என்ற பாடத்திற்கு வேறாக 'எத்திசைபுகினும்' என்ற பாடம் சில பதிப்புகளில் காணப்படுகிறது. 'எத்திசை புகினும்' என வரும் இருசீர்களும் 'கூவிளம் புளிமா' என நின்று நிரையொன்றாசிரியத் தளையாய் வெண்டளை பிழைத்தலால் 'எத்தீ புகினும்' என்ற பாடமே இப்பதிகத்தின் யாப்பமைதிக்கு ஏற்புடையதென்பது நன்கு துணியப்படும்.

திருமூலர் அருளிய திருமந்திர மாலையிலுள்ள திருப்பாடல்கள் யாவும் மேற்குறித்த இந்தளப் பதிகங்களின் யாப்பின் வண்ணம் அமைந்தனவாகும்.

ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந் தானைந்து
வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்
சென்றனன் தானிருந் தானுணர்ந் தெட்டே.

எனவரும் திருமந்திரப் பனுவல். நாற்சீரடி நான்கினால் இயன்று முதல் மூன்றடிகளிலும் அடியொன்றற்குப் பன்னிரண்டெழுத்துக் களும், ஈற்றடி நேரசையினை முதலாகக் கொண்டு தொடங்கிய தாயின் பதினோரெழுத்தும் பெற்று வெண்டளை பிழையாது வந்தமை காணலாம். எனவே திருமூல நாயனார் அருளிய திருமந்திர யாப்பு, திருநாவுக்கரசர் அருளிய இந்தளப் பதிகங் களின் யாப்புக்கு மூல இலக்கியமாக அமைந்தது எனக் கொள்ளுதல் பொருந்தும்.

**சீகாமரம்**

19, 20-ஆம் பதிகங்கள் சீகாமரப் பண்ணுக்கு உரியன. இவற்றுள்,

சூலப் படையானைச் சூழாக வீழருவிக்
கோலத்தோட் குங்குமஞ்சேர் குன்றெட் டுடையானைப்
பாலொத்த மென்மொழியாள் பங்கனைப் பாங்காய
ஆலத்தின் கீழனை நான்கண்ட தாரூரே.

எனவரும் 19-ஆம் திருப்பதிகம், வெண்பாக்களிற் பயிலுதற்குரிய மாச்சீர், விளச்சீர், காய்ச்சீர் ஆகிய சீர்களைப் பெற்று வெண்டளை தழுவி நடக்கும் கொச்சகக் கலிப்பா யாப்பில் அமைந்ததாகும்.

ஆனைத்தோல் போர்த்துப் புலியின் உரியுடுத்துக்
கானத் தெருமைக் கருந்தலைமேல் நின்றாயால்
வானோர் வணங்க மறைமேன் மறையாகி
ஞானக் கொழுந்தாய் நடுக்கின் றியேநிற்பாய்
(வேட்டுவவரி)

என்பது முதலாகச் சிலப்பதிகாரத்தில் வரும் வரிப் பாடல்கள் மேற்குறித்த வண்ணம் வெண்டளை தழுவி நடக்கும் கொச்சகக் கலிப்பாவுக்குரிய இலக்கியமாகத் திகழ்தல் காணலாம். இப் பாடல்களின் ஈற்றுச்சீர் இரண்டினை நீக்கிவிட்டு, அவ்விடத்து ஓரசைச்சீர் ஒன்றினைப் பெய்து வாசித்தால்இக் கொச்சகக் கலிப்பாக்கள் வெண்பாவின் வடிவினைப் பெறுதல் காணலாம்.

சூலப் படையானைச் சூழாக வீழருவிக்
கோலத்தோட் குங்குமஞ்சேர் குன்றெட் டுடையானைப்
பாலொத்த மென்மொழியாள் பங்கனைப் பாங்காய
ஆலத்தின் கீழானை (யாம்).

என மேற்காட்டி பாடலில் வெண்பாவின் உருவம் புலனாதல் காண்க.

20-ஆம் பதிகம்,

காண்ட லேகருத் தாய்றி னைந்திருந் தேன்மனம்புகுந் தாய்கழலடி
பூண்டுகொண் டொழிந்தேன்-புறம்-போயினா லறையோ
தான தானன தான தானன தான தானன தானன தன
தானனா தனனா - தன் - தானனா தனனா.

என முன்னீரடிகளைப் போன்று பின்னீரடிகளும் வருவன. இரண்டாந் திருமுறையில் 49 முதல் 53 வரையுள்ள சீகாமரப் பதிகங்களின் யாப்பினை ஒத்தமைந்தது இத்திருப்பதிகமாகும்.

21-ஆம் பதிகம் குறிஞ்சிப் பண்ணுக்கு உரியது.

முத்து விதான மணிப்பொற் கவரி முறையாலே
தானா தனான தனனா தனன தனதானா.

எனவருதல் இதன் கட்டளையடியாகும். 'தானா', 'தனான', 'தனனா', 'தனன', 'தானன' என்பன ஒத்த அளவினவாய் வருதல் பொருந்தும் முதற்றிருமுறையில் குறிஞ்சி யென்ற பண்ணுக்கு உரியனவாய் 97 முதல் 102 வரையுள்ள பதிகங்களை யொத்த யாப்பியல்புடையது இத்திருப்பதிகமாகும்.

## திருநேரிசை

இத்திருமுறையில் 22 முதல்79 முடியவுள்ள பதிகங்கள்

விளம், மா, மா, விளம், மா, மா,

என்று அறுசீரடி யாப்பாக வரும் திருநேரிசைப் பதிகங்களாகும்.

## திருவிருத்தம்

80 முதல் 113 வரையுள்ள பதிகங்கள் கட்டளைக் கலித்துறை யாப்பாகிய திரு விருத்தப்பதிகங்கள். இவ்விருவகைத் திருப்பதிகங்களையும் கொல்லிப் பண்ணின் இருவேறு கட்டளைகளாகக் கொள்வர். 'நந்தாதநேரிசையாங் கொல்லிக்கு நாட்டில் இரண்டு' எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால் திருநேரிசைப் பதிகங்களை நேரிசைக் கொல்லியென்றும் வழங்கும் வழக்குண்மை இனிது விளங்கும். இத்திருமுறையின் முதற்கண் கொல்லிப் பண்ணுக்குரியதாகக் குறிக்கப்பெற்ற 'கூற்றாயின' என்ற திருப்பதிகம், 'வாகீசர் அருந்தமிழின் முந்தாய பல தமிழுக்கு ஒன்றொன்றா மொழிவித்து' என்றபடி தனியே ஒரு கட்டளையாகக் கொள்ளப் பெற்றமையாலும் நேரிசையின் பின்னுள்ள திருவிருத்தப் பதிகங்களைத் திருமுறை கண்ட புராணம் குறிப்பிடாது விட்டமையாலும் 'நேரிசையாங் கொல்லிக்கு இரண்டு' என்னும் தொகையுள் நேரிசை ஒரு கட்டளையாகவும் திருவிருத்தம் ஒரு கட்டளையாகவும் அடங்கினமை உய்த்துணரப்படும்.

## ஐந்தாந்திருமுறை

திருக்குறுந்தொகை யாப்பமைந்த திருப்பதிகங்கள் நூறு கொண்டது ஐந்தாந் திருமுறையாகும்.

(ஒரு)மா கூவிளம் கூவிளம் கூவிளம்

என வருதல் திருக்குறுந் தொகைச் செய்யுளின் கட்டளையடி என்பது முன்னர் விளக்கப்பெற்றது. 'குறுந்தொகைக்கு ஓர் கட்டளையா விரித்துரைத்தார்' என்பது திருமுறை கண்ட புராணம்.

## ஆறாந்திருமுறை

திருத்தாண்டகப் பதிகங்கள் அனைத்தும் ஒரு முறையாகத் தொகுக்கப்பெற்றது. ஆறாந் திருமுறையாகும். இதன்கண் தொண்ணூற்றொன்பது திருப்பதிகங்கள் அடங்கியுள்ளன. காய்ச்சீரடி நான்கினால் இயன்ற கொச்சகச் செய்யுளில் அடி தோறும் இரண்டாஞ் சீர்க்குப் பின்னும் நான்காஞ் சீர்க்குப் பின்னும் இரண்டிரண்டு மாச்சீர்களைப் பெற்று வரும்யாப்பு தாண்டகம் என்னும் பாவாகும் என்பது முன்னர் விளக்கப் பெற்றது. 'தாண்டகமாம் பாவுக்கோர் கட்டளையாத் தாபித்து' எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால், திருநாவுக்கரசர் அருளிய திருத்தாண்டகப் பதிகங்கள் யாவும் ஒரே கட்டளை யாதல் இனிது விளங்கும்.

## ஏழாந்திருமுறை

நம்பியாரூரர் அருளிய தேவாரத் திருப்பதிகங்கள் யாவும் ஏழாந்திருமுறை என ஒரே திருமுறையாக வகுக்கப் பெற்றமை முன்னர் விளக்கப்பட்டது. இத்திருமுறையில் 1 முதல் 12 வரை அமைந்த பதிகங்கள் இந்தளப் பண்ணுக்கு உரியன. இப்பதிகங் களில் ஒன்பது யாப்பு விகற்பங்கள் உள்ளன.

### இந்தளம்

**யாப்பு 1**

பித்தாபிறை சூடபெரு மானேயரு ளாளா
தானாதன தானாதன தனாதான தானா.

எனவரும். இவ்வாறு வகையுளியாக்காது,

பித்தா பிறைசூடு பெருமானே அருளாளா
தானா தனதானா தனதானா தனதானா.

எனப் பொருள் இனிது புலப்படப் பிரித்திசைத்தலும் ஏற்புடைய தேயாகும். முதற்றிருமுறையில் 9 முதல் 18 வரையுள்ள நட்ட பாடைப் பதிகங்களை அடி யொற்றியமைந்தது இப்பதிகமாகும்.

**யாப்பு 2**

கோத்திட்டை யுங்கோவ லுங்கோயில் கொண்டீர்
உமைக்கொண்டு ழல்கின்ற தொர் கொல்லைச் சில்லைச்
தானான தானான தானான தானா
தானான தானான தானான தானா.

என எண்சீரடியாக வரும். இதனை,

கோத்திட்டையும் கோவலுங் கோயில்கொண்டீர்
உமைக்கொண்டுழல் கின்றதொர் கொல்லைச்சில்லைச்
தானாதன தானன தானதானா
தனனாதன தானன தானதானா.

என ஆறு சீரடியாகப் பிரித்திசைத்தலும் பொருந்தும். இத்திரு முறையில் 2, 4, 9-ம் பதிகங்கள் ஒரே யாப்பின.

நாலாந்திருமுறையில் முதற்பதிகமாகிய 'கூற்றாயின' என்பதன் யாப்பினை அடியொற்றி யமைந்தன இப்பதிகங்களாகும்.

**யாப்பு 3**

கல்வா யகிலுங் கதிர்மா மணியுங்
கலந்துந் திவருந் நிவவின் கரைமேல்
தானா தனனா தனனா தனனா
தனனா தனனா தனனா தனனா.

எனவரும், 'தானா' தனனா ஆதலும், 'தனனா' தானா ஆதலும் அமையும். இரண்டாந் திருமுறையில் 17 முதல் 24 வரையுள்ள இந்தளப் பதிகங்களின் கட்டளையடி இரண்டு கொண்டது ஓரடி யாக வருதல், இம்மூன்றாந் திருப்பதிகத்தின் கட்டளையடியாகும்.

**யாப்பு 4**

நெய்யும் பாலுந் தயிருங் கொண்டு நித்தல் பூசனை செய்ய
லுற்றார்
தானா தானா தனனா தான தானா தானன தான தானா.

எனவரும். 5, 6-ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின. 'தானா' தனனா ஆதலும் 'தனனா' தானா ஆதலும் அமையும்.

**யாப்பு 5**

மத்த யானை யேறி மன்னர் சூழ வருவீர்காள்
தான தானா தான தானா தான தனதான

எனவரும். 'தான' தனன ஆதலும் 'தானா' தனனா ஆதலும் 'தனதானா' தானதனா ஆதலும் அமையும். இத்திருமுறையில் ஏழாந் திருப்பதிகமாகிய இது, காரைக்காலம்மையார் அருளிய

'திருவாலங்காட்டு' மூத்த திருப்பதிகங்கள் இரண்டினுள் 'எட்டி யிலவம்' என்னும் இந்தளப்பதிக யாப்பினை ஒத்தமைந்ததாகும்.

**யாப்பு 6**

இறைகளோ டிசைந்த இன்பம் இன்பத்தோ டிசைந்த வாழ்வு
கருவிளம் புளிமா தேமா தேமாங்காய் புளிமா தேமா.

எனவருவது ஒன்பதாந் திருப்பதிகத்தின் கட்டளையடியாகும். இது திருநாவுக்கரசர் அருளிய திருநேரிசை யாப்பில் அமைந்தமை காணலாம். இதன் கண் 'தேமாங்காய்' எனும் வாய்பாடமைந்த 'இன்பத்தோ' என்ற சீர் 'கூவிளம்' என்ற சீரளவாய் நின்றமை செவி கருவியாக உணரத்தக்கதாகும்.

**யாப்பு 7**

தேனெய் புரிந்துழல் செஞ்சடை யெம்பெரு மானதி
டந்திகழ் ஐங்கணையக்
தான தனாதன தானன தானன தானன
தானன தானதனா.

என வருவது பத்தாந்திருப்பதிகத்தின் அடியமைப்பாகும். இதனை,

தேனெய்புரித் - துழல் - செஞ்சடை யெம்பெரு
மானதிடந் - திகழ் - ஐங்கணையக்
தானதனா - தன - தானன தானன
தானதனா - ன - தானதனா.

எனப் பிரித்துப் பாடுதலும் பொருந்தும்.

**யாப்பு 8**

திருவுடை யார்திரு மாலய னாலும்
கருவிளம் கூவிளம் கூவிளம் தேமா.

என நாற்சீரடியாய் வெண்டளை தழுவி வருவது பதினொராந் திருப்பதிகம்.

இப்பதிகம், நாலாந்திருமுறையில் 17-ம் பதிகமாகிய 'எத்தீ புகினும்' என்னும் இந்தளப்பதிகத்தினை அடியொற்றியமைந் திருத்தல் உணரத்தக்கதாகும்.

**யாப்பு 9**

வீழக் காலனைக் கால்கொடு பாய்ந்த விலங்கலான்
தானா தானனா தானன தான தனதனா.

எனவரும் அடியமைப்பினையுடையது பன்னிரண்டாந் திருப் பதிகமாகும். 'தானா' தன்னா ஆதலும் தானன ஆதலும், 'தனதனா' தானனா ஆதலும் அமையும்.

"ஈண்டிசைசேர் இந்தளத்துக்கு இரண்டாக" என்றமையின் மேற்போந்த பன்னிரண்டு பதிகங்களிடையே பத்து யாப்பு விகற்பங்கள்உளவேனும், தாள விகற்பங்கள் இரண்டெனவே கொள்ளல் வேண்டும்" என்பர் யாழ் நூலார். (பக்கம் 251)

13 முதல் 16 வரையுள்ள பதிகங்கள் தக்கராகப் பண்ணுக் குரியன. இவற்றில் நான்கு யாப்பு விகற்பங்கள் உள.

**யாப்பு 1**

*மாலையாரரு வித்திரண் மாமணி யுந்தி*
*தனனாதன தானன தானன தானா.*

எனவரும். (13-ஆம் பதிகம்), இத்திருப்பதிகப் பாடல்களின் இரண்டாமடிகளில் முதற்சீர்களாகிய 'குலையார', 'சுரும்பார', 'நாடார', 'மொட்டார', 'தாதார', 'செய்யார', 'மண்ணார' என்பவற்றின் ஈற்று ரகரவுயிர்மெய் மெய்ந்நீர்மை பெறும் என்பர் யாழ் நூலார்.

**யாப்பு 2**

*வைத்தனன் றனக்கே தலையுமென் னாவும் நெஞ்சமும்*
*வஞ்சமொன் றின்றி*
*கூவிளம் புளிமா கருவிளம் தேமா கூவிளம் கூவிளம் தேமா.*

என எழு சீரடி பெற்று வரும். (14-ஆம் பதிகம்).

*தானன தனனா தனதன தானா தானன தானன தானா.*

என்பதனைக் கட்டளை யடியாகக் கொள்ளலாம்.

**யாப்பு 3**

*பூணா ணாவதோ ரரவங்கண் டஞ்சேன் யுறங்காட்*
*டாடல்கண் டிகழேன்*
*தேமா கூவிளம் கருவிளம் தேமா புளிமா கூவிளம் புளிமா*

என எழுசீராய் வரும். இவ்வடியில் 'ரரவங்கண்' என்புழி ஙகர வொற்றும் 'டாடல்கண்' என்புழிலகர வொற்றும் ஒலியடங்கி நிற்க, அவ்வொற்றின் முன்னும் பின்னும் நின்ற குறில்கள் இணைந்து நிரையசையாயின ஆதலால் அச்சீர்கள் முறையே 'கருவிளம்' 'கூவிளம்' என ஒசையூட்டப்பெற்றன. (15-ஆம் பதிகம்).

*தானனா தானன தனதன தானா தனனா தானன தனனா.*

என்பதனை இப்பதிகத்தின் கட்டளையடியாகக் கொள்ளலாம்.

**யாப்பு 4**

*குரும்பைமுலை மலர்க்குழலி கொண்டதவங் கண்டு*
*குறிப்பினொடுஞ் சென்றவடன் குணத்தினைநன் கறிந்து*

என எண்சீரடியாய் வருவது 16-ம் பதிகம்.

*தனனதன தனதனன தானதன தானா*
*தனனதன தானதன தனதனன தானா.*

என்பதனை இதன் கட்டளையடியாகக் கொள்ளலாம். 'தனனதன' தானதன ஆதலும், 'தானா' தனனா ஆதலும் பொருந்தும். 'நீண்ட தக்க ராகத்துக்கு இரண்டாக நிகழ்வித்தார்' எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால், மேலே காட்டிய நான்கு யாப்பு விகற்பங்களையும் ஓசை யொற்றுமையும் தாள அமைதியும் நோக்கி முன்னுள்ளோர் இரண்டு கட்டளையாக அடக்கினார்கள் என்பது புலனாம்.

17 முதல் 30 வரையுள்ள பதிகங்கள் 'நட்டராகம்' என்ற பண்ணுக்கு உரியன. 'கூறரிய நட்டராகத்து இரண்டு' என்பது திருமுறை கண்ட புராணமாதலின் இப்பதிகங்கள் இரண்டு கட்டளையுள் அடங்கும் எனத் தெரிகிறது. 17 முதல் 29 வரையுள்ள பதிகங்கள் ஒரு கட்டளையாகக் கொள்ளத்தக்கன. 30-ஆம் பதிகம் மற்றொரு கட்டளையாகும். முதற் கட்டளைக்குரிய பதிகங்களில் இரண்டு யாப்பு விகற்பங்கள் உள.

**யாப்பு 1**

*கோவல னான்முகன் வானவர் கோனுங்குற் றேவல்செய்ய*
*கூவிளம் கூவிளம் கூவிளம் தேமாங்காய் கூவிளங்காய்.*

எனக் கட்டளைக் கலித்துறை யாப்பாக அமைந்தன 17-20, 22, 24-28 - ஆம் பதிகங்களாகும். இவற்றில் 'ஏவல் செய்ய' என்றாங்கு அடியின் ஈற்றில்வரும் சீர்களில் இடையே லகரம் முதலிய ஒற்றுக் காரணமாகக் 'கடையொரு சீரும் விளங்காய் ஆகி' என்னும் விதி மாறுபடுமாயின், அச்சீர்களின் இடையே நின்ற 'லகரம்' முதலிய ஒற்றினைக் குறைந்த ஒலியினதாகக் கொண்டு அதனை விட்டு, அதன் முன்னும் பின்னும் உள்ள குறில்களை இணைத்து நிரை யசையாக்கி விளங்காய்ச் சீராக அமைத்துக் கொள்ளுதல் வேண்டும். இப் பதிகங்கள் மூன்றாந் திருமுறையிற் பஞ்சமப் பண்ணுக்குரியனவாக 56 முதல் 62 வரையுள்ள திருப்பதிகங்களை யொத்து அமைந்தன. கட்டளைக் கலித்துறை யாப்பில் வரும் இத் திருப்பதிகங்களை,

*பொன்னார் மேனியனே-புலித்-தோலை யரைக்கசைத்து*
*தானா தானதனா - தன - தானா தனதனனா. (21, 23)*

என இவ்வாறு பிரித்து இசைத்தல் மரபாகும்.

**யாப்பு 2**

21, 23, 29 - ஆம் பதிகங்கள் இவை போன்று கட்டளைக் கலித் துறையாக அமைந்தன அல்லவாயினும்,

*நொந்தா ஒண்சுடரே - நுனை - யேநி னைந்திருந்தேன்*
*தானா தானதனா - தன - தான தானதனா.*

என மேற்குறித்த வண்ணம் பிரித்துப் பாடுதற்கேற்ற ஒத்த ஓசையினவாக உள்ளன. ஆகவே இப்பதிகங்கள் மேற்குறித்த பதிகங்களுடன் சேர்த்து ஒரே கட்டளையாகக் கொள்ளப் பெற்றன.

**கட்டளை 2**

*சிம்மாந்து சிம்புளித்துச் சிந்தையினில் வைத்துகந்து*
*திறம்பா வண்ணம்*
*தேமாங்காய் கூவிளங்காய் கூவிளங்காய் கூவிளங்காய்*
*புளிமா தேமா.*

என முன்னுள்ள சீர்கள் நான்கும் காய்ச்சீர்களாகவும் பின் வந்த சீர்கள் இரண்டும் மாச்சீர்களாகவும் வருதல் நட்டராகத்தின் இரண்டாங் கட்டளையாகும். 30 -ஆம் பதிகமாகிய இது, முதற் றிரு முறையில் 129 முதல் 132 வரையுள்ள மேகராகக் குறிஞ்சிப் பதிகங்களை யொத்த யாப்பமைதியுடையதாயினும், அப்பதிகங் கள் போன்று தொடர்ந்து செல்லும் ஒழுகிய ஓசையினதாகாது சீர்தோறும் தாள அறுதிபட இடையறவு பட்டிசைக்கும் ஓசை யினதாதல் நுணுகி நோக்கத்தக்கதாகும்.

31 முதல் 37 வரையுள்ள பதிகங்கள் கொல்லிப் பண்ணுக்கு உரியன. 'கொல்லிக்கு வேறு வகை மூன்றாக' எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால் கொல்லிக்கு உரிய பதிகங்கள் மூன்று கட்டளைபெறும் என்பது புலனாம்.

**கட்டளை 1**

*முந்தை யூர்முது குன்றங் குரங்கணின் முட்டம்*
*தான தானன தான தனாதன தானா.*

எனவரும் 'தான' தனன ஆதலும் 'தானா' தனனா ஆதலும் அமையும். பதின்மூன்று எழுத்துக்களால் இயன்ற இக் கட்டளை படியில் 'தான தானன' என்னும் முதலிரண்டு சீர்களும் 'தனனா தன' என ஒரு சீராக ஒன்றியிசைத்தலும், 'தான தனாதன' என்னும் மூன்றாம் நான்காஞ் சீர்கள் 'தானன தானா' எனப் பிரிந்திசைத்தலும் பொருந்தும்.

*கடிதாய்க் கடற் காற்றுவந் தெற்றக் கரைமேல்*
*தனனாதன தானன தான தனனா.*

என வருதல் காண்க. 31, 32-ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின.

**கட்டளை 2**

*பாறு தாங்கிய காட ரோபடு தலைய ரோமலைப் பாவையோர்*
*தான தானன தான தானன தனன தானன தானனா.*

எனவரும். ஈற்றுச்சீர் 'தனதனா' ஆதலும் ஒழிந்த சீர்களில் 'தான' தனன ஆதலும் அமையும். 33 முதல் 36 வரையுள்ள பதிகங்கள் ஒரே யாப்பின. இவை மூன்றாந் திருமுறையில் கொல்லிப் பண்ணுக்கு உரியனவாக 37 முதல் 39 வரை அமைந்த திருப்பதிகங்களின் யாப்பமைதியினை உடையன.

**கட்டளை 3**

*குருகுபா யக்கொழுங் கரும்புக ணெரிந்தசா*
*தனதனா தானனா தனதன தனதனா.*

என வருவது 37 - ஆம் பதிகம். இது, மூன்றாந் திருமுறையில் கொல்லிப் பண்ணைச் சேர்ந்த 24 முதல் 36 வரையுள்ள திருப்பதிகங்களை அடியொற்றி யமைந்ததாகும்.

திருமுறைகண்ட புராணத்தில் சுந்தரர் அருளிய திருப்பதிகங் களைக் குறிக்குமிடத்து சொல்லிப் பண்ணை யடுத்துப் பழம் பஞ்சுரம் என்ற பண் குறிக்கப்பெற்றதே யன்றிக் கொல்லிக் கௌவாணம் என்ற பண் குறிக்கப்பெறவில்லை. இவ்வாறே ஆளுடைய பிள்ளையார் அருளிய பதிகங்களைக் குறிக்கு மிடத்தும் கொல்லியின் வேறாகக் கொல்லிக் கௌவாணம் என்ற பண் குறிக்கப் பெறவில்லை. ஆயினும் கொல்லியின் வேறாகக் (கொல்லிக்) கௌவாணம் என்ற பண் உள்ளமை முன்னர் விளக்கப் பெற்றது. 'கொல்லிக்கு வேறு வகை மூன்றாக' எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலைக் கூர்ந்து நோக்குங்கால் கொல்லிப் பண்ணுக்குரிய கட்டளைப் பதிகங்களும் அக்கட்டளை களின் தொடர்புடைய கொல்லிக் கௌவானப் பண்ணுக்குரிய திருப்பதிகங்களும் உள என்பது குறிப்பாற் புலனாதல் காணலாம்.

இத் திருமுறையில் 38 முதல் 41 வரையுள்ள பதிகங்கள் கொல்லிக் கௌவாணப் பண்ணமைந்தன. இப்பதிகங்களில் அமைந்த யாப்பு விகற்பங்கள் நான்காகும்.

**யாப்பு 1**

*தம்மானை யறியாத சாதியா-யா ருளரே*
*சடைமேற்கொள் பிறையானை விடைமேற்கொள் விகிர்தன்.*

என எண் சீரடியால் வரும்.

*காய் காய் காய் மா காய் காய் காய் மா*

என்பதனை இதன் கட்டளையடியாகக் கொள்ளலாம். 38, 39, 40, 46-ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின. இப்பதிகங்களில் 'சாதிய்யார்',

'வெல்லும்மா' என ஓர் ஒற்றெழுத்தினைப் பெய்து காய்ச்சீர் கொள்ள வேண்டிய இடங்களும், 'தில்லை வாழ்' 'இல்லை-யே' என ஐகாரத்தை இரண்டு மாத்திரை யுடையதாகக் கொண்டு காய்ச்சீர் கொள்ள வேண்டிய இடங்களும் 'வ்ம்ப-றா' 'எம்பி-ரான்' எனக் குற்றெழுத்தினை விட்டிசைத்துக் காய்ச்சீர் கொள்ள வேண்டிய இடங்களும் உள.

**யாப்பு 2**

*முதுவா யோரி கதற முதுகாட் டெரிகொண் டாடல்*
*முயல்வானே*

*தனனா தானா தனன தனனா தனனா தானா தானனா தானா.*

என வருவது 41 - ஆம் பதிகமாகும்.

**யாப்பு 3**

*எறிக்குங்கதிர் வேயுதிர் முத்தமோ டேலமில வங்கந்தக்*
*கோலமிஞ்சி*

*தனனாதன தானன தானனா தானாதன தானாதன*
*தானதானா.*

என வருவது 42-ஆம் பதிகம். இது, நான்காம் திருமுறையிற் கொல்லிப் பண்ணுக்குரிய 'கூற்றாயின' என்ற பதிகத்தின் யாப்பினை ஒத்திருத்தல் காணலாம்.

**யாப்பு 4**

*நஞ்சி யிடையின்று நாளையென் றும்மை நச்சுவார்*
*தான தனதான தானனா தானா தானனா*

என வருவது 43-ஆம் பதிகம். இக்கட்டளையடியினை,

*தானன தானன தானன தான தானனா*

எனவும்,

*தனதன தானன தான தானன தானதனா.*

எனவும் பிரித்திசைக்கும்படி இப்பதிகப் பாடல்கள் அமைந்துள்ளன. 43, 45-ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின கொல்லிப் பதிகங்களுக்கு மூன்று கட்டளைகள். எனவே அவற்றுடன் தொடர்புடைய கொல்லிக் கௌவாணப் பதிகங்களின் கட்டளைகளும் மூன்றெனக் கொள்ளுதல் பொருந்தும். மேற்காட்டிய யாப்பு விகற்பங்களுள் 1, 2-ஆம் விகற்பங்கள் இரு வேறு கட்டளைகளாவும் 3, 4-ஆம் விகற்பங்கள் இரண்டும் ஓசை யொப்புமை பற்றி ஒரு கட்டளையாகவும் கொள்ளுதல் பொருந்தும்.

47 முதல் 53 வரையுள்ள பதிகங்கள் பழம் பஞ்சுரம் என்ற பண்ணைச் சார்ந்தன. இவற்றில் யாப்பு விகற்பங்கள் ஐந்து உள்ளன.

**யாப்பு 1**

*காட்டூர்க் கடலே கடம்பூர் மலையே கானப் பேரூராய்*
*தேமா புளிமா புளிமா புளிமா தேமா தேமாங்காய்*

என அறு-சீரடியாய், முன்னுள்ள ஐந்து சீர்களும் மாச்சீர் களாகவும், ஆறாஞ் சீராகிய கடைச்சீர் மட்டும் காய்ச்சீராகவும் வருவது 47-ஆம் பதிகம்.

**யாப்பு 2**

*மற்றுப் பற்றெனக் கின்றி நின்திருப் பாத மேமனம் பாவித்தேன்*
*தேமா கூவிளம் தேமா கூவிளம் தேமா கூவிளம் தேமாங்காய்*

என மாச்சீரும் விளச்சீரும் ஒன்றன்பின் ஒன்றாக அடுத்தடுத்து வந்து இறுதிச்சீர் பெரும்பாலும் காய்ச்சீராகவும் சிறுபான்மை விளச்சீராகவும் அமைய எழு சீரடியால் இயன்றது 48 - ஆம் பதிகம்.

*தான தானன தான தானன தான தானன தானனா*

என்பதனை இதன் கட்டளையடியாகக் கொள்ளலாம். இதன் கண் 'தான' தனன ஆதலும், 'தானன தானனா' எனவரும் பின்னிரண்டு சீர்களும் 'தானாதானா' என வருதலும் அமையும். இவ்வாறு,

*கொடுகு வெஞ்சிலை வடுக வேடுவர் விரவ லாமை சொல்லி*
*தனன தானன தனன தானன தனன தானா தானா.*

என வருவது 49 ஆம் பதிகம். இதன் கண் பாடல் தோறும் நான்கா மடியின் நான்காஞ்சீரின் பின் 'எத்துக்கிங்கிருந்தீர்' என இரு சீர்கள் வந்து முடிய, அத்தொடரின்பின் 'எம்பிரானிரே' என்ற தொடர் 'வைப்பு' ஆக அமைந்துள்ளமை காணலாம். வைப்பாக வந்த 'எம்பிரானிரே' என்ற விளியையும் அதன் முன் வந்த 'எத்துக் கிங்கிருந்தீர்' என்ற வினாவையும் மீண்டும் ஒருமுறை இசைக்குமிடத்து அத்திருப்பாடற் பொருளும் இசை நலமும் சிறந்து விளங்குதல் அறிந்து பாடி மகிழத்தக்கதாகும்.

**யாப்பு 3**

*சித்த நீதினை என்னொடு சூளறும் வைகலும்*
*தான தானன தானன தானன தானனா.*

என்னும் கட்டளையடி பெற்றது 50 -ஆம் திருப்பதிகம். முதற்சீராக 'தான'தனன ஆதலும், 'தான தானன' என்னும் முதலிரு சீர்களும் ஒன்றித் 'தானா தன' என வருத லும், முதற்சீர் 'தனதான' என நிற்க, ஏனைச் சீர்கள் வேறுபடாமல் வருதலும் முதலிய விகற்பங்களை இப்பதிகத் திருப் பாடல்களிற் காணலாம்.

**யாப்பு 4**

பத்திமையும் அடிமையையுங் கைவிடுவான் பாவி-யேன்
கூவிளங்காய் கருவிளங்காய் கூவிளங்காய் தேமாங்காய்

எனக் காய்ச்சீர் நான்குகொண்ட அடிகளாலாய நரவு கொச்சகக் கலிப்பாக்களாக அமைந்தது 51-ஆம் பதிகம்.

**யாப்பு 5**

முத்தா முத்தி தரவல்ல முகிழ்மென் முலையாள் உமைபங்கா
தேமா தேமா புளிமாங்காய் புளிமா புளிமா புளிமாங்காய்

என்றாங்கு, 'மா, மா, காய், மா, மா, காய்' என்னும் அறு சீரடிகளால் இயன்றன 52, 53 - ஆம் பதிகங்கள் இவ்விரு பதிகங்களும் நாலாந்திருமுறையில் 15-ஆம் எண்ணுள்ள 'பற்றற்றார்சேர்' என்னும் முதற் குறிப்புடைய பழம்பஞ்சுரப் பதிகத்தினை ஒத்துள்ளமை காணலாம். பழம்பஞ்சுரத்தின் ஏழு பதிகங்களும் மேற்கூறிய வண்ணம் ஐந்து யாப்பு விகற்பங்கள் பெற்றன. 'மிகுந்த பழம்பஞ்சுரத்துக் கேறும் வகை இரண்டாக்கி' எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலை ஆழ்ந்து நோக்குங்கால், வாகீசர் அருந்தமிழில் பழம்பஞ்சுரப் பதிகம் பெற்ற கட்டளை ஒன்றோடு மேலும் இரண்டு கட்டளை பெறுவன சுந்தரர் பாடிய பழம் பஞ்சுரப் பதிகங்கள் என்பதும், எனவே அவை பெற்ற மொத்தக் கட்டளைகள் மூன்றென்பதும் நன்கு புலனாகும். மேற்குறித்த ஐந்து யாப்பு விகற்பங்களுள் 1, 2, 3-ஆம் யாப்பு விகற்பங்கள் சீர் வகையால் வேறுபடினும் ஓசையொப்புமை நோக்கி ஒரு கட்டளையாகவும், 4-ஆம் யாப்பு விகற்பம் ஒரு கட்டளையாகவும், 5-ஆம் யாப்பு ஒரு கட்டளையாகவும் கொள்ளத் தக்கனவாகும்.

இனி, 54 முதல் 70 வரையுள்ள பதிகங்கள் தக்கேசிப் பண்ணுக்கு உரியன.

அழுக்கு மெய்கொடுன் திருவடி யடைந்தேன்
அதுவும் நான்படப் பாலதொன் றானால்
தனன தானன தானன தனனா
தனன தானன தானன தானா.

என்றாங்கு மாச்சீரும் விளச்சீரும் விரவி எண்சீரடியாக வருதல் இத்திருப்பதிகங்களின் கட்டளையாகும். 'தனன' தான ஆதலும், 'தானன' தனதன ஆதலும் 'தனனா' தானா ஆதலும், 'தானா' தனனா ஆதலும் அமையும். 54 முதல் 70 வரையுள்ள தக்கேசிப் பண்ணமைந்த திருப்பதிகங்கள் யாவும் ஒரே யாப்பினவாய் ஒரே கட்டளையின் அடங்குதலால், 'தக்கேசிப் பேரிசையாறாக்கி' எனவரும் திருமுறைகண்ட புராணத் தொடர், 'தக்கேசிப்

பேரிசையொன்றாக்கி' என்று இருத்தல் வேண்டும் என்பது யாழ் நூலாசிரியர் கருத்தாகும்.

71 முதல் 75 வரையுள்ள பதிகங்கள் காந்தாரப் பண்ணுக்கு உரியன. இவற்றில் அமைந்துள்ள யாப்பு வகை நான்காகும்.

**யாப்பு 1**

யாழைப்பழித் தன்னமொழி மங்கையுமை பங்கன்
தானத்தன தானாதன தானாதன தானா.

என வருவது 71-ஆம் பதிகம். இதன் கண் முதற் சீராகிய 'தானத்தன' என்பது, தனதத்தன, தந்தந்தன, தந்தத்தன, தனதன தன, தனந்தனதன, தனனாதன, தானாதன என வருதலும், இரண்டாஞ் சீராகவும் மூன்றாஞ்சீராகவும் வந்த 'தானாதன' என்பது தன்னாதன ஆதலும், நான்காஞ் சீராகிய 'தானா' தனனா ஆதலும் பொருந்தும்.

**யாப்பு 2**

எனக்கினித் தினைத்தனைப் புகலிட மறிந்தேன்
தனத்தன தனத்தன தனதன தனனா.

என வருவது 72-ஆம் பதிகம். 'தனத்தன' என்பது தனதன, தானன ஆதலும், ஈற்றுச் சீராகிய 'தனனா' என்பது தானனா எனவும் தனதன எனவும் வருதலும் பொருந்தும்.

**யாப்பு 3**

கரையுங் கடலும் மலையுங் காலை மாலையு மெல்லாம்
தனனா தனனா தனனா தானன தானன தானா.

எனவரும், 73, 75-ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின் பாற்படும்.

**யாப்பு 4**

மின்னுமா மேங்கள் பொழிந்திழித் தருவி
வெடிபடக் கரையொடுத் திரைகொணர்ந் தெற்றும்
தானனா தானனா தனதன தானா
தனதன தனதன தனதன தானா.

என எண் சீரடியாக வருதல் 74-ஆம் பதிகத்தின் கட்டளையாகும். 'கந்தாரம் பிரித்திரண்டாம்' எனத் திருமுறைகண்ட புராணம் கூறுதலால், காந்தாரப் பண்ணமைந்த திருப்பதிகங்கள் காந்தாரமும் பியந்தைக் காந்தாரமும் என இருதிறப்பட்டு இரண்டு கட்டளை பெறுவன எனக் கொள்ளுதல் ஏற்புடையதாகும். மேலே காட்டிய காந்தாரப் பதிகங்களில், 1, 2-ஆம் யாப்பு விகற்பங்கள் ஒரு கட்டளையாகவும் 3, 4-ஆம் விகற்பங்கள் மற்றொரு கட்டளையாகவும் கொள்ளத்தக்கன.

76-ஆம் பதிகம் பியந்தைக் காந்தாரமாகும்.

பொருவ னார்புரி நூலர் புணர்முலை யுமையவ ளோடும்
தனன தானன தானா தனதன தனதன தானா.

எனவரும். இரண்டாந் திருமுறையில் 90-ஆம் எண்பெற்ற 'எந்தை யீசனெம் பெருமான்' என்னும் பியந்தைக் காந்தாரப் பதிகத்தை ஒத்து இத்திருப்பதிகம் அமைந்திருத்தல் அறியத்தக்கதாகும்.

77-ஆம் பதிகம் காந்தார பஞ்சமம், "ஒன்றாகுந் காந்தார பஞ்சமத்துக்கு" என்றமையால் இப்பண்மைந்த பதிகம் ஒரே கட்டளையினதாதல் பெறப்படும்.

பரவும் பரிசொன் றறியேனான் பண்டே யும்மைப் பயிலாதேன்
தனனா தனனா தனதானா தானா தானா தனதானா.

என அறுசீராய் வருவது இதன் கட்டளையடியாகும். ஒவ்வொரு பாடலின் ஈற்றிலும் வந்துள்ள 'அடிகளோ' என்பதனை நடுவே யுள்ள ககரமாகிய குற்றெழுத்து அடிகளோ என விட்டிசைத்து நிற்க அச்சொல் 'புளிமாங்காய்' எனக் காய்ச்சீராயிற்று.

78 முதல் 82 வரையுள்ள பதிகங்கள் நட்ட பாடைப் பண்ணில்அமைந்தன. 'ஓர் இரண்டாம் நன்றான சீர் நட்ட பாடைக்கு' என்றமையால் இப்பதிகங்களில் அமைந்த கட்டளை கள் இரண்டு என்பது பெறப்படும்.

**கட்டளை 1**

வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம்
தானாதன தானாதன தானாதன தானா.

எனவரும். 'தானாதன' தனனாதன ஆதலும், 'தானா' தனனா ஆதலும் அமையும். முதல் திருமுறையில் 11 முதல் 18 வரையுள்ள நைவள (நட்ட பாடை)ப் பதிகங்களையும் இத்திருமுறையில் முதலாகவுள்ள 'பித்தா பிறைசூடீ' என்னும் இந்தளப் பதிகத் தையும் அடியொற்றியமைந்தது. இக்கட்டளையடியாகும். 78 - 80, 82-ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின.

**கட்டளை 2**

கொன்று செய்த கொடுமை யாற்பல சொல்லவே
தான தான தனன தானன தானனா.

எனவருவது 81-ஆம் பதிகமாகும்.

83 முதல் 85 வரையுள்ள பதிகங்கள் புறநீர்மை என்ற பண்ண மைந்தன. 'குன்றாத புறநீர்மைக்கு இரண்டாகக் கூறும் இசை ஒன்றாக' எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால் இப் பதிகங்களில் இரண்டு கட்டளைகள் உள என்பதும், கட்டளைகள்

இரண்டாயினும் இப்பதிகங்களை இசைக்கும் ஓசைமுறை ஒன்றே என்பதும் நன்கு புலனாம்.

**கட்டளை 1**

அந்தியு நண்பகலும் அஞ்சுப தஞ்சொல்லி
தானன தானதனா தானன தானானா.

என வரும். முதற்சீரின் ஈற்றெழுத்து அடுத்த சீருடன் இயைய வரும், 'தான தன தனனா தானன தானதனா' என்னும் விகற்பமும், அவ்வாறே மூன்றாஞ்சீரின் ஈற்றெழுத்து நான்காஞ்சீருடன் இயைய வரும், 'தான தனனதனா தான தனனதனா' என்னும் விகற்பமும் இம்முதற் கட்டளையுள் அடங்கும். மூன்றாந் திருமுறையில் 56 முதல் 62 வரையுள்ள பஞ்சமம் என்ற பண்ணமைந்த பதிகங்களின் கட்டளையடியாகிய

தானன தானதனா - தன - தானன தானதனா.

என்பதில் நடுவே நின்ற 'தன' என்னும் ஓரசையை நீக்கப் புறநீர்மைப் பதிகங்களுக்கு உரியதாக மேற்காட்டிய கட்டளையடி வந்தெய்தும்,

சூழ்தரு வல்வினையும் -உடல் - தோன்றிய பல்பிணியும்
பாழ்பட வேண்டுதிரேல் மிக - ஏத்துமின் பாய்புனலும்
போழிள வெண்மதியும் - அனல் - பொங்கர வும்புனைந்த
தாழ்சடை யான்பனந்தாள் - திருத் - தாடகை யீச்சரமே.

என ஆளுடைய பிள்ளையார் அருளி பஞ்சமத்திற்குரிய பதிகப் பாடலில் அடிதோறும் நடுவே பிரிந்து இசைக்கும் 'உடல்,' 'மிக,' 'அனல்,' 'திருத்' என்னும் தனியசைகளை விலக்கிப் படிக்க,

சூழ்தரு வல்வினையும் தோன்றி பல்பிணியும்
பாழ்பட வேண்டுதிரேல் ஏத்துமின் பாய்புனலும்
போழிள வெண்மதியும் பொங்கர வும்புனைந்த
தாழ்சடை யான்பனந்தாள் தாடகை யீச்சரமே.

என்றதொரு பாடலமைப்பு வந்தெய்தும். இவ் யாப்புருவம் புறநீர்மைப் பதிகமாகிய 'அந்தியும் நண்பகலும்' 'வடிவுடை மழுவேந்தி' என்ற பதிகங்களின் யாப்பிற்கு அடிப்படையாக உள்ளமை ஆழ்ந்து உணரத்தக்கதாகும். 83, 85 - ஆம் பதிகங்கள் ஒரேயாப்பின.

**கட்டளை 2**

தொண்ட ரடித்தொழலும் சோதி யிளம்பிறையும்
சூதன மென்முலையாள் பாகமு மாகிவரும்

எனவரும் 84-ஆம் பதிகம், தான தனதனனா தான தனதனனா தானன தானதனா தானன தானதனா என மேற்குறித்த

கட்டளையினை இரட்டிக்க வரும் கட்டளையடியினை யுடைதாகும்.

86 முதல் 89 வரையுள்ள பதிகங்கள் சீகாமரப் பண்ணைச் சார்ந்தன. இப் பதிகங்களில் யாப்பு விகற்பங்கள் இரண்டுள்ளன.

**யாப்பு 1**

விடையின்மேல் வருவானை வேதத்தின் பொருளானை
புளிமாங்காய் புளிமாங்காய் தேமாங்காய் புளிமாங்காய்.

எனக் காய்ச்சீர் நான்கு கொண்ட அடியினால் இயன்ற தரவு கொச்சகக் கலிப்பாவாக அமைந்தன 86, 89-ஆம் பதிகங்கள். இவை இரண்டாந் திருமுறையில் 40 முதல் 48 வரையுள்ள சீகாமரப் பதிகங்களை ஒத்தமைந்தன.

**யாப்பு 2**

மாடமாளிகை கோபுரத்தொடு மண்டபம்வள ரும்வளர்பொழில்
பாடல் வண்டறையும் பழனத் திருப்பனையூர்,
தான தானன தான தானன தான தானன தானனாதனா
தான தானதனா தனனா தனதானா.

என முன்னிரண்டடிகளைப் போன்று பின்னிரண்டடிகளும் வரும். 87, 88-ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின. இவை, இரண்டாந் திருமுறையில் 49 முதல் 53 வரையுள்ள சீகாமரப் பதிகங்களையும், நாலாந்திருமுறையில் 20-ஆம் எண் பெற்ற சீகாமரப் பதிகத்தினையும் ஒத்தமைத்திருத்தல் அறியத்தக்கதாகும்.

'காமரத்துக்கு ஒன்றாகப் போற்றினார்' எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால் மேற்காட்டிய யாப்பு விகற்பங்கள் இரண்டும் ஒரே கட்டளையாய் அடங்குமென்பது புலனாம்.

90 முதல் 93 வரையுள்ள பதிகங்கள் குறிஞ்சிப் பண்ணைச் சார்ந்தன. 'உற்றவிசைக் குறிஞ்சிக்கு ஓர் இரண்டாக வகுத்தமைத்து' எனத் திருமுறை கண்ட புராணம் குறிப்பிடுதலால் சுந்தரர் பாடிய குறிஞ்சிப் பதிகங்கள் இரண்டு கட்டளை யுடையன என்பது பெறப்படும். இப்பதிகங்களில் உள்ள யாப்பு விகற்பங்கள் மூன்றாகும்.

**யாப்பு 1**

மடித்தாடு மடிமைக்க ணன்றியே மனனே நீ வாழு நாளும்
புளிமாங்காய் புளிமாங்காய் தேமாங்காய்
புளிமாங்காய் தேமா தேமா.

எனக் காய்ச்சீர் நான்கும் மாச்சீர் இரண்டும் பெற்று அறு சீரடியாய் வரும். முதல் திருமுறையில் 129 முதல் 132 வரை அமைந்த பதிகங்களையும், இவ்வேழாந்திருமுறையில் 30-ஆம்

எண் பெற்ற நட்டராகப் பதிகத்தினையும் அடியொற்றியது 90-ஆம் எண்ணுள்ள இத் திருப்பதிகமாகும்.

**யாப்பு 2**

*பாட்டும் பாடிப் பரவித் திரிவார்*
*தானா தானா தனனா தனனா,*

எனவும்,

*பந்துங் கிளியும் பயிலும் பாவை*
*தானா தனனா தனனா தானா.*

எனவும் பத்தெழுத்தடிகளாகவும்,

*என்ன தெழிலு நிறையுங் கவர்வான்*
*தானா தனனா தனனா தனனா,*

எனவும்,

*பணங்கொ ளரவம் பற்றிப் பரமன்*
*தனனா தனனா தானா தனனா,*

எனவும் பதினோரெழுத்தடிகளாகவும்,

*முழுநீ றணிமே னியின்மொய் குழலார்*
*தனனா தனனா தனனா தனனா.*

எனப் பன்னிரண்டெழுத்தடிகளாகவும் வருதல் இதன் கட்டளை யமைப்பாகும். 91, 93, 94-ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின.

**யாப்பு 3**

*எற்றான் மறக்கே னெழுமைக்கு மெம்பெரு மானையே*
*தானா தனனா தனதான தானன தானனா*

எனவரும் 92-ஆம் பதிகம் பலவாறு விகற்பித்து வரும் கட்டளை யடியினை யுடையதாகும்.

"இப்பதிகமானது, 91, 93, 94 என்னும் எண் பெற்ற பதிகங்களோடு தாளம் ஒன்றப் பாடுதற்குரியது. அம்மூன்று பதிகமும் ஒரு கட்டளையாக, 'மடித்தாடு மடிமை' யெனும் 90-ஆம் திருப்பதிகம் மற்றொரு கட்டளையாகக் குறிஞ்சிப்பண் இரண்டு கட்டளை பெற்றது" என்பார் யாழ் நூலாசிரியர்.

மேற்குறித்த பதிகங்களுள் 94-ஆம் எண் பெற்ற 'அழனி தொழுகி யனைய சடையும்' என்ற திருப்பதிகம் 'கவுசிகம்' என்ற பண்ணுக்குரியதாக வெளிவந்த பதிப்புகளில் குறிக்கப்பெற்றுள்ளது. திருமுறை கண்ட புராணத்தில் சுந்தரர் அருளிய ஏழாந்திரு முறைப் பண்களை நிரல்படக் கூறுமிடத்துக் குறிஞ்சிப் பண்ணின் பின் செந்துருத்தியும் அதனையடுத்துக்

கௌசிகப் பண்ணும் முறையே இடம் பெற்றிருத்தலாலும், குறிஞ்சிக்கும் செந்துருத்திக்கும் இடையேயுள்ள 'அழனீரொழுகி' என்னும் 94-ஆம் பதிகம் முன் குறிஞ்சிப் பண்ணுக்கு உரியனவாகக் குறித்த இரண்டு கட்டளைகளுள் ஒன்றெனத் தெளிவாகத் தெரிதலாலும் அதனைக் 'கவுசிகம்' எனக் கொள்வதைக் காட்டிலும் குறிஞ்சி யெனக் கொள்ளுதலே ஏற்புடையதாகும்.

> **"உற்றவிசைக் குறிஞ்சிக்கோ ரிரண்டாக வகுத்தழைத்துப்**
> **பற்றரிய செந்துருத்திக் கொன்றாகக் கவுசிகப்பாற்**
> **றுற்றவிசை யிரண்டாக்கி"**

எனத் திருமுறைகண்ட புராணம் கூறுதலால் 95-ஆம் பதிகமாகிய 'மீளா அடிமை' என்னும் செந்துருத்திப் பதிகத்திற்கு முன்னுள்ள 94-ஆம் பதிகம் குறிஞ்சிப் பண்ணுக்கு உரியதென்பதும், செந்துருத்திப் பதிகத்தின் பின்னுள்ள 'தூவாயா' என்னும் 96-ஆம் பதிகம் கௌசிகப் பண்ணுக்கு உரியதென்பதும் நன்கு பெறப்படும்.

'செந்துருத்தி' என்ற பண்ணின் பழைய பெயர் செந்திறம் என்பதாகும். 'செந்துருத்திக்கு ஒன்றாக்கி' என்றதனால் இஃது ஒரு கட்டளை பெறும் என்பது புலனாம்.

> மீளா அடிமை யுமக்கே யாளாய்ப் பிறரை வேண்டாதே
> தானா தனனா தனனா தானா தனனா தானானா.

எனவரும். 'தானா' தனனா ஆதலும், 'தனனா' தானா ஆதலும் 'தானானா' தனதானா ஆதலும் அமையும். ஏழாந்திருமுறையில் 96-ஆம் எண்பெற்ற இப்பதிகம், முதல் திருமுறையில் 66 முதல் 74 வரையுள்ள தக்கேசிப் பதிகங்களின் யாப்பினை ஒத்திருத்தல் இங்கு ஒப்பு நோக்கத் தகுவதாகும்.

96-ஆம் திருப்பதிகம் பஞ்சமம் என்ற பண்ணிற்கு உரியதாக அச்சிடப்பெற்ற பதிப்புக்களிற் குறிக்கப் பெற்றுளது. சுந்தரர் பாடியருளிய திருப்பதிகங்களில் செந்துருத்தி என வழங்கும் செந்திறப் பண்ணிற்கும் பஞ்சமம் என்ற பண்ணிற்கும் இடையே கவுசிகம் என்ற பண் அமைந்ததாகத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால், 'தூவாயா' என்ற முதற் குறிப்புடைய 96-ஆம் பதிகத்தினைக் கவுசிகப் பண்ணுக்கு உரியதாகக் கொள்ள வேண்டும் என்பது, விபுலாநந்த அடிகளார் கருத்தாகும்.

> தூவாய தொண்டுசெய் வார்படு துக்கங்கள்
> தனானா தானனா தானனா தானானா

என்பது 96-ஆம் பதிகத்தின் கட்டளையடியாகும். 'தானானா' தனதானா ஆதலும், 'தானன' தனதன ஆதலும் அமையும். 'கவுசிகப்பாற், றுற்றவிசை இரண்டாக்கி' என்பதனால், இப் பண் ஆளுடைய பிள்ளையார் அருளிய கவுசிகப் பதிகங்களிற்

போன்று இங்கும் இரண்டு கட்டளை பெறுமெனக் கருத வேண்டியுளது.

மூன்றாந் திருமுறையிலும் ஏழாந் திருமுறையிலும் கவுசிகம் என்ற பண்ணமைந்த பதிகங்களின் பின் பஞ்சமம் என்னும் பண்ணுக்குரிய பதிகங்கள் முறைப்படுத்தப் பெற்றுள்ளன. இம் முறையில் கவுசிகப் பண்ணுக்குரிய இறுதிப்பதிகம் பஞ்சமத்திற்கு உரியதாகவும் பஞ்சமத்திற்குரிய முதற் பதிகம் கவுசிகத்திற்கு உரியதாகவும் ஏடுகளிற் பண் பெயர்கள் இடமாறிக் குறிக்கப் படுதல் நிகழக்கூடியதேயாம். மூன்றாந் திருமுறையில் 'விரையார் கொன்றையினாய்' என்ற முதற் குறிப்புடைய திருப்பதிகம் பஞ்சமம் என்ற பண்ணுக்குரிய இயலிசையமைப்புடையதாகவும், முன்னுள்ள கவுசிகப் பதிகங்களுடன் சேர்த்தெண்ணப்பட்டுளது. அது போலவே, இவ் ஏழாந்திருமுறையில் கவுசிகம் என்ற பண்ணுக்கு உரிய 'தூவாயா' என்னும் 96-ஆம் பதிகம் பின்னுள்ள பஞ்சமம் என்ற பண்ணுக்குரிய பதிகங்களுடன் சேர்த்து எண்ணப் பெற்றிருத்தல் வேண்டும் எனத் தெரிகிறது.

97 முதல் 100 வரையுள்ள திருப்பதிகங்கள் பஞ்சமம் என்ற பண்ணில் அமைந்தன. 'தூய இசைப் பஞ்சமத்துக்கு அற்ற இசை ஒன்றாக்கி அரனருளால் விரித்துரைத்தார்' எனத் திருமுறை கண்ட புராண ஆசிரியர் தேவாரப் பண்களின் கட்டளை வகையினைக் கூறி முடித்துள்ளார். எனவே, ஏழாந்திரு முறையின் கடைசிப் பண்ணாக அமைந்தது பஞ்சமம் என்பதும், அப்பண்ணுக்குரிய பதிகங்கள் ஒரே கட்டளையாய் அடங்கும் என்பதும் நன்கு புலனாம்.

> ஆதியன் ஆதிரையன்-அயன்-மாலறி தற்கரிய
> தானன தானதனா - தன -தானன தானதனா.

என வருவது இதன் கட்டளையடியாகும். 97-100-ஆம் பதிகங்கள் ஒரே யாப்பின. இவை மூன்றாந்திருமுறையிற் பஞ்சமம் என்ற பண்ணுக்கு உரிய 56-62-ஆம் பதிகங்களை அடியொற்றி அமைந் தனவாகும்.

இதுகாறும் தேவார ஆசிரியர்கள் மூவரும் திருவாய் மலர்ந் தருளிய ஏழு திருமுறைகளிலும் முறையே அமைந்துள்ள பண்கள் இவையென்பதும், அவ்வப்பண்களுக்குரிய திருப்பதிகங்கள் பெற்றுள்ள கட்டளை விகற்பங்களின் தொகையும், அவை புலப்படும் நிலையில் இப்பொழுது தேவாரத் திருப்பதிகங்களில் தெளிவாக விளங்கும் யாப்பமைதிகளும், ஏடெழுதுவோர்களால் பிற்காலத்தில் நேர்ந்த சில மாற்றங்களும் திருமுறை கண்ட புராணத்தை ஆதாரவாகக் கொண்டு எடுத்துக்காட்டி விளக்கப் பெற்றன.

தேவாரத் திருப்பதிகங்களை இசையுடன் பாடியும் கேட்டும் மகிழ வேண்டுமானால் அப்பதிகங்களுக்குரிய பண்ணாகிய இசையமைப்பினையும் பாடல்களுக்கு உரிய தாள அமைப்பினையும் நன்கு உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். செய்யுட்களின் தாள அமைதியினைப் புலப்படுத்துவன அவற்றில் அமைந்த சீர்நிலைகளே யாகும். 'சீர்' என்னும் சொற்குத் தாளம் என்பதும் ஒரு பொருள்.* (*"கொடிபுரை நுசுப்பினாள் கொண்ட சீர் தருவாளோ'- கலித்தொகை. கடவுள் வாழ்த்து) எனவே திருப்பதிகப் பாடல்களின் சீர்நிலைகளாகிய யாப்பமைதியினைப் பகுத்து உணருங்கால் அதனை நிலைக்களனாகக் கொண்டு நிகழும் தாளக் கூறுபாடும் இனிது விளங்கும் என்னும் கருத்தால் திருமுறை கண்ட புராண ஆசிரியர் தேவாரத் திருப்பதிகங்களின் பண்முறை பற்றியமைந்த கட்டளைகளைப் பகுத்துக் கூறியுள்ளார்.

திருமுறைகண்ட புராணத்திற் கூறிய வண்ணம் தேவாரப் பதிகங்களுக்குரிய பண்களும் கட்டளைகளும் பெரியபுராண ஆசிரியராகிய சேக்கிழார் காலத்திற்கு முன்னிருந்தே வழங்கி வந்துள்ளன. திருமுறைகண்ட புராணம் காலத்தாற் பிற்பட்டதாயினும் அந்நூல் விரித்துரைக்கும் திருமுறைப் பகுப்பும் பண்ணடைவும் கட்டளை வகைகளும் திருமுறை வகுத்த நம்பியாண்டார் நம்பி காலத்திலேயே நிலைபெற்று வழங்கிய தொன்மை வாய்ந்தன என்பதிற் சிறிதும் ஐயமில்லை. ஆளுடைய பிள்ளையார் பாடிய 'பூவார்கொன்றை' என்னும் முதற்குறிப்புடைய திருப்பதிகம், தக்கராகப் பண்ணுக்குரிய கட்டளைகளுள் ஒரு கட்டளைக்குரிய எட்டுத் திருப்பதிகங்களுள் ஒன்றாக அமைந்தது என்பதனை,

"திருப்பெருகு பெருங்கோயில் சூழவலங்
கொண்டருளித் திருமுன் றின்றே
அருட்பெருகு திருப்பதிகம் எட்டொருகட்
டளையாக்கி அவற்றுள் ஒன்று
விருப்புறுபொற் றிருத்தோணி வீற்றிருந்தார்
தமைப்பாட விரவு காதல்
பொருத்தமுற அருள்பெற்றுப் போற்றியெடுத்
தருளினார் பூவார் கொன்றை"
(பெரியபுராணம்- சம்பந்தர் 107)

என்ற பாடலில் சேக்கிழாரடிகள் தெளிவாக விளக்கியுள்ளார். திருஞான சம்பந்தர் அருளிய முதல் திருமுறையில் 'மடையில் வாளை' (23) முதல் 'விதியாய் விளைவாய்' (30) என்பது வரையுள்ள எட்டுத் திருப்பதிகங்களும் தக்கராகத்திற்குரிய ஏழு

கட்டளைகளுள் முதற் கட்டளையாக அமைந்தவை என்பதும், முதற் கட்டளையுள் அடங்கிய எட்டுத் திருப்பதிகங்களுள் ஒன்றே 'பூவார் கொன்றை' என்னும் இப்பதிகம் என்பதும் யாழ் நூல் தேவார இயலுள் தொகுத்துரைக்கப் பெற்றன. இங்ஙனம் சேக்கிழாரடிகள் தக்கராகப் பண்ணுக்குரிய கட்டளைகள் ஒரு கட்டளையுள் அடங்கிய திருப்பதிகம் எட்டெனவும் அவ்வெட்டினுள் ஒன்றாக அமைந்தது 'பூவார்கொன்றை' என்னும் திருப்பதிகம் எனவும் வரையறுத்துக் கூறுதலைக் கூர்ந்து நோக்குமிடத்து' அவ்வாசிரியர் காலத்திலேயே தேவாரப் பண்களுக்குரிய கட்டளைகளும் அவற்றுள் அடங்கிய திருப்பதிகங்கள் இத்தனை இத்தனை என்னும் வரையறையும் விளங்க அமைந்த தெளிவான கட்டளை அமைப்பு நிலைபெற்று வழங்கினமை நன்கு புலனாம்.

இனி, இக்காலத்தார் சிலர், "அருட்பெருகு திருப்பதிகம் எட்டொரு கட்டளையாக்கி அவற்றுள் ஒன்று... போற்றி யெடுத்தருளினார் பூவார் கொன்றை" எனவரும் பெரிய புராணத் தொடர்க்கு இவ்வாறு பொருள் கொள்ளாது, திருஞானசம்பந்தர் பாடிய தக்கராகப் பதிகங்கள் யாவும் எட்டுக் கட்டளையுள் அடங்கும் எனவும், அக்கட்டளைகளுள் ஒன்றாக அமைந்ததே 'பூவார் கொன்றை' என்ற பதிகம் எனவும், இவ்வாறு சேக்கிழார் தக்கராகத்திற்கு எட்டுக் கட்டளை கூறியிருக்கவும், திருமுறை கண்ட புராண ஆசிரியர், 'இன்னிசையால் தருந்தக்கராகத்து ஏழ் கட்டளையாம்' எனத் தக்கராகத்துக்கு ஏழு கட்டளையென்று கூறுதல் முரணாம் எனவும் கூறுவர். மேல் எடுத்துக்காட்டிய பெரிய புராணச் செய்யுள், தக்கராகம் என்ற பண்ணுக்குரிய கட்டளைகள் இத்தனை எனக் கட்டளையின் தொகையினைக் குறிப்பிடவில்லை. ஆளுடைய பிள்ளையார் அப்பொழுது பாடிய 'பூவார்கொன்றை' என்ற பதிகம் தக்கராகப் பண்ணில் ஒரு கட்டளையில் அமைந்த எட்டுத் திருப்பதிகங்களுள் ஒன்று என்பதனையே அச்செய்யுள் தெளிவாகக் குறிப்பிடுகின்றது. இதன் கண் 'எட்டு' என்னும் தொகை 'அருட்பெருகு திருப்பதிகம் எட்டு' எனப் பதிகத்தினையே சார்ந்ததென்பது 'அவற்றுள் ஒன்று.... பூவார்கொன்றை' என அப்பதிகத் தொகையினைத் தொடர்ந்து பின்வரும் தொடரால் நன்கு விளங்கும்.* (*இத் திருப்பாடற்கு இதுவே பொருள் என்பதனை ஆறுமுகத் தம்பிரான் உரை நோக்கித் தெரியலாம்.)

அருண்மொழித் தேவராகிய சேக்கிழாரடிகள் தாம் இயற்றிய திருத்தொண்டர் புராணத்தில் திருஞான சம்பந்தர் திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவர் வரலாறுகளையும் விரித்துக் கூறும்பொழுது, அவர்கள் பாடியருளிய தேவாரத் திருப்பதிகங்களில் இன்ன இன்ன பதிகங்கள் இன்ன இன்ன

செவ்வியில் அருளிச் செய்யப் பெற்றன எனவும், அவற்றுட் சிலவற்றின் பண்கள் இவையெனவும், சில திருப்பதிகங்களுக்குரிய பெயர்கள் இவையெனவும் விரித்துக் கூறியுள்ளார். திருப்பதிகங்கள் பாடப்பெற்ற செவ்வியினைக் குறிப்பிடும் இடங்களில் அவ்வத் திருப்பதிகங்களின் கட்டளையமைப்பு இனிது புலப்படுத் தற்கு ஏற்ற சந்தப்பாக்களையும் ஆங்காங்கே அமைத்துள்ளார். நம்பியாரூரர் முதன் முதற் பாடியருளிய "பித்தா பிறைசூடீ" என்னும் முதற் குறிப்புடைய திருப்பதிகம் இந்தளம் என்ற பண்ணிற் பாடப்பெற்றதென்பதும், அதன் கண் அமைந்த தாள அமைதியும் ஆகிய குறிப்புக்களை,

'முறையால்வரு மதுரத்துடன் மொழியிந்தள முதலிற்
குறையாநிலை மும்மைப்படி கூடுங்கிழ மையினால்
நிறைபாணியின் இசைகோள்புணர் நீடும்புகல் வகையால்
இறையான்மகிழ் இசைபாடினன் எல்லாம் நிகர் வல்லான்'
(பெரிய-தடுத்தாட்-75)

எனவரும் பாடலில் சேக்கிழாரடிகள் தெளிவாகக் குறித் துள்ளார்.

'பித்தா பிறைசூடீ' என்ற பதிகத்தின் இசையமைதியினை விளக்கும் இச்செய்யுள், அத்திருப்பதிகத்தின் இசை நிலையை விளக்கும் அதே யாப்பில் அமைந்திருத்தல் காணலாம். ஏழாம் திருமுறையின் முதலிலுள்ள இத் திருப்பதிகம் இந்தளப் பண்ணுக்கு உரியதென்றும் இந்தளப் பண்ணமைய நம்பியாரூரர் பாடிய திருப்பதிகங்கள் இரண்டு கட்டளை பெறுவன என்றும் திருமுறை கண்ட புராணம் கூறும் குறிப்பு பெரிய புராணத்தில் சேக்கிழார் கூறும் குறிப்புக்களுடன் ஒத்திருத்தல் காணலாம். இவ்வாறே தேவாரத் திருமுறைகளின் அமைப்புப் பற்றித் திருமுறைகண்ட புராணத்தில் கூறப்படும் செய்திகள் பலவும் சேக்கிழார், நம்பியாண்டார் நம்பி முதலிய முன்னையோர் கருத்துக்களை அடியொற்றி யமைந்தன என்பது, திருமுறை நூல்களை ஒப்பு நோக்கிப் பயிலுங்கால் இனிது புலனாம்.

இயற்றமிழில் வகுத்துரைக்கப்பெறும் யாப்பு விகற்பம் ஒன்றிலேயே இசைத்தமிழ் விகற்பங்கள் பல தோன்றுதல் கூடும். இந்நுட்பம்,

"அசையுஞ் சீரும் இசையொடு சேர்த்தி
வகுத்தனர் உணர்த்தலும் வல்லோர் ஆறே"
(தொல்-செய்யுள்-11)

எனவரும் தொல்காப்பியச் சூத்திரத்தால் உய்த்துணரப்படும். செய்யுட்களின் உறுப்புக்களாகிய அசையினையும் சீரினையும்

இசையமைதியோடு சேர்த்து நோக்கி, இசையமைப்புக்கு ஏற்ப அவ்வசையினையும் சீரினையும் பகுத்து உணர்த்துதலும் இயலிசைத் திறத்தில் வல்ல நல்லிசைப் புலவர் நெறியாகும் என்பது, மேற்காட்டிய சூத்திரத்தின் பொருளாகும். ஒரு சீரின் முன்னும் பின்னும் உள்ள அசையினை விட்டிசைத்துத் தனி யசையாக நிறுத்தியும், சீரின் ஈற்றசையினைப் பின்வருஞ் சீரின் ஈற்றிலும் பிரித்து இசைத்தும், இவ்வாறு எழுத்துப் பிரிந்திசைத் தலாகிய இசைமுறை பற்றி இயற்றமிழ் யாப்பு ஒன்றிலேயே இசைத் தொடர்புடைய வேறு சில யாப்பு விகற்பங்கள் தோன்றுதல் கூடும். இதற்கு இயற்றமிழ் யாப்பாகிய கட்டளைக் கலித்துறையினை இங்கு உதாரணமாக எடுத்துக் காட்டுதல் மிகவும் பொருந்தும்.

முதல் திருமுறையில், 116, 117-என்னும் எண் பெற்ற திருப்பதி கங்கள் 'வியாழக்குறிஞ்சி' என்ற பண்ணில் அமைந்தன. மூன்றாந் திருமுறையில், 56, 57-ஆம் பதிகங்கள் பஞ்சமம் என்ற பண்ணுக்கு உரியன. நான்காந் திருமுறையில் 80 முதல் 113-வரையுள்ள பதிகங்கள் திருவிருத்தம் எனப்பெயர் பெற்றன. ஏழாந் திரு முறையில் 17 முதல் 28 வரையுள்ள பதிகங்களிற் பல நட்டராகம் என்ற பண்ணிலும், 97 முதல் 100 வரையுள்ள பதிகங்கள் பஞ்சமம் என்ற பண்ணிலும் அமைந்துள்ளன. இவை யாவும் இயற்றமிழ் யாப்பின் படி கட்டளைக் கலித்துறைச் செய்யுட்களே. ஆயினும் இவற்றுள் திருவிருத்தப் பதிகங்கள் மட்டும் கட்டளைக் கலித் துறை என்ற முறையில் பாடப்பெறுகின்றன. ஏனைய பதிகங்கள் எழுத்துப் பிரிந்திசைக்கும் முறைபற்றி வெவ்வேறு யாப்பு விகற்பங் களாகப் பாடப்பெற்று வருவதனைத் தேவார ஓதுவார் பலரும் நன்குணர்வர்.

அசையும் சீரும் இசையொடு சேர்த்து எழுத்துப் பிரிந்திசைத் தலாகிய இசை முறையினால் முதல் திருமுறையில் நட்டபாடைப் பண்ணில் அமைந்த யாப்பு விகற்பங்கள் நான்கும், இரண்டிரண்டு யாப்பு வகைகளாகப் பிரிந்து எட்டுக் கட்டளையாகிய திறத்தை யாழ் நூலாசிரியர் நன்கு விளக்கியுள்ளார்.

இனி, இயற்றமிழில் வேறு வேறாகிய யாப்பு விகற்பங்கள் சில, ஒத்த ஓசை பற்றியும் சீர் நிலையினாலுளவாம் ஒத்த தாளங் களின் இயைபு பற்றியும் ஒரு கட்டளையாக அடக்கப் பெறுதலும் உண்டு. திருஞானசம்பந்தர் அருளிய இரண்டாந் திருமுறையில் 54 முதல் 82 வரையுள்ள இந்தளப் பண்ணுக்குரிய பதிகங்களில் பத்து யாப்பு விகற்பங்கள் உள்ளன. 'தேவுவந்த இந்தளத்தின் செய்திக்கு நான்கு' எனத் திருமுறை கண்ட புராணத்தில் இந் தளத்திற்கு நான்கு கட்டளைகளே கூறப்பட்டன. மேற்கூறிய

யாப்பு வகைகள் பத்தும் ஓசையொப்புமை பற்றியும் தாள இயைபு பற்றியும், நான்கு கட்டளைகளுள் அடங்கின.

இனி, ஒரே யாப்பு விகற்பம் பல பண்களிலும் பயிலக் காண்கிறோம். பியந்தைக் காந்தாரப் பண்ணில் ஞானசம்பந்தர் அருளிய 'வேயுறு தோளிபங்கன்' என்ற பதிகத்தின் யாப்பு விகற்பம், நாவுக்கரசர் பாடியருளிய 'சிவனெனு மோசை' என்ற பியந்தைக் காந்தாரப் பண்ணிலும் 'பருவரையொன்று சுற்றி' என்னும் பழம்பஞ்சுரப் பண்ணிலும் வருதல் காணலாம். இவ்வாறே முதற்றிரு முறையில் 43-ஆம் எண் பெற்ற 'வடந்திகழ் மென்முலையாளை' என்ற தக்கராகப் பதிகத்தின் யாப்பு, இரண்டாந் திருமுறையில் 'மந்திரமாவது நீறு' முதலிய காந்தாரப் பதிகங்களில் அமைந்திருத்தலும், 'சீரணி திகழ்தரு' 'விழை யாருள்ளம்' எனவரும் தக்கராகப் பதிகங்களின் யாப்பு விகற்பம் ஏழாந்திருமுறையில் 'வைத்தனன் றனக்கே' 'பூணாணாவதோர்' எனவரும் தக்கராகப் பதிகங்களில் அமைந்திருத்தலும், 'மூன்றாந் திருமுறையில் பஞ்சமப் பண்ணில் அமைந்த பைங்கோட்டு மலர்ப் புன்னை' என்ற பதிகத்தின் யாப்பமைதி, திருநாவுக்கரசர் அருளிய 'கரவாடும்' என்னும் காந்தாரப் பண்ணிற் காணப்படுதலும் இங்கு ஒப்பு நோக்கத் தக்கனவாகும்.

இது காறும் எடுத்துக்காட்டிய குறிப்புக்களால் தேவாரத் திருப்பதிகங்களில் சீர்நிலை பற்றியும் எழுத்தளவாகிய மாத்திரை பற்றியும் சீர்களில் முன்னும் பின்னும் உள்ள எழுத்துக்கள் அசையாய் நின்று முன் பின்னுள்ள சீர்களின் ஈற்றினும் முதலிலும் பிரிந் திசைந்து இசைத்தலால் உளவாம் இசை முறை பற்றியும் அமைந்த ஓசைக் கூறுபாடுகளே, திருமுறைகண்ட புராணக் கூறும் தேவாரப் பதிகங்களின் கட்டளைகளாம் என்பது நன்கு தெளியப்படும். தேவாரத் திருப்பதிகங்களாகிய ஏழு திருமுறைகளிலும் பண்கள் தோறும் அமைந்த கட்டளைகளின் தொகையினையும் அவற்றுக்குரிய யாப்ப விகற்பங்களின் தொகையினையும் பின்வரும் அட்டவணை கொண்டு தெளிவாக அறிந்து கொள்ளலாம்.



# தேவாரப் பண்களின் கட்டளை அட்டவணை

| திரு முறை எண் | பதிக எண் | பண் | திருமுறை கண்ட புராணம் கூறும் கட்டளைத் தொகை | இப்பொழுது விளங்கும் யாப்பு விகற்பங்கள் | கட்டளை வகை |
|---|---|---|---|---|---|
| 1. | 1-22 | நட்டபாடை | 8 | 4 | ஒவ்வொரு யாப்பும் இரண்டிரண்டாய்ப் பிரிந்திசைத்தலால் கட்டளை 8- ஆயின. |
| | --------- | | - | - | |
| | 1-3 | | | 1 | |
| | 4-8 | | | 2 | |
| | 9-18 | | | 3 | |
| | 19-22 | | | 4 | |
| | 23-44, 46 | தக்கராகம் | 7 | 7 | |
| | | | - | - | |
| | 23-30 | | | 1 | |
| | 31-33 | | | 2 | |
| | 34-38 | | | 3 | |
| | 39-40 | | | 4 | |
| | 41,42,44 | | | 5 | |
| | 43 | | | 6 | |
| | 46 | | | 7 | |
| | 45 | (பழம் பஞ்சுரம் | | - | 45-ம் பதிகத்திற்குரிய பண் பழம் பஞ்சுரமே என்பது சேக்கிழார் அடிகள் துணிபாகும். 47-53 முடிய உள்ள முதல் மூன்று யாப்பினையும் 60-62 உள்ள 6-வது யாப்பையும் ஒரு கட்டளையாகக் கொண்டு ஏனைய இரண்டு விகற்பங்களையும் தனித் தனிக் கட்டளையாகக் கொள்ள 3 கட்டளையாகும். |
| | 47-62 | பழந்தக்கராகம் | 3 | 6 | |
| | | | - | - | |
| | 47-51 | | | 1 | |
| | 52 | | | 2 | |
| | 53 | | | 3 | |
| | 54-58 | | | 4 | |
| | 59 | | | 5 | |
| | 60-62 | | | 6 | |
| | 63-74 | தக்கேசி | 2 | 2 | |
| | | | - | - | |
| | 63-65 | | | 1 | |
| | 66-74 | | | 2 | |
| | 75-103 | குறிஞ்சி | 5 | 5 | |
| | | | - | - | |
| | 75-76 | | | 1 | |
| | 77-79 | | | 2 | |
| | 80-89 | | | 3 | |
| | 90-96 | | | 4 | |

| திரு முறை எண் | பதிக எண் | பண் | புராணம் கூறும் கட்டளைத் தொகை | இப்பொழுது விளங்கும் யாப்பு விகற்பங்கள் | கட்டளை வகை |
|---|---|---|---|---|---|
| | 97-103 | | | 5 | ஈற்றில் உள்ள திருத் |
| | 104-128 | வியாழக் | 6 | 9 | தாளச்சதி, திரு ஏக |
| | | குறிஞ்சி | - | - | பாதம், திருஎழு கூற் |
| | 104-108 | | | 1 | றிருக்கை என்னும் |
| | | | | 2 | மூன்றும் தனித்து |
| | 109-115 | | | 3 | எண்ணத்தக்க இயல் |
| | 116-117 | | | 4 | அமைப்புடையன. |
| | 118 | | | 5 | ஆதலால் அவை |
| | 119 | | | 6 | யொழித்து ஏனைய |
| | 120-125 | | | | யாப்புவகை ஆறுமே |
| | | | | | வியாழக் குறிஞ் சிக் |
| | 126 | திருத் | - | 7 | குரிய கட்டளை |
| | | தாளச்சதி | | | வகைகளாகக் குறிக் |
| | 127 | திரு ஏக | | 8 | கப் பெற்றன. |
| | | பாதம் | | | |
| | 128 | திருஎழு | | 9 | |
| | | கூற்றி | | | |
| | | ருக்கை | | | |
| | 129-135 | மேக | 2 | 4 | முதல் இரண்டு |
| | | ராகக் | - | - | யாப்புக்களும் முதல் |
| | | குறிஞ்சி | | 1 | கட்டளை. பின்னி |
| | 129-132 | | | 2 | ரண்டு யாப்புக் |
| | 133 | | | 3 | களும் மற்றொரு |
| | 134 | | | 4 | கட்டளை. |
| | 135 | | - | 1 | |
| | 136 | யாழ்முரி | | - | 1,6,7,8 யாப்பு |
| 2 | 1-39 | இந்தளம் | 4 | 8 | விகற்பம் ஓசை பற்றி |
| | 1-10 | | - | - | ஒரு கட்டளை |
| | 11-16 | | | 1 | யாகவும் 2-ஆம் யாப்பு |
| | 17-24 | | | 2 | ஒரு கட்டளையாக |
| | 25-28 | | | 3 | வும் 3,4-ஆம் யாப்பு |
| | 29-34 | | | 4 | ஒரு கட்டளையாக |
| | 35-37 | | | 5 | வும் 5-ஆம் விகற்ப |
| | 38 | | | 6 | மாகிய திருவிராகப் |
| | 39 | சீகா | 2 | 7 | பதிகங்கள் மற்றொரு |
| | 40-53 | மரம் | - | 8 | கட்டளையாகவும் |
| | | | - | 2 | அடக்குதற்குரியன. |
| | | | | - | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2 | 40-48 | | | 1 | |
| | 49-53 | | | 2 | |
| | 54-82 | காந்தாரம் | 3 | 10 | 1,4,7,9-ஆம் யாப் |
| | | | -- | -- | புக்கள் ஓசைத் |
| | 54-58 | | | 1 | திறத்தால் ஒரு |
| | 59-64 | | | 2 | கட்டளையாக |
| | 65-69 | | | 3 | வும் 2,5-ஆம் யாப் |
| | 70-74 | | | 4 | புக்கள் ஒரு கட்ட |
| | 75,76 | | | 5 | ளையாகவும் |
| | 77,78 | | | 6 | 3,6,8,10 யாப்புக் |
| | 79 | | | 7 | கள் மற்றொரு |
| | 80 | | | 8 | கட்டளையாகவும் |
| | 81 | | | 9 | அடங்கும். |
| | 82 | | | 10 | |
| | 83-96 | பியந்தைக் | | | |
| | | | 3 | 3 | |
| | 83-87 | காந்தாரம் | -- | -- | |
| | 88 | | | 1 | |
| | 89-96 | | | 2 | |
| | | | | 3 | |
| | 97-112 | நட்ட | 2 | 4 | முதலாவது |
| | | ராகம் | -- | -- | யாப்பு ஒரு கட் |
| | 97-101 | | | 1 | டளையாகவும் |
| | | | | | ஏனைய மூன்றும் |
| | 102-110 | | | 2 | ஓசை ஒப்புமை |
| | 111 | | | 3 | பற்றி மற்றொரு |
| | 112 | | | 4 | கட்டளையாக |
| | | | | | வும் அடங்கும். |
| | 113-122 | செவ்வழி | 1 | 1 | |
| | | | - | - | |
| 3 | 1-23 | காந்தார | 3 | 5 | முதல் மூன்று |
| | | பஞ்சமம் | -- | -- | யாப்பும் ஒரு கட் |
| | | | | | டளை யாகவும் |
| | 1-2 | | | 1 | 4-ஆம் யாப்பு ஒரு |
| | 3-4 | | | 2 | கட்டளையாக |
| | 5-6 | | | 3 | வும் 5-ஆம் யாப்பு |
| | 7-12 | | 5 | 4 | மற்றொரு |
| | | | | 5 | கட்டளையாக |
| | 13-23 | | | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 24-1 | கொல்லி | 4 | 4 | கொல்லிக்கௌவாணம் என்ற பண்ணின் பெயர் திருமுறை கண்ட புராணத்தில் சொல்லப் பெறாமையால் கொல்லிப் பண்ணோடு சேர்த்துக் கட்டளை கொள்ளப்பட்டது. |
| | 24,36 | | | 1 | |
| | 37-39 | | | 2 | |
| 3 | 40-41 | | - | 3 | |
| | 42 | கொல்லிக் கௌவாணம் | | 4 | |
| | 43-54 | கௌசிகம் | 2 | 2 | |
| | | | - | - | |
| | 43-51 | | | 1 | |
| | 52-54 | | | 2 | |
| | 55-66 | பஞ்சமம் | 1 | 3 | வேறுபட்ட யாப்பு மூன்றும் ஓசை ஒப்புமை பற்றி ஒரு கட்டளையாக அடங்கும். |
| | | | - | - | |
| | 55 | | | 1 | |
| | 56-62 | | | 2 | |
| | 63-66 | | | 3 | |
| | 67-99 | சாதாரி | 9 | 5 | சாதாரிக்கு உரிய யாப்பு விகற்பத்தோடு பழம் பஞ்சுரத்திற்குரிய யாப்பும் கூட்ட 10 ஆகும். அவற்றுள் பழம் பஞ்சுரத்திற் குரிய 23-ஆம் யாப்பு ஓசை ஒப்புமை கருதி ஒரு கட்டளையாகக் கொள்ள கட்டளை 9 ஆதல் புலனாம். |
| | | | - | - | |
| | 67-80 | | | 1 | |
| | 81-83 | | | 2 | |
| | 84-88 | | | 3 | |
| | 89-93 | | | 4 | |
| | 94-99 | | | 5 | |
| | 100-116 | (பழம் பஞ்சுரம்) | | 5 | |
| | | | | - | |
| | 100-107 | | | 1 | |
| | 108 | | | 2 | |
| | 109 | | | 3 | |
| | 110-112 | | | 4 | பண் அமைதி நோக்காது சித்திருக்கவி என்னும் சிறப்பு நோக்கித் திரு இயமகப் பண்களின் பின் வைக்கப்பெற்றது. |
| | 113-116 | | | 5 | |
| | 117 | (மாலை மாற்று) | | 1 | |
| | | | | - | |
| | | பண்: கௌசிகம் | 1 | 1 | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 3 | 118-123<br>124,125<br><br>பதிகம்<br>மறியார்<br>கரத்து<br>எந்தை | புற<br>நீர்மை<br>அந்தாளிக்<br>குறிஞ்சி | 1<br>-<br>1 | -<br>1<br>- | கல்வெட்டில் கண்ட திருவிடை வாய்த்திருப்பதிகம், முதல் திருமுறை யில் 30-33 தக்கரா கப் பதிகங்களை யோ, 2-ஆம் திரு முறையில் 35-37 இந்தளப் ப திகங் களையோ ஒத்து இசைத்தற்கு ஏற்ற இசை அமைதி உடையது. |
| ஆக 1-3 ஆம் திரு முறை களில் | 384 | 22 | 66 | 93 | |
| 4 | 1 | கொல்லி | 1 | 1 | |
| | | | - | - | |
| | 2-7 | காந் | 1 | 3 | |
| | | தாரம் | - | - | |
| | 2-4 | | | 1 | |
| | 5-6 | | | 2 | |
| | 7 | | | 3 | |
| | 8 | பியந்தைக்<br>காந்தாரம் | 1 | 1 | ஓசைத் திறத்தால் ஒரே கட்டளையாக அடங்குவன. |
| | 9 | சாதாரி | 1 | 1 | |
| | 10,11 | காந்தார | 1 | 1 | |
| | | பஞ்சமம் | - | | |
| | 12,13 | பழந்தக்க | 1 | 1 | |
| | | ராகம் | - | - | |
| | 14,15 | பழம் | 1 | 2 | |
| | | பஞ்சுரம் | - | - | |
| | 14 | | | 1 | |
| | 15 | | | 2 | |
| | 16-18 | இந்தளம் | 1 | 1 | |
| 7 | 17-29 | | | 1 | |
| | 30 | | | 2 | |
| | 31-37 | கொல்லி | 3 | 3 | |
| | | | - | - | |
| | 31,32 | | | 1 | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 7 | 33-36 | | | 2 | |
| | 37 | | | 3 | |
| | 38-46 | (கொல் | 3 | 4 | |
| | | விக் கௌ | - | - | |
| | | வாணம்) | | 1 | |
| | 38,39 | | | 2 | |
| | 40,46 | | | 3 | |
| | 41 | | | 4 | 1, 2, 3 - ஆம் யாப்புகள் சீர்வகையால் வேறுபடினும் ஓசை ஒப்புமை நோக்கி ஒரு கட்டளையாகவும் 4-ஆம் யாப்பு ஒரு கட்டளையாகவும் 5-ஆம் யாப்பு ஒரு கட்டளையாகவும் கொள்ளத்தக்கன. |
| | 42 | | | - | |
| | 43-45 | | | | |
| | 47-53 | பழம் | (1)+2 | 5 | |
| | | பஞ்சுரம் | | - | |
| | 47 | | | 1 | |
| | 48,49 | | | 2 | |
| | 50 | | | 3 | |
| | 51 | | | 4 | |
| | 52,53 | | | 5 | |
| | 54-70 | தக்கேசி | 6 | 1 | 'தக்கேசிப் பேரிசை யாறாக்கி என்னும் தொடரைத் தக்கேசிப் பேரிசை யொன்றாக்கி எனத் திருத்திக் கொள்ளுதல் வேண்டும். |
| | | | | - | |
| | 71-75 | காந்தாரம் | 2 | 4 | 1,2-ஆம் யாப்பு ஒரு கட்டளை யாகவும் 3-4 ஆம் யாப்பு மற்றொரு கட்டளை யாகவும் கொள்ளத்தக்கன. |
| | | | - | - | |
| | 71 | | | 1 | |
| | 72 | | | 2 | |
| | 73,75 | | | 3 | |
| 4 | 19,20 | சீகா மரம் | 1 | 2 | |
| | | | - | - | |
| | 19 | | | 1 | |
| | 20 | | | 2 | |
| | 21 | | | | |
| | 22-79 | குறிஞ்சி | 1 | 1 | |
| | | திரு | 1 | 1 | |
| | | நேரிசை | | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 80-113 | திரு விருத்தம் | 1 | 1 | |
| 5 | 1-100 | திருக் குறுந் தொகை | 1 | 1 | |
| 6 | 1-99 | திருத் தாண் டகம் | 1 | 1 | |
| ஆக 4-6 திரு முறை களில் | 312 | 10 | 14 | 18 | |
| 7 | 1-12 | இந்தளம் | 2 | 9 | ஒன்பது யாப்பு விகற்பங்கள் உளவேனும் தாளம் பற்றிய கட்டளை விகற்பங்கள் இரண்டில் அடங்குமெனக்கொள்ளுதல் பொருந்தும். |
| | | | - | - | |
| | 1 | | | 1 | |
| | 2,4,9 | | | 2 | |
| | 3 | | | 3 | |
| | 5,6 | | | 4 | |
| | 7 | | | 5 | |
| | 8 | | | 6 | |
| | 10 | | | 7 | |
| | 11 | | | 8 | |
| | 12 | தக்க | 2 | 9 | |
| | 13-16 | ராகம் | - | 4 | ஓசை ஒப்புமை பற்றி இவை நான்கையும் இரண்டு கட்டளையாக அடக்குதல் வேண்டும். |
| | 12 | | | - | |
| | 14 | | - | 1 | |
| | 15 | | | 2 | |
| | 16 | நட்ட | 2 | 3 | |
| | 17-30 | ராகம் | - | 4 | 'காந்தாரம் பிரித்து இரண்டாம்' என்றமையால் காந்தாரமும் பியந்தைக் காந்தாரமுமென இரு பண்களாகக் கொண்டு மேற் |
| | 74 | பியந்தைக் | | 2 | |
| | 76 | காந்தாரம் | | - | |
| | | காந்தார | | 4 | |
| | 77 | பஞ்சமம் | 1 | 1 | |
| | | நட்ட | - | - | |
| | 78-82 | பாடை | 2 | 1 | |
| | | | - | - | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | | - | 2 | குறித்த இரண்டி னுள் இதுவும் ஒன்றாக அடக்கப் படும். |
| 7 | 78-80,82 | | | - | |
| | 81 | | | 1 | |
| | 83-85 | புற நீர்மை | 2 | 2 | |
| | | | | 2 | |
| | 83,85 | | - | - | ஓசை பற்றி ஒரு கட்டளையாகக் கொள்ளப்பட் டன. (86-89) |
| | 84 | | - | 1 | |
| | 86-89 | சீகாமரம் | 1 | 2 | |
| | 86,89 | | - | 2 | |
| | 87,88 | குறிஞ்சி | 2 | - | 94-ஆம் பதிகம் குறிஞ்சிக்குரிய தாகக் கொள்ளப் பட்டது. |
| | 90-93 | | - | 1 | |
| | | | | 2 | |
| | | | | 3 | |
| | 90 | | | - | முதல் யாப்பு ஒரு கட்டளையாகவும் மற்றொரு கட்ட ளையாகவும் கொள்ளத்தக்கன. |
| | 91,93,94 | | | 1 | |
| | 92 | | | 2 | |
| | | | | 3 | |
| | 95 | செந் துருத்தி | 1 | 1 | இது பஞ்சமப் பண் என்று குறிக்க பெற்றுள்ளது. திருமுறை கண்ட புராண அமைப்பு நோக்கியும் யாப்பு அமைதி நோக்கி யும் கவுசிகமாகக் கொள்ளப்பட்டது கவுசிகத்திற்கு இரண்டு கட்டளை கூறப்பட்டன. ஒன்றுதான் தெளி வாகத் தெரிகிறது. |
| | | | - | - | |
| | 96 | கவுசிகம் | 2 | 1 | |
| | | | - | - | |
| | 97-100 | பஞ்சமம் | 1 | 1 | |
| | | | - | | |
| ஆக 7-ஆம்திரு முறை யில் | 100 | 16 | 31 | 46 | |

## 3. இசையமைதி

நாளும் இன்னிசையால தமிழ் பரப்பும் நன்னோக்கத்துடன் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பியாரூரர் ஆகிய மூவரும் எல்லாம் வல்ல இறைவனை இன்னிசையாற் பரவிப் போற்றிய செந்தமிழ்ப் பாடல்களே தேவாரம் என்பது முன்னர் விளக்கப்பெற்றது. தேவாரத் திருப்பதிகங்களைத் திருவாய் மலர்ந்தருளிய பெருமக்கள் மூவரும், கலைக்கெலாம் பொருளாய் விளங்கும் கண்ணுதற் கடவுள் திருவருளால் இயலிசைத் தமிழ் வளர்த்த அருளாசிரியர்களாவர். அவர்கள் இத் திருப்பதிகங்களைத் திருவாய் மலர்ந்தருளும் போதே இன்னிசையுடன் பாடிப் போற்றினார்கள். இச்செய்தி, அன்னோர் அருளிய திருப்பதிகங்களாலும், அவர்தம் வரலாற்று நிகழ்ச்சிகளை விளக்கும் முறையில் நம்பியாண்டார் நம்பி, சேக்கிழாரடிகள் முதலிய பெருமக்கள் கூறிய அரிய குறிப்புக்களாலும் இனிது விளங்கும்.

இசைப்பாடல்கள் இருவகைப்படும்: இயற்புலவன் பாடும் பொழுதே இசையுடன் பாடப்பெற்றன ஒருவகை; புலவர்களால் முதற்கண் சுத்தாங்சுமாகப் பாடப்பெற்றுப் பின்னர் இசை வல்லாரால் இசையமைக்கப் பெற்றன மற்றொரு வகை. தேவார ஆசிரியர் மூவரும் அருளிய திருப்பதிகங்கள், அப்பெருமக்கள் திருவாயிலிருந்து வெளிவரும் பொழுதே பண்ணார் இன் தமிழாய் வெளிப்பட்ட இன்னிசைப் பாடல்களாதலின் மேற் குறித்த இருவகையிசைப் பாடல்களுள் முதல் வகையில் அடங்கும் இப்பதிகங்களைப் 'பண் சுமந்த பாடல்'* (*"பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளும் பெண் சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துரை யான்" திருவாசகம் - திருவம்மானை 8) எனப்போற்றுவர் சான்றோர்.

திருஞானசம்பந்தப் பிள்ளையார், தாம் பாடிய திருப்பதிகங்கள் இனிய பண்ணமைந்த இசைத்தமிழ்ப் பாடல்கள் என்பதனை 'ஏழேயேழே நாலேமூன்றியலிசை யிசையியல்பா' (1-126 -11) எனவும், 'ஏழின்னிசை மாலை' (2-37-11) எனவும், 'சந்தமிவை தண்டமிழின் இன்னிசையெனப் பரவுபாடல்' (3-76-11) எனவும் வரும் தொடர்களில் தெளிவாகக் குறித்துள்ளார். ஆளுடைய பிள்ளையார் நாளும் இன்னிசையால் செந்தமிழ் வளர்த்த சிறப்பினையும் அவர் மேற்கொண்ட இசைத்தமிழ்த் தொண்டு இனிது நிகழும் வண்ணம் இறைவன் திருக்கோலக்காவில் பிள்ளையாருக்குப் பொற்றாளம் ஈந்தருளிய அருள் நிகழ்ச்சியினையும் நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள்,

"நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும்
ஞானசம்பந்த னுக்குல கவர்முன்
தாளம் ஈந்து அவன் பாடலுக் கிரங்கும்
தன்மையாளனை என்மனக் கருத்தை
ஆளும் பூதங்கள் பாட நின்றாடும்
அங்கணன்றனை எண்கணம் இறைஞ்சுங்
கோளிலிப் பெருங் கோயிலு ளானைக்
கோலக் காவினிற் கண்டு கொண்டேனே"

(7-62-8)

எனவரும் திருப்பாடலில் உளமுருகிப் போற்றியுள்ளார். தொண்டர்சீர் பரவுவாராகிய சேக்கிழாரடிகள், 'இன்னிசையேழும் இசைந்த செழுந்தமிழ் ஈசற்கே, சொன் முறைபாடும் தொழும்பருள்பெற்ற' தொடக்கினராய ஞானசம்பந்தப் பிள்ளையாரைப் 'பண்ணியல் கதியே'எனவும், 'தேனக்க மலர்க் கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்குங் கானத்தின் எழுபிறப்பு' எனவும் சிந்தை மகிழ்ந்து போற்றியுள்ளார். இக்குறிப்புக்களை கூர்ந்து நோக்குங்கால் ஆளுடைய பிள்ளையார் அருளிய திருப்பதிகங்கள் யாவும் பழைய இசைத்தமிழ்ப் பாடல்களுக்குரிய சிறந்த இலக்கியங்கள் என்பது நன்கு தெளியப்படும்.

தாண்டக வேந்தராகிய திருநாவுக்கரசர், இயற்றமிழிலும் இசைத்தமிழிலும் வல்லவர்; இசையுருவாகிய இறைவனை நாடோறும் நன்னீரும் நறுமலரும் கொண்டு போற்றும் கடப்பாடுடையராய் ஒழுகியவர்; நாள் வழிபாட்டில் இறைவனது பொருள்சேர் புகழை நினைந்து நெஞ்சம் நெக்குருகி இசைத் தமிழ்ப் பாடல்களாற் பரவிப் போற்றும் நல்லியல்பினர். இங்ஙனம் தன் பொன்னடிக்கு இன்னிசைபாடும் பணியினராகிய அன்பரை முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் இயலிசைத் தமிழ்த்தொண்டில் மேலும் ஈடுபடுத்தித் தன் அருளியல் திறத்தையும் அறிவுறுத்தி நன்னெறிப் படுத்தியருளினான். அவனருளே கண்ணாகக் கண்டு தெளிவுபெற்ற திருநாவுக்கரசர், இன்னிசைத் தமிழ்ப் பாடல்களாகிய சொன்மாலைகளால் இறைவனைப் பாடிப் போற்றி இன்புற்றோர் என்பன அப்பரடிகள் வரலாற்றிலிருந்து அறியப்படும் நிகழ்ச்சிகளாகும். இந்நுட்பம்,

"சலம் பூவொடு தூப மறந்தறியேன்
தமிழோடிசை பாடல் மறந்தறியேன்" (1-1-6)

"பாட்டினான் தன பொன்னடிக் கின்னிசை" (5-63-3)

"பத்திமையாற் பணிந்தடியேன் றன்னைப் பன்னாள்
பாமாலை பாடப் பயில்வித்தானை" (6-54-3)

"பன்னியநூல் தமிழ் மாலை பாடுவித்தென்
சிந்தை மயக்கறுத்த திரு அருளினானை" (6-84-4)

"வரி மூரி பாடிநின்று வல்லவா றடைந்து நெஞ்சே" (4-25-6)

எனவரும் வாகீசர் அருந் தமிழால் இனிது புலனாம்.

இனி, நல்லிசை ஞானசம்பந்தரும் நாவினுக்கரசரும் பாடிய நற்றமிழ் மாலையாகிய திருப்பதிகங்களை இயலிசை நலம் தோன்ற நாடொறும் இறைவன் திருமுன் ஓதி மகிழும் பத்திமையாளர் நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் என்பது,

"நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக்கரையனும்
பாடிய நற்றமிழ் மாலை
சொல்லியவே சொல்லி யேத்துகப்பானை" (7-67-5)

எனவரும் அவரது வாய்மொழியால் நன்கு விளங்கும். சுந்தரர் அருளிய திருப்பதிகங்கள், அவர் திருவாயிலிருந்து வெளிவரும் பொழுதே இன்னிசையுடன் வெளிப்பட்ட பண்ணார்ந்த பாடல்கள் என்பது

"நண்புடைய நன்சடையன் இசைஞானி சிறுவன்
நாவலர்கோன் ஆரூரன் நாவினயந்துரைசெய்
பண்பயிலும் பத்துமிவை பத்திசெய்து நித்தம்
பாடவல்லார் அல்லலொடு பாவமிலர்தாமே"
(7-6-11)

"உளங் குளிர் தமிழ்மாலை" (7-29-10)

"ஒலிகொள் இன்னிசைச் செந்தமிழ்பத்தும்" (7-67-11)

"மந்த முழவம் இயம்பும் வளவயல் நாவலாரூரன்
சந்தம் இசையொடும் வல்லார்" (7-73-11)

"ஏழிசை யின்றமிழால் இசைந்தேத்திய பத்தினையும்
ஆழிகடலரையா அஞ்சையப்பர்க் கறிவிப்பதே"
(7-100-10)

என நம்பியாரூரர் வாய்மொழிகளாக வரும் திருக்கடைக் காப்புத் தொடர்களால் இனிது விளங்கும்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் வெண்ணெய் நல்லூர் அருட்டுறையிறைவரால் தடுத்தாட் கொள்ளப் பெற்று முதன் முதற் பாடிப் போற்றிய 'பித்தா பிறை சூடீ' என்னும் திருப்பதிக அமைப்பினை,

"கொத்தார் மலர்க் குழலாளொரு கூறாயடி யவர்பால்
மெய்த்தாயினும் இனியானையவ் வியனாவலர் பெருமான்
பித்தா பிறை சூடீயெனப் பெரிதாந்திருப் பதிகம்
இத்தாரணி முதலாமுல கெல்லாமுய எடுத்தார்"

"முறையால்வரு மதுரத்துடன் மொழியிந்தள முதலிற்
குறையா நிலை மும்மைப்படி கூடுங் கிழமையினால்
நிறைபாணியின் இசைகோள் புணர் நீடும்புகழ் வகையால்
இறையான் மகிழ் இசைபாடினன் எல்லாம்நிக
ரில்லான்"-(பெரிய, தடுத்தாட்-74,75)

எனவரும் பாடல்களில் சேக்கிழாரடிகள் இனிது விளக்கி யுள்ளார். இவ்விளக்கத்தினைக் கூர்ந்து நோக்குங்கால் சுந்தரர் அருளிய திருப்பதிகங்கள் யாவும் சந்த நலம் வாய்ந்த செந்தமிழ் இசைப்பாடல்களே யென்பது நன்கு புலனாம்.

நம்பியாரூரர் திருவீழிமிழலைப் பெருமானை நோக்கி, "விண்ணிழி விமானத்தில் வீற்றிருந்தருளும் பெருமானே, நீவிர் இத்திருக்கோயிலில் அமர்ந்திருக்கும் நிலையிலேயே திருஞான சம்பந்தரும் அப்பரடிகளும் பாடிப்போற்றும்இனிய இசைத் தமிழ்ப் பாடல்களைக் கேட்டு மகிழ வேண்டுமென்னும் பெரு வேட்கையால் அப்பெருமக்கள் இருவர்க்கும் நாடோறும் படிக் காசு கொடுத்தருளினீர். அவ்விரு பெருமக்களும் சொல்லி யனவே சொல்லி நும்மை இன்னிசைத் தமிழாற் பாடிப் போற் றும் இயல்புடைய அடியேற்கும் அங்ஙனம் அருள் புரிவீராக" என வேண்டிப் போற்றுகின்றார்.

"பரந்த பாரிடம் ஊரிடைப்பலி பற்றிப் பார்த்துணுஞ் சுற்றமாயினீர்
தெரிந்த நான் மறையோர்க் கிடமாய திருமிழலை
இருந்து நீர் தமிழோடிசை கேட்கும் இச்சையாற்காசு நித்தல் நல்கினீர்
அருந்தண் வீழிகொண்டீர் அடியேற்கும் அருளுதிரே"

என்பது சுந்தரர் பாடிய திருப்பாடல். இது திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகிய பெருமக்கள் இருவரது இசைத்தமிழ்த் திறத்தையும் அன்னோர் பாடியருளிய தெய்வத் தமிழ் இசையில் தோய்ந்து மகிழ்ந்த சுந்தரரது இசைத் தமிழ் ஆற்றலையும் இனிது புலப்படுத்துவதாகும்.

தெய்வத்தைப் போற்றிய இசைப்பாடலை 'வாரம்' என வழங்குவர் இளங்கோவடிகள். வாரம் என்ற சொல், முதல் நடை, வாரம், கூடை, திரள் என்னும் இசையியக்கம் நான்கினுள் ஒன்றாய்ச் சொல்லொழுக்கமும் இசையொழுக்கமும் நிரம்பிய இசைப்பாடலைக் குறித்த பெயராகும். இழுமென வொழுகிய இன்னோசையும் செம்பாகமாகப் பொருளுணர்த்தும் தெளிவும் அமைந்தவை மூவர் முதலிகள் அருளிய திருப்பதிகங்களாதலின், அவை 'தேவாரம்' என வழங்கப் பெறுவனவாயின என்பது முன்னர் விளக்கப்பெற்றது.

வார இயக்கத்தில் அமைந்த இத்தெய்வ இசைப் பாடல் களுக்கு இசைபுணர்குறிநிலை யுணர்ந்து இசையமைத்துப் பாடுவ

தென்பது, இசைத் திறத்தில் முழுவதும் வல்ல நலிலிசைப் புலவர்களால் தான் முடியும். இசைத் துறையில் நிரம்பிய தேர்ச்சி யில்லாதார் இயற் பாடலொடு புணர்க்கும் வார இசை, பாடற் பொருளோடு இயைந்து ஒன்றாகாது சிதையும் என்பர்.

"முதல்வழியாயினும் யாப்பினுட் சிதையும்
வல்லோன் புணரா வாரம் போன்றே" (தொல்-மரபு.107)

எனத் தொல்காப்பிய மரபியலிற் காணப்படும் நூற்பாவில் 'இசைத் துறையில் மிகத் தேர்ச்சி பெற்றவர்களாலன்றி ஏனை யோராற் புணர்த்தற்கரிய நுட்பம் வாய்ந்தது வார இயக்கம்' என்ற உண்மை உவமையாக எடுத்தாளப் பெற்றமை காணலாம். எனவே இயற்றமிழ்ச் சொற்பொருள் நலங்களும் இசைத்தமிழ் ஒலிநயமும் சிதையா வகை ஒன்றிப் பொருந்தும் முறையில் அமைந்த இனிய இயலிசைத் தமிழ்ப் பாடல்களே வாரப் பாடல் களாம் என்பதும், முழுமுதற் கடவுளாகிய தெய்வத்தைப் பரவிப் போற்றும் முறையில் மூவர் முதலிகள் அருளிய திருப்பதிகங்கள் இங்ஙனம் இயலிசை நலம் வாய்ந்த வாரப் பாடல்களாக அமைந்தமை பற்றித் தேவாரம் என வழங்கப் பெற்றன என்பதும் நன்கு துணியப்படும்.

செவிப்புலனுக்கு இன்பந்தந்து உணர்வூட்டும் நாதத்தை 'ஓசை' எனவும், அவ்வுணர்வுடன் நற்பொருளை அறிவுறுத்தும் முறையில் மக்களது உள்ளத்திற் பதியும் செவிப்புலனாம் அணுத் திரளை 'ஒலி' எனவும் பகுத்துணர்த்துவர் அறிஞர். உயிர்க்குயிராய் விளங்கும் இறைவன், மேற்குறித்த 'ஓசை' 'ஒலி' ஆகிய இருவகை ஒலி நுட்பங்களாகவும் பிரிப்பின்றி இயைந்து நின்று உலகங்கள் எல்லாவற்றையும் இயக்கியருள்கின்றான் என்பர் பெரியோர். இவ்வுண்மையினை,

"ஓசை யொலியெலாம் ஆனாய் நீயே
உலகுக் கொருவனாய் நின்றாய் நீயே"

எனவரும் திருத்தாண்டகம் இனிது புலப்படுத்துவதாகும். அருளாளனாகிய இறைவன் மன்னுயிர்களின் உள்ளத்தையுருக்கி இன்ப அன்பினைப் பெருக்கும் முறையில் இனிய இசையுருவாக விளங்கி நலந் தருகின்றான் என்றும், இங்ஙனம் இசையுருவாய் விளங்கும் சிவபரம் பொருளைப் போற்றி வழிபாடு செய்தற்கு ஏற்புடையதாய் இசைத் திறத்திற் சிறந்து விளங்கும் மொழி தமிழ் என்றும், முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் பண்ணார் இன் தமிழாகவும் பாட்டகத்து இசையாகவும் விளங்கி உள்ளத்திற்கு உவகையளிக்கின்றான் என்றும், பாட்டிற் பண்ணாக இசைந்த அப்பரமன், தன்னை இன்னிசைச் செழும் பாடல்களாற் பரவிப் போற்றும் மெய்யடியார்களுக்குத் தானே எளிவந்து முன்நின்று

இன்னருள் வழங்குகின்றான் என்றும் தேவார ஆசிரியர்கள் தாம் அருளிச் செய்த திருப்பதிகங்களிற் பலவிடங்களிலும் குறித்துப் போற்றியுள்ளார்கள்.

இயல் இசை நாடகம் என்னும் மூன்று துறைகளிலும் வளம் பெற்று வளர்ந்த தமிழ் மொழியானது. பழத்தினிற் சுவையும் கண்ணிடை மணியும் போன்று இசை வளர்ச்சிக்கு இன்றியமையாததாய்ப் பண்ணிடையே கலந்து நின்று இசைக்குச் சுவையும் ஒளியும் தரவல்லதாகும். இந்நுட்பம்,

'பண்ணினார் பாடலாகிப் பழத்தினில் இரதமாகிக்
கண்ணினார் பார்வையாகி' (4-70-4)

எனத் திருநாவுக்கரசரும்,

'பண்ணிடைத் தமிழொப்பாய் பழத்தினிற் சுவையொப்பாய்
கண்ணிடை மணியொப்பாய்' (7-29-6)

என நம்பியாரூரரும் இறைவனை உவமித்துப் போற்றுதலால் இனிது விளங்கும். ஞானத்திரளாய் நின்ற பெருமான் பண்ணாகவும் பண்ணகத்தே இனிய ஓசையினையுடைய தமிழின் உருவாகவும் திகழ்கின்றான் என்பது,

'பண்ணும்பத மேழும்பல வோசைத்தமி ழவையும்
உண்ணின்றதொர் சுவையும்முறு தாளத்தொலி பலவும்
மண்ணும்புன லுயிரும்வரு காற்றும்சுடர் மூன்றும்
விண்ணும் முழுதானானிடம் வீழிம்மிழலையே' (1-11-4)

'என்னானவன் இசையானவன்'
(1-16-6)

'இயலும் இசையானை'

'பாவின் இசைக் குழகர்'
(3-46-3)

என ஆளுடைய பிள்ளையாரும்,

'பண்ணில் ஓசை பழத்தினில் இன்சுவை' (5-47-8)

'பழத்தின் இரதமாம் பாட்டிற் பண்ணாம்' (16-15-11)

'மருவற்கினிய
பண்ணகத்தான் பத்தர் சித்தத்துளான்' (4-112-6)

'கந்திருவம் பாட்டிசையிற் காட்டுகின்ற
பண்ணவன் காண் பண்ணவற்றின் திறலானான்காண்'
(6-52-1)

'முத்தமிழும் நான்மறையும் ஆனான்கண்டாய்' (6-23-9)

என ஆளுடைய அரசும்,

'ஏழிசையாய் இசைப்பயனாய்' (7-51-10)

'பாட்டகத்து இசையாகி நின்றானை'

(7-62-3)

'வண்டமிழ் வல்லவர்கள்
ஏழிசையேழ் நரம்பின் ஓசையை' (7-83-6)

என ஆளுடைய நம்பியும் தமது அருள்வாழ்விற் கண்டுணர்த்திய அனுபவ உண்மையாகும்.

எங்கும் நீக்கமற நிறைந்து விளங்கும் முழுமுதற் கடவுளை வழிபட்டு இன்புறுதற்கேற்ற சாதனமாவன, இறைவனது பொருள்சேர் புகழை விரித்துரைக்கும் தோத்திரங்களாகிய இனிய இசைப்பாடல்களேயாகும். திருக்கோயில்களில் நாள் வழிபாட்டில் இறைவனுக்குத் திருமஞ்சனமும், நறுமலரும், திருவமுதும், தீபதூபமும், நான்மறை முழக்கமும் அந்தணர் வேள்வியும் இன்றியமையாதவாமாறு போலவே, இறைவனது மெய்ம்மையான புகழ்த்திறங்களைப் பரவிப் போற்றும் செந் தமிழ்க் கீதமாகிய தெய்வப் பாடல்கள் மிகவும் இன்றியமை யாதனவாகும். இவை திருக்கோயில்களில் இறைவனை வழிபட்டு நலம்பெறக் கருதிவரும் பல்லாயிரவராகிய மக்களது உள்ளத்தை நெகிழ்வித்து அன்னோருள்ளத்தில் அருளாளனாகிய இறைவன் கோயில் கொண்டு விளங்கும் வண்ணம் பேரன்பாகிய பத்தியை விளைவிக்கும் ஆற்றல் வாய்ந்தன. ஆதலின் அண்ணலாகிய இறைவனைப் போற்றிய இசைத்தமிழ்ப் பாடல்களாகிய இவற்றைப் 'பத்திமைப்பாடல்' என வழங்குவர் சான்றோர். இறைவன் திருக்கோயில்களில் இன்றியமையாது இடம்பெறத் தக்க வழிபாட்டு முறைகளில் பாடுதலாகிய இத் திருத்தொண்டு மிகவும் சிறந்ததாகும். இனிய இசைத்தமிழ்ப் பாடல்களாகிய தோத்திரங்களைத் தாளத்தோடும் யாழ், வீணை, முழவு, மொந்தை முதலிய இசைக்கருவிகளோடும் அன்புடைய அடியார் பலர் கூடிப் பாடும் கூட்டத்தை விட்டு இறைவன் கணப்பொழுதும் பிரியாது உடனிருந்து அருள்புரிவான் என்பது ஆன்றோர் துணிபாகும்.

'தமிழின் நீர்மை பேசித் தாளம் வீணைபண்ணி நல்ல'

'முழவம் மொந்தை மல்கு பாடல் செய்கையிடம் ஓவார்'

(1-73-8)

'வந்தணைந் தின்னிசை பாடுவார்பால் மன்னினார்'

(1-8-5)

என ஞானசம்பந்தரும்,

'யாழின் பாட்டையுகந்த அடிகளே' (5-41-5)

'மனத்தகத்தான் தலைமேலான் வாக்கினுள்ளான்
வாயாரத் தன்னடியே பாடுந்தொண்டர்
இனத்தகத்தான்' (6-8-5)

என நாவுக்கரசரும் அருளிய திருப்பாடல்கள், பத்தராய்ப் பாடுவார். எல்லார்க்கும் இறைவன் எளிவந்து அருளுந் திறத்தை இனிது புலப்படுத்துதல் அறிந்து மகிழத்தக்கதாகும்.

வெண்ணெய் நல்லூர்ப்பெருமான், நம்பியாரூரராகிய சுந்தரரது திருமணத்தின் போது முதுவேதியர் கோலத்துடன் வந்து 'ஆரூரனே, எனக்கு உன் குடி முழுதும் அடிமை' எனக்கூறி, அதற்குச் சான்றாக எழுதுந் தமிழ்ப்பழ ஆவணங்காட்டி ஆரூரரை அடிமை கொண்டருளி அவரை நோக்கி, 'நீ நம்முடன் வன்மொழிகளைப் பேசினை ஆதலால் வன்றொண்டன் என்ற பெயரைப் பெற்றாய். நமக்கு அன்பினாற் செய்யத்தக்க வழிபாட்டிற்குரிய மந்திரம் இசை நலம் வாய்ந்த இனிய தமிழ்ப் பாடலேயாகும். ஆதலால் இந்நிலவுலகில் இயலிசைத் தமிழ்ப் பாடல்களால் நம்மைப் பாடிப் போற்றுவாயாக' எனப் பணித்தருளினார் என்பது வரலாறு. இந்நிகழ்ச்சி,

'மற்று நீ வன்மைபேசி வன்றொண்ட னென்னும் நாமம்
பெற்றனை நமக்கும் அன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க
அர்ச்சனை பாட்டேயாகும் ஆதலால் மண்மேல் நம்மைச்
சொற்றமிழ் பாடுகென்றார் தூமறை பாடும் வாயார்' (தடுத்-70)

எனத் திருத்தொண்டர் புராணத்தில் தெளிவாகக் குறிக்கப் பெற்றுளது.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பியாரூரர் முதலிய அருளாசிரியர்கள் காலத்தில் தமிழ்நாட்டுத் திருக்கோயில் களில் நிகழும் வழிபாட்டு நிகழ்ச்சிகளில் தமிழ் மொழியே முதலிடம் பெற்று விளங்கியது. இறைவனது பெருங்கருணைத் திறத்தை வியந்து போற்றும் பத்திமைப் பாடலாகிய இசைத் தமிழ்ப் பாடல்கள் அக்காலத்தில் சிறப்பிடம் பெற்றன. இச் செய்தி,

'செந்தமிழோர்கள் பரவியேத்தும்
சீர்கொள் செங்காட்டங் குடியதனுள்
கந்தம் அகிற்புகையே கமழும் கணபதியீச்சரம்' (1-6-9)

எனவும்,

'தம்மலரடியொன் றடியவர் பரவத்
தமிழ்ச் சொலும் வடசொலுந் தாள் நிழற்சேர

அம்மலர்க் கொன்றை யணிந்தஎம் அடிகள்
அச்சிறு பாக்கம தாட்சிகொண்டாரே'. (1-77-4)

எனவும்,

'செந்தமிழர் தெய்வமறை நாவர்செழு
நற்கலை தெரிந்த அவரோடு
அந்தமில் குணத்தவர்கள் அர்ச்சனைகள்
செய்ய அமர்கின்ற அரனூர்.... வீழிநகரே'. (3-80-4)

எனவும்,

'பண்ணியல் பாடலறாத ஆவூர்ப் பசுபதியீச்சரம்' (1-8-1)

'பத்திமைப் பாடலறாத ஆவூர்ப் பசுபதியீச்சரம்' (1-8-2)

எனவும் வரும் தமிழ் ஞானசம்பந்தர் வாய்மொழிகளால் நன்கு விளங்கும். மேற்காட்டிய தொடர்களைக் கூர்ந்து நோக்குங்கால் ஆளுடைய பிள்ளையார் காலத்தில் தமிழ் நாட்டுத் திருக் கோயில்களில் தமிழ்மொழிப் பாடல்களும் வடமொழி நான் மறைகளும் இறைவழிபாட்டிற்கு இன்றியமையாத மறைமொழி களாக ஒப்ப ஆளப்பெற்ற திறம் இனிது புலனாதல் காணலாம்.

பத்தராய்ப் பணியும் மெய்யன்பினராகிய அடியார் பலர், பரமனையே பாடும் இசைத்தமிழ்ச் செல்வர்களாய்த் திருக் கோயில்களில் தங்கியிருந்து உமையொருபாகனாகிய இறைவனை இன்னிசைப் பாடல்களாகிய தெய்வப் பாடற்களாற் பரவிப் போற்றியும், அச்செழும் பாடல்களின் பொருள் நலங்களில் திளைத்தும், தம்மையொத்த மெய்யடியார்களுடன் இறைவனது அருளியல்பினை யெடுத்துரைத்து அன்பினால் அளவளாவியும் நெஞ்ச நெக்குருகிக் கண்ணீர் வார முழுமுதற் கடவுளை இடை விடாது தியானித்தும் வழிபட்டிருந்தனர். இச்செய்தி,

'கீதத்தை மிகப்பாடும் அடியார்கள் குடியாகப்
பாதத்தைத் தொழநின்ற பரஞ்சோதி பயிலுமிடம்' (2-43-5)

'பண்ணொன்ற இசைபாடும் அடியார்கள் குடியாக
மண்ணின்றி விண்கொடுக்கும் மணிகண்டன் மருவுமிடம்'
(2-43-8)

'பாடுவாரிசை பல்பொருட் பயனுகர்ந் தன்பாற்
கூடுவார் துணைக் கொண்டதம் பற்றறப் பற்றித்
தேடுவார்பொரு ளானவன் செறிபொழில் தேவூர்
ஆடுவானடி யடைந்தனம் அல்லலொன்றிலமே' (2-82-5)

'தென்தமிழ்க் கலை தெரிந்தவர் பொருந்திய தேவூர்
அன்பன் சேவடியடைந்தனம் அல்லலொன் றிலமே' (2-82-7)

'கலவ மாமயி லாளொர் பங்கனைக் கண்டு கண்மிசை
நீர்நெகிழ்த்திசை
குலவுமாறு வல்லார் குடிகொண்ட கோட்டாற்றில்' (2-52-7)

எனவரும் திருப்பதிகத் தொடர்களால் இனிது விளங்கும்.

தமிழ்நாட்டில் இசைத் திறத்தில் வல்ல ஆடவரும் மகளிரும் நாட்காலையே துயிலெழுந்து நீராடித் தூய சிந்தையுடன் திருக் கோயிலையடைந்து இறைவனது அருளியல்பினை நினைந்து ஆரா அன்பினால் நெஞ்ச நெக்குருகிக் கண்ணீர் மல்கி இனிய இசைப்பாடல்களைப் பாடியும், யாழ் வீணை முழவு மொந்தை முதலிய இசைக் கருவிகளை வாசித்தும், இசைப் பாடல்களின் சுவை நலங்கள் புலப்படும் வண்ணம் விறல்பட ஆடியும் தெய்வ வழிபாட்டில் மகிழ்ந்தார்கள்.

'துன்னிய மாதரும் மைந்தர் தாமுஞ் சுனையிடை
மூழ்கித்துதைந்த சிந்தைப்
பன்னிய பாடல் பயிலும்ஆவூர்ப் பசுபதியீச்சரம்' (1-8-10)

'புண்ணிய வாணரும் மாதவரும் புகுந்துடனேத்தப்
புனையிழையார்
அண்ணலின் பாடலெடுக்குங் கூடலாலவாய்' (1-7-3)

'அஞ்சுடரோ டாறுபத மேழினிசை யெண்ணரிய
வண்ணமுளவாய்
மஞ்சரொடு மாதர்பலருந் தொழுது சேரும் வயல்
வைகாவிலே' (3-71-6)

'இசை வரவிட்டியல் கேட்பித்துக்கல்ல வடமிட்டுத்
திசை தொழுதாடியும் பாடுவார் சிந்தையுட் சேர்வரே'
(3-9-6)

'பண்ணிய நடத்தொடிசை பாடும் அடியார்கள்
நண்ணிய மனத்தின் வழிபாடுசெய் நள்ளாறே' (2-33-2)

எனவரும் திருப்பதிகத் தொடர்கள், பண்டை நாளில் இசையில் வல்ல ஆண்களும் பெண்களும் திருக்கோயில்களிற் சென்று இறைவன் புகழைப் பண்ணார்ந்த பாடல்களாற் பாடி வழிபாடு செய்த திறத்தை நன்கு புலப்படுத்துவன.

தமிழேயன்றிப் பிறமொழிகளைத் தாய்மொழியாகப் பெற்று வேறுதிசையில் வாழும்ஆடவரும் மகளிரும் தமிழகத்தி லுள்ள திருக்கோயில்களை வழிபட்டு இங்குப் பாடப்பெறும் இசைத் தமிழ்த் திறங்களை நன்குணர்ந்து பாடும் பயிற்சியைப் பெற்றனர். பொழுது புலர்வதன் முன்னரே துயிலெழுந்து நீர்மூழ்கித் திருக்கோயிலில் வழிபடவரும் மாந்தரது மனவிருள் நீங்கும் வண்ணம் தாம் பயின்ற இசைத் தமிழ்ப் பாடல்களையும்

முன்னரே கற்றுணர்ந்த வடமொழித் தோத்திரங்களையும் ஏனைத் திசைமொழியிசைப் பாடல்களையும் வீணை முதலிய நரம்புக் கருவிகளில் வைத்து வாசித்து மகிழ்ந்தார்கள். இந் நிகழ்ச்சி,

'ஊறுபொரு ளின்றமி ழியற்கிளவி தேருமட மாதருடனார்
வேறுதிசை யாடவர்கள் கூற இசை தேருமெழில்
வேதவனமே' (3-78-4)

எனவும்,

'தென்சொல்விஞ்சமர் வடசொல் திசைமொழியெழில்
நரம்பெடுத்துத்
துஞ்சு நெஞ்சிருள் நீங்கத்தொழுதெழு தொல்புகலூரில்'
(2-92-7)

எனவும் வரும் திருஞானசம்பந்தர் தேவாரத் தொடர்களால் நன்கு புலனாதல் காணலாம்.

இசைத்திறத்தில் நன்கு தேர்ந்தவர்களேயன்றி இசைத் துறையிற் போதிய பயிற்சியும் குரல் வளமும் பொருளுணர்ந்து பாடும் மொழிப் பயிற்சியும் உடல் வன்மையும் நன்கு வாய்க்கப் பெறாத முதியவர்களும், இறைவன் பாற்கொண்ட பேரன்பாகிய பத்தியினால் தம்மால் இயன்ற அளவு பத்திமைப் பாடல்களாகிய இசைப் பாடல்களைப் பாடி இறைவனை வழிபட்டு மகிழ்ந் தார்கள். இச்செய்தி,

'கோழைமிடறாக கவிகோளுமிலவாக இசைகூடும் வகையால்
ஏழையடியாரவர்கள் யாவைசொன சொன்மகிழும் ஈசன்'
(3-71-1)

எனவரும் திருப்பாடலால் இனிது புலனாகும்.

பண்டை நாளில் தமிழகத்திலுள்ள திருக்கோயில்களில் தெய்வப் பாடல்களை இசையுடன் பாடுவோரும் யாழில் இசைப் போரும் ஆகிய இசைவாணர்கள், அழுக்கேறாத தூய உடையும் நோயின்றித் தூய்மை வாய்ந்த உடல் வனப்பும் மாசற்ற தூய நன்னெஞ்சும் உடையராய் விளங்கினர் என்பதனை,

'புகைமுகந் தன்ன மாசில் தூவுடை
முகைவா யவிழ்ந்த தகைசூழ் ஆகத்துச்
செவிநேர்பு வைத்த செய்வுறு திவவின்
நல்லி யாழ் நவின்ற நயனுடை நெஞ்சின்
மென்மொழி மேவலர் இன்னரம் புளர
நோயின் றியன்ற யாக்கையர் மாவின்
அவிர்தளிர் புரையும் மேனியர் அவிர்தொறும்
பொன்னுரை கடுக்குந் திதலையர் இன்னகைப்

பருமந்தாங்கிய பணிந்தேத் தல்குல்
மாசில் மகளிரொடு மறுவின்றி விளங்க'

(திருமுருகு 138-147)

எனவரும் தொடர்களால் சங்கப் புலவராகிய நக்கீரர் விரித்துக் கூறியுள்ளார்.

இங்ஙனமே தேவார ஆசிரியர்கள் காலத்தும் தென்னாட்டுத் திருக்கோயில்களில் இறைவனைச் சேவித்துத் தெய்வப்பாடல் பாடும் மகளிர், இனிய இசை மொழியும் உடல் வனப்பும் தூய்மையும் நற்குணங்களெல்லாவற்றுக்கும் இடனாகிய உள்ளத் தூய்மையும் ஒருங்குடையராய், எல்லாம் வல்ல முழு முதுற் கடவுளது அருள்மேனி வண்ணங்களும் வரம்பிலாற்றலும் நலம் வளர் ஞானவுரைகளும்ஆகிய பெருஞ் சீர்த்திகளைப் பொருளாகக் கொண்ட இன்னிசைச் செழும் பாடல்களை இறைவன் திரு முன்னர்ப் பாடி போற்றினார்கள். இச்செய்தியினை,

"பண்ணினல்ல மொழியார் பவளத்துவர் வாயினார்
எண்ணினல்ல குணத்தார் இணைவேல்வென்ற கண்ணினார்
வண்ணம்பாடி வலிபாடித்தம் வாய்மொழி பாடவே
அண்ணல் கேட்டுந்தானும் ஐயாறுடை ஐயனே"

(2-6-4)

எனவரும் திருப்பாடலில் ஆளுடைய பிள்ளையார் அழகுறக் குறிப்பிட்டுள்ளார்.

பண்ணார்ந்த பாடல்களால் இறைவனைப் பாடிப் போற்று தலாகிய இத்திருப்பணி யாவராலும் விரும்பி மேற்கொள்ளத் தக்க எளிமையும் இனிமையும் ஒருங்குடைய தென்பதும், இவ் வினிய சாதனத்தை மேற்கொள்ள மனமில்லாதார் இதனின் மிக்க மற்றைத் தொண்டுகளை மேற்கொண்டு பத்தி செய்ய இயலாதென்பதும் அருள நுபவமுடைய அடியார்களின் துணிபாகும்.

"பத்தனாய்ப் பாடமாட்டேன் பரமனே பரமயோகீ
எத்தினாற் பத்திசெய்கேன் என்னைநீ யிகழவேண்டா"

என அப்பரடிகள் தில்லைச் சிற்றம்பலவனை யிறைஞ்சிக் கூறும் இவ்வேண்டுகோள், இறைவன் பாற் பத்தி செய்தற்கு இன்றியமை யாத எளிய சாதனம் பாடும் பணியே என்ற இவ்வுண்மையினை நன்கு வலியுறுத்தல் காணலாம்.

திருக்கோயில்களில் திருவலகிடுதல், மெழுகுதல், நறுமலர் மாலை தொடுத்தல் என்ற இச்சரியைத் தொண்டுகள், ஒன்றினுக்கு ஒன்று பத்துமடங்கு மேற்பட்ட நற்பயன்களைத் தருவன. திருக்கோயிலில் திருவிளக்கிடுவோர் உண்மை நெறி யாகிய சிவஞானத்தைப் பெறுவர். இறைவனது மெய்ப்புகழை

விரித்துரைக்கும் இன்னிசைப் பாடலாகிய கீதத்தை மிகப்பாடும் அடியார்களுக்கு இறைவன் அருளுந்திறம், மேற்குறித்த தொண்டுகளால் விளையும் நற்பயன்களைக் காட்டிலும் அளவற்றனவாகும் இத்தகைய திருத்தொண்டின் பயன்களை அறிவுறுத்தும் முறையில் அமைந்தது,

"விளக்கினார் பெற்ற இன்பம் மெழுக்கினாற் பதிற்றியாகும்
துளக்கில் நன்மலர் தொடுத்தால் தூயவிண்ணேறலாகும்
விளக்கிட்டார் பேறுசொல்லின்மெய்ந்நெறி ஞானமாகும்
அளப்பில கீதஞ்சொன்னார்க்கு அடிகள்தாம் அருளுமாறே"

எனவரும் திருநேரிசையாகும். இதன் ஈற்றடியினை,

'கீதஞ்சொன்னார்க்கு அடிகள் அருளுமாறு அளப்பில'

என இயைத்துப் பொருள்கொள்க. (தாம்-அசை) இனி, இத்திருப்பாடலில், திருவலகிடுதல் முதலிய பணிகளைச் செய்தார். பெறும் பேறு இவ்வளவு இவ்வளவு என உணர்த்திய அடிகள், புகழ்த்திறத்தால் அளவில்லன வாகிய இசைப் பாடல்களால் இறைவனைப் போற்றினார்க்கு அவற்றினும் மேலாகத் தரத்தக்க பெருமையுடைய பொருள் பிறிதின்மையின் பரமனையே பாடுவாராகிய அவ்வடியார்களுக்கு இறைவன் தன்னைத்தானே பரிசிற்பொருளாக வழங்கியருள்வான் என்பார், 'அளப்பில கீதஞ்சொன்னார்க்கு அருளுமாறு' (கைம்மாறாக நல்கத்தக்க பொருள்) அடிகள் தாம் (இறைவனே) என்றார் எனக் கொள்ளுதற்கும் இடமுண்டு. இத்திருப்பாடல், இறைவனை அன்பினால் வழிபடுதற்கு இனிய சாதனமாக விளங்குவன இசைப் பாடல்களே யென்ற உண்மையினை நன்கு வலியுறுத்தல் காண்க.

சொல்லக்கருதிய கருத்துக்களைக் கேட்போர் விரும்பி யேற்றுக்கொள்ளும் வண்ணம் இனிய ஓசைத் திறத்தாற் புலப்படுத்துவது இசையாகும். மூலதாரம் தொடங்கிய எழுத்தோசை ஆளத்தியாய்ப் பின் இசையென்றும் பண்ணென்றும் பெயராம், மக்கள் பெற்ற உடம்பினது அளவு தம் கையால் தொண்ணூற்றாறங்குலம். இதனுள் மேலே நாற்பத்தேழரை யங்குலமும் கீழே நாற்பத்தேழரையங்குலமும் விட்டு நடு நின்ற ஓரங்குலம் மூலாதாரம். இதன் மேலே நால் விரல் விட்டுப் பின்னாதாரம் நின்றியங்கும்.

"துய்ய வுடம்பளவு தொண்ணூற்றா றங்குலியா
மெய்யெழுத்து நின்றியங்கு மெல்லத்தான் - வையத்
திருபாலு நாற்பதோ டேழ்பாதி நீக்கிக்
கருவாகும் ஆதாரங் காண்"

என்ற பழம்பாடல், இசைக்குப் பிறப்பிடமாயுள்ள மூலாதாரத்தின் அமைப்பினை விளக்குவதாகும். இம் மூலாதாரத்தை யடுத்து

உந்தித்தானத் தெழுந்த வளியினைத் துணையாகக் கொண்டே உயிரும் மெய்யுமாகிய எழுத்தொலியும் ஏனைய இசையோசை களும் தோன்றி இடைபிங்கலையால் வெளிப்படும் என்பர். இந்நுட்பம்,

"ஆதாரம் பற்றி யசைவ முதலெழுத்து
மூதார்ந்த மெய்யெழுத்து முன்கொண்டு-போதாரும்
உந்தி யிடைவளியா யோங்குமிடை பிங்கலையால்
வந்துமே லோசையாம் வைப்பு"

எனவும்,

"ஐவகைப் பூதமும் ஆய சரீரத்து
மெய்பெற நின்றியங்கு மெய்யெழுத்தாற்-றுய்ய
ஒருநாடி நின்றியங்கி உந்திமே லோங்கி
வருமா லெழுத்துடம்பின் வந்து"

எனவும் வரும் பழைய பாடல்களால் அறிவுறுத்தப் பெற்றமை நினைக்கத்தகுவதாகும்.

முற்குறித்த மூலாதாரத்திலிருந்து இசையினை எழுப்பு மிடத்து, மகரமெய்யினாலே சுருதியைத் தோற்றுவித்துக் குற்றெழுத்தாலும் நெட்டெழுத்தாலும் நாதத்தைத் தொழில் செய்து பாடுதல் தொன்றுதொட்டு வரும் இசைத்தமிழ் மரபாகும். இங்ஙனம் மூலாதாரத்தினின்றும் இசையையெழுப்பிப் பாடும் முறையினை 'ஆளத்தி' என வழங்குவர். ஆளத்தி செய்யுமிடத்துத் 'தென்னா' என்றும் 'தெனா' என்றும் இரண்டசையுங் கூட்டித் 'தென்னா தெனா' என்றும் பாடப் படும். மெய்யெழுத் தாகிய பதினெட்டெழுத்துள்ளும் மவ்வும் நவ்வும் தவ்வும், அல்லாத மற்றையெழுத்துக்கள் ஆளத்திக்கு வரப்பெறா என்பர்.

"மகரத்தி னொற்றாற் சுருதி விரவும்
பகருங் குறினெடில்பா ரித்து-நிகரிலாத்
தென்னா தெனாவென்று பாடுவரேல் ஆளத்தி
மன்னாவிச் சொல்லின் வகை"

எனவும்,

"குன்றாக் குறிலைந்துங் கோடா நெடிலைந்து
நின்றார்ந்த மந்நகரந் தவ்வொடு-நன்றாக
நீளத்தால் ஏழும் நிதானத்தால் நின்றியங்க
ஆளத்தி யாமென்றறி"

எனவும் சிலப்பதிகாரம் அரங்கேற்று காதை யுரையில் மேற் கோளாக வரும் வெண்பாக்கள் ஆளத்தியின் இயல்பினை நன்கு புலப்படுத்தல் காணலாம். இசையினைத் தோற்றுவித்துத்

தொழில் செய்யும் முறையாகிய இவ் ஆளத்தியினை ஆலாபனை என வழங்குவர் இக்காலத்தார்.

இசைச் சுருதியினைத் தோற்றுவித்தற்கு மகர மெய் துணையாகப் பயன்படும் முறையினை 'மகரத்தின் ஒற்றாற் சுருதி விரவும்' என்ற தொடரால் நன்குணரலாம். இம்முறை தேவார ஆசிரியர்கள் காலத்திலும் வழக்கில் இருந்ததென்பது, "மும்மென்றிசை முரல் வண்டுகள்" (1-11-3) என வரும் ஆளுடைய பிள்ளையார் திருப் பாடற்றொடரால் நன்கு விளங்கும். இத்தொடரில் 'மும்ம்' என்ற மகரவொற்றால் இசை முரலும் முறை இனிது விளக்கப் பெற்றிருத்தல் காணலாம்.

இசை, பண் என்பன காரணப் பெயர்கள்: பல இயற் பாக்களோடு நிறத்தை (இராகத்தை) இசைத்தலால் இசை யென்று பெயராயிற்று. பாக்களோடு இயைத்துரைக்கப்பட்ட இசையினை நெஞ்சு, மிடறு, நா, மூக்கு, அண்ணம், உதடு, பல், தலை என்னும் எட்டிடங்களிலும், எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம், ஒலி, உருட்டு, தாக்கு என்னும் எண் வகைத் தொழில்களால் சீர்பெறப் பண்ணிப் பாடப்பெறுவது பண் எனப்படும்.

"பாவோ டணைதல் இசையென்றார்; பண்ணென்றார்
மேவார் பெருந்தானம் எட்டானும்-பாவாய்
எடுத்தல் முதலா இரு நான்கும் பண்ணிப்
படுத்தமையாற் பண்ணென்று பார்"

என்ற பாடல் இப்பெயர்க் காரணங்களை விளக்குவதாகும். கோடாக வரைந்த ஓவியத்தினைப் போன்றது தாளத்தோடு அமைந்த இயற்பாவினது ஓசை. கோடாக அமைந்த ஓவியத்தின் மேல் அதன் உருவிற்குத்தக்க செம்மை, பசுமை முதலிய நிறங்களைத் தீட்டுவது போன்றது, பாவோடு இசைத்துரைக்கப் படும் இசையாகும். 'நிறம்' என்ற தமிழ்ச் சொல்லோடு ஒத்த பொருளுடையது 'இராகம்' என்ற வடசொல். பாவோடு நிறத்தினை (இராகத்தினை) இசைத்தலால் இசையெனப் பட்டது. பண்ணுதல் என்னும் வினையடியாகப் பிறந்தது பண், மிடற்றுப்பாடல், குழல் யாழ் முதலிய இசைக் கருவிகளின் ஒலி, இவற்றின் கால அளவினை வரையறுக்கும் தாள அமைப்பு ஆகிய இவை மூன்றும் ஒத்திசைத்து இயங்குவது இசையாகும்.

இசைக்குரிய சுரங்கள் ஏழாகும். 'ஏழிசையாய் இசைப் பயனாய்' (7-51-10) எனவும், 'ஏழிசை யேழ் நரம்பின் ஓசையை' (7-83-6) எனவும் வரும் திருப்பதிகத் தொடர்கள், இசை ஏழென்றும், அவ்வேழிசைகளையும் தனித்தனி நரம்புகளின் இசைத்து அறியும் முறையில் அக்காலத்தில் நரம்புக் கருவிகள் அமைந்தி

ருந்தன என்றும் புலப்படுத்துவன. குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன ஏழிசைகளைக் குறித்து வழங்கிய பழைய தமிழ்ப் பெயர்கள்.

இளங்கோவடிகள் காலத்தில் வழங்கிய 'செம்முறைக் கேள்வி' என்னும் சகோட யாழிலே உழை முதல் கைக்கிளை யீறாகப் பதினான்கு நரம்புகள் கட்டப்பட்டிருந்தன. அவை

| மெலிவு | சமன் | வலிவு |
|---|---|---|
| உ.இ.வி.தா. | கு.து.கை.உ.இ.வி.தா. | கு.து.கை |

என மெலிவு நான்கும், சமன் ஏழும், வலிவு மூன்றும் ஆக அமைந்திருந்தன. இவ்வாறு சமன்தானத்தில் 'குரல் முதலாக ஏழிசைகளும் அமைந்து நிற்பது குரற்கிரமம் எனப்படும். சமன்தானத்தில் இளி முதலாக நிற்பது இளிக்கிரமம் எனவும், காந்தாரம் முதலாக நிற்பது தாரக்கிரமம் எனவும் வழங்கப்படும்.

முற்குறித்த ஏழிசைகளுள் 'தாரம்' என்னும் இசையே இசை வளர்ச்சிக்கு ஆதாரமாய் முதற்கண் விளங்கியது என்பர். 'தாரம்' என்ற இசை ஆண் மக்கள் குரலிலும், 'குரல்' என்ற இசை மகளிர் குரலிலும் இயல்பாகப் புலப்படும் என்பர். தாரத்தின் வழியிசையாக உழையும், உழையின் வழியிசையாகக் குரலும், குரலின் வழியிசையாக இளியும், இளியின் வழியிசையாகத் துத்தமும், துத்தத்தின் வழியிசையாக விளரியும், விளரியின் வழியிசையாகக் கைக்கிளையும் தோன்றும். இப்பிறப்புமுறை,

> **"தாரத்துட் டோன்றும் உழை, உழை யுட்டோன்றும்**
> **ஒருங் குரல், குரலு னுட்டோன்றிச்-சேருமிளி**
> **யுட்டோன்றுந் துத்தத்துட் டோன்றும் விளரியுட்**
> **கைக்கிளை தோன்றும் பிறப்பு"**

என்ற பாடலில் தெளிவாகக் குறிக்கப்பட்டது. இசைத்தோற்ற முறையாகிய இதனைக் கூர்ந்து நோக்குங்கால் ஐந்தாம் நரம்பின் அடைவு முறையிலே ஏழிசையும் பிறப்பன என்பதும் இவ்வமைப்பில் சட்சத்தோடு இயல்பாகவே தோன்றுவது பஞ்சமம் என்பதும் நன்கு விளங்கும். நின்ற நரம்பிற்கு ஐந்தாம் நரம்பு கிளை நரம்பு எனப்படும். நான்காம் நரம்பினை 'நட்பு' என்றும் மூன்றாம் ஆறாம் நரம்புகளைப் 'பகை' என்றும் இரண்டாம் ஏழாம் நரம்புகளை 'இணை' என்றும் கூறுவர்.

முற்குறித்த ஏழிசைகளும் மெலிவு, சமன், வலிவு என்னும் மூவகைத் தானங்களிலும் நின்று மூவகை இயக்கம் உடையனவாய் இசைப்பன. மெலிவு, சமன், வலிவு என்ற இம்மூன்றையும்

மூவகையியக்கம் என்றும் மூவகைத்தானம் என்றும் இளங்கோவடிகள் குறிப்பிடுவர். இம் மூன்றினையும் பிற்காலத்தார் வழக்கின்படி முறையே மந்தரம், மத்திமம். தாரம் எனச் சேக்கிழாரடிகள் வழங்கியுள்ளார்.

வீணை நரம்பு மெலிவுத்தானத்திலேயுள்ள குரல் இசைக்கு இசை கூட்டப்பட்டிருந்தால், அதன் சரிபாதி நரம்பிலே சம இசையாகிய குரலும், அதன் நான்கிலொரு கூற்றிலே உச்ச இசையாகிய குரலும், மூன்றிலொரு கூற்றிலே குரலுக்கு ஐந்தாம் இசையாகிய இளியும் ஒலிக்கும். ஏழிசைகளும் படிப்படியாக மேன்மேல் உயர்ந்து செல்லும் இசைநிரலை 'ஆரோசை' எனவும், படிப்படியாகத் தாழ்ந்து செல்லும் இசை நிரலை 'அமரோசை' எனவும் சேக்கிழார் வழங்குவர். இவ்விரண்டினையும் முறையே ஏற்றம் இறக்கம் என்னும் பொருளினவாகிய ஆரோகணம் அவரோகணம் என்ற சொற்களால் வழங்குவர் இக்காலத்தார்.

இசைச் சுரங்கள் இரண்டிற்கு இடையேயமைந்த ஓசை வேறுபாட்டினை அளத்தற்கு அமைந்த நுண்ணிய இசையளவினைச் சுருதி யென்பர். சுருதி, அலகு, மாத்திரை என்பன ஒரு பொருட் சொற்கள். ஏழிசைகளிலும் அமைந்த சுருதிகளின் தொகை இருபத்திரண்டு, நுண்ணிய இசைக் கூறுபாடுகளாகிய இச் சுருதிகள் நான்கு கூடி நிற்பது முற்றிசை எனப்படும். இது ஓரலகும் மூவலகும் என இரண்டாய்ப் பிரிந்த நிலையில் ஓரலகினைக் 'குற்றிசை' யெனவும், மூவலகினைப் 'பற்றிசை' எனவும் கொள்ளலாம். ஓரலகாகிய குற்றிசை இரண்டு கூடி நிற்பது 'நெட்டிசை' யெனப்படும். பற்றிசையாகிய மூன்று சுருதியிலிருந்து குற்றிசையாகிய ஒரு சுருதியை நீக்கினால் எஞ்சி நின்ற இரு சுருதியும் 'விதியிசை' யெனப்படும். இதனைப் பிரமாண சுருதி என்பர் வட நூலார். சட்ச பஞ்சமமாகிய கிளை முறைப்படி பதினொரு சுருதிகளும், சட்ச மத்திமமாகிய நட்பு முறைப்படி பதினொரு சுருதிகளும் பிறப்பன. மேற்குறித்த இருப்பத்திரண்டு சுருதிகளே பழந்தமிழ் இசை மரபில் வழங்கிய இருபத்திரண்டு இசை நிலைகளாகும்.

இவ்விருபத்திரண்டு சுருதிகளையும் பன்னிரண்டு இராசி வீடுகளில் வைத்து ஆராய்ந்து இசை நுட்பம் அறியும் முறை பழந்தமிழர் கண்டதாகும். சட்சம் நீங்கலாக எஞ்சியுள்ள பதினொரு வீட்டிலும் நட்பு முறையிற் பிறந்த சுருதி ஒன்றும் கிளை முறையிற் பிறந்த சுருதி ஒன்றும் ஆக இரண்டிரண்டு சுருதிகள் நிற்பன. இங்ஙனம் ஒரு வீட்டினுள் நிற்கும் நட்பு, கிளை என்னும் இருவகைச் சுருதிகளுக்கும் இடையே யமைந்த வேறுபாடு, முற்குறித்த பிரமாண சுருதியாகிய ஈரலகாகும். இச்சுருதி அளவிற் சிறியதாதலின் ஒரு வீட்டில் அமைந்த நட்பு கிளையென்னும்

இருவகைச் சுருதிகளையும் கமக முறையினாலே வேறுபாடின்றிப் பயன்படுத்திக் கொள்வர் இசைவாணர்.

தாரக்கிராமத்தில் 4, 4, 4, 1, 4, 4, 1 எனவும், குரற்கிரமத்தில் 4, 3, 4, 2, 4, 3, 2 எனவும், இளிக்கிரமத்தில் 4, 3, 2, 4, 4, 3, 2 எனவும் இருபத்திரண்டு சுருதிகளும் ஏழிசைகளாகப் பிரிந்து நிற்பன என்பர் யாழ் நூலார். ச, ரி, க, ம, ப, த, நி என எழுத்தாற் குறிக்கப் படும் ஏழிசைகளுக்கும் முறையே 4, 3, 2, 4, 4, 3, 2 என்னும் சுருதிகள் உரியன எனக்கூறுவர். இனிக்கிரமத்தின் அலகுகள் இளிமுதலாக 4, 3, 2, 4, 4, 3, 2 என நின்றன. எனவே குரல் முதலாக எண்ணப்படும் ஏழிசைகளும் முறையே 4, 4, 3, 2, 4, 3, 2 என்னும் சுருதிகளைப் பெறுவன என்பது நன்கு புலனாகும். இங்குக் குறித்த சுருதிகளின் பகுப்பு முறையினை,

> **'குரல்துத்தம் நான்கு, கிளைமூன்று, இரண்டாம்**
> **குரையா உழை, இளி நான்கு-விரையா**
> **விளரியெனின் மூன்று, இரண்டு தாரமெனச் சொன்னார்**
> **களரிசேர் கண்ணுற்றவர்'**

எனச் சிலப்பதிகாரவுரையில் மேற்கோளாக வரும் பாடல் நன்கு புலப்படுத்தும். இதனை ஊன்றி நோக்குங்கால், இளிக்கிரமத்து இளி, விளரி, தாரம், குரல் துத்தம், கைக்கிளை, உழை என்னும் ஏழிசைகளுக்கு அமைந்த சுருதிப்பகுப்பும், இக்காலத்தில் சட்சம், ரிஷபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என வழங்கப்படும். ஏழிசைகளுக்கமைந்த சுருதிப் பகுப்பும் ஒரு நிரலையே குறிக்கும் என்பது நன்கு தெளியப்படும்.

குறிப்பிட்ட ஓர் இராகத்திற்கு ஆரோசையிலும் அமரோசையிலும் இன்ன சுரங்கள் வருவன என நிச்சயித்து நிறுத்துவது பாலைநிலை எனப்படும். அவ்வாறு நிறுத்திய சுரங்களிலே முதல் முறை, முடிவு, நிறை, குறை, கிழமை, வலிவு, மெலிவு சமன் என்பவற்றை அறிந்து இசைப்புலவன் வைத்த தாளத்திற்குப் பொருந்த இராகத்தினை ஆளத்தி செய்து பாடுதல் பண்ணுநிலை எனப்படும். மேற்செம்பாலை, செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, விளரிப்பாலை எனவரும் ஏழ்பெரும்பாலைகளும்,* (*மேற்செம்பாலையினை மேச கல்யாணி எனவும், பாலையினை அரிகாம்போதி எனவும், படுமலைப்பாலையினை நட-பைரவி எனவும், செவ்வழிப் பாலையினைச் சுத்ததோடி எனவும், அரும்பாலையினைத் தீரசங்கராபரணம் எனவும், கோடிப்பாலையினைக் கரகரப்பிரியா எனவும், விளரிப் பாலையினை அநுமத்தோடி எனவும் கொள்வர் யாழ் நூலார்.) இவற்றின் அந்தரங்களாகத் தோன்றும் அந்தரச் செவ்வழி, அந்தரவிளரி, அந்தரப்படுமலை, அந்தரக்கோடி, அந்தரச்செம்பாலை என்னும்

ஐந்து சிறுபாலைகளும் ஆகப் பன்னிரண்டு சுரக்கோவைத் தொடர் நிலைகளைப் பண்டைத் தமிழ் மக்கள் கண்டுணர்ந்து 'பன்னிருபாலைகள்' எனப்படும் இவற்றின் அடியாகப் பல்வேறு பண்களைத் தோற்றுவித்து இசை வளர்த்தார்கள் என்பது சிலப்பதிகாரத்தாலும் அதன் உரைகளாலும் அறியப்படும்.

பழந்தமிழர் கண்டுணர்த்திய பன்னிரு பாலைகளைத் தாரக் கிரமம், குரற்கிரமம், இளிக்கிரமம் முதலிய எல்லாக் கிரமங்களிலும் இசைக்கலாம். கிரகசுரம் மாற்றுதல் என்னும் பாலைத்திரி பினால் பல்வேறு பண்கள் தோன்றுவன எனபதும், தமிழ்ப் பண்கள் நூற்று மூன்றும் பாலைகளிலிருந்தே தோன்றின என்பதும், "பன்னிரு பாலையின் உரு, தொண்ணூற்றொன்றும் பன்னிரண்டுமாய்ப் பண்கள் நூற்று மூன்றாதற்குக் காரணமாம் எனக்கொள்க" என அரும்பதவுரையாசிரியரும், "இவ்வேழு பெரும்பாலையினையும் முதலடுத்து நூற்று மூன்று பண்ணும் பிறக்கும்" என அடியார்க்குநல்லாரும் கூறுதலால் நன்கு விளங்கும்.

சிலப்பதிகாரம் அரங்கேற்றுகாதையில் இசைப்பாட்டினைப் பாடித் தரும் கவிஞனது இயல்பினை விரித்துரைக்குமிடத்து, "இசைப்புலவன் ஆளத்தி வைத்த பண்ணீர்மையை முதலும் முடிவும் நிறையும் குறையும் கிழமையும் வலிவும் மெலிவும் சமனும் வரையறையும் நீர்மையும் என்னும் பதினொரு பாகுபாட்டினானும் அறிந்து, அறிந்தவண்ணம் அவன் தாள நிலையில் எய்த வைத்த நிறம் தன் கவியினிடத்தே தோன்ற வைக்க வல்லனாய்" என அடியார்க்குநல்லார் விளக்கியுள்ளார். இதன் கண் பண் என்பது, முதல், முறை, முடிவு, நிறை, குறை, கிழமை, வலிவு, மெலிவு, சமன், வரையறை, நீர்மை என்னும் இப்பதினொரு பாகுபாட்டினாலும் ஆராய்ந்தறியப்படும் இலக்கணங்களை யுடையது என்னும் உண்மையினிது புலனாதல் காணலாம். வடமொழியில் இராகங்களுக்கு உரியனவாக, கிரகம்,அம்சம், மந்தரம், தாரம், நியாசம், அபந்யாசம், சந்யாசம், விந்யாசம், பகுத்வம், அற்பத்வம் எனப் பத்திலக்கணங்கள் கூறப்பட்டன என்பர்.

இசைத் தமிழ்நூலில் 'முதல்' என்பது, இசைப்பாட்டின் முதலில் எடுக்கும் சுரத்தைக் குறிக்கும். இதனைக் கிரகம் என்பர் வடநூலார். 'கிழமை' என்பது, பலமுறை வருதற்குரிய சுரமாகும். இது வடமொழியில் அம்சம் என்றும் ஜீவசுரம் என்றும் வழங்கும். கீதத்தை முடிக்குஞ் சுரத்தை நியாசம் எனவும், இராகத்தின் இடையிலுள்ள முடிவைச் செய்யும் சுரத்தை 'அபந்யாசம்' எனவும் கீதத்தினது முதற்பகுதியின் இறுதியிலுள்ள சுரத்தைச் 'சந்யாசம்' எனவும், கீதப்பகுதியின் முதற்கூற்றின் இறுதியி

லுள்ள இறுதியிலுள்ள சுரத்தை 'விந்யாசம்' எனவும் வழங்குவர் வடநூலார். மேல் நூல் வகைப்படக் குறித்த முடிக்குஞ்சுரங்களை யெல்லாம் 'முடிவு' என ஒன்றாக அடக்கிக் கூறுவர் இசைத்தமிழ் நூலார். தமிழில் நிறை, குறை, மெலிவு, வலிவு என வழங்குவன வற்றை முறையே பகுத்வம், அற்பத்வம் மந்தரம், தாரம் என வழங்கும் வடநூற் குறியீடுகளோடு ஒத்தனவாகக் கொள்ளலாம். சமன் என்பது சமசுரங்களைக் குறிக்கும். முறை என்பது இசைச் சுரங்கள் பயின்று வரும் முறையைக் குறிக்கும். வரையறை யென்பது, ஒரு பண் வேறொரு பண்ணோடு மயங்காமற் காத்தற்குக் கூறும் இலக்கணம். நீர்மை என்பது, சொல்லாற் கூற முடியாமல் உய்த்துணர்வால் உணர்ந்து கொள்ளத்தக்க இராக பாவம் போன்ற பண்ணீர்மையைக் குறிக்கும். பண்களுக்கு உரியனவாக அடியார்க்கு நல்லார் குறித்த பதினோரிலக்கணங் களுள் வரையறையும் நீர்மையும் நீங்கலாக எஞ்சிய ஒன்பதும் திருஞானசம்பந்தர் காலத்தில் இசைத் தமிழ்ப் பண்களுக்குரிய இலக்கணங்களாகக் கொள்ளப்பட்டன எனத் தெரிகிறது. இவை ஒன்பதினையும்,

எண்ணிடை யொன்றினர் இரண்டினர் உருவம்
எரியிடை மூன்றினர் நான் மறையாளர்
மண்ணிடை ஐந்தினர் ஆறினர் அங்கம்
வகுத்தனர் ஏழிசை எட்டிருங்கலை சேர்
பண்ணிடை ஒன்பதும் உணர்ந்தவர் பத்தர்
பாடிநின் றடிதொழ மதனனை வெகுண்ட
கண்ணிடைக் கனலினர் கருதிய கோயில்
கழுமலம் நினையநம் வினையகரி சறுமே.

என்னும் திருக்கழுமலத் திருப்பதிகத்திலே 'பண்ணிடை ஒன்பதும்' என ஆளுடையபிள்ளையார் குறிப்பிட்டுள்ளமை காணலாம். மேற்காட்டிய திருப்பாடலில் 'ஏழிசை எட்டிருங் கலை சேர்பண்' என்றமையால் இணை கிளை, பகை, நட்பு என்னும் நான்கினையும் ஆராய்ந்து இசைபுணருங் குறிநிலை யெய்த நோக்கி, ஏழிசையினையும் பாலையாக நிறுத்தியபின். எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம், ஒலி, உருட்டு, தாக்கு என்னும் எண்வகைத் தொழிலினாலும் பண்ணியமைத்த பண்ணானது மேற்குறித்த ஒன்பது இலக்கணத்தாலும் உணர்தற் பாலதென்பது நன்கு புலனாம். 'எட்டிருங்கலை' என்பன யாழ்க்கருவியிலே இசை எழுப்புதற்குச் செய்யும் பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு என்னும் எட்டினையும், இசை நிலையின் தீதின்மை ஆராய்தற்குச் செய்யும் வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், அள்ளல், பட்டடை என்னும்

எட்டினையும் ஒருங்கே குறிக்கும் எனக்கொள்வர் யாழ் நூலாசிரியர்.

'பண்களாவன பாலையாழ் முதலிய நூற்று மூன்று' என்றார் பரிமேலழகர். ஈரிரு பண்ணும் எழு மூன்று திறனும்' என்பது பிங்கலந்தை, பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி இவை நான்கும் பெரும்பண்கள், நாற்பெறும் பண்ணுக்கும் இருபத் தொரு திறங்கள் கூறப்பட்டன. பாலையாழ்த்திறன் 5, குறிஞ்சி யாழ்த்திறன் 8, மருதயாழ்த்திறன் 4, செவ்வழியாழ்த்திறன் 4, ஆக 21, இவ்விருபத்தொன்றும் அகநிலை, புறநிலைஅருகியல் பெருகியல் என வகைக்கு நான்காய் எண்பத்து நான்காகும். இசைச்சுரங்களின் மாத்திரை வேறுபாட்டினாலே முற்குறித்த ஒவ்வொரு பண்ணும் அகநிலை, புறநிலை, அருகியல், பெருகியல் என நால்வகைச் சாதியாயின என்ற நுட்பத்தை யாழ் நூலிற் காணலாம். இங்குச் சுட்டிய பழந்தமிழ்ப் பண்கள் நூற்று மூன்றின் அமைப்பினையும் வகை முறைமையினையும் யாழ்நூல் 'பண்ணியல்' என்ற பகுதியில் அருண்மிகு விபுலாநந்த அடிகளார், சிலப்பதிகாரவுரை, பிங்கலந்தை முதலிய பழந்தமிழ் நூல்களின் சான்று காட்டிப் பின்வருமாறு வகைப்படுத்தி விளக்கி யுள்ளார்கள்.

பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி என்னும் நாற்பெரும் பண்களும் அகம், புறம் அருகு, பெருகு என்னும் நால்வகை நிலையால் நானான்கு பதினாறாவன.

| அகம் | புறம் | அருகு | பெருகு |
|---|---|---|---|
| 1. பாலையாழ் | 2. தேவதாளி | 3. நிருபதுங்க ராகம் | 4. நாக ராகம் |
| 5. குறிஞ்சியாழ் | 6. செந்து | 4. மண்டலியாழ் | 8. அரி |
| 9. மருதயாழ் | 10. ஆகரி | 11. சாயவேளர் கொல்லி | 12. கின்னரம் |
| 13. செவ்வழி யாழ் | 14. வேளாவளி | 15. சீராகம் | 16. சந்தி |

இவற்றுட் பாலையாழ்க்குரிய திறங்கள்; அராகம், நேர்தி உறுப்பு, குறுங்கலி, ஆசான் என்பன.

| | அகம் | புறம் | அருகு | பெருகு |
|---|---|---|---|---|
| அராகம் | 17. தக்கராகம் | 18. அந்தாளி பாடை | 19. அந்தி | 20. மன்றல் |
| நேர்திறம் | 21. நேர்திறம் | 22. வராடி | 23. பெரிய வராடி | 24. சாயரி |

| | | | | |
|---|---|---|---|---|
| உறுப்பு | 25. பஞ்சம் | 26. திராடம் | 27. அழுங்கு | 28. தனாதி |
| குறுங்கலி | 29. சோம ராகம் | 30. மேக ராகம் | 31. துக்க ராகம் | 32. கொல்லி |
| ஆசான் | 33. காந்தாரம் | 34. சிகண்டி | 35. தேசாக் கரி | 36. சுருதி காந்தாரம் |

குறிஞ்சி யாழ்த்திறங்கள் நைவளம், காந்தாரம், பஞ்சுரம், மலை, மருள், அயிர்ப்பு, அரற்று, செந்திறம் என்பன,

| | அகம் | புறம் | அருகு | பெருகு |
|---|---|---|---|---|
| நைவளம் | 37 நட்ட பாடை | 38. அந்தாளி | 39. மலகரி | 40 விபஞ்சி |
| காந்தாரம் | 41. காந்தாரம் | 42. செருந்தி | 43. கௌடி | 44. உதயகிரி |
| பஞ்சுரம் | 45. பஞ்சுரம் | 46. பழம் பஞ்சுரம் | 47. மேக ராகக் குறிஞ்சி | 48. கேதா ளிக் குறிஞ்சி |
| மலை | 49. கௌவா ணம் | 50. பாடை | 51. சூர் துங்க ராகம் | 52. நாகல் |
| மருள் | 53. மருள் | 54. பழந்தக்க ராகம் | 55. திவ்விய வராடி | 56. முதிர்ந்த இந்தளம் |
| அயிர்ப்பு | 57. அநுத்திர பஞ்சமம் | 58. தமிழ்க் குச்சரி | 59. அருட் புரி | 60. நாரா யுணி |
| அரற்று | 61. குறிஞ்சி | 62. நட்ட ராகம் | 63. இராமக் கிரி | 64. வியாழக் குறிஞ்சி |
| செந்திறம் | 65. செந் நிறம் | 66. தக்க ணாதி | 67. சாவகக் குறிஞ்சி | 68. ஆநந்தை |

மருத யாழ்த்திறங்கள் நவிர், வடுகு, வஞ்சி, செய்திறம் ரபன.

| | அகம் | புறம் | அருகு | பெருகு |
|---|---|---|---|---|
| நவிர் | 69. தக்கேசி | 70.கொல்லி | 71. ஆரிய குச்சரி | 72. நாகதொனி |
| வடுகு | 73. இந்தளம் | 74. சாதாளி | 75. தமிழ் வேளர் கொல்லி | 76. காந்தார பஞ்சமம் |
| வஞ்சி | 77. பாக்கழி | 78. தந்தள பஞ்சமம் | 79. மாதுங்க ராகம் | 80. கௌசிகம் |
| செய் திறம் | 81. பியந்தை | 82. சீகாமரம் | 83. சாரல் | 84. சாங்கிமம் |

செவ்வழி யாழ்த்திறங்கள் நோதிறம், பெயர்திறம், யாமை முல்லை என்பன.

| | அகம் | புறம் | அருகு | பெருகு |
|---|---|---|---|---|
| நேர்திறம் | 85. குறண்டி | 86. ஆரிய வேளர் கொல்லி | 87. தணுக் காஞ்சி | 88. வியந்தம் |
| பெயர் திறம் | 89. யாழ் பதம் | 90. தாளி | 91. கொண்டைக் கிரி | 92. சீவலனி |
| யாமை | 93. யாமை | 94. சாளர் பாணி | 95. நாட்டம் | 96. தாணு |
| முல்லை | 97. முல்லை | 98. சாதாரி | 99. பைரவம் | 100. மே காஞ்சி |

மேற்குறித்த நூறு பண்களுடன் 101, தாரப் பண்டிறம், 102 பையுள்காஞ்சி, 103. படுமலை என்னும் திறங்கள் மூன்றையும் சேர்க்கப் பண்கள் நூற்று மூன்றாயின. இப்பகுப்பு முறைக்குரிய விளக்கத்தை யாழ்நூலிற் காணலாம்.

நூற்று மூன்று பண்கள் எனப்பகுக்கப்பெற்ற இப்பண்களுள்ளே தேவாரத் திருப்பதிகங்களில் அமைந்தவை இருபத்து மூன்று. அவையாவன:

(13) செவ்வழி
(17) தக்கராகம்
(21) நேர்திறம்-புறநீர்மை
(25) பஞ்சமம்
(33, 41?) காந்தாரம்
(37) நட்டபாடை
(38) அந்தாளிக்குறிஞ்சி
(46) பழம் பஞ்சுரம்
(47) மேகராகக் குறிஞ்சி
(73) இந்தளம்
(76) காந்தாரபஞ்சமம்
(80) கௌசிகம்
என்பனவாம்.

(49) கொல்லிக் கௌவாணம்
(54) பழந்தக்கராகம்
(61) குறிஞ்சி
(63) நட்ட ராகம்
(64) வியாழக்குறிஞ்சி
என்பனவாம்.
(65) செந்நிறம்-செந்துருத்தி
(69) தக்கேசி
(70) கொல்லி
(81) பியந்தை
(82) சீகாமரம்
(98) சாதாரி

மேற்குறித்த இருபத்து மூன்று பண்களும் தேவாரத் திருப்பதிகங்களில் தேவார ஆசிரியர்களாலேயே இசையமைத்துப் பாடப் பெற்ற தனிச் சிறப்புடையன. மேலும், தேவாரத் திருப்பாடல்களில் 1. பாலையாழ், 6. செந்து, 9. மருதம், 13, முல்லையாழ்-செவ்வழி, 25. பஞ்சமம், 33. காந்தாரம், 45. பஞ்சுரம், 53. மருள், 61. குறிஞ்சி, 70. கொல்லி, 82. காமரம் என்பனவும், நேரிசை, நந்திசை, பிறழ் என்பனவும் பண்ணின் பெயர்களாகக் குறிக்கப் பெற்றுள்ளன. இவற்றுள் பிற்கூறிய மூன்றும் நூற்று மூன்று பண்களைக் குறிக்கும் பெயர் வரிசையிற் காணப்படவில்லை. ஏனையவை நூற்றுமூன்று என்னும் பகுப்பில் அடங்கியனவே. இக்குறிப்புக்களைக் கூர்ந்து நோக்குங்கால், நூற்றுமூன்று என வழங்கும் பண்கள் தேவார ஆசிரியர் காலத்திற்கு முற்பட்ட தொன்மையுடையன என்பது நன்கு புலனாம்.* (* 1-108-10, 2-81-5, 5-12-10, 5-45-4, 6. 1-101-2, 1-114-11, 2-51-11, 2-82-9, 9. 6-35-8, 13. 1-63-7, 1-132-7, 5-12-10, 25. 4-29-3, 33. 1-130-6, 6-9-2, 45. 3-14-3, 3-104-4, 53. 1-46-1, 1-66-8, 3-71-7, 61. 1-12-10, 70. 4-49-6, 82.1-47-3.நேரிசை 1-75-3,2-53-10. நந்திசை 1-104-6. பிறழ் 4-8-5)

ஏழு சுரங்களால் ஆகிய இராகங்களைப் பண் என்றும், ஆறுசுரங்களால் ஆகியவற்றைப் பண்ணியல் என்றும், ஐந்து சுரங்களால் ஆகியவற்றைத் திறம் என்றும், நான்கு சுரங்களால் ஆகியவற்றைத் திறத்திறம் என்றும் வழங்குதல் மரபு. இவற்றை முறையே சம்பூரணம், ஷாடவம், ஔடவம், சதுர்த்தம் என வடமொழிப் பெயரால் வழங்குதலும் உண்டு. திறம் என்ற சொல் பெரும்பண் நீங்கலாக ஏனைய பண்ணியற்றிறம், திறம், திறத்திறம் என்னும் முத்திறங்களையும் குறிக்கும் பெயராகும். நூற்று மூன்று பண்கள் என்புழி மேற்குறித்த பண்ணுந் திறமும் ஆகிய எல்லாவற்றையும் 'பண்' என்ற பெயரால் வழங்கும் வழக்கமுண்மை இனிது புலனாம்.

ஓர் இராகத்திற்குரிய ஏழு இசைச் சுரங்களில் ஒவ்வொரு சுரத்தையும் கிழமையாக (சீவசுரமாக)க் கொண்டு, மெலிவு, சமன், வலிவு என்னும் மூவகைத் தானங்களிலும் பாடுமிடத்து, அவ்விராகம் மூவேழ் துறைகளாக (இருபத்தொரு திறங்களாக), விரிவுபெறும். இவ்வாறு பண்டை இசைத்தமிழ் வல்லோர் ஒரே பண்ணினை இருபத்தொரு துறைகளாக விரிவுபடுத்திப் பாடியுள்ளார்கள். புறநானூற்றில் 152-ஆம் பாடல் வல்வில் ஓரியை வன்பரணர் பாடியதாகும். அதன்கண்,

'மூவேழ் துறையும் முறையுளிக் கழிப்பி'

என்ற தொடர் அமைந்துளது. இதற்கு 'இருபத்தொரு பாடற் றுறையும் முறையாற் பாடி, முடித்து' எனப்பொருள் வரைந்த

பழைய உரையாசிரியர், "மூவேழ் துறைகளையும் என்றது, வலிவு, மெலிவு, சமம் என்னும் மூன்று தானத்திலும் ஒவ்வொன்றில் ஏழு தானம் முடித்துப் பாடும் பாடற்றுறையை" என விளக்கமும் எழுதியுள்ளார்.

இங்ஙனம் ஏழு சுரங்கள் நிறைவு பெற்றுள்ள பெரும் பண்களுள் ஒன்றினை மெலிவு, சமன், வலிவு என்னும் மூன்று தானங்களிலும் அமைத்துப் பாடுங்காலத்து அப்பண்ணானது மூவேழு (இருபத்தொரு) இசைத்துறைகளாக விளங்கித் தோன்றும். இவ்வாறு ஒரு பண்ணின் சாயல் அனைத்தும் தெளிவாகப் புலப்படும் முறையில் அதனை மூன்று தானங் களிலும் வைத்து இருபத்தொரு துறைகளாக இசைத்துக் காட்டும் நோக்கத்துடன் இருபத்தொரு நரம்புகள் கட்டப்பெற்ற யாழ்க்கருவி பேரியாழ் என்பதாகும். இந்நுட்பம் 'மூவேழ் துறையும்' என மேற்காட்டிய தொடர்க்கு 'அன்றி இருபத்தொரு நரம்பால் தொடுக்கப்படும் பேரியாழ் எனினும் அமையும்,' எனப் பழைய உரையாசிரியர் கூறிய மற்றொரு விளக்கத்தால் உய்த்துணரப்படும்.

மேலே குறித்த வண்ணம் ஒவ்வொரு பண்ணிற்கும் உரிய முழு அமைப்பினையும் விரித்து விளக்கும் முறையில் இருபத் தொரு இசைத் துறைகளையும் குழல் யாழ் முதலிய இசைக் கருவிகளில் இசைத்துக்காட்ட வல்ல இசையாளர் பலர் பண்டை நாளில் தமிழகத்தில் வாழ்ந்திருந்தனர். இச்செய்தி,

"குழலினும் யாழினும் குரல்முதல் ஏழும்
வழுவின் றிசைத்து வழித்திறங் காட்டும்
அரும்பெறல் மரபிற் பெரும்பாண் இருக்கையும்"

(இந்திர, 35-7)

எனவரும் சிலப்பதிகாரத் தொடராலும்,

"துளைக் கருவியானும் நரம்புக் கருவியானும் குரல் முதலாயுள்ள ஏழிசையினும் சரிகம பதநி என்னும் ஏழெழுத் தினையும் மூவகை வங்கியத்தினும் நால்வகை யாழினும் பிறக்கும் பண்களுக்கு இன்றியமையாத மூவெழு திறத்தையும் இசைத்துக் காட்ட வல்ல பெறுதற்கரிய இசை மரபை யறிந்த குழலர் பாணர் முதலிய இசைக்காரர் இருக்குமிடங்களும்" என அடியார்க்கு நல்லார் இத்தொடர்க்கு எழுதிய உரையாலும் நன்கு புலனாம். இவ்வாறே,

"இசைபெறு திருவின் வேத்தவை யேற்பத்
துறைபல முற்றிய பைதீர் பாணரொடு"

(மலைபடு-39.40)

என்ற தொடர், ஒவ்வொரு பண்ணும் மூவகைத்தானத்தும் பல துறைகளிலும் இசைக்கப்பெறும் என்ற நுட்பத்தை இனிது விளக்குதல் காணலாம்.

மேலே குறித்த வண்ணம் ஒவ்வொரு பண்ணையும் இருபத் தொரு இசைத் துறைகளிற் பாடி முடிக்கும் இசைமுறை ஆளுடைய பிள்ளையார் காலத்திலும் வழக்கில் இருந்தது. இவ்விசைத் துறைகளையெல்லாம் இசைத்துக்காட்டத் தக்கவாறு திருஞான சம்பந்தர் பாடியருளிய இயலிசைத் திருப்பதிகங்கள் அமைந் திருந்தன. இச்செய்தி,

**கஞ்சத்தே னுண்டிட்டே களித்துவண்டு சண்பகக்**
**கானே தேனே போராருங் கழுமல நகரிறையைத்**
**தஞ்சைச் சார் சண்பைக்கோன் சமைத்த நற்கலைத்துறை**
**தாமே போல்வார் தேனேரார் தமிழ் விரகன மொழிகள்**
**எஞ்சத்தேய் வின்றிக்கே யிமைத்திசைத் தமைத்தகொண்**
**டேழே யேழே நாலேமூன் றியலிசை யிசை யியல்பா**
**வஞ்சத்தேய் வின்றிக்கே மனங்கொளப் பயிற்றுவோர்**
**மார்பே சேர்வாள் வானோர்சீர் மதிநுதல் மடவரலே.**

(1-126-11)

எனவரும் திருக்டைக்காப்பால் இனிது விளங்கும்.

தேவாரத் திருப்பதிகங்களில் அமைந்த பண்களைத் திணை வேறுபாடு பற்றியும், அகம் - புறம் - அருகு - பெருகு என்னும் சாதி வேறுபாடு பற்றியும் வகுத்து நிறுத்திப் பின்பு அவ்வப் பண்களின் உள் நின்ற சுவையிதுவெனக் குறித்துத் திருமுறை யெண்ணும் பதிகவெண்ணும் தந்து, திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந் தொகை, திருத்தாண்டகம், யாழ்முரி என்னும் இவற்றை அடுத்து வைத்துப் பின்வருமாறு அட்டவணைப் படுத்திக் காட்டுவர் யாழ் நூலாசிரியர்.



# தேவாரத்தில் வரும் பண்களின் அட்டவணை

| திணை வரும் பண் | திறம் | அகநிலை | புறநிலை | அருகியல் | பெருகியல் |
|---|---|---|---|---|---|
| பாலை | அராகம் | 17. தக்கராகம் | | | |
| | நேர்திறம் | 21. புறநீர்மை | | | |
| | உறுப்பு | 25. பஞ்சமம் | | | |
| குறிஞ்சி | நைவளம் | 37. நட்ட பாடை | 38. அந் தாளி | | |
| | காந்தாரம் பஞ்சுரம் | 41. காந்தாரம் | 46. பழம் பஞ்சுரம் | 47. மேக ராகக் குறிஞ்சி | |
| | படுமலை மருள் | 49. கௌவா ணம் | 54. பழந் தக்க ராகம் | | |
| | அரற்று | 61. குறிஞ்சி | 62. நட்ட ராகம் | | 64. வியாழக் குறிஞ்சி |
| | செந்திறம் | 65. செந்துருத்தி | | | |
| மருதம் | நவிர் | | 70. கொல்லி | | 76. காந்தார பஞ்சமம் |
| | வடுகு | 69. தக்கேசி | | | |
| | வஞ்சி | 73. இந்தளம் | | | 80. கௌசிகம் |
| | செய்திறம் | | 82. சீகா மரம் | | |
| | | 81. பியந்தை | | | |
| செவ்வழி | முல்லை | | 98. சாதாரி | | |

13

# பண்களின் சுவை (இரத) அடைவு

| பண் | திருமுறை எண் | பதிக எண் | சுவை (இரதம்) |
|---|---|---|---|
| 1. தக்கராகம் | 1 | 23-46 | பெருமிதம், மருட்கை |
| | 7 | 13-16 | பெருமிதம் |
| 3. புறநீர்மை | 3 | 118-123 | உவகை, மருட்கை |
| | 7 | 83-85 | மருட்கை |
| 4. பஞ்சமம் | 3 | 56-66 | உவகை |
| | 7 | 97-100 | உவகை |
| 37. நட்டபாடை | 1 | 1-22 | உவகை, மருட்கை |
| | 7 | 78-82 | பெருமிதம் |
| 38. அந்தாளிக் குறிஞ்சி | 3 | 124,125 | சமநிலை |
| 41. காந்தாரம் | 2 | 54-82 | பெருமிதம், மருட்கை |
| | 4 | 2-7 | ,, ,, |
| | 7 | 71,75 | ,, ,, |
| 46. பழம்பஞ்சுரம் | 4 | 14,15 | மருட்கை |
| | 7 | 47-53 | அச்சம், அவலம் |
| 47. மேகராகக் குறிஞ்சி | 1 | 129-135 | உவகை, மருட்கை |
| 49. கொல்லிக் கௌவாணம் | 3 | 42 | உவகை |
| | 7 | 38-46 | மருட்கை, பெருமிதம் |
| 54. பழந்தக்க ராகம் | 1 | 47-62 | அவலம், மருட்கை |
| | 4 | 12, 13 | அவலம் |
| 61. குறிஞ்சி | 1 | 75-103 | உவகை, மருட்கை |
| | 4 | 21 | பெருமிதம், உவகை |
| | 7 | 90-94 | உவகை |
| 62. நட்டராகம் | 2 | 97-112 | உவகை, மருட்கை |
| | 7 | 17-30 | பெருமிதம், உவகை |
| 64. வியாழக் குறிஞ்சி | 1 | 104-128 | பெருமிதம் |
| | 7 | 95 | பெருமிதம் |
| 69. தக்கேசி | 1 | 63-74 | அச்சம், உவகை |
| | 7 | 54-70 | அவலம், உவகை |
| 70. கொல்லி | 3 | 24-41 | மருட்கை, இளிவரன் |
| | 4 | 1 | அவலம் |
| | 7 | 31-37 | மருட்கை |

| | | | |
|---|---|---|---|
| 73. இந்தளம் | 2 | 1-39 | பெருமிதம், மருட்கை |
| | 4 | 16-18 | ,, ,, |
| | 7 | 1-12 | அச்சம், உவகை |
| 76. காந்தார பஞ்சமம் | 3 | 1-23 | உவகை, மருட்கை |
| | 4 | 10,11 | மருட்கை |
| | 7 | 77 | ,, |
| 80. கௌசிகம் | 3 | 43-55 | அவலம், மருட்கை, உவகை |
| | 7 | 96 | அவலம் |
| 81. பியந்தைக் காந்தாரம் | 2 | 83-96 | மருட்கை |
| | 4 | 8 | ,, |
| | 7 | 76 | சமநிலை |
| 82. சீகாமரம் | 2 | 40-53 | அவலம், மருட்கை |
| | 4 | 19,20 | ,, ,, |
| | 7 | 86-89 | ,, ,, |
| 98. சாதாரி | 3 | 67-117 | அச்சம், பெருமிதம், உவகை |
| | 4 | 9 | பெருமிதம், |
| 13. செவ்வழி | 2 | 113-122 | மருட்கை |
| நேரிசை | 4 | 22-79 | அவலம் |
| விருத்தம் | 4 | 80-113 | சமநிலை, மருட்கை |
| திருக்குறுந்தொகை | 5 | 1-100 | பெருமிதம், மருட்கை |
| திருத்தாண்டகம் | 6 | 1-99 | பெருமிதம், மருட்கை, அவலம், இளிவரல் |
| நம்முரி | 1 | 136 | உவகை |

தேவாரத் திருப்பதிகங்களும் அவற்றின் பண்ணமைதிகளும் இடைக்காலத்திற் போற்றுவாரின்றி அருகிய நிலையிலே சோழ மன்னனொருவன் திருநாரையூர் நம்பியாண்டார் நம்பி என்பவ ரின் துணைகொண்டு தில்லையில் தேவாரத் திருப்பதிகங்களைத் தேடிக்கண்டு தொகுத்து முறைப்படுத்தினமையால் திருமுறை கண்ட சோழன் எனப் போற்றப்பெற்றான் என்ற வரலாறு முன்னர் விளக்கப்பெற்றது. அவ்வேந்தன், திருவெருக்கத்தம் புலியூரில் திருநீலகண்ட யாழ்ப்பாணர் மரபிற் பிறந்து இசைத் துறையில் வல்ல பாடினியா ரொருவரைக்கொண்டு தேவாரத் திருப்பதிகங்களுக்குரிய பழைய பண் முறைகளை அடியொற்றி இசை வகுக்கச் செய்தனன். அங்ஙனம் வகுக்கப்பெற்ற தேவாரப் பண்முறை கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டு வரை தமிழ் நாட்டில் சிறப்பாக நிலைபெற்று வழங்கியது. கி.பி. 1210-1241-ல் வடநாட்டில் தௌலதாபாத் தேவகிரிராச்சியத்தில் சிம்மண ராச சபையில் அவைக்களப் புலவராக விளங்கியவர் சாரங்க

தேவர். இவர் தமிழ்நாட்டில் யாத்திரை செய்து இங்கு வழங்கும் தேவாரப் பண்களை நன்குணர்ந்தவர். இவர் தாம் இயற்றிய சங்கீத ரத்தனாகரம் என்னும் இசை நூலில் தேவாரப் பண்கள் சிலவற்றின் இலக்கணங்களைப் பொன்னேபோல் போற்றி வைத்துள்ளார். தக்கராகத்தின் விபாஷையாகிய தேவாரவர்த்தி நீ என்றும், மாளவ கைசிகமாகிய தேவாரவர்த்தநீ என்றும் தக்க ராகம், கௌசிகம் ஆகிய தேவாரப்பண்களை இவர் முறையே குறித்துள்ளமை காணலாம். எனவே தேவாரத் திருப்பதிகங்களை முன்னோர் வகுத்த பண் முறைப்படி இக்காலத்திலும் பாடிக் கேட்டு மகிழ்தற்குரிய வழிமுறைகளை ஆராய்ந்து மேற்கொள்ளு தற்குச் சாரங்கதேவர் இயற்றிய சங்கீத ரத்தனாகரம் பெரிதும் துணைபுரியுமெனக் கொள்ளுதல் ஏற்புடயதாகும்.

தேவாரப் பதிகங்களுக்குப் பண்வகுத்த காலத்து இசை முறையும் சாரங்கதேவர் இயற்றிய சங்கீத ரத்தனாகரத்திற் கூறப் பட்ட தேவாரப் பண்களின் இசைமுறையும் இடைக் காலத்து இசைமரபு எனப்படும். இவ்விசை மரபு கி.பி. 16-ஆம் நூற்றாண்டு வரை தமிழ்நாட்டில் அழிவெய்தாதிருந்தது. பின்பு தஞ்சையில் மகாராட்டிர ஆட்சியில் ஏற்பட்ட பிறநாட்டு இசைக் கலப்பினாலும் பிறமொழியிசைப் பாடல்களைப் பாடும் பழக்கம் இசைவாணர் பால் பெருக நிலை பெற்றமையாலும் இசைத் தமிழ்ப் பனுவல்களாகிய தேவாரத் திருப்பதிகங்களை அவற்றிற் குரிய பண்முறையிற் பாடும்முறை மறந்து பழைய தமிழ்ப் பண்ணுருவங்கள் சிதைந்து மறையும் நிலையையெய்தின. எனவே பிற்காலத்தில் தேவாரப் பதிகங்களை அவற்றுக்குரிய பண்களிற் பாடும் தலைமுறையினராகிய இசையாளர் அருகினர். எனினும் திருக்கோயில்களிலும் திருமடங்களிலும் பணிபுரிந்த ஓது வார்கள் சிலர், இன்ன இன்ன பண்ணமைந்த பதிகங்களை இன்ன இன்ன இராகங்களிற் பாடுதல் வேண்டும் எனத் தமக்குள் ஒருவரையறை செய்து கொண்டனர் எனத் தெரிகிறது.

தேவாரத்திற் பயின்ற பண்களைப் பகற்பண், இராப்பண், பொதுப்பண் என மூவகையாகப் பகுத்து, அவை முறையே இன்ன இன்ன நேரங்களிற் பாடுதற்குரியன என்பதும், இன்ன இன்ன பண்ணமைந்த பதிகங்களை இக்காலத்தில் வழங்கும் இன்ன இன்ன இராகங்களிற் பாடுதல் வேண்டும் என்பதும் ஆகிய தேவாரப் பண்முறைக் குறிப்பொன்று திருவாவடுதுறை யாதீனத்திலுள்ள ஏட்டுப் பிரதியொன்றில் இருப்பதாக ஆசிரியப் பெருந்தகை பொன்னோதுவாரவர்கள் வெளியிட்டுள்ளார்கள்.*

(* Annamalai University Journal, Vol. I, No.2 'தேவாரப் பண்கள்' என்ற கட்டுரை பார்க்க) அக்குறிப்பு பின்வருமாறு:

பகற்பண்கள் பத்து: இவை ஒவ்வொன்றினுக்கும் முறையே மும்மூன்று நாழிகை மேலேற்றிக் காலவரையறை கொள்க.

## பகல்

| கால வரையறை நாழிகை | பண் | இராகம் |
|---|---|---|
| 0-3 | புறநீர்மை | ஸ்ரீகண்டி |
| 3-6 | காந்தாரம், பியந்தை | இச்சிச்சி |
| 6-9 | கௌசிகம் | பயிரவி |
| 9-12 | இந்தளம், திருக்குறுந்தொகை | நௌித பஞ்சமி |
| 12-15 | தக்கேசி | காம்போதி |
| 15-18 | நட்டராகம், சாதாரி | பந்துவராளி |
| 18-21 | நட்டபாடை | நாட்டைக் குறிஞ்சி |
| 21-24 | பழம்பஞ்சுரம் | சங்கராபரணம் |
| 24-27 | காந்தார பஞ்சமம் | கேதாரகௌளை |
| 27-30 | பஞ்சமம் | ஆகிரி |

இராப்பண்கள் எட்டு; ஒவ்வொன்றிற்கும் மூன்றே முக்கால் நாழிகையாக மேலேற்றிக் கால வரையறை கொள்க.

## இரவு

| கால வரையறை நாழிகை | பண் | இராகம் |
|---|---|---|
| 30-33¾ | தக்கராகம் | கன்னட காம்போதி |
| 33¾-37½ | பழந்தக்கராகம் | சுத்த சாவேரி |
| 37½-41¼ | சீகாமரம் | நாதநாமக்கிரியை |
| 41¼-45 | கொல்லி, கொல்லிக் கௌவாணம், திருநேரிசை, திருவிருத்தம் | சிந்து கன்னடா |
| 45-48¾ | வியாழக்குறிஞ்சி | சௌராஷ்டிரம் |
| 48-52½ | மேகராகக்குறிஞ்சி | நீலாம்பரி |
| 52½-56¼ | குறிஞ்சி | மலகரி |
| 56¼-60 | அந்தாளிக்குறிஞ்சி | சைலதேசாட்சி |

## பொதுப்பண்கள்

| | |
|---|---|
| செவ்வழி | எதுகுல காம்போதி |
| செந்துருத்தி | மத்தியமாவதி |
| திருத்தாண்டகம் | பியாகடை |

இம்மூன்றும் பகல் இரவு ஆகிய எக்காலமும் பொதுவாகப் பாடுதற்குரியன வாகையாற் பொதுப் பண்களாயின.

## இராகசுரங்கள்

ஸ்ரீகண்டி - ஸகமபதநிஸ - ஸநிதபமகஸ

ஸிந்துகந்நடா - மகமரிகமபஸ -ஸநிதபமகரிஸ

ச -ரி - அம் - க- ச - த - கை - நி

ஸைலதேசாட்சி - ஸரிகமபமதநிஸ - ஸநிபமகமரிஸ

ஷ - ரி - - அம் - கா - ஸ - த - கா - நி

திருவாவடுதுறையாதீன ஏட்டுச் சுவடியில் உளதென மேலே காட்டிய பண்ணடைவிலே, வேங்கடமகி இயற்றிய சதுர்தண்டிப் பிரகாசிகையிலே காணப்படுவனவும் பிற்காலத்தில் வழக் கொழிந்தனவுமாகிய இராகங்கள் சில குறிக்கப்பெற்றுள்ளன. இதிற்குறித்த 'இச்சிச்சி' என்பது, ஹெஜ்ஜுஜ்ஜி என்ற இராகத்தையும், 'நெளித பஞ்சமி' என்பது லளித பஞ்சமத்தையும் குறிப்பன. எழுபத்திரண்டு மேளகர்த்தா ராகங்களை வகுத்துக் காட்டியவர் வேங்கடமகி, அவர் தந்தையார் கோவிந்த தீட்சிதர். அவர் தஞ்சையில் கி.பி 1572 முதல் 1614 வரை ஆட்சிபுரிந்த அச்சுதப்ப நாயக்கருக்கு அமைச்சராயிருந்தவர். அவருடைய புதல்வர் வேங்கடமகி காலத்திற்குப் பின் தோன்றிய இப் பண்ணடைவு ஏறக்குறைய முந்நூறாண்டுகள் தொன்மையுடைய தெனக் கொள்ளலாம். இப்பண்ணடைவினைக் குறித்த திருவாவடு துறையாதீன ஏட்டுப் பிரதியில் "கொல்லம் 917-ளு துன்முகி-ளு மாசிமீ ச-உ எழுதி முடிந்தது" என எழுதப் பெற்றிருத்தல் இதனை வலியுறுத்தும்.

இனி, மேலே குறித்த முறையிலன்றிச் சில பண்களை வெவ்வேறு இராகங்களிற் பாடும் மரபொன்றும் தேவார ஓதுவார்களிடையே நிலவி வந்துளது. புறநீர்மையைப் பூபாளத் திலும், காந்தாரம், பியந்தைக் காந்தாரம், கொல்லி, கொல்லிக் கௌவாணம் என்ற பண்களை நவரோசிலும், இந்தளம் திருக் குறுந்தொகைப் பதிகங்களை நாதநாமக்கிரியையிலும், நட்ட பாடையை நாட்டையிலும், தக்க ராகத்தைக் காம்போதியிலும், குறிஞ்சியை அரிகாம்போதி எதுகுல காம்போதி கலப்பிலும்,

அந்தாளிக் குறிஞ்சியைச் சாமா ராகத்திலும், திருத்தாண்டகத்தை அரிகாம்போதியிலும் பாடும் வழக்கம் நிலைபெற்றிருத்தலை ஓதுவார் பலரும் நன்கறிவர். இவ்வாறே பழந்தக்க ராகத்தை ஆரபியிற் பாடும் வழக்கமும் இருந்து வருகிறது.

மேலே இன்ன பண்ணுக்கு இன்ன ராகம் எனக் குறித்த முறையில் 'நவரோசு' என்ற ஒரே இராகம் கொல்லி, கொல்லிக் கௌவாணம், காந்தாரம், பியந்தைக் காந்தாரம் என்ற நால்வேறு பண்களுக்கும் உரியதாக அமைக்கப் பெற்றிருத்தலையும், பகற் பண்களுக்குரியனவாகக் கூறப்படும் இராகங்கள் சில மீட்டும் இராப்பண்களுக் குரியனவாகக் குறிக்கப் பெற்றிருத்தலையும் கூர்ந்து நோக்குங்கால், இங்ஙனம் தேவாரப்பண்களுக்கு இராகம் வகுத்த காலத்தில் மேற்குறித்த நால்வேறு பண்களுக்கும் இடையே யமைந்த சிறப்பியல்பினையுணர்ந்து பாடும் இசை மரபு மறக்கப்பட்டு மறைந்தமை நன்கு புலனாம். ஆகவே, மேற்குறித்த பண்களுக்குப் பிற்காலத்தில் அமைந்த இராக அட்டவணையை அடிப்படையாகக் கொண்டு இன்ன பண்ணின் உருவம் இன்ன இராகத்தை ஒத்தது என முடிவு செய்வதைக் காட்டிலும், இன்ன இன்ன பண்ணமைந்த பதிகங்களை இன்ன இன்ன இயகங்களிற் பாடுதல் தக்கது என்று பிற்காலத்தார் வகுத்த இசைமுறை யெனவே அதனைக் கொள்ளுதல் ஏற்புடையதாகும்.

தேவாரத்திற் பயின்ற பண்கள் முன்னோர் நூற்று மூன்று எனப் பகுத்த பழைய தமிழ்ப் பண்களும் அடங்கியன என்பது முன் விளக்கப்பட்டது. இப்பண்களின் இலக்கணங்களை யுணர்ந்து பாடும் இசைமரபு, நாட்டில் ஏற்பட்ட அரசியல் மாறுபாட்டால் பிற்காலத்தில் அருகி மறைவதாயிற்று. இந்நிலையில் திருக்கோயில்களிலும் திருமடங்களிலும் திருப்பதி கங்கள் ஓதப்பெறும் முறையினை அடியொற்றி ஓதுவார்கள் பாடி வந்தனர். எனினும் பிற்காலத்தில் சைவ ஆதீனங்களிடையே நிலைபெற்று வழங்கிய பழக்கங் காரணமாகவும் இசைத் துறையில் மிகவும் தேர்ச்சிபெற்ற ஓதுவார்கள் சிலர் தமது இசைத்திறம் விளங்கப் புதியனவாக அமைத்துப் பாடிய இசை யமைப்பாலும் மேற்குறித்த பண்களுள் ஒரு சிலவற்றிற்குரிய இராகங்கள் வேறுபட்டன என எண்ணவேண்டியுளது.

தேவாரப் பண்களில் பகற்பண், இராப்பண் என்ற பகுப்பு முறை பழைய பண்முறையினை அடியொற்றி அமைந்திருத்தல் வேண்டும். தேவார ஆசிரியர்கள் தலங்கள் தோறும் இறைவனை வழிபடச் சென்றபொழுது அவ்வக்கால நிலைக்குச் சிறப்புரிமை யுடைய பண்களிலும் திருப்பதிகங்களை அருளிச் செய்துள்ளார்கள். திருஞானசம்பந்தர் திருமறைக்காட்டிலிருந்து பாண்டி நாட்டிற்கு எழுந்தருளி மதுரையெல்லையில் நின்று திருவாலவாய்த் திருக்கோபுரத்தைக் கண்டு கைதொழுது போற்றிய நேரம்

விடியற்காலமே என்பது பெரிய புராணத்தால் இனிது புலனாம். விடியற் காலமாகிய பொழுதுக்குப் பொருந்த அப்பொழுது பிள்ளையார் அருளிய திருப்பதிகம் 'மங்கையர்க்கரசி' என்னும் முதற்குறிப்புடைய புறநீர்மைப் பதிகமாகும். புறநீர்மை (பூபாளம்) என்றபண், பள்ளியெழுச்சிக்குரிய விடியற் காலத்திற் பாடத்தக்க தென்பது,

"பாண் வாய் வண்டு நோர்திறம்பாடக்
காண்வரு குவளை கண்மலர் விழிப்ப"
(அந்திமாலை -75,76)

எனவரும் சிலப்பதிகாரத் தொடராலும்,

"வண்டாகிய பள்ளியுணர்த்துவான் புறநீர்மை என்கின்ற
பண்ணைப்பாட, குவளை கண்மலர்போல விழிப்ப"

என இதற்கு அரும்பதவுரையாசிரியர் எழுதிய உரைக்குறிப்பாலும் இனிது விளங்கும்.

காலையில் மருதமும், மாலையில் செவ்வழியும், நள்ளிரவிற் குறிஞ்சியும் பாடுதல் வேண்டும் என்பது பழந்தமிழ் இசைமரபு. இம்மரபினை,

"யாழோர் மருதம் பண்ண" (மதுரைக் -658)

எனவும்,

"செவ் வழியாழிசை நிற்ப............
மாலையும் வந்தன்று" (கலி 143,38-41)

எனவும்,

"ஒலியல் வார்மயிர் உளரினள் கொடிச்சி
பெருவரை மருங்கிற் குறிஞ்சிபாட
..................................................................
மறம்புகல் மழகளி றுறங்கும்" (அகம்-102)

எனவும் வரும் சங்க இலக்கியத் தொடர்களால நன்குணரலாம்.

"பாலையாழொடு செவ்வழி பண்கொள
மாலை வானவர் வந்து வழிபடும்"

என்றார் திருநாவுக்கரசரும், இதனால் செவ்வழிப்பண்மாலைக் காலத்திற் பாடுதற்குச் சிறப்புரிமையுடைய தென்பது நன்கு புலனாதல் காணலாம். தண்டியலங்காலத்தில் நுட்ப அணிக்கு உதாரணமாக அமைந்தது,

"பாடல் பயிலும் பணிமொழி தன்பணைத்தோள்
கூடல் அவாவாற் குறிப்புணர்த்தும்-ஆடவற்கு
மெனறீந் தொடைபாழின் மெல்லவே தைவந்தாள்
இன்றீங் குறிஞ்சி யிசை"

என்ற வெண்பாவாகும். "இங்கே குறிஞ்சியிசையைப் பாடுதலாகிய தொழிலினாலே இடையாமத்திலே கூடுதற்கு நேர்ந்தாள் என்பது அநுமானித்தறியப்படும். குறிஞ்சிக்குச் சிறுபொழுது இடையாமமென அறிக" என்பது மேற்காட்டிய பாடலின் பழையவுரை. இவ்விசை மரபுக்கு ஏற்பத் திருவாவடுதுறை யாதீனத்தும், தருமபுர ஆதீனத்தும் ஆதீனத் தலைவரவர்கள் மார்கழி மாதத்தில் இடையாமத்திலே நித்திய கரும அனுட்டானங்களை முடித்துக் கொண்டு பூசை மடத்தில் வழிபாடு செய்யும்போது ஓதுவா மூர்த்திகள் குறிஞ்சிப்பண் ஓதுதலை வழக்கமாகக் கொண்டிருக்கிறார்கள் என்றும், பிறகாலத்தில் ஓதுவதில்லையென்றும் ஆசிரியர் பொன்னோதுவாரவர்கள் எழுதியிருப்பது இங்கு நோக்கத்தக்கதாகும்.

அருட்டுறையிறைவனால் தடுத்தாட் கொள்ளப் பெற்ற நம்பியாரூரர், திருவதிகையை வணங்கச்சென்று திருநாவுக்கரசர் கைத்திருத்தொண்டு புரிந்த அத்தலத்தை மிதிக்க அஞ்சி அந்நகருட்புகாது அதன் அயலேயுள்ள சித்தவட மடத்தில் இரவில் துயில் கொண்டார். அதிகைப்பெருமானே முதுமறையோராக அம்மடத்துள் வந்து சுந்தரருடன் உறங்குவார் போலிருந்து ஆரூரர் சென்னியில் திருவடிசூட்டியருளினார். அப்பொழுது, சுந்தரர் 'தம்மானையறியாத சாதியாருளரே' என்ற திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார் என்பது வரலாறு. இப்பதிகம் கொல்லிக்கௌவாணம் என்ற பண்ணில் அமைந்ததாகும். திருவொற்றியூரிலே சங்கிலியார்க்குக் கூறிய சூள் பிழைத்து அவ்வூரைவிட்டு நீங்கினமையாற் கண்களையிழந்து வருந்திய சுந்தரர், காஞ்சியில் திருவேகம்பரைப்பரவி இடக்கண் பெற்றுப் பல தலங்களையும் வணங்கி ஒருநாள் மாலைப் பொழுதில் திருவாரூரையடைந்து பரவையுண்மண்டளி யிறைவரைப் பாடிப் போற்றித் திருஅத்தயாம காலத்தில் திருவாரூர்ப் பூங்கோயிலமர்ந்த பெருமானை ஏதிலார்போல் வினவிக் கைக்கிளைத்திணையிற் பாடிய திருப்பதிகம், 'குருகுபாய' என்னும் முதற் குறிப்புடையதாகும். இப்பதிகம் கொல்லிப் பண்ணிற் பாடப் பெற்றதாகும்.

சுந்தரரால் நள்ளிரவில் பாடப்பெற்றனவாகச் சேக்கிழாரடிகள் குறித்த இவ்விரு பதிகங்களும் முறையே கொல்லிக் கௌவாணம், கொல்லி என்ற பண்களில் அமைந்திருத்தலைக் கூர்ந்து நோக்குங்கால், இவ்விரு பண்களையும் இராப்பண்களாக வகுத்த முன்னோரது பகுப்புமுறையின் நுட்பம் இனிது புலனாம்.

தேவாரத் திருப்பதிகங்களுக்குப் பண்வகுக்கச் செய்த திருமுறைகண்ட சோழன் காலத்தும் சேக்கிழார் காலத்தும் நிலவிய இசைமரபும், சாரங்க தேவா சங்கீதரத்னாகரத்திற்

குறித்த தேவாரப் பண்களின் இசை மரபும் தமிழ் நாட்டில் இடைக்காலத்தில் வழங்கிய இசை மரபாகும். தேவாரத் திருப்பதிகங்களை முன்னோர் பாடிய இசை முறையின்படி இக்காலத்தும் பாடிக்கேட்டு மகிழும் வண்ணம் தேவாரப் பண்களின் இலக்கணங்களை உணர்ந்துகொள்ளுதற்குச் சாரங்க தேவர் இயற்றிய இசைநூல் ஓரளவு துணைபுரியும் நிலையில் அமைந்திருத்தல் காணலாம். தமிழ் முன்னோர் கண்ட ஏழ் பெரும்பாலை ஐந்து சிறுபாலை ஆகிய பன்னிரு பாலைகளும் நிலையான இசையுருவங்களாகும். இவற்றின் முதல் நரம்பு வேறுபடுமிடத்தும் இந்நிரல்களின் இசை வேறுபடுதலில்லை. சங்கீதரத்தினாகரத்திற் கூறப்படும் இடைக்காலத்து மூர்ச் சனைகளோ அவ்வம் மூர்ச்சனைகளின் முதலில் நிற்கும் சுரத்தினாற் பெயர்பெற்றவை. அவை காகலி அந்தரங்களோடு கூடிவருதலாலே இசை வேறுபடுமிடத்தும் அவற்றின் பெயர் வேறுபடுதலில்லை.

இக்குறிப்புக்களை யுளத்திற்கொண்டு, தமிழர் வகுத்த நூற்று மூன்று பண்களின் அமைப்பினையும் சங்கீதரத்தனா கரத்திற் குறிக்கப்பெற்ற மூர்ச்சனைகளையும் ஒப்பு நோக்கி யாராய்ந்து, தேவாரப் பண்களின் இசையுருவங்களையும் அப்பண்கள் அமைந்த பதிகங்களுக்குரியனவாகப் பிற்காலத்தார் மேற்கொண்டு பாடிவரும் இராகங்களைப் பற்றி நாரத சங்கீத மகரந்தம், சதுர்தண்டிப் பிரகாசிகை முதலிய வடமொழி யிசை நூல்களிற் காணப்படும் இசையமைதியையும் அருள்மிகு விபுலாநந்த அடிகளார் யாழ்நூல் தேவார இயலில் தெளிவாக விளக்கியுள்ளார்கள். தென்னாட்டு இசைத்துறையில் ஷட்ஜம், சுத்தரிஷபம், சதுசுருதி ரிஷபம், சாதாரண காந்தாரம், அந்தர காந்தாரம், சுத்த மத்திமம், பிரதி மத்திமம், பஞ்சமம், சுத்த தைவதம், சதுசுருதி தைவதம், கைசிகி நிஷாதம், காகலி நிஷாதம் என வழங்கும் பன்னிரண்டு இசை நிலைகளும் முறையே ச, ர, ரி, க, கி, ம, மி, ப, த, தி, ந, நி என்னும் குறியீட்டெழுத்துக்களால் யாழ் நூலிற் குறிப்பிடப்பட்டன. யாழ்நூலாசிரியர் கூறிய விளக்கங்களை அடியொற்றித் தேவாரப் பண்களைப் பற்றி அறிந்துகொள்ளத்தக்க குறிப்புக்களை ஈண்டு ஒரு சிறிது தொகுத்து நோக்குதல் இன்றியமையாததாகும்.

## 13. செவ்வழி

முல்லைப் பெரும்பண்ணாய், நூற்றுமூன்று என்னும் பண் வரிசையில் 13 என்னும் எண் பெற்றது செவ்வழி என்ற பண்ணாகும். இரண்டாந் திருமுறையில் 113 முதல் 122 வரையுள்ள பதிகங்கள் செவ்வழிப் பண்ணுக்கு உரியன. இது

மாலைப் பொழுதிற் பாடுதற்குரியதென்பது முன்னர் விளக்கப் பெற்றது. கிரம வழக்கு வீழ்ந்த இடைக்காலத்தில் இவ்வரையறை மாறியதும் உண்டு. சேக்கிழாரடிகள்,

"மாறுமுதற் பண்ணின்பின் வளர்முல்லைப் பண்ணாக்கி
ஏறிய தாரமும் உழையும் கிழமைகொள விடுந்தானம்
ஆறுலவுஞ் சடைமுடியார் அஞ்செழுத்தின் இசைபெருகக்
கூறிய பட்டடைக் குரலாங் கோடிப்பாலையின் நிறுத்தி"

(பெரிய-ஆனாயர்-25)

என முல்லைப் பண்ணுக்குக் கோடிப்பாலை கொண்டது மன்றி அது தாரமும் உழையும் கிழமைகொளும் எனவும் கூறியிருத்தலால், கரகரப்பிரியா ராகத்தினைக் காந்தார நிஷாத சுரங்கள் அம்ச சுரமாகக் கொண்டு பாடுமிடத்துச் செவ்வழிப் பண்ணின் உருவம் தோன்றும் என்பர் யாழ் நூலார். செவ்வழிப் பண்ணிலமைந்த பதிகங்களைப் பிற்காலத்தார் எதுகுல காம்போதியிற் பாடுதலை மரபாகக்கொண்டனர்.

## 17. தக்கராகம்

பாலைப்பெரும் பண்ணில் தோற்றிய 'அராகம்' என்னும் திறத்தின் அகநிலையாய்ப் பண்வரிசையில் 17 என்னும் எண் பெற்று நிற்பது தக்கராகம். இது முதல் திருமுறையில் 23 முதல் 46 வரையுள்ள பதிகங்களிலும், ஏழாந் திருமுறையில் 13 முதல் 16 வரையுள்ள பதிகங்களிலும் அமைந்துள்ளது.

"டக்க என்னும் இராகமானது, சட்ஜ, மத்யமா, தைவதீ என்னும் ஜாதிராகங்களிலே தோன்றி, அற்ப பஞ்சம முடையதாய், சட்ஜசுரத்தை முதல் முடிவு கிழமையாகப் பெற்றுக் காகலீ அந்தரங்களோடு கூடி வருவது; ஆத்ய மூர்ச்சனையினைக் கொண்டது; உருத்திரருக்கு உவந்தது; கார்காலத்திற்கு உரியது; பெருமிதம் மருட்கை வெகுளி என்னும் சுவைகளையுடையது; போர் வீரனொடு தொடர்புடையது" என்றும், "டக்கராகத்தின் விபாஷையாகிய தேவாரவர்த்தநீ பஞ்சம அம்சம், பஞ்சம கிரகம், சட்ஜ நியாசம் உடையது; சம்பூரணானது" என்றும் சாரங்க தேவர் கூறுவர். இதன் ஆளத்தியினை நோக்குமிடத்து, ரிஷபம் நீங்கியும் பஞ்சமம் (ஒருமுறை மாத்திரம் தோற்றி) அற்பமாகவும் நிற்றல் புலனாம். 'மத்தியமக்கிராமத்து சௌவீரி' என்னும் மூர்ச்சனையினை ஆத்ய மூர்ச்சனையெனக் கொள்ளலாம். காகலீ அந்தரங்களோடு கூடிய நிலையில் அது மேசகல்யாணி மேளத்திற்கு ஒப்பாகும். 'மபதநிசரிக' என்ற நிரலில் பஞ்சம ரிஷபங்கள் நீங்குதல், 'சரிகமபதநி' என்ற நிரலில் ரிஷபதைவதங்கள் நீங்குதலாகும். ஆதலால் கிமிபநி - நிதிபமிகிரி என ஔடவ சம்பூரணமாக இப்பண்ணின் உருவத்தைக் கொள்ளலாம் என்பர்

யாழ் நூலாசிரியர், தக்கராகப் பதிகங்களைக் கன்னட காம்போதியிலும், காம்போதியிலும் பாடுதல் பிற்கால வழக்கமாகும்.

## 21. புறநீர்மை (நேர்திறம்)

இது பாலை யாழ்த்திறங்களுள் 'நேர்திறம்' என்பதன் அகநிலையாய்ப் பண்வரிசையில் 21 என்னும் எண் பெற்றது. இப்பண் மூன்றாந் திருமுறையில் 118 முதல் 123 வரையுள்ள பதிகங்களிலும், ஏழாந்திருமுறையில் 83 முதல் 85 வரையுள்ள பதிகங்களிலும் அமைந்துளது. இது விடியற்காலத்திற் பாடுதற் குரிய பண்ணென்பது முன்னர்க் குறிக்கப்பட்டது. இதனை இக் காலத்தார் 'பூபாளம்' எனவழங்குவர். புறநீர்மைப் பதிகங்களைப் பூபாளத்திலன்றி ஸ்ரீகண்டி என்ற இராகத்திலும் பாடும் வழக்கம் பிற்காலத்தில் இருந்ததென்பது திருவாவடுதுறையாதீன எட்டுச் சுவடியிற்கண்ட குறிப்பினால் புலனாம்.

## 25. பஞ்சமம்

பாலைப்பெரும் பண்ணின் 'உறுப்பு' என்னுந் திறத்தின் அகநிலையாய்ப் பண் வரிசையில் 25 என்ற எண் பெற்றது. இப்பண் மூன்றாந் திருமுறையில் 56 முதல் 66 வரையுள்ள பதிகங்களிலும், ஏழாந்திருமுறையில் 57 முதல் 100 வரையுள்ள பதிகங்களிலும் பொருந்தியுள்ளது.

"பஞ்சமம் என்னும் இராகமானது. மத்திமா, பஞ்சமீ என்னும் ஜாதி ராகங்களில் தோன்றிக் காகலீ அந்தரங்களோடு கூடிப் பஞ்சம சுரத்தினை முதல், கிழமை, முடிவு ஆகப்பெற்று வருவது; ஹ்ருஷ்யகா என்ற மூர்ச்சனையையுடையது; காமனை அதி தெய்வமாகப் பெற்றது; முதுவேனிற் பருவத்துக்கு உரியது; நகை உவகை என்னும் சுவைகளை யுடையது; 'விளைவு' என்னும் நாடகச் சந்தியுள் வருவது" என்பர் சாரங்க தேவர்.

காகலீ அந்தரங்களோடு கூடிய வழி ஹ்ருஷ்யகா என்னும் மூர்ச்சனையானது, இக்காலத்து அரிகாம் போதி மேளத்தை ஒப்பது. இம் மேளத்தில் ஆரோகணத்தில் காந்தரா தைவதங்கள் நீங்கிய ரிம பந-நதி பமகிரி என்னும் ஔடவ சம்பூரண உருவம் பஞ்சமப் பண்ணுக்கு உரியது என்று கொள்வர் யாழ் நூலார். பஞ்சமப் பதிகங்களைப் பிற்காலத்தார் ஆகிரி ராகத்திற் பாடுதலை வழக்கமாகக் கொண்டனர்.

## 37. நட்ட பாடை (நைவளம்)

குறிஞ்சிப் பெரும்பண்ணின் அகநிலையாய்ப் பண் வரிசையில் 37-என்னும் எண் பெற்றது நட்டபாடை. பழந்தமிழ் நூல்களில் 'நைவளம்' என வழங்கப்பெற்ற பண்ணின் பெயரே

வடமொழியில் 'நாட்யபாஷா' என்றாகி மீண்டும் தமிழில் நட்டபாடையெனத் திரிந்து வழங்குகிறது.*(*"தமிழர் வழங்கிய நைவளம் என்னும் பண்ணினை வடநாட்டார் கைப்பற்றி, வேசர ஷாடவத்திற்குப் பாஷாங்கராகமாக்கி, 'நாட்யா' எனப் பெயர் புனைந்தார்கள். வேற்று மொழியிலிருந்து எடுத்து, வடமொழி வழக்கிற் சேர்க்கப்பட்டதெனக் குறிப்பதற்காக, இது 'நாட்டிய பாஷா' எனவும் வழங்கப்பட்டது. தமிழர் தாம் இழந்த பொருளினை அடையாளம் கண்டறிய மாட்டதாராய், 'தமிழ்' என்பதைக் குறித்து நின்ற 'பாஷா' என்னும் சொல்லைப் 'பாடை'யாக்கி, நட்ட பாடைப் பெயர் வழங்கி யிடப்படுவாராயினர். இனி, இப்பண்ணினை 'நைவளம்' என வழங்குவதே முறையாகும்" யாழ் நூல்- பக்கம் 286)

இப்பண் முதல் திருமுறையில் 1 முதல் 22 வரையுள்ள பதிகங்களிலும், ஏழாந்திருமுறையில் 78 முதல் 82 வரையுள்ள பதிகங்களிலும், பதினொராந் திருமுறையில் அம்மையார் அருளிய, "கொங்கை திரங்கி" என்னும் முதற் குறிப்புடைய மூத்த திருப்பதிகத்திலும் அமைந்துளது. இதனை வேசரஷாடவத்தின் பாஷாங்கமாகக் கொள்வர் சாரங்கதேவர். வேசர ஷாடவம் என்பது, சட்ஜ மத்தியமா என்னும் ஜாதி ராகத்தில் தோன்றி, மத்திம சுரத்தை முதல், முடிவு, கிழமையாகக் கொண்டு, காகலீ அந்தரங்களோடு கூடி மத்திம மாதியான மூர்ச்சனையை யுடையதென்பர், மத்திய மாதியான மூர்ச்சனை யென்பது, குரல் குரலான செம்பாலையைக் குறிக்கும். இக்காலத்தார் இதனை அரிகாம்போதி மேளம் என்பர்.

இனி, வேசரஷடவத்தின் பாஷாங்கமாய், நாட்யா எனப் பெயர் பெற்று நின்ற இராகம், சட்ஜத்தைக் கிரக சுரமாகவும் மத்திமத்தை நியாச சுரமாகவும் பெற்றது. மேலும் இது மத்தி மத்தை நிறைந்த சுரமாகப் பெற்றுப் பஞ்சமத்தை விட்டது எனக் கூறப்பட்டிருத்தலால் இதன் உருவம் ரிகிமதிந என்பதாகும் என்றும், எனவே இப்பண்ணுக்குரியதாக இக்காலத்தார் வழங்கும் நாட்டைக் குறிஞ்சியென்னும் இராகம் இப்பண்ணுக்குப் பொருத்தமானதேயென்றும் கூறுவர் யாழ் நூலாசிரியர். நட்ட பாடைப் பதிகங்களை நாட்டை ராகத்திலும் பாடும் வழக்கம் உண்டெனத் தெரிகிறது.

## 38. அந்தாளிக் குறிஞ்சி

குறிஞ்சிப் பெரும் பண்ணில் நைவளம் என்ற திறத்தின் புறநிலையாய்ப் பண் வரிசையில் 38 என்னும் எண் பெற்றது அந்தாளி என்ற பண்ணாகும். இது குறிஞ்சிப் பெரும் பண்ணின் திறங்களுள் ஒன்றென்பது தோன்ற அந்தாளிக் குறிஞ்சி என வழங்கப்பெற்றது. மூன்றாந் திருமுறையில் 124, 125 - ஆம்

பதிகங்கள் இப்பண்ணில் அமைந்தன. இதன் பழைய இசை யுருவம் இதுவெனத் தெரிந்து கொள்ள இயலவில்லை. இப்பண்ணமைந்த பதிகங்களைச் சைலதேசாட்சி என்ற இரகத்திலும் சாமா இராகத்திலும் பாடுதலை வழக்கமாகக் கொண்டனர் பிற் காலத்தார்.

## 41. காந்தாரம்

குறிஞ்சிப் பெரும்பண்ணின் அகநிலையப் பண்வரிசையில் 41 என்னும் எண் பெற்று நின்றது காந்தாரம். இப்பண், இரண்டாந் திருமுறையில் 54 முதல் 82 வரையுள்ள பதிகங்களிலும், நான்காந் திருமுறையில் 2 முதல் 7 வரையுள்ள பதிகங்களிலும், ஏழாந் திரு முறையில் 71 முதல் 75 வரையுள்ள பதிகங்களிலும் அமைந்துளது.

"காந்தார பஞ்சமத்தின் பாஷாங்கராகமாகிய காந்தரி என்பது, ஷட்ஜ மத்திமங்களால் அலங்கரிக்கப்பெற்றுத் தைவதம் இன்றிவரும் என்பர் சாரங்க தேவர்." "காந்தாரம் இசைய மைத்துக் காரிகையார் பண்பாட" என ஆளுடைய பிள்ளையார் கூறுதலால், சாரங்க தேவர் கூறிய காந்தாரியே காந்தாரப் பண் எனக்கொள்ளுதல் பொருந்தும் எனவும், சங்கீத ரத்தனாகரத்தில் தேவார வர்த்தநீயாகிய கௌசிகத்தை யடுத்து இப்பண் கூறப்பட்டிருத்தல் இதனை வலியுறுத்தும் எனவும், செம்பாலைக் குரிய ரிதமே பதிந என்னும் உருவில் தைவதம் நீங்கலாக எஞ்சி நின்ற ரிதிமபந என்னும் சுத்தஷாடவ வுருவத்தைக் காந்தாரப் பண்ணுக்கு உருவமாகக் கொள்ளலாம் எனவும், பாலைப் பெரும்பண்ணின் ஆசான் என்னுந் திறத்தின் அகநிலையாய் 33 என்னும் எண்பெற்ற காந்தாரத்தை நாரத சங்கீத மகரந்தம் கூறிய தேவகாந்தாரத்துக்கு ஒப்பாகக் கொள்ளுமிடத்து ரிகி மிதிநி என்னும் சுத்த ஷாடவ வுருவம் பெறும் எனவும் யாழ் நூலாசிரியர் காரணங்காட்டி விளக்கியுள்ளார்.

## 46. பழம் பஞ்சுரம்

குறிஞ்சிப் பெரும் பண்ணில் 'பஞ்சுரம்' என்னுந் திறத்தின் புறநிலையாய்ப் பண்வரிசையில் 46 என்னும் எண் பெற்றது பழம் பஞ்சுரம் என்ற பண்ணாகும். இது நான்காந் திருமுறையில் 14, 15-ஆம் பதிகங்களிலும், ஏழாந் திருமுறையில் 47 முதல் 53 வரை யுள்ள பதிகங்களிலும் அமைந்துளது. இதன் பழைய வுருவம் இதுவென விளங்கவில்லை. பிற்காலத்தார் இப்பண்ணமைந்த பதிகங்களைச் சங்கராபரண ராகத்திற் பாடுதலை வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

## 47. மேகராகக்குறிஞ்சி

இது, குறிஞ்சிப் பெரும்பண்ணின் 'பஞ்சுரம்' என்னுந் திறத்தின் அருகியலாய்ப் பண் வரிசையில் 47 என்னும் எண் பெற்றது. இதனை நாரத சங்கீத மகரந்தம் கூறும் 'மேகரஞ்சி' என்னும் இராகமாகக் கொள்ளுமிடத்து ம-முதலாகிய மூர்ச்சனையில் தைவத நிஷாதங்கள் நீங்கிய உருவம் இதன் உருவாகும். ம பத நி சரிக என்ற நிரலில் உள்ள தநி என்பன, சரிகம பதநி என்ற நிரலில் கம ஆகுமாதலின் அரிகாம்போதி மேளத்தில் காந்தாரம் மத்திமம் நீங்கிய 'ரிபதிந' என்ற சுத்த ஔடவ வுருவம் மேகராகக் குறிஞ்சியின் உருவமெனக் கொள்ளலாம் என்பர் யாழ் நூலார். இப்பண்ணமைந்த பதிகங்களை நீலாம்பரி ராகத்திற் பாடுதல் பிற்கால வழக்கமாகும்.

## 45. கொல்லிக்கௌவாணம்

குறிஞ்சிப் பெரும்பண்ணில் 'படுமலை' என்னுத் திறத்தின் அகநிலையாய்ப் பண் வரிசையில் 49-என்னும் எண் பெற்றது கௌவாணம் என்ற பண்ணாகும். மூன்றாந்திருமுறையில் 42-ஆம் பதிகத்திற்கும் ஏழாந்திருமுறையில் 38 முதல் 46 வரையுள்ள பதிகங்களுக்கும் உரியதாகக் குறிக்கப்பெற்ற கொல்லிக்கௌவாணம் என்ற பண், நூற்று மூன்று பண்களுள் ஒன்றாக மேலே குறித்த கௌவாணம் என்ற பண்ணாகவே இருக்கலாம் என்பர் யாழ்நூலார். இப்பண்ணின் பழைய உருவம் நன்கு புலப்படவில்லை. இப்பண்ணமைந்த பதிகங்களைப் பிற்காலத்தாருட் சிலர் 'சிந்து கன்னடா' என்ற இராகத்திலும் பலர் 'நவரோசு' என்ற இராகத்திலும் பாடுதலை வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

## 54. பழந்தக்கராகம்

இது, குறிஞ்சிப் பெரும்பண்ணில் 'மருள்' என்னுந் திறத்தின் புறநிலையாய்ப் பண்வரிசையில் 54-என்னும் எண் பெற்றது. இப்பண் முதல் திருமுறையில் 47 முதல் 62 வரையுள்ள பதிகங்களிலும் நான்காந்திருமுறையில் 12, 13-ஆம் பதிகங்களிலும் அமைந்துளது. இதன் பழையவுருவம் இதுவெனத் திட்டமாகத் தெரியவில்லை. பிற்காலத்தார் பழந்தக்க ராகப் பதிகங்களைச் 'சுத்த சாவேரி' என்னும் இராகத்திற் பாடுதலை வழக்கமாகக் கொண்டனர்.

## 61. குறிஞ்சி

குறிஞ்சிப் பெரும்பண்ணின் 'அரற்று' என்னுந் திறத்தின் அக நிலையாய்ப் பண்வரிசையில் 61-என்னும் எண் பெற்றது குறிஞ்சியென்ற பண். இது முதல் திருமுறையில் 75 முதல் 103 வரையுள்ள பதிகங்களிலும், நான்காந்திருமுறையில் 21-ஆம்

பதிகத்திலும், ஏழாந்திருமுறையில் 90 முதல் 94 வரையுள்ள பதிகங்களிலும் பொருந்தியுள்ளது. இதனை நாரத சங்கீத மகரந்தம் கூறும் 'குரஞ்சி'யென்னும் இராகமெனக் கொள்ளு மிடத்து, ம-முதலாகிய செம்பாலையில் 'நி' குறைந்ததாகக் கொள்ளவேண்டும் என்றும், ம-முதலாகிய, நிரலில் 'நி' குறைவது, ச-முதலாகிய நிரலில் 'ம' குறைவதாகுமாதலால் 'ரிகிபதிநி' என்னும் சுத்த ஷாடவவுருவத்தைக் குறிஞ்சிப் பண்ணுக்கு உரியதாகக் கொள்ளலாம் என்றும் யாழ்நூல் கூறும். குறிஞ்சிப் பண்ணமைந்த பதிகங்களை 'மலகிரி' என்ற இராகத்திலும் அரிகாம்போதி எதுகுல காம்போதி என்ற இராகங்களின் கலப்பிலும் பாடுதல் பிற்கால வழக்கமாகும்.

## 62. நட்டராகம்

குறிஞ்சிப் பெரும் பண்ணின் 'அரற்று' என்னுந் திறத்தின் புறநிலையாய்ப் பண்வரிசையில் '62' என்னும் எண் பெற்றது நட்டராகம். இப்பண், இரண்டாந் திருமுறையில் 97 முதல் 112 வரையுள்ள பதிகங்களிலும், ஏழாந் திருமுறையில் 17 முதல் 30 வரையுள்ள பதிகங்களிலும் அமைந்துளது. "நர்த என்னும் இராகமானது, மத்யமா, பஞ்சமீ என்னும் ஜாதிராகங்களிலே பிறந்தது; பஞ்சமத்தைக் கிழமையாகவும் முதலாகவும் கொண்டது; காகலியோடு கூடியது; பஞ்சமம் முதலாகிய மூர்ச்சனையை யுடையது; நகை, உவகை என்னும் சுவைகளைப் பொருந்தியது; துர்க்கையை அதிதெய்வமாகக் கொண்டது" என்பர் சாரங்க தேவர்.

பஞ்சமம் முதலாகிய சுத்தஷட்ஜா என்னும் மூர்ச்சனை யானது நடபைரவி மேளமாகும். பஞ்சமம் ஆதார சுருதியாக நிற்க, பஞ்சமம் சதுசுருதிதைவதம், கைசிகி நிஷாதம், ஷட்ஜம், சதுசுருதி ரிஷபம், சாதாரண காந்தாரம், சுத்த மத்திமம், பஞ்சமம் என எடுக்க நடபைரவி மேளமாகும். இந்நிரலில் தைவத ரிஷபங்களை நீக்குதல், 'சரிகமபதநிச' என்னும் நிரலில் ரிஷப பஞ்சமங்களை நீக்குதலாகும். யாழ்நூலார் கொண்ட குறி யீட்டின்படி 'நர்த' என்னும் இராகத்தின் உருவம் 'கமதந' என்பதாகும். சதுர்தண்டிப் பிரகாசிகை அநுபந்தத்தில் 20-ஆம் மேளத்தின் கீழே "பஞ்சம ரிஷப வர்ஜிதமும், ஆகவே ஔடுவமும், ஷட்ஜக்ரஹத்தோடு கூடியதுமான ஹிந்தோளம் என்பது அறிஞர்களால் எல்லாக்காலத்திலும் பாடப்படுவதாம்" எனக் கூறப்படுதலின், நட்டராகமானது இக்காலத்தில் தென்னாட்டில் 'இந்தோளம்' என்ற பெயருடன் வழங்கும் இராகத்திற்கு ஒப்பானது என்பர் யாழ்நூலாசிரியர். பிற் காலத்தார் நட்டராகப் பதிகங்களைப் பந்துவராளியிற் பாடி வருகின்றனர்.

## 64. வியாழக் குறிஞ்சி

இது, குறிஞ்சிப் பெரும்பண்ணில் 'அரற்று' என்னுந் திறத்தின் பெருகியலாய்ப் பண் வரிசையில் 64 என்னும் எண் பெற்றது. இப்பண் முதல் திருமுறையில் 104 முதல் 128 வரையுள்ள பதிகங்களிற் பொருந்தியுளது. இதன் பழைய இசையுருவம் இது வெனப் புலப்படவில்லை. பிற்காலத்தால் வியாழக் குறிஞ்சிப் பதிகங்களைச் சௌராஷ்டிரம் என்ற இராகத்திற் பாடி வருகின்றனர்.

## 65. செந்துருத்தி (செந்நிறம்)

குறிஞ்சிப் பெரும்பண்ணில் 'செந்திறம்' என்னுந் திறத்தின் அகநிலையாய்ப் பண்வரிசையில் 65 என்னும் எண் பெற்றது செந்துருத்தி. இது, செம்பாலையிலே தோற்றிய திறமாதலின் செந்திறம் என வழங்கப்பெறும். இப்பண் ஏழாந்திருமுறையில் 95-ஆம் பதிகத்தில் அமைந்துளது. நாரத சங்கீத மகரந்தம் என்ற நூலில் ம-முதலாகிய மூர்ச்சனையில், ரி, த இல்லாமல் தோற்றுவது 'மதுமாதவி' என்ற இராகம் எனக் குறிக்கப்பெற்றது. ச-முதலாகிய சரிகிமபதிந என்னும் செம்பாலை (அரிகாம்போதி) நிரலில் கி, தி நீங்க எஞ்சி நிற்கும் 'ரி ம ப ந' என்பது இதன் உருவம் எனவும் 'மதுமாதவி' என்ற பெயரே மத்தியமாவதி எனத் திரிந்தது எனவும் கொள்வர் யாழ்நூலார்.

## 69. தக்கேசி

மருதப் பெரும்பெண்ணின் 'நவிர்' என்னுந் திறத்தின் அகநிலையாய்ப் பண் வரிசையில் 69 என்னும் எண் பெற்றது தக்கேசி. இப்பண், முதல் திருமுறையில் 63 முதல் 74 வரையுள்ள பதிகங்களிலும், ஏழாந்திருமுறையில் 54 முதல் 70 வரையுள்ள பதிகங்களிலும் பொருந்தியுளது. இதனை 'டக்க கைசிகம்' என வழங்குவர் சாரங்கதேவர்.

"தைவதீ, மத்தியமா என்னும் ஜாதி ராகங்களிலிருந்து தோன்றித், தைவதத்தை முதல் முடிவு கிழமையாகக்கொண்டு காகலீ அந்தரத்தோடு கூடி உத்தராயதா என்னும் மூர்ச்சனையை யுடையது, டக்ககைசிகம். இது, இளிவரல் அச்சம் என்னும் சுவைகளைப் பெற்றது; மகாகாளருக்கும் மன்மதனுக்கும் உவப்பை விளைவிப்பது" என்றும், "மத்திமத்தை முதலாகவும் கிழமை யாகவும் தைவதத்தை முடிவாகவும் பெற்று நிகசத என்னும் இசைகளோடு கூடிநின்ற 'திராவிடி' என்னும் இராகம் டக்க கைசிகத்தின் விபாஷா ஆகும்" என்றும் சங்கீத ரத்னாகரம் கூறும்.

தக்கேசிப்பண் மருதப் பெரும்பண்ணின் அகநிலையாதலால், அரும்பாலையில் (தீரசங்கராபரணத்தில்) பிறக்கவேண்டு மென்பது இடைக்காலத்து மரபு காகலீ அந்தரங்களோடு கூடிய மூர்ச்சனைகளிலே ஷட்ஜாதி மூர்ச்சனையே தீரசங்கராபரண மாகும். ஆதலால் மேலே தந்த குறிப்புக்களுக்குப் பொருந்தும் வண்ணம் தக்கேசியை 'கி மி தி நி' என்னும் சுத்த ஔடுவ ராகமாகக் கொள்வர் யாழ்நூலார். தக்கேசிப் பதிகங்களைப் பிற்காலத்தார் காம்போதியிற் பாடி வருகின்றனர்.

## 70. கொல்லி

இது, மருதப் பெரும்பண்ணின் 'நவிர்' என்னுந் திறத்தின் புறநிலையாய்ப் பண் வரிசையில் 70-என்னும் எண் பெற்றது. இப்பண் மூன்றாந் திருமுறையில் 24 முதல் 41 வரையுள்ள பதிகங்களிலும், நான்காந் திருமுறையில் முதற் பதிகத்திலும், ஏழாந்திருமுறையில் 31 முதல் 37 வரையுள்ள பதிகங்களிலும் அமைந்துளது. திருநாவுக்கரசர் அருளிய திருநேரிசை, திருவிருத்தம் என்ற பதிகங்களையும் கொல்லிப் பண்ணுக்கு உரியனவாக இடைக்காலத்தார் கொண்டனர். கொல்லியின் பழைய இசை யுருவம் இதுவெனத் திட்டமாகக் கூறுதற்கியலவில்லை. கொல்லிப் பண்ணுக்குரிய பதிகங்களைப் பின்னுள்ளோர் 'நவரோசு' என்னும் இராகத்திற் பாடுதலை மரபாகக் கொண்டுள்ளனர்.

## 73. இந்தளம்

மருதப்பெரும் பண்ணின் 'வடுகு' என்னுந் திறத்தின் அகநிலையாப் பண் வரிசையில் 73-என்னும் எண் பெற்றது இந்தளம். இப்பண் இரண்டாந் திருமுறையில் 1 முதல் 39 வரை யுள்ள பதிகங்களிலும், நான்காந் திருமுறையில் 16, 17, 18-ஆம் பதிகங்களிலும், ஏழாந்திருமுறையில் 1முதல் 12 வரையுள்ள பதிகங் களிலும், பதினொராந் திருமுறையில் உள்ள 'எட்டியிலவம்' என்னும் முதற் குறிப்புடைய மூத்த திருப்பதிகத்திலும் அமைந் துளது. அன்றியும் திருநாவுக்கரசர் அருளிய திருக்குறுந்தொகைப் பதிகங்கள் இந்தளப் பண்ணுக்கு உரியவாகக் குறிப்பிடப் பெற்றுள்ளன.

"ஹிந்தோளகம் என்னும் இராகமானது தைவதி, ஆர்ஷபி என்னம் ஜாதி ராகங்களிலே தோன்றி, ரிஷப தைவதங்கள் இன்றி, முதல் முடிவு கிழமை என்னும் மூன்றும் ஷட்ஜசுரமாக வருவது, சுத்தமத்யா என்னும் மூர்ச்சனையைக் கொண்டது, பெருமிதம் மருட்கை வெகுளி என்னும் சுவைகளையுடையது; இளவேனிற் காலத்திற்கு ஏற்றது; மகரக் கொடியோனாய மன்மதனை அதிதெய்வமாகக் கொண்டது" எனச் சங்கீத ரத்தனாகரம்

கூறும். இதற்குரிய அலங்காரமும் வேறு பல குறிப்புக்களும் அந்நூலில் இடம் பெற்றுள்ளன.

மேலே சாரங்க தேவர் குறித்த சுத்தமத்யா மூர்ச்சனைக்கு ஒப்பானது கரகரப்பிரியா மேளம். அது, ஷட்ஜம், சது சுருதி ரிஷபம், சாதாரண காந்தாரம், சுத்த மத்திமம், பஞ்சமம், சதுசுருதி தைவதம், கைசிகி நிஷாதம், என நிற்குமாதலின் இதன் உருவம் 'ரிகம பதிந' எனக் கொள்ளலாம். இவ்வரிசையில் ரிஷப தைவதம் இரண்டும் நீங்கியது ஹிந்தோள ராகம். ஆகவே அதன் உருவம் 'கமபந' ஆகும். இனி, இக்காலத்தில் ஹிந்தோளம் என்ற பெயரில் வடநாட்டில் வழங்கும் இராகம், மேசகல்யாணி மேளத்தில் தோன்றிப் பஞ்சம ரிஷபமின்றிக் 'கிமிதிநி' என்னும் உருப்பெற்று நிற்பது. இவற்றின் வேறாக வேங்கடமகி கூறிய ஹிந்தோளராகம், நடபைரவி மேளத்தில் தோன்றிப் பஞ்சம ரிஷபமின்றிக் 'கமதந' என்னும் உருப்பெற்று நிற்பது. ஹிந்தோளம் என்ற பெயரால் மேலே குறிப்பிட்ட மூன்று இராகங்களிலும் காலத்தால் முற்பட்டது சாரங்கதேவர் கூறும் இந்தோளமே. ஆதலால் சங்கீத ரத்னாகரம் கூறும் ஹிந்தோள ராகத்தையே தேவாரத்தில் வரும் இந்தளப்பண்ணின் உருவமாகக் கொள்ளதல் வேண்டும். சாரங்கதேவர் ஹிந்தோளத்திற்கு இலாக்கணங் கூறுங்கால் 'காகலீ கலித' எனக் குறித்தாராயினும், 'கமபந' என்னும் உருவம் தமிழ் முன்னோர் வகுத்த நூற்று மூன்று பண்களுள் வாராமையால் இவ்விடத்தில் இந்தளப் பண்ணுக்குக் கைசிகிநிஷாதம் கொள்வது இன்றியமையாத தாயிற்று எனவும், காகலீயந்தரங்களோடு கூடி வருங்கால் தீரசங்கராபரணம் கொள்ளுதற்குரியதெனவும், அங்ஙனங் கொண்டால் இந்தளப் பண்ணின் உருவம் 'கிமபநி' ஆகும் எனவும், வடநாட்டில் வழங்கும் 'தெலுங்க' என்னும் இராகமும், 36-ஆம் மேளத்திற் பிறந்த 'கம்பீரநாட' என்னும் இராகமும் இவ்வுருவினவே யெனவும், விபுலாநந்த அடிகளார் யாழ் நூலில் தெளிவு படுத்தியுள்ளார்கள்.

தமிழ்ப்பண்ணாகிய இந்தளம் 'வடுகு' என்ற பெயராலும் வழங்கப்பெற்றுள்ளது. எனவே தமிழ் நாட்டில் 'வடுகு' என்ற பெயரால் வழங்கும் இந்தளமும், வடநாட்டில் 'தெலுங்க' என்ற பெயரால் வழங்கும் இந்தளமும் ஒன்றேயென்பது நன்கு துணியப் படும். இந்தளப்பதிகங்களை லளிதபஞ்சமியிலும் நாத நாமக்கிரி யையிலும் பாடும் வழக்கம் பிற்காலத்தில் ஏற்பட்டதாகும்.

## 76. காந்தார பஞ்சமம்

மருதப்பெரும் பண்ணின் 'வடுகு' என்னுந் திறத்தின் பெருகியலாய்ப் பண்வரிசையில் 76-என்னும் எண் பெற்றது

காந்தாரபஞ்சமம். இது, மூன்றாந்திருமுறையில் 1 முதல் 23 வரையுள்ள பதிகங்களிலும், நான்காந்திருமுறையில் 10, 11-ஆம் பதிகங்களிலும் ஏழாந்திருமுறையில் 75-ஆம் பதிகத்திலும் அமைந்துளது.

"காந்தாரபஞ்சமம் என்பது, காந்தாரி, ரக்தகாந்தாரி என்னும் ஜாதிராகங்களிலே தோன்றிக் காந்தார சுரத்தினை முதல் முடிவு கிழமையாகப் பெற்று வருவது; ஹாரிணாஸ்வா என்னும் மூர்ச்சனையுடையது; இராகுவை அதிதெய்வமாகக் கொண்டது; நகை, மருட்கை, அவலம் என்னும் சுவைகளோடு பொருந்தியது" எனச் சங்கீத ரத்தனாகரம் கூறும்.

ஹாரிணாஸ்வா மூர்ச்சனை மேசகல்யாணியாகும். அதன் உருவத்தை 'ரிகிமிபதிநி' எனக் கொள்ளலாம். இந் நிரலில் நி,மி என்னும் சுரங்கள் நீங்க எஞ்சி நிற்பது 'ரிகிபதி'. இதுவே காந்தார பஞ்சமத்தின் உருவம். இக்கால வழக்கிலே இவ்வுருவமுடையது மோகனராகமாகும். எனினும் இடைக்காலத்தார் கரகரப்பிரியா ராகத்தை முதல் மேளமாகக் கொண்டார்கள். ஆதலால் ஷட்ஜம், சதுசுருதி ரிஷபம், சாதாரண காந்தாரம், சுத்த மத்திமம், பஞ்சமம், சதுசுருதி தைவதம், கைசிகிநிஷாதம், ஷட்ஜம் என எடுத்துப் பின்பு அந்நிரலிலே சாதாரண காந்தாரம் முதல் சாதாரணகாந்தாரம் வரையும் இசைக்க மேசகல்யாணிமேள மாகும். இதன்கண் ரிஷப தைவதங்களை நீக்க, காந்தார பஞ்ச மத்தின் உருவம் வந்தெய்தும் என்பர் யாழ்நூலார். காந்தார பஞ்சமப் பதிகங்களைக் கேதார கௌளையிற் பாடுதல் பிற்கால வழக்கமாகும்.

## 80. கௌசிகம்

மருதப்பெரும் பண்ணின் 'வஞ்சி' என்னுந் திறத்தின் பெருகியலாய்ப் பண்வரிசையில் 80 என்னம் எண் பெற்றது கௌசிகம். மூன்றாந் திருமுறையில் 43 முதல் 55 வரையுள்ள பதிகங்கள் கௌசிகப் பண்ணுக்கு உரியன.

"கைசிகீ என்னும் ஜாதி ராகத்தில் தோற்றி, சட்சத்தினை முதல், கிழமை, முடிவு ஆகக்கொண்டு, அற்ப தைவதம் உடையதாய்க் காகலியோடு கூடி வருவது மாளவ கைசிகம். இது சட்ஜம் முதலாகிய மூர்ச்சனையுடையது; வீரம், வெகுளி, வியப்பு என்னும் சுவைகளோடு வருவது, முன்பனிக்காலத்திற்கு உரியது" எனவும், "மாளவ கைசிகத்தின் விபாஷாவாக அமைந்த தேவார வர்த்தநீ என்ற இராகம், சட்ஜத்தை அம்சமாகவும் பஞ்சமத்தை நியாசமாகவும் பெற்றுக் காந்தார நிஷாதசுரங்கள் விடுபட்டு நிற்பது" எனவும் கூறுவர் சாரங்கதேவர். அவரால் தேவார வர்த்தநீ எனக் குறிக்கப்பெற்ற கௌசிகப் பண்ணின் உருவம்,

'ரிமபதி' என்றும், வடநாட்டார் 'சுர-மல்ஹார' என வழங்கும் சுத்தராகம் இவ்வுருவினது என்றும், இது தென்னாட்டில் சுத்த சாவேரி என வழங்கப்படுவதென்றும் யாழ்நூலாசிரியர் விளக்கம் தருகின்றார். கௌசிகப்பதிகங்களை இக்காலத்தால் பயிரவி இராகத்திற் பாடி வருகின்றனர்.

## 81. பியந்தைக்காந்தாரம்

மருதப்பெரும்பண்ணின் 'செய்திறம்' என்பதன் அக நிலையாய்ப் பண்வரிசையில் 81-என்னும் எண் பெற்றது 'பியந்தை' என்ற பண்ணாகும். பியந்தையென்ற இப்பண்ணும் தேவாரத்தில் வரும் பியந்தைக் காந்தாரமும் ஒன்றேயெனக் கொள்ளுதல் பொருந்தும். இப்பண் இரண்டாந் திருமுறையில் 83 முதல் 96 வரையுள்ள பதிகங்களிலும், நான்காந்திருமுறையில் 8-ஆம் பதிகத் திலும், ஏழாந்திருமுறையில் 76-ஆம் பதிகத்திலும் அமைந்துளது. இப்பண்ணின் இசையமைதி இதுவெனத் திட்டமாகக் கூறுதற் கியலவில்லை. பியந்தைக்காந்தாரப் பதிகங்கள் பிற்காலத்தாரால் 'நவரோசு' என்னும் இராகத்திற் பாடப்பெற்று வருவதனைப் பலரும் அறிவர்.

## 82. சீகாமரம்

இது, மருதப்பெரும்பண்ணில் 'செய்திறம்' என்ற திறத்தின் புறநிலையாய்ப் பண்வரிசையில் 82-என்னும் எண் பெற்றது. இப்பண் இரண்டாந் திருமுறையில் 40 முதல் 53 வரையுள்ள பதிகங்களிலும், நான்காந்திருமுறையில் 19, 20-ஆம் பதிகங் களிலும், ஏழாந்திருமுறையில் 86 முதல் 89 வரையுள்ள பதிகங் களிலும் அமைந்துளது. இதன் பழைய இசையுருவம் புலனாக வில்லை. சீகாமரப் பதிகங்களைத் தேவார ஓதுவார்கள் நெடுங் காலமாக நாதநாமக்கிரியையிற் பாடி வருகின்றனர்.

## 98. சாதாரி

முல்லைப் பெரும்பண்ணில் 'முல்லை' என்னுந் திறத்தின் புறநிலையாய்ப் பண்வரிசையில் 98- என்னும் எண் பெற்றது சாதாரி என்ற பண்ணாகும். இது, மூன்றாந்திருமுறையில் 67 முதல் 117 வரையுள்ள பதிகங்களிலும், நான்காந்திருமுறையில் 9-ஆம் பதிகத்திலும் அமைந்துள்ளது.

"சட்ஜமத்தியமா என்னும் ஜாதி ராகத்தில் தோன்றித் தார சட்ஜத்தை முதல் (கிரகம்) ஆகவும் கிழமை (அம்சம்) ஆகவும், நிஷாத காந்தார சுரங்கள் குறை (அற்பம்) ஆகவும் பெற்று, ஷட்ஜம் முதலாகிய மூர்ச்சனையையுடையதாய் வீரம், வெகுளி என்னும் சுவைகளோடு கூடிக், கருப்பம் என்னும் நாடகச் சந்தியுள் வருவது சாதாரிதா என்னும் இராகம்" என்பர் சாரங்கதேவர்.

கரகரப்பிரியா மேளம் நிஷாத காந்தாரங்கள் அற்பமாய் (குறையாய்) வருவதாதலின், சாதாரிதா என்னும இராகம் கரகரப் பிரியா மேளத்தில் தோன்றியதாதல் வேண்டும். இதன்கண் காந்தார சுரம் மிகவும் அற்பமாய்வருதல் கருதி அதனை நீக்க, இது தேவமனோகரி என்னும் இராகமாகலாம் என்றும், பாட்டுக்கு உருகும் தமிழ்ச்சொக்கநாதர் பாணபத்திரர் பொருட்டுக் கூடலம் பதியிலே விறகாளாகிப் பாடியது சாதாரிப் பண்ணாதலின், அத்தெய்வஇிசை தேவமனோகரி எனப் பாராட்டப்பட்ட தென்றும் கூறுவர் யாழ் நூலாசிரியர். சாதாரிப் பதிகங்களைப் பந்துவராளியிற் பாடும் பழக்கம் பிற்காலத்தில் ஏற்பட்டதாகும்.

இசையுருவங்களைப் பிறழாது வளர்ப்பன இசைக் கருவிகள். அவை தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி என்பன. இந் நால்வகை இசைக்கருவிகளும் திருக் கோயில் வழிபாடுகளில் சிறப்பாக இடம் பெற்றிருந்த செய்தி தேவாரத் திருப்பதிகங்களிற் பல இடங்களிலும் குறிக்கப் பெற்றுளது.

பண்டை நாளில் வாழ்ந்த இசைவாணர்கள், துளைக்கருவி யாகிய வேய்ங்குழலையும் நரம்புக் கருவியாகிய யாழையும் துணையாகக்கொண்டே ஏழிசைத் திறங்களையும் குற்றமற இசைத்து இனிய இசை நுட்பங்களை நன்கு புலப்படுத்திக் காட்டி யுள்ளார்கள். இச்செய்தி,

"குழலினும் யாழினும் குரல்முதல் ஏழும்
வழுவின் றிசைத்து வழித்திறங் காட்டும்
அரும்பெறல் மரபிற் பெரும்பாண் இருக்கையும்"
(இந்திர -35- 8)

எனவரும் சிலப்பதிகாரத் தொடரால் இனிதுவிளங்கும். இசையின் இனிமையைப் பெருக்கிக்காட்டும் இசைக்கருவிகளுள் குழலும் யாழுமே தனிச் சிறப்புடையன என்பது "குழலினி தியாழினிதென்ப" எனவரும் திருக்குறளால் நன்கு புலனாம்.

அடர்ந்து வளர்ந்த மூங்கிற் காடுகளில் வண்டுகள் மூங்கிலில் துளை செய்ய, அத்துளைகளில் வழியே காற்றுப்புகுந்து இயங்க, அதனால் உளதாகிய ஓசை, கேட்போர் செவிக்கு ஒருவகை இன்பத்தை அளித்தது. அதன் இனிமையை யுணர்ந்த மக்கள், அதுபோன்றதோர் இன்னோசையைத் தாமும் இசைத்து மகிழ விரும்பிச் சிறிய மூங்கிற் கோலை வெட்டியெடுத்து, அதன்மேற் பல துளைகளை அளவுபெறச் செய்து முதன் முதல் அமைத்துக் கொண்ட துளைக்கருவி 'குழல்' என்பதாகும். இது புறத்தே வயிரமுடைய புல்வகையாகிய மூங்கிலிற் செய்யப்பெற்றமையால் வேய்ங்குழல் எனவும் புல்லாங்குழல் எனவும் வழங்கப்பெறுவ

தாயிற்று. இது முற்காலத்தில் மூங்கிலிலும் சந்தனம், கருங்காலி, செங்காலி என்ற மரங்களிலும் வெண்கலத்திலும் அமைக்கப் பட்டது. மூங்கிலிற் செய்வது உத்தமம், வெண்கலம் மத்திமம், ஏனைய அதமம் என்பர்.

குழலின் நீளம் இருபது விரல்; சுற்றளவு நாலரை விரல் துளையிடுமிடத்து நெல்லரிசியில் ஒரு பாதி மரன் நிறுத்திக் கடைந்து வெண்கலத்தால் அணைசு பண்ணி இடமுகத்தை அடைத்து வலமுகம் வெளியாக விடப்படும். இருபது விரலளவுள்ள இக்குழலில் தூம்புமுகத்தில் இருவிரல் நீக்கி, முதல் வாய்க்கு ஏழங்குலம் விட்டு வளைவாயிலும் இருவிரல் நீக்கி நடுநின்ற ஒன்பது விரலிலும் எட்டுத்துளையிடப்படும். இவற்றுள் வளைவாய் சேர்ந்த ஒரு துளையை முத்திரை என்றுகழித்து மற்றயை ஏழு துளைகளிலும் ஏழு விரல் வைத்து ஊதப்படும். இத்துளைகளின் இடைப்பரப்பு ஒரு விரலகலம் கொள்ளப்படும். இடக்கையிற் பெருவிரலும் சிறுவிரலும் நீக்கி மற்றை மூன்று விரல்களும் வலக்கையிற் பெருவிரல் நீங்கிய ஏனை நான்கு விரல்களும் வைத்து இக்குழலை வாசித்தல் வேண்டும் மேற்குறித்த ஏழு துளைகளிலும் சரிகமபதநிச என்னும் ஏழெழுத்துக்களும், இவற்றை மாத்திரைப் படுத்தித் தொழில் செய்ய ஏழிசைகளும் பிறக்கும் எனவும், இவை பிறந்து இவற்றுள்ளே பண் பிறக்கும் எனவும் விளக்குவர் அடியார்க்கு நல்லார்.

தேவார ஆசிரியர் காலத்தில் துளைக்கருவிகளுள் வேய்ங்குழல் இசை நாடகத்துறையிற் சிறப்புற்று விளங்கியது.

இச்செய்தி,

"துளை பயிலுங் குழல் யாழ்முரல" (1-4-5)

எனவும்,

"பாடல் வீணை முழவம் குழல் பண்ணாகவே
ஆடுமாறு வல்லான" (2-6-1)

எனவும்,

"சல்லரியி யாழ் முழவ மொந்தை குழல் தாளமதியம்ப" (3-81-2)

எனவும்,

"தாளங்கள் கொண்டும் குழல் கொண்டும் யாழ் கொண்டும்" (4-104-7)

எனவும்,

"குழலோடு கொக்கரை கைத்தாளம் மொந்தை
குறட்பூதம் முன்பாடத் தானாடுமே" (6-4-7)

எனவும் வரும் திருப்பதிகத் தொடர்களாற் புலனாம்.

வேய்ங்குழலூதுதலிற் சிறந்த பயிற்சியுடையோர் முல்லை நிலமக்களாய ஆயராவர். குழல் வாசிப்பதில் ஆயர்களுக்கு அமைந்திருந்த இசை நலங்குறித்து ஆளுடைய பிள்ளையார் திருப்பதிகத்திற் காணப்படும் நிகழ்ச்சியொன்று இங்கு நினைக்கத் தகுவதாகும். அன்பினால் நினைப்போர்க்கு வீடுபேறளிக்கும் பெருமை வாய்ந்த திருவண்ணாமலைச் சாரலில் ஆயனொருவன் ஆநிரைகளையும் எருமையினங்களையும் மேய்க்குந் தொழிலில் ஈடுபட்டுள்ளான். மாலைப்பொழுதாகவே அவற்றையெல்லாம் ஒன்று திரட்டி அழைத்துச் செல்லும் கடமை அவனுக்கேற் பட்டது. ஒளி மங்கிய அந்தி நேரத்தில் புதர்களிடையே சென்று புல்மேயும் எருமையொன்றை அவன் காணவில்லை. எனினும் இடையிடையே அவ்வெருமையின் கனைப்பொலி மட்டும் அவன் செவியிற் படுகிறது. அவ்வொலியினைக் கேட்ட ஆயன், தன் கையிலிருந்த வேய்ங்குழலை எடுத்து ஊதி இனிய இசையைத் தோற்றுவித்தான். அவ்வின்னிசையினால் ஈர்க்கப்பட்டு அச்சாரலில் மேயும் எருமை முதலிய எல்லா மாடுகளும் ஒன்று சேர்ந்து அவனையடைகின்றன. உள்ளத்திற்கு உவகையளிக்கும் இவ்வினிய காட்சியை,

"எனைத்தோ ரூழியடியார் ஏத்த இமையோர் பெருமானார்
நினைத்துத் தொழுவார் பாவந்தீர்க்கும் நிமலர் உறைகோயில்
கனைத்தமேதி காணா தாயன் கைமேற் குழலூத
அனைத்துஞ் சென்று திரளுஞ் சாரல் அண்ணாமலையாரே"

என வரும் திருப்பாடலில் ஆளுடையபிள்ளையார் வனப்புற எடுத்துக்காட்டிய திறம் உணர்ந்து மகிழத்தக்கதாகும். இதனால் விலங்குகளில் மந்த மதியுடைய தெனப்படும் எருமையையும் தம்பால் ஈர்த்து நிறுத்தும் முறையில் முல்லை நிலத்தில் வாழும் ஆயர் வேய்ங்குழலால் இனிய இசையினை வளர்த்தார்கள் என்ற செய்தி நன்கு புலனாதல் காணலாம்.

பண் வகைகளை யாழின் பகுதி' எனவும் இசை நூலை 'நரம்பின் மறை' எனவும் ஆசிரியர் தொல்காப்பியனார் குறித்துள்ளார். இக்குறிப்பினைக் கூர்ந்து நோக்குங்கால் முற்காலத்தில் நரம்புக் கருவியாகிய யாழினை நிலைக்களமாகக் கொண்டே பண்களும் அவற்றின் திறங்களும் ஆராய்ந்து வகைப்படுத்தப் பெற்றன என்பது நன்கு விளங்கும். முற்காலத்தில் வேட்டைத் தொழிலை மேற்கொண்ட மக்கள், அம்புகளை எய்யுங்கால் அவை நெடுந்தூரம் விரைந்து செல்லுதற்கு ஏற்றவண்ணம் வில்லின்கண் நாணை இறுகக் கட்டினர். வில் நாணின் இறுக்கத்தைத் தெரிந்து கொள்வதற்கு நாணினை விரலால் தெறித்து அதிலிருந்தெழும் ஓசையை அளவு கருவியாகக் கொண்டனர். வில் நாணின் ஓசையைக் கேட்டு அதன் இசை நுட்பத்தை உணர்ந்த நம்

முன்னோர்கள், இசைத் தோற்றத்திற்கு இடனாயுள்ள வில் நாணின் நீளத்தைக் குறைத்துங் கூட்டியும் பலவேறு இன்னிசைச் சுருதிகளைத் தோற்றுவித்தனர். இவ்வாறு வெவ்வேறு இன்னிசைச் சுருதிகளைத் தரும் பலர் விற்களை ஒன்றாகச் சேர்த்து நெடுங்காலத்திற்கு முன் நம் முன்னோர்களால் அமைத்துக் கொள்ளப்பெற்ற நரப்புக்கருவி 'வில்யாழ்' என்பதாகும். ஆனிரை மேய்க்கும் ஆயனொருவன் குமிழமரக் கொம்புகளைவில்லாக வளைத்து அதன்கண்மரல்நாரினை நரம்பாகக் கட்டித் தான் அமைத்துக்கொண்ட வில் யாழிலே குறிஞ்சிப் பண்ணை வாசித்தான் என்ற செய்தி பெரும்பாணாற்றுப்படையிற் பேசப் பெற்றுளது. தலைச்சங்க காலத்திற்கு முன் மிகப் பழங்காலத்தில் தோன்றிய வில் யாழினைக் கடைச் சங்கப் புலவராகிய கடியலூர் உருத்திரங் கண்ணனார் தம் காலத்தில் ஆனிரை மேய்க்கும் ஆயன் வாசித்ததாகக் கூறியதன் நோக்கம், அக்கருவியின் தொன்மை யினையும் ஆயர் முதலிய யாவரும் கையாளுதற்கேற்ற அதன் எளிமையினையும் இனிமையினையும் விளக்குதற் பொருட்டே யாகும்.

மிகப் பழங்காலத்தில் தோன்றிய வில்யாழ் ஆகிய இக்கருவியை அடிப்படையாகக் கொண்டே இசை வளர்ச்சிக்கு இன்றியமையாத பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என்னும் நால்வகை யாழ்களும், ஆயிரம் நரம்புடைய பெருங்கலம் என்னும் ஆதியாழும் பிறநரம்புக் கருவிகளும் நுண்ணுணர்வுடைய பெருமக்களால் உய்த்துணர்ந்து அமைக்கப்பெற்றன. ஏழிசைகளையும் மெலிவு, சமன் வலிவு என்னும் மூன்று தானங்களிலும் முறையே இசைத்தற் கேற்றவாறு மூவேழு (இருபத்தொரு) நரம்புகள் கட்டப்பெற்றது பேரியாழாகும். பத்தொன்பது நரம்புகள் கட்டப்பெற்று மகரமீன் உருவாக அமைக்கப்பெற்ற வடிவினையுடையது மகர யாழாகும். மெலிவு நான்கும் சமன் ஏழும் வலிவு மூன்றும் ஆகப் பதினான்கு நரம்புகளையுடையதாய்ச் செவிக்கு இன்பந் தரும் இனிய இசையினைத் தோற்றுவிப்பது சகோடயாழ் ஆகும். இதன் பழைய பெயர் 'செம்முறைக்கேள்வி' என்பதாகும். இக்கருவி யினை "ஈரேழ்தொடுத்த செம்முறைக் கேள்வி" என இளங்கோ வடிகள் வழங்கியிருத்தலால் 'செம்முறைக் கேள்வி' என்ற பழைய தமிழ்ப் பெயரே பிற்காலத்தில் 'சகோஷம்' என வடமொழியில் மொழி பெயர்க்கப்பெற்றுச் சகோடயாழ் எனத் திரிந்து வழங்கிய தெனத் தெரிகிறது. மிகப் பழங்காலத்தில் யாழ்க் கருவியில் மிகவும் வளைவாகச்செய்யப்பட்டிருந்த 'கோடு' என்னும் உறுப்பானது, நிமிர்ந்து நேராக (செம்மையாக) விளங்கும்படி, சிறிது மாற்றி அமைக்கப்பட்ட யாழ்க்கருவி, 'செங்கோட்டியாழ்'

என வழங்கப்பெற்றது. இதன்கண் ஏழிசைகளுள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு நரம்பாக ஏழு நரம்புகள் கட்டப் பெற்றிருந்தன.

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை ஆகிய சங்கச் செய்யுட்களில் தமிழ் முன்னோர் இசைத்த பழைய யாழ்க்கருவியின் உருவச்சாயலும் அதன் உறுப்புக்களாகிய பத்தர், போர்வைத் தோல், கோடு, ஆணி, திவவு, நரம்பின் தொடர்ச்சி, உந்தி, கவைக்கடை என்பவற்றின் அமைப்பும் வினை, பயன், மெய், உரு என்னும் நால்வகை உவமங்களின் துணை கொண்டு நன்கு விளக்கப் பெற்றுள்ளன. பண்டைநாளில் வழங்கிய நரம்புக் கருவியாகிய யாழ் என்பது, மருப்பு என்னும் கோடாகிய உறுப்பு வளையப் பெற்றதாய்க் கண்ணினாற் காண்டற்கு அத்துணை அழகில்லாத தோற்றத்துடன் செவியாற்கேட்டு மகிழ்தற்கு இனிய இசை நலங்களைத் தோற்றுவிக்கும் சிறப்புடையதாய் விளங்கியது. இந்நுட்பம்.

"கணை கொடிதி யாழ்கோடு செவ்விநாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல்" (279)

எனவரும் திருக்குறளுக்கு, "அம்பு வடிவாற் செவ்விதாயினும் செயலாற்கொடிது. யாழ் கோட்டால் வளைந்ததாயினும் செயலாற் செவ்விது. அவ்வகையே தவஞ் செய்வோரையும் கொடியர், செவ்வியர் என்பது வடிவாற் கொள்ளாது அவர் செயல்பட்ட கூற்றானே அறிந்துகொள்க" எனப் பரிமேலழகர் கூறிய உரையாலும்,

"யாழிடைப் பிறவா இசையேயென்கோ" (மனையறம்-76)

எனவரும் சிலப்பதிகாரத் தொடர்க்கு "யாழ் கட்கு (கண்ணுக்கு) இன்னாதாகலின் அதனிடைப் பிறவாகத இசை யென்பேனோ" என அடியார்க்கு நல்லார் கூறிய உரையாலும் நன்கு தெளியப் படும்.

செங்கோட்டியாழினை அடியொற்றியமைந்தது, வீணை யென்னும் இசைக்கருவியாகும். யாழில் நரம்பு கட்டப் பெறுதற்கு இடமாயுள்ள 'கோடு' என்னும் உறுப்பின் வளைவினை மாற்றி அதன்கண் ஒரு நரம்பிலேயே ஏழிசைகளையுந் தொடுத்து வாசித்தற்கேற்ற வகையில் நரம்புகளின் எண்ணிக்கையைக் குறைத்து அமைக்கப்பெற்ற நரம்புக்கருவியே வீணை என்பதாகும். ஒவ்வொரு சுரத்திற்கும் தனித்தனி நரம்பு கட்டப் பெற்றது பண்டைத் தமிழர் வாசித்த யாழ்க் கருவியாகும். ஒரு நரம்பிலேயே பல சுரங்களை வாசித்தற்கேற்ற தான நிலைகளைக் கொண்டது இக்காலத்து வழங்கும் வீணைக்கருவியாகும். தேவார ஆசிரியர் காலத்தில் பண்டைத் தமிழர் வாசித்த

யாழாகிய இசைக்கருவியும் அதனை யடியொற்றியமைக்கப் பெற்று வட நாட்டிற் பெருக வழங்கிய வீணையென்னும் இசைக் கருவியும் தமிழ் மக்களால் திறம்பெற வாசிக்கப்பெற்றன என்பது, தேவாரத்திருப்பதிகங்களில் யாழும், வீணையும் ஆகிய இவ்விரு கருவிகளைப்பற்றி யமைந்த குறிப்புக்களால் இனிது விளங்கும்.

இனி, பழந்தமிழர் கையாண்ட யாழ்க்கருவியும் இக்காலத்தில் நம் நாட்டில் வழங்கும் வீணைக்கருவியும் ஒன்றே யென்பர் சிலர். சங்கத்தொகை நூல்களில் யாழைத் தவிர வீணையென்பதொரு கருவி கூறப்படவில்லை. இளங்கோவடிகள் காலத்தில் வீணை யென்றதோர் இசைக்கருவி தமிழ்நாட்டில் வழங்கியதென்பது,

**"நாரதன் வீணை நயந்தெரிபாடலும்"**

எனவரும் சிலப்பதிகாரத் தொடராற் புலனாம்.

யாழும் வீணையும் இருவேறு கருவிகள் என்பது,

**"அறைகலந்த குழல் மொந்தை வீணையாழும்"** (6-40-2)

**"பண்ணொடி யாழ்வீணை பயின்றாய் போற்றி"** (6-57-10)

**"ஏழிசையாழ் வீணை முரலக்கண்டேன்"** (6-77-1)

எனத் திருநாவுக்கரசடிகளாரும்,

**"குடமுழவங் கொக்கரை வீணைகுழல் யாழ்"** (ஆதியுலா)

எனச் சேரமான் பெருமாள் நாயனாரும்,

**"இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்"** (திருவாசகம்)

எனத் திருவாதவூரடிகளும்,

**— — — — — "புகலுமிசை**
**நேர்வைத்த வீணைக்கும் யாழுக்கும் நிலைவகையிற்**
**சேர்வுற்ற தந்திரிகள்"** (பெரிய-திருநாளைப்-14)

எனச் சேக்கிழாரடிகளும் இவ்விரண்டினையும் இருவேறு இசைக்கருவிகளாகப் பிரித்துரைத்தலால் இனிது புலனாம். சங்க காலத்திற்குப்பின் தோன்றிய நூல்களிற் குறிக்கப்பெற்றுள்ள வீணையாகிய நரம்புக் கருவி, ஒரே முறையில் தொடர்ந்து செல்லும் தொடரிசையினை வாசித்தற்கேற்றது. பழந்தமிழர் கையாண்ட யாழ்க்கருவி தொடரிசையுடன் பலரும் சேர்ந்து பாடும் நிலையில் அமைந்த ஒத்திசைப் பண்களை வாசித்தற்கேற்ற அமைப்புடையதாகும். சங்கச் செய்யுட்களில் யாழின் அமைப்பினைப்பற்றி அமைந்த குறிப்புக்களையும் அமராவதி கோலி என்னும் இடங்களிற் கிடைத்த யாழ்க் கருவியின் உருவச் சாயலையும், தாராசுரம், திருஎருக்கத்தம்புலியூர் ஆகிய ஊர்களில் உள்ள திருநீலகண்டயாழ்ப்பாணர் திருவுருவத்தில் அமைந்த

சகோடயாழ்க் கருவியின் உருவ அமைப்பினையும் கூர்ந்து நோக்குவார்க்கு யாழும் வீணையும் இரு வேறு கருவிகள் என்பது இனிது விளங்கும்.

திருஞான சம்பந்தப்பிள்ளையார் காலத்தவராகிய திருநீலகண்ட யாழ்ப்பாணர், தம் மனைவியார் மதங்க சூளாமணி யாருடன் சீகாழிப்பதிக்குச் சென்று ஆளுடையபிள்ளையாரை வணங்கி அவர் பாடியருளிய திருப்பதிகங்களைத் தம் யாழில் இசைத்துப் பிள்ளையாருடன் தமிழ்நாடெங்குஞ் சென்று நாளும் இன்னிசைத் திறத்தால் தெய்வத்தைப் போற்றினார் என்பது வரலாறு. அவர் வாசித்த யாழ்க்கருவி சகோடயாழ் என்னும் பெயருடையதென்பது, திருநீலகண்டப்பாணரைச் 'சகோட யாழ்த் தலைவர்' எனச் சேக்கிழாரடிகள் போற்றுதலாற் புலனாம். நால்வகை யாழ்களுள் சகோடயாழும் ஒன்றென்பதும் அதன் பழைய தமிழ்ப்பெயர் செம்முறைக் கேள்வி யென்பதும் அக்கருவியிற் பதினான்கு நரம்புகள் கட்டப்பெற்றிருந்தன என்பதும் முன்னர் விளக்கப்பெற்றன. ஆளுடையபிள்ளை யாரருளிய திருப்பதிகங்களிற் பல திருநீலகண்ட யாழ்ப்பாணரது யாழ்க்கருவியில் வாசிக்கப்பெற்றன என்பது,

> "வீழிம்மிழலைம் மேவிய விகிர்தன்றனை விரைசேர்
> காழிந்நகர்க் கலைஞான சம்பந்தன் தமிழ்பத்தும்
> யாழின்னிசை வல்லார் சொலக் கேட்டாரவ ரெல்லாம்
> ஊழின்மலி வினைபோயிட உயர்வானடை வாரே" (1-11-11)

எனப் பிள்ளையார் அருளிய திருக்கடைக்காப்புப் பாடலால் நன்கு புலனாம்.

இசைப்பாட்டின் தாள அறுதியைப் புலப்படுத்தி இசை வளர்ச்சிக்குத் துணை செய்வதுடன் கேட்போரது உள்ளத்தைக் கிளர்ந்தெழச் செய்வன தோற்கருவிகளாகும். அவை பேரிகை படகம், இடக்கை, உடுக்கை, மத்தளம், சல்லிகை, கரடிகை திமிலை, குடமுழா, தக்கை, கணப்பறை, தமருகம், தண்ணுமை தடாரி, அந்தரி முழவு, சந்திர வளையம், மொந்தை, முரசு கண்விடுதூம்பு, நிசாளம், துடுமை, சிறுபறை, அடக்கம் தகுணிச்சம், விரலேறு, பாகம், உபாங்கம், நாழிகைப்பறை, துடி பெரும்பறை என்னும் முப்பதும் என்பர் அடியார்க்கு நல்லார் இவை அகமுழவு, அகப்புறமுழவு, புறமுழவு, புறப்புறமுழவு பண்ணமை முழவு, நாள்முழவு, காலை முழவு என எழுவகைப் படும் என்றும், இவற்றுள் அகமுழவாகவன உத்தமமான மத்தளம், சல்லிகை, இடக்கை, கரடிகை, பேரிகை, படகம், குட முழவு என இவை யென்றும், அகப்புற முழவாவன மத்திமக் கருவி யாகிய தண்ணுமை, தக்கை, தகுணிச்சம் முதலாயின என்றும்

புறமுழவாவன அதமக் கருவியான கணப்பறை முதலாயின என்றும், பண்ணமை முழவாவன முரசு, நிசாளம், துடுமை, திமிலை என்னும் வீரமுழவு நான்கும் என்றும் அடியார்க்கு நல்லார் இத் தோற்கருவிகளைப் பகுத்துக் கூறியுள்ளார்.

தோற்கருவிகளில் இசைவளர்ச்சிக்கு மிகவும் பயன்படுவது மத்தளமாகும். "மத்து என்பது ஓசைப்பெயர், இசையிடனாகிய கருவிகட்கெல்லாம் தளம் (அடிப்படை) ஆதலான் மத்தளம் என்று பெயராயிற்று" என்பர் அடியார்க்கு நல்லார். அவர் கருத்துப்படி மத்து + தளம் என்னும் இரண்டு சொற்களே மத்தளம் என்றாயின எனக் கருத வேண்டியுளது. முதலில் கரம் கொண்டு வாசிக்கத்தக்கது மத்தளம் ஆதலின் அதனை முதற் கருவி என்றும், இசை நிகழ்ச்சிக்கு இடையே வாசிக்கத்தக்கது சல்லிகை யாதலின் அதனை இடைக்கருவி என்றும், கடைக்கண் வாசித்தற்குரியது உடுக்கை யாதலின் அதனைக் கடைக்கருவி என்றும் கூறுவர்.

தேவாரத் திருப்பதிகங்களில் இடக்கை: (3-76-4) உடுக்கை, (1-66-10) கத்தரிகை, (3-76-4) கல்லவடம், (1-24-7, 3-9-6, 4-21-5, 5-92-2, 7-84-5) கல்லலகு, (6-9-9, 6-21-1) கிணை, (7-36-9) குடமுழா, (1-75-4, 4-66-5, 6-4-5, 6-10-2, 6-83-3, 7-36-9) கொக்கரை, (3-59-4, 3-85-7, 4-111-89, 5-7-1, 6-4-7, 6-13-8, 7-36-9 ) கொடுகொட்டி, (1-75-4, 4-111-8, 6-10-2, 6-97-8) சல்லரி, (3-81-2, 7-36-9) தக்கை, (1-66-10, 3-76-4, 4-111-8, 7-36-9) தகுணிச்சம், (3-57-5, 4-111-3, 7-36-9) தண்ணுமை, (2-94-6, 7-36-9) பறை, (1-73-6, 1-87-8, 2-57-3, 3-103-666-49-6) பிடவம், (6-10-2) முழவு, (1-6-5, 1-73-8, 2-6-1, 3-3-4, 4-6-6, 6-36-8, 6-77-1) மொந்தை, (1-44-5, 2-12-3, 3-8-4, 3-85-5, 4-111-8, 6-10-2, 6-40-2) முரவம், (3-38-5) எனவரும் தோற்கருவிகள் இசை நிகழ்ச்சிக்கும் ஆடலுக்கும் பயன்படுத்தப்பெற்றனவாகக் குறிக்கப் பெற்றுள்ளன. எனவே இக் கருவிகளிற் பல தேவாரத் திருப்பதிகங்களைப் பாடுங் காலத்தும் பயன்பட்டிருத்தல் கூடும். முதலாம் இராசராச சோழன் தான் எடுப்பித்த தஞ்சை இராசராசேச்சுரத் திருக்கோயிலில் திருப்பதிகம் விண்ணப்பஞ் செய்தற்கு நியமித்த இசைவாணர் ஐம்பதின்மருள், பாடுவாராகிய பிடாரர்கள் நாற்பத்தெண்மரும் இவர்களிலே நிலையாய் உடுக்கை வாசிப்பான் ஒருவனும், கொட்டி மத்தளம் வாசிப்பான் ஒருவனும் இருந்தனர் என அறிகின்றோம்.* (*தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி, 2 எண் 65) இதனால் திருக்கோயில்களில் இறைவன் திருமுன்னர்த் தேவாரத் திருப்பதிகங்களை விண்ணப்பஞ் செய்யும்பொழுது மத்தளம் முதலிய துணைக்கருவிகளுடன் பாடும் வழக்கம் மிகவும் தொன்மையுடையதென்பது பெறப்படும்.

இனி, கஞ்சக் கருவிளாவன வெண்கலத்தால் அமைக்கப் படும் தாளம் முதலாயின. ஆடற்கும் பாடற்கும் தளமாக விளங்குதலால் தாளம் என்பது காரணப்பெயர். இசை நாடகங் களுக்கு இன்றியமையாத தாளத்தினைப் பற்றித் தேவாரத் திருப்பதிகங்களிற் பல இடங்களிற் குறிக்கப்பட்டுள்ளது.

'உறுதாளத் தொலி பலவும்' 1-11-4.

'மோந் தைமுழாக் குழல்தாள மோர் வீணை
முதிரவோர் வாய்முரிபாடி' 1-44-5.

"தமிழின் நீர்மை பேசித் தாளம் வீணை பண்ணி நல்ல
முழவ மொந்தை மல்குபாடல் செய்கையிடம் ஓவார்" (1-73-8)

"தண்டுந் தாளமுங் குழலும் தண்ணுமைக் கருவியும்" (2-94-6)

"கொக்கரை தாளம் வீணை பாணி செய்குழகர்" (4-66-9)

"தாளங்கள் கொண்டும் குழல் கொண்டும் யாழ்
கொண்டும்" (4-104-7)

"கொண்டபாணி கொடுகொட்டி தாளம் கைக்
கொண்ட தொண்டரை" (5-9-1)

எனவரும் தொடர்கள், இசை நிகழ்ச்சிக்கும் ஆடலுக்கும் தாளம் இன்றியமையாத தென்பதனைப் புலப்படுத்துவன. உமையம்மை யாரளித்த ஞானப்பாலைப் பருகிச் சிவஞானம் கைவரப்பெற்ற ஆளுடைய பிள்ளையார், திருக்கோலக்காவையடைந்து தம் மெல்லிய திருக்கைகளினால் தாளமிட்டுத் திருப்பதிகம் பாடிய பொழுது இறைவன் பிள்ளையாருடைய மெல்லிய கைகள் வருந்தா வண்ணம் திருவைந்தெழுத்தெழுதப் பெற்ற இனிய ஓசை யமைந்த அழகிய செம்பொன்னாலாகிய தாளத்தினைக் கொடுத் தருளினான் என்ற செய்தி முன்னர் விளக்கப்பெற்றுள்ளது. இதனை,

"நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும்
ஞானசம்பந்தனுக்கு உலகவர்முன்
தாளம் ஈந்து அவன் பாடலுக்கு இரங்கும்
தன்மையாளனை" (1-62-8)

எனச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் குறித்துப் போற்றியுள்ளார்.

தேவாரத் திருப்பதிகங்களில் 'ஏழில்' (6-17-9,7-6-7) தண்டு (2-94-6), துத்திரி (3-76-4) என்பனவும் இன்னிசைக்கருவிகளாகக் குறிக்கப் பெற்றுள்ளன. இவற்றுள் ஏழில் என்பது ஏழிசை களையும் இசைத்தற்குரிய ஏழு துளைகளையுடைய துளைக் கருவியாகும். பெருவங்கியம் நாகசுரம் என்பன இவ்வகையைச்

சார்ந்தன எனக் கருதுதல் பொருந்தும். தண்டு என்பது வீணையைக் குறித்து வழங்கும் பெயர். துத்திரி என்பது ஊது கொம்பினை யொத்த துளைக்கருவி.

மேற்குறித்த யாழ் குழல் முழவு முதலிய இசைக் கருவி களுடன் இசைவாணர்கள் தாமே தனித்துப் பாடியும், தம்மை யொத்த இசை வல்லார் பலருடனும் சேர்ந்து பாடியும் இசைத் தொண்டு புரிந்து இறைவனை வழிபட்டனர். இவ்வாறே ஆளுடையபிள்ளையாரும் திருநீலகண்ட யாழ்ப்பாணர் அவர் தம் வாழ்க்கைத் துணைவியார் மதங்க சூளாமணியார் முதலிய அடியார் பலருடன் யாழ் முதலிய இசைக் கருவிகளோடு ஒத்துப் பாடியும், தாமே தனித்துப் பாடியும் இறைவனை இன்னிசைப் பாடல்களால் பரவிப் போற்றியுள்ளார். இங்ஙனமே பிள்ளை யாருடன் சென்ற அடியார்களும் தனித்தும் பலர் ஒன்று சேர்ந்தும் பிள்ளையார் அருளிய திருப்பதிகங்களை இன்னிசையுடன் பாடிப் போற்றினார்கள் எனக் கருதுதல் பொருந்தும்.

“யாழின்னிசை வல்லார் சொலக் கேட்டாரவ ரெல்லாம்
ஊழின்மலி வினைபோயிட உயர் வானடைவாரே” (1-11-11)

“துன்னிய இன்னிசை யாற்றுதைந்து
சொல்லிய ஞானசம்பந்தன் நல்ல
தன்னிசையாற் சொன்ன மாலை பத்தும்” (1-5-11)

“ஒக்க ஞானசம்பந்தன் உரைத்தபாடல்” (2-97-11)

“திருத்தமாந் திகழ்காழி ஞானசம்பந்தன் செப்பிய
செந்தமிழ் ஒருத்தராகிலும் பலர்களாகிலும்
உரைசெய்வார் உயர்ந்தார்களே” (3-38-11)

எனவருந் தொடர்கள் இக்கருத்தினை வலியுறுத்துவனவாம்.

ஆளுடைய பிள்ளையாரைப் போன்றே திருநாவுக்கரசரும் இசையோடு கூடிய தமிழ்பாடல்களால் இறைவனை வழிபட்டவர் என்பதும், அப்பெருந்தகையார் உழவாரத் தொண்டாகிய கைத் திருத்தொண்டுன் தாம் இயற்றிய சொற்றுணை மாலையாகிய திருப்பதிகங்களை இன்னிசையுடன் பாடிப் போற்றும் இசைத் தொண்டிலும் ஈடுபட்டுத் தம்மை ஆட்கொண்ட இறைவரது அருளின் வெளிப்பாடாகிய திருமுறுவலாம் உவகைக் குறிப்பினை நேர்ந்துகண்டு மகிழ்ந்தார் என்பதும்,

‘சலம்பூவோடு தூப மறந்தறியேன்
தமிழோடிசை பாடல் மறந்தறியேன்’ (4-1-6)

எனவும்,

“தொண்டலாம் இசைபாடத் தூமுறுவல்
அருள்செய்யும் ஆரூரரை” (4-5-4)

எனவும் வரும் அவருடைய வாய்மொழிகளால் இனிதுணரப் படும். இவ்விரு பெருமக்கள் சென்ற நெறியை அடியொற்றிப் பின் வந்த நம்பியாரூரரும் தமக்கு முன்னுள்ள அப்பெருமக்கள் அருளிய திருப்பதிகங்களை இன்னிசை நலம் பொருந்தப் பாடியும் தாம் இயற்றிய திருப்பதிகங்களை முழவு குழல் முதலிய இசைக் கருவிகளுடன் பொருந்தப் பாடியும் இறைவனை இசையாற் பரவிப் போற்றுதலையே தொழிலாகக் கொண்ட அடியார்கள் விரும்ப இசைத் திருத்தொண்டு புரிந்துள்ளார். இச்செய்தி,

'நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக்கரசரும்
பாடிய நற்றமிழ் மாலை
சொல்லியவே சொல்லியேத்து கப்பானை' (7-67-5)

எனவும்,

'மந்தம் முழவங் குழலுமியம்பும் வளர் நாவலர்கோன்
நம்பியூரன் சொன்ன
சந்தம்மிகு தண்டமிழ் மாலைகள் கொண்
டடிவீழவல்லார் தடுமாற்றிலரே! (7-4-10)

எனவும்,

"கோடரம்பயில் சடையுடைக் கரும்பைக்
கோலக்காவு ளெம்மானை மெய்ம்மானைப்
பாடரங்குடி யடியவர் விரும்பப்
பயிலு நாவலூரூரன் வன்றொண்டன்" (7-62-10)

எனவும்,

"ஏழிசை யின்றமிழால் இசைந்தேத்திய பத்தினையும்"
(7-100-10)

எனவும் வரும் ஆரூரர் அருளுரைகளால் உய்த்துணரப்படும்.

தேவாரத் திருப்பதிகங்களை இன்னிசையுடன் பாடி இறைவனைப் போற்றுதல் வேண்டும் என்பதே அத்திருப் பதிகங்களை அருளிச்செய்த பெருமக்களது நோக்கமாகும்.

"காழியுள் ஞானசம்பந்தன் தமிழ்பத்தும்
கொண்டு வைகியிசை பாடவல்லார் குளிர்வானத்
துயர்வாரே" (1-13-11)

"நிகரில்லன தமிழ்மாலைகள் இசையோடிவை பத்தும்
பகரும் மடியவகட்கிடர் பாவம்மடையாவே" (1-39-11)

"இன்னிசையால் இவைபத்தும் இசையுங்கால் ஈசனடி
யேத்துவார்கள்
தன்னிசையோ டமருலகில் தவநெறி சென்றெய்துவார்
தாழா தன்றே" (1-130-11)

"இன்னிசையாற் பாடவல்லார் இருநிலத்தில்
ஈசனெனும் இயல்பினாரே" (1-131-1)

"வண்ண மூன்றுந் தமிழிற்றெரிந் திசை பாடுவார்
விண்ணுமண்ணும் விரிகின்ற தொல்புகழாளரே" (2-75-11)

"தனமலி புகழ் தயங்கு பூந்தராயவர் மன்னன் நற்சம்பந்தன்
மனமலிபுகழ் வண்டமிழ் மாலைகள் மாலதாய் மகிழ்வோடும்
கனமலி கடலோதம் வந்துலவிய கடிக்குளத் தமர்வானை
இனமலிந்திசைபாட வல்லார்கள்போய்
இறைவனோ டுறைவாரே" (2-104-11)

*என ஆளுடைய பிள்ளையாரும்,*

"சிந்தை வெள்ளப் புனலாட்டிச்
செஞ்சொன்மாலை யடிச்சேர்த்தி
எந்தைபெம்மான் என்னெம்மான்
என்பார் பாவம் நாசமே" (4-15-11)

*என ஆளுடைய அரசரும்,*

"மந்தம் முழவம் இயம்பும் வளவயல் நாவலாரூரன்
சந்தம் இசையொடும் வல்லார் தாம்புகழெய்துவர்தானே"
(7-73-11)

*என நம்பியாரூரரும் அருளிய திருக்கடைக் காப்புத் தொடர்கள் தேவாரத் திருப்பதிகங்களை இசைநலம் குன்றாதபடி பாடுதல் வேண்டும் எனவும், அங்ஙனம் பாடிப்போற்றுவார் முன்னைத் தீவினையாகிய பாவம் நீங்க இறைவன் திருவருளால் எல்லா நலங்களையும் பெற்று இன்புறுவர் எனவும் வற்புறுத்துதல் காணலாம். நன்றாக இசை பாடுதற்கேற்ற குரல்வளம் அமையாத வர்களாயினும் இத்திருப்பதிகங்களைக் கூடிய அளவு இசைநலம் பொருந்தப்பாடி மகிழவேண்டும் என்பது இசைத் தமிழிலக்கியங் களாக இவற்றைத் திருவாய் மலர்ந்தருளிய பெருமக்களது அருட்குறிப்பாகும்.*

"தழங்கெரி மூன் றோம்புதொழில் தமிழ் ஞானசம்பந்தன்
சமைத்த பாடல்
வழங்கும் இசை கூடும்வகை பாடுமவர் நீடுலகம்:
ஆள்வர்தாமே"
(1-131-11)

*எனவரும் திருக்கடைக்காப்பு இங்கு நோக்கத்தக்கதாகும்.*



# 4. ஆளுடைய பிள்ளையார் அருளிச் செயல்

அருளின் நீர்மைத் திருத்தொண்டினை நன்குணர்ந்த சிவஞானச் செம்மலாராகிய ஆளுடைய பிள்ளையார், தாம் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகங்களில் இறைவனுடைய திருவருட்டிறங்களாகக் குறிக்கத் தக்கவற்றுள் மூன்று கருத்துக் களைச் சிறப்பாகத் தெரிந்தெடுத்து அம்மூன்றினையும் தாம் பாடிய திருப்பதிகங்கள் தோறும் தவறாது விரித்துரைத்தலைக் கடமையாகக் கொண்டுள்ளார்.

ஒவ்வொரு பதிகத்திலும் ஒன்று முதல் ஏழு வரையுள்ள திருப்பாடல்கள், அவ்வப் பதிகத்திற்குரிய திருத்தலங்களின் இயற்கை வனப்பினையும் அங்கே கோயில் கொண்டு எழுந்தருளி யுள்ள இறைவன் வானோர்க்கும் அரியனாய் விளங்கும் அருமை யினையும், தன்னடியார்களுக்கு எளிவந்தருளும் எளிமைத் திறமாகிய பெருமையினையும் உலகெலாம் படைத்தளித் தழிக்கும் வரம்பிலாற்றலுடைமை முதலிய திருவருட் பண்பு களையும், அவ்வத்தலங்களிலிருந்து இறைவனை வழிபாடு செய்து மகிழும் அடியார்களது திருத்தொண்டின் திறத்தையும் விரித்துரைக்கும் முறையில் அமைந்துள்ளன.

தென்னிலங்கை வேந்தனாய இராவணன், முன் அறியாமை யினாற் கயிலாய மலையினை எடுக்க முயன்று அம்மலையின் கீழ் அகப்பட்டுத் தலைகளும் கோள்களும் நசுங்கி அங்கிருந்தும் மீளமுடியாது அல்லலுழப்பவன் தன் தவறுணர்ந்து அதனைப் பொறுத்தருளும்படி இறைவனை வேண்டி இசைப் பாடல்களால் பாடித் துதிக்கச் சிவபெருமான் அவனுக்கு அருள் புரிந்த ஆக்கப் பாட்டினை அறிவுறுத்துவது எட்டாந் திருப்பாடலாகும். படைத்தற் கடவுளாகிய நான்முகனும் காத்தற் கடவுளாகிய திருமாலும் தாம் தாம் பெரியர் எனத் தம்முள் மாறுகொண்டு அன்னமாகியும் ஏனமாகியும் இறைவனது முடியும் அடியும் தேட முயன்று பெரிதும் அல்லற் பட்டுக் காண முடியாது பின் இறைவனது திருவருளால் திருவைந்தெழுந்தோதி யுய்ந்த செய்தியை உணர்த்துவது ஒன்பதாந் திருப்பாட்டு. வேதநெறி சைவநெறிகளைப் பழித்துரைக்கும் புறச்சமயத்தார்களாகிய சமணர் புத்தர் ஆகியோர் தெய்வம் உண்டு என்னும் தெளிவான ஞானமில்லாதவராதலின், அன்னோர் கொண்ட நெறிகள் அவர்க்கும் பிறர்க்கும் பயன்படாது பழிவிளைக்குங் குற்ற முடையனவே என்பதனை எடுத்துரைப்பது பத்தாந்திருப் பாடலாகும்.

இங்ஙனம் ஒவ்வொரு திருப்பதிகத்தினையும் பத்துப் பத்துப் பாடல்களால் ‘நிறைவித்த ஆளுடைய பிள்ளையார், அத்திருப் பதிகங்களைப் பத்தியுடன் பயின்று பாடும் உலகமக்கள் அடையும் நற்பயன்களை விளக்கும் முறையில் பதிகத்தின் கடைசித் திருப்பாடலாகப் பதினோராம் பாடலை அமைத் துள்ளார். இவ்வாறு பதிகந்தோறும் அவ்வப்பதிகப் பயன்கூறும் முறையிற் பாடியருளிய திருப்பாடலைத் ‘திருக்கடைக்காப்பு’ என்ற பெயராற் சேக்கிழாரடிகள் குறித்துள்ளார். பதிகங்களின் இறுதியுள்ள திருக்கடைக் காப்புச் செய்யுட்கள் அவ்வப்பதி கங்களைப் பாடுவோராய அன்பர்களுக்குச் சிறிதும் இடர் நேராமற் காக்கும் அருள் நோக்கத்துடன் திருஞானசம்பந்தரால் அருளிச் செய்யப் பெற்ற திருவுடைய செழும்பாடல்களாதலின் திருக்கடைக்காப்பு என வழங்கப்பெறுவனவாயின.

இலங்கையர் மன்னாகிய இராவணன்’ அளகை வேந்தனாகிய குபேரனை வென்று அவனிடமிருந்து பெற்ற புட்பக விமானத்தில் அமர்ந்து வான்வழியே செல்பவன், தனது போக்குக்குத் தடைவிளைக்கும் முறையில் திருக்கயிலாயமலை குறுக்கிட்டு நின்றதனைக் கண்டு வெகுண்டு அதனைப் பெயர்த் தெடுக்கத் தலைப்பட்டான். ஆற்றல்மிக்க அரக்கனாகிய அவன் சிவபெருமானை வழிபடும் திறமுடையவனாக இருந்தும் ஆன்மா வுக்கு இயல்பாக அமைந்த ஆணவ மலத்தின் விளைவாக அவன் மனத்தே செருக்கு மேலிட்டதனால், இறைவன் வீற்றிருக்கும் சிறப்புடைய திருமலை திருக்கயிலாயம் என்பதனைக் கருத்திற் கொள்ளாது ஏனைய மலைகளைப்போல் அதனையும் எளிதாக எண்ணி இகழ்ந்து அதனைத் தூக்க முயன்றான். அவனது முயற்சி தவறானது, தீமைவிளைப்பது என்பதனையுணர்ந்த தேர்ப்பாகன், கடவுள் வீற்றிருக்குந் திருமலையாகிய கயிலையைப் பெயர்த் தெடுத்தல் அடாத செயல் என இராவணனுக்கு எடுத்துக் காட்டியும் அவன் அச்சொல்லை மதியாமல் இகழ்ந்து கூறி வெகுண்டு துருக்கினால் கயிலாயத்தைப் பெயர்த்தெடுக்கின்றான். அந்நிலையில் அருளாளனாகிய இறைவன், அரக்கனது தருக்கினை யொழிக்கத் திருவுளங்கொண்டு தனது திருவடிப் பெரு விரலொன்றினால் அம்மலையின் மீது ஊன்றி யழுத்தினான். மலையும் அழுந்தியது. அப்பொழுது இருபது கைகளாலும் கயிலாயத்தைப் பெயர்த்தெடுத்த இராவணன், தன்னுடைய பத்துத் தலைகளும் மலையிடையிற் சிக்கி அழுந்த வருத்தமுற்று ஆற்றாது அழுதான். பின் சிறிது தெளிவுபெற்றுத் தன், தலைகளுள் ஒன்றை வெட்டியெடுத்துப் பத்தராக அமைத்து முன்கை நரம்பினை நரம்பாகக் கட்டி வீணையென்னும் இசைக் கருவியினை அமைத்துக்கொண்டு சாம வேதமாகிய இசைப் பாடல்களைப் பாடி இறைவனைப் போற்றினான். அரக்கனது

இசைத் திருத்தொண்டுக்குத் திருவுளமிரங்கிய அருளாளனாகிய சிவபெருமான், அரக்கனாகிய அவனுக்கு 'தனது பிழை நினைத்து அழுதற்றியவன் என்ற' பொருள்பட 'இராவணன்' என்ற பெயரையும் போரில் வெற்றியளிக்கும் கொற்றவாள் ஒன்றையும் முக்கோடி வாழ்நாளையும் யாண்டும் விரைந்து செல்லும் சிறந்த தேரொன்றையும் கொடுத்தருளினார் என்பது புராண வரலாறு. இச்செய்திகள் ஆளுடையபிள்ளையார் அருளிய திருப்பதிகங்களில் எட்டாந் திருப்பாடலில் விரித் துரைக்கப்பெற்றுள்ளன.

இராவணனைப்பற்றிய இச்செய்தியினைப் பதிகந்தோறும் எடுத்துரைப்பதன் நோக்கமாவது, சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினராக இவ்வுலகில் வாழும் மக்கள், தமது அறியாமையால், கடவுளொருவர் உண்டென்னும் நினைவின்றிப் பல குற்றங் களைச் செய்தல் இயல்பு. இவ்வாறு அறியாமை காரணமாகப் பல குற்றங்களைச் செய்தாலும், அப்பிழையினால் இடர்ப்பட்டு வருந்தும் துன்பக்காலத்தே தாம் முன்செய்த பிழையினை யெண்ணி மனம் வருந்தித் தம் பிழைகளைப் பொருத்தருள்க என இறைவனைப் பணிந்து குறையிரந்து வேண்டுவாராயின், கண்ணு தலானாகிய இறைவனது பெருங்கருணை அவர்களைத் துன்பக் கடலிலிருந் தெடுத்துக் காப்பாற்றுதல் உறுதி. சில்வாழ்நாட் பல்பணிச் சிற்றறிவினராய மக்கள் செய்த குற்றங்களைப் பொறுத் தருளும் இறைவனது திருவருட் பெருமையினை உலகத்தார்க்கு எடுத்துரைக்கும் நோக்கத்தினாலேயே ஞானசம்பந்தர் இராணவனைப் பற்றிப் பதிகத்தோறும் எட்டாந் திருபபாடலில் தவறாது குறித்தருள்கின்றார். இந்நுட்பத்தினை,

> 'மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்நடையிற்
> கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளும் எனக்காட்ட
> எண்ணமிலா வல்லரக்கன் எடுத்துமுறிந் திசைபாட
> அண்ணலவற் கருள்புரிந்த ஆக்கப்பாடருள் செய்தார்'

எனவரும் பாடலில் சேக்கிழாரடிகள் தெளிவாக விளக்கி யுள்ளமை காணலாம்.

குறையுணர்வாகிய பசுஞானத்தாலும் பாசஞானத்தாலும் ஞானமேயுருவாகிய இறைவனியல்பினை உயிர்கள் உணர்தல் இயலாது. முற்றறிவினனாகிய முதல்வனை உள்ளவாறு கண்டு வழிபட விரும்புவோர் அவனது திருவடி ஞானத்தால் தன்னறிவிலே ஆராய்ந்து தெளிதற்குரியர். யாண்டும் நீக்கமறக் கலந்து விளங்கும் இறைவனை அவனருளே கண்ணாகக் கொண்டு காணுமிடத்து ஆன்மா பாசப் பிணிப்பினின்றும் நீங்கித்தூய்மை பெறும். இங்ஙனம் உயிர் தூய்மைபெற்ற

நிலையிற் பெறத்தக்க கடவுட்காட்சி உள்ளத்தே நீங்காது நிலைபெறுதற்பொருட்டுத் திருவைந்தெழுத்தை விதிப்படி எண்ணுதல் வேண்டும். இவ்வாறு வழிபடும் நெறியுணர்ந்து வழிபடுவோர்க்கே சிவபெருமான் எளிவந்து அருள்புரிவன் என நூல்கள் கூறும். இவ்வுண்மையினை யுணர்ந்து இறைவனைத் தொழுது நலம்பெற முயலாது திருமாலும் பிரமனும் தாமே தலைவர் என்னும் முனைப்புடன் தம்முள் இகலிப் பன்றியுருவும் அன்னத்தின் உருவும் கொண்டு முறையே மண்ணினை அகழ்ந்து உள்புக்கும் விண்ணின் மேற் பறந்து சென்றும் இறைவனுடைய அடியும் முடியும் தேடிக் காணப்புக்குக் காணமாட்டாது அல்லற்பட்டு அயர்ந்து விழுந்தனர். அங்ஙனம் விழும் அவர்கள் ஈசனருள் கூடுதலால் உள்ளத்தே தெளிவு பெற்றுத் திருவைந் தெழுத்தினையோதி இறைவனருள் பெற்று உயர்ந்தனர். இச்செய்தியினைப் பிள்ளையார் ஒவ்வொரு பதிகத்திலும் ஒன்பதாந்திருப்பாடலில் விரித்துரைத்துள்ளார். ஒன்பதாம் பாடலிலமைந்த இப்பொருட் குறிப்பினை,

> 'தொழுவார்க்கே யருளுவது சிவபெருமான் எனத்தொழார்
> வழுவான மனத்தாலே மாலாய மாலயனும்
> இழிவாகுங் கருவிலங்கும் பறவையுமாய் எய்தாமை
> விழுவார்கள் அஞ்செழுத்துந் துதித்துய்ந்தபடி விரித்தார்'

எனவரும் செய்யுளில் அருண்மொழித்தேவர் குறித்துள்ளார்.

ஐம்பொறி வழியாகச் செல்லும் ஐந்து அவாவையும் அடக்கியாளும் உள்ளத்திண்மை, பொறிவாயில் ஐந்தவித்த னாகிய இறைவன் அருளிய ஒழுக்க நெறியினைக் கடைபிடித் தொழுகுவார்க்கே எளிதில் வாய்க்கும். இதனை யுணர்ந்து இறைவன் திருவருளைச் சிந்தித்து அதன்வழி யடங்கி யொழுகுதலே அறிவுடைய நன் மக்கள் மேற்கொள்ளுதற்குரிய நல்லொழுக்க நெறியாகும். அந்நெறியினைப் பின்பற்றி நடவாது தமது சிற்றறிவொன்றையே முதன்மையாகக் கொண்டு தாம் தாம் நன்றெனக்கண்ட தெளிவற்ற கொள்கைவழியே நலம் பெற முயலும் புத்தர் சமணர் என்னும் புறச்சமயத்தார் மேற்கொண்ட செயல் முறைகள் இம்மை மறுமையாகிய இருமையினும் துயர் விளைக்கும் பழிச்செயல்களே என்பதனைத் தமிழ் மக்கள் தெளிவாக உணரும் வண்ணம் பதிகந்தோறும் பத்தாம் படலில் பிள்ளையார் வற்புறுத்தியருள்கின்றார்.

> 'வேதகா ரணராய வெண்பிறைசேர் செய்யசடை
> நாதனெறி யறிந்துய்யார் தம்மிலே நலங்கொள்ளும்
> போதமிலாச் சமண்கையர் புத்தர்வழி பழியாக்கும்
> ஏதமே யெனமொழிந்தார் எங்கள்பிரான் சம்பந்தர்'

எனவரும் பெரிய புராணச் செய்யுள் இந்நுட்பத்தை விளக்குதல் காணலாம்.

இவ்வாறு, ஆளுடைய பிள்ளையார் அருளிய திருப்பதிகந் தோறும் 8, 9, 10-ஆம் பாடல்களாகிய மூன்று திருப்பாடல் களிலும் முறையே, உயிர்கள் தம் பிழை நினைந்து ஏசறுதல், பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் காண்டற்கரியன் பரன் என்றுணர்தல், இறைவனருளிய மெய்ம்மையான ஒழுக்கநெறி யன்றிச் சிற்றறிவுடைய மக்கள் தம் ஆன்ம போதம் ஒன்றினாலேயே அமைத்துக் கொண்ட புறச்சமயச் செயல்கள் புன்னெறியிற் செலுத்துவனவே எனவுணர்ந்து அவற்றை விலகி யொழுகுதல் ஆகிய இவை மூன்றும் கடவுள் வழிபாட்டிற்கு இன்றியமையாத சாதனங் களாக அறிவுறுத்தப்பட்டன.

திருப்பதிகத்தோறும் இறுதிப்பாடலாக அமைந்த திருக்கடைக் காப்புச் செய்யுட்கள் யாவும் சிவபரம் பொருளைத் திருப்பதிகப் பாமாலையாற் போற்றி வழிபாடு செய்யும் அன்பர்கள் எல்லா நலங்களும் பெற்று ஈறிலாப் பேரின்ப வாழ்வில் திளைக்க வேண்டும் என்னும் பெருங்கருணைத் திறத்தால் நிறைமொழி மாந்தராய ஆளுடைய பிள்ளையார் ஆணையிற் கிளந்த மறைமொழிகளாத் திகழ்கின்றன.

'நடுவிரு ளாடுமெந்தை நனிபள்ளியுள்க
வினைகெடுதல் ஆணை நமதே' 2-84-11

'ஆனசொன் மாலையோதும் அடியார்கள்
வானில் அரசாள்வர் ஆணை நமதே' 2-85-11

'சிந்தைசெய வல்லவர்கள் நல்லவர்கள்
என்ன நிகழ் வெய்தியிமை யோர்
அந்தவுல கெய்தியரசாளு மதுவே
சரதம் ஆணை நமதே' 3-78-11

'வானிடை நிகழ்வர் மண்ணிடைப்பிறவார்
மற்றிதற் காணையும் நமதே' 3-118-11

எனவரும் வாய்மொழிகள், ஞானசம்பந்தர் உலக நன்மை கருதித் தம்மீது ஆணையிட்டுக்கூறிய தமிழ் மந்திரங்களாகத் திகழ்தல் அறியத்தக்கதாகும். இவ்வாறு தெய்வத்தின் திருவருளை உலக மக்கள் இம்மை வாழ்வில் தெளிவாக உணர்ந்து மகிழ்தல் வேண்டும் என்னும் அருட்குறிப்புடன் அடியார்களுக்குத் தம் வாய்மொழியில் உறுதியான நம்பிக்கையுண்டாம் வண்ணம் பிள்ளையார் ஆணையிட்டு கூறியதிறத்தை.

'முத்திப் பகவன் முதல்வன் திருவடியை
அத்திக்கும் பத்தரெதிர் ஆணைநம தென்னவலான்'*
(* ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை)

என நம்பியாண்டார் நம்பி இனிது விளக்கியுள்ளார்.

பிள்ளையாரருளிய இவ்வுறுதியுரையின் மெய்ம்மையினை யுணர்ந்த பெருமக்கள் இவரை 'ஆணை நமதென்ற பெருமாள்' எனப் பாராட்டிப் போற்றியதுடன் இப்பெயரை மக்களுக்கு இட்டும் வழங்கியுள்ளார்கள் எனத் தெரிகிறது.* (* ஔவை துரைசாமிபிள்ளையவர்கள் எழுதிய சைவ இலக்கிய வரலாறு பக்-109.)

**'ஞாலம் நின்புகழே மிக வேண்டும் தென்**
**ஆலவாயில் உறையும் எம் ஆதியே'**

என இறைவன்பால் முறையிட்ட சிவஞானச் செம்மலார், இவ்வாறு தாம் பாடிய ஒவ்வொரு திருப்பதிகத்தின் முடிவிலுப். அத்திருப்பதிகத்தைப் பாடிய தமது பெயரையும், அப்பதி கத்தினை அன்புடன் நெஞ்ச நெக்குருகி ஓதுவார் பெறும் நலங் களையும் தவறாமல் உடன் அருளிச் செய்திருப்பதன் நோக்கம், குறித்த அவ்வொரு திருப்பதிகத்தையேனும் கற்றுப் பாடுவோரும் தாம் பெற்ற சிவாநுபவப் பயனை எளிதிற்பெற்று இன்புற வேண்டுமென்னும் பெருங்கருணையே என்பர் பெரியோர்.*(*கா. சுப்பிரமணியபிள்ளையவர்கள் எழுதிய திருஞானசம்பந்த சுவாமிகள் சரித்திரம், பக்-41-46.)

இவ்வாறு திருஞானசம்பந்தர் அருளிய திருப்பதிகங்கள் யாவும், இறைவன் ஒருவனுளன் என்பதற்குரிய பிரமாணங் களையும், அம்முதல்வனுக்குரிய பொதுவும் சிறப்புமாகிய இலக்கணங்களையும், இறைவனை வழிபடுதற்கு இன்றி யமையாத சாதனங்களையும், அங்ஙனம் உணர்ந்து வழிபாடு செய்யும் அன்பர்கள் பெறும் பேரின்ப வாழ்வாகிய நற்பயனையும் அறிவுறுத்தும் முறையில் அமைந்திருத்தல் உணர்ந்து இன்புறத் தக்கதாகும்.

ஞானத்தின் திருவுருவாகிய பிள்ளையார் அருளிய திருப்பாடல்கள் யாவும், உமையம்மையார் அளித்த திருவருள் ஞானமாகிய பாலடிசிலைப் பருகிய மகிழ்ச்சி நிலையில் சிவனடியே சிந்திக்கும் திருவுடைய அவரது உள்ளத்திலிருந்து பொங்கியெழுந்து பொழிந்த உயர் ஞானத் திருமொழிகளா தலின், இயற்கைப் பொருள்களின் எழில் நலங்களையும் அவற்றிற் பிரிவறத்தோய்ந்து இன்பஞ் செய்யும் இறைவனது திருவருள் வனப்பையும் ஒருங்கே விரித்துரைக்கும் சந்தமலிந்த செந்தமிழ்ச் சொற்களால் இயன்று, உள்ளம் பொருந்தக் கற்போருக்கும்

இசைநலம் பொருந்தப் பாடுவோர்க்கும் தெவிட்டாத தீஞ்சுவை யமிழ்தமாகத் தித்திப்பன.

நீர்வள மிகுந்த காழிப் பதியில் தோன்றிய கவுணியப் பிள்ளையார் இயற்கைக் காட்சியின் எழில் நலத்தில் திளைத்தவர். அவற்றுள் உள் நின்று திகழும் தெய்வத் திருவருளைச் சிந்தையாற் பருகி மகிழும் இயல்பினர். பிள்ளையார் திருப்பாடலில் நானிலத்து ஐந்திணை வளங்களும் நன்கு புனைந்துரைக்கப் பெற்றுள்ளன.

திருஞானசம்பந்தர் திருவாய் மலர்ந்தருளியனவாகத் தேவார ஏடுகளிற் காணப்படுவ 383 திருப்பதிகங்களே. அவற்றுடன் திருவிடைவாசல் என்ற ஊரில் அமைந்த திருக் கோயிற் கல்வெட்டிலிருந்து வெளிவந்த ‘மறியார்சுரத் தெந்தை’ என்னும் முதற்குறிப்புடைய திருவிடைவாய்த் திருப்பதிகம் ஒன்றையும் சேர்த்தெண்ணப் பிள்ளையார் அருளிய திருப்பதி கங்கள் 384 ஆகும். இப்பதிகங்களிலுள்ள திருப்பாடல்கள் 4158 ஆகும்.

ஆளுடைய பிள்ளையார் திருப்பதிகங்களிற் பெரும்பாலன பதினொரு பாடல்களால் ஆகியவை. திருப்பிரமபுரத் திருப்பதி கங்களிற் சில, அத்தலத்திற்கு அமைந்த பன்னிரு திருப்பெயர் களையும் பரவிப் போற்றும் கருத்துடன் பன்னிரண்டு திருப் பாடல்களால் இயன்றுள்ளன. ‘சைவசமயத்தின் நுண்பொருள்களை அறிவுறுத்தும் முறையில் அமைந்த’ ‘வாழ்க அந்தணர்’ என்னும் முதற் குறிப்புடைய திருப்பாசுரப் பதிகம் திருப்பாடல்களை யுடையதாகும். திருவெழுகூற்றிருக்கை என்னும் மிறைக்கவி ஆசிரியப்பாவாக அமைந்த ஒரு திருப்பாட்டாகும்.

நாளும் இன்னிசையால் நற்றமிழ்பரப்பும் திருத்தொண்டினை மேற்கொண்ட ஞானசம்பந்தப் பிள்ளையார், தமிழ் மொழியில் ‘விருந்தாய சொல் மாலைகள்’ சிலவற்றைத் திருவாய் மலர்ந் துள்ளார். இவ்வாறு பிள்ளையாரால் புது முறையில் முதன் முதல் அருளிச் செய்யப்பெற்ற அத்திருப்பதிகங்கள் தமிழில் அத்தகைய பனுவல்களுக்கெல்லாம் மூல இலக்கியங்களாகத் திகழ்கின்றன. அவற்றை மிறைக்கவியென்.றும் சித்திரகவி யெ:ன்றும் வழங்குவர். அவையாவன: மொழி மாற்று, மாலை மாற்று, வழிமொழி, மடக்கு, இயமகம், ஏகபாதம், இருக்குக்குறள், எழு கூற்றிருக்கை, ஈரடி - ஈரடிவைப்பு, நாலடி மேல் வைப்பு, முடுகியலாகிய திருவிராகம், சக்கர மாற்று, கோமூத்திரிகம் முதலியனவாகும்.*

(*‘நீக்கரிய இன்பத்திராகம் இருக்குக்குறள்
நோக்கரிய பாசுரம் பல்பத்தோடும் - ஆக்கரிய

யாழ்முரி சக்கரமாற் றீரடி முக்காலும்
பாழிமையாற் பாரகத்தோர் தாமுய்ய - ஊழி
உரைப்பமரும் பல்புகழால் ஒங்கவுமை கோனைத்
திருப்பதிகம் பாட வல்ல சேயை '-

*(ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை 83-85-ம் கண்ணிகள்)* *இவற்றை,*

"செந்தமிழ் மாலை விகற்பச் செய்யுட்களான் மொழி மாற்றும்
வந்த சொற்சீர் மாலை மாற்றும் வழிமொழி எல்லா மடக்கும்
சந்த இயமகம் ஏக பாதந் தமிழ் இருக்குக் குறள் சாத்தி
எந்தைக் கெழு கூற்றிருக்கை ஈரடி ஈரடி வைப்பு"

"நாலடி மேல் வைப்பு மேன்மை நடையின் முடுகு மராகம்
சால்பினில் சக்கரம் ஆதி விகற்பங்கள் சாற்றும் பதிகம்
மூல இலக்கிய மாக எல்லாப் பொருள்களும் முற்ற
ஞாலத் துயர்காழி யாரைப் பாடினார் ஞானசம்பந்தர்"

*எனவரும் செய்யுட்களில் சேக்கிழாரடிகள் விரித்துக் கூறியுள்ளார்.*

*செய்யுளகத்து மொழிகள் தம்முட் புணரும் முறை, நிரல் நிறை, சுண்ணம், அடிமறி, மொழிமாற்று என நால்வகைப்படு மென்றும், அவற்றுள் மொழிமாற்றாவது, செய்யுளகத்து அமைந்து நின்ற சொற்கள் அவை நின்ற நிலையிற் பொருள் விளங்காதவழி அச் செய்யுட் பொருளுக்குப் பொருந்த அச்சொற்களை முன்னும் பின்னும் மாற்றிப் புணர்த்துப் பொருள் கொள்ளுதலாகிய பொருள்கோள் முறை யென்றும் கூறுவர் தொல்காப்பியனார்.* (*தொல்காப்பியம்-எச்சவியல் - சூத்திரம் 8, 13) *செய்யுளில் சில இடங்களில் தன்னியல்பில் மாறி நின்ற சொற்களைப் பொருள் எதிர் இயையப் புணர்க்கும் பொருள்கோள் முறையிலன்றி, செய்யுட்களைக் கற்போர் அச்செய்யுட் பொருளைக் கூர்ந்து நோக்கி இப்பொருள்கோள் முறை யுணர்ந்து சொற்களை முன்னும் பின்னும் இயைத்துப் பொருள் கொள்ளவேண்டும் என்ற நோக்கத்துடன் இயற்றப்படுவது 'மொழிமாற்று' என்னும் மிறைக் கவியாகும். இவ்வாறு பொருளுக்கு ஏற்பச் சொற்களை முன்னும் பின்னும் மாற்றிப் புணர்த்துப் பொருள் கொள்ளும் நிலையில் அமைந்த செய்யுளமைப்பினையே 'மொழிமாற்று' எனச் சேக்கிழார் வழங்கியுள்ளார்.*

"காட தணிகலம் காரரவம்பதி காலதனில்
தோட தணிகுவர் சுந்தரக் காதினிற் றூச்சிலம்பர்
வேட தணிவர் விசயற்குருவம் வில்லுங் கொடுப்பர்
பீட தணிமணி மாடப் புரம புரத்தரரே"

என்ற திருப்பாடலை முதலாகக் கொண்ட திருப்பிரமபுரப்பதிகம் 'மொழிமாற்று' என்னும் சித்திரகவிக்கு மூல இலக்கியமாக அமைந்துளது. பதிகத்தின் முதற்கண் உள்ள இத் திருப்பாடல்,

> **"காடதுபதி, காரரவம் அணிகலம், காலதனில் தூச்சிலம்பர்**
> **சுந்தரக் காதினில் தோடது அணிகுவர், வேடது உருவம்,**
> **விசயற்கு வில்லும் கொடுப்பர், (அவர்யாரெனின்)**
> **பீடது அணி மணிமாடப் பிரமபுரத்து அரர்"**

என இவ்வாறு மொழிகளை முன்னும் பின்னும் மாற்றிப் பொருள் கொள்ளும் முறையிற் பிள்ளையாரால் அருளிச் செய்யப் பெற்றிருத்தல் காணலாம். இவ்வாறே இத்திருப்பதிகத்துள்ள எல்லாத் திருப்பாடல்களும் மொழிகளை மாற்றிப் பொருள் கொள்ளும் நோக்கத்துடன் அருளிச் செய்யப் பெற்றமையால் இத் திருப்பதிகம் மொழிமாற்றுக்கு இலக்கியமாயிற்று.

ஒரு செய்யுளை முதலிலிருந்து வாசித்தாலும் அன்றி இறுதி தொடங்கி வாசித்தாலும் அதே செய்யுளாக அமையும்படி பொருளும் ஓசையும் ஒத்த எழுத்துக்களை நிரலே பெற்ற செய்யுள் 'மாலை மாற்று' என்னும் சித்திர கவியாகும். 'முன் வந்த சொல்லொடு கூடிய சீர்களாலாகிய முதலடியையே அதன் இறுதி தொடங்கி மாற்றிப் படிக்க, அதுவே இரண்டாமடியாக அமைவது இம்மாலை மாற்று என விளக்குவார்' 'வந்த சொற்சீர் மாலைமாற்று' என்றார். இதன் இயல்பு முன்னர் விளக்கப் பட்டது.* (*இந்நூல் பக்கம் 357) மூன்றாந் திருமுறையில் 117-ஆவதாக அமைந்த 'யாமாமாநீ' என்னும் முதற் குறிப்புடைய திருப்பதிகம் ஆளுடைய பிள்ளையார் அருளிய மாலை மாற்றாகும்.

ஒரு பாடலில் அடிமுதற் சீரின் இரண்டாமெழுத்து அப்பாடலிற் பின்வரும் சீர்கள் தோறும் ஒன்றி வழியெதுகையாய் வருவது, வழிமொழி எனப்படும். இவ்வாறு வழிமொழித் திருவிராகமாக அமைந்தது, மூன்றாந் திருமுறையில் 'சுரருலகு' என்னும் முதற் குறிப்புடைய 67-ஆம் பதிகமாகும்.* (*இந்நூல் பக்கம் 492) இப்பதிகத்திற்கு வழங்கும் 'வழிமொழி' என்ற பெயர், ஆளுடைய பிள்ளையாரால் இடப்பெற்றதே என்பது, 'தமிழ் விரகன் வழிமொழிகள் மொழி தகையவே' எனவரும் இப்பதிகத் திருக்கடைக்காப்பால் இனிது விளங்கும்.

ஒரு பாடலில் முன் வந்த சீரும் அடியும் அவ்வாறே மீட்டும் மடக்கி வரப்பெறுவது, 'மடக்கு' எனப்படும். மூன்றாந் திருமுறையில் 94 முதல் 99 முடியவுள்ள திருப்பதிகங்கள், பாடல் தோறும் இரண்டாம் அடியே மூன்றாம் அடியாக இடைமடக்காய் அமைந்துள்ளன.

மூன்றாந் திருமுறையில் 113 முதல் 116 வரையுள்ள திரு இயமகப் பதிகங்கள் தமிழில் சந்த இயமகத்திற்குரிய இலக்கியங் களாகும்.* (* இந்நூல் பக்கம் 498)

முதல் திருமுறையில் 90 முதல் 96 வரை யமைந்த குறிஞ்சிப் பதிகங்களும், மூன்றாந் திருமுறையில் 40, 41 என்னும் எண்ணுள்ள கொல்லிப் பதிகங்களும் 'திரு இருக்குக்குறள்' என வழங்கப் பெறுவன. இவை இரு சீரடியாகிய குறளடி நான்கினால் இயன்ற செய்யுட்களால் அமைந்தன. இதன் பெயர்க் காரணம் முன்னர் விளக்கப்பட்டது* (*இந்நூல் பக்கம் 461) வடமொழி மறையாகிய இருக்கு வேதத்தினைப் போன்று தமிழ் மறையாகத் திகழ்வது இதுவென்பார், இதனைத் 'தமிழ் இருக்குக்குறள்' எனப் போற்றுவர் சேக்கிழார். திருவள்ளுவர் அருளிய திருக்குறள் யாப்பு, முதலடி நாற்சீராய் இரண்டாமடி முச்சீராய்ச் செப்ப லோசை பெற்று இவ்வாறு இரண்டடிகளால் இயன்று வரும் குறள் வெண்பாவாகும். ஆளுடைய பிள்ளையார் அருளிய திரு இருக்குக்குறள், இரு சீரடியாகிய குறளடி நான்கினால் அமைந்த சந்தச் செய்யுளாகும். எனவே திருக்குறள் யாப்பும் திருவிருக்குக் குறள் யாப்பும் தம்முள் வேறாதல் உணரத் தக்கதாகும்.

ஏகபாதம், எழுகூற்றிருக்கை என்பவற்றின் இயல்பு முன்னர் விளக்கப் பெற்றது.* (*இந்நூல் பக்கம் 465) மூன்றாந் திருமுறையில் 110, 111, 112 என்னும் எண்பெற்ற மூன்று பதிகங்களும் ஈரடிகளால் ஆகிய திருப்பாடல்களையுடையன. எனவே அவை ஈரடி என வழங்கப் பெறுவன. மூன்றாந்திருமுறையில் 5, 6-ஆம் பதிகங்கள் ஈரடிச் செய்யுளின் மேல் ஈரடிவைப்பாக அமைந் திருத்தலால் 'ஈரடி மேல் வைப்பு' எனவும், இத்திருமுறையில் 3, 4 ஆம் பதிகங்களும் 108-ஆம் பதிகமும் நாலடிச் செய்யுளின் மேல் ஈரடி வைப்பாக அமைந்திருத்தலால் 'நாலடி மேல் வைப்பு' எனவும்பெயர் எய்தின.* (*இந்நூல் பக்கம் 484)

முதல் திருமுறையில் 19 முதல் 22 வரையுள்ள நட்டபாடைப் பதிகங்களும், 120 முதல் 125 வரையுள்ள வியாழக் குறிஞ்சிப் பதிகங்களும், இரண்டாந் திருமுறையில் 29 முதல் 84 வரையுள்ள இந்தளப் பதிகங்களும் 97, 98, 100, 101-ஆம் எண்ணுள்ள நட்ட ராகப் பதிகங்களும், மூன்றாந் திருமுறையில் 52, 53-ஆம் எண்ணுள்ள கௌசிகப் பதிகங்களும் 67-முதல் 88-ஆம் வரையுள்ள சாதாரிப் பதிகங்களும் முடுகியலாகிய திருவிராகத் திருப்பாடல் களாக அமைந்திருத்தல் காணலாம்.

இரண்டாந் திருமுறையில் 70, 73-ஆம் பதிகங்க;ள இரண்டும் 'சக்கரமாற்று' என்னும் மிறைக் கவியாகக் குறிக்கப்பெற்றுள்ளன. இவற்றுள் 'பிரமனூர் வேணுபுரம்' என்னும் முதற்குறிப்புடைய

திருப்பதிகம், ஆளுடையபிள்ளையார், பாண்டிமா தேவியார் வேண்டுகோட்கிரங்கித் தென்னவனது வெப்பு நோயை நீக்கும் பொருட்டு எழுந்தருளியபோது, முன்னைத் தவப்பயனால் கவுணியப் பிள்ளையாரைக் காணப்பெற்ற தென்னவன், அவரை நோக்கித் 'தேவரீருடைய ஊர் யாது?' என வினவ, அதற்கு விடை கூறும் முறையில் 'பிரமபுரம் முதலாகப் பன்னிரு திருப்பெயர் களையுடைய திருக்கழுமலமே நாம் பயிலும் ஊர்' எனப் பிள்ளையாரால் அருளி செய்யப்பெற்றதாகும். இத்திருப் பதிகத்தின் முதற்கண் அமைந்தது,

> பிரமனூர் வேணுபுரம் புகலி வெங்குருப் பெரு நீர்த்தோணி
> புரமன்னு பூந்தராய் பொன்னஞ் சிரபுரம் புறவஞ் சண்பை
> அரன்மன்னு தண்காழி கொச்சைவய முள்ளிட்டங் காதியாய
> பரமனூர் பன்னிரண்டாய் நின்றதிருக் கழுமல நாம்பரவுமூரே.

என்ற திருப்பாட்டாகும். இம் முதற்பாடலில் 1. பிரமனூர், 2. வேணுபுரம், 3. புகலி, 4. வெங்குரு, 5. தோணிபுரம், 6. பூந்தராய், 7. சிரபுரம், 8. புறவம், 9. சண்பை, 10. காழி, 11. கொச்சைவயம், 12. கழுமலம் என இம்முறையே எண்ணப்பெற்ற பன்னிரு திருப் பெயர்களும் இவ்வெண்ணு முறைப்படியே இத் திருப்பதிகத்தின் ஒன்று முதல் பன்னிரண்டு வரையுள்ள பாடல்களின் முதற் பெயர்களாக அமைந்துள்ளன. இவ்வாறு முதற்பாடலில் குறித்த பன்னிரு பெயர்களும் நிரலே அப்பதிகத்தில் 1 முதல் 12 வரை யுள்ள பாடல்களின் முதற் பெயர்களாக நின்று ஒரு வட்டமாக அமையும்படி அப் பெயர்களை மாற்றினமையால் இது 'சக்கர மாற்று' என்னும் பெயர்த்தாயிற்று.

மேற்குறித்த வண்ணம் சீகாழிப்பதிக்குரிய பன்னிரு திருப்பெயர்களையும் பரவும் வகையில் பன்னிரு திருப்பாடல் களையுடைய மற்றொரு பதிகம் இரண்டாந் திருமுறையில் 73ஆம் திருப்பதிகமாகும். இதன் முதற்கண் அமைந்த திருப்பாட்டு,

> விளங்கிய சீர்ப் பிரமனூர் வேணுபுரம் புகலிவெங்குரு மேற்சோலை
> வளங்கவருந் தோணிபுரம் பூந்தராய் சிரபுரம்வண் புறவ மண்மேல்
> களங்கமிலூர் சண்பைகமழ் காழி வயங்கொச்சை கழுமல மென்றின்ன
> இளங் குமரன் தன்னைப்பெற் றிமையவர்தம் பகையெறிவித் திறைவனூரே.

என்பதாகும். முதல் திருப்பாட்டாகிய இதன் இறுதியில் வைத்து எண்ணப்பெற்ற 'கழுமலம்' என்பது இரண்டாந் திருப்பாட்டின் முதலிலும், இரண்டாம் பாட்டின் இறுதியிலுள்ள 'தோணிபுரம்' மூன்றாந் திருப்பாட்டின் முதலிலும், மூன்றாம் பாட்டின் இறுதி யிலுள்ள 'வெங்குரு' நான்காந் திருப்பாட்டின் தொடக்கத்திலும், நான்காம் பாட்டின் இறுதியிலுள்ள 'சண்பை' ஐந்தாம் திருப்பாட்டின் முதலிலும், ஐந்தாம் பாட்டின் இறுதியிலுள்ள

'புறவம்' ஆறாம் திருப்பாட்டின் முதலிலும், ஆறாம் பாட்டின் இறுதியிலுள்ள 'அயனூர்' ஏழாந்திருப்பாட்டின் முதலிலும், ஏழாம் பாட்டின் இறுதியிலுள்ள 'புறவம்' எட்டாந் திருப்பாட்டின் முதலிலும், எட்டாம் பாட்டின் இறுதியிலுள்ள 'தோணிபுரம்' ஒன்பதாந் திருப்பாட்டின் முதலிலும், ஒன்பதாம் பாட்டின் இறுதியிலுள்ள 'கழுமலம்' பத்தாந் திருப்பாட்டிலும், பத்தாம் பாடலின் இறுதியிலுள்ள 'சண்பை' பதினொராந் திருப்பாட்டின் முதலிலும், பதினொராம் பாடலின் இறுதியிலுள்ள 'வெங்குரு'வாகிய தருமனூர் பன்னிரண்டாந் திருப் பாட்டிலும், பன்னிரண்டாம் பாடலின் இறுதியிலுள்ள 'அயனூர்' என்னும் பிரமபுரம் 'பூமகனூர்' என முதல் திருப்பாடலின் முதலிலும் இயைந்து நின்று பொருட்டொடர்பு பற்றிய அந்தாதியாக மண்டலித்து முடிந்திருத்தல் காணலாம்.

இவ்வாறு இப்பதிகத்திலுள்ள பன்னிரு திருப்பாடல்களும் சீர்காழிப்பதிக்குரிய பன்னிரு திருப்பெயர்களால் முன்னும் பின்னுமுள்ள திருப்பாடல்களுடன் இணைந்து ஒரு வட்டமாக அமைந்து செல்லுதலால், இப்பதிகம் 'சக்கரம்' என்னும் பெயரு டையதாயிற்று. இப்பெயர் ஆளுடைய பிள்ளையாராலேயே இடப்பெற்றதென்பது "அயனூர்மேல் இச்சக்கரம் சீர்த்தமிழ் விரகன் தான் சொன்ன தமிழ் தரிப்போர் தவஞ்செய்தோரே" என வரும் இதன் திருக்கடைக்காப்பால் இனிது விளங்கும். பிற்காலத்தார் இதனைச் சக்கரமாற்று எனக்குறித்தனர்.

திருஞான சம்பந்தர் அருளிய இச் சக்கர மாற்றின் அமைப்பும், பிற்கால யாப்பணி நூலார் பாடலெழுத்துக்களை ஆரைகளில் அமைத்துக்காட்டும் சக்கரபந்தத்தின் அமைப்பும் தம்முள் வேறென்பது, 'சக்கரமாற்று' எனவும் 'சக்கர பந்தம்' எனவும் வழங்கும் அவற்றின் பெயர் வேறுபாட்டால் நன்கு புலனாம். அன்றியும் தேவாரத் திருப்பதிகங்களில் அமைந்த சக்கரமாற்று ஒரு பதிகமாய் அப்பதிக முழுவதும் ஒரே வட்டமாய் அமைந்தது; யாவர்க்கும் பொருள் இனிது விளங்க இயல்பு வகையாற் பாடப்பெற்றது. பிற்காலத்தார் கூறும் சக்கரபந்தம், ஒரு பாடலாய் வட்டங்கீறி ஆரைகளில் எழுத்துக்களை அமைத்துக் காட்டும் நிலையில் அமைந்தது; எழுத்தெண்ணிச் செயற்கை வகையாற்பாடப்பெறுவது.

இரண்டாந் திருமுறையில் அமைந்த 'பூமகனூர்' என்னும் முதற்குறிப்புடைய திருப்பிரமபுரத் திருப்பதிகம், 'கோமூத்திரி' என்னும் சித்திரகவியாகக் குறிக்கப் பெற்றுள்ளது, கோமூர்த்திரி யாவது, ஒரு செய்யுளின் முன்னிரண்டடிகளை மேல் வரியாகவும் பின்னிரண்டடிகளைக் கீழ்வரியாகவும் வரைந்து, அவ்விரண்டு வரிகளின் எழுத்துக்களை மேலும் கீழுமாக ஒன்றிடையிட்டு

வாசித்தாலும் அதே செய்யுளாய் அமையும் சித்திர கவியாகும். இதன்கண் மேலும் கீழுமுள்ள வரிகளில் அமைந்த எழுத்துக்கள் கோமூத்திர ரேகைபோல் ஒன்றிடையிட்டு வாசிக்கப்பெறுதலின் கோமூத்திரி எனப்பட்டது. கோமூத்திரி எனப் பிற்காலத்தார் கூறும் பாடலமைப்பு மேற்குறித்த 'பூமகனூர்' என்னும் முதற்குறிப்புடைய திருப்பதிகத்தில் இருப்பதாகப் புலப்பட வில்லை. இப்பதிகத்திற்குப் பிள்ளையார் இட்ட பெயர் கோமூத்திரியென்பதன்று; வழிமுடக்குமாவின் பாச்சல் என்பதே இப்பதிகப் பெயராகும். இதன் பெயர்க்காரணம் நன்கு விளங்கவில்லை. இப்பதிகப் பாடல் ஒவ்வொன்றிலும் பிரமபுரத் திற்குரிய பன்னிரு திருப்பெயர்களும் எண்ணப்பெற்றுள்ளன. ஒரு பாடலின் இறுதியில் வைத்தெண்ணப்பெற்ற பெயர் அடுத்த பாடற்கு முதலாக மீண்டும் மடித்தெண்ணப் பெறும் நிலையில் அமைந்த இப்பதிகம், மூடக்காக வளைந்த வழியிலே சென்ற மாவானது மீண்டும் வந்த வழியே மடங்கிச் சென்றாற்போலும் நடை அமைப்பினையுடையதாதல் இங்கு நோக்கத் தகுவதாகும்.

மூன்றாந் திருமுறையில் 109-ஆம் பதிகமாகவுள்ளது 'மண்ணது வுண்டரி' என்னும் முதற் குறிப்புடை திருப்பதிக மாகும். இது கூடற் சதுக்கம் என்றும் கூட சதுக்கம் என்றும் குறிக்கப்பெற்றுளது. ஒரு செய்யுளின் நான்காம் அடியிலுள்ள எழுத்துக்கள் யாவும் ஏனை மூன்றடிகளுள்ளும் மறைந்து நிற்குமாறு பாடப்பெறுவது, கூட சதுர்த்தம் என்பர் அணி நூலார். கூடம்-மறைவு. சதுர்த்தம்-நான்காவது, மறைவான நான்காம் அடியினையுடையது என்பது இதன் பொருள். எனவே நான்காமடியிலுள்ள எழுத்துக்க ளெல்லாம் மற்றைய முதல் மூன்றடிகளுள்ளும் நிற்றல் 'கூட சதுர்த்தம்' என்ற சித்திரகவியின் அமைப்பாதல் பெறப்படும்.

ஆளுடைய பிள்ளையார் அருளிய 'மண்ணதுவுண்டரி மலரோன்' என்னும் முதற்குறிப்புடைய பதிகப் பாடல்களின் நான்காமடியில் முன்னை மூன்றடிகளிலும் இல்லாத எழுத்துக்கள் சில இருத்தலால், இப்பாடல்களின் நான்கா மடியில் உள்ள எழுத்துக்கள் யாவும் ஏனை மூன்றடிகளிலும் மறைந்துள்ளன எனக் கருதுதற்கு இடமில்லை. அன்றியும் இப்பதிகப் பெயர், கூடற் சதுக்கம் கூட சதுக்கம் என்றே குறிக்கப் பட்டுளது. கூட சதுத்தம் என்ற பெயரால் இப்பதிகம் வழங்கப் பெறவில்லை. ஆகவே தேவாரத்தில் அமைந்த கூடற் சதுக்கம் என்ற இம்மிறைக்கவியும் பிற்காலத்தில் கூட சதுர்த்தம் என்ற பெயரால் வழங்கப்பெறும் சித்திரகவியும் தம்முள்வேறனவே கொள்ளுதல் பொருந்தும்.

நான்கு தெருக்கள் ஒன்றாகக் கூடும் இடத்தைச் 'சதுக்கம்' என வழங்குதல் மரபு. அம்முறையில் திருமயேந்திரம்,

திருக்கயிலாயம், திருவாரூர், திருவானைக்கா என்ற நான்கு தலங்களும் ஒன்றுகூடிய நிலையில் அந்நான்கு தலங்களிலும் கோயில் கொண்டருளிய பெருமானைப் பரவிப்போற்றுவதாக அமைந்தது.

மண்ணது வுண்டரி மலரோன் காணா
வெண்ணாவல் விரும்பு மயேந்திரரும்
கண்ணது வோங்கிய கயிலையாரும்
அண்ணலா ரூராதி யானைக்காவே.

என்ற பாடலை முதலாக வுடைய திருப்பதிமாகும். இப்பதிகப் பாடல்கள் யாவும், திருக்கயிலாயம், திருவானைக்கா, திருமயேந்திரம், திருவாரூர் ஆகிய நான்கு தலங்களையும் தனித்தனியே குறித்துப் போற்று முகத்தால்அவை நான்கும் ஒருங்கே கூடிய சதுக்கம் போன்று அமைந்திருத்தலால் இப்பதிகம் கூடற் சதுக்கம் என்னும் பெயர்த்தாயிற்று.

செய்யுட்களின் முதலிலும் இறுதியிலும் நிற்கும் மொழிகள் தம்முட் பொருள்நோக்க முடையனவாய் இயைந்து நிற்கும் நிலையினைப் 'பூட்டுவிற் பொருள் கோள்' என்பர்.

'அலர்மகள் மலிதர அவனியில் நிகழ்பவர்
மலர்மலி குழலுமை தனையிட மகிர்பவர்
நலமலி யுருவுடை யவர் நகர் மிகுபுகழ்
நிலமலி மிழலையை நினையவல்லவரே'

என முதற் திருமுறையில் 124-ஆம் எண்பெற்று நின்ற திருப்பதிகத்தின் முதற் பத்துப் பாடல்களும் பூட்டுவிற் பொருள் கோளில் அமைந்திருத்தல் காணலாம். மேற்காட்டிய பாடலில் 'மிழலையை நினைய வல்லவர்' என வரும் இறுதித் தொடரை 'அலர் மகள் மலிதர அவனியில் நிகழ்பவர்' என முதலடியுடன் இயைத்து நோக்கிப் பொருள் கொள்ளுதல் வேண்டும்.

ஆளுடைய பிள்ளையார் அருளிய திருப்பதிகங்களின் சொற்பொருள் முறையினைக் கூர்ந்து நோக்குங்கால் அப்பதி கங்களைப் பின் வருமாறு வகைப்படுத்திக் கொள்ளலாம்:-

1. பிள்ளையார், உலக மக்களை உய்விக்கும் அருட் குறிப்புடன் அவர்களை நோக்கி 'நீவிர் நும் துயரங்கள் நீங்க அம்மையப்பனாகிய இறைவனை அன்பினால் தொழுது உய்வீராக' என அறிவுறுத்தும் முறையில் பல திருப்பதிகங்களை அருளிச் செய்துள்ளார்.

"ஒடுங்கும் பிணிபிறவி கேடென் றிவை
யுடைத்தாய வாழ்க்கை யொழியத்தவம்

அடங்கும் இடங்கருதி நின்றீரெல்லாம்
அடிக ளடிநிழற்கீழ் ஆளாம் வண்ணம்
கிடங்கும் மதிலுஞ் சுலாவி யெங்குங்
கெழுமனைகள் தோறும் மறையின்னொலி
தொடங்குங் கடந்தைத் தடங்கோயில் சேர்
தூங்கானை மாடந் தொழுமின்களே" 1-50-1

என்றாங்கு வரும் திருப்பதிகங்கள் இவ்வகையைச் சார்ந்தன வாகும்.* (*திருமுறை I 90, 91, 93, 96, 99, 116; II, 13, 25, 84, 86 III 30, 37, 50, 106-ஆம் பதிகங்களை நோக்குக)

2. சிவபெருமான் கோயில் கொண்டெழுந்தருளிய வளமார்ந்த திருத்தலம் இன்னது என அத்தலத்தின் பெயர் கூறிப்போற்றும் முறையில் அமைந்த திருப்பதிகங்கள் பலவாகும்.

'விதியாய் விளை வாய்விளை வின்பயனாகிக்
கொதியா வரு கூற்றை யுதைத்தவர் சேரும்
பதியாவது பங்கய நின்றலரத்தேன்
பொதியார் பொழில் பூம்புக லிந்நகர் தானே' 1-30-1

என்றாங்கு வரும் பதிகங்கள் இவ்வகையில் அடங்குவன.* (*திருமுறை 136, 43, 49, 53, 64, 65, 81, 82, 97, 100, 103, 104, 108-115, 120, 126, 129-132, II 17, 29, 38, 42, 43, 45, 60, 61, 63, 64, 71, 72, 78. III 30, 33,-35; 67-71; 74-86, 88. 90, 93, 100, 103, 104, 107, 118- ஆம் பதிகங்களை நோக்குக)

3. 'இன்ன தலத்தில் எழுந்தருளிய இறைவனை வழி படுவார் இத் தன்மையராய் விளங்குவார்கள்' என அடியார் திறம் விளக்குவன சில பதிகங்கள்.

'மண்புகார் வான்புகுவர் மனமிளையார் பசியாலுங்
கண்புகார் பிணியறியார் கற்றாருங் கேட்டாரும்
விண்புகா ரெனவேண்டா வெண்மாட நெடுவீதித்
தண்புகார்ச் சாய்க் காட்டெந் தலைவன் தாள் சார்ந்தாரே.'
2-41-1

என்றாங்கு வருவன இவ்வகையைச் சார்ந்தன.* (*திருமுறை 157, 88, 107, II 15, 16, 46, 49, 52, 77, 89, 109, III 9, 48, 53-ஆம் பதிகங்களைப் பார்க்க)

4. இறைவன் எழுந்தருளிய இத்தலத்தை வழிபட வினைத் துயர் நீங்கும் எனவும் நற்பயன்களை அடைந்து இன்புறலாம் எனவும் அறிவுறுத்தும் முறையில் பல பதிகங்கள் உள்ளன.

'கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம்பல மேய
முற்றா வெண்டிங்கள் முதல்வன் பாதமே
பற்றா நின்றாரைப் பற்றா பாவமே.' 1-80-1

'நல்லானை நான்மறை யோடிய லாறங்கம்
வல்லானை வல்லவர்பால் மலிந் தோங்கிய
சொல்லானைத் தொன் மதிற் காழியே கோயிலாம்
இல்லாலை யேத்தநின் றார்க்குள தின்பமே.' 2-11-1

*என்பன முதலாக வரும் பதிகங்கள் இறைவனை வழிபடுதலின் பயனை அறிவுறுத்தும் நிலையில் உள்ளன.*

*5. இறைவன் இன்ன இன்ன தலங்களின் இன்ன இன்ன தன்மையில் விளங்கி அருள் புரிகின்றான் எனக் கூறும் முறையில் அமைந்தன சிலபதிகங்கள்.* (*திருமுறை I 58, 79, 80, 83, 86, 98, 101, 102, 119, 122, 124, 125, 133, 115, 8, 11, 59, 76, 102-105, 107, 108, 115, 119, III 12, 20, 26, 91, 92, 100, 111, 119-ஆம் பதிகங்கள் இங்கு நோக்கத்தக்கன)*

'அந்தமும் ஆதியும் ஆகிய அண்ண லாரழலங்கை யமர்ந்திலங்க
மந்தமுழவ மியம்ப மலைமகள் காணநின் றாடிச்
சந்தமிலங்கு நகுதலை கங்கை தண்மதி யம்மய லேததும்ப
வெந்தவெண் ணீறுமெய் பூசும் வேட்கள நன்னகராரே' 1-39-1

*என்றாங்கு வரும் பதிகங்கள் இவ்வகையைச் சார்ந்தன.* (*திருமுறை I 46, 66-75, 77, 84, 85, 105, 117, 123, 127, 134-136, II 6, 7, 10, 19, 22, 26, 28, 40, 62, 67, 69, 75-ஆம் பதிகங்கள் இவண் கருதற்குரியன.)*

*6. ஒரு திருத்தலத்தினை யடையும் நிலையில் அதன் சேய்மையிலும் அணிமையிலும் நின்று அத்தலத்தினைக் கண்டு போற்றியனவாகச் சில பதிகங்கள் காணப்படுகின்றன.*

'ஓடேகலன் உண்பதும் ஊரிடு பிச்சை
காடேயிட மாவது கல்லால் நிழற்கீழ்
வாடாமுலை மங்கையுந் தானு மகிழ்ந்
தீடாவுறை கின்ற இடைமரு தீகோ.' 1-32-1

*எனவும்,*

'மங்கையர்க் கரசி வளவர்கோன்பாவை வரிவளைக் கைம்மடமானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி பணிசெய்து நாடொறும் பரவப்
பொங்கழ லுருவன் பூதநாயகனால் வேதமும் பொருள்களு மருளி
அங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த ஆலவா யாவது மிதுவே.'
3-120-1

*எனவும் தொடங்கும் திருப்பதிகங்கள் போல்வன மேற்குறித்த வகையில் அமைந்தனவாகும்.* (*திருமுறை I 9, 10, 16, 17, II 88, III 122-ஆம் பதிகங்களைப் பார்க்க )*

*7. இறைவன் கோயில் கொண்டருளிய தலத்தினுட் புகும் பொழுது திருவுடைய செழும்பதியாகிய அதனைத் தெய்வ நிலையில் வைத்து மலர்தூவி அருச்சிக்கும் முறையிற் பாடிய திருப்பதிகங்களும் சில உள்ளன.*

'சித்தந் தெளிவீர்காள், அத்தன் ஆரூரைப்
பத்தி மலர்தூவ, முத்தி யாகுமே' 1-91-1

என்றாங்கு வருவன இவ்வகையில் அடங்கும்.* (*திருமுறை I 93, II 112-ஆம் பதிகங்களை நோக்குக.)

8. ஒரு தலத்தினுள்ளே புகும்பொழுது, அங்குத் தம்மை எதிர்கொண்டழைத்த பெரியோர்களாகிய சிவனடியார்களை ஆர்வமுடன் நோக்கி, 'உங்கள் பெருமான் என்னையும் ஆட்கொள்வரோ' என வினவும் முறையில் அமைந்த திருப்பதிகமும் உண்டு.

'அந்தமாயுல காதியு மாயினான்
வெந்த வெண்பொடிப் பூசிய வேதியன்
சிந்தையே புகுந் தான்திரு ஆரூரெம்
எந்தை தானெனை ஏன்று கொளுங் கோலோ' 3-45-1

என்ற திருப்பாடலை முதலாகவுடையது அத் திருப்பதிகமாகும். ஆளுடைய பிள்ளையார் அருளிய இத்திருப்பதிகத்தை நன்கு பயின்ற சுந்தரர், திருவாரூருட் புகும்பொழுது தம்மை எதிர் கொண்டழைத்த ஆரூர் மக்களை நோக்கி ஆர்வமுடன் வினவும் முறையில்,

'கரையுங் கடலும் மலையுங் காலையு மாலையு மெல்லாம்
உரையில் விரவி வருவான் ஒருவன் உருத்திரலோகன்
வரையின் மடமகள் கேள்வன் வானவர் தானவர்க் கெல்லாம்
அரையன் இருப்பதும் ஆரூர் அவர் எம்மையும் ஆள்வரோ கேளீர்'
7-73-1

எனத் தொடங்கும் திருப்பதிகத்தை அருளிச் செய்திருத்தல் இங்கு ஒப்புநோக்கி யுணரத்தகுவதாகும்.

9. இறைவனுக்கு உவப்பாய தலம் இதுவென்றும் இதனை வழிபடுமின் என்றும் உலகமக்களுக்கு அறிவுறுத்தும் நெறியில் அமைந்த பதிகங்கள் பல.

'வன்னி கொன்றைமத மத்தம் எருக்கொடு கூவிளம்
பொன்னியன்ற சடையிற் பொலிவித்த புராணனார்
தென்ன வென்று வரி வண்டு பண்செய் திருவாஞ்சியம்
என்னை யாளுடையா னிடமாக வுகந்ததே' 2-7-1

எனவும்,

'இறைவன் ஈசனெந்தை யிமையோர் தொழுதேத்த நின்ற
கறையணி கண்டன்வெண் தோடணி காதினன் காலத்தன்று
மறைமொழி வாய்மையினான் மலையாளொடு மன்னுசென்னிப்
பிறையணி செஞ்சடையான் பிரமாபுரம் பேணுமினே' 3-56-1

எனவும் வரும் பதிகங்கள் போல்வன இவ்வகையில் அடங்குவனவாம்.* (*திருமுறை III 59, 61 நோக்குக)

*10.* திருஞானசம்பந்தர் தாம் கண்டு வணங்கிய திருத்தலங்களின் எழிலையும் அங்கே கோயில் கொண்டு எழுந்தருளிய இறைவனுடைய திருமேனி வண்ணத்தினையும் கருதிப் பரவும் நிலையிலும், இறைவன் திருவடிகளில் நறுமலர்தூவி அருச்சித்துப் போற்றும் நிலையிலும் அருளிய திருப்பதிகங்கள் பலவாகும்.

'வரிவள ரவிரொளி யரவரை தாழ வார்சடை முடிமிசை வளர்மதிசூடிக்
கரிவளர் தருகழல் கால்வலனேந்திக் கனலெரியாடுவர் காடரங்காக
விரிவளர் தருபொழில் இளமயிலால வெண்ணிறத் தருவிகள்
திண்ணென வீழும்
எரிவள ரினமணி புனமணிசாரல் இடைச்சுரமேவிய இவர்வண மென்னே'
(1-76-1)

எனவும்,

'பொடியுடைமார்பினர் போர்விடையேறிப் பூதகணம் புடைசூழக்
கொடியுடை யூர்திரிந் தையங் கொண்டு பல பல கூறி
வடிவுடை வாணெடுங் கண்ணுமையாக மாயவன் வாழ்கொளிபுத்தூர்க்
கடிகமழ் மாலரிட்டுக் கறைமிடற்றானடி காண்போம்' (1-40-1)

எனவும் வரும் திருப்பதிகங்கள் முதலாயின இவ்வகையைச் சேர்ந்தனவாகும்.* (*திருமுறை I 74, II 111, III 25, 42, 46)

*11.* ஒரு தலத்தை வழிபட்டுத் திரும்பும் நிலையில் அங்கே கண்ட தெய்வக்காட்சியினைத் தம் உள்ளத்தே நினைவு கூரும் முறையில் அருளிய திருப்பதிகமும் உண்டு.

'சந்தமா ரகிலொடு சாதிதேக்கம் மரம்
உந்துமா முகலியின் கரையினில் உமையொடும்
மந்தமார் பொழில்வளர் மல்குவண் காளத்தி
எந்தையார் இணையடி என்மனத் துள்ளவே' (3-36-1)

எனவரும் திருப்பதிகம் இங்கு நோக்கத்தக்கதாகும்.

*12.* ஆளுடைய பிள்ளையார் அடியார் குழாத்துடன் ஒரு தலத்திலிருந்து மற்றொருதலத்தை நோக்கிச் செல்லும் நிலையிற் பாடிய திருப்பதிகங்கள் வழிநடைக் கேற்ற சந்தத்தில் அமைந்துள்ளன.

'நம்பொருள் நம்மக்களென்று நச்சியிச்சை செய்துநீர்
அம்பர மடைந்துசால அல்லலுய்ப்ப தன்முனம்
உம்பர்நாதன் உத்தமன் ஒளிமிகுத்த செஞ்சடை
நம்பன்மேவு நன்னகர் நலங்கொள்காழி சேர்மினே' (2-97-1)

என்றாற் போல்வன இங்கே குறிப்பிடத்தக்கன வாகும்.* (*திருமுறை II 99,100, 101-ஆம் பதிகங்கள் பார்க்க)

13. பிள்ளையார் ஏனையடியார்களையும் தம்மொடு உளப்படுத்தி உள்குதும், பரவுதும், போற்றுதும் என இறைவனைப் போற்றிப் பரவும் திருப்பதிகங்களும் சில உள.

'மாறிலவுணரர ணம்மவை மாயவோர் வெங்கணையா-லன்று
நீறெழவெய்த வெங்கள் நிமலனிடம் வினவில்
தேறலிரும் பொழிலுந் திகழ் செங்கயல்பாய் வயலுஞ்-சூழ்ந்த
ஊறலமர்ந்த பிரான் ஒலியார்கழல் உள்குதுமே' (1-106-1)

என்றாற்போல்வன இவ்வகையிலடங்குவன.* (*திருமுறை I 118, II 82, 110, III 2,102-ஆம் பதிகங்கள் பார்க்க.)

14. இறைவனது திருவருள் நீர்மையினைக்கண்டு வியந்து 'இவ்வருள் வந்தவாறு மற்றெவ்வணமோ' என்று சிந்தைசெய்து போற்றும் முறையில் அமைந்தன சிலபதிகங்கள்,

'எந்தையீசனெம் பெருமான் ஏறமர் கடவுளென் றேத்திச்
சிந்தை செய்பவர்க் கல்லாற் சென்றுகை கூடுவதன்றால்
கந்தமாமலர் உந்திக் கடும்புனல் நிவாமல்கு கரைமேல்
அந்தண் சோலைநெல்வாயில் அரத்துறையடிகள்தம் அருளே'
(2-90-1)

என்றாற்போல்வன இவ்வகையைச் சார்ந்தனவாம்.

15. இறைவனது திருவருள் வண்ணமாகிய திருநீற்றின் சிறப்பினை விரித்துணர்த்துவது,

'மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்திலுள்ளது நீறு
செந்துவர் வாயுமைபங்கன் திரு ஆலவாயான் திருநீறே' (2-66-1)

எனவரும் திருநீற்றுப் பதிகமாகும்.

16. இறைவனது திருப்பெயராய்த்திகழும் திருவைந்தெழுத்தின் பெருமையினையும் மந்திரமாகிய அதனைக் காதலாகிக் கசிந்து ஓதுவார் எய்தும் நலங்களையும் அறிவுறுத்தும் முறையில் அமைந்தன,

'துஞ்சலுந் துஞ்சலிலாத போழ்தினும்
நெஞ்சக நைந்து நினைமின் நாடொறும்
வஞ்சக மற்றடி வாழ்த்த வந்தகூற்
நஞ்ச வுதைத்தன அஞ்செழுத்துமே' (3-22-1)

எனவரும் பஞ்சாக்கரத் திருப்பதிகமும்,

'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் நமச்சி வாயவே' (3-49-1)

எனவரும் நமச்சிவாயத் திருப்பதிகமுமாகும்.

17. இயல்பாகவே பாசங்களின் நீங்கி முற்றறிவின் உருவாக விளங்கும் முதல்வன், உலகப் பொருளொன்றினுந் தோய்வின்றித் தானேதன் பேரொளியால் விளங்கும் தன்னுண்மை நிலையிற் 'சிவம்' எனவும், உலகெலாம் ஆகி வேறாய் உடனுமாய்' இவ்வாறு உயிர்களின் வழிநிற்கும் நிலையிற் 'சத்தி' எனவும் பிரிவிலாது ஒன்றாந் திறத்தால் இரு நிறப்பட்டு, பின் ஐந்தொழில் செய்யும் தன்மையிற் 'பதி', எனப் பெயர் பெற்று நிற்பன் என்பது சிவாகம நூற்றுணிபு. இறைவனுக்குரிய பொதுவும் சிறப்புமாகிய இவ்விலக்கணங்களை உய்திபெறும் முறையில் ஆளுடைய பிள்ளையார் அரும்பொருள் நிறைந்த பல திருப்பதிகங்களை அருளிச்செய்துள்ளார்.

பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பார்ப்பரிய பரம் பொருளை, உமையம்மையார் அளித்த ஞானப் பாலடிசிலைப் பருகியதனால் விளைந்த பதிஞானத்தாலே நேசமொடும் நேரே காணப்பெற்றவர் ஆளுடைய பிள்ளையார். சிவஞானச் செல்வராகிய அப்பெருந்தகையார், சுட்டுணர்வுக்கு எட்டாத தனிமுதற் பொருளை நேரேகண்டு 'எம்மை இது செய்த பிரான் இவனன்றே' எனத் தம் தந்தையார்க்குச் சுட்டிக் காட்டும் நிலையில் அருளிச் செய்தது, 'தோடுடைய செவியன்' எனத் தொடங்கும் திருப்பதிகமென்பது முன்னர் விளக்கப் பெற்றது. இத்திருப்பதிகம், உயிர்களின் உள்ளத்தின் உள்ளிருந்து உறுதி காட்டி உயிர்க்குயிராய் விளங்கும் தம்முதல்வனே முன்னைத் தவப்பயனால் கண்ணுக்குப் புலனாகப் புறத்தே அருளுருக் கொண்டு அம்மையப்பனாம் ஆசானாக எழுந்தருளிய திறத்தை விரித்துக் கூறுவதாகும். இவ்வாறே திருவாய்மூரில் இறைவர் ஆடல் காட்டியருளிய திறத்தை நேரிற்கண்டு மகிழ்ந்த ஞானசம்பந்தர் தாம்கண்ட தெய்வக் காட்சியைத் தம் அன்புடைய நண்பராகிய அப்பரடிகளுக்குச் சுட்டிக் காட்டும் நிலையில் அமைந்தது,

'தளிரிள வளரென உமைபாடத் தாளம்மிடவோர் கழல்வீசிக்
கிளரிள மணியர வரையார்த் தாடும் வேடக் கிறிமையார்
விளரிள முலையவர்க் கருள்நல்கி வெண்ணீறணிந்தோர் சென்னியின்மேல்
வளரிள மதியமொ டிவராணீர் வாய்மூரடிகள் வருவாரே' (1-111-1)

எனவரும் திருப்பதிகமாகும். இங்ஙனம் ஒருவனாகிய இறைவன் உருவம் அருவம் அருவுருவம் என முத்திறப்பட்ட பலவேறு திருமேனிகளையும் மேற்கொண்டு உலகம் உய்யும் வண்ணம் காலந்தோறும் நிகழ்த்திய அருட்செயல்களாகிய புராண வரலாறுகளைப் பரவிப் போற்றும் முறையில் ஆளுடைய பிள்ளையார் திருவாய் மலர்ந்தருளிய பதிகங்கள் பலவாகும். இவையாவும் இறைவனுக்குரிய பொதுவியல்புகளையும் சிறப்பியல்புகளையும் விரவிக்கூறும் நிலையில் அமைந்திருத்தல் காணலாம்.

இனி இறைவனது, சிறப்பியல்பாகிய சொரூப இலக்கணம் ஒன்றினையே சிறந்தெடுத்துக் கூறும் முறையில் அமைந்தது,

"கறையணி வேலிலர்போலும் கபாலந்தரித்திலர் போலும்
மறையும் நவின்றிலர்போலும் மாசுணம் ஆர்த்திலர் போலும்
பறையுங் கரத்திலர் போலும் பாசம் பிடித்திலர் போலும்
பிறையுஞ் சடைக்கிலர் போலும் பிரமபுரம் அமர்ந்தாரே" (2-65-1)

எனவரும் பிரமபுரத்திருப்பதிகமாகும். இறைவன் செய்தனவாகப் புராணங்களிற் கூறப்படும் செயல்கள் பலவற்றையும் தொகுத்துக் கூறி, இச்செயல்கள் யாவும் அண்ணலாகிய இறைவனாற் செய்யப்பட்டன அல்ல என மறுத்துரைக்கும் முறையில் இப் பதிகப் பாடல்கள் அமைந்திருத்தல் காணலாம். உலகப் பொருள்கள் ஒன்றிலும் தோய்வற நிற்கும் தன்னுண்மை நிலையிற் 'சிவன்' எனத் திகழும் தனிமுதல்வன், முன் கூறப்பட்ட படைத்தல் முதலிய தொழில்கள் எல்லாவற்றையும் தன் தொழிலாகக் கூடி நின்று செய்யும் நிலையிலும் தான் அத் தொழில்பற்றி விருப்பு வெறுப்புக் கொள்ளாதுஅவற்றில் தோய்வற விளங்குதல்பற்றி, இறைவன் செய்தனவாக முற்கூறப் பட்ட செயல்கள் யாவும் ஏகதேச நிலையில் ஒன்றிற் கருத் திருத்திச் செய்யும் முறையில் அவனாற் செய்யப்பட்டனவல்ல என உலக மக்களுக்கு அறிவுறுத்தும் நிலையில் ஞான சம்பந்தர் இத்திருப்பதிகத்தை அருளிச் செய்துள்ளார். இந்நுட்பம்,

'பெண்ணுரு ஆணுரு வல்லாப் பிரமபுர நகர்மேய
அண்ணல் செய்யாதன எல்லாம் அறிந்து வகை வகையாலே
நண்ணிய ஞானசம்பந்தன் நவின்றன பத்தும் வல்லார்கள்
விண்ணவ ரோடினிதாக வீற்றிருப்பாரவர் தாமே' (2-65-11)

என வரும் இதன் திருக்கடைக் காப்பால் இனிது புலனாதல் காணலாம்.* (*இப்பதிகத்திற்கு இதுவே பொருள் என்பதனைச் சிவஞான சித்தியார் சுபக்கம் 89-ஆம் விருத்தத்தின் உரையில் மறைஞான தேசிகர் இத்திருப்பாடலைப் பிரமாணமாக எடுத்துக்காட்டினமையால் நன்கு

*தெளியலாம்) இத்திருப்பதிகப் பொருளை அடியொற்றி இறைவனது சொரூப இலக்கணத்தினை யுணர்த்துவது,*

'சிவன் அருவுருவு மல்லன் சித்தினோ டசித்து மல்லன்
பவமுதல் தொழில்க ளொன்றும் பண்ணிடு வானுமல்லன்
தவமுதல் யோக போகந் தரிப்பவனல்லன் தானே
இவைபெற இயைந்தும் ஒன்றும் இயைந்திடா இயல்பினானே'
(சித்தியார்-சுபக்கம்-89)

*எனவரும் சிவஞான சித்தியார் திருவிருத்தமாகும்.*

*18. காழிப் பிள்ளையார் தம்மை ஆட்கொண்டருளிய இறைவனை நோக்கிக் குறையிரந்து வேண்டும் நிலையில் முன்னிலைப் பரவலாகப் பல பதிகங்களைப் பாடிப் போற்றி யுள்ளார்.*

'ஓல்லையாறி யுள்ளமொன்றிக் கள்ளமொழிந்து வெய்ய
சொல்லையாறித் தூய்மை செய்து காமவினை யகற்றி
நல்லவாறே யுன்றன் நாமம் நாவில் நவின்றேத்த
வல்லவாறே வந்து நல்காய் வலிவல மேயவனே' (1-50-1)

*எனவும்,*

'மறையுடையாய் தோலுடையாய் வார்சடைமேல் வளரும்
பிறையுடையாய் பிஞ்ஞகனே யென்றுனைப் பேசினல்லால்
குறையுடையார் குற்றம் ஓராய் கொள்கையினா லுயர்ந்த
நிறையுடையார் இடர்களையாய் நெடுங்கள மேயவனே'
(1-52-1)

*எனவும் வரும் திருப்பதிகங்களைப் போல்வன இவ்வகையில் அடங்குவனவாகும்.* (*திருமுறை I 47, 48, 51, 54, 55, 92, 128; திருமுறை II 18,20, 21, 25, 30, 37, 51, 53-58, 81, 98, III 1, 3, 4, 47, 51, 52, 5, 58, 94-98, 108, 113, 114, 116, 117, 125 பார்க்க)*

*19. இறைவனுடைய பெரும் புகழை எடுத்துரைத்துப் போற்றும் முறையில் படர்க்கைப் பரவலாகப் பல பதிகங்கள் அமைந்துள்ளன.*

'கண்ணுதலானும் வெண்ணீற்றினானுங் கழலார்க்கவே
பண்ணிசை பாடநின்றாடினானும் பரஞ்சோதியும்
புண்ணிய நான்மறை யோர்களேத்தும் புகலிந்நகர்ப்
பெண்ணினல்லாளொடும் வீற்றிருந்த பெருமானன்றே' (3-7-1)

*என்றாற்போன்று இறைவனைப் படர்க்கை நிலையில் வைத்துப் பரவிப் போற்றும் திருப்பதிகங்கள் இவ்வகையின் பாற்படுவன.*

*20. திருஞான சம்பந்தர் தம் நெஞ்சத்தை நோக்கியும் நா முதலிய அங்கங்களை நோக்கியும் 'கடவுள் வழிபாட்டில்*

ஈடுபடுக' என அறிவுறுத்தும் முறையிற் பல திருப்பதிகங்களை அருளிச்செய்துள்ளார்.

'ஊருலாவு பலிகொண் டுலகேத்த
நீருலாவ நிமிர்புன் சடையண்ணல்
சீருலாவு மறையோர் நறையூரிற்
சேருஞ்சித்தீச் சரஞ்சென் றடைநெஞ்சே' (1-9-1)

எனவும்,

'ஆரூர் தொழுதுய்யலாம் மையல்கொண் டஞ்சல்நெஞ்சே'
(2-79-1)

எனவும்,

'புண்ணியர் பூதியர் பூதநாதர் புடைபடு வார்தம் மனத்தார் திங்கட்
கண்ணியர் என்றென்று காதலாளர் கைதொழுதேத்த இருந்த வூராம்
விண்ணுயா மாளிகை மாடவீதி விரைகமழ் சோலை சுலாவி யெங்கும்
பண்ணியல் பாடலறாத ஆவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே'
(1-8-1)

எனவும் வரும் திருப்பதிகங்கள் இவ்வகையைச் சார்ந்தன.

21. உமையம்மையார் அளித்த ஞானப்பாலடிசிலைப் பருகிச் சிவஞான சம்பந்தராகிய கவுணியப் பிள்ளையார், தன்னேரில்லாத் தலைவனாகிய இறைவன் மாதொரு பாகனாக விடைமீது எழுந்தருளக்கண்டு, அப்பெருமானது திருவருள் வனப்பில் தமது உள்ளத்தைப் பறிகொடுத்து, உள்ளங்கவர் கள்வனாகிய இறைவனை நாயகனாகவும், ஆன்மாவாகிய தம்மை அவனருள் விழைந்த தலைவியாகவும் கொண்டு, தாம் பெற்ற சிவாநுபவமாகிய காதலின்பத்தினைத் தமிழுக்கேயுரிய இனிய அகப்பொருட்டுறையில் வைத்து உணர்த்தும் முறையில் 'தோடுடைய செவியன்' என்னும் திருப்பதிகத்தினை அருளிச் செய்தமை முன்னர்க் கூறப்பட்டது. பிள்ளையாரால் முதன் முதற் பாடப்பெற்ற இத் திருப்பதிகப் பொருளைக் கூர்ந்து நோக்குங்கால், சிறிய பெருந்தகையாராய அவர் அருளிய திருப்பதிகங்களில் 'அருந்தமிழின் பொருள்' ஆகிய அகப் பொருட்டுறையமைதி சிறப்பிடம் பெற்றிருத்தல் இனிது புலனாகும்.

திருத்தோணிபுரத் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனைக் கண்டு காமுற்ற இளநங்கையொருத்தி, அத்தலை வனையடையப்பெறாது பிரிவினால் வருந்திய நிலையில், தாமரைத் தடாகத்தில் நறுமலர்களில் தேன் பருகும் அளியரசாகிய வண்டினையும் அங்கு வாழும் நாரை முதலிய பறவைகளையும் நோக்கித் தன் துயர் நிலையைத் தலைவன்பாற் சென்று கூறுமாறு வேண்டுவது,

'வண்டரங்கப் புனற்கமல மதுமாந்திப் பெடையினொடும்
ஒண்டரங்க இசைபாடும் அளியரசே ஒளிர்மதியத்
துண்டர் அங்கப் பூண்மார்பர் திருத்தோணி புறத்துறையும்
பண்டரங்கர்க் கென்னிலைமை பரிந் தொருகாற் பகராயே' (1-60-1)

எனவரும் திருப்பதிகமாகும். ஆளுடைய பிள்ளையார் அருளிய திருமுறைகளில் இவ்வாறு அகப்பொருட்டுறையமைந்த பதிகங்களும் பாடல்களும் பலவுள.* (*திருமுறை I 44, 56, 63, 73, 76, திருமுறை II 18, 23, (106-ம் பதிகத்தில் 6,7,-ஆம் பாடல்கள்), திருமுறை III 63, 100-ஆம் பதிகங்கள் பார்க்க.)

22. ஆளுடையபிள்ளையார் தம்மை ஆட்கொண்டருளிய இறைவனை நோக்கியும் அவன்பால் அன்புடைய அடியார்களை நோக்கியும் இறைவனதியல்பினைக்குறித்து வினவும் முறையில் சில திருப்பதிகங்களைப் பாடிப் போற்றியுள்ளார். வினவும் முறையில் அமைந்த திருப்பதிகங்கள் 'வினாவுரை' எனக் குறிக்கப்பெற்றுள்ளன.

'செந்நெலங் கழனிப் பழனத்தயலே செழும்
புன்னை வெண்கிழியிற் பவளம் புரை பூந்தராய்
துன்னி நல்லிமை யோர்முடி தோய்கழலீர் சொலீர்
பின்னு செஞ்சடையிற் பிறைபாம்புடன் வைத்ததே' (2-1-1)

எனவும்,

'வினவி னேனறி யாமையில் லுரை செய்ம்மினீரருள் வேண்டுவீர்
கனைவிலார்புனற் காவிரிக்கரை மேயகண்டியூர் வீரட்டன்
தனமுனே தனக் கின்மையோ தமராயினாரண்ட மாளத்தான்
வனனில் வாழ்க்கை கொண்டாடிப் பாடியிவ் வையமாப்பலி தேர்ந்ததே'
(3-38-1)

எனவும் வரும் திருப்பதிகங்கள் முறையே இறைவனையும் அடியார்களையும் நோக்கி வினவும் முறையில் அமைந்திருத்தல் காணலாம். இப்பதிகங்களுக்கு அமைந்த 'வினாவுரை' என்ற பெயர் ஆளுடையபிளையாராலேயே இடப்பெற்ற தொன்மை யுடையதென்பது,

'கருத்தனைப் பொழில் சூழங்கண்டியூர் வீரட்டத்துறை கள்வனை
அருத்தனைத் திறம் அடியார்பால் மிகக் கேட்டுகந்த வினாவுரை'
(3-38-11)

எனவரும் திருக்கடைக்காப்பால் நன்கு புலனாம். முதல் திருமுறையில் 4, 6, 7-ஆம் எண்ணுள்ள நட்டபாடைப் பதிகங்களும், இரண்டாந் திருமுறையில் 1, 2, 4, 36, என்னும் எண்ணுள்ள இந்தளப்பதிகங்களும், மூன்றாந் திருமுறையில் 38-ஆம் எண் பெற்ற கொல்லிப் பதிகமும் 'வினாவுரை' எனக் குறிப்பிடப்

பெற்றுள்ளன. இரண்டாந் திருமுறையில் 37-ஆம் பதிகமும் மூன்றாந்திருமுறையில் 47, 108-ஆம் பதிகங்களும் இறைவனை நோக்கி வினாவும் முறையிற் பாடப் பெற்றிருத்தல் காணலாம்.

மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகியவற்றை முறையே கண்டு இறைவனை வழிபட்டு உய்திபெறுந் திறத்தினைத் தமிழ் மக்களுக்கு அறிவுறுத்தும் கடமையினை மேற்கொண்டு திருத்தலங்கள் தோறும் அடியார் குழாத்துடன் யாத்திரை செய்தருளிய திருஞான சம்பந்தர், ஊர்தோறும் கோயில்கொண்டெழுந் தருளிய இறைவனது திருவுருவச் சிறப்பினையும் திருத் தலங்களின் வளத்தினையும் பெருமையினையும் விரித்துரைப்ப துடன், அப்பெருமான் அடியார்களது பிறவி வெப்பந் தணிய இனிய திருவருள் நீர்மைவாய்ந்த தீர்த்தமாகத்திகழும் திறத்தையும் பரவிப் போற்றியுள்ளார்.

'பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவர் ஐயுறவேண்டா வொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையார் அவர் தம்மைத் தோயாவாம் தீ வினையே'
(2-48-2)

எனவும்,

'சக்கரமாற் கிந்தானும் சலந்தரனைப் பிளந்தானும்
அக்கரைமே லசைத்தானும்அடைந்தயிரா வதம்பணிய
மிக்கதனுக் கருள்சுரக்கும் வெண்காடும் வினைதுரக்கு
முக்குளநன் குடையானும் முக்கணுடை யிறையவனே' (2-48-7)

எனவும்,

'தண்முத்தரும்பத் தடமூன்றுடையான் தனையுன்னிக்
கண்முத் தரும்பக் கழற்சே வடிகை தொழுவார்கள்
உண்முத் தரும்ப உவகை தருவான் ஊர்போலும்
வெண்முத் தரும்பிப் புனல்வந்தலைக்கும் வெண்காடே' (2-61-3)

எனவும் வரும் திருப்பாடல்களில் திருவெண்காட்டிலுள்ள முக்குளமாகிய தீர்த்தங்கள் சிறப்பாகக் குறிக்கப்பெற்றிருத்தல் காணலாம். இவ்வாறே,

'வாசங்கமழ் மாமலர்ச் சோலையில் வண்டே
தேசம்புகுந் தீண்டியொர் செம்மை யுடைத்தாய்ப்
பூசம்புகுந்தாடிப் பொலிந்தழ காய
ஈசனுறை கின்ற இடைமரு தீதோ' (1-32-5)

எனவும்,

'வருந்திய மாதவத்தோர் வானோர் ஏனோர் வந்தீண்டிப்
பொருந்திய தைப்பூசம் ஆடியுலகம் பொலிவெய்தத்

திருந்திய நான்மறையோர் சீராலேத்த இடைமருதில்
பொருந்திய கோயிலே கோயிலாகப் புக்கீரே' (2-56-5)

எனவும் வரும் பாடல்களில் திருவிடைமருதில் பூச தீர்த்தமாகிய காவிரித்துறையையும்,

'மடலார்ந்த தெங்கின் மயிலையார் மாசிக்
கடலாட்டுக் கண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
அடலானே றூரும் அடிகளடி பரவி
நடமாடல் காணாதே போதியோ பூம்பாவாய்' (2-47-6)

என மயிலாப்பூரில் மகதீர்த்தமாகிய கடலாட்டினையும் பிள்ளையார் குறித்துப் போற்றியிருத்தல் இவண்கருதத் தகுவதாகும்.

'வேதநெறி தழைத்தோங்க மிக சைவத்துறை விளங்க'த் திரு அவதாரஞ் செய்தருளியவர் திருஞான சம்பந்தர். பிள்ளையார் அருளிய திருப்பதிகங்களில் வேதச் சிறப்பும், வேதங்களில் விதிக்கப்பெற்றுள்ள வேள்விகளின் நற்பயனும், வேதநெறிப்படி நாடோறும் மேற்கொள்ளுதற்குரிய நியமங்களில் தவறாது வேள்வி பல புரிந்து சிவபரம்பொருளை இடையறாது தியானித்துப் போற்றும் நான்மறை யந்தணர்களின் மாண்பும் நன்கு விரித்துரைக்கப் பெற்றுள்ளன.

உலகியல் ஒழுகலாறுகளை விரித்துரைக்கும் நால் வேதங்களின் வழி யொழுகுதலாகிய வேத நெறியை 'வைதிகம்' எனவும், வேதத்தின் முடிபுகளாகிய உபநிடதங்கள், கடவுள் வழிபாட்டிற்கு இன்றியமையாத ஆமங்கள் ஆகிய மெய்ந்நூல்களைச் சிறப்பு முறையில் மேற்கொண்டொழுகும் சிவநெறியினைச் 'சைவம்' எனவும் வழங்குவர் சான்றோர். இந் நிலவுலகில் வாழ்வார்க்குரிய பொதுநெறியாகிய வைதிகம் சிறப்பு நெறியாகிய 'மாதவம்' எனப்படும் தெய்வ வழிபாட்டு நெறிமுறைகள் அனைத்தும் உலக மக்கள் நலம் பெறற் பொருட்டு இறைவனால் வகுத்தருளிச் செய்யப் பெற்றனவாம்.

'மண்ணின் மறையோர் மருவு வைதிகமு மாதவமு மற்றுமுலகத்
தெண்ணில் பொருளாயவை படைத்த இமையோர்கள் பெருமான்' (3-80-6)

'ஆகம செல்வனாரை' (3-57-10)

எனவரும் ஆளுடைய பிள்ளையார் வாய் மொழியால் இவ்வுண்மை இனிது புலனாம்.

மக்கள் தம் உயிரினும் சிறந்த ஒழுக்க நெறியினை மேற்கொண்டு வாழ்தற்கு இன்றியமையாத உலகியலொழுக லாறுகளை விரித்துரைப்பன நால்வேதங்கள். அறத்தையே

அறிவுறுத்துவனவாகிய இந்நூல்களை 'அறங்கரை நாவின் நான்மறை' எனச் சிறப்பித்தார் பனம்பாரனார். வேதத்தால் அறிவுறுத்தப்பெறும் அறநெறிகள் எக்காலத்தும் மாறாத இயல் புடையன என்பார், 'நால் வேத நெறிதிரியினும் திரியாச் சுற்ற மொடு' எனக் குறித்தார் முரஞ்சியூர் முடிநாகராயர். வேதத்தலை தருபொருளாகிய உபநிடத நுண்பொருள்களை விரித்துரைப் பனவாய் எல்லாம் வல்ல இறைவனையடைந்து இன்புறுதற்கு இன்றியமையாத நெறிமுறைகளாகிய சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை நன்னெறிளையும் சிறப்பு முறையில் எடுத்துரைப்பன சிவாகமங்கள். பொதுவும் சிறப்புமாகிய இவ்விரு வகை மெய்ந்நூல்களையும் 'இறைவனூல்' எனப் போற்றுவர் பெரியோர்.

**'வேதமோ டாகமம் மெய்யாம் இறைவனூல்**
**ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன'** (திருமந்திரம் 2397)

என்றார் திருமூலர்.

**'உலகியல் வேதநூ லொழுக்க மென்பதும்**
**நிலவு மெய்ந்நெறி சிவநெறிய தென்பதும்'**

என்றும்,

**'வேதப் பயனாம் சைவமும் போல்'**

என்றும் சேக்கிழாரடிகள் கூறுதலால், வேத நூல்களிற் கூறப்படும் கருத்துக்களிற் பெரும்பாலன உலகியல் நடைமுறை களுக்கு அரண் செய்யும் முறையில் அமைந்துள்ளன என்பதும், வேத நெறியின் மேலாக அதன் முடிந்த பயனாய்த் திகழும் சிறப்புடைய திருநெறி சைவம் என்பதும் நன்கு தெளியப்படும்.

'நற்பனுவல்' எனப் போற்றப்பெறும் நான்கு வேதங்களும்* (* புறநானூறு 15-ஆம் பாடல் 17-ம் அடி) எழுத்தாக்கிளவியாய்,* (*குறுந்தொகை 156-ஆம் பாடல்) ஆசிரியர் மாணவர் பரம்பரையில் செவி வாயிலாகக் கேட்டுணர்ந்து ஓதப்பெற்றுவரும் இயல்பு பற்றி அவ் வேதங்களைக் 'கேள்வி' எனவும் 'சுருதி' எனவும் வழங்குதல் மரபு. வடமொழி வடிவில் வழங்கும் நால் வேதங்களும் எழுத்துருவில் வரையப்பெறாது வழிமுறை வழிமுறையாக ஓதப்பெற்று வருதலால் இவ்வேதப் பொருள்களைக் குறித்த சில குடும்பத்தார்களேயன்றி மக்கள் அனைவரும் கற்றுணர்தல் என்பது இயலாத செயலாம். இங்ஙனமின்றி எல்லோரும் நற் பொருள்களைக் கற்றுணர்ந்து இறைவனது திருவருளைப் பெற்றுய்ய வேண்டும் எனத் திருவுளங் கொண்ட திருஞான சம்பந்தப் பிள்ளையார், தமிழில் எழுதும் மறைமொழிகளாகத் 'தோடுடைய செவியன்' முதலிய திருப்பதிகங்களை அருளிச் செய்தார் என்பது,

'மறை வளருந் தமிழ் மாலை' (2-67-11)

'மறையிலங்கு தமிழ்' (1-61-11)

எனவரும் திருக்கடைக் காப்பாலும்,

'வண்டமிழால் எழுதுமறை மொழிந்த பிரான்'

எனச் சேக்கிழாரடிகள் ஆளுடைய பிள்ளையாரைப் போற்று தலாலும் நன்கு விளங்கும்.

வேதம் ஒருவராலும் செய்யப்படாத தொன்னூல் எனக் கூறுவர். உலக மக்கள் வினைத்தொடர்பு நீங்கி உய்தி பெற வேண்டும் என்னும் பேரருளால் விருப்பு வெறுப்பற்ற பெரு மக்களாகிய முனிவர் முதலியோர் வாயிலாக எல்லாம் வல்ல இறைவனால் அருளிச் செய்யப் பெற்றனவே வேதம், ஆறங்கம்,* (*வேதத்தின் ஆறங்கங்களாவன:-வியாகரணம், சோதிடம், நிருத்தம், சந்தம், சிக்கை, கற்பம் என்பன.) ஆகமம் முதலிய மெய்ந் நூல்கள் என்பது முன்னைச் சான்றோர் துணிபாகும். இக் கருத்தினை,

"விழையாருள்ளம் நன்கொழுநாவின் வினைகெட வேதம் ஆறங்கம்
பிழையா வண்ணம் பண்ணியவாற்றாற் பெரியோரேத்தும் பெருமான்"
(1-42-7)

என்ற பாடலில் ஆளுடையபிள்ளையார் அருளிச் செய்துள்ளமை காணலாம். வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனை வனாகிய இறைவனால் அருளிச்செய்யப்பெற்ற மெய்ந்நூல்கள் என்ற கருத்திலேயே முன்னோர்கள் வேதங்களைச் சிறப்பித்துப் போற்றியுள்ளார்கள்.

பெரிதும் ஆராயப்பட்ட நீண்ட சடையினையுடைய முதிய இறைவனது (சிவபெருமானது) வாக்கை விட்டு நீங்காது அறமொன்றையே மேவிய நான்கு கூற்றையுடைத்தாய் ஆறங்கத் தாலும் உணரப்பட்ட ஒப்பற்ற பழைய நூல் வேதம். வேதத்திற்கு மாறான நூல்களைச் செய்தோர் புத்தர் சமணர் முதலிய புறச்சமயத்தோர். அன்னோரது தருக்க வாதத்தின் மிகுதியைக் கெடுத்து அவர்களாற் கூறப்படும் மெய்போன்ற உரைகளின் பொய்ம்மையை அறிந்து அதனை மெய்யென்று கருதாமல் உண்மைப் பொருளை மக்களுக்கு ஏற்பச்சொல்லி இருபத்தொரு வேள்வித் துறைகளையும்* (இருபத்தொரு வேள்விகளாவன:- ஸோம யஞ்ஞம் 7, ஹவிர் யஞ்ஞம் 7, பாக யஞ்ஞம் 7, ஆக 21. அக்கினிஷ்டோமம், அதியக்கினிஷ்டோமம், உக்தியம், ஷோடசி, வாஜபேயம், அதிராத்திரம், அப்தார் யாமம் இவை ஏழும் ஸோம யஞ்ஞங்கள். அக்னியாதேயம், அக்கினி ஹோத்திரம், தரிச பூர்ண மாசம், சாதுர் மாஸ்யம், நிரூடபசுபந்தம், ஆக்கிரயணம், ஸௌத்திராமணி இவை ஏழும் ஹவிர் யஞ்ஞங்கள்.

அஷ்டகை, ஆபார்வணம், சிராத்தம், சிராவணி, ஆக்கிரகாயணி, சைத்திரி, ஆச்வயுஜி இவை யேழும் பாக யஞ்ஞங்கள்.) குறையின்றிச் செய்து முடித்த பார்ப்பார் பலர் முற்காலத்தில் தமிழ்நாட்டில் வாழ்ந் தார்கள். அவர்கள் வழியில் தோன்றிக் கடைச்சங்க காலத்தில் வாழ்ந்தவனே சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப்பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் என்பான். அம்மறையோன் சிவபெருமான் அருளிய வேதநெறியில் ஒழுகிச் சிறந்த பல வேள்விகளைச் செய்து முடித்த திறத்தை ஆவூர் மூலங்கிழார் என்னும் புலவர் பெருமான் புறநானூறு 166-ம் பாடலில் 'பார்ப்பன வாகை' என்னுந் துறையில் வைத்துப் பாராட்டிப் போற்றியுள்ளார். அவர் பாடிய புறப்பாடலில்,

"நன்றாய்ந்த நீணிமிர்சடை
முது முதல்வன் வாய்போகாது
ஒன்றுபுரிந்த ஈரிரண்டின்
ஆறுணர்ந்த ஒருமுது நூல்"

என வேதம் புகழப்பெறுகின்றது. இதனால் வேதத்தை அருளிச் செய்த முதல்வன் சிவபெருமானே என்பது முன்னோர் கொள்கை யாதல் நன்கு விளங்கும். வேதங்களை நன்றாக ஓதியுணர்ந்தவன் என்ற பொருளில் 'வேத முதல்வன்' என நான்முகனைக் குறித்த இளங்கோவடிகள், வேதகங்களையெல்லாம் முதன் முதல் அருளிச் செய்த முனைவன் என்ற கருத்தில் 'மறைமுது முதல்வன்' எனச் சிவபெருமானைப் போற்றியுள்ளார். சிவபெருமான் அருமறைகளை அருளிச் செய்த திறத்தை,

'ஆறறி யந்தணர்க்கு அருமறை பலபகர்ந்து'

என வரும் கலித்தொகைக் கடவுள் வாழ்த்துப் பாடல் உணர்த்துகின்றது. மதுரை ஆலவாயிற் கோயில் உணர்த்து கின்றது. மதுரை ஆலவாயிற் கோயில் கொண்டருளிய இறைவன் வேதங்களையும் அவற்றின் பொருள்களையும் திருவாய் மலர்ந்தருளிய செய்தியை,

பொங்கழ லுருவன் பூதநாயகன் நால்வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற் கண்ணி தன்னொடும் அமர்ந்த ஆலவாயாவது மிதுவே'
(3-120-1)

என வரும் தொடரால் காழிப் பிள்ளையார் அறிவுறுத்தி யுள்ளமை காணலாம்.

தமிழ் நாட்டிற் சங்ககால முதற் கொண்டு வேத வேள்வி யினையும் சிவநெறியினையும் போற்றி வளர்ப்பதிற் சிறந்து விளங்கிய வேதியர் குடும்பமாகிய கவுணிய கோத்திரத்தில் தோன்றியவர் திருஞான சம்பந்தராதலின், அவர் திருவாய்மலர்ந்

தருளிய திருப்பதிகங்களில் வேதநெறியின் சிறப்பு பல விடங்களிலும் வற்புறுத்தப்பெற்றுளது. 'வேத நெறியை' 'வைதிகம்' எனவும் 'மறை வழக்கம்' எனவும் (3-108-2,3), சிவநெறியில் நின்று வழிபடுதற்குறிய பரம்பொருளைச் 'சைவன்' (1-12-2) எனவும் 'சைவனார்' (1-109-7) எனவும் ஆளுடைய பிள்ளையார் வழங்கியுள்ளார்.

உமையம்மையாரளித்த சிவஞானத்தைப் பெற்றமையால் எல்லாக் கலைகளையும் ஓதாதுணர்ந்த முத்தமிழ் விரகராகிய ஞானசம்பந்தப் பிள்ளையார், தாம் பிறந்தருளிய வேதியர் மரபுக்கு ஏற்ப நான்மறைகளையும் நன்குணர்ந்து ஓதவும் அவற்றின் நுண் பொருள்களை ஏனையோர்க்குத் தெளிவாக எடுத்துரைக்கவும் வல்லவராய் நாள்தோறும் வேத நெறிப்படி முத்தீ வளர்க்கும் தொழிலுடையவராய்த் திகழ்ந்தார் என்பது,

'நல்ல கேள்வி ஞானசம்பந்தன்' (1-26-11)

'மன்னியசீர் மறை நாவன் வளர்ஞான சம்பந்தன்' (1-130-11)

'செழுமறைகள் பயிலும் நாவன்' (1-132-11)

'சிரபுரம் பதியுடையவன் கவுணியன் செழுமறை நிறைநாவன்' (2-110-11)

'நான் மறைவல்ல ஞானசம்பந்தன்' (3-1-11)

எனவும்,

'செந்தழலோம்பிய செம்மை வேதியர்க்கு
அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே' (3-22-2)

'வேதநான் கினும் மெய்ப்பொருளாவது
நாதனாமம் நமச்சி வாயவே' (3-49-1)

எனவும்,

'தழங்கெரிமூன் றோம்புதொழில் தமிழ்ஞான சம்பந்தன்' (1-131-11)

எனவும் வரும் பிள்ளையார் அருளுரைகளால் இனிதுணரப் படும்.

திருஞானசம்பந்தப் பிள்ளையார் காலத்தில் தில்லை, சீர்காழி, திருவீழமிழலை, திருமருகல், திருவழுந்தூர், ஓமாம்புலியூர், பழுவூர் முதலிய சோழநாட்டு ஊர்களில் நான்கு வேதங்களையும் நன்குணர்ந்த அந்தணர்கள், அவ்வேதங்களைத் தெளிவாக ஓதவும் வேதநூற் பொருள்களைப் பலர்க்கும் எடுத்துணர்த்தவும் வல்ல பெரும்புலமை பெற்று வாழ்ந்தார்கள்.

அறுதொழிலோர் ஆகிய அவ்வேதியர்கள், புலனடக்க முடையராய் நல்லொழுக்கத்தினைத் தம் உயிரினும் சிறத்தாகக் கொண்டு பேணிக் காத்தனர். கலைஞானங்களில் வல்லராய அம்மறையோர், கற்றதனாலாயபயன் சிவபரம்பொருளை மறவாது வழிபடுதலே யெனத் தெளிந்து வைதிக நூல்களிற் கூறப்பட்ட சந்தியா வந்தனம் முதலிய நியமங்களில் தவறாது சிவபெருமானை வழிபட்டு வேத நெறிப்படி வேள்விகள் பல புரிந்து உலகமக்கள் அனைவர்க்கும் இனியனவே புரியும் செந்தண்மையுடையராய்த் திகழ்ந்தார்கள். தமிழ்நாட்டுப் பெருமக்களாகிய இம்மறையவர்கள் வேதங்களை ஓசையும் பொருளும் மாறாத வண்ணம் ஓதுவதிலும், வேதப் பொருள்களை உள்ளவாறுணர்ந்து பிறர்க்கு எடுத்து விளக்குவதிலும் படைத்தற் கடவுளாகிய நான்முகனை யொத்த பெரும்புலமை படைத்த வராய்க் கங்கைநதி பாயும் வளநாடாகிய வடநாடெங்குஞ் சென்று பரவிய பெரும் புகழுடையராய் விளங்கினார்கள்.

'பொய்ம் மொழியா மறையோர்' (1-4-1)

'பூமரு நான்முகன் போல்வர்' (1-104-11)

'மிகுவாப், போதனைப்போல் மறையோர் பயிலும்புகலி'
(1-4-7)

'ஐந்து புலங்களைக் கட்டவர்' (1-4-8)

'அங்கமும் வேதமும் ஓதுநாவர் அந்தணர்' (1-6-1)

'நெய்தவழ் மூவெரி காவலோம்பும்
நேர்புரி நான்மறை யாளர்' (1-6-2)

'வந்தியோடு பூசையல்லாப் போழ்தின் மறைபேசிச்
சந்திபோதிற் சமாதி செய்யும் சண்பைநகர்' (1-66-11)

'தோலொடு நூலிழை சேர்ந்த மார்பர்
தொகுமறையோர்கள் வளர்த்த செந்தீ' (1-6-3)

'அந்தமும் ஆதியும் நான்முகனும் அரவணையானும் அறிவரிய
மந்திர வேதங்கள் ஓதும் நாவர்' (1-6-9)

'கலையாறொடு சுருதித்தொகை கற்றோர்மிகு கூட்டம்
விலையாயின சொற்றேர்தரு வேணுபுரம்' (1-9-8)

'ஆங்கெரி மூன்று மமர்ந்துட னிருந்த
அங்கையால் ஆகுதி வேட்கும்
ஓங்கிய மறையோர்' (3-122-3)

'கற்றநால் வேதம் அங்கமோ ராறுங்
கருதினார் அருத்தியாற் றெரியும்
உற்ற பல்புகழார்' (3-122-4)

'ஒன்று மிருமூன்று மொரு நாலு முணர்வார்கள்
மன்றினி லிருந்துடன் மகிழ்ந்த பழுவூரே' (2-34-11)

'ஆசாரஞ் செய்மறை யோர்' (2-58-10)

"மணந்திகழ் திசைகளெட்டுமே ழிசையும்
மலியும் ஆறங்கம் ஐவேள்வி
இணைந்தநால் வேதம் மூன்றெரி யிரண்டு
பிறப்பென ஒருமையா லுணரும்
குணங்களு மவற்றின் கொள்பொருள் குற்ற
மற்றவை யுற்றது மெல்லாம்
உணர்ந்தவர் வாழும் ஓமமாம் புலியூர்
உடையவர் வடதளியதுவே" (3-122-6)

'கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம்பலம்

'பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட் டெரியோம்பும் சீறப்பர்'
(1-80-2)

'சங்கையின்றி நன்னியமந் தாஞ்செய்து தகுதியின் மிக்க
சங்கை நாடுயர் கீர்த்தி மறையவர்காழி நன்னகரே' (2-96-5)

எனவரும் காழிப் பிள்ளையார் வாய்மொழிகள், அவர் காலத்தில் நாவலந் தீவினர் அனைவரும் போற்றும் வண்ணம் தமிழ்நாட்டில் வாழ்ந்த நான்மறையந்தணர்களின் மாண்பினை நன்கு விரித்துரைத்தல் காணலாம்.

இனி, வடநாட்டில் கடவுட் கொள்கைக்குச் சிறப்பிடந்தராது வேதங்களில் விதிக்கப்பெற்றுள்ள யாகம் முதலிய சடங்கு களுக்கே மக்கள் முதலிடம் தந்தமையால் எங்கும் மிகுதியாகப் பரவிய உயிர்ப்பலி வேள்விகளைக் கண்டித்து அருளறநெறியினை வற்புறுத்தும் நோக்கத்துடன் புத்தம் சமணமாகிய சமயங்கள் தோன்றின. அவற்றைப் பின்பற்றிய வடநாட்டவரிற் சிலர், தம் சமயத்தை எங்கும் பரப்பவேண்டுமென்னும் பேராசையால் உந்தப்பட்டுத் தமிழ்நாட்டிற் புகுந்து பல ஊர்களிலும் தங்கித் தம் சமயத்தைப் பரப்புவாராயினர். கி.பி. இரண்டாம் நூற்றாண்டினை யடுத்த காலப்பகுதியில் சமணரும் புத்தரும் காவிரிப் பூம்பட்டினம், மதுரை, வஞ்சி முதலிய தமிழ்நாட்டுப் பேரூர்களில் தமிழ் மக்கள் ஆதரவுடன் தங்கியிருந்து தத்தம் சமயத்தைப் பரப்பும் உரிமை பெற்று விளங்கிய செய்தி அக்காலத்தில் இயற்றப்பட்ட முத்தமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரத்தால் நன்கு விளங்கும்.

இவ்வாறு தமிழ் மக்களது ஆதரவுடன் தமிழகத்தில் வந்து தங்கிய புத்தர் சமணர்களேயன்றி, கி.பி. மூன்றாம் நூற்றாண்டில்

பாண்டிநாட்டைக் கைப்பற்றி யாண்ட களப்பிரர் ஆதரவால் சமணர் பலர் பாண்டி நாட்டிற் குடிபுகுந்தனர். கி.பி. ஏழாம் நூற்றாண்டில் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட மகேந்திரபல்லவன் சார்பால் தொண்டை நாட்டிலும் சோழ நாட்டிலும் சமணசமயம் மேலோங்கியது. கடைச்சங்க காலம் வரை பல்வேறு சமயங்களிடையில் பொது நோக்கமே நிலை பெற்றிருந்த தமிழகத்தில், சமணரும் புத்தரும் இடம்பெற்றுத் தத்தம் சமயக்கொள்கையினை ஏனையோர்க்கு எடுத்துரைக்கு மளவில் நில்லாது, இந்நாட்டுத் தொல்பெருஞ் சமயமாகிய சிவநெறியினையும் நாட்டு மக்களால் மதிக்கப்பெறும் நிலையில் முன்னமே வேரூன்றியிருந்த வேதநெறியினையும் இகழ்தலையே தமது தொழிலாகக்கொண்டு திரிந்தமையால், 'ஒன்றே குலனும் ஒருவனே தேவனும்' என நெடுங்காலமாகத் தமிழ் மக்கள் உள்ளத்தில் நிலைபெற்றிருந்த கடவுட் கொள்கை சிதைவுறும் நிலை யேற்பட்டது. தெய்வ வழிபாட்டில் மக்களுக்கிருந்த உறுதியான நம்பிக்கை நெகிழ்ந்து சிதைந்தமையால் தமிழ் மக்களிற்பலர், உள்ளத்தில் உரனிழந்து உரிமையற்று இந்நாட்டிற் குடிபுகுந்த அயலார்க்கு அஞ்சி அடிமைப்படும் அவல நிலைக்கு உள்ளாயினர். தமிழ்மொழியும் தனது உயர் நிலையை யிழந்தது. ஆரிய மொழியும் அதன் திரிபாகிய பாகதமொழியும் தமிழ்நாட்டு வழக்கில் இடம்பெறும் நிலையேற்பட்டது. இந்நாட்டு நிலைமைக்கு ஒவ்வாத அயலார் நடைமுறைகளால் தமிழ் மக்களுடைய சமுதாய வாழ்வும் சிதைவுற்றது.

திருஞானசம்பந்தர் காலத்தில் தமிழ் நாட்டு அரசியலிற் செல்வாக்குப் பெற்றிருந்தவர் சமணர்களே. அந்நாளில் புத்த மதத்தினர்க்குச் சமணர்க்கிருந்த அளவு செல்வாக்கிருந்ததாகத் தெரியவில்லை. எனவே ஆளுடையபிள்ளையார் சமணர் களோடுதான் வாது செய்யவேண்டியிருந்தது. புறச்சமயத்தார்களால் தமிழ்நாட்டில் ஏற்பட்ட குழப்பநிலைகளைக்கண்டு மணங்கவன்ற காழிப்பிள்ளையார். சமணர் புத்தர் மேற்கொண்டொழுகும் நடைமுறைகளும் உறுதியற்று கொள்கைகளும் இவ்வுலக வாழ்வாகிய இம்மையின்பத்திற்கும் பிறப்பற முயலும் பெருநெறி யாகிய பேரின்ப வாழ்வுக்கும் இடர்விளைத்தலைக் கண்டார். அவற்றின் தீமைகளைத் தமிழ்நாட்டு மக்கள் அனைவர்க்கும் தெளிவாக எடுத்துரைத்து மக்களை விழிப்படையச் செய்தாலன்றித் தமிழரது சமுதாய வாழ்வும் அரசியல் நிலையும் திருந்துதல் இயலாதெனவுணர்ந்து புறச்சமயத்தாரின் பொருந்தா நடை முறைகளைத் திருப்பதிகந் தோறும் எடுத்துரைத்துக் கண்டிக்கும் கடமையினை மேற்கொள்வாராயினர்.

ஆளுடைய பிள்ளையார், சமணர்களைச் சமணர் அமணர், குண்டர், பிண்டியார் ஆரம்பர் என்ற பெயர்களாலும், புத்தர்களைச் சாக்கியர், தேரர், போதியார், சீவரத்தார் என்ற பெயர்களாலும் குறித்துள்ளார். சம்பந்தர் காலத்தில் தமிழ்நாட்டில் வாழ்ந்த சமணர்களில் இல்லறத்தாராகிய சாவகநோன்பிகளும், துறவிகளாய் உடையின்றித்திரியும் அமணர்களும் இருந்தார்கள். அவர்களுள் துறவு நிலையினை மேற்கொண்ட அமணர்களாகிய அடிகள்மார்களே பெருந்தொகையினராயிருந்தனர். பாண்டிய நாட்டில் எண் பெருங்குன்றங்களிலும் வாழ்ந்த அடிகள்மார் எண்ணாயிரவரும் பாண்டியனது ஆதரவுபெற்று மதுரையில் ஆளுடைய பிள்ளையாருடன் வாது செய்யக் குழுமியெழுந்த செய்தி, அக்காலத்து அமணத்துறவிகளின் மிகுதியினையும் அவர்களுக்கு அரசியலில் இருந்த செல்வாக்கையும் நன்கு புலப்படுத்தும்.

எவ்வுயிர்க்கும் அருளுடையராய் நடந்து கொள்ளுதலே சமண சமயத்தின் உயர்ந்த குறிக்கோளாகும். தரையில் நடக்கும் பொழுது எறும்பு முதலிய சிற்றுயிர்களுக்குச் சிறிதும் துன்பம் நேராதபடி மயிற்றோகையினால் தடவிக்கொண்டு வழியில் நடத்தலும், இரவில் விளக்கேற்றுதலால் விட்டில் முதலியன விழுந்து இறக்குமென்றஞ்சி இரவில் உண்ணாமையும், இருளில் தரையிற் படுத்துப் புரளுதலால் சிற்றுயிர்களுக்குண்டாகுந் துன்பத்தினை யெண்ணி உறியில் அமர்ந்து உறங்குதலும், நீர் வாழுயிர்கள் வருந்துமென நினைத்து நீராடாமையும், காற்றிற் பரவியுள்ள உயிர்கள் வாயில் அகப்பட்டும் வெப்பக்காற்றால் தாக்கப்பெற்றும் வருந்துமென்று அஞ்சி உண்ணும்போது உரையாடாமையும் முதலிய பல நியமங்களை அக்கால அமணத் துறவிகள் தமக்குரிய சிறப்புடைய தவச் செயல்களாகக் கைக் கொண்டொழுகினர்.

தலை பறித்தல் (லோச்சு), உடையினை நீத்தல் (திகம்பரம்), நீராடாமை, சுடுபாறையிற் கிடத்தல், பல் விளக்காமை, நின்றுண்ணல், ஒரு நாளைக்கு ஒரு பொழுதே உண்ணல் என்னும் இவை யேழும் சமணர்களுடைய ஒழுக்கமுறை என்பர். சம்பந்தர் காலத்தில் தமிழ் நாட்டில் வாழ்ந்த சமணர்கள் இச்செயல்களை மேற்கொண்டு கொல்லாமை ஊனுண்ணாமையாகிய சிறந்த அறங்களை மக்களுக்கு விரித்துரைத்தனர்; தம் சமயத்தைப் பரப்புதலையே குறிக்கோளாகக்கொண்டு தருக்கசாத்திரத்தில் வல்லவர்களாய் ஏனைச் சமயத்தார்களை வாதுக்கழைத்தனர்; சாவாயினும் வாது செய்யும் விடாப்பிடியுடையவர்களாய் விருது கூறித் திரிந்தனர்; வேத வேள்விகளையும் சிவநெறியையும் இகழ்தலையே தமது தொழிலாகக் கொண்டனர்; தாம் கற்று

வல்ல நூற்பொருள்களாலன்றி வெறுந் தர்க்கவாதத்தையே கருவியாகக் கொண்டு புலவர்களைப் பழித்து வந்தனர்;தமிழ் மொழியையோ அன்றி வடமொழியையோ அவற்றின் இலக்கணங்களை மதித்து அதனதன் தனித்தன்மை சிதையாத படிபேசிப்பழகாமல், அவ்விரு மொ..ழிகளையும் உருச் சிதைத்து விரவு மொழியாக்கி மணிப் பிரவாள நடையிற் பேசினார்கள்; பாகத மொழியினையே தமக்குரிய மொழியாகக்கொண்டனர்.

சமணர்களைப் போலவே புத்தர்களும் வைதிகத்தையும் சைவத்தையும் இகழ்ந்துரைத்தலையே தமது பொழுது போக்காகக் கொண்டு திரிந்தனர் என்பது அவ்விரு சமயத்தார்களைப் பற்றியும் ஆளுடைய பிள்ளையார் கூறிய பல குறிப்புக்களால் நன்கு புலனாகும். புத்த சமயத் துறவிகள் மருதம்பூ முதலியவற்றாலாய சாயந்தோய்ந்த துவராடையினை யுடுத்துக் கொள்வர். அன்னோர், பெண்களைப் போன்று தம் உடம்பு முழுவதும் ஆடையாற் போர்த்துக்கொள்வர். சமணர்களில் துறவிகள் ஆடையினை உடுத்துக் கொள்ளாது வெற்றரையினராயி ருந்தமையால் அமணர் எனப் பெயர் பெற்றனர். சமணர்கள், அஃறிணையுயிர்களிடத்தும் இரக்க முடையராய்க் கொல்லா நோன்பினை மேற்கொண்டமையால் புலால் உண்ணுதலைக் கொடிய பாவமாக வெறுத்து விலக்கினர். புத்தர்கள், கொல்லாமை என்னும் நோன்பினை மட்டும் ஏற்றுக்கொண்டு, ஊனுண்ணாமையாகிய அறத்தைக் கடைப்பிடிக்காமல் தம் முயற்சியின்றிப் புலால் உணவுதானே கிடைத்தால் உண்ணுவதில் தவறில்லையென்று கருதி, ஊனுண்ணும் பழக்கத்தை விடா தொழுதினர். உணவுண்ணும் போது ஓரிடத்தில் அமைதியாக இருந்து உண்ணும் பழக்க முடையவர்கள் புத்தர்கள். சமணத் துறவிகளோ நின்றுண்ணும் பழக்கமுடையவர்கள் புத்தர்கள் மண்டையென்ற உண்கலத்தில் உண்பவர்கள். சமணர்கள் கலத்தில் உண்ணாமல் கையிலிடப் பெற்று உண்ணும் பழக்க முடையவர்கள்.

இங்ஙனம் தத்தமக்குரிய வழக்க ஒழுக்கங்களால் மாறு பட்டுள்ள புத்தர் சமணர் ஆகிய இருதிறத்தாரும், வேத வேள்வி களையும் சைவசமயம் முதலியவற்றின் தெய்வ வழிபாட்டு முறைகளையும் இகழ்ந்து பேசுவதில்தமக்குள் ஒத்த கருத்தினரா யிருந்ததால், தேவார ஆசிரியராகிய பெருமக்கள் புறச்சமயத் தாராகிய அவ்விருதிறத்தார் செய்யும் தீங்குகளையெல்லாம் ஒருங்கே இணைத்துக் கூறிக் கண்டித்துள்ளார்கள்.

ஐம்புலப் பேருருவாகிய பரமாணுவினை அடிப்படையாகக் கொண்டு அவற்றின் கூட்டத்தால் அணுத்திரளும் அவ்வணுத் திரள்களின் சேர்க்கையால் உலகமும் தோன்றும் என்பர் சமணர்.

இங்ஙனம் தொடக்கநிலை பற்றிய ஆரம்பவாதம் பேசுவோர் சமணர்களும் புத்தரில் ஒரு வகையினராகிய வைபாடிகரும் ஆதலின், அன்னோர் 'ஆரம்பர்' எனக் குறிக்கப்பட்டனர்.

**'வேர்வந்துற மாசூர்தர வெயில்நின் றுழல்வாரும்**
**மார்பம்புதை மலிசீவர மறையா வருவாரும் ஆரம்பர்'** (1-10-10)

என்றார் ஆளுடைய பிள்ளையாரும்.

காணப்படுகின்ற இவ்வுலகம் பின் காரண நிலையில் அருவமாய் உள்ளதே இப்பொழுது காரிய நிலையில் உருவமாய் விரிவடைந்துள்ளது என்பது சைவர்களது துணிபாகும். புத்தர்களோ உலகம் முற்கணத்தில் தோன்றியது பிற்கணத்தில் இல்லையாய்க் கணந்தோறும் மாறியழிவதாதலின் எல்லாம் பாழே என்று சூனியவாதம் பேசுவர். இவ்வாறு எல்லாப் பொருள்களும் கணந்தோறும் தோன்றியழிவனவே என்பது புத்த சமயத்தார் கோட்பாடாதலின் அன்னோர் 'கணபங்கவாதிகள்' எனப் பேசப்பட்டனர். இவர்களைக் 'கணிகை நோன்பர்' (3-3-10) எனக் குறிப்பிடுவர் ஞானசம்பந்தர், குணங்கள், அறிவு. பொருள் என்பனயாவும் கணந்தோறும் தோன்றியழிவனவே; ஆதலின் அவை நிலையுடைய பொருள்களாகக் கொள்ளத் தக்கன அல்ல என்பது இச்சமயத்தாரது கொள்கையாகும். புத்தர் கூறும் இக் கொள்கையினை,

**'குணம் அறிவுகள் நிலையில பொருளுரை மருவிய பொருள்களும் இல**
**திணம் எனுமவர்'** (1-21-10)

என வரும் தொடரில் ஞானசம்பந்தர் தெளிவாகக் குறித்துள்ளார்.

பொருளின் உண்மைத் தண்மை ஒன்று; அதன் இருத்தல் வகை மற்றொன்று. பொருளின் இயல்பே உண்மைத்தன்மை யெனப்படும். அத்தன்மை என்றும் நிலைபேறுடையது. அப்பொருளின் இருத்தல் வகையோ என்றும் ஒரு தன்மையா யில்லாமல் தோன்றியும் அழிந்தும் மாறிக்கொண்டே வருவது என்பர் சமணர். எனவே எல்லாப் பொருளும், நிலையாகிய உண்மைத் தன்மையும் மாறியழிதலாகிய இன்மைத் தன்மையும் ஒழுங்குடையன என்பது சமண் சமயத்தாரது துணிபாதல் பெறப்படும். இத்துணிபினைப் புலப்படுத்தும் முறையிலேயே 'அஸ்தி நாஸ்தி' என்னும் வடமொழித் தொடர் சமணர்களால் அடிக்கடி பயன்படுத்தப்பட்டு வருகின்றது.

கடவுளாகிய முழுமுதற் பொருள் உண்டோ இல்லையோ என்னும் ஐயறவுக்கு இடனின்றிக் 'கடவுள் உண்டு' என்று உறுதியாகத் தெளிந்து வழிபடுதலே பண்டைத்தமிழ் மக்கள் மேற்கொண்டொழுகிய சமயக் கொள்கையாகும். இவ்வுண்மை,

'ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து'

எனவரும் தமிழ் மறையாலும், இத்தமிழ்மறைப்பொருளை வற்புறுத்தும் நோக்கத்துடன்,

'தெய்வந் தெளிமின் தெளிந்தோர்ப் பேணுமின்'

எனச் சேரமுனிவராகிய இளங்கோவடிகள் தாம் இயற்றிய செந்தமிழ்க் காப்பியத்தின் முடிபொருளாக அறிவுறுத்திய வாய்மொழியாலும் நன்கு துணியப்படும்.

சமணர்களை நோக்கித் 'தெய்வம் என்பதொரு பொருள் உண்டா இல்லையா' என வினவினால், அவ்வினாவுக்கு 'உண்டு' என்றோ 'இல்லை' என்றோ ஒருதலையாக விடை கூறுவதில்லை. 'அஸ்திநாஸ்தி' என மேற்குறித்த கொள்கையினை அடியொற்றி, உடன் பாட்டு நிலையில் வைத்து. (1) 'கடவுள் உண்டு போலும்' எனவும், எதிர்மறை நிலையில் வைத்து, (2) 'கடவுள் இல்லை போலும்' எனவும், உடன்பாடு எதிர்மறை ஆகிய இவ்விரு நிலையும் நிரலே அமைய (3) 'கடவுள் உண்டுமாம் இல்லையுமாம்' எனவும், இவ்விரு நிலையிலும் ஒருங்கு வைத்துணர்தல் இயலாமையால் (4) 'கடவுள் சொல்லொணாதது போலும்' எனவும், சொல்லொணா நிலையுடன் முற்கூறிய உடன்பாட்டு நிலையையும் சேர்த்து (5) 'கடவுள் உண்டுமாம் சொல்லொணாததுமாம்' எனவும், சொல்லொணா நிலையுடன் முற்கூறிய எதிர் மறை நிலையையும் சேர்த்து (6) 'கடவுள் இல்லதும் சொல்லொ ணாததுமாம்' எனவும், சொல்லொணா நிலையுடன் உடன்பாடு எதிர்மறை ஆகிய நிரல்நிறை நிலையையும் சேர்த்து, (7) 'கடவுள் உள்ளதும் இல்லதும் சொல்லொணாததுமாம்' எனவும் இவ்வாறு ஏழு பகுதிகளாக விடை கூறுவர் சமணர். இங்ஙனம் ஒரு பொருளின் இயல்பினையும் இருப்பினையும் விரித்துக் கூறுங்கூற்றுக்கள் ஏழு பகுதிகளாக அமைதலின் இவ்வுரையாடல் முறையைச் 'சப்த பங்கி' என்பர்.* (திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் எழுதிய 'சம்பந்தரும் சமணரும்' என்ற நூல் பார்க்க.) இங்ஙனம் கடவுட் கொள்கைபற்றி ஒன்றோடொன் றொவ்வாதவற்றைக் கூறி மக்களது மனத்தைத் தெளிவற்ற குழப்ப நிலைக்கு உள்ளாக்கி வரும் இப்பொருந்தாக் கொள்கையினை,

'அத்தகு பொருள் உண்டும் இல்லையும் என்று நின்றவர்க்கச்சமா
ஒத்தொவ்வாமை மொழிந்து' (33-9-10)

எனவும்,

'குண்டமணராகி யொரு கோலமிகுபீலியோடுகுண்டிகை பிடித்து
எண்டிசையு மில்லதொரு தெய்வமுளதென்பர் அது என்ன பொருளாம்'
(3-80-10)

எனவும் வரும் தொடர்களால் ஞானசம்பந்தப் பிள்ளையார் எடுத்துக்காட்டி மறுத்துள்ளார்.

உலகில் வழங்கும் சமயநெறிகள் எல்லாவற்றிற்கும் புகலிடமாய் விளங்கும் தனிமுதல்வன் இறைவன் ஒருவனே என்பதும், உயிர்க்குயிராய் விளங்கும் அம் முதல்வன், அறிவினால் மிக்க சமய நெறிகள் எல்லாவற்றுக்கும் ஆதாரமாக மெய்ம்மையான ஒழுக்க நெறியினை வகுத்தருளி உலகங்களையெல்லாம் தத்தம் ஒழுங்கு முறையிற் பிறழாதவாறு நிலைபெறச் செய்கின்றான் என்பதும்,

"ஆயாதன சமயம் பலஅறியாதவன் நெறியின்
தாயானவன் உயிர்கட்குமுன்தலையானவன்" (1-11-5)

எனவரும் பிள்ளையார் வாய்மொழியால் நன்கு விளங்கும். இங்ஙனம் எல்லாச் சமய நெறிகளையும் தோற்றுவித்தற்குக் காரணனாகிய முதல்வன், 'அம்மையப்பனாக விளங்கும் தனது உண்மை நிலையினை மக்கள் உணர்ந்து அடைந்து உய்தி பெறுதற்கியலாத நிலையில் சமணம் புத்தம் ஆகிய புறச் சமயங்களைத் தோற்றுவித்ததன் நோக்கம் எதுவோ' என அன்பின் மிக்க அடியார்களை நோக்கி வினவும் முறையில்,

'துணை நன்மலர் தூய்ந்தொழு தொண்டர்காள் சொல்லீர்
பணை நன்முலைப் பாழ்ப்பதி யோடுடனாகி
இணையில் இரும்பூளை யிடங்கொண்ட ஈசன்
துணைவில் சமண சாக்கியம் ஆக்கியவாறே' (2-36-11)

எனவரும் திருப்பாடலில் அருளிச் செய்துள்ளார். மக்களது உணர்வின் எல்லை நோக்கியும் படிகால் முறையாக மக்கள் பெற வேண்டிய மனவளர்ச்சி நோக்கியும் இச்சமயங்கள் இறைவன ருளால் தக்க தலைவர்களைக் கொண்டு தோற்றுவிக்கப்பெற்றன என்னும் உண்மை இத் திருப்பாடலிற் குறிப்பாக அறிவுறுத்தப் பெற்றுள்ளமை அறியத்தக்கதாகும்.

புத்தம் சமணம் என்ற சமயங்களைத்தோற்றுவித்த முதற் குரவராகிய புத்தர், மகாவீரர் என்ற பெருமக்கள், அவ்வச்சமய நெறியில் நின்ற மக்கட் சமுதாயத்தாரால் தத்தம் தெய்வமென நாடிப் போற்றப் பெறும் தெய்வ நிலை பெற்றவர்கள் என்ப தனையும், தெய்வநிலை பெற்ற அப்பெருமக்கள், உலகெலாம் இயக்கும் பேரறிவுப் பொருளாகிய முழுமுதற் கடவுளையும், அதனுடன் பிரியா இயல்பாகிய திருவருட் பண்பினையும்

இகழாது விரும்பிப் போற்றும் தெளிவு நிலை பெற்றவர்கள் என்பதனையும்:

'மூடியசீவரத்தர் முதுகட்டையர் மோட்டமணர்
நாடிய தேவரெல்லாம் நயந்தேத்திய நன்னலத்தான்' (3-59-10)

'மூடிய சீவரத்தர் முதிர்பிண்டியர் என்றிவர்கள்
தேடிய தேவர் தம்மால் இறைஞ்சப்படுந் தேவர்பிரான்' (30-60-10)

எனவரம் திருப்பாடல்களில் பிள்ளையார் அறிவுறுத்தியுள்ளார்.

இங்ஙனம் புத்த சமண சமயங்களைத் தோற்றுவித்த அச்சமயங்களின் முதற்குரவர்கள். கடவுட்கொள்கைக்கு முரண் படாதவராயினும், அன்னோர், தம் காலத்தில் வாழ்ந்த மக்களின் நிலையைக் கூர்ந்து நோக்கி, அக்காலத்திற்கு இன்றியமை யாதனவாகத் தம் மனத்திற்பட்ட அறங்களை மட்டுமே விரித்துக் கூறி வற்புறுத்தும் கடமையினை மேற்கொண்டமையால், பலரும் ஒருவகையால் உடன்பட்டுள்ள தெய்வங் கொள்கையைப் பற்றி எதுவும் கூறாது போயினர். அவர்களுக்குப் பின் அச்சமயங்களைப் பரப்பவந்த அவர்தம் மாணாக்கர்கள், தம் குரவரால் தனியே வற்புறுத்தப்படாதன யாவும் அவர் உடம் படாதன எனக் கொண்டு, தெய்வங் கொள்கையினை மறுத்துத் தம் சமய அறங்களைமட்டும் விரித்துரைப்பாராயினர். கி.பி. ஏழாம் நூற்றாண்டில் தமிழகத்தில் வாழ்ந்த புத்தரும் சமணரும் சிவநெறிக் கொள்கைளை இகழ்ந்துரைத்து வந்தனர் என்பது,

'பல்சமணும் புத்தரும் நின்றலர் தூற்ற அந்தண்
புகவி நிலாவிய புண்ணியனே' (1-4-10)

எனவும்,

'அலையாரும் புனல்துறந்த அமணர்குண்டர் சாக்கியர்
தொலையாதங் கலர் தூற்ற' (2-55-10)

எனவும்,

'தோகையம் பீலிகொள்வார் துவர்க் கூறைகள்போர்த்துழல்வார்
ஆகம செல்வனாரை யலர்தூற்றுதல் காரணமாகக்
கூகையம் மாக்கள் சொல்லைக் குறிக்கொள்ளன் மின்' (3-57-10)

எனவும் வரும் தொடர்களாற் புலனாம். அன்றியும் அக்காலத்தில் சமணரிற் பலர், தங்கள் சமயத்தவரல்லாத சைவர் முதலியோரைக் காணவும் அவர்களது நல்வாழ்வு பற்றிக் கேட்கவும் பொறாத நிலையிற் சமயக் காழ்ப்புடையவர்களாக இருந்தனர் என்பது,

'நீற்றுமேனிய ராயினர் மேலுறற
காற்றுக்கொள்ளவும் நில்லா அமணர்' (3-108-8)

எனவரும் பிள்ளையார் வாய்மொழியால் இனிதுணரப்படும். புத்தர் சமணர் புறங்கூற்றுரைகளை மேற் போக்காக நோக்கு மிடத்து அவை, அம்மையப்பனாகிய இறைவனது நிலையைப் பழிப்பன போலத் தோன்றினாலும், அப்பழிப்புரைகளுக்கும் அவனன்றிப் பொருளாவார் பிறரில்லாமையால், அப்பழி மொழிகளும் இறைவனது இருப்பை ஒருவாற்றாற் புலப்படுத்தி அன்னோரை மெல்ல மெல்லத் தெய்வ முண்டென்னுந் தெளிவு நிலையில் ஈடுபடுத்தி வாழ்விக்கும் புகழுரைகளாகவே கொள்ளத் தக்க ஆதலின், புறச்மயத்தார் கூறும் அப் பழிப்புரைகளைக் கேட்டு அவர்களை வெகுளாதீர்கள் என மக்களுக்கு அறிவுறுத்தும் முறையில்,

'போதியாரும் பிண்டியாரும் புகழலசொன்னாலும்
நீதியாகக் கொண்டங்கருளும் நிமலன்' (1-60-10)

எனவும்,

'குண்டருங் குணமிலாத சமண்சாக்கிய
மிண்டர்கள் மிண்டவை கேட்டு வெகுளேன்மின்' (2-14-10)

'சாவாயும் வாதுசெய் சாவகர் சாக்கியர்
மேவாத சொல்லவைகேட்டுவெகுளேன் மின்' (2-11-10)

எனவும் திருஞானசம்பந்தர் அருளிய வாய்மொழிகள், தமிழகம் சமயப் பூசல்களில் ஈடுபடாது அமைதியுற்று விளங்க வேண்டு மென்பதில் அவர் மேற்கொண்ட நன்முயற்சிகளை நன்கு புலப்படுத்துதல் காணலாம்.

திருஞான சம்பந்தப்பிள்ளையார் அருளிய திருப்பதி கங்களில் இயற்கைப் பொருள்களின் எழில் நலங்கள் நன்கு விரித்துரைக்கப்பெற்றுள்ளன.

திருக்கற்குடி மலையின் உயர்ந்த தோற்றத்தையும் அங்கு வாழும் குறிஞ்சிநில மக்களாகிய குறமாதர்கள் கையில் வளரும் இளஞ்சிறார்களின் குழந்தை யுள்ளத்தையும் கண்டு மகிழ்ந்த ஆளுடைய பிள்ளையார், தாம் கண்ட விளையாட்டுக் காட்சியை,

'சங்கமதார் குறமாதர் தங்கையில் மைந்தர்கள் தாவிக்
கங்குலின் மாமதிபற்றுங் கற்குடி மாமலையாரே' (1-43-2)

என்ற தொடரிற் சுவைபடக் குறித்துள்ளார். குறிஞ்சி நிலத்தே வாழும் யானைகளில் ஆண் யானையாகிய களிறு, தன் காதல் மடப்பிடியாகிய பெண் யானைக்கு மூங்கில் முளைகளை விருப்பத்துடன் ஊட்டும் அன்பின் செயலை,

'மருங்களியார் பிடிவாயில் வாழ்வெதிரின் முளைவாரிக்
கருங்களி யானை கொடுக்கும் கற்குடி மாமலையாரே' (1-43-4)

என்ற தொடராற் புலப்படுத்தியுள்ளார்.

வேங்கைப்பூ புலியின்நிறம்போலும் நிறத்தினையுடைய தென்பது,

'உறுபுலி யுருவேய்ப்பப்பூத்த வேங்கை' (கலித்தொகை-38)

எனவரும் குறிஞ்சிக் கலியாற் புலனாம். இங்ஙனம் புலியினைப் போன்று பூத்துள்ள வேங்கை மரத்தின்பூக்கள், அம்மரத்தின் கீழே துறுகல்லாயமைந்துள்ள பாறை மேல் உதிர்ந்து அக்கல்லினை மறைத்து விட்டமையால், அத் துறுகல்லானது, இரவில் நிலாப் பொழுதிலே புலியின் குட்டியை யொத்துத் தோன்றுகிறது. கண்டார்க்கு அச்சந்தரும் இவ் வழகிய தோற்றத்தினை,

'கருங்கால் வேங்கை வீயுரு துறுகல்
இரும்புலிக் குருளையிற் றோன்றுகாட்டிடை' (47)

எனவரும் குறுந்தொகைச் செய்யுளில் நெடுவெண்ணிலவினார் என்ற புலவர் குறித்துள்ளார். திருக்கேதாரத் திருமலையின் சாரலிலே இத்தகைய காட்சியைத் தம் உள்ளத்திற் கற்பனை செய்துகொண்ட ஆளுடைய பிள்ளையார்,

'உடைந்த காற்றுக்குயர் வேங்கைபூத்துதிரக் கல்லறைகண்மேல்
கிடந்த வேங்கை சினமாமுகம் செய்யுங் கேதாரமே' (2-14-7)

என அம் மலையின் தோற்றத்தைப் புனைந்துரைத்துள்ளார். 'காற்றினால் வேங்கைமலர் உதிர்ந்து மூடப் பெற்றுள்ள துறுகல்லைத் தனக்குப்பகையாகிய புலியென எண்ணி, அங்கு உறங்கிக்கிடந்த புலியானது விழித்துப் பார்த்து வெகுளும் தோற்றமுடன் விளங்குவது திருக்கேதாரமலை' என்பது மேற்குறித்த தேவாரத் தொடரின் பொருளாகும்.

முல்லைநிலத் தலமாகிய திருவாலங்காட்டினைப் போற்றிய திருப்பாடலில் அங்குள்ள சோலையினிடத்தே கொத்தாக மலர்ந்துள்ள காந்தட்பூ, பாம்பினையொத்த தோற்றமுடையதாய்த் திகழுங்காட்சி குறிக்கப் பட்டுள்ளது.

'கொந்தண் பொழிற்சோலை அரவிற்றோன்றிக் கோடல் பூத்து
அந்தண் பழையனூர் ஆலங்காட்டெம்மடிகளே' (1-45-2)

என வருதல் காண்க.

ஆளுடையபிள்ளையார் பிறந்தருளிய சீகாழிப்பதி கடலருகே யமைந்திருத்தலால், மருத நிலவளமும் நெய்தல் நிலவளமும் ஒருங்குடையதாய் விளங்குகின்ற திறத்தைப்பிள்ளையார் பாடியருளிய திருப்பதிகங்களால் நன்குணரலாம் காழிப்பதியில்

வளர்ந்துள்ள கமுகினைக் குறிக்க எண்ணிய பிள்ளையார், அக் கமுகமரம் வெள்ளிய முத்துக்களை யொத்த பூக்களையீன்று மரகதமணிகளைப் போன்ற காய்களைப் பெற்றுப் பவளம் போன்று பழுத்த பழங்களுடன் கண்ணிமையாது கண்டு மகிழ்தற்குரிய அழகிய தோற்றமுடையதாய் விளங்குகின்றது என்பார்,

**'எண்ணார் முத்தம் ஈன்று மரகதம்போற் காய்த்துக்**
**கண்ணார் கமுகு பவளம் பழுக்குங் கலிக்காழி'**
(1-102-4)

என்ற தொடரில் அழகுறப் புனைந்துரைத்துள்ளார்.

வாழையும் கமுகும், முறையே பொன்னையும் பவளத்தையும் ஒத்துப் பழுத்த பழங்களுடன் திகழுந் தோற்றத்தினை,

**'குலைவாழை பொன் பவளம் பழுக்குங் கலிக்காழி'** (2-58-1)

எனவரும் தொடரால் அறியலாம்.

சிவபெருமான் முனிவர்களுக்கு அறமுரைத்தற் பொருட்டு எழுந்தருளிய நிலையில் அப்பெருமானது திருமேனியில் நிழல் தர அமைந்த ஆலமரத்தின் தோற்றத்தினைப் புலப்படுத்தத் திருவுளங்கொண்ட பிள்ளையார், அம்மரம் நல்ல தளிர்களுடன் சிவந்த பழங்களைப் பெற்றுத் திகழும் காட்சியினை,

**"கோலமாய்க் கொழுந்தீன்று பவளந் திரண்டதோர்**
**ஆலநீழ லுள்ளானும்"**
(2-6-10)

என்ற தொடரில் அழகுற விளக்குகின்றார்.

மருத நிலத்தில் செந்தாமரை மலர்மேல் இளமை பொருந்திய அன்னம், பெருமித நிலையில் வீற்றிருக்கும் அழகிய தோற்றத்தை விளக்குவது,

**"செறியிதழ்த் தாமரைத் தவிசில் திகழ்ந்தோங்கும்**
**இலைக்குடைக் கீழ்ச் செய்யார் செந்நெல்**

**வெறிகதிர்ச் சாமரையிரட்ட இள அன்னம்**
**வீற்றிருக்கும் மிழலையாமே"**
(7-132-2)

எனவரும் தொடராகும். இதன்கண் அன்னத்தினை அரச தோற்றத்துடன் ஒப்பிடும் வண்ணம் புனைத்துரைத்ததிறம் அறிந்து இன்புறத்தக்கதாகும்.

மணியால் அமைத்த இடத்தினைப்போன்று தெளிந்த புனல் நிறைந்த பொய்கையில், தூய வெண்சங்கின் தொகுதிகள் சூழ்ந்து தோன்ற, அவற்றின் நடுவே மலர்ந்த செந்தாமரை மலர்மேல் அப்பொய்கைக் கரையில் வளர்ந்த புன்னையின் மலர்கள் உதிரும்

தோற்றத்தினைக் கூர்ந்து நோக்கிய ஆளுடைய பிள்ளையார், அவ்வழகிய காட்சியினை அடிப்படையாகக் கொண்டு, தூய பெருங்குடும்பத்தில் மறைமுறைப்படி நிகழும் திருமணக் காட்சியினைஅறிவுறுத்துவதாக அமைந்தது,

"தகவுடை நீர் மணித்தலத்துச் சங்குளவர்க்கம்
திகழச் சலசத்தீயுள்
மிகவுடைய புன் குமலர்ப் பொரியட்ட
மணஞ் செய்யும் மிழலையாமே" (1-132-5)

எனவரும் திருப்பாடலாகும். இவ்வாறு ஞானசம்பந்தர் தேவாரத்தில் அமைந்த இயற்கையின் எழில் நலத்தை எடுத்துக் காட்டப் புகின் மிகவும் விரியும் என்றஞ்சி, ஒரு சிலவே இங்குக் குறிக்கப் பெற்றன.

பிள்ளையார் அருளிய திருப்பதிகங்களில் ஒரு தலத்திற் கெனவன்றி எல்லாத் தலங்களுக்கும் பொதுவாக அமைந்த பதிகங்கள் ஏழாகும். அவையாவன, திருநீலகண்டப் பதிகம், க்ஷேத்திரக் கோவை, கோளறு திருப்பதிகம், பஞ்சாக்கரத் திருப்பதிகம், தனித் திருவிருக்குக் குறள், நமச்சிவாயத் திருப்பதிகம், திருப்பாசுரம் என்பனவாகும்.

ஞானசம்பந்தர், சிவபெருமானுடைய திருவருளுக்கு உரிமை யுடைய தெய்வங்களாக விநாயகப் பெருமானையும் முருகப் பெருமானையும் தாம் பாடிய திருப்பதிகங்களிற் குறித்துப் போற்றியுள்ளார். தம் காலத்தில் வாழ்ந்த சிவனடியார்களாகிய குலச் சிறையார், சிறுத்தொண்டர், நமிநந்தியடிகள், திருநீல கண்ட யாழ்ப்பாணர், நீலநக்கர், மங்கையர்க்கரசியார், முருக நாயனார் என்னும் பெருமக்களையும், தம் காலத்திற்கு முன் நிலவிய சிவனடியார்களாகிய சண்டேசர் கண்ணப்பர், கோச்செங்கட் சோழர், புகழ்த்துணையார் என்னும் பெரு மக்களையும், சிவபெருமானை வழிபட்டுஅருள் பெற்றவர்களாக மார்க்கண்டர், பகீரதன் புரூரவா, இராமபிரான், இலக்குவன், சடாயு, சம்பாதி, சாம்புவான், சுக்கிரீவன், வாலி, அநுமான், நளன் ஆகியோரையும் திருப்பதிகங்களிற் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

ஆளுடைய பிள்ளையார் காலத்தில் ஆவணி புரட்டாசி மாதங்களில் உருத்திர கணத்தாராகிய அடியார்களுக்கு அமுதளிக்கும் விழாவும், ஐப்பசியில் திருவோண விழாவும், கார்த்திகையில் விளக்கீடாகிய திருவிழாவும், மார்கழியில் திருவாதிரைத் திருவிழாவும், தைத்திங்களில் பூச விழாவும், மாசியிற் கடலாட்டும், பங்குனியில் உத்திரத் திருவிழாவும், சித்திரையில் அட்டமி விழாவும், வைகாசியிற் பொன்னூசல்

விழாவும், ஆனி ஆடியிற் பெருஞ்சாந்தி விழாவும் நிகழ்ந்தன என்பது அவர் அருளிய பூம்பாவைப் பதிகத்தால் உணரப்படும்.

இறைவன் உபமனிப முனிவர்க்குப் பாற்கடல்தந்தது, குபேரனைத் தோழனாகக் கொண்டது சலந்தரனைச் சக்கரத்தால் தலையரிந்தது, அச்சக்கரப் படையைத் திருமாலுக்கு அளித்தது, நஞ்சுண்டு தேவர்களை உய்யக் கொண்டது, திரிபுரம் எரித்தது, தக்கனது வேள்வியை அழித்தது, யானைத்தோலை உரித்துப் போர்த்தது, தாருகாவனத்து முனிவர் மகளிரது நிறையழிய ஓடேந்து செல்வராய்ப் பிச்சையேற்றது, அயனும் மாலும் அடிமுடி தேட அன்னோர் அறியாவண்ணம் தீப்பிழம்பாய் உயர்ந்தது, நான்முகனது தலையைக் கிள்ளியது, மார்க்கண்டேயர்க்காகக் கூற்றுவனை உதைத்தது, காமனை யெரித்தது முதலிய புராணச் செய்திகள் ஞானசம்பந்தர் தேவாரத்திற் பலவிடங்களிலும் குறிக்கப்பெற்றுள்ளன. புராண வரலாறுகளாகிய இச்செய்திகளில் பல திருநாவுக்கரசர் தேவாரத்தும் சுந்தரர் தேவாரத்தும் குறிக்கப் பெற்றுள்ளமை காணலாம்.

"ழகார ளகார வொற்றீற்று நிலைமொழிப் பதத்தின் முன், வருமொழி முதலில் தகாரம் வந்து புணர்ந்தால், நிலை மொழி யீறும் வருமொழி முதலும் திரிந்து தனித்தனி இரண்டும் டகாரமாதலும், பின்னும் அந்நிலை மொழியீறு கெடுதலும் உண்டு" என்பது வீரசோழியம்சந்திப்படலத்திற் கூறப்பட்ட புணர்ச்சி விதியாகும்.

**"துகடுலு விரிதுகிலுடையவ ரமணெனும் வடிவினர்**
**விகடமதுறு சிறுமொழியவை நலமில வினவிடல்**
**முகிடரு மிளமதியரவொடு மழகுற முதுமதி**
**திகடருசடை முடியடிகடம் வளநகர் சேறையே"**

(3-86-10)

எனவரும் ஆளுடைய பிள்ளையார் திருப்பாடலில், முகிழ்+தரும் இளமதி-முகிடரு மிளமதி எனவும், திகழ்+தரு கடைமுடி=திகடரு சடைமுடி எனவும் நிலைமொழி யீற்றிலுளள ழகரமும் வருமொழி முதலில் வந்த தகரமும் டகரமாகத் திரிந்து, நிலை மொழி யீறுகெட்டுப் புணர்ந்துள்ளமை காணலாம். ஆளுடைய பிள்ளையார் தேவாரத்திற் காணப்படும் இத்தொடர்களை இலக்கியமாகக் கொண்டே புத்தமித்திரனார் என்னும் ஆசிரியர், தாம் இயற்றிய வீரசோழியத்தில் இப்புணர்ச்சி விதையினைக் கூறியிருத்தல் வேண்டும், இவ்விதியை அடியொற்றியதே "திகட சக்கரச் செம்முகம் ஐந்துளான்" என்னுங் கந்தபுராணக் கடவுள் வாழ்த்துப் பாடலாகும். இங்ஙனமே ஆளுடைய பிள்ளையார்

அருளிய திருப்பதிகங்களில் அரிய சொல்லாட்சிகள்பல காணப் படுகின்றன.* (*திரு. ஔவை துரைசாமிபிள்ளையவர்கள் இயற்றிய சைவ இலக்கியவரலாறு பக்கம் 96, 97 பார்க்க.)

சிவஞானசம்பந்தராகிய பிள்ளையார், தன் செயலற்றுத் 'தான்' என்னும் உயிர் முனைப்பு அடங்கிய பெற்று, உயிர்க்குயிராய்த் திகழும் சிவபெருமானது திருவருள்வழி ஒட்டி வாழ்ந்த செம்புலச் செல்வராதலின், அப்பெருந்தகையார் திருவாய் மலர்ந்தருளிய திருப்பாடல்கள் யாவும் சிவபெருமான் அருளிச்செய்த மறைமொழிகளாகவே கொண்டு போற்றத் தக்கன என்பர் பெரியோர், இந்நுட்பம்,

'மலையினார் பருப்பதம்துருத்தி மாற்பேறு
மாசிலாச் சீர்மறைக்காடு நெய்த்தானம்

நிலையினான்எனதுரை தனதுரையாக
நீறணிந் தேறுகந் தேறிய நிமலன்' (1-76-1)

எனவரும் திரு இலம்பையங் கோட்டூர்த் திருப்பதிகத்தால் இனிது புலனாதல் உணர்ந்து மகிழத்தக்கதாகும்.



## 5. ஆளுடைய அரசர் அருளிச் செயல்

மக்களுக்கு உறுதிபயக்கும் நல்லுரைகளை வழங்க வல்ல சொல்வன்மையுடையார் திருநாவுக்கரசர். ஆதலின், 'சொற் குறுதிக்கு அப்பர்' எனப் போற்றப்பெற்றார். ஆளுடைய அரசர் அருளிய திருப்பதிகங்கள் யாவும், நன்மக்களாற் செய்யத்தகுவன இவை, தவிரத் தகுவன இவை எனத் தெளிவாக அறவுறுத்தும் திறம் வாய்ந்தன அப்பரடிகள் எண்பத்தோராண்டுகள் இவ்வுலக வாழ்வில் வாழ்ந்தவர். இவ்வுலகில் இளமையும் யாக்கையும், பொருளும் நிலையுடையன அல்ல; உலகில் மக்கள் வாழ்வுக்கு உறுதுணையாய் நின்று உயிர்களை உய்விப்பது எல்லாம் வல்ல இறைவனது திருவருளே; நாட்டில் அரசியல் மாறுபாடு களாலும், இயற்கையினாலும் நேரக்கூடிய பலவகைத் துன்பங் களிலும் தப்பி உயிர்கள் உய்தி பெற வேண்டுமானால், பற்றற்றான் பற்றினைப் பற்றுதல் வேண்டும்; அம்மையப்பனாகிய இறைவனது திருவருள் உண்மையைத் தெளிந்தவர்கள்எத்தகைய இடையுறு நேர்ந்தாலும் அச்சமின்றி இன்புற்ற வாழ்வர்; என்னும் இவ்வுண்மைகளைத் தமிழ் மக்களுக்கு அறிவுறுத்தும் முறையில் அப்பரடிகள் குமரி முதல் இமயம் வரை யாத்திரை செய்து, இறைவனது திருவருளாற்றலை மக்கள் உளங்கொள்ளும் படி உழவாரத் திருத்தொண்டு செய்துள்ளார். ஆகவே அவர் அருளிய அருளுரைகள் திருத்தொண்டின் சிறப்பினை மக்கள் உளங்கொள விரித்துரைக்கும் முறையில் அமைந்துள்ளன.

செந்தமிழ் நாட்டு வேளாண் குடியில் தோன்றிய மருள்நீக்கியார், தம் இளமைப் பருவத்திலேயே பெற்றோரை இழந்து, தம்மை ஆதரிப்பார் இல்லாது அல்லலுற்றவர் ஆதலின், 'இளமையும் யாக்கையும் நிலையா' என்பதனை அவர் தமது சொந்த அனுபவத்திலேயே உணரும் வாய்ப்பைப் பெற்றதில் வியப்பில்லை. நில்லாத உலகியல்பு கண்டு, 'இனி நிலைய வாழ்க்கையில் ஈடுபடுவேன் அல்லேன்' என்னும் துணிவுடைய ராய், கொல்லா அறத்தை மேற்கொண்ட அமணர் குழுவிற் சார்ந்து தருமசேனராகித் தம் வாழ்க்கையின் பெரும்பகுதியைப் பயனற்ற விரதங்களிலும் நோன்புகளிலும் வீணே கழித்துப் பின் தம்தமக்கையார் செய்த தவத்தின் பயனாக இறைவர் அருள் கூடுதலால் திருவதிகை வீரட்டானத்தை அடைந்து சூலை நோய் நீங்கப்பெற்றுத் திருநாவுக்கரசரானார். இங்ஙனம் நாவுக்கரசராகி இறைவனது திருவருளனுபவத்தில் திளைத்த நிலையில் பாடிய திருப்பதிகங்களே, நான்கு, ஐந்து, ஆறாந் திருமுறைகளாக

அமைந்துள்ளன. இத் திருப்பதிகங்களிற் பல, வாழ்க்கையில் நெடுங்காலம் துயருற்ற நாவரசர், அத்துயர மிகுதியால் இறைவனை நோக்கி முறையிடும் நிலையில் அமைந்துள்ளன. மக்கள் தமது அறியாமையால் பிழை புரிந்தாலும், பின்னர்த் தம்முடைய குற்றம் உணர்ந்து அருளாளனாகிய இறைவன்பால் முறையிடுவாராயின் அம்மையப்பனாகிய இறைவன், அன்னோர் அறியாமையாற் செய்த குற்றங்களைப் பொறுத்து அருள்புரிவன் என்னும் பேருண்மையினை அப்பரடிகள் தமது வாழ்க்கையில் சிறப்பாக உணர்ந்திருந்தார்.

ஞானசம்பந்தரும், நம்பியாரூரரும் தாம் பாடிய திருப்பதிகங்களின் இறுதிப் பாடல்களில் பாடினோராகிய தம் பெயரையும் அப்பதிகங்களைக் காதலாகி ஓதுவோர் பெறும் பயனையும் விரித்துரைத்தமைபோல, அப்பரடிகள் தம் பதிகத் திறுதியில் அவற்றைக் குறிப்பிடும் வழக்கத்தை மேற்கொள்ள வில்லை, தம் வாழ்க்கையின் பெரும்பகுதிக் காலத்தையும் புறச்சமயச் சூழலில் கழித்த தம் அறியாமையினையும், அது காறும் உயிர்க்குயிராகிய இறைவனைத் தாம் மறந்திருந்த பெருங் குற்றத்தினையும் எண்ணியெண்ணி மனம் உருகிய அப்பரடிகள், இவ்வாறு காலத்தைக் கொன்னே கழித்த தம்மையும் பொருளாக ஆட்கொண்டு உய்வித்த சிவபெருமானது பெருங்கருணைத் திறத்தினை உணர்த்தும் முறையில், "பிழைசெய்த இராவணனை உய்வித்த அருளாளன் குற்றமுடைய என்னையும் கோது நீக்கி ஆட்கொண்டான்" என உலக மக்களுக்கு எடுத்துரைக்கும் முறையில் இராவணனைப் பற்றிய குறிப்பைப் பதிகந்தோறும் விடாது குறித்தருளுகின்றார், இச்செய்தி,

**இத்தன்மை நிகழ்ந்துழி நாவின்மொழிக் கிறையாகிய அன்பரும் இந்நெடுநாள்**
**சித்தந்திகழ் தீவினையேன் அடையுந் திருவோ இதுஎன்று தெருண்டறியா**
**அத்தன்மையனாய இராவணனுக் கருளுங் கருணைத் திறமான அதன்**
**மெய்த்தன்மை அறிந்து துதிப்பதுவே மேல்கொண்டு**
**வணங்கினர் மெய்யுறவே.'** (பெரிய நாவுக்கரசர், 75)

எனவரும் திருத்தொண்டர் புராணச் செய்யுளால் இனிது விளங்கும். அப்பரடிகள் அருளிய திருப்பதிங்களில் இறுதிப் பாடல்கள் யாவும் இராவணனைப்பற்றி மேற்குறித்த செய்தியை விளக்கும் நிலையில் இருத்தலால், அப்பாடல்கள் அவ்வப் பதிகங்களின் பயனுரைக்கும் திருக்கடைக்காப்புப் போன்று அமைந்திருத்தல் காணலாம்.

திருநாவுக்கரசர் அருளிச்செய்த திருப்பதிகங்களுள் தமது வாழ்க்கையைச் சமணர் சூழலில் வீணே கழித்த நிலையை நினைந்து இரங்கும் முறையில் அமைந்த பதிகங்களும்,

இறைவனது திருவருட்பெற்றியை உள்ளவாறுணர்ந்து மகிழும் நிலையில் அம்மகிழ்ச்சிக்கு இடமளிக்காத சமணரது பயனற்ற வாழ்க்கையை வெறுத்துக் கூறும் முறையில் அமைந்த பதிகங்களும், தமக்கு அருள்புரிந்த இறைவனை முன்னிலைப்படுத்திக் குறையிரந்து வேண்டும் நிலையில் அமைந்த பதிகங்களும் இறைவனுடைய அருட்குணங்களை மனத்தில் இடைவிடாது எண்ணி, மகிழ்ச்சிமிக்குப் போற்றும் திருப்பதிகங்களும், இறைவன் திருவருளையடைந்து இன்புறுதற்குரிய நல்வழியை உலகுக்கு அறிவுறுத்தும் முறையில் அமைந்த பதிகங்களும், தம்மைக் கடலிலிருந்து காப்பாற்றிய திருவைந்தெழுத்தின் சிறப்பினை எடுத்துரைக்கும் பதிகங்களும், உலக மக்களுக்கு அருள் செய்யும் பொருட்டாக இறைவன் ஊர்தோறும் கோயில் கொண்டெழுந்தருளிய அருளின் நீர்மையை விளக்கும் பதிகங்களும், தம்முடைய குற்றங்களை நீக்கி இறைவனிடத்து எடுத்துக்கூறி, அக்குற்றங்களை நீக்கி ஆட்கொள்ளும்படி வேண்டும் பதிகங்களும், ஐம்பொறிகளால் ஈர்க்கப்பட்டு அல்லற்படும் தனது தளர்ச்சியை நீக்கி உய்யக்கொள்ளும்படி இறைவனை வேண்டும் பதிகங்களும், அடியார்க்கு அருள்செய்யும் பொருட்டாக இறைவன் அவ்வப்போது செய்த திருவருட் செயல்களை விரித்துரைக்கும் பதிகங்களும், அம்மையப்பனாகிய இறைவன் காலந்தோறும் மேற்கொண்ட பல்வேறு திருக்கோலங்களின் பொலிவினைப் புலப்படுத்தும் பதிகங்களும், உலக மக்களை நோக்கி 'நீங்கள் இன்னவாறு இறைவனை வழிபட்டு உய்தி பெறுவீராக' என அறிவுறுத்தும் பதிகங்களும், யாக்கையும் இளமையும் செல்வமும் நிலையாதன எனக் கூறும் பதிகங்களும், இறைவனை அகத்தும் புறத்தும் இன்னவாறு வழிபட வேண்டும் என அறிவுறுத்தும் பதிகங்களும், இறைவனது பொதுவும் சிறப்புமாகிய இயல்புகளை விரித்துரைக்கும் பதிகங்களும், சிற்றறிவும், சிறு தொழிலுமுடைய உயிர்களின் வலியற்ற நிலையை விளக்கி, உயிர்கட்கு இறைவனே துணையாவான் என அறிவுறுத்தும் பதிகங்களும் உள்ளன.

இத்திருப்பதிகங்களுக்குள்ளே ஏனைய இருவர் பதிகங்களிலும் காணப்பெறாத திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந் தொகை, திருத்தாண்டகம் என்னும் யாப்பு விகற்பங்கள் சிறப்பாக அமைந்துள்ளன என்பது முன்னர் விளக்கப்பெற்றது. அப்பரடிகள் அருளியனவாக நமக்குக் கிடைத்துள்ள 312 திருப்பதிகங்களுள் நான்காந் திருமுறையில் ஒன்று முதல் இருபத்தொன்று வரை அமைந்த பதிகங்கள் மட்டும் ஞானசம்பந்தர், சுந்தரர் ஆகிய இருவர் பாடிய பதிகங்களை யொத்துப் பண்ணமைந்துள்ளன. ஏனைய 291 திருப்பதிகங்களும் திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம் என்ற அமைப்பினை

யுடையனவாய் அப்பரடிகளுக்கேயுரிய சொல்நடையின் சிறப்பியல்பினை விளக்கும் நிலையில் அமைந்துள்ளன. திருக்குறுந்தொகைப் பதிகங்கள், திருக்கோயில்களை வழிபடச் செல்லும் நிலையிலும், கைத் திருத்தொண்டாகிய உழவாரப் பணிபுரியும் நிலையிலும், இறைவனது புகழ்த்திறத்தை உலக மக்களுக்குச் சுருங்க அறிவுறுத்தும் நிலையிலும் அருளிச்செய்யப் பெற்றனவாக உள்ளன.

தமிழ்ச்செய்யுள் வகையாகிய தாண்டகம் என்னும் யாப்பிற்கு மூல இலக்கியமாக விளங்குவன திருநாவுக்கரசர் அருளிய திருத்தாண்டகப் பதிகங்களே என்பது முன்னர் விளக்கப் பெற்றது.

தன்னொப்பாரில்லாத் தலைவனாகிய இறைவனுடைய அருட்குணங்கள் எல்லாவற்றையும் அப்பெருமான் திருமுன் முன்னிலைப்பரவுதலாக எடுத்துரைத்துப் போற்றுதற்கும், உலக மக்களுக்கும், தமது நெஞ்சத்திற்கும் தெளிவாக விரித்துரைத்தற்கும் ஏற்றவாறு விரிந்த சொல்நடையும், எல்லார்க்கும் எளிதிற் பொருள் விளங்கும் தெளிவும் பெற்றுத் திகழ்வன திருத்தாண்டகத் திருப்பதிகங்களாகும். இறைவனது இயல்பினைக் கூறுமிடத்து, 'அரியானை அந்தணர்தம் சிந்தையானை ' என இவ்வாறு இரண்டாம் வேற்றுமை யுருபு அடுக்கிவரும் நிலையில் அமைந்த பதிகங்களும், இறைவன் இன்ன இன்ன இடங்களில் இன்ன இன்ன தன்மையில் எழுந்தருளியுள்ளான் எனக் கூறும் பதிகங்களும், வினை முற்றுக்களை யடுக்கிக்கூறும் பதிகங்களும், இறைவனுடைய அடையாளங்களைத் தொடர்புபட எடுத்துக் கூறும் பதிகங்களும், 'வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி' என்றவாறு அப்பெருமானை முன்னிலைப்படுத்திப் போற்றும் பதிகங்களும், மானை முன்னிலைப்படுத்திப் போற்றும் பதிகங்களும், 'அரவாணையான் சிந்தித்து அரற்றும் அடி' என்றாங்கு அவ்விறைவனது திருவடிப் பெருமைகளை விளக்கும் பதிகங்களும், 'தில்லைச்சிற்றம்பலமுஞ் செம்பொன் பள்ளி' என்றவாறு இறைவன் திருக்கோயில் கொண்டருளியுள்ள திருத்தலங்களைத் தொகுத்துக் கூறும் பதிகங்களும், இறைவன் இயல்பினை உலக மக்களுக்குத் தெளியக்காட்டி அறிவுறுத்தும் நிலையில், 'விற்றூண் ஒன்றில்லாத நல்கூர்ந்தான் காண்' என்றாங்கு 'காண்' என்றும், 'தூண்டு சுடரனைய சோதி கண்டாய்' என்றாங்கு 'கண்டாய்' என்றும் அறிவுறுத்தும் பதிகங்களும், இறைவன் இன்னின்ன செயல்களைச் செய்தாரென விளக்கும் முறையில் 'நோதங்க மில்லாதார் நாகம் பூண்டார் நூல் பூண்டார்' 'நினைந்துருகும் அடியாரை நையவைத்தார்' என்றாங்கு அமைந்த பதிகங்களும், இறைவன் எல்லாப்

பொருள்களுமாகி விளங்குகின்றான் என நினைவுகூரும் முறையில், 'குருகாம் வயிரமாம் கூறும் நாளாம்' என ஆமீற்றில் வைத்துக் கூறும் பதிகங்களும், இறைவனது ஒப்புயர்வற்ற தன்மைகளை எடுத்துரைத்துப் போற்றும் முறையில், 'சூலப் படையுடையார் தாமேபோலும்' சுடர்திங்கட் கண்ணியுடையார் போலும் என ஒப்பில் போலியாற் செப்பும் திருப்பதிகங்களும், தாம்கண்ட கடவுட் காட்சியை ஏனையோரும் உணர்ந்து உய்தி பெறும் முறையில் தமது அனுபவத்தை விளக்கி 'வடிவேறு திரிசூலம் தோன்றும் தோன்றும் வளர்சடைமேல் இளமதியம் தோன்றும் தோன்றும்' என்றும், 'வாய்மூர் அடிகளையான் கண்டவாறே' என்றும், 'புண்ணியனைப் பூந்துருத்திக் கண்டேன் நானே', 'கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே' என்றும் கூறும் பதிகங்களும், தாம் கண்ட அத்தெய்வக்காட்சியை ஏனை யோரும் காணவேண்டும் என்னும் பெருவேட்கையால், 'நாகைக் காரோணந்து எஞ்சான்றும் காணலாமே' என்றும், 'காதன் மையால் தொழும் அடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே' என்றும் எல்லாம் வல்ல இறைவனைப் புறத்தும் அகத்தும் காணும் நெறியினை அறிவுறுத்தும் பதிகங் களும் ஆறாந்திருமுறையில் இடம்பெற்றுள்ளன. இறைவனை இடைவிடாது நினைந்து போற்றுதலால், கருத்திற்குச் சேயனாக விளங்கும் அப்பெருமான் 'என்னுடைய எளிய நெஞ்சத்திலும் நீங்காது எழுந்தருளியுள்ளான்' என அகமகிழ்ந்து போற்றும் வகையில் 'ஏகம்பன்காண், அவனென் எண்ணத்தானே' என்றும் 'திருப்புத்தூரில் திருத்தளியான்காண், அவனென் சிந்தையானே' என்றும், 'திருமுண்டீச்சுரத்து மேய சிவலோகன்காண் அவன் என் சிந்தை யானே' என்றும் அறிவுறுத்தும் பதிகங்களும், தாம் கண்ட கடவுட் காட்சி தம் கண்ணெதிரே நீங்காது நின்ற திறத்தை விளக்கும் முறையில் 'காளத்தி காணப்பட்ட கணநாதன்காண், அவன் என் கண்ணுளானே' எனக்கூறும் திருப்பதிகமும், இறைவன் உலகலொம் ஆகி நின்ற பெருநிலையைப் புலப் படுத்தும் முறையில்,

> 'இருநிலனாய்த்தீயாகி நீருமாகி இயமானனா
> யெறியுங் காற்றுமாகி
> அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
> ஆகாச மாயட்ட மூர்த்தியாகி
> பெருநலமும் குற்றமும் பெண்ணும் ஆணும்
> பிறருருவுந் தம்முருவுந் தாமேயாகி
> நெருநலையாய் இன்றாகி நாளையாகி
> நிமிர்புன்சடையடிகள் நின்றவாறே'

(6-94-1)

எனவரும் நின்ற திருத்தாண்டகம் முதலிய பதிகங்களும், உலகெலாமாகிய இறைவன், உலகப் பொருள்கள் ஒன்றிலும் தோய்வின்றி விளங்கும் தனி நிலையைப் புலப்படுத்தும் முறையில்,

'மண்ணல்லை விண்ணல்லை வலயமல்லை
மலையல்லை கடலல்லை வாயுவல்லை
எண்ணல்லை யெழுத்தல்லை யெரியுமல்லை
இரவல்லை பகலல்லை யாவுமல்லை
பெண்ணல்லை யாணல்லை பேடுமல்லை
பிறிதல்லை யானாயும் பெரியோய்நீயே
உண்ணல்லை நல்லார்க்குத் தீயையல்லை
உணர்வரிய ஒற்றியூருடைய கோவே'

(6-45-9)

என்றாங்கு வரும் திருப்பாடல்களும், இறைவனை நோக்கி 'நீ எல்லாமாய்ப் பிரிவறக்கலந்து விளங்குகின்றாய்' எனப் போற்றிப் பரவும் நிலையில், 'அப்பன் நீ அம்மை நீ' என்றும், 'நின்னாவார் பிறரன்றி நீயேயானாய்' என்றும், முன்னிலைப் படுத்திக் கூறும் திருப்பாடல்களும், இறைவனைச் சேராதார் 'நன்னெறிக்கண் சேராதார்', 'தீநெறிக்கே சேர்கின்றார்' என அறிவுறுத்தும் நிலையில் 'திருநாகேச்சரத்துளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேராதாரே' எனவும், 'திருவீழி மிழலையானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின்றாரே' எனவும் வரும் திருப்பதிகங்களும், இறைவனைப்பற்றி நின்றார் எக்காலத்தும் இறவாப் பெரு நிலையை அடைந்து இன்புறுவர் என்பது பட, 'கீழ்வேளூர் ஆளும் கோவைக் கேடிலியை நாடுமவர் கேடிலாரே' என அறிவுறுத்தும் திருப்பாடல்களும் என்னிலும் இனியானாகிய இறைவனை இத்துணைக் காலம் வரையிலும் அறியப்பெறாது திகைத்திருந்தேன், அவனது திருவருளோடு பழகாது உலக வாழ்வில் பாழே உழன்றேன் என்பதுபட, 'சேராது திகைத்து நாள் செலுத்தினேனே' என்றும், அப்பெருமானைச் 'சாராதே சாலநாள் போக்கினேனே' என்றும் ஏசற்று உரைக்கும் திருப்பதிகங்களும், அவனருளே கண்ணாக அவனைக் கண்டு அடையப்பெற்றேன் என அகமகிழ்ந்து கூறும் நிலையில், 'திருமாற் பேற்றெஞ் செம்பவளக் குன்றினைச் சென்றடைந்தேன் நானே' என்றும், 'பாசூர் மேய பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்தவாறே' என்றும், 'கஞ்சனூர் ஆண்ட கோவைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந்தேனே' என்றும், 'எறும்பியூர் மலைமேல் மாணிக்கத்தைச் செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே' என்றும் வரும் பதிகங்களும், தம்நெஞ்சத்தை நோக்கி இடைவிடாது நினைக்கத் தூண்டும் வகையில்

'திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே' என்று இவ்வாறு அறிவுறுத்தும் பதிகங்களும், தாம் இறைவனை நினைந்து வினைத் தொடர் பறுத்த செய்தியை ஏனையோர்க்கு அறிவுறுத்தும் வகையில் 'அரநெறியில் அப்பன்தன்னை அடைந்தடியேன் அருவினை நோய் அறுத்தவாறே' என்றும் 'ஆவடு தண்டுறையுள் மேய அரனடியேஅடிநாயேன் அடைந்துய்ந்தேனே' என்றும் வரும் பதிகங்களும், தம்மையாட் கொண்ட இறைவனைச் 'செல்வன' என்றும், 'மணாளன்' என்றும் மகிழ்ந்து போற்றும் பதிகங்களும், தீவினை முதலிய இடையூறுகளை நோக்கி, 'அடியார்களாய எம்மை விட்டு விலகுமின்' என அறிவுறுத்தும் பதிகங்களும், இறைவனைக் குறித்து வினாவும் விடையுமாக அமைந்த திருப்பாடல்களும், 'அப்பரருளிய திருத்தாண்டகத் தொகுதியாகிய' ஆறாந்திருமுறையில் அமைந்திருத்தல் காணலாம்.

இறைவனது திருவருட் பெருமையினையும், உயிர்களின் சிறுமையினையும் உலகமக்களுக்கு விளங்க எடுத்துரைக்கு முகமாக மக்களுடைய மனமாசுகளைப் போக்கி இறைவனது திருவருள் இன்பத்தில் அன்பர்களைத் திளைக்கவைக்கும் பேராற்றல் மிக்க செழும் பாடல்களாக நாவரசரருளிய திருப்பதிகங்கள் திகழ்தல் காணலாம்.

அப்பரடிகள் ஆண்டானாகிய இறைவனைத் தலைவனாகவும் அவனது பேரருள் இன்பத்தை விரும்பி நிற்கும் ஆருயிராகிய தம்மைத் தலைவியாகவும் கருதிய நிலையில் அகப்பொருள் துறையில் அருளிய திருப்பதிகங்கள், 'அவனே தானேயாகிய' நெறியில் அடிகள் பெற்ற சிவானுபவத்தை இனிது புலப்படுத்துவனவாகும். அடிகளார் கனவிலும் நனவிலும் தாம் இறைவனைத் தலைப்பட்டு நுகர்ந்த திருவருள் அனுபவத்தை நற்றாய் கூற்றாகவும் செவிலித்தாய் கூற்றாகவும் புலப்படுத்திய திருப் பாடல்கள், 'புணர்ந்துழி உவகையும், பிரிவுழிக் கலக்கமும்' ஆகிய இருதிறத்தையும் விளக்குவனவாக உள்ளன. திருநாவுக்கரசர், நம்பர் அருளாமையினால் சமண சமயத்தைச் சார்தற்கு முன்னரும், இறைவனருளிய சூலைநோயால் துன்புற்றுச் சமணத்துறந்து திருநாவுக்கரசராகிய பின்னரும், சிவபெருமானை நாள்தோறும் தவறாது பூசனை புரியும் கடப்பாட்டினராக விளங்கிய செய்தி அவரருளிய பதிகங்களிற் பலவிடத்தும் புலனாம்.

இத்திருப்பதிகங்களைப் பயில்வோர், 'வாழ்வெனும் மையலை விட்டு வறுமையாஞ் சிறுமை தப்பித், தாழ்வெனும் தன்மையோடும் சைவமாம் சமயம் சார்ந்த' நல்லூழ் உடையார் அப்பரடிகள் என்பதனைத் தெளிவாக உணர்வர்.

திருநாவுக்கரசர், செல்வம் நிறைந்த வேளாண் குடியிற் பிறந்து, இளமையும் யாக்கையும் செல்வமும் நிலையா என்பதனை யுணர்ந்து, சமணம் முதலிய சமயங்களால் விரித்துரைக்கப் பெறும் நன்னெறிகளை ஓதியுணர்ந்து, சிவனெனும் நாமந் தனக்கேயுடைய செம்மேனி யம்மானாகிய முதல்வனுக்கு ஆட்பட்டு, 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்னுந் தெளிவுடைய சிந்தையராய் நல்லறங்கள் பலவற்றை ஆர்வமுடன் செய்த அறவாராவர். நற்றவச் செல்வராகிய நாவுக்கரசர் அருளிய திருப்பாடல்களில் அறத்தின் ஆக்கமும், எல்லா அறங்களுக்கும் நிலைகளமாய் விளங்கும் இறைவனது திருவருட் சார்பும் நன்கு விளக்கப் பெற்றுள்ளன. திருவருட் சார்பினை உலக மக்களனைவரும் நன்கு தெளிந்து திருநின்ற செம்மை யுடையராய் நல்வாழ்வு பெறுதற்குரிய அறவுரைகளை வெளியிட்டருளிய அருளாளர் அப்பரடிகள் ஆதலின், அப்பெருந் தகையாரை "அறந்தரு நாவுக்கரசு" எனச் சேக்கிழாரடிகள் புகழ்ந்து போற்றியுள்ளார்.

நல்லறங்கள் எல்லாவற்றுக்கும் பற்றுக்கோடாக அமைந்தது இறைவனது திருவருளே என்பதனைத் தெளிய உணர்ந்த திருநாவுக்கரசர், தம்மைச் சமண சமயத்திற் புகுத்தி அறவுரைகள் பலவற்றையும் ஓதியுணரச் செய்து, பின் சூலை நோயினைத்தந்து சமணத்தினின்று மீட்டு, அறங்களுக்கெல்லாம் அடிப்படையாய் விளங்கும் திருவருளின் திறத்தினைப் புலப் படுத்திச் சிவநெறியிற் சேர்த்து உய்வித்தருளிய இறைவனது திருவருட் செய்கையினை,

"ஓதுவித்தாய் முன் அறவுரை காட்டி அமணரொடே
காதுவித்தாய் கட்டநோய் பிணிதீர்த்தாய் கலந்தருளிப்
போதுவித்தாய் நின் பணிபிழைக்கிற் புளியம் வளாரால்
மோதுவிப்பாய் உகப்பாய் முனிவாய் கச்சியேகம்பனே"
(4-99-1)

எனவும்,

"குலங்கெடுத்துக் கோள்நீக்க வல்லான் தன்னைக்
குலவரையின் மடப்பாவை யிடப்பாலானை
மலங்கெடுத்து மாதீர்த்தம் ஆட்டிக்கொண்ட
மறையவனைப் பிறைதவழ் செஞ்சடையினானைச்
சலங்கெடுத்துத் தயாமூல தன்மமென்னுந்
தத்துவத்தின் வழிநின்று சார்ந்தோர்க்கெல்லாம்
நலங்கொடுக்கும் நம்பியை நள்ளாற்றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்தவாறே"
(6-20-7)

எனவும்,

"சினந்திருத்துஞ் சிறுப்பெரியார் குண்டர்தங்கள்
செதுமதியார் தீவினைக்கே விழுந்தேன்தேடிப்
புனந்திருத்தும் பொல்லாத பிண்டிபேணும்
பொறியிலியேன் தனைப்பொருளா ஆண்டுகொண்டு
தனந்திருத்தும் அவர்திறத்தை யொழியப்பாற்றித்
தயாமூல தன்வழி யெனக்கு நல்கி
மனந்திருத்தும் மழபாடி வைரத்தூணே
என்றென்றே நானரற்றி நைகின்றேனே" (6-40-6)

எனவும் வரும் திருப்பாடல்களில் விரித்துக் கூறியுள்ளார். இப்பாடல்களைக் கூர்ந்து நோக்குங்கால் அறத்தின் பெருமை யினையும் அருளொழுக்கத்தின் இன்றியமையாமையினையும் விரித்துரைக்கும் சமண சமயத்திற் சார்ந்திருந்த தருமசேனர்க்கு, அறங்களைக் கடைபோகச் செய்து நிறைவேற்றுதற்கு மூலமாய் மக்களுக்கு உறுதுணையாய் விளங்குவது இறைவனது திரு வருளே என்னும் மெய்ம்மையினை அறிவுறுத்தி உய்யக் கொள்ளும் முறையில், சைவ சமயத்திற் சேர்த்துத் 'தயாமூல தன்மம்' என்னும் அருளற நெறியினை அறிவுறுத்தித் திருநாவுக்கர சாக்கிய இறைவனது திருவருட் செயல் இனிது புலனாதல் காணலாம்.

அறவாழியந்தணனாகிய இறைவன், உலகில் பிறரது வறுமைத் துயர்கண்டு பொறாது தம்பாலுள்ள பொருள்களை இரப்போர்க்கு இல்லை யென்னாது ஈந்து மகிழும் அருளுடையச் செல்வர்களுக்கென்றே 'சென்றடையாத திரு'வாகிய தன் திருவருட் செல்வத்தை உரிமை செய்து வைத்துள்ளான் என்றும், அப்பெருமானது திருக்குறிப்பை உணர்ந்து தம்பாலுள்ள பொருள்களை இரவலர்க்கு ஈந்து மகிழும் ஈகைத் திறத்தினை மேற்கொள்ளாது தாமே யுண்ணவேண்டுமென்றெண்ணிக் கரவினால் வைத்திழக்கும் வன்கண்ணராகிய உலோபிகட் கென்றே கொடிய துன்பங்களைத் தரும் நரகங்களை இறைவன் ஒதுக்கி வைத்துள்ளான் என்றும் அப்பரடிகள் உலக மக்களுக்கு அறிவுறுத்துவதாக அமைந்தது,

"இரப்பவர்க் கீயவைத்தார் ஈபவர்க்கருளும் வைத்தார்
கரப்பவர் தங்கட்கெல்லாம் கடுநரகங்கள் வைத்தார்
பரப்புநீர்க் கங்கை தன்னைப் படர்சடைப் பாகம்வைத்தார்
அரக்கனுக் கருளும் வைத்தார் ஐயன்ஐயாறனாரே" (4-38-10)

எனவரும் திருநேரிசையாகும். இத்திருப்பாடல், செல்வம், நல்குரவு என்னும் மேடு பள்ளங்களிற் சிக்கிக் களிப்பும் கவற்சியும் கொண்டு தம்முணர் விழந்து தடுமாறும் உலக மக்களை, வாழ்வெனும் மையலினின்றும் வறுமையாம் சிறுமையினின்றும் மீட்டு, இறைவனது திருவருட் சார்பில் ஒரு நிலையராய்

அன்பினால் ஒன்றி வாழச்செய்யும் அறவுரையாகத் திகழ்தல் உணர்ந்து போற்றத்தக்கதாகும்.

அறியாமையால் தமக்குரிய சைவ சமயத்தை விட்டுச் சமண சமயத்திற்புக்கு உறுதிப்பொருள் இதுவென உணராது சூலை நோயினால் தாம் அல்லலுற்ற போது, இறைவன் (திலகவதியாராகிய) நல்லாசிரியரைக்கொண்டு பால் முதலிய பஞ்ச கௌவியத்தினைத் தலையில் தெளித்து (மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை என்னும் அறுவகை நெறிகளாலும்) தம்மைச் சோதித்துத் தீக்கை செய்து திருவைந்தெழுத்தினை உபதேசித்துத் தம் உள்ளத்திற் கோயில் கொண்டு எழுந்தருளிய திறத்தினை,

"குண்டனாய்த் தலைபறித்துக் குவிமுலையார் நகை நாணா துழிதர்வேனைப்
பண்டமாப் படுத்தென்னைப் பர்ல்தலையிற்றெளிந்துந் தன் பாதங்காட்டித்
தொண்டெலாம் இசைபாடத் தூமுறுவல் அருள் செய்யும் ஆரூரைப்
பண்டெலாம் அறியாதே பனிநீராற் பரவைசெயப் பாவித்தேனே"
(4-8-4)

எனவும்,

"பொல்லாத என்னழுக்கிற் புகுவான் என்னைப்
புறம்புறமே சோதித்த புனிதன் தன்னை" (6-86-7)

எனவும்,

"புகுந்தென் சிந்தைத் தன்னுருவைத் தந்தவனை" (6-27-4)

எனவும் வரும்தொடர்களில் திருநாவுக்கரசர், நெஞ்சம் நெக்குருகிப் பரவிப் போற்றியுள்ளார்.

தொண்ட உழவராகிய திருநாவுக்கரசர், சிவகதியாகிய நற்பயிர் விளைதற்கு உலக மக்கள் மேற்கொள்ள வேண்டிய உழவு முறைகளை,

"மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாங் களையை வாங்கிப் பொறையெனும் நீரைப் பாய்ச்சி
தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வெலியிட்டுச்
செம்மையுள் நிற்பராகிற் சிவகதி விளையுமன்றே" (4-76-2)

எனவரும் திரு நேரிசையில் உருவக அணியமைய விரித்துக் கூறிய முறை உணர்ந்து போற்றத் தக்கதாகும்.

அப்பரடிகள் இறைவனைப் பரவும் நிலையில், அப்பெருமான் நினைப்பவர் மனங் கோயிலாகக் கொண்டு எழுந்தருளிய எளிமைத் திறத்தையும், அடியார்கள் உள்ளத்திலிருந்து உறுதிப்பொருளை யறிவுறுத்தும் அருள்ஞானச் சிறப்பினையும் பல திருப்பாடல்களில் பரவிப் போற்றியுள்ளார்.

"உடம்பெனும் மனையகத்துள் உள்ளமே தகளியாக
மடம்படும் உணர்நெய் யட்டி உயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பவர் காளைதாதை கழலடி காணலாமே" (4-75-4)

என்ற பாடலால், ஊனிலுயிர்ப்பை, யொடுக்கித் தம உள்ளத்துள்ளே ஞான விளக்கேற்றி இறைவனைக் காணுந் திறத்தை அறிவுறுத்தியுள்ளார்.

"காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக
நேயமே நெய்யும்பாலா நிறைய நீர்மைய ஆட்டிப்
பூசனை யீசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே" (4-76-4)

எனவரும் திருப்பாடலில் அகட்பூசை செய்யும் முறையினை அடிகள் புலப்படுத்தினமை காண்க.

"கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்
விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை
அரவாடச் சடைதாழ அங்கையினில் அனலேந்தி
இரவாடும் பெருமானை என்மனத்தே வைத்தேனே" (4-7-1)

எனவரும் திருப்பதிகத்தில், இறைவனைப் போதொடு நீர் சுமந்தேத்திப் புறத்தே வழிபாடு செய்வோர், வழிபாட்டின் முடிவில் முதல்வனைத் தம் உள்ளத்தே ஒடுக்கிச் சிந்தித்துப் போற்றும் முறையினை அடிகள் தெளிவாக அறிவுறுத்தி யுள்ளமை காணலாம். 'கரவாடும் வன்னெஞ்சர்க்கரியானை' என்னும் முதற் குறிப்புடைய கச்சியேகம்பத் திருப்பதிகத்தினை அடிகள் பாடிய அன்பின் நிலையை,

"வார்ந்து சொரியுங் கண்ணருவி மயிர்க்கால்தோறும் வரும்புளகம்
ஆர்ந்த மேனிப் புறம்பலைப்ப அன்புகரைந்தென் புள்ளலைப்பச்
சேர்ந்த நயனப் பயன்பெற்றுத் திளைப்பத் திருவேகம்பர் தமை
நேர்ந்த மனத்தின் உறவைத்து நீடும் பதிகம் பாடுவார்"
(பெரிய-திருநாவுக்-323)

என்ற செய்யுளில் சேக்கிழாரடிகள் சொல்லோவியஞ் செய்து காட்டியுள்ளார். இத்திருப்பாடலைக் கூர்ந்து நோக்குங்கால், திருநாவுக்கரசர் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகங்கள் யாவும் அப் பெருந்தகையார் இறைவனை அகத்தும் புறத்தும் இடை விடாது வழிபடும் நிலையில் அருளிச் செய்யப்பெற்ற பத்திமைப் பாடல்கள் என்பது நன்கு விளங்கும்.

சமணந்துறந்து சிவநெறியினை மேற்கொண்ட திருநாவுக் கரசர், தாம் சமணம் புகுவதற்கு முன்னும், புறச் சமயமாகிய அதனைத் துறந்தபின் சிவநெறியினை உறுதியாகக் கடைப்பிடித்

தொழுகும் நிலையிலும் முழுமுதற் கடவுளாகிய இறைவனை மறவாது வழிபட்டவராதலின் எல்லாச் சமயத்தாராலும் வழிபடப்பெறும் முதல்வன் ஒருவனே என்னும் உண்மையினைப் பல பதிகங்களிலும் வற்புறுத்தியுள்ளார். சமய வாதங்களில் ஈடுபடாது. சமயாதீதப் பழம்பொருளாகிய முழுமுதற் கடவுளை வழிபட்டுய்தலே மக்களால் மேற்கொள்ளத்தக்க நன்னெறியாம் என்பது,

"விரிவிலா அறிவனார்கள் வேறொரு சமயஞ் செய்து
எரிவினாற்சொன்னாரேனும் எம்பிராற் கேற்றதாகும்
பரிவினாற்பெரியோரேத்தும் பெருவேளூர் பற்றினானை
மருவினான் வாழ்த்தியுய்யும் வகையது நினைக்கின்றேனே"
(4-60-9)

எனவும்,

"வாதுசெய்து மயங்கும் மனத்தராய்
ஏது சொல்லுவீராகிலும் ஏழைகாள்
யாதொர் தேவ ரெனப்படு வார்க்கெலாம்
மாதேவன் னலாற் றேவர்மற் றில்லையே" (5-100-4)

எனவும் வரும் அப்பர் அருள்மொழிகளால் உறுதியாக அறிவுறுத்தப் பெற்றுள்ளமை அறிந்து இன்புறத்தகுவதாகும்.

உயிர்க்குயிராய் விளங்கும் இறைவன், உயிர்களின் உள்ளத்தின் உள்ளிருந்து உறுதிப்பொருளை யறிவுறுத்தி நிற்றலால், அம்முதல்வனது இருப்பினை நன்குணர்ந்து இடைவிடாது தியானிப்பவர் உள்ளத்தில், இறைவனது இனிமை நலமாகிய் பேரின்பத்தேன் பெருக்கெடுத்துப் பொங்கி நிறையும் என்பதைத் தம் அனுபவத்தில் உணர்ந்து மகிழ்ந்தவர் திருநாவுக்கரசர். அப்பரடிகள் இறைவனை மனத்தால் எண்ணிய நிலையில் தாம் பெற்ற பேரின்ப அனுபவத்தினை,

"மனத்துள் மாயனை மாசறு சோதியை
புனிற்றுப் பிள்ளை வெள்ளைம் மதிசூடியை
எனக்குத் தாயை எம்மான் இடை மருதனை
நினைத்திட் டூறி நிறைந்ததென் னுள்ளமே" (5-15-2)

எனவும்,

"தெள்ளத் தேறித் தெளிந்து தித்திப்பதோர்
உள்ளத் தேறல் அமுதவொளி வெளி,
கள்ளத் தேன் கடியேன் கவலைக் கடல்
வெள்ளத் தேனுக் கெவ்வாறு விளைந்ததே" (5-91-10)

'எனவும்,

"கனியினுங் கட்டி பட்ட கரும்பினும்
பனிமலர்க் குழற் பாவைநல் லாரினும்
தனிமுடி கவித் தாளும் அரசினும்
இனியன் தன்னடைந் தார்க்கிடை மருதனே" (5-14-10)

எனவும்,

"என்னிலாரும் எனக்கினி யாரில்லை
என்னிலும் இனியானொரு வன்னுளன்
என்னுளே யுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னுளே நிற்கும் இன்னம்ப ரீசனே" (5-21-1)

எனவும் வரும் திருப்பாடல்களில் தெளிவாக விரித்துக் கூறியுள்ளார்.

உயிர்கள் செய்யும் நலந்தீங்குகளையெல்லாம் அவ்வுயிர்களின் உள்ளத்துள்ளே நின்றறிந்து, நல்லன இவை தீயன இவை என உயிர்கட்கு அறிவுறுத்தி நல்வழிப்படுத்தும் இறைவனது இருப்பினை உணரப்பெறாது தம்மனம் போனபடி நடக்கும் உலக மக்களைத் திருத்தக் கருதிய திருநாவுக்கரசர், அன்னோரது செயலைத் தம்மேல் ஏறிட்டுக்கொண்டு,

"கள்ளனேன் கள்ளத்தொண்டாய்க் காலத்தைக் கழித்துப் போக்கித்
தெள்ளினே னாகிநின்று தேடினேன் நாடிக் கண்டேன்
உள்குவார் உள்கிற் றெல்லாம் உடனிருந் தறிதியென்று
வெள்கினேன் வெள்கிநானும் விலாவிறச் சிரித்திட் டேனே"
(4-75-3)

என இறைவனை நோக்கித் தமது பேதைமையினை நகைச் சுவைபட வெளியிட்டுரைக்கின்றார். இத்திருப்பாடல், உயிர்க்கு யிராய்க் கலந்து நிற்கும் இறைவனது உண்மையினை மக்களது அநுபவத்தில் வைத்து யாவர்க்கும் தெளிவாக அறிவுறுத்து வதாகும்.

இங்ஙனம் இறைவனது இருப்பினைத் தம் அனுபவத்தில் வைத்துணரும் பயிற்சியைப் பெறாது, கடவுள் என்பதொரு, பொருள் இல்லை' எனக் கூறித்திரியும் பாழ்ங்கொள்கையினரை நோக்கி, அப்பரடிகள் கடவுளுண்டென்னும் தம் கருத்தினை உறுதியுடன் அறிவுறுத்துவதாக அமைந்தது,

"அந்திவட்டத் திங்கட் கண்ணியன் ஐயா றமர்ந்துவந்தென்
புந்திவட்டத்திடைப்புக்கு நின்றானையும் பொய்யென்பனோ
சிந்திவட்டச் சடைக் கற்றையலம்பச் சிறிதலர்ந்த
நந்திவட்டத் தொடு கொன்றை வளாவிய நம்பனையே"
(4-98-2)

எனவரும் திருவிருத்தமாகும். நிலையில்லாத இவ்வுலக நிகழ்ச்சி யொன்றையே மெய்யென நம்பி, உலகெலாம் இயக்கும்

பேராற்றல் வாய்ந்த கடவுளையும், அம்முதல்வனது திருவருளாணையால் ஊட்டப்பெறும் இருவினைப் பயனையும் இல்லையென்று சாதித்துத் திரியும் உலகாயதவாதிகளை நோக்கி "நீவிர் இவ்வுலக நடையொன்றையே மெய்யென நம்பி, கடவுளும் இருவினைப் பயனும் இல்லையென்று கூறுதலை விட்டொழியுங்கள்: உம்மால் நிலையுடையதாகக் கருதப்படும் இவ்வுலக வாழ்வில் ஐம்பெரும் பூதங்களின் மாறுதலால் புயல், கடற்பெருக்கு, பூகம்பம் முதலிய அழிவுகள் பெரும்படைகளைப் போன்று தோன்றி அல்லற்படுத்துவதனைக் காண்கின்றீர்கள். இவ்வாறு உலகில் அவ்வப்பொழுது மக்கள் வாழ்வுக்குத் தடையாகத் தோன்றும் இடையூறுகளையெல்லாம் போக்கி மன்னுயிர்களுக்கு அன்னையும் அத்தனுமாய்த்தோன்றி அருள் சுரந்து காப்பது முழுமுதற் பொருளாய பரம்பொருளே என்பதனை உணர்ந்து உய்திபெறுவீராக" என அறிவுறுத்துவது,

"நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே
படைகள் போல்வரும் பஞ்சமா பூதங்கள்
தடையொன் றின்றியே தன்னடைந்தார்க் கெலாம்
அடைய நின்றிடும் ஆனைக்கா அண்ணலே" (5-31-6)

எனவரும் திருக்குறுந் தொகையாகும்.

தெய்வமுண்டென்னுந் தெளிவில்லாத சமணர்களோடு நெருங்கிப் பழகிய திருநாவுக்கரசர், கடவுளுண்டென்னுந் துணிபின்றி அவர்களுடன் கூடித் தாம் மேற்கொண்ட கொல்லாமை, புலாலுண்ணாமை முதலிய புறச்செயல்களாலும் உடம்பை வருத்தும் பல்வேறு விரதங்களாலும் இவ்வுலக வாழ்வாகிய இம்மையின்பத்தையும், அவ்வுலக வாழ்வாகிய மறுமையின்பத்தையும் ஒருங்கேயிழந்து வருந்திய அவல நிலையினை,

"ஒருபிறப்பி லானடியை யுணர்ந்துங் காணார்
உயர்கதிக்கு வழிதேடிப் போகமாட்டார்
வருபிறப்பொன் றுணராது மாசுபூசி
வழிகாணாதவர் போல்வார் மனத்தனாகி
அருபிறப்பை யறுப்பிக்கும் அதிகையூரன்
அம்மான்றன் அடியிணையே அணைந்துவாழாது
இருபிறப்பும் வெறுவியராய் இருந்தார் சொற்கேட்டு
ஏழையேனான் பண்டு இகழ்ந்தவாறே" (6-3-5)

எனவரும் ஏழைத்திருத்தாண்டகத்தில் குறிப்பிட்டு இரங்குகின்றார். இங்ஙனம் உலகமக்கள் இம்மை மறுமையென்னும் இருமை யின்பங்களையும் இழக்கும் நிலையில் சமணர், புத்தர் ஆகிய புறச்சமயத்தார் தம் சமயக் கொள்கையினைப் பரப்பிய செய்தியை,

"சாக்கியப்பட்டுஞ் சமணுருவாகி யுடையொழிந்தும்
பாக்கியமின்றி யிருதலைப் போக மும் பற்றுவிட்டார்"
(1-116-10)

எனவரும் தொடரில் ஞானசம்பந்தர் வெளியிட்டுள்ளமை இங்கு ஒப்புநோக்கி உணரத் தக்கதாகும்.

சொல்வேந்தராகியஅப்பர் அருளிய திருப்பதிகப் பாடல்களில், பொருள் விளக்கத்திற்கு வேண்டிய உவமை, உருவகம் முதலிய அணிநலங்கள் சிறப்பாக அமைந்துள்ளன. ஐம்பொறிகளும் உயிரைச் சூழ்ந்துநின்று தத்தம் பொருள்கள் மேற்செலுத்த, அவற்றால் ஈர்க்கப்பட்டு அலையும் உயிரானது, பின் அப்பொறிகளால் தனக்கு நேரவிருக்கும் அழிவினைச் சிந்திக்க நேரமின்றி ஐம்பொறி யின்பத்திலேயே அழுந்திக் கிடக்கும் மயக்க நிலையை விளக்கக் கருதிய நாவுக்கரசர், உணவு சமைத்தற்கென அடுப்பிலேற்றிய உலைப்பானை நீரில் இடப் பெற்ற ஆமையானது, நீர் சிறிது சூடேறி இளவெந்நீராகிய நிலையில் அதிற் குதித்து மகிழ்ந்து ஆடும் தெளிவற்ற நிலையினை உவமையாக எடுத்தாண்டுள்ளார்,

"வளைந்து நின்றைவர் கள்வர் வந்தெனை நடுக்கஞ் செய்யத்
தளைத்துவைத் துலையை யேற்றித் தழலெரிமடுத்த நீரில்
திளைத்தநின் றாடுகின்ற ஆமைபோல் தெளிவிலாதேன்
இளைத்துநின் றாடுகின்றேன் என்செய்வான் தோன்றினேனே"
(4-79-10)

என்ற பாடலில், ஆன்மா ஐம்பொறிகளால் ஈர்க்கப்பட்டுப் பின் விளைவறியாது சிறிது பொழுதுமகிழும் அவலநிலைக்கு, உலை ளயேற்றிய இளவெந்நீரிற் குதித்தாடும் ஆமையின் தெளிவற்ற மகிழ்ச்சியினை உவமையாகக் குறித்த நயம்உணர்ந்து மகிழத் தக்கதாகும்.

சிறிது குடிசை ஒன்றினை அமைக்கவேண்டுமானால், கால்களை நட்டு, இருபக்கத்தும் பக்கவாரைகளாகிய கைகளை ஏற்றி, அவற்றின்மேல் சார்த்துக்கழிகளை வரிந்துகட்டி, அதன் மேல் ஓலை முதலியவற்றை வேய்ந்து, ஓரங்களில் மண்ணைக் குழைத்து சுவரெடுத்து, நுழைவாயிலும் புழைக்கடைவாயிலும் என இரண்டு-வாசல்களை வகுத்துப் பக்கங்களில் காற்றுப் புகுந்து இயங்கக் காலதர்களை (சன்னல்களை) அமைத்துக் கண்டோர் யாவரும் விரும்பித் தங்குதற்கேற்ற கவர்ச்சியுடைய தாய்ச் செய்து முடித்தல் இயல்பு. இங்ஙனம் அருளாளனாகிய இறைவனும் உயிர்களாகிய நாம் விரும்பித் தங்குதற்கேற்ற கவர்ச்சியுடையதாக மக்கள் யாக்கையாகிய இவ்வுடம்பை நமக்குப் படைத்து வழங்கியுள்ளான். இதனை,

"கால்கொடுத் திருகை யேற்றிக் கழிநிரைத் திறைச்சி மேய்ந்து
தோல்படுத் துதிர நீராற் சுவரெடுத் திரண்டு வாசல்
ஏல்வுடைத்தா வமைத்தங் கேழு சாலேகம்பண்ணி
மால்கொடுத் தாவிவைத்தார் மாமறைக்காடனாரே" (4-33-4)

எனவரும் திருநேரிசையில் அப்பரடிகள்சுவைபொருந்த விரித்துரைத்துள்ளார். இங்ஙனம் உயிர்களுக்கென அமைத்த யாக்கையாகிய இவ்வில்லம், உயிர்மட்டுமே நிலையாய்த் தங்குதற்கேற்ற சொந்த வீடாக அமையாமல், ஐம்பொறிகள் தங்குதற்குரிய உரிமையிடமாகவும் அவ்வைம் பொறிகளுக்கிடையே உயிர் ஒதுக்குக் குடியிருக்கவேண்டிய துச்சிலாகவும் அமைந்து, உயிர் வாழ்வுக்குப் பல்வகைத் துன்பங்களையும் விளைப்பதாயினும், இக்குடிசையிற் புக்க உயிரானது இதனை விட்டு மீள விரும்பாததொரு கவர்ச்சியினை இதற்கு உண்டாக்கி, இக்குடிசையில் உயிர்களை இறைவன் குடியேற்றினான் என்பார், 'மால்கொடுத்து ஆவி வைத்தார் மாமறைக் காடனாரே' என்றார். இவ்வாறே ஞானசம்பந்தரும்,

'என்பினாற்கழி நிரைத் திறைச்சிமண் சுவரெறித் திதுநம்மில்லம்
புன்புலால் நாறுதோல் போர்த்துப் பொல்லாமையால் முகடுகொண்டு
முன்பெலாம் ஒன்பது வாய்தலார் குரம்பையின் மூழ்கிடாதே
அன்பனாரூர் தொழு துய்யலாம் மையல் கொண் டஞ்சல் நெஞ்சே'
(2-70-8)

என யாக்கையின் இழிபினையும் அதன் நிலையாமையினையும் தம் நெஞ்சிற்கு அறிவுறுத்தியுள்ளமை காண்க.

அப்பர்சுவாமிகள் இறைவனை நோக்கி உரையாடும் நிலையிற் பாடிய பாடல்கள் படிக்குந்தோறும் சுவை விளைப்பனவாகும். திருவொற்றியூர்க்குச் சென்று அங்குக் கோயில்கொண்டருளிய இறைவனை வணங்கி மகிழ்ந்த திருநாவுக்கரசர், எழுத்தறியும் பெருமானாகிய இறைவனை நோக்கி, "வேதங்களை அருளிய முதல்வனே, நீ கோயில் கொண்டருளிய இத்திருப்பதியினை நீ பிறரிடம் ஒற்றியாகப் பெற்றுள்ளாய். நின்பால் ஒற்றி வைத்த அவர்கள் வழியில் ஒருவரும் இப்பொழுது இல்லாத நிலையில் ஒற்றியூராகிய இவ்வூர் நினக்குச் சொந்தமான ஊராய் விட்டது. ஆயினும் நின்பால் வைத்தார்க்கு உறவானோர் யாரேனும் வந்து கேட்க நேர்ந்தால் இதனைத் திருப்பிக்கொடுத்து விட வேண்டுமே என்ற எண்ணத்தால் இவ்வூரை நீ விற்றுவிட முயலுதலும் கூடும். அவ்வாறு இவ்வூரை நீ விலைக்கு விற்று விட நினைத்தால், நீ இதற்கு என்ன விலை சொன்னாலும் கொடுத்து வாங்கிக்கொள்ளுதற்குப் பலரும் முன்வருவார்கள். அவ்வாறு அவர்கள் முன் வருதற்குக் காரணம், வண்டுகள் நறுமலர்களைச்

சுற்றி யாழோசையினையெழுப்பித் தேனுண்ணுதற்கு இடமாகிய சோலையும் இளமரக்காவும் சூழ்ந்து நெருங்கி விளங்கும் இத்திருவொற்றியூரின் இயற்கை வளமேயாகும். இதனை விற்றால் பெரும் பொருள் கிடைக்குமென நினைத்து விற்று விடாதே. இதன் சிறப்பினை நோக்காது விற்றுவிட்டால் பின் இதுபோன்றதொரு வளமார்ந்த ஊரினை நீ எங்கும் பெறுதற்கு இல்லை என ஒற்றியூரின் சிறப்பினை அறிவுறுத்துவதாக அமைந்தது.

"சுற்றிவண்டியாழ் செயுஞ் சோலையுங் காவுந் துதைந்திலங்கு
பெற்றிகண்டால் மற்றியாவருங்கொள்வர், பிறரிடைநீ
ஒற்றிகொண்டாய் ஒற்றியூரையுங் கைவிட் டுறுமென் றெண்ணி
விற்றிகண்டாய் மற் றிதுவொப்பதில்லிடம் வேதியனே" (4-6-6)

எனவரும் திருநேரிசையாகும். இங்ஙனம் உவகைச் சுவையும் நகைச்சுவையும் அமைய அப்பர் அருளிய திருப்பாடல்கள் பலவுள.* (*இப்பாடல்களின் நயத்தினை திருவாளர் கோ. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் எழுதிய 'அப்பர் விருந்து' என்னும் நூலிற் காணலாம்)

தொண்டர்க்கு தொண்டராம் நற்பேற்றினை விரும்பிய நாவுக்கரசர், அடியார்க்கடியராய் வாழும் அத்தொண்டின் நிலையினைத் தவிரத் தமக்குப் பேரின்பம் தரும் பதவி பிறிதொன்றுமில்லை என்பதனை,

'அண்டர் வாழ்வும் அமரர் இருக்கையும்
வண்டு வீற்றிருக்கும் கருத்தொன்றிலோம்
வண்டுசேர் மயிலாடு துறையரன்
தொண்டர் பாதங்கள் சூடித் துதையிலே' (5-39-3)

என்ற பாடலால் அறிவுறுத்திய திறம் ஓர்ந்துணரத்தக்கதாகும். அடியார்க்குத் தொண்டுபட்டு மனிதரில் தலையான அப்பெரு மக்களை வாழ்த்தி வணங்குதலே மகிழ்வளிப்பதெனத் தெளிந்த அப்பரடிகள், சிவனடியார்களின் பெருமையினைப் பல பாடல் களிலும் பாராட்டிப் போற்றியுள்ளார்.

'வானந்துளங்கிலென் மண் கம்ப மாகிலென் மால்வரையும்
தானந் துளங்கித் தலைதடுமாறிலென் தண்கடலம்
மீனம்படிலென் விரிசுடர் வீழிலென் வேலை நஞ்சுண்டு
ஊனமொன் றில்லா ஒருவனுக் காட்பட்ட உத்தமர்க்கே'
(4-112-8)

எனவரும் திருவிருத்தம் இறைவனுக்கு ஆட்பட்ட பெருமக்க ளாகிய அடியார்களின் உள்ளத்துறுதியைப் புலப்படுத்தல் காணலாம்.

சிவனடியார்கள், "வருத்துணையும் சுற்றமும் பற்றும் விட்டு வான்புலன்கள் அகத்தடக்கி மடவாரோடும் பொருந்து அணை

மேல் வரும் பயனாகிய போகத்தை" அறவே துறந்து போந்து திருமடத்தில் தங்கியிருந்து சிவபரம் பொருளை இடைவிடாது சிந்தித்துப் போற்றும் நல்லியல்புடையராவர். ஆதலின் அவர்கள் உள்ளத்திலே இறைவன் என்றும் எழுந்தருளியுள்ளான் என்பதனை,

'மடமன்னும் அடியார்தம் மனத்தினுள்ளார்' (6-10-6)

என்ற தொடரில் அப்பரடிகள் அறிவுறுத்தியுள்ளார். இங்ஙனம் திருநீரால் கண்டிகையும் பூண்டு இறைவனை இடைவிடாது போற்றும் மெய்யடியார்களை இறைவனாகவே மதிந்து, அன்னோர் பிறந்த குலம் முதலிவற்றின் உயர்வு தாழ்வைக் கருதாமல் வழிபடும் அன்புடையார் உள்ளத்திலே, காணுதற் கரிய பெருமானைக் கண்டு மகிழலாம் என்பது அப்பரடிகள் கண்டுணர்ந்த திருவருள நுபவமாகும்.

'எவரேனுந் தாமாக விலாடத்திட்ட
திருநீறுஞ் சாதனமுங் கண்டால் உள்கி
உவராதே யவரவரைக் கண்டபோது
உகந்தடிமைத் திறநினைந்தங் குவந்துநோக்கி
இவர்தேவர் அவர்தேவர் என்று சொல்லி
இரண்டாட்டா தொழிந்தீசன் திறமேபேணிக்
கவராதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே' (6-61-3)

எனவரும் திருத்தாண்டகம், சிவனடியார்களைச் சிவனெனவே தெளிந்து வழிபடுத்திறத்தினை அறிவுறுத்தல் காணலாம்.

சிவனடியார்களைக் கண்டால் அவர்பால் அன்பும் அச்சமும் கொண்டு அவர்களைப் பணிந்து அகலுதல் வேண்டு மென இயமன் தூதர்களுக்கு அறிவுறுத்தும் முறையில் அமைந்தது, காலபாசத் திருக்குறுந்தொகையாகும்.

கடவுளை வழிபடுதற்கு அன்பு, கொல்லாமை, பொறி யடக்கம், வாய்மை, பொறை, அருள், அறிவு, தவம் என்னும் எண்வகை மலர்கள் இன்றியமையாதன என்பதனை,

'எட்டு நாண்மலர் கொண்டவன் சேவடி
மட்ட லரிடு வார்வினை மாயுமால்
கட்டித் தேன்கலந் தன்ன கெடிலவீ
ரட்ட ணாரடி சேரு மவருக்கே' (5-54-1)

எனவரும் திருப்பதிகத்தில் அடிகள் குறித்துள்ளார்.

தம்மை இடர்நீக்கி உய்வித்த திருவைந்தெழுத்தின் சிறப்பினை அப்பரடிகள் பல திருப்பாடல்களிலும் வெளிப் படையாக விரித்துக் கூறியிருத்தலைக் கூர்ந்து நோக்குங்கால்,

அருந்தவம் தரும் அஞ்செழுத்தினை ஓதி, உலக மக்கள் அனைவரும் இடர்நீங்கி யின்புறுதல் வேண்டும் என்னும் பெரு வேட்கையுடையவர் அப்பரடிகள் என்பது நன்கு புலனாம். திருநாவுக்கரசர் தாம் பெற்ற ஐந்தெழுத்துபதேசத்தை,

கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்றன் நாமம் பயின்றேன் உனதருளால்
திருவாய்ப் பொலியச் சிவாயநமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீபாதிரிப்புலியூர் அரனே' (4-94-6)

எனவும்,

'நமச்சிவாயவே ஞான முங்கல்வியும்
நமச்சிவாயவே நானறிவிச்சையும்
நமச்சிவாயவே நாநவின்றேத்துமே
நமச்சிவாயவே நன்னெறிகாட்டுமே' (5-90-2)

எனவும் வரும் திருப்பாடல்களில் நுண்மையும் தெளிவும் பொருந்த வெளியிட்டருளியதிறம் நினைந்து போற்றற் பால தாகும். ஆலமர் செல்வனாகிய கடவுள், முனிவர் நால்வர்க்கு அறமுதலிய நாற்பொருளையும் உபதேசிக்க எழுந்தருளிய நிலையில், அப்பெருமான் சின்முத்திரையாகக் காட்டிய திருக் கரத்தில் அமைந்துள்ள ஐந்து விரல்களும் திருவைந்தெழுத்தின் பொருளைவிளக்கும் நிலையில் அமைந்தனவே என்பதும், இத்திருவைத்தெழுத்தினை ஓதுதலால் காமம் முதலிய குற்றத்தைப் போக்குதலும், பாம்பின் நஞ்சு முதலியவற்றால் நேரும் துன்பங்களை நீக்குதலும் கைகூடும் என்பதும் ஆகிய உண்மையினை,

'கொங்கலர் வன்மதன் வாளியைந்தகத்
தங்குள பூதமும் அஞ்ச ஐம்பொழில்
தங்கரவின் படம் அஞ்சும், தம்முடை
அங்கையில் ஐவிரல் அஞ்செழுத்துமே' (3-22-5)

எனவரும் திருப்பாடலில் ஞானசம்பந்தப் பிள்ளையார் அறிவுறுத்தி யுள்ளமை இங்கு நோக்கத் தக்கதாகும்.

திருநாவுக்கரசர், தம் காலத்திற்கு முன் தோன்றிய சண்டேசர், கண்ணப்பர், கணம்புல்லர், அமர் நீதிநாயனார், சாக்கிய நாயனார், கோச்செங்கட் சோழர் ஆகிய அடியார்களையும், தம் காலத்தில் உடன் வாழ்ந்த நமிநந்தியடிகள்; அப்பூதியடிகள், திருஞான சம்பந்தர் ஆகிய பெருமக்களையும் தாம் பாடிய திருப்பதிகத்திற் குறித்துப் போற்றியுள்ளார். திருவாலங்காட்டுத் திருத்தாண்டகத்தில்,

'பாவுற்றபாடல் உகப்பார் தாமே' (8-78-3)

'பண்தான் இசைபாட நின்றார் தாமே' (6-78-6)

'செய்யாள் வழிபட நின்றார் தாமே' (6-78-7)

'சீலத்தார் ஏத்தும் திறத்தார் தாமே' (6-78-10)

எனவரும் தொடர்ப் பொருளைக் கூர்ந்து நோக்குங்கால் இத் தொடர்கள், 'அறவா நீ ஆடும்போது உன்னடியின் கீழ் இருக்க' என இறைவனை வேண்டி, ஆலங்காட்டிறைவன் ஆட எடுத்த பெருஞ் சேவடிக்கீழ் என்றும் இருக்கின்றாராகிய காரைக் காலம்மையாரைக் குறித்தன எனக் கொள்ளுதல் பொருந்தும். இவ்வாறே,

'வணங்குஞ் சிறுத்தொண்டர் வைகலேத்தும் வாழ்த்துங் கேட்டு
அணங்கும் பழையனூர் ஆலங்காட் டெம்மடிகளே' (1-45-7)

எனவருஞ் சம்பந்தர் தேவாரத் தொடர், காரைக்காலம்மை யாரைக் குறித்துப் போற்றும் முறையில் அமைந்திருத்தல் இங்கு ஒப்புநோக்கி யுணர்தற்குரியதாகும்.

-"சுடருருவில்
என்பறாக் கோலத் தெரியாடும் எம்மானார்க்கு
அன்பறாது என்னெஞ் சவர்க்கு" (அற்புத-2)

என்பது அம்மையார் அருளிய அற்புதத் திருவந்தாதி. இத்திருப் பாடலை யோதி மகிழ்ந்த திருநாவுக்கரசர், இத்திருப்பாடற் சொற்பொருளை,

"சுடருருவில் என்பறாக் கோலத்தானை" (6-92-10)

என அவ்வாறே எடுத்தாண்டு இறைவனைப் போற்றுகின்றார்.

"நூலறிவு பேசி நுழைவிலாதார் திரிக
நீலமணி மிடற்றான் நீர்மையே - மேலுவந்த
தெக்கோலத் தெவ்வுருவா யெத்தவங்கள் செய்வார்க்கும்
அக்கோலத் தவ்வுருவே யாம்" (அற்புத-33)

என்பது அம்மையார் திருவந்தாதி. இதனை யடியொற்றி யமைந்தன,

"ஆரொருவர் உள்குவார் உள்ளத்துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோன்றும்" (6-18-11)

எனவும்,

"பாராழி வட்டத்தார் பரவியிட்ட
பன்மலரும் நறும்புகையும் பரந்து தோன்றும்" (6-18-6)

எனவும் வரும் அப்பர் அருள் மொழிகளாகும்.

*இவ்வாறே, திருமூலர்அருளிய' திருமந்திரப் பாடல்களின் சொற்பொருள் நலங்கள் அப்பர் அருளிய திருப்பதிகங்களில் ஆங்காங்கே அமைந்திருத்தல் காணலாம்.*

'புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அது கண்டருள்புரியா நிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்மிறை யீசனை
நண்ணறியாமல் நழுவுக்கின்றாரே' (திருமந்திரம் 1828)

*எனச் சிவ பூசையின் இன்றியமையாமையினைத் திருமூலர் அறிவுறுத்துகின்றார்,*

'கற்றுக் கொள்வன வாயுள நாவுள
இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடை யானுளன் நாமுளோம்
எற்றுக்கோ நமனால் முனிவுண்பதே' (5-91-6)

*எனவரும் திருக்குறுந் தொகை, திருமூலர் திருமந்திரத்தை அடியொற்றி யமைந்துளது,*

'தத்துவ ஞானந் தலைப்பட்டவர் கட்கே
தத்துவ ஞானந் தலைப்படலாய் நிற்கும்
தத்துவ ஞானத்துத் தானவ னாகவே
தத்துவ ஞானானந் தந்தான் தொடக்குமே' (திருமந்-2330)

*எனவரும் திருமூலர் வாய்மொழியை அடியொற்றியது.*

'தத்துவந் தலைகண்டறி வாரிலைத்
தத்துவந் தலை கண்டவர் கண்டிலர்
தத்துவந் தலை நின்றவர்க் கல்லது
தத்துவ னலன் தண்புக லூரனே' (5-46-7)

*எனவரும் திருக்குறுந் தொகையாகும்.*

*உயிரானது அரனருளிய சிவஞானத்தினாலே தன்னையும் உயிர்க்குயிராகிய இறைவனையும் காணுதல் வேண்டும் என்பதனை,*

'தன்னினிற் றன்னை யறியுந் தலைமகன்
தன்னினிற் றன்னை யறியத் தலைப்படும்
தன்னினிற் றன்னைச் சார்கில னாகில்
தன்னினிற் றன்னையுஞ் சார்தற் கரியவே' (2419)

*எனவரும் திருமந்திரத்தில் திருமூலர் அருளிச் செய்துள்ளார். இத்திருமந்திரத்தை,*

'தன்னிற் றன்னை யறியுந் தலைமகன்
தன்னிற் றன்னை யறியிற் றலைப்படும்

தன்னிற் றன்னை யறிவில னாயிடில்
தன்னிற் றன்னையுஞ் சார்தற் கரியனே' (5-97-29)

எனவரும் திருக்குறுந் தொகையில் அவ்வாறே எடுத்தாண்டுள்ளார். இங்ஙனம் அப்பரடிகள் திருமந்திரப் பொருளை எடுத்தாண்ட இடங்கள் இன்னும் பலவுள. திருமந்திரத்திலும் திருநாவுக்கரசர் திருப்பதிகங்களிலும் அமைந்துள்ள ஒப்புமைப் பகுதிகளைத் தொகுத்து நோக்குதல், திருமுறைப் பனுவல்களின் பொருள் நலங்களை உள்ளவாறு அறிந்து கோடற்கு இன்றியமையாத தொன்றாகும்.

திருநாவுக்கரசர் திருப்பதிகங்களில், சிவபெருமான் நிகழ்த்தி யருளிய தொன்மையான புராணச் செய்திகள் பல விரித்து ரைத்துப் போற்றப்பட்டுள்ளன.

திருநாவுக்கரசர் அருளிய பதிகங்களில் 'சொற்றுணை வேதியன்' என்னும் முதற்குறிப்புடைய திருப்பதிகம் 'நமச்சிவாய' என்னும் திரு ஐந்தெழுத்தின் சிறப்பினை விளக்குவதாதலின், நமச்சிவாயத் திருப்பதிகம் எனப் பெயர்பெற்றது. பொருளமைப் பாற் பெயர்பெற்றவை; திரு அங்கமாலை, தசபுராணம், குறைந்த திரு நேரிசை, காலபாசத் திருக்குறுந்தொகை, ஆதிபுராணத் திருக்குறுந்தொகை, இலிங்கபுராணத் திருக்குறுந்தொகை, பாவ நாசத்திருக்குறுந்தொகை, பெரிய திருத்தாண்டகம், மறுமாற்றத் திருத்தாண்டகம், அடைவு திருத்தாண்டகம், வினாவிடைத் திருத்தாண்டகம், அடையாளத் திருத்தாண்டகம் என்பன. பாடல் தோறும் பயின்ற சொற்பொருளமைப்பாற் பெயர் பெற்றவை; கொப்பளித்த திருநேரிசை, நினைந்த திருநேரிசை, ஆருயிர்த் திரு விருத்தம்; சரக்கறைத் திருவிருத்தம், பசுபதி திருவிருத்தம், நின்ற திருத்தாண்டகம், திருவடித் திருத்தாண்டகம், புக்க திருத் தாண்டகம், காப்புத் திருத்தாண்டகம், ஏழைத் திருத்தாண்டகம், போற்றித் திருத்தாண்டகம் என்பனவாம். முதற் குறிப்பாற் பெயர்பெற்றது, 'சிவனெனுமோசை' என்ற பதிகம். ஈற்றுத் தொடராற் பெயர்பெற்றது. பாவநாசத் திருப்பதிகம், பொருட் டொகையாற் பெயர்பெற்றவை; மனத்தொகைத் திருக்குறுந் தொகை, சித்தத் தொகைத் திருக்குறுந்தொகை, உள்ளத் தொகைத் திருக்குறுந்தொகை, ஷேத்திரக் கோவைத் திருத் தாண்டகம் என்ற பதிகங்களாகும். பாடல்களிற் பயின்ற ஈற்றுச் சொல்லாற் பெயர் பெற்றவை; மறக்கிற்பனே யென்னுந் திருக் குறுந்தொகை, தொழற்பாலதே யென்னுந் திருக்குறுந் தொகை என்பனவாகும். பொதுவகையாற் பெயர் பெற்ற பதிகங்கள் தனித் திருநேரிசை, தனித் திருக்குறுந்தொகை, தனித்திருத் தாண்டகம் பலவகைத் திருத்தாண்டகம் என வரும் திருப்பதிகங்களாகும்.



# 6. ஆரூரர் அருளிச் செயல்

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகிய பெருமக்கள் காலத்தையடுத்துத் தோன்றியவர் நம்பியாரூரர் என்பது முன்னர் விளக்கப்பெற்றது, முன்னை இருவர் வாழ்ந்த காலத்தில் தமிழ்நாடு 'அயல்வேந்தர் ஆட்சியிலும், புறச்சமயச் சூழ்ச்சியிலும் அகப்பட்டுத் தன் ஆற்றல் குன்றி இருந்தது. அருளாசிரியராகிய அப்பெருமக்கள் இருவரது தன் முயற்சியினால் தமிழ் மக்கள் தம் உள்ளத்து அச்சம் நீங்கப்பெற்று வீறு கொண்டு எழுந்தனர். தமிழ்நாடெங்கும் பண்டுபோல் செந்தமிழும் சிவநெறியும் தழைத்தோங்கின. பல்லவர் முதலிய அயல் வேந்தரும் தமிழராகவும், சைவராகவுமாயினர். தமிழ் மூவேந்தரும் ஆற்றல் பெற்று விளங்கினர். தமிழ்மக்கள் பண்டு போல் உரிமை வாழ்வு நடத்தினர். இவ்வாறு தமிழகம் அமைதியுற்ற காலத்தில் தோன்றியவர் நம்பியாரூரர் ஆதலால், அவரருளிய திருப்பதிகங்களில் சமணம், பௌத்தம் முதலிய புறச் சமயங்களைப் பற்றிய கண்டனங்களுக்கு இடம் ஏற்படவில்லை.' 'நல்லிசை ஞான சம்பந்தனும், நாவினுக்கரசரும் பாடிய நற்றமிழ் மாலை சொல்லியவே சொல்லி ஏத்துகப்பானை' என்னும் சுந்தரர் திருப்பாடலைக் கூர்ந்து நோக்குங்கால், இவர் தமக்கு முன்னர் வாழ்ந்த ஞானசம்பந்தர் நாவுக்கரசர் ஆகிய பெருமக்கள் இருவரும் அருளிய திருப்பதிகங்களை இடைவிடாது பாடிப் போற்றி இறைவனது உவப்பைப் பெற்றவர் என்பது நன்கு விளங்கும்.

இவரருளிய பதிகங்கள், திருஞானசம்பந்தப்பிள்ளையார் அருளிய திருப்பதிகங்களைப் போன்று 'உளங்குளிர்ந்த போதெலாம் உகந்துகந்துபாடும்' உவகைத் திறத்தையும், நாவுக்கரசருடைய திருப்பதிகங்களைப் போன்று தன்பிழை நினைந்து ஏசறும் இரங்கலுணர்வையும் ஒருங்குடையனவாய், அவ்விருவர் திருப்பதிகங்களுக்கும் அமைந்த விளக்கவுரை யாகவும் கருத்துரை யாகவும் திகழ்தலைக் காணலாம்.

நம்பியாரூரர் அருளிய திருப்பதிக யாப்புக்களிற் பெரும் பாலான, முன்னையிருவர் அருளிய திருப்பதிகங்களை அடி யொற்றி அமைந்தவை, இயலமைதி என்ற பகுதியில் விளக்கப் பெற்றது. நாவலூரர் இறைவரால் தடுத்தாட் கொள்ளப் பெற்றுத் தம்பிரான் தோழராக விளங்கியவராதலின், அவர் பாடிய திருப்பதிகங்களிற் பெரும்பாலன, எல்லாம் வல்ல இறைவனைத் தம் உயிர்த் தோழனாக எண்ணி அப்பெருமானுடன் அன்பின்

நயந்து விளையாடியும், வன்கண்மையுடன் ஊடியிடித்துக் கூறியும், தமக்கு இன்றியமையாத அனைத்தையும் அப்பெருமான் பால் வேண்டிப் பெறும் உரிமையுணர்வைப் புலப்படுத்துவனவாக உள்ளன. 'நலியேன் ஒருவனை நான் உமையல்லால் நாட்டியத் தான் குடி நம்பீ!' என நம்பியாரூரர் தம் உள்ளக்கருத்தாக இறைவனிடம் வெளியிட்டுக் கூறும் இத்தொடர், வலியற்ற நிலையில் விளங்கும் உலக மக்கள்பால் தமக்கு வேண்டிய பொன் பொருள் முதலியவற்றை வேண்டி அல்லற் படும் நிலையை விட்டு, எவ்வுயிர்க்கும் உயிராக விளங்கும் இறைவன் ஒருவனையே நலிந்து வேண்டிப்பெற முயலும் ஆரூரரது தோழமைத் திறத்தை நன்கு விளக்குவதாகும்.

சுந்தரர் பாடிய பதிகங்களில் தக்கேசிப்பண்ணமைந்த திருப்பதிகங்கள் படிப்போருடைய உள்ளத்தை நெகிழ்விக்கும் தனிச் சிறப்புடையனவாகத் திகழ்கின்றன. திருநாவுக்கரசர் அருளிய திருப்பதிகங்களில் திருத்தாண்டகயாப்பு அவர்க்கே உரியமுறையில் சிறந்து விளங்குவதைப் போன்று, சுந்தரர் பதிகங்களில் தக்கேசிப்பண்ணமைந்த பதிகங்கள் ஆரூரர்க்கே யுரிய சொல் நடையில் அமைந்துள்ளன.

தோழமை நெறியில் நின்ற நம்பியாரூரர், தம்மைத் தடுத்தாட் கொண்ட இறைவனை நோக்கி, 'அத்தா உனக்காளாய் இனி அல்லேன் எனலாமே' என வினவும் பகுதியும், யாவராலும் அணுகுதற்குரிய சிவபெருமானது திருக்கோலத்தை விரித் துரைத்து 'அடிகேள் உனக்காட்செய அஞ்சுதுமே' எனக் கூறும் பகுதியும், 'ஆர்ப்பது நாகம் அறிந்தோமேல் நாம் இவர்க்கு ஆட்படோமே' என அஞ்சிக் கூறும் பகுதியும், ஓணகாந்தன் தனிப்பெருமானை நோக்கி நகைச்சுவை பட உரையாடும் பகுதி களும், பாச்சிலாச்சிராமத்து இறைவனை நோக்கி, "இவரலாது இல்லையோ பிரானார்" எனவும் ஆரூரர் இறைவரை நோக்கி, 'திருவாரூரிர் வாழ்ந்து போதிரே' எனவும் ஊடிக் கூறும் பகுதிகளும், எனக்கு இன்னது செய்கவென இறைவனை ஏவும் முறையில் அமைந்த பதிகங்களும் (20, 25, 46), கைக்கிளை முதலிய அகத்துறைப் பொருள்பட அமைந்த திருப்பதிகங்களும், அன்பரது துயரினைப் போக்கவேண்டுமென வேண்டும் பதிகமும், ஆரூரர் தம் குடும்ப வாழ்வுக்கென இறைவன் பால் பொன்னும் பொருளும் பிறவாதிகளும் ஆகியவற்றை வேண்டிப்பெறும் முறையில் பாடிய திருப்பதிகங்களும் ஏழாந் திருமுறையில் அமைந்துள்ளன. கயிலைக்குச் செல்லும் வழியில், "தானெனை முன்படைத்தான்" என்னும் பதிகம் சுந்தரர் இறைவனருளால் தம் ஊன் உயிர் வேறாகும் நிலையில் கயிலைப் பெருமான் கழலடைந்த நெறிமுறையை அழகுபெறத் தெளிவாக அறிவுறுத்துவதாகும்.

இறைவனைக் கண்ணாரக் கண்டும் அவனருளால் பல நலங்களைப் பெற்றும் மகிழ்ந்த சுந்தரர், அம்மகிழ்ச்சியைப் புலப் படுத்தும் முறையில் அருளிய திருப்பதிகங்களும், இறைவனை உணராத நிலையிலும் அருளாளனாகிய அப்பெருமான் தம் பொருட்டுச் செய்த பேருதவியை நினைந்த நினைந்து நெஞ்சம் கசிந்துருகிப் போற்றும் பதிகங்களும்; தம்பிழை நினைந்து ஏசறும் பதிகங்களும், 'யான்செய்த பிழைகளை எல்லாம் பொறுத்தல் எனது தோழனாகிய நினது கடனே' என அறிவுறுத்தும் பதிகங்களும், இறைவன் தம்மைத் தண்டித்த நிலையில், அப் பெருமானோடு முறைப்பாடுடையராய் இறைவனை அயன்மை செய்து இகழும் நிலையிற் பாடிய பதிகங்களும், பெற்ற சிற்றின்பமே பேரின்பமாக முற்றவரும் தன்மையில் வாழ்ந்த நம்பியாரூரரது வாழ்க்கை நிலையை வெளிப்படுத்தும் பதிகங் களும், இவ்வேழாந்திருமுறையில் இடம் பெற்றிருத்தல் அறியத் தக்கதாகும். சுந்தரர் திருப்பதிகங்களிற் பல திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் அருளிய தேவாரப் பதிகங்களின் சொற்பொரு ளமைதியை அடியொற்றியமைந்திருத்தல் காணலாம்.

1. 'பெண்ணாண் அலியாகும் பித்தா பிறைசூடீ' என இறைவனைப் போற்றினார் ஆளுடையபிள்ளையார், அவர் குறித்த 'பித்தா பிறைசூடீ' என்பதனை முதலாகக்கொண்டு நம்பி யாரூரர் திருவெண்ணெய் நல்லூர் அருட்டுறைப் பெருமானைப் பாடிப் போற்றியுள்ளார்.

2. 'புலனைந்தும் பொறிகலங்கு நெறிமயங்கி யறிவழிந்திட் டைம்மே லுந்தி, அலமந்த போதாக அஞ்சேலென்றருள் செய்வான்' என்பது சம்பந்தர் தேவாரம்.

'புலனைந்து மயங்கி யகங்குழையப் பொருவேலோர் நமன்தமர் தாநலிய, அலமந்து மயங்கி யயர்வதன் முன் அடியேனுய்யப் போவதோர் சூழல் சொல்லே' என்பது சுந்தரர் வாய்மொழி.

3. 'மைவரை போற்றிரை' எனவும், 'குன்று போற்றிரைகள்' எனவும் கடலலைகளுக்கு மலையை உவமை கூறினார் சம்பந்தர். 'மலைக்கு நிகரொப்பன வன்றிரைகள்' (7-4-1) என அதே உவமையை எடுத்தாண்டார் சுந்தரர்.

4. காஞ்சி நகரத்தில் காமக்கோட்டத்தில் எழுந்தருளி யிருந்து எண்ணான்கு அறங்களையும் வளர்த்தருளும் அறப் பெருஞ் செல்வியை ஒரு பாகத்திற் கொண்ட இறைவன், பிரமனது தலையோட்டிற் பிச்சை யேற்றதன் கருத்தென்னை என அடியார்களை நோக்கி வினவுவார்,

'நச்சித் தொழுவீர்கள் நமக்கிது சொல்லீர்
கச்சிப்பொலி காமக் கொடியுடன் கூடி
இச்சித் திரும்பூளை யிடங்கொண்ட வீசன்
உச்சித் தலையிற்பலி கொண்டழ னூணே' (2-36-4)

எனப்பாடிப் போற்றினார் சம்பந்தர்.

'வாரிருங்குழல் வாணெடுங்கண் மலை மகள்மது விம்மு கொன்றை
தாரிருந்தட மார்புநீங்காத் தையலாளுல குய்ய வைத்த
காரிரும்பொழிற் கச்சிமுதூர்க் காமகோட்டமுண் டாக நீர்போய்
ஊரிடும் பிச்சை கொள்வதென்னே ஓணுகாத்தன் தளியுளீரே'
(7-5-6)

என அதே செய்திபற்றி இறைவனை வினவினார் சுந்தரர்.

5. 'கோவலன்நான்முகன்' எனவும் 'ஏவலனார்' எனவும் (3-101-9) சம்பந்தர் தேவாரத்தில் வந்துள்ள தொடர்கள், சுந்தரர் அருளிய 'கோவலன் நான்முகன்' (7-17-1) என்னும் திருப்பாடலில் அவ்வாறே அடியெதுகையில் அமைந்திருத்தல் காணலாம்.

6. 'விரையார் கொன்றையினாய்' (3-55-1) எனவரும் ஞான சம்பந்தர் திருப்பதிகப் பொருளமைதியும் சொற்றொடரும், 'விரையார் கொன்றையினாய்' (7-21-8) என்னும் முதற் குறிப்பினையுடைய சுந்தரர் பாடலிலும் அத்திருப்பதிகத்திலும் அவ்வாறே பொருந்தியிருத்தல் அறியத்தக்கதாகும்.

7. 'எங்கேனும் யாதாகிப் பிறந்திடினம் தன்னடியார்க்
கிங்கேயன் றருள்புரியும் எம்பெருமான்' (2-40-6)

எனவரும் திருஞானசம்பந்தர் திருப்பாடற்பொருளை அடியொற்றியது,

'எங்கேனு மிருந்துன் னடியே னுனைநினைந்தால்
அங்கேவந் தென்னொடு முடனாகி நின்றருளி
இங்கேயென்வினையை யறுத்திட் டெனையாளும்
கங்கா நாயகனே கழிப்பாலை மேயானே' (7-20-2)

எனவரும் சுந்தரர் தேவாரமாகும்.

8. சிவபெருமானுடைய திருவடிகளையன்றி மற்றெதனையும் பேணாத இயல்புடையவர் திருஞான சம்பந்தர் என்பது,

'கைச்சிறு மறியவன் கழலலாற் பேணாக்
கருத்துடை ஞானசம்பந்தன்' (1-71-14)

என்ற ஞானசம்பந்தர் திருக்கடைக் காப்பினால் உணர்த்தப் பட்டது. இக்குறிப்பினை அறிவுறுத்தும் முறையில் அமைந்தது,

'வம்பறா வரிவண்டு மணநாற மலரும்
மதுமலர் நற்கொன்றையான் அடியலாற் பேணா
எம்பிரான் சம்பந்தன்' (7-3--5)

*எனவரும் திருத்தொண்டத் தொகையாகும்.*

*9. 'பொய்யிலா அடிமை புரிந்தார்க் கருளாயே' என்பர் சம்பந்தர், (2-53-7)*

*'பொய்யடிமை இல்லாத புலவர்க்கும் அடியேன்' (7-39-7) என்றார் சுந்தரர்.*

*10.* 'வானைக்காவில் வெண்மதிமல்கு புல்கு வார்சடைத்
தேனைக்காவ லின்மொழித் தேவிபாக மாயினான்
ஆனைக்காவி லண்ணலை அபயமாக வாழ்பவர்
ஏனைக்காவல் வேண்டுவார்க் கேதுமேத மில்லையே'
(3-53-1)

*எனவரும் சம்பந்தர் பாடலை அடி யொற்றியது,*

'தேனைக்காவல் கொண்டுவிண்ட கொன்றைச் செழுந்தாராய்
வானைக்காவல் கொண்டு நின்றா ரறியா நெறியானே
ஆனைக்காவி லரனே பரனே அண்ணா மலையானே
ஊனைக்காவல் கைவிட்டுன்னை யுகப்பா ருணர்வாரே'
(7-47-7)

*எனவரும் சுந்தரர் திருப்பாட்டு. இவ்வாறே சம்பந்தர் பதிகத்தில் 'தாரமாய' என்ற முதற்குறிப்புடைய மூன்றாம் பாட்டும், சுந்தரர் பதிகத்தின் ஏழாம் பாட்டும் ஒத்திருத்தல் உணர்க.*

*11. 'ஓவுநாளும் உணர்வொழிய நாளென் முறுளங் கொள்ளவே' (2-115-4) என்பது சம்பந்தர் வாய்மொழி.*

'ஓவுநா ளுணர்வழியுநா ளுயிர்பொகுநா ளுயர்பாடை மேல்
காவுநா ளிவை யென்றலாற் கருதேன்' (7-48-3)

*என்பது சுந்தரர் வாக்கு.*

*12.*'எல்லையில் புகழெந்தை' (2 -107 - 5) *என்றார் சம்பந்தர்.*

'எல்லையில் புகழெம்பிரான் எந்தை' (7-58-3) *என்றார் சுந்தரர்.*

*13. திருக்கடவூர் மயானத்தில் எழுந்தருளிய இறைவனை,*

'பெரிய விடைமேல் வருவார் அவரெம் பெருமானடிகளே'
(2-80-1)

*எனப் போற்றினார் சம்பந்தர். இத்திருப்பாடலில் பெருமானடிகள் என்பதனோடு பெரிய என்னுர் அடைமொழியையும் இணைத்து,*

'பெருமான் கடவூர் மயானத்தும் பெரிய
பெருமானடிகளே' (7-53-1)

எனப் பரவிப் போற்றினார் நம்பியாரூரர்.

14.'மூவார் புரங்க ளெரித்த அன்று மூவர்க்கருள் செய்தான்' (1-67-7) என்பது சம்பந்தர் தேவாரம். இப்புராண நிகழ்ச்சியை,

'மூவெயில் செற்ற ஞான்றுய்ந்த மூவரில்
இருவர் நின்திருக் கோயிலின் வாய்தல்
காவலாளரென் றேவிய பின்னை
ஒருவன் நீ கரிகாட ரங்காக
மானை நோக்கியோர் மாநடம் மகிழ
மணிமுழா முழக்க அருள்செய்த
தேவதேவநின் திருவடி யடைந்தேன்
செழும் பொழில்திருப் புன் கூருளானே' (7-55-8)

எனவரும் திருப்பாடலாகும்.

15. திருவாரூரை வழிபடச் சென்ற ஞானசம்பந்தர், தம்மை எதிர்கொண்ட அடியார்களை நோக்கி, 'அந்தமாயுல காதியு மாயினான் .... .... எந்தை தான் எனை யேன்று கொளுங்கொலோ' (3-55-1) என அன்புடனும் அச்சத்துடனும் வினவுகிறார்.

அதுபோன்றே தம்மை எதிர் கொண்டழைத்த ஆரூரடியார்களை நோக்கிச் சுந்தரர் வினவுவதாக அமைந்தது, 'கரையும் கடலும்' (7-73-1) என்ற பதிகமாகும்.

16. 'மூவருமாகி யிருவருமாகி முதல்வனுமாய் நின்ற மூர்த்தி' என்றார் சம்பந்தர்.

'மூவரெனஇருவரென முக்கணுடை மூர்த்தி' என்றார் சுந்தரர்.

17. நானாவித வுருவாய் நமை யாள்வான்' (1-9-5) என்றார் சம்பந்தர்.

'நானாவித நினைவார்தமை நலியார் நமன்றமரே' (7-82-1) என்றார் சுந்தரர்.

18. 'மடையில் வாளைபாய' (1-23-1) என்பது சம்பந்தர் தேவாரம்.

'மடையில் வாளைகள் பாயும் வன்பார்த்தான் பனங்காட்டூர்' (7-86-1) என்பது சுந்தரர் வாய்மொழி.

19. மூன்றாந் திருமுறையில் 61-ஆம் பதிகமாகிய 'ஆதி யனாதிரையன்' என்னும் பஞ்சமப்பண்ணைப் போன்று அமைந்தது, ஏழாந் திருமுறையில் 97-ஆம் பதிகமாகிய 'ஆதியனாதிரையன்' என்னும் பஞ்சமப் பண்ணாகும்.

20. செருந்தி என்னும் மரம், பொன்போலும் நிறமுடைய மலர்களைப்பூத்து விளங்குதலை, 'செருந்தி செம்பொன் மலர் திருநெல்வேலி யுறை செல்வர் தாமே' (3-90-1) என்ற தொடரில் சம்பந்தர் குறித்தருளுவர்.

இவ்வாறே, 'செருந்தி செம்பொன் மலருந் திருநாகேச்சரத்தானே' (7-89-2) எனச் சுந்தரர் குறித்துள்ளார்.

இனி, திருநாவுக்கரசர் திருப்பதிகங்களின் சொற்பொருள் நலங்களைச் சுந்தரர் எடுத்தாண்ட திறத்தைக் காண்போம்.

1. 'முளைத்தானை எல்லார்க்கும் முன்னேதோன்றி' என்றார். திருநாவுக்கரசர். அத்தொடரின் பொருளை விரிந்துரைப்பதாக அமைந்தது, 'திரியும் மூப்பும் செற்றதும், கொற்றத் திறல் அரக்கனைச் செலுத்தம் மற்றைப், பெரிய நஞ்ச முண்டது முற்றும் பின்னையாய் முன்னமே முளைந்தானை' எனவரும் நம்பியாரூரர் திருப்பாட்டாகும்.

2. 'வேண்டுவார் வேண்டுவதே ஈவரன் கண்டாய்' (6-29-1) என்பது அப்பர்அருள்மொழி.

"என்னெவர் தேவர் இருடிகள் மன்னர் எண்ணிறந்தார்கள் மற்றெங்கும் நின்றேத்த, அவ்வவர் வேண்டியதே அருள் செய்து அடைந்தவர்க்கே இடமாகி நின்றுனை" என்பது நம்பியாரூரர் பாடல்,

3. 'புள்ளுவர் வேர்வெடர் புனந்திடைப் புருந்துநின்று
துள்ளுவர் வருனுகொள்வர் தூநெறி விளையவொட்டார்
மூள்ளுடையவர்கள்தம்மை மூக்கணான் பாதநீழல்
உள்ளிடைமறைந் துநின்றங் குணர்வினால் எய்யலாமே'
(4-77-5)

என்பது அப்பர் அருள்மொழி. இப்பாடற் கருத்தை அடியொற்றியமைந்தது. 'புள்ளுவராகு மனர்க்வே தாமும் புள்ளுவனார்' எனவரும் சுந்தரர் வரத்தாகும்.

4. 'நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே புக்கு நிற்கும் பொன்னார் சடைப் புண்ணியன்' (5-90-9) என்றார் திருநாவுக்கரசர்.

'நெக்கிறையே நினைவார் தனி நெஞ்சம், புக்குறை வானுறை பூவணமீதோ (7-11-7) என்றார் சுந்தரர்.

5. 'உற்றலால் கயவர் தேறார் என்னும் கட்டுரையோடொத்தேன்' (4-31-8) என்றார் அப்பரடிகள்.

'உற்றபோதல்லால் உறுதியை உணரேன்' (7-14-3) என்றார் ஆரூரர்.

*6. 'புள்ளிருக்கு வேளூரானைப் போற்றாதே ஆற்ற நாள் போக்கினேனே' என்பது திருநாவுக்கரசர் தேவாரம்.*

*'புரிந்தவந் நாளே புகழ்தக்க அடிமை போகு நாள் வீழுநாளாகி' என்பது சுந்தரர் திருப்பாட்டு.*

7. 'எவரேனுந் தாமாக விலாடத்திட்ட
திருநீறுஞ் சாதனமுங் கண்டால் உள்கி
உவராதே அவரவரைக் கண்டபோது
உகந்தடிமைத்திறம் நினைந்தங் குவந்துநோக்கி
இவர்தேவர் அவர் தேவர் என்று சொல்லி
இரண்டாட்டா தொழிந்தீசன் திறமே பேணிக்
கவராதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே' (6-61-3)

*என இறைவனடியார்களைச் சிவனாகவே எண்ணி வழிபட வேண்டும் என்று அப்பரடிகள் அறிவுறுத்தியுள்ளார். அவ்வறிவுரையின் வண்ணம் ஒழுகியவர் நம்பியாரூரர். இச்செய்தி,*

'துணிப்படும் உடையும் சுண்ண வெண்ணீறும்
தோற்றமும் சிந்தித்துக் காணில்
மணிப்படு கண்டனை வாயினால் கூறி,
மனத்தினால் தொண்டனேன் நினைவேன்'

*எனவரும் அவரது வாய்மொழியால் நன்கு விளங்கும்.*

*8. 'அழகார் கொன்றை வாசன்காண்' (6-65-2) என்றும், 'நறுங்கொன்றைப் போதின் உள்ளான்' என்றும் இறைவனது திருவடையாள மாலையாகிய கொன்றை மலரை அப்பரடிகள் போற்றியுள்ளார்.*

*இதனை யடியொற்றி 'வாசத்தினார் மலர்க் கொன்றை யுள்ளார்' (7-19-2) எனச் சிவபெருமானை நம்பியாரூரர் போற்றுகின்றார்.*

*9. 'சங்கையொன் றின்றியே தேவர் வேண்டச் சமுத்திரத்தின் நஞ்சுண்டு சாவா மூவாச் சிங்கமே' (6-99-22) என்பது திருத்தாண்டகம். 'அமரர் அடி பரவச் சங்கையை நீங்க அருளித் தடங்கடல் நஞ்ச முண்டார்' (7-19-3) என்பது சுந்தரர் திருப்பாட்டு.*

*10.'கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை' (4-7-1) எனவும், 'வஞ்சனையா ரார்பாடுஞ் சாராத மைந்தனை' (4-19-8) எனவும் கூறினார் அப்பரடிகள்.*

*'வஞ்சங்கொண்டார் மனஞ்சேர கில்லார்' (7-19-5) என்றார் நம்பியாரூரர்.*

*11. 'நுந்தாத ஒண்சுடரே' (6-31-4) (6-61-5) எனப் போற்றினார் அப்பரடிகள்.*

*'நுந்தாத ஒண்சுடரே நுனையே நினைந்திருந்தேன்' (7-21-4) என்றார் சுந்தரர்.*

*12. 'ஓதுவித்தாய் ....... ...... றின்பணி பிழைக்கில் புளியம் வளாரால் மோதுவிப்பாய் உகப்பாய், முனிவாய்' (4-99-1) என இறைவன் பால் முறையிட்டார் திருநாவுக்கரசர்.*

*இவ்வாறே 'ஒழிப்பாய் என்வினையை உகப்பாய் முனிந் தருளிந் தெழிப்பாய் மோதுவிப்பாய் விலை ஆவண முடையாய்' (7-23-5) என இறைவனை வேண்டிக் கொண்டார் சுந்தரர்.*

*13. 'காளத்தி காணப்பட்ட கணநாதன் காண்' (6-8-1) என்பது திருத்தாண்டகம்.*

*'கண்டார் காதலிக்கும் கணநாதன் எங்காளத்தியாய்' (7-26-1) என்பது சுந்தரர் தேவாரம்.*

14.'குருகாவூர் வெள்ளடை' என அப்பர் தேவாரத்திலும், 'வெள்ளடை' (3-1-24) எனச் சம்பந்தர் தேவாரத்திலும் கூறப்படுதல் போன்று, 'குருகாவூர் வெள்ளடை' 'நீயன்றே' எனச் சுந்தரர் தேவாரத்தில் கூறப்பட்டுள்ளது.

*15.'பண்ணினார் பாடலாகிப் பழத்தினில் இரதமாகி' (4-70-4) எனவும்,*

*'பழத்தின் இரதமாம் பாட்டிற் பண்ணாம்' (6-15-1) எனவும், 'கண்ணிடை மணியர்' எனவும் வரும் அப்பர் அருள் மொழிகளை அடியொற்றி அமைந்தது,*

> **'பண்ணிடைத் தமிழொப்பாய், பழத்தினிற் சுவை யொப்பாய்**
> **கண்ணிடை மணியொப்பாய்'**

*என வரும் சுந்தரர் தேவாரமாகும்.*

*16. 'கொய்யுலாம் மலர்ச்சோலை குயில்கூவ மயிலாலும் ஆருரர்' (4-5-1) என்பது அப்பர் தேவாரம்.*

*'கொய்யுலாம் மலர்ச்சோலை குயில்கூவ மயிலாலும் கொகுடிக் கோயில்' (7-30-6) என்பது சுந்தரர் திருப்பாட்டு.*

*17.'கோடியான் கண்டாய் குழகன் கண்டாய்' (6-23-6) எனவரும் அப்பர் வாய்மொழியை அடியொற்றி, அங்கெழுந் தருளிய பெருமானைக் 'கோடிக் குழகீர்' (7-32-1-10) எனச் சுந்தரர் போற்றியுள்ளார்.*

*18.'எண்தோள் வீசிநின் றாடும் பிரான்' என்றார் அப்பர்.*

'காடுதான் அரங்காகவே கைகள்எட்டினோ டிலயம்பட ஆடுவார்', (7-38-8) என்றார் சுந்தரர்.

19.'புறம்பயம் நம்மூரென்று போயினாரே' (6-13-3) என்பது அப்பரது திருவாக்கு. இதனை அடியொற்றி யமைந்தது,

'மலமெலாம் அறும் இம்மையே மறுமைக்கும் வல்வினை சார்கிலா
சலமெலாம் ஒழி நெஞ்சமே எங்கள் சங்கரன் வந்து தங்குமூர்
கலமெலாம் கடல் மண்டுகாவிரி நங்கையாடிய கங்கைநீர்
புலமெலாமண்டிப் பொன் விளைக்கும் புறம்பயந்தொழப் போதுமே'
(7-35-8)

எனவரும் சுந்தரர் தேவாரம்.

20. 'நம்பியை நள்ளாற்றானை' என்றார் அப்பர். 'நள்ளாற்று நம்பியை' என்றார் சுந்தரர்.

'வானோர் தம்மானைத் தலைமகனை' (6-27-1)

எனவரும் அப்பர் திருவாக்கு. இவ்வாறே சுந்தரர் திருப்பாடலில் (7-38-6) எடுத்தாளப் பெற்றுளது.

21. 'மெய்யெலாம் வெண்ணீறு, சண்ணித்த மேனியான்' என்பது அப்பர் தேவாரம்.

அதனையடியொற்றி 'வெண்ணீறு சண்ணித்த மேனி யெம்மானை' (7-34-6) என்றார் சுந்தரர்.

22. 'நம்பி நந்தி' (4-102-2) என நமிநந்தியடிகளைப் போற்றினார் நாவுக்கரசர்.

அவ்வாறே 'அரு நம்பி நமிநந்தி' (7-39-4) எனக் குறித்தார் ஆரூரர்.

23. 'புத்தன் மறவாதோடி எறிசல்லி புது மலர்கள் ஆக்கினான்காண்' (6-52-80) என்பது திருத்தாண்டகம்.

அதனை அடியொற்றி யமைந்தது 'வார்கொண்ட வன முலையாள் உமைபங்கன் கழலே மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கும் அடியேன்' எனவரும் திருத்தொண்டத் தொகை.

24. 'என்னவனாய் என்னிதயம் மேவினானே' (6-44-8) எனப் போற்றினார் அப்பரடிகள்.

'என்னவனாம் அரனடியே அடைந்திட்ட சடையன்' என்பது திருத்தொண்டத்தொகை.

25. 'நெருநலையாய் இன்றாகி நாளையாகி நிமிர் புன்சடையடிகள் நின்றவாறே' என்பது நின்ற திருத்தாண்டகம்.

'நாளையின்று நெருநலாய் ஆகாயமாகி ஞாயிறாய் மதியமாய் நின்ற எம்பரனை' (7-40-4) என்பது சுந்தரர் வாக்கு.

26. 'அரக்கனை விரலா லடர்த்திட்ட நீர்
இரக்க மொன்றிலீர்' (5-10-11)

என்றார் அப்பரடிகள்,

'இரக்க மில்லவரைந்தொடைந்தலை தோளிருபது தாள்நெரிதர
அரக்கனை யடர்த்தார்' (7-87-9)

என்றார் சுந்தரர்.

'நரிவிருத்தம் தாகுவர்' என்றார் அப்பரடிகள். 'நரியார் தங் கள்ளத்தாற் பக்கான பரிசு' (7-90-3) என்பது சுந்தரர் தேவாரம்.

27. 'காண்டற் கரிய கடவுள் கண்டாய்' (6-23-1) என்றார் நாவுக்கரசர்.

'காண்டவன் காண்டவன் காண்டற்கரிய கடவுளாய்' (7-45-6) என்பது சுந்தரர் தேவாரம்.

28. 'துட்டர் வான்புரம் சுட்ட சுவண்டரோ' (5-10-3) என அழைத்தார் அப்பரடிகள்.

'சுந்தரராய்த் தூமதியம் சூடுவது சுவண்டே' (7-46-4) என வினவினார் சுந்தரர். 'சுவண்டு' என்பது உபாயம், பொருத்தம் என்ற பொருளில் வழங்கும் சொல்லாகும்.

29. 'கறிவிரவு நெய்சோறு கையிலுண்டு' என்பது அப்பர் வாக்கு.

'கறிவிரவு நெய்சோறு முப்போதும் வேண்டும்' (7-46-10) என்பது சுந்தரர் வேண்டுகோள்.

30. 'வரையார் மடமங்கை பங்கா, கங்கை மணவாளா' (6-47-3) என அழைத்தார் அப்பர்.

'வண்டார் குழலி உமை நங்கை, பங்கா-கங்கை மணவாளா' (7-52-7) என அழைத்தார் சுந்தரர்.

31. 'ஓங்கு மாகடல் ஓதநீ ராடிலென்' என்பது அப்பர் வாக்கு.

'ஓங்கு மாகடல் ஓதம் வந்துலவும் ஒற்றீயூர்' (7-54-3) என்பது சுந்தரர் வாக்கு.

32. 'எண் கணமும் பின் படர' (4-19-4) என்றார் அப்பர்.

'எண்கணம் இறைஞ்சும் கோளிலிப் பெருங்கோயிலுளான்' (7-62-8) என்றார் சுந்தரர்.

33. 'மறவனாய்ப் பன்றிப் பின் சென்ற மாயமே' (5-68-5) என்பது அப்பர் தேவாரம்.

'மறவனை அன்றுபன்றிப்பின் சென்ற மாயனை' (7-68-7) என்பது சுந்தரர் திருப்பாட்டு.

34. 'நரிபுரி சுடலை தன்னில் நடமலால் நவிற்றவில்லை' (4-40-3) என்றார் அப்பர்.

'நரிபூரி காடரங்கா நடமாடுவர்' (7-72-7) என்றார் சுந்தரர்.

35. 'மீளா ஆளலால் கைம்மாறில்லை' (4-40-7) என்பது அப்பரது அருள்வாக்கு.

'மீளா அடிமையுனக்கே யாளாய்' (7-95-1) என்பது சுந்தரர் வாய்மொழி.

36. 'எல்லியும் பகலும் எல்லாம் நினைந்தபோதினியவாறே' என்றார் அப்பரடிகள்.

'எம்மானை மனத்தினால் நினைந்தபோ தவர் நமக்கினியவாறே' (7-30-1-10) என்பது சுந்தரர் தேவாரம்.

37. 'பண்ணினேர் மொழி யாளுமை பங்கரோ' என்பது திருக்குறுந்தொகை.

'பண்ணினோர் மொழி மங்கை பங்கினன்' (7-75-6) என்பது சுந்தரர் தேவாரம்.

38. 'மருவிப் பிரியாத மைந்தர் போலும்' (6-89-9) என்பது திருத்தாண்டகம்.

இத்தொடர்க்குப் பொருள் விரித்துரைப்பதாக அமைந்தது. 'மருவிப் பிரிய மாட்டேன் நான்' (7-77-3) என்னும் சுந்தரர் வாக்கு.

'மேவினார் பிரியமாட்டா விமலனுக்கடுத்த தென்னோ' எனக் காளத்தியப்பரது கண்ணிற் குருதிகண்டு கண்ணப்பர் இரங்கியதாகச் சேக்கிழாரடிகள் கூறும் தொடர்ப்பொருள் இங்கு ஒப்பு நோக்கி யுணரத் தக்கதாகும்.

39. திருமடங்களில் தங்கித் திருத்தொண்டுபுரியும் அடியார்களின் உள்ளத்தே இறைவன் அகலாது எழுந்தருளியிருக்கும் அன்பின் திறத்தை,

'மடமன்னும் அடியார்கள் மனத்தினுள்ளார்' (6-10-6)

எனவரும் தொடரில் திருநாவுக்கரசர் குறித்துப் போற்றியுள்ளார்.

அப்பரடிகள் அருளிய இத்தொடர்ப் பொருளை அடியொற்றியமைந்தது,

'மடமுடைய அடியார்தம் மனத்தேயுற
விடமுடையமிடறன்' (7-51-6)

எனவரும் சுந்தரர் திருப்பாடலாகும்.

40. இறைவன் உயிர்களின் பொருட்டுச் செய்தருளும் படைத்தல் முதலிய ஐந்தொழில்களையும் பந்தம் வீட என இரண்டாக அடக்கி, 'பந்தமும் வீடும் பரப்புகின்றீர்' எனப் போற்றினார் திருநாவுக்கரசர்.

இவ்வாறே சுந்தரரும் 'பந்தம் வீடு இவை பண்ணினீர்' (7-88-4) என இறைவனைப் போற்றியுள்ளார். இவ்விருபெரு மக்கள் வாய்மொழியையும் 'பந்தம் வீடு தரும் பரமன்' (பெரிய-300) என்ற தொடரில் சேக்கிழாரடிகள் குறித்துள்ளமை காணலாம்.

41. 'கருமானின் உரியதளே உடையா வீக்கி ............ ஆடுகின்ற
பெருமானைப் பெரும்பற்றப் புலியூரானை' (6-1-3)

எனத் தில்லைப் பெருமானை அப்பரடிகள் போற்றியுள்ளார்.

இத்திருப்பாடற் பொருளையுணர்ந்த சிற்றம்பலவனை யிறைஞ்சிய நம்பியாரூரர்,

'கருமானின் உரியாடைச் செஞ்சடைமேல்
வெண்மதியக் கண்ணியானை
................................புலியூர்ச் சிற்றம்பலத்தெம் பெருமானைப்
பெற்றாமன்றே' (7-90-6)

எனப் போற்றியிருத்தல் ஒப்பு நோக்கி மகிழத்தக்கதாகும்.

42. 'எற்றினான் மறக்கேன் எம்பிரானையே' (5-35-9) என்பது திருக்குறுந்தொகை இதனை அடியொற்றி யமைந்தது, 'எற்றான் மறக்கேன் எழுமைக்கும் எம்பெருமானையே' (7-92-1) என்னும் சுந்தரர் திருவாக்கு.

43. 'அகன்ஞாலத்தகட்டுட் டோன்றி
வருந்துணையும் சுற்றமும் பற்றும் விட்டு
வான்புலன்க ளகத்தடக்கி மடவாரோடும்
பொருந்தணைமேல் வரும்பயனைப் போகமாற்றிப்
பொதுநீக்கிற் தனை நினையவல்லோர்க் கென்றும்
பெருந் துணையை' (6-1-5)

என்பது திருத்தாண்டகம்.

இத்தொடர்ப் பொருளைத்தொகுத்துக் கூறுவதாக அமைந்தது,

'சிறந்தார் சுற்றம் திருவென் றின்ன
துறந்தார் சேரும் சோற்றுத் துறையே' (7-91-7)

என்னும் சுந்தரர் திருப்பாடலாகும்.

44. 'மூக்கினால் முரன்றோதியா குண்டிகை தூக்கினார்' (5-58-2) எனச் சமணர்களைக் குறித்தார் திருநாவுக்கரசர். சமணர்கள் மூக்கினால் முரன்றோதும் மந்திரங்களின் ஒலி யமைப்பினை விளக்குவதாக அமைந்தது,

'ஞாமண ஞாஞண ஞாணஞோண மென்றோதி
யாரையும் நாணிலா அமணர்' (7-33-6)

எனவரும் சுந்தரர் திருப்பாடலாகும்.

45. 'அகல்வாய பேயுந் தாமும் பிரியார் ஒரு நாளும்' (6-17-9) என்றார் அப்பர்.

'பேயோடேனும் பிரிவொன்றின்னாது' (7-95-9) என்றார் சுந்தரர்.

46. 'ஆவணத்தால் என்றன்னை யாட்கொண்டான் காண்' (6-24-3) என்பது திருத்தாண்டகம்.

'ஆவணம் செய்து ஆளும் கொண்டு' (7-5-10) என்பது சந்தரர் தேவாரம்.

47. 'மன்னியசீர் மறைநான்கும் ஆனாய் போற்றி' (6-32-4) என்பது திருத்தாண்டகம்.

'மன்னியசீர் மறைநாவன் நின்றவூர்ப் பூசல்' என்பது திருத்தொண்டத் தொகை.

48. 'உச்சம்போ தேறேறி யென்றேன் நானே' (6-37-9) என்பது திருத்தாண்டகம்.

'உச்சம் போதா, ஊரூர் திரியக் கண்டால் அடியார் உருகாரே' (7-41-2) என்பது சுந்தரர் வாக்கு.

49. 'புள்ளிருக்கு வேளூரானைப் போற்றாதேயாற்ற நாள் போக்கினேனே' என வரும் திருத்தாண்டகத் தொடர்பொருள்.

'புரிந்துவந்தாளே புகழ்தக்க அடிமை போகுநாள் விழு நாளாகி' (1-14-4) எனவரும் சுந்தரர் வாய் மொழியில் இடம் பெற்றிருத்தல் காணலாம்.

50. இழிப்பரிய பசுபாசப் பிறப்பை நீக்கும் என் துணையே' என்பது திருத்தாண்டகம். இதன்கண் பசுத்துவம் என்பது ஆணவமலத்தைக் குறித்து நின்றது.

இம்முறையே 'மலந்தாங்கிய பாசப் பிறப்பறுப்பீர்' (7-82-6) என்ற தொடரில் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங் களையும் நம்பியாரூரர் குறித்துள்ளமை அறியத்தக்கதாகும்.

51. "நற்பதத்தார் நற்பதமே ஞானமூர்த்தி
நலஞ்சுடரே நால்வேதத் தன்பால் நின்ற
சொற்பதத்தார் சொற்பதமுங் கடந்து நின்ற
சொலற்கரிய சூழலாய்" (6-95-4)

என்பது திருத்தாண்டகம். இதன் பொருளை 'நற்பதமென் றுணர்வார் சொற்பதமார் சிவனை' (7-84-3) என்ற தொடரில் சுந்தரர் சுருங்கச் சொல்லி விளங்க வைத்துள்ளார்.

இவ்வாறே நம்பியாரூரர் அருளிய திருப்பதிகங்களில் ஞான சம்பந்தரும் நாவுக்கரசரும் ஆகிய முன்னையிருவர் அருளிய திருப்பதிகங்களின் சொற்பொருள் நலங்கள் பாடல் தோறும் நிரம்ப அமைந்துள்ளன. அப்பகுதிகளையெல்லாம் ஒருங்கே தொகுத்து ஒப்பு நோக்கியாராய்தல் மூவர் அருளிய தேவாரத் திருப்பதிகங்களின் சொற் பொருள் நலங்களைத் தெளியவுணர் தற்குப் பெரிதும் துணைபுரிவதாகும்.

திருவீழிமிழலையில் திருநாவுக்கரசரும் திருஞான சம்பந்தரும் அடியார் குழாந்துடன் தங்கியிருந்த பொழுது கொடிய பஞ்சம் நேர மக்கள் பசியால் வாட்டமுற்றனர் என்பதும், அந்நிலையிலும் மனந்தளராது இறைவனைப் போற்றி அப்பெருமான் அளித்த படிக்காசினைக் கொண்டு அடியார்களுக்கும் பிறர்க்கும் அமுதளித்துப் பசி நீக்கிய உரவோர் அப்பரும் சம்பந்தரும் என்பதும் முன்னர் விளக்கப்பட்டன. இந்நிகழ்சிளை,

"திடங்கொள் சிந்தையினார் கலிகாக்குந் திருமிழலை" (7-88-8)

எனவும்,

"இருந்துநீர் தமிழோடிசைகேட்கும் இச்சையாற்காசு நித்தல்நல்கினீர்
அருந்தண் விழிகொண்டீர் அடியேற்கும் அருளுதிரே" (7-58-6)

எனவும் வரும் தொடர்களில் சுந்தரர் குறித்துள்ளமை அறியலாம்.

மூன்றாம் வயதிலேயே 'அம்மே அப்பா' என இறைவனை நோக்கியழுது, உமையம்மையாரளித்த ஞானப் பாலடிசிலைப் பருகிச் சிவஞானசம்பந்தராகித் தேவர் முதலிய யாவராலுங் காண்டற்கரிய கடவுளைக் கண்ணாரக் கண்டு போற்றியவர் காழிப்பிள்ளையார். சம்பந்தப் பிள்ளையார் திருவதாரம் செய்தருளிய சீகாழிப்பதியை வணங்கச் சென்ற சுந்தரர், அந்நகரை மிதிக்க அஞ்சி அதனைச் சூழ்ந்து வலம்வந்த பரவினார் என்பதும், அந்நிலையிற் காழிப்பெருமான் சுந்தரர்க்குக் காட்சி கொடுத்தருளினான் என்பதும் முன்னர் விளங்கப்பெற்றன. காழியின் எல்லையிற் கடவுளைக் கண்டு வணங்கிய சுந்தரர்,

அப்பொழுது தாம் பாடிய 'சாதலும் பிறத்தலும்' என்னும் முதற் குறிப்புடைய திருப்பதிகத்தின் திருக்கடைக்காப்புப் பாடலில்,

'செழுமலர் கொன்றையும் கூவிளமலரும்
விரவியசடை முடியடிகளை நினைந்திட்டு
அழுமலர்க் கண்ணினை யடியவர்க்கல்லால்
அறிகரிது அவன் திருவடியிணை 'யிரண்டும்'

என ஞானசம்பந்தர் 'அம்மே அப்பா' என இறைவனை நினைந்து அழுது சிவஞானம் பெற்று இறைவனைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்த திறத்தினைக் குறிப்பாக அறிவுறுத்தியுள்ளமை உணர்ந்து மகிழத்தக்கதாகும்.



## 7. திருப்பதிகம் பொருட் பாகுபாடு

தேவாரத் திருப்பதிங்களில் அறிவுறுத்தப்பெறும் பொருள் களைப் பற்றிச் சிவநெறிச் செல்வர் பலர் பல வகையாகப் பகுத்துச் சிந்தித்துள்ளார்கள். மூவர் அருளிய திருப்பதிகங்கள் முழுவதனையும் ஓதி மகிழ விரும்பிய சிவாலய முனிவர்க்குப் பொதியில் முனிவராகிய அகத்தியர் மூவர் தேவாரங்களிலிருந்து இருபத்தைந்து திருப்பதிகங்களைத் திரட்டித்தந்து, அத்திருப்பதி கங்களை நாள்தோறும் பாராயணஞ் செய்வோர் அடங்கன் முறை முழுவதையும் ஓதிய பயனைப் பெருவர் என அறிவுறுத்தி மறைந்தருளினார் என்றதொரு வரலாறு, செவிவழிச் செய்தியாக வழங்கப் பெற்று வருகிறது. அகத்திய முனிவர் சிவாலய முனிவர் பொருட்டுத் திரட்டித்தந்த தேவாரப் பதிகங்கள் இருபத் தைந்தும் ‘அகத்தியர் தேவாரத்திரட்டு’ என்ற பெயருடன் பாராயணம் செய்யப்பெற்று வருதலைப் பலரும் அறிவர்.

அகத்தியர் தேவாரத் திரட்டில், குருவருள், திருவெண்ணீறு (பரையின் வரலாறு), அஞ்செழுத்துண்மை, கோயிற்திறம், சிவனுருவம், திருவடி, அருச்சனை, அடிமைநிலை என்னும் எண்வகைப் பொருட்பகுதிகள், திருப்பதிகங்களின் திருவுள்ளக் கிடையாக அமைந்திருத்தல் காணலாம். இப்பொருட் பகுதிகள் எட்டும்,

> “குருவருளும் வெண்ணீறெழுத்தஞ்சுங் கோயில்
> அதனுருவும் என்றிலைமே லாக்கும்-திருவடியும்
> சிட்டான அர்ச்சனையும் தொண்டும் சிவாலயர்க்கென்
> றிட்டார் அகத்தியனார் எட்டு”

எனவரும் வெண்பாவிற் குறிக்கப்பெற்றன. அகத்தியத் தேவாரத் திரட்டின் பாயிரமாக அமைந்தது.

> “தோடு கூற்றுப் பித்தா மூன்றும்
> பீடுடைத் தேரிகன் பொருளாகும்
> நீற்றுப்பதிகம் நிகழ்ந்துங் காலை
> மாற்றுப் பரையின் வரலாறாரும்,
> துஞ்சல் காதர் சொற்றுணை மூன்றும்
> அஞ்செழுத்துண்மை அருளிய தாகும்,
> ஆரூர் தில்லை காட்டூர் மூன்றும்
> சீரார் கோயிற் திறமையதாகும்,
> ஓருரு வரிய பாளை வடிவே
> மருவார் என்ற வண்டமிழ் ஐந்தும்
> திருவார் மேனிச் செய்திய தாகும்,

பொடியுடை அரவணை அந்த ணாளன்
அடியிணை தந்த அருளே யாகும்,
பந்து வேற்றா கொன்றிவை மூன்றும்
நந்தலில் அருச்சனை நாட்டிய தாகும்,
வேய் சூலம் தில்லை எனுமிவை மூன்றும்
நாயனும் அடிமையும் நாட்டிய தாகும்;
இப்பரி சகத்திய முனிவன் இருநிலத்
தொப்பறு மூவர் ஓதுதே வாரம்
முழுதையுஞ் சிவாலய முனிக்கறிவித்துப்
பழுநிலா அவையுட் பரிந்தெடுத் திருபத்
தைந்துயர் பதிகமும் அறிவுறந் திரட்டி
எண்ணரும் அடங்கல் யாவையும் உணரும்
புண்ணியம் இவைகொடு பொருந்து மென்றவன்
தனக்கருள் செய்தனன் தகவுற, அதனால்
தீதிலா அகத்தியந் திரட்டினை யுலகில்
ஓதீனர் அடங்கலும் ஓதினராவரே"

எனவரும் ஆசிரியப்பாவாகும். இதனைக் கூர்ந்து நோக்குங்கால் மூவர் தேவாரத்திருப்பதிகங்கள் முழுவதையும் மேற்குறித்த குருவருள் முதலிய எண்வகைப் பொருள் பற்றிப் பகுத்துணர்ந்து கொள்ளுதல் பண்டையோர் ஆராய்ந்து கண்ட பொருள் நெறி மரபென்பது இனிது விளங்கும்.

அகத்தியத் தேவாரத்திரட்டினைப் போல் தனிப் தனிப் பதிகங்களாகத் தொகுக்கப்படாமல், சைவ சித்தாந்தச் செம் பொருட்டுணிபினை இனிது விளக்கும் குறிப்புடைய தனித் தனிப் பாடல்களாக உமாபதி சிவசாரியாரால் தொகுக்கப்பெற்றது. 'திருமுறைத்திரட்டு' என்பதாகும். இது, திருவருட்பயன், சிவப்பிரகாசம் முதலிய சைவசித்தாந்த சாத்திரங்களை இயற்றும் நிலையில், தாம் கூற எடுத்துக்கொண்ட நுண் பொருளுக்கு அரண் செய்யும் முறையில் முன்னூல் சான்றாக உமாபதி சிவாசாரியாரால் தொகுத்துணர்த்தப் பெற்ற தனிச் சிறப்புடைய தாகும். இச்செய்தி,

"தேசுமிகும் அருட்பயின்ற சிவப்பிரகாசத்தில்
திருந்து பொதுச் சங்கற்ப நிராகரணந் திருத்தி
ஆசிலருள் வினாவெண்பாச் சார்பு நூலால்
அருளெளிதிற் குறிகூட அளித்து ஞானப்
பூசைதக்க காரணமுன் புகன்றதனிற் புரிந்து
புணர்விக்கச் சிவஞான போதசித்தி வழிநூல்
மாசில் சதமணிக் கோவை முன்னூல் சான்று
மருவு திருமுறைத்திரட்டு வைத்தனன் மன்னுயிர்க்கே"

எனவரும் ஞானதீக்கைத் திருவிருத்தத்தால் நன்கு விளங்கும்.

உமாபதி சிவாசாரியாரால் தொகுக்கப் பெற்ற இத்திரு முறைத் திரட்டில், மூவரருளிய தேவாரத் 'திருமுறைகளிலிருந்து தொண்ணூற்றொன்பது திருப்பாடல்கள் தொகுக்கப் பெற்றுள்ளன. அத்திருப்பாடல்களை (1) பதிமுதுநிலை, (2) உயிரவை நிலை, (3) இருண்மலநிலை, (4) அருளது நிலை, (5) அருளுரு நிலை, (6) அறியும்நெறி, (7) உயிர் விளக்கம், (8) இன்புறு நிலை, (9) அஞ்செழுத்தருள் நிலை, (10) அணைந்தோர் தன்மை எனப் பத்து அதிகாரங்களாக உமாபதிசிவாசாரியார் பகுத் துள்ளார். இப்பத்துத் தலைப்புகளும் அவ்வாசிரியர் இயற்றிய 'திருவருட் பயன்' என்ற நூலிலும் அமைந்திருத்தல் காணலாம். எனவே திருவருட் பயன் என்பது, அருள் நூலாகிய தேவாரத் திருமுறையின் பயனாகிய சைவசித்தாந்த உண்மைகளைச் சுருங்க விளக்கும் நோக்கத்துடன் இயற்றப் பெற்ற சிந்தாந்த சாத்திர மென்பது நன்கு தெளியப்படும்.

தேவாரத் திருப்பதிகங்களில் அறிவுறுத்தப்பெறும் நற்பொருள்களை நாடோறும் சிந்திக்கும் முறையில் தொகுக்கப் பெற்றுள்ள அகத்தியர் தேவாரத்திரட்டு, உமாபதி சிவாசரியார் திருமுறைத்திரட்டு என்னும் இத்தொகுப்பு நூல்களின் அமைப்பினைக் கூர்ந்து நோக்குங்கால், நம் முன்னோர்கள் தேவாரத் திருப்பதிகப் பொருள் நலங்களைக் குருவருள் முதலிய எட்டு வகையானும் பதிமுது நிலை முதலிய எட்டிறந்த பலவகை யானும் பகுத்து* (*தொல்காப்பியம் - எழுத்ததிகாரம் சூத்திரம் இளம்பூரணர் நச்சினார்க்கினியர் உரை நோக்குக) ஆராய்ந்துள்ளார்கள் என்பது நன்கு புலனாகின்றது.

திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் ஆகிய மெய்ந் நூல்களும், சைவசித்தாந்தத் தமிழ் முதல் நூலாக ஆசிரியர் மெய் கண்ட தேவர் இயற்றிய சிவஞானபோதமும், அதன் வழி நூலாக அருணந்தி சிவாசாரியார் இயற்றிய சிவஞான சித்தியாரும், இருபா இருபஃதும், அதன் சார்பு நூலாக உமாபதி சிவாசாரியார் இயற்றிய சிவப்பிரகாசம் முதலிய எட்டு நூல்களும் தேவாரத் திருப்பதிகங்கள் திருவாசகம் முதலிய திருமுறைகளின் சாரமாக அமைந்த சாத்திரங்களாகும். ஆகவே மூவர் அருளிய தேவாரத் திருப்பதிகங்களில் அறிவுறுத்தப் பெறும் பொருட்கூறுகளை யெல்லாம் உலக நூல் வழக்குப் பற்றிய தொல்காப்பியம் முதலிய இயற்றமிழ் நூல்களின் துணை கொண்டும் அறிவுநூல் வழக்குப் பற்றிய மெய்கண்ட நூல்களின் துணை கொண்டும் பகுத் துணர்ந்து கொள்ளுதல், இத்திருமுறை நூல்களை விரும்பிக் கற்கும் நல்லறிஞர்களது கடமையாகும்.



## 8. சங்கநூற் குறிப்புக்கள்

திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய தேவார ஆசிரியர்கள் மூவரும், முற்காலத்திற் பாண்டிய நாட்டின் தலைநகராகிய மதுரை நகரத்தே நிலவித் தமிழ் வளர்த்த தமிழ்ச் சங்கத்தைப் பற்றியும், அச் சங்கத்தே தமிழாராய்ந்த ஆலவாயில் அவிர்சடைக் கடவுளாகிய இறையனார் முதலிய சங்கப் புலவர்கள் பாடிய சங்கச் செய்யுட்களைப் பற்றியும் நன்கு அறிந்திருந்தார்கள்.

திருஞானசம்பந்தப் பிள்ளையார், மதுரையில் நடைபெற்ற தமிழ்ச் சங்கத்தைக் 'கழகம்' எனவும், 'மதுரைத் தொகை' எனவும் குறித்துள்ளார்.

'அங்கழகச் சுதை மாடக் கூடல் ஆலவாய்' (1-7-2)

'அற்றன்றிஅந்தண் மதுரைத் தொகை ஆக்கினானும்' (திருப்பாசுரம்)

என வரும் தொடர்கள் இங்கு நோக்கத்தக்கன.

மதுரைத் திருவாலவாயில் எழுந்தருளியுள்ள சிவபெருமான், தன்னை அன்பினால் வழிபட்ட பிரமசாரியாகிய தருமி என்னும் அந்தணன் பொருட்டுக் 'கொங்குதேர் வாழ்க்கை' எனத் தொடங்கும் செய்யுளைப் பாடிக் கொடுத்ததோடு அமையாது, அச்செய்யுள் குற்றமற்றதெனச் சங்கப் புலவர் முன் வாதிட்டுத் தருமிக்குப் பொற்கிழி வாங்கி அளித்தார் என்பது வரலாறு. இச்செய்தியினை,

'மின்காட்டுங் கொடி மருங்குல் உமையாட்கு என்றும்
விருப்பவன் காண் பொருப்புவலிச் சிலைக் கையோன் காண்
நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி நற்கனகக்
கிழிதருமிக்கு அருளினோன் காண்'

என வரும் திருப்புத்தூர்த் திருத்தாண்டகத்தில் அப்பர் அடிகள் குறித்துள்ளார்.

இவ்வாறு திருவாலவாயில் எழுந்தருளிய இறைவனே மதுரையில் சங்கப் புலவர்கட்கெல்லாம் தலைமைப் புலவராக விளங்கிய திறத்தை,

'தண்டமிழ் நூற் புலவாணர்க் கோர்அம்மானே' (7-34-2)

என வரும்தொடரால் நம்பியாரூரர் குறித்துள்ளார்.

இறைவனைத் தலைவனாகக்கொண்டு விளங்கிய பரணர், கபிலர் முதலிய சங்கப் புலவர்கள் அனைவரும், நிலையற்ற பொய்யாய செல்வத்திற்கு அடிமைப்படாமல், என்றும் நிலைத்த மெய்ப்பொருளாகிய இறைவனது திருவடிக்கே தொண்டு பட்டுத் தம் புலமைத் திறத்தால் சிறந்த பல செய்யுட்களைப் பாடிய பெரும் புலவர்கள் ஆதலால் தண்டமிழ்ப் புலவாணர் களாகிய அப்பெருமக்களை,

'பொய்யடிமை இல்லாத புலவர்க்கும் அடியேன்'

எனத் திருத்தொண்டத் தொகையில் பரவிப் போற்றுவர் சுந்தரர்.

திரிபுரம் எரித்த உமையொரு பாகனாகிய சிவபெருமானை,

'உமை யமர்ந்து விளங்கும் இமையா முக்கண
மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்'
(திருமுருகாற்றுப்படை)

என போற்றினார் நக்கீரர். இத்தொடர்ப்பொருளை அடி யொற்றியது,

'எண்ணார் மும்மதில் எய்த இமையா முக்கண்
பண்ணார் நான்மறை பாடும் பரம யோகி
கண்ணார் நீறணி மார்பன் கள்ளில் மேயான்
பெண்ணா ணாம் பெருமான் எம்பிஞ்ஞகனே' (1-119-1)

என வரும் ஆளுடைய பிள்ளையார் திருப்பாடலாகும்.

குறிஞ்சிக் கடவுளாகிய முருகப் பெருமானுக்கு விருப்பமான பண், குறிஞ்சிப் பண் என்பதனை,

'நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி
.... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... குறமகள்
முருகிய நிறுத்து முரணினர் உட்க
முருகாற்றுப் படுத்த உருகெழு வியனகர்'

என வரும் திருமுருகாற்றுப் படைத் தொடரால் அறியலாம்.

'கருகுகுழல் மடலார்கடி குறிஞ்சியது பாடி
முருகன்னது பெருமைபகர் முதுகுன் றடைவோமே'
(1-12-10)

எனவரும் ஞானசம்பந்தர் தேவாரம் மேற்காட்டிய திருமுருகாற்றுப் படைத்தொடர்ப்பொருளைப் பின்பற்றி அமைந்திருத்தல் காணலாம்.

முருகப் பெருமானைக் காடு கிழாளாகிய அம்மைக்கு மகன் எனப் போற்றும் முறையில்,

'விழையணி சிறப்பிற் பழையோள் குழவி'

என அழைத்தார் நக்கீரர். காடு கிழாளாகிய சக்தியைத் தன் ஒரு பாகத்துக் கொண்டவன் சிவபெருமான் என்பது புலப்பட,

'அணி கிளரன்ன தொல்லையவள் பாகமாக
எழில் வேதம் ஓதும் அவரே' (4-8-8)

என அப்பர் அடிகளும்,

'கையார் வளைக் காடுகாளோடும் உடனாய்' (7-32-5)

என நம்பியாரூரரும் இறைவனைப் போற்றியுள்ளார்கள். நக்கீரர் 'பழையோள்' எனக் குறித்த பெயரையே அப்பர்அடிகள் 'தொல்லையவள்' என்ற சொல்லால் குறித்துள்ளமை இங்கு நோக்கத் தக்கதாம்.

பொருநராற்றுப் படையில் பாடினியைக் குறிக்குமிடத்து,

'ஈர்க்கிடை போகா ஏரிளவனமுலை' (36)

என அவளது எழில்நலம் சிறப்பிக்கப் பெற்றுள்ளது.

'இடையீர் போகா இளமுலையாளை ஓர்
புடையீரே' (1-54-2)

எனவரும் சம்பந்தர் தேவாரத்தில் இத்தொடர் எடுத்தாளப் படுதலைக் காணலாம்.

செருந்திப்பூ பொன் போலும் நிறமுடையது என்பதனை,

'தலைநாட் செருந்தி தமனிய மருட்டவும்'
(சிறுபாண். 147)

எனவரும் தொடரில் நத்தத்தனார் குறித்துள்ளார்.

'பொருந்துதண் பறவினிற் கொன்றைபொன்
சொறிநரத் துன்றுமைப்பூஞ்
செருந்தி செம்பொன் மலர் திருநெல்வேலியுறை
செல்வர் தாமே' (3-91-1)

எனச் சம்பந்தரும்,

'செருந்தி செம்பொன்மலருந் திருநாகேச்சரத்தானே' (7-99-2)

எனச் சுந்தரரும் செருந்தி மலரைப் பற்றிக் கூறும் தொடர்கள் இங்கே நோக்கத் தந்தனவாம்.

வேதங்களே ஓதும் அந்தணர்கள் நெருங்கி வாழும் ஊர்களில், அவர்கள் ஓதிய வேதத்தின் ஓசையைக் கேட்டுப் பழகிய வளைந்த வாயினையுடைய கிளிகள் அவ் வேதங்களை அவற்றின் ஓசை கெடாது மிழற்றும் ஆற்றல் பெற்றமையால் அவை மாணாக்கர்கட்கு வேதங்களைக் கற்பிக்கும் ஆசிரிய நிலையில் விளங்கின என் உயர்ந்துப் போற்றுவதாக அமைத்தது,

"வளைவாய்க்கிள்ளைமறை விளிபயிற்றும்
மறை காப்பாளர் உறைபதி" (300-1)

எனவரும் பெரும்பாணாற்றுப் படைத் தொடராகும். வேதியர் நிறைந்து வாழும் திருவீழிமிழலையைச் சிறப்பிக்கக் கருதிய ஞானசம்பந்தப் பிள்ளையார்,

"பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும்
பயின்றோதும் ஓசை கேட்டு
வேரி மலிபொழிற் கிள்ளை வேதங்கள்
பொருட்சொல்லும் மிழலையாமே" (1-132-1)

என இத்தொடர்ப் பொருளை அடியொற்றிப் பாடிப் போற்றியிருத்தல் உணர்ந்து மகிழத் தக்கதாகும்.

பகற் பொழுதிலே பெய்தலை உடைய மழை கால் இறங்கினால் ஒத்த பெரிய அடியினை உடையது கமுகு மரம் என்பது,

'மழை வீழ்ந்தன்ன மாத்தாட் கமுகின்' (363)

எனவரும் பெரும்பாணாற்றுப்படைத் தொடரிற் குறிக்கப் பட்டது. இவ்வாறே,

'மேகம் ஏய்க்கும் இளங்க முகம்' (2-74-5)

என்றார் சம்பந்தரும்.

கொத்துக்களையுடைய கொன்றைமரம் பொன்போன்ற பூக்களைச் சொரிந்து நிற்கும் இயல்பினை,

'முறியிணர்க் கொன்றை நன்பொன் கால' (74)

எனவரும் முல்லைப்பாட்டு அடியால் அறியலாம்.

'விரைசேர் பொன் இதழிதர மென்காந்தள்
கையேற்கும்' (1-32-4)

என்றார் ஞானசம்பந்தர்.

'திரிமருப்பிரலையொடு மடமான் உகள' (99)

என்பது முல்லைப்பாட்டு.

'கானமரும் பிணை புல்கிக் கலைபயிலும்'

என்பது ஞானசம்பந்தர் தேவாரம்.

'தென்னவற்பெயரிய துன்னருந்துப்பின்
தொன்முது கடவுள்' (40,41)

எனவரும் மதுரைக்காஞ்சியில், இராவணன் 'தென்னவன்' என்ற பெயரால் குறிக்கப்பெற்றுள்ளான்.

'தென்னவன் மலையெடுக்கச் சேயிழை நடுங்கக்கண்டு
மன்னவன் விரலால் ஊன்ற மணிமுடித்தெரிய வாயால்
கன்னலின் கீதம்பாடக் கேட்டவர் காஞ்சிதன்னுள்
இன்னலற்கு அருளிச்செய்தார்இலங்குமேற்றளிய னாரே'

எனவரும் திருநேரிசை மேலே காட்டிய தொடரிற் குறிக்கப்படும் நிகழ்ச்சியை விரித்துரைப்பதாகும்.

உயர்ந்த பல கற்படைகளை உடைய மதிலை,

'விண்ணுற வோங்கிய பல்படைப் புரிசை' (352)

எனக் குறித்தார் மாங்குடி மருதனார்.

'படையார் புரிசைப் பட்டினஞ்சேர் பல்லவனீச்சரமே' (1-65-1)

என்பது ஞானசம்பந்தர் தேவாரம்.

சங்க காலத்தில் மதுரை நகரத்திலே சிவபெருமானுக்கு ஏழு நாட்கள் திருவிழா நடந்து, ஏழாம்நாள் முடிவில் தீர்த்தம் ஆடும் சிறப்பு நடைபெற்றது என்பது,

'கழுநீர்கொண்ட எழுநாள் அந்தி
ஆடுதுவன்று விழாவின்' (427, 8)

எனவரும் மதுரைக் காஞ்சியடிகளாலும்,

'கழுநீர்கொண்ட அந்தி-தீவினை கழுவுதற்குக் காரணமான தீர்த்த நீரைத் தன்னிடத்தே கொண்ட அந்திக்காலம்' 'கால் கொள்ளத் தொடங்கிய ஏழாம் நாள் அந்தியிலே தீர்த்தம் ஆடுதல் மரபு' எனவரும் நச்சினார்க்கினியர் உரையாலும் அறியப்படும். இவ்வாறு கடைச்சங்க காலத்தில் ஏழாம் நாள் அந்தியில் கொண்டாடப்பட்ட தீர்த்தவிழாவானது, தேவார ஆசிரியர் காலத்தில் எட்டாம் நாளாகிய அட்டமியில் கொண்டாடப் பெற்றது எனத் தெரிகிறது. இச்செய்தி,

'தீர்த்தமாம் அட்டமிமுன் சீருடை ஏழுநாளும்
கூத்தராய் வீதிபோந்தார் குறுக்கை வீரட்டனாரே' (4-50-2)

எனவரும் திருநேரிசையால் புலனாகின்றது.

சிவபெருமானே உலகங்களைப் படைத்த முதற் கடவுள் என்றும், அம்முதல்வனே எல்லாத் தெய்வங்களுக்கும் தலைவன் என்றும் அறிவுறுத்துவது,

'நீரும் நிலனும் தீயும் வளியும்
மாக விசும்போடு ஐந்துடன் இயற்றிய
மழுவான் நெடியோன் தலைவனாக' (453-455)

எனவரும் மதுரைக் காஞ்சித் தொடர் ஆகும்.

'உலகில் உயிர்நீர் நிலமற்றும்
பலகண்டவனூர் பனையூரே' (1-37-8)

எனவரும் சம்பந்தர் தேவாரம் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

திருவோண நாள் மாயோனுக்குரிய சிறப்புடைய நாள் என்பதை,

'மாயோன் மேய ஓண நன்னாள்' (மதுரைக்காஞ்சி 391)

என்பதனால் அறியலாம்.

திருவோண நாளுக்குச் சிறப்புரிமையுடைய திருமாலை 'ஓணப்பிரான்' (2-47-4) எனப்போற்றுவர் அப்பரடிகள்.

பாதத்தை வருடுதலால் உறக்கம் வரும் என்பது,

'மெல்லியன் மகளிச் நல்லடி வருட' (151)

எனவரும் நெடுநல் வாடையிற் குறிக்கப்பெற்றது. இக்குறிப்பு,

'மழையார் சாரற் செம்புனல் வந்தங்கு அடிவருடக்
கழையார் கரும்பு கண்வளர் சோலைக் கலிக்காழி'
(1-102-5)

'தென்றலார் அடிவருடச் செழுங்கரும்பு
கண்வளருந் திருவையாறே' (1-130-7)

எனவரும் தொடர்களில் அமைந்துள்ளது.

புனங்காக்கும் மகளிர் ஓசைகளை எழுப்பிக் கிளி முதலிய பறவைகளை ஓட்டும் முறையினை,

'வள்ளுயிர்த் தெள்விளி இடையிடை பயிற்றிக்
கிள்ளை ஓப்பியும்' (100-1)

எனக் குறிஞ்சிப் பாட்டு குறிப்பிடுகின்றது.

'வெஞ்சொற் பேசும் வேடர் மடவார் இதண மதுவேறி
அஞ்சொற் கிளிகள் ஆயோவெனனும்
அண்ணாமலையாரே'
(சம்பந்தர்)

'மையார் தடங்கண்ணாள் மடமொழியாள் புனங்காக்கச்
செவ்வேதிரிந் தாயோவெனப் போகவிட விளிந்து
கைபாவிய கவணால் மணி யெறிய இருந்தோடிச்
செவ்வாயின கிளிபாடிடுஞ் சீர்ப்பத மலையே' (7-79-4)

எனவரும் திருப்பாடல்களில் இக்குறிப்பு அமைந்திருந்தல் காணலாம்.

'வேறு பல்லுருவிற் கடவுட்பேணி' (குறிஞ்சிப்பாட்டு -6)

என்ற தொடர். கடவுள் ஆகிய முழுமுதற் பொருள் ஒன்றே பல்வேறு உருவில் வழிப்படப்பெறும் நிலையை விளக்குவது.

'நானாவிரு உருவாய் நமை ஆள்வான்' (1-9-5)

என்பது சம்பந்தர் தேவாரம்,

'வான் பொய்ப்பினும் தான் பொய்யா
மலைத்தலைய கடற் காவிரி' (5-6)

எனக் காவிரியைப் போற்றினார் கடியலூர் உருத்திரங் கண்ணனார். அக்காவிரி வளஞ் சுரக்கும் பொன்னி நாட்டில் அமைந்த கழுமல நகரினை,

'விலங்கலமர் புயல் மறந்து மீன்சனிபுக்
கூன் சலிக்குங் காலந்தானும்
கலங்கலிலா மனப்பெருவண் கையுடைய
மெய்யவர் வாழ்கழுமலமே' (1-129-3)

எனச் சிறப்பித்தார் ஆளுடைய பிள்ளையார்.

'மதிசேர்ந்த மகவெண் மீன்
உருகெழுதிறல் உயர் கோட்டத்து
முருகமர்பூ முரண் கிடக்கை
வரியணிசுடர் வான்பொய்கை' (பட்டினப்பாலை 35-38)

என்ற தொடரில் நிறைமதியும் மீனும் பொய்கைக்கும் கரைக்கும் உவமையாகக் குறிப்பிடப்பட்டன இவ்வுவமையை அடியொற்றிப் பிறைமதியை ஏரியின் கரைக்கு உவமையாக நாவுக்கரசர் எடுத்தாண்டுள்ளார்.

'வாரிவளாய வருபுனற் கங்கை சடைமறைவாய்
ஏரிவளாவிக் கிடந்தது போலும் இளம்பிறையே'
(4-113-9)

என்பது திருவிருத்தம்.

'பேரிசை நவிரமே ஏயுறையுங்
காரியுண்டிக் கடவுள்' (82-83)

எனச் சிவபெருமானை மலைபடு கடாம் என்ற சங்கப் பாட்டு, பரவிப் போற்றியுள்ளது.

'ஒருங்களி நீ இறைவா என்று உம்பர்கள் ஓலமிடக்கண்டு
இருங்களமார விடத்தை இன்னமுது உண்ணிய ஈசர்'
(1-43-4)

என்றாங்குவரும் தேவாரப் பாடல்களில் இறைவன் நஞ்சுண்ட திறம் விரித்துரைக்கப் பெற்றுள்ளது.

குரங்குகளின் இனமாகிய கருவிரலூகம், மூங்கில் வளர்ந்த மலைச்சாரலில் விளையாடும் இயல்பு,

'கவணுமிழ் கடுங்கல்
இருவெதிரீர்ங் கழை தத்திக் கல்லெனக்
கருவிரலூகம் பார்ப்போடு இரிய' (206-8)

எனவரும் தொடரில் குறிக்கப்பெற்றது. இவ்வியல்பினை,

'வேயுயர் சாரற் கருவிரலூகம் விளையாடும்
சேயுயர் கோயிற் சிராப்பள்ளி மேய செல்வனார்' (1-98-7)

என வரும் தேவாரத் தொடரால் அறியலாம்.

மலைகளில் வாழும் யானையை மலைப்பாம்பு விழுங்குதல் உண்டு என்பது,

'ஞால்வாய்க் களிறு பாந்தட் பட்டெனத்
துஞ்சாத் துயரத்து அஞ்சுபிடிப் பூசல்' (நற்றிணை 14)

என வரும் தொடராற் புலனாகும்.

இச் செய்தியைப்

'பரியகளிற்றை அரவு விழுங்கி மழுங்க இருள்கூர்ந்த
கரியமிடற்றர் செய்ய மேனிக் கயிலை மலையாரே' (1-68-2)

என்ற தொடரில் சம்பந்தர் குறித்தல் காணலாம்.

காட்டில் வாழும் யானை மூங்கில் வளைத்துத் தழை உண்ணும் நிலையில், அதனால் விடப்பெற்ற மூங்கில், தூண்டிற்கோலைப் போன்று விரைந்து மேலெழும் திறத்தை,

'கான யானை கைவிடு பசுங்கழை
மீனெறி தூண்டிலின் நிவக்கும்' (குறுந்தொகை 54)

என்ற தொடர் விளக்குகிறது. இங்ஙனம் மேலோங்கிய அம் மூங்கில், மழைமேகத்தைக் கீறியது என்பதுபட,

'தாளமர் வேய்தலைபற்றித் தாழ்கரிவிட்ட விசை போய்க்
காளமதார் முகில் கீறும் கற்குடி மாமலையாரே'

என ஞானசம்பந்தப்பிள்ளையார் கூறிய வருணனைப் பகுதி நினைக்கத்தக்கதாகும்.

'தினைத்தாளன்ன சிறுபசுங்கால
ஒழுகுநீர் ஆரல் பார்க்கும் குருகு' (குறுந்தொகை-25)

எனச் சங்கச் செய்யுளில் நாரையின் இயல்பு கூறப்பெற்றது.

'நாரைகள் ஆரல் வாரி வயல்மேதி வைகும்' (2-84-1)

எனவும்,

'தினைத்தாளன்ன செங்கால் நாரை சேருத் திருவாரூர்' (7-95-8)

எனவும் வரும் தேவாரத் தொடர்கள், மேற்குறித்த நாரையின் இயல்பினை விளக்குதல் காணலாம்.

நெய்தல் நிலத்தில் வளர்ந்துள்ள தாழை, குருகினை ஒத்துப் பூக்கும் இயல்பினை,

'தயங்குதிரை பொருத தாழைவெண்பூக்
குருகென மலரும்' (226)

எனவரும் குறுந்தொகைப் பாடலால் அறியலாம். இவ்வுவமையை அடியொற்றி அமைந்தன.

'விடமுண்ட மிடற்றண்ணல் வெண்காட்டின் தண்புறவின்
மடல்விண்ட முத்தாழை மலர் நிழலைக் குருகென்று
தடமண்டு துறைக்கெண்டை தாமரையின் பூமறையைக்
கடல்விண்ட கதிர் முத்தம் நகைகாட்டும் காட்சியதே'
(2-48-4)

எனவும்,

'நெய்தற்குருகு தன்பிள்ளை என்றெண்ணி நெருங்கிச் சென்று
கைதைமடல் புல்கு தென் கழிப்பாலை' (4-106-1)

எனவும் வரும் திருப்பாடல்களாகும். இவை, பேதைமை பொருளாகப் பிறந்த நகைச்சுவையினையும் மயக்கத்தால் ஏற்பட்ட மருட்கைச்சுவையினையும் புலப்படுத்துதல் காணலாம்.

'நீலமேனி வாலிழை பாகத்து
ஒருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை யுலகும் முகிழ்த்தன முறையே'

என்பது ஐங்குறு நூற்றின் கடவுள் வாழ்த்துப் பாடலாகும். இப்பாடற்பொருளை அடியொற்றி அமைந்தது,

'தண்கடல் சூழ்
வியனில் முற்றுக்கும் விண்ணுக்கும் நாகர் வியனர்க்கும்
இயபரமாவன இன்னம்பரான் தன் இணையடியே' (4-100-9)

எனவரும் திருவிருத்தமாகும்.

ஆதிரை முதல்வனாகிய இறைவனுடைய திருக்கோயில்களில் வழிபாடு இயற்றும் அந்தணர்களை 'விரிநூல் அந்தணர்' (11) எனப் பரிபாடல் கூறும். ஆகமங்களை உணர்ந்த பூசகர்களாகிய இப்பெருமக்களை 'முப்பொழுதும் திருமேனி தீண்டுவார்க்கு அடியேன்' எனத் திருத்தொண்டத்தொகையில் நம்பியாரூரர் போற்றியுள்ளார்.

'உருளிணர்க் கடம்பின் ஒலிதாரோயே' (7) என முருகனைப் பரிபாடல் போற்றும். அப்பரடிகள் 'நங்கடம்பன்' எனப் போற்றினார்.

'மணிமிடற்று எண்கையாய்' எனச் சிவபெருமானைப் போற்றுவதாக அமைந்தது, கலித்தொகைக் கடவுள் வாழ்த்து.

'எண்தோள் வீசிநின் றாடும்பிரான்' எனப் போற்றுவர் அப்பரடிகள்.

படைத்தற் கடவுளாகிய நான் முகனைத்
'தொடங்கற்கண் தோன்றிய முதியவன்'

எனப் பாலைக்கலி கூறும். அத்தொடர்ப்பொருளைப் பின்பற்றி 'ஆதிக்கண்ணான்' (6-20-1) எனக் குறித்தார் அப்பரடிகள்.

'கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த்
தாரன்மாலையன் மலைந்த கண்ணியன்'

எனச் சிவபெருமானைப் போற்றுவது அகநானூற்றுக் கடவுள் வாழ்த்து.

'கொன்றைத்தாரன் மாலையன் தண்ணுறுங் கண்ணியன்' (5-12-7)

என அப்பரும்,

'காரார் கொன்றை கலந்த முடியினர்' (1-5-1)

எனச் சம்பந்தரும் குறித்துள்ளமை காணலாம்.

'செவ்வானன்ன மேனி'

என்றார் பெருந்தேவனார்.

'அந்தி வானமும் மேனியோ சொலும்' (7-36-4)

என இறைவனை வினவினார் ஆரூரர்.

'முதிராத்திங்களொடு சுடருஞ் சென்னி'

என்றார் பெருந்தேவனார்.

'மாதர்ப் பிறைக் கண்ணியானை' (4-3-1)

என வழுத்தினார் அப்பரடிகள்,

'யாழ்கெழு மணிமிடற்று அந்தணன்
தாவில் தாணிழல் தவிர்ந்தன்றால் உலகே' (அக - கடவுள்)

எனவரும் தொடர்ப் பொருளை அடியொற்றி இறைவனது திருவடியைப் 'படிக்கொள் சேவடி' (5-36-10) எனப் பரவிப் போற்றினார் அப்பர் சுவாமிகள்,

'நீரறவறியாக் கரகத்துத்
தாழ்சடைப் பொலிந்த அருந்தவத் தோற்கே'

என்பது புறநானூற்றுக் கடவுள் வாழ்த்து.

'தொடைத்தலை மலைத்திதழி துன்னிய எருக்கலரி வன்னி முடியின்
சடைத்தலை மிலைச்சிய தபோதனன்' (3-79-5)

எனவரும் ஞானசம்பந்தர் தேவாரம். இறைவனது தவஉருவினை இனிது புலப்படுத்துதல் காணலாம்.

'அப்பிறை, பதினெண் கணமும் ஏத்தவும் படுமே'

என்பது புறப்பாட்டு.

'பாரொடும் விண்ணும் மண்ணும்
பதினெட்டுக் கணங்கள் ஏத்த' (4-20-8)

என்பது அப்பர் தேவாரம்.

அதியமான் என்னும் வள்ளலது கொடைத்திறத்தினையும் விருந்தோம்பும் பண்பினையும் பாராட்டப் போந்த ஔவையார்,

'ஒரு நாட் செல்லலம் இருநாட் செல்லலம்
பலநாட் பயின்று பலரொடு செல்லினும்
தலைநாட் போன்ற விருப்பினன் மாதோ' (புறம்:01)

என மகிழ்ந்து பாடியுள்ளார். திருமுல்லை வாயில் என்ற தலத்தில், வாழும் செல்வர்களது விருந்தோம்பும் குணத்தினையும் எத்தனை நாட்கள் தங்கினாலும் அடியார்கள் பால் வைத்த ஆரா விருப்பத்தினால் செஞ்சாலி நெல்லின் விளைந்த திருவமுதினை அருத்தும் திறத்தினையும் நேரிற்கண்டு மகிழ்ந்த ஞானசம்பந்தப் பிள்ளையார்,

'மஞ்சாருமாட மனைதோறும் ஐயமுளது என்று வைகி வரினும்
செஞ்சாலி நெல்லின் வளர்சோறு அளிக்கொள்
திருமுல்லைவாயிலிதுவே' (2-88-7)

எனப் பாராட்டியுள்ளமை இங்கு ஒப்பு நோக்குதற்குரியதாகும்.

'பாரி பாரியென்று பலவேத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்' (புறம்.107)

எனப் போற்றினார் கபிலர் என்னும் புலவர் பெருமான். அங்ஙனம் போற்றப்பெற்ற பாரி வள்ளலின் சீர்த்தியை நன்குணர்ந்த நம்பியாரூரர்,

'கொடுக்கிலாதானைப் பாரியே யென்று
கூறினும் கொடுப்பார் இலை' (7-34-2)

எனப் பாரிவேளைப் பாராட்டிய திறம், அவரது சங்க நூற் புலமையினை இனிது புலப்படுத்துவதாகும்.

எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் என்ற புலவர் பெருமான், குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனது ஆட்சியில் தம்மை யொத்த குடிமக்கள் பலரும் எத்தகைய அச்சமும் இன்றி வாழும் திறத்தைப் புலப்படுத்துவதாக அமைந்தது,

'எறிதிரைப் பெருங்கடல் இறுதிக்கட் செலினும்
தெறுசதிர்க்கனலி தென்றிசைத் தோன்றினும்
என்னென் றஞ்சலம் யாமே வென்வேல்
அருஞ்சமம் கடக்கும் ஆற்றலவன்
திருந்துகழல் நோன்தாள் தண்ணிழலேமே'

(புறம்.397)

என்ற பாடலாகும். எல்லா உலகிற்கும் தலைவனாகிய இறைவனது திருவடியை அரணாகக் கொண்டோர், எத்தகைய அச்சமும் இன்றி நீடு வாழ்வார்கள் என்பதனை,

வானந்துளங்கிலென் மண்கம்பமாகில்என் மால்வரையும்
தானந்துளங்கித் தலைதடுமாறிலென் தண்கடலும்
மீனம்படிலென் விரிசுடர் வீழிலென் வேலை நஞ்சுண்டு
ஊனமொன்றில்லா ஒருவனுக்கு ஆட்பட்ட உத்தமர்க்கே.

(4-113-8)

எனவும்,

'எம்பரிவு தீர்ந்தோம் இடுக்கண் இல்லோம்
எங்கெழிலென் ஞாயிறு எளியோமல்லோம்' (6-95-2)

எனவும் வரும் திருப்பாடல்களில் திருநாவுக்கரசர் வற்புறுத்திய திறம் இங்குச் சிந்திக்கத்தக்கதாகும்.

வடதிசையில் இறைவன் எழுந்தருளிய இமயம் உள்ளது. அதற்கு ஒப்பத் தென்திசையில் ஆய்குடி என்ற ஊர் இல்லாது போகுமானரல் இவ்வுலகம் நிறை ஒவ்வாமையால் பிறழ்ந்து போகும்; ஆய்குடி இருத்தலால் அத்தகைய பிறழ்ச்சி இலதாயிற்று - என ஆய்குடியைச் சிறப்பிக்கும் முகத்தால் அங்கு வாழும் ஆய்வேளினது பெருமைக்கு இமயத்து வாழும் இறைவனது பெருமையை உவமையாக்கிப் புனைந்துரை வகையால் உயர்த்துவது,

'வடதிசையதுவே வான்தோய் இமயம்
தென்திசை ஆய்குடி இன்றாயின்
பிறழ்வது மன்னோ இம்மலர்தலை உலகே'

எனவரும் 32-ஆம் புறப்பாடலாகும். உண்மைவகையான் நோக்கின் வடதிசையில் இறைவன் விரும்பி வீற்றிருக்கும் திருக்கயிலாய மலைக்கு ஒப்பத் தென் திசையில் திருநல்லூர் என்னும் தலம் இறைவனுக்கு உவப்பாகிய பெருமையுடன் திகழ்கின்றது என அறிவுறுத்தும் முறையில் அமைந்தது,

படவேர்அரவல்குற் பாவைநல்லீர்பகலே யொருவர்
இடுவார் இடைப்பலிகொள்பவர் போலவந்து இல்புகுந்து
நடவார்அடிகள் நடம் பயின்றாடிய கூத்தர்கொலோ
வடபாற் கயிலையுந் தென்பால் நல்லூருந்தம் வாழ்பதியே.
(4-97-3)

என்ற திருவிருத்தம் ஆகும்.

'காமப்பகுதி கடவுளும் வரையார்
ஏனோர் பாங்கினும் என்மனார் புலவர்'

என்வரும் தொல்காப்பியப் புறத்திணை இயற்சூத்திரம், தனக்குவமையில்லாத இறைவனைத் தலைவனாகக்கொண்டு தேவரும் மக்களுமாகிய உயிர்கள் அன்பினாற்காமுற்று வாழும் ஒழுகலாற்றைக் குறிப்பதாகும். இக்குறிப்பினை அடிப்படையாகக் கொண்டு சங்க இலக்கியங்களில் விரித்துரைக்கப் படும் அகப்பொருட்டுறை அமையப் பாடிய அகத்துறைப் பாடல்கள் மூவர் தேவாரத்தும் அமைந்திருத்தல் காணலாம்.

தலைமகனது பெரும்புகழ் கேட்டுத் தலைவி மகிழும் நிலையில் ஏற்படும் மெய்ப்பாட்டினை 'உறுபெயர் கேட்டல்' எனத் தொல்காப்பியர் குறித்துள்ளார். இம்மெய்ப்பாட்டினை அடியொற்றி அமைந்தது;

'முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னையவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்
தன்னை மறந்தாள்தன் நாமங்கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே'

எனவரும் திருத்தாண்டகம் ஆகும்.

இதுகாறும் எடுத்துக்காட்டியவற்றால், இறைவனது பொருள்சேர் புகழை விரித்துரைக்கும் தேவாரத் திருமுறைகளில், கடைச் சங்க நூல்களாகிய பத்துப் பாட்டு எட்டுத் தொகை என்பவற்றின் சொற்பொருள் நலன்கள் இடம் பெற்றுள்ளமை நன்கு புலனாதல் காணலாம்.



# 9. திருக்குறளும் தேவாரத் திருமுறையும்

**'தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்**
**மூவர் தமிழும் முனிமொழியுங் - கோவை**
**திருவாசகமும் திருமூலர் சொல்லும்**
**ஒருவாசகமென் றுணர்'**

என்பது ஒளவையார் அருளிய மெய்ம்மொழியாகும். திருவள்ளுவதேவர் அருளிய திருக்குறளும், திருநான்மறை முடிவாகிய உபநிடதங்களும், சிவநெறிச் செல்வகளாகிய திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் முதலிய பெருமக்கள் அருளிய தேவாரம், திருவாசகம், திருக்கோவை, திருமந்திரம் முதலிய திருமுறைகளும், உலகியல் கூறி மெய்ப் பொருள் இதுவென உணர்த்தும் நெறியில், ஒத்த கருத்துடைய மெய்ந்நூல்கள் என்பது மேற்குறித்த நல்வழிச் செய்யுளின் கருத்தாகும்.

அறநெறியில் நின்று பொருளையீட்டி அப்பொருளால் இன்பம் நுகரும் மக்களது வாழ்க்கை முறையினை 'மூன்றன் பகுதி' எனக் குறிப்பிடுவர் தொல்காப்பியர். அவ்வாசிரியர் குறித்தவண்ணம் மக்களது நல்வாழ்க்கை முறையினை அறத்துப் பால், பொருட்பால், காமத்துப்பால் என முப்பாலாக வகுத்து விளக்குவது, தெய்வப்புலவர் அருளிய திருக்குறளாகும். உலகப் பொதுமறையாக விளங்கும் இந்நூல், நாடு, மொழி, சமயம், இனம் முதலிய வேற்றுமையின்றி மக்கட் குலத்தார் அனைவரும் உவந்தேற்றுக்கொள்ளுந் தகுதி வாய்ந்த சிறந்த ஒழுக்க நெறியினை அறிவுறுத்துவதாகும். ஆகவே தமிழகத்தில் வாழ்ந்த சான்றோர் அனைவரும் சமய வேறுபாடின்றித் திருக்குறளைத் தமக்குரிய மறைநூலாக மதித்துப் போற்றியுள்ளார்கள். செம்புலச் செல்வர்களாகிய தேவார ஆசிரியர்கள் மூவரும் இறைவனது பொருள்சேர் புகழை விரித்துப் போற்றும் முறையில் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத் திருப்பதிகங்களில் திருவள்ளுவர் அருளிய திருக்குறட் கருத்துக்கள் ஆங்காங்கே சிறப்பாக இடம் பெற்றுள்ளன.

இவ்வுலக நிகழ்ச்சியைக் கூர்ந்து நோக்குங்கால், இவ்வுலகம் ஓர் ஒழுங்கு நிலையில் நின்று செயற்படுதல் இனிது புலனாகும். இத்தகைய நியதியொடு நிகழும் செயற்பாட்டுக்கு நிமித்த காரணமாய் உடன்நின்று இயக்கி நிற்கும் பேராற்றல் வாய்ந்த முழுமுதற்பொருள் ஒன்று இருத்தல் வேண்டும் என்பது

அறிஞரனைவர்க்கும் ஒப்ப முடிந்த உண்மையாகும். இங்ஙனம் எல்லார்க்கும் புலனாகும் இவ்வுலக நிகழ்ச்சியினை அடிப்படையாகக் கொண்டே, காணப்படாது உயிர்க்குயிராய் உடனின்றியக்கியருளும் முழுமுதற் பொருளாகிய கடவுளது உண்மையினை உணர்த்தக் கருதிய திருவள்ளுவர்,

'அகர முதல எழுத்தெல்லாம்; ஆதி
பகவன் முதற்றே யுலகு'

என அருளிச் செய்தார். "எழுத்துக்களெல்லாம் தம்மை உடனின்று செலுத்தும் அகர வொலியினைத்தமக்கு முதலாக உடையன; அதுபோல உலகமும் தன்னை உடனின்று இயக்கி நிற்கும் ஆதிபகவனாகிய இறைவனைத் தனக்கு முதலாக உடையது" என்பது இதன் பொருள். இங்கு 'உலகு' என்றது, உடம்பொடு காணப்படும் உயிர்த் தொகுதியினை, ஓர் வரையறையுடன் காணப்படும் இவ்வுலக நிகழ்ச்சியைக் கொண்டு இதற்கு நிமித்தகாரணமாகிய முதற்பொருள் ஒன்றுண்டு எனத் துணிய வெண்டியிருத்தலால் "உலகு ஆதி பகவனை முதலாக உடையது" என உலகின் மேல் வைத்துக் கூறினார். ஆயினும் தனக்கு முதல்வனாக ஆதிபகவனைத் தேர்ந்துகொள்ளும் உணர்வுரிமையும் உடைமைத் தன்மையும் உலகிற்கு இன்மையால் 'உலகிற்கு முதல்வன் ஆதி பகவன்' என்பதே ஆசிரியர் கருத்தாகக் கொள்ளுதல் வேண்டும் என விளக்கங்கூறுவர் பரிமேலழகர்.

"எழுத்தெனப் படுப அகரமுதல" (நூன்மரபு-1)

என்றும்,

"மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்" (மொழி மரபு-13)

என்றும் வரும் நூற்பாக்களில் ஆசிரியர் தொல்காப்பியனார், எழுத்துக்கள் எல்லாவற்றின் இயக்கத்திற்கும் காரணமாய் நிற்கும் அகரம் முதன்மையுடையதாதலைக் குறித்துள்ளார். "அகரம் தனியே நிற்றலானும் பல மெய்க்கண் நின்று அவ்வம்மெய்கட்கு இசைந்த ஓசைகளைப் பயந்தே நிற்றலானும் வேறுபட்டதாகலின், ஒன்றேயாயும் பலவேயாயும் நிற்பதோர் தன்மை உடைத்தென்று கோடும்; இறைவன் ஒன்றேயாய் நிற்குந் தன்மையும் பல்லுயிர்க்குந் தானேயாய் நிற்குந் தன்மையும் போல"எனவும், 'இறைவன் இயங்குதிணைக் கண்ணும் நிலைத்திணைக் கண்ணும் பிறவற்றின் கண்ணும் அவற்றின் தன்மையாய் நிற்குமாறு எல்லார்க்கும் ஒப்பமுடிந்தாற்போல, அகரமும் உயிர்க்கண்ணும் தனிமெய்க் கண்ணும் கலந்து அவற்றின் தன்மையாலே நிற்கும் என்பது சான்றோர்க்கெல்லாம் ஒப்பமுடிந்தது.' 'அகர முதல' என்னுங் குறளான் 'அகரமாகிய

முதலையுடைய எழுத்துக்களெல்லாம், அதுபோல இறைவனாகிய முதலையுடைத்து உலகம்' என வள்ளுவனார் உவமை கூறிய வாற்றானும், கண்ணன் 'எழுத்துக்களில் அகரமாகின்றேன் யானே' எனக்கூறிய வாற்றானும், பிற நூல்களாலும் உணர்க' எனவும் தொல்காப்பியவுரையாசிரியராகிய நச்சினார்க்கினியர் அகரத்தைப் பற்றிக்கூறிய கருத்துக்கள், திருக்குறள் முதலதிகாரத்தின் முதற் குறளின் விளக்கமாக அமைந்திருத்தல் காணலாம். இத்திருக் குறட்பொருளை,

'அகரமுதலானை அணியாப்பனூரானை' (1-88-5)

எனத் திருஞானசம்பந்தரும்,

'ஆனத்தின் முன்னெழுத்தாய் நின்றார்போலும்' (6-28-1)

எனத் திருநாவுக்கரசரும்,

'அகர முதலின் எழுத்தாகி நின்றாய்' (7-3-7)

எனச் சுந்தரமூர்த்தி சுவாமிகளும் தாம்பாடியருளிய திருப் பாடல்களிற் பொன்னேபோற் போற்றியுள்ளமை காணலாம்.

இறைவனை 'ஆதிபகவன்' என்ற பெயரால் திருவள்ளுவர் குறித்துள்ளார். ஆதிபகவன் என்பது இரு பெயரொட்டுப் பண்புத்தொகை என்றார் பரிமேலழகர். அவர் கருத்துப்படி இத்தொடர், ஆதியாகிய பகவன் எனவிரியும் முதற்கடவுள் என்பது இதன் பொருளாகும். இனி, ஆதி என்பது சிவசத்தியைக் குறித்த பெயராகக் கொண்டு, ஆதிபகவன் என்ற தொடர்க்கு 'ஆதி சத்தியொடு கூடிய சிவன்' எனச் சிவநெறிச் செல்வர்கள் பொருள் கொண்டார்கள் எனத் தெரிகிறது. "அநாதி முத்த சித்துருவாகிய முதல்வன், ஒன்றினுந் தோய்வின்றித் தானே சொயம்பிரகாசமாய் நிற்குந் தன்னுண்மையிற் 'சிவம்' எனவும், உலகெலாமாகி வேறாய் உடனுமாய் இவ்வாறு உயிர்களின் வழி நிற்குந் தன்மையிற் 'சக்தி' எனவும் தாதான்மியத்தால் இருதிறப் பட்டு" உலகினை இயக்கி நிற்றல்பற்றி இறைவனை 'ஆதிபகவன்' என்ற பெயரால் திருவள்ளுவர் குறித்துள்ளார் எனக்கருதுதல் பொருந்தும்.

'சத்தியுள் ஆதியோர் தையல்பங்கன்' (1,115-4)

என்வரும் திருஞானசம்பந்தர் தேவாரத் தொடர், திருவள்ளுவர் கூறிய 'ஆதிபகவன்' என்னும் திருப்பெயர்க்குரிய விளக்கமாக அமைந்திருத்தல் இக்கருத்தினை வலியுறுத்துதல் காணலாம்.

இறைவன், சத்தியுஞ் சிவமுமாய்ப் பிரிவற நின்றே உலகினைப் படைத்துக் காத்து அழித்து மறைத்து அருள் புரிகின்றான் என்பது,

எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவனும் நிற்பன்
(சிவஞான சித்தியார் - சுபக். -165)

எனவும்,

'சிவனெனும் பொருளும் ஆதிசத்தியொடு
சேரின் எத்தொழிலும் வல்லதாம்' (சௌந்தரியலகரி)

எனவும் வரும் ஆன்றோர் உரைகளால் இனிதுணரப்படும்.

வேதத்துள், அத்துவிதம் என்றதுமன்றி ஏகம் எனவும் ஒற்றுமைப்பட ஓதுதலால், அதற்குமாறாக உயிர்கள் பல என்றும் இறைவன் அவற்றுடன் ஒன்றி நிற்கின்றான் என்றும் வேறுபடக் கூறுவதென்னை? என்னும் தடையினை நிகழ்த்திக்கொண்டு அதற்கு விடை கூறும் நிலையில்,

'ஒன்றென்ற தொன்றேகாண், ஒன்றேபதி, பசுவாம்
ஒன்றென்ற நிபாசத்தோடுளைகாண்-ஒன்றின்றால்
அக்கரங்கள் இன்றாம் அகரவுயிர் இன்றேல்
இக்கிரமத் தென்னும் இருக்கு'

எனமெய்கண்ட தேவரும்,

'ஒன்றென மறைகளெல்லாம் உரைத்திட உயிர்கள் ஒன்றி
நின்றனன் என்று பன்மை நிகழ்த்துவ தென்னை யென்னின்
அன்றவை பதிதான் ஒன்றென்றறையும் அக்கரங்கள் தோறும்
சென்றிடும் அகரம்போல நின்றனன் சிவனுஞ் சேர்ந்தே'

என அருணந்திசிவனாரும் கூறிய விளக்கங்கள் 'அகர முதல எழுத்தெல்லாம்' என்னும் திருக்குறட் பொருளைஅடியொற்றி யமைந்தனவாம்.

'அகர வுயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரிலிறை நிற்கும் நிறைந்து' (திருவருட்பயன்-1)

என உமாபதிசிவம் இயற்றிய குறள் வெண்பா, 'அகர முதல' என்னும் திருக்குறளின் தெளிவுரையாக அமைந்துளது.

எல்லா நூல்களையுங் கற்றவர்க்கு அக்கல்வியறிவினாலாய பயன், ஞானமே யுருவாகிய இறைவன் திருவடிகளைத் தொழுது போற்றுதலேயாகும். கற்ற கல்வியினும் இனியானாகிய இறைவனை வழிபடாதார்க்கு அன்னோர் அரிதின் முயன்று பெற்ற கல்வியறி வினாற் சிறிதும் பயனில்லை என்பார்.

'கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழா அரெனின்'

என்றார் திருவள்ளுவர். பிரமபுரத் திறைவனை அன்பினால் வழிபடும் சிவஞானச் செல்வர்களாகிய அடியார்களின் இயல்பினைக் கூறப் போந்த ஞானசம்பந்தப் பிள்ளையார்,

'கற்றல் கேட்டலுடையார் பெரியார் கழல் கையாற் றொழுதேத்தப்
பெற்ற மூர்ந்த பிரமாபுரமேவிய பெம்மான் இவனன்றே' (1-1-2)

எனவரும் தொடரில், இத்திருக்குறட் பொருளை எடுத்தாண்டுள்ளார். வாலறிவன் என்பது, இறைவனைக் குறித்த பெயர். தூய மெய்யுணர்வே தனது திருமேனியாக விளங்குபவன் என்பது இதன் பொருள். 'ஞானத் திரளாய் நின்ற பெருமான்' என ஞானசம்பந்தர் இறைவனைப் போற்றியுள்ளமை 'வாலறிவன்' என்னும் இத்தொடர்ப் பொருளை இனிது விளக்குவதாகும். வாலறிவன் நற்றாள் தொழுதற்கு ஏற்றமுறையிற் கற்கப்படு நூல்களாகத் திருவள்ளுவராற் சுட்டப்பட்டவை, உலக வாழ்க்கை யொன்றையே விரித்துரைக்கும் உலக நூல்கள் மட்டும் அல்ல என்பதும், இறைவனைப் பற்றியும், அப்பெருமானையுணர்ந்து வழிபடுதற்கேற்ற திருவுருவ அடையாளங்களைப் பற்றியும், அம்முதல்வன் அன்புடையார் வேண்டுகோட் கெளிவந்து எழுந்தருளிய திருக்கோயில்களைப் பற்றியும், அவனை யடைதற் குரிய சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நெறிகளைப் பற்றியும், அந்நெறிகளில் ஒழுகும் அடியார்களுக்கு அருளாள னாகிய இறைவன் அருள் வழங்கும் நீர்மையினைப் பற்றியும் அறிவுறுத்தும் ஞான நூல்களே இங்குச் சிறப்பாகச் சுட்டப் பட்டன என்பதும் கூர்ந்து உணரத் தக்கனவாகும்.

இறைவனது திருவருட் பெருமையினை உணர்ந்து உய்தி பெறும் நோக்கத்துடன், ஆயிரக் கணக்கான வேதம் ஆகமம் முதலிய மெய்ந் நூல்களைக் கற்றுணர்ந்தும் கற்ற கல்வியின் பயன்! 'கடவுளடிகளை மறவாது போற்றுதலே என்னும் தெளிவில்லாத வர்களாய்த் தமது நூற்பயிற்சி யொன்றையே யெண்ணி வியந்து நின்று வாழ்நாளை வீழ்நாளாக்கும் நற்பேறில்லாத மக்களை நோக்கி அப்பரடிகள் இடித்துக் கூறுவதாக அமைந்தது,

குறிகளும் அடையாளமுங் கோயிலும்
நெறிகளும் அவர் நின்றதோர் நீர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதினும்
பொறியிலீர் மனம் என்கொல் புகாததே. (5-90-6)

எனவரும் திருக்குறுந்தொகையாம். இத் திருப்பாடல் இரண்டாந் திருக்குறளுக்கு விளக்க உரையாக அமைந்தமை அறிந்தின்புறத்தக்கதாகும்.

அன்பினாற் கசிந்துருகிப் போற்றும் அடியார்களின் நெஞ்ச மாகிய தாமரையிலே, அவர்கள் நினைந்த திருமேனி கொண்டு எழுந்தருளியிருத்தல், இறைவனது அருளின் நீர்மையாதலின், எல்லாம் வல்ல முதல்வனுக்கு 'மலர்மிசை ஏகினான்' என்பது ஒரு திருப்பெயராயிற்று. நினைப்பவர் நெஞ்சத் தாமரை

*யினையே கோயிலாகக் கொண்ட இறைவனது மாண்புமிக்க திருவடிகளை இடைவிடாது நினைந்து போற்றுவார் எல்லா வுலகிற்கும் மேலாகிய வீட்டுலகின் கண் எக்காலத்தும் அழிவின்றி வாழ்வார் என்பது,*

'மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ்வார்' (3)

*என்பதனால் உணர்த்தப்பட்டது.*

*இறைவனைக் குறித்தமைந்த 'மலர்மிசை ஏகினான்' என்னும் இத்தொடர்ப் பொருளை,*

'சினமலி யறுபகை மிகுபொறி சிதைதருவகை வளிநிறுவிய
மனனுணர்வொடு மலர்மிசை யெழுதரு பொருள் நியதமு முணர்பவர்
தனதெழிலுருவது கொடுவடை தகுபரனுறைவது நகர்மதின்
கனமருவிய சிவபுரநினைபவர் கலைமகள் தரநிகழ்வரே' (1-21-5)

*எனவும்,*

'அகனமர்ந்த அன்பினராய் அறுபகைசெற்
றைம்புலனும் அடக்கி ஞானப்
புகலுடை யோர்தம் முள்ளப் புண்டரிகத்
துள்ளிருக்கும் புராணர்' (1-132-5)

*எனவும்,*

'சுடர்கமலப் பேதகஞ் சேர் புண்ணியனார்' (1-66-2)

*எனவும் வரும் தொடர்களில் ஞானசம்பந்தப் பிள்ளையார் எடுத்தாண்டுள்ளார். இவ்வாறே திருநாவுக்கரசரும்,*

'நன்மலர் உறையாநின்ற அறநெறியை' (6-29-1)

*எனவும்,*

'நின்றபூமேல் எழுந்தருளியிருந்தானை' (6-84-1)

*எனவும்,*

'எரியாயதாமரைமேல் இயங்கினாரும்' (6-16-7)

*எனவும்,*

'அடித்தாமரை மலர்மேல் வைத்தார்' (6-21-1)

*எனவும்,*

'புண்டரிகப் புதுமலராதனத்தார்' (6-53-8)

*எனவும் வருந்தொடர்களில் எடுத்தாண்டுள்ளமை காண்க.*

*ஒரு பொருளை விரும்புதலும் வெறுத்தலும் இல்லாதவன் இறைவன். எனவே அம்முதல்வனுக்கு 'வேண்டுதல் வேண்டாமை*

யிலான்' என்பதொரு பெயராயிற்று. வேண்டுதலும் வேண்டாமையும் இல்லாதவனாகிய இறைவனது திருவடியைச் சேர்ந்த அடியார்க்கும் விருப்பு வெறுப்பு என்னும் குற்றங்கள் இல்லாதொழிதலால் அவை காரணமாக வரும் பிறவித்துன்பங்கள் எக்காலத்தும் உண்டாகா என்பார்.

**'வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்**
**கியாண்டும் இடும்மையில'**

என்றார் திருவள்ளுவர். 'வேண்டுதல் வேண்டாமையிலான்' என்னும் இத்தொடரை,

**'வேண்டாமை வேண்டுவது மில்லான் தன்னை'** (6-46-9)

என அப்பரடிகள் தாம்பாடிய திருத்தாண்டகத்திற் பொன்னே போற் போற்றிவைத்துள்ளார்.

இறைவனது பொருள்சேர்ந்தபுகழை விரும்பினார்க்கு, அகவிருளாகிய ஆணவத்தைப் பற்றி வரும் நல்வினை தீவினை என்னும் இருவினைகளும் உளவாகா என்பது,

**இருள்சேர் இருவினையுஞ் சேரா, இறைவன்**
**பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.**

என்ற குறளிற் கூறப்பட்டது. இதன்கண் 'இருள்' என்றது 'மயக்கத்தை' எனவும், 'பொருள்' என்றது 'மெய்ம்மையை' எனவும் கொண்டு, 'மயக்கத்தைப் பற்றிவரும் நல்வினை தீவினையென்னும் இரண்டு வினையும் உளவாகா; இறைவனது மெய்ம்மை சேர்ந்த புகழை விரும்பினாரிடத்து' எனப் பரிமேலழகர் பொருள் வரைந்துள்ளார். "இன்ன தன்மைத்தென ஒருவராலுங் கூறப்படாமையின் அவிச்சையை 'இருள்' என்றும், நல்வினையும் பிறத்தற் கேதுவாகலான்" 'இருவினையுஞ் சேரா' என்றும் கூறினார். இறைமைக் குணங்கள் இலராயினாரை உடையர் எனக்கருதி அறிவிலார் கூறுகின்ற புகழ்கள் பொருள்சேரா ஆகலின், அவை முற்றவும் உடைய இறைவன் புகழே 'பொருள் சேர்புகழ்' எனப்பட்டது. 'புரிதல்-எப்பொழுதுஞ் சொல்லுதல்' என்பது மேற்காட்டிய குறளுக்குப் பரிமேலழகர் எழுதிய விளக்கவுரையாகும்.

ஆசிரியர் திருவள்ளுவர், மயக்கத்தினை 'மருள்' என்று வேறோர் சொல்லால் வழங்கியிருத்தலால், அதனின் வேறாக 'இருள்' என்ற சொல்லாற் குறிக்கப்பட்டது, மயக்கமாக இருத்தல் இயலாது. புறத்தே காணப்படும் பூத இருளானது, கண்ணால் ஒரு பொருளையும் காணமுடியாத நிலையிற் பொருள்களின் உருவத்தை மறைத்து நிற்பது. இவ்வாறே உயிர்களின் அகத்துணர்வாகிய அறிவுக்கண்ணை மறைத்து நிற்பதாகிய

இருளொன்று உண்டென்பதும், அகவிருளாகிய அது, தன் தன்மை யிதுவென உயிர்கள் உணராதபடி அவற்றின் அறிவினை மறைத்து நிற்றலால், ஆன்மாவாகிய பொருளையுங் காட்டாது அதனை மறைத்துள்ள தன்னையுங்காட்டாது நிற்குந் தனித் தன்மை யுடையதென்பது,

'ஒருபொருளுங் காட்டாது இருள் உருவம்காட்டும்;
இருபொருளுங் காட்டாது இது' (திருவருட்பயன்-23)

என உமாபதி சிவாசாரியார் இருள்மலமாகிய ஆணவ மலத்தின் இயல்பினை எடுத்துரைத்தலால் இனிது புலனாம். இங்ஙனம் ஆன்மாக்களின் அறிவினை அநாதியே மறைத்து நிற்ப தொன்றையே ஆசிரியர் திருவள்ளுவர் இத்திருக்குறளில் 'இருள்' என வழங்கியிருத்தல் வேண்டும். ஈண்டு 'இருள்' என்றது ஆணவமாகிய இருள் மலத்தையே எனவும், 'பொருள் என்றது, அம்மலவிருளை நீக்கி உயிர்களுக்கு நல்லுணர்வளிக்கும் அருள் ஞானமாகிய மெய்யுணர்வினையே எனவும் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் முதலிய சிவநெறிச்செல்வர்கள் இத்திருக் குறளுக்குப் பொருள் கண்டுள்ளார்கள்.

"பிறவித் துன்பத்திற்குக் காரணமாய் அநாதியே உயிர் களைப்பற்றி நின்று இருவினையிற் புகுத்தி இடர் விளைக்கும் இருளாகிய மலமறைப்பினின்றும் விடுபட்டு உய்திபெற விரும்பு வீராயின், தன்னை இடைவிடாது, தியானிக்கும் அன்பர்கள் உள்ளத்தே தேன்போன்று உண்ணித்து இன்பம் நல்குவானாகிய இறைவன் எழுந்தருளிய மயிலாடுதுறையில் அப்பெருமான் அருளிய சிவஞானமாகிய பொருளையே துணையாகக் கொண்டு புகழ்ந்து போற்றி அம் முதல்வன் திருவடிகளைப் பேணி வழிபடுவீர்களாக" என உலக மக்களுக்கு அறிவுறுத்தும் நிலையிலமைந்தது,

"ஊனத்திருள் நீங்கிட வேண்டில்
ஞானப் பொருள் கொண்டடி பேணும்
தேனோத் தினியான் அமருஞ்சேர்
வானா மயிலாடு துறையே" (1-38-3)

எனவரும் திருஞானசம்பந்தர் தேவாரமாகும். உயிர்கட்கு ஊனத்தை விளைக்கும் 'இருள்' என்பதொரு மலம் உண்டென்பதும், அவ்விருள் நீக்கத்திற்கு இறைவன் அறிவுறுத்தும் 'சிவஞான மாகிய பொருளையே துணையாகக்கொண்டும்' இறைவனது திருவருளைப் புகழ்ந்து போற்றி வழிபாடு செய்தல் இன்றியமை யாததென்பதும் இத் திருப்பாட்டில் நன்கு புலப்படுத்தப் பெற்றமை காண்க.

உயிர்களை ஆணவ இருளாகிய திரை அநாதியே மறைத்து நிற்றலால், மெய்ஞ்ஞானமாகிய பெரும் பொருளையுணருந் தகுதிவாய்ந்த அறிவுக் கண்களையிழந்து, நுகர்தற்குரிய பொருள் எதனையும் அடையப் பெறாது, அதனைநாடிப் பெறுதற்குரிய உபாயத்தினையும் இழந்து ஒன்றும் புரியாத குருடராய், உயிர்கள் தனித்து இருளில் வீழ்ந்து தடுமாறிய கேவல நிலையில், இறைவனுடைய திருவடிகளாகிய திருவருட் சத்தி, அவ் வுயிர்களின் இடர் நிலைக்கு இரங்கி, கொடிய நரகமெனப்படும் அத்துன்பக் குழியில் வருந்தும் அவ்வுயிர்களைத் தன் அருளாகிய கைகொடுத்துப் பற்றியெடுத்து ஈறிலாப் பேரின்ப வாழ்வாகிய இன்பக்கரையில் ஏற்றியருள்கின்றது. இறைவனது அருளுபகார மாகிய இந்நிகழ்ச்சியை,

> 'இருள்தரு துன்பப்படல மறைப்ப மெய்ஞ் ஞானமென்னும்
> பொருள்தரு கண்ணிழத் துண்பொருள் நாடிப் புகலிழந்த
> குருடருந் தம்மைப் பரவக் கொடுநரக குழிநின்
> றருள்தரு கைகொடுத் தேற்றும் ஐயாறன் அடிந்தலமே'

என வரும் திருப்பாடலில் திருநாவுக்கரசர் இனிது விளக்கியருள் கின்றார்.

இத்திருப் பாடலின் சொற்பொருளமைதியைக் கூர்ந்து நோக்குங்கால், 'இருள்சேர் இருவினை' என்ற தொடரில் 'இருள்' என்றது, மெய்யுணர்வைப் பெறவொட்டாது உயிர்களின் அறிவுக் கண்ணை மறைக்கும் ஆற்றலுடைய இருள் மலத்தினையே என்பதும், அவ்விருட்படல மறைப்பினாலே உயிர்கள் அறிவுக் கண்ணையிழந்து அல்லற்படுகின்றன என்பதும், 'பொருள்சேர் புகழ்' என்ற தொடரிற் 'பொருள்' என்றது, இறைவனது திருவருள் ஞானத்தையே என்பதும், இறைவனது புகழ் அவனருளும் மெய்ஞ்ஞானமாகிய அதன் துணை கொண்டே உணர்தற்குரிய தாதலின், அதனைத் திருவள்ளுவர் 'பொருள்சேர் புகழ்' என அடைகொடுத்தோதினார் என்பதும் நன்கு புலனாகும்.

ஆணவமாகிய இருள்நீங்க நோக்கும் ஞானநாட்டம், உயிர்கட்கு இயல்பாக அமைந்ததன்று என்பதும், இருளை நீக்கி உயிர்கட்கு இன்பமளிக்கவல்லஅருளும் பேரறிவும் ஆற்றலும் ஒருங்குடைய முதல்வன் இறைவன் ஒருவனே என்பதும் திரு முறை யாசிரியர்களாகிய சிவநெறிச் செல்வர்கள் துணிபாகும். இந்நுட்பம்,

'இருளற நோக்க மாட்டாக் கொத்தையேன்' (4-69-1)

எனவும்,

'இருளறுத்து நின்றீசனென் பார்க்கெலாம்
அருள் கொடுத்திடும் ஆனைக்கா அண்ணலே'*
(*'ஆனைக்கா அண்ணல், ஈசன் என்பார்க்கெலாம் இருள் அறுத்து நின்று, அருள் கொடுத்திடும்' என இயைத்துப் பொருள் கொள்ளுதல் வேண்டும்)
(5-31-8)

எனவும்,

'இருளாய வுள்ளத்தின் இருளை நீக்கி
இடர்பாவங் கெடுத்து'

எனவும் வரும் அப்பர்அருள்மொழிகளால் இனிது புலனாதல் காணலாம்.

மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளின் வழியாக திகழும் ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்னும் ஐம்புல ஆசைகளிலும் தம்முணர்வின்றித் தாழும் தன்மை மக்களது மனத்தியல்பாகும். ஐம்பொறிகளையும் அடக்கும் வலியின்றி ஐயுணர்வுகளின் வழியே செல்லும் மக்களது மனத்தினைத் திருத்தி அவ்வைந்தையும் அடக்கி ஆளவல்ல ஆற்றலை வழங்குதல் இறைவனது அருளியல்பாகும். நல்லொழுக்கநெறி நிற்பார்க்கு இன்றியமையாத புலனடக்கத்தையும், பொய்ம்மையே பெருக்கும் பாசங்களின் நீக்கத்தையும் அளித்தற் பொருட்டு இறைவன் உயிர்க்குயிராய் நின்றுணர்த்திய நன்னெறியே உண்மையான ஒழுக்க நெறியாகும். இறைவனது திருவருட் குறிப்புணர்ந்து அவனறிவுறுத்திய மெய்ம்மையான ஒழுக்க நெறியில் நிற்போர் பிறப்பின்றி எக்காலத்தும் ஒரு தன்மையராய் நெடிதுவாழ்வார். இவ்வுண்மை,

'பொறிவாயில் ஐந்தவித்தான்பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடு வாழ்வார்'

என வரும் திருக்குறளால் அறிவுறுத்தப் பட்டதாகும். ஈண்டுப் 'பொறிவாயில் ஐந்தவித்தான்' என இறைவனைக் குறித்தது, இறைவன் தனக்கு ஐம்பொறி வாயிலாக நிகழும் ஐம்புல அவாக்கள் இருந்து அவற்றைத் தன் ஞானத்தால் அடக்கி வென்றான் என்ற கருத்திலன்றாம். ஞானமே திருமேனியாக வுடையவன் என்பது 'வாலறிவன்' என்னுந் தொடரால் உணர்த்தப்பட்டது. ஐம்புல ஆசைகளால் உந்தப்பட்டு எத்தகைய பொருள்களையும் விரும்புதலும் வெறுத்தலும் இறைவனுக் கில்லை யென்பது 'வேண்டுதல் வேண்டாமை யிலான்' என்பதனால் முன்னமே வலியுறுத்தப்பட்டது. எனவே ஐம்பொறி வாயிலாகச் செல்லும் ஐயுணர்வு இறைவனுக்கு இல்லாமையும், அவையில்லை யாகவே அவற்றை யடக்குதல் வேண்டாமையும்

நன்கு விளங்கும். விருப்பு வெறுப்புடைய உயிர்கள் ஐயுணர்வு களான் மயங்கி அவற்றை யடக்கமாட்டாது அல்லற்படுத் துன்ப நிலையிலே அருளாளனாகிய இறைவன், பொறிவாயில் ஐந்தினையும் அடக்கியாளும் பொய்தீரொழுக்க நெறியினை மக்களுக்கு அறிவுறுத்தி நலஞ்செய்கின்றான் என்பதும் இயல் பாகவே பாசங்களின் நீங்கிய இறைவனாலன்றி ஏனைப்புலனுணர் வினராய மாந்தர்களால் எடுத்துரைக்கப்பெறும் அறவுரைகள் குன்றிய அறவுரைகளாமன்றி, உலகவுயிர்கள் எல்லாவற்றுக்கும் மன நிறைவளிக்கும் மெய்ம்மை வாய்ந்த ஒழுக்க நெறியாக அமைதல் இயலாதென்பதும் இத்திருக்குறளால் விளங்கும் அரிய வுண்மைகளாம்.

"அஞ்சொண் புலனு மவை செற்ற மஞ்சன்" (1-38-4)

"அஞ்சுபுலன்களை விலங்கினை புறம்பயம் அமர்ந்தோய்" (2-30-8)

"ஐந்து புலனொடு வென்று பொய்ம்மைகள் தீர்ந்த புண்ணியர்" (1-42-4)

"அன்றிய அமணர்கள் சாக்கியர்கள்
குன்றிய அறவுறை கூறா வண்ணம்
வென்றவன் புலனைந்தும்" (1-113-10)

"நின்றடர்த்திடும் ஐம்புலன் நிலையாத வண்ணம்
நினைந் துளைத்திடை
வன்றடர்த் தொருபால் மடந்தை விரும்புதலென்" (2-50-8)

"உடல் வாழும், ஐவரை யாசறுத் தாளும் என்பர்
அதுவுஞ் சரதமே" (3-105-2)

என ஆளுடைய பிள்ளையாரும்,

"தமை யாளுடையான் புலன் மாற்றினான்" (5-39-7)

"வருங்கையானை மதகளி றஞ்சினைப்
பொருங்கையானை கண்டீர் புகலூரரே" (5-46-8)

"மூக்கு வாய் செவி கண்ணுட லாகிவந்
தாக்கும் ஐவர்தம் ஆப்பை அவிழ்த்தருள்
நோக்குவான் நமை நோய்வினை வாராமே
காக்கு நாயகன் கச்சியே கம்பனே" (5-47-7)

"வென்றானைப் புலனைந்தும்" (5-98-7)

"நேரிழையைக் கலந்திருந்தே புலன்கள் ஐந்தும் வென்றானை"

"பொல்லாப் புலனைந்தும் போக்கினான் காண்" (6-8-6)

"காப்பரிய புலனைந்துங் காத்தாய் நீயே" (6-38-2)

"துறவாதே கட்டறுத்த சோதியானை" (6-11-1)

எனத் திருநாவுக்கரசரும்,

"வேண்டில் ஐம்புலன் என்வச மல்ல" (7-60-7)

"வறிதே நிலையாத விம் மண்ணுலகின்
ணரனாக வகுத்தனை நானிலையேன்
பொறிவாயில்வ் வைந்தினையு மவியப்
பொருதுன் னடியே புகுஞ்சூழல் சொல்லே" (7-2-3)

என நம்பியாரூரரும் அருளிச் செய்த தேவாரத் தொடர்கள், "பொறிவாயில் ஐந்தவித்தான்" "என்னுந் தொடர்ப் பொருளைத் தெளிய விளக்கி நிற்றல் உளங்கொளத் தக்கதாகும்", எனவே 'பொறிவாயில் ஐந்தவித்தான்' என்னுந்தொடர், 'தன்பாலுள்ள ஐம்புலன்களையும் அடக்கினான்' என்ற பொருளிலன்றி 'தன்னை அன்பினால் வழிபடும் அன்பர்களுக்கு ஐம்புலன் களையும் அடக்கி வெல்லும் நல்வழி காட்டினான்' என்ற பொருளிலேயே தெய்வப் புலவரால் ஆளப்பெற்ற தென்பது நன்கு தெளியப்படும். "பொய்தீர் ஒழுக்க நெறி நின்றார்" என்ற தொடரை,

"பொய்யிலா மெய்ந் நெறிக்கே தக்கிருந்தார்" (2-42-1)

என விரித்துப் பொருள் கொள்வர் ஆளுடைய பிள்ளையார். எல்லாம் வல்ல இறைவனே மக்கள் உய்தி பெறுதல் வேண்டி மெய்ந் நெறியாகிய ஒழுக்க நெறியினை அருளிச் செய்துள்ளான் என்பது,

"மேவிய வெந்நரகத்தில் அழுந்தாமை நமக்கு
மெய்ந் நெறியைத் தான் காட்டும் வேதமுதலானை"
(7-40-10)

எனவரும் சுந்தரர் வாய்மொழியால் நன்கு புலனாம்.

தன்னின் மிக்காரும் ஒப்பாரும் இல்லாத தனி முதல்வனாகத் திகழும் இறைவனுடைய திருவடிகளை நினைந்து வழிபடும் இயல்புடையவர்களே, தம் மனத்தின்கண் நிகழும் துன்பங்களாய கவலைகளை மாற்ற வல்லவர் எனவும், இறைவனடிகளை நினையாதார் காம வெகுளி மயக்கங்களாகிய மன மாசுகளை நீக்க மாட்டாமையால் அவற்றால் வரும் துன்பங்களுள் அழுந்துவர் எனவும் அறிவுறுத்துவார்,

"தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது"

என்றார் திருவள்ளுவர். ஒரு வகையாலும் தனக்கு ஒப்பில்லாத வனாக உயர்ந்தோன் இறைவன் ஒருவனே யாதலின்,

அம்முதல்வனைத் 'தனக்கு உவமையில்லாதான்' எனப் பொய்யில் புலவர் போற்றியுள்ளார். "தனக்குவமையில்லாதான்" என்னும் இத்தொடர்ப் பொருளை,

'தன்னெப் பாரில்லாத் தூயவன்' (1-113-2)

'தன்னேர் பிறரில்லானை' (2-62-3)

என ஞானசம்பந்தரும்,

'தன்னெப்பா ரில்லாதானை' (6-46-2)

'மற்றாருந் தன்னொப்பாரில்லாதானை' (6-1-2)

'தன்னொப்பிலாத் தில்லைநடம்பயிலும் தலைவன் தன்னை' (6-33-6)

என நாவுக்கரசரும் எடுத்தாண்டுள்ளார்கள்.

தனக் குவமையில்லாத இறைவன் திருவருள் வழி நின்று தற்போதம் நீங்கப்பெற்ற அடியார்கள், ஞாயிறு எங்கே தோன்றினால் எமக்கென்ன என்று எத்தகைய மனக்கவலையு மின்றி இனிதிருப்பார்கள் என்பது,

'எங்கெழி லென்ஞாயி றெளியோமல்லோம்'

எனவரும் திருநாவுக்கரசர் அநுபவ மொழியால் நன்கு தெளியப் படும்.

"கண்ணுதல்தன் நிறைவதனிற் கலந்தார்க்குப் பண்டை ஏகதேச வுணர்வு தூர்ந்து போதலின், ஏகதேச வுடம்பில் நிகழும் இன்பத் துன்பத்திற்கு ஏதுவாகிய உற்பாத முதலியவற்றை நோக்கி வரக்கடவதோர் கவலையின்மையின், எங்கெழிலென் ஞாயிறெமக்டென்று குறைவின்றி நிற்பாராயினாரென்பது 'தனக் குவமையில்லாதான் தாள் சேர்ந்தார்க் கல்லால் - மனக்கவலை மாற்றலரிது' என எதிர் மறை முகத்தாற் கூறியதும் இதுபற்றி என்க" (சித்தியார் - சுபக் - சூ - அ - 31-ஆம் செய்யுள் உரை) எனச் சிவஞான முனிவர் கூறிய விளக்கம் இங்கு உணரற் பால தாம்.

அறக்கடலாகிய அருளாளனது திருவடியாகிய புணையைப் பற்றினார்க் கல்லது பிறவியாகிய பெருங்கடலை நீந்திக் கடத்தல் இயலாதென்பது,

'அறவாழி யந்தணன் தாள் சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது'

எனவரும் குறளால் உணர்த்தப்பட்டது. நல்லறங்கள் எல்லா வற்றுக்கும் நிலைக்களமாய் நின்று, அவ்வறங்களை நிகழ்த்துதற் குரிய பேரருளாளனாகத் திகழ்வோன் இறைவனாதலின், அம்முதல்வனை 'அறவாழியந்தணன்' எனக் குறித்தார் ஆசிரியர்.

'அறக்கடலாகிய அருளாளன்' என்பது இத்தொடரின் பொருளாகும். அறங்கள் அனைத்திற்கும் அருளே பற்றுக் கோடாதலின் அறமும் அருளும் ஆகிய இவ்விரண்டின் திருவுருவாகவும் இறைவன் திகழ்கின்றான் என்பார். "அறவாழியன்" என்றமையாது "அறவாழியந்தணன்" என்றார். கடலேயனைய அறமும் அழகிய தண்ணளியாகிய பேரருளும் இறைவனிடத் தன்றி ஏனையுயிர்களிடத்தே முழுவதும் நிலைபெறுதலியலாது என்பார். 'அறவாழியந்தணன்' என ஒருமையாற் கூறினார். 'இறைவனருள் பெற்ற அறவோர்களை' 'அந்தணர் என்போர் அறவோர்' எனப்பன்மையாற் குறித்துள்ளமை இங்கு நினைக்கத் தக்கதாகும்.

'கொடி மாடச்செங்குன்றூர் நின்ற
அந்தணனைத் தொழுவார் அவலமறுப்பாரே' (1-107-1)

என்றார் ஆளுடையபிள்ளையாரும்.

அறமும் அருளும் உருவாகத் திகழ்பவன் இறைவன் என்பது,

'அறவனாரூர் தொழுதுய்யலாம்' (2-79-5)
'தருமமாகிய தத்துவன்' (5-81-2)
'நால் வர்க்காலின் கீழுரைத்த அறவனை' (7-68-7)
'அறக்கண் என்னத்தகும் அடிகள் ஆரூரரை' (7-37-2)
'நம்பினார்க்கருள் செய்யும் அந்தணர்' (7-88-1)

எனவரும் தேவாரத் தொடர்களால் இனிது புலனாம்.

'அறவாழியந்தணன்' எனத் தொடங்கும் இத்திருக்குறளில், பிறவியைக் கடலாக உருவகஞ் செய்து, அதனைக் கடத்தற்கு உதவும் இறைவன் திருவடியினைப் 'புணை' என உருவகஞ் செய்யாது விட்டமையால், இப்பாட்டு ஏகதேச உருவகம் என்னும் அணியின் பாற்படும் என்பர். பிறவு+ஆழி=பிறவாழி எனப் புணர்ந்தது. பிறவியாகிய, கடல் என்பது இதன் பொருள், 'பிறவு' என்பது, பிறத்தல் என்னும் பொருளில் வழங்கும் உகர வீற்றுத் தொழிற்பெயர். இச்சொல் வழக்கு, 'பிறவினோ டிறவுமானான்' (1-110-1) என ஆளுடைய பிள்ளையார் தேவாரத்திற் பயின்றுளது.

'பற்றாய் நினைந்திடப்போது நெஞ்சே யிந்தப் பாரைமுற்றும்
சுற்றாய் அலைகடல் மூடினுங்கண்டேன் புகல்நமக்கு
உற்றான் உமையவட் கன்பன் திருப்பாதிரிப்புலியூர்
முற்றாமுளைமதிக் கண்ணியினான்றன மொய்கழலே'
(4-74-2)

எனத் திருநாவுக்கரசர் அருளிய திருவித்தப்பாடல் இறைவன் திருவடி பிறவிக்கடலைக் கடத்தற்குரிய புணையாதலை அறிவுறுத்தல் காணலாம்.

இனி; 'பிறவாழி' என்பதனைப் பிற+ஆழி எனப் பிரித்து, அறவாழிக்கு வேறாகிய ஏனைப் பொருளும் இன்பமும் ஆகிய கடல்கள் எனக்கொண்டார் பரிமேலழகர். 'அறம் பொருள் இன்பம் என உடன் எண்ணப்பட்ட மூன்றனுள், அறத்தை முன்னர்ப் பிரித்தமையான் ஏனைப் பொருளும் இன்பமும் பிறவெனப்பட்டன' என்பது பரிமேலழகர் தரும் விளக்கமாகும்.

எண்வகைப் பட்ட குணங்களையுடைய இறைவனுடைய திருவடிகளை வணங்காத தலைகள், தத்தமக்கு உரிய புலன்களையுணரும் ஆற்றலில்லாத பொறிகளைப் போலப் பயன்படாதனவே என்பது,

**"கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்**
**தாளை வணங்காத் தலை"**

என்பதனாற் கூறப்பட்டது. "எண்குணங்களாவன: தன் வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்ப முடைமை என இவை. இவ்வாறு சைவாகமத்துக் கூறப்பட்டது" என்பர் பரிமேலழகர். இறைவனுடைய அருட்பண்புகள் எண்ணிறந்தன ஆயினும், அவற்றை எண்குணங்களுள் அடக்கிக் கூறுதல் சிவாகம மரபாகும். இறைவனுக்கு வழங்கும் 'எண்குணத்தான்' என்னும் இத்திருப்பெயர்ப் பொருளைச் சிவநெறிச் செல்வர்கள் சிறப்பாக வழங்கியுள்ளார்கள் என்பது,

**'எட்டுக் கொலாமவர் ஈறில்பெருங்குணம்'** (5-18-8)
**'எட்டுவான் குணத்தீசன்'** (5-89-8)
**'காதல் எண்குணவன் காண்'** (5-63-4)
**'எண்குணத்தார் எண்ணாயிரவர்போலும்'** (6-16-4)

எனவரும் திருநாவுக்கரசர் வாய்மொழிகளால் நன்கு புலனாகும்.

**'எண்ணமரும் குணத்தாரும்'** (2-69-1)

என்றார் ஆளுடைய பிள்ளையாரும். இத்தொடரை 'அமரும் எண்குணத்தார்' என இயைத்து 'எல்லாவுயிர்களாலும் விரும்பிப் போற்றத்தக்க எண்குணங்களையுடைய இறைவர்' எனப்பொருள் கொள்க. 'இறைவனை மறையவனை எண் குணத்தினானை' (7-10-3) என்றார் நம்பியாரூரரும்.

இறைவனது பொருள்சேர் புகழுரையினை நாவினால் விரித்துக் கூறுதற்கெனச் சொல்வளம் வாய்ந்த வாயும், இறைவன் புகழ்த்திறங்களைச் சான்றோர் வாயிலாகக் கேட்டுணர்ந்து நெக்கு நெக்கு நினைந்துருகுதற்கென நேயமலிந்த நெஞ்சமும்,

ஞானத்திரளாய் விளங்கும் இறைவனது நற்றாளை வணங்கித் தாடலை போல் ஒன்றுதற் பொருட்டுச் சிறப்பமைந்த தலையும், மனனுணர்வுடைய மாந்தர்க்குக் கடவுளால் வழங்கப்பட்டன என்பது அருளாளராகிய சான்றோர் துணிபாகும்.

> வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
> தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனைச்
> சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
> வீழ்த்தவா வினையேனெடுங் காலமே. (5-90-7)

எனவரும் திருப்பாடல், மக்கள் பெற்றுள்ள சிறப்புடைய பொறிகளின் பயன் இவையென விளக்கி நிற்றல் காண்க.

எண்குணத்தானாகிய இறைவனது நற்றாளைத் தலையால் வணங்கியவர்களே தலை சிறந்த நன்மக்களாவார் என்னும் இக்கருத்தினை,

> 'கலையார் தொழுதேத்தியகாழி
> தலையாற் றொழுவார் தலையாரே' (1-31-6)

> 'அலையார் புனல்சூடி யாகத் தொருபாக
> மலையான் மகளோடு மகிழ்ந்தானுலகேத்தச்
> சிலையாய் எயில் எய்தான் சிற்றம்பலந்தன்னைத்
> தலையால் வணங்குவார் - தலையானார்களே' (1-80-7)

எனவரும் திருப்பாடல்களில், ஆளுடைய பிள்ளையார் குறித்துள்ளார். உலகத்துப் பொருள்களைக் காணுந் தன்மையில்லாத கண்கள், ஓசை ஒலிகளைக் கேட்குந் திறம் வாய்க்காத செவிகள் முதலிய ஆற்றலிழந்த பொறிகளால் அவற்றையுடைய மக்களுக்குச் சிறிதும் பயனில்லாதவாறு போல, இறைவன் திருவடிகளை வணங்குந் தன்மை பெறாத தலையினால் அதனையுடைய மக்களுயிர்க்குச்சிறிதும் பயனில்லை எனச் சிறப்புடைய தலைமேல் வைத்துக்கூறினார் திருவள்ளுவர். இவ்வாறு தலைமேல் வைத்துக் கூறினாராயினும், அத்தலையுடன் இயைந்த உடலுறுப்புக்கள் என்னும் இனம்பற்றி இறைவன் திருவுருவினைக் காணாதகண்களும், அப்பெருமானது புகழினைக் கூறாத நாக்களும், அப்புகழுரைகளைக் கேளாத செவிகளும், அருளாளனாய முதல்வனைக் கசிந்துருகி நினையாத நெஞ்சமும், இங்ஙனமே இறைவழிபாட்டில் ஈடுபடாத ஏனைய அங்கங்களும் மக்களது நல்வாழ்வுக்குப் பயன்படாதனவே என்பதும் கொள்ளப்படும். இவ்வாறு இத் திருக்குறள்கொண்டு உய்த்துணர்ந்து கொள்ளத் தகுவனவற்றை,

> 'ஆமாத்தூரம்மானைக்
> காணாத கண்ணெல்லாங் காணாத கண்களே' (2-44-2)

'கூறாத நாவெல்லாங் கூறாத நாக்களே' (2-44-7)

'கேளாச் செவியெல்லாங் கேளாச் செவிகளே' (2-44-8)

'வள்ளல்கழல்பரவா வாழ்க்கையும் வாழ்க்கையே' (2-44-9)

'நிச்சல் நினையாதார் நெஞ்சமும் நெஞ்சமே' (2-44-10)

எனவரும் திருப்பாடற்றொடர்களில் ஆளுடைய பிள்ளையார் தெளிவாக எடுத்துக்காட்டி விளக்கியதிறம் உணர்ந்து இன்புறத் தக்கதாகும்.

கடவுளை வழிபடுதற்கென்றே அமைந்தது, இம்மக்கட் பிறவி. இந்நுட்பமுணர்ந்து இறைவன் திருவடிகளைத் தலை தாழ்த்து இறைஞ்சிப் போற்றாதார் வாழ்வு பயனுடையான்று எனத் திருவள்ளுவர் எதிர்மறை முகத்தாற் கூறிய இக் கருத்தினைத் திருநாவுக்கரசர் நெஞ்சறிவுணர்வாத அருளிய திருஅங்கமாலை என்னுந் திருப்பதிகத்திலே (4-9)

'தலையே நீ வணங்காய்'

'கண்காள் காண்மின்களோ'

'மூக்கே நீ முரலாய்'

'வாயே வாழ்ந்து கண்டாய்'

'நெஞ்சே நீ நினையாய்'

'கைகாள் கூப்பித் தொழீர்'

என உடன்பாட்டு முகத்தானும்,

'பூக்கையாலட்டிப் போற்றி என்னாத இவ்
வாக்கையாற் பயனென்'

'கறைக்கண்டனுறைகோயில்
கோலக்கோபுரக் கோகரணஞ்சூழாக்
கால்களாற் பயனென்'

என எதிர்மறை முகத்தானும் விளக்கிய திறம் ஓதியுணரத் தக்கதாகும்.

காரணகாரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருவது பிறவிப்பிணிப்பாதலின், அது பிறவிப் பெருங்கடல் எனப்படும். இறைவனடியாகிய புணையைப் பற்றினோர் அப்பெரிய கடலை எளிதில் நீந்துவர். திருவடியாகிய புணையின் துணையிலாதார் அப்பெருங்கடலுள் வீழ்ந்து நீந்தமாட்டாது அழுந்துவர்.

'பிறவிப் பெருங்கடல் நீந்துவர், நீந்தார்
இறைவனடி சேராதார்'

எனவரும் திருக்குறள், இதனை அறிவுறுத்துவதாகும். உலகியல்பை நினையாது இறைவனடியையே நினைப்பார்க்குப் பிறவியறுதலும், இறைவனடியை நினையாது உலகியல்பையே நினைவார்க்குப் பிறவியறாமையும் ஆகிய இரு நிலைமையும் இக்குறளால் நியமிக்கப்பட்டன. பிறந்தோருறுவது பெருகிய துன்பமாதலின், துன்பத்தைத் தரும் பிறவியைக் கடலாக உருவகஞ் செய்த ஆசிரியர், அதனைக் கடத்தற்கு உறுதுணையாகவும் இறைவனடியினைப் புணையென உருவகஞ் செய்து கொள்ளும் படி உய்த்துணரவைத்துள்ளார். துன்பத்தைத் தரும் பிறவியாகிய பெருங்கடலில் வீழ்ந்து, நீந்திக் கரைகாணமாட்டாது அமைந்து அல்லற்படும் ஆருயிர்களுக்கு இனிய தெப்பமாக ஈறிலாப் பேரின்ப வாழ்வாகிய இன்பக்கரையிற் சேர்ப்பன, திருவையாறுடைய இறைவன் திருவடித்துணைகளே என்னும் மெய்ம்மையினை,

> "துன்பக் கடலிடைத் தோணித் தொழில் பூண்ட தொண்டர்தம்மை
> இன்பக் கரைமுகந் தேற்றுந் திறத்தன மாற்றயலே
> பொன்பட்டொழுகப் பொருந்தொளி செய்யுமப் பொய்பொருந்தா
> அன்பர்க் கணியன காண்க ஐயாறனடித்தலமே" (4-92-6)

எனவும்,

> "இடர்க்கடலுட் சுழிக்கப்பட்டிங்கிளைக் கின்றேற்கு
> அக்கரைக்கே யேறவாங்குந் தோணியை" (6-46-4)

எனவும் அப்பரடிகள் அறிவுறுத்தியுள்ளார். உயிர்கள் பிறவிக் கடலை நீந்தியேறி உய்திபெறுதற்கு, இறைவன் திருவடித் துணையன்றி வேறு பற்றுக்கோடில்லை என்பது,

> "மற்றேலொரு பற்றில னெம்பெருமான்
> வண்டார் குழலாள் மங்கை பங்கினனே
> அற்றார் பிறவிக் கடல் நீந்தி யேறி
> அடியேனுய்யப் போவதோர் சூழல் சொல்லே" (7-3-8)

என நெல்வாயில் அரத்துறைப் பெருமானை நோக்கி நம்பியாரூரர் முறையிடும் திருப்பாடலால் நன்கு விளங்கும்.

தாம் கூறக்கருதிய அறங்களுக்கெல்லாம் நிலைகளமாய்த் திகழும் முழுமுதற் கடவுளை முதற்கண் வாழ்த்தி வணங்குதல் இன்றியமையாதென அறிவுறுத்திய திருவள்ளுவர், உயிர்களாற் காணப்படாது அருவாய்த் தத்துவங் கடந்து நிற்குந் தனிமுதற் பொருளின் அருளுருவாக விளங்கிக் கைம்மாறு கருதாது உலகிற்குப் பயன் சுரக்கும் வானத்தின் சிறப்பினை உணர்த்தும் பகுதி 'வான் சிறப்பு' என்னும் இரண்டாம் அதிகாரமாகும். மழை, இறைவன் திருவருளின் விளைவாகத் திகழுந் திறத்தை,

'மன்னானவன் உலகிற்கொரு மழையானவன்' (1-16-6)

என ஞானசம்பந்தரும்,

'சொரிவிப்பார் மழை' (5-16-3)

என நாவுக்கரசரும்,

'கார்க்குன்ற மழையாய்ப் பொழிவானை' (7-59-3)

எனச் சுந்தரரும் இனிது விளக்கியுள்ளார்கள்.

மழை இடையறாது நிற்ப உலகம் நிலைபெற்று வருதலால் அம்மழை தான் உலகத்திற்கு அமிழ்தம் என்றும், நல்ல உணவுகளை உண்டாக்கி அவற்றை நுகர்கின்றார்க்குத் தானும் உணவாய்ப் பயன்படுவது மழைநீர் என்றும் திருவள்ளுவர் அறிவுறுத்தியுள்ளார். அடியார்களின் ஐயம் நீங்க இக்கருத்தினை இறைவனே அறிவுறுத்தியுள்ளான் என்றதொரு குறிப்பினை,

'தூய நீரமுதாய வாறது சொல்லுகென்றுமைக் கேட்கச்
சொல்லினீர்' (7-88-9)

எனவரும் திருப்பாடலில் நம்பியாரூரர் குறித்துள்ளமை இங்கு நோக்கத் தக்கதாகும்.

மழை பெய்யாதாயின் புல் முதலிய ஓரறிவுயிரும் இல்லை என்பார்,

'விசும்பிற் றுளிவீழி னல்லான் மற்றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது'

என்றார் ஆசிரியர்.

பயிர்க்கு மழை இன்றியமையாதென்பதனை

'குழைக்கும் பயிர்க்கோர் மழையே யொத்தியால்' (7-4-4)

என்ற உவமையால் விளக்குவர் நம்பியாரூரர்.

மேகம் கடல் நீரை முகந்து மழை பொழியாதாயின் அப்பெருங்கடலும் தன் வளத்திற் குறையும் என்பது,

'நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின்'

என்பதனாற் புலனாம். இவ்வாறு கடலானது மேகத்தினால் முகக்கப்பெற்று மழை நீரால் மேலுங் கிளர்ந்தெழும் இயல்பின தென்பதனை,

'காரரக்குங் கடல் கிளர்ந்த காலம்' (1-35-8)

என்ற தொடரில் ஆளுடைய பிள்ளையார் குறித்துள்ளார்.

திருக்கோயில்களில், தெய்வத்தை வழிப்டும் முறையில் நாள்தோறும் நிகழும் வழிபாட்டினைப் 'பூசனை' எனவும், இங்ஙனம் நிகழும் வழிபாடுகளில் சோர்வினால் வரும் தாழ்வு தீர்தற்கெனச் செய்யப்பெறும் சிறப்புடைய திருவிழாவினைச் 'சிறப்பு' எனவும் வழங்குவர் திருவள்ளுவர். கடவுளைப் போற்றி மக்களாற் செய்யப்படும் சிறப்பும் பூசனையும் ஆகிய இவ்வழி பாடுகளை திருவாரூர்த் திருமூலட்டானத்தில் எழுந்தருளி யிருக்கும் சிவபெருமானுக்கு வானோர்கள் அன்புடன் செய்து மகிழ்ந்தார்கள் என்பது,

> "நறப்படுபூ மலர்தூப தீபநல்ல
> நறுஞ் சாந்தங் கொண்டேத்தி நாளும் வானோர்
> சிறப்போடு பூசிக்குந் திருவாரூரில்
> திருமூலட்டானத்தெஞ் செல்வன் றானே" (6-30-5)

எனவரும் திருத்தாண்டகத்தாற் புலனாம். இத்திருப்பாடலின் சொற்பொருளமைதியினைக் கூர்ந்து நோக்குங்கால்,

> "சிறப்போடு பூசனை செல்லாது வானம்
> வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு"

என்னும் திருக்குறள் நினைவுக்கு வரும். "மழை பெய்யாதாயின் இவ்வுலகில் கடவுளுக்குச் செய்யப் பெறும் சிறப்பும் பூசனையும் நிகழ்த்துதல் வானோர்க்கும் இயலாத செயலாம்" என இத் திருக்குறளுக்கு மேலும் ஒரு பொருள் விளங்கித் தோன்றுதல் காணலாம். சீர்காழிப் பதியிற் சிவபெருமானை வழிபட எண்ணிய வானோர்தலைவனாகிய இந்திரன், வழிபாட் டிற்கெனத் தான் அமைத்த நறுமலர் நந்தவனம் மழையின்றி வாடிய நிலையிற் காவிரியை வேண்டி வரவழைத்து அதன் நீரை நந்தவனத்துக்குப் பாய்ச்சி வளர்த்தான் என வழங்கும் கந்த புராண வரலாறு, மழையில்லையானால் மக்களே யன்றி இவ்வுலகில் வந்து இறைவனை வழிபட்டு உய்தி பெற விரும்பும் வானோரும் சிறப்பும் பூசனையும் செய்ய வழியின்றி வருந்துவர் என்பதனை வற்புறுத்துவதாகும். இவ்வுலகில் மழையின்மை மாநிலத்தாராய மக்கள் வாழ்க்கைக்குத் தடை விளைப்ப தோடன்றி, இங்கு வந்து வானோர் நடத்தும் பூசனை முதலிய வற்றுக்கும் தடை விளைப்பதாகும் என்பார், 'வானோர்க்கும் செல்லாது' என்றார். ஈண்டுச் 'செல்லுதல்' என்பது, 'செல்லும் வாய்' (குறள்-673) என்புழிப்போல, முடிதல் நிறைவேறுதல் என்ற பொருளில் ஆள்ப்பெற்றதாகும். மழையின்றி வானோர்க்கும் முடியாதெனவே, ஏனை மக்களுக்கு இயலாமை தானே பெறப்படும்.

இறைவனது திருவருள் நீர்மையை யுணர்ந்து, அவனருளாலே ஐம்புலன்களையும் வென்று, வேண்டுதல் வேண்டாமையின்றி வாழும் அறவோர், 'நீத்தார்' எனப் போற்றப் பெறுவர். பற்றற்ற பெரியோர்களாய அவர்களது பெருமையினை விரித்துரைப்பது 'நீத்தார் பெருமை' என்னும் மூன்றாம் அதிகாரம். திண்ணிய அறிவென்னும் அங்குசத்தால் ஐம்பொறிகளாகிய யானை ஐந்தினையும் அவை விரும்பிய புலங்கள் மேற்செல்லாதபடி அடக்கியாளும் பெரியோன், பிறபிறப்பின் நீங்கி எல்லா நிலத்திற்கும் மேலாகிய வீட்டினையடைதல் உறுதியாதலின், அந்நிலத்திற்கு வித்தாவன் என்பது,

"உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து"

என வரும் குறளால் உணர்த்தப்பட்டது. இதன்கண் ஐம்புலன்களை அடக்குதற்குச் சாதனமாகிய நல்லறிவினை அங்குசமாக உருவகஞ் செய்ததற்கேற்ப, அவ்வங்குசத்தால் அடக்கத்தகும் பொறிகள் ஐந்தினையும் ஐந்து களிறும் என உருவகித்துரைக்காமல் ஓரைந்தும் எனப் பொதுப்படக் கூறினமையால், இச்செய்யுள் ஏகதேச உருவகம் என்பர்.

திருக்கேதாரத்தின் சிறப்பினை உணர்த்தப்போந்த திருஞானசம்பந்தர், அங்கே ஐம்புலனடக்கிய அறவோராகிய சிவனடியார்கள், கேதாரப் பெருமானைப் பேரன்புடன் வழிபடுந் திறத்தினை,

"தொண்டரஞ்சு களிறும் மடக்கிச் சுரும்பார்மலர்
இண்டைகட்டி வழிபாடு செய்யுமிட மென்பரால்
வண்டுபாட மயிலால மான்கன்று துள்ளவரிக்
கெண்டை பாயச் சுனைநீல மொட்டலருங் கேதாரமே"

(2-114-1)

எனவரும் திருப்பாடலில் விரித்துரைத்துப் போற்றியுள்ளார். உயிர்களது உள்ளத்தை நல்வழியிற் செல்லவொட்டாது அலைக் கழித்து வருத்தும் ஐம்பொறிகளாகிய களிறுகளை அறிவாகிய தோட்டியினால் (அங்குசத்தால்) அடக்கும் உபாயமறிந்து அடக்கியாளும் அருளாளராகிய மெய்யடியார்கள் திருவுளக் கருத்திலே என்றும் நீங்காது எழுந்தருளியிருக்கும் இறைவனது சிறப்பியல்பினை,

'வருத்தின களிறுதன்னை வருத்துமா வருத்த வல்லார்
கருத்தினில் இருப்பர் போலுங் கடவூர் வீரட்டனாரே'

எனவரும் தொடரால் திருநாவுக்கரசர் நன்கு விளக்கியுள்ளார். திருவள்ளுவர் 'ஓரைந்தும்' எனக் குறித்த பொறிகள் ஐந்தினையும்

ஐந்து களிறுகளாக உருவகஞ் செய்தும், அவர் வெளிப்படையாக உருவகித்துக் காட்டிய உரன் என்னுந் தோட்டியினைக் குறிப்பாக உணர வைத்தும், ஆளுடைய பிள்ளையாரும் அப்பரடிகளும் இத் திருக்குறட் பொருளை யெடுத்தாண்ட நயம் உணர்ந்து மகிழத்தக்கதாகும். ஐம்புலன்களை வென்ற அறவோராகிய நீத்தார் பெருமையினை,

'ஐந்து புலன்களைக் கட்டவர் போற்ற அந்தண்
புகலிநிலாவிய புண்ணியனே' (1-4-8)

புலன்கள் தமை வென்றார் புகழவர்'

'புலந்தாங்கி ஐம்புலனுஞ் செற்றார் வாழும் பூம்புகலி'
(1-16-8)

எனவரும் திருஞானசம்பந்தர் வாய்மொழிகள் இனிது விளக்குவனவாம். இங்ஙனம் புலன்களை வென்ற பெரியோர்களுக்கு இறைவன் அணியனாய் உடனின்று அருள்புரிய, அவர்கள் 'வரனென்றும் வைப்பு' எனப்படும் சிவனுலகிற் பெறுதற்குரிய பேரின்ப அநுபவத்தை இவ்வுலக வாழ்விலேயே பெற்று மகிழும் சிறப்பினை,

'அஞ்சும் வென்றவர்க்கு அணியார்' (2-94-4)

எனவும்,

'பொறிப்புலன்களைப் போக்கறுத் துள்ளத்தை
நெறிப்படுத்து நினைந்தவர் சிந்தையுள்
அறிப்புறும் அமுதாயவன் ஏகம்பம்
குறிப்பினாற் சென்று கூடித் தொழுதுமே'

எனவும் வரும் திருப்பாடல்களால் நன்குணரலாம்.

ஐம்பெரும் பூதங்களுக்குப் பிறப்பிடமாய் அவற்றின் நுண்ணுருக்களாகிய தன்மாத்திரைகள் ஐந்தினையும் 'சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம்' என எண்ணினார் திருவள்ளுவர், அவர் எண்ணிய முறையே,

'உன்னுருவிற் சுவையொளி யூறோசை நாற்றத்
துறுப்பினது குறிப்பாகும் ஐவீர்' (6-27-4)

எனத் திருநாவுக்கரசடிகள் எண்ணியுள்ளமை இங்கு நோக்கத் தக்கதாகும்.

சொல்வோர்க்கும் கேட்போர்க்கும் நன்மை விளைக்கும் இனிய சொற்கள் உளவாயிருக்க, அவற்றைக் கூறாது, தீமை தரும் கடுஞ்சொற்களை ஒருவன் கூறுதல், இனிய சுவையுடைய கனிகள் தம்பால் உளவாயிருக்க அவற்றை நுகராது நச்சுக்காயினை நுகர்வதனை யொத்துத் தீமை பயக்கும் என்பார்,

'இனிய வுளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று'

என்றார் தெய்வப் புலவர். தனக்கும் பிறர்க்கும் இனிமை விளைக்கும் நற்செயல்கள் பல இருக்க அவற்றை மேற்கொள்ளாமல், தீமையே தரும் செயல்களை மேற்கொண்டு வருந்தும் அறிவிலார் இயல்பினைப் புலப்படுத்தும் நிலையில் அமைந்தது, 'கனி யிருக்கக் காய் கவர்தல்' என்னும் இப்பழமொழியாகும். மருள் நீக்கியாராகிய திருநாவுக்கரசர், தம் வாழ்நாளிற் பெரும் பகுதியைப் புறச் சமயச் சூழலிற்புக்கு வீணே கழித்தமையினைக் கருதிக் கையற்றுப் பாடிய பழமொழித் திருப்பதிகத்தில்,

'மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான் தாள்தொழாதே
உய்யலாம் என்றெண்ணி உறிதூக்கி யுழி தந்தென் உள்ளம் விட்டுக்
கொய்யுலாம் மலர்ச்சோலைக் குயில்கூவ மயிலாலும் ஆரூரரைக்
கையினாற் றொழாதொழிந்தே கனியிருக்கக் காய்கவர்ந்த கள்வனேனே'
(4-5-1)

எனவரும் திருப்பாடலில் இப்பழமொழியை எடுத் தாண்டுள்ளமை காணலாம்.

அருளுடையாராகிய செல்வர்கள், தம்பாலுள்ள செல்வத்தை வறியவர்களுக்குக் கொடுத்து, அதனால் அவர்கள் எய்தும் இன்பத்தினைக் கண்டு தாமும் மகிழ்வர். இவ்வாறு கொடைத் திறத்தால் அடையும் இன்பத்தினை 'ஈத்துவக்கும் இன்பம்' என்பர். 'தம்பாலுள்ள பொருளைத் தாமும் நுகராது பிறர்க்கும் வழங்காது இறுகச் சேர்த்து வைத்து இழந்து போகும் வன் தண்மையுடையோர், தம்மிடத்திலுள்ள பொருளை வறியோர்க்குக் கொடுத்து அதனால் அவர்களிடையும் இன்பத்தினைக் கண்டு தாமும் மகிழும் இன்பச் சுவையினை அறிய மாட்டார்களோ? அறிந்தால் இங்ஙனம் வன் கணாளராக இருக்க மாட்டார்களே' என அவரது பேதைமையை நினைந்து இரங்குவதாக அமைந்தது,

"ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்கணவர்"

என்ற திருக்குறளாகும். இறைவன் திருக்கோயில் கொண்டு எழுந்தருளிய திருத்தலங்களுள் ஒன்றாகிய திருவாக்கூரில் வாழும் அருளாளர்களாகிய அந்தணர்களது வள்ளன்மையினை நேரிற்கண்டு மகிழ்ந்த ஞானசம்பந்தப் பிள்ளையார்,

"இன்மையாற் சென்றிரந்தார்க் கில்லையென்றாதீத்துவக்குந்
தன்மையார் ஆக் கூரிற் றான்றோன்றி மாடமே" (2-46-6)

என அன்னோரது ஈகைச் சிறப்பினைப் பாராட்டிப் போற்றி யுள்ளார்.

மக்கள், நில எல்லைக் கண்ணே வாழும் நிலையில் நீண்ட புகழைத் தரும் நற்செயல்களைச் செய்வாராயின், தேவருலகம், தன் கண் வாழும் தேவர்களினும் இவர்களையே முதற்கண் வைத்துப் போற்றும் என்பார்,

'நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு'

என்றார் தெய்வப் புலவர். புலவர் பாடும் புகழுடையோர், புகழு டம்பால் இவ்வுலகும் புத்தேளுடம்பால் அவ்வுலகும் ஒருங்கே பெறும் வித்தகராதலில், அன்னோர் புத்தேளிராகிய தேவர் களினும் முன்வைத்துப் போற்றப்பெறும் சிறப்புடையவராவர் என்பதாம், நில எல்லைக் கண்ணே அடங்கி வாழும் மக்கள் செய்யும் புகழானது அவர் வாழும் நில எல்லையைக் கடந்தும் நீண்டு பரவும் பெருமையுடையது என்பார், 'நிலவரை நீள்புகழ்' என்றார் ஆசிரியர். எனவே புகழானது, தன்னைத் தோற்றுவித் தார்க்கு நிலைக்களமாய் விளங்கும் நிலவெல்லையைக் கடந்தும் நீண்டுயர்ந்து பரவும் பெருமையுடையதென்பது பெறப்படும். புகழ் ஞானலத்தினும் மாணப் பெரிது எனத் திருவள்ளுவர் கூறிய இக்கருத்தினை "மண்தேய்த்த புகழினான்" என்ற தொடரில் இளங்கோவடிகளும் குறித்துள்ளமை காணலாம். "மண் தேய்த்த புகழ்-பூமி சிறுகும்படி வளர்ந்த புகழ்" என்பர் அரும்பத வுரையாசிரியர். "மண் தேய்த்த" என்றார். புகழ் வளரப் பூமிசிறுகலான்; 'மண் இடத்திற் சிறிது என்றார் வள்ளுவனாரும்' என்பது இத்தொடர்க்கு அடியார்க்கு நல்லார் தரும் விளக்க மாகும். 'மண் இடத்திற் சிறிது என்றார் வள்ளுவனாரும்' என அடியார்க்கு நல்லார் சுட்டிய கருத்து. புகழ் என்னும் அதி காரத்தில் வந்துள்ள 'நிலவரை நீள் புகழாற்றின்' எனவரும் இத்திருக்குறளில் அமைந்திருத்தல் கூர்ந்து நோக்கத் தக்கதாகும். 'தான் உண்டதற்கு விளைநிலமாகிய நிலத்தின் எல்லையைக் கடந்தும் நீண்டு வளர்ந்து பரவி அதனை அகத்திட்டுக் கொள் ளும் தன்மையது புகழ்' என்பது புலப்படுத்துவார். 'நிலவரை நீள் புகழ்' என்றாராதலின், அத்தகைய புகழை நோக்க நிலமாகிய 'மண் இடத்திற் சிறிது' என்றாராயிற்று. இங்ஙனம் வையத்தைச் சூழ்ந்து அதனை அகத்திட்டுக் கொள்ளும் பெருமை வாய்ந்தது புகழ் என்பதனை ஆசிரியர் 'சுழலும் இசை' (திருக்குறள் 777) என்ற தொடராற் பின்னரும் குறிப்பிடுதல் காணலாம். "சுழலும் இசை - வையத்தைச் சூழ்ந்து நிற்கும் புகழ். வையத்தைச் சூழும். எனவே அதன் பெருமை பெற்றாம். சூழ்தல் அகத்தில்லை" என பரிமேலழகர் தரும் விளக்கம் இங்கு நோக்கத்தக்கதாகும்.

இங்ஙனம் உலகத்தைச் சூழ்ந்து பரவும் புகழின் விரிவினை நோக்கும் பொழுது அதற்கு நிலைக்களமாகிய பூமியின் எல்லை மிகச் சுருங்கித் தோன்றுதல் புலனாம். இந்நிலையில் 'மண் இடத்திற் சிறிது' என்னும் வள்ளுவனார் கருத்தும் உய்த்துணரப்படும்.

'புகழெனின் உயிருங் கொடுக்குவர்
பழியெனின் உலகுடன் பெறினுங் கொள்ளலர்' (புறம்-)

என்னும் சான்றோர் கூற்று, உயிரினைவிடப் புகழே பெருமை வாய்ந்தது என்னும் உண்மையினை வற்புறுத்தல் காணலாம்.

நம்பியாரூரர் அருளிய திருப்பதிகமாகிய தமிழ் மாலை யினைப் பாடும் நற்பணி, பூண்ட அன்புடைத் தொண்டர்கள், கடல் சூழ்ந்த நிலவுலகினும் நீண்டு பரவிய பெரும் புகழைப் பெறுவார்கள் எனப் பயன் கூறுவதாக அமைந்தது,

'ஆரூரன தமிழ்மாலைகள் பாடும் அடித்தொண்டர்
நீரூர்தரு நிலனோடுயர் புகழாகுவர் தாமே' (7-71-10)

எனவரும் திருக்கடைக்காப்புத் தொடராகும். இதன் கண் 'நீரூர் தரு நிலனோடு உயர் புகழாகுவர்' என்ற பகுதி, மேற்காட்டிய 'நிலவரை நீள்புகழ்' என்னும் திருக்குறள் தொடரின் விளக்கமாக அமைந்துள்ளமை காண்க.

உயிரை உடம்பினின்று பிரிக்கும் தெய்வ ஆற்றலைக் கூற்றம் என்பர். உயிரையும் உடம்பையும் வெவ்வேறு கூறாகப் பிரித்த லால் கூற்றம் என்பது காரணப்பெயர். இத்தகைய கூற்றத்தை விலக்கி உய்தல் என்பது, ஒருவாலும் இயலாத செயல் என்ப தனை மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமையும்; என்ற தொடரில் தொல்காப்பியர் தெளிவாகக் குறித்துள்ளார். 'குறியில் வழுவாக் கொடுங்கூற்று' (7-93-10) என்றார் நம்பியாரூரரும். தவஞ்செய்யும் நற்சார்பிற் பழகி மெய்யுணர்வு பெற்ற தவச் செல்வர்கள், பொறிவழி போகாமல் தம் மனத்தை அடக்கியாளும் நோன்பின் ஆற்றலால், மாற்றருங் கூற்றத்தையும் வென்று இறவா நிலை பெற்று விளங்குவர் என்பது,

'கூற்றங் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு'

எனவரும் திருக்குறளால் உணர்த்தப்பட்டது. 'மாற்றருங் கூற்றம்' என்னும் தொல்காப்பியத் தொடர்ப் பொருளைக் 'கூற்றங் குதித்தலுங் கைகூடும்' என்ற தொடரில் எதிர்மறையும்மையால் குறிப்பாகப் புலப்படுத்தினார் திருவள்ளுவர். ஈண்டுக் குதித்தல் என்றது, தாண்டிக் கடத்தல் - தப்பி உய்தல் என்னும் பொருளது. மாற்றுதற்கரிய கூற்றுவனையும் விலக்கும் ஆற்றல் பெற்ற பெருந்தவச் செல்வர்களாகிய சிவனடியார்களின் சிறப்பினை,

'மதிய மொய்த்த்கவீர் போலொளிம்மணற் கானல்வாய்ப்
புதிய முத்தந்திகழ் பாதிரிப்புலியூரெனும்
பதியில் வைக்கப்படும் எந்தைதன் பழந்தொண்டர்கள்
குதியுங் கொள்வர் விதியுஞ் செய்வர் குழகாகவே' (1-121-6)

எனவரும் திருப்பாடலில் விரித்துரைப்பர் திருஞான சம்பந்தர். இத்திருப்பாடல் 'கூற்றங் குதித்தலுங் கைகூடும்' என்னுந் தொடரின் சொற்பொருளை எடுத்தாண்டிருத்தல் அறிந்து மகிழத்தக்கதாகும்.

தவஞ் செய்வார்க்குத் தலைமயிரை மழித்தலும் சடையாக வளர்த்தலுமாகிய புற வேடங்களால் மட்டும் பயனில்லை; உயர்ந் தோர் தவநிலைக்குப் பொருந்தாதன என விலக்கிய பழியுடைய செயல்களைக் கடிந்து ஒதுக்குதலே இன்றியமையாதது என அறிவுறுத்துவது,

'மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்த தொழித்து விடின்'

என்னுந் திருக்குறளாகும். தெய்வம் உண்டு என்னுந் தெளி வின்றித் தலைமயிரை மழித்தலும் பறித்தலுமாகிய புறவேடங் களால் மட்டும் நோன்புடையார் போன்றொழுகும் சிலரது ஒழுகலாற்றின் பயனற்ற தன்மையினை,

'மண்ணுதல் பறித்தலு மாயம்வை
எண்ணியகால் அவை இன்பமல்ல' (1-111-10)

என வரும் திருப்பாடலில் ஆளுடையபிள்ளையார் எடுத்துக் காட்டியுள்ளார். மனத்தின் கண் மாசுடையராய் வெறும் புறவேடமே கொண்டுள்ள கூடாவொழுக்கினராய விரதிகள் சிலரைப் பற்றி,

'தன்னிலாசறு சித்தமுமின்றித் தவமுயன் றவமாயினபேசிப்
பின்னலார்சடை கட்டியென்பணிந்தாற்பெரிது
நீந்துவதரிது'

என நம்பியாரூரர் கூறும் குறிப்பு. 'மழித்தலும் நீட்டலும் வேண்டா' என்னும் திருக்குறட் கருத்தை வலியுறுத்துவதாகும்.

ஒருவர்க்கு உடம்பு அழுக்கு நீங்கித் தூய்மையடைதல் நீராலே யுளதாவது. அதுபோல மனமாசு நீங்கி உள்ளம் தூய்மையடைதல் வாய்மையாலே யுளதாவது என்பார்,

'புறந்தூய்மை நீரான் அமையும் அகத்தூய்மை
வாய்மையாற் காணப்படும்'

என்றார் பொய்யில் புலவர். உடம்பு தூய்மையடைதற்கு நீர் இன்றியமையாதவாறு போல, மனம் தூய்மையடைதற்கு

வாய்மையாகிய ஒழுக்கம் இன்றியமையாதது என்பது கருத்து. இக்கருத்தினை,

'காயமே கோயிலாகக் கடினம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக
நேயமே நெய்யும்பாலா நிறைய நீரமைய ஆட்டிப்
பூசனையீசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே' (4-76-4)

எனவரும் திருப்பாடலில், 'வாய்மையே தூய்மையாக' என உடன்பாட்டு முகத்தானும், 'வாய்மையால் தூயேனல்லேன்' (4-54-7) என எதிர்மறை முகத்தானும் அப்பரடிகள் எடுத்தாண்டுள்ளார்.

ஒருவர் பிறர்க்குத் துன்பம் விளைக்கும் தீமைகளை முற்பகலிலே செய்வாராயின், அத்தகைய துன்பங்கள் பிறர் செய்யாமலே பிற்பகலிலேயே அவரைச்சார்ந்து வருத்தும் என்பார்,

'பிறர்க்கின்னா முற்பகற்செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்'

என்றார் திருவள்ளுவர். இங்கே முற்பகல், பிற்பகல் என்பன ஒரு நாளின் முற்கூறாகிய காலையையும் பிற்கூறாகிய மாலையையும் உணர்த்துவதோடு முற்பிறப்பு, இப்பிறப்பு முற்கணம் பிற்கணம் என்ற பொருள்களையும் தந்து நின்றன. இத்திருக்குறட் பொருளை,

"முற்பகற் செய்தான் பிறன்கேடு தன்கேடு
பிற்பகற் காண்குறூஉம் பெற்றியகாண்"

எனக் கண்ணகியார் கூற்றில் வைத்து இளங்கோவடிகள் எடுத்தாண்டுள்ளமை இங்கு நோக்கத்தக்கதாகும். கொலை, கொள்ளை முதலிய அளவின்மிக்க தீவினைகளைச் செய்தோர் அடுத்த பிறப்பிலன்றி இப்பிறப்பிலேயே அத்தீவினைப் பயனை அடைந்து துன்புறுவர் என்னும் இக்கருத்தினை,

"குற்றொருவரைக் கூறைகொண்டு கொலைகள் சூழ்ந்த களவெலாஞ்
செற்றொருவரைச் செய்ததீமைகள் இம்மையேவரும் திண்ணமே"
(7-85-4)

என நம்பியாரூரர் அறிவுறுத்தியுள்ளமை இங்கு நினைக்கத் தக்கதாகும்.

'ஒருவன் நேற்று உளனாயினான், அவனே இன்று இல்லையாயினான்' என்று வருந்தும் அளவுக்கு நிலையாமையை இயல்பாகப் பெற்றது இவ்வுலகம் என்பார்,

"நெருநல் உளனொருவன் இன்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு"

என்றார் திருவள்ளுவர். இதனால், இன்று எல்லாச் சிறப்புக்க ளோடும் கூடி வாழ்பவர் நாளை இறந்தொழித்தலும் இயல்பே என்னும் உண்மை இனிது புலனாதல் காணலாம். இதனை அஃறிவுறுத்தும் முறையில் 'இன்றுளார் நாளையில்லை' என்ற தொரு பழமொழி நிலை பெற்று வழங்குவதாயிற்று.

இதனை,

'இன்றுளார் நாளையில்லை யெனும் பொருள்
ஒன்றும் ஓராதுழிதரும் ஊமர்காள்
அன்றும்வானவர்க்காக விடமுண்ட
கண்டனார் காட்டுப்பள்ளிகண் டுய்ம்மினே' (5-84-9)

எனவும்,

"இன்றுளேன் நாளையில்லேன்என்செய்வான்
தோன்றினேனே" (4-78-1)

எனவும் திருநாவுக்கரசர் எடுத்தாண்டுள்ளார்.

உடம்பிற்கும் உயிர்க்கும் இடையே யமைந்த தொடர்பு. பறவையின் கூட்டிற்கும் அதனுளிருந்து பறந்து செல்லும் பறவைக்கும் அமைந்த சிறிது காலத் தொடர்பேயன்றி நிலை பெற்ற தொடர்பாகாது என்பார்,

'குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு'

என்றார் ஆசிரியர். இதன்கண் 'குடம்பை' என்ற சொல்லுக்கு முட்டை எனப் பொருள் கொண்டு, 'முன் தனியாத முட்டை தனித்துக் கிடப்ப, அதனுள்ளிருந்த புள்ளுப் பருவம் வந்துழிப் பறந்துபோன தன்மைத்து; உடம்பிற்கும் உயிர்க்கும் உளதாய நட்பு' என உரைவரைந்தார் பரிமேலழகர். கருவும் தானும் ஒன்றாய்ப் பிறந்து வேறாந்துணையும் அதற்கு ஆதாரமாய் நிற்பது முட்டையாதலரால் அதனை உடம்பிற்கு உவமை யாகவும், அம்முட்டையுல் வேற்றுமையின்றி நின்றே பின் புகாமற் பறந்து போதலின் புள் உயிர்க்கு உவமையாகவும் கொள்ளப் பட்டன. இங்கு 'நட்பு' என்றது குறிப்பு மொழியாய் நட்பின்றிப் போதலை யுணர்த்தி நின்றது. அறிவாய் அருவாய் நிலை யுடையதாய் நின்ற உயிரும், அறிவில்லாததாய் உருவாய் அழியக் கூடியதாய உடம்பும் தம்முள் நட்புடையன அல்ல என இக்குறளுக்குப் பரிமேலழகர் கூறிய விளக்கம் சிறப்புடையதாகும்.

எனினும் இங்கு வழங்கிய குடம்பை என்ற சொல்லுக்கு முன்னுள்ளோர் 'கூடு' எனவே பொருள் கொண்டுள்ளார்கள். "இனிக் குடம்பை என்பதற்குக் கூடென்றுரைப்பாருமுளர். அது புள்ளுடன் தோன்றாமையானும் அதன்கண் மீண்டு புகுதலுடை–

மையானும் உடம்பிற்கு உவமையாகாமையறிக" என மறுப்பர் பரிமேலழகர். உவமையென்பது ஒரு புடையொப்புமையே யாதலானும், ஈண்டுக் கூடு என்றது பறவைகள் முட்டையிடுதற் பொருட்டு அமைத்துக் கொண்ட 'ஈனில்' என்னும் கூட்டினையே யாதலான் அக் கூட்டினகத்தே முட்டையிலிருந்து வெளிப்பட்ட குஞ்சு மீண்டும் அதனுட் புகவேண்டும் என்னும் இன்றியமையாமை இல்லையாதலானும் குடம்பை என்பதற்குக் கூடு எனப் பொருளுரைத்தல் தவறாகாதென்றே கொள்ள வேண்டியுளது.

'கூட்டை விட்டுயிர் போவதன் முன்னமே
காட்டுப் பள்ளியு ளான்கழல் சேர்மினே' (5-84-2)

எனத் திருநாவுக்கரசர் உடம்பினைக் கூடாகக் குறித்தது இத்திருக்குறட்பொருளை நினைவுபடுத்துதல் காணலாம்.

உறங்குதலும் விழித்தலும் உயிர்கட்கு இயல்பாய்க் கடிதின் மாறி மாறி வருகின்றமை போன்று, இறப்பும் பிறப்பும் விரைவில் மாறி மாறி வரும் என்பது,

'உறங்குவது போலும் சாக்காடு, உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு'

என்பதனால் அறிவுறுத்தப்பட்டது. இதனை,

'உறங்கி விழித்தா லொக்கும் இப்பிறவி' (7-3-4)

என்ற தொடரில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் எடுத்துக் காட்டிய திறம் நினைந்து மகிழத்தக்கதாகும்.

உடம்பாகிய மனையினுள் ஐம்பொறிகளோடு உடனாய் ஒதுக்குக் குடியிருந்து அவற்றால் துன்புறுத்தப்பட்டு இவ்வாறே பிறவிகள் தோறும் பல வேறுடம்புகளிற் புகுந்து ஒன்றினும் நிலைத்து நில்லாது அல்லற்படும் உயிர்க்கு, என்றும் தனக்கே யுரியதாக நிலையாகத் தங்குதற்கென்று ஒரு தனிவீடு இன்னும் அமையவில்லையே என்று, இங்ஙனம் யாக்கை நிலையாமையினை எண்ணி வருந்துவதாக அமைந்தது,

'புக்கி லமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சில் இருந்த உயிர்க்கு'

என்ற திருக்குறளாகும். துச்சிலிருத்தல்-ஒதுக்குக் குடியிருத்தல்.

'தாயுநீயே தந்தை நீயே சங்கரனே யடியேன்
ஆயுநின்பால் அன்பு செய்வான் ஆதரிக்கின்ற துள்ளம்
ஆயமாய காயந் தன்னுள் ஐவர் நின் றொன்ற லொட்டார்
மாயமேயென் நஞ்சுகின்றேன் வலிவலமேயவனே' (1-50-7)

என ஆளுடைய பிள்ளையாரும்,

முப்பதும் முப்பத்தாறும் முப்பதும் இடுகுரம்பை
அப்பர்போல் ஐவர்வந்து அதுதரு கிதுவிடென்று
ஒப்பவே நலியலுற்றால் உய்யுமாறறிய மாட்டேன்
செப்பமே திகழுமேனித் திருப்புக லூரனீரே' (4-54-3)

'சாற்றுவர் ஐவர்வந்து சந்தித்த குடிமை வேண்டிக்
காற்றுவர் கனலப்பேசிக் கண்செவி மூக்கு வாயுள்
ஆற்றுவர் அலந்து போனேன் ஆதியை யறிவொன் றின்றிக்
கூற்றுவர் வாயிற்பட்டேன் கோவல் வீரட்டனீரே' (4-69-4)

'காச்செய்த காயந்தன்னுள் நித்தலும் ஐவர்வந்து
கோச்செய்து குமைக்க வாற்றேன் கோவல் வீரட்டனீரே' (4-69-6)

எனத் திருநாவுக்கரசரும்,

'சொல்லிடில் எல்லையில்லை சுவையிலாப் பேதை வாழ்வு
நல்லதோர் கூரைபுக்கு நலமிக அறிந்தேனல்லேன்' (7-8-4)

'நரம்பினோ டெலும்புகூட்டி நசையினோ டிசைவொன் றில்லாக்
குரம்பைவாய்க் குடியிருந்து குலத்தினால் வாழமாட்டேன்'
(7-8-6)

'உதிரநீரிறைச்சிக் குப்பை யெடுத்தது மலக்குக்கைம்மேல்
வருவதோர் மாயக்கூரை வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்'
(7-8-8)

'பொய்த்தன்மைத்தாய மாயப் போர்வையை மெய்யென் றெண்ணும்
வித்தகத்தாய வாழ்வு வேண்டி நான் விரும்பகில்லேன்'
(7-8-9)

என நம்பியாரூரரும் உயிர்கட்கு நிலையாகத் தங்கும் உடம்பில்லை என்பதனையும் உயிர் துச்சிலிருக்கும் இழிவினையும் எடுத்துரைக்கும் பகுதிகள் உள்ளத்தை யுருக்குவனவாம். 'உடம்பொடு நின்ற உயிருமில்லை, மடங்கலுண்மை மாயமோ அன்றே' (புறம் 363) என்பது இங்கு ஒப்பு நோக்கத் தகுவதாகும்.

எல்லாப் பொருட்கும் பற்றாய் நின்றே தான் ஒன்றினையும் சார்பாகக் கொள்ளாத தனிமுதல்வன் இறைவன் ஆதலின், அவனைப் 'பற்றற்றான்' என்றும், அவன் அருளிய ஒழுக்க நெறியினை மனத்தாற் பற்றி நிற்பாருக்கு அநாதியே தொடர்ந்து வரும் உடம்பிற் பற்று தானே விட்டு நீங்கும் என்றும் அறிவுறுத்துவது,

'பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு'

எனவரும் திருக்குறளாகும்.

'செற்றமில் சீரானைத் திருவாப்ப னூரானைப்
பற்றும் மனமுடையார் வினைப்பற்றறுப்பாரே' (1-81-1)

'பற்றுவர் ஈசன் பொற்பாதங்களே' (1-113-10)

*என ஆளுடைய பிள்ளையாரும்,*

'வெப்பத்தின் மனமாசு விளக்கிய
செப்பத்தாற் சிவனென்பவர் தீவினை
ஒப்பத் தீர்த்திடும் ஒண்கழ லாற்கல்ல
தெப்பற்றும் மிலன்எந்தைபிரானிரே' (5-96-7)

'கைப்பற்றித் திருமால் பிரமன்னுனை
எப்பற்றி யறிதற் கரியாயருள்
அப்பற்றல்லது மற்றடி நாயினேன்
எப்பற்றும் மிலன் எந்தை பிரானிரே' (5-96-9)

'அருந்துணையை யடியார் தம் அல்லல்தீர்க்கும்
அருமருந்தை யகன் ஞாலத் தகத்துட்டோன்றி
வருந்துணையுஞ் சுற்றமும் பற்றும் விட்டு
வான்புலன்கள் அகத்தடக்கி மடவாரோடும்
பொருந்தணைமேல் வரும்பயனைப் போகமாற்றிப்
பொதுநீக்கித் தனைநினைய வல்லோர்க் கென்றும்
பெருந்துணையைப் பெரும்பற்றப் புலியூரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' (6-1-5)

'துணையா யென்னெஞ்சந் துறப்பிப்பாய்நீ' (6-95-1)

*என ஆளுடைய அரசும்,*

'மற்றுப் பற்றெனக்கின்றி நின் திருப்பாதமே
மனம் பாவித்தேன்' (7-48-1)

'மற்றொரு துணையினி மறுமைக்குங் காணேன்
வருந்தலுற்றேன் மறவாவரம் பெற்றேன்
சுற்றிய சுற்றமும்துணையென்று கருதேன்
துணையென்று நான் தொழப்பட்ட வொண்சுடரை'
(7-58-2)

'பற்றினார்க் கென்றும் பற்றவன்தன்னை' (7-61-2)

'புற்றாடரவா புக்கொளியூ ரவிநாசியே
பற்றாக வாழ்வேன் பசுபதியே பரமேட்டியே' (7-92.1)

*என ஆளுடையநம்பியும் பற்றுவிடுதற்குப் பற்றற்றான் பற்றே சார்பென்பதனை இனிது புலப்படுத்தியுள்ளமை அறிந்து இன்புறத் தக்கதாகும்.*

மயக்கத்தின் நீங்கிக் குற்றமற்ற தூய மெய்யுணர்வுடைய ராயினார்க்கு அம்மெய்யுணர்வு உயிரோ டொற்றித்து நின்ற உள்ளத்திருள் நீங்க ஈறிலாப் பேரின்ப வாழ்வினை நல்கும் என்பது,

'இருள்நீங்கி யின்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு'

என்பதனாற் புலனாம். இருள் நீக்கத்துக்கு இறைவன் திரு வருளால் மருள் நீங்கப் பெறும் மாசறுகாட்சியே காரணமாம் என்பதனை,

'மறப்படுமென் சிந்தை மருள் நீக்கினான் காண்*
(* திருநாவுக்கரசருடைய இளம் பருவத்தில் அவர்க்குப் பெற்றோர் இட்ட பெயர் மருணீக்கியார் எனச் சேக்கிழாரடிகள் கூறியதற்கு இத்தொடர் ஆதாரமாதல் காணலாம்.)
வானவரும் அறியாத நெறிதந்தான் காண்' (6-30-5)

எனவும்,

'இருளாய வுள்ளத்தின் இருளை நீக்கி
இடர்பாவங் கெடுத்தேழையேனை யுய்யத்
தெருளாத சிந்தைதனைத் தெருட்டித் தன்போற்
சிவலோக நெறியறியச் சிந்தைதந்த அருளானை'

எனவும்,

'பொன்னுள்ளத் திரள் புன்சடையின்புறம்
மின்னுள்ளத்திரள் வெண்பிறை யாயிறை
நின்னுள்ளத்தருள் கொண்டிருள் நீங்குதல்
என்னுள்ளத்துள தெந்தை பிரானிரே'

எனவும் வரும் அப்பரடிகள் வாய்மொழிகளால் இனிதுணரலாம்.

திருக்குறளில் முப்பத்தாறாம் அதிகாரமாக அமைந்தது, மெய்யுணர்வு என்னும் அதிகாரமாகும். மெய்யுணர்வாவது "பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களாலன்றி உண்மையான் உணர்தல். இதனை வடநூலார் தத்துவ ஞானம் என்ப. இதுவும் பற்றற்றான் பற்றினைப் பற்றிய வழி உளதாவது" என்பர் பரிமேலழகர். உளதோ இலதோ என்னும் ஐயத்தினின்றும் நீங்கி, மெய்ப் பொருளாகிய தெய்வம் ஒன்று உண்டு எனத் தெளிந்து மெய்யுணர்ந்தார்க்கு எய்தி நின்ற இவ்வுலக வாழ்க்கையினும் இனி எய்தத் தகுவதாகிய வீட்டுலகம் மிகவும் அணுகிய தன்மைத்து என்பார்.

'ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து'

என்றார்தெய்வப் புலவர்.

"ஐயமாவது பல தலையாய உணர்வு. அஃதாவது மறு பிறப்பும் இருவினைப் பயனும் கடவுளும் உளவோ இலவோ என ஒன்றிற் றுணிவு பிறவாது நிற்றல்; பேய்த்தேரோ புனலோ, கயிறோ அரவோ எனத் துணியாது நிற்றலும் அது. ஒருவாற்றாற் பிறர் மதங்களைந்து தம் மதம் நிறுத்தல் எல்லாச் சமய நூல் கட்கும் இயல்பாதலின், அவை கூறுகின்ற பொருள்களுள் யாது மெய் என நிகழும் ஐயத்தினை யோகமுதிர்ச்சியுடையார் தம் அனுபவத்தான் நீக்கி மெய்யுணர்வராதலின், அவரை 'ஐயத்தின் நீக்கித் தெளிந்தார்' என்றும், அவர்க்கு அவ்வனுபவ வுணர்வு அடிப்பட்டு வர வரப் பண்டை உலகியலுணர்வு தூர்ந்து வருமாகலின், அதனைப் பயன் மேலிட்டு 'வையத்தின் வானம் நணிய துடைத்து' என்றும் கூறினார்; கூறவே ஐயுணர்வும் பிறப்பிற்குக் காரணமாதல் கூறப்பட்டது"

என இத் திருக்குறட்குப் பரிமேலழகர் விளக்கவுரை வரைந் துள்ளார். அவர் குறித்த ஐயங்கள் பலவற்றுள் 'மறு பிறப்பும் இருவினைப் பயனும் உளவோ இல்லவோ' என்னும் ஐயத்தின் நீங்கி அவையுண்டெனத் தெளிந்தார்க்கும் 'கடவுள் உண்டோ இல்லையோ' என்றதொரு ஐயம் மட்டும் நீங்காதிருக்குமாயின், முன்னைய ஐயங்களின் நீங்கித் தெளிந்தமையாற் சிறிதும் பயனின்றாம். ஆகவே மக்களுக்கு ஒரு தலையாக நீங்கத்தக்க ஐயம், 'கடவுள் உண்டோ இல்லையோ' என்ற ஒன்றேயாகும். இத் தகைய ஐயத்தின் நீங்கித் 'தெய்வம் உண்டு' எனத் தெளிதலும் அங்ஙனந் தெளிந்த மெய்யுணர்வுடைய சான்றோரைப் போற்றி வழிபட்டு அவர்கள் அறிவுறுத்த நன்னெறியில் ஒழுகுதலும் வேண்டும் என்பதனை,

'தெய்வந் தெளிமிந் தெளிந்தோர்ப் பேணுமின்'

எனவரும் தொடரால் இளங்கோவடிகள் அறிவுறுத்தியுள்ளார்.

மறு பிறப்பும் இருவினைப் பயனும் உண்டெனத் தெளிந்து எவ்வுயிர்க்கும் இரக்கமுடையராய் அருளொழுக்கம் மேற் கொண்ட சமண் சமயச் சான்றோரும் தெய்வமென்பதொன்று உண்டோ இல்லையோ என ஒன்றில் துணிவு பெறாது ஐயுறும் நிலையிலேயே அமைந்தனர் என்பதனை,

'ஐயுறும் அமணரும்' (1-128-36)

எனவும்,

'தெற்றென்று தெய்வந்தெளியார்' (3-54-11)

எனவும் வரும் தொடர்களால் திருஞானசம்பந்தர் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். இத்தகைய ஐயங்களின்றும் நீங்கித் தெய்வ மென்றதோர் சித்தமுண்டாகி மெய்யுணர்வு பெற்ற சான்றோர்

களையே 'ஐயத்தினீங்கித் தெளிந்தார்' எனத்தெய்வப் புலவர் குறித்துள்ளார். இங்ஙனம் தெளிவுடையார் சிந்தையிலேயே இறைவன் தேற்றமுற எழுந்தருளி நலம் புரிந்தருள்கின்றான் என்பது,

'சிந்தையும் தெளிவுமாகித் தெளிவினுள் சிவமுமாகி
வந்தநன் பயனுமாகி வாணுதல் பாகமாகி
மந்தமாம் பொழில்கள் சூழ்ந்த மண்ணித்தென் கரைமேல் மன்னி
அந்தமோடளவிலாத அடிகள் ஆப்பாடியாரே' (4-48-5)

என அப்பரடிகள் அருளிய திருப்பாடலால் இனிது விளங்கும். ஐயத்தின் நீங்கித் தெளிவு பெறாதார், இறைவன் திருவருளை யுணர்ந்து இன்புறுதலியலாதென்பது,

'சங்கையவர் புணர்தற்கரியான்' (7-10-9)

எனவும்,

'சங்கைப் பட நினையாதெழு நெஞ்சே' (7-71-5)

எனவும் வரும் நம்பியாரூரர் வாய்மொழியால் நன்கு புலனாம்.

உலகெலாம் இயக்கும் முழுமுதற் பொருள் ஒன்றே எவ்வுயிர்க்கும் உயிராய் உடன் நின்று அருள்புரிகின்றது என்னும் தெளிவுடைய சிந்தையராய் மெய்ப்பொருளாகிய அவ்விறைவனை வழிபடாதார் எத்தகைய கலைஞானமும் உள்ளத்து ஒண்மையும் உடையராயினும் அன்னோரைத் தெளிந்த நல்லறிவுடையராகச் சிவஞானச் செல்வர்கள் மதிக்கமாட்டார்கள் என்பது,

'தையலார் பாட்டோவாச் சாய்க்காட்டெம்பெருமானைத்
தெய்வமாப் பேணாதார்தெளிவுடைமை தேறோமே' (2-41-9)

எனவரும் ஆளுடைய பிள்ளையார் அருளுரையால் உணரப்படும்.

ஐம்புலன்களாகிய ஐவகையுணர்வின் வழியே ஓடித் திரியும் மனமானது, உரனென்னுந் தோட்டியால் அப்புலன்கள் ஐந்தையும் அடக்கியாளும் ஒருமை நிலையைப் பெற்றால் மட்டும் போதாது. ஒருமை நிலைபெற்ற மனம், மெய்ப்பொருளாகிய கடவுளை இடைவிடாது நினைந்துணரும் தியானமாகிய பயிற்சியைப் பெற்று இன்புறுதலே, தவநிலையின் முடிந்த பயனாகும் என அறிவுறுத்துவார்,

'ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லாதவர்க்கு'

என்றார் திருவள்ளுவர். எனவே ஐம்புலன்களையும் அடக்கியாளும் தவம், யோகம் முதலிய சிறந்த சாதனங்களால் மட்டும்

பயனில்லை யென்பதும், உயிர்கள் அடைதற்குரிய மெய்ப் பொருளைத் தெளிந்து சிந்தித்துணர்ந்து போற்றுதலே நற்பயன் தரும் என்பதும் இனிது பெறப்படும். இத்திருக்குறளில் 'மெய்யுணர்வில்லாதவர்' எனவரும் தொடர்க்கு மெய்யினை உணர்தலில்லாதார் - உண்மை ஞானம் பெறாதார்' எனப் பொது வகையிற் பொருள் கொள்ளுதல் ஆசிரியர் கருத்தன்றென்பதும், 'தோற்றக் கேடுகளின்றித் தூய்தாய் என்றும் உள்ள மெய்ப் பொருளாகிய இறைவனை உணர்ந்து போற்றாதார்க்குப் புலனடக்க முதலிய வெறும் சாதனங்களால் மட்டும் பயனில்லை' எனச் சிறப்பு வகையாற் கூறுதலே இக்குறளில் ஆசிரியர் அறவுறுத்த எடுத்துக்கொண்ட பொருளென்பதும் தேவார ஆசிரியர்கள் கருத்தாகும். இந்நுட்பம்,

**'ஊறினா ரோசையுள் ஒன்றினார், ஒன்றிமால்**
**கூறினார் அமர்தரும் குமரவேள் தாதையூர்,**
**ஆறினார் பொய்யகத் தையுணர் வெய்திமெய்**
**தேறினார் வழிபடு தென்குடித் திட்டையே'** (3-35-6)

என வரும் ஆளுடைய பிள்ளையார் திருப்பாடலாலும்,

**'கானநாடு கலந்து திரியிலென்**
**ஈனமின்றி யிருந்தவஞ் செய்யிலென்**
**ஊனையுண்ட லொழிந்து வானோக்கிலென்**
**ஞானனென்பவர்க்கன்றி நன்கில்லையே'** (5-99-6)

எனவரும் பாவநாசத் திருக்குறுந் தொகையாலும் நன்கு தெளியப் படும். ஐயுணர்வெய்தப் பெற்றும் மெய்யுணர் வில்லாதார்க்குப் பயனில்லை என மெய்யுணர்வின் இன்றியமையாமையினை வற்புறுத்த வேண்டி எதிர்மறை வாய்பாட்டால் திருவள்ளுவர் கூறிய இத்தொடர்ப் பொருளை, தென்குடித் திட்டையில் சிவபெருமானை வழிபடும் அடியார்களின் இயல்பில் வைத்து 'பொய் ஆறினார், அகத்து ஐயுணர்வு எய்தி மெய்தேறினார்' என உடன்பாட்டு முகத்தால் அறிவுறுத்திய திறம் நினைந்து இன்புறத் தக்கதாகும்.

**'தேறினார் சித்தத் திருந்தார் தாமே'** (6-78-4)

எனவரும் திருத்தாண்டகத் தொடர் இங்கு ஒப்பு நோக்கி யுணரத்தக்கது.

நல்லொழுக்கமுடைய சான்றோர்பால் உபதேச மொழிகளைக் கேட்டு அதனால் மெய்ப்பொருளையுணர்ந்து போற்றும் நல்லறிவாளர்கள் மீளவும் இப்பிறவியில் திரும்பி வாராமைக்கு ஏதுவாகிய பெருநெறியாகிய வீட்டு நெறியைத் தலைப்படுவர் என்பது,

'கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி'

என்பதனால் உணர்த்தப்பட்டது. பிறப்பிலாப் பெருநெறியாகிய வீடு பேற்றினை,

'துஞ்சலில்லா நல்ல உலகம்' (2-59-10)

'வாரா நாடு' (2-58-6)

என ஞானசம்பந்தரும்,

'வாரா வுலகு' (6-3-2)

என நாவுக்கரசரும் குறித்துள்ளமை, 'மற்றீண்டு வாரா நெறி' என்ற திருக்குறள் தொடரை அடியொற்றியதேயாகும்.* ('மீண்டு வாரா' வழி (நீர்த்தி - 117) என்னும் திருவாசகத் தொடரும் இங்கு உணருந்தக்கதாகும்.)

ஒழுக்கமுடையார்வாய் உபதேசமொழிப் பொருளைக் கேட்ட உள்ளமானது, தோற்றக் கேடுகளின்றி என்றும் உள்ளதாய முழுமுதற் பொருளைத் தெளிய ஆராய்ந்து இடைவிடாது சிந்திக்குமாயின், அத்தகைய உள்ளமுடையார்க்கு மீண்டும் பிறப்புண்டாகுமென நினைக்க வேண்டியதில்லை; அன்னோர்க்குப் பிறப்பிலாப் பேரின்ப நிலையே உறுதியாகக் கிடைக்கும் என்பார்.

'ஓர்த்துள்ள முள்ள துணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு'

என்றார் திருவள்ளுவர். இப் பொருளுரையின்படி என்றும் உள்ளதாகிய செம்பொருளைத் தெளிய ஆராய்ந்து அதன் உண்மைத்தன்மையை யுணர மாட்டாத புறச் சமயத்தாராகிய குண்டர்களின் சொற்களை மெய்மையுடையனவாகக் கொண்டு மாணாப் பிறப்பிற்குக் காரணமாகிய மருளில் வீழ்ந்து அழுந்திய எளியேனைத் திருச்சேறையில் செந்நெறித் திருக்கோயிலில் வீற்றிருந்தருளும் பெருமான், குண்டர்கள் குழலினின்றும் பிரித்து அடிமையாகக் கொண்டு பிறவி நோய்க்குக் காரணமாவுள்ள எல்லாப் பிணிப்பினையுந் தீர்த்து அருள் செய்தார் என்பது பட,

'ஓர்த்துள்ளவாறு நோக்கி யுண்மையை யுணராக் குண்டர்
வார்த்தையை மெய்யென்றெண்ணி மயக்கில் வீழ்ந்தழுந்து வேனைப்
பேர்த்தெனை யாளாக்கொண்டு பிறவி வான்தளைக ளெல்லாம்
தீர்த்தருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வனாரே' (4-78-2)

எனத் திருநாவுக்கரசர் அருளிய திருப்பாடல் இங்குக் கருதத் தக்கதாகும்.

'ஓர்த்து உள்ளம் உள்ளது உணரின்' என்னுந் திருக்குறட் பொருளை யுணர்ந்து அதன்படி நடவாதவர் குண்டர் என்ற கருத்தை 'ஓர்த்து உள்ளவாறு நோக்கி உண்மையை உணராக் குண்டர்' என்ற தொடரிலும், 'பேர்த்து உள்ள வேண்டா பிறப்பு' என்ற தன் கருத்தினைப் 'பேர்த்து எனை ஆளாக்கொண்டு பிறவிவான் தலைகளெல்லாம் தீர்த்து அருள் செய்தாழ்' என்ற தொடரிலும் அப்பரடிகள் எடுத்துக்காட்டி விளக்கினமை உணர்ந்து போற்றுதற்குரியதாகும்.

என்றும் உள்ளதாகிய செம்பொருளின் திருவருளாலேயே மக்கள் மீண்டும் பிறவாப் பெருநெறியை அடைய முடியும் என்பது,

'நம்பனே நான்முகத்தாய் நாதனே ஞானமூர்த்தி
என்பொனே ஈசா என்றென் றேத்திநான் ஏசற்றென்றும்
பின்பினே திரிந்து நாயேன் பேர்த்தினிப் பிறவா வண்ணம்
அன்பனே ஆலவாயில் அப்பனே அருள் செயாயே' (4-62-2)

என நாவுக்கரசரும்,

'ஓர்ந்தனன் ஓர்ந்தனன் உள்ளத்துள்ளே நின்ற ஒண்பொருள்'
(7-45-4)

'உற்றனன் உற்றவர் தம்மையொழிந்துள்ளத்துள் பொருள்
பற்றினன் பற்றினன் பங்கயச் சேவடிக்கே செல்ல
அற்றனன் அற்றனன் ஆமாத்தூர் மேயா னடியார்கட்காள்
பெற்றனன் பெற்றனன் பெயர்த்தும் பெயர்த்தும் பிறவாமைக்கே'
(7-45-10)

'மழைக்கரும்பும் மலர்க் கொன்றையினானை
வளைக்கலுற்றேன் மறவாமனம் பெற்றேன்
பிழைத்தொரு காலினிப் போய்ப் பிறவாமைப்
பெருமை பெற்றேன்' (7-58-4)

என நம்பியாரூரரும் அருளிய பொருளுரைகளால் நன்கு விளங்கும்.

பிறப்பிற்குக் காரணமாயுள்ள அறியாமைகெடச் சிறப்பாகிய பேரின்பத்தையருளும் செம்பொருளை உணர்வால் ஒற்றித்து நின்று இடைவிடாது நல்லுணர்வாற்கண்டு போற்றுவதே மெய்ம்மையாகிய ஞானத்தின் பயனாகும். இக்கருத்து,

'பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு'

என்பதனால் அறிவுறுத்தப்பெற்றது. மனைவாழ்க்கையில் நுகர வேண்டிய நுகர்ச்சிகளையெல்லாம் எஞ்சாமல் நுகர்ந்து மன வமைதி பெற்ற நன்மக்கள், என்றும் அழிவிலாப் பேரின்பத்தை யருளும் செம்பொருளை அயரா அன்பினால் இடைவிடாது நினைந்து, மீண்டும் பிறவிச்சூழலில் திரும்பி வாராமைக்கு ஏதுவாகிய நன்னெறியினைத் தலைப்படுதலே காதலிருவர் கருத்தொன்றி வாழும் அன்பின் ஐந்திணை யொழுகலாற்றின் முடிந்த பயனாகும். இதனை,

'காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ்சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே' (கற்பியல்-51)

எனவரும் நூற்பாவால் தொல்காப்பியர் அறிவுறுத்தியுள்ளார். எல்லாவுயிர்களுக்கும் உயிர்க்குயிராய்ச் சிறந்து விளங்குதல் இறைவனது இயல்பாதலின், மன்னுயிர்கட்குத் தோன்றாத் துணையாய் உடனின்றுதவும் சிறப்புடைய கடவுளைச் 'சிறந்தது' என்ற பெயராற் குறித்தார் ஆசிரியர். தோற்றக் கேடுகளின்றி என்றும் உள்ளதாய், எப்பொருளும் நிலைத்தற்கேற்ற சார்பாய்த் தன்பால் பிறிதொரு பொருளும் ஊடுருவ இயலாத செறிவுடை மையால் தூயதாய், எத்தகைய திரிபும் இன்றி என்றும் ஒரே பெற்றியதாய் விளங்குதல் முழுமுதற் பொருளின் இயல்பாதல் பற்றி, அதனைச் 'செம்பொருள்' எனவும், 'உள்ளது' எனவும், 'சார்பு' எனவும் திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார். 'சிறந்தது பயிற்றல்' என்னுந் தொல்காப்பியத்தொடர்ப் பொருளையே 'சிறப்பென்னுஞ் செம்பொருள் காண்பது' என்ற தொடரால் தெய்வப் புலவர் விரித்துக் கூறியுள்ளார். "சிறந்தது என ஆன்றோராற் போற்றப்பெறும் செம்மை வாய்ந்த பெரும் பொருளை ஒன்றிய வுள்ளத்தாற் சிந்தித்துப் போற்றுதல்" என்பது மேற்காட்டிய தொடரின் பொருளாகும். இங்ஙனம் செம்மையேயாய சிவபரம்பொருளை இடைவிடாது நினைந்து வழிபடுதலே பிறவிக்குக் காரணமாகிய பேதைமையினை அகற்றி உய்தி பெறுதற்குரிய நன்னெறியாம் என்பதனை,

'பிறவியால் வருவன கேடுள வாதலின் பெரிய வின்பத்
துறவியார்க் கல்லது துன்பநீங்கா தெனத் தூங்கினாயே
மறவல்நீ மார்க்கமே நண்ணினாய் தீர்த்தநீர் மல்கு சென்னி
அறவனாரூர் தொழுதுய்யலாம் மையல் கொண்டஞ்சல் நெஞ்சே'
(2-79-5)

என்ற திருப்பாடலில் திருஞானசம்பந்தர் உள்ளத்திற்கு அறிவுறுத்தும் முகமாகத்தெளிய விளக்கியுள்ளார்.

எல்லாப் பொருட்குஞ் சார்பாய் விளங்கும் இறைவனை யுணர்ந்து, தம்மைச் சார்ந்துள்ள இருவகைப் பற்றுக்களும் தம்மை விட்டு நீங்கும் வண்ணம் ஒழுகவல்லராயின், அவர்களை முன்னை யூழ்வயத்தாற் சாரக் கடவனவாய் நின்ற வல்வினைத் துன்பங்கள் அவர்தம் உணர் வொழுக்கங்களை யழித்துச் சாரும் வலியற்றன. ஆதலால் அன்னோரைச் சாரமாட்டா என்பார்,

'சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்'

என்றார் திருவள்ளுவர். எல்லாப் பொருட்கும் சார்பாய் நிற்பது முழுமுதற் பொருளாய கடவுளாதலின் அதனை ஆகு பெயராற் 'சார்பு' என வழங்கினார்.

'சார்பினாற் றோன்றாது தானருவா யெப்பொருட்குஞ்
சார்பெனநின் றெஞ்ஞான்றும் இன்பந் தகைத்தரோ
வாய்மொழியான் மெய்யான் மனத்தான் அறிவிறந்த
தூய்மையதாம் மைதீர் சுடர்'

என்றார் பிறரும். இறைவனது அருட்சார்பே மன்னுயிர்கட்கு ஆதாரமாய் விளங்குவது என்னும் இவ்வுண்மையினை,

'சைவனாரவர் சார்பலால் யாதுஞ் சார்பிலோம் நாங்களே'

என ஆளுடைய பிள்ளையாரும்,

'பற்றற்றார் சேர்பழம் பதியை' (4-15-1)

என ஆளுடைய அரசரும் தெளிவுபடுத்தியுள்ளார்கள்.

பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம் என்றறிந்தவர், தமக்கென ஒன்றினை வேண்டப் புகுவராயின், பெரும் பேரின்ப நிலையினதாகிய பிறவாமையினையே வேண்டுவர். பிறவாமை யாகிய இன்பநிலையானது, ஒரு பொருளையும் விரும்பாமை யாகிய அவாநீக்கத்தை வேண்டத் தானேயுளதாகும். இது,

'வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை, மற்றது
வேண்டாமை வேண்ட வரும்'

என்பதனால் உணர்த்தப்பெற்றது. இவ்வுலகிற் பிறப்புப் பிணி மூப்புக்களால் உயிர்கள் துன்புற்று வருதலையுணர்ந்த நல்லறிஞர்க்குப் பிறவாமையாகிய இன்ப நிலையினைப் பெறவேண்டும் என்னும் வேட்கையுண்டாதல் இயல்பாதலின், அன்னோர், தம் பொருட்டு ஒரு பொருளை வேண்டிப் பெற்றுக்கொள்ள விரும்பினால், பிறவாமையாகிய இதனையே வேண்டுவர் எனவும், இவ்வுலக வாழ்விற் கணந்தோறும் தோன்றியழியும் சிற்றின்பங்களைக் கருதி ஒரு பொருளை அவாவின் அத்தகைய அவாவானது பிறப்பீனும் வித்தாய்ப் பின்னும் எல்லையற்ற

துன்பமே விளைக்குமாதலின், அது நீங்கும் பொருட்டு அவா வறுதியாகிய வேண்டாமையினை வேண்டிப் பெறின் பிறவாமை தானே வரும் எனவும் இத்திருக்குறளில் ஆசிரியர் குறித்துள்ளார். 'வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை' என்னும் இக் கருத்தினை,

"ஆட்டான் பட்டமையால் அடியார்க்குத் தொண்டுபட்டுக்
கேட்டேன் கேட்பதெல்லாம் பிறவாமை கேட்டொழிந் தேன்"
(7-21-2)

எனவரும் தொடரில் நம்பியாரூரர் எடுத்தாண்டுள்ளமை காணலாம்.

உயிர்கள் இறைவன்பால் வேண்டத்தக்க வேண்டு கோள்களுள் முடிவாக அமைந்த கடைசி விண்ணப்பம் பிறவாமையாகிய ஒன்றேயாகும்.

"திருந்தா அமணர்தந் தீநெறிப்பட்டுத் திகைத்துமுத்தி
தருந்தா ளிணைக்கே சரணம்புகுந்தேன் வரையெடுத்த
பொருந்தா அரக்கன் உடல்நெரித்தாய் பாதிரிப்புலியூர்
இருந்தாய் அடியேன் இனிப்பிற வாமல்வந் தேன்று கொள்ளே"
(4-94-10)

எனவரும் அப்பரடிகள் வேண்டுகோளும்,

'இறவாத இன்பஅன்பு வேண்டிப் பின்வேண்டுகிறார்
பிறவாமை வேண்டும்'

எனக் காரைக்காலம்மையார் வேண்டியநிலையினை விரித் துரைக்கும் திருத்தொண்டர் புராணச் செய்யுளும் இங்கே நினைக்கத்தக்கன. பிறவாமையாகிய பெருநிலை வந்தெய்திய பின்னர் மேலும் வேண்டத்தக்கதொன்றில்லை யாதலால், இவ்வாறு பிறிதெதனையும் வேண்டும் நிலையையும் விட்டொ ழிந்தேன்' என்பார் பிறவாமை கேட்டொழிந்தேன்' என்றார் சுந்தரர். இனி பிறவாமை கேட்டு அதனைப்பெறுதல் வேண்டி உலகப் பொருள்களில் வைத்த பற்றனைத்தையும் விட் டொழிந்தேன் என்றார் எனக் கொள்ளுதலும் பொருந்தும். இப்பொருட்டு 'கேட்டு-ஒழிந்தேன்' எனப் பிரித்துரைக்க. அவாநீக்கமே பிறவாமைக்கு ஏதுவென்பது,

'வெறுத்தேன் மனைவாழ்க்கையை விட்டொழிந்தேன்'
(7-4-8)

என்பதனாலும் உணர்த்தப் பெற்றமை யுணரலாம்.

தூய்மையாவது ஒரு பொருளிலும் அவாவில்லாமையாகும். அகத்தூய்மையாகிய அதுவும் வாய்மையெனப்படும் மெய்ப் பொருளை இடைவிடாது சிந்திததலால் தானே உளதாகும் என்பார்,

'தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்'

என்றார் திருவள்ளுவர். மன அழுக்கைக் கழுவுதற்குரிய நன்னீராயமைந்து, மெய்ம்மைப்பொருளாம் இறைவனைச் சிந்தித்தலாகிய வாய்மையொழுக்கமே என்பதனை,

"காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறைய நீரமைய ஆட்டிப்
பூசனை யீசனார்க்குப் போற்றவிக்காட்டினோமே" (4-76-4)

காத்திலேன் இரண்டு மூன்றும் கல்வியேல் இல்லையென்பால்
வாய்த்திலேன் அடிமைதன்னுள் வாய்மையில் தூயேனல்லேன்.
(4-54-7)

எனவும் வரும் திருப்பாடல்களில் நாவுக்கரசர் எடுத்துக் காட்டிய திறம் உணரற்பாலதாகும்.

கற்கப்படும் நூல்களை எண்ணும் எழுத்தும் என இரு திறமாகப் பகுத்து அவற்றை மக்களுயிர்க்குக் கண்கள் எனச் சிறப்பித்தார் திருவள்ளுவர்,

'எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டுங்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு'

என்பது திருக்குறள். எண்ணும் எழுத்துமாகிய இவ்விரண்டினையும்,

'எண்ணுமோ ரெழுத்தும் இசையின் கிளவிதேர்வார்
கண்ணுமுதலாய கடவுட்கிடமதென்பர்' (1-34-4)

என ஞானசம்பந்தரும்,

'எண்ணானாய் எழுத்தானாய்' (4-13-7)

என நாவுக்கரசரும் குறித்துள்ளமை காணலாம்.

மக்களால் மதிக்கத்தக்க செல்வங்களெல்லாவற்றுள்ளும் தலையாய செல்வம் இவையென அறிவுறுத்தக் கருதிய திருவள்ளுவர், 'அருட்செல்வம் செல்வத்துட் செல்வம்' (241) எனவும், 'செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம் அச்செல்வம், செல்வத்து ளெல்லாந்தலை' (411) எனவும் முறையே எல்லாவுயிர்களிடத்தும் செல்வதாகிய கருணையினையும் எல்லா நூற்பொருளையும் அறிந்தோர் வாயிலாகக் கேட்டுணரும், கேள்வியுணர்வினையும் சிறப்புடைய செல்வங்களாகக் குறித்துள்ளார்.

ஆரவாரமுடைய ஆணைமொழிகளைக் கூறிப் பிறரை ஏவிப்பணி கொள்ளுதலும், மனத்தினும், விரைந்து செல்லும் ஊர்திகளை ஏறிச் செலுத்துதலும், உண்மையான செல்வங்களாக மாட்டா. அவை அவரவர் செய்த வினையின் பயன்களாகவே கொள்ளத் தக்கன. அறிவுடைய சான்றோர்களாற் செல்வம் என்று சிறப்பித்துப் பேசப்படுவது, தன்னை அடைந்தோர்களின் துன்பங்கண்டு அஞ்சி வருந்தி அத்துன்பத்தினைத் துடைத்தற்கு முந்தும் அருளுடைமையாகிய கருணையேயாகும். இந்நுட்பம்,

'நெடிய மொழிதலும் கடியவூர்தலும்
செல்வமன்று தம் செய்வினைப் பயனே
சான்றோர் செல்வமென்பது சேர்ந்தோர்
புன்கண் அஞ்சும் பண்பின்
மென்கட் செல்வம் செல்வமென்பதுவே' (குறுந்-)

எனவரும் சங்கச் செய்யுளிற் புலப்படுத்தப் பெற்றது. இவ்வாறு பிறவுயிர்களின் துயர்கண்டு அஞ்சி அத்துயரினைத் துடைக்க முற்படும் அருளாகிய பெருஞ்செல்வத்திற்கு நிலைக்களமாகத் திகழ்வோன், இறைவன் ஒருவனே ஆதலின் அவனது திருவருட் பெருமையினை விரித்துரைக்கும் பொருள் சேர் புகழாகிய தோத்திரங்களை வாயாரப்பாடி மகிழ்தலும் அவற்றை அன்பர் சொல்லச் செவியாரக் கேட்டு மகிழ்தலும் சிறப்புடைய செல்வமாம் என்பதனை,

'செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச்
செல்வ மதிதோயச் செல்வம் உயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம்பலமேய
செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே' (1-80-5)

எனவரும் திருப்பாடலில் ஆளுடைய பிள்ளையார் அறிவுறுத்தி யுள்ளார். 'செல்வன் கழலேத்தும் செல்வம்' ஆகிய இச்செல்வம், இறைவன் திருவருளைப் பெறுதற்கு வாயிலாகிய அருட் செல்வமும் செவிச் செல்வமும் என இரு நிலையினையும் ஒருங்கே பெற்றுச் சிறந்து விளங்குதல் உணர்ந்து மகிழத்தக்கதாகும்.

ஒழுக்கமுடைய உயர்ந்தோர் வாயிலிருந்து வெளிவரும் நல்லுரைகள், தளர்ச்சி நேர்ந்தபொழுது வழுக்கு நிலத்தில் நடப்பார்க்கு ஊன்றுகோல் போன்று உதவுவன என்பது,

'இழுக்க லுடையுழி ஊற்றுக்கோலற்றே
ஒழுக்க முடையார்வாய்ச் சொல்'

என்பதனால் உணர்த்தப்பட்டது. சீலமேயுருவாக விளங்கும் இறைவன், தன்னை அன்பினால் நினைந்து போற்றும் அடியார்களுக்கு உலகவாழ்வில் தளர்ச்சி நேர்ந்தால் வழுக்கு

நிலத்தில் ஊன்றுகோல்போல் துணைநின்று தளர்வுநீக்கி ஏன்று தாங்கிக்கொள்வன் என்பதனை,

'கூற்றுத் தண்டத்தை யஞ்சிக் குறிக்கொண்மின்
ஆற்றத் தண்டத்தடக்கு மரணடி
நீற்றுத் தண்டத்தராய் நினை வார்க்கெலாம்
ஊற்றுத் தண்டொப்பர்போல் ஒற்றியூரரே' (5-24-3)

எனவரும் திருப்பாடலில் அப்பரடிகள் குறித்துள்ளார். இத்திருப் பாடல் 'இழுக்கலுடையுழியூற்றுக்கோலற்றே' எனவரும் திருக்குறள் உவமையினை அவ்வாறே எடுத்தாண்டிருத்தல் அறிக.

அறிவு நூல்களிற் கூறப்பட்ட நற்பொருள்களைக் கேட்டுப் பழகாத செவிகள், தம் புலமாகிய ஓசையினைக் கேட்டுணரும் இயல்புடையனவாயினும், செவிட்டுச் செவிகளைப் போன்று அறிவு வளர்ச்சிக்குச் சிறிதும் பயன்படாதனவே என்பார்,

'கேட்பினுங் கேளாத்தகையவே கேள்வியாற்
றோட்கப் படாத செவி'

என்றார் திருவள்ளுவர். இதனை யூன்றி நோக்குங்கால், மக்கள் இன்றியமையாது கேட்டற்குரியனவாகத் திருவள்ளுவர் அறிவுறுத்திய நூற் கேள்விகளுள் இறைவனது பொருள் சேர் புகழாகிய கேள்வி மிகவும் சிறந்ததென்பதும், அப்புகழினைக் கேட்டுப் பழகாத செவிகளாற் பயனின்மையின் அவை செவிட்டுச் செவிகளே என்பதும் நன்கு தெளியப்படும். இக்கருத்தினை,

'தாளால் அரக்கன்தோள் சாய்த்த தலைமகன்றன்
நாள் ஆதிரையென்றே நம்பன்றன் நாமத்தால்
ஆளானார் சென்றேத்தும் ஆமாத்தூர் அம்மானைக்
கேளாச் செவியெல்லாங் கேளாச் செவிகளே' (2-44-8)

எனற் திருப்பாடலில் தெளிவாகக் குறித்துள்ளார்.

காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை மதம் எனக் குற்றங்கள் ஆறென்பர். இவ் வறுவகைக் குற்றங்களையும் அறவே களையவேண்டியதன் இன்றியமை யாமையினைக் 'குற்றங்கடிதல்' என்ற அதிகாரத்தில் திருவள்ளுவர் விரித்துக் கூறுவர்,

'செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து' (431)

'இவறலும் மாண்பிறந்த மானமும் மாணா
உவகையும் ஏதம் இறைக்கு' (432)

எனவரும் இரண்டு பாட்டாலும் அறுவகைக் குற்றங்கள் இவை யென உணர்த்தப்பட்டன. இவற்றுள் செருக்கு என்பது செல்வக்

களிப்பாகிய மதம் என்னும் குற்றமாகும். சினம்-வெகுளி. சிறுமை-மக்களைச் சிறுமையுறுத்துவதகிய அளவிறந்த காமம், இவறல்-பொருள்களைச் செலவு செய்ய வேண்டியவழிச் செலவிடாமை யாகிய கடும்பற்றுள்ளம். இதனை லோபம் என்பர் வடநூலார். மாண்பு இறந்த மானம் - தன்பால் உண்மையான பெருமை யில்லாத நிலையில் அஃது இருப்பதாக மதித்துப் பணிதற்குரிய பெரியோர்களிடத்து அடங்கியொழுகாமை. மாணா உவகை-அளவிறந்த மகிழ்ச்சி காரணமாகத் தான் செய்யத்தக்க கடமைகளை உரிய காலத்திற் செய்யாது சோர்வடைதல். இத்தகைய சோர்வுநிலை மயக்கத்தின் விளைவாக நேர்வதாதலின் இதனை 'மோகம்' என வழங்குவர் வடநூலார். மேலே குறித்த அறுவகைக் குற்றங்களும் ஒழுக்கத்தால் மேன்மேல் உயர்தற்குரிய மனவுணர்வுடைய மக்களது வாழ்விற் குறுக்கிட்டு அன்னோர் அடைதற்குரிய நற்பயன்களைப் பெறவொட்டாது தடை விளைத்துத் துயர் செய்வன வாதலால் இக்குற்றங்களை 'அற்றந்தரும் பகை' என்றார் திருவள்ளுவர். இதனால் அறுவகைக் குற்றங்களையும் 'அறுபகை' என வழங்கும் மரபும் உளதாயிற்று. இவ்வாறு பகையினையும்,

'பொங்குமத மானமே ஆர்வச்செற்றக்
குரோதமே லோபமே பொறையே' (6-27-6)

எனத் திருநாவுக்கரசர் குறித்துள்ளமை காணலாம்.

பொறிவாயில் ஐந்தினையும் அடக்கி இறைவனருள் பெற விரும்பும் மெய்யடியார்கள் அகப்பகையாகிய அறுவகைக் குற்றங்களையும் கடிந்தகற்றித் தம் நெஞ்சத் தாமரையிலே இறைவனை இடைவிடாது நினைந்து வழிபடுவார்கள் என்பதனை,

'அகனமர்ந்த அன்பினராய் அறுபகைசெற்
றைம்புலனும் அடக்கி ஞானப்'

'புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிகத்
துள்ளிருக்கும் புராணர்' (1-132-6)

எனவரும் திருப்பாடலில் ஞானசம்பந்தப்பிள்ளையார் குறித்துள்ளார். இங்ஙனம் அகப்பகையாகிய குற்றங்களைக் களை தற்கும் இறைவனது திருவருளையே துணையாகக் கொண்டு முயலுதல் வேண்டும் என்பது,

'வலையம் வைத்த கூற்றமீவான் வந்துநின்ற வார்த்தை கேட்டுச்
சிலையமைத்த சிந்தையாலே திருவடி தொழுதுய்யினல்லால்

கலையமைத்த காமச் செற்றக் குரோதலோப மதவருடை
உலையமைத்திங் கொன்றமாட்டேன் ஓணகாந்தன் தளியுளீரே' (7-5-8)

எனவரும் நம்பியாரூரர் வாய்மொழியால் நன்குணரப்படும்.

குணம், குற்றம் என்பவற்றுள் ஒன்றேயுடையார் உலகத்தில்லாமையால், ஒருவர்பால் அமைந்த குணங்களையும் குற்றங்களையும் ஒப்பவைத்து, ஆராய்ந்து அவற்றின் மிகுதியையும் குறைவினையும் நோக்கிக் கண்டு, குணம் மிக்கதாயின் அவரைச் செய்தொழிற் குரியரென்றும், குற்றம் மிக்கதாயின் அத்தொழிற்கு உரியரல்லரென்றும் தெளிந்துகொள்க என அறிவுறுத்துவது,

'குண நாடிக் குற்றமு நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்ககொளல்'

என்ற திருக்குறளாகும். குற்றமும் குணமும் ஒருங்குடைமை மக்களது இயல்பாயினும், தம்பாலுள்ள குற்றங்களையுணர்ந்து அவற்றைப் படிப்படியே குறைத்து விலக்குதலும், நற்குணங்களை நாடி மேன்மேலும் பெருக்கிக் கொள்ளுதலும் அறிவுடைய நன்மக்களது கடமை என்பது இதனால் குறிப்பாக அறிவுறுத்தப் பட்டது. இக்குறிப்பினை யுணர்ந்து நன்னெறியிலொழுக மாட்டாது, குற்றங்களையே பெருக்கிக் குணங்களைக் குறைத்துத் தீயநெறியில் தலைப்படும் புன்மக்களை, நோக்கி இடித்துரைத்து நல்வழிப்படுத்துவதாக அமைந்தது,

'குற்றங் கூடிக் குணம்பல கூடாதீர்
மற்றுந் தீவினை செய்தன மாய்க்கலாம்
புற்றரா வினன் பூவனூர் ஈசன்பேர்
கற்று வாழ்த்தும் கழிவதன் முன்னமே' (5-6-53)

என வரும் திருக்குறுந்தொகையாகும்.

உரியகாலத்தில் வேண்டும் அளவு மழைபெய்தால் தான் உலகத்து உயிர்களெல்லாம் நிலைபெற்று வாழ முடியும். இவ்வாறு உயிர் வாழ்வுக்கு மழையொன்றே காரணமாயினும் சிறப்புடையுயிராகிய குடிமக்கள் அரசனது நீதி முறையாகிய செங்கோலினையே தம் வாழ்வுக்கு ஆதரவாகக் கொண்டு வாழ்கின்றார்கள். இவ்வுண்மை,

'வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோல்நோக்கி வாழும் குடி'

என்பதனால் உணர்த்தப்பட்டது. இவ்வாறு மக்கள் வாழ்வுக்கு உறுதுணையாய் நின்றுதவும் மன்னனது செங்கோன் முறைமைக்கும் உடனாய்த் துணை நின்று மன்னுயிர்களைக் காப்பது இறைவனது திருவருளேயாகும். இந்நுட்பத்தினை,

'குழைக்கும் பயிர்க்கோர் புயலேயொத்தியால்
அடியார் தமக்கோர் குடியேயொத்தியால்'
(7-4-4)

*எனச் சுந்தரர் இறைவனைப் போற்று முகத்தால் நன்கு புலப்படுத்தியுள்ளார்.*

'முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப்படும்'

*எனவரும் திருக்குறள், எல்லார்க்கும் நடுவாய் நின்று இறை புரிதலாகிய முறைசெய்தற்றன்மை இறைவனொருவனுக்கே சிறப்புரிமையுடையதென்பதனையும், அதனை இறையருளாற் பெற்று அதன் வழி முறை செய்யும் மன்னவன் பிறப்பால் மகனேயாயினும் முறை செய்தற் றொழிலால் இறைவனாகவே வைத்துப் போற்றப்பெறுவான் என்பதனையும் தெளிவாக விளக்குகின்றது.*

'தனிமுடி கவித்தாளும் அரசினும்
இனியன் தன்னடைந்தார்க் கிடைமருதனே' (5-14-10)

*எனவரும் அப்பரருள்மொழி, மன்னவன் செங்கோன் முறைக்கும் உடனாய்த் துணை நின்று இறைவன் வழங்கும் அருள் நலத்தினைப் புலப்படுத்தல் அறியத்தக்கதாகும்.*

*ஊக்கமுடையார் ஒன்றை நினைத்துப் பெற முந்துவராயின், மக்கள் வாழ்வுக்கு நலம் பயக்கும் உயர்ந்த பொருளையே எண்ணி முயலுதல் வேண்டும். அம்முயற்சிக்கு ஊழ்வயத்தால் தடைபல நேர்ந்தாலும் அவர்தம் உள்ளக் கருத்தின் வன்மையால் அவர் எண்ணிய பொருளைத் தடையின்றிப் பெறுதல் உறுதி என்பது,*

'உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல் மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து'

*என்ற குறளால் வலியுறுத்தப்பட்டது. உலகப் பொருள்களிற் சென்ற இத்தகைய உள்ளக் கிளர்ச்சியினை, உலகிறந்த ஒண்பொருளாகிய இறைவன் பாலும் செலுத்துக என அறிவுறுத்துவன,*

'ஒள்ளி துள்ளக் கதிக்கா மிவனொளி
வெள்ளியானுறை வேற்காடு
உள்ளியார் உயர்ந்தாரிவ் வுலகினில்
தெள்ளியாரவர் தேவரே' (1-57-1)

*எனவும்,*

'முள்ளின்மேல் முதுகூகை முரலுஞ் சோலை
வெள்ளின்மேல் விடுகூறைக் கொடிவிளைந்த

கள்ளில் மேய அண்ணல் கழல் நாளும்
உள்ளுமேல் உயர்வெய்தல் ஒருதலையே' (1-119-1)

எனவும் வரும் திருப்பாடல்களாகும். ஆளுடைய பிள்ளையார் அருளிய இப்பாடல்கள் 'உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்' என்னும் திருக்குறட்கு விளக்கமாக அமைந்தனவாகும்.

சோம்புதலில்லாத மன்னவன், தன் அடியளவால் உலக முழுவதையும் அளந்த திருமால் தாண்டிக்கடந்த நிலப்பரப்பு முழுவதனையும் ஒருங்கே எய்தும் ஆற்றலைப் பெறுவான் என்பார்,

'மடியிலா மன்னவன் எய்தும், அடியளந்தான்
தாஅய தெல்லாம் ஒருங்கு' (610)

என்றார் திருவள்ளுவர். திருமால், மாவலி என்னும் வேந்தனிடத்தே மூன்றடி மண் இரந்து வேண்டி நெடியோனாய் நின்று இவ்வுலக முழுவதனையும் தன் திருப்பாதத்து ஓரடியால் தாவி அளந்தமை பற்றி அப்பெருமானைத் 'தாவியவன்' *(1-62-6)* என்ற பெயராற் குறித்தார் ஞானசம்பந்தர். திருமால் தன் பாதத்தால் தாவியளந்த இந் நிகழ்ச்சியை,

'மூவுலகும் ஈரடியான் மறைநிரம்பா வகைமுடியத்
தாவிய சேவடி' (சிலப்-ஆய்ச்சியர் குரவை)

என்ற தொடரில் இளங்கோவடிகள் குறித்துள்ளார்.

மடியிலா மன்னவன் தன் முயற்சியால் எய்தும் நிலப்பரப்பின் பெருமையைச் சுட்டக் கருதிய திருவள்ளுவர், திருமாலின் அடியால் அளக்கப் பெற்ற பெருநிலப்பரப்பினை 'அடியளந்தான் தாஅயது' எனக் குறித்தார். உலகளந்த நெடியோனாகிய திருமாலின் பேராற்றலைக் குறிப்பிடக் கருதிய ஆளுடைய பிள்ளையார்,

'தாய அடியளந்தான்' (1-50-9)

எனவும்,

'தாவி அடிமூன்றளந்தவன்' (2-12-9)

எனவும் திருமாலைச் சிறப்பித்துள்ளார். இத்தொடர்கள் 'அடி யளந்தான் தாஅயது' என்னும் திருவள்ளுவர் வாய்மொழியை அடியொற்றி யமைந்திருத்தல் காணலாம்.

எல்லார்க்கும் வேண்டுவனவற்றை இல்லையென்னாது கொடுத்து உபகாரஞ் செய்தலாகிய வேளாண்மைப் பண்பு இடைவிடாத மெய்ம்முயற்சியாகிய தாளாண்மை என்னும் குணத்தின் கண்ணே நிலைத்துள்ளது என்பதனை,

'தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு'

என்ற குறளில் ஆசிரியர் தெளிவாகக் குறிப்பிடுகின்றார். சோழநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றாகிய திருஆக்கூரில் வாழும் பெருமக்கள் இத்திருக்குறளுக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகத் திகழ்கின்றார்கள் என அன்னோரது தாளாண்மையின் வழி நிகழும் வேளாண்மையினைச் சிறப்பிக்கும் முறையில் அமைந்தது,

'வேளாளரென்றவர்கள் வள்ளன்மையால் மிக்கிருக்குந்
தாளாளர் ஆக்கூரில் தான் தோன்றிமாடமே' (2-42-3)

எனவரும் திருப்பாடலாகும். இதன் கண், 'வள்ளன்மையால் மிக்கு இருக்கும்' என்ற தொடர் 'வேளாண்மை யென்னுஞ் செருக்கு' என்பதற்குரிய உரை விளக்கமாகவும், வேளாள ரென்றவர்கள் வள்ளன்மையால் மிக்கிருக்குந் தாளாளர்' என அமைத்த சொன்முடிவு, 'வேளாண்மை என்னுஞ் செருக்கு தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்று' எனவரும் திருக்குறள் சொன்முடிவின் விளக்கமாகவும் அமைந்திருத்தல் அறிந்து மகிழத்தக்கதாகும்.

மக்களது சொல்லேயன்றி அவர்கள் செய்யும் செயலும் உள்ளத் தூய்மையுடன் கூடியிருத்தல் வேண்டும் என வற்புறுத்துவது 'வினைத்தூய்மை' என்னும் அதிகாரம். தீய செயல்களாற் பொருளைச் சேர்த்து அப்பொருளைக் கொண்டு இன்பமான நல்வாழ்வைப் பேணிக்கொள்வதென்பது சுடப் படாத பசுமட் பாண்டத்திலே தண்ணீரை நெடுங்காலம் நிறைத்து வைத்திருத்தலை யொத்து, செய்தவனும் பொருளும் சேரக்கெடுதற்கு ஏதுவாகும் என்பார்,

'சலத்தாற் பொருள் செய்தே மார்த்தல் பசுமட்
கலத்துணீர் பெய்தி? இ யற்று' (660)

என்றார் திருவள்ளுவர். குற்றமின்றி வருகின்ற நமது குடிப்பிறப்பின் தூய்மையோடு ஒத்து வாழ்தலே நமது கடமை யெனக் கருதி வாழும் பெருமக்கள், தாம் வறுமையுற்ற பொழுதும் வஞ்சனையைப் பொருந்தித் 'தமக்கு' அமைவில்லாதனவாகிய தீச்செயல்களைச் செய்யமாட்டார்கள் என்பதனை,

'சலம்பற்றிச் சால்பில செய்யார் மாசற்ற
குலம்பற்றி வாழ்தும் என்பார்' (956)

என்ற குறளால் உணர்த்தியுள்ளார். திரு ஓமாம்புலியூரில் வாழும் பெருமக்களது வினைத்தூய்மையினையும் குடிபிறப்பின் உயர்ச்சியினையும் கண்டு மகிழ்ந்த ஆளுடைய பிள்ளையார்,

'சலத்தினாற் பொருள்கள் வேண்டுதல் செய்யாத்
தன்மையார், நன்மையால் மிக்க
உலப்பில் பல்புகழார் ஓமமாம் புலியூர்
உடையவர் வடதளியதுவே' (3-122-5)

என அப்பெருமக்களை உளமுவந்து பாராட்டியுள்ளார். இத்தொடர் மேலே குறித்த திருக்குறட் பாடல்கள் இரண்டின் பொருளையும் அடியொற்றி அமைந்ததாகும்.

அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை முதலிய பல குணங்களாலும் நிறைந்து, அப்பண்புகளை உலக வாழ்க்கையிற் பயன்படுத்தும் நன்மக்களது இயல்பினைச் 'சான்றாண்மை' என்னும் அதிகாரத்தில் விளக்குவர் ஆசிரியர். சால்புடையமையாகிய பெருங்கடல் நீரைத் தேக்கிவைக்கும் கரையென்று சொல்லப்படும் சான்றோர். புறத்தேயுள்ள பெருங்கடலானது கரையுள் நில்லாமற் பொங்கி மீதூர்ந்து உலகமெலாம் அழிய வரும் ஊழிக்காலத்தும் பெருங்குணங்களைக் காத்தலாகிய தம்மியல்பினின்றும் சிறிதும் திரிபடைய மாட்டார்கள் என்பது,

'ஊழி பெயரினுந் தாம்பேரார் சான்றாண்மைக்கு
ஆழியெனப் படுவார்' (989)

என்பதனால் உணர்த்தப்பட்டது. சான்றாண்மையாகிய இவ்வியல்பு, என்றும் அழிவிலா முழுமுதற் பொருளாகிய இறைவனுக்கு ஆட்பட்டு அவனது திருவருளையே துணையாகக் கொண்டு வாழும் உத்தமர்களாகிய அடியார்களிடத்திலேயே என்றும் மாறாது திகழும் என்பதனை,

'வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையும்
தானந் துளங்கித் தலைதடுமாறிலென் தண்கடலும்
மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலைநஞ்சுண்
டூனமொன் றில்லா ஒருவனுக் காட்பட்ட உத்தமர்க்கே'
(4-112-8)

என்ற திருவிருத்தத்துள் அப்பரடிகள் நன்கு விளக்கியுள்ளார் ஊழி பெயரினும் என்பதனால் குறிக்கப்பட்ட ஊழிப்பெயர்ச்சியின் இயல்பினை இத்திருப்பாடலின் முதன் மூன்றடிகளும் விரித்துரைத்தல் காணலாம்.

விண்ணோர் அமுதுண்ணவேண்டி ஒருவரும் உண்ணக் கருதாத கொடிய நஞ்சினையுண்டும் ஊனமொன்றில்லா ஒருவனாகிய இறைவனுக்கு ஆட்படுதலே சான்றாண்மை நிலை பெறுதற்குரிய நற்சார்பென்பதும், அச்சார்பினைப் பெற்ற இறைவனடியார்களாய சான்றோர்கள், உலகமெலாம் அழிய

வரும் ஊழிப்பெயர்ச்சியாகிய காலத்தும் தம் பெருமைக்குணங் களிற் சிறிதும் திரிபடைய மாட்டார்கள் என்பதும் ஆகிய இவ்வுண்மையினை,

'மண்பா தலம்புக்கு மால்கடல்மூடி மற்றேழுலகும்
விண்பால் திசைகெட்டிருசுடர் வீழினும் அஞ்சல் நெஞ்சே
திண்பால் நமக்கொன்று கண்டோம் திருப்பாதிரிப்புலியூர்
கண்பாவுநெற்றிக் கடவுட்சுடரான் கழலிணையே'

எனவரும் திருநாவுக்கரசர் அநுபவமொழியால் இனிது ணரலாம்,

இதுகாறும் எடுத்துக்காட்டிய்வற்றால் மூவர் அருளிய தேவாரத் திருப்பதிகங்களில் திருவள்ளுவர் அருளிய திருக்குறட் கருத்துக்களும் சொற்களும் சொற்றொடர்களும் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளமை இனிது விளங்கும். இங்கெடுத்துக்காட்டி விளக்கிய ஒப்புமைப் பகுதிகளைக் கூர்ந்து நோக்குங்கால் 'தேவர் குறளும் மூவர் தமிழும் ஒருவாசகம்' என முன்னைச் சான்றோர் ஒருவர் ஆராய்ந்துணர்த்திய பொருள்முடிபு உறுதியாதல் நன்கு தெளியப்படும்.



# 10. தேவார ஆசிரியர்கள் அறிவுறுத்திய திருநெறிக் கொள்கைகள்

சிவநெறி வளர்த்த செந்தமிழ்ச் செல்வர்களுள் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரையும் சைவசமய ஆசிரியர் எனச் சிறப்பித்துப் போற்றுதல் மரபு. சைவசமய குரவாகிய இந்நால்வரும் இறைவனருளால் சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானமாகிய அருள் ஞானம் கைவரப்பெற்ற திருநெறிச் செல்வர்கள் ஆவர். இப்பெரு மக்களைப் 'பண்டை நற்றவத்தால் தோன்றிப் பரமனைப் பத்தி பண்ணும் தொண்டர்' என்றும், சிவாகமங்களில் கூறப்பட்ட படிமுறையால் அன்றி இறைவன் தானே எளிவந்து இவர்களை ஆட்கொண்டு சிவகதியிற் சேர்த்தருளினன் என்றும் மெய்ந் நூல்கள் கூறும்.

எல்லா உலகங்களிலும் எந்த ஏதுவிலேயானாலும் நடை பெற்றுவரும் செயல்கள் யாவும் எங்கும் நீக்கமறப் பொருந்தி யிருக்கும் இறைவனுடைய திருவருள் ஆணையால் நிகழ்வனவேயாம் ஆதலின், உணர்வில்லாத சடப்பொருள்கள், உணர்த்த உணரும் இயல்பினவாகிய உயிர்கள் ஆகிய இருதிறப் பொருள்களுக்கும் அவற்றுக்கெனத் தனியே ஒரு செயல் இல்லை என்பர் பெரியோர். இவ்வுண்மையினை உணர்ந்தவர்களே சிவஞானிகள் எனப் போற்றப் பெறுவர். அன்னோர் தாங்கள் எந்தச் செயலைச் செய்யத் தொடங்கினாலும் 'யான் செய்தேன்' 'பிறர் செய்தார்' என்னும் மனக்கோணையினைச் சிவஞானமாகிய தீயினால் வாட்டி நிமிர்த்து மகவெனப் பல்லுயிரனைத்தையும் ஒக்கப் பார்க்கும் செம்மையுடையராய்த் தன் முனைப்பு அடங்கி 'எல்லாம் இறைவன் செயல்' என எண்ணி அவன் அருள்வழி ஒழுகும் இயல்பினர் ஆவர். அப்பெருமக்கள் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானைத் தனக்குவமையில்லாத் தனி முதல்வனாகவும் தம்மை அம்முதல்வனது அடிமையாகவும் கருதித் தம்மின் வேறுபடவைத்துத் தியானித்தலும், அப்பெரு மானது எல்லையற்ற பேராற்றலை நோக்கத் தமக்கென்று ஒரு செயல் இல்லாமையால் தான் என்றொரு முதலற அவனது அருளில் அடங்கி ஒன்றாகித் தம்மை மறத்தலும், இவ் இருதிறமும் விளங்க அவன் திருவருள்வழி உடனாய் நின்று ஒற்றித்துணர்தலும் ஆகிய மூன்று திறத்தாலும் சுட்டற நின்று வழிபட்டு உய்வார்கள். இந்நுட்பம்,

"செய்யும் செயலே செயலாகச் சென்று தமைப்
பையக் கொடுத்தார் பரங் கெட்டார்"*
(* திருக்களிற்றுப்படியார் - 21)

எனவும்,

"யாதேனும் காரணத்தால் எஃவுலகில் எத்திறமும்
மாதேயும் பாகன் இலச்சினையே - ஆதலினால்
பேதமே செய்வாய் அபேதமே செய்திடுவாய்
பேதாபேதம் செய்வாய் பின்"*
(*திருக்களிற்றுப்படியார் - 82)

எனவும் வருவனவற்றால் இனிது புலனாம். இவ்வாறு ஆன்ம போதம் கெட, எல்லாம் வல்ல இறைவனைத் தியானிக்கும் இயல்புடைய பெரியோர்கள், இவ்வுலக வாழ்வில் கருவி கரணச் சேட்டைகளின் நீங்கிச் சிவபரம் பொருளின் அருட்செயலே தம்பால் விளங்கப் பெற்றுத் திகழும் தூயநிலை 'சீவன்மூத்தி நிலை' எனப்படும். இங்ஙனம் 'பசு கரணங்களெல்லாம் பதி கரணங்களாக'ப் பெற்ற செம்புலச் செல்வர்களாகிய இப்பெரு மக்களைக் 'காணும் கரணங்க ளெல்லாம் பேரின்பம் எனப் பேணும் அடியார்'* (*திருவாசகம் பண்டாய நான்மறை-6) எனப் போற்றுவர் பெரியோர்.

இவ்வாறு தம் செயல் என்பது ஒன்றின்றி ஆன்ம போதம் நீங்கிச் சித்தம் சிவமாகப் பெற்ற மெய்யடியார்கள் இவ்வுலகில் செய்யும் செயல் அனைத்தும் தவச் செயலாம் என்பதும், இறைவன் அவற்றைத் தன் செயலாகவே ஏற்றுகொண்டு அவரோடு ஒட்டி உடனாய் நின்று அருள்புரிவான் என்பதும்,

"எனதுரை தனதுரையாக"

எனவும்,

'உயிராவண மிருந்து உற்று நோக்கி உள்ளக்கிழியின் உருவெழுதி
உயிராவணஞ் செய்திட்டுன்கைத்தந்தா
ருணரப் படுவாரோடு ஒட்டிவாழ்தி'

எனவும்,

'தொடர்ந்தென் சிந்தைத் தன்னுருவைத் தந்தவனை'

எனவும்,

'சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும் அத்தன்'
(திருவாசகம் 320)

எனவும்,

'நஞ் செயலற்றிந்த நாமற்றபின் நாதன்
தன் செயல் தானேஎன் றுந்தீபற
தன்னையே தந்தான்என் றுந்தீபற' (6)

எனவும் வரும் அனுபவ மொழிகளால் நன்கு விளங்கும்.

இவ்வாறு சித்தஞ் சிவமாகப் பெற்ற மெய்யடியார்கள் செம்பொருளாகிய சிவத்தை இடைவிடாது சிந்திப்பதல்லது உலகியற் பொருள்களை நாடுவார் அல்லர். அவர்களுடைய உள்ளம், உரை, செயல்கள் யாவும் உலகியலிற் பொருந்தி நிற்கும் இடத்தும் இறைவன் திருவருள் வழியே இயங்கிப் பிற உயிர்களையும் நன்னெறிப்படுத்தும் இயல்பினவாகும். ஆற்றின் வழியாகச் சென்று கடலிற் கலந்து உவர்தன்மை பெற்ற நீரானது, கடலோதத்தால் மீளவும் ஆற்று நீருடன் கலந்தபொழுது அந்நீரையும் உவர்ப்புச் சுவையுடையதாகச் செய்வதுபோன்று, சித்தம் சிவமாகப் பெற்ற ஞானிகளது உணர்வு இறையருட் பெருக்கால் உலகியலிலே மீளவும் கலக்க நேரிட்டால் அக்கலப்பு, பாசப் பிணிப்புடைய மக்களுடைய மலமாயை கன்மங்களையும் நீக்கி நலஞ்செய்யும் ஆற்றலுடையது என்பர். இச்செய்தி,

'ஆற்றால் அலைகடற்கே பாய்ந்த நீர் அந்நீர்மை
மாற்றி அவ்வாற்றான் மறித்தாற்போல்-தோற்றிப்
புலன்களெனப்போதம் புறம்பொழியில் நந்தம்
மலங்களற மாற்றுவிக்கும் வந்து' (திருக்களிற் 11)

எனவரும் பாடலால் அறிவுறுத்தப்பட்டது.

இவ்வாறு தற்போதங்கெட்டு இறைவன் திருவருளில் அழுந்தியவர்களே திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பியாரூரர், மாணிக்கவாசகர் முதலிய சைவசமய ஆசிரியர்களாவர். இவர்கள் இவ்வுலகியல் வாழ்வில் உயிர்கள் அடையும் துயரங்களை எண்ணிய நிலையில் இப்பெருமக்களது திருவாயிலிருந்து நம்மனோருடைய மும்மலங்களையும் மாற்றும் அருமருந்தாக வெளிவந்த அருளுரைகளே தேவாரம், திருவாசகம் முதலிய அருள் நூல்கள் என்பது முன்னர் விளக்கப்பெற்றது.

சிவஞானச் செல்வர்களாகிய இப்பெருமக்கள், ஆன்ம போதங்கெட்டு, இறைவன் திருவருளை உலக மக்கள் அனைவரும் பெற்று இன்புறும் வண்ணம் சரியை கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை நன்னெறிகளை அறிவுறுத்தி அந்நெறிகளில் ஒழுகிக் காட்டியுள்ளார்கள்.

சரியையாவது, ஆகமங்களில் விதித்தவாறு திருக்கோயிலில் அமைந்துள்ள இறைவனது உருவத் திருமேனியைப் பொருள் என்று உணர்ந்து திருக்கோயிலில் அலகிடல், மெழுகல்,

பூக்கொய்து நறுமலர் மாலை தொடுத்தல், புகழ்ந்து பாடுதல் முதலிய உடம்பின் தொழில்களாக நிகழ்வது. இதன் இயல்பினை,

'துண்ணெனஃ விரும்பு சரியைத் தொழிலர் தோணிபுரமாமே' (3-81-7)

'கீதத்தை மிகப்பாடும் அடியார்கள் குடியாகப்
பாதத்தைத் தொழநின்ற பரஞ்சோதி' (2-43-5)

எனவரும் தொடர்களால் திருஞானசம்பந்தரும்,

'பெரும்புலர் காலைமாலை பித்தர்க்குப் பத்தராகி
அரும்பொடு மலர்கள் கொண்டாங்கார்வத்தையுள்ளே வைத்து
விரும்பிநல் விளக்குத்தூபம் விதியினால் இடவல்லார்க்குக்
கரும்பினிற் கட்டிபோல்வார் கடவூர் வீரட்டனாரே' (4-31-4)

'விளக்கினார் பெற்ற இன்பம் மெழுக்கினாற் பதிற்றியாகும்
துளக்கில் நன்மலர் தொடுத்தால் தூயவிண்ணேற லாகும்
விளக்கிட்டார் பேறுசொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும்
அளப்பில கீதஞ்சொன்னார் கடிகள்தாம் அருளுமாறே' (4-77-3)

'நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம்பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் மாதி யென்றும்
ஆரூரா என்றென்றே அலறாதில்லே' (6-31-3)

எனத் திருநாவுக்கரசரும் விளக்கியுள்ளமை காணலாம்.

கிரியையாவது திருக்கோயிலில் எழுந்தருளிய சிவலிங்கத் திருவுருவாகிய அருவுருவத் திருமேனியே பொருள் என்று உணர்ந்து புறத்தேயும் அகத்தேயும் பூசனைபுரிந்து வழிபடுதலாகும். இதன் இயல்பினை,

"நறைமலி தருமளறொடுமுகை நகுமலர்புகை மிகுவளரொளி
நிறைபுனல் கொடுதனை நினைவொடு நியதமும் வழிபடுமடியவர்
குறைவிலபதம் அணைதரவருள் குணமுடையிறை யுறைவணபதி
சிறைபுனலமர் சிவபுரமது நினைபவர் செயமகள் தலைவரே" (1-21-4)

எனவும்,

"தடங்கொண்டதோர் தாமரைப் பூமுடிதன்மேற்
குடங் கொண்டடியார் குளிர்நீர் சுமந்தாட்ட" (1-32-2)

எனவும்,

"வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாகப்
போதத்தால் வழிபட்டான் புள்ளிருக்கு வேளூரே" (2-43-5)

எனவும் வரும் திருப்பாடல்களால் ஞானசம்பந்தரும்,

"கைப்போது மலர்தூவிக் காதலித்து வானோர்கள்
முப்போது முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வனை
அப்போது மலர்தூவி ஐம்புலனும் அகத்தடக்கி
எப்போதும் இனியானை என்மனத்தே வைத்தேன." (4-7-3)

எனவும்,

"மறைகலந்த மந்திரமும் நீருங்கொண்டு
வழிபட்டார் வானாளக் கொடுத்தியன்றே"

எனவும்,

"காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக
நேயமே நெய்யும்பாலா நிறையநீரமைய ஆட்டிப்
பூசனை யீசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே" (4-76-4)

எனவும் வரும் திருப்பாடல்களால் நாவரசரும்,

"அகத்தடிமை செய்யும் அந்தணன்தான்
அரிசிற் புனல் கொண்டு வந்தாட்டுகின்றான்" (7-9-6)

எனவும்,

"முப்போதுந் திருமேனி தீண்டுவார்க்கு அடியேன்" (7-39-10)

எனவும் வரும் தொடர்களால் நம்பியாரூரரும் குறித்துள்ளமை காணலாம்.

யோகமாவது இறைவனுக்குரிய உருவம், அருவம், அருவுருவம் என்னும் மூவஸ்தத் திருமேனிகளுள் மிக நுண்ணிய அருவத் திருமேனியே பொருள் எனவும் உருவமும் அருவுருவமும் இத்திருமேனியை வழிபடுதற்கு முதலும் முடிவு மாயமைந்த திருமேனிகள் எனவும் இவ்வாறு உணர்ந்து இறைவனை உள்ளத்தால் வழிபடுவஃது. இதன் இயல்பினை,

"சினமலியறுபகை மிகுபொறி சிதைதருவனகவளி நிறுவிய
மனனுணர்வொடு மலர்மிசை எழுதருபொருள்நியதமும் உணர்பவர்
தனதெழிலுருவது கொடுவடைதகுபரனுறைவது நகர்மதிள்
கனமருவிய சிவபுரநினைபவர் கலைமகள் தர நிகழ்வரே" (1-21-5)

என ஞானசம்பந்தரும்,

"உடம்பெனு மனையகத்துள் உள்ளமே தகளியாக
மடம்படு முணர்நெய்யட்டி உயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளைதாதை கழலடி காணலாமே"

(4-75-4)

"உயிராவண மிருந்து உற்று நோக்கி உள்ளக்கிழியின் உருவெழுதி
உயிராவணஞ் செய்திட் டுன்கைத்தந்தார்
உணரப்படுவாரோடு ஒட்டிவாழ்தி" (6-25-1)

என நாவுக்கரசரும்,

"ஓர்ந்தனன் ஓர்ந்தனன் உள்ளத்துள்ளே நின்ற ஒண்பொருள்"
(7-45-4)

"தேடுவன் தேடுவன் செம்மலர்ப் பாதங்கள் நாடொறும்
நாடுவன் நாடுவன் நாபிக்குமேலேயோர் நால்விரல்
மாடுவன் மாடுவன் வன்கை பிடித்து மகிழ்ந்துளே
ஆடுவன் ஆடுவன் ஆமாத்தூர் எம்மடிகட்கே" (7-45-9)

"நாற்றானத் தொருவனை நானாய பரனை"

எனச் சுந்தரரும் தெளிவாகக் குறித்துள்ளார்கள்.

ஞானமாவது, மேற்குறித்த வண்ணம் உருவம், அருவுருவம், அருவம் ஆகிய மூன்று திருமேனிகளையும் முறையே வழிபட்டு வர ஆன்மாவின்கண் நிகழும் பக்குவமுதிர்ச்சியாலே உள்ள வாறு உணர்வு விளங்கி, உலகெலாங் கடந்தும் அணுத்தொறும் விரவியும் என்றும், உள்ள உண்மை அறிவின்பமே இறைவனது திருவுருவாம் என்றும் உருவம், அருவுருவம், அருவம் ஆகிய ஏனை மூன்றும் பருமை வழியே நுண்மையினை உணர்தல் என்னும் முறைப்படி ஞானத்திரளாய் நின்ற இறைவனை உணர்தற் பொருட்டும் வழிபடுதற் பொருட்டும் கொண்ட திருமேனிகளே என்றும் இவ்வாறு உணர்ந்து, முன்குறித்த உடம்பின் தொழில், மனத்தொழில் இரண்டினையும் கைவிட்டுக் கேட்டல், சிந்தித்தல் தெளிதல், நிட்டைகூடுதல் ஆகிய அறிவுத் தொழில் மாத்திரையால் இறைவனை வழிபடுதலாகும். இந்நெறியினை,

"நுண்ணறிவால் வழிபாடு செய்யுங் காலுடையான்"
(1-5-4)

"ஊனத்திருள் நீங்கிடவேண்டில்
ஞானப்பொருள்கொண்டு அடிபேணும்" (1-38-3)

என ஆளுடைய பிள்ளையாரும்,

ஞானத்தால் தொழுவார் சிவஞானிகள்
ஞானத்தால் தொழுவேனுனை நானலேன்
ஞானத்தால் தொழுவார்கள் தொழக்கண்டு
ஞானத்தாயுனை நானுந் தொழுவனே (5-91-3)

என ஆளுடைய அரசரும்,

"நத்தார்புடை ஞானன்" (7-80-1)

"ஞானமூர்த்தி நட்டமாடி" (7-81-7)

என ஆளுடைய நம்பியும் அறிவுறுத்தியுள்ளார்கள்.

மேற்காட்டிய குறிப்புக்களால் புறத்தொழில் மாத்திரை யானே உருவத்திருமேனியை நோக்கிச் செய்யும் சரியையும், புறத்தொழில், அகத்தொழில் என்னும் இரண்டாலும் அருவுருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் கிரியையும், அகத்தொழில் மாத்திரையானே அருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் யோகமும், இவ்வாறு புறத்தொழில் அகத்தொழில் இரண்டுமின்றி அறிவுத் தொழில் மாத்திரையானே அம்மூன்று திருமேனிக்கும் மேலாய் அகண்டாகார நித்த வியாபக சச்சி தானந்தப் பிழம்பாய் நிறைந்து நிற்கின்ற சிவபிரானிடத்திற் செய்கின்ற ஞானமும் ஆகிய நால்வகை நன்னெறிகளும் தேவார ஆசிரியர்களால் அறிவுறுத்தப்பெற்றமை நன்கு புலனாம்.

"அறிதல் ஒப்புமையால் சரியை முதலிய நான்கும் ஞானமேயாம் எனவும், ஆயினும், அரும்பு மலர் காய் கனியாதல் போலச் சோபான ஒன்றிற்கு ஒன்று அதிகமாய், நான்காம் எண்ணுமுறைமைக் கண் நின்ற ஞானமே முடிவாகிய ஞானமாம் எனவும், எனவே இந்நான்கினும் அறிவு நுணுகி வளரவளர, அறியாமையாகிய மலமும் அம்முறையே தேய்ந்து தேய்ந்து வருதலின், அவற்றின் பயனாகிய சாலோக முதலிய நான்கும் முத்தியேயாம் எனவும், ஆயினும் அம் மல நீக்கமும் அவ்வாறு நிகழும் சோபான முறையானே அவை ஒன்றற்கொன்று ஏற்றமாய் அவற்றுள் நான்காம் எண்ணுமுறைமைக்கண் நின்ற சாயுச்சியம் ஒன்றே முடிவாகிய முத்தியாம்" எனவும் கூறுவர் சிவஞான முனிவர்.

"இறைவனை அடைதற்குரிய இந்நால்வகை நன்னெறி களையும் முறையே தாசமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம் சன்மார்க்கம் என வழங்குவர் சான்றோர். இந்நால்வகை நெறிகளையும் கடைப்பிடித்து ஒழுகுவோர் முறையே சாலோகம், சாமீபம், சாரூபம், ஆகிய பத முத்திகளையும், சாயுச்சியம் ஆகிய பரமுத்தியையும் அடைவர் என நூல்கள் கூறும். (சாலோகம் - இறைவன் உலகினை

அடைதல்; சாமீபம் - இறைவன் அருகு இருத்தல்; சாரூபம் - இறைவன் உருவினைப் பெறுதல்; சாயுச்சியம் - (இறைவனை அடைந்து அவனோடு இரண்டறக் கலத்தல்)

மேற்குறித்த நால்வகை மார்க்கங்களையும் தொண்டு நெறி, மகன்மை நெறி, தோழமை நெறி, (இரண்டற்று) ஒன்றும் நெறி என வழங்குதல் பொருந்தும்.

"தாதமார்க்கம் சாற்றில் சங்கரன் தன் கோயில்
தலம் அலகிட்டு இலகுதிரு மெழுக்கும் சாத்திப்
போதுகளும்கொய்து பூந்தார் மாலைகண்ணி
புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்துபாடி
தீதில் திருவிளக்கிட்டுத் திருநந்தவனமும்
செய்து திருவேடம் கண்டால் அடியேன் செய்வது
யாது பணியீரென்று பணிந்தவர் தம்பணியும்
இயற்றுவது, இச்சரியை செய்வோர் ஈசன்
உலகு இருப்பர்"

"புத்திரமார்க்கம் புகலில் புதிய விரைப்போது
புகையொளி மஞ்சனம் அமுதுமுதல்
கொண்டைந்து
சுத்திசெய்து ஆசனம் மூர்த்த மூர்த்திமானாம்
சோதியையும் பாவித் தாவாகித்துச் சுத்த
பத்தியினால் அருச்சித்துப் பரவிப்போற்றிப்
பரிவினொடும் எரியில் வருகாரியமும் பண்ணி*
நித்தலும் இக்கிரியையினை இயற்றுவோர்கள்
நின்மலன்தன் அருகிருப்பர் நினையுங்காலே"

(*'தழங்கெரி மூன்றோம்பு தொழில் தமிழ் ஞானசம்பந்தன்' எனவரும் திருக்கடைக்காப்புத் தொடரைக் கூர்ந்து நோக்குங்கால் ஆளுடைய பிள்ளையார் கிரியை'யின் அங்கமாகிய வேள்விச் செயலை மேற்கொண்டியற்றினமை இனிது புலனாகும்.)

'சகமார்க்கம் புலன் ஒடுக்கித் தடுத்துவளி இரண்டும்
சலிப்பற்று முச்சதுர முதல் ஆதாரங்கள்
அகமார்க்க அறிந்தவற்றின் அரும்பொருள்கள் உணர்த்தாங்கு
அணைந்துபோய் மேலேறி அலர்மதி மண்டலத்தின்
முகமார்க்கம் அமுதுடல முட்டத்தேக்கி
முழுச்சோதி நினைந்திருத்தல் முதலாக வினைகள்
உகமார்க்க அட்டாங்கயோக முற்றும்
உழத்தல் உழந்தவர் சிவன்தன் உருவத்தைப் பெறுவர்'

"சன்மார்க்கம் சகலகலை புராணவேத
சாத்திரங்கள் சமயங்கள் தாம்பலவும் உணர்ந்து

பன்மார்க்கப் பொருள்பலவும் கீழாக மேலாம்
பதிபசுபாசம் தெரித்துப் பரமசிவனைக் காட்டும்
நன்மார்க்க ஞானத்தை நாடி ஞான
ஞேயமொடுஞா திருவும் நாடாவண்ணம்
பின்மார்க்கச் சிவனுடனாம் பெற்றிஞானப்
பெருமையுடையோர் சிவனைப் பெறுவர் காணே"

எனச் சிவஞான சித்தியாரில் உள்ள செய்யுட்கள் நால்வகை நெறிகளின் இயல்பினையும் அவற்றால் அடையும் பயனையும் விரித்துணர்த்துதல் காணலாம்.

மக்கள் விரும்பிச் செய்வதற்குரிய வேள்விகள் கன்ம வேள்வி, தவ வேள்வி, செப வேள்வி, தியான வேள்வி, ஞான வேள்வி என ஐந்தாகும். இவற்றுள் முந்திய நான்கும் போகத்தை ஊட்டுவன. ஓதல், ஓதுவித்தல், கேட்டல், கேட்பித்தல், சிந்தித்தல் என ஐவகையாகக் கூறப்படும் ஞானவேள்வி ஒன்றுமே உயிர்கட்கு வீடுபேற்றை அளிக்கவல்லது. ஆகவே வீடுபேற்றினை அடைய விரும்புவோர் அனைவரும் மேல் ஐவகையாகக் குறிக்கப்பட்ட ஞானவேள்வியினையே செய்தற்குரியர்.

இங்ஙனம் ஐவகைப்படும் ஞானவேள்வியின் சிறப்பினை,

"ஞானநூல் தனையோதல் ஓதுவித்தல்
நற்பொருளைக் கேட்ப் பித்தல், தான் கேட்டல், நன்றா
ஈனமிலாப் பொருள் அதனைச் சிந்தித்தல் ஐந்தும்
இறைவனடி அடைவிக்கும் எழில் ஞான பூசை
ஊனமிலாக் கன்மங்கள் தபம் செபங்கள் தியானம்
ஒன்றுக்கொன்று உயரும் இவை ஊட்டுவது போகம்
ஆனவையான் மேலான ஞானத்தால் அரனை
அருச்சிப்பர் வீடெய்த அறிந்தோர் எல்லாம்."

என்ற பாடலில் அருணந்தி சிவனார் அறிவுறுத்தியுள்ளார்.

'ஐவகையால் நினைவார்பால் அமர்ந்து தோன்றும்' (6-18-3)

எனவரும் அப்பர் அருள்மொழி இங்குச் சிந்திக்கத் தக்கதாகும்.

மேற்குறித்த நால்வகை நெறிகளுள் தாதமார்க்கத்து இயல்பு திருநாவுக்கரசரிடத்தும், சற்புத்திர மார்க்கத்து இயல்பு திருஞான சம்பந்தரிடத்தும், சகமார்க்கத்து இயல்பு நம்பியாரூரர் இடத்தும், சன்மார்க்கத்திறம் மாணிக்கவாசகர் இடத்தும் அன்னோர்தம் வரலாற்று நிகழ்ச்சிகளில் வெளிப்பட்டு விளங்குதல் காணலாம்.

சரியை வழி நின்றவர் அப்பர் என்றும், கிரியை வழி நின்றவர் சம்பந்தர் என்றும், யோகநெறி நின்றவர் சுந்தரர் என்றும், ஞானநெறி நின்றவர் மாணிக்கவாசகர் என்றும் கூறுதல் உண்டு. ஆயினும் சமய குரவராகிய இந்நால்வரும் எல்லாம்

வல்ல இறைவன் அருளால் சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம் கைவரப் பெற்று முதிர்ந்த ஞான நெறியில் நின்ற செம்புலச் செல்வர்கள் என்பதே சேக்கிழார் முதலிய முன்னைய அருளாசிரியர்களின் துணிபாம். இப்பெருமக்களைப் 'பண்டை நற்றவத்தால் தோன்றிப் பரமனைப் பத்தி பண்ணும் தொண்டர்' என்றும் இவர்களை இறைவன் சிவாகமங்களிற் சொல்லிய படி முறையான் அன்றித் தனது எல்லையற்ற பேரருளால் தானே எளி வந்து ஆட்கொண்டு தூய கதியாய வீடுபேற்றின் கண்சேர்த்து அருளினன் என்றும் அறிவனூல் கூறும்.

சிவனை வழிபடும் கூட்டத்தார் யாவரும், சைவர் என அழைக்கப்பட்ட காலம் தேவார ஆசிரியர் காலத்திற்குச் சிறிது முற்பட்டதாயிருக்கலாம். ஆயின் பண்டைத் தமிழர் வழிபட்ட செம்பொருளாஞ் சிவத்திற்குச் சங்க காலத்தும் அதற்கு முன்னரும் இறையோன், கடவுள், பெரியோன் என்ற பெயர்களே பல்கி வழங்கின எனத் தெரிகிறது. 'நூதல்விழி நாட்டத்து இறையோன்' என மணிமேகலையிலும் 'கடவுள்' எனப் புறத்திலும் 'பிறவா யாக்கைப் பெரியோன்?' எனச் சிலப்பதிகாரத்திலும் பயின்று வருதல் நோக்கத்தக்கது. செம்மை - நடுவு நிலைமை, நேர்மை என்னும் பொருள் தரும் செந்தமிழ்ச் சொல். 'செம் பொருள்' என்னும் சொல்லால் வள்ளுவனார் மெய்பொருளாகிய இறைவனைக் குறித்தமையும் சிந்திக்கற்பாலது.

'கரைந்து கைதொழுவாரையும் காதலன்
வரைந்து வைதெழுவாரையும் வாடலன்'

எனத் தேவாரம் நுதலியாங்கு, தன்னை வழிபட்டோரையும் வைதெழுவோரையும் ஒப்ப மதித்து இன்னருள் புரியும் இயல்பினன் இறைவனாவன். இறைவனை 'வேண்டுதல் வேண்டாமையிலான்' எனப்போற்றிய திருவள்ளுவர், விருப்பு வெறுப்பு இல்லா நிலைமைக் கேற்ப அம்முதல்வனைச் செம்பொருள் (நடுவு நிலையுள்ள பொருள்) எனச் சிறப்பித்தமை பொருந்துவதேயாம். தமிழர்கள், இறைவன் ஒளி உருவினனாகப் போற்றியுள்ளார்கள். காலையில் பொன்னை உருக்கிவார்த்தால் என வேலைமீது எழும் செஞ்ஞாயிற்றினை முருகன் சேயொளிக்கு ஒப்பாக முருகாற்றுப்படை கூறுதலும் கதிரவன்தன் உருமவேலையின் வெய்யஒளியை விட்டு உயிர்களின் உடலுக் கெல்லாம் நல்லொளி பரப்புங் காலமாகிய மாலைக்காலத்து வான்முழுவதும் பரவி மீது எழுந்த செக்கர் ஒளியினைச் சிவபிரானின் திருமேனி ஒளியோடு ஒப்பவைத்து இரைக்கப் போந்த பெருந்தேவனார் என்னும் புலவர்,

"செல்வான் அன்னமேனி..........அந்தணன்"

என உவமித்துப் போற்றுதலும், சிவந்த ஒளியில் இறைவன் திருமேனியினை எண்ணிப் போற்றும் அக்காலத்தார் தம் இயல்பினை நன்கு புலப்படுத்துவதாகும். இங்ஙனம் இறைவனைச் சிவந்த திருமேனி யொளியினனாக எண்ணிப் போற்றிய நம் முன்னோர்கள் அம்முதல்வனைச் செம்மேனியான் என்ற கருத்தில் 'சிவன்' என்னும் பேரால் அழைப்பார் ஆயினர். **"சிவன் எனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மான்"** எனப் போற்றினார் திருநாவுக்கரசடிகள். செம்மேனி உடைமை காரணமாகச் சிவன் எனும் திருபெயரினைத் தனக்கே உரியதாகப் பெற்றவன் என்பது இத்தொடரின் பொருளாம். எனவே இறைவனுக்கு வழங்கும் சிவன் என்னும் பெயர் செம்மை நிறம் பற்றி வந்த செந்தமிழ்ப் பெயரென்பது நன்குபெறப்படும். இறைவனைச் சிவன் என்ற பெயராற் போற்ற விரும்பிய காரைக்காலம்மையார், அத்திருப்பெயரை அவ்வாறே உரையாது **'செம்மேனிப் பேராளன் வானோர் பிரான்'** எனக் குறித்துள்ளமை சிந்தித்து அறியத்தக்கது.

சிவன் என்ற செந்தமிழ்ப் பெயரை அடிப்படையாகக் கொண்டே அதனோடு வடமொழி நான்காம் வேற்றுமை யுருபையும் வணக்கச் சொல்லையும் சேர்த்து ஐந்தெழுத்துச் சொல்லாகக் கொண்ட பெரியோர்கள், அதனை மந்திரமாகப் போற்றினார்கள். நிறைமொழி மாந்தர் மறைமொழி ஆகிய இம்மந்திரத்தினைத் தேவார ஆசிரியர் மூவரும் நமச்சிவாயத் திருப்பதிகம், பஞ்சாக்கரத் திருப்பதிகம் முதலிய பதிகங்களிலும் தொடர்ந்து போற்றியுள்ளார்கள்.

இனி, இவர்களால் வழிபடப்பெறும் இறை இயல்பினைத் தேவாரப் பாடல்கள் கொண்டே நோக்குதல் சிறந்ததாம். இறைவன் உருவுடையன் அல்லது உருவற்றவன், அன்றி இரு நிலையும் ஒருங்கு உடையோன், என இவ்வாறு தம்முள்முரணி இறைவனது இயல்பு உரைப்பதை விட்டு, இறைவன் எல்லாமாய் அல்லதுமாய் நிற்கும் இயல்புடையவன் எனவும் அவன் நம்மனோர்க்கு அருள்செய்யும் பொருட்டு "மலைமகள் பாதமாக அருள் காரணத்தின் வருவார்" என்றபடி அருளே திருமேனி ஆக அவ்வப்பொழுது அடியார் விரும்பிய, திரு மேனியினைக் கொண்டு தோன்றி அருள் புரிவன் எனவும் தேவாரம் கூறும். நின்ற திருத்தாண்டகம் முதலிய பாடல்கள் இறைவனது எல்லாம் ஆகிய நிலைமையையும் 'மண்ணல்லை' என்பது முதலிய பாடல்கள் அவன் அல்லனாய் நிற்கும் நிலையையும் உணர்த்துதல் நோக்கத்தக்கது. இறைவன், உருவம், அருவம், அருவுருவம் என்று சொல்லப்படும் மூன்று கூற்றுள் ஒரு கூற்றினும் படாதவனாய் வேறுபட்டு நிற்கும் இயல்பினன் ஆதலின் அவனை அம்

மூன்றனுள் அடக்கியுரைத்தல் இயலாத செயலாம், ஞான சம்பந்தப் பிள்ளையாரும்.

"எந்தையார் அவர் எவ்வகையார் கொலோ" (3-54-3)

என்பதனால் இறைவன் இயல்பு யாவர்க்கும் புலப்படா முறையினை வியந்துரைத்தார்.

மேற்கூறியவாறு தன்மை பிறரால் அறியாத தலைவனை நாம் எவ்வுருவால் வணங்குதல் கூடும் என்பார்க்கு அவன் நீதி உருவாக உலகில் நிலவுகிறான் என்பது உணர்த்துவார்,

"இன்னவுரு இன்னநிறம் என்று அறிவதேல் அரிது நீதி பலவும்
தன்ன உருவாம் என மிகுத்ததவன்" (3-71-4)

எனப் போற்றினார் ஞானசம்பந்தர்.

"பங்கயத்து அயனும்மால் அறியா நீதியே"

என்றார் திருவாதவூரடிகளும், இறைவன் ஞானமே திரு மேனியாக உடையான் என்பது, 'வாலறிவன்' எனும் வள்ளுவர் மொழியானும் 'ஞானத்திரளாய் நின்ற பெருமான்' என்ற பிள்ளையார் திருவாக்கானும் 'ஞானத்தாய்' என நாவுக்கரசர் இறைவனை அழைத்துப் போற்றுதலானும் நன்கு விளங்கும். இறைவன் பேரறிவில் நிலைத்துள்ளவன் என்பதற்கு அறிகுறி யாகவே சைவர்கள், நல்லுணர்வினை இடபமாக உருவகித்து அவ்வேற்றினைச் சிவபெருமானது ஊர்தியாகப் போற்றிப் பரவுகின்றார்கள்.

"உணர்வென்னும் ஊர்வது உடையாய் போற்றி" (6-57-6)

என்பது திருக்கயிலாயத் திருத்தாண்டகம்.

இங்ஙனம் பேரறிவின் உருவாய் விளங்கும் இறைவன், உயிர் கட்கு அருள் செய்யவேண்டி அன்புருவினனாய் அம்மையப்பனாகி அருள் திருமேனி கொண்டு ஆட்கொள்வன் என்பது,

"தாயும் தந்தை பல்லுயிர்க்கும் தாமே யாய தலைவனார்"

"ஆணும் பெண்ணுமாய் அடியார்க்கு அருள் நல்கி"

"மலைமகள் பாகமாக அருள் காரணத்தின் வருவார்"

எனவரும் திருஞானசம்பந்தர் பாடல் தொடர்களால் நன்கு புலனாகும்.

இறைவன் உலகுயிர்களோடும் ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்கும் உண்மையினை,

"ஈறாய் முதலொன்றாயிரு பெண்ணான்குண மூன்றாய்
மாறாமறை நான்காய் வருபூதம்மவை ஐந்தாய்

ஆறார் சுவை யேழோசையோ டெட்டுத் திசைதானாய்
வேறாய் உடனானானிடம் வீழிம் மிழலையே"

எனவரும் திருப்பாடலில் ஞானசம்பந்தர் விளக்கியருள்கின்றார். இத்திருபாடற் பொருளை யடியொற்றியது.

"ஈறாகி அங்கே முதலொன்றாய் ஈங்கிரண்டாய்
மாறாத எண்வகையாய் மற்றிவற்றின்-வேறாய்
உடனாய் இருக்கும் உருவுடைமை யென்றுங்
கடனாய் இருக்கின்றான் காண்" (86)

எனவரும் திருக்களிற்றுப் படியாராகும்.

"சங்காரகாலத்தில் நிட்களமாயும், சிருட்டி காலத்திலே நிட்கள சகளமாயும், அட்ட மூர்த்தியாயும் இவற்றுக்கெல்லாம் வேறாயும் இவற்றுக்கெல்லாம் உடனாயும் இருக்கின்ற அருள் வடிவுடைமையைக் கர்த்தா எக்காலமும் முறைமையாகக் கொண்டிருப்பன்" என்பது இவ்வெண்பாவுக்கு முன்னோர் கூறிய பொருளாகும்.

அன்பு உருவினனாம் இறைவன் எவ்வுயிரின் உள்ளும் நின்று அவ்வுயிர்கட்கு உடல் உலகம் முதலியவற்றைப் படைத்துக் கொடுத்துக் காத்து அழித்துஅருளும் இயல்பினன் எனச் சைவ நூல்கள் நூவலும் உலகமாவது கடவுளால் மாயையினின்றும் தோற்றுவிக்கப்பட்டு அவர் அருளின் துணையை ஆதாரமாகக் கொண்டு நிலைத்த பொருள் என்பது சைவ சமயத்தின் கொள்கையாகும். சேற்றிலுள்ள கிழங்கினின்றும் முளைத்த தாமரையைக் கிழங்கினின்றும் தோன்றியது எனக் கூறாமல், அக் கிழங்கிற்கு ஆதாரமான சேற்றினின்றும் தோன்றியது எனும் பொருள்படப் 'பங்கயம்' என்றாற் போல், இறைவன் திருவருளாகிய திருவடியை ஆதாரமாகக் கொண்டுள்ள மாயை யினின்றும் தோற்றுவிக்கப்பட்ட உலகத்தை இறைவனிடத்துத் தோன்றியதெனக் கூறுதல் முறை என்பர். இவ்வாறு உலகு அவன் உருவில் தோன்றி ஒடுங்கிடும் உண்மையை,

"யாழ்கெழு மணிமிடற்று அந்தணன்
நாவில் தாணிழல் தவிர்ந்தன்றால் உலகே" (அகநானூறு)

எனவரும் கடவுள் வாழ்த்தால் அறியலாம். இக்கருத்தினை நாவுக்கரசர் 'அடிநீழலாணை கடவா தமர ருலகே' என்பதில் விரித்துரைத்தார். உலக முதலிய எல்லாப் பொருள்களும் தோன்றி நிலைத்தற்கு ஏதுவாகிய திருவடிகளை 'எல்லாமாம் எம்பெருமான் கழல்' எனவும் 'படிக்கொள் சேவடி' எனவும் தேவாரத் திருமுறை கூறிப் பாராட்டுகிறது. படிக்கொள் சேவடி=உலகத்தினைத் தன்னகத்தே கொண்ட செம்மை பொருந்திய திருவடி என்பது இதன் பொருள்.

இறைவன் உயிரினைத் தோற்றிக் காத்து மறைத்து அருளுதல் 'காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி' என்பதனால் அவனது திருவிளையாடல் என ஒரு சாரர் புகல்வர்.

"ஐயாநீ ஆட்கொண்டருளும் விளையாட்டில்
உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்"

என்பதனால் ஒரு சாரர் விளையாட்டு என்றதும் ஐங்கலப் பாரஞ் சுமத்தல் சாத்தனுக்கு விளையாட்டு என்றதுபோல அத்துனை எளிதிற்செய்யப்படுதலை நோக்கி ஆதலின், காத்த காலத்து உயிர்கட்கு இன்பமும், முத்திக்காலத்து வீடுபேறும் கொடுத்தற் பயத்தது ஆதலான், உயிர்களின் மேற் சென்ற கருணையே ஆண்டைக்குக் காரணமாம் என்பர். இறைவன் அருட் பெருக்கால் இயற்றும் இத்தொழில்களின் நுட்பம் யாவரானும் அறியப்படாத அருமைத்து என்பதனை,

"அடிகள் செய்வன ஆர்க்கறி வொண்ணுமே"

என்பதனால் ஞானசம்பந்தப் பிள்ளையார் தெளிவாகக் குறித்துள்ளார்.

எல்லா உலகத்தும் தலைமையாய் எப்பொருளையும் அமைத்து இயக்கும் ஆற்றல் ஒன்றுதான் இருக்க முடியும் என்று உணர்ந்து அப் பரம்பொருளைச் சிவனெனத் தெளிந்து வழிபட்ட செம்புலச் செல்வர்கள் தேவார ஆசிரியர்கள், ஒரு தெய்வ வழிபாட்டை வலியுறுத்துஞ் சமயமே சிறந்தது என்பர் அறிவர். திருமூலரும் 'ஒன்றே குலனும் ஒருவனே தேவனும்' எனச் சாதி வேறுபாடற்ற தனிப்பெருஞ் சிவவழிபாட்டையே பாராட்டினார். இவ்வுண்மை கொண்டே,

"ஒருவன் கழல்அல்லாது எனது உள்ளம் உணராதே"-

"கூத்தா நின்குறையார் கழலேயலாது
ஏத்தா நாவெனக்கு எந்தை பிரானிரே"

"அன்னே உன்னையல்லால் இனியாரை நினைக்கேனே"

எனத் தேவார ஆசிரியர் மூவரும் போற்றியதோடு தம் பாடல்களில் முருகன், பிள்ளையார் முதலிய கடவுளர்களைக் குறிக்க நேர்ந்தவழி, தம்மால் வழிபடப் பெறும் சிவபெருமானால் அவர்கள் தலையளிக்கப் பெற்றவர்கள் என்ற அளவில் அத்தெய்வங்களைப் பாராட்டி, தாம் சிவனைத் தவிர வேறு யாவரையும் நினையாத் தெளிவுடையாராகத் திகழ்கின்றனர்.

ஞானசம்பந்தப் பிள்ளையார்க்கு நிகழ்ந்த திருமணத்தில் அக்காலத்தார் கொண்டொழுகிய தீவலஞ் செய்தலாகிய சடங்கினைச் செய்யும்படி அங்குள்ள நான்மறை வேதியர்கள்

ஞானசம்பந்தரை வேண்டினர். இறைவன் ஒருவனையே வணங்கும் உறுதிப்பாடுடைய பிளையார்.

"யான் விருப்புறும் அங்கியாவார் விடை உயர்த்தவரே"

என்னும் மெய்ம்மையினை உரைத்துத் திருநல்லூர்ப் பெருமணக் கோயிலை வலம் வந்து சுற்றத்தாரோடு பற்றறுத்து உய்ந்த செய்தி பெரிய புராணத்தில் கூறப் பட்டுள்ளது. இவ்வாறே திருநாவுக் கரசரும் ஞாயிறு, தீ முதலிய புறப்பொருள் வழிபாட்டையும் பிறதெய்வ வழிபாட்டையும் கடிந்து உரைத்ததோடு சாதி வேறுபாட்டையும் இழித்துரைத்தமை அரசர் அருளிய தேவாரப் பாடல்களாற் புலனாம்.

தேவார ஆசிரியர் மூவரும் இறைவன் அருளால் அப்பெருமானை நேரிற் கண்டு அவனது இயல்பு உணர்ந்து வழி பட்டமை அவர்கள் வாய்மொழியால் தெளியலாம். ஆளுடைய பிள்ளையார் 'தோடுடைய செவியன்' என்ற பதிகத்துப் "பெம்மான் இவன் அன்றே" எனச்சுட்டிக் காட்டியதோடு அமையாது, இறைவன் தன் அருள் உருவத்தினை அமணரும் குண்டரும் அலர் தூற்றும்படி தமக்குக் காட்டியருளிய தகைமையினை,

'அலையாரும் புனல்துறந்த அமணர்குண்டர் சாக்கியர்
தொலையாதங் கலர்தூற்றத் தோற்றங் காட்டி யாட் கொண்டீர்'

என்ற அடிகளால் விளக்கியருளினார். இவ்வாறே அப்பரும் சுந்தரரும் இறைவனை நேரிற் கண்டு வழிபட்டமை அவர்கள் வாய்மொழியாற் புலனாம். இவர்கள் வாழ்க்கையில் நடந்த சில அருட்செயல்களைக் குறித்து ஐயுறுவாருமுளர். இக்காலத்திலும் பலவியத்தற்குரிய செயல்களைக் கண்டு அவற்றின் காரணம் உணரப்பெறாது மருளும் நாம், அவற்றின் காரணம் உணர லாகாமையின் இஃது ஒன்றுடைத்தெனக் கொள்வதல்லது அவை நிகழ்ந்தன அல்ல என மறுத்து ஒதுக்குதல் தவறாகும். தேவார ஆசிரியர்கள் தம் மெய்யுணர்வின் பயனாய பாடலிற் குறிப்பிட்டன எல்லாம் உண்மையெனக் கொள்ளுதலே அறிவுடையார் கடன். அவ்வாசிரியர்கள், தாம் காணும் அருட்செயல்கள் உலகில் நிகழா அருமை உடையன ஆதலைத் தெளிந்து, அவற்றின் உண்மையறியாது மருளும் ஏனைய மக்களுக்கு அவற்றின் உண்மைக் காரணத்தை உணர்த்திப் போதல் ஒன்றே அவர்தம் உண்மைநிலையைப் புலப்படுத்தும். இறைவன் இவ்வாறு அருமையுடையனவற்றைக் காட்டி யருள் செய்தல் அன்பால் தனக்குரிமையுடைய அடியார்களின் பொருட்டே என்பதனை,

"உரிமையுடை அடியார்கள் உள்ளுற உள்க வல்லார்கட்கு
அருமையுடையன காட்டி யருள்செயும் ஆதி முதல்வர்"

என ஞானசம்பந்தரும்,

"..........அன்பர்க்குக் காணா காட்டும்
கண்ணாங் கருகாவூரெந்தை தானே"

என நாவுக்கரசரும் அறிவுறுத்தினமை கண்டு தெளியலாம்.

இனி, தேவார ஆசிரியர்கள் 'தம்மால் (உயிரால்) ஆவது ஒன்றும் இல்லை, எல்லாம் இறைவன் செயல்' என்னும் இவ்வுண்மையைத் தம் வாழ்க்கை முழுவதும் மறவாது நினைந்து, குற்றம் உடையனவற்றைத் தம் அறியாமையின் விளைவெனக் கொண்டும், அருமையுடைய நற்செயல்களை எல்லாம் இறைவர் தம் திருவருட் செயலெனக் கொண்டும் வழுத்தும் உள்ளம் உடையார் ஆவர். பாண்டிமாதேவியாரின் மங்கல நாணைப் பாதுகாக்கும் கருத்தோடு தீப்பிணியைப் 'பையவே சென்று பாண்டியற்காக' எனப் பணித்த ஞானசம்பந்தப்பிள்ளையார், பின்னர், தாம் பாண்டியனின் வெப்பு அகற்றி மங்கையர்க்கரசியாரின் மங்கல நாணை நல்கியவராய் இருந்தும், உலகம் போற்றும்அச்செயலைத் தமதெனக் கொள்ளாமல் 'எல்லாம் முந்தனுடைச் செயல் எனவே நினைத்தொழுக' என்றபடி அதனை இறைவன்பாற்படுத்தி 'மிக்க தென்னவன் தேவிக்கு அணியையே, மெல்ல நல்கிய தொண்டர்க்கு அணியையே' எனப் போற்றுகின்றார். இவ்வாறே திருநாவுக்கரசரும் தம்மைச் சமணத்திற் சேர்த்ததும் மீண்டும், சைவத்திற்குத் திருப்பியதும் இறைவன் செயல்களேயெனவும் அவனது கட்டளையை மீறினால் அடித்து அடக்குபவனும் அவ் இறைவனே எனவும் உலக மக்களுக்கு அறிவுறுத்துகின்றார்.

"ஓதுவித்தாய்முன் அறவுரைகாட்டி அமணரோடே
காதுவித்தாய் கட்ட நோய் பிணி தீர்த்தாய் கலந்தருளிப்
போதுவித்தாய் நின்பணி பிழைக்கி புளியம்வளாரால்
மோதுவிப்பாய் உகப்பாய் முனிவாய் கச்சியேகம்பனே"

என்ற பாடல் இவ்வுண்மையை வலியுறுத்துவதாகும்.

கடவுள், உயிர், உலகம் ஆகிய மூன்றும் என்றுமுள்ள பொருள்கள் எனவும், அவற்றுள் கடவுள் நிலைமாறா முற்றறிவுடைய பொருளெனவும், உயிர்கள் அறிவிக்க அறியும் இயல்பின எனவும், உலகம் நிலைமாறும் இயல்புடைய அறிவில் பொருள் எனவும் கூறும். இவற்றின் உண்மை,

"கற்றுக்கொள்வன வாயுள நாவுள
இட்டுக்கொள்வன பூவுள நீருள

கற்றைச் செஞ்சடை யானுளன் நாமுளோம்
எற்றுக்கோ நமனார் முனிவுண்பதே"

என்ற திருக்குறுந்தொகையால் தெளிவுறத் தெரிகின்றது. உயிர்களாகிய நாம் நமனால் முனியப்படும் எளிமையுடையோம் அல்லோம் என்பார். இதன் முதல் இரண்டடிகளாலும் உலகின் உண்மை கூறி, மூன்றாம் அடியில் கடவுள் உயிர் இவ்விரு பொருளின் உண்மையினை உணர்த்தியருள்கின்றார். நாவுக்கரசர். 'கற்றைச் செஞ்சடையான் உளன்' என்பதனைஅடுத்து உயிர் களைத் தம்மோடு உளப்படுத்தி 'நாமுளோம்' என்று கூறியதன் கருத்தாவது, அவனது ஆதரவால் அவனுக்கு அடிமையாகிய நாமும் என்றும் பொன்றாத நிலையைப் பெற உயிராய் உளோம் என்பதாம்.

உயிரின் இலக்கணத்தினை உணர்த்தக் கருதிய சொல் வேந்தர், உயிரானது 'இருண்மலம்' எனப்படும். ஆணவத்தால் மறைப்புண்டு யாதொரு பற்றுக்கோடும் இன்றி அறிவுவிழி கெட்டு ஒன்றுஞ் செய்ய இயலாது தடுமாறும் இயல்பினது என்பதனை,

'இருளற நோக்கமாட்டாக் கொத்தையேன்' (4-69-1)

எனத் தம்மேல் வைத்துக் கூறுமாற்றால் விளக்கியருளினார். நெல்லிற்கு உமியும் செம்பினிற் களிம்பும் தொன்மையே அப்பொருள்களோடு விரவினமைபோல, உயிர்களும் அநாதியே அறியாமை என்னும் இருள் விரவிய இயல்பினவாய் அவ்விருளால்அடர்க்கப்பட்டு மெய்யறிவாம் கண்ணிழந்து புகலிழந்து நிற்கின்றன என்பதனையும், அந்நிலைக்கு இரங்கிய இறைவன்ஒன்று மாற்றா உயிர்களின் பொருட்டுத் தானே எளிவந்து அருள் செய்கின்றான் என்பதனையும்,

"இருள்தரு துன்பப்படல மறைப்ப மெய்ஞ்ஞானம் என்னும்
பொருள் தரு கண்ணிழந்து உண்பொருள் நாடிப் புகலிழந்த
குருடரும் தம்மைப் பரவக் கொடுநரகக் குழிநின்று
அருள் தரு கைகொடுத்து ஏற்றும் ஐயாறன் அடித்தலமே"

என இறைவனது திருவடிப் பெருமை நுவலும் இப்பாடலால் அரசர் அறிவுறுத்தினமை நோக்கத்தக்கது.

உயிர், தன் விழைவு, அறிவு, செயல்களின் நிகழ்ச்சி சிறிதும் இன்றி, தான் மட்டும் இருள் (ஆணவ) மலத்தோடு உடனாய் உளதாம் தனி நிலையும், பினபு கருவி கரணங்களோடு கூடி அவை ஒருபுடை விளங்கும் கலப்பு நிலையும், பின்பு இருண்மல முதலாங் குற்றம் நீங்கி இறைவனைத் தலைப்பட்டு விழைவு, அறிவு, செயல்கள் எங்குமாய்ப் பரவி விளங்கும் தூய நிலையும்ஆகிய

மூன்று நிலைகளை (அவத்தைகளை) உடையது என்பர். இவற்றுள் முதல் நிலை இருண்மலத்தோடு மட்டும் கூடிய நிலை இதனைக் கேவலம் என்பர், இரண்டாம் நிலை. இறைவனால் உடல் பொறிகள் கொடுக்கப்பெற்று வாழும் உலகியல் நிலை. இதனைச் சகலம் என்பர். இந்நிலை அறிவு வளர்ச்சிக்கெனவே அமைக்கப்பட்டதென்ப, சகல நிலையில் இறைவன் உயிரிற் கலந்து நின்று, அதன் விழைவு அறிவு செயல்களை விளக்கி நன்று தீது என்பனவற்றைக் காட்டும் உதவியையும், உயிரைச் செலுத்திக் கொண்டு சென்று பொருளிற் கலந்து நின்று காணும் உதவியையும் செய்யும் இயல்பினன் என்பது சைவ சமயத்தின் சிறந்த கொள்கையாம். இதனை,

> 'அறிவானுந் தானே அறிவிப்பான் தானே
> அறிவாய் அறிகின்றான் தானே' (அற்புதத் திருவந்தாதி)

என்னும் அம்மையார் அருள்மொழியால் நன்கு அறியலாம். இறைவன் காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல் உயிர்களோடு கலந்து நின்று காட்டிக் காணும் இயல்பினன் என்பதனைத் திருநாவுக்கரசர்,

> 'உண்ணிலாப் புகுந்து நின்றங்கு உணர்வினுக்கு
> உணரக்கூறி' (4-25-1)
>
> 'உள்ளத்தின் உள்ளிருந்தங்கு உறுதி காட்டி' (4-5-6)
>
> 'நெஞ்சுள் நின்று நினைப்பிக்கும் நீதியை' (5-93-8)
>
> 'தெள்ளியேனாகி நின்று தேடினேன் நாடிக் கண்டேன்
> உள்குவா ருள்கிற் றெல்லாம் உடனிருந்து அறிதி என்று
> வெள்கினேன் வெள்கி நானும் விலாவிறச் சிரித்திட்டேனே'
> (4-75-3)

எனவரும் தொடர்களால் தெளிவாக விளக்கியுள்ளமை காணலாம். "உள்குவார் உள்கிற்று எல்லாம் உடனிருந்து அறிதி"என்பதனால் இறைவனது காணும் உபகாரத்தைத் தம் அனுபவ வாயிலாகக் கண்டுரைத்தமை நினைவிற் பதிக்கற்பாலது.

மும்மலமும் நீங்கப்பெற்று விரிந்திடும் அறிவு விளக்கத்தால் இறைவனோடு இரண்டறக் கலத்தல் உயிரின் தூய நிலையாகும். இதனைச் 'சுத்தம்' என வழங்குவர். இந்நிலையை அடைவதற்கே சமயங்களெல்லாம் இறைவனால் படிகால் முறையாக அமைக்கப்பட்டன என்பர். இந்நுட்பம்,

> "அறுவகைச் சமயம் வைத்தார்"
>
> "முறை முறை நெறிகள் வைத்தார்"

"ஏணிப்படி நெறி யிட்டுக் கொடுப்பன
....ஐயாறன் அடித்தலமே"

என வரும் அப்பரடிகள் வாய்மொழிகளால் இனிது புலனாம்.

பலவகைச் சமயங்களிலிருந்தும் இறைவனை உண்மையாகப் போற்றும் மெய்யடியார்கள் எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் அவரவர் நினைத்த திருமேனி கொண்டு அங்கங்கே தோன்றி அருள் செய்தல் சிவபெருமானது இயல்பென்பதனை,

'எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் தன்னடியார்க்கு
இங்கே என்று அருள்புரியும் எம்பெருமான்'

எனத் திருஞானசம்பந்தரும்,

'ஆரொருவர் உள்குவார் உள்ளத்துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோன்றும்'

எனத் திருநாவுக்கரசரும்,

'அறிவினான் மிக்க அறுவகைச் சமயம்
அவ்வவர்க்கு அங்கே யாரருள் புரிந்து'

என நம்பியாரூரரும் கூறுமாற்றால் தெளிய அறியலாம்.

'யாதொர் தேவர் எனப்படுவார்க் கெல்லாம்
மாதேவன் அலாற் றேவர் மற்றில்லையே'

எனவும்,

'விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயம் செய்து
எரிவினாற் சொன்னாரேனும் எம்பிராற்கு ஏற்றதாகும்'

எனவும் வரும் திருநாவுக்கரசர் அருளுரைகளைக் கூர்ந்து நோக்குங்கால், பல சமயங்களால் போற்றப்படும் எல்லாத் தெய்வங்களாகவும் நின்று அருள்புரிவோன் எல்லாம் வல்ல சிவபெருமானே என்பதும், மக்கள் தங்கள் குறுகிய நோக்கத்தால் வேறுபட்ட சமயக் கொள்கைகளைத் தமக்கெனப் புதியனவாகக் கற்பித்துக் கொண்டாலும் அன்னோர் கற்பனைகளுக்கெல்லாம் தானும் உடனாய் நின்று அருள் செய்யும் இயல்புடையான் இறைவன் என்பதும் நன்கு விளங்கும். எனவே எல்லாச் சமயத்தார்க்கும் இறையருள் கைகூடும் என்னும் உண்மை தேவார ஆசிரியர்கள் கொண்டொழுகிய சைவ சமயத்து மிளிர்தல் காணலாம்.

'செய்வினையும் செய்வானும் அதன் பயனும் சேர்ப்பானும்
மெய்வகையால் நான்காகும் விதித்த பொருள் எனக் கொண்டே
இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றுக்கு இல்லை என
உய்வகையாற் பொருள் சிவனென் றருளாலே உணர்ந் தெழுந்தார்'

எனவரும் சாக்கிய நாயனார் புராணச் செய்யுளில் செய்யப்படும் வினையும், அதனைச் செய்யும் வினை முதலாகிய உயிரும், அவ்வினை முதல்தொழிலானாய பயனும், அப்பயனை உயிரோடு கூட்டும் தலைவனாகிய இறைவனும் எனச் சைவ சமயத்துள் விதிக்கப்பட்ட பொருள் நான்காம் என வரையறுத் துரைக்கப்பட்டது. ஒருவன் செய்த வினையானது தன் பயனை உயிரோடு கூட்டுந் தலைவன் இல்லாமலே செய்தோனைத் தொடர்ந்து பற்றிப் பயன்தரும் எனச் சமணர் முதலாயினோர் கூறுவர்.

ஒருவன் தான் செய்த வினையின் பயனைத் தானே அனுப வித்தல் வேண்டும் என்னும் நியதியை, "முன்னைச் செய்வினை இம்மையில் வந்து மூடுமாதலின்" என்பதனால் நம்பியாரூரரும் 'மெய்த்தன்னுறும் வினை' என்பதனால் சம்பந்தரும் உடன் பட்டுக் கூறியுள்ளார்கள். ஆயினும் அறிவிலதாய அவ் வினை தானே செய்தோனை அடைந்து பயன் தருமென்பது தேவார ஆசிரியர்களுக்கு உடன்பாடன்றாம். விருப்பு வெறுப்புடைய உயிர்கள் தாம் செய்த இருவினைப் பயனாகிய இன்ப துன்பங்களை உணர்ந்து அநுபவித்துக் கழிக்கும் பேரறிவும் நடுவு நிலைமையும் ஒருங்கு உடையன அல்ல. எனவே உயிர்கள் செய்த இருவினைப் பயன்களை அறிந்து அவை செய்த முறையே இன்ப துன்பங்களை நுகரச் செய்பவன் இறைவனொருவனே என்பது சைவ சமயத்தின் கொள்கையாகும். இவ்வுயரிய கொள்கையினை மேற்கொண்டவர்கள் தேவார ஆசிரியர்கள். வினைப்பயனை ஊட்டும் இறைவன், உயிர்கட்குத் தீவினைப்பயனை அருத்தும் போது, நோயாளர்களின் பிணி நீக்கக் கருதிய மருத்துவன் அதனை நீக்குதற்குரிய கைக்கும் மருந்தினை வெல்லக்கட்டி முதலிய இனிய பொருளோடும் சேர்த்து அருத்துதல் போல உயிர்கள் நுகர்தற்குரிய தீவினைப் பயனை இனிமையைத் தரும் நன்மையுடனே கூட்டி நுகர்விப்பான் எனவும், உயிர்கள் செய்த பாவங்கள் தீர்தர நல்வினையையும் தந்து அருளுவான் எனவும் கூறுவர். இவ்வாறு உயிர்கட்கு, இருவினைப் பயனை நுகர் விப்போன் இறைவனே என்பது,

'இனியன அல்லவற்றை இனிதாக நல்கும் இறைவன்'

'பண்டு நாம் செய்த வினைகள் பறையவோரருள் நெறிபயப்பார்'

'பாவங்கள் தீர்தர நல்வினை நல்கி'

எனவரும் ஆளுடைய பிள்ளையார் வாக்காலும்,

'வேம்பினொடு தீங்கரும்பு விரவியெனைத் தீற்றி'

என வரும் நம்பியாரூரர் வாய்மொழியாலும் நன்கு விளங்கும்.

அன்றியும் தம் அறியாமையாற் பெரும் பிழைகளைச் செய்தவர்கள், அக் குற்றத்தின் பொருட்டு வருந்தி நெஞ்சுருகி இறைவனிடத்து முறையிடுவராயின், அருளாளனாகிய இறைவன், அன்னோரது முறையீட்டுக்கு உளமிரங்கி அவர்தம் வஞ்சனை முதலாகிய குற்றங்களை நீக்கி யருள்புரிவான் என்பது,

'நெஞ்சம் இது கண்டு கொள் உனக்கென நினைந்தார்
வஞ்சம தறுத்தருளும் மைந்தன்' (2-33-5)

எனவரும் தொடராற் புலனாம்.

உள்ளங்கசிந்து வழிபடும் அடியார்களை ஊழ்வினை முதலியன பற்றாவாறு இறைவன் காத்தருள்வான் என்பதனை

"வந்தித்து இருக்கும் அடியார் தங்கள்வருமேல் வினையோடு
பந்தித்து இருந்த பாவந்தீர்க்கும் பரமர்"

"அடியார்மேல் எண்ணில் வினைகளைவான்"

"ஒருவனார் அடியாரை ஊழ்வினை நலியவொட்டாரே"

எனவரும் அடிகளால் ஆளுடைய பிள்ளையார் அறிவித் தருளினார். முன்செய்த தீவினைப் பயனாகிய பாவங்களைப் போக்க வேண்டுமானால் இறைவனை நெஞ்சம் நெக்குருகி வாழ்த்துதலே செய்யத்தக்கது என்பதனை,

"முன்னை நான் செய்த பாவம் முதலறப்
பின்னை நான் பெரிதும் அருள்பெற்றதும்
அன்னமார் வயற்கோழம்பத் துள்ளமர்
பின்னல் வார்சடையானைப் பிதற்றியே" (5-64-7)

எனவரும் திருப்பாடலில் திருநாவுக்கரசர் தம் அநுபவத்தின் வாயிலாக எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார்.

தேவார ஆசிரியர்கள் கடவுள் ஒன்றையே உள் பொருளாகக் கொண்டனர் எனவும், அவர்கள் பாடிய திருப்பதிகங்களில் மும்மலம் என்ற தொகையினைக் குறிக்காது போதலால் ஆணவமலமென்பது ஒன்று உண்டு என்பது அவர் தமக்கு உடன்பாடு அன்று எனவும், அவரால் மலமெனக் குறிக்கப் படுவது மாயையேயா மெனவும் கருதுவர் சிலர். தேவார ஆசிரியர்கள் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள் உண்மையை மேற்கொண்டவர்களென்பது,

'பாலனாம் விருத்தனாம் பசுபதிதானாம்' (1-76-3)

எனவும்,

'பசுபதியின் மிசைவரு பசுபதி'

எனவும்,

'பாசமதறுத்து'

எனவும் வரும் திருப்பதிகத் தொடர்களால் இனிது உணரப்படும்.

இனி, ஆணவம், கன்மம், மாயை என மலம் மூன்று என்று விரித்துக் கூறப்படாவிடினும் மலம் ஒன்றுக்கு மேற்பட்டுள்ளன என்பது,

"தவமாம் மமாயின தானறுமே" எனப் பன்மையில் வழங்கப்படுதலால் தெளியப்படும். எனவே, உயிர்களைப் பற்றிய மலம் மூன்றெனல் தேவார ஆசிரியர்களுக்கும் உடன் பாடென்பது புலனாம். 'மலமாயின' என்றதால் பன்மையே கொள்ளப்படுமன்றி மூன்று என்னும் தொகையினை அத்தொடர் குறிக்க வேண்டும் என்னும் நியதியில்லாமையால் அத்தொடராற் குறிக்கப்படுவன கன்மம், மாயை ஆகிய இரண்டுமேயாம் எனின், சைவ சித்தாந்த நூல்களால் அறிவுறுத்தப்படும் ஆணவமலத்தியல்பு உயிர்கள்பால் அமைந் திருப்பதாகும் தேவார ஆசிரியர்களாற் கூறப்பட்டால் ஆவண மலத்துண்மை அவ்ஆசிரியர்கட்கு உடன்பாடாதல் கொள்ளப் படும். ஆதலின் சைவசித்தாந்திகள் கூறும் மும்மலத்தியல்பினை ஒரு சிறிது நோக்குவோமாக.

எண்ணிறந்த சத்திகளான் எண்ணிறந்த உயிர்களினும் செம்பிற்களிம்பும், நெல்லின் உமியும் போல அநாதியே விரவி நிற்பதொன்றாய், கேவலத்தின் அவ்வுயிர்களின் அறிவோடு தொழிலை மறைத்து நின்று, சகலத்தில் போக நுகர்ச்சி வினை முதல் ஆதல் தன்மையை நிகழ்த்தி, அறியாமை நிகழ்ச்சிக்குக் காரணமாய் நிற்பது ஆணவமலம் என்பர். இஃது உயிரை அணுத்தன்மைப்படுத்து மறைப் பதாதலின் ஆணவம் என்னும் பெயர்த்தாயிற்று. ஆணவ மலம் ஆன்மாக்களை விட்டுப் பிரியாது அநாதியே உயிரின் இயல்பாக அவற்றைத் தொடர்ந் துள்ளமையால் பசுத்துவம் எனவும் வழங்கப்படும். உயிர்களை அறியாமை இருளிற் படுத்து மறைப்பதாகலின் இதனை இருண் மலம் என வழங்குதல் தமிழ்மரபு. கன்மம் ஆவது ஆணவத்தால் உயிர்களிடத்து எழுந்தவிருப்பினை உடையதாய்ப் போக நுகர்ச்சிக்கு ஏதுவாகி உயிரைப் பிறவியுட்படுத்துவதாகும். இக்கன்மமலத்து இயல்பு 'மொய்த்து இருண்டு பந்தித்து நின்றபழவினை' எனவரும் அப்பர் அடிகள் வாய்மொழியில் விளக்கப்பெறுதல் காணலாம். 'எண்ணரிய சத்தியுடையதாய் உயிர்களின் அறிவொடு தொழிலை ஆர்த்துப் பந்தித்து நிற்கும் இருள்மலத்தால் உளவாகிய பழவினை' என்பது இத்தொடரின் பொருள். மாயாமலமாவது உவர் மண்ணாகிய அழுக்கைக் கொண்டு உடையின் அழுக்கை நீக்குதல் போல உயிர்களைப் பற்றிய ஏனை மலங்களை அகற்றுதற்கு மருந்தாய் இறைவனால்

உயிர்களுக்குக் கொடுக்கப்பட்டு அவற்றிற்குச் சிறிது அறிவு நிகழ்ச்சியைத் தருவது என்பது சைவசித்தாந்த சமயத்தினரது கொள்கையாகும்.

ஞானசம்பந்தப் பிள்ளையார் ஆணவம், கன்மம், மாயை ஆகிய இம் மூன்றின் இயல்பையும் உடம்பொடு புணர்த்துக் கூறியதுடன் இம்மூன்று மலங்களையும் தவிர்ப்போன் முதல்வனாகிய இறைவனே என்பதனை,

> "விளையாததொர் பரிசில்வரு பசுபாசவேதனை ஒண்
> தளையாயின தவிரவ்வருள் தலைவன்" (1-12-3)

என்ற அடிகளில் தெளிவாக அறிவுறுத்தியுள்ளார். இதனுள் முறையே மும்மலமும் பின்வருமாறு குறிக்கப்பட்டுள்ளன.

(1) "விளையாததொர் பரிசில் வருபசு (வேதனை)"

(2) "பாச வேதனை"

(3) "ஒண் தளை"

இவற்றுள் "விளையாததொர் பரிசில்வரு பசு (வேதனை)" என்ற தொடர், புதிதாகத் தோன்றாத தன்மையில் (அஃதாவது அநாதியே) உயிரைத் தொடர்ந்து வரும் பசுத்துவம் எனப்படும் ஆணவமலத்துன்பம் எனப் பொருள்படும். "பாச வேதனை என்பது, நல்வினை தீவினையாகிய இரு வினைக்கட்டால் உண்டாகிய துன்பம், ஈண்டுப் பாசம் என்றது இருவினையையே யாம்" என்பது "வினையென்பாச மறைவிலே" எனவரும் நாவரசர் வாக்காலும் "இருவினைப் பாசம்" எனவரும் சேக்கிழார் வாக்காலும் நன்கு தெளியப்படும். "ஒண் தளை" என்பது, உயிர்கட்குச் சிறிது அறிவு நிகழ்ச்சியை (ஒட்பத்தை) விளைப்பதாய் உயிரைத் தளைத்துள்ள மாயையைக் குறிக்கும். மாயாமலம் உயிர்கட்கு விழைவு அறிவு செயல்களை விளக்கும் என்பதனை மெய்கண்ட தேவரின் முதல் மாணவராகிய அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் சிவஞானபோ தத்தின் வழி நூலாகச் செய்தருளிய சிவஞான சித்தியாரில் மாயா காரியமே ஆணவமலம் என்பார் கூற்றை மறுத்துரைக்கப் போந்த விடத்து,

> "மலமென வேறொன்று இல்லை மாயாகாரியம் அது என்னின்,
> இலகுயிர்க்கு இச்சாஞானக் கிரியைகள் எழுப்பும் மாயை,
> விலகிடும் மலம், இவற்றை வேறுமன்றது வேறாகி
> உலகுடல் கரணமாகி உதித்திடும் உணர்ந்து கொள்ளே"

என்ற செய்யுளால் தெளிவாக விளக்கியுள்ளார். இப்பாடலில் 'இலகு உயிர்க்கு இச்சா ஞானக் கிரியைகள் எழுப்பும் மாயை' என்பது, மாயை உயிர்களுக்கு விழைவு, அறிவு, தொழில்களை எழுப்பும் இயல்பிற்று என்பதனை விளக்கி நின்றது. இப்

பாடலுக்கு உரை வரைந்த மாதவச் சிவஞான சுவாமிகளும் 'உயிரோடு ஒற்றித்து நின்று அறிவு இச்சை, செயல்களை மறைப்பதாகிய மலத்துக்கும், வேறு நின்று அவற்றை விளக்குவ தாகிய மாயைக்கும் தம்முள் வேற்றுமை பெரிதாகலான் 'மாயையே மலம் என்பார் மதம் போலி' என ஆணவ மலமும் மாயையும் தம்முள் வேறு என்பதனை நன்கு வலியுறுத்தி யுள்ளார். சிவஞான முனிவர் கூறிய இவ்விளக்கம், மாயை ஒண்தளை (அறிவு விளக்கத்தைத் தரும்தளை) யாதலை நன்றாக உறுதிப்படுத்துவதாகும்.

"விளையாததொர்" எனத் தொடங்கும் ஞானசம்பந்தப் பிள்ளையார் தேவாரத்தில், ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலத்தின் வைப்பு முறையும், அவற்றுள் ஒவ்வொன்றின் சிறப்பியல்புகளும், அடைமொழியுடன் சேர்த்து விளக்கப் பெறுதல் உய்த்துணர்ந்து மகிழத் தக்கதாகும். "விளையாததொர் பரிசில் வரு" என்ற தொடர், ஆணவமாகிய பசு வேதனைக்கும், ஒண்மை (புத்தி கூர்மை)யைக் குறிக்கும் 'ஒண்' என்பது 'உயிரைப் பற்றிய தளைகளுள் ஒன்றாய மாயைக்கும் அடைமொழிகளாக வந்து நயம்பாராட்டற் பாலது. 'விளையாததொர் பரிசில்வரு' எனவும் 'ஒண்' எனவும் வரும் இவ்விரு அடைமொழிகளும் தனித்தனியே முறையே தாம் சார்ந்து நின்ற பசு வேதனை, தளை என்பவற்றிற்அன்றி ஏனையவற்றுள் ஒன்றித்தேனும் உரியதாகக் கொள்ளின் பொருந்திய பொருள்தராமையும் நோக்கற்பாலது.

மும்மலத்தையும் நீக்குவோன் இறைவனே என்பதனைத் திருநாவுக்கரசர் "சுழித்துணையாம்" எனத் தொடங்கும் திரு மழலைபாடித் திருத்தாண்டகத்து "இழிப்பரிய பசுபாசப் பிறப்பை நீக்கும் என் துணையே" என்ற தொடரில் குறித் துள்ளார். இத்தொடரில் முறையே பசுத்துவம் எனப்படும் ஆணவமலத்தினையும் பாசம் எனப்படும் கன்ம மலத்தினையும் குறிப்பிட்டதோடு அமையாது, மாயையின் தொடர்பாகிய பிறவி யினையுஞ் சேர்த்துரைத்தமையும், பசு, பாசம், பிறப்பு என்னும் இம் மும்மலங்களையும் நீக்குவோனாகிய முதல்வன் உயிர்கட்கு உயிர்த்துணையாய் நின்று அருள் செய்கின்றான் என்பதனையும் ஒருங்கே குறித்துள்ளமை காணலாம். இத்தொடர்ப் பொருளைக் கூர்ந்து நோக்கினால் இதனைப் பாடிய திருநாவுக்கரசர் ஆணவம் கன்மம் மாயை என மும்மலம் உண்டு என்னும் கொள்கை யினராதல் நன்கு விளங்கும். ஈண்டுப் பிறப்பு என்றது மாயா காரியத்தைக் குறித்து நின்றது. 'மலந்தாங்கிய பாசப்பிறப் பறுப்பீர்' (7-82-6) என்றார் சுந்தரரும்.

மேல் தேவார ஆசிரியர்கள் கருத்தாக உடன்பட்ட மும் மலங்களுள் மூலமாய் முதலதாய ஆணவமலம், வேறு பல

தேவாரப் பாடல்களிலும் குறிக்கப்படுதல் நோக்கத்தக்கது. மலம் என்னும் பெயர் மும்மலங்களுக்கும் பொருந்துமாயினும், அச் சொல், அடைமொழியின்றி ஆணவமலம் ஒன்றனையே சிறப்பாக உணர்த்துதல் தேவார ஆசிரியர்கள் காலத்துச் சொல் வழக்கெனத் தெரிகிறது* (மலனொடு மாசும் இல்லவர் 1-42-2) ஆணவமலம் உயிரோடு ஒற்றித்து நின்று அறிவுடையுயிர்களை அறியாமைப்பாற்படுத்து மறைப்பதாகலின், அது காரணமாக 'இருள்' என்ற பெயரால் தேவாரப் பதிகங்களிற் குறிக்கப் பட்டிருத்தல் காணலாம், இருளெனப்படும் ஆணவமலம் இறைவனது அருளாலேயே போக்குதற்குரியது என்பதனை,

"இருள்தரு துன்பப்படல மறைப்ப............
அருள் தருகைகொடுத்தேற்றும் ஐயாறன் அடித்தலமே"

"நின் மலன் என்றங்கு ஏத்தும் நினைப்பினை யருளி நாளும்
நம்மலம் அறுப்பர் போலும் நனிபள்ளியடிகளாரே"

"இருளறுத்து நின்(று), ஈசன் என்பார்க்கெல்லாம்
அருள் கொடுத்திடும் ஆனைக்கா அண்ணலே"

எனவரும் திருநாவுக்கரசர் வாய்மொழியாலும்,

"தலம் நிலவிய மனிதர்களொடு தவமுயல்தரு முனிவர்கள்தம்
மலம் அறுவகை மனம்நினைதரு மறைவன மமர்தரு பரமனே"

"மலனாய தீர்த்தெய்தும் மாதவத் தோர்க்கே"

எனவரும் ஞானசம்பந்தப் பிள்ளையார் வாய்மொழியாலும் நன்குணரலாம்.

இவ்வாறு 'பசு வேதனை' எனவும் 'இருள்' எனவும் 'மலம்' எனவும் பெயர் கூறப்பட்டு உயிரோடு ஒற்றித்து நின்று உயிர்களின் விழைவு, அறிவு, செயல்களை மறைப்பதாகிய ஆணவ மலத்துக்கும், அதனின்றும் வேறுபட்டு ஆன்மாக்களின் விழைவு, அறிவு, செயல்களை விளக்குதலால் 'ஒண்தளை' எனப் பெயர் பெற்ற மாயைக்கும் வேற்றுமை பெரிதாதலை மேலெடுத்துக் காட்டிய தேவாரப்பாடல்களால் நன்குணரலாம்.



# 11. தேவாரப் பதிகங்களிற் குறிக்கப்பெற்ற திருத்தலங்கள்

இறைவனை வழிபடுதற்கென ஊர்தோறும் திருக்கோயில்களை நிறுவிப் போற்றுதல் என்பது, தமிழகத்தில் நெடுங்காலமாக நிலைபெற்றுவரும் நாட்டுப் பண்பாகும். மக்கட்குலத்தார் 'தெய்வம் ஒன்று உண்டு' என்னுந் தெளிவுபெற்ற தொன்மைக் காலந்தொட்டே தமிழ்நாட்டில் திருக்கோயில்கள் பலதோன்றி நிலை பெற்றுள்ளன. "தேசம் உமை அறிவதற்கு முன்னோ பின்னோ திருவாரூர் கோயிலாக கொண்டநாளே" எனவரும் திருத்தாண்டகத் தொடர், திருவாரூர், தில்லை முதலிய தமிழ்நாட்டுத் திருக்கோயில்களின் தொன்மையை உணர்த்தி நிற்றல் அறியத் தக்கதாகும்.

உலக மக்கள் பசியும் பிணியும் பகையும் நீங்கி நல்வாழ்வு பெற்று மகிழ்தற்கு, ஊர்தோறும் அமைந்த திருக்கோயில் வழிபாட்டு முறையே பெருந்துணை புரிந்து வருகின்றது. எவ்வுயிர்க்கும் அம்மையப்பராய் விளங்கும் இறைவனைத் தன்னொப் பாரில்லாத் தலைவனாக நினைந்து போற்றி உலகமக்கள் அனைவரும் இகலின்றி அன்புடையராய் வாழ்தற்கு ஊக்கமளிக்கும் திருவருள் நிலையமாகத் திகழ்வன இத்திருக்கோயில்களேயாகும். இத்தகைய திருக்கோயிலைப் பெறாத ஊர்கள், நிலவளம் நீர் வளங்களாலும் செல்வப் பெருக்காலும் எத்துணைச் சிறப்புற்றிருந்தாலும், அங்கு வாழும் மக்கள் உள்ளத்திலே அன்பும் அருளுமாகிய திருத்தகு நற்பண்புகளை வளர்க்கும் தெய்வத்தன்மையாகிய சிறப்பினைப் பெறாமையால் அவையெல்லாம் மக்கள் அன்பினாற் கலந்து வாழ்தற்கேற்ற திருவுடைய ஊர்கள் ஆகமாட்டா என்றும், கொடிய விலங்குகள் வாழும் காடுகளாகவே அவற்றைக் கருதி நீங்குதல் வேண்டும் என்றும் சான்றோர் கூறுப.

"திருக்கோயில் இல்லாத திருவிலூரும்
திருவெண்ணீ றணியாத திருவிலூரும்
பருக்கோடிப் பத்திமையாற் பாடாவூரும்
பாங்கினொடு பலதளிகள் இல்லாவூரும்
விருப்போடு வெண்சங்கம் ஊதாவூரும்
விதானமும் வெண்கொடியும் இல்லாவூரும்

அருப்போடு மலர் பறித்திட் டுண்ணாவூரும்
அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே"

எனவரும் திருத்தாண்டகத்தாலும்,

"கோயிலில்லா வூரிற் குடியிருக்க வேண்டாம்"

என வழங்கும் உலக நீதியாலும் இக்கருத்து வலியுறுத்தப் பட்டுள்ளமை காணலாம்.

முற்காலத்தில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என வகுக்கப்பட்ட நால்வகை நிலத்தும் அவ்வந் நிலை மக்களால் தெய்வ வழிபாடுகள் சிறப்புற நிகழ்த்தப் பெற்றன என்பது, ஆசிரியர் தொல்காப்பியனார்,

"தெய்வம் உணாவே மாமரம் புள்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப" (தொல்-அகம்)

எனவரும் கருப்பொருட் சூத்திரத்தில், உயிர் வாழ்வுக்கு இன்றியமையாத உணவுக்குமுன் தெய்வத்தை முதன்மை யுடையதாக முன்னர்க் கூறுதலால் இனிது விளங்கும். தொல்காப்பியனார் காலத்தில் காடுறையுலகமாகிய முல்லை நிலத்தில் மாயோனாகிய திருமால் வழிபாடும், மைவரை யுலகமாகிய குறிஞ்சி நிலத்தில் சேயோனாகிய முருகன் வழிபாடும், தீம்புனலுலகமாகிய மருத நிலத்தில் வேந்தனாகிய இந்திரன் வழிபாடும், பெருமணலுலகமாகிய நெய்தல் நிலத்தில் வருணன் வழிபாடும் சிறப்புற நிகழ்ந்தன. இச்செய்தி,

"மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமண லுலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"

எனவரும் தொல்காப்பிய அகத்திணையியற் சூத்திரத்தால் நன்கு புலனாம். பாட்டுந் தொகையுமாகிய சங்கச் செய்யுட்களையும் சிலப்பதிகாரம், மணிமேகலையாகிய காப்பியங்களையும் நோக்குங்கால், தமிழ் மூவேந்தர்களின் தலைநகர்களாகிய காவிரிப்பூம்பட்டினம், உறையூர், மதுரை, வஞ்சி, காஞ்சி முதலிய தமிழ்நாட்டுப் பேரூர்களிலும் சிற்றூர்களிலும்,

"காடும் காவும் கவின்பெறு துருத்தியும்
யாறுங் குளனும் வேறுபல் வைப்பும்
சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்
மன்றமும் பொதியிலும் கந்துடைநிலையும்" (திருமுருகாற்)

"ஆலமுங் கடம்பும் நல்யாற்று நடுவும்
கால்வழக் கறுநிலைக் குன்றமும்" (பரிபாடல்)

*ஆகிய பிற இடங்களிலும் தெய்வத்தை வழிபடுதற்கென்றே சிறியவும் பெரியவுமாகிய பல்வேறு வழிபாட்டிடங்களைத் தமிழ் மக்கள் அமைந்திருந்தனர் என்பதும், இங்ஙனம் முற்காலத்தில் மக்கள் பலரும் ஒருங்கு கூடித் தெய்வத்தை வழிபட்டுப் போற்று தற்கு நிலைக்களனாய் விளங்கிய சிறப்புடைய இடங்களே 'பிறவா யாக்கைப் பெரியோன்' ஆகிய சிவபெருமான் கோயி லாகவும் ஆறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலாகவும் 'நீலமேனி நெடியோன்' ஆகிய திருமால் கோயிலாகவும் 'வெற்றி வேற்றடக்கைக் கொற்றவை'யாகிய துர்க்கை, காடுகிழாள் முதலிய தெய்வங்களின் கோயில்களாகவும் வளர்ச்சியுற்றன என்பதும் இனிது புலனாகும்.*

*சங்க காலந்தொட்டுத் தமிழகத்திற் சிறப்புற்று விளங்குந் திருக்கோயில்கள் பலவற்றுள்ளும் பிறவா யாக்கைப் பெரியோனாகிய சிவபெருமானுக்குரிய திருக்கோயில்களே தலைமையும் பன்மையும் பெற்றுத் திகழ்ந்து வருதலை அனைவரும் நன்குணர்வர். தென்றமிழ் நாட்டில் வழங்கும் தெய்வ வழிபாடுகள் பலவற்றுள்ளம் சிவ வழிபாடே முதன்மை பெற்று விளங்கும் தொன்மையும் சிறப்பும் வாய்ந்ததென்பது,*

"நீரும் நிலனுந் தீயும் வளியும்
மாக விசும்போ டைந்துட னியற்றிய
மழுவாள் நெடியோன் தலைவனாக
மாசற விளங்கிய யாக்கையர் சூழ்சுடர்
வாடாப் பூவின் இமையா நாட்டத்து
நாற்ற உணவின் உருகெழு பெரியோர்க்கு
மாற்றரு மரபின் உயர் பலிகொடுமார்
அந்தி விழவில் தூரியம் கறங்க"
(மதுரைக்காஞ்சி-453-60)

*என மாங்குடி மருதனாரும்,*

"ஆடக மாடத் தறிதுயிலமர்ந்தோன்
சேடங் கொண்டு சிலர் நின்றேத்தத்
தெண்ணீர்க் கரந்த செஞ்சடைக் கடவுள்
வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்
ஆங்கது வாங்கி யணிமண்ணிப் புயத்துத்
தாங்கினன்" (சிலப்பதிகாரம்)

*என இளங்கோவடிகளும்,*

**"நுதல் விழி நாட்டத் திறையோன் முதலாப்**
**பதிவாழ் சதுக்கத்துத் தெய்வ மீறாக"** **(மணிமேகலை)**

எனச்சாத்தனாரும் சிவபெருமான் தெய்வங்களுக்கெல்லாம் முதல்வனாக வைத்துப் போற்றப்பெறும் முறையினை விளக்கிக் கூறும் தொடர்களால் நன்கு தெளியப்படும்.

ஊர்தோறும் அமைந்த 'பொது-இல்' எனப்படும் அம்பலத்திலே தெய்வம் உறையும் தறியாகிய தூணொன்று நாட்டப் பெற்றிருந்தது. நீராடித் தூய்மையுடையராய மகளீர் பலரும் அம்பலத்தை மெழுகித் தூய்மை செய்து அந்தியில் நந்தா விளக்கேற்றி இறைவனை வழிபட்டனர். மக்கள் பலரும் அவ்வம்பலத்திலே நறுமலர் தூவிக் கடவுளை வழிபட்டுப் போற்றினார்கள். ஊருக்குப் புதியராயினார் அவ்வம்பலத்திலே தங்கியிருந்தார்கள். இச்செய்தி,

**"கொண்டி மகளிர் உண்டுறை மூழ்கி**
**அந்தி மாட்டிய நந்தா விளக்கின்**
**மலரணி மெழுக்கம் ஏறிப் பலர் தொழ**
**வம்பலர் சேக்குங் கந்துடைப் பொதியில்"**

எனவரும் பட்டினப்பாலை யடிகளாலும்,

"பகைவர் மனையோராய்ப் பிடித்துவந்த மகளிர் பலரும் நீருண்ணுந் துறையிலே சென்றுமுழுகி மெழுகும் மெழுக்கத்தினையும், அவர்கள் அந்திக்காலத்தே கொளுத்தின அவியாத விளக்கத்தினையும் உடைய பூக்களைச் சூட்டின. தறியினையுடைய அம்பலம். கந்து-தெய்வம் உறையும் தறி வம்பலர் சேக்கும் பொதியில்-புதியவர்கள் பலரும் ஏறித் தொழுதற்குத் தங்கும் பொதியில். பொதியிலை மெழுகி விளக்கும் இட்டிருக்க வம்ப மகளிரை வைத்தார்; அதனால் தமக்குப் புகழ் உளதாமென்று கருதி" என இத் தொடருக்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையாலும் நன்கு விளங்கும்.

இங்ஙனம் பண்டை நாளில் ஊர்தோறும் தெய்வ முறையும் தறியாகிய 'கந்து' நடப்பெற்ற பொதியில் என்னும் அம்பலங்களே, தேவார ஆசிரியர் காலத்தில் சிவபெருமானது அருவுருவத் திருமேனியை வழிபடுதற்குரிய பெரிய திருக் கோயில்களாகத் திகழ்வனவாயின. பட்டினப்பாலையிற் 'கந்து' எனக் குறிக்கப்படும் தெய்வம் உறையும் தறியும், சைவர்களால் வழிபடப்பெறும் அருவுருவத் திருமேனியாகிய சிவலிங்கத் திருவுருவமும் யாவரும் ஒன்றெனக் கருதி வழிபடுதற்குரிய பொதுமைச் சிறப்பாலும் திருவுருவ அமைப்பாலும் ஒன்றே யென்பது,

'காதன்மையாற் றொழுமடியார் நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே' (6-61-1)

எனவரும் அப்பர் அருள்மொழியால் உய்த்துணரப்படும். நன்னன் என்னும் குறுநில மன்னனுக்குரிய 'நவிரம்' என்ற மலையில், கறைமிடற்றண்ணலாகிய சிவபெருமானுக்குரிய திருக்கோயில் சிறந்து விளங்கியதென்பதனை,

'நீரகம் பனிக்கும் அஞ்சுவரு கடுந்திறற்
பேரிசை நவிரம் மேஎயுறையும்
காரியுண்டிக் கடவுளதியற்கையும்' (மலைபடுகடாம்)

எனவரும் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் வாய்மொழியால் நன்குணரலாம். பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நோக்கி,

"பணியியரத்தை நின்குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ்செயற்கே,
இறைஞ்சுக பெருமநின் சென்னிசிறந்த
நான்மறை முனிவர் ஏந்துகையெதிரே" (புறம்-6)

எனக் காரிகிழார் என்னும் புலவர் வாழ்த்துதலால், அவர் காலத்துத் தமிழ் வேந்தர்கள் சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கோயிலை வலம் வந்து பணிதலைத் தமது அரச வாழ்க்கையினால் அடைதற்குரிய நற்பேறாகக் கொண்டிருந்தமை இனிது விளங்கும்.

கடைச் சங்க காலத்தில் தமிழகத்தை ஆண்ட முடி மன்னர்களுள் கோச்செங்கணான் என்னும் வேந்தர் பெருமான், சிவபெருமானிடத்துப் பேரன்பு உடையராய் அம்முதல்வனை அடியார் பலரும் குழுமிப் போற்றுதற்கு ஏற்றமுறையில் மலைபோன்றுயர்ந்த மாடக் கோயில்கள் பலவற்றைச் சோழ நாட்டிற் பல ஊர்களிலும் அமைத்துச் செயற்கரிய செய்த சிவனடியார்களுள் ஒருவராகத் திருத்தொண்டத்தொகையிற் போற்றப்பெற்றுள்ளார். சோழநாட்டில் அம்பர், நன்னிலம், வைகல் முதலிய திருத்தலங்களிற் காணப்படும் மாடக்கோயில்கள் கோச்செங்கட் சோழராற் கட்டப் பெற்ற திருக்கோயில்களே யாகும். இச்செய்தி, இத்தலங்களைப் போற்றித் திருஞான சம்பந்தர் அருளிய திருப்பதிகங்களிலும் சுந்தரர் அருளிய திருப் பதிகத்திலும் குறிக்கப்பெற்றிருத்தல் காணலாம். கோச்செங்கட் சோழநாயனார் சிவபெருமானுக்கென எழுபது மாடக் கோயில்களை அமைத்துள்ளார். இச்செய்தியை,

"இருக்கிலங்கு திருமொழிவா யெண்டோளீசற்கு
எழில்மாடம் எழுபதுசெய் துலகமாண்ட

திருக்குலத்துவளச் சோழன் சேர்ந்தகோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே"
(பெரிய திருமொழி - 6-6-8)

எனத் திருநறையூர்ப் பதிகத்தில் திருமங்கையாழ்வார் தெளிவாகக் குறித்துள்ளார். கோச்செங்கட் சோழர் அமைத்த மாடக் கோயில்கள் முன்னுள்ள திருக்கோயில்களைக் காட்டிலும் அளவிற் பெரியனவாக அமைந்தமையால் அவை 'பெருங் கோயில்' என வழங்கப்பெற்றன. நன்னிலத்திற் கொச்செங்கட் சோழராற் கட்டப்பெற்ற மாடக்கோயிலை 'நன்னிலத்துப் பெருங் கோயில்' (7-98-1-11) என நம்பியாரூரர் குறித்துப் போற்றுதலால், மாடக்கோயிலைப் பெருங்கோயில் எனவும் வழங்கும் வழக்கமுண்மை நன்கு புலனாம்.

திருநாவுக்கரசர் காலத்தில் தமிழ்நாட்டில் 'மாடக்கோயில்' என்னும் அமைப்புடைய பெருங்கோயில்கள் எழுபத் தெட்டிருந்தன. இப் பெருங்கோயில்களே யன்றிக் கரக்கோயில், ஞாழற்கோயில், கொகுடிக்கோயில் இளங்கோயில், மணிக் கோயில் ஆலக்கோயில் என வழங்கும் அமைப்புடைய கோயில்களும் ஆங்காங்கே நிறுவப் பெற்று வழிபாடு செய்யப் பெற்றன. இச்செய்தி,

"பெருக்காறு சடைக்கணிந்த பெருமான்சேரும்
பெருங்கோயில் எழுபதினோடெட்டும் மற்றுங்
கரக்கோயில் கடிபொழில்சூழ் ஞாழற்கோயில்
கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக்கோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்தும்
இளங்கோயில் மணிக்கோயில் ஆலக்கோயில்
திருக்கோயில் சிவனுறையுங் கோயில் சூழ்ந்து
தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீருமன்றே"
(6-71-5)

என வரும் திருத்தாண்டகத்தாற் புலனாம். இதன்கண் அப்பரடிகள் குறித்த எழுபத்தெட்டுப் பெருங் கோயில்களுள் எழுபது பெருங்கோயில்கள் கோச்செங்குட் சோழாற் கட்டப் பெற்றவை யென்பது, மேற்குறித்த திருமங்கையாழ்வார் அருளிச் செயலால் நன்கு விளங்கும். எஞ்சிய பெருங் கோயில்கள் எட்டும் கோச் செங்கட் சோழர்க்குப் பின்வந்த தமிழ் மன்னர்களால் நிறுவப் பெற்றனவாதல் வேண்டும். இவ்வாறு சங்க காலத் தமிழ் வேந்தர்களால் சுடு மண்ணாகிய செங்கல்லும் சாந்தும் கொண்டு அமைக்கப்பெற்ற இப் பெருங்கோயிலமைப்பு முறையே, அவர்க்குப்பின் காஞ்சியைத் தலைநகரமாகக் கொண்டு தொண்டை நாட்டை ஆட்சி புரிந்த மகேந்திரவர்மன், நரசிங்க

வர்மன், இராசசிம்மன் முதலிய பல்லவ மன்னர்களால் மலைகளைக் குடைந்தும், பாறைகளைப் பிளந்து அடுக்கியும் அமைக்கப் பெற்ற கருங்கற் கோயில்களுக்கு முன் மாதிரியாக இருந்ததெனக் கருதுதல் பொருந்தும்.

சங்க காலச் சோழ மன்னர்களுள் செங்கணான் ஒருவனாலேயே எழுபது மாடக்கோயில்கள் கட்டப் பெற்றன என்றால், அவ்வேந்தர் பெருமானுக்கு முன்னும் பின்னும் ஆட்சி புரிந்த முடி மன்னர்களாலும் குறுநில மன்னர் முதலியவர் களாலும் சிறியனவும் பெரியனவுமாக எத்தனையோ திருக் கோயில்கள் தமிழகத்தில் கட்டப் பெற்றிருத்தல் வேண்டும் என்பது தானே பெறப்படும். எனவே சடைச்சங்க காலத்திற்குப் பின் ஐந்து நூற்றாண்டுகள் பிற்பட்டுத் தோன்றிய தேவார ஆசிரியர்களாற் பாடிப் போற்றப்பெற்ற சிவத்தலங்களுட் பெரும்பாலான, அவ்வாசிரியர்கள் வாழ்ந்த காலப்பகுதியாகிய கி.பி. ஏழாம் நூற்றாண்டிற்கு முன்னரே தமிழகத்தில் நிலை பெற்றிருந்த பழங்கோயில்களாதல் வேண்டும். இவற்றுட் பல, தமிழ்வேந்தரல்லாத களப்பிரர் முதலியோரது படையெடுப் பாலும், சமணம் புத்தம் முதலிய சமயங்களை மேற்கொண்டோரது தாக்குதலாலும் இடைக்காலத்தே சிதைந்து மறைந்து, பின் திருநாவுக்கரசரும் திருஞான சம்பந்தரும் தமிழ் நாடெங்கும் சென்று செய்த திருநெறித் தமிழ்த் தொண்டினால் சிதைவு நீங்கி, மீண்டும் தம் பழைய நிலையை யெய்திச் சிறப்புற்றன என்பது தேவார ஆசிரியர்கள் வரலாற்றால் விளங்கும்.

சிவபெருமான் எழுந்தருளிய பழையாறை வடதளியில் அமைந்த மாடக்கோயிலைச் சமணர்கள் மறைத்துத் தங்களுக் குரிய சமண்பள்ளியாக மாற்றி விட்டார்கள். இதனையுணர்ந்த திருநாவுக்கரசர், வடதளியிற் கோயில்கொண்ட பெருமானை நினைந்து சமண்பள்ளியாகிய அவ்விடத்திலேயே உண்ணா நோன்பு மேற்கொண்டு தங்கிவிட்டார். இச்செய்தியினை யறிந்த சோழ மன்னன், சமணர்கள் சூழ்ச்சியால் இடையிலே தோன்றிய பள்ளியை நீக்கிப் பண்டுபோற் சிவன் கோயிலாக்கினான் என்ற வரலாறு இங்கு நினைக்கத் தக்கதாகும்.

இதுகாறும் எடுத்துக்காட்டிய குறிப்புக்களால் தேவார ஆசிரியர்களாற் பாடிப் போற்றப் பெற்றுள்ள திருத்தலங்களிற் பல, அவ்வாசிரியர்கள் நிலவிய காலத்திற்குப் பன்னூறாண்டுகள் முற்பட்டு நிலைத்த பழமையுடையன என்பதும், பழையாறை வடதாளி முதலிய சில கோயில்கள் புறச்சமயத்தாரால் மறைக்கப் பட்டு மீண்டும் சிவன் கோயில்களாக மாற்றப்பெற்றுள்ளன என்பதும் நன்கு தெளியப்படும். இனி, தேவார ஆசிரியர்

காலத்தில் சிராப்பள்ளி, மயேந்திரப் பள்ளி, குணதர வீச்சுரம் முதலியன போன்று புதியனவாக அமைக்கப்பெற்ற கோயில் களும் சிலவுள. இவ்வாறு தம் காலத்தில் தோன்றிய புதிய கோயில்கள் சிலவற்றையும் தேவார ஆசிரியர்கள் திருப்பதிகங் களாற் பரவிப் போற்றியுள்ளார்கள்.

இனி, தேவார ஆசிரியர் காலத்துத் திருக்கோயில் அமைப்பினை நோக்குங்கால் அக்கோயில்களிற் பெருங் கோயிலாகிய மாடக்கோயில்களும், குதிரை பூட்டிய தேர் போன்று சக்கரங்களுடன் அமைந்த சக்கரக் கோயிலும், ஞாழல் (புலி நகக் கொன்றை) கொகுடி (முல்லை) முதலியனவாக அவ்வத் தலத்திலுள்ள மரம் கொடி முதலிய தாவரத்தின் சார்பினால் அமைந்த கோயில்களும், நல்ல மணி முதலியவற்றால் அழகுறப் புனைந்த மணிக்கோயில்களும்,* (*திருவாரூர்த் திருக்கோயிலை 'மணிக்கோயில்'. (பெரிய-திருநாவுக்கரசர் புராணம்) 223 எனவும், 'பூங்கோயில்' (பெரிய-திருநகரச். 49) எனவும் சேக்கிழாரடிகள் குறித்துள்ளமை இங்குக் கருதத்தக்கதாகும்.) தூய செம்பொன்னினால் எழுதி மேய்ந்த தில்லைச் சிற்றம்பலம், திருவாலங்காடு முதலாகக் கூத்தப்பெருமான் ஆடல் புரியும் அம்பலங்களும், வானத்தி லிருந்து இறங்கும் விமானத்தின் அமைப்பினை ஒத்து அமைந்த வீழிமிழலை விண்ணிழி, விமானம் போன்ற திருக்கோயில்களும் உள்ளமை புலனாகும்.

பழைய திருக்கோயிலைப் பிரித்துத் திருப்பணி செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டபொழுது அதன் திருப்பணி நிறைவேறும் வரையிலும் இறைவனுடைய நாள் வழிபாடும் திருவிழாவும் தவறாது நடைபெறும் பொருட்டு இடைக்காலத் திற்கெனச் சிறியதாக அமைத்துக்கொண்ட கோயில் இளங் கோயில் எனப்படும். இதனைப் 'பாலாலயம்' எனவும் வழங்குவர். இவ் விளங்கோயில், திருப்பணி நடைபெறும் பழைய கோயிலை யொட்டியே அமைக்கப்பெறும். மீயச்சூர் இளங் கோயிலும் கடம்பூர் இளங்கோயிலும் இவ்வாறு இடைக்காலத்தில் தோன்றிய இளங் கோயில்களேயாகும்.

தமிழகத்தினை 'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு' என ஆசிரியர் தொல்காப்பியனார் குறிப்பிடுதலால், அவர் காலத்தில் தமிழ்நாடு சேர நாடு, சோழநாடு, பாண்டிய நாடு என் மூன்று மண்டலங்களாகப் பிரிக்கப்பெற்றிருந்ததெனத் தெரிகிறது. கடைச்சங்ககாலத்தின் பிற்பகுதியில் சேரநாட்டின் கிழக்குப்பகுதி கொங்கு மண்டலம் எனத் தனி மண்டலமாகவும், சோழ நாட்டின் வடக்குப்பகுதி தொண்டை மண்டலம் எனத் தனி மண்டல மாகவும் பிரிந்தமையால் தமிழ்நாடு ஐந்து மண்டலங்களாகப் பகுத்துரைக்கப் பெறுவதாயிற்று.

'தமிழ் மண்டலம் ஐந்தும் தாவிய ஞானம்'

(திருமந்திரம் 1646)

என்றார் திருமூலரும். மேற்குறித்த ஒவ்வொரு மண்டலமும் சிறு சிறு தனி நாடுகளாகப் பகுக்கப்பட்டன. அந்நாடுகள் யாவும் அவ்வவற்றின் தலையூர்களின் பெயரால் குறிக்கப்பெற்றன. இச்செய்தி,

'முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே'

(புறநானூறு)

எனவரும் புறப்பட்டாலும், சுந்தரர் பாடிய நாட்டுத்தொகை, ஊர்த்தொகை முதலிய திருப்பதிகங்களாலும் நன்குணரப்படும்.

தேவார ஆசிரியர் காலத்தில் சோழமண்டலத்திற்கும் தொண்டை மண்டலத்திற்கும் நடுவே வட வெள்ளாற்றிற்கும் சேயாற்றிற்கும் இடையேயமைந்த நிலப்பரப்பு 'திருமுனைப்பாடி நாடு' என ஒரு தனி நாடாகக் கொள்ளப்பட்டது. இந்நிலப் பகுதியை ஆட்சி புரிந்த குறுநில மன்னர்கள் 'முனையரையர்' என அழைக்கப்பெற்றனர். சுந்தரர் காலத்தில் திருமுனைப்பாடி நாட்டை ஆண்ட குறுநில மன்னர் நரசிங்க முனையரையராவர். திருநாவலூரைத் தலைநகராகக் கொண்ட திருமுனைப்பாடி நாட்டினையும் அதன் மேற்றிசை யெல்லையில் திருக் கோவலூரைத் தலைநகராகக் கொண்ட சேதிநாட்டினையும் பின்னுள்ளோர் 'நடுநாடு' என ஒருநாடாக அடக்கிக் கூறினர்.

இனி, தமிழகத்தையொட்டிய புறநாடாகிய துளுநாட்டில் 'திருக்கோகரணம்' என்ற தலமும், தமிழ் நாட்டின் தென் னெல்லையை யொட்டிக் கடலின் நடுவேயமைந்த இலங்கைத் தீவின் பகுதியாகிய ஈழநாட்டில், மாதோட்டக் கேதீச்சரம், திருக்கோணாமலை என்னும் இருதலங்களும் தேவார ஆசிரியர் களாற் பாடிப் பரவப் பெற்றுள்ளன. தமிழ் நாட்டின் வட எல்லையாய் விளங்கும் வேங்கடத்தின் வடக்கே இமயம் வரை அமைந்துள்ள திருத்தலங்களை 'வடநாட்டுத் தலங்கள்' என வழங்குதல் மரபு.

தேவார ஆசிரியர்களாற் போற்றப்பெற்ற திருத்தலங்களைப் 'பாடல் பெற்ற தலம்' எனவும் 'வைப்புத்தலம்' எனவும் இரு வகையாகப் பிரித்துரைத்தல் மரபு. ஒவ்வொரு தலத்தினையும் தனித்தனியே பரவிப் போற்றும் முறையில் தமக்கெனத் தனித் திருப்பதிகத்தினைப் பெற்ற தலங்கள் 'பாடல் பெற்ற தலங்கள்' என வழங்கப் பெறுவன. இவ்வாறு தமக்கெனத் தனிப் பதிகத்தினைப் பெறாது பிற தலத்திற்குரிய பதிகப் பாடல்களிலோ அன்றிப் பொதுப் பதிகங்களிலோ பெயரளவிற் குறிக்கப்

பெற்றுள்ள திருத்தலங்கள் 'வைப்புத் தலங்கள்' என வழங்கப் பெறுவன.

இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ள தேவாரத் திருப்பதி கங்களில் தமக்கெனத் தனிப்பதிகம் பெற்றுள்ள பாடல் பெற்ற தலங்களாக இரு நூற்றெழுபத்து நான்கு தலங்கள் உள்ளன. அவற்றுள் சோழநாட்டுத் தலங்கள் 190, ஈழநாட்டுத் தலங்கள் 2, பாண்டிநாட்டுத் தலங்கள் 14, மலை நாட்டுத்தலம் (சேர நாட்டுத்தலம்) 1, கொங்குநாட்டுத் தலங்கள் 7, நடுநாட்டுத் தலங்கள் 22, தொண்டை நாட்டுத்தலங்கள் 32, துளுநாட்டுத் தலம் 1, வடநாட்டுத் தலங்கள் 5 ஆகப் பாடல் பெற்ற திருத்தலங்கள் 274 ஆகும். இங்கே குறித்த இருநூற்றெழுபத்து நான்கு தலங்களையும் தொகுத்துக் கூறும் முறையில் உமாபதி சிவாசாரியார் 'திருப்பதிகக் கோவை' என்ற நூலை இயற்றி யுள்ளார். அந்நூலில் சோழநாட்டுத் தலங்களைக் காவிரிக்கு வடகரையிலுள்ள தலங்கள் எனவும் தென்கரையிலுள்ள தலங்கள் எனவும் இருவகையாகப் பகுத்து, வடகரைத்தலங்கள் 63 எனவும், தென்கரைத் தலங்கள் 127 எனவும் ஆசிரியர் குறித்துள்ளமை காணலாம்.

தேவாரத் திருப்பதிகங்களிற் குறிக்கப்பட்ட திருத்தலங்கள், அவை அமைந்துள்ள குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நில அமைப்புப்பற்றியும், அவற்றில் மிகுந்துள்ள கருப்பொருள் பற்றியும், அங்கு வழிபட்டோர் பெயரொடு அமைந்த திருக்கோயில் பற்றியும் பெயரிடப் பெற்று வழங்குகின்றன.

குறிஞ்சி நிலத்தில் அமைந்த தலங்கள் மலை, குன்றம், அறை, பருப்பதம் என்ற பெயர்களாலும்; முல்லை நிலத்தலங்கள் காடு, வனம், பாடி என்ற பெயர்களாலும்; மருதநிலத் தலங்கள் ஊர், ஆறு, துறை முதலிய பெயர்களாலும்; நெய்தல்நிலத் தலங்கள், பட்டினம், வாயில் முதலிய பெயர்களாலும்; குறிஞ்சியும் முல்லையும் திரிந்த பாலைநிலத் தலங்கள் சுரம் என்ற பெயராலும் தேவாரப் பதிகங்களிற் குறிக்கப்பெற்றுள்ளன. நெய்தல் நிலத்திற்கு உரிய 'பாக்கம்' என்ற பெயரும், மருத நிலத்திற்குரிய 'ஊர்' என்ற பெயரும், முல்லை நிலத்திற்குரிய காடு, வனம் என்ற பெயர்களும் ஏனை நிலத்தலங்களுக்கும் வழங்கப்பட்டிருத்தல் அறியத்தக்கதாகும். கா, பொழில், குளம் என்ற பெயர்கள் முல்லைநிலத் தலங்களுக்கும் மருத நிலத்தலங்களுக்கும் ஒப்ப ஆளப்பெற்றன. களம் என்ற பெயர் நானிலத் தலங்களுக்கும் உரிய நிலையில் வழங்கப்பெற்றது. உப்பங்கழிகளுடன் கூடிய நெய்தல் நிலத்தலம் கழிப்பாலை எனப் பெயர் பெற்றது. பாலைத்துறை என்ற பெயரில்அமைந்துள்ள 'பாலை' என்ற சொல் ஒருவகை மரத்தைக் குறித்த பெயர். 'திருக்களர்' என்ற பெயர்

அத்தலத்தின் மண்ணின் இயல்பு குறித்துவழங்கியதெனக் கொள்ளுதல் பொருந்தும். நிலம், பழனம் (மங்கலம் என்பதன் மரூஉவாகிய) மங்கை, (இடம் என்ற பொருளைத்தரும் வட சொல்லாகிய) தானம், (குடியிருப்பு என்ற பொருளுடைய) குடி, (புனற் பரப்பின் நடுவே யமைந்த திட்டு எனப் பொருள்படும்) திட்டை, (இன்னின்னார்இறைவனை வழிபாடு செய்து ஈசன் அருள்பெற்ற திருக்கோயில் என்ற பொருளில் வழங்கும்) ஈச்சரம். (புனல் நடுவே பொலிந்து தோன்றும் ஆற்றிடைக்குறை என்ற பொருளுடைய) துருத்தி என்பன தலங்களின் ஈற்றுப் பெயர்களாக இணைத்து வழங்கப் பெற்றுள்ளன. கடல், ஆறு முதலிய நீர் நிலைகளை நோக்கியோ அன்றி மலை முதலிய எவற்றின் நெறிகளை நோக்கியோ எதிர்முகமாக அமைந்த தலங்கள் 'வாயில்' என வழங்கப்பெறுவன நதி முதலியன கூடும் இடம் 'கூடல்' என வழங்கப்பெற்றது.

இடைக்காலத்தில் சமணர்கள் தங்கிய தவப்பள்ளிகளாக இருந்து, பின் சிவத்தலங்களாக மாறிய இடங்கள் 'பள்ளி' எனவும் 'பாழி' எனவும் வழங்கப்படுகின்றன. இறைவனுடைய வீரச் செயல்கள் வெளிப்படுதற்கு நிலைக்களமாயமைந்த திருக்கோயில்கள் வீரட்டானம் என வழங்கப்பட்டன. 'வீரஸ்தானம்' என்ற வடமொழித் தொடர் தமிழில் வீரட்டானம் எனத் திரிந்தது என்ப. ஆளுடைய பிள்ளையார் 'அட்டானம் என்றோதிய நாலிரண்டும்' (2-39-3) என்ற தொடரால் இறைவனுடைய வீரச் செயல்கள் வெளிப்பட்ட திருத்தலங்களாகிய அட்ட வீரட்டங்களையும் குறித்துள்ளார்.

சிவபெருமான், பிரமனது தருக்கினை யடக்க வேண்டி அவன் கொண்ட ஐந்து தலையில் ஒன்றைக் கிள்ளிய இடம் திருக்கண்டியூர். அந்தகாசுரனைக் கொன்ற தலம் திருக்கோவலூர். திரிபுரத்தை எரித்தழித்த தலம் திருவதிகை. தக்கனது தலையைத் தடிந்த தலம் திருப்பறியலூர். சலந்தராசுரனைத் தம் காற்பெரு விரலாற் கீறியமைந்த சக்கரத்தினால் தலையரிந்த தலம் திருவிற்குடி. கயமுகாசுரனாகிய யானையினைக் கொன்று அதன் தோலையுரித்துப் போர்த்துக்கொண்ட தலம் வழுவூர். மன்மதனை எரித்த தலம் திருக்குறுக்கை. மார்க்கண்டேயர்க்காகக் கூற்றுவனைக் யுதைத்த தலம் திருக்கடவூர். இங்கே குறித்த எட்டுத்தலங்களும் எல்லாம் வல்ல சிவபெருமானுடைய வீரச் செயல்கள் வெளிப்பட்டுத் தோன்றுவதற்கு நிலைக்களமாய் விளங்குதலால் அட்ட வீரட்டம்' எனப் போற்றப் பெறுவன வாயின. இவற்றில் 'விற்குடி' நீங்கலாக ஏனைய ஏழு வீரட்டானங்களுடன் 'கோத்திட்டைக் குடி வீரட்டம்' (6-71-2)

என மற்றொரு வீரட்டானத்தையும் இணைத்து அட்ட வீரட்டம் எனக் குறிப்பிடும் வழக்கமும் உண்டெனத் தெரிகிறது.

"காவிரியின் கரைக் கண்டி வீரட்டானம்,
கடவூர் வீரட்டானம், காமருசீர் அதிகை
மேவிய வீரட்டானம், வழுவை வீரட்டம்
வியன்பறியல் வீரட்டம், விடையூர்திக் கிடமாம்
கோவல்நகர் வீரட்டம், குறுக்கை வீரட்டம்,
கோத்திட்டைக்குடி வீரட்டானம் இவை கூறி
நாவில் நவின்றுரைப்பார்க்கு நணுகச் சென்றால்
நமன் தமரும் சிவன் தமரென் நகர்வர் நன்கே"

(6-71-2)

எனவரும் திருத்தாண்டகத்தாலும், இங்கே குறித்த வீரட்டானத்தின் வேறாக, 'குடி', என்ற பெயருடைய தலங்களைக் குறிக்கும் அடுத்த பாடலில் (6-71-3) 'விற்குடி'யைக் குறிப்பிடு தலாலும், விற்குடியில் நிகழ்ந்ததாகக் கூறப்படும் சலந்தராசுரனை யழித்த வீரச் செயல் கோத்திடைக் குடியில் நிகழ்ந்ததாகக் கொண்டு கூறும் மற்றொரு புராணமுறையும் அப்பரடிகள் காலத்தில் வழங்கியதாகக் கருத இடமுண்டு. இனி, அப்பரடிகள் காலத்தவராகிய ஆளுடையபிள்ளையார் 'விற்குடி' என்ற தலத்தையே 'வீரட்டம்' (2-108-1-11) எனக் குறித்திருத்தலால், விற்குடி வீரட்டமும் கோத்திட்டைக்குடி வீரட்டமும் ஒரு தலமே யெனக்கொள்ளுதற்கும் இடமுண்டு.

ஊர்ப்பெயர்களுடன் நகர், நன்னகர் என்ற சொற்களை இறுதியில் இணைத்து 'வேட்கள நன்னகர்', 'பாம்புர நன்னகர்' எனத் தேவார ஆசிரியர்கள் தம்பதிகங்களிற் சிறப்பித்துப் போற்றியுள்ளார்கள். ஒரூரில் வாழும் சிறப்புடையார் ஒருவர் பெயரால் அவ்வூர் அழைக்கப்பெறுதலும் உண்டு. இச்செய்தி, 'நிறையினார் நீல நக்கன் நெடுமா நகர் என்று தொண்டர் அறையுமூர் சாத்தமங்கை' எனவரும் ஞானசம்பந்தர் தேவாரத்தால் நன்கு புலனாம்.

'குடியிருப்பு' என்ற பொருளில் 'இல்' என்னும் ஈற்றால் வழங்கும் தலங்களும் உள. அன்பில், பிரம்பில் கீழையில், செந்தில், கள்ளில் என்பன இவ்வகையைச் சேர்ந்தன. 'அகம்' என்ற ஈற்றால் 'ஏடகம்' என வழங்கும் ஊர்ப்பெயரும் இங்கு நோக்கத்தக்கதாகும். குடிகள் பலரும் சேர்ந்து வாழும் சிற்றூர் 'சேரி' என வழங்கப்பட்டது. திருத்தெளிச் சேரி, இறையான் சேரி, என வருதல் காண்க. ஊர்களின் தொன்மை நோக்கிப் பழையாறை, பழையனூர் எனவும், புதியனவாக அமைக்கப்

பெற்றமை கருதித் திருப்புத்தூர், அரிசிற்கரைப் புத்தூர், கடுவாய்க்கரைப்புத்தூர் எனவும் வழங்கப்பெற்றன. பேரூர்களின் அருகே அமைந்துள்ள தலங்கள் அவையமைந்துள்ள திசை பற்றிக் குடவாயில் குணவாயில் என வழங்கப்பெற்றன.

ஒரே தலத்திற் பல திருக்கோயில்கள் அமைந்திருந்தால் அவை யமைந்துள்ள திசையைச் சுட்டி இன்ன திசையிலுள்ள இன்ன கோயில் என அத்திருக் கோயிலைத் தேவார ஆசிரியர்கள் குறித்துப் போற்றியுள்ளார்கள். பழையாறை வடதளி, ஆறை மேற்றளி எனவும், காஞ்சி மேற்றளி, கச்சித் திருவேகம்பம், ஓணகாந்தன், தளி, கச்சி மயானம், கச்சிநெறிக் காரைக்காடு, கச்சி அனேகதங்காவதம் எனவும், கடவூர் வீரட்டம், கடவூர் மயானம் எனவும், திருவாரூர்த் திருமூலட்டானம், திருவாரூர் அரநெறி, திருவாரூர்ப் பரவையுண் மண்டளி எனவும் இவ்வாறு ஓரூரிலேயுள்ள பல திருக்கோயில்களையும் அவற்றின் திசையும் சிறப்புப் பெயர்களும் ஆகிய அடையாளங்களைக் கொண்டு தெரிவிக்கும் முறையினைத் தேவாரத் திருப்பதிகங் களிற் காணலாம்.

ஒரு நாட்டில் ஒரே பெயருடைய பல தலங்கள் இருப்பின் அத்தலங்கள் அமைந்துள்ள திசை பற்றியும் அவற்றின் அருகேயுள்ள ஆறு முதலியவற்றின் எல்லை பற்றியும், அங்குள்ள தாவர அமைப்பு, வழிபட்டோர், அத்தலத்தின் பெருமை, பரப்பு முதலியவற்றைக் குறித்த அடைமொழிகளுடன் சேர்த்து அவை இன்ன தலங்கள் எனத் தெளிவாக அறிந்துகொள்ளும் முறையில் தேவார ஆசிரியர்கள் திருத்தலங்களைப் பாடிப் போற்றி யுள்ளார்கள். மேலைத் திருக்காட்டுப்பள்ளி, கீழைத்திருக் காட்டுப்பள்ளி, தென் திருமுல்லைவாயில், வடதிருமுல்லை வாயில் என்பன திசை பற்றியமைந்த தலப் பெயர்கள். வடகுரங்காடு துறை, தென்குரங்காடு துறை என்பன காவிரியாற்றின் வடகரை தென்கரை யாகிய எல்லைபற்றியும் அத்தலங்களில் முறையே வாலியும் சுக்கிரீவனும் வழிபாடு செய்தனர் என்னும் புராணவரலாறு பற்றியும் பெயரெய்தின. பெரும்பற்றப் புலியூர், திருப்பாதிரிபுலியூர், திருப்பெரும்புலியூர், எருக்கத்தம்புலியூர் என்பன வியாக்கிர பாதராகிய புலிக்கால் முனிவர் முதலாக அத்தலங்களில் வழிபாடு புரிந்தோர் தொடர்பாலும் அத்தலங்களுக்கும் புலிக்கும் உள்ள தொடர்பாலும் அமைந்த பெயர்கள். நல்லூர், வெண்ணெய் நல்லூர், அரையணிநல்லூர், கலயநல்லூர், ஏமநல்லூர், பொய்கைநல்லூர் என்பன நல்லூர் என்னும் பெயரால் வழங்கும் தலங்களிடையே வேற்றுமை தெரிய அடைமொழி பெற்று வழங்குவன. புள்ளிருக்கு வேளூர், கீழ்வேளூர், பெருவேளூர் என்பனவும் இவ்வாறு அடைமொழிபெற்று வழங்குவனவே.

தலையாலங்காடு, தலைச்சங்காடு எனவும், இடைமருது, இடைச்சுரம், இடையாறு, இடைக்குளம் எனவும், கடைமுடி எனவும் வழங்கும் தலங்கள் முறையே தலை, இடை, கடை என்னும் அடைமொழி பெற்றன.

நிழலமைந்த சோலைகளும் அடர்ந்தகாடுகளும், இனிய பொழில்களும் ஆக அமைந்த தலங்கள் 'கா' எனவும் 'காடு' எனவும் 'பொழில்' எனவும் குறிக்கப்பெற்றன. ஆற்றுடன் தொடர்புடைய தலங்களும், இறைவனை யடைதற்குரிய 'அழகிய நெறி' எனப் போற்றப்பெறும் தலங்களும், 'ஆறு' என்னும் ஈற்றாற் குறிக்கப்பட்டன. சிறப்புடைய தீர்த்தத்துடன் இயைந்த தலங்கள் 'குளம்' என்ற பெயராலும், ஊர்மக்கள் பலரும் கூடி இறைவனை வழிபடுதற்கேற்ற பொது இடங்களாய் விளங்கிய தலங்கள் 'களம்' என்ற பெயராலும் வழங்கப்பெற்றன.

ஆற்றையடுத்து அமைந்துள்ள தலங்கள் 'துறை'யென்ற பெயரால் வழங்கப்பெற்றன. 'துறைகள்' எனப்படும் இத்தலங்கள், அங்குச் சிறப்பாக வளர்ந்துள்ள மரம் முதலிய கருப் பொருள்களின் அமைப்பாலும் அவ்வந்நில அமைப்பாலும், பல்வேறு அடைமொழிகளால் வழங்கப்பெற்றன. திருப்ப ராய்த்துறை, திருப்பாலைத்துறை, கடம்பந்துறை, திருமாந்துறை, திருஆலந்துறை, குரங்காடுதுறை மயிலாடுதுறை எனவும், திருவெண்டுறை எனவும் பேணுபெருந்துறை, திருச்சோற்றுத் துறை, திருப்பாற்றுறை எனவும் வரும் தலங்கள் இவ்வகையிற் குறிப்பிடத்தக்கன.

இனி, இறைவனது திருவருளில் உயிர்கள் திளைத்து இன்புறுதற்கு நிலைக்களமாய் விளங்கும் திருக்கோயில்களையும் 'நெறி' என்னும் பொருளில் 'துறை' என்ற பெயரால் வழங்குதலும் உண்டு. திருவெண்ணெய் நல்லூர்த் திருக் கோயிலைத் 'திருவருட்டுறை' எனவும், திருநெல்வாயில் திருக்கோயிலைத் 'திரு அரத்துறை' எனவும் தேவார ஆசிரியர்கள் குறித்துள்ளமை காணலாம். இவ்வாறே திருச்சேறையிலுள்ள திருக்கோயிலைச் 'செந்நெறி' எனவும் தண்டலை என்னும் ஊரிலுள்ள கோயிலை 'நீள்நெறி' எனவும் திருவாரூரில் உள்ள கோயிலை 'அரனெறி' எனவும் அவ்வாசிரியர்கள் திருப்பதிகங் களிற் குறித்துள்ளமை இங்கு ஒப்பு நோக்கத் தக்கதாகும்.

திருக்கோயில்களில் இறைவன் அருவுருவத்திருமேனியாகிய சிவலிங்கத் திருமேனியுடன் எழுந்தருளியிருக்கும் கருவறையினை 'மூலஸ்தானம்' என்பர். வடசொற்றொடராகிய இதனை 'மூலட் டானம்' என வழங்குதல் தமிழ்மரபு. எல்லாத் திருக்கோயில் களிலும் சிவலிங்கத் திருமேனியுடன் இறைவன் வீற்றிருந்தருளும்

சிறப்புடைய அருள் நிலையத்தினை மூலட்டானம் எனப் பொதுவாக வழங்குதல் உண்டு. எனினும் திருவாரூர்த் திருக்கோயிலுள் புற்றிடங்கொண்ட பெருமான் எழுந்தருளிய இடத்தையே 'திருமூலட்டானம்' எனத் திருநாவுக்கரசர் திருப்பதிகங்களிற் சிறப்பாகக் குறித்துள்ளார். இவ்வாறே தில்லைப்பெருங் கோயிலில் சிவலிங்கத்திருமேனி அமைந்த நிலையத்தைத் திருமூலட்டானம் எனச் சிறப்பாக வழங்குதல் உண்டு.

'பெரும்பற்றப் புலியூர் மூலட்டானத்தார்' (6-71-6)

என அப்பரடிகள் குறிப்பிடுதலால் திருவாரூரைப் போன்று தில்லையிலும் மூலட்டானம் உள்ளமை தெளியப்படும்.

தேவாரப் பாடல்பெற்ற தலங்கள் சிலவற்றில் ஊர்ப்பெயரும் அவ்வூரில் அமைந்த கோயிற் பெயரும் வேறு வேறு குறிக்கப் பெற்றுள்ளன. அவற்றைப் பிற்சேர்க்கையாகக் குறித்த பாடல் பெற்றதலங்களின் திருப்பதிக அட்டவணையால் அறிந்து கொள்ளலாம்.



# 12. தேவார வைப்புத்தலங்கள்

மூவர் தேவாரப் பதிகங்களிலும் தமக்கெனத் தனித்திருப் பதிகத்தினைப் பெறாமல் பிற தலப் பதிகங்களிலும் பொதுப் பதிகங்களிலும் பெயரளவிற் குறித்துப் போற்றப்பெற்ற தலங்கள் தேவார வைப்புத் தலங்கள் என வழங்கப் பெறுகின்றன. இத்தலங்களுட் பலவற்றின் நாடு முதலியன நன்கு புலப் படவில்லை. தெரிந்தவற்றுக்குரிய குறிப்புக்களே இங்குத் தரப்பெற்றுள்ளன. ஈண்டு ச, அ, சு என்ற எழுத்துக்கள் முறையே சம்பந்தர், அப்பர், சுந்தரர் அருளிய தேவாரப் பதிகங்களைக் குறிப்பனவாகும்.

**1. அகத்தீச்சுரம்-அ (6-71-8):** கன்னியாகுமரியிலிருந்து மூன்று மைல் என்பர் செங்கல்வராய பிள்ளை. ஆநாங்கூர் அகத்தீச்சரம் தென்னிந்தியக் கல்வெட்டு 1926-ஆம் ஆண்டறிக்கை எண் 73-78.

**2. அக்கீச்சரம்-அ (6-71-8):** தஞ்சை மாவட்டம் கஞ்சனூரி லுள்ள சிவாலயம் "திருவக்கீச்சரம்" எனச் சாசனத்திற் குறிக்கப் பெற்றது. "அனலோன் போற்றும் காவலனைக் கஞ்சனூர் ஆண்ட கோவை" என அப்பரடிகள் போற்றுதலால் "அக்கீச்சரம்" என்னும் பெயர்க் காரணம் நன்கு விளங்கும்.

ஆழ்வார் குறிச்சி புகைவண்டி நிலையத்திலிருந்து அரை மைல் தொலைவிலுள்ள வன்னிக்கரந்தை என்பர் செங்கல்வராய பிள்ளை. இதனை மக்கீச்சுரம் என்று கொள்ளுதல் பொருந்தும். 'குக்குடேச்சுர மக்கீச்சுரம்' 6-71-8 என்றதொடரைக் குக்குடேச்சுரம் மக்கீச்சுரம் என்றே பிரித்தல் வேண்டும் என்பது, "பூருவந்தன்னில் மக்கவீச்சுரமெனப் பொலிந்தே, மேருவொப் பென விளங்கிடுங் கோயில் பள்ளியதாய்ச், சாருமாலிது சான்று, நந்தம் பிரான் சபைமுன், பாரிதாமணி தூக்கிடப்பட்டுறும் பரிவால்" எனவரும் வீரசிங்காதனப் புராணம் மழைய மல் லேசுரச்சருக்கம் 84-ஆம்பாடலாலும் "மக்கீச்சுரம் என்பதனைத் தேவாரம் அடைவு திருத்தாண்டகத்தானும் உணர்க" எனவரும் அடிக் குறிப்பாலும் நன்கு புலனாம்.

**3. அசோகந்தி-அ (6-70-9) (அயோகந்தி)-அ (6-7-10):** திருச்சாத்தமங்கையில் திருநீல நக்க நாயனாரால் வழிபாடு. செய்யப்பெற்ற "அயவந்தி" என்னும் பாடல் பெற்ற தலமாகக் கருதுதல் பொருந்தும்.

**4. அண்ணல் வாயில்-அ (6-71-8)** *புதுக்கோட்டை நாட்டில் உள்ள அன்னவாசல் என்ற ஊர். சிற்றண்ணல் வாயில் இதனை யடுத்துள்ள ஊராகும்.*

**5. அத்தங்குடி-ச (2-39-10)**

**6. அத்தமயன மலை-அ (6-71-9)** *ஞாயிறு மறையும் மலை, இஃது ஒரு தலமாகக் குறிக்கப்பட்டது.*

**7. அத்தி-ச (2-39-2)** செயங்கொண்ட சோழ மண்டலத்து வெண்குன்றக் கோட்டத்துப் பெருநகர் நாட்டு அத்தி *அகத்தீசுவர முடையார் கோயில் கேரளாந்தக நல்லூர். 299* of *1912. தெ.இ.க.*

**8. அத்தீச்சுரம்-அ (6-71-8)** *சிவசைலம்-ஆழ்வார் குறிச்சி புகைவண்டி நிலையத்திலிருந்து மூன்று மைல் என்பர் செங்கல்வராய பிள்ளை.*

**9. அமுதனூர்-சு (7-12-1)**

**10. அயனீச்சுரம்-அ (6-71-6)** *அம்பாசமுத்திரத்திற்கு அருகில் ஒரு மைல் தொலைவிலுள்ள பிரமதேசம் என்பர். திருப்பனந்தாளில் அசனீச்சுரம் என்றொரு கோயிலுண்டு. வடவார்க்காடு சில்லா வழுவூரிலுள்ள பழைய கோயில் அயனீச்சுரம் எனக் கல்வெட்டிற் குறிக்கப்பட்டுளது. (1908-ம் ஆண்டறிக்கை எண். 5,8) என்பர் ராபி. சேதுப்பிள்ளை.*

**11. அரணநல்லூர்-அ (6-7-7)**

**12. அரிச்சந்திரம்-அ (6-51-10):** *பழையாறையில் சோழ மாளிகைக்குக் கிழக்கே பட்டீச்சுரத்திற்கு வடதிசையில் அமைந்தது. இதன் கீழுள்ள பாற்குளம், அப்பரடிகளால் "பழையாறும் பாற்குளமும்" எனக் குறிக்கப்பட்ட சிறந்த தீர்த்தமாகும்.*

**13. அளப்பூர்-அ,சு (6-51-3, 6-70-4,6-71-4,7-47-4):** *தரங்கம்பாடி புகைவண்டி நிலையம்.*

**14. அறப்பள்ளி-ச (2-39-4):** *"கொல்லிக் குளிரறைப்பள்ளி"*

**15. ஆடகேச்சுரம்-அ(6-71-8):** *திருவாரூர்த் திருக்கோயி லுக்குள் "நாகபிலம்" என வழங்கும் ஆலயம் என்பர் ராபி.சே.*

**16. ஆழியூர்-அ,சு (6-70-7, 7-12-7):** *கீழ்வேளூருக்கும் சிக்கலுக்கும் இடையில் உள்ளது.*

**17. ஆறை-ச (2-39-5):** *ஆற்றூர் என்பதன் மரூஉ.*

**18. ஆறைமேற்றளி-சு (7-35-1, பழையாறை):** சுவாமிமலை புகைவண்டி நிலையத்திற்குத் தெற்கே ஒரு மைல் தொலைவில் திருமேற்றளி என்ற பெயருடன் உளது.

**19. ஆன்பட்டி (பேரூர்) - அ(6-7-10):** கோயம்புத்தூருக்கு அருகிலுள்ளது. பசு வழிபட்டதலம் இறைவன் பெயர் பட்டிப் பெருமான், "பேரூருறைவாய் பட்டிப் பெருமான்" எனப் போற்றுவர் சுந்தரர். 'குடகத்தில்லையம்பலம்' (7-) என்பதும் இதுவே.

**20. இடவை-அ (6-70-3):** இராசேந்திர சிங்கவள நாட்டு மண்ணி நாட்டு இடவை எனக் கல்வெட்டுக்களில் குறிப்பிடப் பட்டுளது.

**21. இடைக்குளம்-அ (6-71-10):** மருத்துவக்குடி என இந்நாளில் வழங்குகிறது. ஆடுதுறை புகைவண்டி நிலையத்திற்கு அண்மையில் உள்ளது. 'உய்யக்கொண்டார் வள நாட்டு... திருவிடைக்குள முடையார்' என்பது கல்வெட்டுக் குறிப்பு.

**22. இடைத்தானம்-அ (6-7-8)**

**23. இடைபள்ளி-ச (2-39-4)**

**24.இராப்பட்டீச்சுரம்-அ (6-25-10):** கும்பகோணந் திருவாரூர்ப் பெருவழியில் பெருவேளூர்க்குத் தெற்கே கரவீரத்திற்கு வடக்குமுகமாக அமைந்தது.

**25. இளங்கோயில்-அ (6-71-5):** பழைய திருக்கோயிலைப் புதுப்பிக்குந் திருப்பணியினைத் தொடங்கு முன், நாள் வழிபாடு தடையின்றி நிகழ்தற் பொருட்டுக் கருவறையிலுள்ள பெருமானை வேறோர் இடத்தில் எழுந்தருளியிருக்கும் படி வேண்டி யமைத்துக் கொண்ட கோயில் இளங்கோயில் எனப்படும். இடைக்கால வழிபாட்டிற்கென அமைத்துக் கொள்ளப்பெற்ற இச்சிறிய கோயிலைப் பாலாலயம் என வழங்குவர். இவ்வாறு இளங்கோயிலாக அமைக்கப்பட்ட சந்நிதிகள் தேவார ஆசிரியர்களாற் பாடப் பெற்றமையால் நிலையான தனிக் கோயில்களாகவே இன்றும் காட்சியளிக்கின்றன. மீயச்சூர் இளங்கோயில், கடம்பூர் இளங்கோயில் என்பன இவ்வகையிற் குறிக்கத் தக்கன.

**26. இளமர் (6-70-4)**

**இறைக்காடு-சு (7-47-3):** 'இறைக்காட்டாயே எங்கட் குன்னை' எனப் பாடங்கொண்டு, பெருமானே எங்களுக்கு உன் திருமேனியழகினைச் சிறிதேனும் புலப்படுத்தாய் எனப் பொருள்

கொள்ளுமிடத்து, 'இறைக்காடு' என ஒரு தனித்தலம் கொள்ள வேண்டியதில்லை.

**27. இரும்புதல்-அ (6-51-6):** *ஆவூர்க் கூற்றத்தைச் சார்ந்தது. பாபநாசந் தாலூகாவில் உள்ள 'இரும்புதல்' என்னும் ஊராகும்.*

**28. இறையான்சேரி-அ (6-70-4):** *உய்யக்கொண்டார் வளநாட்டில் உள்ளது. திருத்துறைப் பூண்டியின் அருகே இறை வான்சேரியென வழங்கும் ஓர் ஊருளது. காஞ்சிக்கு அருகே இப்பெயருடைய ஓர் ஊருண்டு. (கல்வெட்டுத் தொகுதி 3-45)*

**29. இளையான்குடி-சு (7-39-1):** *அறுபத்துமூவருள் ஒருவராகிய இளையான்குடி மாறனார் திருப்பதி. இளையான் குடிமாறனார் வரலாற்றுடன் தொடர்புடைய இவ்வூர். தஞ்சை மாவட்டத்திலும் இராமநாதபுரம் மாவட்டத்திலும் இப்பெயருடன் வழங்குகின்றது.*

**30. ஈசனூர்-சு (7-31-8):** *திருவாய்மூருக்கு அருகில் உள்ளது.*

**31. உஞ்சேனை மாகாளம் -ச, அ (2-39-9, 6-70-8):** *உச்சயினி-வடநாட்டுத்தலம் இஃது உஞ்சை மகாளம் எனவும் வழங்கப்பெற்றுள்ளது. 6-7-11*

**உண்ணீர்-அ (6-7-7):** *'உண்ணீரார் ஏடகமும்' என்புழி ஏடகத்திற்கு அடைமொழியாய் வந்தது தனித்ததோர் தலமன்று.*

**32. உதயமலை-அ (6-71-9):** *ஞாயிறு தோன்றும் மலை இறைவன் எழுந்தருளும் திருத்தலமாகக் குறிக்கப்பெற்றது.*

**33. உருத்திரகோடி-அ (6-70-6):** *கோடியுருத்திரர் பூசை செய்த தலம். காஞ்சிபுரத்திலும் திருக்கழுக்குன்றத்திலும் உள்ளதென்பர்.*

**34. ஊற்றத்தூர்-அ (6-70-10, 6-71-4):** *திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலுள்ள ஊட்டத்தூர். ஊறைப் பதிற்றுப்பத்தந்தாதி-மகாவித்துவான் பிள்ளையவர்கள் பாடியது.*

**35. எங்களூர்-சு (7-31-6):** *அடியார்களாகிய எங்களுக் குரிமையுடைய ஊர் என இதனைஅடைமொழியாகக் கொள்ளு தற்கும் இடமுண்டு.*

**36. எச்சிவிளமர்-அ (6-70-4):** *எச்சில் என்பது ஓர் ஊர். இளமர் என்பது மற்றோர் ஊர்.*

**37. எழுமூர்-அ (6-70-5):** *இப்பொழுது சென்னையின் பகுதியாக இருக்கும் எழும்பூர், பிற்காலத்து அயலார் ஆட்சியினால் எழுமூரின் பழைய கோயில் சிதைவுற்று மறைந்தது.*

**38. ஏமகூடமலை-அ (6-7-8, 6-71-9)**

**39. ஏமநல்லூர்-அ (6-70-4):** *திரைலோக்கிய மாதேவிச் சதுர் வேதிமங்கலம். 'மண்ணி நாட்டு ஏமநல்லூராகிய திரைலோக்கிய மாதேவிச் சதுர் வேதிமங்கலம்'-தெ.இ.க. தொகுதி 2. பக்கம் 331.*

**40. ஏமப்பேரூர்-அ (6-70-3):** *திருவதிகைக்கு அருகிலுள்ளது. 'திருமுனைப்பாடி நாட்டு ஏமப்பேரூர், நாட்டு ஏமப்பேரூர், திருவாலந்துறை மகாதேவர்.' (1921 தெ. இ. க. ஆண்டறிக்கை 513-533)*

**41. ஏயீச்சுரம்-அ (6-7-8):**

**42. ஏர்-அ (6-51-6, 6-70-3):** *இராசேந்திர சிங்கவள நாட்டில் உள்ளது. சுவாமி மலைக்கு அருகில் ஏரகரம் என்னும் பெயருடன் விளங்கும் தலம். செந்தமிழ், 41-பக்.209-214.*

**43. ஏழூர்-அ (6-70-5):**

**44. ஏறனூர்-சு (7-31-9):** *ஏற்றினை (இடபத்தை) ஊர்தியாக வுடைய இறைவன் எழுந்தருளியவூர் என அடைமொழியாகவும் கொள்ளலாம்.*

**ஓரேடகம்-அ (6-7-10):** *ஒப்பற்ற ஏடகம், பாடல் பெற்ற தலம். இனி உரோடகம் என்பதன் திரிபாகக் கொண்டு செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள ஊராகக் கொள்ளவும் இடமுண்டு. உரோடகம் எனக் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது. 'உரோடகத்துக் கந்தரத்தனார்' என்ற சங்கப் புலவர் இவ்வூரினரேயாதல் வேண்டும். இவ்வூர்க் கோயிலில் ஆதித்தன் காலத்துக் கல்வெட்டும் கங்கைகொண்ட சோழன் கல்வெட்டும் உள்ளன.* M. E. R. of 1914. Nos. 251, 252.

**45. கச்சிப்பலதளி-அ (6-70-4):** *காஞ்சி நகரத்திலுள்ள திருமேற்றளி, ஓணகாந்தன்தளி, திருக் காமக்கோட்டம். கச்சிநெறிக் காரைக்காடு முதலிய பல திருக் கோயில்களையும் குறிக்கும்.*

**46. கச்சி மாயனம்-அ (6-97-10):** *காஞ்சியில் திருவேகம்பம் திருக் கோயிலுக்குள் கொடி நிலையின் அருகே அமைந்த மேற்குப் பார்த்த சந்நிதி.*

**47. கச்சையூர் - சு (7-31-4):**

**(வட)கஞ்சனூர்-சு (7-12-8):** *இது பாடல்பெற்ற தலம். இதனை 'வட கஞ்சனூர்' எனச் சுந்தரர் போற்றினமையால் தனித் தலமாகக் கருதப்பெற்றது போலும். காவிரிக்கு வடகரையில்*

அமைந்தமை பற்றி 'வட கஞ்சனூர்' என அடை புணர்த்தோதப் பட்டது.

**48. கஞ்சாறு-அ (6-70-8):** இராசேந்திர சிங்க வள நாட்டுக் கஞ்சாறநகர்; மானக் கஞ்சாற நாயனார் பிறந்தருளிய தலம்; ஆன தாண்டவபுரம் என்று இக்காலத்தில் வழங்குகிறது.

**49. கடங்களூர்-சு (7-31-3):**

**50. கடம்பை இளங்கோயில்-அ (6-70-5):** திருக்கடம்பூர்த் திருக்கரக் கோயிலின் முற்றத்திலே அமைந்துள்ள பாலாலயம்.

**51. கடையக்குடி-அ (6-71-3):** பாண்டிகுலாசனி வள நாட்டு மீய்செங்கிளி நாட்டுக் கடையக்குடி என்பது கல்வெட்டு.

**52. கண்ணை-அ (6-70-6):** செங்கண்மா என்பதன் மரூஉ. இப்பொழுது செங்கம் என வழங்குகிறது. S.I.I. Vol. No. 117.

**53. கந்தமாதனமலை-அ (6-71-9):** திருச்செந்தூர்க் கோயிலின் வடபாலுள்ள தென்பர் ரா. பி. சே.

**54. கரபுரம்-அ (6-7-7):** வடவார்க்காடு மாவட்டம் வாலாசாபேட்டை தாலூகாவில் திருப்பாற்கடல் என்ற பெயரோடு உள்ளது. 'திருப்பாற்கடல் திருக்கரபுரமுடைய நாயனார்' என்பது கல்வெட்டு. தெ.இ.க. 1905 ஆண்டறிக்கை 685-699.

**55. கருகற்குரல்-சு (7-47-5):** கருகல் என்பதே ஊர்ப் பெயர். அங்குக் கதிரெனத் தோன்றிய இறைவனைக் 'குரலாய்' என அழைத்தார். 'வெண்ணிக் கரும்பே' என அழைத்தமை நோக்குக.

**56.அருந்திட்டைக்குடி-அ (6-71-3):** தஞ்சையினையடுத் துள்ள ஊர்.

**57. கருப்பூர்-சு (7-98-3):** கும்பகோணத்திலிருந்து திருப்பனத்தாள் செல்லும் வழியிலுள்ள ஊராதல் கூடும். இவ்வூரில் அகத்தீசுவரமுடையார் கோயில் என்ற கோயில் உளது.

**58. கருமாரி-அ (6-79-11):** 'கானார் மயிலார் கருமாரி' எனச் சிறப்பித்தலால் இவ்வூர் சோலை சூழப் பெற்றதெனத் தெரிகிறது.

**59. கழுநீர்க்குன்றம்-அ (6-13-4):** திருத்தணிகை மலை என்பர் அம்மலை 'உற்பலவரை' எனப் பெயர் பெற்றமை இங்கு நினைத்தற்குரியது.

**60. களந்தை-சு (7-39-6):** கூற்றுவ நாயனார் திருவவதாரத் தலம். களப்பாள் என்பது களந்தை என மருவியது. இது திருத்தருப் பூண்டியருகேயுள்ளது. 'அருமொழி தேவ வளநாட்டுக் களப்பாள்' என்பது கல்வெட்டு.

**கறையூர்-அ.சு (6-70-10,7-48-1):** திருப்பாண்டிக் கொடுமுடியென்னும் பாடல் பெற்றதலம். கறையூர்-ஊர்ப் பெயர். கொடுமுடி-கோயிற் பெயர்.

**61. காட்டூர்-ச,சு (2-39-7, 7-47-1):** திருவாரூர்க்கு அருகிலும், பந்தணை நல்லூருக்கு அருகிலும், செங்கற்பட்டு சில்லா மதுராந்தகத்துக்கு அருகிலும் இப்பெயருடன் ஊர்கள் உள்ளன. திருவாரூர்க்கு அருகிலுள்ள காட்டூரே தேவார வைப்புத் தலங்களுள் ஒன்றாகக் கொள்ளத்தக்கதாகும்.

**62. காம்பீலி-அ (6-70-2):** பெல்லாரி சில்லாவிலுள்ள காம்பீலி என்னும் ஊர்.

**63. காரிக்கரை-சு (7-31-3):** தொண்டைநாட்டுத் தலம். திருக்காரிகரை எனச் சேக்கிழார் குறித்துள்ளார். இது நாகலாபுரத்திலிருந்து ஒரு மைல் தொலைவிலுள்ள ராமகிரி என்ற ஊராகும். காரி (காலேறு) நதியின் கரையிலுள்ளமையால் இப்பெயர்த்தாயிற்று. 'சயங்கொண்ட சோழமண்டலத்துக் குன்றவர்த்தனக் கோட்டத்து நின்றையூர் நாட்டு நடுவின் மலை திருக்காரிக் கரையுடைய நாயனார் திருக்காரிக்கரைப் பிள்ளையார்' என வரும் கல்வெட்டுத் தொடர் இங்கு அறியத் தக்கதாகும்.

**64. காவம்-சு (7-31-4):**

**65. காளிங்கம்-அ (6-7-5):** 'கழுநீர் மதுவிரியும் காளிங்கம்' எனப் போற்றுவர் அப்பரடிகள்.

**66. காறை-அ (6-70-6):** காறை என்பது, 'காறாயில்' என்ற பாடல் பெற்ற தலத்தின் திரிபாகலாம்.

**காற்றூர்-ச (2-39-8):** 'காற்றூர் வரையன் றெடுத்தான்' என இராவணனைக் குறிக்குமிடத்துக் 'காற்றூர் வரை' எனக் கயிலை மலையைச் சிறப்பித்த அடைமொழியாகும்.

**67. கிழையம்-சு (7-12-5):**

**68. கிள்ளிகுடி-சு (7-12-7):** கீழ் வேளூரையடுத்துள்ளது.

**69. கீழையில்-சு (7-12-7):** 'அருமொழி தேவ வள நாட்டு அளநாட்டுக் கீழையூர் என்பது கல்வெட்டு. நாகை தாலுக்காவில் உள்ளது.

**70. கீழைவழி-சு (7-12-5):**

**71. குக்குடேச்சுரம்-அ (6-71-8):** சித்தூர் சில்லா புங்கனூரில் உள்ள சிவாலயம் 'திருக்கோழீச்சுரம்' எனக்

*கல்வெட்டில் குறிக்கப்பட்டிருத்தலால் (1906-ஆம் ஆண்டு எண் 541) அதுவே குக்குடேச்சுரம் என்பர் ராபி.சே.*

**குடப்பாச்சில்-சு(7-15-6):** *பாடல்பெற்ற தலம், சோழநாட்டுத் தலங்களுள் மேற்றிசையில் உள்ளது திருப்பாச்சில் ஆச்சிராமம் ஆதலின் அது 'குடப்பாச்சில்' என மேற்றிசையோடு புணர்த்துக் கூறப்பட்டது.*

**72. திருக்குணவாயில்-ச,அ (2-39-7,6-71-6):** *சேரநாட்டுத் தலம்-குணவாயிற் கோட்டம் என்றதும் இதுவேயாகும். கொடுங் கோளூருக்கு மேற்புறத்தில் உள்ளது.*

**73. குண்டையூர்-சு (7-20-1):** *திருக்கோளிலி என்ற தலத்தையடுத்துள்ளது.*

**74. குத்தங்குடி-ச (2-39-10):** *திருவழுந்தூருக்கு அருகிலுள்ளது.*

**75. குமரி-அ (6-70-9):** *கன்னியாகுமரி.*

**76. குயிலாலந்துறை-அ (6-71-11):** *சிலப்பதிகாரத்திற் குறிக்கப்படும் குயிலாலுவம் என்ற வடநாட்டுத் தலமாக இருத்தல் கூடும்.*

**77. குரக்குத்தளி-சு (7-47-2):** *முகுந்தனூர் என்பது இக்காலப் பெயர். ஈரோடு அருகே கூளிப்பாளையம் புகைவண்டி நிலையத்திற்குத் தெற்கில் உள்ள ஊர். 1909-ஆம் ஆண்டறிக்கை, எண்.304. இவ்வூர் கொங்கு மண்டலத்தில் குறும்பு நாட்டில் அமைந்தமையால் 'கொங்கிற் குறும்பிற்' 'குரக்குத்தளி' எனக் குறித்தார் சுந்தரர்.*

**78. குருக்கேத்திரம்-சு (7-78-6):** *தீர்த்தச்சிறப்பு வாய்ந்த வடநாட்டுத் தலம். குருஷேத்திரம் குருக்கேத்திரம் எனத் திரிந்தது.*

**79. குருந்தங்குடி-ச (2-39-10):**

**80. குன்றியூர்-ச,அ (2-39-1,6-70-5):** *அருமொழி தேவ வளநாட்டுக் குன்றியூர். மன்னார்குடிக்கு அருகிலுள்ள குன்னியூராதல் கூடும்.*

**81. குன்றையூர்-சு (7-39-1):** *விறன்மிண்ட நாயனார் திருப்பதியாகிய மலைநாட்டுத் திருச்செங்குன்றூர். அது குன்றை என மருவியது.*

**82. கூந்தலூர்-அ (6-70-9):** *பேணு பெருந்துறைக்கு அருகிலுள்ளது.*

**83. கூரூர்-ச (2-39-1):** 'திருநறையூர் நாட்டுக் கூரூர்' என்பது கல்வெட்டு.

**84. கூழையூர்-அ (6-70-9):**

**கூறனூர்-சு (7-32-9):** 'திருமாலோர் கூறுனூர் குரங்காடு துறை' எனக் குரங்காடு துறைக்கு அடைமொழியாக வந்தது. திருமாலை ஒரு பாகத்துக் கொண்டமையால் சிவபெருமானைத் 'திருமாலோர் கூறன்' எனக் குறித்தார்.

**85. கைம்மை-சு (7-12-5):**

**86. கொங்கணம்-அ (6-70-5):** கொண்கானம் என்னும் மலை புறநானூறு 154-56-ஆம் பாடல்களில் மோசிகீரனாரால் 'கொண்பெருங்கானம்' எனக் குறிக்கப்பெற்றுள்ளது.

**87. கொங்கு-அ (6-70-9):** நாட்டின் பெயர்.

**கொடுங்கோவலூர்-ச (2-39-7):** திருக்கோவலூர் வீரட்டம் என்னும் பாடல் பெற்ற தலம். வீரட்டத்தலமாதலின் கொடுமை யாகிய அடைமொழி பெற்றது.

**கொடுங்கோளூர்-அ,சு (6-70-5,7-4-1):** இது பாடல் பெற்ற தலம். கொடுங்கோளூர் ஊர்ப்பெயர். அஞ்சைக் களம் கோயிற் பெயர்.

**கொடுமுடி-அ (6-70-3):** திருப்பாண்டிக் கொடி முடி என்னும் பாடல் பெற்ற தலம்.

**88. கொண்டல்-அ,சு (6-51-9,7-12-2):** சீகாழிக்கு மேற்கே 3½ மைல் தொலைவில் உள்ளது. கொண்டல் நாட்டுக்குத் தலையூர்.

**89. கொல்லிமலை-அ (5-34-1):**

**கொல்லியறைப் பள்ளி-அ அறப்பள்ளி (6-70-1):** அறப்பளீச்சுரச் சதகம் என்பது இத்தலத்து இறைவனைச் சார்த்தி இயற்றப்பட்டதாகும்.

**90. கொழுநல்-சு (7-47-1):**

**91. கோட்டுக்கா-அ (6-7-5):** "கொழுநீர் புடை சுழிக்கும் கோட்டுக்கா" என்பர் திருநாவுக்கரசர்.

**92.கோட்டுக்காடு-அ (6-70-2):** மேற்குறித்த கோட்டுக்காவும் கோட்டுக்காடும் ஒன்றோ வேறோ என்பது புலப்படவில்லை.

**கோணம்-ச (2-39-2):** இதுவும் சுந்தரர் குறித்த மாகோணமும் திருக்கோண மலையாக இருக்கலாம்.

**93. கோத்திட்டை-அ, சு (6-70-3, 6-71-2, 7-3-1):** "கோத்திட்டைக்குடி வீரட்டானம்" என்றார் அப்பரடிகள்.

**கோவந்தபுத்தூர்-அ (6-71-3):** திரு விசயமங்கை என்னும் பாடல் பெற்ற தலம். கோவந்தபுத்தூர் ஊர்ப்பெயர். விசயமங்கை என்பது கோயிற்பெயர். கோவிந்தப்புத்தூர் என வழங்குகிறது.

**கோழி-ச (2-120-4, 5):** சோழ நாட்டுத் தலைநகராகிய உறையூர். இங்குள்ள மூக்கீச்சுரம் பாடல் பெற்ற தலமாகும்.

**94. சடைமுடி-அ (6-70-3):** கோவிலடி என வழங்குகிறது. திருச்சடை முடியுடைய மகாதேவர் கோயில் திருப்பேர் நகரத்தில் அமைந்ததென்பதும், அக்கோயிலமைந்துள்ள இடம் திருப்புறம் என வழங்கியதென்பதும் பழைய கல்வெட்டாற் புலனாம். தெ.இ.க.தொ. VII. 303, 304, 307.

**95. சாலைக்குடி-அ (6-70-3):**

**96. சித்தவடம்-அ (4-2-3):** திருவதிகைப்புறத்துள்ளது. இங்குள்ள மடத்தில் நம்பியாரூரர் துயில் கொள்ளும் பொழுது சிவபெருமான் அவர் முடியில் திருவடி சூட்டினார் என்பது வரலாறு.

**97. சிவப்பள்ளி-அ (6-71-1):** மாயூரத்தையடுத்த திருச்சம்பள்ளி என்னும் ஊர் சிவப்பள்ளி என்பர் ரா.பி.சே. (தமிழகம்-ஊரும் பேரும் பக்.246)

**சிரப்பள்ளி-அ (6-71-1):** திருச்சிராப்பள்ளி என்னும் பாடல் பெற்ற தலம்.

**98. சிறப்பள்ளி-ச (2-39-4):**

**99. சூலமங்கை-அ (6-70-10):** பசுபதி கோயில்.

**செங்குன்றூர்-அ (6-70-5):** 'கொடுங்கோளூர் அஞ்சைக் களம் செங்குன்று' என்றமையால், இது மலைநாட்டுத் தலம் செங்குன்றூர் தாலூகாவின் தலையூர். விறன்மிண்ட நாயனார் பிறந்த தலம். 'குன்றை' என முன் குறிக்கப்பட்டது.

**100. செந்தில்-அ (6-23-4):** 'நம் செந்தில்மேய வள்ளி மணாளற்குத் தாதைகண்டாய்' என அப்பரடிகள் இதனை முருக வேளுக்குரிய சிறப்புடைத் தலமாகக் குறித்துள்ளார்.

**101. செம்பங்குடி (6-7-3):** *சீகாழி கோயிலுக்கு வட கிழக்கே 2 மைல் தொலைவில் உள்ள ஊர் என்பர் செங்கல்வராய பிள்ளை.*

**(சேலூர்)-** தேவராயன்பேட்டை, பாபநாசந் தாலூகாவிலுள்ளது. இதனை ஞான சம்பந்தர் வழிபட்டதாகச் சேக்கிழார் குறித்துள்ளார்.

**102. சேற்றூர்-அ (6-71-4):** *திருச்சேறை (பாடல் பெற்ற தலம்) சத்திரிய சிகாமணி வளநாட்டுச் சேற்றூர்க் கூற்றத்துச் சேற்றூர் எனக் கல்வெட்டிற் குறிக்கப்பெற்றுள்ளது.*

**103. சையமலை (6-71-10):**

**104. சோமேசம்-சோமீச்சுரம்-அ (6-70-10):** *குடந்தை சோமநாத சுவாமி கோயில்.*

**105. ஞாழல்வாயில்-அ (6-71-7):**

**106. ஞாழற்கோயில்-அ (6-71-5):** *பாடல்பெற்ற தலமாகிய திருப்பாதிரிப் புலியூர்க் கோயிலாதல் கூடும்.*

**107. தகடூர்-சு (7-12-1):** *தருமபுரி மாவட்டத்தின் தலை நகராய்த் தருமபுரி என வழங்கும் தகடூர் அதிகமானுக்கு உரியதாகும். தகட்டூர் எனப்பெயருங்கொண்டு திருத்துறைப் பூண்டியிலிருந்து பத்து மைல் தூரத்திலுள்ளதோர் ஊர் எனக் கொள்வர் செங்கல்வராய பிள்ளை.*

**108. தக்களூர்-அ.சு. (6-2-1,6-70-3,7-12-1):** *திருநள்ளாற்றிலிருந்து ஒரு மைல்.*

**தங்களூர்-சு (7-31-6):** *தனித்தலமாகத் தெரியவில்லை.*

**109. தஞ்சாக்கை-சு (7-12-9):** *பாண்டிநாட்டுத் தஞ்சாக்கூர்.*

**110. தஞ்சை-அ,சு (6-70-8, 7-12-9):** *மருகல் நாட்டுத் தஞ்சை. இக்காலத்துக் 'கீழைத் தஞ்சாவூர்' என வழங்குவது.*

**111. தஞ்சைத் தளிக்குளம்-அ (6-51-8,7-71-10):** *வெண்ணி நாட்டுத் தஞ்சை. தஞ்சைப் பெருவுடையார் கோயிலின் முன்னைய நிலை.*

**112. தண்டங்குறை-சு (7-12-2):** *இக்காலத்தில் தண்டாங்கோரை என வழங்குகிறது. 'பசுபதி கோயிலிலிருந்து இரண்டு மைல் தொலைவில் உள்ளது.*

**113. தண்டந்தோட்டம்-சு (7-12-2):** *உய்யக்கொண்டார் வளநாட்டுத் திருநறையூர் நாட்டிலுள்ளது. திருநாகேச்சுரத்தின் அருகேயுள்ளது. பேணு பெருந்துறையிலிருந்து 2 மைல்.*

**தண்டலையாலங்காடு-அ :** *தலையாலங்காடு என்ற பாடல் பெற்ற பழம்பதி. தண் என்பது அடைமொழி.*

**114. தண்டலை-அ (6-51-9):** *தண்டலை நீணெறி என்ற பாடல் பெற்ற தலமாகலாம்.*

**115. தவத்துறை (லால்குடி)-அ (6-71-11):** *'பண்டெழுவர் தவத்துறை' என்பர் அப்பரடிகள்.*

**116. தவப்பள்ளி-அ (6-71-1):**

**117. தளிச்சாத்தங் குடி-அ (6-25-10):** *பெருவேளூர்க்குத் தென் பக்கத்திலும் மணக்காலுக்கு வடபுறத்திலும் உள்ளது.*

**118. தாழையூர்-சு (7-12-1):**

**119. திங்களூர்-அ, சு (6-25-3, 7-31-6):** *அப்பூதியடிகள் பிறந்தருளிய தலம், திருவையாற்றுக்கு அருகிலுள்ளது.*

**120. திண்டீச்சரம்-சு (6-7-8, 6-70-9):** *திண்டிவனம் 'ஒய் மாநாட்டுக் கிடங்கில் திருத்திண்டீசுவரம்' என்பது கல்வெட்டு.*

**121. திரிபுராந்தகம்-அ (6-7-5):** *தெலுங்கு நாடு-கர்நூல் ஜில்லாவில் உள்ளது. S.I.I. Vol. 12. எண்.247.*

**122. திருக்குளம்-அ (6-71-10):**

**(திருச்செந்துறை)-** *காவிரிக்குத் தென்கரையில் சம்பந்தர் வழிபட்ட தலங்களில் ஒன்று. திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே உள்ளது. சம்பந்தர் பாடிய பதிகங்களில் இத்தலத்திற்குரிய பதிகம் கிடைக்கவில்லை.*

**123. திருமலை - அ (7-12-7):**

**124. திருவண்குடி-ச (2-39-10):**

**125. திருவாதிரையான் பட்டினம்-சு (7-31-6):** *பட்டுக் கோட்டை தாலுகாவிலுள்ளதோர் ஊர் என்பர்.*

**(திருவாலந்துறை):** *திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே ஏழுகல் தொலைவிலுள்ள அந்துவனல்லூர், காவிரிக்குத் தென் கரையில் சம்பந்தர் பாடிய தலங்களுள் ஒன்று. பதிகம் கிடைக்கவில்லை.*

**126. திருவேட்டி-அ (6-7-7):** *சென்னையைச் சேர்ந்த திருவேட்டீசுவரன் பேட்டை என்பர்.*

**127. துடையூர்-அ (6-71-4):** திருச்சிராப்பள்ளிக்கு அருகே யுள்ள துறையூர். திருப்பாச்சிலாச்சிரமத்திலிருந்து மூன்று மைல் என்பர் செங்கல்வராய பிள்ளை. இங்குள்ள திருக்கோயில் கடம்பந்துறை.

'நல் துறையூர்' - அப்பர், சுந்தரர் பாடிய திருத்துறையூராதல் வேண்டும்.

**128. துவையூர்-அ (6-71-4):**

**129. தெள்ளாறு-அ (6-71-10):** வடவார்க்காடு மாவட்டத்திலுள்ள தெள்ளாறு என்ற ஊராதல் வேண்டும்.

**130. தென்களங்குடி-அ (6-71-3):** பாண்டி நாட்டில் களக்குடி நாட்டின் தலைநகர். கரவந்தபுரம் என்று வழங்குகிறது.

**131. தொன்கோடி-ச (2-39-1):** கோடிக் குழகராதனுக் கோடியா என்பது திட்டமாகத் தெரியவில்லை. தனுக்கோடியில் கோயில் இல்லாமையால் இது திருக்கோடிக் குழகர் என்ற தலமாகலாம்.

**132. தென்னூர்-சு (7-12-6):**

**தென் பனையூர்-சு (7-12-8):** காவிரிக்குத் தென் கரையிலுள்ள தலமாதலின் தென் என்னும் அடைமொழி பெற்றது. பனையூர் பாடல் பெற்றதலம்.

**133. தேங்கூர்-சு (7-12-4, 7-47-6):**

**134. தேசனூர்-சு (7-31-8):**

**135. தேரூர்-அ (6-25-3):**

**136. தேவனூர்-சு (7-12-6):** 'எங்கள் பிரானுறையுந் திருத்தேவனூர்' எனப் போற்றுவர் சுந்தரர். செயங்கொண்ட சோழ மண்டலத்து உத்தமசோழ வளநாட்டுச் சிங்கபுர நாட்டுத் தேவனூர் திருநாகேசுரமுடைய மகாதேவர். M.E.R. 1928-241.

**137. தேவன்குடி-ச,அ (2-39-10,6-7-1,6-70-1,6-71-3):** திருந்து தேவன் குடி என்ற பாடல் பெற்ற தலமும், இத்தேவன் குடியும் ஒன்றோ வேறோ என்பது ஆராய்தற்குரியது.

**138. தேவீச்சுரம்-அ (6-7-5):** 'தென்னார் தேவீச்சுரம்' என்பர் அப்பர் அடிகள். இத்தலம் இதுவெனத் தெரியவில்லை. வடிவீச்சுரம் திருநெல்வேலியிலிருந்து ஒழுங்குசேரிக்குப் போகும் வழியில் 55-வது மைலில் இருப்பதாகக் கூறுவர்.

**139. தேறனூர்-சு (7-31-9):**

**140. தேனூர்-ச,அ (1-61-9,6-41-9):** *திருச்சிராப்பள்ளிக்கு அருகிலுள்ளது என்பர் செங்கல்வராய பிள்ளை. பாண்டி நாட்டிலும், கழுமல நாட்டிலும் 'தேனூர்' இருப்பதாகத் தெரிகிறது. (ஐங்குறு: மருத 55, 57)*

**141. தோழுர்-அ (6-70-5, 6-71-4):** *'இராசேந்திர சிங்க வளநாட்டு அண்டாட்டுக் கூற்றத்துத் தோழுர்' என்பது கல்வெட்டு,* S.I.I. Vol. II (Intro P 23)

**142. நங்களூர்-சு (7-31-6):**

**143. நந்திகேச்சுரம்-அ (6-71-8):** *மைசூர் நாட்டிலுள்ள 'நந்தீச்சுரம்' என்ற சிவாலயம் என்பர் ரா.பி.சே. செங்கற் பட்டு ஜில்லா கூடுவாஞ்சேரி நிலையத்திற்கு அருகிலுள்ள நந்திவரம் என்பர் செங்கல்வராய பிள்ளை. பழையாறையிலுள்ள நந்திவனம் என்பர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார்.*

**144. நம்பனூர்-சு (7-12-3):** *'நாலனூர் நரையேறுகந் தேறிய நம்பனூர்' என்பர் சுந்தரர்.*

**145. நல்லக்குடி-அ (6-71-1):** *மாயூரத்துக்கு அருகிலுள்ள நல்லத்துக்குடி யென்பர் ரா. பி. சே. இறைவன் ஆலந்துறையப்பர் எனவும், இறைவி குயிலாண்ட நாயகி எனவும் பெயர் பெறுதலால் குயிலாலந்துறை இது வென்பது அவர்கள் கருத்து- (ஊரும் பேரும்-பக்.191).*

**146. நல்லாற்றூர்-அ (6-71-4):** *புதுச்சேரிக்கு அடுத்த கண்டமங்கலம் புகைவண்டி நிலையத்திலிருந்து மூன்று மைல் தொலைவில் உள்ளது என்பர் செங்கல்வராயபிள்ளை. இது நரசிங்கன் பேட்டையருகேயுள்ள நல்லாற்றூர் நாட்டின் தலைநகர் எனக் கொள்ளுதலே பொருந்தும்.*

**147. திருநற்குன்றம்-ச (2-39-9):**

**148. நாகளேச்சுரம்-அ (6-71-8):** *சீர்காழியிலுள்ள நாகேச்சுரம் என்பர் செங்கல்வராயபிள்ளை. நன்னிலத்தையடுத்த குழிக்கரையிலுள்ள சிவாலயம் 'நங்காளீச்சுரம்' (1911-ஆண்டறிக்கை எண். 82) எனக் கல்வெட்டிற் குறிக்கப்பட்டது.*

**149. நாங்கூர்-சு (7-1-24, 7-47-6):** *நாங்கூர் நாட்டின் தலைநகர்.*

**(பாவ) நாசனூர்-சு (7-31-8):** *'பாவநாசனூர் நனிபள்ளி' எனத் தனிபள்ளிக்கு அடைமொழியாகக் கொள்ளலாம்.*

**நாட்டுத் தஞ்சை-சு :** திருநாட்டுத் தொகையிற் குறித்த தஞ்சை என்பது புலப்பட நாட்டுத்தஞ்சை எனக் குறித்தனர் போலும்.

**150. நாலனூர்-சு (7-12-3):**

**151. நாலாறு-அ (6-71-10):** 'நலந் திகழும் நாலாறு' எனப் போற்றுவர் நாவுக்கரசர்.

**152. நாலூர்-சு (7-31-6):** 'நாலூர் மயானம்' என்னும் பாடல் பெற்றதலம் இவ்வூரையடுத்துள்ளது. இவ்வூர் புறநானூற்றில் 'நாலை' எனக் குறிக்கப்பட்டுள்ளது. நாலூர் மயானம் குடவாயிலுக்குப் பக்கத்தில் திரு மெய்ஞ்ஞானம் என்ற பெயருடன் வழங்குகிறது.

**153. நாற்றானம்-சு (7-38-4):**

**154. நியமநல்லூர்-அ (6-70-5):** நியமம் நல்லூர் என இரண்டூராகப் பிரித்தலும் ஆம்.

**நியமம்-அ (6-13-4):** திருக்காட்டுப்பள்ளியை யடுத்து நேமம் என வழங்கும் ஊராதல் கூடும்.

**155. நிறைக்காடு-சு (7-47-3):**

**156. நிறையனூர்-சு (7-31-5):**

**157. நின்றவூர்-அ (7-39-11):** மனக்கோயில் அமைத்த பூசலார் நாயனார் பிறந்தருளிய திருநின்றவூர் என்னும் தலம்.

**158. நீலமலை-அ (6-71-9):** 'நீலகிரியின் நெடும் புறத்திறத்து' என்பர் இளங்கோவடிகள்.

**159. நெடுவாயில் ச-அ (2-39-9, 6-71-7):**

**160. நெய்தல்வாயில்-அ (6-71-7):** காவிரிப்பூம் பட்டினத் தருகேயிருந்த நெய்தலங்கானல் ஆகலாம். கடல் கொள்ளப் பட்டு எஞ்சிய இவ்வூர் நெய்தல்வாசல் என்ற பெயருடன் உள்ளது.

**161. நெற்குன்றம்-ச (2-39-9):** திருச்சிராப்பள்ளி ஜில்லா, முசிறி தாலுகா தின்னகோணம் என்ற ஊரிலுள்ள முதற் பராந்தகன் கல்வெட்டு இதனைத் திருநெற்குன்றம் எனக் கூறும் இறைவர் பெயர் திருமாடத்து கூனனார் எனவும், கூனாண்டார் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

*(1932-33-249-57 கல்வெட்டு);*

**162. பஞ்சாக்கை-அ (6-70-8):** *திருக்கடவூருக்கு அருகில் உள்ளது என்பர் செங்கல்வராயபிள்ளை.*

**படம் பக்கம்:** *இது தலம் அன்று. 'படம் பக்கம் கொட்டும் திருவொற்றியூர்' என்ற தொடரில் 'படம் பக்கம்' கொட்டும் என்பது திருவொற்றியூருக்கு அடைமொழி. படம் பக்கம் ஒருவகைப் பறை என்பர்.*

**(ஆன்) பட்டி-அ (6-7-10):** *கொங்குநாட்டில்கோயம்புத்தூரை யடுத்த திருப்பேரூர்த் திருக்கோயில் கல்வெட்டு ஒன்று அவ்வூரைத் 'திருவான்பட்டி' என்று குறிப்பிடுகிறது. 'பேருருறைவாய் பட்டிப் பெருமான்' எனப் போற்றுவர் சுந்தரர்.*

**163. பந்தையூர்-சு (7-31-1):**

**164. பரப்பள்ளி-அ (6-71-1):** *கோவை மாவட்டம் தாராபுரத்தை யடுத்த பரன்சேர் பள்ளி என்ற ஊர். "காங்கய நாட்டுப் பரன்சேர் பள்ளியிலுள்ள நட்டூரமர்ந்தார்" என்பது தென்னிந்தியக் கல்வெட்டு. (1908-ஆண்டறிக்கை எண். 559)*

**பருத்தி நியமம்-சு (7-47-8):** *திருப்பருதி நியமம் என்ற பாடல் பெற்ற தலம். எதுகை நோக்கிப் பருத்தி நியமம் என இடையே ஒற்றுமிக்கது.*

**165. பவ்வந்திரியும் பருப்பதம்-அ (6-7-6):** *கடலருகே யமைந்த மலையாதல் வேண்டும். இனி பவ்வத்திரியும் பருப்பதமும் எனப்பாடங்கொண்டு 'செல்லா நல்லிசைப் பொலம்பூட்டிரையன் பல்பூங்கானற் பவத்திரி'-(அகம்-340) என்ற ஊரையும் திருப்பருப்பதம் என்ற பாடல் பெற்ற தலத்தையும் குறித்த தொடராகக் கருதுதற்கும் இடமுண்டு.*

**166. பழையாறு-அ (6-13-1):** *பழையாறை என்னும் சோழர் பேரூர்.*

**167. பன்னூர்-சு (7-12-6):** *திருத்தலையூரை அடுத்துள்ள பண்ணூர் என வழங்கும் ஊராதல் கூடும்.*

**பனங்காடு-அ (6-71-6):** *திருப்புறவார் பனங்காடு என்னும் பாடல் பெற்ற தலம்.*

**பனங்காட்டூர்-அ,சு (6-70-7):** *வன்பார்த்தான் பனங்காட்டூர் என்னும் பாடல் பெற்ற தலம்.*

**168. பாங்கூர்-சு (7-12-4):**

**169. பாசனூர்-சு (7-31-8):**

பா.தாளம்-அ (6-70-7), பாம்பணி-சு (7-12-9): *பாதளீச்சுரம் என்னும் பாடல் பெற்ற தலம். பாதாள் என்பதே இதன் திரிபில் பெயர், 'பாதாள்' என்ற பாடமே பழைய ஏட்டிலும் பதிப்பிலும் காணப்படுகின்றது. 'உறைகோயில் பாதாளே' என்பர் சம்பந்தர். இத்தலம் பாம்பணி எனவும் வழங்கும்.*

**170. பாட்டூர் (7-47-1):**

**171. பாவநாசம்-அ (6-7-6):** *பொதியின் மலைச் சாரலை யடுத்த பாவநாசம் என்ற தலமாதல் வேண்டும்.*

**172. பாற்குளம்-அ (6-13-1):** *பழையாற்றிலுள்ளதொரு தீர்த்தக்குளம் என்பர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார். 'பழையாறும் பாற்குளமும் கைவிட்டிந்நாள் -புறம்பயம் நம்மூரென்று போயினாரே (6-13-1) என்பது திருத்தாண்டகம்.' 'சித்தவடமுமதிகைச் சேணுயர் வீரட்டஞ் சூழ்ந்து தத்துங் கெடிலப் புனலும் உடையார்' எனத் தலமும் தீர்த்தமும் இணைந்து வருதலால் தலப்பெயரே எண்ணி வரவேண்டுமென்ற நியதியில்லை.*

**173. பிடவூர்-அ (6-7-6, 6-70-2):** *இ ர ா சே ந் தி ர சி ங் க வளநாட்டுப்பிடவூர். திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் துறையூருக்கு அருகிலுள்ளது என்பர் செங்கல்வராயபிள்ளை, திருவிடைக் கழிக்கு அருகிலுள்ளது என்பர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார். பிடவூரில் எழுந்தருளிய ஐயனாரைப் 'பிடவூரன்' (7-96-6) எனப் போற்றுவர் சுந்தரர்.*

**174. பிரம்பில்-அ (6-70-6):** *தஞ்சையையடுத்த கள்ளப் பிரம்பூர். மங்கை நல்லூரையடுத்த பிரம்பூர் என்பர் செங்கல்வராய பிள்ளை.*

**175. பிறையனூர்-அ (6-51-3):**

**176. புதுக்குடி-அ (6-71-3):** *உய்யக்கொண்டார் வள நாட்டுத் திருவழுந்தூர் நாட்டுப் புதுக்குடி எனக் கல்வெட்டிற் குறிக்கப் பட்டுள்ளது.*

**177. புரிச்சந்திரம்-அ (6-51-9):**

**178. புரிசை நாட்டுப் புரிசை-சு (7-12-6):** *காஞ்சிபுரத்துக்கு அருகிலுள்ளது என்பர் செங்கல்வராய பிள்ளை.*

**179. புலிவலம்-அ (6-51-11, 6-70-11):** *திருவாரூரிலிருந்து இரண்டு மைலில் உள்ளதோர் ஊர். தொண்டைநாட்டுத் திருப்புலிவனம் என்றும் கொள்ளலாம் என்பர் ரா.பி. சேதுப்பிள்ளை.*

**180. புவனம்-அ (6-51-11):** *திரிபுவனம் என்பர் செங்கல்வராயபிள்ளை. இது மூன்றாங் குலோத்துங்கன் அமைத்த ஊர் என்பர். தஞ்சையை யடுத்த பூண்டியின் அருகே திரிபுவனம் என்றதோர் ஊர் கங்கை கொண்ட சோழன் செப்பேட்டிற் குறிக்கப்பட்டுள்ளது. இதனைத் தலமாகக் கொள்ளாமல் 'புவனநாதர்' என இறைவரைக் குறித்த பெயராகவும் கொள்ளலாம்.*

**181. புற்குடி-அ (7-71-3):**

**பூங்கூர்-சு (7-12-4):**

**182. பூந்துறை-அ,ச (3-92-8, 6-7-11):** *திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள சிந்துபூந்துறை என்பர் செங்கல்வராய பிள்ளை.*

**183. பூழியூர்-ச (2-39-8):** *பூமி நாட்டின் தலையூராக இருத்தல் கூடும்.*

**184. பெருந்துறை-அ (6-70-2, 6-71-11):** *திருப்பெருந்துறை என்பர் உ.வே. சாமிநாத ஐயர்அவர்கள். இதனைத் திருப்பெருந்துறை வடக்கூரில் உள்ள பழைய சிவாலயமாகக் கொள்ளலாம்.*

**185. பெருமூர்-அ (6-31-5):**

**186. பேராவூர்-அ (6-70-2, 6-71-4):** *நரசிங்கன் பேட்டையையடுத்த பேராவூர் நாட்டின் தலைநகர். ஆ(தித்)தீச்சரம் பேராவூரிலுள்ள கோயிற் பெயர்.* (364 of 1925, 109 of 1925)

**பேரூர்-ச,அ,சு (2-39-1,6-70-1,7-47-4, 7-82-10,7-90-10):** *'காஞ்சிவாய்ப் பேரூர்' எனக் குறிக்கப்படும் தலம். 'பேருருறைவாய் பட்டிப் பெருமான்' 'பேரூரர் பெருமானைப் புலியூர்ச் சிற்றம் பலத்தே பெற்றாமன்றே' என்பர் சுந்தரர். இதனைக் 'குடகத்தில்லையம்பலம்' எனவும் வழங்குவர். மேலைச்சிதம்பரம் என்ற பெயர் இப்பொருளுடையதே. இதனருகேயுள்ள காஞ்சியாறு இக்காலத்தில் நொய்யாலாறு என வழங்குகிறது. முன் ஆன்பட்டி என்றதும் இது.*

**187. பேறனூர்-அ (6-31-9):**

**188. பொதியில்மலை-ச,அ (1-50-10,1-79-1.6-70-8):** *பாபநாசம் என்பர் செங்கல்வராயபிள்ளை.*

**189. பொய்மை நல்லூர்-அ (6-70-11):** *காமற்கோட்டத்துப் பொய்கை நல்லூர் திருவகத்தீச்சுவரமுடையார் என்பது கல்வெட்டு. வடார்க்காடு ஜில்லா அரக்கோணம் தாலுகாவில்*

உள்ளது. அறந்தாங்கிக்கும் பொய்கை நல்லூர் என்ற பெயருண்டு.

**பொய்கை-அ :** பொய்கை நல்லூர் என்ற தொடரைப் பொய்கை, நல்லூர் என இரு தலமாகக் கொண்டு பொய்கை என்ற தலம் எனக் கூறுதலும் பொருந்தும்.

பொய்கை நாட்டுத் திருவையாறு எனக் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. ஆகவே, பொய்கை என்பது அந்நாட்டின் தலைநகராக இருத்தல் வேண்டும்.

**190. பொருப்பள்ளி-அ (6-71-1):** 'பொருப்பள்ளி' வரை 'வில்லாப்புர மூன்றெய்து' என்பதனைப் பொருப்பு அள்ளி வரைவில்லாப் புரம்மூன்றெய்து எனப் பிரித்தற்கும் இடமுண்டு.

**191. பொன்னூர் நாட்டுப் பொன்னூர்-சு (7-12-6):**

**போற்றூர்-ச (2-39-8):**'போற்றூரடியார் வழிபா டொழியா' என்பது அடைமொழியாதல் கூடும்.

**192. மகாமேரு மலை-அ (6-71-9):** 'மாமேரு' எனத் திருத்தாண்டகத்திற் குறிக்கப்பட்டது.

**193. மகேந்திர மலை-அ (6-71-9):** திருவானைக்காத் திருப்பதிகத்துள் கூடற் சதுக்கமாக இத்தலம் பாடப் பெற்றிருத் தலால் இதனையும் பாடல் பெற்ற தலமாகக் கொள்ளுதல் பொருந்தும்.

**மகோதை-சு (7-100-1-10):**திருவஞ்சைக்களமாகிய பாடல் பெற்ற தலம்.

**194. மணற்கால்-அ (6-25-10):** திருவாரூரையடுத்துப் பெருவேளூர்க்கு அண்மையில் உள்ளது.

**மக்கீச்சுரம்-அ (6-71-8):** அரேபியாவிலுள்ள மக்கா நகரம். அக்கீச்சுரம் என்ற தலைப்பைப் பார்க்க.

**மணிக்கோயில்-அ (6-71-5):** பெருங்கோயில் என்றாற் போன்று கோயிலமைப்பினைக் குறித்த பெயர். தனித்தலமன்று. திருவாரூர் மணிக் கோயிலமைப்பினது.

**195. மணிமுத்தம்-அ (6-7-6):**

**196. மத்தங்குடி (2-39-10):**

**197. மந்தாரம்-அ (6-70-6):**'மாயூரத்திற்கு அருகிலுள்ள ஆற்றூர் என்பர் செங்கல்வராய பிள்ளை.'

∴ 2-39-7ம் பாடலில் 'முண்டீச்சுரம்' என்பதனை மயிண்டீச்சுரம் எனப் பாடங்கொண்டு அதனைத் தனியே ஒருதலமாகக் கொண்டனர்.

**198. மறையனூர்-சு (7-31-5):**

**199. மாகாளம்-அ (பொது) (6-51-7, 7-47-5):** உஞ்சேனை மாகாளம், அம்பர் மாகாளம் என்பனவற்றைக் குறித்தல் வேண்டும்.

**200. மாகாளேச்சுரம்-அ (6-71-8):**

**201. மாகுடி-அ (6-71-3):** இக்காலத்து 'மாமாகுடி' என வழங்கும் ஊர்ப் பெயர் ஆராயத்தக்கது.

**202. மாகோணம்-சு (7-47-3):** 'கோணமாமலை' எனச் சம்பந்தர் திருக்கோணமலையைச் சிறப்பித்தலால் மாகோணம் என்றது திருக்கோணமலை என்னும் பாடல் பெற்ற தலமாகலாம்.

**203. மாட்டூர்-ச,சு- (2-39-7, 7-47-1):** மாயூரத்துக்கு அருகேயுள்ள சேவூர் என்பர் செங்கல்வராய பிள்ளை.

**204. மாணிகுடி-அ (6-71-3):** குறுமாணிகுடி என்பது குறுமாணக்குடி எனத் திரிந்து வழங்குகிறது. இது கணணார் கோயில் என்ற பாடல் பெற்ற தலமாதல் வேண்டும்.

**205. மாதானம்-அ (6-70-8):**

**மாந்துறை (தென்கரை)-:** திருமங்கலக்குடிக்கு அருகேயுள்ளது. மஞ்சணிமாமதில் சூழும் மாந்துறை வந்து வணங்கி, அஞ்சொல் தமிழ் மாலை சாத்தினார் ஆளுடைய பிள்ளையார் என்பர் சேக்கிழார். அப்பதிகம் கிடைத்திலது.

**206. மாநதி-அ (6-7-4):**

**207. மானிருபம்-அ (6-7-12):** 'வருநீர்வளம்பெருகு மாநிருபம்' என்றார் அப்பரடிகள்.

**208. மாவூர்-அ (6-25-3):**

**மாறன்பாடி-:** சம்பந்தர் 2-39-3ல் குறிப்பிட்ட 'பாடி நான்கில்' இதுவும் ஒன்று என்பர் செங்கல்வராயபிள்ளை.

**209. மிறைக்காடு-சு (7-47-3):**

**210. மிழலைநாட்டு மிழலை-சு (7-12-5):** பெருமிழலைக் குறும்பர் பிறந்தருளிய தலம். திருப்பனந்தாளுக்கு அருகே யுள்ளது. திருவீழிமிழலை யென்னும் பாடல் பெற்ற தலம் 'வெண்ணி நாட்டு மிழலை' யாகும்.

**211. முதல்வனூர்-சு (7-12-3):**

**212. முந்தையூர்-சு (7-31-1):**

**213. மூவலூர்-அ (5-65-8):** *மாயூரத்திற்கு அருகிலுள்ளது.*

**214. மூலனூர்-சு (7-12-3):**

**215. முழையூர்-அ (6-70-1, 6-41-9):** *பட்டீச்சுரத்துக்குக் கிழக்கிலும், பழையாறை வடதளிக்குத் தெற்கிலும் உள்ளது.*

**வஞ்சி-ச (2-120-4):** *மகோதை என்பதும் இதுவே.*

**216. வடபேறூர்-சு (7-31-4):**

**வடமாகறல்-ச (2-39-1):** *திருமாகறல் பாடல்பெற்ற தலமாகும். திசை நோக்கி 'வட' என அடைமொழி புணர்த்துக் கூறப் பட்டது.*

**217. வரந்தை-ச (1-61-3):**

**218. வரிஞ்சை-சு (7-39-7):** *சத்திநாயனார் பிறந்த தலம்.*

**219. வழுவூர்-அ,ச (6-70-1, 3-71-2):** *மாயூரத்தருகே யுள்ளது. 'வழுவை வீரட்டம்' என்பது அப்பர் வாக்கு.*

**220. வளவி-அ (6-13-1):** *'மதி சூடும் வளவி யானை' (6-69-9) என்ற தொடரிலும் இத்தலம் குறிக்கப்பட்டிருத்தல் காணலாம்.*

**221. வளைகுளம் (6-50-8, 6-71-10):** *வடார்க்காடு ஜில்லாவில் அரக்கோணத்தருகில் 'வளர்புரம்' என்ற பெயருடன் உள்ளது. கோயிற் பெயர் கொண்டீச்சரம்.*

**வன்னி-அ (6-70-11):** *பாடல்பெற்ற தலம். திருவீழிமி ழலைக்கு அருகேயுள்ளது. வன்னியூர் என்பது இக்காலத்தில் வழங்கும் பெயர்.*

**222. வாதவூர்-ச (2-38-7):** *திருவாதவூர்-பாண்டிநாடு. 'தென் பறம்பு நாட்டுத் திருவாதவூர்' என்பர். பாரியின் உயிர்த்தோழராகிய கபிலரும், மாணிக்கவாசகரும் பிறந்தருளிய தலம்.*

**223. வாரணாசி-ச,அ (2-39-7,6-70-6):** *காசி.*

**224. விடங்களூர்-சு (7-31-3):**

**225. விடைவாய்க் குடி-அ (6-71-3):** *திருவிடைவாய் என்ற பாடல்பெற்ற தலமாதல்கூடும். இத்தலத்தில் திருஞானசம்பந்தன் குகை' என்ற மடமும் இருந்திருக்கிறது. இடைவாய் என்றே*

ஐயடிகள் குறிப்பிடுதலால் விடைவாய்க்குடி. இதனின் வேறாதல் வேண்டும்.

**226. வீந்தமா மலை-அ (6-71-9):**

**227. விவீசுரம்-அ (6-70-8):** *கோதாவரி ஜில்லா திரா க்ஷாராமம் என்ற ஊரிலுள்ள பீமீச்சுரர் ஆலயமென்றும், வீமீச்சுரம் என்ற பெயரே விவீசுரம் எனத் திரிந்திருத்தல் கூடுமென்றும், இவ்வூரின் பெயர் 'இடர்க்கரம்பை' எனக் கல்வெட்டிற் குறிக்கப்பட்டதென்றும் கூறுவர் ரா.பி. சேது பிள்ளை.*

**228. விராடபுரம்-அ (6-70-6):**

**229. விளத்தூர்-சு-அ (7-12-8):** *விளத்தூர் நாட்டு விளத்தூர்.*

**230. விளத்தொட்டி-அ (6-70-6):** *மாயூரம் தாலுகா திருச்சிற்றம்பலம் அருகேயுள்ள ஊர்.*

**231. வெகுளீச்சுரம்-அ (6--7-11):**

**232. வெள்ளாறு--சு (7-38-4):**

**233.வெற்றியூர்-ச,அ,சு (2-39-6, 6-70-8, 7-12-3):** *இக்காலத்தில் ஐயபுரி என வழங்குகிறது. பாண்டிநாட்டில் திருவாடானையிலிருந்து எட்டு மைல்.*

**234. வேங்கூர்-அ,சு (6-70-7, 7-47-6):**
**வேதம்-அ (6-71-9):**

**235. வேதீச்சுரம்-அ (6-70-8):**

**236. வேலனூர்-சு- (7-12-3):**

**237. வேளார்நாட்டு வேளூர்-சு (7-12-8):**



# தேவாரப் பாடல் பெற்ற தலங்கள்

குறிப்பு:- *தலப்பெயரின் முன்னுள்ள எண்கள் தலவரிசை எண்ணாகவும், பின்னுள்ள எண்கள் அவ்வத் தலங்களுக்கு உரிய திருப்பதிகங்களின் மொத்தத் தொகை யெண்ணாவும் கொள்ளத் தக்கன. தலப் பெயர்களின் பின் பிறைக்கோட்டினுள் ( ) தந்த பெயர்கள், அவ்வத்தலங்களில் அமைந்த திருக்கோயிற் பெயர் களாகும். ச.அ.சு. என்ற எழுத்துக்கள் முறையே சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய ஆசிரியர்களையும், அவ்வெழுத்துக்களின் பின்னுள்ள எண்கள் அவ்வாசிரியர்கள் அருளிய திருப் பதிகங்களின் தொகையினையும் குறிப்பன.*

## சோழநாட்டுத் தலங்கள் -190

### (1) காவிரியின் வடகரை

| எண் | தலப் பெயரும் பதிகத்தொகையும் | எண் | தலப் பெயரும் பதிகத் தொகையும் |
|---|---|---|---|
| 1. | கோயில் - 11 பெரும்பற்றப் புலியூர், தில்லைச் (சிற்றம்பலம்) ச-2, அ-8,சு-1. | 8. | திருக்கலிக்காழூர்-1 ச-1. |
| 2 | திருவேட்களம்-2 ச-1, அ-1. | 9. | காவிரிப்பூம்பட்டினம்-திருச்சாய்க்காடு-4 ச-2, அ-2. |
| 3. | திருநெல்வாயில்-1 (திருவுச்சி) ச-1. | 10. | காவிரிப் பூம்பட்டினம்-(திருப்பல்லவனீச்சரம்) -2 ச-2. |
| 4. | திருக்கழிப்பாலை-8 ச-2, அ-5, சு-1. | 11. | திருவெண்காடு-6 ச-3, அ-2, சு-1. |
| 5. | திருநல்லூர்ப் (பெருமணம்)-1 ச-1. | 12. | கீழைத்திருக்காட்டுப் பள்ளி-1 ச-1. |
| 6. | திருமயேந்திரப் பள்ளி-1 ச-1. | 13. | திருக்குருகாவூர். (வெள்ளடை)-2 ச-1, சு-1. |
| 7. | தென்திருமுல்லை வாயில்-1 ச-1. | 14. | பிரமபுரம்-71 ச-67, அ-3, சு-1. |
| | | 15. | திருக்கோலக்கா-2 ச-1, சு-1 |

16. புள்ளிருக்குவேளூர்-3 ச-1, அ-2.
17. திருக்கண்ணார் கோயில்-1 ச-1.
18. திருக்கடைமுடி-1 ச-1.
19. திருநின்றியூர்-4 ச-1, அ-1, சு-2.
20. திருப்புன்கூர்-3 ச-1, அ-1, சு-1.
21. திரு நீடூர்-1 சு-1.
22. திருஅன்னியூர்-2 ச-1, அ-1.
23 திருவேள்விக்குடி-2 ச-1, சு-1.
24. திரு எதிர் கொள் பாடி-1 சு-1.
25. திருமணஞ்சேரி-2 ச-1, அ-1.
26. திருக்குறுக்கை-2 அ-2.
27. திருக்கருப்பறியலூர் ச-1, சு-1.
28. திருக்குரக்குக்கா-1 அ-1.
29. திருவாழ் கொளிபுத்தூர் ச-2, சு-1.
30. திருமண்ணிப்படிக் கரை சு-1.
31. திரு ஓமாம்புலியூர் 2 ச-1, அ-1.
32. திருக்கானாட்டு முள்ளூர்-1 சு-1.
33. திரு நாரையூர்-5 ச-3, அ-2.
34. திருக்கடம்பூர்-3 ச-1, அ-1.
35. திருப்பந் துணை நல்லூர்-2 ச-1, அ-1.
36. திருக்கஞ்சனூர்-1 அ-1.
37. திருக்கோடிகா-4 ச-1, அ-3.
38. திருமங்கலக்குடி-2 ச-1, அ-1.
39. திருப்பனந்தாள் (தாடகையீச்சரம்)-1 ச-1.
40. திருவாப்பாடி-1 அ-1.
41. திருச்சேய்ஞலூர்-1 ச-1.
42. திருந்து தேவன்குடி-1 ச-1.
43. திருவியலூர்-1 ச-1.
44. திருக்கொட்டையூர்-(கோடீச்சுரம்)-1 அ-1.
45. திரு இன்னம்பர்-5 ச-1, அ-4.
46. திருப்புறம்பயம்-3 ச-1, அ-1, சு-1.
47. கோவந்த புத்தூர் (திருவிசைய மங்கை)2 ச-1, அ-1.
48. திருவைகாவூர்-1 ச-1.
49. திருவட குரங்காடு துறை-2 ச-1.
50. திருப்பழனம்-6 ச-1, அ-5.
51. திருவையாறு-18 ச-5, அ-12இ சு-1.
52. திருநெய்த்தானம்-6 ச-1, அ-5.

53. திருப்பெரும்புலியூர்-1 ச-1
54. திருமழபாடி-6 ச-3, அ-2, சு-1.
55. திருப்பழுவூர்-1 ச-1.
56. திருக்கானூர்-2 ச-1, அ-1.
57. திரு அன்பில் (ஆலந்துறை)-2 ச-1, அ-1.
58. திருமாந்துறை-1 ச-1.
59. திருப்பாற்றுறை ச-1.
60. திருவானைக்கா-7 ச-3, அ-3, சு-1.
61. திருப்பைஞ்ஞீலி-3 ச-1, அ-1, சு-1.
62. திருப்பாச்சில் (ஆச்சிராமம்)-2 ச-1, சு-1.
63. திரு ஈங்கோய் மலை-1 ச-1.

## (2) காவிரியின் தென்கரை

64. திருவாட் போக்கி-1 அ-1.
65. திருக்கடம்பந்துறை-1 அ-1.
66. திருப்பராய்த்துறை-1 ச-1, அ-1.
67. திருக்கற்குடி-3 ச-1, அ-1, சு-1.
68. உறையூர்-1 (திருமூக்கீச்சரம்) ச-1.
69. திருச்சிராப்பள்ளி-2 ச-1, அ-1.
70. திருவெறும்பியூர்-2 அ-2.
71. திருநெடுங்களம்-1 ச-1.
72. மேலைத் திருக்காட்டுப் பள்ளி-2 ச-1, அ-1.
73. தென் பரம்பைக்குடி-1 (திருவாலம்பொழில்) அ-1.
74. திருப்பூந்துருத்தி-3 அ-3.
75. திருக்கண்டியூர் (வீரட்டம்)-2 ச-1, அ-1.
76. திருச்சோற்றுத் துறை-6 ச-1, அ-4, சு-1.
77. திருவேதிகுடி-2 ச-1, அ-1.
78. திருத் தென்குடித் திட்டை-1 ச-1.
79. திருப்புள்ளமங்கை (ஆலந்துறை)-1 ச-1.
80. திருச்சக்கரபள்ளி-1 ச-1.
81. திருக்கருகாவூர்-2 ச-1, அ-1.
82. திருப்பாலைத்துறை-1 அ-1.
83. திருநல்லூர்-5 ச-3, அ-2.
84. திரு ஆவூர்ப் (பசுபதீச்சரம்)-1 ச-1.
85. பழையாறை (திருச்சத்திமுற்றம்)-1 அ-1.

86. பழையாறை (திருப்பட்டீச்சரம்)-1 ச-1.
87. திருப்பழையாறை (வடதளி)-1 அ-1.
88. திருவலஞ்சுழி-5 ச-3, அ-2.
89. திருக்குடமூக்கு-2 ச-1, அ-1.
90. திருக்குடந்தைக் (கீழ்க்கோட்டம்)-1 அ-1.
91. திருக்குடந்தைக் (காரோணம்)-1 ச-1.
92. திரு நாகேச்சரம்-6 ச-2, அ-3, சு-1.
93. திருவிடைமருதூர்-12 ச-6, அ-5, சு-1.
94. திருத்தென்குரங்காடு துறை-2 ச-1, அ-1.
95. திருநீலக்குடி-1 அ-1.
96. திருவைகல் மாடக்கோயில்-1 ச-1.
97. திருநல்லம்-2 ச-1, அ-1.
98. திருக்கோழம்பம்-2 ச-1, அ-1.
99. திருவாவடுதுறை-8 ச-1, அ-5, சு-2.
100. திருத்துருத்தி-3 ச-1, அ-1, சு-1.
101. திருவழுந்தூர்-1 ச-1.
102. திருமயிலாடுதுறை-3 ச-2, அ-1.
103. திருவிளநகர்-1 ச-1.
104. திருப்பறியலூர் (வீரட்டம்)-1 ச-1.
105. திருச்செம்பொன் பள்ளி-3 ச-1, அ-2.
106. திருநனிபள்ளி-3 ச-1, அ-1, சு-1.
107. திருவலம்புரம் 4 ச-1, அ-2, சு-1.
108. திருத்தலைச்சங்காடு-1 ச-1.
109. திருஆக்கூர்த் (தான்தோன்றி மாடம்)-2 ச-1, அ-1.
110. திருக்கடவூர் (வீரட்டம்)-5 ச-1, அ-3, சு-1.
111. திருக்கடவூர் (மயானம்)-3 ச-1, அ-1, சு-1.
112. திருவேட்டக்குடி-1 ச-1.
113. திருத்தெளிச்சேரி-1 ச-1.
114. திருத்தருமபுரம்-1 ச-1.
115. திருநள்ளாறு-7 ச-2, அ-4, சு-1.
116. திருக்கோட்டாறு-2 ச-2.
117. திரு அம்பர்ப் (பெருந்திருக் கோயில்)-1 ச-1.
118. திருஅம்பர் (மாகாளம்)-3 ச-3.
119. திருமீயச்சூர்-1 ச-1.
120. திருமீயச்சூர் (இளங்கோயில்)-1 அ-1.
121. திருத்திலதைப்பதி-1 ச-1.
122. திருப்பாம்புரம்-1 ச-1.
123. திருச்சிறுகுடி-1 ச-1.

124. திருவீழிமிழலை-24 ச-15, அ-8, சு-1.

125. திருவன்னியூர்-1 அ-1.

126. திருக்கருவிலீக் கொட்டிட்டை-1 அ-1.

127. திருப்பேணு பெருந்துறை-1 ச-1.

128. திருநறையூர்ச் (சித்தீச்சரம்)-4 ச-3, சு-1.

129. அரிசிற்கரைத் திருப்புத்தூர்-3 ச-1, அ-1, சு-1.

130. திருச்சிவபுரம்-4 ச-3, அ-1.

131. திருக்கலயநல்லூர்-1 சு-1.

132 திருக்கருக்குடி-1 ச-1.

133. திரு[illegible]ஞ்சியம்-3 [illegible]-1, அ-2, சு-1.

134. திருநன்னிலத்துப் பெருங்கோயில்-1 சு-1.

135. திருக்கொண்டீச்சரம்-2 அ-2.

136. திருப்பனையூர்-2 ச-1, சு-1.

137. திருவிற்குடி-1 (வீரட்டம்) ச-1.

138. திருப்புகலூர்-8 ச-2, அ-5, சு-1.

139. திருப்புகலூர் (வர்த்த பதனீச்சரம்)-1 ச-1.

140. திரு இராமனதீச்சரம்-1 ச-1.

141. திருப்பயற்றூர்-1 அ-1.

142. திருச்செங்காட்டங்குடி ச-2, அ-1.

143. திருமருகல்-3 ச-2, அ-1.

144. திருச் சாத்தமங்கை (அயவந்தி)-1 ச-1.

145. திருநாகைக் (காரோணம்) 7 ச-2, அ-4, சு-1.

146. திருச்சிக்கல்-1 ச-1.

147. திருக் கீழ்வேளூர்-2 ச-1, அ-1.

148. திருத்தேவூர்-2 ச-2.

149. திருப்பள்ளியின் முக்கூடல்-1 அ-1.

150. திருவாரூர்-34 ச-5, அ-21, சு-8.

151. திருவாரூர் (அரனெறி)-2 அ-2.

152. திருவாரூர்ப் (பரவையுண் மண்டளி)-1 சு-1.

153. திருவிளமர்-1 ச-1.

154. திருக்கரவீரம்-1 ச-1.

155. திருப்பெரு வேளூர்-2 ச-1, அ-1.

156. திருத்தலையாலங் காடு-1 அ-1.

157. திருக்குடவாயில்-2 ச-2.

| | | | |
|---|---|---|---|
| 158. | திருச்சேறைச் (செந்நெறி)-3 ச-1, அ-2. | 173. | திருத்தண்டலை நீணெறி-1 ச-1. |
| 159. | திருநாலூர் (மயானம்)-1 ச-1. | 174. | திருக்கோட்டூர்-1 ச-1. |
| 160. | திருக்கடுவாய்க் கரைப் புத்தூர்-1 அ-1. | 175. | திருவெண்டுறை-1 ச-1. |
| 161. | திருவிரும்பூளை-1 ச-1. | 176. | திருக்கொள்ளம் பூதூர்-1 ச-1. |
| 162. | திருவரதைப் பெரும்பாழி-1 ச-1. | 177. | திருப்பேரெயில்-1 அ-1. |
| 163. | திரு அவளிவ ணல்லூர்-2 ச-1, அ-1. | 178. | திருக்கொள்ளிக் காடு-1 ச-1. |
| 164. | திருப்பருதி நியமம்-1 ச-1. | 179. | திருத்தெங்கூர்-1 ச-1. |
| 165. | திருவெண்ணியூர்-3 ச-1, அ-2. | 180. | திருநெல்லிக்கா-1 ச-1. |
| 166. | திருப்பூவனூர்-1 அ-1. | 181. | திருநாட்டியத்தான் குடி-1 சு-1. |
| 167. | திருப்பாதாளீச்சரம்-1 ச-1. | 182. | திருக்காறாயில்-1 சு-1. |
| 168. | திருக்களர்-1 ச-1. | 183. | திருக்கன்றாப்பூர்-1 அ-1. |
| 169. | திருச்சிற்றேமம்-1 ச-1. | 184. | திருவலிவலம்-4 ச-2, அ-2, சு-1, |
| 170. | திருச்சாத்தானம்-1 ச-1. | 185. | திருக்கைச் சினம்-1 ச-1. |
| 171. | திருஇடும்பாவனம்-1 ச-1. | 186. | திருக்கோளிலி-4 ச-1, அ-2, சு-1. |
| 172. | திருக்கடிக்குளம்-1 ச-1. | 187. | திருவாய்மூர்-3 ச-1, அ-2. |
| | | 188. | திருமறைக்காடு-9 ச-4, அ-4, சு-1. |
| | | 189. | திரு அகத்தியான் பள்ளி-1 ச-1. |
| | | 190. | திருக்கோடிக் குழகர்-1 சு-1. |

## 2. ஈழநாட்டுச் சிவத்தலங்கள்-2

| | | | |
|---|---|---|---|
| 191. | திருக்கோண மாமலை-1 ச-1. | 192. | மாகோட்டத் (திருக்கேதீச்சரம்)-2 ச-1, சு-1. |

## 3. பாண்டி நாட்டுச் சிவத்தலங்கள்

| | | | |
|---|---|---|---|
| 193. | *மதுரை (திரு ஆலவாய்)-11 ச-9, அ-2.* | 199. | *திருப்புனவாயில்-2 ச-1, சு-1.* |
| 194. | *திரு ஆப்பனூர்-1 ச-1.* | 200. | *திருஇராமேச்சுரம்-3 ச-2, அ-1.* |
| 195. | *திருப்பரங்குன்றம்-2 ச-1, சு-1.* | 201. | *திரு ஆடானை-1 ச-1.* |
| | | 202. | *திருக்கானப்பேர்-2 ச-1, சு-1.* |
| 196. | *திருவேடகம்-1 ச-1.* | | |
| 197. | *திருக்கொடுங்குன்றம்-1 ச-1.* | 203. | *திருப்பூவணம்-4 ச-2, அ-1, சு-1.* |
| 198. | *திருப்புத்தூர்-2 ச-1, அ-1.* | 204. | *திருச்சுழியல்-1 சு-1.* |
| | | 205. | *திருக்குற்றாலம்-2 ச-2.* |
| | | 206. | *திருநெல்வேலி-1 ச-1.* |

## 4. மலை நாட்டுச் சிவத்தலம் - 1

207. *திருக்கொடுங்கோளூர் (அஞ்சைக்களம்)-1 சு-1.*

## 5. கொங்கு நாட்டுச் சிவத்தலங்கள் - 7

| | | | |
|---|---|---|---|
| 208. | *திருப்புக்கொளியூர் (அவிநாசி) சு-1.* | 212. | *திருவெஞ்சமாக்கூடல்-1 சு-1.* |
| 209. | *திருமுருகன் பூண்டி-1 சு-1.* | 213. | *கறையூர் (திருப்பாண்டிக் கொடுமுடி)-3 ச-1, அ-1, சு-1.* |
| 210. | *திருநணா-1 ச-1.* | | |
| 211. | *திருச்செங்குன்றூர்-1 ச-1.* | 214. | *திருக்கருவூர் (ஆனிலை)-1 ச-1.* |

## 6. நடுநாட்டுச் சிவத்தலங்கள்-22

| | | | |
|---|---|---|---|
| 215. | *திருநெல்வாயில் (அரத்துறை)-3 ச-1, அ-1, சு-1.* | 216. | *திருப்பெண்ணாகடம் (திருத்தூங்கானை மாடம்)-2 ச-1, அ-1.* |

217. திருக்கூடலை யாற்றூர்-1 சு-1.
218. திரு எருக்கத்தம் புலியூர்-1 ச-1.
219. திருத்தினை நகர்-1 சு-1.
220. திருச்சோபுரம்-1 ச-1.
221. திரு அதிகைத் (திரு வீரட்டானம்)-18 ச-1, அ-16, சு-1.
222. திருநாவலூர்-1 சு-1.
223. திருமுதுகுன்றம்-11 ச-7, அ-1, சு-3.
224. திருநெல் வெண்ணை-1 ச-1.
225. திருக்கோவலூர் (வீரட்டம்)-2 ச-1, அ-1.
226. திரு அறையணி நல்லூர்-1 ச-1.
227. திரு இடையாறு சு-1.
228. திருவெண்ணெய் நல்லூர் (திருவருட்டுறை)-1 சு-1.
229. திருத்துறையூர்-1 சு-1.
230. திருவடுகூர்-1 ச-1.
231. திருமாணிகுழி-1 ச-1.
232. திருப்பாதிரிப் புலியூர்-2 ச-1, அ-1.
233. திருமுண்டீச்சரம்-1 அ-1.
234. திருப்புறவார் பனங்காட்டூர்-1 ச-1.
235. திருவாமாத்தூர்-5 ச-2, அ-2, சு-1.
236. திரு அண்ணாமலை-5 ச-2, அ-3.

## 7. தொண்டை நாட்டுச் சிவத்தலங்கள் - 32

237. திருக்கச்சி (திருவேகம்பம்)-12 ச-4, அ-7, சு-1.
238. திருக்கச்சி (திருமேற்றளி)-2 அ-1, சு-1.
239. திருக்கச்சி (திருஓண காந்தன்றளி)-1
240. திருக்கச்சி(அனேக தங்காவதம்)-1 சு-1.
241. திருக்கச்சி (நெறிக் காரைக் காடு)-1 ச-1.
242. திருக்குரங்கணின் முட்டம்-1
243. திருமாகறல்-1 ச-1.
244. திரு ஒத்தூர்-1 ச-1.
245. திருவன்பார்த்தான் பனங் காட்டூர்-1 சு-1.
246. திருவல்லம்-1 ச-1.
247. திருமாற்பேறு-6 ச-2, அ-4.
248. திருவூறல்-1 ச-1.
249. திருஇலம்பயங் கோட்டூர்-1 ச-1.

| | | | |
|---|---|---|---|
| 250. | திருவிற்கோலம்-1 ச-1. | 259. | திருவேற்காடு-1 ச-1. |
| 251. | பழையனூர் (திருவாலங்காடு)-4 ச-1, அ-2, சு-1. | 260. | புன்னையங்கானல் திருமயிலாப்பூர்-1 ச-1. |
| 252. | திருப்பாசூர்-3 ச-1, அ-2. | 261. | திருவான்மியூர்-3 ச-2, அ-1. |
| 253. | திருவெண்பாக்கம்-1 சு-1. | 262. | திருக்கச்சூர் (ஆலக்கோயில்)-1 சு-1. |
| 254. | திருக்கள்ளில்-1 ச-1. | 263. | திருஇடைச்சுரம்-1 ச-1. |
| 255. | திருக்காளத்தி-4 ச-2, அ-1, சு-1. | 264. | திருக்கழுக்குன்றம்-3 ச-1, அ-1, சு-1. |
| 256. | திருஒற்றியூர்-8 ச-1, அ-5, சு-2. | 265. | திரு அச்சிறு பாக்கம்-1 ச-1. |
| 257. | திருவலிதாயம்-1 ச-1. | 266. | திருவக்கரை-1 ச-1. |
| 258. | திருவட திருமுல்லை வாயில்-1 சு-1. | 267. | திரு அரசிலி-1 ச-1. |
| | | 268. | திரு இரும்பை மாகாளம்- ச-1. |

## 8. துளுவநாட்டிலுள்ள சிவத்தலம் - 1

269. திருக்கோகரணம் -2

ச-1, அ-1.

## 9. வடநாட்டுச் சிவத்தலங்கள் - 5

| | | | |
|---|---|---|---|
| 270. | திருப்பருப்பதம்-3 ச-1, அ-1, சு-1. | 273. | திருக்கேதாரம்-2 ச-1, சு-1. |
| 271. | திரு இந்திர நீலப் பருப்பதம்-3 ச-1. | 274. | திருநொடித்தான் மலையாகிய கயிலாயம்-7 ச-2, அ-4, சு-1. |
| 272. | திரு அனேகதங் காவதம்-1 ச-1. | | |

# பொதுப்பதிகங்கள்

## சம்பந்தர்

| பதிகத்தின் பெயர் | பதிக முதற் குறிப்பு | குறிப்பு |
|---|---|---|
| திருநீல கண்டம் | அவ்வினைக் கிவ்வினை | கொடிமாடச் செங்குன்றூரில் அடியார்களுக்குச் சுரநோய் நீங்கப் பாடியது. |
| க்ஷேத்திரக் கோவை | ஆரூர் தில்லை யம்பலம் | திருத்தலங்களையெல் லாம்கோவைப் படச் சேர்த்துப் பாடியது. |
| கோளறு திருப்பதிகம் | வேயுறு தோளிபங்கன் | சிவனடியார்களுக்குக் கோள்களாலுளவாம் தீமைநீங்கப் பாடியது. |
| பஞ்சாக்கரத் திருப்பதிகம் | துங்சலுந் துஞ்சலிலாத | உபநயன காலத்தில் எல்லா மந்திரங் களுக்கும் திரு ஐந் தெழுத்தே மேம் பட்டதென்று பாடியது. |
| தனித்திருவிருக்குக் குறள். | கல்லா னீழல் | 'இருக்கு' என்னும் குறள் யாப்பினால் வேதப் பொருளைப் பாடியது. |
| நமச்சிவாயப் பதிகம் | காதாலாகிக் கசிந்து | திருவைந்தெழுத்தினை யோதுதலே உலகத்தார் உய்யும் வழியென்று உரைத்தது. |
| திருப்பாசுரம் | வாழ்க அந்தணர் | ஏடு எதிர்த்துச் செல்லப் பாடியது. |

# அப்பர்

| | | |
|---|---|---|
| சிவனெனு மோசை | சிவனெனு மோசை | சிவ நாமமே நாமமெனப் பாடியது. முதற் குறிப்பினாற் பெற்ற பெயர். |
| திருஅங்க மாலை | தலையே நீ வணங்காய் | அங்கங்களை நோக்கி இறை வழிபாட்டில் ஈடுபடும் இயல்பினை அறிவுறுத்துவது. |
| நமச்சிவாயப் பதிகம் | சொற்றுணை வேதியன் | கல்லொடு கட்டிக் கடலில் வீழ்த்திய காலத்தில் அப்பர் அருளியது. |
| தச புராணம் | பருவரையொன்று சுற்றி | சிவனது அநாதி முறைமையான பழைய வரலாறு களைப் பரவிப் போற்றுவது. |
| பாவநாசப் பதிகம் | பற்றற்றார் சேர் | பதினோராம் பாட்டிறுதியில் 'என்பார் பாவம் நாசமே' என முடிதலால் இறுதித் தொடராற் பெற்ற பெயர். |
| விடந்தீர்த்த திருவெதிகம் | ஒன்று கொலாமவர் | அப்பூதியடிகளாரது மூத்த மைந்தன் திருநாவுக்கரசு விடந் தீர்ந்து உய்யப் பாடியரு ளிய திருப்பதிகம். |

| | | |
|---|---|---|
| நினைந்த திரு நேரிசை | முத்தினை மணியைப் பொன்னை | நெஞ்சம் ஈசனை நினைந்த விதத்தைப் பாடியது. |
| தனித்திருநேரிசை | தொண்டனேன் பட்டதென்னே | ஒரு தலத்திற்குரிமையின் மீது தனித்தமைந்த பதிகம். |
| ,, | மருளவா மனிதனாகி | ,, |
| ,, | கடும்பகனட்ட மாடி | ,, |
| குறைந்த திருநேரிசை | வென்றிலேன் புலங் களைந்தும் | இறைவனை நோக்கிக் குறையிரந்த முறையில் அமைந்தது. |
| ,, | தம்மானங் காப்பதாகி | ,, |
| ஆருயிக்கு திருவிருத்தம் | எட்டாந் திசைக்கு மிரு திசைக்கும் | பாட்டினுதி தோறும் ஆருயிரேவென்று முடிவது. |
| பசுபதி திருவிருத்தம் | சாம்பலைப் பூசி தலையிற் | பாட்டியிறுதி தோறும் பசுபதியே என்று முடிவது. |
| சரக்கறைத் திருவிருத்தம் | விடையும் விடைப் பெரும் | சிவபெருமானுக்குரிய சின்னங்களாகிய பொருள்களை வைக்குஞ் சரக்கறையாகத் தம் நெஞ்சைக் குறித்தது. |
| தனித் திரு விருத்தம். | வெள்ளிக் குழைத்துணி | ஒரு தலத்திற்குரிமையின்றித் தனித்தமைந்த திருப்பதிகம். |

| | | |
|---|---|---|
| ,, | பவளத்தடவரை போலுந் | ,, |
| தனிக் குறுந் தொகை | ஒன்று வெண் பிறைக் கண்ணி | ஒன்று முதற் பத்து வரை எண் கொண்டு பாடிய பாடல்களை யுடையது. |
| ,, | மாசில் வீணையு மாலை மதியமும் | சமணர்களால் நீற்றறையில் அடைக்கப் பட்டிருந்த பொழுது பாடியது. |
| ,, | ஏயிலானை யெனிச்சை | ஒரு தலத்திற்குரிமை யின்றிப் பொது வாக அமைந்தது. |
| காலாபாராயணத் திருக் குறுந் தொகை | கண்டு கொள்ளரி யானை | காலன் முதலிய நமன் தூதரை நோக்கிச் சிவனடியார்களின் பெருமையை அறிவுறுத்துவது. |
| மறக்கிற்பனே யென்னுந் திருக் குறுந் தொகை | காசனைக் கனலைக் கதிர் | மறவேனென்னுங் குறிப்புப்பட 'மறக்கிற்பனே' எனப்பாடல் தோறும் பரவியது. |
| தொழற் பாலதே யென்னுந் திருக் குறுந் தொகை | அடைந்தானையமரர் தொழப்படும் | என்தலை சிவனை வணங்கும் தன் மையுடையது என்று பாடியது. |
| இலிங்க புராணத் திருக்குறுந் தொகை | புக்கணைந்து புரிந்தலர் | திருமால் பிரமன் இருவரும் இறைவனது அடியும் முடியும் தேடிய பொழுது |

| | | |
|---|---|---|
| | | இறைவன் அவர்களுக்குத் தேடவொண்ணாமல் முடிவில் சிவலிங்கத்தில் தோன்றியருளிய திறத்தினைக் கூறுவது. |
| மனத்தொகைத் திருக்குறுந் தொகை | பொன்னுள்ளத்திரள் | நின்னுருவம் என் மனத்துள் தொக்கதென்று சிவபெருமானை நோக்கிப் பாடியது. |
| சித்தத்தொகைத் திருக் குறுந் தொகை | சிந்திப்பார் மனத்தான் | இறைவன் சிந்திக்குஞ் சித்தத்துள் வீற்றிருப்பானென்று பாடியது. |
| உள்ளத்தொகைத் திருக்குறுந் தொகை | நீறலைத்ததோர் மேனி | தனதுள்ளம் சிவபெருமானைக் கண்டது பற்றி மகிழ்ந்து பாடியது. |
| பாவநாசத் திருக் குறுந்தொகை | பாவமும் பழி பற்றற்ற | இறைவனை உள்ளத்தால் நினைந்து வாழ்த்தி வணங்கினார்க்கே பாவம் நீங்குமென்று பாடியது. |
| ஆதிபுராணத் திருக் குறுந் தொகை | வேதநாயகன் வேதியர் | இறைவனது மிகப் பழைய தொன்மையினைப் பரவிப் போற்றியது. |
| க்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகம் | தில்லைச் சிற்றம் பலம் | இறைவன் எழுந்தருளிய திருத்தலங்களைக் கோவையாகச் சேர்த்துப் பாடியது. |

| | | |
|---|---|---|
| அடைவு திருத் தாண்டகம் | பொருப்பள்ளி வரை வில்லா | சிவத் தலங்களின் பெயர்களை அடைவுபடத் தொகுத்துரைத்து அவற்றைப் புகழ்ந்தேத்தித் தொழுவோர் சிவகதி யடைவ ரென்றது. |
| பலவகைத் திருத் தாண்டகம் | நேர்ந் தொருத்தி யொருபாக | சிவத் தலங்களையும் இறைவனையும் பலவகையாலும் துதித்துப் போற்றுவது. |
| நின்ற திருத் தாண்டகம் | இருநிலனாய்த் தியாகி | சிவபெருமான் உலகெலமாகிப் பிரிவின்றிக் கலந்து நின்றருளிய திறத்தை விரித் துரைப்பது. |
| தனித் திருத் தாண்டகம் | அப்பனீயம்மை நீ | ஒரு தலத்திற்குரிய தன்றிப் பொது வாக அமைந்தது. |
| தனித் திருத் தாண்டகம் | ஆமயந்தீர்ந் தடியேனை | ,, |
| வினாவிடைத் திருத்தாண்டகம் | அண்டங்கடந்த சுவடு முண்டோ | சிவபெருமானது திருக்கோலத்தியல் பினைக் குறித்து வினவும் முறையிலும் விடையிறுக்கும் முறையிலும் அமைந்த திருப் பாடல்களை யுடையது. |
| மறுமாற்றத் திருத் தாண்டகம் | நாமார்க்கும் குடியல்லோம் | அமணர் போதனை யாலழைக்க ஏவிய பல்லவனுடைய |

| | | |
|---|---|---|
| | | மந்திரி முதலியோரைப் பார்த்து யான் நும்மோடு வாரேன்என மறுமொழி கூறும் நிலையிற் பாடிய திருப்பதிகம். |

## சுந்தரர்

| | | |
|---|---|---|
| திருநாட்டுத் தொகை | வீழக் காலனைக் கால்கொடு | இறைவன் கோயில் கொண்டருளிய நாடுகளையும் அந்நாட்டுத் தலையூர்களையும் தொகுத்துப் போற்றிய திருப்பதிகம். |
| திருத்தொண்டத் தொகை | தில்லை வாழ்ந்தணர் தம் அடியார்க்கும் அடியேன் | சிவபெருமானுடைய அடியார்களையெல்லாம் எடுத்தோதி அவர்களுக்கு அடியேன்எனத் தொகுத்துரைக்கும் திருப்பதிகம். |
| முடிப்பது கங்கை | முடிப்பது கங்கையும் | முடிப்பது கங்கையென்று தொடங்குதலின் இது முதற் குறிப்பாற் பெற்ற பெயர். |
| ஊர்த் தொகை | காட்டூர்க் கடலே | இறைவன் கோயில் கொண்டருளிய ஊர்களைத் தொகுத்துப் பரவிய திருப்பதிகம். |



வித்துவான் க. வெள்ளைவாரணன்

# பன்னிரு திருமுறை வரலாறு

## இரண்டாம் பகுதி

## (8 - 12 திருமுறைகள்)

# பன்னிரு திருமுறை வரலாறு – 2

## உள்ளே...

### எட்டாந் திருமுறை



### ஒன்பதாந் திருமுறை

## பத்தாந் திருமுறை



## பதினொராந் திருமுறை

## பன்னிரண்டாந் திருமுறை

உ

சிவமயம்

# பன்னிரு திருமுறை வரலாறு – 2

## திருவாதவூரடிகள்

சிவநெறிப் பனுவலாகிய பன்னிரு திருமுறைகளுள் எட்டாந் திருமுறையாகத் திகழ்வன திருவாசகம் திருச்சிற்றம்பலக் கோவையென்பன. அன்பினால் ஓதுவார் கேட்பார் ஆகிய அனைவருள்ளத்தையும் உருக்கவல்ல இச்செழும் பாடல்களைத் திருவாய்மலர்ந்தருளிய திருவருட்செல்வர், சைவசமயக் குரவர் நால்வருள் ஒருவராகிய திருவாதவூரடிகளாவர். முன்னைத் தவத்தின் பயனாக முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானே குருவாக எளிவந்து அருள் செய்யப்பெற்ற இப்பெருந்தகையார், பழுதிலாச் செந்தமிழாகிய மணிவார்த்தைகளால் இறைவனது பொருள்சேர் புகழை விரித்துரைத்துப் போற்றினமையால் மாணிக்கவாசகர் என அழைக்கப்பெற்றார்.

திருவாதவூரடிகளாகிய இவரது வரலாறு, கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த செல்லிநகர்ப் பெரும்பற்றப்புலியூர் நம்பி பாடிய திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்திலும், கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த பரஞ்சோதி முனிவர் பாடிய திருவிளையாடற் புராணத்திலும் இவர்க்குப் பின் வந்த கடவுள் மாமுனிவர் பாடிய திருவாதவூரடிகள் புராணத்திலும் திருவுத்தரகோசமங்கைப் புராணம் முதலிய பிற்காலத் தலபுராணங்களிலும் விரிவாகவும் சுருக்கமாகவும் விளக்கப் பெற்றுள்ளது. இப்புராணங்கள் யாவும் மாணிக்கவாசகர் வாழ்ந்த காலத்திற்குப் பல நூற்றாண்டுகள் பிற்பட்டுத் தோன்றியன வாதலின் அடிகளது வரலாற்றைக் கூறும் முறையில் இவற்றிடையே சிற்சில வேறுபாடுகள் காணப்படுகின்றன. இந்நூல்கள் கூறும் முறையில் அடிகளது வரலாறு பற்றிய செய்திகளை நிரல்படத் தொகுத்து நோக்குவோமாக.

### 1. திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்

மதுரைத் திருவாலவாயில் வீற்றிருந்தருளும் சோமசுந்தரக் கடவுள் தன்பால் மெய்யன்புடைய அடியார்கள் பொருட்டு நிகழ்த்தியருளிய அற்புத நிகழ்ச்சிகளாகிய திருவிளையாடல்கள் அறுபத்து நான்கினையும் விரித்துக்கூறுந் தமிழ் நூல்களுள் மிகவுந் தொன்மையுடையதாக விளங்குவது திருவால

வாயுடையார் திருவிளையாடற் புராணமாகிய இதுவேயாகும். இது வடமொழியில் உத்தர மகாபுராணத்திலுள்ள சாரசமுச்சயம் என்ற பகுதியிற் கூறப்பட்டவற்றை ஆதாரமாகக் கொண்டு இயற்றப்பட்டதென்பர். இதன்கண் விரித்துரைக்கப் பெறும் அறுபத்துநான்கு திருவிளையாடல்களுள் ஞானோபதேசஞ் செய்த திருவிளையாடல் நரி குதிரையான திருவிளையாடல், குதிரை நரியான திருவிளையாடல், மண்சுமந்த திருவிளையாடல் ஆகிய நான்கும் அன்புடைத் தொண்டராகிய திருவாதவூரடிகள் பொருட்டு ஆலவாயிறைவரால் நிகழ்த்தப் பெற்ற அருட்செயல்களாகும். இறைவன் செய்தருளிய இத் திருவிளையாடல்களை விளக்கும் நிலையில் திருவாதவூரடிகளது வரலாறு இப் புராணத்தில் இடம்பெற்றுளது.

செந்தமிழ்ப் பாண்டி நாட்டிலே பொய்யா வாய்மொழிக் கபிலர் என்னும் புலவர் பெருமான் பிறந்தருளியதும் வாயுதேவனால் வழிபடப்பெற்ற சிவபெருமான் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருப்பதும் ஆகிய திருவாதவூரிலே மானமங்கலத்தார் என அழைக்கப்பெறுந் தொன்மையமைந்த ஆமாத்தியர் குலத்திலே இறைவனருளால் சிவகணத்தலைவரொருவர் வந்து பிறந்தருளினார். அவர்க்கு வாதவூரர் என்ற பெயர் இடப்பெற்றது. திருவாதவூரர் முன்னைப் பிறப்பின் தொடர்பால் அறிவுநூல்கள் எல்லாவற்றையும் பதினாறாண்டு நிரம்புவதற்கு முன்னரே கசடறக் கற்றுணர்ந்தார். அந்நாளிற் பாண்டி நாட்டையாண்ட வேந்தர் பெருமானாகிய பாண்டியன், வாதவூரரது கல்வியறிவாற்றலைக் கேள்வியுற்று அவரைத் தன்பால் வர வழைத்துத் 'தென்னவன் பிரமராயர்' என்ற சிறப்புப் பெயருடன் பல வரிசைகளும் தந்து பாராட்டித் தன் அமைச்சர்களில் ஒருவராக அமர்த்திக் கொண்டான். அரசனாற் சிறப்புப் பெற்ற திருவாதவூரர், அவனுடைய நால்வகைச் சேனைகளையும் நன்கு பாதுகாக்கவல்ல தலைமையமைச்சராய்ப் போர் செய்தலும் பகைவர் பால் திறைகொள்ளுதலும் நண்பராகிய வேந்தர்க்கு இனியன புரிதலும் ஆகிய அரசியற் கடமைகளைத் திருத்தமுறச் செய்து வந்தார். தன்னலமற்ற அமைச்சர் தலைவராய் விளங்கும் அப்பெருந்தகையார், மதுரைச் சொக்கநாயகனாகிய சிவபெருமான்பால் அளவிலாப் பேரன்புடையராய்ச் சிவனடியார்க்கும் தம்முடைய சுற்றத்தார்க்கும் வேண்டுவன புரிந்து உலக மக்கள் அனைவர்க்கும் நலந்தரும் நல்லறங்களைச் செய்வாராயினர். இவரது அமைச்சுரிமைச் செயலால் பாண்டியனுக்கு முன்னையினும் பன்மடங்கு செல்வம் பெருகுவதாயிற்று. அது கண்டு மன்னன் அளவிலா மகிழ்ச்சியடைந்தான்.

ஒரு நாள் பாண்டிய மன்னன் அரசவையிலே வீற்றிருந்த பொழுது குதிரைத்துறைக் காவலாளர் சிலர் அரசன் திருமுன் வந்து வணங்கி நின்று, 'வேந்தர் பெருமானே, நம் சேனையைச் சேர்ந்த குதிரைகளிற் பெரும்பாலான பலவகை நோய்களால் இறந்து போயின. எஞ்சியுள்ளன சிலவும் மெலிவுற்று இறக்கும் நிலையிலுள்ளன. பகைவர் நாட்டினை வென்று கொள்ளும் மன்னவர்பால் ஒரு நூறாயிரம் குதிரைகளேனும் அவசியம் வேண்டப்படுவன' எனத் தெரிவித்தார்கள். அது கேட்ட பாண்டியன், வாதவூரரை அழைத்து 'அமைச்சர் தலைவரே, நம் குதிரைத்துறைக் காவலர் நம்முடைய குதிரைகளெல்லாம் நோயால் இறந்து போயின எனக் கூறிச் சென்றார்கள். நீவிர் நம் கருவூலத்திலிருந்து வேண்டுமளவும் பொருள்களை யெடுத்துக் கொண்டு குதிரைகள் வந்திறங்கும் கடற்றுறைப் பட்டினத்தை யடைந்து நல்லிலக்கணம் வாய்ந்த சிறந்த குதிரைகளைத் தேர்ந்து வாங்கி வருவீராக' எனப் பணித்தான். வாதவூரரும் மன்னனை வாழ்த்தி 'அவ்வாறே விரைவிற் செய்வேன்' எனக் கூறி அரசன்பால் விடைபெற்று நிதியறையிற் சென்று வேண்டும் பொருள்களை யெடுத்துக்கொண்டு கணக்கிற் பதிவுசெய்து அப்பொருளைப் பெட்டகத்திற்கட்டி, நம்பிக்கைக்குரிய ஏவலாளர்களைத் தமக்குத் துணையாகக் கொண்டு அவர்களிடம் பொருட் பெட்டகத்தை ஒப்புவித்துப் பயணப்படுத்தினார்; திருவாலவாய்த் திருக்கோயிலையடைந்து பொற்றாமரையில் நீராடி நியமங்கள் செய்து அங்கயற்கண்ணியொடும் அமர்ந்த ஆலவாயிறைவரைப் பணிந்து போற்றினர்; 'எல்லாம் வல்ல இறைவனே, பாண்டிய மன்னனுக்குரிய பெரும்பொருளைக் கொண்டு அடியேன் முடிக்கக்கருதிய காரியம் இடையூறின்றி இனிது நிறைவேற அருள்புரிவாயாக' என வேண்டி நின்றார். அவ்வளவில் இறைவனைப் பூசிக்கும் இயல்பினராகிய அந்தணர் ஒருவர், திருவாதவூரரையடைந்து உவப்புடன் திருநீறு நல்கினர். திருவருள் வண்ணமாகிய அத்திருநீற்றினை ஆர்வமுடன் வாங்கியணிந்து கொண்ட வாதவூரர், தாம் கருதிச் செல்லும் காரியம் நன்கு நிறைவேறுமென்னும் துணிபுடையராய் மகிழ்ந்து சேனைகள் சூழச் சிவிகையிலேறி மதுரையை விட்டுப் புறப்பட்டார். நெடுந்தூரஞ் சென்று வழியிடையே யமைந்த கானப்பேர் என்னுந் திருப்பதியை யடைந்து அங்குக் கோயில் கொண்டருளிய சிவபெருமான் திருவடிகளைப் பணிந்து போற்றினார். பின் அங்கிருந்து புறப்பட்டுப் பலகாத தூரங்கடந்து சென்று மொய்யார் தடம் பொய்கை யென்னுந் தீர்த்தச் சிறப்பமைந்த திருப்பெருந்துறையை அணுகினார்.

பெருந்துறை புகுந்த வாதவூரர், உள்ளமும் உரையும் வேறு தன்மையடைய, அன்பு கரைகடந்து மீதூர இருகண்களிலும் நீரொழுக அழல் சேர் மெழுகென நெஞ்சம் நெகிழ்ந்துருகப் பெற்றார்; இதற்கு முன் செல்வத்தின் மேலிருந்த அவாவானது அற்றுப்போகத் தமது நெஞ்சம் ஒருவழி ஒடுங்குதலைக் கண்டார்; மிகவும் வியந்தார்; இவ்விடத்தில் ஏதோ ஒரு புதுமையிருத்தல் வேண்டுமென உணர்ந்தார்; 'கொணர்ந்த பொருளுடன் இங்கேயே தங்கியிருப்போம்' எனத் தம் மனத்துள் எண்ணினார்; தம்முடன் வந்த சேனைத்தலைவர் முதலிய ஏவலாளர்களை நோக்கி 'ஆடி மாதத்தில் குதிரை வருதல் இல்லை; ஆவணித் திங்களில்தான் வந்திறங்கும். அப்பொழுது நல்ல குதிரைகளை யானே வாங்கிக்கொண்டு வருவேன். நீங்கள் இப்பொழுதே பாண்டிய மன்னனை யடைந்து இச்செய்தியைத் தெரிவிப்பீராக' என்று சொல்லி அவர்களைப் போகவிடுத்தார். ஏவலாளர்களும் அவ்வாறே மதுரைக்குச் சென்று மன்னனைப் பணிந்து வாதவூரர் கூறியவற்றைத் தெரிவித்தார்கள்.

இப்பால் திருப்பெருந்துறையில் தங்கிய வாதவூரர், பொய்கையில் நீராடித் திருநீறணிந்து சிவபெருமானை வழிபடுதற்குத் திருக்கோயிலுள் தனியே புகுந்தார். அப்பொழுது கோயிலுள்ளே யமைந்த குருந்தமரத்தின் நிழலிலே தாரகை நடுவே தண்மதி விளங்குவதுபோன்று சிவனடியார்களாகிய மாணாக்கர் களுக்கு நடுவே சிவபெருமான் ஆசிரியத் திருமேனிகொண்டு எழுந்தருளியிருந்தார். அவ்வழகிய தெய்வக்காட்சியைக் கண்ட திருவாதவூரர், தம் செயலற்று உடல் நடுங்கி நிலத்தின் மீது விழுந்து பலமுறை பணிந்து நின்றார். ஆசிரியத் திருமேனி கொண்டு எழுந்தருளிய இறைவர், வாதவூரரை முடிமுதல் அடிவரையும் மந்திரங்களால் நோக்கி அருட்பார்வையால் உபதேசித்து அவரைத் தூயராக்கி முகமலர்ந்து முறுவலித்துத் தம் அருகேயழைத்து அவர்தம் முடிமிசைத் தம்திருவடிகளைச் சூட்டித் திருவைந்தெழுத்தின் உண்மையைச் செவிப்புலத்து அறிவுறுத்தி யருளினார். அந்நிலையே வாதவூரர் பரமஞானம் வந்தெய்தப் பெற்றுச் சிவஞானச் செல்வராயினார். அவரது நாவில் கலைஞானத் தெய்வமாகிய நாமகள் வந்து அமர்ந்தாள். ஆணவம் முதலிய மும்மலங்களும் அவரை விட்டு அகன்று ஒழிந்தன. குருநாதராகிய இறைவர், திருவாதவூரை நோக்கி 'அன்பனே, நீ சிவ புண்ணியஞ் செய்தமையால் மனத்தால் நாடியுணரும் பேற்றினைக் கண்களாற் காணப்பெற்றனை; நம்மைப் பாடுவாயாக' எனப் பணித்தருளினார். ஆசிரியர் பணித்த வண்ணம் திருவாதவூரடிகள் திருவாசகமாகிய செழும்பாடல்களைப் பாடத்தொடங்கிச் சென்னிப்பத்து அச்சோப்பத்து ஆகிய பனுவல்களைப் பாடிப் போற்றினார்.

இங்ஙனம் இறைவனது பொருள்சேர் புகழைப் போற்றிப்பரவும் திருவாதவூரர், அமைச்சர் கோலம் நீக்கி, முற்றத் துறந்து நான்மறை முனிவராய்த் திகழ்ந்தார்.

குருவாய் வந்தருளிய இறைவன், நான் மறையோதும் மாணாக்கர்களாகிய அடியவர் கூட்டத்தை வாதவூரடிகளுக்குக் காட்டியருளினான். அவர்களைக் கண்ட அடிகள் 'நண்பர்களே, நீங்கள் முன்னை நல்வினைப்பயனால் ஈசனிடத்து அன்பு பூண்டு அவனைப்பிரியாதிருக்கப் பெற்றீர்கள், யானும் அன்பர்களாகிய நும்மை அடையப்பெற்று மகிழ்கின்றேன்' என்று அதிசயப்பத்தினைப் பாடினார். அந்நிலையில் அருட்குருவாகிய இறைவர், 'மாணிக்கவாசக, இங்கு நில்' என்று சொல்லித் தம் மாணாக்கர்களாகிய தொளாயிரத்துத் தொண்ணூற்றென்பதின் மரோடும் விரைவில் மறைந்தார். அந்நிலையில் ஆசிரியப் பெருமானையும் உடன்வந்த அடியார்களையும் காணப்பெறாத வாதவூரடிகள், அளவிலாத் துயருற்று அழுதரற்றினார். தம்மை ஆட்கொண்டருளிய குருமணியை நினைந்து கண்ணீர் ஆறாய்ப் பெருகக் கோயிற்பத்து, புணர்ச்சிப்பத்து, செத்திலாப்பத்து, பிரார்த்தனைப்பத்து, ஆசைப்பத்து, உயிருண்ணிப்பத்து, திருப்புலம்பல், வாழாப்பத்து, எண்ணப்பத்து ஆகிய திருவாசகப்பனுவல்களை நெஞ்சம் நெக்குருகிப் பாடிப் போற்றினார். பின்பு பெருந்துறையாகிய அந்நகரத்தினுள்ளே சென்று அங்கு நிகழும் விளையாடல்களைக் கண்ணுற்று அம்மானை, பொற்சுண்ணம், கோத்தும்பி, தெள்ளேணம், பூவல்லி, உந்தி, தேணோக்கம், (திருவெம்) பாவை, சதகம் ஆகிய பனுவல்களை ஓதினார்.

இங்ஙனம் திருவாதவூரடிகள் இறைவனது திருவருட் டிறத்தை யெண்ணி அப்பெருமானது பிரிவினால் உள்ளம் வருந்தி ஊணுறக்கமின்றித் திருவாசகம் ஓதக்கேட்ட தொண்டர்கள், அதிசயித்துத் 'தேனினுமினிய இத்திருப்பாடல்கள் நாம் முன்பு கேட்டன அல்ல; புதியனவாகவுள்ளன' என அடிகளைச் சூழ்ந்து பாராட்டிப் போற்றினார்கள். அடிகள் தாம் குதிரைத் திரள் வாங்குதற்கெனக் கொண்டு வந்த பொருளனைத்தையும் பின்வரும் காரியத்தை நோக்காது அடியார்களுக்கு வாரி வழங்கினார். சிறிதுநாளிற் பொருளனைத்தும் செலவாயிற்று.

இங்ஙனம் வாதவூரர் கொண்டு சென்ற பொருளனைத்தும் செலவழிந்த செய்தியையறிந்த ஏனைய அமைச்சர்கள், பாண்டிய னிடத்திற் சென்று தெரிவித்தனர். அஃதுணர்ந்த அரசன் பெரிதும் சினமுற்றான். 'தென்னவன் எழுதும் ஓலை; தென்னவன் பிரம ராயன் காண்க. என் பொன்னறையிலிருந்து பெரும் பொருளை

வாரிக்கொண்டு குதிரைத்திரள் வாங்கிவருவதாகக் கூறிச் சென்றவன் இன்னம் வாராமலிருப்பது எது கருதி? அமைச்சனுக்கு இஃது அழகாகுமோ? உடனே குதிரைகளைக் கொண்டு விரைவில் வருக' என ஓலையொன்றெழுதி, அதனைத் தூதர் கையிற் கொடுத்தனுப்பினான். அரசனால் அனுப்பப்பட்ட தூதர், பெருந்துறையையடைந்து ஓலையை வாதவூரர்க்குக் காட்டினர். அவ்வோலையைக் கண்ட அளவில் அரசனது கருத்துணர்ந்த வாதவூரடிகள் மனக்கலக்கமுற்றார். 'பாண்டியனுடைய அமைச்சனாகிய யான் குதிரை வாங்குதற்கெனக் கொணர்ந்த பொருளெல்லாவற்றையும் என் விருப்பப்படி செலவழித்து விட்டேன். நாடாளும் வேந்தனுக்குத் தவறிழைத்த யான் எங்ஙனம் உய்வேன்?' எனப் பலவாறு புலம்பினார். 'எனது இடர் நிலையை என்னையாட்கொண்ட இறைவனுக்கு எடுத்துரைப்பேன்' எனத்துணிந்து, பொழுது புலர்வதன் முன் திருப்பெருந்துறைக் கோயிலுட் சென்று இறைவன் திருமுன் நின்று 'போற்றியென் வாழ்முதலாகிய பொருளே' எனத் தொடங்கும் திருப்பள்ளி யெழுச்சியைப் பாடித் துதித்துத் தம்முடைய குறைகளைத் தெரிவித்து முறையிட்டார். 'நினக்கு யாம் துணையுண்டு. விரைவிற் குதிரை வரும் என்று பாண்டியனுக்குத் திருமுகம் எழுதி விடுப்பாயாக' என்றதோர் அருள்வாக்கு விசும்பில் தோன்றியது. அதனைக்கேட்டு மகிழ்ந்த அடிகள், 'சீர்த்திமிக்க பாண்டிய மன்னனுக்கு அடியேன் வாதவூரன் விண்ணப்பம்:- இன்னும் ஐந்தாறு நாட்களில் குதிரைகள் வந்து சேரும். அவற்றுக்குரிய பந்திகளையும் நீர்த்தடங்களையும் திருத்தமுற அமைத்து நகர வீதிகளையும் குதிரைகளை நடத்தும் செண்டுவெளியையும் அலங்கரிக்கும்படி ஏற்பாடு செய்தல் வேண்டும்' என்று திருமுகமெழுதி அவ்வோலையைத் தூதர் கையிற் கொடுத்து அனுப்பிவிட்டு, மீண்டும் திருக்கோயிலிற் சென்று மனக்கவலை தீர்ந்து சிறிது பொழுது துயில் கொண்டார். அன்பரது பாரத்தைத் தம்முடையதாக ஏற்றுக்கொள்ளும் சிவபெருமான், அடிகளா ரருகே வந்து தோன்றி, 'இக்காரியத்தை யாம் முடித்தல் திண்ணம். இன்னும் மீளவும் வேந்தன் ஆளனுப்புதற்கு முன்னமே நீ அவனையடைந்து அவன் மகிழத்தக்க வகையில் சமாதானம் கூறுவாயாக' எனக்கூறி மறைந்தருளினார்.

கனவுநிலை நீங்கி விழிப்புற்ற வாதவூரடிகள். திருப்பெருந்துறை யீசனைத் தொழுது விடைபெற்று மதுரையை அடைந்தார். அடிகள் போவதற்கு முன்னரே அவரெழுதிய ஓலையைத் தூதர் வாயிலாகப்பெற்ற பாண்டியன் சினந்தணிந் திருந்தான். அந்நிலையில் வாதவூரர் சென்று மன்னனை வணங்கினார். அவரைக்கண்ட பாண்டியன், அன்புடன்

வரவேற்றுச் சிறப்பித்துத் தனியே அழைத்துச் சென்று 'எவ்வளவு குதிரைகள் வாங்கினீர்கள்? எந்தத் துறையில் தங்கியிருந்தீர்? நும்மால் வாங்கப்பெற்ற குதிரைகள் எவ்வண்ணத்தன?' எனப் பலவாறு வினவினான். இங்ஙனம் மன்னன் கேட்ட வினாக்களுக் கெல்லாம் வாதவூரடிகள், இறைவன் திருவளை மனத்திற் கொண்டு தக்கவாறு விடைபகர்ந்தார். அடிகள் கூறியவற்றைக் கேட்டு மகிழ்ச்சியுற்ற பாண்டியன், அவர்க்குப் பல வரிசைகள் நல்கி அவர்தம் மாளிகையிற் செல்லப் பணித்தான்.

மன்னன்பால் விடைபெற்ற அடிகள், திருவாலவாய்த் திருக்கோயிலிற்புக்குச் சொக்கநாதரைப் பணிந்து 'உமையொரு பாகனாகிய பெருமானே, குதிரைகள் விரைவில் வந்துசேரு மென்று பாண்டியன் மகிழ உரைத்தேன். குதிரை வாங்குவதற் கென அரசன் தந்த பொருள்களையெல்லாம் அடியார்களுக்குச் செலவிட்டேன். உன்னையல்லால் அடியேற்குத் துணையாவார் ஒருவருமிலர்' எனத் தனிநின்று குறையிரந்தார். அப்பொழுது 'அஞ்சல், அஞ்சல்' என்றதோர் அருள்வாக்கு விசும்பிடைத் தோன்றியது. அதுகேட்டுத் தேறுதலடைந்த வாதவூரர், தமது மாளிகையிற் சென்று இறைவனை வழிபட்டு அமுது செய்து, கருதிய காரியம் எவ்வாறு முடியுமோ என்ற மனக்கவலையுடன் துயில் கொண்டார். அந்நிலையில் உறவினர்கள் வந்து அடிகளையெழுப்பி, அரசன்பால் அவர் நடந்துகொண்ட செயல் தவறுடைத்தென அறிவுறுத்தினர். 'நீர்அரசனுக்குச் செய்த தவறுதலால் நும் சுற்றத்தவர்களாகிய எங்களுக்கு என்ன தீங்கு நேருமோ? எமக்குத் துணையாவார் யார்' எனக்கூறி வருந்தினர்கள். அவர்களது மனக்கருத்துணர்ந்த வாதவூரர், அவர்களை நோக்கி 'உமக்கும் எனக்கும் என்ன தொடர்புளது? எனக்கு உலகத்தில் வெறுப்புமில்லை; விருப்புமில்லை. இறைவன் மானிடத்திருமேனி கொண்டு எழுந்தருளி வந்து என்னை ஆட்கொண்ட அன்றே எனது பிறப்பொழிந்தது. அரசனுக்குத் தவறு செய்தலாகாது என்னுங்கருத்தினாலேயே இங்கு யான் இப்பொழுது வந்தேன். அரசனிடத்துப் பொருள் பெற்று நேர்ந்த கடன் முழுவதையும் ஒர் உபாயத்தால் விரைவில் தீர்த்துவிடப் போகின்றேன். நீங்கள் உங்களுக்காவனவற்றைப் பார்த்துக் கொண்டு போமின்' எனக் கூறினார். அதுகேட்ட உறவினர்கள் மனம் நொந்து அவரை விட்டு அகன்று போயினர்.

மறுநாள் பாண்டியனால் அனுப்பப்பட்ட ஏவலர் சிலர் வாதவூரரையடைந்து 'குதிரைகள் வந்தனவோ' என வினவினர். அதுகேட்ட அடிகள் 'குதிரைகள் மெய்யாகவே இப்பொழுது வந்துவிடும். நீங்கள் அவசரப்படுதல் வேண்டாம். நகரத்தை அலங்கரித்து வைக்கும்படி சொல்லுமின். எனது சொல் தப்பாது'

எனக்கூறியனுப்பினார். அடிகள் குறித்த காலம் வந்தும் குதிரைகள் வந்து சேரவில்லை. அதனையெண்ணிச் சினமுற்ற பாண்டியன் முறைசெய்வோரை வாதவூரர்பால் அனுப்பிக் கேட்கச் செய்தான். அடிகள் முன்போலவே மறுமொழி சொல்லியனுப்பி விட்டார். இந்நிலையில் அமைச்சர் பலரும் ஒன்றுகூடி அரசனையணுகி 'வேந்தர் பெருமானே, பித்தனாகிய வாதவூரனது வார்த்தையை மெய்யென நம்பி நகரத்தை அலங்கரிக்கச் செய்தனை. குதிரை வாங்கி வருவதாகக் கூறிச்சென்ற வாதவூரன் பெருந்துறையை யடைந்து பித்தனாகி நின்று பொருள் முழுவதையும் மனம் போனபடி செலவழித்துவிட்டான். இரக்கமின்றி அவனைத் தண்டித்து அவனிடமிருந்து பொருளை வாங்கிக் கொள்ளுதலே இனிச் செய்யத்தகுவதாகும்' என அறிவுரை கூறித் தெளிவித்தனர்.

அமைச்சர் சொற்கேட்ட பாண்டியன், தனது தெளிவின்மையால் நேர்ந்த பொருளழிவினை யெண்ணிப் பெருமூச்சுவிட்டுக் கண்களில் தீயெழச் சினங்கொண்டான். 'மையல் நெஞ்சினனாகிய வாதவூரனை வளைத்துப் பிடிமின்' எனப் பிரம்படிக்காரரை ஏவினான். அவர்களும் மன்னன் பணித்த வண்ணம் வாதவூரடிகளை யடைந்து வளைத்துப் பிடித்தனர். எனினும் அடிகளது சிவபத்தி மாண்பினை யுணர்ந்து அவரைத் துன்புறுத்த அஞ்சினர். வாதவூரரைச் சிறைப்படுத்தி வருத்தும்படி பண்டியன் பின்னுஞ்சிலரை அனுப்பினான். அவர்கள் அடிகளைப்பற்றிச் சென்று கொடுஞ்சிறையில் வைத்துத் துன்புறுத்தினார்கள். துயரம் பொறாத அடிகள், இறைவனை நோக்கி முறையிட்டுப் புலம்புவாராயினர். 'ஒளி செய் மானுடமாக வந்து எனது நெஞ்சினை உருக்கிப் பணிகொண்ட அருளாளா, நீ கூறிய மொழி தப்பாதெனத் துணிந்து, குதிரை விரைவில் வருமென்று மன்னனுக்கு உரைத்தேன். யான் இங்ஙனம் துயருறவும் நீ இரங்காததென்னோ? குதிரைகளைக் கொண்டு விரைவில் வருவாயாக' என அழுதரற்றிக் குழைத்த பத்து, அருட்பத்து ஆகிய பனுவல்களைப் பாடிப் போற்றினார்.

அடியார் வருத்தம் தரியாதாராகிய சிவபெருமான், தம்பால் அன்புடைய வாதவூரடிகளது மனத்துயரைப் போக்கத் திருவுளங் கொண்டு, மிழலை நாட்டுக் காட்டிலே திரியும் நரிகளையெல்லாம் ஒருங்கு திரட்டி அவற்றுக்கு வேண்டிய அறிவுரைகளைச் சொல்லி அவற்றையெல்லாம் குதிரைகளாக்கித் தம்மைப் பிரியாதுள்ள கணநாதர்களைக் குதிரை வீரர்களாகப் பணித்துத் தாமும் ஒரு குதிரைமீதமர்ந்து குதிரைத் திரளுடன் மதுரையைநோக்கி வந்தருளினார். அங்ஙனம் வருபவர், வழியிடையே திருவாதவூரை யடைந்து, வாதவூரடிகள் செவியிற்புலப்படும்படி நம்முடைய திருவடிச் சிலம்பொலியைக் காட்டியருளினார். சிறையிலிருந்த

படியே சிலம்பொலியைக் கேட்ட வாதவூரடிகள் 'இஃது என்னையாண்ட எம்பிரானது பாதச்சிலம்பொலியே யாகும்' எனத் தெளிந்து இறைவனை இறைஞ்சினர். அப்பெருமான் குதிரைகளைக் கொண்டு வந்தமையுணராது, அவற்றைக் கொணர்ந்தருளும்படி இறைவனை நினைந்து குறையிரந்து வேண்டினார். இந்நிலையில் குதிரைத்திரளின் வருகையைக் கண்ட சிறைக்காவலர், மனமகிழ்ந்து வாதவூரடிகளை யணுகிக் 'குதிரைகளின் வரவினை நேரிற் சென்று பாண்டியனுக்குத் தெரிவிப்பீராக' எனச் சொல்லி அடிகளைச் சிறையினின்றும் விடுவித்தார்கள். அடிகளும் அவ்வண்ணமே மதுரையை யடைந்து பண்டியன் முன்னர்ச் சென்று 'நமது மதுரைப்புறத்தே குதிரைகள் வந்தன என்று தூதர்கள் தெரிவித்தார்கள்' எனக் கூறினார். அது கேட்டு மகிழ்ச்சியுற்ற பாண்டியன், குதிரைகளின் வரவை எதிர்பார்த்து வீதியின் கண்ணதாகிய மண்டபத்தில் வந்து அமர்ந்தான். மன்னன் நெடுநேரங் காத்திருந்தும் சிவபெருமானது அருள் விளையாட்டால் குதிரைகள் வரத் தாழ்த்தன. பரிகளைக் காணாது மனம் புழுங்கிய பாண்டியன், ஒற்றர்களை ஏவ, அவர்கள் நாற்றிசையிலும் சென்று நோக்கிக் குதிரைகளைக் கண்டிலோம்' எனக் கூறினார்கள். அது கேட்டு வெகுண்ட அரசன், 'நமது பொருளையெல்லாம் வீணே செலவிட்டதுமன்றி இங்ஙனம் குதிரைகள் வருவதாகச் சொல்லி ஏமாற்றும் இவ்வமைச்சனை ஊரினுள்ளே கொண்டுபோய் நிறுத்திப் புளியம் வளாரால் வடித்துத் துன்புறுத்துமின்' எனத் தண்டத் தலைவரை நோக்கிக் கூறினான். அவர்களும் அவ்வாறே அடிகளை யிழுத்துச் சென்று துன்புறுத்தத் தொடங்கிய அளவில், அடிகள் கண்களில் நீர்மல்கத் திருமுகம் வியர்க்கச் சிவபெருமானை நினைந்து அடைக்கலப் பத்துப் பாடினார். சிறைக் கூடத்தருகே சோலையிற் புகுந்த குயிலை நோக்கிக் குயிற் பத்துப் பாடினார். அவ்வளவில் இறைவனருளால் குதிரைத்திரள்கள் மதுரை நகர்க்குள்ளே புகுந்தன. அவற்றைக் கண்டு பாண்டியன் பெரிதும் வியந்தான். கேட்போர் நெஞ்சங் கரையத் திருவாசகப் பாடல்களைப் பாடிப் போற்றும் வாதவூரடிகளை அழைத்துவரச் செய்து அவரைத் தன்னருகே அமர்த்தி அவர்தம் கண்களில் வழியும் நீரைத் துடைத்துத் தான் செய்த பிழையினைப் பொறுத்தருளும்படி வேண்டினான்.

இதற்குள் குதிரைவீரர்கள் குதிரைகளை நடத்திக் கொண்டு உடன்வர இறைவர் அழகியதோர் பரிமேல் அமர்ந்து அரச வீதி வழியே வந்தார். பரிமேலழகராய் வந்தருளிய அவரது பேரழகில் ஈடுபட்டுக் காதல் கொண்ட இளமகளிர் கூறுவதாக அடிகள் அன்னைப் பத்தினைப் பாடினார். குதிரைகளைக் கொண்டு வந்த

வணிகச் சாத்தினர் அனைவரும் உருவம் பருவம் முதலியவற்றால் ஒத்த இயல்பினராதலைக் கண்டு வியந்த பாண்டியன், வாதவூரரை நோக்கி 'இவர்களுள் தலைவர் யார்' எனக் கேட்டான். அவரும் 'இப்போது குதிரையின் முன்னே வந்து தோன்றுவர்' எனக் கூறினார். அவ்வளவில் சிவபெருமான் வெள்ளைப் பரிமீது முன்வந்து தோன்றி 'அரசே, சிறிது நேரம் கண்ணிமையாதிருந்து காண்பாயாக' என மொழிந்து குதிரையின் பலவகைக் கதிகளையும் தாம் அமர்ந்துவந்த குதிரையைக் கொண்டு நடத்திக் காட்டினார். அவருடன் வந்த வீரர்களும் தத்தம் குதிரையினை அவ்வண்ணமே நடத்திக் காட்டினார்கள். அது கண்ட மன்னன், குதிரை வீரர்களை நோக்கி, 'நும் தலைவர் யார்' என வினவினான். சிவகணத் தலைவராகிய அவர்கள், தம்முடன் வந்த இறைவனைச் சுட்டிக்காட்டி, 'யாவருக்கும் தலைவர் இவரே' எனத் தெரிவித்தார்கள். குதிரைச் சேவகனாகிய இறைவனைக் கண்ட பாண்டியன், வியப்பினாலும் களிப்பினாலும் தன்னை மறந்தானாய்க் கைகள் தலைமேற் குவிய வணங்குதற்கு எழுந்தவன், தான் ஒரு குதிரைப்பாகனை வணங்குதல் தக்கதன்றென நினைந்து வாளாவிருந்தனன். அங்கிருந்தோர் அனைவரும் பரிப்பாகனாகிய இறைவனைத் தொழுது போற்றினர். பாண்டியன் அமைச்சர் களை நோக்கிக் 'குதிரை வாணிகச் சாத்தின் தலைவராகிய அவர் நம் சொக்கநாதரைப் போலவே எனக்குத் தோன்றுகின்றார். அவர் கொணர்ந்த குதிரைகளைக் காணுங்கள். காலந்தாழ்த்தாயினும் இவற்றை நல்லனவாகத் தேர்ந்து வாங்கிய வாதவூரரை நோக்குமின்' எனப் பலமுறை வியந்துரைத்தான். குதிரைப் பாகனாகிய இறைவன், அரசன் முன் வந்து 'அரசே உன் மந்திரி யாகிய வாதவூரர் தந்த பொருளனைத்தையும் குதிரைகள் தருவதாகச் சொல்லி எம்மவர்கள் கைக்கொண்டார்கள். இக்குதிரைகள் பல தீவுகளிலிருந்தும் இமயமலைக்கு அப்பா லிருந்தும் பெருந்துறையிலே வந்திறங்கி இங்குக் கொண்டு வரப் பட்டன. உடற்பழுதின்றி நற்சுழிகளும் நன்னிறங்களும் வாய்ந்த உயர்ந்த சாதிக் குதிரைகளாகிய இவை நூறாயிரத்திற்கும் விலையாக யாங்கள் பெற்றுக் கொண்ட பொன் நூறாயிரமாகும். அறிஞர் முன்னே இவற்றின் நல்லியல்புகளை ஆராய்ந்து கண்டு இக்குதிரைகளைக் கைக்கொள்வாயாக. இவை நின்னுடையன வாகக் கைக்கொண்ட பின்னர் இவற்றின் நன்மை தீமைகள் எம்மைச் சார்ந்தனவாகா' எனக் கூறி, ஆவணி மூலநாளிற் குதிரைகளைக் கயிறு மாறிக் கொடுத்தருளினான். பாண்டியனும் குதிரைச் சேவகனாகிய இறைவன் சொல்லியவற்றிற்கெல்லாம் முழுதும் உடன்பட்டு 'நாம் குதிரைகள் வாங்குதற்காகக் கொடுத்த பொன்முழுவதும் இவற்றுள் ஒரு குதிரைக்கேனும் விலையாகப் போதா' எனக் கருதியவனாய், அப்பரித்திரளை ஏற்றுக்

கொண்டான். பரித்துறைக் காவலாளரை யழைத்துக் குதிரைகளை அவாபால் ஒப்புவித்து அவற்றைப் பந்திகளிற் சேர்க்கும்படி கட்டளையிட்டான். அவர்களும் அக்குதிரைகளைக் கொண்டு சென்று பந்திகளிற் பிணித்தனர்.

கிடைத்தற்கரிய குதிரைகளைப் பெற்ற மகிழ்ச்சியினாலும் குதிரைப்பாகர் காட்டிய குதிரையேற்றத்தைக் கண்ட வியப்பினாலும் உள்ளங்கிளர்ந்த பாண்டியன், விலை மதித்தற்கரிய பொற்பட்டாடையினைத் தன் கையால் எடுத்துக் குதிரைச் சேவகனாக வந்த இறைவனுக்கு நல்கினான். அத்தலைவன் அவ்வாடையினைத் தன் பரிக்கோலின் முனையால் வாங்கித் தன்னடியாரகிய வாதவூரர் பொருட்டுத் தன் முடிமிசைப் புனைந்து கொண்டான். தான் கொடுத்த ஆடையைப் பரிக்கோலால் ஏற்றது கண்டு பாண்டியன் சினங்கொண்டான். அருகேயிருந்த வாதவூரர், 'அஃது அவர் நாட்டு வழக்கம்' என அமைதி கூறி அரசனது சினத்தைத் தணிவித்தார். மன்னன் அத்தலைவனேடு உடன் வந்த மற்றைய வீரர்களுக்கும் உயர்ந்த ஆடைகளைப் பரிசாக வழங்கினான். வீரர்கள் அவற்றை வாங்கித் தலைமிசைத் தரித்துக் கொண்டார்கள்.

குதிரைச் சேவகனாய் வந்த இறைவன், பாண்டியன்பால் விடைபெற்றுப் புறப்பட்டான். அப்பொழுது வாதவூரடிகள் இறைவர்க்கு முன்னே சென்று அவருடைய திருவடிகளைப்பற்றிக் கொண்டு 'பிடித்த பத்து' என்னும் பனுவலைப் பாடிப் போற்றினார். இறைவன், அடிகளை நோக்கி 'நேசமிக்க முனிவ, நினது நினைவினை இங்கு வந்து முடித்தோம். பாதத்தை விடுக' என்று சொல்லிப் புறப்பட்டுப் போயினான். அன்று குதிரையீடு கண்டவர்களெல்லாம் 'இது போல்வதொரு காட்சியை முன்பு கண்டிலோம்' எனக் கூறிப் பேரானந்தக்கடலில் திளைத்தார்கள். பாண்டியன் வாதவூரர்க்குப் பொற்பட்டம் முதலிய வரிசைகளை நல்கி அவர் தம் மாளிகைக்குச் செல்லுமாறு விடை கொடுத்தனுப்பிவிட்டுத் தனது அரண்மனையை யடைந்தான். குதிரைச் சாத்தின் தலைவனாக வந்த சிவபெருமானும், உடன் வந்த வீரர்களாகிய சிவகணங்களுடன் மறைந்து திருவாலவாய்த் திருக்கோயிலை யடைந்தருளினார்.

குதிரைத்துறைக் காவலர், புதியனவாக வந்த குதிரைகளைப் பந்திகளில் நிரல்படக் கட்டி அவற்றுக்குக் கருப்புக் கட்டியொடு கலந்த கொள், பயறு, துவரை முதலிய இனிய உணவுகளைக் கொடுத்தும் அவை அயின்றில. மாயக் குதிரைகளாகிய அவை, அன்று நள்ளிரவிலே ஒன்றையொன்று முகம் பார்த்து, 'நாம் நேற்று நன்றாக அடிபட்டதுமன்றிக் கழுத்திலும் காலிலும்

கயிற்றாற் கட்டுண்டோம். இனி இங்கு நிற்போமானால், குருதி நீரொழுகப் புண்படுவோம். நமக்கு வேண்டாத கொள்ளும் புல்லும் உணவாக இட்டு மனிதர்கள் நம்மேல் தொற்றுவர். விடியுமுன் நம்முருவத்தைக்கொண்டு இவ்விடத்தை விட்டு நழுவி விடவேண்டும்' என்று சொல்லிக் கழுத்திற் கட்டிய கயிற்றைக் கடித்தெறிந்து பண்டை நரிகளாக உருமாறின. நரிகளாகிய அவை, அங்குக் கட்டப்பட்டிருந்த பழைய குதிரைகளைக் கடித்துக் கொன்று அங்கிருந்து புறப்பட்டுக் கடைவீதிகளிலும் மாடமாளிகை திருமடம் முதலியவற்றின் முற்றங்களிலும் திரள்திரளாய்ச் சென்று ஊளையிட்டு ஓடின. ஊர் மக்கள் விழித்தெழுந்தனர். பரித்துறைக் காலவர் என்ன விளையுமோ என அஞ்சி மனங்கலங்கி மன்னனை யடைந்து 'வேந்தர் பெருமானே, நேற்று வந்த புதிய குதிரைகளைக் கண்ணுறக்கமின்றிக் காத்து வந்தோம். அவை நாங்கள் வைத்த உணவினை யுட்கொள்ளாமல் நள்ளிரவிலே நரிபோல் உருப்பெற்றுக் குதிரை, மான், யானைக்கன்று, ஆடு, கோழி முதலியற்றின் குடர்களைப் பிடுங்கித்தின்று ஊளையிட்டுக் கொண்டு எங்கள் கையிலகப் படாது ஓடிப்போயின' எனக்கூறி முறையிட்டார்கள். அதனைக் கேட்ட பாண்டியன். 'மின்னாமல் இடித்ததுபோல் இத்தகைய துன்பம் நேர்தற்கு எனது அரசியல் முறையில் ஏதேனும் தவறு நிகழ்ந்ததுண்டோ? என மனங்கலங்கினான். அத்தாணி மண்டபத்தை அடைந்து அமைச்சர்களை யழைத்து நள்ளிரவில் நிகழ்ந்தவற்றைக் கூறினான். அமைச்சர்கள் மறுமொழி கூற அறியாமல் தலைகவிழ்ந்து நின்றனர்.

அப்பொழுது வாதவூரடிகள் நாட்கடன்களை முடித்துக் கொண்டு முகமலர்ச்சியுடன் பாண்டியனது பேரவையினை யடைந்தார். முகவாட்டத்துடன் இருந்த மன்னனை நோக்கி 'அரசே, இங்ஙனம் நின்முகம் வாட்டமுற்றிருப்பதேன்' என வினவினார். அவ்வுரை கேட்ட பாண்டியன் அடிகளைச் சினந்து நோக்கி 'நீ நல்லறிவுடைய அமைச்சன், உன்னையொப்பார் யாருளர்? நல்ல குதிரைகளைத் தேடிக் கொணர்ந்தாய் எனச் சடுகடுத்துரைத்தான். வாதவூரர் மனநடுங்கி 'அரசர் பெருமானே, சிறந்தனவாகத் தேர்ந்து கொண்டுவந்த குதிரைகளுள் ஏதேனும் பழுதுண்டோ? அறிஞர் முன்னிலையிற் பழுதறக்கண்டு அக்குதிரைகளை நேற்றே ஏற்றுக்கொள்ளவில்லையா' என வினவினார். அஞ்சாது என்முன் நின்று இவ்வாறு பேசுகின் றனையோ? நேற்று நீ கொணர்வித்த குதிரைகள் யாவும் நரிகளாகி நம்மிடத்திருந்த பழைய குதிரைகளையும் கடித்துப் பிணமாக்கி ஊர் முழுதும் ஊளையிட்டுத் திரிகின்ற செய்தியைப் பித்தனாகிய நீ உணர்ந்திலைபோலும். ஆசிரியர், அரசர், அந்தணர், அன்பிற்

கினிய தோழர், அருந்தவத்தோர் ஆகியவர்களை வஞ்சிப்பார்க்குக் கொலையையன்றி வேறு தண்டமில்லை. நரிகளையெல்லாம் குதிரைகளாக்கிக் கொணர்ந்து எம்முடைய குதிரைப் பந்திகளிற் கட்டுவித்தாய். இவ்வாறு அறிவை மயக்கி இந்திர சாலஞ் செய்வது எம்மிடத்திலேயோ? நீயோ சாதி அந்தணன். உன்னைக் கூறுதற்கு என்ன இருக்கிறது? குதிரைகள் நடத்திவந்த குதிரைச் சேவகன் எங்கே போயினான்? அவனுடன் வந்த ஏனையோர் எங்கே சென்றனர்? அருமறைநூல்களை ஓதியதெல்லாம் இவ்வாறு எம்மை வஞ்சித்தற்குத்தானோ? எனக் கடுமொழிகளைக் கூறினான். தண்டத் தலைவரை நோக்கி 'வாதவூரனாகிய இவனைக் கொடுஞ்சிறையில் வைத்துத் தண்டித்து நம் பொருளனைத்தையும் வாங்குமின்' எனப் பணித்தான்.

தண்டத்தலைவர், வாதவூரடிகளது சிவபத்தி மாண்பினை யுணர்ந்து அடிகளைத் துன்புறுத்தற்கு அஞ்சினராயினும் அரசன் சொற்படி செய்யாவிடில் தமக்குத் தீங்கு வருமென்று அஞ்சி வாதவூரடிகளைச் சிறையில் வைத்துத் தண்டித்தனர். பொறுமை மிக்க பாண்டியன் வாதவூரரைத் தண்டத்தலைவருடன் அனுப்பிய பின் மனக்கவலையுடன் போந்து தனித்திருந்து வருந்தினான். இப்பால், சிறையிலே துன்புறும் வாதவூரடிகள், அளவிலாத் துயரத்தால் மனங்கலங்கித் திருவேசறவு என்னும் பனுவலைப் பாடி இறைவனை நினைந்து புலம்பினார். அந்நிலையிற் சிவபெருமான் அவருள்ளத்தே தோன்றி ஆறாத்துயரத்தைத் தணிவித்தருளினார்.

திருவாதவூரடிகளின் துயரத்தைப் போக்கத் திருவுளங் கொண்ட இறைவர், வருணனை நினைத்தருளினார். அவ்வளவில் அவன் விரைந்து சென்று பணிந்து நின்றான். 'நீ வாதவூரர்படும் சிறைத்துன்பம் நீங்கக் கங்குற் பொழுதிலே வைகை யாற்றிற் பெருவெள்ளம் வரச் செய்வாயாக' என இறைவர் வருணனுக்கு அறிவித்தருளினார். வருணனது ஏவலால் மேகங்கள் திரண்டு மழையைப் பொழிந்தன. வைகையாற்றிற் பெருவெள்ள முண்டாயிற்று. என்றுமில்லாத அளவில் வைகையாற்றில் வந்த பெருவெள்ளம், அதன் கரையினை யுடைத்துக்கொண்டு மதுரை நகருட் புகுந்தது. அது கண்ட ஊர் காவலர் வெள்ளம் பெருகிய செய்தியை ஊர்மக்களுக்குப் பறையறைந்து தெரிவித்தனர். பறையொலி கேட்டுத் துணுக்குற்றெழுந்த பாண்டியன் 'காலமல்லாக் காலத்தே வைகை கடலெனப் பெருகியதே? இது என்ன ஊழிக்காலமோ' என மனங்கவன்றான்; நாடு கண்காணிக்கும் தனது அதிகாரியை யழைத்து, 'வாதவூர் முனிவரை நாம் சிறை செய்ததனால் விளைந்த துன்பமோ இது? இறைவன் திருவுள்ளத்தை யாரறிவார்? மதுரை நகரில்

மனைக்கட்டுடன் குடியிருப்போர் ஒவ்வொருவர்க்கும் தக்க வண்ணம் அடைத்தற்குரிய கரைப்பகுதியை அளந்து கொடுத்து விரைவில் அடைக்கச் செய்வாயாக' என்று சொல்லி யனுப்பினான். அதற்குள் பொழுதும் விடிந்தது.

அரசனது ஆணையினை மேற்கொண்ட அரசியலதிகாரி, ஊர்க்கணக்கர்களை உடனழைத்துக் கொண்டு மதுரை நகரில் வாழும் இளைஞர் முதல் முதியோர்வரை எல்லோரையும் ஒரு சேரத் திரட்டிக்கொண்டு வைகைக் கரையினை யடைந்து அவரவர் அடைத்தற்குரிய கரைப்பகுதிகளை அளந்து கொடுத்தனன். அவரவர்களும் தத்தமக்குரிய கரைப்பகுதியில் மண்ணிட்டு அடைக்கத் தொடங்கினர். அந்நிலையில் மதுரையில் தென்கிழக்கு மூலையிலமைந்த மனையொன்றில் வாழும் நரைமுதியாளாகிய பிட்டுவாணிச்சி, தனக்கு அளந்த பங்கினை அடைத்தற்குரிய ஆள்கிடைக்காமல் அழுது புலம்பி அரச தண்டத்திற்கு அஞ்சிக் கூலியாளைத் தேடியலைந்தனள். அவளது துயரத்தைப் போக்கத் திருவுளங்கொண்ட சிவ பெருமான், பதினாறு வயதுடைய இளைஞனாகி, மண் வெட்டியும் கூடையும் கொண்டு அவள்முன் கூலியாளாகத் தோன்றி, 'அன்னையே, வருந்தாதே, இவ்வுலகத்து என்னைப் போல் உனக்கு வேறு ஆள் கிடைக்காது. பல்லோரும் வேண்டியழைக்க அவர்கள்பாற் செல்லாது உன்னை வேண்டி இங்கு வந்தேன். வேண்டுமானாற் சொல்' என்றான். 'ஐயா, நல்ல சமயத்தில் வந்து சேர்ந்தீர். உம்மைப் பார்த்தால் எம் வழிபடு தெய்வமாகிய சொக்கநாதரைப் போலவே தோன்றுகிறது. மண் சுமவாவிடில் தண்டத்தலைவர்கள் மெய் நோவ அடிப்பார்களே. விரைவில் மண் சுமக்க வல்லீரோ?' எனப் பிட்டுவாணிச்சியாகிய முதியவள் பரிவுடன் வினவினாள். அதைக்கேட்ட இறைவன், 'இளைப்பின்றி விறகு சுமப்பேன். தண்ணீர் சுமப்பேன், மண் சுமக்கமாட்டேனோ? எனக்குக் கூலியாக என்ன தருவாய்' எனக் கேட்டான். 'ஐயா, என்னிடத்திற் பொருளில்லை, வெய்தாய் நறுவிதாய் வேண்டுமளவும் நுகரத்தக்க இன்சுவையுடையதாய் என்பாலுள்ள பிட்டமுதினைக் கூலியாக முற்படத் தருவேன்' என அம்முதியவள் கூறினாள். 'சொக்கனிடத்துப் பேரன்பு பூண்டவள் நீ, எனக்கு உதிராத பிட்டினைக் கொடுக்க வேண்டுமென்பதில்லை உதிர்ந்த பிட்டும் எனக்குப் பிடிக்கும்' எனக் கூலியாளாய் வந்த இறைவன் கூறினான். அன்பிற் சிறந்த முதியவள் அவனை நோக்கி, 'ஐயா, வைகைக்கரை காக்கும் அதிகாரிகள் மிகவும் பொல்லா தவர்கள். யான் தரும் பிட்டினைத் தின்று விரைந்து சென்று எனக்கு அளந்த பங்கினைச் சோம்பலின்றி அடைப்பீராக' என்று கூறித் தான் அப்பொழுது அவித்த பிட்டினை அன்புடன் கொடுத்தாள். கூலியாளாய் வந்த அவன் அப்பிட்டினை மடி

நிறைய வாங்கிக் கட்டிக்கொண்டு வைகைக்கரையை அடைந்தான்.

இனியவை பெற்றால் தனித்துண்ணாது பலர்க்கும் கொடுத்து உண்ணுதல் வேண்டும் என்ற முறைப்படி இறைவன் தான் பெற்ற சுவை நிறைந்த பிட்டினை வைகைக்கரையில் வேலை செய்யும் ஏனைய கூலியாட்களுக்குங் கொடுத்துத் தானும் உண்டு மகிழ்ந்து ஆடிப்பாடினான். தன்னிடமுள்ள பிட்டுத் தீர்ந்தவுடன் புழுதிபடிந்த மேனியோடு பிட்டு வாணிச்சியாகிய முதியவளிடம் சென்று 'அன்னையே, மண் சுமந்து இளைத்தேன். உனக்கு அளந்த கரையிற் பெரும்பகுதி அடைத்தாயிற்று. சொக்கனார் ஆணை' என்றான். அவ் அம்மையும் அவன் மொழியினை நம்பி மேலும் பிட்டமுதினை நிறையக்கொடுத்தாள். அவன் அதனைப் பெற்று முன்போலவே ஏனையோர்க்குங் கொடுத்துத் தானும் உண்டு கரையை யடைப்பவன் போல அங்குமிங்கும் திரிந்து சில இடங்களில் கரையினையும் உடைத்துவிட்டான். அந்நிலையில் கணக்கர்கள் அவ்விடம் வந்தனர். அவன் அவர்க்கு முன் சென்று 'என்னையொப்பவர் ஒருவருமிலர். என்னை முதலாளாகத் தெரிந்து கொள்ளுங்கள்' எனக் கூறினான். அங்குள்ள வேலையாளர் இவனுடைய குறைகளைச் சொல்லினர். எனினும் இவனால் தமக்குத் தீங்கு நேர்தலாகா தென்றஞ்சிய கணக்கர்கள் இவனையே முதலாளாகக் குறித்துச் சென்றார்கள். அவர்கள் போனபின் அவன் கூடையைத் தலைக்கணையாக வைத்துக் கால்மேல் காலை வைத்துப் படுத்திருந்தான். அங்கு நிகழும் வேலைகளைக் கண்காணிக்க அரசனால் அனுப்பப்பட்ட பணியாளர் சிலர் அங்கு வந்து, 'மண்சுமவாது படுத்திருக்கும் இவன் யார்?'என வினவினர். அங்குள்ள ஆட்கள் 'இவன் பிட்டு வாணிச்சி ஆள்' என்றனர். அது கேட்ட பணியாளர் கூலியாளாகிய இறைவனை நோக்கி 'அதிகாரியிடத்தில் உன்னை ஒப்படைப்போம். வா' என அழைக்க, அவனும் தண்டத் தலைவராகிய அதிகாரியின் முன் சென்று நின்றான். அவனைக் கண்டு அதியசமுற்ற அதிகாரி, 'மெல்லிய உடம்பினனாகிய நீ யார்? விளங்கச் சொல் என்றான். 'தந்தை, தாய் உடன் பிறந்தார், சுற்றத்தார் ஒருவரும் எனக்கில்லை. பொருளும் இல்லை. இப்பெரிய நகரத்தில் ஒரு மூலையிலிருக்கும் கொற்றாள் யான். பிறர்க்கென உழைப்பதே எனது தொழில். என்னைக் கொண்டு அதிகாரிக்கு என்ன காரியம் ஆக வேண்டும்' என்றான் இறைவன். இம்மொழியினைக் கேட்டு வெகுண்ட அதிகாரி, கொற்றாளாகிய இறைவனை நோக்கி 'உனக்கு அளந்து கொடுத்த கோலறையில் ஒரு கூடை மண் கூட இட்டாயில்லை. சிறிதும் அச்சமின்றி உரையாடுகின்றாய். உன்னை நூறடிகள் அடித்தாலும் தகும். உன்

உடலின் மென்மையைக் கண்டு அடிக்க மனம் வரவில்லை. விரைந்து சென்று மண்ணை வெட்டியிட்டுக் கரையை அடைப்பாயாக' எனக் கடிந்து கூறினான். கொற்றாளாகிய அவன் அவ்விடத்தை விட்டகன்று முன்போற் படுத்துக் கொண்டான்.

மன்னன் ஏவலால் கரையை நோக்கி வந்த தண்டத் தலைவர்கள் பிட்டுவாணிச்சிக்கு அளந்து கொடுத்த கரை அடைக்கப் பெறாது வெள்ளத்தால் அறுக்கப்பட்டுச் சிதைவுறுதலைக் கண்டார்கள். அருகே பணிசெய்யும் சிற்றாட்களை நோக்கி 'இஃது யாருடையது' எனக் கேட்க 'இது பிட்டு வாணிச்சியது' என்றுரைத்து அவளுடைய கொற்றாள் செய்த குறும்புகளை யெல்லாம் எடுத்துக்கூறினார்கள். சினமுற்ற தண்டத்தலைவர்கள், பிட்டுவாணிச்சியின் கொற்றாளைக் கண்டு 'நீ சிறிதும் அச்சமென்பதின்றி மண் சுமவாமல் இவ்வாறு விளையாடித் திரிவதற்குரிய காரணமென்ன' எனக் கேட்க, அவன் 'காரணம் ஒன்றுமில்லை, கழுத்து நோவச் சுமப்பேன்' எனக்கூறினான். 'இனி நீ விரைந்து சென்று மண் சுமக்கவில்லையானால் நன்றாக அடிப்போம்' என அவர்கள் அவனை அச்சுறுத்தினர். அவன் மிகவும் அஞ்சியவன் போல ஒரு கூடை மண்ணை வெட்டி யெடுத்துத் தலைமேற் சுமந்து கொண்டு அடிமேல் அடிவைத்து நடந்தான். அது கண்ட தண்டத்தலைவர் 'இக்கொற்றாளாற் சிறிதும் நன்மையில்லை. இவன் உடைப்பினை ஒழுங்காக அடைக்க மாட்டான்' எனச் சினந்து அவனைப் பிடித்து அவனது நடுமுதுகிற் சிவக்க அடித்தனர். அந்நிலையில் கொற்றளாய் வந்த இறைவன் தன் முடியிற் சுமந்த கூடை மண்ணை வைகைக் கரையுயரும்படி அதன் மேலே கொட்டிவிட்டுப் புன்சிரிப்புடை யனாய் 'என்னை ஏன் அடிக்கின்றீர்கள்?' என்று சொல்லிக் கொண்டே கொற்றாட்கள் கூட்டத்திடையே புகுந்து மறைந்தனன். தண்டத்தலைவர் 'அவன் எங்கே ஓடினான்' எனத் தேடிப் பார்த்தும் காணாதவராகி அவனை யனுப்பிய பிட்டு வாணிச்சியை யடைந்து அவளைத் தண்டித்தற்கு நெருங்கினார்கள். அவர்கள் அணுகுதற்கு முன்னரே முதியவளாகிய அவ்வம்மை சொக்கநாதர் திருவருளால் மண்ணுலகத்தவர் காண மாறா இளநலம் வாய்ந்த தெய்வ வடிவத்தினைப் பெற்று எல்லாவுலகிற்கும் மேலாகிய சிவலோகத்தை யடைந்தாள். அவ்வழகிய காட்சியைக் கண்ட தண்டத்தலைவர்கள் திகைத்து அதிசயித்து நின்றனர்.

இறைவன்மேற் பட்ட அடி, நாடாள் வேந்தனாகிய பாண்டியன் முதலாக இவ்வுலகில் வாழும் நிற்பன நடப்பனவாகிய எல்லாவுயிர்களின் முதுகிலும் ஏனையுலகங்களிலும் வாழும் தேவர் அசுரர் முதலிய எல்லோர் முதுகிலும் பட்டுப்

புடைப்பினை உண்டாக்கியது. மதுரை நகர மக்கள், இதனை யறிவோ மென்று பாண்டிய மன்னனையணுகி 'ஒருவன் மேல் அடித்த அடி யாவர் மேலும் பட்டதென்ன?' எனக்கேட்டனர். அரசனும் தன் முதுகைக்காட்டி 'இதன் உண்மையினைச் சொக்கநாதரே அறிவார்' என்றான். அப்பொழுது வாதவூரடிகள் பொருட்டு இறைவனருளால் விசும்பிடத்தே ஓர் அருள்வாக்கு எழுந்தது. 'பாண்டியனே, நீ வேத நூற் பிராயமாகிய நூறாண்டு நெடிது வாழ்வாயாக. நீ நற்பேறுடையவன். நினது பொருள் அறத்தின் வழியே ஈட்டப்பட்டதாதலால் அதனை வாதவூரன் வாயிலாக நம் அடியார்களுக்கு வாங்கிக் கொடுத்தோம். அப்பொருளுக்குத் தக நீ விரும்பிய வண்ணம் குதிரைகளையும் கொண்டு வந்து தந்தோம். அவனை விடுவித்தற்காகக் கொற்றாளாக வந்து மண்சுமந்து பிட்டும் தின்று அடியும் பட்டோம். அவனைச் சிறை நீக்கி அவன் விரும்பிய வண்ணம் இயங்கச் செய்வாயாக. இங்ஙனம் செய்வதனால் நினக்கே நலம் பெருகும்' என ஆகாயத்தில் தோன்றிய அருள்மொழியினை அங்குள்ளார் அனைவரும் கேட்டு அதிசயித்து அரசனை நோக்கினர்.

அருள்வாக்கினைச் செவிமடுத்த பாண்டியன், உள்ளத்தில் அச்சமும் உடம்பிற் புளகமும் எய்தி, 'இது நம் நாட்டிற் குதிரைச் சேவகனாக வந்த ஆலவாயிறைவனது அருள்வாக்கு' எனத் தெளிந்து உடனே திருவாதவூரடிகளைச் சிறையினின்றும் விடுவித்துத் தனது அருகே வரவழைத்துப் பலவகை உபசாரங்களைச் செய்து அவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். 'திருவாதவூர் நாயனீரே, வேந்தர் போற்றும் பெருமானாகிய எம் சொக்கநாதர் நும்பால் வைத்த அன்பினைப் போன்று வேறெங்கும் கண்டோமில்லை. எனது அறியாமையால் நுமக்கு மிக்க இன்னல்களைச் செய்தேன். அவற்றை யெல்லாம் பொறுத்தருளி நுமது திருவுளப் பாங்கின்படி இருப்பீராக' என அடிகளைத் துதித்துப் போற்றினான். அங்குள்ளாரனைவரும் வியப்புற்று அடிகளார் திருவடிகளில் வீழ்ந்து இறைஞ்சினார்கள்.

பாண்டியனால் உபசரிக்கப் பெற்ற திருவாதவூரடிகள் மன்னனை நோக்கி, 'விசும்பில் தோன்றிய வார்த்தையினை இறைவனது அருள்வாக்கென்றே தெளிந்தாய். நின்னைச் சார்ந்து ஒழுகினமையால் இத்தகைய திருவருட்பேற்றினைப் பெற்றேன். நீக்குதற்கரிய பிறவித் தொடர்பையும் அறுத்து உய்ந்தேன். இனி என் வழியே செல்வேன். இன்று எம்பெருமானாகிய கடவுள் உண்டு என ஐயமற உணர்ந்த மெய்யுணர்வால் நினது செல்வம் தீங்கின்றி மேன்மேலும் பெருகியோங்கும்' எனக்கூறி 'நமச்சிவாய வாஅழ்க' என்றெடுத்துச் சிவபுராணத்தை ஓதிக்கொண்டு அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டார். உவகைமிக்க பாண்டியன்

அடிகள்பால் அளவிறந்த பேரன்புடையனாய் அவரைத் தொடர்ந்து சிறிது தூரம் பின் சென்று விடைபெற்றுத் தனது அரண்மனையை யடைந்து அடிகளது திருவருட் செயலை வாழ்த்தியிருந்தான்.

திருவாதவூரடிகள், திருவாலவாய்த் திருக்கோயிலுட் புகுந்து சொக்கநாதரை வணங்கி நின்று 'எளியேனை ஆண்டருளிய பெருமானே, என் பொருட்டுக் குதிரைகளைக் கொண்டு எழுந்தருளியதுமன்றி இன்று நின் முடிவருந்த மண் சுமந்து திருமேனி வருந்தப் பிரம்படியும் பட்டனையே' என நெஞ்சம் நெக்குருகிப் பரவிப் போற்றினார். ஆலவாய்ச் சொக்கர், அடிகளை நோக்கி 'நீ உத்தரகோசமங்கை, கழுக்குன்றம் ஆகிய தலங்களில் நமது திருமேனியைக் கண்டு மகிழ்ந்து கொவை யென்னும் சிறந்த பனுவலைப்பாடிக்கொண்டு தில்லையம்பலத்தே வருக' என்றதோர் அருள்வாக்கினை விசும்பில் தோற்றுவித் தருளினார். அவ்வருள் மொழியைச் செவிமடுத்த வாதவூரடிகள் அவ்வண்ணமே திருவுத்தரகோசமங்கை, திருக்கழுக்குன்றம் முதலிய தலங்களைப் பணிந்து திருவாசகமாகிய செந்தமிழ்ப் பாடல்களைப் பாடிப் போற்றித் தில்லைப்பதியிற் போந்து புத்தர்களை வாதில் வென்று யாவரும் புகழ்ந்து போற்றத் தில்லைச்சிற்றம்பலவன் பொன்னார் திருவடிகளை யடைந்து ஈறிலாப் பேரின்பத்தில் திளைத்து மகிழ்ந்தார்.

இவ்வாறு பெரும்பற்றப்புலியூர் நம்பி வாதவூரடிகளது வரலாற்றை வகைபெற விளக்கியுள்ளார். இவ்வாசிரியர் கூறியது போலவே பிற்காலத்தவராகிய பரஞ்சோதி முனிவரும் தாம் பாடிய திருவிளையாடற் புராணத்தில் மாணிக்கவாசகரது வரலாற்றை நான்கு படலங்களில் விரித்துக் கூறியுள்ளார். எனினும் பெரும்பற்றப்பூலியூர்நம்பி கூறாத புதிய விளக்கங்கள் சிலவும் அவர் கூறியதற்குச் சிறிது வேறுபட்ட நிகழ்ச்சிகள் சிலவும் பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடலில் இடம் பெற்றுள்ளன. அவற்றைத் தொகுத்து நோக்குவோமாக.

## 2. பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம்

திருவாதவூரில் வாதவூரர் பிறந்து வளர்ந்த காலத்தில் பாண்டியநாட்டை ஆட்சிபுரிந்த மன்னன் அரிமர்த்தன பாண்டியன். வாதவூரர் அம்மன்னனுக்கு முதல் மந்திரியாய்க் காரியஞ் செய்து ஒழுகினார். அவர் அந்நாளில் 'நாதனாகிய தன்னையும் என்னையும் நல்கும் போதனாகிய குருபரன் வருவது எப்பொழுது?' எனச் சிந்தித்துக் கொண்டிருந்தார். அந்நிலையில் பாண்டியன் குதிரைகளை வாங்கி வருவதற்கெனத் தந்த பொன் களை ஒட்டகங்களில் ஏற்றி ஏவலாளர்களை முன்னே செல்ல

விடுத்த வாதவூரர், அங்கயற்கண்ணியொடும் அமர்ந்த ஆலவாயிறைவரைப் பணிந்து, 'வெள்ளி மன்றுள் நடம்புரியும் பெருமானே, இப்பொருள்களெல்லாவற்றையும் நினக்கும் நின்பால் அன்புடைய அடியார்களுக்கும் உரியனவாகச் செய்தருளுக' என வேண்டி நின்றார். அப்பொழுது இறைவ னருளால் ஆதி சைவராகிய அருச்சகரொருவர் வாதவூரர்க்கு முன்னே வந்து திருநீறு நல்கினார். அது கண்டு 'நமக்கு இதுபோலும் நன்னிமித்தம் வேறில்லை. இது நன்னெறிக்கு ஏதுவாம்' எனக் கருதிய வாதவூரர், அத் திருநீற்றினை இருகை யேற்று வாங்கியணிந்து இறைவனைப் பணிந்து விடைபெற்றுத் திருப்பெருந்துறையை யடைந்தார். அப்பதியிலுள்ள திருக் கோயிலை யடைந்து வலம் வருங்கால் அக்கோயிலின் ஒரு பக்கத்தே குருந்தமரத்தின் அடியிலே நால்வகை நன்னெறிகளிற் பயிலும் மாணவர்கள் சூழ்ந்து போற்றச் சிவஞான போதமெனும் புத்தகத்தைக் கையிற்கொண்டு யோக ஆசனத்திற் குருவாக எழுந்தருளிய இறைவரைக் கண்டார். அம்பலத்தில் ஆடும் வடிவமும் ஆலின்கீழ் நால்வர்க்கு உபதேசித்த வடிவமும் குருமேனி கொண்டு இங்கெழுந்தருளிய இத்திருவுருவமே என்ற வுணர்ச்சி அவருள்ளத்தே யுண்டாயிற்று. ஆசிரியருடைய திருவடி களில் வீழ்ந்திறைஞ்சினார். அன்புருவாகிய அவர் இறைவனது அருளாகிய வலையில்கப்பட்டு நெஞ்சம் கசிந்துருகினார். அந்நிலையிற் குருவாய் வந்தருளிய சிவபெருமான், வாதவூரர் முடிமிசைத் திருவடிசூட்டித் தீக்கைசெய்து திருவைந்தெழுத்தை உபதேசித்துப் பாசத்தொடர்பகற்றி இன்பமே திகழும் சிவசொரூப மாக அவரை ஆக்கியருளினான். தேனும் பாலும் கருப்பஞ்சாறும் அமுதுமாகித் தித்தித்து ஊனையும் உள்ளத்தையும் உருக்கவல்ல சிவவுணர்வு வாதவூரரது மனத்தகத்தே ஊற்றெடுத்துப் பொங்கிப் புறத்தேயும் கசிந்து படரும் நிலையில் அவர்தம் நாவிலே ஞானவாணியாகிய கலைமகள் வந்து அமர்தாள். தம் வசமிழந்து அன்புருவாகிய வாதவூரர், மெய்ம்மயிர் சிலிர்ப்பக் கண்ணீர் மல்க நாத் தழுதழுப்பத் தம்மை யாட்கொண்டருளிய குருமணியைத் தொழுது போற்றுவாராயினார். பழுதிலாத சொற்களாகிய மாணிக்கமணிகளை வரிசைப்படுத்தி அன்பாகிய வடத்திற் கோத்து இறைவன் திருவடிகளிற் பாமாலையாகச் சாத்துகின்ற வாதவூரர்க்கு 'மாணிக்க வாசகன்' என்ற திருநாமத்தைக் குருவாக வந்தருளிய பெருமான் கொடுத்தருளினான். தித்திக்கும் மணிவார்த்தை கேட்டு மகிழ்ந்த இறைவன், வாதவூரரை நோக்கி 'செய்தற்குரிய கருமம் சிறிதுண்டு. இங்கே யிருப்பாயாக' என்று சொல்லி அடியார்களோடும் மறைந்தருளினான். மெய்யுணர்வு அருளிய குருமணியைக் காணாது உள்ளம் பதைத்து அழுது அரற்றிய வாதவூரர், கோயில் வாயிலை வந்தடைந்து அரசனுடைய பணியாளர்களை நோக்கி 'ஆடி மாதத்திற் குதிரைகள் வந்து

சேரும். நீங்கள் முன்னமே சென்று இச்செய்தியை வேந்தனுக்குத் தெரிவிப்பீராக' எனச் சொல்லியனுப்பினார். மதுரை சென்ற பணியாளர்கள். நிகழ்ந்த செய்தியை உள்ளவாறு மன்னனுக்குத் தெரிவித்தார்கள். அது கேட்ட பாண்டியன் ஒன்றும் உரையாமல் குதிரையின் வரவினை எதிர்நோக்கியிருந்தான்.

வாதவூரர் குறித்த வண்ணம் குதிரை வாராமையால் சினமுற்ற பாண்டியன் தறுகணாளர் சிலரை யழைத்து 'நீங்கள் இவ்வாதவூரனைக் கொண்டு போய்த் தண்டித்து எம்முடைய பொன்னெல்லாவற்றையும் வாங்குங்கள்' எனப் பணித்தான். அப்பணியினை மேற்கொண்ட தண்டத்தலைவர்கள் வாதவூரடிகள் மேல் திணிந்த கருங்கல்லைப் பாரமாக ஏற்றித் துன்புறுத்தினார்கள். அன்பர்பாரந் தாங்குவானாகிய இறைவனே, தாங்கமுடியாத அப்பெரும் பாரத்தினை ஏற்றுப் பொறுத்துக் கொண்டமையால், வாதவூரர் அத்துன்பத்தால் சிறிதும் வருந்தாதிருந்தார். அவரது நிலையினைக் கண்ட தண்டத்தலைவர் 'இது மாயம் போலும்' என வெகுண்டு அடிகளுடைய கையிலும் தாள்களிலும் கிட்டிகட்டி நெரித்தார்கள். இரவுப் பொழுது எய்தியதும் அவரை விலங்கிட்டுச் சிறையிலடைத்துத் துன்புறுத்தினார்கள். வாதவூரர் இறைவன் திருவடிகளைப் புணையாகக் கொண்டு துயரக்கடலைக் கடந்தார்.

வாதவூரரது துயரத்தைப் போக்கத் திருவுளங்கொண்ட சிவபெருமான், ஆவணி மூல நாளில் நந்தி முதலிய சிவகணத் தலைவர்களைக் குதிரைச் சேவகர்களாகவும் காட்டிலுள்ள நரிகளைக் குதிரைகளாகவும் ஆக்கித் தாமும் வேதப்பரிமீது அமர்ந்து மதுரைத் தெருவில் பாண்டியனெதிரே வந்து தோன்றினார். இறைவனது அருட்கண்ணோக்கத்தைப் பெற்ற பாண்டியன், மனமயங்கித் தன்னை மறந்து இருக்கைவிட்டு எழுந்து இருகைகளையும் தலைமேற்குவித்து நின்றான். பின்னர் இறைவன் ஆணையால் மெய்யுணர்வு தடைப்பட ஆன்மபோதம் மேலோங்கப்பெற்ற பாண்டியன், இன்று • நாம் குதிரை வீரனொருவனைக் கண்டு எழுந்து கைகூப்பி வணங்கி நின்றது என்னை? எனத் தனக்குள் சிந்தித்து மீளவும் ஆசனத்தில் அமர்தற்கு நாணி நின்றான்.

குதிரைச் சாத்தின் தலைவராய் வந்து தாம் கொணர்ந்த குதிரைகளின் இயல்புரைத்து அவற்றைத் திறம்பட நடத்திக் காட்டிக் கயிறுமாறிக் கொடுத்த குதிரைவீரர்க்கு விலை மதிக்கவொண்ணாத வெண்பட்டினைப் பாண்டியன் வரிசையாக நல்கினான். வாதவூரரைக் காத்தற்கு வந்த கடவுள் குதிரையில் இருந்திறங்கி அத் தூசினையேற்றுத் தன்முடியிற் சூடிக் கொண்டு வேதப்புரவியொடும் மறைந்தருளினார்.

பாண்டியனது குதிரைப்பந்தியிற் பிணிக்கப்பட்ட மாயக் குதிரைகளெல்லாம் இறைவனது அருள்விளையாட்டால் அன்றிரவே நரிகளாக மாறிப் பழைய குதிரைகளையும் கடித்துத் துன்புறுத்தி மதுரை நகரிற் கலக்கம் உண்டாக்கிக் காட்டிற்கு ஓடிப்போயின. அதனை யுணர்ந்து சினமிக்க பாண்டியன் தன் அமைச்சராகிய வாதவூரரைப் பலவாறு இகழ்ந்துரைத்து 'வாதவூரனாகிய இவனைக் கொண்டுபோய்த் தண்டித்துப் பொருளை வாங்குமின்' எனத் தண்டலாளரை ஏவினான். அரசனால் ஏவப்பட்ட தண்டலாளர்கள், வாதவூரரைக் கொண்டு சென்று, நண்பகற்பொழுதிற் கடுவெயிலிலே ஞாயிற்றைப் பார்க்கும்படி நிறுத்தி, அவருடைய நெற்றியிலும் கைகயிலும் கற்களையேற்றித் துன்புறுத்தினர். அக்கொடுந்துயரைப் பொறுக்க முடியாத வாதவூரர், குருவாக வந்து தம்மையாட் கொண்ட சிவபெருமானை நோக்கி அழுது அரற்றினார். அன்பராகிய அவரது துன்பத்தைத் துடைக்கக் கருதிய இறைவன், தன் சடைமீதுள்ள கங்கையை நோக்கி 'ஊழிக்காலத்துக் கடல் போன்று பெருகி வருக' எனப் பணித்தருள, வைகை நதியிற் பெருவெள்ளமுண்டாகிக் கரைகடந்து மதுரை நகருட் புகுவதாயிற்று. மாணிக்கவாசகரை ஒறுத்த தண்டலாளர்கள் வெள்ளப் பெருக்கிலிருந்து தம் பொருள்களைப் பாதுகாத்துக்கொள்ள எண்ணித் தத்தம் வீடுநோக்கி விரைந்து சென்றனர். தண்டலாளர்கள் தம்மைவிட் டகன்றமை கண்ட வாதவூரர், திருவாலவாய்த் திருக்கோயிலுக்குச் சென்று ஆலவாய் இறைவன் திருவடிகளை இறைஞ்சிப் போற்றி அப்பெருமானது திருவருளின்பத்தில் திளைத்து எழுது சித்திரம் போன்று அசைவற்று இருந்தார்.

நரைமுதியாளாகிய வந்திக்குக் கூலியாளாக வந்தருளிய சோமசுந்தரக் கடவுள் வைகைக் கரைக்குச் சென்று வந்தியின் கூலியாள் என்று தம்மைக் கணக்கில் எழுதும் படி செய்துவிட்டுத் தமக்குரிய பங்கனை அடைக்காமல் பிட்டினை உண்டு ஆடிப் பாடிப் பொழுதுபோக்கினார். உடைப்பு அடைபட்டதனை நோக்கவந்த அதிகாரிகள், வந்திக்கு அளந்த பங்கு அடைபடாமை கண்டு வெகுண்டனர். வந்தியின் ஆளாய் வந்த இறைவனைச் சினந்து நோக்கி அவனது திருமேனியின் இயல்பறிந்து அடித்தற்கு அஞ்சிக் கொற்றாளாகிய அவனது குறும்பினை அரசனிடம் சென்று தெரிவித்தார்கள். அது கேட்ட பாண்டியன் அமைச்சர் களுடன் கரையினைக் காணவந்தான். வந்தியின் பங்கு அடைக்கப் பெறாமல் கரையினை யழித்து வெள்ளம் பெருகுதலைக் கண்டு அளவிறந்த வெகுளியுடையவனாய், 'இப்பங்கினை யடைப்பவன் எங்கே சென்றான்' என வினவினான். அரசனது சினங்கண்டு அஞ்சிய ஏவலாளார், வந்தியின் கூலியாளைக் கையிற்பற்றி

யிழுத்து வந்து மன்னன் முன்னே நிறுத்தினர். கொற்றாளைக் கண்டு சினந்த பாண்டியன் தன் கையிலுள்ள பொற்பிரம்பினை ஓங்கி அவர் முதுகில் அடித்தனன். வந்தியாளாய் வந்த இறைவர் கூடையோடு மண்ணை உடைப்பிலே கொட்டிவிட்டு விரைவில் மறைந்தருளினார்.

சிவபெருமான் ஆகாயத்திலே தோற்றுவித்தருளிய அருள் வாக்கினால் வாதவூரடிகளது சிவபத்தி மாண்பினை நன்குணர்ந்த பாண்டியன், அச்சமும் உவகையும் அதிசயமும் ஒருங்கெய்தித் திருவாலவாய்த் திருக்கோயிலை யடைந்து சிவனருளில் திளைத்திருந்த திருவாதவூரடிகளுடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். 'அடியேன் அறியாமையாற் செய்த தீங்குகளை யெல்லாம் பொறுத்து மாசுநீக்கி இந்நாட்டினைக் காத்து எங்களை ஆட்கொண்டருள்வீராக' எனக் குறையிரந்து வேண்டி நின்றான். அன்பராகிய வாதவூரடிகள் இறைவனருளைப் பெறுதற்குத் தமக்குச் சார்பாய் நின்ற பாண்டிய மன்னனைப் பாராட்டி வாழ்த்தினர். 'ஆலவாயிறைவன் அடியேனைத் தில்லைக்குச் செல்க எனப் பணித்தான். அரசராகிய நீவிரும் அதற்கு இசைதல் வேண்டும்' என்றுரைத்துப் பாண்டியன்பால் விடைகொண்டு புறப்பட்டார். அடிகளது சிவபத்தியில் ஈடுபட்ட பாண்டியன் அவரைப் பிரிய மனமின்றித் தொடர்ந்து உடன் சென்றான். அடிகள் 'நில்லுமின் நில்லுமின்' எனப்பணித்து மதுரை யினின்றும் புறப்பட்டார். சிவபெருமான் கோயில் கொண் டருளிய திருத்தலங்கள் பலவற்றையும் பணிந்து போற்றித் தில்லைமூதூரிற் சென்று சேர்ந்தார். தில்லைத் திருவீதியினை வணங்கி உள்ளே புகுந்து சிவகங்கையில் நீராடி இறைவன் திருநடம் புரியும் அருள்நிலையமாகிய பொன்னம்பலத்தைக் கண்டு வணங்கினார். திருப்பெருந்துறையில் குருந்தடியிலே தமக்கு உபதேசித்தருளிய அருட்கோலமே திருச்சிற்றம்பலத்திலே வருக என அழைக்கும் முறுவற் குறிப்புடன் திகழ்தல் கண்டு மனமுருகித் தொழுது திருவாசகப் பாமாலைகளாற் பரவிப்போற்றினார். அங்கே அம்பலவன் தோற்றுவித்தருளிய அருள்வாக்கின் தில்லைப்பதியின் கீழ்த்திசையிலேயுள்ள தவவனத்தை யடைந்து சிவயோகத்தில்அமர்ந்திருந்தார்.

ஈழ நாட்டிலிருந்து வந்த புத்தர் சிலர், தில்லையை அடைந்து, தில்லை மூவாயிரவரை ஏழு நாட்களில் வாதத்தில் வெல்வதாகக்கூறி, வாதுக்கழைத்தார்கள். அந்நிலையில், கூத்தப் பெருமான், தில்லைவாழந்தணர்களுக்குக் கனவிலே தோன்றி 'வாதவூரனை அழைத்து வந்து புத்தருடன் வாது செய்வீராக' எனக் கூறி மறைந்தருளினார். தில்லை மூவாயிரவரும் மனமகிழ்ந்து வாதவூரடிகளை அணுகிநின்று 'புத்தருடன்

வாதுசெய்தற்கு வருதல் வேண்டும்' என அழைத்தார்கள். சித்தத்தைச் சிவன்பாலே வைத்தத வாரவூரர் 'வரவியலாது' என மறுத்தார். அந்தணர்கள் மனக்கவலையுடன் மீண்டனர். சிவபெருமான் மீண்டும் அவர்கள் கனவிலே தோன்றித் திருப்பெருந்துறையிற் குருந்தமரத்தின் கீழ்க் குருவாகத் தோன்றி வாதவூரரை ஆட்கொண்ட முறைமையினையும், மாணிக்க மணிபோலும் இன்னிசைத் தமிழ்ப் பாடல்களால் தம்மைத் துதித்தமை பற்றி அவர்க்கு 'மாணிக்கவாசகன்' என்ற பெயர் தந்து தாம் சிறப்பித்த செய்தியையும் எடுத்துரைத்து, 'அவனை மாணிக்கவாசகன் என்று அழையுங்கள், வருவான்' என அறிவுறுத்தியருளினார்.

இறைவன் அறிவுறுத்த வண்ணமே தில்லைவாழந்தணர்கள் மாணிக்கவாசகரை அணுகி அழைத்தார்கள். சிவயோக நிலையில் அமர்ந்த மாணிக்கவாசகர், இறைவனது திருவருட்குறிப்பு இதுவென உணர்ந்து தில்லை திருவடிகளைத் தொழுது போற்றி, அறிஞர்கள் வந்து குழுமிய பட்டிமண்டபத்திலே வந்தமர்ந்தார். ஈழுநாட்டிலிருந்து வந்த புத்தர்களை வேறிடத்தில் அமரச்செய்து தனித்து ஒருபால் அமர்ந்த வாதவூரடிகள், புத்தர்களை வினவி அவர்களுடைய சமயக்கொள்கைகளை அளவை நூல் முறை களால் மறுத்துச் சைவசமயமே மெய்ச்சமயமென நிலை நாட்டினார். புத்தர்களுடன் அடிகள் நிகழ்த்திய வாதத்தில் புத்தர்கள் தோல்வியுற்றனர். புத்த சமயத்தில் ஈடுபாடுடையனாகிய சோழமன்னன், இச்செய்தியையறிந்து ஊமையாகிய மகளையும் உடனழைத்துக் கொண்டு தில்லையை யடைந்தான். 'என் மகளது ஊமையினைத் தீர்த்தோர் யாவரோ அவரே இவ்வாதத்தில் வெற்றி பெற்றவராவர்' எனக் கூறினான். அது கேட்டுப் புத்தர்கள் தங்கள் வழிபடு தெய்வமாகிய புத்த தேவரை நினைத்து மணிமந்திர மருந்து என்னும் மூன்றினாலும் அப்பெண்ணினது ஊமையைப் போக்க முயன்றும் அந்நோய் தீர்ந்திலது. அஃதுணர்ந்த சோழ மன்னன் திருவாதவூரடிகள் திருமுன் தன் மகளைக் கொணர்ந்து நிறுத்தி 'என் மகளாகிய இவளது ஊமையினைத் தீர்த்தல் வேண்டும்' எனத் தனது குறையினைத் தெரிவித்துக்கொண்டான். அவனது வேண்டுகோளுக்கு இணங்கிய அடிகள், தில்லைச் சிற்றம்பலவன் திருவடிகளைச் சிந்தித்து அவ்வூமைப் பெண்ணை அருட்பார்வையால் நோக்கிச் சிவபெருமானது பொருள் சேர்புகழினைத் தனித்தனி வினாவுரையாகப் பாடி வினாவ, அவள் ஊமை நீங்கி, அடிகள் வினவிய வினாக்களுக்கெல்லாம் சிறிதும் தயங்காது தக்கவாறு விடைபகர்ந்தாள். அது கண்டு வியப்புற்ற சோழ மன்னன், சிவபெருமானே முழுமுதற் கடவுள் எனத் தெளிவாக உணர்ந்து கொண்டான்; இறைவனருள் பெற்ற

மாணிக்கவாசகர் திருவடிகளில் வீழ்ந்திறைஞ்சித் தில்லை மூவாயிரவவரைப் பணிந்து முன்பு அவர்கள் சொன்ன வண்ணமே புத்தர்களைத் தண்டித்துத் தில்லைச் சிற்றம்பலவன் அருட்கூத்தினைக் கண்டு போற்றிச் சைவனானான்.

சிவனருள் விளக்க வந்த திருவாதவூரடிகள், தில்லைப் பதியிலே தங்கி மணிமன்றுள் நடம்புரியும் பெருமானை வழிபட்டு மாணிக்கமணி போலும் வாசகப் பாமாலையைப் பாடிப் போற்றித் தில்லையம்பலவன் திருவடிக்கீழ் ஈறிலா ஞானானந்தப் பேரொளியிற் கலந்து இன்புற்றார் எனப் பரஞ்சோதி முனிவர் தாம் இயற்றிய திருவிளையாடற் புராணத்தில் குறிப்பிட்டுள்ளார்.

## 3. திருவாதவூரர் புராணம்

திருவாதவூரடிகள் மதுரையை விட்டகன்று தில்லைச் சிற்றம்பலவன் திருவடி நீழலெய்தியது வரையுள்ள நிகழ்ச்சி களைப் பெரும்பற்றப்புலியூர் நம்பி இரண்டு செய்யுட்களில் தொகுத்துக் கூறி முடித்தார். அடிகளது வரலாற்றின் பிற்பகுதியாகிய அதனைப் பரஞ்சோதி முனிவர் சில பாடல்களில் வகுத்து விளக்கினார். இவ்விருவர் நூல்களிலும் சுருக்கமாகவும் சிறிது விரிவாகவும் கூறப்பட்ட செய்திககளையும் அறவே கூறப்படாது எஞ்சிய செய்திகள் சிலவற்றையும் ஆராய்து நோக்கி அடிகளது வரலாற்றைத் தொடக்கம் முதல் இறுதிவரை முழுவதும் விரித்துக் கூறும்நூல், கடவுள் மாமுனிவர் பாடிய திருவாதவூரர் புராணமாகும். அடிகளது வரலாறொன்றையே பொருளாகக்கொண்டு பாடப்பெற்ற இந்நூல், இலக்கியச்சுவை நிரம்பிய செந்தமிழ்க் காப்பியமாகத் திகழ்கின்றது. இரண்டு திருவிளையாடற் புராணங்களிலும் கூறப்படாது இந்நூலில் மட்டும் கூறப்படும் குறிப்புக்களைத் தொகுத்து நோக்குவோமாக.

ஆரிய தேசத்து வணிகர்கள் குதிரைகளுடன் சோழ நாட்டுக் கடற்கரையிலே வந்து இறங்கிய செய்தியைத் தூதர்கள் பாண்டியனுக்குத் தெரிவித்தார்கள். பாண்டியன் தன் அமைச்சராகிய வாதவூரரை நோக்கி 'நீவிர் தூதராகிய இவர்கள் சொன்ன இடத்திற்குச் சென்று நல்ல குதிரைகளை வாங்கி வருவீராக' எனப்பணித்தான். அறநெறியால் வந்த பொருளில் நாற்பத்தொன்பது கோடி பொன்னை அரசன் அவரிடம் கொடுத்தான். அப்பொருளைப் பெற்ற வாதவூரர் நல்ல நாளிலே சொக்கலிங்கப் பெருமானை வணங்கிப் பாண்டியன்பால் விடைபெற்றுப் பரிசனங்களுடன் மதுரையிலிருந்து புறப்பட்டுக் கீழ்த்திசை நோக்கிப் பல காவததூரஞ் சென்று திருப்பெருந் துறையை அணுகினார்.

அந்நிலையில் வாதவூரரை ஆட்கொள்ளத் திருவுளங் கொண்ட சிவபெருமான் சிவகணநாதர்கள் அடியவர்களாகிச் சூழ்ந்து போற்ற ஆசிரியத் திருமேனி கொண்டு திருப்பெருந் துறையிலுள்ளதொரு பூஞ்சோலையிலே குருந்த மரத்தடியில் எழுந்தருளியிருந்தார். அச்சோலையின் அருகே வந்த வாதவூரர், அதனுள்ளிருந்த வந்த சிவாகம ஒலியைக் கேட்டுத் தம்முடன் வந்த ஏவலரை நோக்கி 'இவ்வொலி இன்னதென அறிந்து வம்மின்' என ஏவினார். 'சிவனடியார்கள் சூழ்ந்து போற்றச் சிவபெருமானை யொத்த சிவயோகியாரொருவர் குருந்தமர நிழலில் வீற்றிருக்கின்றார்' என ஏவலாளர் அறிந்துவந்து கூறினர். வாதவூரர் சிவிகையை விட்டு இறங்கிச் சோலையினுள்ளே சென்று ஆசிரியன் எழுந்தருளியிருக்கும் தெய்வ சபையைக் கண்டு மனத்தால் வணங்கியும் மெய்யால் வணங்காதவர்போல் அவரெதிரே சென்று அவர்தம் திருக்கையிலுள்ள ஏட்டுச் சுவடியைக்கண்டு 'ஐயா நுமது கையிற் பொருந்திய புத்தகம் யாது?' என வினவினார். 'சிவ ஞானபோதம்' என ஆசிரியர் விடைபகர்ந்தார். அங்ஙனம் கூறியவளவில் வாதவூரர் அவ்வாசிரி யரை நோக்கி, 'சிவம் ஏது? ஞானம் ஏது? இங்கு இலங்கியிடும் போதம் ஏது? இவற்றை விளக்குவீராயின் கல்லாலின்கீழ் வீற்றிருக்கும் பரமகுரு நீரேயாவிர், யான் உமக்கு அடியனாவேன்' எனக் கூறினார். 'நிலைபெற்ற சிவமாவது ஒப்பற்ற முழுமுதற் பொருள், அதனை வழிபட்டு அதனியல்பினை ஐயத்தினீங்கி உள்ளவாறறிதலே ஞானமாகும். அங்ஙனம் அறிந்ததனை அநுபூதியில் வைத்துத் தெளிந்துணர்தலே போதம் எனப்படும்' என உள்ளம் உருகும் வண்ணம் ஆசிரியர் எடுத்துரைத்தார். அந்நிலையில் வாதவூரர் 'எளியேனை ஆட்கொள்ள வேண்டி மன்றுளாடும் இறைவனே இத்திருமேனி கொண்டு எழுந் தருளினான்' என நினைத்து 'எம்முயிர்க்கிறைவா, இன்று என்னை அடிமைகொள்வாயாக' என மொழிந்து ஆசிரியனை முன்னுற வணங்கி நின்றார். அங்கிருந்த பழவடியார்களில் ஒருவர், தம் மெய்க்குரவனை வணங்கி நின்று 'இவனை அடியவனாக ஏற்றருளல் வேண்டும்' என வேண்டிக் கொண்டார். அதற்கு இசைந்த ஆசிரியர், வாதவூரரை நோக்கி, 'அன்பனே, நீ முன்னைப் பிறவிகளிற் செய்த தவத்தினாலே உன்னை அடிமை கொள்ளுதற் பொருட்டு இன்று இப்பெருந்துறையின் கண் வந்தோம். மனம் வருந்தற்க' எனத் திருவாய் மலர்ந்து தம் அடியவர்களைக் கொண்டு பட்டினாலும் மலர்மாலைகளாலும் அமைக்கப்பெற்ற பூங்கோயிலிலே அமர்ந்து வாதரவூர் அன்புடன் செய்த வழிபாட்டினை ஏற்றபின் நள்ளிரவிலே வாதவூரர்க்கு முறைப்படி தீக்கை செய்து திருவைந்தெழுத்தினை உபதேசித்தருளினார்.

பொழுது புலர்ந்ததும் வாதவூரர்க்குச் சிவாகமங்களின் சாரங்களையெல்லாம் விளங்க விரித்துரைத்துக் 'குருவாய் வந்த இவ்வுருவினை நின் மனத்தில் இருத்துவாயாக' என மொழிந் தருளினார். மெய்ப்பொருளுபதேசம் பெற்ற வாதவூரர், ஆசிரியரைத் துதித்துப் போற்றித் தாம் குதிரை வாங்குதற்கெனக் கொணர்ந்த பெரும் பொருளை அவர் திருமுன் வைத்து 'என்னுயிரும் உடலும் உடைமையும் ஆகிய எல்லாம் நினக்கே உரியன' எனக்கூறி வணங்கினார். ஆசிரியரும் அவர் தந்த பொருளை யேற்றுக்கொண்டு தம் அடியார்களுள் ஒருவரை நோக்கி 'இப்பொருள் எல்லாவற்றையும் சிவாலயத்திருப் பணிக்கும் அருந்தவத்தோராகிய அடியார்களுக்கும் வறுமையால் நலிவுற்றார்களுக்கும் வழங்குவீராக' எனப் பணித்தார். அவரும் அவ்வாறே அப்பெரும் பொருளைச் சிவப்பணிக்குச் செல விட்டார். திருவாதவூரர் பிறவித்தொடர்பு நீங்கிச் சீவன் முத்தராக விளங்கினார். பரிசனங்கள் சூழ்ந்துவரக் குடை நிழற்றச் சிவிகையிலேறி வேந்தரைப் போன்று வந்த வாதவூரர், கோவண ஆடையும் முழு நீறு பூசப்பெற்ற மேனியும் விரித்த குடுமியும் உடையராய் நெஞ்சு நெக்குருகிக் கண்ணீர் சொரியத் தம்மை ஆட்கொண்டருளிய ஆசிரியரைத் தொழுது போற்றி அன்பினால் அழுதரற்றினார். உலகத்தை அறவே மறந்து இரவு பகல் காணாராய் ஞான நன்னிலையில் நின்று பித்தர், பாலர், பேய் கோட்பட்டோர் என்னும் இவர்களது தன்மையை எய்தினார்.

உடன் வந்த பரிசனங்கள், பாண்டியன் வெகுள்வான் என அஞ்சி வாதவூரரை யடைந்து வணங்கித் தென்னவன் முனியா முன்னம் குதிரைத் தொகுதியினைக் கொண்டுசேர வேண்டுமெனச் சிந்தியாமையாகிய இது குற்றமாகும் என இரங்கி 'ஐயர் நீர் வருதல் வேண்டும்' என அழைத்தார்கள். வாதவூரடிகள் அவர்களை இன்னாரென்றுணராதவராய் " நீவிர் பொய்யெலாம் உரைத்தல் வேண்டாம் இவ்விடத்தைவிட்டு அகலுமின்" எனப் புகன்றார். அடிகளது நிலைகண்டு துயருற்ற பரிசனங்கள், அவரை விட்டு நீங்கி மதுரையையடைந்து பாண்டியனை வணங்கி நிகழ்ந்தவற்றை எடுத்துரைத்தார்கள். அது கேட்டுச் சினமுற்ற பாண்டியன், திருமுகம் ஒன்று எழுதித் தூதர் கையிற் கொடுத்து 'இதனைக் காட்டி வாதவூரனைக் கைக்கொண்டு வம்மின்' எனப்பணித்தான். சென்ற தூதர்கள், வாதவூரரையணுகி மன்னது ஓலையினைப் படித்துக் காட்டினார்கள். வாதவூரடிகள் இறைவன் திருமுன்பு சென்று வணங்கித் தென்னவன் எழுதிய ஓலையிலுள்ள வாசகங்களை எடுத்துரைத்தார். அதனைச் செவிமடுத்த சிவபெருமான், வாதவூரடிகளை நோக்கி 'நாடெல்லாம் மதிக்க நாமே நல்ல குதிரைகளைக் கொண்டு சென்று பாண்டியனுக்கு

அளித்து மீள்வோம். நீ தூதருடன் சென்று மன்னனைக் கண்டு ஆவணி மூல நாளிற் குதிரைகள் வரும் எனக் கூறுவாயாக' என மொழிந்து மன்னவன் மகிழ வாதவூரடிகளை முன்பு போல் மந்திரிக் கோலஞ் செய்து அவர் கையில் விலை மதித்தற்கரிய மாணிக்க மணியொன்றைத் தந்து 'இம்மணியினைக் கையுறை யாகக் கொடுத்துப் பாண்டியனைக் காண்பாயாக' எனக் கூறியனுப்பினார். அவ்வாறே மதுரையை யடைந்த வாதவூரர், மன்னனையணுகி மாணிக்க மணியைக் கையுறையாகத் தந்து, 'ஆவணி மூல நாளிற் குதிரைகள் வந்து; சேரும்' எனக் கூறினார். சினந்தணிந்த மன்னன் வரிசைகள் நல்கி அடிகளை அவரது மாளிகையிற் செல்லப் பணித்தான்.

அமைச்சர்களுள் ஒருவன் பாண்டியனை யணுகி, வாதவூரர் கூறியனவெல்லாம் பொய்யெனக் கூறினான். உண்மையுணர விரும்பிய மன்னன், 'பெருந்துறையிற் குதிரைகள் உள்ளனவா என்பதை விரைவில் அறிந்து வந்துரைமின்' எனத் தூதர்களை ஏவினார். தூதர்கள் பெருந்துறையிலும் அதனைச்சார்ந்த இடங்களிலும் குதிரைகளைக் காணாது மீண்டு வந்து அரசனிடம் தெரிவித்தார்கள். அதுகேட்டு வெகுண்ட பாண்டியன் 'நமக்கு அமைச்சனாகி இடர் செய்யும் வாதவூரனைத் தண்டித்து நம் பொருள் முழுவதையும் அவனிடமிருது வாங்குமின் எனத் தண்டலாளரை நோக்கிக் கூறினான். அவர்கள் வாதவூரடிகளைச் சிறையில் அடைத்தனர். மறுநாட் காலை கடுவெயிலில் நிறுத்தித் துன்புறுத்தினார்கள். இளைப்புற்று வருந்திய வாதவூரடிகள், தம்மை யாட்கொண்டருளிய இறைவனை நினைந்து "எங்கள் பெருமானே, 'மன்னனுக்குக் குதிரைகளைக் கொண்டு வந்து கொடுத்தல் நமது கடமையாகும்' எனக் கூறிய சொல்லும் பொய்யாகுமோ" எனப் புலம்பி முறையிட்டார். அன்பராகிய அவர் கூறிய மாற்றமெல்லாம் இறைவன் செவியிற்புக்கன.

வாதவூரடிகளின் துயரத்தைப் போக்க எண்ணிய சிவபெருமான், நரிகளெல்லாம் குதிரைகளாகவும் தேவர்கள் குதிரை வீரர்களாகவும் திருவுளங்கொண்டார். உடனே நரிகள் குதிரைகளாகி வந்து கூடின. தேவர்கள் குதிரை வீரர்களாகி வந்து குழுமினர். இறைவன் குதிரை வாணிகராய் வேதக் குதிரையின் மீதமர்ந்து குதிரைத் திரளுடன் மதுரைக்கு எழுந்தருளினர். குதிரைத்திரள் வரக் கண்ட நகரமாந்தர், அரசனிடம் சென்று தெரிவித்தனர். அச்செய்தி கேட்டு மகிழ்ந்த பாண்டியன், வாதவூரர் பால் அன்புடையனாகி அவரையழைத்துச் சிறப்புச் செய்து குதிரைத்திரள் காண வருவீராக எனக் கூறிச் சிவிகையிலேறிச் செண்டுவெளியை யடைந்தான். குதிரைச் சேவகனாக வந்த இறைவனைக் கண்ட வாதவூரடிகள் 'பண்ணியதவப் பயன்

பரியின் மீது நண்ணியது' என வியப்புற்றார். பாண்டியன் வாதவூரரை நோக்கி 'ஆரிய வணிகரை இவ்வீதியிலே குதிரை நடத்திக் காட்டுமாறு சென்று கூறுமின்' என்றான். அடிகளும் குதிரைத் தலைவரை யணுகி, முகமன் கூறி மன்னது விருப்பத்தைத் தெரிவித்தார். குதிரைச் செவகராய் வந்த இறைவர் மன்னன் வியந்து காணும் வண்ணம் குதிரையை நடத்திக் காட்டினார். அதனைக் கண்டு மகிழ்ச்சியுற்ற பாண்டியன் பொன்னாடையைப் பரிசாக வழங்கினான். குதிரைத் தலைவராய் வந்த இறைவர் அவ்வாடையைச் செண்டினால் ஏற்றார். தான் அளித்த பொன்னாடையைக் கையினால் வாங்கி முடிமிசைப் புனைந்து கொள்ளாத குதிரைச் சேவகனது செயல் கண்டு பாண்டியன் சினமுற்றான். அரசனது வெகுளி நிலையினைக் குறிப்பாலுணர்ந்த வாதவூரர் 'அஃது அவர் நாட்டு வழக்கம்' எனக் கூறி மன்னனது சினத்தைத் தணிவித்தார். பரியிலக்கணம் வினவிய பாண்டியனுக்குக் குதிரை வாணிகராய் வந்த இறைவர் அவற்றை விளக்கிக் கூறிக் குதிரைகளைக் கயிறுமாறிக் கொடுத்தார். குதிரைகளெல்லாம் பந்தியிற் கட்டப் பெற்றன. குதிரை வாணிகராய் வந்த இறைவர் திருவாலவாய்க் கோயிலை யடைந்தார்.

அன்றிரவில் இறைவனது அருள் விளையாட்டால் குதிரை களெல்லாம் நரிகளாக மாறி முன்னுள்ள பழைய குதிரைகளையும் கடித்து வருத்திக் கூக்குரலிட்டு ஓடி மதுரை நகரத்தார்க்குத் துன்பமுண்டாக்கின. இதனையுணர்ந்து சினமுற்ற பாண்டியன். வாதவூரரைக் கடுவெயிலில் நிறுத்தி 'நம்முடைய பொருளெல்லாவற்றையும் குறைவற வாங்குமின்' எனத் தண்டலாளரை ஏவினான். அவர்கள் வாதவூரரை வெயிலில் நிறுத்தித் துன்புறுத்தினார்கள். வாதவூரடிகள், சோமசுந்தரக் கடவுளை நினைந்து முறையிட்டார். அடிகளது துயரத்தைப் போக்கத் திருவுளங் கொண்ட இறைவர், கங்கையை நோக்கி 'நீ வைகையிற் சென்று வாதவூரரது துன்பத்தைப் போக்குவாயாக' என ஏவினார். வைகையிற் பெருவெள்ள முண்டாயிற்று. வைகையாறு உடைப்பெடுத்தமையால் அதன் வெள்ளம் மதுரை நகரத்துட் புக்கது. நகரமாந்தர் மனங்கலங்கினர். பாண்டியன் வைகைக் கரையை யடைந்து பொன்னும் மணியும் முத்தும் நறுமலரும் தூவி வைகை நதியை வணங்கி 'அன்னையே நின் சினந்தணிதல் வேண்டும்' என வேண்டி நின்றான். வெள்ளப் பெருக்கு சிறிதும் குறையவில்லை. அரசனுக்குக் கவலை பெரிதாயிற்று. "எம்பெருமானாகிய திருவாலவாயிறைவனது திருக்கோயிற் பூசை முட்டுப்பாடுற்றதோ? தவச் செல்வர்கள் மனம் வருந்த யாம் தீமை செய்ததுண்டோ? சொல்லுமின்" எனத்

தன் அருகிலிருந்த அமைச்சர்களை வினவினான். அமைச்சர்கள் மன்னனைத் தொழுது நின்று, 'அரசே, சிவனடிக்கு அன்பராகிய திருவாதவூரடிகளைக் கடுவெயிலிலிருந்து விடுவித்து மகிழ்வித்தால் இவ்வெள்ளப் பெருக்கு தணியும்' எனக் கூறினார்கள். பாண்டியனும் வாதவூரடிகளை யழைத்து உபசரித்துத் தன் பிழைகளைப் பொறுத்தருளும்படி வேண்டினான். 'வெள்ளப் பெருக்கால் நமது மதுரை நகரம் சிதைவுறாத படி நற்றவத் தலைவராகிய நீரே வைகையாற்றின் உடைப்பினை அடைப்பித்தருளல் வேண்டும்' எனக் குறை யிரந்தான். விருப்பு வெறுப்பில்லாத வாதவூரடிகள், வைகைப் பெருக்கு தணியுமாறு இறைவன் திருவடிகளைச் சிந்தித்தார். குதிரைச் சேவகனாகி வந்த இறைவனது திருக்கோலத்தையே நினைந்து வானை நோக்கி வணங்கினார். அந்நிலையில் வெள்ளப் பெருக்கு குறைவதாயிற்று. பின்னர்ப்பறை அறைவித்து மக்களை யழைத்து அவரவர்கள் அடைக்க வேண்டிய நிலப்பகுதியை அளந்து அறிவித்தனர். மக்களனைவரும் தத்தமக்கு அளந்து விடப்பட்ட பகுதியை அடைக்க முற்பட்டனர்.

மதுரை நகரிற் பிட்டு விற்றுப் பிழைப்பவளும் சிவபெருமான் பால் பேரன்புடையவளும் நரை மூதாட்டியுமாகிய செம்மனச் செல்வி யென்பாள், தனக்கு அளந்த கரையினை அடைத்தற்குரிய ஆளின்றி வருந்தித் திருவாலவாய்த் திருக்கோயிலை யடைந்து இறைவன்பால் தன் குறையைச் சொல்லி முறையிட்டாள். அவள் நிலைக்கிரங்கிய சிபெருமான் மண்வெட்டியுங் கூடையுங் கொண்டு கூலியாளாக அவள்முன் தோன்றி அவள் அளித்த பிட்டினை வாங்கியுண்டு, அவளுடன் வைகைக் கரையை யடைந்து அவளுக்கு இட்ட பங்கினை அடைக்கத் தொடங்கித் தான் மேற்கொண்ட வேலையைச் செய்யாது ஆடிப்பாடிப் பொழுது போக்கினார். கூலியாளாகிய இறைவரை நோக்கி ஒன்றுஞ் சொல்ல மாட்டாத பிட்டு வாணிச்சி, 'அரசன் அதிகாரிகள் கண்டால் என்ன நேருமோ' என அஞ்சி நடுங்கி நின்றாள். அவளது மனநிலையை யுணர்ந்த இறைவர் 'அன்னையே, கவலைப்படாது நினது வீட்டிற்குச் செல்வாயாக. உனக்கு அளந்த பங்கை நான் விரைவிலடைத்து விட்டு இதோ வருகிறேன்' என உறுதி சொல்லி அனுப்பிவிட்டுக் கொன்றை மரத்தடியிற் கூடையைத் தலைக்கணையாக வைத்துத் துயில் கொண்டார். அந்நிலையில் வாதவூரரது ஏவலால் கரையினைக் கண்காணிக்க வந்த அதிகாரி, எல்லாப் பங்கும் அடைபட்ட நிலையிலும் பிட்டு வாணிச்சியின் பங்கு அடைபடாது வெள்ளத்தாற் சிதைவுறுதல் கண்டு வெகுண்டு 'அவளுடைய கூலியாளை இங்குக் கொணர்க' எனப் பணிந்தான்.

ஏவலனொருவன் அக் கூலியாளை யிழுத்து வந்து அவன் முன் நிறுத்தினான். வெகுளி மிக்க தலைவன் 'இவனைக் குருதிசோர அடித்திடும்' எனக் கூறினான். அது கேட்டு அருகே நின்ற வன்கணாளன் ஒருவன் பிரம்பினால் ஓங்கியடித்தான். கூலியாளாக வந்த இறைவர், அங்குள்ளார் திடுக்கிடும் படி விரைந்து மறைந்தார். அவர்மேற் பட்ட அடியானது அரசன், அரசியர், அமைச்சர் முதலிய அனைவர் மேலும் பட்டது; வாதவூரடிகள் மேலும் பட்டது; நிற்பன நடப்பனவாகிய எல்லா வுயிர்கள் மேலும் பட்டது.

அஃதுணர்ந்த வாதவூரடிகள், உயிர்க்குயிராகிய இறைவரே இங்ஙனம் கூலியாளாக எழுந்தருளினார். என்றிரங்கிக் கம்பிதமுங் கண்ணீரு முடையரானார். அந்நிலையில் அவர் முன் அதிகாரிகள் விரைந்து வந்து இறைவனுடைய திருவிளையாட்டெல்லாம் எடுத்துரைத்தார்கள். அவ்வருட் செயலைக் கேட்டு நெஞ்சம் நெக்குருகிய வாதவூரர், அவ்வதிகாரிகளை நோக்கி 'இறைவன் மண் சுமந்து விளையாடிய இடத்தை எமக்குக் காட்டுவீராக' என்று சொல்லி, அவர்களுடன் அவ்விடத்தை யடைந்து நிலமிசை விழுந்து புரண்டு அலறி இறைவனது கருணைத் திறத்தை நினைந்து இரங்கினார்; யாவர்க்கும் மேலாம் இறைவனைப் பணி கொண்ட தமது பிழையை நினைந்து பலவாறு புலம்பினார். வைகையாறும் வடிந்தது. இச்செய்தியெல்லாம் அறிந்த பாண்டியன், வாதவூரடிகளை யடைந்து வணங்கித் தனது பிழையைப் பொறுத்தருளுமாறு வேண்டினான். யான் நாளும் நுமது பணி செய்தொழுக இந்நாட்டின் ஆட்சியைத் தாங்களே ஏற்று நடத்தல் வேண்டும் என மன்னன் குறையிரந்து நின்றான். அரசனது அன்பினை யுணர்ந்த வாதவூரடிகள் 'என்னைத் திருப்பெருந்துறைக்குச் செல்ல விடுப்பதே இவ்வுலக ஆட்சியை எனக்கு வழங்கியதாகும்' என்றார். அடிகளது சிவபத்தியின் மாண்பினை யுணர்ந்த மன்னன் 'பெரியீர்நும் திருவுளப்படி செய்மீன்' எனக்கூறி அவர்பால் விடைபெற்றுத் தனது அரண்மனையை யடைந்தான்.

நம்பனுக்கு அன்பு பூண்ட வாதவூரர், நற்றவக் கோலங் கொண்டார்; தமக்கு மெய்யுணர்வளித்து ஆட்கொண்டருளிய ஆசிரியப் பெருமானைக் கண்டிறைஞ்ச விரும்பி, மதுரையி னின்றும் புறப்பட்டுத் திருப்பெருந்துறையை யடைந்து குருநாதர் திருவடிகளில் வீழ்ந்திறைஞ்சினார். அடியார் சூழ ஆசிரியத் திருமேனி கொண்டெழுந்தருளிய இறைவர், வாதவூரடிகளுக்குத் திருநீறு தரித்து அருட்பார்வை நல்கினார் தம்மைச் சூழ்ந்துள்ள அடியார்களை நோக்கி 'நாம் நினைத்து வந்த கருமமெல்லாம் இனிது முடித்தனம். கயிலையிலுள்ள நம் தொண்டர்கள் நமது

திருமேனியைத் தரிசிக்க விரும்பி நம்மை அன்புடன் தியானிக்கின்றனர். ஆதலால் யாம் அங்குச் செல்லுதல் வேண்டும். நீங்கள் மகிழ்ச்சியுடன் இங்கு வாழ்ந்திருப்பீராக' எனத் திருவாய் மலர்ந்தருளினார். தொண்டர்களெல்லாம் இறைவன் திருவடிகளில் வீழ்ந்திறைஞ்சித் தோத்திரஞ்செய்து 'எம் பெருமானே, நினது பிரிவைத் தரித்திருக்கும் ஆற்றலுடையோ மல்லோம். எம்மைக் கைவிடுவாயோ' என அழுதரற்றினார்கள். அவர்கள்பால் அருளுடைய இறைவர் 'நீங்கள் வருந்துதல் தவிர்மின். இன் குருந்தமர நிழலில் தெய்வபீடம் அமைத்து அதன்மீது நம்திருவடிகளை வைத்து வழிபட்டிருப்பீராக. இத் திருத்தமாம் பொய்கையின் நடுவே ஒருநாள் தீப்பிழம்பு வந்து தோன்றும். நீவிர் யாவரும் அத்தழலில் மூழ்கி நம்மையடைந்து மகிழ்மின்' எனக் கூறித் தம்முடன் தொடரும் அடியார்களை 'நில்லுமின்'என நிறுத்திக் கயிலையை நோக்கிப் புறப்பட்டார். அவரைப் பிரிந்திருக்கலாற்றாத வாதவூரடிகள், அவரை மீண்டுந் தொடர்ந்தார். அடிகளது வருத்தத்தினைப் போக்கக் கருதிய இறைவர், அங்குள்ளதொரு கொன்றைமர நீழலிற் சிறிது பொழுது தாமதித்திருந்து வாதவூரடிகளை அருகே அழைத்து 'நாம் எல்லாவுலகத்தும் யாண்டும் நீக்கமறத் தங்கியிருப்போமாயினும், அன்பராகிய அடியார்களது வினைத்தொடர்பகற்றி ஆட் கொள்ளுதல் வேண்டி இத்திருப்பெருந்துறையிற் குருந்த மர நீழலிலே எப்பொழுதும் எழுந்தருளியிருப்போம். இங்குச் சூக்குமநாதவொலியாகிய சங்கநாதமல்லது பிற வாத்தியங்கள் நமக்கு ஆகா. நீ அடியார்களுடன் குருந்தடியில் நம்மை வழிபட் டிருப்பாயாக. திருத்தமாம் பொய்கையில் தோன்றும் தீயுள் அடியார்கள் புகும்பொழுது நீயும் உடன் புகாது இத்தலத்தை விட்டு நீங்கித் திருவுத்தரகோசமங்கையை யடைந்து அங்கே சித்திகளெல்லாம் பெற்றுச் சிவலிங்கத் திருமேனி கொண்டுள்ள திருத்தலங்களிலெல்லாம் இக்குருவடிவத்தையே கண்டு மகிழ்வாயாக. பின் திருக்கழுக்குன்றத்தை வணங்கி அங்கிருந்து மீண்டும் தென்றிசை நோக்கிவந்து தில்லையிற் பொன்னம் பலத்தை வணங்கிப் புத்தர்களை வாதில் வென்று நம்திருவடிப் பேற்றினைப் பெற்று இன்புறுவாய்' எனப்பணிந் தருளினார். இங்ஙனம் வரந்தரவிருந்த பெருமானை வாதவூரடிகள் வணங்கி நின்று 'எம்பெருமானை பெருந்துறை நகரிலன்றிப் புலியூர்ப் பொன்னம்பலத்தே முத்திபெறுவை என்று அடியேற் கருளியது எவன் கருதி?' என வினவினார். 'புழுவானது தான் எடுக்கப்பட்ட இடத்தின் கணன்றி வைக்கப்பட்ட இடத்திலேயே வேட்டுவ னாகிய குளவியின் வடிவத்தைப் பெறும். அதுபோல இப்பெருந்துறையிலே நினக்கு மெய்ஞ்ஞானத்தை யுபதேசித்

தோம். சிவாநுபூதியாகிய பரமுத்தி உனக்குத் தில்லையம் பலத்திலே யுண்டாகும்' எனக் கூறித் தில்லைப்பதியின் சிறப்பினை யெடுத்துரைத்து வாதவூரடிகளின் நெற்றியிலே திருநீறு சாத்திச் சிவபெருமான் மறைந்தருளினார்.

பின்பு வாதவூரடிகள் அடியார்குழுவில் வந்து அடைந்து குருந்தின்கீழ்த் தெய்வபீடம் அமைத்து இறைவன் திருவடிகளை வழிபட்டிருந்தார். இறைவன் தன்னை அன்பினாற் பாடிப் போற்றிய அடியார்களுக்கு இரங்கி யருள்புரிவார் எனத் தெளிந்து 'நமச்சிவாய வாஅழ்க' என்றெடுத்து ஞானவாசகம் பாடத் தொடங்கினார். திருப்பெருந்துறையில் இறைவன் திருவடிகளை வழிபட்டிருக்கும் நாட்களில் அற்புதப்பத்து, அதியப் பத்து, குழைத்தபத்து, சென்னிப்பத்து, ஆசைப்பத்து, வாழாப்பத்து, அடைக்கலப்பத்து, செத்திலாப்பத்து, புணர்ச்சிப்பத்து, அருட்பத்து, திருவார்த்தை, எண்ணப்பதிகம், திருவெண்பா, திருப்பள்ளியெழுச்சி, திருவேசறவு, ஆனந்தமாலை, உயிருண்ணிப்பத்து, பிரார்த்தனைப்பத்து, திருப்பாண்டிப் பதிகம் ஆகிய பனுவல்களைப் பாடிப்போற்றினார்.

சிலநாட்களுக்குப்பின் இறைவன் பணித்த வண்ணமே திருத்தமாம் பொய்கையில் தீப்பிழம்பு தோன்றியது. அன்புடைய அடியார்களெல்லாம் அஞ்செழுத்தோதி அதனுள்ளே புகுந்தார்கள். சிவபெருமான் உமையம்மையாருடன் விடைமீது தோன்றிக் காட்சியளித்தருளினார். அடியார்களனைவரும் சிவகணநாதர்களாயினர். 'புத்தர்களைப் புலியூரில் வாதில் வெல்லுதற் பொருட்த் திருவாதவூரனை இப்புவியில் தங்கச் செய்தோம். எமது பிரிவாற்றாது வருந்தும் வாதவூரனது வருத்தத்தைத் தணித்தற்பொருட்டே நும்மை இங்குச் சிலநாள் இருக்கப்பணிந்தோம். மலநீங்கிய சிவஞானிகளும் மானுட வடிவத்துடன் இந்நிலவுலகில் சிலநாள் தங்குவராயின் அவர்களை மலவாதனை மீளவும் வந்துதாக்கும் என்பது கருதியே பொய்கையில் ஞானக்கினியைத் தோற்றுவித்து நுமது சரீரத்தை நீறாக்கி இவ்வுடம்பினைத் தந்தோம். என இறைவன் சிவகணநாதர்களுக்கு அறிவுறுத்தி அவர்களுடன் மறைந் தருளினார். கொன்றை மரநீழலிற் சிவயோகத்தில் அமர்ந்திருந்த வாதவூரடிகள், இந்நிகழ்ச்சியினை யோகக்காட்சியாலுணர்ந்து, பொய்கைக் கரையையடைந்து இறைவனையும் அடியார்களையும் காணாது வருந்தி அழுதரற்றினார். பின் ஒருவாறு உள்ளந் தெளிந்து குருந்தமர நீழலையணுகி இறைவன் திருவடிகளை யிறைஞ்சி நின்று 'மெய்தானரும்பி' யெனத் தொடங்கும் திருச்சதகத்தைப் பாடிப்போற்றினார். முன் சிவபெருமான் அருளியதனை மனத்தின்கண் நினைந்து திருப்பெருந்துறையி

னின்றும் புறப்பட்டுத் திருவுத்தரகோசமங்கையெய்தி இறைவனது திருக்கோயிலிற் புக்கு அங்குக் குருவடிவத்தைக் காணாது வருந்தி நீத்தல் விண்ணப்பத்தைப் பாடினார். அப்பொழுது இறைவன் அடிகளுக்கு ஆசிரியத்திருமேனி காட்டி அருள் புரிந்தார்.

பின்னர் அங்கிருந்து புறப்பட்டுத் தெய்வத்திருத் தலங்கள் பலவற்றையும் தரிசித்துக் கொண்டு சோழ நாட்டையடைந்து இடைமருதுறையும் பெருமானை இறைஞ்சிப் போற்றினார். திருவாரூர் இறைவனைப் பணிந்து திருப்புலம்பல் பாடினார். சீகாழிப்பதியைப் பணிந்து பிடித்த பத்தினைப் பாடிப் பரவினார். திருக் கழுக்குன்றத்தை வணங்க எண்ணித் தில்லைப் பதியைத் திசைநோக்கித் தொழுது திருமுதுகுன்றம், திருவெண்ணெய் நல்லூரருட்டுறை முதலிய தலங்களைப் பணிந்து திருவண்ணா மலையை அடைந்தார். அங்குள்ள மாதர்களெல்லாம் மார்கழித் திங்களில் திருவாதிரைக்கு முன் பத்துநாள் தொடங்கி வைகறைப்பொழுதில் துயிலெழுந்து மனைகள் தோறும் சென்று மகளிரைத் துயிலெழுப்பி அனைவரும் ஒன்றுகூடிச் சிவபெருமானது மெய்ப்புகழைப்பாடிப் பொய்கையில் நீராடினர். அதுகண்ட வாதவூரடிகள், அம்மகளிர் கூறுவதாகத் திருவெம் பாவையை அருளிச் செய்தார். அவர்கள் விளையாட்டில் கூறும் கூற்றாகத் திருவம்மானை பாடினார். காஞ்சி நகரடைந்து திருவேகம்பம், காமக்கோட்டம் ஆகிய திருக்கோயில்களை இறைஞ்சித் திருக்கழுக்குன்றை அடைந்தார். அங்கே இறைவர் பெருந்துறையிற் காட்டிய குருமேனிகொண்டு காட்சி தந்தருளினார். அவ்வருட் காட்சியைக் கண்டு மகிழ்ந்த அடிகள், திருக்கழுக்குன்றப் பதிகம் பாடினார். பின் தில்லைப் பதியை யடைந்து தில்லைச் சிற்றம்பலவன் ஆசிரியத்திருமேனி காட்டி அருள்புரியக் கண்டு ஆனந்தக் கண்ணீர் சொரியக் கண்டபத்துப் பாடி ஓவியம்போல் அசைவற்று நின்றார். இவ்வாறு நெடுநேரம் தன்வசமிழந்து நிற்கும் வாதவூரடிகளைக் கண்ட கோயில் மெய்க்காவலர் அடிகளைப் பித்தரெனத் தவறாகக் கருதிப் 'பொன்னம்பலத்தை விட்டு வெளியே செல்லும்' எனக் கடிந்துரைத்தனர். நன் புலனொன்றி நின்ற அடிகளது செவியில் அச்சொல் புகவில்லை. பின் அடிகள் தம்முணர்வு வரப்பெற்றுச் 'சிவ சிவபோற்றி' எனத் தில்லையம்பலவனை வழிபட்டு வலம் வந்து திருப்புலீச்சரம், திருநாகேச்சரம் (அனந்தீசம்) ஆகிய திருக்கோயில்களை இறைஞ்சித் தில்லைத்திருவீதியை வலம் வரும்போது குலாப்பத்து, கோயிற்றிருப்பதிகம், கோயில் மூத்ததிருப்பதிகம், கீர்த்தித் திருவகவல், திரு அண்டப்பகுதி, போற்றித் திருவகவல் என்பவற்றைப் பாடினார். மாதர்கள் நறுமணப் பொடியாகிய சுண்ணம் இடிக்குங்கால் அவர்கள்

கூறுவதாகத் திருப்பொற்சுண்ணம் பாடினார். அருகேயுள்ள சோலையிற் சென்று விளையாடும் சிறுமியர்களின் பலவகை விளையாடல்களைக் கண்டு, அங்ஙனம் விளையாடு மகளிர் 'பயனற்ற சொற்களை நீக்கி எம்பெருமானாகிய இறைவனைப் பாடுமின்' எனத் தமக்குள் உரையாடும் நிலையில் திருத் தெள்ளேணம். திருவுந்தியார், திருத்தோணோக்கம், திருப்பூவல்லி, திருப்பொன்னூசல் ஆகிய பனுவல்களைப் பாடிப்போற்றினார். அன்னைப்பத்து, திருக்கோத்தும்பி, குயிற்பத்து, திருத்தசாங்கம், அச்சப்பத்து ஆகிய செழும் பாடல்களைப் பாடித் தில்லைநகர்ப் புறத்திலே இலைக்குடில் (பன்னசாலை) அமைத்து அதன்கண் அமர்ந்திருந்தார்.

இவர் இங்ஙனமிருக்க, சிவனடித்தொண்டு பூண்ட அருந்தவரொருவர், சோழநாட்டுத் தலங்களை வணங்கித் தில்லைப் பொன்னம்பலத்தைக் கண் குளிரக் கண்டிறைஞ்சி ஈழநாட்டை யடைந்தார். தில்லைச் சிற்றம்பலத்தின் பெருமையை யுணர்ந்த அவ்வடியவர், செல்லுமிடந்தோறும் பொன்னம்பலம் என்று கூறுதலை வழக்கமாகக் கொண்டிருந்தார். அவரது இயல்பினைக் கண்டு பொறாத புத்தர்கள், தம் வேந்தனாகிய ஈழ மன்னனைக் கண்டு முறையிட்டார்கள். மன்னன், அவ்வடியவரை அழைத்துவம்மின் என்றான். அரசனது ஏவலால் அழைக்கப் பெற்ற சிவனடியார், அரசன் முன்னிலையில் 'பொன்னம்பலம்' என்று கூறி அமர்ந்தார். 'அச்சொல்லின் சிறப்புயாது' என மன்னன் வினவினான். சிவனடியாராகிய அவர், சிவபெருமான் உமையம்மை காணத் திருநடம்புரியும் தில்லைச் சிற்றம்பலத்தின் சிறப்பினை விரித்துரைத்து 'ஒருமுறை பொன்னம்பலம் என்று சொன்னவர் திருவைத்தெழுத்தை இருபத்தோராயிரத்து அறுநூறுமுறை ஓதிய பயனைப்பெறுவர்' எனக் கூறிமுடித்தார். அது கேட்டு அருகேயிருந்த புத்தகுரு மிகவும் வெகுண்டான். 'திரிபிடகத்தை யருளிய புத்ததேவனாகிய எங்கள் தலைவனை யன்றி வேறொரு தெய்வமுண்டோ? உண்டாயின் தில்லையை யடைந்து அங்குள்ளவர்களை வாதில்வென்று பொன்னம் பலத்தைப் போதிநீழற் பெருமானுக்குரிய புத்தவிகாரமாக மாற்றுவேன் எனச் சூளுரைத்துப் புத்தர்குழுவுடன் புறப்பட்டான். ஈழமன்னனும் ஊமையாகிய தன்மகளை அழைத்துக் கொண்டு தில்லைப் பதியை யடைந்தான்.

முன்னமே சென்ற புத்தகுரு, சிதம்பரத்தையடைந்து திருப்புலீச்சரத் திருக்கோயிலிலே தங்கியிருந்தான். புறச்சமயத்தா னாகிய அவனைக் கண்டி நகரமக்கள் 'தில்லையெல்லையை விட்டு அகல்க' எனக் கடிந்துரைத்தார்கள். 'யான் சோழ

மன்னனுக்கெதிரில் நுமது சைவசமயம் மெய்ச்சமயம் அன்று எனத் தெளிவித்து எங்கள் புத்ததேவனே தெய்வம் என நிலைநிறுத்தியன்றி இவ்விடத்தை விட்டு அகலேன்' எனப் புத்தகுரு கூறினான். இதனைக் கேட்டோர் இச்செய்தியைத் தில்லைமூவாயிரவர்க்குத் தெரிவித்தார்கள். அவர்கள் அங்குவந்து புத்தகுருவை நோக்கி 'நீ இவ்வாறு செய்வது என்' எனவினவக் கேட்ட புத்தகுரு 'நீங்கள் வேதசாத்திர அளவைகளைக் கொண்டு நுமது தெய்வமே தெய்வமென்று நிலைநாட்டுவீராயின், யான் அதனை மறுத்துப் புத்தனே கடவுள் என நிலைநிறுத்துவேன்' என்றான். புத்தனை வாதில்வென்று போக்குதலே முறையென உணர்ந்த தில்லைவாழந்தணர்கள், சோழமன்னனுக்குத் திருமுகம் எழுதியனுப்பி அருந்தவ முனிவர்களாகிய சிவனடியார்களுக்கும் ஓலையெழுதியனுப்பினார்கள். இரவுப் பொழுதெய்திய அளவில் தில்லை நகர மக்கள் அனைவரும் தத்தம் மனையிற் சென்று துயில் கொண்டனர். அன்றிரவு வைகறைப் பொழுதிலே தில்லைப் பெருமான் சடைமுடியும் முழுநீறு பூசிய திருமேனியும் உடையராய்க் கையிற் பிரம்பு தாங்கித் தில்லைநகர மக்களது கனவிலே தோன்றி 'நீவிர் வருந்துதலொழிமின், நம்முடைய ஊறெல்லையில் வாதவூரன் வந்து தங்கியிருக்கிறான். அவன் இம்மொழியைக் கேட்ட போதே விரைந்து வந்து தர்க்க சாத்திர முறைக்குப் பொருத்தமான வகையில் புத்தர்களை வாதில் வெல்வான். தவப்பயனுடைய நீங்கள் அவனை அழைப்பீராக' எனப் பணித்து மறைந்தருளினார்.

விழித்துணர்ந்த அவர்கள் திருக்கோயில் மண்டபத்திலே வந்து கூடித் தாங்கள் கண்ட கனவினை ஒருவரோடொருவர் சொல்லி மகிழ்ந்து திருவாதவூரடிகளையடைந்து இறைவனது அருள் வாக்கினை யெடுத்துரைத்து வணங்கினார்கள். இறைவனது அருளிப்பாட்டினை யறிந்த வாதவூரடிகள், தில்லை மூவாயிரவருடன் போந்து கூத்தப்பெருமானை வணங்கி யருள்பெற்றுப் புத்தர்கள் தங்கிய மண்டபத்தை அடைந்தார். சிவபெருமானுக்கு அன்பிலாதாராகிய புத்தர்களைத் தம் கண்ணாற் பார்த்தலாகாதென்று நடுவே திரையிடுவித்து அத்திரைமறைவில் ஓர் ஆசனத்தில் அமர்ந்தார். சோழ மன்னன் விரைந்து அங்கு வந்து திருவாதவூரடிகள் திருவடிகளை யிறைஞ்சி அவரருகே அமர்ந்தனன். அப்பொழுது ஈழத்தரசன் எழுந்து சென்று தான் கொணர்ந்த திறைப்பொருளைக் கொடுத்துச் சோழ மன்னனை வணங்கினான். சோழனும் மகிழ்ந்து அவனைத் தன்னருகே அமர்த்திக் கொண்டான். ஆராய்ந்துணர்ந்து வெற்றி தோல்வியினை நடு நின்று எடுத்துரைக்கும் சான்றோர் களும்

அவை நடுவே வந்தமர்ந்தார்கள். எல்லோரும் வந்து நிரம்பிய அச்சபையிலே சோழ மன்னன் திருவாதவூரடிகளை வணங்கி நின்று 'சைவ சமயத்தை நிலை நிறுத்துவது தங்கள் கடமை. தோல்வியுற்ற புத்தர்களைப் போக்குவது எனது கடமை' என மொழிந்தான். வாதவூரடிகள் புத்த குருவை நோக்கி 'நீ வந்த காரணம் என்ன' என வினவினார். 'எங்கள் தெய்வத்தையன்றி வேறு தெய்வமில்லையென்று யாவருங் காண உறுதிப்படுத்தி இப்பொன்னம்பலத்தே எங்கள் புத்ததேவரை வைத்தற்காக நேற்றே இங்கு வந்து காத்திருக்கிறேன்' எனப் புத்த குரு கூறினான். 'அது கேட்டு வாதவூரடிகள் புன்முறுவல் செய்து 'நினது கடவுளிலக்கணமும் முத்தி நிலையும் இன்னவெனச் சொல்வாயாக' என்றார். புத்தகுரு திரிபிடகத்திற் சொல்லிய வண்ணமே தன் சமயக் கொள்கைகளை யெடுத்துரைத்தான். திருவாதவூரடிகள் அவன் சொல்லியவற்றை யெல்லாம் அளவை நூல் வரம்பு தவறாது மறுத்துரைத்தார். தன் சமயக் கொள்கை மறுக்கப்பட்டமையால் ஒளி மழுங்கிய புத்த குரு அடிகளை நோக்கி 'நும் கடவுள் யாது? நுமது முத்தி எது?' என வினவினான். வாதவூரடிகள் சிவபெருமானது பெருமையினை விரித்துரைத்தார். அவ்வளவில் புத்த குரு இடைமறித்து அடிகள் கூறியவற்றை இகழ்ந்துரைப்பானாயினன். அவன் கூறிய இகழ்ச்சியுரைகளுக்கு மறுமொழி கூறிய வாதவூரடிகள் கலைமகளை நோக்கி 'நான்மறைகளைச் சொல்லும் நாமகளாகிய நீ முன்னர்த் தக்கன் வேள்வியிற் பட்ட துன்பத்தை மறந்து சிவநிந்தை செய்யும் இப்புத்தர்களது நாவிலிருப்பது தகுதியோ? இவர்களது நாவினை விட்டு விரைவில் நீங்குவாயாக' எனச் சினந்துரைத்தார். நிறைமொழி மாந்தராகிய அடிகளது சினங்கண்டு அஞ்சிய கலைமகள் புத்தர்களுடைய நாவினை விட்டகன்றாள். அதனால் அவர்களனைவரும் ஊமைகளாயினர் அத்துன்ப நிலையைக் கண்ட ஈழ மன்னன். வாதவூரடிகளை வணங்கி நின்று, 'பெரியீர், நும்முன்னிலையிலே பேசவல்ல புத்தர்கள் ஊமைகளாயினர். பிறவியூமையாகிய என்மகளைப் பேசும்படி செய்தருள்வீராயின் யான் நுமக்கு அடியனாவேன்' என்றான். அடிகள் அம்மன்னன் மகளை அழைத்துவரச் செய்து அவளை நோக்கி முன் தன்பால் புத்தகுரு கேட்ட வினாக்களுக்கெல்லாம் விடை கூறும்படி பணித்தருளினார். அவளும் அவ்வினாக்களுக்குத் தக்கவாறு விடை பகர்ந்தாள். வாதவூரடிகள் அவ்வினாவிடைகளைத் தொகுத்து மங்கையர் விளையாட்டிற் பாடிப் பயிலும் முறையில் திருச்சாழற் பாடல்களாகப் பாடியருளினார்.

இவ்வற்புத நிகழ்ச்சியைக் கண்டு வியந்த ஈழ மன்னன் வாதவூரடிகள் திருவடிகளில் வீழ்ந்திறைஞ்சி அவர்க்குத்

தொண்டனாயினான். 'இப்புத்தர்களுக்கு ஊமை நீங்க அருள் செய்தல் வேண்டும்' என இரந்து நின்றான். அடிகளது அருட் பார்வையால் அங்கிருந்த புத்தர்களனைவரும் ஊமை நீங்கப் பெற்று, 'அடியேங்களுக்குத் திருநீறும் அக்கமாலையும் கல்லாடையும் அளித்தருளல் வேண்டும்' என வாதவூரடிகளை வணங்கினார்கள். வாதவூரடிகளும் அவர்கள் விரும்பிய வண்ணமே திருநீறு நல்கி அவர்களது துவராடையைச் சுட்டெரித்தார். பின்னர் எல்லோரும் தில்லைச் சிற்றம்பலவனை வணங்கிப் போற்றி அடிகள்பால் விடைபெற்றுத் தத்தம் இருப்பிடத்தை அடைந்தார்கள். வாதவூரடிகள் தில்லையில் பன்னசாலையில் தங்கியிருந்து கூத்தப்பெருமானை வணங்கித் திருப்படையாட்சி, திருப்படையெழுச்சி, அச்சோப்பதிகம், யாத்திரைப் பத்து ஆகிய திருவாசகப் பனுவல்களைப் பாடிப் போற்றிக் கவற்சியும் களிப்புமில்லாத பேரின்ப வாழ்வில் திளைத்திருப்பாராயினார்.

இங்ஙனம் இருக்கும் நாட்களில் ஒருநாள், தில்லையுட் கூத்தனாகிய சிவபெருமான், வேதியர் வடிவு கொண்டு வாதவூரடிகள் முன் வந்து நின்றார். அடிகள் அவ்வேதியரை அங்கு அமரும் படி சொல்லி 'நீர் எங்குளீர்? கூறும்' எனக் கேட்க, வேதியராய் வந்த அவரும் 'யாம் பாண்டி மண்டலத்திருப்போம்' எனப் பகர்ந்தார். பண்டி நாடெனக் கேட்ட அளவில் முன்னையினும் பரிவுடையராகிய வாதவூரடிகள், வேதியரை நோக்கி 'நீர் இங்கு வருதற்குரிய காரியம் யாது? கூறும்' என்றார். அது கேட்ட வேதியர் 'நும்மைக் காணுதற் பொருட்டே இங்கு வந்தோம். வானோர்களாலும் காணுதற்கரிய இறைவனைப் பரிமீது அமர்ந்து வரச் செய்த நுமது பெருமையாலே பாண்டி நாடு உய்ந்தது. நீர் பெருந்துறையீசனை வணங்கிப் பின் பல தலங்களையும் இறைஞ்சித் தில்லையிற் புத்தர்களை வாதில் வென்ற செய்தியைக் கேட்டு யாவரும் பெருமகிழ்ச்சி யடைந்தார்கள். சிவபெருமானது மெய்ப்புகழ் விளங்க நீவிர் பாடிய திருப்பாடல் முழுவதையும் ஓத விரும்பி இங்கு வந்தேன். அப்பாடல்களை யான் எழுதிக் கொள்ளும்படி விளங்கச் சொல்வீராக' என வேண்டிக் கொண்டார். வாதவூரடிகள் தாம் பாடிய திருவாசகச் செழும் பாடல்களை முறையே கூறக்கேட்டு வேதியராகிய இறைவர் முழுவதும் எழுதிக்கொண்டார். மீண்டும் அடிகளை நோக்கி 'தில்லைச் சிற்றம்பலவரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு அகப்பொருட்கோவை பாடுவீர்' என வேண்டினார். அடிகளும் அதற்கிசைந்து அகப்பொருட்கோவை பாடி அப்பாடல்களை முறையே சொல்லி வந்தார். வேதியராக வந்த இறைவர், அக்கோவையையும் எழுதி முடித்துப் புத்தகத்தைக்

கட்டிக் கொண்டு விரைவில் மறைந்து போயினார். திருவாதவூரடிகள் தமக்கு முன் இருந்த வேதியரைக் காணாது மனம் வருந்திப் புறத்தே சென்று தேடியும் காணாராய் வியப்பெய்தி இங்ஙனம் வந்து சென்றவர் எல்லாம் வல்ல இறைவரேயெனத் தெளிந்து திருவருளின்பத்தில் தோய்ந்திருந்தார்.

இங்ஙனம் வாதவூரடிகள் திருவாய் மலர்ந்த திருவாசகச் செழுமறையை எழுதிக் கொண்டு சென்ற சிவபெருமான், அதன் முடிவில் 'அழகிய திருச்சிற்றம்பலமுடையார் எழுதியது' எனத் தமது கையொப்பமும் இட்டு அத்திருமுறையேட்டினைத் தில்லைச் சிற்றம்பலத்தின் வாயிற்படியில் வைத்தருளினார். மறுநாள் பூசை செய்ய வந்த அந்தணர், என்றுமில்லாததோர் புத்தகம் அங்கிருத்தலைக் கண்டு அதிசயித்துத் தில்லை நகரத்தார்க்குத் தெரிவித்தார். அதனைக்கண்ட நகரமாந்தர் 'இஃது இறைவனருளிய ஆகமமோ தமிழ் நூலோ என அறிதல் வேண்டும்' என்றனர். அப்பொழுது தில்லை வாழந்தணரொருவர் முன் சென்று அவ்வேட்டினை நறுமலர் கொண்டு அருச்சித்து வணங்கி அவிழ்த்துப் படித்துப் பார்த்தபொழுது அதன்கண் திருவாசகமும் திருச்சிற்றம்பலக் கோவையும் எழுதப்பெற்று முடிவில் 'திருவாதவூரன் சொல்ல அழகிய திருச்சிற்றம்பல முடையார் எழுதியது' எனக் கைச்சாத்திட்டிருத்தல் கண்டு இறைவன் திருவருளை வியந்து போற்றினார்கள். இத்திரு முறையின் பொருளைத் திருவாதவூரடிகள்பாற் கேட்டுணர்தல் வேண்டும் என்ற பெரு விருப்பம் அங்கிருந்தோரனைவர் உள்ளத்திலும் மிக்குத் தோன்றியது. எல்லோரும் திருவாதவூரடிகள் இருந்த தவச்சாலையையடைந்து வாதவூரடிகள் திருவடிகளை இறைஞ்சி நின்று திருவாசகத் திருமுறை தமக்குக் கிடைத்த அற்புத நிகழ்ச்சியை எடுத்துரைத்து, அத்திருமுறைக்குப் பொருள் விரித்தருளும்படி வேண்டிக் கொண்டார்கள். சிவபெருமானது திருவருட்பெருமையை நினைந்து நெஞ்சம் நெக்குருகிய வாதவூரடிகள். தம்மை வணங்கிய அன்பர்களாகிய எல்லோரையும் அழைத்துக்கொண்டு பொன்னம்பலத்தையடைந்தார். 'திருவாசகத்திற்குப் பொருளாவார் பொன்னம் பலவராகிய இவரே' எனக்காட்டி எல்லோருங்காணத் தில்லையம்பலத்திற்புக்கு மறைந்தனர். தில்லைச் சிற்றம்பலவ னாகிய இறைவன், திருவாதவூரடிகளைப் பாலுடன் மேவிய நீர்போற் பிரிவறக் கலந்து ஒன்றாம் வண்ணம் தன் திருவடியிற் சேர்த்தருளினான். அடிகளது திருமேனி சிவரூபமாகிய இவ்வற்புத நிகழ்ச்சியைக் கண்டோரனைவரும் சிவபெருமானது திருவருளை வியந்து திருவாசகத் தேனை நுகர்ந்து மகிழ்ந்தார்கள்.

## 4. திருவுத்தரகோசமங்கைப் புராணம்

இந்நூலில் பார்ப்பதி தவம் புரிந்த அத்தியாயத்தில் மாணிக்க வாசகரது வரலாறு சுருக்கமாகக் கூறப்பட்டுளது. திருவுத்தரகோசமங்கைத் திருக்கோயிலின் தென்மேற்குத் திசையில் முற்றுணர்வுடைய முனிவர் ஆயிரவர் சிவபெருமானை நோக்கித் தவஞ் செய்தனர். இறைவன் அவர்களுக்கு முன்னே தோன்றி 'நாம் மண்டோதரிக்கு அருள் செய்தற் பொருட்டுக் கடல் சூழ்ந்த தென்னிலங்கைக்குச் செல்கின்றோம். நீவிர் இவ்விடத் திலேயே இருமின்' எனக் கூறித் தம் கையிலுள்ள அரும்பொருள் நூலாகிய திருமுறையை அறிஞர்களாகிய முனிவர்களிடம் தந்தருளினார். முனிவர்கள் இறைவனை வணங்கி நின்று, 'எம்பெருமானே, தாங்கள் தீவினையாளராகிய அரக்கர்கள் வாழும் இலங்கைக்குச் செல்லுதல் தகுமோ' என வினவினர். 'இலங்கை மன்னனாகிய இராவணன் நம் திருமேனியைத் தீண்டும் பொழுது இங்குள்ள பொய்கையின் நடுவே தீப்பிழம்பு தோன்றும்' எனக்கூறிச் சிவபெருமான் இலங்கைக்குச் சென்று மண்டோதரி மாளிகையையடைந்து அவள் அன்புடன் செய்த பூசனையை யேற்று மகிழ்ந்திருந்தார். அந்நிலையில் மண்டோதரி மாளிகைக்கு இராவணன் சென்றான். அப்பொழுது சிவபெருமான் இளங் குழந்தையாக உருமாறினார். குழந்தையைக் கண்ட இராவணன். தன் மனைவியை நோக்கி 'இக்குழந்தை எங்கிருந்து வந்தது?' என வினவினான். 'தவப்பெண்ணொருத்தி இக்குழந்தையை என்னிடந் தந்து போயினாள்' என்றாள் மண்டோதரி. வனப்புமிக்க அக்குழந்தையை அன்புடன் அணைத்தெடுத்துத் தன் மடிமீது அமர்த்திக் கொண்டான் இராவணன்.

இங்ஙனம் சிவபெருமானாகிய அக்குழந்தையை இராவணன் தொட்ட அளவிலே திருவுத்தரகோச மங்கையிலுள்ள பொய்கை யிலே முற்கூறியவண்ணம் தீப்பிழம்பு தோன்றியது. அது கண்டு மன நடுக்கமுற்ற தவமுனிவரனைவரும் அத்தீயிற் பாய்ந்தனர். அம் முனிவர்களுள் மாணிக்கவாசகரென்னும் வேதியர் இறைவன் தந்தருளிய அருள் நூலைப் பாதுகாத்தற்பொருட்டுத் தாம் மட்டும் அத்தீயிற் புகாமல் நெடுநாள் அப்பொய்கைக் கரையிலேயே தங்கியிருந்தார். இவர் இங்ஙனமாக, பார்வதி தேவியார் முதுமைக் கோலமுடைய தவச்செல்வியாக மண்டோதரி மாளிகையை யடைந்து இளங்குழந்தையாகிய சிவபெருமானைப் பெற்றுக்கொண்டு திரும்பினார். பின்பு சிவபெருமான் உமாதேவியாருடன் திருவுத்தரகோசமங்கையின் பொய்கைக் கரையை யடைந்து தழலிற் புகுந்த முனிவர்களுக்கு அருள் புரிந்தார். அப்பொய்கைக் கரையிலே பொருள் நூல் குறித்த திருமுறையைப் போற்றல் குறித்து வீற்றிருந்த மருள்

நீங்குணர்வின் மாணிக்கவாசகரை நோக்கி, 'அன்ப, நீ இந்நிலவுலகில் யாம் கோயில் கொண்டருளிய தலங்கள் தோறுஞ் சென்று எம்மைப் பாடிப் போற்றுவாயாக. யாமே ஒரு தலத்தில் ஆட்கொண்டு மும்மலங்களைக் களைந்து ஈறிலாப் பேரின்பமாகிய வீடு பேற்றினை அளிப்போம்' என அருள் செய்து மறைந்தருளினார் என இப்புராணத்தில் மாணிக்கவாசகரது முன்னைப் பிறப்பின் வரலாறு குறிப்பிடப் பெற்றுளது.

இந்நூலாசிரியர்

**"நிரைசிறந்த நெடுங்குடுமிப் பொலங்கிரியிற்**
**கயலெழுது நிருபனேவ**
**விரைசெலவாம் பரிகொணர்ந்து வருகெனப் போய்ப்**
**பொருள் கொடுபோய் விழைவி னெய்தித்**
**தரைவிளங்கும் பெருந்துறையிற் குருந்துறைமான்**
**மழுக்கரந்த தலைவற் போற்றி**
**உரையிறந்த மெய்ப்பொருள்பெற் றுயர்ந்தவரைத்**
**தாழ்ந்தவரை யுளத்துள் வைப்பாம்"**

எனத் திருவாதவூரடிகளைத் துதிக்கு முகத்தால் அடிகளது வரலாற்றினைச் சுருக்கிக் கூறிய திறம் இங்கு நினைக்கத் தகுவதாகும்.

## 5. திருப்பெருந்துறைப் புராணம்

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களால் இயற்றப்பெற்ற இப்புராணத்தில் திருவாதவூரர் திருவவதாரப் படலம், அமைச்சுரிமை பூண்ட படலம், திருப்பெருந்துறை யடைந்த படலம், உபதேசப் படலம், மதுரையையடைந்து விடைபெற்ற படலம், தில்லையை யடைந்த படலம் எனவரும் ஆறுபடங்களில் திருவாதவூரடிகளது வரலாறு விரித்துக் கூறப்பெற்றுளது.

திருவாதவூரிலே வாழ்ந்த ஆமாத்தி வேதியராகிய சம்புபாதாசிருத ரென்பார், தம் மனைவியார் சிவஞானவதி யாருடன் சிவபெருமானை வழிபட்டுப் புத்த சமயக் குறும்பினைப் போக்கவல்ல புதல்வரொருவரைத் தந்தருள வேண்டுமெனக் குறையிரந்து வேண்டினார். சிவபெருமான் அவரது வேண்டு கோளை நிறைவேற்றத் திருவுளங்கொண்டார். சிவகணநாதர் ஆயிரவர் ஒரு நாள் சிவபெருமானை வணங்கி நின்று 'எம்பெருமானே, அடியேங்களுக்கு ஆகமப் பொருளை யறிவுறுத்தியருளல் வேண்டும்' என விண்ணப்பஞ் செய்தார்கள். அவர்களது பெரு விருப்பத்தை நிறைவேற்றத் திருவுளங்கொண்ட சிவபெருமான் அவர்களை நோக்கி 'நீவிர் அனைவரும்

திருவுத்தரகோசமங்கை யென்னுந் தலத்தை யடைந்து நம்மை வழிபட்டிருமின், நாம் அங்கு வந்து நுமது விருப்பத்தை முடித்தருளுவோம்' எனக் கூறியருளினார்.

இறைவன் பணித்த வண்ணம் சிவகணநாதர் ஆயிரவரும் திருவுத்தரகோசமங்கையை யடைந்து சிவபெருமானை வழிபட்டிருந்தார்கள். அந்நிலையிற் சிவபெருமான் அந்தணனாகி அங்கு எழுந்தருளிச் சிவகணநாதர்களுக்கு ஆகமப்பொருளை உபதேசிக்கத் தொடங்கினார். அப்பொழுது வானோர் தலைவனாகிய இந்திரன் பலவகை அணிநலம் விளங்கப் பவனி வந்தான். இறைவன்பால் உபதேசம் கேட்கும் கணநாதர்களில் ஒருவர், இந்திரனது உலாக் காட்சியிற் கருத்தைச் செலுத்தி இறைவனது உபதேசப் பொருளில் நாட்டமின்றியிருந்தார். அவரது கருத்து புறத்தே செலலுதலை யுணர்ந்த சிபெருமான், கணநாதராகிய அவரை நோக்கி, 'நீ நாம் கூறிய உபதேசப் பொருளை மறந்து இந்திரனது உலாக் காட்சியிற் கருத்தைச் செலுத்தினமையால் நீ இந்நிலவுலகிற் பிறந்து விரும்பிய செல்வமெல்லாம் எய்தப்பெற்றுப் பின் நம்மை அடைவாயாக' எனப் பணித்தார். அம்மொழியினைக் கேட்டு மன நடுக்கமுற்ற கணநாதர், 'எம்பெருமானே, அடியேன் என் செய்கேன்' என அழுதரற்றினார். அருளாளனாகிய இறைவன், அவரை நோக்கி 'அஞ்சாதே, நாமே குருவாக வந்து நின்னை ஆட்கொண் டருள்வோம்' என ஆறுதல் கூறித் தேற்றியருளினான். இறைவன் பணித்த வண்ணம் சிவகணநாதராகிய அவ்வடியவர் திருவாத வூரில் சம்புபாதாசிருதர்க்கும் சிவஞானவதியார்க்கும் புதல்வராகப் பிறந்தருளினார்.

பெற்றோர்களால் அன்புடன் வளர்க்கப்பெற்றுக் கல்வித்துறையிற் சிறந்து விளங்கிய திருவாதவூரர் பாண்டிய மன்னனால் நன்கு மதிக்கப்பெற்று அவனுக்கு அமைச்சராயினார். மன்னன் பணித்த வண்ணம் குதிரை வாங்குவதற்குப் புறப்பட்டு வழியிடையேயுள்ள திருப்பெருந்துறையை யடைந்தார். அப்பதியில் அன்றிரவு பரிவாரங்களுடன் தங்கியிருந்தார். ஆன்மநாதராகிய கடவுள் மானிடவுருவுடன் மாணாக்கர் பலர் சூழக் குருந்த மரத்தடியில் அமர்ந்திருப்பதாகவும் தாம் அவருடைய திருவடிகளைப் பணிந்து துதிப்பதாகவும் கனவு கண்டு விழித்தெழுந்தார். விடியற் காலையிலே நாட்கடன்களை முடித்துக்கொண்டு தாம் கனவிற் கண்ட வண்ணமே குருந்த மர நீழலிலே குருவாக வீற்றிருந்தருளிய பெருமானைக் கண்டு வணங்கி அவர்பால் ஞானோபதேசம் பெற்றார் எனத் திருப்பெருந்துறைப் புராணம் கூறும்.

இவ்வாறு புராணங்களிற் பலபடியாகப் புனைந்துரைக்கப் பெறும் திருவாதவூரடிகளது வரலாற்றினை அடிகளார் திருவாய் மலர்ந்தருளிய திருவாசகம் திருச்சிற்றம்பலக் கோவையாகிய திருமுறையிற் காணப்படும் வரலாற்றுக் குறிப்புக்களாகிய அகச்சான்றுகளையும் பிறநூற் குறிப்புக்களையும் துணையாகக் கொண்டு ஆராய்ந்து துணிதல் அமைவுடையதாகும்.

திருவாதவூரடிகள் அருளிய திருமுறையில் அடிகள் பிறந்தருளிய ஊர், குலம், அவருடைய பெற்றோர் பெயர் முதலியவற்றைத் தெளிவாகத் தெரிந்து கொள்வதற்குரிய சான்றுகள் கிடைக்கவில்லை. எனினும் 'திருவாதவூர்ச் சிவபாத்தியன்'* (*கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம் 58.) என நம்பியாண்டார் நம்பி திருவாதவூரடிகளைக் குறித்துப் போற்றுதலால் இனிது விளங்கும். அடிகள் திருவாதவூரில் மானமங்கலத்தாராகும் தொன்னெறி முனிவர் ஆமாத்தியர் குலத்திற் பிறந்தார்* (*திருவால வாயுடையார் திருவிளையாடற் புராணம், ஞானோப தேசஞ் செய்த திருவிளையாடல் 6-ஆம் செய்யுள்.) எனப் பெரும்பற்றப்புலியூர் நம்பி தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். வாதவூரில் அமாத்தியர் குடியில் தூய சிவாகம நெறியின் துறைவிளங்க அடிகள் அவதரித்தார் * (*திருவிளையாடற்புராணம், வாதவூரடிகளுக்கு உபதேசித்த படலம் 4-ஆம் செய்யுள்.) என்பர் பரஞ்சோதி முனிவர். வாதவூரில் மறையோரில் அருள்புனை மாத்தியர் குலத்தில் சைவ நெறித்தலைவனாகத் திகழ்ந்த அந்தணனுக்குப் புதல்வராக வாதவூரர் அவதரித்தார். * (*திருவாதவூரடிகள் புராணம், மந்திரிச்சுருக்கம் 4-ஆம் செய்யுள்.) எனக் கடவுள் மாமுனிவர் கூறுவர். அடிகள் தோன்றியகுடி ஆதிசைவக் குடும்பம் என வடமொழி ஆலாசியம் கூறும் என்ப * (*கா. சுப்பிரமணியம் பிள்ளையவர்கள் எழுதிய மாணிக்கவாசகர் சரித்திரம் பக். 10) இக்குறிப்புக்களை ஒருசேரத் தொகுத்து நோக்குங்கால் திருவாதவூரருடைய முன்னோர் வாழ்ந்த தொல்பதி மானமங்கலம் என்பதும், அப்பதியில் வாழ்ந்த அந்தணர்கள் பிறவூர்களிலும் பரவி வாழ்ந்த காலத்து அக்குடும்பத்தினர் மானமங்கலத்தார் என அழைக்கப் பெற்றனர் என்பதும், அந்தணர்களாகிய அன்னோர் அரசர்க்கு அருகேயிருந்து அரசியல் நெறிமுறைகளை அறிவுறுத்தும் அமைச்சுத் தொழிலுடையராய் வாழ்ந்தமையால் உழையிருந்தார் என்னும் பொருளுடைய அமாத்தியர் என்ற பெயரால் அழைக்கப் பெற்றனர் என்பதும் மாத்தியர் எனவும் திரிந்து வழங்கலாயிற்றென்பதும், அமாத்திய குலத்தினாராகிய திருவாதவூரருடைய முன்னோர் தொன்று தொட்டுச் சிவாகம நெறியில் ஒழுகிய தமிழ் நாட்டு அந்தணர்களென்பதும் நன்கு புலனாதல் காணலாம்.

திருவாதவூரடிகள் திருவாசகப் பாடல்களில் ஆகமநூற் சிறப்பினைக் குறித்துப் போற்றுதலானும் சிவ சமயவுறைப்பின்றித் தம்காலத்து வாழ்ந்த வேதியர்களை,

**'விரதமே பரமாக வேதியரும்**
**சரத மாகவே சாத்திரங் காட்டினர்'**

எனத் தமக்குப் புறம்பாயினாராக விலக்கிக் கூறுதலானும் தமிழ்நாட்டில் நெடுங்காலமாகச் சிவாகம நெறியினை மேற்கொண்டு வாழ்ந்த அந்தணர்குடியிலே திருவாதவூரடிகள் பிறந்தருளினாரென்பது நன்கு துணியப்படும்.

அடிகளது வரலாற்றினை முதன்முதல் விரித்துக் கூறிய பெரும்பற்றப்புலியூர் நம்பியும் அவர்க்குப் பின் வந்த பரஞ்சோதி முனிவர், கடவுள் மாமுனிவர் ஆகியோரும் வாதவூரடிகளைப் பெற்ற தந்தையும் தாயும் ஆகிய பெற்றோர் பெயரைக் குறிப்பிடவில்லை. திருவாதவூரடிகளைப் பெற்ற தந்தையார் சம்புபாதாசிருதர் எனவும் ஈன்று வளர்த்த தாயார் சிவஞானவதியார் எனவும் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் தாம் இயற்றிய திருப்பெருந்துறைப் புராணத்திற் குறிப்பிட்டுள்ளார்கள். வாதவூரடிகளின் பெற்றோரைக் குறித்து வழங்கும் இப்பெயர்கள் பிற்காலத்தில் நூலாசிரியர் புனைந்து வழங்கிய சிறப்புடைய காரணப்பெயர்களெனவே கொள்ளத் தக்கன.

நம்பியாண்டார்நம்பி திருவாதவூரடிகளைத் 'திருவாத வூர்ச் சிவபாத்தியன்' எனச் சிறப்பித்துப் போற்றியுள்ளார். யாவராலும் அறியொணா முதலாய ஆனந்த மூர்த்தியாகிய இறைவனே திருப்பெருந்துறையிற் குருவாக எழுந்தருளி வந்து வாதவூரர்தம் சென்னிமிசைத் திருவடி சூட்டி ஆட்கொண்டு மெய்ப்பொருளை உபதேசித்தருளினான் என்பது வரலாறு. இவ்வாறு குருவாக எழுந்தருளிவந்து தம்மை ஆட்கொண்டருளிய இறைவனது பெருங்கருணைத்திறத்தை நினைந்து நெஞ்சங் கரைந்துருகிய திருவாதவூரடிகள், தம்மை ஆட்கொண்டருளிய சிவபருமானுடைய திருவடிகளை எக்காலத்தும் தம் சென்னியிற்கொண்டு போற்றும் செம்புலச் செல்வராய்த் திகழ்ந்தனராதலால் 'சிவனடி சென்னிவைத்தவர்' என்ற பொருளில் 'திருவாதவூர்ச் சிவபாத்தியன்' என்ற சிறப்புப் பெயரால் போற்றப் பெற்றனர். எனினும் அடிகளுக்குப் பெற்றோர் இட்டு வழங்கிய இளம் பருவப் பெயர் 'திருவாதவூரர்' என்பதே யாகும். இச்செய்தி, 'நாமம் இன்னெறி வாதவூரர் என்ன வந்து தயஞ்செய்தார்' எனப் பெரும்பற்றப் புலியூர் நம்பியும் 'பேர்வாதவூரரெனப் பெற்று' எனப் பரஞ்சோதி முனிவரும், 'திருவாதவூரரெனுந் திருநாமந்தரித் தார்கள்' எனக் கடவுள் மாமுனிவரும் கூறுமாற்றால் இனிது

விளங்கும். 'ஆருரர்' என்ற பெயர், திருவாரூரிற் கோயில் கொண்டருளிய சிவபெருமானுக் குரிய பெயராய்ப் பின்பு திருநாவலூரில் தோன்றிய சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குரிய பெயராக இடம்பெற்று வழங்கினமை போன்று, 'திருவாதவூரர்' என்ற இப்பெயரும் திருவாதவூர் என்னும் தலத்திற் கோயில் கொண்டருளிய சிவபெருமானுக்குரிய திருப்பெயராய், அடிகளுக்குப் பெற்றோரால் இடப்பெற்று வழங்கியதெனக் கருதுதல் பொருந்தும்.

திருவாதவூரடிகளுக்குத் திருவாதவூரர் என்ற பெயரைக் காட்டிலும் மாணிக்கவாசகர் என்ற பெயரே இக்காலத்திற் பெருக வழங்கக் காண்கிறோம். மாணிக்கவாசகர் என வழங்கும் இப்பெயர்க்காரணத்தைச் சிந்தித்து ஆராய்தல் வேண்டும். திருப்பெருந்துறையிற் குருவாக எழுந்தருளிய சிவபெருமானால் ஆட்கொள்ளப் பெற்ற திருவாதவூரடிகள் நாவிலே அவர்பெற்ற உபதேசத்தின் பயனாக ஞானவாணியாகிய கலைமகள் வந்தமர்ந்தாள். அந்நிலையில் அடிகள் பழுதிலாத சொல் மலர்களாகிய மணிகளை அன்பாகிய வடத்தில் நிரல்படக் கோத்துக் குருமூர்த்தி யாகிய பெருமானுக்கு மாலையாக அணிந்து போற்றினரெனவும், அதுகண்டு மகிழ்ந்த சிவபெருமான் வாதவூரர்க்கு மாணிக்க வாசகன் என்ற சிறப்புப் பெயரிட் டழைத்தாரெனவும் பரஞ்சோதி முனிவர் கூறுவர்.

திருவாதவூரடிகள் வரலாறு கூறும் நூல்களுள் மிகவும் தொன்மை வாய்ந்த திருவாலாயுடையார் திருவிளையாடற் புராணத்தில், திருப்பெருந்துறையிற் குருவாக எழுந்தருளிய இறைவர் வாதவூரரை நோக்கி 'மாணிக்கவாசக' என அழைத்தருளியதாகக் கூறப்பெற்றுளது. திருவாதவூரடிகள் பழைய கல்வெட்டுக்களில் திருவாதவூரர், திருவாதவூராளி நாயனார் எனவே குறிக்கப்பெறுகின்றார். இறைவனது பொருள்சேர் புகழை விரித்துரைக்கும் திருப்பாடல்களை 'மணிவார்த்தை' என்ற பெயரால் அடிகள் திருவாசகத்திற் குறிப்பிட்டுள்ளார்.

**'சிந்தனைநின் றனக்காக்கி நாயினேன்றன்**
**கண்ணிணைநின் திருப்பாதப் போதுக்காக்கி**
**வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி வாக்குன்**
**மணிவார்த்தைக் காக்கி'**

எனவும்,

**'பேசும் பொருளுக் கிலக்கிதமாம் பேச்சிறந்த**
**மாசின் மணியின் மணிவார்த்தை'**

எனவும் வரும் திருவாசகத் தொடர்களால் இக்குறிப்பு இனிது புலனாதல் காணலாம், அடிகள் குறித்த 'மணிவார்த்தை' என்ற

தொடர்க்கு 'மாணிக்க மணிபோலும் வாசகம்' எனப்பொருள் கொண்ட உமாபதி சிவாசாரிய சுவாமிகள், தாம் இயற்றிய கோயிற் புராணத்தில்

**பேசுபுகழ் வாதவூர்ப் பிறந்துபெருந்துறைக்கடலுண்**
**டாசிலெழி றடித்தயர வஞ்செழுத்தா லதிர்த்தெழுந்து**
**தேசமலி தரப்பொதுவார் சிவபோக மிகவிளைவான்**
**வாசகமா மாணிக்க மழைபொழிமா முகில்போற்றி.**

எனத் திருவாதவூரடிகளை இறைஞ்சிப் போற்றியுள்ளார். இதன்கண்'வாசகமா மாணிக்க மழைபொழி மாமுகில்' எனத் திருவாதவூரடிகளைப் போற்றுமுகத்தால் அவர் திருவாய் மலர்ந்தருளிய திருப்பாடல்களை 'மாணிக்க வாசகம்' என்ற பெயரால் உமாபதிசிவம் குறித்துப் போற்றியுள்ளமை காணலாம். இக்குறிப்பினைக் கூர்ந்து நோக்குங்கால் திருவாசகத்திற்கு வழங்கிய 'மாணிக்கவாசகம்' என்ற இப்பெயரின் அடியாகவே இத்திருமுறையை அருளிச்செய்த திருவாதவூரடிகளுக்கு மாணிக்கவாசகர் என்ற சிறப்புப் பெயரும் தோன்றி வழங்கிய தென்பது நன்குபுலனாகும். இப்பெயர்க் காரணத்தை மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் திருப்பெருந் துறைப் புராணம் உபதேசப்படலத்தில்,

**"மன்ன நன்மனியே வார்த்தையாய்த்திரண்டு**
**வருமொரு காரணக் குறியால்**
**அன்ன மாணிக்க வாசகரெனும்பே**
**ராகவின் றாதியென் றறைத்தார்'**

எனவரும் தொடரில் தெளிவாக விளக்கியுள்ளமை இவண் கருதத்தகுவதாகும்.

திருவாதவூரர் உலக நூற்கல்வியும் அறிவனூற் கல்வியும் ஆகிய இருதிறமும் ஒருங்கு பயின்றவர் என்பது அவர் அருளிச் செய்த திருப்பாடல்களில் வரும் பலவகைக் குறிப்புக்களால் இனிது விளங்கும். வாதவூரரது கல்வித் திறத்தை நன்குணர்ந்த பாண்டியன் அவரைத் தனது ஆட்சியின் அமைச்சராக அமர்த்திக் கொண்டான் என்ற செய்தி அவருடைய வரலாறு கூறும் புராணங்கள் எல்லாவற்றிலும் சிறப்பாகக் குறிக்கப்பெற்றுளது. இங்ஙனம் வாதவூரரை அமைச்சராக அமர்த்திக்கொண்ட பாண்டியன் இன்னானென்பது தெளிவாக விளங்கவில்லை. இப்பாண்டிய மன்னனை அரிமர்த்தனன் என்ற பெயரால் பரஞ்சோதி முனிவர் குறிப்பிடுவர். இவர் கூறுமாறு அரிமர்த்தனன் என்ற பெயருடைய மன்னன் பாண்டி நாட்டை ஆட்சி புரிந்தான் என்பதற்குரிய கல்வெட்டாதரவோ பிற சான்றுகளோ இதுகாறும் கிடைக்கவில்லை. எனவே அரிமர்த்தனன் என்ற இப்பெயரை வாதவூரடிகள் காலத்து

வாழ்ந்த மன்னனது இயற்பெயராகக் கொள்ளுதற்கு இடமில்லை. பகைவர்களை அழித்தோன் என்னும் கருத்துப்பட அரிமர்த்தனன் எனப் பிற்காலத்தவர் அம் மன்னனுக்கு இட்டு வழங்கிய புனைபெயரெனவே இதனைக் கருத வேண்டியுளது.

திருவாதவூரடிகள் பாண்டிய மன்னன்பால் அமைச்சுரிமை பூண்டொழுகியவரென்பது, அவரது வரலாறு கூற வந்த எல்லாப் புராணங்களிலும் தெளிவாக விளக்கப்பெறும் செய்தியாகும்.

**'ஈண்டிய மாயா விருள்கெட எப்பொருளும் விளங்கத்**
**தூண்டிய சோதியை மீனவனுஞ் சொல்ல வல்லனல்லன்'**

எனவும்,

**'மதுரையர் மன்னன் மறுபிறப்போட மறித்திடுமே'**

எனவும்,

**'நரகொடு சுவர்க்க நானிலம் புகாமல்**
**பரகதி பாண்டியற் கருளினை போற்றி'**

எனவும் வரும் திருவாசகத் தொடர்களை ஊன்றிநோக்குங்கால் வாதவூரடிகள் தம் காலத்து ஆட்சி புரிந்த பாண்டியனுடன் நெருங்கிய தொடர்புடையவரென்பது நன்குபுலனாம்

பாண்டியனுக்கு அமைச்சுக்கடன் பூண்ட வாதவூரர், அம்மன்னன் பணித்த வண்ணம் குதிரை வாங்குதற்கென நிறைந்த பொன்னைப் பெற்றுக்கொண்டு கீழ்கடற்றுறையை நாடிச் செல்லும்பொழுது, வழியிடையே திருப்பெருந்துறை யென்னுந் தலத்திலே சிவபெருமான், அடியார்களாகிய மாணாக்கர்கள் புடைசூழ அந்தணராய் ஆசிரியத் திருமேனி கொண்டு எழுந்தருளியிருந்து மன்னவனமைச்சராகிய வாதவூரரை அருள்நோக்கால் அழைத்தருளித் தீக்கைசெய்து திருவைந்தெழுத்தின் உட்பொருளை உபதேசித்தருளினார் என்னும் இச்செய்தியினை,

**'தெங்குதிரள் சோலைத் தென்னன் பெருந்துறையான்**
**அங்கணன் அந்தணனாய் அறைகூவி வீட்டருளும்**
**அங்கருணை வார்கழலே பாடுதுங்காண் அம்மானாய்'**

எனவும்

**'எந்தரமும் ஆட்கொண்டு தோட்கொண்ட நீற்றனாய்ச்**
**சிந்தனையை வந்துருக்குஞ் சீரார் பெருந்துறையான்'**

எனவும்,

**'தென்னன் பெருந்துறையான்**
**காட்டா தனவெல்லாங் காட்டிச் சிவங்காட்டித்**
**தாட்டா மரைகாட்டித் தன் கருணைத் தேன்காட்டி**

நாட்டார் நகைசெய்ய நாமேலை வீடெய்த
ஆட்டான்கொண்டாண்டவா பாடுதுங்காண் அம்மானாய்'

எனவும்,

'பேணுபெருந்துறையிற்
கண்ணார் கழல்காட்டி நாயேனை யாட்கொண்ட
அண்ணா மலையானைப் பாடுதுங்காண் அம்மானாய்'

எனவும்,

'சீரார் பெருந்துறையில்
எளிவந் திருந்திரங்கி யெண்ணிரிய இன்னருளால்
அளிவந்த அந்தணனைப் பாடுதுங்காண் அம்மானாய்'

எனவும்,

'அருவாய் மறைபயில் அந்தணனாயாண்டு கொண்ட
திருவான தேவற்கே சென்றுதாய் கோத்தும்பீ'

எனவும்,

'உருநாம் அறியவோர் அந்தணனா யாண்டு கொண்டான்'

எனவும்,

'அந்தண னாகிவந் திங்கே அழகிய சேவடி காட்டி
எந்தம ராமிவ னென்றிங் கென்னையு மாட்கொண் டருளும்
செந்தழல் போற்றிருமேனித் தேவர்பிரான் வரக்கூவாய்'

எனவும்,

'பாரிடைப் பாதங்கள் காட்டிப் பாசமறுத் தெனையாண்ட
ஆருடையம் பொனின்மேனி யமுதினைநீ வரக்கூவாய்'

எனவும்,

'செந்தழல் புரைதிரு மேனியுங் காட்டித்
திருப்பெருந் துறையுறை கோயிலுங் காட்டி
அந்தண னாவதுங் காட்டிவந் தாண்டாய்
ஆரமுதே பள்ளியெழுந்தருளாயே'

எனவும்,

பேராசை யாமிந்தப் பிண்டமறப் பொருந்துறையான்
சீரார் திருவடி யென்றலைமேல் வைத்தபிரான்'

எனவும்,

'மாய வாழ்க்கையை மெய்யென் றெண்ணி
மதித்திடா வகை நல்கினான்
வேய தோளுமை பங்க னெங்கள்
திருப்பெருந்துறை மேவினான்

**காயத்துள்ளமு தூறவூறநீ**
**கண்டு கொள்ளென்று காட்டிய**
**சேயமாமலர்ச் சேவடிக்கணஞ்**
**சென்னிமன்னித் திகழுமே**

*எனவும்,*

**'நீதியே செல்வத் திருப்பெருந் துறையில்**
**நிறைமலர்க் குருந்த மேவியசீர்**
**ஆதியே'**

*எனவும்,*

**'போதலர் சோலைப் பெருந் துறையெம்**
**புண்ணியன் மண்ணிடைவந்திழிந்து**
**ஆதிப் பிரமம் வெளிப் படுத்த**
**அருள றிவாரெம் பிரானாவாரே'**

*எனவும்,*

**'நானேயோ தவஞ்செய்தேன் சிவாய நமவெனப்பெற்றேன்**
**தேனாயின்னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்**
**தானேவந்தெனதுள்ளம் புகுந்தடியேற் கருள்செய்தான்**
**ஊனாரு முயிர்வாழ்க்கை யொறுத்தன்றே வெறுத்திடவே'**

*எனவும்,*

**'உய்யுநெறி காட்டுவித்திட் டோங்காரத் துட்பொருளை**
**ஐயனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே'**

*எனவும் வரும் திருவாசகத் தொடர்களில் திருவாதவூரடிகள் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.*

*இருவினைகளால் உளவான் இன்பத் துன்பங்கள் இரண்டையும் ஒரு படித்தாக எண்ணி வாழ்க்கையில் விருப்பு வெறுப்பின்றிப் பழகும் மனநிலையே இருவினை யொப்பு என்று பேசப்படுகிறது. இந்நிலை யெய்திய உயிர்களுக்கு ஆணவமலம் கழன்றெழியும் தகுதியுளதாகும். இத்தகுதியினை மலபரிபாகம் என வழங்குதல் மரபு. இங்ஙனம் இருவினை யொப்பும் மலபரிபாகமும் வந்தெய்திய நிலையில் உயிரினது அறிவின்கண்ணே இறைவனது திருவருள் பதியப்பெறும். இந்நிலையினைச் சத்திநிபாதம் எனக்கூறுவர். இறைவன் திருவருளை நாடி உலகப்பயன் கருதாது வீடுபேற்றை அவாவி நின்று தம் செயலற்றிருத்தலும், இறைவனையடையும் நெறி யாதென ஆராய்தலும், அகத்தால் உலகத்தை முற்றுந் துறந்து புறத்தே உலகியலோடு ஒத்துவாழ்த்தலும் அகத்தும், புறத்தும் உலகினை முற்றத் துறந்து சிவஞானம் நல்கும் அருட் குரவன்*

ஒருவனையே நாடித் திரிதலும் என இவ் அருட்பதிவு நால் வகைப்படும். இவற்றுள் நாலாஞ் சத்திநிபாதமாகிய முடிந்த நிலையில் நின்றே திருவாதவூரர் திருப்பெருந்துறையிற் குரு மூர்த்தியைக் கண்டு இறைஞ்சினார் எனக் கடவுள் மாமுனிவர் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். இருவினையொப்பு வந்தெய்திய நிலையே இறைவனாகிய குருவினைக் காணப்பெற்று மகிழ்தற் குரிய செவ்வி என்பதனைத் திருவாதவூரடிகள் தமது வாழ்க்கை நிகழ்ச்சியில் வைத்து,

**'உணக்கிலாததொர் வித்துமேல்விளை**
**யாம லென்விளை யொத்தபின்**
**கணக்கிலாத் திருக்கோல நீவந்து**
**காட்டினாய்கழுக் குன்றிலே'**

என விளக்கிய திறம் இங்கு நினைவுகூரத் தகுவதாகும்.

ஆணவமலம் ஒன்றேயுடைய உயிர்களுக்கு உயிர்க்குயிராய் உள்நின்றும் ஆணவம் கன்மம் என்னும் இருமலமுடைய உயிர்களுக்கு உமையொருபாகராய் முன்னின்றும், ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களுமுடைய உயிர்களுக்கு மானுடத் திருமேனி கொண்டு படர்க்கையில் நின்றும் இறைவன் சிவஞானம் நல்குவன் எனச் சைவ நூல்கள் கூறும். அம் மரபின்படி சிவபெருமான் மானுடத் திருமேனிகொண்டு குருவாய் வந்து திருவாதவூரர்க்குத் திருவடிஞானம் வழங்கி ஆட்கொண் டருளினன் என்பது வரலாறு. இச்செய்தி,

**'ஈறிலாதநீ எளியையாகிவந்து**
**ஒளிசெய் மானுடமாக நோக்கியும்**
**கீறிலாத நெஞ்சுடைய னாயினேன்'**

என இறைவனை நோக்கி அடிகள் உளமுருகிப் போற்றுதலால் இனிது புலனாதல் காணலாம். தேவருங் காணாச் சிவபெருமான் இந்நிலமிசைத் தம் கண்காண எழுந்தருளி வந்து தம்மை ஆட்கொண்டருளிய அருட்செயலை,

**'தேவருமறியாச் சிவனே காண்க**
**பெண்ணாணலி யெனும் பெற்றியன் காண்க**
**கண்ணா லியானுங் கண்டேன் காண்க**
.... .... .... .... .... .... .... .... .... .... ....
**புவனியிற் சேவடி தீண்டினன் காண்க**
**சிவனென யானுந் தேறினான் காண்க**
**அவனெனை யாட்கொண்ட ருளினன் காண்க'**

எனவும்,

**அருபரத் தொருவன் அவனியில் வந்து**
**குருபரனாகி யருளிய பெருமையை'**

எனவும் வரும் திருவாசகத் தொடர்களில் வாதவூரடிகள் தெளிவாகக் குறித்துப் போற்றியுள்ளார்.

திருவாதவூரடிகளுக்கு உபதேசம் நிகழ்ந்த பின்னரே திருப்பெருந்துறையிற் கோயில் அமைக்கப் பெற்றதென்றும் வாதவூரடிகளுக்கு உபதேசம் புரிந்தருளிய அருள் நிலையமாக இப்பொழுதுள்ள பெருந்துறைக் கோயிலில் சிவலிங்கத் திருவுருவமும் ஏனைய அங்கங்களும் அமைந்தில்லாமையே அடிகள் காலத்திற்கு முன் அங்கே திருக்கோயில் இல்லாமையைப் புலப்படுத்துமென்றும் மறைமலையடிகள் கருதுவர்,

**'செந்தழல் புரைதிரு மேனியுங் காட்டித்**
**திருபெருந் துறையுறை கோயிலுங் காட்டி**
**அந்தண ணாவதுங்காட்டி வந்தண்டாய்'**

எனவரும் வாதவூரடிகள் வாய்மொழி, அடிகள் குருவின் திருமேனியைக் காணுதற்கு முன்னரும் திருப்பெருந்துறையிற் சிவபெருமானுக்குத் தனிக்கோயில் உண்டு என்ற குறிப்பை வற்புறுத்தல் காணலாம். 'ஆரூர் மூலட்டானம்' எனத் தொடங்கும் க்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகத்தில்,

**'பெருந்துறை காம்பீலி பிடவூர்'**

எனக் குறித்துப் போற்றப்பெற்ற பெருந்துறையென்னும் வைப்புத்தலம் இத் திருப்பெருந்துறையெனக் கருதுதற்கும் இடமுண்டு. இக்காலத்தில் ஆளுடையார் கோயில் என வழங்குதல் திருப்பெருந்துறையின் ஒரு பகுதியாய வடக்கூரில் வெள்ளாற்றின் தென்கரையில் அமைந்துள்ள ஆதிகைலாச நாதசுவாமி கோயில் பழைய திருப்பெருந்துறைக் கோயிலாக இருத்தல் வேண்டுமெனத் தோன்றுகின்றது.

சிவபெருமான் திருப்பெருந்துறையிற் குருந்த மர நீழலிற் குருவாய் எழுந்தருளியபோது தமது திருக்கரத்தில் சிவஞான போதம் என்ற நூலை வைத்திருந்தார் எனப் பரஞ்சோதி முனிவரும், அந்நூற் பொருளை வாதவூரடிகளுக்கு உபதேசித்தார் எனக் கடவுள் மாமுனிவரும் கூறுவர். கி.பி.13-ம் நூற்றாண்டில் மெய்கண்ட தேவரால் இயற்றப்பெற்ற சைவ சித்தாந்தத் தனிமுதல் நூல் சிவஞானபோத மென்னுஞ் செந்தமிழ் நூலாகும். இப்பெயருடைய நூலொன்று திருவாதவூரடிகள் காலத்தில் வழங்கிய தென்பதற்கு எத்தகைய சான்றும் கிடைக்கவில்லை. திருப்பெருந்துறையில் ஆசிரியத் திருமேனிகொண்டு தோன்றிய இறைவன், திருவாதவூரர்க்கு அறிவுறுத்தியது, திருவைந் தெழுத்துபதேசமெனவே பெரும்பற்றப் புலியூர் நம்பி தெளிவாகக்

குறிப்பிட்டுள்ளார். அவர் கருத்தே அடிகள் வரலாற்றுக்கு ஏற்புடையதெனத் தோன்றுகிறது.

**'நமச் சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க'**

எனவும்,

**'நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம வெனப் பெற்றேன்'**

எனவும்,

**'என்னையோர் வார்த்தையுட் படுத்துப் பற்றினாய்'**

எனவும்,

**'ஓங்காரத்துட் பொருளை**
**ஐயனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே'**

எனவும்,

**'அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின்றேனை'**

எனவும் வரும் திருவாசகத் தொடர்கள் அடிகள் பெற்ற திருவைந்தெழுத் துபதேசத்தின் சிறப்பினை வற்புறுத்தல் காணலாம்.

திருவாதவூரர்க்குச் சிவபெருமான் ஞானேபதேசம் செய்த முறையைப் பிற்காலத்தில் விரிந்து பரவிய சைவசமயத் தீக்கை முறைகளில் நிருவாணதீக்கை முறைக்கு ஒத்தவாறு கடவுள் மாமுனிவர் விரித்துக் கூறியுள்ளார். இம்முறை பெரும்பற்றப் புலியூர்நம்பி திருவிளையாடலிற் கூறப்படவில்லை. அருட்குரவனாகிய இறைவன், திருநோக்கினாலும், நினைவாலும் தொடுதலாலும் வாதவூரரது சித்தமலம் அறுவித்துப் பேரறிவு நல்கினன் என்ற அளவே பெரும்பற்றப் புலியூர்நம்பி கூறுவர். குருமூர்த்தியாகிய பெருமான், திருவதாவூரர் சென்னியில் திருவடிசூட்டித் தீக்கை செய்து, பல்லோருங்காண அவரது பாசத் தொடர்பாகிய மும்மலங்களையும் நீக்கியருளி, இறைவன் திருவடிகளை அகத்தும் புறத்தும் காணுமாறு காட்டிச் சொல்லிறந்த பேரின்பமாகிய சிவானந்தப் பெருந்தேனை நுகர்ந்து இன்புறும் முறையை அறிவுறுத்தி, 'நின்னை ஒரு பொழுதும் பிரியேன்' என அன்புரை பகர்ந்து அழிவிலாப் பேரின்ப வாழ்வில் அடிகளை நிலைபெறச் செய்தனன். இம்மெய்மை வரலாற்றினை,

**'பெரியோ னொருவன் கண்டுகொ ளென்றுன்**
**பெய்கழ லடிகாட்டிப்**
**பிரியேன் என்றென் றருளிய வருளும்**
**பொய்யோ எங்கள் பெருமானே'**

எனவும்,

**'காயத் துள்ளமு தூற வூறநீ**
**கண்டுகொள் ளென்று காட்டிய**
**சேய மாமலர்ச் சேவடிக்கணஞ்**
**சென்னி மன்னித் திகழுமே'**

*எனவும்,*

**'வாக்கிறந் தமுத மயிர்க்கால் தோறும்**
**தேக்கிடச் செய்தனன், கொடியே னூன்ற**
**குரம்பை தோறு நாயுடலகத்தே**
**குரம்பை கொண்டின் றேன்பாய்த்தி நிரம்பிய**
**அற்புதமான அமுத தாரைகள்**
**எற்புத் துளைதொறும் ஏற்றினன், உருகுவ**
**துள்ளங் கொண்டோ ருருச்செய் தாங்கெனக்**
**கள்ளூ றாக்கை யமைத்தனன், ஒள்ளிய**
**கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை**
**என்னையும் இருப்ப தாக்கினன்'**

*எனவும் வரும் திருவாசகத் தொடர்களால் அடிகள் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளமை காணலாம்.*

*இறைவனே குருவாக எழுந்தருளி வந்து ஆட்கொள்ளப் பெற்று அன்புருவமாகிய திருவாதவூரடிகள் ஆசிரியப் பெருமானை அகலாது வழிபட்டிருந்த நிலையில் இறைவன் அடிகளை நோக்கி 'அன்பனே என்னைப் பாடுக' எனப் பணித்தருளத் தித்திக்கும் மணிவார்த்தையாகிய திருவாசகச் செழும்பாடல்களைத் திருவாதவூரடிகள் பாடிப் போற்றினார் என்பது வரலாறு. இச்செய்தி,*

**'நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனை'**

*எனவும்,*

**'இருந்துதி யென்வயிற் கொண்டவன்'**

**(திருக்கோவையர்-300)**

*எனவும் வரும் அடிகளது வாய்மொழியால் நன்கு வலியுறுதல் காண்க,*

*சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம் பெற்ற திருவாதவூரடிகள், தமக்கு எளிவந்து அருள்புரிந்த இறைவனது பேரருளை நினைந்து நெஞ்ச நெக்குருகி இரு கண்களிலும் உவகைக் கண்ணீர் மழையெனச் சொரியச் சிவபோகமாகிய பெருந்தேனை நுகர்ந்து ஏனைச் சுற்றத் தொடர்பினை அறவே துறந்து உலகப் பொருள்கள் எவற்றையும் நோக்காது மெய்ப் பொருளையே நோக்கும் விதியுடையராய்த் தம் செயலற்றுச் சித்தஞ் சிவமாகத் திகழ்ந்தனர். அடிகளது இவ்வநுபவ நிலை,*

**'நனவே யெனைப்பிடித் தாட்கொண்டவா நயந்து நெஞ்சஞ்
சினவேற்கண் நீர்மல்கத் தெள்ளேணங் கொட்டாமோ'**

**'இணையார் திருவடி யென்றலைமேல் வைத்தலுமே
துணையான சுற்றங்கள் அத்தனையுந் துறந்தொழிந்தேன்'
'கயல்மாண்ட கண்ணிதன் பங்கனெனைக் கலந்தாண்டலுமே
அயல்மாண் டருவினைச் சுற்றமுமாண் டவனியின்மேல்
மயல்மாண்டு மற்றுள்ள வாசகமாண் டென்னுடைய
செயல்மாண்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ'**

**'திருவார் பெருந்துறை மேயபிரா னென்பிறவிக்
கருவே ரறுத்தபின் யாவரையுங் கண்டதில்லை'**

**'ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட்டென் உள்ளமும்போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ'**

**'நவமாய செஞ்சுடர் நல்குதலு நாமொழிந்து
சிவமான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ'**

**'சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அந்தமிலா ஆனந்தம்'**

*எனவரும் திருவாசகத் தொடர்களில் இனிது புலனாதல் காணலாம்.*

*இங்ஙனம் சிவனருட் கடலில் திளைத்தின்புறும் அடிகள், தாம் குதிரை வாங்குதற் பொருட்டுக் கொணர்ந்த பொன் எல்லாவற்றையும் திருப்பெருந்துறையில் இறைவன் குருமூர்த்தியாக வந்து தம்மை யாட்கொண்டருளிய அன்றே அப்பெருமானிடம் ஒப்பு வித்தனரென்பது,*

**'அன்றேயென்றன் ஆவியும் உடலும்
உடைமை யெல்லாமும்
குன்றே யனையாய் என்னையாட்
கொண்டபோதே கொண்டிலையோ'**

*எனவரும் அவரது வாய்மொழியால் நன்கு விளங்கும். இங்ஙனம் தம் உடல் பொருள் ஆவி யனைத்தையும் தம்மை யாட்கொண்ட குருமூர்த்திக்கு உரிமையாக்கி அவரது அருள்வழி நின்ற வாதவூரடிகள், ஆசிரியன் பணித்த வண்ணம் அப்பொருளைச் சிவபெருமானது திருப்பணிக்கும் சிவனடியார்களுக்கும் செலவு செய்தன ரென்பது,*

**'கொம்மை வரிமுலைக் கொம்பனையாள் கூறனுக்குச்
செம்மை மனத்தால் திருப்பணிகள் செய்வேனுக்கு'**

*எனவும்,*

**'தன்சீரடியார் குலம் பணிகொள்ள எனைக்கொடுத்தோன்'**
**(திருக்கோவையார்-54)**

*எனவும் அடிகள் தம்மைப்பற்றிக் கூறுங் குறிப்புக்களால் ஒருவாறு உய்த்துணரப்படும்.*

*திருப்பெருந்துறையில் அருட்குரவன்பால் மெய்ஞ்ஞான உபதேசம் பெற்ற திருவதவூரர், சிவபெருமானுக்கே பித்தராய் அப்பெருமானது எல்லையற்ற பேரருளில் ஈடுபட்டுத் திளைத்த திறத்தை,*

**'அன்புட னோக்கிநிற்பர் அழுவர்கைதொழுவர் வீழ்வர்**
**இன்புற வெழுவர் பின்பால் ஏகுவர் இரங்கி மீள்வர்**
**நண்பகல் கங்குல் காணார் ஞானநல் லறிவேகொண்டு**
**கொன்புனை பித்தர்பாலர் பாசாசர்தங் கொள்கையானார்'**

*என்ற பாடலில் கடவுள் மாமுனிவர் விரித்துரைப்பர். இங்ஙனம் பித்தர்போன்று தாம் செய்வதிதுவென யுணராது இறைவன்பால் அளவிலாப் பேரன்புடன் விளங்கிய வாதவூரடிகளது நிலை,*

**'வஞ்சகப் பெரும்புலையனேனையுன் கோயில்வாயிலிற்**
**பிச்சனாக்கினாய்'**

**'கல்லாமனத்துக் கடைப்பட்ட நாயேனை**
**வல்லாளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றிக்**
**கல்லைப்பிசைந்து கனியாக்கித் தன்கருணை**
**வெள்ளத்தழுத்தி'**

**'பித்தென்னை யேற்றும் பிறப்பறுக்கும் பேச்சரிதாம்**
**மத்த மோக்கும்வந் தென்மனத்தை - அத்தன்**
**பெருந்துறையான் ஆட்கொண்டு பேரருளால் நோக்கும்**
**மருந்திறவாப் பேரின்பம் வந்து'**

*எனவரும் அவர்தம் அருளிச் செயல்களால் நன்கு புலனதல் காணலாம்.*

*உலகப் பொருளனைத்தும் இறைவனுடைமையே எனத் தெளிவாகவுணர்ந்த திருவாதவூரடிகள், தாம்கொணர்ந்த பொன்திரளனைத்தும் முன்பு பாண்டியனாற் குதிரை வாங்குவதற் பொருட்டுத் தம்மிடம் ஒப்புவிக்கப் பெற்றதென்னும் உலகியல் நிகழ்ச்சியை அறவே மறந்து, தம்மையாட்கொண்டருளிய இறைவன்பால் பொன்னை ஒப்புவித்தனர் என்னும் இச் செய்தியே வாதவூரடிகள் வரலாற்றிற் காணப்படும் உயிர்நிலையான பகுதியாகும். குதிரை வாங்குதற்கென மன்னன் தந்த பொருளை அமைச்சரொருவர் அவனது இசைவுபெறாது தாம் விரும்பிய வண்ணம் செலவழிப்பதென்பது அரசியல் நெறிமுறைக்கு ஒவ்வாத பெருங்குற்றம் என்பதனை யாவரும் நன்குணர்வர்.*

உலகியல் ஆட்சி முறையிற் சிறிய பொறுப்பினை மேற்கொண்ட அதிகாரிகளும் எளிதில் உணர்ந்து விலக்குதற்குரிய பெருங் குற்றமாகிய இதனைப் பாண்டியனுக்குரிய அமைச்சராய் விளங்கிய திருவாதவூரர் உணராமைக்குரிய காரணம் என்ன என்பதே ஈண்டு ஆராய்தற்குரிய பொருளாகும்.

திருப்பெருந்துறையில் இறைவன் அருட்குரவனாக எழுந்தருளிவந்து தம்மை ஆட்கொண்டருளிய அப்பொழுதே வாதவூரடிகள் தம்மையும் இவ்வுலகியல் வாழ்வையும் அறவே மறந்து சித்தஞ் சிவமாகப் பெற்றுச் சீவன்முத்தராயினார். இவ்வரலாற்று நுட்பம் அடிகளது வாய்மொழியாகிய அகச்சான்று கொண்டே முன்னர் விளக்கப்பெற்றது. இங்ஙனம் அறிவாற் சிவனேயாகிய அடிகளது செயலை உலகர் நடைமுறையில் வைத்து ஆராயப் புகுவது சிற்றறிவும் சிறு தொழிலுமுடைய நம்மனோர்க்கு ஒரு சிறிதும் ஏற்புடைய தன்றாம். தம்மை மறந்து இறைவனையே சிந்திக்கும் செம்மை மனமுடைய சிவஞானிகள் செயலை இறைவன் தன் செயலெனவே ஏன்று கொண்டருளு மியல்பினன் என்பதும் அவ்வண்ணமே வாதவூரடிகள் செயலையும் தன் செயலாகக் கொண்டருளின னென்பதும்,

**'சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும்**
**அத்தன்'**

எனவரும் அடிகளது அநுபவ வுரையாலும் "மாணிக்கவாசகர் அறிவாற் சிவனே யென்பது திண்ணம்" எனவரும் சான்றோர் வாய்மொழியாலும் நன்கு துணியப்படும். வாதவூரடிகள் செயலனைத்தையும் தவச்செயலெனவே கொண்டு அச்செயலால் வரும் இன்பத்துன்பங்களையும் இறைவன் தானே ஏன்று கொண்டருளிய எளிமைத்திறமே அடிகளது வரலாற்றால் உலகத்தாருக்கு அறிவுறுத்தப்பெறும் சிறந்த உண்மையாகும்.

இங்ஙனம் திருவாதவூரடிகள் தமதுணர்வு முற்றும் மாறித் தம்மையாட் கொண்டருளிய இறைவன் பணித்தவண்ணம் தம்மிடமுள்ள பொன்னனைத்தையும் செலவிட்ட செய்தியை உடன்சென்ற பரிசனங்களால் அறிந்து சினமுற்ற பாண்டியன், தன் அமைச்சராகிய வாதவூரர்க்குத் திருமுகம் எழுதித் தூதர்களை யனுப்பி அழைத்தனனாக, அந்நிலையில் ஒரு சிறிது தம்முணர்வு வரப்பெற்ற வாதவூரடிகள், தாம் மன்னனிடம் வாங்கிய பொன் திரளுக்குரிய குதிரைகளை வாங்கித்தந்து அப்பொன்னை ஈடு செய்ய முடியாத நிலையில் இருத்தலை யெண்ணி பெருந்துறையிறைவன்பால் வருந்தி முறையிட்டனர் என்பதும், இறைவன், 'யாமே குதிரைகளைக் கொண்டு வருவோம். நீ

அச்சமின்றி மதுரைக்குச் செல்க' என வாதவூரடிகளை நோக்கிக் கூறியருளினர் என்பதும், அடிகளும் இறைவனது கட்டளையை ஏற்றுப் பாண்டியனை யடைந்து ஏற்பனகூறித் தமது பாரம் அனைத்தையும் தம்மையாண்டருளிய இறைவன்பாற் சார்த்தி 'இறைவனருளால் குதிரைகள் வந்து சேரும்' என உறுதியாக நம்பியிருந்தனரென்பதும், அடிகள் நம்பிய வண்ணமே பெருந்துறை யீசனும் அப்பக்கத்தில் திரியும் நரிகளைக் குதிரைகளாக்கி அவற்றைச் செலுத்தும் குதிரைச் சேவகனாகத் தம் பரிசனத்துடன் மதுரை நகரத்தே வந்து தோன்றினன் என்பதும்,

**'ஆண்டுகொண்டருள அழகுறு திருவடி**
**பாண்டியன் றனக்குப் பரிமா விற்று**
**ஈண்டு கனகம் இசையப் பெறாஅது**
**ஆண்டான் எங்கோன் அருள்வழி இருப்பத்**
**தூண்டு சோதி தோற்றிய தொன்மையும்'**

எனவரும் அடிகளது வாய்மொழியால் இனிது புலனாதல் காணலாம். "அழகு பொருந்திய திருவடியால் இறைவன் என்னை ஆண்டுகொண்டருளிய நிலையில் பாண்டி வேந்தனுக்குக் குதிரைகளை விற்று (முன்புயான் அவனிடம் பெற்ற) நிறைந்த பொன்னை ஈடு செய்யப்பெறாது (வருந்திய நிலையில்) என்னை அடிமை கொண்டவனாகிய எம்பெருமானது திருவருள் வழியே யடங்கி (நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானே இதற்கு நாயகமே என) அமைதியுற்றிருந்தேனாக, அந்நிலையில் இறைவனே (குதிரைகளைத்) தூண்டிச் செலுத்தும் சோதிப் பொருளாகத் தோன்றியருளிய பழைய செய்தியும்" என்பது மேற்காட்டிய தொடரின் பொருளாகும்.

அமைச்சராகிய வாதவூரர், குதிரை வாங்குவதற்கென்று பாண்டியன்பால் நிறைந்த பொன்னைப் பெற்றுச் சென்றமையும் திருப்பெருந்துறையில் இறைவனே குருவாக வந்து அவரை ஆண்டுகொண்டருளிய நிலையில் அவர் கொண்டு வந்த பொன்னனைத்தும் செலவழிந்து போகவே அப்பொன்னுக்குரிய குதிரைகளை வாங்கி மன்னனிடம் கொடுத்தற்கு இயலாது வருந்திய அடிகள் தமது பாரமனைத்தையும் இறைவன்பால் ஒப்பு வித்து அவனது அருள் வழியடங்கி எத்தகைய இடையூறு களையும் பொருட்படுத்தாது ஒழுகினமையும், சித்தஞ் சிவமாகப் பெற்ற அடிகளது துயரைப் போக்கத் திருவுளங்கொண்டு சிவபெருமானே குதிரைச் சேவகனாக வந்து தோன்றியமையும் ஆகிய இவ்வரலாற்று நிகழ்ச்சிகள் மேற்காட்டிய திருவாசகத் தொடராகிய அகச்சான்றினால் நன்கு வலியுறுதல் அறிந்து மகிழத்தக்கதாகும்.

திருவாதவூரர் குதிரை வாங்குவதற்கெனக் கொண்டு சென்ற பொன் எல்லாவற்றையும் திருப்பெருந்துறையிற் செலவிட்டமை யறிந்து சினமுற்ற பாண்டியன் வாதவூரடிகளைச் சிறையில் வைக்கும்படி கட்டளையிட அரசனுடைய ஏவலர் அடிகளைச் சிறைப்படுத்தினரெனவும் சிறையில் துயருறும் அடிகள் தம்மை ஆண்டருளிய இறைவனை யெண்ணி அழுதரற்றிக் குழைத்தபத்து, அருட்பத்து ஆகிய பனுவல்களைப் பாடிப் பரவினாரெனவும் பெரும்பற்றப்புலியூர் நம்பி கூறுவர், நம்பி கூறும் இக்கருத்து,

**"அன்றே யென்றன் ஆவியும்**
**உடலும் உடைமை யெல்லாமுங்**
**குன்றே யனையாய் என்னை ஆட்**
**கொண்டபோதே கொண்டிலையோ**
**இன்றோ ரிடையூ றெனக்குண்டோ**
**எண்தோள் முக்கண் எம்மானே**
**நன்றே செய்வாய் பிழை செய்வாய்**
**நானோ இதற்கு நாயகமே"**

**"நீதியே செல்வத் திருப்பெருந்துறையில்**
**நிறைமலர்க்குருந்த மேவியசீர்**
**ஆதியே யடியேன் ஆதரித்தழைத்தால்**
**அதெந்துவே யென்றருளாயே"**

எனவரும் அடிகளது திருப்பாடற் குறிப்புகளுக்கு ஒத்த வகையில் அமைந்திருத்தல் அறியத் தக்கதாகும்.

திருப்பெருந்துறையில் தம்மை அடிமை கொண்டருளிய சிவபெருமான் அன்பராகிய தம் துயரத்தைத் தவிர்க்கத் திருவுளங்கொண்டு காடுகளில் திரியும் நரிகளைக் குதிரை களாக்கிச் சிவகணத் தலைவர்களைக் குதிரை வீரர்களாகப் பணித்துத் தானும் குதிரைச் சேவகனாகி அழகியதோர் குதிரைமேல் எழுந்தருளிய இவ்வற்புத நிகழ்ச்சியைத் திருவாதவூரடிகள் தாம் பாடிய திருவாசகத்தில்,

**"குதிரையைக் கொண்டு குடநாடதன்மிசைச்**
**சதுர்படச் சாத்தாய்த் தானெழுந்தருளியும்"**

**"அரியொடு பிரமற் களவறி யொண்ணான்**
**நரியைக் குதிரையாக்கிய நன்மையும்"**

**"அரியொடு பிரமற் களவறியாதவன்**
**பரிமாவின் மிசைப்பயின்ற வண்ணமும்"**

**"ஒருங்குதிரை யுலவுசடையுடையானே நரிகளெல்லாம்**
**பெருங்குதிரையாக்கியவா றன்றேயுன் பேரருளே"**

**"நரியைக் குதிரைப் பரியாக்கி ஞாலமெல்லாம் நிகழ்வித்துப்**
**பெரியதென்னன் மதுரையெல்லாம் பிச்சதேற்றும்**
**பெருந்துறையாய்"**

**"ஆடலமர்ந்த பரிமாவேறி ஐயன்பெருந்துறையாதி அந்நாள்**
**ஏடர்களையெங்கும் ஆண்டுகொண்ட இயல்பறிவார்**
**எம்பிரானாவாரே"**

**"சங்கங் கவர்ந்துவண் சாத்தினோடும்**
**சதுரன் பெருந்துறையாளி யன்று**
**மங்கையர்மல்கு மதுரைசேர்ந்த**
**வகையறிவார் எம்பிரானாவாரே"**

*என்றாங்குப் பலமுறையும் போற்றியுள்ளமை காணலாம்.*

*குதிரைச் சேவகனாக வருகின்ற பெருமான் மதுரையைப் நோக்கி வரும் வழியில் திருவாதவூரையடைந்து வாதவூரடிகள் செவியிற் புலனாமாறு தமது திருவடிச் சிலம்பொலியைக் காட்டிஎருளினாரெனவும், சிறையிலிருந்த வண்ணமே அவ்வொலியைச் செவிமடுத்த அடிகள், 'இஃது என்னையாண்ட எம்பெருமானது பாதச் சிலம்பொலியே' எனத் தெளிந்து இறைவனை யிறைஞ்சினர் எனவும் பெரும்பற்றப்புலியூர்நம்பி கூறுவர். இந்நிகழ்ச்சி,*

**"வாதவூரினில் வந்தினிதருளிப்**
**பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்"**

*என வரும் அடிகளது வாய்மொழிகொண்டு உய்த்துணரப்படும். அடிகள் திருப்பெருந்துறையில் இறைவனால் ஆட்கொள்ளப் பெற்ற நிலையில் அப்பெருமானை இடைவிடாது சிந்தித்துப் போற்றுமுகத்தால் இறைவனது திருவடிச் சிலம்பொலியைக் கேட்டு மகிழும் சிவாநுபவ இன்பத்தில் பல்காலுந் திளைத்திருந்தவரென்பது,*

**'சீரார் திருவடித் திண்சிலம்பு சிலம்பொலிக்கே**
**ஆராத ஆசையதாய் அடியேன் அகமகிழத்**
**தேரார்ந்த வீதிப் பெருந்துறையான் திருநடஞ்செய்**
**பேரானந் தம்பாடிப் பூவல்லி கொய்யாமோ'**

*என வரும் அடிகளது அநுபவ வாசகத்தால் இனிது புலனாதல் காணலாம்.*

*அடிகள் தம்பொருட்டு இறைவன் குதிரைச் சேவகனாக மதுரை நகரத்தே வந்து தோன்றிய எளிமைத் திறத்தையும், பரிமேலழகனாக வந்த அப்பெருமானது திருமேனிப் பொலிவையும், அவ்வழகிய தெய்வக்காட்சியைக் கண்டு*

மன்னனாகிய பாண்டியனும் தாமும் மதுரை நகர மக்களும் உள்ளமுருகப் பெற்ற செய்தியையும்,

"மதுரைப் பெருநன் மாநக ரிருந்து
குதிரைச் சேவகனாகிய கொள்கையும்"

எனவும்,

"நன்பொன் மணிச்சுவ டொத்த நற்பரிமேல் வருவானை"

"பொன்னையழித்த நன்மேனி புகழிற் றிகழு மழகன்
மன்னன் பரிமிசைவந்த வள்ளல்"

எனவும்,

'வெள்ளைக் கலிங்கத்தர் வெண்டிருமுண்டத்தர்
பள்ளிக் குப்பாயத்தர் அன்னேயென்னும்
பள்ளிக் குப்பாயத்தர் பாய்பரிமேல் கொண்டென்
உள்ளங் கவர்வரால் அன்னேயென்னும்'

எனவும்,

'பருவரை மங்கைதன் பங்கரைப் பாண்டியற் காரமுதாம்
ஒருவரையொன்று மிலாதவரைக் கழற்போதிறைஞ்சித்
தெரிவர நின்றுருக்கிப் பரிமேற்கொண்ட சேவகனார்
ஒருவரை யன்றி உருவறி யாதென்றன் உள்ளமதே'

எனவும்,

'விரவிய தீவினை மேலைப் பிறப்புமுந் நீர்கடக்கப்
பரவிய அன்பரை என்புருக்கும்பரம் பாண்டியனார்
புரவியின் மேல்வரப் புந்தி கொளப்பட்ட பூங்கொடியார்
மரவியல் மேல்கொண்டு தம்மையுந் தாமறியார் மறந்தே'

எனவும் வரும் திருவாசகப் பகுதிகளில் விரித்துக் கூறிய திறம் படித்து மகிழத்தக்கதாகும்.

குதிரைச் சேவகனாக வந்த இறைவனைப் பாண்டியன் கண்ணாரக்கண்டு மகிழ்ந்தனனாயினும், அங்ஙனம் குதிரைச் சாத்தொடும் வந்த அத்தலைவன் முழு முதற்கடவுளாகிய சிவபெருமானே யென்ற உண்மையைச் சிறிதும் உணரப்பெற்றில னென்பது.

"ஈண்டிய மாயா விருள்கெட எப்பொருளும் விளங்கத்
தூண்டிய சோதியை மீனவனுஞ் சொல்ல வல்லனல்லன்"

என வாதவூரடிகள் தெளிவாகக் கூறுதலால் இனிது புலனாம்.

அடிகள் பொருட்டு இறைவனாற் கொணரப்பட்ட குதிரைகள் யாவும் அன்றிரவே மீண்டும் நரிகளாய் மாறிய செய்தியினை,

**நரியைக் குதிரைப்பரியாக்கி ஞாலமெல்லாம் நிகழ்வித்துப்**
**பெரியதென்னன் மதுரையெல்லாம் பிச்சதேற்றும்**
**பெருந்துறையாய்**
**அரிய பொருளே யவிநாசியப்பா பாண்டி வெள்ளமே**
**தெரிய வரிய பரஞ்சோதீ செய்வதொன்று மறியேனே"**

*என்ற பாடலில் அடிகள் குறிப்பாகச் சுட்டியுள்ளார். இறைவன் கொணர்ந்த குதிரைகள் நரிகளாய் மாறிய பின்பே அவை முன்னை நிலையில் நரிகளாயிருந்தன என்னும் உண்மை புலப்படுமாதலானும், பெருந்துறை ஈசன் நரியைக் குதிரையாக்கிய அளவில் அமையாது அக்குதிரைகளை மீண்டும் நரிகளாக மாற்றி மதுரை மக்களை மதிமயங்கச் செய்தனன் என்ற கருத்தமைய 'நரியைக் குதிரைப் பரியாக்கி ஞாலமெல்லாம் நிகழ்வித்துப் பெரிய தென்னன் மதுரையெல்லாம் பிச்சதேற்றும் பெருந்துறையாய்' என அடிகள் இறைவனை நெஞ்சநெக்குருகிப் போற்றுதலானும் குதிரைச் சேவகனாகிய இறைவனால் மதுரை நகரத்தே கொண்டு வந்து சேர்க்கப்பெற்ற குதிரைகள் மீண்டும் தம் பழையவுருவினை யெய்தி நரிகளாய் மாறியநிலை நன்குணரப்படும்.*

*அரசு தண்டத்தில் அகப்பட்டு வருந்திய வாதவூரடிகளது மனக்கலக்கத்தை மாற்றத் திருவுளங்கொண்ட இறைவனது ஆணையால் வையையாற்றில் பெருவெள்ளம் தோன்றிக் கரையையுடைத்துக் கொண்டு மதுரை நகரத்தே புக்கதாக, மன்னனது அதிகாரிகளால் தனக்கு வரையறுக்கப்பட்ட பங்கினை யடைத்தற்கு ஆள் கிடைக்காது அல்லற்பட்டமுத வந்தி யென்னும் தவமுதியாள் பொருட்டுச் சிவபெருமானே கூலியாளாக வந்து அவ்வம்மையார் அன்பினால் அளித்த பிட்டமுதினைக் கூலியாகப்பெற்று நுகர்ந்து மண் சுமந்தருளிய எளிமைத் திறத்தை,*

**'ஆங்கதுதன்னில் அடியவட்காகப்**
**பாங்காய் மண்சுமந்தருளிய பரிசும்'**

*எனவும்,*

**'மண்பால் மதுரையிற் பிட்டமுது செய்தருளி'**

*எனவும்,*

**'பிட்டுநேர்பட மண்சுமந்த பெருந்துறைப் பெரும்பித்தனே'**

*எனவும் அடிகள் பலமுறை குறித்துப் போற்றியுள்ளமை காணலாம்.*

*வந்தியின் ஆளாய் வையைக்கரையில் மண் சுமப்பதாகத் தன்னைப் பதிவு செய்துவிட்டு அவ்வேலையிற் சிறிதும் கருத்தின்றிப் பொழுதுபோக்கிய இறைவனைப் பிரம்பினால் அடித்துத் தண்டித்தவன் பாண்டி வேந்தனே யென்ற உண்மை நிகழ்ச்சியை,*

**“கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை**
**மண்சுமந்து கூலிகொண்டு அக்கோவால் மொத்துண்டு**
**புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய்”**

*எனவும்,*

**‘திண்போர் விடையான் சிவபுரத்தார் போரேறு**
**மண்பால் மதுரையிற் பிட்டமுது செய்தருளித்**
**தண்டாலே பாண்டியன் தன்னைப் பணிகொண்ட**
**புண்பாடல்........ லி கொய்யாமோ’**

*எனவும் வரும் தொடர்களால் வாதவூரடிகள் தெளிவாகக் கூறியுள்ளார்.*

*இங்ஙனம் வாதவூரடிகள் முன்னர்ப் பாண்டியனுக்கு அமைச்சராக இருந்தமையால் ஏற்பட்ட உலகியற் றுன்பங்களால் சிறிதும் உளங்கலங்காது சித்தத்தைச் சிவன்பாலேவைத்து வாழ்ந்தவரென்பது,*

**“தகைவிலாப்பழியும் அஞ்சேன் சாதலை முன்னமஞ்சேன்”**

**“மஞ்சுலா முருமு மஞ்சேன் மன்னரோ டுறவு மஞ்சேன்”**

*எனவரும் அவர்தம் வாய்மொழியால் இனிது புலனாம். அடிகள் பொருட்டுச் சிவபெருமானே குதிரைச் சேவகனாக எழுந்தருளியும் அடியவளாகிய வந்தியின் பொருட்டுக் கொற்றளாய் வந்து பிட்டு நேர்பட மண்சுமந்து அரசனது பிரம்படியை யேற்றும் தென்பாண்டி நாடே சிவலோகம் எனச் செய்தருளிய சிறப்பினை,*

**“மாவாரவேறி மதுரைநகர் புகுந்தருளித்**
**தேவார்ந்த கோலந் திகழப் பெருந்துறையான்**
**கோவாகி வந்தெம்மைக் குற்றேவல் கொண்டருளும்**
**பூவார் கழல் பரவிப் பூவல்லி கொய்யாமோ”**

*எனவும்,*

**‘பெற்றி பிறர்க்கரிய பெம்மான் பெருந்துறையான்**
**கொற்றக் குதிரையின்மேல் வந்தருளித் தன்னடியார்**
**குற்றங்கள் நீக்கிக் குணங்கொண்டு கோதாட்டிச்**
**சுற்றிய சுற்றத் தொடர் வறுப்பான்**

*எனவும்,*

**‘ஞாலமிகப் பரிமேற் கொண்டு நமையாண்டான்’**

*எனவும்,*

**‘அப்பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்த**
**அப்பார் சடையப்பன்’**

எனவும் வரும் தொடர்களில் வாதவூரடிகள் குறித்துப் போற்றிய திறம் இவண் நினைக்கத் தகுவதாகும்.

தான் செய்த பிழைகளையுணர்ந்து பொறுத்தருள வேண்டிய பாண்டிய மன்னனுக்கு ஆறுதல்கூறிய வாதவூரடிகள், மன்னனிடம் விடைபெற்றுத் திருவாலவாய்த் திருக்கோயிலை யடைந்தபொழுது அங்கே இறைவனருளால் தோன்றிய அசரீரியின் வண்ணம் அடிகள் உத்தரகோசமங்கை, கழுக்குன்றம் ஆகிய தலங்களை வணங்கி இறைவன் திருமேனிகண்டு திருவாசகமும் திருக்கோவையும் பாடித் தில்லையை அடைந்தார் எனப் பெரும்பற்றப்புலியூர் நம்பியும், மன்னன்பால் விடைபெற்று மதுரையிலிருந்து புறப்பட்ட அடிகள் பலபதிகளையும் பணிந்து போற்றித் தில்லையை யடைந்தார் எனப் பரஞ்சோதி முனிவரும் கூறுவர். மதுரையிற் குதிரைச் சேவகனாக வந்தருளிய இறைவனது பெருங்கருணைத்திறத்தை யெண்ணி மனங்கசிந்துருகிய வாதவூரடிகள் முன்னாளில் தமக்கு மெய்ப்பொருளுணர்த்திய குருமூர்த்தியைக் காணும் பெருவேட்கையுடன் மீண்டும் திருப்பெருந்துறைக்கு விரைந்து சென்றார் எனக் கடவுள் மாமுனிவர் கூறுவர். திருப்பெருந்துறையிலிருந்து வாதவூரடிகள் பாடியனவாகக் கருதப்பெறும் திருவாசகப் பாடல்களில் இறைவனே குதிரைச் சாத்தொடு வந்தருளிய மதுரை நிகழ்ச்சி குறிக்கப் பெறுதலாலும், பெருந்துறையிறைவன் குருவாக வந்து தம்மை ஆட்கொண்டதோடன்றித் தம்பொருட்டுக் குதிரை களைக் கொண்டு மதுரைக்கு எழுந்தருளியும் வந்தியென்னும் தவமுதியாளுக்குக் கொற்றாளாகப் போந்து மண் சுமந்தும் மன்னனடித்த பிரம்படிபட்டும் தம்மை உய்யக் கொண்டருளிய எளிமைத் திறத்தை யெண்ணி நெக்குருகிய வாதவூரடிக ளுள்ளத்தில் இவ்வாறு தமக்கு அருள்சுரந்த குருமூர்த்தியை மீண்டும் கண்டு வழிபட வேண்டுமென்னும் பெருவேட்கை தோன்றுதல் இயல்பாதலாலும் அடிகள் மதுரையிலிருந்து மீண்டும் திருப்பெருந்துறைக்குச் சென்று திருப்பெருந்துறை யீசனை இறைஞ்சிப் போற்றினார் எனக்கூறும் கடவுள்மாமுனிவர் கூற்றே இவ்வரலாற்று நிகழ்ச்சிக்குப் பொருத்தமுடையதாகத் தோன்றுகின்றது. அடிகள் இன்னின்ன இடங்களில் இன்னின்ன பதிகங்களைப் பாடினர் எனப் பெரும்பற்றப் புலியூர் நம்பி கூறும் குறிப்புக்கள் சிற்சில இடங்களில் அடிகள் வரலாற்றொடு முரண்படுதலும் இவண் சிந்திக்கத் தகுவதாகும்.

திருப்பெருந்துறையில் குருந்த மர நீழலில் அடியார்களாகிய மாணவர்கள் தற்சூழ ஆசிரியர்த் திருமேனிகொண்டு எழுந்தருளிய சிவபெருமான், திருவாதவூரர்க்கு ஞானோபதேசஞ் செய்த பின்னர் 'மாணிக்க வாசக! இங்கு இருப்பாயாக' எனக் கூறி உடன்

வந்த அடியார்களுடன் மறைந்தருளினான் எனப் பெரும் பற்றப்புலியூர்நம்பியும் பரஞ்சோதி முனிவரும் கூறுவர். திருப்பெருந்துறையில் ஞானோபதேசம் பெற்ற வாதவூரடிகள் இறைவன் பணித்த வண்ணம் மதுரைக்குச் சென்று அங்கு இறைவன் செய்தருளிய திருவிளையாடல்களைக் கண்டு மீண்டும் திருப்பெருந்துறைக்கு வருமளவும் சிவபெருமான் ஆசிரியத் திருக்கோலத்துடன் திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருந்தார் எனக் கடவுள் மாமுனிவர் கூறுவர். இவ்விருவகைக் கருத்துக்களுள் முன்னவர் கருத்தே பொருத்தமுடையதாகத் தெரிகிறது. திருவாதவூரடிகள் மதுரைக்குச் சென்று மீளும்வரை இறைவன் தான் மேற்கொண்ட குருவடிவத்துடன் திருப்பெருந் துறையில் வெளிப்பட எழுந்தருளியிருக்கவில்லை யென்பதும் அடியார்களுடன் போந்து வாதவூரடிகளை யாட்கொண்ட சில நாட்களுக்குள் மறைந்தருளினரென்பதும்,

**"தொண்டனேற்குள்ளவாவந்து தோன்றினாய்**
**கண்டுங் கண்டிலே னென்னகண் மாயமே"**

எனவும்,

**"காணுமாறு காணேனுன்னை யந்நாட்கண்டேனும்**
**பாணேபேசி யென்றன்னைப் படுத்ததென்ன பரஞ்சோதி"**

எனவும்,

**"பொய்யனேன் அகநெகப் புகுந்தமு தூறும்**
**புதுமலர்க் கழலிணையடி பிரிந்துங்**
**கையனேன் இன்னுஞ்செத்திலே னந்தோ**
**விழித்திருந் துள்ளக் கருத்தினை யிழந்தேன்**
**ஐயனே அரசே அருட்பெருங் கடலே**
**அத்தமே அயன்மாற் கறியொண்ணாச்**
**செய்ய மேனியனே செய்வகை யறியேன்**
**திருப்பெருந்துறை மேவிய சிவனே"**

எனவும் வரும் திருவாசகத் தொடர்களால் நன்கு தெளியப்படும். எனவே இரண்டாம் முறையாகத் திருப்பெருந்துறைக்குச் சென்ற வாதவூரடிகள் இறைவனே ஆசிரியனாக எழுந்தருளித் தமக்கு ஞானோபதேசஞ் செய்தற்கு இடமாயமைந்த குருந்தின் நீழலிலேயே அம்மையப்பர் திருவடிகளை மலர்தூவி வழிபட்டுத் திருவாசகச் செழும்பாடல்களால் பரவிப் போற்றினார் எனக் கொள்ளுதல் பொருந்தும்.

அன்பர்களாகிய அடியார்களின் துணையின்றி வாதவூரடிகள் தனித்துறைதலாற்றார் எனக் கருதிய சிவபெருமான் தம்முடன் வந்த அடியார்களை நோக்கி 'யாம் கயிலைக்குச்

செல்லுதல் வேண்டும். நீவிர் இங்கே யிருப்பீராக. இங்குள்ள பொய்கையின் நடுவே ஒரு நாள் தீப்பிழம்பு தோன்றும். நீங்களெல்லோரும் அத் தீயில் மூழ்கி நம்மை யடைவீராக' எனக்கூறி, வாதவூரடிகளை அருகிலழைத்து 'இத்தொண்டர் களுடன் நீயும் தீயிற் புகாமல் திருவுத்தரகோசமங்கை முதலிய தலங்களைப் பணிந்து தில்லைக்கு வந்து சேர்க' என அறிவுறுத்தி மறைந்தருளினாரெனவும், சில நாட்சென்ற பின் அங்குள்ள பொய்கையில் தீப்பிழம்பு தோன்றவே அடியார்களெல்லாம் அஞ்செழுத்தோதி அத்தழலில் மூழ்கிச் சிவகணநாதர்களாய் எழுந்தார்களெனவும், அப்பொழுது சிவபெருமான் அம்மையப்பராக விடை மீது தோன்றி அவ்வடியார்களுக்கு அருள் புரிந்து அவர்களுடன் மறைந்தனரெனவும், அந்நிலையில் சிவயோகத்தில் அமர்ந்திருந்த வாதவூரடிகள் சிவனடியார்களாகிய அன்பர்களைக் காணாது பொய்கைக் கரையையடைந்து அழுதரற்றி 'மெய்தானரும்பி' எனத் தொடங்கும் திருச்சதகத்தைப் பாடிப் போற்றினரெனவும் கடவுள் மாமுனிவர் கூறுவர்.

இறைவன் வாதவூரடிகளைத் 'தில்லைக்கு வருக' எனப்பணித்து மறைந்த நிலையில் உடனிருந்த அடியார்கள் அப்பெருமானது பிரிவிற் காற்றாது தீப்பாய்ந்து அன்பின் திறத்தையும் தமது தனிமையையும்,

**"நாயினேனை நலமலி தில்லையுட்**
**கோல மார்தரு பொதுவினில் வருகென**
**ஏல என்னை யீங்கொழித்தருளி**
**அன்றுடன் சென்ற அருள்பெறும் அடியவர்**
**ஒன்ற ஒன்ற உடன்கலந் தருளியும்**
**எய்த வந்திலாதார் எரியுற் பாயவும்"**

எனவும்,

**'விச்சுக் கேடு பொய்க்காகா தென்றிங்கெனை வைத்தாய்**
**இச்சைக்கான ரெல்லாரும் வந்துன்றாள் சேர்ந்தார்'**

எனவும்,

**'புறமேபோந்தேன் பொய்யும் யானும் மெய்யன்பு**
**பெறவே வல்லே னல்லா வண்ணம் பெற்றேன்யான்**
**அறவே நின்னைச் சேர்ந்தவடியார் மற்றொன்றறியாதார்**
**சிறவே செய்து வழிவந்து சிவனே நின்தாள் சேர்ந்தாரே'**

எனவும் வரும் தொடர்களில் அடிகள் தெளிவாக விளக்கியுள்ளார்.

இறைவனது பிரிவாற்றாது உயிர் துறந்த தலையன்பர்க ளாகிய மெய்யடியார்களுக்கு அப்பெருமான் உமையம்மை யாருடன் தோன்றி அருள் வழங்கிய திறத்தையும், அத்தகைய

*பேரன்பர்களாகிய அடியார்களைப் பிரிந்தமையால் தாம் கண்கெட்ட ஊரெருது போன்று அல்லற்பட்டுழலும் அவல நிலையையும்,*

**'போரே றேநின் பொன்னகர்வாய் நீபோந்தருளி யிருள்நீக்கி
வாரேறிளமென் முலையாளோ டுடன் வந்தருள அருள் பெற்ற
சீரேறடியார் நின்பாதஞ் சேரக்கண்டுங் கண்கெட்ட
ஊரேறாய் இங்குழல்வேனோ கொடியேன் உயிர்தான் உலவாதே'**

**'பொருத்த மின்மையேன் பொய்மை யுண்மையேன்
போதவென் றெனைப்புரிந்து நோக்கவும்
வருத்த மின்மையேன் வஞ்சமுண்மையேன்
மாண்டிலேன் மலர்க் கமலபாதனே
அரத்த மேனியாய் அருள்செய் அன்பரும்
நீயும் அங்கெழுந்தருளி யிங்கெனை
இருத்தினாய் முறையோ'வெ னெம்பிரான்
வம்பனேன் வினைக் கிறுதி யில்லையே'**

*என இறைவனை நோக்கி முறையிடு முகமாக அடிகள் விரித்துரைத்த திறம் இவண் நினைக்கத் தகுவதாகும். இங் கெடுத்துக்காட்டிய குறிப்புக்களால் குருவாக வந்த இறைவனும் உடன் வந்த அடியார்களும் மறைந்த நிலையில் அடிகளாற் பாடப்பெற்ற பகுதி திருச்சதகம் என்பது நன்கு துணியப்படும்.*

*திருவாதவூரடிகள் பெருந்துறை யீசன் பணித்தருளிய வண்ணம் திருவுத்தரகோசமங்கையை யடைந்து நீத்தல் விண்ணப்பம்பாடி முன்பு திருப்பெருந்துறையிற் கண்ட குருவடிவினை அங்கேயும் கண்டு மகிழ்ந்தனரென்பது,*

**"தெங்குலவு சோலைத் திருவுத்தரகோசமங்கைத்
தங்குலவு சோதித் தனியுருவம் வந்தருளி
எங்கள் பிறப் பறுத்திட் டெந்தரமும் ஆட்கொள்வான்
பங்குலவு கோதையும் தானும் பணிகொண்ட
கொங்குலவு கொன்றைச் சடையான்"**

*எனவரும் அடிகள் வாய்மொழியால் இனிது விளங்கும். பின்னர் அடிகள் பல தலங்களையும் வணங்கித் திருவிடைமருதினைச் சிறப்பாக வழிபட்ட செய்தி,*

**'இடை மரு ததனில் ஈண்ட விருந்து
படிமப் பாதம் வைத்தவப் பரிசும்'**

*எனவும்,*

**'அந்த இடைமருதில் ஆனந்தத் தேனிருந்த
பொந்தைப் பரவிநாம் பூவல்லி கொய்யாமோ'**

எனவும் வரும் திருவாசகக் குறிப்புகளால் நன்கு புலனாம். அடிகள் திருவாரூரை வழிபட்டுத் திருப்புலம்பல் பாடினார் எனக் கடவுள் மாமுனிவர் குறிப்பிடுவார். இச் செய்தி,

**பூங்கமலத்தயனெடுமால் அறியாத நெறியானே**
**கோங்கலர் சேர் குவிமுலையாள் கூறாவெண்ணீறாடீ**
**ஓங்கெயில்சூழ் திருவாரூ ருடையானே அடியேன் நின்**
**பூங்கழல்களவையல்லா தெவையாதும் புகழேனே"**

என வரும் அப்பதிக முதற் பாடலால் உய்த்துணரப்படும்.

திருவாதவூரடிகள் சீகாழிப்பதியை யடைந்து தமக்கு வெளிப்பட்டருளிய இறைவன் திருவடிகளை இறுகப்பற்றிக் கொண்டு பிடித்தபத்தினைப் பாடினார் எனக் கடவுள் மாமுனிவர் கூறுவர். இப்பதிகப் பாடல் தோறும், 'உன்னைச் சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந்தருளுவதினியே' என இறைவனை நோக்கி வினவுங் குறிப்பு அமைந்திருத்தலும் 'கழுமல மதனிற் காட்சி கொடுத்தும்' என வரும் தொடரால் அடிகள் இந் நிகழ்ச்சியைக் குறிப்பிட்டிருத்தலும் கடவுள் மாமுனிவர் கூற்றுக்கு ஆதாரமாகக் கொள்ளத்தக்கனவாகும். 'கழுமல மதனிற் காட்சி கொடுத்தும்' என வரும் இத் தொடர் வாதவூரடிகள் கண்ட தெய்வக் காட்சி யையும் அவர்க்கு முற்காலத்தே ஆளுடைய பிள்ளையார்க்குத் தோணிபுரத்திறைவர் அம்மையப்பனாகத் தோற்றிய அருட் காட்சியையும் ஒருசேரக் குறித்து நிற்றல் உணர்ந்து மகிழத் தக்கதாகும். இவ்வாறே திருநாவுக்கரசர்க்குத் திருப்பூவணத் திறைவன் முன்னின்றருளிய அருட்செய்தி,

**"பூவண மதனிற் பொலிந்திருந்தருளித்**
**தூவண மேனிகாட்டிய தொன்மையும்"**

என்ற தொடரால் அடிகள் குறித்துப் போற்றியுள்ளமை காண்க.

இறைவன் பணித்த வண்ணம் திருக்கழுக்குன்றத்தை யடைந்த திருவாதவூரடிகள், தமக்குத் திருப்பெருந்துறையில் எளிவந்தருளிய குருவடிவினைக் கண்டு வணங்கி மகிழ்ந்த செய்தி

**'மலங்கினேன் கண்ணின் நீரைமாற்றி**
**மலங்கெடுத்த பெருந்துறை**
**விலங்கினேன் வினைக்கேடனேன் இனி**
**மேல் விளைவ தறிந்திலேன்**

**இலங்குகின்ற நின் சேவடிக**
**ளிரண்டும் வைப்பிட மின்றியே**
**கலங்கினேன் கலங்காமலே வந்து**
**காட்டினாய் கழுக்குன்றிலே"**

எனவும்,

> **பூணொணாததொ ரன்பு பூண்டு**
> **பொருந்தி நாடொறும் போற்றவும்**
> **நாணொணாததொர் நாணமெய்தி**
> **நடுக்கடலு ளழுந்திநான்**
> **பேணொணாதபெருந்துறைப்பெருந்**
> **தோணிபற்றி யுகைத்தலுங்**
> **காணொ ணாத் திருக்கோலம் நீ வந்து**
> **காட்டினாய் கழுக் குன்றிலே'**

எனவும் வரும் திருக்கழுக்குன்றப் பதிகத் திருப்பாடல்களால் நன்கு புலனாம்.

'நலமலி தில்லையிற், கோலமார்தரு பொதுவினில் வருக' என இறைவன் பணித்த வண்ணம் திருவாதவூரடிகள் தில்லையை யடைந்து பொன்னம்பலவனைப் போற்றி வழிபட்டிருந்தமை, அடிகள் தில்லையிற் பாடிய திருவாசகப் பதிகங்களால் இனிது விளங்கும். திருவாதவூரடிகள் தில்லையில் தங்கியிருந்தபொழுது புத்தரை வாதில் வென்றார் எனப் பெரும்பற்றப்புலியூர் நம்பியும், இலங்கையிலிருந்து போந்த புத்தர் சிலர் தில்லையை யடைந்து ஏழுநாள் வரையறுத்து வாதுசெய்யத் தொடங்கியபொழுது தில்லைப்பதியிலுள்ளோர் கூத்தப்பெருமான் பணித்த வண்ணம் மாணிக்கவாசகரை வேண்டிக்கொள்ள அடிகள் புத்தரை வாதில் வென்றனர் எனப் பரஞ்சோதி முனிவரும் தம் நூலிற் குறிப்பிட்டுள்ளனர். தில்லையிற் பொன்னம்பலவாணனைப் போற்றி மகிழ்ந்த சிவனடியாரொருவர் ஈழநாட்டிற்குச் சென்று 'பொன்னம்பலம்' என்ற திருப்பெயரை இடைவிடாது ஓதி இரந்துண்டிருந்தனரென்றும் * (* "பல்காலுன்னைப் பாவித்துப் பரவிப் பொன்னம்பல மென்றே ஒல்கா நிற்கும் உயிர்க்கிரங்கி யருளாய் என்னை யுடையானே" எனவரும் திருவாசகத் தொடர் 'பொன்னம்பலம் என்ற திருப்பெயர் திருவைந் தெழுத்தினையொத்துச் சிந்தித்து ஓதத்தகும் சிறப்புடையதென்பதனை இனிது புலப்படுத்தல் காணலாம்.) அது கண்டு பொறாத இலங்கைப் புத்தர்கள் அவ்வடியார் செய்கையைத் தம் மன்னனிடம் தெரிவிக்க, அவனும் அவ்வடியாரை அழைத்துப் 'பொன்னம் பலம்' என அவர் கூறுவதன் கருத்தினைக் கேட்டறிந்து புத்த மதத்தைத் தில்லையில் நிலைநாட்டுங் கருத்துடன் புறப்பட்ட தன்னுடைய குருவினை முன்னனுப்பித் தன் புதல்வியாகிய ஊமைப் பெண்ணுடன் தில்லையை யடைந்தனனென்றும், அப்பொழுது திருவாதவூரடிகள் தில்லைநகர மக்கள் வேண்டுகோட்கிசைந்து புத்தர்

களுடன் வாது நிகழ்த்தி இலங்கை மன்னன் மகளாகிய ஊமைப்பெண்ணையும் பேசும்படி அருள்செய்து இலங்கை மன்னனைச் சைவனாக்கினாரென்றும் கடவுள் மாமுனிவர் திருவாதவூரடிகள் புராணத்தில் விரித்துக் கூறியுள்ளார்.

வாதவூரடிகள் புத்தர்களை வாதில் வென்றார் என வழங்கும் இந்நிகழ்ச்சிக்கு அடிகளது வாய்மொழியாகிய அகச்சான்றெதுவும் கிடைக்கவில்லை. ஊமைப்பெண்ணைப் பேசுவித்த நிலையில் அடிகள் வினாவும் விடையுமாகத் திருச்சாழல் பாடினார் என நெடுநாட்ககளாக வழங்கிவரும் செவிவழிச் செய்தியே இதற்கு ஆதாரமாதல் கூடும். 'புத்தன் முதலாய புல்லறிவிற் பல்சமயம்' என்ற தொடரால் தம் காலத்துப் புறச் சமயங்களை அடிகள் குறிப்பிடுதலால் அவர் காலத்துப் புத்த சமய வாடை தமிழ் நாட்டிலும் ஓரளவு வீசினமை நன்கு விளங்கும். தமிழ் நாட்டிலிருந்து சைவாசாரியரொருவர் ஈழநாட்டிற்குச் சென்று அங்குள்ள பௌத்த மன்னனைச் சைவசமயத்திற்குத் திருப்பினர் என ராஜரத்நாகரி யென்னும் இலங்கைச் சரித நூல் கூறுகிறதென்றும், அந்நூலிற் குறித்த காலம் கி.பி.819-ஆம் ஆண்டினை ஒட்டியதென்றும் நெல்சன் என்பார் தாம் எழுதிய மதுரைச் சரித்திரத்தில் (Madura Manua) குறிப்பிட்டுள்ளார். ராஜரத் நாகரியிற் குறிக்கப்பட்ட சைவாசாரியரென்பவர் திருவாதவூரடிகள் புராணம் கூறுமாறு அடிகள் தில்லையிலிருந்த பொழுது தமிழ்நாட்டிலிருந்து இலங்கைக்குச் சென்ற சிவனடியாரெனத் தெரிதலால் தில்லையில் திருவாதவூரடிகளால் வாதில் வெல்லப்பட்ட புத்தர்கள் இலங்கையிலிருந்து வந்தவர்களென்பதும், அவர்கள் எல்லோரும் வாதவூரடிகளது பெருமையை யுணர்ந்து சிவநெறியைத் தழுவினரென்பதும் நன்கு துணியப்படும்.

தில்லையிற் சிவபெருமான் வேதியராகி வந்து வாதவூரடிகள் பால் திருவாசகத்தையும் திருச்சிற்றம்பலக் கோவையையும் கேட்டு எழுதிச் சென்ற செய்தி, திருவாதவூரடிகள் புராணத்தில் விரித்துக் கூறப்பெற்றுளது. திருச்சிற்றம்பலக்கோவையைத் திருவாதவூரடிகள் பாடியபோது அழகிய திருச்சிற்றம்பலமுடையாராகி இறைவரே தமது திருக்கரத்தினால் எழுதிக் கொண்டார் என்னும் இவ் வரலாற்றினை "மெய்யருந்தவர் கோவையெழுதிச் சிவந்தன..... தெள்ளுசெந்தமிழ் மூவர்கவியைச் சுமந்தன தில்லையம்பலவாணர் கனகப்புயங்களே" எனத் தில்லைக்கலம்பகத்தில் இரட்டைப் புலவர் குறித்துள்ளார். எனவே இச்செய்தி கி.பி. 14-ஆம் நூற்றாண்டிலேயே பெருக வழங்கினமை நன்குபெறப்படும். இச்சிறப்புடைய நிகழ்ச்சி,

*பெரும்பற்றப் புலியூர் நம்பியும் பரஞ்சோதி முனிவரும் பாடிய திருவிளையாடற் புராணங்களிற் குறிக்கப்பபெறவில்லை. எனினும் பின்வந்த சான்றோர் பலர் இந்நிகழ்ச்சியை வலியுறுத்தியுள்ளமை இவண் நோக்கத் தகுவதாகும்.*

**கறைமிடற்றெம் பரற்போற்றி நரிபரியா**
**வரவழைத்துக் கயற்கண் மூகை**
**இறைவளையைப் பேசுவித்துப் புத்தரைவென்**
**றம்பலத்தி னினிதினாடும்**
**பிறைமுடித்த பிரானெழுதக் கோவைதிரு**
**வாசகம்பேர் பிறங்குபாடன்**
**மறைவகுத்த வாதவூர் மாணிக்க**
**வாசகர்தாள் மனத்துள் வைப்பாம்**

*என இரசை வடமலையப்ப பிள்ளையனவர்களும்,*

**“நலமலி வாதவூர் நல்லிசைப் புலவ**
**மனநின் றுருக்கும் மதுர வாசக**
**கலங்குறு புலனெறி விலங்குறு வீர**
**திங்கள் வார்சடைத் தெய்வ நாயகன்**
**ஒருகலை யேனு முணரான். அஃதான்று**
**கைகளோ முறிபடுங் கைகள், காணிற்,**
**கண்களோ வொன்று காலையிற் காணும்**
**மாலையி லொன்று வயங்கித் தோன்றும்,**
**பழிப்பி னொன்று விழிப்பி னெரியும்**
**ஆயினும் தன்னை நீபுகழ்ந் துரைத்த**
**பழுதில் செய்யுள் எழுதினன் அதனால்**
**புகழ்ச்சி விருப்பன் போலும்**
**இகழ்ச்சி யறியா என்பணிவோனே”**

*எனச் சிவப்பிரகாச சுவாமிகளும்,*

**“கடையூழி வருந்தனிமை கழிக்கவன்றோ அம்பலத்தில்**
**உடையார் உன்வாசகத்தில் ஒருபிரதி கருதினதே**

*என மனோன்மணீய ஆசிரியர் சுந்தரம் பிள்ளையவர்களும் சிவபெருமான் திருவாசகத்தையும் திருச்சிற்றம்பலக் கோவையையும் தமது திருக்கரத்தால் எழுதிய அற்புத நிகழ்ச்சியை நினைந்து உளமுருகிப் பாராட்டியுள்ளார்கள்.*

**இருந்துதி யென்வயிற் கொண்டவன்** (300)

*எனவும்,*

**"நினைவித்துத் தன்னையென் நெஞ்சத்திருந்தம்பலத்து நின்று புனைவித்த ஈசன்" (140)**

எனவும் வரும் திருச்சிற்றம்பலக்கோவைத் தொடர்களாலும், "அன்பர் துதிப்ப அவர்வயின் தான் கொள்ளும் பெருந்துதியை என் வயின் உண்டாக்கிக் கொண்டவன்" எனவும், "தானே வந்திருந்து திருத்தவேண்டுதலின் என்னெஞ்சத்துப் புகுந்திருந்து தன்னை யான் நினையும் வண்ணஞ்செய்து அம்பலத்தின்கண் திருமேனி காட்டி நின்று என்னால் தன்னைப் புகழ்வித்துக் கொண்ட ஈசன்" எனவும் அத்தொடர்களுக்குப் பேராசிரியர் உரைத்த உரையாலும் சிவபெருமானே போந்து இத் திருமுறையைப் பாடும்படி பணித்த திறம் இனிது புலனாதல் காணலாம். திருவாசகத்தையும் திருச்சிற்றம்பலக் கோவையை யும் கேட்டு எழுதிக்கொண்டு மறைந்த இறைவன், அத் திருமுறையேட்டினைத் தில்லைச் சிற்றம்பலத்தே வைத்தருளி னாராக, மறுநாள் பொன்னம்பல வாணர்க்குப் பூசை செய்ய வந்த பூசகர் அதனைக் கண்டு வியந்து ஊர்மக்களுக்குத் தெரிவித்துத் திருவாதவூரடிகளையடைந்து அத்திருமுறைக்குப் பொருள் விரித்தருளும்படி வேண்டினரெனவும், அவ்வேண்டுகோளுக் கிசைந்த வாதவூரடிகள் அன்பரெல்லோரையும் அழைத்துக் கொண்டு தில்லைப் பொன்னம்பலத்தை யடைந்து இத்திரு முறைக்குப் பொருளாவார் தில்லைச் சிற்றம்பலவராகிய இவரே' எனச் சுட்டிக்காட்டி அங்குள்ளார் யாவருங் காணத் தில்லையம்பலத்திற் புக்கு இறைவன் திருவடி நீழலிற் கலந்து ஒன்றாயினர் எனவும் கடவுள் மாமுனிவர் கூறுவர். அடிகள் அருளிய மணிவார்த்தையாகிய திருப்பாடல்களின் பொருள் சிவானுபவத் தாலேயே முற்றுமுணர்தற்குரியதாகலானும் அவ்வனுவத்திற்கு உள்ளீடாயிருப்பவன் தில்லைச் சிற்றம்பலவன் ஆகலானும் அவ்விறைவனையே திருவாசகத் திருமுறையின் பொருளென்று அடிகள் சுட்டியருளினார். திருவாசகம் திருச்சிற்றம்பலக் கோவை ஆகிய இத்திருமுறைக்கு இறைவனே பொருள் எனக் கூறிய இவ்வுண்மையை,

**"பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளம்**
**மூழ்கிய புனிதன் மொழிந்த வாசகமே**
**வாசகம், அதற்கு வாச்சியம்**
**தூசக லல்குல்வேய்த் தோளிடத் தவனே"**

எனச் சிவப்பிரகாச சுவாமிகளும்,

**"பைந்தமிழ் நவின்ற செந்நாப் புலவன்**
**ஐந்திணை யுறுப்பின் நாற்பொருள் பயக்கும்**

**காமஞ் சான்ற ஞானப் பனுவற்குப்**
**பொருளெனச் சுட்டிய ஒரு பெருஞ் செல்வ"**

எனக் குமரகுருபர அடிகளும் தெளிவாகக் குறித்துள்ளமை அறிந்து மகிழத்தக்கதாகும்.

'எண்ணிலியாகிய சித்திகள் வந்தெனை எய்துவதாகாதே' என்பது திருவாதவூரடிகள் வாய்மொழி. அடிகளது அனுபவவுரையாகிய இம்மெய்ம்மொழிக்கேற்பவே, அடிகளது திருமேனி பருப்பொருளாய் இம்மண்ணிற் கலவாது அருவாய் நுண்பூதத் தொடு கலக்க, அவரது நல்லுயிர் தில்லைச் சிற்றம்பலவன் திருவடி நீழலிற் கலந்து சிவானந்தப் பெருவாழ்வில் திளைத்தமையாகிய இவ்வற்புத நிகழ்ச்சியும் அமைந்துளது. அடிகள் முத்திபெற்ற இம்முறையை ஆன்றோர் பலரும் வியந்து போற்றுவர். தில்லைச் சிற்றம்பலமாகிய சிதாகாசப் பெருவெளியிலே மணிவாசகப் பெருமான் கலந்து முத்தி பெற்ற திறத்தை,

**'வான்கலந்த மாணிக்கவாசக'**

என வடலூர் இராமலிங்க அடிகள் அழைத்துப் போற்றும் அன்புரையாலும்,

**'மாணிக்கவாசகர் பேறெனக்குத்தர வல்லாயோஅறியேன்**
**..................................................................................**
**கற்பூர தீபம்போல் என்றனுடலைக் கனகசபையில் கலந்து கொள்வாயே,**

எனவரும் முத்துத்தாண்டவர் இசைப்பாடலாலும் நன்குணரலாம்.



# மாணிக்கவாசகர் காலம்

திருவாதவூரடிகளாகிய மணிவாசகப் பெருந்தகையார் வாழ்ந்த கால எல்லையைக் குறித்து அறிஞர் பலரும் தமக்குத் தோன்றிய பல வேறு முடிபுகளை வெளியிட்டுள்ளார்கள். மாணிக்கவாசகர் கடைச்சங்க காலமாகிய கி.பி.முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவரெனத் திருமலைக் கொழுந்து பிள்ளைவயர்களும்* (* Date of Manickavasagar by Tirumalaikolunthu Pillai) கி.பி.மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவரென மறைமலையடிகளாரும் பேராசிரியர் கா. சுப்பிரமணியபிள்ளை அவர்களும் * (*மாணிக்கவாசகர் வரலாறுங் காலமும்.) கி.பி. நான்காம் நூற்றண்டில் வாழ்ந்தவரென கே.ஜி.சேஷையர் அவர்களும்* (*1904-ல் வெளிவந்த சென்னைக் கிறித்தவ கலாசாலைப் பத்திரிகை) கி.பி.792 முதல் 835 வரை ஆட்சி புரிந்த முதல்வரகுண பாண்டியன் காலத்தவரெனத் திருவாளர் டி.வி.சதாசிவ பண்டாரத்தாரவர்களும்* (*பாண்டியர் வரலாறு (இரண்டாம் பதிப்பு) பக்கம். 61.) கி.பி.862 முதல் 880 வரை ஆண்ட இரண்டாம் வரகுண பாண்டியன் காலத்தவரெனத் தஞ்சை சீநிவாசபிள்ளை, தெ.பொ.பழநியப்பபிள்ளை முதலியவர்களும்* (*தமிழ் வரலாறு பிற்பாகம் (நான்காம் பதிப்பு) (பக்கம் 85-142) Date of Manickavasagar, T.P. Palaniyappa Pillai Journal of Shri Venkateskvara Oriental Institute Vol IV, Part I, Page 152 - 1 82.) கி.பி.பத்தாம் நூற்றண்டின் இறுதியிலும் பதினொராம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்தவரென அறிஞர் கோபிநாத ராயரவர்களும் (*சென்னைக் கிறித்தவ கலாசாலைப் பத்திரிகை.) ஆராய்ந்தெழுதி யுள்ளார்கள்.

மேற்காட்டிய அறிஞர் பலருடைய முடிபுகளையும் இரண்டு வகையாக அடக்கலாம். ஒன்று தேவார ஆசிரியர் மூவர்க்கும் காலத்ததால் முந்தியவர் மாணிக்கவாசகர் என்பது. மற்றொன்று தேவார ஆசிரியர் மூவர்க்கும் காலத்தாற் பிந்தியவர் மாணிக்க வாசகர் என்பதாகும். பல்லவபுரத்துப் பொதுநிலைக் கழக ஆசிரியர் மறைமலையடிகளாரவர்கள் தமது விரிந்த ஆராய்ச்சி யின் பயனாக எழுதி வெளியிட்ட "மாணிக்கவாசகர் வரலாறுங் காலமும்" என்ற ஆராய்ச்சிப் பெருநூலில் தேவார ஆசிரியர் மூவர்க்கும் காலத்தால் முற்றட்டவர் திருவாதவூரடிகள் என்னும் தமது கொள்கையினைப் பலவகைச் சான்றுகளைக் காட்டி நிலைநாட்டியுள்ளார்கள். தஞ்சை சீநிவாச பிள்ளையவர்கள் தாமெழுதிய தமிழ் வரலாறென்னும் நூலில் மணிவாசகர் தேவார

ஆசிரியர் மூவர்க்கும் காலத்தாற் பிற்பட்டவ ரென்பதனைச் சான்றுகள் காட்டித் தெளிவாக விளக்கி யுள்ளார்கள். இவ்விருதிற முடிபுகளையும் காய்தலுவத்தலகற்றி ஆராய்ந்து திருவாத வூரடிகள் வாழ்ந்த காலம் இதுவென்பதனைத் திட்டமாக அறிந்து கொள்ளுதல் திருமுறை வரலாற்று ஆராய்ச்சிக்குப் பெரிதும் துணை செய்வதாகும்.'

திருவாதவூரடிகள் தேவார ஆசிரியர் மூவர்க்கும் காலத்தால் முற்பட்டவரென்பதற்கு ஆசிரியர் மறைமலையடிகள் முதலியோர் கூறும் சிறப்புடைக் காரணங்களை முறையே ஆராய்வோம்.

(1) "மாணிக்கவாசகர் இந்நிலவுலகத்திற் பிறந்தருளுதற்கு முன் சிவபெருமானுக்கு அணுக்கராய் அவர்பாலிருந்தனர். பின்னர் அவரது கட்டளையால் மக்கட்பிறவிக்கு வரலாயினார். மேலுலகத்திற் சிவபெருமான்மாட்டு அணுக்கராய் நிற்கும் தூய தொண்டர்கள் 'சிவகணங்கள்' என்று வழங்கப்படுவர். அச் சிவகணங்களுள் தலைவராய் நிற்குஞ் சிலர்க்கு 'நந்திகள்' என்னும் பெயருண்டு. அந்நந்திகளுள் ஒருவரே மாணிக்கவாசகராக இந்நிலவுலகிற் பிறந்தருளினர். அவ்வுண்மை கண்டே மாணிக்கவாசகர்க்குப் பின் வந்த திருநாவுக்கரசு நாயனார் 'குராமலரோடு அராமதியஞ் சடைமேற் கொண்டார் குட முழநந்தீசனை வாசகனாகக் கொண்டார், என்று அருளிச் செய்தனர்.* (*மாணிக்கவாசகர் வரலாறுங் காலமும் (மூன்றாம்பகுதி) பக்கம் 2-3) என்பது.

திருவாதவூரடிகள் வரலாறு கூறும் பெரும்பற்றப்புலியூர் நம்பி திருவிளையாடல், திருவுத்தரகோசமங்கைப் புராணம், கடம்பவன புராணம் முதலிய நூல்கள் கணநாதர் ஒருவர் வாதவூரடிகளாக வந்து பிறந்தனரெனக் கூறுகின்றனவேயன்றி நந்திகளுளொருவர் மாணிக்கவாசகராக வந்து பிறந்தனரெனக் கூறுகின்றில. நந்தி யென்னும் பெயர் சிவகணத் தலைவர்களுக்குப் பொதுவாக வழங்குதற்குரியதெனக் கொள்ளினும் நந்தீசன் என்ற பெயரைச் சிவகணத் தலைவர் பலர்க்குமுரிய பொதுப்பெயராகக் கொள்ளுதல் பொருந்தாது. நந்திகள் அனைவர்க்கும் தலைவராம் பெருமைநந்தீசர் ஒருவர்க்கே உரியதாகும். மலையடிகளார் கருதுமாறு பெரியதேவராகிய நந்தியெம் பெருமானே மணிவாசகரெனப் பிறந்தருளினரென்பது உண்மையாயின் அவரது வரலாறு கூறும் தமிழ்நூல்களெல்லாவற்றிலும் இச்செய்தி விரிவாக விளக்கப்பெற்றிருக்கும். நந்தீசரே மணிவாசகராகப் பிறந்தருளினாரென்ற செய்தி தமிழ் நூல்களொன்றிலேனும் கூறப்படாமையால் அதனை உண்மை யெனக் கொள்ளுதற்கில்லை. நந்திகள் நால்வர் எனத் தொகை

கூறிய திருமூலதேவ நாயனாரும் அந்நந்திகள் கணத்தராக இந்நிலவுகிற் பிறந்த அடியார்களைக் குறிப்பிடு மிடத்துச் சிவயோக மாமுனி பதஞ்சலி, வியாக்கிரர் ஆகிய மூவரோடு தம்மையுஞ் சேர்த்துக் கூறிய தன்றி அத்தகைய நந்திகளுள் ஒருவராகத் திருவாதவுரடிகளைக் குறிப்பிடவேயில்லை.* (* திருமந்திரம் 77.) ஆகவே திருவாதவூரடிகள் திருமூலர்க்குக் காலத்தால் முற்பட்டவராய்க் கி.பி.மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்தாரெனக் கூறுதல் ஒரு சிறிதும் பொருந்தாது.

'வாசகன்' என்ற சொல் தூதுவன் என்ற பொருளிலும் புகழ்ந்தேத்துவோன் என்ற பொருளிலும் வழங்கும் சொல்லாகும். தனது திருக்கூத்துக் கேற்பக் குடமுழா முழக்கவல்ல நந்தி தேவரைத் திருக்கயிலைப்பெருமான் தன்னைத் தொழவந்த அடியார்களை இன்னின்னரெனத் தெரிவித்துத் தனது அருளிப்பாடறிந்தபின் திருமுன்னர் அழைத்துவரும் பணிமேற் கொண்ட தூதுவனாக அமைத்துக் கொண்டாரென்பார்.

**"குடமுழ நந்தீசனை வாசகனாக் கொண்டார்"**

எனத் திருநாவுக்கரசடிகளார் குறிப்பிடுவாராயினர். இத்தொடரிலமைந்த வாசகன் என்றசொல் சிவபெருமானது திருமுன்னர் அப்பெருமானைப் போற்றிப் பரவி அவரது திருக்குறிப்பறிந்து ஏவல் செய்யும் தூதுவராய் நிற்கும் பதவிநிலையைக் குறித்த பெயராகும். இதனை ஒருவர்க் குரியதாய் வழங்கும் இயற்பெயரென்றோ சிறப்புப் பெயரென்றோ கொள்ளுதல் சிறிதும் பொருந்தாது. இறைவனை நன்மொழிகளாற் புகழ்ந்து போற்றும் மெய்யடியார் யாவராயினும் அவர்கள் வாசகர் என்ற சொல்லால் வழங்குதற்குரியவரென்பது திருநாவுக்கரசர் பாடியருளிய,

**"குசையும் அங்கையிற் கோசமுங்கொண்ட அவ்**
**வசையில் மங்கல வாசகர் வாழ்த்தவே**
**இசைய மங்கையும் தானுமொன்றாயினான்**
**விசைய மங்கையுள் வேதியன் காண்மினே" ***

(* திருநாவுக்கரசர் திருவிசையமங்கைத் திருக்குறுந்தொகை 1 - பாடல்)

எனவரும் திருவிசயமங்கைத் தேவாரத்தால் நன்கு உய்த்துணரப் படுகின்றது. மறைகளை நன்குணர்ந்து கையில் தருப்பையும் புத்தகமும் தாங்கியவர்களாகிய மறைமுனிவர்கள் குற்றமற்ற நன் மொழிகளைச் சொல்லி வாழ்த்தத் திருவிசயமங்கை யென்னும் திருப்பதியுள் இறைவன் உமையம்மையாருடன் ஒருங்கு வீற்றிருக்கும் அழகிய காட்சியை விளக்குவது இத் திருக்குறுந் தொகைப் பாடலாகும். இதன்கண் 'அவ்வசையில் மங்கலவாசகர்' எனப் பன்மை கூறியவதனால் இறைவனை நன்மொழிகளாற் புகழ்ந்து போற்றுவோர் அனைவரையும் வாசகர் என்னும்

இச்சொல் உணர்த்திநின்றமை நன்கு தெளியப்படும். எனவே திருநாவுக்கரசர் திருப்பாடலில் வழங்கிய வாசகன் என்ற சொல் மாணிக்கவாசகப் பெருமானைக் குறிப்பதன்றென்பது நன்கு பெறப்படுதல் காண்க. திருவாதவூரடிகளுக்கு வழங்கும் மாணிக்க வாசகர் என்னும் பெயர் வழக்கம் கி.பி.15ம் நூற்றாண்டுக்கு பிற்பட்டதாதலின் அதனை முற்காலத்தவரான திருநாவுக்கரசர் வாசகன் என்று முதற்குறையாக வழங்கினாரென்பார் கூற்று சிறிதும் பொருந்தாதென்க.

(2) "நரியைக் குதிரை செய்வானும்" எனத் திருவாரூர்த் திருப்பதிகத் திலும் "மணியார் வைகைத் திருக்கோட்டில் நின்றதோர் திறமுந் தோன்றும்" எனத் திருப்பூவணத் திருத்தாண்டகத்திலும் திருநாவுக்கரசர் குறிப்பிட்ட செய்திகள் முறையே மணிவாசகர் பொருட்டு ஆலவாய்ப் பெருமான் நரியைப் பரியாக்கிய திருவிளையாடலையும் பிட்டுக்கும் மண் சுமந்த திருவிளை யாடலையும் குறிப்பன என்பர்.

> **"நரியைக் குதிரை செய்வானும் நரகரைத் தேவு செய்வானும்**
> **விரதங்கொண்டாட வல்லானும் விச்சின்றி நாறுசெய்வானும்**
> **முரசதிர்ந் தானைமுன் னோட முன்பணிந் தன்பர்களேத்த**
> **அரவரைச் சாத்திநின்றானும் ஆரூரமர்ந்த அம்மானே"**

எனவரும் இத்திருப்பாட்டில் "காட்டில் அலைந்து பிணங்களைத் தின்று திரியும் இழிதொழிலுடைய தாழ்ந்த நரியையும் உயர்ந்தோர் மதிக்கும் பெருமைவாய்ந்த சிறந்த ஊர்தியாகிய குதிரையாகத் திருத்திப் பணிகொள்ளவல்ல தன்வயத்தனாகத் திகழ்பவனும் துன்பமே நுகர்தற்குரிய நிலையில் நிரயத்து வீழ்ந்த உயிர்த் தொகுதிகளை இன்பமே நுகர்தற்குரிய வானுறையுந் தெய்வங்களாக உயர்த்தி வாழ்விக்கும் பேரருளாளனும், இருவினைப் பாசட்ததாற் கட்டுண்டு மயங்கும் மாந்தரைத் தவநெறியிற் புகுத்திச் சிவஞானத்தையளித்தல் கருதி அவர் பொருட்டு எண்ணிலாத விரத நெறிகளைத் தானே மேற்கொண்டு அருள்புரியவல்ல விரதியாக விளங்குபவனும், வித்தாகிய காரணத்தைக் கொண்டு விளைவிப்பார் பிறராக, தான் எதனையும் வேண்டாமலே காரியமாகிய பயிர்களை விளைவிக்கவல்ல முடிவிலாற்றலுடையவனும் திருவாரூரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள சிவபெருமான் ஒருவனே யென்னும் உண்மையைத் திருநாவுக்கரசடிகளார் இனிது விளக்கியுள்ளார். நரியைக் குதிரை செய்தல், நரகரைத் தேவு செய்தல், விரதங் கொண்டாடுதல் விச்சின்றி நாறு செய்தல் என்பவற்றை முன்னொரு காலத்திற் சிவபெருமான் நிகழ்த்திய திருவிளை யாடல்களாகத் திருநாவுக்கரசர் கருதவில்லை யென்பதற்கு

இச்செயல்களை இத்திருப்பாடலில் எதிர்காலத்தில் வைத்துக் கூறியருளியதே சிறந்த சான்றாகும். திருநாவுக்கரசர் காலத்திற்கு முன் இறைவன் செய்தருளிய திருவிளையாடல்களைக் குறிப்பது 'நரியைக் குதிரை செய்வானும்' எனத் தொடங்கும் திருப்பாடலன் றென்பதும் எண்குணத்தானாகிய இறைவனுடைய தன் வயத்தனாதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை முதலிய அருட்பண்புகளை விளக்குவதே இத்திருப்பாடலென்பதும் இதன் பொருளை ஆழ்ந்து உணர வல்லார்க்கு இனிது புலனாம். இப்பாடலில் 'விச்சின்றி நாறு செய்வான்' எனத் திருநாவுக்கரசர் இறைவனது முடிவிலாற்றலுடைமையினை விளக்கியவாறே "விச்சதின்றியே விளைவு செய்குவாய்"* (*திருவாசகம், திருச்சதகம் 96.) எனத் தொடங்கும் திருச்சதகப் பாடலில் திருவாதவூரடிகளும் விளக்கிய திறம் இவண் ஒப்புநோக்கி யுணரத்தக்கதாகும். 'விச்சின்றி நாறு செய்தல்' என்ற தொடர் முன்னர் நிகழ்ந்த திருவிளையாடல்களுள் எதனையும் குறித்து வழங்காமை போன்றே அதனோடு உடன் வைத்து ஓதப்பெற்ற நரியைக் குதிரை செய்தல், நரகரைத் தேவு செய்தல், விரதங் கொண்டாடுதல் என்பனவும் சிவபெருமானால் நிகழ்த்தப்பட்ட திருவிளையாடல்களுள் எதனையும் குறித்து வழங்கியன அல்ல என்பது நன்கு தெளியப்படும்.

இனி "மணியார் வைகைத் திருக்கோட்டில் நின்றதோர் திறமுந் தோன்றும்" எனவரும் திருப்பூவணத் திருத்தாண்டகத் தொடர், மதுரையிற் சோமசுந்தரப்பெருமான் வந்தி யென்னுந் தவப்பெருஞ் செல்விக்குக் கூலியாளாகி மண்சுமந்து கூலிகொண்டு பிரம்படிபட்டு விளையாடிய நிகழ்ச்சியைக் குறித்து நிற்பது தானா? என்பதும் ஈண்டு ஆராயத்தக்கதாகும். "வடிவேறு, திரிசூலம் தோன்றும் தோன்றும்" எனத் தொடங்குந் திருப்பூவணத் திருத்தாண்டகத்தின் ஒன்பதாம் திருப்பாட்டில் "மணியார் வைகைத் திருக்கோட்டில் நின்றதோர் திறமும்" என்ற இத்தொடர் அமைந்துளது. திருவாலவாய்ப் பெருமானை இறைஞ்சிப் போற்றிய திருநாவுக்கரசர் திருப்பூவணத்தை வழிபடச் சென்றபொழுது திருப்பூவணத்திறைவர் திருநாவுக் கரசர்க்கு நேரே தோன்றிக் காட்சியளித்தருளினாரென்பதும், அத்தெய்வக் காட்சியைக் கண்ணாரக்கண்டு இறைஞ்சிய தாண்டகவேந்தர் 'வடிவேறு திரிசூலம் தோன்றும் தோன்றும்" எனத் தொடங்குந் திருத்தாண்டகத்தைப் பாடிப் போற்றினா ரென்பதும் வரலாறு, இச்செய்தி,

**"திருவால வாயமர்ந்த செஞ்சுடரைச் செழும்பொருணூல்**
**தருவானை நேரிசையும் தாண்டகமு முதலான**

பெருவாய்மைத் தமிழ்பாடிப் பேணுதிருப் பணிசெய்து
மருவார்தம் புரமெரித்தார் பூவணத்தை வந்தடைந்தார்"

(பெரிய புராணம், திருநாவுக். - 406)

"கொடி மாடம் நிலவுதிருப் பூவணத்துக் கோயிலினுள்
நெடியானுக் கறிவரியார் நேர்தோன்றக் கண்டிறைஞ்சி
வடிவேறு திரிசூலத் தாண்டகத்தால் வழுத்திப் போய்ப்
பொடிநீடு திருமேனிப் புனிதர்பதி பிறபணிவார்"

(பெரிய புராணம், திருநாவுக் - 407)

எனவரும் பெரியபுராணச் செய்யுட்களால் நன்கு தெளியப்படும். திருப்பூவணத் திருக்கோயில் வைகையாற்றின் கரையிலே அமைந்ததாகும். இத்திருக்கோயில் இறைவன் தமக்கு நேர் தோன்றிக் காட்சி வழங்கிய திருவருட்டிறத்தையே "மணியார் வைகைத் திருக்கோட்டில் நின்றதோர் திறம்" எனத் திருநாவுக்கரசர் இத்திருத்தாண்டகத்துள் போற்றிப் பரவியுள்ளார். "மணியார் வைகைத் திருக்கோடு" என்பது மணிகள் நிறைந்த வையை யாற்றின் அழகிய கரை என்னும் பொருள் தருவதாய் அக் கரையிலமைந்த திருப்பூவணத் திருக்கோயிலைக் குறித்து நின்றது. திருப்பூவணத்திறைவர் வையைக் கரையிலே தோன்றித் தமக்குக் காட்சி வழங்கிய செய்தியைத் திருநாவுக்கரசர் இத்தொடராற் குறிப்பிடு கின்றாரெனக் கொள்வதே இத்திருத்தாண்டகம் பாடப்பெற்ற செவ்விக்குப் பொருத்தமுடையதாகும். இஃதன்றிப் பிட்டுக்கு மண் சுமந்த திருவிளையாடலைக் குறித்தற்குரிய சொல்லமைப் பெதுவும் இத்தொடரிற் காணப்படவில்லை. ஆகவே இத்தொடரிற் பிட்டுக்கு மண் சுமந்த திருவிளையாடல் குறிக்கப்பட்டதென்பார் கூற்று நாவுக்கரசர் வரலாற்றுக்கு முரண்பட்டதாதல் நன்கு பெறப்படும்.

(3) சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடியத் திருதொண்டத் தொகைத் திருப்பதிகத்தில் 'பொய்யடிமையில்லாத புலவர்க்கும் அடியேன்' எனப் போற்றி வழிபடப்பெற்ற பொய்யடிமை யில்லாத புலவரென்பார் மாணிக்கவாசகரே. மாணிக்க வாசகப் பெருமான் வடக்கிருந்து வந்த வீரசைவ மரபிற்கு உரியராய் அம்மரபினரால் தலைமையாசிரியராக வைத்து போற்றப்பட்டு வந்தமை கண்டே தமிழ்நாட்டுச் சைவ சமயத் தெய்வ ஆசிரியரான சுந்தரமூர்த்தி நாயனார் தாம் அருளிச் செய்த திருத்தொண்டத் தொகையில் அவர் பெயரை வெளிப்படக் கிளந்து ஓதாது "பொய்யடிமையில்லாத புலவர்" என்று அவரைக் குறிப்பால் ஓதினர் என்பர் மறைமலையடிகளார்.

பொய்யடிமையில்லாத புலவர் எனத் திருத்தொண்டத் தொகையிற் போற்றப் பெற்றவர், மறைமலையடிகள் முதலியோர் கருதுமாறு தனியடியாராகிய ஒருவரல்லர். மெய்ம்மைநெறி நின்று இறைவனைப் போற்றிப்பரவும் பெருங் கூட்டத்தினராகிய பலரையும் இத்தொடர் குறித்து நிற்பதென்னும் உண்மையைத் திருத்தொண்டத்தொகைக்கு வகை நூலாகத் திருத்தொண்டர் திருவந்தாதி பாடிய நம்பியாண்டார் நம்பிகளும் விரிநூலாகத் திருத்தொண்டர் புராணம் பாடிய சேக்கிழாரடிகளும் தெளிவாகக் கூறியுள்ளார்கள். குடந்தை நகருக்கு அருகே இப்பொழுது தாராசுரமென மருவி வழங்கும் இராசராசேச்சுரத் திருக்கோயிலிற் சோழ மன்னரால் அமைக்கப்பட்ட திருத் தொண்டத் தொகையடியார்களைக் குறிக்கும் சிற்பங்களில் பொய்யடிமையில்லாத புலவரைக் குறித்த சிற்பத்தில் அடியார் பலர் குறிக்கப்பட்டிருந்தலைக் காண்கின்றோம். ஆதலால் பொய்யடிமையில்லாத புலவர் என்னுந்தொடர் தனியடியா ரொருவரைக் குறித்த தன்றென்பதும் தொகையடியார்களையே குறித்ததென்பதும் நன்கு தெளியப்படும். சிவபெருமானால் வலிய வந்து வழக்குப் பேசித் தடுத்தாட்கொள்ளப் பெற்ற வன்றொண்டர், மாணிக்கவாசகர் பெயரை வெளிப்படக் கிளந்தோதும் மனவலியின்றிப் 'பொய்யடிமையில்லாத புலவர்' எனக் குறிப்பால் உணர வைத்தாரென்னுங் கூற்று, வன்றெண்டரது மனவியல்புக்கு முற்றும் முரணாகும். சுந்தரர் காலம் முதல் இன்று வரை பொய்யடிமையில்லாத புலவரைத் தொகையடியாராக வைத்து வழிபட்டு வரும் தொன்னெறி வழக்கிற்கும் இது முரண் படுகின்றது. அன்றியும் பாண்டி நாட்டுத் திருவாதவூரிற் பிறந்தருளிச் சைவ சித்தாந்த மெய்ந்நூலிலக்கிய மாகத் திகழும் திருவாசகச் செழுமுறையைத் திருவாய் மலர்ந்தளிருய மணிவாசகப் பெருமானை வடக்கிருந்து வந்த வீரசைவ மரபினரெனத் துணிந்து கூறுதல் சிறிதும் ஏற்புடையதன்றாம்.

(4) மாணிக்கவாசகர் தேவார ஆசிரியர் மூவர்க்கும் காலத்தாற் பிற்பட்டவராயின் கண்ணப்ப நாயனார், சண்டீசப் பிள்ளையார் ஆகிய அடியார்களைத் தம் பாடல்களிற் போற்றிப் பரவிய அவ்வடிகள் சிவபெருமானது திருவருளை நிரம்பப் பெற்ற தேவார ஆசிரியர் மூவரையும் உளமுருகிப் போற்றியிருப்பார். தேவார ஆசிரியர்களைப் பற்றிய குறிப்பெதுவும் திருவாச கத்திலும் திருச்சிற்றம்பலக் கோவையிலும் காணப்படாமையால் மாணிக்கவாசகர் அம்மூவர்க்கும் காலத்தால் முற்பட்டவ ரென்பது நன்கு தெளியப்படும் என்பர்.

சோழன் கோச்செங்கணான் என்னும் வேந்தன் கடைச்சங்க காலத்தில் வாழ்ந்தவனாவன். இவனது ஆட்சிக்காலம் கி.பி. முதல்

நூற்றாண்டின் இறுதியாகும். இவ்வேந்தர் பெருமான் இருக்கிலங்கு மொழித் திருவாய் எண்தோளீசற்கு எழில் மாடம் எழுபது செய்து உலகம் ஆண்ட செய்தியினைத் திருமாலடியாரான திருமங்கையாழ்வார் திருநறையூர்த் திருப்பதிகத்திற் குறிப்பிட்டுப் போற்றியுள்ளார். இவ்வேந்தர் பெருமானது சிவபத்தி மாண்பினைத் தேவார ஆசிரியர் மூவரும் சிறப்பித்துப் பாடியுள்ளார்கள். இங்ஙனமாகவும் சைவசமயக் குரவருளொருவராகிய மாணிக்கவாசக சுவாமிகள் தமக்கு முன் வாழ்ந்த கோச்செங்கட்சோழ நாயனாரைத் தம் பாடல்களிற் குறித்துப் போற்றாமைக்குரிய காரணமென்னை? மணிவாசகர் கோச்செங்கட் சோழரைக் குறிப்பிடாமையால் கோச்செங்கட் சோழர்க்குக் காலத்தால் முற்பட்டவர் மாணிக்கவாசகர் என முடிபு செய்தல் வரலாற்றாராய்ச்சிக்கு முரண்படுமல்லவா? அடியார் பெருமையினை உலக மக்களுக்கு எடுத்துக் கூறுதலையே தமது குறிக்கோளாகக் கொண்ட அருளாசிரியர்கள் தாம் கூற எடுத்துக்கொண்ட நிகழ்ச்சியிற் குறிக்கத்தக்க அடியார்களைக் குறிப்பிடாதிருந்தால் அது பற்றி ஐயுற்று ஆராய்தல் முறையாகும்.

உலகத்தோரை நோக்காமல் பரமே பார்த்திருக்கும் இயல்பினராய் இறைவனது பிரிவினையே இடைவிடாது நினைந்துருகும் மணிவாசகப் பெருந்தகையார், தமக்குக் காலத்தால் முற்பட்ட அடியார் பலரையும் தம் பாடல்களில் விடாது கிளந்தெடுத்துக் கூறியிருக்க வேண்டுமெனத் துணிதலும், அத்துணிபுகொண்டு அடிகள் காலத்தை நிச்சயிக்க முற்படுதலும் பொருத்த முடையனவாகத் தோன்றவில்லை. திருவாதவூரடிகள் தமக்கு முன் வாழ்ந்த அருளாசிரியராகிய சிவனடியார்களையும் அப்பெருமக்களது அன்பின் பெற்றியையும் அன்னோர்க்கு இறைவன் அருள்சுரந்த திறத்தையும் தம்முடைய பாடல்களில் அங்கங்கே பொதுவாகக் குறிப்பிட்டுப் போற்றியதுடன் அப்பெருமக்கள் திருவாய் மலர்ந்தருளிய இயலிசைத் தமிழ் மாலைகளாகிய திருப்பதிகங்களைப் ‘பண்சுமந்த பாடல்’ எனப் பாராட்டிப் போற்றியுற்றார். தேவாரத் திருப்பதிகங்களிலமைந்த சொல்லும் பொருளும் திருவாதவூரடிகள் திருவாய் மலர்ந்தருளிய திருப்பாடல்களிலும் அவ்வாறே அமைந்திருத்தல் இக்கருத்தை மேலும் வலியுறுத்துகின்றது.

(5) கி.பி. ஆறாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்தே யானைமுகக் கடவுள் வழிபாடு இத்தென்றமிழ் நாட்டின்கண் உளதாயிற்றென்பது துணிபாதலின் இக்குறிப்பொன்றுமே மாணிக்கவாசகப் பெருமான் தேவார ஆசிரியர் மூவர்க்கும் காலத்தால் முற்பட்டவரென்பதை விளக்கும் என்பர் மறைமலையடிகள்.

சைவத் திருமுறையாசிரியர்க ளனைவரும் சிவனெனும் நாமந் தனக்கேயுடைய செம்மெனி யெம்மானாகிய சிவபெருமானையே முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபட்டவராதலின் விநாயகர், முருகன், கொற்றவை, சாத்தன் முதலிய சைவசமயப் பிரிவிலடங்கிய பரிவார தெய்வங்களைத் தனித்தனியே போற்றி வழிபடும் கொள்கையினரல்லர். இத்தகைய கொள்கை காரணமாகத் தேவார ஆசிரியர் மூவரும் சிவபெருமானொருவனையே வழிபட்டுப் போற்றியதன்றி விநாயகர் முதலிய மூர்த்தங்களைத் தனித் தனித் தெய்வங்களாகக் கொண்டு வணங்காமல் தம்மால் வழிபடப்பெறும் சிவபரம்பொருளால் உலக நன்மை கருதியளிக்கப் பெற்ற துணைத் தெய்வங்களாகவும் அப்பரம்பொருளுக்கு உறவுடையவர்களாகவும் அப் பெருமானைப் போற்றி வழிபட்டுப் பேறுபெற்றவர்களாகவும் தம் பாடல்களிற் குறிப்பிட்டுள்ளார்கள். அம்முறையினையொட்டிச் சிவபெருமானாகிய தனிமுதற் பொருளொன்றையே வழிபடும் பணியில் நின்ற திருவாதவூரடிகள் தாம் பாடிய பாடல்களில் விநாயகப் பெருமானைத் தனிமுதற் கடவுளாகக் குறிப்பிட வில்லை. அதுகொண்டு அவர் விநாயக வணக்கம் இந்நாட்டிற் பரவாத கி.பி. ஆறாம் நூற்றண்டிற்கு முன் வாழ்ந்தவரெனக் கருதுதல் வலியுடையதாகாது. அங்கனங் கொண்டால் விநாயகர் வழிபாட்டைக் குறிப்பிடாத பிற்கால ஆசிரியர் சிலரும் கி.பி. ஆறாம் நூற்றாண்டிற்கு முற்பட்டவரெனத் தவறாகக் கொள்ளுதற்கும் இடமுண்டாம். தேவார ஆசிரியர் மூவரையும் குறித்துப் போற்றிய திருவிசைப்பா ஆசிரியராய பூந்துருத்தி நம்பிகாடநம்பி என்பார் தேவார ஆசிரியர் மூவரையும் கண்ணப்பர், கணம்புல்லர் முதலிய அடியார் சிலரையும் குறித்துப் போற்றியுள்ளார். எனினும் மாணிக்கவாசகரைப்பற்றி அவ்வாசிரியர் எதுவும் குறிப்பிடவில்லை. அதுகொண்டு அவ்வாசிரியர் மாணிக்கவாசகர்க்குக் காலத்தால் முற்பட்டவரெனத் துணிதல் முறையாகுமா? அதுபோலவே விநாயகரைப் பற்றிக் குறிப்பிடாத மாணிக்கவாசகர் விநாயகர் வழிபாடு பரவத்தொடங்கிய கி.பி. ஆறாம் நூற்றாண்டிற்கு முற்பட்டவரெனத் துணிதலும் முறையாகாதென்க.

(6) திருச்சிற்றம்பலக் கோவையாரில் வங்கமலிகலி நீர் தில்லை (செ-85) எனவும், 'கடற்றில்லை' 122,296) எனவும் 'புலியூர் சுற்றும் போர்க்கடலே' 183) எனவும் மணிவாசகப் பெருமான் கூறுதலால் அவர் காலத்தே தில்லை நகரின் அருகே கடல் நின்றதென்றும், "பாளையுடைக் கமுகோங்கிப் பன்மாட நெருங்கி யெங்கும், வாளையுடைப்புனல் வந்தெறி வாழ்வயற்றில்லை" எனத் திருநாவுக்கரசரும் "மையாரொண்கண்ணார் மாடநெடுவீதிக்

கையாற் பந்தோச்சுங் கழிசூழ் தில்லை" எனத் திருஞான சம்பந்தரும் தில்லைநகர அமைப்பைக் கூறுதலால் அவ்விரு பெருமக்களும் வாழ்ந்த காலத்தே கடல் தில்லையை விட்டு ஒரு கல் தொலைவில் விலகிச்செல்ல அது நின்றவிடத்தே உப்பங்கழி நீர் நிற்பதாயிற்றென்றும், இவ்வாறு கடல் விலகிச் செல்லுதற்கு 225 ஆண்டுகளாவது சென்றிருக்க வேண்டுமென்றும், எனவே மாணிக்கவாசகர் வாழ்ந்த காலம் கி.பி. நான்காம் நூற்றாண்டுக்கு முற்பட்டதாமென்றும் கூறுவர் மறைமலையடிகள்.

திருவாதவூரடிகள் 'வங்கமலி கலிநீர் தில்லை' எனவும் 'கடற்றில்லை' எனவும் கூறியது, தில்லை நகரத்தை யொட்டிக் கடல் அமைந்திருந்தது என்பதைக்குறித்தற் பொருட்டன்றாம். கடலுக்கு ஐந்தாறு கல் தொலைவிலமைந்த ஊர்களையும் கடற்கரையூராகச் சிறப்பித்துரைக்கும் வழக்கம் இலக்கியங்களிற் பெருகிக் காணப்படுகின்றது. சீகாழிப்பதிக்குக் கிழக்கே ஐந்தாறு கல் தொலைவில் கடலமைந்திருப்பினும்,

**"ஒன்னார் புரமூன்று மெரித்த வொருவன்**
**மின்னாரிடை யாளொடுங் கூடிய வேடந்**
**தன்னாலுறை வாவது தண்கடல் சூழ்ந்த**
**பொன்னார்வயற் பூம்புகலிந் நகர்தானே"** (* முதல் திருமுறை 30-ஆம் பதிகம் 2-ஆம் திருப்பாட்டு)

எனத் திருஞானசம்பந்தப் பிள்ளையார் அதனைக் கடலொடு தொடர்புபடுத்திக் கூறியுள்ளார். அது போலவே தில்லை நகரத்தைச் சிறப்பிக்குந் திருவாதவூரடிகளும் கடலுக்கு மூன்று நான்கு கல் தொலைவிலுள்ள தில்லையைக் கடல் வளம் உடைய பதியாகக் குறிப்பிட்டுள்ளார். இங்ஙனம் மணிவாசகப்பெருமான் தில்லையைக் கடலொடு தொடர்புபடுத்திக் கூறினாற்போலவே கி.பி.10, 11ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த திருவிசைப்பா ஆசிரியர் களாகிய கருவூர்த் தேவரும் திருவாலி யமுதனாரும் "ஆர்த்துவந் தமரித் தமரும் பிறரும் அலைகட லிடுதிரைப் புனிதத் தீர்த்தநீ ரரும்பும் பெரும்பற்றப் புலியூர்த் திருவளர் திருச்சிற்றம் பலமே"(*கருவூர்த்தேவர் திருவிசைப்பா. கோயில் - 8) எனவும் "சீர்வங்கம் வந்தணவும் தில்லைமா நகர்ச் சிற்றம்பலம்" (*திருவாலியமுதர் திருவிசையப்பா, கோயில் கோலமலர் 8) எனவும் முறையே கடலின் பாங்கர் அமைந்த ஊராகத் தில்லைப் பதியைக் குறிப்பிட் டுள்ளார்கள். எனவே மாணிக்கவாசகர் காலத்தில் மட்டுமன்றித் திருவிசைப்பா ஆசிரியார்களாகிய கருவூர்த்தேவர், திருவாலிய முதர் முதலியோர் வாழ்ந்த பிற்காலத்திலும் தில்லைப்பதி கடலொடு தொடர்புடையதாக வைத்துப் பாடப்பெற்றதென்பது நன்கு புலனகின்றது. உண்மையாக

நோக்குமிடத்துத் தேவார ஆசிரியர் காலத்தில் மட்டுமன்றி மாணிக்கவாசகர் வாழ்ந்த நாளிலும் சிதம்பரத்தை யொட்டிக் கடல் இருந்ததில்லை யென்பதும். கடலொடு தொடர்புடைய உப்பங்கழியே தில்லை நகரின் கீழ்த்திசையில் அமைந்திருந்த தென்பதும், தில்லையின் ஏனைய மூன்று பக்கங்களிலும் காவிரியாற்றின் நீர் கால்வாய் வழியே வளைந்தோடியதென்பதும், அந்நீரால் வளம்பெற்ற தில்லை நகரின் சுற்றுப்புறம் வயலும் சோலையுமுடைய மருதநிலமாகத் திகழ்ந்ததென்பதும்,

**"மாதுற்றமேனி வரையுற்ற வில்லிதில்லை நகர்சூழ்**
**போதுற்ற பூம்பொழில் காள்கழிகாள்"***

(* திருச்சிற்றம்பலக்கோவை 174-ஆம் செய்யுள்.)

**"பொன்னிவளைத்த புனல்சூழ்நிலவிப் பொலிபுலியூர்"*** (* திருச்சிற்றம்பலக்கோவை 317-ஆம் செய்யுள்.)

**"சிறைவான்புனற் றில்லைச்சிற்றம்பலம்"*** (* திருச்சிற்றம்பலக் கோவை 20ம் செய்யுள்)

**"குருநாண்மலர்ப் பொழில் சூழ்தில்லை'*** (* திருச்சிற்றம்பலக் கோவை 44-ம் செய்யுள்)

எனவரும் சிற்றம்பலக்கோவைத் தொடர்களாலும்* (* திருவாசகம் - திருச்சாழல் 14.)

**"தேன்புக்க தண்பனைசூழ் தில்லைச் சிற்றம்பலவன்"***

(* திருவாசகம் - கண்டபத்து 6.)

**"செறிபொழில் சூழ்தில்லை நகர்த் திருச்சிற்றம்பலம்"*** (* கல்லாடம் 97-ம் செய்யுள் 14ஆம் அடி.)

எனவரும் திருவாசகத் தொடர்களாலும் நன்கு விளங்கும். இங்கெடுத்துக் காட்டிய குறிப்புக்களால் தில்லை நகரத்திற்கும் கீழ்கடலிற்கும் உள்ள தொலைவு தேவார ஆசிரியர் காலத்திலும் மாணிக்கவாசகர் காலத்திலும் வேறுபட்ட தில்லை யென்பது தெளிவாகப் புலப்படுதலால் தேவார ஆசிரியர் மூவர்க்கும் மாணிக்கவாசகர் காலத்தால் முற்பட்டவர் என்பதற்குத் திருக்கோவையாரிலுள்ள நெய்தனில வருணனையைச் சான்றாகக் கொள்ளுதல் பொருந்தாதென்பது புலனாம்.

(7) சாக்கியநாயனர், இடைக்காடர், காரைக்காலம்மையார் முதலிய அடியார்களை எடுத்தோதிய கல்லாடம் தேவார ஆசிரியர் மூவரையும் யாண்டும் குறிப்பிடாமையால் அந்நூல் தோன்றியகாலம் தேவார ஆசிரியர்க்கு முன் கி.பி.ஐந்தாம் நூற்றாண்டின் இறுதியும் ஆறாம் நூற்றாண்டின் தொடக்கமுமா மென்றும், ஆகவே அக்கல்லாட நூலிற் போற்றிப் புகழப்பட்ட

மணிவாசகர் அம்மூவர்க்கும் முந்தியவரென்பது பெறப்படு மென்றும் மறைமலையடிகள் கூறுவர்.

திருஞானசம்பந்தர் காலத்துப் பாண்டியனுக்கு வெப்புத் தீர்த்த திருவிளையாடல், அக்காலத்துச் சமணர் கழுவேறினது, சேரமான் பெருமாள் நாயனார் காலத்தில் ஆலவாயிறைவன் பாணபத்திரர் பொருட்டுச் சாதாரி பாடியது ஆகிய இத்திருவிளை யாடல்களெல்லாம் இறைவன் இயற்றிய அறுபத்து நான்கு திருவிளையாடலுள் அடங்கும் என்பவாதலின் "எட்டெட்டி யற்றிய கட்டமர் சடையோன்" * (* பரிபுரக்கம்பலை-யிருசெவி யுண்ணும், குடக்கோச் சேரன் கிடைத்திது காண்கென, மதிமலிபுரிசைத் திருமுகங்கூறி, அன்புருந் தரிந்த இன்பிசைப் பாணன், பெறநிதி கொடுக்கென வுறவிடுத்தருளிய, மாதவர் வழுத்துங் கூடற் இறைவன்" - கல்லாடம் 13 ஆம் செய்யுள் 25-30 வரிகள்) என்ற தொடரால் அவ்வறுபத்து நான்கு திருவிளையாடல்களையுந் தொகுத்துக் கூறிய கல்லாட நூலானது திருஞானசம்பந்தர் முதலிய தேவார ஆசிரியர் காலத்திற்கு மிகவும் பிற்பட்டதென்பது துணியப்படும். சுந்தரர்க்குத் தோழராகிய சேரமான் பெருமாள் நாயனார் நடராசப்பெருமானது திருச்சிலம்பொலி கேட்ட வரலாற்றையும் ஆலவாயிறைவர் பாணபத்திரர் பொருட்டு அவ்வேந்தர் பெருமானுக்குத் திருமுகப் பாசுரம் பாடிக் கொடுத்தருளிய செய்தியையும் கல்லாடத்தில் 13-ம் செய்யுளாக அமைந்த அகவல் விரித்துக் கூறுகின்றது. எனவே கல்லாடம் என்னும் இந்நூல் சுந்தர மூர்த்தி சுவாமிகள் காலத்திற்குப் பின் தோன்றிய தென்பது நன்கு தெளியப்படும். இந்நூல் சொல்நடையாலும் பொருளமைதி யாலும் கி.பி. பத்தாம் நூற்றாண்டளவில் இயற்றிப்பட்டதென்பது இதனை யுற்றுணர்வார்க்கு இனிது விளங்கும். ஆகவே இது கொண்டு மாணிக்கவாசகர் காலம் தேவார ஆசிரியர்களுக்கு முற்பட்டதெனத் துணிதல் ஏற்புடையதன்றாம்.

இனி, மாணிக்கவாசகர் புத்தரொடு வாது நிகழ்த்திய நிகழ்ச்சியைக் கூர்ந்து நோக்குங்கால் தமிழ் நாட்டில் புத்தசமயம் தலையெடுத்த காலமாகிய கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிற்கு முந்தியே திருவாதவூரடிகள் வாழ்ந்திருத்தல் வேண்டுமென்பர் மறைமலையடிகள்.

திருவாதவூரடிகளுடன் வாதஞ் செய்தவர்கள் தமிழ் நாட்டவர்களல்லரென்பதும் தமிழ் நாட்டில் சைவ சமயம் சிறப்புற்றிருந்த நிலையில் அச்சமயத்தின் கொள்கைகள் ஏற்புடையன அல்ல என வாதித்துத் தம் சமயத்தைப் பரப்புங் கருத்துடன் ஈழ நாட்டிலிருந்து வந்தவர்களென்பதும் வாத வூரடிகள் வரலாற்றில் நன்கு விளக்கப் பெற்றுள்ளன. எனவே

வாதவூரடிகள் காலத்தை நிச்சயித்தற்குப் புத்தரை வாதில் வென்ற இந்நிகழ்ச்சியை ஆதாரமாகக் கொள்ளுதல் பொருந்தாது.

இதுகாறும் ஆராய்ந்த குறிப்புக்களால் மாணிக்கவாசகர் தேவார ஆசிரியர் மூவர்க்கும் முற்பட்டவரென்பார் கூறுங் காரணங்கள் நடுநிலையாளர்களால் ஏற்கத்தக்கன அல்லவெனக் கண்டோம். இனி மாணிக்கவாசகர் தேவார ஆசிரியர் மூவர்க்கும் காலத்தாற் பிற்பட்டவரென்பதற்குரிய காரணங்களைக் காண்போம்.

(1) சைவ சமய குரவர் நால்வருள் மாணிக்கவாசக சுவாமிகளை நான்காமவராக வைத்துப் போற்றும் முறை உலக வழக்கும் செய்யுள் வழக்குமாகிய இருவகை வழக்கிலும் நிலைபெற்று வருகின்றது. அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் என உலக வழக்கில் வழங்கும் இம் முறைவைப்பு, சைவ சமய ஆசிரியராகிய அந்நால்வரும் ஒருவர் பின் ஒருவராக இவ்வுலகில் திருவவதாரஞ் செய்த கால அடைவினை யொட்டியது. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் என நூல்களில் வழங்கும் வைப்புமுறை. அவ்வரு ளாசிரியர் நால்வரும் ஒருவர் பின் ஒருவராகச் சிவபெருமான் திருவடி நீழலிற் கலந்து இன்புற்ற காலஅடைவினை யொட்டி யமைந்ததாகும். மேற்காட்டிய திருவவதார அடைவு, திருவடியடைவு என்னும் இரண்டனுள், திருவடியடைவு பெற்ற கால முறையினை யொட்டியே தேவாரத் திருப்பதிகங்கள் முதலேழு திருமுறைகளாகவும், திருவாசகம் திருச்சிற்றம்பலக் கோவையென்பன எட்டாந் திருமுறையாகவும் வகைப்படுத்தப் பெற்றன.

பட்டினத்தடிகள் பாடிய திருவிடைமருதூர் மும்மணிக் கோவையில்,

**"வித்தகப் பாடல் முத்திறத் தடியரும்**
**திருந்திய அன்பிற் பெருந்துறைப்பிள்ளையும்"**

எனச் சைவ சமய குரவர் நால்வரையும் முறையே குறிப்பிட்டுப் போற்றியுள்ளார். இவ்வாறே சைவ நூல்களெல்லாவற்றிலும் திருவாதவூரடிகளைச் சமய குரவருள் நாலாமவராக வைத்துப் போற்றும் முறையினைக் காணலாம். எனவே தேவார ஆசிரியர் மூவர்க்குப்பின் திருவாதவூரடிகளை நாலாமவராக வைத்துப் போற்றும் இம் முறைவைப்பு சமய குரவர் நால்வரும் வாழ்ந்த கால அடைவினை யொட்டி ஏற்பட்ட தென்பது நன்கு துணியப்படும் இதனால் தேவார ஆசிரியர்களாகிய மூவர் முதலிகள் காலத்திற்குப் பின்னும் பதினொராந் திருமுறை யாசிரியர்களுள் ஒருவராகிய பட்டினத்தடிகள் காலத்திற்கு முன்னும் அமைந்த

காலப் பகுதியே திருவாதவூரடிகள் வாழ்ந்த காலமென்பது தெளிவாகப் புலனாதல் காணலாம்.

(2) நம்பியாரூரர் தம் காலத்தில் வாழ்ந்த சிவனடியார்களையும் தமக்குக் காலத்தால் முற்பட்ட சிவனடியார்களையும் போற்றுங் கருத்துடன் திருத்தொண்டத் தொகைத் திருப்பதிகத்தைப் பாடியருளினாரென்பது வரலாறு. நம்பியாரூரராற் பெயர்கூறிப் போற்றப்பட்ட தனியடியார்களுள் திருவாதவூரடிகளது பெயர் குறிக்கப் பெறவில்லை. தமக்குத் தெரிந்த சிவனடியார்க ளெல்லோரையும் போற்றிப் பரவுதலையே நோக்கமாகக் கொண்டு திருத்தொண்டத் தொகைத் திருப் பதிகத்தை அருளிச் செய்தவர் நம்பியாரூரராவர். அறிவினாற் சிவனே யெனப் போற்றப்பெறுஞ் சிறப்பமைந்த மாணிக்கவாசக சுவாமிகள் ஆரூரர்க்குக் காலத்தால் முற்பட்டிருந்திருப்பின் அப்பெருந்தகையாரையும் அவர் தமது திருத்தொண்டத் தொகையில் பெயர்கூறிப் பாராட்டிப் போற்றியிருப்பார். அடியார்க்குத் தொண்டுபட்டு அவர்களது பெரும் புகழையே பேசும் விருப்புடைய சுந்தரமூர்த்தி சுவாமிகள் தமது திருத் தொண்டத் தொகையில் திருவாதவூரடிகளைக் குறிப்பிடா மையால் அவ்வடிகள் சுந்தரமூர்த்தி சுவாமிகள் காலத்திலே அன்றி அவர்காலத்திற்கு முன்னே வாழ்ந்தவரல்லரென்பதும் சுந்தரர்க்குக் காலத்தாற் பிற்பட்டவரென்பதும் நன்கு துணியப்படும்.

(3)தேவார ஆசிரியர் மூவர் காலம் வரையிலும் தில்லை நடராசப் பெருமான் திருக்கோயிலில் திருக்கோயிலில் கோவிந்தராசப் பெருமாள் சந்நிதி இருந்ததில்லை யென்பதும், இதனை முதன் முதல் அமைத்தவன் கி.பி.710 முதல் 775 வரை ஆட்சி புரிந்த பல்லவ வேந்தனாகிய நந்திவர்ம பல்லவ மன்னனே யென்பதும் ஆராய்ச்சியாளர் துணிபாகும். * (* திருவாளர் மு. இராகவையங்காரவர்களால் எழுதப்பட்ட 'திருச்சித்திரக்கூடம்' என்ற கட்டுரை பார்க்க. (The Annals of Oriental Research of the Madras University Vol. III (1938-39) Part I.)

**"பைம்பொன்னும் முத்தும் மணியுங் கொணர்த்து**
**படை மன்னவன் பல்லவர்கோன் பணிந்த**
**செம்பொன்மணி மாடங்கள்சூழ்ந்த தில்லைத்**
**திருச்சித்திரக் கூடம் சென்று சேர்மின்களே"**

**(பெரிய திருமொழி 3-2-3)**

எனத் தில்லைத் திருச் சித்திரக்கூடத்தைப்பற்றி நந்திவர்ம பல்லவ மல்லன் காலத்தவராகிய திருமங்கையாழ்வார் பாடிப்போற்றி யுள்ளார். இங்கு ஆழ்வாராற் பாராட்டப்பட்ட பல்லவ வேந்தனாகிய நந்திவர்ம பல்லவன் முதலில் சைவ வைணவ

சமயங்களிற் பொதுநோக்குடையவனாக இருந்து பின் பரம வைஷ்ணவனாக மாறியவ னென்பது, இவனளித்த காசாக்குடி, உதயேந்திரம், தண்டந் தோட்டம், பட்டத்தாள் மங்கலம் ஆகிய ஊர்களிற் கிடைத்த செப்பேடுகளால் நன்கு புலனாகின்றது. இங்ஙனம் இவன் பரம வைஷ்ணவனாக மாறியதற்கு இவனாட்சியின் பிற்பகுதியில் சிறந்த திருமாலடியாராகத் திகழ்ந்த திருமங்கையாழ்வாரது புலமைத்திறமே காரணமாதல் வேண்டும். இவ்வேந்தன் பரம வைஷ்ணவனாக மாறிய காலமாகிய இவனாட்சியின் பிற்பகுதியிலேயே தில்லை நடராசர் திருக்கோயிலின் முகப்பில் திருச்சித்திர கூடமென்ற பெயருடைய இப்பெருமாள் சந்நிதியை ஏற்படுத்தினானென்று தெரிகிறது. எனவே தில்லை நடராசர் கோயிலிற் கோவிந்தராசப் பெருமாள் சந்நிதி யேற்பட்ட காலம் கி.பி.எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியே யெனத் திட்டமாகக் கூறலாம். இவ்வாறு கி.பி.எட்டாம் நூற்றாண்டின் இறுதியில் தில்லைக் கூத்தப் பெருமான் முன்றிலின் முகப்பே யமைக்கப்பட்ட இத்திருமால் சந்நிதியை

**"புரங்கடந்தானடி காண்பான் புவிவிண்டு புக்கறியா**
**திரங்கிடெந் தாயென் றிரப்பத்தன் னீரடிக் கொன்னிரண்டு**
**கரங்கள்தந்தானொன்று காட்டமற் றாங்கதுங்காட்டிடென்று**
**வரங்கிடந் தான்தில்லை யம்பல முன்றிலம் மாயவனே"**

**(திருக்கோவை - 86)**

எனவரும் திருச்சிற்றம்பலக் கோவைச் செய்யுள் திருவாதவூரடிகள் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். ஆகவே அவ்வடிகள் வாழ்ந்த காலம் இரண்டாம் நந்திவர்ம பல்லவன் காலமாகிய கி.பி.எட்டாம் நூற்றாண்டிற்கு முன்னாகாதென்பது நன்கு தெளியப்படும்.

(4) திருவாதவூரடிகள் தில்லையம்பலவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடிய திருச்சிற்றம்பலக் கோவையாரில் தம் காலத்தில் விளங்கிய வேந்தர் பெருமானாகிய பாண்டிய னுடைய வெற்றித் திறத்தையும் சிவபத்தி மாண்பினையும் குறித்துப் போற்றியுள்ளார்.

**"மன்னவன் தெம்முனை மேற்செல்லுமாயினும் மாலரியே**
**றன்னவன் தேர்புறத் தல்கல்செல் லாது வரகுணனாந்**
**தென்னவ னேத்துசிற் றம்பலத் தான்மற்றைத் தேவர்க்கெல்லாம்**
**முன்னவன் மூவலன்னாளுமற் றோர்தெய்வ முன்னலளே"**

**(திருக்கோவை 306)**

**"புயலோங் கலர்சடை யேற்றவன் சிற்றம்பல புகழும்**
**மயலோங் கிருங்களி யானை வரகுணன் வெற்பின்வைத்த**

**கய்லோங் கிருஞ்சிலை கொண்டுமன் கோபமுங் காட்டிவருஞ்**
**செயலோங் கெயிலெரித் தெய்தபி னின்றோர் திருமுகமே"**
**(திருக்கோவை 327)**

*எனவரும் திருச்சிற்றம்பலக்கோவைச் செய்யுட்களில் 'வரகுண னாம் தென்னவன் ஏத்து சிற்றம்பலத்தான்' எனவும் 'சிற்றம்பலம் புகழும் மயலோங்கு இருங்களியானை வரகுணன்' எனவும் மணிவாசகப் பெருமான் தம் காலத்தில் வாழ்ந்த பாண்டியனை உளமாரப் பாராட்டிப் போற்றியுள்ளமை காணலாம். இங்ஙனம் திருவாதவூரடிகளாற் போற்றப்பெற்ற பாண்டியமன்னன், வரகுணன் என்ற இயற்பெயருடையவனென்பதும், தில்லைச் சிற்றம்பலப் பெருமானை இடைவிடாது ஏத்திப் புகழும் பெருவிருப்புடைய சிவநெறிச் செல்வனென்பதும் மேற்காட்டிய திருப்பாடல் தொடர்களால் நன்கு புலப்படுகின்றன. சிவபத்திச் செல்வம் வாய்ந்த இத்தென்னவர் பெருமானை,*

**"வெள்ளை நீறு மெற்யிற் கண்டு**
**கள்ளன் கையிற் கட்டவிழ்ப் பித்தும்**
**ஓடும் பல்நரி யூளைகேட் டரனைப்**
**பாடின வென்று படாம்பல அளித்தும்**
**குவளைப் புனலில் தளைவ அரற்ற**
**ஈசன் றன்னை யேத்தின வென்று**
**காசும் பொன்னுங் கலந்து தூவியும்**
**வழிபடு மொருவன் மஞ்சனத் தியற்றிய**
**செழுவிதை யெள்ளைத் தின்னக் கண்டு**
**பிடித்தலும் அவன்இப் பிறப்புக் கென்ன**
**இடித்துக் கொண்டவ னெச்சிலை நுகர்ந்தும்**
**மருதவட்டத் தொருதனிக் கிடந்த**
**தலையைக் கண்டு தலையுற வணங்கி**
**உம்மைப் போல எம்மித் தலையும்**
**கிடக்க வேண்டு மென் றடுத்தடுத் திரந்தும்**
**கோயில் முற்றத்து மீமிசைக் கிடப்ப**
**வாய்ந்த தென்று நாய்க்கட்ட மெடுத்தும்**
**காம்பவிழ்ந் துதிர்ந்த கனியுருக் கண்டு**
**வேம்புகட் கெல்லாம் விதானம் அமைத்தும்**
**விரும்பின கொடுக்கை பரம்பரற் கென்று**
**புரிகுழற் றேவியைப் பரிவுடன் கொடுத்த**
**பெரிய அன்பின் வரகுண தேவர்"*** *(* பதினொராந்திருமுறை - திருவிடைமருதூர் மும்மணிக் கோவை 28ஆம் செய்யுள்.)*

*எனப் பட்டினத்தடிகள் வியந்து பாராட்டியுள்ளார். இதன் கண் வரகுணபாண்டியன் செய்தனவாகப் பட்டினத்தடிகள் கூறிய செய்திகளைப் பெரும்பற்றப் புலியூர் நம்பி தாம் பாடிய*

திருவிளையாடற் புராணத்தில் வரகுணனுக்குச் சிவலோகங் காட்டிய திருவிளையாடலிற் குறிப்பிட்டுள்ளார்.

இவ்வரகுண பாண்டியன், உடல் முழுதும் திருநீறணிந்து பகைவருடன் போர் செய்து நின்ற காலத்து இவன் மேல் பகைவர் குறிபார்த்து எய்த அம்பு, இவனது திருநீறு பூசிய மேனியிற் படாது ஆற்றல் குன்றி இவனது பாதத்தில் வந்து வீழ்ந்ததென்றும் அதனைக் கண்டு வியந்த இவ்வேந்தன், திருநீறணியும் தகுதிபெறாத எனது பாதத்தில் அம்பு தைத்தது பொருத்தமுடையதே' என்று சொல்லித் தான் அணிந்த சிவசாதனமாகிய திருநீற்றின் பெருமையை எல்லோர்க்கும் விளங்க எடுத்துரைத்தானென்றும் தெரிகிறது. இச்செய்தியினை,

**"பொடியேர் தருமேனியனாகிப் பூசல் புகவடிக்கே**
**கடிசேர் கணை குளிப்பக்கண்டு கோயிற் கருவியில்லா**
**அடியேபட வமையுங்கணை யென்ற வரகுணன்றன்**
**முடியேதருகழல் அம்பலத் தாடிதன் மொய்கழலே" ***

*(* கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம் 62-ஆம் செய்யுள். இப்பாடலில் கோயிற்கருவி யென்றது சிவசாதனமாகிய திரு நீற்றையெனக் கொள்க.*

எனவரும் பாடலால் நம்பியாண்டார் நம்பி வியந்து போற்றியுள்ளார்.

பாண்டியர் குடியில் வரகுணன் என்ற பெயருடைய வேந்தர் இருவர் இருந்தனரென்பது கல்வெட்டுக்களாலும் செப்பேடு களாலும் இனிது புலனாகின்றது. அவ்விருவருள் முன்னோ னாகிய வரகுணன் என்பான் கி.பி 792 முதல் 835 வரை ஆட்சிபுரிந்தவன். இரண்டாமவன் இம்முதல் வரகுணனது பேரனாவன். கி.பி 862 முதல் 880 வரை பாண்டி நாட்டை ஆண்டவன் இரண்டாம் வரகுணனாவன். இவ்விருவருள் மாணிக்கவாசகராலும் பதினொராந்திருமுறை யாசிரியர்களாகிய பட்டினத்தடிகள் நம்பியாண்டார் நம்பி என்பவர்களாலும் போற்றப்பெற்ற சிவபத்திச் செல்வம் வாய்ந்த வரகுணன் யாவன் என்பதே இங்கு ஆராயத்தக்க செய்தியாகும்.

இரண்டாம் இராசசிம்ம பாண்டியனுடைய மகனாகிச் சடையவர்மன் என்ற பட்டம் புனைந்து ஆண்ட முதல் வரகுண வர்மனே திருச்சிற்றம்பலக் கோவையிலும் பதினொராந் திருமுறை யிலும் சிறப்பிக்கப்பட்ட சிவபத்திச் செல்வம் வாய்ந்த வரகுண பாண்டியனாவ னென்பது திருவாளர் சதாசிவ பண்டாரத்தா ரவர்கள் துணிபாகும். இக்கொள்கையை வலியுறுத்தற்கேற்ற சான்றுகள் பல இவர்களால் தெளிவாக எடுத்துக்காட்டப் பட்டுள்ளன.* (* *பாண்டியர் வரலாறு* (இரண்டாம் பதிப்பு) பக்கம் 58-

63.) முதல் வரகுணனாகிய இவ்வேந்தனைக் "கொற்றவர்கள் தொழுகழற்காற் கோவரகுண மகாராசன்" எனச் சினனமனூர்ச் செப்பேடுகள் புகழ்ந்து கூறுகின்றன. இவனது ஆட்சியின் நாலாமாண்டுக் கல்வெட்டுக்கள் சோழ நாட்டில் திருவியலூர் திருநெய்த்தானம் என்ற ஊர்களிலும், ஆறு, எட்டு, பத்தாம் ஆண்டுக் கல்வெட்டுக்கள் முறையே ஆடுதுறை, கும்பகோணம், செந்தலை ஆகிய ஊர்களிலும் பதினொராம் ஆண்டுக் கல்வெட்டுக்கள் திருச்சிராப்பள்ளி, திருக்கோடிகா என்ற ஊர்களிலும் ஆண்டழிந்து போன கல்வெட்டொன்று திருச்சோற்றுத்துறையிலும் இருத்தலால் சோழ மண்டலம் முழுவதும் முதல் வரகுணனது ஆட்சிக் குட்பட்டிருந்ததென்பது நன்கு தெளியப்படும்.

கி.பி.795 முதல் 846 வரையில் அரசுபுரிந்த தந்திவர்ம பல்லவனுடைய கல்வெட்டுக்கள் சோழ நாட்டிற் காணப்பட வில்லை. முதல் வரகுண பாண்டியனுடைய கல்வெட்டுக்கள் சோழ நாட்டிற் காணப்படுகின்றன. இவற்றைக் கூர்ந்து நோக்குங்கால் தந்திவர்ம பல்லவனது ஆட்சிக்காலத்தில்தான் இவ்வரகுண பாண்டியன் சோழ நாட்டின் மேற் படையெடுத்துச் சென்று அதனைக் கைப்பற்றியிருத்தல் வேண்டுமென்பது நன்கு புலனாகும். இவ்வேந்தன் சோழநாட்டிலுள்ள வேம்பில்* (*வம்பில் என்ற ஊர் இப்பொழுது திருவிடை மருதூரையடுத்துள்ள வேம்பத் தூரெனக் கருதப்படுகின்றது.) என்னும் ஊரின் மதிலையழித்து நியமம் என்ற ஊரில் தங்கியிருந்தபொழுது திருச்சிராப் பள்ளியிறைவற்குத் திருவிளக்கெரிக்க 25 கழஞ்சு பொன் நிபந்த மளித்துள்ளான். * (*Annual Report on Archaeological survey of India for 1993 - 04 Page 275.) இம்மன்னன் தொண்டை மண்டலத்தில் பெண்ணை யாற்றங்கரையிலுள்ள அரசூரில் தங்கியிருந்த பொழுது அம்பாசமுத்திரத் திருக் கோயிலுக்கு நாள் வழிபாட்டிற்கென 290 பொற்காசுகள் நிபந்தமளித்துள்ளான். திருவிடைமருதினை யடுத்துக் காவிரிக்கு வடகரையிலமைந்த இடவையென்பது இவ்வேந்தன் காலத்தில் பாண்டியர் தங்கி ஆட்சிபுரிதற்குரிய அரணுடைய ஊரா யிற்றென எண்ண வேண்டியுளது. இவ்வூரில் தங்கியிருந்த காலத்தில்தான் இவன் திருவிடைமருதீசர்பால் அளவிலாப் பேரன்பு வைத்து ஒழுகியிருத்தல் வேண்டும்.

பல்லவர் ஆட்சியைச் சோழ நாட்டிலிருந்து விலக்கிய பெருவீரனாகிய இவ்வேந்தன், சோழநாட்டின் சிறப்புடைச் சிவதலமாகிய தில்லைப்பதியில் எழுந்தருளிய கூத்தப் பெருமானைப் போற்றிப் பரவுதலைத் தனக்குரிய நீங்காக் கடமையாகக் கொண்டிருந்தானென்பது திருச்சிற்றம்பலக் கோவையில் குறிப்பிடப்பட்டது. "வரகுணனாம் தென்னவன்

ஏத்து சிற்றம்பலத்தான்" எனத் திருவாதவூரடிகள் நிகழ்காலத்து வைத்து இவ்வேந்தனைச் சிறப்பித்தலால் திருவாதவூரடிகள் திருச்சிற்றம்பலக்கோவை பாடியது இவ்வேந்தன் காலத்திலென்று தெரிகிறது. அன்றியும் இவனாற் போற்றி வழிபடப்பெற்ற இடைமருதினையும் அதன் மருங்கே இவனுக்குரியதாய் விளக்கிய இடவையென்னும் நகரில் வாழ்ந்த மடநல்லாள் ஒருத்திக்கு இறைவன் அருள் செய்த திறத்தையும்* (*இடைமருதீசன் அருள் பெற்ற இடவை மடநல்லாள் எனத் திருவாதவூரடிகள் குறித்துப் போற்றிய அம்மையார் பட்டினத்தடிகள் கூறிய பெரிய அன்பின் வரகுண தேவரது புரிகுழற்றேவியாகவும் இருத்தல் கூடுமென்று எண்ண இடமுண்டு. இச்செய்தி அறிஞரது ஆராய்ச்சிக்குரியதாகும்.) திருவாசகத்துள் அடிகள் குறித்துப் போற்றுதலும் இதனை வலியுறுத்தும்.

திருச்சிற்றம்பலக்கோவையாரிற் குறிக்கப்பட்ட வரகுண பாண்டியன் தமிழ் நாட்டில் கல்வெட்டுக்கள் உண்டாவதற்கு முன் அதாவது கி.பி 4ஆம் நூற்றாண்டுக்குமுன் இருந்தவன் என்பர் மறைமலையடிகள். கி.பி.நான்காம் நூற்றாண்டிற்கு முன்னிருந்த தமிழ் வேந்தரெல்லோரும் தனித் தமிழ்ப் பெயரால் வழங்கப் பெற்றுள்ளார்கள். அவர்களுள் எவரும் வடமொழிப் பெயர்களைத் தமக்குரிய பெயர்களாகப் புனைந்து கொண்டதில்லை. வரகுணன் என்ற பெயர் தமிழும் வடமொழியும் கலப்புற்ற காலத்தில் தோன்றிய பெயர். ஆகவே இப்பெயராற் குறிக்கப்படும் இப்பாண்டியனைப் பாண்டி நாட்டிற் களப்பிரர் ஆட்சிக்குப் பின் தோன்றிய பாண்டியர்களுள் ஒருவனாகவே கொள்ளுதல் வேண்டும்.

இனி மணிவாசகராற் போற்றப் பெற்ற இவ்வரகுண பாண்டியனைக் கி.பி.880-ம் ஆண்டில் திருப்புறம்பயப் போரில் தோற்ற இரண்டாம் வரகுண பாண்டியனெனக் கொள்வர் தஞ்சைச் சீநிவாச பிள்ளை முதலியோர்* (*தமிழ் வரலாறு பிற்பாகம் (நான்காம் பதிப்பு) பக்கம் 128-131.) வரகுணனது சிவபத்தி மாண்பினால் விளைந்த வெற்றித் திறத்தை நம்பியாண்டார் நம்பி தாம் பாடிய கோயிற்றிருப்பண்ணியர் விருத்தத்தில் இனிது விளக்குதலானும் தில்லையம்பலவாணனை இடைவிடாது போற்றும் இயல்புடையவனாகத் தம் காலத்து விளக்கிய தென்னவர் பெருமான் வரகுண பாண்டியன் என்பதனைத் திருவாதவூரர் தெளிவாகக் கூறுதலானும், பட்டினத்தடிகள் வாய்மொழியானும் பெரிய அன்பின் வரகுணதேவராகிய இவ்வேந்தர் பெருந்தகை நெடுங்காலம் சோழ நாட்டில் தங்கயிருந்த பெருவீரரென்பது தமிழ் வரலாறுடையார் கருதுமாறு திருப்புறம்பயப் போரில் தோற்றோடியவரல்லரென்பதும் நன்கு புலனாகும். ஆதலால் 'கொற்றவர்கள்

தொழுகழற்காற் கோ வரகுண மகாராசன்' எனப் பாராட்டப் பெற்ற முதல்வரகுண வர்மனே மாணிக்கவாசகர் காலத்து ஆட்சி புரிந்த பாண்டியன் எனக்கொள்ளுதல் வேண்டும். இம்முடிபினை வலியுறுத்தவதாக அமைந்த மற்றொரு செய்தியும் இங்கே குறிப்பிடத் தக்கதாகும். தமிழ்நாட்டிலிருந்து சைவாசாரிய ரொருவர் ஈழநாட்டிற்குச் சென்று அங்குள்ள பௌத்த மன்னனைச் சைவ சமயத்திற்குத் திருப்பினர் என ராஜரத்நாகரி யென்ற நூல் கூறுகிறதென்றும், அந்நூலிற் குறித்த காலம் கி.பி.819-ம் ஆண்டினை யொட்டியதென்றும் நெல்சன் என்பார் மதுரைச் சரித்திரத்தில் குறிப்பிட்டுள்ளார். மணிவாசகப் பெருமான் வாழ்ந்த காலத்தில் சிவனடியாரொருவர் ஈழநாட்டிற்குச் சென்று 'பொன்னம்பலம்' என்ற திருப்பெயரைச் சொல்லி யிரந்துண்டு வந்தாரென்றும், அவரது செய்கையைக் கண்டு பொறாத இலங்கைப்புத்தர்கள் தமது மன்னனிடம் தெரிவிக்க மன்னன் அவ்வடியாரை யழைத்துப் 'பொன்னம் பலம்' என்றதன் வரலாற்றைக் கேட்டறிந்து தனது குருவுடனும் தான் பெற்ற ஊமைப் பெண்ணோடும், தில்லைப் பொன்னம் பலத்தை யடைந்து அங்குப் புத்தமதத்தை நிலைநாட்டுங் கருத்துடன் புறப்பட்டுத் தில்லையை யடைந்தனனென்றும் தில்லைப் பதியில் தங்கியிருந்த மணிவாசகப் பெருமான் புத்த குருவை வாதில் வென்று ஊமைப் பெண்ணையும் பேசவைத்து இலங்கை மன்னனைச் சைவனாக்கினாரென்றும் திருவாதவூரடிகள் புராணம் கூறுகின்றது.* (*திருவாதவூரடிகள் புராணம், புத்தரை வாதில் வென்ற சருக்கம்.) இந்நிகழ்ச்சி மேற்காட்டிய ராஜரத்நாகரி யென்ற இலங்கைச் சரித நூல் கூறும் செய்தியுடன் ஒத்துக் காணப்படுதலால் அந்நூலிற் கூறப்படும் சைவாசாரியாரென்பவர் மணிவாசகப் பெருமானை வழிபட்ட அடியார் குழுவினைச் சார்ந்தவரென்பதும் இந்நிகழ்ச்சி நிகழ்ந்ததாக ராஜ ரத்நாகரியென்ற நூல் குறிப்பிடும் காலப் பகுதியாகிய கி.பி.819-ஆம் ஆண்டு முதல் வரகுண பாண்டியனது ஆட்சிக்காலத்துள் அடங்கியதாதலின் மணிவாசகர் காலத்து ஆட்சிபுரிந்த பாண்டியன் முதல் வரகுண பாண்டியனே யென்பதும் நன்கு தெளியப்படுமென்க.

(5) தேவார ஆசிரியர்கள் தம் காலத்து வழங்கிய அறுவகைச் சமயங்களையும் சைவ சமயத்தின் உட்பிரிவுகளாகிய அகச்சமயங் களையும் தம் பாடலிற் குறிப்பிட்டுள்ளார்கள். அவர்கள் காலத்தில் ஏகான்மவாதமென்னும் மாயாவாத மதம் தமிழ் நாட்டில் தோன்றி வழங்கியதில்லை. சேர நாட்டிற் பிறந்த சங்கராச்சாரிய சுவாமிகள் தாம் ஏகான்ம வாதத்தைத் தென் னாட்டிலும் வடநாட்டிலும் சிறப்பாக நிலைபெறச் செய்தவ ரென்பது பலரும் அறிந்த செய்தியாகும். திருவாதவூரடிகள் தம்

காலத்தில் மாயாவாதமென்னும் மதம் நாடு முழுவதும் சண்டமாருதம் போல் விரைவிற் பரவி மக்கள் உள்ளத்தைக் கலக்கிய திறத்தை,

**'மிண்டிய மாயாவாத மென்னும்**
**சண்டமாருதம் சுழித்தடித் தார்த்து'**

என்ற தொடரால் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். எனவே அடிகள் வாழ்ந்த காலம் ஆதிசங்கரர் வாழ்ந்த காலத்தை யொட்டியதென்பது பெறப்படும். சங்கரர் தாம் பாடிய சௌந்தரியலகரி என்ற நூலில் கவுணிய கோத்திரத்தவராகிய ஞானசம்பந்தப் பிள்ளையார்க்கு உமையம்மையார் ஞானப் பாலளித்த வரலாற்றைக் குறித்துப் பாராட்டியுள்ளார். ஆகவே அவர் வாழ்ந்த காலம் திருஞானசம்பந்தப் பிள்ளையார் வாழ்ந்த காலமாகிய கி.பி. ஏழாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டதென்று உறுதியாகக் கொள்ளலாம். சங்கரரது கொள்கையாகிய மாயாவாதத்தைக் குறிப்பிட்ட மணிவாசகரது காலம் தேவார ஆசிரியர்க்குப் பிற்பட்ட தென்பது சொல்லாமலே விளங்கும்.

(6) மாணிக்கவாசகப் பெருமான் தேவார ஆசிரியர்களாற் பாடிப் போற்றப்பெற்ற சிவ தலங்கள் சிலவற்றைத் தமது பாடல்களிற் குறிப்பிட்டதுடன் அவ்வாசிரியர்களாற் குறிக்கப் படாத புதிய திருக்கோயில்கள் சிலவற்றையும் குறிப்பிட் டுள்ளார். சிராப்பள்ளியென்ற திருத்தலம் திருநாவுக்கரசர் காலத்திற்கு முன் சமணப்பள்ளியாயிருந்து பின் அவராற் சைவனாக மாறிய மகேந்திர பல்லவனால் சிவன் கோயிலாக மாற்றப்பெற்ற தென்பது ஆராய்ச்சியாளர் துணிபாகும்.* (*திருவாளர் தி.வை. சதாசிவ பண்டாரத்தாரவர்கள் எழுதிய 'திருச்சிராப்பள்ளி' யென்ற கட்டுரை செந்தமிழ் 45-ஆம் தொகுதி (பக்கம் 77-82) நோக்குக.) "சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி" எனத் திருவாதவூரடிகள் அத்திருப்பதியில் எழுந்தருளிய இறைவனைப் போற்றுதலால் சிராப்பள்ளியைச் சிவன்கோயிலாக மாற்றிய மகேந்திர வர்மனுக்கும் அவனால் வழிபடப்பெற்ற பெருந்தகையாராகிய திருநாவுக்கரசர்க்கும் காலத்தாற் பிற்பட்டவர் மணிவாசக ரென்பது நன்கு தெளியப்படும்.

(7) "கலையார் அரிகேசரியாய் போற்றி" என வரும் போற்றித் திருவகவலில் கலையுணர்வு நிரம்பிய அரிகேசரி மன்னன் பெயரால் அமைக்கப்பட்ட ஊரிலே இறைவன் திருக்கோயில் கொண்டெழுந்தருளிய திறத்தை மணிவாசகர் குறித்துப் போற்றியுள்ளார். அரிகேசரி யென்ற பெயருடைய பாண்டியன் திருஞானசம்பந்தரால் வெப்பு நோய் தீர்த்து ஆட்கொள்ளப் பெற்ற நின்றசீர் நெடுமாறனாவன். இவனது பெயராலமைக்கப் பட்ட ஊர் பாண்டி நாட்டிலுள்ள அரிகேசரி நல்லூர்

என்பதாகும். இதனை இக்காலத்தார் சின்னமனூர் என வழங்குவர்.* (* தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி III பகுதி III 109ஆம் கல்வெட்டு, பார்க்க. தொகுதி IVஇல் வெளிவந்த சின்னமனூர்ப் பட்டயத்தில் 'அள நாட்டு பிரமதேயம் அரிகேசரி நல்லூர்' என வரும் தொடரும் இதனை உறுதிப்படுத்துகின்றது.) அரிகேசரியென்ற சிறப்புப் பெயருடைய நின்றசீர் நெடுமாறன் பெயராலமைந்த திருத்தலத்தைத் திருவாதவூரடிகள் குறிப்பிடுதலால் மாறவர்மன் அரிகேசரியாகிய நின்ற சீர் நெடுமாறனுக்கும் அவனை நல்வழிப்படுத்திய திரு ஞானசம்பந்தப் பிள்ளையார்க்கும் காலத்தாற் பிற்பட்டவர் மாணிக்கவாசகர் என்பது ஒரு தலை.

தேவாரத் திருமுறைகளில் வழங்கப்பெறாத அஞ்ஞானம், இருதயம், இந்தீவரம், சந்தீவரம், சிந்தாகுலம், சூக்கம், தூலம், தோயம், துவந்துவம், நந்தீவரம், பயங்கரம், பயோதரம் முதலிய வடமொழிச் சொற்களும், அச்சன், அச்சோ, அந்தோ, அதெந்துவே என்பன போன்ற திசைச் சொற்களும், குது குதுப்பு, விது விதுப்பு, கூவித்து, வேசறுவேன், சட்டோ, தகப்பன், துரை, எத்தன் என்பன போன்ற பிற்காலச் சொற்களும் திருவாதவூரடிகள் திருப்பாடல்களிற் காணப் படுகின்றன.

கோகழி, கல்லாடம், வேலம்புத்தூர், சாந்தம் புத்தூர், உத்தரகோசமங்கை, பூவலம், பட்டமங்கை, அரிகேசரி, ஓரியூர், பாண்டூர், கவைத்தலை, குவைப்பதி முதலாகத் திருவாசகத்திற் குறிக்கப்படும் ஊர்களும் சில தலபுராண வரலாறுகளும் தேவாரத் திருமுறைகளிற் காணப்படவில்லை. தேவார காலத்திற் காணப்படாத தசாங்கம் முதலிய பிரபந்த வகைகளும் அவை பற்றித் தோன்றிய புதிய யாப்பு விகற்பங்களிற் சிலவும் திருவாசகத்தில் உள்ளன. திருவாசகத்திற் கூறப்பட்ட பஞ்சமலம், வினையொப்பு முதலிய தத்துவ விளக்கங்கள் சில தேவார ஆசிரியர் காலத்திற்குப் பின் தோன்றியவை யெனத் தெரிகிறது.

இதுகாறும் இங்கு எடுத்துக்காட்டிய ஏதுக்களால் மாணிக்கவாசக சுவாமிகள் தேவார ஆசிரியர்கள் மூவர்க்கும் காலத்தாற் பிற்பட்டவரென்னுங் கொள்கையே ஏற்றுக் கொள்ளத் தகுவதென்பதும், அடிகள் வாழ்ந்த காலம் கி.பி.792 முதல் 835 வரை ஆட்சி புரிந்த முதல் வரகுண பாண்டியனது ஆட்சிக்காலமே யென்பதும் தெளிவாகப் புலனாதல் காணலாம்.



# திருவாதவூரடிகள் அருளிய அருள் நூல்கள்

திருவாதவூரடிகளால் திருவாய் மலர்ந்தருளப் பெற்று அழகிய திருச்சிற்றம்பலமுடையானாகிய சிவபெருமானது திருக்கரத்தாற் செவ்விதின் எழுதிக் கொள்ளப் பெற்ற சிறப்புடையன திருவாசகமும் திருச்சிற்றம்பலக்கோவையும் என்பது முன்னர் விளக்கப்பெற்றது. மதுரையிற் குதிரைச் சேவகனாக எழுந்தருளிய சிவபெருமான் வழங்கிய பேரானந்தமாகிய திருவருளின்பத்தைத் தூய தாமரை மலர் போலும் தமது திருவாயிலிருந்து வெளிப்படும் அழகிய சொற்களால் திருவாசகப் பனுவலாக அருளிச் செய்து, வஞ்சனையைத் தரும் பிறவித் துன்பத்தை நாம் அறியா வண்ணம் நம்மனோர்க்கு நன்னெறி காட்டியருளிய பெருந்தகையார் திருவாதவூரடிகளாவர். இவ்வுண்மையை,

**'பாய்பரியோன் றந்த பரமானந் தப்பயனைத்**
**தூயதிரு வாய்மலராற் சொற்செய்து - மாயக்**
**கருவாதை யாமறியா, வாறுசெய்தான் கண்டாய்**
**திருவாத வூராளுந் தேன்'**

எனவரும் திருக்களிற்றுப்படியாரில் திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனார் விரித்துரைத்தமை காண்க.

மணிவாசகப்பெருமான் பாடிய திருப்பாடல்கள், திருவாசகம் எனவும் திருச்சிற்றம்பலக்கோவை எனவும் இருவேறு தலைப்பில் வைத்து எண்ணப்படினும் இவ்விரு நூல்களும் 'பேச்சிறந்த மாசில்மணியின் மணி வார்த்தை' யாகவே விளங்குதலால் திருவாசகம் என ஒரு பெயராலும் வழங்கப்பெற்று வந்துள்ளன. 'கோவைத் திருவாசகம்'* (* சிவப்பிரகாசம் - செய்யுள் - 1. மதுரைச் சிவப்பிரகாசர் உரை.) எனத் திருக்கோவையார்க்கு வழங்கும் பழம்பெயரால் இவ்வழக்கின் தொன்மை இனிது புலனாம். முத்தியாகிய பேரின்பத்தை அடைவதற்குரிய பத்தி நெறியின் இலக்கியமாக விளங்குவது திருவாசகம். உலகியல் வாழ்வுக்கு இன்றியமையாத அன்பினை விளைக்கும் அகனைந்திணை யொழுகலாற்றை விரித்துரைக்கு முகமாகப் பத்திநெறியின் பயனாகிய பேரின்ப வாழ்வின் அனுபவ நிலையை விளக்குவது திருச்சிற்றம்பலக்கோவை. எனவே திருவாசகமும் திருச்சிற்றம்பலக்கோவையும் பொருளால் ஒன்றேயென்பது நன்கு துணியப்படும். இவ்வருள் நூல்களிரண்டையும் 'எட்டாந்

திருமுறை' என ஒரே திருமுறையாக முன்னுள்ள சான்றோர் தொகுத்தமைத்திருத்தலை ஊன்றி நோக்குங்கால் திருவாசகமும் திருக்கோவையாரும் ஆசிரியர் ஒருவராலேயே அருளிச் செய்யப்பெற்றன என்னும் உண்மை நன்கு விளங்கும்.

திருவாசகத்தை அருளிய திருவாதவூரடிகளே திருச் சிற்றம்பலக்கோவையையும் பாடியருளினார் என்ற செய்தி,

**'வருவாசகத்தினின் முற்றுணர்ந் தோனைவண் தில்லைமன்னைத்**
**திருவாதவூர்ச்சிவ பாத்தியன் செய்திருச் சிற்றம்பலப்**
**பொருளார்தருதிருக் கோவைகண் டேயுமற் றப்பொருளைத்**
**தெருளாத வுள்ளத் தவர்கவிபாடிச் சிரிப்பிப்பரே'**

எனவரும் கோயிற்றிருப்பண்ணியர் விருத்தத்தில் தெளிவாகக் குறிக்கப்பெற்றுள்ளது. இதன்கண் 'வருவாசகம்' எனத் திருவாசகத்தையும் 'திருவாதவூர்ச் சிவபாத்தியன்' எனத் திருவாதவூரடிகளையும் நம்பியாண்டார் நம்பி குறித்துப் போற்றியுள்ளமை காணலாம். 'சிவபாத்தியன்' என்பதற்குச் (சிவனடி சென்னிவைத்தோன்) சிவனடித் தொடர்புடையோன் என்பது பொருள். சிவபெருமானே அருட்குரவனாக எழுந்தருளி வந்து மெய்ப்பொருளை உபதேசிக்கப்பெற்ற திருவாதவூரடிகள், தம்மை ஆட்கொண்டருளிய சிவபெருமான் திருவடிகளைச் சென்னியிற்கொண்டு இடைவிடாது போற்றுதலைத் தம் கடமையாக மேற்கொண்டொழுகினார் என்பது,

**'பத்தர்சூழப் பராபரன் பாரில்வந்து பார்ப்பானெனச்**
**சித்தர்சூழச் சிவபிரான் தில்லைமூதூர் நடஞ்செய்வான்**
**எத்தனாகிவந் தில்புகுந்தெமை யாளுங்கொண்டெம்**
**பணிகொள்வான்**
**வைத்தமா மலர்ச் சேவடிக்கணஞ் சென்னிமன்னி மலருமே'**

என வரும் அடிகளது வாய்மொழியால் நன்கு புலனாதலின் அடிகளைத் 'திருவாதவூர்ச் சிவபாத்தியன்' என நம்பியாண்டார் நம்பி குறித்துப் போற்றியது மிகவும் பொருத்த முடையதேயாம். திருவாதவூரடிகளே திருச்சிற்றம்பலக்கோவையையும் பாடியருளினார் என்ற செய்தியை,

**'உத்தர கோச மங்கை கழுக்குன்றாங் குருவங்கண்டு**
**சித்திரக் கோவை பாடித் தில்லையம்பலத்து வாவென்**
**றத்தன் வானத்துரைப்பப் போந்தருந் தமிழ்கள் பாடிப்**
**புத்தன் வாதையும் வென்றியாரும் போற்றுபொற் பதமடைந்தார்'**

என்ற பாடலில் பெரும்பற்றப் புலியூர் நம்பி தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். இச்செய்தியைப் பின் வந்த கடவுள் மாமுனிவர் திருவாதவூரடிகள் புராணத்து விரித்துக் கூறினமை முன்னர் விளக்கப்பெற்றது.

# 1. திருவாசகம்

திருவாசகம் என்ற பெயர், திருவுடைய சொற்களால் ஆகிய அருள்நூல் எனப் பொருள் தருவதாகும் இதன்கண் அடைமொழியாய் நின்ற 'திரு' என்னுஞ் சொல், செல்வக் களிப்பால் மையலுறுதலும் அல்லல் மிகுதியாற் சோர்வடைதலும் இன்றி, எக்காலத்தும் ஒரு தன்மையராய் வாழ்தற்குரிய உள்ளத்தின் நிறைவாகிய பேரழகினைக் குறிப்பதாகும். வாசகம்-சொல். திருத்தகவிற்றாகிய மனச் செம்மையினை வழங்கும் ஆற்றல் நிறைந்த சொற்களால் இயன்றமையின் இந்நூல் திருவாசகம் என்னும் பெயர்த்தாயிற்று. திருவாதவூரடிகளது திருவாய் மலரில் தோன்றிய திருவாசகமென்னும் இத்தேனானது, நெடுங்காலமாக உயிர்களைச் சூழ்ந்து பிணித்துள்ள பிறவியாகிய வலிய கட்டினை நீக்கித் துன்பத்திற்கேதுவாகிய அறியாமையை அகற்றிப் பேரின்பத்தைத் தரும் இயல்புடையதாகும். இவ்வியல்பினைத் திருவாசகத்தைப் பலகாலும் ஓதியுணர்ந்த பண்டைச் சான்றேரொருவர்.

**'தொல்லை யிரும்பிறவிச் சூழந் தளை நீக்கி**
**அல்லலறுத் தானந்த மாக்கியதே - எல்லை**
**மருவா நெறியளிக்கும் வாதவூர் எங்கோன்**
**திருவா சகமென்னுந் தேன்'**

என்ற பாடலில் இனிது விளக்கியுள்ளார். இறவாத இன்ப அன்பின் பயனாக விளங்கும் இத்திருவாசகச் செழும் பாடல்களை ஓதுந்தோறும் கேட்குந்தோறும் நினைக்குந்தோறும் நெஞ்சம் நெகிழ்துருகக் கண்ணீர் பெருக நாவுரை குழற மெய்ம்மயிர் சிலிர்ப்பப் பேரின்ப வெள்ளம் கிளர்ந்தெழுதல் யாவரிடத்துங் காணப்படும் இயற்கை நிகழ்ச்சியாகும். இங்ஙனம் அன்பினால் ஓதுவார் கேட்பார் ஆகிய எல்லோருடைய உள்ளத்தையும் உருக்கவல்ல பேராற்றல் திருவாசகமாகிய அருள் நூலுக்கே உரிய தனிச் சிறப்பென்பது, தமிழ் நாட்டவரல்லாத வெளி நாட்டறிஞர்களாலும் ஒப்புக்கொள்ளப்பெற்ற உண்மையாகும்.

'திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்தும் உருகார்' என நம் தமிழகத்தில் நெடுங்காலமாக வழங்கி வரும் பழமொழியும்,

**'திருவாசகம் இங்கு ஒருகால் ஓதிற்**
**கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள்**
**தொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய**
**மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி**
**அன்ப ராகுநர் அன்றி**
**மன்பதை யுலகில் மற்றையர் இலரே'**

என வரும் சிவப்பிரகாச சுவாமிகள் வாய்மொழியும்

**'வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை**
**நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே**
**தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவை கலந்தென்**
**ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே'**

என வரும் இராமலிங்க அடிகளார் அனுபவ மொழியும் கற்பார் உள்ளத்தை உருகச்செய்து பேரின்ப வெள்ளத்தில் திளைத் தின்புறச் செய்யும் திருவாசகத்தின் சிறப்பினை நன்கு விளக்குவனவாகும்.

திருவாசகம், சிவபுராணம் முதல் அச்சோப்பதிகம் ஈறாக ஐம்பத்தொரு பகுதிகளாக முறைப்படுத்தப் பெற்று வழங்கி வருகின்றது. இம் முறைவைப்பு திருவாதவூரடிகள் பாடி அருளிய கால அடைவினைப் பற்றியதோ, அன்றி அவர்தம் திருப்பாடல் களால் உணர்த்தப்படும் பொருளடைவினைப் பற்றியதோ என்பது திட்டமாகத் தெரியவில்லை. திருவாசகப் பதிகங்கள் பாடப்பெற்ற சந்தர்ப்பங்களைக் குறித்துப் பெரும்பற்றப் புலியூர் நம்பியும் கடவுள் மாமுனிவரும் கூறும் குறிப்புக்கள் வேறுபட அமைந்துள்ளன.

திருவாசகத்தில் சென்னிப்பத்து, அச்சோப்பத்து, அதிசயப்பத்து, கோயிற்றிருப்பதிகம் (மாறி நின்றென்னை), புணர்ச்சிப்பத்து, செத்திலாப்பத்து, பிரார்த்தனைப்பத்து, ஆசைப்பத்து, உயிருண்ணிப்பத்து, திருப்புலம்பல், வாழாப்பத்து, எண்ணப்பத்து, திருவம்மானை, திருப்பொற் சுண்ணம், திருக்கோத்தும்பி, திருத்தெள்ளேணம், திருப்பூவல்லி, திருவுந்தியார், திருத்தோணோக்கம், திருவெம்பாவை, திருச்சதகம், திருப்பள்ளியெழுச்சி என்பன இம்முறையே திருப்பெருந் துறையிலும், குழைத்தபத்து, அருட்பத்து, அடைக்கலப்பத்து, குயிற்பத்து, அன்னைப்பத்து, பிடித்த பத்து, சிவபுராணம் என்பன மதுரையிலும், திருவாசகத்தின் ஏனைய பகுதிகளும் திருக்கோவை யாரும் மதுரையிலிருந்து புறப்பட்டு உத்தரகோச மங்கை முதலிய தலங்களை வணங்கிச் செல்லும் வழியிலும் தில்லைப்பதியிலும் பாடப்பெற்றன எனப் பெரும்பற்றப் புலியூர் நம்பி குறிப்பிட் டுள்ளார். எனவே திருவாசகப் பதிகங்களுள் முதன் முதற் பாடப் பெற்றது சென்னிப் பத்து என்பது அவர் கருத்தாதல் நன்கு பெறப்படும்

இனி, திருவாதவூரடிகள் முதன்முதற் பாடிய பனுவல் சிவபுராணம் என்பது கடவுள் மாமுனிவர் கருத்தாகும். திருவாதவூரடிகள் திருப்பெருந்துறையில் இருந்த காலத்து, சிவபுராணம், அற்புதப்பத்து, அதிசயப்பத்து, குழைத்தபத்து, சென்னிப்பத்து, ஆசைப்பத்து, வாழாப்பத்து, அடைக்கலப்பத்து,

செத்திலாப்பத்து, புணர்ச்சிப்பத்து, அருட்பத்து, திருவார்த்தை, எண்ணப்பத்து, திருவெண்பா, திருப்பள்ளியெழுச்சி, திருவேசறவு, ஆனந்தமாலை, உயிருண்ணிப் பத்து, பிரார்த்தனைப்பத்து, திருப்பாண்டி விருத்தம், திருச்சதகம் ஆகிய பனுவல்களை முறையே பாடியருளினார் எனவும், பின்னர்த் திருவுத்தரகோச மங்கையில் நீத்தல் விண்ணப்பத்தையும், திருவாரூரில் திருப்புலம்பலையும், திருப்புகலியில் பிடித்தபத்தினையும், திருவண்ணாமலையில் திருவெம்பாவை திருவம்மானை என்பவற்றையும், திருக்கழுக்குன்றில் திருக்கழுக்குன்றப் பதிகத்தையும் அருளிச் செய்தாரெனவும், தில்லையில் கண்டபத்து, குலாப்பத்து, கோயில் மூத்த திருப்பதிகம், கோயிற்றிருப்பதிகம், கீர்த்தித் திருவகவல், திருவண்டப்பகுதி, போற்றித் திருவகவல், திருப்பொற்சுண்ணம், திருத்தெள்ளேணம், திருவுந்தியார், திருத்தோணோக்கம், திருப்பூவல்லி, திருப்பொன்னூசல், அன்னைப்பத்து, திருக்கோத்தும்பி, குயிற்பத்து, திருத்தசாங்கம், அச்சப்பத்து, திருச்சாழல், திருப்படையாட்சி, திருப்படையெழுச்சி, அச்சோப்பத்து, யாத்திரைப்பத்து, திருச்சிற்றம்பலக் கோவை ஆகிய பனுவல்களை முறையே பாடியருளினார் எனவும் கடவுள் மாமுனிவர் கூறுவர். இங்ஙனம் கடவுள் மாமுனிவர் குறித்த திருவாசகப் பதிகத் தலைப்புகளில் 'பண்டாய நான்மறை' என்ற பகுதி விடுபட்டமைக்குரிய காரணம் விளங்கவில்லை.

இனி சிவபுராணம் முதலாக அச்சோப்பதிகம் ஈறாக இப்பொழுது வழங்கும் திருவாசகப் பதிகங்களின் முறைவைப்பு, மேற்குறித்தவண்ணம் பெரும்பற்றப் புலியூர் நம்பியும் கடவுள் மாமுனிவரும் கூறிய இரு வேறு முறைகளில் எதனுடனும் முழுதும் பொருந்திவரவில்லை. எனினும் இம்முறைவைப்பே நெடுங்காலமாக நிலைபெற்று வழங்கி வருகிறதெனத் தெரிகிறது. ஆகவே இம்முறைவைப்பு அடிகள் பாடிய கால அடைவினையொட்டி முறைப்படுத்தப்பட்ட தன்றென்றும் திருவாதவூரடிகள் சொல்ல அழகிய சிற்றம்பல முடையார் எழுதிக் கொண்ட முறையில் இயற்கையாக அமைந்ததே இம்முறைவைப்பு என்றும் கொள்ளுதல் ஏற்புடையதாகும்.

திருவாசகத்தில் சிவபுராணம் முதல் அச்சோப்பதிகம் ஈறாகவுள்ள தலைப்புக்கள் ஐம்பத்தொன்றும் அவ்வப்பதிகங்களில் உள்ள சொற்றொடரையும் பொருட்பகுதியையும் அடியொற்றி அமைந்தனவாகும். எனவே இத்தலைப்புக்கள் அடிகள் காலத்திலேயே அவ்வப்பதிகங்களுக்குரிய பெயர்களாக வழங்கப்பெற்றிருத்தல் கூடும் எனக் கருதுதல் பொருத்தமுடையதாகும். இனி சிவபுராணம் முதலிய இப்பதிகப் பெயர்களையடுத்து இவற்றின் விளக்கமாக 'சிவனது

அநாதிமுறைமையான பழமை' என்பது முதலிய கருத்துரைப் பகுதிகள் திருவாசக ஏட்டுச் சுவடிகளிலும் அச்சுப்புத்தகங்களிலும் குறிக்கப் பெற்றுள்ளன. ஆயின் இக்கருத்துரைப் பகுதிகள் திருவாசக ஏடுகளில் மிகவும் பழமையான ஏடுகளிற் காணப்பெற வில்லை. இத்தகைய கருத்துரைப்பகுதியும் பா, பாவினம்பற்றிய குறிப்பும் பிற்கால ஏடுகளிலும் அச்சுப் புத்தகங்களிலுமே காணப்படுகின்றன. இவற்றைக் கூர்ந்து நோக்குங்கால் பதிகத் தலைப்பினையடுத்துக் காணப்படும் கருத்துரைப் பகுதிகள் பிறகாலச் சான்றோரொருவரால் நன்காராய்ந்து குறிக்கப்பெற்றன எனக் கொள்ளுதல் ஏற்புடையதாகும். திருப்பெருந்துறைக்குரிய பழைய புராண மொன்றில் திருவாசகப் பதிகங்களின் கருத்தினை விளக்கும் திருவாசக உண்மை என்ற பகுதி இடம்பெற்றுளது. இதற்கும் திருவாசக அச்சுப் புத்தகங்களிற் காணப்படும் கருத்துரைப் பகுதிக்கும் ஓரளவு தொடர்புண்டு. திருவாசகப் பதிக அடைவு முறையினை அறிதற்கும் பதிகங்களின் பொருளமைதியைத் தேர்ந்து துணிதற்கும் இக்குறிப்புக்கள் பெரிதும் பயன்படுவனவாகும்.

## 1. சிவபுராணம்

திருவாசகத்தின் முதற்கண் உள்ள சிவபுராணம் கீர்த்தித்திருவகவல், திருவண்டப்பகுதி, போற்றித் திருவகவல் என்ற நான்கும், திருக்குறளின் முதற் கண்ணவாகிய கடவுள் வாழ்த்து, வான் சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் என்ற நான்கு அதிகாரங்களையும் போன்று தெய்வத் தமிழ்மறைக்குரிய பாயிரமாக அமைந்தன எனக்கொள்ளுதல் பொருந்தும். திருக்குறளில் முதற்கண் உள்ள கடவுள் வாழ்த்து என்ற அதிகாரத்தைப் போன்று திருவாசகத்தின் முதலில் அமைந்தது சிவபுராணமாகும். இஃது எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானது அநாதி முறைமையான பழமையினை விரித்துரைப்பதாகலின், சிவபுராணம் என்னும் பெயர்த்தாயிற்று. 'சிந்தை மகிழச் சிவபுராணந் தன்னை, முந்தை வினை முழுதும் ஓய வுரைப்பன் யான்' என இதன்கண் அடிகள் குறிப்பிடுதலால், சிவனது அநாதி முறைமயான பழமை யென்னும் ஒரு பொருளே நுதலியது இத்திருப்பாட்டு என்பது இனிது விளங்கும். தொண்ணூற்றைந் தடிகளையுடைய இப்பாடல்,

**'ஒருபொருள் நுதலிய வெள்ளடி யியலால்**
**திரிபின்றி வருவது கலிவெண் பாட்டே'** **(செய்யுள்-153)**

என்ற தொல்காப்பிய இலக்கணத்தின்படி அமைந்த கலிவெண் பாட்டாகும். 'இது கடவுட்புராயு முன்னிலைக்கண் வந்த பாடான் பாட்டு' என்பர் ஆசிரியர் மறைமலையடிகள்.

உலகிற்கு நிமித்த காரணனாகிய சிவபெருமான், திருவைந்தெழுத்தாகிய மந்திரப்பொருளாய் விளங்கி உயிர்களின் நெஞ்சத்தாமரையிலே நீங்காதெழுந் தருளியிருந்து உள் நின்று உபகரித்தருள்வதோடு புறத்தேயும் ஆசிரியர்த் திருமேனிகொண்டு எழுந்தருளி வந்து திருப்பெருந்துறையில் தமக்கு மெய்ப் பொருளை உபதேசித்தருளிய அருட்செய்தியும், அப்பெரியோன் அறிவுறுத்தருளிய மெய்ந்நூற் பொருளைச் சிந்தித்துணரும் நிலையில் அம் முதல்வன் ஆகமநூற் பொருளாகித் தம் நெஞ்சத்தே அண்ணித்திட்டு அமுதூறும் இனிமைத் திறமும், தனிமுதற் பொருளாகிய இறைவன் தன்னை அன்பினால் நினைந்துருகும் மெய்யடியார்கள் உள்ளத்தே அவரவர் நினைந்த திருமேனிகொண்டு விரைந்து அருள் புரிதல் வேண்டிப் பலவேறு திருக்கோலங்களைத் தாங்கி எங்கும் நீக்கமறக் கலந்து நிற்கும் இயல்பும் ஆகிய இறைவனது பேரருட்டிறத்தை நினைத்துருகிய திருவாதவூரடிகள்,

**'நமச்சிவாய வா அழ்க நாதன் தாள் வாழ்க**
**இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்கா தான் தாள்வாழ்க**
**கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க**
**ஆகமம் ஆகிநின் றண்ணிப்பான் தாள் வாழ்க**
**ஏகன் அநேகன் இறைவனடி வாழ்க'**

எனச் சிவபுரணத்தின் முதற்கண் சிவபரம் பொருளின் திருவடிகளை வாழ்த்திப் போற்றுகின்றார்.

ஐம்புலன்களால் அலைக்கப்பட்டுப் புறத்தே விரைந்தோடும் மனத்தின் வேகத்தைக் கெடுத்துப் பொறி வாயிலாகச் செல்லும் அவாஐந்தனையும் அடக்கி உயிர்களை ஒரு நெறிப்படுத்தவல்ல பேராற்றலும், திருவருள்வழியொழுகும் அடியார்களது பிறவிப் பிணிப் பினை அறுக்கும் வன்மையும், யாவராயினும் அன்பரல்லா தாரால் அறியப்படாத அருமையும், கைகூப்பி வணங்கும் தொண்டர்களின் உள்ளத்திலே சிறந்து விளங்கிச் செந்தேன் பொழியும் இனிமைத் திறமும், தலைதாழ்த்து வணங்கும் தொண்டர்களைத் தேவர்களும் தொழுது போற்றும்வண்ணம் உயர் நிலையில் வைத்துச் சிறப்பிக்கும் அருள்நலமும் ஒருங்குடைய இறைவன் திருவடிச்சிறப்பினை,

**'வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க**
**பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க**
**புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க**
**கரங்குவிவார் உண்மகிழும் கோன்கழல்கள் வெல்க**
**சிரங்குவிவார் ஓங்குவிக்குஞ் சீரோன்கழல் வெல்க'**

என வெற்றித்திறம் விளங்க விரித்துப் போற்றியுள்ளார்.

*இவ்வாறு சிவபெருமான் திருவடிகளுக்கு வாழ்த்தும் வெற்றியும் கூறிய வாதவூரடிகள்,*

**'ஈசனடி போற்றி எந்தையடி போற்றி**
**நேசனடி போற்றி சிவன்சே வடிபோற்றி**
**நேயத்தே நின்ற நிமலன் அடிபோற்றி**
**மாயப் பிறப்பறுக்கும் மன்ன னடிபோற்றி**
**சீரார் பெருந்துறைநம் தேவனடிபோற்றி**
**ஆராத இன்பம் அருளு மலைபோற்றி**

*என எண்வகைப் போற்றி வாசகத்தால் எண்குணத்தானாகிய பெருமானுக்கு வணக்கமுங் கூறினார்.*

**'சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால்**
**அவனரு ளாலே அவன் தாள் வணங்கிச்**
**சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை**
**முந்தை வினைமுழுதும் ஓய வுரைப்பன்யான்'**

*என இறைவன் திருவருட்டுணை கொண்டு தாம் சொல்லக் கருதிய பொருள் சிவபுராணம் என்பதனைத் தெளிவாக எடுத்துரைத்தார். இதனால் சிவபுராணம் என்ற இப்பெயர், இம் முதற்பகுதிக்கே யன்றி அடிகள் அருளிய திருவாசகம் முழுவதற்கும் பொருந்து மெனக் கொள்ளுதற்கும் இடனுண்டு. இங்ஙனம் நுதலிய பொருளை முன்மொழிந்த வாதவூரடிகள்,*

**'கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி**
**எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி**
**விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்**
**எண்ணிறந் தெல்லை யிலாதானே நின் பெருஞ்சீர்**
**பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்'**

*என்ற தொடரால் அவையடக்கமும் கூறினாராயிற்று. எனவே நூன்முகத்து உரைத்தற்குரிய வாழ்த்து, வணக்கம். வருபொரு ளுரைத்தல் ஆகிய மங்கல வாழ்த்தும் அவையடக்கமுமாக இச்சிவபுராணத்தின் முற்பகுதி அமைந்திருத்தல் காணலாம்.*

*உயிர்கள் புல் முதல் மக்கள் ஈறாகவுள்ள உடம்புகளைப் பெற்றுப் பிறந்து ஓரறிவு முதல் ஆறாவதறிவெனப்படும் மனவுணர்வு ஈறாகப் படிப்படியே அறிவினாற் சிறிது வளரும் வளர்ச்சி முறையும், இங்ஙனம் பலவகைப் பிறப்புக்களிலும் பிறந்துழன்று தூய்மையடைந்த நல்லுயிர்களுக்கு இறைவன் திருவடிப்பேறுநல்கி அவ்வுயிர்களை ஆட்கொண்டருளுதலும், அறிவு நூல்களாகிய வேதங்களாலும் உணர்தற்கரிய அப்பரம்பொருள் உயிர்களின் நலங்கருதிப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களையும்*

இயற்றுமுகமாக உயிர்களின் அறியாமையை அகற்றித் தூய்மை செய்து பேரின்பம் நல்கிப் பிறவிவேரறுக்கும் பெற்றியும், தாயிற்சிறந்த அருளாளனாகிய இறைவன் எல்லாமாய் அல்லவுமாய் நிற்குமியல்பும், தில்லைக்கூத்தனாகிய அவ்விறைவன் திருவடிகளை நெஞ்சம் நெக்குருகிப் பணிந்தேத்திப் பரவிய திருப்பாட்டின் பொருளுணர்ந்து சொல்லும் மெய்யடியார்கள் பல்லோரும் போற்றச் சிவனடிக்கீழ் வைகும் பேரானந்தப் பெருவாழ்வு எய்தி இன்புறுவர் என்பதும் ஆகிய உண்மைகள் சிவபுராணமாகிய இத்திருப்பாட்டில் விரித்து உரைக்கப் பெற்றுள்ளன. இத்திருப்பாட்டு சிவனது அருவ நிலையைக் கூறுவதெனவும் "ஈசர் தமக்கியல்பான திருநாம முதலெவையும், மாசறவே வாழ்கவென வாழ்த்துகின்ற அருட்குறிப்பு" உடையதெனவும் சான்றோர் கூறுவர்.

## 2. கீர்த்தித் திருவகவல்

திருவாசகத்தின் இரண்டாந் திருப்பாட்டாகிய இவ்வகவல், சிவபெருமான் தன்பால் அன்புடைய மெய்யடியார்களுக்கு எளிவந்து அருள்சுரந்த புகழ்ச் செய்திகளை விரித்து உரைப்ப தாகலின் கீர்த்தித் திருவகவல் என்னும் பெயர்தாயிற்று. கீர்த்தி-புகழ். இதற்குச் 'சிவனது திருவருட் புகழ்ச்சி முறைமை' என முன்னைச் சான்றேரொருவர் கருத்துரைத்துள்ளார். 'புகழ் பெருகுஞ் செய்கையெலாம் புகல் அகவல்' எனப் போற்றப் பெறுஞ் சிறப்புடையது இக்கீர்த்தித் திருவகவலாகும். நிலை மண்டில ஆசிரியப்பாவாக அமைந்த இப்பாடல் 146 அடிகளையுடையதாகும்.

தில்லை மூதூரில் ஐந்தொழிற் றிருக்கூத்தியற்றும் சிவபெருமான் உலகத்து உயிர்கள்தோறும் உயிர்க்குயிராய்த் திகழும் தன்னுடைய அருட்குணங்கள் யாண்டும் விளங்க இவ்வுலகில் அன்பிற்சிறந்த அடியார்கள் பொருட்டு நிழ்த்தியருளிய அற்புத நிகழ்ச்சியாகிய திருவிளையாடல்களை மணிவாசகப் பெருமான் இத் திருவகலில் விரித்துரைத்துப் போற்றியுள்ளார். இதன்கண் குறிப்பிடப் பெற்ற அருட் செய்திகளின் விளக்கத்தைப் பெரும்பற்றப்புலியூர்நம்பி திருவிளையாடல், பரஞ்சோதி திருவிளையாடல், திருவுத்தர கோசமங்கைப் புராணம், திருப்பெருந்துறைப் புராணம் முதலிய நூல்களைக் கொண்டு ஒருவாறு உணர்ந்து கொள்ளலாம்.

திருப்பெருந்துறையில் அருட்குருவாகப் போந்து மெய்ப் பொருளை உபதேசித்தருளிய சிவபெருமான் வாதவூரடிகளை நோக்கி 'நலமலிதில்லையுட் கோலமார் தரு பொதுவினில் வருக' எனப் பணித்தருளி மறைந்தமையும், அந்நிலையில் உடனிருந்த

அடியார்கள் இறைவனது பிரிவாற்றது தம் உடம்பினைத் துறந்து இறைவனுடன் இரண்டறக்கலந்தமையும், அங்ஙனம் இறைவனையடையப் பெறாது எஞ்சி நின்ற அடியார்கள் தீயிற் பாய்ந்து தம் உடம்பினை விடுத்து இறைவனை அடைந்தமையும், ..யிலைப் பெருமானாகிய கடவுள் அன்பர்களுக்கு நேர்நின்று அருள்செய்தற் பொருட்டுப் புலியூர்ப் பொதுவாகிய பொன்னம்பலத்திலே புகுந்தருளினமையும் ஆகிய செய்திகள் இக் கீர்த்தித் திருவகவலின் இறுதிப் பகுதியிலே குறிக்கப் பெற்றுள்ளன. இக்குறிப்பினைக் கூர்ந்துநோக்குங்கால் திருப்பெருந்துறையில் அருட்குரவனாக எழுந்தருளிய இறைவன் பணிந்தவண்ணம் வாதவூரடிகள் தில்லைக்கு வந்த பொழுது இக்கீர்த்தித் திருவகவல் அருளிச் செய்யப் பெற்றதென்பது நன்கு புலனாகும்.

திருக்குறளில் கடவுள் வாழ்த்தினையடுத்து வான் சிறப்பு என்ற அதிகாரம் வைக்கப்பெற்றமை போன்று திருவாசகத்தில் கடவுள் இலக்கணமுணர்த்தும் சிவபுராணத்தையடுத்து இறைவனது இனிய திருவருளாகிய மழையின் சிறப்புணர்த்தும் கீர்த்தித்திருவகவல் அமைந்திருத்தல் அறிந்து மகிழத் தக்கதாகும்.

## 3. திருவண்டப்பகுதி

எல்லாம் வல்ல இறைவன், உலகப் பெரும்பரப்பாகிய அண்டங்களெல்லாம் இல்நுழைகதிராகிய வெயிலொளியில் விளங்கித் தோன்றும் நுண்ணிய அணுக்களைப் போன்று மிகச் சிறியனவாகத் தோன்றத் தான் அவற்றினும் மிகமிகப் பெரியவனாகி எல்லா அண்டங்களுக்கும் அப்பாற்பட்டு விளங்குவதலாகிய பருமை நிலையினையும், உயிர்க்குயிராய் உள் நின்று எவ்வகைப் பொருள்களையும் ஊடுருவி இயக்கியருளும் நுண்மை நிலையினையும் ஒருங்குடையவனாவன். இவ் வுண்மையை அவனருளாலே உணரப்பெற்ற வாதவூரடிகள், அம் முதல்வனது தூல சூக்கும நிலையை வியந்து போற்றுவதாக அமைந்தது திருவண்டப் பகுதியாகிய அகவலாகும். இஃது 'அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்' எனத் தொடங்கி அண்டப் பரப்பின் உள்ளும் புறம்பும் திகழும் இறைவனது பேராற்றலை விரித்துக் கூறுவதாதலின் 'திருவண்டப்பகுதி' என வழங்கப் பெறுவதாயிற்று. 'அண்டப் பகுதி' என்னும் இது, ஆத்திசூடி என்றார்போலப் பாட்டின் முதற்குறிப்பாற் பெற்ற பெயராகும். இணைக்குறளாசிரியப் பாவாகிய இது 182 அடிகளை யுடையதாகும்.

திருவண்டப் பகுதியாகிய இவ்வகவல் 'சிவனுடைய தூலசூக்குமத்தை வியந்தது' என முன்னுள்ளோர் கருத்துரை வரைந்துள்ளனர். இறைவன் செய்தருளும் ஐந்தொழில்களில்

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல் என்னும் நான்கினைப் பற்றிப் பொதுவாகவும் விரிவாகவும் தெரிந்துகொள்ளுதற்கேற்ற அரும்பொருள்கள் இதன்கண் விரித்துரைக்கப் பெற்றுள்ளன. இதன் பொருளமைதியை,

**'திகழ்திருவண்டப் பகுதித் திருவகவல் செப்பியது**
**தகுசிருட்டி நிதியொடுக்கஞ் சாற்றுதிரோ தம்பொதுவாய்**
**அகலமுறத் தேர்ந்திடவே யருளியநற் பொருளாகும்'**

எனவரும் திருவாசக உண்மையால் இனிதுணரலாம்

அளக்கலாகாப் பேரளவினவாகிய அண்டங்களெல்லாம் இறைவனது அருள்வெளிப் பரப்பினுள்ளே சிறிய அணுக்களை யொப்ப அடங்கித் தோன்றுதலின், அவ்விறைவனது பெருமை, சொல்லுக்கும் மனத்திற்கும் எட்டா இயல்பினது. அண்டங்களின் தலைவராக நியமிக்கப் பெற்ற தெய்வங்களாகிய நுண்ணிய உயிர்களாலும் அறியவொண்ணாத நிலையில் உயிர்க்குயிராய் உள்நின்று இயக்குவோன் இறைவன் ஒருவனே யாதலின் அப்பெருமான் நுண்ணியன், உயிர் வாழ்க்கைக்கு இன்றியாமையாச் சிறப்பினவாய் அண்டப் பரப்பில் திகழும் ஞாயிறு, திங்கள், வான், வளி, தீ, நீர், மண் முதலிய எல்லாப் பொருள்களுக்கும் ஆற்றலை வழங்கி அவற்றைத் தொழிற்படுத்து வோன் அம்முதல்வனே. பேரருளாளனாகிய அப்பெரியயோன் அன்புடைய அடியார்களுக்கு அணுகி நின்றருளும் எளிமைத் திறமும் அன்பரல்லாதார்க்கு மிகமிகச் சேய்மையனாக அப்பாற்பட்டு நிற்கும் அருமைத்தன்மையும் ஒருங்குடையான், இறைவன் மாதொரு பாகனாக எளிவந்து தோன்றி வழங்கிய பேரின்பம், உடம்போடிருந்து பொறுத்தற்கு இயலாதபடி உள்ளம் முழுவதையும் அகத்திட்டுக் கொண்டது; என வாதவூரடிகள் தாம் பெற்ற அருளாரமுதப் பேரின்ப நுகர்ச்சியை இத் திருவகவலில் விரித்துக் கூறியுள்ளார்.

வேண்டுதல் வேண்டாமையிலான் ஆகிய இறைவன் திருவடிகளை இடைவிடாது போற்றும் பெரியோர்களே 'யான்' 'எனது' என்னும் இருவகைப் பற்றும் நீத்த நீத்தா ராவர். புலன்களிற் செல்லும் அவா ஐந்தினையும் அடக்கிய இப் பெருமக்களே சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்றும் தன் மாத்திரைகள் ஐந்தனது கூறுபாட்டையும் உள்ளவாறு உணர வல்லவர்கள். அணுமுதல் அண்டம் ஈறாகவுள்ள பொருள்களைப் பற்றிக் கூர்ந்து ஆராய்ந்து உணர்த்தவல்ல பேரறிவு, முற்றத்துறந்த முனிவர்களாகிய இப்பெருமக்களுக்கே யுரியதாகும். இறைவன் திருவருள்வழி யொழுகும் நிறைமொழி மாந்தராகிய வாதவூரடிகள், அண்டப்பரப்பின் அகத்தும், புறத்தும்

இடையீடின்றிக் கலந்து விளங்கும் இறைவனது இயல்பினை உணர்த்து முகமாக, அவனருளாலே அவன்தாள் வணங்கிய மெய்யடியார்களாகிய நீத்தார் பெருமையினையும் உடம்போடு புணர்த்து விளக்கிய திறம் உணர்ந்து மகிழத்தக்கதாகும். நிறைமொழி மாந்தர் அருளிய மறைமொழியாக விளங்கும் இத்திருவகவல், திருக்குறளில் நீத்தார் பெருமை என்ற அதிகாரத்தைப் போன்று திருவாசகத்தில் மூன்றாந் திருப்பாட்டாக அமைக்கப்பெற்றிருப்பது, நீத்தார் பெருமை என்ற அதிகாரத்திற்கும் இதற்கும் உள்ள தொடர்பை இனிது புலப்படுத்துவதாகும். இந்நிலவுலகும் இதனைச் சூழ இயங்கும் ஏனை உலகங்களும் உருண்டை வடிவினவாய் ஒன்றனுக்கு ஒன்று ஈர்ப்பாற்றல் உடையனவாக இயங்கிவரும் அற்புதக் காட்சியினை வாதவூரடிகள் இவ்வகவலில் விளக்கிய திறம் வியந்து போற்றத் தக்கதாகும்.

## 4. போற்றித் திருவகவல்

'நான்முகன் முதலா வானவர் தொழுதெழ' எனத் தொடங்கும் அகவல், வணக்கம் எனப் பொருள்படும் 'போற்றி' என்னும் தமிழ் மந்திரத்தால் இறைவனை முன்னிலைப் படுத்துப் போற்றுவதாதலின், 'போற்றித் திருவகவல்' என்னும் பெயர்த்தாயிற்று. 'நமச்சிவாய' என்னும் மந்திரத்தின் முன்னுள்ள 'நம' என்னுஞ் சொல்லுக்கு நேரான தமிழ்ச் சொல் 'போற்றி' என்பதாகும். போற்றுதல் என்பது புகழ்தல், வணங்குதல், குறிக்கொண்டு பாதுகாத்தல் எனப் பலபொருள் தரும் ஒரு சொல்லாகும். போற்றி என்பது வணக்கம் என்ற பொருளிலும் எம்மைப் பாதுகாத்தருள்க என வேண்டிக்கோடற் பொருளிலும் வழங்கும் செந்தமிழ் மந்திரச் சொல் என்பது, போற்றித் திருவகவலாகிய இதனாலும், போற்றித் திருத்தாண்டகம் முதலாக முன்னுள்ள திருமுறைகளிற் காணப்பெறும் அருட்பாடல் களாலும் நன்கு துணியப்படும்.

போற்றித் திருவகவல் ஆகிய இதற்குச் 'சகத்தின் உற்பத்தி' எனச் சான்றோரொருவர் கருத்துரை வரைந்துள்ளார். இங்கே 'சகம்' என்ற சொல் உலகத்தில் வாழும் உயிர்களை யுணர்த்தும் என்பர்.* (*மறைமலையடிகள் எழுதிய திருவாசக விரிவுரை 2-ம் பதிப்பு பக்கம் 249.) உயிர்கள் இவ்வுலகிற் பிறந்து வீடுபே றடைதற்குரிய நெறிமுறைகளை அறிவுறுத்தும் நிலையில் இவ்வகவல் அமைந் திருத்தலால் 'முத்திபெறு நெறியறியும் மொழி போற்றித் திருவகவல்' என இதனைச் சிறப்பித்துரைப்பர் அறிஞர் * (*திருவாசக வுண்மை.) இப்பாடல் இருநூற்றிருபத்தைந்தடிகளை யுடையதாகும். இதன்கண் உள்ள எல்லா அடிகளும் நாற்சீரால் இயன்றமையின் இது நிலை மண்டில ஆசிரியப்பாவாகும்.

நான்முகன் முதலிய தேவர்களால் வழிபடப் பெறும் சிறப்பமைந்த காத்தற் கடவுளாகிய திருமாலும் காணுதற்கரிய தன் திருவடியிணையை அன்பிற்சிறந்த மெய்யடியார்கள் கண்டு மகிழ்தற் பொருட்டுப் பேரருளாளனாகிய இறைவன் இந்நில வுலகிலே எளிவந்தருளிய செய்தியும், உயிர்கள் பொறிகளாலும் உணர்வுகளாலும் வேறுபட்ட பலதிற உடம்புகளிற் பொருந்தித்தோன்றிப் பெறுதற்கரிய மக்கட் பிறப்பினை யெய்தும் முறையும், மக்கட் பிறப்பில் தாய் வயிற்றிற் கருவாய்த் தங்கிய நாள்முதல் மகவாய் வெளிப்படும் வரையும் நேரும் பலவகைத் துன்பங்களிலும் உயிர்கள் தப்பிப்பிழைக்குமாறும், பிள்ளைப் பருவம் முதல் ஆண்மைப் பருவம் எய்துமளவும் நேரும் பலவகைத் தொல்லைகளும், அவற்றை யெல்லாந் தப்பி உலகியல் வாழ்வில் நன்றாக வாழும் நிலையில் தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாக, சிறப்புடைய அக்கருத்தினைக் கலைத்தற்கு முற்படும் பல்வேறு குழுவினரின் தீய முயற்சிகளும், அவற்றாற் சிறிதும் மனங் கலங்காது நனவிலும் கனவிலும் இறைவன்பால் இடையறாப் பேரன்புடையராம் வண்ணம் அவ்விறைவனே குருபரனாக எழுந்தருளிய செய்தியும், மெய்யன்பராகி அடியார்களைத் தாய்போல் தலையளித்துக் காக்கும் இறைவனது பெருங்கருணைத் திறமும் ஆகியவற்றை இவ்வகவலில் ஒன்று முதல் எண்பத்தாறு வரையுள்ள அடிகளால் மணிவாசகப் பெருமான் விரித்து விளக்குகின்றர். எண்பத்தேழாம் அடிமுதல் இருநூற்றிருபத் தைந்தாம் அடிமுடியவுள்ள இவ்வகவலின் பிற்பகுதி, சிவபெருமானை முன்னிலைப்படுத்திப் போற்றும் மந்திர மொழியாக அமைந்துளது. இப்பகுடிதி வடமொழி எசுர் வேதத்தின் இடையே யமைந்த திருவுருத் திரத்தைப் போன்று சிவபரம் பொருளை மலர்தூவி வழிபடுதற் கேற்ற செந்தமிழ் மந்திரங்களாக அமைந்துளதென்றும், வாதவூரடிகள் திருவாய் மலர்ந்தருளிய தமிழ் மந்திரங்களாகிய இவை திருக்கோயில் களிலும் பிறவிடங்களிலும் இறைவனை வழிபடுதற்குரிய சிறப்புரிமை வாய்ந்தனவென்றும் ஆசிரியர் மறைமலையடிகளார் தாம் எழுதிய திருவாசக விரிவுரையில் நன்கு விளக்கியுள்ளார்கள்.

திருக்குறளில் உள்ள ‘அறன் வலியுறுத்தல்’ என்னும் அதிகாரத்தைப் போன்று திருவாசகத்தில் நான்காம் பனுவலாக முறைப்படுத்தப் பெற்றது இப் போற்றித் திருவகவலாகும். முற்றத்துறந்த முனிவர்களால் உணர்த்தப்படும் உறுதிப் பொருள்களுள் இம்மை மறுமை வீடு என்னும் மும்மை நலங்களையும் ஒருங்கே தருவது அறம் என்ற முதற் பொருளேயாகும். எனவே அவ்வறத்தின் பெருமையினை வலியுத்தும் நோக்கத்துடன் ‘நீத்தார் பெருமை’ என்ற அதி காரத்தை யடுத்த ‘அறன் வலியுறுத்தல்’ என்ற அதிகாரம்

வைக்கப்பட்டது. திருக்குறளில் அமைந்த இம்முறையினை யொட்டியே திருவாசத்திலும் நீத்தாராகிய திருத்தொண்டர்களின் பெருமையினை விளக்கும் திருவண்டப் பகுதியின் பின் என்றும் மாறாத நல்லறத்தின் சிறப்பினை வற்புறுத்தும் இப்போற்றித் திருவகவல் வைக்கப்பெற்றுள்ளமை காணலாம். இவ்வைப்பு முறையின் அமைப்பினை உணர்தற்கு இப்போற்றித் திருவகவலுக்கும் அறன் வலியுறுத்தல் என்ற அதிகாரத்திற்கும் இடையே அமைந்த தொடர்பினை அறிந்து கொள்ளுதல் இன்றியமையாததாகும்.

குற்றமற்ற மனத்தினால் எண்ணித் துணிந்து இயற்றப் படுவதே அறமென்றும் அதுவும் பொறாமை, அவா, வெகுளி, கடுஞ்சொல் ஆகிய குற்றம் நான்கினையும் விலக்கிய நிலையில் நிகழ்வதென்றும் ஆசிரியர் திருவள்ளுவர் அறத்திற்கு இலக்கணம் கூறியுள்ளார். அறத்தின் இயல்பாக அமைந்த இவ்விலக்கணம் உலகியல் முறையினை உளங்கொண்டு கூறிய பொது விலக்கணமாகவே கொள்ளத்தகுவதாகும். தெய்வப்புலவராகிய திருவள்ளுவர், அறத்தின் சிறப்பிலக்கணத்தினைக் கடவுள் வாழ்த்தாகிய முதலதிகாரத்திலேயே தெளிவாகக் குறித்துள்ளார். நல்லறங்கள் எல்லாவற்றிற்கும் நிலைக்களமாக விளங்குவோன் அருளாளனாகிய இறைவனே என்ற உண்மையினை 'அறவாழி யந்தணன்' என்ற தொடரால் பொய்யில்புலவர் நன்கு புலப்படுத்தி யுள்ளார். எனவே அறக்கடலாய் விளங்கும் அருளாளனாகிய இறைவனது திருவருளை எதிரேற்று நடக்கும் தூய உள்ளமுடைய பெரியோர்களால் இயற்றப்பெறுவது எதுவோ அதுவே உண்மையான அறமாகும் என்பது திருவள்ளுவர் கருத்தாதல் நன்கு தெளியப்படும்.

இறைவனது திருவருளை எதிர்நோக்கி அதன் வழியொழுகும் நன்னெஞ்சினோராகிய அடியார்களே உண்மையான அறத்தினை மேற்கொண்டவராவர் என்ற இவ்வுண்மையினை,

'நின்குணம் எதிர் கொண்டோர் அறங்கொண்டோர்'* (* பரிபாடல் 5. 71.) என்ற தொடரில் கடுவன் இளவெயினனார் என்ற சங்கப் புலவர் இனிது விளக்கியுள்ளார். 'இறைவனாகிய நினது திருவருட் குணத்தை ஏற்றுக்கொண்டு அவ்வருள் நெறியில் ஒழுகுவோரே உண்மையான அறவோர்' என்பது மேற்காட்டிய தொடரின் பொருளாகும்.

உயிர்கள் செய்யும் நலந்தீங்குகளையெல்லாம் உள்ளவாறு அறிந்து அவற்றிற்கேற்ப இன்ப துன்பங்காகிய இருவினைப் பயன்களை நுகர்விக்கவல்ல தனி முதல்வன் இறைவனாதலின் அவன் திருவடிகளை அன்பினால் வழிபடும் கருத்துடன் மக்கள்

தன்முனைப்பற்றுச் செய்யும் செயல்களெல்லாம் நல்லறமாகும். இவ்வாறன்றி இறைவனடிகளை மறந்து 'யான்' 'எனது' என்னும் செருக்குடன் செய்யும் செயல்கள் உலகியல் நெறியால் நோக்கும் நிலையில் நல்லனபோற் காணப் பட்டாலும் உண்மையால் நோக்குங்கால் வீண்செயலெனவே கருதப்படும். ஒன்றினும் வேண்டுதல் வேண்டாமையின்றி எல்லாவுயிர்களிடத்தும் பேரருளுடையனாய் வேண்டும் நலங்களை வழங்கியருளும் இறைவன் திருவடிகளைப் போற்றி வழிபடுதலே எல்லா அறங்களுக்கும் மூலமான நல்லறமாகும் என்பது சான்றோர் துணிபாகும். அறத்தின் அடிப்படைக் கொள்கையாகிய இவ்புண்மையினை,

**"காண்பவன் சிவனேயானால் அவனடிக் கன்பு செய்கை**
**மாண்பறம், அரன்றன்பாதம் மறந்துசெய் அறங்களெல்லாம்**
**வீண்செயல், இறைவன் சொன்ன விதி அறம்,**
**விருப்பொன்றில்லான்**
**பூண்டனன் வேண்டல் செய்யும் பூசனை புரிந்து கொள்ளே." ***

*(* சிவஞான சித்தியார் - இரண்டாம் சூத்திரம் 27-ம் செய்யுள்)*

எனவரும் செய்யுளில் அருணந்தி சிவனார் திட்பமுற விளக்கியுள்ளார்.

மேல் எடுத்துக் காட்டிய வண்ணம் முன்னைத் தமிழ் சான்றோர் பலரும் அறத்தின் இலக்கணங்களாகக் கூறிய கருத்துக்களைத் தொகுத்து நோக்குவோமானால், உலக மக்கள் அறவாழியந்தணனாகிய கடவுளிடத்து நீங்காத பேரன் புடையராய் அருளாளனாகிய அவனுடைய திருவடிகளை யிறைஞ்சித் தன்முனைப்பற்றுச் செய்யும் செயல்களே உண்மையான நல்லறங்களாம் என்பது நன்கு விளங்கும்.

இறைவன் திருவருளை நிலைக்களனாகக் கொண்டு நிகழும் அறத்தின் சிறப்பிலக்கணத்தினை உலக மக்களுக்கு உணர்த்தத் திருவுளங்கொண்ட மணிவாசகப் பெருமான் இப்போற்றித் திருவகவலால் மன்னிய திருவருள் மலையெனத் திகழும் சிவபரம் பொருளை மறவாது போற்றி வழிபடுமுகமாக வையத்து வாழ்வாங்கு வாழும் நல்லற நெறியை மக்கள் கடைப் பிடித்தொழுகுதல் வேண்டுமெனத் திட்பமுற வலியுறுத்தி யுள்ளார். எனவே திருவாசகத்திலுள்ள போற்றித் திருவகவலாகிய இது திருக்குறளில் அறன் வலியுறுத்தல் என்ற அதிகாரத்துடன் தொடர்புடையதென்பது இனிது புலனாம்.

இதுகாறும் கூறியவாற்றால் திருவாசகத்தில் முதற்கண் அமைந்த சிவபுராணம், கீர்த்தித் திருவகவல், திருவண்டப் பகுதி, போற்றித் திருவகவல் ஆகிய நான்கு திருப்பாடல்களும்,

திருக்குறளின் தொடக்கத்தே அமைந்த கடவுள் வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் என்னும் நான்கதிகாரங்களைப் போன்று, திருவாசகச் செழுமறையின் பொருள் நலங்களைப் புலப்படுத்தும் பாயிரமாக முறைப்படுத்தப் பெற்றன என்பது ஒருவாறு புலனாதல் காணலாம்.

## 5. திருச்சதகம்

திருவாசகத்தில் ஐந்தாம் பனுவலாக அமைந்த இப்பகுதி தெய்வத்தன்மை வாய்ந்த நூறு திருப்பாடல்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குதலால் திருச்சதகம் என்னும் பெயர்த்தாயிற்று. சதம் என்ற வடசொல் நூறு என்னும் எண்ணினைக் குறித்த பெயராகும். அது, நூறு திருப்பாடல்களைக் கொண்டது என்னும் பொருளில் 'க' என்னும் ஓர் இடைச் சொல்லைப் பெற்றுச் 'சதகம்' என வழங்கியது என்பர். இத்திருச்சதகம், 1. மெய்யுணர்தல், 2. அறிவுறுத்தல், 3. சுட்டறுத்தல், 4. ஆத்தும சுத்தி 5. கைம்மாறு கொடுத்தல், 6. அநுபோக சுத்தி, 7. காருணியத்திரங்கல் 8. ஆனந்தத் தழுந்தல் 9. ஆனந்த பரவசம், 10. ஆனந்தாதீதம் எனப் பத்துத் தலைப்புக்களை யுடையதாய், ஒவ்வொரு தலைப்புக்கும் பத்துப்பத்துப் பாடல்களைக் கொண்டதாய்ப் பத்து யாப்பு விகற்பங்களைப் பெற்றுளது.

ஒரு பாடலின் இறுதியிலுள்ள சொற்றொடர், சொல், எழுத்து என்னும் இவற்றுள் ஒன்றை அடுத்த பாடலின் தொடக்கமாகக் கொண்டு பாடப்பெறுவது அந்தாதி என்னும் சொற்றொடர் நிலைச் செய்யுளாகும். இத்திருச்சதகத்திலுள்ள நூறு திருப்பாடல்களும் மேற்குறித்த வண்ணம் ஒரு செய்யுளின் ஈறு அடுத்த செய்யுளுக்கு முதலாக அமையும் முறையில் அந்தாதியாக அருளிச் செய்யப் பெற்றுள்ளன. 'மெய்தானரும்பி' எனத் தொடங்கும் இத் திருச்சதகத்தின் முதற்பாடலின் முதற் சொல்லோடு பொருந்தும் முறையில், இதன் நூறாம் பாடலாகிய இறுதித் திருப்பாட்டு 'மெய்யர் மெய்யனே' என முடிந்து ஈறும் முதலும் ஒன்றாய் இணைந்திருத்தல் காணலாம். திருச்சதகமாகிய இதன் அமைப்பு முறையினை அடியொற்றிப் பிற்காலத்தில் தோன்றியதே பதிற்றுப் பத்தந்தாதி என்னும் பிரபந்தம் என்பது இங்கு நினைத்தற்குரியதாகும்.

திருப்பெருந் துறையிலே குருந்த மர நீழலில் அருட் குரவனாக எழுந்தருளித் திருவாதவூரடிகளுக்கு ஞானோபதேசம் வழங்கியருளிய குருமூர்த்தியாகிய இறைவன்பால் திருவாத வூரடிகள் கொண்டுள்ள எல்லையற்ற பேரன்பினைப் புலப்படுத்தும் நிலையில் அமைந்தது இத் திருச்சதகமாகும். தம்மை ஆட்கொண்டருளிய பேரருளாளனாகிய இறைவனிடத்து வாதவூரடிகள் கொண்ட பேரன்பின் முதிர்ச்சியும் அதன் பயனாக

'யான்' 'எனது' என்னும் இருவகைப் பற்றுக்களும் அறவே நீங்க அடிகள் பால் நிகழ்ந்த வியக்கத்தக்க நற்செயல்களும் ஆகிய வற்றைப் புலப்படுத்தும் முறையில் இப்பனுவல் அமைந் திருத்தலால், இதற்குப் 'பத்தி வைராக்கிய விசித்திரம்' என ஆன்றோர் கருத்துரை வரைந்தனர். இக்கருத்தினை.

**"சத்திய ஞானந்தரு தேசிகர் மோகஞ் சதகமதாம்"**

எனவரும் திருவாசக உண்மைத் தொடரும் வலியுறுத்தல் காணலாம்.

பத்தியாவது, அம்மையப்பனாகிய இறைவன் மன்னுயிர்கள் பால் வைத்த மாறிலாத மாக்கருணை வெள்ளமாகிய அருளின் நீர்மையை எண்ணிய அளவில், மெய்யடியார்கள் உள்ளத்தே தோன்றிப் பெருகும் பேரன்பாகும். வைராக்கியம் என்பது அருளாளனாகிய இறைவன்பாற் செலுத்தும் பேரன்புக்குத் தடையாயுள்ள உலகப் பற்றுக்களையெல்லாம் அறவே வெறுத்தொதுக்கும் கடைப்பிடியாகிய மனவுறுதியாகும். விசித்திரம் என்பது வியக்கத்தக்க தன்மை, பற்றற்றான் பற்றாகிய ஒரே பற்றினைத் துணையாகப் பற்றி நின்று ஏனைய உலகப் பற்றுகளையெல்லாம் அறவே ஒழித்தலாகிய இச்செயல், சதுரப்பாடுடைய சிவஞானச் செல்வர்களாலன்றி ஏனையோரால் மேற்கொள்ளுதற்கரிய பெருமையுடையதாதலின் வியக்கத்தக்க தன்மையுடையதாயிற்று. அருட்குரவனாக எழுந்தருளி வந்து தம்மை ஆட்கொண்டருளிய இறைவன்பால் திருவாதவூரடிகள் கொண்ட பேரன்பின் உவப்பும், அத்தகைய அன்பிற்குத் தடையாய் நிகழும் உலகப் பொருள்களிடத்தே அடிகள் வைத்த உவர்ப்பும் ஒருங்கே புலப்படும் முறையில் இத் திருச்சதகம் அருளிச் செய்யப் பெற்றிருத்தல் உணர்ந்து போற்றத் தக்கதாகும்.

இனி, பழைய ஏட்டுச் சுவடிகள் சிலவற்றில் 'பத்து வகையாக இரட்சித்த முறைமை' என இத் திருச்சதகத்திற்குக் கருத்துரை வரையப் பெற்றுளது. மெய்யடியார்கள் பால் நிகழ்தற்குரிய செயல்கள் பத்தும் தம்பால் நிகழும் வண்ணம் இறைவன் குருமூர்த்தியாக எளிவந்து தம்மை ஆட்கொண்டு பாதுகாத் தருளிய அருட்செயலை எடுத்துரைத்துப் போற்றும் முறையில் திருவாதவூரடிகள் இத் திருச்சதகத்தை அருளிச் செய்துள்ளார். எனவே இச்சதகத்திற்குப் 'பத்துவகையாக இரட்சித்த முறைமை' எனக் கருத்துரைத்தல் பொருத்த முடையதாகவே தோன்றுகின்றது.

பத்துப் பாடல்கள் கொண்டது ஒரு பதிகம் என்ற முறையில் இத் திருச்சதகத்தில் பத்துப் பதிகங்கள் அமைந்துள்ளன. இதன் கண் ஒவ்வொரு பதிகமும் தனித்தனி யாப்பமைதி பெற்றுத்

தனித்தனித் தலைப்புடன் விளங்குதல் காணலாம். இவற்றுள் 'மெய்தானரும்பி' எனத் தொடங்கும் முதற்பதிகம் 'மெய் யுணர்தல்' என்ற தலைப்பில் அமைந்துளது. மெய்யுணர்வாவது, தோற்றக் கேடுகளின்றித் தூய்தாய் என்றும் உள்ள மெய்ப்பொருளாகிய இறைவனை இடைவிடாது நினைந்து போற்றுதல். உடல், கருவி, நுகர்ச்சியாகிய உலகப்பொருள்களின் நிலையாமைகண்டு அவற்றின் பிணிப்பிலிருந்து விலகி, மெய்ப்பொருளாகிய கடவுளை அநுபவ வாயிலாக உணர்ந்து போற்றும் நிலையில் திருச்சதகத்தின் முதற்பதிகம் அமைந்துளது. 'மெய்யுணர்தல்' என்னும் இப்பதிகத் தலைப்புக்குத் 'தேகாதி பிரபஞ்சங்களைக் கண்டு நீங்குதல்' என முன்னோர் கூறிய விளக்கம் இத் திருப்பதிகக் கருத்தினை நன்கு புலப்படுத்துவதாகும்.

ஆருயிர்த் தலைவனை நினைந்த அளவில் உண்டாம் அன்பு மேலீட்டால் உள்ளத்தே இன்பவுணர்வு தோன்றுதலும், அவ்வுணர்வின் வழிப்பட்ட மெய்ப்பாடாக உடம்பில் மயிர் சிலிர்த்தலும் நடுக்கம் உண்டாதலும் முன் தலைவன் செய்த தலையளியை எண்ணுந்தோறும் நெஞ்சம் நெகிழ்து உருகப் பெறுதலும், அதன் பயனாகக் கண்ணீரரும்புதலும், தலைவனுடைய இனிய பண்புகளையுணர்ந்து இன்புறுதற்குத் தடையாயிருந்த இடையூறுகளெல்லாம் அறவே அகன்றொழிய அப்பெருமானது கருணைத் திறத்தினை யெண்ணி அகங்குழைந்து பாராட்டிப் போற்றுதலும் ஆகிய இச்செயல்கள் தலையாய அன்புடையர்பால் நிகழ்வனவாகும்.

**வேர்க்குங்கண் ணீர்ததும்புங் கம்பித்து மெய்நடுங்கும்**
**வார்த்தை நழுவும் மனம்பதறும் - கார்க்கதமாய்க்**
**காந்தும் உரோமாஞ் சலியாகுங் காதலித்தார்க்**
**கேய்ந்தகுண மாமிவையெட்டும்.**

எனவரும் வெண்பா அன்புடையார் பால் நிகழும் மெய்பாடு களைத் தொகுத்துரைப்பதாகும். அன்புரிமைச் செயல்களாகிய இவையனைத்தும் திருவாதவூரடிகள் பால் நிகழும் நிலையில் அடிகள் இத் திருச்சதகத்தினை அருளிச் செய்துள்ளார். இச்செய்தி,

**மெய்தான் அரும்பி விதிர்விதிர்த் துன்விரை யார்கழற்கென்**
**கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பியுள்ளம்**
**பொய்தான் தவிர்ந்துன்னைப் போற்றி சயசய போற்றி யென்னுங்**
**கைதான் நெகிழ விடேனுடை யாயென்னைக் கண்டு கொள்ளே.**

எனவரும் இத் திருச்சதக முதற்பாடலால் இனிது விளங்கும். இறைவனது திருவருளில் ஈடுபட்ட மெய்படியார்கள்பால் நிகழும் அன்புரிமைச் செயல் முறைகளைப் புலப்படுத்தும் முறையில் இத்திருப்பாடல் அமைந்துளது. மெய்அரும்புதல், கைதலை

வைத்தல், கண்ணீர் ததும்புதல், வெதும்புதல் என்பன மெய்யின் தொழில்கள்; உள்ளம் பொய்தவிர்தல் மனத்தின் தொழில்; 'போற்றி சய சய போற்றி' என்றல் வாக்கின் தொழில். எனவே மன மொழி மெய்யாகிய முக்கரணங்களாலும் இறைவனை வழி பட்டமை புலனாம். என்றும் மாறத மெய்ம்மைப் பொருளாகிய இறைவனை அன்பினால் அகங்குழைந்து போற்றும் திருவருள் வாழ்வின் சிறப்பினை உணர்ந்து, நிலையற்ற உலகியல் நடையாகிய பொய்ம்மையைத் தவிர்ந்தொழுகும் உறைப்புடைய மெய்த் தொண்டர் வாழ்வின் இயல்பினை விளக்கும் நிலையில் அமைந்த இத்திருப்பாடல், 'பத்தி வைராக்கிய விசித்திரம்' என்னும் திருச்சதகப் பொருளையும், அதன் முதற்கண் அமைந்த 'மெய்யுணர்தல்' என்னும் திருப்பதிகம் நுதலிய பொருளையும், இத்தகைய திருவாசகச் செழுமறையினை அருளிச் செய்து அன்புருவாகிய திருவாதவூரடிகளது திருவுருவ இயல்பினையும் ஒருங்கேயுணர்த்தி நிற்றல் காணலாம். அடிகளின் அன்பின் திருவுருவினை நம்மனோர் நெஞ்சக் கிழியில் ஓவியமாக எழுதி நினைவுகூரும் வகையில் அமைந்த இத்தகைய திருப்பாடல்களைத் தியானசுலோகம் எனப் போற்றுவர் வடமொழி அறிஞர்.*
(*திருவாசகம், திருச்சதகம் - கதிர்மணி விளக்கம் - பக்கம் 12.)

"இறைவா, எங்கள் உத்தமனே, இந்திரன், திருமால், பிரமன் ஆகிய பெருந்தேவர்களது சிறப்புடைய வாழ்வையும் ஒரு பொருளென மதித்து ஏற்றுக் கொள்ளமாட்டேன். நண்பு பூண்டொழுகுந் திறத்தில் என் குடும்பமே அடியோடு கெட்டொழியும் நிலை ஏற்படுமாயினும் நின்னுடைய அடியார் களோடன்றி நின்னை நினையாத பிறரோடு நட்புறவு கொள்ளமாட்டேன். நின் திருவருள் நினைவுடன் வாழும் வாய்ப்பு உளதாயின், நரகத்திற்புகினும் அதனை இகழ்ந்து விலகநினையேன். எவ்வுயிர்க்கும் உயிராய் விளங்கும் தனி முதல்வனாகிய நின்னையன்றிப் பிறிதொரு தெய்வம் உண்டென்று கனவிலும் கருதேன். என்னால் விரும்பத் தகும் இவ்வியல்பு என்பால் என்றும் அகலாது நிலைபெற்றிருக்க அருள் புரிவாயாக" என இறைவனை நோக்கி அடிகள் வேண்டுவதாக அமைந்தது,

**"கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு, குடிகெடினும்**
**நள்ளேன் நினதடி யாரொடல்லால், நரகம்புகினும்**
**எள்ளேன் திருவருளாலே யிருக்கப்பெறின், இறைவா**
**உள்ளேன் பிறதெய்வம் உன்னையல்லாதெங்கள் உத்தமனே"**

என்ற திருப்பாட்டாகும். இதன்கண் 'குடிகெடினும் நினது அடியாரொடல்லால் நள்ளேன்' எனவே, நின்னடியரல்லாத பிறரொடு நட்புக் கொள்ளுதலால் எனது குடி நெடுங்காலம்

நிலைபெற்று வளரும் உயர்நிலை ஏற்படுவதாயினும் நின் அன்பரல்லாதார் நட்பை ஏற்றுக்கொள்ளேன் என்பதும் 'நின் திருவருளாலே இருக்கப் பெறின் நரகம் புகினும் எள்ளேன்' எனவே, நின் திருவருளை நினைந்து போற்றும் வாய்ப்பில்லை யென்றால் புரந்தரன் மால் அயன் வாழ்வையும் பொருளெனக் கொள்ளமாட்டேன் என்பதும் இனிது புலனாதல் காணலாம்.

'நாடகத்தால்' எனத் தொடங்கும் இரண்டாம் பதிகம் 'அறிவுறுத்தல்' என்னுந் தலைப்புடையதாகும் இதற்குப் பொறியோடே கூட்டுதல் எனவும் அருள் தரிசனம் எனவும் குரு தரிசனம் எனவும் முன்னோர் கருத்துரைத்துள்ளார்கள். உயிர் தன்னறிவினால் உய்த்துணர்தற்கரியதாய சிவபோகத்தை உடலின்கண் பொருந்திய ஐம்பொறியளவிலும் உணர்ந்து மகிழும் வண்ணம் இறைவன், திருவாதவூரடிகளுக்குக் குரு மூர்த்தியாக எழுந்தருளி வழங்கினான் ஆதலின், "உணர்வின் நேர்பெற வருஞ் சிவபோகத்தை ஒழிவின்றி உருவின்கண், அணையும் ஐம்பொறி யளவினும் எளி வர" க் கண்ட அடிகள், தாம் நுகர்ந்த சிவபோகம் பொறியுணர்வுக்குப் புலப்படும் நிலையில் இப்பதிகத்தால் இறைவனைப் பரவிப் போற்றியுள்ளார். இதுபற்றியே இப்பதிகத்திற்குப் பொறியோடே கூட்டுதல் எனக் கருத்துரைக்கப் பட்டது. இப்பதிகத்தில் ஒன்று முதல் எட்டு வரையுள்ள பாடல்கள் அடிகள் ஆண்டவனை நோக்கித் தம் இயல்பினையும் வேட்கையினையும் வெளியிட்டுரைப்பனவாகவும் ஒன்பது பத்தாம் பாடல்கள் தம் நெஞ்சிற்கு அறிவுறுத்துவனவாகவும் அமைந்துள்ளன.

'பொன்னிலத்திலே அழகுடன் திகழும் மாணிக்கமலை போல்வானே! என்னை அடிமையாகவுடைய இறைவனே! யான், எனது நடிப்புத் திறத்தால் நின் மெய்யடியாரைப் போன்று திறம்பட நடித்து அவர்கள் திருக்கூட்டத்தின் இடையே ஒன்றிநின்று (அன்னோர் புகுதற்குரிய) பேரின்ப நிலையாகிய வீட்டுலகத்திற் புகுதல்வேண்டி மிகவும் விரைந்து முந்துகின்றேன். இந்நிலையில் எனது தகுதியின்மை வெளிப்படுவதன் முன் நின்பால் இடையறாது செலுத்தற்குரிய பேரன்பு எனது நெஞ்சத்திலே நிலைபெற்று உள்ளம் உருகும்படி அதனை அடியேற்குத் தந்தருள்வாயாக எனத் தமக்கு மெய்யன்பு அருளவேண்டி இறைவனைப் பரவுவதாக அமைந்தது,

**நாடகத்தால் உன்னடியார் போல்நடித்து நானடுவே**
**வீடகத்தே புகுந்திருவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்**
**ஆடகச்சீர் மணிக்குன்றே இடையறா அன்புனக்கென்**
**ஊடகத்தே நின்றுருகத் தந்தருளெம் உடையானே.**

எனவரும் திருப்பாட்டாகும்

'வெள்ளந்தாழ் விரிசடையாய்' எனத் தொடங்கும் மூன்றாம் பதிகம், சுட்டறுத்தல் என்னுந் தலைப்புடையதாகும். சுட்டறுத்தல் என்பதற்குத் தன் செயலறுத்தல்; அஃதாவது உலகப் பொருள்களைச் சுட்டியறிதலாகிய ஆன்மபோதத்தை ஒழித்தல் என்பது பொருள். உயிர்கள் ஐம்பொறிகள் முதலிய கருவிகளோடு கூடிநின்று அறியும் அறிவு ஒன்றைச் சுட்டியறியும் சுட்டுணர்வு எனப்படும். இங்ஙனம் சுட்டுணர்வினால் அறியப்படும் பொருள்கள் அனைத்தும் அழியுந் தன்மையானவாம். ஆதலின் அவை அசத்து எனப்படுவன. ஐம்புலத் தொடக்கினின்றும் நீங்கிச் சுட்டிறந்து அறியும் அறிவு மெய்யுணர்வு எனப்படும். மெய்யுணர்வினால் அறியப்படுவதொன்றே சத்து எனப்படும் முழுமுதற் பொருளாகும். பொருள்தோறும் யாண்டும் நீக்கமறக்கலந்து நின்று என்றும் மாறதுள்ள முழுமுதற் பொருளாகிய இறைவன், ஐம்புல அறிவாற் சுட்டியறியப்படுவான் அல்லன் என்பதனை, 'அனைத்துலகும் ஆய நின்னை ஐம்புலன்கள் காண்கிலா' எனவும் * (*திருவாசகம் - திருச்சதகம் 76) 'ஐம்புலன்கள் நின்னைப் புணர்க்கிலாப் புணர்க்கையானே' எனவும் * (*திருவாசகம் - திருச்சதகம் 70) வரும் தொடர்களால் அடிகள் தெளிவாகக் குறித்துள்ளார். இறைவனே ஆசிரியனாக எழுந்தருளி வந்த நற்பொருளை உபதேசிக்கப் பெற்ற வாதவூரடிகள், தமக்கு மெய்யுணர்வருளிய பெருமானைச் சுட்டுணர்வுக்கு எட்டாத பரம்பொருள் எனத் தெளிந்து தம் செயலற்று அவனருளே துணையாகக் கொண்டு பரவும் நிலையில் அமைந்தது இப்பதிகமாதலின், சுட்டறுத்தல் எனக் குறிக்கப்பெற்றது.

**வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்**
**பெருமானே யெனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்**
**பள்ளந் தாழுறு புனலிற் கீழ்மேலாகப்**
**பதைத் துருகுமவர்நிற்க, என்னை ஆண்டாய்க்கு**
**உள்ளந்தாள் நின்று உச்சியளவும் நெஞ்சாய்**
**உருகாதால்; உடம்பெல்லாங் கண்ணாய் அண்ணா**
**வெள்ளந்தான் பாயாதால்; நெஞ்சம் கல்லாம்;**
**கண்ணிணையும் மரமரம் தீவினையினேற்கே.**

எனவரும் திருப்பாடலில் பேரருளாளனாகிய இறைவனை உணர்ந்து போற்றுதற்கு நாம் பெற்றுள்ள கருவி கரணங்கள் போதிய ஆற்றல் வாய்ந்தவையல்ல என்பதை அடிகள் நன்கு புலப்படுத்தியுள்ளார்.

"கங்கைப் பெருவெள்ளம் தங்கிய விரிந்தசடையை யுடையவனே! எருதினை ஊர்தியாகவுடையவனே! விண்ணாளும் தேவர்க்கெல்லாம் மேலாய் விளங்கும் பெருமானே! என

இவ்வாறு நின் திருப்பெயர்களை அன்பர்கள் கூறக்கேட்ட அளவிலேயே பள்ளத்தில் விரைந்துபாயும் வெள்ளநீரைப் போன்று கீழ் மேலாகத் துடிதுடித்துப் புடைபட்டுருகும் மெய்யன்பர்பலரும் நின் திருவருளை எதிர்பார்த்து ஏக்கற்றிருக்க, அத்தகைய அன்பு சிறிதும் இல்லாத எளியேனை வலியவந்து ஆட்கொண்டருளினாய். இங்ஙனம் அருளாளனாகிய நீ எனக்குச் செய்த பேருதவியை நன்றியுடன் நினைத்து உருக வேண்டு மானால், உள்ளங்கால் முதல் உச்சந்தலை வரையுள்ள என் உடம்பின் உட்பகுதியனைத்தும் நினைந்துருகு மியல்பின தாகிய நெஞ்சமாக அமையப்பெறுதல் வேண்டும். அத்தகைய நெஞ்சத்தின் கசிவாகிய அன்புடைமையினை யான் புலப்படுத்த வேண்டுமானால் உடம்பின் வெளிப்புறமெல்லாம் கண்களாக அமைந்து கண்ணீர் சொரியப் பெறுதல் வேண்டும். ஆனால் , யான் பெற்றுள்ள அணுவளவிற்றாகிய சிறிய நெஞ்சமும் வல்லென்ற கல்லின் தன்மை உடையதாதலின் உருகப் பெறா தாயிற்று. தீவினையேனாகிய எனக்குக் கிடைத்துள்ள இருகண்களுங்கூட அன்புநீர் சொரியும் தன்மையின்றி மரக்கண்களைப் போன்று உணர்ச்சியற்றனவாயின" என்பது இத் திருப்பாட்டின் பொருளாகும்.

சுட்டுணர்வுக்கு எட்டா இயல்பினனாகிய இறைவனது அருமையையும், அரியதில் அரிய அம்முதல்வன் மருவிய கருணைமலையாய் வெளிப்பட்டு ஐம்புலன்கள் ஆரஆசிரியத் திருமேனி கொண்டு எழுந்தருளிவந்து அருள்புரிந்த எளிமைத் திறத்தையும், உயிராகியதாம், சுட்டுணர்வுடைய உலகம் போன்று அசத்தாகவோ சுட்டுணர்வுக்கு எட்டாத முதல்வனைப் போன்று சத்தாகவோ அமையாது. சத்தும், அசத்தும் ஆகிய அவ்விரண்டின்பாற்படாது தனித்துள்ள எளிமை நிலையையும்

**"வண்ணந்தான் சேயதன்று, வெளிதேயன்று,**
**அநேகன், ஏகன்,அணு,அணுவிலிறந்தாய் என்று அங்கு**
**எண்ணந்தான் தாடுமாறி இமையோர் கூட்டம்**
**எய்துமாறறியாத எந்தாய்! உன்றன்**
**வண்ணந்தான் அதுகாட்டி வடிவுகாட்டி**
**மலர்க்கழல்கள் அவைகாட்டி வழியற்றேனைத்**
**திண்ணந்தான் பிறவாமற் காத்தாட் கொண்டாய்**
**எம்பெருமான் என்சொல்லிச் சிந்திக்கேனே"**

எனவும்,

**"சிந்தனைநின் றனக்காக்கி நாயினேன்றன்**
**கண்ணிணைநின் திருப்பாதப் போதுக்காக்கி**
**வந்தனையும் அம்மலர்க்கே யாக்கிவாக்குன்**
**மணிவார்த்தைக் காக்கி ஐம்புலன்களார**

**வந்தனை ஆட்கொண்டுள்ளே புகுந்த விச்சை**
**மாலமுதப் பெருங்கடலே மலையேயுன்னைத்**
**தந்தனை செந்தாமரைக் காடனையமேனித்**
**தனிச்சுடரே இரண்டுமிலித்தனிய னேற்கே"**

எனவும் வரும் திருப்பாடல்களில் அடிகள் தெளிவாகக் குறித்துள்ளமை அறியத்தக்கதாகும். "சத்தும் அசத்தும் ஆகிய இரண்டினையும் அறியுந்தன்மைத்தாய், அறிவிக்க அறிவதாகிய உபதேசியாய், நிலைபெற்ற சத்து, அசத்து இரண்டன்பாலும் அநுப அறிவுள்ளதாயுள்ள அதுவே சத்தும் அசத்தும் அல்லாத சதசத்தாகிய ஆன்மா" என்பர். * (*சிவஞானபாடியம், ஏழாஞ் சூத்திரம் 3-ஆம் அதிகாரம்) ஆன்மாவுக்குரிய இவ்வியல்பினை 'இரண்டுமிலித் தனியனேன்' என்ற தொடரில் அடிகள் தெளிவாகச் சுட்டியள்மை காணலாம். இவ்வாறே ஆசிரியர் மெய்கண்ட தேவரும் 'இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா' என ஆன்மாவிக்குரிய சிறப்பிலக்கணம் உணர்த்தியுள்ளார். 'இரண்டு மிலித் தனியனேன்' என்ற திருவாசகத்தொடரை அடியொற்றி யமைந்ததே 'இரண்டலா ஆன்மா' எனவரும் சிவஞானபோதத் தொடராகும். * ( *சிவஞானபோதம், ஏழாஞ் சூத்திரம்)

ஆடுகின்றிலை' எனத் தொடங்கும் நான்காம் பதிகம் ஆத்தும சுத்தி என்னும் தலைப்பில் அமைந்ததாகும். ஆன்மசுத்தி யாவது, உயிர், பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் அறியப் படாத முதல்வனை அவனருளிய சிவஞானத்தாலே தன்னறிவின் கண்ணே நாடிக்கண்டு அம்முதல்வன் அருள்வழி அடங்கி நிற்றலால் மனமாசு நீங்கித் தூய்மை பெறுதல். ஆன்மசுத்தி யென்பதற்கு அனுபவத்தழுந்தல் என முன்னோர் கருத்துரைப்பர். பதிஞானத்தாற் சிவபரம்பொருளைக் கண்ட காட்சி சலியாமைப் பொருட்டு அவ்விறைவன் செய்த பேரருளை நினைந்து அவனடிக்கு அன்புடையராய் ஆடுதல், என்புருகிப்பாடுதல், பாதமலர் சூடுதல் ஆகியவற்றை மேற்கொண்டு அவனருளில் அழுந்துதலே உயிர்கள் தூய்மை பெறுதற்குரிய நெறிமுறை என்பதனை,

**ஆடுகின்றிலை கூத்துடை யான்கழற் கன்பிலை யென்புருகிப்**
**பாடுகின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை பணிகிலை பாதமலர்**
**சூடுகின்றிலை சூட்டுகின்றதுமிலை துணையிலி பிணநெஞ்சே**
**தேடுகின்றிலை தெருவுதோ றலறிலை செய்வதொன் றறியேனே**

என இப்பதிகத்தின் முதற்பாடலில் அடிகள் தம் நெஞ்சிற்கு அறிவுறுத்தியிருத்தல் அறியத்தக்கதாகும். இங்ஙனம் இறைவனை நினைந்து போற்று முகத்தால் நெஞ்சந் தூய்மைபெறும் என்பதும்,

அத்தூய்மை தானும் இறைவனது திருவருளாலேயே உயிர்கள் பெறத்தக்கதென்பதும்,

**'நெஞ்சினைத் தூய்மை செய்து நினைக்கு நினைப்பியாதே**
**வஞ்சமே செய்தியாலோ வானவர் தலைவனே நீ' (4-23-9)**

எனவரும் நாவுக்கரசர் வாய்மொழியாற் புலனாம்

'அறிவிலாத எனைப்புகுந்து ஆண்டுகொண்டு அறிவதை யருளி, மேல்நெறியெல்லாம் புலமாக்கிய ஏந்தை' எனவும், 'நம் களவறுத்து நின்றாண்டமை கருத்தினுட் கசிந்துணர்ந் திருந்தேயும்..............பளகு அறுத்து உடையான் கழல் பணிந்திலை' எனவும் வரும் தொடர்கள், ஆன்மா சிவனருளால் தூய்மை பெறுதலைச் சுட்டி நிற்பனவாம்.

'இருகையானையை' எனத்தொடங்கும் ஐந்தாம் பதிகம், 'கைம்மாறு கொடுத்தல்' என்னுந் தலைப்புடையதாகும். தன்னைச் சிவனிடத்திலே கொடுத்தல் என்பது இதன் பொருள். தன்னை முன்னம் நினைக்கத் தந்துதவிய இறைவனுக்கு ஆன்மா, தன் ஆற்றலற்ற நிலையினை யுணர்ந்து தன்னையே கைம்மாறாகக் கொடுத்து, இறைவன் அருள்வழி அடங்கி யொழுகும் நன்றியுணர்வினைப் புலப்படுத்தும் முறையில் அமைந்தது இப்பதிகமாதலின் கைம்மாறு கொடுத்தல் என்னும் பெயர்த் தாயிற்று. இறைவன் தமக்குப் புரிந்த பேரருளுக்குக் கைம்மாறாகத் தாம் ஒன்றும் செய்ய இயலாத எளிமை நிலையினை நினைந்திரங்கிய அடிகள, தம்மையே கைம்மாறாக ஏற்றுக் கொள்ளும்படி வேண்டிப் போற்றுகின்றார்.

'என்னுளக்கருவை' எனவும் 'தொண்டனேற்கு உள்ளவா வந்து தோன்றினாய்' எனவும் 'யாவரும் சிந்தையாலும் அறிவருஞ் செல்வன், முந்தி என்னுள் புகுந்தனன்' எனவும், 'எட்டினோடு இரண்டும் அறியேனையே பட்டி மண்டபம் ஏற்றினை' எனவும் இறைவனது கைம்மாறு வேண்டாக் கருணைத்திறத்தை நினைந்துருகிய வாதவூரடிகள், முட்டையினை விட்டு வெளியேறும் பறவைக்குஞ்சினைப் போன்று தம் யாக்கைத் தொடர்பினை உதறிவிட்டு இறைவனையே தஞ்சமெனப் பற்றியுய்யும் கருத்துடையரானர் என்பது,

**காணலாம் பரமே கட்கு இறந்ததொர்**
**வாணிலாப் பொருளே இங்கொர் பார்ப்பெனப்**
**பாணனேன்* படிற்றாக்கையை விட்டுனைப்**
**பூணுமாறறியேன் புலன் போற்றியே.** (* வாழ்நன் என்ற சொல் வாணன் எனத்திரிந்து நின்றாற் போன்று பாழ்நன் என்பது பாணன் எனத்திரிந்து நின்றது. பாணனேன் என்புழி என் தன்மையொருமை விகுதி, பாழ்நன் - வெறுவியன்.)

எனவரும் திருப்பாடலாற் புலனாம். யாக்கையைத் துறந்து நின்கழலைப் பற்றிக்கொள்ளும் ஆற்றலில்லாத எளியேனை நின் அன்பர் கூட்டத்திற் கூவிப் பணி கொள்ளுதல் வேண்டும் என்பார். 'கொள்ளுங்கில்லெனை அன்பரிற் கூய்ப்பணி'* (*நின்னையறிந்து பற்றிக்) கொள்ளும் ஆற்றலற்ற என்னை நின்னுடைய அன்பர் கூட்டத்திற் கூவியழைத்துப் பணி கொள்வாயாக' என்பது இத்தொடரின் பொருளாகும். இதற்கு இதுவே பொருளென்பது 'கேட்கவுங் கில்லேனே' (திருவாசகம்33) என அடிகள் பிறாண்டுங் கூறுதலாற் புலனாம். கொள்ளுங் கில்லேனை என்பது, கொள்ளுங்கில் லெனை எனக் குறுகி நின்றது.) என இறைவனை வேண்டுகின்றார்.

'ஈசனே யென்னெம்மானே' எனத்தொடங்கும் ஆறாம் பதிகம், அநுபோகசுத்தி எனனுந் தலைப்புடையதாகும். தன் வாழ்க்கை அநுபவங்களில் நேர்ந்த தவறுகளை யெண்ணி உள்ளங் கசிந்து இறைவனைப் போற்று முகத்தால் உயிர் தன் அநுபவங்களைத் தூய்மை செய்து கொள்ளுமாறு உணர்த்துவது இப்பதிகமாதலின் அநுபோக சுத்தி யென்னும் பெயர்த்தாயிற்று. அநுபவம் தூய்மையடையவே அதனால் உயிர்க்கு இன்பம் மேலிடுதல் இயல்பாதலின் இதற்குச் 'சுகமேலீடு' எனப் பின்னுள்ளோர் கருத்துரைப்பர்.

**'நான்யாது மொன்றல்லாப் பொல்லா நாயான**
**நீசனேனை ஆண்டாய்க்கு நினைக்க மாட்டேன்'**

எனவும்

**'செய்வதறியாச் சிறுநாயேன் செம்பொற்பாத மலர்காணாப்**
**பொய்யர் பெறும்பே றத்தனையும் பெறுதற் குரியேன் பொய்யிலா**
**மெய்யர் வெறியார் மலர்ப்பாதஞ் சேரக்கண்டும் கேட்டிருந்தும்**
**பொய்யனேன் நான் உண்டுடுத்திங்கிருப்பதானேன் போரேறே'**

எனவும்,

**'மலமாக்குரம்பை இது மாய்க்க மாட்டேன் மணியே**
**யுனைக்காண்பான்**
**அலவா நிற்கும் அன்பிலேன்'**

எனவும், 'ஊர்நாயிற் கடையானேன் நெஞ்சுருகாதேன் கல்லாமனத்தேன் கசியாதேன்' எனவும், 'சோரனேன் இங் கொருத்தி வாய்துடித்த வாறும் துகிலிறையே சோர்ந்தவாறும் முகங்குறுவேர், பொடித்த வாறும் இவையுணர்ந்து கேடேன் றனக்கே சூழ்ந்தேனே' எனவும் அடிகள் தம்முடைய பிழைகளை நினைந்து வேசறுகின்றராதலின், இங்ஙனம் அகங்கரைந்துருக வெளிவந்த இத்திருப்பதிகம், அநுபோக சுத்தி என்னுந் தலைப்புக்கு ஏற்புடைதாய்த் 'தேனைப்பாலைக் கன்னலின்

தெளிவை யொளியைத் தெளிந்தார்தம் ஊனையுருக்கும் உடையானை' உள்கி உள்ளமுருகும் பெருங்காதலாகிய சுகமேலீட்டுக்குச் சிறந்த இலக்கியமாயிற்று.

'தரிக்கிலேன் காயவாழ்க்கை சங்கராபோற்றி' எனத் தொடங்கும் ஏழாந்திருப்பதிகம், 'காருணியத்திரங்கல்' என்னுந் தலைப்புடையதாகும். காருணியமாவது இறைவன் உயிர்கள்பால் வைத்த பெருங்கருணைத்திறம், பாசத் தொடர்புகளை அறவே போக்குவதாய்ச் சிவப்பேற்றுக்குக் காரணமாய் உள்ள இறைவனது திருவருள் பதியப்பெற்ற உயிர், முதல்வனது பெருங்கருணைத் திறமாகிய அதனையே நினைந்து போற்றும் முறையில் இரங்கி வேண்டுவதாக அமைந்தது இப்பதிகமாதலின், காருணியத்திரங்கல் எனக் குறிக்கப் பெறுவதாயிற்று. தம்முடைய இடர்களையெல்லாம் விரைந்து களைதல் வேண்டும் என்னும் துடிதுடிப்புடன் இறைவனது பேரருளை எதிர்நோக்கி அடிகள் இரங்கிப் போற்றும் முறையீடுகளாக இப்பதிகத் திருப்பாடல்கள் அமைந்துள்ளன.

**போற்றியோ நமச்சிவாய புயங்கனே மயங்குகின்றேன்**
**போற்றியோ நமச்சிவாய புகலிடம் பிறிதொன்றில்லை**
**போற்றியோ நமச்சிவாய புறமெனைப் போக்கல்கண்டாய்**
**போற்றியோ நமச்சிவாய சயசய போற்றி போற்றி,**

எனத் திருவாதவூரடிகள் திருவைந்தெழுத்தாகிய மந்திரத்தை 'ஓம்' என்னும் பிரணவத்தினுடன் போற்றி உலகமுய்யத் திருவாய் மலர்ந்தருளிய அன்பின்திறம் இங்கு நினைந்து போற்றத் தகுவதாகும். இங்ஙனம் இறைவனது பேரருளின் திறம் வெல்க வெல்க (சய சய) எனப் போற்றிப் பரவும் முறையீடாக அமைந்த இப்பதிகத்திற்குச் 'சிவனுடைய வெற்றிப் பாட்டிரங்கல் எனக் கருத்துரைப்பர் பின்னுள்ளோர்.

'புணர்ப்பதொக்க' என்னும் முதற் குறிப்புடைய எட்டாந் திருப்பதிகம். 'ஆனந்தத் தழுந்தல்' என்னுந் தலைப்புடையதாகும். இங்கு ஆனந்தம் என்றது, பொறிகளின் வாயிலாக உயிர்கள் நுகரும் உலக வாழ்வாகிய சிற்றின்பத்தையன்றி, மெய்யுணர்வின் வாயிலாக நுகரத்தக்க சிவானந்தமாகிய பேரின்பத்தினையேயாம். இதன் இயல்பினைப் 'பேரானந்தம்' எனவும் 'உவப்பிலா ஆனந்தத்தேன்' எனவும் 'அந்தமொன்றில்லா ஆனந்தம்' எனவும் அடிகள் விளக்கியுள்ளார். அழுந்தல் என்றது, தான் என்னும் உணர்வு அற அப்பேரின்பத்திற் படிதலை, திருவுடைய சிந்தையராகிய திருவாதவூரடிகள், தம்மை ஆண்டு கொண்டருளிய இறைவனை நோக்கி, "எம்பெருமானே, என்னை நின்னேடு பிரிவறக் கூட்டிக்கொள்வாய் போன்று என்னை அடிமை கொண்டு யான் நின்னையே தஞ்சமெனக்கொண்டு

தொண்டு பூணும்வண்ணம் அருட்கண்ணால் நோக்கி யருளினாய். என்னை நின்னுடன் இரண்டற இயைத்துக் கொள்ளுதற்கு இது காலமன்று எனக்கருதி நீ அதனைச் செய்யாது காலந் தாழ்த்தனையாயின், ஆண்டானாகிய நினக்கும் நின்னால் ஆட்கொள்ளப் பெற்ற அடிமையாகிய எனக்கும் உள்ள பண்டைத்தொடர்பு என்னாவது? அழகிய அருளாளனாகிய தலைவனே! நீ என்னை நின்னுடன் கூட்டிக்கொள்க; அல்லது கூட்டிக்கொள்ளாது தவிர்க (அதுபற்றி எனக்குக் கவலையில்லை). நின் திருவடிக்கண்ணே எனது அன்பு பொருந்தும்படி செய்வாயாக. அத்தகைய பேரன்பே மேலான சிவபோகத்தை அடியேற்கு அளிப்பதாகுக" எனப் போற்றும் நிலையில் அமைந்தது.

**புணர்ப்ப தொக்க எந்தை யென்னை யாண்டுபூண நோக்கினாய்**
**புணர்ப்பதன்றி தென்றபோது நின்னொடென்னோ டென்னிதாம்**
**புணர்ப்பதாக அன்றிதாக அன்புநின் கழற்கணே**
**புணர்ப்பதாக அங்கணாள புங்கமான போகமே.**

எனவரும் திருப்பாட்டாகும். இறைவன் திருவடிக்கண் செலுத்தும் அன்பொன்றே இந்திரன் முதலியோர் பதவிகளை எல்லாம் கீழ்படுத்து எல்லா இன்பங்களுக்கும் மேலதாகிய பேராவியற்கையாகிய பேரின்ப நிலையை * நல்க வல்லது என்பதனை,

(*'ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே
என்னுடையன்பே' என்பர் பின்னும்)

**'போகம்வேண்டி வேண்டிலேன் புரந்தராதி யின்பமும்**
**ஏகநின் கழலிணை யலாதிலேன் என் எம்பிரான்'**

எனவரும் தொடரில் அடிகள் தெளிவாகக் குறித்துள்ளார்.

'விச்சுக்கேடு' எனத் தொடங்கும் ஒன்பதாம் பதிகம், 'ஆனந்த பரவசம்' என்னும் தலைப்புடையதாகும். மேற்பதிகத்திற் குறித்தவண்ணம் சிவானந்தமாகிய பேரின்பத்தில் தலைப்படக் கிடைத்த நல்லுயிர் மேன்மேலும் உலப்பிலா ஆனந்தமாகிய அதன்கண் ஈடுபட்டுத் தன்வசம் அழிதல் ஆனந்த பரவசம் ஆகும். பரவசம் என்பதற்குப் பிறர்வயப் படல் என்பது பொருள். ஆயினும் ஈண்டு அச்சொல் தன்வசம் அழிதல் என்ற கருத்தில் ஆளப்பெற்றுளது. * (*திருவாசகம், திருச்சதகம், கதிர்மணி விளக்கம், பக்கம் 371) உயிர், கருவிகரணங்களின் சார்பு உண்மை பற்றாது சிவானந்தத்தில் தன்வசமழிந்து தோய்தலைக் குறித்தது இத்திருப்பதிகமாகும்.

'திருவாரூரிற் கோயில்கொண்டருளிய பிச்சைத் தேவனாகிய பொருமானே! இவ்வுலகிற் பொய்யாகிய பயிர்க்கு விதை யில்லாமற் போதல் கூடாது என்னும் கருத்துடன் பொய்க்குரிய விதையாக என்னை இங்கே சேமித்துவைத்துள்ளாய். நின்பால் ஆராவிருப்புடைய மெய்யடியா ரெல்லாரும் நின் திருவடியை யடைந்து இன்புறுகின்றார்கள். யானே நின் அருள் வெள்ளத்தில் அகப்பட்டும் அதனை நுகர்ந்தின்புறும் உணர்வின்றி எனது அறியாமையாலுளதாகிய அச்சங் காரணமாகத் துன்பத்துள் ஆழ்ந்துபோகின்றேன். ஆற்றலற்ற யான் வேறு என் செய்யவல்லேன்? நின் அருளாரின்பத்தை நுகர்தற்குரிய உபாயத்தை எளியேற்கு உரைத்தருள்வாயாக' எனத் திருவாதவூரடிகள் இறைவனை நோக்கி வேண்டுவதாக அமைந்தது,

**விச்சுக்கேடு பொய்க்காகா தென்றிங் கெனைவைத்தாய்**
**இச்சைக்கானா ரெல்லாரும் வந்துன் றாள்சேர்ந்தார்**
**அச்சத்தாலே யாழ்ந்திடு கின்றேன் ஆரூரெம்**
**பிச்சைத் தேவா என்னான் செய்கேன் பேசாயே.**

எனவரும் திருப்பாட்டாகும். இதன்கண் 'அச்சத்தாலே ஆழ்ந்திடுகின்றேன் நான் என்செய்கேன்' என வரும் தொடர் அடிகளது பரவச நிலையைப் புலப்படுத்துவதாகும். இறைவனது பேரருளை நிரம்பப் பெற்ற அடிகள், 'மெய்யடியார்கள் எல்லோரும் நின் திருவடியைச் சார்ந்து பேரா இன்பத்தில் திளைத்து ஆனந்த பரவசராக அமர்ந்துள்ளார்கள். பொய்ய னாகிய யான் மட்டும் புறமே போந்து தனித்து வருந்துகின்றேன்' என அருள்பெறாதாரைப் போன்று அழுங்கிக் கூறுவனவாகிய திருப்பாடல்களையுடைய இத்திருப்பதிகம், அடிகள் ஆனந்த பரவசராய்த் தன்வசமழிந்த நிலையினை இனிது புலப்படுத்துவதாகும்.

'மாறிலாத மாக்கருணை வெள்ளமே' எனத் தொடங்கும் பத்தாந் திருப்பதிகம் 'ஆனந்தாதீதம்' என்னுந் தலைப்புடையது. ஆனந்தம்-மெய்யுணர்வினால் நுகரத்தகும் பேரின்பம். ஆதீகம்-கடந்தநிலை. அஃதாவது பேரின்பத்தின் உயர்ந்த எல்லை. இதனை 'அதீதநிலைக் கண்ணதாகிய சிவத்துவ விளக்கம் எனப்படும் பரமசுகம்' எனக்குறிப்பிடுபவர் சிவஞான முனிவர்.'* (*சிவஞானபாடியம் பதினோராஞ்சூத்திரம்.) இறைவ னருளால் நிகழ்வது ஆனந்த விளக்கம். ஆனந்தத்தில் ஞானநிலையோடு தோய்தல் ஆனந்தத் தழுந்தல் என்றும், அத்தோய்வு முதிர முதிர ஆன்மா தன்வயமழிதல் ஆனந்த பரவசம் என்றும், இங்ஙனம் தன் வசம் அழிந்த நிலையில் ஏற்பட்ட அதீதநிலையே ஆனந்தாதீதம்

என்றும் கூறுவர்.'* (*திருவாசகம், திருச்சதகம், கதிர்மணி விளக்கம்) இந்நிலையில் காண்பான் காட்சி, காணப்படுபொருள் என்னும் வேறுபாடில்லையாகும். தன்வசமழிந்த நிலையில் ஒரோவழிப் பண்டைப் பாசத் தொடர்பால் 'இதனை யான் நுகர்கின்றேன்' எனக் கருதும் தன்னுணர்வு முற்படுதலுங்கூடும். அதீதமாகிய கடந்த நிலையில் இத்தகைய நினைவு நிகழ்தற்கு இடமில்லை. இத்தகையை ஆதீதத்தின் இயல்பினை 'எனை, நானென்பதறியேன் பகலிர வாவதுமறியேன்' என வரும் அடிகளது அநுபவ மொழியால் உணரலாம்.

**அப்பனே யெனக்கமுதனே ஆனந்தனே அகம்**
**நெக அள்ளூறுதேன்**
**ஒப்பனே உனக்குரிய அன்பரில் உரியனாயுனைப்**
**பருக நின்றதோர்**
**துப்பனே சுடர் முடியனே துணையாளனே**
**தொழும்பாள ரெய்ப்பினில்**
**வைப்பனே எனைவைப்பதோ சொலாய் நையவையகத்**
**தெங்கள் மன்னனே.**

எனவருந் திருப்பாடல், அடிகள் பெற்ற ஆனந்தாதீத நிலையினைக் குறித்தல் அறியத்தக்கதாகும்.

## 6. நீத்தல் விண்ணப்பம்

திருப்பெருந்துறையில் ஆசிரியத்திருமேனி கொண்டு எழுந்தருளியிருந்து வாதவூரடிகளை ஆட்கொண்டருளிய சிவபெருமான், 'இன்னும் சிலநாள் இங்கிருப்பாய்' எனக் கூறி மறைந்தனனாக, ஆசிரியனது பிரிவாற்றது மனங் கலங்கிய அடிகள், இறைவன் பணித்தவண்ணம் திருப்பெருந் துறையி லிருந்து திருவுத்தரகோசமங்கையை அடைந்து திருக்கோயிலிற் புகுந்தவர், தம்மை ஆண்டுகொண்டருளிய ஆசிரியத் திருமேனியைக் காணப்பெறாராய்ப் பெரிதும் வருந்தி, 'உத்தரகோசமங்கைக்கு அரசே, அடியேனைக் கைவிட்டு விடுவாயோ? என நெஞ்சம் நெக்குருகி நின்று நீத்தல் விண்ணப்பம் என்னும் பனுவலைப் பாடிப் போற்றினார் என்பதும், அந்நிலையில் உத்தரகோச மங்கைப்பெருமாள் அடிகட்கு ஆசிரியத் திருக்கோலத்தைக் காட்டி அருள்புந்தான் என்பதும் வரலாறு. இச்செய்தி,

**'உத்தரகோச மங்கை யூரினிற் சென்று புக்கார்'**

எனவும்,

**'சடையவர் கோயிலெய்தித் தம்மைவந் தடிமைகொண்ட**
**வடிவது காணாராகி மயங்கி வெய்துயிர்த்து வீழ்ந்து**

**'விடுதிகொல்என்னை' என்று நீத்தல் விண்ணப்பம் என்னும்**
**தொடைகெழு பாடல் ஓதக் காட்டினார் தொல்லைமேனி'**

எனவும் வரும் திருவாதவூரடிகள் புராணத்தால் அறியப்படும்.

நீத்தல் விண்ணப்பமாகிய இப்பனுவல், கட்டளைக் கலித்துறையாக அமைந்த ஐம்பது திருப்பாடல்களை உடையது; ஒரு பாடலின் இறுதி அடுத்த பாடலுக்கு ஆதியாக அமையக் 'கடையவனேனை' எனத் தொடங்கி 'அமுதுண்ணக் கடையவனே' என மண்டலித்து முடிந்துளது. 'நின் திருவடிக்குத் தொண்டுபட்ட என்னைக் கைவிட்டு விடுதலாகாது' என வாதவூரடிகள் ஆண்டவனை நோக்கி வேண்டிக்கொள்ளும் முறையில் அமைந்தமையால், இது 'நீத்தல் விண்ணப்பம்' என்னும் பெயர்த்தாயிற்று. இதன் முதல் இருபது பாடல்களிலும் நாற்பத்தெட்டாம் பாடலிலும் 'உத்தரகோச மங்கைக்கு அரசே' என இறைவனை அடிகள் அழைத்துப் போற்றுதலைக் கூர்ந்துநோக்குங்கால் நீத்தல் விண்ணப்பமாகிய இப்பதிகம் திருவுத்தரகோசமங்கையில் அருளிச் செய்யப் பெற்றதென்பது இனிது புலனாம்.

நீத்தல் விண்ணப்பத்திற்குப் 'பிரபஞ்ச வைராக்கியம்' என முன்னோர் கருத்துரை வரைந்துள்ளனர். 'பிரபஞ்ச வைராக்கியம் என்னும் இத்தொடர்க்கு 'உலக வாழ்க்கையிற் பற்றறுத்தலாகிய உறுதிப்பாடு' என்பது பொருள். திருப்பெருந்துறையில் இறைவன் அந்தணனாகி வந்து அழகமர் திருவுருக்காட்டி ஆண்டருளிய பின்னர், உலகத் தொடர்பினை அறவே உதறிவிட்டு இறைவனோடு பிரிவறக்கலத்தலாகிய பேரின்ப நிலையினைத் தலைப்பட்டு இன்புற முந்தும் அடிகளார், இறைவன் 'இன்னும் சின்னாள் இங்கு இருத்தி' எனக் கூறி மறைந்தனனாக, அப்பிரிவினைத் தினைத்தனைப் பொழுதும் தரித்திருக்க வொண்ணாராய், உலக வாழ்க்கையில் தமக்குள்ள வெறுப்பும் முதல்வன் திருவடியினைத் தலைப்படுதற்குரிய பேரன்பினைப் பெறுதல் வேண்டுமென்னும் பெருவேட்கையும் விளங்க அருளிய பனுவல் நீத்தல் விண்ணப்பம் ஆதலின் இதற்குப் 'பிரபஞ்ச வைராக்கியம்' என முன்னோர் கருத்துரை வரைந்தனர். ஆண்டவனது திருவடியைத் தலைப்படுதற்குச் சாதனமாகிய மெய்யன்பினது வியக்கத்தக்க திறத்தினை விளக்கும் திருச்சதகத்தினையடுத்து அதன் பயனாக உலக வாழ்க்கையிற் பற்றொழிவின் உறுதிப்பாட்டினைப் புலப்படுத்தும் நீத்தல் விண்ணப்பம் அமைந்திருத்தல் கூர்ந்து உணரத்தக்கதாகும்.

'யாவர்க்குங் கடையேனாகவுள்ள எளியேனை நினது பெருங்கருணைத் திறத்தால் உளங்கலந்து நின்று ஆண்டு

கொண்டருளிய ஏறூர்ந்த செல்வனே, என்னை இத்துயர் நிலையிற் கைவிட்டு விடுவாயோ? வளமிக்க புலியின் தோலை உடையாகக் கொண்டவனே, நிலைபெற்ற திருவுத்தரகோசமங்கையைத் தலைநகராகக் கொண்டு வீற்றிருந்தருளும் வேந்தனே, செஞ்சடைக் கடவுளே, அடியேன் பெரிதுந் தளர்வுற்றேன். எம்பெருமானே, தளர்ச்சி நீக்கி அடியேனைத் தாங்கிக் காத்தருள்வாயாக' என்பார்,

**கடையவ னேனைக் கருணையினாற்கலந் தாண்டுகொண்ட**
**விடையவ னேவிட் டிடுதிகண்டாய் விறல்வேங்கையின் தோல்**
**உடையவ னேமன்னும் உத்தர கோசமங்கைக்கரசே**
**சடையவ னேதளர்ந் தேனெம்பி ரானென்னைத் தாங்கிக் கொள்ளே**

எனத் திருவாதவூரடிகள் உத்தரகோசமங்கைப் பெருமானைப் பரிந்து வேண்டுகிறார். இதன்கண் 'விட்டிடுதி' என்னும் இகரவீற்று முன்னிலை யொருமை எதிர்கால வினைச்சொல் 'கண்டாய்' என்னும் முன்னிலையசையினைப் பெற்று 'விட்டு விடாதே' என்ற பொருளைத் தந்தது. இச்சொற்கு இதுவே பொருள் என்பதனை, 'விடுதிகொல் என்னையென்று நீத்தல் விண்ணப்பமென்னுந் தொடைகெழு பனுவல் ஓத' எனவரும் திருவாதவூரடிகள் புராணச் செய்யுளில் கடவுள் மாமுனிவர் தெளிவாகக் குறித்துள்ளமை காண்க.

நீத்தல் விண்ணப்பம் என்ற தொடர்க்கு உலகப் பற்றை நீத்தற் பொருட்டு இறைவனிடத்து வேண்டிய வேண்டுகோள் எனவும், 'என்னை நீத்து விடாதே' என இறைவனை நோக்கிச் செய்துகொண்ட வேண்டுகோள் எனவும் இருவகையாக நம் முன்னோர் பொருள் கொண்டுள்ளார்கள் எனத் தெரிகிறது. இந்நுட்பம்,

**'மித்தையுலகினை யகற்றி, விடாமல் எனை ஆண்டருளென்**
**றத்தர் அறிந்திட நீத்தல் விண்ணப்பம் அறைந்ததுவாம்'**

என வரும் திருவாசக உண்மையால் புலனாதல் காணலாம். இத்தொடர், 'மித்தை உலகினை அகற்றி எனை ஆண்டருள்' எனவும், 'விடாமல் எனை ஆண்டருள்' எனவும் இயைந்த இப்பனுவலில் அமைந்த இருவகை விண்ணப்பங்களையும் ஒருங்கு சுட்டிநிற்றல் அறியத்தக்கதாகும்.

## 7. திருவெம்பாவை

திருவாதவூரடிகள் திருவண்ணாமலையினை யடைந்து இறைவனை வழிபட்டு அத்தலத்தில் தங்கியிருக்கும் நிலையில் மார்கழித் திங்கள் வந்ததாக, இளமகளிர் வைகறைப் பொழுதில் துயிலுணர்ந்தெழுந்து ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்

சோதியாகிய இறைவனது பொருள்சேர் புகழினைப் போற்றிசைத்துத் தம்மையொத்த மகளிரைத் துயிலெழுப்பிக் கொண்டு சென்று பொய்கையில் நீராடி அண்ணாமலையானை அன்பினாற் பாடிப் போற்றி மார்கழி நீராடலாகிய நோன்பினைச் சிறப்புறக் கொண்டாடினர் எனவும், அவ்வழகிய காட்சியைக் கண்ட மணிவாசகப் பெருமான், அம்மகளிர் வைகறைப் பொழுதில் ஒருவரை யொருவர் எழுப்பிச் சென்று ஆர்த்த பிறவித்துயர் கெடப் பூத்திகழும் பொய்கையில் நீராடி இறைவனை யேத்திவழிபடும் நிலையில் அம்மகளிர் கூறும் உரைகளாக இத்திருவெம்பாவையைப் பாடியருளினாரெனவும் கடவுள் மாமுனிவர் கூறுவர்; * (* திருவாதவூரடிகள் புராணம், திருவம்பலச் சருக்கம், செய்யுள் 383 - 385)

திருவெம்பாவை இருபது பாடல்களை உடையது. இப்பாடல்கள் யாவும் மகளிர் ஒருவரை யொருவர் நோக்கி 'எம்பாவாய்' என அழைத்துக் கூறும் முறையில் 'பாவைமார் ஆரிக்கும் பாடலாக' அமைந்திருத்தலால் திருவெம்பாவை யென்பது இதற்குரிய பெயராயிற்று. பாவை என்னும் ஐகார வீற்றுப்பெர், 'ஐ ஆயாகும்' (தொல்-விளிமரபு. 4) என்னும் விதிப்படி 'பாவாய்' என விளியேற்றது. மகளிர் ஒருவரையொருவர் துயிலுணர்ததி அழைத்து நீராடி இறைவளைப் போற்றும் முறையில் அமைந்த இப்பனுவலைப் 'பாவைப் பாட்டு' என வழங்குவர் பேராசிரியர், "தரவின்றாகித் தாழிசை பெற்றும்" (தொல்-செய்யுளியல் 149) எனவரும் சூத்திரவுரையில் "பாவைப்பாட்டும் அம்மனைப் பாட்டும் முதலாயின நான்கடியின் இகந்து வருவனவாயின" எனப் பேராசிரியர் குறித்துள்ளமை திருவாசகத்திலுள்ள திருவெம் பாவை, திருவம்மானை ஆகிய வைப்பு முறையினை யொட்டி அமைந்திருத்தல் காணலாம். பெரும்பற்றப்புலியூர் நம்பியும் 'திருந்துபூவல்லி யுந்தி தோணோக்கம் சிறந்த பாவை' என இத்திருவெம்பாவையைப் 'பாவை' என்ற பெயராலேயே குறித்துள்ளார். திருமாலடியாராகிய ஆண்டாள் அருளிய பனுவல் திருப்பாவை என வழங்கப்பெறுதல் இப்பழைய வழக்கினை நினைவுபடுத்துவதாகும்.

இளமகளிர் இசையுடன் பாடியாடும் பல்வரிக் கூத்தாக அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார வுரையிற் காட்டியவற்றுள், அம்மனை, நல்லார்தந் தோள் வீச்சு (தோணோக்கம்), சாழல், உந்தி, அவலிடி (பொற்சுண்ணம்), கொய்யு முள்ளிப்பூ (பூவல்லி) என்பவற்றுக்குரிய பாடல் வகைகள் திருவாசகத்தில் அமைந்துள்ளன. இவையேயன்றி, கோத்தும்பி, தெள்ளேணம், பொன்னூசல், குயிற்பத்து முதலிய மகளிர் விளையாட்டிற்குரிய

இசைப்பாடல்களும் உள்ளன. இங்ஙனம் மணிவாசகப்பெருமான் இறைவனது பொருள்சேர் புகழை விரித்துரைக்கும் திருப் பாடல்களை விளையாடும் பருவத்து இளமகளிர் கூற்றில் வைத்து அருளிச் செய்துள்ளார்.

**"மனைகள் தொறும் இறைவனது தன்மைபாடிக்**
**கருந்தடங்கண்ணார் சுழல் பந்து அம்மானைப் பாட்டயருங்**
**கழுமலமே"**

எனவும்,

**"கருகு குழல் மடவார்கடி குறிஞ்சியது பாடி**
**முருகன்னது பெருமைபகர் முதுகுன்றடைவோமே"**

எனவும் வரும் ஆளுடைய பிள்ளையார் தேவாரத் தொடர்களைக் கூர்ந்து நோக்குங்கால், பண்டைநாளில் தமிழகத்தில் வாழ்ந்த இளமகளிர் இயலும் இசையும் பயின்று இறைவனைப் போற்றுதற்குரிய சமய ஒழுங்கங்களிற் சிறப்புற்றிருந்தனர் என்பது நன்கு புலனாம். காரைக்காலம்மையார், மணலாற் சிறு வீடு கட்டி விளையாடும் இளம் பருவத்திலேயே இறைவது பொருள் சேர் புகழைப் போற்றிப் பயின்ற திறத்தை,

**'வண்டல் பயில்வனவெல்லாம் வளர்மதியம் புனைந்தசடை**
**அண்டர்பிரான் திருவார்த்தை யணைய வருவன பயின்று'**

எனச் சேக்கிழாரடிகள் பாராட்டிப் போற்றியுள்ளார். மேல் எடுத்துக் காட்டிய குறிப்புக்களால் இளமகளிர் விளையாடல் களுள் ஒன்றாகிய பாவைப்பாட்டு முறையிலேயே இத்திரு வெம்பாவையும் இயற்றப் பெற்றிருத்தல் வேண்டுமென்பது இனிது புலனாம்.

திருவெம்பாவை இருபது பாடல்களை யுடையது. இதன்கண் உள்ள பாடல்கள் யாவும் நான்கடிக்கு மேற்பட்டு எட்டடியால் இயன்ற கொச்சக வொருபோகு எனப்படும்.* (*தொல் - செய்யுளியல் 149-ஆம் சூத்திரம் பேராசிரியர் உரை.) இவற்றை இயற்றரவிணைக் கொச்சகக் கலிப்பா என வழங்குவர் பிற்காலத்தார்.* (*இப்பா கூன் பெற்று வந்த எட்டடிப் பஃறொடை வெண்பா' எனச் சீர்காழித் தாண்டவராயர் உரையிற் காணப்படுங் குறிப்பு பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை.) திருவெம் பாவைக்குச் 'சத்தியை வியந்தது' என முன்னோர் கருத்துரை கூறுவர். சத்திகளாவார் அம்பிகை, சுணாம்பிகை, கௌரி, கங்கை, உமை, பராசத்தி, ஆதிசத்தி ஞானசத்தி, கிரியாசத்தி என ஒன்பதின்மரெனவும், மனோன்மணி, சர்வபூததமனி, பலப்பிரம தனி, பலவிகர்ணி, கலவிகர்ணி, காளி, ரௌத்திரி, சேஷ்டை, வாமை என ஒன்பதின்மரெனவும் வெவ்வேறு பெயரிட்டு வழங்குவர். உலகத் தோற்றத்திற்குக் காரணராகிய சத்திகள்

*ஒன்பதின்மரும் படைப்பு முதலிய தொழில்களை நிகழ்த்தல் கருதி ஒருவரை யொருவர் தூண்டிக் கிளர்ந்தெழச் செய்து தொழிற்படும் இயல்பினை உணர்த்துவது இத்திருவெம்பாவை என்றும், இதன் முதலிலுள்ள எட்டுத் திருப்பாடல்களும் மகளிர் ஒருவரை யொருவர் துயிலெழுப்பும் நிலையில் அமைந்திருத்தலால் அங்ஙனம் எழுப்பப்பெற்ற மகளிர் எண்மரும் அவர்களை முதன் முதல் எழுப்பத் தொடங்கியவள் ஒருத்தியும் ஆக ஒன்பதின்மர் தம்முள் உரையாடும் முறையில் அமைந்தது இப்பனுவல் என்றும், நவசத்திகளின் ஆற்றல் தொழிற்படும். இயல்பினைச் சுட்டிய இத்திருவெம்பாவை ஐந்தொழிற் றிருத்கூத்தியற்றும் அம்பலவாணர்க்குரிய மார்கழித் திருவாதிரை திருவிழாவிற் பத்து நாட்களிலும் தில்லைக் கூத்தன் திருமுன்னர் முறையே ஓதி வழிபடப் பெறும் சிறப்புடைத் தாயிற்றென்றும் கூறுவது மரபு.*

*மக்களுக்குரிய ஓராண்டு வானோர்க்கு ஒரு நாள். ஆடி முதல் மார்கழி முடியவுள்ள ஆறு திங்களும் இரவு; தை முதல் ஆனி முடிய ஆறு திங்களும் பகல், இவ்வகையில் மார்கழித் திங்கள் வானோர்க்குரிய வைகறைப் பொழுதாகக் கருதப்பெறுகிறது. கூத்தப் பெருமான் திருவுருவில் திகழும் திருவாதிரையானது, நிறைமதியுடன் கூடி விளங்கும் சிறப்புடைய திருநாளாக அமைவது மார்கழித் திங்களில் ஆதலின், மார்கழித் திருவாதிரைத் திருநாள் சிவபெருமானுக்குரிய திருநாளாகக் கொண்டாடப் பெற்று வருகிறது. இத் திருவிழாவின் சிறப்பினை,*

**“கனைக்கும் அதிர்குரல் கார்வானம் நீங்கப்
பனிப்படு பைதல் விதலைப் பருவத்து
ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து
மாயிருந் திங்கள் மறுநிறை யாதிரை
விரிநூ லந்தணர் விழவு தொடங்கப்
புரிநூ லந்தணர் பொலங்கலம் ஏற்ப
வெம்பா தாக வியனில் வரைப்பென
அம்பா வாடலின் ஆய்தொடிக் கன்னியர்
முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப்
பனிப்புலர் பாடிப் பருமண லருவியின்
ஊதை யூர்தர வுறைசிறை வேதியர்
நெறிநிமிர் நுடங்கழல் பேணிய சிறப்பிற்
றையல் மகளிர் ஈரணி புலர்த்தர
வையை நினக்கு மடைவாய்த் தன்று”(பரிபாடல் 11, 74-87)**

*என ஆசிரியர் நல்லந்துவனார் குறித்துள்ளார்.*

*மேகம் பெய்யும் பருவத்தில் மழை பெய்து முடித்தமையால் தனது கடுங்குரல் நீங்கப் பனி மிகுதலால் குளிரால்*

நடுங்குதலையுடைய முன்பனிப் பருவம் வந்து எய்தியது. வெயில் கடுமையாகப் பரவாத மழையின் கடைப் பகுதியாகிய மார்கழி மாதத்தில் சந்திரன் முழுவதும் நிறைந்து மறுவுடன் விளங்கும் உவா நாளாகிய திருவாதிரைத் திருநாளின்கண் விரிநூலாகிய ஆகமங்களைக் கற்றுவல்ல அந்தணர்கள் திருவாதிரைக்குத் தெய்வமாகிய இறைவனுக்குத் திருவிழாவைத் தொடங்கிச் செய்தனர். அவ்விழாவில் முப்புரி நூலணிந்த வேதியர்கள் மக்கள் தானமாகத் தரும் பொருளை யேற்று மகிழ்ந்தனர். வளையலை யணிந்த கன்னிப் பெண்கள், 'இவ்வுலகம் வெயிலாலும் பனியாலும் வெதும்பாது மழையாற் குளிர்வதாகுக' என இறைவனை வேண்டி அம்பா வாடலாகிய நோன்பினை மேற்கொண்டு தவமுது மகளிர் அறிவுறுத்த நெறியிலே நின்றி, பனிபெய்யும் விடியற் காலத்திலேயே பருமணலையுடைய வையை யாற்று நீரிலே முழுகி யெழுந்து குளிரும் வாடைக்காற்று வீசுவதால் வையைக் கரைக்கண் வேதியர் வளர்த்த வேள்வித்தீயைப் பேணிய சிறப்புடனே தமது ஈர அணியையும் புலர வைத்தனர். மையோலை பிடித்துக் கல்வி பயிலும் இளஞ்சிறார்களுக்குப் போட்டியாக விடியற் காலையிலெழுந்து தாம் கற்ற கல்வியின் வழியொழுகும் நோன்பாகிய இவ்விளையாட்டிற் கலந்துகொண்ட கன்னிப் பெண்கள், தம் தாயின் பக்கத்தே நின்று தமக்குரிய தவமாகிய தைந்நீராடலைச் செய்தனர். இங்ஙனம் கடைச் சங்க காலத்தில் மதுரைமா நகரத்தில் வையை யாற்றின் கரையிலே நிகழ்ந்த அம்பா ஆடல் நிகழ்ச்சியை ஆசிரியர் நல்லந்துவனார் பதினொராம் பரிபாடலில் சொல்லோவியமாகப் புனைந்துரைத்துள்ளார்.

"மையோலை பிடித்த இளைய புலவரது விளையாட்டிற்கு மாறாயெழுந்து காமக் குறிப்பில்லாத விளையாட்டைச் செய்கின்ற ஆயத்தினராகிய கன்னிமகளிர் நீர்க்கண் தம்புலன்கள் அடக்கிச்செய்யுந் தவத்தை முன்னைப் பிறப்புக்களில் அடுத்தடுத்துச் செய்ததன் பயன் தானோ தம் தாயின் அருகேநின்று தவமாகிய தைந்நீராடலை நின்கட் செய்யப்பெற்றனர்? வையையே கூறுவாயாக" என வையையை நோக்கி வினவுவதாக அமைந்தது.

**'மையாட லாடல் மழபலவர் மாறெழுந்து**
**பொய்யாட லாடும் புணர்ப்பி னவரவர்**
**தீயெரிப் பாலுஞ் செறிதவமுன் பற்றியோ**
**தாயருகா நின்று தவத்தைந்நீ ராடுதல்**
**நீ யுரைத்தி வையை நதி'** **(பரிபாடல் 11, 88-92)**

என்பதாகும். இங்கெடுத்துக் காட்டிய பதினொராம் பரிபாடல், மார்கழி மாதத்துத் திருவாதிரையை யொட்டி நிகழும் மகளிர்

நோன்பாகிய தைந்நீராடலின் சிறப்பினை விரித்துரைப்பதாகும். இப் பாடலில் 'குளம்' என்றது மார்கழி மாதத்தை. திருவாதிரை நிறைமதி நாளாங்கால் ஆதித்தன் (ஞாயிறு) பூத்தடத்தின் கண் (புனர் பூசத்தில்) நிற்குமாதலின், அதனையுடைய மார்கழி மாதம் குளமெனப்பட்டது" என்பர் பரிமேலழகர். மார்கழித் திருவாதிரையில் தொடங்கித் தைத்திங்களில் நிறைவுபெறும் மகளிர் நோன்பானது, சங்க காலத்தில் தைந் நீராடல் எனவும், பிற்காலத்தில் மார்கழி நீராடல் எனவும் வழங்கப் பெற்றுள்ளது. இதனை மணிவாசகப் பெருமானும் திருமாலடியாராகிய நாச்சியாரும் மார்கழி நீராடல் என்றே வழங்கியுள்ளார்கள். நீராடலாகிய இந் நோன்பின் நிறைவு தைத் திங்களில் முற்றுப் பெறுதல் கருதித் தைந்நீராடல் எனச் சங்கப் புலவர்களும், நோன்பின் தொடக்கம் மார்கழியில் நிகழ்தல் பற்றி மார்கழி நீராடல் எனப் பின் வந்த பெருமக்களும் குறிப்பிட்டுள்ளார்கள். எனவே சங்கச் செய்யுட்களிற் குறிக்கப்பட்டுள்ள தைந் நீராடலும், திருவெம்பாவையிலும் திருப்பாவையிலும் குறிக்கப்பெற்ற மார்கழி நீராடலும் ஒரு நோன்பினையே குறித்து வழங்கும் இரு வேறு பெயர்கள் என்பது பதினொராம் பரிபாடலால் இனிது புலனாதல் காணலாம்.

சிவபெருமானுக்குரிய திருவாதிரைத் திருநாளையே முதன்மையாகக் கொண்டு இந் நீராடல் நோன்பு நிகழும் என்பது,

**'மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்**
**நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்'**

எனவரும் திருப்பாவையால் உய்த்துணரப்படும். கன்னியர் பலருங் கோலம் புனைந்து ஒருங்கு கூடிச் சென்று நீராடுதலும், பிறர் வீடுகளிற் பாடிச்சென்று ஐயமேற்றுத் தாம் பெற்ற பரிசிற் பொருள்களை வறியோர் பலர்க்கும் வழங்கி மகிழ்தலும், பாவையைச் சிறிய குழமகனாகப் பேணிச் சீராட்டி அப்பிள்ளைக்கு மற்றொருத்தியின் பாவையை மணமகளாக்கிக் கோடற்குச் சிறு சோறு சமைத்து இளமகளிர் குழுவுடன் விருந்துண்டு மகிழ்தலும் சங்க காலத்தில் நிகழ்ந்ததைந்நீராடலிற் காணப்படும் சடங்குகளாகும். இவற்றுட் சில தைப்பொங்கலை யடுத்துக் கன்னிப் பொங்கல் நாளில் தமிழ் நாட்டிற் சில விடங்களில் இள மகளிரால் மேற்கொள்ளப்பெற்று வருதலை இக்காலத்துங் காணலாம். தைந் நீராடலாகிய இந் நோன்பின்கண் கன்னிப் பெண்கள் அழகிய பாவையினை அமைத்துச் செய்யும் சடங்குண்மை கருதி இந் நோன்பு 'அம்பாவாடல்' எனப் பெயரெய்தியிருத்தல் வேண்டும். 'அம்பா-தாய், தாயோடு ஆடப் பெறுதலின் இப்பெயர்த்தாயிற்று' என்றார் பரிமேலழகர்.

**"வையத்து வாழ்வீர்காள் நாமும் நம்பாவைக்குச்**
**செய்யுங் கிரிசைகள் கேளீரோ"**

எனவும்,

**"நாங்கள் நம் பாவைக்குச் சாற்றி நீராடினால்"**

எனவும்

**"பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம் புக்கார்"**

எனவும் வரும் திருப்பாவைத் தொடர்களால் இந்நோன்பில் பாவைக்குச் செய்யும் சடங்குண்மை புலனாம்

இங்ஙனம் கன்னியர் நீராடி நோன்பு நோற்றலின் நோக்கம், நாடுமலிய மழை பெய்து நோயும் துன்பமும் நீங்கி இவ்வுலகம் இன்புறுதல் வேண்டும் என இறைவனை வேண்டி அவனது திருவருளைப் பெறுதற்பொருட்டேயாம். தமிழ் நாட்டுச் சிறுமியர்களின் இவ்வுயர்ந்த அருள் நோக்கத்தினை,

**'வெம்பாதாக வியனில வரைப்பென**
**அம்பா வாடலின் ஆய்தொடிக் கன்னியர்'**

எனவரும் தொடரில் ஆசிரியர் நல்லந்துவனார் அழகுற விரித்துரைத்துள்ளார். உலகில் அறம் பொருள் இன்பங்களாகிய ஒழுகலாறுகள் தடையின்றி நிகழ்தற்கு உறுதுணையாவது மழை. மழையின்றேல் மாநில வாழ்க்கையில்லை. இறைவனது அருளின் நீர்மையாகிய மழையினைப் பெய்விக்கும் ஆற்றல் பெறுதற் குரியார் ஒருமை மகளிரே. ஆதலால் 'உலகம் மழையாற் குளிர்வதாக' என உலகநலங்கருதி நோன்பியற்றும் கடமையும் உரிமையும் அம்மகளிர்க்கே யுரியவாயின. ஒருமை மகளிர்க்குரிய இக்கடமை யுணர்வினை மணிவாசகப் பெருமான்,

**முன்னிக்கடலைச் சுருக்கி யெழுந்துடையாள்**
**என்னத் திகழ்ந்தெம்மை யாளுடையாள் இட்டிடையின்**
**மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேற்**
**பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம்**
**என்னைச் சிலைகுலவி நந்தம்மை யாளுடையாள்**
**தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கும்**
**முன்னி யவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே**
**என்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய்.**

எனவரும் திருவெம்பாவைச் செய்யுளால் எழில்பெற விளக்கியுள்ளார். இவ்வாறே ஆண்டாள் அருளிய திருப்பாவையிலும்,

**'ஓங்கி யுலகளந்த யுத்தமன்பேர் பாடி**
**நாங்கள் நம் பாவைக்குச் சாற்றிநீ ராடினால்**

**தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்து**
**ஓங்கு பெருஞ்செந்நெ லூடு கயலுகளப்**
**பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்பத்**
**தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி**
**வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல்பெரும்பசுக்கள்**
**நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய்."**

என 'உலகம் மழையாற் பல வளமும் பெறுக' என வாழ்த்துங் குறிப்புப் புலனாதல் காணலாம்.

சங்க நூல்களில் பாவையினை வைத்துச் செய்யும் சடங்கு முதலியன தைந் நீராடல் நோன்பிற்குரியவாகச் சொல்லப்பட்டன. மகளிர்க்குரியனவாகச் சொல்லப்பட்ட அச்சிறிய சடங்குகளை விரித்துரையாமல், இருபாலாரும் இறைவனது திருவருள் பெற்று உய்யும் நோக்குடன் ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதியாகிய இறைவன் ஒருவனையே மனமொழி மெய்களால் இறைஞ்சிப் போற்றும் ஒருமைநிலை வளர இளமகளிர் விடியற் காலையிலேயே துயிலுணர்ந்தெழுந்து தம் தோழியர்களையும் எழுப்பிக்கொண்டு பொய்கையில் நீராடி இறைவனது பொருள்சேர் புகழை வாயாரப் பாடிப் போற்றும் முறையில் திருவாதவூரடிகள் இத்திருவெம்பாவையை அருளிச் செய்துள்ளார்.

இறைவனருளிய மெய்யுணர்வினால் மனமாசு நீங்கப் பெற்ற செம்புலச் செல்வராகிய அடியார்கள், ஆணவ மலமாகிய பேரிருளில் அழுந்தியுறங்கும் உயிர்களை அவ்வுறக்கத்தை விட்டு எழுப்பிப் 'பிறவி வெப்பந்தணிய இறைவனது திருவருளாகிய ஆனந்த வெள்ளத்தில் மூழ்கி யின்புற வருக என அழைக்கும் முறையில் அமைந்தது, இத்திருவெம்பாவை யெனக் கூறுவர் பெரியோர்.

**'மல விருளுற் றுறங்காமல் மன்னுபரிபாகர் அருள்**
**செலமுழுக வருகவெனச் செப்பல் திருவெம்பாவை'**

எனவரும் திருவாசக வுண்மையில் இக்கருத்து இனிது விளக்கப் பெற்றிருத்தல் அறியத்தக்கதாகும்.

வைகறையில் துயிலெழுந்து இறைவனது மெய்ப்புகழை நெஞ்ச நெக்குருக நினைந்து போற்றிவரும் இளமகளிர் தம் தோழியர்பால் வைத்த அன்பும் இறைவன் திருவடிகளில் தாம் வைத்த பத்தித் திறமும் வளர ஒருவரை யொருவர் துயிலுணர்த்தும் முறையும், நகைச்சுவை பொருந்த உரையாடும் நிலையிலும் இறைவன்பாற்கொண்ட அன்பின் திறமே மேம்பட இனிமை யாகப் பேசும் மொழித்திறமும், பொழுது புலர்வதன்முன்

பூத்திகழும் பொய்கை குடைந்தாடி அண்ணாமலையான் அடிக்கமலஞ் சென்றிறைஞ்சி அம்முதல்வனைப் பண்ணார் தமிழாற் பாடிப் போற்றும் பாங்கும், உலகம் வெயிலாலும் பனியாலும் வெம்பாது நலம்பெற வேண்டி உலகம் ஈன்ற அன்னையாகிய இறைவியின் திருவருளே யென்ன மழையைப் பெய்யப் பணிக்கும் மனவளமும், இறைவன் பால் அன்புடையவரையே தாம் கணவராகப் பெறுதல் வேண்டும் எனத் தம் மண வாழ்க்கை குறித்து இறைவனை வேண்டிப் போற்றும் மனத்திட்பமும், மன்னுயிர்கள் உய்தற் பொருட்டு ஐந்தொழில் திருக்கூத்தியற்றும் இறைவனது அருளியல்பினைப் போற்றி அம்மகளிர் தாம் மேற்கொண்ட மார்கழி நீராடல் நோன்பினை நிறைவு செய்து கொள்ளும் முறையும் திருவெம்பாவை யென்னும் இப்பனுவலிலே அன்பெனும் ஆறு கரையது புரள அடிகளால் நன்கு அருளிச் செய்யப்பெற்றுள்ளன.

இதன்கண் 'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதி' எனவும் 'மாலறியா நான்முகனுங் காணா மலை' எனவும், 'அண்ணாமலையான்' எனவும் திருவண்ணாமலைப் பெருமானை அடிகள் குறித்துப் போற்றுததால், இத்திருவெம் பாவை திருவண்ணாமலையில் அருளிச் செய்யப்பெற்ற தென்பது இனிது விளங்கும்.

## 8. திருவம்மானை

அம்மானை என்பது, மகளிர் விளையாடல்களில் ஒன்று. அம்மனைக்காய் கொண்டு விளையாடும் இள மகளிர் தம்முள் உரையாடி மகிழும் முறையில் அமைந்த வரிப்பாடல்களே இலக்கியங்களில் அம்மானை என்ற பெயராற் சிறப்பித்து வழங்கப் பெற்றுள்ளன. மகளிர் அம்மனை ஆடுங்கால் இறைவனைப் பரவிய புகழ்ப் பாடல்களையும் அரசன் முதலிய தலைவரை பற்றிய புகழ்ப் பாடல்களையும் பாடி மகிழ்வர் என்பது,

**'அம்மனை தங்கையிற் கொண்டங் கணியிழையார்**
**தம்மனையிற் பாடுந் தகையேலோ ரம்மானை'**

**(சிலப்-வாழ்த்துக்காதை)**

எனவரும் சிலப்பதிகாரத் தொடரால் இனிது விளங்கும். 'அம்மனை' என்னும் விளையாட்டில் மகளிர் மூவர் உடனமர்ந்து விளையாடுவர். அம்மூவருள் ஒருத்தி பாட்டுடைத் தலைவன் புகழ்ச் செயலைக் குறித்து வினா நிகழ்த்த, இரண்டாமவள் அவ்வினாவிற்கு விடைகூற, மூன்றாமவள் அப்புகழ்ச் செயலைத் தொடர்ந்து கூறிப் பாராட்டும் முறையிலும், அம்மூவரும் ஒருங்கு சேர்ந்து பாட்டுடைத் தலைவன் புகழைப் பாடிப் போற்றும் முறையிலும் அம்மானைப் பாடல்கள் அமைதல் இயல்பு.

**'வீங்குநீர் வேலி யுலகாண்டு விண்ணவர்கோன்
ஓங்கரணங் காத்த உரவோன்யார் அம்மானை
ஓங்கரணங்காத்த உரவோன் உயர்விசும்பில்
தூங்கெயில் மூன்றெறிந்த சோழன்காண் அம்மானை
சோழன் புகார்நகரம் பாடேலோர் அம்மானை'**

எனச் சிலப்பதிகாரம் வாழ்த்துக் காதையில் வரும் அம்மானை வரிப்பாடல்கள் வினாவும் விடையுமாக அமைந்தவை. திருவாசகத்தில் வரும் திரும்மானைப் பாடல்கள் மகளிர் பலரும் ஒருங்குசேர்ந்து பாடி மகிழும் நிலையில் அமைந்த வரிப்பாடல்களாகும். சிலப்பதிகாரத்திலுள்ள அம்மானைப் பாடல்கள் ஐந்தடிகளால் இயன்ற கொச்சக ஒருபோகாய் நாடாளும் வேந்தனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப் பெற்றவை. திருவாசகத்திலுள்ள திருவம்மானைப் பாடல்கள் ஆறடிகளாலியன்ற கொச்சக ஒருபோகாய் எல்லாவுலகிற்கும் முதல்வனாகிய சிவபெருமானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பெற்றனவாகும். இவ்வரிப் பாடல்களில் 'அம்மானை' என ஐயீறு இயல்பாகவும் 'அம்மானாய்' என ஆயீறாகத் திரிந்தும் வரும் விளிகள், அம்மானையாடும் மகளிர் தம் கையிற் கொண்ட அம்மானைக் காயினையும் தம்முடன் விளையாடும் தோழியையும் முன்னிலை யாக்கும் நிலையில் அமைந்திருத்தல் அறியத்தக்கதாகும்.

தென்னன் பெருந்துறையான் அந்தணனாய் வந்து ஆட்கொள்ளப் பெற்ற திருவாதவூரடிகள், இறைவனது அம் கருணை வார்கழலால் தம் உள்ளத்தே ஊற்றெடுத்துப் பெருகிய பேரானந்தத்தில் திளைக்கும் நிலையில் இத்திருவம்மானையை அருளிச் செய்தமையால், இதற்கு 'ஆனந்தக்களிப்பு' என முன்னோர் கருத்துரை கூறினர். அந்தணர் வடிவுடன் வந்து ஆண்டு கொண்டருளிய இறைவனது பெருங்கருணைத் திறத்தை நினைந்து அருளிச் செய்யப் பெற்றது இத்திருவம்மானை யென்பது

**'நலமுறும் அந்தணன் வடிவாய் நாரணன் காண்பரிய பதம்
நிலமதில்வந்து ஆள்கருணை நினைந்தாடல் அம்மானை'**

எனவரும் திருவாசகவுண்மையால் அறியப்படும்.

மாலும் அயனும் காணுதற்கரிய வள்ளல், திருப்பெருந் துறையிற் குருவாக எழுந்தருளிச் சிந்தனையை யுருக்கிப் பணி கொண்ட திறத்தினையும், பந்தமெலாம் நீங்கப் பரிமேலழகனாக எழுந்தருளி அளவிலா ஆனந்தம் அருளிய பான்மையினையும், கற்போலும் நெஞ்சத்தையும் கனியச்செய்து தன் கருணை வெள்ளத்தில் ஆழ்த்தி வினைத்தொடர்பு அறுத்த மேன்மை யினையும், பெருந்துறையிற் குருவாய் வந்த பெரியோன் காட்டா

தனவெல்லாங் காட்டித் தன் கருணைத் தேன்காட்டி யாவரும் பெற்றறியா இன்பத்துள் வைத்த பேரருளின் பெற்றியையும், எவ்வுயிர்க்கும் தாயாகிய தலைவன் நாயான நம்மையெலாம் ஆண்டருள் புரியும் அருளின் திறத்தையும், கண்ணுதற் கடவுளாகிய அம்முதல்வன் வந்தியென்னும் செம்மனச் செல்வியார்க்கு அருள்புரிதல் வேண்டி மதுரையிற் கூலியாளாக வந்து வையைப் பெருவெள்ளத்தை யடைத்தற் பொருட்டு மண் சுமந்தும் வந்தியம்மையார் தந்த பிட்டமுதினைக் கூலியாகக்கொண்டு நுகர்ந்து மகிழ்ந்தும், பாண்டியன் தன் கைப்பிரம்பினால் அடித்த அடியினைத் தமது பொன்மேனியிற் சுமந்தும் விளையாடிய எளிமைத் திறத்தையும், அண்ணாமலை யண்ணல் பெருந்துறையிற் கண்ணார் கழல்காட்டித் தம்மையாண்ட தகவினையும் திருவம்மானையாகிய இப்பனுவலில் அடிகள் நெஞ்ச நெக்குருகிப் பரவிப்போற்றியுள்ளார்.

தப்பாமே தாளடைந்தார் நெஞ்சுருக்குந் தன்மையினானாகிய இறைவன், அப்பாண்டி நாட்டைச் சிவலோகமாக்கிய பரிசும், இனிப்பிறவாமே காத்துத் தமக்கு வீட்டின்பம் நல்கியதகவும், மெய்யர் மெய்யனாகிய இறைவன் ஐயாற்றில் அமர்ந்தருளிய வண்ணமும், அம்முதல்வனது திருவடிச்சிறப்பும், தன்னை மதியாது தக்கன் செய்த வேள்வியில் கலந்து கொண்ட இந்திரன், எச்சன், கதிரோன் முதலிய தேவர்களைத் தண்டித்துத் திசை திசையே ஓட்டிய வெற்றிப்பாடும், ஆனா அறிவாய் விளங்கும் அப்பெரியோன் அளவிறந்த பல்லுயிர்க்குங் கோனாகி நின்ற குறிப்பும், அத்திருவருட் குறிப்பினையுன்னி அடிகள் பெற்ற இன்ப அநுபவமும், என்னானை என்னப்பன் என்பார்கட்கு இன்னமுதாம் இறைவன் மன்னுயிர்களின் உள்ளத்துள்ளே ஒளியுருவாய்த் தோன்றி இன்னருள் சுரக்கும் இனிமைத் திறமும், மதுரையிற் குதிரைச் சேவகனாக எழுந்தருளிக் குற்றங்கள் நீக்கிக் குணங்கொண்டு கோதாட்டிய பெற்றியும் இத்திருவம்மானையில் விரித்துரைத்துப் போற்றப் பெற்றுள்ளன.

இதன்கண் ஐந்தாம் பாடலில் வரும் 'ஒல்லை விடையான்' என்ற தொடர்க்கு 'அடியாரை யிரட்சிக்கும் பொருட்டு விரைவாய்ச்' சேறலுடைய புண்ணிய விடையை யுடையவன்' எனப் பொருள் கூறுவர் சீகாழித் தாண்டவராயர்.

**"கவனமாய்ப் பாய்வதோர் ஏறுகந் தேறிய காள கண்டன்" (2-79-1)**

என வரும் ஆளுடைய பிள்ளையார் வாய்மொழி இங்கு ஒப்பு நோக்கி உணரத்தக்கதாகும். இவ்வாறே 18-ஆம் பாடலில் வரும் 'வெளிவந்த மாலயனுங்காண்பரிய வித்தகனை' என்ற தொடர்க்கு, "உள்ளிருப்பதை வெளியிலே தேடியவராதலின் 'வெளிவந்த மாலயன்' என்றார்" என நயவுரைபகர்வர் தாண்டவராயர்.

**"தேடிக்கண்டுகொண்டேன் - திருமாலொடு நான்முகனும்**
**தேடித்தெடொணாத் தேவனையென்னுள்ளே - தேடிக்கண்டு**
**கொண்டேன்"**
**(4-9-11)**

எனவரும் அப்பர் அருண்மொழி இங்குச் சிந்தித் துணர்தற் குரியதாகும்.

'கேட்டாயோதோழி' எனத் தொடங்கும் ஆறாம் பாடலில் உயிர்கள் மும்மலங்களும் நீங்க இறைவன் திருவடியாகிய திருவருளிற் பிரிவறக்கலத்தலே வீடுபேறென்னும் மெய்ம்மை யினை அடிகள் குறிப்பாக அறிவுறுத்தியுள்ளார்.

**"சேவடி படருஞ் செம்ம லுள்ளமொடு**
**நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையுஞ்**
**செலவுநீ நயந்தனை யாயின்"**

எனவரும் திருமுருகாற்றுப்படைத் தொடர்ப்பொருளை விளக்க வந்த நச்சினார்க்கினியர், "புலம்பிரிந்துறையும் அடி- மெய்ஞ்ஞானத்தான் அறிதலைக் கைவிட்டுத் தங்கும் அடி. திருவடியே வீடாயிருக்குமென்றார்; அது, 'தென்னன் பெருந்துறையான், காட்டாதனவெல்லாங் காட்டிச் சிவங் காட்டித் தாட்டாமரைகாட்டித் தன் கருணைத் தேன்காட்டி' என்பதனானும், பிறரும் திருவடியைக் கூறுமாற்றானும் உணர்க" என இத்திருவம்மானைப் பாடலின் பொருள் நுட்பத்தினை விளக்கி யுள்ளமை உணர்ந்து போற்றத் தக்கதாகும்.

## 9. திருப்பொற்சுண்ணம்

திருக்கோயில்களில் இறைவனது திருமெய்ப்பூச்சுக்குரிய பொன்னிறமான மணப்பொடியினை இடிக்கும் பொழுது இளமகளிர் பாடும் வரிப்பாடலாகத் திருவாதவூரடிகள் அருளிய பனுவல் திருப்பொற்சுண்ணம் என்பதாகும். 'ஆடப்பொற் சுண்ணம் இடித்தும் நாமே' எனப் பாடல்தோறும் பயின்று வருதலால் பொற்சுண்ணம் என்பது இப்பனுவலுக்குரிய பெயராதல் புலனாம். நறுமணப்பொடிகளில் பொன்னிறச் சுண்ணமே சிறப்புடையதாகும்.

**"பொன்காண் கட்டளை கடுப்பச் சண்பின்**
**புன்காய்ச் சுண்ணம்"**

எனச் சிறுபாணாற்றுப்படையிற் பொன்னிறச் சுண்ணமே சிறந்தெடுத்துக் கூறப்பெற்றிருத்தல் காணலாம். பண்டைக் காலத்தில் உடற்பூச்சுக்கேற்ற நறுமணப் பொடியினை நன் முறையில் இடித்தமைக்கும் பயிற்சியினை மகளிரே மேற்கொண்டிருந்தனரென்பது,

**"பலர் தொகு பிடித்த தாதுகு சுண்ணத்தர்"**

எனவரும் மதுரைககாஞ்சித் தொடரால் இனிது விளங்கும். இங்ஙனம் உடற்பூச்சுக்குரிய மணப்பொடியினை இடித்தமைக்குந் தொழிலில் ஈடுபட்ட மகளிரது உள்ளம் அந்நறுமணத்தின் தொடர்பால் மகிழ்ச்சி நிலையினை எய்துதல் இயல்பாகும். இங்ஙனமாகத் திருக்கோயில் இறைவனது திருமஞ்சனத்திற்குரிய நறுமணப்பொடியினை இடிக்குந் திருப்பணியில் ஈடுபட்ட மகளிரது உள்ளமோ வையத்து வாழ்வினை மறந்து இறைவன் திருவருளாகிய தெய்வ மணத்தில் ஒன்றித் திளைக்கும் பெரு மகிழ்ச்சியைத் தலைப்படுதல் இயல்பாகும். எனவே திருப்பொற் சுண்ணமிடிக்கும் இளமகளிரது உரையாடலாக அமைந்த இப்பனுவலுக்கு 'ஆனந்த மனோலயம்' என முன்னோர் கருத்துரை கூறினர்.

நாம் பெற்றுள்ள உடல், கருவி, உலகு, நுகர் பொருள் ஆகிய இவையாவும் தம்பாலுள்ள திருமெய்ப்பூச்சுக்கு ஏற்ற இனிய நறுமணப் பொடியாய் நுணுகும்படி அவற்றை மாற்றியமைத் தருளும் வண்ணம் அருட்சத்திகளை அழைப்பது இத்திருப் பொற்சுண்ணத்தின் உட்கிடை என்பர் பெரியோர், இந்நுட்பம்,

**"சத்திகளாற் றனுகரண புவனபோ கங்கள் தமை**
**அத்தனுக்குச் சுண்ணமவை யாயிடிக்கக் கூவுதலே**
**ஒத்ததிருச் சுண்ணம்"**

எனவரும் திருவாசக உண்மையால் இனிது புலனாதல் காணலாம்.

மகளிர் உலக்கை கொண்டு நறமணப் பொடியினை இடிக்கும் நிலையிற் பாடுவதாக அமைந்த இப்பனுவல், சிலப்பதிகாரத்தில் வரும் வள்ளைப்பாட்டினையும், அடியார்க்கு நல்லார் உரையில் மேற்கோளாகக் குறிக்கப்பட்ட அவலிடி என்னும் வரிப் பாடலையும் ஒத்த அமைப்புடையதாதல் உய்த்துணரத் தக்கதாகும். இதன்கண் பாடல்தோறும் 'ஆடப் பொற்சுண்ணம் இடித்தும் நாமே' எனவரும் தொடர் இறைவன் திருமஞ்சனம் ஆடுதற்பொருட்டுப் பொற்சுண்ணமாகிய மணப்பொடியை நாம் இடிப்போமாக' என மகளிர் கூறும் முறையில் அமைந்ததாகும்.

இறைவனது திருமஞ்சனத்திற்குரிய சுண்ணம் இடிக்குங்கால் அதற்குரிய இடத்தினை மெழுகித் தூய்மை செய்து முத்துமாலை முதலியவற்றால் அணி செய்து முளைக்குடம் வைத்துத் தூப தீபம் முதலியன அமைத்துக் கவரி வீசிக் கொடியெடுத்துச் சிறப்புச் செய்தல் வேண்டுமென்பதும், சுண்ணமிடிக்கும் கருவியாகிய உரலுக்குப் பட்டுச் சாத்தி உலக்கைக்குப் பொற்பூண் முதலியன அணிந்து 'நேசமுடைய அடியார்கள் நீடு வாழ்க' என வாழ்த்தி

இறைவனைப் பாடிச் சுண்ணமிடித்தல் மரபு என்பதும், பொற்சுண்ணத்திற்குரிய மணப்பொருள்களில் மஞ்சள் சிறப்புடையதென்பதும் இப்பதிகப் பாடல்களில் விளக்கப் பெற்றுள்ளன. சுண்ணமிடிக்கக் குழுவிய மகளிர்களாக சத்தி, சோமி, பார்மகள், நாமகள், சித்தி, கௌரி, பார்ப்பதி, கங்கை என எண்மர் இப்பதிகப் பாடலிற் குறிக்கப் பெற்றுள்ளனர். இக்குறிப்பினைத் துணையாகக் கொண்டு 'அட்ட சிவ சத்தியும் திருவையாறகலாத செம்பொற் சோதியை வணங்குதல்' என இப்பதிகத்திற்குக் கருத்துரைப்பர் சீகாழித் தாண்டவராயர்.

தில்லைவாணன் திருமஞ்சனம் ஆடுதற்குரிய அழகிய சுண்ணத்தினை அமைக்க வேண்டுமானால், அதற்கு உலகமே உரலாகவும் மேருமலையே உலக்கையாகவும் மெய்ம்மையாகிய உயர்ந்த குணமே மஞ்சளாகவும் கொண்டு திருப்பெருந்துறையிற் கோயில் கொண்டருளிய இறைவனுடைய திருவடியினைப் பாடிப் பாடிச் செம்பொனுலக்கையை வலக்கையிற் கொண்டு இடித்தல் வேண்டும் என்பதனை,

**'வையக மெல்லாம் உரலதாக**
**மாமேரு வென்னும் உலக்கை நாட்டி**
**மெய்யெனும் மஞ்சள் நிறைய அட்டி**
**மேதகு தென்னன் பெருந்துறையான்**
**செய்ய திருவடி பாடிப் பாடிச்**
**செம்பொன் உலக்கை வலக்கைபற்றி**
**ஐயன் அணிதில்லை வாணனுக்கே**
**ஆடப்பொற் சுண்ணம் இடித்தும் நாமே'**

எனவரும் திருப்பாடலில் அடிகள் அருளிச் செய்துள்ளார். இத்திருப்பாடல் இறைவனது பெருமையினையும் அப் பெருமானது திருமெய்ப் பூச்சுக்குரிய பொற்சுண்ண மிடித்தலாகிய திருப்பணியின் அருமையினையும் இனிது புலப்படுத்துதல் காண்க.

இறைவன் ஆணும் பெண்ணுமாய் உயிர்களுக்கு அருள் செய்யும் திருக்குறிப்புடன் சிவமும் சத்தியுமாகத் திகழ்தல் பற்றிச் சிவபெருமான் சத்திக்குக் கணவன் எனவும், சிவதத்துவத்தி னின்றும் சத்தி தத்துவம் தோன்றுதல் பற்றிச் சிவன் சத்திக்குத் தந்தை எனவும், சத்தி தத்துவத்தினின்றும் சதாசிவ தத்துவம் தோன்று முறைபற்றிச் சிவன் சத்திக்கு மகன் எனவும் சுத்த மாயையினின்றும் இறைவனது ஞானசத்தியின் தூண்டுதலால் சிவதத்துவமும் கிரியா சத்தியின் தூண்டுதலால் சத்தி தத்துவமும் முன் பின்னாகத் தோன்றும் முறைபற்றிச் சிவன் சத்திக்குத் தமையன் எனவும் அம்மையோடு அப்பனுக்குள்ள பிரிக்க

வொண்ணாத தொடர்பினை உலகியல் உறவு முறைபற்றி உருவகஞ் செய்துரைப்பதாக அமைந்தது, இப்பதிகத்தின் 13-ஆம் பாடலின் அமைந்த,

**'எம் பெருமான், இமவான் மகட்குத்**
**தன்னுடைக் கேள்வன் மகன் தகப்பன் தமையன்'**

எனவரும் தொடராகும். இத்தொடர்ப் பொருளினை

**'தவளத்த நீறணியுந் தடந்தோளண்ணல் தன்னொருபா**
**லவளத்தனா மகனாந் தில்லையான்'**
**(திருச்சிற்றம்பலக் கோவை.112)**

எனவரும் திருக்கோவையாரிலும் அடிகள் விளக்கியுள்ளமை இங்கு ஒப்புநோக்கத்தக்கதாகும். ஈசனது சுதந்தர வடிவமாகிய சுத்த தத்துவங்களின் தோற்றமுறை பற்றித் திருவாதவூரடிகள் கூறிய இவ்வுருவகத்தின் உட்கருத்தினை.

**"சிவம் சத்திதன்னை யீன்றும் சத்திதான் சிவத்தை யீன்றும்**
**உவந்திருவரும் புணர்ந்திங் குலகுயி ரெல்லாமீன்றும்**
**பவன்பிரம சாரியாகும் பான்மொழி கன்னியாகும்**
**தவந்தரு ஞானத்தோர்க்கித் தன்மைதான் தெரியுமன்றே"**

எனவரும் சிவஞான சித்தியார் (166) திரு விருத்தத்தில் அருணந்தி சிவாசாரியார் தெளிவாக விளக்கியுள்ளார்.

**'கனகமார் கவின்செய் மன்றில்**
**அனக நாடகற்கெம் அன்னை**
**மனைவி தாய்தங்கை மகள்'** **(சிதம்பரச் செய்யுட்கோவை)**

எனவரும் குமர குருபர அடிகள் பாடலும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

## 10. திருக்கோத்தும்பி

தும்பி என்பது ஒரு வகை உண்டு. தலைமையுடைய வண்டு கோத்தும்பி என வழங்கப்பெறும். நறுமலர்களிற் படிந்து தேனுண்டு மகிழ்ந்த தலைமை வாய்ந்த அரசவண்டு மகிழ்ச்சி மிகுதியால் தேனுள்ள மலரையே சுற்றிச் சுற்றிச் சுழன்று பறத்தலைப் போன்று விளையாடும் பருவத்து இளமகளிர், மகிழ்ச்சி மிகுதியால் ஒருவர்க்கொருவர் கைகோர்த்துக் கொண்டு சுற்றிவிளையாடும் விளையாட்டினைத் தும்பி பறத்தல் என்பர். இவ்விளையாட்டில் ஈடுபட்ட இளமகளிர், கோத்தும்பியை முன்னிலைப்படுத்தி அம்பலவன் தேனார் கமலமாகிய திருவடித் தாமரையிலேயே சென்று படிந்து அவனது திருப்புகழாகிய இசையினையே இடைவிடாது இசைக்கும் வண்ணம் வேண்டிப்

பாடுமாறு அமைந்த பனுவலாதலின், இது 'திருக்கோத்தும்பி' யன்னும் பெயர்த்தாயிற்று. திருவாதவூரடிகள் தமக்குக் கிடைத்த சிவபோதத்தை வண்டாக உருவகப்படுத்திச் சித்த விகாரமாகிய மனக்கலக்கம் நீங்க அவ்வண்டினைத் தம் ஆருயிர் நாயகனாகிய இறைவன்பால் தூதனுப்புவதாக அமைந்தது திருக்கோத்தும்பி யென்னும் இப்பனுவல் என்பர். இந்நுட்பம், 'உயிர் போதமொரு வண்டாகச் சித்தவிகாரத் தூது செப்பிவிடல் கோத்தும்பி' எனவரும் திருவாசக வுண்மையால் இனிது புலனாம். இதற்குச் 'சிவனோடைக்கியம்' எனக் கருத்துரை வரைந்தனர் முன்னோர். சிவனுடன் இடையறது நிற்றல் என்பது இத்தொடரின் பொருளாகும். "சடசித் தெங்கணும் தாமே நிறைந்த சிவாநுபவ சுவாநு பூதிகம் விளைந்த அடியார்கள், அவ்விளக்கம் 'எனக்குங்கிடைத்தது, உனக்குங் கிடைத்தது, என்று ஒருவர்க் கொருவர் மடிபிடித்துக் கொண்டு வண்டு சுழலுகிறது போலச் சுற்றும் விளையாட்டு" என இத் திருக்கோத்தும்பிக்கு விளக்கங் கூறுவர் சீகாழித் தாண்டவராயர்.

இதன்கண் சிவபெருமான் திருவடியின் அருமை பெருமை களும், அப்பெருமான் ஆட எடுத்த அடிமலர்யான் எனது என்னும் செருக்குடையாரால் அறியப்படாத அருமை யுடைத்தென்பதும், அத்திருவடி வழிபடும் அன்பர்களின் என்பினையுருக்கி ஆனந்தத் தேன்சொரியும் குனிப்புடைய தென்பதும், கண்ணப்பனையொத்த அன்புருவாகிய அடியார் களையுடைய பெருமான் அன்பென்பது ஒரு சிறிதும் இல்லாத தம்மையும் கருணையினால் ஆண்டுகொண்டான் என்பதும், மெய்த்தேவர் தேவனாகத் திகழும் முதல்வன் சிவபெருமான் ஒருவனே யென்பதும், அம்முதல்வனே தமது சித்தவிகாரமாகிய கலக்கத்தை நீக்கித் தெளிந்த சிவஞானத்தைத் தமக்கு நல்கியருளினன் என்பதும், அவனைத் தியானிக்கும் அடியார்கள் உள்ளத்தில் ஆராத பேரின்பம் ஊற்றெடுத்துப் பெருகும் என்பதும், இறைவன் ஒருவனாக இருந்தும் எங்கும் நீக்கமற நிறைந்துள்ளான் என்பதும், அவனை வழிபடும் அடியார்களுக்கு மரணம் பிறப்பு என்பது பற்றிய அச்சத்தின் பயனாகிய மயக்கம் இல்லை யென்பதும், அம்முதல்வன் உலக உயிர்கள் அனைத்தையும் தாய்போல் தலையளிக்கும் பேரருளாளன் என்பதும், கற்போலும் நெஞ்சத்தையும் கசிந்துருகச் செய்து அருவாய் மறைபயில் அந்தணனாகி வந்து தம்மை ஆண்டுகொண்டருளினன் என்பதும், அப்பெருமானது திருவடி நினைப்பார் உள்ளத்தே தேனுந்து சேவடி என்பதும், பசுபோதக் கருவிகளால் உள்ளி உணரப் படாதவன் இறைவன் என்பதும், பொய்யாய செல்வத்தை மெய்யென நம்பி அதனுள் அழுந்திக்கிடந்த தம்மை அம்பலவனாகிய ஐயன் குருவாக வந்து

ஆட்கொண்டு மெய்யுணர்வு அருளினன் என்பதும் மாதொரு பாகனாகிய அவனது தொன்மைக் கோலம் உள்ளுவாருள்ளத்துப் பிறவி வெப்பத்தை மாற்றித் தண்ணிழலாய் நின்று அருள்சுரக்குந் தன்மையுடையதென்பதும், அம்மையப்பராகிய அவருடைய திருவடிகள் தம் உள்ளத்துறு துயரத்தைப் போக்கி உய்வித்தன என்பதும், தீமேனியாகிய இறைவன் நாய்மேல் தவிசிட்டது போல் தம்மை நன்றாப் பொருட்படுத்தி இன்பமும் சிறப்பும் நல்கியருளினன் என்பதும் ஆகிய உண்மைகள் திருக்கோத்தும்பியாகிய இப்பனுவலில் திருவாதவூரடிகளால் விரித்துரைக்கப் பெற்றுள்ளன.

## 11. திருத்தெள்ளேணம்

தெள்ளேணம் என்பது சிறுமியர்க்குரிய விளையாடல்களில் ஒன்றாகும். சிறுமியர் முச்சில் என்னும் சிறிய முறத்தைக் கையிற் கொண்டு தானியங்களைத் தெள்ளிக் கொழித்து விளையாடும் நிலையில் இறைவனது புகழ்த்திறங்களைத் தெளிந்துணர்ந்து பாடிப் போற்றுவதாக அமைந்தது இப்பனுவலாதலின், இது திருத்தெள்ளேணம் என்னும் பெயர்த்தாயிற்று. சிறிய முறத்தால் தெள்ளிப் புடைத்தலாகிய இது 'தெள்ளத் தெறுதல்' எனத் தாண்டவராயர் உரையிற் குறிக்கப்பெற்றுளது. தெள்ளுதல் என்பது, தானிய முதலியவற்றைக் கல்லும் மண்ணுமாகிய குற்றங்களைப் புடைத்தொதுக்கித் தூயவனாகத் தனியே பிரித்தெடுத்தல், 'தெள்ளத் தெறுதல்' என்னும் இச்சொல்லின் உண்மை யுருவம் 'தெள்ளத்தேறுதல்' என்பதாகும். இந் நுட்பம்,'தெள்ளத் தேறித் தெளிந்து தித்திப்பதோர், உள்ளத் தேறல்' எனவரும் அப்பர் அருள் மொழியாலும், தெள்ளி வடித்தறிந்த பொருள் சிவன் சுழலிற் செறிவென்றே கொள்ளும் உணர்வினில்' எனவரும் சேக்கிழார் வாய்மொழியாலும் இனிது புலனாதல் காணலாம். 'பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ' எனவரும் சொற் குறிப்புக்கொண்டு தெள்ளேணம் எனக் குறிக்கப் படும் இவ்விளையாட்டு பாட்டுக்கேற்பக் கைகொட்டியோ பறை கொட்டியோ இயற்றப்பெறும் விளையாட்டாக இருக்கலாம் எனக் கருதுதலும் உண்டு.

இதற்குச் 'சிவனோடடைவு' என முன்னோர் கருத்துரைத்தனர். ஆன்மாவாகிய தாம் ஆன்ம நாயகனாகிய சிவனுடனே கூடி இன்புறுந் திறத்தை உலகத்தார் அறிய விரித்துரைக்கும் முறையில் திருவாதவூரடிகள் திருத்தெள்ளேணம் என்னும் இப்பனுவலை அருளிச் செய்துள்ளார். இந்நுட்பம், 'நாம் ஒழிந்து சிவமாயவா பாடித் தெள்ளேணம் கொட்டாமோ' எனவும் 'தேவானவா பாடி' எனவும் வரும் அடிகளது அநுபவ மொழியாலும்,

**'பொன்னார் மெய்யண்ணலரும் போதவின்பமே மிகுந்து**
**தென்னா தென்னாவென்று தெள்ளேணம் கொட்டியதாம்'**

என வரும் திருவாசக வுண்மையாலும் இனிது புலனாம்.

ஊரும் பேரும் உருவும் இல்லாத இறைவன் ஊரும் பேரும் கொண்டு யாவராலும் போற்றப்பெறும் முறைமை, திருவடி ஞானம் பெற்றபின் சிவனையன்றி மற்றொன்றையும் காணாமை, வாக்குமனங் கடந்த பரம்பொருள் உயிர்களின் மனத்துட் புகுந்து உருக்கிப் பணி கொள்ளுதல், அப்பரம்பொருளின் அருளால் உயிர் பசுத்துவம் நீங்கிச் சிவமாதல், அறிதற்கரிய பொருளாகிய சிவம் கருப்பிணி நீங்க உயிர்களின் உள்ளத்துள் அமர்தல், அம்மையப்பனாய் வந்து ஆட்கொண்டருளுதல், திருவடியைத் தரிசித்தவுடன் சீவன் சிவனான முறைமை, இறைவன் தன் கழல் மறவா வண்ணம் நல்கிய திறம், கல்லில் நாருரித்தல் போன்று தன் பேராற்றலால் உயிர்களின் கன்னெஞ்சத்தினையும் கனிவித்து ஆட் கொள்ளுதல், வானோர்க்குக் கனவிலும் அறியப்படாத அம்மெய்ப்பொருள் தமக்கு நனவிலேயே எளிவந்தருளினமை, தம் செயலற்று இறைவன் செயலிலேயே தம்முணர்வு அடங்கப் பெற்றமை, பத்திக்கடலுள் பதித்த பரஞ்சோதி தமக்குச் சிவானந்தம் விளைத்துத் தித்தித்திருக்கும் திறம், ஆன்ம போதத்தால் அறிய வொண்ணாத முழுமுதற் பொருள் திருவடி ஞானத்தால் நேர்பட்டருளுதல் நூலுணர்வால் உணரப்படா செம்பொருள் அன்புடைய மெய்யடியார்கள் அநுபவிக்க வெளிப்படுதல் பாசஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனைத் திருவடி ஞானத்தாற் சிந்தையிற் கண்டு போற்றுதல், ஒவ்வாத சமயக் கோட்பாடுகளிலும் சாத்திரங்களிலும் மயங்கித் தடுமாறாது சிவபதம் பெறுதல், பசுபோதங்கெடுதல், காண்டற் கரிய கடவுளை அவனருளாற் கண்ணாரக் கண்டு களித்தல் திருச்சிலம்போசை ஒலி வழியே சென்று நிருத்தனை நேர்பட்டு இறைஞ்சி மகிழ்தல் ஆகிய செய்திகள் இப்பனுவலில் விரித்துரைக்கப் பெற்றுள்ளன.

## 12. திருச்சாழல்

சாழல் என்பது மகளிர் விளையாடல்களுள் ஒன்று. ஒருத்தி ஒரு கதையின் செயலைப்பற்றி வினா நிகழ்த்த, மற்றொருத்தி அக்கதையின் இடமாகத் தோற்றிய முரண்பாட்டினை நீக்கி அதன் உட்பொருளை விளக்கி விடை கூற, இவ்வாறு மகளிர் இருவர் ஒரு கதைபற்றி வினாவும் விடையும் நிகழ்த்தி உரையாடி விளையாடும் முறையில் அமைந்தது சாழல் என்னும் இவ்விளையாட்டாகும். 'நற் சாழல்' எனப்பல்வரிக் கூத்துள் ஒன்றாகச் சிலப்பதிகார வுரையிற் குறிக்கப்படுவது இதுவேயாகும்.

திருவாதவூரடிகள் தில்லையில் புத்தரொடு நிகழ்த்திய வாதில், ஈழநாட்டு மன்னன் வேண்டுகோட்கிரங்கி, அவன் மகளாகிய ஊமைப் பெண்ணைப் பேசுவிக்கத் திருவுளங்கொண்டு, அவ்வூமைப் பெண்ணை நோக்கிச் சிவபெருமானுடைய திருவருட் செயல்களின் உட்கருத்துப்பற்றி வினாவியருள, பிறவி யூமையான அப்பெண் அவ்வினாக்களுக்கெல்லாம் தக்கவாறு விடை கூறினாள் என்பதும், திருவாதவூரடிகள் தாம் கேட்ட வினாக்களையும் அவ்வினாக்களுக்கு அவ்வூமைப்பெண் கூறிய விடைகளையும் தொகுத்துத் 'திருச்சாழல்' என்னும் இப் பனுவலாக இயற்றியருளினாரென்பதும் வரலாறு. இப் பனுவல், எல்லாம் வல்ல சிவபெருமானது முழுமுதற்றன்மையினையும் அம்முதல்வன் உயிர்கள்மேல் வைத்த பெருங்கருணைத் திறத்தையும் விரித்துரைக்கும் முறையில் அமைந்ததாகும். இதற்குச் 'சிவனுடைய காருணியம்' என முன்னோர் கருத்துரை வரைந்தனர். 'முன்னோர் கலையுமுணரா மூகையாமேடி, தன்னாற்பதி முதன்மை சாற்றியதாந் திருச்சாழல்' என்பது திருவாசகவுண்மை. இப்பதிகம் 'கதையழித்துப் பொருள் சொன்னது' எனத்தாண்டவராயர் குறித்துள்ளார். சிவ புராணங்களின் உள்ளீடு இதுவெனத் தெரிவிக்கும் முறையில் திருவாதவூரடிகள் திருச்சாழலாகிய இதனை அருளிச் செய்துள்ளாரென்பது தாண்டவராயர் குறிப்பினால் இனிது புலனாம்.

சிவபெருமான் திருநீறு பூசி அரவம் பூண்டு அருமறைகளை அருளிச் செய்தமை, கோவண ஆடையுடுத்தமை, சுடுகாடு கோயிலாகவும் புலித்தோல் உடையாகவும் கொண்டுள்ளமை, அயன், அநங்கன், அந்தகன், சந்திரன் முதலியோரை ஒறுத்தமை, அயனும் மாலும் அடிமுடிகாணாவண்ணம் ஆரழலாய் நிமிர்ந்து தோன்றினமை, கங்கையைச் சடையிற் சுரந்தமை, ஆலகால நஞ்சினை உண்டமை, மாதொரு பாகன் ஆனமை, அடியடைந்தாரை ஆனந்த வெள்ளத்தில் திளைக்கச் செய்தமை, தசை யொழிந்த உடலின் முழு எலும்பாகிய கங்காளத்தினை அணிந்தமை, காடு பதியாகவும் தோல் உடையாகவும் பிச்சை உணவாகவும் கொண்டமை, மலையரையன் மகளை மணந்தமை, திருநட்டம் ஆடினமை, இடபம் உகந்து ஏறினமை, அம்பலத்தே கூத்தாடி அமுது செயப் பிச்சையேற்றுத் திரிந்தமை, சலந்தரனைத் தடிந்த சக்கரத்தை நாரணனுக்கு அருளினமை ஆகிய திருவருட் செயல்களைப்பற்றிய விளக்கங்கள் இப்பனுவலில் இடம் பெற்றுள்ளன.

திருமுருகாற்றுப்படைக்கு உரை வரைந்த நச்சினார்க்கினியர், 'ஒரு முகம், குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின், மடவரல் வள்ளியொடு நகையமர்ந்தன்றே' (திருமுருகு-100-102) எனவரும்

தொடர்க்கு உரை கூறுமிடத்து "ஒரு முகம் குறவருடைய மடப்பத்தையுடைய மகளாகிய வல்லி போலும் இடையினையுடைய வள்ளியுடனே மகிழ்ச்சியைப் பொருந்திற்று; மடவரல் நகை எனக் கூட்டித் தனக்கு ஓரறியாமை தோன்றும் நகையென்று கூறுக. அவளோடு நகை யமர்தலின் அறியாமை கூறினார்: காம நுகர்ச்சியில்லாத இறைவன் இங்ஙனம் நகையமர்ந்தான்; உலகில் இல்வாழ்க்கை நடத்தற் கென்றுணர்க. அது, 'தென்பாலுகந்தாடுந் தில்லைச் சிற்றம்பலவன்' என்பதனுள், 'பெண்பாலுகந்திலனேற்பேதாய் இருநிலத்தோர், விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ' என்பதனான் உணர்க" என இத் திருச்சாழலின் ஒன்பதாம் திருப்பாடலை எடுத்துக் காட்டி விளக்கியுள்ளமை ஈண்டு நினைக்கத்தக்கதாகும்.

திருவெம்பாவை முதல் திருச்சாழல் ஈறாகவுள்ள பனுவல்கள் ஆறும் இருபது இருபது பாடல்களால் இயன்றுள்ளமையாலும் இளமகளிர் விளையாட்டாதல் ஒப்புமை யானும் இம்முறையே இயைபு பெற அமைந்துள்ளன.

## 13. திருப்பூவல்லி

திருப்பூவல்லி என்பது, அழகிய பூக்களையுடைய கொடி எனப் பொருள்படும் இச்சொல், பூக்கொய்தலாகிய இளமகளிர் விளையாட்டினையும் அவ்விளையாட்டிற் பாடப்பெறும் வரிப்பாடலையும் குறித்த பெயராக இங்கு ஆளப்பெற்றது. சிலப்பதிகார வுரையில் அடியார்க்கு நல்லார் குறித்த பல்வரிக் கூத்தினுள் ஒன்றாகிய 'கொய்யு முள்ளிப்பூ' என்பது இப் பூவல்லியாகிய விளையாட்டினைக் குறிக்குமெனக் கருதுதல் பொருந்தும். இறைவனுக்குச் சாத்துதற்கென நறுமலர் கொய்யும் சிறுமியர்கள் அம் முதல்வனது பெருங்கருணைத் திறத்தை வியந்து பாடும் முறையில் திருவாதவூரடிகள் இத் திருப்பூவல்லியினை அருளிச் செய்துள்ளார்.

இப்பதிகத்திற்கு 'மாயா விசயம நீக்குதல்' அஃதாவது 'மாயையின் பலத்தை மறுத்தல்' என முன்னோர் கருத்துரைப்பர். வானோராலும் அறிய வொண்ணாத சிவபெருமான், மாயையின் தொடர்ச்சியுட்பட்டு மதிமயங்கும் மனிதர்களாகிய நம்மனோரை ஆட்கொள்ளுதல் வேண்டித் தன் பெருங் கருணையால் எளிவந்து மாயையின் வலியை நீக்கி ஆண்டு கொண்ட அருள் நலத்தினை அடியார் பலர்க்கும் ஆர்வமுடன் எடுத்துரைத்து அம்முதல் வனுக்குச் சாத்துதற்குரிய நறுமலர்களைக் கொய்வோமாக என அடியார் பலரையும் ஒருங்கு அழைத்தல் இத் திருப்பூவல்லியின் பொருளமைதியாகும். இந்நுட்பம். 'தேவரறியாத சிவம் தேடியே யாண்ட நலம், ஆவலொடுஞ் சொல்லி அடியாரொடுங் கூடிப்

பூவியந்து கொய்தல் திருப்பூவல்லியாம்' எனவரும் திருவாசக வுண்மையால் இனிது புலனாம்.

இதன்கண் 'தேனாடு கொன்றைச் சடைக்கணிந்த சிவபெருமான் ஊனாடி நாடி வந்துள் புகுந்தான்' எனவும் 'இணையார் திருவடி என் தலைமேல் வைத்தலுமே, துணையான சுற்றங்கள் அத்தனையும் துறந்தொழிந்தேன்' எனவும், எந்தை யெந்தாய் சுற்ற மற்றுமெல்லாம் என்னுடைய பந்தமறுத் தென்னையாண்டு கொண்ட பாண்டிப்பிரான்' எனவும், 'பேராசை யாமிந்தப் பிண்டமறப் பெருந்துறையான் சீரார் திருவடி என் தலைமேல் வைத்தபிரான்' எனவும் திருவாதவூரடிகள் குறிப்பிடுதலால், தேவராலும் அறிய வொண்ணாத இறைவன் தேடிவந்தாண்ட திறமும் 'மாயா விசயம் நீக்குதல்' என்னும் பதிகக் கருத்தும் இனிது புலனாதல் காணலாம்.

எண்குணத்தானாகிய இறைவனடிகளை வணங்குதற்கேற்ற தலைமையமைந்த தலையும், அவனுடைய பொருள்சேர் புகழ்த்திறங்களை விரித்துரைத்தற்கேற்ற நாநலம் வாய்ந்த வாயும், இறைவன் திருவடிக்கேற்ற திருப்பணிகளை விருப்புடன் இணங்கிச் செய்தற்குரிய நேயமலிந்த அடியார் திருக்கூட்டமும் ஆகிய சாதனங்களைத் தந்தருளி, அருளுருவாகிய அம்மையுடன் கூடித் திருவம்பலத்திலே ஆடல் புரிந்தருளும் கூத்தப் பெருமானது திருவருட் குணத்தைப் பாடிப் பரவி, இறைவன் திருவடிகளில் அருச்சித்தற்குரிய நறுமலர்களைக் கொய்வோமாக என அன்புடையாரை அழைக்கும் முறையில் அமைந்தது,

**வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்த வைத்து**
**இணங்கத்தன் சீரடியார் கூட்டமும்வைத் தெம்பெருமான்**
**அணங்கொ டணிதில்லை யம்பலத்தே யாடுகின்ற**
**குணங்கூரப் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ**

என்ற திருப்பாடலாகும் இது,

**'வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்**
**தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்**
**சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே**
**வீழ்த்தவா வினையே னெடுங்காலமே'** (5-90-7)

எனவரும் அப்பர் அருளுரையினை ஒத்து அமைந்திருத்தல் நோக்கத்தக்கதாகும்.

இறைவன், என் உடலிடங்கொண்டு என்னுள்ளத்தே புகுந்தருளி என்னை ஆட்கொண்டருளினனாகவும், பெருந் தேவராகிய மாலயன் முதலியோர் உயிர்க்குயிராய் உள் நின்று அருள்புரியும் அம்முதல்வனது இருப்பினை யுணரப்பெறாது

*சிவபெருமான் திருவடிகளைப் புறத்தே காண முயன்று அறியாது அயர்த்தல் அழகோ? என இரங்கிக் கூறும் குறிப்புடையது.*

**முன்னாய மாலயனும் வானவருந் தானவரும்**
**பொன்னார் திருவடி தாமறியார் போற்றுவதே**
**என்னாகம் உன்புகுந் தாண்டுகொண்டான் இலங்கணியாம்**
**பன்னாகம் பாடி நாம் பூவல்லி கொய்யாமோ,**

*எனவரும் திருப்பாட்டாகும். இது,*

**'நாடி நாரணன் நான்முக னென்றிவர்**
**தேடி யுந்திரித் துங்காண வல்லரோ**
**மாட மாளிகை சூழ்தில்லை யம்பலத்**
**தாடி பாதமென் னெஞ்சு ளிருக்கவே,** (5-1-10)

*எனவரும் திருக் குறுந்தொகைப் பொருளை அடியொற்றி அமைந்திருத்தல் அறியத்தக்கதாகும்.*

**'அத்தி யுரித்தது போர்த்தருளும் பெருந்துறையான்**
**பித்த வடிவு கொண் டிவ்வுலகிற் பிள்ளையுமாம்**
**முத்தி முழுமுத லுத்தர கோச மங்கைவள்ளல்**
**புத்தி புகுந்தவா பூவல்லி கொய்யாமோ.**

*எனவரும் திருப்பாடல், சிவபெருமான் 'இலங்கையிலே அன்புள்ள வண்டோதரியம்மைக்கு அநுக்கிரகஞ் செய்ய எழுந்தருளி, உபதேசஞ் செய்யும்போது, அன்புடைய இராவணன் வர சுவாமி பாலகனாகத் திருமேனி கொள்ள, பார்ப்பதி தாய் போலக் குழந்தையை யெடுத்துக்கொண்டு இடுப்பில் வைத்து அன்பால் இன்புற்று எழுந்தருளிய' செயலைக் குறித்ததெனப் பொருள் கொள்வர் சீகாழித் தாண்டவராயர்.*

*திருப்பூவல்லி யென்னும் இப்பதிகமும் இதன் அடுத்த பதிகமாகிய திருவுந்தியாரும் பத்தொன்பது பத்தொன்பது திருப்பாடல்களை யுடையனவாம்.*

*அச்சிட்ட பதிப்புக்கள் சிலவற்றில் இவ்விரு பதிகங்களில் முறையே 'மாவார வேறி' 'ஏகாசமிட்ட' என்னும் முதற் குறிப்புடைய பாடல்கள் இருபதாவது பாடல்களாகக் குறிப்பிடப் பெற்றுள்ளன. இப்பாடல்கள் இரண்டும் பழைய நல்ல பதிப்புக்களில் இடம் பெறாமையாலும் திருவாசகத்துக்குக் கிடைத்துள்ள உரைகளுள் மிகவும் பழைமையுடைய சீகாழித் தாண்டவராயர் உரையில் இவை இல்லாமையாலும் இவ்விரு பாடல்களும் பிற்காலத்தாரால் பாடிச் சேர்க்கப்பெற்ற மிகைப் பாடல்கள் எனவே கருத வேண்டியுளது.*

## 14. திருவுந்தியார்

உந்தி பறத்தல் என்பது மகளிர் விளையாட்டுக்களுள் ஒன்று. உந்தி பறத்தலாவது விளையாடும் பருவத்து இளமகளிர் பாட்டுடைத் தலைவனது வெற்றியை வாயாற் புகழ்ந்துகொண்டு உயர எழுந்து குதித்தலாகும். மகளிர் இருவர் சிவபெருமானுடைய வெற்றிச் செயல்களைச் சொல்லிக்கொண்டு துள்ளிக் குதித்து விளையாடும் முறையில் திருவாதவூரடிகளால் அருளிச் செய்யப்பெற்ற பனுவல் இத்திருவுந்தியாராகும். இதற்கு ஞானவெற்றி என முன்னோர் கருத்துரைத்தனர். அருட்சத்தியினுடைய சாமர்த்தியத்தைப் புலப்படுத்தும் நிலையில் அமைந்தது இப்பனுவலாகும். 'அரன்சீர் பாவமுறு தீமையறப் பாடல் திருவுந்தியதே' என்பது திருவாசகவுண்மை.

இதன் கண், சிவபெருமான் திரிபுரம் எரித்தருளியது (1-4ஆம் பாடல்கள்), தக்கன் வேள்வி தகர்த்தது (5-16ஆம் பாடல்கள்) பாலகனார்க்குப் பாற்கடல் ஈந்தது (17ஆம் பாடல்) நான்முகனது தலையைக் கிள்ளியது (18ஆம் பாடல்) இராவணனை மலையின் கீழ் அடர்த்தது (19ஆம் பாடல்) என்னும் பழைய வரலாறுகளாகிய இறைவனுடைய வெற்றிச் செயல்கள் விரித்துரைக்கப் பெற்றன.

சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினான்கினும் முதற்கண்ணதாய்த் திருவியலூர் உய்யவந்த தேவநாயனாரால் அருளிச் செய்யப்பெற்ற திருவுந்தியார் என்னும் மெய்ந்நூல், திருவாதவூரடிகள் அருளிய திருவுந்தியார் என்னும் இப்பனுவலை யாப்பினும் ஞான வெற்றியென்னும் பொருளினும் அடியொற்றி அமைந்திருத்தல் அறியத்தக்கதாகும்.

## 15. திருத்தோணோக்கம்

தோள் நோக்கம் என்பது, மகிழ்ச்சிப் பெருக்கினால் தம் தோள்கள் பூரித்து மேலோங்க அவற்றை நோக்கிக் கைவீசியாடும் மகளிரது விளையாட்டு. இதனை 'நல்லார் தம் தோள் வீச்சு' எனக் குறிப்பிடுவர் அடியார்க்கு நல்லார். 'போற்று மடியாருள் நின்று நகுவேன் பண்டு தோள் நோக்கி, (திருச்சதகம்-60) எனத் திருவாதவூரடிகள் அடியார் நடுவே நின்றமையால் தமக்குண்டான மகிழ்ச்சிப் பெருக்கைக் குறிப்பிடுதலாலும், 'குளிர்ந்து தோள் நோக்கினார்' (சீவக-1843) எனவும் 'தாமின்னும் நின்றாராந் தோணோக்கி' (கம்ப. யுத்த. மாயா. சனக. 82) எனவும் பிறரும் கூறுதலானும் தோணோக்கம் என்பது மகிழ்ச்சிப் பெருக்கினால் பூரித்த தோள்களை நோக்கியாடுதல் என்பது உய்த்துணரப்படும். திருத்தோணாக்கம் என்னும் இப்பனு வலுக்குப் பிரபஞ்ச சுத்தி எனக் கருத்துரைப்பர் முன்னோர். ஆன்மாக்களைச் சுத்திகரித்தல் என்பது இதன் பொருள்,

இதன்கண், தில்லையில் திருக்கூத்தியற்றியருளும் இறைவனது இயல்பும், அம்முதல்வன் அயனும் மாலும் தேடிக் காணுதற்கு அரியனாதலும், அன்புருவாகிய கண்ணப்பர் என்னும் அடியார்க்கு வெளிப்பட்டருளியதும், சொற் பதங்கடந்த கடவுள் கற்போலும் நெஞ்சைக் கனிவித்து நெஞ்சுட் புகுந்து சொல்லாற் போற்றப்பெறும் நிலையில் எளிவந்தருளிய செய்தியும், நிலம், நீர், நெருப்பு, காற்று, விசும்பு, திங்கள், ஞாயிறு, ஆன்மா என இறைவன் எண் பேருருவினனாய் நின்ற நிலையும், அடியார்களின் சித்தஞ் சிவமாக்கிய சீர்த்தியும், தாதையைத் தாளற வீசிய சண்டேசப் பிள்ளையார்க்கு அருள்புரிந்த தகவும், இறைவன் திருவடிகளையே சிந்திக்கும் இயல்பினராகிய மெய்யடியாரது இயல்பும், திரிபுரம் தீப்பற்றி யெரியும் நிலையில் சிவனை மறவாத சிந்தையினராகிய அவுணர் மூவர் அவனருளால் உய்ந்த வரலாறும், திருமால் சக்கரம் வேண்டித் தம் கண்ணையே தாமரை மலராகக் கொண்டு அருச்சித்த சீர்த்தியும், தேவர்கள் சிவபெருமானை யிகழ்தலாகிய குற்றத்தைப் புரிந்து வீரபத்திரரால் தண்டிக்கப்பட்டுத் தூய்மை பெற்ற செய்தியும், திருமாலும் பிரமனும் தேடிக்காண வொண்ணாது அலுத்த நிலையிற் சிவபெருமான் இலிங்கோற்பவ ராக வெளிப்பட்டருளிய வரலாறும், வாழ்நாள் வழியடைத்துப் பிறவிப் பிணியினைத் தீர்த்தருள வல்லோன் பரம்பரனாகிய இறைவனொருவனேயாதலின், வீழ் நாள் படாமை அவனை வழிபடுதல் வேண்டும் என்பதும், உரையிறந்த முதல்வனாகிய இறைவனை உள்ளத்தால் நினைந்த அளவில், காம வெகுளி மயக்கங்களாகிய நோய்கள் அறவே கெட்டொழிய ஐம்பொறி களாகிய பறவைகள் வலிகுன்றியோட ஆன்மாவின் மிகுதிப் பாடாகிய பசுத்துவம் கெட்ட திறமும் பதினான்கு திருப்பாடல் களால் விரித்துரைக்கப்பெற்றன. இப் பதிகப் பாடல் தோறும் "ஆடுவாமோ" எனற் பாலதாகிய சொல் 'ஆடாமே' எனத் திரிந்து நின்றது.

**'சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே புண்ணியமாய்**
**அத்தன் செயுங் கருணைக்கு ஆராமை யுண்மிகுந்து**
**பொத்திய கைகொட்டிப் புகழ்தல் தோணோக்கும்'**

என்பது திருவாகசவுண்மை.

## 16. திருப்பொன்னூசல்

ஊசல் - ஊஞ்சல். ஊஞ்சலில் ஏறியாடுதல் மகளிர்க்கு மன மகிழ்ச்சி விளைக்கும் விளையாட்டாகும். இளமகளிர் ஊசலில் ஏறியாடுங்கால் பாட்டுடைத் தலைவனது புகழ்த் திறத்தைப் பாடிக் கொண்டு ஆடும் நிலையில் அமைந்த இசைப்பாட்டு 'ஊசல் வரி' எனப்படும். சிலப்பதிகாரம் வாழ்த்துக் காதையில் ஊசல்

வரிப்பாடல்கள் மூன்றும் சேர மன்னனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பெற்றவை. இவ்வாறே எல்லாம் வல்ல சிவபெருமானைப் பாட்டுடைத் தலைவனாகக்கொண்டு ஊஞ்சலாடும் மகளிர் பாடிப் பரவும் நிலையில் திருவாதவூரடிகள் அருளிய பனுவல் திருப்பொன்னூசல் என்பதாகும். செல்வ மிகுதி தோன்ற ஆடும் மகளிரது ஊசல் பொன்னூசல் எனப்பட்டது. இதற்கு அருட்சுத்தி எனக் கருத்துரைத்தனர் சான்றோர். அருட்சுத்தியாவது ஆன்மா தன் முனைப்பழிய அருளோடு கூடுதலாகும். ஊசலில் அமர்ந்து ஆடும் மகளிர் தம் சார்பில் நில்லாது தமக்கு ஆதாரமாகிய ஊசலின் சார்பில் அமைந்து அதன் வழியே இயங்கி மகிழ்தல் போன்று, சிவபெருமான் பால் நேயமிகுந்த அடியார்களும் தம்முணர்வின் வழியொழுகாது எப்பொருட்குஞ் சார்பாகிய இறைவனது அருளே சார்பாகப் பற்றி நின்று யாண்டும் இயங்கி மகிழுந்திறத்தினை விளக்கும் நிலையில் அமைந்தது இத்திருப்பொன்னூசல் எனக் கருத்துரைத்தல் ஏற்புடையதாகும். "தன் வசமின்றி அருள் வசமாகும் காலம் சகலத்தின் செய்தியும் சுத்தத்தின் செய்தியும் சமானமாய் ஒன்றாகும் தன்மையாகிய அருளின் திறமை" எனச் சீகாழித் தாண்டவராய் இதற்குக் கூறும் விளக்கம் இக்கருத்தினதாதல் அறியத்தக்கதாகும். இனி, 'அருட் சத்தியிருந்தாடத் தாலாட்டல் பொன்னூசல்' எனத் திருவாசக வுண்மையிற் குறித்த கருத்து, ஊசலில் ஏறியிருந்து ஆடுவது அருட்சத்தியும், அங்ஙனம் ஆடத்தாலாட்டும் தொழிலினர் அன்புடைய மகளிரும் எனத் தொழிலினர் அன்புடைய மகளிரும் எனத் திருக்கோயிலில் நிகழும் பொன்னூசல் விழாவினை அடியொற்றி அமைந்ததெனக் கொள்ளுதல் பொருந்தும்.

திருப்பொன்னூசல் ஒன்பது திருப்பாடல்களை யுடையது. இதன்கண், நாராயணனறியா நான் மலர்த்தாள் நாயடியேற்கு ஊராகத், தந்தருளினான் எனவும், 'வான் தங்கு தேவர்களும் காணாமலரடிகள் தேன் தங்கித் தித்தித்து அமுதூறித் தான் தெளிந்து அங்கு ஊன் தங்கி நின்றுருக்கும்' எனவும், 'தன் நீறு எனக்கருளித் தன் கருணை வெள்ளத்தே மன்ன வைத்தான்' எனவும், 'அஞ்சொலாள் தன்னொடும் நெஞ்சுளே நின்று அமுதமூறிக் கருணைசெய்து துஞ்சல் பிறப்பறுப்பான்' எனவும், 'ஆணோ அலியோ அரிவையோ என்று இருவர் காணாக் கடவுள் எனவும்' அடியாருட் கோதாட்டி நாயேனை யாட்கொண்டென் தொல் பிறவித் தீதோடாவண்ணந் திகழப் பிறப்பறுப்பான்' எனவும், 'பாவங்கள் பற்றறுப்பான்' எனவும், 'ஞாலமிகப் பரிமேற் கொண்டு நமையாண்டான்' எனவும், 'தங்குலவு சோதித் தனி யுருவம் வந்தருளி, எங்கள் பிறப்பறுத்திட்டு எந்தரமும்

ஆட்கொள்வான்' எனவும் திருவாதவூரடிகள் தம்மை ஆட்கொண்ட உத்தரகோசமங்கைப் பெருமானைப் பரவிப் போற்றியுள்ளார்.

**'சீரார் பவளங்கால் முத்தங் கயிறாக**
**ஏராரும் பொற்பலகை ஏறி யினிதமர்ந்து'**

எனவும்,

**'அன்னத்தின் மேலேறி யாடுமணி மயில்போல்**
**............................ பொன்னூச லாடாமோ'**

எனவும் வருதலால் பொன்னூசலின் வனப்பும் வடிவ அமைப்பும் அவ்வூசலில் மகளிர் ஏறி அமர்ந்தாடும் அழகும் இனிது புலனாதல் காணலாம்.

## 17. அன்னைப்பத்து

திருப்பெருந்துறையிற் குருவாய் எழுந்தளிருத் தம்மை ஆட்கொண்டருளிய இறைவன் மதுரை நகர வீதியிற் குதிரைச் சேவகனாக எழுந்தருளியபோது அவனது பேரழகில் ஈடுபட்டு அவன்பாற் காதல் கொண்ட தலைவி யொருத்தி தன் அன்னையை நோக்கிக் கூறும் கூற்றினைக் கொண்டு கூறும் முறையில் திருவாதவூரடிகள் அருளிய பனுவல் அன்னைப்பத்தாகும். இச்செய்தி,

**'ஆங்கொரு சிறுமி தன்சீர் அன்னையை நோக்கிக்கூறும்**
**தாங்கிசை மொழியேயாகத் தகுமவை யீரைந்தோதி'**

எனவரும் கடவுள் மாமுனிவர் வாய்மொழியால் இனி துணரப் படும். தலைவியொருத்தி தன் அன்னையை நோக்கிக் கூறும் கூற்றினைக் கொண்டுகூறும் நிலையிலமைந்த பத்துத் திருப்பாடல் களையுடைய பனுவலாதலின், இஃது அன்னைப்பத்து என்னும் பெயருடையதாயிற்று. இதன்கண் பாடல் தோறும் 'அன்னே யென்னும்' என்ற தொடர் இருமுறை பயின்று வருதல் காணலாம். ஐங்குறுநூற்றில் குறிஞ்சித் திணையின் இரண்டாம் பத்தாக அமைந்த 'அன்னாப் பத்து' என்னும் பெயர்ப்பொரு ளமைதியினை இவ் அன்னைப்பத்து அடியொற்றி அமைந் திருத்தல் கூர்ந்து நோக்கத்தக்கதாகும், 'நேயமிகுந்த நிலை குலையக் கூடுதலை, ஆயவருள் தாய்க்கங் கறைத லன்னைப் பத்தாகும்' என்பது திருவாசகவுண்மை. அன்னைப் பத்தாகிய இப்பனுவலுக்கு 'ஆத்தும பூரணம்' என முன்னோர் கருத்துரைத்தனர். ஆத்தும பூரணமாவது 'ஆன்மா சிவனுடனே நிறைதல்' என்பதாம். இப்பனுவலில் அமைந்த பாடல்களில் இரண்டு மூன்றாம் அடிகள் இடை மடக்காய் அமைந்திருத்தல் காணலாம்.

**வெள்ளைக் கலிங்கத்தர் வெண்டிரு முண்டத்தர்**
**பள்ளிக் குப்பாயத்தர் அன்னே யென்னும்**
**பள்ளிக் குப்பாயத்தார் பாய்பரிமேற் கொண்டென்**
**உள்ளங் கவர்வரால் அன்னே யென்னும்.** (அன்-7)

எனவரும் திருப்பாடல், குருவாய் வந்து அருள்புரிந்த இறைவன் மீண்டும் குதிரைச் சேவனாக எழுந்தருளிய திருக்கோலத்தியல் பினை இனிது புலப்படுத்துவதாகும்.

**தாளி யறுகினர் சந்தனச் சாந்தினர்**
**ஆளெம்மை யாள்வரால் அன்னெ யென்னும்**
**ஆளெம்மை யாளும் அடிகளார் தங்கையில்**
**தாள மிருந்தவா றன்னே யென்னும்.** (அன்-8)

எனவரும் திருப்பாடல், இறைவன் குருவாய் எழுந்தருளி வந்து திருவாதவூரடிகளை ஆட்கொண்ட நிலையில் அம்முதல்வன் 'பரமனையே பாடுவார்' என்னும் அடியார் திருக்கூட்டத்துள் ஒருவராய்த் தமது திருக்கையில் தாளத்தைக் கொண்டிருந்த தோற்றத்தினை நன்கு புலப்படுத்தல் காணலாம்.

## 18. குயிற்பத்து

இறைவனைக் காதலித்தாள் ஒருத்தி, சோலையினிடத்தே வாழும் குயிலை நோக்கி, 'எங்கள் பெருமானாகிய இறைவனை என்பால் வரக் கூவுவாயாக' எனக் குறையிரந்து வேண்டும் முறையில் அமைந்த பத்துத் திருப்பாடல்களை யுடைமையால் இது 'குயிற் பத்து' எனப் பெயரெய்தியது.

**'பொங்கரி னிடையே வாழும் பொற்பிளங் குயிலே கூவி**
**இங்கழை எம்பிரானை என்பது'**

எனத் திருவாதவூரர் புராண முடையார் இதன் பொருள் அமைதியைக் குறித்துள்ளார். இதற்கு 'ஆத்தும இரக்கம்' என முன்னோர் கருத்துரைப்பர். ஆத்தும இரக்கமாவது, உயிர் சிவனைக் கண்டு அம் முதல்வனை விரைவில் அடையப் பெறுதல் வேண்டும் என்னும் வேட்கையால் இரங்குதல். "தூய அருட் குயிலே நற்சோதி யெனைக் கூடுதற்குன், வாயினாற் கூவென முன் வாழ்த்தல் குயிற் பத்தாமே" என்பது திருவாசகவுண்மை.

இதன்கண், இறைவனது சோதி மணிமுடி சொல்லிறந்து நின்ற தொன்மையது என்பதும், அம் முதல்வன் பாதமிரண்டும் பாதாளம் ஏழினுக்கப்பால் ஊடுருவிப் பரவிய பெருமையுடையன என்பதும், பெருந்துறை யிறைவன் ஆர்கலி சூழ் தென்னிலங்கை அழகமர் வண்டோதரிக்குப் பேரருளின்பமளித்த பெற்றியும், அப் பெரியோன் ஞாலம் விளங்கத் திருவுத்தரகோசமங்கையில் எழுந்தருளிய சிறப்பும், வள்ளலாகிய அவ்விறைவன் வான்பழித்து

இம்மண் புகுந்து மனிதரை யாட்கொண்டு ஊன் பழித்து உள்ளம் புகுந்து உணர்வதுவாய்க் கலந்த திறமும், மூவரறியா முதல்வன் அந்தரத்தே நின்றும் இறங்கி வந்து அடியார்களது ஆசையையறுத்த அருளின் சிறப்பும், கோகழிநாதன் நற்பரிமேல் வந்த பொற்பும், வள்ளன்மையும், மெய்ம்மையும், அன்பர்களது அகத்தாமரையில் எழுந்தருளிய இறைவன் உலகவர் கண்காண ஆசானாக எழுந்தருளி வந்து அழகிய சேவடி காட்டிப் பாசம் அறுத்துப் பணிகொண்டருளிய திறமும் ஆகிய திருவருள் நலங்களை அடிகள் இக்குயிற் பத்தில் நெஞ்சம் நெக்குருகிப் போற்றியுள்ளார்.

## 19. திருத் தசாங்கம்

ஆட்சி புரியும் தலைவன் ஒருவனுக்குச் சிறப்பாகச் சொல்லத்தக்க பத்து அங்கங்களையும் எடுத்துரைத்துப் போற்றும் பனுவல் தசாங்கம் எனப் பெயர் பெறும், தன்னேரில்லாத் தலைவனாகிய சிவபெருமான்பாற் காதல் கொண்ட பெண் ஒருத்தி, கிளியை நோக்கிச் சிவபெருமானுக்குரிய பேர், நாடு, ஊர், ஆறு, மலை, ஊர்தி, படை, முரசு, தார், கொடி என்பன யாவை என வினவக்கேட்ட கிளியானது முறையே அவ் அங்கங்கள் இவை என விடைகூறும் முறையில் வினாவும் விடையுமாக அமைந்த பத்து நேரிசை வெண்பாக்களை யுடையது இத்திருப் பதிகமாகும். தலைவி யொருத்தி கிள்ளையை நோக்கி வினா நிகழ்த்த, அவ்வினாவுக்குக் கிளி விடைகூறும் முறையில் இத்திருப் பதிகம் அமைந்திருத்தலால் இதனைக் 'கிள்ளைப்பத்து' என வழங்குதலும் பொருந்தும். எனினும் இத்திருப்பதிகத்தில் சிவபெருமானுக்குரிய பேர், நாடு, ஊர் முதலிய பத்து அங்கங் களைப் பற்றிய புகழ்ச்சியே சிறப்புடைய பொருளாக அமைந்திருத் தலால் இது திருத்தசாங்கம் என்னும் பெயருடையதாயிற்று.

**'பேர்நாடூ ராறு மலை பெயரூர்தி படை முரசு**
**தார்கொடி யெலாம் அரற்குச் சாற்றல் தசாங்கமதாம்'**

எனத் திருப்பெருந்துறைப் புராணத்தில் இப்பதிகத்தின் பெயர்க்காரணம் இனிது விளக்கப்பெற்றது.

சிவபெருமானுக்குரிய சிறப்புடைய பத்து அங்கங்களுள்,

பேர் : ஆரூரன், எம்பெருமான், தேவர் பிரான்.

நாடு : தென்பாண்டி நாடு.

ஊர் : உத்தரகோச மங்கையூர்

ஆறு : ஆனந்தமாகிய ஆறு,

மலை : இன்பமரும் முத்தியருளும் அருளாகிய மலை.

*ஊர்தி : வான் புரவி.*

*படை : கழுக்கடை.*

*முரசு : நாதப்பறை*

*தார் : தாளியறுகு.*

*கொடி : ஏறு.*

*எனத் திருவாதவூரடிகள் இத்திருப்பதிகத்திற் குறித்துப் போற்றியுள்ளார். இறைவன் பெருந்துறையிற் குருவாகத் தோன்றித் தம்மை ஆண்டு கொண்டருளிய நிலையில் அவனுக்குரிய பத்து அங்கங்களையும் விரித்துரைக்கு மிடத்து ஏற்றுக் கொடிக்கு இயையத் தூய நீற்றுக் கோடியினையும் தாளியறுகின்தாருக்கு இயையக் கழுநீர் மாலையினையும் சீர்த்தித் திருவகலில் அடிகள் குறித்துள்ளமை இங்கு ஒப்புநோக்கி உணரத்தகுவதாகும்.*

**"ஆறும் மலையும் யானையும் குதிரையும்
நாடும் ஊரும் கொடியும் முரசும்
தாருந் தேரும் தசாங்கம் எனப்படும்"**

*எனச்சேந்தன் திவாகரமுடையார் தசாங்கம் என்ற பிரபந்தத்திற்கு இலக்கணம் கூறியுள்ளார். இவற்றுள் தேரை நீக்கிப் படையைச் சேர்த்துரைப்பர் சூடாமணி நிகண்டுடையார். திருவாதவூரடிகள் குறித்த பத்து அங்கங்களுள் பேர், படை என்பன திவாகரத்தில் இடம்பெறவில்லை. அவ்விரண்டின் இடத்தில் யானை குதிரை என்பன சேர்க்கப்பட்டன. திருவாசகத்திற் குறிக்கப்பட்ட பேர் என்னும் அங்கம் சூடாமணி நிகண்டிற் குறிக்கப் பெறவில்லை; யானை என்னும் அங்கம் இடம் பெற்றுள்ளது.*

**"வழக்கொடு சிவணிய வகைமையான"**

**(தொல் - புறத்திணை - 31)**

*எனவரும் புறத்திணையியற் சூத்திரவுரையில், 'சிவணிய வகைமை' என்றதனானே முற்கூறியவற்றோடே நாடும் மலையும் யாறும் படையுங்கொடியும் குடையும் முரசும் நடைநவில் புரவியும் களிறும் தேரும் தாரும் பிறவும் வருவனவெல்லாங் கொள்க, எனவும், "இவற்றுட் சிலவற்றை வரைந்து கொண்டு சின்னப்பூ வென்று பெயரிட்டு இக்காலத்தார் கூறுமாறுணர்க" எனவும் நச்சினார்க்கினியர் கூறுதலால், இவ்வாறு தசாங்கம் கூறுதல் பாடாண்டிணையில் உலக வழக்கொடு பொருந்தியதென்பதும், திருவாசகத்திற் காணப்படும் இத்திருத் தசாங்கம் பாடாண்டிணையில் கடவுள் வாழ்த்தின் பாற்படும் என்பதும் இனிது புலனாம்.*

## 20. திருப்பள்ளியெழுச்சி

"தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்
சூதர் ஏத்திய துயிலெடை நிலையும்"
(தொல் - புறத்திணை - 36)

எனவரும் சூத்திரத்தில் "தமது வலியாலே பாசறைக்கண் ஒரு மனக்கவற்சியின்றித் துயின்ற அரசர்க்கு நல்ல புகழைக் கொடுத்தலைக் கருதிய சூதர், அத்துயிலெடுப்பின் ஏந்திய துயிலெடை என்ற துறையை ஆசிரியர் தொல்காப்பியனார் குறித்துள்ளார், "துயில் எடை - துயிலினின்றும் எழுப்புதல்; அஃதாவது பள்ளியெழுச்சி. துயிலெடை நிலையாகிய இத்துறை, அரசர்க்கு உரியதாய்த் தொன்றுதொட்டு வருமென்பதூஉம், சூதர், மாகதர், வேதாளிகர், வந்திகர் முதலாயினோருள் சூதர் என்பவரே இங்ஙனம் வீரத்தால் துயின்றாரைத் துயிலெழுப்புவர் என்பதூஉம், யாண்டும் முன்னுள்ளாரையும் பிறரையும் கூறப்படு மென்பதூஉம் கொள்க" என்பர் நச்சினார்க்கினியர். "அவர் அங்ஙனம் துயின்றமை பிறர்க்கும் புலப்படப் புகழ்தல் அவர் கருத்தாதலின் ஒருதலைக்காமம் உளதாயிற்று" என்பது நச்சினார்க்கினியர் கருத்தாகும். 'ஞாலத்துவரூஉம் நடக்கையது குறிப்பிற் காலம் மூன்றொடு கண்ணிய வரும்' புறத்திணைத் துறைகளுள் ஒன்றாகிய இத்துயிலெடைநிலை, உறங்கலும் விழித்தலும் உடையராய் உணர்த்த உணரும் இயல்பினராகிய அரசர் முதலிய மாந்தர்க்கே உண்மையாக உரியதாகும். உறங்கலும் விழித்தலும் இன்றி இமையா முக்கண்ணினனாய், தானே முழு துணரும் இயற்கையுணர்வினனாய், நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் இறைவனைத் துயிலெழுப்புவதென்பது, உண்மை நிகழ்ச்சியாதலின்றி வெறும் உபசாரமேயாகும். ஆயினும் 'துஞ்சும் பொழுதாடுஞ் சோதி', ஆகிய அம் முதல்வனை, உறங்கி விழிக்கும் இயல்பினராகிய மாந்தர் தாம் துயிலெழுங் காலத்துத் தொழுதுகொண்டு எழுதல் இன்றியமையாததாதலின், அவனருளாலே அவன் தாள் வணங்கித் துயிலெழும் வழிபாட்டு நெறிமுறையினை மாந்தர்க்கு அறிவுறுத்தும் நோக்கத்துடன் திருவாதவூரடிகளால் திருவாய் மலர்ந்து அருளப்பெற்றது 'திருப்பள்ளியெழுச்சி' என்னும் இப்பனுவலாகும். தூங்கி விழிக்கும் இயல்பினராகிய வேந்தர் முதலாயினாரை எழுப்புந் துயிலெடைநிலை என்னும் துறையினும் இது வேறுபட்ட தென்பது புலனாகச் சான்றோர் இதனைத் துயிலெடை நிலை யென்னாது திருப்பள்ளியெழுச்சியெனத் தொன்றுதொட்டு வழங்கி வருவாராயினர். இந்நுட்பம்,

**"நீறணிந்தார் அகத்திருளும் நிறைகங்குற் புறத்திருளும்
மாறவருந் திருப்பள்ளி யெழுச்சி யினில்"**

**(பெரிய-நாவுக்-68)**

என வரும் சேக்கிழாரடிகள் வாய்மொழியில் இனிது புலனாதல் காணலாம்.

திருவாசகத்திலமைந்த திருப்பள்ளியெழுச்சி என்னும் இத்திருப்பதிகத்திற்குத் 'திரோதானசுத்தி' என முன்னோர் கருத்துரை வரைந்தனர். திரோதான சுத்தி என்னும் இத் தொடர்க்கு, 'ஏகமாகிய திரோதாயி மறைப்பான மலம் நீங்குதல்' எனப் பொருள் உரைப்பர்.

**ஏர்மருவு திருப்பள்ளி யெழுச்சி பணிவிடை கேட்டு
ஆர்வமுடன் ஆண்ட அரற்கு அன்புசெயும் இயல்பே**

எனத் திருப்பெருந்துறைப் புராணமுடையார் இத் திருப்பதிகக் கருத்தினைத் தெளிவாகக் குறித்துள்ளார். திருப்பெருந்துறையில் இறைவனால் ஆட்கொள்ளப் பெற்ற திருவாதவூரடிகள், வைகறைப் பொழுதில் துயிலெழுந்து திருப்பெருந்துறை இறைவனைப் போற்றி அடியார்களாகிய தமக்கு அருள்புரிய எழுந்தருளுமாறு ஆண்டவனை வேண்டி யெழுப்பும் நிலையில் அருளிச் செய்யப்பெற்றது திருப்பள்ளியெழுச்சி என்னும் இத்திருப்பதிகமாகும்.

முன்னிலைப்பரவலாக அமைந்த இத்திருப்பதிகத்தில் திருப்பெருந்துறையுறை சிவபெருமானை இறைஞ்சி 'எம் பெருமான் பள்ளி யெழுந்தருளாயே' எனப் பாடல்தோறும் அடிகள் இறைவனை வேண்டிப் போற்றுதல் காணலாம். இவ்வாறே திருமாலடியாரான தொண்டரடிப்பொடியாழ்வார், திருவரங்கப் பெருமானைப் போற்றித் திருப்பள்ளியெழுச்சி பாடியுள்ளமை இங்குக் கருதத் தகுவதாகும். 'பள்ளி எழுந்தருளாய்' என்ற தொடர்க்கு 'எமதுள்ளத்தில் திருப்பள்ளி ஓலக்கம் கொள்ள எழுந்தருள்க' எனப் பொருளுரைப்பர் சீகாழித் தாண்டவராயர்.

'போற்றியென் வாழ்முதலாகிய பொருளே' எனத் தொடங்கும் இத்திருப்பதிக முதற்பாடலில், நின்திருமுகத்து எமக்கு அருள்மலரும் எழில்நகைகொண்டு நின் திருவழி தொழுகோம்' என்றது, இறைவனது திருமுகத்தின் முறுவல் நகையினைக் கண்டு அவனருளாலே அவன்தாள் வணங்க விரும்பும் அடியார்களது விருப்பத்தினைப் புலப்படுத்துவதாகும். "முத்தா வுன்றன் முகவொளி நோக்கி முறுவல் நகை காண, அத்தா சால ஆசைப்பட்டேன்" (திருவாசகம் - ஆசைப்பத்து - 6) என

அடிகள் தம் உள்ளத்தமைந்த ஆசையினை வெளியிட்டுள்ளமை இங்கு நினைக்கத்தக்கதாகும்.

'இன்னிசை வீணையர் யாழினர்' எனத் தொடங்கும் திருப்பாடல், வீணையர் - யாழினர், இருக்கு இயம்பினர் - தோத்திரம் இயம்பினர், துன்னிய பிணை மலர்க்கையினர் - தொழுகையர் அழுகையர் துவள்கையர் ஆக எதிர் எதிர் பணி புரியும் இருதிறத்து அடியார்களின் குழுவினைப் புலப்படுத்தும் நிலையில் அமைந்திருத்தல் காணலாம். இவ்வாறே,

> **"தம்மல ரடியொன் றடியவர் பரவத்**
> **தமிழ்ச்சொலும் வடசொலும் தாணிழற் சேர**
> **அம்மலர்க் கொன்றை அணிந்தஎம் அடிகள்**
> **அச்சிறு பாக்கமது ஆட்சிகொண்டாரே"**

என வரும் ஆளுடைய பிள்ளையார் வாய்மொழியும், ஆரியம் தமிழ் ஆகிய இரு மொழிகளாலும் அடியார்கள் ஒருங்கு நின்று இறைவனை வழிபட்டு மகிழும் திறத்தினைப் புலப்படுத்தி நிற்றல் உணர்ந்து போற்றத் தக்கதாகும்.

'பூதங்கள் தோறும் நின்றாய்' எனத் தொடங்கும் திருப் பாடல் மாற்ற மனங்கடந்த மறையோனாகிய இறைவனைக் குறித்துப் புலவர்கள் பாடிப் போற்றும் தோத்திரப் பாடல்களின் பொருளமைதியைச் சுட்டுவதாகும். 'பப்பற' என்னும் முதற் குறிப்புடைய திருப்பாடல், ஆண்டவனைக் க்ாதலனாகவும் தம்மை அவனது அன்புக்குரிய காதலியாகவும் எண்ணி வழிபடும் அடியார்களது ஆராக் காதலைப் புலப்படுத்துவதாகும். 'முந்திய முதல் நடு இறுதியுமானாய்' எனத் தொடங்கும் பாடல், திருப்பெருந்துறையிற் சிவபெருமான் குருவாக எழுந்தருளித் தம்மை ஆண்டு கொண்டருளிய திறத்தை அடிகள் பரவிப் போற்றும் நிலையில் அமைந்துள்ளது. விண்ணகத் தேவரும் நண்ணுதற்கரிய விழுப்பொருளாகிய சிவபெருமான், தம் கண்ணகத்தே நின்று களிதரு தேனாக எழுந்தருளிய சீர்த்தியினையும், நாம் வாழும் உலகமாகிய இப்பூமி சிவன் உய்யக்கொள்கின்ற நெறியாகத் திகழும் சிறப்பினையும் ஒன்பது, பத்தாம் பாடல்களில் அ்டிகள் குறித்துப் போற்றியுள்ளமை பாடி மகிழத் தக்கதாகும்.

## 21. கோயில் மூத்த திருப்பதிகம்

"உடையாள் உன்றன் நடுவிருக்கும்" எனத் தொடங்கும் இத்திருப்பதிகம், தில்லைச் சிற்றம்பலத்தில் அருட்கூத்து இயற்றும் இறைவனது தொன்மை வாய்ந்த பொருள்சேர் புகழ்த் திறத்தை விரித்துரைக்கும் பெருமையுடைய திருப்பதிகமாதலின், 'கோயில் மூத்த திருப்பதிகம்' என வழங்கப் பெறுவதாயிற்று.

காரைக்காலம்மையார் அருளிய திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகத்தினைப் போன்று, கோயில் எனச் சிறப்பிக்கப்பெறும் தில்லைச் சிற்றம்பலத்தைத் திருவாதவூர் அடிகள் பரவிப் போற்றிய இத்திருப்பதிகமும் பொருளால் முதன்மையுடையதாக அமைந்திருத்தலால் "கோயில் மூத்த திருப்பதிகம்" என்னும் பெயருடையதாயிற்று எனக் கருதுதல் பொருந்தும்.

இது, தில்லையில் அருளிச் செய்யப்பெற்றதென்பது, 'கோயில் மூத்த திருப்பதிகம் சிதம்பரத்தில் அருளடையுங் குறிப்பதாகும்' என வரும் திருப்பெருந்துறைப் புராணத் தொடரால் அறியலாம். இப்பதிகப் பாடல்கள் பத்தும் அந்தாதியாகத் தொடர்ந்தமைந்துள்ளன. இதற்கு 'அநாதியாகிய சற்காரியம்' என முன்னோர் கருத்துரைப்பர். எல்லையறிய வொண்ணாத தொல்லைநாள் தொட்டு இறைவன் உள் பொருளாகிய உலகுயிர்களைச் செயற்படுத்தி அருளும் முறைமையினை அறிவுறுத்தும் நிலையில் இப்பதிகம் அமைந்திருத்தல் கூர்ந்து நோக்கத்தக்கதாகும்.

இப்பதிகத்திற்குச் 'சத்தியும் சிவமும் ஒத்திரு பாலுற முத்தியாகும் முறைமையருளிய உண்மை எனக் கருத்து உரைப்பர் சீகாழித் தாண்டவராயர். பொன்னம்பலத்திலே திருக்கூத்தி யற்றியருளும் எம் பெருமானே! என்னை அடிமையாகவுடைய இறைவனாகிய நீ அம்மையோடு அப்பனாகி இருவீரும் என் உள்ளத்தில் உயிர்க்குயிராய் எழுந்தருளியிருப்பது மெய்ம்மை யானால், அடியேனாகிய யான் உன் மெய்யடியாராகிய அன்பர் குழுவிலே ஒருவனாக அவர்கள் நடுவே வாழும் இன்ப அன்பினை எனக்கு அளித்தருளி எனது கருத்தினை முன்னின்று முடித் தருள்வாயாக' என அடிகள் தில்லைச் சிற்றம்பலப் பெருமானை இறைஞ்சி வேண்டுவதாக அமைந்தது,

**'உடையாள் உன்றன் நடுவிருக்கும்**
**உடையாள் நடுவுள் நீயிருத்தி**
**அடியேன் நடுவுள் இருவீரும்**
**இருப்பதனால் அடியேன் உன்**
**அடியார் நடுவுள் இருக்கும் அருளைப்**
**புரியாய் பொன்னம்பலத்தெம்**
**முடியா முதலே என் கருத்து**
**முடியும் வண்ணம் முன்னின்றே'**

எனவரும் இப்பதிகத்தின் முதல் திருப்பாட்டாகும். சிவமாகிய பரம்பொருளினின்றும் அதனிற் பிரிவிலாது விளங்கும் திருவருள் தோன்றுதலின் முழுமுதற் பொருளாகிய சிவம் அருளாகிய சத்திக்கு நிலைக்களமாகத் திகழ்வது என்பதனை, 'உடையாள் உன்றன் நடுவிருக்கும்' என்றும், அவ்வருளே திருமேனியாகக்

கொண்டு தோன்றி உயிர்களுக்கு எளிவந்தருளுதல் சிவத்தின் இயல்பாதலின் அத்தகைய சிவத்திற்கு அருளாகிய சிவசக்தியே நிலைக்களமாம் என்பதனை 'உடையாள் நடுவுள் நீ இருத்தி' என்றும், இறைவன் சத்தியும் சிவமுமாகிய தன்மையால் அம்மையோடு அப்பனாகி உயிர்தோறும் உயிர்க்குயிராய் எழுந்தருளியுள்ளான் என்பதனை, 'அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதனால்' என்றும் திருவாதவூரடிகள் விளக்கிய திறம் ஆழ்ந் துணரத்தக்கதாகும். இனி, 'உடையாள் உன்றன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீ இருத்தி, அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதனால்' எனவரும் இத் தொடர் முத்தி பஞ்சாக்கரத்தின் அமைப்பினைப் புலப்படுத்தும் நிலையில் அமைந்ததெனக் கூறுதலும் உண்டு.

'முன்னின்றாண்டாய் எனைமுன்னம் யானும் அதுவே முயல்வுற்றுப், பின்னின்றேவல் செய்கின்றேன்' என வரும் இரண்டாந் திருப்பாட்டில் 'முன்னம்' எனக் குறித்தது மகா கேவலத்தை எனவும், 'முயல்வுற்று' என்றது தாமே தருபவரைத் தம் வலியினாற் கருதல்' (திருவருட் பயன் 70) எனவும் விளக்கங் கூறுவர் தாண்டவராயர்.

அன்புடைய அடியார்களுக்குக் காட்சிதந்து வெளிப் பட்டருளியும் தமக்கு ஓரளவு வெளிப்பட்டு முழுவதும் வெளிப் படாது மறைந்தும் நின்ற இறைவனது நிலையினை யெண்ணி ஏக்கற்ற உளத்தினராகிய அடிகள்,

**"கரைசேர் அடியார் களிசிறப்பக்**
**காட்சி கொடுத்துஉன் னடியேன்பால்**
**பிரைசேர் பாலின் நெய்போலப்**
**பேசாதிருந்தால் ஏசாரோ"**

எனப் பொன்னம் பலத்தாடும் அமுதினைப் போற்றியுள்ளார். பிரை - பாலைத் தயிராக்குதற் பொருட்டு அதன்மேல் தெளிக்கப்படும் மோர்த்துளி. பிரை சேர்ந்த பாலினகத்து நெய்யானது முழுவதும் வெளிப்படாது சிறிது புலப்பட்டுத் தோன்றுமாறு போன்று, இறைவனாகிய நீ எனக்குச் சிறிதளவே தோன்றி அருள்செய்து மறைந்துள்ளாய் என்பார், 'பிரைசேர் பாலின் நெய்போலப் பேசாதிருந்தால்' என்றார்,

**"விறகிற் றீயினன், பாலிற் படு நெய்போல்**
**மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்**
**உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால்**
**முறுக வாங்கிக் கடைய முன்னிற்குமே"**

எனவரும் அப்பர் அடிகள் வாய்மொழி இங்கு ஒப்பு நோக்கி யுணர்தற்குரியதாகும்.

திருவாதவூரடிகள் அம்பலக் கூத்தனை நோக்கி,

**"இரங்கும் நமக்கு அம்பலக் கூத்தன்**
**என்றென் றேமாந் திருப்பேனை**
**அருங் கற்பனை கற்பித்தாண்டாய்**
**ஆள்வாரிலி மாடாவேனோ"**

என அன்பினால் வினவி வேண்டுவதாக அமைந்தது இப்பதிகத்தின் ஏழாந் திருப்பாட்டாகும். இதன்கண் அருங் கற்பனை, என்றது, யாவராலும் முயன்று பெறுதற்கு அரியதாய், இறைவனே பெருந்துறையிற் குருவாக எழுந்தருளிக் கற்பித்தருளிய சிவஞான உபதேசத்தினை. ஆள்வாரிலிமாடு - மேய்ப்பரில்லாத ஊர்க் காளை, மாடு ஆவேனோ என்புழி ஆக்கச் சொல் உவமப் பொருள் குறித்து நின்றது. 'கண் கெட்ட, ஊர் ஏறாயிங் குழல் வேனோ' (திருச்சதகம் 53) என முன்னருங் கூறியுள்ளமை காண்க.

'சிரிப்பார் களிப்பார் தேனிப்பார்' (9) 'நல்கா தொழியான்' (10) எனவரும் திருப்பாடல்கள் இரண்டும் சிவஞானிகளாகிய அடியார்களது அநுபவத்தை இனிது விளக்கும் நிலையில் அமைந்துள்ளன. சிரித்தல் - 'உள்குவார் உள்கிற்றெல்லாம் உடனிருந்தறிதி' என இறைவனது முற்றுணர்வினையும் அதனை அறியாது தாம் செய்த சிறுமையினையும் எண்ணி வெள்கிச் சிரித்தல். களித்தல் - 'சிறுமான் ஏந்தித் தன் சேவடிக்கீழ்ச் சென்று அங்கு இறுமாந்திருக்கும்' நிலையை யெண்ணிக் களித்தல். தேனித்தல் - 'காணுங் கரணங்களெல்லாம் பேரின்பம் எனச் சிவபரம் பொருளையே பேணித் தியானித்து உள்ளம் அள்ளூறித் தித்திக்கப் பெறுதல்.

## 22. கோயிற்றிருப்பதிகம்

கோயில் என்ற பெயர் தில்லைக்கே சிறப்பாக உரியதாயினும் ஈண்டுக் கோயில் எனக் குறிக்கப் பெறுவது திருப்பெருந் துறையில் அமைந்த திருக்கோயிலே எனக் கருதவேண்டியுளது. "செந்தழல் புரை திருமேனியுங் காட்டித் திருப்பெருந் துறையுறை கோயிலுங்காட்டி" (திருப்பள்ளியெழுச்சி - 8) எனவரும் அடிகளது வாய்மொழியும் 'ஏயுங் கோயிற்றிருப்பதிகம் பெருந் துறைத்தேசிகர் மோகம் இயம்பலாகும்' எனவரும் திருப்பெருந் துறைப் புராணத் தொடரும் இக்கருத்தினை வலியுறுத்தல் காணலாம். இப்பதிகத்தின் திருவுள்ளக்கிடை 'அனுபோக இலக்கணம்; சிவாநுபூதிக்கு அடையாளம்' என்பதாகும். திருவாதவூரடிகள் தாம்பெற்ற சிவாநுபவமாகிய அதனைக்கொண்டு இறைவனது அருளாரின்பத்தின இயல்பினைப் புலப்படுத்தும் நிலையில் அருளிச் செய்யப்பெற்றது இத்திருப்பதிகமாகும். இப்பதிகப் பாடல்கள் அந்தாதியாக அமைந்துள்ளன.

திருப்பெருந்துறையிற் குருவாய் எழுந்தருளிய பெருமான், மாறி நின்று மயக்கிடும் ஐம்புல வழியை அடைத்து அடியார்களின் உள்ளத் தினுள்ளே தேறலின் தெளிவாய் அமுதே ஊறிநின்று இன்பஞ் செய்யுந் திறத்தினையும், உணர்ந்தார்க் குணர்வரிய பரம்பொருள் அன்புடைய அடியார்களது ஆவியோடு ஆக்கை புரைபுரைகனிய உள்ளத்தினுள்ளே புகுந்து நின்று உருக்கிப் பொய்யிருள் கடிந்து மெய்ச்சுடராய்ப் பிறப்பறுக்கும் நன்மருந்தாய்க் குறைவிலா நிறைவாய்க் கோதிலா அமுதாய் மனத்திடை மன்னிச் சிந்தைவாய்ப் பாய்ந்து உள்ளே யெழுகின்ற சோதியாய், உலகப் பொருள்களெல்லாவற்றையும் தன்னகத்தடக்கிக் கொண்டு வெளிப் பட்டருளுந் திறத்தினையும், அத்தெய்வக் காட்சியை அடிகள் தம் கண்ணாரக் கண்டு மகிழ்ந்த திறத்தையும், இருள் கடிந்து எழுகின்ற ஞாயிறே போன்று உள்ளத்தினுள்ளே நின்ற அம் முதற் பொருளை ஆன்ம போதமாகிய நினைப்பறத் தாம் நினைந்துப் போற்றிய திறத்தினையும், மெய்ப்பொருளாகிய அது இவ்வுலகுயிர்களுக்கு ஆதாரமாக வேறொரு பொருள் இல்லை யென்னும்படி பார்பதம் அண்டம் அனைத்துமாய் முளைத்துப் படரொளிப் பிழம்பாய் யாண்டும் பரவிநிற்கும் பெற்றியையும், அம்முதற் பொருளின் இயல்பினை அதனது அருள் வெள்ளம் பாய்ந்த சீருறு சிந்தை யாலன்றி ஆன்ம போதத்தால் அறிதல் இயலா தென்பதனையும், ஆதி நடு அந்தமாய்த் தீதிலா நன்மெத் திருவருட் குன்றாய்த் திகழும் அப்பரம்பொருள் அன்புடைய அடியார்களின் பாசப் பிணிப்பினை அறுத்து அந்தமொன்றில்லாப் பேரானந்தப் பெருவாழ்வை வழங்கியருளும் பெற்றியுடைய தென்பதனையும், எல்லாவுயிர்கள் மாட்டும் காரணமின்றிச் செல்லும் அப் பேரருட்கு உயிர்கள் எத்தகைய கைம்மாறுகளையும் செய்யவல்ல ஆற்றலுடையன அல்ல என்பதனையும் அடிகள் அநுபவத்தின் துணைகொண்டு இத்திருப்பதிகத்தில் இனிது விளக்கி யுள்ளார்கள்.

இப்பதிகத்தின் முதற் றிருப்பாடலில் நான்காமடிக்கு 'ஈறிலாப் பதங்களாயவை கடந்த இன்பமே' எனப் பாடங் கொண்டு, "முடிவிலாத உலகாயதன் முதல் சிவாத்துவித பத வீடுமாய் அவைக்கு அப்பாலாய் நின்ற பேரின்ப சொரூபமே" எனப் பொருளுரைப்பர் தாண்டவராயர். மூன்றாந் திருப்பாடலில் 'பொய்யிருள் கடிந்த மெய்ச்சுடரே' என வரும் தொடரில் 'பொய்யிருள்' என்றது ஆணவமலத்தை. "பெத்தகாலத்து மேற்பட்டு நின்ற தனது சத்தி, முத்தி காலத்து ஒளிமுன் இருள் போல மடங்கிச் சூனியம் போல் நிற்றல் மாத்திரையே பற்றி உள்பொருளாகிய ஆணவமலத்தினைப் பொய்யிருள் என்றார்"

(சிவஞானபாடியம் சூத்திரம் 6.) என இத் தொடர்க்கு விளக்கம் கூறுவர் சிவஞான முனிவர். நிலையற்றமையாற் பொய்யாய செல்வத்தே புக்கழுந்தி (அவற்றை) மெய்யாக் கருதிக் கிடக்கச் செய்தல் பற்றிப் பொய்ம்மையை விளைக்கும் இருள் என்னும் பொருளில் ஆணவமாகிய இருள் மலத்தினைப் 'பொய்யிருள்' எனக் குறித்தார் எனினும் பொருந்தும்.

பொருளையுங் காட்டாது தன்னையுங் காட்டாது உயிரறிவை மறைத்து நிற்கும் ஆணவமாகிய செறிந்த பேரிருளிலேயும் அதனாற் பிணிப்புற்ற உயிர்கள் தெளிவு பெற்றுத் தூய்மை பெறும் வண்ணம் இறைவனது சிவஞானமாகிய பேரொளி மேற்பட்டு விளங்குவதென்பார், 'திணிந்ததோர் இருளில் தெளிந்த தூவெளியே' (4) எனப் போற்றியுள்ளார். இத் தொடர்ப் பொருளை விளக்கும்முறையில்,

**"ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றேயிடம், ஒன்று மேலிடிலொன்று**
**ஒளிக்கும் எனினும் இருளட ராதுள் ளுயிர்க்குயிராய்த்**
**தெளிக்கு மறிவு திகழ்ந்துளதேனுந் திரிமலத்தே**
**குளிக்கு முயிரருள் கூடும்படிக் கொடி கட்டினனே"**

**(காடிக்கவி. 1)**

எனவரும் பாடல் அமைந்திருத்தல் அறியத்தக்கதாகும்.

**"இன்றெனக் கருளி இருள் கடிந் துள்ளத்**
**தெழுகின்ற ஞாயிறே போன்று**
**நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்**
**நீயலாற் பிறிதுமற் றின்மை**
**சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந்**
**திருப்பெருந் துறையுறை சிவனே**
**ஒன்றுநீ அல்லை அன்றியொன் றில்லை**
**யாருன்னை அறியகிற் பாரே"** **(7)**

எனவரும் திருப்பாடல், திருவாதவூரடிகள் இறைவனது திருவருளாற் சுத்தாவத்தை அடைந்த நிலைமையினை இனிது புலப்படுத்தும் என்பர். * (* ஞானாவரண விளக்கம். பக்.541) நினைப்பற நினைதலாவது ஒரு பொருளைச் சுட்டியறியும் சுட்டுணர்வாகிய நினைப்பும் மறப்பும் அற்ற அதீத நிலையில் இறைவனது திருவருளில் அழுந்திநின்று உணர்தல். 'நினைப்பற உள்கில்' என்பது திருமந்திரம் (2666). 'நினைப்பற நினைந்தேன்' எனவரும் இத்திருவாசகப் பொருளைச் சிந்தித்துணர்ந்த தாயுமானவர், 'நினைப்பறவே தானினைந்தேன் என்ற நிலை நாடி, அனைத்துமாம் அப்பொருளில் ஆழு நாள் எந்நாளோ' (அறிஞர் உரை) எனக் கூறியுள்ளமை இங்கு உணரத்தக்கதாகும். இறைவன்

ஒவ்வொரு பொருள்தோறும் நீங்காது நிலைபெற்றுப் பரவித்தோன்றும் பருமைநிலையினனாகவும், இங்ஙனம் எல்லாப் பொருள்களோடும் தான் பிரிவறக்கலந்து நிற்பினும் அவற்றின் தன்மை தனக்கு எய்தலின்றி அணுவினும் மிக நுண்ணியனாய் மிக மிக நுணுகி மறையும் நுண்மை நிலையினனாவும் உலகெலாமாகி ஒருபொருளாய்த் திகழுந்திறத்தினை, 'சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றாம் திருப் பெருந்துறையுறை சிவனே' எனவரும் தொடரில் அடிகள் புலப்படுத்தியுள்ளார். இவ்வாறு இறைவனாகிய நீ உலகெலாம் ஆகி நிற்பினும் உலகப் பொருள்களொன்றினுந்தோய் வின்றியுள்ளாய் என்பார் 'ஒன்றும் நீ அல்லை' என்றும், எவ்வகைப் பொருள்களும் நினது சார்பின்றித் தாமே தனித்து நிற்கும் ஆற்றல் உடையன அல்ல என்பார், 'அன்றி ஒன்று இல்லை' என்றும், இங்ஙனம் அனைத்துமாய் அவையல்லையாய் நிற்கும் நின்னைத் தம் ஆன்மபோதம் இழந்து நின்னருளின் வழி அடங்கிய சிவஞானிகளையன்றித் தம்முணர்வினராகிய ஏனை யாவரும் அறியவல்லாரல்லர் என்பார், 'யார் என்னை அறியகிற்பாரே' என்றும் கூறினார். இங்ஙனம் இறைவனது அருள்வழி நின்று அவனை உணர்ந்து மகிழும் இந்நெறியின் சிறப்பினை, 'சென்று சென்றே யணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றாகி, நின்றுவிடும் என்ற நெறி நிற்கு நாள் எந்நாளோ' (அறிஞர் உரை) எனத் தாயுமானார் விளக்கிய திறம் ஈண்டு நினைக்கத் தக்கதாகும்.

இறைவனே குருவாக எழுந்தருளி வந்து தம்மை அடிமையாகக் கொண்டபோதே தனது பாரங்கெட்டுச் சர்வமும் தம்பிரானார்க்கே பாரமாம் முறையில் தன்னை அவனுக்குத் தந்த முறையினையும் அதன் பயனாக இறைவன் அடிகள் செயலெல்லாந் தன் செயலே யாக்கித் தன்னை அடிகளுக்குத் தந்த சிறப்பினையும் புலப்படுத்தும் நிலையில் அமைந்தது,

**'தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்**
**சங்கரா ஆர்கொலோ சதுரர்**
**அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்**
**யாது நீ பெற்ற தொன் றென்பால்**
**சிந்தையே கோயில் கொண்ட எம்பெருமான்**
**திருப்பெருந் துறையுறை சிவனே**
**எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய்**
**யான் இதற்கிலன் ஓர் கைம்மாறே'**

எனவரும் பத்தாந் திருப்பாடலாகும். இதன்கண் இறைவ னருளால் பாசங்களினின்றும் விடுபட்டு நல்லறிவு பெற்றுச் சுதந்தர நிலையில் உள்ள உயிர், சிவாநுபவமாகிய பேரின்ப

நுகர்ச்சி யொன்றுக்கேயுரிய தென்பதும், படைத்தல் முதலிய ஐந்தொழில் இயற்றும் இறைவனுக்கு உயிர்களாற் பெறத்தக்க பயன் எதுவும் இல்லை யென்பதும் தோன்ற, 'அந்தம் ஒன்றில்லா ஆனந்தம் பெற்றேன், யாது நீ பெற்றது ஒன்று என்பால்?' என அடிகள் வினவிப் போற்றியுள்ளமை காணலாம்.

**'நஞ்செயல் அற்றிந்த நாமற்றபின் நாதன்**
**தன்செயல் தானேயென் றுந்தீபற**
**தன்னையே தந்தானென் றுந்தீபற'** (6)

எனவரும் திருவுந்தியார், அடிகளது அநுபவ மொழியை அடியொற்றியமைந்த தாகும்.

"உம்பர் பிரான் உற்பத்தி யாதிகளுக்குரியன், உயிர் தானும் சிவாநுபவம் ஒன்றினுக்கும் உரித்தே" (சித்தியார் - சுபக் - 319) என்னும் உண்மை அடிகளது சிவாநுபவத்தில் வைத்து உணரத் தக்க முறையில் இத் திருப்பாடலில் அமைந்திருத்தல் காணலாம்.

ஆன்ம போதங்கெட்டு அருளின்வழியொழுகும் அடியார்களது உள்ளத்தையும் உடம்பினையும் கோயிலாகக் கொண்டு அவர் தம் செயலெல்லாம் தன் செயலாகக்கொண்டு எழுந்தருளியிருக்கும் இறைவனது இயல்பினை, 'சிந்தையே கோயில்கொண்ட எம்பெருமான்.... உடலிடங் கொண்டாய்.... யான் இதற்கு இலன் ஓர் கைம்மாறே' எனவரும் தொடரில் தமது அனுபவத்தின் வைத்து அடிகள் விளக்கியுள்ளார். "புகுந்தென் சிந்தைத் தன்னுருவைத் தந்தவனை" (6-27-4) எனவும், 'பொல்லாத புலாலுடம்பே புகுந்து நின்ற கற்பகமே' (6-95-4) எனவும் வரும் அப்பர் அருண் மொழிகள் இங்கு நினைக்கத் தக்கனவாகும்.

## 23. செத்திலாப்பத்து

திருவாதவூரடிகள், திருப்பெருந்துறை மேவிய சிவ பெருமானை நோக்கி, 'ஐயனே! ஆன்மபோதம் முற்றும் கெட நினது திருவருளிலே தோயப்பெற்றிலேனே, அத்தகைய நற்பேற்றினை எளியேற்கு அருள்புரிவாயாக, எனக் குறையிரந்து வேண்டும் முறையில் செத்திலாப் பத்தாகிய இதனை அருளிச் செய்துள்ளார். ஈண்டுச் சாதல் என்றது, பசுபோதம் முற்றும்கெட இறைவனது திருவருளாகிய ஓங்குணர்வில் உள்ளடங்கித் தூங்குதல். அத்தகைய சாதல் எனக்கு வாய்க்கவில்லையே என ஏங்குதலாகிய ஒருபொருள் நுதலிய பத்துப் பாடல்களை யுடைமையால் இது 'செத்திலாப் பத்து' என்னும் பெயருடையதாயிற்று.

"பதிகம் என்பது பல்வகைப் பொருளையும் தொகுதியாகச் சொல்லுதல்" என்பவாகலின், செத்திலாமையாகிய ஒரு

பொருளே நுதலிய இது செத்திலாப் பதிகம் என்னாது செத்திலாப் பத்து எனக் குறிக்கப் பெறுவதாயிற்று. அன்னைப்பத்து, குயிற்பத்து என முன் வந்தனவற்றிற்கும் அடைக்கலப் பத்து முதலாக யாத்திரைப்பத்து ஈறாகப் பத்தென்னும் பெயருடன் பின்வருவனவற்றிற்கும் இஃது ஒக்கும்.

பசுபோதத்தை வெறுத்துச் சிவனருளில் தோயப் பெற்றிலேனே என ஏக்கற்று வருந்தும் ஆற்றாமையுணர்வு, பேரானந்தம் அளவறுக்கொண்ணாத மெய்யடியார்களிடத்தன்றி ஏனையோர்பால் தோன்றாதாதலால், திருவாதவூரடிகள் அத்தகைய ஆற்றாமை மீதூர அருளிச் செய்த செத்திலாப் பத்தென்னும் இதற்குச் 'சிவானந்தம் அளவறுக் கொண்ணாமை' என முன்னோர் கருத்துரை வரைந்தனர். 'சிவானந்தம் அனுகிச் செயிக்கப்படாமை' எனப் பின் வந்தோர் விளக்கமுங் கூறினார். "ஆயும் பசுபோதம் முற்றுங் கெட வேண்டலே செத்திலாப் பத்தாகும்" என்பர் திருப் பெருந்துறைப் புராண ஆசிரியர்.

தம்மை ஆண்டு கொண்டருளிய இறைவனைப் பிரிந்து கணமும் தரித்திருக்கப்பெறாத திருவாதவூரடிகள், தமது ஆன்மபோதம் கெட்டொழிதல் வேண்டும் என இறைவனை வேண்டுபவர், அதற்கு நிலைக்களனாகிய தமது உடம்பும் பொன்றக்கெட இறந்துபடவில்லையே என இரங்கி இறைவனை நோக்கி முறையிடும்நிலையில் இதன் பத்துப் பாடல்களும் அமைந்திருத்தல் காணலாம்.

இதன் ஐந்தாந் திருப்பாடலில் உள்ள ஆட்டுத் தேவர், நாட்டுத்தேவர், சேட்டைத் தேவர் என்பன முறையே உயிர்களின் உள்ளத்தைப் பல துறைகளில் ஈர்த்து அலைக்கழித்து ஆட்டு விக்கின்ற ஐம்புலன்களையும், வான நாட்டில் வாழ்வோராகிய இந்திரன் முதலிய தேவர்களையும், உலகங்களைத் தொழிற்படுத்து இயக்கும் காரணேசுரர்களையும் குறிப்பனவாகும். இதன் ஏழாந் திருப்பாடலில், 'நமச்சிவாய வென்றுன்னடி பணியாப் பேயனாகிலும் பெருநெறி காட்டாய்' எனவரும் தொடர், திரு ஐந்தெழுத்து உயிர்களின் வாசனா மலத்தை ஒழிப்பதாய் இறைவனை வழிபட்டு இன்புறும் பெருநெறிக்குச் சாதனமாம் என்னும் உண்மையினைப் புலப்படுத்தல் அறியத் தக்கதாகும்.

## 24. அடைக்கலப்பத்து

பேரிடர் செய்யும் பசுபாசப்பிறப்பிற்கு அஞ்சிய திருவாதவூரடிகள் தம்மை அப் பிணிப்பினின்றும் நீக்கி உணர்வற்ற உடைமைப் பொருள் போல் ஏன்று கொள்ளும்படி இறைவனை வேண்டி அடைக்கலம்புகும் நிலையிற் பரவிப்போற்றிய

பனுவலாதலின் இஃது அடைக்கலப்பத்து என்னும் பெயருடைய தாயிற்று. அடைக்கலமாவது, தனக்கு இன்றியமையாத உடைமைப் பொருளைப் பகைவர் முதலியோரானுளவாம் கேடுகளை நீக்கிப் பாதுகாத்துத் தரவல்ல தக்கவர் பால் ஒப்படைத்தலாகும். அடிமையாகிய தன்னை உணர்வுடைய உயிராகக்கருதாது உணர்வற்ற உடைமைப் பொருள் போன்று எண்ணி ஏன்று கொள்ளுமாறு இறைவன்பால் அடைக்கலம் புகுதல் அன்பிற் சிறந்த மெய்யடியார்களின் இயல்பாகும்.

**"படைக்கல மாகவுன் னாமத்தெழுத்தஞ்சென் னாவிற் கொண்டேன்**
**இடைக்கல மல்லேன் எழுபிறப்பும் முனக்காட் செய்கின்றேன்**
**துடைக்கினும் போகேன் தொழுதுவணங்கித்தூ நீறணிந்துன்**
**அடைக்கலங் கண்டாய் அணிதில்லைச் சிற்றம்பலத்தரனே"**

**(4-81-8)**

எனவரும் அப்பரடிகள் வாய்மொழி இங்கு நினைக்கத் தகுவதாகும், பிறவித் துன்பத்திற்கு அஞ்சிய உயிர்கள் இறைவன்பால் அடைக்கலம் புகுதல் இன்றியமையாதது என்னும் உண்மையினை உலகினர்க்கு உணர்த்தும் முறையில் அடிகள் அடைக்கலப்பத்தினைப் பாடிப் போற்றியுள்ளார். இந்நுட்பம், ஓது வல்வாதனை வந்தணுகாமல் அடைக்கலப்பத் துரைத்தாமே' என்னும் திருப்பெருந்துறைப் புராணத்தால் இனிது புலனாம், இதன் பாடல்தோறும் முடிவில் உடையாய் அடியேன் உன் அடைக்கலமே' என அடிகள் இறைவனை நோக்கி முறையிடுதல் காணலாம்.

அடைக்கலப்பத்திற்குப் 'பக்குவநிண்ணயம், அஃதாவது வித்தும் அங்குரமும்போல வென்றல்' என முன்னோர் கருத் துரைப்பர். உயிர் தன்முனைப் படங்கித் தாழ்வெனுந் தன்மை யோடும் இறைவனை அடைக்கலம் புகுதலாகிய இந்நிலை, மலமாசு நீங்கி இறைவனது அருளாரின்பப் பெருவாழ்வை அடைதற்குரிய பக்குவத்தையடைந்தது என உறுதிசெய்தற்குரிய அடையாளமாதலின், இதற்குப் பக்குவ நிர்ணயம் எனப் பண்டையோர் கொண்ட கருத்து மிகவும் பொருத்த முடையதே யாகும்.

இதன்கண் அமைந்த பத்துப்பாடல்களும் யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடைய கொச்சகவொருபோகாய், ஓரோசையாக அமையாமல் அசையும் சீரும் இசையோடு புணர்த்து ஓதுமிடத்து தாழிசை, கட்டளைக்கலித்துறை என இவ்வாறு வேறுபட்ட ஓசையுடைய பாடல்களாய் அமைந்தமை யால் இப்பாடல்களைக் 'கலவைப்பாட்டு' என முன்னோர் குறித்துள்ளார்கள். இப்பாடல்கள் கலிவிருத்தம் எனத் தாண்டவ

ராயர் உரையிற் குறிக்கப்பட்டிருத்தல் யாப்பிலக்கணப் பயிற்சியில்லாமையால் இடைக்காலத்தில் நேர்ந்த பிழையெனக் கருதவேண்டியுளது.

இதன்கண் இறைவனது கருணையின் உயர்வும் அவனடி அடைந்த அடியார்களின் பெருமையும் தமது சிறுமையும் கூறி, உணர்வுடைய ஆன்மாவாகிய தம்மையும் உணர்வற்ற உடைமைப் பொருளாக எண்ணி ஏற்றுக்கொள்ளுதல் வேண்டும் எனத் திருவாதவூரடிகள் இறைவனை வேண்டிய திறம் உணர்ந்து போற்றுதற்குரியதாகும்.

## 25. ஆசைப்பத்து

திருவாதவூரடிகள், உலகப் பொருள்களில் தமக்குள்ள ஆசையை அறவே நீக்கித் திருவருளில் தாம் கொண்டுள்ள ஆசையை நிறைவேற்றி அருளும்வண்ணம் தம்மை ஆட்கொண்டருளிய இறைவனை இறைஞ்சி விண்ணப்பிக்கும் முறையில் பரவிப்போற்றிய பத்துத் திருப்பாடல்களையுடைய பதிகமாதலின், இஃது ஆசை பத்து என்னும் பெயருடையதாயிற்று. இதற்கு, 'ஆத்துமவிலக்கணம் - அஃதாவது ஆன்ம ரூபத்தையறிதல்' எனக் கருத்துரைப்பர் முன்னோர்.

**"கருவியுறும் ஊனுடற்கண் வாராமல் திருவருளிற் கலப்பதற்கே**
**அரனடியைப் புகழ்ந்து பெருகார்வமொடு பாடுதலே ஆசைப்பத்தாம்"**

என்பது திருப்பெருந்துறைப் புராணமாகும். ஞானம் பெற்ற நல்லுயிரைக் கீழ்நிலைக்கு இழுத்துச்செல்லும் இழிநிலையினதாகிய ஊனுடற்கண் உள்ள ஆசையை விலக்கிப் பேரின்ப நிலையினை அருளவல்ல இறைவனது திருவருளைப் பெறுதற்கும், அவ்விறைவனது பொருள்சேர் புகழைப் பரவித் துதித்தற்கும், அவனருள் பெற்ற பழவடியார்களின் திருக்கூட்டத்தைக் கண்டு மகிழ்வதற்கும் பஞ்சேரடியாள் பங்கனாகிய இறைவன் திருவாயால் அஞ்சேல் என்னத் தம்மை அழைத்து அருள் புரிதற்கும் தம் மனத்தெழுந்த தூய ஆசையினை அடிகள் இப்பதிகப் பாடல்களில் விரித்துக் கூறியுள்ளமை காணலாம்.

"தன்னாலே தனையறிந்தால் தன்னையுந்தானே காணும்" (சிவப்பிரகாசம் - 22) எனவும், 'அதிலறிவடங்கி மன்னிடவியாபியாய வான்பயன் தோன்றும்' (மேற்படி - 28) எனவும் கூறுமாறு, எல்லாம்வல்ல இறைவனாகிய தலைவனையுணர்ந்து அவ்வுணர்வின் பயனாக ஆன்மாவாகிய தம்மியல்பினை உணர்தல் வேண்டும் என மெய்ந்நூல்கள் கூறுங்கூற்று, சிவரூபத்தால் ஆன்ம தரிசனமும், சிவ தரிசனத்தால் ஆன்ம சுத்தியும் ஆமாறு கூறிற்று என விளக்கங் கூறுவர் சிவஞான

முனிவர். இங்ஙனம் சிவரூபத்தால் ஆன்ம தரிசனம் உணர்ந்த நிலையில், ஆன்மாவாகிய தம் இயல்பு விளங்கத் திருவாத வூரடிகளால் ஆசைப்பத்தாகிய இப்பதிகம் அருளிச் செய்யப் பெற்றமையால் இதற்கு 'ஆத்தும இலக்கணம்' என முன்னுள்ளோர் கருத்துரை வரைந்தமை மிகவும் பொருத்த முடையதேயாகும்.

"மொய்ப்பால் நரம்பு கயிறாக மூளையென்பு தோல் போர்த்த, குப்பாயம் புக்கிருக்ககில்லேன்" (2) எனவும், "சீவார்ந்து ஈமொய்த்து அழுக்கொடு திரியும் சிறுகுடில்" (3) எனவும், "மிடைந்து எலும்பு ஊத்தை மிக்கு அழுக்கூறல் வீறிலி நடைக்கூடம்" (4) எனவும், "அளிபுண் ணகத்துப் புறந்தோல்மூடி அடியேனுடை யாக்கை" (5) எனவும் இவ்வாறு தமது உடம்பின் தூய்மையில்லாத் தன்மையும் தம் முயிரின் இயல்பும் பகுத்துணர்ந்து,

**"எய்த்தேன் நாயேன் இனி இங்கிருக்க கில்லேன் இல்வாழ்க்கை வைத்தாய் வாங்காய் வானோரறியா மலர்ச் சேவடியானே" (6)**

என அடிகள் இறைவனை வேண்டிப் போற்றுதல் இங்கு நோக்கத்தக்கதாகும்.

## 26. அதிசயப்பத்து

அதிசயம் என்ற சொல் மிகுதியென்னும் பொருளுடைய தாகும். அச்சொல் ஒரு பொருளின் மிகுதியால் விளைந்த வியப்பு என்னும் பொருளில் உலக வழக்கில் ஆளப்பெற்று வருவதனை யாவரும் அறிவர். தமக்குத் திருவருள் சுரந்த இறைவனது திருவருட் பெருமையின் மிகுதியைக் குறித்துத் திருவாதவூரடிகள் வியந்து போற்றுவதாக அமைந்தது இப்பதிகமாதலின், இஃது அதிசயப்பத்து என்னும் பெயர்த்தாயிற்று. இந்நுட்பம்,

**"வெருவிமலத்தினைச் சீலத்தொன்றாகு மடியார்குழாத்துடனே கூட்டும்**
**பரம ரருட் பெருமை மிகுதியைப் புகழ்ந்து பாடல் அதிசயப் பத்தாமே"**

எனவரும் திருபெருந்துறைப் புராணத்தால் நன்கு புலனாதல் காணலாம்.

'உலக வாழ்க்கையிலேயே சிக்குண்டு இறைவனது திருவடிப் பணிக்கு உரிய தகுதியின்றி அல்லற்படும் எளியேனை என் தந்தையாகிய இறைவன் தன்னருளால் எளி வந்து திருவடிநல்கி ஆட்கொண்டு நேயமிகுந்த மெய்யடியார்களோடு ஒருங்கு கூட்டியருளிய வியத்தற்குரிய இச்செயலை நாம் கண்ணாரக் காணப்பெற்றோம்' என இறைவன்து திருவருளை வியந்து போற்றும் முறையில் திருவாதவூரடிகள் அதிசயப்பத்தினை

அருளிச் செய்துள்ளார். இறைவனது அளத்தற்கரிய பெருமையும், தமது சிறுமையும், அம்முதல்வனது பேரருள் வெள்ளம் தம்பால் விரைந்து பரவிய புதுமையும், அதனால் விளைந்த பேரானந்தமாகிய ஆக்கமும் விளங்க அடிகள் இத்திருப் பதிகத்தினை அருளிச் செய்துள்ளமை காணலாம்.

**"புதுமை பெருமை சிறுமை ஆக்கமொடு**
**மதிமை சாலா மருட்கை நான்கே"** **(தொல் -மெய்-7)**

எனத் தொல்காப்பியனார் குறித்த புதுமை, பெருமை, சிறுமை, ஆக்கம் என்னும் நால்வகைப் பொருள் பற்றியும் தம்பால் (வியப்புச்) சுவை தோன்றிய திறத்தை அடிகள் இப்பதிகத்திற் புலப்படுத்தியுள்ளமை அறியத்தக்கதாகும்.

அதிசயப்பத்தாகிய இதற்கு 'முத்தியிலக்கணம்' அஃதாவது மோட்சத்தின் அடையாளம்' என முன்னோர் கருத்துரை வரைந்து உள்ளனர். 'அத்தன் ஆண்டு தன் அடியரிற் கூட்டிய அதியங் கண்டாமே என அடிகள் இறைவன் திருவருளால் பொய்ந்நெறியாகிய பிறவித் தொடர்ச்சியை விட்டு நீங்கிச் சித்த மலம் அற்றுப் பத்தர் இனத்தராய்ப் பரனுணர்வோடு ஒன்றியுணரும் மெய்த்தவச் செல்வராய் முத்தி நெறியில் திகழும் மாண்பினைப் புலப்படுத்துவனவாக இப்பதிகப் பாடல்கள் அமைந்திருத்தலால், இப்பாடல்கள் சீவன் முத்தரது இயல்பினை விளக்கும் சிறந்த இலக்கியமாகத் திகழ்கின்றன.

கந்தழி யெனப் போற்றப்பெறும் பரம்பொருளாகிய இறைவனது இயல்பினை விளக்கக் கருதிய நச்சினார்க்கினியர், "கந்தழியாவது ஒரு பற்றும் அற்று அருவாய்த் தானே நிற்குந் தத்துவங் கடந்த பொருள். அது,

**"சார்பினாற் றோன்றாது தானருவா யெப்பொருட்குஞ்**
**சார்பென நின் றெஞ்ஞான்றும் இன்பந் தகைத்தரோ**
**வாய்மொழியான் மெய்யான் மனத்தா னறிவிறந்த**
**தூய்மையதா மைதீர் சுடர்"**

என்பதாம். இதனை,

**'உற்ற ஆக்கையின் உறுபொருள் நறு மலர் எழுதரு நாற்றம்போற்**
**பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்'**

(திருவாசகம் அதிசயப் பத்து - 9) என அதனை உணர்ந்தோர் கூறியவாற்றான் உணர்க" (திருமுருகாற்றுப்படை உரை) என இவ் அதிசயப்பத்தின் ஒன்பதாந் திருப்பாடலை எடுத்துக் காட்டியுள்ளமை இங்கு நினைக்கத் தகுவதாகும்.

## 27. புணர்ச்சிப்பத்து

*திருப்பெருந்துறையில் குருவாக எழுந்தருளி வந்து ஆட்கொண்டருளிய இறைவனைப் பிரியாது போற்றும் பேரன் பின்ராகிய திருவாதவூரடிகள், அம்முதல்வன் திருவடிகளைப் பூண்டு அப்பெருமானைப் பிரிவின்றி ஒன்றியுடனாம் பேரின்ப நிலையினை விரும்பி, 'என் பொல்லா மணியைப் புணர்ந்து புடைபட்டிருப்பது என்று கொல்லோ' என்று நெஞ்சம் நெக்குருகிப் போற்றும் நிலையில் இப்பதிகத்தினை அருளிச் செய்தமையின், இது புணர்ச்சிப்பத்து என்னும் பெயருடையதாயிற்று.*

**"ஆண்ட குருவைப் பிரியா தணைந்துபணி**
**புரிந்துமிகும் அன்போ டின்பம்**
**பூண்டு கிடக்கப் பெறுவ தென்றுகொலோ**
**எனும் விருப்பம் புணர்ச்சிப் பத்தாம்"**

*எனத் திருப்பெருந்துறைப் புராண ஆசிரியர் இதன் பொருளமைதியைக் குறித்துள்ளமை இங்கு நோக்கத் தக்கதாகும். இப்பதிகத்திற்கு 'அத்துவித இலக்கணம்; அஃதாவது ஒன்று மல்ல இரண்டு மல்ல என்றல்' என முன்னோர் கருத்துரை வரைந்தனர். ஆன்மாவும் சிவனும் ஒரு பொருளாகில் ஆன்மா சிவத்துடன் கூட வேண்டியதில்லை. பொருள் ஒன்று என்ற நிலையிற் பெறுவானும் பேறும் இல்லை. ஆன்மா வேறு சிவம் வேறு என இரண்டாய் நிற்கும் என்று சொல்லின், அந்நிலையைச் சாயுச்சியம் என்று சொல்லுதற்கு இடமில்லை. எனவே பொருட்டன்மையால் வேறாகிய ஆன்மாவும் சிவமும் கலப்பினால் ஒன்றாய்ப் பிரிவறக் கலந்து ஒன்றியுடனாகும் நிலையே அத்துவிதம் எனப்படும் என்பர் சைவ சித்தாந்திகள்.*

*இப்பதிகத்தில், 'விரையார் மலர் தூவிப் பூண்டு கிடப்பது என்று கொல்லோ என் பொல்லா மணியைப் புணர்ந்தே' (3) எனவும், 'சொல்லும் பொருளும் இறந்த சுடரை.... புல்லிப் புணர்வதென்று கொல்லோ என் பொல்லா மணியைப் புணர்ந்தே' (4) எனவும், இவ்வாறு ஆன்ம போதம் அடங்கி, அவனே தானேயாகிய அந்நெறி ஏகனாகி நிற்கும் அத்துவித இயல்பினைத் திருவாதவூரடிகள் தமது அருளனுபவத்தால் இத்திருப்பதிகத்தில் இனிது விளங்க அருளிச் செய்திருத்தல் கூர்ந்துணரத் தக்கதாகும்.*

**'அல்லிக் கமலத்தயனும் மாலும்**
**அல்லாதவரும் அமரர் கோனுஞ்**
**சொல்லிப் பரவும் நாமத்தானைச்**
**சொல்லும் பொருளும் இறந்த சுடரை**

**நெல்லிக் கனியைத் தேனைப் பாலை**
**நிறையின் னமுதை அமுதின் சுவையைப்**
**புல்லிப் புணர்வ தென்று, கொல்லோ என்**
**பொல்லா மணியைப் புணர்ந்தே'** **(4)**

எனவரும் திருப்பாடலில், தன்னடைந்தார்க்கு இன்பங்கள் தரும் இறைவனை நெல்லிக்கனி, தேன், பால், அமுது முதலிய இன்சுவைப் பொருளாக அடிகள் குறித்துப் போற்றியுள்ளார். ஈண்டு நெல்லிக்கனி என்பது ஔவையுண்ட நெல்லிக்கனி போன்று அமிழ்தாம் நிலையில் உள்ள சிறந்த கனியினை, 'அங்கை நெல்லியம் பழத்திடையமுதே' (7-54-3) என நம்பியாரூரர் இறைவனைப் போற்றியுள்ளமையும்,

**'இரும்பைக் காந்தம் வலித்தாற் போலியைந்தங் குயிரை**
**எரியிரும்பைச் செய்வதுபோல் இவனைத்தானாக்கி**
**... ... ... ... ... ... ... .... .... ....**
**கரும்பைத் தேனைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்**
**கட்டியை ஒத்திருப்பன் அந்த முத்தியினிற் கலந்தே'**
**(சித்தியார் சுபக்கம் - 321)**

என அருணந்தி சிவனார், இறைவன் உயிரின்கண் கலந்த வழி இவ்வியல்பிற்றெனப் பிரித்தறியவாராது ஆனந்த சொரூபமாய் நிற்கும் இயல்பினை விரித்துரைத்தமையும் இங்குச் சிந்தித்தற் குரியனவாகும்.

## 28. வாழாப்பத்து

'இறைவனாகிய நினது பற்றினையன்றி இவ்வுலகப் பொருள்களிற் சிறிதும் பற்றுடையேன் அல்லேன்; உலக வாழ்க்கையிற் சிக்குண்டு மேலும் வாழ்தற்கு விரும்புகின்றிலேன்; எளியேனை நின்பால் 'வருக' என அழைத்தருளி நின் திருவடி நீழலிற் கூட்டி அருள்புரிவாயாக' என இறைவனை வேண்டி அழுதரற்றி முறையிடும் நிலையில் திருவாதவூரடிகளால் அருளிச் செய்யப் பெற்றது, 'வாழாப் பத்து' என்னும் இப்பனுவலாகும். உலக வாழ்க்கையில் உளவாகும் இன்னல்களை யெண்ணி 'இவ் வாழ்க்கையில் யான் வாழ்கிலேன்' என வாழ்வினை வெறுத் துரைக்கும் முறையில் அமைந்தமையின், இது வாழாப்பத்து என்னும் பெயர்த்தாயிற்று. வாழாப் பத்து - வாழ விரும்பாமையைப் புலப்படுத்தும் பத்துப் பாடல்களால் இயன்ற பனுவல்.

**"நீண்ட வுலகத்தினிற் பற்றொன்றிலேன் இவ்வுடற்கண் நின்று**
**வாழேன்**
**மாண்டகு நின் பதநிழற்கீழ் வருக வருள் புரியெனுஞ் சொல்**
**வாழாப் பத்தே"**

என்பது திருப்பெருந்துறைப் புராணம். இத்திருப்பத்திகப் பாடல் தோறும், "திருப்பெறுந்துறையுறை சிவனே! பற்று நான் மற்றிலேன் கண்டாய், உலகில் வாழ்கிலேன் கண்டாய், வருக என்று அருள் புரியாயே" என இறைவனை நோக்கி அடிகள் முறையிடுதல் காணலாம்.

இங்ஙனம் உலக வாழ்க்கையிற் பற்றின்றிப் பற்றற்றான் திருவடிகளையே தஞ்சமெனப் பற்றி எல்லாப் பற்றுக்களையும் விட்டொழித்த நிலையில் வீடுபேறாகிய பேரின்பநிலை தானே வந்தெய்தல் உறுதியாதலின் அடிகளது பற்றறுதியினைப் புலப்படுத்தும் இத்திருப்பதிகத்திற்கு, 'முத்தியுபாயம் - பிரபஞ்சத்தை விட்டுப் பரபோகத்தைக் கூடுதற்கு உபாயம்' என முன்னோர் கருத்துரைப்பாராயினர்.

## 29. அருட்பத்து

இறைவனது திருவருளை வேண்டிப் போற்றிய பத்துப் பாடல்களையுடைய பதிகமாதலின் 'அருட்பத்து' என்னும் பெயருடையதாயிற்று. திருப்பெருந்துறையிற் குருந்தமர நீழலில் குருவாக எழுந்தருளி வந்து தம்மை ஆண்டருளிய பெருமானை நோக்கிச் 'சோதியே சுடரே, சூழொளி விளக்கே, ஆதியே' என அன்பினால் அழைத்து "அடியேன் ஆதரித்தழைத்தால் அதெந்துவே என்றருளாயே" எனப் பாடல்தோறும் இறைவனது அருளை வேண்டிப் பரவிப் போற்றியுள்ளமை காணலாம்.

**"சோதியே சுடர் விளக்கே துயர்ப் பிறவிக்**
**கடல் விடுத்துன் நற்றாள் சேர்தற்கு**
**ஆதியே ஆதரித்திங் குனையழைத்தால் அதெந்துவெனக்**
**கேளெனுஞ்சொல் அருட்பத்தாகும்".**

என்பது திருப்பெருந்துறைப் புராணம். திருப்பதிகத்திற் பாடல் தோறும் பயின்ற 'அதெந்துவே' என்ற திசைச் சொல்லுக்கு மலையாள மொழியில் 'அது என்ன' என்ற பொருளும், கன்னட மொழியில் 'அஞ்சாதே' என்ற பொருளும் வழங்கும் என்பர்.

ஒரு பற்றுக்கோடும் இன்றி அல்லலுறும் அடியேனை நோக்கி ஆண்டவனாகிய நீ 'வருந்துதல் எதற்கு, அஞ்சாதே' என ஆறுதல் மொழி பகர்ந்து அருள் புரிவாயாக' எனத் திருவாதவூரடிகள் திருப்பெருந்துறை யிறைவனது திருவருளை வேண்டிப் பரவிப் போற்றும் நிலையில் இப்பதிகப் பாடல்கள் அமைந்துள்ளன.

இறைவனது திருவருளையே வேண்டித் தம்முடை கருவி கரணங்களுக்கு இடமாய மாமாயையைத் தூய்மை செய்து கொள்ளும் முறையில் அடிகளால் அருளிச் செய்யப் பெற்றது

இப்பதிகமாதலின், இதற்கு 'மகா மாயா' சுத்தி - மாயைச் சுத்தி பண்ணுதல்' என முன்னோர் கருத்துரை வரைந்தனர்.

திருப்பெருந்துறையிற் குருவாய்வந்து மெய்ப்பொருளை உபதேசித்தருளிய இறைவன், திருவாதவூரடிகளைச் தனித்திருக்கச் செய்து அடியார் குழுவுடன் மறைந்த பொழுது, இறைவனைப் பிரிந்துறைதலாற்றாத அடிகள், இறைவனது திருவருளை வேண்டி இப் பதிகத்தினைப் பாடிப்போற்றினார் என்பது,

**"திருந்துவார் பொழில்சூழ் திருப்பெருந்துறையிற்**
**செழுமலர்க் குருந்தமே வியசீர்**
**இருந்தவா றெண்ணி யேசறா நினைந்திட்**
**டென்னுடை யெம்பிரானென்றென்**
**றருந்தவா நினைந்தே யாதரித் தழைத்தால்**
**'அலைகட லதனுளே நின்று**
**பொருந்தவா கயிலை புகுநெறி யிதுகாண்**
**போதராய் 'என்றருளாயே'"** (அருட்பத்து - 10)

எனவரும் இப்பதிகப் பாடலால் இனிது விளங்கும். இதன்கண் 'அலைகடல்' என்றது, துன்ப அலைகளையுடைய பிறவிப் பெருங்கடலை. 'நாணோணாததோர் நாணமெய்தி நடுக்கடலுள் அழுந்தி நான், பேணோணாத பெருந்துறைப் பெருந்தோணி பற்றியுகைத்தலும்' (திருக்கழுக்குன்றப் பதிகம் - 4) என அடிகள் இக்கடல் நடுவே தாம் சிக்கித் திருப்பெருந்துறையைத் தோணியாகப் பற்றி நின்ற திறத்தைக் குறித்துள்ளமை இங்கு ஒப்புக்நோக்கற் பாலதாகும்.

## 30. திருக்கழுக்குன்றப் பதிகம்

திருவாதவூரடிகள் திருக்கழுக்குன்றத்தினை யடைந்து அங்குக் கோயில் கொண்டருளிய இறைவனை இறைஞ்சிப் போற்றித் திருபெருந்துறையிற் குருந்தமர நீழலில் குருவாக எழுந்தருளி யிருந்து மெய்ப்பொருளை உபதேசித்தருளிய ஆசிரியத் திருக்கோலத்தை அடியேற்குக் காட்டியருள்வாயாக' எனவேண்டி நின்றாராக, இறைவனும் அடிகள் விரும்பிய வண்ணமே திருப்பெருந்துறையில் தான் கொண்ட திருக்கோலத்தினை அடிகளுக்குக் காட்டியருளினான் என்பதும், அத்திருக்கோலத்தினைக் கண்டு மகிழ்ந்த திருவாதவூர்டிகள் திருக்கழுக்குன்றப் பதிகம் என்னும் இப்பனுவலைப் பாடிப் போற்றினார் என்பதும் வரலாறு. இச் செய்தி,

**நீதிமறை பரவு திருப்பெருந்துறையிற்**
**குருவடிவாய் நிகழ்ந்த கோலம்**
**காதலொடுங் காட்டினையே யெனுங்களிப்புப்**
**பகர்தல் திருக்கழுக்குன் றாமே"**

எனவரும் திருப்பெருந்துறைப் புராணத்தாலும், இப் பதிகப் பாடல் தோறும் பெருந்துறைப் பெருமானை முன்னிலையாக்கி, 'திருக்கோலம் நீ வந்து காட்டினாய் கழுக்குன்றிலே' என வாதவூரடிகள் மனம் நைந்துருகிப் போற்றுதலானும் இனிது புலனாம். இப்பதிகம் ஏழு திருப்பாடல்களை யுடையதாகும். அடிகள் தமக்கு அருள் சுரந்த குருவின் திருக்கோலத்தைத் தரிசித்த நிலையிற் பாடிய பதிகமாதலின் இதற்குக் 'குரு தரிசனம் - பசுத்துவம் கெட்ட இடம்' என முன்னோர் கருத்து உரைத்தனர்.

காய்ந்து உலர்தல் இல்லாத நிலையில் உயிரோடு ஒன்றித்துள்ள ஆணவமலமாகிய விதை, மேல் விளைவெய்தித் துன்பங்களைப் பெருக்காதவாறு வறுத்த வித்துப்போல் ஆற்றல் குன்றியடங்க, இருவினை ஒப்பு எய்த, இறைவன் தம்மை ஆட்கொண்டருளிய செய்தியை,

**"பிணக்கில்லாத பெருந்துறைப் பெருமானுள் நாமங்கள் பேசுவார்க்**
**கிணக்கிலாததோர் இன்பமேவரும்; துன்பமே துடைத் தெம்பிரான்**
**உணக்கிலாததோர் வித்து மேல்விளையாமல் என்வினை ஒத்தபின்**
**கணக்கிலாத் திருக்கோலம் நீவந்து காட்டினாய் கழுக்குன்றிலே"** (1)

எனவரும் திருப்பாடலில் அடிகள் எடுத்துரைத்துப் போற்றியுள்ளார். இப்பாடலில் 'உணக்கிலததோர் வித்து' என்றது. காய்ந்து உலர்தல் இல்லாத நிலையில் உயிர்களுடன் ஒற்றித்துள்ள ஆணவமலமாகிய விதையின், மேல் விளையாமல் வினை ஒத்தலாவது, ஆணவமாகிய அவ்விதை, வறுத்த வித்துப்போல் முளைக்கும் ஆற்றல் கெட்டு அடங்க, உயிர் இன்ப துன்பங்களை ஒன்றாக ஏற்று நுகரும் இருவினையொப்பு அடையப் பெறுதல்.

சிவபெருமான் மதுரையில் தன்னை அன்பினால் வழிபட்டுப் பரவிய வந்தியென்னும் செம்மனச் செல்வியின் பொருட்டு அவ்வம்மையார் தந்த பிட்டினைக் கூலியாகப் பெற்று மண்சுமந்த அருட்செய்தியினையும், இறைவன் தமது கலக்கத்தை மாற்றிக் கண்ணீர் துடைத்து அருள் சுரந்த பெருமையினையும், திருப்பெருந்துறை பிறவிப் பெருங்கடலைக் கடத்தற்குரிய தோணியாகத் தமக்கு வாய்த்த பெற்றியினையும், கொழுநனே சிவன் எனக்கொண்டு போற்றும் வண்ணம் பேதமில்லாதோர் கற்பளித்த பெருமையினையும், இறைவன் தன்னை வழிபட்ட இயக்கிமார் அறுபத்து நால்வரும் தன் அருட்பண்புகளாகிய எண்குணங்களையும் பெற்றுச் சிவமேபெறுந் திருவினராய் விளங்கச் செய்தருளிய சீர்த்தியினையும் திருவாதவூரடிகள் இத்திருப்பதிகத்தில் உளமுருகிப் பரவிப் போற்றியுள்ளார்.

ஆறாந்திருப்பாடலில் 'பேதமில்லதோர் கற்பளித்த பெருந்துறைப் பெருவெள்ளமே' என அடிகள் இறைவனைப் போற்றுகின்றார். பேதம் இல்லதோர் கற்பு - வேறுபாடில்லாத கற்பு; கொழுநன் வேறு, சிவன் வேறு என்னும் வேற்றுமையின்றிக் கொழுநனே சிவன் எனக்கொண்டு போற்றும் மகளிரது உள்ளத்திண்மையைத் தன்னை வழிபட்ட இராவணன் மனைவியாகிய வண்டோதரிக்கு இறைவன் அருள் புரிந்தான் என்பதனை,

**"ஏர்தரும் ஏழுலகேத்த எவ்வுருவுந் தன்னுருவாய்**
**ஆர்கலி சூழ்தென்னிலங்கை அழகமர் வண்டோதரிக்குப்**
**பேரருளின்ப மளித்த பெருந்துறை மேய பிரானைச்**
**சீரிய வாயாற் குயிலே தென்பாண்டி நாடனைக் கூவாய்"**
**(குயிற்பத்து - 2)**

என வரும் திருப்பாடலில் அடிகள் விரித்துரைத்தமை இங்கு நினைக்கத்தக்கதாகும். இனி, 'பேதமில்லாதோர் கற்பளித்த' என்பதற்கு, 'பேதமில்லாத வண்ணம் ரிஷிபத்தினிகளைப் பரமசிவனிடத்து வைத்த அன்பே கற்பென்னும்படி அவர்களாற் கொண்ட புருடன் ஏவல் கற்பைப் பொய்யெனக் காட்டி ஆண்ட' எனப் பொருளுரைப்பர் சீகாழித் தாண்டவராயர். அடியார் களைச் சிவனெனவே பேணிப் போற்றும் பேரன்பினைப் 'பேதமில்லதோர் கற்பு' என இத்தொடரில் அடிகள் குறித்தருளினார் எனக் கொள்ளுதலும் பொருந்தும்.

## 31. கண்டபத்து

தில்லைப்பதியை யடைந்த திருவாதவூரடிகள் தில்லைச் சிற்றம்பலத்தில் இறைவன் இயற்றியருளும் ஆனந்தத் திருக் கூத்தினைக் கண்டு மகிழ்ந்து கண்டபத்து என்னும் இத்திருப் பதிகத்தினைப் பாடிப் போற்றினார் என்பது வரலாறு. ஐம்புலன் வழியே சென்று மயங்கி அல்லற்படுந் தொல்லைகள் யாவும் நீங்கத் தில்லைச் சிற்றம்பலத்தே இறைவன் புரிந்தருளும் ஆனந்தத் திருக்கூத்தினைக் கண்டு மகிழ்ந்தேன் என்பதுபட 'அந்தமிலா ஆனந்தம் அணிகொள் தில்லை கண்டேனே' என்றாங்கு உவந்துரைக்கும் நிலையில் பத்துப் பாடல்களை யுடைய திருப்பதிகமாக அமைந்தமையின் இது 'கண்ட பத்து' என்னும் பெயருடையதாயிற்று. இதன் பொருளமைதியினை,

**"இந்திரிய வயமயங்கா தேயெடுத்துத் தானாக்கு மெழிலானந்தம்**
**கந்தமலி தில்லையினுட் கண்டேனென் றுவந்துரைத்தல்**
**கண்டபத்தாம்"**

எனவரும் திருப்பெருந்துறைப் புராணத்தால் அறியலாம். இதுபற்றி இப்பதிகத்திற்கு 'நிருத்த தரிசனம்' என முன்னோர் கருத்துரைத்தனர். திருநாவுக்கரசர் திருவையாற்றிற் கயிலைக் காட்சியைக் கண்டு பாடிய 'மாதர்ப் பிறைக்கண்ணியானை' என்னும் முதற் குறிப்புடைய திருப்பதிகப் பாடல் தோறும் 'கண்டேன் அவர் திருபாதம் கண்டறியாதன கண்டேன்' எனத் தாம் கண்ட தெய்வக் காட்சியை விரித்துரைத்துப் போற்றி யுள்ளமை இங்கு ஒப்புநோக்கி யுணரத் தக்கதாகும்.

## 32. பிரார்த்தனைப்பத்து

பிரார்த்தனை - வேண்டுகோள். திருவாதவூரடிகள் தம்மை ஆட்கொண்டருளிய இறைவனைப் போற்றி 'நின்னை விட்டு நீங்காவண்ணம் அடியேனை நின் திருவருள் வெள்ளத்தில் ஆழ்த்தியருள்வாயாக' என வேண்டும் முறையில் இப்பதிகம் அமைந்தமையால் இது 'பிரார்த்தனைப்பத்து' எனப் பெயர் பெற்றது. இதன் பொருளமைப்பினை,

**"அந்தமிலா ஆனந்தத் தகலாம லெனையழுத்தி யாள்வாயென்று**
**சிந்தைகலந் துரைத்ததுவே பிரார்த்தனைப் பத்தாய்ப் புகலுஞ்**
**செய்கைத்தாமே"**

என்னும் திருப்பெருந்துறைப் புராணத் தொடரால் உணரலாம்.

இதன்கண், 'ஆர்வங்கூர அடியேற்கே அருள் செய்யாய்' எனவும், 'கடியேனுடைய கடுவினையைக் களைந்துன் கருணைக் கடல் பொங்க, உடையாய் அடியேன் உள்ளத்தே ஓவாதுருக அருளாயே' எனவும் 'மெய்யன்பைப் பெறவேண்டும்' எனவும், 'பேரானந்தம் பேராமை வைக்க வேண்டும்' எனவும் 'ஊனே புகுந்த உனையுணர்ந்தே உருகிப் பெருகும் உள்ளத்தைக் கோனே அருளுங்காலந்தான் கூடுதல்வேண்டும்' எனவும், 'உடையாயொடு கலந்து உள்ளுருகிப்பெருகி நெக்கு ஆடியாடி ஆனந்தம் அதுவேயாக அருள் கலந்து' ஒன்றியின்புறும் நிலை வேண்டும் எனவும் திருவாதவூரடிகள் இறைவனைப் பிரார்த்தித்துப் போற்றியுள்ளமை காணலாம். இப்பதிகம் திருப்பெருந்துறையில் அருளிச் செய்யப் பெற்றதாகும். இதற்குச் 'சதாமுத்தி - ஆன்மாக்களுக்கு முத்தி நிச்சயம் பண்ணுதல்' என முன்னோர் கருத்துரை வரைந்துள்ளனர்.

## 33. குழைத்தபத்து

பண்டைக் கொடுவினை நோய்கள் தம்மைத் தொடர்ந்து வருத்தும் இன்னலுக்கு ஆற்றாது வருந்திய வாதவூரடிகள், அத்துன்பங்களுக்குக் காரணமாகத் தாம்செய்த பிழைகளை

நினைத்திரங்கி இறைவனது கருணைத்திறத்தினையே தாம் உய்தி பெறுதற்குரிய சார்பாகக் கொண்டு இறைவனை நோக்கி மனம் நைந்து அரற்றிக்கூறும் முறையீடாக அமைந்தது, 'குழைத்தபத்து' என்னும் இப்பதிகமாகும்.

**"இழைத்தேன் இவ் ஆக்கைபொறுத் தினிக்கணமும்**
**பொறுக்ககிலேன் ஏழையேனைக்**
**குழைப்பதேன் பிழைபொறுத்துஆள் எனஇரங்கிக்**
**கூறுதலே குழைத்த பத்தாம்"**

என்பது திருப்பெருந்துறைப் புராணம். இறைவனே ஆசிரியனாகத் தோன்றி மெய்ப்பொருளை அறிவுறுத்தருளலால் இருவகைப் பாசங்களுந் தீர்ந்து நற்பொருளைக் கேட்கும்முறையிற் கேட்டுச் சிந்திக்கும் முறையிற் சிந்தித்து ஆசிரியன்பாற் பேரன் புடையராய் ஆன்மபோதம் அடங்கப்பெற்ற வாதவூரடிகள், ஒன்றினும் தோய்வற நிற்கும் இறைவனாகிய முதற்பொருளோடு ஒற்றித்து நின்று 'கூடாதே வாடாதே குழைந்திருப்பதான' பேரன்பில் திளைத்திருக்கும் இயல்பினைப் புலப்படுத்தும் நிலையில் அருளிய திருப்பதிகமாதலின் இது 'குழைத்தபத்து' என்னும் பெயருடையதாயிற்று. இதன்கண்,

**"அன்றே யென்றன் ஆவியும் உடலும் உடைமையெல்லாமுங்**
**குன்றே யனையாய் என்னை ஆட்கொண்டபோதே**
**கொண்டிலையோ**
**இன்றோர்இடையூ றெனக்குண்டோ எண்டோள் முக்கண் எம்மானே**
**நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே"**

எனவரும் திருப்பாடல் இங்குச் சிறப்பாகக் குறிக்கத் தக்கதாகும். இப்பாடல் ஆன்ம நிவேதனத்தின் இயல்பினை நன்கு புலப்படுத்தல் காணலாம்.

ஆன்ம நிவேதனமாவது, "விஞ்ஞான தீக்கையின் உடல் பொருள்களோடு ஒப்ப ஆன்மாவாகிய தன்னையும் சற்குரவன் கையில் தானஞ்செய்து அளித்தும், தானஞ்செய்து அளித்த பொருள் என்று அறியும் அறிவு சலியாமைப் பொருட்டு நாளும் நாளும் சிவபூசையில் செபகன்மங்களோடு ஒப்பச் 'சிவோ தாதா' என்னும் மந்திரம் ஓதி ஆன்மாவையும் சிவன் உடைமையாகப் பூநீரோடு தானஞ்செய்து அளித்தல்' (சிவஞான பாடியம் - சூ-6, அதி 2) என விளக்குவர் சிவஞான முனிவர்.

'எனது உயிரை ஆண்டவனாகிய உனக்கு உரிமை செய்து அளித்தபின் என்னுயிர்க்கும் உளவாகும் இன்ப துன்பங்கள் அனைத்திற்கும் யான் பொறுப்பாளி அல்லன்.' என்னை உடையானாகிய நீயே அவற்றுக்கு உரியவன்' என்பார், 'தீமை நன்மை முழுதும் நீ' என்றும், நன்றே, செய்வாய்பிழை செய்வாய்

நானோ இதற்கு நாயகமே என்றும், 'ஆயக்கடவேன் நானோதான் என்னதோ இங்கு அதிகாரம், காயத்திடுவாய் உன்னுடைய கழற்கீழ் வைப்பாய்' என்றும் அடிகள் இறைவனை நோக்கி முறையிட்டருளிய திறம் இங்கு நினைத்தற்குரியதாகும்.

## 34. உயிருண்ணிப்பத்து

இறைவன் தனது அருள் எங்கும் பரவ உயிரின்கண் கலந்தவழி இவ்வியல்பிற்றெனப் பிரித்தறியவாராது ஆனந்த சொரூபனாய் நிற்பன் ஆகலான், அங்ஙனம் உயிரின் அறிவாகிய பசுபோதத்தை உண்டு சிவபோதமே விளங்கித்தோன்ற நிற்கும் நிலையினை அடிகள் தமது அநுபவத்தின் துணைகொண்டு உணர்த்தும் முறையில் அமைந்தது உயிருண்ணிப்பத்து என்பதாகும்.

**"தழைத்துவளர் பேரின்பந் தானாகியுயிர்தோன்றாத்**
**தன்மையாய்த் துன்பு**
**ஒழித்து நிறைவைப் பெறுதல் உயிருண்ணிப்பத்தாய் இங்கு**
**உரைத்தாமே"**

என இப்பதிகத்தின் பொருளமைதியினைத் திருப்பெருந்துறைப் புராணம் விளக்குதல் காணலாம். இப்பதிகத்திற்குச் 'சிவானந்தம் மேலிடுதல் - நேயம் மேலிடுதல்' என முன்னோர் கருத்துரைத்தனர்.

சிவானந்த மேலீடாகிய இந்நிலையினை "இன்பே யருளி எனையுருக்கி உயிருண்கின்ற எம்மானே" (எண்ணப்பதிகம் - 3) என்ற தொடரில் அடிகள் சுட்டியருள்கின்றார். சிவபெருமான், தமது ஆருயிரை அகத்திட்டுக் கொண்டருளிய திறத்தை 'ஊனாருடல் புகுந்தான் உயிர்கலந்தான் உளம்பிரியான்' எனவும், 'எனைத் தான் புகுந்து ஆண்டான் எனது என்பின்புரையுருக்கி மனத்தான் கண்ணினகத்தான் மறுமாற்றத்திடையானே' எனவும், கடலின் திரையதுபோல்வரு கலக்க மலமறுத்தென், உடலும் எனதுயிரும் புகுந்து ஒழியாவண்ணம் நிறைந்தான்' எனவும் வரும் தொடர்களில் அடிகள் தெளிவாகக்குறித்துள்ளமை காணலாம். இறைவன் தன் பேரருளால் என்னகத்து நிலைபெற்று என்னைப்பற்றி பாசப்பிணிப்பெலாம் அகல என்னுடன் வேற்றுமையின்றித் தோன்றுதலால் யானாகிநின்றான் என்பார், திருப்பெருந்துறையுறைவான் நிச்சம் என நெஞ்சின்மன்னி யானாகி நின்றானே" எனத் தமது சிவாநுபவ மேலீட்டினை அடிகள் புலப்படுத்திய திறம் உயத்துணரத் தக்கதாகும்.

சிவதீக்கையுற்றுத் தன்னையும் தலைவனையும் உணர்ந்து சிவோகம் பாவனையைத் தலைப்பட்டஉயிரிற் சிவபெருமான் பிரிவற உடனியைந்து ஒன்றாய் நிற்கும் இப்பெற்றியினை,

**"அரக்கொடு சேர்த்தி அணைத்த அக் கற்போல்**
**உருக்கி உடங்கியைந்து நின்று - பிரிப்பின்றித்**
**தானே உலகாம் தமியே னுளம் புகுதல்**
**யானே உலகென்பன் இன்று"**
**(சிவஞான போதம் சூ2. அதிகரணம் 1)**

*எனவரும் சிவஞானபோத உதாரண வெண்பாவாலும்,*

**'யானாகிய என்னை விழுங்கிவெறுந்**
**தானாய் நிலை நின்றது தற்பரமே' (கந்தரநுபூதி)**

*எனவரும் அருணகிரிநாதர் வாய்மொழியாலும் இனிதுணரலாம்.*

*'உயிரை விட்டுச் சிவம் பிரியாது' என்னும் உண்மையை 'என்மெய்ந் நாள்தோறும் பிரியா வினைக்கேடா' (1) என்ற தொடரில் அடிகள் குறித்துள்ளார். சிந்தைக்கும் மொழிக்கும் எட்டாதவனாய்த் திகழும் இறைவனை இப்பதிகத்தின் மூன்றாந் திருப்பாடலில் 'மனவாசகங்கடந்தான்' என அடிகள் குறித் துள்ளமை 'மனவாசகங்கெட்ட மன்னனை' (திருமந்திரம் 2575) எனவரும் திருமூலர் வாய்மொழியை நினைவுபடுத்துவதாகும்.*

## 35. அச்சப்பத்து

*நேயமலிந்தவர்களாகிய அடியார் திருக்கூட்டத்துடன் சிவானந்தத்தில் திளைத்து மகிழும் நிலையில் 'அடியாரொருவர் தமர்நாம் அஞ்சுவது யாதொன்று மில்லை அஞ்ச வருவதுமில்லை' என்றவாறு வினைவயத்தால் உலகியலில் எத்தகைய இடையூறுகள் நேரினும் அவற்றுக்குச் சிறிதும் உளங்கலங்காத தமது உள்ளத் திண்மையையும், தெய்வம் ஒன்றேயென்றும் அதுவே சிவபரம்பொருள் என்றும் தெளிந்துணரும் அன்பில் லாதவரோடு பழகநேரின், அன்னோர், உயிர்க்குயிராய் நின்று உபகரித்துவரும் முதல்வனது பெருங்கருணையை மறக்குமாறு செய்து தீநெறிக்கட்கொண்டு சென்று மலங்களானாய பிறவிக்குழியில் வீழ்வித்துத் துயருறுத்து வராதலின், அவர்களே தம்மால் அஞ்சி விலகத்தக்க கொடியவர்க ளென்பதனையும் உலக மக்களுக்கு அறிவுறுத்தும் முறையில் அடிகள் இத்திருப் பதிகத்தினை அருளிச் செய்துள்ளார். இப்பதிகம் இவ்வுலக வாழ்க்கையில் அறிவுடையாரால் அஞ்சத் தக்கனவும் அஞ்சத் தகாதனவும் இன்ன இன்ன எனப் பகுத் துணர்த்துவதாகலின் அச்சப்பத்து என்னும் பெயருடைய தாயிற்று.*

*"அடியார்களாகிய யாம், வினைக்கடலுக்கும் மாதர் முறுவலுக்கும் பிணிகளுக்கும் ஐம்பூதங்களுக்கும் பழிகளுக்கும்*

களிறு புலி முதலிய கொடிய உயிர்களுக்கும் பகைவர் படைக் கலங்களுக்கும் சிறிதும் அஞ்சமாட்டோம்; ஆயினும் சிவபெருமானாகிய முழுமுதற் கடவுளையன்றி மற்றைத் தேவர் எத்தேவர்? என ஏனைத் தெய்வங்களை யெல்லாம் அருவருத் தொதுக்கவல்ல உள்ளத்தெளிவில்லாதவர்களும், இறைவனை ஏத்தி இனிது அருள்பருகமாட்டாதாராகிய அன்பில்லாதவர் களும், இறைவன் திருப்பாதங்களைப் பரவித் துளியுலாங் கண்ணராகித் தொழுது அழுது உள்ளம் நெக்கு இங்கு அளியிலாதவர்களும், திருவெண்ணீறு அணிகிலாதவர்களும், திருவடிக்கு மலர்மாலை புனைந்து ஆட்படாதவர்களும், முன்னவன் பாதம்ஏத்தி அகம்நெகாதவர்களும், செறிதரு கழல்கள் ஏத்திச் சிறந்து இனிது இருக்கமாட்டாத அறிவிலிகளும், திரிபுண்டரம் அணிய அஞ்சுகின்றவர்களும், நினைந்து நைந்து உருகி நெக்குக் கண்கள் நீர்சோர வாழ்த்தி நின்று ஏத்தமாட்டாத ஆணலாதவர்களும் ஆகியவர்களைக் கண்டால் ஐயோ பெரிதும் அஞ்சுகின்றோம்" என அடிகள் திருப்பதிகப் பாடல்களில் அறிவுறுத்தியுள்ளார். உலக வாழ்க்கையில் அஞ்சத்தக்க கொடியன எல்லாவற்றுள்ளும் இறைவன்பால் அன்பில்லா தவர்களே பெரிதும் அஞ்சி விலகத்தக்க கொடுமையுடையர் என்பது திருவாதவூரடிகள் கருத்தாதல் இதனாற் புலனாம். இக்கருத்து,

**"தரையில் வளர் வினைமுழுதும் வரினு மஞ்சேன்**
**சிவசமயத் தவஞ்சாராதார்**
**அருகின் வரக் காண்கின்மன அஞ்சும் என**
**இகழ்ந்துரைத்தல் அச்சப்பத்தாம்"**

எனவரும் திருப்பெருந்துறைப் புராணத்தால் இனிது புலப்படுத்தப் பெற்றிருத்தல் அறியத்தக்கதாகும்.

சிவானந்தம் உற்றார்க்கன்றி இத்தகைய அஞ்சாமையும் அச்சமும் ஒருங்குநிகழாவாகலின் இப்பதிகத்திற்கு "ஆனந்த முறுதல்" என முன்னோர் கருத்துரை கூறினர்.

**"அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவ**
**தஞ்சல் அறிவார் தொழில்"**

எனவரும் திருகுறட்பொருளைத் தெளிவுறப் புலப்படுத்தும் முறையில் இப்பதிகத் திருப்பாடல்கள் அமைந்திருத்தல் காணலாம்.

### 36. திருப்பாண்டிப் பதிகம்

"தென்னவன் சேரலன் சோழன்" என இவ்வாறு உலகபாலர் உருவாய்நின்று மன்னுயிர்களைக் காத்தருளுஞ் சிவபெருமான்,

தம் பொருட்டுப் 'பாண்டியன் தனக்குப் பரிமா விற்றல்' வேண்டி மதுரை நகரத்தே குதிரைச் சேவகராய் எழுந்தருளிய தெய்வக்காட்சியில் திளைத்த திருவாதவூரடிகள், பரிப்பாகனாக எழுந்தருளிய இறைவனது, திருக்கோலத்தின் பேரழகில் பாண்டி வேந்தனும் தாமும் மதுரை நகர மக்களும் ஈடுபட்டு நெஞ்சத்தினைப் பறிகொடுத்த பேரின்ப நிலையினை எடுத்துரைத்துப் போற்றும் நிலையில் அருளியது, திருப்பாண்டிப் பதிகமாகும். இறைவன் பாண்டிப் பிரானாக எழுந்தருளியபோது தமக்கு உண்டாகிய சிவானந்த விளைவினை அடிகள் விரித்துரைத்தால் இதற்குச் 'சிவானந்த விளைவு - சுகமேலீடு' என முன்னோர் கருத்துரை வரைந்தனர். இது 'திருப்பாண்டி விருத்தம்' எனவும் வழங்கும்.

**"புரவியின்மேற் பாண்டியன்முன் வரும்பதத்தை**
**யாம்பெறும் அற்புதம்போல் யாரும்**
**விரவுமின்கள் என்றடியார்க் குறுதி சொலல்**
**திருப்பாண்டி விருத்தமாமே"**

எனவரும் திருப்பெருந்துறைப் புராணத்தொடர் இங்கு நோக்கத் தகுவதாகும்.

இதன்கண், 'பாண்டியற்கு ஆரமுதாம் ஒருவரை என்றும், 'ஒருவரையன்றி உருவறியாது என்றன் உள்ளமதே' என்றும், 'மதுரையர் மன்னன் மறுபிறப்போட மறித்திடும்' என்றும், 'பாரின்ப வெள்ளங்கொளப் பரிமேற் கொண்ட பாண்டியனார், ஓரின்பவெள்ளத்துருக்கொண்டு தொண்டரை யுள்ளங் கொண்டார்' என்றும், 'ஈண்டிய மாயா இருள்கெட எப்பொருளும் விளங்கத் தூண்டிய சோதியை மீனவனும் சொல்லவல்லன் அல்லன்' என்றும், 'பரவிய அன்பரை என்புருக்கும் பரம் பாண்டியனார், புரவியின்மேல் வரப்புந்தி கொளப்பட்ட பூங்கொடியார், மரவியல் மேல் கொண்டு தம்மையும் தாம் அறியார் மறந்தே' என்றும் இறைவன் குதிரைச் சேவகனாக எழுந்தருளிய திருக்கோலத்தின் பேரழகினையும் அவ்வழகிலே பாண்டியனும் தாமும் இறைவனைக் காதலிக்கும் பரி பக்குவமுள்ள பேதை முதல் பேரிளம் பெண் ஈறாகவுள்ள மற்றை மாதர்களும் ஈடுபட்டு மெய்ம்மறந்த நிலையினையும் அடிகள் நினைத்துருகிப் போற்றியுள்ளமை காணலாம்.

இப்பதிகத்தின் இரண்டாந் திருப்பாடலில் குதிரையின்மேல் வந்தருளிய இறைவனைக் 'சுதிரை மறைத்தன்னசோதி' என்றும், அதனைச் சார்ந்தவர் தற்போதமிழந்து ஞானப்பெரு வேட்கையால் மயங்கும் அருளநுபவத்தினை அடையப்பெறுவர் என்பதனைச் 'சார்ந்தவர் சதுரை மறந்து அறிமால் கொள்வர்'

என்றும் அடிகள் குறித்துள்ளார். செஞ்ஞாயிற்றையும் சிவபெருமான் திருமேனியையும் ஒரு காலத்து ஒருங்கே காண நேர்ந்தால், இறைவன் திருமேனியை நோக்க ஒளிப்பிழம்பாகிய சூரியனும் இருள் என்று சொல்லும்படி பொலிவிழந்து மறைவன் என்பது புலப்படுத்துவார் 'கதிரை மறைத்தன்ன சோதி' என்றார். கதிர் - சூரியன்.

இதன் நான்காந் திருப்பாடலில், தென்னன் நன்னாட்டு இறைவனாகிய சிவபெருமான், 'ஆனந்தமாக் கடவி, அறிவு ஒண்கதிர்வாள் உறைகழித்து, எதிர்ந்தார் இருநிலத்துப் புரள, பிறப்பை எறியும்' என உருவக அணிநலம் தோன்றப் பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பேரருள் நலத்தினை வியந்து போற்றியுள்ளார். 'எறிவது ஞானத்து உறைவாள் உருவி' (திருமந்திரம் 2645) எனத் திருமூலதேவர் சிவஞானத்தினை வாட்படையாக உருவகஞ் செய்துள்ளமை இங்கு ஒப்புநோக்கத் தக்கதாகும்.

தன் திருவடிக்கண் அன்புசெய்யும் பாண்டிய மன்னனைப் பகைத்துவரும் பகைவனது படையை இறைவனே படைத் தலைவனாக எழுந்தருளித் தான் ஒருவனாகவே எதிரேற்றுத் தாக்கி வேந்தனுக்கு வெற்றி வழங்கிய செய்தியை 'ஓர் மீனவன்பால் ஏற்று வந்தார் உயிருண்ட திறல் ஒற்றைச் சேவகனே எனவரும் தொடரில் அடிகள் குறித்துப் போற்றியுள்ளமை அறியத்தக்கதாகும்.

## 37. பிடித்த பத்து

'எல்லாத் தொடர்பையும் விடுத்து நின் திருவடிகளையே சிக்கெனப் பிடித்துக்கொண்டேன்' என இறைவனைப் போற்றிப் பரவும் நிலையில் அடிகள் அருளிய திருப்பதிகம் பிடித்தபத்து என்பதாகும். மற்றைப் பற்றுக்களெல்லாம் அறவே நீங்குமாறு பற்றாற்றான் பற்றினை இறுகப்பற்றிய பேரானந்தமாகிய முத்தியின் பத்தினைப் புலப்படுத்தும் முறையில் அமைந்தது, இத்திருப்பதிக மாதலின், இதற்கு 'முத்திக் கலப்புரைத்தல்' என முன்னோர் கருத்துரை வரைந்தனர்.

**"மிக்கபிறவித் துயரெலாமொழித்து விபுத்துவமிங் களித்தலாலே**
**பிக்கறச் சிக்கெனப் பிடித்தே னுன்னையென்று துணிவு**
**செப்பல் பிடித்த பத்தாம்"**

என்பது திருப்பெருந்துறைப்புராணம்.

இத்திருப்பதிகத்தில், 'எம்பொருட்டுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்' எனவும், 'இருளிடத்துன்னைச் சிக்கெனப் பிடித் தேன்' எனவும், 'எய்ப்பிடத்துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்' எனவும். 'இறவிலே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்' எனவும்,

'இன்பமே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன் எனவும் அடிகள் இறைவனை நோக்கிப் போற்றுதலால், இறைவனைச் சிக்கெனப் பிடித்தமையால் ஆன்மாவாகிய தமக்கே இன்பம் என்பதன்றி, ஆன்மாவினால் இறைவனுக்கு எய்தக் கடவ பேறு எதுவும் இல்லையென்பதும், ஆன்மா தன்னறிவுகொண்டு இறைவனை யுணர்ந்து பற்றுதல் இயலாதென்பதும், ஆணவ இருளிடத்துக் (கேவல நிலையிற்) கிடந்த ஆன்மாவுக்கு இரங்கி இறைவனே எளிவந்து அருள் வழங்குகின்றான் என்பதும், உயிர் தனது ஆற்றலைக்கெண்டு அறிந்து உய்திபெற முயன்று முனைந்து அஃது இயலாது சோர்வுற்றுத் தற்போதம் அடங்கப் பெற்ற பிறகே இறைவன் திருவடியினைத் தஞ்சமெனப் பற்றும் நற்சார்பு பெற்று ஞானத்தை நண்ணும் என்பதும், இங்ஙனம் உயிர் தன் முனைப்புக்கெட்டு இறைவன் திருவடிகளில் தாடலைபோல் ஒன்றியுடனாம் நிலையில் அத்திருவடிப்பேறு ஆருயிர்க்கு என்றும் அழிவிலாப் பேரின்பமாய்த் திகழும் என்பதும் இனிது புலனாதல் காணலாம்.

இத்திருப்பதிகத்தில் 'செம்பொருட்டுணிவே சீருடைக் கழலே செல்வமே சிவபெருமானே' எனவும், 'செம்மையே யாய சிவபதமளித்த செல்வமே சிவபெருமானே" எனவும் வரும் தொடர்கள், 'சிறப்பென்னுஞ் செம்பொருள்' (திருக்குறள் - 358) என வரும் தெய்வப்புலவர் வாய்மொழியையும் 'செம்பொருளான சிவமெனலாமே' (திருமந்திரம் - 2579) எனவரும் திருமூலர் வாய்மொழியையும் 'செம்மையாய சிவகதி சேரலாம்' (5-43-8) எனவரும் அப்பரருள் மொழியையும் அடியொற்றி அமைந்திருத்தல் அறியத்தக்கதாகும்.

## 38. திருவேசறவு

பேரருளாளனாகிய இறைவன் என் பொருட்டு இழிந்த நரிகளையெல்லாம் உயர்ந்த குதிரைகளாக்கியவாறு போன்று மிகவும் கீழாகிய எளியேனுடைய இரும்பு மனம்முதலிய இழிந்த கருவி கரணங்களையும் மிகவும் உயர்ந்தனவாகத் திருத்தித் தன் திருவடிக் கீழ் வைத்துப் பேரின்பம் அருளினான்' எனத் திருவாதவூரடிகள், தம்பொருட்டு எளிவந்தருளிய இறைவனது பெருங்கருணைத் திறத்தினை நினைந்து நினைந்து உள்ளங் குழைத்து இரங்கிப்போற்றும் நிலையில் அருளிய பனுவலாதலின், இது திருவேசறவு எனப்பெயர் பெறுவதாயிற்று. இச்செய்தி,

**'தக்கபரியாய் நரியை யாக்குதல்போல் எனைப்பெரிய**
**தாக்கித் தாட்கீழ்**
**அக்கணம் வைத்தனையே யென்றிரங்கல்திரு**
**வேசறவென் றியம்பலாமே'**

எனவரும் திருப்பெருந்துறைப் புராணத்தால் அறியப்படும். வேசறவு - மனங்குழைந்து இரங்குதல். இப் பொருளில் 'ஏசினும் யானுன்னை ஏத்தினும் என் பிழைக்கே குழைந்து வேசறுவேனை' (நீத்தல் விண்ணப்பம் - 50) என அடிகள் இச்சொல்லினை ஆண்டுள்ளமை இங்கு நோக்கத்தக்கதாகும். இங்ஙனம் தம்பிழை நினைந்து இறங்கும் முறையில் அடிகள் அருளிய இப்பனுவல், ஆன்மா இறைவனது அருளின் வண்ணமாய் அடங்கித் தான் ஒன்றையும் சுட்டியறியாத நிலையினைப் புலப்படுத்தலால் இதற்குச் 'சுட்டறிவொழித்தல் - தன்செயலற நிற்றல்' என முன்னோர் கருத்துரைத்தனர்.

இதன்கண், இறைவன் தமது இரும்பு மனத்தினையும் ஈரத்து ஈர்த்து என்பும் உருகச் செய்து தன் கழலிணைகளைக் காட்டிக் கரும்புதருஞ்சுவை காட்டித் தமக்கு அருள்செய்த திறத்தினையும், நரிகளை எல்லாம் தம்பொருட்டுக் குதிரைகளாக்கிக் கொணர்ந்த பெற்றியையும், நாய்க்குப் பொற்றவிசு இடுமாறு போன்று தமக்குப் பொன்னருள் சுரந்து அஞ்சேல் என்றருளி அகம்நெகவே புகுந்து ஆட்கொண்டருளிய சீர்த்தியையும், தமக்குத் திருவைந்தெழுத் தினை உபதேசித்தருளித் தானே உள்ளம் புகுந்து தேனாய் இன்னமுதமுமாய்த் தித்தித்தருளிய திறத்தினையும் திருவாத வூரடிகள் இத்திருப்பதிகப் பாடல்களில் எடுத்துரைத்துப் போற்றியுள்ளமை அன்பினால் ஓதி மகிழ்தற்குரியதாகும்.

**"நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம வெனப்பெற்றேன்**
**தேனாயின் னமுதமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்**
**தானேவந் தெனதுள்ளம் புகுந்தடியேற் கருள்செய்தான்"**
**ஊனாரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே**

என வரும் திருப்பாடல் திருவைந்தெழுந்து ஓதுமுறையினை இனிது விளக்கி நிற்றல் அறியத்தக்கதாகும்.

## 39. திருப்புலம்பல்

புலம்பல்-தனிமையுற்று வருந்துதல். உயிர்களுக்கு இறைவனையன்றித் துணையாவார் பிறர் இலர் எனத் தெளிந்துணர்ந்த திருவாதவூரடிகள், தமக்குக் குருவாய் வந்தருளிய அம் முதல்வனைப் பிரிந்துறைய நேர்ந்த தமது தனிமை நிலைக்கு மிகவும் வருந்தி, 'தான் ஈன்ற இளங்கன்றினைப் பிரிந்து கதறி யழைக்கும் தாய்ப் பசுவின் பேரன்பினையொத்த பேரன்பினை அடியேற்கு அருள்புரிவாயாக' என இறைவனை இரந்து வேண்டும் நிலையில் அருளிய பனுவலாதலின், இது திருப்புலம்பல் என்னும் பெயர்த்தாயிற்று.

**'கரைந்துருகும் பேரன்பன் கழலிணைக்கே**
**கற்றாவின்மனம் போலென்றும்**
**திருந்தும்வகை யெனக்கருள்க எனக்கேட்டல்**
**திருப்புலம்பலாகும்'**

எனவரும் திருப்பெருந்துறைப் புராணத்தொடர், இதன் பொருளமைதியினைப் புலப்படுத்துவதாகும். இது மூன்று திருப்பாடல்களை உடையது. இப்பனுவல் திருவாரூரில் அருளிச்செய்யப் பெற்றதென்பர். இச்செய்தியினை இதன் முதற் பாடலில், 'ஓங்கெயில் சூழ் திருவாரூ ருடையானே' என அடிகள் திருவாரூர்ப் பெருமானை முன்னிலையாக்கிப் போற்றுங் குறிப்பினால் உய்த்துணரலாம். இதற்குச் 'சிவானந்த முதிர்வு-சிவானந்தம் பெறாவிச்சை' என முன்னோர் கருத்துரை வரைந்தனர்.

**"உற்றாரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்**
**கற்றாரை யான்வேண்டேன் கற்பனவும் இனியமையும்**
**குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாவுன் குரைகழற்கே**
**கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே"**

எனவரும் மூன்றாந் திருப்பாடல், திருவாதவூரடிகள் உற்றார் ஊரார், கற்றார், புகழ், கல்வி முதலிய உலகியல் தொடர்புகளை அறவே விலக்கி இறைவன் திருவடிக்கே நெக்கு நெக்குக் கசிந்துருகும் நேயமலிந்த நெஞ்சத்தினராக விளங்கிய திறத்தினை இனிது விளக்கும் அனுபவ மொழியாகத் திகழ்தல் அறிந்து இன்புறற்பாலதாகும்.

**"உற்றார் ஆருளரோ உயிர் கொண்டு போம்பொழுது**
**குற்றாலத்துறை கூத்தனல்லால் நமக் குற்றார் ஆருளரோ"**

எனவும்,

**'குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தன் கண்டாய்"** **(6-81-4)**

எனவும் வரும் அப்பரடிகள் வாய்மொழிகள் இங்கு ஒப்புநோக்கி உணரத்தக்கனவாகும்.

## 40. குலாப்பத்து

தில்லையில் சிற்றம்பலவனது திருக்கூத்தினைக்கண்டு மகிழ்ந்த திருவாதவூரடிகள், 'அடியேற்கு உண்டாகிய மகிழ்ச்சியெல்லாம் தில்லைச் சிற்றம்பலத்துள் ஆடல் புரிந்தருளும் ஆண்டானைச் சார்ந்ததனால் ஆகியதேயாம்' எனத் தமது மகிழ்ச்சி மிகுதியை எடுத்துரைத்து அம்பலவனைப் போற்றும் முறையில் அருளிய திருப்பதிகம் குலாப்பத்து என்பதாகும்.

குலாவுதல்-மகிழ்தல். அஃது 'உலா' என்பது போன்று 'குலா' என முதல் நிலையளவாய் ஈண்டுப் பெயராய் நின்றது. நிலாவிரி முற்றத்துக் குலாவோடேறி' (பெருங்கதை. வத்தவ-12-14) என்புழிக் குலா இப்பொருளாதல் அறியலாம். திருப்பெருந்துறைப் புராண ஆசிரியர்,

**"உள்ளம்**
**விரும்பு சிவானந்த வெள்ளம் விழைந்த தில்லைநாயகனை**
**மிகக்கொண்டாடி**
**நிரம்புமனக் களிமிகுத்த இறுமாப்பே குலாப்பத்தாய்**
**நிகழ்த்தலாமே"**

என இப்பதிகக் கருத்தினைக் குறித்துள்ளமை நோக்கத்தக்கதாகும். இப்பதிகத்திற்கு 'அனுபவம் இடையீடு படாமை' என முன்னோர் கருத்துரை வரைந்தனர். இதன்கண் உள்ள திருப்பாடல்கள் யாவும் அடிகள்பால் சிவாநுபவம் இடையீடின்றி நிகழுந் திறத்தினை இனிது விளக்குகின்றன. 'குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே' எனப் பாடல்தோறும் இறுதியிலமைந்த தொடர், 'என்பாலுளதாகிய இம் மகிழ்ச்சிப் பெருக்கு தில்லையம்பல வாணனாகிய ஆண்டவனைக் கொண்டு விளைந்ததேயாகும்' எனப் பொருள் தருவதாகும். குலா - எழுவாய், கொண்டன்று பயனிலை. கொண்டன்று - கொண்டது. ஏகாரம்-தேற்றம். இனி, 'கொண்டு' என்பதனை மூன்றாமுருபின் பொருள்பட வந்த சொல்லுருபாகக்கொண்டு, 'ஆடுங் குலா தில்லையாண்டானால் ஆயதல்லவா' எனப் பொருளுரைத்தலும் பொருந்தும்.

**'ஓடுங் கவந்தியுமே உறவென் றிட் டுன்கசிந்து**
**தேடும் பொருளுஞ் சிவன்கழலே யெனத்தெளிந்து**
**கூடும் உயிரும் குமண்டையிடக் குனித்தடியேன்**
**ஆடுங் குலாத் தில்லையாண்டானைக் கொண்டன்றே'**

என்பது இப்பதிகத்தின் முதல் திருப்பாட்டாகும். "திருவோடாகிய உண்கலனும் கந்தையாகிய கோவணமுமே என் தொடர்புடைய உறவெனக்கொண்டு துறவுநிலையில் நின்று உள்ளம் கசிந்துருகி உணர்வுடைய உயிரால் தேடியடையத்தக்க பெரும்பொருளாவன சிவபெருமானுடைய திருவடிகளே என்னுந் தெளிவுபெற்று உடம்பும் அதன்கண் நிலைபெற்ற உயிரும் உவகைக் கூத்தாட, அடியேன் ஆடும் கூத்தாகிய மகிழ்ச்சிப் பெருக்கானது, தில்லைத் திருமன்றிற் கூத்தியற்றி எளியேனை ஆட்கொண்டருளிய இறைவனைக் கொண்டு விளைந்ததாகும்" என்பது இதன் பொருளாகும். ஓடு-பிச்சை எடுத்தற்குரிய திருவோடு. கவந்தி-கந்தை; கோவணம். கூடு-உடம்பு. குமண்டை - கூத்து. திருவாதவூரடிகள் ஓடாகிய உண்கலனும் கோவண ஆடையும் கொண்டு துறவுநிலையில் ஒழுகியவர் என்பது இத்திருப்பாடலால் இனிது புலனாதல் காணலாம்.

## 41. அற்புதப்பத்து

*அற்புதம்-ஆச்சரியம். நிகழாதது ஒன்று உலகத்து நிகழ்ந்தால் தோன்றும் மருட்கைச்சுவையினை அற்புதம் என வழங்குவர். அதிசயம் என்பது ஒன்றின் மிகுதியைக் குறிப்பது. இறைவனது திருவருட் பெருமையின் மிகுதியினை அதிசயப்பத்தில் விரித்துப் போற்றிய அடிகள், 'தன் அருளைப் பெறுதற்குச் சிறிதும் தகுதியில்லாத என் பொருட்டு எல்லாம்வல்ல இறைவனே திருப்பெருந்துறையில் மானிட உருத்தாங்கி வெளிப்பட்டு அருள்புரிந்தான்' எனத் தம்மை அடிமைகொண்டருளிய அற்புத நிகழ்ச்சியினை வெளியிட்டு உரைக்கும் பனுவலாதலின், இஃது அற்புதப்பத்து என்னும் பெயர் உடையதாயிற்று.*

*அடிகள், இத்திருப்பதிகத்திற் பாடல்தோறும் தம்முடைய சிறுமையினையும், பெருமறை தேடிய அரும்பொருளாகிய இறைவன் தம்பொருட்டுக் குருமேனி கொண்டு வெளிப்பட்டுத் தோன்றிச் சிவஞானத்தை உபதேசித்தருளிய அற்புத நிகழ்ச்சியையும் ஒருங்கு குறித்துள்ளமை காணலாம்.*

**'மாயவுருக் கொண்டுளத்தை மயக்குமின்னார்**
**கண்வலையுள் மயங்குவேற்கிங்**
**காயுமறி வளித்தாளல் அதிசயமென்**
**றுரைத்தல் அற்புதப்பத்தாகும்'**

*எனத் திருப்பெருந்துறைப் புராணம் இப்பதிகக் கருத்தினைக் குறித்துள்ளமை அறியத்தக்கதாகும். இப்பதிகத்திற்கு 'அநுபவ மாற்றாமை - அநுபவம் முற்றுப் பெறுதலில் பொறாமை விம்முதல்' எனக் கருத்துரைப்பர் முன்னையோர்.*

**"சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கியாங்கு இவள்**
**உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே" (குறுந்தொகை-18)**

*என்றாற் போன்று, இறைவனருளால் தமக்குக்கிடைத்த சிவானந்த அநுபவம் தம்மாற் பொறுக்க ஒண்ணாதவாறு மிக்கு விளங்குவதனை அடிகள் இத்திருப்பதிகத்தில் வெளியிட்டருளினமை அறிந்து இன்புறத்தக்கதாகும். இப்பதிகத்தின் ஒன்பதாம் பாடலின் மூன்றாம் அடியில் "விச்சகத் தரியயனும்" எனப் பாடங்கொண்டு, "வித்தகராகிய அயனும் அரியும்" எனப் பொருளுரைப்பர் சீகாழித் தாண்டவராயர்.*

## 42. சென்னிப்பத்து

*சிவபெருமான் குருவாகி வந்தருளித் தம் சென்னியில் திருவடி சூட்டியருளும் பேறுபெற்ற திருவாதவூரடிகள், அம் முதல்வனுடைய சேவடிகள் தமது சென்னியில் எப்பொழுதும்*

நிலைபெற்றுத் திகழும் அரிய சிறப்பினைத் தம்முடன் பொருந்திய அடியார்களுடன் மகிழ்ந்து பரவிப் போற்றிய திருப்பதிகம் சென்னிப்பத்து என்பதாகும். இறைவன் குருவாகி வந்து தன் திருவடிகளை அடிகளது சென்னியிற் சூட்டியருளிய இச்செய்தி, "என்னையும் ஒருவனாக்கி இருங்கழல், சென்னியில் வைத்த சேவக. போற்றி" (போற்றித் திருவகவல்) எனவரும் அடிகளது வாய்மொழியாற் புலனாம். இறைவன் தன் பொன்னார் திருவடிகளைச் சூட்டி அருள் செய்தமையால் தமது சென்னிக்கு வாய்த்த பெருஞ்சிறப்பினை எண்ணி உவந்து போற்றிய பத்துப் பாடல்களையுடைய பதிகமாதலின், இது சென்னிப்பத்து என்னும் பெயருடையதாயிற்று.

இறைவன் திருவடிகளின் அருமையினைப் பரவிப் போற்றும் முறையில் அத்திருவடியினைப் பெற்ற தம் சென்னியின் சிறப்பினை அடிகள் இத்திருப்பதிகத்தில் விரித்துக் கூறியுள்ளார். இந்நுட்பம்,

**"தூய வருட்குருபதத்தைச் சூட்டுதற்குப்**
**பெற்றவுயிர்ச் சுகத்தை நோக்கிச்**
**சேய மலர்ப் பதத்தருமை அடியரொடும்**
**வியந்துரைத்தல் சென்னிப்பத்தே"**

எனவரும் திருப்பெருந்துறைப் புராணத்தால் இனிது புலனாம்.

இறைவன் சேவடி தம்முடைய சென்னியில் மன்னி விளைக்கும் பேரானந்தத்தை நினைந்து போற்றும் நிலையில் அடிகள் அருளிய பதிகம் ஆதலின், இதற்குச் 'சிவ விளைவு' என முன்னோர் கருத்துரைத்தனர்.

**'தேவதேவன் மெய்ச்சேவகன் தென்பெருந்துறை நாயகன்**
**மூவராலும் அறியொணாமுதலாய ஆனந்த மூர்த்தியான்**
**யாவராயினும் அன்பரன்றி அறியொணாமலர்ச் சோதியான்**
**தூய மாமலர்ச் சேவடிக்கணஞ் சென்னிமன்னிச் சுடருமே'**

என்பது இப்பதிகத்தின் முதல் திருப்பாட்டாகும். இதன்கண் 'ஆனந்த மூர்த்தியானாக விளங்கும் இறைவனுடைய தூயனவும் மென்மையுடையனவுமாகிய செந்தாமரை மலர்போலும் திருவடிகள், (தூய்மையற்றும் வல்லென்றும் உள்ள) என்னுடைய சிரசில் நிலைபெற்றுத் திகழ்கின்றன' என அடிகள் குறித்துள்ளமை காண்க. இங்ஙனம் இறைவனுடைய திருவடிகள் என் சென்னியில் மன்னித் திகழ்தற்கு அத்திருவடிகளின் அருளின் நீர்மையே காரணம் அன்றி எனது தகுதி காரணமன்றாம் என்றவாறு. 'ஆயிரந் தாமரைபோலும் ஆயிரஞ் சேவடியானும்' (4-4-8) என அப்பரடிகள் போற்றியவாறு எங்கும் நீக்கமற நிற்பன இறைவன் திருவடிகள் ஆதலின் 'சேவடிக்கணம்' என்றார். கணம்-

தொகுதி. இனி, சேவடிக்கள் நம் சென்னி மன்னிச் சுடரும்' எனப்பிரித்து, ஏனைய அடியார்களையும் தம்முடன் உளப்படுத்திக் கூறியதாகவும் கொள்ளலாம். இவ்வாறன்றி, சேவடிக்கண் நம் சென்னி மன்னிச் சுடரும்' எனப் பிரித்துரைப்பின் மன்னுதலும் சுடர்தலும் ஆகிய நிலைபேறும் ஒளியுடைமையும் இறைவன் திருவடிக்கு ஆதலின்றித் தம் சென்னிக்கு ஆகுமாறு அடிகள் கூறியதாகக் கொள்ளவேண்டி நேரும். அங்ஙனம் கொள்ளுதல் அடிகளது மனவியல்புக்கு ஒவ்வாததொன்றாகும். அன்றியும் அப்பரமசிவனது மலர்மனம் ஒத்த பாத தாமரையான திருவருட்சோதி, என் போதச் சிரசிலே வியாபகமாகப் பிரகாசிக்கும்" எனச் சீகாழித் தாண்டவராயர் மேற்காட்டிய தொடர்க்குப் பொருள் கூறியிருத்தலும்,

**'தூய அருட்பதத்து அருமை .......................அடியரொடும்**
**வியந்துரைத்தல் சென்னிப்பத்தே'**

எனத் திருப்பெருந்துறைப் புராணம் சுட்டிய பதிகக் கருத்தும் இங்கு நோக்கத் தக்கனவாகும். இதன் ஐந்தாந் திருப்பாடலில், 'திருப்பெருந்துறை மேவினான், காயத்துள் அமுது ஊற ஊற நீ கண்டுகொள் என்று காட்டிய தூய மாமலர்ச் சேவடிக்கணம்' என்றது. திருப்பெருந்துறையிறைவன் குருவாக எழுந்தருளி வந்து அடிகளுக்கு உபதேசித்தருளிய திருவடி ஞானத்தை, ஆன்மாவாகிய சரீரத்துக்குள்ளே உயிராயிருக்கப் பெற்ற சிவஞானமாகிய தேனினைச் சொரியும் திருவடி பேரின்ப அநுபவத்தினை,

**'காயத்துள் மெய்ஞ்ஞானக் கள்ளுண்ண மாட்டாதே**
**மாயக்கள் ளுண்டாரென் றுந்தீபற**
**வரட்டுப் பசுக்களென் றுந்தீபற'** (43)

எனவரும் திருவுந்தியார் பாடலில் உய்யவந்த தேவநாயனார் வெளியிட்டுள்ளமை இங்கு ஒப்பு நோக்கியுணரத்தக்கதாகும்.

'நங்கைமீர் எனை நோக்குமின்' எனத் தொடங்கும் மூன்றாந் திருப்பாடலில் அடிகள் தம்மை இறைவனாகிய ஆன்ம நாயகனைக் காதலித்த மகளிர்நிலையில் வைத்துக் கூறியுள்ளார்.

## 43. திருவார்த்தை

சிவபெருமான் பெருந்துறையிற் குருவாக எழுந்தருளி முழுமுதற் பொருளாகிய தன் உண்மையினை வெளிப்படுத்தி யருளியது முதலாகத் தன் சீரடியார்களுக்கு அருளிய திறங்களாகிய புகழ்ச் செயல்களைப் போற்றிப் பரவும் பொருளுரையாக அமைந்தது, திருவார்த்தை என்னும் இத் திருப்பதிகமாகும். இறைவன் தன் அடியார் பொருட்டு

எளிவந்தருளிய செயல்களைக் குறிக்கும் இப்புகழுரைகளை அறிந்து போற்றும் அடியார்கள் எம்பிரான் ஆவார் எனத் திருவாதவூரடிகள் இப்பதிகப் பாடல்தோறும் உளமுருகிப் போற்றியுள்ளமை காணலாம்.

**"அறம் பெருகும் பெருந்துறையிற் றமையாண்ட**
**செயல்முதலா அரன்சீ ராட்டின்**
**திறமறிவார் எம்பிரா னாவரென வுரைத்தல் திரு**
**வார்த்தை யாகும்"**

என்பது திருப்பெருந்துறைப் புராணம்.

மணிவாசகப் பெருமான், தாம் அருளிய திருவாசகத்தில் "வாக்கு உன் மணிவார்த்தைக்கு ஆக்கி" (30) எனவும், "வார்த்தையும் பேசி" (166) எனவும், "என்னை ஓர் வார்த்தையுட்படுத்துப் பற்றினாய்" (399) எனவும், வார்த்தை என்னும் சொல்லை இறைவனது பொருள்சேர் புகழ் என்ற பொருளிலும், இறைவன் அருளிய உபதேச மொழி என்ற பொருளிலும் ஆண்டுள்ளார். எனவே அவரருளிய திருவார்த்தை என்பது, இறைவனது புகழை விரித்துரைக்கும் திருவுடைய வார்த்தை எனவும், இறைவனால் திருவாய் மலர்ந்தருளப்பெற்ற திருவுடைய உபதேச வார்த்தை எனவும் இருவகையாகப் பொருள் கொள்ளும் நிலையில் அமைந்து நின்றதெனக் கருதுதல் பொருந்தும்.

திருவள்ளுவர் குறித்த ஆதி பகவன் என்பதனை 'மாதிவர் பாகன்' எனவும், மலர்மிசை யேகினான் என்பதனை 'மாமலர் மேய சோதி' எனவும், இப்பதிக முதற் பாடலில் அடிகள் குறித்துள்ளமை காணலாம். ஆதி பகவானாகிய முழுமுதற் கடவுளின் இயல்பினை 'ஆதிப் பிரமம்' என்ற தொடரால் அடிகள் குறித்துள்ளார்.

இறைவன் திருப்பெருந்துறையிலே தம் பொருட்டுக் குருவாக எழுந்தருளி ஆதிப் பிரமம் வெளிப்படுத்த அருள் திறமும், இடவை மடநல்லாட்குச் சீலமிகக் கருணையளித்த திறமும், பெண்பாலுகந்து மணிவலை கொண்டு மீன் விசிறும் வகையும், வேடுருவாகி மகேந்திரத்து ஆகமம் அருளிய பெருமான் ஆடலமர்ந்த பரிமா ஏறி ஏடர்களை எங்கும் ஆண்டுகொண்ட இயல்பும், உந்து திரைக் கடலைக் கடந்து அன்று இலங்கையதனில் பந்தணை மெல்விரலாள் ஆய வண்டோதரிக்கு அருளிய பரிசும், ஏவுண்ட பன்றிக்கு இரங்கிக் கேவலங் கேழலாய்ப் பால் கொடுத்த கிடப்பும், நாதமுடையதோர் நற்கமலப் போதினில் நண்ணிய நன்னுதலார் பொருட்டு மண்ணிடை வந்து தோன்றிப் பேதம் கெடுத்து அருள்

செய்த பெருமையும் இருங்கடல் வாணற்குத் தீயில் தோன்றும் ஓவிய மங்கையர் தோள் புணரும் உருவும், காதல் பெருகக் கருணை காட்டித் தன் கழல்காட்டிக் கேதங் கெடுத்துத் தம்மை ஆண்டருளிய திறமும், பெருந்துறை யீசன் வண்சாத்தினோடும் மங்கையர் மல்கும் மதுரை சேர்ந்த வகையும் ஆகிய புகழ்ச் செய்திகளை அடிகள் இப்பனுவலிற் பரவிப் போற்றியுள்ளார்.

இதன்கண், 'ஆதிப்பிரமம்' என்பதும் 'கேவலம்' என்பதும் அடிகள் காலத்து வழங்கத் தொடங்கிய வடசொல் லாட்சியாகும். இறைவனே எளிவந்து உறுதிப் பொருளை அறிவிக்க அறிந்து அவன்பால் அன்பு மீதூரப்பெறும் நிலையில் அடிகள் அருளிய திருப்பதிகமாதலின், இதற்கு 'அறிவித்தன்புறுதல்' என முன்னோர் கருத்துரை வரைந்தனர்.

## 44. எண்ணப்பதிகம்

திருவாதவூரடிகள் தமது உள்ளக் கருத்தினைத் தம்மை ஆட்கொண்ட வள்ளலாகிய இறைவனுக்குத் தெரிவிக்கும் முறையில் இப்பனுவலைப் பாடியிருத்தலால் இஃது எண்ணப் பதிகம் என்னும் பெயர்த்தாயிற்று. எண்ணம்-உள்ளக்கருத்து. இப்பதிகத்திற்கு 'ஒழியா இன்பத்து உவகை' என முன்னோர் கருத்துரை வரைந்தனர். அடிகள் தம்மை ஆட்கொண்டருளிய முதல்வனது திருவருளில் திளைத்துப் 'பாருருவாய பிறப்பற வேண்டும் பத்திமையும் பெறவேண்டும்' எனத் தம் மனத்திலுள்ள விருப்பத்தை இறைவனுக்கு அறிவித்து, 'நின் திருவருள் காட்டி என்னையும் 'உய்யக்கொண்டருளே' எனவும், 'நண்பே அருளாய்' எனவும், 'பிறப்பறுப்பாய்' எனவும், 'உடையவனே' எனை ஆவ என்றருளாயே' எனவும் இறைவனை வேண்டிப் போற்றுகின்றார்.

**"நிறம் வளரும் மலர்ப்பொழில் சூழ்ந் தோங்குதிருத்**
**தில்லை மன்றுள் நிமல னாமத்**
**திறம் பெருகும் இன்பம் அருள் என்றல் எண்ணப்**
**பத்தெனவும் நிகழ்த்த லாமே"**

எனவரும் திருப்பெருந்துறைப் புராணத் தொடரால் அடிகளது எண்ணம் 'இன்பம் அருள்' என இறைவனை வேண்டுதல் என்பது இனிது புலனாகும். எண்ணப் பதிகம் ஆறுதிருப் பாடல்களை யுடையதாகும்.

## 45. யாத்திரைப் பத்து

உலகிற் பாசத் தொடர்பிலிருந்து விடுபட்டு ஈறிலாப் பேரின்ப வாழ்வாகிய வீடுபேற்றினை நச்சிச் சிவமாநகர்க்குச் செல்லும் நோக்குடன் அன்புடைய அடியார்களை அழைக்கும்

நிலையில் அருளிய பத்துப் பாடல்களுடைய பனுவலாதலின், இது யாத்திரைப் பத்து என்னும் பெயருடையதாயிற்று.

**"பொல்லாத பவத்தை விட்டுச் சிவன்கழற்கீழ்ப்**
**புகுங் காலம் புகுந்தது எற்கு இங்கு**
**எல்லாரும் வாரும் எனக் கருணையினால்**
**அழைத்திடல் யாத்திரைப் பத்தாகும்"**

என்பது திருப்பெருந்துறைப் புராணம்.

இதன்கண் திருவாதவூரடிகள் அன்பராகிய அடியார்களை நோக்கி, "பொய்விட்டு உடையான் கழல்புகக் காலம் வந்தது, போவோம், ஆட்பட்டீர் வந்து ஒருப்படுமின்" எனவும், 'நீர் புலன்களில் புகவே வேண்டா, புயங்கப் பெருமான் பூங்கழல்கள் மிகவே நினைமின், மிக்க எல்லாம் வேண்டா, போகவிடுமின்கள்' எனவும், கோமான் பண்டைத் தொண்டரொடும் அவன்தன் குறிப்பே குறிக்கொண்டு, 'பொய் நீக்கிப் புயங்கன் ஆள்வான் பொன்னடிக்கே போமாறு அமைமின்' எனவும் 'அடியாரானீர் எல்லீரும் அகல விடுமின் விளையாட்டை; கடிசேர் அடியே வந்தடைந்து திருக்குறிப்பைக் கடைக்கொண்டு இருமின்' எனவும் வெகுளி வேட்கை நோய் விடுமின், மிக ஓர் காலம் இனி இல்லை, உடையான் அடிக்கீழ்ப் பெருஞ் சாத்தோடு உடன் போவதற்கே ஒருப்படுமின்' எனவும் புகழ்மின் தொழுமின் பூப்புனைமின், புயங்கன் தாளே புந்தி வைத்திட்டு எல்லா அல்லலையும் இகழ்மின் நாம் சீரார் சிவபுரத்துச் சென்று சிவன்தாள் வணங்கி நிகழும் அடியார் முன் சென்று நெஞ்சம் உருகி நிற்போமே' எனவும் அன்பினால் விரைந்து அழைக்கின்றார்.

உலகியற் பிணிப்பால் தாமதித்தோரது நிலைமை கண்டு இரங்கிய அடிகள், ஏனைய மெய்யடியார்களை நோக்கி, 'நிற்பார் நிற்க, நில்லா உலகில் நில்லோம் இனி நாம் செல்வோமே .........பிற்பால் நின்று பேழ் கணித்தால் பெருதற்கு அரியன் பெருமானே' எனவும், 'பெருமான் பேரானந்தத்துப் பிரியாது இருக்கப் பெற்றீர்காள்! அருமால் உற்றுப் பின்னைநீர் அம்மா அழுங்கி அரற்றாதே, திருமாமணிசேர் திருக்கதவம் திறந்தபோதே சிவபுரத்துத் திருமால் அறியாத் திருப்புயங்கன் திருத்தாள் சென்று சேர்வோமே' எனவும் 'புயங்கன் அருளமுதம் ஆரப்பருகி ஆராத ஆர்வம்கூர அழுந்துவீர்! பொய்யிற் கிடந்து புரளாதே சிவன் கழற்கே போரப்புரிமின்' எனவும் அறிவுறுத்துகின்றார். 'போதர' என்றது 'போர' என இடைக்குறைந்து நின்றது. (திருக் கோவை 182 பேராசிரியர் உரை நோக்குக.)

இவ்வாறு தாம் அழைத்த நிலையிலும் பின்தங்கினாரது நற்பேறின்மையை நினைந்து வருந்திய அடிகள், 'இன்றே வந்து

ஆளாகாதீர் மருள்வீர், பின்னை மதிப்பார் ஆர்? மதியுட் கலங்கி மயங்குவீர், தெருள்வீராகில் இது செய்ம்மின், திருப்புயங்கன் அருள் அகலிடத்தே ஆர் பெறுவார்? அந்தோ அந்தோ அந்தோவே' என அருள் மிகுதியால் அரற்றி அழைக்கும் நிலையில் இத்திருப்பதிகத்தை நிறைவு செய்கின்றார்.

இதன்கண் பாடல்தோறும் இறைவனைத் 'திருப் புயங்கன்' என்ற திருப் பெயருடன் அடிகள் குறித்துள்ளமை கூர்ந்து நோக்கற்பாலதாகும். 'பூவார் சென்னி மன்னன்' என்பதனால் வியாக்கிரபாதரையும் 'புயங்கப் பெருமான் என்பதனால் பதஞ்சலி முனிவரையும் ஆட்கொண்டவன் இறைவன் என்ற குறிப்பினை சீகாழித் தாண்டவராயர் தம் உரையிற் குறிப்பிடுவார்.

## 46. திருப்படை யெழுச்சி

'உலக வாழ்க்கையில் தீக்குணங்களாகிய மாயப்படைகள் அடர்ந்து நெருங்கி மன்னுயிர்களை வருத்தாதவாறு இறைவனைப் பரவும் அருளார்ந்த நல்லோர் யாவரும், திருநீறாகிய கவசத்தை அணிந்து, இறைவன் அருளிய ஞானமாகிய வாட் படையினை ஏந்தி, மானம் என்னும் பெருங்குணமாகிய குதிரைமீது அமர்ந்து மதிவெண்குடை கவிக்க, அருள்நாதப் பறை முழங்கப் புறப்படுங்கள்; நம்மைத் தடுக்கும் மாயப்படையினைப் புறங்கண்டு வானவூரைக் கைப்பற்றுவோம்' என்றும், 'சரியையாளராகிய தொண்டர்களே நீங்கள் தூசிப்படையாக முன்னே செல்லுங்கள்; பத்தி நெறியில் நிற்கும் பாங்குடையவர்களே; இரு பக்கங்களிலும் சூழ்ந்து வளைக்கவல்ல கைகோட் படையாகச் செல்லுங்கள்; ஒண்மையும் ஆற்றலும் வாய்ந்த யோகியர்களே! நடுவிற் பெருஞ்சேனையாகச் செல்லுங்கள்; உரன் என்னும் திண்மையும் செயற்கரிய செய்யும் திறமையும் வாய்ந்த சித்தர்களே! நமது சேனை பின்னிடாதபடி பின்னணியாகிய கூழைப் படையாகக் கடைக்கண் நின்று செலுத்துங்கள்; அல்லற் படை வந்து நம்மை வருத்தாதபடி முன் சென்று விலக்கி நாம் அண்டர் நாட்டினைக் கைப்பற்றி ஆள்வோம்! என்றும் திருவுடைச் செல்வர்களாகிய சிவஞான வீரர்களது பெரும் படையினை எழுப்பிச் செலுத்தும் முறையில் திருவாதவூரடிகள் அருளிய பனுவல் திருப்படை யெழுச்சி என்பதாகும். திருவுடைய பெருமக்களாகிய சிவஞானச் செல்வர்களது சேனை புறப்பட்டெழும்படி அறிவுறுத்தும் பனுவலாதலின், இது திருப்படையெழுச்சி யென்னும் பெயருடையதாயிற்று. முன்னோர் இதற்குப் 'பிரபஞ்சப் போர்' எனக் கருத்துரை வரைந்தனர். இருள் நிறைந்த வாழ்வில் மருளானாம் மாயப் படை ஆன்மாவைப்பற்றி அலைக்காதபடி அருள் மறவாது படையெழுக எனத் தூண்டுவது இத்திருப்படை யெழுச்சி எனலாம்.

**"அல்லாத துர்க்குண மாயப்படைகள் வாராமல் அருள்வாள் ஏந்தி நல்லார்கள் யாரும் எம்மோ டெய்துமெனப்**
**படையெழுச்சி நவிறலாகும்"**

என்பது திருப்பெருந்துறைப் புராணமாகும்.

திருப்படையெழுச்சி இரண்டு பாடல்களையுடையது. முதற் பாடலில் படை வீரர்க்கு வேண்டிய போர்க்கருவிகள் இவை எனவும், இரண்டாம் பாடலில் தொண்டர், பத்தர், யோகிகள், சித்தர் ஆகிய நால் வகையினரும் முறையே தூசிப்படை (முன்னணிப் படை), கைகோட்படை (இரு பக்கங்களிலும் சென்று வளைக்கும் படை), பேரணி (நடுவே சென்று எதிர்க்கும் பெரும்படை), கூழைப்படை (பின்னணிப்படை) என அமைந்து மாயப்படையைப் புறங்கண்டு வானவூராகிய அண்டர் நாட்டைக் கைக்கொண்டு ஆளுதற்கேற்ற உரனுடைய சான்றோர் எனவும் அடிகள் அணிநலம் அமைய விளங்கிய திறம் உணரத் தக்கதாகும்.

## 47. திருவெண்பா

திருவாதவூரடிகள் தாம் பெற்ற சிந்தையின் நிறைவாகிய சிவமே பெறுந் திருவினை, பெறாத ஏனையோரும், பெற்று மகிழுமாறு விளங்க அறிவுறுத்தும் அழகிய வெண்பாக்களாலாய பனுவலாதலின், இது திருவெண்பா என்னும் பெயர்த்தாயிற்று. அறிவினாற் சிவனேயாகிய மணிவாசகப் பெருந்தகையின் சிவமாந் தன்மைப் பெருவாழ்வினைத் தெரிவிப்பதுபற்றி இதற்கு 'அணைந்தோர் தன்மை' என முன்னோர் கருத்துரை வரைந்தனர்.

**"தொந்தமா மலமறுத்துச் சுகம்பெருக்கிப்**
**பெருந்துறைவாழ் சோதி என்றன்**
**சிந்தையே ஊராகக் கொண்டிருந்தான்**
**என்றுரைத்தல் திருவெண்பாவாம்"**

என்பது திருப்பெருந்துறைப் புராணம். திருவெண்பா என்னும் இப்பனுவல் பதினொரு வெண்பாக்களையுடையதாகும். இதன்கண்,

**'வாரா வழியருளி வந்தெனக்கு மாறின்றி**
**ஆரா அமுதாய் அமைந்தன்றே-சீரார்**
**திருத்தென் பெருந்துறையான் என்சிந்தைமேய**
**ஒருத்தன் பெருக்கும் ஒளி'**

எனவும்,

**'யாவர்க்கும் மேலாம்அளவிலாச் சீருடையான்**
**யாவர்க்குங் கீழாம் அடியேனை யாவரும்**
**பெற்றறியா இன்பத்துள் வைத்தாய்க்கென் எம்பெருமான்**
**மற்றறியேன் செய்யும் வகை'**

எனவும்,

**'மூவரும் முப்பத்து மூவரும் மற்றொழிந்த**
**தேவரும் காணாச் சிவபெருமான்-மாவேறி**
**வையகத்தே வந்திழிந்த வார்கழல்கள் வந்திருக்க**
**மெய்யகத்தே இன்பம் மிகும்'**

எனவும்,

**'இன்பம் பெருக்கி இருளகற்றி எஞ்ஞான்றும்**
**துன்பம் தொடர்வறுத்துச் சோதியாய்-அன்பமைத்துச்**
**சீரார் பெருந்துறையான் என்னுடைய சிந்தையே**
**ஊராகக் கொண்டான் உவந்து'**

எனவும் வரும் திருவெண்பாக்கள் மணிவாசகப் பெருமான் பெற்ற சிவமேபெறுந் திருவாகிய பேரானந்தத்தினை இனிது புலப்படுத்தல் காணலாம்.

## 48. பண்டாய நான்மறை

'பண்டாய நான்மறை' என்பது, முதற் குறிப்பாற்பெற்ற பெயர், பண்டு ஆய நான்மறை என்றது, இன்ன நாள் என்று ஒருவராலும் அளந்தறிய முடியாத தொன்மைக் காலத்தே இறைவனது வாய்மொழியாகத் தோன்றிய நான் மறைகளை. அத்தகைய வேதங்களும் தனது இயல்பினை அணுகி அறிய முடியாமல் ஐயா என ஓலமிட்டு அலற அவற்றுக்கு அகப்படாது மேலோங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியன் இறைவன் என்பார், 'பண்டாய நான்மறையும் பால் அணுகா,' என்றார். உலகங்காக்கும் மூவருள் திருமாலும் அயனும் இறைவனாகிய பெருமானை உள்ளவாறு காணப் பெற்றிலர் என்பார், 'மால் அயனும் கண்டாரும் இல்லை' என்றார். இங்ஙனம் மாலும் அயனும் காணாக் கடவுள் தன் தொண்டனாக ஏற்றுக் கொண்டருளினான். அவனது கைம்மாறு வேண்டாக் கடப்பாடாகிய பேரருளுக்குக் கடையேன் செய்யும் கைம்மாறு எதுவும் இல்லை என்பார், கடையேனைத்-தொண்டாகக் கொண்டருளுங்கோகழி எம் கோமாற்கு நெஞ்சமே உண்டாமோ கைம்மாறு உரை' என்றார்.

இப்பனுவல், ஏழு வெண்பாக்களை யுடையது, இவ்வெண் பாக்கள் ஒன்றோடொன்று பொருட்டொடர்பு உடையனவாக அமைந்துள்ளன. திருப்பெருந்துறை இறைவனை நண்ணி வழிபடும் நம்மவராகிய அடியார்கள் அனைவரும் பாசத் தொடர்பற்று இடர்களெல்லாம் நீங்கிப் பேரின்ப வாழ்வு பெற்று இன்புறுவர் என்னும் மெய்ம்மையினை அடிகள் தமது அருளநுபவங்கொண்டு ஐயமின்றித் தெளிவிக்கும் முறையில் அமைந்தது இப்பனுவலாதலின், 'அநுபவத்துக்கு ஐயமின்மை உரைத்தல்' என இதற்குக் கருத்துரை வரைந்தனர் முன்னோர்.

'எந்தை திருப்பெருந்துறையை ஏத்தும் நமரே வாழ்வுற் றிட ர்சேர் பாச பந்தமறுத்திடுவரெனப் பண்டாய நான்மறையும்பகர்ந்ததாமே'

எனத் திருப்பெருந்துறைப் புராண ஆசிரியர் இப்பதிகக் கருத்தினைக் குறித்துள்ளார். இதன்கண்,

"உள்ள மலமூன்றும் மாய உகுபெருந்தேன்
வெள்ளந் தரும்பரியின் மேல்வந்த-வள்ளல்
மருவும் பெருந்துறையை வாழ்த்துமின்கள் வாழ்த்தக்
கருவும் கெடும்பிறவிக் காடு"

"வாழ்ந்தார்கள் ஆவாரும் வல்வினையை மாய்ப்பாரும்
தாழ்ந்துலகம் ஏத்தத் தகுவாரும்-சூழ்ந்தமரர்
சென்றிறைஞ்சி யேத்தும் திருவார் பெருந்துறையை
நன்றிறைஞ்சி யேத்தும் நமர்"

"காணுங் கரணங்கள் எல்லாம் பேரின்பமெனப்
பேணும் அடியார் பிறப்பகலக்-காணும்
பெரியானை நெஞ்சே பெருந்துறையில் என்றும்
பிரியானை வாயாரப் பேசு"

"பேசும் பொருளுக் கிலக்கிதமாம் பேச்சிறந்த
மாசின் மணியின் மணிவார்த்தை-பேசிப்
பெருந்துறையே யென்று பிறப்பறுத்தேன் நல்ல
மருந்தினடி யென்மனத்தே வைத்து"

எனவரும் திருப்பாடல்கள் திருவாதவூரடிகளது அநுபவத்தினை இனிது புலப்படுத்தும் நிலையில் அமைந்திருத்தல் காணலாம்.

உள்ளும் புறம்பும் ஒரு தன்மைக் காட்சியராய் இறை நிறைவில் அழுந்ததலாகிய ஞான நிட்டை மேவிய அடியார் களுக்குப் பண்டைப் பயிற்சி வயத்தால் சுட்டுணர்வு பற்றிப் பிரபஞ்ச வாழ்வு காட்சிப் பட வருமானால், அவர்கள், அதனைக் காணும் பொழுதே இறைவன் அதற்கு உள்ளேயும் புறத்தேயும் நிற்கும் நிலையினைக் கண்டு அதனை அறிந்துகொள்ளுதல் அரிதாயின், பிண்டத்தில் நிற்கும் நிலையுள் ஒன்றின் வைத்து அறிந்து அது வாயிலாகப் புகுந்தாயினும் இறைவனது இயல்பினைத் தலைப்பட்டு அறிந்து அங்கே காணுங் கரணங்கள் எல்லாம் பேரின்பமெனப் பேணி இவ்வாறு கருவிகளோடும் கூடி நிற்பதாகிய நனவு நிலையிலேயே, கருவி யொன்றினோடும் கூடாது தொழிலிறந்து நிற்கும் நின்மல துரியாதீதம் எனப்படும் தூயநிலை கைகூடும்படி முயல்வோர், சிவானுபவம் தமதாகக் கொண்டு அநுபவிக்கப் பெறுவர். இந்நுட்பத்தினை,

"இந்நிலை தான் இல்லையேல் எல்லாம் ஈசன்
இடத்தினிலும் ஈசன் எல்லா இடத்தினிலும் நின்ற

அந்நிலையை அறந்தந்தக் கரணங்கள் அடக்கி
அறிவதொரு குறி குருவின் அருளினால் அறிந்து
மன்னுசிவன் தனையடைந்து நின்றவன்றனாலே
மருவு பசு கரணங்கள் சிவகரணமாகத்
துன்னிய சாக்கிரமதனில் துரியா தீதம்
தோன்றமுயல் சிவானுபவம் சுவானு பூதிகமாம்"

(சித்தியார்-286)

எனவரும் திருவிருத்தத்துள் அருணந்தி சிவாசாரியார் விளக்கியுள்ளார். இது 'காணுங் கரணங்களெல்லாம்' பேரின்பம் எனப் பேணும் அடியார், எனவரும் தொடருக்கு அமைந்த விளக்கமாதல் அறிக.

## 49. திருப்படையாச்சி

பாண்டி நன்னாடுடையனாகிய இறைவனுடைய படைவீரராம் திருத்தொண்டர்கள், மாயப்படையினை வென்று தம் தலைவனைக் கண்ணாரக்கண்டு, சீவோபாதி ஒழிந்து, சிவமாந் தன்மை யெய்தி ஒக்க உறைந்து, இவர் அவனோடு அவன் இவரோடு பிரிவறக்கூடி, அண்டர் நாடாளும் ஆட்சி யனுபவத்தினை எண்ணி வியந்துரைக்கும் பனுவலாதலின் இது திருப்படையாட்சி என்னும் பெயர்த்தாயிற்று. இந்நுட்பம் "பாண்டி நன்னாடுடையான் படையாட்சிகள் பாடுது மாகாதே" எனவரும் இப்பதிகத் தொடரால் இனிது விளங்கும்.

இதன்கண், 'மண்களில் வந்து பிறந்திடுமாறு மறந்திடு மாகாதே' எனவும், 'நன்றிது தீதென வந்த நடுக்கம் நடந்தன' எனவும், 'பந்த விகார குணங்கள் பறிந்து மறிந்திடும்' எனவும் 'இந்திரஞால இடர்ப் பிறவித்துயர் ஏகுவது' எனவும், 'மண்ணினில் மாயை மதித்து வகுத்த மயக்கறும்' எனவும், 'கண்ணிலி காலம் அனைத்தினும் வந்த கணக்கறும்' 'பெண்ணிலி ஆணென நாம் என வந்த பிணக்கறும்' எனவும், 'சாதி விடாத குணங்கள் நம்மோடு சலித்திடும், அங்கிது நன்றிது நன்றெனும் மாயை அடங்கிடும்' எனவும் உயிர்கட்குத் தடையாகவுள்ள தொல்லைகள் ஒழியும் முறையினை அடிகள் தெளிவாகக் குறிந்தருள்கின்றார். இப்பொருளமைப்பினை யுணர்ந்த முன்னோர் இப்பதிகத்திற்குச் 'சீவோபாதி யொழிதல்' எனக் கருத்துரை வரைந்தனர். உயிர்கட்குத் தடையாகவுள்ள தொல்லைகள் நீங்கும் எனவே, உயிர்க்கு உறுதி பயப்பனவாகிய எல்லா நலங்களும் ஒருங்கு எய்தும் என்பதும் உடன் கூறியவாறாயிற்று. 'மாலறியா மலர்ப் பாதம் இரண்டும் வணங்குதும்' 'என்றும் என் அன்பு நிறைந்த பராவமுது எய்துவது' 'பாவனையாய கருத்தினில் வந்த பராவமுது' 'அந்த

மிலாத அகண்டமும் நம்முள் அகப்படும்' 'ஆதிமுதற் பரமாய' பரஞ்சுடர் அண்ணுவது, எல்லையில் மாக்கருணைக் கடல் இன்றினி தாடுதும் 'நன்மணிநாதம் முழங்கி என் உள்ளுற நண்ணுவது' 'எண்ணிலியாகிய சித்திகள் வந்தெனை எய்துவது' 'வீணை முரன்றெழும் ஓசையில் இன்பம் மிகுத்திடும்' 'சொல்லியலாதெழு தூமணியோசை துவன்றிடும்' 'பண்டறியாத பரானுபவங்கள் பரந்தெழும்' 'சங்குதிரண்டு முரன்றெழும் ஓசை தழைப்பன' சீரடியார்கள் சிவானுபவங்கள் தெரிந்திடும் எனவரும் தொடர்கள், அடியார்களாகிய படைவீரர்கள் சிவமாநகர் எய்தி நுகரும் சிவானுபவமாகிய பராவத்தை நிலையினை இனிது புலப்படுத்தல் காணலாம். இந்நிலையில் சிவயோகிகள்தம் அகத்தே கேட்டு மகிழும் பத்து வகை இன்னொலிகளையும்,

**'மணிகடல் யானை வார்குழல் மேகம்**
**அணிவண்டு தும்பி வளைபேரிகை யாழ்**
**தணிந்தெழு நாதங்கள் தாமிவை பத்தும்**
**பணிந்தவர்க்கல்லது பார்க்கவொண்ணாதே'** (திருமந்திரம் 606)

எனவரும் பாடலில் திருமூல தேவர் தொகுத்துக் கூறியுள்ளார்.

**"திருச்சிலம்போசை செவிவழியே சென்று**
**நிருத்தனைக் கும்பிடென் றுந்தீபற"**

எனத் திருவியலூர் உய்யவந்த தேவநாயனாரும்,

**"தூங்கிருள் நடுநல் யாமத்தே மழலையாழ் சிலம்ப**
**வந்தகம் புகுந்தோன்"**

எனக் கருவூர்த்தேவரும் அருளிய பொருளுரைகள் இங்கு ஒப்புநோக்கி உணரத்தக்கனவாகும்.

**"வாகுதிருப் பெருந்துறையார் எழுந்தருளப் பெறில்**
**எல்லா வளங்கள் முற்றும்**
**ஆகும் எமக்கு; அல்லாத தாகா தென்றிளம்பல்**
**படையாட்சியாகும்"**

எனத் திருப்பெருந்துறைப் புராணமுடையார் இப்பதிகக் கருத்தினை எடுத்துரைத்துள்ளார். அதன்கண் எட்டுத் திருப் பாடல்கள் உள்ளன. இறைவன் தன் படைவீரராகிய அடியார் களைப் பேரின்ப வாழ்வில் நிலைபெறச்செய்து ஆளுந்திறன் நுதலியது இப்பனுவலாதலின் இதற்குத் திருப்படையாட்சி என்ற பெயர் மிகவும் பொருத்தமுடையதேயாம்.

இப்பதிகத்திற் பயின்று வரும் 'ஆகாதே' என்னும் சொல், அன்றே என்னும் சொற்போன்று 'அல்லவா' எனவினவும் குறிப் புடைய இடைச்சொல்லாகும். "நின்கரு நெடுங்கண் புதைத்தது

இவற்குப் பெரியதோர் ஆற்றாமையைச் செய்யுமென்றாகாதே? அவற்றின் பரத்தனவோ, சுரும்புடைக்கோதை நின்கரும்புடைத் தோள்" (களவியல் 3-ஆம் சூத்திரவுரை) என வரும் இறையனார் களவியலுரையில் 'ஆகாதே' என்னும் சொல் இப்பொருளில் ஆளப் பெற்றிருத்தல் இங்கு நினைக்கத்தக்கதாம். "ஆரூரானை மறக்கலும் ஆமே, என்றமையானும் ஆமென்கிளவி அன்றெனவும் அன்றென்கிளவி ஆமெனவும் காணத்தக்கது" என இச்சொல்லுக்குப் பொருளமைதி கூறுவர் சீகாழித் தாண்டவராயர்.

இப்பனுவலின் இரண்டாந் திருப்பாடலில் 'ஒன்றினோ டொன்றும் ஓரைந்தினோடைந்தும்' என்ற தொடர், முப்பத்தாறு தத்துவங்களைக் குறித்ததெனக் கொள்வர் தாண்டவராயர். ஒன்று என்னும் எண்ணுடன் ஒன்றிய ஐந்தும் ஐந்தும் முறையே ஆறு ஆறு 6X6=36 என்றாகி, 'முதல்முப்பத்தாறே'. (திருமந்திரம் 125) எனத் திருமூலர் குறித்த முப்பத்தாறு தத்துவங்களையும் குறித்து நின்றன எனக்கொள்ளுதல் ஏற்புடையதே யாகும்.

"காரிகையார்கள் தம் வாழ்வில் என் வாழ்வு கடைப்படும் ஆகாதே" எனவும் "என்னணியார் முலைஆகம் அளைந்துடன் இன்புறுமாகாதே" எனவும் அடிகள் தம்மை இறைவனைக் காதலித்த நாயகியின் நிலையில் வைத்துக் கூறியிருத்தலும், இவ்வாறே 'செந்துவர்வாய் மடவார் இடரானவை சிந்திடு மாகாதே சேலனகண்கள் அவன் திருமேனி திளைப்பன வாகாதே' எனவும் 'மின்னியல் நுண்ணிடையார்கள் கருத்து வெளிப்பட மாகாதே' எனவும், செங்கயலொண்கண் மடந்தையர் சிந்தை திளைப்பனவாகாதே எனவும் தம்மையொத்த அடியார்களையும் இறைவனைக் காதலித்த மகளிர் நிலையில் வைத்துக் கூறியிருத்தலும் திருவாதவூரடிகள் இறைவனை ஆன்ம நாயகனாகக் கொண்டு அயரா அன்பு செய்தொழுகிய சன்மார்க்க நெறியில் நின்றவர் என்பதனை நன்கு புலப்படுத்துவனவாகும்.

இதன் இரண்டாந் திருப்பாடலில் 'கன்றை நினைந்தெழு தாயெனவந்த கணக்கது வாகாதே' என்ற தொடர்,

**'மன்று நிறைந்தது மாபர் மாயது**
**நின்று நிறைந்தது நேர்தரு நந்தியும்**
**கன்று நினைந்தெழு தாயென வந்தபின்**
**குன்று நிறைந்த குண விளக்காமே'** (திருமந்திரம் - 2446)

எனவரும் திருமூலர் வாய்மொழியையும், ஐந்தாந் திருப்பாடலில் வரும் 'கண்ணலி காலம்' என்ற தொடர், 'காலனென்னுங் கண்ணிலி' (புறம்-240) என்ற தொடர்ப் பொருளையும் அடியோற்றி அமைந்திருத்தல் இங்கு அறியத்தக்கதாகும்.

## 50. ஆனந்த மாலை

ஆரா அன்புடைய மெய்யடியார்களுடன் கூடிப் பெருமானது பேரானந்தத்துப் பிரியாதிருக்கப்பெறும் இன்பத்தின் இயல்பினை விரும்பியுரைப்பதாதலின், இஃது 'ஆனந்தமாலை' என்னும் பெருடையதாயிற்று. மாலை-இயல்பு. மாலை இயல்பே (தொல்-சொல்-உரி-15) என்பது தொல்காப்பியம். சிலப்பதிகாரத்தில் உள்ள 'துன்பமாலை' என்னும் தலைப்பினைப் போன்று இன்பத்தின் இயல்பினை விளக்கும் இப்பனுவல், ஆனந்தமாலை என்றாயிற்று. இதற்குச் 'சிவாநுபவ விருப்பம்' என முன்னோர் கருத்துரை வரைந்தனர். "மோகமிகும் அடியரொடுங் கூட விரும்பியது ஆனந்தம்" என்பது திருப்பெருந்துறைப் புராணம்.

ஆனந்த மாலை ஏழு திருப்பாடல்களை உடையது. இதன் முதற்பாடலாக அமைந்தது,

**"மின்னே ரனைய பூங்கழல்கள் அடைந்தார் கடந்தார் வியனுலகம்**
**பொன்னே ரனைய மலர்கொண்டு போற்றா நின்றார் அமரரெல்லாம்**
**கன்னே ரனைய மனக்கடையாய்க் கழிப்புண் டவலக் கடல்வீழ்ந்த**
**என்னே ரனையேன் இனியுன்னைக் கூடும்வண்ணம் இயம்பாயே"**

எனவரும் திருப்பாட்டாகும். 'மின்னே ரனைய பூங்கழல் எனத் தொடங்குவது பற்றி, இம் முதற் குறிப்பினையே இப்பதிகத் தலைப்பாகக் குறித்தலும் உண்டு.

'இனி உன்னைக் கூடும்வண்ணம் இயம்பாயே' எனவும், 'பன்னாளுன்னைப் பணிந்தேத்தும் பழைய அடியரொடுங் கூடாது, என் நாயகமே பிற்பட்டிங்கிருந்தேன் நோய்க்கு விருந்தாயே' எனவும், 'கோலங்காட்டி ஆண்டானைக் கொடியேன், என்றோ கூடுவதே' எனவும் வரும் தொடர்கள், அடியார்கள் பலரும் இறைவனைத் தலைப்பட்டு இன்புற, அவ்வின்பப்பேற்றில் திளைக்கும் நிலையை அவாவிய திருவாதவூரடிகளது சிவாநுபவ விருப்பத்தினை நன்கு புலப்படுத்துவனவாகும்.

**"நரியைக் குதிரைப் பரியாக்கி "ஞாலமெல்லாம் நிகழ்வித்துப்**
**பெரியதென்னன் மதுரையெல்லாம் பிச்சதேற்றும் பெருந்துறையாய்**
**அரியபொருளே அவிநாசியப்பா பாண்டி வெள்ளமே**
**தெரியவரிய பரஞ்சோதீ செய்வதொன்றும் அறியேனே"**

என வரும் திருப்பாடல், திருவாதவூரடிகள் பெற்ற பேரின்பமாகிய ஆனந்த வெள்ளத்தின் இயல்பினைப் புலப்படுத்துதல் காணலாம்.

'சீலமின்றி நோன்பின்றிச் செறிவேயின்றி யறிவின்றி என்ற தொடர் செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்து, ஆற்றின்

அடங்கப்பெறின் (123) எனவரும் திருக்குறளை அடியொற்றி அமைந்திருத்தல் அறியத்தக்கதாகும்.

## 51. அச்சோப்பதிகம்

யாவர்க்கும் மேலாம் அளவிளாச் சீருடையனாகிய சிவபெருமான், தம்பொருட்டு எளிவந்தருளிய பேரருளின்பத்தில் திளைத்து திருவாதவூரடிகள் தாம் பெற்ற அருளாரின்பத்தை வியந்து போற்றுவதாக அமைந்தது அச்சோப்பதிகமாகும். அச்சோ என்பது வியப்பினைப் புலப்படுத்தும் இடைச்சொல், இப்பதிகப் பாடல்கள் தோறும் இறைவன் 'எனக்கு அருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே' என அடிகள் தாம் பெற்ற சிவானுபவத்தை வியந்து போற்றி மகிழ்வதால், இஃது அச்சோப் பதிகம் என்னும் பெயர்த்தாயிற்று. இஃது அச்சோப்பத்து எனவும் சில சுவடிகளிற் குறிக்கப்பெற்றுள்ளது. எனினும் பழைய சுவடிகளில் இப்பதிகத்திற்குரியனவாக ஒன்பது திருப்பாடல்களே காணப்படுவதால் அச்சோப்பதிகம் என்ற பெயரே பொருத்தமுடையதாகத் தெரிகிறது.

**"முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்**
**பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்**
**சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட**
**அத்தன் எனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே"**

என்பது இப்பதிகத்தின் முதல் திருப்பாட்டாகும். இறைவனை அடைதற்குரிய நெறிகள் முத்திநெறி, பத்தி நெறி என இருவகைப் படும் என்பதும், அவற்றுள் முத்தி நெறி என்பது சரியை கிரியை யோக ஞானங்களால் முதிர்ந்த அறிவுடைய பெருமக்கள் மட்டுமே அறிந்து கடைப்பிடித்தற்குரிய அருமை உடைய தென்பதும், பத்தி நெறி என்பது உலக மக்கள் அனைவரும் அன்பினாற் பின்பற்றுதற்குரிய எளிமை வாய்ந்த வழியென்பதும், முத்தி நெறியறியாத மூர்க்கரொடு கூடிக் காலங்கழிக்கின்ற தம்மை, இறைவன் தானே எளிவந்து பத்தி நெறி அறிவித்துப் பழவினைகளெல்லாம் அறவே சிதைந்தொழியச் சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி ஆண்டுகொண்டருளினான் என்பதும் ஆகிய உண்மைகளைத் திருவாதவூரடிகள் இத்திருப்பாடலில் வெளியிட்டு வியந்து போற்றியுள்ளார்.

அடிகள், சிவானுபவமாகிய பேரின்பத்தினையடைதற்குத் தாம் மேற்கொண்ட சாதனங்கள் யாவை என எண்ணிப்பார்த்து, தாம் அதன் பொருட்டுச் செய்த முயற்சிகளாக எதுவும் புலப்படாமையால், முயற்சியும் உளப்பாடும் இன்றி இறைவனருளால், தமக்கு கிடைத்த சிவானுபவத்தை வியந்து

*உரைக்கும் முறையில் இப்பதிகப் பாடல்கள் அமைந்திருத்தலால் 'அநுபவ வழியறியாமை' என இதற்கு முன்னோர் கருத்துரை வரைந்தனர். "மொழியும் ஈசர் போக சுகம் எனக்கு அளித்தார் ஆர்பெறுவார் எனும் அருமை புகறல்' அச்சோ" என்பது திருப்பெருந்துறைப் புராணம்.*

*சிவபெருமானை அடைந்து இன்புறுதற்குரிய சாதனமாகிய திருவைந்தெழுந்தையும் குருவாய் எழுந்தருளிவந்து அவ்வரு மறைப்பொருளை உபதேசித்தருளிய இறைவன் திருவருளையும் போற்றி, 'நமச்சிவாய வாழ்க, நாதன் தாள் வாழ்க' எனத் தொடங்கிய திருவாசகமாகிய அருள் நூல்,*

**'செம்மைநலம் அறியாத சிதடரொடுந் திரிவேனை**
**மும்மைமலம் அறுவித்து முதலாய முதல்வன்தான்**
**நம்மையும் ஓர் பொருளாக்கி நாய்சிவிகை ஏற்றுவித்த**
**அம்மை யெனக்கருளியவா றார்பெறுவார் அச்சோவே'**

*என, மும்மலங்களை அறவே களைந்து முதல்வன் திருவடி அடைந்து இன்புறும் சிவனாந்தப் பேறாகிய முடிபொருளை உணர்த்தும் திருப்பாடலுடன் நிறைவு பெற்றுள்ளமை உணர்ந்து மகிழத்தக்கதாகும்.*



## 2. திருச்சிற்றம்பலக்கோவை

திருவாதவூரடிகள் தில்லையிற் புத்தர்களை வாதில் வென்று சிற்றம்பலவனை வழிபட்டுத் தவச்சாலையில் தங்கியிருந்தபோது, அழகிய திருச்சிற்றம்பலமுடையானாகிய இறைவனே அடிகள் முன் அந்தணனாக வந்து தோன்றி, அடிகள் பாடியருளிய திருவாசகச் செழுமறையைத் தம் திருக்கையினால் எழுதிக் கொண்டு, 'அகத்திணைக் கோவையொன்று பாடித்தருக' என அடிகளை வேண்டிய நிலையில், அம்முதல்வனே தன் திருக்கரத்தால் எழுதிக்கொள்ளும்படி திருவாதவூரடிகள் திருவாய் மலர்ந்தருளிய தெய்வப் பனுவல் திருச்சிற்றம்பலக் கோவையாகும். இந்நூல் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் உலகெலாம் உய்ய ஆனந்தத் திருக்கூத்தியற்றியருளும் திருவருள் நிலையமாகிய தில்லைத் திருச்சிற்றம்பலத்தைப் பரவிப் போற்றும் முறையில் அமைந்த அகத்திணைக் கோவையாதலின் திருச்சிற்றம்பலக் கோவை யென்னும் பெயர்த்தாயிற்று. திருவாசகப் பனுவலைப் போன்று இத்திருக்கோவையும் வாதவூரடிகளது மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனாகத் திகழ்தலால் இதனைக் கோவைத் திருவாசகம் எனச் சான்றோர் சிறப்பித்துப் போற்றியுள்ளார்கள்.

அகப்பொருட்டுறைகளைப் பொருட்டொடர்பு அமையும் வண்ணம் ஒரு கோவைப்பட அமைத்துப் பாடப்பெறுவது கோவை என்னும் பிரபந்தமாகும். அகத்துறைகளை நிரல்படக் கோத்து அமைக்கப் பெருதலின் கோவை என்பது காரணப் பெயர். தமிழ் மொழிக்கே சிறப்பாகவுரிய பனுவல்களுள் அகப் பொருட் கோவையும் ஒன்றாகும். சங்கத்தொகை நூல்களுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய தொகை நூல்கள் ஐந்தும் அகப்பொரு ளொழுகலாற்றின் சிறப்பியல்பினை விரித்துரைக்கும் செந்தமிழ்ப்பனுவல்களாகும். பரிபாடல் என்னும் தொகை நூலிலும் சில பகுதிகள் அகப்பொரு ளமைதியுடையனவாய் அமைந்திருத்தல் காணலாம். மேற்குறித்த அகத்திணைச் செய்யுட்கள் யாவும் அன்பும் அறமும் நிரம்பிய இன்ப வொழுக்கமாகிய இல் வாழ்கையின் இயல்பினை ஒத்த அன்புடைய ஒருவனும் ஒருத்தியும் ஆகிய இருவரது வாழ்க்கையில் வைத்து விளக்கும் இனிய செந்தமிழ் இலக்கியங்கள் என்பதனை அறிஞர் பலரும் நன்குணர்வர்.

இவ்வுலகியல் வாழ்வில் ஒருவன் ஒருத்தி என்னும் இருவரிடையே நிகழும் கூட்டுறவினை ஒருதலைக் காமமாகிய கைக்கிளை எனவும், ஒத்த காமமாகிய ஐந்திணை எனவும், ஒவ்வாக்

காமமாகிய பெருந்திணை எனவும் பகுத்துரைத்தல் தமிழ் மரபு. ஒருவன் ஒருத்தி என்னும் இருவருள் ஒருவர் மட்டும் அன்பினாற் கூடி வாழ்தலில் அளவிறந்த வேட்கையுடையராய் ஒழுக, மற்றவர் அவரது அன்பின் திறத்தை உணர்ந்துகொள்ள முடியாத நிலையினராக இவ்வாறு அமைந்த தொடர்பு ஒருபக்கத்து உறவாதலின் அது கைக்கிளை எனப்பெயர் பெறுவதாயிற்று. கை-பக்கம். கிளை - உறவு. கைக்கிளை என்பது ஒருதலைக்காமம். இனி, ஒருவன் ஒருத்தியாகிய இருவரும் தம்முள் அன்பின்றிக் கூடி வாழும் ஒழுகலாறு பெருந்திணை எனப்படும். கணவன் மனைவி யரிடையே நிகழும் இத்தகைய உளம்பொருந்தா வாழ்க்கை உலகியலிற் பெரும்பான்மையாகக் காணப்படுதலால் இதற்குப் பெருந்திணையெனப் பெயரிட்டனர். முன்னோர். பெருந்திணை- உலகத்திற் பெரும்பான்மையாக நிகழும் ஒழுகலாறு. பெருந்திணை என்பது பொருந்தாக் காமம். பல பிறவிகள் தோறும் கணவனும் மனைவியுமாகப் பிரிவின்றி ஒன்றி வாழ்ந்தமையால் நிரம்பிய அன்புடையார் இருவர், வேறு வேறிடங்களிற் பிறந்து வளர்ந்தராயினும், இறைவனது ஆணையாகிய நல்லூழின் செயலால் ஒரிடத்தெதிர்ப்பட்டு நெஞ்சுகலந்து ஒருவரையொருவர் இன்றியமை யாதவராய் அன்பினாற் கூடிவாழும் ஒழுகலாறு அன்பின் ஐந்திணை எனப்படும். ஒத்த அன்பினராகிய இவ்விருவரும் அன்பினால் அளவளாவி ஒருங்கு கூடியிருத்தலும், இவருள் கணவன் உலகியற் கடமை கருதிச் சிலநாள் மனைவியைப் பிரிந்து செல்லுதலும், மனைவி அப்பிரிவுத் துன்பத்தைப் பொறுத்து ஆற்றியிருத்தலும், பிரிந்த கணவன் தான் வருவதாகக் குறித்த நாளில் வரத் தாமதிப்பின் ஆற்றாமை மிக்கு இரங்குதலும், பின் அவன் வந்தபோது அன்பினாற் பிணங்குதலும் என இவ்வொழுகலாறு முறையே குறிஞ்சி பாலை முல்லை நெய்தல் மருதம் என்னும் ஐந்து பகுதிகளாக வகுத்து விளக்கப்பெறுதலின் இஃது அன்பின் ஐந்திணையெனப் பெயர் பெறுவதாயிற்று திணை என்பது ஒழுக்கம் என்னும் பொருளுடைய சொல்லாதலின், அன்பின் ஐந்திணை என்பதற்கு அன்பினால் நிகழும் ஐவகைப்பட்ட ஒழுகலாறாகிய அகஒழுக்கம் எனப் பொருள் கொள்ளுதல் வேண்டும்.

ஒருவரை யொருவர் முன் அறியாத நிலையிற் காணும் முதற் காட்சியிலேயே பண்டைப் பிறப்பில் தம்மிருவருக்கிடையே யமைந்த தொன்மை அன்பின் தொடர்புணர்ந்து கணவனும், மனைவியுமாக ஒருவரையொருவர் இன்றியமையாதொழுகும் பெருங்கேண்மையுடையார் இவ்வுலகத்து மிகவும்

அரியராதலால், உலகத்து அருமையுடையராய்த் தோன்றிய அவர்களை அன்பிற் சிறந்த தலைமக்கள் எனப் பண்டைத்தமிழ்ச் சான்றோர் பாராட்டிப் போற்றினர். எஞ்ஞான்றும் ஒத்த அன்பினராய் ஒழுகும் இத்தலைமக்களது வாழ்விலே மிக்குத்தோன்றும் பேரன்பின் திறத்தை எடுத்துக் கூறுமுகமாக, ஏனைப் பொதுமக்கள் வாழ்விற் பெருகிக் காணப்படும் ஒவ்வாக் காமத்தையும் ஒருபாற் காமத்தையும் விலக்கி, ஒத்தகாமமாகிய அன்பு நெறியிலே அவர்களைப் பயிற்றுதல் எளிதாம் எனக் கருதினர். இவ் வுயர்ந்த நோக்கத்தினாலேயே ஒத்த அன்பினராய் தலை மக்களது வாழ்க்கையினைப் பொருளாகக் கொண்டு பண்டைத் தமிழ்ச் சான்றோர்களால் அகத்திணைச் செய்யுட்கள் மிகுதியாகப் பாடப்பெறுவனவாயின.

ஒருவனும் ஒருத்தியுமாகிய இருவருள்ளத்தே தோன்றி வளரும் இன்ப அன்பின் திறத்தை இனிது விளக்கு முகத்தால் மக்கட் குலத்தாரனைவரும் வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து தெய்வத் திருவருளாகிய பேரின்ப நிலையை எய்தி இன்புறுதற்கு வழிவகுப்பன அகத்திணை பற்றியமைந்த தமிழ்ச் செய்யுட் களாகும். "கூறும் அருந்தமிழின் பொருளான" இவற்றின் குறிப்பினை நன்குணர்ந்தே தேவாரம், திவ்வியப் பிரபந்தம் முதலிய தெய்வப் பனுவல்களைப் பாடியருளிய பெருமக்கள் பலரும், தன்னேரில்லாத் தலைவனாகிய இறைவனை ஆருயிர்க் காதலனாகவும் அவனருள் விழைந்த ஆன்மாக்களை அம்முதல்வனைக் காமுற்று வருந்தும் தலைவியாகவும் கொண்டு அகப்பொருள் துறையமையைப் பல திருப்பாடல்களைப் பாடியுள்ளார்கள். திருவாசகப் பனுவலைப் பாடியருளிய திருவாதவூரடிகளும் சிவபெருமானைத் தம் ஆருயிர்க் காதலனாகவும் அவனது திருவடிப் பேரின்பத்தை விரும்பிய தம்மைத் தலைவியாகவும் கொண்டு நெஞ்சுநெக்குருகிப் பல திருப்பாடல் களைப் பாடிப் போற்றியுள்ளமை காணலாம்.

**"மூலமாகிய மும்மல மறுக்கும்**
**தூயமேனிச் சுடர்விடு சோதி**
**காதலனாகிக் கழுநீர் மாலை**
**ஏலுடைத்தாக எழில்பெற அணிந்தும்"**

*(கீர்த்தித்திரு அகவல்- (111-114)*

எனவரும் அடிகள் திருவாக்கு, அவர் ஆண்டவனைத் தலைவனாக வும் தம்மை அவனருளுக்கு ஏக்கற்று வருந்தும் பெண்ணொருத்தி யாகவும் கருதி நெஞ்சங்கரைந்து அன்பு நெறியில் நின்றொழுகி யவர் என்பதனை நன்கு புலப்படுத்துவதாகும்.

"அடியவன் தன்னை ஒரு காதலியாகவும் ஆண்டானைக் காதலனாகவும் வைத்துரைத்தல் மரபாதலானும், நான்காவதாகிய சன்மார்க்கம் அல்லது ஞானமார்க்கத்தின்கண் ஆண்டானுக்கும் அடியவனுக்குமுள்ள நெருங்கிய இயைபினுக்குக் காதலன் காதலி என்னும் இருவர்க்குமுள்ள நெருங்கிய உறவினையே எடுத்துக்காட்டல் தொல்லாசிரியர் வழக்காய்ப் போதரலானும், அடிகளைச் சன்மார்க்கத்திற் குரியராகவே சான்றோரெல்லாம் கூறுதலானும், இக்கருத்துப் பற்றியே அடிகளும் திருச்சிற்றம்பலக் கோவையார் அருளிச் செய்தமையானும், ஈண்டுக் காதலனாகி, என அருளிச் செய்தது பொருத்தம் உடைத்தேயாம்" என்பர் அறிஞர். * (திருவாசக விரிவுரை (மறைமலையடிகள்))

தில்லைச் சிற்றம்பலத்தில் ஆடல் புரிந்தருளும் முழு முதற்கடவுளாகிய சிவபெருமானே மதுரைத் தமிழ்ச் சங்கத்திற் சங்கப் புலவர்கள் நடுவே தானும் ஒரு தமிழ்ப் புலவனாக வீற்றிருந்து தமிழ் மொழியிலுள்ள அகமும் புறமுமாகிய பொருட்கூறுகளை ஆராய்ந்து முறைப்படுத்தி யருளினான் என்ற செய்தியை,

**சிறைவான் புனற்றிலைச் சிற்றம் பலத்துமென் சிந்தையுள்ளும்**
**உறைவான் உயர்மதிற் கூடலின் ஆய்ந்த ஒண்தீந்தமிழின்**
**துறைவாய் நுழைந்தனையோ வன்றியேழிசைச் சூழல்புக்கோ**
**இறைவா தடவரைத்தோட் கென்கொலாம் புகுந்தெய்தியதே**

எனவரும் திருப்பாடலில் பாங்கன் வினாதல் என்னுந் துறையில் வைத்துத் திருவாதவூரடிகள் சுவைபெறக் குறித்துள்ளார். "தமிழின் துறைகளாவன ஈண்டு அகமும் புறமுமாகிய பொருட்கூறு" எனப் பேராசிரியர் கூறும் விளக்கம், தமிழுக்கும் அம்மொழியில் அமைந்த அகப்பொரு ளொழுகாற்றிற்கும் உள்ள தொடர்பினை இனிது புலப்படுத்தல் காணலாம்.

அன்பிற் சிறந்த தலைமக்களது இன்ப அன்பின் ஒழுகலாறுகள் எனப் பழந்தமிழ் நூலாகிய தொல்காப்பியத்திலும் சங்கச் செய்யுட்களிலும் தனித்தனித் துறைகளாகக் குறிக்கப் பட்டுள்ள அகத்திணைத் துறைகளையெல்லாம் தெய்வம் கூட்ட ஒருவரை யொருவர் கண்ட காட்சி முதலாக இருவரும் ஒருவரை யொருவர் இன்றியமையாக் காதற் கேண்மையினராய் உலகத்தார் அறிய மணஞ் செய்துகொண்டு அன்பினால் ஊடியுங் கூடியும் மகிழ்தல் ஈறாக ஒரு கோவைப்படத் தொகுத்துக் கட்டளைக் கலித்துறையாப்பினால் கூற்றும் மாற்றமும் அமைய நாடகக் காப்பியம் போன்று இயற்றப் பெறும் பொருட்டொடர் நிலைச் செய்யுள் அகத்திணைக் கோவை யாகிய இப்பிரபந்தமாகும்.

இக்கோவைப் பிரபந்தம் தொடர் நிலைச் செய்யுள் வகையினைச் சார்ந்தது என்பது,

"கோவையுந் தொகையும் ஆவயின் வரையார்" என்பதனால் இது தொடர்நிலைச் செய்யுளாதலின் (திருக்கோவை 252-ஆம் செய்யுள் உரை) எனப் பேராசிரியர் கூறுதலாற் புலனாம். இதன்கண் குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்னும் ஐந்திணை யொழுகலாறுகளும் ஒருங்கேயமையப் பாடப் பெறுதல் பற்றி இஃது ஐந்திணைக் கோவை எனவும் வழங்கப் பெறும்.* (* "திருந்து தமிழிலக்கண ஐந்திணைக் கோவை
விருத்தகிரீச் செல்வற்கோதும்
பெருந்தகைமை வுடையம் யாம்"
எனவரும் துறைமங்கலம் சிவப்பிரகாசர் பாடலில் இப்பெயர் வழக்கம் இடம்பெற்றிருத்தல் காண்க. ஐந்திணைக் கோவைத் துறைகளுள் ஒரு துறையினையே பொருளாகக் கொண்டு பிற்காலத்திற் பாடப்பெற்ற கோவைகள் ஒருதுறைக் கோவை என்ற பெயரால் வழங்கப் பெறுதலும் இங்கு நினைக்கத் தகுவதாகும்.)

அகத்தினைக் கோவையாகிய இப்பிரபந்தம் கட்டளைக் கலித்துறை யாப்பில் இயற்றப் பெறுதல் மரபு. அகப்பொருளொழுகலாற்றினைப் பாடுதற்குக் கலிப்பா, பரிபாடற்பா ஆகிய இருவகைப் பாக்களே சிறப்புரிமையுடையன எனத் தொல்காப்பியனார் கூறியுள்ளார். அவர் காலத்திற்குப் பின் தோன்றிய சங்கத் தொகை நூல்களுள் கலித்தொகையும் பரிபாடலும் தவிர ஏனைய தொகைநூல்கள் யாவும் ஆசிரியப்பாவாகிய யாப்பிலேயே இயற்றப்பெற்றுள்ளன. அகத்திணை யொழுகலாறுகளை ஒரு கோவைபடத் தொகுத்துக் கோவைப் பிரபந்தம் பாட எண்ணிய பிற்காலச் சான்றோர், தொல்காப்பியனார் கருத்தினைப் பின்பற்றித் தாம் பாட எடுத்துக் கொண்ட கோவையினைக் கலிப்பாவின் இனமாகிய கட்டளைக் கலித்துறை யாப்பில் அமைத்துப் பாடுதலை வழக்கமாகக் கொண்டனர். இவ்வாறு கட்டளைக் கலித்துறை யாப்பு அகத்திணைக் கோவைக்குச் சிறப்புரிமையுடையதாகக் கொள்ளப் பெற்றமையால் அதற்குக் கோவைக் கலித்துறை என்றதொரு பெயரும் தோன்றி வழங்குவதாயிற்று. * (வீரசோழியம் யாப்புப் படலம் 17ஆம் செய்யுள் உரை நோக்குக.)

கலிப்பாவின் இனமெனப்படும் கட்டளைக் கலித்துறை யாப்பு காரைக்காலம்மையார் அருளிய திருவிரட்டை மணிமாலையில்தான் முதன்முதற் காணப்படுகிறது. கட்டளைக் கலித்துறை யாப்பு கி.பி.ஏழாம் நூற்றாண்டில் தோன்றிய தேவாரத் திருமுறைகளிலும் திவ்யப் பிரபந்தங்களிலும் பயின்று வழங்கக் காண்கின்றோம்.

ஒத்த அன்பினராய தலைமக்களது உள்ளத்துயர்ச்சியைப் புலப்படுத்தும் அகனைந்திணை யொழுகலாற்றினைக் கற்றவர்களேயன்றி மற்றவர்களும் எளிதின் உணர்ந்து போற்றும் வண்ணம் இசை நலம் வாய்ந்த கட்டளைக் கலித்துறை யாப்பினால் கோவைபாடும் முறை கி.பி. ஏழாம் நூற்றாண்டில் தோன்றியதெனத் தெரிகிறது. இங்கனம் தோன்றிய அகத்திணைக் கோவைகளுள் பாண்டியன் அரிகேசரியைப் பாட்டுடைத் தலைவனாகக்கொண்டு பாடப் பெற்ற பாண்டிக்கோவையும் தில்லைச் சிற்றம்பலவனாகிய இறைவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு மாணிக்கவாசகப் பெருமான் திருவாய் மலர்ந்தருளிய இத் திருச்சிற்றம்பலக் கோவையும் மிகவும் தொன்மை வாய்ந்தனவாகும். இவ்விரண்டினுள்ளும் 'அகத்திணைக் கோவை என்பது நானூறு துறைகளையுடையது என்னும் இவ்வரையறைக்கமைந்த இலக்கியமாக முதன்முதல் இயற்றப்பெற்ற அகத்திணைக்கோவை திருச்சிற்றம்பலக் கோவையேயாகும்.'

இறையனார் களவியலுரையில் விரித்துரைக்கப்படும் துறைகட்கு இலக்கியமாக அந்நூலில் உரையாசிரியராற் காட்டப் பெறும் மேற்கோட் செய்யுள்களில் கட்டளைக் கலித்துறையாப்பி லமைந்த கோவைச் செய்யுட்கள் 326-ம் பாண்டிக் கோவை என்ற பெயரால் வழங்கப் பெறுகின்றன. இப்பாடல்களிற் சிறப்பித்துப் போற்றப்பெறும் பாட்டுடைத் தலைவன் மாறவர்மன் அரிகேசரி என்னும் சிறப்புப் பெயருடையவனும் நெல்வேலிப் போரில் வெற்றி பெற்றவனுமாகிய நின்ற சீர்நெடுமாறனாவன். இவ்வேந்தன் திருஞான சம்பந்தர் காலத்துப் பாண்டியமன்னன் என ஆராய்ச்சியாளர் கூறுவர். களவியலுரையில் மேற்கோளாகக் காட்டப்பெற்றுள்ள பாண்டிக்கோவைப் பாடல்களுள் ஒரு துறைக்கே ஒன்றுக்கு மேற்பட்ட பாடல்கள் உள்ளன.

பாண்டிக் கோவைச் செய்யுட்களாக 326 பாடல்கள் களவியலுரையிற் காணப்படினும் அப்பாடல்களால் விரித் துரைக்கப்பெறும் அகத்துறைகள் 175 துறைகளேயாகும். தொல்காப்பியத்திலோ இறையனார் களவியலிலோ அகத்திணைத் துறைகள் நானூறு என்னும் இவ்வரையறை இடம் பெறவில்லை. இறையனார் களவியலுரை நக்கீரனார் முதலாக முசிறியாசிரியர் நீலகண்டனார் வரை வந்த ஆசிரியப் பரம்பரையில் செவிவாயிலாக அறிவுறுத்தப்பெற்று வழங்கி வந்து முடிவில் இப்பொழுது உள்ளவாறு எழுத்துருவமைந்த காலம் கி.பி. எட்டாம் நூற்றாண்டென்பர் அறிஞர். களவியலுரை எழுதப்பெற்ற இக்காலப் பகுதியை அடுத்துத் தோன்றியவர்

திருவாதவூரடிகளாவர். ஆகவே அவ்வாசிரியர் தொல்காப்பியத்திலும் இறையனார் களவியலுரையிலும் அடியொற்றி மேலும் பல அகத்துறைகளை யமைத்துத் தாம்பாட எடுத்துக் கொண்ட திருச்சிற்றம்பலக் கோவையினை நானூறு துறைகளையுடைய அகப்பொருட் கோவையாக அழகுற இயற்றியுள்ளார். களவியலுரையில் உரையாசிரியர் மேற்கோள் காட்டி விளக்கிய துறைகளேயன்றி அத்துறைகளின் தொடர்புடை செயலாக அந்நூலுரையிற் குறிக்கப்பெற்ற நிகழ்ச்சிகள் சிலவும் இத்திருகோவையில் வாதவூரடிகளால் தனிதுறைகளாக வகுக்கப் பெறுவனவாயின. இறையனார் களவியல் ஒன்பதாம் சூத்திரவுரையில், "மதியுடம் படுத்துத் தன் கருத்தறிவித்துப் பின்னைத் தழையும் கண்ணியும் கொண்டு பின்னிற்கும்" எனவரும் உரைத் தொடரினை அடியொற்றி மதியுடம் படுத்தலின் இறுதியில் 'கருத்தறிவித்தல்' என்னும் துறையினை அடிகள் அமைத்துள்ளமை காணலாம்.

இவ்வாறு அகத்திணையொழுகலாற்றினை நானூறு துறைகளாக வகுத்தமைத்துப் பொருட்டொடர் நிலையாக நானூறு செய்யுட்களால் முதன்முதற் கோவை பாடியவர் திருவாதவூரடிகளே யாவார். அடிகள் தாம் பாட எடுத்துக் கொண்ட அகப்பொருட் கோவைக்கு நானூரு என்னும் பாடற்றொகையினைத் தேர்ந்து கொண்டமைக்கு, நற்றிணை நானூறு, குறுந்தொகை நானூறு, நெடுந்தொகை நானூறு என அமைந்த சங்கத்தொகை நூல்களின் பாடற்றொகையே அடிப்படையாக அமைந்திருத்தல் வேண்டும்.

திருச்சிற்றம்பலக் கோவையிலுள்ள நானூறு திருப்பாடல் களுக்கும் அவற்றின் கருத்துரைப் பகுதிகளாக நானூறு கொளுக்கள் அமைந்துள்ளன. பாடல்களின் கருத்துரைப் பகுதிகளாகிய இக் கொளுக்களை அடியொற்றியே இப்பாடல் களுக்குத் துறைகள் வகுக்கப் பெற்றுள்ளன எனத் தெரிகிறது. 321, 366, 367-ஆம் பாடல்களுக்கு இருவேறு துறைகள் அமையப் பொருள் வரையப் பெற்றிருத்தலானும், அங்ஙனம் வகுத் துரைக்கப் பெறும் இருவேறு துறைகளுக்கும் அடிப்படையாக அவ்வப்பாடல்களுக்குரிய கொளு ஒன்றே பொருந்தியமைந் திருத்தலானும், 370-ஆம் பாடலுரையில், "கயன்மணிக் கண்ணி யென்பது பாடமாயின், பரத்தையர் சேரிக்கட்டலைமகனதுதேர் செல்லத் தலைமகள் நொந்துரைத்த தாம்" எனப் பேராசிரியர் கொளுவினை அடியொற்றி வேறு துறை விளக்கம் கூறுதலானும் இவ்வுண்மை உய்த்துணரப்படும்.

திருக்கோவையின் கருத்துரைப் பகுதிகளாகிய கொளுக் களைப் பாடிய ஆசிரியர் இன்னாரெனத் தெரியவில்லை. ஆயினும் இக்கொளுக்கள் திருவாதவூரடிகள் காலத்தையொட்டியோ அல்லது அவர் காலத்திற்குப் பின்னரோ கி.பி.பன்னிரண்டாம் நூற்றாண்டிற்கு முன்னரே இயற்றப்பெற்று இத்திருக்கோவையில் இடம் பெற்றிருத்தல் வேண்டுமென்று தெரிகிறது. திருக்கோவை 158-ஆம் பாடலுரையில், "இக்கருத்தே பற்றி உதவி நினைந்து குறை நயந்ததென்னாது அவனது ஆற்றாமை நிலைமை கேட்டுக் குறைநயந்ததென்றார்" எனப் பேராசிரியர் வரைந்த உரைக் குறிப்பாலும் இவ்வாறே அவ்வாசிரியர் பாடல்தோறும் கொளுச் சொற்களுக்கு வரைந்துள்ள உரைக் குறிப்புக்களாலும் இக்கொளுக்களின் தொன்மை புலனாம். இத்தகைய கருத்துரைப் பகுதிகளாகிய கொளுக்களைப் புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியராகிய ஐயனாரிதனார் தாம் சொல்லக் கருதிய துறையின் விளக்கமாகத் தம் நூலில் அமைத்துள்ளார். திருக்கோவை யாருக்கு அமைந்த கொளுக்கள் அவ்வப் பாடல்களில் அமைந்த துறைகள் இவையென அறிந்துகொள்ளுதற்குக் கருவியாக அமைந்திருத்தலும், புறப்பொருள் வெண்பாமாலையிலுள்ள கொளுக்கள் அந்நூலிற் குறித்த துறைகளுக்குரிய விளக்கமாக அமைந்திருந்தலும் இங்கு ஒப்புநோக்கி யுணரத்தக்கனவாம்.

திருவாதவூரடிகள் அருளிய திருச்சிற்றம்பலக் கோவை இயற்கைபுணர்ச்சி, பாங்கற் கூட்டம், இடந்தலைப்பாடு, மதியுடன் படுத்தல், இருவரும் உள்வழி அவன் வரவுணர்தல், முன்னுறவுணர்தல், குறையுறவுணர்தல், நாணநாட்டம், நடுங்க நாட்டம், மடல், குறைநயப்பித்தல், சேட்படை, பகற்குறி, இரவுக்குறி, ஒருவழித்தணத் தல், உடன்போக்கு, வரைவுமுடுக்கம், வரைபொருட்பிரிதல், மணஞ்சிறப்புரைத்தல், ஓதற் பிரிதல், காவற் பிரிதல், பகைதணி வினை பிரிதல், வேந்தற் குற்றுழிப்பிரிதல், பொருள் வயிற்பிரிதல், பரத் தையிற்பிரிதல் என இருபத்தைந்து கிளவிக் கொத்துக்களாகப் பகுக்கப்பட்ட இருபத்தைந்து அதிகாரங்களை யுடையதாகும்.

இயற்கைப் புணர்ச்சி யென்பது, அன்பினாலும், குணத்தி னாலும் கல்வியினாலும் உருவினாலும் திருவினாலும் பருவத்தி னாலும் ஒத்த ஒருவன் ஒருத்தியாகிய இருவரும், ஒருவரை யொருவர் முன் அறிந்துகொள்ளாத நிலையில் ஒரு பொழிலிடத்து எதிர்பட்டுத் தெய்வம் இடை நிற்பப் பான்மை வழியோடி ஓர் ஆவிற்கு இருகோடு தோன்றினாற்போலத் தம்முள் ஒத்த அன்பினராய்க் கொடுப்பாரும் அடுப்பாருமின்றித் தம்முள் தாமே கூடும் கூட்டம். இவ்விருவரும் இவ்வாறு இன்ன

இடத்தில் இன்ன பொழுதிற் காணவேண்டும் என்னும் எண்ணமும் முயற்சியும் இன்றி நல்லூழின் செயலால் தம் இயல்பில் எதிர்பட்டுக் கூடினாராதலின் இஃது இயற்கைப் புணர்ச்சி யெனப்பட்டது. இவ்வாறு ஒருவர்க்கு முயற்சியும் உளப்பாடும் இன்றி ஒரு காரியம் கைகூடின இடத்து அது தெய்வத்தினான் ஆயிற்று என்பது உலகியலாதலின், இது தெய்வப் புணர்ச்சியெனவும் கூறப்படும். இது காட்சி முதல் பாங்கியையறிதல் ஈறாகப் பதினெட்டுத் துறைகளையுடையது.

இவ்வாறு இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன் தன் அன்புக்குரிய தலைவியை மணந்துகொண்டு இல்லறம் நடத்துதல் வேண்டும் என்னும் தெளிவுபெற்றுத் தலமகளை மணந்து கொள்ளுதல் தக்கது. அங்ஙனம் தெளியானாயின் தன் பாங்கனா லாவது இடந்தலைப் பாட்டினாலாவது இவ்விரண்டனுள் ஒன்றால் தலைவியைச் சென்று எய்துதல் முறைமை என்பர்.

அவற்றுள், பாங்கற் கூட்டமாவது, தலைமகன் தன் அன்பிற் கினிய தோழனாகிய பாங்கனது இசைவு பெற்றுத் தலைமகளைக் கூடுங் கூட்டமாகும். பாங்கனை நினைதல் முதல் நின்று வருந்தல் ஈறாகவுள்ள துறைகள் முபபதும் பாங்கற்கூட்டத்திற்குரியனவாம்.

இனி, இடந்தலைப்பாடு என்பது இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன் மறுநாளும் முன்தான் தலைமகளைக் கண்ட அதே இடத்தினைத் தலைப்பட்டுத் தலைமகளைக் கண்டு மகிழ்தல், பொழிலிடைச்சேறல் என்னும் துறை இடந்தலைப் பாட்டிற்கே உரியது. மேல், பாங்கற் கூட்டத்தில் 'மின்னிடை மெலிதல்' என்பது முதலாக 'நின்று வருந்தல்' என்பது ஈறாகக் கூறப்பட்ட துறைகள் பன்னிரண்டும் இடந்தலைப்பாட்டிற்கும் உரியனவாம்.

இவற்றுள் பாங்கற்கூட்டம் நிகழாதாயின் இடந்தலைப் பாடும் நிகழும்; இடந்தலைப்பாடு நிகழாதாயின் பாங்கற்கூட்டம் நிகழும். மேற்குறித்த இரண்டனுள் ஒன்றாற் சென்று எய்திய பின்னர்த் தலைமகன் தெளிவு பெற்று மணந்து கொள்ளுதல் தக்கது. தெளிந்து மணந்து கொள்ளானாயின் தலைமகள் கண்ணாற் காணப்பட்ட காதற்றோழியை வழிபட்டு சென்று எய்துதல் முறைமை என்பர். காதற்றோழியை வழிபடுதல் என்றது, தான் உற்றகுறையினைத் தெளிவாக முன்னர்க்கூறாது இரந்து நின்று கரந்த சொற்களால் தன் கருத்தினை அறிவித்துத் தோழியை ஐயவுணர்வினளாக்கி அது வழியாக நின்று தன் குறையினை அவளுக்குக் கூறுதல்.

மதியுடம்படுத்தல் என்பது, தலைமகன் தோழியின் கவர்த்த அறிவினை ஒருப்படுத்தல், இயற்கைப்புணர்ச்சி புணர்ந்தநாள் முதற்கொண்டு தலைமகளது கண்சிவந்து நுதல் வேறுபாடு காட்டிற்று. 'இவளுக்கு இவ்வேறுபாடு தெய்வத்தால் ஆயிற்றோ அன்றி மக்களால் ஆயிற்றோ' எனவும், 'இனி இவனும் அதுமுதற் கொண்டு தழையும் கண்ணியும் கொண்டு பின்னிலை முனியாது நிற்கின்றான். இவனது குறை யார் கண்ணதோ' எனவும் தோழியின் அறிவு ஒன்றினும் துணிவு பிறவாது பலதலைப்பட்டு மயங்கியது. வேறுபட்ட அறிவினளாகிய தோழி, 'இவள் வேறுபட்டது இவன் காரணமாகப் போலும்' இவன் இரந்து பின்னின்றது இவள் காரணமாகப் போலும் என ஒருங்கு சிந்தித்து வேறாக வகுத்துணரும்படி தலைமகன் குறையுற்று நிற்றல் மதியுடம் படுத்தல் எனப்படும். இது, பாங்கிடைச் சேறல் முதல் இடைவினாதல் ஈறாகப் பத்துத் துறைகளையுடையது.

பாங்கிமதியுடன்பாடு, இருவரும் உள்வழி அவன் வரவுணர்தல் முன்னுறவுணர்தல் குறையுறவுணர்தல் என மூன்று வகைப்படும். அற்றுள், இருவரும் உள்வழி அவன் வரவுணர்தல் என்பது, தலைமகளும் தோழியும், உள்ள இடத்திற்சென்று தலைமகன் கரந்தமொழியால் தன் கருத்தறிவிக்க, தோழி அவனது நினைவினை ஆராய்ந்தறிதல். ஐயுறுதல், அறிவுநாடல் என்னும் துறையிரண்டும் இதன்பாற்படும்.

முன்னுறவுணர்தல் என்பது, இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த பின்னைத் தலைமகளது வேறுபாடுகண்ட தோழி, 'இவ் வேறுபாடு தெய்வத்தினாலாயிற்றோ அல்லது மற்றொருவா றாயிற்றோ' என ஐயுற்று நிற்பது, வாட்டம் வினாதல் என்னும் துறை இதன்பாற்படும்.

குறையுறவுணர்தல் என்பது, தலைமகன் குறையுறத்தோழி அதனைத் துணிந்துணர்தல். இது, குறையுற்று நிற்றல், அவன் குறிப்பறிதல், அவள் குறிப்பறிதல் இருவர் நினைவும் ஒருவழியறிதல் என்னும் நான்கு துறைகளையுடையதாகும்.

நாணநாட்டம் என்பது இருவர் நினைவும் ஐயமறத் துணிந்த தோழி, அவரது கூட்ட முண்மைகாரணமாகத் தலைமகளை அவள் நாணும் வண்ணம் ஆராய்தல் இது, பிறைதொழு கென்றல் முதலாக மதியுடம்படுதல் ஈறாக ஐந்து துறைகளையுடையது.

நடுங்கநாட்டம் என்பது, தலைமகள் பெருநாணினள் ஆகலானும் தோழியாகியதான் அவளது குற்றேவல் மகள் ஆகலானும் பின்னும்தான் சொல்லாடாது அவள் தன்னைக் கொண்டே கேட்பது காரணமாக நெருங்கி நின்று, 'ஒருபுலி ஒருவனை எதிர்பட்டது' எனக்கூறித் தலைமகளை அவள் அஞ்சி

நடுங்குமாறு ஆராய்தல். இது, புலிமிசை வைத்துரைத்தல் என்னும் ஒரு துறையினையுடையது.

**"நாணவும் நடுங்கவும் நாடாள் தோழி**
**காணும் காலைத் தலைமகள் தேஎத்து"**

என்பவாகலின் நாணவும் நடுங்கவும் நாடுதல் அகத் தமிழிலக்கணம் அன்றென்பது புலனாம். ஆயினும் தலைமகள் தனக்குத் தலைவனோ டுண்டாகிய புணர்ச்சி யொழுக்கத்துக்கு இவள் காவற்றோழி யாகையால் இடையூறாம் என்னும் உள்ளத்தளாய் நின்று, இவ்வொழுக்கத்தைத் தோழி அறியின் நன்று என்னும் நினைவு வாராநிற்க, அந்நிலையிலே தோழி அவளைச் சிறிது நாணமடையு மாறும் நடுக்கமுறுமாறும் செய்து நலந்தரும் மென்மொழிகளால் நாடுதலின், இத்திருக்கோவையில் 'நன்னிலை நாணநடுங்க நாடல்' என அவ்விரண்டும் இடம் பெறுவனவாயின.

மடற்றிடம் என்பது, நடுங்க நாடுதலாற் பெரு நாணினளாய தலைமகள் தன் குறைசொல்லமாட்டாது நிற்ப, இனி இவள் இறந்துபடவுங்கூடும் என எண்ணித் தலைமகனுடன் சொல்லாடத் தொடங்கிய தோழி தானும் பெருநாணமுடைய ளாதலின், மீண்டும் தலைமகள் குறையுறவேண்டி ஒன்றுங் கூறாதிருப்ப, அந்நிலைமைக் கண் தலைமகன் சென்று 'இந்நாள்வரையும் எனது குறை நின்னால் முடியும் என்று நின்னை வந்து இரந்தேன்; இது நின்னால் முடியாமையின் யான் மடலூர்ந்தாயினும் இக்குறை முடித்துக் கொள்வேன்' எனத் தோழிக்குக் கூறாநிற்றல். இது, தலைமகன் ஆற்றாதுரைத்தல் என்பது முதல் தோழி உடம்பட்டு விலக்கல் என்பது ஈறாக ஒன்பது துறைகளை யுடையதாகும்.

குறைநயப்புக் கூறல் என்பது, தலைமகனை மடலேறாதவாறு விலக்கி அவன் குறையினை முடிப்பதாக ஏற்றுக்கொண்ட தோழி, தலைமகளைக் குறைநயப்பிக்க அவனது குறையினைக் குறை நயப்பிக்க அவனது குறையினைக் கூறுதல். இது, குறிப்பறிதல் முதல் மனத்தொடு நேர்தல் ஈறாக எட்டுத் துறைகளையுடையது.

சேட்படை என்பது, தலைமகளைக் குறைநயக்கும்படி செய்து தன்னினாகிய கூட்டத்தினைக் கூட்டுதற்கு இயைந்த தோழி, தலைமகளது பெருமையும் தனது முயற்சியது அருமையும் தலைமகனுக்குப் புலப்படும் படியும், 'இத்துணை அருமையுடைய தலைவி இனி நமக்கு எய்துதற்கு அரியள்' என்பதனை அவன் உணர்ந்து விரைந்து மணந்துகொள்ளுதல் வேண்டியும்

அவனுக்குப் பொருந்த மறுத்துக்கூறி, அவன் தம்மை அணுகி நில்லாதவாறு அப்புறப்படுத்தல். இது தழை கொண்டு சேறல் முதல் தழை விருப்புரைத்தல் ஈறாக இருபத்தாறு துறைகளை யுடையதாகும்.

பகற்குறி என்பது, தலைமகன்தந்த கையுறையாகிய தழையி னைத் தலைமகள் ஏற்கும்படி செய்த தோழி, தலைமகனுடன் அவளைக் பகற்குறியிடத்து அளவளாவுமாறு கூட்டுதல், இது குறியிடங்கூறல் முதல் பதிநோக்கி வருந்தல் ஈறாக முப்பத்திரண்டு துறைகளை யுடையது.

இரவுக்குறி என்பது, பகற்குறியிடத்துத் தலைமகளைக் கண்டு அளவளாவிய தலைவன், அவளை மணந்து ஒழுகுதலே தக்கது என்னுந் தெளிவின்றி மீண்டும் தோழியையடைந்து, 'இற்றை இரவிற்கு யான் உங்கள் சிற்றூர்க்கு விருந்தினன். என்னை ஏற்றுக்கொள்வாயாக' எனத் தோழியை வேண்டித் தலைமகளை இரவுக்குறிடத்து எதிர்பட்டுக் கூடுதல். இது தலைவன் இரவுக்குறி வேண்டல் முதலாகத் தோழி அலரறிவுறுத்தல் ஈறாக முப்பத்து மூன்று துறைகளை யுடையது.

இவ்வாறு தோழியின் இசைவுபெற்று இரவுக் குறியிடத்துத் தலைமகளைக் கண்டு அளவளாவி மகிழ்ந்த தலைமகன், அலர் எழுந்ததென்று விலக்கப்பட்ட பின்னர்த் தெளிவுற்று மணந்து கொள்ளுதல் தக்கது. அங்ஙனம் தெருளானாயின் அவ்வலர் மொழியடங்குமாறு சிலநாள் ஒருவழித் தணந்துறைதல், தலைமகளை உடன் கொண்டுபோதல், தோழியால் வரைந்து கொள்ளும்படி தூண்டப்பட்டு அருங்கலம் அனுப்பித் தலைமகளை மணந்து கொள்ளுதல் இம்மூன்றினுள் ஒன்று செய்தல் முறையாகும் என்பர். அவற்றுள் ஒருவழித் தணத்தல் என்பது, தலைமகளை இரவும் பகலுமாகப் பலாகலும் தான் எதிர்ப்படுதலால் உளவாம் பழிசொற்களுக்கு அஞ்சி விலகிய தலைமகன், அவளைக் காணாத நிலையில் நீங்கி ஓரிடத்து ஒதுங்கியுறைதல். இஃது அகன்றணைவு கூறல்முதல் வருத்த மிகுதி கூறல் ஈறாகப் பதின்மூன்று துறைகளை யுடையது.

இவ்வாறு ஒருவழித் தணத்தல் நிகழாதாயின் உடன்போக்கு நிகழும்.

உடன்போக்கு என்பது, தலைமகன், தோழியின்இசைவு பெற்றுத் தலைமகளை அவர்தம் பெற்றோரறியாதவாறு தன்னுடன் அழைத்துக் கொண்டு, நடத்தற்கரிய வழியிலே நடந்து வேற்றூர்க்குச் செல்லுதல். இது, பருவங்கூறல் முதல் அழுங்கு தாய்க்குரைத்தல் ஈறாக ஐம்பத்தாறு துறைகளை யுடையதாகும்.

இவ்வாறு உடன்போக்கு நிகழாதாயின், மணஞ்செய்து கொள்ளுதல் நிகழும். அது நிகழுங்கால் தலைமகன் தலைமகளை மணந்து கொள்ளுமாறு தோழியால் விரைந்து தூண்டப்பட்டும், பொருள் தேடப் பிரிந்து வந்தும் மணம் நிகழும் என்பர்.

அவற்றுள் வரைவு முடுக்கமாவது, தலைமகளை விரைந்து மணந்து கொள்ளும்படி தோழி தலைமகனை வற்புறுத்துதல். இது வருத்தமிகுதி கூறி வரைவுகடாதல் முதல் பொலிவழிவுரைத்து வரைவுகடாதல் இறுதியாகப் பதினாறு துறைகளையுடையது.

வரைபொருட் பிரிதல் என்பது, தலைமகளை மணந்து கொள்ளுதற்கு வேண்டிய பரிசுப்பொருளை ஈட்டுதற் பொருட்டுத் தலமகன் பிரிந்து செல்லுதல். இது, முலைவிலை கூறல் முதல் நிதிவரவு கூறாநிற்றல் ஈறாக முப்பத்து மூன்று துறைகளையுடையதாகும்.

மணஞ் சிறப்புரைத்தல் என்பது, தலைமகன் தலைமகளை மணந்துகொண்டு மனையறம் நிகழ்த்துதலின் சிறப்பினை விரித்துரைப்பதாகும். இது, மணமுரசு கூறல் முதல் கலவியின்பங் கூறலீறாக ஒன்பது துறைகளையுடையதாம்.

ஓதற் பிரிவு, என்பது, தலைமகளை மணந்து வாழும் தலைமகன், கலைநூல்கள் பலவற்றை முன்னரே ஓதி முடித்தானா யினும், தான் ஓதிய நூற்பொருள்களினும் அமையாது மிக்குள்ள உறுதிப்பொருள்களை யறிவுறுத்தும் நூல்கள் மேலும் உளவோ என ஆராய்ந்துணருங் கருத்தினாலும், கல்வியால் தன்னில் தாழ்ந்தாரை அறிவு மிகுதி காட்டி அறிவுறுத்தலாகிய அறநூல் விதி பற்றியும் ஓதுதல் கருதித் தலைமகளைப் பிரிந்து செல்லுதல். இது, கல்வி நலங்கூறல், பிரிவு நினைவுரைத்தல், கலக்கங் கண்டுரைத்தல், வாய்மொழி கூறித்'தலை மகள் வருந்தல் என நான்கு துறைகளை யுடையது.

காவற் பிரிவு என்பது, எல்லாவுயிர்களையும் பாதுகாக்க வேண்டும் என்னும் அறநூல் விதிபற்றி நாடு காத்தற் பொருட்டுத் தலைமகன் தலைமகளைப் பிரிந்து செல்லுதல். இது, பிரிவறி வுறுத்தல், பிரிவு கேட்டிரங்கல் என்னும் இரு துறைகளையுடையது.

பகைதணி வினைப் பிரிவு என்பது, தம்முள் முரணிப்போர் செய்யக்கருதிய வேந்தர் இருவரையும் அவர் தம் பகைமை தணிந்து நட்பினராகுமாறு அன்பினாற் பொருந்தச் செய்தற் பொருட்டு தலைமகன் தலைமகளைப் பிரிந்துதூதாகச் செல்லுதல். பிரிவுகூறல், வருத்தந்தணித்தல் என்னும் துறையிரண்டும் இதன் பாற்படும்.

வேந்தற் குற்றுழிப் பிரிவு என்பது, ஒரு வேந்தனுக்கு ஒரு வேந்தன் தோல்வியுற்று தன் துணையை நாடினால் அவனுக்கு உதவிசெய்தற்பொருட்டுத் தலைமகன் தலைமகளைப் பிரிந்து போர்த்தொழிலை மேற்கொண்டு செல்லுதல், இது, புரிந்தமை கூறல் முதலாக மறவாமை கூறல் இறுதியாகப் பதினாறு துறைகளை யுடையது.

பொருள் வாயிற் பிரிதல் என்பது, தம் முன்னோர் தேடிய பொருள் கொண்டு இல்லறஞ் செய்தல் அறமன்றென வுணர்ந்த தலைமகன், தான் ஈட்டிய பொருள் கொண்டு இல்லறம் நிகழ்த்தும் கருத்துடையனாய்த் தானே முயன்று பொருள் தேடுதற் பொருட்டுத் தலைமகளைப் பிரிந்து செல்லுதல், இது வாட்டங் கூறல் முதல் உண் மகிழ்ந்துரைத்தல் ஈறாக இருபது துறைகளையுடையது.

பரத்தையிற் பிரிவு என்பது, தலைமகன் தலைமகளை மணந்துகொண்டு மனைவாழ்க்கையினை நிகழ்த்தும் நிலையில், 'வைகலும் பாலே நுகர்வானொருவன் இடையே புளிங்காடியும் நுகர்ந்து, பாலின் இனிமையினை யறிந்தாற்போல, அவள் நுகர்ச்சி யினிமை யறிதற்கும், பண்ணும் பாடலும் முதலாயின காட்டிப் புறப் பெண்டீராய பரத்தையர் தன்னைக் காதலித்தால் தான் எல்லார்க்குந் தலைவனாதலின் அவர்க்கும் இன்பஞ் செய்தல்வேண்டியும், தலைமகளை யூடல் அறிவித்தற்கும் தலைமகளைப் பிரிந்து பரத்தையை யடைதலாகும்' என்பர் பேராசியர். இது, கண்டவர் கூறல் முதல், ஊதியம் எடுத்துரைத்து ஊடல் தீர்த்தல் ஈறாக நாற்பத்தொன்பது துறைகளை யுடையதாம்.

இருபத்தைந்து கிளவிக் கொத்துக்களாக மேற்குறித்த கிளவிப் பெயர்கள், இறையனார்களவியலுரையினை அடியொற்றி இத்திருக்கோவையில் அமைக்கப் பெற்றன எனத் தெரிகிறது. தெய்வப் புலவர் திருவள்ளுவர் தாம் கூற எடுத்துக் கொண்ட காமத்துப் பாலாகிய அகனைந்திணை யொழுக லாற்றினை இருபத் தைந்ததிகாரங்களாக வகைப்படுத்துரைத்தாற் போன்று, திருவாதவூரடிகளும் நானூறு துறைகளில் தாம் பாடக் கருதிய திருச்சிற்றம்பலக் கோவையினை மேற்குறித்தவாறு இருபத்தைந்து கிளவிக்கொத்துக்களாக வகைபெற அமைத்துள்ளமை ஒப்புநோக்கத் தக்கதாகும். பிற்காலக் கோவைகளிற் பல, கைக்கிளை முதல் பொருள் வயிற்பிரிதல்ஈறாக முப்பத்துமூன்று கிளவிக் கொத்துக்களாக வகுக்கப் பெற்றுள்ளன.

அகத்திணை யொழுகலாற்றில் உரையாடுதற்குரியவர்களுள் தலைவன், தலைவி, தோழி என்னும் இம்மூவரும் சிறப்பாகக்

குறிப்பிடத்தக்கவராவர். திருக்குறள் காமத்துப்பாலில் அமைந்த கூற்றுகள் யாவும் மேற்குறித்த மூவர் கூற்றுள் அடங்குதல் காணலாம். இந்திருக்கோவையில் இன்னார் கூற்றென்னாது துறை பற்றிய நிகழ்ச்சி யளவிற் குறித்த பாடல்களும் உள்ளன. அப்பாடல்களைத் 'துறை கூறிய கருத்து' என இந்நூலுரைசிரியர் குறித்துள்ளார், 258-ஆம் திருப்பாடலுரையில், "இதுவும் துறை கூறிய கருத்து, 'மகிழ்வுற்றது' என, இன்னார் கூற்றென்னாது துறை கூறினார்" எனவும், இவ்வாறே 366, 367, 397-ஆம் பாடல் களின் உரையிலும் அவ்வுரையாசிரியர் குறித்துச் செல்லுதலைக் கூர்ந்து நோக்குங்கால், அகத்திணைப் பாடல்களில் இன்னார் கூற்றெனத் தெளிவாக உணர்ந்துகொள்ளுதற்குரிய கூற்றென்னும் அகப் பாட்டுறுப்பின்றி, அத்துறைப் பொருளை மட்டும் விரித்துரைக்கும் நிலையில் அமைந்த அகப்பாடல்களைத் 'துறை கூறிய கருத்து' எனக் குறித்துரைக்கும் வழக்க முண்மை இனிது புலனாம். இத்தகைய துறைப் பாடல்களாக வறியதுநகை தோற்றல், முறுவற் குறிப்புணர்தல் என்பன பிற்காலக் கோவை நூல்களில் இடம் பெற்றுள்ளன. இவற்றுள் வறிது நகை தோற்றலைச் சிலர் தலைவன் கூற்றாகவும் சிலர் கவிக் கூற்றாகவும் அமைத்து உள்ளனர்.

அகனைந்திணைக் கோவையாகிய இப்பிரபந்தத்தில் பாடாண்டிணை யென்னும் புறத்திணை யமையப் புலவனாற் பாராட்டப்பெறும் பாட்டுடைத் தலைவன் எனவும் கூற எடுத்துக் கொண்ட அகப்பொருளொழுகலாற்றொடு தொடர்பு உடைய கிளவித் தலைவன் எனவும் இருவேறு தலைவர்கள் இடம் பெறுவர். அவருள் கோவைப்பனுவலாற் புறத்திணையில் வைத்துப் புகழப்படும் தலைவன், பாட்டுடைத் தலைவன் ஆவன். கோவையிற் கூறும் அகப்பொருளொழுகலாற்றிற் குரியனவாகப் பேசப்படும் தலைவன் கிளவித்தலைவன் எனப்படுவான். கிளவித் தலைவனது இயற்பெயர் கூறுதல் மரபன்று; வெற்பன், நாடான், விடலை, ஊரன், சேர்ப்பன் முதலிய திணைநிலைப் பெயர்களாலேயே இத்தலைவன் குறிக்கப்பெறுவான்.

திருக்கோவையாகிய இப்பனுவலிற் போற்றியுரைக்கப் பெறும் பாட்டுடைத் தலைவன், தில்லை மூதூர்ப் பொதுவினில் தோன்றி எல்லையிலானந்த நடம்புரிகின்ற பரமகாரணனாகிய சிவபெருமானாவன். அம்முதல்வனது திருவடியைத் தன் சிந்தையிலும் சென்னியிலும் கொண்டு போற்றும் திருத்தக வுடைய தலைமகனே இத்திருக்கோவையில் விரித்துரைக்கப் பெறும் அகத்திணை யொழுகலாற்றுக்குரிய கிளவித் தலைவன் ஆவான்.

எல்லாம்வல்ல முழுமுதற் கடவுளாகிய தில்லைச் சிற்றம்பலவனே திருப்பெருந்துறையில் குருவாக எளிவந்து ஆட்கொண்டருளினமையால் பசுகரணங்களெல்லாம் பதிகரணங்களாக, ஐம்பொறியுணர்வுகளின் நீங்கிச் செம்புலச் செல்வராகிய மணிவாசகப் பெருந்தகையார், அறிவனூற் பொருளும் உலக நூல் வழக்கும் என இவ்விரு பொருள்களையும் விளக்கும் முறையில் இத்திருக்கோவையினை அருளிச் செய்துள்ளார்.

"திருவாதவூரடிகள் இத்திருக்கோவையை என்னுதலி எடுத்துக்கொண்டாரோ எனின்...

**தில்லை மூதூர்ப் பொதுவினிற் றோன்றி**
**எல்லையி லானந்த நடம் புரிகின்ற**
**பரமகாரணன் திருவருளதனால்**
**திருவாதவூர் மகிழ் செழுமறை முனிவர்**
**ஐம்பொறிகையிகந் தறிவா யறியாச்**
**செம்புலச் செல்வராயினர் ஆதலின்**
**அறிவனூற் பொருளும் உலக நூல் வழக்கும் என**
**இருபொருளும் நுதலி யெடுத்துக்கொண்டன"**

என இந்நூல் உரைமுகத்தமைந்த பேராசிரியர் வாய்மொழி இவ்வுண்மையினைத் தெளிவுபடுத்தல் காணலாம்.

அறிவனூற் பொருளாவது, முற்றுணர்வினனாகிய இறைவன் அருளிச்செய்த ஆகம நூல்வழியிற் கூறப் பெற்ற ஞானயோக நுண்பொருள். உலக நூல் வழக்காவது, ஒத்த அன்புடைய ஒருவனும் ஒருத்தியுமாகிய இருவரும் நல்லூழின் செயலால் எதிர்ப்பட்டு ஒருவரையொருவர் இன்றியமை யாதவராய் மறைவிற் கலந்து அளவளாவிப்பின் உலகத்தார் அறிய மணந்து கொண்டு மனையறம் நிகழ்த்தி இன்புற்று வாழ்தலாகிய உலகியல் வாழ்வு. "உலகியல் வேத நூல் ஒழுக்கம்" என்பவாகலின் தமிழியல் நூலாகிய தொல்காப்பியத்தினும் இறையனார் களவியலினும் சங்கச் செய்யுட்களினும் உலகியலொழுகலாறு பற்றி எடுத்தோதப்பட்ட களவு கற்பு என்னும் அகத்திணையின் இன்ப வரலாறே இத்திருக்கோவையில் விரித்து விளக்கப் பெறும் உலகநூல் வழக்காகும்.

அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப் பொருள் நான்கினும் இன்பத்தை நுதலிய களவொழுக்கமாகிய அகத்திணை யொழுகலாற்றினை விரித்துரைக்க எழுந்த நூல் இத்திருக்கோவை யாயினும், பனுவலின் பாட்டுடைத் தலைவனாகிய தில்லையம்பலக் கூத்தனையும், அம் முதல்வன்

உலகெலாம் உணர்ந்து உய்யும் வண்ணம் ஐந்தொழில் திருக்கூத்தியற்றிருளும் பரஞான அருள் வெளியாகிய தில்லைச் சிற்றம்பலத்தையும் போற்றிப் பரவும் முறையில் அமைந்த இந்நூற் பகுதிகள், அறம்பொருள் இன்பம் என்னும் மும்முதற் பொருளுடன் சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாகிய வீடுபேற்றின் திறத்தினையும் இனிது புலப்படுத்தும் முறையில் அமைந்திருத்தலால், அறம் பொருள் இன்பம் வீடென்னும் நாற்பொருள்களையும் பயக்கும் நிலையில் திருவாதவூரடிகளால் அருளிச் செய்யப்பெற்றது இத் திருச்சிற்றம்பலக் கோவையெனக் கூறுதல் பொருந்தும்.

பாட்டுடைத் தலைவர்க்குரிய பெயரோடும் ஊரோடும் சார்த்திக் கூறும் அடைமொழி எதுவுமின்றித் திருக்கோவை எனவும், உயர்த்தற் பொருளதாகிய ஆர்விகுதி புணர்த்துத் திருக்கோவையார் எனவும், ஆன்றோர் பலரும் இத்திருச் சிற்றம்பலக் கோவையினை வழங்கி வருதலால், அகத்திணைக் கோவைகள் எல்லாவற்றிலும் மேம்பட்டு விளங்கும் தனிச் சிறப்பு வாய்ந்தது இத்திருச்சிற்றம்பலக் கோவையே என்பது நன்கு தெளியப்படும். உயர்வற வுயர்ந்த திருவருட்பனுவலாகிய இதன் சிறப்பினை,

**'வருவாசகத்தினின் முற்றுணர்ந்தோனை வண்டில்லை மன்னைத்'**
**திருவாதவூர்ச் சிவபாத்தியன் செய்திருச் சிற்றம்பலப்**
**பொருளார்தரு திருக்கோவை கண்டேயுமற்றப் பொருளைத்**
**தெருளாதவுள்ளத்தவர் கவிபாடிச் சிரிப்பிப்பரே'**

(கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம் செய்யுள் 58)

எனவரும் திருப்பாடலில் நம்பியாண்டார் நம்பிகள் உளமுருகிப் பாராட்டியுள்ளமை இங்கு நோக்கத்தக்கதாகும்.

திருச்சிற்றம்பலக்கோவையின் பொருள்நலம் விளங்கும் வண்ணம் தெளிந்த செந்தமிழ் நடையில் திட்பமும் நுட்பமும் அமைய அழகியதோர் உரையினை வரைந்தவர் பேராசிரியர் ஆவார். இவ்வுரை முதன்முதல் அச்சில் வெளிவந்த பொழுது நாச்சிக்கினியர் உரை எனக்கருதப்பட்டது. நாச்சிக்கினியர் உரை வரைந்த நூல்களைத் தொகுத்துக் கூறும் பழையவெண்பாவில் அவ்வாசிரியர் இத்திருக்கோவைக்கு உரைவரைந்தார் என்ற செய்தி குறிக்கப்படாமையாலும், பிரயோக விவேக நூலுடையார் திருக்கோவையாருரையிற் குறிக்கப்பெற்றுள்ள இலக்கணக் குறிப்புகள் சிலவற்றைத் தம் நூலில் எடுத்துக்காட்டுங்கால் திருக்கோவையார்க்கு அமைந்த இவ்வுரையினை யியற்றியவர்

பேராசிரியர் எனத் தெளிவாகக் குறிப்பிடுதலாலும்* (*பிரயோக விவேகம் 24-ம் பாடல் உரை.) திருக்கோவையார் உரையாசிரியர் பேராசிரியரே என்பது நன்கு துணியப்படும்.* (*தஞ்சைச்சரசுவதி மகால் நூல் நிலைய வெளியீடாகவும் பின் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தின் வெளியீடாகவும் வெளியிடப் பெற்ற திருக்கோவையார்-பழையவுரை என்பது மேற்குறித்த பேராசிரியர் உரையினைத் தழுவிச் சுருக்கமும் எளிமையும் அமையப் பின் வந்த சான்றோரொருவரால் எழுதப்பட்ட புதியவுரையாகும். இவ்வுண்மை அவ்வுரையில் ஆங்காங்கே விரவியுள்ள பிற்காலச் சொல் வழக்குகளால் உய்த்துணரப்படும்.)

பேராசிரியரால் இயற்றப்பெற்ற இவ்வுரை, இத்திருக் கோவையின் வாயிலாகத் திருவாதவூரடிகள் உணர்த்த எடுத்துக் கொண்ட அறிவானூற் பொருளும் உலகநூல் வழக்கும் ஆகிய இருதிறப் பொருள்களையும் இனிது விளங்கும் முறையில் அமைந்துள்ளது.

**"ஆகமநூல் வழியின் நுதலிய ஞான**
**யோகநுண் பொருளினை யுணர்த்துவதற்கு அரிது;**
**உலகநூல் வழியின் நுதலிய பொருள் எனும்**
**அலகில் தீம்பாற் பரவைக்கண் எம்**
**புலன் எனும் கொள்கலன் முகந்தவகை, சிறிது**
**உலையா மரபின் உரைக்கற் பாற்று"**

எனப் பேராசிரியர் திருக்கோவையார் உரைமுகத்து அவையடக்க மாக நுதலிப்புகும் கருத்துரை, ஆகம நூல் வழியின் நுதலிய ஞான யோக நுண்பொருளாகிய அறிவனூற் பொருளில் அவர் கொண்டுள்ள நன்குமதிப்பும் நூற்பயிற்சியும், உலகநூல் வழியின் நுதலிய அகனைந்திணைப் பொருள்பற்றிய தமிழிலக்கிய நூல்களில் அவர்க்கிருந்த ஆழ்ந்த பயிற்சியும் புலமையும் ஆகியவற்றைப் புலப்படுத்துவதுடன், அறிவினாற் சிவனே யாகிய மாணிக்கவாசகப் பெருமான் பால் அவர் கொண்ட பக்தியினையும் அடிகள் திருவாய் மலர்ந்தருளிய அருள் நூலாகிய இத் திருச்சிற்றம்பலக் கோவையில் அவர் கொண்டுள்ள நன்மதிப்பினையும் இனிது விளக்கும் நிலையில் அமைந்திருத்தல் அறியத்தக்கதாகும்.

இவ்வுரையாசிரியர் பாடல் தோறும் முதற்கண் அப்பாடலுக்குரிய துறை பற்றிய விளக்கமும், அதனையடுத்துக் கோவைப்பாடலும், அதன்பின் அதன் கருத்துரையாக அமைந்த கொளுவும், அதனையடுத்துப் பாடற்பொருளாகிய பொழிப் புரையும், அதன்பின் பாடலில் அமைந்த சொற்பொருள் நயங்களையும் கொளுவின் சொற்பொருளையும் விளக்கும்

சிறப்புரையும் அமைய இம்முறையில் இத்திருக்கோவைக்கு உரை வரைந்துள்ளார். இவ்வுரையில் அகத்திணைக் கிளவிக் கொத்துக்கள் இருபத்தைந்தினைத் தொகுத்துக் கூறும் நூற்பாவும் அதன்கண் அமைந்த கிளவிக் கொத்துக்களின் துறைகளை விரித்துரைக்கும் நூற்பாக்களும் அவற்றிற்கமைந்த உரைப் பகுதிகளும் இடம்பெற்றுள்ளன. அகத்திணை யொழுக லாற்றினை வகுத்துக் கூறும் இச்சூத்திரங்களும் உரைப்பகுதிகளும் பேராசிரியராலேயே இயற்றப்பெற்று இத்திருக்கோவையுரையில் சேர்க்கப் பெற்றிருத்தல் கூடும், எனக்கருதுதல் பொருந்தும்.

இறையனார் களவியலுரையினை எழுத்துருவில் அமைத்த உரையாசிரியர், அவ்வுரையிற் குறிக்கப் பெறும் அகத்துறைகளை விளக்கி அத்துறைகளுக்குரிய உதாரண இலக்கியமாகப் பாண்டி யனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பெற்ற அகத் திணைக் கோவைச் செய்யுட்களையும் தொடர்புடைய சங்கச் செய்யுட்கள் சிலவற்றையும் எடுத்துக்காட்டி அகப்பொரு ளொழுகலாற்றின் இயல்பினை இலக்கியச் சான்றுடன் இனிது விளக்கியுள்ளார். அவ்வுரையாசிரியர் காட்டிய அகப்பொருள் விளக்கங்களை நன்குணர்ந்த பேராசிரியர், அகப்பொருள் இலக்கியமாகிய இத்திருக்கோவையின் பாடற்பொருளை விளக்கும் நிலையில், அதற்கு இன்றியமையாத கிளவித்தொகை துறை முதலியன பற்றிய இலக்கண விளக்கங்களைப் பாடல் தோறும் முன்னர்த் தந்து, அதன்பின் பாடற் பொருள்களையும் பொருள்நலம் அணிநலம் முதலியன பற்றிய விளக்கவுரை யினையும் கருத்துரைப் பகுதியாகிய கொளுவின் அருஞ்சொற் குறிப்புகளையும் உடன் வரைந்து, அகப்பொருளிலக்கியமாகிய இத் திருக்கோவையினைக் கற்போர் இதன் வாயிலாக அகப் பொருளிலக்கணத்தினையும் ஒருங்குணர்ந்து மகிழும் வண்ணம் இவ்வுரையினைத் திறம்பட அமைத்துள்ளார்.

இறையனார் களவியலுரையினை அடியொற்றித் திருக் கோவைக்கு உரைகாணக் கருதிய பேராசிரியர், தம் உரையின் இடையிடையே மாணாக்கர் வினவுமாறு போன்று உரிய தடைகளை நிகழ்த்தி, அவற்றிற்குத் தக்க விடை கூறியும், நோக்கு என்னும் செய்யுளுறுப்பினைக் கூர்ந்துணர்ந்து பாடற் றொடர்களை மறித்து நோக்கி அவற்றிலமைந்த நுண்பொருள் நயங்களை சுவைபெற விளங்க உணர்த்தியும், பாடல்களில் அமைந்த உள்ளுறைவுமை, ஏனையுவமை, உருவகம் சிலேடை முதலிய அணிநலன்களை எடுத்துக் காட்டி விளக்கியும், அடிகள் அருளிய இத்திருக்கோவைக்கும் திருவாசகத்திற்கும் உள்ள ஒப்புமைப் பகுதிகள் சிலவற்றை ஆங்காங்கே குறிப்பிட்டும், திருக்கோவைத் திருப்பாடளிற் பயின்ற திரு, செல்வு, சோத்தம்,

*படிச்சந்தம் முதலிய சொற்களுக்குச் சிறந்த விளக்கங்கள் தந்தும் இனிய செந்தமிழ் நடையில் இவ்வுரையினை யமைத்திருப்பது, இத்திருக்கோவையினைக் கற்பார்க்குக் கற்குந்தோறும் கற்குந்தோறும் கழிபேருவகையினை விளைப்பதாகும்.*

*திருக்கோவையாருரையிற் பேராசிரியர் தந்த விளக்கங்கள் சிலவற்றை நாற்கவிராசநம்பி தாம் இயற்றிய அகப்பொருள் விளக்கத்திற் சூத்திரங்களாக எடுத்தாண்டுள்ளார். திருக்கோவை யார் 70-ஆம் பாடலுரையில் "இவற்றுள் கைக்கிளை யென்பது ஒரு தலைக்காமம். பெருந்திணை என்பது பொருந்தாக் காமம்" எனப் பேராசிரியர் குறித்த உரைத்தொடர்கள், நம்பியியற்றிய அகப்பொருள் விளக்கத்தில் கைக்கிளை, பெருந்திணை என்பவற்றின் இலக்கணங் கூறும் இருவேறு சூத்திரங்களாக அமைந்திருத்தல் காண்க.*

*இனி, பேராசிரியர் உரையினையுளத்துட் கொண்டு இத் திருக்கோவையின் பொருள் நலங்களை ஒருசிறிது நோக்குதல் இத்திருமுறை யாராய்ச்சிக்கு இன்றியமையாததாகும்.*

*அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பொருளிலும் இன்பத்தை நுதலி இத்திருக்கோவையின்கண் உரைக்கின்ற களவியற் பொருளினது பொழிப்பிலக் கணத்தினையும் அதற்கு உறுப்பாகிய கைக்கிளைத் திணையின்கண் முதற்கிடந்த காட்சி என்னும் ஒருதலைக் காமத்தினையும் உடனிலைச் சிலேடையாக உணர்த்துவது,*

**திருவளர் தாமரை சீர்வளர் காவிகள் ஈசர்தில்லைக்**
**குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள் கொண்டோங்கு தெய்வ**
**மருவளர் மாலையொர் வல்லியின் ஒல்கிஅனநடைவாய்ந்**
**துருவளர்கா மன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே.**

*எனவரும் முதல் திருப்பாட்டாகும். ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தலைமகனும் தலைமகளும் பண்டைப் பிறப்பிற் பழகிய நல்லூழின் பயனாகத் தத்தம் ஆயத்தின் நீங்கி ஒரு பொழிலகத்து எதிர்ப்பட்டு ஒருவரையொருவர் தனிமையிற் கண்ணுற்ற பொழுது, வேட்கையத்தவனாகிய தலைமகன் தலைமகளைக் கண்டு வியந்து கூறுவதாக அமைந்தது, இத் திருப்பாடலாகும்.*

*"திருவளரும் தாமரைப்பூவினையும் அழகு வளரும் நீலப் பூக்களையும் இறைவரது தில்லையெல்லைக்கண் உண்டாகிய பூங்குமிழினது நிறம் வளரும் பூவினையும் கோங்கரும்புகளையும் செவ்விக்காந்தட் பூக்களையும் உறுப்பாகக்கொண்டு மேம்பட்ட தெய்வ மணம் வளரும் மாலையானது, ஒருகொடிபோல நுடங்கி அன்னத்தின் நடைபோலும் நடையினைப் பொருந்தி வடிவு*

வளரும் மன்மதனது வெற்றிக்கொடி போன்றுஒளிமிக்கு விளங்குகின்றதே; இஃது என்ன வியப்பு" என்பது இதன் பொருள்.

திரு என்பது, கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்; அஃதாவது அழகு, தாமரை, நெய்தல் (நீலம்), குமிழ், கோங்கு, காந்தள் எனப்பல நிலங்களுக்கும் உரிய பூக்களைக் கூறிய அதனால் நிலமயக்கம் கூறியவறாயிற்று. ஆகவே பல நிலங்களினுஞ்சென்று துய்க்கும் இன்பமெல்லாம் தில்லையின் வாழ்வார் ஆண்டு இருந்தே துய்ப்பர் என்பது போதரும். போதர, இம்மையின்பத்திற்குத் தில்லையே காரணம் என்பது கூறியவராயிற்று. ஈசர் தில்லை என்றதனான் மறுமை யின்பத்திற்கும் காரணமாதல் சொல்லாமையே விளங்கும். தெய்வ மருவளர் மாலை என்றதனால், தாமரை முதலாயினவற்றான் இயன்ற பிற மாலையோடு இதற்கு வேற்றுமை கூறியவாறாம். உருவளர் காமன்தன் வெற்றிக்கொடி என்றது, மன்மதன் சிவபெருமானது நெற்றிக்கண்ணினால் நோக்கப்பட்டு நீறாகி உருவிழப்பதன்முன் தோல்வியுறாத ஆணையுடையனாய் நின்று உயர்த்துள்ளவெற்றிக் கொடியினை. திருவளர் தாமரை, சீர்வளர் காவிகள் என்றாங்கு அவ்வப் பூக்களுக்குத் தக்க அடைமொழி கொடுத்துக் கூறிய ஆசிரியர் கோங்கு என அடைமொழியின்றிக் கூறியது, தனக்கெனத் தனி நிலம் பெறாத பாலை நிலஞ் சொல்லுதல் நோக்கி என்பர் பேராசிரியர்.

உடனிலைச் சிலேடையாவது, ஒரு பாட்டு இரண்டு வகையாற் பொருள்கொண்டு நிற்பது. அவ்விரண்டனுள் இத்திருக் கோவையின் உரைக்கின்ற முதற் பொருளாவது, காமனது வெற்றிக்கொடி போன்று விளங்கி, அன்னநடை யுடையதாய்த் தாமரை, காவி, குமிழ், கோங்கு, காந்தள் என்னும் ஐவகைப் பூக்களால் தொடுக்கப்பெற்று ஓங்கும் தெய்வ மருவளர் மாலையின் வியக்கத்தக்க தோற்றப் பொலிவாகும். இவற்றுள் தாமரைமலர் தலைமகளின் முகத்தினையும், காவிமலர் கண்களையும், குமிழமலர் மூக்கினையும், கோங்கரும்பு கொங்கையினையும் காந்தள்மலர் கைகளையும் ஆகுபெயராற் குறித்து நின்றன. தலைமகளைக் கண்டு வேட்கையுடையனாய் நின்ற தலைமகன், அவளை ஒரு தெய்வப் பூமாலையாக உருவங்கொண்டு, காமனது வெற்றிக்கொடியோடு உவமித்துச் சொன்னான் என்பதாகும். 'திருவளர் தாமரை' என்று முகம் முதலாக எடுத்துக்கொண்டு, 'அன்னநடை' என்று பாதத்திலே முடித்தலால், இது கேசாதி பாதமாக வருணிக்கப்பட்ட தென்றறிக.

தாமரை மருதநிலப் பூ. காவி (நீலம்) நெய்தல் நிலப் பூ. குமிழ் முல்லை நிலப் பூ. கோங்கு பாலைநிலப் பூ. காந்தள் குறிஞ்சிநிலப் பூ. இந்த ஐந்து பூக்களாலும் முறையே மருதம், நெய்தல், முல்லை, பாலை, குறிஞ்சி என்னும் ஐந்திணையொழுகலாறுகளையும் குறிப்பாக உணர்த்தினார். பைங்காந்தள் என்று குறிஞ்சிக்குரிய பூவிலே முடித்தலால் புணர்தலும் புணர்தல் நிமித்தமும் ஆகிய குறிஞ்சியே கூறினார். "ஓரிடத்து ஒரு கலியாணம் உண்டானால் எல்லோரிடத்தும் உண்டாகிய ஆபரணங்கள் எல்லாம் அவ்விடத்துக்கூடி அக்கலியாணத்தைச் சிறப்பிததாற் போலப் பல நிலங்களும் இக்குறிஞ்சியையே சிறப்பித்து நின்றன." என்பர் பேராசிரியர். உருவளர் காமன்றன் வென்றிக்கொடி என்றமையின், அன்பினானே நிகழ்ந்த காமப்பொருளாகிய இவ்வகத்திணை யொழுகலாற்றைக் குறிப்பான் உணர்த்தினார். யாரும் கேட்பாரின்றித் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொன்னமையின், கந்தருவர் ஒழுக்கத்தை ஒத்த களவொழுக்கத்தையே குறித்தார். ஈசர் தில்லை என்றமையின், வீடுபேற்றின் பயத்தது என்பதையும் ஒருங்கு குறித்தாராயிற்று.

களவொழுக்கம் என்னும் பெயர் பெற்று, வீடுபேற்றின் பயத்ததாய், அன்பினால் நிகழ்ந்த காமப்பொருள் நுதலிக் கந்தருவ ரொழுக்கத்தோடு ஒத்துக் காமனது வெற்றிக்கொடி போன்று ஐந்திணையின் கண்ணும் வென்று விளங்காநின்ற கடிமலர்மாலை யின் வரலாறு இத்திருக்கோயின்கண் உரைக்கப்படுகின்றது என்றவாறு, களவொழுக்கத்தினை ஒரு மாலையாக உட்கொண்டு உருவகவாய்பட்டான் உணர்த்தினார் என்பது இத்திருப் பாடற்குரிய இரண்டாவது பொருளாகும்.

இங்ஙனம் இத்திருக்கோவையின் முதற்கண் அமைந்த இத்திருப்பாடல், நூல்நுதல் பொருளைத் தன்னகத் தடக்கி உடனிலைச் சிலேடையாய் இரு பொருள் தந்துநிற்குந் திறத்தினை இதனுரையிற் பேராசியர் இனிது விளக்கியுள்ளார்.

அகப்பொருளொழுகலாற்றில் வெளிப்படக் கூறாது குறிப்பான் உணர்த்தத் தகுவனவற்றைக் கூறுதற்கு அமைந்தது உள்ளுறை யுவமமாகும். தெய்வம், உணவு, விலங்கு, மரம், பறவை முதலாகவுள்ள கருப்பொருள்களுள் தெய்வம் ஒழிந்த ஏனைய கருப்பொருள்களின் நிகழ்ச்சியினை எடுத்து உரைக்கு முகத்தால், அந்நிகழ்ச்சியினை உவமையாகக்கொண்டு தலைவன் தலைவி ஆகிய அகத்திணை மக்களின் ஒழுகலாறுகளைக் கேட்போர் மனத்தினால் உய்த்துணர்ந்து கொள்ளுமாறு அமைதல் இவ்வுள்ளுறை யுவமத்தின் இயல்பாகும். "யான் வெளிப்படக் கூறிய இக்கருப்பொருள் நிகழ்ச்சியுடன் வெளிப்படக் கூறாத

உவமிக்கப்படும் பொருளும் ஒத்துப் புலப்படுவதாகுக" எனப் புலவன் தன்னுள்ளத்தே கருதி, அதனைப் படிப்போர் கருதியுணர்தற்கேற்ற சொல்லெல்லாம் செய்யுளகத்தே அமையுமாறு கொண்டு கூறப்படுவதே உள்ளுறையுவமம் எனப்படும். இவ்வாறன்றி வண்ணம் வடிவு பயன் தொழில் என்னும் இப்பொதுத் தன்மைகளால் உவமிக்கப்படும் பொருளோடு இயைத்துக் கூறப்பட்டு வெளிப்படையாகப் பொருள் விளக்குவது ஏனையுவமம் எனப்படும். இவ்விருவகை உவமங்களும் அகத்திணைப் பொருளை யுணர்தற்குச் சிறந்த கருவியாம் என்பர் அறிஞர்.

அகத்திணையிலக்கியமாகிய இத்திருக்கோவைக்கு உரை வரைந்த பேராசிரியர் அகப்பொருளையுணர்தற்குக் கருவியாய் இந்நூலிற் பயின்ற உள்ளுறையுவமைகளை உய்த்துணர்ந்து விளக்கியுள்ளார். திருக்கோவையார் 99, 128, 133, 159, 168, 193, 250, 252, 254, 260, 262, 264, 265, 276, 369, 377, 380-ஆம் பாடல்களின் உரையில் அவ்வப் பாடல்களில் அமைந்த உள்ளுறையுவமை யிதுவெனத் தெளிவாக விளக்கப் பெற்றிருத்தல் காணலாம்.

களவொழுக்கம் ஒழுகாநின்ற தலைமகன் தலைமகளை யடைய விரும்பித் தோழியைக் குறையிரந்துவேண்டி நின்றானாக, தோழி, "யான் குற்றேவல் மகளாதலின் நினது குறையினைத் தலைமகளிடத்துத் துணிந்து சொல்ல முடியாதவளாக உள்ளேன்; இனி நீயே அவள்பாற் நின்குறையுள்ளது சொல்வாயாக" எனத் தான் உடம்படாது மறுத்துக் கூறுவதாக அமைந்தது.

**அந்தியின் வாயெழி லம்பலத்தெம்பரன் அம்பொன்வெற்பிற்**
**பந்தியின்வாய்ப் பலவின்சுளை பைந்தேனொடுங் கடுவன்**
**மந்தியின்வாய்க்கொடுத் தோம்புஞ்சிலம்ப மனங்கனிய**
**முந்தியின்வாய்மொழி நீயேமொழி சென்றம் மொய்குழற்கே**
**(திருக்கோவை-99)**

எனவரும் திருப்பாடலாகும். 'அந்திப்பொழுதின் கண் உண்டாகிய செவ்வானத்தின் எழிலையுடைய அம்பலத்தின்கண் உளனாகிய எல்லாப் பொருட்கும் அப்பாலாயவனாகிய எம்முடைய இறைவனது அழகிய பொன்னையுடைய மலையிடத்தே பந்தியாகிய நிரையின் கண்ணே ஆண் குரங்கானது இனிய பலாச்சுளையைச் செவ்விய தேனோடும் (தன் துணையாகிய) பெண் குரங்கின் வாயிலே அருந்தக் கொடுத்துப் பாதுகாக்கும் மலைப் பக்கத்தையுடைய தலைவனே, அவளது மனம் நெகிழுமாறு இவ்வினிய மொழிகளை அம்மொய்த்த குழலை யுடையளாகிய தலைமகட்கு நீயே சென்று கூறுவாயாக'

என்பது இதன் பொருளாகும். இத்திருப்பாடலில் 'பந்தியின்வாய்ப் பலவின் சுளை பைந்தேனொடுங் கடுவன், மந்தியின் வாய்க்கொடுத்து ஓம்பும்' என்றது உள்ளுரையுவமமாக வந்த கருப்பொருள் நிகழ்ச்சியாகும். மந்தி-பெண்குரங்கு. கடுவன்-ஆண்குரங்கு. "மந்தி உயிர் வாழ்வதற்குக் காரணமாகியவற்றைக் கடுவன் தானே கொடுத்து மனமகிழ்வித்தாற் போல, அவள் (தலைமகள்) உயிர் வாழ்வதற்கு காரணமாகிய நின் வார்த்தைகளையே கூறி அவளை மனமகிழ்விப்பாயாக என உள்ளுறையுவமங்கண்டு கொள்க" என்பது, இதற்குப் பேராசிரியர் தரும் விளக்கமாகும். இவ்வாறே ஏனைய திருப்பாடல்களில் உள்ள உள்ளுறையின் இயல்பினையும் பேராசிரியர் தெளிவாக விளக்கியுள்ளமை உணர்ந்து மகிழத் தக்கதாகும்.

செய்யுட்களில் வெளிப்படச் சொல்லப்பட்ட பொருளின் புறத்தே தங்கிய குறிப்புப் பொருளை இறைச்சி என வழங்குதல் மரபு. இறைச்சிப் பொருள் என்பது, உரிப்பொருளின் புறத்ததாகித் தோன்றும் பொருள்; அஃதாவது, கருப்பொருளாகிய நாட்டிற்கும் ஊர்க்கும் துறைக்கும் அடையாகி வருவது" என்பர் இளம் பூரணர்.

களவொழுக்கம் ஒழுகாநின்ற தலைமகன், கழுநீர் மலரைக் கையுறையாகக் கொண்டு சென்று அதனை ஏற்றுக் கொள்ளும் படி தோழியை வேண்ட, அவள் தெய்வத்திற்குரிய அம்மலர் எங்குலத்திற்கு இசையாது எனக்கூறி மறுப்பதாக அமைந்தது.

**'நறமனை வேங்கையின் பூப்பயில் பாறையை நாகநண்ணி**
**மறமனை வேங்கையென நணியஞ்சு மஞ்சார் சிலம்பா**
**குறமனை வேங்கைச் சுணங்கொ டணங்கலர் கூட்டுபவோ**
**நிறமனை வேங்கையதள் அம்பலவன் நெடுவரையே' (96)**

எனவரும் திருப்பாடலாகும். இதன்கண் நாகம் என்றது யானையை. அணங்கலர் என்றது, தெய்வத்திற்குரிய கழுநீர் முதலாகிய பூக்களை. 'தேனிற்கு இடமாகிய வேங்கைப் பூக்கள் நிறைந்துள்ள பாறையை யானை சென்றணைந்து (அப்பாறையைத்) தறுகண்மைக்கு இடனாகிய புலியென்று (எண்ணி) மிகவும் அஞ்சும் மேகந்தவழும் மனையினையுடைய தலைவனே, நிறந்தங்கிய புலித்தோலை அணிந்த அம்பலவனது நீண்ட இம்மலையின்கண்ணே குறுவர் மனையில் உளவாகிய வேங்கையினது சுணங்குபோலும் பூக்களோடு தெய்வத்திற்குரிய கழுநீர் முதலாகிய பூக்களைக் கூட்டுவரோ கூட்டார்' என்பது இதன் பொருளாகும்.

இதன்கண் வேங்கை மலர்களால் மூடப்பெற்றுள்ள கற்பாறையைக் கண்ட யானையானது, அதனைப் புலியென எண்ணி அஞ்சும் நாடன் எனத் தலைவனுக்கு அமைந்த அடைமொழி, இறைச்சிப் பொருள்பட வந்ததாகும். 'ஒன்றினைக் பிறிதொன்றாகப் பிறழவுணரும் நாடன் ஆதலால், தெய்வத்திற்குரிய நறுமலரைச் சூடாத குறமகளிராகிய எம்மை அம்மலரைச் சூடுவேமாகப் பிறழ வுணர்ந்தாய்' என்பது இதன்கண் அமைந்த இறைச்சிப் பொருளாகும். 'ஒத்த தோற்றம் உடைமை ஒன்றேபற்றி, அஞ்சப்படாததனையும் அஞ்சுவதற்கு இடனாயது எமது மலைநிலம் ஆதலால், எம்குலத்திற்கு ஏலாததாய் நீ தரும் தெய்வ மலரைச் சூடுதற்குயாம் அஞ்சுதல் சொல்லவேண்டுமோ' எனக் கூறித் தோழி மறுத்ததாக இறைச்சிப் பொருள் கொள்ளினும் பொருந்தும் என்பர் பேராசிரியர்.

இத்திருக் கோவையிற் கூற எடுத்துக் கொண்ட அகத்திணை யொழுகலாற்றினை உணர்தற்குக் கருவியாய உள்ளுறை, இறைச்சி என்பவற்றைப் போலன்றி, இவ்வொழுகலாற்றோடு தொடர் பில்லாததாய் இரட்டுற மொழிதலால் பிறிதொரு பொருள் விளங்கித் தோன்றும் பாடல்களும் உள்ளன. இவ்வாறு கூற எடுத்துக்கொண்ட அகப்பொருளொழுகலாற்றிற்கு அயன்மை யுடையதாய்த் தோன்றும் இப்பொருளைப் பேராசிரியர் நுண்ணிதின் உணர்ந்து இவற்றை 'வேறும் ஒரு பொருள்என எடுத்துக் காட்டியுள்ளார். இங்ஙனம் இத்திருக்கோவையாரில் வேறும் ஒரு பொருள் தோன்ற அமைந்தவை 39, 158, 281, 349, 352, 365, 394-ஆம் திருப்பாடல்களாகும்.

இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த தலைமகன் பின் பாங்கனைக் கண்டு அவனால் தெருட்டப் பெற்று அவனது இசைவு பெற்றுத் தான் முன்னாளில் தலைவியை எதிர்ப்பட்ட பொழிலையடைந்து அங்கு நின்ற தலைமகளைக் கண்ணுற்று 'என்னுயிர் இவ்வாறு செய்து நிற்பதோ' எனத் தலைவியைத் தனது உயிர் என வியந்து கூறுவதாக அமைந்தது,

**நேயத்ததாய் நென்னல் என்னைப் புணர்ந்து நெஞ்சந் நெகப்போய்**
**ஆயத்ததாயமிழ் தாயணங்காயர னம் பலம் போல்**
**தேயத்ததாய் என்றன் சிந்தையதாய்த் தெரியிற் பெரிதும்**
**மாயத்ததாகி யிதோவந்து நின்றதென் மன்னுயிரே**

(திருக்கோவை-39)

எனவரும் திருப்பாடலாகும்.

"நெருநல் (நேற்று) உள்ளநெகிழ்ச்சியை யுடைத்தாய் என்னைக் கூடிப் பின் நேயம் இல்லது போல என் நெஞ்சு உடையும் வண்ணம் நீங்கிப் போய், ஆயத்தின் கண்ணதாய், இன்பத்தைச் செய்தலின் அமிர்தமாய், துன்பத்தைச் செய்தலின் அணங்காய், புலப்படும் தோற்றப்பொலிவால் இறைவனது பொன்னம்பலம் போலும் ஒளியையுடைத்தாய், புலப்படாது வந்து என் சிந்தையின் கண்ணதாய், ஆராயிற் பெரிதும் மாயத்தை யுடையதாய் வந்து நின்றது இதுவோ எனது மன்னுயிர்" என்பது இதன் பொருளாகும். நேய முடைமையும் நேயமின்மையும், இன்பஞ் செய்தலும் துன்பஞ் செய்தலும், புலப்படுதலும் புலப்படாமையும் ஒரு பொருட்கு இயையாமையின், 'பெரிதும் மாயத்ததாகி' என்றான் தலைவன். தேயம்-ஒளி.

"என் மாட்டு அருளுடைத்தாய் முற்காலத்து என்னை வந்து கூடி, அருளில்லதுபோல என் நெஞ்சு உடையும் வண்ணம் போய்த், தன் மெய்யடியார் குழாத்த தாய், நினைதோறும் அமிதம்போல இன்பஞ் செய்து, கட்புலனாகாமையின் துன்பஞ்செய்து, அம்பலம் போலும் நல்ல தேசங்களின் கண்ணதாய் வந்து என் மனத்தகத்தாய், இத்தன்மைத் தாகலின் பெரிதும் மாயத்தை யுடைத்தாய் எனது நிலைபெறும் உயிர் வந்து தோன்றா நின்றது என வேறும் ஒரு பொருள் விளங்கியவாறு கண்டுகொள்க" எனப் பேராசிரியர் இத்திருப்பாடலிற் றோன்றிய மற்றொரு பொருளை எடுத்துக் காட்டியுள்ளார்.

இப்பொருள், திருவாதவூரடிகள் திருப்பெருந்துறையில் தமக்குக் குருவாக எளிவந்து அருள் செய்து மறைந்தருளிய இறைவன், மீண்டும் தம் கண்காண எழுந்தருளிய அற்புத நிகழ்ச்சியினை நினைந்து வியந்து போற்றும் நிலையில் அமைந்திருத்தல் அறிந்து மகிழத்தக்கதாகும். அகத்திணை யொழுகலாற்றுக்குரிய களவித்தலைவன், தலைவியைத் தன்னுயிரெனக் கண்டு வியந்துரைப்பதாக அருளிச் செய்யப் பெற்ற இத் திருப்பாடலில், அடிகள் தம்மை வலியவந்து ஆண்டருளிய இறைவனை நினைந்து அம்முதல்வனது திருவருளை வியந்து போற்றுதலாகிய இப்பொருளும் வெளிப் பட்டுத் தோன்றுமாறு அமைத்த நுட்பம், உய்த்துணர்ந்து போற்றத்தக்கதாகும்.

'சிங்கங்கள், கூடி யானை வேட்டம் செய்யும் நள்ளிருளில் வள்ளலை வாவென்று சொல்லத்தகுமோ' என்று, வழியிடை நேரும் துன்பம் நினைத்து மறுத்த தலைமகள், தலைமகன் ஆற்றானாகிய நிலைமையைத் தோழி சொல்லக் கேட்டு, இரவில் அவன் வருவதற்கு உடம்பட்டு இசைந்துரைப்பதாக அமைந்தது,

**ஓங்குமொருவிடம் உண்டம்பலத்தும்ப ருய்யவறுன்**
**தாங்குமொருவன் தடவரை வாய்த்தழங் கும்மருவி**
**வீங்குஞ் சுனைப்புனல் வீழ்ந்தன் றமுங்கப் பிடித்தெடுத்து**
**வாங்கு மவர்க்கறியேன்சிறி யேன்சொல்லும் வாசகமே. (158)**

எனவரும் திருப்பாடலாகும். "உலகம் முழுவதையும் சுடும் வண்ணம் மேன்மேலும் வளரா நின்றதோர் நஞ்சினைத் தான் உண்டு, தேவரெல்லாம் உய்யும்வண்ணம் அந்நாளில் தாங்கிக் காத்தருளிய சிற்றம்பலத்தானாகிய ஒருவனது பெரிய மலையிடத்து, ஒலியா நின்ற அருவியாற் பெருகுகின்ற சுனைநீரின்கண்ணே அன்றொருநாள் யான் வீழ்ந்தழுந்தி இறக்கும் இடர் நிலையினேனாக, அந்நிலையில் என்னைப்பற்றி அறிந்திலேன்" என்பது இதன் பொருள். 'யான் சுனைப்புனல்வாய் வீழ்ந்து அழுங்கிய அன்று தாமே வந்து எடுத்து உய்வித்தாற் போல, வழங்கா இருள்நெறியில் தாம் வருதலால் எனக்கு வரும் இடுக்கணையும் தாமே நீக்கின் அல்லது யான் அறிவதென் றில்லை' எனக் கூறித் தலைமகள் குறைநேர்ந்தாள் என்பதாம்.

தலைவன் செய்த பேருதவியை நினைந்து நெஞ்சம் நெக்குருகிய தலைமகள் கூற்றாக அமைந்த இத்திருப்பாடலில்,

**"வீங்குஞ் சுனைப்புனல் வீழ்ந்தன் றமுங்கப் பிடித்தெடுத்து**
**வாங்குமவர்க்கு அறியேன் சிறியேன் சொல்லும் வாசகமே"**

எனவரும் பின்னிரண்டடிகளும், திருவாதவூரடிகள் தம் ஆருயிர் நாயகனாகிய இறைவன் தமக்குச் செய்த பேருதவியை நினைந்து நெஞ்சங்கசிந்துருகிப் போற்றும் செய்ந்நன்றிமறவாக் குறிப் புடையனவாக அமைந்துள்ளன. இக்குறிப்பினைக் கூர்ந்துணர்ந்த பேராசிரியர், "பிறவிக் குட்டத்து யான் விழுந்து கெடப்புகத்தாமே வந்து பிடித்தெடுத்து அதனினின்றும் வாங்கிய பேருதவியார்க்குச் சிறியேனாகிய யான் சொல்வதறியேன்என்று வேறுமொரு பொருள் தோன்றியவாறு கண்டுகொள்க" என எடுத்துக்காட்டி விளக்கி யுள்ளார்.

கோவைத் திருவாசகமாகிய இந்நூல், இதன் ஒரு பகுதியாகிய திருவாசகத்தோடும் திருநாவுக்கரசர் அருளிய தேவாரத்தோடும் அறிவனூற்பொருளால் ஒத்துவிளங்கும் திறத்தினை இந்நூலுரையில் ஆங்காங்கே பேராசிரியர் எடுத்துக் காட்டியுள்ளமை இங்கு நோக்கத் தகுவதாகும்.

67-ஆம் பாடலுரையில்,

"மற்றை(ப் பொய்வானவர்) என்பது பாடமாயின், அல்லாத பொய்வானவர் என்றுரைக்க. இனமல்லராயினும் இனமாக

உலகத்தாராற் கூறப்படுதலின் அவ்வாறு கூறினார். "மூவரென்றே எம்பிரானொடும் எண்ணி"* (* திருவாசகம் - திருச்சதகம் 4) என்பதூஉம் அக்கருத்தே பற்றி வந்தது. பிறர் கூறும் பெருமை அவர்க்கின்மையிற் பொய்வானவர் என்றார்" எனப் பேராசிரியர் கூறும் விளக்கம், வாதவூரடிகள் கருத்தினை அடியொற்றி யமைந்ததாகும்.

**"தவளத்த நீறணியுந் தடந்தோளண்ணல், தன்னொருபா**
**லவள்அத்தனாம் மகனாம் தில்லையான்- (திருக்கோவை-112)**

என உமையொருபாகனாகிய இறைவனை அடிகள் போற்றியுள்ளார். 'வெண்மையையுடைய திருநீற்றினை யணிந்த பெரிய தோள்களை யுடைய அண்ணல்.' தனது ஒரு பாகத்து உள்ளவளாகிய உமாதேவிக்கு, அப்பனும் ஆகி மகனும் ஆகிய தில்லையம்பலவன்' என்பது இத்தொடரின் பொருளாகும். "சிவ தத்துவத்தினின்றும் சத்தி தத்துவம் தோன்றலின் அவள் அத்தனாம் என்றும், சத்தி தத்துவத் தினின்றும் சதாசிவ தத்துவம் தோன்றலின் மகனாம் என்றும் கூறினார். 'இமவான் மகட்குத் தன்னுடைக் கேள்வன் மகன் தகப்பன்'* (*திருவாசகம் - திருப்பொற்சுண்ணம் 13) என்பதூஉம் அப்பொருள்போல் வந்தது" என இத்தொடர்ப்பொருளை விளக்குவர் பேராசிரியர்.

**"தெவ்வரை மெய்யெரிகாய்சிலை யாண்டுஎன்னை ஆண்டு கொண்ட**
**செவ்வரை மேனியன்" (திருக்கோவை-114).**

எனவரும் தொடரில், அடிகள் தம்மை வலிந்து ஆண்டு கொண்டருளிய இறைவனது அருட்டிறத்தை வியந்து பாராட்டு கின்றார். 'பகைவரை மெய்யெரித்த மேருமலையாகிய வில்லைப் பணிகொண்டு பழகிப் பின் (வலிய நெஞ்சினனாகிய) என்னை அடிமைக்கொண்ட சிவந்த மலைபோலும் திருமேனியை யுடையனாகிய இறைவன் என்பது இத்தொடரின் பொருளாகும். "வலியனவற்றை வயமாக்கிப் பயின்று பின் என்னை ஆண்டான் என்பது போதர, காய்சிலை ஆண்டு என்னை ஆண்டு கொண்ட என்றார். என்னைத்தனக்கு அடிமை கொள்ளுதல் காரணமாக அல்லது தனக்கு ஒரு பகையுண்டாய்ச் செய்ததன்று போலும் என்பதும் கருத்து. 'கல்லை மென்கனியாக்கும் விச்சைகொண்டு என்னை நின்கழற்கு அன்பனாக்கினாய்' * (*திருவாசகம்- திருச்சதகம் 94) என்பது அது" எனப் பேராசிரியர் தரும் விளக்கம், திருவாசகத்திற்கும் திருக்கோவைக்கும் உள்ள பொருளொற்றுமை யினை இனிது புலப்படுத்துதல் காணலாம்.

'தில்லையான் அருள் போன்று அலராய் விளைகின்றது அம்பல் கைம்மிக்கு ஐயமெய் அருளே' (திருக்கோவை - 180) எனவரும் தொடர், இரவுக்குறி வந்தொழுகாநின்ற தலைமகனை நோக்கித் தோழி அலரறிவுறுத்துவதாகும். 'ஐயனே, நினது மெய்யாகிய அருள் தில்லையானருளைப் போன்று அரும்பாம் நிலைமையைக் கடந்து அலராய் விளைவதாயிற்று' என்பது இத்தொடரின் பொருளாகும். 'தில்லையான் அருள் பெற்றார் உலகியல்பினராய் நில்லாமையின், அவ்வருள் உலகத்தார்க்கு அலராம் என்பது கருத்து. 'நாடவர் நந்தம்மை ஆர்ப்ப ஆர்ப்ப'* (*திருவாசகம் - திருப்பொற்சுண்ணம் 7.) . என்பதூஉம் அக்கருத்தே பற்றி வந்தது' என இத்தொடர்ப் பொருளை விளக்குவர் பேராசிரியர்.

116-ஆம் திருப்பாடலில், வான்உழைவாள் அம்பலத்து அரன் எனவரும் தொடர்க்கு, "இருட்கு அப்பாலாகிய வானிடத்து உண்டாகிய ஒளி; இவ்வண்ணம் சேயனாயினும் அணியனாய் அம்பலத்தின்கண் உளனாகிய அரன். 'அண்டமாரிருளூடு கடந்தும்பர், உண்டுபோலும் ஓர் ஒண்சுடர்' * (*திருநாவுக்கரசர் தேவாரம் 5-97-2.) என்பதூஉம் அப்பொருள்மேல் வந்தது எனப் பொருள் கூறி மேற்கோள் காட்டி யிருத்தலும், 375-ஆம் திருப்பாடலில் வரும் 'தில்லையிறையமைந்த திறலியல்யாழ்' என்னுந்தொடர்க்கு "தில்லையிறையால் அமைக்கப்பட்ட வெற்றியியலும் யாழ்" எனப்பொருள் கூறி, "வெற்றி-வீணைகளுள் தலையாதல். 'எம் இறை நல் வீணை வாசிக்குமே.* (*திருநாவுக்கரசர் தேவாரம் 4-112-7.) என்பவாகலின் இறை அமைத்த யாழ் என்றார்' என விளக்கம் தந்திருத்தலும் திருநாவுக்கரசர் அருளிய தேவாரப் பதிகங்களில் பேராசிரியர்க்கு உள்ள பயிற்சியினை நன்கு புலப்படுத்துவனவாம்.

**'சிலம்பணி கொண்டசெஞ் சீறடிபங்கன், தன்சீரடியார்**
**குலம்பணிகொள்ள எனைக்கொடுத்தோன் கொண்டுதான் அணியும்**
**கலம்பணிகொண்டு, இடம் அம்பலம் கொண்டவன்'**

எனவரும் 54-ஆம் திருப்பாடலின் உரையில், "தனக்குத் தக்க தையலை இடத்து வைத்தானென்றும், தன்னடியார்க்குத் தகாத என்னை அவர்க்குக் கொடுத்தானென்றும், அணிதற்குத் தகாத பாம்பை அணிந்தானென்றும், தனக்குத் தகும் அம்பலத்தை இடமாகக் கொண்டானென்றும் மாறுபாட்டொழுக்கம் கூறியவறாம்" எனப் பேராசிரியர் அதன் பொருள் நயத்தினைப் புலப்படுத்தியுள்ளார். இதன்கண் 'தன்னடியார்க்குத் தகாத என்னை' என்ற குறிப்பு,

**'புகவேதகேன் உனக்கன்பருள்யான், என்பெ..ல்லாமணியே**
**தகவே எனை எனக்கு ஆட்கொண்ட தன்மை' (திருச். 10)**

எனவரும் அடிகளது வாய்மொழியை யுளங்கொண்டு அவர் கருத்தினைப் புலப்படுத்தும் நிலையில் வரைந்த நுட்பவுரையாதல் காண்க.

திருவாதவூரடிகள் தம்மை அருளால் ஈர்த்து ஆட்கொண்டருளிய சிவபெருமானை,

**'சுழியா வருபெரு நீர்சென்னி வைத்தென்னைத் தன்தொழும்பிற்**
**கழியா அருள்வைத்த சிற்றம்பலவன்' (திருக்கோவை-261)**

எனப் போற்றியுள்ளார். 'சுழித்துக்கொண்டு வரும் பெரிய (கங்கை யாற்றின்) நீரைத் திருமுடியின்கண் வைத்துத் தன் அடிமைத் திறத்தின்கண் என்னை நீங்காத அருளால் நிலைக்கச் செய்த திருச்சிற்றம்பலவன்' என்பது இதன் பொருளாகும். "பரந்துவரும் பெரும்புனலை வேகம் தணித்துத் தன் சென்னியின் கண் வைத்தாற்போல, நில்லாது பரக்கும் நெஞ்சுடையேனைத் தன்கண் அடக்கினான் என்பது கருத்து" என இத்தொடர்க்குப் பேராசிரியர் வரைந்த கருத்துரை,

**"நில்லாத நீர்சடைமேல் நிற்பித்தானை**
**நினையாவென் னெஞ்சை நினைவித்தானை" (6...43...1)**

எனவரும் திருத்தாண்டகத் தொடரை நினைப்பிக்கும் முறையில் அமைந்திருத்தல் அறியத்தக்கதாகும்.

திருவாதவூரடிகள் தாம் இயற்றிய திருச்சிற்றம்பலக் கோவையில் பாட்டுடைத் தலைவனாகிய தில்லைச் சிற்றம்பலப் பெருமானைப் பரவிப் போற்றிய தொடர்கள், அடிகள் அருளிய திருவாசகப் பனுவலை யொத்துக் கற்போர் நெஞ்சைக் கனிந்துருகச் செய்வன வாகும்.

ஐந்தாம் திருப்பாடலில் "அணியும் அமிழ்தும் என் ஆவியும் ஆயவன், தில்லைச்சிந்தாமணி, உம்பரார் அறியா மறையோன்" என அடிகள் இறைவனைப் போற்றியுள்ளார். "எனக்கு ஆபரணமும் அமிழ்தும் என்னுயிரும் ஆயவன்; தில்லைக்கண் சிந்தாமணிபோல் அன்பர்க்கு நினைத்தவை கொடுப்போன்; அன்பரல்லாத தேவர்கள் அறியாத அந்தணன்" என்பது இத்தொடரின் பொருளாகும். தன்னை அன்பினால் வழிபடும் உயிர்கட்கு அழகு செய்தலால் 'அணி' என்றும், கழிபெருஞ் சுவையோடு உறுதி பயத்தலுடைமையால் 'அமிழ்து' என்றும் காதலிக்கப்படும் பொருள்களெல்லாவற்றினும் சிறந்தமையால் 'ஆவி' என்றும், இறைவனை உவமித்துக் கூறிய நயம்

உணர்தற்குரியதாகும். ஈறிலின்பம் பயக்கும் இறைவனொடு சார்த்தி நோக்குங்கால் அணியும் அமிழ்தும் ஆவியும் மிகத் தாழ்தனவாயினும், சொல்வாரது கருத்து வகையாலும் உலகத்துப் பொருள்களுள் இவற்றைவிடச் சிறந்தன பிற இல்லாமையாலும் உயர்ந்தனவாய் இறைவனுக்கு உவமையாயின என்பர் பேராசிரியர்.

தம்மைச் சார்பாக எண்ணி வந்தடைந்தவர்கள், அறியாமை காரணமாகத் தம்பாற் பிழை செய்தனராயின், தலைமை வாய்ந்த பெரியோர்கள், அப்பிழை அவரது அறியாமையால் நேர்ந்தது எனத் தம் மனத்துட்கொண்டு அதனைப்பொறுத்தருள்வர் இடையாயினார், பிழை புரிந்தோரைத் தம்மொடு தொடர்பு கொள்ளாதவாறு நீக்கிவிடுவர். கடையாயினார், குற்றம் புரிந்தோரை ஒறுத்து அழிப்பர். எல்லாப்பொருட்கும் முன்னோனாகிய இறைவன், தன்பாற் பிழைசெய்த அன்பரிடத்து இம்மூவகைச் செயல்களையுஞ் செய்யாது, அவர் செய்த குற்றங்களை நீக்கிக் குணங்கொண்டு அன்னோரைப் பிறவித் துன்பத்துட் புகாவண்ணம் காக்கும் பேரருளுடையனாய்ச் சிற்றம்பலத்துள் ஆடல் புரிந்தருள்கின்றான். இவ்வாறு குற்றங்கள் நீக்கிக் குணங்கொண்டு கோதாட்டும் இறைவனது பேரருட்டிறத்தை,

**"பிழைகொண் டொருவன் கெடாதன்பு செய்யிற் பிறவியென்னும்**
**முழைகொண் டொருவன் செல்லாமைநின் றம்பலத்தாடு முன்னோன் - (திருச் 65)**

எனவரும் திருப்பாடலில் அடிகள் உளமுருகிப் போற்றியுள்ளார். பிழை-குற்றம். ஒருவுதல்-துறத்தல், கெடுத்தல்-அழித்தல். 'பிழை கொண்டு, ஒருவிக்கெடாது' என்னும் தொடர்க்கு "அடைந்தார் பிழைப்பின், தலையாயினார் பிழையை உட்கொண்டு அமைதலும், இடையாயினார் அவரைத் துறத்தலும், கடையாயினார் அவரைக் கெடுத்தலும் உலகத்துண்மையின் அம்மூவகையுஞ் செய்யாது" எனப் பேராசிரியர் கூறிய விளக்கமும்,

**"உவகைக் கண்ணீர்**
**ஆறாத ஆனந்தத் தடியார் செய்யும்**
**அனாசாரம் பொறுத்தருளி அவர்மேலென்றுஞ்**
**சீறாத பெருமானை" (6-80-5)**

எனவரும் அப்பரடிகள் அருள்மொழியும் இங்கு ஒப்புநோக்கி யுணரத்தக்கனவாகும்.

**'நாணவும் நடுங்கவும் நாடாள் தோழி**
**காணுங் காலைத் தலைமகள் தேஎத்து'**

என்பது இறையனார் களவியலுரையில் மேற்கோளாகக் காட்டப் பட்ட பழஞ்சூத்திரமாகும். தலைமகள் தனக்குத் தலைமக னோடுண்டாகிய புணர்ச்சியொழுக்கத்துக்குக் காவற்றோழி யாகிய இவளால் இடையூறாகும் என்னுமுள்ளத்தளாய் நின்று, 'இவ்வொழுக்கத்தைத் தோழியறியின் நன்று' என்னும் நினைவினளாக, அந்நிலையில் தோழி அவளை நாணவும் நடுங்கவும் நாடுதல் இயல்பு என்றும், அவ்வகை நாட்டம் நன்னிலையுடையதே யென்றும் கருதிய திருவாதவூரடிகள், இத்திருக்கோவையில் நாண நாட்டம், நடுங்கநாட்டம் என்னும் இருவகைக் கிளவிகளையும் எழில்பெற அமைத்துள்ளார். தலைவி பெருநாணினள்ஆதலானும் தான் குற்றேவல் மகள் ஆதலானும் மறைவெளிப்படும் நிலையில் அவள்பால் தான் உரையாடாது அவளைக்கொண்டே கேட்பது காரணமாக அவளை நெருங்கி நின்று, 'புலியொன்று ஒருவனை எதிர்ப்பட்டது' எனத் தோழி தலைமகள் உள்ளத்தில் நடுக்கந் தோன்றுபடி அவளை ஆராய்தல் நடுங்க நாட்டம் எனப்படும். இத்துறையில் அமைந்தது,

**ஆவா விருவ ரறியாவடிதில்லை யம்பலத்து**
**மூவாயிரவர் வணங்கநின் றோனையுன் னாரின்முன்னித்**
**தீவாயுழுவை கிழித்ததந்தோ சிறிதேபிழைப்பித்**
**தாவாமணிவேல் பணிகொண்ட வாறின்றொராண்டகையே.**
**(திருக்கோவை-72)**

எனவரும் திருப்பாடலாகும். "ஆ ஆ! அயன் திருமால் ஆகிய அவ்விருவரும் அறியாத திருவடியினைத் தில்லைச் சிற்றம்பலத்திலே அந்தணர் மூவாயிரவரும் கண்ணாரக் கண்டு வழிபாடு செய்யும் வண்ணம் நின்றருளிய இறைவனை நினையாதாரைப் போலே வருத்தமுற ஒரு புலி எதிர்ப்பட்டுத் தனது கொடிய வாயை அங்காந்தது * (* அங்காத்தல் -வாயைத் திறத்தல்) (அவ்வாறு அது வாயினைத் திறந்ததாக அந்நிலையில்) ஆடவருட் சிறந்தான் ஒரு வீரன் அதனைச் சிறிதே தப்பிவித்துத் தனது அழகிய வேற்படையினைப் பணி கொண்ட திறன் பெரிதும் வியக்கத் தக்கதாகும்" என்பது இதன் பொருள்.

'அயனும் அரியும் தில்லையம்பலத்திற் சென்று வணங்கு மாறு அறிந்திலராகலின், ஆவா என்பதுஅருளின்கண் குறிப்பு; இரக்கத்தின்கண் குறிப்பாய்த் தீவாய் உழுவை கிழித்தது என்பதனை நோக்கி நின்றதெனினும் அமையும். உழுவை-புலி, இதன்கண் 'தீவாய் உழுவை கிழித்தது' எனத்தோழி கூறியதாக

வரும் இத்தொடர், 'தனது கொடிய வாயைப் புலி அங்காந்தது' எனவும் 'புலியினது தீய வாயை வேறொன்று கிழித்தது' எனவும், 'புலியினது தீயவாய் பிறிதொன்றனைக் கிழித்தது' எனவும் இவ்வாறு மூவேறு வகையாகப் பொருள்படுதலால், இதனைக் கேட்ட தலைமகள் உள்ளத்திலே 'இவ்வழியே நம்மை நாடிவரும் நம் தலைவர்க்கு இப்புலியால் ஏதேனும் இடர் விளைந்ததோ' என்னும் நினைவினால் நடுக்கம் உண்டாயிற்று. அதனைக் குறிப்பினால் உணர்ந்ததோழி, 'ஆவா மணி வேல் பணி கொண்ட வாறின் றொராண்டகையை' எனக்கூறி ஆடவருட் சிறந்தா னொரு வீரன் அப்புலியினைச் சிறிதே தப்புவித்துத் தன் கையி லுள்ள அழகிய வேற்படையால் அதனை வென்றடக்கிய திறம் மிகவும் வியக்கத்தக்கது என்பது தோன்றத் தலைமகளது நடுக்கத்தினை விரைந்து தீர்த்தாள் என அச்சமும் உவகையும் ஒருங்கமைய அடிகள் இத்திருப்பாடலை அருளிச் செய்த திறம் வியந்து போற்றத் தக்கதாகும்.

ஆண்டகையாகிய தலைவன் இவ்வாறு தன் கையிலுள்ள வேற்படையால் வேங்கையை வீழ்த்தும் பெருவீரனாதலை,

**'சென்றெதிர்ந்த,**
**வேங்கையின்வாயின் வியன்கைம் மடுத்துக் கிடந்தலற**
**வாங்கயிலாற்பணி கொண்டது திண்டிறலாண்டகையே'**
**(திருக்கோவை-245)**

எனவரும் திருப்பாடலில் அடிகள் புலப்படுத்தியுள்ளமை இங்கு ஒப்பு நோக்கி யுணரத்தக்கதாகும்.

தலைமகன் நிலைமையினைத் தோழி கூறக்கேட்ட தலைமகள், பெருநாணினள் ஆதலால் அதனை அறியாதாள் போல வேறொன்று கூறுவாளாய், அயலேயுள்ள கடலைச் சுட்டிக் காட்டி, 'தோழீ, பலவாய்ப் பெரியவாகிய மரக்கலங்கள் மிகப் பெற்ற தொன்மை வாய்ந்த இக்கடல், தில்லைப்பெருமானை ஒத்துத் தோன்றுவதாகும்' எனக் கூறுவதாக அமைந்தது,

**சங்கந் தருமுத்தி யாம்பெற வான்கழி தான்கெழுமிப்**
**பொங்கும் புனற்கங்கை தாங்கிப் பொலிகலிப் பாறுலவு**
**துங்க மலிதலை யேந்தலின் ஏந்திழை தொல்லைப்பன்மா**
**வங்க மலிகலி நீர்தில்லை வானவன் நேர்வருமே**
**(திருக்கோவை-85)**

என்னும் திருப்பாடலாகும்.

இதன்கண் 'சங்கந் தருமுந்தி யாம்பெற' என்பது முதல் 'துங்கமலிதலை யேந்தலின்' என்பது வரையுள்ள தொடர்,

தில்லை யிறைவனுக்கும் கடலுக்கும் பொருந்தச் சிலேடையாய் வந்ததாகும்.

'சங்கு தரும் முத்துக்களை யாம்பெறப் பெரிய (உப்பங்) கழிகளைத் தான் பொருந்திப் பொங்கும் புனலையுடைய கங்கையைத் தாங்கிப் பொலிந்த ஆரவாரத்தையுடைய பாறு ஆகிய மரக்கலங்கள் இயங்கும் அலைகளின் மிகுதியை யுடைத்தாகலின்' எனக்கடலுக்கு ஏற்பவும், 'திருவடிக்கண் உண்டாகிய பற்றுத்தரும் முத்தியையாம் பெறும் வண்ணம் 'எல்லாப் பொருளையும் அகப்படுத்தி நிற்கும் ஆகாயத்தையும் கடந்து நின்ற தான் ஒரு வடிவு கொண்டுவந்து பொருந்திப் பொங்கும் புனலையுடைய கங்கையைச் சூடி, மிக்க ஆரவாரத்தை யுடைய பாறு (பருந்து) ஆகிய பறவைகள் சூழ்ந்து நின்ற உயர்வுமிக்க தலையோட்டினை ஏந்துதலின்' எனத் தில்லையிறைவனுக்கு ஏற்பவும் இருவகையாகப் பொருள் கொள்ளும்படி இத்தொடர் சிலேடையணி பெற அமைந்துள்ளது. பெருநாணினளாகிய தலைவி, தோழிக்கு வெளிப்படையாக மறுமொழி கூறாது, அவள் கூற்றினை யறியாதாள் போல் வேறொன்று கூறினாளாயினும், தான் கூறியதனைக் கேட்ட தோழி, இக்கூற்றில் உள்ள கருத்துக்களை ஆராய்ந்து இணைத்து நோக்கினால் இதுவே அவளுக்குத் தான் கூறுவதற்குரிய மறுமொழியாகவும் அமையும்படி கடலின்மேல் வைத்துக் கூறியுள்ளாள்.

முன்னர் நீ புரிசேர் சடையோன் புதல்வன் என்றும் பூங் கணைவேள் என்றும் உயர்த்துக் கூறியனவெல்லாம் அத் தலைவ னுக்கு உரியனவே. அத்தகைய பெரியோன் தன்மாட்டுண்டான புணர்ச்சியான பேரின்பத்தை நாம் பெறுகை காரணமாக இவ்வாறு எளிவந்து உன்னை அடைந்து நின்றான்; அஃது எது போலவென்றால், பெறுதற்கரிய சங்கு தருகிற முத்தினை நாம் பெறுதல் எளிதாகக் கடலானது பெரிய உப்பங்கழியை வந்தடைந்தாற்போல; இனி உனக்கு வேண்டியது செய்வாயாக எனத் தலைவி தோழியை நோக்கிக் கூறிய மறுமொழி யாகவும் அமையும் முறையில் அடிகள் இத்திருப்பாடலை அருளிச் செய்துள்ளமை அறிந்து மகிழத்தக்கதாகும்.

நாணத்தாற் குறைநேர மாட்டாது வருந்தும் தலைமகள், 'என் தோழியாகிய இவளும் பெருநாணினள் ஆதலால் என்னைக்கொண்டே சொல்லச் செய்து பின் தலைவனது குறை முடிக்கக் கருதுகின்றாள். இதற்கு யான் ஒன்றும் சொல்லாமலிருந்தால் எம்பெருமான் இறந்துபடுவான்' என

உட்கொண்டு, தன் நாணத்தினை விட்டுப் பின்னும் வெளிப்படக் கூறமாட்டாது, 'பாங்கற்கூட்டம் பெற்ற தலைவன் இப்பொழுது தோழியிற் கூட்டத்திற்குத் துவள்கின்றான் என்பது தோன்ற, மாயவன்மேல் வைத்து மறைத்துக் கூறுவதாக அமைந்தது,

> **புரங்கடந் தானடி காண்பான் புவிவிண்டு புக்கறியா**
> **திரங்கிடெந் தாயென்றிரப்பத் தன்னீரடிக் கென்னிரண்டு**
> **கரங்கள்தந் தான்ஒன்றுகாட்ட மற்றாங்கதும் காட்டிடென்று**
> **வரங்கிடந்தான் தில்லையம்பல முன்றிலம் மாயவனே. (86)**

எனவரும் திருக்கோவையாகும். "மாயவனாகிய திருமால், முப்புரங்களை வென்ற இறைவனுடைய திருவடிகள் இரண்டையுங் காணவேண்டி, நெறியல்லா நெறியால் நிலத்தைப் பிளந்துகொண்டு உள்ளே புகுந்து, பின் அம்முதல்வனை வழிபட்டு, 'எந்தையேஅருள் புரிதல் வேண்டும்' என இரந்து நின்று வேண்ட, தன் இரண்டு திருவடிகளையும் தொழுதற்கு என்னுடைய இரண்டு கைகளையும் தந்தவனாகிய இறைவன், சிறிது திருவுளமிரங்கி, ஒரு திருவடியைக் காட்டியருளினானாக, மற்றொரு திருவடியையும் காட்டியருளுதல் வேண்டும் எனறு தில்லையம்பலத் திருமுற்றத்தின்கண் வரம் கிடக்கின்றான்" என்பது இதன் பொருள். இன்னும் வரங்கிடன்றானாகலின் முன் கண்டது ஒன்றுபோலும் என்பது கருத்து.

"ஒன்று காட்ட மற்றாங்கதும் காட்டிடு, என்று மாயவன் தில்லையம்பல முற்றத்தே வரங் கிடந்தாற் போல, முன்னர்ப் பாங்கற் கூட்டம் பெற்றானாகிய தலைமகன், பாங்கியாலாகிய கூட்டம் பெறுகை காரணமாக நின்னிடத்து வந்து குறையுறா நின்றான்." எனத் தலைமகள் தோழிக்குத் தான் கூறும் மறு மொழியை வெளிப்படக் கூறாது மறைத்துக் கூறினாள் என்றவாறு.

"புரங்கடந்தானடிகளைக் காணுமாறு வழிபட்டுக் காண்கையாவது, அன்னத்திற்குத் தாமரையும், பன்றிக்குக் காடுமாதலால் இவர் இங்ஙனம் தத்தம் நிலைப்பரிசே தேடுதல். இவ்வாறு தேடாது தமது அகங்காரத்தினான் மாறுபட்டுப் பன்றி தாமரையும், அன்னம் காடும் ஆகப் படர்ந்து தேடுதலாற் கண்டிலர். இது நெறியில்லா நெறியாயினவாறு" எனப் பேராசிரியர் கூறும் விளக்கம் இங்கு நினைக்கத் தக்கதாகும்.

உடன்போக்கில் தலைவனுடன் சென்ற தலைமகளைத் தேடிக்கொண்டு சென்ற செவிலித்தாய், தன் மகளையும் அவள் காதலனையும் ஒத்தகாதற்கேண்மையினராய்த் தனக்கு எதிரே வந்த காதலர் இருவரைக் கண்டு அணுகி வினாவினாளாக,

அவ்விருவருள் தலைவன் அவளுக்கு மறுமொழி கூறிய நிலையில் வினாவும் விடையுமாக அமைந்தது.

> **மீண்டா ரெனவுவந் தேன்கண்டு நும்மை, இம்மேதகவே**
> **பூண்டாரிருவர் முன்போயினரே, புலியூரெனைநின்**
> **றாண்டான் அருவரை ஆளியன்னானைக்கண்டேன் அயலே**
> **தூண்டா விளக்கனையாய் என்னையோ அன்னை**
> **சொல்லியதே (திருக்கோவை-244)**

எனவரும் திருப்பாடலாகும். 'காதலாராய் வரும் நும் இருவரது தோற்றத்தைக் கண்டு, என்னால் தேடப்பெறும் மகளும் அவள் காதலனும் ஆகிய அவ்விருவரும் மீண்டு வந்தார்கள் என்று கருதி மகிழ்ந்தேன். இவ்வாறு நும்மோடொத்த பெருமை வாய்ந்த இவ்வொழுக்கத்தையே பூண்ட காதலர் இருவர் இவ்வருஞ் சுரத்தில் முன்னே நடந்து சென்றனரோ உரைமின்' எனச் செவிலி வினவுவதாக அமைந்தது. 'நும்மைக் கண்டு மீண்டார் என உவந்தேன்; இம்மேதகவே பூண்டார் இருவர் முன் போயினரே?' என்ற தொடராகும். செவிலி கூறிய அம்மொழியைக் கேட்ட அத்தலைவன், "புலியூர்க்கண் என்னை ஒரு பொருளாக மதித்து நின்று ஆண்ட இறைவனது கிட்டுதற்கரிய மலையில் சிங்கத்தினை யொப்பனாகிய தலைவனை யான் கண்டேன்" எனச் செவிலிக்கு மறுமொழி கூறியவன், தன் அருகே நின்ற காதலியை நோக்கி, 'தூண்ட வேண்டாத மணிவிளக்கினை ஒப்பாய், அத் தலைமகனது அயலே அன்னை சொல்லியது யாது? அதனை அன்னைக்கு விளங்கச் சொல்வாயாக' எனப் பணிக்கும் முறையில் அமைந்தது, 'புலியூர் எனைநின்று ஆண்டான் அருவரை ஆளி அன்னானைக் கண்டேன்; தூண்டா விளக்கு அனையாய், அயல் அன்னை சொல்லியது என்னையோ?' என்ற தொடராகும்.

புணர்வதுடன் வரும் தலைமகன் செவிலியை நோக்கிக் கூறியதாக அமைந்த இம்மறுமொழி, தன்னாற் காதலிக்கப்பட்ட மனைவி யொருத்தியை யன்றிப் பிறர்க்குரிய மகளிரைக் கண்ணாற் காணுதற்கும் எண்ணாத அவனது தூய நன்னெஞ்சத்தின் இயல்பினைப் புலப்படுத்துவதாய்க் கற்பினுக்கும் அருங்கலமாய் அவனுடன் போந்த காதலியின் சிறப்பினையும் ஒருங்கு உணர்த்தும் நிலையில் அமைந்திருத்தல் காணலாம். தமிழ் இயல் வழக்கமாகிய அகத்திணையொழுகலாற்றில் தலைவன் தலைவியாகிய இருவர்பாலும் அமைய வேண்டிய உயர்ந்த பண்புகளுள் நிறையும் கற்பும் ஆகிய இவை இன்றியமையாச் சிறப்பின என்னும் இவ்வுண்மையினைத் திருவாதவூரடிகள் இத்திருப்பாடலில் தலைவன் கூற்றில் வைத்து விளங்கிய திறம் உணர்ந்து போற்றத் தக்கதாகும்.

—

திருவாதவூரிற் பிறந்த பொய்யாநாவின் அந்தணராகிய கபிலர் என்னும் புலவர் பெருமான், ஆரிய அரசன் பிரகத்தன் என்பானுக்குத் தமிழியல் வழக்கமாகிய அகனைந்திணை யொழுக லாற்றின் சிறப்பினையுணர்த்தற் பொருட்டுக் குறிஞ்சிப் பாட்டினைப் பாடித் தந்தது போலவே, திருவாதவூர் மகிழ் செழுமறை முனிவராகிய மணிவாசகப்பெருமானும் அகனைந் திணை யொழுகலாற்றினை ஒரு கோவையாகப் பாடித் தருக என வேதியர் வடிவில் வந்து கேட்டருளிய இறைவன் வேண்டிய வண்ணம் நானூறு துறைகளமையத் திருச்சிற்றம்பலக்கோவை யென்னும் இத்திருக்கோவையினை இயற்றியளித்தருளிய செய்தி இங்கு ஒப்பு நோக்கி எண்ணத்தக்க தனிச் சிறப்புடையதாகும்.

திருவாதவூரடிகள் அருளிய அத்திருச்சிற்றம்பலக் கோவை யின் சொற்பொருட் சுவைநலங்களில் திளைத்த பிற்காலச் சான்றோர்கள், அடிகள் அருளிய திருப்பாடற் பொருளைப் பின்பற்றி அகத்திணைச் செய்யுட்கள் பல இயற்றியுள்ளார்கள். அவ்வகையில் தோன்றிய அகத்திணை நூல்களுள் கி.பி.பதினொராம் நூற்றாண்டினையடுத்து வாழ்ந்த கல்லாடர் என்னும் புலவர் பெருமானால் இயற்றப்பெற்ற கல்லாடம் என்பது ஒன்றாகும். இந்நூல் நூறு செய்யுட்களை யுடையது. இந்நூலாசிரியர் திருச்சிற்றம்பலக் கோவையினுள் நூறு திருப்பாடல்களுக்குரிய நூறு துறைகளைத் தேர்ந்துகொண்டு ஒவ்வொரு துறைக்கும் ஒவ்வோர் ஆசிரியப் பாவாக நூறு ஆசிரியப் பாக்களால் இந்நூலைச் சுவைபெற இயற்றியுள்ளமை இங்குச் சிறப்பாகக் குறிக்கத்தக்கதாகும்.

தொல்காப்பியப் பொருளதிகாரம் நச்சினார்க்கினியர் உரையில் மேற்கோளாகக் காணப்படும் செய்யுட்களிற் சில, இத்திருக்கோவையின் சொற் பொருளமைப்பினைத் தழுவி இயற்றப் பட்டனவாகத் தோன்றுகின்றன.

உடன்போக்கிற் செல்லும் தலைவன் தலைவி ஆகிய இருவரும் ஒருவரையொருவர் காணும் விருப்பினாற் பின்னும் முன்னுமாக மாறி மாறிச் செல்லும் அழகிய தோற்றத்தினைக் கண்டோர் மகிழ்ந்துரைப்பதாக அமைந்தது,

**அன்பணைத் தஞ்சொல்லி பின்செல்லும் ஆடவனீடவன்றன்**
**பின்பணைத் தோளிவரும் இப்பெருஞ் சுரஞ் செல்வதன்று**
**பொன்பணைத்தன்ன இறையுறை தில்லைப்பொலி மலர்மேல்**
**நன்பணைத் தண்ணற வுண்ணளி போன்றொளிர் நாடகமே**
**(219)**

எனவரும் திருக்கோவையாகும். "தலைமகளின் அழகிய முதுகினையும் அசை நடையையும் காண விரும்பி ஆடவரிற்

சிறந்தானாகிய தலைவன் அன்பால் அணைத்து அழகிய சொல்லையுடையாளாகிய தலைவியின் பின்னே செல்கின்றான். பசிய மூங்கில் போலும் தோளையுடைய தலைமகளோ அவனுக்கு முன்னே செல்லுதற்கு நாணியவளாய், அவனது பீடு நடையினைக் காண விரும்பி அவன்பின்னே மெல்லச் செல்கின்றாள். இவ்வாறு இருவரும் ஒருவருக்கொருவர் பின்னே செல்லுதலில் விருப்ப முடையவராக நின்று பின்தங்கிச் செல்லுதலை நோக்கின் இவரதுசெயல் இப்பெரிய சுரத்தை விரைவிற் கடந்து செல்லுதற்கு ஏற்றதாகக் காணப்படவில்லை. இவர் தம் தோற்றம், பொன் ஒரு வடிவுகொண்டு தோன்றினாற் போலும் கூத்தப்பெருமான் எழுந்தருளிய தில்லையில் நல்ல மருத நிலத்திற் பூத்த மலர்களிலே குளிர்ந்த தேனைப்பருகிய வண்டுகளை யொத்து இன்பக்களியால் மயங்கி விளங்குவதொரு நாடகம் போன்று கண்டார்க்கு இன்பஞ் செய்வதாயிற்று என்பது இத்திருப்பாடலின் பொருளாகும். இப்பொருளைத் தெளிய விளக்கும் நிலையில் அமைந்தது,

**காண்பான் அவாவினாற் காதலன் காதலிபின் நடவாநிற்ப**
**நாண்பாலன் ஆதலால் நன்னுதல் கேள்வன்பின்நடவாநிற்ப**
**ஆண்பான்மை குன்றா அயில்வேலவன் தனக்கும்**
**அஞ்சொலாட்கும்**
**பாண்பல வண்டினமும்பாட அருஞ்சுரமும் பதிபோன்றன்றே.**
**(தொல்-அகத்-40-நச்.)**

எனவரும் மேற்கோட் செய்யுளாகும். இதன்கண் மேற்காட்டிய திருக்கோவையிலுள்ள ‘அஞ்சொல்லி’ என்பது அஞ்சொலாள் எனவும், ‘ஆடவன்’ என்பது, ஆண்பான்மை குன்றா அயில் வேலவன் எனவும் விளக்கமுற அவ்வாறே எடுத்தாளப் பெற்றிருத்தலையும், தலைவனும் தலைவியும் ஒருவர்பின் ஒருவர் செல்ல விரும்புதற்குரிய முறையிற் பேராசிரியர் இத்திரு கோவையுரையிற் குறித்த காரணங்கள், ‘காண்பான் அவாவினால்’ எனறும், ‘நாண்பாலள் ஆதலால்’ என்றும் அவ்வாறே இப்பாடலில் எடுத்தாளப் பெற்றிருத்தலையும் கூர்ந்து நோக்குங்கால், தொல்காப்பிய மேற்கோட் செய்யுளாகிய இது, மேற்குறித்த திருக்கோவைச் செய்யுளையும் அதற்குப் பேராசிரியர் எழுதிய உரையினையும் உளத்துட் கொண்டு இயற்றப்பெற்றதென்பது இனிது புலனாம்.

பாலைநில வழியே தலைமகளைத் தேடிச் செல்லும் செவிலி, தன் மகளையும் அவள் காதலனையும் பற்றித் தன் எதிர் வருவோரைக் கண்டு வினவினாளாக, அவர்கள் அவளை நோக்கி “அன்னையே, நீ கூறிய கொள்கையினராகிய காதலர் இருவரையும் குன்றத்திடையே கண்டோம்; அவ்விருவரும் அன்பினாற்

பிரிவின்றி இயைந்து ஒருங்கு செல்கின்றதனைக் கண்டு, எல்லாவற்றையும் உடையாளாகிய தன் தேவியுடன் ஒருவடிவாய் விளையாடும் புலியூரிறைவனாகிய உமையொருபாக னென்றே கருதியாங்களெல்லாம் உள்ளம் ஒருப்பட்டு அவ்வழகினைத் தொழ நினைந்தோம். அந் நன்மை சொல்லால் வெளியிட்டுரைக்கும் எளிமையுடைய தன்றாம்" என வியந்து கூறுவதாகவுள்ளது.

**மின்றொத் திடுகழல் நூபுரம் வெள்ளைசெம்பட்டு மின்ன**
**ஒன்றொத்திட வுடையாளொடொன் றாம் புலியூரனென்றே**
**நன்றொத் தெழிலைத் தொழவுற்ற னம்என்னதோர் நன்மைதான்**
**குன்றத்திடைக் கண்டனம் அன்னைநீ சொன்ன கொள்கையரே**
**(246)**

எனவரும் திருக்கோவையாகும். இதனை அடியொற்றியமைந்தது,

**சிலம்புஞ் சிறுநுதலும் சில்குழலும் பல்வளையும் ஒருபாற்றோன்ற**
**அலங்கலந் திண்டோளும் ஆடெருத்தும் ஒண்குழையும் ஒருபாற்றோன்ற**
**விலங்கலருஞ்சுரத்து வேறுருவின் ஓருடம்பாய் வருவோர்க்கண்ட**
**அலங்க லவிர்சடையெம் அண்ணல் விளையாட்டென் றகன்றேம் பாவம். (தொல்-அகத்-40-நச்.)**

எனவரும் மேற்கோட் செய்யுளாகும்.

தலைவன் வரைதல் வேண்டிப் பொருள் தேடச் சென்றானாகத் தலைமகள் தன்னெஞ்சொடு வருந்தக் கண்ட தோழி, "மானினை எய்தற் பொருட்டு வில்லினை வளைத்த கொடுந் தொழிலாளராகிய கானவரும் அம்மானின் மருண்ட நோக்கத்தினை ஒத்ததென்று கருதித் தாம் வில்லிற் பொருந்திய அம்பினை எய்யாது மடக்கிக்கொள்ளும் மலையினராதலால் தலைவர் நீ இவ்வாறு வருந்தும்படி தாமதித்திரார்; வரைதற்கு விரைந்து வருவர்" என்று கூறி, அவளது வருத்தத்தைத் தீர்ப்பதாக அமைந்தது.

**கானமர் குன்றர் செவியுற வாங்கு கணைதுணையா**
**மானமர் நோக்கியர் நோக்கென மானற் றொடை மடக்கும்**
**வானமர் வெற்பர் வண்டியில்லையின் மன்னை வணங்கலர்போற்**
**றேனமர் சொல்லி செல்லார் செல்லல் செல்லல் திருநுதலே.**
**(274)**

எனவரும் திருக்கோவையாகும். இத்திருப்பாடலில் கானவரது இயல்பாக அடிகள் குறித்தருளிய அன்பின் செயலை நன்குணர்ந்த நக்கீர தேவர், தாம் பாடிய திருஈங்கோய் மலையெழுபதில்,

**எய்யத் தொடுத்தோன் குறத்திநோக் கேற்றதெனக்**
**கையிற் கணைகளைந்து கன்னிமான் - பையப்போ**
**என்கின்ற பாவனைசெய் ஈங்கோயே தூங்கெயில்கள்**
**சென்றன்று வென்றான் சிலம்பு. (12)**

எனவரும் திருப்பாடலிற் சொல்லோவியஞ் செய்து காட்டிய திறம் இங்கு ஒப்புநோக்கி யுணர்த்தற்குரியதாகும்.

இத்திருக்கோவையிற் பொருள் புலப்பாட்டிற்கு இன்றியமையாத சிறந்த உவமைகள் பலவற்றை அடிகள் எடுத்து ஆண்டுள்ளார். அவ்வுமைகளின் நுட்பங்களைப் பேராசிரியர் தமது உரையில் நன்கு விளக்கியுள்ளமை காண்க. இதன்கண் இல்பொருளுவமை-அபூத உவமை, 125, 244, எதிர்காலக் கூற்றிடத்துக் காரியத்தின்கண் வந்த இரங்கல் விலக்கு, உபாய விலக்கு 157, பரியாயம் 161, 289, புகழுவமை 162, அல்பொருட் டற்குறிப்பேற்றம் 185, ஒற்றுமைக் கொளுவுதல் 195, புகழாப் புகழ்ச்சி 202, கூற்றிடத் திருபொருட்கண் வந்த உயர்ச்சி வேற்றுமை 217, முயற்சி விலக்கு, பொருள் முரண் 289, மிகைமொழி 295 ஆகிய அணிகள் பயின்றுள்ள திறத்தை அவ்வப் பாடல்களின் உரையிற் பேராசிரியர் குறித்துள்ளமை காணலாம். 399-ஆம் திருப்பாடலில் எண்ணலங்காரம் அமைந்துளது.

பாட்டுடைத் தலைவனாகிய இறைவன் திருக்கூத்தியற்றி யருளும் திருவருள் நிலையமாகிய திருச்சிற்றம்பலத்தின் சீர்த்தியினை அடிகள் இத்திருக்கோவையிற் பாடல் தோறும் துதித்துப் போற்றியுள்ளமை காணலாம். திருவளர் திருச்சிற்றம்பலத்தைத் தன்னகத்தே கொண்டு விளங்கும் பெரும் பற்றப் புலியூராகிய தில்லைப்பதி, சோலையும் தடாகமும் சேணுயர் மதிலும், அதனை யொட்டிய அகழும், பொன்னிப் புனல் பாயும் கால்வாய்களும் வயல்களும் புடை சூழப்பெற்றதாய், உப்பகழிங்களும் அவற்றையடுத்துள்ள கடற்கரைச் சோலையும் கடலும் அணுகப் பெற்றதாய் அமைந்துள்ள தோற்றத்தினை, ‘குருநாண்மலர்ப்பொழில் சூழ்தில்லை’ (44), ‘திகழ் பொழிற் றில்லை’ (166) எனவும், ‘தில்லைத்தண் பூம்பணையுந் தடமும்’ (183) ‘புலியூர்ப் பழனத்து அகன் தாமரையன்னம்’ (184) எனவும், ‘சேடார்மதில் மல்லல்தில்லை’ (161) ‘கற்பாமதிற்றில்லை (310), ‘வானக்கடிமதிற்றில்லை’ (335) ‘சேணுந் திகழ்மதிற்றில்லை’ (341) எனவும் ‘அகழும் மதிலும் அணிதில்லை’ (181), எனவும், ‘குரூஉக் கமலந், துன்றங் கிடக்கும் துறை துறைவள்ளை வெள்ளை நகையார் சென்றங்கடை தடமும் புடைசூழ் தருசேணகரே’ எனவும், ‘பொன்னி வளைத்த புனல்சூழ்நிலவிப் பொலி புலியூர்’ (317) எனவும், ‘வடிவார் வயற்றில்லை’ (139), ‘வயல் கொண்ட

தில்லைமல்கூரர்' (386) தில்லையின் வாய்த், தூண்டி லெடுத்தவரால் தெங்கொடற்றப் பழம் விழுந்து, பாண்டிலெடுத்தபல் தாமரை கீழும் பழனங்களே, (240) எனவும், 'தில்லைமெல்லங் கழிசூழ் கண்டலையே கரியாக் கன்னிப் புன்னைக் கலந்த கள்வர் (178)' 'தில்லை நகர்சூழ் போதுற்ற பூம்பொழிகாள் கழிகாள்' (174) 'புலியூர் ஓங்கணை மேவிப் புரண்டு விழுந்தெழுந் தோலமிட்டுத் தீங்கணைந்து ஓர் அல்லுந் தேறாய் கலங்கிச் செறிகடலே' (179) 'பூலியூர் சுற்றும் போர்க்கடலே' (183) 'உடையான் புலியூர்க் கொண்டலுற்றேறும் கடல்வர' (290) எனவும் வரும் தொடர்களால் அடிகள் நன்கு புலப்படுத்தியுள்ளார்.

புலியூராகிய தில்லைப்பதி, வானுற வுயர்ந்த மாட மாளிகை களையுடையதாய் விளங்கிய திறத்தைப் 'பொன்னா ரணிமணி மாளிகைத்'தென்புலியூர்' (217) எனவும் 'செழுமிய மாளிகைச் சிற்றம்பலவர்' (393) எனவும் வரும் தொடர்களால் அறியலாம். இத்தில்லை நகரத்தின் நடுவே விளங்கிய திருக்கோயில், நெடுந் தூரத்திலேயே ஒளியுடன் திகழும் செம்பொன் மாளிகையாகிய பொன்னம்பலத்தினைத் தன்னகத்தே பெற்றதாய், அழகிய சிற்பங்கள் பலவற்றை யுடையதாய் அமைந்திருந்த தென்பதும், அதன் நடுவே மாணிக்கக் கூத்தன் ஆடல் புரிந்தருளும் தில்லைச் சிற்றம்பலமாகிய திருமன்றம் அழகிய சிறந்த ஓவியங்கள் பல எழுதப் பெற்றுக் கவினுறத் திகழ்ந்த தென்பதும், சேணிற்பொலி செம்பொன் மாளிகைத் தில்லைச் சிற்றம்பலத்து மாணிக்கக் கூத்தன் (23) எனவும், 'சிற்பந் திகர்தரு திண்மதிற்றில்லை' (305) எனவும் 'சிற்றம்பலத் தெழுதும் ஓவியங் கண்டன்ன ஒண்ணுதலாள் (384) எனவும் வரும் திருக்கோவைத் தொடர்களால் அறியப்படும்.

தில்லையம்பலத்திலே அம்பலவாணர் சந்நிதி தென்திசை நோக்கி அமைந்துள்ள தன்மையினைத் 'தென்மாத்திசை வசை தீர்தரத் தில்லைச் சிற்றம்பலத்துள், என்மாத் தலைக்கழல்வைத் தெரியாடும் இறை' (338) என்பதனாலும், தில்லையில் பதஞ்சலி முனிவர் தொழுது போற்ற இறைவன் ஆடல் காட்டியருளிய அற்புத நிகழ்ச்சியை, 'நாகந்தொழவெழிலம்பலம் நண்ணி நடம்நவில்வோன்' (171) என்பதனாலும், தில்லையிற் கூத்தப்பெருமானை மூவாயிரவராகிய அந்தணர்கள் ஒருங்கே குழுமி நாளும் பூசனை செய்து வழிபடும் முறையினை, 'தில்லையம்பலத்து மூவாயிரவர் வணங்க நின்றோனை' (72) என்பதனாலும், தம் காலத்தில் 'தில்லையம்பலத் திருமுற்றத்திலே திருமால் அறிதுயிலமர்ந்த கோலத்தில் திருவுருவமைக்கப்

பெற்றிருந்த செய்தியினை, 'வரங்கிடந்தான் தில்லையம்பல முன்றிலம் மாயவனே' (86) என்பதனாலும் திருவாதவூரடிகள் இத்திருக்கோவையிற் குறித்துள்ளமை அறியத் தக்கதாகும்.

தில்லைச் சிற்றம்பலத் திருக்கோயிலில் வழிபாட்டுக் காலங்களில் நாள்தோறும் குடமுழா முழுக்கப்பெறும் நிகழ்ச்சியினை, 'சிற்றம்பலத்து அடியேன், களிதரக் கார்மிடற்றோன் நடமாடக் கண்ணார் முழவம், துளிதரற் காரென ஆர்த்தன' (324) என்பதனாலும், தில்லை கோயிலில் நிகழும் சிறப்புடைய திருவிழாக் காலங்களில் இராப்பொழுது பல நிற மணிமாலைகளின் ஒளியாலும் பலவாக ஏற்றப்பட்ட விளக்குகளாலும் இருள் நீங்கிப் பகற்பொழுது போன்று விளங்கிய திறத்தினை, 'இன்னற வார்பொழிற் றில்லைநகர் இறைசீர் விழவிற் பன்னிற மாலைத்தொகை பகலாம் பல் விளக் கிருளின்' (175) என்பதனாலும், அக்காலத்தில் பாண்டிய நாட்டினையும் சோழ நாட்டினையும் ஆண்ட பெருவேந்தனாகிய வரகுணபாண்டியன் தில்லையம்பலப் பெருமானை மகிழ்ந்து போற்றும் பெரு வேட்கையுடையனாய் அன்பினால் ஏத்தி வழிபட்ட செய்தியை 'வரகுணனாந் தென்னவனேத்து சிற்றம்பலத்தான்' (306) 'சிற்றம்பலம் புகழும் மயலோங்கிருங்களியானை வரகுணன்' (327) எனவரும் தொடர்களாலும் மணிவாசகப்பெருமான் இத்திருக் கோவையில் இனிது விளக்கியுள்ளார்.

தில்லைக்கு மேற்கேயுள்ள கடம்பூரின் அருகே நீர் நிரம்பிய பெரிய தாடகம் ஒன்று அமைந்திருந்த செய்தியினைத் திருக்கோவை 220-ஆம் திருப்பாடலில் அடிகள் குறிப்பிட் டுள்ளமை நோக்கத்தக்க தாகும்.

தில்லைச் சிற்றம்பலத்தைச் சிறப்பித்துப் போற்றும் இத் திருக்கோவையில், அம்பர் (182), இடைமருது (268), ஈங்கோய்மலை (113,204), ஏகம்பம் (268), கடம்பை (220), கழுக்குன்று (107), காழி (379), குற்றாலம் (94, 135), கூடல் (20, 376), கொடுங்குன்று (150), கயிலை 6, 16, 22, 25, 29, 30, 34, 37, 38, 54-56, 59, 62, 76, 120, 132, 138, 141, 145, 169, 245, 280, 294, 378, 383) சிவநகர் (209), சுழியல் (377), திருப்பனையூர் (137), பரங்குன்று (100,144,178, 279, 292), பூவணம் (305, 338), பெருந்துறை (104) பொதியில் மலயம் (8, 91, 139, 140, 153, 154, 336,392, 394, 15, 68), மூவல் (191,304), வாஞ்சியம் (268), வெண்காடு (286), ஆகிய திருத்தலங்கள் திருவாதவூரடி களால் குறித்துப் போற்றப்பெற்றுள்ளன.

இறைவன், கயிலையையெடுத்த இராவணனைத் தன் திருவடிப் பெருவிரலொன்றினால் ஊன்றி மலைக்கீழ் அடர்த்த

ருளியது * (*திருக்கோவையார் 59, 383.) காமனை எரித்தது (61, 70, 90, 95, 164, 179, 313, 352, 364, 367.) காலனைக் காய்ந்தது* (150, 227, 286.) சலந் தரனைத் தலையரிந்தது * (209.) தக்கன் வேள்வி சிதைத்தது* (4, 60, 92, 168, 184, 226, 234, 270.) அவ்வேள்வியிற் சூரியன் பற்களைத் தகர்த்தது* (4, 60.) பகன் ஆதித்தனது கண்ணைக் குருடாக்கியது* (184, 270.) மேருவை வில்லாக வளைத்தது * (26, 98, 114, 152, 174.) திரிபுரம் எரித்தது* (13, 18, 36, 55, 133, 137, 142, 167, 190, 213 321, 357, 371, 372.) அயனைச் சிரங்கொய்தது * (321, 371.) ஆல கால நஞ்சினை யுண்டு மிடற்றி லடக்கியது * (22, 27, 81, 158, 329). யானையை யுரித்தது* (15, 55). ஆகிய வீரச் செயல்களையும், முருகவேள் சூரபதுமனை அழித் தருளியது*(285) . திருமால் பிரமர் அடிமுடி தேடியது* (86, 105, 107, 287.) திருமால் ஆயிரங் கைகளால் ஆயிரந்தாமரை மலர்களைக் கொண்டு நாள்தோறும் சிவபெருமானை அருச்சனை புரிந்தது* (180.) ஒருநாள் ஆயிர மலர்களுள் ஒன்று குறையத் தன் கண்ணைத் தோண்டி மலராக இறைவனடியிற் சாத்திச் சக்கரப் படையினைப் பெற்றுக் கொண்டது* (153, 163, 180, 230.) உலகளந்தது* (42.) ஆலிலையிற் பாலகனாகத் துயில் கொண்டது* (105.) கண்ணனாகி நப்பினையை மணந்து கொண்டது* (273.) திருமால் நரசிங்கமாக வந்தது*(225) ஆகிய புராணச் செய்திகளையும் அடிகள் திருக்கோவையிற் குறித்துள்ளார்.

இத்திருக்கோவையில் ஆகம நூற் பொருள்களை அடிகள் எடுத்துக் கூறியுள்ளார் எனவும் அவற்றுள் தம் உளங்கொண்ட சிலவற்றையே தாம் உரையிற் குறிப்பதாகவும் பேராசிரியர் இந்நூல்உரை முகத்துக் கூறியுள்ளமை முன்னர் விளக்கப்பெற்றது. சிவபெருமானுடன் பிரிவற ஒன்றாயுள்ள பராசக்தியை 'யாவையுமாம் ஏகம்' என 71-ஆம் திருப்பாடலிலும், 'பிறத்தற்குக் காரணமாகிய மலங்களெட்டும் யாக்கைக்குக் காரணமாகிய மலத்துடனே வினை நிற்றலின், நிகழ்காலம் புலனாக 'என்பிறவி கெட்டு இன்று அழகின்றதாக்கிய தாள் அம்பலவன்' என 76-ஆம் பாடலிலும், சிவதத்துவத்தினின்றும் சத்தி தத்துவமும் சத்தி சத்துவத்தினின்றும் சதாசிவ தத்துவமும் தோன்றும் என்பதனை 'தன்னொரு பாலவள் அத்தனாம் மகனாம் தில்லையான்' என 112-ஆம் பாடலிலும், பாசமாகிய தளையிற் பட்டுக்கிடத்தல் உயிரியல்பு என்பதும், உயிர்களின் பாசத்தளை யறுத்து ஆண்டு அருள்புரிதல் இறைவன் இயல்பென்பதும் ஆகிய உண்மையினை, 'பாசத்தளையறுத் தாண்டு கொண்டோன்' என 115-ஆம் பாடலிலும், உயிர்கட்குப் புகலிடம் இறைவனே என்பதனை 143-ஆம் பாடலிலும், சிவத்தைத் தலைப்பட்டு இரண்டறக் கலந்த

ஆன்மா மீளவும் அதனைவிட்டு நீங்கிப் பிறவியுட் புகுதல் இல்லை என்பதனைப் 'புகுநர்க்குப் போக்கரி யோன்' என 188-ஆம் பாடலிலும் தில்லையம்பலத்தோனாகிய இறைவனது அருள் எல்லையினைத் தலைப்பட்டவர்களாகிய சீவன்முத்தரது இயல்பு உலகமெங்கும் பரவி அகண்ட பரிபூரணராய் இருத்தல் என்னும் மெய்ம்மையினை 'அம்பலத் தோன் எல்லை செல்குறுவோர் நலம் பாவிய முற்றும்' என 197-ஆம் பாடலிலும் அடிகள் குறித்துள்ள திறத்தினைப் பேராசிரியர் அவ்வத்திருப்பாடல்களின் உரையில் நன்கு விளக்கியுள்ளார்.

அகத்தமிழ்கோவையாகிய இந்நூலில் இடம்பெற்று உரையாடும் இயல்பினராகிய தலைவன், தலைவி, தோழி, செவிலி முதலிய அனைவரும், இந்நூலின் பாட்டுடைத் தலைவனாகத் திகழும் தில்லையம்பலவனாகிய இறைவனுடைய திருவடிகளில் அழுந்திய பேரன்பினராய், அம்முதல்வனுக்குத் தொண்டராய் ஒழுகும் சிவபக்திச் செல்வராகத் திகழ்கின்றார்கள். இவ்வுண்மை, அவர்கள் தத்தம் உரையாடல்களில் தில்லையம்பலப் பெருமானுக்கும் தமக்கும் உள்ள ஆண்டானடிமைத் தொடர்பினை ஆங்காங்கே குறித்துச் செல்லுதலால் நன்கு தெளியப்படும்.

இனி, இத்திருக்கோவையில் கிளவித்தலைவன் இயல்பாக வந்தனவெல்லாம் அடிகளது இயல்பு-அஃதாவதுஆன்மாவினது இயல்பு உணர்த்துவன எனவும், தலைவியின் இயல்பாக வந்தனவெல்லாம் இறைவனது இயல்பு உணர்த்துவன எனவும் பிற்காலச் சான்றோரொருவர் இத்திருக்கோவையாருக்குப் பேரின்பத்துறை வகுத்துள்ளார். இத்துறையமைப்புப்பற்றிக் கி.பி.1834-ஆம் ஆண்டில் திருவாசக வியாக்கியானம் எழுதிய சீகாழித் தாண்டவராயர் கூறுங் கருத்துக்கள் இங்கு நோக்கத் தக்கனவாகும்.

"தோத்திரங்கள் அன்பினால் நிகழ்ந்த மொழியாதலின் துறைகளில் அமைந்தேயிருக்கும். துறையாவது அன்பு முதிர்ச்சி. நாயகன் நாயகி இவர்களின் அன்புத் தொடர்ச்சியை நானூறு விதமாகப் பாராட்டி வருணிக்கக்கூடும். ஆதலால், நாயன்மார்கள் திருவாக்குகள் அப்படியே இருக்கின்றன. பரமசிவன் மதுரைந் திருப்பதியில் தெய்வப் புலமையாகிய பொய்யடிமை யில்லாத புலவரான திருச்சங்கத்துள் இறையனார் என்று தாமும் ஒரு புலவராக எழுந்தருளியிருந்து நற்கீரர்க்கு அநுக்கிரகம் செய்யும் போது 'இறையனார் பொருள்' என்றே பஞ்ச விலக்கணத்தில் பொருளதிகாரக் கருத்து முழுவதும் இந்தத் துறையே விளங்கும்படி சூத்திரமாகத் திருவுளம் பற்றினார்.

அத்துறைகளில் நாயன்மார்கள் அருள் செய்த தோத்திரங்களில் சில துறைகள் வரும். வாதவூரடிகள் அருளிய கோவைத் திருவாசகத்தில் துறைகள் எல்லாம் அடங்கும்.

பத்திமுத்திக்கு உவமை பெத்தம்; பேரின்பத்துக்கு உவமை சிற்றின்பம் என வைத்து, உடம்பையுடைய யோகிகள்பால் உற்ற சிற்றின்பம் அடங்கத்தன் பேரின்பமாக, பேரின்பமான பிரமக்கிழத்தியோடு ஓரின்பமான அன்பே சிவமாய், அருளே காரணமாக, சுத்தாவத்தையே நிலமாக, நாயகி பரம்பொருளாக, நாயகன் பக்குவான்மாவாக, தோழி திருவருளாக, தோழன் ஆன்ம போதமாக, நற்றாய் பரையாக, திரோதாயி செவிலித்தாயாக, மேலும் நாயகன் கூற்றெல்லாம் நாயகி கூற்றாகவும், நாயகி கூற்றெல்லாம் நாயகன் கூற்றாகவும் நிகழ்ந்து வரும். அவை அநுபூதியாற் காண்க.

நாயகியைச் சிற்றம்பலம் போல வருணிக்கையால் நாயகி பரம்பொருளாயிற்று. பெறுவான் நாயகனும்; பேறு நாயகியுமாக இரசமும் நாவும் போல இருத்தலானும், கொத்தும் துறையும் கருப்பொருளும் உரிப்பொருளும் இடமும் எல்லாம் அருளின்ப மெனக் கொள்க.

"சுத்த சாக்கிரத்தானமே குறிஞ்சி நிலம்; சுத்த சொப்பனத்தானமே பாலை நிலம்; சுத்த சுழுத்தித்தானமே முல்லை நிலம்; சுத்த துரியத்தானமே மருத நிலம்; பரமசிவவின்ப சுகாதீதமே நெய்தல் நிலம். இப்படி ஐந்து நிலங்களும் சுத்தாவத்தைத் தானங்களாகவும் பஞ்ச சத்தி அதிட்டானத் தானங்களாகவும் காண்க."

என விளக்கங்கூறித் திருக்கோவையிலுள்ள இருபத்தைந்து கிளவிக் கொத்திற்கும் நானூறு துறைகளுக்கும் துறையன்பு முதிர்ச்சி என்னும் நூற்பாக்களையும், பேரின்ப நிட்டையன்பு விலாசம் என்னும் கொளுக்களையும் நமச்சிவாய வாழ்க என்ற பத வியாக்கியானத்தில் எடுத்துக் காட்டியுள்ளார்.

இப்பகுதி, திருசுவாமிநாத பண்டிதர் அவர்கள் பதிப்பித்த 'திருக்கோவையா ருண்மை' என்ற நூலிலும், இதன் கருத்து திரு. விசாகபெருமாளையர் அவர்கள் வெளியிட்ட 'திருக்கோவையார் உண்மைக் கருத்து' என்ற பகுதியிலும் சிற்சில வேறுபாடுகளுடன் காணப்படுகின்றன.

"இனிப் பேரின்பப் பொருள்தான் ஒத்த கிழவனும் கிழத்தியுந் தம்முள் அஃகா உழுவலன்பான் நுகர்ந்து போதரும் சிற்றின்பம் போல்வ தொன்றாகலின், மற்றது சிற்றின்பம் அகனைந்திணைபற்றி நிகழ்தல் போலக் குருதரிசன முன்னான

நின்மல சாக்கிராதியைந்தும் பற்றி நிகழுநீரதாம். அங்ஙனம் நிகழ்வுழிப் பேரின்பக் கிழத்தி சிற்றம்பலமும், கிழவோன் முத்தான்மாவும் ஆம்" எனச் சபாபதி நாவலரவர்கள் மேற்குறித்த கருத்தினையே சிறிது மாற்றிக் கூறியுள்ளார்.

திருச்சிற்றம்பலக் கோவைக்குப் பேரின்பப் பொருள் பற்றியமைந்த இவ்விளக்கங்கள் திருக்கோவையார்க்கு உரை வரைந்த பேராசிரியர் காலத்தில் வழங்கியிருக்குமாயின், இவற்றை அவ்வாசிரியர் தமது உரையில் தெளிவாகக் குறித்திருப்பார். அத்தகைய குறிப்பெதுவும் அவரது உரையிற் காணப்படாமை யால், பேரின்பத் துறை பற்றிய இவ்விளக்கம் மிகப் பிற்காலத்தறிஞ ரொருவரால் இயற்றப்பட்டதெனத் தெரிகிறது.

சரியை கிரியை யோகம் ஞானம் எனச் சைவ சித்தாந்தம் கூறும் நால்வகை நெறிகளுள், நான்காவதாகிய ஞான நன்னெறி யானது, எல்லாம் வல்ல முதல்வனை ஆன்ம நாயகனாகவும் உயிராகிய தன்னை அவனைத் தலைப்பட்டு மகிழ விழைந்த தலைவியாகவும் கருதியொழுகும் இயல்பினதாகும். "முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்.... தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே (6-25-7) எனவரும் திருப்பாடல்கள் இறைவனைக் காமுற்று வருந்தும் தலைமகள் நிலையில் நின்று அருளாசிரியர்கள் அருளிச் செய்த திருப்பாடல்கள் பலவும் தொன்றுதொட்டு வரும் இம் மரபினை வலியுறுத்துவனவாகும். கடவுள்மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கமாகிய பாடாண்டினைப் பகுதியும் இம்மரபின் தொன்மையினைப் புலப்படுத்துதல் அறியத்தக்கதாகும். இம்மரபு, சைவத் திருமுறைகளிலும் ஆழ்வார்கள் அருளிய திவ்யப் பிரபந்தத்திலும் இவற்றையடியொற்றித் தோன்றி பிற்காலப் பனுவல்களிலும் சிறிதும் பிறழாதமைந்திருத்தல் காணலாம். இதற்கு மாறாக இறைவனைத் தலைவியாகவும் அவனை அடைந்து மகிழ எண்ணிய ஆன்மாவைத் தலைவனாகவும் கொண்டு கூறும் கூற்று சைவத் தொன்னூல்களிற் காணப்படாத புதுமையுடைய தொன்றாம். தலைவியை அவளிருக்குமிடம் நாடியடைந்து மணக்குந் தலைமைப்பாடும் ஊற்றமும் தலைவனுக்கே உண்டு. அதுபோல் ஆன்மாக்களை வலியவந்து ஆட்கொண்டருளும் தலைமையும் தகவும் உயிர்த் தலைவனாகிய இறைவ னொருவனுக்கே யுரியது. உயிர்கள் அவனருளாலேயே இவனை அடைந்து இன்புறுதற்குரியன. அவ்வுயிர்கட்கு எளிவந்து ஆட்கொண்டு இன்னருள் சுரக்கும் தலைமை இறைவனுக்கேயுரிய தொன்றாகிலும் ஆண்டானாகிய இறைவனே தலைவன் என்றும் அவனால் தலையளிக்கப் பெறும் ஆன்மா அவனருளை

எதிர்நோக்கும் தலைவியென்றும் கொண்டு போற்றும் முறையே சைவ வைணவத் தமிழ் நூல்களில் உள்ள அகத்துறைப் பாடல்களிற் காணப்படுகின்றது.

திருவாதவூரடிகள், தாம் பாடியருளிய திருவாசகச் செழும்பாடல்களில், இறைவனைத் தலைவனாகவும், உயிராகிய தம்மை அவனருள் விழைந்த தலைவியாகவும் கொண்டு அன்புசெய்து போற்றியுள்ளார். அன்றியும் தாம் இயற்றிய திருக்கோவையில் வரும் அகப்பொருளொழுகலாற்றுக்குரிய தலைவியைப் பெருந்துறைப்பிள்ளை என்ற பெயராற் குறித்துள்ளார்.. 'பெருந்துறைப்பிள்ளை' என்னும் இப்பெயர் திருவாதவூரடிகளைக் குறித்து வழங்கும் பெயரென்பது, 'திருந்திய அன்பிற் பெருந்துறைப்பிள்ளையும்' எனவரும் திருவெண் காட்டடிகள் வாய்மொழியால் இனிது விளங்கும். திருந்திய அன்பு என்பது, இறைவனைத் தந்தையாகவும் தன்னை மகனாகவும், இறைவனை ஆண்டானாகவும் தன்னை அடிமையாகவும், இறைவனை நண்பனாகவும் தன்னைத் தோழனாகவும் இவ்வாறு பலபடியாக வழிபட்டு வளர்ந்து, பின் இறைவனைத் தன் ஆருயிர் நாயகனாகவும் தன்னை அவனருள் விழைந்த பெண்ணொருத்தியாகவும் கருதித் தன் செயலற்றுத்தான் என்பது அற்று அவன்தன் செயலேயாக அடங்கி நின்றொழுகும் நிலையிற் செலுத்தப்பெறும் பேரன்பாகும். இம்முறையில், திருவாதவூரடிகள், தம்மையாட்கொண்டருளிய சிவபெருமானை ஆருயிர் நாயகனாகவும் தம்மை அவனது அருளாரின்பத்திற்கு ஏக்கற்று நிற்கும் பெண்ணொருத்தியாகவும் கருதி அன்பு செலுத்தியவர் என்பது, மேற்குறித்த திருவெண்காட்டடிகள் வாய்மொழியால் நன்கு துணியப்படும். அன்றியும், 'புலியூரம்பலவர்க்குற்ற, பத்தியர்போலப் பணைத்திறு மாந்த பயோதரத்தோர் பித்தி தன்பின்வர முன்வருமோ வொர் பெருந்தகையே' (242) எனவரும் திருக்கோவையில் பத்தியராகிய அடியார்களைத் தலைவிக்கும் அம்பலவனைத் தலைவனுக்கும் உவமித்து அடிகள் கூறியிருத்தலும், 'புலியூர்' ஒருவனது அன்பரின் இன்பக் கலவிகள் உள்ளுருகத் தருவனசெய்து எனது ஆவிகொண்டு ஏகி, என்னெஞ்சில் தம்மை, இருவின காதலர் ஏதுசெய்வான் இன்று இருக்கின்றதே" (281) எனத் தலைமகள், தன்னை அடியவரோடும் தம் காதலனாகிய தலைவன் இறைவனோடும் உவமித் துரைப்பதாக அடிகள் கூறியிருத்தலும், இறைவனை நாயக ன்ாகவும் தம்மை அவனருள் விழைந்த பெண்ணாகவும் கருதி அடிகள் அன்புசெய்த திறத்தினை நன்கு வலியுறுத்துவனவாகும்.

ஆகவே, அருளாசிரியர் அருளிய அருள் நூல்களில் அமைந்த அகப்பொருள் துறைகளுக்கு இறைவனைத் தலைவியாகவும் ஆன்மாவைத் தலைவனாகவும் கொண்டு விளக்கம் கூறும் முறையில் இத்திருக்கோவைத் திருப்பாடல் களுக்குப் பேரின்பப்பொருள் கூறுதல், அகப் பொருளொழுகலாறாகிய தமிழிலக்கண மரபுக்கும் சைவசித் தாந்தவியல்பாகிய சமய மரபுக்கும் சிறிதும் ஒவ்வாததாகும். அன்றியும் திருக்கோவையாருரையிற் பேராசிரியர் 'அறிவனூற் பொருள்' என்றது, ஆகம நூல் வழியின் நுதலிய ஞானயோக நுண் பொருளையேயன்றித் தலைவன் தலைவியொழுகலாறாகிய இப்பொருளை யன்றாம்.

இத்திருக்கோவைக்கண் இறைவன் இயல்புகளை விரித் துரைத்துப் போற்றுவனவாக அமைந்த தொடர்கள் யாவும் அறிவனூற்பொருள் பற்றியனவாகவும், தலைவன், தலைவி, தோழி முதலியோர் இயல்புரைப்பனவாக அமைந்த தொடர்கள் யாவும் உலக நூற்பொருள் பற்றியனவாகவும் பகுத்து உணர்தல் இத்திருக் கோவையின் பொருளையுணர்ந்து மகிழ்தற்கு மிகவும் துணைசெய்வதாகும்.



# திருவாசகமும் திருக்கோவையாரும்

முத்திநெறியாகிய பேரின்ப நிலையை அடைவதற்குச் சாதனமாகிய பத்திநெறியின் இலக்கியமாகத் திகழ்வது திருவாசகம் என்பதும், உலகியல் வாழ்வுக்கு இன்றியமையாத இன்ப அன்பினை வளர்க்கும் அகத்திணை யொழுகலாற்றை விரித்துரைக்கும் வாயிலாகப் பத்திநெறியின் பயனாகிய பேரின்ப வாழ்வின் பெற்றியினை உய்த்துணர வைப்பது திருச்சிற்றம்பலக் கோவை என்பதும் முன்னர் விளக்கப்பெற்றன. இத்திருக் கோவையில், பாட்டுடைத் தலைவனாகிய தில்லைச் சிற்றம்பலவனைப் பரவிப் போற்றுவனவாக அமைந்த பகுதிகள் யாவும், அம்முதல்வனது பொருள் சேர் புகழ்த்திறத்தினை விளக்குவனவாய்க் கற்போர் நெஞ்சத்தைக் கசிந்துருகச் செய்வன வாம். திருக்கோவையிலுள்ள இப்பகுதிகள் திருவாசகத்தின் சொற்பொருள் நடையினை அடியொற்றியமைந்துள்ளமை பின்வரும் ஒப்புமைப்பகுதிகளால் இனிது புலனாம். பின்வரும் தொடர்களில் முன்னுள்ள எண்கள் திருக்கோவையார் பாடல் எண்களாகும். பின்னுள்ளவை திருவாசகப் பாடல்களுக்குரிய எண்களாகும்.

**4.** **அடையார் புரங்கள், இகல்குன்ற வில்லிற் செற்றோன்**
**தில்லையீசன் எம்மான் எதிர்த்த, பகல்குன்றப் பல்லுகுத்தோன்.**

**60** **“பல்லிலனாகப் பகலை வென்றோன்”-**
**‘அந்தரமே செல்லும் அலர்கதிரோன் பல்தகர்த்து’**
**திருவம்மானை-15**

**67** **மறந்து மற்றைப், பொய்வானவரிற் புகாதுதன் பொற்கழற்கே**
**அடியேன், உய்வான்புக ஒளிர்தில்லை நின்றோன்.**
**அத்தேவர் அவர்தேவ ரென்றிங்ஙன்**
**பொய்த்தேவு பேசிப் புலம்புகின்ற பூதலத்தே**
**பத்தேதும் இல்லாதென் பற்றறநான் பற்றிநின்ற**
**மெய்த்தேவர் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ.**
**திருக்கோத்தும்பி-5**

**71** **யாவையுமாம் ஏகத்தொருவன்**
**‘ஏகனனேக னிறைவனடிவாழ்க’** **- சிவபுராணம்**
**‘தான் ஒருவனுமே பலவாகி நின்றவா’ - திருத்தோணோக்கம்-5**

73 பொருளாவெனைப் புகுந்தாண்டு புரத்தான் மாலயன்பால்
இருளாயிருக்கும் ஒளி.
'பொருளே தமியேன் புகலிடமே..................
இருளேவெளியே யிகபரமாகி யிரந்தவனே'-
நீத்தல் விண்ணப்பம் -17

'செங்கணவன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால்
எங்கும் இலாததோர் இன்பம் நம்பாலதா' - திருவெம்பாவை-17

75 விண்ணைமடங்க விரிநீர்பரந்து வெற்புக்கரப்ப
மண்ணைமடங்க வருமொரு காலத்து மன்னிநிற்கும் அண்ணல்
'ஊழிமுதல்வனாய் நின்றஒ ருவனை' -திருவெம்பாவை-8

85 தன்னீரடிக் கென்னிரண்டு கரங்கள் தந்தான்.
"வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்தவைத்து
-திருப்பூவல்லி-7

91 அன்பர்க்கு ஆரத்தழை அன்பு அருளிநின்றேன்
"தொண்டனேற்கும் உண்டாங்கொல், வேண்டாதொன்றும்
வேண்டாது மிக்க அன்பே மேவுதலே - பிரார்த்தனைப்பத்து-4

92 முன்தகர்த்தெல்லா இமையோரையும் பின்னைத் தக்கன்முத்தீச்,
சென்றகத் தில்லாவகை சிதைத்தோன்.
'சந்திரனைத் தேய்ந்தருளித் தக்கன்றன் வேள்வியினில்
இந்திரனைத் தோள்நெரித்தி டெச்சன் தலையரிந்து
அந்தரமே செல்லும் அலர்கதிரோன் பற்றகர்த்துச்,
சிந்தித் திசைதிசையே தேவர்களை ஓட்டுகந்த
செந்தார்ப்பொழில் புடைசூழ் தென்னன்
பெருந்துறையான்' - திருவம்மானை-15

102 மைத்தழையா நின்ற மாமிடற் றம்பலவன் கழற்கே
மெய்த்தழையா நின்ற அன்பினார்போல விதிர்விதிர்த்து.
"மெய்தானரும்பி விதிர்விதிர்த்துன் விரையார்கழற்கென்
கைதான் தலைவைத்துக் கண்ணீர்ததும்பி" - திருச்சதகம்-1

106 மத்தகஞ் சேர்தனி நோக்கினன் வாக்கிறந்தூறமுதே
ஒத்தகஞ் சேர்ந்தென்னை உய்யநின்றோன்.
"வாக்கிறந்தமுதம் மயிர்க்கால் தோறும்
தேக்கிடச் செய்தனன்" -திருவண்டப்பகுதி-170, 171

112 தவளத்த நீறணியுந் தடந்தோளண்ணல் தன்னொருபா
லவள் அத்தனாம் மகனாம் தில்லையான்,

'இமவான்மகட்குத், தன்னுடைக்கேள்வன், மகன் தகப்பன்
தமையன் - திருப்பொற்சுண்ணம்-13

114 தெவ்வரை மெய்யெரிகாய் சிலையாண்டென்னை யாண்டு
கொண்ட
செவ்வரை மேனியன் சிற்றம்பலவன்.
'கல்லைமென் கனியாக்கும் விச்சைகொண்டு, என்னை
நின்கழற்கு அன்பனாக்கினாய்' - திருச்சதகம்-94

116 காதரந்தீர்ந்தருளும், தையல்வளர் மேனியன்
'அச்சந் தீர்த்தாட்கொண்டான்' -திருச்சதகம்-29

118 தொழுதெழுவார், வினைவளம் நீறெழ நீறணியம்பலவன்.

'சிவனவன் திரள்தோள்மேல் நீறுநின்றது
கண்டனையாயினும் நெக்கிலை' -திருச்சதகம்-33

122 தண்ணறவுண் களிநீயெனச் செய்தவன்
'கருணைமட்டுப் பருகிக்களித்து மீண்டுகின்றேனை'
-நீத்தல் விண்ணப்பம்-33

124 இப்பிறப்பில் அழுந்தாவகையெனை யாண்டவன்.
'இப்பிறவியாட் கொண் டினிப்பிறவாமே காத்து
-திருப்பொற்சுண்ணம்-12

127 முத்தன், முத்திவழங்கும்பிரான்.
'முத்தனே முதல் வா' -அருட்பத்து-7
'முத்தி அருளும் மலை' - திருச்சாங்கம்-5
'மூலபண்டாரம் வழங்குகின்றான் வந்து முந்துமினே'
- திருப்பாண்டிப் பதிகம் -5

129 உள்ளலரைக் கீடஞ்செய்து என்பிறப்புக்கெடத்
தில்லைநின்றோன்
'ஆனையாயக் கீடமாய் மானுடராய்த் தேவராய்
ஏனைப்பிறவாய்ப் பிறந்திறந் தெய்ந்தேனை.....
........ தன்தொழும்பிற் கொண்டருளும் வானவன்'
-திருப்பொற்சுண்ணம்-14

140 நினைவித்துத்தன்னை யென்னெஞ்சத் திருந்தம்பலத்து நின்று
புனைவித்த ஈசன்
'நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனை'
- திருகோத்தும்பி-12

147 ஆனந்தமாக்கடல் ஆடு சிற்றம்பலம்
• 'பரமானந்தப் பழங்கடலதுவே' - திருவண்டப்பகுதி-66

'பரமானந்தப் பழங்கடல்'
'பேரா ஒழியாப்பிரிவில்லா, மறவா நினையா அளவிலா
மாளா இன்ப மாகடலே'
'கடலேயனைய ஆனந்தம்' - பிரார்த்தனைப்பத்து 5,6,7.

வானுந்துமாமதி வேண்டியமும் மழப்போலும்.
(198) விசும்புற்ற திங்கட்கு அழும்மழப்போன்று.
பைதலாவதென்று பாதுகாத்திரங்கு -திருச்சதகம்-73

150 மாற்றேனென வந்தகாலனை ஓலமிட அடர்த்த கோற்றேன்
'கோற்றேன் எனக்கு என்கோ' - உயிருண்ணிப்பத்து-8

153 செம்மலராயிரந் தூய்க் கருமால் திருக்கண்ணணியும்
மொய்ம் மலரீர்ங்கழ லம்பலத்தோன்.

180 அலராயிரந்தந்து வந்தித்து மாலாயிரங்கரத்தால்
அலரார்கழல் வழிபடு செய்தாற்களவில் லொளிகள்
அலராவிருக்கும் படைகொடுத்தோன்.
'சலமுடைய சலந்தரன்றன் உடல்தடித்த நல்லாழி
நலமுடைய நாரணற்கன் றருளியவாறென்னேடீ
நலமுடைய நாரணன்றன் நயனமிடந் தரனடிக்கீழ்
அலராகவிடவாழி அருளினன்காண் சாழலோ - திருச்சாழல்

156 தில்லைமுன்னோன் கழற்கே, கோட்டந்தரும்நம்
குருமுடி வெற்பன்.
'பாவநாசாவுன் பாதமேயல்லாற் பற்றுநான்மற்றிலேன் கண்டாய்'
'தொபழுவனோ பிறரைத் துதிப்பனோ எனக்கோர்
துணையென நினைவானோ' -வாழாப்பத்து-9,10

160 முன்னுமொருவர் இரும்பொழில் மூன்றற்கும், முற்றும்
இற்றார் பின்னும் ஒருவர்
முன்னைப்பழம் பொருட்கு முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனே
-திருவெம்பாவை-9

171 நாகந்தொழ வெழிலம்பலம் நண்ணிநடவில்வோன்.
"பதஞ்சலிக்கருளிய பரமநாடக" -கீர்த்தித்திருஅகவல்-138

173 சோத்துன்னடியமென்றோரைக் குழுமித்தொல்வானவர்
சூழ்ந் தேத்தும்படி நிற்பவன்
'சோத்தெம்பிரான்' -நீத்தல் விண்ணப்பம்-4-4

'சோத்தெம்பிரானென்று' -திருப்பொற்சுண்ணம் -8

'சோத்தமெம்பெருமானே' - ஆசைப்பத்து-4

185 உள்ளும் உருகி யுரோமஞ் சிலிர்ப்ப வுடையவன் ஆட்கொள்ளுமவரிலோர் கூட்டந்தந்தான்.

"என்புநைந், துருகி நெக்குநெக்கேங்கி
அன்பெனும் ஆறு கரையது புரள
நன்புல னொன்றி நாதவென்றரற்றி
உரைதடுமாறி உரோமஞ் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித் திருதய மலரக்
கண்களிகூர நுண்டுளி யரும்பச்
சாயா அன்பினை நாடொறுந் தழைப்பவர்"
-போற்றித்திருஅகவல்-80-86

'அடியேன்உன், அடியார்நடுவுளிருக்கும்
அருளைப்புரியாய்' -கோயில் மூத்ததிருப்பதிகம்-1

'ஆசைதீர்த்தடியாரடிக்கூட்டிய அற்புதமறியேனே'
- அற்புதப்பத்து -8

194 ஒராகம் இரண்டெழிலாயொளிர்வோன்,
'தோலுந்துகிலும் ....... தொன்மைக்கோலம்'
-திருக்கோத்தும்பி-18

பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப்பைம் போதால்...
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போறிசைந்த
திருவெம்பாவை - 13

195 நஞ்சமஞ்சி மறுகி விண்ணோர் பணியக் கருணைதரும்பரன்.
நஞ்சமஞ்சி ஆவவெந்தா யென்றவிதாவிட' - திருச்சதகம்-4

204 தாயிற்சிறந்தன்று நாண்,
'தாயிற்சிறந்த தயாவான தத்துவனே' - சிவபுராணம் - 61

214 எம்மைப்பிடித்தின், றாண்டெல்லை தீரின்பந்தந்தவன்.
'ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தைபெருமானே'
- சிவபுராணம்

'அடித்தடித்து அக்காரமுன் தீற்றிய அற்புதமறியேனே'
-அற்புதப்பத்து-3

216 அம்பலத்தோன் அடித்தேரலரென அஞ்சுவன்.
'செறிதருகழல்களேத்திச் சிறந்தினிதிருக்கமாட்டா
அறிவிலாதவரைக்கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே'
-அச்சப்பத்து-8

217 தென்புலியூர் புகழ்வார், தென்னாவென உடையான்
நடமாடு சிற்றம்பலமே.
'தென்னாதென்னாவென்று தெள்ளேணங்கொட்டாமோ'
- திருத்தெள்ளேணம் - 9

232 நான் அணுகப்பெற்றேன் பிறவிபெறாமற் செய்தோன்,
'இப்பிறவியாட் கொண் டினிப் பிறவாமேகாத்து'
- திருவம்மானை-12

234 அம்பலத்தானைப் பழித்து மும்மைத், தீயினதாற்றல்
சிரங்கண்ணிழந்து திசை திசைதாம் போயின எல்லையெல்லாம்
'சந்திரனைத் தேய்த்தருளித் தக்கன்றன் வேள்வியினில்
இந்திரனைத் தோள்நெரித்திட் டெச்சன் தலையரிந்து
அந்தரமே செல்லும் அலர்கதிரோன் பல்தகர்த்துச்
சிந்தித் திசை திசையே தேவர்களை ஓட்டுகந்த
செந்தார்ப் பொழில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
- திருவம்மானை-15

246 மின்றொத்திடுகழல் நூபுரம்வெள்ளை செம்பட்டுமின்ன
ஒன்றொத்திட வுடையாளொடொன்றாம் புலியூரன்.
'தோலுத்துகிலும் குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும்பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமுந் தொக்கவளையு முடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந் தூதாய் கோத்தும்பீ'
- திருக்கோத்தும்பி-18

270 சீரருக்கன் குருட்டிற்புகச் செற்றகோன்
(184) பகன் தாமரைக்கண் கெடக்கடந்தோன்.
'உண்ணப்புகுந்த பகனொளித்தோடாமே
கண்ணைப் பறித்தாவா றுந்தீபற' -திருவுந்தியார்-12

293 மனக்களியாயின்றி யான்மகிழ்தூங்கத் தன்வார்கழல்கள்,
எனக்களியா நிற்கும் அம்பலத்தோன்.
'பித்தென்னையேற்றும் பிறப்பறுக்கும் பேச்சரிதாம்
மந்தமேயாக்கும் வந்தென்மனத்தை-அத்தன்'
-திருவெண்பா-4

298 என்கடைக்கண்ணினும் யான்பிற ஏத்தாவகையிரங்கித்
தன்கடைக்கண் வைத்ததண் தில்லைச் சங்கரன்
'உள்ளேன் பிறதெய்வம் உன்னையல்லா தெங்கள்' - உத்தமனே
- திருச்சதகம்-2

300 இருந்துதி யென்வயிற் கொண்டவன்.
'நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனை'
-திருக்கோத்தும்பீ-12

307 அம்பலஞ்சேர் ஆனந்தவெள்ளத் தறைகழலோனருள் பெற்றவரின்
ஆனந்தவெள்ளம் வற்றாது முற்றாதிவ் வணிநலமே
'தானந்தமில்லான் தனையடைந்த நாயகனை
ஆனந்தவெள்ளத் தழுத்துவித்தான் காணேடீ'-திருச்சாழல்-10

310 கற்பாமதிற்றில்லைச் சிற்றம்பலமது காதல்செய்த
விற்பா விலங்கலெங்கோனை விரும்பலர்போல அன்பர்
சொற்பா விரும்பினர்.
'கல்வியென்னும் பல்கடற்பிழைத்தும்'
-போற்றித்திருஅகவல்-38

'கற்றாரையான்வேண்டேன் கற்பனவும் இனிமையும்'
- திருப்புலம்பல்-3

311 பிரியாமையுமுயிர் ஒன்றாவதும் பிரியற்பெரிதுந்
தரியாமையு மொருங்கே நின்றுசாற்றினர்
'உரியேனல்லே னுனக்கடிமை யுன்னைப்பிரிந்திங் கொருபொழுதுந்
தரியேன் நாயேன் இன்னதென்றறியேன்
சங்கரா கருணையினாற்
பெரியோனொருவன் கண்டுகொளென்றுன் பெய்கழலடி காட்டிப்
பிரியேனென்றென்றருளிய வருளும்பொய்யோ
எங்கள்பெருமானே -எண்ணப்பதிகம்-2

314 பல்பிறவித் தொகைதணித்தற்கென்னை யாண்டு கொண்டோன்.
(86) என்பிறவிகெட்டின், றழிகின்றதாக்கிய தாளம்பலவன்
'பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள்வெல்க'
- சிவபுராணம் - 7

'என்பிறவித் தாழைப் பறித்தவா' - திருத்தோணோக்கம்-13

315 மிக்க, விருப்புறுவோரை விண்ணோரின்மிகுத்து.
'எப்புன்மையரை மிகவேயுயர்த்தி விண்ணோரைப் பணித்தி'
-திருச்சதகம்-10

326 கருமால் விடை யுடையோன்.
'இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண்' -திருச்சாழல்-15

337 மூவர்நின்றேத்த முதலவனாட முப்பத்து மும்மைத்
தேவர் சென்றேத்துஞ் சிவன்.
'மூவரும் முப்பத்து மூவருமற்றொழிந்த
தேவருங்காணச் சிவபெருமான்' -திருவெண்பா-9

338 தென்மாத்திசை வசைதீர்தரத்தில்லைச் சிற்றம்பலத்துள்
என்மாத் தலைக்கழல் வைத்தெரியாடும்இறை.
'தென்பாலுகந்தாடுந் தில்லைச் சிற்றம்பலவன்' - திருச்சாழல்-9

343 நாய்வயினுள்ள முணமுமில்லேனை நற்றொண்டு கொண்ட
தீவயின்மேனியன்
'இங்கு, ஊர் நாயிற்கடையானேன்' - திருச்சதகம் -56

'நாயிற்கடையாம் நானேனை நயந்துநீயே
ஆட்கொண்டாய்' - குழைத்தபத்து-9

346 சுற்றம் பலமின்மை காட்டித்தன் தொல்கழல்தந்த
தொல்லோன்.
'இணையார் திருவடி யென்றலைமேல் வைத்தலுமெ
துணையான சுற்றங்கள் அத்தனையும் துறந்தொழிந்தேன்'
- திருப்பூவல்லி-1

377 அம்பலத்தடியார், என்பிடைவந்து அமிழ்துறடிநின்றாடி
'அற்புதமான அமுததாரைகள்
ஏற்புத்துளைதொறும் ஏற்றினன்' - திருவண்டப்பகுதி-174, 175.



# தொல்காப்பியமும், திருக்கோவையாரும்

திருவாதவூரடிகள், தொல்காப்பியம், இறையனார் களவியலுரை ஆகிய தமிழியல் நூல்களையும் சங்கச் செய்யுட்கள் திருக்குறள் முதலிய செந்தமிழிலக்கியங்களையும் நன்கு தேர்ந்து, தமிழியல் வழக்கமாகிய அகப்பொருளொழுகலாறு இத்தன்மையது என யாவரும் உணர்ந்து மகிழும் வண்ணம் அகத்திணைக் கோவையாகிய இத்திருக்கோவையை அருளிச் செய்துள்ளார். ஆகவே அடிகள் பாடியருளிய திருச்சிற்றம்பலக் கோவையில் அவர்க்கு முற்பட்ட செந்தமிழ்ச் சான்றோராகிய தொல்காப்பியனார், திருவள்ளுவர், கபிலர், ஔவையார் முதலிய புலவர் பெருமக்களின் கருத்துக்களும் சொற்றொடர்களும் பொன்னேபோற் போற்றி எடுத்தாளப் பெற்றிருத்தல் காணலாம். மதுரைத் திருவாலவாய்த் திருக்கோயிலில் எழுந்தருளிய சிவபொருமான் கூடலம்பதியில் நிறுவப்பெற்ற தமிழ்ச் சங்கத்திலே தானும் ஒரு தமிழ்ப் புலவராக வீற்றிருப்பது தமிழாராய்ந் தருளிய அருள் நிகழ்ச்சியை அடிகள் இத் திருக்கோவையிற் குறித்துள்ளமை முன்னர் விளக்கப் பெற்றது. ‘சிற்றம்பலத்தும் என் சிந்தையுள்ளும் உறைவான் உயர்மதிற் கூடலின் ஆய்ந்த ஒண்தீந்தமிழின் துறை’ என அடிகள், தமிழ்நூற் பரப்பினை ஞானப்பொருளாய் நின்ற இறைவனால் ஆராயத்தக்க ஆழமும் பரப்பும் உடையதாகக் குறித்தலால், சங்கத் தமிழ் நூல்களில் அடிகள் கொண்டுள்ள நன்மதிப்பும், ஆழ்ந்த புலமையும் இனிது விளங்கும்.

‘மகளிருக்கு உயிரைக்காட்டிலும் நாணம் சிறந்தது; அத்தகைய நாணத்திலும் கற்புச் சிறப்புடையது’ என்னும் முன்னோர் மொழியைத் தலைமகள் தனது உள்ளத்துட்கொண்டு தலைவன் இருக்கும் இடத்தினை அடைய நினைத்தல் இயல்பு. கற்புடை மகளிர்க்குரிய இவ்வியல்பினை,

**“உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணினுஞ்**
**செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்றெனத்**
**தொல்லோர் கிளவி புல்லிய நெஞ்சமொடு**
**காமக் கிழவ னுள்வழிப் படினும்”** **(தொல்-களவியல்-23)**

எனவரும் நூற்பாவில் ஆசிரியர் தொல்காப்பியனார் விரித்துக் கூறியுள்ளார். தலைமகளது உள்ளத்தமைந்த கற்புநலம் பற்றிய இக்கருத்தினை,

**தாயிற் சிறந்தன்று நாண்தைய லாருக்கந் நாண்தகைசால்**
**வேயிற் சிறந்தமென் தோளிதன் கற்பின் விழுமிதன்று; ஈங்**
**கோயிற் சிறந்து சிற்றம்பலத் தாடும்எம் கூத்தப்பிரான்**
**வாயிற் சிறந்த மதியிற் சிறந்த மதிநுதலே. (திருக்-204)**

எனவரும் திருப்பாடலில் அடிகள் விரித்துக் கூறியுள்ளார்.

தலைமகளைப் போக்கு உடன்படுத்திய தோழி, தலைமகள் பாற் சென்று, 'மகளிராற் பாதுகாக்கப்படுவனவற்றுள் நாணத்தை யொத்துச் சிறந்த பொருள் பிறிதொன்றில்லை. அத்தகைய நாணமும் கற்புப்போல அத்துணைச் சிறப்புடையதன்று' என உலகியல் கூறுவாள் போன்று தலைமகள் உடன் போக்கிற்கு உடன்படுமாறு கற்பின் நலத்தினை வற்புறுத்துவதாக அமைந்தது மேற்காட்டிய திருப்பாடலாகும். இதன்கண் வரும் 'கூத்தப்பிரான் வாயிற் சிறந்த மதியிற் சிறந்த' என்ற தொடர்க்கு, "உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணினுஞ், செயிர்தீர்காட்சிக் கற்புச் சிறந்தன்று என்றாகலின், 'தாய்போல நாண் சிறத்தலும் நாணினும் கற்புச் சிறத்தலும் ஆகிய இரண்டும் கூத்தப்பிரான் வாயிற் சிறந்த நூல்கள் இடத்துச் சிறப்புடைய பொருள்' என்று உரைப்பினும் அமையும்" எனப் பேராசிரியர் விளக்கம் கூறுவர். இவ்விளக்கத் தினைக் கூர்ந்து நோக்குங்கால், 'கூத்தப்பிரான் வாயிற் சிறந்த மதி' எனப்படும் அறிவு நூல்களுள் ஆசிரியர் தொல்காப்பியனார் இயற்றிய தொல்காப்பியமும் ஒன்றாகும் எனத் திருவாதவூரடிகள் இத்திருப்பாடலிற் குறித்துள்ளமை நன்கு புலனாம். "ஒருநாட் பழகியுயிரிற் பிரியாதுடன் வளர்ந்த அருநாண்" (திருக்கோவை-44) எனத் தலைமகள் கூற்றில் வைத்து உயிரினுஞ் சிறந்த நாணின் சிறப்பினை அடிகள் விளக்கிய திறம் இங்கு நினைத்தற் குரியதாகும்.

எல்லாவுயிர்க்கும் இன்பத்துன்பத்திற்குக் காரணமான இருவினையையும் வகுத்து நுகர்விப்பவன் எங்கும் நீக்கமற நிறைந்த இறைவனாகிய முழுமுதற் பொருளே என்பது, 'பால்வரை தெய்வம்' (தொல்-கிளவி-57) எனவரும் தொல்காப்பியத் தொடரால் அறியப்படும். 'பால்வரை தெய்வம்' என்னும் இத்தொடர், பால் வேறு, அதனை வரைந்து நுகர்விக்கும் தெய்வம் வேறு என்னும் மெய்ம்மையினைப் புலப்படுத்தல் காணலாம். தெய்வத்தால் வகுக்கப்படும் முறையே பால் எனவும் வகை எனவும் ஊழ் எனவும் வழங்கப்படும். இந்நுட்பத்தினை,

**'வகுத்தான் வகுத்த வகைவல்லாற் கோடி**
**தொகுத்தார்க்குத் துய்த்த லரிது' (377)**

என்னும் திருக்குறளில் திருவள்ளுவர் தெளிவாகக் குறித்துள்ளார். ஊழ்வினை தானேவந்து வினைசெய்த உயிரைப்பற்றி நுகர்விக்கும் உணர்வும் ஆற்றலும் உடையதன்று என்றும், இயங்குதிணை நிலத் திணை ஆகிய எல்லாப் பொருள்களையும் ஓர் ஒழுங்குபட வகுத்து இயக்கி நிற்கும் இறைவனால் வகுக்கப்பட்ட முறைமை ஆகிய நியதியே ஊழ் என வழங்கப்படுவதென்றும் தெளிவுபடுத்த எண்ணிய திருவள்ளுவர், 'வகுத்தான் வகுத்த வகை' என்ற தொடரால், ஊழ்வினையாவது இத்தன்மையதென விளக்கி யுள்ளார். இத் தொடரில் வகுத்தான் என்னும் சொல் இறைவனைக் குறிப்பது. நியதியாகிய ஊழினைக் குறிப்பதாகும். பகுத்தது பால் என வழங்கினாற்போல, வகுத்தது வகை என வழங்குவதாயிற்று. தொல்காப்பியனாரும் திருவள்ளுவரும் முறையே இறைவனைப் பற்றியும் ஊழைப் பற்றியும் கூறிய இக்கருத்தினை,

**'யாழின் மொழி மங்கைபங்கன் சிற்றம்பலத்தான் அமைத்த**
**ஊழின் வழியதொன் றென்னை' (திருக்கோவை-350)**

எனவரும் தொடரில் திருவாதவூரடிகள் தெளிவாக விளக்கி யுள்ளமை உணர்ந்து மகிழத்தக்கதாகும். இதன்கண் 'ஊழிற் பெருவலியாவுள' (380) எனவரும் திருகுறட் பொருளும் எடுத்தாளப் பட்டுள்ளமை காணலாம்.

முன்னைப் பிறப்பிற் பழகியவர்களை இப்பிறப்பிலும் முன் போல் ஒன்றுவிப்பதும் அன்றி வேறுபடுத்துப் பிரித்து வைப்பதும் எனப் பால் (ஊழ்) இருவகைப்படும் என்பதும், ஒன்றுவிக்கும் திறத்தால் உயர்ந்த ஊழின் வழியே நிகழும் இறைவனது ஆணையால், உருவும் திருவும் முதலிய நலங்களால் ஒத்த தன்மையினராகிய தலைவனும் தலைவியும் ஓரிடத்து எதிர்ப்பட்டு அன்பினால் ஒன்றுபடுவர் என்பதும் ஆகிய உண்மையினை,

**'ஒன்றே வேறே யென்றிரு பால்வயின்**
**ஒன்றி யுயர்ந்த பால தாணையின்**
**ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப' (தொல்-களவு-2)**

எனவரும் நூற்பாவில் தொல்காப்பியனார் குறித்துள்ளார். இவ்வாறு இறைவனது ஆணையாகிய நல்லூழின் திறத்தால் ஒரு பொழிலகத்துத் தலைமகளை எதிர்ப்பட்டு அன்பினாற்கூடி மகிழ்ந்த தலைவன், தான்பெற்ற இன்பத்தியல்பினைக் கூறுவதாக அமைந்தது,

**சொற்பா லமுதிவள் யான்சுவை யென்னத் துணிந் திங்ஙனே**
**நற்பால் வினைத்தெய்வம் தந்தின்று நானிவ ளாம் பகுதிப்**
**பொற்பா ரறிவார் புலியூர்ப் புனிதன் பொதியில் வெற்பிற்**
**கற்பா வியவரை வாய்க்கடி தோட்ட களவகத்தே (8)**

எனவரும் திருக்கோவையாகும். 'புலப்படச் சொல்லும் போது 'அமிழ்தம் இவள், யான் அதன் சுவை' என்று துணிந்து சொல்ல, இவ்வண்ணமே நல்லூழின் பாற்பட்ட தெய்வம் தருதலால், இன்று (புணர்ச்சியால் வரும் இன்பம் துய்த்தற் பொருட்டாக, யானென்றும் இவளென்றும் வேறு பாட்டோடு கூடிய) அழகை (இதனை அனுபவிக்கின்ற யானே அறியினல்லது) பிறர் யார் அறிவார்?' எனத் தலைவன், தலைவியும் தானும் கூடிப்பெற்ற புணர்ச்சி இன்பத்தின் இயல்பினைக் கூறி மகிழ்கின்றான்.

'சொற்பாலமுது இவள், யான் சுவை' என்றது, சுவையுடைய பொருளுக்கும் அதன்கண் பிரிவற அமைந்த சுவைக்கும் வேறுபாடு .இல்லாதவாறு போல, எனக்கும் இவளுக்கும் வேறுபாடில்லை என்றவாறு. இவ்வாறு தான் அவள் என்னும் வேற்றுமையின்றித் தலைவன் தலைவி இருவரும் எதிர்ப்பட்டு மகிழும் இயல்பினைத் 'தானே அவளே தமியியர் கணாக்காமப்புணர்ச்சி இருவயின் ஒத்தல்' (இறையனாரகப் பொருள் சூத்-2) எனவரும் நூற்பாவாலும் "தானே அவள். அவளே தான் என்பது என் சொல்லியவாறோ எனின், தான் அவள் என்னும் வேற்றுமையிலர் என்றவாறு" எனவரும் உரைப்பகுதியாலும் நன்குணரலாம். மேற்குறித்த இறையனார் களவியல் நூற்பாவையும் அதன் உரை விளக்கத்தினையும், 'சொற்பாலமுது இவள், யான் சுவை' எனவும், 'நான் இவளாம் பகுதிப் பொற்பு' எனவும் வரும் தொடர்களில் அடிகள் குறித்தருளிய திறம் இங்கு உளங்கொளத் தக்கதாகும்.



# இறையனார் களவியலுரையும் திருக்கோவையாரும்

மணிவாசகப் பெருமான் இறையனார் களவியலுரையினை இலக்கணமாகக்கொண்டு திருச்சிற்றம்பலக்கோவை யென்னும் அகப்பொருளிலக்கியத்தினை இயற்றியுள்ளார் என்பது, களவி யலுரையில் வரும் அகப்பொருட்டுறைகளையும் உரைத்தொடர் களையும் கருத்துக்களையும் அவ்வாறே இத்திருக்கோவையில் அடிகள் எடுத்தாண்டிருத்தலால் இனிது புலனாம்.

பொருவிறந்தாராகிய தலைமகனும் தலைமகளும் தத்தம் ஆயத்தின் நீங்கித் தமியராய் ஒரு பொழிலகத்து எதிர்ப்படுதற்கு, அவ்விருவரையும் இப்பிறப்பில் ஒன்றுவிக்கும் நல்லூழே காரணமாதலை விளக்கிய களவியலுரையாசிரியர், வேறு வேறிடங்களிற் பிறந்து வளர்ந்தாராகிய அவ்விருவரும் ஓரிடத்து எதிர்ப்பட்ட தன்மையை, "வடகடலிட்ட ஒரு நுகம் ஒரு துளை, தென்கடலிட்ட ஒரு கழி சென்று கோத்தாற் போலவும்... தலைப்பெய்து ஒருவர் ஒருவரைக் காண்டல் நிமித்தமாகத் தமியராவர்" என உவமை கூறி விளக்கியுள்ளார். களவியலுரை யாசிரியர் கூறும் இவ்விளக்கத்தை அடியொற்றி அமைந்தது.

**வளைபயில் கீழ்கடல் நின்றிட மேல்கடல் வானுகத்தின்**
**துளைவழி நேர்கழி கோத்தெனத் தில்லைத்தொல்லோன்கயிலைக்**
**கிளைவயி னீக்கியிக் கெண்டையங் கண்ணியைக் கொண்டுதந்த**
**விளைவையல் லால்விய வேன்நய வேன்தெய்வமிக்கனவே (6)**

எனவரும் திருக்கோவையாகும். களவியலுரையாசிரியர் பொதுவாக வடகடல், தென்கடல் எனக்குறித்தாராயினும் அவ்வுவமையினைத் தமிழ்நாட்டு மக்கள் புரிந்து கொள்ளும் முறையில் கீழ்கடல், மேல்கடல் என அடிகள் மாற்றியமைத்த நுட்பம் அறிந்து மகிழ்தற்குரியதாகும்.

தலைமகனும் தலைமகளும் ஒருவரையொருவர் எதிர்ப் பட்டுக் காணுங்கால் தம் உணர்வினரல்லராதற் றன்மையை அங்ஙனங் காணுதற்கு முன்னரே பெற்றுடையர் என விளக்க எண்ணிய களவியலுரையாசிரியர், "ஏனாதி மோதிரஞ் செறித்த திருவுடையான் ஒருவன் ஏனாதி மோதிரஞ் செறிக்கும் அத்திரு, அவன் செறிக்கின்ற பொழுதே உண்டாயிற்றன்று; முற்கொண்டு அமைந்து கிடந்தது... ... அது பின்னை ஒரு காலத்து ஓரிடத்து ஒரு காரணத்தான் எய்துவிக்கும். அது போலே இன்ன நாள் இன்ன பக்குவத்து இன்னபொழுது இன்ன இடத்து இவள் காரணமாக

இவன் தன்னுணர்வினன் அல்லனாம் என்பதூஉம், இவன் காரணமாக இவள் தன்னுணர்வினள் அல்லளாம் என்பதூஉம் முன்னே முடிந்து கிடந்தன. அது பின்னுங் கொணர்ந்து எய்துவிக்கும்" என எடுத்துக் காட்டுத் தந்து விளக்கியுள்ளார். இவ்விளக்கத்தின் சிறப்பினை உளங்கொண்ட திருவாதவூரடிகள், தாம் இறைவனால் ஆட்கொள்ளப்படுவதற்கு முன்பே, தம்மை அடியவனாக ஆட்கொண்டருளுதல் வேண்டும் என்னும் நியதியை இறைவன் தனக்குரியதொரு முறைமையாகக் கொண்டுடையான் என்பதுபட,

'என்னை முன் ஆள் ஊழுடையான்' (திருக்கோவை-7) எனத் தம்மை ஆண்டுகொண்டருளியஇறைவனை உளங்கசிந்து போற்றுகின்றார். குருவாக எழுந்தருளிய இறைவனைத் தாம் எதிர்ப்பட்டு அம்முதல்வனுக்குத் தாம் அடிமைப் படுத்துவதற்கும் அம்முதல்வன் தம்மை அடிமையாக ஏற்று ஆண்டருளுதற்கும் அமைந்த திருவருள் முறைமையினைப் புலப்படுத்தும் நிலையில் அமைந்தது, 'என்னை முன் ஆள் ஊழுடையான்' என்னும் இத்தொடராகும். முன் என்னை ஆள் ஊழுடையாள் என்பதற்கு 'எனக்கு ஆட்படுந்தன்மை உண்டாவதற்கு முன்னே என்னை ஆள்வதொரு புதிதாகிய முறைமையையுடையான்' எனப் பேராசிரியர் கூறிய விளக்கம் இங்கு நோக்கத்தக்கதாகும்.

'அன்பி னைந்திணைக் களவு' (களவியல்-1) என இறையனார் குறித்தவாறு, திருவாதவூரடிகள், தாம் அன்பின் ஐந்திணைக் களவொழுக்கத்தினைப் பொருளாகக் கொண்டு பாடியருளிய இத்திருக்கோவையின் முதற் பாடலில், நூல் நுதல் பொருளாகிய அகனைந்திணை யொழுகலாற்றினை ஒரு மாலையாகக் கொண்டு உருவக அணியமையக் கூறியுள்ளார்.

திருக்கோவையாரிலுள்ள திருப்பாடல்களிற் சில இறையனார் களவியலுரையில் உரையாசிரியரால் மேற் கோளாகக் காட்டப்பட்ட பாண்டிக்கோவைச் செய்யுட்களின் சொற்பொருள் நடையினை ஒத்து அமைந்திருத்தல் காணலாம்.

**'மேவியொன் னாரைவெண் மாத்துவென் றான்கன்னி வீழ்பொழில்வாய்த்**
**தேவியென் றாம்நின்னை யானினைக்கின்றது சேயரிபாய்**
**காவிவென் றாயகண்ணா யல்லையே லொன்று கட்டுரையாய்**
**ஆவிசென் றாற்பின்னை யாரேபெயர்ப்பர் அகலிடத்தே.(46)**

எனவரும் பாண்டிக்கோவைச் செய்யுள், மொழிபெற வருந்தல் என்ற துறையில் அமைந்ததாகும். இத்துறையில் வரும்,

**காவிநின் றேர்தரு கண்டர்வண் டில்லைக்கண் ணார்கமலத்**
**தேவியென்றே யையஞ் சென்றதன்றேயறியச் சிறிது**

**மாவியன் றன்னமென் னோக்கிநின் வாய்திற வாவிடினென்**
**ஆவியன் றேயமிழ் தேயணங்கே யின்றழிகின்றதே. (41)**

என்ற திருக்கோவைப்பாடல் மேற்குறித்த பாண்டிக் கோவையினைச் சொற்பொருள் நடையால் பெரிதும் ஒத்தமைந்திருத்தல் கூர்ந்து நோக்கத்தக்கதாகும்.

'அவயவம் எழுதல் அரிதென விலக்கல்' என்ற துறையில் அமைந்தது,

**அண்ணல் நெடுந்தேர் அரிகேசரியகன் ஞால மன்னாள்**
**வண்ணம் ஒருவா றெழுதினும் மாமணிவார்ந் தனைய**
**தண்ணெனன்கரு ழல்நாற்றமு மற்றவள் தன்னடையும்**
**பண்ணெனன் மொழியும் எழுத வுளவோ படிச்சந்தமே. (82)**

எனவரும் பாண்டிக்கோவையாகும். 'மொழி நடையெழுதல் அரிதென விலக்கல்' என்னும் துறையில் அமைந்தது,

**'அடிச்சந்த மால்கண்டி லாதனகாட்டி வந்தாண்டு கொண்டேன்**
**முடிச் சந்த மாமல ராக்குமுன் னோன்புலி யூர்புரையுங்**
**கடிச்சந்த யாழ்கற்ற மென்மொழிக் கன்னி யன நடைக்குப்**
**படிச்சந்த மாக்கும் படமுளவோநும் பரிசகத்தே. (76)**

எனவரும் திருக்கோவையாகும். இவையிரண்டும் பொருளால் ஒத்திருத்தல் காணலாம். 'படிச்சந்தம் என்பது ஒன்றன் வடிவை யுடைத்தாய் அதுவென்றே கருதப்படும் இயல்பை யுடையது' என்பர் பேராசிரியர். பரிசகம்-சித்திரசாலை. 'சிறந்த ஓவியம் எழுதப் புகுவோர்' முதற்கண் தாம் எழுதக் கருதிய ஓவியத்திற்கு முன்மாதிரியாக ஒரு வரைபடத்தினை அமைத்துக்கொண்டு அதனைப் பார்த்து அம்முறையில் எழுதுதல் மரபு. அங்ஙனம் முன்மாதிரியாகக் கொள்ளப்படும் வரைபடமே இங்கு 'படிச்சந்தம்' எனக் குறிக்கப் பட்டது.

மேல் எடுத்துக் காட்டிய வண்ணம் பாண்டிக்கோவைச் செய்யுட்களும் திருச்சிற்றம்பலக்கோவைச் செய்யுட்களும் சொற்பொருள் நடையால் ஒத்துக் காணப்படினும், பாண்டிக் கோவைச் செய்யுட்களினும் திருச்சிற்றம்பலக்கோவைச் செய்யுட்கள், நவில்தொறும் சுவைமிகத்தரும் சொற்பொருள் நலங்களின் மேம்பட்டு விளங்குவனவாய் அடிகளது திருவருட் புலமையினை இனிது புலப்படுத்தி நிற்றல் அறியத்தக்கதாகும்.

பகற்பொழுதில் தலைமகளைக் கண்டு அளவளாவி மகிழ்தற்குரிய இடம் இதுவெனக் குறித்த தோழி, தலைமகளுடைய ஆயத்தராகிய மகளிரைப் பல்வேறு விளையாடல்களைக் குறித்துத் தலைமகளை விட்டுத் தம்மியல்பால் பிரியச் செய்து, தமியளாய் நின்ற தலைமகளை உடன்கொண்டு, 'யாமும் போய் மயிலாடல் காண்போம்' எனக்

*கூறிக் குறித்த அவ்விடத்திற்கு அழைத்துச் செல்லும் நிலையில் அமைந்தது,*

**'தினைவளங் காத்துச் சிலம்பெதிர்கூஉய்ச் சிற்றில் முற்றிழைத்துச்
சுனைவளம் பாய்ந்து துணைமலர் கொய்து தொழு தெழுவார்
வினைவளம் நீறெழ நீறணியம்பலவன்றன் வெற்பிற்
புனைவளர் கொம்பரன்னாய் அன்னகாண்டும் புனமயிலே' (118)**

*எனவரும் திருக்கோர்வையாராகும். "இறைவனாகிய தன்னைத் தொழுது கொண்டு துயிலெழும் அன்பர்களது வினையினது பெருக்கம் பொடியாகச் சிதையுமாறு தன் திருமேனிக்கண் திருநீற்றையணியும் தில்லைச் சிற்றம்பலவனது மலையிலே அழகுபெற அணி செய்யப்பெற்று வளர்ந்த பூங்கொடியினை ஒப்பாய்! தினையாகிய வளத்தைக் காத்துச் சிலம்பிற்கு எதிரே (ஓசையுண்டாகக்) கூவியழைத்துச் சிறு வீட்டினை முழுவதுமாகச் செய்து முடித்து, சுனை நீரிற் பாய்ந்து விளையாடி, அத்தன்மைய வாகிய பொழிலிடத்தே (ஆடும்) மயிலைக் காண்போமாக" என்பது இதன்பொருளாகும். இதன் கண் 'அன்ன காண்டும் புனமயிலே' என்ற தொடர்க்கு "அத்தன்மையவாகிய மயிலைக் காண்போம். யாம்" எனப் பொருள் கூறி, அத்தன்மையவாகிய மயிலென்றது, பொருளதிகாரத்திற் கூறப்பட்ட தலைமகள், தான் தமியளாய் நின்று கண்ட மயிலை, இயற்கைப் புணர்ச்சியது இறுதிக்கண் தோழி தனது வாட்டத்தை வினவியபோது, "யான் ஓர் இளமயில் ஆடுவது கண்டேன்; அதனை நீயும் காணப்பெற்றிலை என வாடினேன்" என்று உரைப்பக் கேட்டாளாதலான், அதனைப்பற்றி அம்மயிலைக் காண்டும் என்றாளாயிற்று" என விளக்கம் கூறுவர் பேராசிரியர், ஈண்டுப் பேராசிரியராற் பொருளதிகாரம் எனச் சுட்டப்பட்டது இறையனார் களவியலுரையாகும்.* (*இறையனார் களவியலுக்குப் 'பொருளதிகாரம்' என்னும் பெயருண்டென்பது, "இது பொருளதிகாரம்! நம் பெருமான் நமது இடுக்கண் கண்டு அருளிச்செய்தானாகற்பாலது!" எனவரும் களவியலுரைப் பகுதியாற் புலனாம்.)*

*"பளிக்குப்பாறை மணித்தலத்துமிசை நீல ஆலவட்டம் விரித்தாற் போலத் தன் கோலக் கலாவங் கொளவிரித்து, முளையிள ஞாயிற்று இளவெயில் எறிப்ப ஓர் இளமயில் ஆடுவது கண்டு நின்றாள்" என்பது, இறையனார் களவியலுரை. இவ்வுரையிற் புனைந்து உரைக்கப்பட்ட மயிலையே. 'அன்னகாண்டும் புனமயிலே' எனத்தோழி கூற்றில் வைத்துத் திருவாதவூரடிகள் குறித்துள்ளார் என்பது பேராசிரியர் தரும் விளக்கத்தால் உய்த்துணரப்படும்.*



# சங்க நூல்களும் திருக்கோவையாரும்

இயற்கைப் புணர்ச்சிகண் தலைமகளைக் கண்டு உவந்த நெஞ்சினனாகிய தலைமகன், அவளை ஒரு தெய்வப் பூமாலையாக உருவகஞ் செய்து வியந்துரைப்பதாக அமைந்தது. "திருவளர் தாமரை" எனத் தொடங்கும் இத்திருக் கோவையின் முதல் திருப்பாடலாகும். இங்ஙனம் தலைமகளை ஒரு மாலையாகக் கொண்டு உருவகித்தல் சங்ககாலந் தொட்டு நிலவிவரும் தமிழ் மரபாகும். இம்மரபு,

**"கோடல் எதிர்முகைப் பசுவீ முல்லை**
**நாறிதழ்க் குவளையொ டிடைப்பட விரைஇ**
**ஐது தொடை மாண்ட கோதை போல**
**நறிய நல்லோன் மேனி**
**முறியினும் வாய்வது முயங்கற்கும் இனிதே"** (குறுந்-62)

என்னும் குறுந்தொகைச் செய்யுளில் இடம் பெற்றிருத்தல் காணலாம்.

**'பூப்புனை மாலையும் மாலைபுனை மாதரும்**
**தோற்புனை வில்நாண் தொடர்கைக் கட்டியும்**
**கோச்சேரன் பெயருங் கோதை யென்றாகும்'** (திவாகரம்-11)

என்பதனாற் பெண்ணுக்கு மாலை யென்று பெயராயிற்று எனப் பேராசிரியர் கூறும் விளக்கம் இம்மரபினைப் புலப்படுத்துதல் அறியத்தக்கதாகும்.

இயற்கைப் புணர்ச்சியின்கண் தலைமகளைக் கண்டு அவளைஅடையக் கருதிய தலைவன், தன்னிடத்து அவளுக்கு உண்டாகிய காதலை அவள் கண்ணிற் கண்டு தன் மனத்துட் கொள்வதாக அமைந்தது, 'அணியும் அமிழ்தும்' என்னும் முதற் குறிப்புடைய ஐந்தாந் திருப்பாடலாகும். இதன்கண்,

**'பிணியும் அதற்கு மருந்தும் பிறழப் பிறழ மின்னும்**
**பணியும் புரைமருங்குற் பெருந்தோளி படைக்கண்களே'**

எனவரும் தொடர்,

**'மருந்தெனின் மருந்தே வைப்பெனின்வைப்பே**
**அரும்பிய சுணங்கி னம்பகட் டிளமுலைப்**
**பெருந்தோள் நுணுகிய நுசுப்பிற்**
**கல்கெழு கானவர் நல்குறு மகளே'** (71)

எனவரும் குறுந்தொகைச் செய்யுளையும்,

**'பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை**
**தன்னோய்க்குத் தானே மருந்து'** (1102)

*எனவரும் திருக்குறளையும் அடியொற்றி யமைந்திருந்தல் காணலாம்.*

*வாட்டம் வினாவிய பாங்கனை நோக்கி, 'நெருநலை நாள் கைலைப்பொழிற்கட் சென்றேன். அவ்விடத்து ஒரு சிற்றிடைச் சிறுமான்விழிக் குறத்தியால் இவ்வாறு ஆயினேன்' எனத் தலைவன் தனக்கு உற்றதனைக் கூறுவதாக அமைந்தது,*

**கோம்பிக் கொதுங்கி மேயா மஞ்ஞை குஞ்சரங் கோளிழைக்கும்**
**பாம்பைப் பிடித்துப் படங்கிழித் தாங்கப் பணைமுலைக்கே**
**தேம்பற் றுடியிடை மான்மட நோக்கிதில்லைச் சிவன்றாள்**
**ஆம்பொற் றடமலர் சூடுமன் ஆற்றல் அகற்றியதே.** (21)

*எனவரும் திருக்கோவையாகும். இச்செய்யுள்,*

**'சிறுவெள் ளரவின் அவ்வரிக் குருளை**
**கானயானை அணங்கி யாஅங்கு**
**இளையன் முளைவா ளெயிற்றன்**
**வளையுடைக் கையள் எம் அணங்கியோளே'** (119)

*எனவரும் குறுந்தொகைச் செய்யுட் பொருளை அடியொற்றி அமைந்ததாகும்.*

*கழறிய பாங்கற்குத் தலைமகன் கழற்றெதிர் மறுத்தது என்னுந்துறையில் அமைந்தது,*

**'அம்மவாழிகேளிர் முன்னின்று**
**கண்ட னிராயிற் கழறலிர் மன்னோ**
..... ....... .......
**மாதர் வாண்முகம் மதைஇய நோக்கே'** (130)

*எனவரும் அகநானூற்றுப் பாடலாகும். இதனை அடியொற்றி யெழுந்தவை,*

**'குண்டலம் சேர்ந்த மதிவாள் முகத்த கொழுங் கயற்கண்**
**கண்டிலிர் கண்டால் உரையீர் கழறிய கட்டுரையே'** (31)

*எனவரும் பாண்டிக்கோவையும்,*

**'பூணிற் பொலி கொங்கையாவியை ஓவியப் பொற்கொழுந்தைக்**
**காணிற் கழறலை கண்டிலை மென்றோட் கரும்பினையே'** (23)

*எனவரும் திருக்கோவையும் என்பது இவற்றை ஒப்பு நோக்குங்கால் நன்கு புலனாம்.*

*பாங்கற் கூட்டத்தின்கண் தலைமகன், தலைமகள் முன் நின்று தனது ஆற்றாமை மிகுதி கூறக்கேட்ட தலைமகள், தனக்குரிய நாணம் தன்னைவிட்டு நீங்கா நிற்க, அதற்கு வருந்துவதாக அமைந்தது,*

**குருநாண் மலர்ப்பொழில் சூழ்தில்லைக் கூத்தனை ஏத்திலர் போல்**
**வருநாள் பிறவற்க வாழியரோ மற்றென் கண்மணி போன்**
**றொருநாள் பிரியா துயிரிற் பழகி யுடன்வளர்ந்த**
**அருநாண் அளிய அழல்சேர் மெழுகொத் தழிகின்றதே. (44)**

*எனவரும் திருக்கோவையாகும். இது,*

**'அளிதோ தானே நாணே நம்மோடு**
**நனிநீ டுழந்தன்று மன்னே யினியே**
**வான்பூங் கரும்பின் ஓங்குமணற் சிறுசிறை**
**தீம்புனல் நெரிதர வீந்துக் காஅங்குத்**
**தாங்கு மளவைத் தாங்கிக்**
**காமம் நெரிதரக் கைந்நில் லாதே' (149)**

*என்னும குறுந்தொகைச் செய்யுளை நினைவுபடுத்துவதாகும்.*

*பாங்கற் கூட்டத்து இறுதிக்கண், 'விசும்பும் நிலனும் ஒருங்குபெறவரினும் என் உயிரனைய இவளை மறந்து அதன்கண் முயலேன்' எனத் தலைமகள் தனது இன்றியமையாமை கூறுவதாக அமைந்தது,*

**நீங்கரும் பொற்கழற் சிற்றம் பலவர் நெடு விசும்பும்**
**வாங்கிருந் தெண்கடல் வையமும் எய்தினும் யான்மறவேன்**
**தீங்கரும்பும் அமிழ்துஞ் செழுந்தேனும் பொதிந்து செப்புங்**
**கோங்கரும்புந் தொலைந் தென்னையும் ஆட்கொண்ட**
**கொங்கைகளே. (46)**

*எனவரும் திருக்கோவையாகும். இது,*

**'விரிதிரைப் பெருங்கடல் வளைஇய வுலகமும்**
**அரிதுபெறு சிறப்பிற் புத்தேள் நாடும்**
**இரண்டும் தூக்கிற் சீர் சாலாவே**
**பூப்போல் உண்கண் பொன்போல் மேனி**
**மாண்வரி யல்குற் குறுமகன்**
**தோண்மறு படூஉம் வைகலொ டெமக்கே' (101)**

*எனவரும் குறுந்தொகையினை ஒத்திருத்தல் அறிக.*

*தலைமகளது புணர்ச்சி நிகழ்வினை ஆராய்ந்தறிய விரும்பிய தோழி, வானத்தில் தோன்றும் பிறைமதியைக் காட்டித் தான் தொழுது நின்று, 'நீயும் இதனைத் தொழுவாயாக' எனத் தலைவியை நோக்கிக் கூறுவதாக அமைந்தது.*

**மைவார் கருங்கண்ணி செங்கரம் கூப்பு மறந்து மற்றைப்**
**பொய்வா னவரிற் புகாதுதன் பொற்கழற் கேயடியேன்**
**உய்வான் புகவொளிர் தில்லை நின்றோன் சடை மேல தொத்துச்**
**செவ்வா னடைந்த பசுங்கதிர் வெள்ளைச் சிறுபிறைக்கே. (67)**

*எனவரும் திருக்கோவையாகும். இது,*

**'தொழுது காண் பிறை' (178)**

*எனவரும் குறுந்தொகைத் தொடருக்கமைந்த விளக்கமாக உள்ளமை உய்த்துணரத்தக்கதாகும். செவ்வானடைந்த வெள்ளைச் சிறுபிறை, உலகெலாம் உய்யத் தில்லைமன்றுள் ஆடல் புரிந்தருளும் இறைவனது செஞ்சடையின் கண்ணதாகிய வெண்பிறையினைப் போன்று விளங்குவதாதலின் அது யாவராலும் தொழத்தகும் பெருஞ் சிறப்பினையுடைதாயிற்று எனத் திருவாதவூடிகள் தரும் விளக்கம், அந்தியிற் பிறை தொழுதலாகிய இவ் வழிபாட்டிற்கும் சிவ வழிபாட்டிற்கும் உள்ள தொடர்பினைப் புலப்படுத்தும் முறையில் அமைந்ததாகும்.*

*தலைமகளை அடையப்பெறாது ஆற்றா நிலையினனாகிய தலைமகன், மடலூர்ந்தாயினும் தலைமகளையடைய வெண்ணிய தனது ஆற்றாமை தோன்ற, மடலூர்தலை உலகின்மேல் வைத்துக் கூறுவாக அமைந்தது,*

**காய்சின வேலன்ன மின்னியல் கண்ணின் வலைகலந்து**
**வீசின போதுள்ள மீனிழந்தார் வியன் தென்புலியூர்**
**ஈசன சாந்தும் எருக்கும் அணிந்தோர் கிழிபிடித்துப்**
**பாய்சின மாவென ஏறுவர் சீறூர்ப் பனைமடலே.**
**(திருக்கோவை-74)**

*எனவரும் திருப்பாடலாகும். இது,*

**'மாவென மடலும் ஊர்ப் பூவெனக்**
**குவிமுகிழ் எருக்கங் கண்ணியுஞ் சூடுப**
**மறுகின் ஆர்க்கவும் படுப**
**பிறிதும் ஆகுப காமங்காழ்க் கொளினே' (17)**

*என்னும் குறுந்தொகைச் செய்யுளைத் தழுவியமைந்ததாகும். இதன்கண் தலைமகள் கண்ணினைக் 'கண்ணின் வலை' எனக்குறித்த உருவகம்,*

**'நுண்வலைப் பரதவர் மடமகள், கண்வலைப் படூஉம்'(184)**

*எனவரும் குறுந்தொகைத் தொடரில் அமைந்துள்ளமை இங்கு ஒப்புநோக்குதற்குரியதாகும்.*

*தலைமகனது குறையினை ஏற்றுக்கொண்ட தோழி, தலைமகளைக் குறை நயப்பிக்க வேண்டியவன்மொழியாற் கூறின்*

*அவள் மனம் மெலியும் என்றஞ்சி, "ஒரு நண்டு தன் பெடை நண்டுக்கு நாவற்பழத்தை நல்குதலைக் கண்டு ஒரு பெரியோன் பேய் பிடித்தாற்போல நின்றன். அந்நிலையை நீ கண்டாயாயின் உயிர் வாழமாட்டாய். யான் வன்னெஞ்ச முடையே னாதலின் வருத்தமின்றி மீண்டேன்" என மென்மொழியோடு சிறிது வன்மொழியும் அமைய விரவிக் கூறுவது,*

**'நீகண்டனை யெனின் வாழலை நேரிழை யம்பலத்தான்**
**சேய்கண் டனையன் சென்றாங்கோ ரலவன்றன் சீர்ப்பெடையின்**
**வாய்வண் டனையதொர் நாவற்கனி நனி நல்கக்கண்டு**
**பேய்கண் டனையதொன் றாகிநின்றானப் பெருந்தகையே' (84)**

*என்னும் திருக்கோவையாகும். இஃது,*

**"அகலிலை நாவல் உண்டுறை யுதிர்த்த**
**கனிகவின் சிதைய வாங்கிக் கொண்டுதன்**
**தாழை வேரளை வீழ்துணைக் கிடூஉம்**
**அலவற் காட்டி நற்பாற் றிதுவென**
**நினைந்த நெஞ்சமொடு நெடிது பெயர்ந்தோனே" (380)**

*எனவரும் அகநானூற்றுப் பாடற்பொருளைத் தழுவி அமைந்த தாகும்.*

**'புணர்துணையோ டாடும் பொறியலவன் நோக்கி**
**இணர்ததையும் பூங்கானல் என்னையும் நோக்கி**
**உணர்வொழியப் போன ஒலிதிரைநீர்ச் சேர்ப்பன்**
**வணர்சுரியைப் பாலோய் வண்ணம் உணரேனால்'**
**(சிலப்பதிகாரம் 7-31)**

*எனவரும் கானல் வரிப்பாடல் இங்கு ஒப்புநோக்கி யுணரத்தக்க தாகும்.*

*தலைமகளது நாணுரைத்துக் கையுறை மறுத்த தோழி, "அவள் நாணம் ஒருபுறமிருக்கட்டும். குறக்குடியிற் பிறந்த யாங்கள் வேங்கை மலரையன்றித் தெய்வத்திற்குரிய மலரைச்சூடுதற்கு அஞ்சுகின்றோம். ஆதலால் இக்கண்ணி எம் குலத்திற்கு இசையாது" எனத் தலைமகளை நோக்கி மறுத்துக் கூறுவதாக அமைந்தது,*

**நறமனை வேங்கையின் பூப்பயில் பாறையை நாகம் நண்ணி**
**மறமனை வேங்கை யெனநனியஞ்சு மஞ்சார் சிலம்பா**
**குறமனை வேங்கைச் சுணங்கொ டணங்கலர் கூட்டுபவோ**
**நிறமனை வேங்கை யதளம் பலவ னெடுவரையே.**
**(திருக்கோவை-96)**

*என்னுந் திருப்பாடலாகும். இதன்கண் வேங்கை மலர்களால் மூடப்பெற்று மறைந்த பாறை, புலியினை யொத்துத் தோன்றியது என்னும் இவ்வுவமை,*

**'கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்**
**இரும்புலிக் குருளையிற் றோன்றும் காட்டிடை' (47)**

எனவரும் குறுந்தொகைச் செய்யுளிற் குறிக்கப் பெற்றுள்ளமை காணலாம். "உறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கையை" (கலித்தொகை 38) என்பதும் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

தான் வேண்டிய இரவுக்குறியினை வழியருமை கூறித் தோழி மறுத்தாளாக, அதுகேட்ட தலைமகன், 'அடைதற்கு அரியளாகிய தலைவியை விரும்பி நீ மெலிகின்றாய். இதற்கு யான் ஆற்றேன்' எனத் தன்னெஞ்சிற்குக் கூறி வருந்துவதாக அமைந்தது,

**மாற்றே னெனவந்த காலனை ஓலமிட வடர்த்த**
**கோற்றேன் குளிர்தில்லைக் கூத்தன் கொடுங்குன்றி னீள்குடுமி**
**மேற்றேன் விரும்பு முடவனைப் போல மெலியுநெஞ்சே**
**ஆற்றே னரிய அரிவைக்கு நீவைத்த அன்பினுக்கே. (150)**

எனவரும் திருக்கோவையாகும். இச்செய்யுளில்,

**'குறுந்தாட் கூதளி யாடிய நெடுவரைப்**
**பெருந்தேன் கண்ட விருக்கை முடவன்**
**உட்கைச் சிறுகுடைக் கோலிக் கீழிருந்து**
**சுட்டுபு நக்கியாங்கு' (குறுந்தொகை-60)**

எனத் தலைமகள் கூற்றில் வந்த உவமையைத் தலைவன் கூற்றிற்கேற்ப அடிகள் மாற்றி யமைத்திருத்தல் அறிந்து மகிழத்தக்கதாகும்.

தலைவனைக் காணபெறாது வருந்தும் தலைவி, கடலை நோக்கி, 'இன்றிரவெல்லாம் என்னைப் போல நீயும் துன்பமுற்றுக் கலங்கித் தெளிவுபெறாது அலைவுற்றனை. என்னைப் போல உன்னையும் பிரிந்து சென்றார் உளரோ' என்று தான் உற்ற துயரத்தைக் கடலுடன் சேர்த்துக் கூறுவதாக அமைந்தது,

**பூங்கணை வேளைப் பொடியாய் விழவிழித் தோன்புலியூர்**
**ஓங்கணை மேவிப் புரண்டு விழுந்தெழுந் தோலமிட்டுத்**
**தீங்கணைந் தோரல்லுந் தேறாய் கலங்கிச் செறிகடலே**
**ஆங்கணைந் தார் நின்னையும் உளரோ சென் றகன்றவரே**
**(179)**

என்னும் திருக்கோவையாகும். இது,

**'யாரணங் குற்றனை கடலே, பூழியர்**
**சிறுதலை வெள்ளைத் தோடுபரந் தன்ன**
**மீனார் குருகின் கானலம் பெருந்துறை**
**வெள்வீத் தாழை திரையலை**
**நள்ளென் கங்குலும் கேட்கும் நின்குரலே' (163)**

என்னும் குறுந்தொகைச் செய்யுளை ஒத்தமைந்ததாகும்.

உடன்போக்கு அருமை கூறிய தலைவனை நோக்கி 'தலைமகள் நின்னோடு போகப்பெறின் அவளுக்கு வெம்மை மிக்க பாலைநிலமும், குளிர்ந்த மருதநிலமும் தடாகமுமாம் ஆதலின், அவளை நின்னொடு உடன் கொண்டு போவாயாக' எனத்தோழி, தலைவியின் பெருவிருப்பத்தினைக் கூறுவதாக அமைந்தது,

**பிணையுங் கலையும்வன் பேய்த்தேரினைப் பெரு நீர் நசையால்**
**அணையு முரம்பு நிரம்பிய அத்தமும் ஐய மெய்யே**
**இணையு மளவுமில்லா விறையோனுறை தில்லைத் தண்பூம்**
**பணையுந் தடமுமன்றே நின்னொ டேகினெம்**
**பைந்தொடிக்கே (202)**

எனவரும் திருக்கோவையாகும். இது,

**'யானை கைமடித் துயவும்**
**கானமும் இனியவாம் நும்மொடு வரினே' (388)**

என்னும் குறுந்தொகையினை ஒத்திருத்தல் அறியத்தக்கதாம்.

தலைமகள் நோக்கிக் கற்பு நலன் உரைத்த தோழி, எம் பெருமான் நின்னை நீரில்லாத வெய்ய பாலைநில வழியில் உடன் கொண்டுபோக எண்ணுகின்றான் எனத் தலைமகளது நினைவு கூறுவதாக அமைந்தது,

**குறப்பாவை நின்குழல் வேங்கையம் போதொடு கோங்கம்விராய்**
**நறப்பாடலம் புனைவார் நினைவார் தம்பிரான் புலியூர்**
**மறப்பா னடுப்பதொர் தீவினை வந்திடிற் சென்று சென்று**
**பிறப்பா னடுப்பினும் பின்னுந் துன்னத்தகும் பெற்றியரே. (205)**

என்னுந் திருக்கோவையாகும். "குறக்குடியிற் பிறந்த பாவை போல்வாய், இறைவனது திருத்தலமாகிய பெரும் பற்றப்புலியூரை மறக்கக்கூடுவதொரு தீவினை விளைவு வருமாயின், பல பிறப்புக் களினுஞ் சென்று சென்று பிறக்கக் கூடினும் பின்னுஞ் சென்று சேரத்தகும் நற்பண்பினையுடைய தலைவர், நின் கூந்தலின்கண் அணியப்பெற்ற வேங்கைப்பூவொடு கோங்கமலரைச் சேர்த்துத் தேனையுடைய பாதிரிமலரை அணியக் கருதுகின்றார்" என்பது இதன் பொருள். இதன்கண் 'நின்குழல் வேங்கையம் போதொடு கோங்கம் விராய், நறப்பாடலம் புனைவார் நினைவார்' என்றது, 'குறிஞ்சி நிலத்தவளாகிய நின்னை நீரற்ற பாலைநில வழியிலே உடன்கொண்டு செல்லத்துணிந்தார்' என்பதனை உணர்த்திய வாறு. ஈண்டு வேங்கை குறிஞ்சி நிலத்தையும், கோங்கம் பாடலம் (பாதிரி) என்பன பாலை நிலத்தையும் உணர்த்தி நின்றன. 'புலியூரை ஒருகால் நினைந்த துணையானே பிறவி கெடுமன்றே; அவ்வாறன்றி அதனை மறந்தவாற்றானே பிறக்கக் கூடினும்

என்னுங் கருத்தால் 'பிறப்பான் அடுப்பினும்' என்றாள். அலர் நாணி உடன் போகாது ஈண்டு இற்செறிக்கப்பட்டு அவரை எதிர்ப்படாதிருத்தல் அன்பன்று என்னுங் கருத்தால், 'பிறப்பான் அடுப்பினும் பின்னும் துன்னத்தகும் பெற்றியர்' என்றாள். தோழிகூற்றில் அமைந்த இத்தொடர்,

**'இம்மை மாறி மறுமையாயினும்**
**நீயாகியர் என் கணவனை**
**யானாகியர் நின் னெஞ்சு நேர்பவளே' (குறுந்தொகை-49)**

எனத் தலைவி கூற்றாக அமைந்த தொடர்ப் பொருளை அடியொற்றி யுள்ளமை கூர்ந்துணரத்தக்கதாகும்.

'மறைநிலை திரியினும் கடல் முழுதும் வற்றினும் இவளிடத்து நின் அருள்திரியாமற் பாதுகாப்பாயாக எனத் தோழி தலைமகனுக்கு ஓம்படை கூறித் தலைமகளைக் கொடுப்பதாக அமைந்தது,

**'பறந்திருந் தும்பர் பதைப்பப் படரும் புரங்கரப்பச்**
**சிறந்தெரி யாடிதென்றில்லை யன்னாள் திறத்துச் சிலம்பா**
**அறந்திருந் துன்னருளும் பிறிதாயின் அருமறையின்**
**திறந்திரிந் தார்கலியும் முற்றும் வற்றுமிச் சேணிலத்தே.' (213)**

என்னும் திருக்கோவையாகும். இது,

**'நிலம்புடை பெயரினும் நீர்தீப் பிறழினும்**
**இலங்குதிரைப் பெருங்கடற் கெல்லை தோன்றினும்**
..... ....... .......
**கேடெவ னுடைந்தோ தோழி**
..... ....... .......
**ஓங்குமலை நாடனொ டமைந்த நம் தொடர்பே'**
**(குறுந்தொகை-373)**

எனவரும் பாடற்பொருளைத் தன்னகத்துக் கொண்டு உள்ளமை காணலாம்.

உடன்போக்கில் தலைவனுடன் சென்ற தலைவியைத் தேடிச் சுரத்திடைச் சென்ற செவிலியை நோக்கிய சான்றோர், 'சந்தனமும் முத்தும் சங்கும்' தாம் பிறந்த இடத்திற்குச் சிறிதும் பயன்படாது, தம்மை விரும்பி அணிவாரிடத்தே சென்று பயன்தருவனவாம். அது போல மகளிரும் தம்மை உற்ற கணவற்கு அன்றிப் பெற்றோர்க்குச் சிறிதும் பயன்பட மாட்டார்கள். ஆதலால் நீ கவலையடைதல் வேண்டா' என உலகியல்பு கூறுவதாக அமைந்தது,

சுரும்பிவர் சந்துந் தொடுகடல் முத்தும் வெண்சங்கும் எங்கும்
விரும்பினர் பாற்சென்று மெய்க்கணியாம் வியன் கங்கையென்னும்
பெரும்புனல் சூடும் பிரான் சிவன் சிற்றம்பலமனைய
கரும்பன மென்மொழியாரும் அந்நீர்மையர் காணுநர்க்கே. (248)

*என்னும் திருக்கோவையாகும். 'எறித்தருகதிர் தாங்கி' (9) எனத் தொடங்கும் பாலைக்கலியில்*

'பலவுறு நறுஞ்சாந்தம் படுபவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்கவைதாம் என்செய்யும்
நினையுங்கால் நும்மகள் நுமக்கும் ஆங்கனையளே'

'சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கவைதாம் என்செய்யும்
தேருங்கால் நும்மகள் நுமக்கும் ஆங்கனையளே'

*எனவும் வரும், இரண்டு தாழிசைப் பொருள்களும் இத்திருக் கோவையில் எடுத்தாளப் பெற்றிருத்தல் இங்கு ஒப்பிட்டு உணரத் தக்கதாகும். மேற்காட்டிய பாலைக்கலியில் மூன்றாந்தாழிசையிற் குறிக்கப்பட்ட ஏழ்புணரின்னிசை இத்திரக்கோவையிற் குறிக்கப் பெறவில்லை, பாலைக்கலியாசிரியர் குறித்த சந்தனமும் முத்தும் ஆகிய இரண்டையும் இத்திருப்பாடலில் எடுத்துக்காட்டிய திருவாதவூரடிகள், அவ்வாசிரியரால் மூன்றாவதாகக் குறிக்கப்பட்டுள்ள ஏழ்புணரின்னிசையை எடுத்துக்காட்டாமல் அதனைக்குறிப்பிட வேண்டிய இடத்தில் வெண்சங்கினைக் குறித்துள்ளார். 'உற்றார்க்குரியர் பொற்றொடி மகளிர்' என்னும் ஒருண்மையினை வற்புறுத்தும் நோக்குடன் காட்டப்படும் இவ் ஏதுக்கள், ஊற்றுணர்ச்சியுடைய மெய்க்கு அணியாம் ஒரு தன்மையினைக் குறித்தனவாகவே அமைதல் நன்றென்னும் கருத்தினால், செவிக்கின்பந்தரும் ஏழ்புணர் இன்னிசையைக் குறிப்பிடாது மெய்க்கு அணிசெய்யும் வெண்சங்கினை அடிகள் இத்திருப்பாடலிற் சேர்த்துக் கூறியுள்ளமை கூர்ந்து உணர்த்தற்குரியதாகும்.*

*'இரவும் பகலும் இங்கு வாராது தவிர்க' எனத் தலைவனை வரவுவிலக்கினதோழி, 'இனி நீ தலைவியை மணத்தற்கு ஏற்றகாலம் இதுவாகும்' என்றுரைத்து மணந்து கொள்ளத் தூண்டுவதாக அமைந்தது,*

மையார் கதலி வனத்து வருக்கைப் பழம்விழுதேன்
எய்யா தயின்றிள மந்திகள் சோரும் இருஞ்சிலம்பா
மெய்யா அரியதென் அம்பலத்தான் மதியூர்கொள் வெற்பின்
மொய்யார் வளரிள வேங்கை பொன் மாலையின்
முன்னினவே. (262)

எனவரும் திருக்கோவையாகும். 'இருள் நிரம்பிய வாழைக் காட்டின்கண் வருக்கைப் பலாவின் பழம் முதிர்ந்து விழுதலால் உண்டாகிய தேனை இளைய பெண்குரங்குகள் தேனென்று அறியாமல் (நீர் எனக் கருதி நிறையப்) பருகி, அதனால் உண்டாகிய களிப்பினால் மயக்கமுற்றுத் தளரும் மலையினை யுடைய தலைவனே, வானத்தில் மதி வளர்ந்து நிரம்பாநின்றது; தில்லைச் சிற்றம்பலவனாகிய இறைவனுக்குரிய இம் மலையின்கண் செறிந்து வளர்ந்துள்ள வேங்கை மரங்கள் பொன்மலைகள் போற் (கொத்தாகப்) பூத்துத் தோன்றுகின்றன. இப்பொழுது உண்மையாகத் (தலைவியின் நன்மை குறித்து 'நின்னாற்) செய்தற்கு அரியது யாதுளது?' எனத் தலைவனை நோக்கித் தோழி வினவுகின்றாள். இத்திருப்பாடல்,

**"கோழிலை வாழைக் கோண்முதிர் பெருங்குலை**
**யூழுறு தீங்கனி யுண்ணுநர்த் தடுத்த**
**சாரற் பலவின் சுளையோ டூழ்படு**
**பாறை நெடுஞ்சுனை விளைந்த தேறல்**
**அறியா துண்ட கடுவன், அயலது**
**கறிவளர் சாந்தம் ஏறல் செல்லாது**
**நறுவீ யடுக்கத்து மகிழ்ந்து கண்படுக்கும்**
**குறியா வின்பம் எளிதின் நின்மலைப்**
**பல்வேறு விலங்கும் எய்தும் நாட,**
**குறித்த வின்பம் நினக் கெவன் அரிய**
**..... ....... ....... பைம்புதல்**
**வேங்கையும் ஒள்ளிணர் விரிந்தன**
**நெடுவெண்டிங்களும் ஊர்கொண்டன்றே"** **(அகம்-2)**

எனவரும் கபிலர் பாடலை அடியொற்றியமைந்துள்ளமை காணலாம். கடுவன் -ஆண்குரங்கு. "கடுவனானது தேனை அறியாது நுகர்ந்தது, பின்பு தனது தொழிலாகிய மரமேறுதலும் செய்யமாட்டாது, தனக்கு அயலாதாகிய சந்தனத்தின் நிழலிற் பூமேலே உறங்குகின்றாற்போல, நீயும் இக்களவொழுக்கமாகிய இன்பம் நுகர்ந்து நினது தொழிலாகிய அறநெறியையுந் தப்பி, இக்களவினை நீங்கி வரையவுமாட்டாது, இக்களவொழுக்க மாகிய இன்பத்திலே மயங்கா நின்றாய்" என்பது மேற்குறித்த அகப்பாட்டில் அமைந்த உள்ளுறையாகும். இதன்கண் பலவின் தேனை அறியாது பருகிக்களித்து மயங்குதலாகியசெயல், கடுவனுக்குரியதாகக் கூறப்பட்டிருக்கவும், திருவாதவூரடிகள் அச்செயலை மந்திகளுக்கு உரியதாக மாற்றியமைத்துள்ளமை கூர்ந்து நோக்கற் பாலதாகும். 'நின்மலைக்கண் வாழும் உணர்வில்லாத தாழ்ந்த விலங்கினத்தனவாகிய பெண்

குரங்குகளும் இத்தன்மைத்தாகிய தேனை நிறையப் பருகித் தம்மை மறந்து இன்பவாழ்க்கையில் திளைத்தனவாய் மகிழா நிற்கவும் நின்னாற் காதலிக்கப்பெற்று நின்னுயிரிற் சிறந்தாளாகிய தலைமகள் நின்னை மணந்து நின்மனைக்கண் இருந்து மகிழும் இன்பநிலையினை எய்தப் பெறாமல் நின்பிரிவினால் தனித்து வருந்த நீ இங்ஙனம் களவொழுக்கத்தில் நீட்டித்து ஒழுகுவது அடைந்தார்ப் புரக்கும் நினது அருட்பண்பிற்குச் சிறிதும் ஏற்புடையதன்றாம்' எனத் தோழி தலைமகளை நோக்கி விரைவில் மணந்துகொள்ளுமாறு வற்புறுத்தினாள் என்பதனை அறிவுறுத்தும் நோக்கத்தினாலேயே அடிகள் இவ்வாறு மாற்றியமைத்துள்ளார் எனக் கருதவேண்டியுளது. இந்நுட்பம், "நின்மலைக்கண் விலங்குகளும் இத்தன்மைத்தாகிய தேனைக் குறியாதுண்டு இன்புறா நின்றன வாகலின், 'குறித்தவற்றின் நினக்கு அரியாது யாது?' இதுவன்றோ பருவமும் என வரைவு பயப்பக் கூறியவாறு" என இத்திருக்கோவையுரையிற் பேராசிரியர் கூறும் விளக்கத்தால் இனிது புலனாதல் காணலாம்.

வரைவுடம்படாமையின் தோழி தலைமகனோடு புலந்து கூறக்கேட்ட தலைமகள், அக்குறிப்பறிந்து, 'கார்காலத்து மயிலை யொப்பாய், சிற்றம்பலவராகிய இறைவரை அடையாதாரைப் போன்று வருந்தச் சிங்கமானது கொல்லும் ஆண் யானையினைச் சென்றணுகாதவாறு பெண்யானை அவ்விரண்டற்கும் இடையே சென்று புகும் கல் நிரம்பிய வழியிலே நீர் வந்தவாறு என்? என்று வினவுவாரைப் பெற்றேமாயின், கரடியானது குரும்பியாகிய உணவு காரணமாகப் பாம்புப்புற்றினை அகழாநிற்கும் நள்ளிருளிலே அத்தலைவர் இருந்த இடத்திற்குச் செல்லுதல் அரிதன்று' எனத் தோழிக்குக் கூறுவதாக அமைந்தது.

**'வல்சியி னெண்கு வளர்புற் றகழ மல்கும் மிருள்வாய்ச்**
**செல்வரிதன்றுமன் சிற்றம்பலவரைச் சேரலர்போற்**
**கொல்கரிசீயங் குறுகாவகை பிடிதானிடைச்செல்**
**கல்லதரென்வந்த வாறென்பவர்ப்பெறிற் கார்மயிலே' (264)**

எனவரும் திருக்கோவையாகும். இஃது,

**'ஈயற் புற்றத் தீர்ம்புறத் திருத்த**
**குரும்பி வல்சிப் பெருங்கை யேற்றை**
**தூங்கு தோற் றுதிய வள்ளுகிர் கதுவலிற்**
**பாம்பு மதனழியும் பானாட் கங்குலும்**
**அறிய வல்லம னிகுளை, பெரிய**
**கேழலட்ட பேழ்வாயேற்றை**
**பலாவம லடுக்கம் புலர வீர்க்கும்**

**கழைநரல் சிலம்பி னாங்கண் வழையொடு**
**வாழை யோங்கிய தாழ்கண் ணசும்பிற்**
**படுகடுங் களிற்றின் வருத்தஞ் சொலியப்**
**பிடிபடி முறுக்கிய பெருமரப் பூசல்**
**விண்டோய் விடரகத் தியம்பு மவர் நாட்**
**டெண்ணரும் பிறங்கல் மானதர் மயங்காது**
**மின்னுவிடச் சிறிய வொதுங்கி மென்மெலத்**
**துளிதலைத் தலைஇய மணியே ரைம்பால்**
**சிறுபுறம் புதைய வாரிக்குரல் பிழியூஉ**
**நெறி கெட விலங்கிய நீயி ரிச்சுரம்**
**அறிதலு மறிதிரோ என்னுநர்ப்பெறினே' (8)**

*என்னும் அகநானூற்றுச் செய்யுளைப் பின்பற்றி அமைந்ததாகும்.*

*தலைவன் வரைபொருட்பிரிய ஆற்றாளாகிய தலைமகள், தனக்கு ஆறுதல்கூறி வற்புறுத்தும் தோழியை நோக்கி, ஆற்றாமையால் வருந்திக் கூறுவதாகவுள்ளது.*

**வந்தாய் பவரையில்லா மயின்முட்டை யிளையமந்தி**
**பந்தா டிரும்பொழிற் பல்வரை நாடன்பண்போ வினிதே**
**கொந்தார் நறுங்கொன்றைக் கூத்தன்றென்றில்லை**
**தொழார் குழுப்போற்**
**சிந்தாகுலமுற்றுப் பற்றின்றி நையுந் திருவினர்க்கே. (276)**

*எனவரும் திருக்கோவையாகும். "கொத்துக்களாகப் பொருந்திய நறுமணம் வாய்ந்த கொன்றைமலரையணிந்த கூத்தப் பெருமானுக் குரியதாய்த் தென்றிசைக்கண் அமைந்த தில்லைச் சிற்றம்பலத்தை வணங்காதார் ஆகிய குழுவினையொத்து மனக்கலக்கத்தையுற்றுத் தமக்கு ஓர் பற்றுக்கோடின்றி வருந்தும் திருவினையுடையார்க்கு, சென்று ஆராய்ந்து பேணுவாரில்லாத மயிலின் முட்டையினை இளைய பெண் குரங்கு பந்தாடி விளையாடும் பெரிய பொழிலையும் பக்க மலைகளையும் உடைய நாட்டையுடைய தலைவனது இயல்பு இனிமையுடையதாகும்" என்பது இதன் பொருள். இதன்கண் 'நையுந் திருவினர்க்கு' என்றது, வருந்துமளவு இறந்துபடாது உயிர்தாங்கி யிருந்து, அவனது தலையளி பெற்றபொழுது இன்புறும் நல்வினையையுடைய மகளிர்க்கு என்றவாறு. எனவே, யான் அத்திருவினைப் பெற்றிலேன் எனத் தலைவி கூறினாளாயிற்று.*

*'உற்றது ஆராய்ந்து ஓம்புவார் இல்லாத மயிலினது முட்டையால், ஈன்ற வருத்தமறியாத இளமந்தி மயிலின் வருத்தமும் முட்டையின் மென்மையும் பாராது, பந்தாடு*

கின்றாற்போல, காதலரான் வினவப்படாத என் காமத்தை நீ இஃது உற்றறியாமையின், எனது வருத்தமும் காமத்தினது மென்மையும் பாராது, இவ்வாறு உரைக்கின்றாய்' என உள்ளுறை வகையால் தோழியை நெருங்கி வன்புறை எதிரழிந்தவாறு கண்டு கொள்க. அல்லதூஉம் வந்து ஆய்பவர் தோழியாகவும், இளமந்தி தலைவனாகவும், பந்தாடுதல் தலைமகளது வருத்தம் பாராது தான் வேண்டியவாறு ஒழுகும் அவனது ஒழுக்கமாகவும் உரைப்பினும் அமையும்" எனப் பேராசிரியர் இத் திருக் கோவையின் உள்ளுறைப் பொருளை இனிது விளக்கியுள்ளார். இது,

**'கான மஞ்ஞை யறையீன் முட்டை**
**வெயிலோடு முசுவின் குருளையுருட்டும்**
**குன்றநாடன் கேண்மை யென்றும்**
**நன்றுமன் வாழிதோழி யுண்கண்**
**நீரோ டொராங்குத் தணப்ப**
**உள்ளா தாற்றல் வல்லுவோர்க்கே' (குறுந்தொகை -38)**

எனவரும் கவிலரது பாடலின் பொருள் நலங்களை விரித்து விளக்கும் முறையில் அமைந்திருத்தல் அறிந்து மகிழத்தக்கதாகும்.

தலைவியின் மெலிவினைத் தணித்தற் பொருட்டு வெறியாடல் நிகழ்த்த வேலனை அழைத்து வருமாறு தாயார் கூறக்கேட்ட தலைமகள், 'எனது மெலிவு தீர்தல் வேண்டி நிகழ்த்தப்பெறும் இவ்வெறியாடலால் எனது உடல் மெலிவு நீங்காதாயின் என்னைக் குறித்து இவ்வூரவர் கூறும் அலர்மொழி உறுதியாகி விடும்; முருகனை வழிபட்டு நிகழ்த்தப் பெறும் இவ்வெறியாடலால் என் உடல்மெலிவு ஒருகால் நீங்கிவிடுமாயின் அதனைக் கேள்வியுற்ற என் காதலர் 'இவளுக்கு இம்மெலிவு எனது பிரிவு காரணமாக உளதாயிற்றன்று போலும்' என எண்ணுதற்கு இடனாகி விடும். ஆகவே இவ்வெறியாடலால் எனது உடல் மெலிவு தீர்ந்தாலும் தீராவிட்டாலும் இருவகையாலும் எனக்கு உயிர்வாழும் நெறியில்லை' எனத் தன்னுள்ளே கூறி வருந்துவதாக அமைந்தது,

**அயர்ந்தும் வெறிமறி யாவி செகுத்தும் விளர்ப்பயலார்**
**பெயர்ந்து மொழியா விடியென்னை பேசுவபோர்ந்திருவர்**
**உயர்ந்தும் பணிந்து முணரான தம்பல முன்னலரிற்**
**றுயர்ந்தும் பிறிதி னொழியினென் னாதும் துறைவனுக்கே.**
**(287)**

எனவரும் திருக்கோவையாகும். இத்திருப்பாடல்,

**"பனிவரை நிவந்த பயங்கெழு கவாஅன்**
**..... ....... .......**
**செல்வன் பெரும்பெய ரேத்தி வேலன்**
**வெறியயர் வியன்களம் பொற்ப வல்லோன்**
**பொறியமை பாவையிற் றூங்கல் வேண்டின்**
**என்னாங் கொல்லோ தோழி, மயங்கி**
**மையற் பெண்டிர்க்கு நொவ்வலாக**
**ஆடிய பின்னும் வாடிய மேனி**
**பண்டையிற் சிறவாதாயின் இம்மறை**
**அலராகாமையோ அரிதே, அஃதான்று**
**அறிவர் உறுவிய அல்லல்கண்டருளி**
**வெறிகமழ் நெடுவேள் நல்குவ னெனினே**
**செறிதொடி யுற்ற செல்லலும் பிறிதெனக்**
**கான்கெழு நாடான் கேட்பின்**
**யானுயிர் வாழ்தல் அதனினும் அரிதே" (98)**

எனவரும் அகநானூற்றுப் பாடற் பொருளை அடியொற்றி அமைந்திருத்தல் நோக்கத்தக்கதாகும்.

உடம்பும் உயிரும் போன்று தலைவியுடன் கூடி மனையறம் நிகழ்த்தும் தலைமகன், தலைமகளது அன்பின் வழியே ஒழுகாநின்ற திறத்தினை, மணமகனைக் காணவந்த செவிலிக்குத் தோழி எடுத்துரைப்பதாக அமைந்தது,

**சீரியலாவியும் யாக்கையு மென்னச் சிறந்தமையாற்**
**காரியல் வாட்கண்ணி யெண்ணகலார் கமலங்கலந்த**
**வேரியுஞ் சந்தும் வியறந்தெனக் கற்பி னிற்பரன்னே**
**காரியல் கண்டர்வண் தில்லை வணங்குவெங் காவலரே.**
**(301)**

எனவரும் திருக்கோவையாகும். "அன்னையே, மழைபோலும் மிடற்றினையுடைய இறைவனது வளமார்ந்த தில்லைப்பதியை வணங்கும் எம்முடைய தலைவர், சீர்த்திமிக்க உயிரும் உடம்பும் என்ன ஒருவரை யொருவர் இன்றியமையாமையால் கரிய வாள் போலும் கண்களையுடைய தலைவியின் கருத்துக்கு மாறுபடாது, தாமரைப்பூவைச் சேர்ந்த தேனும் சந்தன மரமும், இடத்து நிகழ்பொருளும் இடமுமாய் அமைந்து தம் பெருமையைப் புலப்படுத்தினாற்போல, இவளுடன் பிரிவறக்கூடி இவளது பண்பின் வழியே ஒழுகா நின்றார்" எனத் தோழி செவிலிக்குக் கூறும் நிலையில் அமைந்தது இத்திருப்பாடல்.

**'தாமரைத் தண்தா தூதி மீமிசைச்**
**சாந்திற் றொடுத்த தீந்தேன் போலப்**
**புரைய மன்ற புரையோர் கேண்மை' (நற்றிணை-1)**

*எனத் தலைமகள் கூற்றாகவும்,*

**'உடம்போ டுயிரிடை யென்ன மற்றன்ன**
**மடந்தையொ டெம்மிடை நட்பு' (திருக்குறள்-1122)**

*எனத் தலைமகன் கூற்றாகவும் கூறப்பெற்ற உவமைகளைத் திருவாதவூரடிகள் இதன்கண் ஒருங்கே இணைத்துக் காட்டிய திறம் உணர்ந்து போற்றத்தக்கதாகும்.*

*'பொருளில்லாதார் இம்மை மறுமை யென்னும் இருமை இன்பத்தினையும் அறியாதவராவர்' எனக்கருதி நம் தலைவர் அருஞ்சுரம் போய்ப் பொருள்தேட நினைக்கின்றார் எனத் தோழி தலைவிக்கு உரைப்பதாக அமைந்தது,*

**'வறியார் இருமை யறியார் என மன்னும் மாநிதிச் கு**
**நெறியா ரருஞ்சுரம் செல்லலுற்றார் நமர்' (திருக்கோவை-333)**

*என்னுந்தொடராகும். இது,*

**'ஈதலுந் துய்த்தலும் இல்லோர்க் கில்லெனச்**
**செய்வினை கைம்மிக எண்ணுதி' (குறுந்தொகை- 63)**

*எனத் தலைமகன் பொருள்தேடக்கருதிய தன்னெஞ்சிற்குச் சொல்லியதாக வரும் தொடர்ப் பொருளை தோழி உட்கொண்டு கூறும் முறையில் அமைந்திருத்தல் காணலாம். 'இல்லோர்க்கு ஈதலும் துய்த்தலும் இல்' என்னும் இத்தொடர் பொருளை 'வறியார் இருமை யறியார்' என ஒரு பழமொழியாகத் திருவாதவூரடிகள் அமைத்துள்ளமை நோக்கத்தக்கதாகும்.*

*தலைவன் பிரிய ஆற்றாளாகிய தலைவி, 'அவர் இப்பொழுது என்னைப் பிரிவாரல்லர் என்றெண்ணி அவரது பிரிவிற் சிறிதும் கருத்தின்றியிருந்தேன்; அவரோ தமது பிரிவை யான் உணரின் சிறிதும் ஆற்றியிரேன் என்றெண்ணி அதனை எனக்குச் சொல்லுதலிற் கருத்தின்றிப் போயினார். எம்மிருவரது கருத்தின்மையும் ஒருங்கு சேர்ந்து என்னை இப்பொழுது வருத்துகின்றன' எனக் கலக்க முற்றுரைப்பதாக அமைந்தது,*

**பிரியா ரெனவிகழ்ந்தேன் முன்னம்யான் பின்னை யெற்பிரியிற்**
**றரியா ளெனவிகழ்ந்தார் மன்னர்தாந்தக்கன் வேள்விமிக்க**
**எரியா ரெழிலழிக்கும் மெழிலம் பலத்தோ னெவர்க்கும்**
**அரியான் அருளிலர்போல் அன்னவென்னை யழிவித்தவே. (340)**

*என்னும் திருக்கோவையாகும். இது,*

**'செல்வா ரல்லரென் றியானிகழ் தனனே**
**ஒல்வா ளல்லளென் றவரிகழ்ந்தனரே**
**ஆயிடை, இருபேராண்மை செய்த பூசல்**
**நல்லராக் கதுவியாங் கென்**
**அல்லல் நெஞ்சம் அலமலக் குறுமே'** (48)

*எனவரும் குறுந்தொகையினையும், இதனைப் பின்பற்றியமைந்த,*

**செல்லா ரவரென்றி யானிகழ்ந் தேன்கரஞ் செல்லத் தன்கண்**
**ஒல்லா ளவளென் றவரிகழ்ந்தார் மற்றுவையிரண்டும்**
**கொல்லா ரயிற்படைக் கோனெடு மாறன் குளந்தை வென்ற**
**வில்லான் பகைபோ லெனதுள்ளந் தன்னை மெலிவிக்குமே**
**(43)**

*என்னும் பாண்டிக்கோவையினையும் சொற்பொருள் வகையால் ஒத்தமைந்திருத்தல் உணர்தற்குரியதாகும்.*

*தலைமகன், தலைவியைப் பிரிந்து பொருள்தேடக் கருதிய தன்னெஞ்சொடு புலந்துரைப்பதாக அமைந்தது,*

**நாய்வயி னுள்ள குணமுமில் லேனை நற்றொண்டு கொண்ட**
**தீவயின் மேனியன் சிற்றம்பல மன்ன சின்மொழியைப்**
**பேய்வயினும் மரிதாகும் பிரிவெளி தாக்குவித்துச்**
**சேய்வயிற் போந்தநெஞ்சே யஞ்சத்தக்கதுன் சிக்கனவே.**
**(திருக்கோவை-343)**

*எனவரும் திருப்பாடலாகும். இதன்கண், 'மல்குசுனை மலர்ந்த' (347) என்னும் குறுந்தொகைப் பாடலில் வரும் 'நன்றே நெஞ்சம் நயந்த நின்துணிவே' என்ற தொடர்ப்பொருளும், 'அரிதரோ பேயோ டேனும் பிரிவு' என்னும் பழமொழியும் இடம் பெற்றிருத்தல் அறியத்தக்கதாகும். சிலவாகிய மொழியினை யுடைமை தலைமகளுக்குரிய சிறப்பியல்பாகும். இக்கருத்துப் பற்றியே தலைவியைச் 'சின்மொழி' எனக்குறித்து வழங்குதல் மரபு. 'வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையை' (குறுந்தொகை 14) எனவும், 'ஒத்ததோ சின்மொழி' (கலித்தொகை 1) எனவும் வரும் சங்கச் செய்யுள் மரபின் அடிகள் தலைவியைச் 'சின்மொழி' எனக்குறித்துள்ளார்.*

*பள்ளியிடத்துத் தலைமகனொடு ஊடிய தலைமகள், 'தில்லையிலுள்ள தலைவனே, நின் காதலிமாராகிய பரத்தையர்கள் நினக்குப் புதிதாகச் செய்த அப்புல்லுதல்களை யாம் செய்யமாட்டேம்; அதனால் எமது மேகலையைத் தொடாதே' என்ப்புலந்து கூறும் முறையில் அமைந்தது,*

**'தில்லையூர நின்சேயிழையார் நவம்செய்த புல்லங்கள்**
**மாட்டேன்; தொடல், விடு, நற்கலையே' (திருக்கோவை-358)**

*என்னும் தொடரகும்.*

**'ஏதிலாளர் இவண்வரிற் போதிற்**
**பொம்ம லோதியும் புனையல்**
**எம்முந் தொடாஅல் என்குவெமன்ன' (குறுந்-191)**

*எனவரும் குறுந்தொகைத் தொடர் ஈண்டு ஒப்பு நோக்குதற் குரியதாகும்.*

*தலைவன், பரத்தையரொடுகூடிப் புனலாடி மகிழ்ந்திருந் தானாக, அவனைப் பிரிந்தமையால் சூடுவாரின்றி மலர்ச் செப்பின்கண் வைத்து மூடப்பெற்று வறிதே வைகிய பூவினை யொத்து வாட்டமுற்ற தலைமகள், இச்செயல் தலைவர்க்குத் தகாத பழிவிளைப்பதாம் என நாணி அதனைத் தோழிக்கும் புலப்படாது மறைத்திருந்தாளாக, அதுகண்ட தோழி, அவளது கற்புநலத்தினை வியந்து பாராட்டுவதாக அமைந்தது,*

**வேயாது செப்பினடைத்துத் தமிவைகும் வீயினன்ன**
**தீயாடி சிற்றம்பல மனையாள் தில்லையூரனுக்கின்**
**றேயாப் பழியென நாணி யென்கண் ணிங்ஙனே மறைத்தாள்**
**யாயாமியல்பிவள் கற்புநற்பால வியல்புகளே.**
**(திருக்கோவை-374)**

*எனவரும் திருப்பாடலாகும். இது,*

**'யாயாகியளே மாஅ யோளே**
**மடைமாண் செப்பிற் றமிய வைகிய**
**பெய்யாப் பூவின் மெய்சாயினளே**
**..... ....... .......**
**தண்ணந் துறைவன் கொடுமை**
**நம்முன் நாணிக் கரப்பாடும்மே' (9)**

*எனவரும் குறுந்தொகைச் செய்யுளின் சொற்பொருள் நடையினை ஒத்து அமைந்துளது.*

*நாணத்துடன் தனித்து வருந்தும் தலைவியை நோக்கித் தோழி, பாணன் வரவு கூறுவதாகஅமைந்தது,*

**விறலியும் பாணனும் வேந்தற்குத் தில்லையிறையமைத்த**
**திறலியல் யாழ்கொண்டு வந்துநின்றார், சென்றிராத் திசைபோம்**
**பறலியல் வாவல் பகலுறை மாமரம் போலுமன்னோ**
**அறலியல் கூழைநல்லாய் தமியோமை யறிந்திலரே.**
**(திருக்கோவை-375)**

என்பதாகும். 'இராப்பொழுதின்கண் பறந்து சென்று திசையைக் கடந்து இரை தேர்ந்துண்ணும் இயல்புடைய வெளவால், தான் இரை தேர்தற்குரிய காலமல்லாமையால் பகற் பொழுதில் வந்து தங்கியிருத்தற்கு இடனாகிய பெரிய மரத்தினை ஒத்து (இரவுப் பொழுதில்) தனித்துறையும் நமது இயல்பினையறியாது விறலியும் பாணனும் நம் தலைவர்க்குத் துயிலெழு மங்கலம் பாடுதல் கருதி இங்கு வந்ததன்றி, நமது ஆற்றா நிலைமைகண்டு நம்மை இகழ்ந்து நகைத்தற்பொருட்டு இங்கு வந்தவர்களல்லர்' எனத் தோழி பாணனது வரவுரைத்துத் தலைமகள்பால் தோன்றிய வெகுளியையும் உடனே தணித்தாள் என்பதாம். இதன்கண் 'சென்று இராத்திசைபோம் பறலியல்வாவல் பகலுறைமாமரம் போலும்' என்றது, தன்கண் நிலையாக வாழும் வெளவால் இரவில் தன்னைவிட்டு நீங்கி இரைதேர்தற் பொருட்டுப் பறந்து செல்லத் தனித்துறைதல்அதற்கு இடந்தந்த முதுமரத்திற்கு இயல்பாதல் போலத் தலைவர் நீங்கத் தனித்துறைதல் நமக்கு இயல்பென்றும், பகலில் முதுமரத்தில் தங்கியிருந்து இரவில் இரைதேர்தற் பொருட்டுப் பறந்து செல்லும் வெளவாலைப் போன்று இம்மனைக்கண் பகலில் தங்குதலும் இரவில் நீங்கிச் செல்லுதலும் அவர்க்கியல்பென்றும் கூறியவாறு. இத்தொடர்,

**'கொடுமென் சிறைய கூருகிர்ப்பறவை**
**அகலிலைப் பலவின் சாரல் முன்னிப்**
**பகலுறை முதுமரம் புலம்பப் போகும்**
**சிறுபுன்மாலை (குறுந்தொகை-352)**

எனவரும் பாடற்பொருளை உளங்கொண்டு கூறியதாகும்.

நிலமும் விசும்பும் அவற்றிடைப்பட்ட நீர், தீ, காற்று, நிலத்திலுள்ள மலை முதலியனவும் ஆகிய எல்லாப் பொருள் களையும் படைத்தளித்தவன் முழு முதற்கடவுளாகிய சிவபெரு மானே என்னும் உண்மையினை,

**'புணர்ப்போன் நிலனும் விசும்பும் பொருப்பும்'**
**(திருக்கோவை-17)**

எனவரும் தொடரில் திருவாதவூரடிகள் குறித்துப் போற்றி யுள்ளார். இத்தொடர்,

**'நீரும் நிலனும் தீயும் வளியும்**
**மாக விசும்போ டைந்துட னியற்றிய**
**மழுவாள் நெடியோன் தலைவனாக' (மதுரைக்-453-5)**

எனவரும் மதுரைக்காஞ்சியினை நினைவுபடுத்தும் முறையில் அமைந்துள்ளமை அறியத்தக்கதாகும்.

**'வெய்யோன் தான் நுழையா இருளாய் .... ....**

**எழில்காட்டும் ஓர் கார்ப்பொழிலே' (திருக்கோவை-116)**

*என அடிகள் பொழிலின் இயல்புகூறிய இப்பகுதி,*

**'வெயில் நுழைபறியாக் குயினுழைபொதும்பர்'**
**(பெரும்பாணாற்றுப்படை-374)**

*எனவும்,*

**'வெயிலொளியறியாத விரிமலர்த்தண்கா'**
**(கலித்தொகை 30-7)**

*எனவும் வரும் தொடர்களை ஒத்துள்ளமை காணலாம்.*

*வெம்மைமிக்க பாலைநிலத்திலே கூரிய பருக்கைக் கற்கள் பரவிக்கிடக்கும் தோற்றம், சுடர்விட்டு எரியும் தீயின் மேற் பதிந்துள்ள கூறிய வேல்களைப் போன்று அமைந்த தன்மையினை,*

**'எரியும் தீமேல் அயில்போற் செறிபரற்கான்'**
**(திருக்கோவை-228)**

*என்ற தொடரால் அடிகள் புலப்படுத்தியுள்ளார். இத்தொடர்,*

**'அயிலுரு பனையவாகி யைதுநடந்து**
**வெயிலுருப்புற்ற வெம்பரல்' (சிறுபாண் 7,8)**

*எனவும்,*

*'அயில் காய்ந்தன்ன கூர்ங்கல்' (மலைபடுகடாம்-378) எனவும் வரும் சங்க இலக்கியத் தொடர்ப் பொருளை இனிது விளக்கும் முறையில் அமைந்திருத்தல் காணலாம்.*



# திருக்குறளும் திருக்கோவையாரும்

திருவாதவூரடிகள் தெய்வப் புலவர் திருவள்ளுவர் அருளிய திருக்குறட் கருத்துக்களையும் தாம் இயற்றியருளிய அகப்பொருட் கோவையாகிய இத்திருக்கோவையில் ஆங்காங்கே எடுத்தாண்டுள்ளார்.

இயற்கைப் புணர்ச்சியில் தலைமகளைக் கண்ணுற்ற தலைமகன் 'இங்ஙனம் தோன்றுகின்ற இப்பெண், திருமகள் முதலாகிய தெய்வமோ அல்லது மக்கட் குலத்திற் பிறந்தாளொரு மங்கையோ' என ஐயுற்றுக் கூறுவதாக அமைந்தது,

**போதா விசும்போ புனலோ பணிகளது பதியோ**
**யாதோ அறிகுவ தேதுமரிதி யமன்விடுத்த**
**தூதோ அனங்கன் துணையோ இணையிலி தொல்லைத் தில்லை**
**மாதோ மடமயிலோ எனநின்றவர் வாழ்பதியே.**

**(திருக்கோவை-2)**

என்ற திருப்பாடலாகும். இயமன் விடுத்த தூதோ, அனங்கன் துணையோ, தில்லைமாதோ மடமயிலோ என நின்றவர் வாழ்பதி, போதோ, விசும்போ, புனலோ, பணிகளது பதியோ, யாதோ, ஏதும் அறிகுவது அரிது' என இயைத்துப்பொருள் கூறுவர் பேராசிரியர். 'யமனால் விடுக்கப்பட்ட தூதோ, வசித்தற்குரியாரை வசித்தற்கு மன்மதனுக்கு உண்டாகியதொரு துணையோ, ஒப்பில்லாதானது பழம் பதியாகிய தில்லைக்கண் வாழ்வார் ஓர் மாதரோ, மடப்பத்தையுடைய மயிலோ என்று சொல்லும் வண்ணம் நின்ற இவரது வாழும் இடம், தாமரைப் பூவோ, ஆகாயமோ, நீரோ, பாம்புகளது பதியாகிய நாகருலகமோ, இவையன்றி வேறு யாதோ, சிறிதும் துணிதல் அரிது' எனத் தலைமகன் தலைமகளை ஐயுற்று நின்றான் என்பதாம். இத்திருப்பாடல்,

**"அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை**
**மாதர்கொல் மாலுமென் னெஞ்சு"** **(1081)**

என்னும் திருக்குறளுக்குத் திருவாதவூரடிகள் அருளிச் செய்த விளக்கவுரையாகத் திகழ்தல் உணர்ந்து மகிழத்தக்கதாகும். இத்திருக்குறளில் வந்த 'அணங்குகொல்' என்பதனை 'யமன் விடுத்த தூதோ, அனங்கன் துணையோ' எனவும், 'வாழ்பதி, போதோ, விசும்போ, புனலோ, பணிகளது பதியோ,' எனவும்

வரும் தொடர்களாலும், 'ஆய்மயில் கொல்லோ, கனங்குழை மாதர் கொல்' என்பதனை 'தில்லைமாதோ மடமயிலோ என நின்றவர்' என்ற தொடராலும் அடிகள் விரித்து விளக்கியுள்ளமை நோக்கத்தக்கதாகும்.

அறநூல் விதியால் நம் தலைவர் உலகத்தைக் காத்தற் பொருட்டுப் பிரியக் கருதுகின்றார் எனத் தலைமகன் நாடு காத்தற்குப் பிரியும் பிரிவினைத் தோழி தலைமகளுக்கு அறிவிப்பதாக அமைந்தது,

**மூப்பானிளையவன் முன்னவன் பின்னவன் முப்புரங்கள்**
**வீப்பான் வியன்றில்லையானருளால் விரிநீருலகங்**
**காப்பான் பிரியக் கருதுகின்றார் நமர் கார்க்கயற்கட்**
**பூப்பா னலமொளிரும் புரிதாழ்குழற் பூங்கொடியே.**
**(திருக்கோவை-312)**

எனவரும் திருப்பாடலாகும். இதன்கண் தலைமகனுக்குரிய நாடு காத்தற் பிரிவு தில்லையானருளால் அளிக்கப்பட்டது என்னும் உண்மையினைத் 'தில்லை யானருளால் விரிநீருலங்காப்பன் பிரியக் கருதுகின்றார் நமர்' எனவரும் தொடரின் கண் அடிகள் தெளிவாகக் குறித்துள்ளார். 'தில்லைச் சிற்றம்பலத்தில் ஆடல் புரிந்தருளும் இறைவனது ஏவலால் நம் தலைவர் விரிந்த நீராற் சூழப்பட்ட உலகத்தைக் காத்தற்பொருட்டுப் பிரியக் கருதுகின்றார்' என்பது இத்தொடரின் பொருளாகும். 'தில்லையான் ஏவலாவது' எல்லா உயிர்களையும் அரசன் காக்க வேண்டுமென்னும் தரும நூல் விதி. காத்தலாவது, தன்வினை செய்வாரானும் கள்வரானும் பகைவரானும் உயிர்கட்கு வரும் அச்சத்தை நீக்குதல் எனப் பேராசிரியர் இத்தொடர் பொருளை விளக்குவர். இத்தொடர்,

**'முறை செய்து காப்பாற்று மன்னவன் மக்கட்**
**கிறையென்று வைக்கப் படும்' (388)**

என்னும் திருக்குறட் பொருளை அடியொற்றி அமைந்திருத்தல் அறியத் தக்கதாகும். தான் முறை செய்து, பிறர் நலியாமற் காத்தலையுஞ் செய்யும் அரசன் பிறப்பால் மகனேயாயினும் செயலால் மக்களுக்குக் கடவுள் என்று வேறு பிரித்து மக்களிற் பிரித்து உயர்த்துப் போற்றப்பெறுவான் என்பது இதன் பொருளாகும். இதனால் 'இறை' என்ற பெயர் எங்கும் நீக்கமற நிறைந்த பொருளாகிய இறைவனையே குறிப்பதென்பதும், அப்பெயரால் அரசனைக் குறிப்பிடுதல் உபசார வழக்கென்பதும், இறைவனுக்குரிய முறை செய்தற்றன்மை உலகபாலருருவாய

அரசன் வாயிலாக நிகழ்கின்ற தென்பதும் புலப்படுத்தப் பெற்றுள்ளமை அறியத்தக்க தாகும். தெய்வப் புலவர் அருளிய இத்திருக்குறட் கருத்தினை உளங்கொண்டே வாதவூரடிகளும், 'தில்லையானருளால் விரிநீருலகங்காப்பான் பிரியக் கருதுகின்றார் நமர்' எனத் தலைவனது நாடுகாத்தற் பிரிவுக்கு இறைவனது எவலாகிய திருவருட் குறிப்பினை ஏதுவாக்கிக் கூறினாராதல் வேண்டும்.

மணமனை கண்டு செவிலி, தலைமகனது காதல் மிகுதியை நற்றாய்க்கு எடுத்துரைப்பதாக அமைந்தது,

**பொட்டணியானுதல் போயிறும் பொய்போ லிடையெனப்பூண்**
**இட்டணியான் தவிசின்மலரன்றி மிதிப்பக்கொடான்**
**மட்டணிவார்குழல் வையான்மலர் வண்டுறுதலஞ்சிக்**
**கட்டணிவார்சடை யோன்தில்லை போதலின் காதலனே.**
**(திருக்கோவை-303)**

என்னும் திருப்பாடலாகும். "தில்லையை ஒப்பாளாகிய தலைவியின் காதலன், பொய்போலும் இடை ஒடிந்துபோம் என்று கருதி அவளுக்கு அணிகலன்களைப் பூட்டியறியான்; மெல்லடி நோகும் என்று அஞ்சி அவள் தவிசில் மிதிக்கும் பொழுதும் மலரின் மேலன்றி அடிவைக்க விடமாட்டான்; வண்டுகள் பொருந்தி மொய்க்கு மென்றஞ்சிக் கூந்தலின்கண் தேன் நிறைந்த மலர்களை வைத்து அணியமாட்டான்; இவை பற்றி சொல்லுகின்றதென்ன? நுதலின்கண் மகளிர் இன்றியமையாது அணிதற்குரியதாகிய பொட்டையும் பொறையாம் என்று கருதி அணிதலைச் செய்யான்" என்பது இதன் பொருளாகும். இதன்கண் 'பொட்டணியான்------ பூண் இட்டணியான்' என வரும் தொடர்கள்,

**'அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு**
**நல்ல படாஅ பறை' (திருக்குறள்-1115)**

என நலம்புனைந்துரைக்கும் தலைமகன் கூற்றிற் பயின்ற பொருளையுட் கொண்டு, அத்தகைய தலைவனொருவனது காதல் மிகுதியைப் புனைந்துரைக்கும் முறையில் அமைந்துள்ளமை காணலாம்.

தலைமகன் பொருள்வயிற் பிரியக் கருதுகின்றான் எனத்தோழி கூறக்கேட்ட தலைமகள், அச்சொற்கேட்டு ஆற்றாது புலம்புவதாக அமைந்தது,

**'சிறுவா ளுகிருற் றுறாமுன்னஞ் சின்னப் படுங்குவளைச்**
**செறிவான் கழித்தனன் தோழி யெழுதிற் கரப்பதற்கே**

**அறிவாள் ஒழிகுவ தஞ்சனம் அம்பலவர்ப்பணியார்**
**குறிவாழ்நெறிசெல்வ ரன்பரென் றம்ம கொடியவளே.**
**(திருக்கோவை-334)'**

எனவரும் திருப்பாடலாகும். "கண்ணிற்கு மையெழுதுகின்ற அச்சிறிய பொழுதளவும் காதலர் தோன்றாமையால் மையெழுதற் றொழிலை யான் ஒழிந்திருத்தலைத் தோழியாகிய கொடியவள் அறிவாள். (அங்ஙனம் அறிந்திருந்தும்) அம்பலவரை வணங்காதார் அவ்வணங்காமைக்கு அறிகுறியாக வாழும் வெம்மை மிக்க பாலைநில வழியில் அன்பர் செல்வர் என்று கூறி, ஒளியையுடைய நகம் சிறிது ஊன்றுதற்கு முன்னமே கிழிந்து சிதையும் நீலமலரைப் பறித்தற்கு (மரம் முதலியவற்றை) வெட்டுதற்குக் கருவியாகிய வாளை உறையினின்றும் எடுத்தாள்" எனத் தலைமகள் ஆற்றாது புலம்புகின்றாள். இதன்கண், 'அஞ்சனம் எழுதின் (காதலர்) கரப்பதற்கே (அஞ்சனம் எழுதுதல்) ஒழிகுவது அறிவாள்' என்றது, கண்ணுக்கு மை எழுதப்புகின் எழுதுகின்ற காலம் அத்துணையும் காதலர் (கண்ணில்) தோன்றாமையால் யான் என் கண்ணுக்கு மை எழுதாதொழிந் திருத்தலை என்னுடனிருக்கும் தோழியாகிய அவள் நன்கு அறிவாள் என்று தலைமகள் தலைமகனைக் கண்ணிமையாது காண்டலில் தனக்குள்ள வேட்கையினைப் புலப்படுத்தியபடியாம். இத்தொடர்,

**'கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்**
**எழுதேங் கரப்பாக் கறிந்து'** **(திருக்குறள் 1127)**

எனவரும் திருக்குறட் பொருளைக் கொண்டு கூறியதாகும். 'காதலர் எப்பொழுதும் என் கண்ணில் உள்ளாராதலால் கண்ணினை அஞ்சனத்தால் எழுதுவதுஞ் செய்யேன்; காலமும் அவர் மறைதலையறிந்து' என்பது இதன் பொருளாகும்.

'தலைமகள் தன் கணவனையன்றி வேறொரு தெய்வத்தைத் தெய்வமாகக் கருதாளாதலால், தலைவன் தன்னை வணங்காத பகைவரைச் சென்று கிட்டித் திறை கொண்டு வந்து அவளது இல்லத்துத் தங்குவதல்லது புறத்தே தங்கி அறியான். இஃது அவ்விருவரது இயல்பு, எனச் செவிலி தலைமகளது கற்பினை நன்றாய்க்கு அறிவிப்பதாக அமைந்தது.

**தெய்வம் பணிகழலோன் தில்லைச் சிற்றம்பலமனையாள்**
**தெய்வம் பணிந்தறியாளென்று நின்று திறைவழங்காத்**

**தெவ்வம் பணியச் சென்றாலுமன் வந்தன்றிச் சேர்ந்தறியான்**
**பௌவம் பணிமணியன்னார் பரிசின்ன பான்மைகளே. (304)**

எனவரும் திருக்கோவையாகும்,

**'தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யு மழை' (குறள்-55)**

என்னும் பொய்யில் புலவர் பொருளுரையினைத் தன் கண் பொதிந்துள்ளமை காணலாம்.

தலைவனுடன் கூடி மகிழ்ந்த தலைவி, தனக்கு அவன் செய்த தலையளியை நினைந்து, இவ்வாறு அருளும் இவனது அருள் ஒரு நாள் என்னை யொழியப் பிறர்க்கும் ஆகும் எனத் தன்னுள்ளத்துட் கொண்டு பொருமி அழுது புலந்தாள் எனத் தலைவன் தோழிக்கு உரைப்பதாக அமைந்தது,

**செவ்வாய் துடிப்பக் கருங்கண் பிறழச் சிற்றம்பலத்தெம்**
**மொய்வார் சடையோ னருளின் முயங்கி மயங்குகின்றாள்**
**வெவ்வாயுயிர்ப்பொடு விம்மிக் கலுழ்ந்து புலந்துநைந்தாள்**
**இவ்வாறருள் பிறர்க்காகு மெனநினைந் தின்னகையே.**
**(திருக்கோவை-366)**

என்பதாகும். "தவறுபற்றிப் புலப்பள் என்று நீ கூறுகின்றாய். இவ்வாறு யான் செய்த அருள் பிறர்க்கும் ஆகும் என ஒன்றினை உட் கொண்டு இவள் புலக்கின்றாள்" எனத் தலைவன் தன் தவறின் மையையும் காரணமின்றியும் புலக்கும் தலைவியின் இயல் பினையும் தோழிக்குக் கூறினான் என்பதாம். இதன்கண், 'இவ்வாறு அருள் பிறர்க்காகும் என நினைந்து இன்னகை புலந்தாள்' எனவரும் தொடர்,

**'தன்னை யுணர்த்தினுங்காயும் பிறர்க்கு நீர்**
**இந்நீர ராகுதி ரென்று' (1313)**

என்ற திருக்குறளில் வரும் 'பிறர்க்கும் நீர் இந்நீரர் ஆகுதிர்' என்னும், புலவிக் குறிப்பினை அடியொற்றி அமைந்ததாகும்.

புலவி தீர்ந்து தானும் அவனுமேயாகிப் பள்ளியிடத் தாளாகிய தலைமகள், தலைவன்பால் பின்னும் ஒரு குறிப்பு வேறுபாடு கண்டு புலந்து 'இப்பள்ளிக் கட்டில் பலரைத் தாங்காது' என்று சொல்லி இறங்கினாளாக, இவ்வாறு இறங்குதற்குரிய காரணம் யாதோ? என்று அவளயலுள்ள ஆயத்தாராகிய மகளிர் தம்முட் கூறுவதாக அமைந்தது,

**மலரைப் பொறாவடி மானுந் தமியள் மன்னன் ஒருவன்,**
**பலரைப் பொறாதென் றிழிந்து நின்றாள் பள்ளி, காமனெய்த**
**அலரைப் பொறாதன் றழல்விழித்தோன் அம்பலம் வணங்காக்**
**கலரைப் பொறாச் சிறியாள் என்னை கொல்லோ கருதியதே**
**(திருக்கோவை-367)**

என்பதாகும். 'மலரையும் மிதித்தற்குப் பொறாத மெல்லிய பாதத்தினையுடைய மான்போல்வாளாகிய தலைவி தான் ஒருத்தியே; அவளருகில் கணவனாகிய மன்னன் ஒருவனே; (அங்குப் பிறர் யாருமிலர்)அங்ஙனமாகவும் அவள் 'இக்கட்டில் (நம்மிருவர்க்கும் மேலாகப்) பலரைத் தாங்கும் வன்மையுடைதன்று' எனறு சொல்லி அப்பள்ளியினின்றும் விரைந்து இறங்கி நின்றாள்; மன்மதன் எய்த மலரம்பினைப் பொறாது அன்று, அனற் கண்ணினைத் திறந்த இறைவனது சிற்றம்பலத்தைத் தொழாத தீய மக்கள் என்ற வார்த்தையையும் கேட்கப்பெறாத அந்நங்கை இந்நிலைக்கண் எண்ணியது யாதோ என்பது இதன் பொருளாகும்.

இழிந்து நின்றாள் என்பது, விரைய இழிந்தாள் என்னும் பொருள்பட நின்றது. கலர்-தீயோர் . கலரைப் பொறார் சிறியாள் என்றது, தீ மக்கள் என்ற வார்த்தையைக் கேட்டற்கும் பொறாதவள், தீயோர் போன்று வெகுளியுடையளாய் இவ்வாறு செய்தாள் என்றவாறு. இங்ஙனம் தலைமகள் தான் புலத்தற்குக் காரணமாகத் தான் தலைமகன் பால் உய்த்துணர்ந்து கண்ட குறிப்பாவது, 'இவ்வாறு அருள் பிறர்க்கும் ஆகும் என நினைந்து இன்னகை புலந்தாள்' (திருக்கோவை-366) என்று தலைமகன் கூறிய கூற்றையே தவறாக நினைந்துஅவன் தனது அருளுக்குரியவராகப் பிறரும் உண்டாகக் கூறியதாகக்கொண்டு அவனொடு புலந்து, 'இந்த அமளி நம்மிருவரையன்றி நின்னெஞ்சத்தாராகிய மகளிரையும் ஒருசேரத் தாங்கும் வன்மையுடையதன்று என்பாள். 'பலரைப் பொறாது' என்று சொல்லித் தலைவனொடு தான் அமர்ந்திருந்த கட்டிலைவிட்டு விரைய இறங்கினாள் எனத் தலைமகளது புலவி நுணுக்கம் புலனாக அடிகள் இத் திருப்பாடலை அருளிச் செய்துள்ளார். இது,

**'நினைத்திருந்து நோக்கினுங் காயும் அனைத்துநீர்**
**யாருள்ளி நோக்கினீ ரென்று'** (1320)

எனவரும் திருக்குறட்பொருளைப் பின்பற்றியமைந்துள்ளமை கூர்ந்துணரத்தக்கதாகும். "யான் அவளுடைய அவயங்களது ஒப்பின்மையை நினைந்து காதலால் அவற்றையே நோக்கினேனாக, அதுகண்ட தலைவி, 'என் அவயமனைத்தையும்

நோக்கிய நீவிர் அவற்றது ஒப்புமையால் எம்மகளிரை நினைந்து நோக்கினீர்' என நுண்ணியதோர் காரணங் கற்பித்துக்கொண்டு என்னொடு புலந்தாள்" எனத் தலைவன் கூறியதாக அமைந்தது இத்திருக்குறளாகும்.

பரத்தையைக் கண்டமை கூறிப் புலந்து வேறுபட்ட தலைமகளுக்கு 'நம் தலைவர் தம்மால் பாதுகாக்கத்தக்க எத்திறத்தார்க்கும் பயன் விளைப்பவராதலால் அன்பினாலன்றி அருளாற் பரத்தையர்க்கும் தலையளி செய்தல் அவர்தம் பொறுப்பல்லவா? பரத்தையரைப் போன்று நாம் அவரொடு பிணங்குந் தன்மையேம் அல்லேம்; அவர் வரும்பொழுது எதிர்தொழுதும், போம்பொழுது புறந்தொழுதும் மனையறக் கடமையினைச் செய்துகொண்டிருத்தல் அல்லவோ நமக்குக் கடனாவது' என்று தோழி தலைமகனது ஊதியம் எடுத்துரைத்துத் தலைமகளை ஊடல்தீர்த்து அவனொடு அன்பினால் இசைவிப்பது,

**'காரணி கற்பகம், கற்றவர் நற்றுணை, பாணர் ஒக்கல்,**
**சீரணி சிந்தாமணி, யணிதில்லைச் சிவனடிக்குத்**
**தாரணி கொன்றையன், தக்கோர்தஞ் சங்கநிதி, விதிசேர்**
**ஊருணி யுற்றவர்க்கு, ஊரன் மற்றி யாவர்க்கும் ஊதியமே'**
**(திருக்கோவை-400)**

எனவரும் திருப்பாடலாகும். 'ஊரானாகிய தலைவன் (பிறர் வேண்டாமைக் கொடுத்தலால்) மேகத்தை யொப்பான். (இரவலர் வேண்டியனவற்றை மறாது கொடுத்தலால்) கற்பகத்தை ஒப்பான்; (நுண்ணிய கல்வியுடையவனாதலால்) கற்றோர்க்கு ஐயந்தீர நற் பொருளுணர்த்தும் உசாத்துணையாவான்; (இசையுணர் வினாலும் அன்புடன் நெருங்கிப் பழகி ஆதரித்தலானும்) இசைவல்ல பாணர்க்கு அவர்தம் சுற்றத்தை ஒப்பான்; (நினைத்தது கொடுத்தலால், சிந்தித்த வெல்லாம் சிந்தையறிந்துதவும் தெய்வத்தன்மை வாய்ந்த) சிந்தாமணியை ஒப்பான்; அழகிய தில்லைக்கண் அருட்கூத்தியற்றி யருளும் சிவபெருமானுடைய திருவடிகளை எக்காலத்தும் சிந்தையினும் சென்னியினும் கொண்டு போற்றுதலால் அம்முதல்வனுடைய திருவடிக்குத் தாராகி அவ் இறைவனால் அணியப்படும் கொன்றைப்பூவின் தன்மையை யுடையான்; சான்றோர் தமக்கு (க் குறையாத நிறைவுடைய நிதி போன்று இருமையும் விளைத்தலால்) சங்கநிதியை ஒப்பான்; (தன் நண்பர்க்கும் பகைவர்க்கும் முறையே இன்பமும் துன்பமுமாகிய இருவினைப் பயன்களையும் தப்பாது கொடுத்தலால்) ஊழாகிய விதியினை ஒப்பான்; தன்

*(சுற்றத்தாரனைவர்க்கும் அணுகி நின்று வழங்கும் பேரருளாள னாகத் திகழ்தலால்) ஊரின் வாழ்வாரனை வர்க்கும் உண்ணீரளித்துதவும் ஊருணியை ஒப்பான்; (இங்ஙனம் குண நலங்களெல்லாம் ஒருசேர அமையப் பெற்றிருத்தலால்) எல்லார்க்கும் பயன்தரும் நற்பொருளாக உள்ளான் என்பது இத்திருப்பாட்லின் பொருளாகும். 'இப்பாட்டு ஐவகைத் திணைக்கும் உரித்தாகலின் பொதுவகைத் தெனப்பெறும்' என்பர் பேராசிரியர். இதன்கண்,*

**'கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்**
**டென்னாற்றுங் கொல்லோ உலகு'** (211)

*எனவரும் திருக்குறட் பொருளை நினைந்து, 'கார்' என்றும்*

**'பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வம்**
**நயனுடை யான்கட் படின்'** (217)

*என்பதனை யெண்ணி, 'அணிகற்பகம்' என்றும்,*

**'நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்**
**பண்புடை யாளர் தொடர்பு'** (783)

*என்பதனை யுளங்கொண்டு, 'கற்றவர் நற்றுணை' என்றும்,*

**'ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்**
**பேரறி வாளன் திரு'** (215)

*என்பதனைக் கருதி 'உற்றவர்க்கு ஊருணி' என்றும் ஒப்புர வாளனாகிய தலைமகன் குணங்களைக் கூத்தர் முதலியோர் பாராட்டி யுரைக்கும் முறையில் திருவாதவூரடிகள் இத்திருப்பாடலை அருளிச்செய்துள்ளமை படித்து இன்புறற்பாலதாகும்.*



# தேவாரமும் திருக்கோவையும்

*தேவாரத் திருமுறையிலுள்ள சொற்றொடர்களும் கருத்துக்களும் இத்திருக்கோவையில் எடுத்தாளப் பெற்றிருத்தல் பின்வரும் ஒப்புமைப் பகுதிகளால் இனிது விளங்கும்.*

*திருக்கோவையாரில் 'திருவளர் தாமரை' எனத் தொடங்கும் முதல் திருப்பாடல்,*

**'திருவமர் தாமரை சீர்வளர் செங்கழு நீர்கொள்நெய்தல்**
**குருவமர் கோங்கங் குராமகிழ் சண்பகங் கொன்றைவனின்**
**மருவமர் நீள்கொடி மாடமலி மறையோர்கள் நல்லூர்**
**உருவமர் பாகத் துமையவள் பாகனை யுள்குதுமே' (4-97-10)**

*எனத் திருநாவுக்கரசர் அருளிய திருவிருத்தத்தினைச் சொற்றொடர் வகையாலும் யாப்பினாலும் பெரிதும் ஒத்திருத்தல் அறியத்தக்கதாகும்.*

**'சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்தும்' (20)**

*எனவரும் திருக்கோவைத் தொடர்,*

**'சிறைகொள் நீர்த் தில்லைதன்னுள் திகழ்ந்த**
**சிற்றம்பலத்தே' (4-22-8)**

*எனவரும் திருநேரிசையினை ஒத்ததாகும். இறைவன் திருவடிகளை அடியார்கள் தம் சென்னியிற் கொண்டு முடிமலர் போன்று அணிந்து வழிபடும் முறைபற்றி,*

**'தில்லை சிவன்தாளாம் பொற்றடமலர்சூடும் என்னாற்றல்' (21)**

*எனத் தலைவன் தனது ஆண்மை தோன்றக் கூறுவதாக அமைந்த திருக்கோவைத் தொடர்,*

**'அம்பூதி குஞ்சிப்பூவாய் நின்ற சேவடியாய் (4-12-10)**

*எனவரும் அப்பர் அருண்மொழியினை நினைவுபடுத்தும் முறையில் அமைந்ததாம்.*

*இறைவனுடைய திருவடிக்குத் தொண்டு பட்டமையால் ஊழிபெயரினும் தான் பெயராத உறுதி படைத்த உள்ளத்தினனாகிய தலைமகனை நோக்கி,*

**'விலங்கலைக் கால்விண்டு மேன்மேலிட விண்ணு மண்ணு முந்நீர்க்**
**கலங்கலைச் சென்ற வன்றுங் கலங்காய்' (24)**

எனப் பாங்கன் கூறுவதாக அமைந்த திருக்கோவைத் தொடர்,

**'மண்பா தலம்புக்கு மால்கடல் மூடிமற் றேழுலகும்**
**விண்பால் திசைகெட் டிருசுடர்வீழினும் அஞ்சல்நெஞ்சே'**
**(4-94-9)**

எனவும்,

**'வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையும்**
**தானந் துளங்கித் தலைதடு மாறிலென் தண்கடலும்**
**மீனம்படிலென் விரிசுடர் வீழிலென் வேலைநஞ்சுண்**
**டூனமொன் றில்லா ஒருவனுக் காட்பட்ட உத்தமர்க்கே'**
**(4-112-8)**

எனவும் வரும் திருவிருத்தப்பாடல்களின் பொருளை அடியொற்றி யமைந்திருத்தல் காணலாம்.

உலக மக்களால் தத்தம் தெய்மென்று மதித்து வணங்கப்பெறும் பல சமயத் தெய்வங்களாலும் இறைவன் எனக்கொண்டு வழிபடப் பெறும் முதன்மை, தேவதேவனாகிய சிபெருமானொருவனுக்கே உரியதென்பதும், அம்முதல்வன் தன் திருவடிகளைப் பேரன்பினால் தலைதாழ்த்து வணங்கிப் போற்றும் மெய்யடியார்களை வானோராகிய தேவர்களும் தம் தெய்வமெனக் கொண்டு தொழுது போற்றும் வண்ணம் மேல் நிலையில் வைத்து அருள்புரிவான் என்பதும் ஆகிய உண்மையினை, 'தெய்வம் பணிகழலோன்' (304) எனவும், 'தாழச்செய்தார் முடி தன்னடிக் கீழ்வைத்தவரை விண்ணோர், சூழச் செய்தான்' (42) எனவும், 'சோத்துன்னடிய மென்றோரைக் குழுமித்தொல் வானவர்சூழ்ந், தேத்தும்படி நிற்பவன்' (173) எனவும் வரும் திருக்கோவைத் தொடர்களில் திருவாதவூரடிகள் நன்கு புலப்படுத்தியுள்ளார். இத்திருக்கோவைத் தொடர்கள்,

**'தொழப்படுந் தேவர் தொழப்படுவானைத் தொழுதபின்னைத்**
**தொழப்படுந் தேவர்தம்மால் தொழுவிக்கும் தன்**
**தொண்டரையே' (4-112-5)**

எனவரும் நாவுக்கரசர் தேவாரத்தையும்,

**'சிலையால் எயிலெய்தான் சிற்றம்பலந்தன்னைத்**
**தலையால் தொழுவார்கள் தலையானார்களே' (1-80-7)**

எனவரும் ஞானசம்பந்தர் தேவாரத்தையும் ஒத்திருந்திருத்தல் உணரத்தக்கதாகும்.

அடியவரிடத்தே அவரோடு வடிய களிப்பையுடையேனாகி யான் இன்று செம்மாந்து மகிழும் வண்ணம் இறைவன் எனக்கு இன்பத்தினைத் தந்தருளித் தில்லையம்பலத்தின் கண்ணே தீயேந்தி ஆடல் புரிகின்றான் என்பது பட,

**'இருங்களியாயின் றியானிறுமாப்ப இன்பம் பணிவோர்**
**மருங்களியா அனலாடவல்லோன்' (திருக்கோவை-52)**

எனவரும் தொடர்,

**'இறுமாந் திருப்பன்கொலோ ஈசன் பல்கணத்**
**தெண்ணப்பட்டு' (4-9-11)**

என்னுந் திருவங்கமாலைத் தொடர்க்கு அமைந்த விளக்கமாகத் திகழ்தல் காணலாம்.

'தில்லைக்கூத்தனை ஏத்தாதார் துன்புறும் பிறவியிற் பிறப்பாரதலின், அவர்களைப் போன்று இனிவரும் நாட்களில் நான் இவ்வாறு நாண்கெடப் பிறவா தொழிக' எனத் தலைமகள் தன் நாணத்தை விடுதற்கு வருந்திக் கூறுவதாக அமைந்தது,

**'குருநாண்மலர்ப் பொழில் சூழ்தில்லைக் கூத்தனை யேத்தலர்போல்**
**வரு நாள் பிறவற்க' (திருக்கோவை-44)**

என்ற தொடராகும். இது,

**'பெரும் பற்றப் புலியூரானைப் பேசாத நாளெல்லாம்**
**பிறவா நாளே' (6-1-1)**

எனவரும் திருத்தாண்டகத் தொடரை உளங்கொண்டு கூறியதாகும்.

உலகங்களெல்லாம் அழியவரும் ஊழிக்காலத்திலும் அழிவின்றி நின்று நிலவும் முழுமுதற் கடவுள் தில்லைக் கூத்தனாகிய சிவபெருமானே என்னும் உண்மையினை அறிவுறுத்தும் நிலையில் அமைந்தது,

**'விண்ணை மடங்க விரிநீர் பரந்து வெற்புக்கரப்ப**
**மண்ணை மடங்க வருமொரு காலத்தும் மன்னிநிற்கும்**
**அண்ணல் மங்கலதள் அம்பலவன்' (திருக்கோவை-75)**

எனவரும் திருப்பாடலாகும். இது,

**'பெருங்கடல் மூடிப் பிரளயங்கொண்டு பிரமனும்போய்**
**இருங்கடல் மூடி இறக்கும் இறந்தான் களேபரமும்**

**கருங்கடல் வண்ணன் களேபரமுங் கொண்டு கங்காளராய்**
**வருங்கடல் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே'**
**(4-112-7)**

எனவரும் திருவிருத்தத்துடன் ஒப்புநோக்கி யுணர்தற்குரியதாம்.

நெஞ்சிற் கள்ளத்தையுடைய வஞ்சகர்க்கு இரங்கி அருளாதவகையில் அவர்களால் உணர்தற்குரிய அரியவனாக இறைவன் மறைந்துள்ள தன்மையினை, 'கள்ளப்படிறர்க்கு அருளா அரன்' (திருக்கோவை-87) என வரும் தொடரில் வாதவூரடிகள் குறித்துள்ளார். இத்தொடர்,

**'உள்ள முள்கலந் துள்கவல் லார்க்கலால்**
**கள்ளமுள்ளவழிக் கசிவானலன்' (5-82-4)**

எனவும்,

**'கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை' (4-7-1)**

எனவும்,

**'வஞ்சனையார் ஆர்பாடும் சாராத மைந்தனை' (4-19-8)**

எனவும் வரும் தேவாரத் தொடர்களின் பொருளை அடியொற்றி யமைந்திருத்தல் அறியத்தக்கதாகும்.

தில்லையம்பலவன் யாழோசை போலும் மொழியை யுடைய உமையை ஒரு பாகத்திற் கொண்டவன் என்றும் அலைகளையுடைய கடல்கள் ஏழும் உலகங்கள் ஏழுமாய் எங்கும் நீக்கமற விளங்குபவன் என்றும் இறைவனைப் போற்றுவதாக அமைந்தது,

**'யாழார் மொழிமங்கை பங்கத் திறைவன் எறிதிரைநீர்**
**ஏழாய் எழுபொழிலா யிருந்தோன்' (93)**

எனவரும் திருக்கோவையாராகும். இது,

**'யாழைப் பழித்தன்ன மொழிபங்கன்' (7-71-1)**

எனவும்,

**'சூழொளி நீர்நிலந்தீத் தாழ்வளி யாகாசம்**
**வானுயர் வெங்கதிரோன் வண்டமிழ் வல்லவர்கள்**
**ஏழிசையை யேழ்நரம்பின் ஓசையை' (7-81-6)**

எனவும் வரும் சுந்தரர் தேவாரத் தொடர்களுடன் ஒப்பு நோக்குதற்குரியதாகும்.

*தில்லைச் சிற்றம்பலவனை 'அம்பலத்தாடும் எம்சோதி' (94) எனச் சோதியாய்த் தோன்றும் உருவமாக அடிகள் போற்றியுள்ளார். சோதிப் பொருளாகிய அவ்விறைவன் அன்பிற் சிறந்த அடியாருள்ளத்திலும் அம்பலத்திலும் ஒளியுருவினனாகத் திகழுந் திறத்தினை,*

**'உருகுதலைச் சென்ற உள்ளத்தும் அம்பலத்தும் ஒளியே பெருகுதலைச் சென்று நின்றோன்' (திருக்கோவை-104)**

*என அடிகள் உளங்கசிந்து போற்றியுள்ளார். இத்தொடர்,*

**'சுடர் விட்டுளன் எங்கள் சோதி'**

*எனவரும் திருப்பாசுரத் தொடர்ப் பொருளோடு ஒப்பு நோக்கி யுணரத்தக்கதாகும்.*

*இயல்பாகவே பாசங்களின் நீங்கினமையால் முத்தனாகவும் தன்னை அன்பினால் வணங்கும் அடியார்களின் பாசத்தளை யறுத்து வீடு பேறளித்தலால் முத்தி வழங்கும் பிரானாகவும் திகழ்வோன் தில்லையம்பலவன் என்னும் உண்மையினை,*

**'முத்தன் முத்திவழங்கும் பிரான்' (திருக்கோவை 127)**

*எனவரும் தொடரால் வாதவூரடிகள் குறித்துள்ளார். இத்தொடர்,*

**'முத்தா முத்திதரவல்ல முகிழ்மென் முலையாள்
உமைபங்கா' (7-52-1)**

*எனவரும் சுந்தரர் தேவாரத்தை ஒத்தமைந்திருத்தல் காணலாம்,*

**'நட்புச் செய்தால் பேயோடாயினும் பிரிதல் அரிது'** என்னும் *வாய்மொழியினை,*

**'பிரிவு செய்தாலரிதே கொள்க பேயொடும் என்னும்
பெற்றி' (திருக்கோவை-144)**

*எனவரும் தொடரில் அடிகள் எடுத்தாண்டுள்ளார். இப்பழமொழி,*

**'பேயோடேனும் பிரிதல் இன்னாது' (7-95-9)**

*எனவரும் சுந்தரர் தேவாரத்திலும்,*

**'இன்னாதே, பேஎயோ டேனும் பிரிவு' (122)**

*என்னும் பழமொழியிலும் இடம்பெற்றிருத்தல் அறியத் தக்கதாகும்.*

தில்லையம்பலவானாகிய இறைவன் எல்லாப் பொருட்கும் மேலாகிய விண்ணுக்கு மேலும் எல்லாப் பொருட்கும் கீழாகிய பாதலத்தின் கீழும் கடல் சூழ்ந்த இந்நிலவுலகின் நடுவிலும் ஆக இவ்வாறுயாண்டும் நீக்கமறக் கலந்து விளங்குந் திறத்தினை,

**'விண்ணுக்கு மேல் வியன் பாதலக்கீழ் விரிநீருடுத்த**
**மண்ணுக்கு நாப்பண் நயந்து தென்றில்லை நின்றோன்' (162)**

எனவரும் திருக்கோவையில் அடிகள் விரித்துக் கூறியுள்ளார். இத்தொடர்,

**'விண்ணகத்தான் மிக்க வேதத்துளான் விரிநீருடுத்த**
**மண்ணகத்தான் திருமாலகத்தான்' (4-112-6)**

எனவரும் திருவிருத்தத்தினை அடியொற்றியமைந்ததாகும்.

எல்லாப் பற்றுக்களையும் அறவே துறந்த சிவஞானிகள் அறிந்து பற்றுதற்குரிய பெரும் பொருளாகத் திகழ்பவன் தில்லைச் சிற்றம்பலத்தான் என்பதனை,

**'பற்றொன்றிலார் பற்றுந் தில்லைப்பரன்'**
**(திருக்கோவை-178)**

எனவரும் தொடரில் அடிகள் குறித்துள்ளார். இக்குறிப்பு,

**'அருந்துணையை அடியார்தம் அல்லல் தீர்க்கும்**
**அருமருந்தை யகன் ஞாலத் தகத்துட் டோன்றி**
**வருந்துணையும் சுற்றமும் பற்றும் விட்டு**
**வான்புலன்க ளகத்தடக்கி மடவாரோடும்**
**பொருந்தணைமேல் வரும்பயனைப் போக மாற்றிப்**
**பொது நீக்கித் தனைநினைய வல்லோர்க் கென்றும்**
**பெருந்துணையைப் பெரும்பற்றப் புலியூரானைப்**
**பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' (6-1-5)**

எனவரும் திருத்தாண்டகப் பொருளையும்,

**'பற்றற்றார் சேர் பழம் பதியை' (4-15-1)**

எனவரும் தொடரையும் சுட்டி நிற்றல் உணரத்தக்கதாகும்.

வளமாகிய நீர்த்துறையில் அமைந்த பொழிலிடத்தே வாழும் புன்னைமரங்கள் பாணரை யொத்துப்பாட, அதுகேட்ட புன்னைமரங்கள் தாதாகிய பசும்பொன்னைத் தன்னகத்தே கொண்ட போதாகிய வெண்கிழியைத் தந்து வள்ளலை யொத்து விளங்கிய காட்சியை,

**'பாணிகர் வண்டினம் பாடப் பைம்பொன்தரு வெண்கிழிதஞ்**
**சேணிகர் காவின் வழங்கும் புன்னைத்துறை'**
**(திருக்கோவை-183)**

எனவரும் தொடரில் அடிகள் புலப்படுத்தியுள்ளார்.

இத்தொடருடன்,

**'புன்னை வெண்கிழியிற் பவளம்புரை பூந்தராய்' (2-1-1)**

எனவும்,

**'வண்டுபாட, விரைசேர்பொன் இதழிதர' (1-132-4)**

எனவும் வரும் தேவாரத் தொடர்கள் ஒப்புநோக்கி யுணரத்தக்கன வாகும்.

தலைமகள், 'என்னை நீத்தகன்ற வள்ளலை உள்ளம் நெகிழ்வித்து இவ்விடத்தே தரவல்லையோ' எனக் கூடற் தெய்வத்தை வாழ்த்திக் கூடலிழைத்து வருந்துவதாக அமைந்தது, 'ஆழி திருத்தும்' (திருக்கோவை-186) என்னும் முதற் குறிப்புடைய திருப் பாடலாகும். இது,

**'மாடநீர் மருகற் பெருமான் வரிற்**
**கூடு நீயென்று கூட லிழைக்குமே' (5-88-8)**

எனவரும் திருக்குறுந்தொகையினை நினைவுபடுத்தும் நிலையில் அமைந்துள்ளமை காண்க.

**'பாலொத்த நீற்றம்பலவன்' (திருக்கோவை-238)**

எனவரும் தொடர்,

**'பாலையன்ன வெண்ணீறு பூசுவர்' (2-89-3)**

எனவரும் தேவாரத் தொடரினை அடியொற்றியமைந்ததாகும்.

தில்லையம்பலவன்பால் பத்திமிக்க அடியவரைப் போன்று ஒரு பித்தி, தன் பின்னேவர, ஒரு பெருந்தகை முன்னே செல்லக் கண்டீரோ எனச் செவிலித் தாய் விரதியரை நோக்கி வினவுவதாக அமைந்தது.

**'சுத்திய பொக்கணத் தென்பணி கட்டங்கஞ் சூழ்சடைவெண்**
**பொத்திய கோலத்தினீர், புலியூரம் பலவர்க்குற்ற**
**பத்தியர் போலப் பணைத்திறுமாந்த பயோதரத்தோர்**
**பித்திதற் பின்வர முன்வருமோவொர் பெருந்தகையே'(242)**

எனவரும் திருக்கோவையாகும். இதன் முதலிரண்டடிகளிற் குறித்த விரதியர் கோலத்தியல்பு,

**'வித்தகக் கோல வெண்டலை மாலை விரதிகள்' (4-21-1)**

எனவரும் தேவாரத் தொடரிலும், பின்னடிகளிற் குறித்த பத்தியர் நிலையினளாகிய பித்தியின் இயல்பு, 'முன்னமவனுடைய நாமங் கேட்டாள்' எனவரும் திருத்தாண்டகத்தில் 'பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள், தன்னை மறந்தாள் தன் நாமங் கெட்டாள் தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே' எனவரும் தொடரிலும் இடம்பெற்றிருத்தல் ஒப்பு நோக்கத் தக்கதாகும்.

தன்பால் அன்புடைய அடியார்களது வாக்கிலும் மனத்திலும் பிரியாதெழுந்தருளியிருக்கும் இறைவனது அருட்டிறத்தை,

**'வாயும் மனமும் பிரியா இறை' (திருக்கோவை-289)**

என அடிகள் புகழ்ந்து போற்றியுள்ளார். இத்தொடர்,

**'மனத்தகத்தான் தலைமேலான் வாக்கினுள்ளான்**
**வாயாரத்தன்னடியே பாடுந் தொண்டர் இனத்தகத்தான்' (6-8-5)**

எனவும், 'வாயானை மனத்தானைத் மனதுள் நின்ற கருத்தானை கருத்தறிந்து முடிப்பான் தன்னை' (6-19-8) எனவும் வரும் தேவாரத்தொடர்களை ஒத்தமைந்திருத்தல் உணர்தற்குரியதாம். இவ்வாறே 'செய்ம்முக நீல மலர் தில்லைச் சிற்றம்பலத்தரற்கு' (356) என வரும் திருக்கோவைத்தொடர், 'செய்ந்நின்ற நீலமலர்கின்ற தில்லைச் சிற்றம்பலவன்' (4-80-5) எனவரும் திருவிருத்த அடியினையும், 'தில்லையிறையமைத்த திறலியல்யாழ்' (375) எனவரும் திருக்கோவைத் தொடர், 'எம்மிறை நல்வீணை வாசிக்குமே' (4-112-7) எனவரும் திருவிருத்தத் தொடரையும் அடியொற்றி யமைந்துள்ளமை ஒப்பு நோக்கத்தக்கதாகும்.



# திருவாதவூரடிகள் மேற்கொண்டொழுகிய சிவநெறிக்கொள்கை

சைவ சமய குரவர் எனப் போற்றப்பெறும் நால்வருள் கால முறைப்படி நாலாமவராக வைத்து எண்ணப் பெறுபவர் திருவாதவூரடிகளாவர். அடிகள் தமக்கு முன்னுள்ள திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய தேவார ஆசிரியர் மூவரும் அம்மூவர்க்கு காலத்தால் முற்பட்ட திருமூல நாயனாரும் கொண்டொழுகிய சைவ சித்தாந்தம் எனப்படும் சிவநெறிக் கொள்கையினையே மேற்கொண்டொண்முகியவராவர். இச்செய்தி, திருமந்திர மாலையிலும் தேவாரத்திருப் பதிகங்களிலும் உள்ள தொடர்களும் கருத்துக்களும் அடிகள் அருளிய திருவாசகம் திருக்கோவையாகிய அருள் நூல்களில் அவ்வாறே எடுத்தாளப்பட்டிருத்தலால் இனிது விளங்கும்.

திருவாசகத்தில், பதிபசுபாசம் என்னும் முப்பொருணமை பேசப்பட்டுள்ளது. பதி-இறைவன். பசு-ஆன்மா. பாசம்-உயிர்களைப் பற்றியுள்ள ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்கள். அவற்றுள் மாயையின் காரியமாகிய மாயேயத்தையும், இறைவனது சத்திகளுள் ஒன்றாகிய திரோத தாயியையும் வேறுபிரித்து எண்ணி மலங்கள் ஐந்தெனக் கூறுதலும் உண்டு. இங்ஙனம் மும்மலம், ஐம்மலம் என வழங்கும் சைவ சித்தாந்தக் குறியீடுகளும் இருவினையொப்பு முதலிய நுண்பொருள்களும் திருவாசகத்தில் இடம் பெற்றுள்ளமை காணலாம். இக்குறிப்புக்களை உற்று நோக்குங்கால் திருவாதவூரடிகள் திருமூலர் அருளிய சைவ சித்தாந்தத் தத்துவக் கொள்கைகளை மேற்கொண்டொழுகிய செம்புலச் செல்வரென்பது நன்கு துணியப்படும்.

இனி, 'சிவமானவாபாடி' எனவும், 'சிவமாக்கி எனையாண்ட' எனவும், 'சென்று சென்றணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றாம் திருப்பெருந்துறையுறை சிவனே' எனவும் திருவாசகத்தில் வரும் தொடர்கள், அடிகள் காலத்துப் பரவிய மாயாவாதக் கொள்கையினை ஓரளவு தழுவியமைந்தன எனக்கருதுவாருமுளர். * (*தஞ்சை K.S. ஸ்ரீநிவாச பிள்ளையவர்கள் எழுதிய தமிழ் வரலாறு. (நான்காம் பதிப்பு) - பக்கம் 138, 139 ) இக்கருத்து ஒரு சிறிதும் ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று என்பதனை ஆசிரியர் மறைமலையடிகளார் அவர்கள் தாம் இயற்றிய மாணிக்க வாசகர் வரலாறுங் காலமும் என்னும் ஆராய்ச்சி நூலில்

தக்க காரணங்காட்டி விளக்கியுள்ளார்கள்.* (*மாணிக்கவாசகர் வரலாறுங்காலமும்- பக்கம்-142-172) திருமந்திரம் முதலிய ஏனைய திருமுறைகளையும் எட்டாந் திருமுறையாகிய இத்திருவாசகப் பனுவலையும் ஒப்புநோக்கிப் பயில்வார்க்குச் சைவத் திருமுறைகள் பன்னிரண்டும் சித்தாந்தச் செந்நெறியாகிய திருநெறியினைக் கடைப்பிடித்தொழுகிய அருளாளர்கள் அருளிய பொருளுரைகள் என்பது நன்கு புலனாம்.

கடவுள், உயிர், உலகம் என்னும் இம்மூன்றும் என்றும் உள்ள பொருள்கள் என்பது சைவ சித்தாந்தக் கொள்கை. 'பிரமம் ஒன்றே உள்பொருள்; உலகம் வெறும் பொய்த்தோற்றமே' என்பது மாயா வாதக் கொள்கை. சிவனருள் பெற்ற செம்புலச் செல்வராகிய திருவாதவூரடிகள் மாயாவாதக் கொள்கையினையும் முப்பொரு ளுண்மையினை உடன்படாமையால் அதனோடொத்த உலோகாயதக் கொள்கையினையும் அறவே வெறுத்து விலக்கியவர் என்பது,

**'மிண்டிய மாயா வாத மென்னுஞ்**
**சண்ட மாருதஞ் சுழித்தடித் தாஅர்த்து**
**உலோகாயதனெனும் ஒண்டிறற் பாம்பின்**
**கலா பேதத்த கடுவிடம் எய்தி' (திருவா-போற்றித்-54-57)**

எனவரும் திருவாசகத் தொடரால் இனிது விளங்கும்.

உயிர்கள் ஆணவம் மாயை கன்மம் மும்மலங்களாற் பிணிக்கப்பட்டுள்ளன என்னும் இவ்வுண்மை,

**'ஆணவ மாயையுங் கன்மமு மாமலம்**
**காணு முளைக்குத் தவிடுமி யான்மாவும்**
**தாணுவை யொவ்வாமற் றண்டுல மாய்நிற்கும்**
**பேணுவாய் மற்றுநின் பாசம் பிரித்தே.' (2192)**

எனவரும் திருமந்திரத்திற் கூறப்படுதலால், சைவ சித்தாந்தங் கூறும் மும்மலங்களின் உண்மை தேவார ஆசிரியர்கள் காலத்திற்கு முன்பே சைவ நூல்களிற் பேசப்பெற்றுள்ளமை நன்கு புலனாம். இம்மும்மலங்களைப் பற்றிய இயல்புகள் தேவாரத் திருப்பதிகங்களிற் குறிக்கப் பெற்றுள்ளன என்பது முன்னர் விளங்கப் பெற்றது. * (* பன்னிரு திருமுறை வரலாறு முதற்பகுதி) உயிர்களின் அறிவை விளங்கவொட்டாது மறைத்திருத்தல் ஆணவ மலத்தின் செயல். எல்லா உயிர்களும், மாயையால் ஆக்கப்பட்ட உடல், கருவி, உலகு, நுகர் பொருள் என்பவற்றைப் பெற்று அவற்றின் உதவியால் அறியாமை சிறிது சிறிதாக நீங்க அறிவு விளங்கப் பெறுவன. இங்ஙனம் உயிர்களது அறிவு விளங்குவதற்குக் கருவியாய் நின்றுதவுதல் மாயையின் செயல்.

உயிர்கள் மலம் மாயை என்னும் இரண்டின் அகமாய் நின்று வினை செய்யுங்கால் நல்வினை தீவினை என்னும் இரு வினைகள் நிகழ்வன. இவ்வினைகளால் உண்டாகும் பழக்கத்தை உயிர்களின் அறிவிற்பதியும்படி செய்தல் கன்ம மலத்தின் செயலாகும்.

ஆணவ மலத்தால் அறியாமையும், மாயை கன்மங்களால் அவ்வறியாமை நீங்கி அறிவு விளங்கப் பெறுதலும் உயிர்கள்பால் இடையறாது நிகழ்வன. இவற்றுள் ஆணவ மலம் ஒன்றே செம்பிற் களிம்பு போன்று உயிரோடு ஒற்றித்து அதன் விழைவு அறிவு செயல் ஆகிய ஆற்றல்களைத் தொன்றுதொட்டு மறைத்து நிற்பது. மாயையும் கன்மமும் அம்மல நீக்கத்திற்கும் உயிர்களின் அறிவு விளக்கத்திற்கும் துணை செய்வனவாய் இடையேயொரு காலத்துவந்து வாய்த்தனவாகும். மல நீக்கத்திற்கு உதவி செய்யும் இவ்விரண்டும், ஆணவ மலத்தோடு உடன் நின்று அதன் சார்பில் தாமும் ஒரோவொருகால் மயக்கத்தை விளைத்தல் பற்றி மலம் என வழங்கப்படுவனவாயின. அறியாமையைச் செய்யும் மலத்தின் வலியை ஒடுக்கி உயிர்கட்கு அறிவினை விளங்கச் செய்தற் பொருட்டே எல்லாம் வல்ல இறைவன் மாயையின் காரியமாகிய பல்வேறுடம்புகளையும் அவை நுகர்தற்கேற்ற பல்வேறு நுகர் பொருள்களையும் மாயையாகிய முதற்பொருளினின்றும் படைத்து வழங்குகின்றான். இவ்வாறு வழங்கும் இறைவனது நோக்கம், உயிர்கள் உலக நுகர்ச்சிகளால் நன்றுந் தீதுங் கண்டு அறிவு விளங்கப் பெற்றுத் தம்மைப் பிணித்துள்ள மும்மலப் பிணிப்பினின்றும் விடுபட்டுப் பேரின்ப வுருவினதாகிய சிவத்தோடு இரண்டறக் கலந்து தாமும் சிவமுமாய் நிலை பெயராப் பேரின்ப நிலையில் இருத்தல் வேண்டும் என்பதேயாகும்.

இறைவனருளால் மாயை கன்மங்களின் உதவியினைப் பெற்றுச் சிறிது சிறிதாக அறியாமை தேய்ந்து அம்முறையே அறிவு விளங்கப் பெற்ற உயிர்கள், தமக்குத்தோன்றாத் துணையாய் நின்று அருள் புரியும் உண்மையறிவின்ப வுருவினனாகிய சிவபரம் பொருளை அடைந்து அம் முதல்வனருகில் இரண்டறக் கலந்து ஒன்றாதலிலேயே தமது நாட்டத்தைச் செலுத்தி உலகியற் பொருள்களிலும் தம்மைச் சூழ்ந்துள்ள உற்றார் உறவினர் முதலியோரிடத்திலும் தம் உடம்பிலும் உயிராகிய தம்மிலும் செல்லும் உணர்வை மடித்துத் திருப்பித் தம் உயிர்க்கு உயர்வாய் விளங்கும் சில பரம்பொருளிலே படியுமாறு செய்து, தாம் ஒரு பொருள் உண்டென்பதனை மறந்து சிவமாகவே அமர்ந்திருப்பன என்பர் பெரியோர். இவ்வாறு உயிர்கள் மும்மலப் பிணிப்பினின்றும் நீங்கிச் செம்பொருளாகிய சிவத்தைத்

தலைக்கூடிச் சிவமெனத் தாமென வேறின்றி இரண்டறக் கலத்தலையே திருவாதவூரடிகள் 'சிவமாதல்' எனக் குறித்துள்ளார். ஆகவே மலம் மாயை என்னும் பாசங்களும், அவற்றோடு உடனாய் நிற்றல்பற்றிப் பசுவென வழங்கப்படும் உயிர்களும், இவை எல்லாவற்றையும் ஊடுருவி யாண்டும் நிறைந்து நின்றே ஒன்றினும் தோய்வற விளங்கும் பதியாகிய சிவமும் என இம்மூன்றும் என்றும் உள்பொருள்களேயாம் என்பதும், உயிர்கள் மலமாயை கன்மங்களின் பிணிப்பினின்றும் விடுபட்டுச் சிவத்தைத் தலைக்கூடுதல் என்பது, மும்மலங்களாற் கட்டுப்பட்டு அல்லற்படும் முன்னைய நிலையினின்றும் பெயர்ந்து என்றும் பேராவியற்கையாகிய பெருநிலையைப் பெற்றுப் பேரின்பவுருவாய் நிற்கும் அவ்வளவே யல்லது, அவ்வுயிர்கள் தம் பொருண்மை கெட்டு ஒன்றுமேயில்லாத வெறும்பாழாயொழிதல் அன்று என்பதும், சைவ சித்தாந்தத்தின் தெளிந்த கொள்கைகளாகும்.

திருவாதவூரடிகள் அருளிய திருவாசகப் பனுவலில் சைவ சித்தாந்த நுண்பொருள்கள் ஆங்காங்கே தெளிவாக விளக்கப் பெற்றிருத்தல் காணலாம். உயிர்களின் அகத்தே அறிவை மறைத்து நிற்கும் மலமும் புறத்தே அவ்வுயிர்களின் கட்புலனை மறைத்து நிற்கும் இருளும் ஆணவ மலத்தின் இரு வேறு திறங்கள் ஆதலின், அதனை 'இருள்' எனவும், அஃது அறியாமையைச் செய்தலின், 'அஞ்ஞானம்' எனவும், உயிர்களின் அறிவு செயல் முதலியன வெளிப்பட ஒட்டாது அவற்றைக் கயிறு போல் இறுகப் பிணித்து நிற்றலின் 'பாசம்' எனவும், உயிர்கட்குக் கலக்கத்தை விளைவித்தலின் 'மலம்' எனவும், அம்மலத்தின் முனைப்பால் உயிர்கள் பால் நிகழும் வினைகள் கொடுமையுடையனவா யிருத்தலின் 'கடிய வினை' எனவும், இவ்வாறு தொன்று தொட்டு உயிர்களைப்பற்றி வருத்தும் பழைமையுடையதாதல் பற்றி அதனைப் 'பழமலம்' எனவும், உயிர்கள் அடையும் எல்லாத் துன்பங்கட்கும் காரணமாதல் பற்றிய 'பாசவேர்' எனவும் திருவாதவூரடிகள் ஆணவமலத்தின் இயல்பினை விளங்க அறிவுறுத்தியுள்ளார். இந்நுட்பம்,

**'வல்வினையேன் தன்னை, மறைந்திட மூடிய**
**மாய இருளை'** **(சிவபுராணம்-50-51)**

**'என்னுடை யிருளை ஏறத் துரந்தும்'** **(கீர்த்தித்-6)**

**'அவன் வாங்கிய என் பாசத்திற் காரென்று**
**அவன் தில்லையின் ஒளி போன்று** **(திருக்கோவை-109)**

'அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும் நல்லறிவே'
(சிவபுராணம்-40)

'பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே'
(சிவபுராணம் - 64)

'பாசத் தளையறுத்து ஆண்டுகொண்டோன்'
(திருக்கோவை-115)

'கடலின் திரையதுபோல்வரு கலக்க மல மறுத்து'
(உயிருண்ணிப்பத்து)

'கடிய வினையகற்றிப்' பழமலம் பற்றறுத்தாண்டவன்'
(திருப்பாண்டிப் பதிகம்)

'பாசவேர் அறுக்கும் பழம்பொருள்' (பிடித்த பத்து)

என வரும் அடிகள் வாய்மொழிகளால் இனிது புலனாதல் உணரத்தக்கதாகும்.

உயிர்களைப் பொதிந்துள்ள மலத்தின் இயல்பினைக் கூறுமிடத்து, அம்மலத்தின் ஆற்றலைக் கெடுத்து உயிர்களை உய்வித்தருளும் சிவத்தின் இயல்பினை, 'அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும நல்லறிவு' எனவும், 'மலம் அறுத்து என் உடலும் எனதுயிரும் புகுந்து ஒழியா வண்ணம்நிறைந்தான்' எனவும் 'கழிவில் கருணை' எனவும் பழம்பொருள் எனவும், 'அவன் தில்லையின் ஒளி' எனவும் வரும் தொடர்களில் அடிகள் உடன் வைத்து உணர்த்தியுள்ளார். பழம் பொருளாகிய சிவம் என்றும் நல்லறிவுப் பொருளாகத் திகழ்தலும், மலந்தீர்ந்த உயிர் தன் பொருட்டன்மை சிதையாதிருக்க, அவ்வுயிரின்கண் சிவம் புலப் பட்டுத் தோன்றி அதன் உடல், கருவி கரணங்களை அகத்திட்டு விளங்குதலும் பேரருளாளனாகிய இறைவன் உயிர்களின் மலத்துன்பத்தை நீக்கித் தன் பேரருளின்பத்தை உயிர்கட்கு வழங்கும் அருட் குறிப்புடையனாதலும், அம்முதல்வன் தன்பால் அன்புடைய அடியார்கட்கு அருள் வழங்குதற் பொருட்டுத் தில்லைச் சிற்றம்பலமாகிய அருள்வெளியில் ஒளியுருவினனாக நின்று ஆடல் புரிதலும் இங்கெடுத்துக் காட்டிய திருவாசகத் தொடர்களால் இனிது புலனாகும். உயிரும் சிவமும் பொருட்டன் மையால் இருவேறு பொருள்களாதலும், உயிர்கள் தொன்மையே மும்மலப் பிணிப்புடையவனாயிருக்க, முற்றுணர்வும் பேரருளும் அளவிலாற்றலும், வரம்பிலின்பமும் உடையனாய் இயல்பாகவே பாசங்களின் நீங்கிய இறைவன், உயிர்களை மும்மலப் பிணுப்பினின்றும் விடுவித்து அவ்வுயிர்களுச் சிவமாகிய தன்னுடன் பிரிவின்றி ஒன்றும் வண்ணம் தன் அருள் ஒளியில் அகத்திட்டுக் கொள்ளுதலும் மேற்குறித்த அடிகள்

*வாய்மொழிகளால் நன்கு பெறப்படுதலின், திருவாதவூரடிகள் சைவ சித்தாந்த சமயத்தினராதல் நன்கு தெளியப்படும். இறைவனது அருளுபகாரத்தால் மும்மலப் பிணிப்பினின்றும் நீங்கிய தூய உயிர்கள்பால் அம்முதற்பொருளாகிய சிவம் முனைத்துத் தோன்றி அவ்வுயிர்களைத் தன்னுளடக்கித் தன்னையே காட்டிநிற்கும் என்பது,*

**சுத்தச் சிவனுரை தானதில் தோயாமல்**
**முத்தர் பதப்பொருள் முத்திவித்தாமூலம்**
**அத்தகை யான்மா யரனை யடைந்தற்றாற்**
**சுத்த சிவமாவரே சுத்த சைவரே. (திருமந்திரம்-1440)**

*எனவும்,*

**அனாதி சீவனைம் மலமற்றப் பாலாய்**
**மனாதியடங்கத் தனைக்கண்டரனாய்த்**
**தனாதி மலங்கெடத் தத்துவா தீதம்**
**வினாவுநீர் பாலாதல் வேதாந்த வுண்மையே.**
**(திருமந்திரம்-2401)**

*எனவும்,*

**உயிரைப் பரனை யுயர்சிவன் றன்னை**
**உயர்வற் றறிதெர்ந்தத் தசியதனாற்**
**செயலற் றறிவாகி யுஞ்சென்றடங்கி**
**அயர்வற்ற வேதாந்த சித்தாந்த மாமே. (திருமந்திரம்-2402)**

*எனவும் திருமூலநாயனாரும்*

**எம்பிரா னென்றதேகொண் டென்னுளே புகுந்துநின்றிங்**
**கெம்பிர னாட்ட ஆடி யென்னுளே யுழிதர்வேனை**
**எம்பிரான் என்னைப் பின்னைத் தன்னுள்ளே கரக்குமென்றால்**
**எம்பிரா னென்னி னல்லால் என்செய்கேன் ஏழையேனே.**
**(4-76-3)**

*எனவும்,*

**'தற்பரமாய்ச் சதாசிவமாய்த் தானும் யானும்**
**ஆகின்ற தன்மையனை' (6-98-7)**

*எனவும்*

**'என்னானாய் என்னானாய்' (6-95-7)**

*எனவும் திருநாவுக்கரசு நாயனாரும்,*

**'திக பரம்பொருள்**
**சேர்வார்தாமே தானாகச் செயுமவன்' (1-126-7)**

*எனவும்*

**'அப்பரிசிற் பதியான அணிகொள் ஞானசம்பந்தன்'(1-54-11).**

*எனவும் ஆளுடையபிள்ளையாரும்,*

**'நாற்றானத் தொருவனை நானாயபரனை' (7-38-4)**

*எனவும்*

**'என்னவனாம் அரன்' (7-39-11)**

*எனவும் நம்பியாரூரரும்,*

**நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுளம் உண்டாதல்**
**தானெனவொன் றின்றியே தானதுவாய் - நானெனவொன்**
**றில்லென்று தானே யெனுமவரைத் தன்னடிவைத்**
**தில்லென்று தானாம் இறை. (சிஞானபேதம்-சூ.10.வெ-1)**

*என மெய்கண்ட தேவநாயனாரும் ஓதியவாற்றால் நன்கு உணரப் படும் திருமூலர், வேதாந்தம் என்றது உபநிடதங்களை, மாயாவாதத்தை வேதாந்தமென வழங்குதல் பிற்கால வழக்கு.*

*சிவத்தின் திருவடியைச் சேர்தல் என்பது, இறைவன் திருவருளிற் பதிதலாதலின், அதனைச் சிவமாதல் என வழங்குதலும் திருமூலர் காலந்தொட்டு வழங்கிய சைவசித்தாந்த வழக்கேயாகும். இவ்வுண்மை,*

**ஒன்றும் இரண்டும் இலதுமாய் ஒன்றாக**
**நின்று சமய நிராகாரம் நீங்கியே**
**நின்று பராபரை நேயத்தைப் பாதத்தாற்**
**சென்று சிவமாதல் சித்தாந்த சித்தியே. (1437)**

*எனவரும் திருமூலர் வாய்மொழியால் இனிது புலனாம்.*

*ஆன்மா, தன் பொருட்டன்மையழிந்து சிவம் ஒன்றாயே ஒழியாமலும், சிவத்தின் வேறாய்த் தான் தனித்து நில்லாமலும், பாலோடு அளாவிய நீர் தன் உண்மை கெடாமல் பாலின் தன்மையதாய் அதனுடன் பிரிவறக் கலந்து ஒன்றாதல் போன்று, மலம் நீங்கித் தூயதாகித் தன் உண்மை கெடாமல் சிவத்துடன் இரண்டறக் கலந்து ஒன்றாதலையே சிவமாதல் எனச் சைவ சித்தாந்த நூல்கள் கூறும் என்பது மேற்காட்டிய திருமந்திரப் பாடலில் தெளிவாக விளக்கப் பட்டிருத்தல் காணலாம்.*

*"ஆதித்தப் பிரகாசம் காட்டாகப் பிரபஞ்ச ரூபத்தைப் பற்றி நின்ற கண்ணானது, அந்த உருவங்களைவிட்டு அந்தப் பிரகாசத் துக்கு முதலாயிருக்கிற ஆதித்தனைக் கண்டு பிரிவற நின்றாற்போல, ஆன்மாவும் அருளிடமாகக் கூடி நின்று சத்தாதி விடயங்களைப் புசித்து நிற்கச் செய்தே அதனையும் விட்டு*

மனோவிகாரமும் அடங்கி அந்த அருளுக்கு முதலாயிருக்கிற சிவத்தோடும் அந்த அருள் காட்டாகச் சென்று கூடிப் பிறிவற்று இரண்டற நிற்கையால்" ஆன்மா அந்தச் சிவத்தோடுங் கூடிச் சிவமாய் நிற்கும் எனக்கூறி, அதற்குப் பிரமாணமாக,

**'அவமாய தேவர் அவகதியி லழுந்தாமே**
**பவமாயங் காத்தென்னை யாண்டுகொண்ட பரஞ்சோதி**
**நவமாய செஞ்சுடர் நலுகுதலும் நாமொழிந்து**
**சிவமானவா பாடித்தெள்ளேணங் கொட்டாமோ'**
**(திருவா-திருத்தெள்-4)**

எனவரும் திருவாசகத் திருப்பாடலை எடுத்துக்காட்டுவர் மதுரைச் சிவப்பிரகாசர். "சிவமாய் என்றது ஆன்மா தற்போதமாய் நிற்பதுஞ் செய்யாமல் தானென்கிற முதல் கெடுவதுஞ் செய்யாமல் தற்போதங் கெட்டு அந்தச் சிவத்தோடுங் கூடி இரண்டற நின்று அநுபவித்து என அறிக. அப்படிச் சிவமாய் என்ற சொல் அந்தச் சிவமாவதுஞ் செய்யாமற் பிறிந்து நிற்பதுஞ் செய்யாமல் நிற்கை என்பதற்குப் பிரமாணம் சங்கற்ப நிராகரணத்தில், 'ஆனாய் என்பதனைத்தும் அவ்வை, தானாகாமையைச் சாற்றிடும் என்க, தாமே யெனுமித் தனியேகாரம், அழிந்திலர் அதுவே ஆய்த்திலர் அது விட்டொழிந் திலர் பிறிவிலர் எனுமிவை உணர்த்தும்" (சிவப் பிரசாகம் 80-ம் செய்யுள் உரை) எனச் சிவமாதல் என்னுஞ் சொல்லுக்கு அவ்வாசிரியர் கூறும் விளக்கம் இங்கு உணரத்தக்கதாகும்.

சிவமாகிய முழுமுதற்பொருள் ஒன்றையே குறிக்க வேண்டின் அதனை ஏகம் என்ற சொல்லாற் கூறுதல் அமையும். சிவமும் உயிரும் தனித்தனி வேறாய் நிற்பின் துவிதம் என்ற சொல்லாற் சொல்லலாம். இவ்வாறு இறைவன் ஒன்றாயும் இரண்டாயும் நில்லாமல் உயிர்களோடு பிரிப்பின்றி உடனாய் நிற்றலால், அவ்விரண்டற்ற நிலையை வடமொழியில் 'அத்துவிதம்' எனற் சொல்லாற் குறித்தனர் சான்றோர். "சாந்தம் சிவம் அத்வைதம் சதுர்த்தம் ஆன்மா" என்பது மாண்டூக்ய உபநிடதம். அத்துவிதம் என்ற சொல்லுக்கு ஏகம் (ஒன்று) என ஒரு சாராரும், துவிதம் (இரண்டு) என மற்றொரு சாராரும் பொருள் கொண்டனர். ஒன்றும் இரண்டும் ஆகா இரண்டற்ற தன்மை என இதற்கு உண்மைப் பொருள் கண்டார் மெய்கண்டார். இங்ஙனம் ஒன்றெனலும் ஆகாமல் இரண்டெனலுமாகாமல் தூய நல்லுயிர்கள் சிவத்தோடு இரண்டறக் கலந்த் சிவத்தன்மையாய் அடங்கி ஒன்றாகும் வீடுபேற்றின் நிலையே 'சிவமாதல்' என்னும் சொற்றொடரால் அறிவுறுத்தப்பெறும் சைவசித்தாந்த முடி பொருளாகும். அம்முடிவினைத் தெளிவிக்கும் நிலையில்

அமைந்ததே, 'நவமாய செஞ்சுடர் நல்குதலும் நாம் ஒழிந்து சிவமான வாபாடி' எனவரும் திருவாசகத் தொடராகும். இறைவனருளும் சிவஞானத்தால் உள்ளந்தெளிவு பெறாதவர்கள் இங்ஙனம் சிவமாதலாகிய பேரின்ப நிலையை அடைய மாட்டார்கள் என்பதனை,

**'தெளி வறியாதார் சிவமாக மாட்டார்'** **(1480)**

எனவரும் தொடரால் திருமூலநாயனார் அறிவுறுத்தியுள்ளமை இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

**நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப் பகலோன்**
**புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்**
**உலகே ழெனத்திசை பத்தெனத்தா னொருவனுமே**
**பலவாகி நின்றவா தோணோக்கம் ஆடாமோ.**
**(திருவா-திருத்தோணோக்கம்-5)**

எனவரும் திருப்பாடல், இறைவன் ஐம்பூதங்கள், ஞாயிறு, திங்கள், ஆன்மா ஆகிய எல்லாப் பொருள்களிலும் பிரிவின்றிக் கலந்து விளங்குந் திறத்தினை விரித்துரைப்பதாகும். இறைவன் இவ்வாறு பொருள் தோறும் யாண்டும் நீக்கமறக் கலந்து உடனாய் நிற்கும் இயல்பினைக் கூறுவது, 'தான் ஒருவனுமே பலவாகி நின்றவா' என்ற இத் தொடராகும். 'இறைவனையன்றி வேறொரு பொருளும் இல்லாதிருக்க அவன் ஒருவனே உலகுயிர்களாகிய பல பொருள்களுமாய்க் காணப்படுகின்றான்' என இத் தொடர்க்குப் பொருள் கூறுதல் திருவாதவூரடிகள் கருத்துக்குச் சிறிதும் ஒவ்வாததாகும். ஒரு பொருளே பல பொருள்களாகத் தோற்றுதலும், ஒரு பொருளே பல பொருள்களிலும் ஊடுருவி நிற்றலும் தம்முள் மாறுபட்ட இரு வேறு தன்மைகளாகும். இவ்விரண்டினுள் இத்திருப் பாடலில் திருவாதவூரடிகள் குறித்தது, ஒரு பொருளே தம்முள் வேறுபட்ட பல பொருள் களிலும் இரண்டறக் கலந்து நிற்கும் இயல்பினையே யாகும். இந்நுட்பம், எண்வகையாய் நின்றான் என்னாது 'எண் வகையாய்ப் புணர்ந்து நின்றான்' எனத்தாம் கூறும் பொருள் இனிது விளங்க அடிகள் விரித்துரைத்தலால் உணரப்படும்.

புணர்ந்து நிற்றல் என்றது, ஒரு பொருள், தானல்லாத வேறு பொருளுடன் கூடி நிற்றலைக் குறிப்பதன்றி ஒருபொருளே பலவாய் விரிந்து தோன்றுவதனையோ ஒன்று மற்றொன்றாகத் திரிந்து தோன்றுவதனையோ குறிப்பதன்றாம். ஓர் உடம்பினுட் கலந்து நிற்கும் உயிர் அவ்வுடம்பின் ஐம்பொறிகளினும் ஐம்புல உணர்வினைத் தோற்றுவித்தல் பற்றி உடம்போடு ஒன்றாய் கலந்திருப்பினும் உண்மையால் நோக்கும் வழி அவ்வுயிர்,

உடம்பின் வேறாதல் போன்று, இறைவனும் உலகுயிர்கள் எல்லாவற்றிலும் நீக்கமறக் கலந்து நின்று அவற்றை இயக்குவித்தல் பற்றி அவை பலவுமாய் விரவியிருப்பினும் உண்மையில் அம்முதல்வன் அவற்றின் வேறாய்த் தான் ஒருவனேயாவன் என்னும் மெய்ம்மையினையே தான் ஒருவனுமே பலவாகி நின்றவா' எனவரும் இத்தொடரில், அடிகள் விளக்கியுள்ளார். 'ஒருவன்' எனவே ஒருவன் என்னும் ஒருவனாகிய இறைவனும், 'பல' எனவே அவனல்லாத உலகு உயிர்களும், 'ஆகி' எனவே அவற்றோடு அத்து விதமாய்க் கலந்து விளங்கும் அவனது தன்மையும் புலப்படுத்தப் பெற்றமை உணரத்தகுவதாகும். இக்கருத்தினை, நள்ளுங் கீழுளும் மேலுளும், யாவுளும், எள்ளும் எண்ணெயும் போல்நின்ற எந்தையே" (திருவா-திருச்சதகம்-46) என முன்னரும் அடிகள் வற்புறுத்தி யுள்ளமை இங்கு ஒப்ப வைத்து உணர்தற் பாலதாகும்.

இறைவன் எல்லாப் பொருள்களுமாய்க் கலந்துள்ளான் என்று கூறிய அளவில், 'இறைவன் ஒருவனே உலகமாகவும் உயிர்களாகவும் தோன்றுகின்றான்; அவனையன்றி வேறொரு பொருளும் இல்லை' எனப் பிறர் பிறழவுணராதவாறு,

**'நிரந்த ஆகாயம் நீர் நிலம் தீகால் ஆய், அவையல்லையாய்,**
**ஆங்கே, கரந்ததோர் உருவே'**

எனவும்

**'பெண்ணாகி ஆணாய் அலியாய் பிறங்கொளிசேர்**
**விண்ணாகி மண்ணாகி இத்தனையும் வேறாகி**

எனவும்

**எல்லா வுயிருமாய்த் தழைத்துப்**
**பிழைத்தவை யல்லையாய் நிற்கும், எத்தனே'**

எனவும், அம்முதல்வன் கலப்பினால் ஒன்றாயும், பொருட்டன்மை யால் வேறாயும், உயிர்க்குயிராதற் றன்மையால் உடனாயும் நிற்குந் திறத்தினைத் திருவாதவூரடிகள் விளக்கிய திறம் ஈண்டு நினைத்தற் குரியதாகும். இறைவன் கலப்பினால் உலகுயிர்களாக நிற்குந் திறத்தினை நின்ற திருத்தாண்டகத்திலும், பொருட்டன்மையால் அவற்றின் வேறாதலை 'விரிகதிர் ஞாயிறல்லர்', 'மண்ணல்லை விண்ணல்லை' முதலிய திருப்பாடல்களிலும் திருநாவுக்கரசர் அறிவுறுத்தியுள்ளமை இங்கு ஒப்பு நோக்கி யுணரத்தக்கதாம்.

கதிரவன் எழுந்த அளவில் உலகிற்புறவிருள் மறைந்து போக மக்கள் கண்ணறிவு விளங்கப்பெற்று எதிர்ப்பட்ட எல்லாப் பொருள்களையும் காணப்பெறுதல் போன்று, ஆன்மாவுக்கு

இறைவனது அருளொளி தோன்றிய அளவில் இதற்கு முன் அதனைப் பற்றியிருந்த ஆணவ இருள் அகன்று மறைய அவ்வருளொளியின் உதவியால் ஆன்மா, தன்னையும் தன் முதல்வனையும் ஏனைய பொருள்களின் நிகழ்ச்சியினையும் உள்ளவாறு காணும் ஆற்றலைப் பெறுகின்றது. பளிங்கினில் விளங்கித் தோன்றிய மலர்களின் வடிவும் நிறமும் கதிரவன் வானின் உச்சியை யடையும்போது மெல்ல மெல்லக் குறைந்து உச்சிக்கு வந்த நிலையில் முற்றிலும் இல்லையாய் ஒழிதல் போன்று, செஞ்ஞாயிறாகிய இறைவனது அருள்விளக்கம் உயிரின்கண் பதியுந்தோறும் கன்மங்களின் சார்பும் அணுவணுவாய்த் தேய்ந்து, பின்னர் அவ்வருளொளி ஆன்மாவை முற்றிலும் அகத்திட்டுக்கொண்ட நிலையில் அவற்றின் பற்று ஆன்மாவை விட்டு முற்றிலும் இல்லையாயொழிந்துபோம். இவ்வாறு மாயை கன்மங்களின் சார்பு முற்றுங்கெடச் சிவனொளியில் ஒன்றித்துக் காணும் தூய நல்லறிவினராகிய சிவஞானிகட்கு மெய்ப் பொருளாகிய சிவபரம்பொருளையன்றி உயிராகிய தம்மைப்பற்றிய உணர்வும் ஏனைய உலகப் பொருள்களும் தம்மைப்பற்றிய உணர்வும் ஏனைய உலகப் பொருள்களும் தோன்றாதொழியும், இவ்வுண்மையினை, ஐம்புலனை கையிகந்து சிவனருளில் திளைக்கும் செம்புலச் செல்வராகிய திருவாதவூரடிகள், தாம் பெற்ற சிவாநுபவத்தில் வைத்து எடுத்துரைத்துப் போற்றுவதாக அமைந்தது;

**இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத்**
**தெழுகின்ற ஞாயிறே போன்று**
**நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்**
**நீயலாற் பிறிது மற்றின்மை**
**சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாம்**
**திருப்பெருந் துறையுறை சிவனே**
**ஒன்றும் நீ யல்லை அன்றியொன்றில்லை**
**யாருன்னை யறியகிற்பாரே.**

**(திருவாசகம்-கோயிற்றிருப்பதிகம்-7)**

எனவரும் திருப்பாடலாகும். நின் திருவருளைப் பெறும் வாய்ப்பினைப் பெற்ற இக்காலத்து, அடியேற்கு நின் திருவருளை வழங்கி என்னை மறைத்துள்ள ஆணவ இருளை அகற்றி (ப் பளிங்கனைய) என்னுள்ளத்தின்கண்ணே எழுந்து தோன்றும் கதிரவனைப் போன்று (என்னுள்ளும் புறம்புமாக யாண்டும் நிறைந்து) நிற்கும் நினது இயல்பினை (ச் சுட்டுணர்வினால் வேறு வண்ணமாய் ஒன்றியிருந்து) நினைப்பேனாயினேன். (அங்ஙனம் நினைத்த அளவிலே என்னை அகத்திட்டுக்கொண்டு விளங்கும்)

நின்னையன்றி (மாயாகாரியமாகிய பொருள்களுள்) ஒன்றும் இல்லையென்னும்படி உலகெலாம் ஆகியாண்டு விரிந்து பரவிச் சென்று அணுவினும் மிக நுண்ணியனாய் உலகுயிர்கள் தோறும் ஊடுருவி மறைந்து (இங்ஙனம் உள்ளும்புறம்புமாய், யாண்டும் நீக்கமற நிறைந்து) யாவும் ஒன்றாய்ப் பிரிவின்றி விளங்கும் திருப்பெருந்துறைப் பெருமானே, (நீ இவ்வாறு உலகெலாமாகி நிற்பினும் அவற்றின் தன்மை நினக்கு எய்தலின்றி அவற்றுள் ஒன்றினுந் தோய்வின்றி யுள்ளாய் ஆதலால்) நீ அவற்றுள் ஒன்றும் ஆவாய் அல்லை. (உலகுயிர்கள் எல்லாவற்றிற்கும் ஆதாரமாகத் திகழ்வோன் நீயேயாதலின்) நின்னையன்றி அவற்றுள் ஏதொன்றும் இல்லை. (மும்மலப்பிணிப்புற்று நிற்கும் இக்கட்டு நிலையில் நின்னைத் தம்மின் வேறாகக் காண்பார்க்கு அவர் காணும் காட்சியுள்ளாகவே நீ புலப்படாது மறைந்திருத்தலின் அன்னோர் நின்னை உள்ளவாறு காணுதல் இயலாது. இனி, நினதருளாற் பாசப் பிணிப்பினின்றும் விடுபட்டு நின்னருள்வழி நின்று காணும் சிவஞானிகட்கு மீட்டுணர்தற்குக் கருவியாகிய சித்தவிருத்தியும் ஒடுங்குதலால் அந்நிலையில் நீ வேறு தாம்வேறாய் பிரிந்து நின்று காணுதலும் இயல்வதன்று. எனவே) யார்தாம் நின்னியல்பினை உள்ளவாறு உயரவல்லார்? என்பது இதன் பொருளாகும்.

இதன் கண், 'சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றாம்' எனவரும் தொடர், 'நேரியனாய்ப் பரியனுமாய்', 'உலகெலாமாகி வேறாய் உடனுமாய்' நிற்கும் இறைவனது இயல்பினை யுணர்த்துவதாகும். இந்நுட்பம், "திரண்டாம் பயனெனுந் திருவருள் தெளியிற், சென்று சென்றணுவாய்த் தேய்ந்து தேய்ந் தொன்றாம், என்றிறை யியற்கை இயம்புதல்" என உமாபதி சிவாசாரியார் தாம் இயற்றிய சங்கற்ப நிராகரணத்தில் இத்தொடரை இறைவனியல் புணர்த்தியாகக்கொண்டு எடுத்தாளுதலாலும், 'என்று திருவாதவூர் நயினார் கர்த்தாவினுடைய தன்மையை அருளிச் செய்தது' என வ்ரும் உரைக்குறிப்பாலும் உய்த்துணரப்படும்.

இறைவனது திருவருளுக்குரியராகிய சிவஞானிகள் முதல்வனுடன் பிரிப்பின்றி ஒன்றியுடனாம் வீட்டு நிலையில், முதல்வனும் உளன்; அம் முதல்வனோடு ஒன்றிச் சிவானந்தம் நுகரும் உயிரும் உளது; முன் உயிரைப்பற்றி நின்று பின் அப்பிணிப்பினின்றும் விலகிச் செயலற்று அடங்கிய மலமாயை கன்மங்களும் உள்ளன. முன்பெல்லாம் உயிரை இறுகப் பிணித்து நின்ற மும்மலப் பிணிப்பு அவ்வுயிரைவிட்டு நீங்கினமையால், உயிரானது முதல்வனது திருவருளில் மூழ்கி அவ்வருளே

மேற்பட்டுத் தோன்றத் தான் அதன்கண் பிரிவற இயைந்து பேரின்பம் நுகர்ந்திருக்கும். அவ்வளவே அவ்வுயிரின் முன்னைய நிலைக்கும் பின்னைய நிலைக்கும் உள்ள வேறுபாடாகும்.

'இன்றெனக்கருளி' என வரும் இத்திருப்பாடற் பொருள் நுட்பத்தையுணர்ந்து சிவஞானம் பெற்ற நல்லுயிர் தன்முனைப் படங்கி இறைவன் அருள்வழியடங்கி ஒற்றித்து நிற்கும் திறத்தினை அறிவுறுத்துவது,

**"அவனே தானே யாகிய அந்நெறி**
**ஏகனாகி இறைபணி நிற்க**
**மலமாயை தன்னொடு வல்வினையின்றே"**
**(சிவஞானபோதம்-10)**

எனவரும் சிவஞானபோதம் பத்தாஞ் சூத்திரமாகும். இறைவன், உயிர்களின் பெத்தநிலையில் அவற்றோடுங்கூடி நின்று காரியப் படுத்தும் பொழுதே தானொரு முதல் இல்லையென்னும்படி தோன்றாமல் நின்று காரியப் படுத்தினாற் போன்று, உயிராகிய நீயும் சிவனது ஞானத்தினாலல்லவோ காரியப்பட்டு வருகிறோம் என்பதை யுணர்ந்து ஆன்ம போதம் சீவியாமல் அவனருள்வழி யடங்கி நிற்பாயாக என அறிவுறுத்துவது, இச்சூத்திரமாகும். உயிர் தன்னைப் பிணித்துள்ள மும்மலப் பிணிப்பு அற்று நீங்கும்பொருட்டு அவற்றின் இயல்போடு ஒன்றுபட்டு நில்லாது சிவத்தினியல்போடு ஒன்றிலிருந்து அதுவே தானாய் நிற்கும் பயிற்சியினை இடையறாது மேற்கொள்ளுதல் வேண்டும். இடையறாது நிகழும் அப்பழக்கத்தினால், உயிரைப்பற்றியிருந்த மலத்தினியல்பு அதனைவிட்டு நீங்க, உயிர் செம்பொருளாய சிவத்தின் இயல்பில் அடங்கி நிற்கும், மலம் அறுதற்பொருட்டுச் செயற்பாலாகிய இப்பயிற்சியினை,

**'தானவனாகும் சமாதி கைகூடினால்**
**ஆன மலமறும் அப்பசுத் தன்மைபோம்' (2320)**

எனவரும் திருமந்திரத்தில் திருமூல நாயனார் அருளிச் செய்துள்ளார்.

இறைவன் திருவருளிலே உறைந்து நிற்பார்க்குப் புறத்தேயுள்ள புறப்பொருள்களைப் பற்றிய உணர்வும், தம்மோடு உடனாய் நிற்கும் உடம்பைப் பற்றிய உணர்வும், தமக்கு அகக் கருவிகளாயமைந்த மனம் முதலியவற்றைப் பற்றிய உணர்வும், உயிராகிய தான் ஒரு பொருள் உண்டு என எண்ணுந் தன்னைப் பற்றிய உணர்வும் நிகழாத வண்ணம் அவையனைத்தும் மறக்கப்பட்டு மறைந்தொழித லியல்பாதலின், இறைவனருளால் மலம் மாயை கன்மங்களின் பிணிப்பு நீங்கிய பொழுதே

அவற்றோடு உடனிகழும் இவ்வுணர்வுகளும் அணுவணுவாய்த் தேய்ந்து தம்மைவிட்டு ஒழிந்தன என்பதனை,

**வான்கெட்டு மாருதமாய்ந்தழல்நீர் மண்கெடினும்**
**தான்கெட்டலின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்கு**
**ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட்டென் உள்ளமும்போய்**
**நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ.**

எனவரும் திருப்பாடலில் திருவாதவூரடிகள் தமது சிவாநுபவத்தில் வைத்துத் தெளிய விளக்கியுள்ளார். பாசப்பிணிப்பினின்றும் விடுபட்டு இறைவன் திருவருளில் ஒன்றுபட்டுத் திளைத்தலாகிய வீட்டு நிலைக்கண் நிகழும் சிவாநுபவமாகிய இதனை,

**'தானும் அழிந்து தனமும் அழிந்துநீ**
**டூனும் அழிந்து உயிரும் அழிந்துடன்**
**வானும் அழிந்து மனமும் அழிந்தபின்**
**நானும் அழிந்தமை நானறியேனே' (திருமந்திரம்-2951)**

எனவும்,

**'இருளும் வெளியும் இரண்டையும் மாற்றிப்**
**பொருளிற் பொருளாய்ப் பொருந்தவுள்ளாகி**
**அருளா லழித்திடும் அத்தனடிக்கே**
**உருளாத கன்மனம் உற்று நின்றேனே' (திருமந்திரம்-2952)**

எனவும் வரும் திருப்பாடல்களில் திருமூலநாயனார் நன்கு விளக்கியுள்ளார்.

பாசப்பிணிப்பினின்றும் நீங்கிய தூய உயிர், இறைவனுடன் இரண்டறக் கலந்த நிலையில், இதற்கு முன் அதன் கண் நிகழ்ந்த புறப்பொருளுணர்வும் தன்னைப்பற்றியவுணர்வும் முற்றிலும் மறைந்தொழிய, இறைவனது மெய்யுணர்வு மட்டுமே மேற்பட்டு விளங்கத் தன்னுணர்வு அதனுள் அடங்கி, உரைவரம்பிகந்த சிவானந்தமாகிய பேரின்ப வெள்ளத்திற் படிந்து இன்புறும் இவ்வின்ப நிலையில், உயிரானது தன் பொருட்டன்மையிற் சிறிதும் கெடாதிருக்கும் என்பதனை,

**'முத்திதனின் மூன்று முதலும் மொழியக்கேள்**
**சுத்தவனு போகத்தைத் துய்த்தலணு-மெத்தவே**
**இன்பங் கொடுத்தல் இறை இத்தை விளைவித்தல்மலம்**
**அன்புடனே கண்டுகொள் அப்பா' (உண்மை-50)**

எனவரும் உண்மை விளக்கப்பாடலில் திருவதிகை மனவாசகங் கடந்தார் தெளிய விளக்கியுள்ளமை அறியத் தக்கதாகும். உலக நுகர்ச்சியிற் பதிந்த உணர்வோடு நிற்கும் உயிர்க்குச் சிவம் விளங்காது; சிவபோகத்திற்றிளைக்கும் உணர்வோடு கூடிய

*உயிர்க்கு உலகம் தோன்றாது. இவ்வாறுகட்டு நிலையிலும் வீட்டு நிலையிலும் இருதிறப்பட்டுச் சார்ந்ததன் வண்ணமாதல் உயிரின் இயல்புஎன்பது,*

**'மரத்தை மறைத்தது மாமத யானை**
**மரத்தின் மறைந்தது மாமத யானை**
**பரத்தை மறைத்தது பார்முதற்பூதம்**
**பரத்தின் மறைந்தது பார்பமுதற் பூதமே.'(திருமந்திரம்-2290)**

*எனவரும் திருமூலர் வாய்மொழியால் நன்கு தெளியப்படும். உயிர் சார்ந்ததன் வண்ணமாந் தன்மையது என்பதனை,*

**'நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகு மாந்தர்க்**
**கினத்தியல்ப தாகும் அறிவு' (திருக்குறள்-452)**

*எனத் திருவள்ளுவர் பொது முறையிலும்,*

**'யாதொன்று பற்றின் அதன் இயல்பாய் நின்று**
**பந்தமறும் பளிங்கனைய சித்து நீ'**
**(ஆகாரபுவனம்-சிதம்பர ரகசியம்)**

*எனத் தாயுமானார் சிறப்பு முறையிலும் வைத்து அறிவுறுத்தி யுள்ளமை இங்கு நினைக்கத்தக்கதாகும்.*

*சிவ வுணர்வாய் நிற்றல் என்பது, மலம் மாயை கன்மங்களில் ஒன்றினிடத்தும் ஒரு சிறிதும் நினைவு செல்லாமல் உயிராகிய தன்னையும் நினையாமல் சுட்டுணர்வறச் சிவம் ஒன்றையே நினைத்திருத்தல். இங்ஙனம் சிவவுணர்வில் தலைப்பட்டிருக்கும் உயிர், இறைவனது திருவடி ஞானத்தால் சிவமேபெறுந் திருவுடையதாகத் திகழுந் திறத்தினை,*

**'திருவடி ஞானஞ் சிவமாக்குவிக்கும்' (திருமந்திரம்-1598)**

*எனவரும் தொடரில் திருமூலர் தெளிய விளக்கியுள்ளமை காணலாம்.*

*"தற்சேட்டை கெட நின்றதே சிவாநுபவம் என்பதற்குப் பிரமாணம், தேவாரத்தில், 'தன்னை மறந்தாள் தன்னாமங் கெட்டாள் தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே' என்பதும், திருவாசகத்தினும்,*

**ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட்டேன் உள்ளமும்போய்**
**நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ**

*என்பதும் கண்டுகொள்க" எனச் சிவப்பிரகாச வுரையில் மதுரைச் சிவப்பிரகாசர் கூறும் விளக்கம் இங்கு உளங்கொளத் தக்கதாகும்.*

மிகுந்த சிவஞானத்துள்ளே தம் அறிவானது அடங்கிச் சிவத்தோடு இரண்டறக் கலந்து காணும். இக் காட்சியையே உபநிடதங்கள் சோகம் பாவனை எனவும் சித்தாந்த மாமறையாகிய ஆகமங்கள் சிவோகம் பாவனை எனவும் கூறும். இந்நுட்பம்,

**மன்னிய சோகமாம் மாமறையாளர்தம்**
**சென்னிய தான சிவோகமாம் ஈதென்ன**
**அன்னது சித்தாந்த மாமறை யாய்பொருள்**
**துன்னிய ஆகம நூலெனத் தோன்றுமே. (2403)**

எனவரும் திருமந்திரத்தாற் புலனாம்.

தம்மைப் பிணித்துள்ள பசுத்தன்மை பாசத் தன்மைகளை அறுத்து இறைவன் தன் திருவடிக்கண்ணே தம்மைப் பிரிவறச் சேர்த்துக் கொண்டதனையும் அங்ஙனம் தமக்குத் திருவடி நல்கியதே தம்மைச் சிவமாக்கி யாண்டமை யாதலையும்,

**"பத்திமையும் பரிசுமிலாப் பசுபாசமறுத்தருளி**
**.......... .......... ..........**
**சித்தமென்னுந் திண்கயிற்றால் திருப்பாதங் கட்டுவித்த**
**வித்தகனார்" (திருவாசகம் கண்ட-6)**

எனவும்,

'சித்தமலம் அறுவித்தச் சிவமாக்கி எனையாண்ட, அத்தன்' எனவும் வரும் தொடர்களில் திருவாதவூரடிகள் தெளிவாகக் குறித்துள்ளார். ஆன்மா இங்ஙனம் சிவத்தோடு ஒன்றியியைந்து சிவமாகிய நிலையிலும் இறைவனுக்குரிய ஐந்தொழிலியற்றல் முதலிய தொழிலினைச் செய்யாததாய் அம்முத்தி நிலையிலும் இறைவனுக்கு அடிமையாய்ச் சிவாநுபவம் ஆகிய நுகர்ச்சி யொன்றிற்கே யுரியதாம் என்பது, 'சிவமாக்கி' என்ற அளவிலமை யாது, 'எனையாண்ட' என அடிகள் விதந்து கூறும் சொற் குறிப்பால் இனிது புலனாம்.

**'உம்பர்பிரான் உற்பத்தியாதிகளுக்குரியன்**
**உயிர்தானும் சிவாநுபவம் ஒன்றினுக்கு முரித்தே'**
**(சிவஞான சித்தியார்-சுபக்கம்-319)**

எனவரும் அருணந்தி சிவாசாரியார் வாய்மொழி இங்கு நினைத்தற்குரியதாகும்.



# ஒன்பதாந் திருமுறை

திருமாளிகைத் தேவர் முதல் சேதிராயர் ஈறாகவுள்ள அருளாசிரியர் ஒன்பதின்மரும் திருவாய் மலர்ந்தருளிய இருபத் தெட்டுத் திருப்பதிகங்களைத் திருவிசைப்பா என்றும் சேந்தனார் பாடிய பல்லாண்டிசையினைத் திருப்பல்லாண்டென்றும் வழங்குதல் மரபு. இவற்றைத் திருவிசைப்பாமாலையென ஒன்றாக வழங்குவர் திருமுறை கண்ட புராண ஆசிரியர். சைவத் திருமுறை பன்னிரண்டினுள் எட்டாந் திருமுறையாகத் திகழும் திருவாசகம் திருச்சிற்றம்பலக்கோவை யென்பவற்றை யடுத்து ஒன்பதாந் திருமுறையென முறை செய்து போற்றுஞ் சிறப்பியல்பு திருவிசைப்பா திருப்பல்லாண்டு ஆகிய இத் திருப்பதிகங்களுக்கு உரியதாகும். ஒன்பதாந் திருமுறையில் இருபத்தொன்பது திருப்பதிகங்கள் உள்ளன. தேவாரத் திருப்பதிகங்களைப் போன்று இசைநலம் வாய்ந்தன. இத் திருப்பதிகங்களாதலின் இவை திருவிசைப்பா என வழங்கப் பெறுவனவாயின. இத்திருமுறையின் இறுதியிலுள்ள இருபத்தொன்பதாந் திருப்பதிகம், எங்கும் நீக்கமறக் கலந்து விளங்கும் எல்லாம்வல்ல இறைவனுக்குப் பல்லாண்டிசை கூறி வாழ்த்துவதாகலின் திருப்பல்லாண்டு என்னும் சிறபபுப் பெயரைப் பெறுவதாயிற்று. இவ்வொன்பதாந் திருமுறை முந்நூற்றொரு பாடல்களையுடையதாய் அளவிற் சிறியதாயினும் திருக்கோயில் வழிபாட்டிற் அளவிற் பஞ்சபுராணமென ஓதப்பெறும் திருமுறைப் பாடல்கள் ஐந்தினுள் திருவிசைப்பாவில் ஒன்றும் திருப் பல்லாண்டில் ஒன்றுமாக இரண்டு திருப்பாடல்களை இத்திருமுறையிலிருந்து ஓதிவருகின்றனர். இவ்வழக்கம், இத்திருமுறையில் மக்களுக்குள்ள ஈடுபாட்டினை நன்கு புலப்படுத்துவதாகும்.

திருவிசைப்பா- திருப்பல்லாண்டு என்னும் இத் திருப்பதிகங் களைப் பாடிய ஆசிரியப் பெருமக்கள் வாழ்ந்தகாலம், முதல் ஆதித்த சோழன் முதல் கங்கை கொண்ட சோழன் இறுதியாவுள்ள சோழ மன்னர்களின் ஆட்சிக்காலம் என்பது, இவற்றின் பொருளமைதியால் இனிது விளங்கும். தேவார ஆசிரியர்கள் அருளிய பதிகப் பெருவழியைக் கடைப்பிடித்துச் சிவபரம் பொருளை வழிபட்டுப் போற்றுமுகமாகத் தாம் பெற்ற உள்ளத்திண்மையால் தமிழ்நாட்டில் அயலாரது ஆட்சியை அகற்றி மீண்டும் சோழர் பேரரசை நிறுவிய பெருமை பிற்காலச் சோழர்களுக்குரியதாகும். இங்ஙனம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தஞ்சையைத் தலைநகராகத் கொண்டு

தோன்றிய சோழர் பேரரசு, கங்கைநதி பாயும் வடநாட்டிலும் கடல் கடந்த கடாரம் முதலிய பிற நாடுகளிலும் புகழுடன் பரவி நிலைபெற்ற காலம் கி.பி. பத்தாம் நூற்றாண்டும் பதினொன்றாம் நூற்றாண்டும் என்பது சரித்திரம் வல்லார் அறிந்ததொன்றாம். இங்ஙனம் பிற்காலச் சோழ மன்னர்கள் இவ்வுலகிற் பெறற்கரும் வெற்றியைப் பெற்றுச் சிறப்புடன் ஆட்சிபுரிந்த பொற்காலமே இத்திருவிசைப்பாத் திருமுறை தோன்றிய நற்காலமாகும். இத் திருமுறையானது தெய்வங் கொள்கையாகிய சிவநெறியினால் தமிழ் வேந்தர் பெற்ற வெற்றியையும் அவ்வெற்றியின் விளைவாகத் தமிழகத்தார் பெற்ற அமைதி நிலையையும் அவ்வமைதியை அடிப்படையாகக் கொண்டு வளர்ந்தோங்கிய சைவ சமயத்தின் உயர்ச்சியையும் நன்கு விளக்குந் திருவருளிலக்கியமாகத் திகழ்கின்றது.

தஞ்சைப் பெருவுடையார் திருக்கோயிலைக் கட்டிய முதலாம் இராசராச சோழனால் அத்திருக்கோயிலின் கண்ணே ஆடல் பாடல் நிகழ்த்துவதற்கென நியமிக்கப்பெற்ற தளிச்சேரிப் பெண்டுகளிற் சிலர், நீறணி பவளக் குன்றம், எடுத்த பாதம், மழலைச் சிலம்பு என இத்திருவிசைப்பாப் பாடல்களில் அமைந்த சொற்றொடர்களையே தமக்குரிய பெயராகப் பெற்றுள்ளனர். இவ்வாறே தருணேந்து சேகரன் முதலிய திருவிசைப்பாத் தொடர்களும் மக்களுக்குரிய பெயராக வழங்கப் பெற்றுள்ளன. இப்பெயர் வழக்கத்தை யூன்றி நோக்குமிடத்து முதலாம் இராசராசனது ஆட்சிக்காலத்து இத்திருவிசைப்பாவுக்கு அமைந்த தனிச் சிறப்பு இனிது புலனாகின்றது.

திருவிசைப்பாப் பெற்ற திருத்தலங்கள் தில்லைச் சிற்றம்பலம், திருவீழிமிழலை, திருவாவடுதுறை, திருவிடைக்கழி, திருக்களந்தை யாதித்தேச்சரம், திருக்கீழ்க்கோட்டூர் மணியம் பலம், திருமுகத்தலை, திரைலோக்கியசுந்தரம், கங்கைகொண்ட சோழேச்சரம், திருப்பூவணம், திருச்சாட்டியக்குடி, தஞ்சை இராசராசேச்சரம், திருவிடை மருது, திருவாரூர் எனப் பதினான்கு தலங்களாகும். இவற்றுள் தில்லைச் சிற்றம்பலத்திற்கு மட்டும் பதினாறு திருப்பதிகங்கள் அமைந்துள்ளன. ஏனைப் பதின்மூன்று திருத்தலங்களும் ஒவ்வொரு திருப்பதிகமே பெற்றுள்ளன. இங்ஙனம் இவ்வொன்பதாந் திருமுறையிற் பாதிக்கு மேலுள்ள பதிகங்கள் தில்லையில் அருளிச் செய்யப்பெற்றனவாகத் தெரிதலால் இவ்வொன்பதாந் திருமுறையைத் தில்லைத் திருமுறையென்றே கூறுதல் பொருந்தும்.

திருவிசைப்பா மாலையை அருளிச் செய்த ஆசிரியர்கள் திருமாளிகைத்தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர், நம்பிகாடநம்பி,

கண்டராதித்தர், வேணாட்டடிகள் திருவாலியமுதர், புருடோத்தமர், சேதிராயர் ஆக இவர் ஒன்பதின்மர் என்பது,

**"செம்பொன்மணி யம்பலத்து நிருத்த னார்க்குத்**
**திருவிசைப்பா வுரைத்தவர்தந் திருப்பேர் சொல்லிற்**
**பம்பு புகழ் செறிமாளிகைமெய்த் தேவர்**
**பரிவுடைய சேந்தனார் கருவூர்த்தேவர்**
**நம்பிகாடவர் கோன் நற்கண்ட ராதித்தர்**
**நன்குயர் வேணாட்டடிகள் திருவாலியமுதர்**
**அம்புவியோர் புகழ் புருடோத்தமர் சேதிராயர்**
**ஆகஇவர் ஒன்பதின்மர் தாம்முறைகண் டடைவே"**

எனவரும் பழைய பாடலில் நன்கு விளக்கப்பெற்றது. இவ்வொன்பதின்மர்களுள் திருமாளிகைத்தேவர் பாடிய பதிகங்கள் நான்கும், சேந்தனார் பதிகங்கள் நான்கும், கருவூர்த்தேவர் பதிகங்கள் பத்தும், நம்பிகடா நம்பி பாடிய பதிகங்கள் இரண்டும், கண்டராதித்தர் பதிகம் ஒன்றும், வேணாட்டடிகள் பதிகம் ஒன்றும், திருவாலியமுதனார் பதிகங்கள் நான்கும், புருடோத்தமர் பதிகம் இரண்டும், சேதிராயர் பதிகம் ஒன்றும் ஆக இருபத்தொன்பது பதிகங்கள் இவ்வொன்பதாந் திருமுறையிற் சேர்க்கப்பெற்றுள்ளன. இப்பதிகங்களிலுள்ள பாடல்கள் முந்நூற்று அறுபத்தைந்தாகு மென்பர்.

**"அடைவுறு மாளிகைத்தேவர் நான்கு, சேந்தர்**
**அன்புறுபல் லாண்டொன்றோ டிசைப்பா மூன்று**
**திடமுடைய கருவூரர் பத்து, வீறிற்**
**சிறந்த காடவ ரிரண்டு, கண்டர் வேணாடர்**
**படி புகழொவ் வொன்று திருவாலி நான்கு,**
**பன்னு புருடோத்தமனா ரிரண்டு, சேதிராயர்**
**உடையதிருக் கடைக்காப் பொன்றாக விருபத்தொன்பான்**
**ஓது செய்யுள் முந்நூற் றறுபதினோ டைந்தே"**

எனவரும் பழையபாடல் திருவிசைப்பாத் திருப்பதிக வகையினைக் குறிப்பிடுதல் காணலாம், இப்பாடலின்கண் ஒன்பதாந் திருமுறையிலுள்ள பாடல்கள் 365 எனத் தொகை கூறப்படினும் இப்பொழுதுள்ளவை 301 பாடல்களேயாம். எஞ்சிய அறுபத்து நான்கு பாடல்களும் ஏடுகளிற் சிதைந்திருத்தல் வேண்டும். அல்லது இப்பாடலிற்குறித்த 'முந்நூற்றறு பதினோடைந்தே' என்ற தொகை ஏடெழுதுவோராற் சிறிது மாறுபட்டிருத்தல் வேண்டும். பூந்துருத்தி நம்பிகாடநம்பி பாடிய திருவாரூர்த் திருவிசைப்பாப் பதிகத்தில் இப்பொழுது இரண்டு பாடல்களே காணப்படுகின்றன. இதனை நோக்குங்கால் இத்திருமுறையிற் சில பாடல்கள் சிதைந்து மறைந்து போயின என்பது விளங்கும்.

*திருமாளிகைத் தேவர் பாடிய 'இணங்கிலாவீசன்' என்ற பதிகம் காந்தாரத்திலும், கருவூர்த்தேவர் பாடிய 'கணம் விரி', 'கலைகள் தம் பொருளும்' எனவரும் இரண்டு பதிகங்களும் புறநீர்மையிலும், 'நீரோங்கி வளர்கமலம்' என்பது காந்தாரத்திலும், நம்பிகாடநம்பி பாடிய 'முத்து வயிரமணி' என்பது சாளரபாணியிலும், வேணாட்டடிகள் பாடிய 'துச்சான' என்ற முதற் குறிப்புடைய பதிகம் புறநீர்மையிலும், திருவாலியமுதனார் பாடிய 'பவளமால் வரை' என்பது நட்டராகத்திலும், 'அல்லாய்ப்பகலாய்' என்பது இந்தளத்திலும் ஏனைய இருபத்தொருபதிகங்களும் பஞ்சமப்பண்ணிலும் இசை யமைக்கப் பெற்றுள்ளன. இவ்விசையமைதி,*

**ஐந்துடனால் வருமுரைத்த திருக்கடைக் காப்பிற்பண்**
**அறையின் மாளிகைத் தேவர் நான்கிலொன்று காந்தாரம்**
**முந்து கருவூரர் பத்தின் இரண்டு புறநீர்மை**
**மொழிந்திடு காந்தாரமொன்று, காடவர் கோனிரண்டின்,**
**நந்தலில் சாளரபாணியொன்று, வேணாட்டடிகள்**
**நவின்றதொன்று புறநீர்மை, திருவாலியமுதா்**
**பந்தமறச் சொன்னான்கி னொன்று நட்டராகம்,**
**பகர்ந்திடினொன்றிந்தளம், மற்றெவையும் பஞ்சமமே.**

*என்ற பழைய பாடலிற் குறிக்கப் பெற்றமை காண்க. எனவே திருவிசைப்பாவிலமைந்த பண்கள் காந்தாரம், புறநீர்மை, சாளரபாணி, நட்டராகம், இந்தளம், பஞ்சமம் என்ற ஆறுபண்களே யென்பதும் இவற்றுள் சாளரபாணியொழிந்த ஐந்தும் தேவாரத்திருப்பதிகங்களிற் பயின்ற பண்களென்பதும் நன்குபெறப்படும். இருபத்தொன்பது பதிகங்களுள் இருபத்தொரு பதிகங்கள் பஞ்சமப் பண்ணிற் பாடப்பெற்றிருத்தலை உற்று நோக்குங்கால் இப்பண் சிந்தை தெளிந்து செம்பொருளாகிய இறைவனைப் போற்றுதற்குப் பெரிதும் ஏற்புடைய தென்பது இனிது புலனாகும். "பஞ்சமம் பாடியாடுந், தெள்ளியார் கள்ளந்தீர்ப்பார் திருச்செம்பொன் பள்ளியாரே" (4-29-3) என்பது திருநாவுக்கரசர் வாய்மொழி.*

## 1. திருமாளிகைத் தேவர்

*திருவிசைப்பா ஆசிரியர் ஒன்பதின்மருள் முதல்வராக எண்ணப்படுபவர் திருமாளிகைத் தேவர். இவர் பாடிய திருப்பதிகங்கள் நான்கும் ஒன்பதாந் திருமுறையின் முதற்கண் வைக்கப்பட்டுள்ளன. இவை நான்கும் தில்லைச் சிற்றம்பலத்தைப் பற்றியனவாக அமைந்திருத்தலால் இவ்வாசிரியர் தில்லைப் பதியைத் தமக்குரிய உறைவிடமாகக் கொண்டிருந்தாரென்று எண்ண இடமுண்டு. திருமாளிகைத் தேவரென்னும் பெயர்*

இயற்பெயராகத் தோன்றவில்லை. ஏதேனுமொரு காரணம் பற்றி வழங்கிய சிறப்புப் பெயராகவே இதனைக் கொள்ளுதல் பொருத்தமாகும். திருமாளிகை யென்பது "மாடமாளிகைசூழ் தில்லையம்பலம்"* (*"நாடிநாரணன்" என்ற முதற் குறிப்புடைய திருக்குறுந்தொகை) எனத் தேவார ஆசிரியராற் சிறப்பித்துப் போற்றப்பெற்ற தில்லைச் சிற்றம்பலப் பெருங்கோயிலைக் குறித்து வழங்கிய பெயரென்றும், அத்திருக் கோயிலிற் பிரியாதுறைந்து திருச்சிற்றம்பலவனைப் போற்றிய தெய்வ வாழ்க்கை யுடையவராக இவர் திகழ்ந்தமைபற்றித் திருமாளிகைத் தேவரென அழைக்கப் பெற்றாரென்றும் கொள்ளுதல் ஏற்புடையதாகும்.

**"வரந்தருந் தொல்லைத்தில்லை மாளிகை மடத்து மன்னும்**
**அருந்தவ முனிவெண்காடன் அருள் விநாயகன் மனத்தார்**
**பரிந்தெனை யாண்டுகொண்ட படர்சடைக் கடவுள் நீதி**
**திருந்திய பரமஞான சிவனடி சென்னி சேர்ப்பாம்" ***

(*திவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம் கடவுள் வாழ்த்து 22-ம் செய்யுள்.)

எனப் பெரும்பற்றப் புலியூர் நம்பி, தம் ஆசிரியர்க்கு வணக்கங் கூறுதலால் அவர் வாழ்ந்த கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில் 'மாளிகை மடம்' என்ற பெயரோடு சிதம்பரத்தில் ஒரு திருமடம் இருந்ததென்பதும், அம்மடத்தில் வாழ்ந்த தவச்செல்வர் வெண்காடரென்பவருடைய மாணாக்கருள் ஒருவராகிய விநாயகர் என்பவரே பெரும்பற்றப்புலியூர் நம்பிக்கு ஆசிரிய ரென்பதும் நன்கு புலனாகின்றன. சிதம்பரத்திலுள்ளதாகப் பெரும்பற்றப்புலியூர் நம்பி குறித்த அடியார் குழுவின் தொடர்பில் நிலை பெற்ற திருமடமாக இருத்தல் கூடும்.

திருமாளிகைத் தேவர், தாம் பாடிய திருவிசைப் பாப் பதிகங்களின் இறுதிச் செய்யுட்களில் 'மூர்க்கனேன் மொழிந்த புன்மொழிகள்' எனறும், சிவப்பெருந்தொண்டர் தொண்டனேன் என்றும் தாழ்வெனுந் தன்மையோடும் சிவனடியார்க்குத் தொண்டுபட்ட தம்முடைய அடிமைத் திறத்தினைப் புலப் படுத்தியதன்றித் தம்முடைய ஊர், பேர், குடி முதலியனபற்றி எதுவும் சொல்லவில்லை. இந்நிலையில் இவர் பிறந்த குலம் ஊர் முதலிய வரலாற்றுக் குறிப்புக்களைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளுதற்கு இயலவில்லை. இனி இவரைப்பற்றிச் செவி வழியாக வழங்குஞ் செய்திகளை ஆராய்தல் இன்றியமையாததாகும்.

திருமாளிகைத் தேவர் போகநாதரிடம் தீக்கை பெற்றுத் திருவாவடுதுறையில் தங்கியிருந்தார். இவர் தந்த சிவப்

பிரசாதத்தைக் கருவூர்த் தேவர் மகிழ்ந்தேற்றுக்கொண்டார். கருவூர்த்தேவர் பராசக்தியை வழிபட்டுக் கொடுத்த பிரசாதத்தைத் திருமாளிகைத் தேவர் ஏற்றுக் கொள்ளவில்லை. இச் செய்தியைக் கருவூர்த்தேவர் தம் ஆசிரியர் போகநாதரிடம் தெரிவித்தார். அதுகேட்ட போகநாதர் 'தூய்மை நெறியில் வழிபாடு செய்து திருமாளிகைத் தேவர் தந்த சிவப் பிரசாதத்தை நீ ஏற்றுக்கொள்ளுதல் தகும். நின்னாற் கொடுக்கப்பட்ட தூய்மை யில்லாத நிவேதனப் பொருளை அவர் விலக்கியது தவறன்று' என்று கருவூர்த் தேவருக்கு அமைதி கூறினார். திருமாளிகைத் தேவர் ஒருநாள் வழக்கம்போல் காவிரியில் நீராடி மலர் கொய்து வரும்பொழுது அடக்கஞ் செய்தற்கெனச் சிலர் பிணத்தைச் சுமந்து எதிரே வருதலைக்கண்டு தாம் சிவபூசைக்குக் கொணர்ந்த மலர்கள் தூய்மையிழவாதபடி பூக்குடலையை விசும்பில் நிற்கப்பணித்துப் பின்பு பிணத்திற்கு உயிர் உண்டாக்கி அதனைச் சுடுகாடளவும் நடந்து செல்லும்படி கட்டளையிட்டார். இவரது பேரழகில் ஈடுபட்டு இவரையே இடைவிடாதெண்ணிய மகளிர் சிலர் இவரையொத்த சாயல் அமைந்த புதல்வர்களைப் பெற்றனர். அது கண்டு ஐயுற்று வெறுப்படைந்த வேதியர் சிலர், திருமாளிகைத் தேவர் கூடாவொழுக்கம் உடையவராயினார் எனறு அரசனிடம் முறையிடுவாராயினர். அம்முறையீட்டைக் கேட்டு வருந்திய நரசிங்கராசன் திருமாளிகைத் தேவரைக் கயிற்றாற்பிணித்து வரும்படி ஏவலாளர் சிலரை அனுப்பினான். அவர்கள் திருவாவடுதுறைக் கோயிலை யடைந்து அங்கு அமர்ந்துள்ள திருமாளிகைத் தேவரது திருமேனியைத் தாங்கள் கயிற்றாற் கட்டுவதாக நினைத்துத் தங்களுள் ஒருவரொருவரைக் கட்டிக்கொண்டு திரும்பினர். திருமாளிகைத் தேவர் வாராமை கண்டு சினமுற்றவேந்தன் அவரை வெட்டிக் கொணர்மின் என ஏவலாளர்க்குக் கட்டளையிட்டான். அரசன் கட்டளையாற் சென்ற ஏவலாளர், திருமாளிகைத் தேவரை வெட்டுவதாக எண்ணி தங்களுள் ஒருவனையே வெட்டிக் கொணர்ந்தனர். அத்துன்ப நிலையைக் கண்டு வெகுண்ட வேந்தன், திருமாளிகைத் தேவரைக் கொல்லக் கருதிச் சேனையுடன் புறப்பட்டான். மன்னனது சேனை தம்மையழிப்பதற்கு வருவதனையுணர்ந்த திருமாளிகைத் தேவர் உமையம்மையார்பால் விண்ணப்பஞ் செய்ய, அம்மையார் திருவருளால் அத்திருக்கோயில் மதிலின் மேற் சுதையாற் செய்யப் பட்டிருந்த நந்திகள் உயிர் பெற்றெழுந்து சேனைகளையழித்து மன்னனைத் தோற்றோடச் செய்து திரும்பின. சேந்தனாருடன் தில்லைக்குச் சென்ற திருமாளிகைத் தேவர் தில்லைத் திருவீதியில் ஓடாது தடைப்பட்டு நின்ற திருத்தேரை வடமின்றியோடி நிலைசேரத் திருப்பதிகம்

பாடிப்போற்றினார். இவ்வாறு திருவருள் விளக்கமுடையராய்த் திகழ்ந்த திருமாளிகைத் தேவர் திருவாவடுதுறையிலமர்ந்திருந்து சிவனடி சேர்ந்தனர் என்பது இவரைப்பற்றி வழங்கும் கதையாகும். இக்கதையிற் குறிப்பிட்ட செய்திகள் சில,

**"குடங்கர் விசும்படை நிறுவிக்**
**குணபநடந் திடவியக்கிக் கொடிஞ்சிப்பொற்றேர்**
**வடங்கழற்றி யோட்டி மதில்**
**நந்திகளை வரவழைத்து வரைநன்காட்டின்**
**உடம்பினெழு புகைமாற்றிக்**
**கொங்கணர் பாத்திரஞ் சுவற்றி யுணவதாய் வெந்**
**திடும் பயறு முளைசெய்தெமக்**
**கருள் திருமாளிகைத்தேவர் இணைத்தாள் போற்றி"**

எனத் தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர் பாடிய பாடலிற் பாராட்டிக் கூறப்பட்டுள்ளன. இதன்கண் 'குடங்கர் விசும்பிடை நிறுவி' என்றது, பூக்குடலையை ஆகாயத்தில் நிற்கும்படி செய்த செயலை. பிணத்தினை உயிர்பெற்றெழச் செய்து சுடுகாடளவும் நடக்கும்படி ஏவிய திறத்தினைக் 'குணபம் நடந்திட இயக்கி' என்ற தொடராற் குறிப்பித்தார். இச்செய்யுளில் திருமாளிகைத் தேவர் செய்தனவாகக் குறிக்கப்பட்ட செயல்களுள் நன்காட்டின் உடம்பினெழு புகைமாற்றியது, கொங்கணர் பாத்திரஞ் சுவறச் செய்தது, வெந்த பயற்றை முளைக்கச் செய்தது ஆகியன நிகழ்ந்த சந்தர்ப்பம் மேற்காட்டிய கதையிற் குறிக்கப்படவில்லை. அவ்வக் காலத்து மக்கள் தம் மனம் போனவாறு கட்டி வழங்கிய செய்திகள் இக்கதையிலிடம் பெற்றுக் கலந்தமையால் இக்கதை முழுவதையும் உண்மை வரலாறென்று ஏற்றுக் கொள்ளுதற்கியலவில்லை.

திருமாளிகைத் தேவர் போகநாதர் மாணவர் என இக்கதையிற் குறிக்கப்படுவதற்கு ஆதாரமாக,

**"கலந்தருள் காலாங்கர் தம்பாலகோரர்**
**நலந்தரு மாளிகைத்தேவர் நாதாந்தர்**
**புலங்கொள் பரமானந்தர் போகதேவர்**
**நிலத்திகழ் மலர் நிராமயத்தோரே. (102)**

என்ற திருமந்திரச் செய்யுளைக் காட்டுவர் சிலர். இச்செய்யுள் திருமந்திரத்திற் குருமட வரலாறு என்ற தலைப்பிற் காணப்படுகின்றது. இதன் இரண்டாமடி 'நலந்தரு நமனிய தேவர் நாதாந்தர்' எனவும் சில சுவடிகளில் காணப்படுகின்றது. இதன்கண் 'நிலந்திகழ் மூலர் நிராமயத்தோரே' என்ற இறுதியடியை நோக்குங்கால் திருமூலர்க்கு நெடுங்காலம்

பிற்பட்டுத் தோன்றிய சன்றோரொருவரால் இயற்றப்பட்டது இச்செய்யுளென்பது நன்கு துணியப்படும். மூலன் மரபின் முதல்வராக விளங்கிய திருமூலரே தமக்கு நெடுங்காலம் பிற்பட்டுத் தோன்றித் தம்மரபில் வந்த திருமாளிகைத் தேவர் முதலியோரைத் தாம் பாடிய செய்யுளில் தொகுத்துக் கூறினாரென்று கொள்வது வரலாற்று முறைக்கு முற்றிலு முரணாகும். ஆகவே திருமூலர் அறிவுறுத்தருளிய தவநெறியை மேற்கொண்டு வாழ்ந்த அடியார் பரம்பரையைக் குறித்துப் பிற்காலத்துச் சான்றோர் ஒருவராற் பாடிச் சேர்க்கப்பட்டனவே திருமந்திரத்திற் 'குருமட வரலாறு' என்ற தலைப்பிலமைந்த செய்யுட்களெனத் தெளிதல் வேண்டும். அன்றியும் திருமூலர் பரம்பரையில் வந்த அடியார்களுட் சிறப்புடையார் சிலரைக்கூறும் இப் பாடலில் காலாங்கர், பாலகோரர், மாளிகைத் தேவர், பரமானந்தர், போகதேவர் என்ற வழிமுறையிற் போகதேவருக்கு ஒரு தலைமுறை முந்தியவராகக் குறிக்கப்பட்ட மாளிகைத் தேவரைப் போகதேவர்க்கு மாணவரெனத் திட்டமாகக் கூறுதல் சிறிதும் பொருந்தாது. ஆகவே திருமாளிகைத் தேவர் போகநாதர்க்கு மாணவர் என்னுங் கதையினை ஏற்றுக் கொள்ளுதற்குச் சிறிதும் இடனில்லை யென்பது தெளியப்படும்.

திருவாவடுதுறைக் கோயிலையொட்டித் திருமாளிகைத் தேவர்க்குத் திருக்கோயில் அமைந்துளது. இத் திருக்கோயிலைத் தன்னகத்துக் கொண்டு விளங்குவதே இப்பொழுது உள்ள திருவாவடுதுறைத் திருமடமாகும். இத்திருமடத்தின் அடியார் களுள் ஒருவராகிய தொட்டிக்கனலச் சுப்பிரமணிய முனிவரென்பார் திருமாளிகைத் தேவரைப் பரவி வழிபடு முகமாகத் திருமாளிகைத் தேவர் திருவிருத்தம் என்ற நூலைப் பாடியுள்ளார்.

முதல் இராசராச சோழன் ஆட்சியில் திருவீழிமிழலைத் திருக்கோயிலில் வரையப்பட்ட கல்வெட்டுக்களில், சிவஞானியும் திருமாளிகைத் தேவரென்று வழங்கப்பெற்றவருமாகிய ஐயந்தன் என்பார் திருவீழிமிழலைத் திருக்கோயிலுக்கு நுந்தா விளக்கு வைத்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. ஐயந்தன் என்ற பெயர் தமிழிற்சேந்தன் என்று திரிதல் மரபு. திருவீழிமிழலைச் சாசனங்களிற் கண்ட ஐயந்தன் என்பார் சிவஞானியெனச் சிறப்பிக்கப் பெறுதலானும் திருவீழிமிழலைக்குச் சேந்தனார் பாடிய திருவிசைப்பதிகம் அமைந்திருத்தலானும் ஈண்டு ஐயந்தன் எனக் குறிக்கப்பட்டவர் சேந்தனாரேயாவர். திருமாளிகைத் தேவர் பாடிய திருவிசைப்பாப் பதிகங்கள் நான்கிலும் அமைந்த திருக்கடைக்காப்புச் செய்யுட்கள் ஒன்றிலேனும் திருமாளிகைத்

தேவர் பெயர் கூறப்படவில்லை. அப்பதிகங்கள் நான்கினோடு சேந்தனார் பாடிய திருவிசைப்பாப்பதிகங்கள் மூன்றும் சேர ஏழாவதாகவமைந்த திருவிடைக்கழித் திருவிசைப்பாவின் இறுதிச் செய்யுளிற்றான் சேந்தன் என்ற பெயர் கூறப்பட்டுளது. இதனை நுணுகி நோக்குங்கால் இவ்வேழு பதிகங்களும் சேந்தனா ரென்னும் ஆசிரியர் ஒருவராலேயே பாடப்பட்டன என்பது புலனாதலின் திருமாளிகைத் தேவரும் சேந்தனாரும் ஒருவரே என ஐயுறுவாரும் துணிவாருமுளர்.* (*சாசனத் தமிழ்க் கவி சரிதம் பக்கம் 36.) (*பெரிய புராண ஆராய்ச்சி பக்கம் 71.)

திருவிசைப்பாப் பாடிய ஆசிரியர்கள் ஒன்பதின்மர் என்பது தொன்று தொட்டு வழங்கி வரும் உண்மையாகும். திருக்கடைக் காப்புச் செய்யுளில் தம் பெயர் கூறும் வழக்கம் திருமுறையா சிரியர் எல்லாரிடத்தும் ஒப்பக் காணப்படுவதில்லை. திரு மாளிகைத் தேவர் தாம் பாடிய திருவிசைப்பாப் பதிகங்களின் இறுதிச் செய்யுட்களில் தம் பெயரைக் கூற விரும்பாது 'மூர்க்கனேன்' என்றும்,'சிவப்பெருந் தொண்டர் தொண்ட னேன்' என்றும் தம்மைப் பணிவுடன் குறிப்பிடுகின்றார். எனவே திருமாளிகைத் தேவர் தம்பெயரைத் தாம் பாடிய பதிகங்களில் வெளியிட்டுரைக்க விரும்பாத உள்ளமுடைய ரென்பது நன்கு பெறப்படும். ஐயந்தன் என்ற சொல்லும் சேந்தன் என்ற சொல்லும் பொருளால் வேறுபட்ட இரு வேறுசொற்களாம். ஐயந்தன் என்பது வடசொல். சேந்தன் என்பது முருகக் கடவுளைக் குறித்து வழங்கும் செந்தமிழ்ச்சொல், ஆகவே சேந்தன் என்ற தமிழ்ச் சொல்லை ஐயந்தன் என்ற வடசொல்லின் திரிபாகக் கொண்டு திருமாளிகைத் தேவரும் சேந்தனாரும் ஒருவரென்று துணிதல் பொருந்தாதென்பது புலனாம்.

முதல் இராசராசன் ஆட்சிக் காலத்தில் திருவீழிமிழலைத் திருக்கோயிலில் வரையப்பட்டுள்ள கல்வெட்டுக்களில் திருமாளி கைத் தேவராகிய ஐயந்தன் எனக் குறிக்கப்படுதலால் திருமாளிகைத் தேவரென்பார் முதல் இராசராச சோழன் ஆட்சிக் காலத்தில் வாழ்ந்தவரென்றும் இவரது இயற்பெயர் ஐயந்தனென்றும் சிவஞானியாய்த் திகழ்ந்த காலத்து இவர்க்கு வழங்கிய பெயர் திருமாளிகைத் தேவரென்றும் திருவீழிமிழலைக் கோயிலுக்கு நுந்தா விளக்கு வைத்த இவர் பிறந்த ஊர் திருவீழிமிழலையை யடுத்திருத்தல் கூடுமென்றும் கொள்ள இடமுண்டு. இவற்றை வலியுறுத்தற்கு வேறு சான்றுகளும் வேண்டும்.

மூன்றாங் குலோத்துங்க சோழனது ஆட்சியின் மூன்றா மாண்டில் கோட்டூர்க் கோயிலுக்கு நுந்தா விளக்கு வைத்த

திருமாளிகைப் பிச்சரென்பவர் திருவிசைப்பா ஆசிரியராகிய திருமாளிகைத் தேவரது பெயரைத் தாங்கிய அரசியல் தலைவராவார். இவரைப் போன்று திருவீழிமிழலைத் திருக்கோயிற் கல்வெட்டிற் குறிக்கப்பட்ட ஜயந்தன் திருமாளிகைத் தேவரென்பவரும் திருவிசைப்பா ஆசிரியரின் பெயரைத் தாங்கிய மற்றொரு தலைவராகவும் இருத்தல் கூடும்.

திருமாளிகைத் தேவர் பாடிய நான்கு பதிகங்களும் தில்லைக்குரியனவாக அமைந்திருத்தலால் இவர் நெடுங்காலம் தில்லையில் தங்கியிருந்து கூத்தப்பெருமானை வழிபட்டவராதல் வேண்டும். இவர் திருமூலர் பரம்பரையில் வந்தவராகப் பேசப்படுதலால் இவர் சிவயோக நெறி நின்ற தவ முனிவரென்றும் இவரது சமாதி திருவாவடுதுறையிலமைந்திருத்தலை நோக்கு மிடத்து இவர் திருவாவடுதுறையில் தங்கியிருந்த பொழுது இறைவன் திருவடியிற் கலந்திருத்தல் வேண்டுமென்றும் கொள்ளுதல் பொருத்தமாகும்.

திருமாளிகைத்தேவர் பாடிய பதிகங்கள் நான்கிலும் நாற்பத்தைந்து பாடல்கள் உள்ளன. உயிரை யின்றியமையாத கண், ஒருருவத்தைக் காணுங்கால் உயிரானது கண்ணுடன் பிரிப்பின்றிக் கலந்து நின்று அவ்வுருவத்தைக் கண்ணுக்குக் காட்டித் தானும் காணுமாறுபோல, இறைவனையின்றியமையாத உயிர், ஒரு பொருளை அறியுங்கால் இறைவனது பேரறிவானது, உயிரறிவோடு பிரிப்பின்றிக் கலந்துநின்று அப்பொருளை உயிர்க்கு அறிவித்துத் தானும் அதனோடு ஒருங்கறிந்து உதவும். உயிர்களுக்கு இறைவன் செய்யும் இப்பேருதவி, உயிர்கள் பாசத்தாற் பிணிக்கப்பட்டுள்ள பெத்த நிலையிலும் பாசம் நீங்கி யின்புறும் முத்தி நிலையிலும் ஒப்ப நிகழும் என்பர். தீயானது ஒரு பொருளில் தங்கி நின்று சுட்டு ஒன்றுவித்தலாகிய தன் தொழிலை நிகழ்த்துமாறு போல, இறைவனும் ஆன்மாக்களினிடத்துப் பிரிப்பின்றித் தங்கி நின்றே அவற்றின் பாசங்களை யகற்றி அருள்புரிதலாகிய தன்தொழிலை நிகழ்த்துவன். இவ்வாறு உயிர்க்குயிராய் உடனின்று உதவி புரியும் இறைவனது பெருங்கருணைத் திறத்தை யுணர்ந்து தம் செயலெல்லா வற்றையும் கைவிட்டு அப்பெருமானை இடைவிடாதெண்ணி அவனருளால்லது ஒன்றையுஞ் செய்யாராய் நின்ற திருமாளிகைத் தேவர், உயிர்கட்குக் கருணையான் உபகரித்துவரும் இறைவனது உரிமையை நோக்குந்தோறும் அப்பெருமான்பாலுள்ள பேரன்பு அடங்காது மீதூர்தலின் அப்பேரன்பே தானாக விளங்கித் தோன்றும் பேரானந்தத்தை நுகர்ந்து இன்புறும் நிலையில் 'ஒளிவளர் விளக்கே' யெனத் தொடங்கும் இத் திருவிசைப்பாத்

திருப்பதிகத்தை உளங்குளிர்ந்து பாடியுள்ளார். இறைவனது பொருள்சேர் புகழை வாயாரப்பாடிப் போற்றுதற்கும் மனத்தால் நினைத்தற்கும் அப்பொருமானுக்குத் தொண்டுபட்டு அப்பெருமானை வணங்குதற்கும் அவனோடு பிரிவின்றி யொன்றி யின்புறுதற்கும் அப்பெருமானது காட்டும் உபகாரமேயன்றி அம்முதல்வன் உயிரோடு ஒற்றித்து நின்று காணும் உபகாரமும் இன்றியமையாததாகும். என்னும் இவ்வுண்மையை 'ஒளிவளர் விளக்கே' யென்று தொடங்கும் இத்திருவிசைப்பாத் திருப்பதிகம் இனிது விளக்குகின்றது. "உயிர் ஒன்றினையறிதல் முதல்வன் உடனின்றறிதலையின்றி அறிவித்தல் மாத்திரையான் அமையாது என்பது தொண்டனேன் நினையுமா நினையே, விரும்புமா விரும்பே, தொடருமாதொடரே, நுகருமா நுகரே என்றிவ்வாறு முத்திநிலை பற்றி யோதிய திருவாக்குக்களானுமறிக" (சூத்-11) என மாதவச் சிவஞான சுவாமிகள் சிவஞானபோதச் சிற்றுரையில் இத்திருவிசைப்பாத் தொடர்களை 'முத்தி நிலைபற்றி யோதிய திருவாக்குகள்' என்று குறித்துள்ளமை உணர்ந்து இன்புறத்தக்கதாகும்.

'உயர் கொடி யாடை' என்ற திருப்பதிகம் தில்லைச் சிற்றம்பலவரது திருவடிமுதல் திருமுடிவரை அமைந்த திருக்கோலத்தின் பேரழகில் ஈடுபட்டுத் திளைத்து இன்புறுந்திறத்தை விளக்குவது. இதன்கண் தில்லைப் பதியின் வளமும் தில்லைவாழந்தணர்களது சிவபக்தி மாண்பும் விளங்கப்பெற்றுள்ளன.

'உறவாகிய யோகம்' என்ற மூன்றாந் திருப்பதிகம் தில்லையம்பலக்கூத்தன் மகேந்திர மலையில் எழுந்தருளிய திறத்தையும் அப்பெருமான் வேடுருவாகி விசயனுக்கருள் புரிந்த அருமையிலெளிய அழகினையும் நினைந்து இறைவன்பாற் காதல்கொண்டு வருந்தும் தலைவியின் மொழிகளை நற்றாய் எடுத்துரைப்பதாகப் பாடப்பெற்றது. எல்லாவுயிர்க்கும் உயிராகி உள்நின்று உறவாடி மகிழ்ச்சி விளைத்தலையே பயனாகக் கொண்டு நிகழும் இறைவனது திருக்கூத்துக்குத் தில்லைச் சிற்றம்பலம் நிலைக்களனாகத் திகழ்தல் கருதி அதனைக் 'குலாத் தில்லையம்பலம்' எனத் திருமாளிகைத் தேவர் இத்திருப்பதிகத்திற் சிறப்பித்துப் போற்றியுள்ளார். திருவாசகத்தில் குலாப்பத்தி லுள்ள ஒவ்வொரு பாடலிலும் 'குலாத்தில்லையாண்டான்' எனத் திருவாதவூரடிகள் போற்றிய குறிப்பினையும் அவ்வடிகள் கூறுமாறு வேடுருவாகி மகேந்திரத்து வீற்றிருந்து அருள் செய்த இறைவனது அருட்பண்பினையும் இத்திருப்பதிகத்தில் திருமாளிகைத்தேவர் விளக்கியுள்ளமை ஒப்புநோக்கி மகிழத்தக்கதாகும்.

'இணங்கிலாவீசன்' என்ற முதற்குறிப்புடைய நான்காந் திருப்பதிகத்தில் சிவநெறியையும் சிவனடியார்களையும் இகழ்ந் துரைக்கும் பேய்மக்களைத் தம் கண்கள் காணாவென்றும் வாய் அவரோடு உரையாடாதென்றும் திருமாளிகைத்தேவர் வற்புறுத்திக் கூறியுள்ளார்.

**'மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ்**
**சிறப்பிலார் தந்திறத்துச் சேர்வை- அறப்பித்துப்**
**பத்தரினத்தாய்ப் பரனுணர்வி னாலுணரும்**
**மெய்த்தவரை மேவா வினை' (சிவஞானபோதம். வெ. 75)**

என மெய்கண்டதேவர் அறிவுறுத்தருளிய சிவபத்தர் இலக்கணம் திருமாளிகைத்தேவர்பால் முழுவதும் அமைந்துள்ளமை அவர் பாடிய இத்திருவிசைப்பாத் திருப்பதிகத்தால் இனிது புலனாதல் காணலாம்.

**'சோதியே சுடரே சூழொளி விளக்கே'**

எனத் திருவாதவூரடிகள் இறைவனைப் போற்றினாற் போன்று 'ஒளிவளர் விளக்கே' எனத் திருமாளிகைத் தேவர் உளங்கசிந்து போற்றுகின்றார். 'சிறந்தடியாருள்ளத்துத் தேனூறி நின்று' என்ற திருவாசகத் தொடர்ப்பொருள், 'சித்தத்துள் தித்திக்குந் தேனே' எனத் திருவிசைப்பாவில் எடுத்தாளப்பட்டது. 'தன்னைத்தந்த என்னாரமுதை' என்பது திருவாசகம். 'அற்பனென்னுள்ளத் தளவிலாவுன்னைத் தந்த பொன்னம்பலத்தாடீ' என்ற திரு விசைப்பாத் தொடர் அதற்குரிய விளக்கமாகும். 'தானொருவனுமே பலவாகி நின்றவா' என வாதவூரர் இறைவனியல்பினை விளக்கினாற் போன்று 'ஒருமையிற் பலபுக்கு உருவி நின்றாயை' எனத் திருமாளிகைத் தேவரும் விளக்கினமை காணலாம். இவ்வாறு திருவாசகத்திற்கும் திருமாளிகைத் தேவர் திருவிசைப்பாவுக்கும் உள்ள தொடர்பினை யுற்று நோக்குங்கால் திருமாளிகைத்தேவர் திருவாசகத்தில் தோய்ந்த உள்ளமுடையா ரென்பது நன்கு விளங்கும்.

இவ்வாசிரியர் 'நீறணிபவளக் குன்றமே' என இறைவனது திருக்கோலத்தை நினைந்து போற்றிய குறிப்பு இவர் காலத்து வாழ்ந்த தமிழ் மக்களது உள்ளத்தை நெகிழ்வித்து அவர்களது மனத்தகத்தே இறைவனது திருவுருவினைப் புலப்படுத்தி இன்புறச் செய்தமை 'நீறணி பவளக் குன்றம்'* (*தெ.இ.கல்வெட்டுத் தொகுதி எண் II, கல்வெட்டு 66.) என அவர்கள் தம் மக்களுக்கு இட்டு வழங்கிய பெயரால் நன்கு புலனாகும்.

## 2. சேந்தனார்

சேந்தன் என்ற பெயருடையார் பலர். திவாகரம் என்ற நிகண்டினைச் செய்வித்த சேந்தன் என்பான், அம்பர் கிழான் அருவந்தை யென்ற சங்ககாலத் தலைவனது வழியில் வந்தவன்; அம்பர் என்ற ஊரினன்; செந்தமிழ் ஆரியம் ஆகிய இருமொழிகளிலும் நிரம்பிய புலமை வாய்ந்தவன்; புலவர் பெருமக்களை ஆதரித்தவன்; சிவபெருமானது இடப் பாகங்கொண்ட அம்மைக்குச் செந்தமிழ் மாலையந்தாதி புனைந்தவன் எனத் திவாகர நூலாசிரியர் கூறியுள்ளார். வீரசோழிய உரை மேற்கோட் செய்யுட்களிற் பாராட்டப் பெற்ற பொன்பற்றி காவலன் சேந்தனென்பான், புலவர்களை ஆதரித்த குறுநில மன்னன்; புத்த சமயத்தைப் போற்றியவன் எனத் தெரிகிறது. இங்குக் கூறப்பட்ட இவ்விருவரும் திருவிசைப்பா ஆசிரியராகிய சேந்தனாரைக் குறித்துப் பின்வரும் கதையொன்று செவிவாயிலாக வழங்கப்பெற்று வருகின்றது.

சேந்தனார், பட்டினத்தடிகளுக்குக் கணக்கராக இருந்து அடிகள் கட்டளையிட்டவாறு நிதியறையைத் திறந்துவிட்டு, அங்குள்ள செல்வ முழுவதையும் ஊரார் கொள்ளை கொள்ளச் செய்தார். இச் செய்தியைக் கேட்ட அரசன், இழந்த பொருள் களுக்குக் கணக்குக் காட்டுதல் வேண்டுமெனக் கூறிச் சேந்தனாரைச் சிறையிலிட்டான். அதனால் வருத்தமுற்ற அவருடைய மனைவி மக்கள் பட்டினத்தடிகளைப் பணிந்து குறையிரந்து நின்றனர். அப்பொழுது, பட்டினத்தடிகள்,

**"மத்தளை தயிருண்டானும் மலர்மிசை மன்னினானும்**
**நித்தமுந் தேடிக்காணா நிமலனே யமலமூர்த்தி**
**செய்த்தளைக் கயல்பாய் நாங்கூர்ச் சேந்தனை வேந்தனிட்ட**
**கைத்தளை நீக்கியென்முன் காட்டுவென் காட்டுளானே"**

என்ற பாடலைப் பாடினார். அந்நிலையில் சிவபெருமானது கட்டளைப்படி விநாயகர் சேந்தனாரது விலங்கை முரித்துச் சிறை மீட்டருளினார். சிறையிலிருந்து மீண்ட சேந்தனார், பட்டினத் தடிகள் பணித்த வண்ணம் மனைவி மக்களுடன் தில்லைக்குச் சென்று விறகு விற்பதால் வரும் ஊதியத்தைக் கொண்டு நாடோறும் சிவனடியாரொருவர்க்கு உணவளிக்குங் கடமை மேற்கொண்டு வாழ்ந்திருந்தனர். பலநாட்கள் தொடர்ந்து மழை பெய்த நிலையில் பசியால் வருந்திய சேந்தனார், விறகு விற்றுக் கிடைத்த மாவினைத் தம் மனைவி கையிற் கொடுத்துக் களியாக்கச் செய்து சிவனடியாரை எதிர்பார்த்திருந்தார். சிவபெருமானே முதுமைப் பருவமுடைய அடியாராகச் சேந்தனார் வீட்டிற்குச் சென்று அவர் அன்பினா லளித்த களி யுணவையுண்டு மகிழ்ந்து

அடுத்த வேளைக்கும் வேண்டுமென்பாராய் எஞ்சிய களியையும் பழங் கந்தையில் முடிந்துகொண்டு பொன்னம்பலத்தை யடைந்தனர். இஃது இவ்வாறாகத் தில்லையிற் கூத்தப் பெருமானுக்குத் தான் நடத்தும் நாள் வழிபாட்டில் திருச்சிலம்பொலி கேட்டு மகிழ்தலை நியதியாகக் கொண்ட சோழ மன்னன், அன்றிரவு முழுதுங் காத்திருந்தும் அவ் வொலியைக் கேட்கப் பெறாது வருந்தித் துயில்கொண்டான். கூத்தப்பெருமான் மன்னனது கனவில் தோன்றி "வேந்தனே கவலை கொள்ளற்க. இன்று நாம் சேந்தன் அளித்த களியமுதை யுண்ணச் சென்றமையால், நீ நடத்தும் வழிபாட்டிற்கு வரத்தாழ்த்தோம்" என்று கூறி மறைந்தருளினார். அந்நிலையில் விழிப்புற்ற வேந்தன் சேந்தனாரைக் காண விரும்பி விடியற் காலத்தே தில்லைச் சிற்றம்பலப் பெருமானை வணங்கச் சென்றவன், பொன்னம்பலத்திற் களியமுது சிந்திக்கிடத்தலைக் கண்டு தான் கண்ட கனவின் உண்மையைத் தில்லை வாழந்தணர் முதலிய எல்லார்க்குந் தெரிவித்தான். அதனையுணர்ந்த பலரும் சேந்தனாராகிய அடியவரைக் கண்டு வழிபடவேண்டுமெனப் பெரிதும் விருப்புற்றிருந்தனர். மார்கழித் திருவாதிரைத் திருவிழாவில் மழை பெய்தமையால் திருத்தேர் சேற்றிலழுந்தி ஓடாது நின்றபொழுது 'சேந்தா தேர்நடக்கப் பல்லாண்டு பாடுக' என்றதொரு வானொலி எல்லாருங் கேட்கும்படி தோன்றியது. தேரிழுக்கும் அடியார் குழுவில் நின்ற சேந்தனார் 'மன்னுகதில்லை வளர்க நம் பத்தர்கள்' எனத் தொடங்கும் திருப்பல்லாண்டுத் திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார். வடம் பிடிக்காமலே தேர் நிலைக்கு வந்து சேர்ந்தது. இவ்வற்புதத்தைக் கண்டார் அனைவரும் சேந்தனாரது பேரன்பின் திறத்தை எண்ணி நெஞ்சம் நெக்குருகினர். இதுவே திருவிசைப்பா ஆசிரியராகிய சேந்தனாரைக் குறித்து நெடுநாட்களாக வழங்கப்பெற்று வரும் கதை.

சேந்தன் என்ற அடியவர் தில்லையிற் கூத்தப் பெருமானுக்குக் களியமுது அருத்திய பேரன்பின் திறத்தை

**"பூந்தண் பொழில்சூழ் புலியூர்ப் பொலிசெம்பொ னம்பலத்து**
**வேந்தன் றனக்கன்றி யாட்செய்வதென்னே விரிதுணிமே**
**லாந்தண் பழைய அவிழையன் பாகிய பண்டைப் பறைச்**
**சேந்தன் கொடுக்க அதுவுந் திருவமிர் தாகியதே"** (26)

எனவரும் கோயிற்றிருப்பண்ணியர் விருத்தத்தில் நம்பியாண்டார் நம்பிகளும்,

**"அவிழ்ந்த துணியில் அவிழ்ந்த அவிழை**
**அவிழ்ந்த மனத்தால் அவிழ்க்க - அவிழ்ந்தசடை**

**வேந்தனார்க் கின்னமுத மாயிற்றே மெய்யன்பிற்**
**சேந்தனார் செய்த செயல்."** (53)

என வரும் திருக்களிற்றுப் படியாரில் உய்ய வந்த தேவ நாயனாரும் முறையே பரவிப் போற்றியுள்ளார்கள்.

**"வரையே றவிட்டமுதஞ் சேந்தனிட வுண்டனை வல்லின மென்றாலும்**
**உரையே றவிட்டமுதலாகுமோ வெனைச்சித்தென் றுரைக்கி லென்னாம்**
**நரையே றவிட்டமுத னாளவனாக் கொண்டுநறும் புலிசைமேவும்**
**கரையேற விட்டமுதல்வா வுன்னையன் றியுமோர் கதி யுண்டாமோ"**

எனச் சிவஞான முனிவர் பாடிய பாடலும் இவண் நோக்கத் தக்கதாகும்.

'பண்டைப் பறைச் சேர்ந்தன்' என நம்பியாண்டார் நம்பிகள் கூறுதலால் தில்லையம்பலக் கூத்தனுக்குக் களியமுதருத்திய சேந்தனாரென்பவர் பறையர் குலத்தவரென்பதும் நம்பியாண்டார் நம்பிக்குக் காலத்தால் முற்பட்டவரென்பதும் நன்கு துணியப்படும். இவ்வாறு களியமுது நிவேதித்த சேந்தனாரும் திருப்பல்லாண்டு பாடிய சேந்தனாரும் ஒருவரேயென முன்னோர் பலரும் கருதியுள்ளார்கள். இக்கருத்தினை அப்படியே ஏற்றுக்கொள்ளுதற்கோ அன்றி மறுத்தற்கோ போதிய சான்றுகள் இதுகாறுங் கிடைக்கவில்லை.

நம்பியாண்டார் நம்பிகளுக்குக் காலத்தால் முற்பட்டவர் பட்டினத்தடிகளென்பது பதினொராந் திருமுறையிற் பட்டினத் தடிகள் நூல்களுக்குப் பின் நம்பியாண்டார் நம்பிகள் பாடிய நூல்கள் முறைப்படுத்தப்பட்டிருத்தலால் இனிது விளங்கும். பட்டினத்தடிகள்பால் சேந்தனார் பணி புரிந்தாரென்பது நெடு நாட்களாக வழங்கி வருவதாதலின் சேந்தனாரும் நம்பியாண்டர் நம்பிக்கு முன் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவரெனக் கொள்ளுதல் ஏற்புடையதாகும். திருமாளிகைத்தேவர் சேந்தனாருடன் தில்லைக்குச் சென்று திருத்தேரை வடமில்லாது நிலையிற் சேர்ப்பித்தாரென்றதொரு கதை வழங்குதலால் திருமாளிகைத் தேவர் வாழ்ந்த காலமும் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியே யெனத் துணிய இடமுண்டு. கண்டராதித்தர் அல்லது சுந்தரசோழர் ஆட்சிக் காலத்த தெனக் கருதப்படும் கல்வெட்டொன்றில்* (*தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி XIII எண் 138) "கலி விசயன் தருணேந்து சேகரனேன்" என ஒருவன் தன் பெயரைக் குறிப்பிடு கின்றான். தருணேந்து சேகரன் என்னும் இப்பெயர் சேந்தனார்

பாடிய திருவாவடுதுறைத் திருவிசைப்பாவில் காணப்படுகின்றது. எனவே திருவிசைப்பா ஆசிரியராகிய சேந்தனார் முதற்கண்டராதித்த சோழர் காலத்துக்கு முற்பட்டிருந்தமை நன்கு தெளியப்படும்.

"செழுந்திரட்சோதிச் செப்புறைச் சேந்தன்"* (*திருவிடைக்கழி திருவிசைப்பாவின் திருக்கடைக்காப்பு) எனவும், "செப்புறை அந்தமிலானந்தச் சேந்தன்"* (*திருப்பல்லாண்டின் திருக்கடைக் காப்பு) எனவும் சேந்தனார் தம்மைப்பற்றிக் கூறுதலால் இவரது ஊர் 'செப்புறை' என்ற பெயருடையதெனத் தெரிகிறது. ஊர்ப்பெயர்கள் பல மாறி வழங்கும் இக்காலத்தில் அவ்வூர் இன்ன இடத்திலுள்ளதெனத் தெரிந்துகொள்ள இயலவில்லை. இனி செப்புறை யென்பதனை இவரது குடிப்பெயராகக் கொள்ளினும் அமையும். திருவிடைக்கழி முருகப்பெருமானைப் பாடிப்போற்றும் சேந்தனார் அவ்வூர்த் திருவிசைப்பாவில் "மருண்டுறை கோயில் மல்கு நன்குன்றப் பொழில்வளர் மகிழ் திருப்பிடவூர், வெருண்டமான் விழியார்க்கு அருள் செயாவிடுமே"* (*திருவிடைக்கழி திருவிசைப்பா 10-ம் பாடல்) எனக் குறிப்பிடுதலால் இவரது தொடர்புடையதா யிருத்தல் வேண்டும். முடியுடை வேந்தர்க்கு மகட்கொடைக்குரிய வேளாளர்கள் வாழும் ஊர்களாக நச்சினார்க்கினியர் குறித்த "சோழநாட்டுப் பிடவூரும் அழுந்தூரும் நாங்கூரும் நாவூரும் ஆலஞ்சேரியும் பெருஞ்சிக்கலும் வல்லமும் கிழாரும்" முதலிய பதிகளுள் இப்பிடவூர் முதலில் வைத்து எண்ணப்படுதல் காணலாம். நச்சினார்க்கினியர் கூறும் இவ்வூர்களனைத்தும் சோழ நாட்டின் கிழக்கே கடற்கரைப்பகுதியைச் சார்ந்த ஊர்களாதலால் பிடவூரும் இவ்வூர்களையடுத்தே யமைந்திருத்தல் வேண்டும். திருச்சிராப்பள்ளி ஜில்லாவிலுள்ள பிடவூர் அழிந்து இதனின் வேறெனவே கொள்ளப்படும். திருவிடைக்கழியின் அருகிலிருந்த இப்பிடவூர் அழிந்து போயிற்றென்றும் அங்கிருந்த கடவுட் படிமங்களைத் திருவிடைக்கழியிலுள்ள திருக்கோயிலிற் கொண்டு வந்து வைத்துள்ளார்களென்றும் முதியோர் சிலர் கூறுகின்றனர். பட்டினத்தடிகள் சேந்தனார் சிறைநீக்கப் பாடியதாகச் சொல்லப்படும் பாடலில் 'நாங்கூர்ச் சேந்தனை' எனக் குறிக்கப்படுதலால் சேந்தனார் சிலகாலம் நாங்கூரிலும் வாழ்ந்திருத்தல் கூடும் எனக் கருதுதல் பொருந்தும்.

சேந்தனார் பாடியனவாகத் திருவீழிமிழலை, திருவாவடுதுறை, திருவிடைக்கழி என்ற தலங்களுக்குரிய திருவிசைப்பாப் பதிகங்கள் மூன்றும் திருப்பல்லாண்டுப் பதிகமொன்றும் ஆக நான்கு திருப்பதிகங்கள் உள்ளன. இவற்றில் நாற்பத்தேழு பாடல்களை அமைந்துள்ளன.

*செங்கண்மால் வழிபட வீழிமிழலையில் விண்ணிழி விமானத்திற் சிவபெருமான் வீற்றிருந்தருளுமியல்பும், பொய்த்தவ நெறிகளிற் புகாது தடுத்து மெய்த்தவ நெறியாகிய சைவ சமயத்தில் தம்மை நிலைபெறச் செய்தருளிய அப்பெருமானது அருட்குணமும், சிவனடியார்களுக்குத் தாம் தொண்டுபட்டுய்ந்த திறமும், திருநாவுக்கரசர் திருஞானசம்பந்தர் ஆகிய பெருமக்களிருவர்க்கும் வீழிமிழலை யிறைவர் பரிசில் காசருளி அவர்கள் பாடிய பழுத்த செந்தமிழ் மலர்களைச் சூடி அவர்கள் திருவுள்ளத்தே நிறைந்து நின்ற பெருமையும் ஆகிய செய்திகளைத் திருவீழிமிழலைத் திருவிசைப்பாவிற் சேந்தனார் உளமுருகிப் போற்றும் முறை கற்போர் மனத்தைக் கனிவிப்பதாகும்.*

**"பண்டலர் அயன்மாற்கரிதுமாய் அடியார்க்**
**கெளியதோர் பவளமால் வரையை"**

*எனவும்*

**"ஆயிரங்கமலம் ஞாயிறாயிரமுக்**
**கண்முக கரசரணத்தோன்"**

*எனவும்,*

**"எண்ணில் பல்கோடி சேவடிமுடிகள்**
**எண்ணில் பல்கோடி திண்டோள்கள்**
**எண்ணில் பல்கோடி திருவுரு நாமம்**
**ஏர்கொள்முக் கண்முக மியல்பும்**
**எண்ணில் பல்கோடி யெல்லைக்கப்பாலாய்**
**நின்றைஞ்ஞூற் றந்தணரேத்தும்**
**எண்ணில் பல்கோடி குணத்தரேர் வீழி**
**யிவர் நம்மையாளுடையாரே"**

*எனவும் இவ்வாசிரியர் இறைவனைப் போற்றிய பகுதிகள் "வானோர்க்கரிய மருந்தே போற்றி, ஏனோர்க்கெளிய இறைவா போற்றி" என்ற திருவாசகத் தொடரையும்,*

**"ஆயிரந் தாமரைபோலும் ஆயிரஞ் சேவடியானும்**
**ஆயிரம் பொன்வரைபோலும் ஆயிரந்தோளுடையானும்**
**ஆயிரஞாயிறுபோலும் ஆயிரநீண்முடியானும்**
**ஆயிரம் பேருகந்தானும் ஆரூரமர்ந்தவம்மானே"** (4-5-8)

*எனவருந் திருநாவுக்கரசர் திருப்பாடலையும் நினைவுபடுத்து கின்றன. இவர் காலத்தில் திருவீழிமிழலையில் 'ஐந்நூற்றுவர்' என்ற தொகையுடைய வேதியர்கள் வீழிமிழலைப் பெருமான் வழிபாட்டில் ஈடுபட்டிருந்தமை 'ஐஞ்ஞூற்றந்தணரேத்தும்' என்ற தொடராற் புலப்படுகின்றது.*

திருவாவடுதுறையில் எழுந்தருளிய மணவாள நம்பியைக் கண்டு காதல் கொண்ட தன் மகளது அன்பின்பாற்பட்ட மொழிகளையும் செயல்களையும் எடுத்துக்கூறித் தாயொருத்தி இரங்குவதாகப் பாடப்பெற்றது திருவாவடுதுறைத் திருவிசைப்பா. இதன் கண் அந்தாதித் தொடையமைந்துள்ளது. திருவாவடுதுறையென்பது கோயிற்பெயர். அக்கோயில் "அழிவொன்றிலாச் செல்வச் சாந்தையூர் அணியாவடுதுறை" என்ற தொடராற் சேந்தனார் குறிப்பிட்டுள்ளார். "தென்கரைத் திரைமூர் நாட்டுப் பிரமதேயம் சாத்தனூர் ஸ்ரீ திருவாவடுதுறை" எனவரும் கல்வெட்டு* (*தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி XIII எண் 18.) இக்குறிப்பினை நன்கு விளக்குவதாக அமைந்துளது. சாத்தனூர் என்பது சாந்தையென மருவியது. திருவாவடுதுறை கோயிலமைந்துள்ள ஊராகிய சாத்தனூரில் வேதியர் ஆயிரவர் வாழ்ந்தார்களென்றும் அவர்கள் திருவாவடுதுறையில் எழுந்தருளிய இறைவனுக்கு மெய்மைப்பணி புரிந்தார்களென்றும் இவ்வாசிரியர் கூறுகின்றார். "பொய்யாத வேதியர் சாந்தை மெய்ப்புகழாளர் ஆயிரம் பூசுரர், மெய்யே திருப்பணி செய்சீர் மிகுகாவிரிக் கரைமேய, ஐயா திருவாவடுதுறை யாமுதே" எனவரும் பாடலில் இச்செய்தி குறிக்கப்பட்டமை காண்க.

திருவிடைக்கழி என்ற தலத்தில் திருக்குரா நீழலில் எழுந்தருளிய முருகப்பெருமானைக் கண்டு காமுற்ற தலைமகளின் ஆற்றாமையை நினைந்து இரங்கிய நற்றாய் கூறுவதாகச் சேந்தனார் பாடிய திருப்பதிகம், 'மாலுலாமனந்தந்து' எனத் தொடங்கும் திருவிசைப்பாவாகும். அரன் மதலையும் கணபதி இளங்கிளையுமாகிய முருகவேள், கங்கை தன் சிறுவனாக வளர்ந்து தேவர் சேனாதிபதியாய் அசுரர்மாள உழிஞை சூடிக் குன்ற மெறிந்து சூர்மாவினைத் தடிந்து வள்ளியை மணந்து திருமால் மருகனாகித் திகழுஞ் சீர்த்தியும், சுப்பிரமணியனாகிய அத்தோன்றல் கவளமா கரிமேற் கவரிசூழ் குடைக்கீழ்த் திருவுலாவரும் சிறப்பும், அறுமுகச் செவ்வேளாகிய பெருமானது பேரழகில் ஈடுபட்ட மகளிர் மடல் தொடங்கிய நிலையும், பிடவூர் வாழும் அம்மகளிர்க்கு அறுமுகப் பெருமானது திருவருள் கிடைத்தல் உறுதியென அவர்தம் தாயார் கொண்ட நம்பிக்கையும் இத் திருப்பதிகத்தில் விரித்துரைக்கப்பட்டுள்ளமை படித்து இன்புறுத்தற்குரியதாகும். திருவிடைக்கழி என்னும் இத்திருப்பதி மாயூரந் தாலுகாவில் உள்ளது. குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன் என்ற சோழமன்னனது பள்ளிப்படை இவ்வூரின் அருகே வீரசோழனாற்றங் கரையில் இன்றும் அமைந்துள்ளதெனக் கூறுவர். இதனையுய்த்துணருங்கால் சங்க காலத்திற் குராப்பள்ளியென்ற பெயரால் வழங்கியவூர் இத் திருவிடைக்

கழியே யென்பது நன்கு புலனாம். இவ்வூர்க் கோயிலில் முருகப்பெருமான் குராமர நீழலிலமர்ந்திருத்தல் குராவுக்கும் இவ்வூருக்கும் மேலும் உறுதிப்படுத்துவதாகும்.

தில்லையில் மார்கழித் திருவிழாவில் ஓடாமல் தடைப்பட்டு நின்ற திருத்தேர் ஓடும்படி பாடியது திருப்பல்லாண்டுத் திருப்பதிகமென்பது முன்னர் விளக்கப்பட்டது. இது பதின் மூன்று திருப்பாடல்களையுடையது. நெடுங்காலம் வாழ்க என வாழ்த்துதற் பொருளிலமைந்த இசைப்பாட்டினைப் பல்லாண்டிசை என்பர்.

**"பாடுவார் பணிவார் பல்லாண்டிசை**
**கூறுபத்தர்கள் சித்தத்துள்புக்குத்**
**தேடிக் கண்டுகொண்டேன் திருவாரூரம்மானே"**

எனத் திருநாவுக்கரசரடிகள் தம் காலத்துப் பல்லாண்டிசை பாடும் வழக்கமுண்டென்பதனை வெளியிட்டருளுதல் காணலாம். திருமாலடியார்களுள் ஒருவராகிய பெரியாழ்வார் பாடிய திருப்பல்லாண்டு இத்திருப்பல்லாண்டுடன் ஒப்பு நோக்குதற் குரியதாம், பல்லாண்டென்னும் பதங்கடந்து என்றுமுள்ள பரம்பொருளாகிய இறைவனுக்குச் சேந்தனார் பல்லாண்டிசை பாடியதன் நோக்கம், எல்லாம் வல்ல அவ்விறைவனை வாழ்த்தும் மெய்யடியார்கள் எல்லோரும் உடல் நலமும் உள நலமும் ஒருங்கெய்தி நெடுங்காலம் வாழ்ந்து சிவநெறியை வளர்த்தல் வேண்டுமென்னும் பெருவேட்கையேயாகும்.

'மிண்டுமனத்தவர் போமின்கள்' என விலக்கி 'மெய்யடி யார்கள் விரைந்து வம்மின்' எனப் பேரன்பினால் அழைத்து, மழவிடையாற்கு வழிவழியாளாய் மணஞ்செய் குடிப்பிறந்த பழவடியார்களாகிய் பெருமக்களோடுங் கூடிநின்று, ஆவிக்கு அமுதாய் மனத்தகத்தே பாலும் அமுதமும் ஒத்து நின்று அண்ணித்து ஆரும் பெறாத அறிவு தந்து அடியார்க்கு அருள்புரியும் சிவலோக நாயகனாகிய பெருமானை உளமுருகிப் பல்லாண்டு கூறி வாழ்த்தும் இன்னிசைத் திருப்பதிகமாக விளங்குவது இத்திருப்பல்லாண்டு ஆகும். இப்பதிகம் 'மன்னுக தில்லைவளர்க நம்பத்தர்கள்' எனத் தொடங்குவதனை யாழ்ந்து நோக்குங்கால் 'மன்றவாணன் மலர்திருவருளால் தென்றமிழ்ப் பெருமை சிவணிய செய்த அடியவர் கூட்டம்' தில்லைப்பதியில் நிலைப்பெற்றிருந்ததென்னும் செய்தி தெளிவாகப் புலப்படுகின்றது. இதனாலன்றோ,

**"அகலோக மெல்லாம் அடியவர்கள் தற்சூழப்**
**புகலோக முண்டென்று புகுமிடநீ தேடாதே**

**புவலோக நெிபடைத்த புண்ணியங்கள் நண்ணியசீர்ச்**
**சிவலோக மாவதுவுந் தில்லைச் சிற்றம்பலமே"**

எனப் பூந்துருத்திநம்பி காடநம்பியும் போற்றினரென்க.

காமக்கிழத்தியர் வடிவிற் காணப்படும் ஆடை சாந்து அணிகலன் முதலாயின காமுகரை... வசீகரித்து இன்பஞ் செய்யுமாறு போலச் சிவசாதனமாகிய திரு வெண்ணீற்றுத் திருவேடம் மெய்ஞுர்வுடையாரை வசீகரித்து இன்பஞ் செய்யுமென்பார்,

**"சேலுங் கயலுந் திளைக்குங் கண்ணாரிளங்**
**கொங்கையிற் செங்குங்குமம்**
**போலும் பொடியணி மார்பிலங்குமென்று**
**புண்ணியர் போற்றிசைப்ப"**

எனப் பாடுகின்றார்.* (*"காமக்கிழத்தியர் வடிவிற் காணப்படும் ஆடை சாந்து அணிகலன் முதலாயின காமுகரை வசீகரித்து இன்பஞ் செய்யுமாறு போல மெய்யுணர்வுடையாரைக் காட்சி மாத்திரையின் வசிகரித்து இன்பஞ் செய்தல் பற்றித் திருவேடத்தையும் சிவாலயத்தையும் என்று பசரித்தார். அது 'சேலுங் கயலுந் திளைக்குங் கண்ணாரிளங் கொங்கையிற் புண்ணியர் போற்றிசைப்ப என்னுந் திருவாக்கானு மறிக" எனச் சிவஞான முனிவர் கூறும் விளக்கம் இவண் கருதற்குரியதாகும். (சிவஞானபோதச் சிற்றுரை 12-ம் சூத்திரம்) இத்தொடர் திருநீறு முதலிய சிவ சாதனங்களில் இவர் கொண்ட பேரார்வத்தினை இனிது புலப்படுவதாகும். திருப்பல்லாண்டின் இறுதித் திருப்பாடலில்,

**"எந்தையெந்தாய் சுற்றமுற்றும் எமக்கமுதாம் எம்பிரான் என்றென்று**
**சிந்தைசெய்யும் சிவன் சீரடியா ரடிநாய் செப்புரை**
**அந்தமிலானந்தச் சேந்தனெனை"**

என இவ்வாசிரியர் தம்மைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இதன்கண் சேந்தனராற் 'சிவன் சீரடியார்' எனப் போற்றப்பட்டவர்,

**"எந்தையெந்தாய் சுற்ற மற்றுமெல்லாமென்னுடைய**
**பந்தமறுத் தென்னை யாண்டுகொண்ட பாண்டிப்பிரான்" ***
(*திருவாசகம், திருப்பூவல்லி 2-ம் பாடல்.)

என இறைவனைப் பாடிப் போற்றிய திருவாதவூரடிகளேயெனக் கருத இடமுளது. இக்குறிப்பினை நோக்குமிடத்துத் திருவாதவூரடிகளுக்குப் பின் அவரடியார் குழுவின் வழியொழுகியவர் சேந்தனாரென்பது நன்கு தெளியப்படும். சோழரது ஆட்சி பரவிய கடல் கடந்த வெளிநாடாகிய சயாம்

நாட்டில் அரசர் குடும்பத்தில் நிகழ்த்தப்பெறும் சடங்குகளில் திருவெம்பாவை, திருவாய்மொழி என்பவற்றுடன் 'மன்னுக தில்லை'யெனத் தொடங்கும் இத்திருப்பல்லாண்டும் பாடப் பெறுதலுண் டென்ப.* (*சயாம்நாட்டுஅரசாங்கச் சடங்குகளைப் பற்றி வெளிவந்து உள்ள 'State Cermonies of Siam' என்ற ஆங்கில நூலில் இச்செய்தி குறிப்பிடப்பட்டது. திரு ஔவை. துரைசாமி பிள்ளையவர்கள் எழுதிய 'சைவ இலக்கிய வரலாறு' பக்கம் 394 பார்க்க.) இச்செய்தியை நோக்குங்கால் சேந்தனார் பாடிய திருப் பல்லாண்டில் நம் சோழ மன்னர்க்குள்ள ஈடுபாடு நன்கு விளங்கும்.

## 3. கருவூர்த்தேவர்

கருவூர்த்தேவர் பாடியனவாகத் திருவிசைப்பாவில் பத்துத் திருப்பதிகங்கள் காணப்படுகின்றன. அவை தில்லைச்சிற்றம்பலம், திருக்களந்தை ஆதித்தேச்சரம், திருக்கீழ்க்கோட்டூர் மணியம்பலம், திருமுகத்தலை, திரைலோக்கிய சுந்தரம், கங்கைகொண்ட சோழேச்சரம், திருப்பூவணம், திருச்சாட்டியக்குடி, தஞ்சை இராசராசேச்சரம், திருவிடைமருது என்னும் திருத்தலங்களிற் கோயில் கொண்டருளிய சிவபெருமானைப் பரவிப்போற்றியன வாக அமைந்துள்ளன. இத்திருப்பதிகங்களிற் காணப்படும் குறிப்புகளைக் கொண்டு இவற்றைப் பாடியருளிய கருவூர்த் தேவரது வரலாற்றையும் ஓரளவு உணர்ந்து கொள்ளலாம்.

இவ்வாசிரியர் தாம் பாடிய பதிகங்களின் இறுதியில் உள்ள திருக்கடைக் காப்புச் செய்யுட்களில் கருவூரன் என்றும் கருவூரனேன் என்றும், கருவூர் என்றும் தம்மைக் குறிப்பிட் டுள்ளார். இக்குறிப்பினால் இவர் கருவூரிற் பிறந்து வளர்ந்தவ ரென்பதும் கருவூருடன் நெருங்கிய தொடர்புடையமையால் கருவூரன் என அழைக்கப்பெற்றா ரென்பதும் நன்கு விளங்கும். கருவூரென்பது கொங்கு நாட்டுச் சிவதலங்களுள் ஒன்று. இவ்வூரிலுள்ள திருக்கோயில் திருவானிலையென வழங்கப் பெறும். இக்கோயிலினுள்ளே தென்மேற்குத் திசையில் கருவூர்த்தேவருக்குரிய கோயில் அமைந்துளது.

கருவூத்தேவர் வேதியர் குலத்தில் பிறந்தவர். வேதங்களை முறைப்படி யோதி வைதிக நெறியில் வழுவாதொழுகிய பெரியார். இச்செய்தி 'ஆரணம் பிதற்றும் பித்தனேன்' என்றும் 'செழுமறை தெரியுந் திகழ் கருவூரனேன்' என்றும் 'கருவூர் ஆரணம் பொழிந்த பவளவாய்' என்றும் இவ்வாசிரியர் தம்மைப் பற்றிக் கூறுங் குறிப்புகளால் இனிது விளங்கும். இவர் மக்களுக்கு நலந்தருவனவாகிய கலைகள் பலவற்றையும் நன்கு பயின்றவர். 'நலிமலி கலைபயில் கருவூர்' எனவும் 'காட்டிய பொருட்கலை

பயில்கருவூரன்' எனவும் வரும் தொடர்களால் இச்செய்தி புலனாகின்றது.

வேதங்களை முறைப்படி ஓதியுணர்ந்த கருவூர்த் தேவர் தமது தாய் மொழியாகிய தமிழின் இனிமையினையும் எப்பொருளையுந் தெளிய அறிவிக்குந் தெளிவுடைமையினையும் நன்கு தேர்ந்து அமிழ்தினுமினிய தமிழ்ப் பாடல்களின் சுவை நலங்களைத் துய்த்து மகிழ்ந்தார். தமக்குமுன் வாழ்ந்த அருளாசிரியர்கள் இறைவனைப் போற்றி உளமுவந்தபோதெலாம் உகந்துகந்து பாடிய செழும் பாடல்களைக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதி இன்புற்றார். இளமை, யாக்கை, செல்வம் என்பன என்றும் ஒரு நிலையில் நிற்பன அல்ல எனத் தெளிந்தார். நிலையா வாழ்க்கையில் ஈடுபடுவனல்லேன் எனத் துறவறமாகிய தூய நெறியினை மேற்கொண்டார். இறைவன் எழுந்தருளிய திருத்தலங்கள் தோறுஞ் சென்று அப்பெருமானை வழிபட்டுப் போற்றுதலே இம் மக்கட் பிறவியாற் பெறும் பெரும்பயனெனக் கருதியொழுகினார். எல்லாம் வல்ல கடவுளை வாயாரப் பாடிப் போற்றுந் தொண்டர் கூட்டத்திலே கடவுளைக்கண்டு இன்புறலாமென்றும், இறைவனது பொருள்சேர்புகழை இனிய இசைத்தமிழ்த் திறத்தாற் பாடிப்போற்றும் மெய்யடியார்கள் கூட்டத்தைவிட்டு இறைவன் கணப்பொழுதும் பிரிந்துறைதல் இல்லையென்றும் முன்னைப் பெரியோர்கள் பாடியபாடற் பொருளை உளங்கொண்டு மெய்யடியார் கூட்டத்திற் கலந்து நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பி இறைவனை வழிபடுவதனையே தமக்குரிய சிறந்த கடமையாகக் கொண்டொழுகினார். *

(* 'கண்பனியரும்பக் கைகள் மொட்டித்தென்
   களைகணேயோலமென் றோலிட்டு
என்பெலாம் உருகும் அன்பர்தங் கூட்டத்து
   என்னையும் புணர்ப்பவன்' - (கோயில்-திருவிசைப்பா-5)

என இவ்வாசிரியர் தமது அநுபவத்தைக் கூறுதல் காண்க.

பகற்பொழுதெல்லாம் இறைவனை இனிய தமிழாற் பாடிப் பரவுதலும் எல்லோரும் அயர்ந்து கண்ணுறங்கும் நள்ளிருட் பொழுதில் ஓரிடத்து உயிராவண்ணம் அமர்ந்திருந்து தம் உயிர்க்குயிராகிய இறைவனை யுற்றுநோக்கி உள்ளமாகிய கிழியிலே அப்பெருமானது திருவுருவை ஓவியமாக எழுதிப் பார்த்துச் சிவயோக நெறியில் நிலைபெறவிருத்தலும் இவருடைய அன்றாட அலுவல்களாயின. *

*ஒருங் கிருங்கண்ணின் எண்ணில் புன்மாக்கள்
உறங்கிருள் நடுநல்யாமத்தோர்
கருங்கணின்றிமைக்குஞ் செழுஞ்சுடர் விளக்கங்
கலந்தெனக் கலந்துணர் கருவூர் - (திருவிடைமருது-10).

என இவ்வாசிரியர் தமது அநுபவத்தை வெளியிட்டமை நினைத்து இன்புறத்தக்கது.

இவ்வாறு இரவு பகலாக இறைவனது திருவிளையாடலை யெண்ணி மகிழுமியல்பினராகிய இப்பெரியார், உணர்வின் நேர்பெற வரும் சிவபோகமாகிய பேரின்ப நிலையைத் தம் ஐம்பொறிவாயிலாகவும் நுகர்ந்து இன்புறும் நற்பேறுடைய ரானார். மாற்ற மனங்கழிய நின்ற பெருமானைத் தம் கண்ணாரக் கண்டு பிறவிநோய் தீர்க்கும் அருமருந்தாகிய இறைவனது அருளாரமுதத்தை ஆரப்பருகி அல்லலெலாந் தீரப்பெற்று அகமகிழ்ந்தார். தாம் பெற்ற பேரின்பத்தினை எல்லோரும் பெற்று இன்புறவேண்டுமென விரும்பினார். வேதமாகிய தேனை நிறையப் பருகியின்புற்ற இப்பெரியார், வேதங்கள் ஐயாவென ஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனாகிய இறைவனது திருவருளையடைந் தின்புறுதற்கு வீறுயர் செந்தமிழால் ஞாசம்பந்தப் பிள்ளையார் அமைத்த பதிகப் பெருவழியை நாடினார். இன்ன தன்மையன் என்று அறிய வொண்ணாத இறைவனது பேரருட் பண்பினை இவ்வுலகோ ரனைவரும் உணர்ந்து மகிழ்தற்கேற்ற வகையில் ஆலைபடுகரும்பின்சாறு போன்றும் ஆராவமிழ்தம் போன்றும் அண்ணிக்கும் இனிய தமிழ்ப் பாடல்களைப் பாடியருளினார்.

இவ்வாசிரியர், சிவயோக நெறி நின்ற சித்தராய் நோய் முதுமை முதலிய துன்பமின்றி இவ்வுலகில் நெடுங்காலம் வாழ்ந்த ரென்பது "அருமருந்தருந்தி அல்லல்தீர் கருவூர் அறைந்த சொன் மாலை" எனவருந்தொடரால் இனிது புலனாம். கருவூர்ச் சித்தராகிய இப்பெரியார் இவ்வுலகில் நெடுங்காலம் வாழ்ந்தமைக்கு அருமை நிறைந்த தமிழ்ப் பாடல்களால் இறைவனைப் பாடி மகிழவேண்டுமென்னும் பெருவிருப்பமே காரணமாகும். இதனை "ஆரணத் தேன் பருகியருந்தமிழ் மாலை பகரவருங் காரணத்தின் நிலைபெற்ற கருவூரன் தமிழ் மாலை" என வருந்தொடரால் இவ்வாசிரியரே உலகினர்க்கு விளங்க எடுத்துரைத்தமை காண்க.

உலக மக்களனைவரும் கண்ணயர்ந்துறங்கும் பொழுதிலே ஒன்றிய சிந்தையுடன் சிவயோக நிலையிலமர்ந்திருந்து எல்லாம் வல்ல சிவபெருமானை நினைந்து போற்றி ஞாயிற்றினொளியும் கண்ணொளியும் ஒருங்கியைந்தாற் போன்று அப்பெருமானது

*திருவருளில் ஒற்றித்து இன்புறும் நிலையில் தாம் திருவிசைப்பாப் பாடிய திறத்தினை,*

**"ஒருங்கிருங்கண்ணின் எண்ணில் புன்மாக்கள்**
**உறங்கிருள் நடுநல் யாமத்தோர்**
**கருங்கணின்றிமைக்குஞ் செழுஞ்சுடர் விளக்கங்**
**கலந்தெனக் கலந்துணர் கருவூர்**
**தருங் கரும்பனைய தீந்தமிழ்மாலை"**

*எனவருந் தொடராற் கருவூர்த்தேவர் தெளிவாகக் கூறியுள்ளார். நீர் கலந்த பாலை நெருப்பில் வைத்துக் காய்ச்சுங்கால் நீர்முழுவதுஞ் சுண்டிப்போகப் பால் முன்னினும் பன்மடங்கு இன்சுவை பெருதல் போல இன்றவனது திருவருளாகிய தீயின் முன்னர்த் தம்பாலுள்ள நீரனைய தீவினை அறவே கெட்டொழியப் பாலனைய புண்ணியம் நன்ஞானமாகிய இன்சுவையுடையதாய் விளங்குமாறு தாம் சிவயோக நெறியில் ஒழுகிய திறத்தினையும், அந்நிலையில் இறைவன் யாவராலும் உணர்தற்கரிய தனது நுண்ணிய தன்மையினை அடியார்க் கெளிவரும் பெருங்கருணைத் திறமாகிய எளிமையினுள்ளே அடக்கிக்கொண்டு எளிவந்து தோன்றித் தம் கண்ணினுட் கருவிழியெனக் கலந்து அகலாது நின்று தனது திருவருட் கோலத்தைக் காட்டியருளிய திறத்தினையும்,*

**பண்ணிய தழல்காய் பாலளாம் நீர்போற்**
**பாவமுன் பறைந்து பாலனைய**
**புண்ணியம் பின்சென் றறிவினுக் கறியப்**
**புகுந்ததோர் யோகினிற் பொலிந்து**
**நுண்ணியை யெனினும் நம்பநின் பெருமை**
**நுன்னிடையொடுங்கநீ வந்தென்**
**கண்ணினுண் மணியிற் கலந்தனை கங்கை**
**கொண்டசோழேச் சரத்தானே.**

*எனவரும் திருப்பாடலில் அழகு பெற விரித்துரைத்துள்ளார்.*

*கி.பி. 985 முதல் 1014 வரை தமிழகத்தை ஆட்சி புரிந்த பெருவேந்தன் முதலாம் இராசராச சோழனாவன். இவ்வேந்தர் பெருமான் தஞ்சை நகரத்தில் தக்கிணமேருவென்னும் பெயருடன் இராசராசேச்சரத் திருக்கோயிலைக் கட்டினான். இவ்வேந்த னுடைய அரும்பெறற் புதல்வனாகத் தோன்றிக் கங்கையாறு பாயும் வடநாட்டு கடாரம் முதலிய வெளிநாடுகளையும் வென்று மேம்பட்ட கங்கைகொண்ட சோழனென்பான், தான் தன் பெயராற் புதுவதாக அமைத்த கங்கைகொண்ட சோழபுரத்தி னுள்ளே கங்கை கொண்ட சோழேச்சரம் என்ற திருக்கோயிலைக்*

கட்டினான். இவ்வேந்தன் கி.பி. 1012 முதல் 1044-ம் ஆண்டு வரை தமிழகத்தை ஆட்சி புரிந்தான். இவ்விருபெரு வேந்தர்களாலும் கட்டப்பெற்ற இரண்டு திருக்கோயில்களையும் நேரிற் கண்டு மகிழ்ந்த கருவூர்த் தேவர் அங்கு எழுந்தருளிய சிவபெருமானைத் திருவிசைப்பாப் பாடிப் பரவி போற்றியுள்ளார். எனவே இப்பெரியார் மேற்குறித்த முதலாம் இராசராசசோழன் முதலாம் இராசேந்திரன் ஆகிய இரு பெருவேந்தர் காலத்தும் இருந்தவ ரென்பது நன்கு துணியப்படும். எனவே இவ்வாசிரியர் கி.பி. பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் பதினொராம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்தவரெனக் கொள்ளலாம்.

முதலாம் இராசராச சோழன் தஞ்சையில் இராசராசேச்சரத் திருக்கோயிலைக்கட்டி முடித்து அக்கோயிலினுள்ளே பெருவுடையாரைப் பிரதிட்டை செய்யும்பொழுது அஷ்டபந்தன மருந்து இளகிச் சிவலிங்கத் திருவுருவம் மருந்தினாற் பிணிப்புறாமையைக் கேள்வியுற்ற கருவூர்த்தேவர், தஞ்சைக்குச் சென்று தமது வாயிற் றம்பலத்தால் அஷ்டபந்தன மருந்தினை இறுகும்படி செய்து பெருவுடையாரை நிலைபெற நிறுத்தினார் எனச் செவிவழிச்செய்தியொன்று வழங்கிவருகின்றது. தஞ்சை இராசராசேச்சரத் திருக்கோயிலின் திருப்பணி இராசராச சோழனது பத்தொன்பதாம் ஆட்சியாண்டில் தொடங்கப்பெற்று அவனது ஆட்சியின் இருபத்தைந்தாம் ஆண்டில் நிறைவேறிக் குடமுழுக்கு நடைபெற்றது. குடமுழுக்கு நிகழ்ந்த-காலமாகிய கி.பி.1010-ஆம் ஆண்டு தொடங்கிக் கங்கைகொண்ட சோழன் ஆட்சிக்காலமாகிய கி.பி.1044-ஆம் ஆண்டுவரை அப்பெரு வேந்தர்களை நெருங்கி அளவளாவும் நிலையினராய்க் கருவூர்த்தேவர் சிவநெறியினை வளர்த்து வந்தார். துறந்தார்தம் தூநெறிக்கட் சென்ற இப்பெரியார், சோழ மன்னர்பால் அளவற்ற பேரன்புடையராய் அவர்களுக்குச் சிவனது திருவருளில் நம்பிக்கை யுண்டாக்கிச் சிவநெறியில் தளராத உறுதியுடையராயொழுகப் பணித்தார். சோழரது பேரரசு நாடெங்கும் விரிந்து சிறத்தற்கு இன்றியமையாத தறுகண் உணர்வினைத் தமிழ்மக்கள் உள்ளத்தே கிளர்ந்தெழச் செய்தருளினார். முடிவேந்தர் அடிபணிந்து போற்றும் திருவருட் செல்வராகிய இச் சிவயோகியார், அரசர் பெருந்திருவினை, நுகர்தற்கேற்ற நல்ல வாய்ப்பினைத் தாம் பெற்றிருந்தும், அவ் வாய்ப்பு தம்மை உலகியற்பாசத்திற் பிணித்துவிடுமெனத் தெளிந்தவராதலின், அரசர் பெருஞ்செல்வத்தை நுகருமுள மின்றிக் கையில், ஓட்டினை உண்கலனாக ஏந்திக்கொண்டு ஊர்தோறும் திரிந்து பிச்சையேற்று உண்ணும் எளிய வாழ்க்கையினையே மேற்கொண்டொழுகினார்.

இங்ஙனம் தெருவிற் பிச்சையேற்றுத் திரிந்த கருவூர்த் தேவரின் உள்ளத்துயர்ச்சியினை நன்குணர்ந்த கங்கைகொண்ட சோழன், அச்சிவயோகியாரைப் பணிந்து அவர் திருவாய் மலர்ந்தருளிய திருவிசைப்பாத் திருப்பதிகங்களை இறைவன் திருமுன்னர் அன்புடன் ஓதி வழிபடும் வாயிலாக இறைவனது திருவருளை நிரம்பப்பெற்று, வேந்தரெலாந்தன் ஆணை வழியடங்கி யொழுகச் செய்யும் வீறுடைய பேரரசனாக விளங்கினான். இச்செய்தியினை,

**"மங்கையோ டிருந்தே யோகுசெய்வானை**
**வளரிளந்திங்களை முடிமேற்**
**கங்கையோ டணியுங் கடவுளைக் கங்கை**
**கொண்ட சோழேச் சரத்தானை**
**அங்கையோடேந்திப் பலிதிரிகருவூர்**
**அறைந்த சொன்மாலையால், ஆழிச்**
**செங்கையோ டுலகில் அரசுவீற்றிருந்து**
**திளைப்பதுஞ் சிவனருட்கடலே"**

எனவருங் கங்கைகொண்ட சோழேச்சரத் திருவிசைப்பாவின் திருக்கடைக்காப்புச் செய்யுளில் கருவூர்த் தேவரே தெளிவாக எடுத்துரைத்துள்ளார். சிவபெருமானுக்குக் கங்கைகொண்ட சோழேச்சரமெனத் தன் பெயராற் பெருங்கோயிலெடுத்து அப்பெருமான்பால் அளவிலாப் பேரன்புடையவனாகி விளங்கிய கங்கை கொண்ட சோழன் எல்லாம்வல்ல இறைவனது திருவருளால் வேந்தரெலாம் வணங்கும் பெருவேந்தனாகி இவ்வுலகில் ஆணைச்சக்கரமாகிய ஆழிவைச் செலுத்திப் பேரரசு புரிந்தும் அவ்வரசபோகமாகிய சிற்றின்பத்திலழுந்தாது சிவனருட்கடலாகிய பேரின்பவெள்ளத்துள் திளைத்து இன்புற்றான் என்ற நற்செய்தியை உலக மக்களுக்கு எடுத்துரைக்கு முகமாக எல்லோரும் சிவனது திருவருளை விரும்பிச் செம்மை நெறியில் ஒழுகுதல் வேண்டுமென்பதனை இத்திருக்கடைக் காப்புச் செய்யுளால் கருவூர்த்தேவர்அறிவுறுத்தருளிய திறம் நினைந்து இன்புறுதற்குரியதாகும்.

கருவூர்த் தேவர் பாடிய பதிகங்களிலும் நூற்று மூன்று பாடல்கள் காணப்படுகின்றன. 'கணம் விரிகுடுமி' யெனத் தொடங்கும் திருவிசைப்பாப்பதிகம் தில்லைப் பெருங் கோயிலைப் போற்றுவதாகும். இதன் கண் அமைந்த பாடல்கள் யாவும் 'பெரும்பற்றப்புலியூர்த் திருவளர் திருச்சிற்றம்பலமே' என்ற முடிவுடன் அமைந்துள்ளன. கடத்தற்கரிய பிறவியாகிய இப்பெருங் கடலிற்கிடந்து கரைகாணாது நீந்தி அலமரும் அறிவிலாதேனாகிய எளியேற்கு என்னுடன் தோன்றிய

*பொறிகளாகிய ஐவரும் நீங்காப் பகைவராய் மேன்மேலும் இடர்விளைக்கின்றனர்.இத்துன்ப நிலையில் எளியோர்க்குத் துணையாய் நின்று இக்கடலினின்றுங் கரையேற்றி என்னை உய்விப்பார் நின்னைத் தவிர வேறு யாருளர்? என முறையிட்டால் அந்நிலையே தோன்றி, 'நீ ஒரு சிறிதும் அஞ்சற்க' என்று சொல்லித் திருவருள் புரியும் இறைவன் எழுந்தருளிய கோயில் பெரும்பற்றப்புலியூரிலமைந்த திருவளர் திருச்சிற்றம்பலமே என்பதனை,*

**இவ்வரும் பிறவிப் பௌவநீர் நீந்தும்**
**ஏழையேற் கென்னுடன் பிறந்த**
**ஐவரும் பகையே யார்துணை யென்றால்**
**அஞ்சலென் றருள்செய்வான் கோயில்**
**கைவரும் பழனங் குழைத்த செஞ்சாலிக்**
**கடைசியர் களைதரு நீலஞ்**
**செய்வரம் பரும்பும் பெரும்பற்றிப் புலியூர்த்**
**திருவளர் திருச்சிற்றம்பலமே**

*எனவரும் அழகிய பாடலிற் கருவூர்த்தேவர் விளக்கியுள்ளார். இப்பாடல்,*

**"புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி**
**யறிவழிந்திட் டைமேலுந்தி**
**அலமந்தபோதாக அஞ்சேலென் றருள்செய்வான்**
**அமருங்கோயில்"**

*எனவரும் திருஞானசம்பந்தர் திருப்பாடற் பொருளை அடியொற்றி யமைந்திருத்தல் காண்க.*

**"பூத்திரளுருவஞ் செங்கதிர் விரியாப்**
**புந்தியில் வந்தமால் விடையோன்**
**தூத்திரட் பளிங்கிற்றோன்றிய தோற்றம்**
**தோன்ற நின்றவன்"**

*எனக் கருவூர்த்தேவர் இறைவனது தெய்வக்காட்சியை விளக்கும் பகுதி,*

**"இன்றெனக்கருளி யிருள்கடிந்துள்ளத்**
**தெழுகின்ற ஞாயிறேபோன்று**
**நின்றநின்றன்மை நினைப்பற நினைந்தேன்"**

*என்ற திருவாசகத் தொடரையும்,*

**"பளிங்கேபோல் அரிவைபாகம்**
**ஒத்தாறு சமயங்கட் கொருதலைவன்"**

எனவரும் திருஞானசம்பந்தர் தேவாரத் தொடரையும் நினைவு படுத்துகின்றது.

களந்தையென்பது தஞ்சை ஜில்லா திருத்துறைப் பூண்டி தாலுக்காவிலுள்ள களப்பாள் என்ற ஊராகும். களப்பாள் களந்தையென மருவிற்று. இவ்வூரிலுள்ள கோயில்களுள் அழகிய நாதசுவாமி திருக்கோயில் முதலாம் ஆதித்த சோழனாற் கட்டப் பெற்றமையால் ஆதித்தீச்சுரம் என வழங்கப்பெறுகின்றது. இச்செய்தி "களப்பாள் உடையார் திருவாதித்தீசுரமுடையார்"* (*தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி VIII எண் 262.) என இக்கோயிலிற் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுத் தொடரால் உறுதியாதல் தெளிப்படும். கருவூர்த் தேவர் பாடிய 'கலைகள் தம்பொருளும்' என்ற முதற் குறிப்புடைய திருவிசைப்பாப் பதிகம் களப்பாள் என்ற ஊரிலுள்ள இவ்வழகிய நாதசுவாமி கோயிலைப் பற்றிப் பாடப்பெற்றதென்றே கொள்ளுதல் வேண்டும். இதன்கண்

**"கலைகள் தம்பொருளும் அறிவுமாயென்னைக்**
**கற்பினிற்பெற்றெடுத்தெனக்கே**
**முலைகள் தந்தருளுந் தாயினும் நல்ல**
**முக்கணான்"**

என இவ்வாசிரியர் இறைவன் உயிர்கள்மேல் வைத்த அளப்பரும் பேரன்பினைப் புலப்படுத்தும் பகுதி உள்ளத்தையுருக்குவதாகும். 'தாயினும் நல்ல சங்கரன்' எனவும், 'பாலினைந்தூட்டும் தாயினுஞ் சாலப்பரிந்து' எனவும் வரும் அருளாசிரியர் வாய்மொழிக்குரிய விளக்கவுரையாக இத்திருவிசைப்பாத்தொடர் அமைந்துள்ளமை காணலாம்.

திருக்கீழ்க்கோட்டூர் மணியம்பலம் என்ற திருக்கோயிலைப் போற்றிக் கருவூர்த்தேவர் பாடிய திருவிசைப்பா கோட்டூர் என்னுந் திருத்தலத்தில் அமைக்கப்பட்டுள்ள மணியம்பலத்தில் திருநடஞ் செய்தருளும் கூத்தப்பெருமானைக் காதலித்த தலைவி, அப்பெருமான் தன்னுடைய மனத்திற் கலந்து தன்னையுருக்கிய திறத்தையும், அப்பெருமானை யடையப் பெறாதுதான் வருந்து மியல்பினையும் தன்தோழி முதலியோர்க்குக் கூறுவதாக அமைந்துளது. தெளிவாகிய திருநீற்றை யணிந்த இறைவனது திருவெண்ணீற்றை யணிதற்கு என்னுடல் விரும்பும். என் செவி அவனது அறிவு நூல்களைக் கேட்டு மகிழும். வாய் அவனது திருப்பெயரை மெல்லச் சொல்லி யின்புறும். கண்கள் அப்பெருமான் எழுந்தருளியுள்ள விமானத்தையே நோக்கி வெய்துயிர்க்கும், என் மனம் 'வள்ளலே மணியம்பலத்துள் நின்றாடும் மைந்தனே' என இடைவிடாது நினையா நிற்கும் எனத் தலைவி கூறுவதாக அமைந்த பாடல்* (*திருக்கீழ்க்கோட்டூர்

மணியம்பலம் 4-ம் பாடல்.) சிவபத்தரது இயல்பினை விளக்குவதாகும். திருக்கீழ்க்கோட்டூர் என ஈண்டுக் குறிக்கப்பட்ட ஊர் தஞ்சை ஜில்லா மன்னார்குடி தாலுக்காவிலுள்ள கோட்டூரே என எண்ணவேண்டியுளது. "கோட்டூர்க் கொழுந்தே" எனச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் உளமுருகிப் போற்றிய கொழுந்தீசர் எழுந்தருளிய கோட்டூர் இதுவேயாகும். இதனை 'அருள்மொழிதேவ வளநாட்டு நென்மலி நாட்டுக் கோட்டூர்' எனக் கல்வெட்டுக்கள் குறிக்கின்றன. திருக்களந்தை யாதித்தேச்சரம், திருமுகத்தலை என்ற ஊர்களை வழிபட்டுத் திருவிசைப்பாப் பாடிய கருவூர்த்தேவர் அவ்வூர்களையடுத்துள்ள இக்கோட்டூரையும் வழிபட்டுத் திருவிசைப்பாப் பாடியிருத்தல் பொருத்தமேயாம். இவ்வூர்க் கோயிலில் கூத்தப்பெருமா னெழுந்தருளிய அம்பலம் கருவூர்த் தேவர் காலத்தில் மணியம்பலம் என்ற பெயரால் வழங்கப் பெற்றிருத்தல் வேண்டும்.

'புவனநாயகனே எனத் தொடங்குந் திருவிசைப்பாப் பதிகத்தாற் போற்றப் பெற்ற திருமுகத்தலை யென்பது, தஞ்சை ஜில்லா திருத்துறைப்பூண்டி தாலுகாவிலுள்ளது. இவ்வூரிற் கோயில் கொண்டருளிய இறைவன் பன்னகா பரணேசுரர் எனப் போற்றப் பெறுகின்றார். இங்கெழுந்தருளிய இறைவனைக் கருவூர்த்தேவர் 'பன்னகாபரணா' என உளமுருகிப் போற்றுதலால் இப்பெயர் வழங்கியதெனத் தெரிகிறது. திருமுகத்தலை யென்ற இவ்வூர் இக்காலத்தில் தன் பெயரை யிழந்து பன்னத்தெரு என்ற பெயரால் வழங்குகின்றது. பன்னகாபரணன் தெரு என்ற பெயரே பிற்றை நாளில் 'பன்னத்தெரு' எனச் சிதைந்து வழங்கியதாதல் வேண்டும். எல்லாப் புவனங்களுக்குந் தலைவனும் உயிர்களின் உள்ளத்தே இனிக்கும் அமுதானவனும் எங்கும் நீக்கமற நிறைந்தவனுமாகிய இறைவன் உலகத்திற்கு கண்ணாகிய ஞாயிற்றைப் போன்று அறியாமையாகிய இருளையகற்றித் தம்முடைய உள்ளத்திலும் திருமுகத்தலையிலுள்ள பூங்கோயிலிலும் எழுந்தருளிய தன்மையையும், அப்பெருமான் அடியார்க்கெளிவந்தருளும் பெருமையையும், தம் நெஞ்செலாம் நிறைந்து நின்று பவளம் போன்ற செவ்வாயினால் அருளுரை வழங்கித் தம்பக்கல் ஆனந்த வெள்ளம் இடையறாவண்ணம் பண்ணிய செய்தியையும், அப்பெருமான் தம் உடம்பினுள்ளே புகுந்து நின்றமையால் வினைப்பயனாய் வந்த தம்முடம்பு அவ்விறைவன் எழுந்தருளியிருத்தற்குரிய திருப்பதிகத்தில் கருவூர்த்தேவர் உளமுருகிப் பாராட்டிக் கூறியுள்ளார்.

'நீரோங்கி வளர்கமலம்' என்ற முதற்குறிப்புடைய திருவிசைப்பாத் திருப்பதிகம் திரைலோக்கிய சுந்தரம் என்ற திருக்கோயிலில் எழுந்தருளிய இறைவனைப் போற்றிப் பாடப்பெற்ற தாகும். இத்திருக்கோயில் அமைந்துள்ள இடம் மண்ணிநாட்டு ஏமநல்லூராகும். ஏமநல்லூரென்பது 'எச்சில் இளமர் ஏமநல்லூர்' எனத் தேவாரத்திற் குறிக்கப்பட்ட வைப்புத்தலமாகும். இது, மண்ணி நாட்டு ஏமநல்லூராகிய திரைலோக்கிய மாதேவிச் சதுர்வேதி மங்கலம் (தெ.இ.க.தொகுதி 2. பக்-331) எனக் கல்வெட்டிற் குறிக்கப்பட்டுள்ளது. இவ்வூர் இக்காலத்துத் திருப்பனந்தாளுக்கு அண்மையில் திருலோக்கியென்ற பெயருடன் வழங்குகின்றது. இங்குச் சிவபெருமானுக்கு உரியனவாக இரண்டு திருக்கோயில்கள் உள்ளன. அவற்றுள் ஒன்று 'திரைலோக்கிய மாதேவீச்சுரம்' என்பதாகும். முதல் இராசராச சோழன் மனைவியருள் ஒருத்தியாகிய திரைலோக்கிய மாதேவியென்ற அரசியாற் கட்டப் பெற்றமையால் இது திரைலோக்கிய மாதேவிச்சுரம் எனப் பெயரெய்தியது. இங்கெழுந்தருளிய இறைவனைத் திரைலோக்கிய சுந்தரன் என்ற பெயராற் கருவூர்த்தேவர் போற்றியுள்ளார். கோடைத் திரைலோக்கிய சுந்தரம் எனக் குறிக்கப்படுதலால் இக்கோயிலமைந்த இடம் கோட்டூர் என்ற பெயருடையதாய் அது கோடை என மருவியதெனக் கொள்ளலாம். இறைவன்பாற் காதல் கொண்ட தலைவியின் கூற்றாகவும், அவள் பொருட்டு இறைவனைப் பரிந்து வேண்டும் தோழி முதலியோர் கூற்றாகவும் இத்திருப்பதிகம் அமைந்துள்ளது.

சூரியகாந்தமாகிய பளிங்குக் கல்லில் முன்னமே தீயுண்டா யினும் அக்கல் ஞாயிற்றொளியின் முன்சேர்ந்த நிலையில் அதனுள்ளே மறைந்திருந்த தீ புறத்தே வெளிப்பட்டு விளங்கினாற் போன்று, எங்கள் தலைவியினுள்ளத்தில் இறைவனாகிய நின்னைப் பற்றியபேரன்பு கருவிலேயே அமைந்திருப்பினும், நீ திருவுலா எழுந்தருளிய இன்று நின் திருமுகத்தைக் கண்ட அளவே அக்காதல் பெருகி வெளிப்பட்டுச் சிறு கோட்டுப் பெரும்பழந் தூங்கியாங்கு இவள் உயிர் தவச் சிறிது காமமோ பெரிதே என்றவாறேயாய் இவளுயிர்க்குத் தாங்காச் சுமையாயிற்று எனத் தோழி இறைவனுக்கு அறிவுறுத்தி முறையிடுவதாக அமைந்தது.

**அம்பளிங்கு பகலோன்பால் அடைப்பற்றா யிவள்மனத்தின்**
**முன்பளிந்த காதலுநின் முகந்தோன்ற விளங்கிற்றால்**
**வம்பளிந்தகனியே யென்மருந்தே நல்வளர்முக்கட்**
**செம்பளிங்கே பொழிற்கோடைத் திரைலோக்கிய சுந்தரனே.**

என்ற பாடல் ஆகும். இங்குப் பளிங்கு தலைவியின் உள்ளத்திற்கும், அதனகத்து என்றுமுள்ள தீ அவள் உள்ளத்தில் முன்னமே நிலைபெற்ற காதலுக்கும், பளிங்கினிடத்தே தீயைப் புலப்படச் செய்யும் ஞாயிறு தலைவியினுள்ளத்திற் காதலை வெளிப்படச் செய்யும் இறைவனது திருமுகத்திற்கும் உவமையாய் வந்தவாறு உணர்ந்து மகிழத்தக்கதாகும்.

'அன்னமாய் விசும்பு பறந்தயன்தேட' எனத் தொடங்குந் திருவிசைப்பா, கங்கைகொண்ட சோழேச்சரத்தில் எழுந்தருளி யுள்ள இறைவனை உளமுருகிப் போற்றியதாகும். கங்கை கொண்ட சோழேச்சரத்துள் வீற்றிருக்கும் பெருமானை அன்போடு திருவைந்தெழுத்தாகிய சொல்லினிடத்து வைத்து ஓதி உள்ளம் இனிமையால் தேக்கெறியப்பெறும் அடியார்களுக்கு எண்திசையின்கண் உள்ள பொன் முதலிய பொருளும் அவை பற்றிய பல்வேறு பதவிகளின் தொகுதியும் பசும்பொன்னால் அணி செய்யப்பெற்ற மாளிகைகளும், பவளம் போலுஞ் சிவந்த வாயினையுடைய மகளிராற் பெறும் போக நுகர்ச்சியும், கற்பகச் சோலை சூழ்ந்த வானுலக ஆட்சியும், ஆகிய எல்லாப் பேறுகளும் நிரம்பவுண்டாகும். இங்ஙனம் பிறரால் அரிதின்முயன்று பெறுவதற்குரிய இம்மை மறுமை இன்பங்களைத் தன்னை நினைத்து வாழ்த்திய அளவிலேயே எளிதின் அளித்தருளவல்ல இம் முழுமுதற் பொருளை விட வியந்து போற்றுதற்குரிய பிறிதொரு தெய்வம் இல்லையென்றும், மக்கள் கருதி வழிபடும் வேறுவேறு பெயருடைய எல்லாத் தெய்வங்களாகவும் விளங்கியருள் புரியும் இறைவனாவான் கங்கைகொண்ட சோழேச்சரத்திலே எழுந்தருளிய சிவபெருமானே யென்றும், மிகப்பெரிய அண்டத்தையும் அணுவெனக் கருதுமாறு விரிந்து விளங்கும் பெருமையும் மிகச் சிறிய அணுவையும் அண்டமெனக் கருதுமாறு அதனிற் பன்னூறாயிரமடங்கு நுணுகியூடுருவ வல்ல நுண்மையும் ஒருங்குடையனாய் அடியார்கள் உண்டவூணும் தனக்காகும்படி அவர்கள் உள்ளத்திற் பிரிவின்றி விளங்கும் பேரொளிப் பொருளாய்த் திகழுதல் இறைவனது இயல்பென்றும், மகளிர்பாற் செலுத்தும் விருப்பத்தினை நூறாயிரம் பங்கு செய்து அவற்றுள் ஒருபங்கு அளவேனும் இறைவன்பால் மக்கள் அன்பு செலுத்துவாராயின் அவர்கள் தன்பால் வைத்த சிறிய அன்புக்கு மகிழ்ந்து மிகப்பெரிய தேவருலகத்தையே அவர்களுக்குரிய அன்பின் பரிசாக அருளுதல் இறைவனது பேரருளின் பெருமையாமென்றும் இத்திருப்பதிகத்தில் சுவைபெற விரித்துக் கூறியுள்ளார்.

**"அங்கைகொண்டமரர் மலர் மழைபொழிய**
**அடிச்சிலம் பலம்பவந் தொருநாள்**
**உங்கைகொண் டடியேன் சென்னி வைத்தென்னை**
**உய்யக்கொண்டருளினை"**

என்ற தொடரால் இறைவன் குருவாயெழுந்தருளி வந்து தீக்கை செய்து தமக்கு நற்பொருளையுபதேசித்த திருவருட் செயலைக் கருவூர்த்தேவர் மனமுருகிப் பாராட்டியுள்ளார். இவ்வாறு இறைவன் திருவருட் பெருமையை எடுத்துக் கூறு முகத்தால் அப்பெருமான்பால் எல்லா மக்களும் பேரன்புடையராயொழுக வேண்டிய இன்றியமையாமையினையும் இத்திருப்பதிகத்தில் வற்புறுத்தினமை காணலாம்.

'திருவருள்புரிந்து' எனத் தொடங்கும் திருவிசைப்பாப் பதிகம், பாண்டி நாட்டுத்தலங்களுளொன்றாகிய திருப் பூவணத்திற் கோயில் கொண்டருளிய இறைவனைப் போற்றுவது. திருமால் பிரமன் முதலிய தேவர்களாலும் வேதங்களாலும் இன்ன தன்மையனென் றுணர முடியாத இறைவன் அடியார்க்கு எளிவந்தருள்புரியும் எளிமையினை இத்திருப்பதிகத்தில் தமது அநுபவத்தில் வைத்துக் கருவூர்த் தேவர் இனிது விளக்கியுள்ளார்.

**"கடுவினைப் பாசக்கடல் கடந்தைவர்**
**கள்ளரைமெள்ளவே துரந்துன்**
**அடியிணையிரண்டும் அடையுமா றடைந்தேன்**
**அருள்செய்வாய் அருள்செயா தொழிவாய்"**

என இறைவனை நோக்கி முறையிடும் பகுதி "நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோவிதற்கு நாயகமே" எனத் திருவாத வூரடிகள் கூறிய அன்புரையினை நினைவு படுத்துகின்றது.

'பெரியாவாகருணை' என்ற திருவிசைப்பா, சாட்டியக்குடி யென்ற தலத்தில் எழுந்தருளிய இறைவன்மேற் பாடப் பெற்றதாகும். சாட்டியக்குடியென்னும் இவ்வூர் தஞ்சை சில்லாவில் நாகப்பட்டினந் தாலூகாவில் உள்ளது. இங்கள்ள திரு ஏழிருக்கை* (*திரு ஏழிருக்கை 464-1925-ம் ஆண்டு கல்வெட்டு அறிக்கை) என்னும் திருக்கோயிலில் எழுந்தருளிய இறைவனை 'ஏழிருக்கையிலிருந்த ஈசன்' என்றும் அப்பெருமானுக்கு இருமுகம் கழல் மூன்று, ஏழு கைத்தலம் அமைந்துள்ளன என்றும் கருவூர்த் தேவர் இத்திருப் பதிகத்திற் குறிப்பிடுகின்றார். இத்திருவுருவம், தம்மை வழிபடும் அடியார்களின் சுர நோயினைத் தீர்த்தருளும் முறையில் அமைந்ததென்றும் சாட்டியம் என்பது சுர நோயைக் குறிப்பதென்றும், சுரந்தீர்த்தருளும் பெருமான் எழுந்தருளினமை யால் இத்தலம் சாட்டியக் குடியெனப் பெயர் பெற்றதென்றும் கூறுவர்.

'எடுக்கின்ற பாதங்கள் மூன்றதெழுத்தைக்
கடுத்தமுகமிரண் டாறுகண் ணாகப்
படித்தெண்ணு நாவெழு கொம்பொருநாலும்
அடுத்தெழு கண்ணான தந்தமிலாற்கே.' (1030)

எனவரும் திருமந்திரம் இத்திருவுருவின் இயல்பினைப் புலப்படுத்துவதாகும். அடியார்களது பேரன்பினால் அருவி போன்று இடையறாது வெளிப்பட்டொழுகும் கண்ணீரே இறைவனுக்குரிய திருமஞ்சன நீரென்றும், அன்பரானவர் பருகும் ஆரமுதமாக இறைவன் இன்பந் தருகின்றானென்றும் இவ்வாசிரியர் கூறுவன நினைந்து மகிழத்தக்கன.

முதலாம் இராசராச சோழன் கட்டிய தஞ்சை இராசராசேச்சரத் திருக்கோயிலைப் போற்றிக் கருவூர்த் தேவர் பாடிய திருவிசைப்பாத் திருப்பதிகம், நூறாயிரகோடி ஞாயிறு சேர்ந்தாற் போன்று பேரொளி வீசும் சிவபெருமானது திருமேனியின் பேரழகினையும் பழவடியார் பலர் நெடுங் காலமாகத் தொண்டு செய்து இறைவனைக் காணவேண்டுமென ஆசையால் ஏக்கற்றிருக்கவும் அப்பெருமான் தம்முடைய நெஞ்சத் தினைப் பெருங் கோயிலாகக் கொண்டு எழுந்தருளிய அருமையிலெளிய அருட்டிறத்தையும் தஞ்சை நகரத்தின் சிறப்பினையும் அங்கு எயில் சூழ அமைந்த இராசராசேச்சரத் திருக்கோயிலில் ஆடல் பாடலில் வல்ல மகளிர் நடம்பயிலுந் திறத்தினையும் இனிது விளக்குவதாகும். இதன்கண் 'குடைகெழு நிருபர் முடியொடு முடிதேய்ந் துக்கசெஞ் சுடர்ப்படு குவையோங் கிடை கழிமாடத் திஞ்சிசூழ் தஞ்சை' எனவும் "உவரிமா கடலின் ஒலிசெய் மாமறுகில் உறுகளிற் றரசின தீட்டம் இவருமால் வரைசெய் இஞ்சி சூழ் தஞ்சை" எனவும் வரும் தொடர்களால் அரசர் பலரும் வந்திறைஞ்ச இராசராசசோழன் தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு தமிழகத்தையாண்ட திறத்தினைக் கருவூர்த் தேவர் நன்கு புலப்படுத்தியுள்ளார்.

'வெய்ய செஞ்சோதி' என்ற முதற்குறிப்புடைய திருப்பதிகம் திருவிடை மருதில் எழுந்தருளிய இறைவனைப் போற்றியதாகும். இதன்கண் எல்லோரும் கண்ணயர்ந்துறங்கும் நள்ளிருட் பொழுதில் இறைவன் அம்மையப்பனாக எழுந்தருளிக் காட்சி தந்து தம்முள்ளத்திற் புகுந்தருளிய சிவயோக அறுபவநிலையைக் கருவூர்த்தேவர் குறிப்பிட்டுப்போற்றும் முறை படித்து இன்புறத்தக்கதாகும்.

அழகின் கண்ணே ஆழ்ந்த செயற்றிறம் வாய்ந்த சுடப்படாத பசுமண் பாண்டமானது, மழையினது மெல்லிய துளிபட்ட அளவே கரைந்து சிதையும்.* (*'பெயல் நீர்க்கேற்ற பசுங்கலம்,

குறுந்-29') அப்பாண்டம் அழலின்கண் ஆழ்ந்து கிடந்து சூளையிற் சுடப்பட்டால் எத்தனையாண்டுகள் தண்ணீருள் அழுந்திக்கிடந்தாலும் கரையாது. அதுபோல, பெண்டிரது முயக்கத்தில் ஆழ்ந்து கிடக்கும் தமது உரனில்லாத நெஞ்சம், மெல்லிய மழைத்துளி போன்ற சிறிய துன்பங்கள் வந்த அளவிலேயே தன்நிலை கலங்கியழியும் நிலைமையதாயினும், இறைவனது திருவருட் பெருந்தீயில் ஒடுங்கியாழ்தலால் நன்றாகப் பக்குவப்பட்டு உருவாகி உலகியலில் எத்தகைய இடங்கள் வந்தாலும் அவற்றால் நிலை கலங்காத் தன்மையடையும்படி இடைமருதீசன் தம்மை ஆட்கொண்டருளினன் என்பதனை,

**எழிலையாழ் செய்கைப் பசுங்கலன் விசும்பின்**
**இன்றுளிபட நனைந்துருகி**
**அழலையாழ் புருவம் புனலொடுங்கிடந்தாங்**
**காதனேன் மாதரார் கலவித்**
**தொழிலையாழ் நெஞ்சம் இடர்படா வண்ணந்**
**தூங்கிருள் நடு நல்யாமத்தோர்**
**மழலையாழ் சிலம்ப வந்தகம் புகுந்தோன்**
**மருவிடந் திருவிடை மருதே.**

எனவரும் அழகிய பாடலிற் கருவூர்த்தேவர் சுவைபெற விரித்துரைத்துள்ளார்.

முதலாம் இராசேந்திரனாகிய கங்கைகொண்டசோழன், தான் எடுப்பித்த கங்கைகொண்ட சோழேச்சரத் திருக்கோயில் விமானத்தின் தென்கீழ்ப் பகுதியில் தனக்கு அருளாசிரியராய்த் திகழ்ந்த இக்கருவூர்த் தேவரது திரு உருவத்தைக் கல்லோவியமாக அழகுபெறச் செய்தமைத்து உள்ளான். இத்திருவுருவமே கருவூர்த் தேவர்க்கமைந்த திருவுருவங்களுள் மிகப் பழையதெனத் தெரிகிறது. தஞ்சை இராசராசேச்சரத்திருக்கோயிலின் மேலைத் திருச்சுற்றிலும் இவரது திருவுருவம் அமைக்கப்பெற்று அன்பர்களால் வழிபாடு செய்யப் பெறுகின்றது.

இதுகாறுங் கூறியவற்றால் சாதிகுலம் முதலிய தளைகளைக் களைந்து துறவுமேற்கொண்டு கையில் ஓடேந்திப் பிச்சை யேற்றுண்டு இறைவனை இனிய தமிழாற் பாடிப் போற்றுதலையே தமக்குரிய சிறந்த குறிக்கோளாகக் கொண்டு, இராசராசசோழன், கங்கை கொண்ட சோழன் என்னும் முடிவேந்தர்களால் நன்கு மதித்து வழிபடப் பெற்ற அருளாசிரிய ராகித் திருநெறிய தமிழ் வளர்த்த தவப்பெருஞ்செல்வர் கருவூர்த் தேவரெனக் கண்டோம். இவரைக் குறித்துப் பொருந்தாத கதைகள் சில பிற்காலத்தவராற் புனையப்பட்டன. இவராற்

பாடப்பெற்ற திருவிசைப்பாப் பாடல்களை நன்கு பயின்ற அறிஞர்கள் பிற்காலப் பொய்க்கதைகளை ஒரு சிறிதும் நம்ப மாட்டார்களென்பது திண்ணம்.

## 4. பூந்துருத்தி நம்பிகாடநம்பி

இவர், திருவையாற்றுக்கு அண்மையிலுள்ள திருப்பூந் துருத்தியிற் பிறந்தவர். காடன் என்னும் இயற்பெயர் உடையவர். இச்செய்தி 'பூந்துருத்திக் காடன்' என இவர் தம்மைக் குறிப்பிடுதலாற் புலனாம். ஆடவரிற் சிறந்தோன் என்னும் பொருளைத் தரும் நம்பி என்ற சொல், இவரது இயற்பெயரின் முன்னும் பின்னும் இணைந்து வழங்கப்பெறுதலால், இவர் பாலமைந்த பெருஞ்சிறப்பு இனிது புலனாம். இவர் பாடிய திருவிசைப்பாப் பதிகங்கள் இரண்டும் முறையே திருவாரூரையும் தில்லைச் சிற்றம்பலத்தையும் போற்றுவனவாக அமைந்துள்ளன. அவற்றுள் திருவாரூர்த் திருவிசைப்பாவில் இரண்டு திருப் பாடல்களே காணப்படுகின்றன. திருவாரூர் ஆதியாய் விளங்கும் வீதிவிடங்கப் பெருமான் பவனி போந்து நடங்குலாவிய சிறப்பினை இப்பாடல்கள் விரித்து உரைக்கின்றன.

**பத்தியா யுணர்வோர் அருளைவாய்மடுத்துப்**
**பருகுதோ றமுதமொத் தவர்க்கே**
**தித்தியா விருக்குந் தேவர்கா ளிவர்தந்**
**சத்தியாய்ச் சிவமா யுலகெலாம் படைத்த**
**திருவுரு விருந்தவா பாரீர்**
**தனிமுழு முதலுமா யதற்கோர்**
**வித்துமா யாரூ ராதியாய் வீதி**
**விடங்கராய் நடங்குலாவினரே.**

என்ற பாடல் படிக்குந்தோறுஞ் சுவைதருவதாய்ப் பூந்துருத்தி நம்பிகாடநம்பி பெற்ற சிவாநுபவப் பயனைப் புலப்படுத்து கின்றது.

இவர் பாடிய கோயிற்றிருவிசைப்பா சாளரபாணி என்ற பண்ணுக்குரியதாக இசையமைக்கப் பெற்றது. தில்லையம்பலம் எல்லாம்வல்ல சிவபெருமான் ஆடல் புரியும்நாடக அரங்காக விளங்கிய பேரழகினை விரித்துரைப்பது இத்திருப்பதிகம். இதன்கண் 2-ம் பாடல் முதல் 5-ம் பாடல் வரையுள்ள நான்கு திருப்பாடல்களும் கண்ணப்பர், கணம்புல்லர், திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், சேரமான் பெருமாள், நம்பியாரூரர் ஆகிய பெருமக்களுக்குத் தில்லையம்பலவன் உயர்ந்த வீடுபேராகிய பேரின்பத்தை வழங்கித் தில்லைச்சிற்றம்பலத்தில் குடிவாழ்க்கைக் கொண்டு விளங்கும் அருட்பண்பினை உளமுருகிப் போற்றுவன

வாக அமைந்துள்ளன. இத் திருப்பதிகங்கள் இரண்டும் கண்டராதித்தர் திருவிசைப்பாவுக்கு முன் வரிசைப்படுத்தப் பட்டிருத்தலால் நம்பிகாடநம்பிகள் வாழ்ந்த காலம் கண்டராதித்த சோழரது ஆட்சிக்காலமாகிய கி.பி. பத்தாம் நூற்றாண்டின் இடைப்பகுதியெனக் கொள்ளுதல் பொருத்தமாகும்.

இனி, முதல் இராசாதிராசனது 32-ம் ஆம் ஆண்டில் (கி.பி. 1050) பொறிக்கப்பட்ட திருவையாற்றுக் கல்வெட்டொன்றில் "ஆத்திரேய கோத்திரத்து நம்பிகாடநம்பி" என்ற அர்ச்சகர் பெயர் காணப்படுதலாலும் இக்கல்வெட்டுத் திருப்பூந்துருத்தியையடுத்த திருவையாற்றுக்கோயிலிற் பொறிக்கப்பட்டிருத்தலாலும் இக் கல்வெட்டில் குறிக்கப்பட்ட நம்பிகாடநம்பியே திருவிசைப்பாப் பாடியவர் என்று நினைக்க இடமுண்டென்பர்.* (*திரு மா. இராச மாணிக்கம் பிள்ளை அவர்கள் எழுதிய பெரியபுராண ஆராய்ச்சி பக்.72. ) திருவிசைப்பா ஆசிரியர்களைப் பற்றியும் அவர்கள் பாடிய பதிகவகை பண்வகை பற்றியும் கூறும் பழைய பாடல்களில் 'நம்பிகாடவர் கோன்', 'வீறிற்சிறந்த காடவர்', 'காடவர் கோன்' என இவ்வாசிரியர் பல்லவர் குலத்தவராகப் பேசப்படுதலாலும் திருவிசைப்பா ஆசிரியர்களில் கங்கை கொண்ட சோழன் காலத்திற்குப் பிற்பட்டிருந்தவர் ஒருவருமில்லையெனத் தெரிதலாலும் முதல் இராசாதிராசன் காலத்துக் கல்வெட்டில் குறிக்கப்பட்ட நம்பி பூந்துருத்தி நம்பிகாடநம்பியின் பெயரைப் புனைந்து வாழ்ந்த மற்றொருவ ரென்று கொள்ளுதல் ஏற்புடையதாகும்.

சுந்தரர் வெள்ளானை மீதும் சேரமான் பெருமாள் குதிரைமீதும் அமர்ந்து திருக்கயிலாயத்தை அடைந்தார்கள் என்று திருத்தொண்டர் திருவந்தாதியில் நம்பியாண்டார்நம்பிகள் கூறியிருத்தலையும் நம்பியாண்டார் நம்பிகள் கூறியபடியே தஞ்சைப் பெரிய கோயிலில் ஓவியம் எழுதப்பெற்றிருத்தலையும் நோக்காது, சுந்தரரும் சேரமானும் வெள்ளையானையின் மீது அமர்ந்து திருக்கயிலாயத்தை அடைந்ததாக நம்பிகாடநம்பிகள் தில்லைத் திருவிசைப்பாவில் பாடியுள்ளாரென்றும், இவர் கூறுமாறு சேரமான் யானை மீது திருக்காயிலை செல்வதாக அமைந்த ஓவியம் இரண்டாம் இராசராசன் கட்டிய இராசராசேச்சுரமாகிய தாராசுரத்திருக்கோயிலில் வரையப் பட்டுள்ளது என்றும், அவ்வோவியத்தை எண்ணியே நம்பிகாடநம்பிகளும், சேரமான் வெள்ளானைமீது சென்றதாகப் பாடியுள்ளார் என்றும், எனவே நம்பிகாடநம்பி என்பார் இரண்டாம் இராசராச சோழன் காலத்திலோ அன்றி அவன்

காலத்திற்குப் பின்னரோ வாழ்ந்திருத்தல் வேண்டும் என்றும் கருதுவாருமுளர்.* (*பெரிய புராண ஆராய்ச்சி. பக் 73)

**'களையாவுடலோடு சேரமான் ஆரூரன்**
**விளையா மதமாறா வெள்ளானை மேல்கொள்ள**
**முளையா மதிசூடி மூவாயிரவரொடும்**
**அளையா விளையாடும் அம்பல நின்னாடரங்கே'**

எனவரும் இத்திருவிசைப்பாவில் வெள்ளானை மேல் கொள்ளுதலாகிய வினைக்கு ஆரூரன் எழுவாயாகவும் சேரமான் என்பது அவ்வாரூரனுக்கு அடைமொழியாய் நின்று சேரமானோடு கூடிய ஆரூரன் எனச் சிறப்பிக்கும் விசேடணமாகவும் நிற்றலால் சேரமான் வெள்ளானை மேற்சென்றார் என்றல் இவ்வாசிரியர் கருத்தன்றென்பது விளங்கும். களையாவுடலோடு செல்லுதல் சேரமானுக்கும் ஆரூரனுக்கும் பொதுவாகிய நிகழ்ச்சியென்றும் வெள்ளானைமேல் செல்லுதல் ஆரூரனுக்கு உரிய சிறப்பு உடைய நிகழ்ச்சி என்றும் கொள்வதே நம்பிகாடநம்பியின் கருத்துக்கு ஏற்புடையதாகும்.

## 5. கண்டராதித்தர்

தில்லைச்சிற்றம்பலத்தில் திருநடம் புரிந்தருளும் கூத்தப்பெருமான் திருவடிகளிற் பெரிதும் ஈடுபாடு உடையராய் "மின்னாருவ மேல் விளங்க" என்ற முதற்குறிப்புடைய திருவிசைப் பாத் திருப்பதிகத்தை அருளிச் செய்தவர் கண்டராதித்தர் என்னும் ஆசிரியராவர். இவர் சோழர் குடியிற் பிறந்து முடிவேந்தராய் ஆட்சி புரிந்தவர். இச்செய்தி,

**சீரான்மல்கு தில்லைச் செம்பொன் அம்பலத்தாடி தன்னைக்**
**காரார் சோலைக் கோழி வேந்தன் தஞ்சையர்கோன் கலந்த**
**அராவின்சொற் கண்டராதித்தன் அருந்தமிழ்மாலை**

எனவரும் இப்பதிகத் திருக்கடைக்காப்பினாற் புலனாம். இதன்கண் 'கோழிவேந்தன், தஞ்சையர்கோன்' எனத் தலை நகராகக் கொண்டு சோழநாட்டை ஆட்சிபுரிந்த முடிவேந்தர் என்பது இனிது புலனாதல் காண்க.

கண்டர் என்பது சோழமன்னர்களுக்குரிய பொதுப் பெயர். ஆதித்தன் என்பது இவரது இயற்பெயராகும். மதுரையும் ஈழமுங்கொண்ட கோப்பரகேசரிவன்மராகிய முதற் பராந்தக சோழரது இரண்டாம் புதல்வராகக் கண்டராதித்தர் பிறந்தருளினார். இவர் இராசகேசரி என்ற பட்டத்துடன் கி.பி. 950 முதல் 957 வரை சோழநாட்டை ஆட்சி புரிந்துள்ளார். திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் திருமழபாடிக்கு மேற்கே ஒருகல்

தொலைவிலுள்ள கண்டராதித்த சதுர்வேதி மங்கலம் என்ற ஊர் இவராற் புதுவதாக அமைக்கப்பெற்றதாகும்.* (*பிற்காலச் சோழர் சரித்திரம் பகுதி 1. பக்கம் 60) இவர் தம் பெயரால் கண்டராதித்தப் பேரேரி என் நீர்நிலையொன்றை அமைத்த செய்தி தென்னார்க்காடு ஜில்லா உலகபுரத்துக் கல்வெட்டாற் புலனாகிறது. * (*பிற்காலச் சோழர் சரித்திரம் பகுதி. பக்கம் 60)

கண்டராதித்தர்க்கு வீரநாரணி, செம்பியன் மாதேவி என இரு மனைவியர் இருந்தனர். இவர்களுள் முதல் மனைவியாய் விளங்கிய வீரநாரணி என்பார் கண்டராதித்தர் முடிசூட்டப் பெறுதற்கு முன்னரே இறந்தனர். இவர் முடிசூடியபின் பட்டத்தரசியாகத் திகழ்ந்தவர் இரண்டாம் மனைவியாகிய செம்பியன் மாதேவியாரேயாவர். "மழவரையர் மகளார்" ஸ்ரீ கண்டராதித்தப் பெருமாள் தேவியார் செம்பியன் மாதேவியார்"* (S.I.I., VOL, III, No.141) எனவரும் கல்வெட்டுப் பகுதியால் இவ்வம்மையார் மழவர் குடும்பத்திற் பிறந்தவரென்று தெரிகின்றது. கண்டராதித்தர்க்கு இவ்வம்மையார் பாற் பிறந்த புதல்வர் ஸ்ரீ மதுராந்தக தேவரான ஸ்ரீ உத்தம சோழரென்பார்.

கண்டராதித்தர் தில்லைக் கூத்தப்பிரானிடத்து நிறைந்த பேரன்புடையவர். செந்தமிழ்ப் புலமை வாய்ந்தவர். இவ்வேந்தர் பெருமான் தில்லையம்பலவனைப் போற்றிப் பரவிய திருவிசைப்பாத் திருப்பதிகம் படிப்போருள்ளத்தை நெகிழ் வித்துத் தில்லையம்பலவனது ஆடல் கண்டின்புறும் பெருவேட் கையைத் தோற்றுவிப்பதாகும். இதன்கண் பத்துப் பாடல்கள் உள்ளன. மின்னற்கொடிகள் மேலே விளங்க வெண்கொடி கட்டிய மாளிகைகள் சூழ்ந்துநிற்கப் பொன்மலையொன்று வந்து நின்றாற்போன்று தில்லையிற் பொன்னம்பலம் விளங்குவதும், தில்லை வாழந்தணர்களாகிய மூவாயிரவர் நான்மறைகளோதி முத்தீ வளர்த்துக் கூத்தப்பெருமானுக்கு வழிபாடு செய்வதும், திருமால் தில்லையம்பல முன்றிலிலே கூத்தப்பிரானது திருவருளை வேண்டி வரங்கிடப்பதும், பதஞ்சலி முனிவர் வேண்டுகோட்கிணங்கி, இறைவன் என்றும் தில்லையிற் கூத்தியற்றுவதும் ஆகிய செய்திகள் இத்திருப்பதிகத்திற் கூறப்பட்டுள்ளன. பாண்டி நாட்டையும் ஈழ நாட்டையும் வெற்றி கொண்ட பெரு வீரமும் சிறந்த சிவபத்திச் செல்வமும் வாய்க்கப்பெற்ற முதற் பராந்தக சோழனாகிய தம் தந்தை தில்லைச் சிற்றம்பலத்திற்குப் பொன் வேய்ந்து பொன்னம்பலமாக்கிய திருப்பணியை,

**"வெங்கோல் வேந்தன் தென்னாடும் ஈழமுங் கொண்டதிறற்
செங்கோற் சோழன் கோழிவேந்தன் செம்பியன் பொன்னணிந்த
அங்கோல் வளையார் பாடியாடும் அணிதில்லையம்பலம்"**

என்ற தொடராற் குறிப்பிட்டுப் போற்றியுள்ளமை இவர்தம் தந்தையின்பால் வைத்த நன்மதிப்பையும் தில்லையம்பலவன் திருப்பணியில் இவர்க்குள்ள ஈடுபாட்டினையும் நன்கு விளக்குவதாகும்.

சிதம்பரம் தாலுக்கா உடையாற் குடியிற் காணப்படும் கல்வெட்டொன்று இவரை 'மேற்கெழுந்தருளிய தேவர்' எனக்குறிப்பிடுகின்றது.* (*Ins. 540 of 1920) பங்களூர் ஜில்லாவிற் காணப்படும் மற்றொரு கல்வெட்டு இவரைச் 'சிவஞான கண்டராதித்தர்' எனச் சிறப்பித்துப் போற்றுகின்றது. * (*EP. Car., Vol. IX Chennapatinam. No. 92.) இவ்வேந்தரது படைத்தலைவர்களுள் ஒருவன் கங்கநாட்டில் மழவூர்க் கோயிலில் கண்டராதித்த விடங்கரையும் உமாபரமேசுவரியையும் எழுந்தருளிவித்து வழிபாட்டிற்கு நிபந்தமளித்து உள்ளான். இக்குறிப்புக்களை நுணுகி நோக்குங்கால் கண்டராதித்தராகிய இவ்வேந்தர் சிவதலங்களை வழிபட வேண்டிச் சோழ நாட்டிற்கு மேற்கே சென்றிருத்தல் வேண்டுமென்றும், மைசூர் நாட்டில் நந்தியென்னும் ஊரிலுள்ள திருக்கோயிலில் சிவயோக நிலையிலமர்ந்திருக்கும் சோழ மன்னர் உருவமும்* (*Portrait sculpture of South India. P. 29.) கோனேரி ராசபுரத்தில் செம்பியன் மதேவியார் எழுந்தருளிவித்த கண்டராதித்ததேவர் திருவுருவமும் ஒத்திருத்தலும் இதற்குச் சான்றாமென்றும் அறிஞர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் ஆராய்ந்து எழுதியுள்ளார்கள்.* (*பிற்காலச் சோழர் சரித்திரம் பகுதி. 1. பக் 62-63.)

கண்டராதித்த சோழர் கி.பி. 957-ல் இறைவன் திருவடி நீழலெய்தினார். இவருடைய மனைவியார் செம்பியன் மாதேவியார் சிவஞானியாக விளங்கிய தம் கணவரை நினைவு கூர்ந்து போற்றும் நிலையிற் சிவபெருமானுக்குப் பலவகைத் திருப்பணிகளைப் புரிந்தமையால் மாதேவடிகள் எனப் போற்றப்பெறும் பெருஞ் சிறப்பினை யெய்தியுள்ளார். இவ்வம்மையார் கோனேரிராசபுரமென வழங்கும் திருநல்லத்திலுள்ள திருக்கோயிலை தம் கணவர் பெயராற் கண்டராதித்தம் என்ற கற்றளியாகப் புதுப்பித்துக் கண்டராதித்தராகிய தம் கணவர் சிவபெருமானை வழிபடும் நிலையில் அத்திருக்கோயிலில் அவர்க்கொரு படிமமும் அமைத்துள்ளார்கள். இச்செய்தி, "ஸ்வஸ்தி ஸ்ரீகண்டராதித்த தேவர் தேவியார் மாதேவடிகளான ஸ்ரீசெம்பியன் மாதேவியார் தம்முடைய

திருமகனார்ஸ்ரீ மதுராந்தக தேவரான ஸ்ரீ உத்தம சோழர் திரு ராஜ்யஞ் செய்தருளா நிற்க தம்முடையார் ஸ்ரீ கண்டராதித்த தேவர் திருநாமத்தால் திருநல்லமுடையார்க்குத் திருக்கற்றளி எழுந்தருளுவித்து இத்திருக்கற்றளியிலேய் திருநல்ல முடையாரைத் திருவடிதொழுகின்றாராக எழுத்தருளுவித்த கண்டராதித்ததேவர் இவர்" * (*S.I.I., VOL, III, No.146.) என அப்படிமத்தின் கீழ்ப் பொறிக்கப்பட்டிருத்தலால் நன்குணரப்படும்.

சிவஞான கண்டராதித்தராகிய இவ்வேந்தர் சைவ சமயத்திற் பேரீடுபாடுடையரராயினும் நாடாளும் வேந்தர் என்ற முறைமையில் தம்நாட்டுக் குடிமக்கள் மேற்கொண்டொழுகிய வைணவம் சமணம் முதலிய பிற சமயங்களையும் இகழாது நன்கு மதித்து ஆதரித்துள்ளார். தம் பெயரால் அமைத்த கண்டராதித்த சதுர்வேதி மங்கலத்தில் கண்டராதித்த விண்ணகரம்* (*Ins. 78. of 1920.) எனப் பெயரிய திருமால் கோயிலை இவர் கட்டியிருத்தலும், தென்னாற்காடு ஜில்லாவிலுள்ள பள்ளிச்சந்தல் என்ற ஊரிற் கண்டராதித்தப் பெரும்பள்ளி *.(*Ins. 448. of 1938) யென இவர் பெயராற் சமணப்பள்ளி யொன்று வழங்கப் பெறுதலும் இவரது சமயப் பொது நோக்கினைத் தெளிவாகப் புலப்படுத்துவனவாம்.

இனி, இத்திருவிசைப்பா ஆசிரியராகிய கண்டராதித்தரென் பார், முதல் இராசராசன் ஆட்சியில் திருக்கோயில்களை மேற்பார்க்கும் அதிகாரியாக விளங்கியவரும் உத்தமசோழன் புதல்வருமாகிய இரண்டாங் கண்டராதித்தரெனக் கருதுவர் சிலர்* (*சோழ வமிசச் சரித்திரச் சுருக்கம் . பக்-16.) திருவிசைப்பாப் பாடிய கண்டராதித்தர் தாம் பாடிய பதிகத்தின் திருக்கடைக் காப்பில் சோழநாட்டை ஆட்சிபுரியும் முடிவேந்தராகத்தம்மைக் குறிப்பிட்டுள்ளார். உத்தமசோழன் புதல்வராகிய இரண்டாங் கண்டராதித்தர் இளவரசராகக்கூட இருந்ததில்லை. முதற் கண்ட ராதித்தர்க்கு மேற்கெழுந்தருளிய தேவர் எனவும் சிவஞான கண்ட ராதித்தரெனவும் வழங்கும் பெயர்கள் சிவஞானமுடையவராய்த் திருவிசைப்பாப் பாடிய ஆசிரியர் அவரே யென்பதனை வலியுறுத்துகின்றன. இங்ஙனம் போற்றப் பெறுஞ்சிறப்பு இரண்டாங் கண்டராதித்தர்க்குரியதாக வழங்கினமைக்கு எத்தகைய சான்றுமில்லை. ஆகவே முதற் பாரந்தக திருத்தொண்டினைப் போற்றும் திருவிசைப்பாவைப் பாடிய ஆசிரியர் அவ்வேந்தனுடைய இரண்டாம் புதல்வராகிய முதற் கண்டராதித்த சோழரே யாவரென்பது நன்கு தெளியப்படும்.

## 6. வேணாட்டடிகள்

வேணாடென்பது, தென் திருவாங்கூர்ப் பகுதிக்குரிய பழம் பெயராகும். செந்தமிழ்சேர் பன்னிரு நாடுகளுள் இவ் வேணாடும் ஒன்று. இந்நிலப் பகுதியை ஆண்ட அரசர்கள் வேணாட்டடிகளெனக் கல்வெட்டுக்களிற் குறிக்கப்பட்டுள்ளனர்.* (*திருவாங்கூர் கல்வெட்டுத் தொகுதி VI 124-ஆம் கல்வெட்டில் 'வேணாட்டடிகளையும்' எனக் குறிக்கப்பெற்றுள்ளமை காண்க.) எனவே திருவிசைப்பா ஆசிரியருளொருவராகிய வேணாட்டடிகளென்பார் தென்திருவாங்கூர்ப் பகுதியிலுள்ள வேணாட்டில் அரசர் குடும்பத்திற் பிறந்து இறைவனை இன்னிசைத் தமிழாற் பரவிப் போற்றிய குறுநில மன்னரெனக் கொள்ளுதல் பொருந்தும்.

ஒன்பதாந் திருமுறையில் வேணாட்டடிகள் பாடியதாக ஒரு திருப்பதிகமே யுளது. தில்லைச் சிற்றம்பலவனைப் போற்றுவதாக இத்திருப் பதிகத்திற் பத்துப் பாடல்கள் உள்ளன. தில்லையில் நடம்பயிலும் கூத்தப்பெருமானோடு உரையாடும் முறையிலமைந்த இத்திருப்பதிகம், பழமொழிகள் பலவற்றைத் தன்பாற் கொண்டு விளங்குகின்றது. "வேப்பிலையும் வாழைக் கச்சையும் கசப்புடையன வாயினும் அவற்றை உலகத்தார் விரும்பி யேற்றுக் கறிக்குப் பயன்படுத்திக் கொள்வர். அதுபோல வெறுப்பனவே செய்யும் என் சிறுமையையும் பொறுத்து ஆட்கொள்ளுதல் பெரியோனாகிய உனது கடமையாகும்" என இவ்வாசிரியர் கூத்தப் பெருமானை வேண்டிப் போற்றும் முறை உள்ளத்தை யுருக்குகின்றது.

'தம்பானை சாயப்பற்றார்' என்பது ஒரு பழமொழி. தமக்குரிய சுற்றத்தாரது உணவுக்கு யாரும் இடையூறு செய்யமாட்டார்கள் என்பது இப்பழமொழியின் கருத்தாகும். எங்கள் பெருமானாகிய நீ வழியடியேனாகியதாகும். எனது பணியை உவந்தேற்றுக்கொள்ளாது புறக்கணித்தமையால் அப்பழமொழியும் என்னளவிற் பொய்யாய்ப் போயிற்று என்பார்.

**"தம்பானை சாயப்பற்றாரென்னு முதுசொல்லும்**
**எம்போல்வார்க் கில்லாமை என்னளவே யறிந் தொழிந்தென்"**

என்றார். நிறைகுளம் தன் கரைக்கீழ் நின்ற கொம்புக்கு நீர் சுரத்தலியல்பு. அதுபோல் நின்கீழ்ப் பணிபுரியும் அடியோமை நின்னருளால் வளர்த்தல் வேண்டுமென்பார்.

**"பொசியாதோ கீழ்க்கொம்பு நிறைகுளமென்றது போலத்**
**திசை நோக்கிப் பேழ்கணித்துச் சிவபெருமானோ வெனினும்**

**இசையானாலென் றிறத்தும் எனையுடையாள் உரையாடான்**
**நசையானேன் திருத்தில்லை நடம்பயிலும் நம்பானே"**

எனக் குறையிரந்து வேண்டுகின்றார்.

**"இடுவதுபுல் ஓரெருதுக்கு ஒன்றினுக்கு வையிடுதல்"**

என்பது, இணையொத்துத் தொழில் செய்யும் இரண்டெருதுகளுள் ஒன்றிற்குப் புல்லிடுவதும் மற்றொன்றுக்கு வைக்கோலிடுவதும் நடுநிலைமை ஆகாமைபோல, ஒருவரது நடுவுநிலைமையற்ற செயலைக் குறித்து வழங்கும் பழமொழியாகும். எல்லாவுயிர்களையும் அடிமையாகவுடைய இறைவன் அகத்திய முனிவர்க்கு ஞான நூல்களை யறிவுறுத்துவதும் என்போல்வாரைப் புறக்கணிப்பதும் இப்பழமொழிக்குரிய செயலாகாதோ என வினவுவது போன்று,

**படுமதமு மிடவயிறுமுடைய களிறுடையபிரான்**
**அடியறிய வுணர்வதும் அகத்தியனுக் கோத்தன்றே**
**இடுவது புல்லோரெருதுக் கொன்றினுக்கு வையிடுதல்**
**நடுவிதுவோ திருத்தில்லை நடம்பயிலும் நம்பானே.**

எனப் பரிந்து வேண்டும் குறிப்பு படிப்போருள்ளத்தை யுருக்குவதாகும்.

நின் திருவருளுண்மையை ஆராய்ந்து தெளியாத புறச்சமயத்தவர் கண்முன்பு நின் திருவருளை நம்பிய அடியேனை நோய்கள் பெரிதும் வருத்துதலால் அவ்வருத்தத்தைக் கண்ட புறச்சமயத்தவர்கள், 'தொண்டனாகிய இவனை இவனாற் போற்றப்பெறும் இறைவனே இகழ்கின்றான்' என்று நின்னைப் பழிதூற்றுதற்கு நாயேனைக் கருவியாக வைத்துவிட்டாய் என்பதுபட,

**"ஆயாத சமயங்க ளவரவர்கண் முன்பென்னை**
**நோயோடு பிணிநலிய விருக்கின்ற வதனாலே**
**பேயாவித் தொழும்பனைத்தம் பிரான்இகழு மென்பித்தாய்**
**நாயேனைத் திருத்தில்லை நடம்பயிலு நம்பானே"**

என இவ்வாசிரியர் இறைவனை நோக்கி முறையிடும் நிலையிலமைந்த பாடல், பிணி முதலிய துன்பங்களுக்கு உளம் வருந்து மியல்பு இவர்பால் இல்லை யென்பதையும், இறைவன் திருவருளில் நம்பிக்கையில்லாதார் சிலர் அடியார்களது உடற்பிணியை எடுத்துக்காட்டி இறைவனுண்மையை மறுத்தற்கு இடனாயிற்றென்ற ஒரு நிலைக்கே இவர் வருந்துகின்றாரென்பதையும் புலப்படுத்துவதாகும்.

தில்லையில் நடம் பயிலும் பெருமானே, பத்தரடித் தொண்டனாகிய இவன் இன்னிசைத் தமிழ்ப்பாடல்களைப்பாடி என்னை இடையீடின்றி யழைக்கின்றான் எனக்கருதி எனக்கு அருள் புரிந்தனையாயின் நின்செயல் இருவர்க்கும் நன்றாய் முடியும். அங்ஙனம் நீ அடியேற்கு அருளா தொழிந்தால் நின்னை யடைதற்குத் தடையாயுள்ள இவ்வுடலைத் துறந்து இறந்தேனும் நின்னைக் காண்டதென்று முடிவு செய்துவிட்டேன். இம்முடிபினை இனி நின்னால் தடுத்தலியலாது என்பதுபட,

**"பாவார்ந்த தமிழ்மாலை பத்தரடித் தொண்டனெடுத்**
**தோவாதே யழைக்கின்றா னென்றருளின் நன்றுமிகத்**
**தேவேதென் றிருத்தில்லைக் கூத்தாடீ நாயடியேன்**
**சாவாயும் நினைக்காண்ட லினியுனக்குத் தடுப்பரிதே"**

என இவ்வாசிரியர் இறைவனை நோக்கிக் கூறும் அறிவிப்பு, 'மூவாமுழுப்பழி மூடுங்கண்டாய்' எனவருந் திருநாவுக்கரசர் வாய்மொழியை நினைவுபடுத்துவதாய் இவரது உள்ளத்துறு தியைப் புலப்படுத்தல் காணலாம்.

## 7. திருவாலிய முதனார்

திருவாலி நாடென்பது, சோழநாட்டிற் காவிரிக்கு வடகரை யிலுள்ள உள் நாடுகளுள் ஒன்று. இந்நாட்டின் தலைநகர் திருவாலியென்பதாகும். இது சீகாழிக்கு 3 கல் தொலைவில் உள்ளது. திருவாலி யென்னும் இவ்வூரிற் பிறந்து அமுதனார் என்னும் பெயர் பெற்றமையால் இவர் திருவாலியமுதனார் என வழங்கப் பெற்றனர். இவர் அந்தணர் மரபினர். நான்கு வேதங்களையும் நன்கு பயின்றவர். சோழநாட்டிலுள்ள வளமார்ந்த ஊராகிய மயிலாடு துறையில் வாழ்ந்தவர். இச்செய்தி, "வரைசெய் மாமதில் மயிலையர் மன்னவன் மறைவல திருவாலி" என்றும், "தூநான்மறையான் அமுதவாலி" என்றும், "அறைசெந்நெல்வான் கரும்பின் அணியாலைகள் சூழ்மயிலை, மறைவலவாலி" என்றும் இவர் தம்மைப்பற்றிக் கூறுந் தொடர்களால் இனிது புலனாகும். மயிலையென்பது மயிலாடுதுறை.* (*மயிலாடுதுறை இக்காலத்தில் மாயூரம் என வழங்குகின்றது.) யென்பதன் மரூஉ. இவர் வைணவராகத் தோன்றிப் பின்பு சிவபக்தியுடையவராகத் திகழ்ந்தாரென்ற செய்தி செவிவாயிலாகக் கேட்கப்படுவதென்பர் சிலர். இதனைப் புலப்படுத்தற்குரிய எத்தகைய குறிப்பும் இவர் பாடல்களில் இல்லாமையால் இதனை ஒருதலையாகத் துணிதற்கில்லை.

திருவாலியமுதனார் பாடியனவாக ஒன்பதாந் திருமுறையில் நான்கு பதிகங்கள் உள்ளன. இவை யாவும் கோயிலென வழங்கும் தில்லையம்பலத்தைப் போற்றிப் பாடப்பெற்றனவாகும்.

இவற்றுள் 'மையன்மாறொரு கூறன்' என்ற முதற் குறிப்புடைய திருப்பதிகம், தில்லைச் சிற்றம்பலப் பெருமானுடைய திருவடிமுதல் பிறைமுடியீறாக அமைந்த திருக்கோல முழுவதும் என் சிந்தையுள் இடம் பெற்று நிலைத்தது எனப் பாதாதி கேசமாக இவ்வாசிரியரால் பாடப் பெற்றுள்ளது.

'பவளமால்வரை' என்ற முதற் குறிப்புடைய பதிகம், தில்லையம்பலக் கூத்தனைக் காதலித்த இளமகளொருத்தியின் கூற்றாக அமைந்துளது. இறைவனை நினைந்துருகும் தலைவி,

**"தேய்ந்து மெய்வெளுத் தகம்வளைந் தரவினை யஞ்சித்தா னிருந்தேயும்**
**காய்ந்து வந்துவந் தென்றனை நலிசெய்து கதிர்நிலா எரிதூவும்"**

எனத் தனக்குச் சந்திரன் செய்யும் தீங்கினை யெடுத்துரைக்கும் பகுதி, தமது உடல்நலக்கேட்டையும் இகழ்ச்சியையும் பொருட் படுத்தாது பிறர்க்குத் தீங்கு செய்வதனையே தமது கடமையெனக் கொள்ளும் கீழோரது இயல்பினைச் சுவைபெற விளக்குகின்றது.

'அல்லாய்ப் பகலாய்' எனத் தொடங்கும் பதிகம், அருவாயுருவாய் ஆராவமுதமாய்த் திகழும் இறைவன் பதஞ்சலி முனிவர் பரவத் தென்னன் தமிழும் இசையுங் கலந்த தில்லைச் சிற்றம்பலத்திற் பல்லாயிரவர் காணவெளிப்பட்டு, நந்தி முழவங் கொட்டவும் ஆரூர்நம்பி இசை பாடவும் உமையம்மையார் கண்டுகளித்தத் திருநடஞ்செய்தருளும் அழகிய தோற்றத்தை உளங் கொள விரித்துரைக்கின்றது. இங்கே ஆரூர் நம்பி யென்றது நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளை. இப்பதிகத்தின் ஐந்தாம் பாடலில் 'வாமத்தெழிலார் எடுத்த பாதம் மழலைச் சிலம்பார்க்க' எனவருந் தொடர் கூத்தப்பெருமான் எழில் மிகத் தூக்கிய திருவடியாகிய இடப்பாதம் உமையம்மையார்க் குரியதாதலின் அதனை எழிலார் எடுத்த பாதம் என்றும் அதன்மேல் அணியப் பெற்ற மென்சிலம்பினை மழலைச் சிலம்பென்றும் இவ்வாசிரியர் போற்றியுள்ளார். இச்சொற் றொடர்களின் அழகில் ஈடுபட்ட மக்கள் இத்தொடர்களைத் தம் மக்கட்குரிய பெயராக இட்டு வழங்கியுள்ளார்கள். முதலாம் இராசராச சோழனால் தஞ்சைப் பெரிய கோயிலில் ஆடல் பாடல் நிகழ்த்துதற்கென நியமிக்கப்பெற்ற தளிச்சேரிப் பெண்டுகளிற் சிலர் எடுத்த பாதம், மழலைச் சிலம்பு என இத் திருவிசைப்பாத் தொடர்களைத் தமக்குரிய பெயராகப் புனைந்து கொண் டுள்ளார்கள். இக்குறிப்பினை நோக்குங்கால் இத்தொடர்களை முதன்முதல் வழங்கிய திருவாலியமுதனார் முதல் இராசராசன் காலத்திலோ அன்றிச் சிறிது முன்னோ இவ்வுலகில் வாழ்ந்தவரென்பது நன்கு பெறப்படும்.

இறைவனைக் காதலித்த இளையாளொருத்தியின் கூற்றாக அருளிச் செய்யப்பட்டது. 'கோல மலர் நெடுங்கண்' என்ற பதிகமாகும். தில்லைச்சிற்றம்பலவனாகிய எம்பெருமானைக் காண்பது என்று கொலோ எனவும் அவன் மலர்ப்பாதங்களைச் சேர்ந்தின்புறு நாள் எந்நாளோ எனவும் தன் உயிர்க்குயிராகிய இறைவனை நினைந்து தலைமகள் கூறும் பரிவுரைகள் அவளது பேரன்பின் திறத்தை நன்கு புலப்படுத்துவனவாம்.

## 8. புருடோத்தமநம்பி

"மாசிலா மறை பல ஒது நாவன் வண்புருடோத்தமன்" என்று இவ்வாசிரியர் தம்மைப் பற்றிக் கூறுதலால், இவர்க்குப் பெற்றோர் இட்ட பெயர் புருடோத்தமன் என்பதும், இவர் நான்மறைகளைப் பிழையற ஓதும் நாவினராகிய வேதியர் குலத்திற் பிறந்தவரென்பதும் நன்கு தெளியப்படும். இவர் வைணவ சமயத்திற் பிறந்து சிவ பத்தராயினாரென்பர் சிலர். இங்ஙனங் கருதுதற்கு இவரது பெயரொன்றைத் தவிரப் பிறிதொரு சான்றுமில்லாமையால் இதனை ஒருதலையாகத் துணிதல் பொருந்தாது. இவர் பாடியனவாக ஒன்பதாந் திருமுறையில் இரண்டு பதிகங்கள் உள்ளன. தில்லைச் சிற்றம்பலமாகிய கோயிலைப் போற்றுவனவாக அமைந்த இத்திருப்பதிகங்கள் இரண்டும் அந்தாதித் தொடையமையப் பாடப் பெற்றுள்ளன.

'வாரணி நறுமலர்' என்ற முதற் குறிப்புடைய பதிகம், சிற்றம்பலமேய செல்வனைக் காதலித்த மகளிர் அப்பெருமானை நோக்கி அகநெகிழ்ந் துரையாடுவதாக அமைந்துள்ளது. தில்லைச் சிற்றம்பலத் தெங்கள் செல்வன்பால் யான் கொண்ட பெருங்காதல் எனது சிறிய உயிராய் பொறுக்கத்தக்க தன்றென்பாள், 'ஆவியின் பரமன்று என் ஆதரவே' எனத் தலைவி நைந்து இரங்குகின்றாள். இக்கருத்து "சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கியாங்கு இவள் உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே" எனவரும் குறுந்தொகைச் செய்யுட் பொருளைத் தழுவியதாகும்.

'தேவர்களாகிய வலிய பழிகாரர்கள் முன்னொரு காலத்தே இறைவனாகிய நின்னைப் பணிந்து வேண்டி உனக்கு நஞ்சை யூட்டினரென்று பழைய வரலாறு கூறுவார் சொல்லுவர். அதுகேட்டு, முன் நீயுட்கொண்ட நஞ்சினால் நின் திருமேனிக்கு என்ன தீங்கு நேருமோ என மனந்திடுக்கிட்டு, நீ தில்லையம்பலத்தின் கண்ணே திருநடம் செய்தலைப் பார்த்திருந்தும் உயிர் தாங்கும் ஆற்றலற்றவளாயினேன். அம்பலத்திலே நினக்குத் தொண்டு புரிவோமென்று சொல்லிச் சூழ்ந்து நிற்கும் நஞ்சூட்டிய கொடியவர்களாகிய தேவர்களை உடனே விலக்கிவிட்டு நின்பால் அன்புடைய பூதகணங்கள்

நின்னைச் சூழ்ந்து பாதுகாத்து வர நினது பிரிவாலுளதாகிய எனது பசலை நிறந் தீரும்படி எங்கள் வீதிவழியே எழுந்தருளி வருவாயாக' எனத் தலைவியொருத்தி கூத்தப்பெருமானை வேண்டுவதாக அமைந்தது,

**அம்பலத்தருநடம் ஆடவேயும்**
**யாதுகொல் விளைவதென்றஞ்சி நெஞ்சம்**
**உம்பர்கள் வன்பழியாளர்முன்னே**
**ஊட்டினர் நஞ்சையென்றேயு முய்யேன்**
**வன்பெரும் படையுடைப் பூதஞ்சூழ**
**வானவர் கணங்களை மாற்றியாங்கே**
**என்பெரும் பயலைமை தீரும் வண்ணம்**
**எழுந்தருளாய் எங்கள் வீதியூடே**

என்ற திருவிசைப்பாவாகும். பழிவிளைக்கும் பகைவராயினும் ஒருவரது முன் நின்று நஞ்சினை உண்ணும்படி வேண்டமாட்டார்கள். கீழ்மக்களும் செய்ய வொருப்படாத நஞ்சூட்டுந் தீச்செயலைத் தம்மையாளும் கடவுளிடத்தே செய்ய உயர்ந்தோ ரெனப்படும் தேவர்களும் மனந்துணிந்தனரே என வருந்துவாள் 'உம்பர்கள் வன்பழியாளர்' என்று இகழ்ந்தாள். தேவர்கள் நஞ்சூட்டிய செய்தியைக் கேட்டபொழுதே உயிரற்றவளாயினேன் என்பாள், 'ஊட்டினர் நஞ்சையென்றேயும் உய்யேன்' என்றாள். தேவர்கள் உண்பிக்க நஞ்சையுண்ட பெருமான் என்கண் காணத் தில்லையம்பலத்தே ஆடல்புரியக் காண்கின்றேனாயினும் அவனுக்கு ஊட்டிய நஞ்சு ஏனைய நஞ்சுபோல இதுகாறும் அவன் திருமேனிக்கு வருந்தந் தராதயினும் ஒருகால் உள்ளேயேயிருந்து நாளடைவில் அவன் திருமேனிக்கு இடர் விளைத்தலுங்கூடுமே யென்று ஏங்குகின்றேனென்பாள் 'அம்பலத்து அருநடம் ஆடவேயும் யாதுகொல் விளைவதென்று நெஞ்சம் அஞ்சி உய்யேன்' என்றாள். அன்பர் போன்று கூடியிருந்து இடர் விளைவிக்கும் வானவர்கள் தம் பெருமானை இன்றும் சூழ்ந்து போற்றி நிற்பதறிந்து வருந்தியவள், அத்தகைய தீயோரை விலக்கி அவரால் வருந்தீங்கினைப் போக்கிப் பாதுகாக்கவல்ல அன்புடைத் தொண்டர்களாகிய பூதகணங்கள் சூழ எங்கள் வீதி வழியே எழுந்தருள்வாயாக என அப்பெருமானை விரும்பி வேண்டுகின்றாள். இங்ஙனம், இறைவன்பாற் கொண்ட அன்பின் முதிர்வால் தலைவியொருத்தி வேண்டுவதாக இத்திரு விசைப்பாவைப் பாடிய புருடோத்தமனாரது புலமை நலம் சுவைத்து இன்புறத் தக்கதாகும்.

"தாயினும் மிக நல்லையென்றடைந்தேன் தனிமையை நினைகிலை சங்கரா" எனத்தலைவி கூறுவதாக அமைந்த தொடர்

"தாயினும் நல்ல சங்கரன்" எனவரும் திருநாவுக்கரசர் தேவாரத் தொடரைத் தன்னகத்துக் கொண்டு விளங்குதல் காணலாம்.

"வானவர்கள் வேண்ட" என்ற திருப்பதிகத்தில் தேவர்கள் வேண்டிக்கொண்ட அப்பொழுதே நஞ்சையுண்டு அவர்களைக் காத்தருளிய இறைவன் ஒரு குற்றமும் புரியாத என்னுடைய தோள்வளைகளைக் கவர்ந்து எனக்கு இடர்விளைப்பாரோ எனத் தலைவி ஐயுறுவதும், யான் என்னுடைய தோள்வளைகளைத் தோற்றாலும் ஆடிவருங்காரரவும் ஐம்மதியும் பைங்கொன்றையும் சூடிவரும் நிலையில் அப்பெருமானைக் காணப்பெற்றேன் எனத் தலைவி பெருமகிழ்ச்சியடைவதும் ஆகிய பகுதிகள் படித்து மகிழ்தற்குரியன.

இவ்வாசிரியர் வாழ்ந்தகாலம் இதுவெனத் திட்டமாகச் சொல்லுதற்குரிய குறிப்புக்கள் கிடைக்கவில்லை. எனினும் இவர் கி.பி. 11-ம் நூற்றாண்டில் வாழ்ந்தவரெனக் கொள்ளுதல் பொருத்தமுடையதாகும்.

## 9. சேதிராயர்

இவர் சேதிநாட்டை யாண்ட குறுநில மன்னர் குடும்பத்திற் பிறந்தவராதலின் சேதிராயர் என வழங்கப் பெறுகின்றார். சேதி நாடென்பது தென்னார்க்காடு சில்லாவின் வடமேற்கிலமைந்த நிலப் பகுதியாகும். இது மலைய மானாடு, மலாடு எனவும் வழங்கப்பெறும். இந்நாட்டின் தலைநகர் திருக்கோவலூர். "சேதி நன்னாட்டு நீடு திருக்கோவலூரின் மன்னி" என்பர் சேக்கிழார். திருத்தொண்டத் தொகையிற் போற்றப்பெறும் அடியார்களுள் ஒருவராகிய மெய்ப்பொருள் நாயனாரென்பவரும் இச்சேதி நாட்டையாண்ட குறுநில மன்னரேயாவர். இச்செய்தி

"தாத்தா நமரேயெனச் சொல்லி வானுலகம் பெற்றவன் சேதிபன் மெய்ப்பொருளாமென்று பேசுவரே" எனவரும் திருத்தொண்டர் திருவந்தாதியால் நன்கு புலனாம். திருவிசைப்பா ஆசிரியராகிய சேதிராயர் தாம் பாடிய தில்லைத் திருவிசைப்பாப் பதிகத்தின் திருக்கடைக்காப்பில் 'எழிற் சேதிபர் கோன்' எனத் தம்மைக் குறிப்பிட்டுள்ளார். எனவே, இவ்வாசிரியர் சேதிநாடாகிய மலையமானாட்டைத் திருக்கோவலூரிலிருந்து ஆண்ட குறுநில மன்னரென்பதும் செந்தமிழ்ப் புலமைமிக்க சிவநெறிச்செல்வர் என்பதும் நன்கு துணியப்படும். இவர் பாடியதாகத் திருவிசைப்பாப் பதிகம் ஒன்றே காணப்படுகின்றது. தில்லைக் கூத்தப்பெருமானைக் காதலித்த தலைவி, அப்பெருமானைக் காணப்பெரிதும் விரும்பி அவனை அடையப் பெறாமையால் இளைத்து விம்மி விம்மி வெயிதுயிர்த்து அழுதலையும், அஞ்சலை கூப்பி அவனணிந்த கொன்றை

மாலையை வேண்டி யிரத்தலையும், அவன் திருப்பெயரைக் கூறுகவென்று தன்னால் வளர்க்கப்பட்ட கிளியை வேண்டுவ தனையும், அப்பெருமானை முன்னிலைப்படுத்திக் கூறும் இனிய உரையாடல்களையும் அத்தலைவியைப் பெற்ற தாய் கொண்டு கூறி இறைவனை வேண்டுவதாக இத்திருப்பதிகம் பாடப் பெற்றுளது. இதன்கண் பத்துப்பாடல்கள் உள்ளன. இத்திருப்பதிகம் அந்தாதித் தொடையமையப் பாடப் பெற்றுள்ளது.

"அறவனே அன்று பன்றிப்பின்போகிய மறவனே" எனத் தலைவி ஆண்டவனை யழைக்கும் முறையில் "மறவனை யன்று பன்றிப்பின் சென்ற மாயனை நால்வர்க்கு ஆலின் கீழுரைத்த அறவனை" எனவரும் சுந்தரர் தேவாரத் தொடர் எடுத்தாளப் படுதல் காணலாம்.

இவ்வாசிரியர் வாழ்ந்த காலத்தை அறிதற்குரிய குறிப்பெதுவும் இத்திருப்பதிகத்திற் கிடைக்கவில்லை. எனினும் கி.பி. பதினொராம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் இவரெனக் கொள்ளுதல் தவறாகாது.

முதற் குலோத்துங்கன் காலத்திற்கு முன் சேதிராயர் என்ற பட்டத்துடன் மலையமான்கள் குறிக்கப்பட்டிலரென்றும் முதற் குலோத்துங்கன் காலமுதற் கொண்டே இவர்கள் சேதிராயர் என்ற பட்டத்துடன் கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டனரென்றும் ஆகவே திருவிசைப்பா ஆசிரியராகிய இச்சேதிராயரும் முதற் குலோத்துங்கசோழன் காலத்திலோ அன்றி அவன் காலத்திற்குச் சிறிது பின்னரோ வாழ்ந்தார் எனக் கொள்ளுதல் வேண்டுமே யன்றி அவ்வேந்தன் காலத்திற்கு முற்பட்டிருந்தவரெனக் கொள்ளுதல் பொருந்தாதென்றும் கூறுவர் சிலர். * (*பெரியபுராண ஆராய்ச்சி, பக். 74.)

இவ்வாசிரியர் தாம் பாடிய திருவிசைப்பாவின் திருக்கடைக்காப்பில் தம்மைச் சேதிராயர் என்னாது 'சேதிபர்கோன்' என்றே குறிப்பிடுகின்றார். இவ்வாசிரியர் கூறுமாறு போலவே இவர் குலத்து முன்னோராகிய மெய்பொருள் நாயனாரைச் 'சேதிபன்' என நம்பியாண்டார் நம்பி குறிப்பிட்டுப் போற்றியுள்ளார். எனவே சேதிபன் என்னும் இப்பெயர் வழக்கம் கி.பி. பத்தாம் நூற்றாண்டிலேயே நிலவியிருந்தமை தெளிவாகத் தெரிதலால் சேதிராயர் என்ற பெயர் வழக்கத்தினை ஆதாரமாகக்காட்டி இவ்வாசிரியர் முதற் குலோத்துங்கன் காலத்திற்குப் பிற்பட்டவரெனத் துணிதல் ஏற்புடையதாகத் தோன்றவில்லை.



# பத்தாந் திருமுறை
# திருமூலநாயனார் வரலாறு

*சைவத் திருமுறை பன்னிரண்டனுள் பத்தாந் திருமுறையெனப் போற்றப்பெறும் திருமந்திரமாலையாகிய அருள் நூலை அருளிச்செய்தவர் சிவயோகியாராய் விளங்கிய திருமூல நாயனாராவர். இவ்வாசிரியரை*

**"நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்"**

*என நம்பியாரூராகிய சுந்தரர் திருத்தொண்டத் தொகையிற் பரவிப் போற்றியுள்ளார். பன்னாளும் பயில்யோக பரம்பரையில் விளங்கிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் தாம் கொண்டொழுகிய சிவயோக நெறிக்கு முதல்வராய் விளங்கிய திருமூல நாயனாரை 'நம்பிரான் திருமூலன்' எனக் குறித்துப் போற்றியுள்ளமை இங்கு நோக்கத்தக்கதாகும். சுந்தரர் அருளிய திருத்தொண்டத் தொகையின் வகைநூலாகத் திருத்தொண்டர் திருவந்தாதி பாடியருளிய நம்பியாண்டார் நம்பிகள்,*

**குடிமன்னு சாத்தனூர்க் கோக்குல மேய்ப்போன் குரம்பைபுக்கு**
**முடிமன்னு கூனற் பிறையாளன் றன்னை முழுத்தமிழின்**
**படிமன்னு வேதத்தின் சொற்படியே பரவிட் டெனுச்சி**
**அடிமன்ன வைத்த பிரான் மூலனாகிய அங்கணனே.**
**(திருவந்தாதி-36)**

*எனவரும் திருப்பாடலில் திருமூலர் வரலாற்றை வகுத்துக் கூறியுள்ளார். நற்குடிகள் நிலைபெற்ற சாத்தனூரில் பசுக் கூட்டத்தினை மேய்ப்பானாகிய இடையனது உடம்பிற்புகுந்து, சென்னியிலே நிலைபெற்ற வளைந்த பிறைச்சந்திரனையணிந்தவனாகிய சிவபெருமானை (நாற்பொருள்களாற் குறைவின்றி நிறைந்த) முழுமை வாய்ந்த தமிழ் கூறிய வண்ணமே நிலைபெற்ற வேதங்கள் சொல்லியபடியே பரவிப்போற்றி எனது உச்சியிலே தன் திருவடியினை நிலைபெறச் செய்தருளிய பெருந்தகை மூலன் என்னும் பெயரையுடைய அருளாளனாவன் என்பது இத் திருவந்தாதியின் பொருளாகும்.*

*இதன்கண், பரவிட்டு என்னும் வினையை, முழுத்தமிழின் படி பரவிட்டு எனவும், வேதத்தின் சொற்படியே பரவிட்டு எனவும் ஈரிடத்தும் சென்றியையும்படி நம்பியாண்டார் நம்பிகள் கூறியிருத்தலால், திருமூல நாயனார் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற் பொருள்களும் நிரம்பப்பெற்ற தமிழ் மறைகளையும்*

வடமொழி வேதங்களையும் தழுவித் தமிழாகமம் எனப் போற்றப்படும் இத்திருமந்திரப் பனுவலை இயற்றியருளினார் என்னும் மெய்ம்மை இனிது புலனாகும். அம்மையப்பனாகிய சிவபெருமான் தமிழும் ஆரியமும் ஆகிய இரு மொழிகளிலும் ஒப்ப அமையும்படி ஞானநூற் பொருள்களை உமாதேவியார் கேட்கத் திருவாய்மலர்ந்தருளினன் என்பதனை,

**மாரியுங் கோடையும் வார்பனி தூங்கநின்**
**றேரியும் நின்றங் கிளைக்கின்ற காலத்து**
**ஆரியமுந் தமிழும் உடனே சொல்லிக்**
**காரிகை யார்க்குக் கருணை செய்தானே. (திருமந்திரம்-65)**

எனவரும் திருப்பாடலில் திருமூல நாயனார் தெளிவாகக் குறித்துள்ளார். இக்குறிப்பினைக் கூர்ந்து நோக்குங்கால் முற் காலத்தில் இறைவனால் அருளிச் செய்யப்பெற்ற சிவாகமங்கள் தமிழிலும் வடமொழியிலும் ஒப்ப அமைந்திருந்தன என்பது நன்கு விளங்கும். இவ்வாறு இறைவனியல்பினை உலக மாந்தர் உணர்ந்து உய்திபெறும் வண்ணம் தமிழிலும் வடமொழியிலும் இறைவனூலாகிய அருள் நூல்கள் அமைந்திருந்தன என்பதனை,

**அவிழ்க்கின்ற வாறும் அதுகட்டு மாறுஞ்**
**சிமிட்டலைப் பட்டுயிர் போகின்ற வாறும்**
**தமிழ்ச்சொல் வடசொல் லெனுமிவ் விரண்டும்**
**உணர்த்து மவனை யுணரலு மாமே. (திருமந்திரம் - 66)**

என ஆகமச் சிறப்புணர்த்தும் பகுதியில் ஆசிரியர் விளங்கக் கூறியுள்ளார். அன்றியும் திருமந்திரம் நாலாந் தந்திரத்துள் 'வயிரவி மந்திரம்' என்ற பகுதியில்,

**அந்த நடுவிரல் ஆதி சிறுவிரல்**
**வந்த வழிமுறை மாறி யுரைசெய்யும்**
**செந்தமி ழாதி தெளிந்து வழிபடு**
**நந்தி யிதனை நவமுரைத் தானே. (திருமந்திரம் - 1089)**

எனத் திருமூலர் அறிவுறுத்தியருளுதலால் அவ்வழிபாட்டுக்குரிய மந்திரம் வடமொழியில் மட்டுமன்றித் தமிழிலும் அமைந் திருந்தமை நன்கு தெளியப்படும். திருமந்திரம் அருளிய திருமூல நாயனார் தமது வரலாறு கூறுவதாக அமைந்த பாயிரப் பகுதியில்,

**நந்தி யிணையடி நான்தலை மேற்கொண்டு**
**புந்தியி னுள்ளே புகப்பெய்து போற்றிசெய்**
**தந்தி மதிபுனை அரனடி நாடொறுஞ்**
**சிந்தைசெய் தாகமஞ் செப்பலுற் றேனே. (திருமந்திரம் - 73)**

எனவும்,

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே' (திருமந்திரம் - 81)

*எனவும் வரும் ஆசிரியர் வாய்மொழிகள், இந்நூல் தமிழாகமமாக அருளிச் செய்யப்பெற்ற தென்பதனை இனிது புலப்படுத்துவன வாகும்.*

"சதாசிவ தத்துவம் முத்தமிழ் வேத
மிதாசனி யாதிருந்தே னின்ற காலம்" (திருமந்திரம் - 76)

*எனவும்,*

தமிழ் மண்டலம் ஐந்துந் தாவிய ஞானம்
உமிழ்வது போல உலகந் திரிவர்
அவிழு மனமும் எம் ஆதி யறிவும்
தமிழ் மண்டலம் ஐந்தும் தத்துவ மாமே.(திருமந்திரம் - 1646)

*எனவும் வரும் திருமூலர் வாய்மொழிகள், திருமந்திரத்திற் கூறப்படுந் தத்துவ வுண்மைகள் செந்தமிழ் நாட்டில் வாழ்ந்த சிவஞானிகளால் அருளிச் செய்யப்பெற்ற சிறப்புடையன வாதலை நன்கு வலியுறுத்துவனவாகும்.*

வேதமோ டாகமம் மெய்யாம் இறைவன்நூல்
ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன
நாதன் உரையவை நாடில் இரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே(திருமந்திரம் - 2397)

*எனவும்*

வேதத்தை விட்ட அறம் இல்லை வேதத்தின்
ஓதத்தகும் அறம் எல்லாம் உளதர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை ஓதியே வீடுபெற றார்களே. (திருமந்திரம் - 51)

*எனவும்,*

அஞ்சன மேனி அரிவையோர் பாகத்தன்
அஞ்சொ டிருபத்து மூன்றுள ஆகமம்
அஞ்சலி கூப்பி யறுபத் தறுவரும்
அஞ்சா முகத்தில் அரும்பொருள் கேட்டதே.
(திருமந்திரம் - 57)

*எனவும்,*

பரனாய்ப் பராபரங் காட்டி உலகிற்
றரனாய்ச் சிவதன்மந் தானே சொல்காலத்
தரனாய் அமரர்கள் அர்ச்சிக்கு நந்தி
உரனாகி ஆகமம் ஓங்கி நின்றானே. (திருமந்திரம் - 61)

*எனவும் இந்நூலில் ஆசிரியர் வேதநூற் பொருள்களையும் ஆகமநூற் பொருள்களையும் இறைவனூற் பொருள் எனக்*

கொண்டு, வேத சிவாகமங்களாகிய அவற்றைப் பொதுவும் சிறப்புமாகப் பொருளியைபு பெற எடுத்துரைத்தலால், வடமொழி வேதத்தைப் பொது நூலாகவும், தமிழிலும் வடமொழியிலும் உள்ள சிவாகமங்களைச் சிறப்பு நூலாகவும் கொண்டு இவ்விருதிறப் பொருள்களும் ஒருங்கமைய அருளிச் செய்யப் பெற்ற செந்தமிழ்ச் சிவாகமம் இத்திருமந்திரம் என்பது நன்கு துணியப்படும். இந்நுட்பத்தினை விளக்குதற் பொருட்டே, "முழுத்தமிழின்படி, மன்னுவேதத்தின் சொற்படியே பரவிட்டு என்னுச்சி அடிமன்ன வைத்த பிரான் மூலனாகிய அங்கணன்" என நம்பியாண்டார் நம்பிகள் திருமூல நாயனாரைக் குறித்துப் போற்றியுள்ளார் எனக்கருதுதல் பொருத்தமுடையதாகும்.

திருத்தொண்டத் தொகையாகிய முதல் நூல், திருமூலரது பெயரும் சிவயோகப் பண்பும் எடுத்துரைத்தது. அதன் வகை நூலாகிய திருவந்தாதி, திருமூலரது உடம்பு சாத்தனூரிற் பிறந்த ஆனிரை மேய்ப்போனாகிய இடையனுடைய தெனவும், இவ்வாசிரியர் அவ்வுடம்பிற் புகுந்து சிவாகம வேதப் பொருள்களைத் தமிழால் அருளிச் செய்த அருளாளர் எனவும் அவர்தம் ஊரும் பேரும் அருட்பண்பும் ஞான நூலருளிய திறமும் பிறவும் வகுத்துக் கூறுகின்றது. திருத்தொண்டத் தொகையின் விரிநூலாகச் சேக்கிழாரடிகள் தாம் இயற்றிய பெரியபுராணத்தில் திருமூலரது வரலாற்றினை 28 செய்யுட்களால் விரித்துக் கூறியுள்ளார்.

திருக்கயிலாயத்திலே சிவபெருமானது திருக்கோயிலுக்கு முதற் பெருங்காவல் பூண்ட திருநந்தி தேவரது திருவருள் பெற்ற மாணாக்கருள் ஒருவராய், அணிமா முதலிய எண்வகைச் சித்திகளும் கைவரப்பெற்ற சிவயோகியார் ஒருவர், அகத்திய முனிவர்பாற் கொண்ட நண்பினாலே அவருடன், சில நாள் தங்குதற்கு எண்ணி, அம்முனிவர் எழுந்தருளிய பொதியமலையை அடைதற் பொருட்டுத் திருக்கயிலையினின்றும் புறப்பட்டுத் தென்திசை நோக்கிச் சென்றார். செல்லும் வழியில் திருக்கேதாரம், பசுபதிநேபாளம், அவிமுத்தம் (காசி), விந்தமலை, திருப்பருப்பதம், திருக்காளத்தி, திருவாலங்காடு ஆகிய திருத்தலங்களைப் பணிந்தேத்திக் காஞ்சி நகரையடைந்து திருவேகம்பப் பெருமானை இறைஞ்சிப் போற்றி அந்நகரிலுள்ள சிவயோகியர் களாகிய தவமுனிவர்களுடன் அன்புடன் அளவளாவி மகிழ்ந்தார். பின்னர்த் திருவதிகையை யடைந்து புரமெரித்த பெருமானை வழிபட்டுப் போற்றி, இறைவன் அற்புதத் திருக்கூத்தாடியருளும் திருவம்பலத்தினைத் தன்னகத்தே கொண்டு திகழும் பொற்பதியாகிய பெரும்பற்றப்புலியூரை வந்தடைந்தார். எல்லாவுலகங்களும் உய்யும்படி ஐந்தொழில் திருக்கூத்தியற்றி யருளும் கூத்தப்பெருமானை வணங்கித்

துதித்துச் சிந்தை களிகூர்ந்த சிவயோகியார், பசுகரணங்கள் சிவகரணங்களாகிய தூய நிலையில் தம்முள்ளத்தே பொங்கி எழுந்த சிவபோதமாகிய மெய்யுணர்வினால் சிவானந்த திருக்கூத்தினைக் கண்டுகளித்து ஆராத பெருவேட்கையினால் அத்திருத்தலத்தில் தங்கியிருந்தார்.

தில்லைத் திருநடங்கண்டு மகிழ்ந்த சிவயோகியார், அங்கிருந்து புறப்பட்டுக் காவிரியில் நீராடி அதன் தென் கரையினை யடைந்து, உமையம்மையார் பசுவின் கன்றாக இருந்து இறைவனை வழிபாடுசெய்து அம்முதல்வனுடன் எழுந்தருளி யிருந்து அருள்புரியும் திருவாவடுதுறையினை யணுகித் திருக்கோயிலை வலம்வந்து பசுபதியாகிய இறைவனை வழிபட்டு, அத்திருப்பதியினை விட்டு நீங்காததொரு கருத்துத் தம்முள்ளத்தே தோன்ற அங்கே தங்கியிருந்தார். ஆவடுதுறை யிறைவரை வழிபடுதலில் ஆராத பெருங் காதலையுடைய சிவயோகியார், அத்தலத்தை யகன்று செல்லும் பொழுது காவிரிக் கரையிலுள்ள பொழிலிடத்தே பசுக் கூட்டங்கள் கதறி அழுவதனை எதிரே கண்டார். அந்தணர்கள் வாழும் சாத்தனூரிலே தொன்றுதொட்டு ஆனிரை மேய்க்கும் குடியிற் பிறந்த ஆயனாகிய மூலன் என்பான் அங்குத் தனியே வந்து பசுக்களை மேய்ப்பவன். தான் எடுத்த பிறவிக்குக் காரணமாகிய வினைகள் நுகர்ந்து தீர்ந்தமையால் அவனது வாழ்நாளைக் கூற்றுவன் வந்து கவர்ந்து கொள்ள உயிர் நீங்கி அங்கு நிலத்தில் வீழ்ந்து இறந்தானாக, அவனால் மேய்க்கப் பெற்ற பசுக்கள் உயிர் நீங்கிய அவனது உடம்பினைச் சுற்றிச் சுழன்று வந்து மோப்பனவும் கதறுவனவுமாகி வருந்தின.

மேய்ப்பவன் இறந்தமையால் பசுக்களடைந்த துயரத்தினைக் கண்ட அருளாளராகிய சிவயோகியாரது உள்ளத்தில் 'இப்பசுக்கள் உற்ற துயரத்தை நீக்குதல் வேண்டும்' என்றதோர் எண்ணம் இறைவர் திருவருளால் தோன்றியது. 'இந்த இடையன் உயிர்பெற்றெழுந்தாலன்றி இப்பசுக்கள் துயரம் நீங்கா' எனத் திருவுளத்தெண்ணிய தவமுனிவர், தம்முடைய திருமேனியைப் பாதுகாவலானதோரிடத்து மறைத்துவைத்துவிட்டுக் கூடுவிட்டுக் கூடுபாய்தல் (பரகாயப் பிரவேசம்) என்னும் பவன வழியினாலே தமது உயிரை அவ்விடையனது உடம்பிற் புகுமாறு செலுத்தித் திருமூலராய் எழுந்தார். எழுந்ததும் பசுக்களெல்லாம் தம் துயரம் நீங்கி அன்பினால் அவரது உடம்பினை நாத்தழும்ப நக்கி மோந்து கனைத்து மிகுந்த களிப்பினாலே வாலெடுத்துத் துள்ளிக்கொண்டு தாம் விரும்பிய இடத்திற் சென்று புல் மேய்ந்தன. திருமூலநாயனார் அது கண்டு திருவுளம் மகிழ்ந்து ஆனிரைகள் மேயுமிடங்களிற் சென்று நன்றாக மேய்த்தருளினார். வயிறார மேய்ந்த அப்பசுக்கள், கூட்டமாகச் சென்று காவிரியாற்றின் முன்துறையிலே யிறங்கி நன்னீர் பருகிக்கரையேற, அப்

பசுக்களைக் குளிர்ந்த நிழலிலே தங்கி இளைப்பாறும்படி செய்து பாதுகாத்தருளினார்.

சூரியன் மேற்றிசையை யணுக மாலைப்பொழுது வந்தது. பசுக்கள் தத்தம் கன்றுகளை நினைந்து தாமே மெல்ல நடந்து சாத்தனூரை அடைவனவாயின. அப்பசுக்கள் செல்லும் வழியிலே தொடர்ந்து பின்சென்ற சிவயோகியார், பசுக்கள் யாவும் தத்தமக்குரிய வீடுகளிற் சென்று சேர்ந்த பின்னர் அவ்வூர் வழியில் தனியே நிற்பாராயினர்.

அந்நிலையில், மூலனுடைய மானமிகு மனையறக் கிழத்தியாகிய நங்கை, 'என் கணவர் பொழுது சென்ற பின்னரும் வரத் தாழ்த்தனரே. அவர்க்கு என்ன நேர்ந்ததோ' என்று அஞ்சியவளாய்த் தன் கணவனைத் தேடிக்கொண்டு எதிர் செல்பவள், சிவயோகியார் நின்ற இடத்தை யடைந்தாள். தன் கணவனது உடம்பிற்றோன்றிய உணர்வு மாற்றத்தைக் கண்டு 'இவர்க்கு ஏதோ தீங்கு நேர்ந்திருத்தல் வேண்டும்' என்று எண்ணி, அவரைத் தளர்வின்றி இல்லத்திற்கு அழைத்துச் செல்லும் கருத்துடன் அவருடம்பினைத் தொடுதற்கு நெருங்கினாள். திருமூலராகிய சிவயோகியார், அவள் தம்மைத் தீண்ட வொண்ணாதவாறு தடுத்து நிறுத்தினார். தன் கணவனை யன்றி மக்கள் முதலிய நெருங்கிய சுற்றத்தார் ஒருவருமின்றித் தனியாளாகிய அவள், அவரது தொடர்பற்ற நிலைகண்டு அஞ்சி மனங்கலங்கினாள். 'நும் அன்புடைய மனைவியாகிய எளியேனை வெறுத்து நீங்குதலாகிய இதனால் எனக்கு எத்தகைய பெருந் துன்பத்தைச் செய்துவிட்டீர்' என்று கூறிப் புலம்பி வாட்டமுற்றாள். அந்நிலையில் நிறைதவச் செல்வராகிய திருமூலர், அவளை நோக்கி, 'நீ எண்ணியவாறு இங்கு உனக்கு என்னுடன் எத்தகைய உறவும் இல்லை' எனக் கூறிவிட்டு, அவ்வூரில் அருந்தவர் பலரும் தங்கியிருத்தற்கென அமைந்துள்ள பொதுமடத்திற் புகுந்து சிவயோகத்து அமர்ந்திருந்தார்.

தன் கணவனது தன்மை வேறுபட்டதனைக்கண்ட மூலன் மனைவி, அதுபற்றி யாரிடத்தும் சொல்லாமலும், தவநிலையின ராகிய அவர்பால் அணையாமலும் அன்று இரவு முழுதும் உறங்காதவளாய்த் துயருற்றாள். பொழுது விடிந்ததும் தன் கணவர் நிலையை அவ்வூரிலுள்ள நல்லோர்பால் எடுத் துரைத்தாள். அதுகேட்ட சான்றோர், திருமூலரையணுகி அவரது நிலைமையை நாடி, 'இதுபித்தத்தினால் விளைந்த மயக்கமன்று; பேய் கோட்படுதல் முதலாகப் பிறிதொரு சார்பால் உளதாகியதும் அன்று; சித்தவிகாரக் கலக்கங்களையெல்லாம் அறவேகளைந்து தெளிவுபெற்ற நிலையில் சிவயோகத்தில் அழுந்திய கருத்து உடையவராய் இவர் அமர்ந்துள்ளார். இந்நிலைமை யாவராலும்

அளந்தறிதற் கரியதாம்' எனத் தெளிந்தனர். "இவர் இருவகைப் பற்றுகளையும் அறுத்து ஞானோபதேசத்தால் பரமர் திருவடியைப் பெற்ற சீவன் முத்தர்களைப் போன்று எல்லாவற்றையும் ஒருங்கே யறியவல்ல முற்றுணர்வுடையவராக விளங்குகின்றார். ஆகவே முன்னை நிலைப்படி உங்கள் சுற்றத் தொடர்பாகிய வாழ்க்கையில் ஈடுபடுவார் அல்லர்" என மூலன் மனைவிக்கு எடுத்துரைத்தார்கள். அதுகேட்ட அவள் அளவிலாத் துயரத்தால் மயக்கமுற்றாள். அருகேயுள்ளவர்கள் அவளைத் தேற்றி அவளது மனைக்கு அழைத்துச் சென்றார்கள்.

சாத்தனூர்ப் பொதுமடத்தில் சிவயோக நிலையில் அமர்ந்திருந்த திருமூலர், யோகுகலைந்து எழுந்து முதல் நாளிலே பசுக்கள் வந்த வழியே சென்று தம்முடம்பினைச் சேமமாக வைத்த இடத்திற் சென்று பார்த்து, அதனைக் காணாதவராகி, அதுமறைந்த செயலை மெய்யுணர்வுடைய சிந்தையில் ஆராய்ந்து தெளிந்தார். பிறைமுடிக்கண்ணிப் பெருமானாகிய இறைவன், உயிர்கள்பால் வைத்த பெருங்கருணையினாலே அருளிய சிவாகமங்களின் அரும்பொருள்களை இந்நிலவுலகில் திருமூலரது வாக்கினால் தமிழிலே வகுத்துரைக்கக் கருதிய திருவருட்டிறத்தால் சிவயோகி யாரது முந்தைய உடம்பினை மறைப்பித்தருளினார். இம்மெய்ம்மையினைத் திருமூலர் தமது முற்றுணர்வினால் தெளிய உணர்ந்தார். அந்நிலையில் தம்மைப்பின் தொடர்ந்து வந்த ஆயர்க்குலத்தவர்கட்கும் தமக்கும் எத்தகைய தொடர்பும் இல்லையென்பதனை அவர்கட்கு விளங்க அறிவுறுத்தினார்; அவர்கள் எல்லோரும் தம்மைவிட்டு நீங்கியபின் சிவபெருமான் திருவடிகளைச் சிந்தித்து அவ் விடத்தை விட்டகன்று திருவாடுதுறைத் திருக்கோயிலை யடைந்தார். அத்திருக்கோயிலில் வீற்றிருந்தருளும் அம்மையப்ப ராகிய இறைவரை வணங்கி அத்திருக்கோயிலின் மேற்சில் மதிற்புறத்தேயுள்ள அரச மரத்தின்கீழ்த் தேவாசனத்தில் சிவ யோகத்து அமர்ந்து உள்ளக் கமலத்தில் வீற்றிருந்தவருளும் அரும்பொருளாகிய சிவபரம்பொருளோடு இரண்டறக்கூடி ஒன்றியிருந்தார்.

இங்ஙனம் சிவயோக நிலையில் அமர்ந்திருந்த திருமூல நாயனார், ஊனொடு தொடர்ந்த இப்பிறவியாகிய தீயநஞ்சினா லுளவாம் துயரம் நீங்கி இவ்வுலகத்தார் உய்யும் பொருட்டு ஞானம் யோகம் கிரியை சரியை என்னும் நால்வகை நன்னெறிகளும் நால்வகை மலர்களாக விரிந்து விளங்கும் நல்ல திருமந்திரமாலையாகிய பனுவலை இறைவன் திருவடிக்கு அணிந்து போற்றும் நிலையில்,

**ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்**
**நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந்தான் ஐந்து**
**வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்**
**சென்றனன் தானிருந் தானுணர்ந் தெட்டே.**

*என்னும் திருப்பாடலைத் தொடங்கி ஓராண்டுக்கு ஒரு திருப்பாடலாக இவ்வாறு மூவாயிரம் ஆண்டுகள் இவ் உலகிற் சிவயோக நிலையில் அமர்ந்திருந்து மூவாயிரம் திருப்பாடல்களை அருளிச்செய்து, தமிழ் மூவாயிரமாகிய இத்திருமந்திரத் திருமுறையினை நிறைவு செய்து சிவபெருமான் திருவருளாலே திருக்கயிலையை அடைந்து அம்முதல்வனுடைய திருவடி நீழலில் என்றும் பிரியா துறையும் பேரின்பப் பெருவாழ்வினைப் பெற்று இனிதிருந்தார். திருமூலர் அருளிய திருமந்திரமாலை நலஞ்சிறந்த ஞானயோகக் கிரியா சரியை யெலாம் மலர்ந்த மொழி மாலையாகத் திகழ்கின்றது.*

*இவ்வாறு சேக்கிழார் பெருமான் திருமூலரது வரலாற்றினை விரித்துக் கூறியுள்ளார். பெரியபுராண ஆசிரியர் விரித்துக் கூறிய இவ்வரலாற்று நிகழ்ச்சிகள் பலவற்றுக்குத் திருமூலநாயனார் அருளிய திருமந்திர மாலையில் நூலாசிரியராகிய அம்முனிவர் தம்வரலாறு கூறும் முறையிற் பாடியருளிய திருமந்திரப் பாடல்கள் அகச்சான்றுகளாக அமைந்துள்ளன.*

*மூலனுடம்பிற் புகுந்து தமிழ் மூவாயிரம் அருளிய முனிவர்பிரான், திருக்கயிலாயத்தில் நந்தியெம்பெருமான் பால் ஞானோபதேசம் பெற்ற நான்மறை யோகிகளுள் ஒருவர் என்றும், அவர் பொதியமலையில் எழுந்தருளிய அகத்திய முனிவரைக் கண்டு அளவளாவும் விருப்பம் உடையராய்த் தென்றிசை நோக்கிச் செல்லும் வழியில் சாத்தனூரையடுத்துக் காவிரியின் தென்கரையி லுள்ள சோலையில் ஆக்களை மேய்ப்போனாகிய மூலன் என்னும் பெயருடைய இடையன் இறந்துபட அந்நிலையில் அவனால் மேய்க்கப்பெற்ற பசுக்கள் அவ னுடம்பைச் சுற்றிக் கதறி வருந்தின என்றும், அப்பசுக்களின் துயரத்தை நீக்கத் திருவுளங் கொண்ட அருளாளராகிய சிவயோகியார், தம் உடம்பினைப் பாதுகாப்பாக ஓரிடத்தில் மறைத்து வைத்துவிட்டுத் தாம் கற்றறிந்த பரகாயப் பிரவேசம் (கூடுவிட்டுக் கூடு பாய்தல்) என்னும் சித்தித் திறத்தால் தமது உயிரை மூலனது உடம்பிலே புகச்செய்து திருமூலராய் எழுந்தார் என்றும் திருத்தொண்டத் தொகைக்கு வகைநூல் செய்த நம்பியாண்டார் நம்பிகளும் விரிநூல் செய்த சேக்கிழார் அடிகளும், தெளிவாகக் கூறியிருத்தலால், திருமந்திர நூலாசிரி யர்க்குத் திருமூலர் என வழங்கும் இப்பெயர், அவர் மூலனுடம்பிற் புகுந்தபின்னரே உளதாயிற்று என்பது நன்கு புலனாம். நந்தி*

திருவருள் பெற்ற நான் மறையோகியராய் இருந்த இவர் தம் முன்னை நிலையில் இவர் பிறந்த ஊர், குடி, பேர் முதலியவற்றை அறிந்து கொள்ளுதற்கேற்ற வரலாற்றுச் சான்றுகள் தெளிவாகக் கிடைக்காமையால் அருண்மொழித் தேவராகிய சேக்கிழார் அடிகள், சிவயோகியார் திருமூலராதற்கு முன்னுள்ள அவர் தம் ஊர் பேர் குலம் முதலிய வரலாற்றுச் செய்திகளைக் குறித்து எதுவும் கூறாது விட்டார்.

திருமூலராகிய சிவயோகியார் திருக்கயிலையில் நந்தியெம் பெருமான்பால் ஞான நூற்பொருள்களை ஓதியுணர்ந்த நான்மறையோகிகளுள் ஒருவர் என்பது,

**'நந்தியருள்பெற்ற நாதரை நாடிடின்**
**நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி**
**மன்று தொழுத பதஞ்சலி வியாக்கிரர்**
**என்றிவர் என்னோடெண்மரு மாமே' (திருமந்திரம்-67)**

எனவரும் அவர்தம் வாய்மொழியால் அறியப்படும். நந்தியருள் பெற்ற சிவயோகியார் அட்டமாசித்திகளும் கைவரப் பெற்றவர் என்பதும், ஆவுறு துயத்தினை நீக்குதற் பொருட்டே இறைவன் அருளின்வழி மூலன் என்னும் ஆயனது உடம்பிற்புகுந்து பசுக்களைச் சாத்தனூரிற் செலுத்தி மீண்டும்வந்து தமது பழைய உடம்பினை வைத்தஇடத்தில் வந்து பார்த்தபொழுது, அவ்வுடம் பினை இறைவன் மறைத்தருளினானாக அவ்வுடம்பினைக் காணாதவராய், முன்னையுடம்பினாற் பயனில்லையென வுணர்ந்து இறைவன் திருக்குறிப்பின் வண்ணம் மூலனுடம் பிலேயே நெடுங்காலம் விரும்பித் தங்கியிருந்தனர் என்பதும்,

**'அரிய தெனக்கில்லை யட்டமாசித்தி**
**பெரிதருள்செய்து பிறப்பறுத்தானே' (திருமந்திரம்-641)**

எனவும்,

**குரவன் அருளிற் குறிவழி மூலப்**
**பரையின் மணமிகு சங்கட்டம் பார்த்துத்**
**தெரிதரு சாம்பவி கேசரி சேராப்**
**பெரிய சிவகதி பேறெட்டாஞ் சித்தியே. (திருமந்திரம் 642)**

எனவும்,

**நந்தி யருளாலே நாதனாம் பேர்பெற்றோம்**
**நந்தி யருளாலே மூலனை நாடினோம்**
**நந்தி அருளாலே அது என்செய்யும் நாட்டினில்**
**நந்தி வழிகாட்ட நானிருந்தேனே. (திருமந்திரம்-68)**

எனவும் வரும் அவரது வாய்மொழிகளால் நன்கு விளங்கும். இத்திருப்பாடலில், 'நந்தி அருளா அது' என ஆசிரியர் சுட்டியது,

இறைவனால் மறைக்கப்பட்ட தமது பழைய உடம்பினை. இவ்வாறு இறைவன் தம்முடைய பழைய உடம்பினை மறைத்து மூலனுடம்பிற் புகச் செய்தருளிய இப்படைப்பு, அம்முதல்வனது பொருள்சேர் புகழ்த் திறங்களைத் தமிழ்ப்பாக்களால் நன்றாகப் புனைந்து போற்றுதற்கேற்ற நலந்தரும் வாழ்வினை நல்குவதென வுணர்ந்த திருமூலர், தாம் மேற்கொண்ட மூலனுடம்பினை 'எனது முன்னைத் தவத்தின் பயனாக எனக்கு இறைவனால் நன்றாகத் திருத்தமுறச் செய்தளிக்கப்பட்ட நல்லபடைப்பு இதுவாகும்' எனக்கொண்டு போற்றி மகிழ்ந்தனர் என்பது,

**பின்னை நின் றென்னே பிறவிபெறுவது**
**முன்னை நன்றாக முயல்தவஞ் செய்கிலர்**
**என்னை நன்றாக இறைவன் படைத்தனன்**
**தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே. (திருமந்திரம்-81)**

எனத் தமிழ்மாலைகளால் இறைவனைப் போற்றி மகிழும் நிலையில் தாம் பெற்றுள்ள உடம்பினை ஆசிரியர் பாராட்டி மகிழ்தலாற் புலனாம்.

இறைவன் திருவருளால் மூலனுடம்பிற்புக்க சிவயோகியார், திருவாவடுதுறைத் திருக்கோயிலை அடைந்து அங்கு எழுந்தருளிய அம்மையப்பர் திருவடிகளைப் போற்றிப்பரவி, அத்திருக் கோயிலை அடுத்துள்ளதோர் சிவபோதியாகிய அரசமரத்தின் நீழலில் எண்ணில்லாத பல்லாண்டுகள் சிவயோகத்தில் அமர்ந்திருந்தார் என்பது,

**சேர்ந்திருந் தேன் சிவ மங்கைதன் பங்கனைச்**
**சேர்ந்திருந் தேன் சிவ னாவடு தண்டுறை**
**சேர்ந்திருந் தேன் சிவ போதியி னீழலிற்**
**சேர்ந்திருந் தேன் சிவன் நாமங்கள் ஓதியே. (திருமந்திரம்-79)**

எனவும்,

**இருந்தேன் இக்காயத்தே எண்ணிலி கோடி**
**இருந்தேன் இராப்பகல் அற்ற இடத்தே**
**இருந்தேன் இமையவர் ஏத்தும் பதத்தே**
**இருந்தேன் என்நந்தி இணையடிக் கீழே. (திருமந்திரம்-80)**

எனவும்,

**ஞானத் தலைவிதன் நந்தி நகர்புக்கு**
**ஊனமில் ஒன்பது கோடி யுகந்தனுள்**
**ஞானப்பாலாட்டி நாதனை யர்ச்சித்து**
**நானு மிருந்தேன் நற்போதியின் கீழே. (திருமந்திரம்-82)**

எனவும் வரும் திருமூலர் வாய்மொழிகளால் இனிது விளங்கும். இத்திருப்பாடலில் 'நந்திநகர்' என்றது திருஆவடுதுறையினை.

*சைவ சமயத் தனிநாயகனாகிய இறைவனுடைய திருவடிகளை இறைஞ்சிச் சிவயோகத்தமர்ந்து அம்முதல்வனருளிய சிவாகமப் பொருளை விரித்துரைக்கத் திருவுள்ங்கொண்ட திருமூலர், இறைவன் திருவருளை இடைவிடாது சிந்தித்திருந்து தமிழ் மூவாயிரம் ஆகிய திருப்பாடல்களை அருளிச் செய்தார் என்பதும், ஆசிரியர் இவ்வருள் நூலுக்கு இட்டபெயர் திருமந்திரமாலை என்பதும்,*

**நந்தியிணையடி நான்தலை மேற்கொண்டு**
**புந்தியினுள்ளே புகப்பெய்து போற்றிசெய்து**
**அந்தி மதிபுனை அரனடி நாள்தொறும்**
**சிந்தைசெய் தாகமஞ் செப்பலுற்றேனே. (திருமந்திரம்-73)**

*எனவும்,*

**பிறப்பிலி நாதனைப் பேர்நந்தி தன்னைச்**
**சிறப்பொடு வானவர் சென்று கைகூப்பி**
**மறப்பிலர் நெஞ்சினுள் மந்திரமாலை**
**உறைப்பொடுங் கூடிநின் றோதலுமாமே. (திருமந்திரம்-86)**

*எனவும் வரும் ஆசிரியர் வாய்மொழிகளால் நன்கு புலனாம்.*

*தவமுனிவராகிய திருமூலர் தமிழாகமமாகிய இந்நூலை அருளிச் செய்த காலத்தில் தமிழ்மொழியிற் சைவ சமய நுண்பொருள்களை விரித்துரைக்கும் சாத்திர நூல்கள் சிலவாக அருகிக்காணப்பட்டன. ஆயினும் அந்நூல்களில் இல்லாத பொருள்கள் வேறெங்கும் இல்லை என்னும்படி உலக மக்கள் உணர்ந்து உய்திபெறுதற்குரிய அரும் பொருள்கள் அனைத்தும் இறைவனருளால் நிரம்பியிருந்தன. இவ்வுண்மையினை,*

**அங்கி மிகாமை வைத்தான் உடல் வைத்தான்**
**எங்கு மிகாமை வைத்தான் உலகேழையும்**
**தங்கி மிகாமை வைத்தான் தமிழ்ச் சாத்திரம்**
**பொங்கி மிகாமை வைத்தான் பொருள்தானுமே.**
**(திருமந்திரம்-87)**

*எனவரும் திருப்பாடலில்* (*'தமிழ் நூல்களும் அவற்றின் பொருள்களும், சில்வாழ் நாட் பல்பிணிச் சிற்றறிவினரான மக்கள் உணர்ந்து மெய்யப்பன் பெறுதற்குத் தக்க அளவுவைத்து அறிவின் எல்லை கடவாமல் அழகுற அமைக்கப்பட்டன' என இத்திருப் பாட்டிற்குக் கருத்துரைப்பர் மறைமலையடிகளார். (மாணிக்கவாசகர் காலம் - பக்கம்.179) திருமூலர் தெளிவாக வெளியிட்டருளிய திறம் உணர்ந்து மகிழத்தக்கதாகும்.*

*அகத்தியமுனிவரைக் காணவிரும்பித் திருக்கயிலாயத்தினின்றும் தென்றிசை நோக்கிவந்த சிவயோகியார், சிவத்தலங்கள்*

பலவற்றையும் வழிபட்டு வருபவர் காஞ்சி நகரத்தை யடைந்து அங்கு வாழும் சிவயோகியர் பலருடன் அளவளாவினார் எனத் திருத்தொண்டர் புராண ஆசிரியர் குறித்தலாலும், தென்றமிழ் நாட்டில் பொதியமலையில் எழுந்தருளியிருக்கும் அகத்திய முனிவரோடு பழகிய கேண்மையினால் அவரைக்கண்டு அளவளாவப்புறப்பட்டு வந்ததனாலும், தமிழகத்தின் தெற்கெல்லையாகிய குமரித்துறையில் அம்மை கோயில்கொண்டு எழுந்தருளியிருத்தலையும், தமிழகம் ஐந்து மண்டலங்களாகப் பகுக்கப்பட்டிருத்தலையும், வழிப்போவோர் அச்சமின்றிச் செல்லவொண்ணாதவாறு கொங்கு நாட்டில் வழிப்பறித் தொழில் நிகழ்தலையும் இந்நூலிற் குறிப்பிடுவதாலும், இந்நூலாசிரியராகிய சிவயோகியார் மூலனுடம்பிற் புகுவதற்கு முன்னரும் தமிழ் நாட்டிற் பல்லண்டுகள் வாழ்ந்த பயிற்சி யுடையாரென்பதும், சிவாகமப் பொருளை நன்றாகத் தமிழ்ச்செய்யுமாறு தம்மை இறைவர் நன்றாகப் படைத்தார் என அவரே தம்மைத்தமிழொடு தொடர்புபடுத்திக்கூறுதலால் அவர் தமிழ்க்குலத்திற் பிறந்தவரென்பதும், ஆகவே தென் தமிழ் நாட்டிலிருந்து வடகயிலையையடைந்து வாழ்ந்த தமிழ் முனிவர் திருமூலர் என்பதும் நன்கு துணியப்படும்.

திருமூலர் தம்முடன் நந்தியெம் பெருமான்பால் உபதேசம் பெற்றவர்களாக (ச் சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்னும்) நந்திகள் நால்வரையும் சிவயோக மாமுனி, தில்லையில் திருக்கூத்துத் தெரிசனம் கண்ட பதஞ்சலி முனிவர், வியாக்கிரபாத முனிவர் ஆகியவர்களையும் சேர்த்து எண்மராகக் குறித் துள்ளதனை நோக்குங்கால், இவர் மேற்குறித்த சிவயோக மாமுனி, பதஞ்சலி வியாக்கிரபாதர் ஆகிய முனிவர்கள் காலத்தை ஒட்டிவாழ்ந்த சிவாகமச் செல்வரென்பது நன்கு புலனாகும். அன்றியும் சிவயோகியராகிய இவர், தில்லையிற் பதஞ்சலி முனிவருடன், இறைவனது திருக்கூத்தினைக்கண்டு வழிபட்டு மகிழ்ந்தாரென்பதும், தில்லையில் திருக்கூத்துக் கண்ட பின் இவ்வுலகில் நெடுங்காலம் இருந்தவரென்பதும்,

**செப்புஞ் சிவாகமம் என்னுமப் பேர்பெற்றும்**
**அப்படி நல்கும் அருள்நந்திதாள் பெற்றுத்**
**தப்பிலா மன்றில் தனிக்கூத்துக் கண்டபின்**
**ஒப்பில் எழுகோடி யுகமிருந்தேனே. (திருமந்திரம்-74)**

என இவர் தமது வரலாறு கூறுதலால் இனிது விளங்கும். இவ்வாறு நெடுங்காலம் இந்நிலவுலகில் தாம் தங்கியிருந்த காரணம் இறைவனுடன் பிரிப்பின்றி விளங்கும் அருட் சத்தியாகிய புலனாபதி யென்னும் அருந்தவச் செல்வியை வழிபட்டு அவ்வன்னையின் திருவருளால் இவ்வுலகிற் பத்தி

நெறியையும் யோக நெறியையும் ஞானநிலை பெறச் செய்து இறைவனது அருட்கூத்தினை விளக்கும் தமிழ் வேதமாகிய இத்திருமந்திரப் பனுவலை அருளிச் செய்தற் பொருட்டே என்பதனை,

**இருந்தவக் காரணங் கேளிந் திரனே**
**பொருந்திய செல்வப் புவனா பதியாம்**
**அருந்தவச் செல்வியைச் சேவித்தடியேன்**
**பரிந்துடன் வந்தனன் பத்தியினாலே. (திருமந்திரம்-75)**

எனவும்,

**மாலாங்க னேயிங்கு யான் வந்த காரணம்**
**நீலாங்க மேனியள் நேரிழை யாளொடு**
**மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்**
**சீலாங்க வேதத்தைச் செப்பவந்தேனே. (திருமந்திரம்-77)**

எனவும் தன் மாணாக்கர்களாகிய இந்திரன், மாலாங்கன் என்பவர் களை நோக்கிக் கூறும் முறையில் அமைந்த இத் திருப்பாடல் களால் திருமூலர் நன்கு புலப்படுத்தியுள்ளார்.

திருமூலராகிய இச்சிவயோகியாரால் அன்புடன் ஆதரிக்கப் பெற்று அவர் அருளிய திருமந்திரப் பனுவற்பொருளைக் கேட்டுணர்ந்த மாணாக்கர்கள் மாலாங்கன், இந்திரன், சோமன், பிரமன், உருத்திரன், கந்துரு, காலாங்கி, கஞ்சமலையன் என்னும் பெயரினராகிய எழுவர் ஆவர். இச்செய்தி,

**மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்கன்**
**இந்திரன் சோமன் பிரமன் உருத்திரன்**
**கந்துருக் காலாங்கி கஞ்ச மலையனோ**
**டிந்த எழுவரும் என்வழியாமே. (திருமந்திரம்-69)**

எனவரும் பாடலால் அறியப்படும். மூலனுடலிற் புக்குத் திருமூலரா யெழுந்த சிவயோகியார், இறைவனருளால் சதாசிவமூர்த்தியை யொத்துச் சிவாகமப்பொருளை அறிவுறுத்தும் முற்றுணர்வும் தேவர்க்கெல்லாம் முதன்மையும் உடையவராகத் தாம் திகழ்ந்த திறத்தினை,

**நந்தியருளாலே மூலனை நாடிப்பின்**
**நந்தியருளாலே சதாசிவ னாயினேன்**
**நந்தியருளாலே மெய்ஞ்ஞானத்துள் நண்ணினேன்**
**நந்தியருளாலே நானிருந்தேனே. (திருமந்திரம்-92)**

எனவரும் திருப்பாடலிற் குறித்துள்ளார்.



# திருமூலநாயனார் காலம்

கி.பி. எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த அருளாசிரியர் ஆகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள், தாம் பாடிய திருத்தொண்டத் தொகையில், 'நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்' எனத் திருமூல நாயனாரைப் பெயர்குறித்துப் போற்றியிருத்தலாலும் கி.பி.ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த தேவார ஆசிரியர்களாகிய திருநாவுக்கரசர் திருஞானசம்பந்தர் ஆகிய பெருமக்கள் பாடியருளிய திருப்பதிகங்களில் திருமூலர் அருளிய திருமந்திரப் பாடல்களின் சொற்றொடர்களும் பொருள்களும் பலவிடங்களில் எடுத்தாளப்பட்டிருத்தலாலும் திருமந்திர மாலையின் ஆசிரியராகிய திருமூல நாயனாரது காலம் கி.பி ஏழாம் நூற்றாண்டிற்கு முற்பட்டதாதல் நன்கு தெளியப்படும்.

நந்தியருள் பெற்ற நான்மறை யோகியார் மூலனுடம்பிற் புகுந்தபின் திருவாவடுதுறையில் மூவாயிரம் ஆண்டுகள் சிவயோகத் தமர்ந்து ஆண்டுக்கொரு திருப்பாடலாக மூவாயிரந் திருமந்திரப் பாடல்களை அருளிச்செய்தார் எனச் சேக்கிழார் திருமூலநாயனார் புராணத்திற் குறித்துள்ளார். இங்ஙனம் ஆண்டுக்கொரு பாடலாக மூவாயிரம் பாடல்களும் பாடப்பெற்றன என்பதற்குத் திருமந்திரத்தில் தெளிவான சான்றெதுவும் காணப்படவில்லை. எனினும், சேக்கிழாரடிகள் கூறுமாறு திருமூலர் இந்நிலவுலகில் நெடுங்காலம் சிவயோகத்தில் அமர்ந்து இருந்தார் என்பது,

**'ஒப்பில் எழுகோடி யுகமிருந்தேனே' (திருமந்திரம்-74)**

எனவும்,

**'இருந்தேன் இக்காயத்தே எண்ணிலிகோடி' (திருமந்திரம்-80)**

எனவும் வரும் திருமூலர் வாய்மொழிகளால் நன்கு துணியப்படும். மேற்காட்டிய திருமந்திரத் தொடரில் ஆசிரியர் 'இக்காயத்தே' என்று சுட்டியது, சிவயோகியார் ஆகிய அவர், மூலன் என்னும் இடையனுடம்பிற் புகுந்து நிலைபெற்ற பின்னராதலின், அவரால் 'இக்காயம்' எனச் சுட்டப்பட்ட உடம்பு மூலனுடைய உடம்பெனக் கொள்ளுதல் பொருந்தும். எண்ணிலிகோடி என்றது அளவுட்படாத பல்லாண்டுகள் எனப் பொருள் தந்து நின்றது.

திருமூலர் திருந்திரமாலையை அருளிச் செய்த காலத்து இந்நாட்டின் தாய்மொழியாகிய தமிழும் தமிழகத்தைச் சூழவுள்ள புறநாடுகளாகிய பதினேழ் நிலங்களின் தாய்மொழிகளாகிய

பதினேழு மொழிகளும் ஆகப் பதினெண் மொழிகள் வாயிலாக வெளிவந்த மெய்ந்நூற் பொருள்களை உணர்ந்துகொள்வதில் அறிஞர் பலரும் ஆர்வமுடன் ஈடுபட்டிருந்தார்கள். வெவ்வேறு நாடுகளுக்கு உரியனவாய்ச் சொல்வகையால் வேறுபட்ட இப்பதினெண் மொழிகளையும் அண்ட முதல்வனாகிய இறைவனே மக்கட்குலத்தார் அறமுதற்பொருள்களை யுணர்ந்து உய்தி பெறுதற்குரிய சாதனங்களாகப் படைத்தளித்தனன் எனச் சான்றோர் பலரும் நன்கு மதித்துப் போற்றினார்கள். மேற்குறித்த பதினெண் மொழிகளில் கூறப்படும் அறமுதற் பொருள்களை உள்ளவாறு கேட்டு உணர்ந்தவர்களே பண்டிதர் என அக்காலத்திற் சிறப்பாக மதித்துப் பாராட்டப் பெற்றனர். இச்செய்தி,

**பண்டித ராவார் பதினெட்டுப் பாடையுங்**
**கண்டவர் கூறுங் கருத்தறிவார் என்க.**
**பண்டிதர் தங்கள் பதினெட்டுப் பாடையும்**
**அண்ட முதலான் அறஞ் சொன்னவாறே. (திருமந்திரம்-59)**

எனவரும் திருமந்திரத்தால் இனிது புலனாதல் காணலாம். பதினெண்மொழிகளாவன இன்னவென்பது,

**"அங்கம் வங்கம் கலிங்கம் கௌசிகம்**
**சிந்து சோனகம் திராவிடம் சிங்களம்**
**மகதம் கோசலம் மராடம் கொங்கணம்**
**துளுவம் சாவகம் சீனம் காம்போஜம்**
**பருணம் பப்பரம் எனப் பதினெண் பாடை"**

எனவரும் சேந்தன் திவாகரத்தாலும், "ஒன்பதிற்றிரண்டினிற் றமிழொழி நிலத்தினும்" (நன்னூல் சூ 273) எனவரும் தொடர்க்கு, "தமிழ்மொழி பதினேழ் நிலமாவன:

**சிங்களஞ் சோனகஞ் சாவகஞ்சீனந் துளுக்குடகங்**
**கொங்கணங் கன்னடங் கொல்லந் தெலிங்கம் கலிங்கம் வங்கம்**
**கங்க மகதங் கடாரங் கடவுங் கடுங்குசலந்**
**தங்கும் புகழ்த்தமிழ் சூழ் பதினேழ்புவி தாமிவையே.**

என்பன. அருமணம், காம்போசம், ஈழம், கூவிளம், பல்லவம், அங்கம், என்பன முதலானவை இவற்றின் பரியாயமும் பேதமுமாய் இவற்றுள்ளே அடங்குமென்க" என மயிலைநாதர் கூறிய உரை விளக்கத்தால் உய்த்துணரப்படும்.

மேற்குறித்த பதினெண் மொழிகளுள் தமிழுடன் ஏனைய பதினேழு மொழிகளையும் இணைத்துப் பதினெண் மொழிகள் எனத் தொகைப்படுத்தி வழங்கும் வழக்கம் தொல்காப்பியத்திலும் சங்க நூல்களிலும் காணப்படாமையால், பதினெண் மொழி

களைக் குறித்த இத்திருமந்திரம் கடைச்சங்க காலத்திற்குப்பின் இயற்றப் பெற்றதெனக் கருதுதல் பொருந்தும்.

திருமூலர் அருளிய திருமந்திரமாலையில், திருவள்ளுவர் அருளிய திருக்குறளிலுள்ள சொற்றொடர்களும் பொருள்களும் அவ்வாறே எடுத்தாளப் பெற்றுள்ளன.

திருமூலர், தம் காலத்தில் நிலவிய தமிழ்நாட்டின் பகுதிகளைத் 'தமிழ் மண்டலம் ஐந்து' எனக் குறித்து உள்ளார். எனவே அவர் காலத்தில் தமிழகம் ஐந்து மண்டலங்களாகப் பகுக்கப்பட்டு ஆளப்பட்டதெனத் தெரிகிறது. ஆசிரியர் தொல்காப்பியனார் வாழ்ந்த காலத்தில் தமிழகம் சேர சோழ பாண்டியர்களாகிய மூவேந்தர்களது ஆட்சிக்கு உட்பட்டதாய், மூன்று தனி நாடுகளாய் விளங்கியதென்பது, 'வண்புகழ் மூவர்தண்பொழில் வரைப்பு' (தொல்... செய்யுளியல்-சூ.79) எனத் தொல்காப்பியனார் தமிழ்நாட்டினைக் குறிப்பிடுதலால் இனிது விளங்கும். சேர சோழ பாண்டிய நாடுகளாகிய இவை முறையே குடபுலம், குணபுலம், தென்புலம் எனவும் வழங்கப்பட்டன.

கடைச்சங்க காலத்திறுதியிற் சேர வேந்தர்க்குரிய குடபுலம் மலைநாடு கொங்குநாடு என இரு பகுதிகளாகவும், சோழ வேந்தர்க்குரிய குணபுலம் சோழநாடு தொண்டைநாடு என இரு பகுதிகளாகவும் பிரிந்து தனித்தனி நாடுகளாயின. இவ்வாறு தமிழ்நாடு சேரமண்டலம், பாண்டிய மண்டலம், சோழ மண்டலம், தொண்டை மண்டலம், கொங்கு மண்டலம் என ஐந்து மண்டலங்களாகப் பிரிந்து தனித்தனி ஆட்சியில் நிலைபெற்ற காலம் கடைச்சங்க காலத்திற்குப பின் கி.பி.மூன்றாம் நூற்றாண்டினை ஒட்டியதாதல் வேண்டும். இவ்வாறு தமிழகம் ஐந்து மண்டலங்களாகப் பிரிந்து இருந்த செய்தியைத் திருமூலர் தாம் அருளிச் செய்த திருமந்திரத்தில் குறிப்பிடுதலால், அந்நூல் தோன்றிய காலம் கி.பி. மூன்றாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டதென்பது ஒருவாறு துணியப்படும்.

கொங்குநாடு சேர வேந்தரது ஆட்சியிலிருந்து விலகித் தனியுரிமை பெற்ற அந்நாளில் அந்நாட்டினை அடுத்துள்ள புறநாடுகளிலிருந்து தமிழரல்லாத அரசியலாட்சிக்கு உட்படாத அறைபோகு குடிகளும், வழிப்போவோரைத் துன்புறுத்திப் பொருள் கவரும் ஆறலைப்போரும் ஆங்காங்கே இடம் பெற்றனர். அதனால் அந்நாட்டில் மக்கள் அமைதியாகப் போக்குவரவு புரிதற்குரிய பாதுகாப்பு இல்லாது போயிற்று. வழிப்போவோர் தம்கையிலுள்ள பொருள்களோடு தாம் உடுத்துள்ள ஆடையினையும் பறிகொடுக்க வேண்டிய அவல நிலைக்கு உள்ளாயினர். இங்ஙனம் ஆறலைப்போர் பல்கி வாழ்ந்த

கொங்கு நாட்டிற் புதியராய்ச்சென்றோர் பாதுகாப்பற்ற நிலையிற் பெரிதும் வருத்தமுற்ற செய்தியை,

**ஆர்வ முடையவர் காண்பர் அரன்தனை**
**ஈர முடையவர் காண்பார் இணையடி**
**பார முடையவர் காண்பார் பவந்தன்னைக்**
**கோர நெறிகொடு கொங்குபுக்காரே. (திருமந்திரம்-273)**

எனவரும் திருப்பாடலில் திருமூலர் எடுத்துக்காட்டியிருத்தலும், கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிலிருந்தவராகக் காருதப்படும் முன்றுறையரையனார் என்பார்,

**'ஏமரார் கொங்கேறினார்' (பழமொழி நானூறு-282)**

என இதனை ஒரு பழமொழியாக எடுத்தாண்டிருத்தலும் இங்கு ஒப்புநோக்கி யுணரத்தக்கனவாகும். இத்துயரநிலை சுந்தரமூர்த்தி சுவாமிகள் காலம் வரையிலும் தொடர்ந்திருந்த தென்பது,

**'கொங்கேபுகினும் கூறைகொண் டாறலைப் பாரிலை'(7-92-3)**

எனவரும் தேவாரத் தொடரால் உணரப்படும்.

திருமந்திரத்தில், தில்லைத் திருச்சிற்றம்பலத் திருக்கோயில் பொன்னம்பலம் எனப்போற்றப்பட்டிருத்தலால் தில்லையிற் கூத்தப்பெருமான் ஆடல் புரிந்தருளும் திருவம்பலம் பொன்வேயப்பெற்ற பின்னரே இத்திருமந்திரப் பனுவலைத் திருமூலர் இயற்றியிருத்தல் வேண்டும் எனக்கருதுதல் பொருத்முடையதாகும். தில்லையிற் கூத்தப்பெருமான் அருட்கூத்தியற்றும் திருவம்பலத்திற்கு முதன் முதற் பொன்வேய்ந்து அதனைப் பொன்னம்பலமாக்கிய புகழுக்கு உரியவன் கி.பி.ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த பல்லவ மன்னனாகிய சிம்மவர்மன் என்பவர். * (*தி.வை.சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் எழுதிய தமிழிலக்கிய வரலாறு (இருண்ட காலம்) பக்கம் 83.) எனவே அவ்வேந்தனாற் பொன்வேயப்பெற்ற திருவம்பலத்தைப் பொன்னம்பலம் என்ற பெயராற் போற்றிய திருமந்திரமாகிய இந்நூல், கி.பி. ஐந்தாம் நூற்றாண்டின் இறுதியிலோ அன்றி ஆறாம் நூற்றாண்டின் முற்பகுதியிலோ நிறைவு பெற்றதெனக் கருதுதல் ஏற்புடைதாகும் * (*தி. வை. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் எழுதிய தமிழிலக்கிய வரலாறு (இருண்ட காலம்) பக்கம் 83.)

திருமூலர் இப்புவிமேல் மூவாயிரம் ஆண்டுகள் சிவயோகத் தமர்ந்திருந்து தமிழ் மூவாயிரம் ஆகிய திருமந்திரமாலையைப் பாடியருளினார் எனச் சேக்கிழாரடிகள் கூறுதலால், திருமூலர் திருவாவடுதுறையிற் சிவபோதியின் கீழ்ச் சிவயோகத்தமர்ந்த காலம் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிற்குமுன் பன்னூறாண்டுகளாகும் எனக் கருதுதல் பொருந்தும். எனவே எண்ணிலிகாலம்

சிவயோகத்தமர்ந்த அத்தவ முனிவர் கடைச் சங்கம் நிலவிய காலப் பகுதியிலும் தமிழ் நாட்டில் இருந்திருத்தல் கூடும் என எண்ணுதற்கு இடமுண்டு. தொல்காப்பியம் புறத்திணையியல் 20-ஆம் சூத்திரவுரையில்,

"யோகிகளாய் உபாயங்களான் முக்காலமுணர்ந்த மாமூலர் முதலியோர் அறிவன் தேயத்து அனை நிலைவகையோராவர். அவர்க்கு மாணாக்கராகத் தவஞ்செய்வோர் தாபதப் பக்கத்தவராவர்"

என நச்சினார்க்கினியர் கூறும் விளக்கம், பெருமை வாய்ந்த சிவயோகியாராகிய திருமூலநாயனாரையும் அவர்தம்மாணக்கர் களையும் குறித்ததெனக் கருத வேண்டியுளது.

யாப்பருங்கலம் செய்யுளியற் புறநடைச் சூத்திரவுரையில் ஆரிடப்போலி என்னும் செய்யுளமைப்பினை விளக்கக் கருதிய யாப்பருங்கல விருத்தியுரையாசிரியர்,

**"மனத்தது பாடும் மாண்பினோரும்**
**சினத்திற் கெடப்பாடுஞ் செவ்வியோரும்**
**மூனிக்கணச் செய்யுள் மொழியவும் பெறுப"**

என்பது பாட்டியல் மரபு எனக்குறித்து,

**'இலை நல வாயினும் எட்டி பழுத்தால்**
**குலை நல வாங்கனி கொண்டுணலாகா-விலையான்**
**முலை நலங் கொண்டு முறுவலிக் கின்ற**
**வினையுடை நெஞ்சினை வேதுகொளீரே'.**
**(திருமந்திரம்-204)**

இம் மூலர்வாக்கு மிக்குவந்தவாறு கண்டு கொள்க.* (*இத்திருமந்திரத்தின் இரண்டாம் அடியின் இறுதியில் மிக்குவந்த 'விலையான்' என்ற தனிச்சொல், திருமந்திரச் சுவடிகளிலும் வெளிவந்த பதிப்புக்களிலும் காணப்படவில்லை. மேற்குறித்த தனிச்சொல் இதன்கண் இன்றியமையாது இடம் பெறத்தக்க சொல்லும் அன்று. அன்றியும் தமிழ் மூவாயிரமாகிய திருமந்திரப் பாடல்களில் இவ்வாறு தனிச்சொற்பெற்று மிக்குவரும் நிலையில் இதுபோன்று வேறு ஒரு பாடல் கூடக்கிடைக்கவில்லை. எனவே யாப்பருங்கல விருத்தியுரையாசிரியரால் மிக்குவந்ததாகக் காட்டப் பெற்ற இப்பாடல், திருமந்திரம் 204ஆம் திருப்பாடலைத் தவறுபட மனப்பாடஞ் செய்தோர் வாயிலாகத் திரிந்து வழங்கிய பாடலெனக் கொள்ள வேண்டியுளது) எனத் திருமந்திரம் 204ஆம் செய்யுளை எடுத்துக் காட்டியுள்ளார்.

திருமூலர், வடமொழியும் தென்றமிழும் மறைகள் நான்கும் தெளிந்துணர்ந்து சிவஞானச் செல்வராய்த் தாம் சிந்தித்துணர்ந்த

சிவாகம உண்மைகளை இமயமுதற் குமரிவரையுள்ள இந்நாட்டவர் பலரும் ஓதியுணர்ந்து உய்தி பெறுதல் வேண்டும் என்னும் அருள் உள்ளத்தால் இத்திருமந்திர மாலையை அருளிச் செய்தாராதலின், அவரருளிய திருமந்திரப் பாடல்களில் சமய சாத்திரக் குறியீடுகளாகிய பதி, பசு, பாசம்; ஆணவம், கன்மம், மாயை; சித்து, அசித்து; சரியை, கிரியை, யோகம், ஞானம்; சத்து, அசத்து, சதசத்து; வேதாந்தம், சித்தாந்தம், நாதாந்தம், போதாந்தம், யோகாகந்தம், கலாந்தம்; நாதம், விந்து, சத்தி, சாத்து மான், வயிந்தவம், சத்தாதி வாக்குமனாதிகள், சாக்கி ராதீதம், சுத்தம், துரியம், விஞ்ஞானர், பிரளயா கலத்து அஞ்ஞானர், சகலத்தின் அஞ்ஞானர்; இயமம், நியமம், ஆதனம் பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி; கவச நியாசங்கள் முத்திரை; பத்மாசனம், பத்திராசனம், சிங்காதனம்; பூரகம், கும்பகம், ரேசகம், என்றாற் போலும் வடசொற்களும் தொடர்களும் அக்காலத்திற் பொது மக்களிடையே வழங்கிய வழக்குச் சொற்கள் சிலவும் ஆங்காங்கே இடம் பெறுவனவாயின. தமிழ் வடமொழியாகிய இரு மொழிகளையும் கலந்து திருமூலர் தாமே படைத்துக் கூறிய அணுவன் (2501), மாயாள் (399) என்றாற் போலும் புதுச் சொற்களும் இடம் பெற்றுள்ளன. வேத ஆகமங்களின் முடிந்த முடிபாகிய சைவ சமயம் என்ற பொருளிற் சித்தாந்தம் என்ற வட சொற்றொடரை முதன் முதல் வழங்கியவர் திருமூலரேயாவர். சுந்தரர் காலத்துப் பல்லவ மன்னாகிய இரண்டாம் நரசிங்கவர்மன், தான் காஞ்சியில் எடுப்பித்த கைலாசநாதர் கோயிலிற் பொறித்துள்ள வடமொழிக் கல்வெட்டில் சைவ சித்தாந்த நெறியைப் பின்பற்றுவன் எனத் தன்னைக் கூறியிருப்பது* (*தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி I எண் 25.) இங்கு அறித்தக்கதாகும்.

ஆரியமும் தமிழுமாகிய இருமொழிகளையும் நன்கு பயின்று வடநாடு தென்னாடுகளிற் போக்குவரவு புரிந்த தவமுனிவராகிய திருமூலர் அருளிய பாடல்களில் சமய சாத்திரக் குறியீடுகளாகிய வடசொற்களும் அக்காலத்திற் பொது மக்களிடையே வழங்கிய வழக்குச் சொற்கள் சிலவும் விரவிக் காணப்படுதல் இயல்பேயாகும். அகவே திருமந்திரப் பாடல்களின் சொல்லமைப்பு ஒன்றே. பற்றித் திருமூலர் காலத்தின் தொன்மையினைக் குறித்து ஐயுறுதற்கு இடமில்லையென்க.

திருமூலர், தம் நூலில் ஆறு சமயங்கள் எனவும் அவற்றிற் பலவாகிய நூறு சமயங்கள் எனவும் நாட்டில் வழங்கிய பிற சமயங்கள் பற்றிக் குறித்துள்ளார். ஆயினும் வேத வழக்கொடு மாறுபட்ட புறச் சமயங்களாகிய புத்த சமண மதங்களைப் பற்றிய குறிப்பு எதுவும் திருமந்திரத்தின் புறச்சமய தூடணம் பற்றிய

பாடல்களில் இடம் பெறவில்லை. இதனைக் கூர்ந்து நோக்குங்கால், புத்த சமண மதங்கள் தமிழ்நாட்டிற் புகுந்து யாண்டும் பரவி வேரூன்றி நிலைபெறுதற்கு முன்னரேயே சிவயோகியராகிய திருமூலர், சிவாகமப் பொருள் குறித்த இத்திருமந்திரப் பனுவலை இயற்றியருளினார் என்பது இனிது விளங்கும்.

திருமூலர் மூலனுடம்பிற் புகுமுன் தமக்குரிய முன்னைய உடம்புடன் கூடிய நிலையில் அவர் பாண்டிய நாட்டிற் பிறந்தவ ரென்றும், அவர்க்குப் பெற்றோர் இட்டபெயர் சுந்தரன் என்பதாமென்றும், அவர் பொதியமலையில் அகத்தியர் பால் தமிழ்க்கல்வி பயின்றாரென்றும், பின் அவரருளாற் கயிலை சார்ந்து நந்தி பெருமான்பால் ஞான நூல்களைக் கற்று நாதர் என்னும் சிறப்புப் பெயர் பெற்றாரென்றும், அவர் திருக்கயிலையிலிருந்து தென்றிசை போந்தது கி.மு. 6000-க்கும்-கி.மு. 3100க்கும் இடைப்பட்ட காலம் என்றும் கி.மு. 6000 இல் திருக்கயிலையிலிருந்து பதஞ்சலி வியாக்கிர பாதர் ஆகிய முனிவர்களுடன் தில்லைக்கு வந்து நடன தரிசனங்கண்டு வடகயிலை சென்று தவமிருந்தாரென்றும், கி.மு. 3100 இல் அகத்திய முனிவரைக் காணவேண்டி இரண்டாம் முறையாகத் தென்றிசைக்கு வந்தாரென்றும், வரும் வழியில் சாத்தனூரில் ஆவுறு துயரங்கண்டு மூலனுடம்பிற் புகுந்து திருவாவடு துறையில் 3000 ஆண்டுகள் சிவயோகத்தமர்ந்திருந்து மூவாயிரம் திருமந்திரங்களை அருளிச் செய்து கி.மு.100 ஆம் ஆண்டில் மீளவும் வடகயிலை சென்று பிறவாநெறி பெற்றாரென்றும் திருமூலராகிய சிவயோகியாரது முன்னைய உடம்பின் பிறப்புப் பற்றியும் அவர் வாழ்ந்த காலம் பற்றியும் ஊகித்து ஆராய்ந்து முடிவு கூறுவாறுமுளர்.* (*துடிசைக்கிழார் அ.சிதம்பரனாரவர்கள் எழுதிய திருமூலர் வரலாறு நோக்குக.) இவர்களது ஆராய்ச்சியிற் கண்ட முடிபுகள் இவர் தம் கருதலளவையின் துணை கொண்டே வெளியிடப்பெற்றன வெனக் கொள்ளவேண்டியுளது.

திருமூலராகிய சிவயோகியார் முந்தைய உடம்புடன் இருந்த காலத்து அவர் பிறந்த நாடு ஊர் குடி, பெற்றோர் முதலிய வரலாற்று நிகழ்ச்சிகளைக் குறித்துத் திருத்தொண்டர் புராண ஆசிரியராகிய சேக்கிழாரடிகள் திருமூல நாயனார் புராணத்தில் ஒன்றும் கூறவில்லை. திருக்கயிலாயத்தில் 'நந்தி திருவருள்-பெற்ற நான்மறை யோகிகள் ஒருவர்; அவர்தாம் அணிமாதி சித்தி பெற்றுடையார்; 'குறுமுனிபால் உற்றதொரு கேண்மையினால் உடன் சில நாள் உறை உற்றவதற்கு நற்றமிழின் பொதியமலை நண்ணுதற்கு வழிக் கொண்டார்' என்ற அளவே சிவயோகியாரது முன்னையுடம்பிற்குரிய வரலாற்றுக் குறிப்புகளைச் சேக்கிழார்

குறித்துள்ளார். திருமூலராகிய சிவயோகியார் முந்தையுடம்புடன் இருந்த காலத்து அவர்க்குப் பெற்றோர் இட்டபெயர் சுந்தரன் என்பதாம் எனத் துடிசைக்கிழாரவர்கள் துணிந்து கூறுதற்குச் சான்றாக அமைந்தது.

**வந்த மடமேழு மன்னுஞ்சன் மார்க்கத்தின்**
**முந்தி யுதிக்கின்ற மூலன் மடவரை**
**தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரஞ்**
**சுந்தர வாகமச் சொல் மொழிந்தானே. (திருமந்திரம்-101)**

எனவரும் திருப்பாடலாகும். இது திருமந்திரத்திற் குருமட வரலாறு என்னுந் தலைப்பிலுள்ள இரண்டு பாடல்களுள் ஒன்று. இது திருமூலர் வாக்கன்று என்பதும் திருமூலர் வழியிற் பின் வந்தார் ஒருவர் அவரது நூலைக்குறித்துக் கூறியதென்பதும் 'மூலன்... மொழிந்தான்' எனப் படர்க்கையில் அமைந்திருந்தலால் ஆகமச் சொல் மொழிந்தானே' என்ற தொடரில் உள்ள 'சுந்தர' என்ற சொல் சுந்தர ஆகமம் என ஆகமத்துக்கு அடை மொழியாய் 'இறைவனருளிய திவ்யாகமம்' என்னும் சிறப்புணர வந்ததாகும். ஆகவே இதனைத் திருமூலரது முந்தையாக்கையிற் பெற்றோர் இட்ட பெயர் எனத் துணிந்து கூறுதல் சிறிதும் பொருந்தாது. இப்பாடலின் நான்காமடிக்கு உரியதாக அவர் கொண்ட 'சுந்தரனாகமச் சொல் மொழிந்தானே' என்ற பாடம் எந்தச் சுவடியிலும் இருப்பதாகத் தெரியவில்லை. அவ்வாறு பாடங்கொண்டாலும், 'சுந்தரன் ஆகமம்' என்ற தொடர்க்குச் சுந்தரனாகிய சிபெருமானால் அருளிச் செய்யப்பெற்ற ஆகமம் எனப்பொருள் கொள்ளுதலே ஏற்புடைய தாகும்.

**வைத்த பரிசே வகைவகை நன்னூலின்**
**முத்தி முடிவிது மூவாயிரத்திலே**
**புத்திசெய்து பூர்வத்து மூவாயிரம் பொது**
**வைத்த சிறப்புத் தருமிவை தானே.**
**(திருமந்திரம்-பாயிரம்-100)**

எனவரும் திருப்பாடல் திருமந்திரப் பொருளின் சிறப்பினை அறிவுறுத்துவதாகும். நன்னூலாகிய சிவாகமங்களில் நிரல்பட வைத்து ஓதிய முறையானே முத்தியின் முடிந்த பொருளாகிய சைவ சித்தாந்தமாகிய இது, தமிழ் மூவாயிரமாகிய இந்நூலிலே விளங்கக் கூறப்பட்டதாகும். முன்னுள்ள ஆகமங்களைச் சிந்தையிற் கொண்டு அறிவினால் ஆராய்ந்து அருளிச் செய்யப் பெற்ற இம்மூவாயிரம் திருப்பாடல்களும், உலகியல் வேத நூலொழுக்கமாகிய பொதுவும் நிலவு மெய்ந்நெறியாகிய சைவத்தின் சிறப்பும் ஆகிய இவ்விருதிறப் பொருள்களையும் தரும் என்பது இதன் பொருள்.



# திருமந்திர நூலமைப்பு

திருமூலநாயனார் அருளிய திருமந்திரம் தமிழாகமமாக விளங்குதலை யாவரும் அறிவர். சிவாகமங்கள், தந்திரம், மந்திரம், உபதேசம் என மூவகை உரையளவைகளையும் உறுபாகக் கொண்டன. அவற்றுள் தந்திரகலையாவது, வேத ஆகமங்களின் வகையாகிய கருமகாண்டம் ஞானகாண்டம் உபாசனா காண்டம் என்னும் மூவகைகளுள் கருமகாண்டம் பற்றிப் பின்னொடுமுன் மாறுகோளின்றி அனுட்டித்தலை அறிவுறுத்துவது. மந்திரகலை என்பது, உபாசனா கண்டம் பற்றி மன முதலியனஅடக்கித் தெய்வத்தை வழிபடும் முறையினை விரித்துரைப்பது. உபதேசகலை என்பது, ஞானகாண்டம் பற்றித் தனக்கு முதலும் முடிவுமில்லாத இறைவன் தன்னின் வேறில்லாத எண்குண முடையனாதல் முதலிய தன்மைகளைத் தான் உணருமாறும் பிறர்க்கு உணர்த்துமாறும் விளங்க அறிவுறுத்துவதாகும்.* (*சிவஞான சித்தியார், சுபக்கம், பிரமாண இயல் 13, சிவஞான முனிவருரை) இனி, "சாத்திரங்களை முன்னொடுபின் மலைவறக் கொள்ளுகிறது தந்திரகலையாம் என்றும், கரணங்களுடைய வியாபாரங்களை அடக்கி அவரவர் தங்களுக்கு வேண்டிய தெய்வங்களை அந்தந்த மந்திரங்களினாலே வழிபடுகிறது மந்திரகலையாம் என்றும், தனக்கு முதலும், முடிவுமில்லாத பரமேசுவரனுடைய சிவஞானத்தைப் பக்குவான்மாக்களுக்குப் போதிப்பது உபதேசகலையாம் என்றும்" * (*மேற்படி, நிரம்ப அழகிய தேசிகர் உரை). ஞானகாண்டம் ஒன்றே பற்றி இம்மூவகைக் கலைகளின் இலக்கணங்களைப் பகுத்துரைத்தலும் ஏற்புடையதேயாகும். ஆகமங்களுக்கு அங்கமாகிய இம்மூவகை உரையளவைகளையும்,

**அனாதியே யமலனாய அறிவனூ லாகமந்தான்**
**பினாதி மாறின்றிப் பேணல் தந்திரம், மந்திரந்தான்**
**மனாதிகள் அடக்கித் தெய்வம்வழிபடும் வாய்மையாகும்,**
**தனாதி யீறிலான்றன் தன்மை யுணர்த்துதல் உபதேசந்தான்.**
**(சித்தியார்-சுபக்கம்-13)**

எனவரும் திருவிருத்தத்துள் அருணந்தி சிவாசாரியார் சுருக்கமுந் தெளிவும் பொருந்த விளக்கியுள்ளார்.

மேற்குறித்த தந்திரம், மந்திரம், உபதேசம் என்னப்படும் மூவகை உரைத்திறங்களும் ஒருங்கமைந்த செந்தமிழ்ச் சிவாகமமாகத்

திகழ்வது, திருமூல நாயனார் அருளிய இத்திருமந்திர மாலையாகும். தந்திரம், மந்திரம், உபதேசம் எனப்படும் மூன்றனுள் நடுவே நின்ற மந்திரம் என்பது, முன்னுள்ள தந்திரத் தோடும் பின்னுள்ள உபதேசத்தோடும் பிரிவின்றியியைந்த தொடர்பினதாகிய தலைமைபற்றித், திருமூலர் இறைவன் திருவருளாற் சிந்தை செய்து அருளிய இத்தமிழாகமத்தை 'மந்திரமாலை' எனக் குறித்துள்ளார்.* (* திருமந்திரம் 86.) தமிழ் மூவராயிரமாகிய இத்திருமந்திரப் பாடல்கள் ஒன்பது – தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரம் சுந்தரவாகமச் சொன்மொழிந்தானே (101) எனவரும் இந்நூலின் பாயிரப் பாடலால் அறியப்படும்.

சைவ சமயத்துட் கூறப்படும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை நன்னெறிகளையும் செந்தமிழ்ப் பாடல்களால் அறிவுறுத்த எண்ணிய திருமூலர், நாற்சீரடி நான்கு கொண்ட கலிவகை யாப்பினால் இத்திருமந்திரமாலையை அருளிச்செய்துள்ளார். ஒற்று நீக்கி எழுத்து எண்ணுங்கால் அடிதோறும் பன்னிரெண்டெழுத்தும், ஈற்றடி நேரசையினைக் கொண்டு தொடங்கியதாயின் பதினோர் எழுத்தும் பெற்று வெண்டளை பிழையாது வருவது அத்திருமந்திரயாப்பாகும். * (* பன்னிரு திருமுறை வரலாறு முதற்பகுதி) செப்ப லோசை தழுவிய இக்கலிப்பாவகை திருமூலர் திருமந்திரத்தில் தான் முதன்முதற் காணப்படுகின்றது. எனவே இதனைத் திருமந்திரயாப்பு என வழங்குதல் தகும்.* (*விபுலானந்தர்-யாழ்நூல்-பக்கம் 231.)

இந்நூலுக்கு ஆசிரியர் இட்டபெயர் திருமந்திர மாலை என்பதாகும். 'ஞானமுதல் நான்குமலர் நற்றிரு மந்திரமாலை' எனச் சேக்கிழாரடிகள் இந்நூற்பெயரைக் குறித்தருளினார். 'மூலர் திருமந்திரமாலை' என்றார் உமாபதிசிவம். ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம் (திருமந்-85) எனவும், 'மறப்பிலர் நெஞ்சினுள் மந்திரமாலை, உறைப்பொடுங்கூடிநின் றோதலுமாமே' (திருமந்-86) எனவும் இந்நூற்பாயிரம் கூறுதலால், இந்நூலுக்கு ஆசிரியர் இட்ட பெயர் திருமந்திரமாலை என்பது நன்கு தெளியப்படும். இந்நூல், மூவாயிரந் தமிழ்ப்பாடல்களை யுடைமைபற்றித் 'தமிழ் மூவாயிரம்' என வழங்குதலும் உண்டு. 'முன்னிய அப்பொருண் மாலைத் தமிழ்மூவாயிரஞ் சாத்தி' என்பது பெரியபுராணம்.

இந்நூல் தொல்காப்பியனார் கூறிய எழுநிலத்து எழுந்த செய்யுட்களுள் மறைமொழிகிளந்த மந்திரத்தான* (*தொல்-செய்யுளியல் சூ-165) செய்யுளின் பாற்படுதலின், திருமந்திரம் என வழங்கப் பெறுவதாயிற்று. தாம் சொல்லிய சொல்லின் பொருண்மை யாண்டும் குறைவின்றிப் பயன்தரச் சொல்லும்

ஆற்றலுடைய நிறைமொழி மாந்தராகிய பெரியோர் 'இஃது இவ்வாறாகுக' எனத் தமது ஆணையாற் சொல்லப்பட்டு, அவ்வாற்றல் அனைத்தையும் தன்கட் பொதிந்து வைத்துள்ள செறிவுடைய நன்மொழியே மந்திரம் எனப்படும். இதன் இயல்பினை நிறைமொழிமாந்தர் ஆணையிற் கிளந்த, மறைமொழி தானேமந்திரமென்ப* (*தொல்-செய்யுளியல் சூ-171) என்ற நூற்பாவில் தொல்காப்பியர் தெளிவாகப் புலப்படுத்தி உள்ளார். இக்கருத்தேபற்றி ஆசிரியர் திருவள்ளுவரும்,

**'நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து**
**மறைமொழி காட்டி விடும்'** (28)

எனவரும் திருக்குறளில், பெரியோர் அருளிய மந்திர மொழியின் பெருமையை நன்கு விளக்கியுள்ளார். "நிறைமொழி என்பது, அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைப் பயந்தேவிடும்மொழி என்பர் பரிமேலழகர். நிறைமொழி மாந்தராவார், இருவகைப் பற்றுக்களையும் நீக்கி ஐம்புலன்களையு மடக்கி எவ்வுயிர்க்கும் அருளுடையராய் வாழும் பெரியோர். ஆணையிற்கிளத்தலாவது, 'இஃது இவ்வாறாகுக' எனத் தமது ஆற்றல் தோன்றச் சொல்லுதல். மறைமொழி-புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்துச் சொல்லும் சொற்றொடர் என்பர் பேராசிரியர். இனி மறைமொழி என்பதற்கு, 'பலர்க்கும் புலப்படாது மறைந்துள்ள அரிய உண்மைகளைத் தன்னகத்தே பொதிந்துள்ள மொழி எனப் பொருள் கொள்ளுதலும் பொருந்தும். சான்றோர் எண்ணிய வண்ணம் செயற்படுத்தற்குரிய ஆற்றல் முழுவதும் தன்கண் வாய்க்கப் பெற்ற மொழியே மந்திரம் எனப்படும் என்பார், அதனை 'வாய்மொழி' (செய்யுளியல் 75) என்ற பெயராலும் தொல்காப்பியர் குறித்துள்ளார்.

இவை தமிழ்மந்திரம் என்றற்கும், மந்திரந்தானே பாட்டாகி அங்கதம் எனப்படுவனவும் உள, அங்கதப்பாட்டு அல்லாத மறைமொழியே மந்திரம் என ஈண்டுச் சிறப்பித்து உரைக்கப்படும் என்றற்கும் 'மறைமொழி தானே' எனப் பிரித்துரைத்தார். எனவே சபித்தற்பொருட்டாகிய மந்திரச் செய்யுளை அங்கதப் பாட்டெனவும், வசைப்பொருட்டு ஆகாது உலக நலங்குறித்து வரும் மறைமொழியினையே மந்திரம் எனவும் வழங்குதல் ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்தென்பது நன்கு விளங்கும். திருமூலநாயனார் திருவாய் மலர்ந்தருளிய இத்திருமந்திரமாலை, முற்குறித்த தொல்காப்பிய இலக்கணத்தின்படி அமைந்த தமிழ் மந்திரங்களுக்குரிய சிறந்த இலக்கியமாகத் திகழும் சிறப்பு உடையதாகும். 'ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம் (85) எனத்

*திருமூல நாயனாரும், 'சிவயோகமிகு மந்திரமா முறையொன்று' என உமாபதி சிவாசாரியாரும் இதனை மந்திரப்பனுவலாகக் குறித்துள்ளமை இங்கு நினைக்கத்தகுவதாகும்.*

*தமிழ் மூவாயிரமாகிய இந்நூல், பொருள் தொடர் உடையதாய் மாலை போன்று அமைந்திருத்தலின் இதனை 'முன்னிய அப்பொருண்மாலைத் தமிழ் மூவாயிரம்' எனச் சேக்கிழாரடிகள் குறித்துள்ளார். சிவபெருமான், சிவயோகியாரது முன்னுடம்பை மறைப்பித்துச் சாத்தனூர் இடையனாகிய மூலனுடம்பின் நின்றவாறே திருவாவடுதுறையில் சிவயோகத் திருக்குபடி செய்தருளியது, திருமூலர் இறைவனூலாகிய சிவாகமங்களை இந்நிலவுலகில் தமிழால் வகுத்தருளிச் செய்ய வேண்டும் என்ற கருத்தினாலேயே என்பதும், இறைவரது இத்திருவருட் குறிப்பை உணர்ந்த திருமூலர் திருவாவடு துறையில் அம்மையப்பரை வணங்கிச் சிவயோகத்தமர்ந்திருந்து தமிழாகமமாகிய இத்திருமுறையினை அருளிச் செய்தாரென்பதும்,*

**தண்ணிலவார் சடையார்தாந் தந்த ஆகமப்பொருளை**
**மண்ணணின்மிசைத் திருமூலர் வக்கினால் தமிழ்வகுப்பக்**
**கண்ணிய அத்திருவருளால் அவ்வுடலைக் கரப்பிக்க**
**எண்ணிறைந்த உணர்வுடையார் 'ஈசரருள்' என உணர்ந்தார்.**

*எனவரும் சேக்கிழாரடிகள் வாய்மொழியாலும்,*

**'சிந்தைசெய் தாகமஞ் செப்பலுற்றேனே' (திருமந்திரம்-73)**

*எனவும்,*

**'என்னை நன்றாக இறைவப் படைத்தனன்**
**தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே' (திருமந்திரம்-81)**

*எனவும் வரும் திருமூலர் வாய்மொழிகளாலும் அறியப்படும்.*



# திருமந்திரப் பாடற்றொகை

திருமந்திரம் மூவாயிரம் திருப்பாடல்களையுடைய தென்பது, 'முன்னிய அப்பொருண்மாலைத் தமிழ் மூவாயிரஞ் சாத்தி' எனவரும் சேக்கிழார் வாய்மொழியாலும் 'மூலனுரை செய்த மூவாயிரந்தமிழ்' (திருமந்திரம்-99, 3046) 'முத்திமுடிவிது மூவாயிரத்திலே' (திருமந்திரம்-100) 'தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரம்' (திருமந்திரம்-101) எனத் திருமந்திரப் பாயிரத்திலும் நூன் முடிவிலும் வரும் பாடற்றொடர்களாலும் அறியப்படும். இப்போது திருமந்திர நூலில் உள்ளனவாக வழங்குவன காப்புச்செய்யுளோடு சேர்த்து 3048 பாடல்களாகும். திருமந்திரச் செய்யுட்கள் என வேறு நூல்களில் மேற்கோளாகக் காட்டப்பட்டுத் திருமந்திரச் சுவடிகளிலும் வெளிவந்த பதிப்புக்களிலும் நூலுட் சேர்க்கப்படாதுள்ளவை 11 பாடல்கள். சில ஏட்டுச் சுவடிகளில் இருந்து அச்சில் வெளிவராதனவாய்ச் சைவசித்தாந்த சமாசப் பதிப்பில் வெளியிடப் பெற்றவை 17 பாடல்கள். இவற்றின் மேலாக வெள்ளியம்பலவாணத்தம்பிரான் சுவாமிகளால் ஞானாவரணபாடியத்திலும் முத்தி நிச்சயப் பேருரையிலும் மேற்கோளாகக் காட்டப்பட்ட திருமந்திரப் பாடல்களில் இதுவரை வெளிவராதனவாக உள்ளவை ஏறக்குறைய முப்பது திருப்பாடல்களாகும். இவையெல்லா வற்றையும் சேர்த்தெண்ணுங்கால் திருமந்திரப் பாடல்களின் தொகை 3100 ஆக உயர்கின்றது.

இவ்வாறு திருமந்திர பாடற்றொகை மூவாயிரத்திற்கும் மேலாக மிகுந்து காணப்படுதற்கு இவற்றுட் சில பாடல்கள் பொருளியல்பு பற்றி இருமுறையும் மும்முறையுமாக இடம் பெற்றிருத்தலும், சில பாடல்கள் பாட பேதங்களால் உருத்திரிந்து வெவ்வேறு பாடல்களாக எழுதப்பெற்றிருத்தலும், திருமந்தி ரத்தைப்பயின்ற பிற்காலச் சான்றோர் சிலர் அவ்வருள் நூலின் சொற்பொருள் நடையினை அடியொற்றிப் பாடிய பாடல்கள சில யாப்பு ஒப்புமை பற்றித் திருமந்திரம் என்ற பெயராற் குறிக்கப்பட் டிருத்தலும் அவற்றுட் சில இந்நூலில் ஆங்காங்கே இடைச் செருகலாக இடம் பெற்றிருத்தலும் * (*"இந்நூலிற் காணப்படும் ஒட்டியாணம் (818) கடுக்கன் (1424), மல்லாக்கத் தள்ளல் (199), வட்டி (260), பொதுக்கென (2950), சிதம்பரம் (1726, 2653, 2722) முதலான சொல்வழக்கு இதில் இடைச் செருகலாகச் சேர்க்கப்பட்ட சில பாடல்கள் உண்டு என்பதை உறுதிப்படுத்தல் அறியத் தக்கது" (தி.வை.

*சதாசிவ பண்டாரத்தார் எழுதிய தமிழ் இலக்கிய வரலாறு. இருண்ட காலம் பக்கம் - 81))காரணங்களாகும்.*

திருமூலநாயனார் இத்திருமந்திர மாலையை 'ஒன்ற வன்றான்' என்ற திருப்பாடலை முதலாகக் கொண்டு தொடங்கி மூவாயிரந் திருப்பாடல்களால் நிறைவேற்றி அருளினார் என்பது,

**'ஏனவெயி றணிந்தாரை ஒன்றவன்றானென வெடுத்து'**
**'முன்னிய அப்பொருண் மாலைத்தமிழ் மூவாயிரஞ்சாத்தி'**

எனச் சேக்கிழாரடிகள் கூறுதலால் இனிது விளங்கும். 'ஒன்றவன்றான்' எனவரும் இத்திருப்பாடலுக்கு முன்னே,

**ஐந்து கரத்தனை யானை முகத்தனை**
**இந்தி னிளம்பிறை போலு மெயிற்றனை**
**நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்**
**புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.**

எனவரும் விநாயகர் வணக்கத் திருப்பாடல் இத்திரு மந்திரத்திற் காப்புச் செய்யுளாக இடம் பெற்றுள்ளது. மூத்த பிள்ளையா ராகிய யானைமுகக் கடவுளது வழிபாடு கி.பி. ஆறாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்தே தமிழ்நாட்டில் நிலைபெறுவ தாயிற்றென்பது ஆராய்ச்சியாளர் துணிபாதலானும், திருமந்திர நூலினுள்ளே சிவபெருமானது திருக்குமாரராகிய அறுமுகச் செவ்வேளையும் ஐயனாரையும் குறித்த திருமூலர், மூத்த பிள்ளையாரெனப் போற்றப்பெறும் விநாயகக்கடவுளைப் பற்றி ஒன்றும் குறிப்பிடாமையானும், ஒன்றவன்றான் என்ற பாடலையே திருமந்திரத்தின் முதற்பாடலாக ஆசிரியர் சேக்கிழார் குறித்தமையானும் 'ஐந்து கரத்தனை' என்னும் இத்திருப்பாடல் பின் வந்த சான்றோரொருவரால் இந்நூற்குக் காப்புச் செய்யுளாகப் பாடிச் சேர்க்கப்பட்டதாதல் வேண்டும்.* *(*ஆசிரியர் மறைமலையடிகளார் எழுதிய மாணிக்கவாசகர் காலம் பக்கம் - 81.)*

திருமந்திரத்தின் பாயிரப் பகுதியிலுள்ள 112 பாடல்களில் 67 பாடல்களே திருமூலர் வாக்கென்றும், ஏனைய 45 பாடல்களும் இடைச் செருகல்கள் என்றும், அவற்றைத் திருமூலருடைய மாணாக்கர்கள் பாடியிருத்தல் கூடுமென்றும் கருதுவாருமுளர்.* *(*மாவை. விசுவநாத பிள்ளையவர்கள் வெளியிட்ட திருமந்திரப் பதிப்பில் அறிஞர் ரமண சாஸ்திரியாரவர்கள் எழுதிய முகவுரை.)* திருமந்திர நூலின் தொடக்கத்திலமைந்த கடவுள் வாழ்த்துப் பாடல்களும், ஆசிரியர் தமது குருமரபின் வழிமுறை கூறும் குருபாரம்பரியமும், ஆசிரியர் தாம் இந்நூலை இயற்றுதற்குரிய இயைபினைப் புலப்படுத்தும் முறையில் தமது வரலாற்றினைத்

தாமே கூறுவதாக அமைந்த திருமூலர் வரலாறும், ஆசிரியர் கூறும் அவையடக்கமும் ஆகிய பகுதிகள், இந்நூலின் தொடக்கத்தே ஆசிரியர் வாய்மொழியாக விரித்துரைக்கத் தக்க பாயிரப் பொருள்களாதலின், இவை திருமூலநாயனார் வாக்காகவே கொள்ளத்தக்கன என்பதிற் சிறிதும் ஐயமில்லை.

**'சிந்தைசெய் தாகமம் செப்பலுற்றேனே'** **(திருமந்திரம் - 73)**

**'ஒப்பில் எழுகோடி யுகமிருந்தேனே'** **(ஷை 74)**

**'சேர்ந்திருந்தேன் சிவனாவடுதண்டுறை'** **(ஷை 79)**

**'இருந்தேன் இக்காயத்தை எண்ணிலிகோடி'** **(ஷை 80)**

**'என்னை நன்றாக இறைவன் படைத்தனன்**
**தன்னை நன்றாகத் தமிழ்ச்செய்யுமாறே'** **(ஷை 81)**

**'நானுமிருந்தேன் நற்போதியின் கீழே'** **(ஷை 82)**

என்றாங்கு இந்நூலாசிரியர் தம்மைப்பற்றித் தன்மையொருமையில் வைத்துக் கூறும் இவ் அகச்சான்றுகளைப் பின்வந்தோர் கூற்றாக ஒதுக்கித் தள்ளுதல் சிறிதும் அடாத தொன்றாம். திருத்தொண்டர் புராண ஆசிரியராகிய சேக்கிழார், திருமூலர் வரலாற்றினை விரித்துரைத்ததற்குத் திருமந்திர நூலில் ஆசிரியர் கூற்றாக அமைந்துள்ள இத்திருப் பாடல்களையே ஆதாரமாகக் கொண்டுள்ளார் என்பது, இத்திருமந்திரப் பாடல்களையும் திருமூலநாயனார் புராணத்தினையும் ஒப்புநோக்கிப் பயில்வார்க்கு இனிது விளங்கும்.

இனி, இப்பாயிரத்திறுதியில் திருமந்திரப் பாடல் தொகையினையும் பொருட் சிறப்பினையும் கூறும் 99, 100 - ஆம் பாடல்களையும், குருமட வரலாறு கூறும் 101, 102 - ஆம் பாடல்களும் இந்நூலின் பாடற்றொகையினையும் பொருட் சிறப்பினையும் இந்நூலை அருளிச் செய்த திருமூலநாயனாரது வழி முறையில் வந்த மாணாக்கர்கள் வழியாக நிலைபெற்ற திருமடங்களின் அமைப்பினையும் புலப்படுத்தும் முறையில் அமைந்திருத்தலால் இப்பாடல்கள் நான்கும் ஆசிரியர் கூறிய தற்சிறப்புப்பாயிரத்தின் புறத்தேயமைந்த மற்றொரு பாயிரமாய்ப் பிற்காலச் சான்றோராற் பாடப்பெற்று இப்பாயிரத்திற் சேர்க்கப்பட்டன எனக் கொள்ளுதல் தகும். இவ்வாறே இந்நூலின் இறுதியில் 3046 - ஆம் பாடலாகவுள்ள "மூலனுரை செய்த மூவாயிரந்தமிழ்" என்ற பாடலும் "வாழ்கவே வாழ்க" என்னும் வாழ்த்துப் பாடலும் திருமூலநாயனாருடைய மாணாக்கரால் இயற்றப்பெற்றன எனக் கொள்ளுதல் ஏற்புடையதாகும்.

**'மூல னுரைசெய்த மூவாயிரந்தமிழ்**
**மூல னுரை செய்த முந்நூறுமந்திரம்**
**மூல னுரை செய்த முப்பதுபதேசம்**
**மூல னுரை செய்த மூன்றுமொன்றாமே' (3046)**

எனவரும் இப்பாடலை ஆதரமாகக்கொண்டு திருமூலர் மூவாயிரந் தமிழாகிய இத்திருமந்திர மாலையுடன் முந்நூறுமந்திரம், முப்பதுதேசம் என வேறு இரண்டு நூல்களையும் அருளிச் செய்தாரென்றும், பிற் குறித்த இரண்டு நூல்களும் திருமூலராகிய சிவயோகியார் மூலனுடம்பிற் புகுதற்கு முன் தமக்குரியதாயிருந்த பழைய உடம்பிலிருந்த போதே செய்யப்பட்டன என்றும் கூறுவாருமுளர். அன்னோர் கூறுமாறு இந்நூலாசிரியராகிய திருமூலர் திருமந்திரத்தையன்றி முந்நூறு மந்திரம், முப்பதுபதேசம் ஆகிய வேறு இரு நூல்களையும் செய்திருப்பாராயின் திருமூலரது வரலாற்றினை விரித்துரைத்த சேக்கிழாரடிகள் இச்செய்தியைக் கூறாது விடுதற்கு இடமில்லை. சேக்கிழாரடிகள் குறிப்பிடாத நிலையில் முந்நூறு மந்திரம், முப்பதுபதேசம் எனப்படும் இரு நூல்களும் திருமூலநாயனாரால் அருளிச் செய்யப்பட்ட வேறு நூல்கள் எனத் துணிந்து கூறுதல் பொருந்தாது. ஆகவே 'மூலனுரை செய்த' என்னும் இத் திருப்பாடலிற் குறிக்கப் பெற்ற மூவாயிரந் தமிழ், முந்நூறு மந்திரம், முப்பதுபதேசம் என்னும் இம்மூன்றும் திருமந்திர மாலையாகிய இந்நூலில் அமைந்த மூவகைப் பொருட் கூறுகளையே குறித்தன எனக் கருதவேண்டியுளது. இக்கருத்தினை உறுதிப்படுத்தும் நிலையில் இந்நூலில் முதல் தந்திரத்தின் தொடக்கத்தில் உள்ள முப்பது திருப்பாடல்களும் உபதேசம் என்ற தலைப்பில் அமைந்திருத்தல் அறியத்தக்கதாகும். இது போலவே முந்நூறு மந்திரம் என்பதும் இத்திருமந்திரத்திலுள்ள மற்றொரு பகுதியாய் அடங்கியிருத்தல் வேண்டும். மூவாயிரம் பாடல்களை யுடைய இந்நூல், முப்பது உபதேசமும் முந்நூறு மந்திரங்களும் உடையதாய்த் தந்திரம் மந்திரம் உபதேசம் எனப்படும் மூவகையுறுப்புக்களையும் பெற்று ஒப்பற்ற தமிழாகம நூலாக அமைந்துள்ள தென்பதே இப்பாடலின் கருத்தாகும்.

திரு. விசுவநாத பிள்ளையவர்கள் பதிப்பில் நான்காந் தந்திரத்தில் திருவம்பலச் சக்கரம் 89 பாடல்கள், வயிரவி மந்திரம் 50 பாடல்கள், ஏரொளிச் சக்கரம் 36 பாடல்கள், வயிரவச் சக்கரம் 6 பாடல்கள், சாம்பவி மண்டலச் சக்கரம் 10 பாடல்கள், புவனாபதிச் சக்கரம் 12 பாடல்கள், நவாக்கரிச் சக்கரம் 100 பாடல்கள் ஆக 303 பாடல்களே முந்நூறு மந்திரம் எனவும் முதல் தந்திரத்தில் உபதேசம் என்ற தலைப்பில் அமைந்த முப்பது

பாடல்களே முப்பதுபதேசம் எனவும் வெளியிடப் பெற்றிருத்தல் இக்கருத்தினை வலியுறுத்துவதாகும்.

பொதுவாக நோக்குமிடத்துச் சிவாகமங்களுக்குரிய தந்திரம், மந்திரம், உபதேசம் என்னும் மூவகையுரைத் திறங்களாகத் திருமூலர் அருளிய மூவாயிரந் திருப்பாடல்களில் மந்திரப் பகுதிகளாக அமைந்தவற்றுட் குறிக்கொண்டு போற்றுதற்குரிய மந்திரங்கள் முந்நூறு எனவும் உபதேசப் பொருள்களாகிய செம்பொருள்களுள் முதலில் வைத்து எண்ணத்தக்கவை முப்பது உபதேசங்கள் எனவும் இந்நூலைப் பயின்ற ஆசிரியரொருவர் இந்நூற் பொருளை மூவகையாக வகைப்படுத்துக் கூறும் நிலையில் அமைந்தது மேற்குறித்த 3046 - ஆம் பாடல் எனக் கொள்ளுதல் பொருந்தும். எனவே இப்பாடலை யாதரவாகக் கொண்டு திருமந்திர மாலையின் வேறாக முந்நூறு மந்திரம், முப்பதுபதேசம் என்னும் இரண்டு நூல்கள் திருமூலராகிய சிவயோகியாராற் செய்யப்பட்டன எனக் கூறுவதற்குச் சிறிதும் இடமில்லை என்பது நன்கு புலனாகும்.

தமிழாகமமாகிய இந்நூல், இறைவனருளை நிரம்பப் பெற்ற சிவயோகியாராகிய திருமூலநாயனாரால் தமிழ் மொழியில் முதல்நூலாக அருளிச் செய்யப்பெற்றதென்பது, தொன்று தொட்டு வழங்கிவரும் வரலாற்றுண்மையாகும். அங்ஙனமாகவும், திருமூலராகிய சிவயோகியார் தாம் கயிலையிலிருந்து வரும் பொழுதே "மந்திர மாலிகா" என்றொரு வடமொழி நூலைக் கொண்டு வந்து தமிழில் மொழி பெயர்த்தாரென்றும் உபமன்யு பக்த விலாசத்திற் கூறப்படும் அவரது வரலாற்றை நோக்கின் இதன் முதல் நூல் வடமொழியில் உள்ளதென்பது போதரும் என்றும் அறிஞரொருவர் எழுதியுள்ளார்.* (*திரு. விசுவநாத பிள்ளையவர்கள் பதிப்பித்த திருமந்திரப் பதிப்பில் டாக்டர் V. ரமண சாஸ்திரியாரவர்களால் எழுதப்பட்ட ஆங்கில முகவுரை) உபமன்யு பக்த விலாசம் என்பது சேக்கிழார் அருளிய திருத்தொண்டர் புராணமாகிய பெரிய புராணத்தை அடியொற்றி வடமொழியில் அமைந்த மொழிபெயர்ப்பு நூலென்பது, காய்தலுவத்தலகற்றி ஆராயவல்ல நல்லறிஞர் பலருக்கும் ஒப்ப முடிந்த உண்மையாகும். வடமொழியில் அமைந்த அந்நூலில் திருமந்திரமாலை என்னும் இந்நூலின் பெயர், "ஸ்ரீ மந்த்ரமாலிகா" என வடமொழி மரபிற்கேற்ப மொழிபெயர்த் தமைக்கப்பெற்றது. "திருமந்திர மாலை" என்னும் தமிழ் நூற்பெயர் வடமொழி நூலில் அம்மொழி மரபிற்கேற்ப "ஸ்ரீ மந்த்ரமாலிகா" எனக் குறிக்கப்பட்டிருத்தலை ஆதாரமாகக் கொண்டு திருமூல நாயனாரால் முதல் நூலாக அருளிச் செய்யப்பெற்ற இத்திருமந்திர

*மாலையை வடமொழி நூலொன்றின் மொழிபெயர்ப்பெனத் துணிந்து கூறுதல், நடுநிலையில் நின்று ஆராய்ந்து உண்மை காணும் கடப்பாடுடைய ஆராய்ச்சியாளர்க்கு அடாத செயலாகும். ஆரியமும் தமிழும் இறைவனால் அருளிச் செய்யப்பெற்ற ஆற்றல் மிக்க நன்மொழிகள் என்னும் உண்மை தெளிந்து அவ்விரு மொழி நூல்களையும் கற்றுணர்ந்த சிவயோகியாராகிய திருமூல நாயனார் தாம் அருளிய இந்நூல், வடமொழி நூலொன்றின் மொழிபெயர்ப்பாக இருக்குமானால் இந்நூல் அருளிச் செய்யவந்த வரலாற்றினை விரித்துரைக்கும் பாயிரப் பகுதியில் இச்செய்தியைத் தெளிவாக விளக்கியிருப்பார். அவ்வாசிரியருடைய வாய்மொழிகளை அகச் சான்றுகளாகக் கொண்டு அவரது வரலாற்றினை விரித்துரைத்த சேக்கிழா ரடிகளும் இக்குறிப்பினைத் தம் நூலில் தெளிவாக விளக்கியிருப்பார்.*

**நந்தி இணையடி நான்தலை மேற்கொண்டு**
**புந்தியினுள்ளே புகப்பெய்து போற்றிசெய்து**
**அந்திமதிபுனை அரனடி நாள்தோறும்**
**சிந்தை செய்தாகமஞ் செப்பலுற் றேனே திருமந்திரம் (73)**

*எனவும்,*

**ஆரறிவார் எங்கள் அண்ணல் பெருமையை**
**ஆரறிவார் இந்த அகலமும் நீளமும்**
**பேரறியாத பெருஞ்சுடர் ஒன்றதின்**
**வேரறியாமை விளம்புகின்றேனே திருமந்திரம் (95)**

*எனவும் திருமூல நாயனார் இந்நூற்பொருளைத் தாம் சிந்தித்துணர்ந்த அநுபவ மொழிகளில் வைத்து அருளி செய்திருத்தலானும், திருவாவடுதுறையில் மூவாயிரம் ஆண்டுகள் சிவயோகத் தமர்ந்திருந்த திருமூலநாயனார், உலக மக்கள் உய்திபெறுதல் வேண்டும் என்னும் பேரருளால் தம் திருவுள்ளத்தே தோன்றிய எண்ணங்களை ஓராண்டுக்கு ஒரு திருப்பாடலாகக் கொண்டு மூவாயிரந் திருப்பாடல்களையுடைய தமிழ் முதல் நூலாகிய திருமந்திரமாலையைத் திருவாய் மலர்ந்தருளிய திறத்தினை,*

**ஆவடுதண் டுறையணைந் தங் கரும்பொருளை யுறவணங்கி**
**மேவுவார் புறக்குடபால் மிக்குயர்ந்த அரசின்கீழ்த்**
**தேவிருக்கையமர்ந்தருளிச் சிவயோகம் தலைநின்று**
**பூவலரும் இதயத்துப் பொருளோடும் உணர்ந்திருந்தார்.**

**ஊனுடம்பிற் பிறவிவிடந் தீர்ந்துலகத் தோருய்ய**
**ஞானமுதல் நான்குமலர் நற்றிருமந்திரமாலை**

பான்மைமுறை ஓராண்டுக் கொன்றாகப் பரம்பொருளாம்
ஏனவெயிறணிந்தாரை 'ஒன்றவன்றான்' எனஎடுத்து,

முன்னிய அப்பொருள்மாலைத் தமிழ் மூவாயிரஞ்சாத்தி
மன்னிய மூவாயிரத்தாண் டிப்புவிமேல் மகிழ்ந்திருந்து
சென்னிமதி யணிந்தார்தந் திருவருளால் திருக்கயிலை
தன்னிலணைந் தொருகாலும் பிரியாமைத் தாளடைந்தார்.
(பெரிய- திருமூல. 24,25,26)

எனவரும் பாடல்களில் அருண்மொழித் தேவராகிய சேக்கிழார் நாயனார் தெளிவாக விளக்கியிருத்தலானும் செந்தமிழ் முதல்நூலாகிய இத்திருமந்திர மாலையை வடமொழி நூலொன்றின் மொழிபெயர்ப்பெனக் கருதுதற்கு ஒரு சிறிதும் இடமில்லை யெனத் தெளிக. அன்றியும், "ஸ்ரீ மந்த்ர மாலிகா" என்ற பெயருடன் வடமொழியில் ஒரு நூல் இருப்பதாகவோ அன்றி ஒரு காலத்து இருந்ததாகவோ கொள்ளுதற்குரிய சான்றினை அவர் குறிப்பிடாமையும் ஈண்டு நோக்கத்தக்கது.

இறைவனூலாகிய சிவாகமங்கள் இருபத்தெட்டென்பதும், அவை அம்முதல்வனது ஈசான முகத்திலிருந்து அருளிச் செய்யப்பெற்றன என்பதும்,

அஞ்சன மேனி அரிவையோர் பாகத்தன்
அஞ்சொ டிருபத்து மூன்றுள ஆகமம்
அஞ்சலி கூப்பி அறுபத் தறுவரும்
அஞ்சா முகத்தில் அரும்பொருள் கேட்டதே(திருமந்திரம் 57)

எனவரும் திருமந்திரத்தாற் புலனாம். இறைவனருளிய ஆகமங்கள் இருபத்தெட்டிற்கு மேலும் எண்ணிலவாக உள்ளன என்பதும், அவ்வாகமப் பொருள்களை யெல்லாம் பல ஆண்டுகளாகச் சிந்தித்துணர்ந்ததன் பயனாகவே திருமூலர் இத்திருமந்திரத்தை அருளிச் செய்தார் என்பதும்,

அண்ணல் அருளால் அருளுஞ் சிவாகமம்
எண்ணில் இருபத்தெண் கோடி நூறாயிரம்
விண்ணவர் ஈசன் விழுப்பம் உரைத்தனர்
எண்ணிநின் றப்பொருள் ஏத்துவன் நானே. (58)

எனவரும் அவரது வாய்மொழியாற் புலனாம்.

இறைவனிடமிருந்து சத்தியும், சத்தியிடமிருந்து சதாசிவமும், அவர்பால் மகேசுரரும், அவரிடமிருந்து ஸ்ரீகண்ட உருத்திரரும் அவர்பால் திருமாலும், அவரிடமிருந்து பிரமதேவரும், அவரிடமிருந்து உருத்திரரும் இம்முறையே உபதேசம் பெற்றனரென்றும், இவர்கள் தனித் தனியே உபதேச வாயிலாகப் பெற்றுணர்ந்த காரணம், காமிகம் வீரம், சிந்தியம்,

வாதுளம், வியாமளம், காலேத்தரம், சுப்பிரம், மகுடம் என்னும் இவ்வொன்பது ஆகமங்களையும் நந்திபெருமான் இறைவ னருளால் ஒருங்கு கைவரப் பெற்றாரென்றும், திருமூலதேவர் ஆகமச் சிறப்பினை அறிவுறுத்தும் முறையில் அமைந்தன.

**சிவமாம் பரத்தினிற் சத்தி சதாசிவம்**
**உவமா மகேசர் உருத்திர தேவர்**
**தவமால் பிரமீசர் தம்மில் தாம்பெற்ற**
**நவ ஆகமம் எங்கள் நந்திபெற்றானே.** (62)

எனவும்,

**பெற்றநல் லாகமங் காரணங் காமிகம்**
**உற்றநல் வீரம் உயர்சித்தம் வாதுளம்**
**மற்றவ் வியாமள மாகுங் காலோத்தரம்**
**துற்றநற் சுப்பிரம் சொல்லு மகுடமே.** (63)

எனவும் வரும் திருமந்திரப் பாடல்களாகும். மேற் குறித்த ஒன்பது ஆகமங்களின் சாரமாகவே இந்நூல் ஒன்பது தந்திரங்களை யுடையதாய் அமைந்துள்ளது எனக் கருதுவாருமுளர். இந்நூலில் உள்ள ஒன்பது தந்திரங்களும் முறையே ஒவ்வோராகமத்தின் சாரம் எனக் கொள்வதைக் காட்டிலும் திருமூலர் சிவாகமங்களின் நுண்பொருள்களை ஒன்பது தந்திரங்களாக வகைப்படுத்தி மூவாயிரந் திருப்பாடல்களில் வைத்து உணர்த்தியருளினார் எனக் கொள்ளுதலே ஏற்புடையதாகும் என்பர் அறிஞர்.

சிவாகமங்கள், உண்மைப் பொருளைச் சரியை கிரியை யோகம் ஞானம் என நான்கு பாதங்களாக வகுத்துரைப்பன. இந்நூலில் வேதச்சிறப்பும் ஆகமச்சிறப்பும் ஒருங்கே உணர்த்தப்பெற்றன. இவ்விருவகை நூல்களும் இறைவன் நூல்கள் எனவும், அவற்றுள் வேதம் பொதுநூல் ஆகமம் சிறப்பு நூல் எனவும் ஆசிரியர் விளக்குதலால், இந்நூலில் சிறுபான்மை வேதப்பொருளும் பெரும்பான்மையும் சிவாகமப்பொருளும் ஆக எடுத்தோதப்பெற்றன எனக்கொள்ளுதல் பொருந்தும். இந்நூலின் பெரும்பிரிவினைத் தந்திரம் எனவும் இவற்றுள் அடங்கிய திருப் பாடல்களை மந்திரம் எனவும் வழங்குதல் மரபு.

சிவாகமங்களின் ஞானபாதத்தில் உளவாகும் மலைவு தீர்த்தற் பொருட்டு இறைவர் அருளத் தாம் கேட்டுத் தெளிந்த நுண்பொருட்களை நந்திபெருமான் சனற்குமாரர் முதலிய முனிவர்களுக்கு உபதேசித்தருளினார். அவர்பால் உபதேசம் பெற்றவர் திருமூலர். நந்தி பெருமான்பால் தாம் உணர்ந்த சிவாகமப் பொருளைத் திருமந்திரங்களாக்கி அவற்றை ஒன்பது தந்திரங்களாக வகுத்துத் தமிழ் மூவாயிரமாக அருளிச்

செய்வாராயினார். திருமூலர் அருளிய இத்திருமந்திரம் பதி பசு பாசம் என்னும் முப்பொருளுண்மையினையும் சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நால்வகை நன்னெறிகளையும் அறிவுறுத்தும் நிலையில் அமைந்துள்ளது. இவ்வுண்மை

**'உள்ளுணர்வான ஞான முதலிய ஒரு நான்குண்மை**
**தெள்ளுதீந் தமிழாற் கூறுந்திருமூலர்'**

எனவும்,

**'நலஞ்சிறந்த ஞானயோகக்கிரியா சரியையெலாம்**
**மலர்ந்த மொழித் திருமூலதேவர்'**

எனவும் இந்நூலாசிரியரைக் குறித்தும்,

**'ஞானமுதல் நான்குமலர் நற்றிருமந்திரமாலை'**

என இந்நூலைக் குறித்தும் சேக்கிழாரடிகள் சிறப்பித்துப் போற்றுதலால் இனிது விளங்கும். 'ஞானமுதல் நான்கு மலர் நற்றிரு மந்திரமாலை' என்றமையால், ஞான நன்னெறியினை விளக்கும் முறையில் ஞானத்திற் சரியை, ஞானத்திற் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் ஆகிய நால்வகை நன்னெறிகளையும் திருமூலதேவர் இத்திருமந்திரப் பனுவலில் அருளிச்செய்துள்ளார் என்பது நன்கு புலனாம்.

சிவாகம உண்மைகளை உலகமக்களுக்கு அறிவுறுத்த வந்த திருமூலர், தாம் கூறும் மந்திரப் பொருளை மக்கள் அனைவரும் விரும்பிக் கேட்பதிலும் கேட்டு அவ்வழியில் ஒழுகிப் பயன் பெறுவதிலும் மனவெழுச்சியும் உறுதிப்பாடும் உடையராதற் பொருட்டுத் தாம் இந்நூல் வாயிலாக உணர்த்த எடுத்துக் கொண்ட வேத சிவாகமப் பொருள்களின் சிறப்பும், ஆகமப் பொருள் தமக்குக் கிடைத்த வழிமுறையும், தாம் கேட்டுணர்ந்த ஆகமப்பொருளைத் திருமந்திரமாலையாகத் தமிழிற் சொல்ல நேர்ந்த காரணமும் என இந்நூலைப் பயில்வோர் இன்றியமையாது முதற்கண் அறிந்துகொள்ளுதற்குரிய செய்திகளை அறிவுறுத்தும் முறையில் அமைந்தது திருமந்திரத்தின் முதற்கண் உள்ள பாயிரப் பகுதியாகும்.

வேதம் ஆகமம் ஆகிய இருவகை நூல்களும் இறைவனால் அருளிச்செய்யப்பட்ட அருள் நூல்களாகும். இவற்றுள் உலகியல் ஒழுக்க நெறியினை விரித்துரைப்பதாகிய வேதம் பொது நூல் எனப்படும். மெய்ந்நெறியாகிய சிவநெறியினை அறிவுறுத்துவ தாகிய சிவாகமம் சிறப்பு நூல் எனப்படும். இங்கு வேதம் என்றது வேதசிரம் எனவும் வேதாந்தம் எனவும் போற்றப் பெறும் ஞான பாதங்களாகிய உபநிடதங்களை என்பர் பெரியோர்.

பிறவியாகிய துன்பத்தினின்றும் நீங்கி வீடுபெறுதலே அறிவுடைய மக்களின் கடமையும் செயலுமாகும். அந்நிலை சிவனையடைந்தாலன்றிக் கைகூடாது. சிவன் ஒருவனே எல்லார்க்குந் தலைவன். சிவனோடொக்கும் தெய்வம் தேடினும் இல்லை. அவன் மூவர்க்கும் முதல்வன். தாயினும் நல்லன். தேவர் முதலிய யாவரும் அவனைத் தொழுவதல்லது அவனால் தொழப் படுவார் ஒருவருமிலர். இடியும் முழக்கமும் ஈசன் உருவம். அயன் அரி அரன் ஆகிய மூவரும் ஆராய்ந்து நோக்குங்கால் இறைவனது அருளாகிய தொடர்ச்சியால் ஒருவரேயாவர். சிவனருளல்லது வேறு தெய்வமில்லை. சிவபெருமான் உயிர்கள் மேல் வைத்த பெருங்கருணையால் மன்னுயிர்கள் பாசப் பிணிப்பினின்றும் நீங்கி வீடுபேறடைதற் பொருட்டு வேத சிவாகமங்களை அருளிச் செய்துள்ளார். அவற்றின் வழியொழுகிப் பிறவிப் பெருங்கடல் நீந்தி வீடுபெறுதற்கு வேண்டிய நற்செயல்களே அறிவுடைய நன்மக்களால் மேற்கொள்ளத் தக்கன. சிவபெருமான் ஆகமப் பொருளை நந்திபெருமானுக்கு உபதேசித்தருளினார். அவர் கயிலையில் சனற்குமாரர் முதலிய நால்வர்க்கும் பதஞ்சலி வியாக்கிரர் ஆகிய முனிவர்களுக்கும் அவ்வழியே எனக்கும் உபதேசித்தருளினார். ஆகமப் பொருளைத் தமிழில் சொல்லும் பொருட்டே என்னை இம்மூலனுடம்பிலிருக்குமாறு இறைவர் பணித்தருளினார். அவருடைய அருளால் யான் மூலனுடம்பிற் புகுந்து திருவாவடுதுறையிற் பல்லாண்டுகள் சிவயோகத் தமர்ந்திருந்தேன். அரனடி நாள்தோறும் சிந்தை செய்து ஆகமஞ் செப்பலுற்றேன். இறைவன் ஆடியருளும் திருக்கூத்தின் சிறப்பினை அறிவுறுத்தும் மறை நூலாகிய இதனைச் செப்புதற் பொருட்டே யான் இங்கு வந்தேன். நான் பெற்ற இன்பம் இவ்வையகம் பெறுவதாகுக. யான் கூறிய ஞானம் மிக்க இம்மந்திரங்களை உளம் பொருந்திக் கேட்டுணர்வோர் இறைவனுடைய திருவடிகளில் தலைப்பெய்து இன்புறுவர்" என இப்பாயிரப் பகுதியில் திருமூலர் அறிவுறுத்தி யருள்கின்றார்.

இந்நூலிலுள்ள **ஒன்பது தந்திரங்**களுள் முதல் நான்கும் சிவஞானத்தைப் பெறுதற்கு விரும்பியவர் தம்மை உள்ளும் புறம்பும் தகுதியுடையவராக்கிக் கொள்ளுதற்குரிய சாதனங் களையும், நடுவணதாகிய ஐந்தாந் தந்திரம் சைவத்தின் முடிந்த முடிபாகிய சைவசித்தாந்த உண்மைகளையும், 6 முதல் 9 வரையுள்ள நான்கு தந்திரங்களும் ஞானம் பெறும் நிலையில் உணர்ந்து பெறத்தக்கனவாயுள்ள நற்பயன்களையும் பற்றி விரித்துக் கூறும் முறையில் அமைந்துள்ளன.

ஞானம் பெற முயல்வோர் அதற்குத் தகுதியுடையாராகத் தம்மை தூய நல்லொழுக்க நெறியில் நிலைக்கச்செய்து

கொள்ளுதல் வேண்டும் என வற்புறுத்தி அதற்குரிய சாதனங்களையும் உபதேசிப்பது இந்நூலின் **முதல் தந்திர**மாகும். இஃது இருபத்து நான்கு அதிகாரங்களாகப்பகுக்கப்பெற்றுள்ளது. இதன் தொடக்கத்திலுள்ள முப்பது திருப்பாடல்களும் உபதேசம் என்ற தலைப்பில் அமைந்துள்ளன. இதனையடுத்து யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை என்பன உலகியலில் வைத்து அறிவுறுத்தப்பெற்றுள்ளன. ஐந்தாவதாகவுள்ள உயிர் நிலையாமை என்ற தலைப்பில் பத்துத் திருப்பாடல்கள் உள்ளன. உயிர்கள் என்றும் அழியாத நிலையுடைய பொருள் என்பது சைவ சித்தாந்தக் கொள்கையாதலை யாவரும் அறிவர். அங்ஙனமாகவும் இங்கு உயிர் நிலையாமை என்றது மன்னுயிர் தான் எடுத்துள்ள ஒருடம்பிலேயே விரும்பி நிலைபெற்றிருக்க இயலாத தன்மையைக் கூறுவதாகும். "வீயாது, உடம்பொடு நின்றவுயிரு மில்லை, மடங்கலுண்மை மாயமோ வன்றே"(363) எனவரும் புறப்பாடற்றொடர் ஈண்டு நினைக்கத் தக்கதாகும். இதனையடுத்துக் கொல்லாமை, புலால் மறுத்தல், பிறன்மனை நயவாமை, மகளிர் இழிவு நல்குரவு ஆகிய அதிகாரங்களில் அமைந்த பாடல்கள் உள்ளன. இவை தமிழ் மறையாகிய திருக்குறளின் அதிகாரத் தலைப்பினையும் பொருளமைதியையும் அடியொற்றி அமைத்திருத்தல் காணலாம். இவற்றையடுத்து அக்கினி காரியம், அந்தணரொழுக்கம், என்ற தலைப்புகளி லமைந்த பாடல்கள் வேதப் பொருள்களை உளங்கொண்டு கூறியனவாகும். அடுத்து அரசாட்சி முறை, வானச்சிறப்பு, தானச்சிறப்பு, அறஞ்செய்வான்திறம், அறஞ்செயான் திறம், அன்புடைமை, கல்வி, கேள்வி, கல்லாமை, நடுவுநிலைமை, கள்ளுண்ணாமை ஆகிய தலைப்புக்களில் அமைந்த பாடல்கள் உலகியலொழுக்கமாகத் தெய்வப் புலவர் திருவள்ளுவர் அருளிய பொருளுரைகளை அகத்துட்கொண்டு அப்பொருள்களை உலகியலின் உயிர் நிலையாய் நிலவும் மெய்ந்நெறியாகிய சைவசித்தாந்த நெறிக்குப் பொருந்தும் வண்ணம் விரித்துக் கூறும் முறையில் அமைந்திருத்தல் அறியத்தக்கதாகும். இங்குத் திருமூலர் கூறும் கல்வியாவது சிவபரம் பொருளைச் சிந்திக்கும் நிலையில் அமைந்த கல்வியே கேள்வி என்றது அம்முதல்வனது பொருள் சேர் புகழ்ந் திறங்களைக் கேட்டுணரும் கேள்வியினை. இங்ஙனமே நடுவு நிலைமை, அன்புடைமை முதலாக இத் தந்திரத்திலுள்ள ஏனைய அதிகாரப் பொருள்களையும் சிவநெறியிலொழுகு வோர்க்குரிய சிறப்பியல்பினவாக ஆசிரியர் கூறியுள்ளமை கருதத்தக்கதாகும்.

வேதசிவாகமங்களின் ஒன்றுபட்ட துணிவு சிவனே பரம்பொருள் என்று முன்பாயிரத்திற் கூறிய பொருளை ஆசிரியர்

சிறப்பு முறையில் விரித்துரைப்பதாக அமைந்தது திருமந்திரத்தின் **இரண்டாந் தந்திரமாகும்.** இஃது அகத்தியம் என்பது முதல், பெரியாரைத் துணைக்கோடல் ஈறாக இருபத்தைந்து தலைப்புகளையுடையது. இறைவன் வேண்டுதல் வேண்டாமை யிலான் ஆயினும் நம் போன்ற எண்ணிலாவுயிர்கள் உய்தி பெறுதற் பொருட்டுத் தனது இயல்பாகிய பேரருளால் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களைச் செய்து கொண்டிருக்கின்றான். அம்முதல்வன் செய்யும் ஐந்தொழில்களுட்படுவன, உயிர்கள் எடுத்துள்ள உடம்பும், அதன் அகக்கரணங்களும், புறக்கரணங்களும், உயிர்கள் வாழ்தற் கிடனாகிய புவனங்களும், உயிர்கள் நுகர்தற்குரிய நுகர் பொருள்களும் ஆகும். உடலும் உயிருமாகச் சேர்த்துப் படைக்கப்பெறும் நிலை 'கருவுற்பத்தி' என்ற தலைப்பிற் பேசப்படுகிறது. உயிர்கள் ஒருமலமுடையன, இருமலமுடையன, மும்மலமுடையன என்னும் பாகுபாட்டினால் முறையே விஞ்ஞானாகலர், பிரளயாகலர், சகலர் என மூவகைப்படும் என்றும், அவற்றுள் முத்தியில் விருப்பமுடைய சகல வர்க்கத்தார் நூற்பொருளைக் கேட்டற்குரியர் என்றும் அறிவுறுத்தும் நிலையில் அமைந்தது 'மூவகைச் சீவவர்க்கம்' என்ற பகுதியாகும்.

சகல வர்க்கத்தினராகிய மக்கட்குலத்தார் இவ்வுலகில் நன்னெறியறிந்து ஒழுகிப் பிறவாநெறியாகிய வீடுபேற்றின்பத்தை அடைதற்குரியராதலின் நம்மால் வேண்டும் பொருளளித்து வழிபட்டு நற்பொருளைக் கேட்டுணர்தற்குரிய மெய்யுணர் வுடைய பெரியோர்களை யறிந்து வழிபட்டும் மனமாசகற்றும் தீர்த்தத்தின் இயல்பு தெரிந்தும் தம்மைத்தூய்மை செய்து கொள்ளுதல் வேண்டும் என்பதும், மன்னுயிர்கள் உய்தற் பொருட்டு இறைவன் அன்பர்க்கு எளிவந்து அருள்புரியும் அருள் நிலையங்களாகிய திருக்கோயிலின் பண்பு தெரிந்தும், அங்கு நிலையாக வீற்றிருந்து உயிர்களின் இடரகற்றி இன்பமளிக்கும் இறைவனது அதோமுகத்து இயல்பு கண்டும், அம்முதல்வனை வழிபட்டுச் சிவநிந்தை, குருநிந்தை, மாகேசுவர நிந்தை ஆகிய தீமைகளின்றும் நீங்கிப் பொறையென்னும் அணிகலனைப் பூண்டு, பெரியோரை யறிந்து அவர்களைத் துணையாகக் கொண்டு நன்னெறியில் ஒழுகி உய்தி பெறுதல் வேண்டுமென்றும் ஆசிரியர் இத்தந்திரத்தில் அறிவுறுத்தியுள்ளார்.

**மூன்றாந்தந்திரம்** அட்டாங்கயோகம் முதல் சந்திரயோகம் ஈறாக இருபத்தொரு தலைப்புகளையுடையது இதன்கண் எண்வகை யோக உறுப்புகளாகிய இயமம், நியமம், ஆதனம், பிரணாயமம், பிரத்தியாகரம், தாரணை, தியானம், சமாதி

என்பனவும், இவற்றை மேற்கொண்டோர் அடையும் பேறுகளும், அணிமா, லகிமா, மகிமா, பிராத்தி, கரிமா, பிரகாமியம், ஈசத்துவம், ,வசித்துவம் ஆகிய எண்வகைச் சித்திகளின் இயல்பும் பயன்களும், கலைநிலை காயசித்தி உபாயம் முதலியனவும் விரித்துரைக்கப் பட்டுள்ளன. இத் தந்திரப் பகுதியின் உள்ளுரையாவது சரீர சித்தி உபாயமாகும். உடம்பின்றி உயிர்தனித்து நின்று தொழில் புரிதல் இயலாது. உயிர் அறம் முதலிய உறுதிப் பொருளைப் பெற வேண்டுமாயின் அதற்குரிய முயற்சிகளை உடம்பொடு கூடி நின்றே செய்தல் வேண்டும். ஆகவே உயிர்க்கு ஞான சாதனமாகவுள்ள உடம்பினைப் பேணுதல் இன்றியமையாதது என்னும் உண்மையினை,

**உடம்பார் அழியில் உயிரார் அழிவர்**
**திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்**
**உடம்பை வளர்க்கும் உபாய மறிந்தே**
**உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே.**

**(திருமந்திரம்-724)**

**உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்**
**உடம்பினுக்குள்ளே யுறுபொருள் கண்டேன்**
**உடம்புளே யுத்தமன் கோயில்கொண்டானென்**
**றுடம்பினை யானிருந் தோம்புகின்றேனே.(திருமந்திரம்-725)**

எனவரும் திருமந்திரங்களால் திருமூலர் அறிவுறுத்தியுள்ளமை நோக்கத் தக்கதாகும்.

இங்ஙனம் இயமம் நியமம் முதலிய யோகவுறுப்புக்களால் உடம்பினை நன்குபேணிச் சரியை கிரியைஆகிய நெறிகளில் பயின்ற பின்னர்ச் சிவயோகத்தில் நிலை பெற்று நின்று சிவஞானமாகிய பயனைப் பெறுதற்கு நிறைமொழி மாந்தரருளிய மறைமொழிகளாகிய மந்திரங்களின் சாதகமும் அவற்றின் வலிமையும் பெறுதல் இன்றியமையாததாகும். ஆகவே இந்நூலின் **நான்காந் தந்திரத்துள்** திருவம்பலச் சக்கரம் முதலிய மந்திரச் சக்கரங்களின் உபாசனை முறைகள் விரிவாக விளக்கப் பெற்றுள்ளன. இத் தந்திரம், அசபை என்பது முதல் நவாக் கரிசக்கரம் ஈறாகப் பதிமூன்று தலைப்புக்களை யுடையதாகும். இதன்கண் மந்திரச் சக்கரங்களின் வடிவம், அளவு, வரைகள், அவற்றில் அடைக்கப்பெறும் மந்திர எழுத்துக்கள், உரிய மந்திரங்கள், வழிபாட்டு முறைகள், அவ்வவற்றின் அதிதெய்வம் வலிமை, பயன் முதலியன விரித்துரைக்கப் பெற்றுள்ளன. இன்ன சக்கரத்தை இன்ன சாதனத்தில் எழுதி இன்ன இடத்தில் இன்னவாறு மேற்பூச்சும் அணியும் மலரும் முதலியன சாத்தி

இன்னபடி இத்தனை காலம் வழிபட்டால் வசியம் முதலாகச் சொல்லப்படும் உலகியற் பயன்களுள் இன்னின்ன பயன்களை எளிதிற் பெறலாம் என்ற உண்மையினை ஆசிரியர் இத் தந்திரத்தில் விரித்துக் கூறியுள்ளார்.

நன்னெறியினை நாடிய சாதகன், தான் இப்பிறப்பிற் கொண்டுள்ள ஓர் உடம்பில் நின்றே விரும்பிய பயன்களைப் பெறவேண்டியவனாவன். ஆகவே அவ்வுடம்பினைக் கெடாது நெடுங்காலம் நிலைபெறக் கொண்டு வையத்து வாழ்வாங்கு வாழ்தற்கேற்ற பயன்களையும் விரும்புதல் இயல்பாதலால், ஞான நூலாகிய இவ்வாகமங்களிலும் உலகியற் பயன்களைப் பற்றிய இவ்வழிமுறைகள் இடம் பெறுவனவாயின. இறைவன் தனது திருவருளாகிய சத்தியின் மூலமாகவே மன்னுயிர்கட்கு அருள்புரிவானாதலின் இத்தந்திரத்திற் கூறப்படும் மந்திரச் சக்கரங்களிற் பெரும்பாலன அவனது திருவருளாகிய சத்தி பேதங்களைப் பற்றியனவாக அமைந்துள்ளன.

மக்கள் வேண்டிய வேண்டியாங்கு எய்தற் பயத்தவாகிய இம்மந்திரங்கள், நம் நாட்டில் மக்களிடையே நெடுங்காலமாக நிலைபெற்று வழங்கி வந்துள்ளன என்பது, "கோவலன் நாவிற் கூறிய மந்திரம், பாய் கலைப்பாவை மந்திரமாதலின்" (காடுகாண் 196-7) எனவும், "அருமறை மருங்கின் ஐந்தினும் எட்டினும், வருமுறை யெழுத்தின் மந்திர மிரண்டும், ஒரு முறையாக வுளங்கொண் டோதி" (காடுகாண் 128- 130) எனவும் வரும் சிலப்பதிகாரத் தொடர்களால் இனிது விளங்கும். இக் குறிப்புக்களைக் கூர்ந்து நோக்குங்கால், இத்தகைய தெய்வ மந்திரங்கள் பல உபதேச முறையில் தமிழகத்தில் நெடுங்காலமாக நிலைபெற்று வழங்கி வந்துள்ளன என்பது இனிது புலனாம். ஆகவே திருமூல நாயனாரால் திருமந்திரம் நாலாந்தந்திரத்திற் குறிக்கப்பெற்றுள்ள இம் மந்திரங்கள் பலவும் தென்றமிழ் நாட்டில் வழங்கிய தொன்மையுடையன என்பது நன்கு துணியப்படும். இந்நூலாசிரியர் ஆரியமும் செந்தமிழும் கற்றுவல்ல சிவயோகியாராதலால் இமய முதல் குமரி வரையுள்ள நிலப்பகுதியில் வாழும் மக்களனைவர்க்கும் பயன்படும் முறையில் தமிழும் ஆரியமுமாகிய இருமொழி எழுத்துக்களில் விரவிய நிலையில் அகர முதலாகிய ஐம்பத்தொரெழுத்துக்களால் ஆகிய மந்திரங்களை இந்நூலில் வகுத்துக் கூறியுள்ளார். நாலாந் தந்திரத்திலுள்ள அதிகாரங்களிலமைந்த பாடல்களிற் பல அந்தாதித் தொடையமையப் பாடப் பெற்றுள்ளன. ஆயினும், பல இடங்களில் பாட பேதங்களால் பாடல்கள் முன்பின்னாக மாறி யெழுதப் பெற்றமையாலும் இடைச் செருகலாகச் சில பாடல்கள்

இடம் பெற்றமையாலும் இடையிடையே அவ்வந்தாதித் தொடர்புகள் சிதைந்தன எனக் கருத வேண்டியுளது.

**ஐந்தாந் தந்திரம்** சுத்த சைவம் முதலாக உட்சமயம் ஈறாக இருபது உட் பிரிவுகளையுடையதாகும். இதன்கண் நால்வகைச் சைவங்களும், சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நால்வகை நன்னெறிகளும், அவைபற்றி யமைந்த சன்மார்க்கம், சகமார்க்கம், சற்புத்திர மார்க்கம், தாச மார்க்கம் என்ற நெறிமுறைமைகளும், அந்நெறிகளில் நின்றோர் பெறுதற்குரிய சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்னும் நால்வகைப் பேறுகளும், மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிர தரம் என்னும் நால்வகைச் சத்தினிபாதப் பக்குவ நிலைகளும் அறிவுறுத்தப் பெற்றுள்ளன. புறச் சமயங்களின் ஒவ்வாத் தன்மைகளைப் புலப்படுத்தும் நிலையில் அமைந்தது புறச்சமய தூடணம் என்பதாகும். இத்தந்திரத்தில் திருமூல தேவர் கூறியுள்ள முறைமையினை அடியொற்றியே அருணந்தி சிவாச்சாரியார் தாம் இயற்றிய சிவஞான சித்தியாரில் சரியை முதலிய நால்வகை நெறிகளையும், இந்நெறிகள் நான்கும் ஒவ்வொன்றும் நந்நான்காய் விரியும் முறைமையினையும் விரித்துக் கூறியுள்ளமை இங்கு ஒப்புநோக்கி யுணரத் தக்கதாகும்.

பதி பசு பாசம் என்னும் மூன்றும் என்றும் உள்ள பொருள்களாகும். பதி-இறைவன். இறைவன் ஒருவனே. பசு-உயிர். உயிர்கள் எண்ணில்லாதன. அவை அநாதியே மலத்தாற் கட்டப்பட்டுள்ளன; அருளாளனாகிய இறைவன் உயிர்கள் உய்யும் பொருட்டு வினைக் கீடாகிய பிறவிகளில் அவற்றைச் செலுத்துகின்றான். உயிர்கள் பல்வகைப் பிறவிகளிலும் வந்து பிறந்து நல்வினை தீவினைகளைச் செய்து உழல்வன. இவ்வாறு மாறி மாறிப் பிறந்திருந்து வரும் உயிர்கள், பிறவித் துன்பங்கள் நீங்கி என்றும் பேராவியற்கையாகிய நிலையான பேரின்பத்துள் இருக்க முயல்வதுவே நல்லுணர்வு பெற்ற அவற்றின் குறிக்கோளாக அமைதல் வேண்டும். அத்தகைய நன் முயற்சிகளையும் நற்பணிகளையும் மேற் கொள்ளுதற்குக் குருவின் அருளும் திருவைந்தெழுத்து, திருநீறு முதலிய சிவ சாதனங்களுமே துணையாவன. அத்துணையினைக் கொண்டு சிவநெறியில் ஒழுகினால் உலகமக்கள் துன்பம் நீங்கி நிலையான பேரின்பத்தைப் பெறலாம். அவ்வனுபவம் மாறாதிருக்க அடியார்களுடன் இருக்கும் பழக்கம் இன்றியமையாததாகும், என்னும் சைவ வுண்மைகள் இந்த ஐந்தாந்தந்திரத்திற் கூறப் பெற்றுள்ளன.

சைவ சித்தாந்த முடிவுகளை உபதேச வாயிலாகக் கேட்டறிந்தோர் அவற்றைச் சிந்தித்துத் தெளிந்துணர்தற்குரிய

பொருள்களாகிய ஞானம் பெறும் சாதனங்களை உணர்த்துவது, **ஆறாந் தந்திர**மாகும். இது, சிவகுருதரிசனம் முதல் பக்குவன் என்ப தீறாகப் பதினான்கு உட்பிரிவுகளையுடையது. இதன்கண் சிவகுரு தரிசனம், திருவடிப் பேறு, ஞாதிரு ஞான ஞேயம், துறவு, தவம், அருளுடைமையின் ஞானம் வருதல், அவ வேடம், தவ வேடம், அபக்குவன், பக்குவன் என்ற தலைப்புக்களில் வைத்து ஞான சாதனங்கள் விரிந்துரைக்கப் பெற்றன.

ஆன்மாக்கள் உய்தி பெறுதற் பொருட்டு இறைவன் தன் அடியார் திறத்தே நிகழச் செய்யும் தசகாரியம் என்னும் பத்து வகைச் செயல்களும், இத்தந்திரத்திலும் பின்வரும் ஏழு, எட்டு, ஒன்பதாந் தந்திரங்களிலும் கூறப்படும் பொருள்களால் உணர்த்தப் பெறுகின்றன.

**ஏழாந்தந்திரம்**, ஆறாதாரம் முதல் இதோபதேசம் ஈறாக முப்பத்தெட்டு உட்பிரிவுகளையுடையதாகும். இதனுட் கூறப்படும் பொருள்களுள் ஆறாதார நிலைகள், சிவலிங்க பேதங்கள், அருளொளி, குருலிங்க சங்கம வழிபாடு, ஆதித்தர் வகை, ஐம்பொறிகளையடக்கும் முறை, சற்குரு இதோபதேசம் என்பன சிறப்பாகக் குறிப்பிடத் தக்கனவாகும். இவை மேற்குறித்த தச காரியங்களுள் சிவரூபம், சிவ தரிசனம் என்னும் இரண்டையும் விளக்குவன. போசனவிதி, பிட்சாவிதி, பூரணக் குகைநெறிச் சமாதி, சமாதிக் கிரியை விந்துச்சயம் என்பன, ஞானம் பெறுதற்குத் துணையாகவுள்ள நல்லொழுக்க நெறிகளை அறிவுறுத்துவன வாகும். மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களுள் வைத்து அண்ட லிங்கம் முதலிய அறுவகை இலிங்கங்களையும் கண்டு வழிபடுதலும், அருளொளிக்குள் ஒடுங்கியிருந்து குருலிங்க சங்கமம் என்னும் மூன்றிடங்களிலும் சிவபெருமானை வெளிப்படக் கண்டு வழிபடுதலும் ஆகிய இவை, அகமும் புறமுமாகச் செய்தற்குரிய வழிபாடுகள் எனச் சைவ நூல்கள் கூறும் ஐந்திந்திரியம் அடக்கும் முறை, கூடா வொழுக்க நீத்தல், கேடு கண்டிரங்கல் என்ற தலைப்புக்களிலுள்ள திருமந்திரப் பாடல்கள், நல்லொழுக்க நெறியில் நின்று இறைவனை வழிபடுவோர்பால் குற்றங்கள் நீங்க இன்றியாமையாது இருத்தற் குரிய நற்பண்புகளை விளக்குவனவாகும். இத் தந்திரத்தின் இறுதியிலுள்ள இதோபதேசம் என்ற பகுதி பொதுவாக உலகமக்களனைவரும் சிறப்பாகச் சிவநெறிச் செல்வர்களும் அன்புடன் கடைப்பிடித் தொழுகி உய்தி பெறுதற்குரிய நல்லுரைகளைத் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றது.

**செல்லு மளவுஞ் செலுத்துமின் சிந்தையை**
**வல்ல பரிசால் உரைமின்கள் வாய்மையை**

இல்லை யெனினும் பெரிதுளன் எம்மிறை
நல்ல வரனெறி நாடு மினீரே. (திருமந்திரம்-2103)

ஒன்றே குலனும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணாமே
சென்றே புகுங்கதி யில்லை நும் சித்தத்து
நின்றே நிலைபெற நீர்நினைந் துய்மினே (ஷ- 2104)

இக்காய நீக்கி யினியொரு காயத்திற்
புக்குப் பிறவாமற் போம்வழி நாடுமின்
எக்காலத் திவ்வுடல் வந்தெமக் கானதென்
றக்கால முன்ன அருள் பெறலாமே. (ஷ-2106)

கூடியும் நின்றுந் தொழுதம் மிறைவனைப்
பாடியுளே நின்று பாதம் பணிமின்கள்
ஆடியுளே நின் றறிவுசெய் வார்கட்கு
நீடிய வீற்றுப் பசுவது வாமே. (ஷ-2109)

சார்ந்தவர்க் கின்பங் கொடுக்குந் தழல் வண்ணன்
போந்தவர்க் கின்னாப் பிறவி கொடுத்திடும்
கூர்ந்தவர்க் கங்கே குரைகழல் காட்டிடும்
சேர்ந்தவர் தேவரைச் சென்றுணர்வாரே. (ஷ-2114)

என வரும் திருமந்திரப் பாடல்கள் இங்கு நினைக்கத்தக்கனவாகும்.

எட்டாந் தந்திரம் உடலிற் பஞ்சபேதம் என்பது முதல் சோதனை என்பது ஈறாக நாற்பத்து மூன்று உட்பிரிவுகளை யுடையது. இதன்கண் உடலிற் பஞ்சபேதம் சாக்கிரம் முதலிய அவத்தை பேதங்கள், கேவல சகல சுத்தம் என்னும் மூவகை நிலைகள், அறிவுதயம், ஆறந்தம், மகாவாக்கியம் வாய்மை, அவாவறுத்தல், பக்தியுடைமை, சோதனை முதலிய பொருள்கள் விரித்துரைக்கப் பெற்றுள்ளன. சிவதரிசனத்தின் பின் சிவனொடு கூடுதல் என்னும் சிவயோக நிலையினை உணர்த்துதல் எட்டாந் தந்திரத்தின் கருத்தென்பர் பெரியோர். இத்தந்திரத்திற் கூறப்படும் சிவயோக நிலைகள் பற்றிய அரும்பொருள்களும், மேற் கூறப்பட்ட அட்டாங்கயோகம் முதலிய நுண்பொருள்களும் அநுபவமுடைய ஆசிரியர்களை வழிபட்டு அவர்கள் அறி வுறுத்திய நெறியில் நின்று உணர்ந்துகொள்ளத் தக்கனவன்றி ஏனையோரால் எளிதில் உணரத்தக்கன அல்ல.

இத் தந்திரத்தில் அடித்தலையறியுந் திறங்கூறல் என்ற பகுதி, ஆன்மா இறைவன் திருவருளில் தலைப்பட்டுத் தாடலை போல் அடங்கி நிற்றலாகிய அத்துவித நிலையினைப் புலப்படுத்துவ தாகும். மகா வாக்கியம் என்ற பகுதியில் 'தத்துவ மசி' எனவும்

சிவாத்து விதம் எனவும் அருமறைகளிற் கூறப்படும் சித்தாந்த நுண் பொருள் விரித்துரைக்கப் படுகின்றது. வாய்மை வழி நின்று தன்னையறிந்திடும் தத்துவ ஞானிகள், அவாவறுத்து இறைவன்பால் எல்லையற்ற பக்தியுடையராய் சிவயோகத்தின் குடிந்த நிலையில் நிற்குந் திறத்தினை விளக்குவன இத் தந்திரத்தினுள் வாய்மை, ஞானி செயல், அவா வறுத்தல், பக்தியுடைமை சோதனை என்ற தலைப்புக்களில் அமைந்த திருமந்திரப் பாடல்களாகும்.

மெய்கலந்தாரொடு மெய்கலந்தான்மிகப்
பொய் கலந்தாருட் புகுதாப் புனிதனைக்
கைகலந்தாவி யெழும்பொழு தண்ணலைக்
கை கலந்தார்க்கே கருத்துறலாமே. (2601)

தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பார்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனருளாலே. (2611)

ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்
ஆசை படப்பட வாய்வருந் துன்பங்கள்
ஆசை விடவிட வானந்த மாமே. (2615)

அடியா ரடியா ரடியார்க் கடிமைக்
கடிய்னாய் நல்கிட் டடிமையும் பூண்டேன்
அடியா ரருளால் அவனடி கூட
அடியா னிவனென் றடிமைகொண்டானே. (2624)

ஆன்கன்று தேடி யழைக்கு மதுபோல்
நான்கன்றாய் நாடி யழைத்தேனென் நாதனை
வான்கன்றுக் கப்பலாய் நின்ற மறைப்பொருள்
ஊன்கன்றா னாடிவந் துள்புகுந் தாளே. (2627)

முத்தியில் அத்தன் முழுத்த அருள்பெற்றுத்
தத்துவ சுத்தி தலைப்பட்டுத் தன்பணி
மெய்தவஞ் செய்கை வினைவிட்ட மெய்யுண்மைப்
பத்தியி லுற்றோர் பரானந்த போதரே. (2633)

பெம்மான் பெருநந்தி பேச்சற்ற பேரின்பத்
தம்மா னடிதந் தருட்கட லாடினோம்
எம்மாய மும்விடுத் தென்னைக் கரந்திட்டுச்
சும்மா திருந்திடஞ் சோதனை யாகுமே. (2635)

எனவரும் திருமந்திரத் திருப்பாடல்கள் உணர்ந்து போற்றத்தக்கனவாகும்.

இந்நூலின் முடிவிலுள்ள **ஒன்பதாந்தந்திரம்**, தச காரியத்துள் ஒன்றாகிய சிவபோகம் என்னும் பேரின்ப நிலையை விளக்கும் முறையில் அமைந்துள்ளது. ஈண்டுச் சிவபோகம் என்றது, உயிர் யோகத்தாற் சிவத்துடன் கூடிய நிலையில் தன்னை மறந்து அம்முதல்வனது பேரருளில் திளைத்து இன்புறுதலாகிய சிவசாயுச்சிய நிலையினை, இத்தந்திரம் குருமடதரிசனம் என்பது முதலாகச் சர்வ வியாபி என்பதீறாக இருபத்திரண்டு உட்பிரிவுகளையுடையதாகும். இதன்கண் கூறப்படும் குருமடதரிசனம், ஞானகுருதரிசனம், திருக்கூத்துத் தரிசனம், ஆகாசப்பேறு, ஞானோதயம், சத்திய ஞானானந்தம், சொரூப உதயம், சிவதரிசனம், சிவரூபதரிசனம் என்னும் பகுதிகள், சிவயோகியர்களின் அநுபவ நிலைகளைக் குறிப்பன ஆகும். பிரணவ சமாதி, தூல சூக்கும் அதி சூக்கும பஞ்சாக்கரங்கள், மோனசமாதி என்னும் பகுதிகள், எல்லாப் பொருள்களையுந் தன்னகத்தே அடக்கியுள்ள திருவைந்தெழுத்தினை அவ்வத் தானங்களில் வைத்துத் தியானிக்கும் நிலையிற் சிவபோகத்து அழுந்துந்திறனைத் தெளிய அறிவுறுத்துவன ஆகும். திருவைந்தெழுத்தினைக் குறித்துத் திருமூலதேவர் இந்நூலில் அறிவுறுத்திய உண்மைகள், உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன் முதலிய மெய்கண்ட நூல்களில் எடுத்தாளப் பெற்று உள்ளமை உணர்ந்து போற்றத் தக்கதாகும். திருக்கூத்துத் தரிசனம் என்ற பகுதி சைவத்தின் மிகச்சிறந்த நுண்பொருளை விளக்குவது. இதில் சிவானந்தக் கூத்து என்றது, சிவஞானிகள் என்றும் தம் மெய்யுணர்வினிற் கண்டு அநுபவிக்கத் தக்க நித்தியமாகிய ஆனந்தக் கூத்தாகும். இதன் நுட்பத்தினை,

**பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த பொன்சடை**
**பின்றயங்க ஆடுவாய் பிஞ்ஞகா பிறப்பிலீ**
**கொன்றையம முடியினாய் கூடலாலவாயிலாய்**
**நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே.** (3-52-6)

எனவரும் திருப்பாடலில் ஆளுடையபிள்ளையாரும்,

**"குறியொன்றுமில்லாத கூத்தன்றன் கூத்து"** (திருவாசகம்)

எனத் திருவாதவூரடிகளும் குறித்துப் போற்றியுள்ளமை நினைக்கத் தக்கதாம், பக்குவமுடைய சிவஞானிகளுக்குச் சிறப்பு முறையில் நிகழ்த்தப்பெறும் இத்திருக்கூத்தினை யன்றி, உலக உயிர்கள் யாவும் நலம் பெற்றுய்தல் வேண்டும் என்னும் பொது நிலையில் இறைவனால் நிகழ்த்தப்பெறுந் திருக்கூத்து, சுந்தரக் கூத்து, பொற்பதிக்கூத்து, பொற்றில்லைக் கூத்து, அற்புதக்கூத்து என்னும்

தலைப்புக்களில் வைத்து இத்தந்திரத்தில் விரித்துரைக்கப் பெறுகின்றது.

இதன் கண்வரும் சூனியசம்பாஷனை என்ற பகுதி, உணர்தற்கரிய உயர்ந்த ஞான நுண்பொருள்களைக் கேட்போர் எளிதின் மனங்கொள்ளும் வண்ணம் உருவக வாய்பாட்டால் மறைத்துக் கூறும் மறைபொருட் கிளவிகள் ஆக அமைந்துள்ளது. பொருள்களை ஆராய்ந்து பார்க்கும் அறிவுடைய ஆன்மாவின் உறையுளாகிய உடம்பின் கண்ணே உயிர்க்கு நற்பயன்தரும் அறிகருவிகளாகிய ஐம்பொறிகள் உள்ளன. அவை ஐந்தும் தம்மை நல்வழியற் செலுத்தும் ஆசிரியனைப் பொறாமையால் சீவபோதமாகிய வெறிகொண்டு புலன்களின் வழியே உழல்கின்றன. அவை, தீதொரீஇ நன்றின்பாற் செலுத்தவல்ல ஆசிரியனைப் பெற்று அவனது உபதேசத்தின் வழி தற்போதம் அடங்கப் பெறின், அவை ஐந்தும் உயிர்க்குச் சிவஞானமாகிய பாலை நிரம்பத் தருவன என்னும் அரிய உண்மையினை விளக்கும் விடுகதைபோன்று அமைந்தது,

**பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு**
**மேய்ப்பாரை யின்றி வெறித்துத் திரிவன**
**மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினாற்**
**பார்ப்பான் பசு ஐந்தும் பாலாச் சொரியுமே.** (2883)

எனவரும் திருமந்திரமாகும். இதுபோன்று இப்பகுதியில் வரும்பாடல்கள் ஒப்பொடுபுணர்ந்த உவமம், தோன்றுவது கிளந்த துணிவு ஆகிய பிசி என்னும் செய்யுள்வகையினை ஒத்து அமைந்திருத்தல் காணலாம். இவ்வாறு மறை பொருட் கிளவிகளாக வரும் திருமந்திரப் பாடல்களுக்கு அநுபவம் உடைய நல்லறிஞர்களைக் கொண்டு தெளிவான முறையில் பொருள் விளக்கங் காணுதல் தமிழ்வளர்ச்சிக்கும் சமய வளர்ச்சிக்கும் ஆக்கந் தரும் நற்பணியாகும்.

இவ் ஒன்பதாந் தந்திரத்தின் இறுதியிலமைந்த வரையுறை மாட்சி, அணைந்தோர்தன்மை, தோத்திரம் சர்வவியாபி என்னுந் தலைப்புக்களில் உள்ள திருமந்திரப் பாடல்கள், பசுகரணங்க ளெல்லாம் சிவகரணங்களாகப் பெற்றுச் சிவபோகத்தில் திளைத்தின்புறும் அருளாளர்கள் ஆகிய சீவன் முத்தர்களது இயல்பினை இனிது புலப்படுத்துவனவாகும்.



# திருமந்திரமும் திருக்குறளும்

*திருமூலநாயனார் அருளிய திருமந்திரமாலையும் தெய்வப் புலவர் திருவள்ளுவர் அருளிய திருக்குறளிலுள்ள சொற் றொடர்களும் கருத்துக்களும் ஆங்கு ஆங்கே இடம் பெற்றுள்ளன. அவற்றுள் தெளிவாகத் தெரிந்தவற்றை இங்குத் தொகுத்து நோக்குதல் இன்றியமையாததாகும்.*

1. "ஆரும் அறியார் அகாரம் அவனென்று - (1751)

'அகரமுதலாய் அனைத்துமாய் நிற்கும்'திருமந்திரம்- (1753)

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு. - திருக்குறள் - 1

2. "ஓதி யுணரவல் லோமென்பர் உள்நின்ற
சோதி நடத்தும் தொடர் வறியாரே" - திருமந்திரம்- 319

கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின். - திருக்குறள்- 2

-632

3. "போதுகந் தேறும் புரிசடையன்'

'மலருறை மாதவன்' (1531)

'கமலத்துறையீசனை' (2092)

'உடந்த செந்தாமரையுள்ளுறு சோதி
நடந்த செந்தாமரை' -திருமந்திரம் (2484)

மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடு வாழ்வார். -திருக்குறள்- 3

4. 'ஐந்து வென்றனன்' -திருமந்திரம் - 1

'பொறிவாயில் ஐந்தவித்தான்' -திருக்குறள் - 5

5. "தன்னை யொப்பாயொன்றும் இல்லாத் தலைமகன்'
- திருமந்திரம்- 7

'தனக்கு உவமை யில்லாதான்' - திருக்குறள் - 7

6. பிறவாநெறிதந்த பேரருளாளன்
மறவா அருள்தந்த மாதவன் நந்தி

அறவாழி அந்தணன் ஆதிபராபரன்
உறவாகி வந்தென் உளம் புகுந்தானே. - திருமந்திரம் - (1803)

அறவாழி யந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது. - திருக்குறள் - 8

7. 'சிறப்பொடு பூசனை செய்ய நின்றார்க்கே'
- திருமந்திரம் - 1524

'சிறப்பொடு பூசனை செல்லாது' - திருக்குறள்- 18

8. 'இறப்பும் பிறப்பு மிருமையும் நீங்கித்
துறக்குந் தவங்கண்ட சோதிப் பிரானை
மறப்பிலராய் நித்தம் வாய்மொழி வார்கட்
கறப்பயன் காட்டும் அமரர் பிரானே. திருமந்திரம்- 1614

இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு. திருக்குறள் - 23

9. ' ஆக மதத்தன ஐந்து களிறுள
ஆக மதத்தறி யோடணை கின்றில
பாகனு மெய்த்தவை தாமு மிளைத்தபின்
யோகு திருந்துதல் ஒன்றறி யோமே' திருமந்திரம்- 2023

'ஆனைகள் ஐந்தும் அடக்கி...
வாகனமேற வழியெளி தாமே' திருமந்திரம் - 2316

உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து. திருக்குறள்- 24

10. 'ஆமே சுவையொளி யூறோசை கண்டவள்'
திருமந்திரம்- 1350

சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு. திருக்குறள்- 27

11. 'அந்தண்மை பூண்ட அருமறை யந்தத்துச்
சிந்தைசெய் அந்தணர்' திருமந்திரம்- 234

அந்தண ரென்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான். திருக்குறள் - 30

*அந்தணர் என்பதற்கு அழகிய தண்ணளியினையுடையார் எனத் திருவள்ளுவர் குறித்த காரணத்துடன் வேதத்தின் அந்தத்தை அணவுவோர் என மற்றொரு காரணத்தினையும் இயைத்துக் கூறும் நிலையில் அந்தண்மை பூண்ட அந்தணர், அருமறை*

*யந்தத்துச் சிந்தைசெய் அந்தணர் எனத் திருமூல நாயனார் கூறிய விளக்கம் இங்கு உணரத்தக்கவாகும்.*

12. 'சிறந்தநீர் ஞாலஞ் செய்தொழில் யாவையும்
அறைந்திடில் வேந்தனுக் காறிலொன் றாமே'
திருமந்திரம்- 244

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
கைம்புலத்தா றோம்பல் தலை. திருக்குறள்- 43

*'ஐவகையும் அறஞ்செய்தற்கிடனாதலின் ஐம்புலம் என்றார். அரசனுக்கு இறைப்பொருள் ஆறில் ஒன்றாயிற்று; இவ்வைம்புலத்திற்கும் ஐந்து கூறுவேண்டுதலான் என்பதறிக' எனப் பரிமேலழகர் கூறும் விளக்கம் இங்கு நினைத்தற்குரியதாகும்.*

13. 'யாவர்க்குமாம் பிறர்க்கின்னுரை தானே'- திருமந்திரம் - 252
யார்மாட்டும், இன்புறூஉம் இன்சொ லவர்க்கு'
திருக்குறள் - 94

14. 'ஒருமையு ளாமைபோல் உள்ளைந்தடக்கி
இருமையுங் கேட்டிருந்தார் புரையற்றே' 133
'ஆமை யகத்தினி லஞ்சு மடங்கிடும்' திருமந்திரம்-2158

ஒருமையு ளாமைபோல் ஐந்தடக்க லாற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து. திருக்குறள் -126

15. இன்பம் இடரென் றிரண்டுற வைத்தது
முன்பவர் செய்கையி னாலே முடிந்தது
இன்பம் அதுகண்டும் ஈகிலாப் பேதைகள்
அன்பிலார் சிந்தை அறம்அறி யாரே. திருமந்திரம்-267

ஈத்துவக்கும் இனபம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர். திருக்குறள்-228

16. தவமிக் கவரே தலையான வேடர்
அவமிக் கவரே அதிகொலை வேடர்
அவமிக் கவர்வேடத் தாகாரவ் வேடந்
தவமிக் கவர்க்கன்றித் தாங்கவொண் ணாதே.
திருமந்திரம் - 1661

வேடநெறி நில்லார் வேடம்பூண் டென்பயன்
வேடநெறி நிற்பார் வேடம்மெய் வேடமே
வேடநெறி நில்லார் தம்மை விறல்வேந்தன்
வேடநெறி செய்தால் வீடது வாகுமே. திருமந்திரம் - 240

தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
அஃதிலார் மேற்கொள் வது. திருக்குறள் - 262

17. 'கூற்றன் வருங்கால் குதிக்கலுமாமே' (172)

'காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை யுதைக்குங் குறியது வாமே' திருமந்திரம் - 571

கூற்றங் குதித்தலுங் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு. திருக்குறள் - 269

18. 'பறக்கின்ற ஒன்று பயனுற வேண்டின்
இறக்கின்ற காலத்தும் ஈசனை யுள்கும்' (2108)

' உடம்போ டுயிரிடை நட்பறியாதார்
மடம்புகு நாய்போல் மயங்குகின் றாரே' திருமந்திரம் - 2148

குடம்பை தனித் தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு. திருக்குறள் - 338

19. பதமுத்தி மூன்றும் பழுதென்று கைவிட்
டிதமுற்ற பாச இருளைத் துரந்து
மதமற் றெனதியான் மாற்றி விட்டாங்கே
திதமுற் றவர்கள் சிவசித்தர் தாமே. திருமந்திரம் - 2525

யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும். திருக்குறள் - 346

20. 'பற்றது பற்றிற் பரமனைப் பற்றுமின்' (298)
'பற்றற் றவர்பற்றி நின்ற பரம்பொருள்' திருமந்திரம் - 2865

பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. திருக்குறள் - 350

21. 'சிந்தை யுறவே தெளித்திருள் நீங்கினால்' (1460)

இருள் நீக்கி எண்ணில் பிறவி கடத்தி
அருள் நீங்கா வண்ணமே ஆதியருளும்
மருள் நீங்கா வானவர் கோனொடுங் கூடிப்
பொருள் நீங்கா இன்பம் புணர்ந்தயின் றேனே .
திருமந்திரம் - 1516

இருள்நீங்கி யின்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு. திருக்குறள் - 352

22. 'சத்தமுதல் ஐந்தும் தன்வழித் தான்சாரில்
சித்துக்குச் சித்தன்றிச் சேர்விடம் வேறுண்டோ'
திருமந்திரம் - 135

ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு. திருக்குறள் - 353

23. ‘செம் பொருளான சிவமெனலாமே’ (2563)

பிறந்தும் இறந்தும்பல் பேதைமையாலே
மறந்து மலவிருள் நீங்க மறைந்து
சிறந்த சிவனருள் சேர்பரு வத்துத்
துறந்த வுயிர்க்குச் சுடரொளி யாமே. திருமந்திரம் - 1615

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு. திருக்குறள் - 358

24. ‘கலங்கிடுங் காம வெகுளிமயக்கம்’ (1340)

காம வெகுளி மயக்க மிவைகடிந்
தேமம் பிடித்திருந் தேனுக் கெறிமணி
ஓமெனு மோசையி னுள்ளே யுறைவதோர்
தாம மதனைத் தலைப்பட்ட வாறே திருமந்திரம் - 2436

காம வெகுளி மயக்க மிவைமூன்றன்
நாமங் கெடக்கெடும் நோய். திருக்குறள் - 360

25. கணக்கறிந் தார்க் கன்றிக் காணவொண்ணாது
கணக்கறிந் தார்க்கன்றிக் கைகூடா காட்சி
கணக்கறிந் துண்மையைக் கண்டண்ட நிற்குங்
கணக்கறிந் தார்கல்வி கற்றறிந் தாரே. திருமந்திரம் - 316

எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு. திருக்குறள் - 391

26. ‘துணையது வாய்வருந் தூயநற் கல்வியே’
திருமந்திரம் - 294

ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து. திருக்குறள் - 398

27. ‘கற்றவர் பேரின்பம் உற்றுநின்றாரே’ திருமந்திரம் - 298

தாமின் புறுவ துலனின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார். திருக்குறள் - 399

28. ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்
பார்த்திருந் துண்மின் பழம்பொருள் போற்றன் மின்
வேட்கை யுடையீர் விரைந்தொல்லை உண்ணன்மின்
காக்கை கரைந்துண்ணுங் கால மறிமினே. திருமந்திரம் - 250

செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு. திருக்குறள் - 86

பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்ட லரிது. திருக்குறள் - 227

காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
அன்ன நீ ரார்க்கே யுள. திருக்குறள் - 527

29. தத்தஞ் சமயத் தகுதி நில் லாதாரை
அத்தன் சிவன் சொன்ன ஆகம நூல்நெறி
எத்தண்ட முஞ்செயும் உம்மையில், இம்மைக்கே
மெய்த் தண்டஞ் செய்வதவ் வேந்தன் கடனே. திருமந்திரம் -
247

குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில் திருக்குறள் - 549

30. நாடோறும் மன்னவன் நாட்டில் தவநெறி
நாடோறும் நாடி யவனெறி நாடானேல்
நாடோறும் நாடு கெடுமூட நண்ணுமால்
நாடோறுஞ் செல்வம் நரபதி குன்றுமே. திருமந்திரம் - 239

நாடொறும் நாடி முறைசெய்யா மன்னவன்
நாடொறும் நாடு கெடும். திருக்குறள் - 553

31. 'ஒன்றேகுலனும் ஒருவனே தேவனும்' திருமந்திரம் - 2104

'பிறப்பொக்கும் எல்லாவு யிர்க்கும்' திருக்குறள் - 972



# திருமந்திரமும் ஏனைய திருமுறைகளும்

## திருமந்திரம்:

1. ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந் தான்ஐந்து
வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்
சென்றனன் தானிருந் தானுணர்ந் தெட்டே.

ஈறாய்முத லொன்றாயிரு பெண்ணாண்குண மூன்றாய்
மாறாமறை நான்காய்வரு பூதம்மவை யைந்தாய்
ஆறார்சுவை ஏழோசையோ டெட்டுத்திசை தானாய்
வேறாயுட னானானிடம் வீழிம்மிழ லையே.தேவாரம் - 1-11-2

*இவ்விரு திருப்பாடல்களிலும் ஒன்றுமுதல் எட்டு வரையுள்ள எண்கள் எண்ணலங்காரம் அமையப் பயின் றுள்ளமை ஒப்பு நோக்கத் தக்கதாகும்.*

'வென்றவன் புலனைந்தும்' தே. 1-113-10

'வென்றானைப் புலனைந்தும்' தே. 5-98-7

7. முன்னை யொப்பாயுள்ள மூவர்க்கு மூத்தவன்
தன்னை யொப்பா யொன்றும் இல்லாத் தலைமகன்
தன்னையப் பாவெனில் அப்பனு மாயுளன்
பொன்னையொப் பாகின்ற போதகத் தானே.

'மற்றாருந் தன்னொப்பா ரில்லாதனை' தே. 6-1-2

என்னையப்பாவஞ்ச லென்பவ ரின்றிநின் றெய்த்தலைந் தேன்
மின்னையொப்பாய் விட்டிடுதி கண்டாய் உவமிக்கின் மெய்யே
உன்னையொப்பாய் மன்னும் உத்தரகோச மங்கைக் கரசே
அன்னையொப்பாயெனக் கத்தனொப்பாயென் அரும்பொருளே.
திருவாசகம் - நீத்தல் விண்ணப்பம். 16

8. 'தாயினும் நல்லன்'
தாயினும் நல்லதலைவர்' தே. 3-123-5

'தாயினும் நல்ல சங்கரனுக்கன்பர்' தே. 5-100-9

9. 'எம்மிறை, தன்னால் தொழப்படு வாரில்லை தானே'
'சேர்ந்தறியாக் கையானை'திருவாசகம், திருவம்மானை - 13

10. 'தானே மழைபொழி தையலுமாய் நிற்கும்'

'முன்னியவள் நமக்கு முன் சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய்'
திருவாசகம்-திருவெம்பாவை-16

29. 'நாணநில் லேன்உன்னை நான்தழு விக்கொள'

'நாணது வொழிந்து நாடவர்பழித்துரை
பூணது வாகக் கோணுதலின்றி' திருவா-போற்றி-69,70

30. ஆனின் றழைக்கு மதுபோல் என்னந்தியை
நானின் றழைப்பது ஞானங் கருதியே'.
'கற்றா மனமெனக் கதறியும் பதறியும்' திருவா-போற்றித்-73

'கற்றாவின் மனம்போலக் கசிந்துருகவேண்டுவனே'
திருவா-திருப்புலம்பல்-2

31. மண்ணகத்தா னொக்கும் வானகத்தா னொக்கும்
விண்ணகத்தா னொக்கும் வேதகத்தா னொக்கும்
பண்ணகத் தின்னிசை பாடலுற் றானுக்கே
கண்ணகத்தே நின்று காதலித் தேனே.

விண்ணகத் தான்மிக்க வேதத்துளான் விரிநீருடுத்த
மண்ணகத் தான்திரு மாலகத்தான்மரு வற்கினிய
பண்ணகத் தான்பத்தர் சித்தத்துளான்பழ நாயடியேன்
கண்ணகத் தான்மனத்தான் சென்னியானெங்
கறைக் கண்டனே. தே. 4-112-6

34. 'ஆர்ந்த சுடரன்ன ஆயிர நாமமும்'

'ஆயிரம் பேருகந்தானும் ஆரூரமர்ந்த அம்மானே' தே. 4-4-8

36. 'எப்பரி சாயினும் ஏத்துமின் ஏத்தினால்
அப்பரிசீசன் அருள்பெற லாமே'

'அஞ்சியாகிலும் அன்புபட்டாகிலும்
நெஞ்சம்வாழி நினைநின்றி யூரை நீ' தே.5-23-6

38. 'பிதற்றொழியேன் பெரியான் அரியானை'

'அரியானை அந்தணர்தஞ் சிந்தையானை....
பெரியானைப் பெரும் பற்றப் புலியூரானை' தே. 6-1-1

40. 'குறைந்தடைந்தீசன் குரைகழல் நாடும்'
'குறைந்தடைந்தார் பாவம் போக்க கிற்பானை' தே. 6-67-2

50. சூடுவன் நெஞ்சிடை வைப்பன் பிரானென்று
பாடுவன் பன்மலர் தூவிப் பணிந்து நின்
றாடுவன் ஆடி அமரர் பிரானென்று

நாடுவன் யானின்றறிவது தானே.
'சூடுவேன் பூங்கொன்றை சூடிச்சிவன் திரள்தோள்
கூடுவேன் ... ... ... ... ... .... உள்ளுருகித்
தேடுவேன் தேடிச் சிவன் கழலே சிந்திப்பேன்
திருவா-திருவம்மானை-17

54. 'திருநெறியாவது'
'திருநெறிய தமிழ்' தே.1-1-11

61. 'சிவதன்மந்தானே சொல்காலத்தரனாய்'
'அறங்கொண்டு சிவதன்ம முரைத்தபிரான்' தே. 2-43-6

95. 'ஆரறிவார் எங்கள் அண்ணல் பெருமையை'
'இவர்தன்மை அறிவாரார்' தே. 3-112-1
'ஆரொருவர் அவர் தன்மையறிவார்' தே. 6-11-8

118. 'மலங்கள் ஐந்தாமென மாற்றி அருளி'
'மலங்கள் ஐந்தாற் சுழல்வன்' திருவா-நீத்தல்-29

123. 'அனித்தான் உலகெங்குந் தானானவுண்மை'
'உலகத்து, ஒரு நீயாகித் தோன்ற விழுமிய
பெறலரும் பரிசில் நல்குமதி' திருமுருகாற்றுப்படை-293

128. சோம்பர் கண்டாரச் சுருதிக்கண் தூக்கமே'

129. 'தூங்கிக் கண்டார் சிவலோகமுந்தம்முளே'
'சொற்பாவும் பொருள் தெரிந்து தூய்மை நோக்கித்
தூங்காதார் மனத்திருளை வாங்காதானை' தே. 6-67-2

130. 'மன்றுள் உமைகாண ஆடிடும்
செவ்வானிற் செய்ய செழுஞ்சுடர் மாணிக்கம்'
'அருமான வாண்முகத்தாள் அமர்ந்துகாண
அமரர்கணம் முடிவணங்க ஆடுகின்ற, பெருமானை'
தே-6-1-3

134. 'புரையற்ற பாலிலுள் நெய்கலந்தாற்போல்'
'கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற்போல'
திருவா-சிவபுராணம்-46

138. 'திருவடியேசெல் கதியது செப்பில்
திருவடியே தஞ்சம் உள்தெளிவார்க்கே'
'தென்னன் பெருந்துறையான் ...........
தாட்டாமரை காட்டித் தன் கருணைத் தேன்காட்டி"
திருவா-திருவம்மானை-6

"சேவடி படருஞ் செம்மலுள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந்துறையுஞ்
செலவுநீ நயந்தனை யாயின்' - திருமுருகாற்றுப்படை

143. மண்ணொன்று கண்டீர் இருவகைப் பாத்திரந்
திண்ணென் றிருந்தது தீயினைச் சேர்ந்தது;
விண்ணின்று நீர்விழின் மீண்டுமண் ணானாற்போல்
எண்ணின்றி மாந்தர் இறக்கின்ற வாறே.

'புனல்பட வுருகி மண்டழல் வெதும்பிப் பூம்புனல்
பொதிந்துயிரளிக்கும்
வினைபடு நிறைபோல் நிறைந்த வேதகத்தென்
மனம்நெக மகிழ்ந்த பேரொளியே' திருவிசைப்பா-5-6

'எழிலையாழ் செய்கைப் பசுங்கலன் விசும்பி
னின்றுளிபட நனைந்துருகி
அழலையாழ் புருவம் புனலொடுங் கிடந்தாங்
காதனேன் மாதரார்கலவித்
தொழிலையாழ் நெஞ்சம் இடர்படா வண்ணந்
தூங்கிருள் நடுநல்யாமத்தோர்
மழலையாழ் சிலம்ப வந்தகம் புகுந்தோன்
மருவிடந் திருவிடைமருதே' திருவிசைப்பா-10-7

151. 'ஒன்பது வாசலும் ஒக்க அடைந்தன'

'ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்
ஒக்க அடைக்கும்போ துணரமாட்டேன்' தே. 6-99-1

182. 'சாலுமவ் வீசன் சலவியனாகிலும்
ஏல நினைப்பவர்க் கின்பஞ்செய் தானே'

'சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க்கலால்
நலமிலன் நாடொறும் நல்குவான் நலன்' தே. 4-11-6

230. 'நூலுஞ்சிகையும் நுவலிற் பிரமமோ'

'நூலும் வேண்டுமோ நுண்ணுணர்ந்தோர்கட்கே'தே. 5-39-8

297. 'வழித்துணையாம் பெருந்தன்மை வல்லானே'

'வழித்துணையாம் மழபாடி வயிரத்தூணே' தே. 6-40-10

'வானநாடனே வழித்துணைமருந்தே' தே. 7-70-9

303. 'பெருமானிவனென்று பேசியிருக்குந்
திருமானிடர் பின்னைத் தேவருமாவர்'

'திருவாய்ப் பொலியச் சிவாயநமவென்று
சிந்தைசெய்தேன்' தே. 4-94-6

'சிவமேபெறுந் திருவெய்திற்றிலேன்'திருவா-திருச்சதகம்-5

304. 'வாச மலர்க்கந்த மன்னி நின்றானே'

'பூவினாற்றம் போன்றுயர்ந் தெங்கும்
ஒழிவற நிறைந்து மேவியபெருமை
திருவா-திருவண்டப்-115,6

319. 'ஆதிப்பிரான்'
ஆதியனாதிரையன் தே.3-61-1; 7-97-1

339. 'கருத்துறை யந்தகன் ....வருத்தஞ் செய்தானென்று
குருத்துயர் சூலங்கைக் கொண்டு நின்றானே
இருள்மேவும் அந்தகன்மேற் றிரிசூலம் பாய்ச்சி தே. 7-16-2

340. கொலையிற் பிழைத்த பிரசா பதியைத்
தலையைத் தடிந்திட்டுத் தானங்கி யிட்டு
நிலையுல குக்கிவன் வேண்டுமென்றெண்ணித்
தலையை யரிந்திட்டுச் சந்திசெய் தானே.

'தக்கனையும் எச்சனையும் தலையறுத்துத் தேவர்கணம்
தொக்கனவந் தவர்தம்மைத் தொலைத்ததுதா னென்னேடீ
தொக்கனவந் தவர்தம்மைத் தொலைத்தருளியருள் கொடுத்தங்
'கெச்சனுக்கு மிகைத்தலைமற் றருளினன் காண் சாழலோ'
திருவாசகம்-திருச்சாழல்-5

341. 'அயன்தலை முன்னற
அங்கச்சுதனை உதிரங்கொண்டானே'

'அன்றயன் பொய்ச்சிரம், அயனகவ்வதறிந்து மற்றதில்
ஊனுகந்த அருத்தியே' தே.3-38-6

'அயன்றலை கொண்டு செண்டாடல்பாடி'
திருவா-திருப்பொற்-18

342. 'பொங்குஞ்சலந்தரன் போர்செய்ய நீர்மையின்
அங்கு விரற்குறித் தாழி செய்தானே'

'செருமேவுசலந்தரனைப் பிளந்தசுடராழி' தே. 7-16-2

'சலமுடைய சலந்தரன்றன் உடல்தடிந்த நல்லாழி'
திருவா-திருச்சாழல்-18

345. 'காலுற்றுக் காலனைக் காய்ந்தங்கி யோகமாய்
ஞாலக் கடவூர் நயமாய் இருந்ததே'

'அருமுனிக்காய்ச்
சூலமும் பாசமுங் கொண்டு தொடர்ந் தடர்தோடிவந்த
காலனைக் காய்ந்தபிரான் கடவூருறை யுத்தமனே'
- தே. 4-107-6

347. அடிசேர்வன் என்னஎம் ஆதியை நோக்கி
முடிசேர் மலைமக ளார்மக ளாகித்
திடமார் தவஞ்செய்து தேவரறியப்
படியார அர்ச்சித்துப் பத்திசெய் தாளே.

'குரும்பைமுலை மலர்க்குழலி கொண்டதவங்கண்டு
குறிப்பினொடுஞ் சென்றவள்தன் குணத்தினை நன்கறிந்து
விரும்புவரங் கொடுத்தவளை வேட்டருளிச் செய்த
விண்ணவர் கோன் கண்ணுதலோன்' தே.7-16-1

351. உறுவ தறிதண்டி ஒண்மணற் கூட்டி
அறுவகை ஆனைந்தும் ஆட்டத்தன் தாதை
செறுவகை செய்து சிதைப்ப முனிந்து
மறுமழு வாழ்வெட்டி மாலைபெற் றானே.
தழைத்ததோ ராத்தியின்கீழ்த் தாபர மணலாற் கூப்பி
அழைத்தங்கே யாவின் பாலைக் கறந்துகொண் டாட்டக்கண்டு
பிழைத்ததன் தாதை தாளைப் பெருங்கொடு மழுவால் வீசக்
குழைத்ததோ ரமுதமீந்தார் குறுக்கைவீரட்டனாரே.
தே.4-49-3

358. அரிபிர மன்தக்கன் அருக்க னுடனே
வருமதி வாலை வன்னிநல் லிந்திரன்
சிரமுக நாசி சிறந்தகை தோள்தான்
அரனரு ளின்றி யழிந்தநல் லோரே.

'அங்கி அருக்கன் இராவணன் அந்தகன் கூற்றன்
செங்கண் அரியயன் இந்திரனுஞ் சந்திரனும்
பங்கமில் தக்கனும் எச்சனுந்தம் பரிசழியப்
பொங்கியசீர் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ'
திருவா-பூவல்லி-15

409. அப்பரி செண்பத்துநான்கு நூறாயிரம்

'உரைசேரும் எண்பத்து நான்கு நூறாயிரமாம்
யோனி பேதம்' தே. 1-132-4

434. 'ஆண் பெண் அலியுருவாய்நின்ற ஆதியை'
'ஆணொடுபெண் அலியல்லரானார்' தே. 6-75-5

504. 'காவலன் பேர்நந்தி காட்டித்துக் கண்டவன்
ஏவன செய்யும் இளங்கிளையோனே'
'இளங்கிளை யாரூரன்' - தே. 7-29-10

513. 'கடலிற் கெடுத்துக் குளத்தினிற் காண்டல்'
'ஆற்றிற்கெடுத்துக் குளத்தினிற்றேடிய ஆதரைப்போல்'
தே.4-97-6

803. 'மூவரும் முப்பத்து மூவரும்' திருவாசகம்

1064. 'புளியுறு புன்பழம் போலுள்ளே நோக்கி'
'அளிபுண்ணகத்துப் புறந்தோல்மூடி யடியேனுடை யாக்கை புளியம்பழ மொத்திருந்தேன்' திருவா - ஆசைப்பத்து- 5

1078, 1079 'தென்னன்'
'தென்னவனெனை யாளுஞ்சிவனவன்' தே. 5-21-5
'தென்னாடுடைய சிவனே போற்றி' திருவா -போற்றித் -

1099. 'கன்னித்துறை'

1105. 'இனிய தென்மூலை யிருக்குங் குமரி'
'குமரித்துறை' தே. 5-99-2

1100. 'நீலக்குவளை மலரன்ன கண்ணினாள்'
'சுனையுள் நீலஞ்சுளியும் நெடுங்கண்ணாள்'தே. 5-23-5

1104. 'வேயனதோளி'
'வேயனைய தோளுமை' தே. 3-69-4
'வேயுறு தோளி' தே. 2-85-1

1158. 'வெள்ளடையான்'
'வெள்ளடை நீயன்றே' தே. 7-29-1

1176. 'வாயு மனமுங் கடந்த மனோன்மனி .....
அரனுக்குத், தாயும் மகளும் நல்தாரமும்ஆமே'
'எம்பெருமான் இமவான்மகட்குத்
தன்னுடைக்கேள்வன் மகன் தகப்பன் தமையன்'
திருவா-பொற்-13

1243. 'அவிக்கொண்ட சோதிக்கோர் அர்ச்சனைதானே'
'பூசனையீசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே'
தே. 4-76-4

1245. 'நயனங்கண் மூன்றுடை , விற்கொடி மாது'
'நயனங்கண் மூன்றுடை நாயகன்' திருவா-திருச்சாழல்-4

1309. ஏகபராசக்தி யீசற்காம் அங்கமே,
'யாவையுமாம் ஏகத்தொருவன்'
திருச்சிற்றம்பலக்கோவை-7

1330. 'பரமாய பரஞ்சுடர்'
'பண்ணாரின் றமிழாய்ப் பரமாய பரஞ்சுடரே'தே. 7-24-5

1423. இணையார் திருவடி. திருவா-திருப்பூவல்லி-1

1433. 'சிந்தையைத்தேற்றிச் சிவமாக்கி'

'சிந்தையுந் தெளிவுமாகித் தெளிவினுட்சிவமுமாகி'
தே. 4-48-5

1437. 'சென்று சிவமாதல் சித்தாந்த சித்தியே'
'சிவமானவாபாடித் தெள்ளேனங் கொட்டாமோ'
திருவா-திருத்தெள்-4

1455. 'சித்தங் குருவருளாற் சிவமாகுமே'

– 'சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும்
அத்தன்' திருவா- திருத்தோணாக்கம்-6

1459. 'பூவினிற்கந்தம் பொருந்தியவாறு போற்
சீவனுக்குள்ளே சிவமனம் பூத்தது'

'உற்ற வாக்கையி னுறுபொருள் நறுமலரெழுதரு
நாற்றம்போற்
பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்'
திருவா - அதிசயப்பத்து-9

1486. 'பசுபாசம் நீக்கிப் பதியுடன் கூட்டி'

'பசுபாசம் அறுத்தருளி' திருவா-கண்டபத்து-7

1520. 'செய்யன் கரியன் வெளியன் நற்பச்சையன்'
'வெளியாய் கரியாய் பச்சையனேசெய்ய மேனியனே'
திருவா-நீத்தல் -31

1527. 'இருவினை நேரொப்பில் இன்னருட்சத்தி
குருவென வந்து'

'உணக்கிலாததொர் வித்துமேல் விளையாம லென்வினை
ஒத்தபின்
கணக்கிலாத் திருக்கோல நீவந்து காட்டினாய்
கழுக்குன்றிலே'
திருவா-திருக்கழுக்குன்றப் பதிகம்-1

1529. 'நாதன் என்னுள் புகுந்து , ஊனைவிளக்கியுடனிருந் தானே'

'ஊனினை யுருக்கியுள்ளொளி பெருக்கி'
திருவா-பிடித்த-9

1530. 'ஆயத்துள் நின்ற அறுசமயங்களும்
காயத்துள் நின்ற கடவுளைக் காண்கிலா

'இருமுச் சமயத்தொரு பேய்த்தேரினை'
திருவா-திருவண்டப்-79

'காயத்துள் எழுதூறநீ கண்டுகொள்' திருவா-சென்னிப் -5

1534. 'சிவமல்லதில்லை யறையே'
'சிவனெனும் ஓசையல்லதறையோ' தே. 4-8-1

1538. 'குற்றந் தெளியார் குணங்கொண்டு கோதாட்டார்'
'குற்றங்கள் நீக்கிக் குணங்கொண்டு கோதாட்டி'
திருவா- திருவம்மானை - 20

1542. 'ஏதுஞ்செய்யாதே பிரானென்று கைதொழில்
ஆதியும் அந்நெறியாகி நின்றானே'
'எங்கேனும் யாதாகிப் பிறந்திடினுந் தன்னடியார்க்கு
இங்கேயென் றருள்புரியும் எம்பெருமான்' தே. 2-40-6
'யாதோர் தேவ ரெனப்படுவார்க்கெலாம்
மாதேவன்னலால் தேவர்மற்றில்லையே' தே. 5-100-4

1556. 'ஓங்காரத்துள்ளொளி யுள்ளே யுதயமுற்
றாங்காரமற்ற அநுபவம்'
'உய்ய வென்னுள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற'
திருவா-சிவபுராணம் - 33

1557. 'சமையங்க ளாறுந்தன் தாளினை நாட'
'திருத்தகும் அறுவகைச் சமயத் தறுவகையோர்க்கும்
வீடு பேறாய் நின்ற' திருவா- திருவண்டப் - 17, 18

1568. 'எத்தவ மாகிலென் எங்குப் பிறக்கிலென்
ஒத்துணர்வார்க் கொல்லை யூர்புகலாமே'
'எத்தவத்தோர்க்கும் இலக்காய் நின்ற எம்பெருமான்'
தே. 1-4-10
'எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும்' தே. 2-40-6

1582. 'சித்தம் யாவையும் திண்சிவமானக்கால்
அத்தனு மவ்விடத்தே யமர்ந்தானே'
சித்தஞ்சிவமாக்கிச் செய்தனவேமாக்கும், அத்தன்'
திருவா- திருத்தோ - 6

1590. 'தாள் தந்தபோதே தலைதந்த எம்மிறை'
தாழ்த்தச் சென்னியுத் தந்த தலைவனை' தே. 5-90-7

1595. 'என்னைச் சிவமாக்கி'
'சிவமாக்கி எனையாண்ட அத்தன்' திருவா- அச்சோப்- 1

1604. 'மந்திரமாவதும்'
'மந்திரமாவது நீறு' தே. 2-66-1

1608. 'அச்சங்கெடுத்தென்னையாண்டனன் நந்தியே'

2456. 'அச்சமறுத்தென்னை யாண்டனன் நந்தியே'

'அச்சந்தீர்த் தாட்கொண்டான்' திருவா- திருச்சதகம் 29

1616. 'அறவன் பிறப்பிலி யாருமிலாதான்
உறைவதுகாட்டகம் உண்பது பிச்சை'

'உண்பது மூரிடு பிச்சை' தே. 1- 39 - 2

'மூப்பதுமில்லை பிறப்பதுமில்லை யிறப்பதில்லைச்
சேர்ப்பது காட்டகத் தூரினும்' தே. 7-18-1

1631. சாத்திரம் ஓதுஞ் சதுர்களை விட்டுநீர்
மாத்திரைப்போது மறித்துள்ளே நோக்குமின்
பார்த்தஅப் பார்வை பசுமரத் தாணிபோல்
ஆர்த்த பிறவி யகலவிட் டோடுமே.

'சாத்திரம் பல பேசுஞ் சழக்கர்காள்
கோத்திரமுங் குலமுங் கொண் டென்செய்வீர்
பாத்திரஞ் சிவமென்று பணிதிரேல்
மாத்திரைக்குள் அருளுமாற் பேறரே' தே. 5-60-3

'பசுமரத்தாணி யறைந்தாற்போல' திருவா. போற்றித் -65

'ஆர்த்தபிறவித் துயர்கெட'திருவா. திருவெம்பாவை - 12

1689. 'மன்னும் மலம் ஐந்தும்'
மலங்கள் ஐந்தாற் சுழல்வன்' திருவா. நீக்கல் - 29

1693. 'கொள்ளினும் நல்ல குருவினைக் கொள்ளுக'
உள்ளபொருளுடல் ஆவியுடனீக'

1715. 'அண்டங்கடந்தப்புற நின்றுகாத்தனன்'

'அண்டமாரிரு ளூடுகடந்தும்பர்
உண்டுபோலுமோ ரொண்சுடர்' தே. 5-97-2

1778. 'உடல்பொருளாவி யுதகத்தாற்கொண்டு'
'அன்றேயென்றன் ஆவியும் உடலும் உடைமையெல்லாமுங்
குன்றேயனையாய் என்னையாட்கொண்டபோதே
கொண்டிலையோ'

திருவா. குழைத்த - 7

1781. 'தட்டொக்க மாறினன் தன்னையும் என்னையும்
வட்டம தொத்தது வாணிபம் வாய்த்ததே'
'தந்ததுன்றன்னைக் கொண்டதென்றன்னைச் சங்கரா
ஆர்கொலோ சதுரர்

அந்தமொன்றில்லா ஆனந்தம் பெற்றேன் யாதுநீ
பெற்றதொன்றென்பால்' திருவா. கோயிற் - 10

1788. 'நானென நீயென வேறில்லை'

'நிச்சம் என நெஞ்சின் மன்னி யானாகி நின்றானே'
திருவா. உயிருண்ணிப் - 9

1796. 'ஊனே யுருகி யுணர்வை யுணர்ந்தபின்
தேனே யனையனந் தேவர்பிரானே'

'ஊனினையுருக்கி யுள்ளொளிபெருக்கி யுலப்பிலா
ஆனந்தமாய
தேனினைச் சொரிந்து புறம்புறந்திரிந்த செல்வமே'
திருவா. பிடித்த - 9

1797. 'ஊனறிந்துள்ளே யுயிர்க்கின்ற ஒண்சுடர்
தானறியான்பின்னை யாரறிவாரே'

'என்னைத்தன்னடி யானென்றறிதலும்
தன்னைநானும் பிரானென் றறிந்தெனே' தே. 5-91-8

1798. 'அருளெங்குங் கண்ணான தாரறிவாரே'
'அவனருளே கண்ணாகக் காணினல்லால்'தே. 6- 97 -10

1812. 'நேயத்தே நின்றிடும் நின்மலன்'
'நேயத்தே நின்ற நிமலனடி போற்றி' சிவபுராணம்- 13

1815. 'வாராவழிதந்த மாநந்தி'

'பேராயிரமுடைப் பெம்மான்'

'வாராவழியருளி' திருவா. திருவெண்பா - 7

'பேராயிரமுடைப் பெம்மான் போற்றி'
திருவா. போற்றித் - 200

1820. 'புறமே திரிந்தேனைப் பொற்கழல்சூட்டி'
'புறமே போந்தேன் யான்' மேற்படி, திருச்சதகம் - 87

1823. உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பாலயம்
வள்ளற்பிரானார்க்கு வாய்கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்துங் காளாமணி விளக்கே.

1824. "பாட்டவி காட்டுதும் பாலவியாமே'
காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறைய நீரமைய வாட்டிப்
பூசனை யீசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே'
தே. 4-76-4

1828. 'புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு'

'இட்டுக் கொள்வன பூவுள நீருள' தே. 5-91-6

1836. 'நயனங்கள் மூன்றுடையான்
நயனங்கள் மூன்டைய நாயகனே' திருவா. திருச்சாழல்

1838. 'பூவொடு நீர் சுமந்தேத்தி'

'போதொடு நீர்சுமந்தேத்தி' தே. 4-3-1

1857. 'படமாடக் கோயிற் பகவர்'

'பராவுசிவர்' தே. 3-67-6

1890. அங்கார்பசியும் அவாவும் வெகுளியுந்
தங்கார் சிவனடியார் சரீரத்திடைப்
பொங்கார் புவனத்தும் புண்ணிய லோகத்தும்
தங்கார் சிவனைத் தலைப்படுவாரே.

'மண்புகார் வான்புகுவர் மனமிளையார் பசியாலுங்
கண்புகார் பிணியறியார் கற்றாருங் கேட்டாரும்
விண்புகார் எனவேண்டா வெண்மாட நெடுவீதித்
தண்புகார்ச் சாய்க்காட்டெந் தலைவன்தாள் சார்ந்தாரே'
தே. 2-41-1

1891. 'மெய்யக ஞானமிகத் தெளிந்தார்களுங்
கையக நீண்டார் கடைத்தலைக்கே செல்வர்'

'அங்கையோடேந்திப் பலிதிரிகருவூர் அறைந்தசொன்
மலையாலாழிச்
செங்கையோ டுலகில் அரசுவீற்றிருந்து திளைப்பதுஞ்
சிவனருட்கடலே' திருவிசைப்பா - 1

2031. 'குட்ட மொருமுழ முள்ள தரைமுழம்
வட்ட மமைந்ததோர் வாவியுள் வாழ்வன'

'ஒருமுழ முள்ள குட்டம் ஒன்பது துறையுடைத்தாய்
அரைமுழம் அதனகலம் அதனில் வாழ் முதலை யைந்து'
தே. 4-44-2

2067. கண்காணி யில்லென்று கள்ளம்பல செய்வார்
கண்காணி யில்லா விடமில்லை காணுங்கால்
கண்காணியாகக் கலந்தெங்கு நின்றானைக்
கண்காணி கண்டார் களவொழிந்தாரே.
'கள்ளனேன் கள்ளத்தொண்டாய்க் காலத்தைக்
கழித்துப் போக்கித்
தெள்ளியே னாகிநின்று தேடினேன் நாடிக்கண்டேன்

உள்குவார் உள்கிற்றெல்லாம் உடனிருந் தறிதி யென்று
வெள்கினேன் வெள்கிநானும் விலாவிறச் சிரித்திட் டேனே'
தே. 4-75-3

2071. 'தேயத்துளே யெங்குந் தேடித் திரிவர்கள்
காயத்துள் நின்ற கருத்தறியாரே.

'தேடிக்கண்டு கொண்டேன் - திருமாலொடு நான்முகனுந்

தேடித் தேடொணாத் தேவனை என்னுளே,
தேடிக்கண்டு கொண்டேன்' தே. 4-9-12

2085. 'வாதுசெய்தென்னோ மனிதர்பெறுவது'
'வாதுசெய்து மயங்கும் மனத்தராய்' (5-100-4)

2097. இருந்தேன் மலரளைந் தின்புற வண்டு
பெருந்தேன் இழைக்கின்ற பெற்றிமை யோரார்
வருந்தேன் நுகராது வாய்புகு தேனை
அருந்தேனை யாரும் அறியகிலாரே,
'தினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றே னுண்ணார்தே
நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தொறு மெப் போதும்,
அனைத்தெலும் புண்ணெக ஆனந்தத் தேன் சொரியுங்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ'
(திருவா-திருக்கோத்தும்பி)

2103. 'செல்லு மளவுஞ் செலுத்துமின் சிந்தையை

செல்லுமா செல்லச் செலுத்துமா றறியேன்' தே. 7-67- 6

2107. 'சாகின்றபோதுந் தலைவனை நாடுமின்'

2110. 'இறக்கின்ற காலத்தும் ஈசனையுள்கும்,

'நாமம் பரவி நமச்சிவாயவென்னும் அஞ்செழுத்தும்
சாமன் றுரைக்கத் தருதிகண்டாயெங்கள் சங்கரனே'
தே. 4-103-3

2114. 'சார்த்தவர்க்கின்பங் கொடுக்குந் தழல்வண்ணன்
பேர்ந்தவர்க் கின்னாப் பிறவி கொடுத்திடும்'

'சார்ந்தவர்க் கின்பங்கள் தழைக்கும் வண்ணம் நேர்ந்தவன்'
தே. 1-113-5

'சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க்கலால்
நலமிலன் நாடொறும் நல்குவான் நலன்' தே. 4-11-6

2115. 'முத்தியை ஞானத்தை முத்தமிழ் ஓசையை'

'நெய்த்தலைப்பால்போல்'

'பலவோசைத் தமிழவையும்... ஆனான்' தே. 1-11-4

'பிரைசேர் பாலின் நெய்போல'

திருவாச. கோயின் மூத்த- 5

2117. 'நஞ்சவர்க்கன்றி நாடவொண்ணாதே'

'உருகிநைபவர்க்கல்லால் ஒன்றுங்கைகூடுவதன்றால்'

தே. 2-90-5

2171. 'பிச்சன் பெரியன் பிறப்பிலி,

'பிச்சன் பிறப்பிலி பேர் நந்தி' தே 4-80-4

2175. 'ஆவன ஆவ அழிவ அழிவன'

'ஆவதும் அழிவதெல்லாம் அவர் செயல்'

பெரிய . திருஞான-736

2185. 'நாடிய மண்டல மூன்று'

2219. 'மண்டல மூன்றினுள் மாயநன்னாடனை

'என்னிடைக்கமலம் மூன்றினுள் தோன்றி
யெழுஞ்செழுஞ் சுடரினை' திருவிசைப்பா. 5-4

2244. மும்மலங்கூடி முயங்கி மயங்குவோர்
அம்மெய்ச் சகலத்தர்.

'மும்மை மலமறுவித்து' திருவா. அச்சோப் - 9

'மும்மை மாமலங்களற வீடருள்தில்லை'

பெரிய. தடுத்தாட் - 92

2313. 'கறங்கோலை கொள்ளிவட்டம் கடலில் திரை'

'கறங்கோலை போல்வதோர் காயப் பிறப்போடிறப் பென்னும்'

திருவா. திருத்தெள் - 8

2316. 'ஆனைகள் ஐந்தும் அடக்கி'

'ஞானத்திரியைக் கொளுவி'

'தொண்டரஞ்சு களிறும் அடக்கி' தே. 2-114-1
ஞான விளக்கினை யேற்றி. தே. 2-22-3

2330. 'தத்துவஞானந்' தே. 5-46-7

2331. 'தன்னையறிந்து சிவனுடன் தானாக
மன்னுமலங் குணமாளும் பிறப்பறும்'

2337. 'சேருஞ் சிவமானார் ஐம்மலந் தீர்ந்தவர்'

'சிவமானவாபாடித் தெள்ளேணங்கொட்டாமோ'

திருவாசகம்

2340. 'அவமும் சிவமும்'

அவம்பெருக்கும் புல்லறிவின்... ...
சிவம் பெருக்கும் பிள்ளையார்' பெரிய. திருஞான- 26

2349. 'தன்னில் தன்னையறியும்'

*இத்திருப்பாடல் சிலசொல் வேறுபாட்டுடன் திருநாவுக்கரசர் குறுந்தொகைத் திருப்பாடலாக (தே. 5-97-39) அமைந்துள்ளமை முன்னர் விளக்கப் பெற்றது* (* பன்னிரு திருமுறை வரலாறு முதற் பகுதி)*

2366. என்னை யறிந்திலேன் இத்தனை காலமும்
என்னையறிந்தபின் ஏது மறிந்திலேன்
என்னையறிந்திட்டிருத்தலுங் கைவிடா
தென்னையிட் டென்னை உசாவுகின்றானே.

2397. 'வேதமோ டாகமம் மெய்யாம் இறைவனூல்
ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன'

'வேதநெறிதழைத்தோங்க மிகுசைவத்துறைவிளங்க'

பெரிய-திருஞான-1

'வேதப் பயனாஞ்சைவமும்போல்' மேற்படி -சண்டேச - 9

2428. 'எந்தையும் என்னை யறியகி லானாகில்
எந்தையை யானும் அறியகி லேனே'

'என்னையேதும் அறிந்திலன் எம்பிரான்
தன்னை நானும் முன் ஏது மறிந்திலேன்
என்னைத் தன்னடி யானென் றறிதலும்
தன்னை நானும் பிரானென் றறிந்தெனே' தே. 5-91-8

2446. 'கன்று நினைந்தெழு தாயென வந்தபின்'

'கன்றை நினைத்தெழு தாயென வந்த கணக்கது வாகாதே'
திருவாசகம்- திருக்கழுக்குன்றப்பத்து

2453. 'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பதி
சோதிப் பரஞ் சுடர்'

2963. 'அந்தமும் ஆதியும் இல்லா அரும்பொருள்'
'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை' திருவா-திருவெம்-1

'சோதியே சுடரே' - மேற்படி அருட்பத்து-1

2455. 'செம்மை முன்னிற்பச் சுவேதந் திரிவபோல்
அம்மெய்ப் பரத்தோ டணுவனுள்ளாயிட'

'மெய்த்தாறு சுவையுமேழிசையுமெண் குணங்களும்
விரும்பு நால்வே
தத்தாலு மறிவொண்ணா நடைதெளியப்
பளிங்கே போல் அரிவை பாகம்
ஒத்தாறு சமயங்கட் கொருதலைவன்' தே. 1-131-1

2457. 'தன்னை யளித்தான் றற்பரமாகவே'

'தன்னைத்தந்த என்னாரமுதை' திருவா-புணர்ச்சிப்-1

2477. பெத்தம் அறுத்த பெரும் பெருமானே.

'பெரும் பெருமான் என் பிறவியை வேரறுத்துப் பெரும்பிச்சுத்
தரும் பெருமான்' திருவா-அடைக்கலப்-3

2499. 'சிவாயநம வெனத் தேறிலே'

2709. 'தெளிய வோதிச் சிவாயநம வென்னுங்
குளிகையிட்டுப் பொன்னாக்குவன் கூட்டையே'

'திருவாய்ப்பொலியச் சிவாயநமவென்று சிந்தை செய்தேன்'
தே. 4-94-6

'நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநமவெனப் பெற்றேன்'
திருவா-திருவேசறவு-10

2515. 'என்னிலும் என்னுயிராய இறைவனை'

'என்னிலாரு மெனக்கினியாரில்லை
என்னிலும் இனியானொரு வன்னுளன்
என்னுளே யுயிர்ப்பாய்ப்புறம் போந்துபுக்
கென்னுளே நிற்கும் இன்னம்ப ரீசனே' தே. 5-21-1

2520. 'கன்றா மனத்தார்தங் கல்வியுள் நல்லவன்

'கற்றகல்வியிலும் இனியானை' தே. 7-56-5

2529. 'மொட்டலர் தாமரை மூன்றுள மூன்றினும்
விட்டலர்கின்றனன் சோதி விரிசுடர்'

2432. 'ஒன்றுண்டு தாமரை ஒண்மலர் மூன்றுள'

'பூவானமூன்றும் முந்நூற்றறுபதுமாகும் எந்தை'தே. 4-29-9

'என்னிடைக்கமல மூன்றினிற்றோன்றி
யெழுஞ்செழுஞ்சுடரினை' திருவிசைப்பா. 5-4

2531. திகையெட்டுந் தேரெட்டுந் தேவதை யெட்டும்
வகையெட்டு மாய்நின்ற ஆதிப் பிரானை
வகையெட்டு நான்குமற் றாங்கே நிறைந்து
முகையெட்டு முள்நின் றுதிக்கின்ற வாறே.

'புகையெட்டும்..... திகையெட்டுந்தெரிப்பதற்கு'தே. 6-34-9

2573. 'செம்பொருளான சிவமெனலாமே'

'செம்மையேயாய சிவபதம்' திருவா. பிடித்த - 3

2575. 'மனவாசகங் கெட்டமன்னனை'

'மனவாசகங்கடந்தான்' திருவா- உயிருண்ணிப்- 3

2581. 'அறிவா னிருந்தங் கறிவிக்கி னல்லால்
அறிவா னறிந்த அறிவறி யோமே'

'காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே' தே. 6-95-3

2592. 'இரும்புண்ட நீரென என்னையுள்வாங்கி
... ... .... .... இதயத்துளானே'

'ஏதிலென் மனத்துக்கோ ரிரும்புண்ட நீரை' தே. 7-58-1

2594. 'அந்தமுமாதியும் ஆகும் பராபரன்'

'அந்தமுமாதியுமாகிய அண்ணலார்' தே. 1-39-1

2600. 'மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்றன்னைப்
பொய்கலந் தார்முன் புகுதா வொருவனை'

2601, 2604 - ஆம் பாடல்கள்.

'பொய்யர் தம் பொய்யனை மெய்யர் மெய்யை'
திருவா-திருப்பொற்- 12

2607. 'வம்பு பழுத்த மலர்ப்பழம் ஒன்றுண்டு'

'கொம்பி லரும்பாய்க்கு விமலராய்க் காயாகி
வம்பு பழுத்துடலம் மாண்டிங்ஙன் போகாமே'

திருவா-குலாப்- 6

2614. மாடத்து ளானலன் மண்டபத் தானலன்
கூடத்து ளானலன் கோயிலுள் ளானலன்
வேடத்து ளானலன் வேட்கைவிட் டார்நெஞ்சின்
மூடத்து ளேநின்று முத்திதந் தானே,

'மாடத்தாடு மனத்துடன் வைத்தவர்...
வேடத்தார்தொழும் வீழி மிழலையே' தே. 5-12-4

2615. 'ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்'

'பாச மற்றில ராயினும் பார்மிசை
யாசை சங்கரற் காயின தன்மையால்
தேசு மிக்க திருவுருவானவர்' பெரிய- திருஞான- 189

2616. ‘அடுவன பூதங்கள் ஐந்தும் உடனே’

‘அடுவன அஞ்சுபூதம் அவைதமக்காற்றலாகேன்’
தே. 4-76-10

2617. ‘உவாக்கடல்’

‘உவாக்கடல் நள்ளுநீ ருள்ளகந் ததும்ப’
திருவா- திருவண்டப்-169

2622. ‘கந்த மலரிற் கலக்கின்ற நந்தியை’

‘பூவினாற்றம், போன்றுயர்ந்தெங்கும்
ஒழிவற நிறைந்து மேவியபெருமை’
திருவா-திருவண்டப்-115-116

2624. ‘அடியா ரடியா ரடியார்க் அடிமைக்
கடியனாய் நல்கிட் டடிமையும் பூண்டேன்’

‘தில்லைவாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்’
தே. 7-39-1-11

‘அத்தா ஆலங்காடாவுன் னடியார்க் கடியே னாவேனே’
தே. 7-52-1

2626. ‘பத்தர்தம் பத்தியிற் பாற்படி னல்லது’

‘பத்திவலையிற் படுவோன் காண்க’
திருவா- திருவண்டப் - 42

2627. ‘ஆன்கன்று தேடி யழைக்கு மதுபோல்
நான்கன்றாய் நாடி யழைத்தேனென்நாதனை’

‘கற்றா மனமெனக் கதறியும் பதறியும்’ திருவா-போற்றித்-
73

‘கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே’
மேற்படி - திருப்புலம்பல் - 1

2639. ‘காலினில் ஊறும் கரும்பினிற் கட்டியும்
பாலினுள் நெய்யும் பழத்துள் இரதமும்
பூவினுள் நாற்றமும் போலுளன் எம்மிறை’

2857, 3035. ‘துணரின் மலர்க்கந்தத் துன்னி நின்றானே’

‘காலினூக்கங் கண்டோன்’ திருவா- திருவண்டப் -24

‘கரும்பினிற் கட்டி போல்வார் கடவூர் வீரட்டனாரே’
தே. 4-31- 4

‘பாலினெய்யாம் பழத்துளிரத மாம்’ தே. 6-15-1

'பூவினாற்றம் போன்றுயர்ந்தெங்கும்
ஒழிவற நிறைந்து மேவிய பெருமை'
திருவா- திருவண்டப்- 115-116

'பூக்குளால் வாசமாய் மன்னி நின்ற கோத்தானாம்' தே. 6-15-3

2640. 'பொருப்பகஞ் சேர்தரு பொற்கொடி போல, இருப்பர்'

பொற்குன்றஞ் சேர்ந்த காக்கைபொன்னாமதுவே புகல்' தே. 7
காய்சினவானை வளருங் கனக மலையருகே
போயின காக்கையும் அன்றே படைத்தது
பொன்வண்ணமே' பொன் வண்ணத்தந்தாதி - 100

2645. 'எறிவது ஞானத் துறைவாள் உருவி'

1968. 'நமன்வரின் ஞானவாள் கொண்டே எறிவன்'

'ஞானவாள் ஏந்தும் ஐயர்' திருவா- திருப்படை 1

'அறிவொண் கதிர்வா ளுறைகழித்து'
மேற்படி - திருப்பாண்டிப் - 4

2646. சோதிப்பன் அங்கே சுவடு படாவண்ணம்
ஆதிக்கட் டெய்வ மவனிவ னாமே'

'என்மனமே யொன்றிப் புக்கனன் போந்த சுவடில்லையே'
தே. 4-81 - 3

2651. 'நாடும் பெருந்துறை நான்கண்டு கொண்டபின்
கூடுஞ் சிவனது கொய்ம்மலர்ச் சேவடி'

'கொய்ம்மலர்ச் சேவடியிணையே குறுகினோமே'தே. 6- 8- 1

'பெருந்துறையுள்மேய பெருமான் பிரியா

'திருந்துறையும் என்னெஞ்சத் தின்று'

திருவா- திருவெண்பா- 5

2657. 'துரியங்கள் மூன்றுங் கடந்தொளிர் சோதி'

'துரியமு மிறந்த சுடரேபோற்றி' திருவா- போற்றித் - 195

2658. ஆயன நந்தி யடிக்கென் தலைபெற்றேன்
வாயன நந்தியை வாழ்த்தவென் வாய்பெற்றேன்
காயன நந்தியைக் காணவென் கண்பெற்றேன்
சேயன நந்திக்கென் சிந்தைபெற் றேனே.

'வாழ்த்தவாயும் நினைக்க மடநெஞ்சுந்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனை'
தே. திருக்குறுந் தொகை

'சிந்தனைசெய்ய மனமமைத்தேன் செப்ப நாவமைத்தேன்
வந்தனை செய்யத் தலையமைத்தேன் கைதொழவமைத்தேன்'
பொன்வண்ணத்தந்தாதி - 92

2665. 'மருவிப் பிரிவறியா எங்கள் மாநந்தி'
'மருவிப்பிரியாத மைந்தர்போலும்' தே. 6-89-9
'கலந்தபின் பிரிவதில்லை' தே. 4-40-4
'மருவிப்பிரிய மாட்டேனான்' தே. 7-77-3
'மேவினார் பிரிய மாட்டா விமலனார்'
பெரிய - கண்ணப்ப - 174

2666. 'நிலைப்பெற நாடி நினைப்பற வுள்கில்'
'நின்ற நின்றன்மை நினைப்பற நினைந்தேன்'
திருவா-கோயிற் - 7

2670. 'சுந்தரச் சோதியுட் சோதியு மாமே'
'சுடர்ச் சோதியுட் சோதியான்' தே. 1

2676. 'ஓமெனும் ஓங்காரத் துள்ளே'
'ஓங்காரன் காண்' தே. 6-24- 2
'ஓங்காரத்துட் பொருளாய் நின்றான்கண்டாய்'தே. 6-39-10
உய்யவென் னுள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற மெய்யா'
திருவா- சிவபுராணம்- 33, 34

2682. தாமரையிலே
இகலொளி செய்தெம் பிரானிருந் தானே',
'எரியாய தாமரைமேல் இயங்கினாரும் இடைமருது மேவிய
ஈசனாரே' தே. திருத்தாண்டகம்

2690. 'வளங்கொளி யாநின்ற மாமணிச் சோதி'
'மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்'
தே. திருக்குறுந்தொகை

2691. 'கலங்கிருள் நட்டமே கண்ணுத லாட'
'நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதனே'
திருவா. சிவ- 89

2695. 'ஒளிபவ ளத்திரு மேனிவெண் ணீற்றன்'
'சினபவளத் திண்டோண்மேற் சேர்ந்திலங்கு
வெண்ணீற்றனென் கின்றாளால்' தே. 4-6-1

2699. நகார முதலாகு நந்திதன் னாமமே.
'நந்திநாம நமச்சிவாயவெனும்' தே. 3-49-11

'நந்திதன்னாம நமச்சிவாய வென்பார் நல்லரே' (தே)

2702. 'மரணங்கை வைத்துயிர் மாற்றிடும் போதும்
அரணங்கை கூட்டுவ தஞ்செழுத் தாமே'

'துஞ்சலுந் துஞ்சலிலாத போழ்தினும்
நெஞ்சக நைந்து நினைமி னாடொறும்
வஞ்சக மற்றடி வாழ்த்த, வந்தகூற்
றஞ்ச வுதைத்தன அஞ் செழுத்துமே' தே. 3-22-1

2704. 'தெள்ளமு தூறச் சிவாய நமவென்
றுள்ளமு தூற வொருகால் உரைத்திடும்'

'தெள்ளத் தேறித் தெளிந்து தித்திப்பதோர்
உள்ளத்தேற லமுதவொளி வெளி' தே. 5-91-10

'ஆலைப்படுகரும்பின் சாறுபோல
அண்ணிக்கும் அஞ்செழுத்தி னாமத்தான் காண்' தே. 6

2730. பூதங்க ளைந்திற் பொறியிற் புலனைந்தில்
வேதங்க ளைந்தின் மிகுமா மகந்தன்னில்
ஓதுங் கலைகாலம் ஊழி யுடன்அண்டப்
போதங்க ளைந்திற் புணர்ந்தாடுஞ் சித்தனே.

'பூதங்க ளைந்தாகிப் புலனாகிப் பொருளாகிப்
பேதங்க ளனைத்துமாய்ப் பேதமிலாப் பெருமையனைக்
கேதங்கள் கெடுத்தாண்ட கிளரொளியை மரகதத்தை
வேதங்கள் தொழுதேத்த விளங்குதில்லை கண்டேனே'
திருவா- கண்ட- 10

2732. 'கண்டங் கரியான் கருணை திருவுருக்
கொண்டங் குமைகாணக் கூத்துகந் தானே'.

'அருமான வாண்முகத்தா ளமர்ந்து காண
அமரர்கணந் தொழுதேத்த ஆடுகின்ற பெருமானை'
தே. 6-1-3

2740. 'அடியார்பொன் னம்பலத் தாடல்கண் டாரே'

'அடியார் நடுவுளிருக்கும் அருளைப் புரியாய்

பொன்னம்பலத் தெம் முடியாமுதலே'
திருவா-கோயில்-மூத்த-1

'அரைசே பொன்னம்பலத்தாடும் அமுதே' மேற்படி - 5

2743. 'மாணிக்கக் கூத்தனை வண்டில்லைக் கூத்தனை'

'சேணிற் பொலிசெம்பொன் மாளிகைத்தில்லைச் சிற்றம்பலத்து
மாணிக்கக் கூத்தன்' திருக்கோவையார்- 23

2746. 'காளியோடாடி'

'ஆடினார்காளிகாண ஆலங்காட் டடிகளாரே'தே. 4-68-8

'கனிதரு செவ்வா யுமையொடு காளிக்
கருளிய திருமுகத் தழகுறு சிறுநகை இறைவன்'
திருவா - கீர்த்தித்-142-44

2758. 'ஆறு முகத்தி லதிபதி நானென்றும்'

'தேறினர் தெற்குத் திரு அம்பலத்துளே'

'வள்ளி வளைத்தோள் முதல்வன்றன்னை' தே. 6-3-2

'தென்பாலுகந்தாடுந் தில்லைச் சிற்றம்பலவன்'
திருவா-திருச்சாழல்-9

2814. 'அரியன் பெரியனென் றாட்பட்ட தல்லால்
கரியன்கொல் சேயன்கொல் காண்கின்றி லேனே'

'அன்றுந் திருவுருவங் காணாதே யாட்பட்டேன்
இன்றுந் திருவுருவங்காண்கிலேன் - என்றுந்தான்
எவ்வுருவோ னும்பிரா னென்பார்கட் கென்னுரைக்கேன்
எவ்வுருவோ நின்னுருவ மேது' அற்புதத் - 61

'கீதங்கள் பாடுத லாடுத லல்லாற்
கேட்டறியோமுனைக் கண்டறிவாரை'
திருவா- திருப்பள்ளி- 5

2831. பாலொடு தேனும் பழத்து ளிரதமும்
வாலிய பேரமு தாகு மதுரமும்
போலுந் துரியம் பொடிபட வுள்புகச்
சீல மயிர்க்கால் தொறுந்தேக் கிடுமே.

'வாக்கிறந்தமுதம் மயிர்க்கால் தோறுந்
தேக்கிடச் செய்தனன்' திருவா- திருவண்டப் - 170- 1

2820. 'நானென்றுந் தானென் றிரண்டில்லை யென்பது
நானென்ற ஞான முதல்வனே நல்கினான்'

'நாற்றானத் தொருவனை நானாய பரனை' தே. 7-38-4
'தாமென்ன நாமென்ன வேறில்லை'
பரணதேவர்- சிவபெருமான் திருவந்தாதி- 34

2840. 'உருவன்றி யேநின் றுருவம் புணர்க்கும்
கருவன்றி யேநின்று தான்கரு வாகும்'

'கருவி னாலன்றியே கருவெலாம் ஆயவன்
உருவினாலன்றியே யுருவுசெய்தானிடம்' தே. 3- 35-3

2846. 'ஏமாப்ப தில்லை யினியோ ரிடரில்லை'

'ஏமாப்போம் பிணியறியோம்.............
இன்பமே எந்நாளுந் துன்பமில்லை' தே. 6-98-1

2850. வானின் றிடிக்கிலென் மாகடல் பொங்கிலென்
கானின்ற செந்தீக் கலந்துடன் வேகிலென்
தானொன்றி மாருதஞ் சண்டம் அடிக்கிலென்
நானொன்றி நாதனை நாடுவன் நானே.

2851. 'ஆனை துரக்கிலென் அம்பூ டறுக்கிலென்
கானத் துழுவை கலந்து வளைக்கிலென்'
வானந்துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையுந்
தானந் துளக்கித் தலைதடு மாறிலென் தண்கடலம்
மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலைநஞ்சுண்
டூனமொன் றில்லா ஒருவனுக் காட்பட்ட உத்தமர்க்கே.
தே. 4-112-8

2853. 'சிந்தைய தென்னச் சிவனென்ன வேறில்லை'
சிந்தையுந் தெளிவுமாகித் தெளிவினுட் சிவமுமாகி'
தே. 4-48-5

2854. 'வாக்கு மனமு சிறந்த மறைப்பொருள்'
மாற்ற மனங்கழிய நின்றமறையோனே' திருவா சிவ-45

2890. 'பத்திவலை' 'முத்தக்கயிறு'

'பத்திவலையிற் படுவோன்' திருவா-திருவண்டப்-42

'முத்தங்கயிறாக. மேற்படி, திருப்பொன்னூசல்-1

2900. 'காப்பிடு கள்ளரை வெள்ளர் தொடர்ந்திட்டு'

'கள்ளரோ புகுந்தீரென்ன ....
வெள்ளரோம் என்று நின்றார்' தே. 4-75-9

2931. 'தாதவிழ் புன்னை தயங்கு மிருகரை'
தாதவிழ் புன்னை தயங்கு மலர்ச்சிறை' தே. 1-136-1

2953. 'ஒன்றிநின் றுள்ளே யுணர்ந்தேன்'
'ஒன்றியிருந்து நினைமின்கள்' தே. 4-31-2

2958. 'கடவுளும் நானுமொன் றானேன்'
'நானாயபரனை' தே. 7-38-4

2960. 'சீரார் பிரான்வந்தென் சிந்தை புகுந்தனன்
.........யார்பாடுஞ் சாரா அறிவறிந் தேனே'

'சிந்திப்பார் மனத்தான் சிவன்' தே. 5-97-1
'சீரார் பெருந்துறையான் என்னுடைய சிந்தையே

ஊராகக் கொண்டானுவந்து' திருவா-திருவெண்பா-11

'ஆர்பாடுஞ்சாரா வகையருளி' மேற்படி, திருத்தெள்-13

2962. 'நன்றுகண் டீர்நல் நமச்சிவா யப்பழந்
தின்றுகண் டேற்கிது தித்தித்த வாறே'
'மனிதர்காளிங்கேவம்...
புனிதன் பொற்கழ லீசனெனுங்கனி
இனிது சாலவும் ஏசற்றவர்கட்கே' தே. 5-91-7

2969. 'சித்தஞ் சிவமாய் மலமூன்றுஞ் செற்றவர்'

2977. 'செய்வன வெல்லாம் சிவமாகக் காண்டலால்'

'சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும் அத்தன்'
திருவா திருத்தோணோக்கம்-6

2984. 'அத்தனைக் காணா தரற்றுகின் றேனையோர்
பித்த னிவனென்று பேசுகின் றாரே'

'பித்தனிவ னெனவென்னை யாக்குவித்து'
திருவா-கண்ட-7

2986. பூதக்கண் ணாடியிற் புகுந்திலன் போதுளன்
வேதக்கண் ணாடியின் வேறே வெளிப்படும்
நீதிக்கண் ணாடி நினைவார் மனத்துளன்
கீதக்கண் ணாடியிற் கேட்டுநின் றேனே.

'பூம்படிமக்கலம் பொற்படி மக்கலம் ........
தமிழ்மாலைகளால் நாம் படிமக்கலம் செய்து'தே. 4-102-3

2992. 'கைத்தலஞ் சேர்தரு நெல்லிக் கனியொக்கும்'

'அங்கைநெல்லியம் பழத்திடையமுதே' தே. 7-54-3

'நெல்லிக்கனியைத் தேனைப்பாலை'
திருவா-புணர்ச்சிப்-4

2994. 'கள்ளப் பெருமக்கள் காண்பர்கொ லோவென்று
உள்ளத்தி னுள்ளே யொளித்திருந் தாளுமே'

'நாடி நாரணன் நான்முக னென்றிவர்
தேடியுந் திரிந்துங் காணவல்லரோ
மாட மாளிகை சூழ்தில்லை யம்பலத்
தாடி பாதமென் னெஞ்சு ளிருக்கவே' தே. 5-1-10

3000. 'கடல் நஞ்சுண்ட கண்டனை'

'கண்காள் காண்மின்களோ கடல் நஞ்சுண்ட
கண்டன்றன்னை' தே. 4-9-2

3011. 'சிவன்றான் பலபல சீவனு மாகி
நவின்றான்'

'தான் ஒருவனுமே பலவாகி நின்றவா'
திருவா-திருத்தோணோக்கம்-5

3015. 'இல்லனு மல்லன் உளனல்லன் எம்மிறை'
உண்மையுமாய் இன்மையுமாய்க் கோனாகி'
திருவா-திருச்சதகம்-15

3016. 'கள்ளத் தலைவன்'

'உள்ளங்கவர் கள்வன்'

'ஒளிக்குஞ் சோரனைக் கண்டனம்'
திருவா-திருவண்டப்-141

3031. 'பரமாய பரஞ்சுடர்'

'பண்ணா ரின்றமிழாய்ப் பரமாய பரஞ்சுடர்' தே. 7-24-5

3033. 'போக்கும் வரவும் புணரவல்லான்'

'போக்கும் வரவும் புணர்வும்' திருவா-சிவ-77

3041. 'எண்ணும் எழுத்தும் இனஞ்செயல் அவ்வழிப்
பண்ணுந் திறனும் படைத்த பரமனை'

'எண்ணுமொரெழுத்து மிசையின் கிளவி தேர்வார்
கண்ணுமுதலாய கடவுட் கிடமதென்பர்' தே. 2-34-7

566. 'புள்ளினும் மிக்க புரவியை'

எனவரும் திருமந்திரத் தொடர், 'புள்ளியற்கலிமா' (கற்பியல்-53) என்ற தொல்காப்பியத் தொடரை அடியொற்றியமைந்ததாகும்.

1964. 'வித்துக்குற்றுண்பான் விளைவறியாதவன்'

எனவரும் திருமந்திரத் தொடர்,

'விரகின்மையின் வித்தட்டுண்டனை' (227)

எனவரும் புற நானூற்றுத் தொடரை ஒத்தமைந்ததாகும்.

2592. 'இரும்பிடை நீரென என்னையுள் வாங்கி'

என்னும் திருமந்திரம்,

'இரும்புண் நீரினும் மீட்டற் கரிதென' (21)

என்ற புறப்பாடற்றொடரை ஒத்தமைந்ததாம்.

167. காக்கை கவரிலென் கண்டார் பழிக்கிலென்
பாற்றுளி பெய்யிலென் பல்லோர் பழிச்சிலென்
தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டும்
கூத்தன் புறப்பட்டுப் போனஇக் கூட்டையே.

*எனவரும் திருமந்திரப் பாடலை அடியொற்றயமைந்தது,*

"நார்த்தொடுத் தீர்க்கிலென் நன்றாய்ந் தடக்கிலென்
பார்க்குழிப் பெய்யிலென் பல்லோர் பழிச்சிலென்
தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டும்
கூத்தன் புறப்பட்டக் கால்' நாலடி-யாக்கை நிலையாமை-6

*எனவரும் நாலடியார் பாடலாகும்.*

171. ஈட்டிய தேன்பூ மணங்கண் டிரதமும்
கூட்டிக் கொணர்ந்தொரு கொம்பிடை வைத்திடும்
ஓட்டித் துரந்திட்ட டதுவலி யார்கொளக்
காட்டிக் கொடுத்தது கைவிட்ட வாறே.

*எனவரும் திருமந்திரப் பாடற்பொருளை அடியொற்றியமைந்தது.*

உடாஅது முண்ணாதுந் தம்முடம்பு செற்றுங்
கெடாஅத நல்லறமுஞ் செய்யார் - கொடாஅது
வைத்தீட்டி னாரிழப்பர் வான்றோய் மலைநாட
உய்த்தீட்டுந் தேனிக் கரி' நாலடி- செல்வ நிலையாமை- 10

*எனவரும் நாலடியார் செய்யுளாகும்.*

172. 'கூற்றன் வருங்கால் குதிக்கலுமாமே'

*எனவரும் திருமந்திரத் தொடர்ப் பொருளை விளக்கும் முறையில் அமைந்தது,*

இழைத்த நாளெல்லை யிகவா பிழைத்தொரீஇக்
கூற்றங் குதித்துய்ந்தா ரீங்கில்லை-யாற்றப்
பெரும்பொருள் வைத்தீர் வழங்குமின் நாளைத்
தழீஇந்தழீஇந் தண்ணம் படும். செல்வ நிலையாமை-6

*எனவரும் நாலடியார் செய்யுளாகும்.*

இவ்வாறே, 'கரியுண் விளவின் கனிபோல்' (2593)

*எனத் திருமந்திரத்துள் வரும் உவமையினை*

'வெஞ்சினவேழமுண்ட விளங்கனிபோன்று' சீவக-1122

*எனத் திருத்தக்கதேவர் எடுத்தாண்டுள்ளமை இங்கு ஒப்பு நோக்கத் தகுவதாகும்.*



# திருமந்திரமும் மெய்கண்ட நூல்களும்

திருமூலர் அருளிய திருமந்திரம் சைவ சித்தாந்தத் தத்துவ உண்மைகளை விளக்கும் சாத்திர நூலாகவும், சைவ நெறியில் நின்று சிவபரம்பொருளை மனமொழி மெய்களால் சிந்தித்து வாழ்த்தி வழிபடுவதற்குச் சாதனமாகிய தோத்திர நூலாகவும் விளங்கும் தனிச் சிறப்புடையதாகும். தத்துவ உண்மைகளை விளக்கும் நிலையில் பிற்காலத்துத் தோன்றிய சிவஞானபோதம் முதலிய மெய்கண்ட நூல்கள் பதினான்கிற்கும் முதல் நூலாக விளங்குவது இத்திருமந்திரமேயாகும். என்றும் மாறாநிலையின தாகிய மெய்ப் பொருளை மாறுந்தன்மையனவாகிய ஏனைய பொருள்களினின்றும் பிரித்துக்காணும் மெய்யுணர்வினை வழங்கவல்லவை சிவஞானபோதம் முதலிய சித்தாந்த நூல்களாதலின் இவை மெய்கண்ட நூல்கள் எனச் சிறப்பித்துப் போற்றப் பெறுவனவாயின.

சிவஞானம் பெற்ற உயிர், தன் உடம்பையும் கருவி கரணங்களையும் ஏனைய தத்துவங்களையும் தன்னின்வேறாகப் பகுத்துணர்ந்து என்றும் மாறாதுள்ள சிவபரம்பொருளே மெய்ப்பொருளெனக் கண்டு தெளியுமாயின், அது மெய்கண்டது எனச் சிறப்பித்துப் பாராட்டப்பெறும். இந்நுட்பம்,

**மெய்வாய்கண் மூக்குச் செவியென்னும் மெய்த்தோற்றத்**
**தவ்வாய அந்தக் கரணம் அகிலமும்**
**எல்லா யுயிரும் இறையாட்ட ஆடலாற்**
**கைவா யிலாநிறை எங்குமெய் கண்டதே. (2586)**

எனவரும் திருமந்திரத்தால் உய்த்துணரப்படும். இத் திருப்பாடற்பொருளை அடியொற்றியமைந்தது,

**பன்னிறங் காட்டும் படிகம்போல் இந்திரியம்**
**தன்னிறமே காட்டுந் தகைநினைந்து - பன்னிறத்துப்**
**பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய் கண்டான்**
**மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு (50)**

எனவரும் சிவஞானபோத வெண்பாவாகும்.

தேவர் முதலிய யாவராலும் அறிதற்கரிய சிவபரம்பொருள் உயிர்கட்கு அருள்செய்தல் வேண்டி ஆசிரியத்திருமேனி கொண்டு எழுந்தருளிவந்து பாசங்களை நீக்கி மெய்யுணர்வு அளித் தருள்வான் என்பது சிவநெறிச் செல்வர்களது துணிபாகும். இக்கருத்து,

**குருவே சிவமெனக் கூறினன் நந்தி**
**குருவே சிவமென் பதுகுறித் தோரார்**
**குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்**
**குருவே யுரையுணர் வற்றதோர் கொவே. (1581)**

*எனவரும் திருமந்திரத்தில் விரித்துரைக்கப்பட்டுள்ளமை காணலாம். இவ்வுண்மையினை,*

**'அகளமா யாரும் அறிவரி தப்பொருள்**
**சகளமாய் வந்ததென் றுந்தீபற**
**தானாகத் தந்ததென் றுந்தீபற' திருவுந்தியார்-1**

*எனவரும் பாடலில் திருவியலூர் உய்யவந்த தேவநாயனாரும்*

**'அகளமாய மாய் நின்ற அம்பலத்தெங் கூத்தன்**
**சகளமயம் போலுலகில் தங்கி - நிகளமாம்**
**ஆணவ மூல மலமகல ஆண்டான்காண்**
**மாணவக என்னுட்னாய் வந்து' திருக்களிற்றுப் படியார் - 4**

*எனவரும் பாடலில் திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனாரும் விளக்கியுள்ளார். திருவுந்தியார் திருக்களிற்றுப் படியார் ஆகிய இவ்விரு நூல்களும் திருமூலநாயனார் அருளிய திருமந்திரத்திற் கூறப்படும் சிவாநுபவ உண்மைகளை விரித்துரைக்கும் அநுபூதி நூல்களாகும்.*

*சிவஞானம் பெற்ற நல்லுயிர்கள் தன்முனைப்பு அற்றுச் சிவபரம்பொருளோடு வேறற ஒன்றி நிற்கும் இயல்பினை விளக்குவது,*

**வித்துமதன் அங்குரமும் போன்றிருக்கும் மெய்ஞ்ஞானம்**
**வித்துமதன் அங்குரமும் மெய்யுணரில் - வித்ததனிற்**
**காணாமையாலதனைக் கைவிடுவர் கண்டவர்கள்**
**பேணாமை யாலற்றார் பேறு. திருக்களிற்றுப்படியார்- 57**

*எனவரும் திருப்பாடலாகும். விதையினுள்ளே முளையென்று ஒரு முதல் வெளிப்படாது ஒன்றாயடங்கியிருத்தல் போன்று சிவஞானம் பெற்ற ஆன்மாக்களும் தாம் என்றொரு முதன்மைகெடச் சிவபரம் பொருளிடத்திலே வேறற அடங்கியிருப்பார்கள் என்பது இதன் பொருளாகும். இது,*

**வித்தினி லன்றி முளையில்லை யம்முளை**
**வித்தினி லன்றி வெளிப்படு மாறில்லை**
**வித்தும் முளையும் உடனன்றி வேறல்ல**
**அத்தன்மை யாகும் அரநெறி காணுமே. (1932)**

எனவரும் திருமந்திரத்தை அடியொற்றியமைந்திருத்தல் அறியத்தக்கதாகும்.

**'எல்லாரறிவுகளின் தாற்பரியம் என்னறிவு**
**செல்லுமிடத்தளவுஞ் சென்றறிந்தேன்'**
**திருக்களிற்றுப்படியார்- 55**

எனவரும் தொடர்,

**'செல்லு மளவுஞ் செலுத்துமின் சிந்தையை' (2103)**

எனவரும் திருமந்திரத் தொடரை அடியொற்றியமைந்தாகும்.

பதி பசு பாசம் எனப்பட்ட மூன்று பொருள்களும் என்றும் நிலையாகவுள்ள உண்மைப் பொருள்கள் என்பதனை,

**'பதிபசு பாசம் எனப்பகர் மூன்றிற்**
**பதியினைப் போற்பசு பாசம் அனாதி' திருமந்திரம்-115**

எனவரும் தொடரில் திருமூலர் தெளிவாக அறிவுறுத்தியுள்ளார். இவ்வுண்மையினை,

**'நெல்லிற் குமியும் நிகழ்செம் பினிற்களிம்பும்**
**சொல்லிற் புதிதன்று தொன்மையே - வல்லி**
**மலகன்மம் அன்றுளவாம் வள்ளலாற்பொன்வாள்**
**அலர்சோகஞ் செய்கமலத் தாம்'**
**சிவஞானபோதம்- வெண்பா-12**

எனவரும் வெண்பாவில் மெய்கண்ட தேவர் எடுத்தாண்டுள்ளமை இங்கு நோக்கத்தக்கதாகும்.

உயிர், தூலம் சூக்குமம் ஆகிய இருவேறு உடம்புகளின்றும் பிரிந்து செல்லுதலை விளக்குவதாக அமைந்தது,

**அரவுதன் தோலுரிவும் அக்கனவும் வேறு**
**பரகாயம் போய்வருமப் ட'ண்பும் - பரவிற்**
**குடாகாய ஆகாயக்கூத்தாட்டா மென்ப**
**தடாதுள்ளம் போமா றது. சிவஞானபோதம்-வெண்பா-14**

எனவரும்'வெண்பாவாகும். உயிர் தூலவுடம்பினை விட்டு நீங்கிச் செல்லுதற்குப் .பாம்பு தன் சட்டையைக் கழற்றிப் புதியதொரு தோல் போர்த்துச் செல்லுதலும், புருடன் நனவுடம்பின் நீங்கிச் கனவுடம்பிற் செல்லுதலும், யோகிகள் தம் உடம்பு நீங்கிக் வேறோருடம்பிற் சென்று மீளுதலும் உவமையாகும். குட ஆகாயம் குடம் உடைந்தவிடத்து ஆகாயத்தோடு கூடுதல் என்றது, உயிர் சூக்கும உடம்பை விட்டுப் போதற்கு உவமையாகும். இவ்வுவமைகள்,

**நாக முடலுரி போலுநல் லண்டச**
**மாக நனாவிற் கனாமறந் தல்லது**
**போகலு மாகு மரனரு ளாலேசென்**
**றேகு மிடஞ்சென் றிருபய னுண்ணுமே. (2132)**

**உண்டு நரக சுவர்க்கத்தி லுள்ளன**
**கண்டு விடுஞ்சூக்கம் காரண மாச்செலப்**
**பண்டு தொடரப் பரகாய யோகிபோற்**
**பிண்ட மெடுக்கும் பிறப்பிறப் பெய்தியே. (2133)**

*எனவரும் திருமந்திரப் பாடற் பொருளைப் பின்பற்றி அமைந்தனவாகும்.*

*திருமூலநாயனார், மாயையின் காரியமாய் உயிர்நிலை பெறுவதற்கு இடனாகிய உடம்பினை 'மாயாபுரி' (25,28) என்ற தொடராற் குறித்துள்ளார். இத் தொடரை அடியொற்றி யமைந்தது, 'மாயா இயந்திரதனு' (சூத்திரம்.3) எனவரும் சிவஞான போதத் தொடராகும்.*

*"அறிவு விளக்கமில்லாத காலத்துப் பதி, மனைவி முதலிய புறப்பொருள்களைத் தனித்தனியே எனது எனது எனத் தற்கிழமைப் பொருளாகக் கூறிக் கொண்டு நின்றாற் போல, உனதல்லாத உன் கை கால் உடம்புகளைத் தனித் தனியே 'எனது' என்றும், அங்ஙனம் அறிந்த பாச அறிவை 'என்னறிவு அது' என்றும் தற்கிழமைப் பொருளாகக் கூறிக்கொண்டு நீ ஒரு பொருள் வேறு நிற்கின்றாய். ஏதுக்கள் முதலியவற்றால் ஆராய்ந்து பார்ப்பாயாயின் அக் கைகால் முதலியன உயிராகிய உனக்கு வேறாவன" என அறிவுறுத்துவதாக அமைந்தது,*

**'எனதென்ற மாட்டின் எனதலா தென்னா**
**துனதலா துன்கைகால் யாக்கை - எனதென்றும்**
**என்னறிவ தென்றும் உரைத்து நீ நிற்றிகாண்**
**உன்னிலவை வேறாம் உணர்'**

**சிவஞானபோதம் - வெண்பா- 17**

*எனவரும் வெண்பாவாகும். இது,*

**'உன்னை யறியா துடலைமுன் நானென்றாய்**
**உன்னை யறிந்து துரியத்துற நின்றாய்' (2279)**

*எனவரும் திருமந்திரத் தொடர்ப் பொருளை விளக்கும் முறையில் அமைத்திருத்தல் காண்க.*

*பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் அறியப்படுவதாய் அழியுந்தன்மைத்தாகிய பிரபஞ்சத்தை 'அசத்து' எனவும்,*

அழிவின்றி என்றும் உள்ளதாய்ப் பாதிஞானம் ஒன்றினாலேயே அறியப்படும் பரம்பொருளைச் 'சத்து' எனவும், 'சிவசத்து' எனவும், சத்தினைச் சார்ந்த நிலையிற் சத்தாகவும் அசத்தினைச் சார்ந்த நிலையில் அசத்தாகவும் நின்று அவ்விருதிறப் பொருளையும் அறியுந்தன்மைத்தாகிய உயிரைச் 'சதசத்து' எனவும், அறிவே உருவாகிய பரம்பொருளைச் 'சித்து' எனவும், அறிவற்றதாகிய பாசத்தை 'அசித்து' எனவும் குறியிட்டு வழங்குதல் சைவசித்தாந்த நூன்மரபாகும்.

**'சத்தும் அசத்தும் சதசத்துந் தான்கண்டு**
**சித்தும் அசித்துஞ் சேர்வுறா மேநீத்த**
**சுத்தம் அசுத்தமும் தோய்வுறா மேநின்று**
**நித்தம் பரஞ்சுத்த சைவர்க்கு நேயமே. (1420)**
**'சத்தும் அசத்தும் சதசத்துந் தான்கூடிச்**
**சித்தும் அசித்தும் சிவசித்த தாய்நிற்கும்**
**சுத்தம் அசுத்தம் தொடங்காத் துரியத்துச்**
**சுத்தரா மூன்றுடன் சொல்லற் றவர்களே. (2328)**

**'தானே யறியான் அறிவிலோன் தானல்லன்**
**தானே யறிவான் அறிவு சதசத்தென்**
**றானால் இரண்டும் அரனரு ளாய்நிற்கத்**
**தானே யறிந்து சிவத்துடன் தங்குமே. (2329)**

எனவரும் திருமந்திரப் பாடல்களில் மேற்காட்டிய குறியீடுகள் இடம் பெற்றிருத்தல் காணலாம்.

**'உணருரு அசத்தெனின் உணரா தின்மையின்**
**இருதிற னல்லது சிவசத் தாமென**
**இரண்டு வகையின் இசைக்கு மன்னுலகே.**
**சிவஞானபோதம் சூ-6**

எனவும்,

**'யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற்**
**சத்தே யறியா தசத்தில தறியா**
**திருதிறன் அறிவுள திரண்டலா ஆன்மா, ஷை-சூ-7**

எனவும் வரும் சிவஞானபோத நூற்பாக்கள் மேற்குறித்த திருமந்திரப் பாடல்களில் உள்ள குறியீடுகளையும் இலக்கணங் களையும் அடியொற்றியமைந்திருத்தல் ஈண்டு ஒப்பு நோக்கி யுணரத்தக்கதாகும்.

உடம்பின் கண்ணதாகிய பிரார்த்த வாசனை உயிர்க்குத் தாக்குவதாக உள்ள அளவும் அதனால் வரும் விருப்பு

வெறுப்புக்களும் அவை பற்றிக் காட்சிப்படும் மண்முதல் மாயைகளும் அவை பற்றி நிகழும் விபரீதவுணர்வும் ஆகிய அசத்துக்கள் நீங்கிய வழியும் மீண்டும் உயிரை வந்து கூடுமியல்பினவாதலால், அதற்கெல்லாம் மூலமாகிய பிரார்த்த வாசனை அடியோடு நீங்கினாலன்றி அவ் அசத்தைக் கீழ்ப்படுத்து மெய்யுணர்வே மேலோங்குதல் இயலாது. ஆகவே அவ்வாசனை பற்றறக் கழிதற் பொருட்டு மெய்யுணர்வுடையாரை நாடி வழிபடுதல் வேண்டும். அங்ஙனம் வழிபடவே அவ்வினை நீங்கி, மெய்யுணர்வு மேம்பட்டு நிகழும். ஆதலால் அன்பினால் மெய்யுணர்வுடைய சிவஞானிகளை வழிபடுவாயாக என அறிவுறுத்தும் நிலையில் அமைந்தது,

**'வினையா லசத்து விளைதலான் ஞானம்**
**வினைதீரின் அன்றி விளையாவாம் - வினைதீர**
**ஞானத்தை நாடித் தொழவே அதுநிகழும்**
**ஆனத்தால் அன்பிற் றொழு.சிவஞானபோதம்-வெண்பா-79**

எனவரும் சிவஞானபோத உதாரண வெண்பாவாகும். இது,

**'வினையா மசத்து விளைவ துணரார்**
**வினைஞானந் தன்னில் வீடலுந் தேரார்**
**வினைவிட வீடென்னும் வேதமும் ஓதார்**
**வினையாளர் மிக்க விளைவறி யாரே. (2557)**

என்னுந் திருமந்திரத்தின் சொல்லையும் பொருளையும் பின் பற்றி அமைந்திருத்தல் காணலாம். இவ்விரண்டின் சொற் பொருளமைதியை ஒப்பவைத்து நோக்குங்கால் மேற்குறித்த திருமந்திரத்தின் முதலடி 'வினையாலசத்து விளைவதுணரார்' என்றிருத்தல் வேண்டும் என்பது நன்கு தெளியப்படும்.

ஆன்மாக்கள் பாசப்பிணிப்போடுள்ள கட்டுநிலையில் உயிர்க்குயிராகிய இறைவன் அவ்வான்மாவாய் ஒற்றித்து உயிர்க்குள் அடங்கி நின்றவாறுபோல, பாசப் பிணிப்பினின்றும் நீங்கி ஆன்மாச் சுத்தனாகிய நிலையில் உயிர், முதல்வனோடு ஒன்றித் தன்முனைப்பற்று அடங்கி நிற்றலாகிய முறையினை அறிவுறுத்துவது,

**'அவனே தானே யாகிய அந்நெறி**
**ஏகனாகி இறைபணி நிற்க**
**மலமாயை தன்னொடு வல்வினை யின்றே'**

**சிவஞானபோதம் சூ-10**

எனவரும் நூற்பாவாகும். இது,

**தானென் றவனென் றிரண்டெடன்பர் தத்துவந்**
**தானென் றவனென் றிரண்டற்ற தன்மையைத்**
**தானென் றிரண்டுன்னார் கேவலத் தானவர்**
**தானின்றித் தானாகத் தத்துவ சுத்தமே. (2348)**

என்னும் திருமந்திரப் பொருளை அடியொற்றி அமைந்ததாகும்.

உயிர்களைப் பற்றிய மயக்கவுணர்வு அவ்வுயிரோடு உடனாய் நிற்கும் முதல்வனாகிய இறைவனையும் பற்றி நிற்கும் போலும் என நிகழும் ஐயத்தை நீக்கும் முறையில் அமைந்தது,

**மெய்ஞ்ஞானந் தன்னில் விளையா தசத்தாதல்**
**அஞ்ஞானம் உள்ளம் அணைதல்காண் - மெய்ஞ்ஞானந்**
**தானே உளவன்றே தண்கடல்நீர் உப்புப்போல்**
**தானே உளம்உளவாத் தான்.**

**சிவஞானபோதம் - வெண்பா -44**

எனவரும் செய்யுளாகும். 'மயக்கமாவது, ஒரு பெற்றித்தாய அறிவெனப்படும் சிவத்தின்முன் கதிர்முன் இருள்போல நிலையுதல் இல்லது; ஆதலின், அம்முதல்வன்கண் உளதாதலின்றி, அச்சிவம் என்று உள்ளதோ அன்றே தான் பொருந்துதற் குரிமையுடைய உயிர்கள் உள்ளனவாக அவ்வுயிர்களைப் பற்றி நிற்பதாகும். அஃது எது போல் எனின், தண்ணிய கடலின்கண் உளதாதலின்றி, அக்கடலிடத்துளதாகிய நீரைப்பற்றி நிற்கும் உப்புப் போல் என்று அறிவாயாக' என்பது இவ்வெண்பாவின் பொருளாகும். இங்குக் கடல் என்றது, கடல் நீரையுணர்த்தாது அந்நீருக்கு இடந்தந்து அமைந்த பெருவெளியாகிய ஆகாயத்தை உணர்த்தியது. கடல் நீரிலுள்ள உப்பு அந்நீரைப் பற்றுவதன்றி அந்நீர்க்கு இடனாய் விளங்கும் பெருவெளியாகிய ஆகாயத்தைப் பற்றாதவாறு போல, உயிரின் கண்ணதாகிய மயக்கவுணர்வு, அவ்வுயிரைப் பற்றுவதன்றி அவ்வுயிர்க்குச் சார்பாயுள்ள முதல்வனைப் பற்றுவதன்று என்பதாம். இக்கருத்தினை விரித்துரைக்கும் முறையில் அமைந்தது,

**'சுத்தமெய்ஞ்ஞான மேனிச் சோதிபால் அசத்தஞ் ஞானம்**
**ஒத்துறா குற்றமெல்லாம் உற்றிடும் உயிரின்கண்ணே**
**சத்துள போதே வேறாம் சதசத்தும் அசத்தும் எல்லாம்**
**வைத்திடும் அநாதியாக வாயுநீர் லவணம் போலும்'**

**சிவஞான சித்தியார் - 251**

என்னும் சித்தியார் செய்யுளாகும். 'தண்கடல் நீருப்புப் போல்' என மெய்கண்டாரும், 'வாரிநீர் லவணம் போலும்' என அருணந்தி சிவாசாரியாரும் காட்டிய இவ் உவமை, பதி பசு பாசம் என்னும்

முப்பொருள்களும் வியாபக வியாப்பியங்களாய் நிற்குமாறு உணர்த்தியதாகும். கடலும் நீரும் உப்பும் ஒருங்கு கூடிய நிலையிலும் உப்பானது கடலிலுள்ள நீரைப் பொருந்துவதன்றி அந்நீர்க்கு இடனாகிய கடற்பரப்பினைப் பொருந்தாதவாறு போலப் பாசமும் உயிரைப் பொருந்தி நிற்பதன்றி உயிர்க்குச் சார்பாகிய இறைவனைப் பொருந்தாது என்பது இவ்வுவமையால் அறிவுறுத்தப்படும் கருத்தாகும். இவ்வுவமை,

**'அப்பினில் உப்பென அத்தன் அணைந்திட்டுச்**
**செப்பு பராபரஞ் சேர்பரமும் விட்டுக்**
**கப்புறு சொற்பத மாளக் கலந்தமை**
**எப்படி யப்படி யென்னுமவ் வாறே'** **(2945)**

என்னும் திருமந்திரப் பாடற்பொருளை உளங்கொண்டு கூறியதாதல் உணர்தற் பாலதாகும்.

சுட்டியறியப்பட்ட இப்பிரபஞ்சத்தை, 'இது மெய்ப் பொருளன்று, இது மெய்ப் பொருளன்று' என்று இவ்வாறு ஒவ்வொன்றாக வைத்து நோக்கி, மெய்ப்பொருளன்று எனக் கழித்து நீக்கி, அவ்வாறு கண்டு நீங்கிய ஆன்மாவாகிய தன்னறிவின்கண்ணே சுட்டுணர்வு இன்றி நின்ற கடவுளை ஆராய்ந்து, 'அது நானானேன்' என ஒருவன் பாவிப்பானாயின், அப் பாவனையால் வேறன்றியுடனாய் விளங்கித் தோன்றும் முதல்வனது அருளால், தொன்மையே கூடி நின்ற தனது பொதுவியல்பைத் தான்விட்டு நீங்க வல்லனாவன். இவ்வாறு உயிர் தன்னுடன் வேறன்றித் தோன்றும் முதல்வனருளால், தான் பாசப்பிணிப்பினின்றும் நீங்குதல், ஒள்ளிய கருடதியானத்தில் விளங்கித் தோன்றும் கருடனால், தியானிப்போனாகிய பாவகன் பாம்பின் விடத்தைத் தீர்த்துக் கொள்ளுமாறு போலாம். இக்கருத்தினை விளக்கும் நிலையிலமைந்தது,

**'கண்டதை யன்றன் றெனவிட்டுக் கண்டசத்தாய்**
**அண்டனை ஆன்மாவில் ஆய்ந்துணரப் - பண்டணைந்த**
**ஊனத்தைத் தான்விடுமா றுத்தமனின் ஒண்கருட**
**சானத்தில் தீர்விடம்போற் றான்'.**

**சிவஞானபோதம்-வெண்பா- 58**

என்னும் செய்யுளாகும். இதன் பொருளை விரித்துரைக்கும் முறையில் அமைந்தது,

**'கண்ட இவை யல்லேன் நான் என்றகன்று, காணாக்**
**கழிபரமும் நானல்லேன் எனக்கருதிக் கசிந்த**

தொண்டினொடும் உளத்தவன்றான் நின்றகலப் பாலே
சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன் வேறின்றி
விண்டகலும் மலங்களெலாம் கருடதியானத்தால்
விடமொழியும் அதுபோல விமலதையும் அடையும்
பண்டை மறைகளும் அது நானானே னென்று
பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே'
சிவஞான சித்தியார்-298

எனவரும் சித்தியார் திருவிருத்தமாகும். இவையிரண்டும்,

நீயது வானா யெனநின்ற பேருரை
ஆயது நானானேன் என்னச் சமைந்தறச்
சேய சிவமாக்குஞ் சீர்நந்தி பேரருள்
ஆயது வாயனந் தானந்தி யாகுமே. (2577)

எனவும்,

கருடன் உருவங் கருதும் அளவிற்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோல்
குருவின் உருவங் குறித்தஅப் போதே
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே. (2659)

எனவும் வரும் திருமந்திரப் பாடல்களின் பொருளை அடியொற்றியமைந்திருத்தல் அறியத்தக்கதாகும்.

ஆன்மா, சிவனுக்கு உடைமையாதலை அஞ்செழுத்து உச்சரிக்கும் நிலையில் வைத்து நோக்கித் தன் உடம்பினுள்ளே இதயம் பூசைத்தானமாகவும், உந்தி ஓமத்தானமாகவும், புருவநடு தியானத்தானமாகவும் கொண்டு, புறம்பே ஞானபூசை செய்யும் முறைப்படி உள்ளத் தாமரையில் திருவைந் தெழுத்தாகிய திருமேனியில் அம் முதல்வனைத் தியானித்து, கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்னும் எண்வகை மலர்களால் அருச்சித்து, அத்திர மந்திரத்தாலே குண்டலித்தானமாகிய உந்தியிலே ஞான அனலை எழுப்பி, அதன்கண் விந்துத்தானத்து அமிழ்தமாகிய நெய்யைச் சுழுமுனை நாடி இடைநாடியாகிய சுருக்கு சுருவங்களால் சொரிந்து ஓமஞ் செய்து, விந்துத்தானமாகிய புருவ நடுவிலே சிகர யகா வகரங்கள் மூன்றும் முறையே அதுவெனும் (தற்பரப்) பொருளும் நீயெனும் (துவம்பதப்) பொருளும் ஆகின்றாய் எனும் (அசிபதப்) பொருளும் ஆம் முறை நோக்கி அதனால் சிவோகம் பாவனை செய்வனாயின், அப் பாவனைக்கண் அம்முதல்வன் விளங்கித் தோன்றுவன். அப் பாவகன் ஆண்டான் அடிமைத் திறத்தால் அடிமையாவன். இவ்வுண்மையினை அறிவுறுத்துவது,

**அஞ்செழுத்தா லுள்ளம் அரனுடைமை கண்டரனை**
**அஞ்செழுத்தால் அர்ச்சித் திதயத்தில் - அஞ்செழுத்தால்**
**குண்டலியிற் செய்தோமம் கோதண்டம் சானிக்கில்**
**அண்டனாம் சேடனாம் அங்கு.சிவஞானபோதம்-வெண்பா 59**

*என்னும் செய்யுளாகும். இறைவனைத் திருவைந்தெழுத்தின் துணையால் புருவத்தின் இடைவெளியாகிய விந்துத்தானத்திற் கண்டு வழிபடும் இம்முறை,*

**நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி**
**உற்றுற்றுப் பார்க்க ஒளிவிடு மந்திரம்**
**பற்றுக்குப் பற்றாய்ப் பரம னிருந்திடஞ்**
**சிற்றம் பலமென்று சேர்ந்துகொண் டேனே. (2770)**

*எனவரும் திருமந்திரத் திருப்பாடலில் விளக்கப் பெற்றிருத்தல் அறியத்தக்கதாகும்.*

*நெல்லுக்குத் தவிடும் உமியும் அநாதியாயிருந்தும் ஒரு காலத்திலே நீங்குந் தன்மைபோல, உயிர்களுக்கு மலமாயை கன்மங்கள் தொன்மையேயுள்ளன என்றும், அவை தத்தம் காரியத்தைச் செய்தல் முதல்வன் ஆணையால் என்றும், வீடுபெற்ற உயிர்களிடத்தில் அவை இல்லையாயிருப்பினும் பாசப் பிணிப்புடைய உயிர்களிடத்தே நீங்காது நிற்றலால் அவற்றின் உண்மைத் தன்மை அழியாதென்றும் அறிவுறுத்துவது,*

**'நெல்லிற் குமியும் நிகழ்செம் பினிற்களிம்பும்**
**சொல்லிற் புதிதன்று தொன்மையே - வல்லி**
**மலகன்மம் அன்றுளவாம் வள்ளலாற் பொன்வாள்**
**அலர் சோகஞ் செய்கமலத் தாம்'**

**சிவஞானபோதம்-வெண்பா-12**

*எனவரும் செய்யுளாகும். "நெல்லின்கண் உமியும் செம்பின்கண் களிம்பும் எக்காலத்து உளவாயின என்று ஆராய்ந்து சொல்லுங்கால், அந்நெல்லும் செம்பும் உளவாயின அன்றே அவையுள்ளன அன்றி இடையே வந்தன அல்ல எனல் வேண்டும். அதுபோல மாயை ஆணவமலம் கன்மம் என்னும் மும்மலங்களும் அநாதியே யுள்ளனவாம். முன்னே யுளதாகிய தாமரைப்பூ மலர்தலும் குவிதலும் கதிரவனாற் செய்யப்படுமாறு போல அவை தத்தம் காரியங்களைச் செய்தல் இறைவனாலே யாகும்" என்பது இதன் பொருளாகும். மாயை இறைவனுக்குப் பரிக்கிரக சத்தியாதலின் வல்லி என்றார். மலம் - ஆணவம், கன்மம் - வினை.*

*"மூலமலத்தின் காரியம் மோகம் மதம் முதலாயின. இருவினையின் காரியம் இன்பதுன்ப முதலாயின. மாயையின்*

காரியம் தனுகரணம் முதலாயின. வள்ளலால் ஆம் எனவே திரோதான சத்தியது உண்மையும் பெற்றாம். அது, பாகம் வருவித்தற் பொருட்டு மலத்தின் வழி நின்று மோகம் முதலியவற்றைத் தொழிற்படுத்துவதாகிய சிவசங்கற்பத்திற்கு ஏதுவாதல் பற்றி, மலம் என்று உபசரித்துக் கூறப்படும். இவ்வாறு மல, கன்ம, மாயை, திரோதானம், மாயா காரியம் என்னும் ஐவகைப் பாசமும் கண்டுகொள்க" என விளக்குவர் சிவஞான முனிவர்.

ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களும் நெல்லில் அமைந்த முளை, தவிடு, உமி என்பவற்றைப் போன்று உயிரை முறையே பிணித்து மறைந்துள்ளன என்பது,

**"மும்மலநெல்லினுக்கு முளையொடு தவிடுமிபோல்**
**மம்மர்செய் தணுவி னுண்மை வடிவினை மறைத்து நின்று"**
**(சிவஞானசித்தியார்-176)**

எனவரும் அருணந்தி சிவாசாரியார் வாக்காலும்,

**"உயிருண்டாவே யுளதுமலம் மல முளதா யொழிந்தவெல்லாம்**
**நெல்லின்முளை தவிடுமிபோல் அநாதியாக**
**நிறுத்திடுவர் இதுசைவம் நிகழ்த்துமாறே"சிவப்பிரகாசம்- 25**

எனவரும் உமாபதி சிவாசாரியார் வாய்மொழியாலும் உணரப்படும். 'நெல்லின் முளை தவிடுமிபோல்' என்னும் இவ்வுவமையில் நெல்லினுள்ளேயுள்ள அரிசி ஆன்மாவிற்கு உவமை. அரிசியைப்பற்றியுள்ள தவிடு ஆணவமலத்திற்கு உவமை. அதன் நுனியிலுள்ள முளை கன்மத்திற்கு உவமை. அதற்கு இடனாகிய உமி மாயைக்கு உவமை என விளக்குவர் மதுரைச் சிவப்பிரகாசர். மும்மலங்களைப் பற்றிய இவ்விலக்கணம்,

**"ஆணவ மாயையுங் கன்மமு மாமலங்**
**காணு முளைக்குத் தவிடுமி யான்மாவும்**
**தாணுவை யொவ்வாமற் றண்டுல மாய்நிற்கும்**
**பேணுவாய் மற்றுநின் பாசம் பிரித்தே. (2192)**

எனவரும் திருமந்திரப் பாடற்பொருளை அடியொற்றிக் கூறப்பட்டுள்ளமை அறியத்தக்கதாகும்.

**'ஆணவம் பிண்டி அருமாயை தான்உமி**
**காமியம் மூக்கென்று காண்'**

என்வரும் வீட்டுநெறிப்பால் ஈண்டு நினைக்கத்தக்க தாகும். 'நெல்லின் உமிபோனால் முளை சீவியாதற்போலக் கன்மமும் மாயை ஆதாரமாக ஒடுங்கி மீளவும் மாயை ஆதாரமாகச் சீவிக்கும்.

கன்மமில்லாதபோது மாயையும் சீவிப்பற்றுப்போம்' என மதுரைச் சிவப்பிரகாசர் கூறும் விளக்கம் இங்கு உளங்கொளத் தக்கதாகும்.

ஆணவம், கன்மம், மாயை என்னும் இம் மூலமலங்களுடன் மலத்தைப் பரிபாகம் செய்யும் இறைவனது சத்தியாகிய திரோதான சத்தியையும், மாயையின் காரியங்கள் ஆகிய மாயேயத்தையும் சேர்த்து மலம் ஐந்து எனக் கூறுதல் மரபு.

**மோகமிக உயிர்கள்தொறும் உடனாய் நிற்கும்**
**மூல ஆணவம்ஒன்று, முயங்கி நின்று**
**பாகமிக உதவுதிரோ தாயி ஒன்று,**
**பகர்மாயை ஒன்று , படர்கன்மம் ஒன்று,**
**தேகமுறு கரணமொடு புவனபோகச்**
**செயலாரு மாமாயைத் திரட்சி ஒன்றென்(று)**
**ஆகமலம் ஐந்தென்பர் ஐந்தும் மாறா(து)**
**அருளென்ப தரிதென்பர் அறிந்துளோரே**
**- சிவப்பிரகாசம்-32**

எனவரும் செய்யுள் இம்மரபினை விரித்து விளக்குவதாகும். இவ்வாறு மலங்கள் ஐந்து என்னும் மரபு. "மாறாமலம் ஐந்தால்" (திருமந்திரம் - 2160) எனவும் "நேராமலமைந்து" (ஷ - 2166) எனவும், "வணங்கிடும் ஐம்மலம்" (ஷ - 2177) எனவும், "ஐம்மலந்தான்விட்டு" (ஷ - 2207) எனவும், "ஒத்துறுபாசம் மலம் ஐந்தொடாறாது, தத்துவ பேதம்" (ஷ - 2211) எனவும், "நந்திபராவத்தை நாடச் சுடர்முனம், அந்தியிருள் போலும் ஐம்மலம் மாறுமே' (ஷ - 2293) எனவும் திருமந்திரப் பனுவலில் முதன் முதற் காணப்படுவதாகும்.

ஞானமே திருமேனியாகவுடைய இறைவன் சமயங்கள் தோறும் அருளிச்செய்த ஆகமங்களிலெல்லாம் கூறப்பட்ட மெய்யுணர்வு பற்றிய முடிபுகள் எல்லா ஆகமங்களிலும் ஒத்துச் சென்று முழுமுதற் பொருள் ஒன்றையே நோக்கி முடியும் என்பது,

**"சுத்தவடி வியல்பாகவுடைய சோதி**
**சொல்லிய ஆகமங்களெல்லாம் சூழப்போயும்**
**ஒத்துமுடி யுங்கூட ஓரிடத்தே**
**ஒருபதிக்குப் பலநெறிகள் உளவானாற்போல்'**
**சிவஞானசித்தியார் பரபக்கம் - 9**

எனவரும் அருணந்தி சிவாச்சாரியார் வாய்மொழியால் நன்கு உணரப்படும். இவ்வுண்மை

"ஒன்றது பேரூர் வழியா றதற்குள
என்றது போல இருமுச் சமயமும்' (1558)

எனவரும் திருமந்திரத் தொடரில் விளக்கப் பெற்றிருத்தல் காணலாம்.

அறிவிற் சிறந்தோரும் அறிவற்றயர்வோரும் ஆகிய இவர்கட்கன்றி, அறிவும் அறியாமையும் ஒருங்குடையார்க்குப் பயன்படும் நோக்கத்துடனேயே நூல்கள் இயற்றப்படும் என்பதனை,

'போதடிமிகுத்தோர் தொகுத்த பேதைமைக்கே
பொருந்தினோ ரிவர்க்கன்றிக் கதிப்பாற் செல்ல
ஏதுநெறிஎனும் இவர்கட் கறிய முன்னாள்
இறைவன் அருள் நந்திதனக் கியம்ப'

சிவஞானசித்தியார் பரபக்கம்- 10

எனவரும் திருவிருத்தத்தில் அருணந்தி சிவாச்சாரியார் தெளிவாகக் குறித்துள்ளார். இக்கருத்து,

அறிவிக்க வேண்டாம் அறிவற் றயர்வோர்க்கும்
அறிவிக்க வேண்டாம் அறிவிற் செறிவோர்க்கும்
அறிவுற் றறியாமை யெய்திநிற் போர்க்கே
அறிவிக்கத் தம்மறி வாரறிவோரே. (2327)

எனவரும் திருமந்திரப் பாடலில் இடம் பெற்றிருத்தல் கூர்ந்துணரத்தக்கதாகும்.

ஆதிநடு வந்தமிலா அளவில் சோதி
அருண் ஞான மூர்த்தியாய் அகில மீன்ற
மாதினையும் ஒருபாகத் தடக்கி வானோர்
மகுட சூடாமணியாய் வையம் போற்றப்
பாதிமதி யணிபவளச் சடைகள் தாழப்
படரொளியம் பலத்தாடும் பரனார் பாதத்
தாதுமலி தாமரைகள் சிரத்தே வைத்துத்
தளராத பேரன்பு வளராநிற்பாம். சித்தியார்- 1

எனவரும் சிவஞானசித்தியார் கடவுள் வாழ்த்துப் பாடல் திருமந்திரத்தில்,

தேவர்கள் தானவர் சித்தர் வித்தியாதரர்
மூவர்க ளாதி முப்பத்து மூவர்கள்
தாபதர் சத்தர் சமயஞ் சராசரம்
யாவையும் ஆடிடும் எம்மிறையாடவே. (2731)

**தத்துவ மாடச் சதாசிவந் தானாடச்**
**சித்தமு மாடச் சிவசத்தி தானாட**
**வைத்த சராசர மாட மறை ஆட**
**அத்தனு மாடினான் ஆனந்தக் கூத்தே** (2789)

எனவரும் திருக்கூத்துத் தரிசனப் பகுதியை நினைவு படுத்துவதாகும். "திருவம்பலத்து நிருத்தம்பண்ணுகையாவது, பூமிக்குச் சுழுமுனை நாடி சிதம்பரமாதலால் அதில் ஆடுகை. அஜபாஸ்வர இயமாம் இரண்டக்கரமாகிய திருவடிகளால் ஆடுவதனால் உலகத்திற்குயிருமாய் நிற்பன் என்பது கருத்து. உயிர்களுக்குப் பலமாயிருப்பனென்பது அஷ்டமூர்த்தி வடிவாதலால் 'தானாடத் தசையாடும்' என்னும் பழவார்த்தையும் இதனை நோக்கியெனக் கொள்க" என விளக்கம் கூறுவார் சிவாக்கிரயோகியார்.

இறைவன், புறத்தே திருக்கோயிலுள் இருக்குந் திருமேனியும் நேயமலிந்த அடியார்களாகிய திருவேடமும் ஆதாரமாகக் கொண்டு நின்றும், அகத்தே உயிரை இடமாகக் கொண்டு நின்றும் இங்குள்ளார் செய்யும் பூசையினை ஏற்றருள்வன் என்பது,

**"தாபர சங்கமங்கள் என்றிரண் டுருவில் நின்று**
**மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க் கருளை வைப்பன்"** (118)

எனவரும் சிவஞான சித்தியார் திருவிருத்தத்தால் உணர்த்தப் பட்டது. இச்செய்யுள்,

**தாபரத் துண்ணின் றருளவல் லான்சிவன்**
**மாபரத் துண்மை வழிபடு வாரில்லை**
**மாபரத் துண்மை வழிபடு வாளர்க்குப்**
**பூவகத் துண்ணின்ற பொற்கொடி யாமே.** (1717)

**படமாடக் கோயிற் பகவற்கொன் றீயின்**
**நடமாடக் கோயில் நம்பர்க்கங் காகா**
**நடமாடக் கோயில் நம்பர்க்கொன் றீயில்**
**படமாடக் கோயிற் பகவற்க தாமே.** (1857)

எனவரும் திருமந்திரப் பாடல்களை அடியொற்றியமைந்ததாகும்.

**சிவஞ்சத்திநாதம் விந்து சதாசிவன் திகழும் ஈசன்**
**உவந்தருள் உருத்திரன்தான் மால்அயன் ஒன்றினொன்றாய்ப்**
**பவந்தரும் அருவம்நால் இங்குருவம்நால் உபயம் ஒன்றாய்**
**நவந்தரு பேதம் ஏகநாதனே நடிப்பன் என்பர்.**

**சிவஞானசித்தியார்-164**

எனவரும் செய்யுள், இறைவன் ஒருவனே இவ்வாறு அருவம் அருவுருவம் உருவம் எனப்படும் முத்திறத்து ஒன்பது திருமேனியினும் வேற்றுமையின்றி நின்று இவ்வுலகினை இயக்கியருள்கின்றான் என அறிவுறுத்துவது ஆகும். இது,

**சிவமொடு சத்தி திகழ்நாதம் விந்து**
**தவமான ஐம்முகன் ஈசன் அரனும்**
**பவமுறு மாலும் பதுமத்தோன் ஈறா**
**நவமவை யாகி நடிப்பவன் தானே.** (1807)

**தலையான நான்கும் தனதரு வாகும்**
**அலையா அருவுரு வாகும் சதாசிவம்**
**நிலையான கீழ்நான்கு நீடுரு வாகும்**
**துலையா இவைமுற்று மாயல்ல தொன்றே.** (1810)

எனவரும் திருமந்திரத் திருப்பாடல்களின் பொருளைத் தொகுத்துரைக்கும் முறையில் அமைந்திருத்தல் அறியத் தக்கதாகும்.

ஆன்மா, அரசும், அமைச்சரும் போல் மாயா கருவிகளைப் பற்றி உடன்நின்று அறியுங்கால் அரசன் போல் அவற்றை விட்டுவிட்டுச் சென்று ஐவகை அவத்தைகளை அடைவதாகும். அந்நிலையில் நனவு நிலையாகிய சாக்கிரத்தில் நுதல் இடமாக முப்பத்தைந்து கருவிகளும், கனவு நிலையில் கண்டம் இடமாக இருபத்தைந்து கருவிகளும், உறக்க நிலையில் நெஞ்சம் இடமாக மூன்று கருவிகளும், பேருறக்க நிலையில் கொப்பூழ் இடமாக இரண்டு கருவிகளும், துரியாதீதம் எனப்படும் உயிர்ப்படக்க நிலையில் மூலம் இடமாக ஒரு கருவியும் நிற்கும் என்பர். உயிர் கருவிகளோடு கூடி அறியும் நிலையில் உள்ள அவத்தை நிலைகளாகிய இவற்றை,

**ஒன்றணையா மூலத் துயிரணையும் நாபியினில்**
**சென்றணையும் சித்தம் இதயத்து - மன்றவேய்**
**ஐயைந்தாம் நன்னுதலிற் கண்டத்தின் வாக்காதி**
**மெய்யாதி விட்டகன்று வேறு.**

**சிவஞானபோதம்-வெண்பா-28**

எனவரும் சிவஞானபோதமும்,

**சாக்கிரம் முப்பத்தைந்து நுதலினிற், கனவு தன்னில்**
**ஆக்கிய இருபத்தைந்து களத்தினில், சுழுனை மூன்று**
**நீக்கிய இதயந்தன்னில், துரியத்தில் இரண்டுநாபி,**
**நோக்கிய துரியாதீதம் நுவலின் மூலத்தின் ஒன்றே,**

**சிவஞான சித்தியார்- சுபக்-223**

*எனவரும் சிவஞானசித்தியாரும் வகைபெறக் கூறியுள்ளன. இங்குக் கூறப்பட்ட அவத்தை நிலைகளை விளக்கும் முறையில், சிவஞானசித்தியார் உரையாசிரியராகிய மறைஞானதேசிகர்,*

**முப்பதோ டைந்தாய் முதல்விட்டங் கையைந்தாய்**
**செப்பதின் மூன்றாய்த் திகழ்ந்திரண் டொன்றதாய்**
**இப்பதி நின்ற இயல்பை யறிந்தவர்**
**அப்பதி நின்றமை ஆய்ந்துகொள் ளீரே. (2143)**

**இந்திர மீரைந் தீரைந்து மாத்திரை**
**மந்திர மாய்நின்ற மாருதம் ஈரைந்தும்**
**அந்தக் கரணம் ஒருநான்கும் ஆன்மாவும்**
**பந்தவச் சக்கிரப் பாலது வாகுமே. (2144)**

**மனவகத்தே..........இருபத்தைஞ்சதாமே.***
*(*இப்பாடல் முழுவதும் கிடைக்கவில்லை).*

**சுழுனையைச் சேர்ந்துள மூன்றுடன் காட்சி**
**கெழுமிய சித்தம் பிராணன்றன் காட்சி**
**ஒழுகக் கமலத்தின் உள்ளே யிருந்து**
**விழுமப் பொருளுடன் மேவிநின் றானே. (2156)**

**கருவரம் பாகிய காயந் துரியம்**
**இருவரும் கண்டிடிற் பிறப்பிறப் பற்றவர்***
**குருவரம் பெற்றவர் கூடிய பின்னை**
**இருவரு மின்றியொன் றாகிநின் றாரே. (2280)**

*(* மறைஞான தேசிகர் கொண்ட பாடம்).*

*எனவரும் திருமந்திரப் பாடல்களை உதாரணமாகக் காட்டியுள்ளமை இங்கு ஒப்புநோக்கி யுணரற்பாலதாகும்.*

*உயிரானது, மேற்குறித்த காரிய அவத்தைகளை அடைதற்குக் காரணமாகக் கேவலம், சகலம், சுத்தம் என்னும் மூன்று அவத்தைகளை அடையும். அவற்றுட் கேவலம் என்பது, உயிர் தனக்குரிய விழைவு, அறிவு, செயல் என்பவற்றின் நிகழ்ச்சி சிறிது மின்றித் தனித்துத் தன்னளவில் நிற்கும் நிலையாகும். சகலம் என்பது, உடல் கருவிகள் முதலியவற்றோடுங் கூடி விழைவு அறிவு செயல் ஆகிய அவை ஒருசிறிது விளங்க நிற்கும் நிலை. சுத்தம் என்பது, உயிர் தன்னைப் பற்றிய ஐவகை மலங்களும் நீங்கிச் சிவத்தோடுகூடி விழைவு அறிவு செயல்கள் எங்குமாய்ப் பரவி விளங்கும் நிலையாகும். இம் மூவகை நிலைகளையும் விளக்கும் முறையில் அமைந்தது,*

**கேவல சகல சுத்தம் என்று மூன்றவத்தை ஆன்மா**
**மேவுவன், கேவலம் தன்னுண்மை, மெய் பொறிகளெல்லாம்**

**காவலன் கொடுத்த போது சகலனாம், மலங்களெல்லாம்**
**ஓவினபோது சுத்தம் உடையன் உற்பவந் துடைத்தே (227)**

*எனவரும் சிவஞானசித்தியார் திருவிருத்தமாகும். இது,*

**தற்கேவலம் முத்திதானே தனிமையாம்**
**பிற்பால் சகலம் கலாதிப் பிறழ்வதாம்**
**தப்பால் புரிசுத்த கேவலஞ் சாக்கிரத்**
**தப்பாற் புரிய அதிசுத்த மாமே. (2246)**

*எனவரும் திருமந்திரத்தைப் பின்பற்றியமைந்ததாகும்.*

*உயிரானது ஒரு செயலுமின்றி ஆணவமலத்தோடு மட்டும் கூடிய நிலையாகிய கேவலத்தின் இயல்பினை விரித்துரைப்பது,*

**அறிவிலன் அமூர்த்தன்* நித்தன் அராகாதி குணங்களோடுஞ்**
**செறிவிலன் கலாதியோடுஞ் சேர்விலன் செயல்கள் இல்லான்**
**குறியிலன் கருத்தா அல்லன் போகத்திற் கொள்கையில்லான்**
**பிறிவிலன் மலத்தினோடும் வியாபி கேவலத்தில் ஆன்மா.**
**(228)**

*எனவரும் சிவஞான சித்தியாராகும். இது,*

**அறிவிலன் அமூர்த்தன் *அராகாதி சேரான்**
**குறியொன் றிலான் நித்தன் கூடான் கலாதி**
**செறியுஞ் செயலில்லோன் திண்கர்த்தா அல்லோன்**
**கிறியின் மலன்வியாபி கேவலத் தோனே (2247)**

*(* 'அறிவின்றிமுத்தன்' எனத் திருமந்திரம் அச்சுப் புத்தகங்களில் உள்ள பாடம் பிழைப்பட்டதாகும். 'அறிவிலன் அமூர்த்தன்' எனச் சிவஞான சித்தியார் மறை ஞான தேசிகர் உரையிற் கண்ட பாடமே திருந்திய பாடமாகும் என்பது இங்கு எடுத்துக் காட்டிய ஒப்புமைப் பகுதியால் இனிது புலனாதல் அறிக.)*

*எனவரும் திருமந்திரத்தின் சொல்லையும் பொருளையும் அவ்வாறே அடியொற்றி யமைந்திருத்தல் காணலாம்.*

*ஆன்மா, உடல் கருவி முதலியவற்றைப் பெற்றுப் போகம் நுகர்ந்து ஓரளவு அறிவு விளங்கப் பெற்ற நிலையாகிய சகலத்தின் இயல்புரைப்பது,*

**உருவினைக் கொண்டுபோக போக்கியத் துன்னல்செப்பல்**
**வருசெயல் மருவிச் சத்த மாதியாம் விடயந்தன்னில்**
**புரிவதுஞ் செய்திங் கெல்லா யோனியும் புக்குழன்று**
**திரிதரும் சகலமான அவத்தையிற் சீவன் சென்றே (229)**

*என்னும் சிவஞான சித்தியாராகும். இஃது,*

**உருவுற்றுப் போகமே போக்கியந் துற்று**
**மருவுற்றுப் பூதம னாதியான் மன்னி**
**வருமச்செயல் பற்றிச் சத்தாதி வைகிக்**
**கருவுற் றிடுஞ்சீவன் காணுஞ் சகலத்தே (2261)**

*எனவரும் திருமந்திரப் பொருளை விரித்துரைப்பதாகும்.*

*உயிரானது குருவின் திருவருளைச் சார்ந்து தூய்மைபெறும் நிலையாகிய சுத்தாவத்தையினை விளக்குவது,*

**இருவினைச் செயல்கள் ஒப்பின் ஈசன்றன் சத்திதோயக்**
**குருவருள் பெற்று ஞான யோகத்தைக் குறுகி முன்னைத்**
**திரிமலம் அறுத்துப் பண்டைச் சிற்றறி வொழிந்து ஞானம்**
**பெருகி நாயகன்றன் பாதம் பெறுவது சுத்தமாமே (230)**

*என்னும் சிவஞான சித்தியார் செய்யுளாகும். இஃது,*

**இருவினை நேரொப்பி லின்னருட் சத்தி**
**குருவென வந்து குணம்பல நீக்கித்**
**தரும் அரன் ஞானத்தால் தன்செய லற்றால்**
**திரிமலம் நீங்கிச் சிவனாதல் சுத்தமே. (1527, 2262)**

*எனவரும் திருமந்திரப் பொருளை விரித்துரைக்கும் முறையில் அமைந்ததென்பது, இச்செய்யுளுரையில் மறை ஞானதேசிகர் இத்திருமந்திரத்தை மேற்கோளாகக் காட்டியிருத்தலால் இனிது விளங்கும். **

*(*இத்திருமந்திரம் இப்பொழுதுள்ள அச்சுப்புத்தகங்களில்,*

*இருவினை யொத்திட இன்னருட்சத்தி*
*மருவிட ஞானத்தில் ஆதன மன்னிக்*
*குருவினைக் கொண்டருள் சத்திமுன் கூட்டிப்*
*பெருமலம் நீங்கிப் பிறவாமை சுத்தமே (திருமந்திரம் 2262)*

*எனக் காணப்படுகிறது.*

*ஆணவமலம் ஒன்றேயுடைய உயிர்களை விஞ்ஞானா கலர் எனவும், ஆணவம் கன்மம் என்னும் இருமலமுடைய உயிர்களைப் பிரளயாகலர் எனவும், ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலமுடைய உயிர்களைச் சகலர் எனவும் உயிர்களை மூவகையாகப் பகுத்துரைத்தல் சைவ சித்தாந்த மரபாகும்.*

**'மெய்ஞ்ஞானந் தானே விளையும் விஞ்ஞானகலர்க்**
**கஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய்- மெய்ஞ்ஞானம்**
**பின்னுணர்த்து மன்றிப் பிரளயா கலருக்கு**
**முன்னுணர்த்துந் தான்குருவாய் முன்'**
**சிவஞானபோதம்- வெண்பா-47**

*எனவும்,*

உரைதரும் இப்பசுவர்க்கம் உணரின் மூன்றாம்
உயரும் விஞ்ஞானகலர் பிரளயா கலர்சகலர்
நிரையின் மலம் மலங்கன்மம், மலங்கன்ம மாயை
நிற்கும், முதலிருவர்க்கும் நிராதாரமாகிக்
கரையிலருட் பரன் துவிதா சத்திநி, பாதத்தால்
கழிப்பன் மலம், சகலர்க்குக் கன்ம வொப்பில்
தரையில் ஆசான்மூர்த்தி ஆதாரமாகித்
தரித்தொழிப்பன் மலம் சதுர்த்தா சத்திநி பாதத்தால்.
சிவஞான சித்தியார்-சுபக்கம்-254

*எனவும்,*

மூவகை ஆருயிர் வர்க்கம் மூலமலத்தார், கன்ம
மூலமலத்தார், மூன்று முடையாரன்றே,
தீவகமாம் என வுருவாய் வந்து நாதன்
திருநோக்கால் பரிசத்தால் திகழும் வாக்கால்
பாவனையால் மிகு நூலால் யோகப் பண்பால்
பரவிவரும் அவுத்திரியாற் பாசநாசம்
மேவ அருளுதவும், அவுத்திரியிரண்டு திறனாம்
வியன்கிரியை ஞானமென விளம்புமாறே.
(சிவப்பிரகாசம் 8)

*எனவும் வரும் மெய்கண்ட நூற் செய்யுட்கள்,*

விஞ்ஞானர் நால்வரு மெய்ப்பிரள யாகலத்
தஞ்ஞானர் மூவருந் தங்குஞ் சகலத்தின்
அஞ்ஞானர் மூவரு மாகும் பதின்மராம்
விஞ்ஞான ராதியர் வேற்றுமை தானே. (493)

மும்மலங் கூடி முயங்கி மயங்குவோர்
அம்மெய்ச் சகலத்தர் தேவர் சுரர்நரர்
மெய்மையில் வேதா வரிமிகு கீழந்தத்
தம்முறை யோனிபுக் கார்க்குஞ் சகலரே. (2244)

*எனவரும் திருமந்திரப் பாடல்களின் பொருளை மேற்கொண்டு கூறுவனவாகும்.*

*வேதம் சிவாகமம் என்னும் இருதிற நூல்களும் சிவபெருமானால் அருளிச் செய்யப்பெற்ற முதல் நூல்கள் எனவும், வேறுரைக்கும் எல்லா நூல்களும் இவற்றை முதலாகக் கொண்டு இயற்றப்பட்ட வழி நூல்கள் எனவும், வேதம் உலகத்தார் உய்தற் பொருட்டுப் பொது நூலாகவும் சிவாகமம் சத்திநிபாதர் உய்தற்பொருட்டுச் சிறப்பு நூலாகவும் அருளிச் செய்யப் பெற்றன எனவும் அறிவுறுத்து முறையிலமைந்தது,*

**வேதநூல் சைவநூல் என்றிரண்டே நூல்கள்**
**வேறுரைக்குநூ லிவற்றின் விரிந்த நூல்கள்**
**ஆதிநூல் அநாதி யமலன் தருநூ லிரண்டும்**
**ஆரணநூல் பொது, சைவம் அருஞ் சிறப்பு நூலாம்**
**நீதியினால் உலகர்க்கும் சத்திநி பாதர்க்கும்**
**நிகழ்த்தியது, நீண்மறையி னொழிபொருள் வேதாந்தத்**
**தீதில்பொருள் கொண்டுரைக்கும் நூல் சைவம், பிறநூல்**
**திகழ்பூர்வம், சிவாகமங்கள் சித்தாந்தமாகும் (267)**

*எனவரும் சிவஞான சித்தியாராகும். இது,*

**வேதமோ டாகமம் மெய்யாம் இறைவனூல்**
**ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுன்னுக**
**நாத னுரையவை நாடி லிரண்டந்தம்**
**பேதம தென்னிற் பெரியோர்க் கபேதமே. (2397)**

*என்னும் திருமந்திரப் பொருளை விரித்துரைக்கும் முறையில் அமைந்ததாகும்.*

**சித்தாந்தத்தே சிவன்றன் திருக்கடைக்கண் சேர்த்திச்**
**செனன மொன்றிலே சீவன் முத்தராக**
**வைத்தாண்டு மலங்கழுவி ஞான வாரி**
**மடுத்தானந் தம் பொழிந்து வரும் பிறப்பை யறுத்து**
**முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்ப னென்று**
**மொழிந்திடவும் உலகரெலாம் மூடராகிப்**
**பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்**
**பெருங் குழியில் வீழ்ந்திடுவர் இதுவென்ன பிராந்தி.(268)**

*எனவரும் சிவஞான சித்தியார் செய்யுள்,*

**'சித்தாந்தத் தேசீவன் முத்திசித் தித்தலால்**
**சித்தாந்தத் தேநிற்போர் முத்திசித் தித்தவர்'**
**திருமந்திரம்-2394**

*என்னும் திருமூலர் வாய்மொழியினை மேற்கொண்டு கூறிய விளக்கமாக அமைந்திருத்தல் அறியத்தககதாகும்.*

*"தானமியாகந்தீர்த்தம்" (277) எனவரும் சிவஞான சித்தியாரில் 'அரன் முனிலா தொழியில் உற்பவித்து ஞான நெறி யடைந்தடைவர் சிவனை' என்ற தொடர், சரியை முதலிய சிவபுண்ணியங்களைச் செய்தவர் போகத்தில் விருப்புடைய ராயின், விசிட்டமான கன்ம பரிபாகத்தாலே புரியட்டக உடலை யெடுத்துப் பொல்லாதென்ற சகல யோனிகளைப் புசித்துத் தொலைந்தவாறே பிரளயாகலராய்ப் பின்பு விஞ்ஞானகலராய் ஞானநெறியைத் தலைப்பட்டுச் சிவனடியை அடைவார்கள் என்பதனை அறிவுறுத்துவதாம். இது,*

விஞ்ஞான கன்மத்தான் மெய்யட்டகங் கூடி
யஞ்ஞான கன்மத்தாற் சகல யோனிபுக்
கெஞ்ஞானமு மெய்தி யிடையிட்டு மீண்டுபோய்
விஞ்ஞான ராய்ச் சிவ மேவுவ துண்மையே (499)

*என்னும் திருமந்திரப் பாடலை உளங்கொண்டு கூறிய விளக்கமாதல் அறியலாம்.*

சிவஞானச் செயலுடையோர் கையில்தானம்
திலமளவே செய்திடினும் நிலமலைபோல் திகழ்ந்து
பவமாயக் கடலினழுந் தாதவகை யெடுத்துப்
பரபோகந் துய்ப்பித்துப் பாசத்தை யறுக்கத்
தவமாரும் பிறப்பொன்றிற் சாரப் பண்ணிச்
சரியை கிரியா யோகந் தன்னினும் சாராமே
நவமாகும் தத்துவ ஞானத்தை நல்கி
நாதனடிக் கமலங்கள் நணுகுவிக்குந் தானே. (278)

*எனவரும் சிவஞான சித்தியார் விருத்தம்,*

அகர மாயிரம் அந்தணர்க் கீயிலென்
சிகர மாயிரஞ் செய்து முடிக்கிலென்
பகரு ஞானி பகலூண் பலத்துக்கு
நிகரில்லை யென்பது நிச்சயந் தானே. (1860)

*என்ற திருமந்திரப் பாடற்கு அமைந்த விரிவுரை போன்றிருத்தல் உணர்ந்து மகிழத்தக்கதாகும்.*

*சூரியனது சந்நிதியளவிலே சூரியகாந்தக் கல்லில் நெருப்பு விளங்கித் தோன்றுமாறு போல, ஞானாசிரியன் முன்னிலையிலே மாணாக்கனுள்ளத்தே சிவஞானம் விளங்கித் தோன்றும். அது தோன்றவே பதி பசு பாசம் ஆகிய முப்பொருள்களின் இயல்புகளும் நன்கு விளங்கும் என அறிவுறுத்துவது,*

சூரியகாந் தக்கல்லி னிடத்தே செய்ய
சுடர்தோன்றியிடச் சோதி தோன்றுமாபோல்
ஆரியனாம் ஆசான்வந் தருளால் தோன்ற
அடிஞானம் ஆன்மாவில் தோன்றும், தோன்ற
தூரியனாம் சிவன் தோன்றும் தானுந் தோன்றும்
தொல்லுலக மெல்லாந்தன் னுள்ளே தோன்றும்
நேரியனாய்ப் பரியனுமாய் உயிர்க்குயிராய் எங்கும்
நின்றநிலை யெல்லாம் முன் நிகழ்ந்து தோன்றும். (280)

*எனவரும் சிவஞான சித்தியார் செய்யுளாகும். இது,*

**சூரிய காந்தமுஞ் சூழ் பஞ்சும் போலவே**
**சூரிய காந்தஞ் சூழ் பஞ்சைச் சுட்டிடா**
**சூரியன் சன்னிதி யிற்சுடு மாறுபோல்**
**ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே. (117)**

எனவரும் திருமந்திரத்தின் சொற்பொருள்களை அவ்வாறே அடியொற்றியமைந்துள்ளமை காணலாம்.

'ஆசிரியனது அருள்நோக்கத்தால் இருவகைப் பாசங்களும் நீங்கிக் கேட்கும் முறையில் கேட்டுச் சிந்திக்கும் முறையிற் சிந்தித்து அன்பு செய்து அருள் வழியடங்கி நிற்கும் இயல்பினர்க்கு இறைவனியல்பு கேட்கும் காலத்துப் பொருட்டன்மைபற்றிப் பேதமாய்த் தோன்றியும் சிந்திக்குங் காலத்துக் கலப்புப் பற்றி அபேதமாய்த் தோன்றியும், தெளிந்த பின்னர் இவ்விரண்டுமின்றி நுண்ணியனும் பரியனுமாயதோர் முறைமைபற்றி எவற்றினும் ஒற்றித்து நின்றே ஒன்றிலுந் தோய்விலனாய்ப் பேதாபேதமாய்த் தோன்றியும் நிற்கும் அம்முதல்வனது தன்மை இனிது விளங்கும் என இவ்வாறு தெளிதலின் இயல்பினை உணர்த்துவது,

**அறியாமை யறிவகற்றி யறிவி னுள்ளே**
**அறிவுதனை அருளினான் அறியாதே யறிந்து**
**குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடும்**
**கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாகில்**
**பிறியாத சிவன் தானே பிறிந்து தோன்றிப்**
**பிரபஞ்ச பேதமெலாந் தானாய்த் தோன்றி**
**நெறியாலே இவையெல்லாம் அல்லவாகி**
**நின்றென்றுந் தோன்றிடுவன் நிராதார னாயே. (282)**

என்னும் சிவஞான சித்தியாராகும். இச்செய்யுள்,

**அறிவறி யாமை யிரண்டு மகற்றிச்**
**செறிவறி வாயெங்கும் நின்ற சிவனைப்**
**பிறவறியாது பிரானென்று பேணுங்**
**குறியறியாதவர் கொள்ளறி யாரே. (2580)**

எனவரும் திருமந்திரப்பாடலை அடியொற்றியமைந்து இருத்தல் அறியத்தக்கதாகும்.

புண்ணிய பாவம் என்னும் இருவினைத் தளைகளையும் ஞானபூசையின் பயனாகத் தெளிதலுணர்வெனப்படும் ஞான அரத்தால் அறுத்து ஞான நிட்டையில் நின்றோர், கரணங்களின் வயத்தராதலின்றி, இறைவனது வியாபகத்தைத் தலைப்பட்டு ஒருவாற்றானும் குறைவின்றி இம்மையே சீவன் முத்தராகி இவ்வுடம்பு நீங்கப்பெறும் பரமுத்தி நிலையில் தமது வியாபகம்

*எங்கணும் ஆகி அறிவு விளங்கப் பெற்று முதல்வனோடு ஒன்றி ஒத்து நிற்பர் என உணர்த்துவது,*

**புண்ணியமேல் நோக்குவிக்கும் பாவங்கீழ் நூக்கும்**
**புண்ணியனைப் பூசித்த புண்ணியத்தி னாலே**
**நண்ணிய ஞானத்தினால் இரண்டினையும் அறுத்து**
**ஞாலமொடு கீழ்மேலும் நண்ணா னாகி**
**எண்ணுமிக லோகத்தே முத்திபெறும் இவன்றான்**
**எங்கெழிலென் ஞாயிறெமக் கென்றுகுறை வின்றிக்**
**கண்ணுதல்தன் நிறைவதனிற் கலந்து காயம்**
**கழிந்தக்கால் எங்குமாய்க் கருதரன்போல் நிற்பன்.** (283)

*எனவரும் சிவஞான சித்தியாராகும். இது,*

**முப்பது மாறும் படிமுத்தி யேணியாய்**
**ஒப்பிலாப் பேரண்டத் துள்ளொளி புக்குச்**
**செப்ப வரிய சிவங்கண்டு நின்றவர்**
**அப்பரி சாகி யமர்ந்துநின் றாரே.** (126)

*என்னும் திருமந்திரத்திற்கு அமைந்த விரிவுரையாகத் திகழ்தல் இங்கு ஒப்புநோக்கி யுணர்தற் குரியதாகும். தத்துவங்களும் தத்துவகர்த்தாக்களும் நீங்கியே முத்தி என்பதற்கு இத் திருமந்திரத்தினை மேற்கோளாகக் காட்டுவர் மதுரைச் சிவப்பிரகாசர்.*

*பொன்னம்பலத்தில் ஐந்தொழிற் றிருக்கூத்தியற்றியருளும் இறைவன் தன் திருவடியிலே நகரமும், திருவுந்தியிலே மகரமும், திருத்தோளிலே சிகரமும், திருமுகத்திலே வகரமும், திருமுடியிலே யகரமும், திருவாசி ஓங்காரமும், அதன்கண் உள்ள சுடர்கள் ஓங்காரத்தை விட்டு நீங்காத பஞ்சாக்கரமும் ஆக அமைய இவ்வாறு திருவைந்தெழுத்தினையே தனக்குத் திருமேனியாகக் கொண்டு ஆடல் புரிந்தருளுந் திறத்தினை அறிவுறுத்துவன,*

**ஆடும்படி கேள்நல் லம்பலத்தான் ஐயனே**
**நாடுந் திருவடியி லேநகரம் - கூடும்**
**மகரம் உதரம், வளர்ந்தோள் சிகரம்,**
**பகரு முகம்வா, முடி யப்பார்.** உண்மை-32

*எனவும்,*

**ஓங்கார மேநற் றிருவாசி, உற்றதனில்**
**நீங்கா எழுத்தே நிறைசுடராம்- ஆங்காரம்**
**அற்றார் அறிவர் அணி அம்பலத்தான் ஆடலிது**
**பெற்றார் பிறப்பற்றார் பின்.** உண்மை-34

*எனவும் வரும் உண்மை விளக்கச் செய்யுட்களாகும். அம்பலக் கூத்தனாகிய இறைவன், ஒலிக்கின்ற உடுக்கை ஏந்திய திருக் கரத்திலே சிகாரமாகவும், வீசிய திருக்கரத்திலே வகாரமாகவும், அஞ்சலென்று அமைத்த திருக்கையிலே யகாரமாகவும், அக்கினியேந்திய திருக்கரத்திலே நகாரமாகவும், முயலகனை மிதித்து ஊன்றிய திருவடியிலே மகாரமாகவும், கொண்டருளி ஆடல் புரிந்தருளுவதனையும், உடுக்கையேந்திய கையினாலே மாயையை நீக்கி, தீயேந்திய திருக்கரத்தினாலே வல்வினையைச் சுட்டெரித்து, ஊன்றிய திருவடியினாலே மலம் சாய அமுக்கி அருளே தநுவாக நிறுத்தி, அமைத்த திருக்கரத்தினாலே ஆன்மாக்களை ஆனந்த வெள்ளத்தில் அழுத்துதல் இறைவனது திருக்கூத்து முறைமை என்பதனையும் விரித்துரைப்பன,*

**சேர்க்குந் துடிசிகரம், சிக்கனவா வீசுகரம்,**
**ஆர்க்கும் யகரம் அபயகரம்- பார்க்கிலிறைக்(கு)**
**அங்கி நகரம், அடிக்கீழ் முயலகனார்**
**தங்கும் மகரமது தான். உண்மை விளக்கம்-33**

**மாயை தனையுதறி வலிவினையைச் சுட்டுமலம்**
**சாய அமுக்கி அருள்தானெடுத்து- நேயத்தால்**
**ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்**
**தானெந்தை யார்பரதம் தான். (ஷை-36)**

*எனவரும் செய்யுட்களாகும். இவை,*

**மருவுந் துடியுடன் மன்னிய வீச்சு**
**மருவிய அப்பும் அனலுடன் கையும்**
**கருவின் மிதித்த கமலப் பதமும்**
**உருவில் சிவாய நமவென ஓதே. திருமந்திரம்-2798**

*எனவும்,*

**திருந்துநற் சீயென் றுதறிய கையும்**
**அருந்தவர் வாவென் றணைத்த மலர்க்கையும்**
**பொருந்தில் இமைப்பிலி யவ்வென்ற பொற்கையும்**
**திருந்தத்தீ யாகும் திருநிலை மவ்வே. (ஷை-2797)**

*எனவரும் திருமந்திரப் பாடல்களின் பொருளை அடியொற்றி யமைந்த விளக்கங்களாகும்.*

**அரன்துடி தோற்றம், அமைத்தல் திதியாம்,**
**அரன் அங்கிதன்னில் அறையிற் சங்காரம்**
**அரனுற் றணைப்பில் அமருந் திரோதாயி**
**அரனடி யென்றும் அனுக்கிரகம் என்னே. (2799)**

*எனவரும் திருமந்திரத்தைச் சொற்பொருளால் ஒத்து அமைந்தது.*

**தோற்றந் துடியதனில், தோயுந் திதியமைப்பில்**
**சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்-ஊற்றமா**
**ஊன்று மலர்ப்பதத்தே உற்றதிரோதம் முத்தி**
**நான்ற மலர்ப்பதத்தே நாடு. உண்மை விளக்கம்-41**

எனவரும் உண்மை விளக்கமாகும்.

சிவன், அருள், ஆன்மா, திரோதம், மலம் என்னும் இவ்வைந்தும் சிவாயநம என்னும் திருவைந்தெழுத்தின் பொருள் முறையாம். பக்குவப்பட்ட ஆன்மா நகரம் முதலாக ஓதாது சிகாரம் முதலாக ஓதுதலே திருவருளைப் பொருந்தும் முறை என அறிவுறுத்துவது,

**சிவனருள் ஆவி திரோதமலம் ஐந்தும்**
**அவனெழுத் தஞ்சின் அடைவாம்-இவனின்று**
**நம்முதலா ஓதிலருள் நாடாது நாடும் அருள்**
**சிம் முதலா ஓதுநீ சென்று. (41)**

எனவரும் உண்மை விளக்கமாகும். இது,

**சிவனரு ளாய சிவன்றிரு நாமஞ்**
**சிவனரு ளான்மாத் திரோத மலமாயை***
**சிவன்முதலாகச் சிறந்து நிரோதம் ****
**பவம தகன்று பரசிவ னாமே**

( *'மலமாகும்' என்பதே திருந்திய பாடம்.)

(** 'நிரோதம்' என்பது, 'நீரோதப்' என்பதன் சிதைவாகும்.)

என்னும் திருமந்திரத்தைத் தழுவியமைந்திருத்தல் கூர்ந்துணர்தற் குரியதாகும்.

**வாக்கு மனமிறந்த வரன்கருனை யாளன்உருத்**
**தாக்கறவே நிற்குந் தனிமுதல்வா- நீக்காப்**
**பதியினைப்போல் நித்தம் பசுபாச மென்றாய்**
**கதியிடத்து மூன்றினையுங் காட்டு.(உண்மை விளக்கம்- 49)**

எனத் திருவதிகை மனவாசகங்கடந்தார் தம் ஆசிரியரை நோக்கிக் கூறுவதாக அமைந்த இச்செய்யுளில், 'பதியினைப் போல் நித்தம் பசுபாசம் என்றாய்' எனவரும் மூன்றாமடி,

**"பதியினைப் போல் பசு பாசம் அனாதி" (115)**

எனவரும் திருமந்திரத் தொடரை ஆசிரியர் தமக்கு அறிவுறுத்திய மேற்கோளாகக் கொண்டு கூறும் முறையில் அமைந்திருத்தல் காணலாம்.

**அன்றிய பாச இருளும் அஞ்ஞானமும்**
**சென்றிடு ஞானச் சிவப்பிர காசத்தால்**
**ஒன்று மிருசுட ராமரு ணோதயந்**
**துன்றிருள் நீங்குதல் போலத் தொலைந்ததே. (2001)**

*எனவரும் திருமந்திரப் பொருளை உளங்கொண்ட உமாபதி சிவாசாரியார், கருத்திலுறை திருவருளும் இறைவனூலுங் கலந்து தாம் இயற்றிய சார்பு நூலுக்குச் சிவப்பிரகாசம் எனப் பெயரிட்டுள்ளார்.*

*சிவனுடைய அருளிடமாக நின்று ஆன்மசுத்தி பண்ணினவர்கள் தத்துவம் முப்பத்தாறோடும் கூடி நிற்கும் பொழுதே அவற்றோடும் கூடிச் சீவிப்பதும் செய்யாமல் அறிவு குலைவதும் செய்யாமல் சிவத்துடன் கூடி நிற்கும் நிலையே சாக்கிரத்தில் அதீதம் என்னும் முறைமையை அறிவிப்பது,*

**பொற்புறு கருவியாவும் புணராமே, அறிவிலாமற்**
**சொற்பெறும் அதீதம் வந்துதோன்றாமே, தோன்றி நின்ற**
**சிற்பர மதனால் உள்ளச் செயலறுத்திட உதிக்கும்**
**தற்பரமாகி நிற்றல் சாக்கிரா தீதந்தானே. (80)**

*எனவரும் சிவப்பிரகாசச் செய்யுளாகும். இதன்கண் குறித்தவாறு தத்துவம் முப்பத்தாறும் நீங்கியே முத்தியென்பதற்கு,*

**முப்பது மாறும் படிமுத்தி யேணியாய்**
**ஒப்பிலாப் பேரண்டத் துள்ளில் வெளிபுக்குச்**
**செப்ப வரிய சிவங்கண்டு தான்தெளிந்**
**தப்பரி சாகி யமர்ந்திருந் தாரே. (126)**

*என்னும் திருமந்திரத்தையும், ஆணவமலத்தால் மறைப்புண்டு அறியாமையாய்க் கிடப்பதுஞ் செய்யாமல் உட்கரணம் புறக்கரணங்களோடுங்கூடிச் சகலனாய்ச் சத்தாதிவிடயங்களோடுங்கூடிச் சீவிப்பதுஞ் செய்யாமல் நின்ற இடமே சாக்கிராதீதம் என்பதற்கு,*

**நினைப்பு மறப்பு மிலாத விடத்தே**
**வினைப்பற் றறுக்கும் விமலனிருப்பன்**
**வினைப்பற் றறுக்கும் விமலனை நாடி**
**நினைக்கப் புகிலவன் நீளியனாமே. (2970)**

**இரவும் பகலு மிலாத விடத்தே**
**குரவஞ்செய் கின்ற குழலியை நாடி**
**அரவஞ்செய் யாதவ ளோடுஞ் சந்திக்கிற்**
**பருவஞ் செயாவகைப் பாலனு மாமே. (1134)**

**நின்றவச் சாக்கிரந் துரியம தானால்**
**மன்றனு மங்கே மணஞ்செயா நின்றிடு**
**மன்றன் மணஞ்செயின் மாயையு மாய்ந்திடும்**
**அன்றே யிவனும் அவனென லாமே. (2277)**

என்னும் திருமந்திரப் பாடல்களையும், நிஷ்டாபரராகைக்குப் பக்குவரானவர்கள் ஆசாரியனிடத்திலே உண்மையைப் பெற்று அநுபவத்தில் அறிகிறதொழிய நூல்களினாலே அறியப்படா தென்பதற்கு,

**காட்டுங் குறியுங் கடந்தவர் காரணம்**
**ஏட்டின் புறத்தி லெழுதிவைத் தென்பயன்**
**கூட்டுங் குருநந்தி கூட்டிடி னல்லது**
**ஆட்டின் கழுத்தின் அதர்கறந் தற்றே. (2937)**

என்னும் திருமந்திரத்தையும் மதுரைச் சிவப்பிரகாசர் பிரமாணமாகக் காட்டியுள்ளார்.

தத்துவங்களும் ஆன்மாவும் தம்மிற்கூடிச் சீவிக்கும் முறைமையும், அவ்வாறு சீவிக்கும் பொழுதே அவை இரண்டும் பகல்விளக்குப் போலத் தற்போதம் சீவியாமல் நிற்க அருள் மேலிட்ட நிலையில் ஆன்மா அவ்வருளோடுங்கூடிச் சிவாநுபவத்தைப் பெறும் முறைமையும் அறிவுறுத்துவது,

**பற்றிடுங் கருவியாவும் படர்ந்துணர் வளிக்குங்காலை**
**உற்றறிந் திடுவதொன்றின் உணர்வினின் உண்மையாகும்**
**மற்றது பகல்விளக்கின் மாய்ந்திட வருவதுண்டேல்**
**பெற்றிடும் அதனை மாயப்பிறப்பினை யறுக்கலாமே. (82)**

எனவரும் சிவப்பிரகாசமாகும். இதன்கண் பகல்விளக்குப் போல என்றது, தற்போதங் கெட்டு நிற்றலை. இதற்கு,

**'ஒத்திட் டிருக்க வுடம்போ டுயிர்தான்**
**செத்திட்டிருப்பர் சில சிவயோகிகள்' (121)**

எனவரும் திருமந்திரத் தொடரைப் பிரமாணமாகக் காட்டுவர் மதுரைச் சிவப்பிரகாசர்.

இறைவனது திருப்பெயராகிய திருவைந்தெழுத்தினைச் சிவமுதலாக உச்சரித்து நிட்டையைப் பொருந்தினால் பிறபிறப்புக்களாகிய துன்பம் நீங்கும். இதுவே திருவைந்தெழுத்தினை ஓதும் முறை என அறிவுறுத்துவது,

**சிவமுதலே ஆமாறு சேருமேல் தீரும்**
**பவம், இது நீ ஓதும் படி. திருவருட்பயன்-87**

என்னும் செய்யுளாகும். இது,

**நமவென்னு நாமத்தை நாவில் ஒடுக்கிச்**
**சிவவென்று நாமத்தைச் சிந்தையு ளேற்றப்**
**பவமது தீரும், பரிசும தற்றால்**
**அவமது தீரும் அறும்பிறப் பன்றோ. (2717)**

எனவரும் திருமந்திரப் பொருளை உட்கொண்டு கூறியது ஆகும்.

வகாரமாகிய அருள், சிகாரமாகிய சிவத்தை ஆன்மாவுக்குக் கொடுத்துப் பேரின்பத்தை விளைக்கும் குற்றமற்ற அந்த ஆன்மா சிவத்துக்குத் திருமேனியாகும். என்றும், ஆன்மா மலத்துக்குந் திரோதானத்திக்கும் நடுவே பொருந்தாமல் குருவருளினால் அருளுக்கும் சிவத்துக்கும் நடுவே நிற்கிறது முறைமையென்றும்,

**வாசி யருளியவ்வை வாழ்விக்கும் மற்றதுவே**
**ஆசில் உருவமுமாம் அங்கு. திருவருட்பயன்-88**

**ஆசில்நவா நாப்பண் அடையா தருளினால்**
**வாசியிடை நிற்கை வழக்கு. ஷை-89**

எனவரும் செய்யுட்களில் உமாபதி சிவாசாரியார் நுண்ணிய திருவைந்தெழுத்தின் இயல்பினைத் தெளிவாக விளக்கியுள்ளார். இவ்விளக்கம்,

**சிவாய நமவெனச் சித்தம் ஒருக்கி**
**அவாய மறவே யடிமைய தாக்கிச்**
**சிவாய சிவசிவ என்றென்றே சிந்தை**
**அவாயங் கெடநிற்க ஆனந்த மாமே. (2718)**

என்னுந் திருமந்திரப் பொருளை உளங்கொண்டு கூறியதாதல் உணர்ந்து போற்றத்தக்கதாகும்.

இதுகாறும் எடுத்துக் காட்டிய ஒப்புமைப் பகுதிகளைக் கூர்ந்து நோக்குங்கால், சிவஞானபோதம் சிவஞான சித்தியார் முதலிய சைவ சித்தாந்த சாத்திரங்களாகிய மெய்கண்ட நூல்கள் எல்லாவற்றிற்கும் சைவத் திருமுறை பன்னிரண்டனுள் பத்தாந் திருமுறையாக விளங்கும் திருமந்திரமே முதல் நூலாகத் திகழும் சிறப்புடையது என்பது நன்கு புலனாதல் காணலாம்.



# பதினொராந் திருமுறை

திருவால வாயுடையார் திருவாய் மலர்ந்தருளிய திருமுகப் பாசுரம் முதலாக நம்பியாண்டார் நம்பிகள் பாடிய திருநாவுக்கரசு தேவர் திருவேகாதச மாலையீறாக உள்ள நாற்பது பிரபந்தங்களின் தொகுதியே பதினொராந் திருமுறையென வழங்கப் பெறுகின்றது. இத்திருமுறையிற் சேர்க்கப்பெற்ற பிரபந்தங்களைப் பாடிய அருளாசிரியர்கள் திருவாலவாயுடையார், காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர்கோன் நாயனார், சேரமான் பெருமாள் நாயனார், நக்கீரதேவர், கல்லாடதேவர், கபிலதேவர், பரணதேவர், இளம்பெருமானடிகள், அதிராவடிகள், பட்டினத்துப் பிள்ளையார், நம்பியாண்டார் நம்பி எனப் பன்னிருவராவர். இவர்களுள் திருவாலவாயுடையாரென்பவர், சிவநெறிச் செல்வர்களாகிய திருவருட் பெரியோர்களால் வழிபடப்பெறும் முழுமுதற்பொருளாய், மதுரைத் திருவாலவாய்த் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக் கடவுளாவர். ஏனைய ஆசிரியர்கள் அனைவரும் அப்பெருமானது திருவருள் பெற்ற மெய்யடியார்களாவர். எனவே வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவனாகிய சிவபெருமானாலும் அம்முழுமுதற் பொருளது திருவருளை நிரம்பப்பெற்ற மெய்யடியார் பதினொரு வராலும் அருளிச் செய்யப் பெற்ற செழும்பாடல்களைத் தன்னகத்துக் கொண்டு திகழ்வது இப்பதினொராந் திருமுறையென்பது பெறப்படும்.

செந்தமிழ்ப் பாண்டி நாட்டின் தலைநகராகிய கூடலம் பதியிலே சங்கப்புலவர்களுடன் தானும் ஒரு புலவனாக வீற்றிருந்து தமிழாராய்ந்து 'கொங்குதேர் வாழ்க்கை' யென்ற செழும்பாடலையும் அன்பினைந் திணையின் இயல்பினை விளக்கும் அறுபது சூத்திரங்களால் இயன்ற களவிய லென்னும் அகப்பொருளிலக்கண நூலையும் இயற்றியருளிய திருவாலவாயுடைய சிவப்பெருமானே, தன்னை இன்னிசைத் தமிழாற் பரவிப் போற்றிய பாணபத்திரர் பொருட்டுப் பாடித்தந்த திருப்பாட்டு, மதிமலிபுரிசையெனத் தொடங்கும் திருமுகப் பாசுரமாகும். இறைவனது திருவருள் மொழியாகிய இத்திருமுகப் பாசுரத்தை முதற்கண் பெற்று விளங்குதல் பதினொராந் திருமுறைக்கமைந்த தனிச் சிறப்பாகும். கடைச்சங்கப் புலவராகிய நக்கீரர் முருகப் பெருமான்பால் அன்பர்களை ஆற்றுப்படுத்திப் பாடியதும் பத்துப்பாட்டுள் முதலாவதாக விளங்குவதுமாகிய திருமுருகாற்றுப்படை இத்திருமுறையில் இடம் பெற்றுள்ளது.

பதினொராந் திருமுறை ஆசிரியர்களுள் காலங்கடந்து என்றுமுள்ளவர் திருவாலவாயுடையாராகிய சிவபெருமானாவர். காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர்கோன்நாயனார், சேரமான் பெருமாள் நாயனார் ஆகிய இம்மூவரும் சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகைத் திருப்பதிகத்திற் போற்றப் பெற்ற அடியார்களாவர். இவர்களுள் காரைக்கால் அம்மையாரென்பவர் தேவார ஆசிரியர் மூவர்க்கும் காலத்தால் முற்பட்டவர். ஐயடிகள் காடவர்கோன் நாயனார், நாவுக்கரசர் சம்பந்தராகிய இருவர் காலத்திற்கும் சுந்தரர் காலத்திற்கும் இடைப்பட்ட காலப் பகுதியில் வாழ்ந்தவர். சேரமான் பெருமாள் நாயனார் நம்பியாரூரராகிய சுந்தரர்க்குத் தோழராய் அவரோடு திருக்கயிலை சார்ந்தவர். ஏனை எண்மரும் சுந்தரர் காலத்திற்குப் பின் கி. பி. பத்தாம் நூற்றாண்டு முடிய அமைந்த காலப்பகுதியில் வாழ்ந்தோராவர். ஆகவே இப்பெருமக்கள் பாடிய திருப்பாடல் களைத் தன்பாற் கொண்டு திகழும் இப் பதினொராந்திருமுறை கி. பி. ஐந்தாம் நூற்றாண்டு முதல் கி. பி. பத்தாம் நூற்றாண்டு முடியவுள்ள காலப்பகுதியிற் சிவநெறியும் செந்தமிழும் பெற்ற வளர்ச்சியை அறிந்து கொள்ளுதற்குப் பெரிதும் துணைபுரியு மென்பது திண்ணம்.

இத்திருமுறையிலமைந்த நாற்பது பிரபந்தங்களில் முழுமுதற்பொருளாகிய சிவபெருமானைப் போற்றிய பிரபந்தங்கள் இருபத்தைந்தாகும். சிவபெருமான் அருளிய இளைய பிள்ளையாராகிய முருகப் பெருமானைப் போற்றுவது திருமுருகாற்றுப்படையென்ற பாடல். தன்னை வழிபடும் அடியார்களின் இடர் தீர்த்தல் கருதிச் சிவபெருமான் தோற்றுவித்தருளிய மூத்த பிள்ளையாராகிய யானைமுகக் கடவுளைப் போற்றுவன மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலை, மூத்த பிள்ளையார் திருமும்மணிக்கோவை, விநாயகர் திருவிரட்டை மணிமாலை என்ற மூன்று பிரபந்தங் களும் ஏனைப் பதினொரு பிரபந்தங்களும் இறைவனது திருவருள் பெற்ற திருத்தொண்டர்களாகிய சிவனடியார்களின் சிறப்பினை விரித்துரைப்பனவாகும். இறைவனுக்கு ஆட்பட்டதன் பயன் அவனடியார்களுக்குத் தொண்டுபட்டுய்தலே துணிபாகும். இத்துணிபினை விளக்குதற் பொருட்டே சிவனடியார் பெருமையினை விரித்துரைக்கும் இப்பதினொரு பிரபந்தங்களும் இத்திருமுறையிற் சேர்க்கப் பெற்றுள்ளன. சிவனருளாற் செயற்கரிய செய்து சிவநெறி வளர்த்த திருத்தொண்டர்களின் வரலாற்றினை விரித்துரைக்கும் பெரிய புராணமாகிய திருத்தொண்டர் புராணத்திற்கு இன்றியமையாத வரலாற்றுச்

செய்திகள் இப்பதினொரு நூல்களிலும் வகைபெற விளக்கப்பெற்று உள்ளன. அடியார் பெருமையினை விளக்கும் இப்பிரபந்தங்களைப் பன்னிரண்டாந் திருமுறையாகிய திருத்தொண்டர் புராணத்திற்கு முன் பதினொராந் திருமுறையின்கண் தொகுத்துதவிய சான்றோரது உளக்குறிப்பு உணர்ந்து இன்புறத்தக்கதாகும்.

அந்தாதி, இரட்டை மணிமாலை, உலா, கலம்பகம், மும்மணிக்கோவை, நான்மணி மாலை, எழுகூற்றிருக்கை எனப் புதுவது புனைந்த யாப்புப் பற்றியும், வெண்பா, விருத்தம், கலிவெண்பா எனச் செய்யுள் வகை பற்றியும், காரெட்டு, ஒருபா ஒருபது, ஏகாதச மாலை, திருவீங்கோய்மலை யெழுபது என எண் பற்றியும், ஆற்றுப்படை, கோபப்பிரசாதம், கண்ணப்பதேவர் திருமறம், திருமுகப் பாசுரம், திருத்தொகை எனப் பொருள் வகை பற்றியும், பெருந்தேவபாணி என இயலிசை பற்றியும் பெயரெய்திய பிரபந்தங்கள் இத்திருமுறையில் இடம் பெற்றுள்ளன. இங்கெடுத்துக் காட்டிய பிரபந்த வகைகள் சிலவற்றுக்குரிய மூல இலக்கியமாக இப்பதினொராந்திருமுறை விளங்குகின்றது. இதன்கண் தொகுக்கப்பெற்ற நாற்பது நூல்களிலும் உள்ள பாடல்களிற் சிதைவுற்றனபோக இப்பொழுது கிடைத்துள்ளவை ஆயிரத்து நானூற்று முப்பது திருப்பாடல்களாகும்.

இத்திருமுறையைத் தொகுத்துதவியவர், இதன் இறுதிக்கண் அமைந்த திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலை முதலாகத் திருநாவுக்கரசு தேவர் திருவேகாதசமாலை யீறாகவுள்ள பத்துப் பிரபந்தங்களையும் பாடிய நம்பியாண்டார் நம்பியே யாவரென்பது முன்னோர் கருத்தாகும். திருவிசைப்பா திருப்பல்லாண்டு என்பவற்றை ஒன்பதாந்திருமுறையென எண்ணிய பின்னரே திருமந்திரம் பத்தாந்திருமுறையென்ற பெயரையும் திருமுகப்பாசுரம் முதலிய இப்பிரபந்தங்கள் பதினொராந் திருமுறையென்ற பெயரையும் எய்தியிருத்தல் வேண்டுமென்பது இவை தோன்றிய காலத்தை ஆராய்வார்க்கு நன்கு புலனாம். ஆகவே நம்பியாண்டார் நம்பியால் இத்திருமுறை தொகுக்கப்பெற்ற தெனபதைவிட அவர்க்கு நெடுங்காலம் பிற்பட்டுத் தோன்றிய பெரியோர்களாற் பதினொராந் திருமுறையென்ற பெயருடன் தொகுக்கப்பெற்றிருத்தல் வேண்டுமெனக் கருதுதல் பொருத்தமுடையதாகும். இனி இத்திருமுறையாசிரியர்களின் வரலாறுகளையும் அவர்கள் பாடிய பிரபந்தங்களின் பொருளமைதியையும் ஆராய்தல் முறையாகும்.

## 1. திருவாலவாயுடையார்

திருவாலவாயென்பது செந்தமிழ்ப் பாண்டி நாட்டின் தலைநகராகிய மதுரையிற் சிவபெருமானுக்கமைந்த திருக்கோயிலாகும். எல்லாம் வல்ல இறைவன் அத்திருக்கோயிலில் என்றும் விளக்கமுற வீற்றிருந்து அடியார்களுக்கு அருள் சுரத்தல் பற்றி அப்பெருமானுக்குத் திருவாலவாயுடையா ரென்பது பெயராயிற்று. மதுரைத் திருவாலவாயின்கண் எழுந்தளியுள்ள சிவபெருமான் அருளிச்செய்ததாகப் பதினொராந் திருமுறையின் முதற்கண் அமைந்த செய்யுள் திருமுகப்பாசுரம் என்பது முன்னர்க்கூறப்பெற்றது. அறிவாற்றல்களிற் சிறந்த பெரியோர்கள் எழுதியனுப்பும் ஓலையைத் திருமுகம் என வழங்குதல் நம் நாட்டிற் பண்டுதொண்டு வழங்கிவரும் வழக்கமாகும். தனக்குவமை யில்லாத தனிமுதல்வனாகிய சிவபெருமான் தன்பால் அன்புடைய தமிழ் வேந்தராகிய சேரமான் பெருமாளுக்கு எழுதிய திருமுகமாக இசை நலம் பொருந்த இச்செய்யுள் அமைந்தமையால் இது திருமுகப் பாசுரம் என வழங்கப்பெற்றது. சில ஏடுகளில் இது திருமுகப்பாயிரம் என்றும் குறிக்கப் பெற்றுள்ளது. இங்ஙனம் ஒருவர்க்கு ஓலையிற் செய்தியை வரைந்து தெரிவிக்கும் நிலையில் அமைந்த செய்யுட்களை ஓலைத்தூக்கு (1) 'மன்னுடைமன்றத்து ஓலைத்தூக்கினும்' நன்னூல், பாயிரம் 52 -ம் சூத்திரம் என முன்னோர் வழங்கியுள்ளார்கள். இக்காலத்தார் சீட்டுக்கவி யென வழங்குவர்.

கழற்றறிவாராகிய சேரமான் பெருமான் நாயனார் கொடுங்கோளூராகிய வஞ்சியைத் தலைநகராகக் கொண்டு சேர நாட்டை ஆட்சி புரியும் காலத்திற் பாண்டி நாட்டின் தலை நகராகிய மதுரை யம்பதியிற் பாணபத்திரனென்னும் பெய ருடைய இசைப்பாணரொருவர் வாழ்ந்திருந்தார். அவர் பாண்டிய மன்னனால் நன்கு மதிக்கப் பெற்றவர்; திருவாலவாயிறைவற்கே இசைத்தொண்டு புரியுங் கடமை பூண்டவர். அரசர் முதலியோரை யணுகாது பரமனையே பாடுவாராகிய அப்பாணர்க்கு வறுமை நிலையுண்டாகியது. பாடுவார் பசிதீர்ப்பாராகிய திருவால வாயிறைவர், பாணபத்திரரது வறுமையை நீக்கத் திருவுளங் கொண்டார். வேண்டுவார் வேண்டுவதே யீந்தருள்புரியுந் தாமே எல்லாங் கொடுக்க வல்லவராயினும் தம்பாற் பேரன்புடைய சேரமான் பெருமாளைக் கொண்டு பாணபத்திரரது வறுமையைத் தீர்த்து உதவி புரிய வேண்டுமென்பது இறைவரது பெரு வேட்கையாயிற்று. திருவாலவாயிறைவர் ஒரு நாள் இரவு பாணபத்திரரது கனவிலே தோன்றினார். "அன்பனே, என்பால் நிலைபெற்ற பேரன்புடையவன் சேரமான் பெருமாளென்னும் வேந்தன். அவன் உனக்குப் பொன், பட்டாடை, நவமணி

பதிக்கப்பெற்ற அணிகலன்கள் முதலாக நீ வேண்டியவை யெல்லாங் குறைவறக் கொடுப்பான். அதன் பொருட்டு அவனுக்கு ஒரு திருமுகம் எழுதித் தருகின்றோம். நீ அதனைத்கொண்டு விரைந்து மலைநாடு சென்று பொருள் பெற்று வருக" என்று கூறி,

**மதிமலி புரிசை மாடக் கூடற்**
**பதிமிசை நிலவு பானிற வரிச்சிற**
**கன்னம் பயில்பொழில் ஆல வாயில்**
**மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்**
**பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்**
**குரிமையின் உரிமையின் உதவி யொளிதிகழ்**
**குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்**
**செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க**
**பண்பா லியாழ்பயில் பாண பத்திரன்**
**தன்போல் என்பால் அன்பன், தன்பாற்**
**காண்பது கருதிப் போந்தனன்**
**மாண்பொருள் கொடுத்து வரவிடுப்பதுவே,**

எனவரும் அழகிய திருப்பாடலையெழுதிய திருமுகத்தைக் கொடுத்தருளினார்.

இவ்வாறு திருவாலவாயிறைவர் தந்த திருமுகத்தைப் பெற்றுத் தலைமேற் கொண்டு போற்றிய பாணபத்திரர், அப்பொழுதே மலைநாட்டிற்குப் புறப்பட்டுச் சென்று சேரர் தலைநகராகிய கொடுங்கோளூரை யடைந்தார். சேரமான் பெருமாள் அரசு வீற்றிருக்குந் திருமாளிகையின் முன் சென்று தமது வருகையை வாயில்காவலர் மூலம் வேந்தர் பெருமானுக்கு அறிவித்தார். பரமனையே பாடுவாராகிய பாணபத்திரரது வருகையை அறிந்த சேரமான் பெருமாள் விரைந்து வந்து அவரை வணங்கினார். அடியேனையும் பொருளாக மதித்துத் திருமுகங் கொண்டு தாங்கள் இங்கு எழுந்தருளியது யான் செய்த தவப்பேறாம் எனக் கூறி அன்போடு வரவேற்று இருக்கை நல்கி உபசரித்தார். பாணபத்திரர் தாம் கொணர்ந்த திருமுகத்தை வேந்தர்பெருமான் கையிற் கொடுத்தார். பாணர் தந்த திருமுகத்தை ஆர்வமுற வாங்கி முடிமேற்கொண்ட சேரர் பெருமான், ஆனந்தக் கூத்தாடி மொழி குழறக் கண்ணீர் சொரியப் பல முறை நிலமுறப் பணிந்தார். தமக்கு இறைவர் தந்த திருமுகப் பாசுரத்தைப் பலமுறை படித்து உளமுருகினார். அப்பாசுரத்தைப் படியெடுத்துக் கொள்ளும்படி உரிய வகையால் எடுத்துரைத்து இறைவனது திருவருளை நினைந்து மகிழ்ந்து உரிமைச் சுற்றத்தாரையும் அமைச்சரையும் அழைத்துத் தமது நிதியறையிலுள்ள பலவகைப் பொருள்களையும் பொதிசெய்து கொணரும்படி

கட்டளையிட்டார். அங்ஙனமே அவர்களும் நிதியறையுட் புகுந்து எண்ணிறந்த பெரும் பொருளைப் பொதி செய்து கொணர்ந்தனர். அங்குக் கொண்டு வரப்பட்ட பொருளின் பரப்பையெல்லாம் சேரமான் பெருமாள் பாணபத்திரர்க்குக் காட்டினார். 'இப் பெரும் பொருளையும் யானை குதிரை முதலிய சேனைகளையும் இச்சேரநாட்டு ஆட்சியுரிமையையும் தாங்களே ஏற்றருள வேண்டும்' என வேண்டி நின்றார். சேரமான் பெருமாளது அளவிலாப் பேரன்பின் கொடைத் திறத்தைக் கண்டு வியந்த பாணபத்திரர், 'வேந்தர் பெருமானே என்னுடைய சுற்றத்தாரைப் பேணுதற்குப் போதுமான பொருள்களை மட்டும் அடியேன் தங்கள்பால் பெற்றுக் கொள்ள வேண்டுமென்பது திருவாலவாய்ப் பெருமானது ஆணை, ஆதலால் அரசாட்சியும் அதற்கு இன்றியமையாத உறுப்புக்களாகிய படை முதலிய அங்கங்களும் ஆகிய இவற்றைத் தாங்களே கைக்கொண்டருளுதல் வேண்டும், என்று கூறிச் சேரர் பெருமானை வணங்கினார். இறைவரது ஆணையெனப் பாணபத்திரர் கூறியதனைக் கேட்ட சேரமான் பெருமாள் அவ்வாணையை மறுத்தற்கு அஞ்சிப் பத்திரரது வேண்டுகோளுக்கு உடன்படுவாராயினர். பாணபத்திரரும் தமக்கு வேண்டிய பெரும் பொருளையேற்றுக் கொண்டு சேர மன்னர்பால் விடைபெற்று யானை மீதமர்ந்து மதுரையை யடைந்து இறைவனை இன்னிசையாற் பரவிப் போற்றியிருந்தார் என்பது வரலாறு. இதனைச் சேக்கிழார் சுவாமிகள் கழறிற்றறிவார் நாயனார் புராணத்துள் 26 முதல் 38 வரையுள்ள செய்யுட்களில் விரித்துக் கூறியுள்ளார். பெரும்பற்றப்புலியூர் நம்பி பாடிய திருவிளையாடற் புராணத்தில் திருமுகங் கொடுத்த திருவிளையாடல் என்ற படலத்திலும், பரஞ்சோதி முனிவர் பாடிய திருவிளையாடற் புராணத்தில் திருமுகங் கொடுத்த படலத்திலும் இவ்வரலாறு புனைந்து கூறப் பெற்றுள்ளது. பாணபத்திரர் பொருட்டு இறைவனே விறகாளாய்ச் சென்று மதுரைத் திருவீதியில் விறகு விற்றுழன்று சாதாரிபாடி வடபுலத்துப்பாணனைத் தோற்றோடச் செய்தன னென்றும், ஒரு நாளிரவு பெருமழை பெய்யவும் அதனைப் பொருட்படுத்தாது ஆலவாய்ப் பெருமானைப் பாணபத்திரர் பாடி நின்றாராக, அவர் கையிலேந்திய யாழ்க் கருவியின் நரம்பு மழைநீரால் நெகிழ்ந்து கட்டழியாதபடி ஆலவாயிறைவன் அவர்க்குப் பொற்பலகை யிட்டருளின னென்றும், பாணபத்திர ருடைய கற்பிற் சிறந்த மனைவியார் பாடினியார்க்கும் பாண்டியனது ஆதரவு பெற்ற பாடினியொருத்திக்கும் நிகழ்ந்த இசைவாது நிகழ்ச்சியில் இசைநலந்தெரிந்து கூறும் நடுவனாக ஆலவாயிறைவனே

அமர்ந்து உண்மை கூறினாரென்றும் பெரும்பற்றப்புலியூர் நம்பியும் பரஞ்சோதி முனிவரும் தாம் பாடிய நூல்களில் விரித்துக் கூறியுள்ளார்கள்.

இனித் திருவாலவாயிறைவர் பாடிக் கொடுத்தருளிய திருமுகப் பாசுரத்தின் பொருளை ஒரு சிறிது நோக்குவோமாக. "திங்கள் தங்கிய மதிலாற் சூழப்பட்ட மாடங்களையுடைய கூடல் நகரத்திலே நிலைபெற்ற பால்போலும் வெண்ணிறச் சிறகுகளையுடைய அன்னங்கள் பயின்று வாழும் நீர்நிலையோடு கூடிய சோலைசூழ்ந்த திருவாலவாயென்னுந் திருக்கோயிலிலே நிலைபெற வீற்றிருக்கும் இறைவனாகிய யான் வரைந்த இம்மொழியினைப், பருவ காலத்து மேகத்தையொப்பப் பாவன்மையுடைய பெரும் புலவர்களுக்கு அன்புரிமையினால் தன்பாலுள்ள பெரும் பொருளை அவர்கள் போதுமென மறுக்கவும் உரிமையோடு நிறையக் கொடுத்துப் புகழொளி பரவ நிறந்தங்கிய திங்களையொத்து விளங்கும் வெண்கொற்றக் குடை நிழற்கீழ்ப் போர்ப்பரி செலுத்தும் ஆற்றல் மிக்க சேரலன் காண்பானாக. பக்கத்தா ரியல்பறிந்து பழகும் இனிய பண்பினோடு யாழினை வாசிக்க வல்ல பாணபத்திரனென்பான் சேரமானாகிய தன்னைப்போல என்பாற் பெருகிய அன்புடையான். வேந்தர் பெருமானாகிய தன்னைக் காணவேண்டுமென்னும் பேரார் வத்தால் அங்கு வருகின்றான். ஈவோனும் ஏற்போனுமாகிய நும்மிருவர் மாண்பினையும் நோக்கி அம்மாண்புக்குத்தக்க பெரும்பொருளைக் கொடுத்து அவனை என்பால் வரும்படி விடுத்தல் செய்யத் தகுவதாம்" என்பது இதன் பொருளாகும்.

பன்னிரண்டடிகளால் இயன்ற நேரிசை ஆசிரியப் பாவாகிய இப்பாடலில், முதல் நான்கடிகளில் இதனைப் பாடிய தலைவனாகிய சிவபெருமானது சிறப்பும் அடுத்துள்ள நான்கடிகளில் அவ்விறைவனாற் பாடப் பெறும் புகழமைந்த பாட்டுடைத் தலைவராகிய சேரமான் பெருமாளது சீர்த்தியும் பின்னுள்ள நான்கடிகளில் இதனைப் பாடுதற்குக் காரணராகிய பாணபத்திரனென்னும் அடியவரது அன்புரிமைச் சிறப்பும் அவருக்குப் பொருளைக் கொடுத்தனுப்புக என்னும் ஆணையும் குறிக்கப் பெற்றுள்ளமை காணலாம்.

மதிமுடிக் கடவுளாகிய தன்னைப்போன்று மதிதவழும் மாடங்களோடு கூடி விளங்குவது கூடல் நகரமாகிய மதுரையென்றும், நிலனாவிற்றிரிதரும் நீண்மாடக் கூடலாராகிய அந்நகர் வாழ்வார் புலனாவிற் பிறந்த சொற் புதிதுண்ணும் மதி நலமுடையாரென்றும் விளக்குவார், 'மதிமலிபுரிசை மாடக் கூடற்

பதி' எனச் சிறப்பித்தார். குற்றங்கள் நீக்கிக் குணங்கொண்டு பாராட்டுதலாலும் வெண்ணீறணிதலாலும் அன்னப்பறவையைப் போன்று உள்ளும் புறமும் பால்போலுந் தூய்மையாளராகிய மெய்யடியார்கள் இடைவிடாது குழுமி இறைவனை வழிபாடு செய்து போற்றுமிடமாக விளங்குவது மதுரையிலுள்ள திருவாலவாய்த் திருக்கோயிலாதலின், அங்கு என்றும் நீங்காது நிலை பெற்றிருப்பது எனது குடிவாழ்க்கை யென்பார், "பால்நிற வரிச்சிறகு அன்னம் பயில்பொழில் ஆலவாயின் மன்னிய சிவன்யான்" என்றார். 'சிவன்யான் மொழிதரு மாற்றம்' என்றது, சொல் நிகழ்ச்சிக்கு இடனாகிய தன்மை முன்னிலை படர்க்கை யென்னும் இடவரம்பின்றி உயிர்க்குயிராய் யாண்டும் நீக்க மறக்கலந்து விளங்கும் இறைவன் சிவனாகிய யான் என்று தன்னைத் தன்மையிடத்தில் வைத்துக் கூறிப் புறத்தே தோன்றிப் படர்க்கையிலுள்ளாரோடு உரையாடுமளவுக்குத் தன்னடியார் பொருட்டு எளிவந்தருளிய அருட் பண்பினைப் புலப்படுத்துவதாகும்.

கைம்மாறு கருதாது பொழிதல் மாரியின் இயல்பாயினும் அவ்வியல்பு பருவகாலமாகிய கார்காலத்திலன்றி ஏனைக் காலங்களில் மாரியின்பால் மாறாது காணப்படுவதில்லை. சேரமான் பெருமாளாகிய வேந்தர் பெருமானே பருவ காலத்து மழைமேகத்தைப் போன்று பாவலர்க்கு உரிய காலத்தில் வேண்டும் பொருள்களை அவர்கள் கேளாமுன் உரிமையுடன் வரையாது வழங்கும் பெருங் கொடையாளராய் மன்னுயிர்க்கு நிழல்தரும் அளியும் இகல் தீர்க்கும் சேனையுமுடையராய்த் திகழ்கின்றாரென்பார், 'பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்கு, உரிமையின் உரிமையின் உதவி ஒளிதிகழ், குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச் செருமா உகைக்குஞ் சேரலன்' என அவ்வேந்தர் பெருமானுடைய கொடையும் அளியும் தெறலும் முதலிய புகழ்த்திறத்தை விரித்துப் பாராட்டினார். மக்களும் மற்றைய அஃறிணையுயிர்களும் தம்முள் உரையாடுங்கால் அவ்வுயிர்கள் கூறிய குறைகளெல்லாவற்றையும் நன்குணர்ந்து எவ்வுயிர்க்கும் இடரகற்றி இன்பஞ் செய்யும் சேரமான் பெருமாளது அரசியல் மாண்பினை அவரது குடைமேலேற்றி 'ஒளிதிகழ் குருமா மதிபுரை குலவியகுடை' யென அதற்குக் குளிர்ந்த நிலவொளி வீசுந் திங்களை உவமை கூறிச் சிறப்பித்தார். பகைவரொடு பொரும் போரிலே மாற்றாரது முடிமேல் அடிவைத்துப் பாயும் ஆற்றல் பெற்ற பரியைச் செலுத்தும் சேர வேந்தரது போர்வன்மையைப் புகழ்வார் 'செருமா உகைக்குஞ் சேரலன்' என்றார். போர்க் களத்திலே தொழில் புரிதற்குரிய பேராற்றல் பெற்ற தமது குதிரைக்கு எதிர்காலத்தில் நல்லக

விளக்காகிய நமச்சிவாய மந்திரத்தை உபதேசித்துத் திருக்கயிலைக்குச் செலுத்த வல்ல உரவோன் என்பார், 'ஒளிதிகழ்......செலுமாவுகைக்குஞ் சேரலன்' என்றாரெனினும் அமையும். இவ்வாறு திருவாலவாயிறைவர் சேரமான் பெருமாளது புகழ்த் திறத்தை விளக்கிப் பாடிய இத்திருமுகப் பாசுரப் பொருளை யுளங் கொண்ட நம்பியாரூரர், 'கார்கொண்ட கொடைக் கழறிற் றறிவார்க்கும் அடியேன்' எனச் சேரமான் பெருமாளைத் திருத்தொண்டத் தொகையிற் பரவிப் போற்றினமை இங்கு ஒப்புநோக்கி யுணரத்தக்கதாகும்.

உலகத்தாரோடு அன்பாற் பழகி யாழிசைத்து இசை வளர்க்கும் பெருமை மிக்கு பாணனாக விளங்குபவன் இப்பாணபத்திரன் ஆதலானும், வேந்தர் பெருமானாகிய தன்னைப்போல் என்பாற் பெருகிய அன்புடையனாதலானும், என்பா லன்புடைய நீவிர் இருவீரும் ஒருவரொருவரைக் கண்டு உரையாடி அளவளாவி மகிழ்தல் வேண்டுமாதலானும், அவன் எனது ஆணையால் வேந்தனாகிய நின்னைக் காண வருகின்றானென்பார், 'பண்பால் யாழ்பயில் பாணபத்திரன், தன்போல் என்பால் அன்பன், தன்பால் காண்பது கருதிப்போந்தனன்' என்றார். அறநெறியை முதலாகக் கொண்ட அரசியல் விளைவாலுண்டாகிய மாண்புடையது சேரமான் பெருமாள் பொருளாதலின், அதனை 'மாண்பொருள்' என்றும், தான் சிறிதாயினும் தக்கார்கைப் பட்டக்கால் வான் சிறிதாக வளர்ந்தோங்குதல் பொருளினியல்பு ஆதலின், அப்பொருள் மேன்மேலும் பெருகி மாட்சிமைப்பட அதனைப் பெறுவதற்குரிய தகுதியுடையவன் என்பால் அன்புடைய பாணபத்திரனாதலின் அவனுக்குக் கொடுத்தல் வேண்டுமென்பார். 'மாண்பொருள் கொடுத்து' என்றும், மாண்பொருளெனவே உலகிற் பெரிதும் மாட்சியமையுடைய அரசாட்சியை அவனுக்குக் கொடுக்கச் சொல்வதாக எண்ணிப் பாணபத்திரனுக்கு நினது அரசாட்சியை வழங்கி அவனை நின்னாட்டிலேயே இருத்தி விடுதல் கூடாது என அறிவுறுத்துவார், மாண்பொருள் கொடுத்து என்ற அளவி லமையாது மாண்பொருள் கொடுத்து வர விடுப்பதுவே' என்றும் பணித்தருளினார். வேந்தர் பெருமானாகிய நின்பாலமைந்த உயர்ந்த குண நலங்களில் ஈடுபட்ட பாணபத்திரன் நின்னைப் பிரிந்து மீண்டும் என்பால் திரும்பி வருதலை மறந்து ஆண்டுத் தங்கினும் தங்கி விடுவான். அவனது யாழிசையிலும் பேரன்பிலும் ஈடுபட்ட யான் அவனைக் கணப்பொழுதும் பிரிந்துறைதல் இயலாது. ஆகவே அவன் வேண்டிய பொருளை அவனுக்குக் கொடுத்து அவனை உடனே மதுரைக்கு மீளும்படி செய்வதும் நினது கடமையாமென்பார் 'கொடுத்து விடுப்பது' என்ற

அளவிலமையாது 'கொடுத்து வரவிடுப்பதுவே' என அறிவுறுத்தருளினமை உய்த்துணர்வார்க்குப் பெரிதும் சுவை பயப்பதாகும்.

இன்ன தன்மையன் என யாவராலும் உணர முடியாத இறைவன், தன்னை இன்னிசையாற் போற்றிய பாணபத்திரரது வறுமைத் துயரை நீக்கிப் பெருஞ்செல்வம் வழங்குதற் பொருட்டும் தன்னை இடைவிடாது வழிபடும் சேரமான் பெருமாளாகிய வேந்தர் பெருமானுடைய வரையா ஈகை யினையும் சிவபத்தியினையும் விளக்குதற் பொருட்டும் தண்ணார் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டில் தானும் ஒரு தமிழ்ப் புலவனாகத் திருமேனிகொண்டு தோன்றி, மதிமலிபுரிசையென்ற இத்திருமுகப் பாசுரத்தைப் பாடிக் கொடுத்தான் என்ற வரலாறு, அடியார்க்கெளிய பெருமானாகிய அவ்விறைவனது அருமையிலெளிய அழகினை இனிது விளக்குவதாகும். நாடு மொழி முதலிய கட்டுப்பாடு எல்லாவுலகத்துக்குந் தலைவனாகிய இறைவனுக்கு என்றும் இல்லை. எனினும் ஆட்கொள்ளுதற்குரிய மக்கள் அப்பிரிவின் வழியுள்ளார்கள். அவர்களை உய்வித்தற் பொருட்டு அருளே திருமேனியாகக் கொண்டு எழுந்தருளும் இறைவனும் அவர்களுள் ஒருவனாக நடித்து அவர்கள் பேசும் மொழியிற் பேசியும் எழுதியும் செய்யுள் முதலியன இயற்றியும் நட்புக்கொண்டு உறவாடி உலக மக்களுக்கு ஞானம் உண்டாக்கி நலம் புரிகின்றான். இவ்வுண்மையை விளக்கும் சிறந்த இலக்கியமாக இத்திருமுகப்பாசுரம் விளங்குகின்றது. 'தில்லை வாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன், என நம்பியாரூரர்க்கு அடியெடுத்துக் கொடுத்து அடியார் பெருமையினைக் கூறப்பணித்த சிவபெருமான் இத்திருமுகப் பாசுரத்தால் சேரமான் பெருமாள் நாயனாரது பெருமையினை விரித்துக் கூறியமையால், இப்பாசுரத்தாற் போற்றப் பெற்ற பாட்டுடைத் தலைவர் சேரமான் பெருமாளென்பதும், அவரைப்பாடிய புலவர் ஆலவாயில் அவிர்சடைக் கடவுளென்பதும் நன்கு புலனாதல் காணலாம்.

## 2. காரைக்காலம்மையார்

சோழநாட்டிற் கடற்றுறைப் பட்டினமாய்த் திகழும் காரைக்கால் என்னும் வளம்பதியிலே தனதத்தன் என்ற பெய ருடைய வணிகனொருவன் வாழ்ந்திருந்தான். பெருஞ் செல்வமுடைய அவ்வணிகனுக்குத் திருமகளையொத்த பேரழ குடைய பெண்மகவொன்று பிறந்தது. தவப்பயனாகத் தோன்றிய அக்குழந்தைக்குப் புனிதவதியெனப் பெயர் இட்டார்கள். புனிதவதியார் மணலாற் சிறுவீடு கட்டி விளையாடும் பிள்ளைமைப் பருவத்திலேயே சிவபெருமான் திருவடிகளுக்குத்

தொண்டுபட்டொழுகும் அன்புரிமை யுடையராய் அப்பெருமானது பொருள்சேர் புகழாகிய திருவார்த்தைகளைப் பேசும் பயிற்சியும் சிவனடியார்களைக் கண்டால் சிவனெனவே தெளிந்து வழிபடுந்திறமும் வாய்க்கப் பெற்றவராய் அழகின் கொழுந்தென வளர்ந்து திருமணப் பருவமடைந்தார்.

நாகப்பட்டினத்திலே வாழும் நிதிபதியென்ற வணிகன் தன்மகன் பரமதத்தனுக்குப் புனிதவதியாரை மணஞ்செய்விக்க எண்ணி முதியோர் சிலரைத் தனதத்தன் பால் அனுப்பினான். வந்த மூதறிவோரை வரவேற்றுபசரித்த தனதத்தனும் தன்மகளைப் பரமதத்தனுக்குத் திருமணஞ் செய்து தருவதாக இசைந்தான். இருமுதுகுரவர் இசைவினால் திருமணம் காரைக்காலிற் சிறப்பாக நிறைவேறியது. தனதத்தனுக்குப் புனிதவதியாரைத் தவிர வேறு பிள்ளைப் பேறில்லாமையால் அவன் தன் மகளையும் மருமகனையும் நாகப்பட்டினத்திற்கு அனுப்ப மனமின்றி அவர்களிருவரும் காரைக்காற் பதியிலேயே தங்கியிருந்து மனையறம் நிகழ்த்துதற்கு வேண்டிய தனிவீடும் பெரும் பொருளும் தந்து வேறுபடுதிருவின் வீறுபெறக்காண அவ்விருவரையும் தன்னூரிலேயே இருக்கச் செய்தான்.

புனிதவதியாருடைய கணவனாகிய பரமதத்தன், தன் மாமன் தந்த பெரும்பொருளை வாணிகத்தின் முதலாகக் கொண்டு அதனைப் பண்மடங்காகப் பெருக்கி வாணிகத்துறையில் மேம்படுவானாயினன். அவன் மனைவியார் புனிதவதியார், எவ்வுயிர்க்குந் தாயுந் தந்தையுமாகிய இறைவன் திருவடிகளிலே வைத்த அன்பு மேன்மேற் பெருகி முதிரச் சிவனடியார்களுக்குத் திருவமுதளித்தும் வேண்டும் பொருள் கொடுத்தும் இல்லறத்திற்குத் தக்க நற்குண நற்செய்கைகளை யுடையவராய்த் தமக்கும் தம் உயிர்த்துணைவனாகிய கணவனுக்கும் புகழ் பெருக மனையறம் நிகழ்த்துவாராயினர்.

இங்ஙனம் நிகழு நாட்களில் ஒரு நாள் பரமதத்தனைக் காண வந்தவர்களிற் சிலர் அவனுக்கு இரண்டு மாங்கனிகளைக் கொடுத்தார்கள். அக்கனிகளைப் பெற்று அவர்கள் வேண்டும் காரியத்தை முடித்தனுப்பிய பரமதத்தன் மாங்கனிகள் இரண்டையும் தன் வீட்டிற்கு அனுப்பி வைத்தான். அந்நிலையிற் சிவனடியாரொருவர் பசியால் வருந்தி இளைப்புற்றவராய் அவ்வீட்டிற்குச் சென்றார். அடியவருடைய தளர்வைக் கண்ட புனிதவதியார், அவர்க்கு உணவளிக்க எண்ணினார். அந்நேரத்திலே திருவமுது மட்டும் சமைக்கப் பெற்றிருந்தது. கறியமுது பாகம் பண்ணப்பெறவில்லை. இந்நிலையிற் சிவனடியவரே பெறுதற்கரிய விருந்தினராய் வந்தபொழுது

இதனினும் பெறத்தக்க பேறு பிறிதொன்றில்லையெனத் தெளிந்த பேரறிவினராகிய புனிதவதியார், தம்கணவன் அனுப்பிய மாங்கனிகள் இரண்டினுள் ஒன்றைக் கொண்டு வந்து திருவமுதுடன் படைத்து அடியவரை உண்ணச் செய்தார். பசி தீர்ந்த அடியவர் புனிதவதியாரது விருந்து புறந்தரும் பேரன்பின் திறத்தையுணர்ந்துஉள மகிழ்ந்து போயினார்.

பரமதத்தன் நண்பகலில் வீட்டிற்கு வந்து வழக்கம் போல் நீராடி உணவுண்ண அமர்ந்தான். புனிதவதியார் தம் கணவனுக்குத் திருவமுது கறியமுது முதலியவற்றைப் படைத்து அவன் அனுப்பிய மாங்கனிகள் இரண்டில் அடியார்க்களித்தது போக எஞ்சியிருந்த மற்றொரு கனியைக் கொண்டு வந்து வைத்து உண்ணச் செய்தார். அப்பழத்தினை நுகர்ந்த பரமதத்தன், அதன் இனிய சுவையில் அடங்காத வேட்கையுடையவனாகி, 'இதனையொத்த சுவையும் மணமுமுடைய மற்றொரு பழம் உளது, அதனையுங் கொண்டு வந்து வைப்பாயாக' எனப்பணித்தான். கணவனது சொல் வழியொழுகும் கற்பிற் சிறந்த புனிதவதியார், கணவனாற் குறிப்பிடப்படும் மாங்கனியைத் தாம் முன்னமே அடியார்க்கு அளித்திருந்தும் அதனைக் கணவனுக்கு உரைப்பின் அவனது சுவையுணர்வைக் கெடுத்ததாக முடியுமென்று அஞ்சி, அவன் சொல்லிய மாங்கனியை எடுத்துக் கொண்டு வரச்செல்பவர் போல் மனையினுள்ளே சென்று ஒரு புறம் நின்று வருந்தினார்; அன்புடையார்க்குத் துன்பம் வந்துற்ற காலத்து அத்துன்பத்தைத் துடைத்து வேண்டுவன புரிந்துதவும் சிவபெருமானுடைய திருவடிகளைத் தம்மனத்துட் சிந்தித்துப் போற்றினார்; அந்நிலையில் இறைவனது திருவருளால் அவர் கையகத்தே சுவை மிக்கதொரு மாங்கனி வந்தமர்ந்தது. அதனைக் கொணர்ந்து கணவனுடைய உண்கலத்திலே மகிழ்ச்சியுடன் படைத்தார். அதனையுண்ட நிலையில் அதன் சுவை தேவரமிழ்தினும் மேற்பட்டமையுணர்ந்த பரமதத்தன், 'இது முன் நான் தந்த மாங்கனியன்று. இது மூவுலகங்களிலும் பெறுதற் கரியது. இதனை நீ வேறு எங்கே பெற்றாய்' எனத் தம் மனைவியாரை நோக்கி வினவினான். அதனைக் கேட்ட புனிதவதியார், அருளேயுருவாகிய இறைவனது செம்மை நெறியிற் பொருந்திய திருவருட் செயல் பிறர்க்கு விளங்க எடுத்துரைக்கும் எளிமையதன்று என்பது கருதி அதனைத் தம் கணவனுக்குச் சொல்ல மாட்டாமலும், உயிரினுஞ் சிறந்த ஒழுக்கத்தின்பாற்பட்ட தமது கற்புமேம்பாட்டினாலும் கணவனது சொல்வழி யொழுகாமை நல்வழியன்று என்னுஞ் கருத்தினாலும் நிகழ்ந்தது கூறுதலை விடுதற்கியலாமலும், இவ்விருநிலையினும்பட்டு நடுக்கமுறுவாராயினர். முடிவில் நடந்தபடி சொல்லுவதே

கடனென்று துணிந்த புனிதவதியார், சிவனடியாரொருவர் பசியால் வருந்தி வீட்டிற்கு வந்ததும் கறியமுது சமைக்கப்படாத நிலையில் திருவமுதுடன் மாம்பழத்தில் ஒன்றை அவர்க்குப் படைத்ததும், 'இனையதொரு பழம் இன்னும் உளது அதனையிடுக' எனக் கணவன் கூறிய ஆணையை நிறைவேற்ற வேண்டித் தாம் ஒருபுறஞ் சென்று நின்று இறைவனை வேண்ட அவனது திருவருளால் இவ்வினிய சுவையினதாகிய மாங்கனி தம் கையகத்தே வந்தமர்ந்த வியப்புடை நிகழ்ச்சியும் ஆகிய செய்தியைத் தம் கணவனுக்கு எடுத்துரைத்தார். அது கேட்ட பரமதத்தன், புனிதவதியார் குறித்த திருவருள் நிகழ்ச்சியைத் தெரிந்து தெளிதற்குரிய ஆற்றலில்லாதவனாகி அவரை நோக்கி 'இந்தக் கனி சிவபெருமானுடைய திருவருளினாலே உனக்குத் கிடைத்த தாயின் இதுபோன்ற இன்னும் ஒரு கனியை அவன் அருளால் அழைத்து அளிப்பாயாக' எனக் கூறினான். புனிதவதியார் அவ்விடத்தை விட்டுத் தனியிடத்திற் சென்று நின்று சிவபெருமானையிறைஞ்சி 'இன்னும் ஒரு பழத்தை இப்பொழுது தந்தருளா தொழியின் ஈசனருள் என்னும் உண்மை மறுக்கப்பட்டு அடியேனுடைய வார்த்தை பொய்யாகிவிடும்' என விண்ணப்பஞ் செய்தார். அடியார்க் கெளிய பெருமானாகிய இறைவனது திருவருளால் அவர் கையகத்தே மற்றொரு மாங்கனியும் வந்திருந்தது. அதனைக் கணவன் கையிற் கொடுக்க, அவனும் வியப்புற்று வாங்கினான். அக்கனி சிறிது நேரத்திற்குள் அவன் கையினின்று மறைந்து விட்டது. அதுகண்டு அஞ்சிய பரமதத்தன் மனத்தடுமாற்றமெய்தித் தன் மனைவியாரை வேறொரு தெய்வமென்றே கருதினான். அவரைப் பிரிந்து வாழவேண்டு மென்னுந் துணிபுடையவனானான். தன் கருத்தினைப் பிறரெவர்க்கும் வெளிப்படுத்தாமல் மனைவியென்னும் உறவுத் தொடர்பின்றி யொழுகினான்.

இக் கருத்துடைய பரமதத்தன் கடல் கடந்து வாணிகஞ் செய்து வருவேன் எனச் சுற்றத்தார்க்குச் சொல்லி, அவர்கள் அமைத்துத்தந்த மரக்கலத்தில் வெளிநாட்டார் விரும்பி வாங்கும் அரிய பண்டங்களை நிரம்ப ஏற்றிக் கொண்டு கடல் கடந்து வெளிநாடு சென்றான். சிலநாள் அங்கிருந்து பெரும் பொருளீட்டிய பின்பு மீண்டும் அம்மரக்கலத்திலேறிப் பாண்டி நாட்டிலுள்ள துறைமுகப்பட்டினமொன்றை அடைந்தான். அங்கு ஒரு பெண்ணை மணந்தான். இரண்டாம் முறையாக மணந்து கொண்ட அம்மனைவி வயிற்றில் ஒரு பெண் குழந்தை பிறந்தது. அம்மகவுக்குத் தான் தெய்வமெனக் கருதிவிலகிய முதல் மனைவியாரது பெயராகிய புனிதவதியார் என்ற பெயரையே இட்டு வளர்த்து வந்தான்.

இங்ஙனமாகப் புனிதவதியாருடைய சுற்றத்தார்கள் வாணிகத்தின் பொருட்டுக் கடல்கடந்து சென்ற பரமதத்தன் பாண்டி நாட்டிலேயுள்ள பட்டினமொன்றில் வாழ்கின்றானெனக் கேள்வியுற்றுச் சிலரையனுப்பி அவனுடைய நிலையுணர்ந்து வருத்தமுற்றார்கள். புனிதவதியாரை அவன்பாற் கொண்டு போய்விட வேண்டும் என நினைத்து அவரைச் சிவிகையிலேற்றிக் கொண்டு அவனிருக்கின்ற நகரத்தை அணுகினார்கள். அவர்களது வருகையையறிந்த பரமதத்தன் அச்சமுடையவனாகித் தன்னுடைய இரண்டாம் மனைவியோடும் மகளோடும் புனிதவதியாரையடைந்து 'அடியேன் உம்முடைய அருளால் வாழ்கின்றேன். இவ்விளங் குழந்தைக்கும் உம்முடைய பெயரையே இட்டேன்' என்று சொல்லி அவருடைய திருவடிகளில் விழுந்து வணங்கினான். அதுகண்ட புனிதவதியார் தம்முடைய சுற்றத்தார்பால் அச்சமோடு ஒதுங்கி நின்றார். அந்நிலையிற் சுற்றத்தார்கள் நாணமுற்றுப் பரமதத்தனை நோக்கி 'நீ உன் மனைவியை வணங்குவது எது கருதி' என வினவினார்கள். அதுகேட்ட பரமதத்தன் இவர் நம் போன்ற மக்கட் பிறப்பினரல்லர். கருதியது அளிக்க வல்ல தெய்வமாந்தன்மை இவர் பாலுண்மையை யான் அறிந்து அஞ்சி விலகிய பின்பு என்னாற் பெறப்பட்ட இப் பெண்மகவுக்கு இவர்தம் அருமைத் திருப்பெயரையிட்டுப் போற்றியுள்ளேன். ஆதலால் நீங்களும் இவருடைய திருவடிகளைப் போற்றி வழிபடுங்கள் என்றான்.

சுற்றத்தார்கள் இஃது என்ன வியப்பு எனத் திகைத்து நின்றார்கள். கணவன் சொல்லிய வார்த்தையைக் கேட்ட புனிதவதியார், சிவபெருமானுடைய திருவடிகளை ஒன்றிய சிந்தையினாற் போற்றி 'இறைவ, என் கணவனாகிய இவன் கருதிய கொள்கை இதுவாகும். இனி இங்கு இவன் பொருட்டுச் சுமந்துள்ள அழகு மிக்க தசைப் பொதியைக் கழித்து நீக்கிச் சொல்லும் மனமுங் கடந்து அப்பாற்பட்டுத் திகழுந் தூயோனாகிய நின் திருவடிகளைச் சூழ்ந்து போற்ற வல்ல நின்கணங்களுளொன்றாகிய பேய்வடிவினை அடியேனுக்குத் தந்தருளல் வேண்டும்' எனப் பரமர்தாள் பரவி நின்றார். அந்நிலையில் அம்பலத்து ஆடல்புரியும் அண்ணலார் திருவருளால் வீட்டு நெறியை யளித்தற்குரிய மெய்யுணர்வாகிய சிவஞானம் மிகுதலால் வேண்டிய வேண்டி யாங்கெய்தும் தவச்செல்வியாராகிய புனிதவதியார் தம் உடம்பின் ஊன்பொதிந்த தசைப் பொதியினை உதறிவிட்டு எற்புடம்பே கொண்டு வானுலகத்தவரும் மண்ணுலகத்தவரும் வணங்கிப் போற்றும் பேய்வடிவம் பெற்று விளங்கினார். அவ்வடிவத்தைக் கண்டு அஞ்சிய சுற்றத்தார்கள் அவரை வணங்கி அகன்று போனார்கள்.

பின்னர் புனிதவதியார், இறைவன் திருவருளால் தம்முள்ளத்துத் தோன்றி யெழுந்த சிவஞானத்தின் ஒருமைப் பாட்டினால் அற்புதத் திருவந்தாதி யென்ற பிரபந்தத்தை அருளிச் செய்தார். அதன்கண் 'இறைவனுடைய அழகு நிரம்பிய செந்தாமரை மலர்போன்ற திருவடிகளைப் போற்றிப் பரவும் நல்ல சிவகணங்களுள் நானும் ஒன்றானேன்' என்ற கருத்தமைய,

**பெறினும் பிறிதியாதும் வேண்டேம் நமக்கீ**
**துறினம் உறாதொழியு மேனும்- சிறிதுணர்த்தி**
**மற்றொருகண் நெற்றிமேல் வைத்தான்றன் பேயாய**
**நற்கணத்தி லொன்றாய நாம்.**

என்ற திருப்பாடலையும் அருளிச் செய்தனர். பின்பு திருவிரட்டை மணிமாலை யென்னும் பிரபந்தத்தைப் பாடிப் போற்றிச் சிவபெருமான் வீற்றிருந்து அருள் புரியுஞ் சிறப்பமைந்த திருக்கயிலையை யடைவதற்கு இறைவனது திருவருள் துணை நின்றமையால் அத்திருமலையை வழிபடுவதற்கு வடக்கு நோக்கிப் புறப்பட்டார். புனிதவதியாரது பேய் வடிவத்தைக் கண்ட மக்கள், அவர் பேய் வடிவங் கொண்ட கருத்தை உள்ளபடி சொல்லக் கேட்டு வியப்பும் அச்சமுங் கொண்டு அகன்று ஓடினார்கள். அதுகண்ட புனிதவதியார் அண்டங்களெல்லாவற்றுக்குந் தலைவராகிய சிவபெருமான் என்னை அறிந்து அருள் புரிவராயின் உண்மையுணராத இவ்வுலகத்தவர் கண்முன் யான் 'எவ்வுருவாய்த் தோன்றினாலென்னை' , எனக் கூறி வடதிசைத் தேசமெல்லாம் மனத்தினுங் கடிது சென்றார். இறைவன் எழுந்தருளிய திருக்கயிலையின் மருங்கு சென்ற அவர், தூய்மையுடைய அத்திருமலையைத் தம் கால்களால் மிதித்தேறுதல் கூடாதெனக் கருதித் தலையினால் நடந்தார். இங்ஙனம் தலையினால் நடந்த திருக்கயிலை மலையின் மேல் ஏறும்பொழுது இறைவனது திருவருள் நோக்கம் அவர்மேற் பொருந்தியது. மேலான சுக சொரூபமாகிய சிவபோகத்தைத் தன்னடியார்களுக்கு அளித்தருளும் அருட்சத்தியாகிய மலைமகளார் புனிதவதியாரது அன்பின் திறத்தைக் கண்டு வியந்தருளி இறைவனை நோக்கி 'எம்பெருமானே, தலையினால் நடந்து இம்மலைமேல் ஏறிவரும் எற்புடம்பின் அன்பின் திறம் என்னே' என வினவினார். அது கேட்ட சிவபெருமான் 'உமையே இங்கு வரும் இவள் நம்மை அன்பினாற் பேணும் அம்மையாவாள். இப்பெருமை பொருந்திய பேய்வடிவத்தையும் நம்பால் தானே வேண்டிப் பெற்றனள்' என்று சொல்லி அருகு வந்தணைந்த புனிதவதியாரை நோக்கி, 'அம்மையே' என்னும் செம்மொழியால் உலகமெல்லாம் உய்ய அழைத்தருளினார். அருட்கடலாகிய இறைவன் அம்மையே யென்று அழைக்கக் கேட்ட புனிதவதியார்

அப்பா என்று சொல்லிக் கொண்டு அவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். இறைவன் அவரை நோக்கி 'நம்பால் இங்கு வந்து நீ வேண்டிப் பெறக் கருதியது யாது' என வினவக் காரைக்காலம்மையாரும் இறைவனைப் பணிந்து 'அறக்கடலாகிய பெருமானே நின் திருவடிக்கண் குறையாத பேரன்பு என்பாலமைதல் வேண்டும். எனது பிறவி நோய் ஒழிதல் வேண்டும். மீண்டும் வினைவயத்தால் எனக்குப் பிறப்பு நேருமாயின் நின்னை மறவாது போற்றும் மெய்யுணர்வினை அடியேற்கு வழங்கியருளுதல் வேண்டும். நீ திருநடனஞ்செய்யும் பொழுது யான் நினது திருவடிக் கீழ் இன்புற்றிருத்தல் வேண்டும்' என வேண்டிப் போற்றினார். அம்மையார் வேண்டியன வெல்லாம் அவர்க்குக் கூடுமாறு அருள்செய்த இறைவன், அம்மையாரை நோக்கித் 'தென்னாட்டிற் சிறப்புற்று விளங்குந் திருவாலங் காட்டில் யாம் ஆடியருளுந் திருக்கூத்தினைக் கண்டு நீ என்றும் எம்மைப் பாடிப் போற்றியிருப்பாயாக' எனப் பணித்தருளினார். அம்மையார் கயிலைப் பெருமான் பால் விடை பெற்றுத் தென்னாடடைந்து திருவாலங்காட்டிற்குத் தலையால் நடந்து சென்றார். அண்டமுற நிமிர்ந்தாடும் ஆலங்காட்டிறைவனது திருக்கோலத்தைக் கண்டு உளமுருகி வழிபட்டுக் 'கொங்கை திரங்கி' யென்ற முதற்குறிப்புடைய மூத்த திருப்பதிகத்தையும் 'எட்டியிலவம்' என்ற முதற்குறிப்புடைய திருப்பதிகத்தையும் பாடிப் போற்றினார். கண்ணுதற் பெருமான் இனிய தமிழால் அம்மையேயென அழைக்கப் பெற்ற காரைக்காலம்மையார் ஆலங்காட்டடிகளது தூக்கிய திருவடிக்கீழ் என்றும் நீங்காதுறைந்து அப்பெருமானைப் பாடிப்போற்றும் பெருவாழ்வைப் பெற்றார் என்பது வரலாறு. இதனைச் சேக்கிழாரடிகள் திருத்தொண்டர் புராணத்தில் அறுபத்தைந்து திருப்பாடல்களால் விரித்துக் கூறியுள்ளார்கள்.

'அப்பனை அணிதிருவாலங் காட்டுள் அடிகளைச் செடிதலைக் காரைக்காற் பேய் செப்பிய செந்தமிழ்' எனக் 'கொங்கை திரங்கி' யென்ற முதற் குறிப்புடைய மூத்த திருப்பதிகத்தின் இறுதிப் பாடலாகிய திருக்கடைக்காப்பிலும், 'ஆடும் அரவம் அரையில் ஆர்த்த அடிகள் அருளாலே, காடுமலிந்த கனல்வா யெயிற்றுக் காரைக் காற்பேய் தன் பாடல்' என 'எட்டியிலவம்' என்ற திருப்பதிகத்தின் திருக்கடைக் காப்பிலும், 'உரையினால் இம்மாலை அந்தாதி வெண்பாக் கரைவினாற் காரைக்காற்பேய் சொல்' என அற்புதத் திருவந்தாதியின் இறுதிச் செய்யுளிலும் அம்மையார் தம்மைக் 'காரைக் காற்பேய்' எனக் குறித்துள்ளார்கள். இங்கெடுத்துக் காட்டிய அகச் சான்றுகளால் அம்மையார் பிறந்தருளிய திருப்பதி

சோழ நாட்டிலுள்ள காரைக்கால் என்னும் ஊரென்பதும், அவர்க்கு வழங்கிய பெயர் பேயார் என்பதும் நன்கு புலனாகும். நம்பியாரூரர் தாம் பாடிய திருத்தொண்டத் தொகையில் 'பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கும் அடியேன்' என அம்மையாரைப் பேயார் என்ற பெயராற் போற்றியுள்ளமையால், காரைக்காலம்மையார்க்குப் பேயார் என்னும் இப்பெயர் பெருக வழங்கினமை புலனாகும். பேயார் என்னும் இப்பெயர் இவருடைய பெற்றோரிட்ட இயற்பெயரன் றென்பதும், இவர் இல்வாழ்க்கையிற் பற்றற்று இறைவனை வழிபடும் நற்கணத்திலொன்றாய காலத்துப் பெற்ற காரணப் பெயரென்பதும், 'மற்றொருகண் நெற்றிமேல் வைத்தான்றன் பேயாய, நற்கணத்தி லொன்றாய நாம்' என அம்மையார் தம்மைப் பற்றிக் கூறிக் கொள்ளுதலால் நன்கு துணியப்படும். காரைக்காலம்மையார்க்குப் பெற்றோர் இட்ட பெயர் புனிதவதியார் என்பதும், அவர்க்கு அம்மையார் என வழங்கும் இப்பெயர் திருக்கயிலையில் வீற்றிருந்தருளும் சிவபெருமானால் இட்டழைக்கப் பெற்ற சிறப்புப் பெயரென்பதும் சேக்கிழாரடிகள் பாடிய திருத்தொண்டர் புராணத்தில் காரைக்காலம்மையார் புராணத்தால் நன்கு விளங்கும். இவர் பேய்வடிவம் பெற்றனர் என்றது, உடலில் தசை மிகவும் குறைந்து போக ஊனினைச் சுருக்கி உள்ளொளி பெருக எற்புடம்பினராக நிலவினர் என்பதை உணர்த்துவதாகும்.

காரைக்காலம்மையார் இறைவனை வேண்டிப் பெற்ற பேய் வடிவம், பேராசையால் விரும்பியவற்றை நுகரப்பெறாது அலைந்து திரியும் அழுக்குடைய உயிர்களுக்கமைந்த இழிதகவிற் றாகிய பேய்வடிவம் அன்றென்பதும், சிவபெருமானைச் சூழ்ந்து நின்று பரவிப் போற்றும் தூய்மை வடிவினராகிய பதினெண் கணங்களுளொன்றாகிய மேன்மையுடையதென்பதும் விளங்க, 'வானமும் மண்ணுமெல்லாம் வணங்கு பேய் வடிவம்' எனச் சேக்கிழார் பெருமான் சிறப்பித்துப் போற்றுகின்றார். இவ்வுண்மை 'மற்றொருகண் நெற்றிமேல் வைத்தான்றன் பேயாய நற்கணத்தி லொன்றாய நாம்' என முன்னர்க் குறித்த அம்மையார் வாய்மொழியாலும் இனிது புலனாதல் காண்க.

அம்மையார் தளர்நடை கொண்டு விளையாடும் பிள்ளைமைப் பருவத்திலேயே சிவபெருமானது திருவடித் தொண்டில் ஈடுபட்டு அப்பெருமானுடைய திருப்பெயர்களைப் பயின்ற திறத்தைப்

'பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாங் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன் - நிறந்திகழும்
மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே
எஞ்ஞான்று தீர்ப்ப திடர்'

எனவரும் அற்புதத் திருவந்தாதிப் பாடலால் நன்குணரலாம்.

மனையறக் கடமையாகிய விருந்தோம்பல் சமய வழிபாடாகிய அடியார்ப்பேணலும் சிவனடியார்க்குத் திருவமுதளித்தலாகிய இவ்வொரு செயலாலே நிறைவேறுமென்பது புனிதவதியாரது துணிபாதலின், கணவன் கொடுத்தனுப்பிய மாங்கனியிலொன்றை அடியார்க்கு அளித்தனர். அன்புடையார்க்குத் துன்பம் வந்துற்ற காலத்து அதனை அறவே நீக்கி வேண்டுவன புரிதல் இறைவனது இயல்பென்பது புனிதவதியார்க்கு இருமுறை மாங்கனி தந்துதவிய அருட் செயலால் இனிது பெறப்படும். முதன் முறையிற் புனிதவதியார் இறைவன்பாற் பெற்றுத் தந்த பழத்தினை இது திருவருளாற் கிடைத்ததோ என்னும் ஆராய்ச்சியின்றித் தான் அனுப்பிய கனியாகவே பரமதத்தன் கருதினமையாலும், சிவனடியார்க்கு உணவாகிய அவனது பொருள் மீண்டும் பயன் வகையால் நுகரப்படுதல் முறையாதலாலும், அஃது அவனுக்கு உணவாயிற்று. இரண்டாம் முறையாக வேண்டிப் பெற்ற கனி, பரமதத்தன் இறைவனது திருவருளை ஐயுற்றுச் சோதித்தற் பொருட்டு மீண்டும் மனைவியாரைக் கொண்டு வேண்டிய நிலையில் அவனது ஐயத்தைத் தீர்த்தலொன்றே கருதி அளிக்கப் பட்டதாகலின், அவனது நுகர்ச்சியொடுபட்ட ஆராய்ச்சிக்கு அகப்படாது காணாமல் மறைந்து விட்டது. புனிதவதியாரது திருவருட் பேற்றினை நேரிற் கண்டுணர்ந்த பரமதத்தன் அவரைத் தன் மனைவியாகக் கருதாது வேறொரு தெய்வமென்றே கருதி விலகி யொழுக நினைத்தது வியப்பென்னும் மெய்ப்பாடாகும்.*

(* தொல்காப்பியனார் காமக் குறிப்பாகாதன இவையென விலக்கிய மெய்ப்பாடுகளுள் இவ்வியப்பும் ஒன்றாகும். 'வியப்பு- தலைமகள் பால் தெய்வத்தன்மை கண்டான் போல் வியந்தொழுகுதல்' என்பர் பேராசிரியர்; (தொல்- மெய்ப். 26ஆம் சூத்திரவுரை)

சிவநெறிச் செல்வராகிய திருஞான சம்பந்தப் பிள்ளையார் திருவாலங்காட்டிறைவரை வழிபடச் சென்றபொழுது காரைக்காலம்மையார் தலையாலே நடந்து போற்றும் சிறப்புடைய அம்மையப்பர் திருவாலங்காடாம் இதுவென நினைந்து அம்மூதூரினை மிதிக்க அஞ்சி அதன் மருங்குள்ளதோர் ஊரில் அன்றிரவு துயில் கொண்டனரென்றும், அந்நிலையில் ஆலங்காட்டில் எழுந்தருளிய இறைவர் ஆளுடைய பிள்ளையார் கனவில் தோன்றி நம்மைப் பாடுதற்கு மறந்தனையோ என வினவி நின்றாரென்றும், இறைவனது திருவருளே இதுவென்வுணர்ந்த

ஆளுடைய பிள்ளையார் நள்ளிரவில் துயில் நீங்கி யெழுந்து 'துஞ்ச வருவார்' என்ற முதற் குறிப்புடைய திருப்பதிகத்தைப் பாடி ஆலங்காட்டடிகளைப் போற்றினரென்றும் சேக்கிழாரடிகள் திருஞானசம்பந்தர் புராணத்திற் கூறியுள்ளார்.* (* பெரியபுராணம் - திருஞான சம்பந்தர் புராணம் 1008, 1009, 1010 - ஆம் செய்யுட்கள்.) இச்செய்தி 'துஞ்ச வருவாரும் தொழுவிப்பாரும் வழுவிப்போய், நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப்பாரும்' எனவரும் இத் திருப்பதிகத்தின் முதற் பாடலாலும், 'ஆந்தண் பழையனூர் ஆலங்காட்டெம் அடிகளை, வேந்தன் அருளாலே விரித்தபாடல் இவை' எனவரும் இதன் திருக்கடைக் காப்புப் பகுதியாலும் இனிது புலனாகும். திருவாலங்காட்டுப் பெருமான் தனது தூக்கிய திருவடிக் கீழமர்ந்து தாழ்ந்து வணங்குஞ் சிறப்புடைத் தொண்டராகிய காரைக் காலம்மையார் நாடோறும் பாடிப் போற்றும் தோத்திரப் பாடல்களையும் வாழ்த்தினையும் கேட்டு அப்பாடல்களின் இசைக்குத்தக அண்டமுற நிமிர்ந்தாடுகின்றான் என்னும் உண்மையினை,

**'வணங்குஞ் சிறுத்தொண்டர் வைகலேத்தும் வாழ்த்துங்கேட்டு**
**அணங்கும் பழையனூர் ஆலங்காட்டெம் அடிகளே'***

(* திருஞானசம்பந்தர் முதல் திருமுறை 45 - ம் பதிகம் 7-ம் பாடல்.)

எனவரும் தொடரால் திருஞானசம்பந்தர் குறிப்பிட்டருளிய திறம் நினைந்து போற்றத் தக்கதாகும். இச்செய்தி 'அறவா நீ ஆடும்போது உன்னடியின் கீழிருக்க'* (* பெரிய. காரைக்கா லம்மையார் புராணம் 50-ம் செய்யுள்.) என அம்மையார் வேண்டிய வேண்டுகோளாலும் 'குலவிய தாண்டவத்தில் அவர் எடுத்தருளுஞ் சேவடிக்கீழ் என்று மிருக்கின்றார்'* (* பெரிய. காரைக்காலம்மையார் புராணம் 65-ஆம் செய்யுள். எனச் சேக்கிழாரடிகள் கூறிப் போற்றுதலாலும் நன்கு துணியப்படும்.)

மேற்காட்டிய வரலாற்றுக் குறிப்பால் திருஞான சம்பந்தர்க்குக் காலத்தால் முற்பட்டவர் காரைக்காலம்மையா ரென்பது நன்கு தெளியப்படும். சைவ சமய குரவருளொருவராகிய திருஞானசம்பந்தர் கி . பி ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவ ரென்பது வரலாற்றாராய்ச்சியாளர் துணிபாதலின் அவராற் போற்றப் பெற்ற காரைக்காலம்மையார் வாழ்ந்த காலம் அவர்க்கு நெடுங்காலத்திற்கு முன் எனக் கொள்ளுதல் வேண்டும். காரைக்காலம்மையார் பாடிய நூல்களின் யாப்பமைதியையும் பின்வந்த தேவார ஆசிரியர்கள் பாடிய திருமுறைகளின் சொற் பொருளமைதியையும் உற்று நோக்குங்கால் இருண்ட காலப் பகுதி யெனப்படும் கி. பி நான்கு, ஐந்தாம் நூற்றாண்டுகளாகிய காலப்பகுதியில் வாழ்ந்தவர் காரைக்காலம்மையாரெனக் கொள்ளுதல் மிகவும் பொருந்தும்.

காரைக்காலம்மையார் அருளிச் செய்தனவாகத் திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் இரண்டும் திருவிரட்டை மணிமாலை, அற்புதத்திருவந்தாதி யென்ற பிரபந்தங்கள் இரண்டும் ஆக நான்கும் பதினொராந்திருமுறையில் முறையே தொகுக்கப்பெற்றுள்ளன. திருவாலங்காட்டு மூத்த திருப்பதிக மாகிய 'கொங்கைதிரங்கி' என்ற முதற் குறிப்புடைய பதிகம் பதினொரு பாடல்களாலியன்றது. 'இவ்வாறே 'எட்டியிலவம்' என்ற இரண்டாந் திருப்பதிகமும் பதினொரு பாடல்களை யுடையதாகும். இப்பதிகங்கள் இரண்டிலும் பதினொராந் திருப்பாடலாக அமைந்த செய்யுட்கள் இரண்டும் இப்பதிகங்களைப் பாடியோர் பெயரும் இவற்றைப் பாடும் அடியார்கள் பெறும் பயனும் கூறும் திருக்கடைக்காப்புச் செய்யுளாகும். இத்திருக்கடைக் காப்பு நீங்கலாக ஒவ்வொரு திருப்பதிகத்திலும் பத்துப் பாடல்களே அமைந்துள்ளன. இவற்றைக் கூர்ந்து நோக்குங்கால் பத்துப்பாடல்களால் இயன்றனவற்றை பதிகமென்ற பெயரால் வழங்குதல் அம்மையார் காலத்துத் தோன்றி நிலைபெற்ற வழக்கமாதல் நன்கு புலனாம்.

'கொங்கைதிரங்கி' யென்ற முதற் குறிப்புடைய திருப்பதிகம் நைவளம் என்ற நட்டபாடைப் பண்ணிலும் 'எட்டியிலவம்' என்ற பதிகம் இந்தளம் என்ற பண்ணிலும் பாடப்பெற்றுள்ளன. எனவே இப்பண்சுமந்த பாடல்களைப் பாடிய காரைக்காலம்மையார் இயற்றமிழிலும் இசைத்தமிழிலும் நிரம்பிய புலமையுடையா ரென்பது நன்கு துணியப்படும். நம்பியாரூரரால் திருத் தொண்டத் தொகையிற் போற்றப்பெற்ற அடியார்களில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், காரைக்காலம்மையார் ஆகிய இம்மூவரும் கற்கும் இயற்றமிழிலும், இசைத்தமிழிலும் வல்லவர்களென்பது 'கவுணியர் நாவுக்கரசர் பேயார் இம்மூவர் கற்கும் இயல் இசைவல்லோர்' * (* சேக்கிழார் புராணம் 46-ஆம் செய்யுள்) எனவரும் சேக்கிழார் புராணத்தாற் புலனாகும். திருஞான சம்பந்தர் முதலிய தேவார ஆசிரியர்கள் பதிகப்பெருவழியால் இறைவன் திருவருளைத் தமிழகமெங்கும் பரப்புதற்குமுன் பண்ணார்ந்த பாடல்களால் இறைவனைப் பாடிப் போற்றும் திருநெறிய தமிழ் நெறியை முதன் முதல் தோற்றுவித்த அருளாசிரியர் காரைக்காலம்மையாரே யாவார். ஆகவே அம்மையார் திருவாய் மலர்ந்தருளிய இயலிசைத் தமிழ்ப் பதிகங்களாகிய திருவாலங்காட்டுத் திருப்பதிகங்களிரண்டும் மூத்த திருப்பதிகங்கள் என வழங்கப் பெறுவனவாயின.

சிவபெருமானைப் போற்றும் நற்கணத்திலொருவராகிய காரைக்காலம்மையார் ஆலங்காட்டிறைவன் ஈமம் இடு சுடு காட்டகத்தே தாழ்சடையெட்டுத் திசையும் வீசி ஆடியருளுந்

திருக்கூத்தின் இயல்பினையும் அண்டமுற நிமிர்ந்தாடும் அப்பெருமானுக்கு ஆடரங்காகத்திகழும் சுடுகாட்டின் அமைதியையும் அங்கு வாழும் பேய்களின் செய்கைகளையும் இத்திருப்பதிகங்களிற் சுவை பெற விரித்துரைக்கின்றார்.

ஊழ்வயத்தால் இறந்த உயிர்கள் உள்ளங்குளிர்ந்து அமைதியடையும்படி உயிர்க்குயிராகிய சிவபெருமான் இடுகாட்டில் ஆடியருள்கின்றான் என்பது, 'ஈமம் இடு சுடுகாட்டகத்தே ஆகங் குளிர்ந்தனலாடும் எங்கள் அப்பன்' * (* திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் க - 3-ஆம் பாடல்) என அம்மையார் இறைவனைப் போற்றுதலாற் புலனாம். திருவாலங் காட்டிறைவன் காளியுடன் நிருத்தவாதஞ் செய்து ஆடியருளிய ஊர்த்துவ தாண்டவத்தின் இயல்பினை, 'மண்டலம் நின்று அங்குளாளம் இட்டு வாதித்து வீசியெடுத்த பாதம், அண்டமுற நிமிர்ந்தாடும் எங்கள் அப்பனிடம் திருவாலங்காடே'* (*திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் க-4-ஆம் பாடல்) என்ற தொடரால் அம்மையார் புலப்படுத்தினமை காணலாம்.

'காடும் கடலும் மலையும் மண்ணும் விண்ணுஞ்சுழல அனல் கையேந்தி ஆடும் அரவப் புயங்கன்' * (* திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் க- 8-ஆம் பாடல்) என்றும் 'பேய் முழவங் கொட்டக் கூளிபாடக் குழகன் ஆடும்' * (*திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் II 1-ஆம் பாடல்) என்றும், ஆலங்காட்டிறைவனது திருநடனத்தின் இயல்பினை விளக்கிய அம்மையார், 'மாயன் ஆட மலையான் மகளும் மருண்டு நோக்குமே' * (* திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் II 8-ஆம் பாடல்) என்ற தொடராற் பிறரெவருங் காண முடியாத இறைவனது அருட்கூத்தினை மலைமகளாகிய உமையம்மையாரது திருவருள் நோக்கத்தால் தாம் காணப் பெற்று மகிழ்ந்த திறத்தை உய்த்துணர வைத்தமை நினைந்து போற்றத்தக்கதாகும்.

திருவிரட்டை மணிமாலையென்பது, கட்டளைக் கலித்துறை முன்னும் வெண்பா பின்னுமாக முறையே தொடர்ந்து அந்தாதித் தொடையால் மாலைபோன்றமைய இருபது செய்யுட்களால் இயற்றப் பெறுவதாகும். இதனை 'ஆய்ந்தசீர் இரட்டைமாலையந்தாதி' * (*பெரிய. காரைக்காலம்மையார் புராணம் 53-ஆம் செய்யுள்) எனச் சேக்கிழாரடிகள் குறிப்பிட் டுள்ளார்கள். இரட்டை மணிமாலையென்ற பிரபந்தத்தை முதன்முதற் பாடியவர் காரைக்காலம்மையாரே யாவார். இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ள தமிழ் நூல்களிற் கட்டளைக் கலித்துறையென்னும் யாப்புக்கு மூல இலக்கியமாக விளங்குவன காரைக்காலம்மையார் பாடிய இத் திருவிரட்டை மணிமாலையி லுள்ள கட்டளைக் கலித்துறைச் செய்யுட்கள் பத்துமேயாகும்.

இவ்வுலக வாழ்விற் கொடிய துன்பங்கள் வந்து தாக்கும் பொழுது உளந்தளராது ஈசனையே வாழ்த்துதல் வேண்டும். ஈசனாகிய அவனையன்றி இவ்வுலகத்து எதுவும் இயங்காதெனவுணர்ந்து மறவாது போற்றும் அடியார்களை இறைவன் மீண்டும் பிறவாவண்ணம் காத்தருள் புரிவான். அவன் அடியார்களது இடர்கண்டு தரித்திருப்பானல்லன். தன்னைத் தஞ்சம் புகுந்தார் துயர்க்கடலில் அழுந்தா வண்ணம் எளிவந்து காத்தருளும் வல்லாளனாகிய அப்பெருமானை நெஞ்சத்தால் இடைவிடாது சிந்தித்துப் போற்றுதல் வேண்டும். படைத்தற் கடவுளும் ஆதிரை முதல்வனாகிய அவ்விறைவனைச் சோதித்துக் காணமாட்டாது ஆற்றகில்லேன் அம்மா என்று தளர்ந்து வருந்தினான். எண் தோளீசனாகிய இறைவனுடைய பொன்னடி களைப் பணிந்து போற்றுவோர் கடலேயனைய துன்பங்கள் அத்தனையுந் தள்ளிக் கடந்து ஈறில்லாத இன்பக்கரையெய்தி மகிழ்வர். எல்லா மந்திரங்களினும் மேலான திருவைந் தெழுத்தினை ஓதித் தலையாயின உணர்ந்தோர் ஈசன் கழல் கண்டுணர்வர். அத்தகைய மெய்யடியார்களைப் போற்றியவரது உடம்பின் நிழலைக் கண்டபோதே வினைகளெல்லாம் நில்லாதொழியும், அங்ஙனமாகவும் மலர்தூவி வழிபடும் அடியார்களது பழவினை நில்லாதெனச் சொல்லவும் வேண்டுமோ? தொல்லை வினை வந்து நம்மைச் சூழ்வதற்கு முன் கூற்றுவனைக் காய்ந்த பெருமானை நினைந்து அன்பு செய்து அவனது திருநாமமாகிய திருவைந்தெழுத்தினை ஓதியின்புறுதல் வேண்டும். உத்தமராய் வாழ்வார்கள் இறந்த பின்னர்ப் பட்டமரமாகிய விறகினை யடுக்கிச் சுடுவர் உலகத்தார். அத்தகைய சாக்காடு வருதற்கு முன்னரே ஒருவரும் உண்ணாத நஞ்சையுண்டு உலகத்துயிர்களைக் காத்தருளிய சிவபெருமானது பொருள் சேர் புகழைக் கேட்டுச் சிந்தித்துப் போற்றுதல் வேண்டும் என்பன போன்ற உயர்ந்த கருத்துக்கள் இத் திருவிரட்டை மணிமாலையில் விரித்துரைக்கப் பட்டுள்ளன.

'முனியத்தக்க அவுணர்களுடைய முப்புரங்களையும் ஓரம்பினால் தீ மூட்டியழித்து உயிர்களுக்கு இன்பமளிக்க வல்ல எம்பெருமானே, நீ நினது நீண்ட சடையிற் பிறரறியாது வைத்திருக்கும் கங்கையாகிய நங்கையை நின் திருமேனியின் ஒரு பாகத்திலுள்ள உமை நங்கை கண்டால் நினது கள்ளத்தை எங்ஙனம் மறைப்பாய்' என இறைவனை நோக்கிக் காரைக்காலம்மையார் வினவுவதாக அமைந்தது.

**'இனிவார் சடையினிற் கங்கையென்பாளை அங்கத் திருந்த**
**கனிவாய் மலைமங்கை காணில் என்செய்தி கையிற் சிலையால்**
**முனிவார் திரிபுரம் மூன்றும் வெந்தன்று செந்தீயின் மூழ்கத்**
**தனிவார் கணையொன்றினால் மிகக் கோத்தளம் சங்கரனே'**

என்ற பாடலாகும்.

**'வங்கமலி கடல் நாகைக்கா ரோணத்தெம் வானவனே**
**எங்கள் பெருமானோர் விண்ணப்ப முண்டது கேட்டருளீர்**
**கங்கை சடையுட் கரந்தாய் அக்கள்ளத்தை மெள்ள உமை**
**நங்கை யறியிற் பொல்லாது கண்டாய் எங்கள் நாயகனே'**

*எனத் திருநாவுக்கரசடிகளார் பாடிய திருவிருத்தம் இப்பாடற் பொருளை யடியொற்றியமைந்திருத்தல் காணலாம். இவ்வாறே 'ஏறலால் ஏறமற்றில்லையே' என அம்மையார் கூறிய வாய்மொழியை 'ஏறலால் ஏறவில்லை' எனத் திருநாவுக்கரசடிகள் பொன்னே போல் எடுத்தாளுதல் காணலாம்.*

**'உரைக்கப் படுவதும் ஒன்றுண்டு கேட்கிற் செவ்வான் தொடைமேல்**
**இரைக்கின்ற பாம்பினை என்றும் தொடேல்'**

*எனக் காரைக்காலம்மையார் இறைவனை நோக்கிக் கூறும் அறிவிப்பு, அன்பிற் சிறந்த தாய் தன் குழந்தைக்கு இடர் நேரா வண்ணம் விரைந்து கூறும் அறிவுரையை நினைவுபடுத்துவதாகும்.*

*இறைவனருளால் வானமு மண்ணுமெல்லாம் வணங்கு பேய் வடிவம் பெற்ற அம்மையார், முதன் முதல் திருவாய் மலர்ந்தருளிய சிறப்புடைய பிரபந்தம் அற்புதத் திருவந்தாதி யென்பதாகும். அற்புதம் என்பது ஈண்டு யாவராலும் வியந்து போற்றுதற்குரிய சிவஞானம் என்ற பொருளைத் தருவதாகும். 'அற்புத மூர்த்தி' என்னும் நன்னூற் சிறப்புப் பாயிரத் தொடர்க்கு 'ஞானமே திருமேனியாகவுடையான்' எனச் சங்கர நமச்சிவாயர் கூறும் பொருள் இங்கு ஒப்பு நோக்கத் தகுவதாகும். * (* நன்னூற் சிறப்புப் பாயிரம், சங்கர நமச்சிவாயர் உரை) இறைவனருளால் தம் உள்ளத்துத் தோன்றிய சிவஞானத்தின் ஒருமைப் பாட்டினால் உமையொரு கூறனாகிய இறைவனைப் பாடிப் போற்றிய அந்தாதியாதலின் இஃது அற்புதத் திருவந்தாதியென்னும் பெயர்த்தாயிற்று. இந்நுட்பம்,*

**'உற்ப வித்தெழுந்த ஞானத் தொருமையின் உமை கோன்றன்னை**
**அற்புதத் திருவந்தாதி அப்பொழு தருளிச் செய்வார்' ***
*(* பெரிய காரைக்காலம்மையார் புராணம் 52-ஆம் செய்யுள்)*

*எனவரும் சேக்கிழார் வாய்மொழியால் இனிது புலனாகும்.*

*தொல்காப்பிய உரையாசிரியர்களாகிய பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் தொல்காப்பியர் கூறிய எண்வகை வனப்புக்களுளொன்றாகிய விருந்தென்பதற்குப் 'பொய்கையார் முதலாயினார் செய்த அந்தாதிச் செய்யுளை' உதாரணமாகக் குறிப்பிட்டுள்ளார்கள். காரைக்காலம்மையார் பாடிய*

இவ்வற்புதத் திருவந்தாதி விருந்தென்னும் வனப்புக்குரிய சிறந்த இலக்கியமாகும். சங்கத்தொகை நூல்களுளொன்றாகிய பதிற்றுப் பத்திற் காப்பியாற்றுக் காப்பியனார் பாடிய நான்காம்பத்து அந்தாதித் தொடையமையப் பாடப் பெற்றதாகும். எனினும் இப்பத்தின் இறுதிச் செய்யுளின் இறுதியடி முதற்செய்யுளின் முதலடியுடன் மண்டலித்து முடியவில்லை. அந்தாதித் தொடையமைய நூற்றொரு வெண்பாக்களால் இறுதியும் முதலும் மண்டலித்து முடியக் காரைக்காலம்மையார் பாடிய அற்புதத் திருவந்தாதி யென்னும் இந்நூல் அந்தாதியிலக்கியத்துள் தொன்மையும் சிறப்பும் வாய்ந்த விருந்து நூலென்பது அறிஞர் துணிபாகும்.

திருவருள் ஞானம் பெற்றவர் காரைக்காலம்மையார் என்பது, 'திருவருள் ஞானமாவது முதலிகள் மூவர் காரைக்காலம்மை முதலாயினோர்க்குண்டாகிய ஞானமென அறிக' எனச் சிவப்பிரகாசம் 10-ம் செய்யுளுரையில் மதுரைச் சிவப்பிரகாசர் கூறும் விளக்கத்தால் இனிது புலனாகும். அம்மையார் இறைவனருளாற் பெற்ற திருவருள் ஞானத்தின் பயனாகத் திகழ்வது அற்புதத் திருவந்தாதி. இந்நூல் ஓதுதற்கு இனிமையும் எளிமையும் உடையதாய் உணர்தற்கரிய உயர்ந்த சிவஞானத்தியல்பினைத் தெளிவு படுத்துவது. காதலாகி ஓதும் அன்பர்களது உள்ளத்தை உருக்குவது. அம்மையார் தாம் பெற்ற திருவருள் அநுபவத்தினைத் தன்மை நிலையில் வைத்து உலகத்தார்க்குத் தெளியவுணர்த்தும் பாடல்களும், தம் நெஞ்சத்திற்கு அறிவுறுத்தும் பாடல்களும், தம்மையொத்த அடியார்களின் இயல்பினை விரித்துரைக்கும் பாடல்களும், இறைவனுடைய அருட்கோலங்களையும் திருவருட் செயல் களையும் நினைந்து அப்பெருமானை முன்னிலைப்படுத்தி அழைத்து உரையாடி மகிழும் நிலையிற் பாடப்பெற்ற திருப்பாடல்களும், இறைவனது பொருள்சேர் புகழ்த்திறத்தை யாவரும் உணர்ந்து போற்றும் வண்ணம் அப்பெருமானைப் படர்க்கையில் வைத்துப் போற்றும் பாடல்களும் இதன்கண் அமைந்துள்ளன.

எம்பெருமானாராகிய இறைவர் எனக்குண்டாகிய இடையூறுகளை நீக்காராயினும் யான் படுந்துன்பத்திற்கு உளமிரங்காராயினும் துன்பங்களை விலக்கியுய்ந்து போதற்குரிய நல்வழியைக் காட்டாராயினும் எனது நெஞ்சத்தில் நீங்காது வீற்றிருக்கும் அவர்பால் யான் வைத்துள்ள அன்பு ஒரு பொழுதும் குறையாது. * (* அற்புதத் திருவந்தாதி 2) எப்பொருளிலும் நீக்கமறத் தங்கியிருத்தலால் இறைவன் என்ற காரணப் பெயருடைய கடவுள், உயிர்களுக்கு உடல், கருவி, உலகு, நுகர்பொருள் என்பவற்றைப்

படைத்தளிக்க வல்லவன். அவற்றை மீண்டும் ஒடுக்குதலைச் செய்பவனும் அவ்விறைவனே. எம் தந்தையே யெனப் போற்றி வழிபடும் உயிர்களாகிய எங்கள் மேல் பொறுத்தற்கரிய துன்பங்கள் வந்துவருத்துங்கால் அவற்றை மாற்றி இவ்வுலகில் நிலை பெற வாழச் செய்து காப்பவனும் அவ்விறைவனே ஆவன் * (* அற்புதத் திருவந்தாதி 5) ஞானமே திருமேனியாகவுடைய இறைவன் நம்மால் அணுக முடியாத பரவெளியிலும் தேவருலகத்தும் உள்ளான் என்று சொல்லுவார் சொல்லுக. அப்பெருமான் எனது நெஞ்சமாகிய அணிய இடத்திலிருந்து அன்பர்களுக்கு அருள்புரிகின்றான் என்றே யான் கூறுவேன்* (*அற்புதத் திருவந்தாதி 6) கண்ணுதற் கடவுளாகிய சிவபெருமானுக்கு ஆட்பட்டமையால் யானே தவமுடையே னாயினேன். அப்பெருமானை இடைவிடாது எண்ணிப் போற்றுதலால் எனது நெஞ்சமே நல்ல நெஞ்சமாயிற்று. அவனது திருவருள் வழி நிற்றலால் காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வரும் பிறவித் தொடர்ச்சியை யறுத்தற்கெண்ணும் உறுதியுடை யேனாயினேன்.* (* அற்புதத் திருவந்தாதி 7) உலகமெல்லாவற்றையும் ஆள்விப்பதும் உயிர்களின் பிறவி நோயைப் பொன்றக் கெடுப்பதும் ஈசனது திருவருளேயாகும். அத் திருவருளின் துணை கொண்டே மெய்ப்பொருளாகிய சிவபரம் பொருளை உள்ளவாறு கண்டு வழிபடும் நற்பேறுடையே னாயினேன். அடியேற்கு எக்காலத்தும் எல்லாப் பொருளாகவும் நின்று துணைபுரிவது அத்திருவருளேயாகும். * (* அற்புதத் திருவந்தாதி 9) என்றும் எனக்கினிமை தரும் பெருமானாகிய இறைவனை வைப்புநிதியாக என் மனத்துட் கொண்டு போற்றி வழிபடும் அடியேனுக்குக் கிடைத்தற்கரியது எதுவுமில்லை. * (* அற்புதத் திருவந்தாதி 10) இறைவனுக்கு ஆட்பட்டுத் தொண்டு புரிதலாகிய ஒன்றையே நினைந்து அதனையே உறுதிப் பொருளாகத் துணிந்து என்னுள்ளத்திற் கொண்டுள்ளேன். * (* அற்புதத் திருவந்தாதி 11) இறைவனை நினைந்த எனது நெஞ்சம் தனக்குரிய பெருஞ் சேமத்தைத் தானே தேடிக் கொண்டது. * (* அற்புதத் திருவந்தாதி 14) தேவர்கள் தம்முணர்வினால் இறைவனைத் தியானித்து மலர் தூவி வழிபட்டும் அப்பெருமா னுடைய திருவடியைத் தலைப்படும் ஆற்றலற்றவராயினர். வலியற்ற மனத்தால் நினைந்திருந்து, மின்னலோடு விளங்கும் செவ்வானத்தைப் போலும் சிவந்த சடையினையுடையவனே, வேதப் பொருளானவனே என வாயாற் சொல்லி யேத்தும் எளியேனுக்கு அப்பெருமான் எங்ஙனம் அருள்செய்வானோ * (* அற்புதத் திருவந்தாதி 15). முன்னாளில் திருமாலும் நான் முகனுங் கூடித் தேடி அளத்தற்கரியவனும் எல்லா வுலகங்களுமாய்க் கலந்து விளங்குபவனும் ஆகிய இறைவனைக்

கண்டு தெளியும் அறிவு அத்தேவர் இருவருக்கும் அக்காலத்து அரிதாயினும் இறைவனது திருவருளைப் பெற்ற இன்று நம்மைப் போன்ற அடியார்களுக்கு எளிதாயிற்று. * (* அற்புதத் திருவந்தாதி 19) இறைவர் எமது துயர் கண்டு இரங்கி அருள் புரியாவிட்டாலும் உலக முய்ய நஞ்சுண்ட அப்பெருமானுக்கு ஆளாகும் பேறு பெற்றோமென்னும் பெருமித வுணர்வுடன் எமது பொத்துப் படாத உறுதியுடைய உள்ளம் மகிழ்ச்சியோடிருக்கின்றது. * (* அற்புதத் திருவந்தாதி 23) எம் பெருமானாகிய இறைவன் தக்கார் தகவிலரென்னும் வேறுபாடின்றி எங்குஞ் சென்று பிச்சையேற்றுத் திரிவதும் இருள்மிக்க இடுகாட்டிலாடுவதுமாகிய இச்செயல்கள் என்ன பயன் கருதிச் செய்யப்படுவன என்பதை நாம் அப் பெருமானைக் காணலுற்ற நாளில் நேரில் அப்பெருமானைக் கேட்டு ஆராய்ந்து தெரிந்து கொள்ளலாம். அவனைக் காணப்பெறாத நாளில் அச்செயல்களைக் குறித்து நாம் இங்கிருந்து பேசுதற்கு என்ன இருக்கிறது? * (* அற்புதத் திருவந்தாதி 25) இறைவனைக் கண்டு போற்றும் பெரு நெறியை விரும்பி அவனது திருவருளை வேண்டி அப்பெருமான் எங்கே எழுந்தருளியுள்ளான் என வினவும் அன்பர்களே, அவன் இங்கு என்னைப்போன்ற எளியோரது சிந்தையிலும் விரும்பி வீற்றிருக்கின்றான். அவனைக் காண வேண்டுமென்னும் ஆர்வத்தால் அவன் திருவருளே கண்ணாகக் கொண்டு காணுமாறு காணும் மெய்யன்பர்களுக்கு அவனைக் கண்டு இன்புறுதல் மிகவும் எளிது. * (* அற்புதத் திருவந்தாதி 45) இறைவனுடைய திருவடிகளை மலர் தூவிப் பணிந்தும் அங்ஙனம் பணிந்த மெய்யடியார்களை ஏத்தி வழிபடுதலே செய்யத் தகுவதெனத் துணிந்தும் எம்பிரானாகிய இறைவனுக்கு அடிமை செய்யப்பெற்ற இதுவே எனது சிந்தையார்க்குள்ள பெருமிதத்தின் பயனாகிய களிப்புக்குக் காரணமாதல் கூடும். * (* அற்புதத் திருவந்தாதி 79) பெரியோனாகிய இறைவனை யான் புறத்தே காணப்பெறுவேனாயின் அவனது திருமேனியின் அழகினை என் கண்களால் நிறையப் பருகியும்... அவன் திருவடிகளை என் கைகளாற் பலமுறை தொழுதும் அப்பெருமானது திருவருட்டிறத்தை நெஞ்சங் குளிர நினைந்தும், விண்ணகத்தில் விளங்குபவனே! எரியினில் ஆடல் புரிபவனே! என அப்பெருமா னுடைய திருநாமங்களை என் நாவினாற் பலமுறை சொல்லியும் இன்புறுவேன் அல்லவா? என இவ்வாறு காரைக்காலம்மையார் தாம் பெற்ற சிவாநுபவப் பயனை வெளியிட்டுரைக்கும் பகுதிகள் படிப்போருள்ளத்தை நெகிழ்வித்து இறைவன் திருவருளில் திளைத்தின்புறச் செய்வனவாம்.

நெஞ்சமே, நாம் இறைவன் திருவடிகளை இடையீடின்றி நினைக்கப் பெற்றோமாதலின் மீளாப் பிறவிக் கடலை நீந்தி

உய்ந்தோமாயினோம். * (* அற்புதத் திருவந்தாதி 16). நெஞ்சே மக்கட்பிறப்பினருள் ஒருவர்க்குரிய மனமாக நீ விளங்குகின்றாய். ஆதலால் ஏனை அஃறிணை யுயிர்களின் நெஞ்சம் போலன்றிப் பெரிய பாதுகாவலைப் பெற்றுள்ளாய். இவ்வுயர்நிலை நினக்குக் கிடைத்தது கருதி மகிழ்வாயாக. எவருடைய எலும்பானாலும் அவற்றை அன்போடியைதற்கு வந்த சாதனமாகக் கருதித் தம் திருமேனியில் அணிந்து ஆடல் புரிவாராகிய சிவபெருமானுக்குத் தொண்டு செய்தற்குரிய பேரன்பினையே மேன்மேலும் பெருக்கிக் கொள்வாயாக. * (* அற்புதத் திருவந்தாதி 31) உமையொரு பாகனாகிய இறைவனுடைய திருவடிகளைச் சிந்தித்துப் போற்றும் செல்வ வாழ்வினை அவனது திருவருள் நெறியாற் பெறுவதல்லது நினது முயற்சியாற் பெறுதல் இயலாது. * (* அற்புதத் திருவந்தாதி 47) கங்கை முடிக்கு அணிந்த கண்ணுதற் பெருமானது திருவடித் தாமரையை எஞ்ஞான்றும் நினைந்து ஓதிப் போற்றுவாயாயின் நீ கருதியவாறெல்லாம் திருத்தமாகச் செய்து பயன்பெறமுடியும். * (* அற்புதத் திருவந்தாதி 73)

எளியேனை ஆளாகவுடையவனும் தனக்குவமையில்லாத தனி முதற் பொருளாய் விளங்குபவனும் தன் பெருமை தானறியாத் தன்மையனும் பொன்னாற்சுருள்படச் செய்தமைத்தது போன்று திகழும் செஞ்சடையுடன் அருளுருவாகிய உமை நங்கையை இடப்பாகத்திற் கொண்டு விளங்கும் சிவபெருமானாவன். அவனே வானோர் தலைவன். பவளம் போன்று சிவந்து தோன்றும் திருமேனியையும் நீலமணி போலும் மிடற்றினையும் உடைய பெருமான் அவனே. நீ அவன்பால் மெய்யன்புடையையா யிருப்பாயாக. உலகியலிற் செல்லும் நினைவினைத் தடுத்து அடியாரது புகழ்த்திறத்தை நினைந்து போற்றி வாயினாலும் மகிழ்ந்து ஏத்தி இறைவனுக்காட்பட்ட தொண்டர் திருவடிகளைக் குறிக்கொண்டு தொழுவாயாக. யாவராலும் மனத்தாற் சிந்தித்துணர முடியாத பிறைமுடிக் கண்ணிப் பெரியோனாகிய இறைவனது பொருள்சேர் புகழை ஒரு சிறிதும் நினையாத தீயோரது கூட்டத்தை விட்டு விலகி உய்வாயாக. என இவ்வாறு அம்மையார் தம் நெஞ்சத்தை நோக்கிக் கூறும் அறிவுரைப் பகுதிகள் உளங்கொண்டு போற்றத்தக்கனவாகும்.

முக்கட் பகவனாகிய இறைவனுடைய வீட்டின்பம் வழங்கும் நலம் பொருந்திய திருவடிகளைத் தலைக்கு அணியாகக் கொண்டமையால் எம்முயிரைக் கொள்ளவரும் கூற்றுவனைப் பொருளாக எண்ணி நடுங்க மாட்டோம். இவ்வுலகில் சிவனடியார்களைக் கண்டாற் சிவனெனவே தெளிந்து தலைதாழ்த்து வணங்கும் திருத்தொண்டின் நெறியினை மேற்கொள்ளப் பெற்றோம். இனி எமக்கு எத்தகைய

அவலமுமில்லை. திரிபுரத்தவுணர் அவிந்தழியத் தீயம்பு எய்த இறைவனுடைய திருவடித் தாமரைகளைச் சார்ந்தமையால் காலனையும் வென்றோம். கடிய நரகத்துயரை விட்டு நீங்கினோம். பிறவிக்கு வித்தாய்த் தொன்றுதொட்டுத் தொடர்ந்து வருத்தும் நல்வினை தீவினைகளாகிய இருவினைகளையும் வேரறக் களைந்தோம். செஞ்சடையீசன் திருவடிக்கே ஆட்பட்டு அவனது இயல்புரைக்கும் நூல்களைக் கற்று இறைவனது அருள் நலங்களை யுணரப் பெற்றோம். இவ்வுலக வாழ்விற்கும் இனிவரும் மறுமை வாழ்விற்கும் வேண்டிய எல்லா நலங்களும் அமையப் பெற்றுள்ளோம். எங்களைப் புறங்கூறி யிகழ்தற்குக் காரணமாகிய எத்தகைய குற்றமும் எம்பால் இல்லை. எல்லா வுலகங்களையுந் தோற்றுவித்துக் காத்து முடிவில் ஒடுக்குதலால் அரன் என்னுந் திருநாமமுடைய இறைவனை அன்பாகிய போர்வையினாலே போர்த்து அவனது மெய்ப் புகழைக் கற்றுவல்லோம் என்ற உரிமை காரணமாக அவனைப் பிறரறியாதவாறு நம்முடைய நெஞ்சி னுள்ளேயே அடைத்து மறைத்து விட்டோம். இனி அப்பெருமானைக் காணவல்லார் யாவர்? என இவ்வாறு காரைக்கால் அம்மையார் இறைவனுக்கு ஆட்பட்ட மெய்யடியார் களின் இயல்பினை விரித்துரைக்கும் திருப்பாடல்கள் அவரது உள்ளத்துறுதியினை இனிது விளக்குவனவாகும்.

செம்மேனிப் பேராளனாகிய இறைவன் திருமாலை வலப்பக்கத்திலும் உமையம்மையாரை இடப்பாகத்திலும் கொண்டு விளங்கும் திருக்கோலத்தின் வனப்பினைக் குறித்தும், திருமிடற்றில் நஞ்சினையடக்கிய அப்பெருமான் செஞ்சடையில் திங்களையும் அதற்குப் பகையாகிய பாம்பினையும் கங்கையையும் சேர அணிந்த திறத்தைக் குறித்தும், அரவணிந்து தலையோடேந்தி ஊர்தோறும் பலி திரிவதும் பேய்கள் சூழ ஈம வனத்தே தீயேந்தி ஆடுவதுமாகிய செயல்களைக் குறித்தும் காரைக்காலம்மையார் இறைவனை நோக்கி உரையாடும் நிலையிற் பாடிய திருப்பாடல்கள் தன்மை உவமை முதலிய அணிகளுக்கும் நகை உவகை முதலிய சுவைகளுக்கும் சிறந்த இலக்கியமாக விளங்குகின்றன. இறைவ, நின்திருவடிக்கு ஆளாகிய அந்நாளிலும் நினது திருவுருவத்தை நேரிற் காணாமலே நினக்குத் தொண்டு பட்டேன். நினக்குப் பன்னாள் அடித் தொண்டு செய்து பழகிய இந்நாளிலும் நினது திருவுருவத்தினைக் காணப் பெற்றேனல்லேன். 'நும் பெருமானாகிய இறைவன் எத்தகைய திருவுருவத்தையுடையான்' என்று என்னை நோக்கி வினவும் உலகத்தார்க்கு நினது திருவுருவத்தியல்பினை எவ்வாறு விளங்கச் சொல்வேன்? நினது திருவுருவம் எவ்வுருவோ? வானிடத்தே யியங்கும் பிறைத்திங்களையணிந்த பெருமானே, ஏழுலகங் களையும் கண்ணெனப் பாதுகாக்க வல்ல கடவுளே,

உயிர்க்குயிராகிய நின்னை நின் திருவருளாற் காணப்பெற்று, என் தந்தையே யென்று துதித்து வணங்கி என்னாலியன்ற கைத் தொண்டுகளைச் செய்து மகிழேனாயின் அண்டங்களை யெல்லாம் ஆளும் உயர்ந்த பதவி தானே கிடைத்தாலும் அதனை ஒரு பொருளாக விரும்பமாட்டேன். இதுவே அடியேனது உள்ளக் கருத்தாகும். இறைவ, நின் திருவடி சிறிது இடம்பெயருமாயினும் கீழுலகமாகிய பாதாளம் நிலை தளர்ந்து சிதறும். நின் திருமுடி சிறிதே அசையுமாயின் அண்ட முகடு பிளந்துபோம். கடகமணியப் பெற்று வீசியாடுதற்குரிய நின்கைகள் சிறிதசைந் தாலும் வானவருலகும் எண்திசைகளும் சிதர்ந்தழிவன. நீ திருநடம் புரிந்தருளுதற்கு நிலைக்களமாய் விளங்கும் இவ்வுலகமாகிய அரங்கம் நினது திருக்கூத்தினைப் பொறுத்தற்கேற்ற வலியுடையதன்று. ஆகவே இதன் வலியின்மை யறிந்து குறிக்கொண்டு ஆடுவாயாக என அம்மையார் இறைவனை நோக்கிக் கூறும் அன்புரைகள், இறைவனது, திருமேனியைத் தாம் காண்பதுடன் உலகத்தார்க்குங் காட்டுதல் வேண்டுமென்னும் பேரார்வத்தையும், கூடும் அன்பிற் கும்பிடலேயன்றி வீடும் வேண்டாவிறலின் விளங்கிய அம்மையாரது திருத்தொண்டின் திறத்தையும் இறைவனது பெருந்திருக்கூத்தின் இயல்பினையும் இனிது புலப்படுத்து வனவாகும்.

அகக்கண்ணால் தன்னைச் சிந்தித்துக் காணவல்ல தவச் செல்வர்களுக்கு அவர்கள் உள்ளத்துள்ளே பேரொளிப் பிழம்பாகத் தோன்றியருள் புரிதல் இறைவனது இயல்பாகும். அப்பெருமானைப் புறத்தே கண்களாற் கண்டு மகிழவேண்டுமென விரும்புவார்க்கும் அவர்கள் விரும்பிய வண்ணமே எதிர்தோன்றிக் காட்சியளிக்கவல்ல எளிமைத் தன்மை வாய்ந்த அருளாளன் அவன். அவனைக் கைதொழுது போற்றும் மெய்யடியார்களுக்கு அவனது திருவுருவத்தைக் காணுதல் இயலும். அறியும் இயல்புடைய ஆன்மாவேயாய் ஒற்றித்து நிற்பவனும் அவனே. அங்ஙனம் உயிர்களோடு வேறறக் கலந்து நிற்பினும் உயிர்களாகிய அவற்றின் தன்மை தனக்கெய்தலின்றித்தான் அவற்றின் வேறாக நின்று அவ்வுயிர்களுக்குப் பொருள்களின் இயல்பினை உள்ளவாறு காட்டித் தானும் உடனின்று காணும் உயிர் போல, உயிர்களுக்குப் பொருளின் இயல்பினை அறிவுறுத்தி அவற்றோடு பிரிப்பின்றி உயிர்க்குயிராய் உடனிருந்து அறிந்து உதவி செய்பவனும் அவ்விறைவனே. உயிர்கள் இடைவிடாது சிந்தித்துத் தெளிந்து போற்றுதற்குரிய நிலைத்த உண்மைப் பொருளாக விளங்குபவனும் அவனே. ஒளிதரும் சுடர்ப்பொருள்களும் நிலனும் வானுமாகிய உலகியற்பொருள்களோடு விரவி நின்று உலகத்தை இயக்கி நிற்பவனும் அவனே. * (* அற்புதத் 20.) பிறரால் அறிந்துகொள்ள முடியாத பெருமையை யுடையவனும் பிறர்

அறிதற்குக் கருவியாகிய மெய்யுணர்வாக விளங்குபவனும் எம்பெருமானாகிய இறைவனேயாவன். நுண்ணறிவு வாய்க்கப் பெறாதார் தாம்கற்ற நூற்புலமை யொன்றனையே கருவியாகக் கொண்டு தமக்குத் தோன்றியன பலவும் பேசித்திரிக. நீலமணிபோலும் கண்டத்தினையுடைய சிவபெருமானாகிய இறைவனது பெருமையே தனக்கு மேலாவதெதுவுமின்றி உயர்ந்து விளங்குவது. தவச்செல்வராகிய பெருமக்கள் எந்தச்சமய வேடத்தை மேற்கொண்டு தன்னை எந்த உருவத்திற் சிந்தித்துப் போற்றுகின்றார்களோ அன்பால் நினைந்து வழிபடும் அடியார்களாகிய அவர்களுக்கு அவர்கள் நினைந்த திருமேனி கொண்டு தோன்றி அருள் வழங்குபவன் அப்பெருமானேயாவன். மதிவளர் சடைமுடியிறைவனை அறிவினாலும் எற்புச் சட்டமாகிய உடம்பினாலும் இகழாது போற்றி வழிபடும் அன்பர்கள் அவனது திருவடியினையடைந்து இன்புறுவதல்லது. இவ்வுலகில் எலும்போடியைந்த யாக்கையைப் பெற்று மீளப்பிறவார். எம்பெருமானை உள்ளத்தே நினைந்து போற்றும் சிந்தையுடையவராய் வாழுந்திறம் அவனது திருவருளாற் கிடைத்தற்குரியதன்றி மக்களால் முயன்று பெறுதற்குரிய எளிமையுடையதன்று. இறைவனது திருமேனி செங்கதிர் தோன்றும் காலைப் பொழுதினைப் போன்று ஒளி திகழும் செம்மேனியாகும். அதன்கண் பூசப்பெற்று விளங்குந் திருநீறு நண்பகற் பொழுதினையொத்து வெண்மையான ஒளியை வீசுகின்றது. இறைவனது செஞ்சடை மாலைப்பொழுதிற் செவ்வானத்தின் தோற்றமுடையாய்த் திகழ்கின்றது. உலகமுய்ய நஞ்சினையுண்டடக்கிய அப்பெருமானது திருநீல கண்டம் நள்ளிருட்பொழுதின் தோற்றமுடையதாய் விளங்குகின்றது. என இவ்வாறு காரைக்காலம்மையார் இறைவனைப் படர்க்கையில் வைத்துப் பாடிப் போற்றுந் திருப்பாடற் குறிப்புக்களால், இயல்பாகவே பாசங்களின் நீங்கிய இறைவன் உலகப்பொரு ளொன்றினுந் தோய்வின்றிச் சிவம் எனத்தனித்து நிற்கும் இயல்பும், உலகெலாமாகி வேறாய் உடனுமாய் உயிர்களுக்கு அருள்வழங்கு மாற்றால் சிவத்துடன் பிரிக்க முடியாத திருவருட் சத்தியாக விளங்குஞ் சிறப்பும், உலகத்தைப் படைத்துக் காத்து ஒடுக்கி இயக்குதலாற் பதியெனப் பெயர் பெற்றுத் தனிமுதல்வனாக விளங்குந் தகவும், உலகமே உருவமாக விளங்கும், அம்முதல்வனது திருவுருவத்தைக் கண்டு வழிபடுந்திறமும் இனிது புலனாதல் காணலாம்.

இனி, பூதத்தாரும் காரைக்காற்பேயாரும் சேர்ந்து பாடிய ஆரிடவெண்பாவாக,

**கறைப்பற் பெருமோட்டுக் காடு கிழவோட்**
**கரைந்திருந்த சாந்தைத்தொட் டப்பேய்**
**மறைக்க வறியாது மற்றுந்தன் கையைக்**
**குறைக்குமாங் கூர்ங்கத்தி கொண்டு**

என்ற பாடலை யாப்பருங்கலவிருத்தி யுரையாசிரியர் எடுத்துக் காட்டியுள்ளார். யாப்பருங்கலவிருத்தியில் காரைக்காற் பேயார் என்றது காரைக்காற்பேயம்மையார் என்ற பாட பேதத்துடன் காணப்படுதலால் இவ் ஆரிடவெண்பாவைப் பாடிய காரைக்காற்பேயாரென்பவர் காரைக்காலம்மையாரேயாவரெனக் கொள்ளுதற்கு இடமுளது. இவருடன் இவ்வெண்பாவைப் பாடிய பூதத்தார் என்பவர் முதலாழ்வார் மூவருளொருவராகிய பூதத்தாழ்வாரெனத் திரு. மு. இராகவையங்காரவர்கள் கருதுவர். மாமல்லனாகிய நரசிம்மபல்லவன் தன் பெயரால் அமைத்த மாமல்லபுரத்தை "மாமல்லை கோவல் மதிற் குடந்தை" என்ற பாடலிற் பூதத்தாழ்வார் குறிப்பிட்டுப் போற்றுதலால் அவர் வாழ்ந்த காலம் மாமல்லனாகிய நரசிம்மபல்லவனது ஆட்சிக் காலமாகிய கி. பி. ஏழாம் நூற்றாண்டிற்கு முந்தியதன்றென்பது நன்கு துணியப்படும். கி. பி. ஆறாம் நூற்றாண்டின் இறுதியிலும் ஏழாம் நூற்றாண்டின் இடையிலும் வாழ்ந்த தேவார ஆசிரியர்களாகிய திருநாவுக்கரசர்க்கும் திருஞானசம்பந்தர்க்கும் சில நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட காலப் பகுதியில் வாழ்ந்தவர் காரைக்காலம்மையாரென்பது முன்னர் விளக்கப்பட்டது. ஆகவே வேறுவேறு காலத்தவராகிய காரைக்காலம்மையாரும் பூதத்தாழ்வாரும் மேற்காட்டிய ஆரிடவெண்பாவைப் பாடினார்களெனக் கொள்ளுதல் ஏற்புடையதாகத் தோன்றவில்லை. யாப்பருங்கலவிருத்தியிற் குறிக்கப்பட்ட பூதத்தார் பூதத்தாழ்வாரின் வேறெனவே கொள்ளுதல் வேண்டும். அல்லது இவ் ஆரிட வெண்பா இவ்விருபெரு மக்கள் பாடியதாகப் பிற்காலத்துப் புலவரொருவராற் பாடப்பட்டதாதலும் கூடும். இதனைக் காரைக்காலம்மையார் பாடினாரெனத் துணிந்து கூறுவதற்கு அம்மையார் வரலாற்றில் எத்தகைய சான்றுமில்லை.

## 3. ஐயடிகள் காடவர்கோன் நாயனார்

பதினொராந் திருமுறையில் ஐந்தாவது பிரபந்தமாகத் தொகுக்கப் பெற்றுள்ள க்ஷேத்திரத் திருவெண்பாவை அருளிச் செய்தவர் ஐயடிகள் காடவர்கோன் நாயனாராவர். இவரை 'ஐயடிகள் காடவர்கோன் அடியார்க்கும் அடியேன்' எனத் திருத்தொண்டத் தொகையில் நம்பியாரூரர் போற்றிப் பரவியுள்ளார்.

உலகிற் புகழ் நிலவ அரசு புரிந்த பல்லவர் குலத்திலே ஐயடிகள் தோன்றினார். நாட்டில் வறுமையும் பகையும் தோன்றிக்

குடிமக்களை வருத்தா வண்ணம் சிவனடித் தொண்டு பூண்டொழுகும் நீதி நெறியினை மேற்கொண்டு செவ்விய முறையில் ஆட்சி புரிந்தார். எங்கும் திருத்தக விற்றாகிய செல்வப் பொலிவுடன் புகழ் வளரவும் எல்லாவுயிர்களும் பெருமைக்குக் காரணமாகிய நற்பண்புகளுடன் இன்புற்று வாழவும் பகைப்புலமாகிய பிற நாடுகளையும் வென்று அடிப்படுத்து இவ்வுலகில் அறநெறியும் அருள்நெறியாகிய சைவத் திருநெறியும் அருமறையின் துறைகளும் விளக்கமுற அரசியலை நிகழ்த்துவாராயினர். மன்னரெல்லாம் தம் ஆணைவழி நின்று பணிபுரியவும் வடநூல் தென்றமிழ் முதலாகிய கலைத்தொண்டு நிகழவும் குடிமக்களை நன்முறையிற் பேணிக்காத்த இவ்வேந்தர் பிரானார், தம்பா லமைந்த அரசுரிமையாகிய ஆட்சிக் கடமை தாம் மேற்கொண்டுள்ள சிவத்தொண்டிற்குத் தடையாய்த் துன்பம் விளைப்பதெனக் கருதி, அரசுரிமையைத் தம் அருமைப் புதல்வன்பால் ஒப்படைத்து விட்டுச் சிவநெறித் திருத்தொண்டினையே விரும்பி மேற்கொள்வாராயினர். தொண்டுரிமை பூண்ட இவ்வேந்தர் அண்டர்பிரானாகிய சிவபெருமான் அமர்ந்தருளுந் திருக்கோயில்களைக் கண்டு வணங்கித் திருத்தொண்டு செய்து ஒவ்வொரு திருத்தலங்களையும் ஒவ்வொரு வெண்பாவினாற் பாடிப் போற்றும் பேரார்வமுடையராய்ப் பெரும்பற்றப் புலியூராகிய தில்லையை யடைந்தார். திருச்சிற்றம்பலமாகிய ஞான வெளியிலே அருட் கூத்தியற்றும் நிருத்தனாரது திருக்கூத்தினை நேரே கண்டு மகிழ்ந்தார். பேராத காதலால் தாம் பாடிய செந்தமிழ் வெண்பாவாகிய மென்மலரால் அப்பெருமானை அருச்சித்துப் போற்றினார். தில்லைப் பெருமானதருள் பெற்ற ஐயடிகள், இறைவன் கோயில் கொண்டருளிய ஏனைத் திருத்தலங்கள் பலவற்றையும் பணிந்து திருத்தொண்டு செய்து அத்திருத்தலங்களை எவ்வுலகத்தவரும் புகழ்ந்தேத்தும் இனிமை வாய்ந்த ஒவ்வொரு தமிழ் வெண்பாவினாற் பாடிப் போற்றினார். இவ்வாறு செந்தமிழாற் சிவநெறி வளர்த்த ஐயடிகள் காடவர் கோன் நாயனார், அடியார் பலரும் இன்புறத் தமக்கு இயைந்த திருப்பணிகள் பலவற்றையும் நெடுங்காலம் செய்திருந்து பின்பு சிவலோகத்து இறைபணிபுரியும் அடியார்களுடன் கூடிப் பரமர் திருவடி நிழற்கீழ் அமர்ந்து ஈறிலாப் பேரின்ப வாழ்வினைப் பெற்றார் என்பது வரலாறு. இவ்வரலாற்றினைத் தொண்டர் சீர்பரவுவாராகிய சேக்கிழார் சுவாமிகள் திருத்தொண்டர் புராணத்தில் விரித்துக் கூறியுள்ளார்கள்.

காடவரென்பது, பல்லவ குலத்தார்க்கு வழங்கும் பொதுப்பெயர். பல்லவர்குடியிற் பிறந்து தொண்டை நாட்டினையாளும் வேந்தர் பெருமானாக விளங்கினமையால்

இவர் காடவர்கோன் என அழைக்கப்பெற்றார். இவர் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு அரசுபுரிந்தவரென்பது 'கன்னிமதில் சூழ்காஞ்சிக் காடவர் ஐயடிகளார்' எனச் சேக்கிழாரடிகள் கூறுதலாற் புலனாம். காடவர்கோனாகிய இவர் அரசியல் வாழ்வு துன்பந்தருவதென வுணர்ந்து அரசுரிமையைத் தன் புதல்வன்பால் ஒப்புவித்து விட்டுப் பற்றற்ற சிந்தையராய்ச் சிவத்தொண்டு புரிந்து வாழ்ந்த நாளில் இவர்க்கு வழங்கிய சிறப்புப் பெயர் ஐயடிகள் என்பதாகும். ஐயன் அடிகள் என்ற தொடரே ஐயடிகள் என்று மருவியதெனத் தெரிகிறது. எவ்வுயிர்க்குந் தலைவனாகிய இறைவனையும் அவனடியார்களையும் உலகினையாளும் அரசனையும் அடிகள் என்ற சொல்லாற் குறிப்பிட்டுப் போற்றுதல் நெடுங்காலமாகத் தமிழகத்தில் நிலைபெற்று வரும் வழக்காறாகும். இம்மரபின்படி ஆற்றல் மிக்க வேந்தராகவும் சிறந்த சிவனடியாராகவும் திகழ்ந்த காடவர்கோன் நாயனார் அடிகள் என்ற பெயரால் அழைக்கப்பெற்றமை பெரிதும் பொருத்த முடையதேயாம். அரசியல் ஆட்சி முறையில் ஆட்சியை மேற்கொண்டிருக்கும் வேந்தன் தன் தந்தையை ஐயன் எனக் குறிப்பிடும் வழக்க முண்டென்பது பல்லவர் கல்வெட்டுக்க ளாலும் சோழர் கல்வெட்டுக்களாலும் நன்கு புலனாகின்றது. காடவர்கோனாகிய இப்பல்லவ வேந்தர், அரசாட்சி தம்முடைய தொண்டுக்கு இடையூறாவதெனத் தெளிந்து, நம் மைந்தன்பால் அரசுரிமையை ஒப்புவித்து விட்டு நெடுநாள் சிவத்தொண்டு புரிந்திருந்தாரெனச் சேக்கிழார் தெளிவாகக் கூறுதலால், இவர், தம் மைந்தனது ஆட்சிக் காலத்தில் ஐயனடிகள், ஐயடிகள் என அரசனாலும் குடிமக்களாலும் அழைக்கப்பெற்றார் எனக் கொள்ளுதல் பொருந்தும்.

இனி, ஐயடிகள் காடவர்கோன் எனச் சிறப்பிக்கப் பெற்ற பல்லவ வேந்தர் யாவரென்பதும் அவர்க்கு மைந்தராக விளங்கி அரசு புரிந்தவர் யாவரென்பதும் இங்கு ஆராயத் தக்கனவாகும். சிவனடியார்களுள் ஒருவரும் தம் காலத்தில் அரசு வீற்றிருந்த பல்லவ வேந்தருமாகிய கழற்சிங்க நாயனாரைப் போற்றக் கருதிய நம்பியாரூரர்,

> 'கடல் சூழ்ந்த உலகெலாங் காக்கின்றபெருமான்
> காடவர் கோன் கழற்சிங்கன் அடியார்க்கும் அடியேன்'

எனத் திருத்தொண்டத் தொகையிற் பாராட்டிப் போற்றியுள்ளார். இங்கே கழற்சிங்கன் என்ற பெயராற் குறிக்கப்பட்ட பல்லவ வேந்தனாவான் க்ஷத்திரியசிம்மன், நரசிம்மன், இராசசிம்மன் எனச் சிங்கன் என்ற பெயரால் இணைத்துப் போற்றப்படும் இராசசிம்ம பல்லவனே யென்பது முன்னர் ஆராய்ந்து விளக்கப்பட்டது. கழற்சிங்கனாகிய இப்பல்லவ வேந்தன் காடவர்கோன் என்னும்

பெயருடைய வேந்தனுக்கு மகனென்பது 'காடவர்கோன் கழற்சிங்கன்' என இவனை நம்பியாரூரர் குறித்துப் போற்றுதலாற் புலனாம். ஆகவே கழற்சிங்கனுக்குத் தந்தையாகிய காடவர்கோன் என்பார், ஐயடிகள் காடவர்கோனாகிய இவ்வேந்தர் பெருமானே என்பது நன்கு பெறப்படும். காஞ்சியிற் கயிலாயநாதர் திருக்கோயிலைக் கட்டிய இராசசிம்ம பல்லவனே திருத் தொண்டத் தொகையிற் போற்றப் பெற்ற கழற்சிங்க நாயனா ராதலின், அவருடைய தந்தையெனக் கருதப்படும் ஐயடிகள் காடவர்கோன் நாயனார் இராசசிம்ம பல்லவனுடைய தந்தையாகிய முதலாம் பரமேசுரவர்மனே யென்பதும், அவர் தம் மைந்தனுடைய ஆட்சிக்காலத்திலும் வாழ்ந்து பணிசெய்த வராதலின் அப்பெருந்தகையாரை அரசனும் குடிமக்களும் ஐயடிகள் என மதித்துப் போற்றினார்களென்பதும், கழற்சிங்கன் ஆட்சிக்காலத்தில் வாழ்ந்த நம்பியாரூரர் இப்பெயர் வழக்கத்தை நன்கறிந்தவராதலின் ஐயடிகள் காடவர்கோன் என அவரைத் திருத்தொண்டத் தொகையிற் சிறப்பித் தருளினரென்பதும் ஈண்டு உய்த்துணரத்தக்கனவாகும்.

இராசசிம்ம பல்லவனுடைய தந்தையாகிய பரமேசுரவர்மன், இரண்டாம் மகேந்திரனுடைய மகனாவன். இவன் கி.பி.670 முதல் 685 வரை ஆட்சிபுரிந்தானென்பர். இவனது ஆட்சிக்காலத்தில் இரண்டாம் புலிகேசியின் மைந்தனாகிய விக்கிரமாதித்தன் என்னும் சளுக்க வேந்தன் காஞ்சியின் மேற் படையெடுத்துச் சென்று பல்லவனை வென்று காஞ்சியைக் கைப்பற்றிச் சோழ நாட்டையும் கைக்கொண்டு காவிரிக்குத் தென்கரையிலுள்ள உரகபுரத்தில் (உறையூரில்) தங்கியிருந்த செய்தி அவன் அளித்த கத்வால் சாசனத்தால் அறியப்படும். இங்ஙனம் சோழ நாட்டிற் புகுந்த விக்கரமாதித்தன், பாண்டி நாட்டையும் கைப்பற்றக் கருதிப் போருக்கு எழுந்த பொழுது பாண்டியன் நெடுமாறன் மகனான கோச்சடையன் என்பான் திருச்சிராப்பள்ளிக்கு அருகிலுள்ள மருதூரில் விக்கிரமாதித்தனது சேனையைத் தேக்கி மங்கலபுரத்தில் அவனை வென்றமையால் இரணதீரன் என்ற சிறப்புப் பெயரைப் பெற்றான் என்ற செய்தி வேள்விக்குடிச் செப்பேட்டிற் குறிக்கப்பட்டுள்ளது. விக்கிரமாதித்தன் காஞ்சி நகரைக் கைப்பற்றியபோது அவன்பால் தோல்வியுற்றோடிய, பரமேசுரவர்மன் தன்னுடைய சேனைகளை ஒருங்கு திரட்டிக் கொண்டு சென்று திருச்சிராப்பள்ளிக்கு அருகிலுள்ள பெருவளநல்லூரில் விக்கிரமாதித்தனை எதிர்த்துப் பொருதான். இங்கு நிகழ்ந்த கடும்போரில் தன்னுடைய சேனைகளையெல்லாம் இழந்து தோல்வியுற்ற விக்கிரமாதித்தன் தன்னந்தனியே ஒரு கந்தையைப் போர்த்துக் கொண்டு போர்க்களத்திலிருந்து தப்பியோடினான் எனக் கூரம் சாசனம்

கூறுகின்றது. காஞ்சியிலுள்ள கயிலாசநாதர் கோயிலில் வரையப்பட்ட கல்வெட்டொன்றில் ரணரசிகபுரமர்த்தனன் எனப் பரமேசுரவர்மன் குறிக்கப்படுவதால், இவன் ரணரசிகனாகிய விக்கிரமாதித்தனைத் துரத்திச் சென்று அவனது தலைநகராகிய வாதாபியை அழித்துத் திரும்பியிருத்தல் வேண்டுமென உய்த்துணர்ந்துரைப்பர் சிலர். பரமேசுரவர்மன் சளுக்க வேந்தனாகிய விக்கிரமாதித்தனோடு புரிந்த இப்போர்ச் செயல்களையே 'வெய்யகலியும் பகையும் மிகையொழியும் வகையடக்கி.................. ஐயடிகள் நீதியால் அடிப்படுத்துஞ் செங்கோலார்' எனவும், 'சேணிலத்தில் எவ்வுயிரும் பெருமையுடன் இனிதமரப் பிறபுலங்கள் அடிப்படுத்து' எனவும் வரும் தொடர்களால் திருத்தொண்டர் புராண ஆசிரியர் குறித்தனரெனக் கொள்ளுதல் பொருத்தமாகும்.

பரமேசுர வர்மனாகிய இப்பல்லவ வேந்தன் சிவபெருமான்பால் அளவிலாப் பேரன்பு செலுத்திய சிறந்த சிவனடியானென்பது, இவன் கூரம் என்ற ஊருக்குப் பரமேசுர மங்கலமெனப் பெயர் தந்து அதன்கண் விச்சாவிநீத பல்லவ பரமேச்சுரக் கிருகம் என்ற சிவலாயத்தைக் கட்டியிருத்தலாலும், மாமல்லபுரத்தில் இவன் பாட்டனாகிய நரசிம்ம வர்மனா லமைக்கப்பட்டதும் இவனால் முற்றுவிக்கப் பெற்றதுமாகிய அத்யந்த காம பல்லவேச்சுரகிருகம் என்ற சிவாலயத்தை யடுத்த கணேசாலயம் என வழங்கும் ஒரு கற் கோயிலிற் பொறிக்கப் பெற்றுள்ள வடமொழிச் சுலோகங்கள், பக்தி நிறைந்த மனத்திற்பவனாகிய சிவனை இடைவிடாது சிந்தித்துக் கொண்டு இருப்பவனென்றும் சிவ வழிபாட்டிற் பேரார்வமுடையவ னென்றும் இவனது சிரசின் மேல் சங்கரன் எப்போதும் குடிகொண்டெழுந்தருளி யுள்ளானென்றும் இவனைச் சிறந்த சிவனடியானாகக் குறித்துப் போற்றுதலாலும் நன்கு விளங்கும். கருங்கற்களை வெட்டியெடுத்து அடுக்கிக் கட்டிய தமிழகத்தின் முதற் கற்கோயிலாகத் திகழ்வது கூரத்தில் பரமேசுரவர்மனால் நிறுவப்பெற்ற விச்சாவிநீத பல்லவ பரமேச்சுர கிருகமேயாகும். இவ்வாறு சிவபெருமானுக்குப் புதிய முறையிற் கற்றளி யமைத்துச் சிவநெறியைக் கடைப்பிடித்து அறம் வளர ஆட்சி புரிந்த இம் மன்னர் பெருமானை 'செய்ய சடையார் சைவத் திருநெறியால் அரசளிப்பார்' எனவும் 'தருமநெறி தழைத்தோங்கத் தாரணிமேற் சைவமுடன் அருமறையின் துறை விளங்க' அரசளித்தாரெனவும் சேக்கிழார் பெருமான் குறிப்பிட்டாரெனக் கொள்ளுதல் பெரிதும் ஏற்புடையதாகும். மாமல்ல புரத்திலுள்ள கணேசாலயத்திற் பொறிக்கப் பெற்றுள்ள வடமொழிச் சுலோகங்கள் பரமேசுரவர்மனாகிய இவ்வேந்தனுக்கும் இவனால் வழிபடப் பெறும் தனி முதற் பொருளாகிய சிவபெருமானுக்கும்

பொருந்தும்படி சிலேடைப் பொருள் தருவனவாக அமைந்திருத்தலை நோக்குங்கால் அச்சுலோகங்களின் பொருள் நலங்களையுணர்ந்து மகிழும் வடமொழிப்புலமை இவ்வேந்தன் பால் அமைந்திருந்த தென்பது நன்கு புலனாம். 'வடநூல் தென்றமிழ் முதலாம் பன்னுகலைப் பணி செய்யப் பாரளிப்பார்' என ஐயடிகளைக் குறித்துச் சேக்கிழார் கூறும் வாய்மொழி இவ்வேந்தனுக்கு முழுதும் ஏற்புடையதாதல் காணலாம். மேல் எடுத்துக் காட்டிய குறிப்புக்களால் சிறந்த சிவ பக்தனாகவும் வேந்தர் வேந்தனாகவும் விளங்கிய இப்பரமேசுரவர்மன் சிவனருளால் மெய்யுணர்வு கைவரப் பெற்றுத் தனது அரசுரிமையைத் தன் புதல்வனும் பெரு வீரனுமாகிய ராஜ சிம்ம பல்லவன் பால் ஒப்புவித்துத் துறவு நெறியை மேற்கொண்டு திருநெறிய தமிழ் வளர்க்கும் சிவஞானியாகி ஐயடிகள் காடவர் கோன் எனப் போற்றப் பெற்றிருத்தல் வேண்டுமென்பது இனிது புலனாதல் காண்க.

இனி, ஐயடிகள் காடவர் கோனாகிய இப்பல்லவ வேந்தர் வடமொழிப் புராணமொன்றில் சிம்ஹாங்க, பத சிம்ஹா, பஞ்சபத சிம்ஹா என்ற பெயர்களையுடையவராகக் குறிக்கப் பட்டுள்ளரெனவும் அவருடைய மகன் பீமவர்மன் என அந்நூல் கூறுகின்றதெனவும் பல்லவர் குடி வழியில் பீமவர்மன், சிம்ம விஷ்ணு என்பவர்களுக்குத் தந்தையாகக் குறிக்கப்பட்டோன் மூன்றாம் சிம்ம வர்மனாதலால் அவனே ஐயடிகள் காடவர் கோனாவனெனவும், ஆகவே ஐயடிகள் காடவர் கோன் நாயனார் என்னும் இவ்வாசிரியர் தேவார ஆசிரியர் மூவர்க்கும் முற்பட்டவராய்க் கி. பி. 550-575இல் வாழ்ந்தவரெனவும் கூறுவாருமுளர். * (*டாக்டர் மா. இராசமாணிக்கனார் எழுதிய பெரிய புராண ஆராய்ச்சி பக்கம் 95,96).

கி. பி. ஏழாம் நூற்றாண்டிற்கு முற்பட்ட பல்லவ மன்னர்கள் தமிழ் மொழியில் பற்றில்லாதவரென்பதும் தமிழை நன்கு பயிலாதவரென்பதும் அவர்களது ஆட்சிக் காலத்தில் வெளிவந்த சாசனங்கள் யாவும் தமிழல்லாத வேற்று மொழியிற் காணப் படுதலாலும் அவர்கள் புனைந்து கொண்ட பட்டங்களு ளொன்றேனும் தமிழாக இல்லாமையாலும் நன்கு துணியப்படும். கி. பி. ஏழாம் நூற்றாண்டு தொடங்கியே பல்லவர்கள் தமிழ் மொழியிலும் சிவநெறியிலும் பற்றுடையவராய்த் தமிழ் வேந்தர்களாக மாறினார்களென்பது அவர்களது ஆட்சி முறையினையும் அவரளித்த சாசனங்களையும் நோக்குவார்க்கு நன்கு புலனாம். எனவே க்ஷேத்திரத் திருவெண்பாவாகிய இனிய செந்தமிழ்ப் பாடல்களை அருளிச் செய்த புலமைச் செல்வராகிய ஐயடிகள் காடவர் கோன் நாயனார் கி.பி. ஏழாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டுத் தோன்றியவரெனக் கொள்ளுதலே ஏற்புடையதாகும்.

கி. பி. 600 முதல் 630 வரை ஆட்சி புரிந்த மகேந்திர பல்லவன் என்பான் முதலிற் சமண சமயத்தை மேற்கொண்டொழுகிப் பின்பு திருநாவுக்கரசடிகளது திருத்தொண்டின் திறத்தாற் சைவனாகிச் சிராப் பள்ளிக் குன்றில் இப்பொழுதுள்ள சிவாலயத்தைக் கட்டினான் என்பதும் இக்கோயில் கட்டப் பெறுதற்கு முன்பு இம்மலை சிரா என்னும் சமண முனிவருடைய தவப்பள்ளியாகத் திகழ்ந்ததென்பதும் ஆராய்ச்சியாளர் துணிபாகும்.* (* திருவாளர் தி. வை. சதாசிவப் பண்டாரத்தாரவர்கள் ஆராய்ந்தெழுதிய 'திருச்சிராப்பள்ளி' (செந்தமிழ் 45-ஆம் தொகுதி பக்-77-84) என்ற கட்டுரையை நோக்குக.) மகேந்திரவர்மன் சைவனாகத் திருந்தியபின் அமைத்த இத் திருச்சிராப்பள்ளித் திருக்கோயிலை ஐயடிகள் தாம் பாடிய க்ஷேத்திரத் திருவெண்பா 17ஆம் பாடலிற் குறிப்பிடுதலால், அவர் மகேந்திரவர்மனுக்குக் காலத்தாற் பிற்பட்டவரென்பது நன்கு தெளியப்படும். ஆகவே ஐயடிகள் என்ற பெயரை வடமொழிப் புராணமொன்றில் தெளிவின்றிக் கூறப்பட்ட பஞ்சபத சிம்ஹா என்பதன் மொழிபெயர்ப்பாகக் கொண்டு மூன்றாம் சிம்மவர்மனே ஐயடிகள் காடவர்கோன் என்பார் கூற்று சிறிதும் பொருந்தாதென்பது திண்ணம்.

வேந்தர் பெருமானாக, விளங்கிய ஐயடிகள் காடவர்கோன் என்பார், அரசியலாட்சியைத் துறந்து தில்லைத் திருச்சிற்றம்பலம் முதலாகவுள்ள சிவாலயங்கள் பலவற்றையும் நேரில் கண்டு வணங்கி ஒவ்வொரு திருத்தலத்தினையும் ஒவ்வொரு வெண்பாவினாற் பாடிப் போற்றினார் என்பது வரலாறு. இவ்வாறு ஐயடிகள் காடவர்கோன் நாயனார் சிவபெருமான் எழுந்தருளியிருக்குந் திருத்தலங்களைப் போற்றிப் பரவிய இனிய தமிழ் வெண்பாக்களின் தொகுதியே க்ஷேத்திரத் திருவெண்பா என்ற பிரபந்தமாகும். உலகமக்களுக்கு அருள் புரிதற் பொருட்டு இறைவன் திருக்கோயில் கொண்டெழுந்தருளியுள்ள சிவதலங்கள் யாவும் மேலான வீட்டுலகமாக விளங்கும் மெய்ம்மையை அறிவுறுத்தும் வெண்பாக்களால் இயன்றமையால்* (* சத்தித் தடக்கைக் குமரனற்றாதைதன் தானமெல்லாம்முத்திப் பதமொரோர் வெண்பா மொழிந்து' என்பர் நம்பியாண்டார் நம்பிகள். இந்நூல் க்ஷேத்திரத் திருவெண்பா என வழங்கப் பெறுவதாயிற்று. வேந்தர் பெருமானாகவும் சிறந்த செந்தமிழ்ப் புலவராகவும் விளங்கிய இவ்வாசிரியர், தமிழ்நாட்டிலுள்ள திருத்தலங்கள் பலவற்றையும் நேரிற் கண்டு வெண்பா மலர்களால் அருச்சித்துப் போற்றியிருத்தல் கூடுமாதலின் இவராற் பாடப்பெற்ற திருப்பாடல்கள் நூற்றுக் கணக்கினவெனக் கொள்ள இடமுண்டு. எனினும் இவர் பாடியனவாக இப்பொழுது இருபத்து நான்கு வெண்பாக்களே கிடைத்துள்ளன. எஞ்சிய பாடல்கள் தமிழ் மக்களது விழிப்பின்மையால் பேணப்படாது மறைந்தன போலும்.

சிவபெருமான் திருக்கோயில் கொண்டு வீற்றிருந்து அருள் வழங்குஞ் சிறப்புடைய திருத்தலங்களை நெஞ்சினால் நினைந்தும் வாயினால் வாழ்த்தியும் அடைந்து மெய்யினால் தொண்டு புரிந்தும் போற்றுமுகமாகப் பிறவித் துயர் நீங்கி இறைவன் திருவடிகளைச் சார்ந்து இன்புறலாமென்பது க்ஷேத்திரத் திருவெண்பாக்களிலமைந்த திரண்ட கருத்தாகும். மறவாத பேரன்பினால் இறைவனது திருவருள் ஞானத்தால் சிவானந்த அநுபூதியைத் தலைப்பட்ட மெய்யடியார்கள் சிவ வேடத்தையும் திருக்கோயில்களையும் சிவனெனவே தெளிந்து வழிபடுவ ரென்பதற்குச் சிவாலயங்களமைந்த திருத்தலங்களைப் பாடிப் பரவிய ஐயடிகள் காடவர்கோன் நாயனார் சிறந்த இலக்கியமாகத் திகழ்கின்றார். இவராற் பாடப்பெற்ற வெண்பாக்கள் யாவும் யாக்கை நிலையாமையையும் இளமை நிலையாமையையும் செல்வம் நிலையாமையையும் நன்கு வற்புறுத்து வனவாகவும், நோயினாலும் முதுமையினாலும் உடல் தளர்ந்த நிலையில் மனை மக்கள் முதலிய சுற்றத்தார் அழுதிரங்க உயிர் உடலை விட்டுப் பிரிவதற்கு முன்னரே இறைவன் கோயில்கொண்டருளிய திருத்தலங்களை வழிபட்டுய்தல் வேண்டுமென அறிவுறுத்துவன வாகவும் மோனை, எதுகை, யமகம், திரிபு முதலிய அணிநலங்களைப் பெற்று விளங்குகின்றன.

எங்கும் ஓடித்திரிந்து தொழில் புரியும் ஆற்றல் உடம்பிற் குறைந்தபோது, முன்பு சொல்வழி நடந்த சுற்றத்தார்களும் மனம் மாறுபடுகின்றனர். முதுமையும் விரைந்து பற்றுகின்றது. தேடிப் பெறுதற்குரிய நல்ல மக்கட் சட்டகமாகிய இவ்வுடம்பு சிதைந்து பொதுவிடமாகிய சுடுகாட்டிற் சுடப்பட்டழிதற்கு முன் இறைவன் திருக்கூத்தியற்றும் தில்லைச் சிற்றம்பலத்தை நெஞ்சமே நினைந்து போற்றுவாயாக என்பார்,

**ஓடுகின்ற நீர்மை ஒழிதலுமே உற்றாருங்**
**கோடுகின்றார் மூப்புங் குறுகிற்று - நாடுகின்ற**
**நல்லச்சிற் றம்பலமே நண்ணாமுன் நன்னெஞ்சே**
**தில்லைச்சிற் றம்பலமே சேர்.**

எனத் தம் நெஞ்சத்திற்கு அறிவுறுத்துவதாக அமைந்த பாடல், ஐயடிகள் பெற்ற உலக அனுபவத்தினை நன்கு தெளிவிப்பதாகும்.

இருந்த இடத்தைவிட்டெழுவதற்கு வலியின்றி அவ் விடத்தில் இருந்தும் உடல் கூனி வளைய ஒரு கையிற் கோலூன்றித் தள்ளாடி நடந்து இருமல் நோயாற் பெரிதும் வருந்தி நுரைத்துக் கோழை ஆறு போல் வாய் வழியே பாய்வதற்கு முன் ஐயாறு என்னும் திருத்தலத்தினை வாயாற்சொல்லி வழிபட்டு உய்வாயாக என அறிவுறுத்துவதாக அமைந்தது,

**குந்திநடந்து குனிந்தொகை கோலூன்றி**
**நொந்திருமி யேங்கி நுரைத்தேறி - வந்துந்தி**
**ஐயாறு வாயாறு பாயாமுன் நெஞ்சமே**
**ஐயாறு வாயால் அழை.**

*என்ற திருவெண்பாவாகும். இத்திருப்பாடல் முதுமை நோய் முதலியவற்றால் மக்கள் யாக்கை யெய்தும் இழி நிலையை விளக்கி இளிவரல் என்னுஞ்சுவைக்கு எடுத்துக்காட்டாக விளங்குதல் காண்க.*

*உடம்பைவிட்டு உயிர் பிரிந்த நிலையில் அவ்வுடம்பு விறைத்துக் கொள்ளாதபடி ஆடையின் கரைகளைக் கிழித்து அவற்றால் கால்களையும் கைகளையும் கட்டிப் பிணமாகிய அதற்கு மாலை தலைக்கணிந்து கண்ணில் மையெழுதிக் கோலஞ்செய்து அதன்மேற் பருநூலால் நெய்த கோடித் துணியைப் போர்த்து மகளிர் பலர் கூடியிருந்து அழுது அரற்றும் துன்பநிலையினதாகிய சாக்காடு நேர்தற்குமுன் இறைவன் எழுந்தருளிய திருக்கோடிகா என்னுந் திருத்தலத்தினை யடைந்து வழிபட்டு உய்திபெறுதல் வேண்டும் என வற்புறுத்துவது,*

**காலைக் கரையிழையாற் கட்டித்தாங் கையார்த்து**
**மாலை தலைக்கணிந்து மையெழுதி- மேலோர்**
**பருக்கோடி மூடிப் பலரழா முன்னம்**
**திருக்கோடி காவடைநீ சென்று.**

*என்ற திருவெண்பாவாகும். இவ்வாறு ஒருவனது உயிர் உடம்பைவிட்டு நீங்கியபின் அவனுடைய வாழ்க்கைத்துணை ஆகிய இல்லாளும் அவன் ஈட்டிய பெரும்பொருளும் மனையின் அளவே அமைவதன்றி அவனைத் தொடர்ந்து செல்லுதலில்லை. அவனைப்பற்றிப் புகழ்ந்தும் இகழ்ந்தும் கூறுகின்ற சொற்களும் அவனை நன்கறிந்து பழகிய அயலாரது நெஞ்சத்துடிப்பளவே யன்றி நெடுங்காலம் நிற்பன அல்ல. அவனுடைய நல்ல சுற்றத்தார்களும் அவனை யடக்கஞ்செய்து அன்று நீரில் முழுகிய அளவே அவனைப் பற்றிய நினைப்பை மறப்பராதலின் அவர்களும் அக்குளத்தின் நீரளவன்றி அவனைத் தொடர்வ தில்லை. நெஞ்சமே இவ்வுண்மையை யுணரவல்லாயாயின், வளைகுளம் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளிய ஈசனை நினைந்து வாழ்த்தி உய்தி பெறுவாயாக என்பார்,*

**இல்லும் பொருளும் இருந்த மனையளவே**
**சொல்லும் அயலார் துடிப்பளவே - நல்ல**
**கிளைகுளத்து நீரளவே கிற்றியே நெஞ்சே**
**வளைகுளத்துள் ஈசனையே வாழ்த்து.**

எனத் தம் நெஞ்சத்திற்கு அறிவுறுத்துகின்றார். இத்திருப்பாடல் உயிர்களுக்கு இறைவனைத் தவிரத் துணையாவார் எவருமிலர் என்னும் உண்மையைத் தெளிவாக அறிவுறுத்துவதாகும்.

மணம் பொருந்திய இதழ்களையுடைய கொன்றை மலர் மாலையையணிந்த பேரொளிப் பிழம்பாகிய சிவபெருமானுக்கு ஆளாகி ஊர்தோறும் கையில் ஓடேந்திப் பிச்சையேற்றுண்டு மகிழும் தொண்டர் வாழ்வே இவ்வுலக முழுவதும் தமது வெண்கொற்றக் குடைநிழற்கீழடங்கி வாழப்பாரெலாம் ஆளும் முடிவேந்தரது அரசியற் பெருஞ்செல்வத்தைக் காட்டிலும் மும்மடங்கு உயர்ந்ததென்பது, வேந்தர்பெருமானாக விளங்கிய ஐயடிகள் காடவர்கோன் நாயனாரது உள்ளத்துணிபாகும். இங்ஙனம் இறைவனுக்கு ஆட்பட்டு வாழும் தொண்டர் வாழ்வு, முடிவேந்தர் வாழ்வினும் மும்மடங்கு சிறந்த தென்பதனைத் தம்முடைய அநுபவத்தால் அறிந்ததனால் தான் மூடிவேந்தராக விளங்கிய இக்காடவர்கோமான் தமது அரசு பதவியினைத் துறந்து ஐயடிகள் எனப் போற்றப்பெறும் சிவனடியாராயினார் என்ற செய்தி,

**படிமுழுதும் வெண்குடைக்கீழ்ப் பாரெலாம் ஆண்ட**
**முடியரசர் செல்வத்து மும்மை - கடியிலங்கு**
**தோடேந்து கொன்றையந்தார்ச் சோதிக்குத் தொண்டுபட்**
**டோடேந்தி யுண்ப துறும்.**

எனவரும் இவரது வாய்மொழியாலும், இவ்வாய் மொழிப் பொருளையும் இவரது வரலாற்றையும் உணர்த்தப் போந்த நம்பியாண்டார் நம்பிகள் தாம் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியில்,

**சத்தித் தடக்கைக் குமரனற் றாதைதன் தானமெல்லாம்**
**முத்திப்பதமொரோர் வெண்பா மொழிந்து முடியரசா**
**மத்திற்கு மும்மைநன் றால்அரற்காய் ஐய மேற்ற லென்னும்**
**பத்திக்கடல் ஐயடிகளாகின்ற நம் பல்லவனே.**

எனக்கூறி இவரைப் பத்திக்கடல் எனப் பாராட்டிப் போற்றுதலாலும் நன்கு விளங்கும்.

வெம்மை மிக்க நஞ்சினையுண்டு மிடற்றிலடக்கி விண்ணோர்களை உய்வித்தருளிய இறைவன் வீற்றிருக்கும் திருவொற்றியூரை வழிபட்டுப் பிச்சையேற்றுண்ணுந் துறவியாக இருக்கப் பெறுவேனாயின், பற்றுக்கோடாக மூவுலகங்களையும் ஆட்சி புரிந்து குடிமக்களைப் பாதுகாத்து இறவாதிருக்கும் வாழ்வு எனக்குத் தானே வந்து கிடைத்தாலும் அதனை ஒரு பொருளாக

எண்ணி விரும்பியேற்றுக் கொள்ள மாட்டேன் என ஐயடிகள் காடவர்கோன் நாயனார் துறவு நெறியில் தமக்குள்ள பெருவேட்கையை விரித்துரைப்பதாக அமைந்தது,

**தஞ்சாக மூவுலகும் ஆண்டு தலையளித்திட்**
**டெஞ்சாமை பெற்றிடினும் யான் வேண்டேன் - நஞ்சங்**
**கரந்துண்ட கண்டர்தம் ஒற்றியூர் பற்றி**
**இரந்துண் டிருக்கப் பெறின்.**

என்ற திருவெண்பாவாகும். காடவர்கோனாகிய இவ்வேந்தர் பெருமான், தம் வாழ்நாளின் பிற்பகுதியில் அரச பதவியினைத் துறந்து இறைவனைப் போற்றியவரென்பது இத் திருப்பாடலால் நன்கு புலனாதல் காணலாம். பல யுகங்கள் அரச பதவியில் வீற்றிருந்து பெறும் எல்லாச் செல்வங்களையும் இறைவனது பொருள்சேர் புகழ்ப் பாடலைக் கேட்டு மகிழுங் கணநேரமே விளைவிக்க வல்லதென்பதை,

**நூற்றனைத்தோர் பல்லூழி நுண்வயிர வெண்குடைக்கீழ்**
**வீற்றிருந்த செல்வம் விளையாதே- கூற்றுதைத்தான்**
**ஆடாவங் கச்சா அரைக்கசைத்த அம்மான்றன்**
**பாடரவங் கேட்ட பகல்.**

என்ற பாடலில் ஐயடிகள் வியந்து போற்றியுள்ளார். இதன்கண் பகல் விளையாதே எனக் கொண்டு கூட்டி, விளையாதே என்பதற்கு விளைக்கவல்ல தல்லவா? எனப் பொருளுரைத்தல் வேண்டும். ஈண்டு பகலென்றது 'நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்' என்புழிப் போலக் கணப்பொழுது என்ற பொருளில் வழங்கியதாகும். இறைவனது பொருள்சேர் புகழ் பாடலைச் செவி மடுத்தலில் ஐயடிகள் காடவனார்க்குள்ள தணியாக் காதலை இத்திருப்பாடல் இனிது புலப்படுத்துதல் காண்க. இங்ஙனமே க்ஷேத்திரத் திருவெண்பாவாகிய இப் பிரபந்தத்திலமைந்த ஒவ்வொரு பாடலும் இப் பிரபந்தத்தைப் பாடிய ஐயடிகளது உலக அநுபவத்தினையும் அவர் பெற்ற மெய்யுணர்வினையும் ஒருங்கு விளக்குவனவாக அமைந்துள்ளன.

## 4. சேரமான் பெருமாள் நாயனார்

கார் கொண்ட கொடைக் கழறிற்றறிவார்க்கும் அடியேன் என நம்பியாரூரராற் போற்றப் பெற்ற இப்பெரியார், தம் தோழராகிய நம்பியாரூரருடன் திருக்கயிலை சார்ந்தவரென்பதும், பாணபத்திரர் பொருட்டுத் திருவாலவாயுடையார் பாடியருளிய திருமுகப்பாசுரத்தைப் பெற்றுப் பரமனையே பாடுவாராகிய அப்பாணர்க்குப் பெரும் பொருளை வரையாது வழங்கியவ ரென்பதும், தொண்டை நாட்டில் இராச சிம்மபல்லவனும்

பாண்டி நாட்டிற் கோச்சடையன் ரணதீரனும் அரசு வீற்றிருந்த காலமாகிய கி. பி. 670- 710இல் மலை நாட்டையாளும் வேந்தர் பெருமானாக விளங்கியவரென்பதும் முன்னர் விளக்கப் பெற்றன. இவரது வரலாறு சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாற்றுடன் பிரிவின்றி இணைந்துளது. திருத்தொண்டர் புராண ஆசிரியராகிய சேக்கிழார் சுவாமிகள் சேரமான் பெருமாள் நாயனார் புராணம், வெள்ளானைச் சருக்கம் என்ற இருபகுதிகளிலும் இதனை விரித்துக் கூறியுள்ளார்.

வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பாகிய தமிழகத்திற் குடபுலம் எனப்படும் மலைநாட்டிலே, கொடுங்கோளூரிலே படைப்புக் காலந்தொட்டு நிலைபெற்றுவரும் சேரர் குடியிலே சேரர் குலமும் உலகமும் செய்த பெருகுதவத்தின் பயனாகப் பெருமாக் கோதையார் என்ற புதல்வர் பிறந்தார். அரச குமரராகிய அவர், மண் மேற் சைவநெறி வாழ வளர்ந்து, முன்னைப் பல பிறவிகளிலும் பெற்ற பேரன்பினாற் கண்ணுதற் பெருமானாகிய சிவபெருமானுடைய திருவடிகளையே பரவும் கருத்துடைய ராயினார். தமக்குரிய அரசியற்றொழிலை விரும்பாமல் திருவஞ்சைக்களமென்னுந் திருக்கோயிலையடைந்து சிவபெருமானுக்குத் திருத்தொண்டு புரிந்துறைதலை விரும்பினார். உலகின் இயல்பும், அரசியல்பும் உறுதியல்ல எனவுணர்ந்த அப்பெருந்தகையார், நாடோறும் விடியற்காலத்தே துயில் நீத்தெழுந்து நீராடித் திருவெண்ணீறணிந்து மலர் கொய்து மாலை தொடுத்தமைத்துத் திருவஞ்சைக் களத் திருக்கோயிலில் திருவலகும் திருமெழுக்குமிட்டுத் திருமஞ்சனங் கொணர்ந்து இறைவனுக்கு நீராட்டி, முன்னை அருளாசிரியர் திருவாய் மலர்ந்தருளிய திருப்பாட்டினை ஒரு நெறியமனம் மலர்ந்தருளிய திருப்பாட்டினை ஒரு நெறியமனம் வைத்து ஓதி அருச்சித்து வழிபாடு புரிந்து வந்தார். இங்ஙனம் நிகழும் நாளில் மலைநாட்டையாட்சி புரிந்த செங்கோற் பொறையன் என்ற சேரவேந்தன் 'வையமுந் தவமுந் தூக்கின் தவத்திற்கு ஐயவியனைத்தும் ஆற்றாது' என்ற உண்மையையுணர்ந்தவனாகித் தனது அரச பதவியினைத் துறந்து தவஞ்செய்தற் பொருட்டுத் தவவனத்தினைச் சார்ந்தனன்.

இந்நிலையில் அரசியல் நூல் நெறியில் வல்ல அமைச்சர்கள் சேர நாட்டின் அரசியல் நலங்குறித்துச் சில நாள் ஆராய்ந்தனர். பண்டைச் சேர மன்னர் மேற்கொண்டொழுகிய பழைய முறைமைப்படி அந்நாட்டின் ஆட்சியுரிமை திருவஞ்சைக் களத்திலே திருத்தொண்டு புரிந்துவரும் சேரர்குலத் தோன்ற லாகிய பெருமாக் கோதையார் பால் நிலைபெற்றிருத்தலை நன்குணர்ந்தனர். திருவஞ்சைக் களத்தையடைந்து பெருமாக்

கோதையாரை இறைஞ்சிப் போற்றினார். 'தொன்மை மரபின்படி இம் மலை நாட்டின் ஆட்சியுரிமை தங்கள்பால் அமைந்திருத்தலால் தாங்களே இம்மலைநாட்டினைப் புரக்கும் வேந்தர் பெருமானாக முடிசூடி ஆட்சிபுரிந்தருளுதல் வேண்டும்' என அவரைப் பணிந்து வேண்டினர். இந்நிலையிற் பெருமாக் கோதையார் 'மேன்மேலும் பெருகும் இன்ப மயமாகிய சிவத்தொண்டுக்கு இடையூறேற்படும் நிலையில் சேரநாட்டு ஆட்சியுரிமையை ஏற்றுக்கொள்ளும்படி இவ்வமைச்சர்கள் என்னை வற்புறுத்துகின்றார்கள். எவ்வுயிர்க்கும் அன்பு செலுத்துமியல்பினதாகிய இச்சிவத்தொண்டிற்குச் சிறிதும் தடை நேராதபடி அடியேன் இந்நாட்டையாட்சிபுரிய இறைவனது திருவருள் துணை புரிவதானால் அப்பெருமானது திருவுள்ளக் கருத்தையுணர்ந்து நடப்பேன்' எனத் திருக்கோயிலிற் புகுந்து இறைவன் திருமுன்னர்ப் பணிந்து நின்றார். இறைவனது திருவருளால் தமக்குரிய அரசுரிமையில் வழுவாது ஆட்சி புரிந்து இறைவனைப் பேரன்பினால் விரும்பி வழிபடுமியல்பும், புல் முதல் யானையீறாகவுள்ள எவ்வுயிர்களும் மக்கள் யாவரும், தம்நாட்டு அரசியலின் நலந்தீங்கு குறித்துக் கூறுவனவற்றை மனத்தினால் உய்த்துணர்ந்துகொள்ளும், நுண்ணுணர்வும், கெடாத தறுகண்மையும், கைம்மாறு கருதாது இரவலர்க்கீய வல்ல குறையாத பெருவண்மையும், நாடாள் வேந்தர்க்கு இன்றியமையாத படை ஊர்தி முதலிய அரசுறுப்புக்களும் ஆகிய எல்லா நலங்களும் தம்பால் வந்து பொருந்தப் பெற்றார் பெருமாக் கோதையார். இங்ஙனம் அஃறிணையுயிர்களும் உயர்திணை மக்களும் கூறிய சொற்பொருளையுய்த்துணரும் நுண்ணறிவினைப் பெற்றவர் பெருமாக்கோதையாராதலின் அவர்க்குக் கழறிற்றறிவார் என்பது காரணப்பெயராயிற்று.

நிலத்துயிர் கழறுஞ்சொற்கள் அனைத்தையும் உணரும் ஆற்றல்பெற்ற பெருமாக்கோதையார், அரசுரிமையையேற்று நடத்துதல் தாம்மேற்கொண்ட சிவத்தொண்டிற்குத் தடை விளைப்ப தெனினும் தாம் முடிசூடிச் சேரநாட்டினை ஆட்சிபுரிதல் வேண்டுமென்பது சிவபெருமான் திருவுள்ளக் கருத்தாதலை உணர்ந்து திருவஞ்சைக்களத்திறைவனை வணங்கி அமைச்சர் வேண்டுகோளுக்கு இசைந்தருளினார். அவரது இசைவுபெற்று மகிழ்ந்த அமைச்சர்கள் வேண்டுவன செய்ய உரிய நன்னாளில் திருமுடி சூடி இவ்வுலகத்தையும் சிந்தைசெல்லாச் சேணெடுந் தூரத்து அந்தமில் இன்பம் வழங்கும் மறுமையுலகத்தையும் ஒருசேர ஆட்சி புரியும் பெருவேந்தராயினார். மலை நாட்டரசராய் மணிமுடி சூடிய சேரமான் பெருமாள் நாயனார், திருவஞ்சைக் களத் திருக்கோயிலை வலம்வந்து வணங்கிப்

பட்டத்து யானைமீது அமர்ந்து கொற்றக்குடையும் வெண்சாமரையும் பரிசனங்கள் தாங்கிவர, நகரில் திருவுலாப் போந்தபோது உவர்மண் பொதியைத் தோளிலே சுமந்து கொண்டு வரும் வண்ணான் ஒருவன் கண்ணெதிர்ப்பட்டான். மழையில் நனைந்துவந்த அவனது சரீரம் உவர்மண் படிந்து வெளுத்திருத்தமையால் உடல் முழுதுந் திருநீறு பூசிய சிவனடியார் வேடத்தைப் போன்று விளங்கியது. அதனைச் சிவனடியார் திருவேடம் எனக்கொண்ட சேரமான் பெருமாள் விரைந்து யானையினின்றும் இறங்கி சென்று வண்ணானை வணங்கினார். அரசர் பெருமான் தன்னை வணங்கக் கண்டு சிந்தை கலங்கி அச்சமுற்ற வண்ணான், சேரமானைப் பணிந்து 'அடியேன் தங்கள் அடித்தொழில் புரியும் வண்ணான்' என்றான். அது கேட்ட சேரர்பிரான் 'அடியேன் அடிச்சேரன்' காதலாற் பணிந்து போற்றுதற்குரிய சிவனடியார் திருவேடத்தை அடியேன் நினைக்கும்படி செய்தீர். இதுபற்றி மனம் வருந்தாது செல்வீராக என அவ்வண்ணானுக்குத் தேறுதலுரை பகர்ந்து அனுப்புவாராயினர். இச்செய்தி,

> **மன்னர் பிரானெதிர் வண்ணா னுடலுவர் ஊறிநீறார்**
> **தன்னர் பிரான்றமர் போல வருதலுந் தான்வணங்க**
> **என்னர் பிரான்அடி வண்ணான் எனஅடிச் சேரனெனுந்**
> **தென்னர்பிரான் கழறிற்றறி வானெனுஞ் சேரலனே.**

எனவருந் திருத்தொண்டர் திருவந்தாதியாலும் 'வண்ணானைக் கும்பிட்டார்' எனச். சேரமான் பெருமாளுக்கு வழங்கும் பெயராலும் நன்கு துணியப்படும்.

அன்பு நிரம்பிய சேரமான் பெருமாளது அடியார் பத்தியைக் கண்டு வியந்த அமைச்சரனை வரும் அப்பெருந்தகையாரை வணங்கிப் போற்றினார்கள். சேரமான் பெருமாள் யானைமீது அமர்ந்து நகர்வலஞ்செய்து அரண்மனையை யடைந்து மன்னர் போற்றிட அரியணையில் வீற்றிருந்து அரசுபுரிந்தருளினார். குடபுலவேந்தராகிய இப்பெருந்தகையார் குணபுலவேந்தராகிய சோழ மன்னரோடும் தென்புல வேந்தராகிய பாண்டிய மன்னரோடும் கெழுதகை நண்பராக விளங்கித் தமிழ்நாட்டின் மூவேந்தர் எனப் போற்றப்பெற்றுத் தமிழகத்தின் அகத்தும் புறத்தும் உள்ள பகைகளைக் களைந்து திருநீற்றொளியாகிய சிவநெறி வளரவும் வேதநெறி வளரவும் அறநூல்முறையே ஆட்சி புரிந்தனர். சேர சோழ பாண்டியரெனச் சிறப்பித்துப் போற்றும் நிலையில் தமிழகத்தின் ஒற்றுமை வளர மலை நாட்டை ஆட்சிபுரியும் பெருமாக் கோதையார் தாம்பெற்ற அரச பதவியின் பயனும் நிறைந்த தவமும் தேடும் பொருளும் பெருந்துணையும்

ஆகிய இவையெல்லாமாக விளங்குவது தில்லைச் சிற்றம்பலத்தில் ஆடல்புரிந்தருளும் திருவடித்தாமரை யெனத் தெளிந்தார். கூத்தப்பிரானது எடுத்த திருப்பாதத்தினை நாள் தோறுந் தவறாது வழிபடுதலைத் தமக்குரிய கடமையாக மேற்கொண்டார். சேரமான் பெருமாள் செய்யும் அன்பு நிறைந்த வழிபாட்டினை யேற்றுக் கொண்ட இறைவர் தமது திருவடிச் சிலம்பின் ஒலியினைச் சேரமான் செவிகுளிரக்கேட்டின்புறும் வண்ணம் ஒலிப்பித்தலை வழக்கமாகக் கொண்டருளினார்.

இவ்வாறு சிவபூசையிலீடுபட்ட சேரமான் பெருமாள் சிவனடியார்களுக்கு வரையாது கொடுத்தும் சிவவேள்விகள் செய்தும் எவ்வுயிர்க்கும் நலஞ்செய்து வந்தார். இந்நிலையில் பாண்டியனது தலைநகராகிய மதுரையம்பதியிலே திருவாலவாயென்னுந் திருக்கோயிலிலே எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக் கடவுள் தம்மை இன்னிசையாற் பரவிப்போற்றும் பாணபத்திரனென்னும் இசைப்பாணரது வறுமையை நீக்கத் திருவுளங்கொண்டு அவரது கனவிலே தோன்றி, 'அன்பனே, என்பாற் பேரன்புடைய சேரமான் பெருமாளென்னும் வேந்தன் உனக்குப் பொன், பட்டாடை, நவமணிக்கலன்கள் முதலாக நீ வேண்டியவெல்லாங் குறைவறக் கொடுப்பான். அவனுக்கு ஒரு திருமுகம் எழுதிக் கொடுக்கின்றோம். நீ அதனைப் பெற்றுக் கொண்டு மலைநாடு சென்று பொருள் பெற்று வருவாயாக' எனக் கூறி 'மதிமலிபுரிசை' யெனத் தொடங்கும் திருப்பாடல் வரையப் பெற்ற திருமுகத்தைக் கொடுத்தருளினார். திருவாலவாயுடையார் அருளிய திருமுகப் பாசுரத்தைப் பெற்ற பாணபத்திரர், சேர நாட்டையடைந்து சேரமான் பெருமாளைக் கண்டார். பாணர் தந்த திருமுகத்தை வாங்கி முடிமேற் கொண்ட சேரர் பெருமான் அப்பாசுரத்தைப் பலமுறை படித்து உள்ளமுருகினார். அமைச்சர் முதலியோரை யழைத்துத் தமது நிதியறையிலுள்ள பலவகைப் பொருள்களையும் பொதி செய்து கொணரச் செய்து 'இப்பெரும் பொருளையும் யானை, குதிரை முதலிய சேனைகளையும் இம்மலைநாட்டு ஆட்சியுரிமையினையும் தாங்களே ஏற்றருள வேண்டும்' எனப் பாணபத்திரரை வேண்டி நின்றார். அவரது கொடைத் திறத்தைக் கண்டு வியந்த பாணபத்திரர் 'என் குடும்ப வாழ்விற்குப் போதுமான பொருள்களை மட்டும் அடியேன் தங்கள்பால் பெற்றுக்கொள்ள வேண்டுமென்பது இறைவனது ஆணையாதலின், அரசாட்சியும் அதற்கு இன்றியமையாத அரசுறுப்புக்களுமாகிய இவற்றைத் தாங்களே கைக்கொண் டருளுதல் வேண்டும்' என்று கூறினார். இறைவரது ஆணை யெனக் கேட்ட சேரமான் பெருமாள், அவ்வாணையை மறுத்தற்கு அஞ்சிப் பாணபத்திரரது வேண்டுகோளுக் கிசைந்தனர். பாணரும்

தமக்கு வேண்டிய பொருள்களை மட்டும் பெற்றுக்கொண்டு அன்பினால் தம்மைப் பின்தொடர்ந்து வந்து வழியனுப்பிய சேரமான்பால் விடைபெற்று மதுரை நகரந்தையடைந்திருந்தார்.

கழறிற்றறிவாராகிய சேரமான் பெருமாள், என்றும் போல ஒரு நாள் சிவபூசை செய்து கொண்டிருந்தபொழுது வழிபாட்டில் நாடோறுங் கேட்டின்புறுவதாகிய திருச்சிலம் பொலியை அன்று கேட்கப் பெறாது பெரிதும் மனங்கலங்கினர். அடியேன் என்ன பிழை செய்தேனோ எனப் பொருமினார். இறைவனை வழிபடும் ஆசை காரணமாக யான் சுமந்துள்ள இவ்வுடம்பினால் அடியேன் பெறுதற்குரிய இன்பம் வேறென்னவிருக்கிறது எனக்கவன்று தம் உயிரைப் போக்கிக்கொள்ளும் எண்ணத்துடன் உடைவாளையுருவித் தம் மார்பிலே நாட்டப்புகுந்தார் அந்நிலையில் அருட்கடலாகிய கூத்தப்பெருமான் விரைந்து தமது திருவடிச்சிலம்பொலியைச் சேரமான் பெருமாள் செவிக்குளிரக் கேட்டு மகிழும் வண்ணம் மிகவும் ஒலிக்கச் செய்தார். சிலம்பொலியைக் கேட்டு மகிழ்ந்த சேரவேந்தர் தமது கையிற் கொண்ட உடைவாளைக் கீழே எறிந்து விட்டுத் தலைமேற் கைகுவித்து வணங்கி நின்று, 'தேவர்களுந் தேடிக் காணுதற்கரிய பெருமானே இத்திருவருளை முன்பு செய்யாது தவிர்ந்தது எது கருதி' என வினவினார். அந்நிலையில் தோன்றாத் துணையாக மறைந்து நின்றருளிய இறைவர், சேரனே, வன்றொண்டனாகிய சுந்தரன் தில்லையம்பலத்திலே நாம் புரியும் திருக்கூத்தினைக் கண்டு ஐம்புலன்களும் ஒன்றியவுணர்வுடன் நின்று புகழமைந்த திருப்பதிகத்தால் நம்மைப் பரவிப் பாடினான். அவன் பாடிய தீஞ்சுவைப் பாடலில் நாம் திளைத்திருந்தமையால் இங்கு நீ புரியும் வழிப்பாட்டிற்கு உரிய நேரத்தில் வரத்தாழ்த்தோம்' எனத் திருவாய் மலர்ந்தருளினார். அவ்வருள் மொழியைச் செவிமடுத்த சேரமான் பெருமாள் 'அடியார்களுக்கு அருள்புரியும் இறைவனது கருணைத்திறம் என்னே' என வியந்து உளமுருகினார். இறைவன் திருநடம் புரிந்தருளும் பெரும்பற்றப்புலியூரிலமைந்த பொன்னம்பலத்தையும் அங்கே இறைவனது ஆடல்கண்டு மகிழ்ந்த தன்னேரில்லாப் பெரியோராகிய வன்றொண்டரையும் கண்டு வழிபடுதல் வேண்டுமெனக் கருதிச் சோழ நாட்டிற்குச் செல்ல விரும்பினார். திருவஞ்சைக் களத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவனை வழிபட்டுச் சேனைகளுடன் புறப்பட்டுக் கொங்கு நாட்டைக் கடந்து சிவனடியார்கள் எதிர்கொண்டு போற்றச் சோழ நாட்டை அடைந்தார். காவிரியில் நீராடி அதனைக் கடந்து தில்லைமூதூரில் எல்லையை யணுகினார். அந்நிலையில் தில்லைவாழந்தணர்களும் சிவனடியார்களும் எதிர்கொண்டு வரவேற்றனர். அடியார்

களோடு தில்லைத் திருவீதியை வலம்வந்து எழுநிலைக் கோபுரத்தை வணங்கி உட்புகுந்த சேரமான் பெருமாள் நாயனார் திருப்பேரம்பலத்தையிறைஞ்சியுட் புகுந்து இறைவன் ஆடல்புரியும் திருச்சிற்றம்பலத்தின் முன் அணைந்தார். அளவிலின்பப் பெருங்கூத்தராகிய இறைவரது திருக்கூத்தினை ஐம்புலனும் ஒன்றிய ஒருமையுணர்வாற் கண்டு உருகிப் போற்றித் திருவருளின்பக் கடலில் திளைத்து இன்புற்றார். தாம் பெற்ற பேரின்பத்தினை வையகத்தாரனைவரும் பெற்று மகிழும் வண்ணம் கூத்தப்பெருமானது சீர்த்தியை விரித்துரைக்கும் செந்தமிழ்ப் பனுவலாகிய பொன்வண்ணத் திருவந்தாதியைப் பாடிப் போற்றினார். சேரர்பெருமான் பாடிய திருவந்தாதியினைக் கேட்டு மகிழ்ந்த தில்லையம்பலவர் அதற்குரிய பரிசிலாகத் தூக்கிய திருவடியிலணியப் பெற்ற திருச்சிலம்பொலியை நிகழ்த்தியருளினார். ஆடற்சிலம்பினொலியினைச் செவிமடுத்து அளவிலாப் பேருவகையுற்ற சேரமான் பெருமாள் காலந்தோறும் கூத்தப்பெருமானை இறைஞ்சிப் போற்றித் தில்லைப்பதியிற் சில நாள் தங்கியிருந்தார்.

பின்பு நம்பியாரூரைக் கண்டு வணங்குவதற்கு விரும்பித் தில்லையினின்றும் புறப்பட்டுப் பல தலங்களை வணங்கி மகிழ்ந்து திருவாரூரையடைந்தார். சேரமான் பெருமாளது வருகையை யுணர்ந்த நம்பியாரூரர், சிவனடியார்களுடன் அவரை எதிர்கொண்டழைத்தார். நம்பியாரூரைக் கண்ட சேரவேந்தர் நிலமிசை விழுந்திறைஞ்சினார், தம்மை வணங்கிய சேரமான் பெருமாளைத் தாமும் வணங்கித் தம் இரு கைகளாலும் முகந்தெடுத்துத் தழுவிக் கொண்டார் சுந்தரர். இவ்விருபெரு மக்களும் ஒருவரொருவரிற் கலந்த பெருங்கேண்மையினராய்ப் பெருமகிழ்ச்சியுற்றார்கள். இங்ஙனம் 'இருவரும் உயிர் ஒன்றி உடம்பும் ஒன்றாம் என அன்பினால் அளவளாவி மகிழும் தோழமைத் திறத்தைக் கண்ணுற்ற சிவனடியார்கள், நம்பியாரூரைச் 'சேரமான் தோழா' என்ற பெயரால் அழைத்து மகிழ்ந்தார்கள். சேரமான் தோழராகிய சுந்தரர் 'கார் கொண்ட கொடைக் கழறிற்றறிவார்' என முன் தாம் பாராட்டிய சேரமான் பெருமாளது கையினைப்பற்றி அழைத்துச் சென்றார். இருவரும் திருவாரூர்த் திருக்கோயிலையடைந்து அடியார்கள் வீற்றிருக்கும் தேவாசிரிய மண்டபத்தைப் பணிந்து திருக்கோயிலை வலம் வந்தனர். சேரமான் பெருமாள் உடைய நம்பியாகிய சுந்தரரைத் தொடர்ந்து சென்று பூங்கோயிலமர்ந்த பெருமானை நிலமிசைப் பலமுறை விழுந்திறைஞ்சினார். புற்றிடங்கொண்ட பெருமானைப் போற்றிக் கண்களில் அன்புநீர் பொழியத் திருமும்மணிக் கோவையென்னுஞ் செஞ்சொல் மாலை புனைந்தேத்தினார்.

தாம்பாடிய செந்தமிழ்ப்பனுவலைத் தம் தோழராகிய சுந்தரர் திருமுன்பு நன்மை விளங்கக் கேட்பித்தார். ஆரூரிடங்கொண்ட இறைவரும் சேர வேந்தர் பாடிய தெய்வத் தமிழ்ப்பனுவலை விரும்பியேற்றுக் கொண்டருளினார்.

பின்பு சுந்தரர் சேரமான் பெருமாளை அழைத்துக் கொண்டு நங்கை பரவையார் திருமாளிகைக்குச் சென்றார். பரவையார், திருவிளக்கு நிறைகுடம் முதலிய மங்கலப் பொருள்களுடன் சேரமான் பெருமாளை வரவேற்று வணங்கிச் சேரர் பெருமானுக்கும் சிவனடியார் களுக்கும் உடன் வந்த பரிசனங்களுக்கும் தக்க வகையால் திருவமுது அமைத்து அன்புடன் உபசரித்தார். ஆண்டநம்பியும் சேரமான் பெருமாளும் உடனிருந்து திருவமுது செய்தருளி னார்கள். இவ்வாறு சேரமான் பெருமாளும் நம்பியாரூரரும் திருவாரூரில் தங்கியிருக்கும் பொழுது பாண்டிநாட்டிலுள்ள திருவாலவாய் முதலிய திருத்தலங்களை வழிபட வேண்டுமென்ற எண்ணம் சுந்தரர்க்கு உண்டாயிற்று. அவர்தம் விருப்பத்தினைச் சேரமான் பெருமாளுக்குத் தெரிவித்தார். வண்றொண்டரைப் பிரியாத பெருங்கேண்மையராகிய சேரமான் பெருமாள் தமக்கு மதிமலிபுரிசைத் திருமுகம் பாடியனுப்பியருளிய திருவாலவாய்ப் பெருமானை இறைஞ்சிப் போற்ற வேண்டுமென்னும் பேரார்வத்தால் தாமும் அவருடன் செல்லத் துணிந்தார். ஒத்த உள்ளமுடையார் இருவரும் அடியார் புடைசூழத் திருமறைக்காடு திருக்கோடிகுழகர் முதலிய தலங்களை வணங்கித் தென்றமிழ்ப் பாண்டிய நாட்டின் தலைநகராகிய மதுரையை அடைந்தார்கள். அப்பொழுது நாடாள் வேந்தனாகிய பாண்டியனும், பாண்டியன் மகளை மணந்து மதுரையில் வேட்டகத்தில் தங்கியிருந்த சோழமன்னனும் எதிர்சென்று இவ்விரு பெருமக்களையும் வரவேற்றுத் திருவாலவாய்த் திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்றனர். நம்பியாரூரருடன் திருவாலவாய்ப் பெருமானைக் கண்டு மகிழ்ந்த சேரமான் பெருமாள், 'அடியேனையும் ஒரு பொருளாக எண்ணித் திருமுகம் அருளிய பேரருளின் எல்லையை அறிந்திலேன்' என உரை தடுமாறிக் கண்ணீரரும்ப ஆலவாய்க் கடவுளைப் பரவிப் போற்றினார். பாண்டியன் இவ்விரு பெருமக்களையும் தம் அரண்மனைக்கு அழைத்துச் சென்று உபசரித்துப் போற்றினான்.

இங்ஙனம் சேர, சோழ பாண்டியர்களாகிய தமிழ் வேந்தர் மூவரும் நம்பியாரூரராகிய சுந்தரரும் ஒருவரோடொருவர் அன்பினால் அளவளாவிப் பாண்டி நாட்டுத் தலங்களைப் பணிந்து இன்புற்றனர். சேரமான் பெருமாளும் சுந்தரரும் பாண்டியர் சோழராகிய இரு பெருவேந்தர்களிடத்தும் விடை

பெற்றுத் திருவாரூரை அடைந்தனர். சேரமான் பெருமாள் சில நாள் தங்கியிருந்து தம் தோழராகிய நம்பியாரூரரைத் தங்கள் நாட்டிற்கு எழுந்தருள வேண்டுமென்று பலமுறை வேண்டிக் கொண்டார். வேண்டுகோளுக்கிணங்கிய சுந்தரர், பரவையாரது இசைவு பெற்றுச் சேரவேந்தருடன் புறப்பட்டார். இருவரும் வழியிலுள்ள தலங்களை வணங்கிப் போற்றி பல நாட்டவர் எதிர் கொள்ளக் கொடுங்கோளூரை அடைந்தனர். சேரமான் பெருமாள் தம் ஆருயிர்த் தோழராகிய நம்பியாரூரரை அரியணையில் அமரச் செய்து, தம் தேவிமார்கள் பொற்குடத்தில் நன்னீர் ஏந்தி நிற்க நம்பியாரூரருடைய திருவடிகளை விளக்கி மலர் தூவி வழிபட்டு அவருடன் உடனிருந்து அமுதருத்தி உபசரித்தார். செண்டாடுந் தொழில் மகிழ்வும் சிறு சோற்றுப் பெருவிழாவும் பாடல், ஆடல் இன்னியங்கள் முதலாகப் பலவகை விளையாடல்களும் நிகழச் செய்து தம் தோழரை மகிழ்வித்து அளவளாவி மகிழ்வாராயினர்.

இங்ஙனம் நண்பர் இருவரும் அளவளாவி மகிழும் நாட்களில் நம்பியாரூரர்க்குத் திருவாரூர்ப் பெருமானைக் கண்டு வணங்க வேண்டுமென்ற நினைவு தோன்றியது. அந்நினைவு மீதூரப் பெற்ற சுந்தரர், 'பொன்னும் மெய்ப்பொருளுந் தந்து போகமும் திருவும் புணர்த்தருளும் ஆரூர்ப் பெருமானை மறத்தலும் ஆமே' எனப்பாடித் தமது ஆற்றாமையைத் தம் தோழராகிய சேரமானுக்கு உணர்த்தி விடைபெற முயன்றார். சுந்தரரின் உளக் குறிப்பறிந்த சேரமான் பெருமாள், 'இன்று உமது பிரிவாற்றேன் என் செய்கேன்' என்று உரைத்து மிகவும் வருந்தினார். நம்பியாரூரர் தம் தோழரை நோக்கி 'இந்நாட்டிற்கு உளவாம் இடர் நீங்கப் பகை நீக்கி அரசாளுதல் உமது கடன்' என அறிவுறுத்தார், அதனைக் கேட்ட வேந்தர் பெருமான் 'இவ்வுலக ஆட்சியும், வானுலக ஆட்சியுமாக அமைந்து எனக்கு இன்பஞ் செய்வன உம்முடைய திருவடித் தாமரைகளே. திருவாரூர்க்கு எழுந்தருள வெண்ணிய நும் மன விருப்பத்தை 'நீக்கவும் அஞ்சுகின்றேன்' என்றார். 'என்னுயிர்க்கு இன்னுயிராம் எழிலாரூர்ப் பெருமானை வன்னெஞ்சக் கள்வனேன் மறந்திரேன். நீவிர் சிவபெருமான் திருவருளால் அரசுபுரிந்து இங்கிருப்பீராக' என்றுரைத்து வணங்கினார் வன்றொண்டர். சேரர் பெருமானும் வன்றொண்டரை வணங்கித் தம்முடைய திருமாளிகையிலுள்ள பெரும் பொருள்களைப் பொதிசெய்து ஆட்களின் மேல் ஏற்றுவித்து நெடுந்தூரஞ் சென்று வழியனுப்பினார். சுந்தரரும் தம் தோழரைத் தழுவி விடைபெற்றுத் திருவாரூரை அடைந்தார். சேரமான் பெருமாள் தம் தோழராகிய நம்பியாரூரரை மறவாத சிந்தையுடன் கொடுங்கோளூரிலிருந்து மலைநாட்டை ஆட்சி புரிந்திருந்தார்.

நெடுநாளாயின பின் சுந்தரர் மீண்டும் கொடுங்கோளூருக்கு வந்து தம் தோழராகிய சேரமான் பெருமாளுடன் பல நாட்கள் அளவளாவி மகிழ்ந்திருந்தார். ஒரு நாள் சேரமான் பெருமாள் திருமஞ்சன சாலையில் நீராடிக் கொண்டிருந்த பொழுது சுந்தரர் திருவஞ்சைக்களத் திருக்கோயிலையடைந்து அஞ்சைக் களத்து இறைவனை வழிபட்டுத் 'தலைக்குத் தலைமாலை' என்ற முதற் குறிப்புடைய திருப்பதிகத்தைப் பாடிப் போற்றி நின்றார். அந்நிலையில் அவரது பாசத்தளையை அகற்றிப் பேரருள் புரிய விரும்பிய சிவபெருமான், சுந்தரரை அழைத்து வருமாறு திருக்கயிலாயத்திலிருந்து வெள்ளையானையுடன் தேவர்களைத் திருவஞ்சைக் களத்திற்கு அனுப்பியருளினார். வெள்ளை யானையுடன் தேவர்களைத் திருவஞ்சைக்களத் திருக்கோயில் வாயிலையடைந்த தேவர்கள் நம்பியாரூரரைப் பணிந்து நின்று 'தாங்கள் இவ் வெள்ளையானையின் மீது அமர்ந்து திருக்கயிலைக்கு உடனே புறப்பட்டு வருதல் வேண்டுமென்பது இறைவனது அருளிப்பாடு' என விண்ணப்பஞ் செய்தார்கள். இந்நிலையில் நம்பியாரூரர் செய்வதொன்றும் அறியாது தம் உயிர்த்தோழரும் மன்னுயிர்கள் கூறும் மாற்றத்தை உயத்துணரவல்ல திருவருட் செல்வருமாகிய சேரமான் பெருமாளைத் தம் மனத்திற் சிந்தித்துக் கொண்டு வெள்ளையானையின் மீது ஏறிச் செல்வாராயினர்.

இவ்வாறு தம் உயிர்த்தோழராகிய சுந்தரர் தம்மை நினைத்துச் செல்லும் பேரன்பின் திறத்தைத் திருவருளாற்றலால் விரைந்துணர்ந்த கழறிற்றறிவாராகிய சேரவேந்தர், பக்கத்தில் நின்ற குதிரையின் மீது ஏறித் திருவஞ்சைக்களத் திருக்கோயிலுக்கு விரைந்து சென்றார். வெள்ளை யானையின் மீதமர்ந்து விசும்பிற் செல்லும் தம் தோழரைக் கண்டார். தமது குதிரையின் செவியிலே திருவைந் தெழுத்தினை உபதேசித்தார். அவ்வளவில் குதிரை வான்மீதெழுந்து வன்றொண்டர் ஏறிச்செல்லும் வெள்ளை யானையை வலம் வந்து அதற்கு முன்னே சென்றது. அப்பொழுது சேரமான் பெருமாளைப் பின் தொடர்ந்து சென்ற படை வீரர்கள், குதிரை மீது செல்லும் தம் வேந்தர் பெருமானைக் கண்ணுக்குப் புலப்படும் எல்லை வரையிற் கண்டு பின் காணப்பெறாது வருத்தமுற்றார்கள் தம் வேந்தர் பெருமானைத் தொடர்ந்து செல்ல வேண்டுமென்ற மனத்திட்பமுடையவராய் உடைவாளினால் தம் உடம்பை வெட்டி வீழ்த்து வீரயாக்கையைப் பெற்று விசும்பின் மீதெழுந்து தம் அரசர் பெருமானைச் சேவித்துச் சென்றனர். சேரமான் பெருமாளும் சுந்தரரும் திருக்கயிலாயத்தின் தெற்கு வாயிலை யணுகிக் குதிரையிலிருந்தும் யானையிலிருந்தும் இழிந்து வாயில்கள் பலவற்றையுங் கடந்து திருவணுக்கன்

திருவாயிலை அடைந்தார்கள். சேரமான் பெருமாள் உள்ளே புக அனுமதியின்றி வாயிலில் தடைப்பட்டு நின்றார். அவருடைய தோழராகிய சுந்தரர் உள்ளேபோய்ச் சிவபெருமான் திருமுன்னர்ப் பணிந் தெழுந்தார். 'கங்கை முடிக் கணிந்த கடவுளே! தங்கள் திருவடிகளை யிறைஞ்சுதற் பொருட்டுச் சேரமான் பெருமாள் திருவணுக்கன் திருவாயிலின் புறத்திலே வந்து நிற்கின்றார்' என விண்ணப்பஞ் செய்தார். சிவபெருமான், பெரிய தேவராகிய நந்தியை அழைத்துச் சேரமானைக் கொணர்க எனத் திருவாய் மலர்ந்தருளினார். அவரும் அவ்வாறே சென்று அழைத்து வந்தார்.

சேரமான் பெருமாள் இறைவன் திருமுன்பு பணிந்து போற்றி நின்றார். இறைவன் புன் முறுவல் செய்து சேரமானை நோக்கி, 'இங்கு நாம் அழையாதிருக்க நீ வந்தது எது கருதி' என வினவியருளினார். அது கேட்ட சேரவேந்தர் இறைவனைப் பணிந்து "செஞ்சடைக் கடவுளே! அடியேனே நம்பியாரூரருடைய திருவடிகளைப் போற்றி அவர் ஏறி வந்த வெள்ளை யானைக்கு முன் அவரைச் சேவித்துக் கொண்டு வந்தேன். தங்களது திருவருட் பெருவெள்ளம் அடியேனை முன்கொண்டு புகுதலால் இங்கு நும் திரு முன்பு வரப்பெற்றேன். அடியேன் இங்குத் தெரிவித்துக் கொள்ளும் வேண்டுகோள் ஒன்றுளது. எனது பாசத்தளையை அகற்றுதற் பொருட்டு வன்றொண்டரது தோழமையை அருளிய பெருமானே, மறைகளாலும், முனிவர்களாலும் அளவிடுதற்கரிய பெரியோனாகிய நின்னைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு திருவுலாப்புறம் என்ற செந்தமிழ்ப்பனுவல் ஒன்றைப் பாடி வந்துள்ளேன். இத்தமிழ்ப் பனுவலைத் தேவரீர் திருச்செவி சாத்தியருளல் வேண்டும் என்பதே எனது வேண்டுகோளாகும்' என்று விண்ணப்பஞ் செய்தார். அப்பொழுது சிவபெருமான், சேரனே அவ்வுலாவைச் சொல்லுக' எனப் பணித்தருளினார். சேரமான் பெருமாள் நாயனாரும் தாம் பாடிய திருவுலாப் புறமாகிய செந்தமிழ்ப் பிரபந்தத்தைக் கயிலைப் பெருமான் திரு முன்னர் எடுத்துரைத்து அரங்கேற்றினார். சேரர் காவலர் பரிவுடன் கேட்பித்த திருவுலாப் புறத்தை ஏற்றுக் கொண்ட இறைவன், அவரை நோக்கிச் சேரனே நம்பியாரூரனாகிய ஆலால சுந்தரனுடன் கூடி நீவிர் இருவரும் நம் சிவகணத் தலைவராய் இங்கு நம்பால் நிலைபெற்றிருப்பீராக' எனத் திருவருள் செய்ய, வன்றொண்டர் அணுக்கத் தொண்டு புரியும் ஆலால சுந்தரராகவும் சேரமான் பெருமாள் சிவகணத் தலைவராகவும் கயிலையில் திருத்தொண்டு புரிந்திருப்பாராயினர்.

சேரமான் பெருமாள் பாடிய திருக்கயிலாய ஞான உலாவைக் கயிலாயத்திலே அரங்கேற்றிய நாளர்கிய அன்று இறைவன் திருமுன்பு இருந்து கேட்டமர்சாத்தனார் அவ்வுலாவை

உளத்துட்கொண்டு சோழ நாட்டிலுள்ள திருப்பிடவூரிலே வெளிப்படச் சொல்லி அவ் அருள்நூலை இவ்வுலகில் வழங்கும்படி செய்தனர். இங்கு எடுத்துக்காட்டிய வண்ணம் சேரமான் பெருமாள் நாயனார் வரலாறு திருத்தொண்டர் புராணத்திலே சேக்கிழாரடிகளால் விரித்துரைக்கப் பெற்றுளது.

சேரமான் பெருமாள் நாடோறும் கூத்தப் பெருமானை வணங்கிச் செய்யும் சிவபூசையிலே அப்பெருமானது திருவடிச் சிலம்பொலியைக் கேட்டு மகிழும் இயல்புடையாரென்பதும் பாணபத்திரர் பொருட்டுத் திருவாலவாயுடையாராகிய இறைவரே சேரமான் பெருமாளுக்கு 'மதிமலிபுரிசை' யெனத் தொடங்கும் திருமுகப் பாசுரத்தை யெழுதி அனுப்பினா ரென்பதும்,

**பரிபுரக்கம்பலை யிருசெவி யுண்ணும்**
**குடக்கோச் சேரன் கிடைத்திது காண்கென**
**மதிமலி புரிசைத் திருமுகங் கூறி**
**அன்புருத் தரித்த இன்பிசைப் பாணன்**
**பெறநிதி கொடுக்கென உறவிடுத் தருளிய**
**மாதவர் வழுத்துங் கூடற்கிறைவன்.**

**(கல்லாடம் 13-ம் அகவல்)**

எனவரும் தொடரால் நன்கு விளங்கும். சிவபெருமான் அனுப்பிய வெள்ளை யானை மீது கயிலைக்குச் செல்லும் சுந்தரரால் நினைக்கப்பெற்ற சேரமான் பெருமாள் தம்முடைய குதிரைக்குத் திருவைந்தெழுத்தினை உபதேசித்து அக்குதிரையை விசும்பின்வழியே செலுத்தி நம்பியாரூரரைத் தாங்கிச் செல்லும் தெய்வத்தன்மை வாய்ந்த வெள்ளை யானைக்கு முன் செல்லப் பணித்தவரென்பது,

**சேரற்குத் தென்னாவலர் பெருமாற்குச் சிவனளித்த**
**வீரக்கடகரி முன்பு தம் பந்தி யிவுளிவைத்த**
**வீரற்கு வென்றிக் கருப்புவில்வீரனை வெற்றி கொண்ட**
**சூரற்கெனதுள்ளம் நன்றுசெய்தாய் இன்று தொண்டுபட்டே,**

எனவரும் நம்பியாண்டார் நம்பி வாய்மொழியாலும், சுந்தரர் ஏறிய வெள்ளையானைக்கு முன் இவரது குதிரை செல்லும் நிலையில் தஞ்சைப் பெரிய கோயிலில் வரையப்பெற்றுள்ள இராசராச சோழன் காலத்து ஓவியத்தாலும் நன்கு தெளியப்படும்.

சேரமான் பெருமாளும் அவர் தோழராகிய சுந்தரரும் தாம் இவ்வுலகில் தாங்கியிருந்த மக்கள் யாக்கையுடனேயே திருக் கயிலாயத்தையடைந்து சிவனருளில் திளைத்த பெரியோர்களென்பது,

**ஞான வாரூரரைச் சேரரையல்லது நாமறியோம்**
**மானவ ஆக்கையொடும் புக்கவரை வளரொளிப்பூண்**
**வானவராலும் மருவற்கரிய வடகயிலைக்**
**கோனவன் கோயிற் பெருந்தவத்தோர் தங்கள் கூட்டத்திலே (86)**

*எனவரும் திருத்தொண்டர் திருவந்தாதியாலும்,*

**'களையாவுடலோடு சேரமான் ஆரூரன்**
**விளையாமதமாறா வெள்ளானைமேல் கொள்ள'**

*எனவரும் திருவிசைப்பாத் தொடராலும் நன்கு வலியுறுத்துக் கூறப்பட்ட மெய்ம்மை வரலாறாதல் தெளிக.*

*சேரமான் பெருமாள் நாயனார் திருவாய்மலர்ந்தருளிய செந்தமிழ் நூல்களாகப் பதினொராந் திருமுறையில் தொகுக்கப் பெற்றுள்ளவை பொன்வண்ணத்தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை, திருக்கயிலாய ஞானவுலா என்ற மூன்றுமாகும். சேரமான் பெருமாள் தில்லைச் சிற்றம்பலத்தை யிறைஞ்சித் தில்லையம்பலவானது அருட் கூத்தினைக் கண்டு மகிழ்ந்த நிலையிற் பாடிய செந்தமிழ்ப் பனுவல் பொன் வண்ணத் தந்தாதி யென்பர் சேக்கிழார். கட்டளைக் கலித்துறை யாப்பினால் அமைந்த இந்நூலில் நூறு செய்யுட்கள் உள்ளன. பொன்னார் மேனியனாகிய சிவபெருமானைக் கண்டு காமுற்று அவனை அடையப் பெறாமையாற் பசலை நிறங்கொண்டு உடல் வேறுபட்ட தலைவியொருத்தி, தானும் தன்னாற் காதலிக்கப்பட்ட தலைவனாகிய சிவபெருமானும் பொன்வண்ணமாகிய ஒரே நிறத்தினைப் பெற்று விளங்கும் உருவொப்புமையை யெண்ணி உளங்குளிர்ந்துரைப்பதாக அமைந்தது இப்பிரபந்தத்தின் முதற் செய்யுளாகும். பொன் வண்ணம் என்ற தொடரை இம்முதற்பாட்டின் முதற் சீராகக் கொண்டு தொடங்கி இதன் இறுதிச் செய்யுளாகிய நூறாவது செய்யுளைக் 'கனகமலையருகே போயின காக்கையு மன்றே படைத்தது பொன் வண்ணமே' என முடித்து, அந்தாதித் தொடையமைய இப்பனுவலைச் சேரமான் பெருமாள் திருவாய்மலர்ந்தருளினமையால் இந்நூல் பொன்வண்ணத்தந்தாதியென்னும் பெயர்த்தாயிற்று. இதனைச் 'சீரார்வண்ணப் பொன்வண்ணத்திருவந்தாதி' எனச் சிறப்பித்துப் போற்றுவர் சேக்கிழார். பிற்காலத்து ஔவையார் பாடிய ஆத்திசூடி, கொன்றைவேந்தன் என்ற நீதி நூல்களும் ஒன்பதாந்திருமுறையில் திருமாளிகைத் தேவர் பாடிய உயர்கொடியாடை, உறவாகிய யோகம் இணங்கிலாவீசன் என்ற திருவிசைப்பாப் பதிகங்களும் திருவாலியமுதனார் பாடிய பவளமால் வரையென்ற பதிகமும் இப்பொன்வண்ணத் தந்தாதியைப் போன்று முதற்பாடலிலமைந்த முதற்சொற் றொடராற் பெயர் பெற்றுள்ளமை இவண் ஒப்புநோக்கத்தக்கது.*

செம்மேனிப் பேராளனாகிய சிவபெருமானைக் காதலித்த தலைவி, அப்பெருமான் ஓடேந்து செல்வராகத் தாருகாவனத்துச் சென்றபொழுது அம்முதல்வனது பேரழகில் ஈடுபட்டு மயங்கிய முனிவர் மகளிர் நிலையில் நின்று கூறுவனவாகவும் தலைவியின் உளக்கவலையையும் உடல்மெலிவையும் எண்ணி வருத்தமுற்ற தோழி செவிலி முதலியோர் இறைவனை நோக்கிக் கூறுவனவாகவும் அமைந்த அகத்துறைப் பாடல்களும், இறைவன் செய்தருளிய அருட்செயல்களையும் அப்பெருமானது திருமேனியழகினையும் அம்முதல்வன் ஆட்பாலவர்க்கு அருள்புரியும் இயல்பினையும் அவனது இறைமைத் தன்மையினையும் விளங்க விரித்துரைக்கும் பாடல்களும், இறைவனுக்குத் தொண்டுபடும் முறையினையும் அங்ஙனந் தொண்டுபட்ட மெய்யடியார்களது இயல்பினையும் விரித்துரைக்குந் திருப்பாடல்களும், இந்நூலில் அமைந்துள்ளன. இதன்கண் அமைந்த செய்யுட்கள் யாவும் மோனை எதுகை முதலிய தொடை நலம் வாய்ந்தனவாய், நிரனிறை முதலிய பொருள்கோள்களும் தன்மை உவமை முதலிய பொருளணிகளும் யமகம் திரிபு முதலிய சொல்லணிகளும் அமையப் பெற்றுள்ளன.

மக்களைப் பொருளாகக் கொண்டு பாடுதற்குரிய காமப் பகுதியினைக் கடவுளைப் பொருளாகக்கொண்டு பாடினும் அறிஞர் நீக்காது ஏற்றுக் கொள்வர் என்பதும், கடவுளைத் தலைவனாகவும் தம்மைத் தலைவியாகவும் கருதி மக்கள் விரும்பி யொழுகியதாகச் செய்யுள் செய்தலும் நீக்கப்படாதென்பதும் தொல்காப்பியனார் கருத்தாகும். இவ்விருவகைக் காமப் பகுதியினையும் முறையே கடவுள் மாட்டுத் தெய்வப் பெண்டிர் நயந்த பக்கமெனவும், கடவுள் மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கமெனவும்வழங்குவர் இளம்பூரணர். இவ்விருதிறக் காமப் பகுதிகளும் பாடாண்டிணை யென்னும் புறத்திணைக்குரிய பொருள் வகைகளாகத் தொல்காப்பியத்துட் கூறப்பட்டன. காமமாகிய அகவொழுக்கமும் வீரமாகிய புறவொழுக்கமும் பாடாண்டினைக்குரிய பொருள்களாமென்பது ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்தாகலின் கடவுளைக் காமுறும் பகுதியாக மேற்குறித்த இரண்டும் அகத்திணையொழுக லாறெனவே கொள்ளுதல் பொருந்தும். கடவுள் மாட்டு மானிட பெண்டிர் நயந்தபக்கமெனப்படும் காமப் பகுதியில் தலைவனாகிய இறைவன் பெயரேயன்றித் தலைவியின் பெயர் சுட்டப் படாமையால் சுட்டி யொருவர் பெயர் கொள்ளப்படாத அகனைந்திணை யெனவே கொள்ளப்படும் சிறப்புடைத் தெனவும், கடவுள் மாட்டுத் தெய்வப் பெண்டிர் நயந்தபக்க

மெனப்படும் காமப் பகுதி மக்கள் நுதலிய தல்லாமையாலும் சுட்டியொருவர் பெயர் கொள்ளப்படுதலானும் அத்துணைச் சிறப்புடைத்தன்றெனவும் கருதிய தேவார ஆசிரியர்கள், எல்லாம் வல்ல இறைவனைத் தலைவனாகவும் அவனது திருவடியைத் தலைப்பட்டுப் பிரிவற நின்று இன்புறுதற்குரிய உயிர்களாகிய தம்மை அவனருள் வேட்ட தலைவியாகவும் கொண்டு உளமுருகிப் பாடிய செழும் பாடல்கள், இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு அன்பொடு புணர்ந்த அகனைந்திணையின் முடிந்த பொருளாய்ச் சிறந்தது பயிற்றலாகிய உயர்ந்த பேரின்பத்தை வழங்கும் இலக்கியமாகத் திகழ்கின்றன. இவ்வாறு தேவார ஆசிரியர்கள் வகுத்துக் காட்டிய அன்பு நெறியை உளத்துட் கொண்டு சேரமான் பெருமாள் நாயனார் இறைவனைத் தலைவனாகவும் அவனருள் வேட்ட உயிரைத் தலைவியாகவும் கொண்டு பாடிய அகத்துறைப் பாடல்கள் பொன் வண்ணத் தந்தாதியில் நாற்பதுக்கு மேல் உள்ளன. இவையாவும் இளம்பூரணர் கருத்துப்படி கடவுள் மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கம் என்ற வகையில் அடங்குவனவாகும்.

நிலவுலகமே திருவடியாகவும், ஞாயிறு திங்கள் தீ யென்னுஞ் சுடர்கள் கண்களாகவும், இடைவிடாது வீசுங் காற்று உயிர்ப்பாகவும், அலையோங்கிய பெருங் கடல் ஆடையாகவும், அண்டமுகடு திருமுடியாகவும், அருமறைகள் திருமுகங் களாகவும், எண்திசைகள் தோள்களாகவும், உலகத்து வழங்கும் பல மொழிகளும் இன்னிசைப் பாடலாகவும், தன் கண் அமைய விளங்குவது, சிவபெருமானது பேருருவமாகும் யாவராலும் காண்டற்கரியதும் அடைதற்கரியதும் ஆகிய பேருருவமுடைய சிவபெருமானைக் காதலித்து வருந்தும் தன் மகளது எளிமைத் தன்மையை நினைந்து நற்றாய் இரங்குவதாக அமைந்தது,

**பாதம் புவனி சுடர்நயனம் பவனம் உயிர்ப்போங்**
**கோதம் உடுக்கை யுயர்வான் முடிவிசும்பே யுடம்பு**
**வேத முகந்திசை தோள்மிகு பன்மொழி கீதமென்ன**
**போத மிவற்கோர் மணிநிறம் தோற்பது பூங்கொடியே. (19)**

என்ற பாடலாகும். இத்திருப்பாடற் பொருள்,

**மாநிலஞ் சேவடி யாகத் தூநீர்**
**வளைநரல் பவ்வம் உடுக்கையாக**
**விசும்புமெய் யாகத் திசைகையாகப்**
**படர்கதிர் மதியமொடு சுடர்கண்ணாக**
**இயன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய**

**வேத முதல்வ னென்ப**
**தீதற விளங்கிய திகிரியோனே.**

**(நற்றிணை, கடவுள் வாழ்த்து)**

எனவரும் பெருந்தேவனார் பாடற் பொருளுடன் ஒத்து விளங்குதல் அறிந்து இன்புறத்தக்கதாகும்.

இறைவனது பேரழகில் ஈடுபட்ட தலைவியொருத்தி அப்பெருமானையே இரவும் பகலும் இடைவிடாது சிந்தித்துக் கொண்டிருப்பவள் காமவேள் அம்பினால் தான் படுந்துயரத்தை எடுத்துரைத்து வருந்துவதாக அமைந்தது,

**எண்ணம் இறையே பிழைக்குங்கொலாம் இமையோரிறைஞ்சுந்**
**தண்ணம் பிறைச்சடைச் சங்கரன் சங்கக்குழையன் வந்தென்**
**உள்நன்குறைவ தறிந்தும் ஒளிமா நிறங்கவர்வான்**
**கண்ணு முறங்கா திராப்பக லெய்கின்ற காமனுக்கே. (44)**

என்ற பாடலாகும். காமனைக் காய்ந்த பெருமானாகிய சங்கரன் என்னுள்ளத்தில் இடைவிடா தெழுந்தருளியிருத்தலைத் தெரிந்திருந்தும் அப்பெருமான் பாற்சார்புடைய என்மேல் இரவும், பகலும் காமன் அம்பினைச் சொரிந்து நிற்கின்றான். அவன் இங்ஙனம் என்பால் தீமை செய்தொழுகுதலின் காரணம் பெண்ணாகிய என்னைத் தப்பியுய்யலாம் என்ற எண்ணத்தினாற் போலும். தன்னையடைந்தார் துயர் தீர்த்தருளும் எம் பெருமானது ஒறுத்தலுக்கு இலக்காகாது காமனாகிய இவன் உய்தல் கூடுமோ? எனத் தலைவி காமனை அச்சுறுத்துங் குறிப்பு இப்பாடலிற் புலனாதல் காண்க.

இறைவன் தாருகாவனத்து முனிவர் மகளிர் காமுற்று மயங்க ஓடேந்து செல்வராகப் பிச்சைக்குச் சென்ற பொழுது அப்பெருமான் மேற்கொண்ட பிச்சைக் கோலத்தின் பேரழகில் ஈடுபட்ட தலைவி அத்திருக்கோலத்தையே இடைவிடாது எண்ணுகின்றாள். இறைவன் தன்பாற் பிச்சை யேற்க வருவது போலவும் தான் அவனது பேரழகி லீடுபட்டு அவன் பின்னே செல்வது போலவும் அது கண்ட தாய் தன்னைத் தடுத்து நிறுத்தியது போலவும் கனாவொன்று காணுகின்றாள். தலைவி தான் கண்ட கனா நிகழ்ச்சியைத் தோழிக்குக் கூறுவதாக அமைந்தது,

**ஈசனைக் காணப் பலிகொடுசெல்ல எற்றேயிவளோர்**
**பேயனைக் காமுறு பிச்சிகொலாமென்று பேதையர்முன்**
**தாயெனை யீர்ப்பத் தமியேன் தளரவத் தாழ்சடையோன்**
**வாவெனைப் புல்லவென்றான் இமைவிண்டன வாட்கண்களே.**

என்ற பாடலாகும். ஈசனைக் காணும் விருப்புடன் உணவாகிய பலியைக் கையிலேந்தி வெளியே சென்றேன். அது கண்டு 'பேய்களோடோடும் ஒருவனைக் காதலித்த பித்துடைய ளாயினாள் இவள்' என்று கூறி என் தாய் மகளிர் முன்னே என்னைப் பிடித்திழுத்தாள். நாணிழந்து தனிமையுற்ற யான் அப்பெருமானை அணுகுதற் கியலாது தடைப்பட்டு வருந்தினேன். அப்பொழுது இறைவனே என்முன் வந்து நின்று என்னைத் தழுவ வருக என அழைத்தருளினான் அந்நிலையில் என் கண்கள் இமை திறந்து விழித்தன என்பது இதன் பொருளாகும்.

பிச்சைக் கோலமுடைய பெருமானுடன் உரையாடி மகிழ்ந்த மகளிர் மூவருள் ஒருத்தி தமக்குள் நிகழ்ந்த உரையாடலைத் தெரிவிப்பதாக அமைந்தது,

**காமனை முன்செற்ற தென்றாள் அவள், இவள் காலனென்னுந்**
**தாமநன் மார்பனை முன்செற்ற தென்றுதன் கையெறிந்தாள்**
**நாமுனஞ் செற்றதன் றாரையென்றேற் கிருவர்க்கு மஞ்சி**
**ஆமெனக் கிற்றிலர் அன்றெனக் கிற்றிலர் அந்தணரே (45)**

என்ற பாடலாகும். அந்தணராகிய இவர் முதலில் அழித்தது மன்மதனையே என எங்களுளொருத்தியாகிய அவள் கூறினாள். மற்றொருத்தியாகிய இவள் அஃது உண்மையன்று; இவர் முன் அழித்தது காலனையே என்று தன்கை யறைந்து உறுதி கூறினாள். இவ்விருவர்க்கும் நடுவாகிய யான் அப்பெருமானை நோக்கித் தாங்கள் முதலிற் செற்றது காமனையா அன்றிக் காலனையா என்று வினவினேன். இறைவர் அவ்விருவர்க்கும் அஞ்சி இன்னது ஆம், இன்னது அன்று என உறுதியாக மறுமொழி சொல்ல மாட்டாமல் தயங்கினர் என்பது இதன் பொருள்.

காமன், காலன் ஆகிய இவ்விருவருள் நும்மால் முன்னர்க் கொல்லப்பட்டார் யாவர் என்ற இவ்வினாவுக்கு முதலாமவள் கருத்தின்படி காமனையே முன்பு அழித்தது என அவ்வந்தணராகிய இறைவர் மறுமொழி கூறின் மற்றொருத்தி நும்மால் முன்னரே கொல்லப்பட்ட காமன் இன்று என்மேல் அம்பினைத் தூவி வருத்தி நிற்றலெவ்வாறு என வினவுவாள். இரண்டாமவள் கருத்தின்படி காலனையே முதலில் அழித்தது என மறுமொழி கூறின் நும்மைக் காமுற்று வருந்தும் எனக்கு நும்மால் முன்னரே அழிக்கப்பட்ட காலனாலுளதாம் சாக்காடு போல்வதோர் துன்பநிலை இன்றெய்திய தெங்ஙனம் என வினவுவாள். இந்நிலையில் இவ்விருவருள் யார் பக்கஞ் சார்ந்து கூறினாலும் மற்றொருத்திக்கு மறுமொழி கூறும் வழியில்லா மையால் 'அவ்விருவர்க்கும் அஞ்சி ஆமெனக்கிற்றிலர்

அன்றெனக்கிற்றிலர் அந்தணரே' என்றாள் மூன்றாமவள். இங்கே முன் கொன்றது பின்கொன்றது என்ற இரண்டும் கொலைத் தொழில்களேயாதலானும் இவ்விரண்டினுள் எதனை முன்னிகழ்ந்ததாகக் கூறினும் அக்கொடுந்தொழிலாகிய கொலையைத் தாமே செய்ததாக உடன்பட வேண்டியிருத்த லானும் அருள் நிரம்பிய அந்தண வேடத்துடன் வந்த இறைவர் இவ்விரண்டனுள் ஒன்றனை ஆமென்றும் மற்றொன்றனை அன்றென்றும் சொல்ல இயலாது தயக்கமுற்றா ரென்றும், அந்தணராகிய இவர் இங்கு வந்ததன் நோக்கம் நம் உள்ளத்தையும் உயிரையும் வருத்துவதேயன்றிப் பிறிதன்றென்றும் மகளிர் நகையாடியவாறு. காலதத்துவத்தைக் கடந்து விளங்கும் இறைவனுடைய செயல்களைக் காலவரம்பினுள் அடக்கிக் கூறுதலியலா தென்பதனை இப்பாடலிற் சேரமான் பெருமாள் குறிப்பாற் புலப்படுத்தினமை காண்க.

பிச்சைக் கோலமுடைய இறைவனைக் கண்டு காதல் கொண்ட தலைவி அப்பெருமானுடன் தான் நிகழ்த்திய உரையாடல்களைத் தன் தோழிக்கு அறிவுறுத்து முகமாகத் தன் உள்ளங்கவர்ந்த தலைவன் இன்னான் என உடன்பட்டு உரைப்பதாக அமைந்தது,

**அந்தண ராமிவர், ஆரூர் உறைவதென்றேன் அதுவே**
**சந்தணை தோளியென்றார் தலையாய சலவரென்றேன்**
**பந்தணை கையா யதுவுமுண் டென்றா ருமையறியக்**
**கொந்தணை தாரீர் உரைமினென்றேன் துடிகொட்டினரே.**

என்ற பாடலாகும். அழகிய தண்ணளியுடையவராகிய தாங்கள் விரும்பித் தங்கியிருப்பது யாருடைய ஊர் என்று வினவும் நிலையில் 'ஆரூர் உறைவது' என்று கேட்டேன். அது கேட்ட தலைவர் பெண்ணே நீ கூறிய அதுவே (ஆரூர் என்பதே) எனது ஊராகும் என்றார். நுமது ஊரை யான் தெரிந்து கொள்ளாதபடி கவர்பொருள்பட உரையாடுதலால் நீர் முதன்மையான வஞ்சகராகவுள்ளீர் என்ற பொருளில் அவரை நோக்கித் 'தலையாய சலவர்' எனக் கூறினேன். அதற்கு, (தலையிற் பொருந்திய கங்கை நீரையுடையவர் என) வேறு பொருள் கொண்ட அவர், சந்தனம் பூசிய தோளினையுடையாய் நீ கூறியபடி அதுவும் (தலையாய சலமும்) என்பால் உண்டு என்றார். மணம் பொருந்திய மாலையை யணிந்தீர் உம்மை யான் இன்னார் என்று தெரிந்து கொள்ளும்படி எனக்கு விளங்கச் சொல்லும் என்ற பொருளில் 'கொந்தணை தாரீர் உமையறிய உரைமின்' என்றேன். அதற்கு (நும் தேவியாகிய உமையம்மையார் அறிய மெய்ம்மையாகச் சொல்லும் என உறுதிமொழி செய்யச்

சொல்லுவதாகப் பொருள் கொண்டு) மறுமொழி கூற வழியறியாது தன் கையிலேந்திய உடுக்கையை யொலித்து இவ்வுரையாடலை மேலும் வளர விடாது தடுத்து விட்டார் எனத் தலைவி தோழிக்குரைத்ததாக அமைந்த இச் செய்யுளில், ஆரூர், தலையாய சலவர், உமையறிய உரைமின் என்ற தொடர்கள், இரு பொருள் தந்து, இங்ஙனம் தன் அன்பிற்குரிய தலைமகளோடு உரையாடிய தலைவராவார் திருவாரூரில் நீங்கா தெழுந்தருளி யிருப்பவரும் தலையிற் கங்கையைத் தரித்தவரும் உமையொரு பாகரும் ஆகிய சிவபெருமானே என்ற உண்மையினைத் தோழிக்கு விளங்க அறிவுறுத்து நிற்றல் உணர்ந்து இன்புறத்தக்கதாகும்.

தலைமகள், தன்னாற் காதலிக்கப்பட்ட இறைவனைக் கனவிற் கண்டு உரையாடிய திறத்தைத் தன் தோழிக்குப் பின்வருமாறு எடுத்துரைக்கின்றாள். பண்டரங்க வேடத்தனாகிய இறைவன் என்னருகே வந்து நின்று என் பற்களைப் பார்த்து நின் பல்லின் தன்மை இதுவா என நகையாடுங் குறிப்புடன் 'பலிதா' என்று சொல்லிப் பிச்சை கேட்டான். அது கேட்ட யான் 'பல் இந்தா' என்று கூறிப் பற்கள் சிலவற்றை என்பால் அவன் தர வருவதாகப் பொருள் கொண்டு, இறைவனே நீ தர விரும்பிய பற்களைத் தக்க யாகத்தில் நின்னாற் பல்லுடை பட்ட சூரியனுக்கே கொடுத்துவிடு என்று கூறினேன். அண்டங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டு விளங்குபவனும் அவ்வண்டங்களை யெல்லாம் படைத்தருளியவனுமாகிய அப்பெருமான் மீண்டும் என்னை நோக்கித் தான் என் பால் வேண்டியது உணவு என்பது புலப்பட 'அன்னம்' என்று கூறினான். அது கேட்ட யான் நீ கூறும் அன்னம் என்பது பிரமனது ஊர்தியாகிய பறவையல்லவா என்றேன், மீண்டுமவன், என்னை நோக்கி நங்கையே யான் கூறும் சொற்பொருளை உணர்ந்து கொண்டு உன்பாலுள்ள உணவையிடுக என்ற பொருளில் 'உன் ஐயம் பெய்' என்றான். அத்தொடர்க்கு 'உன்பால் உள்ள ஐந்து அம்புகளையும் எய்க' என அவன் கூறுவதாகப் பொருள் கொண்ட யான், அவனை நோக்கி, நின்னாற் குறிக்கப்பட்ட ஐந்தம்புகளையும் உடையவன் மன்மதனே என்றேன். அதுகேட்ட இறைவன் என்னை நோக்கி, நீ யான் கேட்ட வண்ணம் பலியிடாது போயினும் நின்னுடன் உரையாடிய இவ்வளவிலேயே உண்டு பசி தீர்ந்த அமைதி நிலை எனக்குளதாயிற்று என்ற பொருளில், 'உண்டு இங்கு அமைந்தது' என்றான். அதனைக் கேட்டு உறக்கம் நீங்கி விழித்துக் கொண்டேன் என இங்ஙனம் தலைவி தோழிக்குத் தன் கனவு நிலையைப் புலப்படுத்தும் நிலையில் அமைந்தது,

**'பண்டங்கன் வந்து பலிதா என்றான் பகலோற் கிடென்றேன்**
**அண்டங்கடந்தவன் அன்னமென்றான் அயன்ஊர்தி என்றேன்**
**கொண்டிங்குனையம் பெய்என்றான் கொடித்தே ரனங்கனென்றேன்**
**உண்டிங்கமைந்ததென்றாற் கதுசொல்ல வுணர்வுற்றதே'.**

*என்ற பாடலாகும்.*

*'வண்டுகள் தேன் நுகரும் கொன்றை மலர் மாலையை யணிந்த பெருமானே, நின் திருவடிகளை யடைந்து மலர் தூவிக் கைதொழுத மெய்யடியார்களுக்கு இடமகன்ற இப்பெரிய வுலகத்தை ஆளக் கொடுத்தும் அடியேன் பெற்ற மாவடு வகிர்போலுங் கண்களையுடைய என்மகள் நின்னைக் கைகளால் தொழுத காலத்து அவளுடைய கைவளைகளைப் பறித்துக் கொண்டும் இங்ஙனம் இருவேறுபட்ட மன நிலையை யுடையையாய் ஒரூரில் ஒரு பொருளை இரு விலைக்கு விற்பது போலும் நினது நடுவு நிலைமையற்ற செயலைப் புலப்படுத்தினை. அறவுருவாகிய இடபத்தைக் கொடி மேற்கொண்டு நற்குணங் களாற் சலியாத பெருமையுடையனாகத் திகழும் நினக்கு இச் செயல் தகுவதோ' என இறைவனை நோக்கித் தன் மகளது ஆற்றாமை கூறிச் செவிலி இரங்குவதாக அமைந்தது,*

**அடிக்கண்ணி கைதொழுதார்க் ககன் ஞாலங் கொடுத்தடிநாய்**
**வடிக்கண்ணி நின்னைத் தொழ வளைகொண்டனை வண்டுண் கொன்றை**
**முடிக்கண்ணியா யெமக்கோரூ ரிரண்டகம் காட்டினையாற்**
**கொடிக்கண்ணி மேல்நல்ல கொல்லே றுயர்த்த குணக்குன்றமே.**
**(73)**

*என்ற பாடலாகும். ஒரூர் இரண்டஃகம் காட்டல் என்பது ஒரு பழமொழி. அஃகம்- முறைமை. மக்களெல்லோரும் அன்பினால் ஒத்து வாழ்வதற்குரிய ஒரே ஊரில் ஒரு பொருள் பற்றி இரு வேறு முறையில் நடந்து கொள்ளும் மனநிலையுடைய வஞ்சகரது கொடுஞ்செயலைக் குறிப்பது இப் பழமொழி. இஃது ஒரூர் இரண்டகம் காட்டுதல் எனவும் வழங்கும் இத்தொடர்க்கு ஒரூரில் ஒரு பொருள் பற்றி இருவேறு மனநிலை யுடையவராக நடத்தல் எனப் பொருள் கொள்ளுதல் பொருத்தமுடையதாகும். இறைவனாகிய நீ நின்னை வழிபட்ட கோச் செங்கட் சோழர் மூர்த்தி நாயனார் முதலிய மெய்யடியார்களுக்கு உலகாளும் அரசுரிமையை வழங்கி இன்பஞ் செய்தும், நின்னை அன்பினால் அடைந்து மகிழ்தற்கு ஏக்கற்றிருக்கும் என் மகளது கைவளைகளைக் கவர்ந்து அவளுக்குத் துன்பஞ் செய்தும், இவ்வாறு ஒத்த அன்புடையார்களிடத்திலேயே இரு வேறு உள்ளத்துடன் நடந்து கொள்ளுகின்றாய். இம்முறையற்ற செயல்*

நினது இறைமைத் தன்மைக்கு ஏற்றதாகாது எனச் செவிலி இறைவனை நோக்கி முறையிடும் இம் மொழிகளில், அடியார்க்கு உலகெலாம் ஆளக் கொடுக்கும் இறைவனது பெருவண்மையும், அருளாளனாகிய அப்பெருமானை நினைந்து தளரும் தலைவியின் மெலிவும் ஒருங்கு புலப்படுத்தப் பெற்றமை காண்க. இப்பாடலிற் குறிக்கப்பட்ட ஒரூரிண்டஃகம் காட்டுதல் என்ற பழமொழியைத் திருத்தக்கதேவர் தாம் இயற்றிய சீவக சிந்தாமணியென்னும் பெருங் காப்பியத்துள் சுரமஞ்சரியாரிலம் பகம் 93 ஆம் பாடலில் எடுத்தாண்டுள்ளார்.

தலைமகளது ஆற்றாமை கண்ட தோழி இறைவனை நோக்கி உரையாடுவதாக அமைந்தது.

**தறித்தாய் அயன்றலை சாய்த்தாய் சலந்தரனைத் தழலாப்**
**பொறித்தாய் அனங்கனைச் சுட்டாய் புரம் புனலுஞ் சடைமேற்**
**செறித்தாய்க் கிவைபுக ழாகின்ற கண்டிவள் சில்வளையும்**
**பறித்தாய்க் கிதுபழி யாகுங்கொலா மென்று பாவிப்பனே. (81)**

என்ற பாடலாகும். 'பிரமனது தலையை அரிந்தாய். சலந்தரனை அழித்தாய். காமனை எரித்தாய். முப்புரங்களையும் சுட்டு நீறாக்கினாய். கங்கையாகிய பெருவெள்ளத்தின் வேகத்தைக் குறைத்து அதனை நினது சடையில் அடக்கினாய். நீ செய்த ஒறுத்தலாகிய இச்செயல்கள் நினக்குப் புகழ் விளைப்பனவாக உலகத்தாரால் நன்கு மதிக்கப்படுதலைக் கண்டு, மேலும் இத்தகைய ஒறுத்தற் றொழிலாற் புகழ் பெறுதலையே விரும்பி நின்னருளுக் குரியளாகிய இத் தலைவியின் சிலவாகிய வளைகளையும் பறித்துக் கொண்டாய் போலும். நின்பால் அன்புடையாள்பால் நீ செய்த இச்செயல் பொருள்சேர் புகழாளனாகிய நினக்குப் பழி விளைவிப்பதாகுமே எனச் சிற்றறிவுடைய யான் எண்ணுகின்றேன்' என இறைவனை நோக்கித் தோழி நயம்பெற உரையாடிய திறம் நினைந்து மகிழத்தக்கதாகும்.

தலைமகளுக்கு உற்ற நோயை யறிந்து தணிக்க எண்ணிய தோழியை நோக்கித் தலைவி தான் உற்ற துயரைப் புலப் படுத்துவதாக அமைந்தது,

**செறிவளையாய் நீவிரையல் குலநலங் கல்விமெய்யாம்**
**இறையவன் தாமரைச் சேவடிப் போதென்றெல் லோருமேத்தும்**
**நிறையுடை நெஞ்சிது வேண்டிற்று வேண்டிய நீசர் தம்பாற்**
**கறைவளர் கண்டனைக் காணப் பெரிதுங் கலங்கியதே. (85)**

என்ற பாடலாகும். 'செறிந்த வளையலணிந்த தோழியே! குடிப்பிறப்பு, நல்லொழுக்கம், கல்வி, வாய்மை ஆகிய நற்

பண்புகளுக்கெல்லாம் நிலைக்களமாகத் திகழ்வது எங்கும் நீக்கமற நிறைந்த இறைவனுடைய தாமரை மலர் போலுந் திருவடியேயெனப் பெரியோர் பலரும் போற்றிப் புகழும் நிறையுடைமையில் நிலைபெற்றுள்ள எனது நெஞ்சம், என் ஆருயிர் நாயகனாகிய நீலகண்டமுடைய பெருமானைத் தாம் விரும்பியனவற்றை விரும்பிய வண்ணஞ் செய்தொழுகும் நிமித்திகன் முதலிய கீழ்மக்களது முயற்சியாற் காண முயலும் அன்னையின் செயல்கண்டு மிகவுங் கலக்கமடைகின்றது. இதுவே எனது நோய்க்குரிய காரணமாகும். இதனை யறிதற்கு நீ நிமித்திகர் முதலியோரை நாடி விரையற்க' என்பது இதன் பொருளாகும். ஆருயிர் நாயகனாகிய இறைவனை அடைய இயலாமையால் வளைகழல உடல் மெலிந்து வருந்துகின்ற எனக்கு நிறைவுடைய நெஞ்சினால் துணை புரிவார் என்னுயிர்த் தோழியாகிய நின்னைத் தவிர வேறு யாருமிலர் என்பதனைக் குறிப்பான் அறிவுறுத் துவாள் தன் தோழியைச் செறிவளையாய் எனத் தலைவி அழைத்தமை நினைக்கத் தகுவதாம்.

தலைவனோடு உடன் போதற்கு ஒருப்பட்ட தலைமகளைத் தோழி வழிப்படுத்துரைப்பதாக அமைந்த பாடல்,

**ஓதவனாமம் உரையவன் பல்குணம் உன்னை விட்டேன்**
**போதவன் பின்னே பொருந்தவன் வாழ்க்கை திருந்தச்சென்று**
**மாதவ மாகிடு மாதவ மாவளர் புன்சடையான்**
**யாதவன் சொன்னான் அதுகொண்டொழியினி யாரணங்கே.**

என்பதாகும். 'அரிய தெய்வப்பெண் போல்வாய்! நின்தாய் தந்தை ஆயத்தார் முதலியோர் பெயர் குணங்களைக் கூறுதலை விடுத்து நின் ஆருயிர் நாயகனாகிய இறைவனுடைய திருப்பெயர்களையே இடைவிடாது சொல்வாயாக. குணங்களாற் சலியாத பெரிய மலை போன்று விளங்கும் அப் பெருமானுடைய அருட் குணங்களையே பேசுக. நின்னைப் பிரிவின்றியிருந்த யானும் நீ அவ்விறைவனுடன் சேர்ந்த இந்நிலையில் நின்னை நீங்கி நிற்கின்றேன். இனி நீ நின்னுயிர்த் தலைவனாகிய இறைவன் பின்னே செல்வாயாக. அவனது அருள்வழியொழுகும் நல்வாழ்க்கையில் திருத்தமுறச் சென்று பொருந்தி வாழ்வாயாக. இங்ஙனம் ஒழுகுவாயாயின் நின் செயல்களால் இவ்வுலகத்திற்குப் பெருகிய தவப்பயன் உளதாகும். பெருந்தவத்தின் உருவாக விளங்குஞ் செஞ்சடைக் கடவுளாகிய இறைவன் நீ எதனைச் செய்ய வேண்டுமென்று நினக்குப் பணித்தருளினானோ அப்பணியையே குறிக்கொண்டு போற்றிப் பிறவற்றை நீங்கி ஒழுகுவாயாக' எனத் தோழி தலைவிக்கு அறிவுறுத்துகின்றாள். எவ்வுயிர்க்கும் அன்புடையராய் ஒழுகும் ஈசனடியாரைத் தோழியாகவும், அவரால் நல்வழிப்படுத்தற்குரிய தகுதிவாய்ந்த

நல்லுயிரைத் தலைமகளாகவும் கொண்டு, இப்பாட்டின் துறைப்பொருளைக் கூர்ந்து நோக்குமிடத்து, மக்களெல்லோரும் தம்முடைய பாசத் தொடர்பொழிந்து இறைவனுடைய திருவடிக் கண்தலைப் படுதலாகிய ஈறிலாப் பேரின்ப வாழ்வையடைந்து இன்புறுதற்குரிய நெறிமுறைகள் திருவருட் செல்வராகிய சேரமான் பெருமாள் நாயனாரால் இத்திருப்பாடலில் உலக மக்களுக்கு அறிவுறுத்தப் பெற்றுள்ளமை நன்கு புலனாம்.

இவ்வுலகத்தைத் தோற்றுவித்துக் காத்து மீண்டும் ஒடுக்கி உயிர்களை உய்விக்கும் மும்மூர்த்திகளாக விளங்கும் இறைவன் எல்லாம் வல்ல சிவபெருமானே என்பார்,

**வீரன் அயன் அரி வெற்பலர் நீரெரி பொன்னெழிலார்**
**காரொண் கடுக்கை கமலந் துழாய்விடை தொல்பறவை**
**பேரொண் பதிநிறந் தாரிவ ரூர்திவெவ் வேறென்பரால்**
**யாரு மறியா வகையெங்க ளீசர் பரிசுகளே.** (95)

என அவ்விறைவனதியல்பை விளக்குகின்றார் சேரமான் பெருமாள் நாயனார். அரன் அயன் அரி என்பன சிவபெருமானுக்குரிய பெயர்களென்றும், கயிலைமலையும் தாமரை மலரும் பாற்கடலும் முறையே அவ்விறைவன் எழுந்தருளிய இடங்களென்றும், தீவண்ணம், பொன் வண்ணம், கார்வண்ணம் என்பன அவ்விறைவனுடைய திருமேனி நிறங்களென்றும், கொன்றை மலர், தாமரை, துழாய் என்பன முறையே அப்பெருமான் அணிதற்குரிய மாலைகளாமென்றும், இடபம் அன்னம் கருடன் என்பன முறையே அப்பெருமானுக்குரிய ஊர்திகளாமென்றும் நிரனிறைப் பொருள்கோள் அமையக்கூறி, இவ்வாறு எங்கள் பெருமானாகிய ஈசனுக்குரிய தன்மைகள் யாவரும் அறியாவகையில் வேறுவேறாக உள்ளனவாயினும், இவையெல்லாவற்றுக்கும் உரிய முதல்வன் ஒருவனேயென்று இத்திருப்பாடலில் சேரமான் பெருமாள் விரித்துக் கூறினமை நினைந்து போற்றத் தக்கதாகும். அயன் அரி அரன் என்னும் மும்மூர்த்திகளாக விளங்குபவன் சிவபெருமான் ஒருவனே யென்ற உண்மையை,

**'பவமலிதொழிலது நினைவோடு பதும நன்மலரது**
**மருவிய சிவன்'**

எனவும்,

**'உலகுகள் நிலைபெறுவகை நினைவொடு மிகும் அலைகடல்**
**நடுஅறிதுயில்மர் அரியுருவியல்பரன்'**

எனவும்,

**'முழுவதும் அழிவகை நினைவொடு முதலுருவியல்பரன்'**

எனவும் ஆளுடைய பிள்ளையார் தெளிவாக விளக்கி யருளினமை காண்க* (* திருச்சிவப்புரத்துத் தேவாரம் 'புவம் வளி கனல்' என்ற முதற் குறிப்புடைய திருப்பதிகம் 1, 2, 3, ஆம் திருப்பாடல்களை நோக்குக.)

உலகு உடல் கரணம் நுகர்பொருள் என்பவற்றை உயிர்களுக்குத் தந்து அவற்றைப் பிறப்பித்தற்கு முன்னரே தனது இச்சையாற்கொண்ட அருளாகிய திருமேனியை யுடையவன் இறைவனாதலின், முதுமைக்கு முதல்வனாக வுள்ளவன் அவனே, பழைமையுடைய நான்மறைகளை யருளிய முதல்வனாகிய அப்பெருமான் எழுகடல்களையுந் துறைகளாகக் கொண்ட ஏழுலகங்களுக்குந் தலைவனாயினும் கயிலைமலையின் உச்சியில் விரும்பி வீற்றிருக்கின்றான். இங்ஙனந் தன்னால் தோற்றுவிக்கப் பட்ட உலகத்தை இடமாகக் கொண்டு எழுந்தருளியிருப்பினும் இவ்வுலகங்கள் எல்லாந் தன்னால் தோற்றுவிக்கப்படுதற்கு முன் தான் எல்லாவுயிர்களிடத்தும் கொண்ட நடுவு நிலைமையோடு கூடிய திருவருளாகிய தொன்மை இயல்பினின்றும் சிறிதும் வழுவாது யாண்டும் எல்லா வுயிர்களின் உள்ளத்தும் ஒப்ப வீற்றிருந்து அருள் புரிதலால் இறைவன் என்னும் காரணப் பெயரையுடையவன். தன் வயத்தனாதல் முதலிய எண் குணங்களைத் தனக்கே சிறப்புரிமையாகக் கொண்டமையால் எல்லார்க்கும் நல்லருள் சுரக்கும் ஈசனாகத் திகழ்பவன். தன்னை இடைவிடாது நினைந்து போற்றும் மெய்யடியாருள்ளத்தைக் கோயிலாகக் கொண்டு விரும்பி வீற்றிருப்பவன். நஞ்சுடைய பாம்பினையும் வெறுத்து விலக்காமல் அணிகலனாக விரும்பி யணிந்தருளிய அருளாளன். இங்ஙனம் காலம் இடம் பொருள் ஆகிய எல்லாவற்றுக்கும் அப்பாற்பட்டு விளங்கும் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானை இவ்வரம்புகளுட்பட்டு வழங்குஞ் சொற்களால் சொல்லித் துதித்தல் நம்மனோர்க்கு இயலாதென்பார்,

**முறைவனை மூப்புக்கு நான்மறைக் கும்முத லேழ்கடலந்**
**துறைவனைச் சூழ்கயிலாயச் சிலம்பனைத் தொன்மை குன்றா**
**இறைவனை யெண்குணத் தீசனை யேத்தினர் சித்தந்தம்பால்**
**உறைவனைப் பாம்பனை யாம்பின்னை யென்சொல்லி**
**யோதுவதே. (53)**

என்ற திருப்பாடலால் சொல்லற்கரிய சூழலாய் விளங்கும் இறைவனது இயல்பினைச் சேரமான் பெருமாள் அறிவுறுத்தி யருளினமை நினைந்து போற்றத்தக்கதாகும்.

உலக உயிர்கள் ஆணும் பெண்ணுமாய் அன்பினாற் கலந்து உலகியல் நிகழ்த்தி இன்புற்று உய்யும் வண்ணம் உயிர்க்குயிராகிய இறைவன் அம்மையப்பனாகத் திருமேனி கொண்டு தோன்றி எல்லா வுயிர்களுக்கும் அருள்புரிகின்றான் என்னும் உண்மையினை நம் தமிழகத்தே தோன்றி அப்பெருமானது திருவருள் நெறியாகிய சிவநெறியில் நின்றொழுகிய செம்புலச் செல்வர்கள் அனைவரும் நன்குணர்ந்து வெளியிட்டுள்ளார்கள். அப்பெருமக்கள் மேற்கொண்டொழுகிய சிவநெறியினைக் கடைப்பிடித்து ஒழுகிய சேரமான் பெருமாள் நாயனார், தாம் இறைவனருளாற் கண்டுணர்ந்த மாதொருபாகர் திருக்கோலத் தியல்பினை,

**வலந்தான் கழலிடம் பாடகம் பாம்பு வலமிடமே**
**கலந்தான் வலநீ றிடஞ்சாந் தெரிவலம் பந்திடமென்**
**பலந்தார் வலமிட மாடகம் வேல்வல மாழியிடம்**
**சலந்தாழ் சடைவலம் தண்ணங் குழலிடஞ் சங்கரற்கே. (65)**

என்ற பாடலால் நம்மனோர்க்கு விளங்க அறிவுறுத்துகின்றார். எல்லாவுயிர்க்கும் இன்பத்தைத் தருதலாற் சங்கரன் எனப்போற்றப்பெறும் சிவபெருமானுக்கு வலப்பக்கத்துத் திருவடியில் அணியப் பெற்றுள்ளது ஆடவர் அணியாகிய வீரக்கழல். இடப்பக்கத்துத் திருவடியிலுள்ளது மகளிர் அணியாகிய பாதசரம். வலப்பக்கத்தே அணிவது பாம்பாகிய அணிகலன். இடப்பக்கத்துள்ளவை மணிகள் பதிக்கப்பெற்ற அணிகலன்கள். வலப்பாலிற் பூசுவது திருநீறு. இடப்பாலிற் பூசுவது செஞ்சாந்து. வலப்பால் திருக்கையில் ஏந்தியது தீ. இடப்பால் திருக்கையில் ஏந்தியது பந்து. வலப்பக்கத்தே பூண்பது எலும்பாகிய உலர்ந்த மாலை. இடப்பக்கத்தே பூண்பது பொன்னரி மாலை. வலம் ஏந்தியது வேற்படையாகிய சூலம். இடம் ஏந்தியது சக்கரப்படை. வலப்பக்கத்து தாழ்சடை. இடப் பக்கத்து கருங்குழல் என்பது இத்திருப்பாடலின் பொருளாகும். இத்திருக்கோலத்தைத் தொன்மைக் கோலம் எனப் போற்றுவர் திருவாதவூரடிகள்.

இங்ஙனம் சிவபெருமானது இடப்பக்கத்து எழுந்தருளிய உமையம்மையாரே திருமால் என்ற திருவுருவத்துடனும் இறைவனது இடப்பக்கத்தில் விளங்குகின்றார் என்ற மெய்மையைத் தெரிவிப்பது,

**இடமால் வலந்தான் இடப்பால் துழாய் வலப்பாலொண் கொன்றை**
**வடமா லிடந்துகில் தோல்வலம். ஆழியிடம் வலமான்**
**இடமால் கரிதால் வலஞ்சே திவனுக் கெழினலஞ்சேர்**
**குடமாலிடம் வலங் கொக்கரை யாமெங்கள் கூத்தனுக்கே. (6)**

என்ற பாடலாகும். எங்கள் கூத்தப்பிரானாகிய இறைவனுக்கு இடப்பாகம் திருமால்; வலப்பாகம் தான். இடப்பாலணிந்தது துழாய்மாலை; வலப்பாலது கொன்றை மலர் மாலை. இடப்பக்கத்தி லுடுக்கப் பெற்றது பொன்னாடை; வலப்பக்கத்து புலித்தோல். இடது திருக்கையில் ஏந்தப் பெற்றுள்ளது சக்கரப் படை; வலப்பக்கத்து இடபக்கொடி. இடப்பாகத்துத் திருமேனி கரியது; வலப்பாகத் திருமேனி செம்மை நிறமுடையது. இடப்பாகத்தின் ஆடலுக்கேற்றது குடம்; வலப்பாகத்தின் ஆடலுக்கேற்றது கொக்கரையென்னும் வாத்தியமாகும் என்பது இத் திருப்பாடலின் பொருள்.

சிவபெருமான் உயர்த்த கொடியில் எழுதப் பெற்ற இடபமும் அப்பெருமான் உடுத்த கோவணவுடையும் அவ்விறைவனது சென்னியில் அணியப் பெற்று விளங்கும் கொக்கிறகும் அவன் திருவடியிலணிந்த வீரக்கழலும் அவன் மார்பிற் பூசப்பெற்று விளங்கும் திருநீறும் மாலையாக விளங்கும் ஐந்தலையரவும் முடிமேல் விளங்கும் பிறைமதியும் மணநாறும் கொன்றைமலர் மாலையும் அப்பெருமான் திருக்கையில் விளங்கும் மூவிலைச் சூலமும் ஆகிய இத்திருக்கோலம் எப்பொழுதும் தம் கட்புலனாகத் திகழக்கண்ட சேரமான் பெருமாள் நாயனார் தாம் கண்ட அவ்வழகிய காட்சியை,

**கொடிமேல் இடபமுங் கோவணக் கீளுமோர் கொக்கிறகும்**
**அடிமேற் கழலும் அகலத்தி னீறுமை வாயரவும்**
**முடிமேல் மதியும் முருகலர் கொன்றையும் மூவிலைய**
**வடிவேல் வடிவுமென் கண்ணுளெப் போதும் வருகின்றனவே. (20)**

என்ற பாடலால் ஏனையோர்க்கும் விளங்க எடுத்துரைக்குந்திறன் படிப்போருள்ளத்தை உருக்குவதாகும்.

கதிர் விரிகின்ற செஞ்ஞாயிறு போன்று ஒளிர்வது இறைவனது சிவந்த திருமேனி. ஞாயிற்றைச் சூழ்ந்தொளிரும் ஒளிக்கற்றைகள் போல்வது அப்பெருமானது செஞ்சடை. ஞாயிற்றின் கதிர்க்கு ஆற்றாதோடிய காரிருள் போன்று திகழ்வது நஞ்சக்கறையுடைய திருநீலகண்டம். அவ்விருளின் கீழ் விளங்கும் வெண்மேகம் போன்றது அப்பெருமான் திருமேனியிற் பூசப்பெற்றுத் திகழும் திருவெண்ணீறு எனச் சேரமான் பெருமாள் தாம் கண்ட தெய்வக்காட்சியை உவமை கூறி விளங்குவதாக அமைந்தது,

**விரிகின்ற ஞாயிறு போன்றதுமேனியஞ் ஞாயிறு சூழ்ந்**
**தெரிகின்ற வெங்கதி ரொத்தது செஞ்சடை யச்சடைக்கீழ்ச்**
**சரிகின்ற காரிருள் போன்றது கண்டமக் காரிருட்கீழ்ப்**
**புரிகின்ற வெண்முகில் போன்றுளதாலெந்தை யொண் பொடியே (26)**

என்ற திருப்பாடலாகும்.

*இருள் நிறந்தங்கிய திருமிடற்றினால் இரவாகவும், தன் செம்மேனியொளியாற் பகலாகவும், வேதப்பொருளாக மேன்மேலுயர்ந்து சலிப்பின்றி விளங்குதலால் (மரையாகிய மானைத் தாங்குதலால்) மலையாகவும், திருவைந்தெழுத்தின் பொருள் நிரம்பிய திருவடையாளமாகிய கொன்றை மலர் மாலையை யணிந்தமையால் கொன்றை பூத்து விளங்கும் முல்லை நிலமாகவும், பாம்புகள் ஊர்ந்து தவழ்தலால் புற்றாகவும், மதிசூடுதலால் விசும்பாகவும் கங்கை நீரையேற்றலாற் கடலாகவும், ஆட்பாலவர்க்கருளும் அருள் காரணமாகப் பல்வேறு திருவுருவங்களை மேற்கொள்ளுதலால் இங்குக் கூறப்படாத வேறுபல வண்ணங்களாகவும் சிவபெருமான் விளங்கு மியல்பினை,*

**இருளார் மிடற்றால் இராப் பகல்தன்னால், வரைமறையாற்,**
**பொருளார் கமழ் கொன்றையால் முல்லை, புற்றரவாடுதலால்,**
**தெருளார் மதிவிசும்பாற், பௌவந்தெண்புனல் தாங்குதலால்**
**அருளாற் பலபல வண்ணமுமா அரனாயினனே.** (57)

*என்ற பாடலால் விரித்துரைப்பர்.*

*தன்னை வழிபடும் மெய்யடியார்களைச் சாதற் றுன் பத்தினின்றும் நீக்கி நிலமிசை நீடுவாழச் செய்தலாற் காலகாலனாகவும், பிறவிப்பிணி தீர்த்தலால் நன்மருந்தாகவும், அடியார்கள் மனத்தால் நினைத்தனவற்றை நினைத்தபொழுதே வரையாது வழங்குதலாற் சிந்தாமணியாகவும், தன் பொருள்சேர் புகழை நாவாரப் பேசுங்கால் தெவிட்டாத இன்சுவை பயத்தலால் வானோரமுதமாகவும், தலைதாழ்த்து வணங்கும் அன்பர்களது உள்ளத்தைக் கவர்ந்து உவகை தருதலால் ஆருயிர் நாயகனாகவும், இங்ஙனம் இறைவன் தன்னடியார்களுக்கு அருளுந்திறம் பலபல வண்ணங்களாமென்பார், அவனை நினைந்து மால்கொண்ட தலைவி கூற்றில் வைத்து,*

**சந்தித்த கூற்றுக்குக் கூற்றாம் பிணிக்குத் தனிமருந்தாம்**
**சிந்திக்கிற் சிந்தா மணியாகித் தித்தித் தமுதமுமாம்**
**வந்திக்கின் வந்தெனைமால் செயும் வானோர் வணங்க நின்ற**
**அந்திக்க ணாடி யரனடியார்களுக் காவனவே.** (83)

*எனப் பாடிப் போற்றுகின்றார்.*

*மக்கள் விரும்பி வேண்டுமியல்பினதாகிய வாழ்நாளிற் பாதிப்பகுதி உறக்கத்திற்குரிய இராப்பொழுதாய்ப் பயனின்றிக் கழிவது. எஞ்சிய பாதி நாட்களில் நெருங்கி வருத்தும் கொடிய நோய்களும் ஒன்று மறியாப் பிள்ளைப்பருவமும் எதுவுஞ் செய்தற்கியலாத முதுமையும் விரவி வருத்துவன. அன்றியும்*

*அச்சம் வெகுளி அவா பொறாமை முதலிய தீக்குணங்கள் பல செறிந்து உள்ளம் உரை செயல்களை மாசுபடுத்துவன. ஆதலின் இங்ஙனம் துயரிலங்கும் உலக வாழ்வினைப் பற்றுகோடாக எண்ணிச்சாராது என்றும் நிலைபேறுடைய இறைவன் திருவடிகளைச் சார்ந்து உய்தி பெறுவோமாக என உலக மக்களை அழைத்துக் கூறும் அறிவுரையாக அமைந்தது,*

**வேண்டிய நாட்களிற் பாதியுங்கங்குல் மிகவவற்றுள்**
**ஈண்டிய வெந்நோய் முதலது பிள்ளைமை மேலதுமூப்**
**பாண்டின அச்சம் வெகுளி அவா அழுக்கா றிங்ஙனே**
**மாண்டன சேர்தும் வளர்புன் சடை முக்கண் மாயனையே.** (99)

*என்ற பாடலாகும்.*

*வழிபட வேண்டுமென்னும் பேரன்பினால் நெஞ்சங் குழைந்து தளிர்க்கவும் கண்களினின்று அன்புநீர் ததும்பி வழியவும் முகம் தாமரை மலரின் பொலிவுடையதாக விளங்கவும் அழகிய சிவந்த மலர்போலும் கைகள் குவிய எட்டுறுப்பும் நிலத்திற் பொருந்த வீழ்ந்து திருவடிகளைப் பணிந்து தம் சொற்களாகிய மலர்களால் அருச்சித்து வழிபடவல்ல அடியார்கள் தங்குதற்கென்றே தாழ் சடையானாகிய இறைவன் வஞ்சனை முதலிய குற்றங்களைக் கடிந்து எல்லாவுலகிற்கும் மேலதாகிய வீட்டுலகத்தைத் திருத்தமுற அமைத்து வைத்துள்ளான் என்பார்,*

**நெஞ்சந் தளிர்விடக் கண்ணீர் ததும்ப முகமலர**
**அஞ்செங் கரதலங் கூம்ப அட்டாங்க மடிபணிந்து**
**தஞ்சொல் மலரால் அணியவல் லார்கட்குத் தாழ்சடையான்**
**வஞ்சங் கடிந்து திருத்திவைத் தான்பெரு வானகமே.** (11)

*எனப் பாடிப் போற்றுகின்றார். இத்திருப் பாடலில் இறைவன்பால் நேயமிக்க அடியார்களது இயல்பும் அவர்களுக்கு இறைவன் ஈறிலாப் பேரின்ப வாழ்வை வகுத்தருளிய திறமும் இனிது விளக்கப் பெற்றிருத்தல் அறிந்து இன்புறத் தக்கதாகும்.*

*சிவபெருமானுக்கு அடியராயினோர் பெறும் இன்ப நிலையும் அவ்விறைவனது அருள்வழி நில்லாத தீயோர் அடையுந் துன்ப நிலையும் இன்னவென விளக்குவது,*

**வானக மாண்டு மந்தாகினியாடி நந்தாவனஞ் சூழ்**
**தேனக மாமலர் சூடிச்செல்வோருஞ் சிதவல் சுற்றிக்**
**கானகந் தேயத் திரிந்திரப் போருங் கனக வண்ணப்**
**பானிற நீற்றற் கடியரு மல்லாப் படிறருமே.** (12)

*எனவரும் பாடலாகும். வானுலகத்தையாண்டு ஆகாய கங்கையின் தூய நன்னீரிற் குளித்து அங்குள்ள நந்தவனங்களில் அலர்ந்த*

தேனிறைந்த நறுமலர்களைச் சூடித் தேவராய்த் துறக்க வின்பங்களை நுகர்பவரும், இவ்வுலகிற் கந்தைத் துணியைச் சுற்றிக் கொண்டு காலிலுள்ள நகந்தேய ஊர் தோறுந் திரிந்து இரந்துண்போரும் முறையே யாவரெனின், பால்போலும் நிறந்தங்கிய திருவெண்ணீற்றினை யணிந்த சிவபெருமானுக்கு அடியராயினோரும் அவரல்லாத தீயோருமெனத் தெளிதல் வேண்டும் என்பது இதன் பொருளாகும்.

இறைவனை நினைத்தலும் வாழ்த்தலும் வணங்கலும் ஆகிய வழிபாட்டை மேற்கொள்ளுதற் பொருட்டே இம்மக்கட் பிறவி நமக்கு அளிக்கப்பெற்றுள்ளதென்பதனையும் பெறுதற்குரிய தம்முடம்பினைக் கடவுள் வழிபாட்டிற் பயன்படுத்தாமையால் மனிதர்க்குளதாம் தாழ்வினையும் புலப்படுத்துவது,

**சொல்லாதன கொழுநா வல்லசோதியுட் சோதிதன்பேர்**
**செல்லாச் செவிமரம் தேறித்தொழாதகை மண், திணிந்த**
**கல்லாம் நினையாமனம், வணங்காத்தலையும் பொறையாம்,**
**அல்லா அவயவந்தானும் மனிதர்க் கசேதனமே. (42)**

என்ற பாடலாகும். ஞாயிறு திங்கள் விண்மீன்கள் ஆகிய சுடர்ப்பொருள்கள் எல்லாவற்றினுள்ளும் ஆன்மாக்களது அறிவினுள்ளுங் கலந்து நின்று ஒளிதரும் பேரொளிப் பிழம்பாகிய இறைவனது திருப்பெயரைச் சொல்லும் பயிற்சி பெறாத மனிதரது நா அவிழ்ச் சுவையின்றித் தமிழ்ச் சுவையறியாமையால் மண்ணை யுழுதற்குரிய கலப்பையின் கண் அமைந்த இருப்புக் கொழுவெனக் கொள்ளத்தக்கதாகும். இறைவன் திருப்பெயரைக் கேட்டலிற் பழகாத செவி உணர்ச்சியற்ற மரமாம். எவ்வுயிர்க்குந் தலைவன் இறைவனே எனத் தெளிந்து தொழாதவர் தம் கைகள் தமக்குரிய தொழிலைச் செய்யும் ஆற்றல் பெறாமையின் மண்ணால் இயன்றனவேயாம். இறைவனை நினைந்துருகாத மனம் தனக்குரிய அன்பின் நெகிழ்ச்சியினைப் பெறாமையால் வலிய கல்லெனவே கொள்ளத்தகும். இறைவனைத் தாழ்ந்து வணங்காத் தலையும் கல்வியறிவின் பயனாகிய பெருமையை எய்தப் பெறாமையின் வெறுஞ்சுமையேயாகும். இங்ஙனமே இறைவன் திருவுருவினைக் காணும் பயிற்சியில்லாத கண்கள் அப்பெருமானெழுந்தருளிய திருக்கோயில்களைச் சூழ்ந்து வலம்வராத கால்கள் ஆகிய பிற பொறிகளும் தத்தமக்கேற்ற புலன்களைக் கொள்ளும் ஆற்றல் பெறாமையால் அறிவற்றன வெனவே கொள்ளுதற்குரியன என்பது இத்திருப்பாடலின் பொருள். கோளில் பொறியிற் குணமிலவே எண் குணத்தான், தாளை வணங்காத்தலை' என்ற திருக்குறளுக்குச் சேரமான் பெருமாள் நாயனார் கூறிய சிறந்த விரிவுரையாக இத்திருப்பாடல் அமைந்துள்ளமை நினைந்து மகிழ்தற்குரியதாகும்.

*அழியுமியல்பினதாகிய பயனற்ற உடம்பினைப் பேணிப் பாதுகாத்தற் பொருட்டு நாளும் பொய்யே பேசிப் பலருடைய வீடுகள் தோறுஞ் சென்றிரந்து துன்புறுதற்கிடனாகிய இவ்வுலக வாழ்வில் அழுந்தித் தளராது உய்திபெறுவோம். நெஞ்சே துயர்நீங்கி எழுவாயாக. முன்னொரு காலத்திற் கடலிற் பரவியெழுந்த கொடிய நஞ்சினையுட் கொண்டு தன் மிடற்றி லடக்கிய இறைவன் திருவடிகளைப் புகலாக அடைந்துய்தலே இவ்வுலகிற் பெறுதற்கரிய மக்கள் யாக்கையை நாம் பெற்றுள்ளமையால் அடைதற்குரிய பெரும் பயனாம் என்ற மெய்மையை நினக்குச் சொன்னேன் எனச் சேரமான் பெருமாள் தம் நெஞ்சத்திற்குக் கூறும் அறிவுரையாக அமைந்தது,*

**படிறாயின சொல்லிப் பாழுடலோம்பிப் பலகடைச் சென்**
**றிடறா தொழிதும் எழுநெஞ்சமே எரியாடி யெம்மான்**
**கட றாயின நஞ்ச முண்டபிரான் கழல் சேர்தல் கண்டாய்**
**உடறா னுளபய னாவ சொன்னேனிவ் வுலகினுள்ளே. (13)**

*என்ற திருப்பாட்டாகும்.*

*என் நெஞ்சமே இறைவனது திருவடியைப் பணிவாயாக. அப்பெருமானது மெய்ப்புகழை இசை பொருந்தப் பாடியாடுக, குளிர்ந்த நறுமலரால் மாலை புனைந்து அப்பெருமானுக்கு அணிக. சூரியனுடைய பற்களைத் தகர்த்த அவ்விறைவனுக்கே அடிமை செய்யத் துணிக. உடம்பில் திருநீற்றை நிறையப்பூசி அவ்விறைவனது திருவடித் தொண்டினையே விரும்பிச் செய்க. இங்ஙனஞ் செய்வாயாயின் நல்லன வெல்லாம் நிறைந்த சிவலோக வாழ்வை நினக்குக் காட்டியருள் புரிவான். நின் கவலையை நீக்குக எனத் தம் நெஞ்சிற்கு அறிவுறுத்துவதாக அமைந்தது,*

**பணிபதம் பாடிசை யாடிசையாகப் பனிமலரால்**
**அணிபதங் கன்பற்கொள் அப்பனை யத்தவற்கேயடிமை**
**துணிபதங் காமுறு தோலொடு நீறுடல் தூர்த்துநல்ல**
**தணிபதங் காட்டிடும் சஞ்சல நீயென் றனிநெஞ்சமே. (10)**

*என்ற பாடலாகும். பெரும் பொருளைத் தேடிப் பெற்றும் பெறாமையால் செயலொழிந்து நின்றும் திரிந்தும் நோயிற் கிடந்தும் மீண்டும் அலைந்து திரிந்தும் வருந்துதற்கு இடனாகிய இவ்வுலக வாழ்க்கையை விட்டொழிப்பாயாக. மாதொரு கூறனாகிய இறைவன் நாம் பக்குவம் பெற உள்ளத்திருந்திய காலத்தே நம்முடைய தீவினைகளைக் களைந்து அருள்புரிவான் எனத் தம் நெஞ்சத்திற்கு உரைப்பதாக அமைந்தது,*

**இருந்தன மெய்தியு நின்றுந் திரிந்துங் கிடந்தலைந்தும்**
**வருந்திய வாழ்க்கை தவிர்த்திடுபோக நெஞ்சே மடவான்**

**பொருந்திய பாகத்துப் புண்ணியன் புண்ணியல் சூலத்தெம்மான்**
**திருந்திய போதவன் தானே களையுநந் தீவினையே. (17)**

என்ற திருப்பாட்டு. உலக வாழ்க்கை துன்பத்திற் கிடனாவ தென்பதும், உயிர்கள் தம் முயற்சி யொன்றினாலேயே வினைத் தொடக்கினின்றும் மீள முடியாதென்பதும், வினையின் நீங்கி விளங்கிய அறிவினனாகிய இறைவனே உயிர்களின் உளத் தூய்மைக்கேற்ப அவ்வுயிர்களைப் பாசப்பிணிப்பின்றும் விடுத்தருளிப் பேரின்பம் வழங்க வல்லவன் என்பதும் ஆகிய உண்மைகள் இத்திருப்பாடலாற் புலப்படுத்தப்பட்டமை காணலாம்.

சேரமான் பெருமாள் நாயனார் பொறிவாயிலைந் தவித்தானாகிய இறைவன் அருளிய திருவருள் நெறியில் தாம் சென்ற அநுபவத்தை விரித்துரைப்பன,

**தீவினையேனை நின் றைவ ரிராப் பகல் செத்தித்தின்ன**
**மேவின வாழ்க்கை வெறுத்தேன் வெறுத்து விட்டேன் வினையும்**
**ஓவினது உள்ளத் தெளிந்தது கள்ளங் கடிந்தடைந்தேன்**
**பாவின செஞ்சடை முக்கண ணாரணன் பாதங்களே. (18)**

**சிந்தனை செய்ய மனமமைத்தேன் செப்ப நாவமைத்தேன்**
**வந்தனை செய்யத் தலையமைத்தேன் கைதொழ வமைத்தேன்**
**பந்தனை செய்வதற் கன்பமைத்தேன் மெய்யரும்ப வைத்தேன்**
**வெந்த வெண்ணீறணி ஈசற்கிவையான் விதித்தனவே. (92)**

எனவரும் பாடல்களாம். கொடுவினையேனாகிய என்னை ஐம்புலன்களாகிய வேடர் ஐவரும் செத்தித் தின்னுதலால் அவர்களது தொல்லைக்குட்பட்டு உடலொடு வாழும் இவ்வாழ்க்கையை அருவருத்தேன். வெறுத்து ஒழித்து விட்டேன். எனது பழவினையாகிய பகையும் என்னை விட்டொழிந்தது. அதனால் என்னுள்ளமும் தெளிவு பெற்றது. உள்ளத்திலுள்ள வஞ்சனை முதலிய மாசுகளைத் துவரத்துடைத்து முக்கட் பகவனாகிய சிவபெருமானுடைய திருவடிகளைப் பற்றுக் கோடாகக் கொண்டேன். அப்பெருமானைச் சிந்தித்தற்கென்றே என் மனத்தைத் திருத்தமுடையதாகச் செய்தேன். அவனது பொருள்சேர் புகழைச் சொல்லுதற்கே என் நாவை உரிமைப் படுத்தினேன். அவன் திருவடிகளைத் தொழுதற்கே என் தலையை உரிமையாக்கினேன். அவனைத் தொழுதலாகிய திருப்பணிக்கே என் கைகளைப் பயன்படச் செய்தேன். அவனது திருவருளைக் கடைப்பிடியாகப் பற்றுதற்பொருட்டே எனது அன்பினை அமைத்தேன். அவனது திருவருட் பண்பினை எண்ணிய அளவே என்னுடல் சிலிர்க்கும் நெகிழ்ச்சி யுடையனாயினேன். எல்லாப் பாவங்களையும் சுட்டெரிக்கும் அருள் வண்ணமாகிய

திருவெண்ணீற்றினை யணிந்த சிவபெருமானை வழிபடுவதற்கு அடியேன் மேற்கொண்ட நியமங்கள் இவையாகும் எனச் சேரமான் பெருமாள் நாயனார் மேற்காட்டிய திருப்பாடல்களால் தாம் பெற்ற பேரின்பத்தினை ஏனையோரும் பெற்று இன்புற வழி கூறிய திறம் நினைந்து போற்றத் தக்கதாகும்.

இவ்வுலக வாழ்விலும் மறுமை வாழ்விலும் வேண்டுவார் வேண்டுவதே ஈந்தருளும் பேரருளும் பேராற்றலுமுடையோன் இறைவன் ஒருவனேயாதலின் அவனை வழிபடுவோர் யாண்டும் என்றும் இன்பமே நுகர்வரென்றும் அப்பெருமானை வழிபடாது சிவனடியார்களுக்குத் துன்பஞ் செய்யுங் கொடியார் மீளா நரகத்தில் வீழ்ந்திடர்ப்படுவரென்றும் உலக மக்களுக்கு அறிவுறுத்தக் கருதிய சேரமான் பெருமாள் நாயனார்,

**உலகாளுறுவீர் தொழுமின் விண்ணாள்வீர் பணிமினித்தம்**
**பலகாமுறுவீர் நினைமின் பரமனொடொன்ற லுற்றீர்**
**நலகாமலரால் அருச்சிமின் நாணரகத்து நிற்கும்**
**அலகாமுறுவீர் அரனடியாரை யலைமின்களே.** (14)

என நயமுறக் கூறுகின்றார். உலகாளும் பெருவிருப்புடையீர், நும் விருப்பம் ஈடேற வேண்டின் எவ்வுயிர்க்கும் தலைவனாகிய இறைவனைக் கைகூப்பித் தொழுவீராக. வானுலக ஆட்சியை விரும்பியவர்களே இறைவனடிகளில் வீழ்ந்து பணிமின்கள். நாள்தோறும் இவ்வுலகிற் புதிய புதிய இன்பங்களை நுகர விரும்புவீராயின் இறைவனை இடைவிடாது நினைத்து போற்றுமின்கள். ஈசனோடு பிரிப்பின்றியொன்றி இன்புறக் கருதுவீராயின் நறுமலர்களால் அப்பெருமானை நாடோறும் அருச்சித்து வழிபாடு செய்வீராக. நாளும் மீளா நரகினையடைந்து இடர்ப்பட விரும்புவீராயின் இறைவனடியார்களை நாளுந் துன்புறுத்துவீராக என்பது இதன் பொருள். சிவனடித் தொண்டினாற் பெருஞ் சிறப்பெய்திய சேரமான் பெருமாள் நாயனார் 'நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற அருணோக்கத்துடன் உலக மக்களை நோக்கிக் கூறிய அறிவுரையாக அமைந்தது,

**கூறுமின் ஈசனைச் செய்மின் குற்றவேல் குளிர்மின் கண்கள்**
**தேறுமின் சித்தம் தெளிமின் சிவனைச் செறுமின் செற்றம்**
**ஆறுமின் வேட்கை அறுமின் அவலம் இவைநெறியா**
**ஏறுமின் வானத் திருமின் விருந்தா விமையவர்க்கே.** (70)

என்ற திருப்பாட்டாகும். ஈசனது பொருள்சேர் புகழை நாவாரக் கூறுமின். அவனுக்கே அடித்தொண்டு செய்மின், அவனது திருமேனியைக் கண்டு கண்குளிரப் பெறுமின். சிந்தையை ஒரு

நெறியில் வைத்துத் தெளிவு பெறுமின். சிவனே முழுமுதற் கடவுளென்று தெளியுங்கள். சினத்தைத் தணிமின். உலகியற் பொருளிற் செல்லும் அவாவை அகற்றுமின். துக்கத்தை நீக்குமின். இங்குக் கூறிய இந்நியமங்களையே வழியாகக் கொண்டு துறக்கஞ் சென்று இன்பமே நுகருந்தேவர்க்கு விருந்தினராகத் தங்கி அவர்களால் உபசரிக்கப் பெறுவீராக என்பது இதன் பொருளாகும். இங்ஙனமே இப்பொன்வண்ணத்தந்தாதியின் பொருள்நலங் காணப்புகின் மிக விரியுமாதலின் இவ்வளவில் அமைகின்றோம்.

தீவினையின் பயனாகத் தப்பி உய்தற்கியலாத கொடிய நரகத்தையடைந்து துன்புற்றாலும், அன்றி நல்வினை காரணமாக அத்துன்பத் தொடர்பினின்று நீங்கினாலும், மீளவும் இவ்வுலகிற் போந்து ஊர்வன நடப்பன பிறப்பன பறப்பனவாகிய ஆற்றலற்ற தாழ்ந்த பிறவிகளிற் பிறந்திறந்து வருந்தினாலும், இவ்வரச வாழ்வில் நெடுங்காலம் நிலைபெற்றிருந்தாலும், உயிர்களுக்கு நல்லறிவு வளர நான்மறைகளை அருளிச் செய்தவனும் சாதல் நீங்க நஞ்சினை யுண்டாக்கிய கரிய திருமிடற்றை யுடையவனுமாகிய இறைவனுடைய திருவடிகளை மறவாது நினைந்து போற்றுத லொன்றே இறைவன்பால் வேண்டத்தகும் முடிவான வரமாகு மென்று எண்ணியொழுகியவர் சேரமான் பெருமாள் நாயனார். இச் செய்தி,

**பொய்யா நரகம் புகினுந் துறக்கினும் போந்து புக்கிங்**
**குய்யா வுடம்பினொ டூர்வ நடப்ப பறப்ப வென்று**
**நையா விளியினும் நானில மாளினும் நான் மறைசேர்**
**மையார் மிடற்றா னடிமறவா வரம் வேண்டுவனே. (98)**

எனவரும் அவரது வேண்டுகோளால் இனிது புலனாதல் காணலாம். எந்நிலையிலிருந்தாலும் இறைவன் திருவடியை மறவாதிருத்தலே உயிர்களுக்குரிய உறுதிப் பொருளாகும் என்ற மெய்ம்மையினை யறிவுறுத்தும் இத் திருப்பாடல்,

**புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடி யென்மனத்தே**
**வழுவா திருக்க வரந்தர வேண்டுமிவ் வையகத்தே**
**தொழுவார்க் கிரங்கி யிருந்தருள் செய்பாதிரிப் புலியூர்ச்**
**செழுநீர்ப் புனற் கங்கை செஞ்சடைமேல் வைத்த தீவண்ணனே.**

எனவரும் திருநாவுக்கரசர் வாய்மொழியை அடியொற்றி அமைந்தமை உணர்ந்து மகிழத்தக்கதாகும்.

மும்மணிக்கோவையென்பது, வேறுவேறு நிறமுடைய மூவகை மணிகளாற் கோக்கப் பெற்ற மாலை போன்று ஆசிரியம் வெண்பா கட்டளைக் கலித்துறை என்ற மூவகைச் செய்யுட்களால்

அந்தாதித் தொடையமைய இயற்றப் பெறும் செந்தமிழ்ப் பிரபந்தமாகும். இப்பிரபந்தம் முப்பது பாடல்களால் நிறைவுபெறுதல் வேண்டுமென்பது விதி. இப்பொழுது கிடைத்துள்ள தமிழ்நூல்களுள் மும்மணிக் கோவையென்னும் இப்பிரபந்தத்திற்குரிய மூல இலக்கியமாக விளங்குவது சேரமான் பெருமாள் நாயனார் அருளிச்செய்த திருவாரூர் மும்மணிக் கோவை யொன்றேயாம். திருவாரூரிற் கோயில் கொண்டு எழுந்தருளிய சிவபெருமானைப் போற்றுவதாதலின் இது திருவாரூர் மும்மணிக்கோவை யென்னும் பெயர்த்தாயிற்று. தில்லைச்சிற்றம்பலத்தையடைந்து பொன் வண்ணத் திருவந்தாதி பாடிப் போற்றிய சேரமான் பெருமாள் நாயனார் திருவாரூரையடைந்து நம்பியாரூரைத் தோழராகப் பெற்று அவருடன் பூங்கோயிலமர்ந்த பெருமானைப் போற்றிப் பரவும் நிலையில் இத்திருமும்மணிக்கோவையைப் பாடியருளினா ரென்பதும், இறைவர் தம் தோழராகிய நம்பியாரூரர் கேட்டு மகிழ இதனை இறைவர் திருமுன்பு அரங்கேற்றின ரென்பதும் வரலாறு. கட்டளைக் கலித்துறையும் வெண்பாவுமாகிய இருவகைப் பாக்களும் ஒன்றன்பின் ஒன்றாக அந்தாதித் தொடையால் தொடுத்துவர இருபது செய்யுட்களால் இயன்றது இரட்டைமணிமாலை யென்பதும், அதனை முதன் முதலில் அருளிச் செய்தவர் காரைக்காலம்மையார் என்பதும் முன்னர்க் கூறப்பட்டன. அவ்விருவகைப் பாக்களுடன் ஆசிரியப் பாவையும் ஒரு மணியாகக் கொண்டு மும்மணிக் கோவையென்ற செந்தமிழ்ப் பனுவலை முதன் முதல் இயற்றியவர் சேரமான் பெருமாள் நாயனாரேயாவார். நக்கீர தேவ நாயனார் பாடிய திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, இளம்பெருமானடிகள் பாடிய சிவபெருமான் திருமும்மணிக்கோவை, அதிராவடிகள் பாடிய மூத்த பிள்ளையார் திருமும்மணிக்கோவை, பட்டினத்தடிகள் பாடிய திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, நம்பியாண்டார் நம்பி பாடிய ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக்கோவை ஆகிய இவை யாவும் சேரமான் பெருமாள் பாடிய இத் திருவாரூர் மும்மணிக்கோவையின் அமைப்பை அடியொற்றியெழுந்த செந்தமிழ்ப்பனுவல்களேயாம்.

திருவாரூர் மும்மணிக்கோவையிலுள்ள செய்யுட்கள் முப்பதும் அன்பினைந்திணையாகிய அகத்திணையைப் பொருளாகக் கொண்டு பாடப் பெற்றனவாகும். திருவாரூரில் திருக்கோயில் கொண்டருளிய சிவபெருமானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு உலக நூற்பொருளாகிய அகத்திணை யொழுகலாற்றைப் புலப்படுத்துவது இம்மும்மணிக்கோவை

யாதலின், அறிவனூற்பொருளும் உலகநூல் வழக்கும் என இரு பொருளும்நுதலி இயற்றப்பெற்றது இதுவெனல் பொருந்தும். உமையொருபாகத்திறைவனாகிய சிவபெருமான் வானின்றிழிந்த கங்கைப் பெருவெள்ளத்தின் வேகத்தைக் கெடுத்து அதனைத் தன் செஞ்சடைக்கண் அடக்கியருளியதும், தேயுந் திங்களை யணிந்து உய்வித்ததும், ஒருவரும் உண்ணாத நஞ்சினையுண்டு மிடற்றி லடக்கி விண்ணோரை வாழ்வித்ததும், மேருமலையை வில்லாக வளைத்ததும், திரிபுரத்தை யெரித்ததும், தக்கனது வேள்வியைச் சிதைத்ததும், கூற்றெனப் பெரிய கொடுந்திறலாளனது ஆற்றலையழித்தும், மன்மதனை எரித்ததும், யானையையுரித்துப் போர்த்ததும் அருச்சுனற்கு அருள் செய்ததும் ஆகிய செய்திகளும், அண்டத்துக்கு அப்பாலனாகிய அவ்விறைவன் அடியார்களது பிறவிநோய் நீங்க அருள்புரிதற் பொருட்டு அரிவை பாகத்து அண்ணலாய்த் திருவுருக்கொண்டு திருவாரூரிற் கோயில் கொண்டெழுந்தருளிய எளிமைத் திறமும், உலக மக்களை வஞ்சித்தலை மேற்கொண்டு பொய்யே வழிபாடு செய்தொழுகும் வஞ்சகரையும் மெய்யடியாராகத் திருத்தி ஆட்கொள்ளும் பேரருளாளனாக விளங்கும் அவனது அருளின் நீர்மையும், திருக்கடவூர், சிராமலை, திருமறைக்காடு, திருமாந்துறை என்ற திருத்தலங்களில் அப்பெருமான் வீற்றிருந்து அருள்புரிதலும் ஆகிய செய்திகள் இப்பிரபந்தத்துள் ஆங்காங்கே குறிக்கப் பெற்றுள்ளன.

திருவாரூரெல்லையில் தெய்வங்களுக்கு உணவு படைத்தற்குரிய பலிபீடக்கல் அமைந்தமையும் 1) தேவர்கள் சிவபெருமானை வழிபடுதற் பொருட்டு நள்ளிரவில் இவ்வுலகத்திற்கு வருதலும் (9) பகைவரொடு பொருது இறந்துபட்ட வீரருடைய பெயரும் அவர்கள் போர்க்களத்திற் காட்டிய பேராற்றலுமாகியவற்றைக் கல்லிற் பொறித்து அக்கல்லைத் தெய்வமாக நட்டு வழிபடும் வழக்கமுண்மையும் (10) திருவாரூர்க் கடைவீதியிற் கண்ணாடியிற் பதுமையின் நிழல் படியப் பாவைக் கூத்து நிகழும் செய்தியும் (49) திருவாரூரில் திண்ணிதின் அமைந்த கரைகளையுடைய பெருங்குளம் இருந்தமையும் (22) அவ்வூரில் பெருவிழாவின் ஆரவாரமும் (25) இம் மும்மணிக் கோவையிற் குறிக்கப்பட்டன.

கார்ப்பருவங் கண்டிரங்கிய தலைமகளது பிரிவாற்றாமை கண்டு தோழி கவல்வதாக அமைந்தது, இம்மும்மணிக் கோவையின் முதற்பாடல். "விரிந்து பரந்த பெருங்கடலை முகந்து சேறுபட்டாற் போன்று விளங்குங் கருநிற மேகமானது மலைமுகட்டிலேறி நுண்ணிய மழைத்துளிகளைப் பொழிந்தது. அது கண்ட தலைமகள் காதிலணிந்த குழைகள்

மின்னலையொத்து விளங்கவும் புருவம் வானவில்லை ஒத்துத் தோன்றவும் சிவந்தவாய் இந்திரகோபப் பூச்சியின் நிறத்தினைப் புலப்படுத்தவும் கைகளாகிய காந்தள் மலரவும் பற்களாகிய முல்லைகள் அரும்பவும் கூந்தலும் தேமலும் கொன்றையைப் போன்று தோன்றவும் வனப்புமிக்க மேனியின் சாயல் மயிலின் தோற்றத்தினைப் புலப்படுத்திக் காட்டவும் உள்ளத்தே நிரம்பிய ஆற்றாமையால் உளதாகிய பெருமூச்சு ஊதைக்காற்றினை யொத்து மேன்மேல் எழுந்து இயங்கவும் கண்ணீராகிய பெருமழையைப் பொழிந்தமையால், அந்நீர் பெருகிக் கண்ணிற் பூசப்பெற்ற அஞ்சனச் சேற்றையலம்பி மார்பிலணியப்பெற்ற மணி பொன் வயிரம் அகில் சந்தனம் ஆகியவற்றை யலைத்துக் கொங்கைகளாகிய மலைமுகட்டிடையே இழிதரக் கார்ப்பருவத்தின் தோற்றம் உடையளாயினாள். அவளைப் பிரிந்து சென்ற காதலர் தாம் குறித்த பருவத்தே வாராமையால் அவரதுமனம், பொங்கிவரும் கங்கை வெள்ளத்தின் வேகத்தைத் தணிந்த நீண்ட சடையினையுடைய உமையொருபாகத்து இறைவர் கோயில் கொண்டருளிய திருவாரூரெல்லையிற் சிறுதெய்வங்களுக்கு உயிர்ப்பலியிடுதற் பொருட்டமைந்த பலி பீடக்கல் தானோ" எனத் தோழி படருழந்து வருந்துகின்றாள். கருநிறமேகம் மலைமுகடேறி நுண்துளி பொழிதலாகிய முதல் மழையைக் கண்ட அளவே தலைமகள் கார்ப்பருவத்தின் முதிர்ந்த நிலையினை யொத்துக் கண்ணீர் சொரிந்து வருந்துகின்றாள். இப்பருவம் முதிர்ந்தால் இவள் நிலை யாதாகுமோ எனவும் இறைவன் கங்கைப்பெருவெள்ளத்தின் வேகத்தையடக்கி உமாதேவியாரை ஒருபாகத்திற் கொண்டு பிரியாது விளங்குதல் போல இவளது கண்ணீர்ப் பெருவெள்ளத்தைத் தவிர்த்து இவளைப் பிரியாது உடனுறைந்து தலையளிசெய்தற்குரிய காதலர் தமது கடமையை மறந்து உரிய காலத்தில் வாராது தாழ்த்தமையால் அவரது மனம் அன்புடையாரது துயர் கண்டு நெகிழும் மென்மையுடையதன்றெனவும், சிற்றுயிர்களைப் பலியிடுதற்கிடனாகத் திருவாரூரெல்லையில் அமைந்த பலிபீடக்கல்லோ இதுவென ஐயுறுதற்குரிய கொடுமையுடைய தாயிற்றெனவும் தோழி நினைத்திரங்குங் குறிப்பு இப்பாடலில் இனிது புலனாதல் காணலாம்.

தெய்வத்தின் திருவருளால் ஒரு பொழிலிடை உருவும் திருவுமிக்க தலைமகளொருத்தியைக் கண்ணுற்றுக் கூடிப் பிரிந்த தலைமகன், தன்னுயிரினுஞ் சிறந்த அவளை மீண்டும் அடைதற்கியலாத அருமை நிலையை எண்ணி வாட்டமுற, அதுகண்டு அவனது உளநிலையை வினவியறிந்த பாங்கன், 'இத்துயர்நிலை நினது தலைமைப்பாட்டிற்கு ஏலாது' என

அவனை இடித்துக்கூறக்கேட்ட தலைவன் எதிர்மறுத்துக் கூறுதலும், தலைமகளது உயிர்த்தோழியின் உடன்பாடு பெற்றுத் தலைவியை யடையக் கருதிய தலைமகன், தலைவியும் தோழியும் ஒருங்கிருந்த புனத்திடைச் சென்று 'என்னால் துரத்தப்பட் டோடிய மதயானை இங்கு வந்ததோ' என வினவுதலும், இங்ஙனம் இரந்து பின்னின்ற தலைவனது பேரன்பினை யுணர்ந்த தோழி தலைமகளைக் குறைநயப்பித்தலும், தன் ஆயத்திடையே விருந்தினனாகப் புக்க தலைவனால் தான் அடைந்த வேறுபாட்டினைத் தலைவி தோழிக்குக் கூறுதலும், நள்ளிரவில் தலைவனது தேர் வரவினைத் தோழி தலைவிக்கு அறிவித்தலும், இரவுக்குறி வந்தொழுகுந் தலைவனை நோக்கி வழியிடையுளவாந் தீங்கு நினைந்து இரங்கும் தலைமகளது ஆற்றாமை கூறி இரவு வருதலைத் தவிர்க என விலக்குமுகத்தால் தலைவியை விரைந்து மணந்துகொள்க எனத் தோழி தலைவனை வற்புறுத்தலும் ஆகிய குறிஞ்சித்திணை பற்றிய செய்திகளும், களவொழுக்க மொழுகிய தலைமகன் தலைமகளை ஒருவருமறியாதவாறு உடனழைத்துச் சென்றவழி அஃதுணர்ந்த நற்றாய் செவிலித்தாய் ஆகிய இருவரும் சுரத்து அருமையும் தலைமகளது மென்மைத் தன்மையும் நினைந்து வருந்துதலும், தலைமகளைத் தேடிச் சென்ற செவிலி சுரத்திடைக் குரவொடு புலம்புதலும், ஆகிய பாலைத்திணை பற்றிய செய்திகளும், தலைவியை மணந்து மனையறம் நிகழ்த்தும் தலைவன் பொருள் முதலியன கருதிப் பிரிந்து செல்லுங்கால் அவன் மீண்டு வருவதாகக் குறிக்கப்பட்ட கார்காலத்தின் வரவும், அப்பருவத்தே தலைவனது வருகையை எதிர்நோக்கிய தலைமகள் அவன் வாராமையெண்ணி வருந்துதலும், குறித்த வண்ணம் தலைமகனது தேர்வரக் கண்ட தலைமகள் மெலிவு அகன்று பொலிவு பெற்றமைகண்டு தோழி மகிழ்தலும் ஆகிய முல்லைத் திணை பற்றிய செய்திகளும், தலைவன் பரத்தையிற் பிரிந்தவழி வருத்தமுற்ற தலைவி அவனை இடைவிடாதெண்ணிய தன்னெஞ்சொடு புலத்தலும், அவ்வழி வாயிலாகப்புக்க பாணனை வெகுண்டுரைத்தலும், தலைவன் ஆற்றாமையே வாயிலாகத் தன்னையணைந்தவழி ஊடுதலும் ஆகிய மருதத்திணை பற்றிய செய்திகளும், தலைவனைப் பிரிந்துறைதலாற்றாத தலைமகள் கடலொடு கூறி வருந்துதலாகிய நெய்தற்றிணை பற்றிய செய்தியும் என அன்பினைத் திணைபற்றிய ஒழுகலாறுகளே இத் திருவாரூர் மும்மணிக்கோவையில் விரித்துரைக்கப் பெற்றுள்ளன. இந்நூல் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையுமாகிய சங்க இலக்கியங்களிற் சேரமான் பெருமாள் நாயனார்க்கு உள்ள நிரம்பிய பயிற்சியையும் மக்களைப் பொருளாகக் கொண்டு பாடுதற்கு உரிய அகந்திணைப் பாடல்களில் எல்லாம் வல்ல இறைவனைப் பாட்டுடைத் தலைவனாக வைத்துப் போற்றுமுகத்தால் உலகநூல் வழக்கும்

அறிவனூற் பொருளும் ஆகிய இருதிறமும் விரவப் புலனெறி வழக்கங் கண்ட அவரது திருவருட் புலமைத் திறத்தையும் இனிது விளக்குவதாகும்.

தலைமகனது பேரன்பினைத் தலைமகளுக்கு எடுத்து உரைத்துக் குறைநயப்பிக்கக் கருதிய தோழி இதனைத் தலைமகளுக்கு வெளிப்படச் சொல்வேனாயின் இவள் மறுக்கவும் கூடுமெனக் கருதி, "ஆரூர்ப் பெருமான்றன் அரும்பெறல் மகனாகிய முருகவேளைப் போன்று பேரழகு உடையனாய் வேலேந்திய ஒருவன் நம் புனத்தின்கண் பலகாலும் வந்தொழுகுகின்றான். பகற்பொழுது கழிந்தாலும் இப்புனங்காக்குந் தொழிலை விட்டு நீங்காதுள்ளான். அவன் திறத்து நாம் செய்யத்தக்கது யாது" எனத் தலைமகளோடு உசாவி, அவள் உள்ளக் குறிப்பினை அறிவதாக அமைந்தது,

**பொழுது கழிந்தாலும் பூம்புனங்காத் தெள்கி**
**எழுது கொடியிடையாய் ஏகான் - தொழுதமரர்**
**முன்னஞ்சேர் மொய்கழலான் முக்கணான் நான் மறையான்**
**மன்னுஞ்சேய் போலொருவன் வந்து.**

என்ற பாடலாகும்.

**தாதேய் மலர்க்குஞ்சி யஞ்சிறை வண்டுதண் டேன்பருகித்**
**தேதே யெனுந்தில்லை யோன்சே யெனச்சின வேலொருவர்**
**மாதே புனத்திடை வாளா வருவர்வந் தியாதுஞ் சொல்லார்**
**யாதே செயத்தக் கதுமது வார்குழ லேந்திழையே.**

எனவரும் திருச்சிற்றம்பலக் கோவைச் செய்யுள் குறிப்பறித லென்னும் துறையில் மேற்காட்டிய செய்யுளின் விளக்கமாய் அமைந்திருத்தல் காணலாம்.

தலைமகன் தலைமகளை ஒருவரும் அறியாவாறு உடனழைத்துச் சென்றவழிச் சுரத்தருமை நினைந்து செவிலித்தாய் வருந்துகின்றாள். "புனத்தில் வாழும் மயில் போலுஞ் சாயலையும் மலரணிந்த கூந்தலையும் உடைய என்மகள், தன் மனைப் பெருஞ்செல்வத்தில் மகிழ்ச்சியடையாதவளாய், அயலா னொருவன் தன் காதலனாக அவன்பின்னே, ஞாயிறு நடுநின்று கடுவெயிலெறிப்பச் செல்வோரது உடல் நிழல் அடியகத்தே மறையும் அனல் வீசும் பாலை நிலத்திடையே கொடுந் தொழில் புரியும் வேடுவரது துடியோசைக்கு அஞ்சி மெய்நடுங்குந் தன்மையளாகி, முள்ளுடைய ஈந்தும் உலர்ந்த அடியுடைய இலவமரமும் விளா மரமும் பரவிய வெளியிடத்தே கடுங்குரலுடைய நாய்களைக் கட்டிய கயிற்றால் உராயப்பட்டுத் தேய்ந்த கம்பத்தின் மேல் மரைமான் தோலால் வேயப்பெற்ற

*சிறுகுடிசையிலே வாழும் நரைமூதாட்டியராகிய மறத்தியர்க்கு விருந்தாயினள் போலும்" எனச் செவிலி நினைந்திரங்குவதாக அமைந்தது.*

**புனமயிற் சாயற் பூங்குழல் மடந்தை**
**மனைமலி செல்வ மகிழாளாகி**
**ஏதில னொருவன் காதலனாக**
**விடுசுடர் நடுவணின் றடுதலி னிழலும்**
**அடியகத் தொளிக்கும் ஆரழற் கானத்து**
**வெவ்வினை வேடர் துடிக்குரல் வெரீஇ**
**மெய்விதி ரெறியுஞ் செவ்வியளாகி**
**முள்ளிலை யீந்து முளிதா ளிலவமும்**
**வெள்ளிலும் பரந்த வெள்ளிடை மருங்கிற்**
**கடுங்குரற் கதநாய் நெடுந்தொடர் பிணித்துப்**
**பாசந் தின்ற தேய்கா லும்பர்**
**மரையதள் வேய்ந்த மயிர்ப்புன் குரம்பை**
**விரிநரைக் கூந்தல் வெள்வாய் மறத்தியர்**
**விருந்தாயினள் கொல் தானே, திருந்தாக்**
**கூற்றெனப் பெயரிய கொடுந்தொழி லொருவன்**
**ஆற்றல் செற்ற அண்ண லாரூர்ச்**
**செய்வளர் கமலச் சீறடிக்**
**கொவ்வைச் செவ்வாய்க் குயின்மொழிக் கொடியே.**

*என்ற பாடலாகும். இஃது அகநானூற்றிற் குடவாயிற் கீரத்தனார் பாடிய 315-ம் பாடலோடு ஒப்புநோக்கியுணரத் தகுவதாகும்.*

*"நீர்மலி வேணியனாகிய இறைவனால் தலையளிக்கப் பெற்ற மதிபோலும் முகத்தினையுடைய என்மகள் என்னுடன் மலரணையிலே துயிலுங்கால் அவ்வணையிற் பிரிந்து இடப் பக்கமாக யான்மாறினும் அஞ்சுமியல்பினள். அத்தகையவள் இப்பொழுது நடத்தற்கரிய வெம்மை மிக்க பெரிய சுரத்திடையே சென்றனள். என் மகளுக்கு நேர்ந்த இத்துயரங்கள் அவளால் பொறுக்கத்தக்கன அல்லவே" என மகட்போக்கிய செவிலித்தாய் வருந்துவதாக அமைந்தது.*

**தடப்பாற் புனற்சடைச் சங்கரன் தண்மதி போன்முகத்து**
**மடப்பான் மடந்தை மலரணைச் சேக்கையிற் பாகம்பிரீஇ**
**இடப்பாற் றிரியின் வெருவும் இருஞ்சுரஞ் சென்றனளால்**
**படப்பாலனவல்ல வாற்றமியேன் தையல் பட்டனவே.**

*என்ற பாடலாகும்.*

*தலைவனுடன் சென்ற தலைவியைத் தேடிச் சுரத்திடைச் சென்ற செவிலி குரவொடு வருந்திக் கூறுவதாக அமைந்தது,*

பட்டோர் பெயரும் ஆற்றலு மெழுதி
நட்ட கல்லும் மூதூர் நத்தமும்
பரன்முரம் பதரு மல்லது படுமழை
வரன்முறை யறியா வல்வெயிற் கானத்துத்
தேனிவர் கோதை செல்ல மானினம்
அஞ்சிலோதி நோக்கிற் கழிந்து
நெஞ்செரி வுடைமையின் விலக்காது விடுக
கொங்கைக் கழிந்து குன்றிடை யடைந்த
கொங்கிவர் கோங்கமுஞ் செலவுடன் படுக
மென்றோட் குடைந்து வெயினிலை நின்ற
குன்ற வேய்களுங் கூற்றடைத் தொழிக
மாயிருங் கடற்றிடை வைகலாயிரம்
பாவையை வளர்ப்போய் அண்ணணிப் பாவையை
விலக்காது பிழைத்தனைமாதோ நலத்தகு
அலைபுன லாரூர் அமர்ந்துறை யமுதன்
கலையமர் கையன் கண்ணுத லெந்தை
தொங்கலஞ் சடைமுடிக் கணிந்த
கொங்கலர் கண்ணி யாயின குரவே.

எனவரும் செய்யுளாகும். அலைமறியும் புனல் சூழ்ந்த திருவாரூரில் எழுந்தருளிய அமுதம் போல்வானும் கலைமானையேந்திய கையினனும் ஆகிய கண்ணுதற் பெருமானது சடைமுடியில் அணியத் தக்க நறுமலர்களைப் பூக்கும் குரவே, போர்க்களத்திற் பொருது பட்ட வீரர்களது பெயரையும் பேராற்றலையும் பொறித்து நடப்பட்ட நடுகற்களும் பழமையுடைதாயமைந்த ஊரிற் குடியிருப்பிடங்களும் பருக்கைக் கற்கள் நிரம்பிய வன்னில வழியும் அன்றி மழை பெய்த வளமறியாத வெயிலாற் கொதிக்கும் இவ்வெஞ்சுரத்தே தேனிறைந்த மாலையை யணிந்த என் மகள் செல்லக் கண்டும் அவளது கண்ணழகிற்குத் தாம் தோற்றமை பற்றி மானினங்கள் விலக்காது விடுக. கொங்கைக்குத் தோற்றமையால் குன்றிடையடைந்து நோற்கும் கோங்கமும் அவளது போக்கிற்கு உடன்படுக. அவளுடைய தோளிற்குத் தோற்று வெயிலிடை நோற்று நின்ற மூங்கில்களும் வாயடைத்திருந்திடுக. பெரிய சுரத்தினிடையே நாள்தோறும் ஆயிரக்கணக்கான பாவைகளை (பாவைபோலும் நறுமலர்க் காய்களை) ஈன்று வளர்க்கும் இயல்புடைய தாயாகிய நீ எனக்கு மிகவும் அணியளாய் வந்த என்பாவையைத் தடுத்து நிறுத்திக் காக்கத் தவறி விட்டாய். அருளாளனாகிய சிவபெருமானது சடைமுடிக்கு அணியாகும் சிறப்புடைய நறுமலர்களைப் பூக்கும் நினக்கு இது நன்றாமோ" எனச் செவிலி குரவை நோக்கி வருந்தியதாக அமைந்த இப்பாடல், சங்க இலக்கியத்திற் பாலைநில இயல்புரைக்கும் செய்யுட்களை

அடியொற்றியதாய்ச் சிவபெருமானது அருளின் நீர்மையையும் புலப்படுத்தி நிற்றல் அறிந்து இன்புறத்தக்கதாகும்.

பரத்தையிற் பிரிந்த தலைவன் பொருட்டு வாயிலாக வந்த பாணனொடு தோழி வெகுண்டு கூறுவதாக அமைந்தது,

**மனையுறை குருவி வளைவாய்ச் சேவல்**
**சினைமுதிர் பேடைச் செவ்வி நோக்கி**
**ஈனி லிழைக்க வேண்டி யானா**
**அன்பு பொறைகூர மேன்மேல் முயங்கிக்**
**கண்ணுடைக் கரும்பி னுண்டோடு கவரும்**
**பெருவளந் தழீஇய பீடுசால் கிடக்கை**
**வருபுன லூரன் பார்வையாகி**
**மடக்கொடி மாதர்க்கு வலையாய்த் தோன்றிப்**
**படிற்று வாய்மொழி பலபா ராட்டி**
**உள்ளத் துள்ளது தெள்ளிதிற் கரந்து**
**கள்ள நோக்கமொடு கைதொழு திறைஞ்சி**
**எம்மிலோயே பாண, அவனேல்**
**அமரரு மறியா ஆதிமூர்த்தி**
**குமரன் றாதை குளிர்சடை யிறைவன்**
**அறைகழ லெந்தை யாரூ ராவணத்**
**துறையிற் றூக்கும் எழில்மென் காட்சிக்**
**கண்ணாடி யனைய நீர்மைப்**
**பண்ணுடைச் சொல்லியர் தம்பாலோனே.**

என்பதாகும். "பாணனே, வீட்டின் இறப்பில் வாழும் வளைந்த வாயினையுடைய குருவிச் சேவலானது தன் பெடை கருமுற்றிய செவ்வி நோக்கி, அது தங்கிக் கருவுயிர்த்தற்குரிய அறையினை யமைக்கக் கருதி நீங்காத பேரன்பினால் தன்பேடையைப் பலகாலுந் தழுவி அரிதிற் பிரிந்து சென்று கரும்பினது நுண்ணிய பூந்தோடுகளைக் கவர்ந்துவரும் நீர்வளம் நிறைந்த ஊரினையுடைய தலைவனுக்கு அவன் விரும்பிய பரத்தையரைப் பிணித்தற்குரிய பார்வை விலங்காகவும் இளமை பொருந்திய பூங்கொடி போலும் பரத்தையர்கள் தலைவனை அகப்படுத்தற் பொருட்டு விரித்த வலையாகவும் தோன்றி வஞ்சனை மொழிகள் பலவற்றை அடுத்தடுத்துரைத்து உள்ளக் கருத்தினை யுணராதபடி மறைத்துக் கொண்டு கள்வனைப் போல விழித்துக் கைகளால் தொழுது வணங்கி நீ எமது மனை வாயிலில் நிற்கின்றாய். நின்னை இங்குத் தூதாக அனுப்பிய தலைவனோவெனில் தேவர்களால் அறியப்படாத முழு முதற் கடவுளும் முருகனுக்குத் தந்தையும் ஆகிய இறைவன் வீற்றிருந்தருளுந் திருவாரூர்க் கடைவீதியில் அமைக்கப் பட்டுள்ள வனப்புமிக்க கண்ணாடி தனக்குரிய தன்மை யென்பதொன்று மின்றித் தன்னெதிர்ப்பட்ட பொருளின்

தன்மையுடையதாய் விளங்குதல் போலத் தனக்குரிய இயல்பு ஒரு சிறிதுமின்றிப் பண்ணுடைச் சொல்லியராகிய பரத்தையர் தன்மையனாய் அவர் கருத்தின்வழி யடங்கி ஒடுங்குகின்றான்.

இந்நிலையில் நின்னுடைய வாய்மைபோலும் பொய் மொழிகளை யாம் ஏற்றுக்கொள்ள மாட்டோம்" எனத் தோழி பாணனைச் சினந்து கூறுகின்றாள். இதன்கண் சேவற் குருவி கருமுற்றிய தனது பேடைக்கு ஈனில் (கருவுயிர்க்கும் அறை) அமைத்துப் பாதுகாத்தலைப் போன்று தன் காதலி கருவுயிர்த் தற்கு முன்னரே வேண்டுவன செய்து மனைவயிற்றங்கிப் பாதுகாத்தற்குரிய தலைவன், உரிய காலத்தில் தான் செய்ய வேண்டிய கடமையை மறந்தது மன்றிப் புறத் தொழுக்கிற் சென்று தன் காதலிக்கு மேலுந் துன்பம் விளைக்கின்றான் இது நன்றாமோ? எனத் தோழி தலைவனது புறத்தொழுக்கினைக் குறிப்பால் இகழ்ந்துரைத்தல் காணலாம். வாயில் வேண்டிச் சென்ற பாணற்குத் தோழி சொல்லி வாயில் மறுத்ததாகக் குறுந்தொகையிலமைந்த

**யாரினு மினியன் பேரன் பினனே**
**உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்**
**சூன்முதிர் பேடைக் கீனி லிழைஇயர்**
**தேம்பொதிக் கொண்ட தீங்கழைக் கரும்பின்**
**நாறா வெண்பூக் கொழுதும்**
**யாணரூரன் பாணன் வாயே.**

என்ற பாடற் பொருளை இச்செய்யுள் அடியொற்றி அமைந்துள்ளது. இவ்வாறே இத்திரு மும்மணிக்கோவையில் வரும் திருப்பாட்டுக்கள் பலவும் சங்கத் தொகை நூற்கருத்துக்களை உட்கொண்டனவாதல் அறிந்து மகிழத் தக்கதாகும்.

கரிய மேகத்திடையே தோன்றிய மின்னலுக்கு உறையினின்றும் உருவிய வாளினையும், தலைவனுந் தலைவியும் உடன்போகிய வெஞ்சுரத்திற்கு மன்மதன் வெந்து நீறாக இறைவன் கடைக்கண்ணாற் தேன்றிய தீயினையும், தலைவியின் குறை நீங்கா நெஞ்சத்திற்குத் திருவாரூரிற் சிறை நீங்காச் செம்புனலையும், இறைவனது திருநீலக்கண்டத்திற்குக் கரும்பாம்பு பிறையைக் கவ்விய காட்சியினையும், பரதவர்கள் கடலில் வீசிய வலையை யிழுத்தற்குக் குடரை யிழுக்குந் தோற்றத் தினையும், ஆயத்திடையே விருந்தினனாகப் புக்க தலைவனது நோக்கினால் தலைவியுடைந்த மெய்வேறுபாட்டிற்கு நீரிற்பட்ட எண்ணெய்த் துளி அந்நீர் முழுதும் பரவி யொன்றாகிய காட்சியினையும் உவமைகளாக எடுத்தாண்ட இம் மும்மணிக்கோவைப் பகுதிகள் படித்து இன்புறத்தக்கனவாம்.

உலா என்பது, தமிழிலுள்ள தொண்ணுற்றாறு பிரபந்தங்களுள் ஒன்று. பேதை முதல் பேரிளம் பெண் ஈறாகவுள்ள ஏழு பருவத்து மகளிரும் கண்டு காதல் கூறும் நிலையில் தன்னிகரற்ற தலைவனொருவன் நகரில் உலாப்போந்த அழகிய தோற்றத்தைக் கலி வெண்பாவில் அமைத்துப் பாடப் பெறுவதே உலாவென்னும் பிரபந்தமாம்.

**'திறந்தெரிந்த பேதை முதலெழுவர் செய்கை**
**மறந்தயர வந்தான் மறுகென் - றறைந்தகலி**
**வெண்பா உலாவாம்'**

என இதற்கு இலக்கணங் கூறுவர் வச்சணந்தி மாலை ஆசிரியர். இப்பிரபந்தம் உலாச் செய்யுளெனவும் உலாப்புற மெனவும் வழங்கப்படும். ஏழு பருவத்து மகளிரும் தன்னைக்கண்டு காமுற்று மயங்கும் நிலையில் தலைவனொருவன் உலாப்போந்தான் என்ற செய்தியைத் தெரிவிப்பது உலாவென்னும் பிரபந்தமாதலின் இஃது ஒரு தலைக் காமமாகிய கைக்கிளைத் திணையைச் சார்ந்ததாகும்.

**'ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப'**

எனவரும் தொல்காப்பியப் புறத்திணையியற் சூத்திரத்திற்கு ஊரிற் பொதுமகளிரொடு கூடி வந்த விளக்கமும் பாடாண்டினைக்கு உரித்தென்று கூறுவர் ஆசிரியர்''

எனப் பொருள் கூறிய நச்சினார்க்கினியர், தோற்றமு மென்றது, அக்காமம் தேவரிடத்தும் மக்களிடத்தும் விளங்கும் விளக்கத்தை; அது பின்னுள்ளோர் ஏழு பருவமாகப் பகுத்துக் கலிவெண் பாட்டாகச் செய்கின்ற உலாச் செய்யுளாம்' என்றும்,

**'வழக்கொடு சிவணிய வகைமையான'**

எனவரும் அடுத்த சூத்திரத்திற்கு, 'கடவுள் வாழ்த்தும் அறுமுறை வாழ்த்தும் முதலாக ஊரொடு தோற்ற மீறாகக் கிடந்தன வெல்லாம் சான்றோர்செய்த புலனெறி வழக்கோடே பொருந்தி வந்த பகுதிக் கண்ணேயான பொருள்களாம்' என்றும், 'இனி ஊரொடு தோற்றமும் பரத்தையர்க்கு அன்றிக் குலமகளிர்க்குக் கூறப்படாது' என்றும் பொருளும் விளக்கமுங் கூறியுள்ளார். எனவே உலாவாகிய இப்பிரபந்தம் மக்களைப் பொருளாகக் கொண்டு பாடப் பெறுவதுடன் தெய்வத்தைப் பொருளாகக் கொண்டு பாடப் பெறுதலு முண்டென்பதும், இதன்கண் கூறப்படுங் கைக்கிளைச் செய்திகள் பரத்தையர்க்கு அன்றிக் குலமகளிர்க்குக் கூறப்படாவென்பதும் நச்சினார்க்கினியர் கருத்தாதல் நன்கு பெறப்படும்.

இவ்வாறு பாடப்பெற்ற உலாப் பிரபந்தங்களுள்ளே தொன்மையும் பொருட் சிறப்பும் வாய்ந்தது, சேரமான் பெருமாள் நாயனார் பாடியருளிய திருக்கயிலாய ஞானவுலாவாகும். நம்பியாரூரர் சேர நாட்டின் தலைநகராகிய கொடுங்கோளூரி லுள்ள திருவஞ்சைக் களமென்னுந் திருக்கோயிலிலே சிவபெருமானை வழிபட்டுத் திருப்பதிகம் பாடிக் கொண்டிருக்கும் நிலையில், தேவர்கள் சிவபெருமானால் அனுப்பப் பெற்ற வெள்ளையானையோடு அங்குவந்து சுந்தரரைப் பணிந்து திருக்கயிலைக்குப் புறப்படும்படி வேண்டிக் கொண்டனர். இறைவன் பணித்த வண்ணம் வெள்ளை யானையின் மீதமர்ந்து கயிலைக்குப் புறப்படும் சுந்தரர், தம் தோழர் ஆகிய சேரமான் பெருமாளை உள்ளத்தால் நினைக்க, திருமஞ்சன சாலையில் நீராடிக் கொண்டு இருந்த சேரமான் பெருமாள் நாயனார், அந் நினைவினை யோகக் காட்சியால் விரைந்துணர்ந்து தமது குதிரைக்குத் திருவைந்தெழுத்தினை யுபதேசித்து அதனை விரைந்து செலுத்தினார். வான்வழியே செல்லும் அக்குதிரை, சுந்தரரைக் கொண்டு செல்லும் வெள்ளை யானையை வலம் வந்து அதன் முன்னர்ச் சென்றது. இருவரும் கயிலை மலையை யடைந்து சிவபெருமானைப் பணிந்து போற்றினர். சேரமான் பெருமாள் நாயனார் இறைவனது திருவுலாக் காட்சியைப் பொருளாகக் கொண்டு தாம் வழியிடையே பாடிவந்த திருவுலாப் புறமாகிய செந்தமிழ்ப் பனுவலைக் கயிலாயத்தில் இறைவன் திருமுன்னர் அரங்கேற்றினர். அங்கு உடனிருந்து கேட்டு மகிழ்ந்த மாசாத்தனார் அப்பிரபந்தத்தை மனத்திற் கொண்டு சோழ நாட்டில் திருப்பிடவூரில் உலக மக்கள் அறிய வெளிப்படுத்தி யுதவினர் என்பது வரலாறு. திருகயிலாய ஞான உலாவாகிய இப் பிரபந்தத்தின் தோற்றத்தைக் குறித்து வழங்கும் இவ் வரலாற்றினைச் சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்தில் விரித்துக் கூறியுள்ளார்.

சேரமான் பெருமாள் பாடியருளிய இவ்வுலா, தமிழிலுள்ள உலாப் பிரபந்தங்களெல்லாவற்றிற்கும் காலத்தால் முற்பட்டுத் தோன்றிய மூல இலக்கியமாதலின், ஆதியுலாவென வழங்கப் பெறுவதாயிற்று. இரட்டைப் புலவர்கள் பாடிய ஏகாம்பர நாதருலாவில் "பொன்வண்ணத் தந்தாதி ஆதியுலாவோ டமைத் தானும்" என இந்நூலாசிரியராகிய சேரமான் பெருமாள் நாயனார் போற்றப் பெற்றுள்ளார். இத் தொடரில் இவ்வுலா "ஆதியுலா" என்ற பெயராற் குறிப்பிடப் பெற்றமை காணலாம். காலத்தால் முற்பட்டுத் தோன்றிய இவ்வுலாவினை யொத்த சுவை நயமுடைய மற்றொருலா இதுகாறும் தோன்றவில்லையாதலின்

இப்பிரபந்த வளர்ச்சியில் இவ்வுலாவே முடிந்தநிலையில் விளங்குவதென்பதும், இப்பனுவலை வழி நடையில் விரைந்து பாடியருளிய சேரமான் பெருமாள் ஆசுகவிப் புலவராவ ரென்பதும் ஆகிய உண்மையினை "ஆதியந்தவுலா ஆசு பாடிய சேரர்" எனவருந் தொடரால் அருணகிரிநாதர் தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளார். இதனைத் திருவுலாப்புறம் எனக் குறிப்பிடுவர் சேக்கிழாரடிகள். இனி ஆதியுலா என்பதற்கு ஆதி பகவனாகிய இறைவனைத் தலைவனாகக் கொண்டு பாடப்பெற்ற உலா எனப் பொருள் கூறுதலும் உண்டு.

கைக்கிளைப் பொருள்பற்றிக் கலிவெண்பாவில் அமைதற்குரிய இவ்வுலாச் செய்யுள் அடிவரையறையின்றி இரண்டுறுப்பாயும் ஒருறுப்பாயும் பாவும் பொருளும் வேறுபட்டு வெள்ளடியின் இகந்துவரும். "இரண்டுறுப்பாயும் ஒருறுப்பாயும் பாவும் பொருளும் வேறுபட்டு வெள்ளடியின் இகந்துருங் கலிவெண்பாவாகிய உலாச்செய்யுள் அடிவரையன்றி வருமாறும் பெருந்திணைப் பொருள் மேல் வரும் மடற் செய்யுளும் ஒருறுப்பாய் அடியிகந்து வருமாறும் இக்காலத்தார் கூறுகின்ற வற்றுட் காண்க. அது திருவுலாப்புறத்துள்ளும் 'வாமான வீசன் வரும்' என முடிந்து மேல் வேறோருறுப் பாயவாறும், ஒழிந்தவுலாக்களுள் வஞ்சியுரிச்சீர் புகுந்தவாறும் அடிவரையறை யின்மையுமாம்" என்பர் நச்சினார்க்கினியர். எனவே அவர் காலத்தில் இவ்வுலா ' வாமான வீசன் வரும்' என 58-ஆம் கண்ணிவரை ஒருறுப்பாக முடிந்து, 'வாமான வீசன் மறுவில்சீர் வானவர்தங், கோமான்படை முழக்கங் கேட்டலுமே' எனவரும் 59-ஆம் கண்ணி முதலாக வேறோருறுப்பாகியும் வழங்கியதெனவும், 58,59-ஆம் கண்ணிகளுக்கு நடுவே 'போழ்திற்-சேமேலே' என்ற தொடர் இவ்விரண்டுறுப்புக்களையும் இணைத்தற்ப் பொருட்டுப் பிற்றை நாளில் இயைத்துரைக்கப் பெற்றிருத்தல் வேண்டுமெனவும் கருதுதல் பொருந்தும்.

திருமாலும் நான்முகனுந் தேடிக்காண வொண்ணாத பெருமானாகிய இறைவன், சீரார் சிவலோகத்துள் சிவபுரமென்னுந் தலைமைப் பதியிலே அழகிய திருக்கோயிலி னுள்ளே அம்மையப்பனாக வீற்றிருக்கின்றான். இறைவனைக் காண வேண்டுமென்னும் பேரார்வமுடைய தேவர்கள் திருக்கோயிற்புர முன்றிலிலே நின்று 'எங்களுக்குக் காட்சி தந்தருள்க' எனக் குறையிரந்து வேண்டுகின்றனர். தேவர்களது வேண்டுகோளுக்குத் திருவுளமிரங்கிய சிவபெருமான், ஒருநாள் பட்டுடுத்துப் பொன்னும் மணியுமாகிய அணிகலன்களைப் பூண்டு மலர்மாலையணிந்து வடிவுடைய கோலம் புனைந்து நந்தி மாகாளராய சிவகணத் தலைவர் கொணர்ந்த அடிநிலைமேல்

திருவடி வைத்துத் திருக்கோயிலின் வாயிலை யடைந்தருளி, வசுக்கள் தோத்திரஞ் சொல்லவும், முனிவர் எழுவர் வாழ்த்துரைக்கவும், ஆதித்தர் பன்னிருவர் பல்லாண்டு பாடவும், அகத்தியர் யாழ் வாசிக்கவும், தீக்கடவுள், நறும்புகை யேந்தவும், இயமன் மங்கல வாழ்த்துப் பாடவும், நிருதி முதலியோர் அணிகலன்களைத் தாங்கிவரவும், வருணன் நிறைகுடநீர் தாங்கவும் காற்றுத் தெருவினைக் கூட்டித் தூய்மை செய்யவும், மேகம் மழைநீர் தெளித்துப் புழுதியினை யடக்கவும் சந்திரன் குடை பிடிக்கவும், ஈசானன் அடைப்பை யேந்தவும், அசுவினி தேவர்கள் மந்திரத்தால் வாழ்த்துரைக்கவும், உருத்திரர்கள் தோத்திரம் சொல்லவும் குபேரன் வேண்டும் பொருள்களை வழங்கி வரவும், கங்கை யமுனை முதலிய தீர்த்தங்களாகிய மங்கையர்கள் வெண்சாமரை வீசவும், திசையானைகள் தொழுதிறைஞ்சவும், மேகமே நீல விதானமாகவும், மின்னல் கொடிகளாகவும், இடிமுரசமாகவும் அமையத் தும்புரு நாரதர் இசைபாட வானர மகளிர் நடமாடவும், ஞானமே யுருவாகிய இடபத்தின் மேலமர்ந்து ஏழுவாயில்களையுங் கடந்து திருவுலாப் புறப்பட்டருளினான். தேவசேனாபதியாகிய முருகன் மயில்மீதமர்ந்து முன் செல்லத் தேவர் தலைமகனாகிய இந்திரன் வெள்ளையானை மீது பின்னே வர நான்முகன் அன்னப்பறவை மீதர்ந்து வலப்பக்கத்தே வர, திருமால் கருடன் மீதமர்ந்து இடப்பக்கத்தே வர, மன்மதன் கரும்பு வில்லும் மலரம்புந்தாங்கி முன்னே செல்ல, மாசாத்தன் குதிரையூர்ந்து செல்ல இறைவனது திருவுலாப் புறப்பாடாயிற்று.

யானைமுகக் கடவுளாகிய விநாயகனோடு சத்த மாதர்களும் தன்னைச் சூழ்ந்து வர நீலமேனியுடைய கொற்றவை சிங்கத்தின் மீதமர்ந்து உடன் வருகின்றாள். விச்சாதரர் இயக்கர் கின்னர் கிம்புருடர் சாரணர் அரக்கர் அசுரர் முதலிய பதினெண் கணத்தவர்களும் சல்லரி தாளம் தகுணிதம் தத்தளகம் கல்லலகு கல்லவடம் மொந்தை தட்டழி சங்கம் சலஞ்சலம் தண்ணுமை பேரி குடமுழவம் கொக்கரை வீணை குழல் யாழ் தடாரி படகம் மத்தளம் துந்துபி முருடு ஆகிய இவ்வாத்திய வகைகளால் திசை தோறும் இசை முழக்கஞ் செய்கின்றனர். மங்கலம் பாடுவார் இறைவனையடைந்து வணங்குகின்றனர். மற்போரும் விற்போரும் செய்யவல்ல வீரர்கள் தத்தம் தொழிற் திறமையைக் காட்டி ஆரவாரித்து வருகின்றனர். அறுவகைப் பெரும் பொழுதுகளும் யோகமும் தவமும் ஞானமும் மந்திரமும் மூன்று காலமும் குணங்களும் வாலகிலியராகிய முனிவர்களும் முன்வந்து குழுமி நின்று 'இமையோர் பெருமானே போற்றி, உமையாள் மணவாளா போற்றி' என இவ்வாறு இறைவனது பொருள் சேர் புகழை யெடுத்துரைத்துப் போற்றி மலர் தூவி வழிபடுகின்றனர்.

இடபக்கொடியும் பிற கொடிகளும் குடையும் தொங்கலும் சூழ்ந்து தோன்றுகின்றன. பூவணிந்த கரிய கூந்தலையுடைய மகளிரது உள்ளத்தே மேன்மேலும் முதிர்ந்து தோன்றும் பேரன்பினைப் புதிதுண்ண வேண்டித் தாவும் மானைத் தாங்கிய சிவபெருமான் இங்ஙனம் உலாவருகின்றான்.

இத்திருவுலா ஆரவாரத்தைக் கேட்ட அளவில் மாட நடுவில் வாழ்பவராகிய பேதைமுதலாகப் பேரிளம் பெண் ஈறாகவுள்ள ஏழுபருவத்து மகளிரும் தம்மைப் பல்வகை யணிகளாற் கோலஞ்செய்து கொண்டு மாளிகையின் மேலும் தெருவிலும் எம்மருங்கும் கூட்டமாகக் குழுமி நின்று இறைவனது பேரழகில் ஈடுபட்டு மயங்கி அப்பெருமான் பால் கண்ணென்னும் பெருவலையை வீசித் தம் உள்ளத்து நிறையென்னும் கதவின் தாளைத் திறந்திட்டார்கள்.

அவருள், வெண்மணலாற் சிறு சோறமைத்து விளையாடுமியல்புடைய பேதைப் பருவத்தினளாகிய பெண் ஒருத்தி * (*பேதை ஐந்து முதல் ஏழாண்டுவரையுள்ள பருவமுடைய பெண்.) தன் உடல் வளர்ச்சியாலும் நடை யுடை சொல் கோலம் முதலியவற்றாலும் மைந்தரது மனங்கவரும் பக்குவமில்லாதவள், வாயொன்று சொல்லக் கையொன்று செய்ய மனமொன்று நினைக்க நிகழும் விளையாட்டுப் பருவத்தினள். அவள் தாலியைக் கழுத்திலணிந்து சந்தனத்தை உடம்பிற்பூசி நீலச் சிற்றாடையை விரித்துடுத்துக் கொண்டு பாவை யொன்றை வைத்து விளையாடுகின்றாள். அவளை நோக்கி இப்பாவைக்குத் தந்தையாவார் யாவர்? என ஒருத்தி வினவினாள். "இப்பாவைக்குத் தந்தையாவான் சிவபெருமானே" என்றாள் தாய். அம் மொழியைக் கேட்ட இவள், இறைவன் இடபத்தின் மேலெழுந் தருளி வருதலைக் கண்டு காமநூலாகிய கலையினை இதற்குமுன் உணரப் பெறாதவள் இப்பொழுது சிறிது உணரத் தொடங்கினாள்.

பேரொளி சேர்காட்சிப் பெதும்பைப் பருவத்தினளாகிய பெண்ணொருத்தி * (* பெதும்பை எட்டாண்டு முதல் பதினோராண்டு வரையுள்ள பருவத்தினளாகிய பெண் மங்கைப் பருவத்தினளாவான்) தோழியரும் தானுமாய்த் தூய வெண் மணலால் காமனது உருவத்தையெழுதி அவன் கையில் தாங்கிய கரும்பு வில்லையும் மலர்க்கணை களையும் எழுதத் தொடங்கு மளவில் சிவபெருமான் எருதேறி உலாவருதலைக் கண்டு நன்றறிவார் சொன்ன நலத்தினையிழந்து நாணிழந்து அறிவு நிறை ஓர்ப்பு கடைப்பிடி முதலியன நீங்கக் கைவளை கழல மயக்கமுற்று வறிதே நின்றொழிந்தாள்.

மங்கைப் பருவத்தினளாகிய பெண்ணொருத்தி * (* பன்னிரண்டு வயது முதல் பதின்மூன்று வயதுவரையுள்ள பெண் மங்கைப் பருவத்தினளாவாள்) தான் வளர்த்த நாகணவாய்ப் பறவையோடு உரையாடிக் கொண்டிருக்கும்போது செம்மேனி யம்மானாகிய இறைவன் வெள்விடைமேல் உலாவருகின்றான். வெள்ளிமலையில் வீற்றிருக்கும் ஞாயிற்றைப் போன்ற அப்பெருமானது சடைமுடியைக் கண்ட அம்மங்கை, மனநெகிழ்ந்து இறைவன் அணிந்த கொன்றை மாலையையும் தானணிந்த மாலையையும் அவனது மேனியழகையும் தனது மேனி வனப்பினையும் ஒப்புநோக்கித் தன் நாணழிதலை நோக்காது உள்ளம் உருக ஒழியாத வேட்கையாகிய பெருவெள்ளத்திடையே வீழ்ந்து வெய்துயிர்த்தாள்.

தீந்தமிழின் தெய்வ வடிவினைப்போலும் அறிவு நலஞ்சான்ற மடந்தைப் பருவத்தாள் ஒருத்தி * (* பதினான்கு முதல் பத்தொன்பது வயது வரையுள்ள பெண் மடந்தைப் பருவத்தினளாவாள்.) தன்னையொத்த தோழியர்கள் புடைசூழ அமர்ந்து யாழ் நரம்பினை இசைத்துச் சிவபெருமானைக் குறித்துப் பாடப்பட்ட மடல் என்னும் பிரபந்தத்தினையும் வண்ணப்பாடலையும் பாடி மகிழ்கின்றாள். அந்நிலையில் இறைவன் உலாவர, அவன் ஊர்ந்தருளிய இடபத்தின் மணியொலியைக் கேட்டு விரைந்தெழுந்து அப்பெருமானைக் கண்டு காதல் கூர்ந்து தன்மேனியழகினை இறைவனது கொன்றைமாலை கவர்ந்து கொள்ளத் தான் அக்கொன்றைமலரின் நிறம்போலும் பசலை நிறத்தை மேற்கொண்டு பெரிதும் வருத்தமுற்றாள்.

அரிவைப் பருவத்தினளாகிய பெண்ணொருத்தி (1) (இருபதுமுதல் இருபத்தைந்து வயது வரையுள்ள பெண் அரிவைப் பருவத்தினளாவாள்.) தான் பயின்ற இன்னிசை வீணையை யெடுத்து இறைவனது புகழ்ப்பாடலைப் பாடத்தொடங்கு மளவில் பரஞ்சோதியாகிய சிவபெருமான் மால்விடைமேல் உலாவருதலைக் கண்டாள். தான் பாடத்தொடங்கிய இனிய இசையினையும் தான் பிறந்த குடிப்பிறப்பின் உயர்வினையும் இவ்விரண்டையுங் கெடாது பேணுமியல்புடைய பெருமை வாய்ந்த தமிழ்ப் பாடலையும் இசைத்தற்குரிய கருவியாகிய வீணையினையுங் கைநெகிழ விட்டாள். தன் தோழியரை நோக்கிப் 'பொன்னனையீர்' 'இன்றன்றே காண்பது எழில் நலம் கொள்ளேனேல் நன்றன்றே பெண்மை நமக்கு' என்று சொல்லிப் பெரு வேட்கையுடைய ளாய்த் தன்னையறியாது நெகிழும் உடையைச் செறியவுடுக்கும் ஆற்றலற்றவளாய்க் கழலுமியல்பின வாகிய வளையல் கழலாதபடி இறைவனைத்தொழுது காப்பாற்றிக் கொண்டு தனது உடல் வனப்பினையிழந்தாள்.

தெரிவைப் பருவத்தாளொருத்தி, (இருபத்தாறு வயது முதல் முப்பத்திரண்டு வயது வரையுள்ள பெண்பாற்பருவம் தெரிவைப் பருவம் எனப்படும்) ஆராவமுதமே ஒருருவெடுத்து வந்தாலொத்த சுவைக்கினிய வடிவினையுடையாள். செங்கழுநீர்ப் பட்டுகுத்துக் கழுநீர் மாலையையணிந்து தன் தோழியர்களுடன் விளையாடிக் கொண்டிருக்கின்றாள். அந்நிலையில் தோற்றம் நிலையிறுதி யாகிய முத்தொழிலுக்கும் காரணமாய் நின்ற திருவடியையுடைய சிவபெருமான் உலாவருகின்றான். அவனது சடைமுடியைக் கண்ட தெரிவை அவனைக் காமுறுகின்றாள். என் உயிரினுஞ் சிறந்த குணமாகிய நாணார் இனி என்னைவிட்டு விரைவிற் செல்க. அறிவு நிறை முதலிய நலத்தார்க்கு என்பால் இடமில்லை. தன்னைத்தான் கொண்டொழுகுதலாகிய பெருமை என்னை விட்டொழிக. எனது மேனி வனப்பும் ஒழிதற்குரியதே. நீங்காமற் பேணத்தக்க நற்பண்புகள் அகல நீங்குக. குற்றங்களே வம்மின். நன்மைக்கு உறைவிடமாகிய தோழியர்களே என்னை மறவாது நினையுங்கள்" என்று கூறித் "தேவர்களுக்கெல்லாந் தலைவனாகிய சிவபெருமானே இங்கு உலாப்போந்தானாயின் அவ்விறைவனும் தானணிந்த கொன்றை மலர் மாலையை எனக்கு அருளாது போவானாயின் அவனைக் கண்டால் இன்னது செய்வதென்பதை யான் நன்கறிவேன்" எனச் சொல்லிக் கைசோர்ந்து தன் வனப்பினை யிழந்தாள்.

பெண்ணரசாய்த் தோன்றிய பேரிளம் பெண் ஒருத்தி (முப்பத்து மூன்று வயது முதல் நாற்பது வயது வரையுள்ள பருவத்தினள் பேரிளம் பெண் எனப்படுவாள்.) 'கண்டு கேட்டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும், ஒண்டொடி கண்ணே யுள' வென்று பண்டு திருவள்ளுவர் கூறிய பொருளுரைக்கு இலக்கியமாகத் திகழ்பவள். அவள் பண்கவருஞ் சொல்லாராகிய தன் தோழியர்கள் போற்ற வீற்றிருந்து,

**கண்ணவனை யல்லது காணா செவியவன**
**தெண்ணருஞ்சீ ரல்ல திசைகேளா - அண்ணல்**
**கழலடி யல்லது கைதொழா அஃதால்**
**அழலங்கைக் கொண்டான்மாட் டன்பு.**

என்றதோர் அழகிய வெண்பாவினால் இறைவனைப் போற்றி அப்பாடலின் பொருளைத் தன் தோழியருக்கு விரித்துரைத்துக் கொண்டு இருக்கின்றாள். அப்பொழுது கறைக்கண்டனாகிய சிவபெருமான் மாடமறுகில் உலா வந்தருளினன். அவனைக் கண்ட அவள் "அண்ணலே நினது திருவுலாவிற் பல பருவத்து மகளிரும் கண்ணாற் பருகிய நின் திருமேனி யழகாகிய எச்சிலை எங்களுக்கு ஊட்டக் கருதி இங்கு வந்தாய். கைவளையலைக் கவர்ந்தாய். மயக்கத்தையும் தீராத் துயரத்தையும் தந்தாய். இது

நினக்குத் தகுதியாமோ" என வருந்தி முறையிட்டுச் செயலற்று உடல் வெளுத்து மயக்கமுற்றாள்.

மேகங்கள் தவழும் நீண்ட சிகரங்களையுடைய திருக்கயிலை மலையில் வீற்றிருந்தருளும் பிறைதவழ் செஞ்சடையானாகிய சிவபெருமான் திருவுலாப் போந்த தெரு பண்ணின் தன்மை வாய்ந்த இனிய மொழிகளைப் பேசுமியல்பினராகிய மகளிரின் பேராரவாரத்தை யுடையதாயிற்று, என்பது இவ்வுலாவின் தொகைப் பொருளாகும்.

எல்லாம் வல்ல இறைவனைத் தலைவனாகவும் அவனருள் வேட்ட மன்னுயிர்களை அத்தலைவன்பாற் காதல் கொண்டு மயங்கிய மகளிராகவும் வைத்துப் பாடப்பெற்றது திருக்கயிலாய ஞானவுலாவென்னும் இப்பிரபந்தமாகும். இதன்கண் எழுவகைப் பருவத்து மகளிரென்றது எழுவகைத் தோற்றத்தனவாகிய உயிர்களை யெனவும், பேதை முதல் தெரிவை யீறாகச் சொல்லப்பட்ட அறுவரும் ஓரறிவுயிராகிய புல் முதல் ஆறறிவுயிராகிய மக்கள் ஈறாகவுள்ள அறுவகையுயிர்களெனவும், பேரிளம் பெண்ணென்றது தேவர் முனிவர் முதலிய சிறப்புடை யுயிர்களை யெனவும், எல்லா வுலகங்களையும் தோற்றுவித்து இயக்கியருளும் பேரருளாளனாகிய இறைவனது அருமையி லெளிய அழகில் எல்லா வுயிர்களும் திளைத்தின்புறும் மனநிலையே இவ்வுலாவிற் சிறப்பித்துரைக்கப்பட்ட பொருளெனவும் அறிவனூற்பொருள் பற்றிய விளக்கங் கூறுவர் சான்றோர்.

தெருவில் உலாப் போந்த தலைவனொருவனைக் கண்டு காமுற்று வருந்திய எழுவகைப் பருவத்து மகளிரது மன நிலையினை விரித்துரைப்பதாகிய இவ்வுலாவில், அவ்வப் பருவத்து மகளிரது பருவ நிலைக்கேற்ற உடல் வனப்பும் உடை வகையும் அணிவகைகளும் விளையாட்டு முதலிய தொழிற்றிறமும் உள்ளவாறு விளக்கப் பெறுதலும், அம் மகளிரது உரையாடல் வாயிலாக அவர்களது மன வளர்ச்சியை உய்த்துணரச் செய்தலும், ஏழு பருவத்து மகளிர் உள்ளத்திலும் அத்தலைவனது பேரழகு நிலைபெற்றதெனக் கூறுமுகமாகப் பாட்டுடைத் தலைவனது தன்னிகரில்லாத் தலைமைப் பண்பினை இனிது விளக்குதலும் ஆகிய இந்நலங்கள் யாவும் அமைதல் வேண்டுமென்பது இவ்வுலாப்பிரபந்தத்தைத் தோற்றுவித்த தமிழ்ச் சான்றோரது புலமை நோக்கமாகும். இந்நோக்கம் சேரமான் பெருமாள் நாயனார் பாடிய ஆதியுலாவாகிய இவ்விலக்கியத்தால் இனிது நிறைவேறியுள்ளமை காணலாம். இவ்வுலாவில்,

"திருமாலு நான்முகனுந் தேர்ந்துணரா தன்றங்
கருமா லுறவழலாய் நின்ற - பெருமான்
பிறவாதே தோன்றினான் காணாதே காண்பான்
துறவாதே யாக்கை துறந்தான் - முறைமையால்
ஆழாதே ஆழ்ந்தான் அகலா தகலியான்
ஊழா லுயராதே யோங்கினான் - சூழொளிநூல்
ஓதா துணர்ந்தான் நுணுகாது நுண்ணியான்
யாது மணுகா தணுகியான் - ஆதி
அரியாகிக் காப்பான் அயனாய்ப் படைப்பான்
அரனா யழிப்பவனுந் தானே - பரனாய
தேவ ரறியாத தோற்றத்தான் தேவரைத்தான்
மேவிய வாறே விதித்தமைத்தான் - ஓவாதே
எவ்வுருவில் யாரொருவர் உள்குவா ருள்ளத்தே
அவ்வுருவாய்த் தோன்றி யருள்கொடுப்பான் - எவ்வுருவும்
தானேயாய் நின்றளிப்பான் தன்னிற் பிறிதுருவம்
ஏனோர்க்குங் காண்பரிய எம்பெருமான்"

எனவரும் தொடராய் சிவபெருமானது முழுமுதற் றன்மையினைச் சேரமான் பெருமாள் நாயனார் விளக்கிய திறம் உணர்ந்து இன்புறத் தக்கதாகும். "பிறவாதே தோன்றிய பெருமான் தன்னை" 'நோக்காதே யெவ்வளவும் நோக்கினானை' 'துறவாதே கட்டறுத்த சோதியானை' 'ஆரொருவருள்குவா ருள்ளத்துள்ளே அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந் தோன்றும்' என வரும் திருநாவுக்கரசர் வாய்மொழிகளை உளத்துட் கொண்டு,

பிறவாதே தோன்றினான் காணாதே காண்பான்
துறவாதே யாக்கை துறந்தான்..................
எவ்வுருவில் யாரொருவ ருள்குவா ருள்ளத்தே
அவ்வுருவாய்த் தோன்றி யருள்கொடுப்பான்

எனவும்,

'அரனென்கோ நான்முகன் என்கோ அரிய
பரனென்கோ பண்புணர மாட்டேன்'

எனவரும் அம்மையார் வாய்மொழியை யுளத்துட் கொண்டு,

அரியாகிக் காப்பான் அயனாய்ப் படைப்பான்
அரனா யழிப்பவனுத் தானே'

எனவும் இறைவனது இயல்பினை விரித்துக் கூறிய திறம் ஒப்புநோக்கி மகிழத்தக்கதாகும். இங்ஙனமே சேரமான் பெருமாள் நாயனார் தமக்கு முன் வாழ்ந்த திருமுறையாசிரியர்கள் அருளிய பொருளுரைகளை இவ்வுலாவிற் பலவிடங்களிலும் எடுத்தாண்டுள்ளார்.

மடந்தைப் பருவத்தினளாகிய பெண்ணின் வனப்பினை விளக்கக் கருதிய சேரமான் பெருமாள் நாயனார், 'ஒள்ளிய தீந்தமிழின் தெய்வ வடிவாள்' எனப் புனைந்துரைத்தலை யுற்று நோக்குங்கால், தமிழ் ஒண்மையும் இனிமையுமுடைய மொழி யென்றும், தெய்வத் தன்மை வாய்ந்த மொழியென்றும் உலக மக்களுக்கு அறிவுறுத்துதல் அவரது நோக்கமென்பது நன்கு விளங்கும்.

**'இல்லாரை யெல்லாரும் எள்குவார் செல்வரை**
**எல்லாருஞ் செய்வர் சிறப்பென்னுஞ் - சொல்லாலே**
**அல்குற்கு மேகலையைச் சூழ்ந்தாள் அணிமுலைமேல்**
**மல்கிய சாந்தொடு பூண்புனைந்து**
**இடையிடையே யுள்ளுருகக் கண்டாள்'**

என அரிவையின் அணிநலங்களைப் புலப்படுத்துமிடத்தும்,

**கண்டு கேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்**
**ஒண்டோடி கண்ணே யுளவென்று- பண்டையோர்**
**கட்டுரையை மேம் படுத்தாள்**

எனப் பேரிளம் பெண்ணின் இயல்புரைக்குமிடத்தும் இவ்வாசிரியர் திருக்குறளை மேற்கோளாக எடுத்தாண்டுள்ளமை பொய்யில் புலவர் அருளிய திருக்குறளில் இவர் கொண்ட பேரார்வத்தை இனிது புலப்படுத்துவதாகும்.

## 5. நக்கீர தேவநாயனார்

நக்கீரர் பாடியனவாகக் கயிலைபாதி காளத்திபாதி யந்தாதி, திருவீங்கோய்மலை யெழுபது, திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, திருவெழு கூற்றிருக்கை, பெருந்தேவபாணி, கோபப் பிரசாதம், காரெட்டு, போற்றித் திருக்கலிவெண்பா, திருமுருகாற்றுப்படை, திருக்கண்ணப்ப தேவர் திருமறம் எனப் பத்துப் பிரபந்தங்கள் பதினொராந் திருமுறையிற் சேர்க்கப் பெற்றுள்ளன. இப்பிரபந்தங் களைப் பாடிய ஆசிரியராகிய நக்கீரரைப் பற்றியும் இப் பிரபந்தங்கள் பாடப்பெற்ற சந்தர்ப்பங்களைக் குறித்தும் தம்முள் முரண்பட்ட கதைகள் சில வழங்கி வருகின்றன. இக்கதைகள் பதினோராந் திருமுறையாசிரியருள் ஒருவராகிய நக்கீரரது மெய்மை வரலாற்றினை அறிந்து கொள்ளுதற்கு எந்த அளவு பயன்படுவன என்பதை ஈண்டு ஆராய்ந்தறிதல் இன்றியமையாததாகும்.

### (1) நக்கீரரைப் பற்றிப் பெரும்பற்றப்புலியூர் நம்பி கூறுவன

மதுரையில் தமிழ்ச் சங்கப் புலவர் வேண்டுகோட்கிரங்கிப் புலவர்களின் புலமை வரம்பினை அறுதியிட்டுக் காட்டும் சங்கப் பலகையினைத் தந்தருளிய திருவாலவாயிறைவர், சங்கப் புலவர்

பழந்தமிழ்ச் செய்யுட்களின் பொருள் நலங்களை வரையறுத்து ஆராய்ந்து அமைதி காண இயலாது மனங்கவன்ற காலத்துத் தாமும் ஒரு தமிழ்ப் புலவராகத் தோன்றி 'அன்பினைந் திணை' யெனத் தொடங்கும் அகப்பொருளிலக்கண நூலை இயற்றியளித்தார். தாம் பாடிய அகத்திணைப் பாடல்கள் யாவும் இறைவர் இயற்றிய அகப்பொருளிலக்கணத்தின்படி அமைந் திருத்தலை யறிந்து சங்கப் புலவர்கள் மகிழ்ச்சியுற்றார்கள். அவர்களில் ஒருவராகிய நக்கீரனார் மட்டும் அழுக்காறுடையராய் அதனைக் குறை கூறினார். அதனையறிந்த இறைவர் சிரித்து, 'இந் நக்கீரன் என்றுமே பொறாமை யுடையவன் என்பதை இங்குள்ளவர்களில் அறியாதார் யாவர்? நக்கீரன் உண்மை உணர்ந்து அமைதியுறுவதற்கு வேண்டும் அறிவுரையைப் புலவர்களாகிய நீங்களே அவனுக்குச் சொல்லுங்கள்' எனக் கூறியருளினார். அப்பொழுது விசும்பிலே ஓர் அருள் வாக்குத் தோன்றியது. 'சங்கப் புலவர்களே, நுமக்குள் தமிழ் மொழியின் இலக்கண அமைதி குறித்துத் தோன்றிய வழக்கினைத் தீர்த்தற் பொருட்டுத் திருவாலவா யிறைவனாகிய சிவபெருமானே இவ்வாறு நும்முன் புலவனாக எழுந்தருளியுள்ளான். நுமது அறியாமையை விடுத்து அப்பெருமானைப் பணிந்து போற்றுமின்' என விசும்பிடைத் தோன்றிய அருள் மொழியினைக் கேட்டு அச்சமும் வியப்பு மெய்திய நக்கீரர், 'அடியேன் அறியாது கூறிய பிழையுரைகளைப் பொறுத்தருள வேண்டும்' எனக் கூறிப் புலவராய் வந்த இறைவனைப் பணிந்து போற்றினார். இறைவனும் சங்கப் புலவர்களுக்கு அருள் செய்து மறைந்தருளினான்.

மதுரை நகரின் அரசு வீற்றிருக்கும் பாண்டிய மன்னன் தன் தேவியோடும் தனித்து உலவிய பொழுது அவளது கூந்தலிலிருந்து தோற்றிய நறுமணத்தினை யுணர்ந்தான். அந்நறுமணம் பூவோடியைந்தமையாற் கூந்தலுக்குளதாகிய செயற்கை மணமோ அன்றிக் கூந்தலின் இயல்பாகிய மணந்தானோ என்பதோர் ஆராய்ச்சி அவன் மனத்திடையே நிலைபெறுவதாயிற்று. 'யான் என் மணத்திற் கொண்ட பொருளைக் குறிப்பானுணர்ந்து அழகிய செய்யுளொன்று பாடித்தருவோர் யாவராயினும் அவர்கள் பெறுதற்குரியது இப்பொற்கிழி' யென்று சொல்லி ஆயிரம் பொன்னிறைந்த கிழி யொன்றைச் சங்க மண்டபத்தே வேந்தன் கட்டி வைத்தனன். பெரும் புலவர் பலரும் அரசனது உள்ளக் கருத்தினை யறிய முயன்று தாம் பாடிய பாடலை அவனுக்குக் காட்டி அவனது பாராட்டுதலைப் பெறாது வறிதே திரும்பினர்.

இஃதிங்ஙனமாக, சிவபெருமானை வழிபடும் நல்லொழுக்கமுடைய பிரம்மசாரியாகிய தருமி யென்னும்

அந்தணன், பெற்றோரில்லாமையால் நெடுங்காலம் மணஞ் செய்யப்பெறாது, திருமணத்தினை நிறைவேற்றுவதற்குரிய பொருளைத் தந்தருளும்படி திருவாலவா யிறைவன்பாற் குறையிரந்து நின்றான். அவனது வேண்டுகோளை நிறைவேற்றக் கருதிய இறைவன், 'கொங்குதேர் வாழ்க்கை' யெனத் தொடங்கும் செய்யுளைப் பாடிக் கொடுத்துத் 'தருமியே நீ இச்செய்யுளைச் சங்கப் புலவர் பேரவையிற் படித்துக் காட்டி இதற்குரிய பொற்கிழியைப் பெற்றுக் கொள்வாயாக. இச்செய்யுளுக்கு யாரேனுங் குற்றங் கூறுவாருளராயின் யாமே அங்கு வந்து இதன் பொருளமைதியை விளக்கிக் கூறி நினக்கு உதவி செய்வோம்' எனக் கூறி விடை கொடுத்தனுப்பினார். தருமி, சங்கப் புலவர்களிடஞ் சென்று அச்செய்யுளைக் காட்டினான். அவர்கள் தம் மனத்துள்ளேஅதன் பொருள் நயங்களை யெண்ணி வியந்தனராயினும் அதுபற்றி வெளிப்பட எதுவுஞ் சொல்லாதிருந்தனர். அதனையறிந்த தருமி அப்பாடலைப் பெற்றுச் சென்று பாண்டிய மன்னனுக்குக் காட்டினான். அச்செய்யுளைப் படித்துணர்ந்த வேந்தன் தனது உள்ளக் குறிப்பு அச்செய்யுளிற் புலப்படுத்தப் பெற்றிருத்தலையறிந்து பெரிதும் வியந்தான். 'பாவலரே நீர் விரைந்து சென்று சங்க மண்டபத்திற் கட்டப் பெற்றுள்ள பொற் கிழியைக் கைக்கொள்வீராக' எனத் தருமியை நோக்கிக் கூற அவனும் அரசனது இசைவு பெற்றுச் சங்க மண்டபத்தை யடைந்து பொற்கிழியை எடுக்கப் புகுந்தான். அது கண்ட நக்கீரர், அவனைத் தடுத்து நிறுத்தி, 'பாவின் சொற்பொருளறியாத நீ இதனைத் தொடுதலாகாது. நின் கவி குற்றமுடையது. இச்செய்யுளை உனக்குப் பாடிக் கொடுத்த புலவனை இங்கு அழைத்து வா' எனக் கூறினார். அது கேட்டு வருத்தமுற்ற தருமி, ஆலவா யிறைவர் திருமுன் சென்று 'எம்பெருமானே, நும்முடைய கவிக்குச் சிற்றறிவுடைய மாந்தர் குற்றங் கூறினரே' எனக்கூறி முறையிட்டான். அந்நிலையில் ஆலவாயில் எழுந்தருளிய சிவபெருமானே செந்தமிழ்ப் புலவனாகத் திருமேனி தாங்கிச் சங்க மண்டபத்தை யடைந்து, 'என் கவிக்குக் குற்றங் கூறினான் யாவன்' என வினவ, ' நானே குற்றங் கூறினேன்' என்றார் நக்கீரர். அது கேட்ட இறையனார்,

**அங்கங் குலுங்க வரிவாளி னெய்தடவிப்**
**பங்கம் படவிரண்டு கால்பரப்பிச் - சங்கை**
**கீர்கீ ரெனவறுக்குங் கீரனோ வென்கவியை**
**ஆராயு முள்ளத்தவன்.**

என்ற செய்யுளைப் பாட, அதற்கு மறுமொழியாக்,

**சங்கறுப்ப தெங்கள்குலம் தம்பிராற் கேதுகுலம்**
**பங்கமுறச் சொன்னாற் பழுதாமோ - சங்கை**
**யரிந்துண்டு வாழ்வோம் அரனாரைப் போல**
**இரந்துண்டு வாழ்வ திலை.**

என்ற செய்யுளைப் பாடினார் நக்கீரர். அவரை நோக்கிய இறைவர் 'யான் பாடிய செய்யுளிலுள்ள குற்றம் யாது' என வினவினார். 'பூசுவன பூசிப் புனைவன புனைந்து கை செய்யாது விடிற் சிக்குண்டு நாறு மியல்பினதாகிய மகளிரது கூந்தலுக்கு இயற்கை மணமுண்டெனச் செப்பும் இச்செய்யுள் பொருட் குற்றமுடையது' என்றார் நக்கீரர். அம்மொழி கேட்ட இறைவர், 'தெய்வமாதர் கூந்தர்க்கும் நறுமணமில்லையோ' என வினவ, 'இல்லை' யென்றார் நக்கீரர். 'கவுரியாகிய உமாதேவியின் கூந்தலுக்கும் அப்படியோ' என்றார் இறைவர். 'அதுவும் அப்படியே' யென்றார் நக்கீரர். இந்நிலையிற் புலவராக வந்த இறைவர் தம் சடைமுடியைப் புலப்படுத்தினார். அதனையுணர்ந்த நக்கீரர் 'தமிழ் வல்ல என்னை நும் சடையினைக் காட்டி வெருட்ட வேண்டாம்' என்றார். சினமுற்ற இறைவர் நெற்றிக் கண்ணைக் காட்டினார். நெற்றிக் கண்ணழலால் வெதுப்புற்ற நிலையிலும் அச்சமுறாத நக்கீரர் 'நும் உடல் முழுதும் நெருப்புக் கண்ணேயாயினும் குற்றங் குற்றமே' யென இறைவனை நோக்கிக் கூறினார். அம்மொழிகளைக் கேட்ட இறைவர், நக்கீரரை நோக்கி 'நன்னெறி வழக்கினை அறியாதவனே, வழிபடு தெய்வமாகிய கவுரியின் கூந்தலை மற்றை மாதரது கூந்தலை யொப்ப இழிவாகக் கருதினையோ? மறைகள் ஞானப் பூங்கோதை யென்ற பொருளில் உமாதேவியைப் போற்றும் மொழியினை உணர்ந்திலையோ? மடம் நாணம் முதலிய குணங்கள் மகளிர்க்கியல்பு ஆமாறு போல இயற்கையில் மணம் வீசுங்கூந்தல் கவுரிக்கு உண்டென்பதனை யாரறியார்' என வினவினார். இம்மொழிகளுக்கு விடை கூற அறியாத நக்கீரர் இறைவரது நெற்றிக் கண்ணழலால் தமக்குள தாகிய வெப்பத்தைப் பொறுக்கமாட்டாது பொற்றாமரைத் தடாகத்திற் போய் வீழ்ந்தார். தருமி தனக்குரிய பொற்கிழியைத் தடையின்றிப் பெற்றுச் சென்றனன். நக்கீரரது துன்பத்தினைக் கண்டு ஆற்றொணாத் துயரமடைந்த சங்கப் புலவர்கள் திருவாலவாயிறைவரை வணங்கி நின்று, 'தையல்பாகனே, நக்கீரன் அறியாமையால் நின் முன்னர்ப் பிழைபடப் பேசினான். திருக்கயிலையும் திருக்காளத்தியும் தேவரீர் அன்புடன் வீற்றிருந்தருள் புரியும் திருத்தலங்களெனத் தெரிந்து இப்பொழுது அவ்விருதலங்களையும் போற்றி ஓரந்தாதி பாடியுள்ளான். எங்கள் பெருமானாகிய நீ அவனது பிழை பொறுத்து அருள் புரிதல் வேண்டும்' எனப் பரவிப் போற்றினார்கள். அவர்களது

வேண்டுகோளுக்கிரங்கிய இறைவர், அங்கயற்கண்ணியம்மை யொடும் பொற்றாமரைத் தடாகத்தை அடைந்தார். 'சொல்லும் பொருளுமே' என்ற தொடரை முதலாகக் கொண்டு நக்கீரர் பாடிய கயிலைபாதி காளத்தி பாதி யந்தாதியைச் செவிமடுத்து மகிழ்ந்து அருள்தரு கை கொடுத்து அவரைக் கரையேற்றினார். நெற்றிக்கண் ணழலாலுற்ற அவரது உடல் வெப்பத்தையும் தீர்த்தருளினார். இங்ஙனம் தமது உடல் வெப்பத்தைத் தீர்த்தருளிய ஆலவாயிறைவரை அகங்குழைந்து வழிபடுதலை நாடொறும் செய்தற்குரிய நியமமாகக் கொண்டொழுகினார் நக்கீரர். அவரது அறியாமை யகற்றி நற்பொருளையுபதேசிக்கத் திருவுளங் கொண்ட ஆலவாயிறைவர், பொதியமலையில் வாழும் அகத்திய முனிவரை யழைத்துத் தமிழியல் நூற்பொருளை அவருக்கு அறிவுறுத்தி, 'இப்பொருளை நக்கீரனுக்கு உணர்த்துக' எனப் பணித் தருளினார். அகத்திய முனிவரும் தாம் இறைவன்பாற் கேட்ட தமிழியல் நுட்பத்தை நக்கீரருக்கு உபதேசித்தருளினார்.

அகத்தியர் பால் தமிழுணர்ந்த நக்கீரர், சங்கப் புலவர் மதிக்க வாழும் நாளில், இறையனாரருளிய அகப்பொருள் நூலுக்கு மெய்யுரை தந்தருளும்படி புலவர்கள் இறைவனை வேண்டினார்கள். இறைவன் பணித்த வண்ணம் வணிகனாகிய உப்பூர் கிழான் மகனும் ஐந்தாட்டைப் பருவத்தினனும் ஊமைப் பிள்ளையுமாகிய உருத்திரசன்மனைப் பாவறி மண்டபத்தின் நடுவே அரியாசனத் தமர்த்தி வழிபட்டுப் புலவர்கள் தாம் தாம் கருதியவற்றைப் பொருளாக உரைத்தனர். அவற்றைக் கேட்ட உருத்திர சன்மன் அவ்வுரைகளைப் பற்றியெதுவும் புலப் படுத்தாது, நக்கீரர். கபிலர், பரணர் ஆகிய இம்மூவரும் உரை கூறிய அளவில் அவர்தம் உரைகளை விருப்புடன் கேட்டு மெய்ம் மயிர் சிலிர்த்துக் கண்ணீரரும்பி இவ்வுரைகளே மெய்ம்மையுடையன எனப் புலப்படுத்தினான். இதுவே நக்கீரரைப் பற்றித் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்திற் கூறப்படுங் கதையாகும். இக்கதையினையே பரஞ்சோதி முனிவரும் தாம் பாடிய திருவிளையாடற் புராணத்திற் சிறிது வேறுபட விரித்துக் கூறியுள்ளார்.

### (2) பரஞ்சோதி முனிவர் கூறுவன

நெற்றிக் கண்ணின் வெப்பத்திற்கு ஆற்றாது பொற்றாமரைத் தடாகத்தில் வீழ்ந்து வருந்திய நக்கீரர், சங்கப் புலவர் வேண்ட அங்கு எழுந்தருளிய அம்மையப்பராகிய இறைவரது திருவருள் நோக்கினால் கருவி காரணங்கள் தூய்மையடையப் பெற்றுத் திருக்கயிலையிலும் திருக்காளத்தியிலும் இறைவன் வீற்றிருந்தருள் புரியுந்திறத்தினை அடுத்தடுத்துப் போற்றுங் கருத்துடையராய்ச்

'சொல்லும் பொருளுமே' எனத் தொடங்கும் திருவந்தாதியைப் பாடிப் போற்றினாரென்றும், அப்பனுவலைக் கேட்டருளிய இறைவர் நக்கீரரைக் கரையேற்றி யருளினாரென்றும், கரையேறிய நக்கீரர் இறைவரைப் பணிந்து நின்று, சிவபெருமானாகிய பெரியோன் தீமையும் நன்மையும் புரிந்தவர்களுக்கு முறையே சினத்தையும் அருளையும் மேற்கொண்டு நிகழ்த்திய செயல்களைப் பொருளாகக் கொண்டு கோபப்பிரசாதம் என்ற பிரபந்தத்தையும் பெருந்தேவபாணி திருவெழு கூற்றிருக்கை ஆகிய பிரபந்தங்களையும் பாடிப்போற்றினாரென்றும் பரஞ்சோதி முனிவர் தாம் இயற்றிய திருவிளையாடற் புராணத்திற் குறிப்பிட்டுள்ளார்.

### (3) கல்லாட நூலாசிரியர் கூறுவன

நக்கீரர் இறைவனது நுதல் விழியின் வெப்பத்திற்கு ஆற்றாது பொற்றாமரைத் தடாகத்து அமிழ்ந்த நிலையில் கயிலைபாதி காளத்திபாதி யந்தாதி யென்னும் பிரபந்தத்தைப் பாடி இறைவனைப் போற்றினர் என்னும் இச்செய்தி,

**'அருந்தமிழ்க் கீரன் பெருந்தமிழ்ப் பனுவல்**
**வாவியற் கேட்ட காவியங் களத்தினன்'** (52)

எனக் கல்லாடச் செய்யுளிலும் இடம் பெற்றுள்ளது.

இறைவன் தருமியின் பொருட்டு நன்பாட்டுப் புலவனாகச் சங்கமேறிப் பொற்கிழி வாங்கித்தந்தருளினார் என்ற செய்தியினை,

**'நன் பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி**
**நற்கனகக் கிழி தருமிக் கருளினோன் காண்'**

எனத் திருநாவுக்கரசடிகளார் குறிப்பிட்டுப் போற்றியுள்ளார். சங்கத்தொகை நூலாகிய குறுந்தொகையுள் இரண்டாவது செய்யுளாகக் கோக்கப்பெற்ற 'கொங்குதேர் வாழ்க்கை' யென்ற செய்யுளே இறைவன் தருமியின் பொருட்டுப் பாடித்தந்த செய்யுளென்பது கல்லாட நூலாசிரியர் கருத்தாகும்.

**'பொதியப் பொருப்பன் மதியக் கருத்தினைக்**
**கொங்குதேர் வாழ்க்கைச் செந்தமிழ்கூறிப்**
**பொற்குவை தருமிக் கற்புட னுதவி**
**யென்னுளங் குடிகொண் டிரும் பய னளிக்குங்**
**கள்ளவிழ் குழல்சேர் கருணையெம்பெருமான்'** (கல்-1)

எனவருங் கல்லாடச் செய்யுளடிகளில் இக்கருத்து விரித்துரைக்கப் பெற்றமை காணலாம்.

நக்கீரரைப் பற்றிய இக்கதை பிற்காலத்தில் மேலும் சில புனைந்துரைகளைப் பெற்று வளர்வதாயிற்று.

### (4) சிவப்பிரகாச சுவாமிகள் கூறுவன

உமாதேவியாரது கூந்தலுக்கும் இயற்கை மணமில்லையென நக்கீரர் தருக்குற்றுப்பேசியது கண்டு சினமுற்று புலவராகிய சிவபெருமான், நக்கீரரை நோக்கி, 'மறைகளில் மணங் கமழ் குழலாள் எனச் சிறப்பித்துப் போற்றப் பெறும் உமாதேவியாகிய இறைவியின் கூந்தலை நீ பழித்தமையால் குட்ட நோய் கொண்டு அலைந்து வருந்துக' என வெகுண்டுரைத்தனர். அதனைக் கேட்டு நடுக்கமுற்ற நக்கீரர் 'நாயினுங்கடையேன் அறியாமையாற் கூறியவற்றைப் பொறுத்தருளவேண்டும்' என இறைவனைப் பணிந்து வேண்டினார். உளமிரங்கிய இறைவனும் 'நீ கயிலையைக் கண்டு வணங்கினால் இந்நோய் தீரும்' எனச் சொல்லி மறைந்தனன். குட்ட நோயினால் வருத்தமுறும் நக்கீரர் கயிலையைக் கண்டு தம் நோயைத் தீர்த்துக் கொள்ள எண்ணி மதுரையிற் சங்கப் புலவர்பால் விடைபெற்றுப் பல தலங்களை வணங்கி வடநாடு சென்று கங்கையில் நீராடிக் காசி கேதாரம் முதலிய தலங்களை இறைஞ்சி உள்ளங்கால் வெள்ளெலும்பு தேயக் கயிலையை நோக்கிச் சென்றார். வானவராலும் அடைதற் கரிய கயிலையை நோக்கிச் செல்லும் நக்கீரர், வழியிடையமைந்த தடாக மொன்றைக்கண்டு அதன் கரையிலுள்ள ஆலமரத்தின் நிழலிற் சிறிது நேரம் இளைப்பாறுவாராயினர். அந் நிலையில் அவ்வால மரத்திலிருந்து உதிரும் இலையொன்று ஒருபாதி நீரிலும் மற்றொரு பாதி நிலத்திலுமாக விழுந்தது. நீரிற்படிந்த இலைப்பகுதி மீனாகவும் நிலத்திற் படிந்த பாதி பறவையாகவும் மாறி ஒன்றை யொன்று இழுத்தலைக்கும் விநோதத்தைக் கண்ட நக்கீரர், அவ்வதிசயக் காட்சியில் ஈடுபட்டுத் தம்மை மறந்தார். அந்நிலையில் அங்குள்ள பூதமொன்று விரைந்து வந்து நக்கீரரைப் பிடித்துச் சென்று தான்முன் மலைமுழையொன்றிற் சிறைப் படுத்தியுள்ள தொளாயிரத்துத் தொண்ணூற் றொன்பதின்மருடன் இவரையும் சிறையிட்டு இவ்வாயிரவரையும் ஒருசேர வுண்ணுங் கருத்தினால் நீராடி வரச் சென்றது. மலைமுழையில் முன்னரே சிறைப்பட்டிருந் தவர்கள், தம்முன் புதியராய் வந்த நக்கீரரை நோக்கி, 'நீயொருவன் இங்கு வந்தமையால் அல்லவோ நாங்கள் ஆயிரவர் என்னுந்தொகையினராகி இப்பொழுது பூதத்துக்கு இரையாகப் போகின்றோம்' என மனம்நொந்து கூறினார்கள். அவர்களது துயர்க்கு இரங்கிய நக்கீரர், தமிழ்த் தெய்வமாகிய முருகப் பெருமானை நினைந்து திருமுருகாற்றுப் படையென்னும் செழும்பாடலைப் பாடிப் போற்றினார். செந்தமிழ்ச் சுவையில் விருப்புற்ற அறுமுகச் செவ்வேள், வேலேந்தி நீலமயில்மீதேறி நக்கீரர் முன்னே வந்து தோன்றிப் பூதத்தையழித்து நக்கீரரையும் ஏனையோரையும் சிறையினின்றும் விடுவித்தருளினார். நக்கீரர்

தம்துயர்தீர்த்தருளிய முருகப் பெருமானை யிறைஞ்சி 'என் அறியாமை யாலுளதாகிய குட்டநோய் இறைவன் பணித்த வண்ணங் கயிலையைக் கண்டாலன்றித் தீராது, பெரும் பெயர் முருகனாகிய நீ எளியேற்குத் திருக்கயிலையைக் காட்டி எனதுபிணியைத் தீர்த்தருளல் வேண்டும்' எனக் குறையிரந்தார். அவரது வேண்டுகோட்கிரங்கிய முருகப்பெருமான், அவரை நோக்கி, 'எந்தையாகிய சிவபெருமான் இன்ன திசையிலுள்ள கயிலையைக் கண்டு வழிபடுக என நினக்குத் திசைகூறிக் குறிப்பிடாமையால் நீ தென் கயிலையாகிய திருக்காளத்தியைக் கண்டாலும் நினது குட்டநோய் தீரப்பெறுதல் உறுதி. ஆகவே இங்குள்ள குளத்தில் மூழ்கித் தென்கயிலையைக் கண்டு நோய் நீங்கி இன்புறுவாயாக' எனப் பணித்தருளினான். முருகப் பெருமான் பணித்தவண்ணம் நக்கீரர் அங்குள்ள தடாகத்தில் மூழ்கித் தென்கயிலையாகிய திருக்காளத்தியிற் பொன்முகலி யாற்றில் எழுந்தார். நோய்நீங்கித் தூய உடம்பு பெற்ற நக்கீரரது உள்ளத்திலே கயிலைவேறு காளத்திவேறு என்னும் வேற்றுமை நீங்கிக் காளத்தியே கயிலையாகத் தோன்றினமையாற் கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி யென்னுஞ் செழுந்தமிழ்பாடி இறைவனைப் போற்றினார். அந்நிலையில் இறைவன் அம்மையப்பனாகக் காட்சிதந்து என்றும் பிரியாது திருவடி நிழலில் இன்புற்றுறையும் பேரானந்தப் பெருவாழ்வை அவர்க்கு வழங்கியருளினான் என்பது பிற்காலத்தில் தோன்றிய மற்றொரு கதையாகும். இக்கதை சீகாளத்தி புராணம் நக்கீரச் சருக்கத்திற் கூறப்பெற்றுள்ளது. இது பெரும்பற்றப் புலியூர் நம்பி திருவிளை யாடலுக்கும் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடலுக்கும் முற்றிலும் மாறுபட்டதாகும்.

### (5) நிரம்ப அழகிய தேசிகர் கூறுவன

சங்கப்புலவராகிய நக்கீரர் சிவபெருமான்பாற் பேரன்புடையராய் நாடோறும் திருப்பரங்குன்றத்தை யடைந்து சரவணப் பொய்கையில் நீராடித் திருவைந்தெழுத் தோதிச் சிவபூசை செய்து மதுரைக்கு வருதலை நியமமாகக் கொண்டிருந்தார். அவர் சிவபெருமானொருவனையே வழிபடு தெய்வமாகக் கொண்டு அப்பெருமானையும் அவனருள் பெற்ற பாண்டியனையுமன்றிப் பிறதெய்வங்களையும் மக்களையுங் குறித்துச் செய்யுள் பாடுவதில்லையென்ற உறுதியுடையராய் ஒழுகினார். அது கண்ட முருகப்பெருமான் நக்கீரர் தம்மை யுணர்ந்து தமிழ்ப்பாடல் பாடுதற்கேற்ற சந்தர்ப்பமொன்றை யுண்டாக்கும்படி அண்டாபரணன் உக்கிரன் ஆகிய பூதகணத் தலைவர்களுக்குக் கட்டளையிட்டருளினார். என்றும்போல் ஒரு நாள் நக்கீரர் திருப்பரங்குன்றத்தினை யடைந்து சரவணப்

பொய்கையில் நீராடி அதன் கரையிலுள்ள அரசமரத்தின் நிழலிலே திருவைந்தெழுத்தை ஓதிக் கொண்டிருந்தார். அப்பொழுது அங்குள்ள பூதமொன்று அரசமரத்திலுள்ள இலையொன்றைக் கிள்ளியெறிந்தது. அவ்விலை நீரிற்பாதியும் நிலத்திற்பாதியுமாக விழுந்தது. நீரில் அமிழ்ந்திய பகுதி மீனாகவும் நிலத்திற்படிந்த பகுதி பறவையாகவும் மாறி அவ்விரண்டும் ஒன்றையொன்று இழுத்துக் கொண்டு துன்புற்றன. அவற்றின் துயரத்தைக் கண்டு மனம் பதைத்த நக்கீரர், அவ்விரண்டையும் பிரித்து வைக்க எண்ணி நகத்தாற்கிள்ளி விலக்கினார். அவ்விரண்டும் பதைத்துப் புரண்டு அப்பொழுதே இறந்து போயின. அந்நிலையில் அண்டாபரணன் உக்கிரன் ஆகிய பூதகணத்தலைவர்கள் நக்கீரரை யடைந்து 'நீ முருகன் எழுந்தருளிய இத்தலத்திற் கொலை புரிந்தமையால் தீவினையை யுடையையானாய்' எனக்கூறி நக்கீரரது முதுகிற் புடைத்து அவரை மலை முழையொன்றிற் சிறைப்படுத்தினர். நக்கீரர் தாம் அடைந்த துன்பத்திற்குரிய காரணத்தைச் சிந்தித்தார், முருகப் பெருமானைச் செந்தமிழ்ப் பனுவல்களாற் பாடிப் போற்றா மையால் நேர்ந்ததுன்ப மிதுவாமெனத் தெளிந்து உலகமுவப்ப எனத் தொடங்கி மலைகிழவோனேயென முடியும் திருமுருகாற்றுப்படையினைப்பாடி முருகனை வழிபட்டு நோற்றிருந்தார். முருகன் அவரது கனவிலே தோன்றி, நீ என்னைக் கிழவோனே என அழைத்துள்ளாய் யான் கிழப் பருவமடைந்த நிலையில் நின்னை நோக்கிவரச் சில நாளாகும்' எனக் கூறி மறைந்தனர். அதுகண்டு திடுக்குற்று விழித்த நக்கீரர் 'என்றும் இளையாய்' எனப் பாடிப் போற்றினார். அப்பாடலைக் கேட்டு மகிழ்ந்த முருகப் பெருமான் தனது திருக்கரத்தில் தாங்கிய வேற்படையால் மலைமுழையைப் பிளந்து நக்கீரரைச் சிறையினின்றும் மீட்டுத் தனது மூவா இளநலமாகிய தெய்வக் கோலத்தைக் காட்டித் திருவருள் புரிந்தான் எனவரும் இக்கதை நிரம்பவழகிய தேசிகர் பாடிய திருப்பரங்கிரிப் புராணத்து நக்கீரச் சருக்கத்தில் விரித்துரைக்கப்பட்டுள்ளது.

இக்கதை சில வேறுபாடுகளுடன் திருவால வாயுடையார் திருவிளையாடற் புராணத்தில் இந்திரன் முடிமேல் வளையெறிந்த திருவிளையாடலிற் காணப்படினும் இக்கதை நிகழ்ச்சி பற்றிய செய்யுட்கள் சில ஏடுகளில் இல்லாமையாலும் இவை முன்னும்பின்னுந் தொடர்பின்றிக் காணப்படுதலாலும் இது பிற்காலத் தொருவராற் சேர்க்கப்பட்ட தெனவே கருத வேண்டியுள்ளது. இந்திரன் முடிமேல் வளையெறிந்த திருவிளையாடலுக்கும் நக்கீரர் திருமுருகாற்றுப்படை பாடிய செவ்வியினை விளக்கப்புகுந்த இக்கதைக்கும் யாதோரியைபு

மில்லாமையும் இக்கதைக்குரிய 22 முதல் 28 வரையுள்ள ஏழு செய்யுட்களையும் நீக்கிப் படித்த அளவில் இந்திரன் முடிமேல் வளையெறிந்த திருவிளையாடலாகிய கதை தொடர்பு பெற விளங்குதலும் இவண் நோக்கத்தக்கனவாம்.

திருவாலவாய்ப் பெருமான் தருமியின் பொருட்டு நன்பாட்டுப் புலவனாகச் சங்கமேறித் தருமிக்குப் பொற்கிழி வாங்கித்தந்தருளினார் என்ற செய்தியினைத் திருநாவுக்கரசு சுவாமிகள் திருப்புத்தூர்த் திருத்தாண்டகத்திற் குறிப்பிடுதலால் அச்செய்தி திருநாவுக்கரசர் காலமாகிய கி. பி. ஏழாம் நூற்றாண்டி லேயே நிலைபெற்று வழங்கிய பழைய வரலாறென்பது இனிது பெறப்படும். தருமிக்குப் பொற்கிழி தந்தருளிய இத் திருவிளையாடலில் இறைவனது செய்யுளுக்குக் குற்றங் கூறியவர் நக்கீரரென்றும் சிவபெருமான் சடைமுடியும் நெற்றிக்கண்ணும் காட்டி நக்கீரரை அச்சுறுத்தினானென்றும் நெற்றிக் கண்ணலழால் வெதும்பிய நக்கீரர் உடல் முழுதும் நெருப்புக் கண்களைக் காட்டினாலும் குற்றங் குற்றமேயெனக் கூறிப் பொற்றாமரைத் தடாகத்தில் வீழ்ந்தனரென்றும் பின்பு சங்கப் புலவர்களது வேண்டுகோளால் அங்கெழுந்தருளிய இறைவனது அருள் நோக்கம் பெற்ற நிலையிற் கயிலைபாதி காளத்திபாதி யந்தாதி முதலிய பிரபந்தங்களைப் பாடித் துதித்து இறைவனருளாற் கரையேறி யுய்ந்தனரென்றும் பெரும்பற்றப் புலியூர்நம்பியும் பரஞ்சோதி முனிவரும் தாம் பாடிய திருவிளையாடற் புராணத்துக் கூறும் இக்கதை நிகழ்ச்சிகளுக்குக் கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டிற்கு முற்பட்டுத் தோன்றிய தமிழ் நூல்களில் எத்தகைய ஆதரவும் காணப்படவில்லை. இக்கதை நிகழ்ச்சிகளைப் பிற்காலத்தவராகிய நிரம்ப அழகிய தேசிகரும் தாம் பாடிய திருப்பரங்கிரிப் புராணத்து நக்கீரச் சருக்கத்திற் குறிப்பிடவில்லை. திருப்பரங்குன்றத்திற் பூதத்தாற் சிறையிடப் பட்டு வருந்திய நக்கீரர் திருமுருகாற்றுப்படை பாடி முருகனருள் 'பெற்றாரென்னும் மற்றொரு புதுக்கதையினை நிரம்ப அழகிய தேசிகர் தமது நூலிற் குறித்துள்ளார். நக்கீரரைப் பற்றித் திருவிளையாடற் புராணத்திற் சொல்லப்பட்ட கதை நிகழ்ச்சி களையும் திருப்பரங்கிரிப் புராணத்திற் கூறப்பட்ட கதை நிகழ்ச்சியையும் தொகுத்து நோக்கிய துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள், நக்கீரர் இறைவனோடு வாது செய்தமையால் குட்ட நோயினைப் பெற்று இறைவன் பணித்த வண்ணம் அந்நோய்தீரத் திருக்கயிலாயத்தைத் தரிசிக்க வெண்ணி வடநாட்டுத் தலங்களை வணங்கிச் செல்லும் வழியில் ஒரு பூதத்தாற்பற்றப் பட்டு மலைமுழையில் அடைக்கப்பட்டுத் துன்புறும் நிலையில் திருமுருகாற்றுப் படையினைப் பாடி முருகனருளாற் சிறை

நீங்சியுய்ந்து அப்பெருமான் பணித்த வண்ணம் அங்குள்ள தொரு தடாகத்தில் மூழ்கிப் பொன் முகலியாற்றில் நோய் நீங்கிய தூய வுடம்புடன் எழுந்து திருக்காளத்தியாகிய தென் கயிலாயத்தைக் கண்டு கயிலைபாதி காளத்திபாதி யந்தாதி பாடினார் என மற்றொரு புதுக்கதையை உருவாக்கியுள்ளார்.

நக்கீரனாராகிய சங்கப்புலவரது வரலாற்றினை விரித்துரைக்க விரும்பிய இப்பெருமக்கள், திருத்தொண்டர் புராண ஆசிரியர் சேக்கிழார் மேற்கொண்ட உண்மை வரலாற்று நெறிமுறையைப் பின்பற்றி, நக்கீரர் பாடல்களிற் காணப்படும் அகச்சான்றுகளையும் அவரைப்பற்றி அவர் காலத்துப் பெருமக்கள் கூறியனவாகிய புறச்சான்றுகளையும் ஆதரவாகக் கொண்டு நூல் செய்திருப்பின் அந்நூல்கள் தமிழ்ப் பெருமக்கள் வரலாறுகளை யறிதற்குப் பெரிதும் உதவி செய்திருத்தல் கூடும். இவ்வாசிரியர்களெல்லோரும் வரலாற்று நெறியிற் கருத்தின்றி மக்களது மனவியல்புக்கும் இறைவனது திருவருள் நெறிக்கும் முரணாகப் பிற்காலத்தார் சிலர் புனைந்துரைத்த வடமொழித் தல புராணங்களையும் காலந்தோறுந் திரிபுற்று வழங்கிய புனைந்துரைக் கதைகளையும் மெய்யென நம்பி நூலியற்றி யுள்ளார்கள். புலமை நிரம்பிய இப்பெருமக்கள் பாடிய தலபுராணங்களை இலக்கிய நயங்கருதிப் படித்தின்புறுதற்குரிய நூல்களெனக் கொள்வதன்றிப் பழந்தமிழ்ப் புலவர்களது உண்மை வரலாற்றினை யுணர்தற்குத் துணை புரியும் நூல்களெனக் கொள்ளுதற்கில்லை.

நக்கீரர் பாடியனவாகப் பதினொராந் திருமுறையிற் சேர்க்கப்பெற்றுள்ள பத்துப் பிரபந்தங்களில் ஒன்பதாவது பிரபந்தமாக அமைந்தது திருமுருகாற்றுப்படை. சங்கத்துச் சான்றோர் இப்பாட்டினைப் பத்துப் பாட்டில் முதலாவது பாட்டாகக் கோத்தமைத் துள்ளார்கள். இதனைப் பாடியவர் மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனாராவர். 'ந' என்பது சிறப்புப் பொருளைத் தருவதோர் இடைச்சொல். கீரன் என்பதே இவரது இயற்பெயர். இதன் முன் நல் என்னும் அடைமொழி புணர்த்து நற்கீரனார் என வழங்குதல் பிற்கால வழக்காகும். நக்கீரர் பாடியனவாகப் பத்துப்பாட்டுள் திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடை என இரண்டு பாடல்களும், எட்டுத் தொகையில் முப்பத்து நான்கு தனிப்பாடல்களும் கிடைத்துள்ளன. இறையனாரகப் பொருளுக்கு முதலுரை கண்டவர் இவரேயெனக் களவியலுரை கூறும். கடைச் சங்கப் புலவராகிய இவரது காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டெனக் கொள்ளுதல் பொருந்தும்.

நக்கீரனார் பாடிய திருமுருகாற்றுப் படைக்குப் பதினொராந் திருமுறையில் நக்கீர தேவர் பாடியனவாகக் குறிக்கப்பட்ட ஏனை

ஒன்பது பிரபந்தங்களுக்கும் சொல் வழக்கும் பொருளமைதியும் வரலாற்று நிகழ்ச்சிகளும் முற்றிலும் வேறுபட்டுள்ளன.

திருமுருகாற்றுப் படையில், கோபம், அங்குசம் முதலிய ஒருசில வடசொற்களே அருகிக் காணப்படுகின்றன. கயிலை பாதி காளத்திபாதியந்தாதி முதலிய ஏனைய ஒன்பது பிரபந்தங்களிலும் அர்ச்சனை, அலங்கரித்து, இரவி, இலக்கியம், இலிங்கம், உன்றனக்கு, ஓங்காரம், கங்காளர், கதை, கரம், காகோதரம், காமாதி, கோபப் பிரசாதம், சங்கரன், சடலம், சரணம், சாதி, சித்திரம், சிரம், சுந்தரவிடங்கன், தக்கிணம், தயா, திக்கு, தியானிப்பார், துந்துபி, தேவாதிதேவன், நித்தியம், நேசம், பவம், பாசம், பாசுபதம், பாதம், பாதாரவிந்தம், பாவம், பாவனை, பாவித்து, பிரமன், பிராணி, புண்டரிகம், போனகம், மாயம், மானுடவர், முத்தி, மூர்க்கமாக்கள், மூர்த்தி, வாசகம், விடம், விண்ணப்பம் முதலிய வடசொற்களும் பிற்காலச் சொல் வழக்குகளும் பெருகிக் காணப்படுகின்றன. அன்றியும் இப் பிரபந்தங்களில் கண்ணப்பர் வரலாறு, சண்டீசர் சரிதம், அருச்சுனற்குப் பாசுபத மளித்தது, சிலந்தியைக் கோச் செங்கணானாகப் பிறப்பித்தருளிய சிறப்பு, மார்க்கண்டேயர் கதை, உபமன்னிய முனிவர்க்குப் பாற்கடலீந்தது, சாக்கிய நாயனார் வரலாறு, நந்திக்கு அருளியது, புலிக்கால் முனிவர், பிங்கிருடி முதலியோர்க்கு அருள் செய்தது. திருமால் பிரமர் அடிமுடி தேடியது, கடவூரிற் காலனை யுதைத்தது, காமனையெரித்தது, முயலகனை மிதித்தது, தாருகனைக் கொன்ற காளியின் வேகந்தவிர்த்தது, நாமகளை மூக்கரிந்தது, திரிபுரத்தவுணர் மூவர்க்கு அருள் செய்தது, அந்தகாசுரனைக் கொன்றது, யானையை யுரித்தது, ஆலின்கீழ் நால்வர்க்கு அறமுரைத்தது முதலிய புராணச் செய்திகளும் பிற்கால வரலாறுகளும் பேசப்படுகின்றன.

திருமுருகாற்றுப்படையில் தமிழ்நாட்டுப் பழங்குடி மக்கள் மேற்கொண்டு போற்றிய பழைய வழிபாட்டு முறைகளே விரித்து விளக்கப் பெற்றிருக்கவும், நக்கீர தேவர் பாடிய திருக்கண்ணப்ப தேவர் திருமறத்தில் ஆகமச் செயல் முறைகளே விரித்துரைக்கப் பட்டுள்ளன. திருமுருகாற்றுப் படை செறிவுந்திட்பமும் வாய்ந்த சொன்னடையில் அமைந்திருக்கவும் நக்கீரதேவர் பிரபந்தங்கள் இளகிய எளிய நடையில் அமைந்துள்ளன. அன்றியும் நக்கீரதேவர் பாடல்களில் தேவார திருவாசகச் சொற்றொடர்களும் கருத்துக்களும் அவ்வாறே யெடுத்தாளப் பெற்றுள்ளன. ஆகவே கயிலை பாதி காளத்தி பாதி யந்தாதி முதலிய பதினொராந் திருமுறைப் பிரபந்தங்களைப் பாடிய நக்கீர தேவரென்பார், திருமுருகாற்றுப்படை யாசிரியரும் கடைச்சங்கப் புலவருமாகிய

மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனாரல்லர் என்பதும், தேவார ஆசிரியர் மூவர்க்கும் காலத்தாற் பிற்பட்ட மற்றொருவரென்பதும் நன்கு தெளியப்படும்.

திருவீங்கோய் மலைத் திருக்கோயிலிற் கருப்பக் கிருகத்தின் வடபுறத்திற் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டொன்றில் பதினொராந் திருமுறை யாசிரியருளொருவரும் திருவீங் கோய்மலையெழுபது என்னும் பிரபந்தத்தால் அத்திருத்தலத் திறைவரைப் போற்றியவருமாகிய நக்கீரதேவரை அத்திருக் கோயிலில் எழுந்தருளுவித்த செய்தி குறிக்கப்பட்டுள்ளது. மூன்றாங் குலோத்துங்க சோழனது 36ஆம் ஆட்சியாண்டில் இராஜராஜ வளநாட்டுமலை ஸ்ரீஜயங்கொண்ட சோழச் சதுர்வேதி மங்கலத்துப் பெருங்குறி மகாசபையார், உடையார் திருவீங்கோய் ஊருடையார் கோயிலில் எழுந்தருளுவித்த ஆளுடைய பிள்ளையார்க்கும் திருநாவுக்கரசு தேவர்க்கும் ஆலால சுந்தரப்பெருமானுக்கும் திருநற்கீர தேவர்க்கும் திருப்படி மாற்றுக்கும் விஞ்சநத்துக்கும் உடலாக (முதற்பொருளாக) நிலம் அளித்தமையே இக்கல்வெட்டிற் குறிக்கப்பட்ட சிறப்புடைய நிகழ்ச்சியாகும்.* (* செந்தமிழ், பதினேழாந்தொகுதி 313-ம் பக்கம்.) இக்கல்வெட்டினைக் கூர்ந்து நோக்குங்கால் இதன்கண் குறிக்கப்பெற்ற திருநற்கீர தேவரென்பார், பதினொராந் திருமுறை யாசிரியருள் ஒருவரென்பதும் இவ்வாசிரியர் திருவீங் கோய்மலை யெழுபது என்னும் பிரபந்தத்தைப் பாடி இத்திருத்தலத்தைப் போற்றினமையால் இவரது திருவுருவம் திருக்கோயிலில் எழுந்தருளச் செய்யப்பட்டு வழிபடப் பெறுவதாயிற்றென்பதும் நக்கீர தேவராகிய இவ்வாசிரியரைத் தேவார ஆசிரியர் மூவர்க்கும் பின்னாக இதன்கண் குறித்திருத்தலால் இத் திருநற்கீர தேவரென்பார் தேவார ஆசிரியர் மூவர்க்குங் காலத்தாற் பிற்பட்டவரென்பதும் இனிது புலனாதல் காணலாம். திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் சுந்தரர் ஆகிய மூவர் திருவுருவங்களையும் எழுந்தருளுவித்து வழிபாடு நிகழ்த்தும் முறை சிவபெருமானுக்குரிய எல்லாத் திருக்கோயில்களிலும் தவறாது போற்றப் பெற்றுவரும் பொது நிகழ்ச்சியாகும். திருவீங்கோய்மலை யெழுபது பாடிய திரு நற்கீர தேவரை அவ்வூர்த் திருக்கோயிலில் எழுந்தருளுவித்து நாள் வழிபாட்டிற்கு நிலமளித்த இச்செய்தி அவ்வூர்த் திருக்கோயிலுக்கே யுரிய சிறப்புடைய நிகழ்ச்சியாகும்.

நக்கீர தேவராகிய இவ்வாசிரியர் பிறந்த நாடு, ஊர், குலம், பெற்ற தாய் தந்தை இன்னார் என்பது முதலிய வாழ்க்கை வரலாற்றினைப் பற்றித் தெளிவாகத் தெரிந்து கொள்ளுதற்குரிய சான்றுகள் கிடைக்கவில்லை. நக்கீர தேவர் என இவர்க்கு

வழங்கும் பெயர் மதுரைக்கணக்காயனார் மகனார் நக்கீரனாராகிய பழைய சங்கப் புலவரது பெயரையொட்டி இவர்க்குப் பெற்றோராலிடப் பெற்று வழங்கியதெனத் தெரிகிறது. இது போலவே இப்பதினொராந் திருமுறையில் குறிக்கப்பெற்ற கல்லாடதேவர், கபிலதேவர், பரணதேவர் எனவரும் பெயர்களும் கடைச்சங்கப் புலவர்களாகிய கல்லாடர், கபிலர், பரணர் என்னும் பெருமக்களை நினைவு கூர்தற் பொருட்டு அவர்தம் பெற்றோர் களால் இடப்பெற்று வழங்குவனவென்றே கொள்ளத்தக்கன. இளமைப் பருவத்தே நக்கீரர், கல்லாடர், கபிலர், பரணர் எனச் சங்கப் புலவர் பெயர்களால் அழைக்கப்பெற்று வந்த இவர்கள், திருவருட் புலமையிற் சிறந்து இப்பதினொராந் திருமுறையிலுள்ள பிரபந்தங்களைப் பாடிய காலத்தில் தெய்வத்தன்மையை விளக்குதற்குரிய தேவர் என்னும் சிறப்பினையும் பெற்று நக்கீர தேவர், கல்லாடதேவர், கபிலதேவர், பரண தேவர் என உலக மக்களால் அழைக்கப் பெற்றார்களெனக் கொள்ளுதல் ஏற்புடையதாகும். தேவார ஆசிரியர் காலத்திற்குப்பின் தோன்றிய இப்பெருமக்கள் பண்டை நாளில் வாழ்ந்த சங்கப்புலவர் பெயர்களைத் தமக்குரியனவாகக் கொண்டு திகழ்தலை நோக்குங்கால் இவர்கள் வாழ்ந்த காலப்பகுதியில் தமிழ் மக்களிடையே சங்கப் புலவர்கள் செய்த தமிழ்த் தொண்டு பற்றிய மனவெழுச்சி தோன்றியதென்பதும் தம் பிள்ளைகளுக்குப் பண்டைத் தமிழ்ப் புலவர்களின் பெயரை இட்டு அழைக்கு முகமாக அப்புலவர் பெருமக்களது புலமைத்திறத்தில் தம்மக்களை ஈடுபடுத்தல் வேண்டுமென்னும் பெருவேட்கை அக்காலத் தமிழ் மக்களிடையே நிலவத் தொடங்கிய தென்பதும் நன்கு புலனாம். எனவே நக்கீர தேவராகிய இவ்வாசிரியர் நல்ல தமிழ்ப் பற்றுடைய குடும்பத்திற் பிறந்து வளர்ந்து தமிழ்ப் புலமையிற் சிறந்தனரெனக் கொள்ளுதல் மிகவும் பொருந்துவ தாகும். திருவீங்கோய்மலையிற் பொறிக்கப் பெற்றுள்ள கல்வெட்டில் நக்கீர தேவராகிய இவ்வாசிரியர் தேவார ஆசிரியர் மூவர்க்கும் பின்னே குறிக்கப்பெற்றிருத்தலையும் பதினொராந் திருமுறையிற் சேரமான் பெருமாளருளிய பிரபந்தங்களின் பின்னே இவருடைய பிரபந்தங்கள் முறைப்படுத்தமைக்கப் பெற்றிருத்தலையும் நோக்குமிடத்து இவ்வாசிரியர் வாழ்ந்த காலம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டினை யொட்டியதென்பது நன்கு உய்த்துணரப்படும்.

இவ்வாசிரியர் திருக்காளத்தி, திருவீங்கோய்மலை, திருவலஞ்சுழி ஆகிய திருத்தலங்களைப் போற்றிப் பிரபந்தங்கள் பாடியிருத்தலையும் இவர் பாடிய பிரபந்தங்களில் திருவாலவாய், திருமறைக்காடு, திருவண்ணாமலை ஆகிய திருத்தலங்கள்

குறிக்கப்பட்டிருத்தலையும் நோக்குங்கால் இவர் மேற்குறித்த திருத்தலங்களில் பல நாட்கள் தங்கியிருந்து சிவபெருமானை வழிபட்டவரென்பது நன்கு பெறப்படும். இவர் பாடிய திருவெழு கூற்றிருக்கையென்னும் பிரபந்தத்தின் இறுதியிலே,

**பணிந்தேனின் பாதம் பரமேட்டி பால்நீ**
**றணிந்தால வாயில் அமர்ந்தாய் - தணிந்தென்மேல்**
**மெய்யெரிவு தீரப் பணித்தருளு வேதியனே**
**ஐயுறவொன் றின்றி யமர்ந்து.**

என்ற செய்யுள் காணப்படுகின்றது. இதன்கண் 'மெய்யெரிவு' எனக் குறிக்கப்படுவது வெப்புநோய் போல்வதோர் உடற்பிணி யாகும். இந்நோயால் வருந்திய நக்கீரதேவர் திருவாலவா யிறைவனைப் பணிந்து திருவெழுகூற்றிருக்கை யென்னும் பிரபந்தத்தைப் பாடி நோய்நீங்கி யின்புற்றார் எனக்கருதுதல் பொருத்தமாகும். 'கொங்குதேர் வாழ்க்கை' யென்ற பாடலுக்கு நக்கீரர் குற்றங் கூறியது கண்டு சினமுற்ற இறைவர் நெற்றிக்கண்ணைக் காட்ட அவர்தம் கண்ணழலால் நக்கீரர்க் குண்டாகிய அழற்சியே இப்பாடலில் மெய்யெரிவு எனக் குறிக்கப்பட்டதெனக் கருதுவர் சிலர். பிற்காலத்தாராற் புனைந்துரைக்கப்பட்ட இக்கதை நக்கீர தேவரது மனநிலைக்கும் இறைவனது அருளியல்புக்கும் முற்றிலும் மாறுபட்டிருத்தலால் இக்கருத்தினை உண்மையெனக் கொள்ளுதற்கில்லை.

இனி, தருமியின் பொருட்டு இறைவன் பாடித்தந்த கொங்குதேர் வாழ்க்கையென்ற தமிழ்ச்செய்யுளை நக்கீரர் பழித்தனரென்தற்கு,

**'கூடலாலவாய்க் குழகனாவ**
**தறியாதருந்தமிழ் பழித்தன னடியேன்'**

என நக்கீர தேவர் பாடிய பெருந்தேவபாணியை அகச் சான்றாகக் காட்டுதலுங்கூடும். இதுவே நக்கீர தேவரது கருத்தென்பாருளராயின், இதனையடுத்து

**'ஈண்டிய சிறப்பி னிணையடிக்கீழ் நின்று**
**வேண்டுமது வினிவேண்டுவன் விரைந்தே'**

என இறைவனை வேண்டிப் போற்றும் பகுதிக்கு நக்கீரர் அருந்தமிழ் பழித்தலையே மீளவும் வேண்டினாரென உரை கூற வேண்டிவரும். 'திருவால வாயில் எழுந்தருளிய இறைவனாகிய நீ சொல்லின் எல்லையைக் கடந்து விளங்குந் தொன்மையுடையாய் என்பதனையுணரப் பெறாது அடியேன் நின்பெருமைகளை அருமையுடைய தமிழ்ப் பாடல்களால் போற்றித் துதித்தேன்.

எல்லாப் பொருளும் ஒரு சேரத் தங்குதற்கு ஆதாரமாகவுள்ள நின் திருவடிக் கீழ் நின்று நின்னருளால் வேண்டத் தக்கதனை இனி விரைந்து வேண்டிப் பெறும் அவாவுடையேன்' என நக்கீரதேவர் திருவாலவாயிறைவனைப் பணிந்து வேண்டுவதாக அமைந்ததே,

**சொலற்கருந் தொன்மைத் தொல்லோய் நீயே அதனால்**
**கூடலால் வாய்க் குழகனாவ**
**தறியா தருந்தமிழ் பழிச்சின னடியேன்**
**ஈண்டிய சிறப்பின் இணையடிக் கீழ்நின்று**
**வேண்டுமது வினி வேண்டுவன் விரைந்தே.**

எனவரும் பெருந்தேவ பாணியாகும். இதன்கண் அருந்தமிழ் பழிச்சினன் என்ற தொடரையே பிற்காலத்தார் அருந்தமிழ் பழித்தனன் எனத் தவறாகப் பாடங் கொண்டு மேற்குறித்த புனைந்துரைக் கதைக்கு இடஞ் செய்து தந்தனரெனக் கருதவேண்டியுளது.

நக்கீரதேவர் பாடிய பிரபந்தங்களை நுணுகி நோக்குங்கால் அவர் சங்க காலத்தில் வாழ்ந்தவரல்லரென்பதும், தேவார ஆசிரியர் மூவர்க்குங் காலத்தாற் பிற்பட்டவரென்பதும் இறைவன் தருமிக்குப் பொற்கிழியளித்த திருவிளையாடலுக்கும் கைலை பாதி காளத்தி பாதி யந்தாதி முதலிய பிரபந்தங்களைப் பாடிய நக்கீர தேவரது வரலாற்றுக்கும் எத்தகைய தொடர்புமில்லை யென்பதும் நன்குபுலனாம். இனி நக்கீரதேவர் பாடிய பிரபந்தங்களை முறையே நோக்குவோமாக.

## 1. கைலைபாதி காளத்திபாதி யந்தாதி

எல்லாம்வல்ல சிவபெருமான் வடதிசையிலுள்ள திருக்கயிலாய மலையில் அம்மையப்பனாக வீற்றிருந்து எவ்வுயிர்க்கும் அருள்சுரத்தல் போன்று, தென்றிசையிலுள்ள திருக்காளத்தி மலையிலும் மாதொருபாகனாக வீற்றிருந்து மன்னுயிர்க்கு அருள்சுரக்கின்றான் என அப்பெருமானது அருமையில் எளிய அருளின் நீர்மையைப் புலப்படுத்துங் கருத்துடன் நக்கீரதேவர் அருளிய செந்தமிழ்ப் பனுவல் கயிலைபாதி காளத்திபாதியந்தாதியாகும். இந்நூல் அந்தாதித் தொடையமைய நூறு வெண்பாக்களால் இயன்றுளது. இதன்கண் ஒற்றைப் படையெண்களிலமைந்த வெண்பாக்கள் ஐம்பதும் திருக்கயிலையைப் போற்றுவனவாகவும், இரட்டைப்படை யெண்களிலமைந்த வெண்பாக்கள் ஐம்பதும் திருக்காளத்தியைப் போற்றுவனவாகவும், அடுத்தடுத்து அமைந்திருத்தலால் இது கயிலைபாதி காளத்திபாதி யந்தாதி யெனப் பெயரெய்துவ தாயிற்று.

திருக்காளத்தி யிறைவரைப் பரவிப் போற்றிய திருநாவுக்கரசர், தென்திசையிலுள்ள அத்திருக்காளத்தி மலையில் வீற்றிருந்தருளும் இறைவனைப் பணிந்த குறிப்பினால் வடதிசையிலுள்ள திருக்கயிலையில் இறைவன் வீற்றிருந்தருளும் பெருந் திருக்கோலத்தையும் கண்டு வழிபட விரும்பி வடதிசை நோக்கிப் புறப்பட்டருளினார் என்பது வரலாறு.

**சேணிலவு திருமலையில் திருப்பணியாயின செய்து**
**தாணுவினை அம்மலைமேல் தாள்பணிந்த குறிப்பினால்**
**பேணுதிருக் கயிலைமலை வீற்றிருந்த பெருங் கோலங்**
**காணுமது காதலித்தார் கலைவாய்மைக் காவலனார்.**

எனவருஞ் சேக்கிழார் வாய்மொழியால் இச்செய்தி புலனாதல் காணலாம். திருக்காளத்தி மலையை வழிபட்ட திருநாவுக்கரசர் திருவுள்ளத்தே தென்திசையிலுள்ள அம்மலையைப் போன்று வடதிசையில் திகழும் திருக்கயிலை மலை நினைவுக்கு வந்ததென்னும் இச்செய்தியினைக் கூர்ந்து நோக்குமிடத்து, வடதிசையில் திகழும் திருக்கயிலை மலையை யொத்த பெருஞ்சிறப்பு தென்திசையில் விளங்கும் திருக்காளத்தி மலைக்கு உண்டென்பது திருநாவுக்கரசர் திருவுள்ளக் குறிப்பாதல் நன்கு பெறப்படும். இக்குறிப்பினை,

**மனத்தகத்தான் தலைமேலான் வாக்கினுள்ளான்**
**வாயாரத் தன்னடியே பாடுந் தொண்டர்**
**இனத்தகத்தான் இமையவர் தஞ் சிரத்தின்மேலான்**
**ஏழண்டத் தப்பாலான் இப்பாற் செம்பொற்**
**புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதினுள்ளான்**
**பொருப்பிடையான் நெருப்பிடையான் காற்றினுள்ளான்**
**கனத்தகத்தான் கயிலாயத் துச்சியுள்ளான்**
**காளத்தியா னவனென் கண்ணுளானே.**

எனவருந் திருத்தாண்டகத்தில் திருநாவுக்கரசர் தெளிவாகப் புலப்படுத்தருளினமை காணலாம். இவ்வாறு ஒரு திருப்பதியில் தங்கி இறைவனை இறைஞ்சுங்கால் அதனையொத்த ஏனைத்திருப்பதியும் நினைவுக்கு வர அவ்விரண்டினையும் சேர்த்துப் பாடிப்போற்றும் வழக்க முண்டென்பது திருப்புன் கூரும் திருநீடூரும் ஆகிய இருதலங்களையும் பற்றித் திருநாவுக்கரசர் பாடிய திருத்தாண்டகத் தாலும், திருப்புகலியும் திருவீழிமிழலையும், திருமருகலும் திருச்செங்காட்டங்குடியும், திருநள்ளாறும் திருவாலவாயும் என இரண்டிரண்டு தலங்களைப் போற்றித் திருஞானசம்பந்தப் பிள்ளையார் பாடிய திருப்பதிகங் களாலும் இனிது புலனாகின்றது. இவ்வழக்கத்தை யொட்டியே கயிலை பாதி காளத்திபாதியந்தாதி யென்னும் இப்பிரபந்தமும்

தோன்றியிருத்தல் வேண்டும். தென்னாட்டிலுள்ள திருக்காளத்தி மலையினை அடைந்து அங்கெழுந்தருளியுள்ள அம்மையப்பரை வணங்கிப்போற்றிய நக்கீரதேவரது உள்ளத்தில், திருநாவுக்கரசடிகளார் திருவுள்ளத்திற் தோன்றியவாறு வடதிசையிலுள்ள கயிலைமலையைப் பற்றிய எண்ணமுண்டாக, அவ்வெண்ணத்தால் . திருக்கயிலையைப் பற்றி யொரு பகுதியும் அம்மலையை நினைக்கத் தூண்டிய திருக்காளத்தியைப் பற்றி மற்றொரு பகுதியுமாக கயிலைபாதி காளத்திபாதியந்தாதி யென்னும் இப்பனுவலைப் பாடிப் போற்றினாரெனக் கருதுதல் பொருந்தும்.

இறைவனது திருவருளில் திறத்தை நினைந்துருகிய நக்கீர தேவர், இறைவனுடைய அருட்கோலங்களையும் திருவருட் செயல்களையும் அவனை வழிபடுவதன் இன்றியமையாமை யினையும் விரித்துணர்த்தும் நிலையிற் பாடிய பாடல்களும், தம் நெஞ்சத்திற்கு அறிவுறுத்தும் நிலையிற்பாடிய பாடல்களும், இறைவனை நோக்கி உரையாடும் நிலையிற் பாடிய பாடல்களும், இறைவனைக் காதலித்த தலைவியின் ஆற்றாமையினையும் பேரன்பின் திறத்தினையும் புலப்படுத்தும் நிலையிற் பாடிய பாடல்களும் இதன்கண் அமைந்துள்ளன. தூய்மையுடைய சொற்களையே திரியாகவும் அவற்றாலுணர்த்தக் கருதிய நற்பொருளையே நெய்யாகவும் தீயசொற் பயிலாத தூய்மையுடைய நல்ல நாவினையே அகலாகவுங் கொண்டு நக்கீர தேவர் வெண்பா அந்தாதியாகிய இச் சுடர்விளக்கினை மாதொரு பாகனாகிய இறைவன் திருமுன்னே ஒளிபெருக ஏற்றி வழிபட்டார் என்பது,

**சொல்லும் பொருளுமே தூத்திரியு நெய்யுமா**
**நல்லிடிஞ்சில் என்னுடைய நாவாகச் - சொல்லரிய**
**வெண்பா விளக்கா வியன்கயிலை மேலிருந்த**
**பெண்பாகர்க் கேற்றினேன் பெற்று.**

எனவரும் அவரது வாய்மொழியால் இனிது விளங்கும்.

காளத்தியிறைவனைக் கண்டு வணங்கவல்ல ஆற்றலுடைய தாயின் நாம் பெற்ற இம்மனிதப் பிறவி மிகவும் இனிமையுடையதே யென்பதனை,

**இனிதே பிறவி இனமரங்க ளேறிக்**
**கனிதேர் கடுவன்கள் தம்மின் - முனிவாய்ப்**
**பிணங்கிவருந் தண்சாரற் காளத்தி பேணி**
**வணங்கவல்ல ராயின் மகிழ்ந்து.**

எனவரும் பாடலில் நக்கீரர் குறிப்பிட்டுள்ளார். காளத்தி மலையிற் கனிகளைப் பறிக்கச் செல்லும் குரங்குகள் தம்மிற் சினந்து பிணங்கி

மாறுபடுதல் போன்று உலகியலின்பத்தைக் கருதி ஒருவரோடொருவர் பகைகொண்டு திரியும் நிலையினராகிய மக்கள், தம்முட் பகைமை நீங்கி எவ்வுயிர்க்கும் இன்பமளிக்கும் இறைவன் எழுந்தருளிய திருக்காளத்தியை வணங்க வல்லராயின் அவர் பெற்ற மனிதப் பிறவி மிகவும் இனிமையுடையதே யென்பது இத்திருப்பாட்டின் கருத்தாகும். இது 'மனித்தப் பிறவியும் வேண்டுவதே யிந்த மாநிலத்தே' எனத் திருநாவுக்கரசர் கூறிய வாய்மொழிப் பொருளைத் தன்பாற் கொண்டிருத்தல் அறிந்து மகிழத்தக்கதாகும்.

அறிவு நூல்களைக் கற்ற பெரியோர்களால் ஏத்தி வழிபடப்பெறும் காளத்தியிறைவனையடைந்து அடித்தொண்டு செய்யும் பேறுபெற்றேன். இவ்வுலகத்திற் பெறுதற்கரிய மக்கட் பிறப்பினாலடைதற்குரிய பெரும் பயன் இதுவன்றோ என நக்கீர தேவர் வியந்து கூறுவதாக அமைந்தது,

**பெற்ற பயனிதுவே யன்றே பிறந்தியான்**
**கற்றவர்க ளேத்துஞ்சீர்க் காளத்திக் - கொற்றவர்க்குத்**
**தோளாகத் தாடரவம் சூழ்ந்தணிந்த அம்மானுக்**
**காளாகப் பெற்றேன் அடைந்து.**

என்ற பாடலாகும். இதன்கண் 'கற்றவர்களேத்துஞ் சீர்க் காளத்திக் கொற்றவர்' என்றது, 'கற்றல்கேட்டலுடையார் பெரியார் கழல் கையால் தொழுதேத்தப், பெற்ற மூர்ந்த .... பெம்மான்' எனத் திருஞான சம்பந்தர் கூறிய பொருளுரையை நினைவுபடுத்தல் காணலாம்.

இறைவன் தன்னை அன்பினால் நினைந்து போற்றும் மெய்யடியார்க்கு அருள் செய்தல் கருதி அவரவர் விரும்பிப் போற்றிய பலவேறு திருவுருவங்களைக் கொண்டு தோன்றினாலும் யாவராலும் உணர்தற்கரிய இறைமைத் தன்மையுடைய முதல்வன் ஒருவனே யென்பார்,

**'உருவு பலகொண் டுணர்வரிதாய் நிற்கும் ஒருவன்'** என்றார் நக்கீரர். 'தானொருவனுமே பலவாகி நின்றாவா' எனவரும் திருவாசகத் தொடர் ஈண்டு நினைவு கூரத் தக்கதாகும்.

அமிழ்தத்தைப் பெறவிரும்பித் தேவரும் அசுரரும் கூடிப் பாற்கடலைக் கடைந்தனர். அந்நிலையிற் கடலிடையே கருமலையொன்று வெளிப்படுவது போன்று ஆலகால நஞ்சு கிளர்ந்தெழுந்தது. நஞ்சினைக் கண்டு அஞ்சிய அவர்கள் தப்பிச் செல்லுதற்குரிய வழியறியாது நடுக்கமுற்றனர். அவர்தம் துன்பத்தைக் கண்டு உளமிரங்கிய சிவபெருமான் அந்நஞ்சினை யுண்டு மிடற்றிலடக்கினான். அப்பெருமானது பேரிரக்கத்தாலும் அருட்செயலாலும் இவ்வுலகம் அழியாது நிலைபெற்று வருவதாயிற்று. இச்செய்தினை,

**மலைவரும்போல் வானவரும் தானவரும் எல்லாம்**
**அலைகடல்வாய் நஞ்செழல்கண் டஞ்சி - நிலைதளரக்**
**கண்டமையால் தண்சாரற் காளத்தி யாள்வார்நஞ்**
**சுண்டமையால் உண்டிவ் வுலகு.**

எனவரும் பாடலில் நக்கீரதேவர் சுவைபெற விரித்துக் கூறியுள்ளார். இச்செய்யுள்,

**'பண்புடையார்ப் பட்டுண் டுலகம், அதுவின்றேல்**
**மண்புக்கு மாய்வது மன்'**

என்ற திருக்குறளையும் இதற்கு விரிவுரையாக அமைந்த 'உண்டாலம்ம வில்வுலகம் ...தமக்கென முயலா நோன்றாட் பிறர்க்கென முயலுநர் உண்மையானே' என்ற புறநானூற்றுச் செய்யுளையும் நினைவுபடுத்துவதாகும்.

இறைவன் சொல்லும் பொருளும் போலவும் உடலும் உயிரும் போலவும் எங்கும் நீக்கமற நிறைந்து விளங்குகின்றா னென்பதும் எனினும் மக்கள் தம் ஐம்புலன்களாற்பற்றி யுணர்தற்குரிய நிலையின்றி ஒன்றினுந் தோய்வின்றிப் புலனுணர்வுக்கு அப்பாற் பட்டுள்ளானென்பதும் ஆகிய உண்மையினை,

**'உரையும் பொருளும் உடலும் உயிரும்**
**விரையும் மலரும்போல் விம்மிப் - புரையின்றிச்**
**சென்றவா றோங்குந் திருக்கயிலை யெம்பெருமான்**
**நின்றவா றெங்கும் நிறைந்து**

எனவும்.

**'நிறைந்தெங்கும் நீயேயாய் நின்றாலும் ஒன்றின்**
**மறைந்தைம் புலன்காண வாராய்'**

எனவும் வருந் தொடர்களால் நக்கீரதேவர் விரித்துக் கூறியுள்ளார். ஒருபற்றுமற்று அருவாய்த் தானே நிற்குந் தத்துவங்கடந்த பொருளாகிய இறைவனை,

**'உற்ற ஆக்கையின் உறுபொருள், நறுமலரெழுதரு நாற்றம் போல்**
**பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்'**

எனத் திருவாதவூரடிகள் உணர்ந்து போற்றுங் குறிப்பு இவண் ஒப்புநோக்கி யுணரத்தக்கதாகும்.

இறைவனது பொருள்சேர் புகழை நாவாரப் பேசாதிருப்பார் உலகத்தின் திலகமென விளங்கும் செல்வமுஞ் சிறப்புமுடையா ராயினும் அவரது பிறப்பு மிகவும் இழிவுடையதே. இறைவனுக்கு

ஆட்பட்ட மெய்யடியார்களைப் போற்றி வழிபடும் இயல்பிலாதார் குடிப்பிறப்பு கல்வி செல்வம் முதலிய பிறநலங்களாற் சிறப்புற்று விளங்கினும் அன்னோர் பெரிதும் இழிவுடையவரே. இறைவனைப் போற்றாது வீணே பொழுது போக்குவாராகிய அவர்களும் மனிதப் பிறவியாலுளதாம் பயனையடைந்து சிறப்பெய்தியவர் ஆவாரோ? இறைவனைக் கைதொழுவார்க்கு மீண்டும் பிறவியில்லை. வஞ்சனையைச் செய்து ஐம்புல வேடர் பணித்த தீய வழிகளிற் சென்று இவ்வுடம்பினை நிலையுடைதென எண்ணிக் களிப்புமிக்கு ஆடித்திரிதல் அறிவுடைமை யாகாது. இவ்வுடம்பு நிலையுடைய தன்று. ஆதலால் தூயோனாகிய இறைவனது பெரும்புகழைப் பயின்றேத்தி வழிபடுதலே அறிவு நூல்களைக் கற்றதனாலாய நற்பயனாகும். வானோர் தம் சிந்தையாலும் அறிவருஞ் செல்வனாகிய இறைவன், தன்னடியார்களுக்கு முன்னின்று அருள்புரிதலால் அருமையிலெளிய அழகனாகத் திகழ்கின்றான். தன்னொப்பாரில்லாத அவ்வொருவனே பிரமன், திருமால், அமரர்கோன் முதலிய பலராய்க் கலந்து நின்று இவ்வுலகத்தைப் படைத்துக் காத்து ஆண்டு எல்லாம் ஒடுங்குதற்கு உரிய பேரூழிக் காலத்தே தானொருவனுமேயாகி மீளவும் இவ்வுலகத்தைத் தோற்றுவித்து இங்ஙனம் பலவேறு திருமேனிகளைத் தாங்கி அருள்புரிகின்றான். அவனைக் கைதொழுவோர்க்கு மீண்டும் பிறவியில்லை. அப்பெருமானைக் கைதொழாதார் பல பிறவிகளிலும் பிறந்துழலுவதன்றி அமைதியான பேரின்ப வாழ்வினை அடைதல் இல்லை. எல்லாப் பொருட்கும் சார்பாகிய செம்பொருளை யுணர்ந்து சார்ந்த மெய்யடியார்களை எத்தகைய இடர்களிலும் சிக்குறாமற் காப்பனவும் தம்மையடைந்து அன்பு செய்தார்க்கு வீடுபேறாகிய பேரின்பத்தை வழங்குவனவும் தம் உள்ளத்துள்ளே அன்புமீதூர நினைந்து போற்றுவார்முன் தோன்றித் துணைபுரிவனவும் காளத்தியிறைவனுடைய திருவடிகளேயாகும். காலமறிந்து உயிரை உடம்பினின்றும் பிரிக்குந்தொழிலை மேற்கொண்ட கூற்றுவனார் ஊழால் நமக்கு வகுக்கப்பட்டுள்ள வாழ்நாளைக் கணக்குப் பார்த்துக் கொண்டிருந்து அக்காலம் நேர்பட்ட அளவில் நம்மை வணக்கித் துன்பவலையுட் படுத்தற்கு எதிர்பார்த்து நிற்கின்றார். அவர் வருதற்கு முன்னமே இறைவனைத் தொழுது உய்தல் வேண்டும். உயிர் உடம்பைவிட்டு நீங்கிய அளவில் ஊரார் அவ்வுடம்பினைச் சுடுகாட்டிற்கு எடுத்துச் சென்று அடக்கஞ் செய்ய அவ்வுடம்பு தீயில் வேதலைக் கண்டிருந்தும் இறைவனையேத்துதற்கு மனம் ஒருப்படவில்லையே? இறைவனது திருப்பெயராகிய திருவைந் தெழுத்து வாயாற் சொல்லுமளவில் வானோரமிழ்தத்தையொத்து அண்ணிப்பதாகிக் கொடிய பிறவி நோயைத் தீர்த்து

இன்பஞ்செய்வதாகும். அருமறைப் பொருளாய்ச் சிறந்து விளங்குவது திருவைந்தெழுத்தே. இதனைப் பயிலுதலால் யாவராலும் காணுதற்கரிய இறைவனை அடைந்தின்புறுதற்கரிய பெருநெறி மிகவும் அணிமையதாமாதலின் திருவைந்தெழுத்தினைச் சோராமல் எப்பொழுதும் சொல்லுதல் வேண்டும். பெறுதற்கரிய மக்கட்பிறப்பினைப் பெற்ற மாந்தர்பலர் கொன்னே காலத்தைக் கழிக்கின்றார்கள். அந்தோ இவர்கள் பிறருடைய மாயத்துட்பட்டு மயங்கினர் போலும். காளத்தி இறைவர்க்கு அன்பினால் நெருங்கித் தொண்டு புரிந்த கண்ணப்ப நாயனாரது பேரன்பின் திறத்தை இன்னோர் கேட்டு உய்தியடைய மாட்டார்களா? அருச்சுனன் தன் உயிர்த்தோழனாகிய கண்ணபிரானோடுஞ் சென்று கயிலையை யடைந்து சிவபெருமானைப் பணிந்து அப்பெருமான்பால் பாசுபதப் படையைப் பெற்றுப் பகைவரையழித்து வெற்றி பெற்ற திறத்தைப் பாரதக் கதையிலே கேட்டுத் தெரிந்துகொள்ளுங்கள். இறைவன் தன்னை மெய்ம்மையாக வழிபடுவோர் யாவராயினும் அவருடைய துன்பங்களை இம்மையே தீர்த்து அருள் புரிவன். சிவபெருமானே யாவர்க்கும் முழுமுதற் கடவுள். இவர் கடவுள் அவர் கடவுள் என்று சொல்லி இருநிலைப்பட்டு ஐயுறாமல் நீங்கள் விரும்பியதொரு தெய்வத்தை உள்ளத்தால் நினைந்து போற்றுவீராயின், காளத்தி இறைவராகிய சிவபெருமானே அத்தெய்வமாக வந்து உங்கட்கு அருள் புரிவார். கழிந்த நாள் போகட்டும்; இனி மேல் எஞ்சியுள்ள நாட்களிலேனும் கயிலைப் பெருமானை நண்ணி வழிபடுதல் நமக்குச் சிறந்த பேரின்பத்தினை நல்குவதாகும். வாழ்நாள் மேலும் உள்ளனவென்று கருதி நாம் உலக நுகர்ச்சியிலே அழுந்திக் கிடத்தல் தவமாகாது. நிலைபேறில்லாத இப்பொய்வாழ்வினைப் பொருளெனப் பேணாது கயிலைப் பெருமானை இடைவிடாது நினைந்து வழிபடுதல் அறிவின் பயனாகும். ஐம்புலன்களையும் வென்று காம முதலிய குற்றங்களை வேரறுத்து இறைவனது திருவருள் ஒன்றையே இடைவிடாது நினைத்திரேல் கயிலைப் பெருமானுடைய கழலடைந்து இன்புறலாம் என நக்கீர தேவர் உலக மக்களை நோக்கியும் தம் உள்ளத்தை நோக்கியும் கூறும் அறிவுரைகள் திருக்குறள், தேவாரத் திருப்பதிகங்கள், திருவாசகம் முதலிய பண்டைப் பனுவல்களின் தெளி பொருளாகத் திகழ்தல் உணர்ந்து மகிழத்தக்கதாகும்.

கயிலைப் பெருமானாகிய இறைவனே, நின்னைத் தம்முடைய ஆன்ம போதத்தாற் காண முயன்றாரது ஆராய்ச்சிக்கு நெடுந் தொலைவிலும் நின்னருளே கண்ணாகக்கொண்டு காணும் தகுதிவாய்ந்த மெய்யடியார்களுக்கு அண்மையிலும்

*விளங்குகின்றாய் என நின்னை உணர்ந்தோர் கூறுதலால், தன்னறிவொன்றே கருவியாகக் கொண்டு நின்னை ஆராய்ந்து காண முற்பட்டாரொருவர்க்கு நீ நின்ற நிலையினை அறிதல் கூடுமா? நின்னை ஆதாரமாகக்கொண்டு நின்னிடத்தினின்றும் வெளிப்பட்டுத் தோன்றிய ஏழுலகங்களும் மீண்டும் நின்பால் ஒடுங்குதலை இயல்பாகவுடையன என்னும் இவ்வுண்மையினை ஆராய்ந்து நோக்குங்கால் நினது இறைமைத் தண்மையை உள்ளவா றுணர்வார் நின்னையன்றி வேறு யாருளர்? என இறைவனை நோக்கி வினவுவதாக அமைந்தன,*

**கருத்துக்குச் சேயையாய்க் காண்டக்கோர் காண**
**இருத்தி திருக்கயிலை யென்றால் - ஒருத்தர்**
**அறிவா னுறுவார்க் கறியுமா றுண்டோ**
**நெறிவார் சடையாய் நிலை. (கயிலைபாதி 15)**

**நின்னியல்பை யாரே அறிவார் நினையுங்கால்**
**மன்னியசீர்க் காளத்தி மன்னவனே - நின்னில்**
**வெளிப்படுவ தேழுலகும் மீண்டே யொருகால்**
**ஒளிப்பதுவு மானால் உரை. (கயிலைபாதி - 46)**

*எனவரும் பாடல்களாகும். இப்பாடல்களில்,*

**'நின்னளந் தறிதல் மன்னுயிர்க் கருமையின்**
**நின்னடி யுள்ளி வந்தனன்**

*எனவரும் திருமுருகாற்றுப்படையின் கருத்தும்,*

**'காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே'**

*எனவரும் திருநாவுக்கரசர் பொருளுரையும்,*

**'அவனருளாலே யவன்றாள் வணங்கி'**

*எனவரும் திருவாதவூரடிகள் அருள்மொழியும் இடம்பெற் றிருத்தல் காணலாம்.*

*'என்னுடைய நல்வாழ்விற்குரிய முதற்பொருளாக விளங்கும் பெருமானே! நாயினுங் கடையேனாகிய அடியேன் எந்தக் காலத்தில் எந்தப் பிறவியை யடைந்தாலும் யாண்டும் நின்னை மறவாது கண்டு ஏத்துதலே எனது பெருவிருப்பமாகும்' என இறைவனை வேண்டுவதாக அமைந்தது,*

**வைத்த இருநிதியே என்னுடைய வாழ்முதலே**
**நித்திலமே காளத்தி நீள்சுடரே - மொய்த்தொளிசேர்**
**அக்காலத் தாசை அடிநாயேன் காணுங்கால்**
**எக்காலத் தெப்பிறவி யான்.**

*என்ற பாடலாகும். இது,*

**'புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடி யென்மனத்தே**
**வழுவாதிருக்க வரந்தரல் வேண்டும்'**

எனவரும் திருநாவுக்கரசர் வாய்மொழியையும்,

**'நின்திருவடிக்காம் பவமே யருளுகண்டாய்'**

எனவருந் திருவாசகத் தொடரையும் நினைவுபடுத்துவதாகும்.

திருக்காளத்தியி லெழுந்தருளிய சிவபெருமானைக் காதலித்த தலைவியொருத்தி இறைவன் தெரு வழியே திருவுலாப் போகும் நிலையில் அப்பெருமானைத் தாங்கிச் செல்லும் எருதினை நோக்கிக் கூறுவதாக அமைந்தது.

**செய்ய சடைமுடியென் செல்வனையான் கண்டெனது**
**கையறவும் உண்மெலிவும் யான்காட்டப் - பையவே**
**காரேறு பூஞ்சோலைக் காளத்தி யாள்வார்தம்**
**போரேறே யித்தெருவே போது.**

என்ற பாடலாகும். 'காளத்தியிறைவரது ஊர்தியாகிய போர்வலி வாய்ந்த ஆனேறே, சிவந்தசடைமுடியுடைய எம்பெருமானை யான் நேரே கண்டு எனது செயலற்ற தன்மையையும் உள்ளத்தின் மெலிவையும் தெளிய அறிவிக்கும் நிலையில் நீ இத்தெருவழியே பையச் செல்வாயாக' என்பது இதன் பொருள். பாண்டியன் உலாவருங்கால் அவன் ஊர்ந்து வரும் ஊர்தியாகிய பெண்யானையை நோக்கி 'எம் பலகணிக்கு அருகே செல்வாயாக' எனத் தலைவியொருத்தி வேண்டுவதாக அமைந்தது,

**துடியடித் தோற்செவித் தூங்குகைந் நால்வாய்ப்**
**பிடியேயான் நின்னை யிரப்பல் - கடிகமழ்தார்ச்**
**சேலேக வண்ணனொடு சேரி புகுதலுமென்**
**சாலேகஞ் சார நட.**

என்ற முத்தொள்ளாயிரச் செய்யுளாகும். இவ்விரு செய்யுட்களும் பொருளால் ஒத்துநிற்றல் அறிந்து இன்புறத்தக்கதாகும்.

இறைவனைக் காதலித்த தலைவி கிளி குயில் என்பவற்றை நோக்கி இறைவனது திருநாமத்தைக் கூறி அழைக்கும்படி வேண்டும் பகுதி திருவாசகத்திலுள்ள குயிற்பத்து திருத்தசாங்கம் முதலிய பகுதிகளை நினைவுபடுத்துவதாகும். 'தூய வெள்ளை நிறம் வாய்ந்த இளங்குருகே, நீ ஒருபால் கூசித் தங்கியிருக்கின்றாய். கயிலைப் பெருமானது திறம் நினைந்து வருந்தும் எம்மைப்போல் நீயும் அப்பெருமானைக் காமுற்றனையோ" எனக்குருகை நோக்கியும், 'கருங்கடலே, உலக வுயிர்களெல்லாம் கண்ணுறங்கும் இருள் நிறைந்த நள்ளிரவிலும் நீ துயிலாது அலமருகின்றாய். நீயும் எம்மைப் போல் காளத்தியிறைவனைக் காமுற்றனையோ' எனக்

கடலை நோக்கியும் தலைவி கூறுவதாக அமைந்த பாடல்களும், மேகத்தை நோக்கியும் இளம்பிறையை நோக்கியும் இறைவன்பால் தனது ஆற்றாமையைத் தெரிவிக்கும்படி தலைவி குறையிரந்து வேண்டுவதாக அமைந்த பாடல்களும் படிப்போருள்ளத்தை உருக்குவனவாகும். கயிலைபாதி காளத்திபாதி யந்தாதியாகிய இப்பனுவலை இடைவிடாது பயில்வோர் இறைவனது திருவருள் நலத்தினை உள்ளவாறு உணர்ந்து இன்புறுவரென்பது திண்ணம்.

## 2. திருவீங்கோய்மலையெழுபது

திருவீங்கோய்மலையிற் கோயில் கொண்டருளிய சிவபெருமானைப் போற்றிப் பரவிய எழுபது வெண்பாக்களை யுடையதோர் பிரபந்தமாதலின் இது திருஈங்கோய்மலை யெழுபது எனப் பெயர் பெறுவதாயிற்று. சங்கத்துச் சான்றோரால் தொகுக்கப்பெற்ற பண்டைத் தொகை நூல்களின் பாடற்றொகையினை அடியொற்றிப் பிற்காலத்துப் பல்வேறு பிரபந்தங்கள் தோன்றி வழங்குவனவாயின. முன்னையோர் அன்பினைந்திணை பற்றிய அகவற்பாக்களை அடிவரையறை கருதி நெடுந்தொகை நானூறு, குறுந்தொகை நானூறு, நற்றிணை நானூறு என நானூறு நானூறு பாக்களாகத் தொகுத்த முறையினை உளங்கொண்ட பிற்காலப் புலவர்கள், அகனைந் திணைபற்றித் தாம் பாடக்கருதிய அகப்பொருட் கோவையினை நானூறு துறைகளமைய இயற்றுவாராயினர். 'நூற்றைம்பது கலி' யென வழங்கும் கலித்தொகையைப் பாடற்றொகையினை அடியொற்றி அத்தொகையமையத் திணைமாலைநூற்றைம்பது என்னும் அகத்திணை நூல் இயற்றப்பெறுவதாயிற்று. 'எழுபது பரிபாடல்' எனக் களவியலுரையாசிரியராற் பாராட்டப்பெறும் பரிபாடலின் பாடற்றொகையின் யுளத்துட் கொண்ட 'ஐந்திணையெழுபது' என்னும் அகத்திணைநூல் பாடப் பெற்றிருத்தல் வேண்டும். தொன்றுதொட்டு வழங்கிவரும் இத்தொகைநிலையைப் பின்பற்றியே 'திருஈங்கோய்மலை யெழுபது' என்னும் இப்பிரபந்தத்தினை நக்கீர தேவர் பாடியிருத்தல் வேண்டுமெனக் கருதுதல் பொருந்தும்.

ஈங்கோய் மலையைப் போற்றிய எழுபது வெண்பாக்களாலாகிய, இந்நூலில் 48 - ஆம் பாடலின் இரண்டாவது அடி முதல் 62 - ஆம் பாடலின் முதலடி முடிய வுள்ள பகுதி சிதைந்து மறைந்தமையால் இப்பொழுது சிதையா நிலையிற் கிடைத்துள்ளவை ஐம்பத்தைந்து வெண்பாக்களே யாகும். இப்பாடல்கள் யாவும் ஈங்கோய்மலையின் இயற்கை வளத்தையும் அங்குக் கோயில் கொண்டருளிய முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானது திருவருட்டிறத்தையும் சுவை நலம் பெருக இனிது சிறப்பித் துரைப்பனவாகவுள்ளன.

திருவீங்கோய்மலை குறிஞ்சிநிலமாதலின் அங்கு வாழும் மக்கள் குறவர் குறத்தியரெனக் குறிக்கப் பெறுவர். மலைநிலத்துக்கு உரியனவாகிய யானை, புலி, கேழல் (பன்றி), ஆளி, அரி (சிங்கம்), மான், மரை, மயில் முதலியன ஈங்கோய் மலையிற் பொருந்தி வாழுமியல்பினை நக்கீரதேவர் இப்பனுவலிற் பல பாடல்களில் விரித்துக்கூறியுள்ளார். 'பூமயிலிதாதை' (பொலிவார்ந்த மயிலை ஊர்தியாகப் பெற்றோனாகிய முருகனுக்குத் தந்தை) எனவும், 'குமரன் முதுதாதையார்' எனவும் சிவபெருமானைப் போற்றுமுகத்தால் குறிஞ்சி நிலத்திற்குச் சிறப்புடைத் தெய்வமாகிய முருகப்பெருமானையும் ஆசிரியர் புகழ்ந்து போற்றியுள்ளார்.

மலைநிலத்தவராகிய குறவர்கள் சிங்கம், யானை, மான் முதலிய விலங்குகளை வேட்டையாடுமியல்பும், மலையுச்சியிற் கட்டப்பட்ட தேனடைகளை அழித்துத் தேனெடுத்தலும், புனத்தை உழுது தினைவிதைத்தலும், குறமகளிர் யானைத் தந்தத்தை உலக்கையாகக் கொண்டு கல்லுரலிற் செந்தினை இடித்தலும், அங்ஙனம் இடிக்கப்பட்ட தினைமாவினைக் குறவர் கொணர்ந்த தேனொடு கலந்து விருந்தினர்க்கு அளித்துச் சுற்றத்தாரொடு உண்டு மகிழ்தலும், சுனைநீராடி நறவுண்டு மகிழ்ந்து தம் நிலத் தெய்வத்தைப் பாடிக் குரவையாடுதலும் ஆகிய செய்திகள் இந்நூலிற் சுவை பெருக விளக்கப் பெற்றுள்ளன.

சந்தனமுந் தண்பலவும் கொன்றையும் கோங்கமுந்தேக்கும் வேங்கையும் வாழையும் மாவும் மூங்கிலும் எழில் பெற வளர்ந்தோங்கிய சாரலையும், தேனாறு பாய்ந்து தித்திக்குந் தாமரைத் தண்சுனையினையும், கார்க்கொடி முல்லை மலர்ந்த கள்ளொழுகு முல்லைப் புறவத்தினையும், தீயென மலர்ந்த செங்காந்தட் பூக்களையும் தன்பாற்கொண்டு திகழும் ஈங்கோய்மலையின் இயற்கை வனப்பினை நக்கீர தேவர் இந்நூலிற் சொல்லோவியஞ் செய்து காட்டுகின்றார். இயற்கை வனப்பிலே தெய்வவனப்பினைக் கண்டு மகிழுந்திறம் புலமை நிரம்பிய மெய்யடியார்கள்பால் மிக்குத் திகழ்வதாகும். ஈங்கோய் மலையில் எழுந்தருளிய இறைவனைப் போற்றக் கருதிய இந்நூலாசிரியர், தாம் பாடிய வெண்பாக்களில் ஈங்கோய்மலையின் இயற்கை யழகினை முதல் மூன்றடிகளாலும் அங்கு எழுந்தருளிய இறைவனது பேரருட்டிறத்தை இறுதியடியாலும் விளக்கிப் போற்றுதலை முறையாகக் கொண்டுள்ளார். இவர் பாடிய பாடல்கள் யாவும் படிப்போரை இயற்கை வனப்பினாலீர்த்துத் தெய்வ வனப்பில் திளைக்கச் செய்யும் செம்மை நலமுடையன வாய்த் திகழ்கின்றன.

சிவபெருமான், ஓங்காரமாகிய பிரணவ உருவாய் விளங்குதலும், எல்லாவுயிர்களுக்குந் தோன்றாத் துணையாய் நின்று அவ்வுயிர்களுக்கு நேருந்துன்பங்களை நீக்கி அருள் புரிதலும், தன்னை அன்பினால் வழிபடும் அடியார்களை வினைத்துன்பம் சாராதபடி பாதுகாத்து, மனக்கவலை தீர்த்து அருள் செய்தலும், உயிர்களுக்கு நலஞ் செய்தற் பொருட்டு வேதமும் கலைகளும் அருளிச் செய்தலும் ஆகிய திருவருட் பண்புகளை இந்நூலாசிரியர் உளமுருகிப் போற்றுகின்றார். சிவபெருமான் மேருமலையை வில்லாக வளைத்துத் திரிபுரமெரித்தமை, அடியவர்க்காகக் கூற்றுவனை உதைத்தமை, காமனைக் காய்ந்தமை, திங்களைச் சடையிலணிந்து தேயாமற் பாதுகாத்தமை, பெருகிவருங் கங்கை வெள்ளத்தைத் தன் செஞ்சடையிற் கரந்தருளினமை, ஆலின் கீழ் அமர்ந்து அறமுதல் நாற் பொருள்களை முனிவர்களுக்கு அருளிச் செய்தமை, சாவாமைக்குக் காரணமாகிய அமுதத்தை வேண்டித் தேவரும் அசுரரும் பாற்கடலைக் கடைந்த நிலையில் அங்குத் தோன்றிய ஆலகால நஞ்சினைக் கண்டு நடுங்கிச் சரணடைந்த அவர்களை உய்வித்தல் வேண்டி அந்நஞ்சினையுண்டு மிடற்றிலடக்கித் திருநீலகண்டனாகத் திகழ்ந்தமை, திருமாலுந் தேடொணா நிலையில் நின்றமை முதலிய சிவபுராணங்களை நக்கீர தேவர் இப்பிரபந்தத்தில் நயம்பெற எடுத்துரைத்துள்ளார்.

அடியார்களை வினைத்துன்பம் சாராவண்ணம் பாதுகாக்கும் இறைவனது அருட் சிறப்பினை 'நம்மேல் மறுதலை நோய் தீர்ப்பான்', 'நம்மேல் வரலா நோய் தீர்ப்பான்', நந்தம் வினைக் குவால் வீட்டுவிப்பான்', 'எவ்வுயிர்க்கும் வாட்டங்கள் தீர்ப்பான்' என இந்நூலாசிரியர் பலபடியாகப் பாராட்டுகின்றார். கடவுள் வழிபாட்டினால் வினைத் துன்பங்கள் அறவே ஒழிந்து போம் என்னுந் திட்ப வுணர்வினை இவ்வாசிரியர் தெளிவிக்கும் முறை,

**'ஒருவனாரடியாரை ஊழ்வினை நலியவொட்டாரே'**
**'செய்வினை வந்தெம்மைத் தீண்டப்பெறா திருநீலகண்டம்'**

என ஆளுடைய பிள்ளையாரும், 'அல்லலென்செயும் அருவினை யென்செயும், தொல்லை வல்வினைத் தொந்தந்தானென் செயும், தில்லைமாநகர்ச் சிற்றம்பலவனார்க், கெல்லை யில்லதோ ரடிமை பூண்டேனுக்கே' என ஆளுடைய அரசும் அறிவுறுத்திய பொருளுரைகளை நினைவுபடுத்துவதாகும்.

மன வுணர்வுடைய மக்களின் ஒழுகலாறுகளை வரம்பாகக் கொண்டு அஃறிணையுயிர்களாகிய விலங்கு பறவை முதலியவற்றின் செயற்றிறங்களை ஒப்புநோக்குங் குறிப்புடன்

நக்கீரதேவர் புனைந்துரைக்கும் பகுதிகள் மிகவும் சுவையுடையனவாம். அஃறிணையுயிர்களில் மக்களையொத்த உடலமைப்பும், அவர்கள் செய்வனவற்றைப் பார்த்திருந்து அவ்வாறே தாமும் செய்ய முயலும் ஒத்த செயலும் உடையன குரங்குகளேயாகும். இத்தகைய குரங்கின் இயல்பினை நக்கீர தேவர் விரித்துரைக்குந் திறம் பெரிதும் நயமுடையதாகும்.

திருவீங்கோய் மலையில் வாழும் மந்தி (பெண் குரங்கு) தன் சிறிய குட்டிக்குத் தேனடையிலுள்ள தேனை விரலால் தோய்த்து ஊட்டுங் காட்சியினை இந்நூலின் ஒன்பதாம் பாடல் புலப்படுத்துகின்றது. இத்தோற்றம் தாயொருத்தி தன் இளங் குழந்தைக்கு உணவருத்தும் இயல்பினை நினைவுபடுத்து கின்றது. மலையின் ஒரு புறத்தே இலவமரம் ஒன்று இலையெலாம் உதிர்ந்த நிலையில் செந்நிறப் பூக்களைப் பூத்து விளங்குகின்றது. அம்மரத்திற் பூத்துக் காணப்படும் பூவினைக் கண்ட ஆண் குரங்கு, அதனை அம்மரத்திற் பற்றிய தீப்பொறியெனக் கருதி, அருகேயுள்ள மூங்கிலின் தழையினை யொடித்துப் புடைத்து அத்தீயினை அவிக்க முயன்றதென இந்நூல் 17ஆம் பாடல் கூறுகின்றது. தீயை யவித்தற்குப் பசிய மூங்கிற்றழையைத் தேர்ந்து கொண்டு இயற்கையுணர்வு அக்குரங்கின்பால் அமைந்திருத்தலை இப்பாடல் இனிது புலப்படுத்துதல் காணலாம்.

மலைச்சாரலின் ஒரு புறத்தே பளிக்குப்பாறை அமைந்துள்ளது. மலையின் மேற்சரிவிலே வளர்ந்தோங்கிய மா முதலிய மரங்களின் நிழல் தன்கண் படும்படியாக மலைச்சரிவின் தாழ்வில் விளங்குவது அப் பளிங்குப் பாறையாகும். பயன் மரங்கள் பழுத்து விளங்கும் பருவ காலத்தில் அவ்விடத்திற் பழகாத குரங்கொன்று அப்பாறையை யடைந்தது. அந்நிலையிற் மேற்சரிவிலுள்ள மரத்திற் பழுத்த பழத்தின் சாயல் கதிரவனொளியால் அப்பளிங்குப் பாறையிலே படிந்து தோன்றியது. பளிங்குப் பாறையிற் படிந்து தோன்றிய பழத்தின் சாயலைக் கண்ட குரங்கு, அதனை உண்மையான பழமென்றே கருதிச் சுவைக்கினிய கனியினைத் தான் கண்ட வியப்புடைச் செய்தியைத் தன் இனத்திற்குஞ் சொல்லி அழைத்து வந்து காட்டிற்று. அங்கு வந்த எல்லாக் குரங்குகளும் கனியின் நிழல் படிந்த பளிங்குப் பாறையினைத் தம் கைவிரல் நகங்கள் வருத்த விரைந்து தோண்டிப் பார்ப்பனவாயின. இச்செய்தியை,

**கல்லாக் குரங்கு பளிங்கிற் கனிகாட்ட**
**எல்லாக் குரங்கும் உடனீண்டி - வல்லே**
**இருந்துகிராற் கற்கிளைக்கும் ஈங்கோயே மேனி**
**பொருந்தவராப் பூண்டான் பொருப்பு.**

எனவரும் பாடலால் நகைச்சுவை பொருந்த நக்கீர தேவர் எடுத்துரைக்கின்றார். எட்டாத கனியின் நிழலைக் கனியென நம்பி அதனைத் தோண்டியெடுக்க முயலும் குரங்குகளின் பேதைமையினைக் கூறுமுகத்தால் இவ்வுலகில் இன்பமில்லாத போலித் தோற்றங்களை உண்மையென நம்பி ஒரு நிலைப்படாது அலைந்து திரியும் பேதை மாந்தரது இழிதகவினை ஆசிரியர் குறிப்பால் அறிவுறுத்துத் திறம் பெரிதும் வியக்கத்தக்கதாகும்.

மென்மையான இதழ்களையுடைய செங்காந்தள் மலரின்மேல் கருவண்டு மொய்த்திருந்த தோற்றத்தைக் கண்ட முதிய பெண்குரங்கொன்று, செங்காந்தள் மலரைத் தீயென மருண்டு அதன்கண் படிந்த வண்டினை அத்தீயில் அகப்பட்டு வருந்துவதாக எண்ணி அவ்வண்டின்பால் வைத்த இரக்கத்தால் அதனைத் தீயிலிருந்து காப்பாற்ற வேண்டுமெனத் துணிந்து அதன் அருகே நெருங்கிச் சென்றதாயினும் அத்தீ தன்னைச் சுடுமென்ற அச்சத்தினாலே இன்னது செய்வதென்றறியாது உளந்துணுக் குற்று எழுந்து எழுந்து தன் கையை நெறித்துக் கொள்கின்றது. பிறிதின் நோய் தன்னோய் போற் போற்றும் இக்குரங்கின் இரக்கவுணர்வினை,

**வழகிதழ்க் காந்தள்மேல் வண்டிருப்ப வொண்தீ**
**முழுகியதென் றஞ்சி முதுமந்தி - பழகி**
**எழுந்தெழுந்து கைநெறிக்கும் ஈங்கோயே திங்கட்**
**கொழுந்தணிந்த செஞ்சடையான் குன்று.**

எனவரும் பாடலால் ஆசிரியர் அறிவுறுத்திய முறை உள்ளத்திற்குப் பேருவகையளிப்பதாகும். பிறர் துயர்க்கிரங்கும் இரக்கவுணர்வு உயிர்க்குணமாயினும் அப்பண்பினை முடிவு போகச் செயற்படுத்தும் நல்லறிவும் உள்ளத்துறுதியும் உயிர்களுக்கு இயல்பாக அமைந்தனவல்ல என்பதும் அச்சந் தீர்த்து நல்லறிவு வழங்கி எல்லாவுயிர்களையும் உய்விக்கவல்ல பேரருளும் வரம்பிலாற்றலு முடையோன், தன் குற்றத்தால் தேய்ந்து சிறுகும் மதியினை நிறைமதியாக வளர்வித்த செஞ்சடையானாகிய சிவபெருமானே யென்பதும் ஆகிய உண்மைகளைக் குரங்கின் செயலில் வைத்து இந்நூலாசிரியர் குறிப்பினுணரவைத்த நுட்பம் உய்த்துணர வல்லார்க்கு பெரு மகிழ்ச்சி தருவதாகும்.

**"குழலிசைய வண்டினங்கள் கோழிலைய செங்காந்தட் குலைமேற்பாய**
**அழலெரியின் மூழ்கினவால் அந்தோ அளியவென்றயல் வாழ்மந்தி**
**கலுழ்வனபோல் நெஞ்சயர்ந்து கல்லருவி தூஉம்**
**நிழல்வரை நன்னாடன் நீப்பனோ அல்லன்"**

எனவரும் யாப்பருங்கல விருத்தி மேற்கோட் செய்யுளில் மேற்குறித்த முதுமந்தியின் செயல் மேலுந் திருத்தம் பெறக் காண்கிறோம். நக்கீரதேவர் பாடலிற் குறிக்கப்படும் மந்தி செங்காந்தள் மலரிற் படிந்த வண்டினைக் கண்டு தீயில் வீழ்ந்து வருந்துவதாக மருண்டு செய்வதறியாது மனந் துணுக்குற்றுக் கைகளை நெறித்துக் கொள்கிறது. 'குழலிசைய' எனத் தொடங்கும் பாடலிற் குறிக்கப்பெற்ற மந்தி அதே காட்சியைக் கண்டு வருந்திய தாயினும், தீயினைத் தண்ணீரால் அவித்து விடலாமெனத் தெரிந்து விரைந்து அருவி நீரைக் கைகளால் முகந்து அத்தீயினை அணைக்க முயலுந் தெளிவு பெற்றுத் திகழ்வதைக் காண்கிறோம். நக்கீரதேவர் பாடலிற் குறித்த குரங்கின் செயல் அஃறிணை யுயிர்களின் இயற்கைக்கு ஒத்த தன்மை நவிற்சியாகவும், யாப்பருங்கல மேற்கோட்செய்யுளிற் குறித்த குரங்கின் செயல் அதன் இயற்கை யறிவுக்கு மேற்பட்டுத் தோற்றும் உயர்வு நவிற்சியாகவும் விளங்குதலை நோக்குங்கால் முன்னர்க் காட்டிய நக்கீரதேவர் பாடலே பின் தோன்றிய யாப்பருங்கல விருத்தி மேற்கோட் செய்யுளுக்கு நிலைக்களமாக அமைந்ததென்பது நன்கு துணியப்படும்.

தன் இனத்தைப் பாதுகாக்குந் தொழிலில் மக்களைப் போன்று நல்லறிவு பெற்றுத் திகழும் விலங்கு குறிஞ்சி நிலத்திற்குச் சிறப்புரிமையுடைய யானையாகும். யானையைக் குறித்து ஈங்கோய்மலை யெழுபதிற் கூறப்படுஞ் செய்திகளை ஒரு சிறிது நோக்குவோம்.

பிடியின்பாற் காதல்கூர்ந்த களிறொன்று, காற்றின்றி வருந்தும் தனது பிடியின் வருத்தத்தைத் தணித்தல் கருதித் தனது நீண்ட கையினால் மரக்கிளைகளை முறித்து அவற்றின் தழைகளால் வீச, அப்பெண் யானை மென்காற்றினையேற்று உலவி மகிழும் காதல் நிலை ஈய்கோய்மலை யெழுபதின் 25-ஆம் பாடலில் விளக்கப் பெறுகின்றது. மலைவாணர்கள் தாம் விதைத்த தினைக் கொல்லையில் யானைகள் புகுந்து உழக்காதபடி அக்கொல்லையின் ஓரமாக அமைந்த வழியிடையே பெரிய குழிகளை வெட்டி அவற்றைத் தழைகளால் மூடி மறைத்தல் வழக்கம். ஒருமுறை அவர்களது செயலைக் கண்டு கொண்ட யானையொன்று, அப்புனத்தில் உலவுங்கால் அவர்கள் பறித்த குழிகளில் வீழ்ந்தகப்படாமல் தன்னைக் காத்துக்கொள்ளக் கருதித் தனது நீண்ட கையிலே தடியொன்றைப் பற்றிக்கொண்டு தரையில் ஊன்றிச் சென்ற திறத்தை இந்நூல் 36-ஆம் பாடலில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். தீங்குவருமுன்னர்க் காக்கும் நல்லறிவினை யானையானது தன் வாழ்க்கை யனுபவத்தாற் பெற்றமுறை அறிஞர்களாற் பாடப் பெறுஞ் சிறப்புடையதேயாகும்.

மூங்கிற் காடுகளினிடையே யமைந்த தினைப்புனமொன்றில் தன் பிடியொடு புகுந்துண்ணத் தொடங்கிய களிற்றின்மேல் புனங்காக்கும் வேடன் அம்பினைச் செலுத்துகின்றான். அத்துன்ப நிலையிலிருந்து தப்பியோடக் கருதிய ஆண்யானை, முதலில் தனது அன்பிற்குரிய பெண்யானையைப் பாதுகாத்தலே தன் கடமையென வுணர்ந்து அங்கு வளர்ந்துள்ள நீண்ட மூங்கிலை வளைத்து அதன் தோகையால் பெண்யானையை அவ்விடத்தினின்றும் ஓட்டிப் பாதுகாக்குஞ்செயலே இந்நூல் 69-ஆம்பாடல் குறிப்பிடுகின்றது. இங்ஙனம் களிற்றின்பால் அமைந்த இவ்வாண்மைச் செயல் ஆண்கடனிறுக்கும் பெருவீரர்கள்பால் அமைய வேண்டிய நற்பண்பாகும். "உரிமை முன் போக்கியல்லால் ஒளியுடை மன்னர் போகார்" எனச் சச்சந்தன் தன் மனைவி விசயையை நோக்கிக் கூறும் அறிவுரை இவண் ஒப்புநோக்குதற் குரியதாகும்.

மலைச்சாரலின் ஒருபக்கத்தே கரிய மேகத்தைக் கண்டு களிப்புமீதூர்ந்த மயிலொன்று, தன் கோலச் சிறகை விரித்தாடு கின்றது. அவ்விடத்தே செங்காந்தள் மலர்கள் கைகளைப்போன்று பூத்துக் காணப்படுகின்றன. அம்மலர்களின்மேல் பொன்போன்ற இதழ்கள் உதிரும் நிலையில் கொன்றைமரம் ஒன்று நிறையபூத்து மணங்கமழ்கின்றது. தோகைவிரித்து ஆடும் மயில் ஆடல் மகளாகவும் பொன்போன்ற பூக்களைச் சொரியுங் கொன்றைமரம் அக்கூத்தினைக் கண்டு பரிசில்தருஞ் செல்வராகவும் அம்மரத்தினின்று உதிரும் கொன்றை மலர்களைத்தாங்கி விரிந்த செங்காந்தள்மலர், செல்வர்தரும் பொன்களையேற்கும் கையாகவும் தோன்றும் அழகிய காட்சியினை,

> **'காந்தளங் கைத்தலங்கள் காட்டக் களிமஞ்ஞை**
> **கூந்தல் விரித்துடனே கூத்தாடச்-சாய்ந்திரங்கி**
> **ஏர்க்கொன்றை பொன் கொடுக்கும் ஈங்கோயே செஞ்சடைமேற்**
> **கார்க் கொன்றை யேற்றான் கடறு.**

எனவரும் பாடலால் ஆசிரியர் புலப்படுத்துகின்றார்.

> **'வரைசேரும் முகில் முழவ மயில்கள் பல நடமாட வண்டுபாட**
> **விரைசேர் பொன் இதழிதர மென்காந்தள் கையேற்கும்**
> **மிழலையாமே'**

எனவரும் ஆளுடைய பிள்ளையார் திருப்பாடலிற் குறிக்கப்பட்ட அழகிய காட்சியை நக்கீர தேவர் மேற்காட்டிய பாடலிற் புலப்படுத்தியுள்ளமை உணர்ந்து இன்புறத்தக்கதாகும்.

இலைகளெலாம் உதிர்ந்த நிலையில் தீப்போலும் செந்நிற மலர்களைப் பூத்து விளங்கும் முள்ளிலவ மரத்தின்மேல் ஏறிய

*மயில், அப்பூக்களின் தோற்றத்தைக் கண்டுஅஞ்சி நடுங்காது அப்பூக்களின் நடுவே அமைதியாக அமர்ந்திருக்கின்றது. இவ்வழகிய தோற்றம், தன் ஆருயிர்க் கணவன் இறந்தானாக அவனது பிரிவாற்றாது உயிர்விடக் கருதிய கற்புடை மங்கையொருத்தி பெருந்தீயினை வளர்த்து அதன் நடுவே அச்சமின்றியமர்ந்து உயிர்விடுநிலையினை யொத்து விளங்குகின்றது. இவ்வழகிய காட்சியை,*

**முள்ளார்ந்த வெள்ளிலவ மேறி வெறியாது**
**கள்ளார்ந்த பூப்படியுங் கார்மயில்தான்- ஒள்ளார்**
**எரிநடுவுட் பெண்கொடியா ரேய்க்கும் ஈங்கோயே**
**புரிநெடு நூல் மார்பன் பொருப்பு.**

*என்ற பாடலால் ஆசிரியர் அழகுபெற எழுதிக்காட்டுகின்றார். இப்பாடல் ஐங்குறு நூற்றின் ஏட்டுச் சுவடியிற் காணப்பட்ட,*

**'உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை**
**இலவ மேறிய கலவ மஞ்ஞை**
**எரிபுகு மகளி ரேய்க்கும்**
**அரில்படு கள்ளியங் காடிறந்தோரே'**

*என்ற பழம் பாடலை முழுவதும் அடியொற்றியதாக அமைந்திருத்தல் காணலாம். இலவமரத்திற் பூத்துள்ள சிவந்த பூக்களிடையே அமர்ந்த மயிலின் இயற்கை வனப்பாகிய புறக்காட்சியைப் பொருளாகக் கொண்டு, தன் ஆருயிர் நாயகனது பிரிவாற்றாது நளியிரும் பொய்கையையும் தீயையும் ஒன்றாகக் கருதித் தீப்பாயுங் கற்புடை மகளது உளங்கலங்கா நிலைமையாகிய கற்பென்னுந் திண்மையினைத் தெளிவித்த புலமைத் திறம் வியந்து பாராட்டுதற் குரியதாகும்.*

*மலையில் வாழுங் குறமகளிர் தம் தாய்மை அன்பினால் அஃறிணையுயிர்களிடத்துக் கொண்ட இரக்கவுணர்வும், அம்மகளிர்பால் அவ்வுயிர்கள் அன்பினால் அடங்கியொழுகுந் திறமும் ஈங்கோய்மலையெழுபதில் நன்கு விளக்கப் பெற்றுள்ளன. யானையின் இளங்கன்று தன்னினத்திலிருந்தும் பிரிந்து வழி தவறி வந்துவிட்டது. தன் தாயைப் பிரிந்தறியாத அக்கன்றினைக் கண்டு உளமுருகிய குறவர் மகளிர், சந்தன மரத்தின் இலைகளைத் தேனில் தோய்த்து அக்கன்றுக்கு ஊட்டுகின்றார்கள். இச்செய்தி இந்நூல் 2ஆம் பாடலிற் கூறப்பட்டுளது.*

*குறிஞ்சியில் வாழும் குறமகளிர் சந்தன மரத்தின் இலையிலே தினைமாவைத் தேனோடு கலந்து அங்குள்ள மந்திக்குங் கொடுத்துத் தாமும் சுற்றத்தொடு கூடியிருந்து உண்கிறார்கள். அவர்களிடம் பங்கு வாங்கிக்கொண்ட பெண் குரங்கு*

*தினைமாவினைத் தானே தனித்துண்ணாமல் அச்சிற்றூரில் விளையாடிக்கொண்டிருக்கும் சிறுமகளிரின் வாயிலே ஊட்டித் தானும் உடனிருந்து உண்ணத் தொடங்குகிறது. இவ்வரிய நிகழ்ச்சியை விளக்குவது,*

**சந்தின் இலையதனுட் டண்பிண்டி தேன்கலந்து**
**கொந்தியினி துண்ணக் குறமகளிர் - மந்தி**
**இளமகளிர் வாய்க்கொடுத்துண் ஈங்கோயே வெற்பின்**
**வளமகளிர் பாகன் மலை.**

*என்ற செய்யுளாகும். மலைவாணர் மகளிரொடு பழகிய மந்தியும் பகுத்துண்டு பல்லுயிரோம்பும் நல்லறத்திற் சிறப்புற்றுத் திகழ்தலை யுணர்த்துமுகத்தான் ஈங்கோய்மலையில் வாழும் மகளிரது மனைத்தக்க மாண்பினை உய்த்துணர வைத்தமை நினைத்து மகிழ்தற்பாலதாகும்.*

*மலைவாணராகிய வேடுவர்கள் விலங்குகளை இரக்கமின்றிக் கொல்லுங் கொடுந்தொழிலை மேற்கொள்ள வேண்டிய இன்றியமையாமை உடையராயினும், தமது அன்புமிகுந்த இல்வாழ்க்கையின் பயிற்சியால் அவ்விலங்குகளிடத்தும் அருள்மீதூர்ந்த ஈரநெஞ்சத்தினராயிருந்தனர் என்னும் உண்மையினை இந்நூலில் நக்கீர தேவர் இனிது விளக்குகின்றார். ஈங்கோய் மலையில் வேட்டைமேற் சென்ற குறவனொருவன், சேய்மையிலே மேய்ந்து திரியும் மானொன்றைக் கண்டு வில்லை வளைத்து அம்பினைத் தொடுத்து, அம்மானின்மேல் எய்தற்கு நெருங்கிச் செல்பவன், அது கன்னியிளமானாதலையும் அதனது மருண்ட பார்வை தன்னாற் காதலிக்கப்படும் குறத்தியின் அழகிய நோக்கினை ஒத்திருத்தலையும் கண்டு, உவகை நிரம்பிய உள்ளத்தனாகி, தன் முன்னர் எய்தர் பொருட்டுக் கையிலெடுத்த அம்பினைத் தூணியிற் செருகிவிட்டு, அவ்வழகிய மானை நோக்கி, 'இளமை பொருந்திய மானே, நின்னைத் துன்புறுத்த மாட்டேன். நீ பயப்படாது மெல்லச் செல்வாயாக' என வழியனுப்புங் குறிப்புடன் அருள்மீதூர்ந்த உள்ளமுடையனாய் நின்றான். அன்பினால் உள்ளத்தை நெகிழ்விக்கும் அக்குறவனது அருட்பண்பினை,*

**எய்யத் தொடுத்தோன் குறத்திநோக் கேற்றதெனக்**
**கையிற் கணைகளைந்து கன்னிமான் - பையப்போ**
**என்கின்ற பாவனைசெய் ஈங்கோயே தூங்கெயில்கள்**
**சென்றன்று வென்றான் சிலம்பு.**

*எனவரும் பாடலில் ஆசிரியர் விரித்துரைத்த நயம் படித்து இன்புறுதற்குரியதாகும்.*

முதுமை மீதூரத் தளர்நிலை யெய்திக் கூனிய வுடம்பினனாகிய வேடனொருவன், யானைக் கூட்டத்தி னிடையே அகப்பட்ட இளநங்கையொருத்தியை உய்வித்தல் கருதி அங்குள்ள யானைகளைத் தானொருவனேயாக நின்று விலக்கி அவளை மீட்டுக் கொணர்ந்தான் என்ற செய்தியை இந்நூல் 13-ஆம் பாடல் விளக்குகின்றது. கூழைமுது வேடனது பேராண்மையே இங்ஙனமானால் அடலேறு போலும் உடலுரன் பெற்று வாழ்ந்த இளைஞர்களின் தறுகண்மையினை எடுத்துரைத்தலெங்ஙனம்?

இளவேனிற் காலத்துப் பூத்து விளங்கும் மாம்பொழி லினிடையே தென்றற் காற்று வந்து நுழைகின்றது. அங்ஙனம் நுழையும் தென்றல்தானும் பகலிற் பலருங் காண நுழையாமல் இரவுப்பொழுதில் நுழைகிறது. பிறர் அறியாமல் இரவில் நுழையும் இத்தென்றல் களவொழுக்கமுடையதாக இருத்தல் வேண்டுமெனக் கருதிய ஆசிரியர்.

**வளர்ந்த விளங்கன்னி மாங்கொம்பின் கொங்கை**
**அளைந்து வடுப்படுப்பான் வேண்டி - இளந்தென்றல்**
**எல்லிப் புகநுழையும் ஈங்கோயே தீங்கருப்பு**
**வில்லிக்குக் கூற்றினான் வெற்பு.**

எனவரும் பாடலால் அதன் களவினைப் புலப்படுத்துகின்றார். இதன்கண் 'வளர்ந்த இளங்கன்னி மாங்கொம்பின் கொங்கை அளைந்து வடுப்படுப்பான் வேண்டி' என்ற தொடர், களவொழுக்கத்தில் இரவுக் குறியில் வந்தொழுகும் தலைவனுக்கும், இளவேனிற் பருவத்தில் மாம்பொழிலினிடையே நுழையும் இளந்தென்றலுக்கும் பொருந்தும் வண்ணம் இருபொருள் தருவதாக அமைந்துளது. இத்தொடர் தலைவனுக்குச் சொல்லுங்கால் 'பருவமுடையவளாய் வளர்ந்த இளங்கொம்பு போல்வாளாகிய கன்னிமை நீங்கா இளநங்கையின் ஆகத்தைச் சேர்ந்து மகிழ விரும்பி' எனவும், தென்றலுக்குச் சொல்லுங்கால் 'நன்றாய் வளர்ந்து முதன் முதல் பூத்த முதிராத இளைய மாமரத்தின் கிளையிலரும்பிய பூக்களிலுள்ள மகரந்தப் பொடியினை ஒன்றினொன்று கலக்கச் செய்து அப்பூவினை மாவடுவாகக் கருக்கொள்ளச் செய்ய வேண்டி' எனவும் இருவேறு பொருள்களைத் தந்து நிற்கிறது. 'கொங்கை அளைந்து' என்னுந் தொடர் தலைவனுக்குக் கூறுங்கால் 'ஆகத்தைத் தழுவி' என இரண்டாம் வேற்றுமைத் தொகை யாகவும், தென்றலுக்குக் கூறுங்கால் கொங்கினை (மகரந்தப் பொடியைக்) கலக்கச் செய்து' என்னும் பொருளில் இரண்டாம் வேற்றுமை விரியாகவும் கொள்ளுதல் வேண்டும். முன்னதற்கு கொங்கையென்பதே

பெயராகவும் பின்னதற்குக் கொங்கு என்பது பெயராக ஐ இரண்டாம் வேற்றுமையுருபாகவும் அமைந்தமை கருதற்குரியது. 'வடுப்படுத்தல்' என்னுஞ் சொல் முறையே நகக்குறி செய்தலையும், பூவை மாவடுவாகச் செய்தலையும் குறிப்பதாகும். இளையோனொருவன் தன் காதலையுணர்ந்து மகிழும் பருவமுடையளாய் வளர்ந்த கன்னியொருத்தியின் ஆகத்தைச் சேர்ந்து இன்புறும் உள்ளத்தனாய்ப் பிறரறியாதபடி இரவுக் குறியில் வந்து பெயர்தல் குறிஞ்சி நிலத்துக்குரிய களவொழுக்கமாகும். மலை நிலத்திற்கே சிறப்புரிமையுடைய இக்களவொழுக்கத்தை அம்மலையிற்புகுந் தென்றலும் மேற்கொள்வதாயிற்று என்னும் பொருளிற் சிலேடை நயமமைய நக்கீரதேவர் இப்பாடலை இயற்றிய நுட்பம் நினைக்குந் தோறும் வியப்பினை விளைப்பதாகும்.

இறைவன் உயிர்களின் நன்மை குறித்து வழங்கிய உடம்பு, பொறிகள், உட்கருவிகள் ஆகிய்வற்றை நன்முறையிற் பழக்கி எல்லாம் வல்ல அம்முழுமுதற்பொருளை வழிபட்டு இன்புறுதலே மக்கட் பிறவியால் வரும் பயனாகும் என வற்புறுத்தக் கருதிய ஆசிரியர், மனவுணர்வில்லாதன என இழித்துரைக்கப்படும் அஃறிணையுயிர்களும் ஈங்கோய் மலையில் எழுந்தருளிய இறைவனை அன்பினால் வழிபடும் நன்ஞானம் பெற்று விளங்குமியல்பினை எடுத்துரைக்கு முகத்தால் நம்மனோரை இறைவனது திருவருட்பணியில் ஈடுபடுத்துகின்றார், சிங்கமும் புலியும் யாளியும் ஆகிய கொடு விலங்குகள் தம் கொடுந்தொழிலை மறந்து இறைவன் பால் பேரன்புடையனவாய் நறுமலர்களைப் பறித்துக் கொண்டு ஈங்கோய் மலையின் மீதேறி இறைவனை அருச்சித்து வழிபடுந் திறத்தினையும் அவை அன்பினாற் செய்யும் வழிபாட்டினைக் கண்டு இறைவன் மகிழ்ந்து அருள் செய்யும் இயல்பினையும்,

**அரியும் உழுவையும் ஆளியுமே ஈண்டிப்**
**பரியிட்டுப் பன்மலர்கொண் டேறிச் - சொரிய**
**எரியாடி கண்டுகக்கும் ஈங்கோயே கூற்றந்**
**திரியாமற் செற்றான் சிலம்பு.**

என்ற பாடலால் ஆசிரியர் அறிவுறுத்துகின்றார். புனத்தில் திரியும் யானையானது இறைவனை வழிபட விரும்பி அங்குள்ள வேங்கை மரத்தின் பூங்கொத்துக்களைப் பறித்தெடுத்துக் கொண்டு மலையின்மீதுள்ள குளிர்ந்த சுனைநீரைத் திருமஞ்சனமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்ற நினைவுடன் ஈங்கோய்மலையில் விரைந்தேறும் காட்சியினை,

**கொல்லை யிளவேங்கைக் கொத்திறுத்துக் கொண்டுசுனை**
**மல்லல்நீர் மஞ்சனமா நாட்டிக் கொண் - டொல்லை**

**இருங்கைக் களிறேறும் ஈங்கோயே மேல்நோய்**
**வருங்கைக் களைவான் மலை.**

என்ற பாடலால் அழகுறப் புலப்படுத்துகின்றார். இங்ஙனமே அம்மலையில் வாழும் குரங்குகள் மலை உச்சியில் முறையாக அமர்ந்து இறைவனது திருமேனியைத் தீண்டி வழிபடுங் கருத்தினால் ஆடிப்பாடி ஆரவாரிக்கும் இயல்பினை 64ஆம் பாடல் அறிவுறுத்துவதாகும்.

மணமாகாத குறமகளிர், காதலன் களவில் வந்து செல்வதனாலுண்டாகிய பழிச்சொல்லை நீக்கி அவனை என்றும் பிரியாது கலந்து மகிழும் நிலையில் தமது திருமணத்தினை விரைவில் நிறைவேற்றியருளுதல் வேண்டுமென ஈங்கோய் மலையிறைவர் திருவடிகளிற் செந்நிறத்த நறுமலர்களைச் சொரிந்து வழிபாடு செய்கின்றார்கள். இங்ஙனம் வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதற்குத் துணைபுரியும் மகளிரது வழிபாட்டு முறையினை,

**கொவ்வைக் கனிவாய்க் குறமகளிர் கூந்தல்சேர்**
**கவ்வைக் கடிபிடிக்குங் காதன்மையாற் - செவ்வை**
**யெறித்தமலர் கொண்டுவிடும் ஈங்கோயே அன்பர்**
**குறித்தவரந் தான்கொடுப்பான் குன்று.**

எனவரும் பாடலால் நக்கீரதேவர் புலப்படுத்துகின்றார்.

**'யாம் எம் காதலரைக் கனவிலே மணந்தது பொய்யாகாமல், நனவின்கண் திருமணத்தினை நிறைவேற்றியருளுக"**

என மகளிர் முருகப்பெருமானைப் போற்றி வரங்கொண்ட செய்தி எட்டாம் பரிபாடலிற் குறிக்கப் பெற்றமை இங்கு ஒப்புநோக்கத் தகுவதாகும்.

## 3. திருவலஞ்சுழி மும்மணிக் கோவை

திருவலஞ்சுழியிற் கோயில்கொண்டருளிய சிவ பெருமானைப் போற்றிப் பரவுங்கருத்துடன் நக்கீர தேவர் பாடிய பிரபந்தம் திருவலஞ்சுழி மும்மணிக் கோவையாகும். திருவலஞ்சுழியென்பது, சோழ நாட்டிற் காவிரியாற்றின் தென்கரையில் அமைந்ததோர் ஊர். இவ்வூர் காவிரியாறு வலமாகச் சூழ்ந்து செல்லும் இடத்தில் அமைந்திருத்தல் பற்றி வலஞ்சுழியென்ற பெயரால் வழங்கப்பெறுவதாயிற்று. 'மன்னு காவிரி சூழ் திருவலஞ்சுழி' யெனத் திருஞானசம்பந்தர் தேவாரத்தும், 'காவிரிமடந்தை வார்புனல் உடுத்த மணி நீர்வலஞ்சுழி' யென மும்மணிக் கோவையிலும் இவ்வூரின் இயற்கைவளம் கூறப்படுதல் கொண்டு வலஞ்சுழி யென்னும் இவ்வூரின் பெயர்க்காரணத்தை நன்குணரலாம்.

ஆசிரியப்பா, வெண்பா, கட்டளைக்கலித்துறை ஆகிய மும்மணிகளால் அந்தாதித் தொடையமையத் தொடுக்கப் பெற்றமையால் இது மும்மணிக் கோவை யென்னும் பெயர்த்தாயிற்று. மும்மணிக்கோவையாகிய இப்பிரபந்தம் முப்பது செய்யுட்களால் இயன்றிருத்தல் வேண்டுமென்பது வச்சணந்திமாலை சிதம்பரப் பாட்டியல் முதலிய பிற்காலப் பாட்டியல் நூலோர் கொண்ட வரையறையாகும். நக்கீரதேவர் பாடிய இத்திருவலஞ்சுழி மும்மணிக்கோவை 'வணங்குதும் வாழிநெஞ்சே' யெனத் தொடங்கி, 'வலஞ்சுழியானை அண்ணாமலைமேல், வம்பார் நறுங்கொன்றைத் தாருடையானை வணங்குதுமே' என முடிந்து, அந்தம் ஆதியாகப் பதினைந்து பாடல்களால் நிறைவு பெற்றுள்ளது. இதனை நோக்குங்கால், மும்மணிக்கோவை யென்னும் பிரபந்தம் முப்பது பாடல்களால் இயற்றப்பெறுதல் வேண்டுமென்னும் வரையறை இந்நூலாசிரியர் காலத்தில் நன்கு நிலைபெறவில்லை யென்பது புலனாம்.

திருவலஞ்சுழியில் எழுந்தருளிய சிவபெருமானைக் கண்டு அவ்விறைவனது பேரழகில் ஈடுபட்டுக் காதல் கொண்டு வருந்தும் தலைவியின் அன்பின் திறத்தைப் புலப்படுத்தும் பாடல்களும், உலகியல் வாழ்வில் ஒருவனும் ஒருத்தியும் அன்பினால் இன்புற்று வாழும் அகத்திணை யொழுகலாறுகளைப் புலப்படுத்தும் நிலையில் திருவலஞ்சுழி யிறைவனைப் பாட்டுடைத் தலைவனாக வைத்துப் போற்றும் அகத்துறைப் பாடல்களும் இம்மும்மணிக் கோவையில் இடம்பெற்றுள்ளன. ஒடேந்து செல்வனாக எழுந்தருளி வந்த இறைவனது பேரழகில் ஈடுபட்ட பெண்ணொருத்தி, அப்பெருமான் விரைந்து மறைந்தானாக, அவனைக் காணப்பெறாது கைவளைகள் கழல வருத்த முறுகின்றாள். அங்ஙனம் வருத்தமுறுபவள் தனது உடல் மெலிவிற்குரிய காரணத்தைத் தன் தோழிக்குரைப்பதாக அமைந்தது,

**பொருட்டக்கீர் சில்பலிக்கென் றில்புகுந்தீ ரேனும்**
**மருட்டக்கீர் யாதும்மூர் என்றேன் - மருட்டக்க**
**மாமறையம் என்றார் வலஞ்சுழி நம் வாழ்வென்றார்**
**தாம்மறைந்தார் காணேன்கைச் சங்கு.**

எனவரும் பாடலாகும். 'நன்கு மதிக்கத்தக்க பெரியீர் நீவிர் சிலவாகிய பொருளை இரந்துபெறுதற் பொருட்டுப் பிச்சைக் கோலத்துடன் எமது இல்லினுள் நுழைந்தீரெனினும், எல்லாச் செல்வங்களுக்குங் காரணமாகிய பெருந்திருவுடன் வியக்கத்தக்க தோற்றமுடையீராய்த் திகழ்கின்றீர். உம்முடைய ஊர் யாது? என்று வினவினேன். அது கேட்ட அவர் வியக்கத்தக்க மாமறையம் (பெருமைதங்கிய மறைக்காட்டிடத்தோம், பெரிய வேதங்களின்

இடத்தோம்) என்றார். நாம் விரும்பி வாழும்பதி வலஞ்சுழி யென்று கூறி விரைந்து மறைந்தார். யான் அணிந்துள்ள கை வளையல்களைக் காணேனாயினேன்' என்பது இதன் பொருளாகும்.

'தான் ஏறி நடத்தும் ஊர்தியாகிய இடபத்தைக் கைகளால் தொழுதேனல்லேன். தன் சடைமேல் விளங்கும் தேனிறைந்த கொன்றைமலரைக் குறித்து எதுவும் பேசினேனல்லேன். இங்ஙனமாகவும் வலஞ்சுழி யிறைவன் என் கை வளையல்களைக் கவர்ந்தது எது கருதி' எனத் தலைமகள் நினைந்து கவன்று கூறுவதாக அமைந்தது,

**தானேறும் ஆனேறு கைதொழேன் தன்சடைமேல்**
**தேனேறு கொன்றைத் திறம்பேசேன் - வானேறு**
**மையாருஞ் சோலை வலஞ்சுழியான் என்கொல்என்**
**கையார் வளைகவர்ந்த வாறு.**

என்ற பாடலாகும்.

பரத்தையிற் பிரிந்த தலைவன், தலைவியது ஊடலைத் தணிவிக்க வேண்டிப் பாணனைத் தூதாக அனுப்புகின்றான். விறலியொடுகூடி வாயிலாக வந்த பாணனை நோக்கித் தலைவி கூறுவதாக அமைந்தது,

**நெறிதரு குழலி விறலியொடு புணர்ந்த**
**செறிதரு தமிழ்நூற் சீறியாழ்ப் பாண**
**பொய்கை யூரன் புதுமணம் புணர்தர**
**மூவோம் மூன்று பயன்பெற் றனமே, நீயவன்**
**புனைதார் மாலை பொருந்தப் பாடி**
**இல்லதும் உள்ளதும் சொல்லிக் கல்லல்**
**வாசகம் வழாமற் பேச வன்மையில்**
**வானர மகளிர் வான்பொருள் பெற்றனை, அவரேல்**
**எங்கையர் கொங்கைக் குங்குமம் தழீஇ**
**விழையா இன்பம் பெற்றனர், யானேல்**
**அரனமர்ந் துறையு மணிநீர் வலஞ்சுழிச்**
**சுரும் பிவர் நறவயிற் சூழ்ந்தெழு தரும்பிற்**
**றீநீ ரன்ன வாய்நீர் சோருஞ்**
**சிலம்புகுரற் சிறுபறை பூண்ட**
**அலம்புகுரற் கிண்கிணிக் களிறுபெற் றனனே,**

எனவருஞ் செய்யுளாகும். 'விறல்பட ஆடவல்ல விறலியொடுகூடிய பொருள்செறிந்த இசைத்தமிழ்த் திறத்திற் பயின்று சீறியாழ் என்னும் இசைக் கருவியை வாசிக்கவல்ல பாணனே பொய்கை சூழ்ந்த ஊரனாகிய என் கணவன்

பரத்தையரைப் புதுமணம் புணர்ந்தமையால் நீயும் அவனும் யானும் ஆகிய நாம் மூவரும் மூவகைப் பயன்களைப் பெற்றோம். இசைத் திறத்திற் பயின்ற பாணனாகிய நீயோ, அவன் அணிந்த மணமாலையை இசைபொருந்தப் பாடிப் பொய்யும் மெய்யுமாகிய இருவகை நிகழ்ச்சிகளையும் கூட்டித் திறம்படப் பேசும் சொல்வன்மையுடையை யாதலின் வானரமகளிர் போல்வாராகிய அப்பரத்தையரைப் போன்று அவனிடத்திருந்து மிகுதியான பொருளைப் பரிசிலாகப் பெற்றனை. என் கணவராகிய அவரோ பரத்தையரைத் தழுவித் தாம் விரும்பிய இன்பத்தைப் பெற்றனர். அவரைப் பிரிந்துறையும் யானோ சிவபெருமான் வீற்றிருந்தருளும் புனல்சூழ்ந்த திருவலஞ்சுழியில் வண்டுகள் ஆரவாரிக்க மரப்பொதும்பரிடைக் கட்டப்பட்ட தேனடையிலுள்ள நறுந் தேனையொத்து அண்ணிக்கும் வாய்நீரையும் ஒலிக்கும் சிறுபறையினையும் ஆரவாரிக்கும் கிண்கிணியையும் உடைய புதல்வனாகிய மழவிளங்களிற்றினைப் பெற்று மகிழ்கின்றேன்.' என்பது இதன் பொருள், 'பரத்தையரது முயக்கினையே பெறுபயனாகக் கொண்டவர் என் கணவர். அவர் விரும்பிய பழிவழியினையே நன்றெனக் கூறி அவராற்பெறும் பரிசிற் பொருளைப் பெறுபயனாகக் கொண்டு வாழும் இயல்புடையாய் பாணனாகிய நீ. அவரது புறத்தொழுக்கினால் வருந்தி அவ்வருத்தத்தை மறக்கும் நிலையில் செயிர்தீர் காட்சிப் புதல்வனைப் பேணி வளர்த்தலையே வாழ்க்கைப் பேறாகக் கருதி வாழ்பவள் யான். இந்நிலையில் தலைவர் நின்னை இங்கு வாயிலாக அனுப்புதற்குரிய இன்றியமையாமை எதுவும் இல்லையே' எனத் தலைவி வாயிலாக வந்த பாணனைக் குறிப்பால் மறுத்துரைத்த திறம் பெரிதுஞ் சுவை தருவதாம்.

## 4. திருவெழு கூற்றிருக்கை

எழு கூற்றிருக்கை யென்பது மிறைக்கவி (சித்திரகவி) வகைகளுள் ஒன்று. ஒன்றென்னும் எண்ணினை முதலாகக் கொண்டு தொடங்கிப் படிப்படியே ஒவ்வொரெண்ணாகக் கூட்டியும் அம்முறையே ஒன்றொன்றாக ஒன்று முடியக் குறைத்தும் இங்ஙனம் ஒன்று முதல் ஏழீறாக எண்ணும் நிலையில் அமைந்த செய்யுள் எழகூற்றிருக்கை யெனப்படும். "எழுகூற்றிருக்கையாவது ஏழறையாக்கி முறையானே குறுமக்கள் முன்னின்றும் புக்கும் போந்தும் விளையாடும் பெற்றியான் வழுவாமை ஒன்றுமுதலாக ஏழிறுதியாக முறையானே பாடுவது" என்பர் யாப்பருங்கல விருத்தியுரையாசிரியர். இங்ஙனம் எண்ணப்படும் எண்களை இரத பந்தத்தில் அடக்குமிடத்து மையத்திற் பத்தியிரண்டு பத்தியாய்க் கீறி வலத்திலும் இடத்திலும் முறையே எண்ணிச் செல்லும்படி மையத்திலொன்று

*பதினான்காகவும் அதன் அயல் இரு பத்தியில் இரண்டும் பன்னிரண்டாகவும் ஒழிந்த மூன்று முதலியவெண்ணும் பத்திதொறும் இரண்டு குறைந்து ஏழென்னுந்தொகை பொருந்தி முதலிலே நின்ற ஒன்றில் வந்து முடியுமெனவும் இங்ஙனம் செய்யுளகத்து எடுத்தாளப்படும் எண்ணுப் பெயர்கள் இரட்டுற மொழிதலாகவும் ஈறுதிரிந்தும் வருமெனவுங் கூறுவர் மாறனலங்கார ஆசிரியர்.*

*எழுகூற்றிருக்கை யென்னுஞ் சித்திரகவியின் மூல இலக்கியமாகத் திகழ்வது, திருஞானசம்பந்தர் அருளிய திருவெழு கூற்றிருக்கையாகும். அதனை யடியொற்றியதே பதினொராந் திருமுறையிலுள்ள இத்திருவெழுகூற்றிருக்கை. இவ்விரண்டின் சொற்பொருள் நலங்களை உய்த்துணருங்கால் திருஞானசம்பந்தர் பாடிய திருவெழுகூற்றிருக்கையினைப் பின்பற்றியே நக்கீர தேவர் இத்திருவெழுகூற்றிருக்கையினைப் பாடியுள்ளாரென்பது நன்கு புலனாம். நக்கீர தேவர் பாடிய இச்செய்யுளை யாப்பருங்கல விருத்தியுரையாசிரியர் மேற்கோளாக எடுத்துக் காட்டியுள்ளார். பதினொராந் திருமுறை அச்சுப் புத்தகத்திற் காணப்படும் பாடத்திற் சிறிது வேறுபட அமைந்தது யாப்பருங்கல விருத்தியிற் காணப்படும் பாடமாகும்.*

**ஒருடம் பிருவரா யொன்றி யொன்றுபுரிந்
தீரிதழ்க் கொன்றை சூடினை, மூவிலைச்
சூலமேந்தினை, சுடருஞ் சென்னி மிசை
இருகோட் டொருமதி யெழில் பெற மிலைச்சினை
ஒருகணை யிருதோள் செவியுற வாங்கி
மூவெயில் நாற்றிசை முனையரண் செகுத்தனை
யாற்ற முந்நெறி பயந்தனை தேற்றி
இரண்டி னீக்கி யொன்றி னொன்ற
விரண்டு மில் லோர்க்கு
முந்நெறி யுலகங் காட்டினை யந்நெறி
நான்கென வூழி தோற்றினை வான்செலும்
ஐந்தலை யரவரைக் கசைத்தனை நான்முகன்
மேன்முகக் கபால மேந்தினை நூலின்
முப்புரி மார்பினை மூவா மேனியை
இருவரை குடையா வேந்திய வாற்றல்
ஒருபெருங் கடவு ளொருவ னாயினை
யாங்கு நிற் காணா
திருவரு மூவுல கியைந்துடன் றிரிதர
நாற்றிசை,
ஐம்பெருங் குன்றத் தழலாய்த் தோன்றினை
யாறுநின் சடைய தைந்துநின் றுறையே**

நான்குநின் வாய்மொழி மூன்றுநின் கண்ணே
யிரண்டுநின் படையே யொன்றுநின் னேறே
யொன்றியல் காட்சி யுமையவள் நடுங்க
விருங்களிற் றுரிவை போர்த்தனை நெருங்கிய
முத்தீ நான்மறை யைம்புல னடக்கிய
அறுதொழிலாளர்க் குறுதுயர் தீர்த்தனை
ஏழிய லின்னரம் பியக்கினை தாழா
வாறின் னமுதம் பயந்தனை யைந்தினில்
வீறுமா கோவை* விழுத்தக வேந்தினை
*(* வீறுயர் கோவை பா.வே)*
யால நீழ லருந்தவர்க் கறநெறி
நால்வர் கேட்க நன்கினி துரைத்தனை
நன்றியின்,
முந்நீர்ச் சூர்மா முரணறக்கொன்றங்
கிருவரை யெறிந்த வொருவன் றாதையை
யொருமிடற்றிருவடி வாக்கினை * தரும
*(*யொருமிடற்றிருவடி வாக்கினை. பா. வே.)*
மூவகை யுலகுட னுணரக் கூறினை
நால்வகை யிலக்கண விலக்கிய நலம்பட
மொழிந்தனை யைங்கணைக் காமற்காய்ந்தனை
அறுவகைச் சமயமு நெறியுளி வகுத்தனை
ஏழினோசை யிராவணன் பாடத்
தாழாக் கேட்டவன் றலைநனிபொருந்தி
யாறிய சினத்தை யாகி யைங்கதித்
தேரொடு மற்றவன் செல்கென விடுத்தனை
நாற்றோள் நளனே நந்திபிங் கிருடியென்
றாற்றற் பூத மூன்றுடன் பாட
விருகண் மொந்தை யொருகண் கொட்ட
மட்டவீழ் கோதை மலைமகள் காண
நட்ட மாடிய நாதனீ யதனால்
மண்டிணி ஞாலத்து மன்னுயிர்க்கெல்லா
மூழி நின்னடி யேத்திநின்றபல்
லூழியும் பொன்னுல கெய்துவர்காண்பர்
அதனால்,
அறியேன் சொன்ன வறிவில் வாய்மொழி
வறிதெனக் கொள்ளா யுலகம் வேண்டும்
வெறிகமழ் கொன்றையொடு வெண்ணிலவணிந்து
கீதம் பாடிய வண்ணல் நின்
பாதம் பரவுதுஞ் சென்னியிற் பணிந்தே.

என யாப்பருங்கல விருத்தியுரையில் இத் திருவெழு கூற்றிருக்கை மேற்கோளாகக் காட்டப்பெற்றுளது. இப்பாடத்திற்கும் பதினொராந் திருமுறை அச்சுப் புத்தகத்திற் காணப்படும் பாடத்திற்கும் பெரிதும் வேறுபாடுளது. எனினும், எழுகூற்றிருக்கைக்குரிய எண்கள் இயல் பிறழாது அமைந்துள்ளன. இவ்விரு வேறு பாடங்களையும் ஒப்புநோக்கி உண்மைப் பாடத்தினைக் கண்டுணர்தல் அறிஞர் கடனாகும்.

மாதொருபாகனாக விளங்கும் சிவபெருமானது அருளுருவத்தோற்றத்தினையும் அவ்விறைவன் உயிர்களின் நலங்கருதிச் செய்தருளிய அருட்செயல்களையும் நக்கீர தேவர் இத்திருவெழுகூற்றிருக்கையில் தெளிவாக விரித்துரைத்துள்ளமை படித்து இன்புறத்தக்கதாகும்.

## 5. பெருந்தேவபாணி

நக்கீரதேவர் திருவாலவாயிறைவனை முன்னிலைப் படுத்துப் பரவிப் போற்றிய இசைப்பாட்டு பெருந்தேவ பாணியென்ப தாகும். இஃது அறுபத்தேழடிகளாலியன்ற ஆசிரியப்பாவாக அமைந்துள்ளது.

தெய்வத்தை முன்னிலையில் வைத்துப் பரவிய பாடல் தேவபாணியெனப்படும். பாணி - பண்ணோடு கூடியப் பாட்டு. இதனை,

**'ஏனையொன்றே**
**தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே.**

எனவருஞ் செய்யுளியற் சூத்திரத்துள் ஒத்தாழிசைக் கலியின் வகையாகக் குறிப்பிடுவர் தொல்காப்பியர். எனவே தெய்வத்தை முன்னிலையாகச் சொல்லப்பட்டன அன்றி அல்லன தேவபாணியெனத் தகா' என்பது அவர் கருத்தாதல் இனிது புலனாம். தேவபாணியாகிய இஃது இயற்றமிழில் வருங்கால கொச்சக வொருபோகாய்ப் பெருந்தேவபாணி சிறுதேவ பாணியென இருவகைத்தாய் வருமென்றும், அங்ஙனம் வரும் தரவினை நிலையெனவடக்கி முகத்திற் படுந் தரவினை முகநிலையெனவும் இடை நிற்பனவற்றை இடைநிலையெனவும், இறுதியில் நிற்பனவற்றை முரிநிலையெனவும் பரவுதற் பொருண்மையாற் செய்யுள் இயலின் கண் பெயர் கொடுத்தாரென்றும் அடியார்க்கு நல்லார் கூறுவர். இசைப்பா இசையளவு பா என்னும் இரு பகுதியுள் இத்தேவபாணி இசைப்பாவின் பகுதியென்றும், செந்துறை, வெண்டுறை, பெருந்தேவபாணி, சிறுதேவபாணி, முத்தகம் பெருவண்ணம், ஆற்றுவரி, கானல்வரி, விரிமுரண், தலைபோகுமண்டிலம் என இசைப்பா பத்துவகைப்படுமென்றும் கூறுவர் ஒருசாராசிரியர்.

**'செந்துறை வெண்டுறை தேவபாணிய்யிரண்டும்**
**வந்தன முத்தகமே வண்ணகமே - கந்தருவத்**
**தாற்றுவரி கானல் வரிமுரண் மண்டிலமாத்**
**தோற்று மிசையிசைப்பாச் சுட்டு'**

*என்றார் இசை நுணுக்கமுடைய சிகண்டியார். இனி சுத்தம் சாளகம் தமிழ் என்னுஞ் சாதியோசைகள் மூன்றினுடனும் கிரியைகளுடனும் பொருந்தும் இசைப்பாக்கள் சிந்து, திரிபதை, சவலை, சமபாத விருத்தம், செந்துறை, வெண்டுறை, பெருந்தேவபாணி, சிறுதேவபாணி, வண்ணம் என ஒன்பது வகைப்படுமென்றலும் உண்டு.*

**செப்பரிய சிந்து திரிபதை சீர்ச்சவலை**
**தப்பொன்று மில்லாச் சமபாத - மெய்ப்படியுஞ்**
**செந்துறை வெண்டுறை தேவபாணி வண்ணமென்ப**
**பைந்தொடியாய் இன்னிசையின் பா.**

*என்றார் பஞ்சமரபுடைய அறிவனார்.*

*இத்தேவபாணி இயற்றமிழிலக்கணத்தின் படி கலிப்பா வகையைச் சார்ந்தனவென்பது, 'ஏனையொன்றே, தேவர்ப் பராஅய முன்னிலைக்கண்ணே' எனவருஞ் செய்யுளியற் சூத்திரத்தானும், ஏனையொன்று எனப்பட்ட தேவபாணி ஒத்தாழிசை' எனவும், 'வெண்பாவினான் முடியுங் கொச்சக வொரு போகு தேவபாணியாய் வந்தன கண்டுகொள்க' எனவும், 'தலையளவு வண்ணகப் பெருந்தேவபாணி' எனவும் வரும் பேராசிரியர் உரைத்தொடர்களாலும் நன்கு துணியப்படும். சிறுதேவபாணி, பெருந்தேவபாணியென்ற பெயர்களிற் குறிக்கப்படும் சிறுமை பெருமையென்பன செய்யுளின் அடிச்சிறுமையையும் பெருமையையும் முறையே குறித்து நின்றன வெனக் கொள்ளுதல் பொருந்தும்.*

*தொல்காப்பியனா:ர் கூறுமாறு கலிப்பா வகையிலமைதற் குரிய தேவபாணியாகிய இசைப்பாட்டு பிற்காலத்தில் யாப்புவேறுபட்டு ஆசிரியம் முதலிய பிறபாக்களிலும் இயற்றப் பெறுவதாயிற்றென்பது நக்கீரதேவர் இத்தேவபாணியை ஆசிரியப் பாவினாற் பாடியிருத்தலாற்புலனாம். நக்கீரதேவர் பாடிய இவ்வாசிரியப்பாட்டு, அறுபத்தேழடிகளால் நீண்ட பெருமை யுடையதாய், முழுமுதற்கடவுளாகிய சிவபெருமானை முன்னிலைப்படுத்து அவ்விறைவனது திருவருட்டிறத்தைப் பண்பொருந்தப் பரவிப் போற்றுவதாதலின் பெருந்தேவபாணி யெனப் பெயர் பெறுவதாயிற்று. தொல்காப்பியச் செய்யுளிய லுரையில் மேற்கோளாகக் காட்டப் பெற்றுள்ள பெருந்தேவ பாணியாகிய பாடல்களுக்குப் பண்ணுந் தாளமும் வகுக்கப்*

பெற்றுள்ளன. அவற்றை நோக்குங்கால் நக்கீரதேவர் பாடிய இப்பெருந் தேவபாணிக்கும் பண்ணுந்தாளமும் வகுக்கப் பட்டிருத்தல் வேண்டுமென்பது நன்குபுலனாம். இப்பாடலுக்கு முன்னோர் வகுத்த பண்ணுந் தாளமும் பயில்வாரில்லாமையால் ஏடுகளிற் குறிக்கப்படாது மறைந்தனபோலும்.

இறைவனுடைய திருப்பெயர்களையும் மன்னுயிர்களை உய்வித்தல் வேண்டி அவ்விறைவன் செய்தருளிய அருட் செயல்களையும் உலகெலாமாகி வேறாய் உடனுமாய் யாண்டும் நீக்கமற நிறைந்துள்ள இறைவனது மெய்ம்மைத்தன்மையையும் நக்கீரதேவர் இப்பெருந்தேவபாணியில் எடுத்துரைத்துப் போற்றியுள்ளார். நக்கீர தேவர் திருவாலவாயிறைவனை நோக்கி, 'சொலற்கருந்தன்மைத் தொல்லோனாகிய நீ, உயர்மதிற் கூடலின் ஒள்ளிய தீந்தமிழை ஆராய்ந்த பெரியோன் என்பதனையுணராது நின்னை அருமை நிறைந்த தமிழ்ப்பாடலாற் போற்றிப் பரவினேன். அடியேன் எல்லா நூற்பொருளுந் தன் பொருளே யாகத் திரண்டு கூடிய சிறப்பினையுடைய நின் இணையடிக்கீழ் அடங்கி நின்று நின்னைப் பரவிப் போற்றுவதாகிய இவ்வரத்தினையே மேன்மேலும் நின்பால் வேண்டுகின்றேன், என்பார்,

**சொலற்கருந் தன்மைத் தொல்லோய் நீயே**
**கூட லாலவாய்க் குழகனாவ**
**தறியா தருந்தமிழ் பழிச்சினன் அடியேன்**
**ஈண்டிய சிறப்பின் இணையடிக்கீழ் நின்று**
**வேண்டுமது வினிவேண்டுவன் விரைந்தே.**

எனப் பரவிப் போற்றியுள்ளார்.

இறைவனை முன்னிலைப் படுத்துப் பரவிப்போற்றும் இத்தேவபாணியில் வரும் நீலகண்டன், நெற்றியோர் கண்ணன், பால் வெண்ணீற்றன், நூலணிமார்பன் முதலிய அன்னீற்று ஆண்பாற் படர்க்கைப் பெயர்கள் அன்விகுதியின்மேல் ஐகாரவிகுதியும் பெற்று முன்னிலையொருமைப் பெயர்களாய்த் திரிந்துள்ளன. இங்ஙனம் படர்க்கையிடத்திற்குரிய அன்னீற்றுச் சொல் ஐ விகுதி பெற்று முன்னிலைச் சொல்லாய் மாறும். இச்சொல் வழக்கு சங்கத்தொகை நூல்களிற் காணப்படாத புதுமையுடையதாகும். 'நினைப்பவர் மனங்கோயிலாக் கொண்டவன்' என்ற திருநாவுக்கரசர் வாய்மொழியை யுளத்துட் கொண்டு, 'நேசனை நினைப்பவர் நெஞ்சத்துள்ளனை' யென்றும், 'தாயும் நீயே தந்தை நீயே சங்கரனே' எனத் திருஞான சம்பந்தப் பிள்ளையார் அன்பினாலழைத்த திறத்தினை நினைந்து 'தாயும் நீயே தந்தையும் நீயே' யென்றும், 'சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க' எனத் திருவாதவூரடிகள் அருளிய மெய்ம்மொழியை

எண்ணிச் 'சொலற்கருந்தன்மைத் தொல்லோய் நீயே' யென்றும் இத்தேவ பாணியில் நக்கீரதேவர் போற்றியுள்ளமை காணலாம். இத் தேவபாணியை யடுத்து,

**விரைந்தேன்மற் றெம்பெருமான் வேண்டியது வேண்டா**
**திகழ்ந்தேன் பிழைத்தேன் அடியேன்- விரைந்தென்மேற்**
**சீற்றத்தைத் தீர்த்தருளு தேவாதி தேவனே**
**ஆற்றவுநீ செய்யும் அருள்.**

எனவரும் வெண்பா அமைந்துள்ளது. 'என்னிலும் இனிய எம்பெருமானாகிய நீ என் பொருட்டு விரும்பியறிவுறுத்திய நல்வழியை யான் விரும்பாது அதற்கு மாறான தீயவழியில் விரைந்து சென்றேன். நினது அருளாணை வழி ஒழுகாது சோர்வுற்றமையால் தவறு செய்தே னாயினேன். நினது அருளாணைக்கு மாறுபட நடந்த எளியேன்பாற் கொண்ட சினத்தை யொழித்து அடியேற்கு அருள் செய்வாயாக. இதுவே உயிர்கள்பாற் பேரிரக்கமுடையனாகிய நினது அருளின் நீர்மையைப் புலப்படுத்துவதாகும்' என இறைவனைப் பரிந்து வேண்டுவது இத்திருப்பாட்டாதலின் இதுவும் நக்கீர தேவர் வாக்கே யெனக் கொள்வது ஏற்புடையதாகும்.

## 6. கோபப் பிரசாதம்

வேண்டுதல் வேண்டாமையிலானாகிய சிவபெருமான் தன் திருவருளாணைவழி நில்லாத தீயோரைக் கோபித்தும் தனது அருள்வழியொழுகும் நல்லோரைக் காத்தும் மன்னுயிர்களின் நலங்கருதிச் செய்தருளிய தெறலும் அளியுமாகிய இருவகைச் செய்திகளையும் அடுத்தடுத்து எடுத்துரைப்பது நக்கீரதேவர் பாடிய கோபப் பிரசாதம் என்னும் பிரபந்தமாகும். இது தொண்ணூற்றொன்பது அடிகளால் இயன்ற ஆசிரியப்பாவாகும். இதன் கண் இறைவன் அவ்வக்காலந்தோறும் செய்தருளிய அளியும் தெறலுமாகிய செய்திகள் பலவற்றைக் குறிப்பிட்டு 'இன்னவை பிறவும எங்களீசன் கோபப் பிரசாதம்' என நக்கீர தேவர் கூறுதலால் இப்பாட்டிற்கு அவ்வாசிரியர் இட்ட பெயர் 'கோபப் பிரசாதம்' என்பது நன்கு புலனாகின்றது. ஈண்டுக் கோபம் என்றது வெகுளியின் விளைவாகிய ஒறுத்தற் றொழிலையும் பிரசாதம் என்றது அருளின் விளைவு ஆகிய அளித்தற்றொழிலையும் உணர்த்துதல் காண்க.

தம்பால் அடைக்கலமெனச் சார்ந்தாரைக் காப்பது தலையாய பெருமக்களது கடமையாதலானும், தன் ஆணைவழி யடங்காத கொடியோரை ஒறுத்தல் வேந்தனது முறைமையாக லானும் எவ்வுயிர்க்குந் தலைவனாகிய இறைவனும் தன்பால் அன்புடையராய் அருளாணைவழி அடங்கியொழுகும்

மெய்யடியார்களைக் காத்தலும் அருள் ஆணைவழியொழுகாத தீயோரைச் சினந்து ஒறுத்தலும் ஆகிய இவ்விரு தொழில்களையும் தனக்குரிய கடமையும் முறைமையுமாக மேற்கொண்டு உள்ளான். அளியுந் தெறலுமாகிய இத்தொழில்களை இறைவன் மேற்கொள்ளுதற்குக் காரணமாவன உயிர்கள் செய்த நன்றுந் தீதுமாகிய இருவினைகளேயாம். இருவினைப் பயன்களை உயிர்களுக்கு அருத்துதல் முதல்வனது அருளாணையாதலின் அப்பயன்களை நுகர்விக்கும் நிலையில் ஒரு திறத்தாரை விரும்புதலும் மற்றொரு திறத்தாரை வெறுத்தலும் ஆகிய மனக்கோட்டம் இறைவனுக்கு உண்டாதலில்லை. எவ்வுயிர்க்கும் இன்பந்தருதலாற் சங்கரன் என்பது இறைவனுக்குரிய காரணப் பெயராகும். எனவே அவ்விறைவனாற் செய்யப்படும் ஒறுத்தற் றொழிலும் அருளின்வழிப்பட்டதே யாகும். இறைவனது திருவருளாணைவழி அடங்கி யொழுகுவோர் செய்வன வெல்லாம் அறத்தின்பாற்பட்டன. அவ்வருள் ஆணைவழி அடங்கி நில்லாதோர் தன்முனைப்பினாற் செய்யுந் தொழில்கள் தீமையுடையன என்பது திருநெறித் தமிழ்வல்ல சான்றோர்களது கொள்கையாகும். இவ்வுண்மையை உளத்துட்கொண்டு நக்கீரதேவர் பாடிய கோபப் பிரசாதம் என்னும் இத்திருப்பாடலின் பொருளை ஆராய்ந்துணர்தல் அறிஞர் கடனாகும்.

'தவறுபெரிதுடைத்தே தவறு பெரிதுடைத்தே' என இப்பாடலைத் தொடங்கிய நக்கீரதேவர், 'மூர்க்க மாக்களை இன்னே கொண்டேகாக் கூற்றம், தவறு பெரிதுடைத்தே' என முடிக்கின்றார். இறைவன் அவ்வக் காலந்தோறும் செய்தருளிய அளியுந் தெறலுமாகிய செயல்கள் இப்பாடலின் முதற்கண் முறைப்படச் சொல்லப் பெற்றுள்ளன.

இறைவன் செய்தருளும் அருட்செயல்களை நான்முகன் இந்திரன் முதலிய தேவர்கள் ஓரளவு எடுத்துரைத்தற்கு ஏற்ற அறிவுடையாரெனினும் பெருங்கடல் நீரைக் கையினால் இறைக்க முயன்று குருடனைப் போன்று அதனை முற்றமுடித்தற்கேற்ற அறிவாற்றல் பெறாதுள்ளார்கள். ஐம்பொறி வழியாகச் செல்லும் ஐந்தவாவினையும் அடக்கும் அறிவாற்றல் பெறாத மாந்தர் தம்மையொத்துப் புலனடக்கப் பெறாத இந்திரனைப் பரம்பொருள் எனக்கூறுவர். இன்ன தன்மையன் என அறிய வொண்ணாதபடி வாக்கும் மனமுங் கடந்து விளங்கும் முழுமுதற்பொருள் ஆகிய சிவபெருமானைச் சரணெனச் சாராது ஏனைப் பிறந்திறந்துழலுந் தேவர்களைக் கடவுளாக நினைப்போர் முயலைத் தொடராது இழிந்த காக்கையைப் பிடிக்கச் செல்லும் வேடர்களாகிய மூடர்களைப் போன்றும் குளிர் நீங்கச்

சுடர்வழங்க வல்ல விளக்கிருக்கவும் அதனைச் சார்ந்து பயன்பெறாது மின்மினிப் பூச்சியைத் தீயென மயங்கிக் குளிர்காய நினைக்கும் பேதையரைப் போன்றும் காலத்தை வீணே கழிக்கின்றார்கள். தன்னை வழிபடுபவரது இடர்களைக் களைய மடிதற்றுத் தான் முந்துறும் முழுமுதற் பொருளாகிய இறைவனை எண்ணாது இடர்நீக்கும் ஆற்றலற்ற ஏனைக் கொச்சைத் தேவரைக் கடவுளென்றெண்ணி பித்தேறியவர்களாய் ஆரிய மொழியில் தாம் பயின்று பெற்ற புத்தகப்படிப்பையே பேய்போன்று விடாப் பிடியாகப் பற்றிக்கொண்டு இன்னோர் திறம்பட வாதஞ்செய்வர். தாம் விரும்பியவற்றைப் பேசி வடிவால் மக்களே போன்று திரியும் இவர்கள் மிகவும் அறியாமையுடையர். இவ்வுலகில் ஒருவன் மற்றொருவனைப் பார்த்து உனது தலையிலுள்ள மூளைப்பகுதி மீனின் தலையை விட எட்டுப்பலம் மிகுதியுடையது எனக் கூறினால் அது சரிதானா எனத் தெரிந்து கொள்ள விரும்பி அவனாற் சுட்டப்பட்டவனது தலையை யறுத்துச் சரிபார்த்தற்கு யாரும் உடன்பட மாட்டார்கள். இவ்வாறு மக்களது அநுபவ உணர்வுக்கு ஒவ்வாத வகையிற் புனைந்துரை வழக்கிற் பேசப்படும் சிறு தேவர்கள் முழுமுதற் கடவுளென்பது உண்மையானால் அத்தேவர்கள் தமது ஆற்றலால் இன்னாரை அழித்தார்க ளெனவும் இன்னாரைப் பாதுகாத்தார்களெனவும் அன்னோர் தம்மை வழிபட்டாரை வாழ்வித்தல் வேண்டி மேற்கொண்ட ஒறுத்தற் செயல்களையும் அளித்தற் செயல்களையும் உலக மக்களறியத் தெளிவாக எடுத்துரைத்தல் வேண்டும். இங்ஙனம் இவர்கள் தம் கொள்கையினை ஏதுவும் எடுத்துக்காட்டும் தந்துரைப்பது இல்லை. எனினும் உரனில்லாத ஆடுகளைப் போல அச்சத்தாற் கூடிக்கதறியும் நினை விலங்குகளைப் போல ஐம்புல வேட்கையிற் சிக்குண்டு வருந்தியும் இவ்வுலக வாழ்வில் தாம்பெற்ற சிற்றறிவையே பேரறிவெனக் கொண்டு மயங்கியும் உயிர்க்குயிராகிய இறைவனை இன்ன தன்மையன் என அவனருளால் உணர்ந்து கொள்ள மாட்டாத மூர்க்கர்களாக உள்ளார்கள். இத்தகைய தீயோர்களால் இவ்வுலகிலுளவாந் தொல்லைகளுக்கு எல்லையேயில்லை ஆதலின் இத்தகையோரது உயிரை இப்போழுதே கவர்ந்து செல்லுதல் கூற்றுவனது கடமையாகும். இக்கடமையை உரிய காலத்தில் செய்யாத கூற்றம் பெரிதும் குற்றமுடையதே' என நக்கீரதேவர் மனம் வருந்திக் கூறுவதாக அமைந்தது இப்பாட்டு.

'முயல்விட்டுக் காக்கைப்பின் போதல்' என்பதொரு பழமொழி. வேட்டைக்குச் செல்வோன் தன்னால் தொடர்ந்து பிடித்தற்குரியதும் நிறைந்த தசையுடையதும் ஆகிய முயலைத் தொடராமல் தசைப் பற்றில்லாத பறவையாகிய இழிந்த

காக்கையை நாடித்திரிதல் பயனில்லாத முயற்சியாகும். பயனுடைய நற்செயல்களை விடுத்துப் பயனில்லாத வெறுஞ் செயல்களிற் காலத்தைக் கழிக்கும் வீணர்களின் இயல்பினை விளக்குவதற்கெழுந்த பழமொழிகளில் இதுவும் ஒன்று. 'விளக்கிருக்கமின்மினித் தீக்காய்தல்' என்ற பழமொழியும் இக்கருத்தில் வழங்குவதேயாகும். இப்பழமொழிகள் திருநாவுக்கரசர் பாடிய பழமொழித் திருப்பதிகத்தில் எடுத்தாளப் பெற்றுள்ளன. நாவுக்கரசர் பதிகத்திற் காணப்படும் இப்பழமொழி களை நக்கீரதேவர் தாம் பாடிய கோபப் பிரசாதத்தில் எடுத்து ஆண்டதிறம் கூர்ந்துணரத் தக்கதாகும்.

பரம்பொருளாகிய தெய்வம், தன்னை வழிபட்டாரது குடும்பத்தை மேன்மேல் உயர்த்தும் பேராற்றலும் பெருங்கருணையு முடையது என்னும் உண்மையினை,

**குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ**
**மடிதற்றுத் தான் முந்துறும்.**

எனவருந் திருக்குறளில் தெய்வப்புலவர் தெளிவாக எடுத்துக் கூறியுள்ளார். திருவள்ளுவர் கூறிய இத்தெய்வத் தன்மை இந்திரன் முதலிய தேவர்களுக்கில்லையென்பார். 'கச்சங்கொண்டு கடுந்தொழில் முடியாக் கொச்சைத் தேவர்' என்றார் நக்கீரதேவர். கச்சம் - ஆடை, கச்சங்கொண்டு என்பதற்கு ஆடையை இறுகவுடுத்து என்பது பொருள். தான் ஐம்புலன்களை அடக்காமல் சாபமெய்தி நின்று புலன் அடக்கிய கௌதம முனிவனது ஆற்றலை விளக்கியவன் இந்திரனாதலின் 'ஒடுங்காப் பெருமை உம்பர் கோன்' என்றார். 'ஐந்தவித்தானாற்றல் அகல் விசும்புளார் கோமான் இந்திரனே சாலுங்கரி' என்றார் திருவள்ளுவரும்.

**'உள்ள முள்கசிந் துள்க வலார்க்கலாற்**
**கள்ள முள்ளவழிக் கசிவானலன்'**

எனத் திருநாவுக்கரசரும்,

**'தாயேயாகி வளர்த்தனை போற்றி'**

**'மாற்றமனங்கழிய நின்ற மறையோனே'**

எனத் திருவாதவூரடிகளும் அருளிய பொருளுரைகளை,

**'கள்ளங் கைவிட் டுள்ளம துருகிக்**
**கலந்து கசிந்துதன் கழலிணையவையே**
**நினைத்திட வாங்கே தோன்று நிமலனை'**

**'தாயாய் மன்னுயிர் தாங்குந் தலைவனை'**

**'வாக்கு மனமும் இறந்த மைந்தனை'**

எனவருங் கோபப் பிரசாதத் தொடர்கள் நினைவு படுத்தல் காணலாம்.

## 7. காரெட்டு

தலைவனது பிரிவினால் வருத்தமுற்ற தலைமகளை நோக்கிக் 'கார்ப்பருவம் வந்தது, இனித் தலைவரும் வந்து விடுவார்' என்று கூறித் தோழி வற்புறுத்துவதாக அமைந்தது, நக்கீர தேவர் பாடிய காரெட்டு என்னும் இப் பிரபந்தமாகும். இந்நூல் கார்ப்பருவ வரவினைக்கூறும் எட்டுப் பாடல்களால் இயன்றமையாற் காரெட்டு என்னும் பெயருடையதாயிற்று. கார்ப்பருவ வரவினைக் கூறும் நாற்பது பாடல்களால் இயன்ற கீழ்க்கணக்கு நூல் கார் நாற்பது எனப் பெயர் பெற்றமைபோலக் கார்கால வரவினைக் கூறும் எட்டுப் பாடல்களாலியன்ற இப்பிரபந்தமும் காரெட்டு எனப் பெயர் பெற்றதெனத் தெரிகிறது. உலகமும் அதற்குறுதியாகிய அறம்பொருளின்பங்களும் நடத்தற் கேதுவாகிய மழையினது வரவினை எடுத்து உரைக்கு முகத்தால் அம்மழைக்குக் காரணமாகிய இறைவனது திருவருள் வண்ணத்தை நினைப்பிப்பது இப்பிரபந்தம் ஆகும்.

மேகமானது சிவபெருமானது திருநீலகண்டத்தைப் போன்று கருநிறமுடையதாய், இறைவன் கையிலேந்திய வில்லினைப் போன்ற வானவில்லைத் தாங்கி, ஐந்தலையரவினை அணிகலனாகப் பூண்ட அப்பெருமானது ஒளிகிளர் சடைக் கற்றையினையொத்து மின்னி, அவன் திருவடியில் அணியப் பெற்றுள்ள வீரக் கழலினையொத்து முழங்கிய தோற்றத்தினை,

**மையார் மணிமிடறு போற்கருகி மற்றவன்றன்**
**கையார் சிலைவிலகிக் காட்டிற்றே - ஐவாய்**
**அழலரவம் பூண்டான் அவிர்சடைபோல் மின்னிக்**
**கழலரவம் காண்புற்ற கார்.**

எனவரும் பாடல் சுவைபெற விரித்துரைப்பதாகும். இது போன்றே இந்நூலிலுள்ள ஏனைய பாடல்களும் கார்காலத்து மேகத் தோற்றத்தைப் புனைந்துரைக்கும் வாயிலாகத் 'தொண்ட வழவர் ஆரத்தந்த அண்டத் தரும்பெறல் மேகன்' எனப் போற்றப்பெறும் சிவபெருமானது அருளின் நீர்மையைப் புலப்படுத்தும் முறையில் அமைந்துள்ளமை படித்து இன்புறத்தக்கதாகும். இந்நூலின் நான்காம் பாடலின் இறுதியடியாகிய 'காம்பினங் கடோளீயக்கார்' என்பது 'காம்பினங்கொ டோளீயக் கார்' என்றிருத்தல் வேண்டும். காம்பினங்கொள் தோளீ என விளியாக்கி, அக்கார் ஆர்த்தது என வினைமுடிபு செய்க.

## 8. போற்றித் திருக்கலிவெண்பா

சிவபெருமான் உலக உயிர்களுக்கு அருள்புரிதல் வேண்டி அவ்வக் காலந்தோறும் செய்தருளிய அருட்செயல்களை எடுத்துரைத்துப் போற்றுங் கருத்துடன் நக்கீர தேவர் பாடிய பிரபந்தம் போற்றித் திருக்கலி வெண்பா என்பதாகும். இறைவனது பொருள்சேர் புகழைப் போற்றிப் பரவுங் கருத்துடன் திருநாவுக்கரசர் பாடிய திருத்தாண்டகம் போற்றித் திருத்தாண்டவம் எனவும் திருவாதவூரடிகள் பாடிய அகவல் போற்றித் திருவகவல் எனவும் பெயர்பெற்று வழங்குமாறு போல நக்கீரதேவர் பாடிய இக்கலிவெண்பாவும் போற்றித் திருக்கலிவெண்பா எனப் பெயர் பெற்று வழங்குவதாயிற்று.

இக் கலிவெண்பா நாற்பத்தைந்து கண்ணிகளை உடையது. இதன்கண் சிவபெருமான் செய்தருளிய அருட் செயல்கள் விரித்துரைத்துப் போற்றப் பெற்றுள்ளன.

**"நேசத்தால்**
**வாயினீர் கொண்டு மகுடத் துமிந்திறைச்சி**
**ஆயசீர்ப் போனகமா அங்கமைத்துத் -தூயசீர்க்**
**கண்ணிடந்த கண்ணப்பர் தம்மைமிகக் காதலித்து**
**விண்ணுலகம் ஈந்த விறல்போற்றி - மண்ணின்மேற்**
**காளத்தி போற்றி கயிலைமலை போற்றியென**
**நீளத்தினால் நினைந்து நிற்பார்கள் - தாளத்தோ**
**டெத்திசையும் பன்முரசம் ஆர்த்திமையோர் போற்றிசைப்ப**
**அத்தனடி சேர்வார்க ளாங்கு"**

என இந்நூல் முடிவு பெறுதலை நோக்குங்கால் இந்நூலின் ஆசிரியராகிய நக்கீர தேவர் திருக்காளத்தியை அடைந்து கண்ணப்ப நாயனாரால் வழிபாடு செய்யப் பெற்ற சிவபெருமானைப் பணிந்து போற்றும் நிலையில் போற்றித் திருக்கலிவெண்பாவென்னும் இந்நூலைப் பாடியிருத்தல் வேண்டுமென்பது புலனாகும்.

## 9. திருமுருகாற்றுப்படை

தன்னிகரற்ற தலைவனொருவன்பால் பரிசில் பெற்று வரும் கூத்தர், பாணர், பொருநர், விறலி முதலிய பரிசில்வாணர்கள் வழியிடையே தம்மை யெதிர்ப்பட்ட இரவலர்களது துயர்கண்டிரங்கித் தாம் பெற்ற பெருஞ்செல்வத்தை அவர்களும் பெற்று மகிழும்படி வழிகூறியனுப்புதலாகப் பாடப்பெற்ற பிரபந்தம் ஆற்றுப்படை யெனப்படும். ஆற்றுப்படை யென்பதற்கு வழிப்படுத்தல் என்பது பொருள். வரையாது வழங்கும் வள்ளலொருவனை யடைந்து வளம்பெற்ற வாழ்க்கைநிலை

யெய்திய பரிசிலர்கள், தாம் பெற்ற பெருவளத்தை ஏனையோரும் பெற்று இன்புறுமாறு வழிகூறியனுப்புதலாகிய இப்பேருதவியை,

**"கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**
**ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்**
**பெற்ற பெருவளம் பெறா அர்க் கறிவுறீஇச்**
**சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமும்"**

எனப் புறத்திணையியலிற் பாடாண்டினைத் துறைகளுள் ஒன்றாகக் குறிப்பிடுவர் தொல்காப்பியனார். ஆடுதற்றொழிலில் வல்ல கூத்தரும், பண்ணொடு பாடுதலில் வல்ல பாணரும், பிறர் மனத்துக் கொண்டதனைக் குறிப்பால் அறிந்து இசைபட நடித்துக் காட்டவல்ல பொருநரும், மனக்குறிப்பு மெய்க்கண் புலப்பட ஆ்டவல்ல விறலியும் என்னும் நால்வகையோரும் தமது செல்வப் பொலிவும் தம்மெதிர்ப்பட்ட பரிசிலர்களது வறுமைத் தோற்றமும் ஒன்றினொன்று மாறுபட்டுத் தோன்ற, வழியிடையே சந்தித்தபொழுது, தமக்கு இத்தகைய பெருஞ் செல்வத்தை வழங்கியவர் இன்னாரெனவும் அவரை யடைந்து பரிசில் பெறுதற்குரிய வழிமுறைகள் இவையெனவும் தம்மை யெதிர்ப்பட்ட பரிசிலர்க்கு அறிவுறுத்தி, அன்னோர் தாம் கூறிய நெறியே சென்று பரிசில்பெற வழிசொல்லி அனுப்பிய பகுதி ஆற்றுப்படை யென்னுந் துறையாம் என்பது மேற்காட்டிய தொல்காப்பியத் தொடரின் பொருளாகும். இத்தொடரிற் கூறிய இலக்கணத்தின்படி அமைந்த ஆற்றுப்படைகளாவன கூத்தராற்றுப்படை, பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, விறலியாற்றுப்படை யென்பனவாம். இவற்றுக்குரிய இலக்கியங் களாகப் பத்துப்பாட்டில் பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப் படை, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடா மென்னுங் கூத்தராற்றுப்படை ஆகிய பாடல்களையும் புறநானூற்றில் விறலியாற்றுப்படையென்ற துறையிலமைந்த பாடல்களையும் கொள்ளலாம்.

வாழ்க்கைத் துறையில் வளம்பெற்றோர், தம்போல் வளம்பெறாதாரை நோக்கி வருந்தி, அவரும் தம்போல் வளம்பெற்று வாழ்தற்கேற்ற வழிமுறைகளைத் தெரிவிப்பதே ஆற்றுப்படை யென்னும் இப்புறத்துறையின் நோக்கமாகும். யான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்றெண்ணிப் பரந்தவுள்ளத்துடன் ஒருவர்க் கொருவர் தத்தம் அநுபவங்களை எடுத்துரைத்து வையத்து வாழ்வாங்கு வாழ வழிகாட்டியுதவும் இத்தெய்வ அருட்குறிப்பினை,

**ஆற்றிடைக் காட்சியுறழத் தோன்றிப்**
**பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்**
**சென்று பயனெதிரச் சொன்ன பக்கம்**

எனவருந் தொடரால் ஆசிரியர் தொல்காப்பியனார் இனிது விளக்கியுள்ளார். இத்தொடர்ப் பொருளை ஊன்றி நோக்குங்கால் இங்குச் கிளந்தோதப் பெற்ற கூத்தர், பாணர், பொருநர், விறலி யென்னும் இவர்களே யன்றி இவர்களைப் போன்று ஏனைக் கலைத்துறைகளிற் பயிற்சியுடைய பிறரும் தம் எதிர்ப்பட்ட மக்களை மேன்மேலுயரச் செய்தல் வேண்டுமென்னும் அருள் நோக்குடன் நல்வழியிற் செலுத்துதற்குரிய ரென்பதும், இங்ஙனம் வெவ்வேறு கலைத்துறைகளில் வல்ல சான்றோர் பலரும் தத்தம் பயிற்சி நிலையையும் வாழ்க்கை அனுபவத்தையும் எடுத்துரைத்துத் தம்மையொத்த மக்களை நல்வழிபடுத்துதலாகிய பல்வேறு முயற்சிகளும் ஆற்றுப்படை யாகிய இத்துறையில் அடங்கு மென்பதும் ஆசிரியர் கருத்தென்பது நன்கு விளங்கும். ஆகவே தொல்காப்பியனார் கிளந்தோதிய கூத்தர், பாணர், பொருநர், விறலி யென்போர் கூற்றாக அமைந்த ஆற்றுப் படைகளே யன்றிப் புலவர் முதலியோர் கூற்றாக அமைந்த ஏனைய ஆற்றுப்படைகளும் தொல்காப்பியனார் அறிவுறுத்திய ஆற்றுப்படை இலக்கணத்தின்படி யமைந்த ஆற்றுப்படைக ளெனவே கொள்ளுதல் வேண்டும்.

இவ்வாறு ஆற்றுப்படையென்னுந் துறையில் அமைந்த செய்யுட்களின் பொதுவியல்பினைக் கூர்ந்து நோக்குங்கால் பத்துப்பாட்டுள் முதற் பாட்டாகவும் பதினொராந் திருமுறையிற் பதினேழாவது பிரபந்தமாகவும் தொகுக்கப் பெற்றுள்ள திருமுருகாற்றுப்படை யென்ற பனுவல், தொல்காப்பியனார் கூறிய ஆற்றுப்படை இலக்கணத்தின்படி அமைந்ததே யென்னும் உண்மை நன்கு தெளியப்படும். இங்ஙனம் எல்லா வகையான ஆற்றுப்படைகளுக்கும் பொது விலக்கணமாக அமைந்ததே "ஆற்றிடைக் காட்சியுறழத் தோன்றிப், பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச், சென்று பயனெதிரச் சொன்ன பக்கம்" எனவரும் தொல்காப்பியத் தொடராகும். இத் தொடர்க்கு,

"இல்லறத்தை விட்டுத் துறவறமாகிய நெறியில் நிற்றல் நன்றென்றும் கண்ட காட்சி தீதென்றும் மாறுபடத் தோன்றுகையினாலே தான் இறைவன் இடத்துப் பெற்ற கந்தழியாகிய செல்வத்தை யாண்டுந் திரிந்து, பெறாதார்க்கு இன்னவிடத்தே சென்றாற் பெறலாம்" என்று அறிவுறுத்தி, "அவரும் ஆண்டுச் சென்று அக் கந்தழியினைப் பெறும்படி சொன்ன கூறுபாடு" எனப் பொருள் வரைந்து தெய்வத்தினிடத்து ஆற்றுப் படுத்துவதாகிய ஆற்றுப்படைக்குரிய சிறப்பு இலக்கணமாக இதனைக் கொண்டார் நச்சினார்க்கினியர். இங்ஙன மன்றி இதனை ஆற்றுப்படையின் பொதுவிலக்கண மாகவே கொள்ளினும் தெய்வத்தின் பால் உய்ப்பதாகிய இத்

திருமுருகாற்றுப்படை தொல்காப்பிய விலக்கணத்தின்படி யமைந்த ஆற்றுப்படைகளு ளொன்றாதல் புலனாம்.

முருகாற்றுப்படை யென்பதற்கு முருகன்பால் வீடுபெறுதற்குச் சமைந்தானோர் இரவலனை வீடுபெற்றா னொருவன் முருகனிடத்தே ஆற்றுப்படுத்த தென்பது பொருளாகக் கொள்க என்பர் நச்சினார்க்கினியர். இதனைப் புலவராற்றுப்படை யென்ற பெயரால் வழங்குதல் வேண்டுமெனக் கருதுவர் சிலர். கூத்தராற்றுப்படை, பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, விறலியாற்றுப்படையென ஏனைய ஆற்றுப்படைகளெல்லாம் ஆற்றுப்படுத்துவோர் தலைமை தோன்ற அவர் பெயரால் வழங்குமாறு போல், முருகன்பால் முதுவாயிரவலனாகிய புலவனைப் புலமைச் செல்வரொருவர் ஆற்றுப்படுத்துவதாக அமைந்த இத் திருமுருகாற்றுப்படையும் ஆற்றுப்படுத்துவோராகிய புலவர் பெயராற் புலவராற்றுப் படையென வழங்கப் பெறுதல் வேண்டுமென்பது அன்னோர் கருத்தாகும். புலவராற்றுப்படை யென்றபெயரால் நூல் நுதலிய சமயப்பொருள் விளங்கமாட்டாது போகவே, அப்பொருள் எளிதில் விளங்குமாறு பாட்டுடைத் தெய்வத்தின் பெயரோடு சார்த்தி இப்பனுவல் வழங்கலாயிற்றென்றும், இப்புது வழக்கம் பரவிவிட்ட காரணத்தால் புலவராற்றுப்படை யென்ற பழம்பெயர் வழக்கு வீழ்ந்ததாதல் வேண்டுமென்றும் மேற்கூறிய கருத்திற்கு விளக்கங் கூறுவதும் உண்டு. புலவராற்றுப்படை யென்ற பெயர் திருமுருகாற்றுப்படைக்கு என்றும் வழங்கியதில்லை. நச்சினார்க்கினியர் காலத்தில் வாழ்ந்த அறிஞர் சிலர் புலவராற்றுப்படை யென்றபெயரால் திருமுருகாற்றுப் படையை வழங்கத் தொடங்கிய நிலையில் ஆசிரியர் நச்சினார்க்கினியர் திருமுருகாற்றுப்படைக்கு அப்புதுப்பெயர் பொருந்தாதென எடுத்துக் காட்டித் தெருட்டி உள்ளார். “இதனைப் புலவராற்றுப் படையென்று உய்த்துணராது பெயர் கூறுவார்க்கு முருகாற்றுப்படையென்னும் பெயரன்றி அப்பெயர் வழங்காமையான் மறுக்க” எனப் புறத்திணை இயல் 36 - ஆம் சூத்திரவுரையில் அவ்வாசிரியர் கூறுதலால் இச்செய்தி புலனாதல் காணலாம்.

மக்களுட் சிறப்பு உடைய தலைவனொருவன்பால் இரவலரை ஆற்றுப்படுத்தக்கருதிய கூத்தர் பாணர் முதலியோர், வறியோர்க்கு வழங்கும் அத்தலைவனது பெருவண்மையையும் தமக்கு அவன் அன்பினாற்செய்த பேருதவியையும் அவனை யடைதற்குரிய வழி துறைகளைத் தாம் நன்குணர்ந்த பயிற்சியினால் ஏனை இரவலரை அவன்பாற் செலுத்தவல்ல தலைமை தமக்கு உண்டென்பதனையும் எண்ணி, வறியோர்க்கு

வழிகூறியனுப்புதல் உலகியலுக்கு ஒத்ததாகலின், கூத்தர் முதலியோர் கூற்றாகப் புலவர் பாடிய அவ்வாற்றுப்படைகள் யாவும் ஆற்றுப்படுத்துவோராகிய கூத்தர் முதலியோர் பெயராற் பெயர் பெற்று வழங்குவனவாயின. இங்ஙனம் கூத்தர் முதலிய பிறர் கூற்றாகச் செய்யுள் செய்யுங்கால் தம் தலைமை தோன்றாது ஆற்றுப்படுத்தவல்ல புலனுடைய மாந்தர் ஏனைப் பொது மக்களைப் போன்று தம் தலைமை தோன்றாத் தம்மையொத்த புலவரை ஆற்றுப்படுத்தினாரென்றால், கற்றவழியடங்கி யொழுகும் அவரது மனநிலைக்கு ஏற்புடையதன்றாம். அங்ஙனமாகவும் மெய்ஞ்ஞானத்தால் உயிர்முனைப்படங்கி இறைவனுடைய திருவடிகளை இடைவிடாதெண்ணும் நலம்புரிகொள்கைப் புலவனொருவன் இறைவன்பால் ஆற்றுப்படுத்தற்குரிய தகுதியுடையேன் யான் என்னும் ஆன்மபோதத்துடன் முருகனையடைவதற்கு உரிய நெறிமுறையைப் பிறர்க்கு அறிவுறுத்தினானென்றல் சீவன் முத்தனாகிய அவனது சிறப்பியல்புக்குச் சிறிதும் ஒவ்வாது. ஆகவே, இவ்வாற்றுப் படை அப்புலவனது தலைமை தோன்றப் புலவராற்றுப்படையெனப் பெயர் பெறாதாயிற்று. அன்றியும் எல்லாம் வல்ல இறைவனாகிய முருகனையடையும் நெறியறிந்து சென்று சேர்தல் சில வாழ்நாட் பல் பிணிச் சிற்றறிவினராகிய மக்களால் இயலாதென்பதும், அரும்பெறல் மரபின் பெரும்பெயர் முருகனாகிய அவ்விறைவனே தன் அருள் காரணமாக நம்மை நோக்கி எளிவந்து தோன்றி அருள் புரியுமியல்பினன் என்பதும், அப்பெருமான் நம்பால் எளிவந்து தோன்றி அருள் புரியும்படி அவனை நம்வழிப்படுத்தும் வழிபாட்டு முறைகளை உணர்த்தும் நிலையில் இப்பாடல் அமைந்தமை பற்றி இது முருகாற்றுப்படையென்னும் பெயர்த்தாயிற்றென்பதும் பண்டைச் சான்றோர் துணிபாகும். இந்நுட்பம்,

**'குறமகள்**
**முருகியம் நிறுத்து முரணின ருட்க**
**முருகாற்றுப்படுத்த உருகெழு வியனகர்'**

எனவரும் இத்திருமுருகாற்றுப்படைத் தொடராலும்,

**"களநன் கிழைத்துக் கண்ணிசூட்டி**
**வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்**
**துருவச் செந்தினை குருதியொடு தூஉய்**
**முருகாற்றுப்படுத்த உருகெழு நடுநாள்"** **(அகம்)**

எனவரும் வெறிபாடிய காமக்கண்ணியார் பாடலாலும் நன்கு புலனாதல் காணலாம்.

'முருகாற்றுப்படுத்த' எனவரும் இத்தொடர்க்குப் 'பிள்ளையார் வரும்படி வழிப்படுத்தின' என்று பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர்.

இனி, முருகன் எழுந்தருளிய ஆறுபடை வீடுகளைப் பற்றிக் கூறுவது இத் திருமுருகாற்றுப்படையெனக் கொண்டு இவ்வொரு பாடலை ஆறுபகுதிகளாகப் பகுத்து வழங்குவாருமுளர். முருகன் வீற்றிருந்து அருள்புரியுந் திருப்பதிகளாக இத்திருமுருகாற்றுப் படையிற் சிறப்பிக்கப் பட்டவை திருப்பரங்குன்றம், திருச்சீரலை வாய், திருவாவிநன்குடி, திருவேரகம் என்னும் நான்கு திருப்பதி களாகும். அன்னோர் ஐந்தாவதாகக் கூறும் 'குன்றுதோறாடல்' என்பது ஒருதனித் திருப்பதியன்று. முருகப்பெருமான் குறிஞ்சிநிலத் தெய்வமாதலால் அப்பெருமானுக்கு எல்லா மலைகளும் விரும்பி விளையாடுதற்குரிய சிறப்புடைய திருத்தலங்களே யென்னுங்கருத்தினால் "குன்றுதோ றாடலும் நின்ற தன்பண்பே" என்றார் ஆசிரியர். 'மலைகள் தோறும் சென்று விளையாடுதலும் முருகப்பெருமானுக்கு நிலைபெற்ற பண்பாம்' என்பது இத் தொடரின் பொருளாகும். இவ்வாறே குறிஞ்சிக் கிழவன் என்ற பொருள்படப் 'பழமுதிர் சோலை மலை கிழவோன்' என முருகவேளை இந்நூலாசிரியர் இத்திரு முருகாற்றுப் படையின் இறுதியடியிற் குறிப்பிட்டு உள்ளார். இங்குக் கூறப்பட்ட பழமுதிர் சோலைமலை யென்பதனை இப்பொழுது அழகர்மலையென வழங்குந் திருப்பதியாகக் கொள்வதுமுண்டு. இம்மலை சங்கத் தொகை நூலாகிய பரிபாடலில் திருமாலிருஞ்சோலை யென்ற பெயரால் திருமாலுக்குரிய சிறப்புடைய திருப்பதியாகப் போற்றப் பெற்றுள்ளது. பழமுதிர் சோலைமலையென அதனைத் தனியே எண்ணாமல் அம்மலையை முருகனுக்கு உரிமையாக்கிப் 'பழமுதிர்சோலை மலைகிழவோன்' என அவ்விறைவனை நக்கீரர் குறித்துப் போற்றுதலால் "பழமுதிர் சோலைமலை" யென்ற தொடர் திருமாலிருஞ் சோலையை மட்டுங் குறித்ததெனக் கொள்ளாமல் இழுமென இழிதரும் அருவியையுடைய வளமார்ந்த எல்லாமலைகளையுங் குறித்து நின்றதெனக் கொள்ளுதலே ஆசிரியர் கருத்துக்கு ஏற்புடையதாகும். 'பழமுதிர் சோலை மலைகிழவோன்' என உடம்பொடு புணர்த்தமையால் பழமுதிர்சோலை மலையின்கண்ணே எழுந்தருளி யிருத்தலும் உரியன்" எனப் பொருள்கொண்டு இதனை ஒரு தனித் திருப்பதியாகக் கொள்வார்க்கும் இத்திருமுருகாற்றுப்படையிற் சிறப்பிக்கப்பெற்ற திருத்தலங்கள் ஐந்தெனக் கொள்வதன்றி ஆறுபடைவீடெனக் கொள்ளுதற்குச் சிறிதும் இடமில்லை யென்பது திருமுருகாற்றுப்படையை முறையே ஓதுவார்க்கு இனிது விளங்கும்.

திருமுருகாற்றுப்படையினை இயற்றிய ஆசிரியராவார் 'மதுரைக்கணக்காயனார் மகனார் நக்கீரனார்' எனப் பத்துப் பாட்டுரையில் உரையாசிரியர் நச்சினார்க்கினியர் தெளிவாகக் கூறியுள்ளார். கடைச் சங்கப் புலவராகிய இவரே பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு நெடுநல்வாடையென்ற பாடலையும் பாடியுள்ளாரென்பது பத்துப்பாட்டு ளொன்றாகிய அதற்கு நச்சினார்க்கினிய ரெழுதிய வுரைப்பகுதியில் "பாண்டியன் நெடுஞ்செழியனை மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடிய நெடுநல்வாடை" என வருந்தொடரால் இனிது விளங்கும்.

பத்துப்பாட்டுள் முதலாவதாகிய திருமுருகாற்றுப் படையிலும் ஏழாவதாகிய நெடுநல்வாடையிலும் முறையே பேரின்பமாகிய வீடுபேற்றினையும் சிற்றின்பமாகிய உலகியல் வாழ்வினையும் நாடி வாழ்ந்த இருவேறு மனநிலை புலப்படுதலாலும் இவ்விருபாடல்களிடையே மொழிநடை முதலியன சிறிது வேறுபட்டிருத்தலாலும் இப்பாடல்கள் இரண்டும் ஒரு புலவராற் பாடப்பெற்றிருத்தல் இயலாதென்றும், நெடுநல்வாடையை இயற்றிய நக்கீரனாரென்பவர் கடைச்சங்க காலத்திலும் திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரனாரென்பவர் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிலும் வாழ்ந்தவரெனக் கொள்ளுதலே ஏற்புடையதாமென்றும் அறிஞரொருவர் ஆராய்ந் தெழுதியுள்ளார். * (*திருமுருகாற்றுப்படை உரையாசிரிய ருரையுடன் முன்னுரை (மதுரைத் தமிழ்ச் சங்கச் செந்தமிழ்ப் பிரசுரம்-68.) பார்க்க.)

வையத்து வாழ்வாங்குவாழும் உயர்ந்த ஒழுகலாறுடைய பெரும்புலவரது வாழ்க்கையில் நெறிமுறை பிறழா உலகியற் செயல்களும் வீடுபேற்றிற்குக் காரணமாகிய மெய்ந்நெறிச் செயல்களும் படிகால் முறையே ஒருங்கு நிகழுதல் இயல்பாதலால் வையத்து வாழ்வாங்கு வாழ்ந்த தெய்வப்புலவராகிய நக்கீரனார் உலகியல் வாழ்வில் நின்றநிலையிலேயே எங்கும் நிறைந்த பெரும் பொருளாகிய இறைவனை யுணர்ந்து பேரின்ப மெய்தும் வழிபாட்டு முறைகளைத் திருமுருகாற்றுப் படையில் விளக்கி யுள்ளார். வள்ளல்களை நாடிச் செல்லும் பரிசிலர் வாழ்க்கையைப் பற்றியும் போக நுகர்ச்சியாகிய இல் வாழ்க்கையைப் பற்றியும் அவர் சிறிதும் இழித் துரைத்திலர். பத்துப் பாட்டில் தொகுக்கப் பெற்றுள்ள இவ்விரு பாடல்களும் 'மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார்' என வழங்கும் ஒரு புலவராலேயே பாடப்பெற்றனவாகப் பண்டையோர் தெளிவாகக் குறிப்பிட் டுள்ளார்கள். கடைச்சங்க காலத்தவராகிய நல்லந்துவனார் என்ற புலவர் பாடிய பாடல்களுள் பரிபாடலில் தொகுக்கப்பட்ட

பாடல்களையும் கலித்தொகையிலுள்ள பாடல்களையும் ஏனைத் தொகை நூல்களில் தொகுக்கப்பட்ட பாடல்களையும் ஒப்புநோக்குங்கால் அப்பாடல்கள் பொருளமைதியிலும் மொழிநடையிலும் சிறிது சிறிது வேறுபடக் காண்கின்றோம். சொல்ல எடுத்துக் கொண்ட பொருள் காரணமாக யாப்பியலும் மொழிநடையும் வேறுபடுதல் இயல்பேயாம். இங்ஙனமே பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடிய நெடுநல்வாடையும், முருகன்பால் முதுவாயிரவலனை ஆற்றுப்படுத்தும் நிலையிற் பாடிய திருமுருகாற்றுப்படையும் எடுத்துக்கொண்ட பொருள்வகையால் வேறுபட்டனவாதலின், அவற்றிடையே சிறிது வேறுபாடு காணப்படுதல் ஏற்புடையதேயாம். கடைச்சங்கச் செய்யுட்களில் இடைச் சங்கத் தொடக்கத்தில் எழுந்த தமிழியல் நூலாகிய தொல்காப்பியத்திற் சுட்டப்படாத மொழி வழக்குகள் சில புதியன புகுதலாக ஆங்காங்கே இடம்பெற்றிருத்தலைக் காண்கின்றோம். புதியன புகுதலாகிய இவ்வழக்கிற்குத் திருமுருகாற்றுப்படையும் விலக்கானதன்று. இத்தகைய சிறிய வேறுபாட்டினை ஆதரவாகக் கொண்டு, இவ்விரு பாடல்களையும் பாடிய ஆசிரியராகிய மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனாரை வேறு வேறு காலத்து வாழ்ந்த இருவரெனக் கூறுதல் சிறிதும் பொருந்தாது. திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரனாரும் நெடுநல் வாடை பாடிய நக்கீரனாரும் மதுரைக் கணக்காயனார் மகனாராகிய ஒருவரேயென்பது 'மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார்' என இப்பாடலின் உரைகளில் தந்தை பெயரோடு இணைந்து ஒரே தொடராற் குறிக்கப்படுதலாலும், இவர் பாடிய திருமுருகாற்றுப் படையிலும் நெடுநல்வாடையிலும் பிற செய்யுட்களிலும் சொல் வழக்குகள் ஒத்து நிற்றலாலும் * (*பெரும் பேராசிரியர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் தாம் பதிப்பித்த பத்துப்பாட்டின் இரண்டாம் பதிப்பிலே 'பாடினோர் வரலாறு' என்னுந் தலைப்பில் நக்கீரரைக் குறித்து எழுதுங்கால் இத்தகைய ஒப்புமைப் பகுதிகளைத் தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளார்கள். ஆண்டுக் காண்க) நன்குணரப்படும். "சூர்மகுங்கறுத்த சுடரிலை நெடுவேல்" (அகநானூறு- 50) என மதுரை மருதனிள நாகனாரும் "உருவச் செந்தினை குருதியொடு தூஉய், முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள்" (அகநானூறு -22) என வெறிபாடிய காமக் கண்ணியாரும் கூறும் தொடர்கள் திருமுருகாற்றுப் படையில் "சூர்முதல் தடிந்த சுடரிலை நெடுவேல்" (முருகாற் - 46) எனவும், "உருவப் பல்பூ தூஉய்வெரு வரக் குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள், முருகியம் நிறுத்து முரணினருட்க, முருகாற்றுப்படுத்த வுருகெழு வியனகர்" (முருகாற் - 241- 247) எனவும் வரும்தொடர்களோடு ஒத்து நிற்றலைக் கூர்ந்து நோக்குங்கால், இப்புலவர்களனைவரும் கடைச்சங்க காலத்தில்

வாழ்ந்தவர்க ளென்பது நன்குபுலனாதலானும், மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனாரே இத் திருமுருகாற்றுப் படையைப் பாடியவரென்றும் இவரே பாண்டியன் நெடுஞ்செழி யனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு நெடுநல் வாடையைப் பாடியவரென்றும் பண்டையோர் கூறும் கொள்கை உறுதிப் படுதல் காண்க. மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடியனவாக நற்றிணையில் ஏழு செய்யுட்களும், குறுந்தொகையில் எட்டும், அகநானூற்றிற் பதினேழும், புறநானூற்றில் மூன்றும் தொகுக்கப்பெற்றுள்ளன. கீரன் என்பது இவரது பெயர். 'ந' என்பது சிறப்புணர்த்தும் அடைமொழி. மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் என இவர் சுட்டப்படுதலால் இவருடைய ஊர் மதுரையென்பதும் இவருடைய தந்தையார் மாணாக்கர்களுக்குக் கல்வி பயிற்றும் ஆசிரியராகத் திகழ்ந்தவரென்பதும் நன்கு புலனாம். இவர் இறையனாரகப் பொருளுக்கு நல்லுரை கண்டு அவ்வுரையினைத் தம் புதல்வராகிய கீரங்கொற்றனார்க்கு உரைத்தார் என இறையனார் அகப்பொருளுரை கூறும். இவர் மதுரைப் பட்டிமண்டபம் புகுந்து வடமொழியே சிறந்தது தமிழ் தாழ்ந்ததெனக் கூறிய குயக்கோடன் என்பவனை இறக்கப் பாடிப் பின்பு சிலர் வேண்ட அவனைப் பிழைக்கவும் பாடினார் என்றதொரு செய்தி தொல்காப்பியச் செய்யுளியலுரையிற் பேராசிரியர் மேற்கோளாகக் காட்டிய நக்கீரர் அங்கதப் பாடல்களால் நன்கு புலனாகின்றது. பதினொராந் திருமுறையில் நக்கீரர் பாடியனவாகத் தொகுக்கப் பெற்ற பிரபந்தங்களில் திருமுருகாற்றுப்படை யொன்றே மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனாராகிய சங்கப்புலவர் பாடிய பனுவலாகும். ஏனைய ஒன்பது பிரபந்தங்களும் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகக் கருதப்படும் நக்கீர தேவ நாயனாராற் பாடப் பெற்றனவாகு மென்பது முன்னர் விளக்கப்பெற்றது.

பூதத்தால் மலைமுழையிலடைக்கப்பட்டு வருந்திய நிலையில் நக்கீரனார் இத் திருமுருகாற்றுப்படையைப் பாடி முருகப்பெருமானாற் சிறைவீடு செய்யப்பெற்று உய்ந்தார் எனப் பிற்காலத்தார் கூறுங்கதை நக்கீரனார் மனநிலைக்கும் வரலாற்று நெறிக்கும் முற்றிலும் மாறுபட்டதென்பது முன்னர் விளக்கப்பட்டது. முருகன் திருவருளால் வீடுபேற்றுக்குரிய திருவடி ஞானம் கைவரப்பெற்ற சீவன் முத்தராக மதுரையில் வாழ்ந்த நக்கீரனாரென்னும் புலவர் பெருமான் முருகப் பெருமானது திருவடிப் பேரின்பத்தை யடைய விரும்பிய முதுவாயிரவலனை நோக்கி 'நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்னும் அருட்குறிப்புடன் முருகப்பெருமானது

பேரருளின்பத்தை யெடுத்துரைத்து அவ்விறைவன்பால் ஆற்றுப்படுத்தும் நிலையில் இத்திருமுருகாற்றுப் படையைப் பாடியுள்ளாரென்பதே நச்சினார்க்கினியர் முதலிய பண்டைச் சான்றோரது துணிபாகும்.

"உலகத்துப் பல்லுயிர்களும் மகிழ நீலக் கடல்மேல் தோன்றும் காலையிளங் கதிரவனைப் போன்று நீலமயிலின் மேல் செம்மேனிப் பேரொளியினனாகத் திகழ்வோன் முருகப் பெருமான். தன்னைச் சேர்ந்தவர்களது தீவினையைப் போக்கி அவரைத் தாங்கிய ஆற்றல் மிக்க திருவடியினையும் அழித்தற்குரிய கொடியோரை அழித்த கையினையும் உடையவன். அறக் கற்பினையுடைய தெய்வயானையார் கணவன். செங்கடம்பின் மாலையசையும் மார்பினை யுடையவன். வண்டுகள் மொய்க்காத தெய்வத் தன்மை வாய்ந்த செங்காந்தட் பூவாலாகிய கண்ணியைச் சூடிய திருவடியை யுடையவன். கடல் நடுவிற் புகுந்து சூரபன்மாவாகிய தலைவனைக் கொன்ற சுடர்விடும் நெடிய வேலாலே, அவுணரது நல்ல வன்மை யெல்லாம் அழியும்படி கீழ் நோக்கின பூங்கொத்துக்களையுடைய மாமரத்தைப் பிளந்த குற்றமில்லாத வெற்றியினையும், ஒருவராலும் அளந்தறிய வொண்ணாத பொருள்சேர் புகழினையும் உடையவன். சிவந்த வேற் படையைத் தாங்கிய சேயோனாகிய முருகப் பெருமானு டைய திருவடியிற் செல்லுதற்குக் காரணமான நல்வினைகளைப் பல பிறப்புக்களினும் விரும்பிப் புரிந்த தலைமை பெற்ற உள்ளத்துடனே அப்பெருமான்பாற் செல்லுதற்கு நீ விரும்பி விட்டாயாயின் நினது நல்ல நெஞ்சத்தினது இனிய விருப்பம் ஈடேற நீ கருதிய வீடுபேற்றின்பத்தை இப்பொழுதே தப்பாமற் பெறுவாய். வெற்றியாலும் செல்வத்தாலும் விளக்கமுற்ற கூடல் நகரத்துக்கு மேற்றிசையிலுள்ளதும், இரவெல்லாம் தாமரை மலரில் உறங்கிய வண்டினங்கள் விடியற்காலத்தே நெய்தற் பூவை யூதி ஞாயிறு தோன்றின காலத்தே கண்ணைப் போன்று மலர்ந்த சுனைப்பூக்களிலே சென்று ஆரவாரிக்கும் வளமார்ந்ததுமாகிய திருப்பரங்குன்றத்திலே இறைவனாகிய முருகன் மனம் விரும்பி எழுந்தருளியிருத்தலும் உரியன். அதுவன்றி, ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு திருக்கரங்களும் தத்தமக்கேற்ற தொழில் செய்ய யானையின்மே லெழுந்தருளி வான்வழியாகத் திருச்சீரலைவாய் என்ற திருப்பதியை யடைதலும் அவனுக்கு நிலைபெற்ற பண்பாகும். அதுவன்றிப் படைத்தற் கடவுளாகிய நான்முகனுக் கேற்பட்ட சாபத்தை நீக்குதற் பொருட்டுத் திருமால் சிவபெருமான் இந்திரன் ஆகிய தெய்வங்களும் முப்பத்து முக்கோடி தேவர்களும் பதினெண்கணங்களும் துனியில் காட்சி முனிவர் முற்புகக் கந்தருவர் யாழிசைக்க உடன் வந்து காணத்

திருவாவிநன்குடியில் தன் தேவியுடன் சில நாள் அமர்ந்திருத்தலும் உரியன். அதுவன்றி இருபிறப்பாளராகிய அந்தணர்கள் நீராடி ஈர ஆடை உடுத்து ஆறெழுத்து மந்திரமாகிய மறையை ஓதி மலர் தூவி வணங்க அவ்வழிபாட்டை விரும்பியேற்று ஏரகம் என்னுந் திருப்பதியில் எழுந்தருளியிருத்தலும் உரியன். அதுவன்றி, குறமகளிராடுங் குரவைக் கூத்துக்கு முதற்கை கொடுத்து அம்மகளிருடன் மலைகள்தோறும் விரும்பி விளையாடுதலும் அவன்பால் நிலைபெற்ற அருட்குணமாகும். அதுவேயுமன்றி, ஊர்கள்தோறும் மக்கள் கொண்டாடுந் திருவிழாக்களிலும் அன்புடைய அடியார்கள் உளமுருகிப் போற்ற அமைந்த இடங்களிலும் முருக பூசை புரியும் வேலனென்பான் வேலேந்தி வெறியாடு களத்திலும் காடுகளிலும் இளமரச் சோலைகளிலும் ஆற்றிடைக் குறையிலும் குளங்களிலும் வேறுபல எழில் மிக்க இடங்களிலும் பல தெருக்கள் ஒன்று கூடும் சந்திகளிலும் புதுப்பூ மலருங் கடம்ப மரங்களிலும் மன்றங்களிலும் பொதுவாகிய அம்பலங்களிலும் தெய்வம் உறையுந் தூண்கள் நிலைபெற்ற இடங்களிலும் குறையிரந்து வேண்டும் அன்பர்கள் தாம் விரும்பியவாறே பெற்று நின்று வழிபட அவ்வவ்விடங்களிலே நிலைபெற எழுந்தருளியிருத்தலும் திருவருட் பெரியோர் அறிந்து கூறிய மெய்ந்நெறியாகும். யான் முற்கூறிய அவ்வவ்விடங்களிலே யாயினுமாக, அல்லது பிற இடங்களிலேயாயினுமாக நீ முற்பட அம் முருகப் பெருமானைக் கண்டபொழுது முகம் விரும்பித் துதித்துக் கைகளைத் தலைமேற் குவித்து நின்று வாழ்த்திப் பின்பு அவன் திருவடிகளிலே தலை பொருந்தும்படி வீழ்ந்து வணங்கி,

**"நெடும் பெருஞ் சிமையத்து நீலப்பைஞ்சுனை**
**ஐவருள் ஒருவன் அங்கை யேற்ப**
**அறுவர் பயந்த ஆறமர் செல்வ**
**ஆல்கெழு கடவுட் புதல்வ மால் வரை**
**மலைமகள் மகனே மாற்றோர் கூற்றே**
**வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ**
**இழையணி சிறப்பிற் பழையோள் குழவி"**

என்பன முதலாக யான் அறிந்து நினக்குக் கூறிய அளவாலே நீயும் நினக்குத் தெரிந்த பலவற்றையும் கூறிப் புகழ்ந்து, "நின்னோடு ஒப்பாரில்லாத மெய்ஞ்ஞானத்தை யுடைய பெருமானே, நின்தன்மை யெல்லாம் முழுதும் அளந்தறிதல் நிலைபெற்ற எவ்வுயிர்க்கும் அரிதாகையினாலே நின்திருவடியைப் பெறவேண்டுமென்று நினைந்து வந்தேன்" என அவ் இறைவனை நோக்கி நினது வேட்கையினைத் தெரிவிப்பாயாக. நீ அங்ஙனம் தெரிவித்தற்கு முன்னரே முருகனைச் சேவித்து நிற்போராகிய மெய்யடியார்கள், அங்கே பொலிவுடன் வந்து தோன்றி

அவ்விறைவனை நோக்கிப் "பெருமானே, அறிவு முதிர்ந்த வாய்மையுடைய இப்புலவன் நினது பொருள்சேர் புகழுரையினைக் கூற விரும்பிக் கேட்டோர்க்கு இனியனவும் உறுதி பயப்பனவுமாக மிக்க பலவற்றை வாழ்த்தி வந்துள்ளான். இவன் நின்னால் அளிக்கத் தக்கவன்" என நின்பொருட்டுக் குறையிரந்து நிற்பர். அந்நிலையில் இழுமென இழிதரும் அருவி நீரையும் பழம்முதிர்ந்த சோலைகளையும் உடைய மலைக்கு உரியவனாகிய முருகப்பெருமான், தெய்வத்தன்மை யமைந்த பேராற்றல் விளங்கும் வடிவினையும் வானளவோங்கிய வளர்ச்சியையு முடையவனாக அவ்விடத்தே வந்து தோன்றித் தனது பேருருவம் மக்கள் கண்களாற் காண்டற்கரியதாதலின் அப்பெரிய வடிவத்தை உள்ளடக்கிக் கொண்டு தனது பழைய வடிவாகிய இளமைக் கோலத்தினை நினக்குக் காட்டி, 'நீ வீடுபெற நினைந்து வந்த வருகையை யான் முன்னரே யறிவேன். அது நினக்கு எய்துதற்கரிதென்று அஞ்சுதலைத் தவிர்க" என்று நின்பால் அன்புடைய நல்ல வார்த்தைகளைப் பலமுறையும் அருளிச் செய்து, "கடல் சூழ்ந்த இவ்வுலகிலே நீ ஒருவனுமே பிறர்க்கு வீடளித்தற்கு உரிமையுடையையாய்க் கேடின்றித் தோன்றும்படி பிறராற் பெறுதற்கரிய சிறப்பாகிய வீடுபேற்று இன்பத்தை நினக்குத் தந்தருளுவன்" என்பது இத்திருமுருகாற்றுப் படையின் திரண்ட பொருளாகும்.

எல்லாப் பொருளினும் சிறந்ததாகிய வீடு பேற்றினை 'விழுமிய பெறலரும் பரிசில்' என நக்கீரனார் இத்திருமுருகாற்றுப் படையிற் சிறப்பித்துள்ளார். விழுமிய பரிசில், பெறலரும் பரிசில் என இயையும். வீடு பேற்றினுஞ் சிறந்தது பிறிதொன்றின்மையின் அதனை விழுமிய பரிசில் என்றும், அவ் வீடுபேறுதானும் இறைவனது திருவருளாற் கிடைக்கப் பெறுவதன்றி உயிர்கள் தாமே தமது முயற்சியாற் பெறுதற்குரிய எளிமைத் தன்மைத்து அன்றாதலின் அதனைப் பெறலரும் பரிசில் என்றும் நக்கீரனார் குறித்த திறம் நினைந்து மகிழத் தக்கதாகும்.

கந்தழியைப் பெற்றானொருவன் அதனைப் பெறாதான் ஒருவனுக்குப் பெறுமாறு கூறி அவனை வழிபடுத்துக் கூறுவானென்பது பற்றி நக்கீரனார் இத்திருமுருகாற்றுப் படையைப் பாடியுள்ளாரென்பர் நச்சினார்க்கினியர். "கந்தழியாவது ஒரு பற்றுமற்று அருவாய்த் தானே நிற்குந் தத்துவங் கடந்த பொருள்; அது,

> **'சார்பினாற் றோன்றாது தானருவா யெப்பொருட்குஞ்**
> **சார்பெனநின் றெஞ்ஞான்று மின்பந் தகைத்தரோ**
> **வாய்மொழியான் மெய்யான் மனத்தா னறிவிறந்த**
> **தூய்மையாதா மைதீர் சுடர்'**

என்பதாம். இதனை,

**'உற்ற வாக்கையி னுறுபொருள் நறுமலரெழுதரு நாற்றம்போல்**
**பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்'**

என அதனை உணர்ந்தோர் கூறிய வாற்றான் உணர்க" என நச்சினார்க்கினியர் கூறிய விளக்கம், இத்திருமுருகாற்றுப் படையும் திருவாசக முதலிய திருமுறைகளும் போற்றும் முழுமுதற் கடவுள் ஒன்றே யென்பதனை இனிது புலப்படுத்துதல் காணலாம்.

இறைவன் திருவடியே உயிர்களுக்கு வீடாயிருக்கும் என்பதனைத் "தென்னன் பெருந்துறையான், காட்டா தனவெல்லாங் காட்டிச் சிவங்காட்டித், தட்டாமரை காட்டித் தன் கருணைத் தேன் காட்டி" எனவருந் திருவாசகத் தொடரால் திருவாதவூரடிகள் தெளிவாக அறிவுறுத்தியுள்ளார்.* (* இறைவனடி சேர்தலொன்றையே சிறந்த வீடு பேறாகப் பண்டைத் தமிழ் மக்கள் கருதி வந்துள்ளார்களென்பது திருக்குறள் கடவுள் வாழ்த்தில் இறைவனடி சேர்தல், தாள்சேர்தல் எனக் குறிக்கப்படும் சொல் வழக்குகளால் நன்கு தெளியப்படும்) இங்ஙனம் இறைவனடி சேர்தலே வீடுபேறாகும் எனச் சைவத் திருமுறையாசிரியர்கள் தாம் பெற்ற திருவருள் அனுபவத்தால் உணர்ந்து கூறிய அடிசேர் முத்தியினையே "சேவடிபடருஞ் செம்மல் உள்ளமொடு நலம்புரி கொள்கைப்புலம் பிரிந்துறையுஞ் செலவு" எனவருந் தொடரில் நக்கீரனார் தெளிவாகக் குறிப்பிட்டு உள்ளார்.

காமநுகர்ச்சி யில்லாத இறைவனாகிய முருகப் பெருமான் குறவர் மகளாகிய வள்ளி நாச்சியாருடன் கூடித் தனக்கோர் அறியாமை தோன்ற நகையமர்ந்து விளையாடுவதனை விளக்குவது,

**"ஒருமுகம், குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்**
**மடவரல் வள்ளியோடு நகையமர்ந்தன்றே"**

எனவரும் திருமுருகாற்றுப்படைத் தொடராகும். முருகப் பெருமான் வள்ளியோடு நகையமர்ந்து கூடியிருத்தலின் குறிப்பு உலகத்துப் பல்லுயிர்களும் ஆணும் பெண்ணுமாய் அன்பினாற் கலந்து இன்புற்று இல்வாழ்க்கை நடத்தற் பொருட்டேயாம் என்பதனைத்,

**'தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்**
**பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ**
**பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்**
**விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ'**

எனவரும் திருவாசகச் செழும்பாடலை எடுத்துக் காட்டி நச்சினார்க்கினியர் நன்கு விளக்கியுள்ளார்.

ஆதிபகவனாகிய பெருமான் தன் அடியார்கட்கு அருளும் முறையும் அங்ஙனம் அருளவல்ல அவ்விறைவனது இயல்பும் இன்ன தன்மையென யாவராலும் அளந்தறிந்து ஓதுதற்குரிய எல்லையைக் கடந்து நிற்பனவாதலின் அவைபற்றிச் சிற்றறிவின ராகிய உயிர்களாற் செய்யப்படும் ஆராய்ச்சி யாதுமில்லை. அங்ஙனமாதலின் கல்வி கேள்விகளால் தகுதியுடைய பெரியோர்கள் பிறவிநிலைக் கோள்களான் வரும் இடையூறுகள் தம்மையடைந்து நலியாதபடி முதல்வனாகிய இறைவன் திருவடியைச் சார்ந்து அப்பெருமான் அடியார்க்கு அருளும் வண்ணமும் அவ் இறைவனது திருவருள் மாண்பும் அவன்பால் கேட்டுணர்தற்குரியர் எனத் திருப்பாசுரப் பதிகத்தில் ஆளுடைய பிள்ளையார் அறிவுறுத்தியுள்ளார்.* (* திருஞான சம்பந்தர் தேவாரம். திருப்பாசுரம் 4- ஆம் பாடல்.) பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் உணர்தற்கரிய பரம்பொருளைப் பதிஞானமாகிய திருவருள் ஞானமொன்றினாலேயே உணர்ந்து உய்தி பெறுதல் கூடுமென்ற இவ்வுண்மை,

**"நின்னளந்தறிதல் மன்னுயிர்க் கருமையின்**
**நின்னடியுள்ளிவந்தனன் நின்னொடு**
**புரையுநரில்லாப் புலமை யோய்"**

எனவரும் திருமுருகாற்றுப் படையடிகளில் தெளிவாக விளக்கப் பெற்றிருத்தல் காணலாம். எல்லையில் காலமாகப் பல்வகைப் பிறப்புக்களிலும் பிறந்து பிறந்து அல்லற்படும் மன்னுயிரெல்லாம் தன் திருவடிக் கீழடங்க இறைவனாகிய தான் அவற்றைத் தன்னுளொடுக்கி மேற்பட விரிந்து விளங்குவோனாதலின், அவனுடைய பண்பெல்லாம் மன்னுயிர்களால் அளந்தறியப் படுவன அல்லவென்பார் 'நின்னளந்து அறிதல் மன்னுயிர்க்கு அருமையின்' என்றும், இறைவனது அருமையுணர்ந்து உயிர்களாற் செய்யத் தகுவது இறைவனுடைய திருவடியினை வணங்குவதன்றி வேறில்லை யென்பார், 'நின்னடியுள்ளிவந்தனன்' என்றும், ஒருவாற்றானுந் தனக்கு நிகராவார் பிறரின்றி ஞானத்தால் மேற்படத் திகழும் தனிமுதல்வன் இறைவன் என்பார். 'நின்னொடு புரையுநரில்லாப் புலமையோய்' என்றும் இறைவனதியல்பை விளக்கினார் நக்கீரனார்.

இங்ஙனம் சைவத்திருமுறையாசிரியர் மேற்கொண் டொழுகிய சமய தத்துவங்கள் பல பண்டைச் சங்கப் பனுவலாகிய இத் திருமுருகாற்றுப்படையில் இடம்பெற்றிருத்தலாலும் சேயோனாகிய முருகனும், செம்மேனிப் பேராளனாகிய சிவபெருமானும் முறையே காலையிளங்கதிரவனும் மாலை ஞாயிறும் போன்ற தோற்றத்தை யுடையவரென்பதும்

பொருளால் ஒருவரே யென்பதும் தமிழகத்தில் நெடுநாட்களாக நிலவிவரும் பழங்கொள்கையாதலாலும் சிவபெருமானைப் பற்றிய அருள் நூல்களின் தொகுதியாகிய பதினொராந் திருமுறையினுள்ளே முருகவேளைப் பரவிய இத் திருமுருகாற்றுப் படையும் இடம் பெறுவதாயிற்று.

இயற்கை வனப்பும், தெய்வ வனப்பும் அமைய நக்கீரனார் பாடிய திருமுருகாற்றுப் படையென்ற செழும் பாடல் நவில்தொறும் இன்பந்தரும் சுவை நயமுடையதாகும். இப்பாட்டின் சுவை நலங்களை நச்சினார்க்கினியர் எழுதிய உரை கொண்டு பயின்று தெளிதல் அறிஞர்க்குப் பெருவிருந்தாகும்.

இத் திருமுருகாற்றுப் படையின் பின் 'குன்றமெறிந்தாய்' என்பது முதலாக 'முருகனே செந்தில் முதல்வனே' என்பதீறாக ஏழுவெண்பாக்கள் உள்ளன. முருகப் பெருமானை முன்னின்று போற்றுந் தோத்திரங்களாக இவை அமைந்துள்ளன. இப்பாடல்கள் பத்துப்பாட்டும் உரையும் சேர்ந்துள்ள பழைய ஏட்டுப் பிரதிகளில் இல்லை. திருமுருகாற்றுப்படை மட்டுமுள்ள பிற்கால ஏட்டுச் சுவடிகளிலும் பதினொராந் திருமுறை அச்சுப் பிரதிகளிலுமே உள்ளன. இவ்வேழு வெண்பாக்களையும் அடுத்துக் 'காக்கக்கடவிய நீ' 'பரங்குன்றில்' 'நக்கீரர் தாமுரைத்த' என்ற முதற்குறிப்புடைய வெண்பாக்கள் மூன்றும் சில ஏடுகளிற் காணப்படுகின்றன. இப்பாடல்கள் மூன்றும் ஆறுமுக நாவலரவர்கள் பதிப்பித்த பதினொராந் திருமுறைப் பதிப்பிலும் திருமயிலை செந்தில்வேலு முதலியாரவர்கள் பதிப்பித்த பதினொராந் திருமுறைப் பதிப்பிலும் இடம்பெறவில்லை. நாடோறும் திருமுருகாற்றுப்படையைப் பாராயணஞ் செய்வோரடையும் பயனை அறிவுறுத்துவனவாகிய இப்பாடல்கள் பிற்காலத்தவராற் பாடப்பெற்றன எனக் கொள்ளுதல் ஏற்புடையதாகும்.

## 10. திருக்கண்ணப்பதேவர் திருமறம்

மறம் என்ற சொல்லுக்கு வீரம் என்பது பொருள். தறுகண் மறவரது வீரச்செயலை விளக்கும் புறத்துறைகளுள் மறம் என்பதும் ஒன்று, உயர்ந்த புகழைப் பெற விரும்பிப் பலவகை இன்னல்களுக்கிடையே பகைவர் சேனையைத் தடுத்து நிறுத்தும் போர்ச்செயலில் ஈடுபட்ட வீரனொருவன் பகைவருடைய மாறுபாட்டிற்குப் பொறாதவனாகிப் பகைவரது வேல் பாய்ந்தமையால் தன் மார்பின்கண் உண்டாகிய புண்ணைக் கிழித்து இறக்கும் நிலை மறக்காஞ்சி யென்னும் புறந்துறையாகும். காஞ்சித் திணையின் துறையாகிய இதனியல்பினை,

**"பண்புற வரூஉம் பகுதி நோக்கிப்
புண்கிழித்து முடியும் மறத்தி னானும்."**

என்ற தொடரால்* (* தொல், பொருள், புறத்திணை 16 -ஆம் சூத்திரம்.) தொல்காப்பியனார் இனிது விளக்கியுள்ளார். நன்றாகிய பண்பு உலகில் நிலைபெறுவதற் கேற்ற வழிதுறைகளை யாராய்ந்து அதனது நிலைபேற்றிற்குச் சிறிதும் பயன்படாத தன்னுயிரைப் போக்கிக் கொள்ள முயலும் வீரனது மனத்திண்மை இத்துறையிற் புலப்படுதல் காணலாம். இப்புறத் துறையைப் பொருளாகக் கொண்டு பாடப்பட்ட தமிழ்ப் பனுவலும் மறம் என்ற பெயரால் வழங்கப்படும்.* (* "மின்னிழை விறலியர் நின்மறம் பாட" பதிற்றுப் பத்து 54 - ஆம் பாடல்.)

எல்லாப் பொருளினுஞ் சிறந்த சிறப்பென்னுஞ் செம் பொருளைப் பெறுதல் வேண்டி நில்லாத உலகியலில் நேரும் பல்வகைத் துன்பங்களையும் பொறுத்து நிற்குங் குறிக்கோ ளுடைய திண்ணனாராகிய வேடர் பெருமான், தம்மால் வழிபடப் பெறுந் திருகாளத்தி யிறைவனுடைய கண்களில் குருதி நீர் வழிதலைக் கண்டு சிறிதும் பொறாராய் அத்துன்ப நிலையைக் கண்கொண்டு காண்பதைவிடக் கண்ணையிழந்து இறத்தலே நலமென்று எண்ணித் தமது கண்ணைத் தோண்டிக் காளத்தியிறைவனது கண்ணில் அப்பிய பேரன்பின்பாற்பட்ட வீரச்செயல், போர்க்களத்திற் பகைவரது சேனையைத் தடுத்து நின்று போர்புரியும் வீரன் ஒருவன் பகைவர் சேனையைத் தடுத்து நிறுத்தலாற்றா நிலையில் தன் மார்பிற் புண்ணைக் கிழித்துக் கொண்டு உயிர் துறத்தலாகிய வீரச் செயலோடு ஒத்ததாகலின், இதனை மறம் என்னும் புறத்துறையின் பாற்படுத்துதல் ஏற்புடையதாகும். திருக்கண்ணப்ப தேவரது வீரச்செயலைப் போற்றிப் பரவும் நோக்கத்துடன் மறம் என்னுந்துறையமைய நக்கீரதேவர் பாடிய பிரபந்தம் திருக்கண்ணப்பதேவர் திருமறம் என வழங்கப் பெறுவதாயிற்று.

நல்லறங்களைச் செய்வதற்கேயன்றி மறமாகிய வீரச் செயலை மேற்கொள்வதற்கும் அன்பாகிய பண்பே துணைசெய்வதென்பது,

**'அறத்திற்கே யன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை' (திருக்குறள் - 76)**

எனவரும் தெய்வப்புலவர் வாய்மொழியாற் புலனாம்.

**'ஈர அன்பினர் யாதுங் குறைவிலார்
வீரம் என்னால் விளம்புந் தகையதோ'**

எனச் சேக்கிழார் நாயனார் திருத்தொண்டர்களின் சிறப்பினை விரித்துரைக்கும் பகுதி, ஈர அன்பே குறையாத வீரத்திற்குங் காரணமாம் என்பதனை நன்கு புலப்படுத்தல் காணலாம்.

கண்ணப்ப நாயனாரது அன்பின் வழிப்பட்ட வீரச் செயல், உலகியல் வாழ்வில் ஈடுபட்டுத் தறுகண் உணர்வினால் மேம்பட்டு விளங்கும் ஏனைமறவரது வீரச்செயலைப் போன்று பொருளும் பொன்னும் போகமும் வேண்டி நிகழ்த்தப்பட்டதன்றி, அருளும் அன்பும் அறமுமாகிய இவற்றைப் பொருளாகக் கொண்டு நிகழ்ந்த சிறப்புடையதாய், மக்களால் முயன்று பெறுதற்கரிய நிலைபெற்ற பேரின்பமாகிய பெருஞ்செல்வத்தை விளைத்தமை பற்றித் திருமறம் எனப் போற்றப் பெறுவதாயிற்று.

பொத்தப்பி நாட்டிலுள்ள உடுப்பூரிலே வேடுவர் குடியிலே நாகன் என்பானுக்கும் தத்தை யென்பாளுக்கும் மகவாய்ப் பிறந்து (திண்ணன்) திண்ணப்பனென்னும் இளம்பருவப் பெயருடையராய்த் திகழ்ந்த வேடரொருவர், விலங்குகளை வேட்டையாடச் சென்ற பொழுது, பண்டை நற்றவத்தின் பயனாகத் திருக்காளத்திமலை மீது எழுந்தருளிய சிவலிங்கத் திருமேனியைக் கண்டு அளவிலாப் பேரன்புடையராய் வழிபட்டுவரும் நாட்களில் ஒருநாள் காளத்தியிறைவர் கண்ணில் உதிரமொழுகக் கண்டு அஞ்சித் துயரமுற்றுச் செய்வதறியாது தமது கண்ணையே தோண்டி அப்பி இறைவனாற் கண்ணப்பன் என அழைக்கப் பெற்று அழிவிலாப் பேரின்ப வாழ்வை யடைந்தார் என்பது வரலாறு. இவ்வரலாற்றினை,

> **'தந்தையாந்தாய், தந்தை நாகனாம், தன்பிறப்புப்**
> **பொத்தப்பி நாட்டுடுப்பூர் வேடுவனாம் - தித்திக்கும்**
> **திண்ணப்ப னாஞ்சிறுபேர் செய்தவத்தாற் காளத்திக்**
> **கண்ணப்ப னாய்நின்றான் காண்'**

எனத் திருக்கண்ணப்ப தேவர் திருமறத்தின் இறுதியிலுள்ள வெண்பாவினாற் சுருக்கமாக உணர்ந்து கொள்ளலாம். இவ்வரலாற்றினை விரித்துரைத்துப் போற்றும் நிலையில் அமைந்ததே திருக்கண்ணப்ப தேவர் திருமறமாகும். இது நூற்றைம்பத்தேழடிகளால் இயன்ற ஆசிரியப்பாவாக அமைந்துளது.

திருக் கண்ணப்பன் செய்த தவப்பெருஞ் செயலின் கண்ணே இவ்வுலகம் பெரிதும் விருப்புடையதாயிற்று. அவன் பிறந்த குடியோ ஊனை யுணவாகக் கொண்ட வேட்டுவர்குடி. அவன் இயங்கும் நிலமோ விலங்குகளைத் தாக்கிக் கொல்லும் புலிகள் உறும் மலையிடையமைந்த காடு. அவன் வளர்ப்பது, சிவந்த கண்களையுடைய வேட்டை நாயொடு விலங்குகளைப்

பிடிப்பதற்காகப் பழக்கப்பட்ட பார்வை மிருகங்களை. அவன் பயின்ற கல்வியோ வில் வேல் வாள் முதலிய படைக்கலப் பயிற்சி. வேட்டத்தாற் கொன்ற விலங்குகளை யறுத்த தசைத் துண்டங்கள் நிரம்பப் பெற்றுக் குருதி நீர் நிறைந்த குடங்களையும் குருதிக் கறைபடிந்த படைக்கலங்களையும் உடைய தாய்ப் புல்லும் மயிற் பீலியும் வேயப்பெற்ற மேற்கூரை பிரிந்த நிலையிற் காணப்படும் வெளியிடமே அவன் தங்கியிருக்கும் மனையாகும். புலித்தோலும் வாரும் தனக்குரிய உடையும் கச்சுமாக விளங்க, இரவும் பகலும் நீங்காத முயற்சியோடு வில்லிற் கோத்து எய்யப்படும் அம்பினாலும் திண்ணிய குற்றுடை வாளினாலும் விலங்குகள் பலவற்றை இனத்தொடும் பதை பதைப்பக் கொல்லுதலே அவன் மேற்கொண்ட தொழிலாகும். அவனது வடிவோ, வீரமிக்க புலியாற் கடிக்கப் பெற்ற நிலையில் வடுவடைந்த வலிய முன்கையும் மாற்றார் எய்த படைக்கலங்களாற் போழப்பட்ட நிலையில் வடுப்பெற்று விளங்கும் திண்ணிய மலையனைய மார்பும் கூரிய பற்களையுடைய கரடியைப் பற்றியதால் வடுவடைந்த நெற்றியும் வலிய தந்தத்தையுடைய பன்றியைப் பற்றிப் படுத்தமையால் வடுப்பட்ட தொடையும் செடிகளின் புதரெனத் திகழும் செங்குஞ்சியும் சிவந்த கண்களும் இடியென வியம்பும் வெஞ்சொற்களைப் பேசும் வாயும், கரு நிறமும் கொல்லும் படைக்கலங்களைத் தாங்கும் பெருவன்மையும் உடையதாய்த் திகழ்வதாகும். அவனது மனமோ வேட்டத்தால் விலங்குகளைக் கொல்லுந் தொழிலில் வேட்கையுடையதாய்த் தன்பால் அகப்பட்ட உயிர்கள் படுந் துன்பத்தைக் கண்டு மகிழும் இயல்பினதாகும். இதுவே அக் கானவர் தலைவனாகிய வேடனது இயல்பு.

தாய்ப் பசுவினிடத்து ஆர்வத்தால் விரைந்து செல்லும் இளங்கன்றினைப் போன்று மலைமகள் பங்கனாகிய சிவபெருமான்பால் விரைந்து சென்று அவ்விறைவனுடைய திருவடிகளை இறைஞ்சிப் பூசனை செய்த பின்பு உண்பதல்லது அவ்வழிபாட்டிற்கு முன்னர் உணவு கொள்ளும் வழக்கத்தினை அறியாதவன் அவ் வேடுவன். தீப்பிழம்பெனக் கடுவெயில் வீசும் உச்சி வேளையிலே தரையிற் பாதம் படுந்தொறும் தசை தீய்ந்து நாறும் கடுஞ்சுர வழியில் முதிர்ந்து காய்ந்த மரங்கள் நிறைந்த முள் நிரம்பிய சூழலிலே விலங்கினங்களை அவற்றின் இனக் குரலோசையால் எழுப்பி அவற்றைத் தனது வேட்டை நாய் கடித்து இழுக்கும்படி அவற்றின் மேற்கூரிய அம்புகளை எய்து கொல்வான். அங்ஙனம் தன்னாற் கொல்லப்பட்ட விலங்கின் தலையினை அறுத்தெடுத்து விறகினைக் கடைந்து மூட்டிய தீயிலே காய்ச்சி அவற்றுள் நறுமணமும் சுவையுமுடைய

இறைச்சிகளைத் தான் சுவைத்துப் பார்த்து நல்லனவற்றைக் காளத்தியிறைவனுக்குரிய திருவமுதாக வேறுவைத்துக் கொள்வான். பின்னர்க் குளிர்ந்த சுனையிலேயுள்ள நீரை இறைவனுக்குரிய திருமஞ்சனமாகத் தன் வாயே கலசமாக முகந்து கொண்டு அருச்சனைக்குரிய நறுமலராகச் செந்நிறப் பூங்கொத்துக்களைத் தன் செந்நிற மயிர் முடியிற் செருகிக் கொண்டு, ஒரு கையில் திருவமுதாகிய இறைச்சியையும் மற்றொரு கையில் வில்லையும் அம்பையும் ஏந்திக் கடுங்குரலுடைய வேட்டை நாய் தன்னைப் பின் தொடர்ந்து வரத் திருக்காளத்தியிறைவனை வழிபடுதற் பொருட்டுக் கடும் பகலிலே சென்றனன்.

நாட்காலையிலே காளத்தியிறைவனுக்குப் பூசனை புரியுங் கடமையுடையவனாகிய மறையோன், திருப்பரிவட்டத்தை யணிந்து திருமஞ்சனமாட்டி நறுமலர், நறும்புகை, விளக்கு, திருவமுது எனச் சிவாகம நூல்களிற் சொல்லிய முறையிற் சிறிதும் குறையாதவாறு கொண்டு திருமேனியிற் பொருந்த அணிந்த மலர்மாலையும் மேலே தூக்கிக் கட்டிய நறுமலர்த்தொடையும் அமைய அணிசெய்து அருச்சித்து இறைவன் திருமுன்னர்ச் சிறப்பொடு தெரிவித்தற்குரிய கையடையாளங்களாகிய முத்திரைகளைத் திருத்தமுறக் காட்டிச் சிவமந்திரங்களையோதி இறைவனைத் தியானித்து வலம் வந்து வழிபட்டுச் சென்றனன். அவன் சென்ற பின்னர் ஒரு கையில் ஊனமுதமும் மற்றொரு கையில் வில்லும் அம்பும் கொண்டு அங்கு வந்த வேடுவன் சிவலிங்கப் பெருமான் முடிமீது அணியப் பெற்றிருந்த மாலை முதலியவற்றைச் செருப்பணிந்த காலினால் நீக்கித் தன் வாயிற் கொணர்ந்த நீரைத்திரு மஞ்சனமாக ஆட்டினான். தனது தலைமுடியிற் செருகிய பூங்கொத்துக்களை இறைவன் முடிமீது சொரிந்து இறைச்சியினைத் திருவமுதாகப் படைத்தான். காளத்தியிறைவனைக் கண்டு கண்டு உளங்கசிந்து காதலாற் கூத்தாடினான். இறைவன் திருவடிகளை அன்பினால் இறுகப் பற்றிப் பணிந்து பிரிதற்கியலாத பேரன்பினன் ஆனான்.

அவன் அம்மலையைவிட்டு வேட்டைமேற் சென்ற பின்னர் மறுநாள் வைகறைப் பொழுதிலே நீராடிக் காளத்தியிறைவனை அன்பினால் வழிபடுங் கடமையுடைய அந்தணன், வந்து பார்த்து நேற்றுதான் இறைவனுக்குச் செய்த பூசனை சிதைந்த நிலையினைக் கண்டு, "யான் பூசனை செய்த பின்னரும் ஆகம நெறிக்கு முரணாக மறித்தும் இவ்வாறு பூசை செய்தார்யாவர்" என ஐயுற்று அதன் உண்மையைக் கண்டு தெளிதல் வேண்டி அவ்விடத்தே மறைந்திருந்தான். அந்நிலையில் வேடனொருவன் வருதலைக் கண்டு நடுங்கி அவன் வாய் நீராட்டி ஊனமுது

படைத்து வழிப்பட்டதனைக் கண்டு மனம் பொறாது வருந்தித் தன் குடிலை அடைந்தான். மறுநாள் விடியற்காலையிலே நீராடி இறைவனைப் பூசித்தற்பொருட்டுக் காளத்தி மலையை யடைந்த அந்தணன், முன்னை நாளிற் போன்று வேடனாற் படைக்கப்பட்டிருந்த ஊன் முதலியவற்றை விலக்கித் தூய்மை செய்து நன்னீராட்டிக் காளத்தியிறைவனுக்குப் பூசனை செய்து, “இறைவா, இந்நிலை உனக்கு அழகாகுமா? நாள்தோறும் நான் செய்யும் பூசனையை இவ்விடத்தேயுள்ள வேடுவனொருன் நாயொடும் புகுந்து மிதித்துத் தனது செருப்புக்காலால் நின்முடிமீதணிந்த மலர்களைத் தள்ளித் தன் வாய்நீரை நின்மேல் உமிழ்ந்து தலையிற் கொணர்ந்த சருகிலையை உதிர்த்து இவ்வண்ணமாக நின் திருக்கோயிலில் அநுசிதமாகிய இறைச்சியையும் இட்டுச் செல்கின்றானே. இச்செயல் இறைவனாகிய நினக்கு என்றும் இனியது தானா? அவ்வேடன் என்னைக் காணிற் கொன்று விடுவான். அருவருக்கத்தக்க இச்செயலை யாவரும் தடுத்து விலக்குதற்கியலாத நிலையில் முரண்பட்ட குணத்தனாக அவன் உள்ளான்” எனத் திருக்காளத்தியிறைவனை நோக்கி முறையிட்டுவிட்டுத் தனது இருப்பிடத்தை அடைந்தான்.

காளத்தியப்பனாகிய இறைவன், தன்னை விரும்பி வழிபடும் அந்தணனது கனவிலே பிறைதிகழ் சடையும் நீலகண்டமும் மான்மழுவேந்திய கைகளும் நெற்றியிற் கண்ணும் நீறணிந்த திருமேனியும் ஒற்றைவெள்விடையும் உமையொரு பாகமும் உடையவனாகத் தோன்றியருளினான். “என்பால் பேரன்புடன் பூசனை புரியும் வில்வேடனுடைய குணங்கள் இவையெனக் கேட்பாயாக. அவன் என்பால் அன்புரிமையிற் சிறந்த பெருந்தவ முனிவன் என்பதை நன்குணர்க. அவன் விரும்பியுறையும் இடமெதுவோ அதுவே தவமுனிவர் வாழும் தவவனமாகும். செருப்பணிந்த அவனது அடியே யான் விரும்பியணியும் நறுமலர். அவனது வாயே பொன்னாலாகிய அழகிய திருமஞ்சனக் குடமாகும். அவ்வாயினுள்ளே தங்கிய நீர் கங்கையாற்றின் நீரெனத் தூய்மையுடையதாகும். அவன் வாயிலுள்ள பற்கள் திருமஞ்சன நீர்க்குடத்துள் மந்திரம் ஓதி இடுதற்குரிய நன்மணிகளாம். அவ்வாயினகத்து விளங்கும் நாவானது திருமஞ்சன நீரில் இடுதற்குரிய நறுமலராம். அவன் தனது வாய் நீரை என் மேனியில் உமிழுங்கால் அந்நீரொடு தோய்ந்து விளங்கும் அவன் முகத்து மீசையாகிய புன்மயிர் மந்திரவிதிப்படி அமைந்த தருப்பையைக் காட்டிலும் நம் முடிக்கு மிகவும் இனிமையுடையதாகும். அவன் தலைமுடியிற் கொணர்ந்த சருகிலை தருப்பையினாற் பொதிந்து கொணரப்பட்ட கற்பக மலரேயாம். அவன் எனக்கு அன்பினாற்

படைத்த பன்றி முதலிய விலங்குகளின் இறைச்சி பெருந்தவ முனிவர்கள் எனக்குப் படைத்த நெய்யும் பாலுமாகிய தூய திருவமுதின் இயல்பினதாம். வேடனாகிய அவனது, செயலைக்குறித்து யான் கொண்ட கருத்து இதுவே. அவனது அன்பின் திறத்தை உனக்குத் தெளிவாகக் காட்டுவேன். நாளை நீ முறைப்படி பூசனையைச் செய்து முடித்தபின் அங்கேயே ஓரிடத்தில் மறைந்திருப்பாயாக" எனக் காளத்தியிறைவன் அந்தணனுக்கு அறிவுறுத்தி ம்றைந்தருளினான்.

துயிலுணர்ந்தெழுந்த அந்தணன், மனத்திற் கூச்சம் அடைந்து வைகறைப் பொழுதிலே நன்னீரிற் குளித்துக் காளத்திமலையை யடைந்து தான் நாள் தோறும் செய்து வருவதாகிய பூசனையை அமைதியாகச் செய்து முடித்து ஒருவர்க்கும் தோன்றாதபடி அங்கு ஒரு பக்கத்தே மறைந் திருந்தான். ஞாயிறு உச்சியையடைந்த நண்பகலிலே கானவர் தலைவனாகிய வேட்டுவன், தான் வேட்டையில் அகப்படுத்திக் கொண்ட உடும்பொடு வில்லும் அம்பும் உடையனாய்ச் செருப் பணிந்து தன்னைத் தொடர்ந்து வரும் நாயொடும் காளத்தி யிறைவனை வழிபடச் சென்றபொழுது, இறைவன் சிவலிங்கத் திருமேனியிலுள்ள மூன்றுகண்களில் (வலப்பக்கத்தாகிய) ஒரு கண்ணிலே குருதிநீரொழுக இருந்தனன். அதனைக் கண்ட வேடன், உடல் நடுக்கம் உற்றுப் பதைபதைத்து மனஞ்சுழன்று தன்வாயிற் கொணர்ந்த திருமஞ்சனநீர் சிந்தத் திருவமுதாகிய ஊனுடன் வில்லும் அம்பும் கைகளிலிருந்து நழுவிச்சிதற நிலத்தின்மீது செயலற்று விழுந்தான். சிறிது நேரத்திற்குப்பின் தெளிவுற் றெழுந்தான். "எம்பெருமானாகிய இறைவனுக்கு இத் தீங்கிழைத்தவர் இம்மலையைச் சார்ந்த காட்டகத்து இருத்தல் கூடுமோ" என ஐயுற்று எல்லாப் பக்கமும் அலைந்து தேடினான். ஒருவரையுங் காணவில்லை. பின்பு ஒருவாறு தேறி இறைவன் கண்ணில் இடைவிடாது ஒழுகும் குருதியை நிறுத்தத்தக்க பலவகை நன் மருந்துகளைத் தேடிக் கொணர்ந்து பிழிந்து பார்த்தான். அம் மருந்துகளாற் சிறிதும் பயனின்மை கண்டு மனம் தளர்ந்து 'என் அத்தனாகிய இறைவனுக்கு அடுத்த நோய் எதுவோ' என உளங்கனன்று கதறினான். 'இத் துன்பத் தினைக் காணுமளவுக்கும் பொறேன். இதனைக் காணுவதற்கு உரிய தீவினையுடைய எனது கண்ணைத் தோண்டியெடுத்துக் கடவுளது கண்ணிலுள்ள புண்ணில் அப்பியும் பார்ப்பேன்' எனத் துணிந்து அம்பினால் தன் கண்களில் ஒன்றைத் தோண்டியெடுத்து இறைவனது குருதி படிந்த கண்ணில் அப்பினான். அவ்வளவில் குருதிநீர் வழிதல் நின்றமையால் நன்றாயிற்று. இறைவனது மற்றொரு கண்ணிலும் இங்ஙனம் குருதிநீரொழுகக் கண்ட

வேட்டுவன் தக்கநன்மருந்து கண்டமைக்குத் தான் பெரிதும் உளமகிழ்ந்து மற்றைக் கண்ணையும் தோண்டி இறைவனது கண்ணில் அப்பக்கருதி அம்பினால் தோண்டப்புக்கான். அந்நிலையில் காளத்தியப்பனாகிய சிவபெருமான், "நில்லு கண்ணப்ப, நில்லு கண்ணப்ப என் அன்புடைத் தோன்றல் நில்லு கண்ணப்ப" என்ற இன்மொழியோடு சிவலிங்கத்தி னிடமாகத் தோன்றிய தனது மலர்போலும் திருக்கரத்தால் வேடர் தலைவனது கையினை அம்புடன்சேரப் பிடித்துத் தடுத்தருளினான். வானவர் மலர்மழை பொழிந்தனர். சங்கு, படகம், துந்துபி முதலிய மங்கள வாத்தியங்கள் இயம்பின. சிறப்புடைய தவமுனிவர்களும் கானவர்தலைவனாகிய கண்ணப்பனது பேரன்பின் திறத்தை இன்னிசையால் ஏத்தி மகிழ்ந்தனர். திருக்கண்ணப்பனாகிய அத்தோன்றல் இறைவனோடு பிரிவறக்கலத்தலாகிய சிவகதியைப் பெற்று ஈறிலாப் பேரின்ப வாழ்வினை யெய்தினான்".

என்பது திருகண்ணப்ப தேவர் திருமறமென்னும் இப்பனுவலில் விரித்துரைக்கப் பெற்ற செய்தியாகும். 'கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்' என நம்பியாரூரராற் போற்றப் பெற்ற கண்ணப்ப நாயனாரைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புக்கள் தேவாரத் திருப்பதிகங்களிலும் திருவாசகத்தும் ஓரளவு சுருக்கமாகக் குறிப்பிடப் பெற்று உள்ளன. கண்ணப்பரது வரலாற்றை முதன்முதலாக விரித்துக்கூறிய பெருமை இத்திருமறமென்னும் பனுவலை இயற்றிய நக்கீர தேவர்க்கே யுரியதாகும். இவராற் பாடப்பெற்ற இத் திருமறம் கண்ணப்பரது வரலாற்றைச் சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தில் விரித்துக் கூறுவதற்குப் பெரிதும் ஆதரவாயமைந்ததென்பது பெரிய புராணத்திற் கண்ணப்பநாயனார் புராணத்தையும் இத்திருமறத்தையும் ஒப்புநோக்கி ஆராய்வார்க்கு இனிது விளங்கும்.

## 6. கல்லாட தேவ நாயனார்

பதினொராந் திருமுறையாசிரியர்களுள் கல்லாட தேவ நாயனாரும் ஒருவர். இவர் பாடிய பிரபந்தம் திருக்கண்ணப்ப தேவர் திருமறம் என்பது. இந்நூல் பதினொராந் திருமுறையிற் பத்தொன்பதாவது பிரபந்தமாகத் தொகுக்கப் பெற்றுளது. நக்கீரதேவ நாயனார் பாடிய திருக்கண்ணப்ப தேவர் திருமறத்தையடுத்து அதே பெயருடையதாய்த் திகழும் இந்நூல் முறைப்படுத்தப் பெற்றிருத்தலையுற்று நோக்குங்கால், இப்பனுவலைப் பாடிய கல்லாட தேவரென்பார் நக்கீர தேவர் காலத்திலோ அன்றிச் சிறிது பிற்பட்ட காலத்திலோ

வாழ்ந்தவராதல் வேண்டுமென்பது நன்கு பெறப்படும். எனவே இவ்வாசிரியர் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவரெனக் கொள்ளுதல் பெரிதும் பொருத்தமுடையதாகும்.

கல்லாடர் என்னும் பெயர் கடைச் சங்கப் புலவரொருவரையும் பிற்காலப் புலவர் சிலரையும் குறித்து வழங்கக் காண்கின்றோம். கடைச்சங்கப் புலவரு ளொருவராகிய கல்லாடனார், பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பாடியவர். பொறையாற்றுக் கிழான், அம்பர் கிழான் அருவந்தை என்னும் சோழ நாட்டு வள்ளல்களால் ஆதரிக்கப் பெற்றவர். இவர் பாடியனவாகச் சங்கத் தொகை நூல்களில் பதினான்கு பாடல்கள் உள்ளன. இவர் வாழ்ந்தது கி. பி. இரண்டாம் நூற்றாண்டிற்கு முற்பட்ட காலப் பகுதியாகும். பதினொராந் திருமுறை யாசிரியராகிய கல்லாட தேவரும் கல்லாடம் என்னும் அகப்பொருட் பாடற் கோவையைப் பாடிய கல்லாடரும் தொல்காப்பியச் சொல்லதிகார வுரையாசிரியர்களு ளொருவராகிய கல்லாடர் என்பவரும் கடைச்சங்கப் புலவராகிய கல்லாடனாரது பெயரைப் புனைந்து வாழ்ந்த பிற்காலப் புலவர்களாவர். தமிழிலக்கியத் துறையிற் கல்லாடர் என்னும் பெயருடன் பேசப்படுவோர் இங்கு எடுத்துக் காட்டிய இந்நால்வருமே யாவர். கடைச்சங்கப் புலவராகிய கல்லாடனாரது மொழிநடைக்கும் அவரது பெயர் தாங்கிய ஏனை மூவரது மொழிநடைக்கும் வேற்றுமை பெரிதாகலின் சங்கப் புலவராகிய கல்லாடனார் ஏனைக் கல்லாடர் மூவர்க்கும் நெடுங்காலம் முற்பட்டவர் என்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்த கொள்கையாகும். இனி, பிற்காலத்தினராகப் பேசப்படும் கல்லாடர் மூவரும் ஒருவரோ இருவரோ அன்றி வெவ்வேறு புலவரோ என்னும் ஐயமும் அறிஞர்களிடையே நிலவக் காண்கின்றோம். கல்லாட தேவ நாயனார் பாடியதாகப் பதினொராந் திருமுறையில் தொகுக்கப் பெற்றுள்ள திருக்கண்ணப்ப தேவர் திருமறம் என்ற பிரபந்தத்தையும் கல்லாடர் பாடிய கல்லாடம் என்ற நூலையும் ஒப்பு நோக்குங்கால் அவ்விரு நூல்களும் மொழிநடையிற் சிறிது வேறுபட்டிருத்தல் புலனாகும். அன்றியும் பதினொராந் திருமுறையாசிரியர்களுள் ஒருவராகிய கல்லாட தேவ நாயனாரும் கல்லாட நூலின் ஆசிரியராகிய கல்லாடரும் ஒருவரென்பது உண்மையா யிருக்குமானால் பதினோராந் திருமுறையில் திருக்கண்ணப்ப தேவர் திருமறத்தையடுத்துக் கல்லாடத்திலுள்ள செய்யுட்களும் சேர்க்கப் பெற்றிருக்கும். திருவாதவூரடிகள் அருளிய திருச்சிற்றம்பலக் கோவையை யடியொற்றி அறிவனூற் பொருளாகிய சிவசமயச் செய்திகளும் உலக நூல் வழக்காகிய

அகப்பொருளொழுகலாறும் ஒருங்கமைந்து விளங்கும் கல்லாடச் செய்யுட்கள் சைவத் திருமுறையிற் சேர்த்து ஓதியுணரத்தக்க சிறப்புடையன என்பதை மறுத்தற்கில்லை. இறைவனது அருட் புகழை விரித்துரைக்கு மியல்பினவாகிய கல்லாடச் செய்யுட்களை முன்னோர் பதினோராந் திருமுறையிற் கல்லாட தேவ நாயனார் பிரபந்தத்துடன் தொகுக்காது விட்டதனை நுணுகி நோக்குமிடத்துக் கல்லாட தேவ நாயனாரும், கல்லாட நூலாசிரியரும் ஒருவரல்லரென்பதும், கல்லாட தேவ நாயனார்க்குக் காலத்தாற் பிற்பட்டவர் கல்லாட நூலாசிரிய ரென்பதும் நன்கு புலனாம். தொல்காப்பியத்திற்கு முதன் முதல் உரை கண்ட உரையாசிரியர் இளம்பூரண அடிகளேயென்பது எல்லோர்க்கும் ஒப்பமுடிந்த கொள்கையாகும். அங்ஙனமாதலின் தொல்காப்பியச் சொல்லதிகாரத்துக்கு உரையெழுதிய கல்லாடரென்பார் இளம்பூரணர்க்குக் காலத்தாற் பிற்பட்டவ ரென்பது நன்கு துணியப்படும். பதினொராந் திருமுறையிற் கல்லாட தேவ நாயனார்க்குப் பின் குறிக்கப்படும் கபிலதேவ நாயனார் பாடல்களைத் தொல்காப்பியப் பொருளதிகார வுரையில் இளம்பூரணர் மேற்கோளாகக் காட்டுதலால், கபிலதேவ நாயனாரும் அவர்க்கு முன்னே குறிக்கப்பட்ட கல்லாடதேவ நாயனாரும் இளம்பூரண அடிகளுக்குக் காலத்தாற் முற்பட்டவ ராதல் வேண்டும். எனவே இளம்பூரணர்க்குக் காலத்தால் முற்பட்ட கல்லாட தேவ நாயனாரும் அவ்வுரையாசிரியர்க்குப் பின் சொல்லதிகாரத்திற்கு உரை வரைந்த கல்லாடரும் ஒருவரல்லர் என்பது நன்கு துணியப்படும்.

கல்லாடம் என்பது தமிழகத்திலுள்ளதோர் ஊர். சிவபெருமான் கோயில் கொண்டருளுஞ் சிறப்புடைய திருத்தலங்களுள் கல்லாடம் என்னும் பெயருடைய திருத்தலமுமொன்றென்பது,

**'கல்லாடத்துக் கலந்தினி தருளி**
**நல்லாளோடு நயப்புற வெய்தியும்" (கீர்த்தித்திரு அகவல்)**

எனவரும் திருவாசகத் தொடரால் இனிது விளங்கும். செங்கற்பட்டு ஜில்லா பொன்னேரி தாலுகாவைச் சேர்ந்த மீஞ்சூர் என்னும் ஊரிலுள்ள சோழகுல சுந்தரவிண்ணகர் எனும் பழம் பெயருடைய வரதராசப் பெருமாள் கோயிலில் வரையப்பட்ட கல்வெட்டு ஒன்றில் 'கல்லாடீச் சுரமுடையார் கோயில்' குறிப்பிடப் பட்டுள்ளது. கல்லாடீச்சுரம் என்ற பெயருடைய இத்திருக்கோயில் இப்பொழுது எவ்விடத்துள்ளதெனத் தெரிந்து கொள்ளுதற்கியலவில்லை. கல்லாடீச்சுரம் என்பது ஆதித்தேச்சுரம், இராசராசேச்சுரம், மெய்கண்டீச்சுரம்

என்பவற்றைப் போன்று அமைந்த பெயராகும். இராசராசன் கட்டிய திருக்கோயில் இராசராசேச்சுரம் எனப்பெயரெய்தியது போன்று கல்லாடர் என்ற பெரியவர் அமைத்த திருக்கோயில் கல்லாடீச்சுரம் எனப் பெயரெய்தியதெனக் கருத வேண்டியிருத்தலால், மீஞ்சூர் வரதராசப் பெருமாள் கோயிற் கல்வெட்டிற் குறிக்கப்பட்ட கல்லாடீச்சுரம் என்ற திருக்கோயிலமைந்த இடத்தைத் திருவாசகத்திற் கூறப்பட்ட கல்லாடம் என்ற திருப்பதியென உறுதியாகக் கூறுதற்கிடமில்லை. முற்காலத்தில் கல்லாடம் என்ற ஊரில் வாழ்ந்திருந்தமை பற்றிக் கல்லாடனார் என வழங்கிய பெயர் பிற்காலத்தில் பலர்க்கும் இட்டு வழங்குதற்குரிய பெயராயிற்றெனவும், கல்லாடம் என்ற திருப்பதியிற் கோயில் கொண்டு விளங்குதல் கருதிக் கல்லாடர் என அவ்வூர் இறைவனுக்கு வழங்கிய பெயர் பின்னர் மக்களுக்கு இட்டு வழங்குதற்குரிய பெயராயிற்றெனவும் இருவகையாகக் கொள்ளுதல் பொருந்தும்.

கல்லாட தேவநாயனார் பாடிய திருக்கண்ணப்ப தேவர் திருமறம் என்பது முப்பத்தெட்டடிகளாலியன்ற ஆசிரியப் பாவாக அமைந்துள்ளது. கண்ணப்பநாயனாரது அன்பின் வழிப்பட்ட வீரச்செயலை யுணர்த்துவதாகலின் இது திருக் கண்ணப்ப தேவர் திருமறம் என்னும் பெயர்த்தாயிற்று. பரிவின் தன்மை யுருவுகொண்டனைய திண்ணனார், விலங்கினங்களை வேட்டையாடச் சென்றபொழுது, சிவபெருமானது திருவுருவாகிய சிவலிங்கத் திருமேனியைக் கண்டு உளமுருகி வாய் கலசத்தால் மஞ்சன நீராட்டி ஊனமுதருத்தி வழிபட்டார். அங்ஙனம் வழிபட்டு வரும் நாட்களில் ஒரு நாள் இறைவன் அவ்வேடரது அன்பின் திறத்தைச் சிவகோசரியாரென்னும் மறையவர்க்குப் புலப்படுத்தத் திருவுளங்கொண்டு தம் வலக்கண்ணிற் குருதிநீர் வழியச் செய்தமையும், அது கண்டு நடுக்கமுற்ற திண்ணனார் இறைவன் பால் வைத்த நீங்காத பேரன்பினால் அழுதரற்றித் தம் கையிலுள்ள அம்பினால் தமது கண்ணொன்றைத் தோண்டியெடுத்து இறைவனது கண்ணில் அப்பிய செய்தியும், அந்நிலையில் இறைவனது கண் நலம்பெற மற்றொரு கண்ணிலும் குருதி நீரொழுகக் கண்ட திண்ணனார் தமது மற்றொரு கண்ணையும் தோண்டத் தொடங்கியபொழுது சிவபெருமான் தன்னுடைய திருக்கையினால் திண்ணனாருடைய இருகைகளையும் சேரப்பிடித்துக் கொண்டு "நம் கண்ணின் புண் விரைவில் நீங்கி நலம் பெற்றதனைக் காண்பாயாக. நீ மிகவும் நல்லை" எனப் பாராட்டித் திருவருள் புரிந்தமையும் ஆகிய வரலாற்றுச் செய்திகள் இத்திருமறம் என்னும் பிரபந்தத்தில் சுருக்கமாகவும் சுவை பொருந்தவும் விரித்துரைக்கப்பட்டன.

அன்பின் வடிவாகிய கண்ணப்பரென்னும் திருவேட்டுவரது திருவடியைக் கைதொழுத அளவில் கரையின்றி மேன்மேலுளவாம் பிறவிப்பிணிக்குக் காரணமாகிய வினைத்தொடர்பு அறவே கெட்டுப்போம் என்ற உண்மையை இப்பிரபந்தத்தின் முடிந்த பொருளாகக் கல்லாட தேவர் நன்கு அறிவுறுத்தி உள்ளமை கண்ணப்பநாயனார்பால் அவர்கொண்ட பேரன்பினை இனிது விளக்குவதாகும்.

திண்ணனார், காளத்தி மலைமீதமர்ந்த சிவலிங்கப் பெருமானைக் கண்டு வழிபட்டுத் தமது கண்ணைத் தோண்டி அப்பிக்கண்ணப்பராயினார் என்பதே வரலாறு. கல்லாட தேவநாயனாராகிய இவ்வாசிரியர், திண்ணனார் கானப்பேருறை கண்ணுதலை வழிபட்டாரென இப்பிரபந்தத்திற் குறிப்பிட்டு உள்ளார். கானப்பேர் என்பது இக்காலத்திற் காளையார் கோயில் என வழங்கும் பாண்டி நாட்டுத் திருத்தலமாகும். இத்தலத்திற்கும் கண்ணப்பர் வரலாற்றிற்கும் யாதொரு தொடர்புமில்லை. அங்ஙனமாகவும் கண்ணப்பரது வழிபாட்டினை யேற்றுக் கொண்ட சிவபெருமானைக் குறிக்குமிடத்துக் கானப் பேருறைகண்ணுதல் என இவ்வாசிரியர் கூறியுள்ளார். கண்ணப்பர்க்கு அருள் செய்த காளத்திப் பெருமான் பாண்டி நாட்டின் கண்ணதாகிய கானப்பேர் என்ற திருத்தலத்திலும் தன்னடியார்களுக்கு அருள்சுரக்கும் திருக்குறிப்புடன் எழுந்தருளியுள்ளான் எனக் கூறும் வாயிலாகத் தாம் கானப்பேர் என்ற தலத்திற்கொண்டுள்ள பேரீடுபாட்டினைப் புலப்படுத்தி மகிழ்தல் இவ்வாசிரியரது நோக்கமெனத் தெரிகிறது. எனவே கல்லாடதேவநாயனாராகிய இவ்வாசிரியர் பாண்டி நாட்டில் வாழ்ந்தவரென்றும் அந்நாட்டுத் திருத்தலங்களுள் ஒன்றாகிய கானப்பே ரென்னும் திருப்பதியிலே அளவிலாப் பற்றுடையவ ரென்றும் கருதுதல் பொருத்தமுடையதாகும்.

## 7. கபில தேவநாயனார்

இவர் பாடிய நூல்கள் மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை, சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை, சிவபெருமான் திருவந்தாதி என்பன. இம்மூன்று பிரபந்தங்களும் பதினொராந் திருமுறையில் முறையே 20,21,22- ஆம் பிரபந்தங்களாகச் சேர்க்கப் பெற்றுள்ளன.

இவற்றுள் மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை யென்பது, அன்பினால் வழிபடும் அடியார்களது இடர்தீர்த்தருள் புரிதல் வேண்டிச் சிவபெருமானால் தோற்றுவிக்கப் பெற்ற யானைமுகப் பெருமானாகிய மூத்த பிள்ளையாரைப் போற்றிப் பரவும் பனுவலாகும். மூத்த நாயனாரென்பது மூத்த

பிள்ளையாராகிய விநாயகர்க்குரிய பெயராகும். * (* நாயனார் என்ற சொல் வழிபடத்தக்க இறைவன் என்ற பொருளில் வழங்குவதாகும். "சிராப்பள்ளி மேவிய நாயனாரென நம் வினை நாசமே" (திருநாவுக்கரசர் தேவாரம்) என வருதல் காண்க.) வெண்பாவும் கட்டளைக் கலித்துறையும் அடுத்தடுத்துத் தொடுத்து வர இருபது செய்யுட்களால் அந்தாதித் தொடையாக அமைந்த இப்பிரபந்தம், இருவகை மணிகளாற் நோக்கப் பெற்ற மாலை போன்று விளங்குவதாதலின் இரட்டை மணிமாலை யென்னும் பெயர்த்தாயிற்று.

யானைமுகக் கடவுளாகிய விநாயகப் பெருமான் தன்னை அன்பினால் வழிபடு மியல்புடைய மெய்யடியார்களுக்கு இவ்வுலகில் வேண்டும் செல்வங்களை மேன்மேல் உளவாகச் செய்தும் அவர்கள் தொடங்கிய நற்செயல்களை இடையூறின்றி இனிது நிறைவேற்றியும் நலம் பெருகிய சொல்வன்மையும் பெருமைக்குரிய நற்பண்புகளும் பெருகச் செய்தும் அழகுபெற வாழ்விக்கவல்ல அருளாளனாகத் திகழ்வோனாதலின் அப்பெருமானை வானுலகத்தவராகிய தேவர்களும் காதலாற் கைகுவித்து வணங்குவர் என்பதனை,

**திருவாக்குஞ் செய்கருமங் கைகூட்டுஞ் செஞ்சொற்**
**பெருவாக்கும் பீடும் பெருக்கும் உருவாக்கும்**
**ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்**
**காதலாற் கூப்புவர்தங் கை.**

என இவ்விரட்டை மணிமாலையின் முதற் பாடலில் ஆசிரியர் அறிவுறுத்துகின்றார்.

விநாயகப் பெருமானை வாயாரப் போற்றி உளங்குளிர்ந்து வழிபடும் அடியார்கள் சிந்தையின் நிறைவாகிய செல்வத்தைப் பெற்றவர்களாதலின் அவர்கள் பால் செல்வத்திற்குத் தெய்வமாகிய திருமகள் விரும்பியுறைவாள் எனவும் அங்ஙனம் வழிபடாதார் மனத்தில் திருமகள் கணப்பொழுதும் தங்கியிருக்க மாட்டாளெனவும் அறிவுறுத்துவது,

**நல்லார் பழிப்பி லெழிற்செம் பவளத்தை நாணநின்ற**
**பொல்லா முகத்தெங்கள் போதகமேபுர மூன்றெரித்த**
**வில்லா னளித்த விநாயக னேயென்று மெய்ம்மகிழ**
**வல்லார் மனத்தன்றி மாட்டா ளிருக்க மலர்த்திருவே.**

எனவரும் இப்பிரபந்தத்தின் இறுதிச் செய்யுளாகும். இவ்வாறே இத்திரு விரட்டை மணிமாலையிலுள்ள செய்யுட்கள் யாவும் விநாயகப் பெருமானை வழிபடுதலா லுளவாம் பெரும் பயன்களை விரித்துரைப்பனவாக அமைந்துள்ளன.

பத்துப் பாட்டும், எட்டுத் தொகையுமாகிய பழைய சங்க நூல்களிற் சிவபெருமானுக்குரிய மகனாராகப் போற்றப்பெறுந் தெய்வம் குறிஞ்சி நிலக் கடவுளாகிய முருகப் பெருமானேயாவர். யானைமுகப் பெருமானாகிய விநாயகரது வழிபாடு சங்க நூல்களிற் கூறப்படவில்லை. விநாயகர் வழிபாடாகிய இது கி. பி. ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்திலே தமிழ் நாட்டில் இடம் பெற்றிருத்தல் வேண்டுமென்பது வரலாற்றாராய்ச்சியாளர் துணிபாகும். எனவே மூத்த பிள்ளையார் திருவிரட்டை மணிமாலை யென்னும் இப்பிரபந்தம் கி. பி. ஏழாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டதென்பது நன்கு பெறப்படும். இப்பிரபந்தம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த நக்கீர தேவர், கல்லாட தேவர் என்ற பெருமக்கள் பாடிய பிரபந்தங்களை யடுத்துப் பதினொராந் திருமுறையில் முறைப்படுத்தப் பெற்றிருத்தலையும் கி. பி. பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த இளம்பூரண அடிகள் இவ்விரட்டை மணிமாலையிலுள்ள 'கனிய நினைவோடு', 'நல்லார் பழிப்பில்' என்னும் முதற் குறிப்புடைய செய்யுட்கள் இரண்டினைத் தொல்காப்பியச் செய்யுளியல் 175 - ஆம் சூத்திரவுரையில் நெடிலடி நான்கினால் வரும் கலித்துறைக்கு உதாரணமாகக் காட்டியிருத்தலையும் உற்று நோக்குங்கால் இந்நூலாசிரியராகிய கபில தேவ நாயனார் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டினையடுத்து வாழ்ந்தவரென்பது நன்கு புலனாகும்.

பதினொராந் திருமுறையாசிரியருள் ஒருவராகிய கபில தேவ நாயனாரும், கடைச்சங்க புலவராகிய கபிலரும் ஒருவரேயெனக் கருதுவாருமுளர். கட்டளைக் கலித்துறையென்னும் செய்யுள் வகை கடைச் சங்க காலத்தில் இல்லாத புதிய யாப்பாகும். இரட்டை மணிமாலையென்பது இப்புதிய யாப்பாகிய கட்டளைக் கலித்துறையும் பழைய யாப்பாகிய வெண்பாவும் என இருவகைச் செய்யுட்களும் விரவத் தொடுத்த புதிய பிரபந்தமாகும். இப்பிரபந்தத்தை முதன்முதல் அருளிச் செய்தவர் காரைக்காலம்மையாரென்பதும் இப்பிரபந்தம் கடைச் சங்கக் காலத்தில் வழங்கப் பெறாத விருந்து என்னும் பனுவல் வகையைச் சார்ந்த தென்பதும் முன்னர் விளக்கப் பெற்றன. எனவே, திருவிரட்டை மணிமாலையென்னும் பிற்காலப் பிரபந்தத்தைப் பாடிய கபில தேவநாயனாரைக் கடைச் சங்கப் புலவராகிய கபிலர் எனக் கொள்ளுதல் ஒரு சிறிதும் பொருந்தாதென்க. அன்றியும் அஞ்சலி, அரன், அநங்கன், ஆலிங்கனம், இச்சை, ஏகதந்தம், கணபதி, கட்டங்கம், காபாலி, சரணம், சலம், சிங்கம், சித்தம், ஞானம், திக்கு, நாமம், பரஞ்சோதி, பாகீரதி, பாவனை, புண்டரிகம், போகபந்தம், போதகம், மதுகரம், மைத்துனன், வார்த்தை, விதிவசம், விநாயகன் முதலிய வட சொற்களும், உற்றனங்கள்,

எத்துக்கு வந்தாய், காண்கிடாய் முதலிய பிற்காலச் சொல்வழக்குகளும், சண்டேசர் வரலாறு முதலிய புராணச் செய்திகளும் கபிலதேவ நாயனார் பாடல்களில் இடம் பெற்றுள்ளன. இக்குறிப்புக்களை நோக்குமிடத்து இவ்வாசிரியர் கடைச்சங்கப் புலவராகிய கபிலரல்ல ரென்பதும் அப்புலவர் பெருமானது பெயரைத் தமக்குரிய பெயராகப் பெற்றுக் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் வாழ்ந்த திருவருட் செல்வரென்பதும் இனிது புலனாகும்.

கபிலதேவ நாயனார் பாடிய சிவபெருமான் திருவிரட்டை மணிமாலையில் முப்பத்தேழு பாடல்கள் காணப்படுகின்றன. வெண்பாவும் கட்டளைக்கலித்துறையுமாகிய இருவகை மணிகளால் தொடுக்கப்படும் இரட்டைமணிமாலையில் இருதிறப்பாக்களும் ஒத்த எண்ணிக்கையுடையனவாய் அமைந்திருத்தல் வேண்டு மென்பது விதி. சிவபெருமான் திருவிரட்டை மணிமாலையாகிய இதன்கண் பத்தொன்பது வெண்பாக்களும் பதினெட்டுக் கலித்துறைகளுமே உள்ளன. 'அந்திமதிமுகிழான்' என்ற பாடலை முதலாகக் கொண்டு அந்தாதித் தொடையுடன் அமைந்த இப்பனுவலின் இறுதியிலுள்ள 37 - ஆம் செய்யுளின் அந்தம் முதற் செய்யுளின் ஆதிச்சொல்லுடன் மண்டலித்து முடியும் நிலையில் அமையவில்லை. எனவே இத்திருவிரட்டை மணிமாலையின் இறுதியிலுள்ள செய்யுட்கள் சில காலப் பழமையால் ஏடுகள் சிதைந்த நிலையில் மறைந்திருத்தல் வேண்டுமெனக் கருத வேண்டியுளது. இரட்டை மணிமாலையென்னும் பிரபந்தம் இருபது செய்யுட்களால் அமைதல் மரபு. இரட்டைமணிமாலையைச் சிவபெருமானுக்கு அணிந்து மகிழக் கருதிய கபிலதேவநாயனார் அம்மணிமாலை இரட்டை வடமாக அமையும் வண்ணம் நாற்பது செய்யுட்களாற் பாடியணிந்தாரெனக் கருத இடமுண்டு. இக்கருத்துப் பொருந்துவதாயின் இதன்கண் மறைந்து போன செய்யுட்கள் 38, 38, 40 என்னும் எண் பெற்றன எனக்கூறுதல் பொருந்தும். காரைக்காலம்மையார் பாடிய திருவிரட்டை மணி மாலை கட்டளைக் கலித்துறை முன்னும் வெண்பா பின்னுமாகத் தொடுக்கப் பெற்றிருத்தலையும் கபிலதேவ நாயனார் பாடிய திருவிரட்டைமணிமாலை வெண்பா முன்னும் கட்டளைக் கலித்துறை பின்னுமாகத் தொடுக்கப் பெற்றிருத்தலையும் நோக்குமிடத்துக் கட்டளைக் கலித்துறைவெண்பா என்னும் இருவகை மணிகளுள் எந்த மணியை முதலாகக் கொண்டு தொடுப்பினும் அவ்விருவகைமணிகளாற்றொடுக்கப் பெற்ற மாலை இரட்டைமணிமாலையென்னும் பெயர்க்குரியதாம் என்பது நன்கு தெளியப்படும்.

*சிவபெருமான் திருவிரட்டை மணிமாலையில் அமைந்த செய்யுட்கள் யாவும் நவில்தொறும் சுவை பயப்பனவாகவுள்ளன. இறைவனை நோக்கிப் 'பெருமானே நீ நினது ஊரை எப்பொழுது ஒற்றியூராக்கினாய்' என வினவும் நிலையிலமைந்தது,*

**அடியோமைத் தாங்கியோ ஆடையுடுத்தோ**
**குடியோம்ப மாநிதியங் கொண்டோ - பொடியாடும்**
**நெற்றியூர் வாளரவ நீள்சடையாய் நின்னூரை**
**ஒற்றியூ ராக்கிற் றுரை.**

*எனவரும் பாடலாகும். சிவபெருமான் கோயில் கொண்டருளிய திருத்தலங்களுள் திருவொற்றியூரும் ஒன்று. ஒற்றி யென்ற சொல்லுக்கு அடைமானம் என்பது பொருள். அங்ஙனங் கொள்ளவே ஒற்றியூர் என்பது ஒருவர்பால் கடனுக்கு அடைமானமாக ஒற்றி வைக்கப்பட்ட ஊர் எனப் பொருள்படும். தன்னைச் சார்ந்த சுற்றத்தார் ஏவலாளர் முதலியோரை உணவு அளித்துப் பாதுகாத்தற் பொருட்டோ அன்றித் தான் ஆடையணிகலன் முதலியவற்றை நன்றாக அணிந்து செல்வ வாழ்வு வாழ்தற் பொருட்டோ அன்றி வறுமையில் தாழ்வடைந்த தனது குடும்பத்தை உயர் நிலையில் வைத்துப் பாதுகாத்தற் பொருட்டோ இவற்றுள் ஏதாவதொரு காரணத்தைக் கொண்டு தன்னிடத்துள்ள நிலம் முதலிய பொருள்களை ஒற்றி வைத்துக் கடன்வாங்குதல் உலகத்தாரியல்பாகும். மேற்குறித்த காரணங்களுள் எந்தக் காரணங் கருதி இறைவா நினது ஊரை ஒற்றியூராக்கினாய்? எனக் கபிலதேவ நாயனார் இறைவனை வினவி மகிழுந்திறம் உணர்ந்து இன்புறத்தக்கதாகும்.*

*இவர் பாடிய சிவபெருமான் திருவந்தாதி 'ஒன்று முதலாக' எனத் தொடங்கி 'ஒன்று' என முடியும் நூறு வெண்பாக்களால் இயன்றதாகும். இந்நூலில் 62 - ஆம் பாடலின் இரண்டாமடி சிதைந்துள்ளது. ஆரூர், ஒற்றியூர், ஆவூர், அண்ணாமலை, ஆமாத்தூர், வேங்கடம், கூடல், வெண்காடு, மறைக்காடு, சிராமலை, பூம்புகார், கானப்பேர், இடுமணல், ஆக்கூர், புறந்தை, காரோணம், ஆடானை, பழனம், புன்கூர், மண்டளி, கோகரணம், கோப்பாடி, குற்றாலம், கோவணம், புகலூர், களந்தை, தாங்கால், தலையாலங்காடு, திருமாலுமங்கை, செங்குன்றூர், புலிப்பொது, மேற்றளி என்ற திருத்தலங்கள் எதுகை நயம் பொருந்த எடுத்துரைத்துப் போற்றப் பெற்றுள்ளன. இத்திருவந்தாதியிலுள்ள செய்யுட்கள் சில ஏடெழுதுவோர் கைத்திறத்தால் உருமாறி யிருத்தலால் அவற்றின் உண்மைப் பொருளை அறிந்துகொள்ள இயலவில்லை.*

கபிலதேவ நாயனார் பிரபந்தங்களில் அவர்க்குக் காலத்தால் முற்பட்ட காரைக்காலம்மையார், திருநாவுக்கரசர் முதலிய ஏனைத் திருமுறையாசிரியர்கள் திருவாய் மலர்ந்தருளிய திருப்பாடல்களின் சொற்பொருள் நலங்கள் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன.

**"தெளிவாய் மடநெஞ்சே செஞ்சடையான் பாதந்**
**தெளியாதார் தீ நெறிக்கட்செல்வர்"**

எனவரும் சிவபெருமான் திருவந்தாதிச் செய்யுள், 'திருவீழிமிழலையானைச் சேராதார் தீ நெறிக்கே சேர்கின்றாரே' எனவரும் திருநாவுக்கரசர் வாய்மொழிப் பொருளைத் தன்பாற் கொண்டு திகழ்தல் காண்க.

இவ்வாசிரியர் பிறந்த நாடு, ஊர், குலம் முதலிய செய்திகளை யறிந்து கொள்ளுதற்குரிய சான்றுகள் கிடைக்கவில்லை. இவர் தம் பாடல்களிற் போற்றிப் பரவிய சிவ தலங்களைப் பற்றிய குறிப்புக்களைக் கூர்ந்து நோக்குங்கால் இவர் சிவ தல யாத்திரையினை மேற்கொண்டு வாழ்ந்த சிவநெறிச் செல்வ ரென்பது நன்கு விளங்கும். இவராற் போற்றப் பெற்ற திருத்தலங்களுட் பெரும்பாலான சோழ நாட்டூர்களாக இருத்தலை நுணுகி நோக்குமிடத்து இவ்வாசிரியர் சோழ நாட்டில் நெடுங்காலம் வாழ்ந்தவரென்பது ஒருவாறு உய்த்துணரப்படும்.

## 8. பரண தேவநாயனார்

பதினொராந் திருமுறையில் இருபத்து மூன்றாம் பிரபந்தமாக முறைப்படுத்தப்பட்டுள்ள சிவபெருமான் திருவந்தாதி யென்ற பனுவல் பரணர் என்னும் பெயருடைய புலவர் பெருமானாற் பாடப்பெற்றதென்பது,

**ஒன்றைப் பரணர் உரைத்த அந்தாதிபல**
**ஒன்றைப் பகரில் ஒருகோடி - ஒன்றைத்**
**தவிரா துரைப்பார் தளரார் உலகில்**
**தவிரார் சிவலோகந் தான்.**

என அவ்வந்தாதியின் இறுதியிலுள்ள வெண்பாவினால் இனிது விளங்கும். திருவருட் செல்வராகிய இந்நூலாசிரியர் கடைச்சங்கப் புலவராகிய பரணரது பெயரைத் தமக்குரிய பெயராகப் பெற்றமை கருதிப் பரண தேவ நாயனார் என அழைக்கப் பெற்றனரெனக் கொள்ளுதல் பொருந்தும்.

இவ்வாசிரியர் பிறந்த நாடு, ஊர், குலம் முதலியன பற்றித் தெரிந்து கொள்ளுதற்குரிய சான்றுகள் கிடைக்கவில்லை. நக்கீர

தேவர், கல்லாட தேவர், கபில தேவர் என்போர் பாடிய பிரபந்தங்களின் பின் இவர் பாடிய சிவபெருமான் திருவந்தாதி வரிசைப்படுத்தப் பெற்றிருத்தலை நோக்குங்கால் பரணதேவ நாயனாரெனப் போற்றப் பெறும் இவ்வாசிரியர் முற்கூறிய பெருமக்கள் வாழ்ந்த காலமாகிய கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவரென்பது நன்கு பெறப்படும். கபில தேவ நாயனார் பாடிய சிவபெருமான் திருவந்தாதியை அடியொற்றி இவர் பாடிய சிவபெருமான் திருவந்தாதியும் 'ஒன்றுரைப்பீர்' என ஒன்று முதலாகத் தொடங்கி 'ஓரைந்துரைக்க வல்லார்க்கு ஒன்று' என ஒன்றீறாக மண்டலித்து முடிந்துளது. இவ்வந்தாதி நூறு வெண்பாக்களால் இயன்றுளது. இதன் கண் 5 - ஆம் பாடலின் மூன்றாமடியும், 14 - ஆம் பாடலின் முதலடியும், 42- ஆம் பாடல் மூன்றாமடியின் இறுதிச் சீரும் சிதைந்துள்ளன.

எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானது இறைமைத்தன்மையும் அவ்விறைவன் கோயில் கொண்டு வீற்றிருந்தருளுந் திருப்பதிகளும் ஆட்பாலவராகிய அடியார் களுக்கு அருள்புரிதல் வேண்டி இறைவன் செய்தருளிய அருட் செயல்களும் அம்மையப்பனாகிய இறைவனை வழிபடும் நெறிமுறைகளும் அங்ஙனம் வழிபடுதலால் இவ்வுலக மக்கள் அடைதற்குரிய இம்மை மறுமை இன்பங்களும் இவ்வந்தாதியில் விரித்துரைக்கப் பெற்று உள்ளன.

'தத்துவத்தின் உட்பொருள்' எனவும் 'பெண் ஆண் அலியென்று பேச்சுக் கடந்த பெருவெளி' எனவும் 'சொல்லாயம் இன்றித் தொலைவின்றித் தூநெறிக்கட்சொல்லாய்ப் பரந்த சுடரொளி' எனவும் 'தாமேய வாறு சமய முதற்பொருளுந் - தாமேய வாறு தழைக்கின்றார்' எனவும் 'உருவுபலகொண்டொ ருவராய் நின்றார் - உருவு பலவாம் ஒருவர்' எனவும் இவ்வந்தாதியில் வரும் தொடர்கள் சிவநெறிச் செல்வர்களாற் போற்றி வழிபடப் பெறும் முழுமுதற் கடவுளதியல்பினைத் தெளிவாக விளக்குவனவாகும்.

தன்னை அன்பினால் வழிபாடு புரிந்த சண்டேசப் பிள்ளையார்க்கு இறைவன் அருள் செய்த திறத்தினை யெண்ணியுளமுருகிய பரண தேவ நாயனார்,

**அடைந்துன்பால் அன்பாய் அணிமணிகொண் டர்ச்சித்**
**தடைந்துன்பால் மேலுகுத்த மாணிக் - கடைந்துன்பால்**
**அவ்வமுதம் ஊட்டி அணிமலருஞ் சூழ்ந்தன்று**
**அவ்வமுத மாக்கினாய் காண்.**

என இறைவனைநோக்கி உளமுவந்து போற்றியுள்ளார். இவ்வாறே கண்ணப்ப நாயனார் காளத்தியிறைவனை வழிபட்ட

முறையினையும் அன்புருவமாகிய அவர்க்கு இறைவன் அருள்செய்த சிறப்பினையும்,

**சென்றுசெருப் புக்காலாற் செல்ல மலர்நீக்கிச்**
**சென்று திருமுடிவாய் நீர்வார்த்துச் - சென்றுதன்**
**கண்ணிடந்தன் றப்புங் கருத்தற்குக் காட்டினான்**
**கண்ணிடந்தன் றப்பாமைப் பார்த்து.**

எனவரும் பாடலால் இவ்வாசிரியர் போற்றிப்பரவிய திறம் படித்து மகிழ்தற்குரியதாகும்.

அட்ட வீரட்டம், அண்ணாமலை, அம்பர் மாகாளம், ஆமாத்தூர், ஆரூர் மூலட்டானம், ஆலங்காடு, ஆலந்துறை, ஆலவாய், ஆனைக்கா, இடைமருது, ஈங்கோய் மலை, எழிலவாய்(?) ஏகம்பம், ஒற்றியூர், கடவூர், கடனாகைக் காரோணம், கயிலை, கழிப்பாலை கழுமலம், காவாத்தலை, காளத்தி, காறை (காறாயில்), கானப்பேர், கோளிலி, சாய்க்காடு, சிராமலை, செங்காட்டங்குடி, சேதுக்கரை, சோற்றுத்துறை, திருமீச்சூர், தில்லைப் பொன்னம்பலம், பாசூர், புகலூர், பூவணம், பைஞ்ஞீலி, மருகல், மறைக்காடு, வஞ்சி, வலஞ்சுழி, வெண்காடு ஆகிய திருத்தலங்களை ஆசிரியர் இத்திருவந்தாதியிற் குறித்துப் போற்றியுள்ளார். இவற்றுட் சிலதலங்களின் பெயர்களைச் சிலேடைப் பொருளனவாகக் கொண்டு மோனை எதுகை முரண் முதலிய தொடைநயங்களும் வேறுபிற அணிநலங்களும் அமையப் போற்றியுள்ளமை படித்து மகிழத்தக்கதாகும்.

திருக்கழிப்பாலையிறைவரைக் காமுற்ற தலைமகள் அவ்விறைவரது பிரிவாற்றாது வருந்திக் கூறுவதாக அமைந்தது,

**தாமென்ன நாமென்னவேறில்லை தத்துறவில்**
**தாமென்னை வேறாத் தனித்திருந்து - தாமென்**
**கழிப்பாலை சேருங் கறைமிடற்றார் என்னே**
**கழிப்பாலை சேருங் கடன்.**

எனவரும் பாடலாகும். மென்கழியாகிய கரும்பின் சாறு போன்றினிக்கும் பாலைப்பண்ணினைப் பாடவல்ல நஞ்சக் கறையொடு விளங்கும் திருமிடற்றினையுடைய இறைவர், கடவுளாகிய தாமென்றும் உயிர்களாகிய நாமென்றும் இருதிறமாகப் பிரித்துரையாதபடி நம்முடன் பிரிவறக் கலந்திருப்பவராயினும் வருத்தமில்லாத தாம் தம்மைக் காதலித்து வருந்துபவளாகிய எளியேனைத் தனித்திருந்து வருந்தச் செய்து தாம் மட்டும் வேறாகப் பிரிந்து திருக்கழிப் பாலையெனும் திருத்தலத்தைச் சேர்ந்து இனிதமர்ந்து இருத்தல் முறையாதல் எவ்வாறு என்பது இதன் பொருள். மென்கழியென்றது மெல்லிய

கழையாகிய கரும்பினை, பாலை- பாலையென்னும் பெயருடைய பண். ஈண்டு கருப்பஞ்சாறு போன்று இனிக்கும் பாலைப் பண் என்றது இறைவன் பாடிய சாமவேதமாகிய இன்னிசையினை. 'பாலையாழ்ப் பாட்டுகந்தான்' என ஆளுடைய பிள்ளையாரும், 'பாடினார் சாமவேதம்' என ஆளுடைய அரசரும் இவ்வின்னிசை யினைக் குறிப்பிடுதல் காணலாம். இறைவன் திருமிடறு பாலையாழாகிய இன்னிசையும் நஞ்சக்கறையும் பொருந்தி விளங்கும் இயல்பினை 'யாழ்கெழு மணிமிடற் றந்தணன்' எனவரும் அகநானூற்றுக் கடவுள் வாழ்த்தால் அறியலாம்.

பரண தேவராகிய நூலாசிரியர் தம் நெஞ்சத்திற்கு அறிவுறுத்துவதாக அமைந்தது,

**கரியார் தாஞ் சேருங் கலைமறிகைக் கொண்டே**
**கரியார் தாஞ் சேருங் கவாலி - கரியாகி**
**நின்ற கழிப்பாலை சேரும் பிரான்நாமம்**
**நின்ற கழிப்பாலை சேர்.**

எனவரும் திருப்பாட்டாகும். உள்ளத்தே வஞ்சனையுடையராகிய தாருகாவனத்து முனிவர்கள் தாமென்னும் அகந்தையினாற் புரிந்த அபிசார வேள்வியிலிருந்து தோன்றித் தன்பாற் சேர்ந்த கலைமான் கன்றினைத் தன் கையிலேந்திக் கரிய திருமேனியுடைய திருமால் தன்னொரு பாகத்திலே சேரப்பெற்று விளங்கும் கபாலியென்ற திருப்பெயரினை யுடையவனும் மகா சங்கார காலத்தே உலகப் பொருள்களெல்லாம் தீந்து கரியாகிய பெருஞ் சுடுகாட்டகத்தே சேர்ந்து ஆடல்புரியும் பெருமானும் ஆகிய இறைவன் புகழுடன் நிலைபெற எழுந்தருளிய திருக்கழிப் பாலையெனுந் திருப்பதியினை நெஞ்சமே இடைவிடாது நினைந்து போற்றுவாயாக என்பது இதன் பொருளாகும். இதன் கண் 'கரியாகி நின்ற கழிப்பாலை' யென்றது, மகாசங்கார காலத்தே எல்லாவுலகங்களும் வெந்து நீறாகிய பேரீமப் புறங்காட்டினை. இவ்வாறு இருபொருள்பட ஊர்ப் பெயர்களை எடுத்துரைத்துப் போற்றும் பாடல்கள் இத்திருவந்தாதியில் இன்னும் பலவுள்ளன.

**'செல்லுமளவுஞ் சிதையாமற் சிந்திமின்'**

எனவரும் இவ்வந்தாதியின் 70 - ஆம் பாடல் 'செல்லுமளவுஞ் செலுத்துமின் சிந்தையை' (2103) என்ற திருமந்திரப் பாடலை யடியொற்றியமைந்ததாகும். 'நானுடை மாடே யென்ஞானச் சுடர்விளக்கே' எனவும் 'ஆமாத்தூர் அம்மானே' எனவும் 'புகலூரரா புண்ணியனே' எனவும் 'மறைக்காடு சேரும் மணாளர்' என்வும் இறைவனைக் குறித்து இவ்வந்தாதியில் வழங்கப்பெற்ற தொடர்கள் 'நானுடை மாடெனவே நன்மைகொளும்பரனை' (சுந்தரர்) எனவும் 'ஞானச் சுடர் விளக்காய் நின்றான் தன்னை'

*(நாவுக்கரசர்) எனவும், 'ஆமாத்தூ ரம்மானைக் காணாத கண்ணெல்லாங் காணாத கண்களே' (திருஞானசம்பந்தர்) எனவும்,*

**'பூம்புகலூர் மேவிய புண்ணியனே'**

**'மறைக் காட்டுறையும் மணாளன்றானே'**

*(திருநாவுக்கரசர்) எனவும் வரும் தேவாரத் திருப்பதிகங்களின் தொடர் மொழிகளை நினைவுறுத்துவனவாக அமைந்துள்ளன. இவ்வந்தாதியில்,*

**ஆய்ந்துன்றன் பாதம் அடைய வருமென்மேல்**
**ஆய்ந்தென்றன் பாச மலமறுத் தாய்ந்துன்றன்**
**பாலணையச் செய்த பரமா பரமேட்டி**
**பாலணையச் செய்தாய் பரம்.**

*எனவரும் அறுபதாம் பாடல்,*

**'பல்லோருங்காண என்றன் பசுபாச மறுத்தானை'**

*எனவும்,*

**'வாங்கி வினைமலமறுத்து வான்கருணை தந்தானை'**

*எனவும் வரும் திருவாசகத் தொடர்ப்பொருளை விரித்துரைக்கும் நிலையில் அமைந்திருத்தல் காணலாம்.*

*இனி, கடைச் சங்கப் புலவராகிய பரணரும் பதினொராந் திருமுறையாசிரியராகிய இப் பரண தேவ நாயனாரும் ஒருவரேயெனக் கருதுவாருமுளர். மேலெடுத்துக் காட்டிய குறிப்புக்களால் திருமூலர், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பியாரூரர், திருவாதவூரடிகள் ஆகிய பெருமக்களுக்குக் காலத்தாற் பிற்பட்டவர் பதினொராந் திருமுறையாசிரியராகிய பரணதேவ நாயனாரென்பது இனிது புலனாதலானும், இவர் பாடிய சிவபெருமான் திருவந்தாதியில் வடசொற்களும் பிற்காலச் சொல்வழக்குகளும் காணப்படுதலானும் இவர் சங்கப் புலவராகிய பரணரல்லரென்றும் அவர் பெயர்தாங்கிக் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த சிவநெறிச்செல்வரென்றும் கொள்ளுதலே ஏற்புடையதாகும்.*

## 9. இளம்பெருமானடிகள்

*பதினொராந் திருமுறையாசிரியர்களுள் இளம் பெருமானடிகளும் ஒருவராவர். இவர் பாடிய பனுவல் சிவபெருமான் திருமும்மணிக்கோவையென்பதாகும். பெருமானடிகள் என்பது இறைவனைக் குறித்து வழங்கும் பெயராகும். 'வரியமறையார்'' என்னும் முதற் குறிப்புடைய*

திருக்கடவூர்த் தேவாரத் திருப்பதிகத்திற் பாடல்தோறும் 'அவரெம்பெருமானடிகளே' எனத் திருஞானசம்பந்தப் பிள்ளையார் சிவபெருமானைப் போற்றியுள்ளார். என்றும் இளமைகுன்றா இறைவனாகச் சிவபெருமான் பெற்றருளிய முருகப் பெருமானை இளம்பூரணன் என்ற திருப்பெயராற் சான்றோர் போற்றிப் பரவக் காண்கின்றோம். இளமை குன்றா இறைவன் என்ற இப்பொருளிலேயே இளம் பெருமானடிகள் என்ற பெயரும் முருகக் கடவுளுக்கு வழங்கப் பெற்றிருத்தல் கூடும். கடவுட் பெயரை மக்களுக்கு இட்டழைக்கும் வழக்கப்படி இளம் பெருமானடிகள் என்ற பெயர் பெற்றோரரால் இவ்வாசிரியர்க்கு இடப்பட்டதெனக் கொள்ளுதல் பொருந்தும். இனி, பெருமானடிகள் என்னும் பெயருடையார் இருவராக அவர்களுள் இவர் இளையவர் என்பது தோன்ற இளம் பெருமானடிகள் என இவ்வாசிரியர் அழைக்கப் பெற்றாரெனக் கருதுதற்கும் இடமுண்டு. இவ்வாசிரியர் பிறந்த நாடு, ஊர், குலம் முதலியன இவையெனத் தெரிந்து கொள்ளுதற்குரிய சான்றுகள் கிடைக்கவில்லை. இவர் பாடிய திருமும்மணிக்கோவை திருவெண்காட்டடிகள் அதிராவடிகள் ஆகிய பெருமக்கள் பனுவல்களுக்கு முன்னே தொகுக்கப்பெற்றிருத்தலால் இவர் வாழ்ந்த காலம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியும் பத்தாம் நூற்றாண்டின் தொடக்கமுமாமெனக் கூறுதல் பொருந்தும்.

அகவல், வெண்பா, கட்டளைக்கலித் துறையாகிய மும்மணிகளால் இயன்றதாய்ச் சிவபெருமானுக்கு அணியும் அழகிய மணிவடமாகத் திகழ்வதாகலின் இவர் பாடிய பனுவல் திருமும்மணிக்கோவையென்னும் பெயர்த்தாயிற்று. இந்நூல் முப்பது பாடல்களையுடையது. பதினொராந்திருமுறையில் இருபத்துநான்காம் பிரபந்தமாக வரிசைப்படுத்தப் பெற்றுள்ளது. இதன்கண்ணுள்ள பாடல்கள் யாவும் சொற்செறிவும் பொருட் செறிவுமுடையனவாய்த் திகழ்கின்றன. நிரம்பிய இலக்கியப் பயிற்சியுடையார்க்கே இப்பாடல்களின் பொருள் இனிது விளங்கும். இறைவனை முன்னிலைப்படுத்தி உரையாடி மகிழும் நிலையிற் பாடிய பாடல்களும் இறைவனைக் கண்டு காமுற்ற தலைவியினது துயர்கிளந்துரைக்கும் அகத்துறைப் பாடல்களும் இம்மும்மணிக் கோவையில் இடம்பெற்றுள்ளன.

படைத்தலாகிய முதற்றொழிலையுடைய நான்முகன் இயற்றிய கொடுங்கையொடு திகழும் மாடம் போல்வதாகிய இந்நிலப்பரப்பிலே நிறுவிய தெய்வத்தன்மை வாய்ந்த தகழியினுள்ளிடத்தே செந்நிற மேகம் பொழிந்த மழை வெள்ளமெனத்தக்க பேரளவிற்றாகிய நெய்யினை நிரப்பித் தேவருலகளவும் ஓங்கியொளிர ஏற்றியதும், முத்தின்

குளிர்ச்சியையுடையதாய்த் திகழ்வதும், பெருமலைகளைப் பெயர்த்தெறிவதாகிய கடுங்காற்று வீசினும் சிறிதும் நடுக்கமுறாது சுடர்விட்டொளிர்வதுமாகிய பேரொளி விளக்கினைப் போன்று* (*'சுடர்விட்டுளன் எங்கள் சோதி' என ஆளுடைய பிள்ளையாரும், 'சுடர்க்கொழுந்தைத் துளக்கிலா விளக்கை' என ஆளுடைய அரசும் இறைவனைச் சுடர் விளக்காகப் போற்றிய தொடர்கள் இவண் ஒப்புநோக்கத் தக்கனவாம்) அண்டத்தின் புறத்திலும் அன்பருள்ளத்திலும் நிலைபெற்றுத் தோன்றும் ஆதிமுதல்வனாகிய நினது திருவடி நிழல், உடல்தேய்ந்து நின்னைத் தஞ்சம் புகுந்த திங்கட்செல்வனை அளிக்கத் தக்கன அல்லவோ? அங்ஙனமாகவும் ஒளிதிகழும் வெள்ளிய சங்கினைப் போலும் வெண்ணிற மலர்களின் நிறத்தையுடையதாய் நிலவொளியைப் பரப்பிய திங்கட் கண்ணியை நின்திருமுடிமேல் அணிந்தது எக்காரணத்தால்? எனச் சிவபெருமானை நோக்கி வினவும் நிலையில் அமைந்தது,

**முதல்வன் வகுத்த மதலை மாடத்**
**திடவரை யூன்றிய கடவுட் பாண்டிற்**
**புத்தேள் நிவந்த முத்த மாச்சுடர்**
**எறிவளி யெடுப்பினுஞ் சிறுநடுக் குறாநின்**
**அடிநிழல் அளியவோ வைத்த முடிமிசை**
**இலங்குவனைத் தனிப் போது விரித்த**
**அலங்குகதி ரொலியல் நீ அணிந்த தென்மாறே.**

எனவரும் இத்திரு மும்மணிக் கோவையின் முதற்பாடலாகும். "எம்பெருமானாகிய நீ நின்னைச் சரணடைந்தார்க்கு நின் திருவடி நிழல் தந்து அருள் புரிதலே முறையாகவும் நின்னைத் தஞ்சம் புகுந்த வெண்மதிக்கு திருவடி நிழல் அருளாது அம்மதியை நின் முடிமிசை வைத்தது எது கருதி" என இளம் பெருமானடிகள் சிவபெருமானை நோக்கி வினவிய வினா, "தேய் மதியனாகிய சந்திரன் தன் திருவடியால் முன்னொரு காலத்தில் தேய்க்கப்பட்டு வருந்தியவனாதலின் தன் திருவடி அவனுக்கு மேலும் அச்சத்தைத் தரும் என்ற அருட் குறிப்பின் காரணமாகவே சிவபெருமான் சந்திரனைத் தன் முடிமிசை வைத்தருளினன் என்ற குறிப்பினை இனிது புலப்படுத்தல் காண்க.

சிவபெருமானது தாழ்சடை குளிர்ந்த கங்கை நீரைத் தன்பாற் கொண்டிருந்தும் நெருப்புப் போலும் செந்நிற முடையதா யொளிர்தலும், அப்பெருமானது கண்டம் ஆலகால நஞ்சினைத் தன்பால் அடக்கியிருந்தும் வானோரமிழ்தினை யொத்துக் கண்டோரது பிணி நீக்கிச் சாவா மூவாப் பெருவாழ்வு தந்து திகழ்தலும், அவ்விறைவனது திருவடிவம் சுடர் விட்டெரியுந்

*தீயை யொத்த தோற்றமுடையதாயிருந்தும் தளிரினுந் தண்மையுடையநாய்க் கண்டோர் கண்களுக்குக் குளிர்ச்சி தந்து விளங்குதலும், இறைவனுடைய திருவடி கூற்றுவனைச் சினந்துதைத்த பெருவன்மையுடையதாயினும் செந்தாமரை மலரையும் கீழ்ப்படுக்கும் மென்மையும் வனப்புமுடையதாய் மிளிர்தலும் என இங்ஙனம் ஒன்றோடொன் றொவ்வா இயல்பினவாதலை யெண்ணி யுளமுருகிய இளம் பெருமானடிகள், சூலப்படையானாகிய இறைவனை நோக்கி, 'நின் திருவுருவின் இயல்புளை இனையவென்றறியும் திறனுடையோ மல்லோம்' என்று கூறிப் போற்றுவதாக அமைந்தது,*

**'சடையே, நீரகந்ததும்பி நெருப்புக் கலிக்குமே**
**மிடறே, நஞ்சகந் துவன்றி அமிர்து பிலிற்றுமே**
**வடிவே, முளியெரிகவைஇத் தளிர்தயங்குமே**
**அடியே மடங்கல் மதஞ்சீறி மலர்பழிக் கும்மே**
**அஃதான், றினையவென் றறிகிலம் யாமே முனைதவத்**
**தலை மூன்று வகுத்த தனித்தாட்**
**கொலையூன்று குடுமி நெடுவே லோயே**

*என்ற பாடலாகும்.*

*"மாதொரு பாகனாகிய பெருமானே, கடல் முகடும் விசும்பும் ஒன்றாய்க் கலந்த ஊழிக் காலப் பெருவெள்ளத்தில் உலகெலாம் மறைய நீ ஒருவனே தனித்து நின்றனையென்பர். அத்தகைய வெள்ளப் பெருக்கினை இப்பொழுது எங்கே மறைத்து வைத்துள்ளாய்? அதனை எங்களுக்குச் சிறிது சொல்வாயாக" என இறைவனை நோக்கி வினவுவதாக அமைந்தது,*

**வேலை முகடும் விசும்பகடுங் கைகலந்த**
**காலைநீர் எங்கே கரந்தனையால் - மாலைப்**
**பிறைக்கீறா கண்ணுதலா பெண்பாகா ஐயா**
**இறைக் கூறாய் எங்கட்கிது.**

*என்ற பாடலாகும். இதனை வீரசோழியவுரையாசிரியர் தமது உரையில் மேற்கோளாக எடுத்தாண்டுள்ளார்.*

*புலியினது தோலை உடையாக உடுத்த சிவபெருமானது திருக்கோலத் தோற்றத்தை யெண்ணிய இவ்வாசிரியர், "செஞ்சடைத் தீ வண்ணரே, இமயத் தரசியாகிய உமையம்மையாரை நீவிர் திருமணக் காலத்திலும் நுமக்குரிய திருமணவுடையாகத் திகழ்ந்தது இப்புலித்தோல் தானோ?" என இறைவனை நோக்கி வினவும் நிலையில்,*

**இதுநீர் ஒழிமின் இடைதந் துமைஇமை யத்தரசி**
**புதுநீர் மனத்தும் புலியதளேயுடை பொங்குகங்கை**
**முதுநீர் கொழித்த இளமணல் முன்றில்மென் றோட்டதிங்கட்**
**செதுநீர் ததும்பத் திவளஞ்செய் செஞ்சடைத் தீவண்ணரே.**

*என்ற பாடலைப் பாடியுள்ளார். இச்செய்யுள்,*

**கடும்பகல் நட்ட மாடிக் கையிலோர் கபாலமேந்தி**
**இடும்பலிக் கில்லந் தோறும் உழிதரும் இறைவனீரே**
**நெடும் பொறைமலையர் பாவை நேரிழை நெறிமென் கூந்தற்**
**கொடுங்குழை புகுந்த அன்றுங் கோவணம் அரையதேயோ.**

*எனவரும் திருநாவுக்கரசர் திருப்பாடற் பொருளை அடியொற்றி யமைந்ததாகும். இவ்வாறே இத்திருமும்மணிக் கோவையில்,*

**இவளப் பனிமால் இமையத் தணங்குகற் றைச்சடைமேல்**
**அவளப்புத் தேளிர் உலகிற்கரசி அதுகொண்டென்னை**
**எவளுக்கு நீ நல்ல தியாரைமுன் னெய்திற்றெற் றேயிதுகாண்**
**தவளப் பொடிச் செக்கர் மேனிமுக் கண்ணுடைச் சங்கரனே,**

*எனவரும் பாடலும்,*

**ஒருத்திதன் தலைச்சென் றாளைக் கரந்திட்டான் உலக மேத்த**
**ஒருத்திக்கு நல்லானாகி மறுப்படுத் தொளித்து மீண்டே**
**ஒருத்தியைப் பாகம் வைத்தான் உணர்வினால் ஐயமுண்ணி**
**ஒருத்திக்கு நல்லனல்லன் ஒற்றியூருடைய கோவே.**

*என்ற திருநேரிசைப் பாடற்பொருளைப் பின்பற்றியமைந்திருத்தல் காணலாம்.*

*சிவவழிபாடு இத்தமிழகத்துத் தோன்றி நிலைபெற்ற தெய்வ வழிபாடுகளெல்லா வற்றோடும் நெருங்கிய தொடர்பு உடையதாய்த் தமிழரனைவர்க்கும் பொதுவாகிய வழிபாடு என்பதனை,*

**'வேந்துக்க மாக்கடற் சூரன்முன்னாள்பட வென்றிதந்த**
**சேந்தற்குத்தாதை, இவ்வையமளந் தெய்வத்திகிரி**
**ஏந்தற்கு மைத்துனத் தோழன், இன்றேன் மொழிவள்ளி யென்னுங்**
**கூந்தற் கொடிச்சிதன் மாமன்வெம்மால்விடைக் கொற்றவனே'**
*எனவும்,*

**'கொற்றத் துப்பின் ஒற்றை யீன்ற**
**துணங்கையஞ் செல்வத் தணங்குதரு முதுகாட்டுப்**
**பேய்முதிர் ஆயத்துப் பிணவின் கொழுந'**

*எனவும் வரும் பாடற்றொடர்களால் இவ்வாசிரியர் சுவைபெற விளக்கிய திறம் உளங்கொளத்தக்கதாகும்.*

இனி, இளம்பெருமானடிகள் என்பார் சிலப்பதிகார ஆசிரியராகிய இளங்கோவடிகளாக இருத்தல் கூடுமோ என ஐயுறுவாருமுளர். * (* தமிழ்ப் பொழில் 17 - ஆம் துணர் பக்கம் 72. 'ஒரு திருவருட்பா உரை' யென்ற கட்டுரை நோக்குக.) கடைச் சங்க காலத்திலில்லாத கட்டளைக்கலித்துறை யாப்பும் விநாயகர் வழிபாடும் இவர் பாடிய திருமும்மணிக் கோவையில் இடம் பெற்றிருத்தலாலும் கி. பி. ஒன்பது, பத்தாம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த ஆசிரியர்கள் பாடிய பிரபந்தங்களுக்கிடையே இவர் பாடிய மும்மணிக்கோவை முறைப்படுத்தப் பட்டிருப்பதாலும் இதனைப்பாடிய இளம்பெருமானடிகள் இளங்கோவடிகள் அல்லர் என்பதும் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டினிறுதியும் பத்தாம் நூற்றாண்டின் தொடக்கமுமாகிய காலப்பகுதியில் வாழ்ந்த திருவருட்செல்வர் இளம்பெருமானடிகள் என்பதும் நன்கு தெளியப்படும்.

## 10. அதிராவடிகள்

பதினொராந் திருமுறையில் இருபத்தைந்தாம் பனுவலாகத் தொகுக்கப்பெற்றுள்ள மூத்தபிள்ளையார் திருமும்மணிக் கோவையைப் பாடியவர் அதிராவடிகளாவர். கல்விகேள்விகளில் வல்லவராகிய இவ்வாசிரியர் தனக்குவமை இல்லாதவனாகிய இறைவன் திருவடிகளை இடைவிடாது நினைத்து மனக்கவலை மாற்றியவராதலின் வினைத் துன்பங்களைக் கண்டு துளங்காத சிந்தையுடைய இவரை அதிராவடிகள் என்ற பெயரால் ஆன்றோர் குறித்துப் போற்றுவார் ஆயினர். அதிர்ச்சி - நடுக்கம். அதிரா அடிகள் - துளக்க மில்லாத சிந்தையினராகிய பெரியார். எதிர்காலத்தில் வரக்கடவதாகிய இடையூற்றினை முன்னரே அறிந்து தடுக்கவல்ல நல்ல அறிவினையுடையார்க்கு அவர் நடுங்கும்படி வருவதொரு துன்பமும் இல்லையென்பார்.

**'எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை**
**அதிர வருவதோர் நோய்'**

என்றார் திருவள்ளுவர். தெய்வப்புலவர் அருளிய இப்பொய்யாமொழியின் வண்ணம் இடையூறு நீக்குவோராகிய மூத்தபிள்ளையாரைப் பணிந்து பின்வரக்கடவதுன்பங்களை முன்னறிந்து காக்கும் நிலையில் அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறை யென்னும் மும்மணிகளால் இயன்ற மும்மணிக் கோவை யென்னும் பாமாலையை மூத்த பிள்ளையார்க்கு அணிந்த இப்புலவர் பெருமானை அதிராவடிகளென அழைத்தமை பெரிதும் பொருத்தமுடையதேயாம். இவ்வாசிரியர் பிறந்த ஊர் குலம் முதலியன இவை எனத் தெரிந்து கொள்ள இயலவில்லை. இவ்வாசிரியர் வாழ்ந்த காலம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியும் பத்தாம் நூற்றாண்டின் தொடக்கமுமாமெனக் கொள்ளுதல் ஏற்புடையதாகும்.

மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை முப்பது பாடல்களால் இயன்றுளது. இந்நூலின் ஏடுகள் சிதைவு உற்றமையால் இதன்கண் 24 முதல் 30 வரையுள்ள பாடல்கள் ஏழும் கிடைக்கவில்லை. கிடைத்த பாடல்களிலும் சில தொடர்கள் பொருள்விளங்கா நிலையிற் சிதைந்துள்ளன.

காமனைக் காய்ந்த கடவுளாகிய சிவபெருமான் பெற்றருளிய புதல்வர் யானை முகக் கடவுளாகிய மூத்த பிள்ளையாராவர். அவருடைய திருவடித்துணையின்றி உயிர்கட்கு வேறு துணையில்லை. தன்னை அன்பினால் வழிபடும் மெய்யடியார் களின் பிறவிப்பிணியைப் போக்கவல்லார் அவர். அவருடைய திருவடியைச் சிந்தித்து வாழ்வார்க்கு மனக்கவலை யில்லை. யாம் மூத்தபிள்ளையாருடைய திருவடியை இறுகப்பற்றினோமாதலால் மனக்கவலையால் மதிமயங்கும் இயல்புடையேமல்லேம் என அதிராவடிகள் இத் திருமும்மணிக்கோவையிற் கூறுங்கருத்துக்கள் மூத்தபிள்ளையார் வழிபாட்டினால் மக்கள் அடைதற்குரிய பெருநலங்களை அறிவுறுத்துவனவாகும்.

மூத்தபிள்ளையார் இருகைகளையுஞ் சேர்த்துத் தட்டிச் சப்பாணி கொட்டுதலும், திருமுகம் அசையச் செங்கீரை யாடுதலும் ஆகிய பிள்ளை விளையாட்டினை மேற்கொண்டு உலக வுயிர்களுக்கு இன்பஞ்செய்யும் திறத்தை,

**நிலந்துளங்க மேருத் துளங்க நெடுவான்**
**தலந்துளங்கச் சப்பாணிகொட்டும் - கலந்துளங்கொள்**
**காமாரி யீன்ற கருங்கைக் கடதடத்து**
**மாமாரி யீன்ற மணி.**

எனவும்,

**இக்கயங்கொள் மூவலயஞ் சூழேழ் தடவரைகள்**
**திக்கயங்கள் பேர்ந்தாடச் செங்கீரை - புக்கியங்கு**
**தேனாட வண்டாடச் செங்கீரை யாடின்றே**
**வானாடன் பெற்ற வரை.**

எனவும் வரும் பாடல்களால் அதிராவடிகள் சுவை பெற விரித்துரைத்துள்ளார். செங்கீரையாடுதலும் சப்பாணி கொட்டு தலுமாகிய பிள்ளைத் தமிழுறுப்புக்களை இத்திரு மும்மணிக் கோவையில் ஆசிரியர் குறிப்பிட்டுப் போற்றுதலால் இவர் வாழ்ந்த காலமாகிய கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதி யிலேயே செந்தமிழ் மொழியின் சிறப்புடையப் பனுவலாகிய பிள்ளைத்தமிழ்ப் பிரபந்தம் இயற்றப்பெற்று வழங்கியிருத்தல் வேண்டுமென்பது நன்கு துணியப்படும்.

வேத முதல்வனாகிய பிரமனைக் கொன்ற பழியுடையோனுக்குப் புதல்வனாகப் பிறந்ததும் அன்றித் தானே நூலியற்றும் ஆற்றலின்றிப் பரதவர் மகள் புதல்வனாகிய இழிந்தோனொருவன் சொல்லிய கதையினை மேருமலையிற் கைவருந்த எழுதிய யானைமுகக் கடவுளை யாம் பெரிதும் போற்றுவது எது கருதி? எனப் பழித்துரைப்பது போன்றமைந்தது,

**மின்னெடுங் கொண்ட லந்நெடு முழக்கத்**
**தோவற விளங்கிய துளைக்கைக் கடவுளை**
**யாமிக வழுத்துவ தெவனோ அவனேற்**
**பிறந்ததிவ் வுலகின்பெருமூ தாதை**
**உரந்தரு சிரமரிந் தவற்கே, வரைந்தது**
**மேருச் சிமையத்து மீமிசை**
**வாரிச் செல்வன் மகள் மகன் மொழியே.**

என்ற பாடலாகும். படைத்தற் கடவுளாகிய நான்முகனைச் சினந்த பேராற்றல் மிக்க முழுமுதற் கடவுளின் திருமகனாராகத் தோன்றியவர் மூத்த பிள்ளையாரென்றும், வேதப் பொருளாய் விளங்கும் விநாயகப் பெருமான் தன்னை வழிபடும் மெய்யடியாராகிய வியாச முனிவர்க்கு எளிவந்து தோன்றி அவர் சொல்லிய மாபாரதக் கதையினை மேரு மலையில் எழுதியருளினாரென்றும் அக்கடவுளது அருமையிலெளிய அழகினை இத்திருப் பாடலில் அதிராவடிகள் போற்றிப் புகழ்ந்துள்ளமை காணலாம். இதன்கண் பழிப்பது போலப் புகழ்தல் என்னும் அணிநலம் அமைந்திருத்தல் காண்க. ஈண்டு 'வாரிச்செல்வன் மகள்' என்றது கடலில் மீன்பிடிக்குந் தொழிலுடைய பரதவனுக்கு மகளாகிய மச்சகந்தியை. பராசுர முனிவர் அவளைக் கூடிய நிலையிற் பிறந்த புதல்வர் வியாச முனிவராதலின் அவரை 'வாரிச் செல்வன் மகள் மகன்' என்றார் ஆசிரியர்.

சிந்தையும், மொழியும் செல்லாத நிலையில் அப்பாற் பட்டுத் திகழ்தலும், ஞாயிறு, திங்கள் தீயென்பவற்றைக் கண்களாகக் கொண்டு உலகத்திற்கு விளக்கந் தருதலும், கல்லால் நீழலில் முனிவர் நால்வர்க்கு அறமுதலாகிய அருமறைப் பொருளைத் தெளிய அறிவுறுத்தலும் ஆகிய சிவபெருமானுக்குரிய இயல்புகளை அவர் பெற்றருளிய மூத்த பிள்ளையார்க்கு இயைத்துரைப்பதாக அமைந்தது,

**மொழியின் மறைமுதலே முந்நயனத் தேறே**
**கழிய வருபொருளே கண்ணே - தெழிய**
**கலாலயனே எங்கள் கணபதியே நின்னை**
**அலாதையனே சூழாதென் அன்பு.**

என்ற பாடலாகும். சிவபெருமானும் அவர் பெற்றருளிய மூத்த பிள்ளையாரும் பொருளால் ஒருவராதலேயன்றிப் பண்பு உறுப்பு செயல் என்பவற்றாலும் ஒருவராயுள்ள இயைபினை இத் திருப்பாடல் அறிவுறுத்தல் காணலாம். இவ்வாறே இம்மும் மணிக்கோவையின் பத்தாம் பாடலும் 'மஞ்சேறு கயிலை மலைகிழவோயே' என விநாயகப் பெருமானைக் கயிலை மலையில் வீற்றிருக்கும் கடவுளாகப் போற்றி அழைக்கின்றது. இக் குறிப்புக்களை ஊன்றி நோக்குங்கால் சிவபெருமானும் மூத்த பிள்ளையாரும் ஒரு பரம்பொருளே யென்றவுண்மையை யுணர்ந்து வழிபட்ட திருவருட்செல்வர் அதிராவடிகளென்பது நன்கு விளங்கும்.

சிவபெருமான் தன் கையிலுள்ளதோர் மாங்கனியை மூவுலகங்களையும் விரைவிற் சுற்றி வருவார்க்குத் தருவதாகக் கூறினாரென்றும், அதனைக் கேட்ட முருகப் பெருமான் மயில் மீதமர்ந்து, மூவுலகங்களையும் விரைவிற் சுற்றிவரச் சென்றனரென்றும், அந்நிலையில் விநாயகப் பெருமான் எல்லா வுலகமுமாய் விளங்கும் தம் தந்தையாகிய சிவபெருமானை வலம் வந்து அம் மாங்கனியை எளிதிற் பெற்றனரென்றும் வழங்கும் புராணக் கதையினை,

**சுடர்ப்பிழம்பு தழைத்த அழற்றனி நெடுவேற்**
**சேய்மூ வுலகம் வலம்வர ஏய**
**கொன்றையும் படலந் துன்று சடைக் கிடந்த**
**ஓங்கிருந்தாதையை வளாஅய் மாங்கனி**
**அள்ளற் றீஞ்சுவை யருந்திய**
**வள்ளற் கிங்கென் மனங்கனிந்திடுமே.**

எனவரும் பாடலில் இந்நூலாசிரியர் குறிப்பிட்டுப் போற்றி யுள்ளார். இறைவன் திரிபுரத்தை அழிக்கச் சென்ற பொழுது விநாயகப் பெருமான் துணைபுரிந்த செய்தி இம் மும்மணிக்கோவையின் ஒன்பதாம் பாடலிற் குறிக்கப் பெற்றுளது. விநாயகப் பெருமானது திருமேனியின் தோற்றத்தைக் குறித்து இவ்வாசிரியர் புனைந்துரைப்பன கற்போர்க்குப் பெரிதும் சுவை பயப்பனவாம்.

## 11. திருவெண்காட்டடிகள்

திருவெண்காட்டடிகளென்பார் பதினொராந் திருமுறை ஆசிரியர்களுள் ஒருவராவர். இவர் சோழ நாட்டின் கடற்றுறைப்பட்டினமாகிய காவிரிப்பூம்பட்டினத்திற் பிறந்தமையாற் பட்டினத்துப் பிள்ளையாரெனவும் வழங்கப் பெறுவர். இவர்க்குப் பெற்றோர் இட்ட பெயர் திருவெண்காடர்

என்பது. செல்வக் குடும்பத்திற் பிறந்து மனைத்தக்க மாண்புடைய மங்கையை மணந்து மனைவாழ்க்கை நடத்திய இப்பெரியார், பிறவிநோய்க்குக் காரணமாகிய அவாவை அறவே நீத்துத் துறவறத்தை மேற்கொண்டமையால் திருவெண்காட்டடிக ளெனவும் பட்டினத்தடிகளெனவும் அடிகள் என்ற சொல்லாற் போற்றப் பெறுவாராயினர். அடிகள் என்ற இச்சொல் துறவறநெறியில் நின்றார்க்கே சிறப்பாக வுரியதென்பது, "குணவாயிற் கோட்டத்து அரசு துறந்திருந்த, குடக்கோச் சேரல் இளங்கோவடிகட்கு" எனவரும் சிலப்பதிகாரப் பதிகத் தொடராலும் "அடிகள் என்றது துறத்தலான்" என அடியார்க்கு நல்லார் எழுதிய விளக்கவுரையாலும் நன்கு தெளியப்படும்.

பதினொராந் திருமுறையுள் திருவெண்காட்டடிகள் இயற்றினவாகக் கோயில் நான்மணிமாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபா ஒருபது என ஐந்து பிரபந்தங்கள் சேர்க்கப் பெற்றுள்ளன. இப்பனுவல்கள் யாவும் சொற்செறிவும் பொருட்பொலிவு முடையனவாய்க் கற்பார்க்கு நவிலுந்தோறும் சுவை பயப்பனவாக வுள்ளன. இப்பிரபந்தங்களை அன்றி அடிகள் பாடியனவாக வேறுபல தனிப்பாடல்கள் பட்டினத்துப் பிள்ளையார் பாடற்றிரட்டு என்ற பெயருடன் வழங்குகின்றன. பதினொராந் திருமுறையில் திருவெண்காட்டடிகள் பாடிய பிரபந்தங்களும் மேற்குறித்த பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடற்றிரட்டி லுள்ள பாடல்களும் சொல்நடை பொருளமைதி என்பவற்றாற் பெரிதும் மாறுபட்டுள்ளன. பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடற்றிரட்டில் ஏகரித்து, ஒப்பாரி, ஒய்யாரம், கலங்கிறண்டா, சவ்வாது, சலவை, சொகுசு, தாவாரம், பல்லாக்கு, பொக்கசம், பொம்மலாட்டம், போச்சுதடி, மாய்கை, மாங்கிஷம், முழித்திருந்து, வங்கிஷம், வேட்டி, வேலை மினக்கிட்டு முதலிய பிற்காலச் சொற்களும் பிழைபட்ட சொல்லுருவங்களாகிய இழிசினர் வழக்குச் சொற்களும் இடம் பெற்றுள்ளன. பதினொராந் திருமுறையில் சேர்க்கப் பெற்றுள்ள திருவெண்காட்டடிகள் பிரபந்தங்கள் ஐந்தும் சங்கச்சான்றோர் மேற்கொண்ட தூய செந்தமிழ் நடையில் அமைந்துள்ளன. எனவே 'பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடற் றிரட்டு' என்ற பெயருடன் வழங்கும் பாடற் றொகுதி பதினொராந் திருமுறை யாசிரியருள் ஒருவராகிய திருவெண்காட்டடிகள் வாக்கல்ல என்பதும் இத்திருப்பாடற்றிரட்டிலுள்ள பாடல்களைப் பாடிய சான்றோர் திருவெண்காட்டடிகளுக்கு நெடுங்காலம் பிற்பட்டுத் தோன்றிய வேறொருவரென்பதும் நன்கு துணியப்படும்.

திருவெண்காட்டடிகளது உண்மை வரலாற்றினை அறிந்துகொள்ளுதற்குரிய சான்றுகள் கிடைக்கவில்லை. அடிகளது வரலாற்றை விரித்துரைக்கும் நோக்கத்துடன் பிற்காலத்தில் இயற்றப்பட்ட நூல் பட்டினத்துப்பிள்ளையார் புராணம் என்பது. பட்டினத்தடிகள் மரபினராய்த் தில்லையில் வாழ்ந்த வணிகர்களது வேண்டுகோளின்படி இப்புராணத்தைப் பாடியதாக இந்நூலாசிரியர் கூறுகின்றார். இவ்வாசிரியரது பெயர் தெரியவில்லை. பட்டினத்தடிகள் வரலாறுகளாகத் தம் காலத்தில் வழங்கிய செய்திகளை இவ்வாசிரியர் இப்புராணத்தில் தொகுத்துக் கூறியுள்ளார்.

காவிரிப்பூம்பட்டினத்தில் வணிகர் குடும்பத்திலே திருவெண்காடர் அவதரித்தார். அவர் வாணிகத்தாற் பெரும் பொருளீட்டிச் சிவனடியார்களை உபசரித்து வந்தார். திருவிடைமருதூரில் எழுந்தருளிய சிவபெருமான் தன்னை அன்பினால் வழிபாடு செய்யும் சிவசருமரது வறுமையைப் போக்கி அருள்புரியக் கருதி மருதவாணர் என்னும் பார்ப்பனப் பிரமசாரியாய் வந்து தன்னை விற்றுப் பொருள் பெறுக எனச் சிவசருமர்க்குக் கூறி அவருடன் காவிரிப் பூம்பட்டினத்தை அடைந்து திருவெண்காடரிடம் விலையாகக் கொடுக்கப் பெற்றுச் சிவசருமார்க்குப் பெரும் பொருளைத் தரும்படி செய்தருளினார். பொருளைப் பெற்று மகிழ்ந்த சிவசருமர் இடைமருதினை அடைந்து திருமணஞ் செய்து கொண்டு சிவபூசையினைத் தவறாது செய்து வந்தார்.

திருவெண்காடர் தம் புதல்வனெனப் பேரன்புடன் பேணிப் போற்ற வளர்ந்த மருதவாணர், வாணிகத் துறையில் வல்லவராய்ப் பெரும் பொருளீட்டித் தம் தந்தையை மகிழ்வித்தார். வணிகர் சிலருடன் கடல் கடந்து சென்று வணிகம் புரிந்து வரும் நாட்களில் மருதவாணர் தாம் ஈட்டிய பொருளைத் திருக்கோயிற்பணிக்கும் சிவனடியார்களுக்கும் செலவிட்டார். எஞ்சிய பொருளைக் கொண்டு எருமுட்டைகளை நிறைய வாங்கிக் கொண்டு உடன்வந்த வணிகருடன் ஊர்க்குத் திரும்பினார். வரும் வழியில் அவர்கள் ஏறிய கப்பல் திசைமாறிப் போயிற்று. உடன் வந்த வணிகர்கள் உணவு சமைத்தற்கு விறகின்றி மருதவாணர் கொணர்ந்த எரு முட்டைகளைக் கடனாகக் கேட்டுப் பெற்றனர். ஊர் சென்றவுடன் அவற்றுக்கு ஈடு தருவதாக உறுதிச் சீட்டும் எழுதிக்கொடுத்தார்கள். சில நாளில் அவர்களெல்லோரும் காவிரிப்பூம்பட்டினத்தை அடைந்தார்கள். மருதவாணர் தாம் கொணர்ந்த எருமுட்டைகளை இல்லத்திற் கொண்டு சேர்த்தார். அவருடன் வந்த வணிகர் சிலர் திருவெண்காடரை யடைந்து மருதவாணர் வீணே பொருளைச் செலவிட்டுப் பித்தரானார்

எனத் தெரிவித்தார்கள். மருதவாணர் கொணர்ந்த வரட்டிகளுள் ஒன்றைத் திருவெண்காடர் சோதித்த பொழுது அதனுள்ளே மாணிக்க மணியிருத்தலைக் கண்டு வியந்தார். அஃதுணர்ந்த வணிகர்கள் தாம் கடனாகப் பெற்ற எருமுட்டைகளின் விலை மதிப்பினையெண்ணிக் கவலையுற்றார்கள். அவர்கள் சென்றபின் திருவெண்காடர் எல்லா வரட்டிகளையும் சோதித்துப் பார்த்தார். அவற்றுளொன்றிலேனும் மாணிக்க மணிகளில்லாமை தெரிந்து வருத்தமுற்றார். இவ்வாறு பிழைபட நடந்த மருதவாணரைத் தண்டிக்குங் கருத்துடன் தனியறையினுள்ளே பூட்டி வைக்கச் செய்தார், திருவெண்காடரது மனைவியார் தமது வளர்ப்புப் புதல்வராகிய மருதவாணரைக் காணச் சென்றார். சிவபெருமான் முருகவேள் நடுவாக உமையம்மையாருடன் எழுந்தருளிய திருக்கோலத்தைக் கண்டு மகிழ்ந்து அவ்வியப்புடைய செய்தியைத் தம் கணவர்க்கும் தெரிவித்தார். அவ்வருட்காட்சியைக் கண்ட திருவெண்காடர், அவ்வறையைத் திறந்து பார்த்தபொழுது மருதவாணர் மட்டும் தனித்திருத்தலைக் கண்டார். தாம் செய்த பிழையினைப் பொறுத்தருளும்படி மருதவாணரைப் பணிந்து வேண்டினார். மருதவாணர் மெய்ந்நூற்பொருளைத் திருவெண் காடர்க்கு உபதேசித்தார். எனினும் பெருஞ்செல்வராகிய திருவெண்காடர்க்கு உலகப் பற்றொழிய வில்லை. அப்பற்றினை யொழித்தற்கு மருதவாணர் ஓர் உபாயஞ் செய்தார். காதற்ற வூசியை இழை பிரித்த நூலுடன் பட்டுத்துணியில் மடித்துப் பெட்டியில் வைத்து அப்பெட்டியை அவர் மனைவியார் கையிற் கொடுத்து 'நுமது கணவர்க்குரிய பொருள் இதுவாகும். இதனை அவரிடம் கொடுப்பீராக' எனச் சொல்லி அவ்விடத்தை விட்டு அகன்று மறைந்தருளினார்.

திருவெண்காடர் தம் மனைவியார் தந்த பெட்டியைத் திறந்து பார்த்து அதனுள்ளே காதற்ற ஊசியும் நூற்சரடும் இருத்தல் கண்டு நெடிது நினைந்து இறைவனது திருக் குறிப்பை உணர்ந்து கொண்டார். நிலையில்லாத இவ்வுலக வாழ்வை நிலை யுடையதென எண்ணி மகிழ்தல் தவறென வுணர்ந்தார். யான் எனது என்னும் இருவகைப் பற்றுக்களையும் அறவே நீத்துத் துறவறமாகிய தூயநெறியினை மேற்கொண்டார். தமது மாளிகையைத் துறந்து ஊரம்பலத்தையடைந்தார். 'நீர் துறவடைந்து பெற்ற பயன் யாது' என அரசன் வினவியபொழுது 'நீ நிற்கவும் யாம் இருக்கவும் பெற்ற தன்மையே அது' என மறுமொழி பகர்ந்து மோன நிலையில் அமர்ந்திருந்தார்.

அடிகள் பலர் வீடுகளிலும் பிச்சையேற்றலைக் கண்டு வெறுப்புற்ற உறவினர் சிலர் அவரது தமக்கையாரைக் கொண்டு நஞ்சு கலந்த அப்பமொன்றை அடிகளுக்குக் கொடுக்கச் செய்தனர். அதனையுணர்ந்த அடிகள் 'தன்வினை தன்னைச் சுடும் ஓட்டப்பம்

வீட்டைச் சுடும்' என்று சொல்லி அதனை வீட்டின் இறப்பிற் செருகினார். வீடு தீப் பற்றியெரிந்தது. அடிகள் சில நாள் அங்கமர்ந்திருந்து தம் தாயார் இறந்தபொழுது சில பாடல்கள் பாடி அவருடல் வெந்து நீறாகும்படி செய்தார். இவ்வாறு தாயார்க்கு ஈமக்கடனை முடித்த அடிகள், திருவெண் காட்டீசரைப் பணிந்து திருவிடைமருதூரையடைந்து மருதப்பிரானை வழிபட்டிருந்தார். ஒருநாள் நீர் வேட்கையால் வருந்திய பொழுது இடை மருதீசனே தண்ணீர் கொணர்ந்து தரப் பருகி மகிழ்ந்தார். பின்பு திருவாரூர் முதலிய தலங்களை வணங்கிப் பல அற்புதங்களை நிகழ்த்தித் திருவெண்காட்டில் தங்கியிருந்தார். தம் தலைமைக் கணக்கராகிய சேந்தனாரை அரசன் சிறைப்படுத்தின செய்தியை அவர் புதல்வன் சொல்லக் கேள்வியுற்ற அடிகள், 'மத்தளை தயிருண்டானும்' என்ற பாடலைப் பாடினார். அப்பொழுதே சிவகணங்கள் சேந்தனாரைச் சிறையினின்றும் மீட்டு அடிகள் திருமுன்னர்க் கொணர்ந்து நிறுத்தின. சேந்தனாரும் அடிகளைப் பணிந்து பிறவிச் சிறையிலிருந்து உய்தற்குரிய நெறிமுறைகளை உணர்ந்து மகிழ்ந்தார். பின்பு திருவெண்காட்டடிகள் சீகாழிப்பதியை யடைந்து தோணியப்பரைப் பாடிப் போற்றினார். தில்லைக்குச் சென்று பொன்னம்பல வாணனை யிறைஞ்சிக் கோயில் நான்மணிமாலை பாடினார். அங்கு அடிகள் பசியால் வருந்தியபோது சிவகாமியம்மையே உணவளித்துப் பசிதீர்த்தருளினார். பின்பு பல தலங்களைப் பரவிப் போற்றிக் காஞ்சியையடைந்து திருவேகம்பவாணரைத் தரிசித்துத் திருவேகம்பர் திருவந்தாதி பாடினார். திருவொற்றியூரையடைந்து ஒருபா ஒருபது என்னும் பிரபந்தத்தைப் பாடி இறைவனைப் போற்றி மகிழ்ந்தார்.

இவ்வாறு திருவெண்காட்டடிகள் திருவொற்றியூரில் தங்கியிருக்கும் நாட்களில் ஒரு நாள் கடற்கரையையடைந்து அங்கு விளையாடும் சிறுவர்களுடன் தாமும் விளையாடுவார் போன்று திடீரென ஒரு மணற்குன்றில் தோன்றி மறைந்து வேறொரு பக்கம் வெளிப்பட்டார். அதனைக் கண்டு அதிசயித்த சிறுவர்களை யழைத்துத் தம்மை மணலால் மூடச் செய்து வெளிவருவதும் மறைவதுமாக விளையாட்டுக் காட்டி, முடிவில் வெளிப்படாது மறைந்தனர். அடிகளைக் காணாது சிறுவர்கள் மணலைத் தோண்டிப் பார்த்த பொழுது அடிகள் சிவலிங்கமாக வெளிப்பட்டனர்" எனப் பட்டினத்துப் பிள்ளையார் புராணம் கூறும்.

இனி, திருவெண்காட்டடிகள் சரித்திரமெனப் பிற்காலத்தார் பலரும் வழங்கிவரும் கதை மேற்காட்டிய பட்டினத்தடிகள்

புராணத்திற்குச் சிலவிடங்களில் மாறுபட்டிருத்தலைக் காணலாம்.

மண்ணுலகிலுள்ள திருத்தலங்கள் பலவற்றிலும் அம்மையப்பராகிய இறைவனது திருக்கோலத்தைக் கண்டு வழிபட எண்ணினான் குபேரன். செல்வத் தோழனாகிய அவனது விருப்பத்தை நிறைவேற்றத் திருவுளங்கொண்ட இறைவர் உமையம்மையாருடன் விடைமீதமர்ந்து காசி, காளத்தி, காஞ்சி, தில்லை முதலிய திருப்பதிகளில் எழுந்தருளிக் கயிலைக் காட்சியை வழங்கித் திருவெண்காட்டிற்கு எழுந்தருளினார். திருவெண் காட்டில் தங்கி இறைவனை வழிபாடுபுரியுங் குபேரன் அதனருகேயுள்ள காவிரிப் பூம்பட்டினத்தின் இயற்கை யெழிலையும் செல்வப்பொலிவையும் கண்டு அங்குப் பலநாள் தங்கியிருக்க விரும்பினான். 'நீ காவிரிப்பூம் பட்டினத்தில் விருப்பம் வைத்தமையால் அங்குப் பிறப்பாயாக' என இறைவர் பணித்தருளினார். அம்மொழிக் கேட்டு மனங்கலங்கிய குபேரன் 'சிறியேன் மானிடப் பிறவியால் மதிமயங்குங் காலத்து அடியேனைத் தடுத்தாட் கொண்டு அருள் புரிதல் வேண்டும்' எனச் சிவபெருமானைப் பணிந்து வேண்டினான். இறைவரும் அங்ஙனமே அருள்புரிவதாகத் திருவாய் மலர்ந்து திருக்கயிலைக்கு எழுந்தருளினார்.

காவிரிப் பூம்பட்டினத்திற் சிவநேசர் என்ற வணிகர் ஞானகலாம்பை யென்னும் மங்கையை மணந்து மனையறம் நிகழ்த்தி வந்தனர். ஆண்மகவின்றி வருந்தும் அவ்விருவரது குறையினைப் போக்கக் கருதிய இறைவர், குபேரனை அவ்இருவர்க்கும் புதல்வனாகப் பிறப்பித்தருளினார். திருவெண்காடர் திருவருளாற் பிறந்த குழந்தைக்குத் திருவெண்காடரெனப் பெயரிட்டார்கள். வெண்காடர்க்கு ஐந்து வயது நிரம்பும் நிலையில் அவர்தம் தந்தையாராகிய சிவநேசர் இறைவனடி சேர்ந்தார். அன்னையார் திருவெண்காடரைப் பள்ளியிலமர்த்திக் கல்வி பயிலச் செய்தார். கல்வி கேள்விகளில் வல்ல திருவெண்காடர் கற்றதனாலாய பயன் கடவுளடி தொழுதுய்தலே யெனத்தெளிந்தார். ஒருநாள் சிவபெருமான் வெண்காடர் கனவில் அந்தணராகத் தோன்றி 'நாளை நீ திருவெண்காடு சென்று இறைவனை வழிபடுக. அங்கு வேதியரொருவர் வந்து நினக்குச் சிவதீக்கை செய்வார்' எனச் சொல்லி மறைந்தனர். வெண்காடரும் தாம் கண்ட கனவை அன்னையாருக்குச் சொல்லி மறுநாட்காலை திருவெண்காட்டை யடைந்தார். அந்நிலையில் கனவில் தோன்றிய அந்தணரே அங்கு வந்து திருவெண்காடர்க்குச் சிவதீக்கை செய்து தாம்கொணர்ந்த சம்புடத்தை அவர்கையில் தந்தருளினார். அச் சம்புடத்தை

வெண்காடர் வாங்கிய அளவில் அது, தானே திறந்து கொண்டது. அதனுள்ளே சிவலிங்கத் திருமேனியும் விநாயகர் திருவுருவம் இருத்தலைக் கண்ட திருவெண்காடர் ஆசிரியர் கற்பித்தவண்ணம் அத்திருவுருவங்களை நாள் தோறும் பூசித்து வருவாராயினர். இறைவன் வெண்காடர் மாளிகையில் பொன்னினொடு நவமணிகள் பொலிந்து விளங்கச் செய்தருளினான். திருவெண்காடர் சிவகலையென்னும் நங்கையை மணந்து மனையறம் நிகழ்த்தி வருங்கால் மகப்பேறின்றி வருந்தி இறைவனைப் பூசித்து வந்தார்.

திருவிடைமருதூரில் மகாலிங்கப் பெருமானை வழிபடும் சிவசருமரென்பார் சுசீலையம்மையை மணந்து அரன் பூசையிலும் அடியார்க்குத் திருவமுதளித்தலிலும் தம்மிடத்துள்ள பொருளைச் செலவிட்டு வந்தார். வறுமையால் வருந்தும் அவ்வேதியரது வருத்தத்தை நீக்கத் திருவுளங்கொண்ட இடை மருதீசன் அவரது கனவில் தோன்றி 'அன்புமிக்கீர் நமது தீர்த்தக்கரையிலுள்ள வில்வமரத்து அடியில் நாமே ஒரு குழந்தையாக வந்துள்ளோம். நீவிர் அக்குழந்தையை எடுத்துக் கொண்டு காவிரிப்பூம் பட்டினத்தை யடைந்து வெண்காடரென்னும் வணிகரிடங் கொடுத்து அக்குழந்தையளவு நிறையுள்ள பொன்னைப் பெற்று உமது வறுமையைத் தவிர்ப்பீராக' என்று கூறி மறைந்தார். அம்மொழியினைக் கேட்ட சிவசருமர் மனைவியுடன் வில்வமரத்தடியை யடைந்து குழந்தையைக் கண்டு எடுத்து மகிழ்ந்தார். அவ்விருவரும் குழந்தையை விற்க மனமிலராய் வீடுதிரும்ப எண்ணினராயினும் இறைவன் அருளால் வழிதவறிச் சென்று முடிவில் காவிரிப்பூம்பட்டினத்தை யடைந்தனர். அவர்களது வரவினை இறைவர் கனவிடைச் சென்று அறிவிக்க வுணர்ந்த திருவெண்காடர் அவர்களை வரவேற்று உபசரித்துக் குழந்தையளவு நிறை உள்ள பொன்னைக் கொடுத்துக் குழந்தையைப் பெற்று கொண்டார். பொன்பெற்ற சிவசருமர் மனைவியுடன் திருவிடைமருதூரை யடைந்து இறைவனை வழிபட்டு வாழ்ந்திருந்தார்.

திருவெண்காடர் இடைமருதீசனருளாற் கிடைத்த குழந்தைக்கு மருதப்பிரான் எனப் பெயரிட்டு வளர்த்து வந்தார். பெற்றோர் மகிழப் பல அற்புதங்களை நிகழ்த்திய மருதப்பிரான், வாணிகத்துறையில் வல்லவராய்ப் பெரும் பொருளீட்டித் தந்தையை மகிழ்வித்தார். அவர் ஒரு முறை வணிகர் சிலருடன் கடல் கடந்து வாணிகம் நடத்திய பொழுது கிடைத்த ஊதியத்தை எல்லாம் திருக்கோயிற் பணிக்கும் சிவனடியார்க்குஞ் செலவிட்டு எஞ்சிய பொருளுக்கு வரட்டியும் அவல் கடலையும் வாங்கிக் கொண்டு ஊர் திரும்பினார். வரும்வழியில் கடல்நடுவே கப்பல்

திசைமாறினமையால் அவருடன் வந்த வணிகர்கள் உணவுப் பொருளும் விறகுமின்றி வருந்தினார்கள். அவர்கள் விரும்பிய வண்ணம் கடன் பத்திரம் எழுதி வாங்கிக் கொண்டு வரட்டிகளை அவர்களுக்குக் கடனாகக் கொடுத்தார். எல்லோரும் ஊர்க்கு வந்து சேர்ந்தார்கள். உடன் வந்த வணிகர் சிலர் திருவெண்காடரை யடைந்து அவருடைய மகன் மருதப்பிரானது செய்கையைக் கூறினார்கள். திருவெண்காடர் மருதப்பிரான் கொணர்ந்த வரட்டிகளுளொன்றைச் சோதித்து அதனுள்ளே மாணிக்கமணி யிருத்தலைக் கண்டு வியந்தார். மருதப்பிரானைக் காண விரும்பித் தம் மாளிகையுட் சென்று எங்குந் தேடினார். அந்நிலை அவருடைய மனைவியார் எதிரே வந்து நம்புதல்வன் மருதப்பிரான் இப் பெட்டியைத் தங்களிடம் சேர்க்கும்படி சொல்லி வெளியே சென்றான்' என்று கூறிப் பெட்டியை அவரிடங் கொடுத்தார். திருவெண்காடர் பெட்டியைத் திறந்து பார்த்தார். அதனுள்ளே காதற்ற வூசியும் ஓலைச் சுருளொன்றும் இருந்தன. 'காதற்றவூசியும் வாராது காணுங் கடை வழிக்கே' என்ற தொடர் ஓலையில் எழுதப்பட்டிருந்தது. அதனைப் படித்த திருவெண்காடர் இவ்வுலக நிலையாமையை நன்குணர்ந்தார். உணர்ந்த அப்பொழுதே துறவறத்தை மேற்கொண்டார். தம் தலைமைக் கணக்கராகிய சேந்தனாரை யழைத்துத் தமது நிதியறையை எல்லாருங் கொள்ளை கொள்ளத் திறந்து விடும்படி கட்டளையிட்டார். தமது மாளிகையைத் துறந்து ஊரம்பலத்தை யடைந்து சிவயோக நிலையில் அமர்ந்திருந்தார்.

திருவெண்காட்டடிகள் வீடு தோறுஞ் சென்று பிச்சை யேற்றுண்டலைக் கண்டு வெறுப்புற்று அடிகளைக் கொல்லத் துணிந்த அவருடைய தமக்கையார், நஞ்சு கலந்த அப்பமொன்றை யுண்ணும்படி சொல்ல, அதனை யுணர்ந்த அடிகள், அப்பத்தைப் பிட்டு ஒருபாதியைத் தமக்கையார் குடியிருக்கும் வீட்டிறப்பிற் செருகினார். அவ்வளவே வீடு தீக்கு இரையாயிற்று. சில நாட்கழித்து அடிகளது அன்னையார் சிவபதமடைந்தார். அவருடலை அடக்கஞ் செய்யக் கருதிய சுற்றத்தார் அதனைச் சுடுகாட்டிற்கு எடுத்துச் சென்று வழக்கம் போல விறகு களையடுக்கி அவற்றின் மேல் வைத்தார்கள். அந்நிலையில் அங்குப் போந்த திருவெண்காட்டடிகள் விறகுகளை நீக்கி அவற்றுக்கு மாறாக வாழைப்பட்டைகளையடுக்கிச் சில பாடல்களைப் பாடி ஞானத்தீயால் தாயாருடல் வெந்து நீறாடும்படி செய்து ஈமக்கடனை நிறைவேற்றினார். மருதப்பிரானை வணங்க விரும்பித் திருவிடை மருதூரையடைந்து சில நாள் தங்கியிருந்தார். பின்பு பல தலங்களை வணங்கிக் கோகரணம் பணிந்து உஞ்சேனை மாகாளத்தை யடைந்து இறைவனை வழிபட்டு அந்நகரின்

புறத்தேயுள்ள சிறு காட்டில் விநாயகர் ஆலயத்தில் சிவயோக நிலையில் அமர்ந்திருந்தார். இரவில் பத்திரகிரி மன்னன் அரண்மனையிற் புகுந்து அணிகலங்கள் பலவற்றைத் திருடிவரும் கள்ளர்கள் தாம் வேண்டிக் கொண்டபடி விநாயகர் அருள் செய்தமை யெண்ணி அவ்வழியிலுள்ள விநாயகர் கோயிலை யடைந்து விலைமதிப்பரிய மணிமாலை யொன்றைப் பிள்ளையார்க்குப் போட்டு விட்டுச் சென்றார்கள். அப்போது இருட் போதாதலால் அவர்கள் சாத்திய மாலை கணபதி யருகே யோகநிலையிலமர்ந்திருக்கும் பட்டினத்தடிகள் கழுத்தில் விழுந்தது. யோக நிலையிலிருக்கும் அடிகள் அதனையறிந்திலர். சிறிது நேரத்திற்கெல்லாம் கள்வரைத் தொடர்ந்து பிடிக்க வந்த காவலர்கள் கணபதியாலயத்துள்ளிருக்கும் அடிகள் கழுத்தில் மணிமாலையைக் கண்டு இவனே கள்வனென்று சொல்லிப் பிடித்துச் சென்றனர். அடிகளைக் களவுப் பொருளுடன் கண்ட அரசனாகிய பத்திரகிரி மன்னன் அவரைக் கழுவேற்றுமாறு கட்டளையிட்டனன். காவலர் அடிகளைக் கழுமரத்தின் முன்னே கொண்டு நிறுத்தினர். அடிகள் தம் முன்னேயுள்ள கழுமரத்தைப் பார்த்து 'என் செயலாவது யாதொன்றுமில்லை' என்ற பாடலைப் பாடினார். கழுமரம் தீப்பற்றி யெரிந்தது. அதனையுணர்ந்த பத்திரகிரி மன்னன் தம் பிழையைப் பொறுத்தருள வேண்டி அடிகளைப் பணிந்தான். தனது அரசியலைத் துறந்து அடிகளுக்கு மாணவனாயினன். அடிகள் தம் மாணாக்கராகிய பத்திரகிரியாரைத் திருவிடைமருதூர்க்குச் செல்லப் பணித்துத் தாம் பல தலங்களை வணங்கச் சென்றனர். தென்னாடடைந்த திருவெண்காட்டடிகள் திருவிடைமருதூரை யடைந்தார். அங்கு வந்த பத்திரகிரியாரை மேலைக்கோபுரவாயிலில் இருக்கப் பணித்துத் தாம் கீழைக் கோபுரவாயிலில் அமர்ந்திருந்தார். பத்திரகிரியார் நாடோறும் பிச்சையேற்று வந்து தம் ஆசிரியர்க்கு அருத்திய பின் தாம் உண்டு எஞ்சியதைப் பசியால் வருந்தி அங்கிருந்த பெண் நாய்க்கு இட்டார். அன்று முதல் அந் நாய் அவரைப் பிரியாதிருந்தது. ஒரு நாள் சிவபெருமான் சித்தராக வந்து தாம் பசியால் வருந்துவதாகப் பட்டினத்தடிகளிடம் கூறினார். அது கேட்ட அடிகள் 'யான் கந்தையும் மிகையென்ற எண்ணமுடையேன் என்பால் ஒன்றுமில்லை. மேலைக் கோபுரவாயிலில் ஒரு குடும்பியுள்ளான். அவன் உமது பசியைத் தீர்ப்பான்' என்றார். சித்தரும் அவர் சொல்லிய மொழியினை மேலைக் கோபுர வாயிலிலிருந்த பத்திரகிரியாரிடம் சொல்லி நின்றார். அம்மொழியினைக் கேட்ட பத்திரகிரியார் 'இரந்துண்ணும் ஓடும் எச்சிலுண்ணும் நாயுமா என்னைக் குடும்பியாக்கி விட்டன. என்று வருந்தித் தம் கையிலுள்ள ஓட்டைக் கீழே யெறிந்தார். அவ்வோடு சிதைந்து நாயின் மேற்பட

நாய் இறந்து போயிற்று. அடியார்களது சேடத்தை யுண்டமையால் அந்நாய் காசியரசனுக்கு மகளாகப் பிறந்து வளர்ந்தது. மங்கைப் பருவமெய்திய பெண் தன்பழம் பிறப்புணர்ச்சியால் தாய் தந்தையுடன் திருவிடைமருதூரை அடைந்து பத்திரகிரியாரைப் பணிந்து நின்று 'அடி நாய் மீண்டும் திருவடிப்பேற்றுக்கே வந்தது' என்று கூறினாள். பத்திரகிரியார் அப்பெண்ணையழைத்து வந்து பட்டினத்தடிகள் திருமுன்னர் நின்று 'எம்பெருமான் எச்சிலுண்ட நாய்க்கும் இப்பிறவி வரலாமோ' என வருந்தி முறையிட்டார். அடிகளும் சிவன் செயலுக்கு என் செய்யலாம்' என இறைவனைச் சிந்தித்தார். அப்பொழுது ஒரு பெருஞ்சோதி தோன்றியது. அச் சோதியில் இறைவன் ஆணையின்படி பத்திரகிரியார் அப்பெண்ணுடன் சென்று மறைந்தனர். சிவபிரானது பெருங் கருணைத்திறத்தை நினைந்துருகிய பட்டினத்தடிகள் 'இன்னும் என்னையும் என் வினையையும் இங்கு இருத்திவைத்தனை போலும்' என இரங்கிக் கூறினார். அந்நிலையில் 'ஒற்றியூர்க்கு வா' என ஓர் அசரீரி உண்டாகியது. பின்பு அடிகள் திருவெண்காடு சென்று சேந்தனாரைச் சிறைமீட்டருளிச் சீகாழி, தில்லை, அண்ணாமலை, காஞ்சி முதலிய தலங்களைப் பணிந்து போற்றித் திருவொற்றியூரை அடைந்து இறைவனையிறைஞ்சி வரும் நாளில் ஒரு நாள் கடற்கரையில் இடைச்சிறுவர்களுடன் விளையாடிக் கொண்டிருக்கும் நிலையில் மணலில் மறைந்து சிவலிங்கமாய் முளைத்தனர். பட்டினத்தடிகளைக்குறித்து அறிஞர் பலரும் எழுதி வரும் வரலாறு இதுவேயாகும்.

மேற்குறித்தவற்றுட் காணப்படாத செய்திகள் சில புலவர் புராணத்தில் பட்டினத்தடிகள் வரலாற்றில் இடம் பெற்றுள்ளன. சிவபெருமானே மருதப்பிரானாக வந்து உபதேசித்தும் திருவெண்காடர் உலகப் பற்றொழியவில்லை யென்றும், அவருடைய நண்பராகவும் தையற்றொழிலில் வல்லவராகவும் விளங்கிய வயது முதிர்ந்த பாணரொருவர், தாம் இறக்குங்கால் தம் கையிலுள்ள காதற்றவூசிகளை எல்லாங்கொட்டி, 'போங்கால் இவை கூட வாரா' என்றொரு சீட்டெழுதி வைத்து எல்லா வற்றையுஞ் சேர்த்து முடிந்து தம் மனைவி கையில் தந்து, இம்முடிச்சினை வெண்காடரிடம் கொடுப்பாயாக என்று சொல்லி இறந்தாரென்றும், அதனைப் பெற்ற திருவெண்காடர் உலக நிலையாமையை யுணர்ந்து துறவடைந்தார் என்று புலவர் புராணமுடையார் கூறுகின்றார். இச்செய்து பட்டினத்தடிகள் புராணத்திலும் தொழுவூர் வேலாயுத முதலியார் முதலிய அறிஞர்கள் எழுதிய திருவெண்காட்டடிகள் சரித்திரத்திலும் காணப்படவில்லை. பட்டினத்தடிகள் தமக்கு முத்திப்பேறு எங்கு

நிகழும் என ஐயுற்றுவருந்தியபோது சிவபெருமான் அடிகளிடம் பேய்க்கரும்பொன்றைத்தந்து 'இது எந்தத்தலத்தில் தித்திக்குமோ அந்தத்தலமே உனக்குச் சிவகதியை யளிக்குந்தலம்' எனக்கூறி மறைந்தருளினார் என்றும், அவர் தந்த நாணற் கரும்பினைக் கைக்கொண்ட அடிகள், தாம் சென்ற தலங்கள் தோறும் அதனைமென்று சுவைபார்த்து, முடிவில் திருவொற்றியூரை யடைந்தபொழுது அது தித்தித்தமையால் அவ்வூரில் தங்கியிருந்து கடற்கரையிற் சிவலிங்கமாயினாரென்றும் புலவர் புராணம் கூறுகின்றது. இக்கூற்றிற்கேற்பப் பட்டினத்தடிகளின் திருவுருவத்தினை வரைந்தோர் அடிகள் திருக்கரத்திற் கரும்பினைத்தந்து எழுதியுள்ளார்கள். இனி, திருவெண் காட்டடிகள் திருவண்ணாமலையை யடைந்தபொழுது அங்கெதிர்ப்பட்ட உருத்திரகணிகை யொருத்தியை விரும்பி அழைத்தனரென்றும், அவள் மறுத்து ஓடிய நிலையில் தம்பால் வெளிப்பட்ட சுக்கிலத்தை இலைக்கலத்திற்பெய்து விட்டு அடிகள் யோக நிலையில் அமர்ந்திருந்தாரென்றும் பின் அவள் இசைந்துவந்தபொழுது அடிகள் குறிப்பின்படி இலைக்கலத்திற் பெய்துவைத்திருந்ததனை விழுங்கிக் கருக்கொண்டு திருப்புகழாசிரியராகிய அருணகிரி நாதரைப் பெற்றாளென்றும் ஒரு கதை வழங்குகிறது.

இங்கெடுத்துக் காட்டிய இக்கதைகளுட் பல பிற்காலத் தவரால் தம்மனம் போனவாறு புனைந்துரைக்கப் பட்டனவர்கும்.

**"பாரனைத்தும் பொய்யென வேபட்டினத்துப் பிள்ளைப்போல்**
**ஆரும் துறக்கை யரிதரிது"**

எனத் தாயுமானப் பெருந்தகையாரால் வியந்து போற்றப் பெற்ற தூய துறவறச் செல்வராகிய பட்டினத்தடிகள் கணிகை யொருத்தியைக் கண்டு கழிகாமுகராகி உள்ளத்துறுதியை யிழந்தாரெனக் கூறும் இக்கதையினை அறிஞர் அருவருத் தொதுக்குவர் என்பது திண்ணம். அன்றியும் பட்டினத்தடிகள் கி. பி. பத்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இருந்தவர். திருப்புகழாசிரியராகிய அருணகிரிநாதரோ கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். இவ்விருவர் வாழ்ந்த காலப் பகுதிக்கிடையே நானூறாண்டுகள் இடையிட்டுள்ளன. இந்நிலையினை யுணர்வோர் மேற்காட்டிய கதை வரலாற்று முறைக்கு மாறுபட்ட தென்பதனை நன்கு தெளிந்து கொள்வார்கள்.

இனி, பட்டினத்தடிகள் வரலாற்றொடு தொடர்பு உடையனவாக வழங்கப் பெறுவனவற்றுள் அடிகளுடைய வாய்மொழி கொண்டு துணியத்தக்க வரலாற்றுக் குறிப்புகள் இவையென அறிந்து கொள்ளுதல் இன்றியமையாததாகும்.

*நெடுங்காலமாகச் சிவநெறியைக் கடைபிடித்து வந்த பண்புமிக்க பழங்குடியிற் பிறந்தவர் திருவெண்காட்டு அடிகளென்பது,*

**'ஆளெனப் புதிதின் வந்தடைந்திலம் அத்தநின்**
**தாளின் ஏவல் தலையின் இயற்றி**
**வழி வழி வந்த மரபினம்'**

*என அடிகள் இறைவனை நோக்கித் தம் குடும்ப இயல்பினைத் தெரிவித்துக் கொள்ளுதலாற் புலனாம். தாம் செல்வக்குடும்பத்திற் பிறந்தமையும், மனைத்தக்க மாண்பு உடைய மனைவியொடுகூடி மனையறம் நிகழ்த்தினமையும், இரவலர்பலர்க்கும் வரையாது வழங்கி மக்களும் சுற்றமும் மகிழவாழ்ந்தமையும், அங்ஙனம் இல்லறத்தில் வாழும் நிலையிலே சிவபெருமானது திருப் பெயராகிய திருவைந்தெழுத்தினை அன்பினால் மறவாது ஓதிச் சித்தத்தைச் சிவன்பால் வைத்து வழிபட்டுவந்தமையும் ஆகிய தம் வாழ்க்கை அனுபவத்தினை,*

**"யாங்க ளெல்லாம்**
**பழுதின்றுயர்ந்த எழுநிலை மாடத்தும்**
**செந்தா துதிர்ந்த நந்தன வனத்தும்**
**தென்ற லியங்கும் முன்றி லகத்தும்**
**தண்டாச் சித்திர மண்டப மருங்கிலும்**
**பூவிரி தரங்க வாவிக் கரையிலும்**
**மயிற்பெடை யாலக் குயிற்றிய குன்றிலும்**
**வேண்டுழி வேண்டுழி 'பாண்டாட் டிட்ட**
**மருப்பினி யன்ற வாளரி சுமந்த**
**விருப்புறு கட்டில் மீமிசைப் படுத்த**
**ஐவகை யமளி யணைமேற் பொங்கத்**
**தண்மலர் கமழும் வெண்மடி விரித்துப்**
**பட்டினுட் பெய்த பதநுண் பஞ்சின்**
**நெட்டணை யருகாக் கொட்டைகள் பரப்பிப்**
**பாயல் மீது பரிபுரம் மிழற்றச்**
**சாயல் அன்னத்தின் தளர்நடை பயிற்றி**
**... ... ... ...**
**... .... .... .....**
**மதியென மாசறு வதனம் விளங்கப்**
**புதுவிரை யலங்கல் குழல்மிசைப் பொலியும்**
**அஞ்சொல் மடந்தையர் ஆகந் தோய்ந்தும்**
**சின்னம் பரப்பிய பொன்னின் கலத்தில்**
**அறுசுவை யடிசில் வறிதினி தருந்தாது**
**ஆடினர்க் கென்றும் பாடினர்க் கென்றும்**

**வாடினர்க் கென்றும் வரையாது கொடுத்தும்**
**பூசுவன பூசியும் புனைவன புனைந்தும்**
**தூசு நல்லன தொடையிற் சேர்த்தியும்**
**ஐந்து புலன்களும் ஆர ஆர்ந்தும்**
**மைந்தரும் ஒக்கலும் மகிழ மனமகிழ்ந்**
**திவ்வகை யிருந்தோம் ஆயினும் அவ்வகை**
**மந்திர எழுத்தைந்தும் வாயிடை மறவாது**
**சிந்தை நின்வழிச் செலுத்தலின் அந்த**
**முத்தியும் இழந்திலம் முதல்வ"**

எனத் திருவிடைமருதூர் மும்மணிக் கோவையில் திருவெண்காட்டடிகள் விரித்துக் கூறியுள்ளார். அளவின்மிக்க பெருஞ் செல்வமுடையாரை உலக மக்கள் குபேரர் எனப் பாராட்டிப் போற்றுதலை இன்றும் காண்கிறோம். நிதியின் கிழவனாகிய அளகை வேந்தனைப் போன்று வளமிகப் பெற்ற திருவெண்காட்டடிகளைப் பின்வந்தோர் குபேரனது அவதாரமென்றே புனைந்துரைத்துள்ளார்கள். அன்னோர் கூற்றினை உபசாரமெனக் கொள்வதல்லது உண்மை வரலாறாகக் கொள்ளுதற்கில்லை.

அடிகட்குப் பெற்றோர் இட்ட பெயர் 'வெண்காடன்' என்பதாகும். அடிகள் தமக்கு எளிவந்து அருள்புரிந்த இறைவனை நோக்கி 'வெண்காடனென்னுந் தரத்தினுமாயது நின்னடியாந் தெய்வத் தாமரையே' எனத் திருவிடைமருதூர் மும்மணிக் கோவையின் இறுதிப்பாடலில் உளமுருகிப் போற்றியுள்ளார். 'வெண்காடனாகிய என் தரத்திலும் நின்திருவடித்தாமரை எளிவந்து அருள் புரிந்தமைக்கு எளியேன் என்ன கைம்மாறு செய்ய வல்லேன்' என மருதப்பிரானை அடிகள் மகிழ்ந்து போற்றுதலால், அடிகளது பெயர் திருவெண்காடன் என்பது நன்கு புலனாதல் காண்க.

திருவெண்காடர் தரை வழியாகவும் கடல் வழியாகவும் பிறநாடுகட்குச் சென்று பெரும் பொருளை ஈட்டியவரென்பதும், தரை வழியாகச் செல்லுங்கால் கள்வர் முதலாயினாரால் நேரும் துன்பங்களையும் கடல் வழியாகச் செல்லுங்கால் கடல் நடுவே நேரும் இடையூறுகளையும் நன்குணர்ந்தவரென்பதும்;

**அருளா வயவர் அம்பிடை நடந்தும்**
**இருளுறு பவ்வத் தெந்திரங் கடாஅய்த்**
**துன்றுதிரைப் பரப்பிற் குன்று பார்த் தியங்கியும்**

எனவரும் அடிகளது வாய்மொழியால் உய்த்துணரப்படும். அன்றியும் அடிகள் தாம் பாடிய கோயில் நான்மணிமாலை

16 - ஆம் பாடலில் உடம்பினை மரக்கலமாக உருவகஞ் செய்து பிறவிப் பெருங் கடலில் அது கவிழும் நிலையினைச் சுவை பெறக் கூறியுள்ளளார். முற்றுருவக அணியமைந்த அப்பாடற் பொருளைக் கூர்ந்து நோக்குங்கால் அதனைப் பாடிய திருவெண்காட்டடிகளுக்குக் கப்பல் யாத்திரையில் நிரம்பிய பயிற்சியுண்டென்பது இனிது விளங்கும்.

சேணுயர் மருத மாணிக்கத் தீங்கனியை விளைவித்துக் கொள்ள முயன்ற மேலோராகிய தொண்டரது உழவு முறையையும், அவ்வுழவினில் ஈடுபடாது மனமெனும் புனத்தை வறும் பாழாக்கிய ஏனைக் கயவரது இழிவையும் திருவிடை மருதூர் மும்மணிக் கோவையின் பத்தாம் பாடலில் அடிகள் நயம்பெற விளக்கியுள்ளார். அடிகள் உழவுத் தொழிலையும் நன்றாக உணர்ந்தவ ரென்பதற்கு இப்பாடல் தக்க சான்றாதல் காணலாம்.

திருவெண்காடர் தம் குலம் விளங்குதற்குரிய மக்கட் பேறின்றி வருத்தமுற்றாரென்றும், அவரது துயரைப் போக்கத் திருவுளங் கொண்ட இடைமருதீசனே சிவசருமரென்னும் வேதியர்பால் குழந்தையாக வந்து தன்னைத் திருவெண்காடர்க்கு விற்கும்படி செய்து வெண்காடரால் வளர்க்கப் பெற்றுப் பல விளையாடல்களை நிகழ்த்தி மறைந்தருளினனென்றும் வழங்கும் கதையினைப் பட்டினத்தடிகள் வரலாறு கூறுவோர் அனைவரும் விடாது கூறி வருகின்றார்கள். இத்தகைய திருவிளையாடல்களை இறைவன் தன்னடியார்க்கு அருள்செய்தற் பொருட்டு எக்காலத்தும் செய்தருள்வா னென்பதிற் சிறிதும் ஐயமில்லை. இதுகொண்டு அடியார் வரலாறுகள் எல்லாவற்றிலும் இறைவனுடைய அற்புத நிகழ்ச்சிகளைப் புகுத்திக் கூறுவதென்பது பிற்காலத் தலபுராண ஆசிரியர்களின் வழக்கமாக நிலைபெற்றுவிட்டது.

**'மைந்தரும் ஒக்கலும் மகிழ மனமகிழ்ந்து**
**இவ்வகை யிருந்தோம்'**

எனத் திருவெண்காட்டடிகள் தம் வாழ்க்கை யனுபவத்தினை விரித்துக் கூறினமை முன்னர் விளக்கப் பெற்றதாதலின் அடிகளுக்கு மைந்தரில்லையென ஒரு தலையாகத் துணிந்து கூறுதற்கு இடமின்மையுணர்க.

உயிர்க்குயிராகிய சிவபெருமானே புறத்தே ஆசிரியத் திருமேனி கொண்டு எழுந்தருளி வந்து மெய்ப்பொருளை அறிவுறுத்தித் திருவெண்காடரை ஆட்கொண்டருளினன் என்பது,

**நானே பிறந்து பயன் படைத்தேனயன் நாரணனெங்**
**கோனே யெனத் தில்லையம்பலத்தே நின்று கூத்துகந்த**
**தேனே திருவுள்ளமாகி யென்தீமை யெல்லாமறுத்துத்**
**தானே புகுந்தடியேன் மனத்தேவந்து சந்திக்கவே.**

*எனவரும் கோயில் நான்மணிமாலைப் பாடலாலும்,*

**கரத்தினில் மாலவன் கண்கொண்டு நின்கழல் போற்ற நல்ல**
**வரத்தினை யீயும் மருதவப்பா மதியொன்று மில்லேன்**
**சிரத்தினு மாயென்றன் சிந்தையுளாகி வெண்காடனென்னுந்**
**தரத்தினு மாயது நின்னடி யாந்தெய்வத் தாமரையே.**

*எனவரும் திருவிடைமருதூர் மும்மணிக் கோவையின் இறுதிச் செய்யுளாலும் நன்கு புலனாதல் காண்க.*

*திருவெண்காடர் துறவடைந்தமைக்குக் "காதற்ற வூசியும் வாராது காணுங் கடை வழிக்கே" என்ற தொடர் எழுதப்பட்ட ஓலைச்சீட்டும் அதனுடன் இருந்த காதற்ற வூசியும் காரணமாயின எனக் கூறுங்கதை அவரது மனவியல்புக்கு ஏற்புடையதாகத் தோன்றவில்லை. இத்தொடரே அவரைத் துறவடையத் தூண்டியிருக்குமாயின் இத்தொடர்ப் பொருளைத் தாம் பாடிய பதினொராந் திருமுறைப் பனுவல்களில் யாண்டேனும் அடிகள் சிறப்பாகக் குறிப்பிட்டிருப்பர். இத்தொடர் அடிகள் திருவாக்காகிய பதினொராந் திருமுறைப் பிரபந்தங்களில் எங்கும் குறிக்கப்படவில்லை. இத்தொடர்ப் பொருளுக்கு முரணாகச் செல்வம் நிறைந்த மனைவாழ்க்கையிலிருந்து கொண்டே திருவைந்தெழுத்தோதிச் சிவபெருமானை வழிபட்டு இம்மையின்பமும் வீடுபேறாகிய பேரின்பமும் ஒருங்கெய்தும் நிலையில் தாம் வையத்து வாழ்வாங்கு வாழ்ந்த திறத்தினைத் திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில் 19 - ஆம் பாடலில் அடிகள் தெளிவாக விளக்கியுள்ளார். திருவெண்காடர் மனந்திடுக்குற்ற நிலையில் திடீரெனத் துறவெய்தியவர் அல்லரென்பதும் மனை வாழ்க்கையில் வாழும் முறைப்படி வாழ்ந்து முறையாகத் துறவடைந்தவரென்பதும் அவர் பாடிய பிரபந்தங்களை ஊன்றிப் பயில்வார்க்கு இனிது விளங்கும். திருவெண்காடர் முதலிற் கடும்பற்றுள்ளமுடையவராய் வாழ்ந்து தையற்றொழிலாளரும் தமக்கு நண்பராய் நற்பொருளைக் கூறிவந்த வருமாகிய பாணர் செய்த உபாயத்தால் விரைவில் துறவு பெற்றாரெனப் புலவர் புராணமுடையார் கூறுங்கதை,*

**'அறுசுவையடிசில் வறிதினி தருந்தாது**
**ஆடினர்க்கென்றும் பாடினர்க் கென்றும்**
**வாடினர்க்கென்றும் வரையாது கொடுத்தும்**

... ... ... ...
... ... ... ...

**இவ்வகையிருந்தோம்'**

என அடிகள் தம் வாழ்க்கையனுபவத்தைப் பற்றிக் கூறும் வாய்மொழிக்கு முற்றிலும் முரணாதல் காண்க.

இனி, திருவெண்காட்டடிகளுக்குப் பத்திரகிரியார் மாணவர் என வழங்கும் கதைக்குத் தக்க சான்றுகள் கிடைக்கவில்லை.

**"ஒட்டுடன் பற்றின்றி யுலகைத் துறந்த செல்வப்**
**பட்டினத்தார் பத்திரகிரி பண்புரைப்ப தெந்நாளோ"**

எனத் தாயுமான அடிகள், செல்வர் வாழ்வில் வாழ்ந்து அதன்கண் ஒரு சிறிதும் பற்று வையாது உள்ளத்துறவுடையராய் வாழ்ந்த சான்றோர்களாகப் பட்டினத்தடிகளையும் பத்திரகிரியாரையும் ஒருங்கு கூறிப் பாராட்டிப் போற்றியுள்ளார். தாயுமான அடிகளாற் போற்றப் பெற்ற பத்திரகிரியார் என்பவரைப் பற்றிய தெளிவான வரலாற்றுக்குறிப்புகள் கிடைக்கவில்லை. பத்திரகிரியார் பாடியதாக அச்சிடப் பெற்று வழங்கும் மெய்ஞ்ஞானப் புலம்பலின் சொல் நடையினையும் பொருளமைதியினையும் கருத்தூன்றி ஆராயுங்கால், அந்நூலைப் பாடிய பத்திரகிரியார் திருவெண்காட்டடிகள் காலத்திற்குப் பன்னூறாண்டுகள் காலத்தாற் பிற்பட்டவரென்பது நன்கு புலனாகும். பட்டினத்தடிகளையும் பத்திரகிரியாரையும் தாயுமான அடிகளார் ஒருங்கு கூறிப் போற்றிய குறிப்புக்கொண்டு அவ்விருவரும் ஒரு காலத்திலிருந்தவர்களென்றும் பட்டினத்தடிகள்பால் உபதேசம் பெற்றுத் துறவு நிலையினை மேற்கொண்டு வாழ்ந்தவர் பத்திரகிரியாரென்றும் எண்ணுதற்கு இடமுண்டு. எனினும், இக்கதையினை வலியுறுத்தற்குரிய சான்றுகள் இல்லாமையி னாலும் பத்திரகிரியார் பாடியதாக வழங்கி வரும் மெய்ஞ்ஞானப் புலம்பலின் சொற்பொருளமைதியினை நோக்குங்கால் அதனைப் பாடியவர் திருவெண்காட்டடிகள் காலத்தவரல்ல ரென்பதும் அடிகளுக்கு நெடுங்காலம் பிற்பட்டவரென்பதும் நன்கு துணியப்படுமாதலானும் பதினொராந் திருமுறையாசிரியர்களு ளொருவராகிய திருவெண் காட்டடிகளும் மெய்ஞ்ஞானப் புலம்பல் பாடிய பத்திரகிரியாரும் வேறு வேறு காலத்தில் வாழ்ந்தவரெனக் கொள்ளுதலே ஏற்புடையதாமென்க.

இனி, திருவெண்காட்டடிகள் திருவொற்றியூரிற் சிவப்பே றெய்தினர் என வழங்குஞ் செய்தி அடிகளது வரலாற்றோடு தொடர்புடைய தெனவே தெரிகிறது. இக்காலத்தில் திருவொற்றியூர்க் கடற்கரையில் பட்டினத்தடிகள் சமாதி யென்ற

பெயருடன் திகழும் கோயில் பிற்காலத்திற் கட்டப்பட்டதென்றும் அடிகளது உண்மைச் சமாதியைக் கடல் கொண்டதென்றும் கூறுவர் சிலர். திருவொற்றியூரில் இப்பொழுதுள்ள சமாதியின் அமைப்பு முறையினைக் காண்போர் இக்கூற்றினை ஒருவாறு ஒப்புக் கொள்வார்கள். அடிகள் பாடிய பிரபந்தங்கள் ஐந்தினுள் இறுதிக்கண் அமைந்தது திருவொற்றியூர் ஒருபா ஒருபது என்பது பதினொராந் திருமுறைப் பிரபந்தங்களின் வைப்பு முறையினாற் புலனாகின்றது. எனவே அடிகள் திருவொற்றியூரில் தங்கி இறைவனை வழிபட்டிருக்கும் நாட்களில் இப்பிரபந்தத்தைப் பாடிப் போற்றித் திருவொற்றியூரிலேயே சிவபரம் பொருளோடு இரண்டறக் கலந்தனரெனக் கூறுதல் பெரிதும் பொருத்தமுடையதேயாகும்.

பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடற்றிரட்டு என வழங்கும் பாடற்றொகுதியிலுள்ள பார்டல்கள் திருவெண் காட்டடிகள் வாக்கல்ல வென்பதும், இத் திருப்பாடல்கள் பட்டினத்தார் என்ற பெயருடன் பிற்காலத்தில் வாழ்ந்த துறவறச் செல்வரொருவராற் பாடப்பெற்றன வென்பதும் முன்னரே விளக்கப் பட்டன. இப்பாடல்களை ஆதரவாகக் கொண்டு பட்டினத்துப் பிள்ளையார் புராணம், திருவெண்காட்டடிகள் சரித்திரம், புலவர் புராணம் என்னும் நூல்களில் திருவெண் காட்டடிகள் வரலாறாகச் சொல்லப்பட்ட செய்திகள் அடிகளது உண்மை வரலாறாகக் கொள்ளத் தக்கன அல்ல எனத் தெளிந்து கொள்ளுதல் வேண்டும்.

திருவிடைமருதூர் மும்மணிக் கோவையில்,

**"வித்தகப் பாடல் முத்திறத்தடியரும்**
**திருந்திய அன்பிற் பெருந்துறைப் பிள்ளையும்**
... ... ... .... .
**விரும்பின கொடுக்கை பரம்பரற்கென்று**
**புரிகுழற் றேவியைப் பரிவுடன் ஈந்த**
**பெரிய அன்பின் வரகுண தேவரும்"**

என இறைவனது பேரருள் பெற்ற பெருமக்களாகத் தேவார ஆசிரியர் மூவரையும் திருவாதவூரடிகளையும் வரகுண பாண்டியரையும் திருவெண் காட்டடிகள் குறிப்பிட்டுப் போற்றியுள்ளார். இங்குப் 'பெரிய அன்பின் வரகுண தேவர்' என அடிகளாற் பாராட்டிப் போற்றப் பெற்றவர் கி. பி எட்டாம் நூற்றாண்டின் இறுதியிற் பாண்டி நாட்டையும் சோழநாடு தொண்டை நாடுகளையும் ஆட்சி புரிந்த வேந்தர் பெருமானாகிய முதல் வரகுண பாண்டியராவர். திருவெண் காட்டடிகள் வரகுண பாண்டியரது சிவபக்தியின் திறத்தைத் தம் பாடலிற் குறித்துப்

போற்றுதலை நோக்குங்கால் அடிகள் காலத்தில் வரகுண பாண்டியரது அன்பின் திறம் தமிழ் மக்களால் மறவாது போற்றப் பெற்று வந்தமை நன்கு புலனாம். கி. பி. பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த நம்பியாண்டார் நம்பியருளிய பிரபந்தங்களுக்கு முன்னே திருவெஃகாட்டடிகள் அருளிய பிரபந்தங்கள் பதினொராந் திருமுறையில் வரிசைப்படுத்தப் பெற்றிருத்தலை நோக்குங்கால் அடிகள் நம்பியாண்டார் நம்பிக்குக் காலத்தால் முற்பட்டவ ரென்பது நன்கு விளங்கும். ஆகவே திருவெண்காட்டடிகள் வாழ்ந்த காலம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியும் பத்தாம் நூற்றாண்டின் தொடக்கமுமாம் எனக் கொள்ளுதல் பொருத்தமுடையதாகும்.

இனி, அடிகள் அருளிச் செய்தனவாகப் பதினொராந் திருமுறையில் கோயில் நான்மணிமாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபாவொருபது என்னும் ஐந்து நூல்கள் சேர்க்கப் பெற்றுள்ளன. இப்பிரபந்தங்களிலுள்ள பாடல்கள் யாவும் இனிய ஓசையும் விழுமிய பொருளும் உடையனவாய்ப் படிக்குந்தோறும் சுவை நலங்களைத் தந்து இன்பஞ் செய்வனவாகும். முழுமுதற் பொருளாகிய சிவபெருமான் தில்லைச் சிற்றம்பலம், திருக் கழுமலம், திருவிடைமருது, திருக்கச்சி யேகம்பம், திருவொற்றியூர் முதலிய திருத்தலங்களிற் கோயில் கொண்டெழுந்தருளிய சிறப்பும், ஆட்பாலவராகிய மெய்யடியார்களுக்கு இறைவன் அருள் புரியும் திறமும், பிறவிப் பெருங்கடலில் வீழ்ந்து கரை காணாது நெடுங்காலமாகத் துன்புற்றுழலும் உயிர்களை அத்துன்பக்கடலினின்றும் இன்பக்கரையிற் கொண்டு சேர்க்கும் இனிய தெப்பமாகத் திகழ்வது இறைவனது திருவடித் துணையேயாமென்பதும், திருவைந்தெழுத்தாகிய மந்திரத்தினை மறவாது ஓதி இறைவனைச் சிந்தித்து வழிபடுமியல்புடையோர் இல்லறம் துறவறமாகிய எந்த நிலையிலிருந்தாலும் அழிவிலாப் பேரின்பவாழ்வைப் பெற்று இன்புறுவ ரென்பதும், இறைவனடி யார்க்குத் தொண்டுபட்டு வீடுதோறும் பிச்சையேற்றுண்டு திரியும் வாழ்வு வேந்தர் வாழ்க்கையினும் மேம்பட்ட பெருமிதத்தை விளக்குமென்பதும், உயிர்களின் நலங்கருதி இறைவன் உலகங்களைத் தோற்றுவித்துக் காத்து ஒடுக்கி அருள்புரிவன் என்பதும் முதலிய உயர்ந்த உண்மைகள் இப்பிரபந்தங்களில் தெளிவாக அறிவுறுத்தப் பெற்றுள்ளன. இப்பனுவல்கள் திருவெண்காட்டடிகளது செந்தமிழ்ப் புலமையினையும் நுண்ணறிவின் மாட்சியினையும் உலகியல் வாழ்வில் அவர் பெற்ற சிறந்த அனுபவங்களையும் திருவருட் பேற்றினையும் இனிது புலப்படுத்துவனவாதல் உணர்ந்து மகிழ்தற் பாலதாகும்.

## கோயில் நான்மணிமாலை

*சிறந்தோனாயெ இறைவன் எழுந்தருளியிருக்குமிடம் கோயில் எனப்படும். சிவநெறிச் செல்வர்களாற் கோயில் எனச் சிறப்பித்துப் போற்றப் பெறுவது பெரும்பற்றப் புலியூராகிய தில்லைச் சிற்றம்பலப் பெருங் கோயிலேயாம். உலகெலாம் உணர்ந்து ஓதற்கரிய இறைவன் அளவில் பேரொளி திகழ ஐந்தொழிற்கூத்தியற்றி எவ்வுயிர்க்கும் அருள்சுரக்கும் பேரருள் நிலையமாகிய தில்லையம்பலத்தைப் போற்றுங் கருத்துடன் திருவெண்காட்டடிகள் பாடிய செந்தமிழ்ப்பனுவல் கோயில் நான்மணிமாலை யென்பதாகும். வெண்பா, கலித்துறை, விருத்தம், அகவல் என்னும் நால்வகைப் பாக்களும் ஒன்றன்பின் னொன்றாக அந்தாதித் தொடையமையத் தொடுத்துவர வெவ்வேறு நிறமுடைய நால்வகை மணிகளால் தொடுக்கப் பெற்ற மாலை போன்று திகழ்வதாதலின் இது நான்மணிமாலை யென்னும் பெயர்த்தாயிற்று. இது நாற்பது செய்யுட்களாற் பாடப் பெற்றுளது. நான்மணிமாலை யென்னும் செந்தமிழ்ப் பனுவலுக்குரிய மூல இலக்கியமாக நமக்குக் கிடைத்துள்ள பிரபந்தம் இக்கோயில் நான்மணிமாலையே எனக் கூறுதல் பொருந்தும்.*

*"சொல்லின் அளவும் பொருளின் அளவுமாகிய இருவகை எல்லைகளையுங் கடந்து தங்களை மறந்து நின்னையே நினைப்பவர்களாகிய மெய்யடியார்களுடைய தூயவுள்ளத்திலும் செம்பொன்னாலாகிய தில்லையம்பலத்திலும் திருநடனம் செய்தருளும் சிவபெருமானே, நீ மலையரையன் மகளும் திருமாலின் தங்கையுமாகிய பார்வதியைத் திருமணம் புணர்ந்த நாளில் நினக்குரிய கொன்றைமலர்மாலை, இடபக்கொடி, தமருகப்பறை, கங்கையாறு, விரையாக்கலியென்னும் திருவாணை, அயிராவணமாகிய வெள்ளை யானை, வேதமாகிய குதிரை, வான நாடு, மேருமலை, தில்லைப்பதி என்னும் பத்துறுப்புக்களையும் நினக்குரிய பதினாயிரம் திருப்பெயர்களுடன் புகழ்ந்து பாடித் திருமணப்பந்தரில் தேவர்களுக்கு முன்னே புகுந்து நின்னை அறுகும் மலரும் புனைந்து வாழ்த்திய மெய்யடியார்களாகிய நின் சுற்றத்தார்கள் நினக்குத் திருமணப் பரிசளித்துத் தாம் கலந்து கொண்ட செய்தியினை அங்கு எல்லோருங் காண வைக்கப் பட்டிருந்த வரிநெடும் புத்தகத்தில் எழுதி இருப்பார்களல்லவா? அவர்களுடைய பெயர்கள் வரையப்பெற்ற திருமணப் பட்டோலைப் புத்தகத்திலே அடியேனது பெயரையும் சேர்த் தெழுதும்படி வேண்டிக் கொள்கிறேன். நினது திருவரு ளாணையிற்படின் கண்ணுக்குப் புலப்படாத சிறிய அணுவும்*

*பேரண்டமாக வளர்ந்து தோற்றும். காட்டில் வாழும் சிறிய கொசுவும் கருடனாக உயர்ந்து பறக்கும் ஆதலால் காலங்கடந்த நினது திருமண வாழ்த்தில் எளியேனையும் கலந்து கொள்ளச் செய்வதென்பது நின் திருவருளால் முடியாத செயலன்று என்பதனை அடியேன் நன்குணர்வேன்" எனத் தில்லையம்பல வாணனை நோக்கித் திருவெண்காட்டடிகள் வேண்டிக் கொள்வதாக அமைந்தது கோயில் நான்மணி மாலையிலுள்ள 'உரையின் வரையும் பொருளில் அளவும்' என்னும் முதற் குறிப்புடைய அகவலாகும். இதன் கண்,*

**"தம்மை மறந்து நின்னை நினைப்பவர்**
**செம்மை மனத்தினும் தில்லைமன்றினும் நடம்**
**ஆடும் அம்பலவாண"**

*என அடிகள் இறைவனைப் போற்றிய இத்தொடர்,*

**'நினைப்பவர் மனங்கோயிலாக் கொண்டவன்**
**அனைத்தும் வேடமாம் அம்பலக்கூத்தன்'**

*என ஆளுடைய அரசும்,*

**'சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்தும்**
**என் சிந்தையுள்ளும் உறைவான்'**

*எனத் திருவாதவூரடிகளும், அருளிய பொருளுரைகளை நினைந்து கூறிய குறிப்பினதாதல் காண்க.*

*தில்லையம்பலவன் ஆடல் புரியுங்கால் அப்பெருமான் நிலத்தே யூன்றிய திருவடி கீழுலகம் ஏழினையுங் கடந்து சென்றது. அவனது திருமுடி எல்லாவுலகங்களையும் கடந்து சென்று அண்டத்திற்கு அப்பால் விளங்கியது. இறைவன் வீசியாடுந் தோள்கள் எட்டுத் திசைகளின் புறத்தன. இவ்வழகிய தோற்றத்தை விளக்குவது,*

**அடியொன்று பாதல மேழிற்கும் அப்புறம் பட்டதிப்பால்**
**முடியொன்றிவ் வண்டங்க ளெல்லாங் கடந்தது முற்றும்**
**வெள்ளைப்**
**பொடியொன்று தோளெட்டுத் திக்கின் புறத்தன பூங்கரும்பின்**
**செடியொன்று தில்லைச்சிற்றம்பலத் தான்றன் திருநடமே.**

*என்ற பாடலாகும். உலகமே யுருவாகிய இறைவன் ஆடுங்கால் அவனது கூத்தினைப் பொறுத்துக் கொள்ளும் நோன்மை இவ்வுலகத்திற்கில்லை யென்பது இதன் கருத்து. இப்பாடல்*

**அடிபேரிற் பாதாளம் பேரும் அடிகள்**
**முடிபேரின் மாமுகடு பேரும் - கடகம்**

**மறிந்தாடு கைபேரின் வான்திசைகள் பேரும்**
**அறிந்தாடும் ஆற்றா தரங்கு.**

*என அம்மையார் அருளிய அற்புதத் திருவந்தாதியை அடியொற்றியமைந்ததாகும்.*

*இறைவனை நினைந்து வழிபடாது தமது வயிறோம்புதற் பொருட்டுப் பிறவுயிர்கட்குத் தீங்கு செய்து வாழ்வோர் உலக நிலையாமையைச் சிறிதும் உணராதவர் என்பதை விளக்குவது,*

**நஞ்சுமிழ் பகுவாய் வெஞ்சின மாசுணம்**
**தன்முதல் முருக்க நென்முதற் சூழ்ந்த**
**நீர்ச்சிறு பாம்புதன் வாய்க்கெதிர் வந்த**
**தேரையை வவ்வியாங்கி யாம்முன்**
**கருவிடை வந்த ஒருநாள் தொடங்கி**
**மறவா மறலி முறைபிறழ் பேழ்வாய்**
**அயிற்றலை யன்ன எயிற்றிடைக் கிடந்தாங்**
**கருள்நனியின்றி ஒருவயி றோம்பற்குப்**
**பல்லுயிர் செகுத்து வல்லிதின் அருந்தி**
**அயர்த்தனம் இருந்தும் போலும் பெயர்த்துநின்**
**றெண்டோள் வீசிக் கண்டோர் உருகத்**
**தொல்லெயில் உடுத்த தில்லை மூதூர்**
**ஆடும் அம்பலக் கூத்தனைப்**
**பாடுதல் பரவுதல் பணிதலோ விலமே.**

*எனவரும் பாடலாகும். "நஞ்சினைக் கக்கும் பிளந்த வாயினை யுடைய பெரும்பாம்பு தன் உடலைக் கவ்வி ஈர்க்க நெற்பயிரின் வேரிற் சுற்றிக் கிடக்கும் சிறிய நீர்ப்பாம்பானது தன் வாய்க்கெதிரே வந்த தவளையைக் கவ்வியது போன்று யாங்கள் கருவினின்றும் வெளிப்பட்டுப் பிறந்த நாள் தொடங்கி வாழ்நாள் கொள்ளுதலை மறவாத கூற்றுவனது வாயினுள்ளே வேல்நுதியையொத்து விளங்கும் பற்களினிடையே அகப்பட்டுக் கிடந்து பிறவுயிர்க ளிடத்துச் சிறிதும் இரக்கமின்றி இழிந்த வயிறொன்றை வளர்த்தற் பொருட்டுப் பலவுயிர்களின் உடம்பினைக் கொன்று தின்று பின்விளைவறியாது அயர்வுற்றிருந்தோம் போலும்; பழமை வாய்ந்த மதிலாற் சூழப்பெற்ற தில்லை மூதூரிலே ஒரு திருவடியை யூன்றி மற்றொரு திருவடியைத் தூக்கி எட்டுத் தோள்களையும் வீசிநின்று காண்போர் மனங் கசிந்துருகத் திருக்கூத்தியற்றும் அம்பலவாணனை வாயாற்பாடுதலும் மனத்தாற் பரவுதலும் மெய்யாற் பணிதலுமாகிய இத்திருப்பணிகளுள் ஒன்றையுஞ் செய்திலோம்" என உலக மக்களின் நிலையாவாழ்வினை யெண்ணி அடிகள் உளமுருகுந் திறத்தை இப்பாடல் புலப்படுத்தல் காண்க.*

"மறையவர் போற்றத் தில்லைமன்றில் ஆடல் புரியும் பெருமானே, உலகு குழைத்துண்ட ஒரு பெருங்கடவுளாகிய திருமாலும் தேடிக்காணாவண்ணம் பாதாளம் ஏழினுங்கீழ் ஆழ்ந்து சென்ற திருவடியும் உலகினைப் படைத்த நான்முகன் அன்னமாய் மேலே பறந்து சென்றுங் காண முடியாத திருமுடியுங் கொண்டு நீ தில்லைப்பதியிற் சிறிய அம்பலத்திலே யாவருங்காண ஆடியருள்வது அதிசயம் விளைப்பதன்று. பொய்மை, அச்சம், பேராசை முதலிய தீக்குணங்களால் நிரம்பப் பெற்றுச் சிறிதும் இடமின்றி ஐம்பொறிகளாற் சுழற்றப்பட்டு விரைந்து சுழலும் அணுவினுஞ்சிறிய எனது நெஞ்சத்திலே நுழைந்து, நினது விரித்த செஞ்சடையும் சிவந்தவாயும் திருநீலகண்டமும் நெற்றிக்கண்ணும் தூக்கிய திருவடியும் அஞ்சல் என்று அழைத்த திருக்கையும் புள்ளித் தோலாடையும் தெளிவாக ஒளியுடன் திகழ ஆடியருள்கின்றனை. இச்செயலே எனக்கு அதிசயத்தை விளைக்கின்றது" எனக் கூத்தப் பெருமானை நோக்கி அடிகள் வியந்துரைப்பதாக அமைந்தது. 'வரையொன்று நிறுவி' யென்ற முதற்குறிப்புடைய அகவலாகும். இதன்கண் திருமால் தேவர் பொருட்டுப் பாற்கடலைக் கடைந்து அமுதளித்ததும், கடையுகத்தி றுதியில் தோன்றிய பெருவெள்ளப் பரப்பில் உலகம் அமிழாதபடி சேல்மீனின் உருவு கொண்டு தனது சிறிய செதிளினுள்ளே உலகத்தையடக்கிக் காப்பாற்றியதும், ஒரு கற்பத்தில் உலகங்களை யெல்லாந் திரட்டி உண்டதும், குறுமாணுருவனாகி இவ்வுலகை மூவடியால் அளக்கப் புக்குழித் தன்னுடைய ஈரடிகளுக்கு இடனின்றி உலகஞ் சுருங்கத் தான் உயர்ந்து தோன்றியதும் ஆகிய செய்திகள் சுவைபெற விரித்துரைக்கப் பெற்றுள்ளன.

அறிவற்ற செய்கையும் பொய்மையும் கொடிய பிணிகளும் துன்பத் தொகுதியுமாகிய பல சரக்குகளையேற்றித் தீவினை யென்னும் மீகாமன் கருப்பையென்னும் பெரிய பட்டினத்தின் துறைமுகத்தை நோக்கிச் செலுத்த ஐம்புலன்களாகிய பெரிய சுறாமீன்கள் தொடர்ந்து தாக்கப் பிறப்பென்னும் பெரிய கடலிற் புகுந்து துன்பமாகிய அலைகளின் பெருக்கினால் நிலை பெயர்ந்தலைந்து குடும்பமென்னும் வலிய பாறையிலே மோதுண்டு நிறையென்ற பாய்மரம் முறிய அறிவென்னும் பாய் கிழிந்து தீமையுற்ற உடம்பாகிய மரக்கலம் கவிழ்ந்து சிதைவுற்று அமிழ்வதன் முன்னே தில்லையம்பலவாணனாகிய நீ நின் திருவருளாகிய பெரிய வடக்கயிற்றைப் பூட்டியிழுத்து நின் திருவடியாகிய நீண்ட கரையிலே சேரும்படி செய்து எங்களை உய்வித்தருளல் வேண்டும் என இறைவனை வேண்டுவதாக அமைந்தது,

**அறிவில் ஒழுக்கமும் பிறிதுபடு பொய்யும்**
**கடும்பிணித் தொகையும் இடும்பை யீட்டமும்**
**இனையன பலசரக் கேற்றி வினையெனும்**
**தொன்மீ காமன் உய்ப்ப அந்நிலைக்**
**கருவெனு நெடுநகர் ஒருதுறை நீத்தத்துப்**
**புலமெனுங் கோண்மீன் அலமந்து தொடரப்**
**பிறப்பெனும் பெருங்கடல் உறப்புகுந் தலைக்கும்**
**துயர்த்திரை யுவட்டிற் பெயர்ப்பிடம் அயர்த்துக்**
**குடும்பம் என்னும் நெடுங்கல் வீழ்த்து**
**நிறையெனுங் கூம்பு முறிந்து குறையா**
**உணர்வெனும் நெடும்பாய் கீறிப் புணரும்**
**மாயப் பெயர்ப்படு காயச் சிறைக்கலம்**
**கலங்குபு கவிழா முன்னம் அலங்கல்**
**மதியுடன் அணிந்த பொதியவிழ் சடிலத்துப்**
**பையர வணிந்த தெய்வ நாயக**
**தொல்லெயி லுடுத்த தில்லை காவல**
**வம்பலர் தும்பை யம்பல வாணநின்**
**அருளெனு நலத்தார் பூட்டித்**
**திருவடி நெடுங்கரை சேர்த்துமா செய்யே.**

*எனவரும் ஆசிரியப்பாவாகும்.*

*நுரையும் அலையும் சுழற்சியும் எல்லையற்ற நீர்த்திவலைகளும் ஒலிக்குங் கடலிடத்தே பெருத்துஞ் சிறுத்தும் எண்ணிலவாய்த் தோன்றி மீளவும் அக்கடலின் கண்ணே அடங்குமாறு போன்று, இயங்குவன நிற்பனவாகிய உலகத் தொகுதியனைத்தும் இறைவனிடத்தே தோன்றி மீளவும் அவன்கண் ஒடுங்குவனவெனவும், தான் ஒன்றினுந் தோன்றி யொடுங்காத தனிமுதற் பொருளாகத் திகழ்வோன் இறைவனெனவும் விளக்கக் கருதிய திருவெண்காட்டடிகள்,*

**நுரையுந் திரையும் நொப்புறு கொட்பும்**
**வரையில் சீகர வாரியுங் குரைகடற்**
**பெருத்துஞ் சிறுத்தும் பிறங்குவ தோன்றி**
**எண்ணில வாகி யிருங்கட லடங்குந்**
**தன்மை போலச் சராசரம் அனைத்தும்**
**நின்னிடைத் தோன்றி நின்னிடை யடங்கும்நீ**
**ஒன்றினுந் தோன்றாய் ஒன்றினும் அடங்காய்.**

*என அம்பலத்தாடும் உம்பர் நாயகனாகிய சிவபெருமானைப் போற்றிப் பரவுகின்றார். உலகனைத்தும் இறைவன்பால் தோன்றியொடுங்குவன என்னுங் கருத்தமைந்த இத்தொடரை ஆதாரமாகக் காட்டிப் பிரபஞ்சத்திற்கு இறைவனே*

முதற்காரணமென்பது அடிகள் கருத்தெனச் சாதிப்பாரும் உளர். அன்னோர் கூறிய வண்ணம் இப்பிரபஞ்சம் இறைவனாகிய முதற்காரணத்திலிருந்து தோற்றியதென்பது உண்மையாயிருக்கு மானால் முதல் காரணத்தின் குணங்களோடு ஒத்த குணங்களே அதனிற்தோன்றிய காரியத்திற்கும் உளவாதல் வேண்டுமென்னும் நியமம் பற்றி இறைவனிடத்திறோன்றிய பிரபஞ்சம் அறிவுடைய சித்துப் பொருளாதல் வேண்டும். உலகம் அறிவற்ற சடப்பொருள் என்பது யாவர்க்கும் உடம்பாடாதலின், சடப்பொருளாகிய அது, சித்துப் பொருளாகிய இறைவனை முதற் காரணமாகக் கொண்டு தோன்றியதெனக் கூறுதல் பொருந்தாது. பிரபஞ்சம் மாயையாகிய உள்பொருளிலிருந்து தோன்றி விரிந்து மீளவும் அதன் கண் ஒடுங்குமென்பதே திருமூலர் முதலிய திருமுறையாசிரியர்களின் துணிபாகும். கிழங்காகிய மூலத்திலிருந்து முளைத்த தாமரையைக் கிழங்கிற்கு ஆதாரமாகிய சேற்றில் முளைத்தது என்ற பொருளிற் 'பங்கஜம்' என வழங்குவது போன்று, மாயையாகிய உள் பொருளிலிருந்து தோன்றி மீளவும் அதன்கண் ஒடுங்குவதாகிய உலகத் தொகுதியை மாயைக்கு ஆதாரமாகிய முதல்வனிடத்துத் தோன்றியொடுங்குவதாகக் கூறுதல் வழக்கியல் மரபாகும். இம்மரபின் படி நீரில் தோன்றி யொடுங்கும் நுரை அலை முதலியவற்றை நீர்க்கு இடமாகிய கடலிலே தோன்றி யொடுங்குதல் போல் எனத் திருவெண்காட்டடிகள் உவமையாக எடுத்தாளுதலால், சராசரமாகிய உலகத் தொகுதிக்கு இறைவன் ஆதாரமாவதன்றி முதற் காரணமாகான் என்பதே அடிகள் கருத்தென்பது இனிது புலனாகின்றது. "நின்னிடைத் தோன்றி நின்னிடை யொடுங்கும்" என்றது மாயைக்குத் தாரகமாதல் பற்றியென்றுணர்க. அக்கருத்து உணர்ந்து கோடற்கன்றே நீரிற்றோன்றி யொடுங்கும் நுரை முதலியவற்றை நீர்க்கிடமாகிய கடலிற்றோன்ற யொடுங்குதல் போல் என்று உவமை கூறினாராகலின், ஆண்டு ஆசங்கைக் கிடமின்மையுணர்க"* (* சிவஞானபோதப் பேருரை, 2 - ஆம் சூத்திரம் 2 - ஆம் அதிகரணம்) எனச் சிவஞான சுவாமிகள் இத்தொடர்ப் பொருளைத் தெளிவு படுத்தினமை இவண் கருதத்தகுவதாம்.

இங்ஙனமே கோயில் நான்மணிமாலையிலுள்ள பாடல்கள் யாவும் உயர்ந்த நுண்பொருளை யறிவுறுத்தி நிற்றல் அறிந்து மகிழ்தற் பாலதாகும். இந் நான்மணிமாலையிலுள்ள சந்த விருத்தங்கள் அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ் யாப்பிற்கு அடிப்படையாக அமைந்துள்ளன. தாளத்தோடு பொருந்த அமைந்த இச்சந்த விருத்தங்களின் யாப்பமைதியினைப் பின்பற்றி அடிதோறும் இறுதிக்கண் தொங்கல் என வழங்கும் தனிச் சொற்களைச் சேர்த்து நோக்குங்கால் இத்தகைய திருப்புகழ்ச்

சந்தங்கள் உருவாதல் காணலாம். * (* யாழ்நூல் 388 - 390 - ஆம் பக்கங்களைப் பார்க்க.) செந்தமிழ்ப் பாடல்களின் தாள வமைதிக்குச் சிறந்து விளங்கும் இவ்வகைப்பாடல்கள் செந்தமிழ்க் கடவுளாகிய முருகப் பெருமானது பொருள் சேர் புகழைச் சீர்பெற விரித்துரைத்தற்கு ஏற்றனவாக அமைந்தமையால் இவ்வகைப் பாடல்களையே அருணகிரிநாதர் முருகன் புகழ் பாடுதற்குரிய சந்தப் பாடல்களாகத் தெரிந்தெடுத்துக் கொள்வாராயினர். இத்திருப்புகழ் யாப்பு முதன் முதல் இக்கோயில் நான்மணி மாலையிலே கருக்கொண்டு தோன்றிப் பின்னர் அருணகிரிநாதரது வாக்கின் திறத்தால் திருப்புகழ்ப் பாடல்களாக உருப்பெற்று வளர்ந்ததெனக் கூறுதல் பொருந்தும்.

## திருக்கழுமல மும்மணிக்கோவை

கழுமலம் என்பது சீகாழிக்குரிய பன்னிரண்டு பெயர்களுள் ஒன்று. இறைவன் கோயில் கொண்டெழுந்தருளிய திருக்கழுமலம் என்னும் சீகாழிப்பதியை அகவல், வெண்பா, கலித்துறையாகிய மூவகைப் பாக்களாற் போற்றிப் பரவிய பாமாலையாதலின் இது திருக்கழுமல மும்மணிக்கோவை யென்னும் பெயர்த்தாயிற்று. 'திருவளர்பவளப் பெருவரை' யெனத் தொடங்கும் பாடலை முதலாகக் கொண்டு திகழும் இப்பனுவலில் இப்போது பன்னிரண்டு பாடல்களே கிடைத்துள்ளன. பன்னிரண்டாம் பாடலின் இறுதிச்சீர் முதற் பாடலின் முதற்சீரோடு மண்டலித்து முடியாமையாலும் மும்மணிக் கோவை யென்னும் பிரபந்தம் முப்பது பாடல்களால் அமைதல் வேண்டுமென்பது பாட்டியல் மரபாதலாலும் இந்நூலின்கண் 13 முதல் 30 வரையுள்ள பதினெட்டுப் பாடல்களும் ஏடுகளின் சிதைவால் மறைந்து போயினவெனக் கருத வேண்டியுளது.

இனி, ஆ. சிங்காரவேலு முதலியாரவர்கள் எழுதிய உரையுடன் வெளிவந்த பட்டினத்துப் பிள்ளையார் பிரபந்த வுரைப் புத்தகத்தில் திருக்கழுமல மும்மணிக்கோவைக்குரிய 13 முதல் 30 வரையுள்ள பதினெட்டுப் பாடல்களும் உரையுடன் வெளியிடப்பெற்றுள்ளன. இப்பாடல்கள் பதினெட்டும் ஆறுமுக நாவலரவர்களாலும் பின் வந்தவர்களாலும் வெளியிடப் பெற்ற பதினொராந் திருமுறைப் பதிப்புக்களில் இடம்பெறவில்லை. இவற்றின் சொல் நடையையும் பொருளமைதியையும் மேற் போக்காக நோக்குங்கால் இவை திருவெண்காட்டடிகள் வாக்கெனவே சொல்லத் தோன்றும். இப்பாடல்களில் அருட்கலாமதி, அன்னசத்திரம், இரத குளிகை, உபகரணம், கஸ்தூரி, கருடதியானம் சந்திரவிம்பம், பாநு, பூதசாரதநு, பூதமகாதநு, பூத பரிணாமம், வயிடூரியம், வித்துருமம் முதலிய வட

சொற்களும், பணம் காசு, நங்குரம் முதலிய பிற்காலச் சொல் வழக்குகளும் உள்ளன. திருவெண்காட்டடிகள் பாடிய ஏனைப் பிரபந்தங்களில் ஒரே விடங்களில் வடசொல் விரவப் பெற்றிருத்தல் உண்மையாயினும் இங்கெடுத்துக் காட்டியன போன்ற புதிய வழக்குகள் அப்பிரபந்தங்களில் இல்லையென்பது அவற்றைப் பயில்வார்க்கு நன்கு புலனாம். ஆகவே உரைப்பதிப்பிற் காணப்படும் பதினெட்டுப் பாடல்களும் பிற்காலத்துப் புலவரொருவராற் பாடிச் சேர்க்கப்பட்டனவெனக் கொள்ளுதலே பொருத்தமுடையதாகும். அடிகள் அருளிய பனுவல்களை ஓதியின்புறும் புலவரொருவர் திருக்கழுமல மும்மணிக் கோவையிற் சிதைந்து மறைந்த பதினெட்டுப் பாடல்களுக் கீடாகத் தாம் பதினெட்டுப் பாடல்களைப் பாடிச் சேர்த்து அப்பனுவலை நிறைவு செய்த திறம் வியந்து பாராட்டத் தக்கதாகும்.

பிரமபுரத்துறை பெம்மானாகிய இறைவன் பெரிய பெருமாட்டியுடன் தோணி மீது வீற்றிருந்தருளுந் திருக் கோலத்தை அழகிய சொல்லோவியமாகப் புனைந்து காட்டுவது இம் மும்மணிக் கோவையின் முதற் பாடலாகும். சிவபாத விருதயர் பெற்ற தவப் புதல்வராகிய தளர்நடைப் பருவத்து இளங்குழந்தை, பிரம தீர்த்தத்துள் முழுகி மந்திரம் செபிக்கும் தம் தந்தையைக் காணாது, பசியால் வருந்தி அம்மே அப்பா என அழைத்து அழுத ஓசையைக் கேட்டுத் தோணி புரத்தில் எழுந்தருளிய பெருமான், பெரிய பெருமாட்டியாகிய உமையம்மையாருடன் விடையின் மீதெழுந்தருளிப் பிரமதீர்த்தக் கரையை யடைந்து அங்கு நின்று அழுதுகொண்டிருந்த பிள்ளைக்கு ஞானப்பாலடிசிலைக் குழைத் தூட்டியருளிய செய்தியையும், அங்ஙனம் ஆளுடைய பிள்ளையாராகிய திருஞானசம்பந்தர் எச்சில் மயங்கிட நினக்கு இதனைக் கொடுத்தார் யாவர் என வெகுண்டுரைக்கும் தம் தந்தையை நோக்கி 'எம்மை யிது செய்தபிரான் இவனே' எனக் கையாற் சுட்டிக்காட்டித் 'தோடுடைய செவியன்' என்னுந் திருநெறிய தமிழால் அடையாளங்களுடன் வெளியிட்டருளிய திறத்தையும்,

**தாதையொடு வந்த வேதியச் சிறுவன்**
**தளர்நடைப் பருவத்து வளர்பசி வருத்த**
**அன்னாயோ வென்றழைப்ப முன்னின்று**
**ஞானபோனகத் தருளட்டிக் குழைத்த**
**ஆனாத்திரளை அவன் வயினருள**
**அந்தணன் முனிந்து தந்தா ரியாரென**
**அவனைக் காட்டுவன் அப்ப வானார்**
**தோடுடைய செவிய னென்றும்**
**பீடுடைய பெம்மானென்றும்**

**கையிற் சுட்டிக் காட்ட**
**ஐயநீ வெளிப்பட் டருளினை ஆங்கே.**

*என அடிகள் இம்முதற்பாடலில் உளங்குழைந்து போற்றியுள்ளார்.*

*'ஆரணம் நான்கிற்கும் அப்பாலவன்' 'அந்தக் கரணங்கடந்த அரும்பொருள்' என மாற்ற மனங்கழிய நின்ற இறைவனது திறத்தினை விரித்துரைத்த அடிகள், தம் உயிர்க்குயிராகிய இறைவனை நினைத்தற்குத் தடையாயுள்ள மனமாசுகளைக் களைந்து இறைவன் வீற்றிருத்தற்குத் தக்கதாகத் தம் நெஞ்சத்தினைத் தூய்மைப்படுத்திய திறத்தை விரித்துரைப்பது,*

**கருமுதற் றொடங்கிப் பெருநாளெல்லாம்**
**காமம் வெகுளி கழிபெரும் பொய்யெனும்**
**தூய்மையில் குப்பை தொலைவின்றிக் கிடந்ததை**
**அரிதின் இகழ்ந்து போக்கிப் பொருதிறன்**
**மையிருள் நிறத்து மதனுடை அடுசினத்து**
**ஐவகைக் கடாவும் யாப்பவிழ்த் தகற்றி**
**அன்புகொடு மெழுகி அருள்விளக் கேற்றித்**
**துன்ப இருளைத் துரந்து முன்புறம்**
**மெய்யெனும் விதானம் விரித்து நொய்ய**
**கீழ்மையிற் றொடர்ந்து கிடந்தவென் சிந்தைப்**
**பாழறை யுனக்குப் பள்ளியறை யாக்கிச்**
**சிந்தைத் தாமரைச் செழுமலர்ப் பூந்தவிசு**
**எந்தை நீ இருக்க இட்டனன் இந்த**
**நெடுநில வளாகமும் அடுகதிர் வானமும்**
**அடையப் பரந்த ஆதி வெள்ளத்து**
**நுரையெனச் சிதறி இருசுடர் மிதப்ப**
**வரைபறித் தியங்கும் மாருதம் கடுப்ப**
**மாலும் பிரமனும் முதலிய வானவர்**
**காலம் இதுவெனக் கலங்கா நின்றுழி**
**மற்றவர் உய்யப் பற்றிய புணையாய்**
**மிகநனி மிதந்த புகலி நாயக**
**அருள்நனி சுரக்கும் பிரளய விடங்கநின்**
**செல்வச் சிலம்பு மெல்லென மிழற்ற**
**அமையாக் காட்சி யிமையக்**
**கொழுந்தையும் உடனே கொண்டிங்கு**
**எழுந்தருளத்தகும் எம்பெருமானே.**

*எனவரும் பாடலாகும். தாழ்ந்த குணங்களிலே பிணிப்புற்றுக் கிடந்த என் மனமாகிய பாழறையிலே கருவுற்ற நாள்முதலாக இன்றுவரை கழிந்த காலங்களிலெல்லாம் காமம் வெகுளி பொய் என்னும் இக்குற்றங்களால் விளைந்த தீமையாகிய இழிந்த*

குப்பைகள் மூடிக்கிடந்தவற்றை அரிதின் நீக்கி, எதிர்த்துத் தாக்கும் வன்மைமிக்க ஐம்புலன்களாகிய கடாக்கள் கட்டப்பட்டு நின்றனவற்றைக் கட்டவிழ்த்துத் துரத்தி, அவற்றாற் புழுதியான அவ்விடத்தை அன்பெனும் நீரால் மெழுகித் தூய்மைசெய்து, அருளாகிய விளக்கை ஒளிபெற ஏற்றிவைத்து, துன்பமாகிய இருளைப்போக்கி, வாய்மையாகிய மேற்கட்டியை மேலேவிரித்து, என் சிந்தையாகிய அறையை எந்தையாகிய நீ இனிதமர்தற்கு ஏற்ற பள்ளியறையாகச் செய்து, அதன் நடுவே அகத்தாமரையாகிய பூந்தவிசினை இட்டு வைத்துள்ளேன். எம்பெருமானாகிய நீ நின்செல்வச் சிலம்பு மெல்லென மிழற்ற உமையம்மையாருடன் அடியேனது உள்ளமாகிய இவ்விடத்திலே எழுந்தருளுதல் வேண்டும் என அடிகள் புகலி நாயகனை வேண்டுகின்றார். இவ்வேண்டுகோள் உலக மக்கள் மனந்திருந்தி இறைவனை வழிபட்டுய்யும் முறையினை நன்கு அறிவுறுத்துவதாகும். சீகாழியாகிய திருத்தலம் ஓர் ஊழிக்காலத்திலே தேவர் முதலியோர்க்குப் பற்றுக்கோடாகி ஊழிப்பெருவெள்ளத்திலே தோணியாய் மிதந்த வரலாறு இப்பாடலில் 14 முதல் 21 வரையுள்ள அடிகளில் விரித்துரைக்கப் பெற்றமை காண்க.

"மாதொருபாகனாகிய பெருமானே, நினது திருவுள்ளக் குறிப்பால் இவ்வுலகம் தோன்றிய நாள் தொடங்கி வேறு வேறியல்பினவாகிய பலவகைப் பிறப்புக்களிலும் உயர்திணை மக்களாகவும் அஃறிணை உயிர்களாகவும் தோன்றிய யாரும் யாவையுமாகிய உயிர்த் தொகுதியில் எனக்குத் தனித்தனியே தந்தையாகியும் தாயாகியும் வந்து உறவு கொள்ளாதவர் ஒருவருமில்லை. யானும் அவ்வுயிர்களுக்குத் தந்தையாகியும் தாயாகியும் பிறந்து உறவுகொள்ளாததுமில்லை. உலகில் யான் பிறவாத இடமுமில்லை; இறவாத இடமுமில்லை. எனது உடம்பைத் தின்னாத உயிர்களுமில்லை. அவற்றின் உடம்புகளை யான் தின்னத்தவறியதுமில்லை. இங்ஙனமே காலமெல்லாங் கழிந்தன. இவ்வாறு நெடுங்காலமாகப் பிறவிச் சுழலில் தடுமாறும் பழக்கம் பெற்ற யான், இனி இதற்குச் சோர்ந்து இளைக்கும் இயல்புடையனல்லேன். சோதியாய் விளங்கும் நினது திருநாமமாகிய திருவைந்தெழுத்தினை உணர்ந்தோதும் அருள் நூல்களைப் பயின்றேனல்லேன். அந்நூல்களைப் பயின்ற ஆசிரியர்களை அடைந்து கேட்டு அறிந்தவனும் அல்லேன். நாயேன் இங்ஙனம் நின்னை வழிபடுதற்குரிய தகுதியற்றவனாயினும் எனக்கு ஒய்வான காலத்தில் அடியேன் நின்னை நினைந்து இட்டது பச்சிலையாயினும் அதனை நறுமண மலராகவும், யான் நின்னை நினைந்து சொல்வது பிழைமலிந்த சொல்லாயினும் நின்னை வழிபடுதற்குரிய திருமந்திரமாகவும்

கொண்டு எளியேனைப் பிறப்பிறப்பென்னும் பெருங்கடலில் ஆழாதவண்ணம் நின் திருவடியாகிய நெடுங்கரையிற் சேர்த்துக் காத்தல் அருளாளனாகிய நினக்குரிய கடமையாகும்" எனக் கழுமல வாணனை நோக்கி அடிகள் வேண்டிக் கொள்வதாக அமைந்தது 'அருள் நனிபழுத்த' என்னும் முதற் குறிப்புடைய அகவலாகும்.

இறைவனது திருவருளாகிய கண்ணின் உதவியைப் பெறுதற்கு முன் இல்லன உளவாய் உள்ளன காணாது தாம் அறியாமையாகிய இருளிற்பட்டு அல்லற்பட்ட தன்மையையும், திருவருளாகிய ஞானநாட்டம் பெற்ற பின்பு அசத்தாகிய உலகத் தொகுதி மறைய இறைவனாகிய மெய்ப்பொருள் எங்குமாய் விளங்கித் தோன்றிய தன்மையினையும் இப்பிரபந்தத்தின் பத்தாம் பாடலில் அடிகள் தெளிவாக விளக்கிய திறம் படித்துணர்ந்து மகிழத்தக்கதாம்.

**போதும் பெறாவிடிற் பச்சிலையுண்டு புனலுண்டெங்கும்**
**ஏதும் பெறாவிடில் நெஞ்சுண்டன்றேயிணை யாகச் செப்பும்**
**சூதும் பெறாமுலை பங்கர்தென் தோணி புரேசர்வண்டின்**
**தாதும் பெறாத அடித்தா மரைசென்று சார்வதற்கே.**

எனவரும் திருப்பாடல், 'யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை' என்ற திருமந்திரப் பொருளை அடியொற்றி இறைவனடி சேர்தற்கென யாவரும் மேற்கொள்ளுதற்குரிய எளிய வழிபாட்டு முறையை விளக்குதல் காண்க.

## திருவிடை மருதூர் மும்மணிக்கோவை

சிவபெருமான் கோயில் கொண்டருளிய திருவிடை மருதென்னும் திருப்பதியை அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறையென முறைப்படத் தொடுத்த முப்பது செய்யுட்களாற் போற்றிப்பரவிய பனுவலாதலின் இது திருவிடைமருதூர் மும்மணிக்கோவை யென்னும் பெயர்த்தாயிற்று.

'தெய்வத்தாமரை செவ்வியின் மலர்ந்து' எனத் தொடங்கும் இப்பிரபந்தத்தின் முதற்பாடல் உமையொருபாகராகிய அர்த்தநாரீச்சுரர் திருக்கோலத்தின் இயல்பினை அழகுற விரித்துரைக்குந்திறம் படிக்குந் தோறும் இன்பந்தருவதாகும்.

அடியார்கள் பிறிதொன்றில் ஆசையின்றிப் பருகி மகிழ்தற்குரிய பெருந்தேனாக இறைவன் இடைமருதில் வீற்றிருந்து அருள்புரியும் சிறப்பினையும் அத்திருப்பதியை அடைந்து இறைவனை வழிபட்டதனால் தாம் பெற்ற பெருநலங்களையும் அடிகள் விரித்துரைப்பதாக அமைந்தது,

**வருந்தேன் இறந்தும் பிறந்தும் மயக்கும் புலன்வழிபோய்ப்**
**பொருந்தேன் நரகிற் புகுகின்றிலேன்புகழ் மாமருதிற்**
**பெருந்தேன் முகந்துகொண் டுண்டு பிறிதொன்றி லாசையின்றி**
**இருந்தேன் இனிச்சென் றிரவேன் ஒருவரை யாதொன்றுமே.**

எனவரும் பாடலாகும். 'அந்த இடைமருதில் ஆனந்தத் தேனிருந்த, பொந்தைப் பரவி நாம் பூவல்லி கொய்யாமோ' என்ற திருவாசகத் தொடர்ப் பொருளை உளங்கொண்ட திருவெண்காட்டடிகள் இப்பாடலில் 'புகழ்மாமருதிற் பெருந்தேன்' என இடைமருதீசனைப் போற்றியதிறம் நினைந்து மகிழத்தகுவதாம்.

"இடைமருதினை இடமாகக் கொண்டு எழுந்தருளிய என் தந்தையே, அடியேன் பிறவிச்சுழியில் அகப்பட்டுத் தடுமாறும் போது யானுற்ற துன்பத்தினையும் என்னைப் பெறும் நிலையில் என்தாயுற்ற துன்பத்தினையும் உள்ளவாறு அறிவார் உயிர்க்குயிராகிய நின்னைத்தவிர வேறு யாருளர்? பெருகிய துன்பந்தருவதாகிய இப்பிறவிச் சுழலிற்பட்டு யான் இனிப்பிறக்கும் வலியுடையேனல்லேன். நின்னை உறுதுணை யாகப்பற்றி வழிபடும் ஒரு நெறியைத் தவிரப் பிறவி நோய் களைதற்குப் பிறிதொரு வழியும் இல்லை. மீண்டு வாராவழி அருளும் நின் திருவருள் நெறியில் ஒழுகுதற்கு விருப்பு வெறுப்பற்ற ஒருமை மனம் வேண்டும். ஐம்புல வேடர்களின் ஆணைவழி கட்டுப்பட்டு நின்று தானல்லாதவற்றைத் தானெனக் கருதும் மயக்க நிலையினையுடையது என்மனம். இம்மனத்தைக் கொண்டு நின்னை நினைந்துபோற்றுதல் எங்ஙனம் இயலும்? கல்லைத்தெப்பமாகக் கொண்டு கடலைக் கடக்க வெண்ணிய பேதையர் என்னைத்தவிர வேறு யாருளர்? பிறப்பெனும் பெருங்கடலை அடியேன் கடத்தலும் வேண்டும். அங்ஙனங் கடத்தற்கு உறுதுணையாக நின்னை நினைத்தலும் வேண்டும் ஒரு நெறியில் நின்று நின்னை நினைந்து போற்றும் வண்ணம் என் மனத்தை நீ திருத்தி யருளுதலும் வேண்டும்" எனத் திருவெண் காட்டடிகள் இடைமருதீசனை வேண்டுவதாக அமைந்தது இம் மும்மணிக்கோவையின் நான்காம் பாடலாகும். "அவனருளாலே அவன்றாள் வணங்கி" எனத் திருவாதவூரடிகள் அருளிய வண்ணம் இறைவனை நினைந்து போற்றுதற்கும் அவனருள் வேண்டும் என்ற உண்மை இப்பாடலில் நன்கு அறிவுறுத்தப் பெற்றமை காணலாம்.

"செல்வத்துடன் வாழ்ந்திருக்கின்றோமெனச் செருக்குற்று இரவலர்க்கு உதவாது தன்னுயிரைப் பாதுகாத்தலொன்றையே குறிக்கொண்டு தன்னால் ஏனையுயிர்கள் படுந் துன்பத்தினைச் சிறிதும் பொருட்படுத்தாது இம்மைப் பயனும் மறுமைப் பயனும்

இல்லையென்று துணிந்து தாம் விரும்பியவாறு செய்தொழுகி மின்னலைப்போல் தோன்றி யழியும் இயல்பினவாகிய உலகியற் செல்வத்தை நிலைபேறுடையதாக விரும்பித் தன்னையும் ஒப்பற்ற பெருந்தலைவராக மதித்து வாழ்தல் கீழ்மக்கள் வாழ்வாகும். இறைவனுடைய திருவடியைப் பற்றிநின்று உலகியலில் நேரும் இடையூறுகளைக் கண்டு அஞ்சுதலைவிடுத்து மக்கள் மனைவி சுற்றம் செல்வம் என்பவற்றைப் பொருளெனக் கருதாது இறைவனது திருவருளையே பொருளாக எண்ணி இந்திர பதத்தால் அடையும் பெருஞ்செல்வமும் எட்டுச்சித்திகளும் தாமே வந்த காலத்தும் அவற்றை மறுத்தொதுங்கிக் கிழிந்த கந்தையும் ஒட்டிட்டுத் தைத்த கோவணமும் அறுந்த கீளுடையுமாகக் கிடைத்தவற்றை யுடுத்துச் சிதைவுற்ற ஓடொன்றை உண்கலனாகக் கையில் ஏந்தித் தம்மை நோக்கிவந்து பிச்சையிடுவோர் உளராயின் அவர் தந்தவற்றை நின்ற நிலையிலேயே யுண்டு தரையையே பாயாகக்கொண்டு நீங்காத சாந்தம் என்னும் மனையைக் கூடி எவ்வுயிர்களையும் தம்மக்களெனக் கருதி யாவரிடத்தும் ஒப்ப அன்பு செய்தல் அருட்செல்வர்களாகிய கடவுட்டொண்டர் களின் உயர்ந்த வாழ்வாகும். இவ்விருவகை வாழ்க்கையினையும் ஆராய்ந்து நோக்குங்கால், விலங்குகளது காலின் குளம்படியாகிய சிறிய பள்ளத்தில் தங்கிய நீரும் ஊழிக்காலத்தில் அளப்பரியதாய்ப் பொங்கிய பெரும் கடல் நீரும் நீரென்ற பொதுமையான் தம்முள் ஒக்குமாயினும் அளவாற் சிறிதும் ஒவ்வாதனவாம். ஆதலின் சிவனடியார்களுக்குத் தொண்டுபட்டு அவர்கள் குணத்துடன் நெடுங்காலம் பழகி அன்னோர் காலாலிட்ட பணியைத் தலையாலே செய்து அத்தொண்டினாலுளதாம் பேற்றினை அடைந்து இன்புறுதலொன்றைத் தவிரப் பெறத்தக்கபேறு பிறிதொன்றுமில்லை" என அடிகள் இடைமருதீசனைப் பணிந்து போற்றுவதாக அமைந்தது. இம் மும்மணிக் கோவையின் ஏழாம் பாடலாகும். இதன்கண் தாம் மேவன செய்தொழுகும் கயவர் வாழ்வும் இறைவனது அருள் வழியொழுகும் மெய்த்தொண்டர் வாழ்வும் இன்னவென அடிகள் விளக்கிய திறம் அடிகளது செம்மை மனத்தின் சிறப்பினை இனிது புலப்படுத்தல் காணலாம்.

சேணுயர் மருதமாணிக்கத் தீங்கனியாகிய சிவபோகத்தை விளைக்குந் தொழிலினராகிய தொண்டரது உழவின் திறத்தையும், அவ்வுழவினை மேற்கொள்ளாது மனமெனும் புனத்தை வறும் பாழாக்கித் தமக்கும் பிறர்க்கும் பயனின்றிக் கழியும் ஏனையோரது இழிவையும் புலப்படுத்துவது, இம்மும்மணிக் கோவையின் பத்தாம் பாடலாகும். மனமெனும் புனத்தில் முளைத்துள்ள வஞ்சனையாகிய மரத்தை வேருடன் அகழ்ந்து நீக்கி, அன்பெனும் பாத்திகோலி மெய்ம்மையாகிய எருவிட்டுப் பத்தியென்னும்

விதையை விதைத்து, ஆர்வமாகிய நீரைப் பாய்ச்சி, ஐம் பொறிகளென்ற பட்டி மாடுகள் உள்ளே நுழையாதபடி சாந்தமாகிய வேலியை அமைத்துக் காக்க, ஞானமெனும் முளை முளைத்தெழுந்து அருளாகிய பசுந்தளிர்கள் தளிர்த்து விளங்க, ஒழியாத காமம் வெகுளியாகிய களைகளைக் களைந்தெறிந்து சேமமாகக் காத்துவரும் நிலையில் அப்பயிர் செம்மையாக வளர்ந்து மெய்மயிர் முகிழ்த்துக் கண்ணீரரும்பிக் கடிமலர் மலர்ந்து திருவைந்தெழுத்தெனுங் காய் தோன்றி, நீலகண்டமும் முக்கண்ணும் எட்டுத் தோள்களும் ஐந்து திருமுகமும் பவளம் போலும் செந்நிறமுடையதாய் வெள்ளை நீறுபூசி அறுசுவையதனினும் மிக்க சுவையுடையதாய்க் காணினும் கேட்பினும் கருதினும் இனிமை தருவதாய் நிலவெல்லையைக் கடந்து உயர்ந்த மருத மாணிக்கமென்னும் இனிய கனி மெல்ல மெல்லமுற்றிப் பழுத்து எளிதிற் கைவரப் பெற்றுத் தொண்டவுழவராகிய மெய்யடியார்கள் அக்கனியினை இனிதின் அருந்திச் செம்மாந்திருப்பார்கள். இங்ஙனமாகவும் சிலர் தம் மனமாகிய புனத்தைப் பண்படுத்தாது வறும் பாழாக்கிக் காமக் காடுமூடி ஐம்புல வேடர்கள் ஆறலைத்துத் திரியவும் சிற்றின்பமாகிய கானல்நீர் ஓடவும் கல்லாவுணர்வாகிய மானினம் வருந்தியுழலவும் ஆசையெனும் விதை விழுந்து யானெனப் பெயர் கூறப்பட்ட நச்சு மரமாக முளைத்து நீண்டு வளர்ந்து பொய்மையாகிய கிளைகளை எம்மருங்கும் விட்டுப் பாவமாகிய தழைகளைத் தழைத்துப் பூவென்று சொல்லும்படி கொடுமை யென்ற அரும்புகளை யீன்று தீமை மலர்ந்து துன்பமாகிய பல காய்களைக் கொத்தாகத் தாங்கிப் பின்பு அவை மரணமெனும் கனியாகப் பழுத்து உதிர நரகிடை வீழ்ந்து தமக்கும் பிறர்க்கும் பயனின்றிக் கணப்பொழுதில் இறந்தொழிகின்றார்கள்" என உருவக அணியமைய இப்பாடலில் அடிகள் விரித்துக் கூறியுள்ளார். இதன்கண் தொண்ட உழவரது அரிய முயற்சியாக அடிகள் வெளியிட்டருளிய செய்திகள்,

**மெய்ம்மையாம் உழவைச்செய்து விருப்பெனும் வித்தை வித்திப்**
**பொய்ம்மையாங் களையை வாங்கிப் பொறையெனு நீரைப் பாய்ச்சித்**
**தம்மையும் நோக்கிக்கண்டு தகவெனும் வேலியிட்டுச்**
**செம்மையுள் நிற்பராகிற் சிவகதி விளையுமன்றே.**

எனவரும் திருநாவுக்கரசர் திருப்பாடற்குச் சிறந்த விளக்கவுரைப் பகுதியாக அமைந்தமை ஒப்புநோக்கி யுணரத்தகுவதாகும்.

உயிர் எவ்வியல்பினது என ஆராயப்புகுந்து தத்துவ சோதனை செய்து தம்மியல்பினை யுணராது வருந்திய அடிகள், இறைவனது திருவருள் நாட்டம் பெற்றவுடனே உயிராகிய

தம்மையும் இறைவனையும் உணரப் பெற்ற திறத்தை விரித்து உரைப்பது, 'மேவிய புன்மயிர்த் தொகையோ' எனத் தொடங்கும் பதின்மூன்றாம் பாடலாகும். "நாடி, எலும்பு, நரம்பு முதலிய உடலுறுப்புக்களுள் உயிராகிய யான் யார்? என்று என்னைத் தேடிப் பார்த்தும் என்னைத் தெளிய அறிந்து கொண்டே னல்லேன். இவ்வாறு தம்மைப் பற்றி ஆராய்ந்தறிகின்ற ஆராய்ச்சி யறிவின் கண்ணே இதனைத் தெளிவிப்பதாகிய அறிவு வேறு உண்டென்று ஆராய்ந்து நோக்கி அவ்வாறு நாடுங்கால் விளங்கித் தோன்றும் இறைவனது திருவடி ஞானத்தால் அம்முதல்வனையும் உணர்ந்து அவனது பேரறிவினுள்ளே தாம் அடங்கி நின்று அங்ஙனம் அறியும் பொருளாகிய தம்மையும் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். அங்ஙனம் உணரும் பயிற்சி பெறாதார் உயிராகிய தம்மை அறிய வல்லுநரல்லர் என்பதனை,

**நாடியோ என்போ நரம்புசீக் கோழையோ**
**தேடி யெனையறியேன் தேர்ந்தவகை - நாடி அரன்**
**தன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணார்**
**என்னாம் என அறிவார் இன்று.**

எனவரும் வெண்பாவில் ஆசிரியர் மெய்கண்ட தேவநாயனார் தெளிவாக விளக்கியுள்ளார். இவ்வெண்பா திருவிடைமருதூர் மும்மணிக் கோவையில் வரும் 'மேவிய புன்மயிர்த் தொகையோ' என்ற முதற் குறிப்புடைய திருப்பாடற் பொருளை அடியொற்றி யமைந்த தென்பது இவ்விரு செய்யுட்களையும் ஒப்புநோக்கி யுணர்வார்க்கு இனிது விளங்கும். "நின்னைக் காணாமாந்தர், தன்னையுங் காணாத் தன்மையோரே" என ஓதியவாற்றான் "ஏனைப் பசு பாசங்களும் சிவஞானத்தானன்றி அறியப்படா வென்பது போதரும்" என்றும், "ஆன்மா பிற வுயிர்களைத் தனித்த முதலாய்ப் பிரித்தறியுமாறு இல்லையாயினும் சிவத்தைத் தரிசிக்கும்வழித் தான் அதுவாய் நின்று தன்னையறியுமாறு போலப் பிறவுயிர்களையும் அச்சிவத்தின் வண்ணமாய்க் கண்டறிதல் அமைவுடைத்தென்பது,

**'என்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டேன்**
**நின்னிலை யனைத்தையுங்கண்டேன் என்னே**
**நின்னைக் காணாமாந்தர்**
**தன்னையுங் காணாத் தன்மையோரே'**

என்பதனாற் புலனாம்" என்றும் சிவஞான முனிவர் இத்திருப்பாடற் பொருளை இனிது விளக்கியுள்ளார். சிவரூபத்தால் ஆன்ம தரிசனமும் சிவதரிசனத்தால் ஆன்ம சுத்தியும் ஆமாறு கூறிற்று இப்பாடல் எனக் கொள்ளுதல் பொருந்தும்.

*சிவபெருமானை நினையாமலும் திருவைந் தெழுத்தினை முறைப்படி ஓதாமலும் பச்சிலையும் நீருங்கொண்டு வழிபாடு செய்யாமலும் வேறு யாராகவோ நினைக்கும் புறச்சமயத் தாருள்ளத்திலும் இடைமருதீசன் பொன்னார் திருவடியே நண்ணி அருள் வழங்கும். ஆறு சமயத்தார் செய்யும் வழிபாடுகளெல்லாம் இடைமருதீச னொருவனையே வந்து சார்வன என்னும் உறுதியுடையவர் திருவெண்காட்டடிகளென்பது,*

**ஓராதே யஞ்செழுத்து முன்னாதே பச்சிலையும்**
**நேராதே நீரும் நிரப்பாதே - யாராயோ**
**எண்ணுவா ருள்ளத் திடைமருதர் பொற்பாதம்**
**நண்ணுவா மென்னுமது நாம்.**
**அன்றென்றும் ஆமென்றும் ஆறு சமயங்கள்**
**ஒன்றொன்றோ டொவ்வா துரைத்தாலும் - என்றும்**
**ஒருதனையே நோக்குவா ருள்ளத் திருக்கும்**
**மருதனையே நோக்கி வரும்.**

*எனவரும் மும்மணிக்கோவைச் செய்யுட்களால் இனிது புலனாம். இப்பாடல்கள்*

**'எங்கேனும் யாதாகிப் பிறந்திடினுந் தன்னடியார்க்**
**கிங்கேயென் றருள் புரியும் எம்பெருமான்'**

*என ஆளுடைய பிள்ளையாரும்,*

**"விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயஞ்செய்து**
**எரிவினாற் சொன்னாரேனும் எம்பிராற் கேற்றதாகும்"**

**"ஆறுசமயத் தவரவரைத் தேற்றுந் தகையன"**

**"ஆரொருவ ருள்குவா ருள்ளத்துள்ளே**
**அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந்தோன்றும்"**

*என ஆளுடைய அரசரும் அருளிய பொருளுரைகளை இனிது புலப்படுத்தி அடிகளது சமயப் பொதுமையை நன்கு அறிவுறுத்துவனவாதல் காண்க.*

*உயிர்களது நலங்கருதி உடல், கருவி, உலகு, நுகர்பொருள் என்பவற்றைத் தந்தருளிய இறைவன், தன் அருளாரின்பப் பெருவாழ்வை எவ்வுயிர்க்கும் உரியதாக அமைத்து வைத்துள்ளா னாதலின், அவன்பால் ஒரு சிறிதும் குற்றமில்லை. அப் பெருமானை நினைந்து போற்றி அவனருளால் இடர்ப் பகைகளைக் களைந்து கூற்றுவனது ஆற்றலை யழித்து இறப்பையும் பிறப்பையும் இகழ்ந்து வானோரது பசுவாகிய காமதேனுவின் கன்றைப் போன்று கவலையற்றுத் திரியும் பேரின்ப வாழ்வினைப் பெறும் வசதி, எல்லா மக்களுக்கும்*

பொதுவாக இறைவனால் அளிக்கப்பெற்றுளது. அவ்வசதியைப் பயன்படுத்திக் கொள்ளாத தீவினையாளர் கண்ணதே குற்றம். அஃது எவ்வாறென்றால், அறுசுவையுடன் கூடிய நல்ல உணவு சமைக்கப் பெற்றிருக்கவும் அதனைப் புசியாது ஒருவன் பசியால் வருந்துதல் அவ்வுணவின் குற்றமன்று. நல்ல மணப் பொருள் விரவிய இன் சுவைத் தண்ணீர் இருக்கவும் நீர்வேட்கையுடையா னொருவன் அந்நீரைப் பருகாது வருந்துதல் நீரின் குற்றமன்று. நன்னிழலைத்தரும் குளிர் பூஞ்சோலை வழியிடையேயிருக்க அவ்வழியே செல்வானொருவன் அதன்கண் தங்கி இளைப்பாறாது உடல் வியர்க்கக் கடுவெயிலில் நடந்து வருந்துதல் நிழலின் குற்றமன்று என இவ்வாறு சார்ந்தவர்க்கு நலஞ் செய்யும் சங்கரனாகிய இறைவன் எவ்வுயிர்க்கும் தன்னருளை உரிமைப் படுத்தி வைத்துள்ள திறத்தையும் அப்பெருமானை நினைந்து உய்தி பெறாத தீவினையாளர்களது அறியாமையையும் கூறி இரங்குவதாக அமைந்தது, இம்மும்மணிக் கோவையின் பதினாறாம் பாடலாகும்.

இறைவனது திருநாமமாகிய திருவைந்தெழுத்தை யோக ஞானங்களால் முதிர்ந்த துறவிகள் ஓதினாலும் அன்றி மனைவி மக்களொடு வாழும் ஏனையோர் ஓதினாலும் அவ்விரு திறத்தாரும் இறைவனருளில் திளைத்தலுறுதியென்பது திருவெண்காட்டடிகள் கருத்தாகும். உடல் வலியிற் சிறந்தானொருவனால் உயர வீசியெறியப்பட்டு விரைந்து சென்ற கல்லும், வலியில்லாதானொருவனால் வீசப்பட்டுத் தாமதித்து மேலே சென்ற கல்லும் நிலத்தின் இயல்பாகிய ஈர்ப்பாற்றலால் நிலத்தின்கண் ஒருங்கு விழக் காண்கின்றோம். அதுபோல இறைவனது திருநாமமும் தன்னையோதுவாரது ஞானத்தின் வன்மை மென்மை காரணமாக மாறுபடாது தனக்கு ஆதாரமாகிய இறைவனருளால் ஈர்க்கப்பட்டு ஓதுவாரனை வர்க்கும் ஒப்ப நலஞ் செய்யுஞ் சிறப்புடைத் தென்பதனை,

**வல்லா னொருவன் கைம்முயன் றெறியினும்**
**மாட்டா ஒருவன் வாளா எறியினும்**
**நிலத்தின் வழாஅக் கல்லேபோல்**
**நலத்தின் வழாஅர்நின் நாமம் நவின்றோரே.**

எனவருந் தொடரால் அடிகள் விளக்கிய திறம் வியந்து போற்றத்தக்கதாகும்.

இறைவனை வழிபட்டு வரம் பல பெற்ற வானவர் முனிவர் அடியார்கள் இன்னின்னாரெனக் குறித்துப் போற்றுவது, இம் மும்மணிக்கோவையின் இருபத்தெட்டாம் செய்யுளாகும். இதன்கண்,

**வித்தகப் பாடல் முத்திறத் தடியரும்
திருந்திய அன்பிற் பெருந்துறைப் பிள்ளையும்
அத்தகு செல்வத் தவமதித் தருளிய
சித்தமார் சிவ வாக்கிய தேவரும்**

*எனச் சைவ சமய குரவர் நால்வரையும் பெருஞ்செல்வத்தைத் துறந்த செம்மனச் செல்வராகிய சிவவாக்கிய தேவரையும் குறித்துப் போற்றிய அடிகள்,*

**"வெள்ளை நீறு மெய்யிற் கண்டு
கள்ளன் கையிற் கட்டவிழ்ப் பித்தும்
ஓடும் பல்நரி யூளைகேட் டரனைப்
பாடின வென்று படாம்பல வளித்தும்
குவளைப் புனலில் தவளை அரற்ற
ஈசன் றன்னை யேத்தின வென்று
காசும் பொன்னுங் கலந்து தூவியும்
வழிபடும் ஒருவன் மஞ்சனத் தியற்றிய
செழுவிதை யெள்ளைத் தின்னக் கண்டு
பிடித்தலும் அவன் இப் பிறப்புக்கென்ன
இடித்துக் கொண்டவன் எச்சிலை நுகர்ந்தும்
மருத வட்டத் தொருதனிக் கிடந்த
தலையைக் கண்டு தலையுற வணங்கி
உம்மைப் போல எம்மித் தலையும்
கிடத்தல் வேண்டுமென் றடுத்தடுத் திரந்தும்
கோயில் முற்றத்து மீமிசைக் கிடப்ப
வாய்த்த தென்று நாய்க்கட்ட மெடுத்தும்
காம்பவிழ்ந் துதிர்ந்த கனியுருக் கண்டு
வேம்புகட் கெல்லாம் விதானம் அமைத்தும்
விரும்பின கொடுக்கை பரம்பரற் கென்று
புரிகுழற் றேவியைப் பரிவுடன் கொடுத்த
பெரிய அன்பின் வரகுண தேவர்"**

*எனச் சிவபத்திச் செல்வராகிய வரகுண தேவர் செய்த பேரன்பின் செயல்களை விரித்துரைத்துப் போற்றியுள்ளார். இங்குப் புகழ்ந்து போற்றப்பெற்ற பெரிய அன்பின் வரகுணதேவராவார்,*

**"புயலோங் கலர் சடை யேற்றவன் சிற்றம்பலம் புகழும்
மயலோங் கிருங்களியானை வரகுணன்"**

*எனவும்,*

**"வரகுணனாந் தென்னவன் ஏத்து சிற்றம்பலத்தான்"**

*எனவும் திருவாதவூரடிகளாற் போற்றப் பெற்ற முதல் வரகுண பாண்டியர் என்பது முன்னர் விளக்கப்பெற்றது.*

## திருவேகம்பமுடையார் திருவந்தாதி

அந்தாதித் தொடையமைய நூறு பாடல்களைத் தன்னகத்தே கொண்டு திகழும் இந்நூல், காஞ்சி நகரிலுள்ள திருவேகம்பம் என்னும் திருக்கோயிலில் எழுந்தருளிய சிவபெருமானைப் போற்றிப்பரவுதாகலின் திருவேகம்ப முடையார் திருவந்தாதி யென்னும் பெயர்த்தாயிற்று. இப்பனுவல் இறைவனது திருவருட்டுணைகொண்டு பாடப் பெற்றதென்பதும், இவ்வந்தாதி நூறு பாடல்களால் இயன்றமைபற்றி இதற்குப் பதிற்றுப்பத்து என அடிகள் பெயரிட்டனரென்பதும்,

**காட்டிவைத்தார் தம்மை யாங்கடிப் பூப்பெய்யக் காதல்வெள்ளம்**
**ஈட்டிவைத்தார் தொழும் ஏகம்பர் ஏதும் இலாத எம்மைப்**
**பூட்டி வைத்தார் தமக் கன்பது பெற்றுப் பதிற்றுப் பத்துப்**
**பாட்டிவைத்தார் பரவித் தொழுதாம் அவர் பாதங்களே.**

எனவரும் இந்நூல் 99 - ஆம் பாடலால் இனி விளங்கும்.

"திருக்கச்சி யேகம்பத்தில் எழுந்தருளிய பெருமானே, மெய்ஞ்ஞானத்தால் நின்னை வழிபட்டொழுகும் மெய்த் தொண்டர்கள் செல்லும் ஞானநெறி யிதுவென உணர்ந்திலேன். சரியை கிரியையாகிய கைத்தொண்டு செய்து நின்கழல் போற்றும் அடியார்கள் தொண்டினை உவந்து மேற்கொண்டேனல்லேன். உடல் வளர்க்கும் உணவினையே விரும்பிப் பொய்யேயுன்னைப் போற்றிப் புறமே திரியும் இத் தொண்டனேனாகிய எளியேனது பணியையும் ஏற்றுக்கொள்வாயோ" என அடிகள் திருவேகம்பப் பெருமான் முன்னின்று குறையிரந்து வேண்டுவதாக அமைந்தது,

**மெய்த்தொண்டர் செல்லும் நெறியறியேன் மிக நற்பணிசெய்**
**கைத்தொண்டர் தம்மிலும் நற்றொண் டுவந்திலன் உண்பதற்கே**
**பொய்த்தொண்டு பேசிப் புறம்புறமே உன்னைப் போற்றுகின்ற**
**இத்தொண்டனேன்பணி கொள்ளுதியோகச்சி யேகம்பனே**

எனவரும் இத்திருவந்தாதியின் முதற்பாடலாகும்.

சிவபெருமானுக்குத் தொண்டுபட்டதன் பயன் அவனடியார்களுக்குப் பணிசெய் தொழுகுதலே யென்பதும், அடியார்களது திருவடித்தூளியைத் தலைமேற்கொள்வார் உள்ளம் தெளிவு பெறுமாதலால் அவர்கள் சிவனருள் பெறுதல் ஒருதலையென்பதும், சிவபெருமான் திருவடியை வணங்குதற்கே தம் தலையினைப் பயன்படுத்தும் பெரு வேட்கையுடைய மெய்யடியார்களோடு இணங்கிப் பழகுவதன்றி ஏனையரோடு தாம் நெருங்கிப்பழகுவது இல்லை யென்பதும், பிறதெய்வங்களை இறைவனாக எண்ணிப் புலமை மிக்கோர் பாடும் செய்யுட்பொருள் முடிவில் ஏகம்பவாணனாகிய முழுமுதற்

பொருளைச் சென்று சார்வதால் நூலென மதிக்கப்படுவது அன்றிச் சார்தலில்லையாயின் அவ்வாறு மதிக்கப்படா தென்பதும் ஆகியவுண்மைகளை இவ்வந்தாதியில் 3, 4, 7 - ஆம் பாடல்களில் திருவெண்காட்டடிகள் முறையே குறிப்பிட்டுள்ளார். இச்செய்யுட்களை நோக்குமிடத்து அடியார்க்குத் தொண்டுபட்டு வாழ்தலில் அடிகள் மேற்கொண்டிருந்த மனவுறுதி நன்கு புலனாதல் காணலாம்.

பகைவேந்தரைப் பொருதுவெல்லும் ஆற்றல் மிக்க நால்வகைச் சேனைகளையுடைய பெருவேந்தராயினும் எவ்வுயிர்க்கும் இறைவராகிய ஏகம்பவாணரது திருவருள் வண்ணமாகத் திகழும் திருநீற்றினைத் தம் நெற்றியில் அணிந்து அப்பெருமானை வழிபாடு செய்யாராயின் அவ்வேந்தரது அரசியலாட்சியும் அவர்தம் வீரம் நியாயம் கொடை முதலியவற்றுக்கு அடையாளமாக முழங்கும் முரசும் இவ்வுலகில் நிலைபெறா என்பதனை,

**அன்றும் பகையடர்க்கும் பரிமாவும் மதவருவிக்**
**குன்றும் பதாதியும் தேரும்குலவிக் குடைநிழற் கீழ்**
**நன்றும் பொலியினும் கம்பர்நன்னீறு நுதற்கிலரேல்**
**என்றும் அரசும் முரசும் பொலியா இரு நிலத்தே**

எனவரும் பாடலால் அடிகள் தெளிவாகக் கூறியுள்ளார். இத்திருப்பாடல், திருவெண்காட்டடிகள் காலத்தில் தமிழகத்தை யாண்ட மன்னர்களிற் சிவநெறியைக் கடைப்பிடித் தொழுகாதவர்கள் அடைந்த தோல்வியையும் சிவநெறியைக் கடைப்பிடித்து ஒழுகியவர்கள் பெற்ற வெற்றியையும் குறிப்பான் அறிவுறுத்துவதாய், உலகியலில் மக்கள் பெறும் வெற்றிக்கெல்லாம் உறுதுணையாய் விளங்குவது இறைவனது திருவருளே யென்ற உண்மையைப் புலப்படுத்தி நிற்றல் அறிந்து மகிழத்தக்க தாம்.

நிலத்தேவர் எனப் போற்றப்பெறும் தலைமையைப் பிறப்பினாலடைந்து வேதங்களை மறவாதோதி வேள்விகளை முறைப்படி செய்து வந்தாலும், திருவேகம்பப் பெருமானைப் பண்டைக் குலத்தை மறந்த தொண்டர்களோடும் கூடித் தொழும் திருவருள் நலம் வாய்க்கப் பெறாதவர்கள், காடுகளில் வேட்டையாடித்திரியும் வேடுவர்களோடு வைத்து எண்ணப்படும் தாழ்வுடையராவரென்பது அடிகள் கருத்தாகும்.

**நிலத்திமை யோரில் தலையாய்ப்பிறந்து மறையொடங்கம்**
**வலத்திமைப் போதும் பிரியா எரிவளர்த்தாலும் வெற்பன்**
**குலத்துமை யோர்பங்கர் கச்சியுளேகம்பங் கூடித்தொழும்**
**நலத்தமையாதவர் வேட்டுவர்தம்மின் நடுப்படையே.**

எனவரும் பாடலில் இக்கருத்துப் புலனாதல் காண்க.

*சீலமின்றி அறிவின்றிக் கொலைகளவு முதலிய தீமை புரிந்தொழுகும் கீழ்ச்சாதி மக்களாயினும் ஏகம்ப வாணனாகிய இறைவனுடைய திருவடிக்கு அன்புடைய தொண்டராயின் அவர்களே யாவர்க்கும் மேலாகிய உத்தமராகப் போற்றத் தக்காரென்பதனை,*

**படையால் உயிர்கொன்று தின்று பசுக்களைப் போலச்செல்லும்**
**நடையால் அறிவின்றி நட்பிடைப் பொய்த்துக் குலங்களினும்**
**கடையாய்ப் பிறக்கினுங் கச்சியுளேகம்பத் தெங்களையா**
**ளுடையான் கழற்கன்பரேல் அவர் யாவர்க்கும் உத்தமரே.**

*என்ற பாடலில் அடிகள் குறிப்பிட்டுள்ளார். இறைவனடிக்குத் தொண்டு பூண்டொழுகுபவர் முன்னர் எத்தகைய குற்றமுடைய ராயினும் அவர்கள் இறைவனுக்கு ஆட்பட்ட பின்னர் அக்குற்றங்களெல்லாம் எரி முன்னர்ப் பஞ்சுத்துய் போல வெந்து நீறாக, எல்லா நற்பண்புகளும் பெற்று மேம்படுவாராதலின் 'ஆளுடையான் அடிக்கு அன்பரேல் அவர் யாவர்க்கும் உத்தமரே' என்றார். இத்திருப்பாடல்,*

**'அங்கமெலாங் குறைந் தழுகு தொழுநோயராய்**
**ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனுங்**
**கங்கைவார் சடைக் கரந்தார்க் கன்பராகில்**
**அவர்கண்டீர் நாம் வணங்குங் கடவுளாரே'**

*எனத் திருநாவுக்கரசடிகளார் அருளிய பொருளுரையைத் தன்னகத்துக் கொண்டு திகழ்கின்றது.*

*திருவேகம்பப் பெருமானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு குடும்ப வாழ்க்கையில் தலைவன் தலைவி யென்பவர் களது அன்பின் திறத்தைப் புலப்படுத்துவனவாக அமைந்த அகத்துறைப் பாடல்கள் பல இத்திருவந்தாதியில் இடம் பெற்றுள்ளன. இப் பாடல்கள் திருவாதவூரடிகள் திருவாய் மலர்ந்தருளிய திருச்சிற்றம்பலக் கோவையை நினைவுபடுத்துவன வாகவுள்ளன.*

*உடன்போக்கில் தலைவனொடு சென்ற தலைவியைத் தேடிச் சென்ற செவிலித்தாய், தன் மகளும் அவள் காதலனும் போலவே வழியில் எதிர்ப்பட்ட காதலர்களாகிய அயலார் இருவரைக்கண்டு 'நும்மையொத்த அன்பினராகிய இருவர் இவ்வழியே போகக் கண்டீரோ' என வினவுகின்றாள். அதுகேட்ட தலைமகன், 'இறைவன் ஊர்ந்தருளும் ஆனேற்றினையொத்த ஆற்றல் மிக்க தலைமகனைக் கண்டேன். நும்மால் வினவப்பட்ட இருவருள் மற்றொருவரை என்னுடன் வரும் மானோக்கினளாகிய இம்மங்கையைக் கேட்டுத் தெரிந்து கொள்மின்' என மறுமொழி கூறுகின்றான். இவ்வழகிய காட்சியை,*

**துணையொத்த கோவையும் போலெழிற் பேதையுந் தோன்றலுமுன்**
**இணையொத்த கொங்கையொ டேயொத்த காதலொ டேகினரே**
**அணையத்தர் ஏறொத்த காளையைக் கண்டனம் மற்றவரேல்**
**பிணையொத்த நோக்குடைப் பெண்ணிவள் தன்னொடும்**
**பேசுமினே.**

*எனவரும் பாடல் நன்கு புனைந்துரைத்தல் காணலாம். இப்பாடல்,*

**மீண்டா ரெனவுவந் தேன்கண்டு நும்மையிம் மேதகவே**
**பூண்டா ரிருவர்முன் போயினரே, புலியூரெனைநின்**
**றாண்டா னருவரை யாளியன்னானைக் கண்டேனயலே**
**தூண்டா விளக்கனையாய் என்னையோ அன்னை சொல்லியதே.**

*எனவரும் திருச்சிற்றம்பலக் கோவையை யடியொற்றி அன்பினைந்திணை யொழுகலாற்றுக்குரிய தலைவனது உள்ளத்து நிறையை நன்கு புலப்படுத்துவதாகும்.*

*இவ்வந்தாதியில் 38 முதல் 44 முடியவுள்ள பாடல்களில் மாதொரு பாகராகிய அர்த்த நாரீச்சுரர் திருக்கோலத்தியல்பு விரித்துரைக்கப் பெற்றுளது. இறைவன் கோயில் கொண்டருளிய திருத்தலங்களாக இவ் அந்தாதியில் அறுபத்தொன்பது தலங்கள் குறிக்கப் பெற்றுள்ளன. அவற்றுள், இமயம், கொல்லி, பொதியம், விந்தம், மந்தரம், மகேந்திரம், கருங்குன்றம், வெண்குன்றம், செங்குன்றம், நெடுங்குன்றம், நற்குன்றம், திருவிற்பெரும்பேறு, புலிவலம், வில்வலம், திருக்காரிகரை, திருப்போந்தை, முக்கோணம் என்பவை வைப்புத் தலங்களெனக் கொள்ளத் தக்கன.*

*உடன்போக்கிற் சென்ற தலைவன் தன்னுடன் வரும் தலைவிக்குக் காஞ்சி நகரத்தின் எழில் நலங்களைக் காட்டிக் கூறுவனவாக அமைந்தன 75 முதல் 85 வரையுள்ள பாடல்களாம். காஞ்சி நகரத்தின் எழில்நலம் அந்நகரிலுள்ள திருக்காமக் கோட்டம், கச்சி அறச்சாலை, ஊரகம், பாடகம் முதலிய திருக்கோயில்கள் ஆகியவற்றைத் திருவெண்காட்டடிகள் தாம் நேரிற் கண்ட வண்ணம் இத்திருப்பாடல்களிற் சொல்லோவியஞ் செய்துகாட்டிய திறம் உணர்ந்து மகிழத் தக்கதாகும்.*

*உடன் போக்கில் தலைவியை உடனழைத்துச் சென்ற தலைவன் காஞ்சி நகரத்தை யடைந்து அங்கு உமையம்மையார் வெண்மணலாற் சிவலிங்கம் அமைத்து இறைவனை வழிபட்ட காலத்துப் பெருவெள்ளம் பெருக்கெடுத்துவரக் கண்டு அஞ்சித் தான் வழிபடும் சிவலிங்கத் திருமேனிக்கு ஊறுநேராவண்ணம் தழுவிக்கொள்ள, அந்நிலையில் உமாதேவியாரது தனத்தழும்பும் வளைத்தழும்பும் தன் திருமேனியில் விளங்கச் சிவபெருமான்*

குழைந்து காட்டிய பேரன்பின் திறத்தைத் தன்னுடன் வரும் தலைவிக்கு எடுத்துரைத்து 'இத்தகைய திருவேகம்பத் திருக்கோயிலை இறைஞ்சப் பெற்றமையால் இவ்வுலகில் மக்கட் பிறப்பினாலடைதற்குரிய பெரும்பயனை நாம் பெற்றுள்ளோம்' என உண் மகிழ்ந்துரைப்பதாக அமைந்தது,

**தளராமிகு வெள்ளங் கண்டுமை யோடித் தமைத்தழுவக்**
**கிளையார் வளைக்கை வடுப்படும் ஈங்கோர் கிறிபடுத்தார்**
**வளமாப் பொழில் திரு வேகம்பம் மற்றிது வந்திறைஞ்சி**
**உளரா வதுபடைத்தோம் மடவாய் இவ்வுலகத்துளே.**

என்ற பாடலாகும். அன்பின் திறத்தாற் பிரிவின்றியுடன் சென்ற காதலர்கள், பிரியா நங்கையாகிய பெருமாட்டியார் வழிபட அன்பேயுருவாகிய பெருமான் அவர்க்கு அருள் செய்த திருக்கோயிலாகிய திருவேகம்பத்தைக் கண்டு வழிபட்டு மகிழ்ந்த திறம் இத்திருப்பாடலில் இனிது புலனாதல் காண்க.

## திருவொற்றியூர் ஒருபாவொருபது

திருவொற்றியூரிற் கோயிற் கொண்டெழுந்தருளியுள்ள சிவபெருமானது பொருள்சேர் புகழை விரித்துரைக்கும் ஆசிரியப்பாவாகிய பத்துப் பாடல்களால் அந்தாதித் தொடைபெறவமைந்த பனுவலாதலின், இது திருவொற்றியூர் ஒருபாவொருபது என்னும் பெயர்த்தாயிற்று. இதன்கண் உள்ள பாடல்கள் பத்தும் ஒற்றியூரிறைவனை முன்னிலைப்படுத்துப் போற்றுமியல்பினவாய், உணர்தற்கரிய சைவசித்தாந்த வுண்மைகளைத் தெளிவாக விளக்குவனவாக வுள்ளன.

உலகமே யுருவமாகத்திகழும் இறைவனது பெருந் திருவுருவின் இயல்பினை இப்பனுவலின் முதற் பாடலில் அடிகள் இனிது புலப்படுத்தியுள்ளார். சிவபெருமான் சமயங் கடந்த தனிமுதற் பொருளாக விளங்கும் மாட்சியினை,

**இடத்துறை மாதரோ டுருடம்பென்றும்**
**நடத்தினை நள்ளிருள் நவிற்றினை யென்றும்**
**புலியதள் என்பொடு புனைந்தோ யென்றும்**
**பலிதிரி வாழ்க்கை பயின்றோ யென்றும்**
**அருவமும் உருவமும் ஆனா யென்றும்**
**திருவமர் மாலொடு திசைமுக னென்றும்**
**உளனே யென்றும் இலனே யென்றும்**
**தளரா னென்றும் தளர்வோ னென்றும்**
**ஆதியென்றும் அசோகின னென்றும்**
**போதியிற் பொலிந்த புராண னென்றும்**
**இன்னவை முதலாத் தாமறி யளவையின்**

**மன்னிய நூலின் பன்மையுள் மயங்கிப்**
**பிணங்கு மாந்தர் பெற்றிமை நோக்கி**
**அணங்கிய அவ்வவர்க் கவ்வவையாகி அடையப்**
**பற்றிய பளிங்கு போலும்**
**ஒற்றி மாநக ருடையோய் உருவே.**

எனவரும் இரண்டாவது பாடலில் விரித்துக் கூறுவர்.

"திருவொற்றியூரில் எழுந்தருளிய பெருமானே, மாதொரு பாகனாகிய நின்னைத் திருமாலென்றும் பிரமனென்றும் அருகனென்றும் புத்தனென்றும் பல்வேறு பெயர்களாற் சமய வாதிகள் பலர் மாறுபடக் கூறினாலும் யாவர்க்கும் மேலாம் இறைவனாகிய நீ, அவ்வச் சமயத்தவர்களுக்கு அவரவர் நினைந்த திருமேனி கொண்டு தோன்றி அருள்புரிகின்றாய். பளிங்கு தன்கண் சார்ந்த பொருளின் தன்மையைப் புலப்படுத்தி அவற்றின் தன்மை தனக்கெய்தலின்றித் தனித்து விளங்குமாறு போன்று மேம்பட்டு விளங்குதல் நின்திருவுருவின் இயல்பென வுணர்ந்தோம்" என்பது இப்பாடலின் பொருளாகும். இச்செய்யுள்,

**"மெய்த்தாறு சுவையுமேழிசையு மெண்குணங்களும் விரும்பு நால்வே**
**தத்தாலும் அறியவொண்ணா நடைதெளியப் பளிங்கே போல் அரிவைபாகம்**
**ஒத்தாறு சமயங்கட் கொருதலைவன்"**

எனவரும் திருஞான சம்பந்தர் திருப்பாடற் பொருளை விரித்துரைத்தல் காண்க.

எல்லாப் பொருள்களிலும் நீக்க மறக்கலந்து விளங்கும் இறைவனுக்கு உலகமே யுருவமாதலின், அப் பேருருவினை விட்டு விலகி நிற்கும் பொருள்கள் உலகில் இல்லை. ஆதலால் உலகப் பொருள்கள் யாவும் இறைவன் திரு வுருவத்தின் அவயவங் களாகவே கொள்ளத் தக்கன. திரிபுர மெரித்தது, தக்கன்தலையரிந்தது, இந்திரனைத் தோள் நெரித்தது, பிரமன் தலைகளிலொன்றைக் கிள்ளியது, மன்மதனை யெரித்தது, இராவணனை விரலால் அடர்த்தது, கூற்றுவனை யுதைத்தது முதலாக இறைவன் செய்த வீரச் செயல்களெனப் போற்றப் பெற்றுவரும் இச்செயல்களெல்லாம், இறைவன் உலகத்தை இயக்குங்கால் அவனருளினை யெதிரேற்றுக் கொள்ளாதார் செய்த வினைவயத்தால் நிகழ்ந்த நிகழ்ச்சிகளெனக் கொள்வதல்லது, இறைவன் தனக்குப் புகழுண்டாக விரும்பிச் செய்த வீரச்செயல்களென மெய்யுணர்வுடையோர் கொள்ள மாட்டார்கள். இவ்வுண்மையினை,

உருவாம் உலகுக் கொருவனாகிய
பெரியோய் வடிவிற் பிறிதிங் கின்மையின்
எப்பொரு ளாயினும் இங்குள தாமெனின்
அப்பொருள் உனக்கே அவயவ மாதலின்
முன்னிய மூவெயில் முழங்கெரி யூட்டித்
தொன்னீர் வையகந் துயர்கெடச் சூழ்ந்ததும்
வேள்வி மூர்த்தி தன் தலையினை விடுத்ததும்
நீள்விசும் பாளிதன் தோளினை நெரித்ததும்
ஓங்கிய மறையோற் கொருமுகம் ஒழித்ததும்
பூங்கணை வேளைப் பொடிபட விழித்ததும்
திறல்கெட அரக்கனைத் திருவிர லூறுத்ததும்
குறைபடக் கூற்றினைக் குறிப்பினில் அடர்த்ததும்
என்றிவை முதலா ஆள்வினை யெல்லாம்
நின்றுழிச் செறிந்த நின்செய லாதலின்
உலவாத் தொல்புக ழொற்றியூர
பகர்வோர் நினக்கு வேறின்மை கண்டவர்
நிகழ்ச்சியின் நிகழி னல்லது
புகழ்ச்சியிற் படுப்பரோ பொருளுணர்ந்தோரே

என்ற பாடலில் அடிகள் தெளிவாக விளக்கிய திறம் அறிந்து மகிழத்தக்கதாகும்.

தற்போதத்தால் மெய்ப் பொருளையுணர முற்பட்டு உயர்ந்த நான்முகன் முதலாக அறியாமையாகிய இருளொடு ஒற்றித்து நின்று யாக்கையுட்பட்டு வாழும் எல்லாயுயிர்களும், உருவம், உணர்வு, பெருமை, ஆற்றல், செல்வம், வன்மை, செய்யும் தொழில்வகை ஆகியவற்றால் வேறு பட்டனவாகி வினைத் தொடர்பினின்றும் நீங்காது ஒன்றையொன்றொவ்வாதனவாய்க் கூடி நிற்பது இவ்வுலகத் தொகுதி. இதன்கண் வாழும் உயிர்களின் ஒழுகலாறுகள், நிலைபெற்ற பெருங்கடலுள் உயர்ந்து தோன்றும் அலைகளைப் போன்று இறைவனாகிய முழுமுதற் பொருளை ஆதாரமாகக் கொண்டு தோன்றி, அப்பொருளினது வியாபகத்தினிடையே வளர்ந்து விரிந்தும் ஒடுங்கியும் இடம் பெயர்ந்தும் கலந்தும் ஒன்றிலும் தோய்வின்றி விளங்கும் அம்முதல்வனது இயல்பினை விளக்கி நிற்பன. இங்ஙனம் இறைவனது வியாபகத்துள்ளே இவ்வுலகந் தோன்றி நின்றொடுங்கித் தொழிற்படும் இயல்பினை இறைவனது திருவருள் ஞானம் பெற்ற பெரியோர்கள் அறிவதல்லது திருவருள் பெறாத ஏனையோர் அறிதலியலாது. இவ்வுண்மையினை,

பொருளுணர்ந் தோங்கிய பூமகன் முதலா
இருள்துணை யாக்கையில் இயங்கு மன்னுயிர்

**உருவினும் உணர்வினும் உயர்வினும் பணியினும்
திருவினும் திறலினும் செய்தொழில் வகையினும்
வெவ்வேறாகி வினையொடும் பிரியா
தொவ்வாப் பன்மையுள் மற்றவர் ஒழுக்கம்
மன்னிய வேலையுள் வான்திரை போல
நின்னிடை யெழுந்து நின்னிடை யாகியும்
பெருகியுஞ் சுருங்கியும் பெயர்ந்துந் தோன்றியும்
விரவியும் வேறாய் நின்றனை விளக்கும்
ஓவாத் தொல்புகழ் ஒற்றியூர
மூவா மேனி முதல்வ நின்னருள்
பெற்றவர் அறியினல்லது
மற்றவர் அறிவரோ நின்னிடை மயக்கே.**

*எனவரும் பாடலில் அடிகள் தெளிவாக விளக்கியுள்ளார். மாற்றம் மனங்கடந்து விளங்கும் இறைவனதியல்பினை உள்ளவாறுணர வல்லார்க்குப் பிறவிப் பிணி அறுதல் உறுதியென்பதனை ஐந்தாம் பாடலில் அறிவுறுத்தியுள்ளார்.*

*சிவபெருமானது திருக்கோலத்தில் அமைந்துள்ள பொருள் நுட்பத்தை,*

**தூமதி சடைமிசைச் சூடுதல் தூநெறி
ஆமதியானென அமைத்தவாறே
அறனுரு வாகிய ஆனே றேறுதல்
இறைவன் யானென இயற்றுமாறே
அது அவள் அவனென நின்றமை யார்க்கும்
பொதுநிலை யானென உணர்த்திய பொருளே
முக்கணன் என்பது முத்தீ வேள்வியில்
தொக்க தென்னிடை யென்பதோர் சுருக்கே
வேத மான்மறி யேந்துதல் மற்றதன்
நாதன் நானென நவிற்று மாறே
மூவிலை யொருதாட் சூல மேந்துதல்
மூவரும் யானென மொழிந்த வாறே
எண்வகை மூர்த்தி யென்பதிவ் வுலகினில்
உண்மை யானென உணர்த்திய வாறே.**

*என ஆறாம் பாடலில் அடிகளில் தெளிவாக உணர்த்துகின்றார்.*

*இறைவனாகிய நின்னியல்பு சொல்லினெல்லைக்கு அப்பாற்பட்டு விளங்குவதாதலின் அதனை யறிந்துரைப்பார் ஒருவருமிலர் என ஏழாம் பாடலிலும், 'உடலாகிய கடலிற்பட்டுத் தடுமாறும் அடியேனை நினது திருவடிப் புணையைத் தந்து உய்வித்தருள்க' என எட்டாம் பாடலிலும் குழந்தை அழும் அழுகை யொலியைக் கேளாத தூரத்தே தாய் சென்றாளாயினும்*

பிள்ளையின் பசிநேரத்தை யெண்ணி அவள் தானே விரைந்து வந்து பசி வருத்தத்தைத் தீர்த்தல் போன்று பல பிறவிகளிலும் உழன்று மயங்கிச் செய்வதறியாது திகைக்கும் எளியேற்கு இறைவனாகிய நீயே யெளி வந்து எனது பாசப்பிணிப்பினை நீக்கி யருள் புரிவாயாக' என ஒன்பதாம் பாடலிலும் அடிகள் இறைவனை வேண்டும் முறை படிப்போருள்ளத்தை யுருக்குவதாகும். இறைவனது மெய்ப்புகழைப் போற்றிப் பரவுவதாக அமைந்தது இப்பனுவலின் பத்தாம் பாடலாகும். இது திருவாசகத்திலுள்ள போற்றித் திருவகவலை யொத்து அமைந்துளது. திருவாசக முதலிய முன்னைத் திருமுறைகளில் திருவெண்காட்டடிகள் கொண்டுள்ள பேரார்வம் அவர் பாடிய செழும் பாடல்களால் நன்கு புலனாதல் காணலாம்.

## 12. நம்பியாண்டார் நம்பி

பதினொராந் திருமுறை யாசிரியர்களுள் நம்பியாண்டார் நம்பியும் ஒருவர். இவர் திருநாரையூரில் ஆதி சைவமரபில் தோன்றியவர். இளம் பருவத்திலேயே திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையாரால் ஆட்கொள்ளப் பெற்றமையால் நம்பியாண்டார் நம்பியென வழங்கப் பெற்றார். கருவிலே திருவுடையராய்ச் செந்தமிழ்ப் புலமையும் செம்பொருட்டுணிபும் நன்கு வாய்க்கப் பெற்ற இவ்வாசிரியர், தேவாரத் திருமுறையும் திருத்தொண்டர் வரலாறும் உலகமெங்கும் பரவுதல் வேண்டுமென விரும்பிய இராசராச அபயகுலசேகரனென்னும் சோழ மன்னனது பேரார்வத்தை இனிது நிறைவேற்றுதல் வேண்டிப் பொல்லாப் பிள்ளையார் திருவருள் பெற்று மன்னனுடன் தில்லைக்குச் சென்று தேவாரத் திருமுறையைக் கண்டு அவற்றை முன் போல ஏழு திருமுறைகளாக வகுத்துதவிய செய்தி திருமுறை கண்ட புராணத்தில் விரித்துரைக்கப் பெற்றுளது. நம்பியாண்டார் நம்பியாகிய இத் திருவருட் செல்வர் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியும் பத்தாம் நூற்றாண்டின் தொடக்கமு மாகிய காலப் பகுதியில் வாழ்ந்தவ ரென்பது முன்னர் ஆராய்ந்து விளக்கப் பெற்றது. * (* பன்னிரு திருமுறை வரலாறு. முதற் பகுதி.) இவர் இயற்றியருளிய பனுவல்களாகப் பதினொராந் திருமுறையிற் பத்துப் பிரபந்தங்கள் சேர்க்கப் பெற்றுள்ளன.

### (1) திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலை

இப்பிரபந்தம் திருநாரையூரிற் கோயில் கொண்டருளிய பொல்லாப் பிள்ளையாராகிய விநாயகப் பெருமானைப் போற்றிப் பரவுவதாய், வெண்பா, கட்டளைக் கலித்துறை யென்னும் இருவகைப் பாக்களால் அந்தாதித் தொடைபெறத் தொடுக்கப் பெற்றதாதலின் திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை

மணிமாலை யென்னும் பெயர்த்தாயிற்று. திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் திருவருளால் இளம் பருவத்திலேயே செந்தமிழ்ப் புலமை வாய்க்கப் பெற்ற நம்பியாண்டார் நம்பி யென்பார் தாம்பெற்ற திருவருட் புலமையின் பயனாக முதன் முதற் பாடிய திருப்பாடல்,

**என்னை நினைந்தடிமை கொண்டென் இடர்கெடுத்துத்**
**தன்னை நினையத் தருகின்றான் - புன்னை**
**விரசு மகிழ் சோலை வியனாரை யூர்முக்கண்**
**அரசு மகிழ் அத்திமுகத்தான்.**

என்பதாகும். "புன்னை மரங்களும் மகிழ மரங்களும் அடர்ந்த சோலையாற் சூழப்பெற்ற திருநாரையூரிற் கோயில் கொண்டருளும் முக்கட்பெருமானாகிய சிவபெருமான் மகிழும் மூத்தபிள்ளையாராகிய யானை முகப்பெருமான், யான் அவனை நினைக்கும் ஆற்றல் பெறாத முன்னே என்மேல் வைத்த பெருங்கருணையால் என்னை நினைந்து ஆட்கொண்டு, அடியேனது பிறவித் துயரைப் போக்கி இறைவனாகிய தன்னை இடைவிடாது நினைந்து பரவும் சிவஞானத்தை அடியேற்கு மேலும் மேலும் வழங்கியருள்கின்றான்" என நம்பியாண்டார் நம்பிகள் தாம்பெற்ற திருவருளனுபவத்தை இத் திருப்பாடலில் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். இதன்கண் 'அரசு மகிழ் அத்தி முகத்தான்' என்ற தொடரில் அரசு, மகிழ், அத்தி என்ற சொற்கள் அவ்வப் பெயருடைய மரங்களையும் குறிப்பால் அறிவுறுத்தி நிற்றல் அறிந்து மகிழத்தக்கதாகும். இவ்வெண்பாவினால் தன்னை போற்றியதற்கு உளமிக மகிழ்ந்த விநாயகப்பெருமான், திருமாலின் தோற்றமெனப் போற்றப் பெறுந் திருவுடை மன்னனாகிய இராசராச அபயகுலசேகரனென்னும் சோழமன்னனுக்குத் தில்லையில் தேவாரத் திருமுறைகள் சேமிக்கப் பெற்றிருந்த செய்தியினையும் திருத்தொண்டத் தொகையிற் போற்றப்பெறும் அடியார்களது வரலாற்றினையும் தம் வாயிலாகப் புலப்படுத்தியருளிய உண்மை வரலாற்றினை,

**யானேத் தியவெண்பா என்னை நினைந்தடிமை**
**தானே சனார்த்தனற்கு நல்கினான் - தேனே**
**தொடுத்தபொழில் நாரையூர்ச் சூலம் வலன் ஏந்தி**
**எடுத்த மதமுகத்த ஏறு.**

எனவரும் இவ்விரட்டை மணிமாலையின் 13- ஆம் பாடலால் நம்பியாண்டார்நம்பி உய்த்துணர வைத்தமை நினைந்து போற்றத்தக்கதாகும். இப்பாடலில் சனார்த்தனன் என்றது, திருமாலின் தோற்றமெனக் குடிமக்களாற் போற்றப் பெற்றவனும் இந்நூலாசிரியராகிய நம்பியாண்டார் நம்பியைப் போற்றித்

தேவாரத் திருமுறையை யாண்டும் பரவச் செய்தவனுமாகிய சோழ மன்னனை யெனக் கொள்ளுதல் பொருந்தும்.

விநாயகர் திருவிரட்டை மணிமாலையாகிய இப்பனுவல் கபில தேவ நாயனார் பாடிய மூத்த பிள்ளையார் திருவிரட்டை மணிமாலையை யடியொற்றி அமைந்ததாகும். நம்பியாண்டார் நம்பி முதன் முதற் பாடிய 'என்னை நினைந்தடிமைகொண்டு' என்ற வெண்பாவை முதற் பாடலாகக்கொண்டு இவ்விரட்டை மணிமாலை தொடுக்கப் பெற்றிருத்தலால், நம்பியாண்டார்நம்பி இளம் பருவத்தில் முதன்முதற் பாடிய செந்தமிழ்ப் பிரபந்தம் இதுவென்பது நன்கு பெறப்படும்.

சிவபெருமானிடமிருந்து தீஞ்சுவை மிக்கதொரு மாங்கனியைப் பரிசாகப் பெறுதற்பொருட்டு முருகப் பெருமானும் மூத்தபிள்ளையாராகிய விநாயகரும் உலகத்தை விரைவிற் சுற்றிவரும் போட்டியில் ஈடுபட்டன ரென்பதும், அவருள் இளையபிள்ளையாராகிய முருகன் மயில்மீதமர்ந்து உலகத்தைச் சுற்றிவரச் செல்ல விநாயகர் உலகமே உருவாகிய சிவபெருமானை வலம்வந்து மாங்கனியை எளிதிற்பெற்று மகிழ்ந்தனரென்பதும் புராணவரலாறாகும். இச்செய்தியினை,

**கொம்பனைய வள்ளிகொழுநன் குறுகாமே**
**வம்பனைய மாங்கனியை நாரையூர் - நம்பனையே**
**தன்னவலஞ் செய்துகொளும் தாழ்தடக்கையாயென்னோய்,**
**பின்னவலஞ் செய்வதெனோ பேசு.**

**மலஞ்செய்த வல்வினை நோக்கி உலகை வலம்வருமப்**
**புலஞ்செய்த காட்சிக் குமரற்கு முன்னே புரிசடைமேற்**
**சலஞ்செய்த நாரைப் பதியரனறன்னைக் கனிதரவே**
**வலஞ்செய்து கொண்ட மதகளிறே யுன்னை வாழ்த்துவனே.**

எனவரும் பாடல்களால் ஆசிரியர் உளமுருகிப் போற்றியுள்ளார். இவ்வாறு இத்திருவிரட்டை மணிமாலையிலுள்ள திருப் பாடலைக் கூர்ந்து நோக்குங்கால் திருநாரையூர் பொல்லாப் பிள்ளையாரை வழிபடு கடவுளாகக் கொண்டு சிவநெறி பரப்பிய திருவருட் செல்வர் நம்பியாண்டார் நம்பியென்பது நன்கு புலனாம்.

## (2) கோயிற் றிருப்பண்ணியர் விருத்தம்

சிவநெறிச் செல்வர்களாற் கோயில் எனச் சிறப்பித்துப் போற்றப்பெறும் பெரும்பற்றப் புலியூராகிய தில்லைச் சிற்றம்பலத்திலே எழுந்தருளியுள்ள கூத்தப் பெருமானைப் போற்றும் கட்டளைக் கலித்துறையாகிய திருவிருத்தங்களால் இயன்ற பனுவலாதலின் இது கோயிற் றிருப்பண்ணியர் விருத்தம்

என யாப்பினாற் பெயர் பெறுவதாயிற்று. பண்ணோடியன்ற பாடல் என்ற பொருளிற் பண்ணியல் விருத்தமென்பது, லகரத்திற்கு ரகரம் போலியாய்ப் பண்ணியர் விருத்தமென்றாகித் திருப்பண்ணியர் விருத்தமென வழங்குப் பெற்றதெனக் கொள்ளுதல் பொருந்தும். கட்டளைக் கலித்துறையைத் திருவிருத்தமென வழங்கும் வழக்கம் உண்மை திருநாவுக்கரசர் அருளிய திருவிருத்தமாகிய திருப்பதிகங்களின் பெயராலும் நம்மாழ்வார் அருளிய திருவிருத்தம் என்ற பிரபந்தத்தின் பெயராலும் இனிது புலனாம். இனி, 'கோயில் திருப்பண்ணியர்' என்ற தொடர்க்குத் 'தில்லைப் பெருங்கோயிலில் எழுந்தருளி யிருந்து உயிர்களுக்குத் திருத்தகவிற்றாகிய இன்னருளைப் புரிவார்' எனப் பொருள் கொண்டு, பாட்டுடைத் தலைவனாகிய இறைவன் பெயரால் கோயிற்றிருப்பண்ணியர் விருத்தமென இந்நூல் பெயரெய்தியதெனக் கொள்ளினும் அமையும். அந்தாதியாகவமைந்த இப்பிரபந்தம், எழுபது கட்டளைக் கலித் துறைகளை யுடையதாகும். திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் அறிவுறுத்தியபடி தில்லைப் பெருங்கோயிலை யடைந்து தேவாரத் திருமுறைகளைக் காண விரும்பிய நம்பியாண்டார் நம்பிகள் இப்பனுவலைப் பாடித் தில்லைச் சிற்றம்பலவனை யிறைஞ்சிப் போற்றினார் என்பது வரலாறு.

'முற்காலத்திலே தேவர்கள் உய்யும் வண்ணம் ஆலகால நஞ்சினையுண்டு மிடற்றிலடக்கிய பெரியோனே, தில்லைச் சிற்றம்பலத்தில் திருக்கூத்தியற்றி நின்ற செம்பவளம்போலும் நிறமமைந்த திருமேனியை யுடைய சிவபெருமானே, எனதுள்ளத்திலுள்ள வஞ்சனை முதலிய குற்றங்களை நீக்கி நெஞ்சத்தை நினது திருவடிக்கீழ் நிலைபெறவைத்து மலர்போலுங் கண்களில் கண்ணீர் ததும்ப நின்னை வணங்கிப் போற்றினே னல்லேன். ஒரு சிறிதும் தகுதிபெறாத எளியேனையும் நீ ஆட்கொண்டருளினாய். நினது திருவருட்கு யான் என்ன தகுதியுடையேன் என என்னைக் கண்ட பிறரெல்லாம் நின்னைக் கடிந்துரைப்பரல்லரோ' எனத் தில்லைப் பெருமானை நோக்கி நம்பியாண்டார் நம்பிகள் உளமுருகிப் போற்றுவதாக அமைந்தது,

**நெஞ்சந் திருவடிக் கீழ்வைத்து நீண்மலர்க் கண்பனிப்ப**
**வஞ்சங் கடிந்துன்னை வந்தித்திலேன் அன்று வானருய்ய**
**நஞ்சங் கருத்து பெருந்தகையே நல்ல தில்லைநின்ற**
**அஞ்செம் பவளவண்ணா அருட்கியானினி யாரென்பரே**

எனவரும் இப்பிரபந்தத்தின் முதல் திருவிருத்தமாகும்.

இறைவன் உயிர்களது பிறவி நோயைக் களைதற்பொருட்டே தில்லைச்சிற்றம்பலத்தில் திருக்கூத்தியற்றுகின்றான். எவ்வுயிர்க்குந்

தாயுந் தந்தையுமாகிய அவ்விறைவனது திருவடியே அடியேற்குத் தலைமறை நன்னிழலாவது. காளத்திமலையில் தன்னை வழிபட்ட வேடுவராகிய கண்ணப்பர்க்கு வேண்டும் வரமருளிப் பொருவில் அன்புருவமாகிய தெய்வத் தன்மையை வழங்கிய பேரருளாளன் அவ்விறைவனாவன். பொன்னம்பலத்துறை புண்ணியனாகிய அவனுக்குப் பண்டைப் பறைச் சேந்தன் அன்பினால் அளித்த பழைய சோறும் திருவமுதாயிற்று. அம்பலவாணனாகிய அவனருளால் நம்பியாரூரராகிய சுந்தரரும் கழறிற்றறிவாராகிய சேரமான் பெருமாளும் முறையே வெள்ளை யானை மீதும் குதிரை மீதும் அமர்ந்து மக்கள் யாக்கையோடு திருக்கயிலையை யடைந்து இன்புற்றார்கள். கல்லாலெறிந்த சாக்கியனார்க்கும் இறைவன் எதிர்தோன்றி இன்னருள் புரிந்தான். கண்ணப்பர் அன்பினாற் படைத்த இறைச்சியையும் அதிபத்தரென்பார் விடுத்த மீனையும் இழித்தொதுக்கத்தக்கன எனவெண்ணாது ஏற்றுக் கொண்டமையால் உயிர்கள் செய்யும் பழிக்கத்தக்க செயல்களையும் இகழாத பண்புடையான் இறைவன் என்பது புலனாம். தன்னை வழிபடுவாரனைவர்க்கும் மீளாவழியாகிய பேரின்பத்தை வழங்கவேண்டிச் சிவபெருமான் மன்றாடவும் சில ஊமர்கள் அவ்விறைவன் திருவருளில் நாட்டமின்றிப் பிறப்பிறப்பில் வீழ்ந்து தடுமாறுதல் அந்தோ இரங்கத் தக்கது. தில்லைமன்னனாகிய சிவபெருமானைத் தம் சித்தகக் கோயிலில் இருத்தி வழிபடும் ஆகமசீலர்க்கன்றி நூல்களைக் கற்றும் கற்றவழியடங்கி நில்லாத வெறும் புத்தகப் பேய்களுக்கு அவன் பொன்னடி புலப்படுதலில்லை என நம்பியாண்டார் நம்பிகள் இந்நூலில் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

திருவாதவூரடிகளாகிய மாணிக்கவாசகசுவாமிகள் இறைவன் திருவடிக்கே பொருளமைத்து அகனைத்திணையாகிய இன்பத்துறையிற் பாடிய திருச்சிற்றம்பலக் கோவையாகிய செந்தமிழ்ப் பனுவல் உயர்வறவுயர்ந்த நலமுடைய தென்றும், அதன் பொருள் நலங்களைத் தெளிந்து கொள்ளும் வன்மை பெறாத புலவர் சிலர் அகப்பொருட்டுறையமையத் தாமும் பல பாடல்களைப் பாடுதல் அறிஞரது நகைப்பிற்கு இடந்தருவதா மென்றும் விளக்குவதாக அமைந்தது,

**வருவாசகத்தினின் முற்றுணர் ந்தோனை வண்தில்லை மன்னைத்**
**திருவாதவூர்ச் சிவபாத்தியன் செய்திருச் சிற்றம்பலப்**
**பொருளார்தருதிருக் கோவை கண்டேயும் மற்றப் பொருளைத்**
**தெருளாத வுள்ளத்தவர் கவிபாடிச் சிரிப்பிப்பரே**

என்ற பாடலாகும். திருச்சிற்றம்பலக் கோவையில் நம்பி யாண்டார் நம்பிகள் கொண்ட பெருமதிப்பு இச்செய்யுளால் இனிது புலனாதல் காண்க.

'பெரிய அன்பின் வரகுணதேவர்' எனப் பட்டினத்தடிகளாற் போற்றப் பெற்ற வரகுணபாண்டியர் திருநீற்றின்மேல் வைத்த உறைப்புடைய பேரன்பைப் புலப்படுத்தும் வரலாற்று நிகழ்ச்சியினை,

**பொடியேர் தருமேனியனாகிப் பூசல் புகவடிக்கே**
**கடிசேர் கணைகுளிப்பக்கண்டு கோயிற் கருவியில்லா**
**அடியேபட வமையுங்கணை யென்ற வரகுணன்றன்**
**முடியேதருகழல் அம்பலத் தாடிதன் மொய்கழலே.**

எனவரும் பாடலில் நம்பியாண்டார் நம்பிகள் குறிப்பிட்டுப் போற்றினமை முன்னர் விளக்கப் பெற்றது. * (* பன்னிரு திருமுறை வரலாறு. இரண்டாம் பகுதி.)

## (3) திருத்தொண்டர் திருவந்தாதி

திருவாரூர்ப் பெருமான் 'தில்லை வாழந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்' என அடியெடுத்துக் கொடுக்க நம்பியாரூரர் திருவாய் மலர்ந்தருளிய திருத்தொண்டத் தொகை யென்னுந் திருப்பதிகத்திற் போற்றப் பெற்ற திருத்தொண்டர் களின் வரலாற்றைச் சுருக்கமாக வகுத்துக் கூறும் கருத்துடன் நம்பியாண்டார் நம்பி பாடிய பனுவல் திருத்தொண்டர் திருவந்தாதி யென்பதாகும். சோழமன்னன் வேண்டிக் கொண்டபடி தில்லையில் தேவாரத் திருமுறையைக் கண்டு ஏழு திருமுறைகளாக வகுத்து உதவிய நம்பியாண்டார் நம்பி தமக்குப் பொல்லாப் பிள்ளையார் உபதேசித்தருளியபடி திருத் தொண்டத்தொகையை முதனூலாகக் கொண்டு தனியடியார் அறுபதின்மரும் ஒன்பது திருக்கூட்டத்தாரும் ஆகிய திருத்தொண்டர்களுக்குரிய ஊர், நாடு, மரபு முதலியவற்றையும் அவர்கள் மேற்கொண்டொழுகிய திருத்தொண்டின் நெறியினையும் அதனால் அவர்கள் பெற்ற பேற்றினையும் வகுத்து விளக்கும் நிலையில் கலித்துறைத் திருவந்தாதியாகிய இப்பனுவலைப் பாடியருளினாரென்பது,

**ஆக்கியபின் திருத்தொண்டத் தொகையடைவை யருளாலே**
**நோக்கியபின் நாயன்மார் நுடங்கடைவுந் தொழிற்பேறும்**
**பாக்கியத்தால் இபமுகந்தோன் அருள்செய்த பகுதியினால்**
**வாக்கியல்சேர் அந்தாதிநம்பி யடைவே வகுத்தார்.**

எனவரும் திருமுறை கண்ட புராணச் செய்யுளாலும்,

**பொன்னி வடகரை சேர்நாரையூரிற் புழைக்கைமுக**
**மன்னன் அறுபத்து மூவர் பதிதேம் மரபுசெயல்**
**பன்ன அத்தொண்டத் தொகைவகை பல்குமந்தாதி தன்னைச்**
**சொன்ன மறைக்குல நம்பிபொற் பாதத்துணை துணையே.**

என நம்பியாண்டார் நம்பிக்குரிய வணக்கமாக இத்திருவந்தாதி யின் இறுதியிற் காணப்படும் பழம் பாடலினாலும் இனிது விளங்கும்.

நம்பியாரூரர் பாடிய திருத் தொண்டத் தொகையிற் போற்றப் பெற்ற அடியார்களின் வரலாறுகளை வகுத்துக் கூறுவது இத் திருவந்தாதி யாதலின், இதனைத் 'திருத்தொண்டத் தொகைவகை' யென வழங்குதல் உண்டென்பதும், முதனூலாகிய திருத் தொண்டத் தொகையையும் அதன் வகையாகிய இத்திருவந் தாதியையும் ஆதாரமாகக் கொண்டு இயற்றப்பெற்றது திருத்தொண்டர் புராணமாதலின் அதற்குத் 'திருத்தொண்டத் தொகைவிரி' யென்றதோர் பெயரும் உண்டென்பதும்,

**அந்தமெய்ப் பதிகத் தடியார்களை**
**நந்தம் நாதனாம் நம்பியாண்டார் நம்பி**
**புந்தியாரப் புகன்ற வகையினால்**
**வந்தவாறு வழாமல் இயம்புவாம்**

எனவும்,

**தொன்றுசீர்த் திருத் தொண்டத் தொகைவிரி**
**இன்றெனாதர வாலிங் கியம்புகேன்**

எனவும் வரும் சேக்கிழாரடிகள் வாய்மொழியால் உய்த்துணரப் படும்.

திருத்தொண்டத் தொகைத் திருப்பதிகத்தினை அடியொற்றி அதன்கண் போற்றப் பெறும் அடியார்களின் வரலாறுகளை இத்திருவந்தாதி வகுத்துக் கூறுகின்றது. இதன்கண் எண்பத் தொன்பது கட்டளைக் கலித்துறைகள் உள்ளன. திருத்தொண்டத் தொகைத் திருப்பதிகத்திலுள்ள பதினொரு பாடல்களிலும் 'ஆரூரன் ஆரூரில் அம்மானுக்காளே' யென நம்பியாரூரர் தம்மைத் தொண்டர்க்குத் தொண்டராகக் குறிப்பிடுகின்றார். இப்பதினோரிடங்களிலும் சுந்தரர் வரலாற்று நிகழ்ச்சிகளைக் குறித்துப் போற்றும் பதினொரு பாடல்கள் இத்திருவந்தாதியில் முறையே அமைந்துள்ளன. திருநாவுக்கரசர், திருஞான சம்பந்தர், சேரமான் பெருமாள், கோச்செங்கட் சோழர் ஆகிய பெருமக்களின் வரலாறுகள் இரண்டிரண்டு பாடல்களிலும், ஏனைப் பெருமக்களின் வரலாறுகள் ஒவ்வொரு பாடலிலும் குறித்துப் போற்றப் பெற்றன. திருத்தொண்டத் தொகையிற் போற்றப் பெறும் தனியடியார் தொகையடியார் இத்துணைய ரென்பதை ஒரு பாடலிலும், அத்திருப்பதிகத்திலுள்ள பாடல் களின் முதற்குறிப்பினை ஒரு பாடலிலும் இத்திருவந்தாதியை ஓதுவதால் வரும் பயனை ஒரு பாடலிலும் கூறி நம்பியாண்டார்

நம்பிகள் இத்திருவந்தாதியினை நிறைவு செய்துள்ளார். இதன் அமைப்பினைக் கூர்ந்து நோக்குங்கால் இத்திருவந்தாதி திருத்தொண்டத் தொகையின் விளக்கமாக இயற்றப் பெற்ற தென்பது நன்கு விளங்கும். இதன் முதனூலாகிய திருத்தொண்டத் தொகையையும் இதனை விரித்துரைக்கும் முறையில் தோன்றிய விரிநூலாகிய பெரிய புராணத்தையும் ஒப்பு நோக்கிப் பயில்வார்க்கு இத்திருவந்தாதியின் பொருள் நலங்கள் இனிது புலனாகும்.

## (4) ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி

வேதநெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்கச் சீகாழிப்பதியில் அவதரித்து உமையம்மையார் அளித்த ஞானப்பாலைப்பருகி மூன்றாம் வயதிலேயே 'தோடுடைய செவியன்' என்னுந் திருநெறிய தமிழ் பாடிச் சிந்தையும் மொழியும் செல்லா நிலையில் அப்பாற்பட்டு விளங்கும் சிவ பரம்பொருளை 'பிரமாபுரம் மேவிய பெம்மான் இவனன்றே' எனத் தம் தந்தையார்க்குச் சுட்டிக்காட்டிய சிவஞானச் செல்வர் திருஞானசம்பந்த ரென்பது முன்னர் விளக்கப் பெற்றது. ஆளுடைய பிள்ளையாராகிய அப்பெருந்தகையாரைத் தம் ஞானகுருவாகக் கொண்டு வழிபட்டு இறைவன் திருவருளைப் பெற்றவர் நம்பியாண்டார் நம்பிகளென்பது அவர் அருளிச்செய்த ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி, திருச்சண்பை விருத்தம், திருமும்மணிக் கோவை, திருவுலாமாலை, திருக்கலம்பகம், திருத்தொகை என்னுந் செந்தமிழ்ப் பனுவல்களால் நன்கு விளங்கும். இப்பிரபந்தங்கள் ஆறும் திருஞானசம்பந்தப் பிள்ளையாரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பாடப் பெற்றனவாதலின், ஆளுடைய பிள்ளையாராகிய அவர் திருப்பெயருடன் இயைத்து வழங்கப் பெறுவனவாயின. திருஞான சம்பந்தப் பிள்ளையாரது வரலாற்றிற் காணப்படும் சிறப்புடைய நிகழ்ச்சிகள், பிள்ளையார் பிறந்தருளியதன் பயனாகத் தமிழகத்தார் பெற்ற பெருநலங்கள், சிவஞானச் செல்வராகிய பிள்ளையாருடைய திருவருட்பண்புகள் அவர் திருவாய் மலர்ந்தருளிய செந்தமிழ்த் திருப்பதிகங்களின் பொருள் நலங்கள், அத்திருப்பதிகங்களால் தமிழ் நாட்டில் நிகழ்ந்த அற்புத நிகழ்ச்சிகள் முதலியவற்றை இப்பிரபந்தங்களில் நம்பியாண்டார் நம்பி விரித்துரைத்துப் போற்றியுள்ளார்.

ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி யென்பது நூறு கட்டளைக் கலித்துறைகளால் இயன்ற பிரபந்தமாகும். நம்பியாண்டார் நம்பி சோழமன்னன் வேண்டுகோட்கிணங்கிப் பொல்லாப் பிள்ளையார் அறிவுறுத்தியபடி தில்லையில் தேவாரத்

திருமுறைகளைக் கண்டு வகைப்படுத்தித் திருத்தொண்டர் திருவந்தாதி யென்னும் பிரபந்தத்தைப் பாடுதற்கு முன்னரே 'ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி' யெனவழங்கும் இப்பிரபந்தத்தைப் பாடித் திருஞானசம்பந்தப் பிள்ளையாரைச் சிறப்பு முறையிற் போற்றி வழிபட்டுள்ளார். இச்செய்தி,

**பந்தார் விரலியர் வேள்செங்கட் சோழன் முருகன்நல்ல**
**சந்தா ரகலத்து நீலநக்கன் பெயர்தாள் மொழிந்து**
**கொந்தார் சடையர் பதிகத்திலிட்டடி யேன்கொடுத்த**
**அந்தாதி கொண்டபிரான் அருட்காழியர் கொற்றனே.**

எனவரும் திருத்தொண்டர் திருவந்தாதியாற் புலனாம். 'காழியர் கொற்றவனாகிய திருஞானசம்பந்தப் பெருமான் கோச்செங்கட் சோழர், முருகநாயனார் நீலநக்கர் ஆகிய மெய்யடியார்களின் திருப்பெயர்களைத் தான் இறைவனைப் போற்றிப், பரவிய திருப்பதிகங்களிலே யெடுத்துரைத்துப் போற்றி, அடியேன் பாடிய அந்தாதியாகிய பிரபந்தத்தினைத் தான் ஏற்றுக் கொண்டான்' என்பது இத்திருப்பாடலின் பொருளாகும். எனவே நம்பியாண்டார் நம்பி திருத்தொண்டர் திருவந்தாதியைப் பாடுதற்கு முன் ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதியினைப் பாடியுள்ளாரென்பது இனிது புலனாதல் காண்க. இத்திருவந்தாதியின் இறுதியில்,

**பாரகலத் துன்பங் கடந்தமர ராற்பணியும்**
**ஏரகலம் பெற்றாலும் இன்னாதால் - காரகிலின்**
**தூமங் கமழ்மாடத் தோணி புரத்தலைவன்**
**நாமஞ் செவிக்கிசையா நாள்.**

என்றதொரு வெண்பா அமைந்துள்ளது. துயரிலங்கும் இவ்வுலக வாழ்க்கையைத் துறந்து தேவர்களாற் போற்றப் பெறும் வானுலக வாழ்வினைப் பெற்றாலும் தோணிபுரத் தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது திருப்பெயரினைச் செவியாற் கேட்டு மகிழப் பெறாதாரது வாழ்நாள் துன்ப நாட்களென்றும், அவரை ஏத்தும் நாட்கள் இன்ப நாட்களென்றும் கருதிய உறுதிப் பாடுடையவர் இந்நூலாசிரியரென்பது நன்கு பெறப்படும்.

வாழ்க்கைக்குத் துணைபுரியும் சுற்றத்தார்களும் அவர்துணை கொண்டு ஈட்டப்படும் பொருளும் அப்பொருளால் நுகர்தற்குரிய போகமும் விலங்கினின்று மக்களைப் பிரித்து உயர்த்தும் கல்வியும் அக்கல்விப் பயனாலுளதாகும் துறவுள்ளமும் துறவினாலடைதற்குரிய பேராவியற்கை யெனப்படும் வீடுபேறும் ஆகிய எல்லா நலங்களையும் திருஞானசம்பந்தப் பிள்ளை யாருடைய திருநாமங்கள் ஒருங்கே தருவன எனத் தெளிந்து நம்பியாண்டார் நம்பிகள் ஆளுடைய பிள்ளையாரை வழிபட்டு வந்தனரென்பது,

**உறவும் பொருளுமொண் போகமுங் கல்வியுங் கல்வியுற்ற**
**துறவும் துறவிப்பயனும் எனக்குச் சுழிந்தபுனற்**
**புறவும் பொழிலும் பொழில்சூழ் பொதும்பும் ததும்ப வண்டின்**
**நறவும் பொழிலெழிற் காழியர்கோன் திருநாமங்களே.**

*எனவரும் அவரது வாய்மொழியால் நன்கு தெளியப்படும்.*

*தம் நெஞ்சத்திலே திருஞானசம்பந்தப் பெருமான் குருவாகத் தோன்றியருள்புரிந்த செய்தியினை,*

**'பொருளென என்னைத் தன் பொற்கழல்காட்டிப் புகுந்தெனக்கிங்**
**கருளிய சீர்த்திரு ஞானசம்பந்தன்'**

*என்ற தொடரால் நம்பியாண்டார் நம்பி குறிப்பிட்டுள்ளார். உமையம்மையாரளித்த ஞானப்பாலைப் பருகித் திருநெறிய தமிழால் யாவரும் சிவபெருமானது திருவருளையுணர்ந்து இன்புறுதற்குரிய பதிகப்பெரு வழியினைத் தோற்றுவித்தருளிய திறத்தால் தமிழ் மக்களுக்கு ஞானக் கண்ணாகவும் சாதிசமய வேற்றுமையின்றி யாவரும் இறைவனடி சேர்ந்து இன்புறுதற்குரிய உயர்ந்த உண்மைகளை அருளிச் செய்யும் அருட் பண்பினால் விரிந்த உள்ளத்தினராகவும் உலகமக்க ளனைவரும் உளமுவந்து போற்றும் உயர்ந்த குணநலங்களைப் பெற்றுவிளங்கிய திருவருட் செல்வர் ஆளுடைய பிள்ளையாராதலின் அப்பெருந்தகையாரை,*

**'பதிகப் பெருவழிகாட்டப் பருப்பதக்கோன்பயந்த**
**மதியத்திருநுதல் பங்கன் அருள்பெறவைத்த எங்கள்நிதி'**

*எனவும்,*

**'தீந்தமிழோர் கண்ணெனவோங்குங் கவுணியர் தீபன்'**

*எனவும்,*

**'குறுமனமுன் கலவாத் தமிழாகரன்'**

*எனவும்,*

**'உலகம் பரசுங் குணந்திகழ் ஞானசம்பந்தன்'**

*எனவும் இத்திருவந்தாதியில் ஆசிரியர் பாராட்டிப் போற்றி உள்ளார். கவுணியர் கோத்திரத்திலே தோன்றிச் சமணம் பௌத்தம் என்னும் புறச்சமயங்களை வாதில் வென்று செந்தமிழ்ப் பதிகங்களால் சிவநெறிபரப்பிய திருஞான சம்பந்தர்க்குக் கவுணியர் தீபன், பரசமயகோளரி, அருகாசனி, தமிழாகரன், தமிழ்விரகன், சைவசிகாமணி முதலிய சிறப்புப் பெயர்கள் இத்திருவந்தாதியில் வழங்கப் பெற்றுள்ளன.*

*சிவபெருமானையன்றிப் பிறரெவரையுங் கருதாத ஒரு நெறிய மனமுடையார் திருஞானசம்பந்தப் பிள்ளையாராதலின்*

அவர் திருப்பாதங்களைப் பணிந்து போற்றும் அடியார்கள் இறைவனது திருவருளை எளிதிற் பெறுவார்கள் எனவும், திருஞான சம்பந்தர்பால் அளவிலாப் பேரன்புடையார் சிறுத்தொண்டநாயனாராதலின் அவரைப் போற்றுவோர் திருஞானசம்பந்தர் திருவடித் துணையை எளிதிற் பெறுவர் எனவும், திருமாலும் நான்முகனுந்தேடிக் காணுதற்கரிய சிவபெருமானைத் தம் கண்களாற்கண்டு தந்தைக்குங் காட்டிய ஞானச்செம்மலாராகிய ஆளுடைய பிள்ளையாரைச் செந்தமிழ்ப் பாடல்களால் போற்றிப் பரவுதற்குத் தாம் எத்துணையோ தவஞ் செய்திருத்தல் வேண்டும் எனவும், தமிழ்க்கடவுலாகிய ஞானசம்பந்தரை யன்றிப் பட்டத்து யானைமீது உலாவரும் பெருவேந்தராயினும் பிறரெவரையும் தாம் பாடுவதில்லை யெனவும், நம்பியாண்டார் நம்பிகள் இத்திருவந்தாதியில் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். திருஞான சம்பந்தரைப் பாட்டுடைத் தலைவராகவும் கிளவித் தலைவராகவும் கொண்டு பாடப்பெற்ற அகத்துறைச் செய்யுட்கள் இத் திருவந்தாதியில் இடம்பெற்றுள்ளன.

"புகழ் நிரம்பிய திருஞானசம்பந்தப் பெருமானை அடியேன் பரவிப்போற்றிய இச்செந்தமிழ்ப் பாடல்களைக் கற்று வல்லவர்கள் பெறுதற்குரிய பேரின்பவுலகத்தையே தங்களுக்குத் தந்தருளும்படி திருமாலும் பிரமனும் சிவபெருமானை நன்னீரும் நறுமலருங்கொண்டு வழிபட்டு வேண்டிக் கொள்வார்கள்" என்பார்,

**சேரும்புகழ்த்திரு ஞானசம்பந்தனை யானுரைத்த**
**பேருந்தமிழ்ப்பா இவைவல்லவர் பெற்ற இன்புலகம்**
**காருந் திருமிடற்றாய் அருளாயென்று கைதொழுவர்**
**நீருமலருங் கொளாநெடு மாலும் பிரமனுமே.**

எனவரும் பாடலால் இத்திருவந்தாதியினைக் காதலாகி ஓதுவோர் பெறும் பேரின்பநிலையினை இனிது புலப்படுத்தியுள்ளார்.

## (5) ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம்

சண்பையென்பது சீகாழிப்பதிக்குரிய பன்னிரண்டு திருப்பெயர்களுள் ஒன்று. ஆளுடைய பிள்ளையார் பிறந்தருளிய சண்பையென்னும் தலத்தினைக் கட்டளைக் கலித்துறையாகிய திருவிருத்தத்தாற் போற்றுவது இப்பிரபந்தமாதலின் ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம் என வழங்கப் பெறுவதாயிற்று. இதன்கண் பத்துப் பாடல்கள் உள்ளன. பதினொராம் பாடலாக அமைந்த இதன் இறுதிச்செய்யுள் மேற்கூறிய பத்துப் பாடல்களின் முதனினைப்புச் செய்யுளாகும்.

ஆளுடைய பிள்ளையார் இளம்பருவத்திலேயே உமையம்மையாரளித்த பாலடிசிலுண்டு சிவஞானம் பெற்றதும், தன்கணவன் பாம்பு தீண்டியிறந்தமை கண்டு அல்லலுற்றழுத மங்கையொருத்தியின் வருத்தம் நீங்க விடந்தீர்த்த திருப்பதிகத்தை யருளியதும், பாலை நிலமாக உருத்திரிந்த திருநனிபள்ளியை நெய்தல் நிலமாக வளம் பொருந்தப்பாடியதும், ஆன்மாக்கள் பிறவித்துயர் நீங்கி இன்புறும் வண்ணம் வினையினைப் போக்கும் இறைவனடிக்கே செந்தமிழ்ப் பாமாலைகளைப் புனைந்து போற்றியதும், திருமறைக்காட்டில் திருக்கதவம் அடைக்கப் பாடியருளியதும், வையையாற்றில் எதிரேறிச் செல்லும்படி திருப்பதிகம்பாடி அமணர்களை வென்று அன்னோர்கழுவேறக் கண்டதும், நல்லூர்ப் பெருமணத்தில் வாழ்க்கைத் துணைவி யொடும் இறைவனது ஈறில்பெருஞ் சோதியிற்புக்கு ஒன்றி இன்புற்றதும் ஆகிய செய்திகள் இப்பனுவலில் குறித்துப் போற்றப் பெற்றுள்ளன.

## (6) ஆளுடைபிள்ளையார் திருமும்மணிக்கோவை

ஆளுடைபிள்ளையாரது திருப்புகழை விரித்துரைப்பதாகிய இப்பனுவல், அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறையாகிய மூவகைப் பாக்களால் இயன்று மூவகை மணிகளாலாகிய அழகிய மணிவடம் போன்று திகழ்வதாகலின் ஆளுடையபிள்ளையார் திருமும்மணிக்கோவை யென்னும் பெயர்த்தாயிற்று. இதன்கண் முப்பது பாடல்கள் உள்ளன. ஆளுடைபிள்ளையாரது வரலாற்று நிகழ்ச்சிகளைக் குறித்துப் போற்றும் பாடல்களும், அவர் திருவாய் மலர்ந்தருளிய செந்தமிழ்ப் பதிகங்களின் சிறப்பினை விரித்து உரைக்கும் பாடல்களும், பிள்ளையாரைக் காதலித்த தலைமகளது துயர் கிளந்துரைக்கும் அகத்துறைப் பாடல்களும், அவரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டமைந்த அகத்துறைப் பாடல்களும், இம் மும்மணிக் கோவையில் இடம் பெற்றுள்ளன.

திருஞானசம்பந்தப் பிள்ளையார் சிவனருளால் இவ்வுலகிற் செய்தருளிய அற்புத நிகழ்ச்சிகள் பலவற்றைத் தொகுத்துரைத்துப் போற்றுவது,

**அடுசினக் கடகரி யதுபட வுரித்த**
**படர்சடைக் கடவுள்தன் திருவருளதனாற் பிறந்தது**
**கழுமலமென்னுங் கடிநகரதுவே, வளர்ந்தது**
**தேங்கமழ் வாவிச் சிலம்பரையன் பெறு**
**பூங்குழல் மாதிடுபோனகம் உண்டே, பெற்றது**
**குழகனைப் பாடிக் கோலக் காப்புக்**
**கழகுடைச் செம்பொற் றாளமவையே, தீர்த்தது**
**தாதமர் மருகற் சடையனைப் பாடிப்**

பேதுறு பெண்ணின் கணவனைவிடமே, அடைந்தது
அரைசோ டிசையா அணிமறைக் காட்டுக்
குரைசேர் குடுமிக் கொழுமணிக்கதவே, ஏறிற்று
அத்தியும் மாவும் தவிர அரத்துறை
முத்தின் சிவிகை முன்னாட்பெற்றே, பாடிற்று
அருமறை ஓத்தூர் ஆண்பனை யதனைப்
பெருநிறம் எய்தும் பெண்பனை யாவே, கொண்டது
பூவிடு மதுவிற் பொறிவண் டுழலும்
ஆவடு துறையிற் பொன்னா யிரமே, கண்டது
உறியொடு பீலி ஒருகையிற் கொள்ளும்
பறிதலைச் சமணைப் பல்கழு மிசையே, நீத்தது
அவிழ்ச்சுவை யேயறிந் தரனடி பரவுந்
தமிழ்ச்சுவை யறியாத் தம்பங்களையே, நினைந்தது
அள்ளற் பழனக் கொள்ளம் புதூர்
இக்கரை ஓடம் அக்கரைச்செலவே, மிக்கவர்
ஊனசம்பந்தம் அறுத்துயக் கொளவல
ஞானசம்பந்தன் இஞ் ஞாலத்திடையே.

எனவரும் இம் மும்மணிக் கோவைப் பாடலாகும். 'எண்ணிலாத ஆன்மாக்களின் ஊனசம்பந்தமாகிய பிறவிப் பிணியைப் போக்கி உய்வித் தருளவல்ல திருஞானசம்பந்தப் பெருமான் சிவனருளால் இவ்வுலகில் திருவவதாரஞ் செய்தருளிய திருத்தலம் திருக் கழுமலம். அவர் வளர்ந்தது, மலையமரையன் மகளார் உமாதேவியாரளித்த ஞானப்பால் அடிசிலை உணவாகக் கொண்டு, அவர் இறைவனைப் பாடிப் பெற்றது, திருக் கோலக்காவில் செம்பொன்னாலாகிய தாளத்தினை. அவர் தீர்த்தது, திருமருகலில் வருத்தமுற்ற பெண்ணொருத்தியின் துயர்க்கிரங்கி அவள் கணவனது விடத்தினை. அவர் அடைந்தது, திருநாவுக்கரசரொடுகூடித் திருமறைக்காட்டில் திருக்கதவினை. அவர் ஊர்தியாகக் கொண்டேறிது, யானையுங் குதிரையுமின்றித் திருவரத் துறையண்ணல்பால் முன்னாள்பெற்ற முத்துச் சிவிகையினை அவர் பாடியது, திருவோத்தூரில் ஆண்பனை பெண்பனை ஆக. அவர் பெற்றுக் கொண்டது, திருவாவடு துறையில் ஆயிரம் பொன்னிறைந்த பொற்கிழியினை. அவர் கண்டது, உறியையும், பீலியையும் கையிற்கொண்ட சமணர்கள் கழுவேறிய துன்பக் காட்சியினை. அவர் விடுத்து நீங்கியது, உணவின் சுவையொன்றையே யறிந்து அவ்வளவில் அமைந்து சிவனடி பரவும் செந்தமிழ்ப் பாடல்களின் சுவை நலத்தினைச் சிறிதும் உணரப்பெறாத தம்பம் போன்ற மடவோரை. அவர் திருவுள்ளத்தில் நினைத்தருளியது. திருக்கொள்ளம் பூதூரில் ஆற்றின் இக்கரையிலே நின்ற ஓடம் அக்கரையிலே சென்று

சேர்தலை' என்பது இதன் பொருள். இதன் கண் 'அவிழ்ச்சுவையே யறிந்து அரனடி பரவுந் தமிழ்ச்சுவையறியாத் தம்பங்கள்' என்றது, இறைவனது பொருள்சேர் புகழினை விரித்துரைக்கும் செந்தமிழ்ப் பாடலின் சுவைநலத்தினை யறிந்து மகிழும் மதுகையின்றித் தம் வயிறாகிய தூராக்குழியைத் தூர்த்தற் பொருட்டு உணவின் சுவையொன்றினையே விரும்பிவாழும் வாயுணர்வின் மாக்களை. 'செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள், அவியினும் வாழினும் என்' எனத் திருவள்ளுவர் கூறிய வாய்மொழி ஈண்டு நினைக்கத்தக்கது. பிணம்போல்வாராகிய இம்மாக்களது கூட்டுறவு அறியாமையை விளைவிப்பதாதல் உணர்ந்து ஆளுடை பிள்ளையார் இத்தகைய மாக்களை விலக்கியொழுகினர் என்பது, 'நீத்தது, அவிழ்ச்சுவையேயறிந்து அரனடி பரவுந் தமிழ்ச் சுவையறியாத் தம்பங்களையே' எனவரும் இத் தொடரால் நன்கு புலனாகும்.

திருஞானசம்பந்தப் பெருமான் திருவாய் மலர்ந்தருளிய தேவாரப் பதிகங்களாகிய ஞானத் தமிழ், பிறவியாகிய பெருங் கடலை நீந்திக் கடக்குங்கால் உள்ளே நீர் கசிந்து அமிழாதபடி தோலாற் பொதிந்து அமைக்கப்பட்ட அழகிய தோணிபோல் நின்று உதவும் என்பதனை,

**பிறவியெனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத்**
**துறவியெனுந் தோற்றோணி கண்டீர் - நிறையுலகிற்**
**பொன்மாலை மார்பன் புனற்காழிச் சம்பந்தன்**
**தன்மாலை ஞானத் தமிழ்.**

என்ற பாடலால் அறிவுறுத்துவர் ஆசிரியர். உலகில் தீமை யெல்லாம் நீங்கத் திருவவதாரஞ் செய்தருளிய சைவசிகாமணி யாகிய திருஞானசம்பந்தப் பெருமான் திருவடிகள், எக்காலத்தும் அடியார்கள் உள்ளத்தே அகலாதிருந்து இன்பஞ்செய்தும், இவ்வுலகில் வாழும் மக்கள் நல்லமலர்களைக் கொண்டு அருச்சித்து வழிபடும் நிலையில் வெளிப்பட்டும் நன்மை நிறைந்த கல்விக் கழகத்தே அன்பினால் அளவளாவி மகிழும் புலவர்கள் பாடும் செய்யுட்களுக்கு ஏற்ற உரிமையுடையன வாகவும் விளங்குமியல்பினை,

**என்றும் அடியவர் உள்ளத் திருப்பன இவ்வுலகோர்**
**நன்று மலர்கொடு தூவித் துதிப்பன நல்லசங்கத்**
**தொன்றும் புலவர்கள் யாப்புக்குரியன ஒண்கலியைப்**
**பொன்றுங் கவுணியன் சைவசிகாமணி பொன்னடியே.**

என்ற பாடலால் நம்பியாண்டார் நம்பி விரித்துரைத்துப் போற்றியுள்ளார்.

திருஞானசம்பந்தப் பெருமானது பேரழகில் ஈடுபட்டு அப்பெருமானையணையப் பெறாது வருந்தும் தன் மகளது ஆற்றாமை கண்டு வருந்திய நற்றாய், ஞானசம்பந்தப் பெருமானையடைந்து தன் மகளது பேதுறவைத் தீர்த்தருளும் படி வேண்டுவதாக அமைந்தது.

**'தனமலி கமலத் திருவெனுஞ் செல்வி**
**விருப்பொடு திளைக்கும் வீயா இன்பத்**
**தாடக மாடம் நீடுதென் புகலிக்**
**காமரு கவினார் கவுணியர் தலைவ**
**பொற்பமர் தோள நற்றமிழ் விரக**
**மலைமகள் புதல்வ கலைபயில்நாவ, நினாது**
**பொங்கொளி மார்பில் தங்கிய திருநீறு**
**ஆதரித் திறைஞ்சிய பேதையர் கையில்**
**வெள்வளை வாங்கிச் செம்பொன் கொடுத்தலிற்**
**பிள்ளையாவது தெரிந்தது பிறர்க்கே.**

என்ற பாடலாகும். 'கலைபயில் நாவினனாகிய கவுணியர் தலைவனே, நினது பேரொளிதிகழுந் திருமார்பிற் பூசப் பெற்று விளங்கும் திருவருள் வண்ணமாகிய திருநீற்றினைப் பெற விழைந்து நின்னை வந்திறைஞ்சிய இளமகளிர்களின் கைகளிலணியப் பெற்ற வெள்ளிய வளையல்களை வாங்கிக் கொண்டு அவற்றிற்கு ஈடாகச் செம்பொன்னைத் தருதலால் மலைமகள் புதல்வனாகிய நீ வினவு தெரியாத பிள்ளைமைப் பருவத்தினனென்பது, நின்னை ஏமாற்றிச் செம்பொன்னைப் பெற்ற அம்மகளிர்க்கேயன்றி, அன்னோர் பெற்ற பொன்னின் மிகுதியால் பிறரெல்லார்க்குந் தெளிவாகத் தெரிந்து விட்டதே' என்பது இப்பாடலின் பொருளாகும். இதன்கண் ஞானசம்பந்தப் பிள்ளையாரைக் கண்டு காமுற்ற மகளிர் அப்பெருமானது திருமேனிப் பேரழகில் உள்ளத்தைப் பறிகொடுத்தமையால் கைவளைகள் கழல உடலிளைத்து நிறம் வேறுபட்டு வருந்து மியல்பினைக் கூறக் கருதிய நற்றாய், அம்மகளிர் செயலை அவர்களாற் காதலிக்கப்பெற்ற பிள்ளையார் மேலேற்றிக் 'கவுணியர் தலைவனாகிய நீ மகளிர் கைவளைகளை வாங்கிக் கொண்டு செம்பொன்னைத் தருகின்றாய்' எனக் கூறியது. தன்மகள் ஒரு குற்றமுமறியாள் எனச் சாதிக்கும் தாயுள்ளத்தை நன்கு புலப்படுத்துதல் காண்க. 'வாணிகம் புரிவோர் சங்க வளையல்களுக்கு ஈடாகப் பொன்னைக் கொடுத்து ஏமாற மாட்டார்கள். பாலறாவாயனாகிய நீயோ பேதையர் கைவளைகளுக்கு ஈடாகப் பொன்னைக் கொடுத்து ஏமாந்தனை. இவ்வாறு நீ ஏமாந்த செய்தி ஏனையோர்க்குந் தெரிந்து விட்டதே' என நற்றாய் ஞான சம்பந்தப் பெருமானை நோக்கி நகைச்சுவை

பெற வுரையாடியதாக நம்பியாண்டார்நம்பி இப்பாடலிற் புலப்படுத்திய திறம் நினைந்து மகிழத்தக்கதாகும்.

## (7) ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை

திருஞானசம்பந்தப் பிள்ளையார், பேதை முதல் பேரிளம் பெண் ஈறாகவுள்ள ஏழு பருவத்து மகளிரும் காதல் கூர்ந்து தளர்வுறச் சீகாழிப் பதியிலே திருவுலாப் போந்தருளிய இயல்பினை விரித்துரைத்துப் போற்றுவது இப்பிரபந்தமாதலின், ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை யென்னும் பெயர்த் தாயிற்று. உலாப் பிரபந்தத்திற்குரிய மரபின்படி கலிவெண்பா வினால் அமைந்த இப்பிரபந்தம் ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலையென மாலை யென்ற பெயரால் வழங்கப் பெற்றமை கூர்ந்து நோக்கத்தக்கதாகும். உலாப் பிரபந்தங்களிற் பாட்டுடைத் தலைவனது இயல்பு பேசப்படுதலே யன்றி அத்தலைவனைக் கண்டு காதலித்து மயங்கிய பேதை முதல் பேரிளம் பெண் ஈறாகவுள்ள ஏழு பருவத்து மகளிர் செய்திகளும் தனித்தனியே விரித்துரைக்கப் படுதல் மரபு. பாட்டுடைத் தலைவனியல்பினையும் அவனைக் கண்டு காமுற்ற ஏழுவகைப் பருவத்து மகளிர் செய்திகளையும் ஒப்ப விரித்துரைப்பனவாகிய உலாப் பிரபந்தங்கள் திருக்கயிலாயஞானவுலா, திருவாரூருலா எனப் பாட்டுடைத் தலைவனது ஊரொடு சார்த்தி வழங்கப் பெறுதலும், விக்கிரம சோழனுலா, குலோத்துங்க சோழனுலா எனப் பாட்டுடைத் தலைவன் பேரொடு சார்த்தி வழங்கப் பெறுதலுமாகிய இருதிறத்தனவாகக் காணப்படுகின்றன.

ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை யெனும் இப்பிரபந்தத்திற் பாட்டுடைத் தலைவராகிய ஆளுடைய பிள்ளை யாரது இயல்பே பெருக விரித்துரைக்கப் பெற்றுளது. பிள்ளையாரைக் காதலித்த எழுவகைப் பருவத்து மகளிர் செய்திகளும் உலாக்களில் வரும் குழாங்கள் என்ற அளவிற் பொதுவகையிற் கூறப்பட்டதன்றிப் பேதை முதலிய ஏழு பகுதிகளாகத் தனித்தனியே வகுத்துக் கூறப்படவில்லை. எழுவகைப் பருவத்து மகளிரும் காமுற்று வருந்தத் திருஞான சம்பந்தப் பிள்ளையார் திருவுலாப் போந்தருளினார் என்னும் ஒரு பொருளையே கருதிய இயல்புடையது இப்பிரந்தமாதலின், ஏனைய உலாக்களைப்போன்று உலாவென்னும் பெயரால் வழங்கப்பெறாது, உலாமாலை யென வழங்கப் பெறுவதாயிற்று. இங்ஙனம் ஒரு பொருளையே கருதிக் கூறிய செய்யுள், இயல்பு என்னும் பொருளுடைய மாலை யென்ற பெயுரால் வழங்கப் படுதலுண்டென்பது, சிலப்பதிகாரத்திலுள்ள துன்ப மாலை, வஞ்சின மாலை * (* "இக்கலிவெண் பாட்டுப் பத்தினித்

தன்மைத்தாகிய ஒரு பொருளையே கருதிக் கூறிய இயல்பை யுடைத்தாகலின் மாலையென்றார்" என்பர் அடியார்க்கு நல்லார். (சிலப், பதிக.80) யென்ற பெயர் வழக்கத்தால் நன்கு துணியப்படும்.

ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலையாகிய கலிவெண்பா 143 கண்ணிகளை யுடையதாகும். சீகாழிப் பதியின் எழில் நலங்களும், அந்நகரத்தே பிறந்து நான்கு மறைகளையும் பல கலைகளையும் கற்றுணர்ந்து நான்முகனை யொத்த பெருஞ் சிறப்புடையராய் நன்னெறியிலொழுகும் நானூற்றுவராகிய மறையவர்களின் மாண்பும், பன்னிரண்டு திருப்பெயர்களை யுடைய காழிப்பதியிலே கவுணியர் குலத்தில் தோன்றிய ஆளுடைய பிள்ளையார் சிவபெருமானருளால் அழகியபொற் கிண்ணத்திலே உமையம்மையார் அளித்த ஞானவார முதத்தைப் பருகித் திருஞானசம்பந்தர் என்னும் திருப்பெயர் பெற்றுத் திருநெறிய தமிழாகிய இன்னிசைத் திருப்பதிகங்களால் உமையொரு பாகத்து அண்ணலைப் பாடிப் போற்றிப் பல அற்புதங்களை நிகழ்த்தி மதுரையிற் சமணரை வாதில் வென்று சிவநெறி பரப்பிய சீர்த்தியும் இத்திருவுலா மாலையின் முற்பகுதியிலே சுவைபெற விரித்துரைக்கப்பெற்றன.

நான்மறை வல்ல வேதியர்களும் நாற்பத் தெண்ணாயிர முனிவர்களும் புடை சூழ்ந்து போற்றத் திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவோலக்கத்தில் எழுந்தருளியிருத்தலும், அத்திருவோலக்கத்திற்புகுந்து ஆளுடைய பிள்ளையாரைச் சேவித்து மகிழ்ந்த புகலி நகரத்துப் பூசுரர்கள் தாம் கண்ட அவ்வழகிய காட்சியைத் தம் நகர மக்கள் அனைவரும் காண வேண்டுமென்னும் பெருவேட்கையுடையராய்ப் பிள்ளையாரைப் பணிந்து 'சீகாழிப்பதியின் வீதியிலே திருவுலாப் போந்து எங்களுக்குக் காட்சி தந்தருளல் வேண்டும்' என விண்ணப்பஞ் செய்தலும், அவர்களது வேண்டு கோட்கு இசைந்த ஆளுடைய பிள்ளையார் மன்னவர் திருவும் தங்கள் வைதிகத்திருவும் விளங்கச் சிறந்த அணிகலன்களை யணிந்தருளிச் சிறுத் தொண்டர் முதலிய நண்பு மிக்க அடியார்கள் உடன்வரப் பல இன்னியங்கள் முழங்க யானைமீதமர்ந்து சீகாழிப் பதியின் திருவீதியிலே திருவுலாப் போந்தருளுதலும், பேதை முதல் பேரிளம் பெண் ஈறாகவுள்ள ஏழு பருவத்து மகளிரும் அத்திருவுலாவில் ஆளுடைய பிள்ளையாரைக் கண்டு கைதொழுது தம் கைவளைகள் கழல நாணிழந்து மெய் சோர்ந்து தமக்குட் பலவாறாகப் பேசி மையலுற்று வருந்துதலும் ஆகிய செய்திகள் இத்திருவுலா மாலையின் பிற்பகுதியிற் கூறப்பெற்றுள்ளன.

இதன்கண் திருஞானசம்பந்தப் பிள்ளையார் விருந்தென்னும் வனப்பமையப்பாடிய திருவிராகம், திரு விருக்குக்குறள், திருப்பாசுரம், பல்பெயர்ப்பத்து, யாழ்முரி, சக்கரமாற்று, ஈரடி முக்கால் முதலிய யாப்பு விகற்பங்களை,

**"எப்பொழுதும்**
**நீக்கரிய இன்பத் திராகம் இருக்குக்குறள்**
**நோக்கரிய பாசுரம் பல்பத்தோடும் - ஆக்கரிய**
**யாழ்முரி சக்கரமாற் றீரடி முக்காலும்**
**பாழிமையாற் பாரகத்தோர் தாமுய்ய - ஊழி**
**உரைப்பமரும் பல்புகழால் ஓங்க வுமைகோனைத்**
**திருப்பதிகம் பாட வல்ல சேயை'**

எனவரும் தொடரால் நம்பியாண்டார் நம்பி எடுத்துரைத்துப் போற்றினமை உணர்ந்து மகிழத்தக்க தாகும்.

## (8) ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம்

கலம்பகம் என்பது தமிழிலுள்ள பிரபந்தவகைகளுள் ஒன்று. புயம், தவம், வண்டு, அம்மனை, பாண், மதங்கு, கைக்கிளை, சித்து, ஊசல், களி, மடக்கு, ஊர், மறம், காலம், தழை, இரங்கல், சம்பிரதம், கார் என்னும் இப்பதினெட்டுறுப்புக்களையும் பெற்று வருவது கலம்பகம் என்னும் பிரபந்தமாகும். இதன் முதற்கண் ஒருபோகு, வெண்பா, கலித்துறை யென்னும் இம் மூன்றும் முதலுறுப்பாய் வருமெனவும், இவற்றின்பின் ஆசிரிய விருத்தம், ஆசிரியப்பா, வஞ்சித்துறை வஞ்சி விருத்தம் வெண்டுறை, வெண்பா, மருட்பா, கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்தம் என்ற பாக்கள் ஏற்றவாறு வருமெனவும் வெண்பாப் பாடியலுடையார் கலம்பகத்தின் இலக்கணத்தினை விரித்துரைப்பர். இப்பிரபந்தத்திலுள்ள பாடல்கள் அந்தாதியாகத் தொடுக்கப்பெற்று இறுதிப் பாடலின் இறுதி முதற்பாடலின் முதற் சொல்லுடன் மண்டலித்து முடிதல் வேண்டுமென்பது விதி.

இப்பொழுது கிடைத்துள்ள கலம்பகங்களுள் தெள்ளாறெறிந்த நந்திவர்மனென்னும் பல்லவ மன்னனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு புலவ ரொருவர் பாடிய நந்திக் கலம்பகமே காலத்தால் முற்பட்டதாகும். அதனையடுத்துப் பழமையுடையதாக எண்ணத்தகுவது பதினொராந் திருமுறையிலுள்ள ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பக மென்னும் இப்பிரபந்தமேயாகும். திருஞானசம்பந்தப்' பிள்ளையாரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பாடப்பெற்றமையின் இஃது ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம் என்னும் பெயர்த்தாயிற்று. இதன்கண் ஒன்றுமுதல் நாற்பத்தொன்பது

வரையுள்ள பாடல்களே இப்பொழுது கிடைத்துள்ளன. நாற்பத்தொன்பதாம் பாடல் 'எழிலிணையடி யிசைமினே' என முடிகின்றது. இவ்விறுதி 'அலையார்ந்த' எனத் தொடங்கும் முதற் பாடலின் முதற் சொல்லோடு மண்டலித்து முடியவில்லை. அன்றியும் இப்பிரபந்தத்தின் முதற் பாடலாகிய ஒருபோகின்கண் தரவென்னும் உறுப்புக் காணப்படவில்லை. எனவே இக்கலம்பத்தின் முதற்பாடலின் முதலுறுப்பாகிய தரவும் நாற்பத்தொன்பதாம் பாடலுக்குப் பின்னுள்ள ஏனைய பாடல்களும் ஏடுகளின் சிதைவினால் மறைந்தன வெனக் கருத வேண்டியுளது. தேவர்க்கு நூறு செய்யுளும் முனிவர்க்குத் தொண்ணூற்றைந்தும் அரசர்க்குத் தொண்ணூறும் அமைச்சர்க்கு எழுபதும் வணிகர்க்கு ஐம்பதும் ஏனையோர்க்கு முப்பதும் என்ற வரையறையுடன் கலம்பக மாகிய இப்பிரபந்தம் இயற்றப்பெறுதல் வேண்டுமெனப் பிற்காலத்தில் வெண்பாப் பாட்டியலுடையார் வகுத்த சாதிபற்றிய பாட்டியல் மரபு அவர்க்குப் பன்னூறாண்டுகள் முற்பட்டுத் தோன்றிய தொள்ளாறெறிந்த நந்திவர்மன் காலத்தும் நம்பியாண்டார் நம்பிகள் காலத்தும் நிலவியதெனக் கொள்ளுதற்கில்லை.

சிவபெருமானருளால் சீகாழிப்பதியிற்றோன்றி, உமையம்மையார் அளவிறந்த ஞானத்தை அமிர்தாக்கிப் பொற்கிண்ணத் தளித்தருளப் பாலமுதாகிய அதனை நுகர்ந்து, தேவராலும் காணுதற்கரிய கடவுளைத் 'தோடுடைய செவியன்' என்ற திருப்பதிகத்தால் 'எமக்கு அருள்புரிந்த பெருமான் பிரமாபுரமேவிய இவனே' எனத் தம் தந்தையார்க்கு அடையாளங்களுடன் சுட்டிக்காட்டிய திருஞானசம்பந்தப் பிள்ளையார், திருத்தலங்கள் தோறுஞ் சென்று அங்கங்கே வாழும் மக்கள் இறைவனது திருவருள் நெறியைக் கடைப்பிடித்து இடர் நீங்கி யின்புறுதல் வேண்டி நிலையான திருப்பதிகங்களை யருளிச்செய்து உலகத்தார்க்கு இறைவன் திருவடிகளிற் பத்திமையை விளைவித்த வரலாறு, இக்கலம்பத்தின் முதற் பாடலிற் குறித்துப் போற்றப் பெற்றுளது.

பலமலி தருந் தமிழ், முத்தமிழ், செழுமலயத்தமிழ் அறிவாகி யின்பஞ்செய் தமிழ், பயனிலவு ஞானத் தமிழ், வீறதார் தமிழ் எனத் தமிழின் சிறப்பினை நம்பியாண்டார்நம்பி இக்கலம்பத்தில் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். திருஞானசம்பந்தப் பிள்ளையார் இங்ஙனம் அறிவாகி இன்பஞ்செய் தமிழ்மொழியின் துணைகொண்டே வடமொழியில் வல்ல சமணர்களை வாதில் வென்றார் என்பதனை,

**அறிவாகி யின்பஞ்செய் தமிழ்வாதில் வென்றந்த**
**அமணான வன்குண்டர் கழுவேற முன்கண்ட**
**செறிமாட வண்சண்பை நகராளி என்தந்தை**
**திருஞானசம்பந்தன்**

எனவருந் தொடரால் இனிது விளக்கியுள்ளார். இக் கலம்பத்திலுள்ள செய்யுட்கள் ஆளுடைய பிள்ளையார் செய்தருளிய அருட் செயல்களையும் அவர் திருவாய் மலந்தருளிய திருப்பதிகளின் சிறப்பினையும் புலப்படுத்துவனவாகவுள்ளன.

**பெறுபயன் மிகப்புவியுள் அருளுவன, பிற்றைமுறை**
**பெறுநெறியளிப்பன, பல்பிறவியை ஒழிச்சுவன,**
**உறுதுய ரழிப்பன, முன்உமைதிரு வருட்பெருக**
**வுடையன, நதிப்புனலினெ திர்பஃறி உய்த்தன, புன்**
**நறுமுறுகுறைச் சமணை நிரைகழு நிறுத்தியன,**
**நனிக தவடைத்தன, துனருவிடம் அகற்றியன,**
**துறுபொழில் மதிற்புறவ முதுபதிமன் ஒப்பரிய**
**தொழில்பல மிகுத்ததமிழ் விரகன கவித்தொகையே,**

எனவரும் பாடல், தமிழ் விரகராகிய ஆளுடைய பிள்ளையார் திருவாய்மலர்ந்து அருளிய திருப்பதிகங்களால் நிகழ்ந்த அற்புதங்களை விரித்துரைத்தல் காண்க.

**"கொடிநீடு விடையுடைய பெருமானை அடிபரவு**
**குணமேதை, கவுணியர்கள் குலதீப சுபசரிதன்**
**அடியேன் திடர்முழுதும் அறவீசு தமிழ்விரகன்"**

எனவும்,

**'கழுமல நாதன் கவுணியர் குலபதி**
**தண்டமிழ் விரகன் சைவ சிகாமணி**
**பண்டிதர் இன்பன் பரசமய கோளரி**
**என்புனை தமிழ்கொண் டிரங்கி என்னுள்ளத்**
**தன்பினை அருளிய ஆண்டகை'**

எனவும் ஆளுடை பிள்ளையாரை நம்பியாண்டார் நம்பிகள் உளமுருகிப் போற்றுதலைக் கூர்ந்து நோக்குங்கால், பிள்ளையார்பால் இவர்க்கிருந்த ஈடுபாடு நன்கு புலனாகும். 'இடபக்கொடியினையுடைய சிவபெருமா னொருவனையன்றிப் பிறரெவரையும் தெய்வமாப் பேணாத தெளிவுடையார் திருஞாசம்பந்தராதலில் 'கொடிநீடு விடையுடைய பெருமானை யடிபரவு குணமேதை" என இந்நூலாசிரியர் அவரைப் பாராட்டிப் போற்றியுள்ளார். "வம்பறாவரி வண்டு மணநாறமலரும், மதுமலர் நற்கொன்றையான் அடியலாற்பேணா, எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்' எனத் திருத்தொண்டத்தொகையில் நம்பியாரூரர் ஆளுடைய

பிள்ளையாரைப் போற்றிய குறிப்பு இவண் நினைக்கத் தகுவதாகும்.

இக் கலம்பகத்திலுள்ள ஆசிரிய விருத்தங்கள் பல திருவெண்காட்டடிகள் பாடிய கோவில் நான்மணி மாலையிலுள்ள சந்தப்பாடல்களை அடியொற்றினவாய் இயலிசைத் திறங்களிற் சிறந்து திகழ்கின்றன.

## (9) ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை

இப்பனுவல் திருஞானசம்பந்தப் பிள்ளையார் வரலாற்று நிகழ்ச்சிகளைத் தொகுத்துரைப்பதாதலின் ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை யென்னும் பெயர்த்தாயிற்று. சிவனடியார்களாகிய திருத்தொண்டர்களைத் தொகுத்துரைத்துப் போற்றுங் கருத்துடன் நம்பியாரூரர் பாடிய திருப்பதிகம் திருத் தொண்டத்தொகை என வழங்கப்பெறுதல் போன்று ஆளுடைய பிள்ளையார் வரலாற்று நிகழ்ச்சிகளைத் தொகுத்துக் கூறுவதாகிய இப்பிரபந்தமும் திருத்தொகையென வழங்கப் பெற்றதெனக் கருதுதல் பொருந்தும். கலிவெண்பாவாகிய இப்பனுவல் அறுபத்து ஐந்தடிகளால் இயன்றதாகும்.

திருஞானசம்பந்தப் பிள்ளையார், சிவனருளால் உமையம்மையாரளித்த திருமுலைப்பாலைப் பருகி, ஊழிமுதல்வ னாகிய இறைவனைப் 'பிரமாபுரமேவிய பெம்மான் இவனன்றே' யெனத் தம் தந்தையார்க்குச் சுட்டிக்காட்டியது முதல் திருநல்லூர்ப் பெருமணத்தில் நிகழ்ந்த தமது திருமணத்தில் தம் வாழ்க்கைத் துணைவியாருடனும் திருமணங்காணவந்த எல்லா மக்களோடும் ஈறில்பெருஞ் சோதியிற்புகுந்து அந்தமிலின்பத் தமர்ந்தது வரையுள்ள எல்லாச் செய்திகளையும் படிப்போருளமுருக இத்திருத்தொகையில் நம்பியாண்டார் நம்பி எடுத்து உரைத்துப் போற்றியுள்ளார்.

## (10) திருநாவுக்கரசு தேவர் திருவேகாதசமாலை

'வித்தகப்பாடல் முத்திறத்து அடியரும்' எனப் போற்றப் பெற்ற தேவார ஆசிரியர்கள் மூவருள் திருஞானசம்பந்தப் பிள்ளையாரைத் திருவந்தாதி, திருச்சண்பைவிருத்தம், திருமும்மணிக்கோவை, திருவுலாமாலை, திருக்கலம்பகம், திருத்தொகையென மேற்காட்டிய ஆறுபிரபந்தங்களாற் போற்றிப் பரவிய நம்பியாண்டார் நம்பிகள் இங்ஙனமே திருநாவுக்கரசர் நம்பியாரூரர் ஆகிய இருபெருமக்களைக் குறித்தும் தனிப் பிரபந்தங்கள் பலவற்றைப் பாடியிருத்தல் கூடும். நம்பியாரூரைப் போற்றிய தனிப்பிரபந்தமெதுவும் கிடைக்கவில்லை. திருநாவுக் கரசடிகளாரது சிறப்பினை விரித்துரைப்பதாகத் திருநாவுக்கரசு

தேவர் திருவேகாதசமாலை யென்ற பிரபந்தமொன்றே இப்பொழுது கிடைத்துளது. பதினோராந்திருமுறையின் இறுதிக்கண் அமைந்த பிரபந்தமாகத் திகழ்வது இத்திரு ஏகாதசமாலையே யாகும். ஏகாதசம் - பதினொன்று. திருநாவுக் கரசரைப் போற்றிப் பரவும் பதினொரு பாடல்களையுடைய செந்தமிழ்மாலையாக விளங்குவது இப்பிரபந்தமாதலின் இது திருநாவுக்கரசு தேவர் திருவேகாதச மாலையென வழங்கப்பெறுவ தாயிற்று. இதன்கண் அமைந்த பாடல்கள் பதினொன்றாயினும் திருநாவுக்கரசரது வரலாற்றி லமைந்த சிறந்த உண்மைகளும், அப்பெருந்தகையாரை வழிபடுவ தனாலுளவாம் பெருநலங்களும், அரசர் திருவாய்மலர்ந்தருளிய திருப்பதிகங்களின் சிறப்பும், இப்பாடல்களில் தெளிவாக அறிவுறுத்தப் பெற்றுள்ளன.

"ஐம்புலன்களின் வழியே அலைந்து திரியும் மனமுடைய மாந்தர் செய்யும் குற்றங்களை நீக்கியருளுந் தூய பேரன்போடு தம் தமக்கையாராகிய திலகவதியாரைப் பணிந்து அவர் திருவைந் தெழுத்தோதிக் கொடுத்த திருவெண்ணீற்றினை யணிந்து சூலைநோய் நீங்கப்பெற்று அமண்சமயத் தொடர்பகற்றிய உறுதிப் பாட்டுடன் இறைவனது திருவருட் பெருவெள்ளத்திலே திளைத்த தவப்பெருஞ்செல்வன் திருநாவுக்கரசடிகளாவர். மெய்ப்பொருளைப் போற்றிய திருப்பாடல்களில் உலகினரது பாசம் நீங்குதற்குரிய பேருண்மைகளை வெளியிட்டருளிய அப்பெருந்தகையார் அளவிலா ஞானப்பெருங்கடலிடையே திகழும் பேரமிழ்தமாகிய சிவப்பேரொளியிற் புகுந்து இன்புறும் பெருவாழ்வினை அடியேங்களுக்கு வழங்கியருளினார்.

திருநாவுக்கரசர்க்குத் தொண்டுபட்ட மெய்யடியார்கள், தெளிந்த தேன்போலும் இனிமை வாய்ந்த மொழிகளைப் பேசவல்ல ஊர்வசி முதலிய வானுலக மாதர் பாடியாடித் தம்மை வசப்படுத்தற் பொருட்டுக் கூறிய நயவுரைகளைத் துகளென வொதுக்கி, ஞானத் திரளாய்நின்ற புகலூர்ப்பெருமானை நினைந்து நெஞ்ச நெக்குருகக் கண்ணீர் ததும்ப உழவாரப் படையால் திருக்கோயிற் பணிபுரிந்த அப்பெருந்தகையார் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகங்களை அருட்குருவின் உபதேச மொழிகளாகக் கொண்டு, சிவபெருமான் திருவடிகளைச் சென்னியிற் சூடிப் பேரின்பவாழ்வில் திளைத்து மகிழ்வார்கள் ; துன்பத்திற்குக் காரணமாகிய பிறவிச் சூழலிற் புகுவாரல்லர்; திருநாவுக்கரசரை நினைந்து போற்றுதலே பிறவிப் பிணியைப் போக்குதற்குரிய அருமருந்தாகும்.

அன்புருவாகிய திருநாவுக்கரசர்பாற் பற்றுடையராய் நறுமலர்களால் அருச்சனை புரிந்து வழிபடாதவர் நிலையாத யாக்கையினை நிலையென நம்பி வயிற்றுக்கு இரை தேடியுழலும் பித்தராவர்.

சிவபூசை கற்ற தூய பேரறிவினையுடையராய் இவ் வுலகிலேயே வீடுபேற்றின்பினை நுகர்ந்த திருநாவுக்கரசர், பிறவியாகிய பெருங்கடலிலே நெல்லாகிய உணவின் துணை கொண்டு மிதந்துழலாமல் திருவைந் தெழுத்தினையோதிக் கல்லே தெப்பமாகக் கொண்டு கரையேறிய வித்தகர். அவர் திருவாய் மலர்ந்தருளிய தமிழ் மாலையாகிய திருப்பதிகங்கள் உலகத்தார்க்குப் பெருநிதியமாகப் பயன் தருவன.

'பதிகம் ஏழெழுநூறு பகரும் மாகவியோகி' யாகிய நாவரசருடைய திருவடிகளைத் தலைமேற் கொண்டு வழி பாடுவோர், செல்வம், புகழ், மெய்ந்நெறி, வினை நீங்கிய தூய்மை, மெய்ஞ்ஞானம், சிவனடித் தொண்டு, துறக்க வாழ்வு, தலையாய மனிதர்க்குரிய சால்பு ஆகிய எல்லா நலங்களையும் பெற்று இன்புறுவர். என்னைக் குடிமுழு துய்யக்கொண்ட திருநாவுக் கரசடிகளின் திருவடி மலர்கள், சார்ந்த அடியார்களின் இடர்களை அகற்றுவன; களங்கமற்ற, நிறைமதிகள் பத்துக்கூடி நிலவெறித்தாற் போன்று தண்ணொளி பரப்புவன; தூய்மையே யுருவாகத் திகழ்வன; தவமுனிவர்கள் தொழுது போற்றுவன; குற்றமற்ற பெருங் குணங்களுக்கு நிலைக்களமாகத் திகழ்வன.

தேவர்க்கும் அரிதாகிய சிவலோகக்கதி திருநாவுக்கரச ரருளால் அடிநாயாகிய எளியேற்கு எளிதிற் கைவந்தது. திருநீற்றுக் கவசமணிந்து சிவனடியே சிந்திக்கும் மனமுடையராய்ச் சமணர்கள் அமைத்த நீற்றறையிலே தங்கிக் கந்தைமிகையாங் கருத்துடையராய் விளங்கிய புலமைச் செல்வராகிய திருநாவுக்கரசர், வஞ்சனையின்றித் தம்மை வழிபடும் அடியார் களுக்குப் பசுபந்தத்தினை நீக்கும் பரிசினைப் பணித்தருள்புரியும் பேரருளாளராவர். அப்பெருந்தகையார்தம் இணையடித் தாமரைகளைப் பேரன்புடன் தலைமேற்கொண்டு உய்வதன்றி வேறொரு சாதனமுங் கண்டிலோம். மற்றுள்ளன எவையும் வேண்டோம். ஆதலால் ஐம்புலன்களின் வழியே சென்று இறப்பார் செல்லும் தீய வழிகளிற் செல்ல மாட்டோம்".

என நம்பியாண்டார் நம்பிகள் இத் திரு ஏகாதச மாலையில் திருநாவுக்கரசு தேவரை உளங்கசிந்து போற்றியுள்ளார்.

அப்பரடிகளுக்குத் திருவதிகையிறைவர் அளித்தருளிய 'திருநாவுக்கரசு' என்ற திருப்பெயரின் சிறப்பினை,

**இலைமா டென்றிடர் பரியார், இந்திர**
**னேயொத் துறு குறை வற்றாலும்**
**நிலையா திச்செல்வ மெனவே கருதுவர்,**
**நீள் சன்மக்கட லிடையிற் புக்**
**கலையார், சென்றரன் நெறியா குங்கரை**
**அண்ணப் பெறுவர்கள், வண்ணத்திண்**
**சிலை மாடந்திகழ் புகழா மூருறை**
**திருநாவுக்கர சென் போரே.**

*எனவரும் திருப்பாடல் இனிது விளக்குவதாகும். "நிறந்தீற்றிய திண்மை மிக்க மலைபோன்று மாளிகைகள் உயர்ந்து விளங்கும் புகழ்மிக்க திருவாமூரிற் பிறந்தருளிய பெருமான் திருநாவுக்கரசு என அப்பெருந்தகையாரது திருப்பெயரை அன்பினால் ஓதுவார், 'நம்மிடத்துச் செல்வமில்லையே' யென இடருற்று வருந்தார்; வானுலக வேந்தனாகிய இந்திரனைப் போன்று குறைவின்றி நிரம்பிய செல்வமுடையவராகத் தாம் இருந்தாலும் தம்மிடத்துள்ள செல்வம் நிலையாதெனக் கருதும் மெய்யுணர்வையே கொண்டு திகழ்வார்கள்; பிறவியாகிய பெருங்கடலுள் வீழ்ந்து துன்புறமாட்டார்கள்; பிறவித் துன்பத்தினின்றும் நீங்கிச் சிவனது திருவருள் நெறியாகிய இன்பக்கரையினை படைந்து மகிழ்வார்கள் என்பது இத்திருப்பாடலின் பொருளாகும். இதன்கண் திருநாவுக் கரசர்க்குத் தொண்டு பூண்ட அடியார்களின் இயல்பாகச் சொல்லப் பெற்றன யாவும் நாவரசரைத் தெய்வமாகக்கொண்டு போற்றிய அப்பூதியடிகளின் பெருமையினை நினைவு படுத்துவனவாக அமைந்துள்ளன. இந்நுட்பத்தினை உளங்கொண்ட துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் தாம்பாடிய நால்வர் நான்மணிமாலையில்,*

**உற்றானலன் தவம், தீயில் நின்றானலன் ஊண்புனலா**
**அற்றானலன் நுகர்வும், திருநாவுக் கரசெனுமோர்**
**சொற்றா னெழுதியுங் கூறியுமே யென்றுந் துன்பில்பதம்**
**பெற்றான் ஒருநம்பி அப்பூதியென்னும் பெருந்தகையே,**

*என அப்பூதியடிகளாரை உளமுருகிப் போற்று முகமாகத் 'திருநாவுக்கரசு' என்னும் திருப்பெயரின் மாண்பினை விளக்கிய திறம் இங்கு ஒப்புநோக்கியுணரத்தகுவதாகும்.*



# பன்னிரண்டாந் திருமுறை

## சேக்கிழார் நாயனார் வரலாறு

'தெய்வ மணக்குஞ் செய்யுளெலாம்' எனப் போற்றப் பெற்ற சிறப்புடையது திருத்தொண்டர் புராணமாகிய பெரியபுராணம். இவ்வருள் நூலை இயற்றியுதவிய பெரியார் அருண்மொழித் தேவ ரென்னும் பெயருடைய சேக்கிழார் நாயனாராவர். இவரது வரலாற்றை விரித்துக் கூறும் நூல் திருத்தொண்டர்புராண வரலாறு எனப்பெயரிய சேக்கிழார் புராணமாகும். இதனை இயற்றியவர் சைவசமய சந்தானாசாரியருள் ஒருவராகிய கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியார் என முன்னோர் கூறுவர். இந்நூல், பாயிரம் உட்பட நூற்று மூன்று செய்யுட்களால் இயன்றது. இந்நூலிற் சொல்லிய வண்ணம் சேக்கிழார் நாயனாரது வரலாற்றை ஒருசிறிது நோக்குவோமாக.

பாலாறு பாய்ந்து வளஞ்சுரக்கும் சிறப்புடைய தொண்டை நாட்டினைப் பண்டையோர் இருபத்து நான்கு கோட்டங்களாகப் பகுத்தனர். அங்ஙனம் பகுக்கப்பட்ட இருபத்து நான்கு கோட்டங் களுள் புலியூர்க் கோட்டமும் ஒன்று. அக்கோட்டத்தைச் சேர்ந்த குன்றைவளநாட்டின் தலைநகராகத் திகழ்வது குன்றத்தூர். இவ்வூரில் வேளாளர் குடும்பங்களில் ஒன்றாகிய சேக்கிழார் குடியினர் சிறப்புற்று வாழ்ந்தனர். பண்டை நாளிற் சோழன் கரிகாற் பெருவளத்தான் தொண்டை நாட்டிற் குடியேற்றிய நாற்பத் தெண்ணாயிரம் வேளாளர் குடும்பங்களுள் இச்சேக்கிழார் குடும்பமும் ஒன்றாகும். இவ்வாறு சோழ மன்னர்களால் நன்கு மதிக்கப்பெற்ற குன்றத்தூர்ச் சேக்கிழார் குடும்பத்திலே அருண்மொழித் தேவர், பாலறாவாயர் என்னும் இருவரும் சகோதரராய்ப் பிறந்து வளர்ந்தார்கள். இவ்விருவருள் மூத்தவர் அருண்மொழித்தேவர். அவர்க்கு இளையவர் பாலறாவாயர். இவ்விருவரும் கல்வித்துறையில் தேர்ச்சி பெற்று விளங்கினார்கள். அருண்மொழித் தேவருடைய கல்வியறி வொழுக்கங்களை நன்குணர்ந்த சோழ மன்னன், அவரைத் தன் அரசியலில் அமைச்சராக நியமித்து அவருக்கு உத்தம சோழப் பல்லவன் என்ற பட்டத்தையுந் தந்து சிறப்பித்தான். அமைச்சுரிமை பூண்டு சோழ நாட்டில் தங்கிய அருண்மொழித்தேவர், அந்நாட்டுத் திருத்தலங்களுள் ஒன்றாகிய திருநாகேச்சரத்திற் கோயில் கொண்டருளிய இறைவன்பால் பேரன்பு நிறைந்தவராய் மாநாகம் அருச்சித்த மலர்க் கமலத் தாள்வணங்கி நாடோறும்

போற்றிவழிபட்டு வந்தார். நாகேச்சரத்திறைவர்பால் வைத்த அளவிலாப் பேரன்பினால் சோழநாட்டுத் திருநாகேச்சரத் திருக்கோயிலைப் போன்ற அமைப்பிலேயே தம்முடைய ஊராகிய குன்றத்தூரிலும் திருநாகேச்சரம் என்ற பெயரால் ஒரு திருக்கோயிலைக் கட்டி அங்கு நாள் வழிபாடும் திருவிழாக்களும் நடைபெற ஏற்பாடு செய்தார்.

அந்நாளில் சைவ சமயத்தார் பலர் மெய்ந் நூலாகிய தங்கள் சைவ நூல்களின் பெருமையினை யுணராது சமணர்கள் புனைந்துரைத்த சீவகசிந்தாமணிக் கதையை மெய்யென நம்பி அக்காவியச் சுவையில் ஈடுபட்டுத் தம் சமயப் பெரியோர்களின் வரலாறுகளை மறந்தனர். சோழ மன்னனும் சீவகசிந்தாமணிக் கதையை மெய்யென நம்பி மனமகிழ்ந்து பாராட்டிக் கேட்பானாயினன். அதுகண்ட அருண்மொழித் தேவராகிய சேக்கிழார், அரசனை நோக்கி வேந்தர் பெருமானே நீவிர்சைவ சமயத்தினராயிருந்தும் இம்மை மறுமை வீடென்னும் மும்மை நலங்களையுந் தரும் சிவனடியார்களின் மெய்ம்மை வரலாறுகளைக் கேளாது நமது முழுமுதற் பொருளாகிய சிவபெருமானை நிந்திக்கும் புறச்சமயத்தவர்களாகிய சமணர்களுடைய பொய்க்கதை யாகிய இதனை மெய்யென நம்புதல் தகுதியன்று' என அறிவுறுத்தினார். இதனைக் கேட்ட சோழ மன்னன் 'நீவிர் சொல்லிய சிவகதை யாது? அதன் வரலாறென்ன? அதனை விளங்கச் சொல்வீராக' என வினவினான். அதுகேட்ட சேக்கிழார் பெருமான், 'திருவாரூரிலே கோயில் கொண்டருளிய தியாகேசப் பெருமான் தம்முடைய அடியார்களின் பெருமையை விரித்துரைத்துப் பாடிப் போற்றுக' என்றுகூறித், 'தில்லை வாழந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்' என அடியெடுத்துக் கொடுக்க நம்பியாரூராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளால் திருவாய் மலர்ந்தருளப் பெற்றது திருத்தொண்டத் தொகையென்னுந் திருப்பதிகமாகும். அடியார்களின் புகழ்த்திறத்தினைப் போற்றிப் பரவும் அத் திருத்தொண்டத் தொகைக்குத் திருநாரையூரி லெழுந்தருளிய பொல்லாப் பிள்ளையார் பொருளருளிச் செய்யக் கேட்டுணர்ந்த நம்பி யாண்டார் நம்பிகள், அத்திருப்பதிகத்திற் போற்றப் பெற்ற சிவனடியார்களின் வரலாற்றை வகைப்படுத்து விளக்குமுகத்தால் திருத்தொண்டர் திருவந்தாதி யென்றதொரு வகைநூலைச் செய்துதவினார். அத்திருவந்தாதியைத் திருமுறை கண்ட ராசராச தேவர், 'சிவலாய தேவர் முதலாகவுள்ள பெரியோர்கள் அனைவரும் உளமுவந்து இனிமையுடைதெனப் பாராட்டி னார்கள்' எனக்கூறினார். அதுகேட்ட சோழன், அத்திருவந்தாதியை ஓதிப் பொருள் கூறவேண்டுமென

வேண்டினான். அருண்மொழித் தேவரும் அந்நூற்பொருளை மன்னனுக்கு எடுத்துரைத்தார். திருத்தொண்டத் தொகையிற் கூறப்பெற்ற சிவனடியார்களின் உண்மை வரலாறுகளைக் கேட்டு உளமுருகிய வேந்தன், இறைவனது திருவருளை நினைந்து "திருத்தொண்டர் வரலாறுகளை யாவரும் தெளிவாய் அறிந்து கொள்ளும்படி சுவைமிக்க செந்தமிழ்ப் பெருங்காப்பியமாகப் பாடி உதவுதல் வேண்டும்" எனத் தன் அமைச்சராகிய சேக்கிழாரை வேண்டிக் கொண்டு பெரும் பொருளையும் வழங்கினார். அரசனது வேண்டுகோளுக் கிணங்கிய அருண் மொழித் தேவர், தில்லையை யடைந்து சிவகங்கையிலே நீராடித் தில்லையம்பல வாணனைத் தொழுது போற்றி, "பெருமானே, நின்பால் அன்புமிக்க அடியார்களின் வரலாறுகளைப் பெருங்காப்பியமாக அடியேன் விரித்துப்பாடுதற்கு அடியெடுத்துக் கொடுத்தருளல் வேண்டும்" என உளங்கசிந்து வேண்டி நின்றார். அந்நிலையில் அங்குள்ளார் அனைவரும் கேட்கத் தில்லையம்பலவன் திருவருளால் 'உலகெலாம்' என்றொரு வானொலியெழுந்தது. அதனைக் கேட்டு மகிழ்ந்த தில்லைவாழந்தணர்கள், கூத்தப் பெருமானுக்குச் சாத்திய திருநீற்றையும் திருமாலையையும் திருப்பரிவட்டத்தையும் அருண்மொழித் தேவர்க்குச் சாத்தினர். அருண்மொழித் தேவர், திருநெறித் தலைவராகிய திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் சுந்தரர் ஆகிய மூவரையும் வணங்கிப் போற்றிச் சிவசின்னங்கள் அணிந்து ஆயிரக்கால் மண்டபத்தில் அமர்ந்திருந்து, இறைவன் அருளிய 'உலகெலாம்' என்ற சொல்லையே முதன் மொழியாகக் கொண்டு திருத்தொண்டர் புராணமென்னுந் தெய்வத்தமிழ்ப் பெருங்காப்பியத்தைப் பாடி முடித்தார்.

நூல் இனிது நிறைவேறிய திறத்தைக் கேள்வியுற்ற சோழ மன்னன் தில்லைப்பதியை யடைந்தான். சேக்கிழாரும் தில்லை வாழந்தணர்களும் தவச்செல்வரும் மன்னனை எதிர்கொண் டழைத்தார்கள். அருண்மொழித் தேவருடைய சிவவேடப் பொலிவழகை நேரிற்கண்ட மன்னன், அவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கித் தில்லையம்பல முன்றிலில் வந்து நின்றான். அந்நிலையில் "வளவனே, நாம் நம் வாக்கினால் 'உலகெலாம்' என்று அடியெடுத்துக்கொடுக்கச் சேக்கிழான் நம்முடைய தொண்டர்களது அடிமைத்திறத்தை விரித்து நூலாகச் செய்து முடித்தான். நீ அதைக்கேட்பாயாக" என்றதொரு வானொலி திருச்சிலம்பொலியுடன் யாவரும் கேட்பத் தோன்றியது. அதனைக்கேட்டு வியப்புற்ற அரசன், திருத்தொண்டர் புராணத்தைக் கேட்க வரும் பொருட்டுச் சிவனடியார்கள் எல்லோர்க்கும் திருமுகம் அனுப்பினான். திருமுறைகளில்

வல்லவர்களும் சிவாகமங்களைக் கற்றவர்களும் வேதங்களில் வல்லவர்களும் இலக்கண இலக்கியங்களை நுனித்துணர்ந்த புலவர் பெருமக்களும் தில்லையை அடைந்தார்கள். தில்லையம்பலவாணர் திருமுன்னர்த் திருத்தொண்டர் புராண விரிவுரை நிகழ்தற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் குறைவறச் செய்யப்பட்டன. அருள் நடம் புரியும் நடராசப் பெருமானுக் குரிய சிறப்புடையதும், சீகாழிப்பதியில் திருஞான சம்பந்தப் பிள்ளையார் திருவவதாரஞ் செய்ததும், அவர் அழுது மூன்றாம் வயதிலே ஞானப்பால் பெற்றதும் ஆகிய பெருமை வாய்ந்தது, திருவாதிரைத் திருநாளாகும். அச் சிறப்புடைமை கருதித் திருத்தொண்டர் புராண விரிவுரையைத் திருவாதிரைத் திருநாளில் தொடங்குதல் வேண்டுமெனக் கருதினர். சேக்கிழார் பெருமானால் சித்திரைத் திருவாதிரை நாளில் தொடங்கப்பெற்ற திருத்தொண்டர் புராண விரிவுரை, அடுத்த ஆண்டு சித்திரைத் திருவாதிரை நாளில் இனிது நிறைவெய்தியது. அதனைக்கேட்ட சோழ மன்னரும் மற்றவர்களும் இன்பக்கடலில் திளைத்தனர். தில்லை வாழந்தணர்கள் திருத்தொண்டர் புராணத்தைச் சிவனெனவே கருதிச் சிவமூல மந்திரத்தால் அருச்சனை செய்து இறைஞ்சினார்கள். சோழ மன்னன், திருத்தொண்டர் புராணத்தை யானை மீது ஏற்றிச் சேக்கிழார் பெருமானையும் அதன் மீது எழுந்தருளச் செய்து, தானும் அவர்பின் ஏறியமர்ந்து தன்னுடைய இரண்டு கைகளாலும் வெண்சாமரை வீசுவானாகி, இறைவனது திருவருளை நினைந்து 'இது வன்றோ நான் செய்த தவப்பயன்' என்று கூறி உளமுருகினான். யானை திருவீதியை வலம் வந்து பொன்னம்பலத்தின் முன்னே வந்து நின்றது. அடியார் பலரும் சேக்கிழாரைச் சூழ்ந்து போற்றி நின்றார்கள். அரசரோடு யானையிலிருந்து இறங்கிய அருண்மொழித்தேவர் கனகசபையிலே சென்று திருத்தொண்டர் புராணத்திருமுறையை முன்னே வைத்தார். மன்னர் பெருமான் சேக்கிழார் பெருமானுக்குத் தொண்டர்சீர் பரவுவார் என்ற திருப்பெயர் சூட்டி இறைஞ்சிப் போற்றினான். அங்கு வந்திருந்த அன்பரெல்லோரும் தொண்டர்சீர் பரவுவாரை உளமுருகித் தொழுது போற்றினார்கள். அநபாய சோழன் திருத்தொண்டர் புராணத்தைச் செப்பேட்டிலெழுதி முன்னுள்ள பதினொரு திருமுறைகளுடன் சேர்த்துச் சிறப்புச் செய்தனன். ஆகவே இத் திருத்தொண்டர் புராணம் பன்னிரண்டாம் திருமுறையெனப் போற்றப் பெறுவதாயிற்று.

பின்பு, அநபாய சோழன் அங்கிருந்தவர்களை நோக்கி இத் தொண்டர் சீர்பரவுவாருடைய தம்பியார் பாலறாவாயர் இப்பொழுது எங்கேயுள்ளார் என வினவினான். அங்கிருந் தவர்கள், 'பாலறாவாயர் குன்றத்தூரிலே திருக்குளம்

அமைத்தபின் அங்குத் திருநாகேச்சுரப் பெருமானுக்குத் திருந்தொண்டு செய்து கொண்டிருக்கிறார்' என மறுமொழி பகர்ந்தனர். அதனைக் கேட்ட அரசர் பெருமான், பாலறாவாயரை அழைத்துவரச் செய்து அவருக்குத் தொண்டைமான் என்ற பட்டமும் சூட்டித் தனக்குரிய அமைச்சராக அமைத்துக் கொண்டான். அங்ஙனம் அமைச்சர் பதவி பெற்ற பாலறாவாயர், தொண்டை நாட்டில் பெரும்பஞ்சமொன்று வந்தபொழுது உளங்கலங்காமல் அங்குள்ள மக்களுக்கு வேண்டும் வசதிகளைச் செய்து பசிப்பிணி நீக்கிய அருஞ்செயலால் 'தொண்டை மண்டலம் நின்று காத்த பெருமான்' என எல்லாராலும் போற்றப்பெறும் பெருஞ் சிறப்பு எய்தினார்.

தொண்டர் சீர் பரவுவாராகிய சேக்கிழார் பெருமான், தில்லைநகரிலேயே தங்கியிருந்து தேவார ஆசிரியர் மூவராலும் போற்றப் பெற்ற அடியார்களது திருத்தொண்டின் பெருமைகளை இடைவிடாது உணர்ந்து போற்றிச் சிவனடியார்களோடு தவநிலையிலமர்ந்து தில்லைச்சிற்றம்பலப் பெருமானது தூக்கிய திருவடி நீழலையடைந்து இன்புற்றார்.

இவ்வரலாற்றினை விரித்துக் கூறுவதே சேக்கிழார் புராணமாகும். சிந்தாமணியைச் சோழன் படித்துப் பொழுது போக்கியதைக் காணப்பொறாத சேக்கிழார், அதனைச் சமணர் கட்டிய பொய்க்கதையெனக் கூறி மறுத்து அதற்கு மாறாகப் பெரிய புராணத்தைப் பாடினார் என இந்நூல் கூறியிருப்பதற்குப் பெரிய புராணத்தில் ஆதரவில்லையென்றும், கொடும்பாளூரை யாண்ட சிற்றரசராகிய இடங்கழியாரை முடிமன்னர் அறுவருள் ஒருவரெனவும் பல்லவர் குலத்துத் தோன்றிய பெருவேந்தராகிய ஐயடிகள் காடவர்கோன், கழற்சிங்கர் என்னும் இருவேந்தர்களையும் குறுநில மன்னரெனவும் இந்நூல் கூறுங் கூற்று பெரிய புராணத்திற்கு மாறுபட்டதென்றும், அப்பர் சம்பந்தர் காரைக்காலம்மையார் இம்மூவரும் இயலிசைத்தமிழ் வல்லோரெனவும், நாளைப்போவார், ஆனாயர், நீலகண்ட யாழ்ப்பாணர் இம்மூவரும் இசைத் தமிழ் வல்லோரெனவும் ஐயடிகள் திருமூலம் சேரமான் பெருமாள் இம்மூவரும் இயற்றமிழ் வல்லோரெனவும் வகுத்துக் கூறிய இந்நூலாசிரியர், சுந்தரரை இப்பிரிவுகளிற் சொல்லாமல் விட்டதும் நந்தனாரை இசைத்தமிழ் வல்லோர் என ஆதரவின்றிச் சேர்த்துக் கூறியிருப்பதும் தவறென்றும் ஆகவே திருத்தொண்டர் புராண வரலாறு என்னும் இந்நூல், உமாபதி சிவாசாரியாரால் பாடப்பட்டதன் றென்றும், மிகுந்தசைவப் பற்றும் சமண சமய வெறுப்புங் கொண்ட ஒருவரால் உமாபதி சிவாசாரியர் காலத்திற்கு முன்பே பாடப்பட்டதென்றும் கூறுவாருமுளர்.*

(*டாக்டர் மா. இராசமாணிக்கனர் M.O.L. எழுதிய பெரிய புராண ஆராய்ச்சி பக்கம் 11-15.)

இக்கூற்று பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை. சேக்கிழார் சீவகசிந்தாமணிக் கதையை மெய்யென நம்புதல் கூடாதென விலக்கியதாக இந்நூல் கூறுகிறதே தவிர அதன்கண் அமைந்த காவியச்சுவை நலங்களை இழித்துரைத்ததாகக் கூறவில்லை. 'பொய்தருமாலுள்ளத்துப் புன்சமணர்' எனவும் 'பொய்மைச் சமயம்' எனவும் சமணர்களையும் அவர்தம் சமயநூல்களையும் இழித்துரைக்கும் குறிப்புக்கள் பெரிய புராணத்திற் காணப்படுகின்றன. இக்குறிப்பினையுற்று நோக்குவோர் சமணசமயத்தார் புனைந்துரைத்த கதைகளைப் படித்துப் பொழுதுபோக்குஞ் செயலைச் சேக்கிழார் வெறுத் துரைக்கும் உள்ளமுடையவரென்பதனை நன்குணர்வார்கள். ஆகவே சீவகசிந்தாமணிக் கதையைப் படித்து அக்கதையினை மெய்யெனக் கருதிப் பொழுது போக்கிய மக்களைத் திருத்துதற்குச் சேக்கிழார் முயன்றார் எனச் சேக்கிழார் புராண ஆசிரியர் கூறுவதில் தவறில்லை யென்பது பெறப்படும்.

"ஆதித்தன் புகழ்மரபிற் குடிமுதலோர் இடங்கழியார்" என ஆசிரியர் சேக்கிழார் கூறுதலால் இடங்கழி நாயனார் சோழர் குடியிற் பிறந்தவரென்பது நன்கு பெறப்படும்.

திருத்தொண்டர் திருவந்தாதியில்,

**"சிங்கத்துருவனைச் செற்றவன் சிற்றம்பல முகடு**
**கொங்கிற்கனக மணிந்த ஆதித்தன் குலமுதலோன்**
**திங்கட் சடையர் தமரதென் செல்வமெனப் பறைபோக்**
**கெங்கட் கிறைவன் இருக்கு வேளூர்மன் இடங்கழியே"**

என நம்பியாண்டார் நம்பிகளும் இடங்கழிநாயனாரைச் சோழர் குடியிற் பிறந்தவரென்றே தெளிவாகக் கூறியுள்ளார். ஆகவே சேக்கிழார் புராண ஆசிரியர் இடங்கழிநாயனாரை முடி மன்னருள் ஒருவரெனக் கூறியது, சேக்கிழார் நம்பியாண்டார் நம்பி ஆகிய இருவர் கருத்துக்கும் ஒத்ததென்பது நன்கு புலனாகும். சேர சோழ பாண்டியர்களாகிய தமிழ் மூவேந்தர்கள் குறு நிலப் பரப்பை ஆண்ட காலத்தும் அவர்களை முடிவேந்தரெனப் போற்றியுரைத்தல் பண்டைத் தமிழராட்சியிற் பற்றுடைய முன்னோரது செயலாகும். தமிழ் மூவேந்தரல்லாத பிறர் தம்காலத்துப் பெரு நிலப்பரப்பையாளும் பேராற்றல் பெற்று விளங்கினும் வண்பகழ் அன்னோரை மூவேந்தரைப் போன்று முடிமன்னர் எனப் பாராட்டிக் கூறும் வழக்கத்தினைத் தமிழ் மக்கள் மேற்கொண்டதில்லை. களந்தை மன்னவனாகிய கூற்றுவர் என்பார், சோழ நாட்டின் ஒரு பகுதியைக் கைப்பற்றித்

தில்லைவாழந்தணர்களைக் கொண்டு தில்லையில் முடி சூட்டிக் கொள்ள விரும்பிய பொழுது, 'நாங்கள் சோழ குலத்தாருக்கே யன்றி மற்றவர்களுக்கு முடி சூட்ட மாட்டோம்' என மறுத்துரைத்துத் தில்லை வாழந்தணர்கள் சேர நாட்டிற்குச் சென்று தங்கினர் எனப் பெரிய புராணத்திற் கூறப்படுதலால் இச்செய்தி இனிது விளங்கும். எனவே ஐயடிகள் காடவர் கோன்; கழற்சிங்கன் என்னும் பல்லவ மன்னர்கள் பெரு வேந்தராயினும் அவர்களது மரபு, தமிழ் மூவேந்தர் மரபினைப் போன்று படைப்புக் காலந்தொட்டு அரசு புரிந்து வரும் பழங்குடியெனத் தமிழ் மக்களால் மதிக்கப் பெறாமையின், பல்லவ மன்னராகிய இவ்விருவரையும் சேக்கிழார் புராண நூலாசிரியர் குறுநில மன்னரெனவே குறிப்பிடுவாராயினரென்க.

நம்பியாரூரர் பாடிய திருத்தொண்டத் தொகையில் அவரால் புகழ்ந்து போற்றப் பெற்ற அடியார்கள் அறுபதின் மரையே இயலிசை வல்லோர், இசை வல்லோர், இயல் வல்லோர் என இந்நூலாசிரியர் வகுத்துக் கூறுகின்றாராதலின், அவ்வடியார் களைப் போற்றிய சுந்தரரை அவர்களோடு சேர்த்து இன்ன துறையில் வல்லவரெனச் சொல்ல வேண்டிய இன்றியமையாமை யில்லை. திருநாளைப் போவார், திருக்கோயிலில் வீணைக்கும் யாழுக்கும் வேண்டிய நரம்பு போர்வைத் தோல் முதலியன கொடுத்துதவுதலும் ஆடுதலும் பாடுதலுமுடையராய்த் தொண்டு செய்திருந்தார் என ஆசிரியர் சேக்கிழார் கூறுதலால் நந்தனார் இசையில் வல்லவர் எனச் சேக்கிழார் புராண நூலாசிரியர் குறித்தது மிகவும் பொருத்தமுடையதேயாகும். சேக்கிழார் புராணமென வழங்கும் திருத்தொண்டர். புராண வரலாற்றினைப் பாடியவர் கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியார் என முன்னோரனைவரும் உடன்பட்டுரைத்தலானும்,

**திருக்கிளரும் கயிலைமலைக் காவல் பூண்—**
**செல்வமலி திருநந்தி மரபில் வந்து**
**கருக்குழியில் எமை வீழா தெடுத்தாட்கொள்ளும்**
**கருணைமிகு மெய்கண்ட தேவர் தூய**
**மருக் கிளர்தாள் பரவும் அருணந்திதேவர்**
**மகிழுமறை ஞானதே வருக்கன் பாகி**
**இருக்கு மும்பதி தேவர் சேக்கிழார்தம்**
**இசைப்புராணம் உரைத்தார் என்ப மாதோ**

என ஏடுகளிற் காணப்படும் இந்நூற் சிறப்புப்பாயிரத்தானும் சேக்கிழார் புராண நூலாசிரியர் உமாபதி சிவாசாரியாரென வழங்கும் பழங் கொள்கையே உண்மையாதல் காணலாம்.



# சேக்கிழார் நாயனார் காலம்

இத் திருத்தொண்டர் புராணம் பாடிய ஆசிரியர் சேக்கிழார் வாழ்ந்த காலத்தைக் குறித்து ஆராய்ச்சியாளர் பலரும் வெவ்வேறு கருத்துக்களை வெளியிட்டு உள்ளார்கள். கோயமுத்தூர் சில்லா தர்மவரந்தாலுகா முத்தூர்ச் சிவாலயத்திலே வீர ராஜேந்திர சோழனது 4-ஆம் ஆட்சியாண்டிற் பொறிக்கப்பட்ட கல்வெட்டொன்றில் உத்தம சோழப் பல்லவராயனுடைய மைந்தர் திருநுந்தா விளக்கு வைத்த செய்தி குறிக்கப்பெற்றுளது. இங்குக் குறிக்கப்பட்ட வீரராசேந்திரன் என்பான் கங்கை கொண்ட சோழன் மக்களு ளொருவனாகிய வீர ராசேந்திர சோழனென்றும், உத்தம சோழப் பல்லவரையர் என்பார் பெரிய புராண ஆசிரியராகிய சேக்கிழாரென்றும், ஆகவே சேக்கிழார் வீர ராசேந்திர சோழன் காலத்திற்கு முன் கங்கைகொண்ட சோழன் காலத்தில் இருந்திருத்தல் வேண்டும் என்றும் அறிஞர் ஒருவர் எழுதியுள்ளார். இங்குக் குறிக்கப்பட்ட முத்தூர்ச் சாசனத்திற் சொல்லப்படும் வீர ராசேந்திரன் என்பான் கி. பி. 1207 முதல் 1252 வரை கொங்கு நாட்டை யாண்ட கொங்குச் சோழன் என்பதும் இவன் தனக்கு முன் கி. பி. 1149 முதல் 1163 வரை கொங்கு நாட்டில் ஆட்சி புரிந்த தன் முன்னோனாகிய குலோத்துங்க சோழ தேவன் தன் பெயரால் அமைத்த கோயிலுக்கு நிபந்தம் வழங்கியுள்ளமை முத்தூர்ச் சாசனங்களால் அறியப்படுதலின் இவனை முதற் குலோத்துங்க சோழனுக்கு முன் சோழநாட்டை ஆட்சி புரிந்த வீர ராசேந்திர சோழனாகக் கொள்ளுதல் பொருந்தாதென்றும், கொங்குச் சோழர் கல்வெட்டிற் காணப்படும் உத்தம சோழப் பல்லவராயன் என்னும் பெயர் பெரிய புராண ஆசிரியர் சேக்கிழார் நாயனாரைக் குறித்து வழங்கிய தன்றென்றும் அறிஞர் மு. இராகவையங்காரவர்கள் தெளிவாக விளக்கி யுள்ளார்கள்.* (*சாசனத் தமிழ்க் கவி சரிதம் பக்-75,76.) அறிஞர் அ. கோபிநாத ராயரவர்கள் தாமெழுதிய சோழவமிச சரித்திரச் சுருக்கத்தில் முதற்குலோத்துங்க சோழன் வேண்டுகோளின் மேல் சேக்கிழார் பெரிய புராணம் பாடினார் எனக் குறிப்பிட்டுள்ளார்கள்.* (* சோழ வமிசச் சரித்திரச் சுருக்கம் பக்-32,33.) சேக்கிழார் தம் காலத்துச் சோழ வேந்தனைத் தம் நூலுள் அநபாயன் என்ற சிறப்புப் பெயராற் சிறப்பித்துப் போற்றியுள்ளார். அநபாயன் என்னும் இப்பெயர் முதற் குலோத்துங்க சோழன் காலத்து வழங்கியதன்று என்பதும் இரண்டாம் குலோத்துங்க சோழனைக் குறித்தே முதன்முதல்

வழங்கத் தொடங்கிய தென்பதும் கல்வெட்டுக்களாலும் குலோத்துங்க சோழனுலாவாலும் இனிது புலனாதலின் சேக்கிழார் முதற் குலோத்துங்க சோழன் காலத்தில் வாழ்ந்தவரல்லரென்பது நன்கு தெளியப்படும்.

சேக்கிழார் புராண ஆசிரியர், சேக்கிழார் காலத்துச் சோழ மன்னனை அபயன் எனவும் அநபாயன் எனவும் குறித்துப் போற்றியுள்ளார். சேக்கிழார் நாயனார் தம்மை ஆதரித்துப் போற்றிய சோழ வேந்தனைத் தாம் பாடிய திருத்தொண்டர் புராணத்துள் பத்து இடங்களிற் பாராட்டியுள்ளார். அப்பாடல்களுள் அநபாயன் என்ற பெயரையே சிறப்பாகக் குறித்துள்ளார். இச்செய்யுட்களில் சேக்கிழார் நாயனார் சோழ மன்னனைக் குறித்து வெளியிட்ட செய்திகளும் ஒட்டக்கூத்தர் தம்மை ஆதரித்த அநபாய மன்னனாகிய இரண்டாங் குலோத்துங்கனைப் பாராட்டிக் கூறிய பகுதிகளும் ஒத்துக் காணப்படுகின்றன. இவ்விரண்டாங் குலோத்துங்கன் மகனாகிய திரிபுவனச் சக்கரவர்த்தி இரண்டாம் ராசராச சோழனது 17-ஆம் ஆட்சியாண்டில் திருமழபாடித் திருக்கோயிலிற் பொறிக்கப் பெற்றுள்ள கல்வெட்டொன்றில் "ஜயங்கொண்ட சோழ மண்டலத்து... குன்றத்தூர்ச் சேக்கிழான் மாதேவடிகள் ராம தேவனான உத்தம சோழப் பல்லவராயன்" என்பார் திருமழபாடித் திருக்கோயிலுக்குத் தொண்ணூறு பேராடுகள் உதவிய செய்தி குறிக்கப்பட்டுளது. சேக்கிழார் புராணத்தே உமாபதி சிவாசாரியார்,

> **அத்தகைய புகழ்வேளாண் மரபிற் சேக்கிழார்**
> **குடியில்வந்த அரண்மொழித்தே வர்க்குத்**
> **தத்துபரி வளவனுந்தன் செங்கோலோச்சுந்**
> **தலைமையளித் தவர்தமக்குத் தனது பேரும்**
> **உத்தம சோழப்பல்ல வன்றானென்னும்**
> **உயர்ப்பட்டங் கொடுத்திட ஆங்கவர் நீர்நாட்டு**
> **நித்தனுறை திருநாகேச் சுரத்திலன்பு**
> **நிறைதலினால் மறவாத நிலைமைமிக்கார்**

எனச் சேக்கிழார் நாயனாரது வரலாறு கூறுகின்றார். அவ்வாசிரியர் கூறுமாறு சேக்கிழார் குடியிற் பிறந்து உத்தம சோழப் பல்லவனென்னும் பட்டம் பெற்றுத் திகழ்பவர், திருமழபாடிக் கோயிலுக்கு விளக்கெரிக்க நிபந்தம் வழங்கிய 'குன்றத்தூர்ச் சேக்கிழான் மாதேவடிகள் ராமதேவனான உத்தம சோழப் பல்லவராயன்' என்னும் இத்தலைவராவார். இவர் சேக்கிழான் மாதேவடிகள் எனச் சிறப்பிக்கப் பெற்றிருத்தலைக் கூர்ந்து நோக்குங்கால், சேக்கிழார் குடியிற் பிறந்து மாதேவனாகிய

சிவபெருமானிடத்து ஒன்றிய சிந்தையராய்ப் பேரன்பு செலுத்தியவர் இவரென்பது நன்கு புலனாம். இவரது இயற்பெயர் ராமதேவன் என இக்கல்வெட்டுக் கூறுகின்றது. (சேக்கிழாரது இயற்பெயர் அருண்மொழித் தேவன் என உமாபதி சிவாசாரியார் கூறுவர். அருண்மொழித் தேவன் என்பது, முதல் இராசராச சோழனது பெயராகும். அதுவே சேக்கிழார்க்கும் உரிய இயற்பெயராக அவருடைய முன்னோர்களால் இட்டு வழங்கப்பெற்றிருத்தல் கூடும்.) சேக்கிழான் மாதேவடிகள் இராமதேவனென்பார், திரிபுவனச் சக்கரவர்த்தி ராச ராச சோழனது 17-ஆம் ஆட்சியாண்டில் திருமழபாடிக் கோயிலுக்கு நிபந்தம் அளித்துள்ளமையால் இரண்டாங் குலோத்துங்கனுக்கு மகனாகிய இரண்டாம் ராசராச சோழனது 17-ஆம் ஆட்சி யாண்டின் பின்னரும் வாழ்ந்திருந்தவரென்பது பெறப்படுகின்றது. சேக்கிழார் காலத்துச் சோழ மன்னன் அநபாயன் என்ற சிறப்புப் பெயர் கொண்டவனென்பதும், குலோத்துங்க னென்னும் இயற்பெயருடையவனென்பதும், அவனது சிவபத்தி மாண்பினைச் சிறப்பித்துப் போற்றும் பெரிய புராணச் செய்யுட்களால் நன்கு தெளியப்படும். அநபாயன் என்னும் சிறப்புப் பெயர் இரண்டாங் குலோத்துகனுக்கு உரிய தென்பது கல்வெட்டுக்களாலும், ஒட்டக்கூத்தர் அவனைக் குறித்துப் பாடிய நூல்களாலும் தெளிவாகத் தெரிகின்றது. ஆகவே சேக்கிழாரைக்கொண்டு பெரிய புராணம் பாடுவித்த வேந்தன் இரண்டாங் குலோத்துங்க சோழனென்பது நன்கு துணியப்படும். இச்செய்தி இரண்டாம் ராசராசனுக்குப்பின் வந்த இரண்டாம் ராசாதிராசனது ஒன்பதாம் ஆட்சியாண்டில் திருவொற்றியூர்க் கோயிலிற் பொறிக்கப்பட்ட கல்வெட்டினாலும் உறுதிப்படுகின்றது.

"திருப்பங்குனி யுத்திரத்து ஆறாந்திருநாளான புதன் கிழமையும் ஏகாதசியும் பெற்ற ஆயில்யத்தினன்று படம் பக்க நாயகதேவர் திருமகிழின்கீழ்த் திருவோலக்கஞ் செய்தெழுந் தருளியிருந்து ஆளுடைய நம்பி ஸ்ரீ புராணங் கேட்டருளாநிற்க" எனவரும் அக்கல்வெட்டுப் பகுதியால் இரண்டாம் ராசாதிராச சோழன் தனது ஒன்பதாம் ஆட்சி யாண்டில் திருவொற்றியூர்த் திருக்கோயிலில் நிகழ்ந்த பங்குனியுத்திரத் திருநாளுக்கு வந்திருந்தனனென்பதும், ஆறாந்திருநாளில் ஆளுடைய நம்பி ஸ்ரீ புராணம் படிக்கப் பெற்ற தென்பதும் அதனை அரசனுடனிருந்து கேட்டவர்கள் அவ்வூர்த் திருமடத்தின் தலைவர் சதுரானன பண்டிதரும் சோம சித்தாந்தம் வக்காணிக்கும் வாகீசபண்டிதரும் கோயிலதிகாரிகள் பிறரும் என்பதும் நன்கு புலனாம். ஆளுடைய நம்பி யென்பது சுந்தரரது பெயர். அவரைப் பற்றிய புராணமே

திருவொற்றியூர்க் கோயிலிற் படிக்கப்பட்டதென்று தெரிகிறது. இங்குக் குறிப்பிடப்பட்ட ஆளுடைய நம்பிகள் ஸ்ரீ புராணமென்பது சேக்கிழாரியற்றிய திருத்தொண்டர் புராணத்துளடங்கிய சுந்தரர் புராணமாகவே இருத்தல் வேண்டும்.

இரண்டாம் ராச ராச சோழனது 19-ஆம் ஆட்சியாண்டில் குன்றத்தூர்ச் சேக்கிழான் பாலறாவாயன் களப்பாளராயன் என்பார், திருவரத்துறையில் நிகழும் மாசி வைகாசி திருவிழாக்களில் ஆளுடைய பிள்ளையார் மாறன்பாடிக்கு எழுந்தருளுதற்கு நிலமளித்துள்ளார். இவரே மூன்றாங் குலோத்துங்க சோழனது இரண்டாம் ஆட்சியாண்டில் கோட்டூர்க் கோயிலில் திருவிளக்கெரிக்கச் சில பொற்காசுகள் வழங்கியுள்ளார். பெரிய புராண ஆசிரியராகிய சேக்கிழார்க்குப் பாலறாவாயர் என்ற பெயருடைய தம்பி யொருவர் இருந்தமையும் அவர், தம் தமையன் மேற்கொண்டிருந்த அமைச்சர் பதவியை அவருக்குப் பின் ஏற்று நடத்தினமையும் சேக்கிழார் புராணத்தால் அறியப்பட்டவை. ஆகவே இச்சாசனங்களிற் குறிக்கப்பட்ட பாலறாவாயரே சேக்கிழார்க்குத் தம்பியராகச் சேக்கிழார் புராணங்கூறும் பாலறாவாயர் எனக் கொள்ளுதற்குப் பெரிதும் பொருத்தமுளது. குன்றத்தூர் என்ற ஊர்ப் பெயரும் சேக்கிழாரென்ற குடிப் பெயரும் பாலறாவாயர் என்ற இயற்பெயரும் காலமும் சேக்கிழார் புராண வரலாற்றுக்கு இயைய அமைந்துள்ளன. எனவே இராண்டாங் குலோத்துங்கனாகிய அநபாயனது ஆட்சியின் (கி.பி. 1133-1146) இடைக்காலந் தொடங்கி மூன்றாங் குலோத்துங்கனது ஆட்சித் தொடக்கம் வரை 35, 40 ஆண்டுகள் வாழ்ந்தவர் இப் பாலறாவாயரென்பது நன்கு பெறப்படும். அநபாய சோழன் பாலறாவாயர்க்குத் தொண்டைமான் என்ற பட்டம் அளித்து அவரைத் தன் அமைச்சராக்கிக் கொண்டனன் எனச் சேக்கிழார் புராணங் கூறுதற்கேற்ப இரண்டாங் குலோத்துங்கனது 12-ஆம் ஆட்சியாண்டில் அமைந்த சாசனம் ஒன்றினால் அம்மன்னன் தன் அமைச்சனான தொண்டைமானுக்குச் சில கட்டளைகள் நிறைவேற்றுதற்கு ஆணையிட்ட செய்தி தெரிகின்றது.

இதுகாறும் எடுத்துக் காட்டிய குறிப்புக்களால் இரண்டாம் ராசராசனது 17-ஆம் ஆட்சியாண்டில் திருமழபாடிக் கோயிலுக்கு நிபந்தமளித்த ‘குன்றத்தூர்ச் சேக்கிழான் மாதேவடிகள் ராமதேவனான உத்தம சோழப் பல்லவராயன்’ என்பவரே பெரியபுராணம் பாடிய சேக்கிழார் நாயனாரென்பதும், அவரை ஆதரித்துப் பெரியபுராணத்தை இயற்றச் செய்த அநபாய சோழன் என்பவன் இரண்டாம் குலோத்துங்கனே யென்பதும், ஆசிரியர்

சேக்கிழார் இரண்டாம் குலோத்துங்க சோழனுக்குப் பின் அவன் மகன் இரண்டாம் ராசராசனது 17-ஆம் ஆட்சியாண்டிலும் வாழ்ந்தவரென்பதும், சேக்கிழாருடைய தம்பியார் பாலறாவாயர் எனக் கூறப்படுபவர் குன்றத்தூர்ச் சேக்கிழான் பாலறாவாயன் களப்பாளராயன் எனக் கல்வெட்டிற் குறிக்கப் பட்டவரென்பதும் அவர் இரண்டாங் குலோத்துங்கனது ஆட்சியின் இடைப் பகுதி தொடங்கி மூன்றாங் குலோத்துங்கன் ஆட்சியின் முற்பகுதிவரை வாழ்ந்தவரென்பதும் நன்கு பெறப்படுமென்பது அறிஞர் மு. இராகவையங்கார், டாக்டர் மா. இராசமாணிக்கனார் முதலிய ஆராச்சியாளர்களது கொள்கையாகும். இக் கொள்கையே இப்பொழுது பெரும்பாலோரால் ஒப்புக் கொள்ளப்பட்டு வழங்கி வருகிறது.

இரண்டாங் குலோத்துங்கனுக்கு ஆசிரியராகவும் அவைக்களப் புலவராகவும் அவன் ஆட்சிக் காலம் முழுதும் நிலவியவர் ஒட்டக்கூத்தர். சைவ சமயத்திற் பேரீடுபாடுடைய ஒட்டக்கூத்தருடைய மாணவனாகக் கல்வி பயின்ற இரண்டாங் குலோத்துங்கசோழன், சைவசமய அடியார்களின் மெய் வரலாறுகளை அறியாது சமணர்களால் புனைந்துரைக்கப்பட்ட சீவகசிந்தாமணிக் கதையை மெய்யென நம்பிப் பொழுது போக்கினான் என்றற்குச் சிறிதும் இடமில்லை. அன்றியும் இரண்டாங் குலோத்துங்கனுக்குப் பிறகு அவன் புதல்வன் இரண்டாம் ராசராசன் ஆட்சிக் காலத்தும் வாழ்ந்திருந்து இராசராசன் உலாவும் தக்கயாகப் பரணியும் இயற்றியவரும் தம் நூல்களில் இறையனாரகப் பொருள், களவழி நாற்பது, கலிங்கத்துப்பரணி ஆகிய நூல்களை மனமாரப் பாராட்டும் இயல்புடையவரும் சிவபத்திச் செல்வம் வாய்ந்தவரும் ஆகிய ஒட்டக்கூத்தர், தம் காலத்தில் திருத்தொண்டர் புராணம் பாடப் பெற்றிருப்பின் பத்திச்சுவை யொழுகும் அவ்வரிய நூலையும் அதனைப் பாடிய சேக்கிழாரையும் அந்நூல் தோன்றுதற்குக் காரணமாக இருந்த சோழ மன்னனையும் தாம் இயற்றிய நூல்களில் புகழ்ந்து போற்றியிருப்ப ரென்பது திண்ணம். அப்புலவர் பெருமான் தம் நூல்களில் திருத்தொண்டர் புராணத்தைக் குறிப்பிடாமையின், அந்நூல் அவர் காலத்திற்கும் பின்னரே இயற்றப் பெற்றிருத்தல் வேண்டுமென்று கருதவேண்டியுளது. சேக்கிழாரடிகள் கூறியுள்ள பேரம்பலம் பொன்வேய்ந்த அநபாயன் மூன்றாங் குலோத்துங்கனேயாவன். இவன் எதிரம்பலம் பொன்வேய்ந்தான் என்று இவன் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன. எதிரம்பலமே பேரம்பலம் என்று வழங்கியதென்பது அறியற்பாலது. எனவே எதிரம்பலம் பொன்வேய்ந்த மூன்றாங் குலோத்துங்கனே பேரம்பலம்

பொன்வேய்ந்த அநபாயன் என்பதும் இவ்வேந்தனே சேக்கிழாரடிகளைக் கொண்டு திருத் தொண்டர் புராணம் இயற்றுவித்தவன் என்பதும் தெள்ளிதிற் புலனாகு மென்பது ஆராய்ச்சிப் பேரறிஞர் சதாசிவ பண்டாரத்தவர்கள் கருத்தாகும்.* ( *பிற்காலச் சோழர் சரித்திரம். இரண்டாம் பகுதி பக்கம் 167, 168.) இக் கருத்தினை உறுதிப்படுத்தும் நிலையில் அவர்கள் கூறும் காரணங்களை நோக்குதல் இன்றியமையாததாகும்.

1. சேக்கிழார் தம் காலத்தில் வாழ்ந்த சோழ மன்னனைத் திருத்தொண்டர் புராணத்தில் பத்து இடங்களிற் பாராட்டி யுள்ளார். அப்பாடல்களில் அபயன், அநபாயன், குலோத்துங்க சோழன் என்ற பெயர்களால் அவ்வேந்தன் குறிக்கப் பெற்றுள்ளான். மேற்குறித்த மூன்று பெயர்களுள் அபயன் என்பது முதற் குலோத்துங்க சோழனுக்குரிய சிறப்புப் பெயர். அநபாயன் என்பது இரண்டாங் குலோத்துங்கனுக்குரிய சிறப்புப் பெயர். குலோத்துங்கன் என்பது முதற் குலோத்துங்கன் இரண்டாங் குலோத்துங்கன், மூன்றாங்குலோத்துங்கன் ஆகிய மூவர்க்கும் உரிய இயற்பெயராகும். இம் மூன்று மன்னர்களின் ஆட்சிக் காலங்களில் வரையப்பட்ட கல்வெட்டுக்களையும் இவர்களைப் பாராட்டிப் போற்றிய தமிழ் நூல்களையும் ஆராய்வார்க்கு இப்பெயர் வழக்கம் இனிது புலனாகும். முதற் குலோத்துங்கனுக் குரிய அபயன் என்ற சிறப்புப் பெயர் அவன் மகன் வயிற்றுப் பேரன் இரண்டாங் குலோத்துங்க சோழனுக்கும் வழங்குகின்றது. இதனை யுற்றுநோக்குங்கால் சோழ மன்னர்களை அவர்தம் முன்னோர்க்குரிய சிறப்புப் பெயர்களாற் போற்றும் வழக்க முண்டென்பது நன்கு புலனாகின்றது. சேக்கிழார் தம் காலத்துச் சோழ மன்னனை இரண்டாங் குலோத்துங்கனுக்குரிய சிறப்புப் பெயராகிய அநபாயன் என்ற சொல்லாற் போற்றியதுடன் முதற்குலோத்துங்க சோழனுக்குரிய அபயன் என்ற பெயராலும் இயைத்துப் போற்றியுள்ளார். இங்ஙனமே இரண்டாங் குலோத்துங்கனுக்குரிய அநபாயன் என்ற பெயரும் அவன் மரபிற்றோன்றிய பின்னோனொருவனுக்கும் உரித்தாகி வழங்கியிருத்தலுங்கூடும். ஆகவே அநபாயன் என்னும் பெயர் வழக்கமொன்றே கொண்டு சேக்கிழாரால் அநபாயன் எனப் பாராட்டப் பெற்றவன் இரண்டாங் குலோத்துங்கனே என ஒருதலையாகத் துணிதற்கியலவில்லை.

2. சேக்கிழார் தில்லையிற் பேரம்பலத்திற்குப் பொன் வேய்ந்த அநபாயனது செயலைக் குறித்துப் போற்றியுள்ளார். இங்கே குறிக்கப்படும் பேரம்பலம் என்பது தில்லையிற் கூத்தப்பெருமான் ஐந்தொழிற்கூத்தியற்றும் திருச்சிற்றம்பலமாகிய

பொன்னம்பலத் தின் முகப்பிற் பெரியதாயமைந்துள்ள எதிரம்பலமாகும். இவ்வெதிரம்பலமாகிய பேரம்பலத்திற்குச் செப்புத்தகடு வேய்ந்தவன் முதற் குலோத்துங்க சோழனது படைத் தலைவனாகிய மணவிற்கூத்தன் காலிங்கராயனாவான், இச்செய்தி

**'தில்லைச்சிற் றம்பலத்தே பேரம்பலந்தன்னை**
**மல்லற் கடற்றானை வாட்கூத்தன் - வில்லவர்கோன்**
**அம்புசேர் வெஞ்சிலையி னாற்றல்தனை மாற்றியகோன்**
**செம்புமேய் வித்தான் தெரிந்து'**

எனச் சிதம்பரம் கல்வெட்டிற் காணப்படும் வெண்பாவினால் தெளிவாக விளக்கப்படுள்ளது. இவன் காலத்திற்குப்பின் இப்பேரம்பலத்தைப் பொன்மயமாக்கிய பெரியோன் மூன்றாங் குலோத்துங்க சோழனாவான். இவன் எதிரம்பலம் பொன் வேய்ந்தானென்று இவன் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன.

**3.** திருப்புறம்பயத் திருக்கோயிலின் அர்த்த மண்டபத்தின் தென்புறம் திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீராஜ ராஜ தேவரது 13-ஆம் ஆட்சியாண்டிற் பொறிக்கப்பட்ட கல்வெட்டிற்குப் பின், "சுவஸ்திஸ்ரீ திருப்பேரம்பலம் பொன் வேய்ந்த திரிபுவனச் சக்கரவர்த்திகள் குலாத்துங்க சோழ தேவற்குயாண்டு எ-வது" எனத் தொடங்கும் கல்வெட்டு வரையப்பெற்றுளது. இதன் முதற் கல்வெட்டில் திரிபுவனச் சக்கரவர்த்திகள் ராஜராஜ தேவர் என்றது இரண்டாங் குலோத்துங்கன் மகன் இரண்டாம் ராசராசனையென்பதும், அவனது கல்வெட்டிற்குப் பின் தொடர்ந்து வரையப்பட்ட இக்கல்வெட்டிற் குறிக்கப்பட்ட பேரம்பலம் பொன்வேய்ந்த குலோத்துங்க சோழதேவரென்றது இரண்டாம் ராசராச சோழன் மகன் மூன்றாங் குலோத்துங்க சோழனை யென்பதும் இக்கல்வெட்டுக்களிரண்டும் முறையே ஒன்றன் பினொன்றாக வரையப்பட்டிருத்தலால் உய்த்துணரப்படும். முதற் கல்வெட்டில் திருப்புறம்பியத்துக் குடிமகன் ஆலங்குடையான் அடிகள் புறம்பியன் என்பான் தானொருவனே திருநொந்தா விளக்கெரிக்கத் திருப்புறம்பயத்திறைவர்க்குக் கொடுத்த நிபந்தமும், இரண்டாங் கல்வெட்டில் அவனும் காடுடையான் குற்றி திருச்சிற்றம்பலமுடையான்என்பவனும் சேர்ந்தளித்த நிபந்தமும் முறையே குறிக்கப்பெற்றுள்ளன. எனவே இக்கல்வெட்டிரண்டும் காலமுறைப்படி ஒன்றன்பினொன்றாக வெட்டப்பட்டனவே என்பது நன்கு தெளியப்படும். ஆகவே கல்வெட்டுத் துறையினர் கருதுமாறு இக் கல்வெட்டுக் களிரண்டும் முறைமாறி வெட்டப்பட்டன என்று சொல்லுதற்குச் சிறிதும் இடமில்லை யென்பது நன்கு புலனாம். முதற்கல்வெட்டிற் குறிப்பிட்ட திரிபுவனச் சக்கரவர்த்திகள் ராஜராஜதேவனை

மூன்றாம் ராஜராஜனெனக்கொண்டால் அவனுக்குப்பின் குலோத்துங்க னென்னும் பெயருடைய சோழமன்னர் எவரும் இல்லை. இந்நிலையில் குலோத்துங்கன் ஆட்சிக்காலத்துக் கல்வெட்டினைப் பின்னர்ப் பொறிப்பதற்கு எத்தகைய இயைபும் இல்லாமற் போகிறது. அன்றியும் கல்வெட்டுத் துறையாளர் கருதுமாறு முதற்கல்வெட்டிற் குறிப்பிட்ட இராசராசனை மூன்றாம் ராசராசனெனவும் இரண்டாம் கல்வெட்டிற் குறிக்கப்பட்ட பேரம்பலம் பொன்வேய்ந்த சோழனை இரண்டாங் குலோத்துங்கனெனவும் கொண்டால் இரண்டாங் குலோத்துங்கனது ஏழாவது ஆட்சியாண்டில் திருப்புறம் பயத்திருக் கோயிலுக்கு நிபந்தமளித்த ஆலங்குடையான் அடிகள் புறம்பியனென்பான் மூன்றாம் ராசராசனது பதின்மூன்றாம் ஆட்சியாண்டிலும் இருந்து நிபந்தமளித்தான் என்று கொள்ளுதல் வேண்டும். இரண்டாங் குலோத்துங்கனது ஏழாவது ஆட்சியாண்டாகிய கி.பி. 1140-ஆம் ஆண்டிற்கும் மூன்றாம் ராசராசனது பதின்மூன்றாம் ஆட்சியாண்டாகிய கி.பி. 1229-ஆம் ஆண்டிற்கும் நடுவே எண்பத் தெட்டாண்டுகள் இடைவெளியேற் படுகின்றது. ஆலங்குடையான் அடிகள் புறம்பியன் என்பான் முதல்நிபந்தமளித்த நாளில் அவனுக்கு ஏறக்குறைய இருபது வயதென்று வைத்துக்கொண்டாலும் அவன் இவ்வுலகில் வாழ்ந்த ஆண்டு 109 ஆகிறது. ஆகவே கல்வெட்டுத் துறையாளர் கூற்று ஏற்புடையதன்றென்பதும் மேற்காட்டிய திருப்புறம்பயக் கல்வெட்டிற் குறித்த இராசராசன் இரண்டாம் ராசராசனே யென்பதும் அவனது கல்வெட்டிற்கு அடுத்துவரையப்பட்ட கல்வெட்டிற் குறிக்கப்படும் பேரம்பலம் பொன்வேய்ந்த சோழன் மூன்றாங்குலோத்துங்கனேயென்பதும் இனிது புலனாதல் காணலாம். இங்ஙனம் கொள்ளுங்கால் இரண்டாம் ராசராசனது 13-ஆம் ஆண்டாகிய கி. பி. 1159-இல் முதல் நிபந்தமளித்த ஆலங் குடையான் அடிகள் புறம்பியன் என்பான் மூன்றாங் குலோத்துங்கனது 7-ஆம் ஆட்சியாண்டாகிய கி.பி. 1185-இல் இரண்டாவது நிபந்தமளித்தான் என்பது முடிபாகின்றது. முதல் நிபந்தமளிக்கும் பொழுது அவனுக்கு வயது 40 எனக் கொண்டாலும் இரண்டாம் நிபந்தம் 66-ஆம் வயதில் அளித்தான் எனக்கொள்வது பெரிதும் பொருத்த முடையதே யாகும்.

**4.** சோழமன்னர்கள் ஆட்சியில் தானமாக அளிக்கும் ஊர்களுக்கு அவர்களது பெயரிட்டுக் கொடுக்கும் வழக்க முண்டென்பது அவர்களுடைய கல்வெட்டுக்களால் நன்கறியப் படுகின்றது. இரண்டாங்குலோத்துங்க சோழன் தனது ஆட்சியின் ஏழாம் ஆண்டிற் பொறிக்கப்பட்ட திருமாணிகுழிக் கல்வெட்டில் "எதிரிலிசோழ நல்லூரென்று நம்பேரால்" எனக்குறித்தல்

காணலாம். இவ்வாறே மூன்றாங்குலோத்துங்கனது ஆட்சியின் மூன்றாமாண்டில் திருமாணி குழியில் வெட்டப்பட்ட மற்றொரு கல்வெட்டில் "உள்ளூர் திருப்பேரம்பலம் பொன்வேய்ந்த பெருமாள் நல்லூர்" என்ற பெயரால் அம்மன்னனது அதிகாரி மோகன் ஆட்கொள்ளியான குலோத்துங்க சோழக்காடவ ராயன் என்பான் அவ்வூர்க்குப் பெயரிட்டு வழங்குகின்றான். திருமாணிகுழியென்னும் இவ்வூர் விக்கிரமசோழனாட்சியின் மூன்றாமாண்டில் முன்னுடையாரும் பழம்பெயரும் நகரமாய் வருகின்றபடியுந்தவிர்த்து விக்கிரம சோழநல்லூர் என்னும் திருநாமத்தால் வேறுபிரித்து வழங்கப்பட்ட தென்பதும், நீர் நிலம் பத்தேமுக்காலே காணியும் புஞ்சை நிலம் ஐம்பத்திரண்டரையும் இவ்வூரின் பரப்பென்பதும்; இந்நில வெல்லைக்குள் இத்தேவர் ஸ்ரீ கோயிலும் திருமுற்றமும் மடை விளாகமும் உள்ளிட்டு ஒன்றேகால் நீக்கி நின்ற நிலம் அறுபத்தி இரண்டும் காணியும் என்பதும் இவ்வூர்க் கல்வெட்டொன்றிற் குறிக்கப்பட்டுள்ளன. இவ்வூர் பேரம்பலம் பொன்வேய்ந்த பெருமாள்நல்லூர் என இரண்டாங்குலோத்துங்கன் கல்வெட்டுக்களிற் குறிக்கப்பட வில்லை. இது மூன்றாங் குலோத்துங்கசோழன் காலத்தில்தான் பேரம்பலம் பொன் வேய்ந்த பெருமாள் நல்லூர் என்ற பெயரால் வழங்கியதென்பது அவன் காலத்துக் கல்வெட்டால் தெரிகிறது. எனவே மூன்றாங்குலோத்துங்கனுக்குப் பேரம்பலம் பொன்வேய்ந்த பெருமாள் என்றதொரு சிறப்புப் பெயருண்மை புலனாகின்றது. தென்னிந்தியக் கல்வெட்டு ஏழாந்தொகுதியில் 1044-ஆம் எண்ணுள்ள கல்வெட்டு 'பூமன்னுதென்கவிர்நாட்டு' எனத் தொடங்குதலின் அது இரண்டாங்குலோத்துங்கன் காலத்ததென்பது உய்த்துணரப்படும். அதன்கண் "பேரம்பலம் பொன்மேய்ந்த கோராஜகேசரி பத்மரான" எனக்காணப் படுந்தொடர் அக்கல்வெட்டின் உண்மை வடிவமன்று. "பொ(ன்ன)ம்பலம் பொன்மேய்ந்த கோராசகேசரிபத்மரான" என்பதே அதன் உண்மைவடிவாகு மென்பது புதுக்கோட்டைச் சமஸ்தானத்தார் வெளியிட்ட கல்வெட்டுத்தொகுதியில் 120-ஆம் எண்ணுள்ள இக்கல்வெட்டினைப் படிப்பார்க்கு இனிது விளங்கும். ஆகவே பேரம்பலம் பொன்மேய்ந்தபெருமாள் என்ற சிறப்புப் பெயராற் குறிக்கப்பட்டவன் இரண்டாங் குலோத்துங்கன் அல்லன் என்பதும் மேற்குறித்த திருப்புறம்பயக் கல்வெட்டிலும் திருமாணிகுழியிலுள்ள கல்வெட்டிலும் கண்டபடி அச்சிறப்புப்பெயர் மூன்றாங் குலோத்துங்க சோழனுக்கேயுரிய தென்பதும் நன்கு துணியப்படும்.

திரிபுவனவீரேச்சுரத்திற் பொறிக்கப் பெற்ற வடமொழிச் சுலோகங்களில் மூன்றாங்குலோத்துங்கன் பேரம்பலம்

பொன்வேய்ந்தசெய்தி கூறப்படவில்லையென்றும் அவன் பேரம்பலத்தைப் பொன்வேய்ந்த வனல்லனென்றும் கூறுவாருமுளர், * (* பெரியபுராண ஆராய்ச்சி பக்.21.) "எத்தரையுந் தொழுமிறைவற்கெதிரம் பலஞ் செம்பொன்வேய்ந்து" என்பது மூன்றாங்குலோத்துங்கனது மெய்க்கீர்த்தியாதலின் பேரம்பலம் பொன் வேய்ந்தவன் மூன்றாங்குலோத்துங்கனே யென்பது தேற்றம். அன்றியும் திரிபுவனவீரேச்சுரத்திற் பொறிக்கப்பட்ட வடமொழிச்சுலோக மொன்றில் மூன்றாங்குலோத்துங்கன் தில்லையில் முகமண்டபத்தைப் பொன்மயமாக்கிய செய்தி கூறப்பட்டுளது. அச்சுலோகத்திற் குறிக்கப்பட்ட முகமண்டபம் என்பது யாது? அதுவே எதிரம் பலமெனப்படும் பேரம்பலமாகும். மூன்றாங்குலோத்துங்கன் எதிரம்பலத்தைப் பொன்வேய்ந்த போது அதன்குறட்டிலே முன்னாளிற் பொறிக்கப்பட்டிருந்த பழைய கல்வெட்டுகளைப்படியெடுத்து வேறோரிடத்திற் பொறிக்கச்செய்தனனென்பது தில்லைத் திருக்கோயிலிலுள்ள கல்வெட்டொன்றிற் கூறப்பட்டுள்ளது.* (* தென்னிந்தியக் கல்வெட்டு தொகுதி IV எண் 222.)

5. சேக்கிழார் சோழநாட்டுத் திருநாகேச்சரத்திருக்கோயிலில் வைத்துள்ள பேரார்வத்தால் தம்முடைய சொந்த ஊராகிய குன்றத்தூரிலும் திருநாகேச்சரமெனப் பெயரிய திருக்கோயிலைக் கட்டினார் எனச் சேக்கிழார் புராணம் கூறும். இங்ஙனம் குன்றத்தூரிற் சேக்கிழாராற் கட்டப்பட்ட திருநாகேச்சரத் திருக்கோயிலிற் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளில் மிகவும் பழமையுடையன மூன்றாங்குலோத்துங்கன் காலத்துக் கல்வெட்டுகளேயாகும். இங்ஙனமாகவும் "குன்றத்தூர்த் திருநாகேச்சரத் திருக்கேயிலிலுள்ள 44 கல்வெட்டுக்களைக் காணின் அவற்றில் பழமையானவை இரண்டாங்குலோத்துங்கன் காலத்தனவேயாம்"* (* பெரிய புராண ஆராய்ச்சி, பக். 42.) என உறுதியாகக் கூறுவாருமுளர். அவர்கள் கூறுமாறு அக்கல்வெட்டு களை இரண்டாங் குலோத்துங்கன் காலத்தன எனக்கொள்ளுதற்கு இயலவில்லை. ஏனெனின், அத்திருக்கோயிலில் மூன்றாங் குலோத்துங்கனது 2-ஆம் ஆண்டு முதல் 33-ஆம் ஆண்டு வரையமைந்த கல்வெட்டுக்கள் சிலவும் தொடர்ச்சியாக வரையப்பட்டுள்ளன. மூன்றாங்குலோத்துங்கனுக்கு முந்திய இரண்டாம் ராசாதிராசனுடைய கல்வெட்டுக்களோ அவனுக்கு முந்திய இரண்டாம் ராசராசனுடைய கல்வெட்டுக்களோ இத்திருக்கோயிலிற் பொறிக்கப்பெறவில்லை. இக்கோயில் இரண்டாங் குலோத்துங்கன் காலத்திலேயே கட்டப் பெற்றிருக்குமாயின் அவ்வேந்தன் காலத்திலோ அவன் மகன் இரண்டாம் ராசராசன் காலத்திலோ அன்றி அவனுக்குப் பின்

ஆட்சிபுரிந்த இரண்டாம் ராசாதிராசன் காலத்திலோ இக்கோயிலுக்கென வழங்கப்பெற்ற நிபந்தங்களைக்குறித்த கல்வெட்டுக்கள் இக்கோயிலில் வரையப்பெற்றிருக்கும். அன்னோர்காலத்துக் கல்வெட்டெதுவும் இக்குன்றத்தூர்த் திருநாகேச்சரக் கோயிலிற் பொறிக்கப்படாமையால் இத் திருக்கோயில் மூன்றாங் குலோத்துங்க சோழனது ஆட்சியின் தொடக்கத்திலேதான் கட்டப்பெற்றிருத்தல் வேண்டுமென்பது நன்கு துணியப்படும். அன்றியும் இரண்டாம் ராசராசன் காலத்தில் சிறப்புற்று விளங்கிய சேக்கிழார் குடும்பத்தவர் திருப்பாசூரி லுள்ள திருக்கோயிலுக்கு நிபந்தமளித்து உள்ளனர். இத் திருநாகேச்சரத் திருக்கோயிலுக்கு மூன்றாங் குலோத்துங்கன் காலத்திற்கு முன் சேக்கிழார் குடும்பத்தவர்களோ அன்றி ஏனைய அன்பர்களோ எத்தகைய நிபந்தமும் அளித்ததாகத் தெரிய வில்லை. மூன்றாங் குலோத்துங்கனுக்குப்பின் அவன் மகன் மூன்றாம் இராசராசனது 25-ஆம் ஆட்சியாண்டில் தான் சேக்கிழான் வரந்தரு பெருமாள் திருவூரகப்பெருமாள் என்பவர் இத்திருக்கோயிலுக்கு நிபந்தமளித்துள்ளார்.

1929-ஆம் ஆண்டு அறிக்கையிற் குறிக்கப்பட்ட 221-ஆம் எண்ணுள்ள கல்வெட்டு திரிபுவனச் சக்கரவர்த்திகள் ராசராச தேவரது 19-ஆம் ஆண்டில் திருவரத் துறையிலிருந்து திருஞான சம்பந்தப்பிள்ளையார் மாசிவைகாசி விழாக்காலங்களில் மாறன் பாடிக்கு எழுந்தருளுவதற்கும் பிறபணிகளுக்குமாகச் சேக்கிழான் பாலறாவாயன் களப்பாளராயன் என்பார் நிலதானஞ் செய்தனரெனக் குறிப்பிடுகின்றது. திரிபுவனச் சக்கரவர்த்திகள் ராசராசன் எனச் சிறப்பிக்கப்படுவோர் இரண்டாம் ராசராச சோழனும் மூன்றாம் ராசராச சோழனுமேயாவர். அவருள் இரண்டாம் ராசராச சோழன் தனது பதினாறாம் ஆட்சியாண்டு நிறைந்து பதினேழாம் ஆட்சியாண்டின் தொடக்கத்திலேயே இறந்து போயினானென்பது ஆராய்ச்சியாளர் துனிபாகும்.* (* பிற்காலச் சோழர் சரித்திரம் பகுதி II பக். 125.) ஆகவே 19ஆம் ஆட்சியாண்டில் திருவரத்துறையில் வரையப்பட்ட கல்வெட்டின் காலத்தவன் மூன்றாம் ராசராசன் எனக் கொள்ளுதலே பெரிதும் பொருத்தமுடையதாகும். திருவாளர் நீலகண்ட சாத்திரியாரவர் களும் இதனை மூன்றாம் ராசராசன் காலத்துக் கல்வெட்டாகவே கொண்டுள்ளார். இப்பாலறாவாயன் என்பார் மூன்றாங் குலோத்துங்கனது ஆட்சியின் இரண்டாமாண்டில் கோட்டூர்க் கோயிலில் நுந்தா விளக்கெரிக்கப் பொருள் வழங்கியுள்ளார். இவரது தமையனாராகக் கருதப்படும் "ஜயங்கொண்ட சோழமண்டலத்துக் குலோத்துங்க சோழவள நாடான புலியூர்க் கோட்டத்துக் குன்றத்தூர் நாட்டுக் குன்றத்தூர்ச் சேக்கிழான்

மாதேவடிகள் ராமதேவனான உத்தமசோழப் பல்லவராயன்" என்பார் திரிபுவனச் சக்கரவர்த்தி ராசராசதேவரது 17 ஆம் ஆட்சி ஆண்டில் திருமழபாடித் திருக்கோயிலுக்குத் திருநொந்தா விளக்கின் பொருட்டுத் தொண்ணூறு ஆடுகள் வழங்கிய செய்தி அவ்வூர்க் கோயிலில் வரையப் பெற்றுள்ள கல்வெட்டிற் குறிக்கப்பட்டுள்ளது. * (* M.E.R. No. 95 of 1920.) மூன்றாம் குலோத்துங்கன் ஆட்சியின் இரண்டாம் ஆண்டிலும் மூன்றாம் ராசராசனது ஆட்சியின் பத்தொண்பதாம் ஆண்டிலும் முறையே கோட்டூரிலும் திருவரத்துறையிலும் நிபந்தமளித்த சேக்கிழான் பாலறாவாயன் களப்பாளராயன் எனபார் சேக்கிழார் புராணங் கூறியபடி உத்தம சோழப் பல்லவனென்னும் பட்டம் பெற்ற சேக்கிழார் நாயனாருடைய தம்பியெனக் கொள்ளுதல் பெரிதும் பொருத்தமுடையதாகும். இவர் மூன்றாம் குலோத்துங்கன் ஆட்சியின் இரண்டாம் ஆண்டிலேயே திருக்கோயிலுக்கு நிபந்தமளிக்கத்தக்க சமயப் பயிற்சியுடையவராகத் திகழ்தலாலும் இவருடைய தமையனாராகக் கருதப்படும் சேக்கிழான் மாதேவடிகள் ராமதேவனான உத்தமசோழப் பல்லவராயர் இரண்டாம் இராசராசசோழனது ஆட்சியின் இறுதிக் காலத்திலேயே திருமழபாடித் திருக்கோயிலுக்கு நிபந்தமளித் திருப்பதாலும் மூன்றாங் குலோத்துங்க சோழனது ஆட்சிக்கு முன் அவன் தந்தை இரண்டாம் ராசராச சோழனது ஆட்சியின் இறுதியிலேயே சேக்கிழார் சோழர் ஆட்சியிற் பணிமேற் கொண்டரென்பது நன்கு பெறப்படும்.

6. இரண்டாம் ராசராச சோழன் இறக்குங்கால் அவனுடைய பிள்ளையாகிய மூன்றாங் குலோத்துங்கனுக்கு மூன்றுவயது நிகழ்ந்ததென்பதும் அக்குழந்தை ஆட்சிக்கு உரியபருவம் அடையும் வரையில் இரண்டாம் ராஜாதி ராஜனே ஆளுதல் வேண்டுமென இரண்டாம் ராசராசன் நியமித்துவிட்டு இறந்தானென்பதும், பல்லவராயன் பேட்டைக் கல்வெட்டால் நன்குபுலனாம். * (*Ep. Ind. vol. XXI No. 31.) இளம்பருவத்தவ னாகிய மூன்றாங்குலோத்துங்கனுக்குத் தமிழ் மொழியிலும் சிவநெறிப்பனுவலாகிய அருள் நூல்களிலும் பற்றுண்டாகச் செய்தவர் உத்தம சோழப் பல்லவராகிய சேக்கிழாரென்று எண்ண இடமுண்டு. சோழகுமாரன் சீவக சிந்தாமணிக் கதையை மெய்யென நம்பி அதனையே படித்துப் பொழுது போக்கியதைக் கண்ட சேக்கிழார், சமணராற் புனைந்துரைக்கப்பட்ட அக்கதை இம்மை மறுமைக்கு ஒரு சிறிதும் பயன்படாதெனத் தெருட்டிய தோடு அம்மன்னன் வேண்டுகோட்கிணங்கி மும்மைக்கும் பயன்தரும் சிவகதையாகிய திருத்தொண்டர்களின் வரலாற்றை விரித்துரைக்கும் பெரிய புராணத்தை இயற்றினாரெனச்

சேக்கிழார் புராணங்கூறும். இவ்வாறு சிவகதையிற் கருத்தின்றிச் சிந்தாமணிக்கதையை மெய்யென நம்பிப் பயிலும் சூழ்நிலை, சிறந்த சிவநெறிச் செல்வராகிய ஒட்டக்கூத்தரின் மாணாக்கனாகிய இரண்டாங் குலோத்துங்கனுக்கு என்றும் நேர்ந்ததில்லை. ஒட்டக்கூத்தர் இயற்றிய நூல்களை ஊன்றிப் பயில்வார்க்கு இவ்வுண்மை நன்கு விளங்கும். எனவேசேக்கிழார் இரண்டாங் குலோத்துங்கனைத் திருத்துதல் வேண்டிப் பெரிய புராணம் பாடினாரென்பதற்குச் சிறிதும் இடமில்லை என்பது புலனாம். மூன்றாங்குலோத்துங்கனுடைய தந்தையாகிய இரண்டாம் ராசராசன் குலோத்துங்கனது மூன்றாம் வயதிலேயே விட்டிறந்தனென்பது பல்லவராயன் பேட்டை கல்வெட்டாற் புலனாதலின் * (* பிற்காலச் சோழர் சரித்திரம் 2-ஆம் பகுதி பக். 123-, 145,14) இரண்டாம் ராசாதிராசனது ஆட்சியில் இராசராசபுரத்து அரண்மனையிற் பாதுகாவலில் வளர்ந்த இளைஞனாகிய மூன்றாங் குலோத்துங்கன் இளம் பருவத்தே கல்விபயிலுங்கால் சீவக சிந்தாமணிக்கதையை மெய்யென நம்பி அக்கதையைப் படித்து இன்புறுதலிற் பொழுது போக்கியிருத்தல் கூடும். அவனது உளநிலையை யுணர்ந்த சேக்கிழார் இலக்கிய நயம் ஒன்றே கருதிப் புனைந்துரையாகிய கதையை மெய்யென நம்புதல் கூடாதெனவும் தமிழகத்தில் உண்மையாக நிகழ்ந்த மெய் வரலாறுகளைத் தெரிந்து கொள்ளுதல் இன்றியமையாதெனவும் கூறி அவ்வரச குமாரனைத் தெருட்டினார் என்பதும் அவரது அறிவுரையை யேற்றுக்கொண்ட அவ்வரசிளங்குமரன் தனது ஆட்சியின் தொடக்கத்தே புலவர் பெருமானாகிய சேக்கிழாரைக் கொண்டு திருத்தொண்டர் புராணமென்னும் பெருங் காப்பியத்தைப் பாடச்செய்தனன் என்பதும் வரலாற்றுக்கு ஒத்த நிகழ்ச்சிகளேயாகும்.

7. திருத்தொண்டர் புராண வரலாற்றைவிரித்துப் பெருங்காப்பியமாக இயற்றித் தருதல் வேண்டுமென்னும் மன்னனது வேண்டுகோட்கிணங்கிய சேக்கிழார், தில்லைக்குச் சென்று கூத்தப் பெருமானையும் திருமுறை ஆசிரியர்களையும் இறைஞ்சிப் போற்றித் தில்லையம்பலவன் திருமுன் நின்று, "எம்பெருமானே, அடியேன் உம்முடைய அடியார்களாகிய திருத்தொண்டர்களது அடிமைத் திறத்தை விரித்துப் பெருங்காப்பியமாகப் பாடுதற் பொருட்டு அடியெடுத்துத் தந்தருளவேண்டும் என வேண்டிநிற்க அந்நிலையில் 'உலகெலாம்' என்றதொரு வானிழலொலி தோன்றிய தென்றும், அதனை முதலாகக் கொண்டு ஆயிரக்கால் மண்டபத்திலிருந்து திருத்தொண்டர் புராணத்தைப் பாடி முடித்தாரென்றும் சேக்கிழார் புராணம் கூறும். ஆயிரக்கால் மண்டபத்தை முதன்

முதற் கட்டி நிறைவேற்றியவன் மூன்றாங்குலோத்துங்க சோழனாவன். இவன் காலத்திற்கு முன்பு ஆயிரக்கால் மண்டபம் யாண்டும் கட்டப்பெற்றிருந்த தில்லையென்பது ஆராய்ச்சியாளர் துணிபு* (* ஆயிரக்கால் மண்டபம் விஜயநகர வேந்தர் காலத்தில் தான் முதன் முதல் கட்டப்பட்டதென்பர் சிலர். ஆன்றோர் கூற்றுப் பொருந்தாதென்பது, மூன்றாங் குலோத்துங்கன் காலத்திலேயே திருவாரூர், திருவக்கரை, தில்லை முதலிய இடங்களில் ஆயிரக்கால் மண்டபம் கட்டப் பெற்றிருத்தலால் நன்கு புலனாம்.) இவ்வேந்தனது படைத்தலைவன் அம்மையப்பன் பாண்டிநாடு கொண்டானாகிய கண்டர் சூரியன் என்பான் திருவக்கரையில் தன் பெயரால் கண்டர் சூரியன் என்ற ஆயிரக்கால் மண்டபத்தைக் கட்டி முடித்தா னென்று அவ்வூர்க் கல்வெட்டொன்று * (* Ins. 190 of 1904.) கூறுகின்றது. திருவாரூரில் ஆயிரங்கால்களை யுடையதாய் விளங்கும் சபாமண்டபத்தைக் கட்டியவன் இம்மூன்றாங் குலோத்துங்கனேயாவன். இச்செய்தி திரிபுவன வீரேச்சுரத்தி லுள்ள வடமொழிக் கல்வெட்டால் அறியக் கிடக்கின்றது.* (* Ins. 190 of 1907). திருவாரூரிலுள்ள இச்சபா மண்டபத்தினையே ஆசிரியர் சேக்கிழார் 'தேவாசிரியனெனுந் திருக்காவணம்' எனத் திருத்தொண்டர் புராணத்திற் சிறப்பித்துப் போற்றியுள்ளார். (பெரியபுராணம், திருக்கூட்டச் சிறப்பு 2ஆம் செய்யுள். பெரியபுராணம், தடுத்தாட்கொண்ட புராணம் 189ஆம் செய்யுள்) திருவாரூரிலுள்ள பழைய திருக்காவணத்தை ஆயிரக்கால் மண்டபமாகத் திருத்தமுற அமைத்தவன் மூன்றாங் குலோத்துங்கனாவன். திருவாரூரில் ஆயிரக்கால் மண்டபம் அமைத்தவன் மூன்றாங்குலோத்துங்கன் எனத் திரிபுவன வீரெச்சுரக் கல்வெட்டுத் தெளிவாகக் குறிப்பிடுதலின் இதனைத் திருத்தொண்டர் புராணத்திற் குறிப்பிட்ட ஆசிரியர் சேக்கிழாரும் இவன் காலத்தையொட்டி வாழ்ந்தவரென்பது நன்கு தெளியப்படும்.

மூன்றாங் குலோத்துங்கனாற் கட்டப்பெற்ற இச்சபா மண்டபத்திற்குத் தேவாசிரியன் எனப்பெயர் வழங்குதலைக் கூர்ந்து நோக்குங்கால், தேவாசிரியன் என்னும் இப்பெயர் மூன்றாங் குலோத்துங்கனுக்குரிய சிறப்புப்பெயராக இருத்தல் கூடுமோவென்ற எண்ணந்தோன்றுகிறது. இக் குலோத்துங்கனது தந்தையாகிய இரண்டாம் ராசராசசோழன் இப்பொழுது தாராசுரமென வழங்கும் இராசராசபுரத் திருக்கோயிலில் கட்டிய மண்டபம்அவனுக்குரிய இராஜகெம்பீரன் என்ற பெயரால் வழங்கப்படுதல் போல இக்குலோத்துங்கன் திருவாரூரிற் கட்டிய சபாமண்டபமாகிய ஆயிரக்கால் மண்டபமும் இவனுக்குரிய சிறப்புப் பெயராகிய தேவாசிரியன் என்னும் பெயரால் வழங்கப்பட்டதெனக் கொள்ளுதற்கும் இடமுண்டு.

மூன்றாங் குலோத்துங்கனுடைய படைத்தலைவர்களிற் சிறந்தவனும் அவ்வேந்தனுடைய மகளை மணந்த காரணத்தால் மணவாளப்பெருமாள் எனப் பாராட்டப் பெறும் சிறப்பினைப் பெற்றவனும் ஆகிய கூடல் ஏழிசைமோகன் மணவாளப் பெருமாள் வாணிலைகண்ட பெருமாளான ராஜராஜக் காடவராயன் என்பான், இக் குலோத்துங்கனுடைய மகனாகிய மூன்றாம் ராசராசனது ஆட்சியின் 14ஆம் ஆண்டில் திருமுது குன்றத்தில் வெட்டப்பட்ட கல்வெட்டொன்றில் * (* கல்வெட்டுத் தொகுதி VII. எண் 146) பல்லவன் கோப்பெருஞ்சிங்கன் என உயர்த்துப் போற்றப் பெற்றுள்ளான். அவனுடைய படை முதலியவைகளில் ஒருவனாகிய எதிரிகள் நாயன் பொத்தப்பிச் சோழன் என்பான், திருமுதுகுன்ற முடையார்க்கு விளக்கெரிக்க விட்ட நிபந்தம் அவ்வூர்க் கல்வெட்டிற் குறிக்கப்படுவதுடன் திருமுதுகுன்றத்துக் கோயிலிலுள்ள அளவு கருவி தேவாஸ்ரயன் என்ற பெயரால் வழங்கப்படுகின்றது. * (* கல்வெட்டுத் தொகுதி VII. எண் 149.) கோப் பெருங்சிங்கன் சோழராட்சிக்கு மாறாகத் தனியாட்சி நிறுவிய பிற்காலத்திலும் தேவாஸ்ரயன் என்னும் இப்பெயர் வழக்கத்தைத் தன் கல்வெட்டுக்களில் மேற்கொண்டு குறிப்பிட்டுள்ளான். * (* கல்வெட்டுத் தொகுதி XII. எண் 118.) எனவே தேவாஸ்ரயன் என்னும் இப்பெயர், இவனால் மதித்துப் போற்றுதற்குரிய மூன்றாங் குலோத்துங்கனது சிறப்புப் பெயராக இருத்தல் வேண்டும் என உய்த்துணரலாம். தேவாஸ்ரயன் என்ற சொல் தேவர்களால் விரும்பிஅடையத்தக்கவன் என்ற பொருளைத் தருவதாகும். திருவாரூரில் எழுந்தருளிய இறைவர் தம் கோயில் தானத்தார்க்கு அருளிய உத்தரவொன்றில் இவ்வரசர் பெருமானை 'நம் தோழன்' எனக்கூறியுள்ளனரென்று அவ்வூரி லுள்ள இவனது இருபத்து நான்காம் ஆட்சியாண்டுக் கல்வெட் டொன்று * (* Ins. 554 of 1904.) கூறுகின்றது. நம்பியாரூராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் திருவாரூர்ப்பெருமான் "தோழமையாக உனக்கு நம்மைத் தந்தனம்" எனத் திருவாய் மொழிந்தமையால் அவர் 'தம்பிரான் தோழர்' என அழைக்கப்பெற்ற வரலாறு பெரியபுராணத்திற் கண்டதாகும். சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குப் பின் சிவபெருமானுக்குத் தோழனாகும் பேறுபெற்றவன் இம்மூன்றாங் குலோத்துங்க சோழனாதலால் * (* பிற்காலச் சோழர் சரித்திரம் இரண்டாம் பகுதி. பக். 160, 161.) இவனைத் தேவாஸ்ரயன் என்ற சிறப்புப் பெயராற் போற்றுதல் பெரிதும் பொருத்தமுடையதேயாகும். சேக்கிழார் கூறும் தேவாசிரியன் என்னும் பெயர் இவ்வேந்தனைக் குறித்த சிறப்புப் பெயராயினும் அன்றிவேறோர் ஏதுப் பெயராயினும் ஆகுக, அப்பெயராற் குறிக்கப்படும் சபா மண்டபமாகிய

ஆயிரக்கால் மண்டபத்தைக் கட்டியவன் இம் மூன்றாங் குலோத்துங்கனே யென்பது திரிபுவன வீரேச்சுரக் கல்வெட்டால் இனிது பெறப்படுதலின், சேக்கிழார் இம்மூன்றாங் குலோத்துங்கன் காலத்திற் பெரிய புராண மியற்றினாரெனக் கொள்ளுதல் பெரிதும் பொருத்தமுடையதாகும்.

தில்லைத் திருக்கோயிலிற் சேக்கிழார் பெருமான் அமர்ந்து திருத்தொண்டர் புராணத்தை இயற்றுதற்கு இடமாக விளங்கிய ஆயிரக்கால் மண்டபமும் இம் மூன்றாங் குலோத்துங்கன் ஆட்சியில் கட்டப்பெற்றிருத்தல் வேண்டும். இவ்வேந்தர் பெருமானைத் 'தில்லைச் சிற்றம்பலவாணருடைய ஏகபக்தன்' எனத் திரிபுவன வீரேச்சுரத்திலுள்ள கல்வெட்டொன்று கூறுதலால்* (* 1908ஆம் ஆண்டின் தென்னிந்தியக் கல்வெட்டுத் துறையின் ஆண்டறிக்கை IIஆம் பகுதி 64ஆம் பாரா நோக்குக.) இவ்வரசர் பெருமான் தில்லைப் பெருங்கோயிலிற் பல திருப்பணி களைச் செய்து நிறைவேற்றியவனென்பது நன்கு துணியப்படும். சேக்கிழார் பெருமான் அமர்ந்திருந்து திருத்தொண்டர் புராணம் பாடிய இடம் "ஐயிரு நூறுகால் மணிமண்டபம்" * (* சேக்கிழார் புராணம் 35ஆம் செய்யுள்.) எனச் சேக்கிழார் புராணங் கூறுதலானும், சேக்கிழார் தாம் இயற்றிய பெரியபுராணத்தில் மூன்றாங் குலோத்துங்கனாற் கட்டப்பெற்ற திருவாரூர்ச் சபா மண்டபத்தைக் குறிப்பிடுதலானும் அவ்வாசிரியர் திருத் தொண்டர் புராணமியற்றிய காலம் மூன்றாங் குலோத்துங்கன் ஆட்சிக்காலமே என்பது உறுதியாகத் தெரிகின்றது.

சோழ மன்னனுக்கு அமைச்சுரிமைபூண்ட சேக்கிழார் அம்மன்னது தலைநகராய் விளங்கிய பழையாறை, இராசராசபுரம் (தாராசுரம்) என்னும் பதிக்கு அண்மையிலுள்ள திருநாகேச் சரத்தில் தங்கியிருந்தாரெனத் தெரிகிறது. அங்ஙனம் தங்கிய காலத்துத் திருநாகேச்சரத்திறைவரை நாடோறும் போற்றி வழிபடுதலில் விருப்பமிக்க சேக்கிழார் தாம் பிறந்த ஊராகிய குன்றத்தூரிலும் சோழ நாட்டிலுள்ள திருநாகேச்சரத்தைப் போன்ற அமைப்பில் திருநாகேச்சரம் என்னும் பெயருடைய திருக்கோயிலைக் கட்டி நாள் வழிபாடும் திருவிழாவும் நடைபெறச் செய்தார் எனச் சேக்கிழார் புராணங் கூறுஞ் செய்தி முன்னர் விளக்கப்பட்டது. இங்ஙனம் சேக்கிழார் தம் சொந்த ஊராகிய குன்றத்தூரில் திருநாகேச்சரம் என்ற திருக்கோயிலைக் கட்டிய காலம் மூன்றாம் குலோத்துங்கனது ஆட்சியின் தொடக்கமாக இருந்தல் வேண்டும். குன்றத்தூர்த் திருநாகேச் சரத்திலுள்ள 44 கல்வெட்டுக்களிலும் மிகவும் பழமையானது மூன்றாங் குலோத்துங்கனது ஆட்சியின் இரண்டாம் ஆண்டில்

வரையப்பட்ட கல்வெட்டேயாகும்.* (* 1029-30 ஆண்டறிக்கை, கல்வெட்டெண் 200.) மூன்றாங் குலோத்துங்க சோழன் அவ்வூரிற் சில நிலங்களால் வரும் வரிப்பொருளைக் கொண்டு குன்றத்தூர்த் திருநாகேச்சரமுடைய இறைவர்க்கு மாதந்தோறும் ரேவதி நக்ஷத்திரத்தில் சிறப்பு முறையில் வழிபாடு நிகழச்செய்ததனைக் குறிப்பிடுவது அக்கல்வெட்டு. இதுவே இக்கோயிலுக்கு வேந்தனால் முதன் முதல் அளிக்கப்பட்ட நிபந்தமாகும். இதனால் இவ்வேந்தன் சேக்கிழாரையும் அவரால் நிறுவப்பட்ட இத்திருக்கோயிலையும் நன்கு மதித்துப் போற்றியவனென்பது நன்கு புலனாகிறது. இவ்வேந்தன் இருபத்து நாலாவது ஆட்சியாண்டில் திரிபுவன வீரதேவன் என்னும் சிறப்புப் பெயராற் கட்டிய திரிபுவன வீரேச்சுரம் என்ற திருக்கோயில் சோழ நாட்டில் திருநாகேச்சரம் என்ற ஊருக்கு அண்மையில் ஒரு கல் தொலைவில் அமைந்துள்ளது. சேக்கிழார் திருநாகேச்சரத்தில் தங்கியிருந்த காலத்தில் இத்திரிபுவன வீரேச்சுரத்திருக்கோயிற் பணியும் தொடங்கி நடைபெற்றிருத்தல் கூடும்.

மூன்றாங் குலோத்துங்கன் ஆட்சியில் சேக்கிழான் வைராதராயன் என்பார் தில்லையில் 'தொண்டர் சீருரைத்தான் நந்தவனம்' என்ற நந்தவனத்தை அமைத்துள்ளார்.* (* தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி VIII. எண் 48.) இங்கே "தொண்டர் சீருரைத் தான்" எனக் குறிப்பிடப்படும் இப்பெயர் திருத்தொண்டர் புராண மியற்றிய ஆசிரியர் சேக்கிழாரைக் குறித்து வழங்கும் சிறப்புப் பெயராகும். சேக்கிழார் குடும்பத்திற் பிறந்த வைராதராயன் என்பார், தம் குடும்பத் தலைவராகிய சேக்கிழார்க்குரிய தொண்டர் சீருரைத்தான் என்னும் திருப்பெயரால் சேக்கிழார் விரும்பி வாழ்ந்த தில்லையிலே திருநந்தவனம் அமைத்திருத்தலை யுற்று நோக்கின் இச்செய்தி பெரியபுராண ஆசிரியர் வாழ்ந்த காலத்தை யொட்டியே நிகழ்ந்ததென உய்த் துணரலாம். திருத்தொண்டர் புராணத்திற்குச் சேக்கிழார் பொருள் விரித்தருளிச் செய்தபின் சோழமன்னனும் சிவனடியார்களும் சேக்கிழார் பெருமானைத் தில்லையம்பலவர் திருமுன்னே 'தொண்டர்சீர் பரவுவார்' எனச் சிறப்பித்து ஞானமுடி சூட்டிப் போற்றினர் எனச் சேக்கிழார் புராணம் கூறும். தொண்டர்சீர் பரவுவார் என்ற சிறப்புப் பெயரோடு பொருளால் ஒற்றுமையுடையதே தொண்டர் சீருரைத் தான் என்ற இப்பெயருமாகும். ஆகவே சேக்கிழார் தம் காலத்திலேயே தொண்டர் சீருரைத்தான் எனச் சிறப்பித்துப் போற்றப்பெறும் பெருஞ்சிறப் பெய்தினமை மேற்காட்டிய கல்வெட்டினாற் புலனாதல் காணலாம்.

இனி, சேக்கிழாருடைய தம்பியாராகக் கருதப்பெறும் சேக்கிழான் பாலறாவாயன் களப்பாளராயன் என்பார், இரண்டாங் குலோத்துங்கனது 12-ஆம் ஆண்டில் களத்தூரில் வெட்டப்பட்ட கல்வெட்டொன்றில் தொண்டைமான் என்ற பட்டமுடைய அரசியலதிகாரியாகக் குறிக்கப் பட்டுள்ளார் எனக் கருதுவாருமுளர். * (* சாசனத் தமிழ்க்கவி சரிதம் பக்கம் 77.) திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டானது 12-ஆம் ஆண்டில் வெட்டப்பட்ட இக்கல்வெட்டில், களத்தூரைச் சூழ்ந்த சில நிலங்களை ஒன்று சேர்த்துக் குலோத்துங்க சோழன் திருத்தொண்டத்தொகை நல்லூர் என்று பெயரிட்டுப் பெருந்திருக் கோயிலுடைய மகாதேவர்க்குத் திருமடவிளாக மாகவும் நந்தவனமாகவும் பயன்படுத்தும்படி தொண்டைமான் என்னும் தலைவனுக்கு அரசாங்க உத்தரவு வந்த செய்தி குறிக்கப்பெற்றுளது. இக்கல்வெட்டிற் குறிக்கப்படும் அரசியலதிகாரியாகிய தொண்டைமான் என்பவர் குன்றத்தூர்ச் சேக்கிழார் குடும்பத்தைச் சார்ந்தவரென்றோ பாலறாவாய ரென்னும் இயற்பெயருடையவரென்றோ எதுவுங் கூறப்பட வில்லை. இந்நிலையில் தொண்டைமான் என்ற பெயரொன்றே பற்றி அவரைச் சேக்கிழார்க்குத் தம்பியெனத் துணிதல் கூடாது.

இரண்டாம் இராசாதிராச சோழனது ஒன்பதாம் ஆட்சியாண்டில் திருவொற்றியூர்க் கோயிலில் வெட்டப்பட்ட கல்வெட்டில் திருப்பங்குனி உத்தரத்து ஆறாந்திருநாளான புதன்கிழமையும் ஏகாதசியும் கூடிய ஆயில்யத்தினன்று சதுரானன பண்டிதர் வாகீச பண்டிதர் இரண்டாம் ராசாதிராசன் முதலியவர்கட்கு முன் "படம்பக்க நாயக தேவர் திருமகிழின்கீழ்த் திருவோலக்கம் செய்து எழுந்தருளியிருந்து ஆளுடைய நம்பி ஸ்ரீ புராணம் கேட்டருளா நிற்க" என்ற அரிய செய்தி காணப்படுகின்றதென்றும் அக்கல்வெட்டிற் குறித்த ஆளுடைய நம்பி ஸ்ரீ புராணமென்பது சேக்கிழார் செய்த பெரிய புராணத்துள் அடங்கிய சுந்தரர் புராணமாகவே இருத்தல் வேண்டுமென்றும் கூறுவர் சிலர். * (* பெரிய புராண ஆராய்ச்சி பக். 30 (டாக்டர் மா. இராச மாணிக்கனார்) இக்கல்வெட்டிற் குறிக்கப்படும் ஆளுடையநம்பி ஸ்ரீ புராண மென்பது சேக்கிழார் பாடிய திருத்தொண்டர் புராணமே எனத் துணிந்து கூறுதற்கு இயலவில்லை. கன்னிவன புராணம், இறையானரையூர் புராணம் எனக் கல்வெட்டுக்களிற் குறிக்கப்படும் தல புராணங்களைப் போன்று திருவொற்றியூர்க்குரிய தனிப் புராணத்திற் கூறப்படும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாற்றுப் பகுதியே இங்குக் குறிக்கப்பட்ட ஆளுடைய நம்பி ஸ்ரீ புராணமெனத் தெரிகின்றது. ஆசிரியர் சேக்கிழார் தாம் இயற்றிய பெரிய புராணத்திற்குத்

திருத்தொண்டர் புராணமென்ற பெயரையே வழங்கியுள்ளார். அதனை ஸ்ரீ புராணம் என்ற பெயரால் யாரும் வழங்கியதில்லை. கவிச் சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் தாம் பாடிய தக்கயாகப் பரணியில் திருஞான சம்பந்தப் பிள்ளையார் வரலாற்றை விரித்துக்கூறும் தனிப்புராணமே இக்கல்வெட்டிற் குறிக்கப்படும் ஆளுடைய நம்பி ஸ்ரீ புராணம் ஆக இருத்தல் வேண்டும். கல்வெட்டிற் காணப்படும் கன்னிவன புராணம் இறையானரையூர் புராணம் முதலியன போன்று ஆளுடையநம்பி ஸ்ரீ புராணம் என்னும் இதுவும் இக்காலத்திற் கிடைக்கவில்லை. ஆகவே திருவொற்றியூர்க் கோயிலிற் படிக்கப் பெற்ற ஆளுடைய நம்பி ஸ்ரீ புராணமென்பது சேக்கிழார் பாடிய பெரிய புராணம் எனத் துணிந்து கூறுதற்கிடமில்லை. இரண்டாம் ராசராசசோழனாற் கட்டப்பெற்ற இராசராசபுர (தாராசுர)த் திருக்கோயிலில் திருத்தொண்டத் தொகையிற் கூறப்படும் அடியார்களின் திருவுருவங்களும் அவ்வத் திருவுருவத்தின் கீழ் அவரவர்களுடைய வரலாற்றுக் குறிப்பொடு தொடர்ந்த பெயர்களும் பொறிக்கப் பெற்றிருத்தலை எடுத்துக்காட்டி, இரண்டாம் ராசராச சோழன் காலத்திற்கு முன்பே சேக்கிழார் பெரிய புராணம் பாடியிருத்தல் வேண்டுமென்பர். * (* *பெரிய புராண ஆராய்ச்சி பக்கம் 28, 29 (மா. இராசமாணிக்கனார்)* இங்கே குறிக்கப்பெற்ற இத் திருவுருவங்களை அமைத்தற்கும் பெயர் பொறித்தற்கும் வேண்டிய வரலாற்றுக் குறிப்புக்கள் யாவும் இரண்டாம் ராசராசன் காலத்திற்கு முன்னரே பெருக வழங்கியன என்பது நம்பியாண்டார் நம்பிகள் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதி முதலிய திருமுறைகளாலும், இவ்வேந்தன் காலத்துக்கு முற்பட்ட சோழ மன்னர்களின் கல்வெட்டுக்களில் திருத்தொண்டத் தொகையடியார்களைக் குறித்து ஆங்காங்கே காணப்படும் குறிப்புக்களாலும் நன்கு புலனாகும். ஆகவே இத் திருவுருவங்களை அமைத்தற்குச் சேக்கிழார் பெரிய புராணமே வழிகாட்டியா யிருந்த தென்று உறுதியாகச் சொல்லுதற்கில்லை. அன்றியும் "தாரணி கொள் திருத்தாதைக்கும் இராசராசீச்சுரத்தார்க்கும், காரணச் சிறந்தகோயில் அணி திகழ் பொன்வேய்ந்தருளி" எனவரும் மூன்றாங் குலோத்துங்கனது மெய்க் கீர்த்தியால் அவ்வேந்தன் தன் தந்தையாகிய இராசராச சோழனாற் கட்டப்பெற்ற இராச ராசபுரத் திருக்கோயிலை மேலும் விரிவு படுத்தினானென்ற செய்தி புலப்படுத்தப்பட்டுளது. இவனாற் கட்டப்பட்ட திரிபுவன வீரேச்சுரத் திருக்கோயிலுக்குக் கடவுள் மங்கல விழாவைச் சிறப்புற நிகழ்த்தியவரும் இவன் குருவுமாகிய ஈசுர தேவரென்னும் ஈசான தேவர்க்கு இராசராசபுரத் திருக்கோயிற் கோபுரத்தில் படிமம் அமைக்கப் பெற்றுளது.

இவ்வரலாற்றுக் குறிப்புக்களை உற்று நோக்குங்கால் திருத்தொண்டத் தொகையிற் போற்றப்பெறும் அடியார் திருவுருவங்களை இராச ராசபுரத் திருக்கோயிலில் அமைத்தவன் மூன்றாங் குலோத்துங்க சோழனாகவும் இருத்தல் கூடும் எனக் கருத இடமுண்டு.

சேக்கிழார் இரண்டாங் குலோத்துங்கன் காலத்தில் இத்திருத் தொண்டர் புராணத்தைப் பாடியிருப்பாராயின் அவன் காலத்துக் கல்வெட்டுக்களிற் குறிக்கப்பட்ட திருத்தொண்டத் தொகை அடியார்களின் வரலாற்றுக் குறிப்புக்களைத் தமது நூலில் விரிவாக எடுத்துரைத்திருப்பார். ஒரு பசுவின் கன்றுக்காகத் தன் மகன்மேல் தேரூர்ந்த மனுச்சோழனுடைய மகன் பெயர் பிரியவரதன் என்பதும், அவனுடைய மந்திரி பாலையூருடையான் என்பதும், நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளின் தாயார் இசை ஞானியாரென்பவர் திருவாரூரிற் கௌதம கோத்திரத்து ஞான சிவாசாரியார்க்கு மகவாகத் தோன்றியவ ரென்பதும் இரண்டாங் குலோத்துங்கசோழன் காலத்தில் வரையப்பெற்ற திருவாரூர்க் கல்வெட்டுக்களிற் குறிக்கப் பெற்றுள்ளன. இக்குறிப்புக்களுள் எதனையும் சேக்கிழார் பெரிய புராணத்திற்கு குறிப்பிடவேயில்லை. ஆவின் கன்றுக்காகத் தன் மகன்மேல் தேரூர்ந்த அரசனைச் சூரிய வமிசத்து முதல்வனாகிய மனுவென்று கவிச்சக்கரவர்த்தி சயங்கொண்டாரும் ஒட்டக்கூத்தரும் தம் நூல்களில் கூறியுள்ளார்கள். அங்ஙனமாகவும் இவ் வேந்தன் ஆதி மனுப்பெற்ற பெயரைத் தன் பெயராகக் கொண்ட மற்றொரு சோழ மன்னன் எனச் சேக்கிழார் பெரிய புராணத்தில் விளக்கியுள்ளார். மேற்காட்டியவண்ணம் இரண்டாங் குலோத்துங்க சோழன் ஆட்சியில் அரசியலாதரவு கொண்டு வரையப்பட்ட திருவாரூர்க் கல்வெட்டுக்களிற் குறிக்கப்படும் திருத்தொண்டர் வரலாற்றுக் குறிப்புக்கள் பெரிய புராணத்தில் இடம் பெறாமையின் இக்குறிப்புக்கள் இரண்டாங் குலோத்துங்க சோழன் காலத்தில் பெரிய புராணம் இயற்றப்பெற்ற தென்பதற்குச் சிறப்புடைய சான்றாதல் இல்லை.

மேற் குறித்த செய்திகளால் 'சென்னி அபயன் குலோத்துங்க சோழன், தில்லைத் திருவெல்லை பொன்னின் மயமாக்கிய வளவர் போரேறு, என்றும் புவிகாக்கும் மன்னர் பெருமான்' என ஆசிரியர் சேக்கிழாரால் பாராட்டிப் போற்றப்பெறும் சோழ மன்னன் இரண்டாம் இராசராச சோழன் மகனாகிய மூன்றாங் குலோத்துங்கனே என்பதும், இவ்வேந்தனே சேக்கிழார் பெருமானை ஆதரித்துத் திருத்தொண்டர் புராணம் என்னும் பெருங்காப்பியத்தை இயற்றுவித்த பெருந்தகை யென்பதும்,

திருத்தொண்டர் புராணமாகிய அருள் நூலினை இயற்றியருளிய திருவருட் செல்வராகிய சேக்கிழார் மூன்றாங் குலோத்துங் கனுக்குத் தந்தையாகிய இரண்டாம் இராசராசன் ஆட்சியின் இறுதியிலும் இம் மூன்றாங் குலோத்துங்கன் ஆட்சிக் காலத்திலும் அரசியலதிகாரியாகவும் அருளாசிரியராகவும் விளங்கியவ ரென்பதும் நன்கு புலனாம் என்பர் ஆராய்ச்சிப் பேரறிஞர் தி. வை. சதாசிவ பண்டாரத்தாரவர்கள்.

"சென்னி அபயன் குலோத்துங்க சோழன்" எனச் சேக்கிழாரடிகளாற் பாராட்டப்பெற்ற குலோத்துங்கன் என்னும் சோழ மன்னன், இரண்டாங்குலோத்துங்கனோ அன்றி மூன்றாங் குலோத்துங்கனோ என்பது மேலும் ஆராய்ச்சிக்குரிய தொன்றாம். ஆயினும், திருத்தொண்டர் புராண ஆசிரியராகிய சேக்கிழாரடிகள், இரண்டாங் குலோத்துங்கனுக்கு மகனும் மூன்றாம் குலோத்துங்கனுக்குத் தந்தையும் ஆகிய இரண்டாம் இராசராச சோழன் ஆட்சியின் 17-ஆம் ஆண்டில் திருமழபாடித் திருக்கோயிலிற் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டிற் குறித்தவாறு அத்திருக்கோயிலுக்குத் தொண்ணூறு பேராடுகளை நிபந்தமாக வழங்கிய ஐயங்கொண்ட சோழ மண்டலத்துக் குன்றத்தூர் நாட்டுக் குன்றத்தூர்ச் சேக்கிழான் மாதேவடிகள் ராமதேவனான உத்தம சோழப் பல்லவராயன் என்பவரே என்பதனை மேற்குறித்த ஆராய்ச்சியாளர் பலரும் ஐயுறவுக்கிடனின்றி ஒத்துக் கொள்கின்றனர். ஆகவே, இரண்டாம் இராசராசனது ஆட்சியின் இறுதியாண்டாகிய பதினேழாம் ஆண்டில் திருமழபாடித் திருக்கோயிலுக்கு நிபந்தம் வழங்கிய சேக்கிழான் மாதேவடிகள் எனக் கருதப்படும் சேக்கிழார் நாயனார் அம்மன்னனது தந்தையாகிய இரண்டாங் குலோத்துங்க சோழனது ஆட்சியின் பிற்பகுதியிலும் இரண்டாம் ராசராசனது மைந்தனாகிய மூன்றாங் குலோத்துங்க சோழனது ஆட்சியின் முற்பகுதியிலும் வாழ்ந்திருந்தவர் எனக் கொள்ளுதல் பெரிதும் பொருத்த முடையதாகும்.



# திருத்தொண்டர் புராணம்

## நூலமைப்பு

அருண்மொழித் தேவராகிய சேக்கிழாரடிகள், தில்லைச் சிற்றம்பலவன், 'உலகெலாம்' என்று அடியெடுத்துக் கொடுக்கப் பெற்றுப் பாடியருளிய சிறப்புடையது, திருத்தொண்டர் புராணமாகிய பெரிய புராணமாகும். இந்நூல், தமிழ்நாட்டில் நிகழ்ந்த உண்மை நிகழ்ச்சிகளாகிய வரலாறுகளைக் கருவாகக் கொண்டு இயற்றப்பெற்ற செந்தமிழ்க் காப்பியமாகும். விரித்து கூறும் முறையில் புறமொழிச்சார்பு எதுவுமின்றித் தமிழில் முதல் நூலாகத் தோன்றிய சிறப்புடைய செந்தமிழ்க் காப்பியங்கள் சில. அவற்றுள், சிலப்பதிகாரம் திருத்தொண்டர் புராணம் என்னும் இரண்டுமே மிகச் சிறந்தனவாகும். சேரமுனிவர் இளங்கோவடிகள், இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழ்த் திறங்களும் இனிது விளங்க அருளிய பெருங்காப்பியம் சிலப்பதிகாரமாகும். அதனுடன் ஒருங்கு வைத்து எண்ணத்தகும் பெருமை வாய்ந்தது, குன்றை முனிவராகிய சேக்கிழார் நாயனார் அருளிய இத்திருத் தொண்டர் புராணமாகும்.

இவ்விரு பெருங்காப்பியங்களையும் இயற்றியளித்த இப்பெருமக்கள் இருவரும், நாடாளும் மன்னர்களால் நன்கு மதிக்கப் பெற்றவர்கள்; உலக மக்கள் அனைவரும் பசி பிணி பகை என்னும் துன்பங்கள் இன்றி, என்றும் இன்பம் பெருகும் நல்லியல்பினால் நிலைபெற்று வாழ்தல் வேண்டும் என்னும் திருவுள்ளத்துடன் துறவற நெறியினை மேற்கொண்ட அருளாளர்கள்; தமிழ் நாட்டில் தமிழ் வேந்தரும் மக்களும் ஒற்றுமையுணர்வுடன் அன்பினாற் கலந்து வாழ்தல் வேண்டும் என்னும் நன்னோக்குடன், தமக்குக் கிடைப்பதாக இருந்த சேரநாட்டின் அரச பதவியை வெறுத்து விலக்கி இளம் பருவத்திலேயே துறவற நெறியினை மேற்கொண்டவர் இளங்கோவடிகள். தமிழ் நாட்டில் தொன்றுதொட்டு மேற்கொள்ளப் பெற்று வரும் சிறப்பினதாகிய தமிழ் மக்களது தெய்வங்கொள்கையாகிய சிவநெறி உலகமெலாம் சிறந்துவளர வேண்டும் என்னும் உயர்ந்த குறிக்கோளினைச் சோழ மன்னன் உள்ளத்தில் நிலைபெறச் செய்து அவனது இசைவுடன் தமது அமைச்சர் பதவியைத் துறந்து துறவற நெறியில் நின்றவர் சேக்கிழாரடிகள். ஆகவே இவ்விரு பெரு மக்களும் தமிழகம் வாழப் புலமைத் திருப்பணிபுரிந்த திருவருட் செல்வர்கள்

எனப்போற்றத்தகும் பெருமையுடையராவர். இவ்விருவரும் இயற்றியளித்த காப்பியங்கள் தாம் தோன்றும் பொழுதே தமிழில் முதல் நூலாகத் தோன்றிய தனிச் சிறப்புடையன. இந்நூல்களிற் கூறப்படும் வரலாற்று நிகழ்ச்சிகளும் வரலாற்றுக்குரிய மூலங்களும் தமிழ் மொழியோடும் தமிழ் நாட்டோடும் பிரிவின்றி நெருங்கிய தொடர்புடையனவாகும்.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சேரநாட்டை ஆட்சி புரிந்த இமயவரம்பன் என்னும் சேர மன்னனின் இளையமைந்தராய்ச், செங்குட்டுவன் என்னும் மன்னனுக்கு அன்பிற் சிறந்த தம்பியாய் விளங்கியவர் இளங்கோவடிகள். சிந்தை செல்லாச் சேணெடுந்தூரத்து அந்தமில் இன்பத்து அரசாள் வேந்தராகிய அடிகள், 'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு' ஆகிய தமிழகம் பிறநாட்டாரும் மதித்துப் போற்றும் முறையில் அரசியலாட்சியிலும் கலைத்துறைகளிலும் வீறுபெற்று விளங்கவும், தமிழ்வேந்தர் மூவரும் தம்முள் ஒற்றுமையுணர்வுடன் திகழ்ந்து தமிழகத்தை வளம்பெற ஆட்சி புரியவும், இயல் இசை நாடகம் ஆகிய முத்தமிழ்த்துறைகளும் சிறந்து வளரவும் வேண்டித் தக்கதொரு பெருங்காப்பியத்தை இயற்றியளிக்கத் திருவுளங் கொண்டார்; தென்றமிழ்ப்பாவை செய்த தவக் கொழுந்து எனவும் கற்புக்கடம் பூண்ட பொற்புடைத் தெய்வம் எனவும் போற்றத்தகும் சிறப்புடைய கண்ணகியாரைப் பாட்டுடைத்தலைவியாகக் கொண்டு சிலப்பதிகாரம் என்னும் செந்தமிழ் காப்பியத்தை நவில் தொறும் சுவை நலம் பெருகும் வண்ணம் வனப்புற இயற்றியுதவினார். இளங்கோவடிகள் காலத்திற்கு ஆயிரம் ஆண்டுகள் பிற்பட்டுத் தோன்றியவர் சேக்கிழாரடிகள். அருள் மொழித் தேவராகிய இவர், தமிழ் நாட்டின் அரசியல் நெறியும், அந்நெறியினை வரம்புற வளர்த்தற்குரிய தெய்வங் கொள்கையாகிய சிவநெறியும், இவற்றுக்கு உறுதுணையாய் மக்களது அறிவினை வளப்படுத்தும் தமிழ் மொழியும் சிறந்து விளங்கவேண்டும் என்னும் உயர்ந்த குறிக்கோளுடையவர். இக்குறிக்கோளுடன் தமிழ்நாட்டிற் பிறந்து தெய்வமுண்டென்னுந் தெளிவுடையராய்ச் செயற்கருஞ் செயல் பல புரிந்து சிவனருளில் திளைத்த திருவருட் செல்வர்களாகிய திருத்தொண்டர்களின் வரலாறுகளை விரித்து விளக்கும் முறையில் பெரிய புராணமாகிய இக்காப்பியத்தை இயற்றியுள்ளார். இக்காப்பியம் பத்திச் சுவை நலம் ஊற்றெடுத்துப் பெருகும் ஆராத பேரன்பினை விளக்கும் இலக்கியமாகத் திகழ்கின்றது. அம்பலவர் அருள் மொழியை முதலாகக் கொண்டு தொடங்கப்பெற்ற இந்நூல், திசையனைத்தின் பெருமையெலாம்

தென்றிசையே வென்றேறவும், அசைவில் செழுந் தமிழ் வழக்கே அயல் வழக்கின் துறைவெல்லவும், தமிழ் மொழியிலே இசை முழுதும் மெய்யறிவும் இடங்கொள்ளும் நிலை பெருகவும் தமிழ் நாட்டிற்கும் தமிழ் மொழிக்கும் தமிழர் சமுதாயத்திற்கும் ஆக்கந்தரும் முறையில் அமைந்துளது.

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை நன்னெறிகளையும் மேற்கொண்டொழுகி, நிலைபெற்ற பேரன்பின் திறத்தால் எல்லாம் வல்ல சிவபரம் பொருளைச் சிந்தையிற் கொண்டு போற்றி அம்முதல் வனது திருவருளுக்குரிய ராகிய அடியார்களை வழிபட்டு, மகவெனப் பல்லுயி ரனைத்தையும் ஒக்கப்பார்க்கும் திருவருட் பண்புடையராய்த் தத்தமக்கேற்ற திருத்தொண்டுகளைப் புரிந்து சிவனடி சேர்ந்தவர்கள் திருத்தொண்டர்களாவர். ஐம்புல வழியடைத்த செம்புலச் செல்வர்களாகிய இத் திருத்தொண்டர்களின் திருப் பெயர்களை எடுத்துரைத்துப் போற்றும் முறையில் அமைந்தது, நம்பியாரூரர் அருளிய திருத்தொண்டத் தொகை என்னும் திருப்பதிகமாகும். திருவாரூர்ப் பெருமான், 'தில்லை வாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என அடியெடுத்துக் கொடுக்க, நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்திசுவாமிகள் இத்திருப்பதிகத்தினைப் பாடிப் போற்றினார் என்பது வரலாறு. இப்பதிகத்தில் தில்லை வாழந்தணர், பொய்யடிமையில்லாத புலவர், பத்தராய்ப் பணிவார்கள், பரமனையே பாடுவார், சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார், திருவாரூர்ப் பிறந்தார்கள், முப்போதும் திருமேனி தீண்டுவார், முழுநீறு பூசிய முனிவர், அப்பாலும் அடிச்சார்ந்தார் ஆகிய ஒன்பது திருக்கூட்டத் தாரையும், நிருநீலகண்டக் குயவனார் முதல் திருநீலகண்டத்துப் பாணனார் ஈறாகவுள்ள தனியடியார்கள் அறுபதின்மரையும் பெயர்கூறி வழிபடும் நிலையில் அவர்க்கெல்லாம் தனித்தனியே அடியேன் அடியேன் எனக்கூறி நம்பியாரூரர் பரவிப் போற்றியுள்ளார். சுந்தரர் அருளிய திருத்தொண்டத்தொகைத் திருப்பதிகம் பதினொரு திருப்பாடல்களையுடையதாகும். இதன் இறுதிப் பாடலாகிய பதினொராம் திருப்பாடலில், 'என்னவனாம் அரனடியே அடைந்திட்ட சடையன் இசைஞானி காதலன் திரு நாவலூர்க்கோன் அன்னவனாம் ஆரூரன்' என நம்பியாரூரர், தம்மையும், தம் தந்தை சடையனார், தாய் இசை ஞானியார் ஆகிய தம்பெற்றோர்களையும் குறித்துள்ளார். ஆகவே திருத்தொண்டத் தொகையில் அடியேன் என வணங்கச் சொல்லொடு புணர்த்துப் போற்றப் பெறும் சிவனடியார்கள் அறுபதின்மராயினும், அப்பதிகத்தை அருளிச் செய்த நம்பியாரூரர், அவர் தந்தையார் சடையனார், தாயார் இசை ஞானியார் என அப்பதிகத்தால்

அறியப்படும் மூவரையும் சேர்த்து எண்ணித் தனியடியார் அறுபத்து மூவர் என அழைக்கும் வழக்கம் சுந்தரர் காலத்திற்குப் பின் தோன்றி நிலைபெறுவதாயிற்று.

நம்பியாரூரர் வாழ்ந்த காலப்பகுதியாகிய கி.பி. எட்டாம் நூற்றாண்டிலும் அதற்குமுன் பல்வேறு காலங்களிலும் தோன்றிச் சிவனடி மறவாச் சிந்தையராய் உலகம் உய்ய நற்பணி புரிந்த திருவருட் செல்வர்களாகிய சிவனடியார்களின் திருப்பெயர்களை எடுத்தோதிப் போற்றும் வாயிலாகத் தமிழகம் உய்யப் பல வேறு திருப்பணிகளைப் புரிந்த அப் பெருந்தகையார்களின் வரலாறுகளைப் பின்னுள்ளோர் உணர்தற்குச் சாதனமாக அமைந்தது நம்பியாரூரர் அருளிய இத்திருத்தொண்டத் தொகைத் திருப்பதிகமேயாகும். தமிழக வரலாற்றிற் சிறப்பாக இடம் பெறத்தக்க திருவருட் செல்வர்களின் வரலாறுகளை அறிவுறுத்தும் முறையில் அமைந்த இத்திருப்பதிகத்தினை, 'தென்றமிழ்ப் பயனாய் வந்த திருத்தொண்டத் தொகை' எனவும், 'மூலமான திருத்தொண்டத் தொகை' எனவும், இதனைத் திருவாய் மலர்ந்தருளிய சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் 'தேசம் உய்யத் திருத்தொண்டத்தொகை முன்பணித்த திருவாளன்' எனவும் சேக்கிழாரடிகள் உளமுவந்து போற்றியுள்ளார்.

இத்திருத்தொண்டத் தொகைப் பொருளைவகுத்து விளக்கும் முறையில் அமைந்தது, நம்பியாண்டார் நம்பி அருளிய திருத்தொண்டர் திருவந்தாதியாகும். திருத்தொண்டத் தொகையிற் போற்றப்பெற்றுள்ள சிவனடியார்களின் வரலாறுகளைத் திருநாரையூரிற் கோயில் கொண்டருளும் பொல்லாப் பிள்ளையார் அருளால் உணர்ந்து தெளிந்த நம்பியாண்டார் நம்பிகள், திருத்தொண்டர்கள் பிறந்த ஊர், நாடு, மரபு, அருஞ்செயல் ஆகிய வரலாற்றுக் குறிப்புக்களை வகுத்துரைக்கும் முறையில் திருத்தொண்டர் திருவந்தாதி என்னும் நூலைச் செய்தருளினார் என்பது வரலாறு.

நூலமைக்கும் முறை நால் வகைப்படும். அவையாவன விரிந்து பரந்த பொருள்களைத் தொகுத்துக் கூறுவதும், தொகுத்துச் சொல்லப் பட்டவற்றை வகைப்படுத்தி விளக்குவதும், தொகுத்துச் சொல்லப்பட்டவற்றை விரித்து விளக்குவதும், பிறமொழி நூல்களை அடியொற்றி மொழிபெயர்த்துரைப்பதும் ஆகும். அவற்றுள் நம்பியாரூரர் அருளிய திருத்தொண்டத் தொகை அடியார் திருட்பெயர்களைத் தொகுத்துரைப்பதாதலின் தொகை நூல் எனப்படும். அத்தொகையிற் போற்றப் பெற்ற அடியார்களின் வரலாறுகளை வகைப்படுத்துரைப்பது நம்பியாண்டார் நம்பி அருளிய திருத்தொண்டர் திருவந்தாதி

யாகும். இது வகைநூல் எனப்படும். 'நந்தம் நாதனாம் நம்பியாண்டார் நம்பி, புந்தியாரப் புகன்ற வகையினால்' (பெரிய-திருமலைச்-39) எனச் சேக்கிழாரடிகள் இத்திருவந்தாதியை 'வகை' யெனக் குறித்துள்ளமை இப்பெயர் வழக்கினை வற்புறுத்துதல் காண்க. மேற்குறித்ததிருத்தொண்டத் தொகையையும் அதன் வகையாக அமைந்த திருத்தொண்டர் திருவந்தாதியையும் ஆதரவாகக் கொண்டு, அடியார்களின் வரலாறுகளை விரித்துரைக்கும் விரிநூலாகச் சேக்கிழார் அடிகள் இத்திருத்தொண்டர் புராணத்தை இயற்றியுள்ளார். இந்நுட்பம், 'திருத்தொண்டத் தொகை விரி இன்று என் ஆதரவால் இங்கு இயம்புகேன்' எனவும், "மற்றிதற்குப் பதிகம் வன்றொண்டர் தாம், புற்றிடத்தெம் புராணர் அருளினால், சொற்ற மெய்த் திருத்தொண்டத் தொகையெனப், பெற்ற நற்பதிகம் தொழப் பெற்றதாம்." எனவும்,

**"அந்த மெய்ப்பதிகத் தடியார்களை**
**நந்தம் நாதனாம் நம்பியாண்டார் நம்பி**
**புந்தியாரப் புகன்ற வகையினால்**
**வந்தவாறு வழாமல் இயம்புவாம்"** **(திருமலைச். 37 - 39)**

எனவும் வரும் அவருடைய வாய் மொழிகளால் இனிது விளங்கும்.

திருத்தொண்டத் தொகையைப் பதிகமாகவும், திருத்தொண்டர் திருவந்தாதியை வகை நூலாகவும் கொண்டு, திருத்தொண்டத் தொகையின் விரியாகப் பெரிய புராணத்தை இயற்றியளித்த சேக்கிழாரடிகளை,

**'தொகையா நாவலூராளி தொடுத்த திருத்தொண்டப் பெருமை**
**வகையால் விளங்க வுயர் நம்பியாண்டார் வகுப்ப மற்றதனைத்**
**தகையா அன்பின் விரித்துலகோர் தம்மையடிமைத் திறப்பாட்டின்**
**உகையா நின்ற சேக்கிழான் ஒளிர்பொற் கமலத்தாள் பணிவாம்'**

எனக் கச்சியப்ப முனிவர் போற்றியுள்ளமை இங்குக் கருதத் தகுவதாகும்.

தமிழகத்திற் பல காலங்களிலும் பல ஊர்களிலும் பல்வேறு குடும்பங்களிலும் பிறந்தருளி எல்லாம் வல்ல இறைவன் திருவடிகளிலும் அவனைப் போற்றுமியல்பினராகிய மெய்யடியார்கள் திறத்தும் பேரன்புடையராய், ஐம்புலவுணர்வுகளை யடக்கி நன்னெறிக்கண் ஒழுகும் செம்புலச் செல்வர்களாகிய சிவனடியார்களின் வரலாறுகளைத் தொகுத்து ஆராய்ந்து உயர்வு நவிற்சியின்றி மெய்ம்மை வரலாறுகளை விரித்துரைக்கும்

முறையில் இனிய, எளிய, தூய செந்தமிழ் நடையிற் பெருங்காப்பியமாக இயற்றிய பெருமை அருண்மொழித் தேவராகிய சேக்கிழாரடிகட்கேயுரிய தனிச் சிறப்பாகும்.

சேக்கிழார் இயற்றிய இத் திருத்தொண்டர் புராணம், 'உள்ளோன் தலைவனாக உள்ளது புணர்த்தல்' என்னும் முறையிலமைந்த வரலாற்றுக் காப்பியமாகும். இந்நூலிற் போற்றப் பெரும் திருத்தொண்டர் யாவரும் இந்நாட்டிற் பிறந்து வாழ்ந்தவர்களே. அவர்களைக் குறித்து இந்நூலிற் கூறப்பெறும் உலகியற் செய்திகள் யாவும் உண்மையாக நிகழ்ந்த செய்திகளே என்பது, அச்செய்திகளிற் பல தமிழக வரலாற்றிற் கல்வெட்டுச் சான்றுகளோடும் தமிழிலக்கியச் சான்றுகளோடும் தொடர் புடையனவாய் நெடுங்காலமாக வழங்கிவரும் முறைமை கொண்டு நன்கு துணியப்படும்.

மக்கள் வாழ்க்கையின் உளவியல் நுட்பங்களையும் அறிவின் திறங்களையும் செயலாற்றல்களையும் நுணுகி ஆராய்ந்து அவற்றை இனிது விளக்கும் முறையில் வாழ்க்கை வரலாறுகளைச் சொல்லோவியஞ் செய்துகாட்டவல்ல பேராசிரியர்களே பெரும்புலவர் எனப்போற்றத்தகும் சிறப்புடையராவர். வையத்து வாழ்வாங்கு வாழ்ந்த மெய்யடியார்களின் உலகியல் வாழ்வினை உள்ளவாறு விளக்குமுகமாக, உலக மக்களால் தெய்வத்துள் வைத்துப் போற்றப்பெற்ற அப்பெருமக்களது அருள் வாழ்வினை அறிவுறுத்துவது, சேக்கிழார் அளிய திருத்தொண்டர் புராணமாகும். இந்நூல்,

> **'வையத்து வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்**
> **தெய்வத்துள் வைக்கப் படும்'**

என்னும் திருவள்ளுவர் வாய்மொழிப் பொருளை விளக்கும் வாழ்க்கை நூலாகத் திகழ்கின்றது.

'பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்' எனக் கூறிய திருவள்ளுவர் ஒத்த பிறப்பினராகிய மக்களுள், மனத்தைத் தீயநெறியினின்றும் விலக்கி நன்றின்பாற் செலுத்துதலாகிய அரிய செயல்களைச் செய்வோரே பெரியர் எனவும், அவ்வாறு மனத்தை ஒரு நெறிப்படுத்தும் அறிவு வன்மையின்றி மனம் போனபடி எளிய செயல்களையே செய்வோர் சிறியர் எனவும் செய்தொழில் வேற்றுமையால் உலக மக்களை இரு வகையினராகப் பகுத்துள்ளார்.

> **'செயற்கரிய செய்வார் பெரியர், சிறியர்**
> **செயற்கரிய செய்கலா தார்'** (26)

எனவரும் திருக்குறள், மக்கட் குலத்தாருள் பெரியர் எனப் போற்றத்தக்கார் இவ்வியல்பினர், சிறியர் என விலகியொழுகத் தக்கார் இவ்வியல்பினர் என வகுத்துரைக்கின்றது. 'செயற்கெளிய வாவன மனம் வேண்டியவாறே அதனைப் பொறிவழிகளால் புலன்களிற் செலுத்துதலும், வெஃகலும் வெகுடலும் முதலாயின. செயற்கரியவாவன இயமம் நியமம் முதலாய எண்வகை யோகவுறுப்புக்கள்" எனப் பரிமேலழகர் கூறும் விளக்கம் இங்கு நினைக்கத்தகுவதாகும். எளியவற்றைச் செய்யாது அரியவற்றைச் செய்த பெருமக்களே திருத்தொண்டத் தொகையிற்போற்றப் பெற்ற சிவனடியார்களாதலின், அவர்களது வரலாறுகளை விரித்துரைக்கும் திருத்தொண்டர் புராணமாகிய இந்நூல் பெரியபுராணம் என வழங்கப் பெறுவதாயிற்று, இந்நூலை 'எடுக்கு மாக்கதை' என ஆசிரியர் குறித்துள்ளமையும் பெரிய புராணம் என்ற இப்பெயர் வழக்கத்திற்குப் பொருந்திய சான்றாகும். இந்நூலுக்கு ஆசிரியர் இட்ட பெயர் திருத்தொண்டர் புராணம் என்பதாகும். இவ்வுண்மை,

**'இங்கிதன் நாமங் கூறின் இவ்வுலகத்து முன்னாள்**
**தங்கிருள் இரண்டின் மாக்கள் சிந்தையுட் சார்ந்து நின்ற**
**பொங்கிய இருளை ஏனைப் புறவிருள் போக்குகின்ற**
**செங்கதிரவன்போல் நீக்குந் திருத்தொண்டர் புராணம் என்பாம்'**

என இந்நூற்பாயிரத்தில் ஆசிரியர் குறித்துள்ளமையால் நன்கு விளங்கும். உலகிற் பரவியுள்ள புறவிருளைப் போக்குகின்ற கதிரவனைப் போன்று மக்களின் சிந்தையிற் செறிந்துள்ள ஆணவமாகிய அகவிருளைப் போக்குவது திருத்தொண்டர் புராணமாகிய இந்நூல் என ஆசிரியர் இந்நூலின் பெயர் கூறும் பொழுதே இந்நூலின் பயனையும் ஒருங்கு கூறியுள்ளமை காணலாம்.

திருத்தொண்டத் தொகையிற் போற்றப்பெற்றுள்ள அடியார்களின் வரலாறுகளை யெல்லாம் விரித்துணர்த்தும் முறையில் அழகியதொரு செந்தமிழ்க்காப்பியத்தை ஆக்கியுதவ எண்ணிய ஆசிரியர் சேக்கிழார், தம் காப்பியத்திற்கு மூலமாகிய திருத்தொண்டத் தொகையினைத் திருவாய் மலர்ந்தருளிய நம்பியாரூரரையே தம் காப்பியத்துக்குரிய பாட்டுடைத் தலைவராகக் கொண்டார். தன்னே ரில்லாத் தலைவராகிய நம்பியாரூரரது வரலாற்றின் இடையே அவர் திருவாய் மலர்ந்தருளிய திருத்தொண்டத்தொகையின் பொருளை விரித்துரைக்கும் முறையில் அத்திருப்பதிகத்திற் போற்றப் பெற்றுள்ள திருத்தொண்டர்களின் வரலாறுகளை நிரல்பட அமைத்து, நம்பியாரூரர் தம் தோழராகிய சேரமான்

பெருமாளுடன் திருக்கயிலாயத்தைச்சேர்ந்து இறைவன் திருவருள்பெற்று இன்புற்ற செய்தியுடன் இக்காப்பியத்தை நிறைவு செய்துள்ளார்.

இந்நூல், திருமலைச் சருக்கம் முதல் வெள்ளானைச் சருக்கம் ஈறாகப் பதின்மூன்று சருக்கங்களையுடையது. முதற்கண் உள்ள திருமலைச் சருக்கம் திருமலைச் சிறப்பு, திருநாட்டுச் சிறப்பு, திருநகரச் சிறப்பு, திருக்கூட்டச் சிறப்பு, தடுத்தாட்கொண்ட புராணம் என ஐந்துபகுதிகளைக் கொண்டதாகும். திருக்கயிலாயத்தில் சிவபெருமானுக்கு அணுக்கத் தொண்டுபுரிந்த ஆலால சுந்தரர், உமையம்மை யாருடைய சேடிகளாகிய கமலினி அனிந்திதையாகிய மாதர் இருவர் மேலும் மனத்தினைச் செலுத்தினமையால், 'நீ மாதர் மேல் மனம் வைத்தனை ஆதலால் தென்புவி மீது தோன்றி, அம் மெல்லியலாருடன் காதலின்பம் கலந்தணைவாய்' என இறைவன் பணித்த வண்ணம் திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூரில் மாதொரு பாகனார்க்கு வழிவழி அடிமை செய்யும் ஆதி சைவவேதியர் மரபில் சடையனார்க்கும் இசைஞானியார்க்கும் மகவாகத் தோன்றினார்; நரசிங்க முனையரையரால் அன்புடன் வளர்க்கப்பெற்றார்; புத்தூர்ச் சடங்கவி சிவாசாரியாருடைய மகளை மணம் பேசித் திருமணம் செய்யும் நிலையில், வெண்ணெய் நல்லூர் அருட்டுறையிறைவர் கிழவேதியராகத் தோன்றி, 'ஆ ரனே! நீ எனக்கு வழி வழி யடியவன்' என ஆவண வோலைகாட்டித் திருவெண்ணெய்நல்லூர்ச் சபையில் வழக்குரைத்துத் தடுத்தாட்கொள்ளப்பெற்றார்; 'நமக்கு அன்பிற்பெருகிய சிறப்பின் மிக்க அர்ச்சனை பாட்டேயாகும், ஆதலால் மண்மேல் நம்மைச்சொற்றமிழ் பாடுக' என அருட்டுறை யிறைவர்பணித்த வண்ணம், மெய்த்தாயினும் இனிய அப்பெருமானைப் 'பித்தா பிறைசூடீ' எனப் பெரிதாம் திருப்பதிகத்தாற் பாடிப் போற்றினார்; பல தலங்களை வணங்கித் திருவாரூரை அடைந்து தம்பிரான் தோழரானார்; கமலினியாராகிய பரவையாரை நற்பெரும் பான்மை கூட்டக்கண்டு காதல் கொண்டு இறைவன் அருளால் திருமணம் செய்து கொண்டார். பரவையார் கேள்வராகிய சுந்தரர், திருவாரூர்த் திருக்கோயிலின் திருமுற்றத்திலுள்ள தேவாசிரிய மண்டபத்தில் எழுந்தருளியிருக்கும் அடியார் திருக்கூட்டத்தினை நோக்கி அன்பு நீங்கா அச்சமுடையராய், 'இவர்க்குயான் அடியானாகப் பண்ணும் நாள் எந்நாள்?' என்று பரமர் தாள் பரவித் திருக்கோயிலினுள்ளே சென்றார். புற்றிடங்கொண்ட பெருமானாகிய இறைவன், நம்பியாரூரர்க்கு எதிரே தோன்றி அடியார் பெருமையினை எடுத் துரைத்துத் 'தில்லைவாழ்

அந்தணர்தம் அடிபார்க்கும் அடியேன்' என அடியெடுத்துக் கொடுத்தருளினார். சிவனருள் பெற்ற திருவாளராகிய நம்பியாரூரரும் அத்தொடரினை முதலாகக்கொண்டு, நேசம் நிறைந்த உள்ளத்தால் ஈசனடியார் பெருமையினை எல்லாவுயிரும் தொழ எடுத்துத் தேசம் உய்யத் திருத்தொண்டத் தொகையினைப் பாடிப் போற்றினார். இச்சிறப்புடைய நிகழ்ச்சியினைக் காப்பியச் சுவை நலம் பொருந்த விரித்துக் கூறுவது, இந்நூலின் முதற்கண் திருமலைச் சிறப்பு முதல் தடுத்தாட் கொண்டபுராணம் வரை அமைந்த பகுதியாகும்.

இதனையடுத்துத் திருத்தொண்டத் தொகையின் பதினொரு பாடல்களிலும் போற்றப் பெற்றுள்ள தில்லை வாழந்தணர், திருநீலகண்டக் குயவனார் முதல் திருநீலகண்டப் பாணர் ஈறாகவுள்ள அடியார்களின் வரலாறுகள், அவ்வத் திருப்பாடற் குரிய முதற் குறிப்பினையே பெயராகக் கொண்டு, தில்லைவாழந்தணர் சருக்கம் முதல் மன்னிய சீர்ச் சருக்கம் ஈறாகப்பதினொரு சருக்கங்களில் வகுத்துரைக்கப்பெற்றன.

சேரமான் தோழராகிய சுந்தரர், சேரநாட்டுத் தலைநகராகிய கொடுங்கோளூரில் திருவஞ்சைக்களத் திருக்கோயிலில் எழுந்தருளிய இறைவனைப் பாடிப்பரவியிருக்கும் நிலையில், கயிலைப் பெருமானால் அனுப்பப் பெற்று அங்கு வந்த வெள்ளை யானையின் மீதமர்ந்து, தம் தோழராகிய சேரமான் பெருமாள் பரிமீதமர்ந்து உடன்வரத் திருக்கயிலாயத்தை அடைந்து அம்மையப்பரைக் கண்டு வழிபட்டுத் தம் தோழர் சேரமான் பாடிய திருக்கயிலாய ஞானவுலா இறைவன் திருமுன்னர் அரங்கேறக் கேட்டு மகிழ்ந்து முன்புபோல் தத்தமக்குரிய அணுக்கத் திருத்தொண்டினையேற்று இன்புற்ற செய்தியை விரித்துரைக்கும் பகுதி வெள்ளானைச் சருக்கம் என்பதாகும்.

நூலின் முடிபொருளாக அமைந்த இந்நிகழ்ச்சியினையே முதலாகக்கொண்டு ஆசிரியர் சேக்கிழார் இக்காப்பியத்தைத் தொடங்கியுள்ளமை கூர்ந்து நோக்கத்தகுவதாகும்.

## திருமலைச் சிறப்பு

பொன்னின்மேல் வெண் திருநீறு புனைந்தாற் போன்று நீண்ட பனிமலையாகிய இமயமலையின் உச்சியில் விளங்குவது திருக்கயிலாயமலை. அத் திருமலையானது, தன்னை இன்னதன்மையன் என யாவராலும் உணர்தற்கரிய சிவபெருமான் என்றும் அகலாது எழுந்தருளியிருக்கும் தனிச் சிறப்புடையது; உலக மக்கள் செய்த புண்ணியங்கள் யாவும் ஒருங்கு திரண்டாற் போன்று பொலிவுபெற்று விளங்குவது; தேவர் முனிவர் யாவரும்

மலர் தூவி வணங்கி வழிபடும் மேன்மையுடையது; உலக நிலைகளையே மாற்றவல்ல சிவ கணங்களாகிய கோடி கோடி குறட்சிறு பூதங்கள் இறைவன் புகழைப் பாடியாடும் இடப் பரப்பினையுடையது. அத்தகைய திருக்கயிலாய மலையின் தாழ்வரையின் கண்ணே சிவனடியே சிந்திக்கும் சிவஞானச் செல்வரும் கண்ணனுக்குச் சிவதீக்கை செய்தருளியவரும் பாலனாகிய பருவத்தே திருப்பாற் கடலைப் பருகிவளர்ந்தவரும் ஆகிய உபமன்னிய முனிவர், பத்திமையிற் சிறந்த பல்லாயிரம் முனிவர்களும் சுத்தயோகிகளும் சூழ எழுந்தருளியிருக்கின்றார். அப்பொழுது ஆயிரம் சூரியர்கள் ஒருங்கு தோன்றினாற் போன்ற பேரொளிப்பிழம்பு தென் திசையிலே தோன்றியது. அதனைக் கண்ணுற்ற முனிவர் முதலியோர் 'இங்கு இது என்ன அதிசயம்? என உபமன்னிய முனிவரை நோக்கி வினவினார்கள். உபமன்னிய முனிவர் பிறையணி வார்சடையான் திருவடிகளைச் சிந்தித்து, 'மாதவம் செய்த தென்றிசை வாழ்ந்திடத் திருநாவலூரில் திருவவதாரம் செய்தருளிய வந்றொண்டனாகிய சுந்தரன் எம்பெருமான் திருவருளால் மீண்டும் கயிலைக்கு எழுந்தருளு கின்றான்' என உணர்ந்து, இரண்டு கைகளையும் தலை மேற்குவித்து எழுந்து வணங்கி, உவகைக்கண்ணீர் தம் மெய்யெலாம் படிய, நம்பியாரூரரை வரவேற்றுப் போற்றும் கருத்துடன் எதிர் செல்வாராயினார். அப்பொழுது அவரைச் சூழ இருந்த முனிவர்கள், முனிவர் பெருமானாகிய அவரை நோக்கி, 'எம்பெருமானே! சிவபெருமானது செந்தாமரை மலர் போலும் திருவடிகளையன்றி வேறு யாவரையும் தலை தாழ்த்தி வணங்காத தேவரீர் கை கூப்பி எழுந்து வணங்கும் இது என்னே? எனத் தம் உள்ளத்தில் தோன்றிய ஐயம் நீங்க வியப்புற்று வினவினார்கள். தம்பிரானாகிய சிவபெருமானைத் தன் உள்ளத்திற் கொண்டு போற்றும் பேரன்புடைய பெரியோன் இப்பொழுது இங்கு எழுந்தருளி வரும் நம்பியாரூரனாவான் அவன் முற்றும் துறந்த முனிவர்களாகிய நம் எல்லோராலும் தொழப்பெறும் தகுதியுடையனாவான்' என உபமன்னிய முனிவர் நம்பியாரூரது பெருமையினை ஏனைய முனிவர்களுக்கு அறிவுறுத்தியருளினார். ஆரூரரது பெருமையினை உளங்கொண்ட அம் முனிவர்கள், 'வென்ற பேரொளியாராகிய வன்றொண்டரது மேலாகிய தவத்தின் பெற்றியினைப் பெரிதும் கேட்டு மகிழும் பெருவேட்கையுடையோம். அதனை இன்று எங்களுக்கு விரித்து உரைத்தருளுதல் வேண்டும்' என உபமன்னிய முனிவரை இறைஞ்சி வேண்டினார்கள். முனிவர் பெருமானும் அம் முனிவர்களுக்கு வன்றொண்டர் வரலாற்றை உள்ளவாறு விரித்துக் கூறியருளினார். அது கேட்ட முனிவர்கள், 'பாசப்

பிணிப்புடைய மக்கட்குலத்தார் வாழும் தென் திசை, இவ்வாறு ஆலாலசுந்தரர் அவதரித்தருளும் நிலையில் இந் நிலவுலகில் எண் திசைகளிலும் மேற்பட்டு விளங்குதற்கு வந்த புண்ணியச் சிறப்பினையுடையதாதல் எவ்வாறு?' என மீண்டும் வினவினார்கள். அது கேட்ட மாதவச் செல்வராகிய உபமன்னிய முனிவர், 'ஒப்பற்ற தவப் பெருஞ் செல்வராகிய எம் தந்தையார் புலிக்கால் முனிவர் இறைவனை வழிபட்டுப் போற்றிய பெருமையுடையதும் ஈசனுக்கே அன்புடைய ஒருமையாளராகிய அந்தணர்கள் விருப்புடன் தங்கிய சிறப்புடையதுமாகிய பெரும் பற்றப்புலியூர் என்ற திருத்தலம் தென் திசையிற்சிறப்புற்று ஓங்கியுள்ளது. அத் திருப்பதியிலே தான் நம் பெருமானாகிய இறைவன், நம்மை ஆளுடைய தவச் செல்வியாகிய உமையம்மையார் கண்டு மகிழ, விருப்புடன் திருக்கூத்து ஆடியருள்கின்றான். இத்தகைய திருவருட் சிறப்பு தென்றிசைக் கல்லது வேறு எந்தத் திசைக்கு அமைந்துள்ளது? எல்லா உயிர்களுக்கும் உள்ளிருந்து விரியும் உள்ளக் கமலத்தைப் போன்று, மறை முதற் பொருளாகிய இறைவன் வெளிப்பட்டு எழுந்தருளியிருத்தற் குரியதாய் உலக மாகிய மங்கையின் உள்ளத் தாமரையாகத் தென்திசையில் திருவாரூர் திகழ்கின்றது. எமது பெருமாட்டியும் ஏழுலகங்களையும் பெற்றெடுத்த அன்னையும் ஆகிய காமாட்சியம்மையார், தம் பெருமானாகிய இறைவனை நோக்கித் தவமியற்றிக் கம்பையாற்றின் கரையிலே வெளிப்படக் கண்டு வழிபட்டுப் போற்றுதற்கு இடனாகிய காஞ்சிப் பதியினைத் தன்பாற் கொண்ட சிறப்பினது அத் தென் திசையே. நமது குருநாதராகிய நந்தி தேவர் தவம் செய்து நிறைந்த திருவருளைப்பெற்ற பொலிவுடைய திருவையாறு என்ற திருப்பதியும் இத் தென்றிசைக்கண் உள்ளதே. இவ்வாறு தேசங்கள் எல்லாவற்றையும் விளக்கிய தென் திசையிலே, ஈசர்க்கு விருப்புடைய தோணிபுரம் முதலாகச் சிவபெருமானைப் பூசித்ததற்குப் பொருந்திய திருத்தலங்கள் பல உள்ளன. "திசைகளின் உயர்வினைக் குறித்துப் பேசப் புகின் அத்தென்திசைக்குப் பிறதிசைகள் சிறிதும் ஒப்பாகமாட்டா" என்று பெருந்தவச் செல்வராகிய உபமன்னிய முனிவர் சிவமே நிலவிய தென்றமிழ் நாட்டின் சிறப்பினை வடகயிலையில் வாழும் முனிவர்களுக்கு விளங்க எடுத்துரைத்தருளினார்.

"அன்று, திருக்கயிலையில் உபமன்னியர் தம்மை வினவிய முனிவர்கட்கு வன்றொண்டர் வரலாற்றை விரித்துக் கூறிய முறைப்படி திருத்தொண்டத்தொகை விரியாகிய இந்நூலினை எனது விருப்பத்தினாற் கூறத் தொடங்கினேன். இதற்குப் பதிகமாக

அமைந்தது, திருவாரூரிற் புற்றிடங் கொண்ட பெருமானருளால் ஆரூரர் பாடிய திருத்தொண்டத் தொகையாகும். அப்பதிகத்திற் போற்றப்பெற்ற அடியார்களை நம்முடைய நாதராகிய நம்பியாண்டார் நம்பிகள் போற்றிப் பரவிய திருத்தொண்டர் திருவந்தாதி என்னும் வகை நூலினை ஆதரவாகக் கொண்டு திருத்தொண்டர் வரலாறுகளை இனி முறையே கூறத் தொடங்குவோம். உலக உயிர்கள் பிறவிப் பிணிப்பினின்றும் நீங்கி உய்தி பெறவும் திருநெறியாகிய சைவ சமயம் உலகில் நிலை பெற்று வளர்ந்தோங்கவும் எல்லையில் புகழாளராகிய நம்பியாரூரர் பாடிப் போற்றிய சிவனடியார்கள் திருக்கூட்டம் நிறைந்துறையும் பெருமையினைப் பெற்ற புனல் நாடாகிய சோழ நாட்டின் சிறப்பினை இனிக் கூறுவோம்" என ஆசிரியர் சேக்கிழாரடிகள் தாம் இயற்றத் தொடங்கிய வரலாற்றுக் காப்பியமாகிய திருத்தொண்டர் புராணத்தின் முன்னுரையாகத் திருக்கயிலாயத் திருமலையின் சிறப்பினை முதற்கண் அமைத்துள்ளார்.

இவ்வாறு சேக்கிழாரடிகள் தாம் பாட எடுத்துக் கொண்ட காப்பியத்தின் தலைவராகிய நம்பியாரூராது வரலாறு திருக்கயிலாயத் திருமலையிலே மாதவமுனிவர்க்கு முதன்முதலாக விரித்துரைக்கப் பெற்ற சிறப்புடையதெனத் தோற்றுவாய் செய்து கொள்வதற்கு அகச் சான்றாக அமைந்தது.

**'இந்திரன் மால்பிரமன் எழிலார் மிகுதேவ ரெல்லாம்**
**வந்தெதிர் கொள்ள வென்னை மத்த யானையருள் புரிந்து**
**மந்திர மாமுனிவர் இவன் ஆர்என எம்பெருமான்**
**நந்தமரூர னென்றான் நொடித்தான் மலையுத்தமனே'**
**(7-100-9)**

என வரும் நம்பியாரூரர் வாய்மொழியாகும். வெள்ளையானை மீது அமர்ந்து திருக்கயிலாயத்தையடையும் நம்பியாரூரரைக் கண்ட மாதவ முனிவர், 'இங்கு வரும் இவன் யார்? என வினவிய நிலையில் 'இவன் நந்தமர் ஊரூரன்' எனச் சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளினார் என்பதனை இத் திருப்பாடலில் நம்பியாரூரர் தெளிவாக குறித்துள்ளமை அறியத் தகுவதாகும். இங்ஙனம் சிவபெருமானது அருளால் நம்பியாரூரரது வரலாற்றை முதன் முதல் அறியப்பெற்ற பெருந்தவ முனிவராவார் உபமன்னிய முனிவரே என்பதனை 'மந்திர மாமுனிவர்' என்னும் சிறப்புடைய மொழிகளால் உய்த்துணர்ந்த சேக்கிழாரடிகள், அம் முனிவர் பெருந்தகையார் தம்மைச் சூழ்ந்து கொண்டு ஐயம் நீங்க வினவிய ஏனைய முனிவர்களுக்கு வன்றொண்டரது வரலாற்றை விரித்துக் கூறிய முறையில் திருத்தொண்டத்தொகை விரியாகிய இக் காப்பியத்தை அமைத்துள்ளார். இந்நுட்பம்,

**'என்று மாமுனி வன்றொண்டர் செய்கையை**
**அன்று சொன்ன படியால் அடியவர்**
**துன்று சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி**
**இன்றே னாதர வாலிங் கியம்புகேன்' (திருமலைச் சிறப்பு 37)**

*என ஆசிரியர் தம் காப்பியத்திற்குத் தோற்றுவாய் செய்து கொள்ளுதலால் இனிது விளங்கும் நம்பியாரூரர் திருப்பாடலில் 'மந்திரமா முனிவர்' எனவரும் குறிப்பு உபமன்னிய முனிவரையே குறித்ததாகச் சேக்கிழாரடிகள் கருதினார் என்பது, இப் பாடலில் 'மாமுனி' என அதே தொடரால் உபமன்னிய முனிவரைக் குறித்துள்ளமையால் இனிது புலனாம்.*

## திருநாட்டுச் சிறப்பு

*காப்பியம் இயற்றும் ஆசிரியர்கள் தாம் இயற்றும் காப்பியத்தின் தொடக்கத்திலேயே அக்காப்பியத் தலைவர்க்குரிய நாட்டைப் பற்றியும் அவர் பிறந்த நகரத்தைப் பற்றியும் விரித்துரைப்பது இயல்பு. திருத்தொண்டர் புராணமாகிய இக்காப்பியத்தின் பாட்டுடைத் தலைவராவார், நம்பியாரூரராவர். அவர் அவதரித்தருளிய நாடு திருமுனைப்பாடி நாடு; ஊர் அந்த நாட்டின் தலைநகரமாகிய திருநாவலூர். ஆகவே இக் காப்பியத்தில் முதற்கண் சிறப்பித்துரைக்கத்தக்கன திருமுனைப்பாடி நாடும் திருநாவலூருமே என்பது தெளிவு. எனினும் சேக்கிழாரடிகள் தம் காப்பியத்துக்குச் சிறப்புரிமை யுடைய நாடாகச் சோழ நாட்டையும் சிறந்த பேரூராகத் திருவாரூரையும் கொண்டுள்ளார். இவ்வாறு இக்காப்பியத்திற் சோழநாடும் அந்நாட்டுப் பேரூர்களில் திருவாரூரும் சிறப்பிடம் பெறுதற்குரிய காரணம், திருத்தொண்டத்தொகை விரியாகிய இக்காப்பியத்தாற் போற்றப்பெறும் சிவனடியார்களது திருக்கூட்டம் நிறைந்து விளங்கும் சிறப்புடையது புனல் நாடாகிய சோழ நாடாகவும், சிவபெருமான் தன்னடியார்களுக்கு என்றும் எளிவரும் பெருமையுடைய பழம்பதி திருவாரூராகவும் அமைந்துள்ளமையே என்பதனை,*

**'உலக முய்யவும் சைவநின் றோங்கவும்**
**அலகில் சீர்நம்பி யாரூரர் பாடிய**
**நிலவு தொண்டர்தம் கூட்டம் நிறைந்துறை**
**குலவு தண்புனல் நாட்டணி கூறுவாம்'**

*எனத் திருமலைச் சிறப்பின் இறுதியில் தோற்றுவாய் செய்து கொள்ளுதலாலும், இவ்வாறே திருநாட்டுச் சிறப்பினையடுத்து,*

**'சொன்ன நாட்டிடைத் தொன்மையின் மிக்கது**
**மன்னு மாமல ராள்வழி பட்டது**
**வன்னி யாறு மதிபொதி செஞ்சடைச்**
**சென்னி யார்திரு வாரூர்த் திருநகர்'**

எனத்திருநகரச் சிறப்பினைத் தொடங்குதலாலும் சேக்கிழாரடிகள் இனிது புலப்படுத்தியுள்ளார்.

தமிழ்நாடு அயல்வேந்தர் ஆட்சியுட்பட்டமையால் தமிழ்மொழியும் தமிழ் மக்களது தெய்வ வழிபாட்டு நெறி முறையும் சிதைவுறும் நிலையினை எய்தி அல்லற் காலத்திலும் தமிழகத்தின் நெஞ்சத் தாமரையாக விளங்கிய இச்சோழ நாட்டில் தமிழ் மொழியும் தமிழர்க்குச் சிறப்புரிமையுடைய சிவநெறியும் தளர்வுறாது பேணப்பட்டு வந்தமையால் தமிழகத்திற் பல்வேறூர்களிலிருந்தும் வந்த சிவநெறிச் செல்வர் பலர் இந்நாட்டில் விரும்பித் தங்கியிருந்தார்கள். இச்செய்தி திருத்தொண்டர் புராணத்தில் இடம்பெற்றுள்ள வரலாற்று நிகழ்ச்சிகளாலும் அக்காலத்தில் சோழ நாட்டில் வாழ்ந்த காரைக்காலம்மையார் திருமூலர் முதலிய அருளாசிரியர்கள் அருளிய திருமுறைகளாலும் இனிதுணரப்படும். இவ்வாறு செந்தமிழும் சிவநெறியும் வளம்பெற்று வளர்தற்குரிய நிலைக்களமாகச் சோழநாடு நிகழ்ந்தமை பற்றி இந்நாடு 'செந்தமிழ் நிலம்' எனப் பிற்காலவுரையாசிரியர்களாற் போற்றப் பெறும்பெருஞ் சிறப்பினையும் எய்துவதாயிற்று. இவ்வுண்மை, "செந்தமிழ் நிலம் என்பது வையை யாற்றின் வடக்கு, மருதயாற்றின் தெற்கு, கருவூரின் கிழக்கு, மருவூரின் மேற்கு" (தொல் - எச்ச - ஆ - 2) எனவரும் இளம் பூரணர் உரையாலும், I

**'மன்ற வாணன் மலர்திரு வருளாற்**
**றென்றமிழ் மகிமை சிவணிய செய்த**
**அடியவர் கூட்டமும் ஆதிச் சங்கமும்**
**படியின்மாப் பெருமை பரவுறு சோழனும்**
**சைவமாத வரும் தழைத்தினி திருக்கும்**
**மையறு சோழ வள நாடென்ப'**

என யாப்பருங்கலக்காரிகை யுரையாசிரியர் காட்டும் மேற்கோட் செய்யுளாலும் நன்கு புலனாதல் காணலாம்.

புனல் நாடாகிய சோழ நாட்டின் சிறப்பினை விரித்துரைக்கப் போந்த ஆசிரியர் சேக்கிழார், அந்நாட்டினைத் தன்னகத்தே கொண்டு விளங்குவதாய் முடிகெழு வேந்தராகிய தமிழ் வேந்தர் மூவர்க்கும் உரியதாய்த் திகழும் தமிழகத்தின் எல்லையைக் குறிப்பிட்டு, அவ்வெல்லைக்கு மேலாக வடவிமயம் வரை சென்று அம்மலையிற் புலியிலச்சினையைப் பொறித்த

பெருவிறல் படைத்த சோழ மன்னருக்குச் சிறப்புரிமையுடைய சென்னி நன்னாட்டினையும், அந்நாடு வளம் பெறுவதற்குக் காரணமாயமைந்த காவிரித்தாயாகிய பொன்னிநதியின் சிறப்பினையும், அந்நன்னீரால் உளவாகிய நாட்டு வளம், குடிச்சிறப்பு, கூழின் பெருக்கம், தெய்வ வழிபாடு ஆகிய சிறப்புக்களையும், அவற்றுக்குக் காரணமாயமைந்த சோழ மன்னனது அறநெறியில் இயன்ற ஆட்சித்திறத்தினையும் விளக்கும் முறையில் 'திருநாட்டுச் சிறப்பு' என்ற பகுதியை அமைத்துள்ளார்.

**'பாட்டியற் றமிழுரை பயின்ற வெல்லையுட்**
**கோட்டுயர் பனிவரைக் குன்றி னுச்சியிற்**
**சூட்டிய வளர்புலிச் சோழர் காவிரி**
**நாட்டியல் பதனையான் நவில லுற்றனன்'**

என ஆசிரியர் சேக்கிழாரடிகள், தாம் இயற்ற எண்ணிய காப்பியத்திற்குரிய நாட்டின் எல்லையினை நன்கு வரையறுத்துரைப்பது, நாடாள் வேந்தர்க்கு அமைச்சராய் விளங்கிய அவ்வாசிரியரது அரசியல் நெறிமுறையுடன் இயைந்த வரலாற்றுணர்ச்சியினை நன்கு புலப்படுத்துதல் காணலாம். தமிழ் நாட்டின் எல்லை இதுவென விளக்க முற்பட்ட சேக்கிழாரடிகள், 'வடவேங்கடம் தென்குமரி' எனப்படும் அவ் எல்லை, சங்கச் செய்யுட்களாகிய பழம் பாட்டிலும், இயற்றமிழ் இலக்கணமாகிய தொல்காப்பியம் முதலிய தொன்னூல்களிலும், அவற்றுக்கு அமைந்த பழைய உரைகளிலும் வரன் முறையே பயின்று வந்த தொன்மையுடையது என்பார்.

"பாட்டு, இயற்றமிழ், உரை, பயின்ற எல்லை" எனத் தெளிவாகக் குறித்தார். மேற் குறித்த செந்தமிழ் நாட்டின் எல்லையுட்பட்ட காவிரி நாட்டின் இயல்பினையே இங்குச் சொல்லத் தொடங்குகின்றேன் என நுதலிப்புகும் ஆசிரியர், அந்நாட்டினையாளும் சோழ மன்னரது வெற்றித் திறத்தினை விளக்கும் முறையில் 'கோட்டுயர் பனிவரைக் குன்றின் உச்சியில், சூட்டிய வளர்புலிச் சோழர்' எனச் சிறப்பித்தார். பண்டைச் சோழ மன்னர்களிற் கரிகாற் பெருவளத்தான் வடநாட்டின்மேற் படையெடுத்துச் சென்று வடவேந்தர்களைப் புறங்கண்டு இமயமலையின் மேல் தனது புலிக்கொடியாகிய இலச்சினையைப் பொறித்த செய்தியினை.

**"இருநில மருங்கிற் பொருநரைப் பெறாஅச்**
**செரு வெங்காதலிற் றிருமா வளவன்**
**வாளுங் குடையு மயிர்க்கண் முரசு**
**நாளொடு பெயர்த்து நண்ணார்ப் பெறுகவிம்**

**மண்ணக மருங்கினென் வலிகெழு தோளெனப்**
**புண்ணிய திசைமுகம் போகிய வந்நாள்**
**அசைவி லூக்கத்து நசைபிறக் கொழியப்**
**பகைவிலக் கியதிப் பயங்கெழு மலையென**
**இமையவ ருறையுஞ் சிமையப் பிடர்த்தலைக்**
**கொடுவரி யொற்றிக் கொள்கையிற் பெயர் வோற்கு"**
**(சிலப் - இந்திர - 89-98)**

எனவும்,

**"பொன்னிமயக் கோட்டுப் புலிபொறித்து மண்ணாண்டான்**
**மன்னன் வளவன் மதிற்புகார் வாழ்வேந்தன்"**
**(சிலப் - கானல்வரி - உள்வரி வாழ்த்து-2)**

எனவும் வரும் தொடர்களில் இளங்கோவடிகள் தெளிவாகக் குறித்துள்ளார். சோழன் கரிகாலனைப் பற்றிய தொன்மை வரலாற்றை யுளங்கொண்ட சேக்கிழாரடிகள்,

**"இலங்குவேற் கரிகாற் பெரு வளத்தோன்**
**வன்றிறற்புலி இமயமால் வரைமேல் வைக்க ஏகுவோன்"**
**(திருக்குறிப்புத் - 85)**

எனவும்,

**"புண்டரிகம் பொன்வரைமேல் ஏற்றிப் புவியளிக்கும்**
**தண்டரள வெண்கவிகைத் தார் வளவர் சோணாட்டில்"**
**(ஏனாதி - 1)**

எனவும் வரும் தொடர்களிற் குறித்துள்ளமை இங்கு ஒப்பு நோக்கியுணர்தற்குரியதாகும்.

சூரபன்மன் முதலிய அவுணர்களுக்கு அஞ்சிச் சீர்காழியை யடைந்து இறைவனை வழிபட்டுருக்கும் இந்திரன், தான் இறைவனுக்கென வைத்த நந்தவனம் நீரின்றி வாடியதனால் விநாயகப் பெருமானைக் குறையிரந்து வேண்டினன். அப்பொழுது அகத்திய முனிவர் தம் கமண்டலத்திலே ஆகாய கங்கையைக் கொண்டு தென்றிசை நோக்கிப் போந்தவர் சைய மலையில் தங்கினார். அந்நிலையில், விநாயகர் காகவுருக் கொண்டு அவருடைய கமண்டலத்தைக் கவிழ்க்க, அதன் நீர் காவிரியாறாகப் பரந்து ஓடிச் சோழ நாட்டிற் புகுந்து இந்திரனது நந்தவனத்தைச் செழிக்கச் செய்தது எனக் கந்தபுராணம் கூறும். காந்தன் என்னும் சோழ மன்னனது வேண்டுகோளுக்கிரங்கிய அகத்திய முனிவர், தமது கமண்டலத்திலுள்ள நன்னீரைக் காவிரியாறாக நிலத்திற் பெருகச் செய்தார் என மணிமேகலைப் பதிகம் கூறும்.

**"செங்கதிர்ச் செல்வன் திருக்குலம் விளக்குங்**
**கஞ்ச வேட்கையிற் காந்தமன் வேண்ட**
**அமர முனிவன் அகத்தியன் றனாது**
**கரகங் கவிழ்ந்த காவிரிப் பாவை'** **(9-12)**

என்பது மணிமேகலைப் பதிகமாகும். இங்ஙனம் அகத்திய முனிவரது கமண்டலத்திலுள்ள நீரே காவிரியாறாகப் பெருக் கெடுத்தது என்ற பழங்கதையினையுளங்கொண்ட சேக்கிழா ரடிகள், அப்பேராறு நிலத்திற் பரவியோடிய நிலையில் நிலமடந்தையின் மார்பில் அணியப்பெற்ற அழகிய முத்துமாலையினை யொத்து விளங்கிய தோற்றத்தை,

**'ஆதிமா தவமுனி யகத்தியன் தரு**
**பூதநீர்க் கமண்டலம் பொழிந்த காவிரி**
**மாதர்மண் மடந்தைபொன் மார்பிற் றாழ்ந்ததோர்**
**ஓதநீர் நித்திலத் தாமம் ஒக்குமால்'(பெரிய - திருநாட்டு -2)**

எனவரும் பாடலில் அழகாகப் புனைந்துரைக்கின்றார். இச்செய்யுளின் பின்னிரண்டடிகள்,

**"மணிமலைப் பணைத்தோள் மாநில மடந்தை**
**அணிமலைத் துயல்வரும் ஆரம் போலச்**
**செல்புனலுழந்த சேய்வரற் கான்யாற்று'** **(சிறுபாண் 1-3)**

எனவரும் சிறுபாணாற்றுப்படைத் தொடரை அடியொற்றியமைந்துள்ளமை காண்க.

வானத்தின் கண்ணே விளங்கும் வெள்ளியாகிய மீன் தான் நிற்றற்குரிய வடதிசையில் நில்லாமல் தென்றிசைக் கண்ணே சென்றாலும், மேகம் தன்துளிகளை யுணவாகக் கொண்ட வானம்பாடி வாட்டமுறப் பெய்தலைத் தவிர்ந்து வற்கடகாலம் ஏற்பட்டாலும், தான் பொய்யாமற் காலந்தோறும் வருகின்ற நீர்மையை யுடையது குடகமலையிடத்தே தலையினை யுடையதாய்க் கடலிடத்தே செல்கின்ற புகழ்மிக்க காவிரியாறு என்பதனை,

**'வசையில் புகழ் வயங்கு வெண்மீன்**
**திசை திரிந்து தெற்கேகினும்**
**தற்பாடிய தளியுணவின்**
**புட்டேம்பப் புயன்மாறி**
**வான் பொய்ப்பினும் தான் பொய்யா**
**மலைத்தலைய கடற்காவிரி"** **(பட்டினப்பாலை - 1-6)**

எனவரும் தொடர்களிற் கடியலூர் உருத்திரங் கண்ணனார் தெளிவாகக் குறித்துள்ளார். இங்ஙனம் என்றும் பொய்யாதளிக்கும் காவிரியின் புகழ்த்திறத்தினை,

**"கரியவன் புகையினும் புகைக் கொடி தோன்றினும்
விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்
கால்பொரு நிவப்பிற் கடுங்குர லேற்றொடுஞ்
சூன்முதிர் கொண்மூப் பெயல் வளஞ் சுரப்பக்
குட மலைப் பிறந்த கொழும்பஃறார மொடு
கடல் வளனெதிரக் கயவாய் நெரிக்குங்
காவிரிப்புது நீர்"** **(சிலப் - நாடுகாண் 103 -108)**

*என இளங்கோவடிகளும் குறித்துப் போற்றியுள்ளார்.*

*சையமலையினின்றும் பெருக்கெடுத்து வரும் தலைமை வாய்ந்த காவிரியாறு, உலகில் உள்ள எல்லாவுயிர்களையும் வளரச் செய்து நாள்தோறும் அவ்வுயிர்கள் உய்யும்படி அருள் சுரந்து ஊட்டும் நன்னீர்மையால் செம்மை வாய்ந்த நிலமகளுக்குச் செவிலித்தாய் போன்றுள்ளது என்பார்,*

**"பூந்தண் பொன்னி எந்நாளும் பொய்யதளிக்கும்
புனல் நாட்டு"** **(பெரிய - சண்டேசர்-1)**

*எனவும்,*

**'பருவமறாப் பொன்னி'** **(சம்பந் - 338)**

*எனவும் வரும் தொடரிற் சேக்கிழாரடிகளும் குறித்துள்ளமை காணலாம். இவ்வாறு வான் பொய்ப்பினும் தான் பொய்யாத வளமுடையதாய், மன்னுயிர்களைப் புரக்கும் பொன்னி நதியினை நம் முன்னோர் தெய்வத்தன்மை வாய்ந்த திருநதியாகப் பரவிப் போற்றியுள்ளார்கள் என்பது,*

**"தெய்வக்காவிரித் தீதுதீர் சிறப்பும்"**
**(சிலப் - நாடுகாண் - கட்டுரை - 8)**

*எனவரும் இளங்கோவடிகள் வாய் மொழியாலும்,*

**"வருநாளென்றும் பிழையாத் தெய்வப் பொன்னி"**
**(பெரிய - மங்கை -3)**

*எனவரும் சேக்கிழாரடிகள் வாய் மொழியாலும் நன்கு புலனாம்,*

**"சையமால் வரைபயில் தலைமை சான்றது
செய்யபூ மகட்குநற் செவிலி போன்றது;
வையகம் பல்லுயிர் வளர்த்து நாடொறும்
உய்யவே சுரந்தளித் தூட்டு நீரது"** **(திருநாட்டுப் - 3)**

*எனக் காவிரியன்னையைச் சேக்கிழாரடிகள் சிறப்பித் துள்ளார். இவ்வாறே சேரமுனிவராகிய இளங்கோவடிகளும்,*

**"வாழியவன்றன் வளநாடு மகவாய், வளர்க்குந் தாயாகி
ஊழியுய்க்கும் பேருதவி யொழியாய் வாழி காவேரி"**
**(சிலப் - கானல்வரி-)**

*எனக் காவிரியை நிலமடந்தைக்குச் செவிலித் தாயாகக் கொண்டு போற்றியுள்ளமை இங்கு ஒப்பு நோக்கியுணரத் தகுவதாகும்.*

*காவிரியாறு நான்முகனையும் கங்கையையும் ஒக்கும் எனச் சிலேடையுவமையாற் செப்பிய சேக்கிழார், அத்தெய்வ நதியின் ஒழுக்கத்திற்கு, வண்ண நீள் வரை தர வந்து எண்ணில் பேரறங்களும் வளர்க்கும் உமையம்மையாரின் கருணையின் ஒழுக்கினை உவமை கூறி விளக்கும் முறையில் அமைந்தது,*

**"வண்ணநீள் வரைதர வந்த மேன்மையால்**
**எண்ணில் பேரறங்களும் வளர்க்கும் ஈகையால்**
**அண்ணல் பாகத்தை யாளுடைய நாயகி**
**உண்ணெகீழ் கருணையின் ஒழுக்கம் போன்றது"**

**(திருநாட்டுச் - 6)**

*எனவரும் செய்யுளாகும் குளிர்ந்த நன்னீரையுடைய காவிரியாறு, நறுமணம் பொருந்திய மலர்களையும் நன்னீரையும் கொண்டு தன் செம்பொன்மையான இரு கரைகளிலும் அமைந்த எண்ணில்லாத சிவாலயங்களிலே இறைவனை இறைஞ்சிச் செல்லுதலால் ஈசனுக்கு அன்புடைய சிவனடியார்களையும் ஒத்து விளங்குகின்றது என்பார்,*

**"வம்புலா மலர் நீரால் வழிபட்டுச்**
**செம்பொன் வார்கரை யெண்ணில் சிவாலயத்**
**தெம்பிரானை யிறைஞ்சலின் ஈர்ம்பொன்னி**
**உம்பர் நாயகற் கன்பரும் ஒக்குமால்" (திருநாட்டுச் -7)**

*என ஏதுவுவமை என்னும்அணிநலம் பொருந்தக் கூறினார். காவிரியின் புது வெள்ளப் பெருக்கினைக் கூறுமிடத்து, ஒளிமிக்க அப்பொன்னி நதியின் நன்னீர் தெளிவின்றிக் கலங்கி வருதற்குரிய காரணம் கூறுவாராய்,*

**"வாசநீர் குடைமங்கையர் கொங்கையிற்**
**பூசு குங்குமமும் புனை சாந்தமும்**
**வீசு தெண்டிரை மீதழிந் தோடுநீர்**
**தேசுடைத் தெனினுந் தெளிவில்லதே" (திருநாட்டுச்-8)**

*என அந்நீரின் இயல்பினை இனிது புலப்படுத்தியுள்ளார்.*

*காவிரியாற்றின் வருகையை எழில்பெறப் புனைந்துரைக்கும் முறையில்,*

**"மருங்கு வண்டு சிறந்தார்ப்ப மணிப்பூவாடையது போர்த்துக்**
**கருங் கயற்கண் விழித்தொல்கி நடந்தாய் வாழி காவேரி"**

**(சிலப் - கானல்வரி -25)**

*என இளங்கோவடிகள் காவிரியை வாழ்த்துகின்றார். இதனை நினைவு கூறும் முறையில்,*

**"மாவிரைத் தெழுந்தார்ப்ப வரைதரு**
**பூவிரித்த புதுப் புனல் பொங்கிட**
**வாவியிற் பொலி நாடு வளந்தரக்**
**காவிரிப் புனல் கால் பரந்தோடுமால்" (திருநாட்டுச்-9)**

*எனச் சேக்கிழாரடிகள் காவிரிப் புதுப் புனல் வெள்ளத்தைக் குறித்துள்ளார். காவிரியிற் புதுப்புனல் வரக் கண்ட உழவர்களின் ஆரவார ஓசையினையும் அப்புனல் மதகின் வழியாகப் புகுந்து பாய்வதன் ஓசையினையும்,*

**"உழவரோதை மத கோதை யுடைநீரோதை தண்பதங்கொள்**
**விழவரோதை சிறந்தார்ப்ப நடந்தாய் வாழி காவேரி'**
**(சிலப் - கானல் வரி-4)**

*எனவரும் வரிப்பாடலில் இளங்கோவடிகள் குறித்துள்ளார். இவ்வரிப் பாடலையுளங் கொண்ட சேக்கிழாரடிகள்,*

**"ஒண்டு றைத்தலை மாமத கூடுபோய்**
**மண்டு நீள் வயலிற்புக வந்தெதிர்**
**கொண்ட மள்ளர் குரைத்த கையோசை போய்**
**அண்டர் வானத்தின் அப்புறஞ் சாருமால்" (திருநாட்டுச்-10)**

*எனக் காவிரிப் புதுப் புனல் வருகையினை எதிர் கொண்ட உழவரது ஆரவாரத்தைச் சிறப்பித்துரைத்த திறம் உணர்ந்து மகிழத்தக்கதாகும்.*

*சோழ நாட்டின் சிறப்பினை விரித்துரைக்கத் தொடங்கிய அருண்மொழித் தேவர், அந்நாட்டினை வளர்க்குந் தாயாகிய காவிரியின் இயல்பினை இப்படலத்தின் முதற்பத்துப் பாடல்களிற் சிறப்பித்துப் போற்றியுள்ளார்.*

*இனி, பொன்னி நன்னீரால் நற்பயன் விளைக்கும் உழவர்களின் தொழில் முயற்சியினையும் அவர்தம் முயற்சிக்கு மேலாகப் பயன்தரும் அந்நாட்டின் வளத்தினையும் இப்படலத்தில் 11 முதல் 20 முடியவுள்ள பத்துச் செய்யுட்களில் ஆசிரியர் விரித்துக்கூறியுள்ளார். அழகிய நாற்றுக்களைப் பறிப்பவர் மாண்பும், அந்நாற்று முடிகளை நீரிற் சேர்ப்பவர்களது செய்கையும், ஆரவாரம் உடையராய் வயலை உழுபவர்களது வரிசையும் காண்பார்க்கு மேன்மேலும் அன்பினை விளைக்கும் தோற்றப் பொலிவினையுடையனவாக எங்கும் காணப்பட்டன என்பார்.*

**'மாதர் நாறு பறிப்பவர் மாட்சியும்**
**சீத நீர்முடி சேர்ப்பவர் செய்கையும்**

**ஓதையார்செய் யுழுநர் ஒழுக்கமும்**
**காதல் செய்வதோர் காட்சி மலிந்தவே'**

என்கிறார். நாறு - நாற்று. செய் - வயல். நாறு பறித்தல், முடிசேர்த்தல், செய் உழுதல் என்னும் இத்தொழில்கள் இவைபோன்று,

**'மெய்ம்மையாம் உழவைச் செய்து விரும்பெனும் வித்தை வித்திப்**
**பொய்ம்மையாங் களையை வாங்கிப் பொறையெனும் நீரைப்பாய்ச்சித்**
**தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலியிட்டுச்**
**செம்மையுள் நிற்பராகிற் சிவகதி விளையுமன்றே' (4-76-2)**

எனத் தொண்டவுழவர் செய்யும் ஞானவுழவின் நன் முயற்சியினை நினைவு படுத்தி, இறைவனிடத்து ஆருயிர்கள் காதல் செய்வதோர் மெய்யுணர்வினை வழங்கும் நிலையில் அமைந்தன என்பார், 'காதல் செய்வதோர் காட்சி மலிந்தவே' என்றார்.

'வேந்தன் மேய தீம்புனலுலகம்' என மருத நிலத்துக்குத் தெய்வமாக இந்திரனைக் குறிப்பிடுவர் தொல்காப்பியர். மருதவளம் நிறைந்த சோழ நாட்டின் தலைநகராகிய காவிரிப்பூம் பட்டினத்தில் மருதநிலத் தெய்வமாகிய இந்திரனுக்குத் திருவிழா நிகழ்ந்த சிறப்பினைச் சிலப்பதிகாரமும் மணிமேகலையும் விரித்துரைக்கின்றன. பண்டைநாளில் மருதநிலத்தில் நிகழ்ந்த இந்திர வழிபாட்டின் இயல்பினையுணர்ந்த சேக்கிழாரடிகள்,

**'இந்திர தெய்வதம், தொழுது நாறு நடுவார் தொகுதியே,**
**பழுதில் காவிரி நாட்டின் பரப்பெலாம்'**

என அந்நிலக் கருப்பொருள்களுள் ஒன்றாகிய தெய்வத் தினைக் குறித்துள்ளமை இங்கு நினைக்கத் தகுவதாகும்.

நெற்பயிர்கள் வளர்ந்து முற்றிய திறத்தினைச் சொல்ல வந்த திருத்தக்கதேவர்,

**'சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் தோற்றம்போல்**
**மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்**
**செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்**
**கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே' (சீவக-53)**

எனவரும் செய்யுளில் உவமைவாயிலாக இனிது விளக்கியுள்ளார். இவ்வாறு திருத்தக்கதேவர் நெற்பயிர் வளர்ச்சிக்கு உலகியல் நெறிபற்றி உவமை கூறினாராக, அருண்மொழித் தேவராகிய சேக்கிழாரடிகள் நிலவுமெய்ந் நெறியாகிய சிவநெறிபற்றி உவமங்காட்டி விளக்கும் முறையில் அமைந்தன,

**'சாலிநீள் வயலின் ஓங்கித் தந்நிக ரின்றிமிக்கு**
**வாலிதாம் வெண்மை உண்மைக் கருவினாம் வளத்தவாகிச்**
**சூல்முதில் பாசலைகொண்டு சுருள்விரித்தரனுக் கன்பர்**
**ஆலின சிந்தைபோல அலர்ந்தனகதிர் களெல்லாம்'**

**'பத்தியின் பாலராகிப் பரமனுக் காளாம் அன்பர்**
**தத்தமிற் கூடினார்கள் தலையினான் வணங்கு மாபோல்**
**மொய்த்தநீள் பத்தியின்பால் முதிர்தலை வணங்கி மற்றை**
**வித்தகர் தன்மைபோல விளைந்தன சாலியெல்லாம்'**

எனவரும் செய்யுட்களாகும். "நெற்பயிர்கள் நீண்ட வயலிடத்தே ஓங்கி வளர்ந்து, தமக்கு ஒப்பில்லாமல் மிகுந்து தூய வெள்ளிய உண்மைக் கருவின் வளத்தையுடையனவாகிப் பின்னர்க் கருமுதிர்வதனால் பசலைநிறம் அடைந்து இலையாகிய சுருளைவிரித்துச் சிவபெருமானுக்கு அன்பராயினாரது விரிந்த மனத்தினையொத்துக் கதிர்களெல்லாம் விரியப் பெற்றன. இறைவன்பாற் செலுத்தும் பேரன்பாகிய பத்தி நெறியின் வழிப்பட்டவராய் இறைவனுக்கு ஆட்பட்ட அன்புடைய அடியார்கள் தாங்கள் ஒருங்கு எதிர்ப்பட்டபொழுது ஒருவர்க்கொருவர் தாளில் தலைபொருந்த வீழ்ந்து வணங்குவது போன்று, செறிந்து நீண்ட வரிசைகளிலே இனிய பால் ஊறி முதிர்ந்த கதிர்களாகிய தலைகளைத் தாழ்த்தி, அந்தச் சிவஞானிகளின் பால் சிவபோகமாகிய பேரின்பம் விளைவது போன்று நெற்கதிர்களெல்லாம் முதிர்ந்து போகம் விளைந்தன என்பது இச்செய்யுட்களின் பொருளாகும்.

சோழநாட்டு உழவர்கள், நெல்லையும் மீனையும் முத்தினையும் மலரினையும் மலைகள் போற்குவித்த திறத்தினையும், நெற்போர்மலையை முகடு சாய்த்துக் கரிய எருமைகளைக் கொண்டு மிதித்துச் சூழச்செய்தலையும், வைக்கோலைப் பிரித்தெடுத்து வேறிடத்திற்போக்கி நெல்லைத்தூற்றிப் பொன்மலையும் நவமணிக்குன்றுகளும் போன்று குவித்துள்ளமையால் அந்நாடு நிறைந்த மலைகளைத் தன்பாற் கொண்ட குறிஞ்சிநிலம் போன்று திகழும் காட்சியையும் ஆசிரியர் இப்படலத்தில் 23 முதல் 25 முடியவுள்ள செய்யுட்களில் புனைந்துரைத்துள்ளமை படித்து இன்புறத்தகுவதாகும்.

சோழநாட்டுக் குடிமக்களின் அரசியல் மாண்பினையும் அறத்தின்வழி யொழுகும் அவர்தம் வாழ்க்கை முறையினையும் செல்வ வளத்தையும்,

**'அரசுகொள் கடன்க ளாற்றி மிகுதிகொண் டறங்கள் பேணிப்**
**பரவருங் கடவுட் போற்றிக் குரவரும் விருந்தும் பண்பின்**
**விரவிய கிளையுந்தாங்கி விளங்கிய குடிகள் ஓங்கி**
**வரைபுரை மாடம் நீடி மலர்ந்துள பதிகள் எங்கும்'**

எனவரும் செய்யுளில் அழகுறப் புலப்படுத்தியுள்ளார். தமது நன்முயற்சியால் விளைந்த நெல்லில் அரசர்க்குச் செலுத்த வேண்டிய ஆறிலொன்றாகிய கடமையினை முதற்கண் செலுத்தி, எஞ்சியவற்றைக் கொண்டு செய்யத் தகுந்த நல்லறங்களை விரும்பிச் செய்து, பரவி வழிபடுதற்குரிய அருமைவாய்ந்த கடவுட் பூசனையினைப் போற்றிச் செய்து, தம்குலத்து முன்னோர்களையும் விருந்தினரையும் நற்பண்புடன் கூடிய சுற்றத்தார்களையும் பாதுகாத்துப் புகழால் விளக்கமுற்று வாழும் குடிமக்களால் நிரம்பப்பெற்று மலைபோன்று உயர்ந்த மாடமாளிகைகள் சோழநாட்டு ஊர்கள் தோறும் தொடர்ந்து நிலைபெற்று உள்ளன என்பது இச்செய்யுளின் பொருளாகும். இச்செய்யுள்,

**'தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்**
**கைம்புலத்தா றோம்பல் தலை'**

எனவரும் திருக்குறளுக்கு விரிவுரைபோன்று அமைந்துள்ளமை காணலாம். உலகியலில் மக்கள் வாழ்க்கை செவ்விதின் நிகழ்தற்கு அரணாயமைந்தது அரசியல் நெறியாகும். எனவே அந்நெறிமுறை யினைப் பேணிக்காக்கும், அரசர்க்குரிய கடமையினை ஆற்றுதல் குடிமக்களது முதற்கடமை என்பார், 'அரசுகொள்கடன்கள் ஆற்றி' என அதனை முதலாவதாகக் குறித்தார். கடவுள் - தெய்வம். குரவர் - தம் குடியின் முன்னோர் விருந்து - விருந்தினர். கிளை - சுற்றத்தார். தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான் என்னும் ஐந்திற்கும் ஐந்துகூறு வேண்டுதலால் அரசர்க்குத் தருதற்குரிய வரிப்பொருள் ஆறில் ஒன்றாயிற்று என்னும் உண்மையினைப் புலப்படுத்தும் நிலையில் சேக்கிழாரடிகள் இச்செய்யுளை அமைத்துள்ளமை உணர்ந்து மகிழத்தகுவதாகும்.

சோழநாட்டூர்களின் உள்ளேயுள்ள மாடங்களிலும் புறத்தேயுள்ள சோலைகளிலும் மிக்குச் சூழ்ந்துள்ள புகைகளின் திறத்தால் அந்நாட்டுக் குடிமக்களின் அறம் பொருளின்பச் சிறப்பினையும்அவற்றுக்குக் காரணமாகிய வான் சிறப்பினையும் வகுத்துரைப்பதாக அமைந்தது,

**"கரும்படு களம ராலைக் கமழ்நறும் புகையோ மாதர்**
**சுரும்பெழ வகிலா லிட்ட தூபமோ யூப வேள்விப்**
**பெரும் பெயர்ச் சாலை தோறும் பிறங்கிய புகையோ வானின்**
**வருங்கரு முகிலோ சூழ்வ மாடமுங் காவு மெங்கும்"**

என்ற செய்யுளாகும். உழவர்கள் கருப்பஞ்சாற்றினைக் காய்ச்சுதலால் கரும்பாலைகளிலிருந்து எழும் நறிய புகையோ அன்றி மாதர்கள் தம் கூந்தலிலணிந்த மலர்களில் மொய்த்துள்ள வண்டுகள் மேலெழும்படி அகிலைக் கொண்டு புகைத்துள்ள

நறுமணப் புகையோ தூணங்களையுடைய வேள்விச்சாலை தோறும் பெறும் பொருளாகிய இறைவனை நோக்கிச் செய்யும் வேள்வியிற் பிறங்கிய புகையோ அன்றி வானத்தே எழுந்தகரிய மேகத்தின் கூட்டமோ மாடங்களிலும் சோலைகளிலும் மிக்குச் சூழ்ந்துள்ளவை இவையெனப் பிரித்துணர வொண்ணாதவாறு அமைந்துள்ளன என்பது இச் செய்யுளின் பொருளாகும்.

ஆலைக் கமழ்நறும் புகை உழவர்களது பொருள் முயற்சியினையும், மாதர் அகிலால் இட்ட தூபம் இன்ப நுகர்ச்சியையும், வேள்விப் பெரும் பெயர்ச்சாலை தோறும் பிறங்கிய புகை மெய்ப்பொருளை யுணர்ந்து இயற்றும் அறச்செயலினையும், வானின் வரும் கருமுகில் இவ்வுறுதிப் பொருட்குக் காரணமாய் இறைவனது அருளெனப் பொருந்திய வான்சிறப்பினையும் இனிது புலப்படுத்தும் முறையில் அமைந்துள்ளமை உணர்ந்து மகிழத் தகுவதாகும். இவ்வாறே மதுரை நகர மாந்தரின் அறம் பொருளின்பத்தொடு பொருந்திய இனிய வாழ்க்கை வளத்தினை,

**"அட்டிற் புகையும் அகல் அங்காடி**
**முட்டாக் கூவியர் மோதகப் புகையும்**
**மைந்தரும் மகளிரும் மாடத் தெடுத்த**
**அந்தீம் புகையும் ஆகுதிப் புகையும்"**

**(சிலப் - புறஞ்சேரி 122-125)**

எனப் பல்வேறு பூம்புகையால் இளங்கோவடிகள் புலப்படுத்தியுள்ளமை இங்கு ஒப்பு நோக்கி யுணர்தற்பாலதாகும்.

சோழ நாட்டிலுள்ள இளமரச் சோலைகளில் நாளிகேரம் செருந்தி, சூத பாடலம் முதலிய மரங்கள் எழில்பெறச் செறிந்துள்ளன. எங்குபார்த்தாலும் மங்கலவினைகளும் மணஞ்செய் கம்பலைகளும் நிரம்பியுள்ளன. அந்நாட்டு மங்கையர்கள் மலர்ந்த முகமும் இன்சொல்லும் சிறந்த அணிநலங்களுமுடையவராய்ச் செல்வ வாழ்வு வாழ்கின்றனர். நாடெங்கும் வேதமுழக்கமும் வேள்விச் சடங்குகளும் யோகமும் தவமும் போகமும் பொலிவு பெற்று விளங்குகின்றன; யாழும் குழலும் ஆகியவற்றின் இன்னிசையும் வேதியர் வேத ஓசையும் எங்கும் மிக்குத் தோன்றுகின்றன. மனைகள் தோறும் மகளிர் அம்மனை பயின்று துணைவருடன் மாலையணிந்து மகிழ்கின்றனர். வீதிகள் தோறும் திருவிழா ஆரவாரமும் வீடுகள் தோறும் விருந்தோம்பும் ஆரவாரமும் மிக்குள்ளன. மக்கட் குலத்தார் அனைவரும் தத்தமக்குரிய ஒழுக்க நெறியில் தவறாது ஒழுகுகின்றனர். பிள்ளைகள் தாய் சொல்லின் வழி அடங்கி ஒழுகுகின்றனர். பறவைகளும் விலங்குகளும் வேறு நிலத்தை

நாடாதனவாய்ப் பகை நீங்கித் தத்தம் வரம்பில் அமைந்து வாழ்கின்றன. நாட்டில் வாழும் நன்மக்கள் இடைவிடாது திருவைந்தெழுத்தோதி இறைவனை வழிபடுமியல்புடைய ராயிருத்தலால் கொடிய நோய்கள் அந்நாட்டிற்புக அஞ்சிவிலக அந்நாட்டவர் அனைவரும் பிணியற்ற நல்வாழ்வுடையராய்த் திகழ்கின்றனர் என்னும் இச்சிறப்புக்களை இப்படலத்தில் 28 முதல் 34 வரையுள்ள செய்யுட்களில் ஆசிரியர் இனிது விளக்கியுள்ளார்.

இவ்வாறு, சோழநாடு பசியும் பிணியும் பகையும் இன்றிப் பல்வகை வளங்களைப் பெற்று விளங்குதற்குக் காரணமா யமைந்தது, அந்நாட்டினை ஆளும் சோழ மன்னரது அறத்தொடு பொருந்திய ஆட்சி முறையே என அறிவுறுத்துவார்,

**"நற்றமிழ் வரைப்பின் இங்கு நாம்புகழ் திருநாடென்றும்
பொற்றடந் தோளால் வையம் பொதுக்கடிந் தினிது காக்கும்
கொற்றவன் அநபாயன்பொற் குடைநிழற் குளிர்வ தென்றால்
மற்றதன் பெருமை நம்மால் வரம்புற விளம்பலாமோ"**

எனத் தம்மை ஆதரித்த அநபாயன் என்னும் சோழ மன்னனது குடைநிழல் மாண்பினை இனிது புலப்படுத்தி இத்திருநாட்டுச் சிறப்பினை ஆசிரியர் நிறைவு செய்கின்றார். செங்கோற் சோழமன்னரது வெண்கொற்றக் குடைநிழல் திங்களைப் போன்று குளிர்ச்சி தருவதாய்ப் பல்லுயிர்க்கும் தண்ணளிசெய்து பாதுகாக்குந் தன்மையது என்பதனை, இளங்கோவடிகள்,

**"திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றதும்
கொங்கலர் தார்ச்சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
வங்கண் உலகளித்தலான்"**

எனத் தாம் இயற்றும் முத்தமிழ்க் காப்பியத்தின் தொடக்கத் திலேயே இனிது புலப்படுத்தியுள்ளமை இங்கு ஒப்பு நோக்கத்தகுவதாகும்.

## திருநகரச் சிறப்பு

கயிலைமலையும் சோழநாடும் இத்திருத்தொண்டர் புராணமாகிய காப்பியத்திற்குரிய மலையும் நாடும் ஆகும் என்பது திருமலைச் சிறப்பு, திருநாட்டுச் சிறப்பு என மேற்குறித்த பகுதிகளால் இனிது விளங்கும். முதனூலாகிய திருத்தொண்டத் தொகை அருளிச் செய்யப் பெற்ற திருத்தலமும் சிவனடியார்கள் நிறைந்து வீற்றிருக்கும் சிறப்புடைய தெய்வப் பதியும் திருவாரூரே யாதலின், இக்காப்பியத்திற்குரிய நகரம் திருவாரூர்த் திருநகரே யாயிற்று. திருவாரூர்ச் சிறப்பினை ஐம்பது செய்யுட்களால் ஆசிரியர் விரித்துக் கூறியுள்ளார். திருநாட்டுச் சிறப்பினை அடுத்து

அமைந்த இப்பகுதி, திருநகரச் சிறப்பு - திருவாரூர்ச் சிறப்பு - தேரூர்ந்த புராணம், மனுநீதிச் சோழர் புராணம், மனுநீதி கண்ட புராணம் என்ற தலைப்புக்களோடு ஏடுகளிற் குறிக்கப் பெற்றுள்ளது. ஆயினும் திருநகரச் சிறப்பு என்ற தலைப்பே முன்னுள்ள தலைப்புக்களோடு ஒத்ததாக அமைந்துளது.

**"சொன்ன நாட்டிடைத் தொன்மையின் மிக்கது**
**மன்னு மாமல ராள்வழி பட்டது**
**வன்னி யாறு மதிபொதி செஞ்சடைச்**
**சென்னியார் திருவாரூர்த் திருநகர்."**

என இப்படலத்தின் முதற் செய்யுள் அமைந்திருத்தல் 'திருநகரச் சிறப்பு' என்னும் தலைப்புக்குப் பொருத்த முடையதாதல் காணலாம்.

திருவாரூர் சோழநாட்டுப் பேரூர்களில் மிகவும் தொன்மை வாய்ந்தது என்பது,

**"தேசமுமை யறிவதற்கு முன்னோ பின்னோ**
**திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே"** (6-34-10)

என்றாங்குவரும் திருத்தாண்டகத் தொடர்களால் இனிது புலனாம்.

திருவாரூரில் திருமகள் அம்மையப்பரை வழிபட்ட செய்தியினை, 'ஓர் மாதோர் பாகம், திருவினாள் சேர்வதற்கு முன்னோ பின்னோ திருவாரூர் கோயிலாகக் கொண்ட நாளே' (6-34-1) எனவரும் அப்பர் அருள் மொழியால் உய்த்துணர்ந்த ஆசிரியர், 'மன்னுமாமலராள் வழிபட்டது' என்ற தொடரில் அதனைப் பொன்னேபோற் போற்றியுள்ளார்.

திருப்பாற் கடலில் அறிதுயில் கொள்ளும் திருமாலின் மார்பிலே வீற்றிருந்தருளும் தியாகேசப் பெருமான், இந்திரனது வேண்டுகோட் கிரங்கித் தேவருலகில் எழுந்தருளிப் பின்பு முசுகுந்த மன்னன் பேரன்பிற்கிசைந்தருளி அமரர் நாட்டினின்றும் இத்திருவாரூர்த் திருக்கோயிலுக்கு எழுந்தருளியுள்ளார் என்பது கந்த புராணத்தால் அறியப்படும் பழைய வரலாறாகும். இத்தொன்மை வரலாறு,

**"பையஞ்சுடர்விடு நாகப் பள்ளிகொள்வா னுள்ளத்தானும்**
**ஐயஞ்சின் அப்புறத்தானும் ஆரூரமர்ந்த அம்மானே"**

எனவும்,

**"அயிரா வணமேறா தானே றேறி**
**அமரர் நாடாளாதே ஆரூராண்ட**
**அயிராவணமே என்னம்மானே"** (6-25-1)

எனவும் வரும் திருநாவுக்கரசர் திருப்பாடல்களில் இடம் பெற்றுள்ளமை இங்கு நினைக்கத் தகுவதாகும்.

**வேத வோசையும் வீணையி னோசையும்**
**சோதி வானவர் தோத்திர வோசையும்**
**மாத ராடல் மணிமுழ வோசையும்**
**கீத வோசையு மாய்க்கிளர் வுற்றதே. (திருநகரச்-2)**

எனவரும் இரண்டாம் பாடல்,

**'கொண்ட கொண்டலர்ந்த கண்ணினார்கள் கீத வோசைபோய்**
**அண்டரண்ட மூடறுக்கும் அந்தணாரூ ரென்பதே'**
**(2-101-2)**

எனவரும் ஆளுடைய பிள்ளையார் திருப்பாடற் றொடரை விரித்துரைக்கும் முறையில் அமைந்திருத்தல் காணலாம்.

**பல்லியங்கள் பரந்த வொலியுடன்**
**செல்வ வீதிச் செழுமணித் தேரொலி**
**மல்லல் யானை யொலியுடன் மாவொலி**
**எல்லை யின்றி யெழுந்துள வெங்கணும் (திருநகரச்-3)**

எனவரும் மூன்றாம் பாடல், இங்குச் சொல்லப் பெறும் மனுநீதி கண்ட வரலாற்றின் முதற்குறிப்பாக அமைந்துள்ளமை கூர்ந்து நோக்கத் தகுவதாகும்.

**மாட மாளிகை குளிகை மண்டபம்**
**கூட சாலைகள் கோபுரம் தெற்றிகள்**
**நீடு சாளர நீடரங் கெங்கணும்**
**ஆடல் மாதர் அணிசிலம் பார்ப்பன. (திருநகரச்-4)**

எனவரும் நான்காஞ் செய்யுள்,

**"மாட மாளிகை கோபுரங் கூடங்கள் மணியரங் கணிசாலை**
**பாடு சூழ்மதிற் பைம்பொன்செய் மண்டபம்" (2-109-7)**

எனவரும் ஆளுடை பிள்ளையார் தேவாரத் தொடரை அடியொற்றியமைந்திருத்தல் காணலாம்.

திருநகரச் சிறப்பின் ஐந்தாம் செய்யுளில் 'சம்புவின் பங்கினாள் திருச்சேடிப் பரவையாம் மங்கையார் அவதாரஞ்செய் மாளிகை'யைப், பற்றியும் ஆறாஞ் செய்யுளில், 'வன்றொண் டர்க்குத் தூதுபோய் நடந்த செந்தாமரையடி நாறும்' திருவீதியைப் பற்றியும் ஆசிரியர் சிறப்பாகக் குறித்துள்ளமை, காப்பியத் தலைவராகிய நம்பியாரூரர், நங்கை பரவையார் ஆகிய இருவருடன் இத்திருவாரூர்க்கு அமைந்த தொடர்பினை நினைவு படுத்துவதாகும்.

திருவாரூர்ப் பெருமான் நம்பியாரூரரது வேண்டுகோட் கிரங்கி நங்கை பரவையாரின் ஊடலைத் தணித்தற் பொருட்டு நள்ளிரவிலே ஒருமுறைக் கிருமுறை தூது நடந்தருளிய திருவருட் செய்தியைக் குறிப்பிடும் முறையில் 'போய் நடந்த' என இருமுறை கூறினார். பின்னாளில் சிறப்பு முறையாக நிகழ்ந்த இந்நிகழ்ச்சிக்கு,

**'அணியுடைய நெடுவீதி நடப்பர் போலும்**
**அணியாரூர்த் திருமூலட்டான னாரே' (6)**

எனத் திருவீதியில் திருவுலாப் போந்தருளும் முன்னாளைய பொது நிகழ்ச்சி ஆதரவாக அமைந்திருத்தலும் இங்குக் கருதத் தகுவதாகும்.

**"உடந்த செந்தாமரை யுள்ளுறு சோதி**
**நடந்த செந்தாமரை" (2484)**

எனவரும் திருமந்திரத் தொடரை ஆசிரியர் இச்செய்யுளிற் பொருத்தமுற எடுத்தாண்டுள்ளமை காணலாம்.

அன்புடையராய்க் கேட்டோரது உள்ளத்தினையுருக்க வல்ல தேவாரத் திருப்பதிகங்களை ஆர்வமுடன்பயின்று ஓதும் அன்பர்கள் விரும்பியுறையும் சிறப்புடையது திருவாரூர் என்பதனை,

**"உள்ள மாருரு காதவ ரூர்விடை**
**வள்ள லார்திரு வாரூர் மருங்கெலாம்**
**தெள்ளு மோசைத் திருப்பதி கங்கள்பைங்**
**கிள்ளை பாடுவ கேட்பன பூவைகள்" (திருநகரச்-8)**

எனவரும் செய்யுளில் சேக்கிழாரடிகள் கற்போர் மனங்கசிந்துருக எடுத்துரைத்துள்ளார். இச்செய்யுள்,

**'பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும் பயின்றோதும் ஓசைகேட்டு**
**வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள் பொருட்சொல்லும்**
**மிழலையாமே' (1-132-1)**

எனவும்,

**'வேதத்தொலியாற் கிளிசொற் பயிலும் வெண்காடே'(2-62)**

எனவும் வரும் திருப்பதிகத் தொடர்ப் பொருளை நினைவு கூறும் முறையில் அமைந்துள்ளமை உணர்ந்து மகிழத் தக்கதாகும். சிவமுயன்றடையும் தெய்வக்கலையினைத் திருத்தமுறப் பயிலுதலே நகர் வாழ்வார்க்குரிய சிறப்பாகும். இச்சிறப்பினை,

**'தண்ணெென்சோலை யெம்மருங்கும் சாருமடமென் சாரிகையின்**
**பண்ணின்கிளவி மணிவாயும் பதிகச் செழுந்தேன் பொழியுமால்'**
**(பெரிய-முருக-3)**

என முருகநாயனார் புராணத்தில் ஆசிரியர் குறித்துள்ளமை இங்கு நினைக்கத் தக்கதாகும்.

ஒளிதிகழும் அணிகலன்களாலும் பேராரவாரத்தாலும் வழங்கக் குறையாத பண்டங்களின் மிகுதியாலும் திருவாரூரில் உள்ள ஆவண வீதிகள் கடல் போன்று விளங்குதலை,

**விளக்க மிக்க கலன்கள் விரவலால்**
**துளக்கில் பேரொலி யால்துன்னும் பண்டங்கள்**
**வளத்தொடும்பல வாறு மடுத்தலால்**
**அளக்கர் போன்றன ஆவண வீதிகள். (திருநகரச்-9)**

எனச் சிலேடையணி பொருந்தக் கூறியுள்ளார்.

பல்வகை விளக்குகளைக் கொண்ட மரக்கலங்களையும் மாற்ற வொண்ணாத பேரொலியினையும் உடைமையும் நிறைந்த பல பண்டங்களையுடைமையும் பல ஆறுகள் கலக்கப்பெறுதலும் கடலுக்கமைந்த இயல்பு. ஒளிதிகழும் அணிகலன்களை யுடைமையும் மாறாத பேராரவார முடைமையும் உலகிற் பல்வேறிடங்களிலும் நிறைந்த பண்டங்கள் பல்வேறு வழிகளில் வந்து ஒருங்கு நிறைந்துள்ளமையும் திருவாரூர் ஆவண வீதியின் சிறப்பாகும். 'விளக்கமிக்க கலன்கள்' என்ற தொடர் கடலுக்குக் கொள்ளுங்கால் மரக்கலங்களையும், ஆவண வீதிக்குக் கொள்ளுங்கால் ஒளி திகழும் அணிகலன்களையும், 'பலவாறு மடுத்தல்' என்ற தொடர், கடலுக்குக் கொள்ளுங்கால் பல ஆறுகள் வந்து கலத்தலையும், ஆவண வீதிக்குக் கொள்ளுங்கால் பல வழிகளால் வந்து நிறைதலையும் குறிக்கும் முறையில் இச்செய்யுள் செம்மொழிச்சிலேடை என்னும் அணி நலம் பொருந்த அமைந்துள்ளமை அறியத்தகுவதாம்.

திருவாரூரில் செந்தமிழ்ப் பாடல்களேயன்றி நான் மறைகளின் ஒலியும் விடியற்காலத்தே கோழியின் குரலுடன் மாறியொலித்தலை,

**"ஆரணங்களே யல்ல மறுகிடை**
**வாரணங்களும் மாறி முழங்குமால்" (திருநகரச்-10)**

எனவரும் தொடரிற் கூறியுள்ளார். இத்தொடர்,

**"நான் மறையோசையல்லது**
**வாழியும் வஞ்சியுங் கோழியும் போலக்**
**கோழியின் எழாதெம் பேரூர் துயிலே"**

எனவரும் பாடற் பொருளை யுளங்கொண்டு கூறியது போல் அமைந்துள்ளது.

ஆறு சமயத் தொண்டர்களும் பிறரும் அன்புடன் உறையும் பல்வேறிடங்களைத் தன்பாற் கொண்டு திகழும் சிறப்புடையது திருவாரூர் என்பதனை,

**தாழ்ந்த வேணியர் சைவர் தபோதனர்**
**வாழ்ந்த சிந்தை முனிவர் மறையவர்**
**வீழ்ந்த இன்பத் துறையுள் விரவுவார்**
**சூழ்ந்த பல்வே றிடத்ததத் தொன்னகர். (திருநகரச்-11)**

எனவரும் செய்யுளில் ஆசிரியர் விரித்துக் கூறுவர். இச்செய்யுள்,

**"அருமணித்தடம் பூண்முலை யரம்பையரோ டருளிப் பாடியர்**
**உரிமையிற் றொழுவார் உருத்திர பல்கணத்தார்**
**விரிசடை விரதிகள் அந்தணர் சைவர் பாசுபதர் காபாலிகள்**
**தெருவினிற் பொலியுந் திருவாரூரம்மானே" (4-20-3)**

எனவரும் அப்பர் தேவாரத்தை அடியொற்றியமைந் துள்ளமை காணலாம்.

நிலமகட்குத் திலகம் ஒப்பது செம்பியர் வாழ்பதி. மலர்மகட்குத் தாமரை போல் மலர்ந்து விளங்குவது திருவாரூர். என இவ்வாறு பன்னிரண்டு செய்யுட்களால் திருவாரூர்ச் சிறப்பினை விரித்துக்கூறிய ஆசிரியர், அந்நகரில் அரசு வீற்றிருந்த மனுச்சோழனது மாண்பினை நான்கு செய்யுட்களில் விரித்துரைக்கின்றார்.

'அன்ன தொன்னகருக்கு அரசாயினான் மனு வேந்தன்; அவன் செங்கதிரோன் வழித்தோன்றினான்; மன்னுசீர் அநபாயன் வழிமுதல்; மண்ணில் வாழ்தரும் மன்னுயிர்கட்கு எலாம் கண்ணும் ஆவியும் ஆம் பெருங்காவலன்; விண்ணுளார் மகிழ்வு எய்திட வேள்விகள் எண்ணிலாதன இயற்றினான்; செற்றம் நீக்கிய செம்மையின் மெய்ம்மனுப் பெற்ற நீதியும் தன் பெயராக்கினான்; புற்றிடங் கொண்டவர் பூசனைக்கு ஆகமம் சொன்ன முறைமையால் அங்கண் வேண்டும் நிபந்தம் ஆராய்ந்துளான்' எனத் திருவாரூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்த மனுச்சோழனது மாண்பினை ஆசிரியர் தொகுத்துக் கூறியுள்ளார்.

நாட்டின் ஒழுகலாற்றிற்கு இன்றியமையாத வேந்தனை உலகத்திற்கு உயிராகக் கூறுதல் பழைய தமிழ் மரபு. 'மன்னனுயிர்த்தே மலர்தலை யுலகம்' என்பது புறநானூற்றுத் தொடர். இறைவன் கண் ஒளியும் ஆன்மபோதமும் போல உயிருடன் கலந்து நின்று நல்லனவும் தீயனவும் இவையெனக் காட்டி நல்வழிப் படுத்துவது போன்று, நாட்டின் ஆட்சித் தலைவனாகிய மன்னனும் தன்னாட்டில் வாழும் குடி மக்களுக்கு நன்மை தீமைகள் இவையெனக் காட்டி நன்னெறிப் படுத்துந்

திறத்தில் குடிமக்களுக்குக் கண் போன்று உதவி செய்பவன் என்பார்,

**'மண்ணில் வாழ்தரும் மன்னுயிர்கட்கெலாம்**
**கண்ணும் ஆவியும் ஆம் பெருங்காவலன்'**

என்றார். பழைய மனு என்னும் வேந்தன் அறிவுறுத்திய அரசியல் நெறியானது, பிற்காலத்தில் வழங்கிய ஒரு குலத்துக்கொரு நீதியாகாது விருப்பு வெறுப்பின்றி எல்லா மக்களுக்கும் ஒத்த பொதுவறமாகத் திகழுந் தன்மைய தெனவும், அத்தகைய தொன்மை நீதியினையே மனுச்சோழன் தன்னாட்சிக்குரியதாகக் கடைப்பிடித் தொழுகினமையால் அத்தொன்மை வாய்ந்த மனுமுறை இம்மனுச் சோழன் பெயருடன் இணைத்து வழங்கப் பெறுவதாயிற்று எனவும் விளக்குவார்,

**'செற்றம் நீக்கிய செம்மையின் மெய்ம்மனுப்**
**பெற்ற நீதியும் தன்பெயராக்கினான்'**

என்றார்.

"மனுதரும சாத்திரம் அக்காலத்துக்கு ஏற்பவகுக்கப் பெற்றது. ஆதலின் இந்நாளில் பலரும் மயங்கியறிவது போல அது கொண்டு செற்றமும் பூசலும் விளைத்தல் பொருந்தாது என்க. 'செற்ற நீக்கிய செம்மை' என்றும், 'மெய்ம்மனு' என்றும் கூறிய குறிப்புக்கள் ஆசிரியரது தெய்வ வாக்காதலால், அவை இந்நாளில் விளையும் மனுவைப் பற்றிய போராட்டங்களை விலக்கவே எழுந்தனபோலவும் தொனிக்கின்றன. தன் பெயராக்கினான் - முன் மனு அரசன் செலுத்திய நீதி ஆட்சியைப் போலவே இவ்வேந்தனும் செலுத்தியதனால் அப்பெயருடன் சேர்த்துச் சொல்லப்பெற்றான். இக்காலத்துக்கு முன் சொல்லிய அத்தரும சாத்திரம் ஏலாதென்று காலத்திற்கேற்பப் பராசரர் சுமிருதி வகுத்தார் என்றும், அதனாலே 'கலௌ . பராசர' என விதித்தனரென்றும் கூறுவர். மனு - எல்லோராலும் நினைக்கத் தக்கவன்; நினைக்க வேண்டியவற்றையே நினைப்பவன் என்பன பொருளாம்" எனச் சிவக்கவிமணி அவர்கள் கூறிய விளக்கம் இங்கு எண்ணத் தகுவதாகும்.

மனுச்சோழன் அறம் பொருள் இன்பம் என்ற இவற்றை அறநெறியில் வழுவாது மேற்கொண்டு அறத்திற்கு மாறான தீயனவற்றை விலக்கி அரசர்கள் போற்ற ஆட்சி புரியும் நாளில் அவனது முன்னைத் தவத்தின் பயனாக அவனது பட்டத்தரசியின் வயிற்றில் இளஞ்சிங்கம் போல்வானாகிய மைந்தனொருவன் பிறந்தான். தவப்பயனாகத் தோன்றிய அப்புதல்வன் சிவபரம்பொருளைச் சிந்தித்து அடைதற்குரிய தெய்வக்கலைகள்

பலவற்றையும் திருத்தமுறப் பயின்று போரில் குதிரை, யானை, தேர், படை ஆகியவற்றை நடத்துதலாகிய தொழிற் கல்வியும் கற்றுத்தேர்ந்து இப்பிறவியைப் பெற்றதும் வீட்டின்பமாகிய பெரும்பேறே யாயிற்று என்று பாராட்டும் தன்மையுடையனாக வளர்ந்து வந்தான். எல்லையில்லாத பழமையான கலைகளில் நிரப்பிப் பெறலருந் தந்தையுளமகிழ, உயர்ந்த நற்குணங்களை யுடையவனாகி இளவரசு என்னும் பதவியை அடைதற்குரிய பக்குவமுடையவனாக வளர் இளம் பருதிபோன்று விளங்கினான். அம்மைந்தன், ஒரு நாள், அரசர் மாளிகையினின்றும் புறப்பட்டு அரசகுமாரர்களும் சேனைகளும் தன்னைச் சூழ்ந்துவரத் தேரில் ஏறி அரச வீதியில் உலாப் போந்தான். அங்ஙனம் செல்லும் பொழுது வீதியிலே ஒரு பசுக்கன்று துள்ளிக்கொண்டு குறுக்கே போய் அவனது தேர்க்காலின் அடியில் அகப்பட்டு இறந்தது. அதுகண்டு நெஞ்சம் நெக்குருகிய அக்கன்றின் தாய்ப் பசு மனம் வெதும்பிற்று; அலறிற்று; தளர்ந்து மெய் நடுக்கமுற்று வீழ்ந்தது. அத்துயர நிகழ்ச்சியைக் கண்ணுற்ற அரசகுமரன் ‘இங்கு அபாயம் வந்ததே’ என்று உரை தடுமாறி மனத்துயரங்கொண்டு அறிவு கலங்கி ‘பசுவும் கன்றும் இன்று எனது உணர்வாகிய பெருமை யழிந்தொழியச் சிதைத்தன. இனி என் செய்கேன்’ என்று தேரினின்றும் இறங்கி விழுந்தான். அவ்வாறு விழுந்த அரச குமரன், கன்றையிழந்து அலறும் தாய்ப்பசுவை நோக்கி உயிர் பதைபதைத்துச் சோர்வான்; நிலத்தல் இறந்து கிடக்கின்ற கன்றை நோக்கிப் பெருமூச்சுவிட்டு நிற்பான்; ‘மன்னுயிர் அனைத்தையும் தன்னுயிரெனப் பேணிக்காக்கும் மனு என்னும் என் தந்தைக்கு உலகத்தில் இத்தகைய பெரும் பழி வந்து அடையும்படி நானொருவன் மைந்தனாகப் பிறந்தது எத்தகைய தீவினையோ’ என உளங்கவல்வான்; எதிர்பாராத நிலையில் ஏற்பட்ட இப்பழியினை மாற்றும் வகையை மறைகளைக் கற்று வல்ல அந்தணர்கள் விதித்த வண்ணம் செய்வது அறநெறியாயிருக்கு மானால் என்னுடைய தந்தை இதனை அறிதற்கு முன்னமே இன்கொலைப் பாவத்திற்குரிய கழுவாயைச் செய்து முடிப்பேன்’ என்று துணிந்து மறையுணர்ந்த அந்தணர் முன்னே சொன்றான்.

தன் கன்றையிழந்து வருந்திய தாய்ப்பசு, அத்துயரத்தைப் பொறாது பெருமூச்செறிந்து விம்மி முகத்திற் கண்ணீர் வழிய, மன்னுயிர் காக்கும் மனுச்சோழனது அரண்மனை வாயிலையடைந்து அவ்வாயிலிற்கட்டப் பெற்றிருந்த மணியினைத் தன் கொம்பினால் அசைத்து அடித்தது. பழிப்பறை முழக்கம்போலவும் பாவத்தின் ஆரவாரம் போலவும் மறலியூர்தியின் கழுத்தின் அணியிலணியப்பட்ட மணியின் ஓசை போலவும் தோன்றிய அந்த மணியின் ஒலியைக் கேட்ட மன்னன்,

அரியணையினின்றும் விரைந்திறங்கி அரண்மனை வாயிலை அடைந்தபொழுது, வாயில்காவலர் எதிரே வந்து வணங்கி, 'அரசே! இங்கே ஒரு பசு வந்து நின்வாயிலில் தொங்கிய மணியினைத் தன் கொம்பினாற் புடைத்தது" என்றனர். அரசன், காவலாளர் கூறியதைக் கேட்டு, தன் முன்னர் வருந்தி நின்ற பசுவை நோக்கி, 'இப்பசுவிற்கு என்ன துன்பம் நேர்ந்தது?' என வினவும் முறையில் அமைச்சரை இகழ்ச்சியுடன் நோக்கினான். அந்நிலையில் முன்னர் நிகழ்ந்தன எல்லாவற்றையும் அறிந்தவனாகிய அமைச்சனொருவன், அரசனடிகளை வணங்கி நின்று, 'அரசே! நின்மைந்தன் மணிகள் கட்டிய அழகிய தேர்மீதேறியமர்ந்து அளவில்லாத தேர்ப்படைகள் தன்னைச் சூழ்ந்துவர, அரசர் உலாவரும் பெரு வீதியிலே உலாப் போகுங்காலத்து இளைய பசுக்கன்று தேர்க்காலினுள்ளே புகுந்து இறந்து பட்டதாக, அது கண்டு தளர்ந்த தாய்ப் பசுவாகிய இது, இங்கே வந்து இத்தன்மையைச் செய்தது' என்று விண்ணப்பஞ்செய்தான். அம்மொழியினைச் செவிமடுத்த மன்னன் கன்றையிழந்த அப்பசு அடையும் துயரத்தைத் தான் மேற்கொண்டு கொடிய நஞ்சு தலைக்கேறினாற்போலும் பெருந்துன்பம் மிகுந்து இத்தீவினை விளைந்தவாறு என்னே என்று இரங்கி ஏங்கி, 'என் செங்கோல் முறைமை மிகவும் நேர்மையுடையது' என்பான்; 'இது யாது செய்தால் தீரும்' என்பான்; 'நிலை பெற்ற உயிர்களையெல்லாம் இடர்நீக்கிப் பாதுகாத்து அறத்தின் வழியிலே நிகழ்ந்த எனது அரசாட்சி மிகவும் நன்று' என்பான்; (பசுவின் துயராகிய) இது என்ன செய்தால் தீரும் என்பான்; தன்னுடைய இளங்கன்றினைக் காணாத தாய்பசுவைப் பார்த்துச் சோர்வடைவான். இவ்வாறு அந்நிலையில் அரசன் உற்ற துன்பம் ஓர் எல்லையுட் படாததாயிற்று.

மந்திரிகள், மன்னனது துயர மிகுதியைக் கண்உற்று மன்னனை வணங்கி, 'அரசே! சிந்தை தளர்ந்து வருந்துவது இதற்குத் தீர்வாகாது. பசுவதை செய்தார்க்கு மறை நூலந்தணர்கள் விதித்த வழியே நின்மைந்தனை முறை செய்வது அறமாகும்' என்றனர். அதுகேட்ட மனுச் சோழன், மந்திரிகளைப் பார்த்து, 'நீங்கள் மறைமுறைப்படி கழுவாய் தேடுதலே அறத்தொடுபட்ட வழக்கு என்று கூறுவீராயின், மறை விதிப்படி செய்யும் அக்கழுவாய் இளங்கன்றை இழந்து வருந்தும் பசுவின் துயரத்தைப் போக்குதற்குரிய மருந்தாகுமோ? நான் என் மைந்தனை இழக்க இருக்கின்றேன் என்ற நிலையில் நீங்கள் எல்லீரும் ஒன்றுபட்டு உரைத்த இப்பிழையுரைக்கு உடன்பட்டுத் தீர்வு காண்பேனானால் அறக்கடவுள் என் செயல் குறித்து

வெறுப்புறாதோ? பெருநிலப்பரப்பினைக் காவல் புரியும் மன்னன் என்பவன், தன் ஆட்சிக்குட்பட்ட உயிர்களைக் காக்குங்கால், அவ்வுயிர்களுக்கு அரசனாகிய தன்னாலும் தன்னுடைய சுற்றத்தாராலும் குற்றம் மிக்க பகைவர்களாலும் கள்வர்களாலும் பிற உயிரினங்களாலும் உண்டாகும் ஐவகை அச்சங்களையும் போக்கி இடையூறு நீக்கி அறத்தின் வழியே காக்கும் கடமையுடையவன் அல்லனோ? அரசனாகிய யான், என் மைந்தன் செய்த கொலைக் குற்றத்திற்குக் கழுவாயாகப் பெரிய தவச் செயல்களைச் செய்ய உடன்பட்டு, எனது நாட்டில் அயலானொருவன் ஒருபிரைக் கொன்றால் அவனுக்குக் கொலைத் தண்டம் விதிப்பேனாயின், 'தொன்று தொட்டு நிலைபெற்று வந்த மனுவின் அறநெறி, மனு என்னும் பெயருடைய சோழனால் அறவே அழிக்கப்பட்டது' என்ற பழிச்சொல்லை 'நிலைபெற்ற இவ்வுலகில் யான் பெறும் நிலையில் மந்திரிகளாகிய நீங்கள் வழக்கின் நிலையினை எனக்கு எடுத்துரைத்தீர்கள்' என்று இகழ்ந்து கூறினான்.

அதுகேட்டு எதிர்நின்ற மதிநூல்வல்ல அமைச்சர்கள், 'தொன்மையுடையதாய் நிலைபெற்று வரும் நாட்டினை ஆளும் வேந்தர், பெருமானே! நிலைபெற்று உள்ள இந்நீதி முறையினை யொட்டிய வழக்கு உலகத்தில் இதுபோல் முன்பு நிகழ்ந்துள்ளது. ஆகவே இதற்காக அரசகுமரனைக் கொல்வித்தல் முறையாகாது' எனக்கூறினர்.

அறத்தின் மெய்ம்மைத் தன்மையினை நன்குணர்ந்த மனுச்சோழன், அவ்வாறு தொழுதுரைத்த அமைச்சர்களை வெகுண்டு நோக்கி, 'அறமே கூறும் நாவினையுடைய அமைச்சராகிய நீவிர் இவ்வாறு அறத்திற்கு மாறான மொழியினையும் சொல்லத் துணிந்தீர். வேத வழிப்பட்ட மிருதி நூல்களிற் சொல்லப்பட்டு வரும் விதிகள் ஒருபுறம் கிடக்க, அறநெறியின் செம்மை வழிப்பட்ட உண்மை நிலையினை நீங்கள் சிந்தித்துணராது பேசுகின்றீர்கள். எந்த உலகத்தில் எந்தப் பசு இத்தகைய கன்றையிழந்த துன்பத்தினால் வெதும்பிப் பெருமூச்சு விட்டுக் கதறிக்கொண்டு சென்று அரசரது வாயிலிற்கட்டப் பெற்றிருந்த மணியினை அடித்துத் தளர்ந்து வீழ்ந்தது? இதனை ஆராய்ந்து சொல்லுங்கள். அன்றியும், இந்திரன் மால் பிரமன் முதலிய தேவர்கள் போற்றிப் புகழ்ந்திறைஞ்ச வீற்றிருந்தருளும் தியாகேசப்பெருமான் விரும்பிக் கோயில் கொண்டு அருளிய திருவாரூரிலே பிறந்த சிறப்புடைய நல்லுயிரை எனது மைந்தன் கொன்றான் ஆதலால் அவனைக் கொல்வதே இங்குத் துணிதற்குரிய வினையாகும் என நினைமின்' என்று கூறினான். 'என் மைந்தன் செய்த கொலைக் குற்றத்துக்கு இதுவே தக்க

தண்டனையாகும். இப்பசு மனம் வருந்தும் பெருந்துயரத்தை நீக்க முடியாத யான் வருந்தும் அளவில் நில்லாது இப்பசு உற்ற துன்பத்தை யானும் மேற்கொண்டு வருந்துதலே என்னாற் செய்தற்குரிய செயலாகும்' என்று எண்ணிய மனுச்சோழன், எவ்விடத்தும் எக்காலத்தும் எவராலும் செய்தற்கரிய செய்கையைச் செய்யத் துணிந்தான். அதனையுணர்ந்த அமைச்சர்களும் அவன் முன்நிற்றற்கு அஞ்சி அவ்விடத்தைவிட்டு அகன்றார்கள்.

பின்னர் மனுச்சோழன், தன் மைந்தனை அங்கு அழைத்துவரச் செய்து, அமைச்சனொருவனை நோக்கி, புதல்வனாகிய இவனை அந்த வீதியிலேயே தேர்க்காலின் கீழ்க் கிடத்தித் தேரை இவன் மீது செலுத்துக' எனப் பணித்தனன். அதனை நிறைவேற்ற வொண்ணாத நிலையினனாகிய அமைச்சன் அவ்விடத்தை விட்டு அகன்று தனது இன்னுயிரைத் துறந்தான். அதனை யுணர்ந்த மனுச்சோழன், தன் குலத்துக்கு ஒரு மகனாகத் தான் பெற்ற மைந்தனைத் தானே அழைத்துக் கொண்டு அவ்வீதியினை அடைந்தான். தன்னுடைய குலத்துக்கு ஒரே மைந்தனாக இவன் உள்ளான் என்பதனையும் மனங் கொள்ளாது அறத்தின் வழிச் செல்லுதலே தனது கடமையென்று உணர்ந்து, தன் மகனது மார்பின்கண்ணே தேர்ச்சக்கரம் பொருந்தும்படி அவன்மீது தேரைச் செலுத்தினான் மனு வேந்தன். உலகிற்கு அருமருந்து போன்ற அரசாட்சி என்பது யாவராலும் மேற்கொண்டு நிகழ்த்துதற்கேற்ற எளிமையுடையதோ? அருமையுடைய தல்லவோ?

எவ்வுயிர்க்கும் அருளாளனாகிய மனுச்சோழனது செய்தற்கரிய இச்செயலைக்கண்டு பொறாது மண்ணுலகத் தவர்கள் கண்ணீராகிய மழையினைச் சொரிந்தார்கள். வானவராகிய தேவர்கள் மலர்மழை பொழிந்தார்கள். பெரியோனாகிய அம்மன்னனது கண்ணெதிரில் வீதிவிடங்கப் பெருமானாகிய இறைவன் அழகிய அவ்வீதியிலே விண்ணவர்கள் போற்ற விடையின் மீது எழுந்தருளி நின்றான். சடையின் ஒரு பக்கத்து இளையபிறைச் சந்திரனும் தனித்து விழிக்கும் திரு நெற்றியும் இடப்பாகத்தில் உமையம்மையும் எல்லாப் பக்கங்களிலும் பூதகணங்களும் சூழ்ந்து போற்றும் பெருமையும் ஆகிய தெய்வக் காட்சியைக் கண்டு மன்னன் போற்றித் துதித்தனன். விடைமீதெழுந்தருளிய சிவபெருமானும் அறத்தின் வெற்றியையுடைய மனுச் சோழனுக்குத் திருவருள் புரிந்தான். அந்நிலையிலேயே, தேர்க்காலிற் பட்டு இறந்த பசுவின் கன்றும், அரசனது அரசாட்சிக்கு உரிமையுடைய மைந்தனாகிய கன்றும், இறந்த அமைச்சனும் உயிர் பெற்றெழுந்தனர். அது கண்ட

மன்னன் இன்னதன்மையினை அடைந்தான் என்று அறியாதவனாய்ப் பெருமகிழ்ச்சியில் திளைத்தனன். எல்லார்க்கும் முதல்வனாகிய இறைவனே முற்பட்டு எழுந்தருளினால் நிறைவேறாத செயலும் உளதோ? எல்லாம் இனிதின் நிறைவேறுமன்றோ!

மனுவேந்தன் தன் பாதங்களில் வீழ்ந்து வணங்கிய மகனை எடுத்து மார்புறத் தழுவிப் பெருமகிழ்ச்சியுற்றுப் பசுவின் துயரத்தால் விளைந்த தனது முன்னைத் துயரத்தினின்றும் நீங்கினான். தனது மடியிலே சுரந்து பெருகிய இனிய பாலினை உயிர் பெற்றழுந்த இளங்கன்று மகிழ்ந்து பருகி எஞ்சிய பால் நிலத்தினை நனைக்கும் வண்ணம் அங்கு வந்த பசுவும், தனது கன்றை இழந்த முன்னைத் துன்பத்தினின்றும் நீங்கி இன்புற்றது.

இங்ஙனம், திருவாரூர்ப் பூங்கோயிலில் வீற்றிருந்தருளும் இறைவன், வெற்றித் திறம் வாய்ந்த மனுச்சோழனுக்குத் திருவாரூர்த் திருவீதியிலே யாவரும் காணக் காட்சி தந்து திருவருள் புரிந்து சென்றருளிய பெருங்கருணைத் திறத்தைக் கண்டு அவ்விறைவன், என்றும் இவ்வாறே தன்னடியார்களுக்கு எளிவந்தருள் புரியும் பெருமையினை ஏழுலகத்தாரும் எடுத்துரைத்துப் பாராட்டிப் போற்றுவாராயினர். இவ்வாறு அறநெறியில் அளவிலாத உயிர்களுக்கு அருள்புரிந்து யாவர்க்கும் முதல்வராகிய வீதிவிடங்கப் பெருமான் மகிழ்ந்து வீற்றிருந் தருளும் பெருமை வாய்ந்த திருவாரூர் மேற் சிறப்பித்துரைக்கும் புகழுரை நமது அளவுபட்ட சொல்லின் எல்லையுள் அடங்குவதோ? அத்தகைய சிறப்பமைந்த திருநகரத்துக்கு அகமலர் போல் விளங்குவது அறமேயுருவாகிய இறைவன் எழுந்தருளிய பூங்கோயிலாகும்; என மனுச்சோழனது; இறைவன் திருவருள்வழிப் பட்ட அறத்தொடு பொருந்திய அரசியல் நீதி முறையினை விரித்துரைக்கு முகமாகத் திருவாரூர்த் திருநகரத்தின் சிறப்பினை ஆசிரியர் சேக்கிழாரடிகள் இனிது விளக்கியுள்ளார்.

இவ்வாறு மன்னுயிரனைத்தையும் தன்னுயிர்போற் பேணிக் காத்து முறைசெய்த மனுச் சோழனது வரலாற்றை அறிதற்கு ஆதாரமாய் அமைந்தது, இளங்கோவடிகள் அருளிய சிலப்பதிகாரமாகும். கோவலனைக் கள்வனென்று கொண்டு ஆராயாது கொலைபுரிந்த பாண்டியனது அவையிற் சென்று, தன் கணவன் கள்வனல்லன் என வழக்குரைக்க முற்பட்ட கண்ணகி தேவியார், 'நீர்வார் கண்ணை எம் முன் வந்தோய்! யாரையோநீ' என வினவிய நெடுஞ்செழியனை நோக்கித் தன் நாடும் ஊரும் தன் நாட்டு வேந்தரது அறநெறி பிறழா அரசியல் முறையும் இவையெனப் புலப்படுத்தும் நிலையில்,

**'தேரா மன்னா செப்புவ துடையேன்**
**எள்ளறு சிறப்பின் இமையவர் வியப்பப்**
**புள்ளுறு புன்கண் தீர்த்தோன் அன்றியும்**
**வாயிற் கடைமணி நடுநா நடுங்க**
**ஆவின் கடைமணி யுகுநீர் நெஞ்சு சுடத் தான்தன்**
**அரும்பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோன்**
**பெரும்பெயர்ப் புகார் என்பதியே'**
**(சிலப் - வழக் - 50 - 56)**

*எனப் புறவின் துயர்களைந்த சிபிச்சோழனது அருளின் திறத்தையும், ஆவின் துயர் துடைத்த மனுச்சோழனது அரச நீதியினையும் அறிவுறுத்துவதாக இளங்கோ அடிகள் குறித்துள்ளார். 'கறவை முறை செய்தோன்', 'கறவை முறை செய்த காவலன்' (சிலப் - வாழ்த்துக் காதை - அம்மானைவரி) எனச் சிலப்பதிகாரத்திலும்,*

**'சால மறைந்தோம்பிச் சான்றவர் கைகரப்பக்**
**காலை கழிந்ததன் பின்றையும் - மேலைக்**
**கறவைக்கன் றூர்ந்தானைத் தந்தையும் ஊர்ந்தான்**
**முறைமைக்கு மூப்பிளமை யில்'** **(93)**

*எனப் பழமொழியிலும் கூறப்பெற்றுள்ள மனுச் சோழன் வரலாறு,*

**'இறைகாக்கும் வையகம் எல்லாம் அவனை**
**முறைகாக்கும் முட்டாச் செயின்'** **(547)**

*எனவரும் திருக்குறளுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றது. 'வையகத்தையெல்லாம் அரசன் காக்கும்; அவன்றன்னை அவனது செங்கோலே காக்கும்; அதனை முட்டவந்துழியும் முட்டாமற்செலுத்துவனாயின். முட்டாமற் செலுத்தியவாறு மகனை முறைசெய்தான்கண்ணும் தன்கை குறைத்தான்கண்ணும் காண்க' எனப் பரிமேலழகர் தரும் பொருள் விளக்கம் இங்கு நினைக்கத் தகுவதாகும்.*

*முறைவேண்டினோர் யாவரும் தமது குறையினை மணியடிப்பதன் மூலம் எளிதில் தெரிவித்துக் கொள்ளும் பொருட்டு அரண்மனை வாயிலில் ஆராய்ச்சி மணி கட்டப் பெற்றிருத்தல் அக்காலத் தமிழ் வேந்தரது நீதிமுறை வழக்கமாகும். பாண்டியன் நெடுஞ்செழியன் மறை நாவோசையை யல்லது அல்லலுற்று முறை வேண்டினோர் அடிக்கும் இத்தகைய மணிநாவோசையை என்றும் கேட்டதில்லை யென்பது பட,*

**“காதின் மறைநாவோசையல்ல தியாவதும்**
**மணிநாவோசை கேட்டது மிலனே”** **(கட்டுரை - 30-32)**

என மதுரைமா தெய்வம் கண்ணகியை நோக்கிக் கூறுவதாக அமைந்த இத்தொடர், பண்டைத் தமிழ் வேந்தரது அரண்மனை வாயிலில் மணி கட்டப்பெறும் வழக்கத்தினை நன்கு புலப்படுத்துவதாகும். இவ்வாறே தேவர் முதலியோர் தம் குறையினைத் தெரிவித்துக் கொள்ளுதற்கு வாய்ப்பாகச் சிவபெருமான் திருக்கோயில் வாயிலிலும் மணி கட்டப்பெற்றிருந்த தென்பதனை,

**“மூவா வுருவத்து முக்கண் முதல்வமீக் கூரிடும்பை**
**காவாயெனக் கடை தூங்கு மணியைக் கையாலமரர்**
**நாவா யசைத்த வொலியொலி மாறிய தில்லையப்பாற்**
**றீவா யெரிந்து பொடியாய்க் கழிந்த திரிபுரமே”** **(4-113-3)**

எனத் திருநாவுக்கரசர் வெளியிட்டருளிய திறம் இங்கு ஒப்பு நோக்கத் தகுவதாகும்.

வாயிற்கடை மணியின் ஒலி மன்னன் செவியிற் பட்டதன்மையினை,

**‘பழிப்பறை முழக்கோ ஆர்க்கும் பாவத்தின் ஒலியோ வேந்தன்**
**வழித்திரு மைந்தன் ஆவி கொளவரு மறலியூர்திக்**
**கழுத்தணி மணியின் ஆர்ப்போ என்னத்தன் கடைமுன் கேளாத்**
**தெழித்தெழும் ஓசை மன்னன் செவிப்புலம் புக்கபோது’**
**(திருநகரச்-28)**

எனவரும் செய்யுளில் மன்னன் மன நிலைக்கு ஏற்ப ஆசிரியர் கூறும் திறம் உற்றுணரத் தகுவதாகும். ‘என் இதற்கு உற்றது?’ என மன்னன் அமைச்சரை இகழ்ந்து நோக்கிய நிலையில், முதிர்ந்த கேள்வித் தொன்னெறி அமைச்சன் ஆராய்ந்து கூறும் மறுமொழியாக அமைந்தது,

**“வளவநின் புதல்வன் ஆங்கோர் மணிநெடுந் தேர்மேல் ஏறி**
**அளவில்தேர்த் தானைசூழ அரசுலாந் தெருவிற் போங்கால்**
**இளைய ஆன் கன்று தேர்க்கா லிடைப்புகுந் திறந்த தாகத்**
**தளர்வுறும் இத்தாய் வந்த விளைத்ததித் தன்மை யென்றான்”**
**(திருநகரச் -31)**

என்ற செய்யுள். அரசுலாந் தெருவில் அரசகுமரர்களும் அளவில்லாத தேர்ப்படைகளும் புடைசூழ மணிகள் கட்டப் பெற்ற தேர்மேல் உலாப்போந்த அரசகுமாரன் மேற் சிறிதும் குற்றம் இல்லை என்பதனையும், விளைவறியாத பசுவின் இளங்கன்று துள்ளிக் குதித்தோடித் தேர்க்காலில் அகப்பட்டிறந்த

இத்துன்ப நிகழ்ச்சி எதிர்பாராத நிலையில் தன்னியல்பில் நிகழ்ந்த தென்பதனையும் அரசனுக்குக் குறிப்பாக விளங்க வுணர்த்தும் முறையில் இச்செய்யுள் அமைந்துள்ளமை காணலாம்.

மலர் தலையுலகிற்கு உயிரெனச் சிறந்த மன்னன் என் நாட்டில் வாழும் உயிர்க்கெல்லாம் யானே உயிராவேன் எனக் கொண்டு காக்கும் கடமையுணர் வுடையானதலின் 'அவ்வுரை கேட்ட மன்னன் ஆவுறுதுயரம் எய்தி'னான் என்றார். மைந்தன் செய்த குற்றம் தந்தையையும் சாரும் என்றுணர்ந்த மன்னன் தன் மகன் செய்த குற்றத்திற்கு மந்திரிகள் கூறிய வண்ணம் மறையவர்கள் விதித்த விதிப்படி கழுவாய் செய்ய உடன்படாது,

**"இழக்கின்றேன் மைந்தனையென்று எல்லீரும் சொல்லிய இச்**
**சழக்கின்று நான் இசைந்தால் தருமந்தான் சலியாதோ"**

என மறுத்துரைக்கின்றான்.

தன்கீழ் வாழ்வார் குற்றஞ் செய்தால் அக்குற்றத்தை நாடி, யாவரிடத்தும் கண்ணோட்ட மின்றி நடுவு நிலையைப் பொருந்தி, அன்னோர் செய்த குற்றத்திற்குச் சொல்லிய தண்டனையை அமைச்சர் முதலியோருடன் ஆராய்ந்து செய்வதே அரசனது நீதி முறையாகும் என்பது,

**'ஓர்ந்து கண்ணோடா திறைபுரிந் தியார் மாட்டும்**
**தேர்ந்து செய்வஃதே முறை'** (541)

எனவரும் திருக்குறளால் அறிவுறுத்தப் பெற்றது. இத்திருக்குறளுக்குரிய விளக்கவுரை போன்று அமைந்தன,

**"மாநிலங் காவலனாவான் மன்னுயிர் காக்குங்காலைத்**
**தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்**
**ஊனமிகு பகைத்திறத்தாற் கள்வரால் உயிர்தம்மால்**
**ஆனபயம் ஐந்துந்தீர்த் தறங்காப்பான் அல்லனோ'** (36)

**'என்மகன்செய் பாதகத்துக் கிருந்தவங்கள் செய இசைந்தே**
**அன்னியனோர் உயிர்கொன்றால் அவனைக்கொல் வேனானால்**
**தொன்மனுநூற் றொடைமனுவால் துடைப்புண்ட தெனும் வார்த்தை**
**மன்னுலகிற் பெறமொழிந்தீர் மந்திரிகள் வழக்கென்றான்'** (37)

எனவரும் செய்யுட்களாகும். இங்குத் 'தொன் மனு நூல் தொடை' என்றது, இடைக்காலத்தில் 'தோன்றிய ஒரு குலத்துக் கொருநீதி கூறும் மனு மிருதியை விலக்கி, எக்குலத்தார்க்கும் எவ்வுயிர்க்கும் இசைய அறவாழியந்தணன் அருளிய அறநெறியின் வழியமைந்த ஆதிமனு நீதியைச் சுட்டியது.

'மறைமொழிந்த அறம் புரிதல் தொன்று தொடு நெறி' என்ற அமைச்சர்களை நோக்கி, 'இவ்வண்ணம் பழுதுரைத்தீர்' என வெகுண்டு முகம் புலர்ந்த மனுச் சோழன்,

**'அவ்வுரையில் வருநெறிகள் அவைநிற்க, அறநெறியின்**
**செவ்விய உண்மைத்திறம் நீர் சிந்தை செயா துரைக் கின்றீர்' (40)**

எனவும்,

**'திருவாரூர்த் தோற்றமுடையுயிர் கொன்றான் ஆதலினால்**
**துணிபொருள்தான், ஆற்றவுமற்றவற் கொல்லும் அதுவேயாம்'**

எனவும்,

**'இவ்ஆன், மனமழியும் துயரகற்ற மாட்டாதேன் வருந்துமிது**
**தனதுறு பேரிடர் யானும் தாங்குவதே கருமம்' (42)**

எனவும் தெளிந்துரைக்கின்றான். தான் அனுபவிக்கும் மகிழ்ச்சி பிறர் தம்மோடுகூடி அனுபவித்த போது இன்பம் மிகுதலும், துயரம் அனுபவிக்கும் போது பிறரொடு கலந்து நுகரும் நிலையில் அத்துன்பம் குறைதலும் உலகியலிற் கண்ட உண்மையாகும். இவ்வியல்பினை உளத்திற்கொண்டு, 'தனது கன்றையிழந்து வருந்தும் இப்பசு உற்ற பெருந் துன்பத்தை அகற்ற மாட்டாத நிலையில் அத்துயரை யானும் தாங்கி நின்று அதனோடு அனுபவித்துப் பங்கு கொண்டு குறைப்பேன்' என்பது படத் 'தனதுறு பேரிடர் யானும் தாங்குவதே கருமம்' என்கின்றான்.

கொலை முதலிய பெருங்குற்றஞ் செய்தாரைப் பிறர்க்கு எடுத்துக்காட்டாக இருக்கும் நிலையில், அக்குற்றம் நிகழ்ந்த இடத்திலேயே பலருங்காணுமாறு தண்டித்தல் அக்கால நீதி முறையாகும். 'செய்தார்க்குச் செய்தபடியே தண்டம் விதித்தல்' என்னும் தண்ட நூல் விதிப்படி பசுவின் இளங்கன்று தேர்க்காலில் ஊரப்பட்டு இறந்த அந்த இடத்திலேயே தன் மைந்தனையும் தேர்க்காலிலிட்டு ஊர்தல் வேண்டும் என்பான், 'முன் இவனை அவ்வீதி முரண் தேர்க்கால் ஊர்க' என்றான். அரசன் துணிந்ததும் அணைந்ததும் ஊர்ந்ததும் ஆகிய செயல்கள் ஒன்றன் பின் ஒன்றாய் விரைந்து முடிந்தன என்பார், 'அனகன் அரும்பொருள் துணிந்தான், மறுகணைந்தான், தன் மைந்தன் மருமம் தன்தேராழி உற ஊர்ந்தான்' என முற்றுச் சொற்களால் அடுக்கிக் கூறினார் ஆசிரியர்.

"அரும் பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோன்" என்ற சிலப்பதிகாரத் தொடர்ப் பொருளை விரித்துரைக்கும் முறையில் அமைந்தது,

**"ஒரு மைந்தன் தன்குலத்துக் குள்ளானென்பது முணரான்**
**தருமம்தன் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன்**
**மருமம் தன் தேராழியுறவூர்ந்தான் மனுவேந்தன்**
**அருமந்த அரசாட்சி அரிதோமற் றெளிதோதான்" (44)**

*என்ற செய்யுளாகும். பிழையுயிரெய்திற் பெரும் பேரச்சம்' (சிலப்-காட்சிக்-101) ஆதலின், அரசாட்சி எளிதோ என்றார். பிறர் எண்ணுவது போல அத்துணை எளியதன்று; மிகவும் அரிதேயாம் என்பது கருத்து.*

*தண்ணளிவெண்குடை வேந்தன் செயல் கண்ட வீதி விடங்கப் பெருமான் விடைமீது அம்மையப்பராய் எதிர் தோன்றி அருள் செய்தபொழுது 'அந்நிலையே உயிர் பிரிந்த ஆன் கன்றும் அவ்வரசன் மன்னுரிமைத் தனிக்கன்றும் மந்திரியும் உடன் எழுந்த' செய்தியைக் கற்போர் உளம் அமைதியுறும் நிலையில் ஆசிரியர் சுவை பெறக் குறித்துள்ளார். பசுவின் துயரத்தை அகற்ற மாட்டாது வருந்திய மன்னவன் அப்பசுவின் துயர் அகன்ற பிறகே மனமகிழ்வான் ஆதலானும், பசுவின் கன்று உயிர்பெற்றெழாத நிலையில் பசுவின் துயரும் அது காரணமாக மன்னன் மனத் துயரும் நீங்கும் வழியில்லையாதலானும், எல்லாத் துயர்க்கும் காரணமாய் முதற்கண் இறந்தது பசுவின் கன்றேயாதலானும் கன்று உயிர் பெற்றெழுதலை முதற்கண் கூறினார். அரசகுமரனது உயிரைப் போக்குதற்கு அஞ்சியே தன்னுயிர் துறந்தவன் மந்திரியாதலான், அவன் மைந்தனை உயிருடன் கண்டாலல்லது உயிர் தாங்கியிரான், ஆகவே அவன் அரச குமரனை உயிருடன் கண்டு தன் துயரினைப் போக்கி மகிழ்தற்கேற்ற வகையில் மைந்தன் உயிர் பெற்றெழுந்ததனை முற்கூறினார். அரச குமாரன் உயிர் நீத்தது காலத்தாற் பிற்பட்ட நிகழ்ச்சியாயினும், அது மந்திரி உயிர் நீத்ததற்குக் காரணமாய் முன்னின்ற தென்க. ஆன் கன்றும் அரசன் மன்னுரிமைத் தனிக்கன்றும் மந்திரியும் உயிர்பெற்றெழுதலாகிய இந்நிகழ்ச்சிகள் ஒரே நேரத்தில் ஒருசேர நிகழ்ந்தனவாயினும் காரணகாரிய இயைபுபற்றி வரிசைப்படுத்திக் கூறினார்.*

**"மடி சுரந்து பொழி தீம்பால், வரும்கன்று மகிழ்ந்து உண்டு**
**படிநனைய, அரும்பசுவும் பருவரல் நீங்கியது"**

*என்றது, நுண்ணுணர்வுடைய அருமை வாய்ந்த பசு, இறந்த கன்று உயிர்பெற் றெழுந்தமையா லுண்டாகிய பெருமகிழ்ச்சி யையும் தம் கன்றினிடத்தே கொண்ட பேரன்பினையும் இனிது புலப்படுத்துவதாகும்.*

*திருத்தொண்டர் புராணமாகிய இக்காப்பியத்தில் திருநகரச் சிறப்பு உரைக்கும் நிலையில் மனுச்சோழரது வரலாற்றினை ஆசிரியர் விரித்துரைத்தது ஏன்? எனக் கற்போக்கு ஐயம் நிகழ்தல்*

இயல்பேயாகும். காப்பிய ஆசிரியர்கள் தாம் இயற்றும் காப்பியத்தில் காப்பியத் தலைவரது வாழ்க்கையினை வளம்படுத்தும் நிலையில் அமைந்த அவர் நாட்டு அரசியல் நெறிமுறையினை நகரச் சிறப்பினையொட்டி பிரித்துக் கூறுதலை மரபாகக் கொண்டுள்ளார்கள். இம்மரபினைச் சீவகசிந்தாமணி, சூளாமணி, கம்பராமாயணம் போன்ற செந்தமிழ்க் காப்பியங்களிற் காணலாம். அறவாழியந்தணனாகிய இறைவனது திருவருள் வழிப்பட்ட அறநெறியினையே அரசியல் நெறியினும் மேலாகத் தமது வாழ்க்கைக்குரிய நல்லற நெறியாகக் கொண்டு வாழ்ந்தவர்கள் திருத்தொண்டத் தொகையிற் போற்றப் பெற்ற சிவனடியார்கள் ஆவர். 'அறக்கண் என்னத்தகும் அடிகள் ஆரூரரை' (7-37-2) நீதியுருவினராகக் கொண்டு எவ்வுயிர்க்கும் அருளுடையராய், அறநெறி வழுவாத திருவாரூரைத் தலைநகராகக்கொண்டு ஆட்சி புரிந்தவர் மனுச் சோழராதலின், இறைவனது திருவருளின்வழி நிகழும் அரசியல் நெறிமுறைக்கு வரம்பாக மனுச் சோழரது சரிதம் திருத்தொண்டர் வரலாறு கூறும் இப்புராணத்தின் தொடக்கத்தே திருநகரச் சிறப்பில் விரித்துரைக்கப் பெறுவதாயிற்று. உலக முதல்வனாகிய இறைவன் திறத்தும் அவன்பால் மாறா அன்பினராகிய அடியார் திறத்தும் குற்றம் புரிந்தாரை ஒறுத்தலாகிய தண்டனை, இப்பிறப்பில் அவர்தம் பாவத்தைப் போக்கி மறுமையில் அவர்களை நற்கதியடைவிப்பதென்பது, ஞாலமறியப் பிழை புரிந்த எச்சதத்தன் என்னும் மறையவன் சண்டேசரது கோலமழுவால் எற்றுண்டு குற்றம் நீங்கிச் சுற்றமுடன் சிவலோகம் எய்தப் பெற்றான் என்றும், இயற்பகையாருடன் போர் செய்திறந்த சுற்றத்தார் 'வானிடையின்பம் பெற்றார்' என்றும் இக் காப்பியத்தில் ஆசிரியர் கூறுதலால் இனிது புலனாகும். மற்றைக் காப்பியங்களிலெல்லாம் உலகியலாட்சிக்கு இன்றியமையாத அரசியலைக்கூறி அதனையடியொற்றிய நிலையில் காப்பியச் செய்திகள் விரித்துரைக்கப்படுவன. திருத்தொண்டர் புராணமாகிய இக்காப்பியத்தில், உலகியலாட்சிக்கெல்லாம் உறு துணையாய் நின்று என்றும் மாறா இயல்பினதாகிய திருவருளின் வழிப்பட்ட அருளியலாட்சியை முற்கூறி, அதன்வழி நிகழும் அடியார் செய்கைகள் விரித்துரைக்கப்பெறுவன.

மனுவேந்தனுக்கு ஆரூரிறைவன் வெளிப்பட்டருள் புரிந்த இவ்வரலாற்றை ஆசிரியர் முதற்கண் கூறியது இறைவன் தன்பால் அன்புடைய அடியார்களுக்கு என்றும் எளிவந்தருளும் பெருமையாகிய பெருங்கருணைத் திறத்தினை உலக மக்கள் யாவரும் உணர்ந்து போற்றுதற் பொருட்டேயாகும். இந்நுட்பத்தினை,

**“பொன் தயங்கு மதிலாரூர்ப் பூங்கோயில் அமர்ந்தபிரான்
வென்றிமனு வேந்தனுக்கு வீதியிலே யருள்கொடுத்துச்
சென்றருளும் பெருங்கருணைத் திறங்கண்டு தன்னடியார்க்
கென்றுமெளிவரும் பெருமை ஏழுலகும் எடுத்தேத்தும்”**

எனவரும் செய்யுளில் ஆசிரியர் புலப்படுத்தியுள்ளமை கூர்ந்துணரத் தகுவதாகும்.

மக்கள் வாழும் ஊருக்குச் செல்வப் பொலிவினை வழங்குவது அங்குள்ள திருக்கோயிலாகும். ‘திருக்கோயிலில்லாத திருவிலூரும்’ எனவரும் அப்பர் அருள்மொழி திருக்கோயிலைத் தன்னகத்தே கொண்டுள்ள ஊர்களே திருவுடை ஊர்களாம் என்பதனை எதிர்மறை முகத்தால் அறிவுறுத்துவதாகும். திருவாரூர் நகரின் சிறப்புணர்த்தப் போந்த சேக்கிழாரடிகள், மலர்தலையுலகிற்கு உயிரெனச் சிறந்த மனுவேந்தனது அரசியல் மாண்பினை விரித்துரைத்து, அவனது வென்றிச் சிறப்புக்கு உறுதுணையாக அகத்தும் புறத்தும் அருள் வழங்கிய அறவனார் எழுந்தருளிய பூங்கோயில் திருவாரூர் நகரத்துக்கு அகமலராகத் திகழும் சிறப்பினை முடிபொருளாக அமைத்துக் கூறியுள்ளமை கூர்ந்து சிந்திக்கத் தகுவதாகும்.

**“அறவனாரடி சென்று சேர்வதற் கியாது மையுறவில்லையே”**

என்ற தொடரில் இறைவனை ‘அறவனார்’ என்ற பெயரால் நம்பியாரூரர் போற்றுதலும், ‘அறவாழியந்தணன்’ எனத் திருவள்ளுவர் குறித்துள்ளமையும் இச்சரிதத்தின் கருப் பொருளாய் அமைந்திருத்தல் இக்காப்பியத்தைப் பயில்வோர் உளங்கொளத் தக்க சிறப்பினதாகும்.

## திருக்கூட்டச் சிறப்பு

திருவாரூர்ப் பூங்கோயிலின் முன்றிலில் உள்ள தேவாசிரிய மண்டபத்திலே எழுந்தருளியிருக்கும் அடியார் திருக்கூட்டத்தின் சிறப்பினை விளக்கும் பகுதியாதலின் இது, திருக்கூட்டச் சிறப்பு என்னும் பெயர்த் தாயிற்று. பதினொரு செய்யுட்களால் இயன்றது இப்பகுதி.

திருவாரூர்ப் பூங்கோயிலின் திருமதில் வாயிலையடுத்துத் திருக்கோயிலின் முன்றிலிலே நான்முகன் இந்திரன் திருமால் முதலிய தேவர்கள் ஓவாது நிறைந்துறையும் சிறப்பினது தேவாசிரியன் என்னும் திருமண்டபமாகும். துன்பத்தைத் தீர்க்க வல்ல அருளாளர்களாகிய சிவனடியார்களின் திருமேனியின்மேல் நிரம்பிய திருநீற்றின் ஒளியாலும் உள்ளத்தூய்மையாலும் அன்புடன் ஓதும் திருவைந்தெழுத்தின் ஓசை பொலிதலாலும் பரவிய ஆயிரம் பாற்கடல்கள் ஒன்று சேர்ந்தாற் போன்று

விளங்குவது அத்திருமண்டபமாகும். எல்லா உலகங்களுக்கும் முதல்வராகிய இறைவரது திருவடிகளைத் தொழுது இங்கு எழுந்தருளியிருக்கும் திருத்தொண்டர்களே எல்லாவுலகங் களையும் ஆளுதற்குரியவர்கள் என்றுணர்ந்து இவர்களை இறைஞ்சிப் போற்ற எல்லாவுலகங்களிலுள்ளாரும் இங்கு வந்து நிறைதலால் இத்திருமண்டபத்தின் இடப்பரப்பு எல்லாவுலகங் களையும் ஒத்து விரிந்து விளங்குவதாகும். இவ்வாறு இதன் முதலிலுள்ள நான்கு செய்யுட்களால் தேவாசிரிய மண்டபத்தின் சிறப்பினை ஆசிரியர் விளக்குகின்றார். இதன்கண் 5 முதல் 10 வரையுள்ள ஆறு செய்யுட்கள் இங்கு எழுந்தருளிய திருத் தொண்டர்களின் இயல்பினைத் தொகுத்துரைக்கும் முறையி லமைந்துள்ளன. 11-ஆம் செய்யுள் அடுத்து வரும் தடுத்தாட் கொண்ட புராணத்திற்குத் தோற்றுவாயாக அமைந்துளது.

தேவாசிரிய மண்டபத்தில் எழுந்தருளியிருக்கும் அடியார்கள், அம்மையப்பராகிய இறைவரால் விரும்பி ஆட்கொள்ளப் பெற்றவர்கள்; தம்திருமேனியில் மயிர் சிலிர்த்தலும் விதிர் விதிர்ப்பும் தோன்ற, இறைவன் பேரன்பு மிக்குத் தோன்றும் சிந்தையினார்; தம்மால் இயன்ற கைத்திருத் தொண்டு செய்தலையே தமது கடமையாகக் கொண்டவர்கள்; இத்தன்மையராகிய அடியார்கள் எண்ணிலாதவராக உள்ளார்கள். குற்றமில்லாத உருத்திராக்க மணிகள் விளங்கும் தம் திருமேனியின் மேல் பூசப்பெற்று விளங்கும் தூயதிருநீற்றினைப் போலவே உள்ளத்திலும் தூய்மையுடையவர்கள்; தமது ஒளியினால் எல்லாத் திசைகளையும் இருள் நீங்கி விளக்கமுறச் செய்தவர்கள்; சொல்லினால் அளவிட்டுரைக்க வொண்ணாத பெருமையுடன் திகழ்பவர்கள்; ஐம்பெரும் பூதங்களும் தத்தம் நிலையிற் பிறழ்ந்தாலும் தாம் சிறிதும் மனங்கலங்காது மாதொருபாகராகிய இறைவரது செந்தாமரை மலர் போலும் திருவடிகளை மறவாத இயல்புடையவர்கள்; இறைவனது பொருள்சேர் புகழ்த்திறத்தினையே காதலாகிக் கசிந்து ஓதும் உறுதியுடையராய் நன்னெறியில் நிலைபெற நிற்பவர்கள்; குற்றமில்லாத குணங்களின் குன்றெனத்திகழ்பவர்கள்; ஒருகாற் கெட்டொழிதலும் ஒருகால் உளதாதலும் இல்லாத திருவாகிய நிறையுடைய பெருஞ்செல்வத்தை நிலையாகப் பெற்றவர்கள்; மட்பாண்டத்தின் சிதைவாகிய இழிந்த ஓட்டினையும் உலகமக்களால் மதிக்கப்பெறும் செம் பொன்னையும் ஒரு தன்மையவாக நோக்கும் உள்ளமுடையவர்கள்; இறைவனுடன் பிரிவற ஒன்றுதற்குக் காரணமாகிய அன்பின் திறத்தாலே அம்முதல்வனை ஆண்டானாகவும் தம்மை அடிமையாகவும் கருதிக் கைகளாற்றொழுது போற்றும் தொண்டின் திறத்தையே

என்றும் விரும்பி வேண்டுவதன்றி அம்முதல்வனோடு பிரிவற ஒன்றிப் பெறும் வீடுபேற்று இன்பத்தையும் வேண்டாத வீறுபெற்று விளங்குபவர்கள். அவர்கள் தம் மெய்க்கணியாக விரும்பிப் பூணும் ஆரம் உருத்திராக்க மாலையே. உடுப்பது கந்தை உடை. தாம் செய்தற்குரிய கடமைப்பாரமாக மேற்கொண் டிருப்பது இறைவன் திருவடிப் பணியன்றி வேறொன்றும் இல்லாதவர்கள். இத்தகைய பெருமக்களது வீரம் என்னால் அளவிட்டுச் சொல்லுந்தன்மையதோ? தாண்டவப் பெருமான் தனித்தொண்டராகிய இவர்கள் கண்டார் விருப்புறும் நிலையில் தாம் தாம் விரும்பிய கோலங்களைக் கொண்டவர்கள்; நெடிதாய்த் தொன்று தொட்டு உளதாகி வரும் புகழை உடையவர்கள். இப்பெருமக்களின் திருத்தொண்டின் நிலைமையை இங்கு வாழ்த்தப் புக்கேனாகிய எளியேன் எங்ஙனம் அறிந்து துதிக்கவல்லேன்?" என அடியார் திருக்கூட்டத்தின் சிறப்பினை விரித்துரைத்த ஆசிரியர், "இத்தகைய பெருந்தவச் செல்வர்க ளாகிய அடியார் திருக்கூட்டத்தினரை முடிவில்லாத புகழினையுடைய ஆலால சுந்தரன் என்னும் பெருந்தகை இவ்வுலகிலே வந்து சுந்தரத் திருத்தொண்டத் தொகைத் தமிழ் பாடிய வரலாற்றை இனிச் சொல்லத் தொடங்குவோம்' என அடுத்துவரும் தடுத்தாட்கொண்ட புராணத்திற்குத் தோற்றுவாய் செய்து கொள்கின்றார்.

'திருக்கூட்டச் சிறப்பு' என்னும் இப்பகுதி, திருக்குறளில் உள்ள 'நீத்தார் பெருமை" என்னும் அதிகாரத்தை அடியொற்றி, இத் திருத்தொண்டர் புராணத்திற் போற்றப் பெறும் அளவிலாத பெருமையராகிய அளவிலா அடியார்களின் பெருமையினைத் தொகுத்து விளக்கும் முறையில் அமைந்ததாகும். திருத்தொண்டர் களின் பெருமையினை அவர் தம் திருக்கூட்டத்துடன் இயைத்துப் பொதுவகையாற் கூறும் பகுதியில் சிவனடியார் இயல்புகளாகத் தொகுத்துரைக்கப்பட்டவை, இதன் பின்னர்க் கூறப்படும் தனியடியார் வரலாறுகளில் அவரவர்பால் அமைந்த சிறப்பியல்புகளாகத் தனித்தனியே வகுத்து விளக்கப் பெற்றுள்ளன. இக்காப்பியத்தில் பின்னர் விரித்துரைக்கப் பெறும் அடியார்களின் வரலாற்றுப் பண்புகளின் தொகுப்பே திருக்கூட்டச் சிறப்பு என்னும் இப்பகுதியெனக் கொள்ளுதல் பொருந்தும். இப்பகுதியிற் கூறப்பெறும் திருத்தொண்டர் இயல்புகள் அப்பெருமக்கள் திருக்கூட்டமாகக் கூடியுள்ள நிலையில் அவர்தம் சமூகத் தோற்றத்தைப் பொது வகையாற் புலப்படுத்தும் முறையிலமைந்த பொதுநிலைக் காட்சியாகும். பின்வரும் சரிதங்களில் தனித்தனியே வகுத்துரைக்கப் பெறும் அடியார் இயல்புகள், அந்த அந்த அடியார்களின் தனிநிலைத் தோற்றத்தைத் தெளிவுபடுத்திக் காட்டும் முறையில் அமைந்த

தனிநிலைக் காட்சிகளாகும். பொதுவும் சிறப்புமாகிய இவ்விரு வகைக் காட்சிகளையும் முறையே அடியார்களின் சமூக தரிசனம். தனித்தரிசனம் எனப் பெயரிட்டு வழங்குவதும் உண்டு.

இறைவனருள் வாய்க்கப் பெற்ற திருத்தொண்டர்களே எல்லாவுலகங்களையும் இடர்நீக்கி ஆளுதற்குரிய தகுதி வாய்ந்தவர்கள் என்பதனை,

**"அகில காரணர்தாள் பணிவார்கள்தாம்**
**அகில லோகமும் ஆளற்குரியர்"**

எனவரும் தொடரில் சேக்கிழாரடிகள் அறிவுறுத்துகின்றார். இவ்வறிவுரை.

**"நீலமாமிடற், றால வாயிலான்**
**பாலதாயினார், ஞால மாள்வரே"**

என்னும் ஆளுடைய பிள்ளையார் வாய்மொழியைத் தழுவி அமைந்திருத்தல் அறியத்தகுவதாகும்.

இத்திருத்தொண்டர்கள், இறைவர் தாமே எளிவந்து விரும்பி ஆட்கொள்ளப்பெற்ற சிறப்புடையவர்கள் என்பார், 'அத்தர் வேண்டிமுன் ஆண்டவர்' என்றார். இத்தொடர், வெண்ணெய் நல்லூர் இறைவர் நம்பியாரூரரைத் தடுத்தாட் கொண்டருளிய வரலாற்றினை நினைவு படுத்துவதாகும். 'வேண்டி என்னைப் பணி கொண்டாய் (குழைத்த-6) எனவும், 'தானேவந்தெம்மைத் தலை யளித்திதாட் கொண்டருளும் வான் வார்கழல்' (திருவெம்பாவை-6) எனவும் வரும் திருவாச்கத் தொடர்கள் இங்கு நினைக்கத்தர்கன 'அன்பினால் மெய்த்தழைந்து விருப்புறு சிந்தையார், என்பது.

**"தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனியும் தாழ் வடமும்**
**நாயகன் சேவடி தைவரு சிந்தையும் நைந்துருகிப்**
**பாய்வது போல் அன்புநீர் பொழிகண்ணும் பதிகச் செஞ்சொல்**
**மேய செவ்வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே"**
**(பெரிய - திருநாவுக்கரசு-140)**

என்றாங்கு இக்காப்பியத்திற் கூறப்படும் அடியார்களது அன்பின் திறத்தைப் புலப்படுத்துவதாகும்.

'கைத்திருத்தொண்டு செய் கடப்பாட்டினார்' என்றது, "என்கடன் பணிசெய்து கிடப்பதே" (5-19-9) எனவும்,

**"கண்டெந்தை யென்றிறைஞ்சிக் கைப்பணியான் செய்யேனேல்**
**அண்டம் பெறினும் அது வேண்டேன்"**

**(அற்புதத்திரு-72)**

எனவும் திருத்தொண்டில் உறைத்து நிற்கும் உள்ள முடையராய், “ஐயனார்க்கு ஆளாகி அன்புமிக்கு அகங்குழைந்து மெய்யரும்பி அடிகள் பாதம் கையினாற் றொழும் அடியார்” களாகிய திருத்தொண்டர்களைக் குறித்தது.

“மாசிலாத மணிதிகழ், மேனிமேல் பூசு நீறுபோல் உள்ளும் புனிதர்கள்” என்றது, “சுத்தமதாவது நீறு’ எனப்பெற்ற தூய வெண்ணீறு துதைந்த பொன் மேனியராய்க் காம வெகுளி மயக்கங்களாகிய மனமாசு நீங்கி நாயகன் சேவடி தைவரும் தூய சிந்தையினராகிய அடியார்களைக் குறித்தது. ‘தேசினால் எத்திசையும் விளக்கினார் என்றது, தாம் இவ்வுலகில் உள்ள காலத்திலேயே எத்திசைகளையும் விளக்கும் ஒளிமிக்க திருமேனியுடையவர்கள் என்றவாறு, திருக்காளத்தி மலையில் இறைவனை அன்பினால் வழிபட்டு அல்லுறங்காது நிற்கும் திண்ணனாரது திருமேனியொளியினால் இரவின் இருள் இல்லையாயிற்று என்பதனை,

**“ஐந்துமா றடக்கியுள்ளார் அரும்பெருஞ் சோதியாலும்**
**எந்தையார் திருக்காளத்தி மலையினில் இரவொன் றில்லை”**
**(பெரிய-கண்ணப்பர்-13)**

எனவரும் தொடரில் ஆசிரியர் புலப்படுத்தியுள்ளமை இங்கு நோக்கத்தகுவதாகும்.

அளவிலாத பெருமையராகிய அளவிலா அடியார்களது பெருமை சொல்லால் அளவிட்டுரைக்குந் தரத்ததன்று என்பார், ‘பேச ஒன்னாப் பெருமை பிறங்கினார்’ என்றார்.

**“துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்**
**திறந்தாறை யெண்ணிக் கொண் டற்று” (திருக்குறள்-22)**

என்பது இங்கு ஒப்பு நோக்குதற்குரியதாகும்.

ஐம்புலன்களை யடக்கிய செம்புலச் செல்வர்களாகிய இத்திருத் தொண்டர்கள் இவ்வுலகில் ஐம்பெரும் பூதங்கள் தம்நிலையினின்று மாறுபடும் அல்லற்காலத்தும் நிலைகலங்காத உள்ளத்திண்மையுடையராய்ச் சித்தத்தைச் சிவன்பாலே வைத்த மெய்த்தவச் செல்வர்கள் என்பது,

**“பூதம் ஐந்தும் நிலையிற்காலங்கினும்**
**மாதொர் பாகர் மலர்த்தாள் மறப்பிலார்”**

என்பதனால் உணர்த்தப்பட்டது.

**“வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால் வரையுந்**
**தானந் துளங்கித் தலைதடு மாறிலென் தண்கடலும்**

**மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலை நஞ்சுண்**
**டூனமொன் றில்லா ஒருவனுக் காட்பட்ட உத்தமர்க்கே”**
**(4-113-8)**

*என்றாங்கு வரும் அப்பர் அருள் மொழியாலும்,*

*‘கால நிலைமையால் உங்கள் கருத்தில் வாட்டமுறீர்’ என வீழிமிழலையிறைவர் ஆளுடைய பிள்ளையார்க்கும் ஆளுடைய அரசர்க்கும் கனவில் தோன்றியருளியதாகப் பின்னர்க் கூறப்படும் வரலாற்றுக் குறிப்பினாலும் இவ்வியல்பு இனிது புலனாதல் காணலாம்.*

*எத்தகைய இடர்கள் அடுக்கிவரினும் இறைவனது திருப்பெயரை இடைவிடாது ஓதும் பெருங்காதலாகிய உறுதிப்பாட்டில் தளராது நிற்பவர்கள் திருத்தொண்டர்கள் என்பது தோன்ற, ‘ஓதுகாத லுறைப் பின் நெறிநின்றார்’ என்றார். இத்தொடர்,*

**“கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்**
**நற்றுணையாவது நமச்சிவாயவே”** **(4-11-1)**

*என இறைவனைப் பாடிப் போற்றி, ‘ஒன்றிய மன்னவன் சூட்சி திருத்தொண்டின் உறைப்பாலே வென்றவ’ ராகிய அப்பரடிகளது உள்ளத்துறுதியினைப் புலப்படுத்தும் முறையில் அமைந்திருத்தல் காணலாம், ‘கோதிலாத குணப்பெருங் குன்றனார்’ என்றது, “குணமென்னுங் குன்றேறிநின்றார்” (திருக்குறள்-29) எனவரும் தெய்வப் புலவர் வாய்மொழியைப் பொன்னேபோற் போற்றியதாகும்.*

*‘கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்’ என்றது, சிவமே பெறுந்திருவினர் என்பதாம். ‘ஓடும் செம் பொனும் ஒக்கவே நோக்குவார்’ எனவரும் இத்தொடர்ப் பொருளை,*

**“புல்லோடும் கல்லோடும் பொன்னோடும் மணியோடும்**
**சொல்லோடும் வேறுபாடிலா நிலைமை துணிந்திருந்த நல்லோர்”**
**(திருநாவுக்கரசர் புராணம்-418)**

*எனவரும் பாடலில் ஆசிரியர் விரித்து விளக்கியுள்ளார்.*

**“கூடும் அன்பினிற் கும்பிடலேயன்றி**
**வீடும் வேண்டா விறலின் விளங்கினார்”**

*என்றது,*

**“கண்டெடந்தை யென்றிறைஞ்சிக் கைப்பணியான் செய்யனேல்**
**அண்டம் பெறினும் அதுவேண்டேன்”** **(அற்புத-72)**

*எனவரும் அம்மையார் வாய்மொழியை அடியொற்றி யமைந்ததையும், இக்கருத்து,*

**'தங்குபிறப்பே வீட்டினுக்கு மேலாம் பெருமை சாதித்தார்**
**(பெரிய-திருநாவுக்-312)**

எனப் பின்னர் விளக்கப் பெற்றுள்ளமையும் இங்கு மனங்கொளத் தக்கனவாகும்.

**"ஆரங்கண்டிகை ஆடையுங் கந்தையே**
**பாரம் ஈசன் பணியல தொன்றிலார்**
**ஈர அன்பினர் யாதுங் குறைவிலார்**
**வீரம் என்னால் விளம்புந்தகையதோ'**

என அடியார் இயல்பாக இங்குக் கூறியதனை,

**'சிந்தையிடை யறாஅன்பும் திருமேனி தனிலசைவும்**
**கந்தைமிகையாங் கருத்தும் கையுழவாரப் படையும்**
**வந்திழி கண்ணீர்மழையும் வடிவிற்பொலி திருநீறும்**
**அந்தமிலாத் திருவேடத் தரசுமெதிர் வந்தணைய'**
**(பெரிய-சம்பந்-270)**

எனத் திருநாவுக்கரசரது செயல் முறையில் வைத்து ஆசிரியர் விளக்கியுள்ளமை அறியத் தகுவதாகும்.

**'ஒன்றினாற் குறையுடையோ மல்லோமன்றே' (6-98-5)**

என அப்பரடிகள் தம்மையொத்த அடியார் இயல்பாகக் கூறியதனை யுளங்கொண்டு 'யாதுங் குறைவில்லார்' என்ற தொடர் அமைந்திருத்தல் காணலாம்.

ஈண்டு வீரம் என்பது, தமது கொள்கைக்கும் குறிக் கோளுக்கும் மாறாக எத்தகைய இடையூறுகள் வந்தாலும் அஞ்சாது அவற்றை எதிர்த்து நின்று வெற்றி பெறுதற்குரிய மனத்திண்மையாகும். இத்தகைய திண்மை,

**'அஞ்சுவதியாதொன்றுமில்லை அஞ்சவருவதுமில்லை'**

என அப்பரடிகள் வரலாற்றில் இடம் பெற்றுள்ளமை காணலாம். சிவகாமியாண்டாரது பூக்குடலையைப் பறித்துச் சிதறியது அரசரது பட்டத்து யானையென்றறிந்தும் அதனை மழுவால் எறிந்து வீழ்த்திய எறிபத்த நாயனார் செயலும், திருக்கோயிற் பூமண்டபத்து மலரை யெடுத்து மோந்தவள் பல்லவ வேந்தனுடைய பட்டத்தரசி யென்றறிந்திருந்தும் அவளது மூக்கினையரிந்த செருத்துணை நாயனார் செய்கையும், இவ்வாறே தம் உயிரைப் பொருட்படுத்தாது செயற்கரியசெயல்களைச் செய்து நிறைவேற்றிய ஏனைநாயன்மார்கள் திருப்பணிகளும் அடியார்களின் வீரத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டுக்களாகும். "அழியாவீரத்தார் எல்லார்க்கும் தனித்தனி வேறடியேன் என்று, ஆர்வத்தால் திருத்தொண்டத் தொகைப்பதிகம் அருள் செய்தார்"

எனப் பின்னரும் ஆசிரியர் இவ்வீரவுணர்வினைச் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளமை கூர்ந்துணரத் தகுவதாகும்.

**"வேண்டுமாறு விருப்புறு வேடத்தர்**
**தாணடவப் பெருமான் தனித்தொண்டர்கள்'**

என்பது அடியார் திருவேடமானது காண்பாருள்ளத்தில் விருப்பினை விளைக்கவல்லதென்பதனைப் புலப்படுத்துவதாகும்.

**"கண்டகவுணியக்கன்றும் கருத்திற்பரவும் மெய்க்காதற்**
**றொண்டர் திருவேடம் நேரேதோனறிய தென்னத்'**

தொழுதார் எனத் திருவேடத்தின் சிறப்பினை ஆசிரியர் பின்னர் விளக்கியுள்ளமை காணலாம்.

தொண்டர்சீர் பரவுவாராகிய சேக்கிழார் 'இந்த மாதவர் கூட்டத்தை' எனத் தம் நூல் நுதல் பொருளாகிய திருத்தொண்டர் திருக் கூட்டத்தின் பெருமையினையும், 'எம்பிரான் அந்தமில் புகழ் ஆலாலசுந்தரன்' என 'இக்காப்பியத்திற்கு மூலமான திருத் தொண்டத்தொகையினை யருளிய ஆசிரியரும் இக்காப்பியத் தலைவரும் ஆகிய நம்பியாரூரரது பெருமையினையும்' 'சுந்தரத் திருத்தொண்டத் தொகைத் தமிழ்' என ஆரூரர் அருளிய திருப்பதிகத்தின் பெருமையினையும், 'வந்து பாடிய வண்ணம் உரை செய்வாம்' என இத்திருப்பதிகம் தோன்றிய வரலாற்றினையும் குறித்து அடுத்து வரும் பகுதிக்குத் தோற்றுவாய் செய்து கொள்கின்றார்.

## தடுத்தாட்கொண்ட புராணம்

திருவெண்ணெய் நல்லூர் அருட்டுறைத் திருக்கோயிலில் எழுந்தருளிய இறைவர், அற்புதப்பழ ஆவணங் காட்டி நம்பியாரூரரைத் தடுத்தாட் கொண்டருளிய செய்தியை விரித்துரைக்கும் பகுதியாதலின் இது தடுத்தாட்கொண்ட புராணம் என்னும் பெயர்த்தாயிற்று. நம்பியாரூரர் திருக்கயிலாயத்தில் இறைவனுக்கு அணுக்கத் தொண்டரான ஆலால சுந்தரராய் விளங்கிய முன்னைய நிலையில் நிகழ்ந்த வரலாறு திருமலைச் சிறப்பிற் கூறப்பட்டது. கயிலாயத்திற் கமலினி அனிந்திதை என்னும் மாதர் மேல் மனம் வைத்த ஆலால சுந்தரர், இறைவன் பணித்தவண்ணம் தென் புவிமீது திருமுனைப்பாடி நாட்டின் தலைநகராகிய திருநாவலூரிலே மாதொருபாகனார்க்கு வழிவழியடிமை செய்யும் வேதியர் குலத்திலே மேம்படு சடையனாருக்கும் ஏதமில் கற்பின் மிக்க மனைவியார் இசைஞானியார்க்கும் மகவாகத் தோன்றி, இறைவனால் தடுத்தாட்கொள்ளப்பெற்று அருட்டுறை யீசனைப் பித்தாபிறை சூடீ எனப் பெரிதாம் திருப்பதிகத்தாற் பாடிப்

போற்றித் திருத்துறையூர் திருவதிகை, தில்லைச் சிற்றம்பலம் முதலிய திருத்தலங்களை இறைஞ்சிப்பாடித் திருவாரூரை யடைந்து தம்பிரான் தோழராய், நற்பெரும் பான்மை கூட்டக் கமலினியாராகிய நங்கை பரவையாரைக் கண்டு காதல் கொண்டு திருமணம் புணர்ந்து ஆரூரிறைவர் அருளால் அடியார் புகழ்பரவும் திருத்தொண்டத்தொகைத் திருப்பதிகத்தினைத் திருவாய் மலர்ந்தருளியது வரையுள்ள செய்திகள். இத் தடுத்தாட் கொண்ட புராணத்தில் விரித்துரைக்கப் பெறுகின்றன.

இதன்பின் தில்லை வாழந்தணர் முதலாகத் திருநீலகண்டப் பெரும்பாணர் ஈறாகத் திருத்தொண்டத் தொகையிற் போற்றப்பெற்றுள்ள அடியார்களின் வரலாறுகள், தில்லை வாழந்தணர் சருக்கம் முதலாக மன்னிய சீர்ச்சருக்கம் ஈறாகப் பதினொரு சருக்கங்களில் முறையே விரித்துரைக்கப் பெறுகின்றன. பரவையார் கேள்வராகிய நம்பியாரூரர், திருத்தொண்டத் தொகை யருளிய பின் திருவாரூரினின்றும் புறப்பட்டுப் பல தலங்களைப் பண்பொருந்திய செந்தமிழ்ப் பாமாலைகளாற் பாடிப் போற்றித் திருவொற்றியூரையடைந்து அனிந்திதையாராகிய சங்கிலியாரை இறைவனருளாற் கண்ணுற்றுக் காதல்கொண்டு மணந்து அவருடன் பல நாள் இன்புற்று மகிழ்பவர், அவரைப் பிரிந்து திருவாரூரை யடைந்து பரவையாரது புலவியைத் தீர்த்தல் வேண்டி நள்ளிரவிலே ஆரூரிறைவரை இருமுறை தூதாக அனுப்பி, அது காரணமாக ஏயர்கோன் கலிக்காம நாயனார் தம்மீது கொண்ட வெகுளியை இறைவனருளால் தணிவித்து, அவரது அரிய நண்பினைப்பெற்று மகிழ்ந்தது வரையுள்ள செய்திகள் ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணத்தில் இடம்பெற்றுள்ளன. பின்பு நம்பியாரூரர், திருவாரூரில் தம்மை அன்புடன் காண வந்த கழறிற்றறிவார் நாயனாரது நட்புபெற்றுச் சேரமான் தோழராய், அவருடன் சோழ நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் உள்ள பல தலங்களை வணங்கிப் பாடிச் சேர நாட்டின் தலைநகராகிய கொடுங் கோளூரை யடைந்து சேரமான் பெருமாளால் உபசரிக்கப்பெற்று மீண்டும் திருவாரூருக்குத் திரும்பியது வரையுள்ள செய்திகள் கழறிற்றறிவார் நாயனார் புராணத்தில் விரித்துரைக்கப் பெற்றன.

திருவாரூரிற் பரவையாருடன் கூடி வாழ்ந்து புற்றிடங்கொண்ட பெருமானைப் போற்றியிருந்த நம்பியாரூரர், தம் அன்புடைத் தோழராகிய சேரமான் பெருமானைக் காண விரும்பிப் புறப்பட்டுக் கொங்குநாட்டை யடைந்து திருப்புக் கொளியூர் அவிநாசி மடுவில் முதலையால் விழுங்கப்பட்ட அந்தணச் சிறுவனை மீட்டருளிச் சேரமான் பெருமாள் உவந்து வரவேற்கக் கொடுங்கோளூரை யடைந்து திருவஞ்சைக்களத்

திருக்கோயிலில் எழுந்தருளிய பெருமான் யிறைஞ்சித் தமது பாசத் தொடர்பினை நீக்கியருளும் படி திருப்பதிகம் பாடி வேண்டியபொழுது, கயிலைப்பெருமான் வெள்ளையானையை அனுப்பியருள அதன் மீது அமர்ந்து களையாவுடலோடு சேரமான் பெருமாள் குதிரைமீதேறித் தம்மைத் தொடர்ந்து உடன் வரத் திருக்கயிலாயத்தை யடைந்து அம்மையப்பரை இறைஞ்சிப் போற்றித் தமக்குரிய அணுக்கத் திருத்தொண்டில் அமர்ந்தது வரையுள்ள செய்திகள், இக்காப்பியத்தின் இறுதியிலுள்ள வெள்ளானைச் சருக்கத்தில் விரித்துக் கூறப்பெற்றன. ஆகவே திருத்தொண்டர் புராணமாகிய இக்காப்பியத்தில் முதலிலும் நடுவிலும் முடிவிலும் இக்காப்பியத் தலைவராகிய நம்பியாரூரரது வரலாறு இடையீடின்றித் தொடர்ந்து அமைய, அவர் அருளிய திருத்தொண்டத் தொகையிற் போற்றப் பெற்ற தில்லைவாழ் அந்தணர் முதல் திருநீலகண்டப் பெரும்பாணர் ஈறாகவுள்ள திருத்தொண்டர்களின் வரலாறுகள் தொடர்ந்து கூறப் பெற்றுள்ளமை, இக்காப்பியத்திற் போற்றப்பெறும் தன்னேரில்லாத் தலைவர் நம்பியாரூரரே என்னும் உண்மையினை நன்கு புலப்படுத்துதல் காணலாம்.

திருத்தொண்டர் புராணக் காப்பியத்தின் தலைவராகிய சுந்தரர் வரலாறும், இவரால் திருத்தொண்டத் தொகையிற் போற்றப்பெற்றுள்ள திருமுறையாசிரியர்களாகிய திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், திருமூலர், காரைக்காலம்மையார் ஐயடிகள் காடவர்கோன் நாயனார், சேரமான் பெருமாள் நாயனார் ஆகிய அடியார்களின் வரலாறுகளும் இந்நூலாசிரிய ராகிய அருண்மொழித் தேவர் வாக்கினை அடியொற்றி முன்னர் விரிவாக ஆராய்ந்து விளக்கப்பெற்றுள்ளன. இனி, தில்லைவாழந்தணர் முதல் உள்ள ஏனைய அடியார்களின் வரலாற்றுக் குறிப்புக்கள் முறையே இங்குச் சுருக்கமாகத் தரப்பெறும்.

## தில்லைவாழந்தணர்

அருமறைகளை நன்குணர்ந்து தில்லைப்பதியில் வாழும் அந்தணர்களாகிய இவர்கள் தில்லைச் சிற்றம்பலத்தில் ஆடல் புரிந்தருளும் கூத்தப்பெருமானுக்கு அகம்படித் தொண்டு புரியும் திருக்கூட்டத்தினராவர். திருவாரூர்ப் பெருமான் நம்பியாரூரர் திருத்தொண்டத் தொகையினைப்பாடுதற்கு அடியெடுத்துக் கொடுத்தருளும் போது 'தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என இத்திருக் கூட்டத்தாரையே முதற்கண் போற்றி யெடுத்தருளினார் என்பது,

**"தொல்லைமால் வரைபயந்த தூயாள் தன் திருப்பாகன்**
**அல்லல்தீர்ந் துலகுய்ய மறையளித்த திருவாக்கால்**
**தில்லைவா ழந்தணர்தம் அடியார்க்கும் அடியேனென்**
**றெல்லையில் வண் புகழாரை யெடுத்திசைப்பா**
**மொழியென்றான் (தடுத்தாட் - 199)**

*எனவரும் செய்யுளாற் புலனாம்.*

*திருத்தொண்டத் தொகையிற் போற்றப்பெறும் திருக் கூட்டத்தார் ஒன்பதின்மருள் ஒரு கூட்டத்தாராகிய இவர்கள், மூவாயிரவர் என்னும் தொகையினராவர் என்பது,*

**"முட்டாத முச்சந்தி மூவாயிரவர்க்கு மூர்த்தியென்னப் பட்டானை" (7-90-7)**

*எனவரும் நம்பியாரூரர் வாய்மொழியாலும்,*

**"தில்லையம்பலத்து மூவாயிரவர் வணங்க நின்றோனை"(72)**

*எனவரும் திருக்கோவைத் தொடராலும்,*

**"முடியா முத்தீவேள்வி மூவாயிரவரொடும்**
**குடிவாழ்கை கொண்டு நீ குலவிக் கூத்தாடினையே"**

*எனவரும் திருவிசைப்பாத் தொடராலும் இனிதுணரப்படும். தில்லைப்பதியிற் செழுமறையோராகிய இவர்கள் கூத்தப் பெருமானுக்கு உரிமைத் தொழில் புரிவோர் என்பர் நம்பியாண்டார் நம்பிகள்.*

*தில்லை வாழந்தணராகிய இவர்கள் நீற்றினால் நிறைந்த கோலத்தினர்; நிருத்தனுக்கு உரிய தொண்டாம் பேற்றினை யுடையவர்கள்; பெருங்குணங்களுக்கு எல்லையாய் விளங்கு பவர்கள்; இறைவன்பாற்பெருகிய அன்பினால் அடித்தவம் புரிந்து வாழ்பவர்கள்; தில்லைத் திருக்கோயிலினுள்ளே தங்கள் தங்களுக்கேற்ற திருப்பணிகளை மேற்கொண்டு அகம்படித் தொண்டு செய்பவர்கள்; முத்தீ வளர்த்து வேள்வி செய்பவர்கள்; எவ்வுயிர்க்கும் அருளுடையராய் அறத்தையே தமக்குரிய பொருளாகக் கொண்டு தத்துவ நெறியில் நிற்பவர்கள்; நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் கற்று வல்லவர்கள்; தில்லைப் பொன்னம்பலத்தில் திருநடம் புரியும் செல்வன் கழலேத்துஞ் செல்வத்தையே செல்வமெனக் கொண்ட திருவுடை யந்தணர்கள்; மறுவற்ற குடும்பத்திலே பிறந்து மாறிலா நல்ஒழுக்கத்தையே அணிகலனாகப் பூண்டவர்கள்; ஓதல் ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் அறுதொழில் ஆட்சியினால் கலியின் தீமையை நீக்கியவர்கள்; தம்மால் மேற்கொள்ளத் தக்கது திருநீறு உருத்திராக்கமாகிய சிவ*

சாதனமே எனவும், பெறத்தக்க நற்பேறாவது சிவன்பால் அன்புடைமையே யெனவும் கொண்டு வாழ்பவர்கள்; ஞானம், யோகம், கிரியை, சரியை ஆகிய நால்வகை நன்னெறிகளையும் குற்றமறத் தெரிந்து மேம்பட்டவர்கள் ; தானமும் தவமும் வல்லவர்கள் ; ஊனம் சிறிதும் இல்லாவர்கள்; உலகெலாம் புகழும் வண்ணம் மானமும் பொறையும் தாங்கி மனையறம் புரிந்து வாழ்பவர்கள். செம்மையால் மிக்க சிந்தைத் தெய்வ வேதியராகிய இவர்கள், தாங்கள் எப்பொழுதும் போற்றி வணங்கும் நிலையில் முதல்வனாகிய இறைவனை இப்பிறப்பிலேயே தமக்கு உரியனாகப் பெற்று வாழ்வர்கள்; இதனினும் சிறந்ததாக இனிமேற் பெறுதற்குரிய பேறெதுவும் இல்லாதவர்கள். அன்று, வன்றொண்டர் திருத்தொண்டத் தொகையினைப்பாட ஆரூர் அண்ணல் திருவாக்கால் முன்னர்க் குறிக்கப்பெற்ற முதற் பொருளாக இவர்கள் அமைந்தார்கள் என்றால், இன்று இவர்தம் பெருமை எம்மால் சொல்லும் தரத்ததாகுமோ? உலகெலாம் புகழும் திருமறையோராகிய இவர்கள் என்றும் பொது நடம் போற்றி வாழ்வார்களாக' எனத் தொண்டர் சீர்பரவுவாராகிய சேக்கிழாரடிகள் தில்லைவாழந்தணர் பெருமையினை விரித்துக் கூறியுள்ளார்.

## திருநீலகண்டக் குயவ நாயனார்

இவரைத் 'திருநீலகண்டத்துக் குயவனார்க்கு அடியேன்' எனப் போற்றுவர் நம்பியாரூரர். சாதிகுலம் முதலிய வேற்றுமைகளைக் கடந்தவர்கள் திருத்தொண்டர்கள். ஆகவே அவர்களை அவர்தம் குலத்துடன் இணைத்துப் பேசுதல் மரபன்று. எனினும் திருத்தொண்டத் தொகையில் திருநீலகண்டர் என்னும் பெயருடன் பேசப்பெறும் அடியார்கள் இருவர் இருத்தலால், அவ்விருவரையும் வேறு பிரித்துணர்தல் வேண்டித் 'திருநீலகண்டக் குயவனார்' எனவும் 'திருநீலகண்டத்துப் பாணனார்' எனவும் அவர் தம் குலத்தோடு இணைத்துப் போற்றுதல் மரபாயிற்றெனத் தெரிகிறது.

திருநீலகண்டக் குயவனார் தில்லைப்பதியிற் பிறந்தவர் என்பது, 'தில்லைத் திருநீலகண்டக்குயவனார் செய்தவனே' என நம்பியாண்டார் நம்பிகள் போற்றியுள்ளமையாற் புலனாம் வேட்கோவர் குலத்தில் தோன்றிய இந்நாயனார்க்கு வழங்கும் திருநீலகண்டர் என்பது, இவரது இயற்பெயரன்று; பாற்கடலில் தோன்றிய ஆலகால நஞ்சினை உலகெலாம் உய்ய உட்கொண்டு அடக்கிய அருளாளனாகிய இறைவனது திருநீலகண்டத்தின் கண்ணே தாம் கொண்ட பேரார்வத்தின் காரணமாகத் திருநீலகண்டம் என்னும் திருப்பெயரை இடைவிடாது ஓதும்

இயல்புடையராதல் பற்றித் திருநீலகண்டர் என்பது இவர்க்குக் காரணப் பெயராயிற்று.

திருநீலகண்டராகிய இப்பெருந்தகையார், தில்லைச் சிற்றம்பலத்தே அம்மை காண அற்புதத் தனிக்கூத்தாடும் நாதனார் கழல்கள் வாழ்த்தி வழிபடும் நலத்தின் மிக்கவர்; பொய்கடிந்து அறத்தின் வாழ்பவர்; இறைவன்பால் மெய்யன்புடைய அடியார்களுக்கு ஏற்ற பணியினைச் செய்யும் விருப்புடையவர்; சைவ மெய்த்திருவின் சார்பே பொருளெனக்கொண்டு வையகம் போற்றும் வாழ்க்கை மனையறம் புரிந்து வாழ்பவர்; தம் மரபுக்கு ஏற்ப மண்பாண்டங்களைச் செய்து விற்று அதனால்வரும் பொருளினைக்கொண்டு வாழ்க்கை நடத்துபவர்; சிவனடியார் களுக்கு உண்கலமாகிய திருவோட்டினை அளித்தலைத் தமது அன்பின் கடமையாகக்கொண்டு ஒழுகுபவர். அவருடைய மனைவியார் அருந்ததியை ஒத்த கற்பினையுடையவர். இளமை மீதூர இன்பத்துறையில் எளியராகிய திருநீலகண்டர் ஒரு நாள் பரத்தைபால் அணைந்து தம்மனைவியாரை அணுகிய நிலையில், அவரது புறத்தொழுக்கினையறிந்து அவ்வம்மையார், தம் கணவரை நோக்கி, 'எம்மைத் தீண்டுவீராகில் திருநீலகண்டம்' எனத் திருநீலகண்டத்தின் மேல் ஆணையிட்டுக் கூறினார். அதனைக்கேட்ட நாயனார் தம்மனைவியாரை அயலவர்போல நோக்கி, 'எம்மை' எனப் பன்மைச் சொல்லாற் கூறினமையால், மற்றை மாதர்களையும் என்மனத்தாலும் தீண்டேன்' என உறுதி கூறினார். கற்பிற்சிறந்த அவர்தம் மனைவியார் தம் கணவனார்க்கு இயைந்த பணிகளையெல்லாம் நாள் தோறும் விருப்புடன் செய்துவர, திருநீலகண்டதத்தின்பால் அன்புடைய அவ்விருவரும் உடனுறைவின்றி, அற்புறு புணர்ச்சியின்மை அயலறியாது வாழ்ந்து வந்தனர். இளமையில் மிக்குள்ளாராகிய இவ்விருவரும் திருநீலகண்டம் என்னும் ஆணைமொழியினை வழுவாது போற்றி ஆண்டுகள் பலவும் செல்லத் தமது இளமை நீங்க முதுமை நிலையெய்தி உடல் தளர்ச்சியுற்ற பின்னரும் இறைவன் பால் வைத்த அன்பின் திறத்தில் தளராதவர்களாய் ஒழுகினர்.

இவ்வாறு ஒழுகிவரும் நாளில், நிறையினும் கற்பினும் வழுவாத இவர்தம் இல்வாழ்க்கைச் சிறப்பினை உலகத்தார் அறிந்து உய்யும் வண்ணம் புலப்படுத்தத் திருவுளங்கொண்ட சிவபெருமான், சிவயோகியார் வேடங்கொண்டு திருநீலகண்டர் மனையை அடைந்து, தம்பாலுள்ள திருவோடு ஒன்றினை அவரிடம் தந்து, 'நம்பி! நீ இதனை உன்பாற்பாதுகாத்து வைத்திருந்து நாம் வேண்டும் போது தருக' என்று சொல்லிச் சென்றார். சென்ற சிவயோகியார் பல நாட்கள் கழிந்த பின்பு தாம் கொடுத்திருந்த திருவோட்டினை வைத்த இடத்தில் இல்லாமல்

மறையச் செய்து, திருநீலகண்டரை அணுகி, 'யான் முன்பு உன்னிடம் தந்த ஓட்டினைத்தருக' எனக்கேட்டார். தாம் பாதுகாத்து வைத்திருந்த இடத்திற்சென்று ஓட்டினைக் காணப்பெறாது அதனைப் பலவிடங்களிலும் தேடித் திகைப்புற்ற திருநீலகண்ட நாயனார், சிவயோகியாரை வணங்கி, 'எம்பெருமானே! நீர் தந்த திருவோட்டினை யான்பாதுகாத்து வைத்திருந்த இடத்திலும் வேறிடங்களிலும் பலமுறை தேடியும் காணப்பெற்றிலேன். அதனினும் சிறப்புடைய நல்ல பாத்திரம் தருகின்றேன். அதனை ஏற்றுக்கொண்டு எனது பிழையினைப் பொறுத்தருளவேண்டும்' என இரந்து வேண்டினார். அதுகேட்ட சிவயோகியார், 'யான் தந்த மண்ணோட்டினை யன்றி நீ பொன்னினாற் செய்து தந்தாயாயினும் அதனை ஏற்றுக் கொள்ளமாட்டேன். முன்பு நான் தந்த ஓட்டினையே கொண்டுவா' என்றார். அதுகேட்ட திருநீலகண்டர், 'கேடிலாப் பெரியோய்! என்பால் வைத்த ஓடுகெட்டதனால் அதனைத் தேடியும் காணாத நிலையில் அதனினும் நல்லதாய் நீண்ட நாளைக்குப் பயன்படும் திருவோட்டினைத் தருகின்றேன் என்று யான் கூறவும் இவ்வாறு பிணங்கிக்கூறியது என் உணர்வையெல்லாம் ஒழித்தது' என வருந்திக் கூறினர். புண்ணியப்பொருளாய் வந்த இறைவர், நாயனாரை நோக்கி, 'யான் உன்பால் வைத்த அடைக்கலப் பொருளைக் கவர்ந்து கொண்டு பாவத்திற்குச் சிறிதும் அஞ்சாது பலவகைப் பொய் மொழிகளைப் பகர்கின்றாய். யாவரும் காண உன்னைத் தப்பவொட்டாமல் மறித்து எனது திருவோட்டினை வாங்கிக்கொண்டல்லது இவ்விடத்தைவிட்டுப் போக மாட்டேன்' என்றார். 'வளத்தினால் மிக்க திருவோட்டினை யான் கவர்ந்தேனல்லேன்; என் உள்ளத்திலும் களவில்லாமையை எவ்வாறு தெரிவிப்பேன்' என்றார் நாயனார். 'உன் காதல் மைந்தனைப்பற்றிக் குளத்தினில் மூழ்கிச் சத்தியஞ்செய்' என்றார் சிவயோகியார். 'அப்படிச் செய்தற்கு எனக்குப் புதல்வன் இல்லையே' என்றார் வேட்கோவர். 'மைந்தனில்லையாயின் மனைவியின் கையைப்பிடித்துக் குளத்தில் மூழ்கிச் சத்தியஞ்செய்' என்றார் சிவயோகியார். 'நானும் என்மனைவியும் எங்களிடையே யுள்ளதொரு சபதத்தால் உடன் மூழ்க இசைவில்லை. யானே புனலில் மூழ்கி உறுதி செய்கிறேன். என்னுடன் வாரும்' என்றார் நாயனார். 'நான் முன்னே உன்பால் தந்துசென்ற திருவோட்டினைத்தராமலும், அதனை நீ கவர்ந்துகொள்ள வில்லையென்றால் உன்மனைவியின் கைப்பிடித்துச் சத்தியஞ் செய்யாமலும் சிந்தை வலித்திருக்கின்றாய். தில்லை வாழந்தணர்கள் வந்து கூடியிருக்கும் பேரவையிலே இவ்வழக்கினைச் சொல்வேன்' என்று சிவயோகியார் சொல்லத் திருநீலகண்டரும் அதற்கிசைந்து அவருடன் சென்றார்.

தில்லை வாழந்தணர்களின் அவையினை யடைந்த சிவயோகியார், "இந்த வேட்கோவன்பால் யான் வைத்த பாத்திரத்தைத் தந்தொழியான்; கெடுத்தானேல் தன் மனைவி கைப்பற்றி வந்து மூழ்கியும் தாரான்; வலிசெய்கின்றான்" என்று தம் வழக்கினைக்கூறினார். அதுகேட்ட அந்தணர்கள், திருநீலகண்டரை நோக்கி, 'நிறையுடை வேட்கோவரே! நீர் நிகழ்ந்ததைச் சொல்வீராக' என்றனர். 'அருமறை அந்தணர்களே! இங்கு நிற்கின்ற சியோகியார் பொன்னினும் மனையினும் போற்றத்தக்கதென்று சொல்லி என்பால் தந்த திருவோடு நான் பேணிப் பாதுகாத்து வைத்த இடத்திலிருந்து இடம் பெயர்ந்து காணாமற்போய்விட்டது' என்றார் திருநீலகண்டர். "இவர் தாம் வைத்த ஓட்டினைக் கெடுத்தீரானால் தரும் இவர் 'குளத்தில் மூழ்கித் தருக' என்று உரைத்தாராயின் மனைவியோடு மூழ்கி உறுதி கூறுதல் முறையேயாகும்' என்று தில்லை வாழந்தணர் முடிவு கூறினார்கள்.

அதுகேட்ட திருநீலகண்டர் தம் மனைவியாரைத் தீண்ட இயலாமைக்குரிய சபதத்தை வெளிப்படுத்த இயலாதவராய்ப் 'பொருந்தியவகையால் மூழ்கித் தருகின்றேன்' என்று சொல்லி, சிவயோகியாருடன் தம் வீட்டினை யடைந்து மனைவியாரை அழைத்துக் கொண்டு தில்லைத் திருப்புலீச்சுரத்திருக்கோயிலில் முன்னுள்ள குளத்தினை யடைந்தார்; திருநீலகண்டத்தின் ஆணையினை வழுவாது காக்கும் நிலையில் மூங்கிற்கோலின் ஒருமுனையினைத் தாமும் மற்றொரு முனையினைத் தம் மனைவியாரும் பற்றிக்கொண்டு குளத்தில் மூழ்கப்புக்கபொழுது, சிவயோகியார் 'மாதைத் தீண்டிக்கொண்டு உடன்மூழ்குவீராக' என்று வற்புறுத்த, அவ்வாறு செய்தற்குத் தடையாகத் தங்களிடையேயுள்ள சபதத்தை அங்குள்ளார் கேட்ப எடுத்துச்சொல்லித் திருநீலகண்டர் மனைவியாருடன் குளத்தில் மூழகினார். வாவியில் மூழ்கிக் கரையேறும் கணவரும் மனைவியாரும் மேவிய முதுமை நீங்கி விருப்புறும் இளமை பெற்றுத் தோன்றினார்கள். அந்த அற்புதக் காட்சியைக் கண்டார் அனைவரும், அங்கு நின்ற சிவயோகியாரைக் காணாது மருண்டு நின்றனர். மறைந்த இறைவர், அம்மையப்பராக விடைமேல் தோன்றித் திருநீலகண்டரையும் அவர்தம் மனைவியாரையும் நோக்கி 'ஐம்புலன்களை வென்றவர்களே! என்றும் இவ்விளமை 'மங்காது நம்பால் விருப்புடன் இருப்பீராக' என அருள்புரிந்து மறைந்தருள, அவ்விருவரும் இவ்வுலகில் திருவருள் வழிப்பட்ட நற்பணிகள் பல புரிந்து சிவலோகத்தினையடைந்து பெறலரும் இளமை பெற்றுப் பேரின்பம் உற்றார்கள்.

## இயற்பகை நாயனார்

'இல்லையே யென்னாத இயற்பகைக்கும் அடியேன்' என நம்பியாரூரராற் போற்றப் பெற்ற இந்நாயனார், சோழ நாட்டின் கடற்றுறைப் பட்டினமாகிய காவிரிப் பூம்பட்டினத்திலே வணிகர் குலத்திலே தோன்றியவர்; மாறிலாத நன்னெறியினில் விளங்கும் மனையறம்புரி மகிழ்ச்சியின் பேறெலாம் இறைவனடியார் ஏவின செய்யும் பெருமையே எனப் பேணி வாழ்பவர். அரனடியார்க்கு அடித்தொண்டு புரியும் அடிமைத் திறத்தில் நிலைபெற்றொழுகும் இவர், தம்பால் உள்ளன எல்லாவற்றையும் அடியார்களுக்கு இல்லையென்னாது வழங்கும் இயல்பினராய்த் தந்நலங் கருதாது உலகியற்கைக்கு மாறாக ஒழுகினமைபற்றி 'இயற்பகையார்' என அழைக்கப்பெற்றார்.

**"மிக்க சீரடியார்கள் யாரேனும் வேண்டும் யாவையும்**
**இல்லையென்னாதே**
**இக்கடற்படி நிகழ முன்கொடுக்கும் இயல்பின்**
**நின்றவர் உலகியற் பகையார்'**

எனவரும் தொடரில் இயற்பகையார் என்னும் பெயர்க்காரணத்தைச் சேக்கிழாரடிகள் குறிப்பாக விளக்கி யுள்ளமை கூர்ந்துணரத் தகுவதாகும்.

இயற்பகை நாயனாரது ஈகைத்திறத்தினை உலகத்தார்க்கு உணர்த்தத் திருவுளங்கொண்ட சிவபெருமான் தூயநீறு பொன்மேனியில் அணிந்த தூர்த்த வேடமுடைய வேதியர் கோலத்தினராய், இயற்பகையாரது வீட்டினை அடைந்தார். நாயனார் அவ்வடியாரைச் சிந்தையன்புடன் எதிர்கொண்டு, 'முனிவர் இங்கு எழுந்தருளியது என் பெருந்தவத்தினாலன்றோ' என்று வரவேற்று வழிபட்டு நின்றார். நின்ற அன்பரை அவ்வேதியர் நோக்கி, 'சிவனடியார்கள் குறித்து வேண்டின வற்றையெல்லாம் குணமெனக் கொண்டு ஒன்றும் மறுக்காது உவந்தளிக்கும் நுமது ஈகைத் திறத்தினைக் கேள்வியுற்று நும்மிடத்திலே ஒரு பொருளை விரும்பி இன்று நான் இங்கு வந்தேன். அதனை நீர் அளித்தற்கு இசையலாம் என்றால் அதனை நான் வெளியிட்டுச் சொல்லலாம்' எனக் கூறினார். அது கேட்ட இயற்பகையார், 'எந்தப் பொருளாயினும் என்பாலிருக்குமாயின் அஃது எம்பெருமானாகிய இறைவனடியாரது உடைமை. இதிற் சிறிதும் சந்தேகமில்லை. நீர் விரும்பியதனை அருளிச் செய்வீராக' என்றார். அதுகேட்ட வேதியர், 'மன்னுகாதல் உன் மனைவியை வேண்டிவந்தது இங்கு' எனச் சொன்னார். அதுகேட்ட நாயனார் முன்னையினும் மகிழ்ச்சி யுடையராய், 'எம்பிரான் என்னிடம் உள்ள பொருளையே வேண்டியது எனது புண்ணியப் பயனாகும்'

என்று கூறி, விரைந்து வீட்டினுள்ளே புகுந்து கற்பிற் சிறந்த மனைவியாரை நோக்கி, 'விதிமணக் குல மடந்தையே! இன்று உன்னை இம்மெய்த்தவர்க்கு நான் கொடுத்தனன்' என்றார். அதுகேட்ட மனைவியார், மனங்கலங்கிப் பின் மனந்தெளிந்து தம் கணவரை நோக்கி, 'என் உயிர்க்குத் தலைவரே! என் கணவராகிய நீர் எனக்குப் பணித்தருளிய கட்டளை இதுவாயின் நீர் கூறியதொன்றை நான் செய்யும் அவ்வளவல்லது எனக்கு வேறுரிமை உளதோ?' என்று சொல்லித் தன் தனிப் பெருங் கணவராகிய இயற்பகையாரை வணங்கினார். இயற்பகையாரும் இறைவனடியார்க்கெனத் தம்மால் அளிக்கப் பெற்றமை கருதி அவ்வம்மையாரை வணங்கினார். திருவினும் பெரியாளாகிய அவ்வம்மையார், அங்கு எழுந்தருளிய மறைமுனிவர் சேவடிகளைப் பணிந்து திகைத்து நின்றார்.

மறை முனிவர் வேண்டிய வண்ணம் மாது தன்னைக் கொடுத்து மகிழும் மாதவராகிய இயற்பகையார், வேதியரை நோக்கி, 'இன்னும் யான் செய்தற்குரிய பணி யாது?' என இறைஞ்சி நின்றார். வேதியராக வந்த இறைவர், இந்நங்கையை யான் தனியே அழைத்துச் செல்லும் நிலையில் நின் அன்புடைய சுற்றத்தாரையும் இவ்வூரையும் கடத்தற்கு நீ எனக்குத் துணையாக வருதல் வேண்டும் என்றார். அதுகேட்ட இயற்பகையார் 'யானே முன்னறிந்து செய்தற்குரிய இப்பணியை விரைந்து செய்யாது எம்பெருமானாகிய இவர் வெளியிட்டுச் சொல்லுமளவுக்குக் காலந்தாழ்த்து நின்றது பிழையாகும்' என்று எண்ணி, வேறிடத்திற்புக்குப் போர்க்கோலம் பூண்டு வாளும் கேடகமுந் தாங்கிவந்து வேதியரை வணங்கி மாதினையும் அவரையும் முன்னே போகச் செய்து அவர்க்குத் துணையாகப் பின்னே தொடர்ந்து சென்றார்.

இச்செய்தியை அறிந்த மனைவியார் சுற்றத்தாரும், வள்ளலார் சுற்றத்தாரும் 'இயற்பகை பித்தனானால் அவன் மனைவியை மற்றொருவன் கொண்டு போவதோ?' என வெகுண்டு தமக்கு நேர்ந்த பழியைப் போக்குதற்குப் போர்க் கருவிகளைத் தாங்கி மறையவரை அணுகி 'தூர்த்தனே! போகாதே நற்குலத்திற் பிறந்த இப்பெண்ணை இங்கேயே விட்டுவிட்டு எமது பழிபோக இவ்விடத்தைவிட்டு ஒழிக' எனக்கூறி அவரைத் தடுத்து நிறுத்தினர். மறைமுனிவர் அதுகண்டு அஞ்சியவரைப் போன்று மாதினைப் பார்த்தார். மாதரும் 'இறைவனே அஞ்ச வேண்டாம் இயற்பகை வெல்லும்' என்றார். வீரக் கழலணிந்த இயற்பகையார், 'அடியனேன் அவரையெல்லாம் தறையிடைப் படுத்துகின்றேன்' என வேதியர்க்குத் தேறுதல் கூறி, பழிக்கு அஞ்சிப்போருக்கு வந்த தம் சுற்றத்தாரை நோக்கி, 'ஒருவரும் எதிர் நில்லாமே ஓடிப்

பிழையும்! அன்றேல் என் வாட்படைக்கு இலக்காகித் துடிப்பீர், என்று அறிவுறுத்தினார். அதுகேட்ட சுற்றத்தார், 'ஏடா' நீ என்ன காரியத்தைச் செய்து இவ்வாறு பேசுகின்றாய். நின்செயலால் இந்நாடு அடையும் பழியையும் இது குறித்து நம் பகைவராயினார் கொள்ளும் இகழ்ச்சிச் சிரிப்பினையும் எண்ணி நாணாது உன் மனைவியை வேதியனுக்குக் கொடுத்து வீரம் பேச வதோ? யாங்கள் போரிட்டு ஒருசேர இறந்தொழிவதன்றி நின் மனைவியை மறையவனுக்குக் கொடுக்க ஒரு பொழுதும் இசையோம்' என்று வெகுண்டு கூறினர். அதுகேட்ட இயற்பகையார், 'உங்கள் உயிரை விண்ணுலகுக்கு ஏற்றி இந்த நற்றவரைத் தடையின்றிப் போக விடுவேன்' என்று கூறி, உறவினரை எதிர்த்துப் பொருதற்கு முந்தினார். உறவினர்கள் மறையவரைத் தாக்குதற்கு முற்பட்டனர். அதுகண்டு வெகுண்ட இயற்பகையார், சுற்றத்தார்மேற் பாய்ந்து அனைவரையும் வாளினாற் கொன்று வீழ்த்தினார். எதிர்ப்பவர் ஒருவருமின்றி நின்ற இயற்பகையார், வேதியரை நோக்கி 'அடிகள் நீர் அஞ்சா வண்ணம் இக்காட்டினைக் கடக்கும்வரை உடன் வருகின்றேன்' என்று கூறித்திருச்சாய்க் காடுவரை துணை வந்தபொழுதில், மறை முனிவர் 'நீர் வீட்டிற்குத் திரும்பிச் செல்லலாம்' எனக் கூறினர். இயற்பகையாரும் அவரை வணங்கி ஊருக்குத் திரும்பினார்.

மனைவியை அடியார்க்கு உவகையுடன் அளித்துத் திரும்பிப் பாராது செல்லும் நாயனாரது அன்பின் திறத்தை எண்ணி மகிழ்ந்த இறைவர், மெய்ம்மையுள்ளமுடைய நாயனாரை மீளவும் அழைக்கத்தொடங்கி, 'இயற்பகை முனிவா ஓலம் ஈண்டு நீ வருவாய் ஓலம் அயர்ப்பிலதானே ஓலம் அன்பனே ஓலம் ஓலம் செயற்கருஞ் செய்கை செய்த தீரனே ஓலம் ஓலம்' என அழைத்தருளினார். அழைத்த பேரோசையினைக் கேட்ட இயற்பகையார், 'அடியனேன் வந்தேன் வந்தேன். தீங்கு செய்தவர் உளராயின் அன்னோர் என் கைவாளுக்கு இலக்காகின்றார்' என்று கூறி விரைந்து வந்தார். மாதொரு பாகனாகிய இறைவனும் தனது தொன்மைக் கோலத்தைக் கொள்ளுதற்கு அவ்விடத்தைவிட்டு மறைந்தருளினான். சென்ற இயற்பகையார் முனிவரைக்காணாது அவருடன் சென்ற மாதினைக் கண்டார்; விசும்பின் கண்ணே இறைவர் மாதொருபாகராக விடைமேல் தோன்றி அருளும் தெய்வக் கோலத்தைக் கண்டார்; நிலமிசைப் பலமுறை விழுந்து தொழுதார்; எல்லையில் இன்ப வெள்ளம் அருளிய இறைவனை உளங்கசிந்து போற்றி வாழ்த்தினார். அப்பொழுது அம்மையப்பராகிய இறைவர், 'பழுதிலாதாய், நின் அன்பின் திறங்கண்டு மகிழ்ந்தோம். நின்மனைவியுடன் நம்பால் வருக' எனத் திருவருள் புரிந்து மறைந்தருளினார். செயற்கருஞ் செய்கை செய்த திருத்தொண்டராகிய இயற்பகையாரும் தேற்றம்

மருவிய தெய்வக் கற்பினையுடைய அவர்தம் மனைவியாரும் ஞானமா முனிவர் போற்ற நலமிகு சிவலோகத்தில் இறைவனைக் கும்பிட்டு உடனுறையும் பெருவாழ்வு பெற்றனர். அவர்தம் சுற்றத்தாராய் அவருடன் போர்செய்து உயிர் துறந்தவர்கள் வானுலகடைந்து இன்புற்றனர்.

## இளையான்குடி மாறநாயனார்

'இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்' என இந்நாயனார் திருத்தொண்டத் தொகையிற் போற்றப் பெறுதலால், இவர் அவதரித்த திருத்தலம் இளையான்குடி என்பதும், இவரது இயற்பெயர் மாறன் என்பதும் இனிது புலனாகும்.

இளையான்குடி என்ற ஊர் சோழ நாட்டில் திருநள்ளாற்றுக்கு மேற்கே இரண்டு நாழிகை தூரத்தில் உள்ளது என்றும், பத்தகுடி இருப்புப்பாதை நிலையத்திலிருந்து முக்கால் நாழிகை தூரத்தில் இவ்வூரையடையலாம் என்றும் கூறுவர் சிலர். இவ்வூரில் பழைய சிவாலயம் ஒன்று உண்டு. இந்நாயனார் புராணத்திற்குறிக்கப் பெறும் நாற்றங்கால் இக்கோயிலுக்குத் தெற்கில் உள்ளது. இதனை முளைவாரிக்குட்டை - முளைவாரி நாற்றங்கால் என அவ்வூர்மக்கள் வழங்குகின்றார்கள். சோழமண்டல சதகமும் இளையான்குடி மாறனார் பிறந்த தலம் சோழ நாட்டைச் சேர்ந்ததாகக் குறிப்பிடுகிறது. இவ்வாறாகவும் தொண்டைமண்டல சதக ஆசிரியர் இளையான்குடி மாறனார் வரலாற்றுப் பெருமை தொண்டை நாட்டிற்குரியதாகக் கூறுகின்றார்.

இனி, இராமநாதபுரம் மாவட்டத்தைச் சேர்ந்த பரமகுடிக்கு வடகிழக்கே ஏழு நாழிகை தூரத்திலுள்ள இளையான்குடி என்ற ஊரே இந்நாயனாரது ஊரென்றும், இவ்வூரில் முளைவாரி யமுதளித்த நாற்றங்கால்' என்ற பெயரால் ஒரு சருவமானிய நிலம் வழங்கப் பெறுகிறதென்றும், மாறன் என்பது பாண்டியர்க்குரிய பெயராய் அந்நாட்டிலுள்ளார்க்கு இடப்பெற்று வழங்கப் பெறுதல் பாண்டி நாட்டில் அவதரித்த திருமாலடியாராகிய நம்மாழ்வார் மாறன் என்னும் பெயருடையராகப் போற்றப் பெறுதலாற் புலனாமென்றும் கூறுவர் சிலர்.

திருத்தொண்டர்கள் திருவவதாரம் செய்தருளிய திருப்பதிகளுள் இன்னஇன்ன திருப்பதி இன்னஇன்ன நாட்டின் கண்ணது என அந்தந்த நாயனார் புராணத்தில் இடஞ்சுட்டி விளக்குதலை மரபாகக் கொண்ட சேக்கிழாரடிகள், மாறநாயனார் பிறந்தருளிய இளையான்குடி என்னும் ஊர் இன்ன நாட்டின்கண் உள்ளது எனத் தெளிவாகக் குறிப்பிடாமையால் இவ்வூர் இது தான் எனத் துணிந்துரைத்தற்கு இயலவில்லை,

இளையான்குடி என்னும் ஊரிலே வேளாளர் மரபிலே தோன்றியவர் மாறநாயனார். ஏரின்மல்கு வளத்தினால் எல்லையில்லாத செல்வமும் சிவபெருமான்பால் நிறைந்த பேரன்பும் வாய்ந்த இவர், சிவனடியார் யாவராயினும் தம்மனைக்கண் இன்மொழியுடன் எதிர்கொண்டு போற்றி ஆசனத்திருத்தி அருச்சித்து வழிபட்டு அறுசுவை நிறைந்த திருவமுதினை அன்புடன் அருத்தி மகிழ்பவர். அடியார்க்குத் திருவமுதளித்தலாகிய இத்திருப்பணியைச் செல்வக்காலத்திலே மட்டுமன்றி நல்குரவாகிய அல்லற்காலத்திலும் விடாது செய்ய வல்லவர் இந்நாயனார் என்னும் உண்மையினை உலகத்தார்க்கு அறிவுறுத்தத் திருவுள்ளங் கொண்ட இறைவர், இளையான்குடி மாறர் வாழ்க்கையில் செல்வம் குறைய வறுமையுண்டாகும் வண்ணம் செய்தருளினார். இவ்வாறு செல்வவளம் சுருங்கவும் தம் மனஞ்சுருங்குதலின்றித் தம்மிடமுள்ள நிலங்கள் முதலியவற்றை விற்றும் தம்மையே விற்றும் கொடுக்கத்தக்க அவ்வளவு கடன்களை வாங்கியும் அடியார்க்கு அமுதளித்தலாகிய பணியை விடாது செய்து வந்தார்.

இளையான்குடிமாறர், மழைக்காலத்திலே ஒரு நாள் முழுவதும் உணவின்றிப் பசிமிக்கு வீட்டின் கதவைத் தாளிட்டிருக்கும் நிலையில், மழை பெய்து கொண்டிருக்கும் நள்ளிரவிலே சிவபெருமான் அடியார் கோலங்கொண்டு மாறனாரது மனைக்கு எழுந்தருளிக் கதவைத் தட்டி அழைத்தார். மாறனார் கதவைத்திறந்து அடியாரை வீட்டினுள்ளே அழைத்துச் சென்றார்; மழையினால் நனைந்த அடியார் திருமேனியை ஆடை கொண்டு துவட்டி இருத்தற்கு இடங்கொடுத்தார்; அடியார்க்குத் திருவமுது செய்வித்தல் வேண்டும் என்னும் பெருவிருப்புடன் தம் மனைவியாரை நோக்கி, 'அடியார் மிகவும் பசித்துள்ளார். என் செய்வது? முன்னமே நமக்கு இங்கு உணவில்லை. ஆயினும் இறைவன்டியார்க்கு அமுதளித்தல் வேண்டுமே? இதற்கு யாது செய்வோம்?' என வினவினார். அதுகேட்ட மனைவியார், 'நம் வீட்டில் மற்றொன்றும் காண்கிலேன். ஏதிலாரும் இனித் தருவாரில்லை. பகற்பொழுதும் போயிற்று, தேடிப்போதற்குரிய இடமும் வேறில்லை. தீவினையேன் என் செய்வேன்?" எனச் சொல்லி, 'இன்று பகற்பொழுதிலே வறுமை நீங்க வயலில் விதைக்கப்பட்ட செந்நெல் முளைகொண்டுள்ளவற்றை வாரிக்கொணர்ந்தால் இயன்ற அளவில் அமுதாகச் சமைத்தலும் கூடும். இதுவன்றி வேறு வழியறியேன்' என்றார்.

அது கேட்டு மகிழ்ந்த மாறனார், மைக்குழம்பு போன்ற நள்ளிருளிலே இறைகூடையைத் தலையிற்கவித்துக் கொண்டு வயலையடைந்து காலினால் தடவிச்சென்று மழை நீரில் மிதந்த

நெல்முளைகளைத் தம் கைளால் வாரிக் கூடையில் நிறைத்துக் கொண்டு விரைந்து வீடு திரும்பினார். மனைவாயிலிலே கணவரை எதிர்நோக்கி நின்ற மனைவியார், நெல்முளையை வாங்கிச் சேறு போக நீராற் கழுவிச் 'சோறு சமைத்தற்கு விறகு இல்லையே' என வருத்தமுற்றாராக, மாறனார் தம் வீட்டுக் கூறையில் சிதைந்து விழும் அலக்கினைப் பிரித்தார். மனைவியார் அவற்றைக் கொண்டு அடுப்பு மூட்டி நெல் முளையை ஈரம் போக வறுத்துக் குற்றி அரிசியாக்கி உலையிலிட்டுச் சோறு சமைத்து, 'இனி, கறிக்கு யாது செய்வோம்' எனக் கவலையுற்றார். அப்பொழுது மாறனார், வீட்டுத் தோட்டத்திற்குச் சென்று, குழி நிரம்பாத புன்செய்ப் பயிரினைக் கைகளால் தடவிப் பறித்துக் கொணர்ந்தார். மனைவியார் அவற்றை வாங்கி ஆய்ந்து தம் கைத்திறத்தால் வெவ்வேறு கறியமுதாகச் செய்துமுடித்து 'இனிச் சிவனடியாரைத் திருவமுது செய்ய அழைப்போம்' என்றார். மாறனார் தம் மனைக்கண் எழுந்தருளிய சிவனடியாரை எழுப்பி, 'அடியனேன் உய்ய என்பால் எழுந்தருளிய பெரியோய்! அமுது செய்தருள்க' என வேண்டிநின்றார். அப்பொழுது அடியாராக வந்திருந்த பெருமான், சோதிப் பிழம்பாய் எழுந்து தோன்றினார். அது கண்டு மாறனாரும் மனைவியாரும் திகைத்து நின்றனர். சிவபெருமான் உமாதேவியாருடன் விடைமேல் தோன்றி, 'அன்பனே! அன்பர் பூசை அளித்த நீ நின்மனைவியோடும் என்பெரும் உலகமாகிய சிவலோகத்தினை எய்தி இருநிதிக் கிழவனாகிய குபேரன் நினது ஏவல் கேட்ப இன்பம் ஆர்ந்திருப்பாயாக' என்று அருள் செய்து மறைந்தருளினார்.

## மெய்ப்பொருள் நாயனார்

'வெல்லுமா மிகவல்ல மெய்ப் பொருளுக்கு அடியேன்' என நம்பியாரூரராற் போற்றப் பெற்ற இந் நாயனார், சேதி நாட்டிலே திருக்கோவலூரிலே மாதொரு பாகனார்க்கு வழி வழியாக அன்பு செலுத்தும் மலையமான் குடியிற் பிறந்தவர். குறுநில மன்னராகிய இவரது இயற்பெயர் இதுவெனத் தெரியவில்லை சிவனடியார் வேடத்தையே மெய்ப்பொருள் எனச் சிந்தித்துப் போற்றி வந்தமையால் மெய்ப்பொருள் நாயனார் என்பது இவர்க்குக் காரணப் பெயராயிற்று. அறநெறி வழாமல் அரசுபுரியும் இவ்வேந்தர் பெருமான், பகைவரை வென்று வேத நன்னெறியின் மெய்ம்மை விளங்கிடத் தாம் தேடிய பொருள்களும் நீடு செல்வமும் தில்லை மன்றுள் ஆடிய பெருமான் அன்பர்க்கு ஆவன ஆகும் என்று கொண்டு சிவனடியார்களுக்கு வேண்டுவன வற்றைக் குறைவறக் கொடுத்துவந்தார்.

இவ்வாறொழுகும் நாளில் இவருடன் பகைமை கொண்டு பலமுறை போர் செய்து தோற்று அவமானப் பட்டோடிய முத்தநாதன் என்னும் மன்னன், இவரது அடியார் பத்தியை யறிந்து இவரை வஞ்சனையாற் கொன்றொழிக்க எண்ணினான். சிவனடியாரைப் போல மெய்யெலாம் நீறுபூசிச் சடைமுடி தரித்துக் கையிலே புத்தக முடிப்பென்று அதனுள்ளே ஆயுதத்தினை மறைத்து வைத்துக்கொண்டு, சேதிபர் பெருமானது அரண்மனை வாயிலை அடைந்தான். அவனைச் சிவனடியா ரெனக் கருதிய வாயில்காவலர், கைதொழுது உள்ளே புகவிட்டனர். இவ்வாறு அடியார் வேடத்துடன் அரண்மனை வாயில்களைக் கடந்து செல்லும் முத்தநாதன், மெய்ப்பொருள் வேந்தர் தங்கிய அறையின் நுழைவாயிலை அடைந்த பொழுது அங்கே நின்ற தத்தன் என்னும் வாயில் காவலன், 'அரசர் இப்பொழுது துயில்கொள்கின்றார் தாங்கள் காலமறிந்து செல்லுதல் வேண்டும்' என்று சொல்லித் தடுத்தான். அந்நிலையிற் பொய்த்தவனாகிய முத்தநாதன், 'யான் அரசற்கு உறுதிப் பொருளை உபதேசித்தல் வேண்டும். தடுக்காமல் இங்கு நிற்பாயாக' எனத் தத்தனுக்குச் சொல்லிவிட்டு உள்ளே புகுந்து, அரசி உடனிருக்க அரசு கட்டிலிலே துயிலமர்ந்த அரசரை அணுகினான். அது கண்டு அரசியார், விரைந்தெழுந்து அரசரைத் துயிலெழுப்பினார். விழித்தெழுந்த வேந்தர், சிவனடியார் வந்தார் என்று தலைமேற் கைகுவித்து எதிர் சென்று வணங்கி, 'மங்கலம் பெருக என் வாழ்வு வந்தணைந்தது என்னத் தாங்கள் இங்கு எழுந்தருளப் பெற்றேன்' என்று கூறி வரவேற்றார். 'உங்கள் நாயனார் உரைத்தருளிய ஆகமநூல் எங்கும் இல்லாதது ஒன்றைக் கொண்டு வந்தேன்' என்றான் முத்தநாதன். அது கேட்ட வேந்தர், 'மாறில் ஆகமத்தை வாசித்து அருள் செய வேண்டும்' என வேண்டினார். 'நின்பட்டத்தரசி இல்லாமல் நீயும் நானும் வேறிடத்து இருத்தல் வேண்டும்' என்றான் முத்தநாதன். அது கேட்ட வேந்தர், மனைவியாரை அந்தப்புரத்திற்குச் செல்லப் பணித்து, வந்த அடியாரை ஆசனத்து அமர்த்தித் தாம் கீழிருந்து 'ஆகமப் பொருளை அருள் செய்ய வேண்டும்' என வேண்டிக் கொண்டார். அடியார் வேடத்தில் வந்த முத்தநாதன், தன் மடிமீது வைத்துப் புத்தகக் கட்டை அவிழ்ப்பவன் போல் உள்ளிருந்த வாளினை எடுத்துத் தான் நினைந்த தீச்செயலை நிறை வேற்றினான். வாளினாற் குத்தப்பட்ட வேந்தர் 'சிவ வேடமே மெய்ப்பொருள்' என்று அவனை வணங்கி வென்றார், பொய் வேடத்தவனாகிய முத்தநாதன் உள்ளே புகுந்த பொழுதே அங்கு என்ன நிகழ்கின்றதோ எனத் தன் மனத்தைச் செலுத்திய தத்தன் என்னும் வாயில் காவலன், அந்நிலையில் விரைந்து உள்ளே புகுந்து தன் கை வாளினால் பகைவனை வெட்டச் சென்றான்.

அது கண்ட வேந்தர் 'தத்தா! இவர் நம்மவர்' எனத் தடுத்து வீழ்ந்தார். அங்ஙனம் வீழ்கின்ற வேந்தரைத் தலையினால் வணங்கித் தாங்கிய தத்தன், 'யாது நான் செய்கேன்? என்றான். அதுகேட்ட வேந்தர் 'எம்பிரான் அடியாராகிய இவர் இவ்விடத்தினை விட்டுச் செல்லுதற்குத் தடை நிகழா வண்ணம் இவரைக் கொண்டுபோய் விடுவாயாக' எனப் பணித்தார். அவ்வாறே தத்தன், முத்தநாதனை அழைத்துக் கொண்டு செல்லும் பொழுது, இந்நிகழ்ச்சியைக் கேள்வியுற்ற மக்கள் பலரும் 'அரசனுக்குத் தீங்கு செய்த இக்கொடியோனைக் கொன்றெழிப்போம் எனச் சூழ்ந்து கொண்டார்கள். தத்தன், 'இத்தவவேடத்தான் இவ்விடத்தை விட்டுத் தீங்கின்றிச் செல்வது நம் வேந்தரது ஆணையாகும்' என்று கூறி அவர்களைத் தடுத்து நிறுத்தி வஞ்சனை வேடத்தானாகிய அவனை ஆட்கள் நடமாட்டமில்லாத காட்டு வழியிலே விட்டு விட்டு, அவனுக்குத் தீங்கின்மையறிய உயிர் தாங்கியிருக்கும் மெய்ப்பொருள் வேந்தரை விரைந்து அணுகி, 'தவ வேடங்கொண்டு வென்றவற்கு இடையூறின்றி விட்டு வந்தேன்' என்றான். அதுகேட்ட மெய்ப்பொருள் நாயனார், 'இன்று எனக்கு ஐயன் செய்த இப் பேருதவியை வேறு யார் செய்ய வல்லார்கள்' என்று சொல்லி அவன் பால் நிறை பெருங் கருணையுடையராய், அரசாட்சிக்குரிய புதல்வர் முதலியோர்க்கும் தமது பிரிவினால் வருந்தும் சுற்றத்தவர்க்கும் பொருந்திய கடமைகளையெல்லாம் விரித்துரைப்பவர், 'விதி முறைப்படிப் பரவி யணியத்தக்க திருநீற்றின் மேல் வைத்தற்குரிய அன்பின் திறத்தை எக்காலத்தும் நெகிழாது பேணிப் போற்றுவீர்களாக என்று அறிவுறுத்திப் பொன்னம்பலத்தில் ஆடல்புரிந்தருளும் திருவடிகளைச் சிந்தித்தார். அப்பொழுது அம்மையப்பராகிய இறைவர் மெய்ப் பொருள் நாயனார்க்குத் தமது திருக்கோலத்தைக் காட்டியருளி அண்டவானவர்கட்கு எட்டாத தம்முடைய திருவடி நிழலிலே தங்கிக் கும்பிட்டுறையும் பெருவாழ்வை அவர்க்கு அளித் தருளினார்.

## விறன்மிண்ட நாயனார்

'விரிபொழில் சூழ் குன்றையார் விறன்மிண்டர்க்கு அடியேன்' எனப்போற்றப்பெற்ற இவர் சேரர்க்குரிய மலை நாட்டிலே திருச்செங்குன்றூரிலே வேளாளர் குலத்திலே தோன்றியவர். இவர், சிவபெருமான் திருவடிகளையே பற்றாகப் பற்றி ஏனைய பற்றுக்களை யெல்லாம் அறுத்தொழிக்கும் விறலுடையார் ஆதலால் விறன் மிண்டர் என அழைக்கப் பெற்றார். அடியார் பத்தியிலே சிறந்த இவர், சிவனுறையும் திருத்தலங்களை யெல்லாம் வழிபட்டுச் செல்லுங்காலத்து

அடியார் திருக்கூட்டத்தின் எதிர்சென்று அன்பினால் பரவிப்போற்றிய பின்னரே ஆலயத்துள் எழுந்தருளியிருக்கும் இறைவன் திருவடிகளை வணங்கும் இயல்பினையுடையவர். ஈசனிடத்து நேசமுடையராகிய இவர், மலை நாட்டிலிருந்து புறப்பட்டுப் பல தலங்களை வணங்கிக்கொண்டு திருவாரூரை யடைந்து அங்குத் தேவாசிரிய மண்டபத்தில் வீற்றிருக்கும் சிவனடியார்களை வழிபட்டிருந்தார்.

ஒரு நாள், சுந்தரமூர்த்தி நாயனார், திருவாரூர்ப் பெருமானை வழிபடச் செல்பவர், அத்தேவாசிரிய மண்டபத்திலுள்ள சிவனடியார்களை அணுகி வழிபடாது ஒருவழியாக ஒதுங்கிச் செல்வதைக் கண்டவிறன் மிண்டர், 'சிவனடியார் திருக்கூட்டம், இதனைப் பேணாது ஒதுங்கிச் செல்லும் ஆரூரனுக்கும் அவனை வலிய ஆட்கொண்ட சிவபெருமானுக்கும் புறகு (புறம்பானது)' என்று கூறினார். அப்பொழுது ஞாலம் உய்யவும் நாம் உய்யவும் சைவசமயத்தின் சீலம் விளங்கவும் திருத்தொண்டத் தொகை பாடும்படி ஆரூர்ப் பெருமான், தம்மை வழிபட வந்த வன்றொண்டர்க்கு முன்னே தோன்றி 'நாம் அடியார் திருக்கூட்டத்தினுள்ளே உள்ளோம்' என்று அருள் செய்தார். சுந்தரர் அவ்வடியார்களைப் பணிந்து திருத்தொண்டத் தொகை என்னும் திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார். அதை கேட்டவிறன்மிண்டர் மிக மகிழ்ந்து ஆரூர்ப் பெருமான் வன்றொண்டர் ஆகிய அவர்களது மாறிலாப் பேரருளுக்கு உரிய பெருமையுடையராய் விளங்கினார். திருத்தொண்டத் தொகையால் உலகம் நலம் பெற்று விளங்குதற்குக் காரணராகிய விறன்மிண்ட நாயனார், தம் பெருமான் அருளினாலே அம்முதல்வன் தாள் நிழற் கீழ் இனிது அமரும் சிவகணத்தலைவராம் பெருவாழ்வு பெற்று இன்புற்றார்.

## அமர்நீதி நாயனார்

'அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக்கு அடியேன்' எனப் போற்றப் பெற்ற இந்நாயனார், சோழ நாட்டிலே பழையாறை என்னும் பழம்பதியிலே வணிகர் குலத்தில் தோன்றியவர். சிவனடியார்களுக்குக் கோவணமும் கீளும் கொடுக்கும் கட்டுப்பாட்டினை மேற்கொண்ட இந்நாயனார், திருநல்லூரில் சிவனடியார்கள் திருவமுது செய்தற் பொருட்டுத் திருமடங்கட்டித் திருவிழாக் காலத்தில் தம்முடைய சுற்றத்தாரோடும் அங்குத் தங்கியிருந்து அடியார்களுக்குத் திருவமுது அளித்து வந்தார்.

ஒரு நாள் சிவபெருமான், அமர்நீதியார்க்கு அருள் புரியத் திருவுளங்கொண்டு, அந்தணர் குலத்துப் பிரமசாரியாகக் கோலம்

கொண்டு வந்து, தாம் தண்டில் முடித்து வைத்திருந்த கோவணங்கள் இரண்டினுள் ஒன்றைப் பாதுகாப்பாக வைத்திருக்கும்படி அமர்நீதியாரிடம் கொடுத்துவிட்டுக் காவிரியில் நீராடச் சென்றார். சென்றவர், தாம் அமர்நீதியாரிடம் கொடுத்த கோவணத்தை மறையும்படி செய்து, சிறிது நேரத்திற்குள் மழையில் நனைந்தவராய், அமர்நீதியாரை யணுகி 'யாம் கொடுத்த கோவணத்தைக் கொண்டு வாரும்' என்றார். வைத்த இடத்திற்கோவணத்தைக் காணாது மனங்கலங்கிய அமர்நீதியார், 'ஐயா, நீர் தந்த கோவணத்தை வைத்த இடத்திற் கண்டிலேன். இதனை ஒளித்து வைத்தவர் யாருமில்லை. வேறு நல்லதோர் கோவணம் தருகின்றேன்' எனக்கூறினார். அது கேட்டு வெகுண்டார் அந்தணர். அது கண்டு பொறி கலங்கிய உணர்வினரான அமர்நீதியார், அடியாரைப் பணிந்து போற்றி 'தாங்கள் தந்த கோவணத்துக்கு ஈடாக விரும்பத்தகுந்த நல்ல பட்டாடைகள் மணிகள் முதலியவற்றை ஏற்றுக் கொண்டு சிறியேனது பெரும் பிழையைப் பொறுத்தருளுதல் வேண்டும்' என வேண்டினார். நீர் 'தந்த மணியும் பொன்னும் எனக்கு என்ன பயனைச் செய்வன? நான் உம்மிடம் தந்த கோவணத்துக்கு ஒத்தது தண்டில் உள்ள இந்தக் கோவணம். இந்தக் கோவணத்துக்கு எடையான கோவணத்தைக் கொடுப்பீராக' என்று கூறினார் அந்தணர். 'நன்று' என ஏற்றுக்கொண்ட அமர்நீதியார், ஒரு தராசினை அங்குக் கொண்டுவந்து நிறுத்தி, ஒரு தட்டில் அடியார் தந்த கோவணத்தை வைத்து, அதற்கு ஈடாகத் தம்மிடம் உள்ள நெய்த கோவணத்தை மற்றொரு தட்டில்வைத்தபொழுது அது நிறை போதாமையால் மேலெழுந்தது. அதுகண்ட அமர்நீதியார், தாம் அடியார்களுக்குக் கொடுத்தற்பொருட்டு வைத்திருந்த கோவணங்களையும் பூந்துகிற்பொதி முதலியவற்றையும் ஒவ்வொன்றாக இட்ட நிலையிலும் அன்பரது தட்டு மேற்பட அடியாரது கோவணத்தட்டு நிறையால் கீழே தாழ்ந்தது. அந்நிலையில் அமர்நீதியார், அந்தணராகிய அடியாரது உடன்பாடு பெற்றுத் தம்மிடமுள்ள பொன், வெள்ளி, நவமணித் திரள் முதலிய பலவகை அரும் பொருள்களையும் பின்பு தம் மனைவி புதல்வன் ஆகியவர்களையும் துலையில் அமர்த்தியும், தட்டு நேர்நில்லாமை கண்டு, 'யாங்கள் இழைத்த அன்பினில் இறை திருநீற்று மெய்யடிமை பிழைத்திலோம் என்றால் இத்தராசின் தட்டு சமமாக நிற்பதாகுக' என்று திருவைந்தெழுத்தோதித் தாமும் அதன்கண் ஏறி அமர்ந்தார். அந்நிலையில் இறைவரது திருவரைக் கோவணமும் அமர்நீதியாரது அடிமைத் தொண்டும் ஒத்தலால் அத்தராசுத் தட்டுக்கள் இரண்டும் சமமாய் நேர் நின்றன. அடியாராகவந்த இறைவர், திருநல்லூரிற் பொருந்திய அம்மையப்பராகிய

திருக்கோலத்தை அமர்நீதியார்க்குக் காட்டியருளினார். அத்தெய்வக் காட்சியைக் கண்ட அமர்நீதியாரும் மனைவியாரும் மைந்தரும் அம்மையப்பரை வணங்கிப் போற்றித் தாம் அமர்ந்துள்ள தாரசுத் தட்டே விமானமாகி மேற் செல்ல, என்றும் இறைவனைக் கண்டு வணங்கி மகிழும் அழிவில்லாத சிவலோக வாழ்வினைப் பெற்று இன்புற்றார்கள் என்பது வரலாறு.

இவ்வரலாறு, வழி வழியாக உலக மக்களால் வியந்து பேசப்பெற்று வருதலைத் திருநல்லூரிற் சென்று அறிந்த திருநாவுக்கரசர்,

**'நாட்கொண்ட தாமரைப் பூத்தடஞ் சூழ்ந்தநல் லூரகத்தே**
**கீட்கொண்ட கோவணங் காவென்று சொல்லிக் கிறிபடத்தான்**
**வாட்கொண்ட நோக்கி மனைவியோடு மங்கொர் வாணிகனை**
**ஆட்கொண்ட வார்த்தை யுரைக்குமன் றோவிவ் வகலிடமே'**

எனவரும் திருநல்லூர்த் திருவிருத்தத்தில் இதனைக் குறித்துப் போற்றியுள்ளார். அமர்நீதியார் வரலாற்றில் நிகழ்ந்த இவ்வியப்புடைய நிகழ்ச்சி திருநல்லூரில் நிகழ்ந்த தென்பதற்கு இத்திருவிருத்தம் சான்றாக அமைந்துள்ளமை காணலாம்.

## எறிபத்த நாயனார்

'இலை மலிந்த வேல் நம்பி எறிபத்தர்க்கு அடியேன்' எனப் போற்றப்பெற்ற இந்நாயனார், சிவனடியார்களுக்கு ஓர் இடர் வந்த உற்றவிடத்து உதவும் இயல்பினையுடையவர்; சோழ மன்னர்களுக்கு உரிமையுடைய பெரு நகரமாகிய கருவூரிலே, ஆனிலை என்னும் திருக்கோயிலில் எழுந்தருளிய பெருமானை வழிபட்டுச் சிவனடியார்களுக்குத் திருத்தொண்டு செய்பவர் அடியார்களுக்கு இடையூறு வந்த காலத்து அங்கு விரைந்து சென்று அடியார்க்குத் தீங்கு புரிந்த கொடியோரைப் பரசு என்னும் மழுப்படையினால் எறிந்து தண்டிக்கும் இயல்பின ராதலின், எறிபத்தர் என அழைக்கப் பெற்றார். இலைத் தொழிலமைந்த வேல் போலும் கூர்மைவாய்ந்த மழுப்படை யினைத் தாங்கினமையால் இலை மலிந்த வேல் நம்பி எனச் சிறப்பிக்கப்பெற்றார்.

கருவூர்த் திருவானிலைத் திருக்கோயிலில் இறைவர்க்குத் திருத்தொண்டு புரியும் சிவகாமியாண்டார் என்னும் முதிய அடியவர், வைகறையில் துயிலெழுந்து நீராடித் தூய்மை யுடையராய் வாயைத் துணியாற் கட்டித் திருநந்தவனஞ் சென்று மலர் கொய்து பூக்குடலையில் நிறைத்து அக்குடலையைத் தண்டின் மேல் உயரத் தாங்கிக் கொண்டு திருக்கோயிலை நோக்கி விரைந்து சென்றார். மகா நவமியின் முதல்நாள் (அட்டமி) ஆன

அன்று அந்நகரில் அரசு வீற்றிருக்கும் புகழ்ச் சோழரது பட்டத்து யானை, ஆற்றில் நீராடி அலங்கரிக்கப் பெற்று மதச் செருக்குடன் பாகர்க்கு அடங்காது விரைந்து செல்லும் நிலையில், சிவகாமி யாண்டார் கையிலுள்ள பூக் குடலையைப் பறித்துச் சிதறியது. யானை மேலுள்ள பாகர்கள் யானையை விரைந்து செலுத்திச் சென்றனர். சிவகாமியாண்டாராகிய அடியவர், இறைவர்க்குச் சாத்தும் திருப்பள்ளித் தாமத்தைச் சிதறிய யானையின் செயல் கண்டு வெகுண்டு அதனைத் தண்டு கொண்டு புடைக்க முற்பட்டு விரைந்து ஓடி, முதுமை காரணமாக இடறிவிழுந்து, இறைவனை நினைந்து 'சிவதா சிவதா, என முறையிட்டு அரற்றினார். அடியாரது அரற்றொலியைக் கேட்டு விரைந்து அங்கு வந்த எறிபத்தர், யானையின் செய்கையை யறிந்து வெகுண்டார்; யானையைப் பின் தொடர்ந்து சென்று யானையின் துதிக்கையை மழுவினால் துணித்தார்; அதற்கு முன்னும் இருமருங்கும் செல்லும் குத்துக் கோற்காரர் மூவரையும் யானை மேலுள்ள பாகர் இருவரையும் மழுவினால் வெட்டி வீழ்த்தி நின்றார்.

தமது பட்டத்து யானையும் பாகர் ஐவரும் பட்டு வீழ்ந்த செய்தியைக் கேட்டு வெகுண்ட புகழ்ச் சோழர் 'இது பகைவர் செயலாகும்' என்றெண்ணி, நால்வகைச் சேனைகளுடன் அவ்விடத்தை அடைந்தார்; யானையும் பாகரும் வெட்டப் பட்டிறந்த அவ்விடத்தே பகைவர் எவரையும் காணதவராய் இருகையானை போல் தனித்து நிற்கும் எறிபத்தராகிய சிவனடியாரைக் கண்டார். தம் யானையையும் பாகர்களையும் கொன்றவர் அங்கு நிற்கும் அடியவரே என அங்குள்ளார் கூறக்கேட்டறிந்த வேந்தர், 'சிவபெருமானுக்கு அன்பராம் பண்புடைய அடியார்கள் பிழைகண்டாலல்லது இவ்வாறு கொலைத்தண்டம் செய்யமாட்டார்கள். எனவே என்னுடைய யானையும் பாகர்களும் பிழை செய்திருத்தல் வேண்டும்' எனத் தம்முள்ளே எண்ணியவராய், தம்முடன் வந்த சேனைகளைப் பின்னே நிறுத்திவிட்டுக் குதிரையினின்று இறங்கி, 'மலைபோலும் யானையை இவ்வடியவர் நெருங்கிய நிலையில், அவ்யானையால் இவர்க்கு எத்தகைய தீங்கும் நேராது விட்ட தவப்பேறுடையேன், அம்பலவாணரடியார் இவ்வளவு வெகுளியை யடைதற்கு நேர்ந்த குற்றம் யாதோ? என்று அஞ்சி எறிபத்தரை வணங்கினார். எறிபத்தர், யானையின் சிவாபராதச் செயலையும் பாகர் விலக்காதிருந்ததனையும் எடுத்துரைத்தார். அதனையுணர்ந்த புகழ்ச் சோழர், 'சிவனடியார்களுக்குச் செய்த இப்பெருங்குற்றத்திற்கு இந்தத் தண்டனை போதாது; இக்குற்றத்திற்குக் காரணமாகிய என்னையும் கொல்லுதல் வேண்டும். ஆனால் மங்கலம் பொருந்திய மழுப்படையினாற்

கொல்வது மரபன்று. வாட்படையாகிய இதுவே என்னைக் கொல்லுதற்கு ஏற்ற கருவியாம்' என்று தமது உடைவாளை ஏற்றுக் கொள்ளும் படி எறிபத்தரிடம் நீட்டினார்.

அதுகண்ட எறிபத்தர், 'கெட்டேன், எல்லையற்ற புகழாளராகிய வேந்தர் பெருமான் சிவனடியார்பால் வைத்த அன்புக்கு அளவில்லாமையை யுணர்ந்தேன்' என்று எண்ணி, மன்னர் தந்த வாட்படையை வாங்க மாட்டாதவராய்த் தாம் வாங்காது விட்டால் மன்னர் அதனைக் கொண்டு தம்முயிரைத் துறந்து விடுவார் என்று அஞ்சித் தீங்கு நேராதபடி அதனை வாங்கிக்கொண்டார். அது கண்ட புகழ்ச் சோழர், அடியாரை வணங்கி 'இவ்வடியார் வாளினால் எனது குற்றத்தைத் தீர்க்கும் பேறு பெற்றேன்' என உவந்து நின்றார். அது கண்ட எறிபத்தர், "தமது பட்டத்து யானையும் பாகரும் என் மழுப்படையால் மடிந்தொழியவும் உடைவாளைத் தந்து, 'எனது குற்றத்தைப் போக்க என்னையும் கொல்லும், என்று வேண்டும் பேரன்புடைய இவர்க்கு யான் தீங்கு நினைத்தேன்' என்று மனம் வருந்தி, 'இவ்வாளினால் எனது உயிரை முடிப்பதே இனிச் செய்யத்தக்கது' என்று எண்ணி, வாட்படையினைத் தம் கழுத்திற் பூட்டி அரிதற்கு முற்பட்டார். அந்நிலையிற் புகழ்ச் சோழர், 'பெரியோர் செய்கை இருந்தவாறு இது, கெட்டேன்' என்று எதிரே விரைந்து சென்று வாளையும் கையையும் பிடித்துக் கொண்டார்.

அப்பொழுது சிவபெருமான் திருவருளால், 'யாவராலும் தொழத்தகும் பேரன்புடையவர்களே! உமது திருத்தொண்டின் பெருமையினை உலகத்தார்க்குப் புலப்படுத்தும் பொருட்டு இன்று வெகுளிமிக்க யானை பூக்குடலையைச் சிதறும்படி இறைவரருளால் நிகழ்ந்தது' என்று அங்கு ஓர் அருள்வாக்கு எழுந்தது. அதனுடனே பாகர்களுடன் யானையும் உயிர்பெற் றெழுந்தது. எறிபத்தர் வாட்படையை நெகிழவிட்டுப் புகழ்ச் சோழர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். வேந்தரும் வாட்படையைக் கீழே எறிந்து விட்டு எறிபத்தர் திருவடிகளைப் போற்றி நிலமிசை வீழ்ந்து இறைஞ்சினார். இருவரும் இறைவன் அருள்மொழியினை வியந்து போற்றினர். இறைவர் திருவருளால் சிவகாமியாண்டாரது பூக்கூடையில் முன்போல் தூய நறுமலர்கள் வந்து நிரம்பின. பாகர்கள் யானையை நடத்திக்கொண்டு மன்னரை யணுகினர். எறிபத்தர் புகழ்ச் சோழரை வணங்கி, 'அடியேன் உளங்களிப்ப இப்பட்டத்து யானைமேல் மகிழ்ந்து எழுந்தருளுதல் வேண்டும்' என்று வேண்டிக் கொண்டார். புகழ்ச் சோழர் எறிபத்தரை வணங்கி யானை மேலமர்ந்து சேனைகள் சூழ அரண்மனையை யடைந்தார். சிவகாமியாண்டார் திருப்பூங் கூடையைக் கொண்டு

இறைவர்க்குத் திருமாலை தொடுத்தணிதல் வேண்டித் திருக்கோயிலை யடைந்தார். எறிபத்த நாயனார் இவ்வாறு அடியார்களுக்கு இடர் நேரும்பொழுதெல்லாம் முற்பட்டுச் சென்று தமது அன்பின் மிக்க ஆண்மைத் திறத்தால் இடையூறகற்றித் திருக்கயிலையை யடைந்து சிவகணத்தார்க்குத் தலைவராக அமர்ந்தார்.

## ஏனாதிநாத நாயனார்

'ஏனாதிநாதன்றன் அடியார்க்கும் அடியேன்' எனப் போற்றப் பெற்ற இந்நாயனார், சோழநாட்டில் எயினனூரிலே சான்றார் குலத்தில் தோன்றியவர். தொன்மைத் திருநீற்றுத் தொண்டின் வழிபட்டில் நிலைத்து நின்ற இவர், அரசர்களுக்கு வாட்படைப் பயிற்சியளிக்கும் போர்த் தொழில் ஆசிரியராய் அத்தொழிலால் வரும் பொருள்வளங்களால் சிவனடியார்களை உபசரிக்கும் பேரன்பினராய் விளங்கினார். ஏனாதி என்பது சிறந்த படைத்தலைவர்களுக்கு அரசர் வழங்கும் பட்டமாகும். ஏனாதிநாதர் என இவர் அழைக்கப் பெறுதலால் இவர் சேனாதிபதிகளில் தலை சிறந்தவர் என மன்னனால் நன்கு மதிக்கப்பட்ட படைத்தலைவர் என்பது இனிது புலனாகும்.

ஏனாதிநாதர், வாட்படை பயிற்றும் ஆசிரியத் தொழிலை மேற்கொண்டு வாழும் காலத்துப் போர்ப்பயிற்சி பெற விரும்பிய பலரும் அவரையே சார்ந்து பயின்றமையால், அவரது தாயமுறையினனான அதிசூரன் என்பானுக்கு அத்தொழிலில் வருவாய் குறைவதாயிற்று. அதனால் ஏனாதிநாதர்பால் பொறாமையுற்ற அதிசூரன், 'வாள் கொண்ட தாயம் வலியாரே கொள்வது' என அவரைப் போருக்கு அறைகூவி யழைத்தான்; 'நாம் இருவரும் சேனைகளை அணிவகுத்துப் போர் செய்வோம். போரில் வென்றார் யாரோ அவரே வாள் பயிற்றும் உரிமையைக் கைக்கொள்ள வேண்டும்' என்றான். ஏனாதி நாதரும் அதற்கு இசைந்தார். இருவரிடையே நிகழ்ந்த வாட் போரில் அதிசூரன் தோற்றோடினான்.

தோற்றோடிய அதிசூரன், ஏனாதிநாதரை வஞ்சனையாற் கொல்ல எண்ணினான்; 'நம் இருவருக்குத் துணை வருவார் யாருமின்றி நாம் இருவர் மட்டும் நாளை விடியற்காலத்தே வேறோரிடத்திற் போர் செய்வோம், வாரும்' என்று ஒருவனைக் கொண்டு ஏனாதிநாதர்க்குச் சொல்லியனுப்பினான். அது கேட்ட ஏனாதிநாதர், சுற்றத்தார் யாரும் அறியாதபடி அவன் குறித்த போர்க்களத்திற் சென்று அவனுடைய வரவை எதிர்பார்த்து நின்றார். தீங்கு குறித்தழைத்த அதிசூரனாகிய தீயோன், 'திருநீறு தாங்கிய நெற்றியினாரை எவ்விடத்தும் கொல்லாத

இயல்புடையார் ஏனாதிநாதர்' என அறிந்து, முன் எப்பொழுதுமே திருநீறிடாத அவன், வெண்ணீறு நெற்றி விரவப்புறம் பூசி நெஞ்சத்தே வஞ்சனையாகிய கறுப்பினையுட் கொண்டு வாளும் கேடகமும் தாங்கித் தான் குறித்த இடத்திற்குப் போய் அங்கு நின்ற ஏனாதிநாதரைக் கண்டு அவரை அணுகும்வரை தனது நெற்றியைக் கேடகத்தால் மறைத்துக் கொண்டு அவருக்கு முன்னே முடுகி நடந்தான். ஏனாதிநாதர் சமயத் தெரிந்து அவனை எதிர்த்துப் பொருதற்கு முற்பட்ட அளவில், அதிசூரன் தன் முகத்தை மறைத்த கேடகத்தைச் சிறிது விலக்கினானாக அவனது நெற்றியிலே திருநீற்றினைக் கண்ணுற்றார் ஏனாதி நாதர். கண்ட பொழுதே 'கெட்டேன். இவர் சிவபெருமானுக்கு அடியவராகி விட்டார். ஆதலால் இவர்தம் உள்ளக் குறிப்பின் வழியே நிற்பேன்' என்று தம் கையிலுள்ள வாளையும் கேடகத்தையும் நீக்கக் கருதியவர், 'ஆயுதம் இல்லாதவரைக் கொன்றார்' என்றபழி இவரை அடையாதிருத்தல் வேண்டும்' என்று எண்ணி, வாளையும் பலகையையும் கையிற் பற்றியபடியே போர் செய்வார்போல் வாளா எதிர்நின்றார். அந்நிலையில் முன்னே நின்ற தீவினையாளனாகிய அதிசூரனும் கொலை செய்ய வேண்டும் என்ற தனது எண்ணத்தினை எளிதில் நிறைவேற்றிக் கொண்டான். சிவபெருமான் ஏனாதிநாதர்க்கு எதிர்தோன்றி, பகைவனுடைய கையிலுள்ள வாட் படையினால் பாசம் அறுத்து உயர்ந்த அன்பராகிய ஏனாதிநாதரை என்றும் உடன் பிரியாப் பேறளித்து மறைந் தருளினார்.

## கண்ணப்ப நாயனார்

"கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க்கடியேன்" எனப் போற்றப் பெற்ற இந்நாயனார், பொத்தப்பி நாட்டினைச் சார்ந்த உடுப்பூரிலே வேடர் தலைவனாக விளங்கிய நாகன் என்பானுக்கு அவன் மனைவி தத்தை என்பவள்பால் மகவாகத் தோன்றியவர். இவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் திண்ணனார் என்பதாகும். மலையுறை மக்கள் வாழ்த்தச் சிலை பயின்று கலைவளர் திங்களே போற் பதினாறாண்டு நிரம்பிய திண்ணனார், முதுமையால் தளர்ச்சியுற்ற தந்தை பணித்த வண்ணம் வேடர்குலக் காவல் பூண்டார். வேடர்கள் சூழ வேட்டைக்குச் சென்று காட்டிலுள்ள கொடிய விலங்குகளை எய்து கொன்றார். காட்டில் விரித்த வலையினை அறுத்து ஒடிய வலிய பன்றியொன்றைத் துரத்திச் சென்று குற்றுடை வாளால் இருதுணிபடக் குத்திக்கொன்ற திண்ணனார், களைப்புற்றவராய் நீர் வேட்கையால் பொன் முகலியாற்றை அடைந்தார்; எதிரே தோன்றும் காளத்தி மலையினைக் கண்டார். அம்மலைமேல் 'குடுமித்தேவர் இருப்பர்

கும்பிடலாம்' என்ற நாணன் வழிகாட்டிச் செல்ல மலைமீதேறிக் குடுமித் தேவராகிய ஏகநாயகரைக் கண்டார்; பேருவகையால் ஓடிச்சென்று தழுவிக் கொண்டார். இறைவரது அருள் நோக்கத்தால் அன்புருவம் பெற்ற திண்ணனார், அண்ணலைப் பிரியமாட்டாதவராய், 'இவர்தமக்கு இறைச்சி கொண்டு இங்கு எய்துதல் வேண்டும்' என்று மலையினின்றும் இறங்கிப் பொன் முகலியின் கரையேறிக் காடன் என்பான் கொத்தி வைத்திருந்த பன்றி யிறைச்சியைத் தீயிலிட்டுக் காய்ச்சிப் பல்லினால் அதுக்கிச் சுவையும் பதமும் அறிந்து அவ்வூன முதத்தை ஒருகையிலும் வில்லை மற்றொருகையிலும் ஏந்தி, இறைவர்க்குரிய திருமஞ்சன நன்னீரைத் தமது வாயிலும் திருப்பள்ளித்தாமமாகிய பூவினைத் தமது தலையிலும் கொண்டு, காளத்தி மலைமீது ஏறிச்சென்றார். சென்றவர், காளத்தி நாதர் முடிமீது அணியப் பெற்ற பச்சிலைகளைச் செருப்பணிந்த பாதங்களால் விருப்புறத்தள்ளித் தம்வாயிலுள்ள நன்னீரைத் திரு மஞ்சனமாக ஆட்டித் தலையிலுள்ள மலர்களை இறைவர்க்குச் சாத்திப் பன்றி யிறைச்சியினைத் திருவமுதாகப் படைத்து மகிழ்ந்தார்.

இவ்வாறு காளத்தியிறைவர்பாற் பேரன்புடையராய திண்ணனார், தமது பெற்றோர் அழைக்கவும் செல்லாது, அல்லும் பகலும் காளத்தியிறைவரைப் பிரியாது வழிபட்டு நின்றார். திண்ணனாரது பேரன்பின் திறத்தைச் சிவகோசரியார்க்கு அறிவுறுத்தத் திருவுளங்கொண்ட காளத்தியிறைவர், ஒருநாள் தமது வலக்கண்ணில் உதிரம் பெருகி ஒழுகும்படி செய்தார். அது கண்டு 'என் அத்தனுக்கு அடுத்த தென்னோ' எனச் சிந்தை கலங்கிய திண்ணனார், எங்கும் சென்று பச்சிலைகளாகிய நன்மருந்தினைத் தேடிக் கொணர்ந்து பிழிந்தும் உதிரம் நில்லாமையாற் பெரிதும் வருந்தினார். "உற்ற நோய் தீர்ப்பது ஊனுக்கு ஊன்" என்னும் பழமொழி நினைவுக்கு வந்தமையால், தமது வலக்கண்ணைப் பிடுங்கிச் சிவலிங்கத் திருவுருவில் அப்பினார். குருதி நின்றது. அந்நிலையில் இறைவரது இடத்திருக் கண்ணில் குருதி வழியத் தொடங்கியது. மருந்து கைக்கண்ட திண்ணனார். இறைவரது குருதி சோர் கண்ணில் தமது மற்றொரு கண்ணையும் அப்ப எண்ணினார். இறைவரது கண்ணின் இடமறியச் செருப்பணிந்த தம்காலை அவ்விடத்தில் ஊன்றிக் கொண்டு தமது இடக்கண்ணையும் அம்பினால் தோண்ட முற்பட்டார். அந்நிலையில் காளத்தியிறைவர், "நில்லுகண்ணப்ப" என மும்முறைகூறித் தம் திருக்கையினால் திண்ணனார் கையைப் பிடித்துக் கொண்டு, 'மாறிலாப் பேரன்பனே என் வலப்பக்கத்தில் நிற்பாயாக' என்று திருவாய் மலர்ந்து நிலைபெற்ற பேருளைப் புரிந்தார் என்பது வரலாறு. இவ்வரலாறு பதினொராந்

*திருமுறையில் நக்கீரதேவர் பாடிய திருக்கண்ணப்ப தேவர் திருமறத்திலும், கல்லாட தேவர் பாடிய திருமறத்திலும், விரித்துரைக்கப் பெற்றுள்ளமை முன்னர் விளக்கப் பெற்றது.*

*வேடர் குலைத்தலைவராம் திண்ணனார், காளத்தி யிறைவரைக்கண்டு வழிபட்டு ஆராத பேரன்பினால் தம் கண்ணையிடந்து அப்பிக் கண்ணப்பர் எனப்போற்றப் பெறும் பெருஞ்சிறப்பினைப் பெற்ற அருள் நிகழ்ச்சியினை அரனருள் பெற்ற திருமுறையாசிரியர்கள் பலரும் உளமுவந்து போற்றியுள்ளார்கள்.*

**"வாய்கலசமாக வழிபாடு செயும் வேடன்மலராகு நயனம்**
**காய்கணையி னாலிடந் தீசனடி கூடுகாளத்திமலையே"**

**"கானலைக்கும் மவன் கண்ணிடந்தப்ப நீள்**
**வானலைக்குந் தவத் தேவுவைத் தானிடம்"**

*என ஆளுடைய பிள்ளையாரும்,*

**"காப்பதோர் வில்லும் அம்பும் கையுடை யிறைச்சிப்பாரம்**
**தோற்பெருஞ் செருப்புத்தொட்டுத் தூயவாய்க் கலசம் ஆட்டித்**
**தீப்பெருங் கண்கள் செய்ய குருதிநீ ரொழுகத்தன்கண்**
**கோப்பதும் பற்றிக் கொண்டார் குறுக்கை வீரட்டனாரே"**

(4-49-7)

**'குவப்பெருந் தடக்கை வேடன் கொடுஞ்சிலை யிறைச்சிப்பாரம்**
**துவர்ப்பெருஞ் செருப்பால் நீக்கித் தூயவாய்க் கலசம் ஆட்ட**
**உவப்பெருஞ் குருதிசோர ஒருகணை யிடந்தங்கப்பத்**
**தவப்பெருந் தேவு செய்தார் சாய்க்காடு மேவினாரே'** (4-65-8)

**'கண்ணப்பன் கண்ணப்பக் கண்டுகந்தார்'**

*என ஆளுடைய அரசரும்,*

**'இடந்த கண்ணப்பன்'**

**'கணைகொள் கண்ணப்பன்'**

*என ஆளுடைய நம்பியும்,*

**'கண்ணப்ப னொப்பதோர் அன்பின்மை கண்டபின்**
**என்னப்பன் என்னொப்பில் என்னையும் ஆட்கொண்டருளி**
**வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்**
**சுண்ணப்பொன் நீற்றற்கே சென்றூ தாய் கோத்தும்பீ'**

*என ஆளுடைய அடிகளும் கண்ணப்பரது அன்பின் பெருமையினை உளமுருகிப் போற்றியுள்ளமை இங்கு நினைத்தற் குரியதாகும். காளத்தி யிறைவரைக் கண்ட ஆறே நாளில், தன்பரிசும் வினையிரண்டும் சாரும்மலம் மூன்றும் அற*

அன்புருவாகித் தம் கண்ணை இடந்து அப்பிய கண்ணப்பரது செயற்கருஞ் செய்கையினை,

**'நாளாறிற் கண்ணிடந்தப்ப வல்லேனல்லன்'**

எனப் பின்வந்த சான்றோர் நெஞ்சம் நெக்குருகிப் பாராட்டியுள்ளமையும் இங்கு நினைக்கத் தகுவதாகும்.

## குங்குலியக் கலய நாயனார்

காலனைக் காய்ந்த பெருமான் வீற்றிருந்தருளும் திருக்கடவூரிலே அந்தணர் குலத்தில் தோன்றியவர் குங்குலியக் கலயநாயனார். சிவனடி பரவி உருகிய அன்பு கூர்ந்த சிந்தையராகிய இவர் திருக்கடவூர்த் திருக்கோயிலில் நாளும் குங்குலியத் தூபம் இடும் பணியினைத் தமது தலையாய தொண்டாகக் கொண்டிருந்தார். இறைவனருளால் இவர்க்கு வறுமை வந்துற்றது. அவ்வறுமை நிலையிலும் செம்மையுடைய சிந்தைய ராகிய கலயனார், தமக்குரிய நிலம் முதலிய உடைமைகளை விற்றுத் தாம் செய்தற்குரிய குங்குலியப் பணியைத் தவறாது செய்து வந்தார். மக்களும் சுற்றமும் பசியால் வருந்தினர். அந்நிலையில் கலயனார் மனைவியார், கணவனார் கையில் மங்கல நாணாகிய தாலியைக் கொடுத்து 'நெற்கொள்ளும்' என்றார். தாலியைப் பெற்று நெல் வாங்கச் சென்ற கலயனார், வழி யெதிரே குங்குலியப் பொதி கொண்டு வந்த வணிகனை நோக்கி, 'இப்பொதி என்கொல்' என வினவினார். வணிகனும் 'இது குங்குலியப் பொதி' என்றான். அதுகேட்டு மகிழ்ந்த கலயனார், 'பொன்தரத்தாரும்' என்று அவனிடம் தாலியைத்தந்தார். அதனைப் பெற்றுக் கொண்டு வணிகன் குங்குலியப் பொதியைத் தந்தான், அதனைப் பெற்றுக் கொண்ட கலயனார், விரைந்து கடவூர்த் திருவீரட்டானத் திருக்கோயிற் பண்ட ாரத்திலே அதனை ஒப்படைத்துவிட்டு இறைவனருளைப் போற்றி அத்திருக் கோயிலிலே இருந்தார்.

இறைவன பணியினால் இருநிதிக் கிழவனாகிய குபேரன், கலயனார் திருமனையில் பொன்பயில் குவையும் நெல்லும் பொருவில் பல்வளனும் பொங்க மன்பெருஞ் செல்வமாக்கி வைத்தனன். அன்று நள்ளிரவில் இறைவன் அருள்புரியத் துயிலுணர்ந்தெழுந்த கலயனார் மனைவியார், வீட்டிலுள்ள பெருஞ் செல்வத்தினைக்கண்டு 'எம்பிரான் அருளாம்' என்று இருகரம் குவித்துப் போற்றித் தம் பெருங்கணவனார்க்குத் திருவமுதமைக்கச் சார்ந்தார். வீரட்டப்பெருமான், கலயனார் அறியும்படி 'சால நீ பசித்தாய். நின் மனையில் நண்ணிப் பாலின் இன்னடிசில் உண்டி துன்பந் தவிர்க' எனப் பணித்தருளினார்.

இறைவரது அருள் மறுத்திருக்க அஞ்சிய கலயநாயனார், தமது வீட்டினையடைந்து அங்குள்ள பெருஞ் செல்வத்தைக் கண்டு தம்மனைவியாரை நோக்கி, 'வில்லொத்த நுதலாய்! இந்த விளைவெலாம் என்கொல்?' என வினவ, அவரும் 'எம்மான் அருள்தர வந்தது' என்றார். இறைவன் அருளிய பெருஞ் செல்வத்தினை நோக்கி வியந்த கலயனார், வறுமைத்துயர் தவிர்ந்து அப்பெருஞ் செல்வத்தைக் கொண்டு சிவனடியார் களுக்கு இன்னமுதருத்தி இனிது வாழ்ந்தார்.

அந்நிலையில், திருப்பனந்தாள் தாடகை யீச்சரத்துச் சிவலிங்கத் திருமேனியின் சாய்வு நீக்கிப் பெருமானைச் செவ்விதின் நிறுத்தி வழிபட எண்ணிய மன்னன் தன் பெருஞ்சேனைகளையும் யானைகளையும் பூட்டி இழுப்பித்தும் நேர்நில்லாமையாற் பெரிதும் வருந்திய செய்தியைக் கேள்வியுற்றார். மன்னது துயரகற்றிச் சிவலிங்கத் திருமேனியைச் செவ்விதின் நிறுத்தி வழிபட வெண்ணிய கலயனார், திருப்பனந்தாளை அடைந்தார். சேனையும் யானைகளும் வலித்திழுக்கவும் திருமேனி எழாமை நோக்கி, 'யானும் இவ்விளைப்புற்று எய்க்கும் இதுபெற வேண்டும்' என்ற உள்ளத்தராய்ச் சிவலிங்கத் திருமேனியிற் சேர்க்கப் பெற்ற பூங்கச்சினைத் தமது கழுத்திற் பூட்டி வருந்தி யிழுத்தார். அவரது வருத்தம் நீங்கத் திருப்பனந்தாள் இறைவர் சாய்வு நீங்கி நிமிர்ந்தருளினார். அது கண்டு மகிழ்ந்த கலயனார், இறைவன் திருவருளைப் போற்றித் திருக்கடவூரை யடைந்து தாம் மேற் கொண்ட திருப்பணியினைச் செய்திருந்தார்.

அக்காலத்தில் ஆளுடைய பிள்ளையாரும் திருநாவுக் கரசரும் திருக்கடவூர்க்கு எழுந்தருளினர். குங்குலியக் கலயனார் மாறிலா மகிழ்ச்சி பொங்க அவ்விரு பெருமக்களையும் அடியார் திருக்கூட்டத்துடன் எதிர் கொண்டு போற்றித் தம் மனையில் திருவமுது செய்வித்து அவர்களது அருள் பெற்று மகிழ்ந்தார். பின்பு திருப்பணி பல புரிந்து சிவபத நீழலிற் சேர்ந்து இன்புற்றார்.

## மானக்கஞ்சாற நாயனார்

கஞ்சாறு என்னும் ஊரில் வேளாண் மரபில் அரசர் சேனாபதியாம் குடிவிளங்கத் தோன்றியவர் மானக்கஞ்சாறனார். மெய்ப்பொருளை அறிந்துணர்ந்த பெருஞ்செல்வராகிய இவர், சிவனடியார்க்கு ஏவல் செய்யும் இயல்பினராய், அடியார்கள் குறிப்பறிந்து அவர்கள் வேண்டுவன கொடுப்பவர். இவருக்கு இறைவனருளால் ஒரு பெண் மகவு பிறந்தது. அப்பெண் வளர்ந்து மணப்பருவம் எய்திய நிலையில் சிவநேசச் செல்வராகிய ஏயர்கோன் கலிக்காமனார்க்கு மகட்பேசப் பெரியோர்கள்

வந்தார்கள். வந்த மூதறிஞர்க்கு மானக் கஞ்சாறனார் தமது இசைவினைத் தெரிவித்தார். திருமணம் உறுதி செய்யப்பெற்றது. கஞ்சாறூரில் மணநாளில் வெண்முளைப் பெய்து மண அணி செய்யப்பெற்றன. மணமகனாராகிய ஏயர்கோன் கலிக்காமர் மண முரசியம்பக் கஞ்சாறு நகரின் அருகே வந்தணைந்தார்.

அந்நிலையில், சிவபெருமான் மானக்கஞ்சாறரது அடியார் பத்தியினைப் புலப்படுத்தத் திருவுளங்கொண்டு, மாவிரத வேடமுடைய அடியவராகக் கஞ்சாறரது இல்லத்திற்கு எழுந்தருளினார். மாவிரத முனிவரைக் கண்ட மானக்கஞ்சாறர் எழுந்து எதிர் சென்று உருகிய அன்புடன் பணிந்தார். வந்த அடியவர், 'இங்கு நிகழும் மங்கலச் செயல் யாது? என வினவினார், 'அடியேன் பெற்ற மகளது திருமணம்' என மறுமொழி பகர்ந்தார் கஞ்சாறனார். அது கேட்ட அடியவர், 'நுமக்கு மங்கல முண்டாகுக' என வாழ்த்தினார். கஞ்சாறனார், திருமணக்கோலம் புனைந்த தம் மகளை அழைத்து வந்து சிவனடியாரை வணங்கச்செய்தார். பரவ அடித்தலம் கொடுப்பாராகிய அவ்வடியவர், மஞ்சுதழைத்தென வளர்ந்த மணமகளது மலர்க்கூந்தலை நோக்கி, 'இவள்தன் கூந்தல் நமக்குப் பஞ்சவடிக்கு ஆம்' என்றார். அதுகேட்ட கஞ்சாறர், தம் மகள் கூந்தலை உடைவாளால் அடியோடு அரிந்து அடியவரிடம் கொடுத்தார். அடியாரும் அதனை வாங்குவார் போல் மறைந்து விசும்பிலே உமையம்மையாருடன் விடைமேல் தோன்றி. 'நம்பால் உனக்குள்ள பேரன்பினை இச்செழும் புவனங்களில் ஏறச் செய்தோம்' என்று மானக் கஞ்சாறர்க்கு அருள் செய்து மறைந்தருளினார்.

அங்கு வந்தணைந்த ஏயர்கோன் கலிக்காமனாரகிய மணமகனார், அவ்வியப்புடைய நிகழ்ச்சியைக் கேள்வியுற்று உளமுவந்தார்; அத்தெய்வக் காட்சியைத் தாம் காணாமற் போனதற்கு மனந்தளர்ந்தார்; இறைவர் அருளிய திருவார்த்தையின் திறங்கேட்டு இடர் நீங்கினார்; வானவர் நாயகர் அருளால் மலர் புனைந்த கூந்தல் வளரப்பெற்ற பூங்கொடி போல்வாளாகிய நங்கையை உலகெலாம் போற்றத் திருமணம் புணர்ந்து தம்முடைய மூதூர்க்குச் சென்றணைந்தார்.

## அரிவாட்டாய நாயனார்

சோழ நாட்டின் கணமங்கலம் என்னும் பதியில் வேளாண்குடியில் தோன்றியவர் தாயனர் என்னும் இந்நாயனாராவர். சிவபெருமான் திருவடிகளில் தொடர்ந்த சிந்தையினராகிய இவர், சிவபெருமானுக்குச் செந்நெல்லும் செங்கீரையும் மாவடுவும் நாள் தோறும் திருவமுது செய்விக்கும்

திருப்பணியை மேற்கொண்டொழுகினார். இந்த நன்னிலை இன்னல் வந்தெய்திய காலத்தும் சிந்தை நீங்காச் செயலின் உவந்திடத் திருவுளங்கொண்ட இறைவர், தாயனாரது பெருஞ்செல்வம் குறையுமாறு செய்தருளினார். அவ்வறுமை நிலையிலும் தாயனார் கூலிக்கு நெல்லறுத்துச் செந்நெலெல்லாம் சிவனுக்குரிய என்று திருவமுது செய்வித்தார். கூலிக்குக் கிடைத்த நெல்லெல்லாம் செந்நெல்லேயாக அமைந்தமையால் அந்நெல்லைத் தம் குடும்பத்துக்குப் பயன்படுத்தாமல், தம் மனைவியார் அடகு கொய்து அமைத்த உணவினையே தாம் உண்டு இத்திருப்பணியைத் தடையின்றிச் செய்துவந்தார்.

தாயனார், என்றும் போல் ஒருநாள் செந்நெல்லரிசி செங்கீரை மாவடு இவற்றைக்கூடையிற் சுமந்தவராய்த் தம் மனைவியார் இறைவன் திருமஞ்சனத்துக் கேற்ற பஞ்ச கௌவியம் கொண்டு பின்னேவர, முன்சென்றார். அங்ஙனம் செல்லும் நாயனார், கால் இடறிக் கீழே விழப் பின் வந்த மனைவியார் மட்கலத்துடன் வருந்தி வீழ்பவர் கையினால் அணைத்துப் பிடித்தும் சிவனுக்கு அமுதாகிய செந்நெல் முதலிய அனைத்தும் வயல் வெடிப்பிற் சிதறி வீழ்ந்தன. அந்நிலையில் தாயனார், 'இறைவன் திருவமுது செய்தருளும் பேறுபெற்றிலேன்' என்று வருந்தித் தம் கையிலுள்ள அரிவாளால் தமது கழுத்தினை அரியத் தொடங்கினார். அந்நிலையில், அவரது கையினைப் பற்றிப் பிடித்து அம்பலத்தாடும் அண்ணலது திருக்கையும், மாவடுவினை அமுது செய்யும் நிலையில் விடேல் விடேல் என்னும் ஓசையும், அவ்வயல் வெடிப்பினின்றும் ஒருசேர எழுந்தன. இறைவனது அருட்பெருங் கருணைநோக்கி அஞ்சலி கூப்பி நின்ற தாயனார், 'அடியேனன் அறிவிலாமை கண்டும் என் அடிமை வேண்டிப் படிமிசைக் கமரில் வந்து இங்கு அமுதுசெய்பரனே போற்றி, என்று இறைவனைப் பரவிப் போற்றினார். அந்நிலையிற் சிவபெருமான் இடபவாகனராய்த் தோன்றி, நீ புரிந்த செய்கை நன்று, நின் மனைவியுடன் சிவலோகத்தில் என்றும் வாழ்வாயாக, என்று அருள் செய்து மறைந்தருளினார்.

'இறைவர் அமுது செய்யப் பெற்றிலேன்' என்ற ஏக்கத்தால் தம் கழுத்தினை அரிவாள் பூட்டி அரிதலால் தாயனாராகிய இவர் 'அரிவாள் தாயர்' என அழைக்கப் பெற்றார்.

## ஆனாய நாயனார்

மேல் மழநாடு என்னும் நீர் நாட்டிலே மங்கலம் என்னும் மூதூரிலே ஆயர்குலத்தில் தோன்றியவர் ஆறாயர். மனமொழி மெய்களால் சிவபெருமானை வழிபடுமியல்பினராகிய அவர், ஆனிரைகளை அன்புடன் மேய்த்து வருதலைத் தொழிலாகக்

கொண்டவர், தீய விலங்குகளால் வரும் இடர் நீக்கிப் பசுக்களைப் புற்கள் வளர்ந்த நிலத்தில் மேய்த்துவரும் ஆனாயர், சிவனடியில் அன்பு மீதூர்ந்த சிந்தையுடன் இன்னிசைத் திறத்தில் வல்லவராய் இறைவனது திருவைந்தெழுத்தினை வேய்ங்குழலில் வைத்து வாசித்து எவ்வுயிரும் உளமுருக இசையமுதளித்தலைத் தமது பொழுது போக்காகக் கொண்டிருந்தார். கார் காலத்திலே ஒரு நாள் ஆயர்கள் பசு நிரைகளைச் சூழ்ந்துகொண்டு செல்ல, ஆனாயர் கையிலே கோலும் வேய்ங் குழலும் கொண்டு நிரைகாத்தற்குக் காட்டினை அடைந்தார். அப்பொழுது அங்குக் கொன்றை மரமானது நீண்ட பூங்கொத்துக்களையுடையதாய்த் தாழ்சடைக் கடவுளாகிய சிவபெருமானை யொத்துப் பொலிவுற்றுத் தோன்றியது. அதனைக்கண்டு இறைவன்பால் உருகிய உள்ளத்தினராகிய ஆனாயர், நறுங் கொன்றையினை நேர்நோக்கி நின்று, அன்பூறி மிசைப் பொங்கும் அமுத இசைக் குழலாகிய வேய்ங் குழலில் இறைவனது திருவைந் தெழுத்தினை இசை நூல் முறைப்படி இனிமையுடன் வாசித்தார். அவரது வேய்ங் குழலிலிருந்து வெளிப்பட்ட இசை வெள்ளமானது எவ்வகைப்பட்ட உயிர்களின் செவியிலும் கற்பகத்தருவின் விளைதேனைத் தெள்ளமுதினுடன் கலந்து வார்த்தாற் போன்று புகுந்தது. ஆனிரைகள் அறுகருந்தி அசை விடாமல் அவரை அணைந்து நின்றன. பால் குடித்துக் கொண்டு நின்ற கன்றுகள் குடித்தலை மறந்து இசையில் ஈடுபட்டன. எருதுகளும் மான் முதலிய காட்டு விலங்குகளும் மயிர் சிலிர்த்து வந்தணைந்தன. ஆடுகின்ற மயிற் கூட்டங்களும் ஆடுதலொழிந்து அவர் பக்கத்தை அடைந்தன. பறவைகள் இசையில் திளைத்து அவரருகே வந்தன. நிரை மேய்க்கும் இடையர்கள் எல்லாரும் தம் தொழிலை மறந்து இசையினைக் கேட்டு நின்றார்கள். நாகலோகத்தார், வரையர மகளிர், சாரணர், கின்னரர், தேவர் முதலிய யாவரும் ஒருங்கு வந்து ஆனாயரது வேய்ங் குழலின் ஏழிசையமுதம் செவிமடுத்துப் பருகினர். பிறரை வருத்தும் வலியவர்களும் பிறரால் துன்புறுத்தப்படும் மெலியவர்களும் இசையில் வயப்பட்டு ஒத்த உணர்வினரானமையால், பாம்புகள் பயமின்றி மயில்களின் மீது மருண்டு விழும்; சிங்கமும் யானையும் ஒருங்கே கூடிவரும்; புல்லருந்திய வாயினவாகிய மான்கள் புலியின் பக்கத்திலே செல்லும்; மரக்கொம்புகள் சலியாதிருந்தன. இவ்வாறு நிற்பன நடப்பனவாகிய எல்லா உயிர்களும் ஆனாயநாயனாரது வேய்ங் குழலிசையைக்கேட்டு இசைமயமாயின. மெய்யன்பர் மனத்து அன்பின் விளைந்த இசையானது வையந்தன்னையும் மறைத்து வானந் தன்மயமாக்கிப் பொதுவில் நடமாடும் ஐயனாகிய இறைவன் திருச்செவியின் அருகு அணையப் பெருகியது. ஆனாயர் குழலோசை கேட்டருளிய இசையுருவாகிய இறைவன்,

உமையம்மையாருடன் விடைமீதமர்ந்து விசும்பின் வழியே வந்து தோன்றி ஆனாய நாயனாரை அருளுடன் நோக்கி, 'அன்பனே, செம்மனச் செல்வராய நம்முடைய அடியார்கள் நினது வேய்ங் குழலிசையைக் கேட்டு மகிழ இவ்விடத்து வாசித்து நின்ற இந்நிலையிலேயே நம் மிடத்துக்கு வருவாயாக' என்று திருவாய்மலர்ந்தருளினார். ஆனாயநாயனாரும் வேய்ங்குழல் வாசித்துக் கொண்டு இசை விரும்புங் கூத்தனாருடன் சென்றணைந்தார்.

## மூர்த்தி நாயனார்

சீர்மன்னு செல்வக்குடி மன்னிய சிறப்பின் ஓங்கும் பாண்டி நாட்டிலே ஞாலமளந்த மேன்மைத் தெய்வத் தமிழ் வளரும் மதுரையம்பதியிலே வணிகர் குடியில் தோன்றியவர் மூர்த்தி நாயனார். எப்பற்றினையும் அறுத்து இறைவன் திருவடிகளே மெய்ப்பற்றெனப் பற்றிய இப்பெருந்தகையார், திருவாலவாயில் எழுந்தருளிய சொக்கலிங்கப் பெருமானுக்கு நாளும் திருமெய்ப் பூச்சுக்குச் சந்தனம் அரைத்துத் தருதலைத் தமது சிந்தைக்கினிய திருப்பணியாகக் கொண்டு செய்துவந்தார்.

அக்காலத்தில் வடுகக்கருநாடர் மன்னர், படையெடுத்து வந்து பாண்டி நாட்டைக் கைப்பற்றி அந்நாட்டின் அரசனாயினான். சமண சமயச் சார்புடையனாகிய அவன், சமணர் சொற் கேட்டுச் சிவனடியார்களது திருத்தொண்டுக்கு இடர்கள் பல செய்தான். அவ்விடர் நிலையிலும் மூர்த்தி நாயனார் ஆலவாய்ப் பெருமானுக்குச் சந்தனக் காப்பணிதலாகிய தமது திருத்தொண்டினை விடாது செய்து வந்தார். மன்னன் அவரது திருப்பணிக்குத் தடையாக அவர்க்கு எங்குஞ் சந்தனக் கட்டை கொடுக்காதபடி தடுத்தனன். எங்குஞ் சந்தனக் கட்டையைத் தேடிப் பெறாது சிந்தைநொந்த மூர்த்தியார், 'இப்பாண்டி நாடு கொடுங்கோல் மன்னனாகிய இவன் இறந்தொழியத் திருநீற்றுச் சார்புடைய செங்கோல் வேந்தரால் ஆளப்பெறுவது சார்புடைய செங்கோல் வேந்தரால் ஆளப்பெறுவது எப்பொழுது?" என்று ஏங்கிப் பகல் முழுதும் சந்தனக் கட்டைதேடி அலுத்துப் பின்பு திருவாலவாய்த் திருக்கோயிலை யடைந்தார்; 'இறைவன் திருமெய்ப் பூச்சுக்குரிய சந்தனக் கட்டைக்கு முட்டு வந்தாலும் அதனைக் கல்லிலிட்டுத் தேய்க்கும் கைக்கு முட்டுப் பாடில்லை' என்று சந்தனக் கல்லிலே தமது முழங்கையை வைத்து, தோலும் நரம்பும் எலும்பும் தேய்ந்து குறையும் படி தேய்ப்பாராயினார். அந்நிலையில் ஆலவாயிறைவர் திருவருளால் 'அன்பனே! நீ என்பால் வைத்த அன்பின் உறுதிப்பாட்டால் இத்தகைய செய்கையைச் செய்யற்க. உனக்கு இடுக்கண் செய்த கொடுங்கோல்

மன்னன் பெற்ற நாடு முழுதும் நீயே கைக்கொண்டு அவனால் இந்நாட்டிற்கு நேர்ந்த கொடுமைகள் எல்லாவற்றையும் நீக்கிக் காத்துப் பின்பு உன் திருப்பணியைச் செய்து நமது சிவலோகத்தை அடைவாயாக' என்றதோர் அருள்வாக்கு எழுந்தது. இவ்வண்ணம் எழுந்த அருள்மொழியைச் செவிமடுத்த மூர்த்தி நாயனார், அஞ்சித் தமது கையைத் தேய்த்தலை நிறுத்தினார். அவரது கையானது தேய்ந்த புண் ஊறு தீர்ந்து நலம்பெற்றது. அந்நாள் இரவில் அமண்சார்பினனான கருநாடர் மன்னன் இறந்து, சிவனடியார்களுக்கு இடர் விளைத்ததன் காரணமாகக் கொடிய நரகத்தை யடைந்தான். மறுநாள் விடியற் காலை அமைச்சர்கள் கூடி அரசனுக்கு இறுதிக் கடன் செய்தனர். அவனுக்கு மைந்தர் இல்லாமையால் வேறொருவரை அரசனாக நியமிக்க எண்ணினர்; "யானையைக் கண்கட்டி விட்டால் அந்த யானை எவரை எடுத்து வருகிறதோ அவரே இந்நாட்டின் வேந்தராவார்" என்று கொண்டு பட்டத்து யானையை அருச்சித்து 'நீ இந்த நாட்டை ஆளுதற்குவல்ல ஒருவரை ஏந்திக்கொண்டுவா" என்று சொல்லித் துணியினைக்கொண்டு கண்ணைக்கட்டி விடுத்தனர். அந்த யானை மதுரை நகர வீதிகளிலெல்லாம் திரிந்து சென்று திருவலாலவாய்த் திருக்கோயிலின் கோபுர வாயிலின் முன் சென்றது. முதல் நாள் இரவில் ஆலவாயிறைவரது அருள் மொழியினைச் செவிமடுத்து மனத்துயரம் நீங்கியிருந்த மூர்த்தி நாயனார், 'எம்பெருமானது திருவருள் இதுவானால் இந்நாட்டினையாளும் தொழிலை மேற்கொள்வேன்' என்று திருக்கோயிற் புறத்திலே நின்றார். யானையானது அவர் திருமுன்னே சென்று தாழ்ந்து அவரைத் தன் முதுகின்மேல் ஏற்றிக்கொண்டது. அதுகண்ட அமைச்சர்கள் மூர்த்தியாரை வணங்கி யானையின் முதுகினின்றும் இறக்கி அழைத்துச் சென்று முடிசூட்டு விழாவிற்கு ஏற்றன செய்யத் தொடங்கினார்கள். அதுகண்ட மூர்த்தியார் அமைச்சர்களை நோக்கி 'அமண் சமயம் நீங்கிச் சைவம் ஓங்கில் இந்நாட்டினை அரசு புரிதற்கு உடன்படுவேன்' என்று கூறினார். அமைச்சர்களும் அவரது ஆணைக்கு இசைந்து நடப்பதாகக் கூறி வணங்கி நின்றார்கள். பின்பு மூர்த்திநாயனார் அமைச்சர்களை நோக்கி 'யான் அரசு புரிவேனாகில் திருநீறே எனக்குச் செய்யும் அபிஷேகத் திரவியமாகவும் உருத்திராக்கமே பூணும் அணிகலமாகவும் சடைமுடியே மணிமுடியாகவும் ஆதல் வேண்டும்' என்றுகூற, அமைச்சர்களும் அவர் கருத்திற்கிசைந்து முடிசூட்டு விழாவுக்கு ஆவன செய்தார்கள். நற்றவ வேந்தராகிய மூர்த்தியார், திருவாலவாயிறைவரைச் சென்று வணங்கி யானைமீது உலாப் போந்து நிலவுந்திருநீற்று நெறித்துறை நீடுவாழ உலகெங்கும் நிரம்பிய சைவம் உயர்ந்து விளங்கத் திருநீறு கண்டிகை சடைமுடி

ஆகிய மூவகைச் சிவ சின்னங்களுடன் தவவேந்தராகப் பாண்டி நாட்டினை அருள் ஆட்சி புரிந்திருந்து பின்னர் இறைவன் திருவடி நீழலில் என்றும் பிரியாதுடனுறையும் பெருவாழ்வு பெற்றார். இங்ஙனம் மூர்த்தி நாயனாராகிய இப்பெருந்தகையார், திருநீறு கண்டிகை சடைமுடியாகிய மூவகைச் சிவசின்னங்களுடன் அரசு புரிந்தமையால் 'மும்மையால் உலகாண்ட மூர்த்திக்கும் அடியேன்' என நம்பியாரூரராற் போற்றப் பெறுவரராயினர்.

## முருக நாயனார்

சோழ நாட்டிற் பொய்கை சூழந்த திருப்புகலூரில் அந்தணர் மரபில் தோன்றியவர் முருக நாயனார். ஞானவரம்பின் தலைநின்ற இப்பெருந்தகையார், இறைவன் திருவடிக்கீழ் ஊனமின்றி நிறை அன்பால் உருகும் மனத்தார். நாள் தோறும் விடியற் காலையிலெழுந்து நீரில் மூழ்கிக் கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ எனப்படும் நால்வகைப் பூக்களில் உரிய பூக்களைக் கொய்து திருப்பூங்கூடைகளிற் கொணர்ந்து தனியிடத்திலிருந்து கோவை, இண்டை, தாமம், மாலை, கண்ணி, பிணையல், தொடையல் எனப் பலவகைப்பட்ட திருமாலைகளாகத் தொடுத்துத் திருப்புகலூர் வர்த்தமானீச்சரத் திருக்கோயிலில் உள்ள சிவபெருமானுக்குச் சாத்தி அர்ச்சனை செய்தும் திருவைந் தெழுத்தோதியும் வழிபடும் இயல்பினராய் வாழ்ந்தார். இவர், திருப்புகலூர்ப் பெருமானை வழிபடத் திருஞானசம்பந்தப் பிள்ளையார் எழுந்தருளிய போது பிள்ளையாரை எதிர்கொண்டழைத்துத் தமது திருமடத்தில் அமர்த்தி உபசரித்துப் போற்றியவர்; அடியார் குறிப்பறிந்து அவர்களுக்கு வேண்டுவன நல்கும் பேரன்புடையவர். முருகநாயனார் நாள் தோறும் விடியற்காலையிலெழுந்து பொய்கையில் மூழ்கி நறுமலர் கொய்து மாலை தொடுத்தணிந்து வர்த்தமானீச்சரப் பெருமானை முப்போதும் அன்பினால் வழிபட்டுப் போற்றிய திருக்கோலத்தைச் சிவனடியார்கள் கண்டு கண்டு உளங்களிப்புற்ற திறத்தினையும்,

**"தொண்டர் தண்கயம் மூழ்கித் துணையலுஞ் சாந்தமும் புகையும்**
**கொண்டு கொண்டடி பரவிக்குறிப்பறி முருன்செய் கோலம்**
**கண்டு கண்டு கண்குளிரக் களிபரந் தொளிமல்கு கள்ளார்**
**வண்டு பண்செயும் புகலூர் வர்த்தமானீச்சரத்தாரே"**

எனவும்,

**மூசுவண்டறை பொய்கை முருகன் முப்போதுஞ்செய் முடிமேல்**
**வாச மாமலருடையார் வர்த்தமானீச்சரத்தாரே'**

எனவும் ஆளுடைய பிள்ளையார் உளமுவந்து பாராட்டிப் போற்றியுள்ளார். முருகநாயனார் திருமடத்தில் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சிறுத்தொண்டர் திருநீலநக்கர் முதலிய சிவனடியார்கள் பலரும் விரும்பி மகிழ்ந்து உரையாடி உளங்கலந்துறையும் பெரு வாழ்வினைப் பெற்றனர் எனவும், திருஞானசம்பந்தருக்கு நண்பராம் பெருமை பெற்ற முருகநாயனார், திருஞானசம்பந்தப் பிள்ளையார்க்குத் திருநல்லூர்ப் பெருமணத்தில் நிகழ்ந்த திருமண விழாவிற் கலந்து கொண்டு தங்கள் பெருமானடி நீழல் தலையாம் நிலைமை சார்வுற்றார் எனவும் பெரிய புராணம் கூறும்.

## உருத்திர பசுபதி நாயனார்

இவர் சோழ நாட்டில் திருத்தலையூரில் வேதியர் மரபிலே தோன்றியவர்; சிவபெருமான் திருவடிகளிலே நிறைந்த அன்பினையே தமக்குச் செல்வமாகக் கொண்டவர்; பசுபதியார் என்னும் இயற்பெயருடையவர். இவர் தாமரைத் தடாகத்திலே கழுத்தளவு தண்ணீரில் இரவு பகலாக நின்று கொண்டு இருகைகளையும் தலை மேலேறக் குவித்துச் சிவனை மறவாத சிந்தையராய் அருமறைப் பயனாகிய திருவுருத்திரத்தை வழுவாது ஓதும் நியதியுடைய ரா யிருந்தமையால் உருத்திர பசுபதியார் எனப் போற்றப் பெற்றார். இவர் தம் அருந்தவப் பெருமையையும் வேதமந்திர நியதியின் மிகுதியையும் விரும்பிய இறைவர் இந் நாயனார்க்குத் தீதிலாச் சிவலோக வாழ்வினை நல்கியருளினார்.

## திருநாளைப் போவார் நாயனார்

நந்தனார் என்னும் பெயருடைய இந்நாயனார், மேற்கா நாட்டில் கொள்ளிடத்தின் கரையில் உள்ள ஆதனூர் * (*ஆதனூர் என்பது சிதம்பரத்தை யடுத்துள்ள ஓமாம் புலியூர்க்கும் கடம்பூர்க்கும் நடுவில் கொள்ளிடக்கரையில் அமைந்த ஊராகும்.) என்னும் பகுதியில் புலையர் குலத்திலே தோன்றியவர்; மெய்ப்பரிவு சிவன் கழற்கே விளைத்த உணர்வோடும் வந்தவர்; அப்பகுதியில் ஊர்ப்புலைமை ஆன்ற தொழில் தாயத்தார்; பிறந்தது முதல் சிவபெருமான்பால் கொண்ட பேரன்பின் திறத்தால் மறந்தும் அயல் நினைவின்றிப் பிறப்பின் வழிவந்த செயலாகிய அறத்தினைச் செய்பவராகவே சிவனடித் தொண்டிலும் சிறந்து விளங்கினார். அவ்வூரிலே மானியமாகத் தமக்கு விடப்பட்ட பறைத்துடவையாகிய நிலத்தின் விளைவினையே தமக்குரிய உணவுரிமையாகக் கொண்டு தமது தொழில் முயற்சியாற் சிவாலயங்கள் தோறும் பேரிகை முதலிய தோற்கருவிகளுக்குரிய தோலும் வாரும் வீணைக்கும் யாழுக்கும் நரம்பும், அர்ச்சனைக்குக்

கோரோசனையும் கொடுத்தலை தமது கடமையாகக் கொண்டு திருக்கோயிலின் புறவாயிலில் நின்று அன்பின் மேலீட்டினால் சிவனைப்போற்றி ஆடுதலையும் இசையுடன் பாடுதலையும் உடையவராயிருந்தார்.

அவர், ஒரு நாள் திருப்புன்கூர் சென்று சிவலோக நாதர் திருக்கோயில் வாயிலிலே நின்று கொண்டு சீரேறும் இசைபாடிப் பெருமானை நேரே கும்பிட வேண்டும் என நினைந்தார். அந்நிலையிற் சிவபெருமான் அவரது விருப்பத்திற்கு இசைந்தருளித் தம் திருமுன் உள்ள நந்திதேவரைச் சிறிது விலகச் செய்து சிவலிங்கத் திருமேனியினைப் புலப்படுத்தி அருள் செய்தார். சிவலோகமுடைய பெருமானை நேரே கண்டு கும்பிட்டு மகிழ்ந்த நந்தனார், அப்பகுதியில் திருக்கோயிலுக்கு அண்மையில் ஒரு குளத்தினைத் தோண்டிப் பணிசெய்து அத்திருக்கோயிலை வலம் வந்து தம்மூர்க்குச் சென்றார். இவ்வாறு இறைவன் எழுந்தருளும் திருத்தலங்கள் பலவற்றுக்குஞ் சென்று வணங்கிய நந்தனாரது உள்ளத்திலே ஒருநாள் திருத்தில்லைத் திருமன்றினைச் சென்று இறைஞ்ச வேண்டும் என்னும் பெருங்காதலுணர்வு இடைவிடாது எழுந்தது. அன்று இரவு முழுவதும் கண்ணுறங்காத நந்தனார் பொழுது விடிந்த பொழுது, 'தில்லைத் திருமன்றினை அடைதற்கு யான் பிறந்த குலத்துடன் பொருத்தமில்லையே' என்று எண்ணினார் 'சென்று வழிபட வேண்டும் என்னும் இந்நினைவும் எம்பெருமானாகிய இறைவனது கட்டளையே' என்னும் பெருங்காதல் மேலிடுதலால் 'நாளைப் போவேன்' என்று அடிக்கடி கூறி, நாள்கள் பல கழித்தார். அதனால் அவருக்கு நாளைப் போவார் என்னும் பெயர் உண்டாயிற்று.

திருநாளைப் போவாராகிய நந்தனார், ஒருநாள் தில்லைச் சிற்றம்பலத்தைக் கண்டு இறைஞ்ச வேண்டும் என்னும் பெருவிருப்பம் தம்மைப் பிடித்துத் தள்ளுதலால் ஆதனூரை விட்டுப் புறப்பட்டுத் தில்லையின் எல்லையை அடைந்தார். அத்திருப்பதியில் வேள்விப் புகையும் அந்தணர் வேத மோதுமிடங்களும் நெருங்கினமை கண்டு தாம் பிறந்த குலத்தினை நினைந்து அதனுள்ளே புகுதற்கு அஞ்சி நின்றார். அங்ஙனம் நின்ற நந்தனார் தில்லையின் பெருமையினை நினைப்பாராய்ப் புறமதிலைக் கடந்து ஊரைச் சுற்றிய மதிலின் திருவாயிலினுள்ளே புகுபவர் 'அந்தணர் மாளிகைகள் வேள்வி மண்டபங்கள் நிறைந்த இவ்விடத்தில் எனக்கு அடைதல் அரிது' என்று அஞ்சி அப்பதியின் மதிற்புறத்தே ஆராத பெருங்காதலால் உள்ளுருகிக் கைதொழுது அப்பதியை வலங்கொண்டு சென்றார். இவ்வாறு இரவு பகல் தில்லைப்பதியைப் புறத்தே வலம் வந்தவர் 'மைவண்ணத் திருமிடற்றார் மன்றில் நடங்கும்பிடுவது

எவ்வண்ணம்?' என்று எண்ணி ஏக்கத்துடன் துயில் கொண்டார். 'இன்னல் தரும் இழிபிறவாகிய இது, இறைவன் ஆடல் புரியும் பொன்னம்பலத்தை வழிபடுதற்குத் தடையாயுள்ளதே? என்று வருந்தித்துயில் கொள்வாராகிய நந்தனாரது வருத்தத்தை நீக்கியருள் புரியத் திருவுளங் கொண்ட தில்லைக்கூத்தப் பெருமான், ' என்று வந்தாய்' என்னும் புன்முறுவற்குறிப்புடன் நாளைப் போவாரது கனவில் தோன்றி, "இப்பிறவி போய் நீங்க எரியினிடை, நீ மூழ்கி, முப்புரிநூல் மார்பருடன் முன்னணைவாய்" என மொழிந்து அப்பரிசே வேள்வித்தீ அமைக்கும்படி தில்லை வாழந்தணர்க்கும் கனவில் தோன்றி அருள் புரிந்து மறைந்தருளினார்.

அந்நிலையில், தில்லை வாழந்தணர்கள் எல்லோரும் விழித்தெழுந்து கூத்தப் பெருமானது கட்டளையினையுணர்ந்து திருக்கோயில் வாயிலிலே வந்து கூடினார்கள். 'எம்பெருமான் அருள் செய்த பணிசெய்வோம்' என்று ஏத்திப் பெருங்காதலுடன் வந்த திருத்தொண்டராகிய திருநாளைப் போவாரை அடைந்து, 'ஐயரே, அம்பலவர் திருவருளால் உமக்கு வேள்வித்தீ அமைத்துத் தருதல் வேண்டி இங்கு வந்தோம்' என்றார்கள். அது கேட்டநந்தனார் 'நான் உய்ந்தேன்' என வணங்கினார். தெய்வமறை முனிவர்களும் தென் திசையின் மதிற்புறத்துத் திருவாயில் முன்பு தீயமைத்தார்கள். நாளைப் போவார் அத்தீக்குழியினையடைந்து இறைவன் திருவடிகளை மனத்திற் கொண்டு எரிசூழ வலங்கொண்டு ஆடல் புரிந்தருளும் திருவடியை நினைந்து கைதொழுது அதனுள்ளே புகுந்து புணணிய மாமுனி வடிவாய் மெய்யில் வெண்ணூல் விளங்க வேணிமுடிகொண்டு மேலே எழுந்து செம்மலர் மேல் வந்தெழுந்த அந்தணனாகிய பிரமனை யொத்துத் தோன்றினார். அது கண்டு தில்லைவாழந்தணர்கள் கைதொழுதார்கள். திருத்தொண்டர்கள் வணங்கி மனங் களித்தார்கள். வேள்வித்தீயில் மூழ்கிவெளிப்பட்ட திருநாளைப் போவராம் மறைமுனிவர் அருமறைசூழ் திருமன்றில் ஆடுகின்ற கழல் வணங்க வருபவர் தில்லைவாழந்தணர் உடன் செல்லத் திருக்கோயிற் கோபுரத்தைத் தொழுது உள்ளே புகுந்தார். உலகுய்ய நடமாடும் எல்லையினைத் தலைப்பட்டார் உடன் வந்தோர் யாவரும் அவரைக் காணாதவராயினர். நாளைப் போவார் அம்பலவர் திருவடியிற் கலந்து மறைந்தமை கண்டு தில்லைவாழ் அந்தணர்கள் அதிசயித்தார்கள். முனிவர்கள் துதித்துப் போற்றினார்கள். வந்தணைந்த திருத்தொண்டராகிய நந்தனாரது வினைமாசறுத்துத் தம்முடைய திருவடிகளைத் தொழுது இன்புற்றிருக்க அந்தமிலா ஆனந்தப் பெருங்கூத்தர் அருள்புரிந்தார்.

'நற்றமிழ் வல்ல ஞானசம் பந்தன்
நாவினுக் கரையன் நாளைப் போவானும் ... ... ...
குற்றஞ் செய்யினுங் குணமெனக்கருதும்
கொள்கைகண்டு நின் குரைகழலடைந்தேன்'

என நம்பியாரூரர் திருப்புன்கூர்ப் பெருமானைப் போற்றும் பாடலில் நாளைப்போவார் இறைவன்பாற் கொண்ட குற்றமிலாப் பேரன்பின் திறத்தை உளமுவந்து போற்றியுள்ளமை இங்கு நினைத்தற்குரியதாகும்.

## திருக்குறிப்புத் தொண்ட நாயனார்

தொண்டை நன்னாட்டில் காஞ்சி நகரத்திலே ஏகாலியர் மரபில் தோன்றியவர்; செவ்விய அன்புடையவர்; நல்லொழுக்க நெறி நின்றவர்; சிவனடித் தொண்டு புரிபவர்; மனமொழி மெய்யாகிய முக்கரணங்களும் அண்ணலார் சேவடியின் சார்வாக அணைவிப்பவர்; சிவனடியார் திருக்குறிப்பறிந்து போற்றும் உள்ளத்திண்மையினால் திருக்குறிப்புத் தொண்டர் என அழைக்கப்பெறும் சிறப்புப் பெயருடையவர். இவர் சிவனடியார்களது ஆடையினைத் துவைத்துக் கொடுத்தலைத் தமது முதற் பணியாகக் கொண்டிருந்தார். அடியவரது அன்பின் பெருமையை உலகத்தார்க்கு அறிவிக்கத் திருவுளங்கொண்ட திருவேகம்பப்பெருமான், குளிர் காலத்திலே ஒரு நாள் சிவனடியார் திருமேனி கொண்டு அழுக்கடைந்த கந்தையுடன் திருக்குறிப்புத் தொண்டரை யடைந்தார். தளர்ந்த திருமேனி யுடைய சிவனடியாராகிய அவரைக் கண்ட திருக்குறிப்புத் தொண்டர், அன்பினால் எதிர்கொண்டு வணங்கி இன்மொழி பகர்ந்து அவரது குறிப்பறிந்து 'தாங்கள் உடுத்துள்ள இக் கந்தையைத் துவைத்தற்குத் தாருங்கள்' என்று கேட்டார். வந்த சிவனடியார் 'யான் உடுத்துள்ள இந்தக் கந்தை அழுக்கேறி எடுத்தற்குத் தகுதியில்லாத நிலையிலிருப்பினும் உடம்பினை வருத்தும் குளிருக்குப் பயந்து கைவிடாது உடுத்துள்ளேன். மாலைப் பொழுதாவதற்குள் தருவீராயின் விரைந்து கொண்டு போய்த் துவைத்துத் தருவீராக' என்று கூறினார். அதுகேட்ட திருக்குறிப்புத் தொண்டார் 'அடியேன் காலந்தாழ்த்தாமல் மாலைப் பொழுதிற்குள் விரைவில் வெளுத்துத் தருகின்றேன், தந்தருள்வீராக' என்று வேண்டினார். வந்த அடியவர், 'கந்தையாகிய இதனை விரைவில் துவைத்து உலர்த்தித் தாராதொழிவீராயின் இந்த உடம்புக்கு இடர் செய்தீராவீர்' என்று சொல்லித் தாம் உடுத்திருந்த கந்தையை அவர் கையிற் கொடுத்தார். அதனைப் பெற்றுக் கொண்ட திருக்குறிப்புத் தொண்டர், குளத்திற்குச் சென்று முன் சிறது அழுக்கைப் போக்கி

வெள்ளாவியில் வைத்துப் புழுக்கித் துவைக்கப் புகுமளவில், பெருமழை விடாது பெய்வதாயிற்று, அது கண்ட திருக்குறிப்புத் தொண்டர் சிவனடியார்க்குத் தாம் சொன்ன உறுதிமொழியை எண்ணி 'இனி நான் யாது செய்வேன்' என்று கவலையுற்று, மழை விட்டு விடுவதை எதிர்பார்த்து அங்கேயே நின்றார். மழையோ நிற்கவில்லை. இரவுப் பொழுதும் அணுகுவதாயிற்று. திருக்குறிப்புத் தொண்டர் 'குளிரால் திருமேனி நடுங்குகின்ற சிவனடியார்க்கு நான் செய்ய விரும்பிய அடிமைப்பணி அந்தோ! தவறிப் போயிற்றே' என்று நிலமிசை வீழ்ந்தார்; 'மழையோ விடவில்லை; அடியார் சொல்லிய கால எல்லையும் கழிந்து விட்டது. முன்னமே அவரது உடையினைத் துவைத்துக் காற்றில் உலர்த்திக் கொடுப்பதனை அறிந்திலேன். அடியார் திருமேனி குளிரால் வருந்தத் தீங்கு புரிந்த கொடியேனுக்கு இனி இதுவே செயல்' என்று எழுந்து 'துணிதுவைக்கும் கற்பாறையிலே எனது தலையைச் சிந்தும்படி மோதுவேன்' என்று தமது தலையை மோதினார். அப்போது அப்பாறையின் அருகே திரு ஏகம்பரது திருக்கை தோன்றி அவரைப் பிடித்துக் கொண்டது. விசும்பில் விடாது பெய்த நீர்மழை நீங்க மலர் மழை பொழிந்தது. உமையொருபாகராய் இறைவன் விடைமேல் எழுந்தருளிக் காட்சி கொடுத்தருளினார். அத்தெய்வக் காட்சியைக் கண்ட திருக்குறிப்புத் தொண்டர் அன்புருகக் கைதொழுது தனி நின்றார். சிவபெருமான் அவரை நோக்கி, உனது அன்பின் திறத்தை மூவுலகத்தாரும் அறியச் செய்தோம். இனி நீ நம்முடைய உலகத்தையடைந்து நம்மைப் பிரியாது உறைவாயாக' என்று திருவருள் புரிந்து மறைந்தருளினார்.

## சண்டேசுர நாயனார்

பொன்னிநாட்டில் மண்ணியாற்றின் தென்கரையிலமைந்த சேய்ஞலூரில் பெருமை விளங்கும் வேதியர் மரபிற் காசிபகோத்திரத்தில் எச்சதத்தன் என்பானுக்கு அவன் மனைவி பவித்திரை வயிற்றில் தோன்றியவர் விசாரசருமனார். அக்குழந்தைக்கு ஐந்து வயது நிரம்பிய அளவில் முந்தை அறிவின் தொடர்ச்சியினால் வேத சிவாகமங்களின் உணர்வு சிந்தையில் தோன்றி வளர்ந்தது. பெற்றோர்கள் ஏழாம் வயதில் உபநயனம் முடித்துக் கல்விப் பயிற்சியைத் தொடங்கு வித்தார்கள். குலவுமறையும் பல கலையும் சொல்லிக் கொடுப்பதற்கு முன்னமே விரைந்து மனங்கொள்ளும் அக்குழந்தையின் அறிவின் திறங்கண்டு அந்தணர்கள் அதிசயமடைந்தார்கள். சிறிய பெருந்தகையாராகிய விசாரசருமனார் அளவில்லாத கலைகளின் பொருட்கெல்லாம் எல்லையாய் விளங்குவது அம்பலவரது எடுத்த பொற்பாதமே எனத் தம் சிந்தையில் தெளிந்துணர்ந்தார்,

'நடமே புரியும் சேவடியார் ஆகிய இறைவன் உயிர்களாகிய நம்மை ஆளாகவுடையார்' என்னும் உறுதிப் பாட்டினையுடையராய் விசாரசருமர் ஒழுகிவரும் நாளில் ஒரு நாள், வேதம் ஓதுகின்ற இடத்திற்கு மறைச் சிறுவர்களுடன் சென்றார். அப்பொழுது தெருவில் ஊர்ப் பசுக்களை மேய்த்தற் பொருட்டு ஓட்டிச் செல்லும் இடைச்சிறுவன் தன்னைக் கொம்பால் முட்டவந்த ஈற்றுப் பசுவைக் கோலினால் நையப்புடைத்தான். அது கண்டு பொறாத விசாரசருமர், அவனை வெகுண்டு விலக்கி, இறைவனுக்குத் திருமஞ்சனத்துக்குப் பால் தயிர் நெய் முதலிய ஐந்தினையளிக்கும் பசுவின் பெருமையினை உள்ளவாறு உணர்ந்து தாமே அவ்வானிரைகளை மேய்க்க விரும்பி அவ்விடையனை நோக்கி 'நீ பசுநிரை மேய்த்தலை ஒழிவாயாக. இன்று முதலாக யானே இவற்றை மேய்ப்பேன் என்றார். அது கேட்ட இடைச்சிறுவன் அஞ்சி அகன்றான்.

விசாரசருமர் பசுக்களை அவற்றுக்குரிய அந்தணர்களின் இசைவு பெற்று நாள்தோறும் மண்ணியாற்றின் கரையிலுள்ள காடுகளிலும் வயலோரங்களிலும் புல் நிறைந்த இடங்களில் வயிறார மேயவிட்டுத் தண்ணீரூட்டி உச்சி வேளையில் நிழலில் தங்கச் செய்து நள்றாகக் காப்பாற்றி, சமித்துக்கள் ஒடித்துக்கொண்டு மாலையில் அப்பசுக்களை அவரவர் வீட்டுக்கு ஓட்டிப் போய்விட்டுத் தமது வீட்டுக்குச் செல்லுதலை வழக்கமாகக் கொண்டார். இவ்வாறு மறைச்சிறுவரால் மேய்க்கப் பெற்ற பசுக்கள் மடிசுரந்து பாலை மிகப் பொழிந்தன. அப் பசுக்கள் தம் கன்றைப் பிரிந்தாலும் தம்மை அன்புடன் மேய்த்துக் காக்கும் மறைக்கன்றாகிய விசாரசருமரைப் பிரிய மனமில்லாதனவாய் அவர் அருகே சென்று அன்பினாற் கனைத்துத் தாமே மடிசுரந்து பால்பொழியும் தாயன்புடையனவாயின. தம்மால் மேய்க்கப்பெறும் பசுக்கள் கறவாமே பால் பொழியக்கண்ட விசாரசருமர், அவற்றின்பால் நிலத்தில் வீழ்ந்து வீணாகாமல் இறைவனுக்குத் திருமஞ்சனமாதல் வேண்டும் என எண்ணினார். அந்நிலையில் அவருள்ளத்திலே சிவபூசனை செய்யும் பேரார்வம் தலைப்பட்டது. உடனே அவர் மண்ணியாற்றின் கரையிலமைந்த மணல் திட்டிலே திருவாத்தி மரத்தின் கீழே வெண்மணலால் சிவலிங்கம் அமைத்து, திருக்கோயிலும் கோபுரமும் மதிலும் வரைந்து, திருவாத்திப்பூ, முதலிய நறுமலர்களைப் பறித்துக் கூடையிற் கொணர்ந்தார். புதிய குடங்களைத் தேடிக் கொணர்ந்து பசுக்கள் ஒவ்வொன்றினிடமும் ஒருமுறை சென்று மடியைத் தீண்டிய அளவில் அவை குடம் நிறையப் பாலைப் பொழிந்தன. அப்பாற் குடத்தினைக் கொண்டுபோய் மணலால் அமைத்த ஆலயத்தில் தாபித்து மலர் தூவி அருச்சித்து வெண்மணலால்

அமைத்த சிவலிங்கப் பெருமானுக்குத் திருமஞ்சனம் ஆட்டி வழிபாடு செய்தார். அடியார் அன்புக்கு எளிவரும் சிவபெருமானும் அவ்விலிங்கத் திருமேனியில் நின்று விசாரசருமரது வழிபாட்டினை ஏற்றருளினார்.

இவ்வாறு விசாரசருமர் பல நாட்களாகப் பார்ப்பவர்களுக்கு விளையாட்டுப்போலத் தோன்றுகின்ற சிவபூசையைச் செய்து வரும்பொழுது அதனைக்கண்ட ஒருவன் அதன் உண்மையை யறியாது அச்செய்தியை அவ்வூர் அந்தணர்களிடம் தெரிவித்தான். அவர்கள் ஊர்ச்சபையாரிடம் கூறினர். சபையார் எச்சதத்தனை அழைத்து 'அந்தணர் ஆகுதியின் பொருட்டுப் பால் கறக்கும் பசுக்களை நின்மைந்தன் மேய்ப்பதாகச் சொல்லிக்கொண்டு சென்று பாலைக்கறந்து வீணே மணலிற் கொட்டுகின்றான்' என்றனர். அதுகேட்டு அஞ்சிய எச்சதத்தன் 'சிறுபிள்ளை செய்த இக்குற்றத்தைப் பொறுத்தருளவேண்டும்' என்று இரந்துவணங்கி, 'இனி அவன் அவ்வாறு செய்தால் அது என் குற்றமாம்' என்று சொல்லிவிட்டு வீடு திரும்பினான்.

எச்சதத்தன் மறுநாட் காலை அதன் உண்மையை அறிந்துகொள்ள எண்ணிப் பசு மேய்க்கச் செல்லும் விசாரசருமர் அறியாதபடி அவர் பின்னே சென்று அங்கு நிகழ்வதை அறியக் குராமரத்தில் ஏறி ஒளிந்திருந்தான். விசாரசருமர் நீராடி முன்போல மணலால் சிவலிங்கம் அமைத்து மலர் பறித்து வந்து பாற்குடத்தினைக் கொணர்ந்து அருச்சனைக்கு வேண்டிய பிறவற்றையும் அமைத்துச் சிவலிங்கப் பெருமானுக்குப் பாலைத் திருமஞ்சனமாக ஆட்டினார். குராமரத்தில் ஒளிந்திருந்த எச்சதத்தன் வெகுண்டு இறங்கிச் சென்று தன் கையிலுள்ள தண்டினால் விசாரசருடைய முதுகிலே அடித்துக் கொடுஞ்சொற் கூறினன். அவருடைய மனம் சிவபூசையில்ஒன்றியிருந்தமையால் அவன் செய்த தெதுவும் அவருக்குத் தோன்றவில்லை. மேலாம் பெரியோர் தந்தை வெகுண்டு பலகால் தன்னை அடிக்கவும் அதனையுணராராகி இறைவனுக்குப் பாலார் திருமஞ்சனம் ஆட்டும் பணியிற் சலியாதிருந்தனர். அதுகண்டு செற்றங் கொண்ட எச்சதத்தன் திருமஞ்சனக் குடப்பாலைக் காலால் இடறித்தள்ளினான். பால் சிந்தியது கண்ட விசாரசருமர் அதனையிடறித் தள்ளியவன் தன் தந்தையென அறிந்து அவனுடைய கால்களைத் துணித்தல் தகுதி என்று எண்ணி அருகே கிடந்த கோலொன்றை எடுக்க, இறைவரருளால் அதுவே மழுப்படையாயிட, அது கொண்டு தந்தையின் கால்களை வெட்டி வீழ்த்தினார். மறையோனும் வீழ்ந்தான். சிவபூசைக்கு நேர்ந்த இடர் அகற்றிய விசாரசருமர் மீண்டும் சிவபூசையினைச் செய்யலுற்றார். அந்நிலையிற் சிவபெருமான் உமையம்மை

யாரோடும் விடைமேல் எழுந்தருளினார். பூதகணங்கள் புடைசூழ முனிவர் முதலோர் போற்றிசைப்ப இறைவன் வெளிப்பட்டருளுவது கண்ட பத்திமுதிர்ந்த பாலகனார், இறைவன் பாத மலர்கள்மேல் விழுந்து வணங்கினார், சிவபெருமானும் தம் திருவடிக்கீழ் வீழ்ந்த விசாரசருமரை வாரி எடுத்து அருள்நோக்கஞ் செய்து, 'நம் பொருட்டு நின்னைப் பெற்ற தந்தையை மழுவினால் எறிந்தாய். இனி உனக்கு அடுத்த தந்தை நாம்' என்று அருள்செய்து அணைத்தருளிக் கருணையால் தடவி உச்சி மோந்து மகிழ்ந்தருளினார்.

சிவபெருமானது திருக்கைகளால் தீண்டப்பெற்ற வேதியச் சிறுவராய விசாரசருமர், மாயையாக்கையின் மேல் அளவின்றுயர்ந்த சிவமயமாகித் திருவருளில் மூழ்கிப் பேரொளிப் பிழம்பாகத் தோன்றினார். அண்டர்பிரானாகிய சிவபெருமானும் அவரைத் தொண்டர்க்குத் தலைவனாக்கி, 'அனைத்தும் நாம் உண்ட கலமும் உடுப்பனவும் சூடுவனவும் உனக்காகச் சண்டீசனும் ஆம் பதம் தந்தோம்' என்று திருவாய் மலர்ந்து தம்முடைய சடையில் அணிந்துள்ள கொன்றை மலர் மாலையை எடுத்து அப்புதல்வர் திருமுடியிற் சூட்டியருளினார். தொண்டர்கணத் தலைவராய சேய்ஞலூர்ப் பிள்ளையார், எல்லாவுயிரும் மகிழச் சிவகணங்கள் பாடியாடிக் களிகூரச் சைவசமயம் நிலைபெற்றோங்க இறைவனைத் தொழுது சண்டீசுரபதத்தை அடைந்தார். அவருடைய தந்தையாகிய எச்சதத்தர் சிவபூசைக்குக் கேடு சூழ்ந்தும் சண்டீசநாயனாராலே தண்டிக்கப் பெற்றமையால் அக்குற்றம் நீங்கிச் சுற்றத்துடன் சிவலோகத்தை அடைந்தார் எனப் பெரியபுராணம் கூறும்.

இவ்வாறு சேய்ஞலூர்ப் பிள்ளையார் வெண்மணலாற் சிவலிங்கம் அமைத்துப் பாலால் திருமஞ்சனமாட்டி வழிபட்ட திறத்தையும், அவ்வழிபாட்டினைச் சிதைத்த தம் தந்தையின் கால்களைத் தடிந்து சிவபெருமானுக் குரிய மைந்தராய்ச் சண்டீசப் பேறு பெற்ற திறத்தையும் திருமுறையாசிரியர்கள் பலரும் உளமுருகிப் போற்றியுள்ளார்கள்.

**"வந்தமண லாலிலிங்க மண்ணியின்கட் பாலாட்டும்**
**சிந்தை செய்வோன் தன்கருமம் தேர்ந்து சிதைப்பான் வருமத்**
**தந்தைதனைச் சாடுதலுஞ் சண்டீச னென்றருளிக்**
**கொந்தணவு மலர்கொடுத்தான் கோளிலியெம் பெருமானே"**
**(1-62-4)**

**"சென்றுதாதை யுகுத்தனன் பாலையே சீறியன்பு**
**செகுத்தனன் பாலையே**
**வென்றிசேர் மழுக்கொண்டு முன்காலையே**

வீடவெட்டிடக் கண்டு முன்காலையே
நின்றமாணியை யோடினகங்கையால் நிலவமல்கி
யுதித்தன கங்கையால்
அன்றுநின்னுருவாகத் தடவியே ஆலவாயரனாகத் தடவியே"
(3-115-5)

"பீரடைந்த பாலதாட்டப் பேணாதவன் தாதை
வேரடைந்து பாய்ந்ததாளை வேர்த்தடிந்தான்றனக்குத்
தாரடைந்த மாலைசூட்டித் தலைமை வகுத்ததென்னே
சீரடைந்த கோயில்மல்கு சேய்ஞலூர் மேயவனே" (1-48-7)

"தோத்திரமா மணலிலிங்கந் தொடங்கிய ஆனிரையிற்பால்
பாத்திரமா ஆட்டுதலும் பரஞ்சோதி பரிந்தருளி" (3-66-3)

*என ஞானசம்பந்தப் பிள்ளையாரும்,*

"அண்டமா ரமரர் கோமான் ஆதியெம் அண்ணல் பாதம்
கொண்டவன் குறிப்பினாலே கூப்பினான் தாபரத்தைக்
கண்டவன்தாதை பாய்வான் காலற வெறியக்கண்டு
தண்டியார்க் கருள்கள் செய்த தலைவர் ஆப்பாடியாரே"
(4-48-4)

"தழைத்ததோ ராத்தியின்கீழ்த் தாபர மணலாற்கூப்பி
அழைத்தங்கே யாவின்பாலைக் கறந்துகொண் டாட்டக்கண்டு
பிழைத்ததன் தாதைதாளைப் பெருங்கொடு மழுவால்வீசக்
குழைத்ததோர் அமுதமீந்தார் குறுக்கை வீரட்டனாரே"
(4-49-3)

"ஆமலி பாலும் நெய்யும் ஆட்டி அர்ச்சனைகள் செய்து
பூமலி கொன்றை சூட்டப் பொறாததன் தாதைதாளைக்
கூர்மழு வொன்றால் ஓச்சக் குளிர்சடைக் கொன்றைமாலைத்
தாமநற் சண்டிக்கீந்தார் சாய்க்காடு மேவினாரே" (4-65-6)

"மாணிபால் கறந்தாட்டி வழிபட
நீணுலகெலாம் ஆளக்கொடுத்தவன்" (5-2-4)

"ஆங்கணைந்த சண்டிக்கும் அருளியன்று
தன் முடிமேல் அலர்மாலையளித்தல் தோன்றும்" (6-8-10)

*என ஆளுடைய அரசரும்,*

"இண்டைமலர் கொண்டுமண லிலிங்கமதியற்றி
இனத்தாவின் பாலாட்ட இடறிய தாதையைத்தாள்
துண்டமிடு சண்டியடி யண்டர்தொழு தேத்தத்
தொடர்ந்தவனைப் பணிகொண்ட விடங்கள்" (7-16-3)

**"மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க**
**வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினாலெறிந்த**
**அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக்கடியேன்" (7-39-3)**

என ஆளுடைய நம்பியும்,

**"தீதில்லைமாணி சிவகருமஞ் சிதைத்தானைச்**
**சாதியும் வேதியன் தாதைதனைத் தாளிரண்டும்**
**சேதிப்ப ஈசன் திருவருளாற் றேவர்தொழப்**
**பாதகமே சோறு பற்றியவா தோணோக்கம்" (திருவாசகம்)**

என ஆளுடைய அடிகளும் சண்டீசப்பிள்ளையாரது சிவபத்தித் திறத்தைப் பாராட்டிப் போற்றியுள்ளார்கள். சண்டீசப் பிள்ளையாரது வரலாறு திருஞான சம்பந்தப்பிள்ளையார் காலத்திற்கு முன்பே அறிஞர்களாற் செவிவழிச் செய்தியாக வாழங்கப் பெற்ற தொன்மையுடைய தென்பது,

**"கடிசேர்ந்த போதுமலராயின கைக்கொண்டு நல்ல**
**படிசேர்ந்த பால்கொண்டங் காட்டிடத் தாதைபண்டு**
**முடிசேர்ந்த காலையற வெட்டிட முக்கண்மூர்த்தி**
**அடிசேர்ந்த வண்ணம் அறிந்தார் சொலக் கேட்டுமன்றே"**
**(3-54-7)**

எனவரும் திருப்பாசுரத்தால் இனிது விளங்கும்.

சண்டீசப்பிள்ளையார் மண்ணியாற்றின் கரையில் வெண்மணலாற் சிவலிங்கம் அமைத்து வழிபட்ட அருள் நிலையமே திருவாப்பாடி யென்னும் திருத்தலமாகும்.

## திருநாவுக்கரசு நாயனார்

**'திருநின்ற செம்மையே செம்மையாக்கொண்ட**
**திருநாவுக்கரையன்றன் அடியார்க்கும் அடியேன்'**

எனத் திருத்தொண்டத் தொகையிற் போற்றப்பெற்ற திருநாவுக்கரசரது வரலாறு முன்னர் (பன்னிருதிரு முறை வரலாறு முதற்பகுதி) விரிவாக ஆராய்ந்து விளக்கப்பெற்றது.

## குலச்சிறை நாயனார்

**'பெருநம்பிகுலச் சிறைதன் அடியாக்கும் அடியேன்'**

எனப் போற்றப்பெற்ற இப்பெருந்தகையார் பாண்டி நாட்டில் மணமேற்குடியிற் பிறந்தவர். இவர் பிறந்த மரபு இதுவெனத் தெரியவில்லை. குலச்சிறையாராகிய இவர், அரசனாற் பெருநம்பி எனச் சிறப்பிக்கப் பெற்றவர்; திருத்தொண்டில் வழுவாத திண்மையுடையவர்; சிவனடியாராக யார் வந்தாலும் அவர்களை

அன்புடன் வணங்கி இன்னுரை பகரும் இயல்பினர்; உலகரால் மதிக்கப் பெறும் நால்வகைக் குலத்திற் பிறந்தவராயினும் அன்றி அக்குலத்தில் நீங்கியவராயினும் சிவபெருமானுக்கு அடியார் என்றால் அவர்களைப் பணிந்து ஏத்தும் தொழி லுடையவர்; சிவனடியார்கள் நலமுடையராயினும் நலமிலராயினும் அவர்களைப் பணிதலே தவமெனக் கொண்டவர்; அடியார்கள் தனித்துவரினும் கூட்டமாய் வரினும் அன்பினால் எதிர்கொண்டு திருவமுதூட்டும் இயல்புடையவர்; திருநீறும் சந்தனமும் உடையராய்த் திருவைந்தெழுத்தினை யோதும் நாவணக்கத்தினை யுடைய அடியார்களின் திவடிகளை நாளும்பரவிப் போற்றுபவர், இத்தகைய நற்பண்புகளையுடைய குலச்சிறையார் பாண்டிய னுடைய அமைச்சர்களுள் முதல்வராய் விளங்கினார்; பாண்டிமா தேவியாராகிய மங்கையர்க்கரசியாரது திருத்தொண்டுக்குத் துணைபுரியும் மெய்த்தொண்டராயினார்; சமணர்களது பொய்ம்மைச் சமயம் தென்னாட்டை விட்டு அகலவும் தென்னாடு திருநீற்றின் ஒளி பெறவும் திருஞான சம்பந்தப் பிள்ளையாருடைய திருவடிகளைச் சென்னி சேர்த்தி வழபட்ட சிறப்பினையுடையார்; வாதில் தோல்வியுற்ற அமணர்களை அவர்கள் சபதஞ்செய்த வண்ணம் வலிய கழுவிலே ஏற்றுவித்தார். இவரது அடியார் பத்தியினையும் அருங்குணங்கள் பலவற்றையும் ஆளுடைய பிள்ளையார் தாம் பாடிய 'மங்கையர்க்கரசி' என்னும் முதற்குறிப்புடைய திருப்பதிகத்தில் 2,4,6,8,10 -ஆம் திருப் பாடல்களிற் சிறப்பித்துப் போற்றியுள்ளமை காணலாம். இவர் அரசரால் அளிக்கப்பெற்ற 'பெருநம்பி' என்ற சிறப்பினைப் பெற்றவர் எனத் தெரிகிறது.

## பெருமிழலைக்குறும்ப நாயனார்

சோழ நாட்டின் உள்நாடாகிய மிழலைநாட்டிற் பெருமிழலை என்னும் ஊரின் தலைவராய் விளங்கியவர் மிழலைக் குறும்பனார் ஆவர், இவர் சிவனடியார்க்கான திருப்பணிகளை விருப்புடன் செய்பவர்; சிவபெருமான் திருவடிகளை நெஞ்சத்தாமரையில் இருத்தி வழிபாடு செய்பவர்; மெய்யடியார் சித்தம் நிலவும் திருத்தொண்டத் தொகை பாடிய நம்பியாரூரரைப்பணிந்து அவருடைய திருவடிகளை நினைந்து போற்றுதலை நியமமாகக் கொண்டவர்; நம்பியாரூரர் திருவடிகளைக் கையால் தொழுது வாய் வாழ்த்தி மனத்தால் நினைக்குங் கடப்பாட்டினால் இதுவே சிவபெருமான் திருவடிகளை அடைதற்குரிய நெறியாகும் என்று அன்பினால் மேற்கொண்டவர்; நம்பியாரூரர் திருப்பெயரினை நாளும் நவின்ற நலத்தால் அணிமா முதலிய எண்வகைச் சித்திகளும்

கைவரப்பெற்றவர்; இறைவனது திருவைந்தெழுத்தினை இடைவிடாது நினைந்து போற்றுபவர்.

இத்தகைய நியமங்களையுடையராய்ப் பெருமிழலைக் குறும்பர் வாழ்ந்துவரும் நாளில், சுந்தரமூர்த்தி நாயனார் திருவஞ்சைக்களத்திற் சென்று திருப்பதிகம் பாட அவருக்குச் சிவபெருமானருளால் வடகயிலையை அடையும் பேறு மறுநாள் கிடைக்க விருப்பதினைத் தம்முடைய ஊரிலிருந்து கொண்டே யோகக்காட்சியால் முதல்நாளில் அறிந்து கொண்டார்; 'திருநாவலூரர் திருக்கயிலை நாளை எய்த நான் அவரைப் பிரிந்து கண்ணிற் கரியமணிகழிய வாழ்வார்போல வாழேன்' என்று எண்ணி ' இன்றே யோகத்தால் சிவன்தாள் சென்றடைவேன்' என்று சொல்லி, நாற்கரணங்களும் ஒரு நெறிப்பட்டு நல்லறிவு மேற்கொண்டு பிரமநாடியின் வழியே கருத்தைச் செலுத்த, யோக முயற்சியினாலே பிரமரந்திரம் திறப்ப, உடலினின்றும் பிரிந்து திருக்கயிலையில் வீற்றிருந்தருளும் சிவபெருமானுடைய திருவடியை அடைந்தார்.

### காரைக்காலம்மையார்

'பேயார்க்கும் அடியேன்' எனப் போற்றப்பெற்ற அம்மையார் வரலாறு இந்நூல் 478 - 498 ஆம் பக்கங்களில் விரித்துரைக்கப் பெற்றது.

### அப்பூதியடிகள் நாயனார்

சோழ நாட்டில் திங்களூரில் அந்தணர் குலத்தில் தோன்றியவர் அப்பூதியார் என்பவர். எல்லையில் தவத்தின் மிக்கவராகிய இவர், தாண்டவம் புரியவல்ல தம்பிரானுக்கு அன்பர்; திருநாவுக்கரசரைக் காணுதற்கு முன்னமே அவருடைய திருவடிகளை அரணாகப்பற்றி அவரைக்காண வேண்டும் என்னும் ஆர்வம் மேற்பட உள்ளங்கலந்த அன்பினராயுள்ளவர்; களவு பொய் காமம் கோபம் முதலிய குற்றங்களைக் கடிந்து விலக்கியவர்; தம்மனையிலுள்ள அளவைகள், நிறைகோல், மக்கள், ஆவொடு மேதி மற்றும் உள்ள பொருள்களெல்லாவற்றிற்கும் திருநாவுக்கரசின் பெயரிட்டழைக்கும் இயல்பினையுடையவர். திருநாவுக்கரசரை நேரிற்காணதவராயினும் அப்பரடிகளாகிய அப்பெருந்தகையார் இறைவன்பாற் கொண்டுள்ள அடிமைத்திறமும் அவர்க்கு இறைவன் அருளும் பெருங்கருணைத்திறமும் ஆகியவற்றை அறிந்தோர் சொல்லக் கேட்டுத் திருநாவுக்கரசர் திருப்பெயரால் திருமடங்கள் தண்ணீர்ப் பந்தர்கள் முதலாகவுள்ள அழிவில்லாத நல்லறங்கள் பல செய்து வையத்து வாழ்வாங்கு வாழ்ந்துவரும் நாளில் ஒரு நாள்

திருநாவுக்கரசர் திருப்பழனம் என்னும் திருத்தலத்தை வணங்கிக் கொண்டு பிறதலங்களையும் வணங்கும் பொருட்டுத் திங்களூரின் அருகே வந்தருளினார். வரும் வழியில் தம் பெயரால் தண்ணீர்ப்பந்தல் இருப்பதைக் கண்டு அதனை அமைத்தார் யார் என அங்குள்ளவரைக் கேட்டறிந்து அப்பூதியடிகளது திருமனையின் வாயிலை அடைந்தார். உள்ளிருந்த அப்பூதியார், சிவனடியா ரொருவர் வாயிலில் வந்துள்ளார் என்றறிந்து விரைந்து சென்று அவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். திருநாவுக்கரசர் அப்பூதியடிகளை நோக்கி, 'வழிக்கரையில் நீர்வைத்த தண்ணீர்ப்பந்தரும் கண்டு அத்தகைய அறம்பிறவும் கேட்டு நும்மைக் காண வந்தோம். சிவனடியார் பொருட்டு நீர்வைத்த தண்ணீர்ப்பந்தரில் நும்முடைய பெயர் எழுதாது வேறொருபேர் முன்னெழுத வேண்டிய காரணம் யாது?' என வினவினார். அதுகேட்ட அப்பூதியார், 'நன்மொழியினைப் பகர்ந்திலீர், நாணில்லாத கொடியோராகிய அமணர்களுடன் கூடிய மன்னவன் செய்த இடர்களை யெல்லாம் திருத்தொண்டின் உறைப்பாலே வென்றவர்தம் திருப்பேரோ வேறொருபேர்?" என்று வெகுள்வாராகி, 'சிவனடித்தொண்டினாலே இம்மையினும் பிழைக்கலாம் என்னும் உண்மையினை என் போல்வாரும் தெளியும் பொருட்டு அருள்புரிந்த திருநாவுக்கரசர் திருப்பெயரையான் எழுத இந்தக் கொடுஞ்சொல்லை நான் கேட்கும்படி கூறினீர். கல்லே மிதவையாகக் கொண்டு கடலைக்கடந்த அப்பெருந்தகையாரது பெருமையினை இவ்வுலகில் அறியாதார் யார்? மங்கலமாம் சிவவேடத்துடன் நின்று இவ்வாறு பேசும் நீர் எங்குறைவீர்? நீர் தாம் யார்? என்றார். அப்பூதியாரது அன்பின் பெருமையையறிந்த திருநாவுக்கரசர், 'புறச்சமயச் சூழலினின்றேற அருளுபெருஞ் சூலையினால் ஆட்கொள்ள அடைந்துய்ந்த தெருளு முணர்வில்லாத சிறுமையேன்யான்' என்றார். அது கேட்ட அப்பூதியார், இருகைகளும் தலைமேற்குவிய, கண்ணீர் சொரிய, உரைதடுமாற நிலமிசை வீழ்ந்து திருநாவுக்கரசின் திருவடித்தாமரைகளைப் பூண்டார். அப்பரடிகள் அவரை எதிர்வணங்கி எடுத்தருளினார். அப்பூதியடிகள் வறியோர் பெருஞ் செல்வம் பெற்றாற்போன்று மகிழ்ந்து ஆடிப்பாடினார்; வீட்டினுள்ளே புக்கு மனைவி மக்கள் முதலிய சுற்றத்தார்க்குத் திருநாவுக்கரசரின் வருகையுரைத்து அரசரை உள்ளே அழைத்துச் சென்று அவர் திருவடிகளை விளக்கிய திருவடிநீரை உள்ளும் புறம்புந்தெளித்து உளமகிழ்ந்தார். தேசமுய்ய வந்த திருநாவுக்கரசரைத் தம் மனையில் திருவமுது செய்தருளவேண்ட அரசரும் அதற்கு இசைந்தார். அப்பூதியாரும் அவர்தம் மனைவியாரும் அரசர் அமுது செய்யும் பேறுபெற்றோம் என்னும் உவகையுடன் திருவமுதமைத்து மூத்த

திருநாவுக்கரசை வாழக்குருத்தரிந்து வரும் பொருட்டு அனுப்ப, அவர் விரைந்து தோட்டத்துட் சென்று இலையினை அரியும்பொழுது, ஒரு பாம்பு அவரைத் தீண்டி அவரது கையிலே சுற்றிக்கொண்டது. மூத்த திருநாவுக்கரசு அதனை உதறி வீழ்த்திவிட்டு விஷ வேகம் தலைக்கேறுவதன் முன் விரைந்து ஓடி வாழையிலையினைத் தாயிடம் தந்து கீழே வீழ்ந்து இறந்தார். அடியார் திருவமுது செய்யத் தாழ்த்தல் கூடாதென்றெண்ணிய பெற்றோர், மைந்தனது உடம்பினை வீட்டுப்புறத்தில் பாயில் மறைத்து வைத்துவிட்டுத் திருநாவுக்கரசரை அமுது செய்ய அழைக்க, அரசரும் இசைந்து ஆசனத்திலமர்ந்து திருநீறளிக்கும் பொழுது, மூத்த திருநாவுக்கரசரைக்காணாது ' அவனை அழையும்' என்றார். அது கேட்ட அப் பூதியார் 'அவன் இங்கு இப்போது உதவான்' என்றார். அந்நிலையில் இறைவரருளால் நாவுக்கரசர் திருவுள்ளத்தேஒரு தடுமாற்றம்தோன்ற, அரசர்அப்பூதியாரை நோக்கி, 'அவன் என் செய்தான்? உண்மையைச் சொல்வீராக' என்றார். அவரும் அஞ்சி நடுங்கி நிகழ்ந்தது கூறினார். அது கேட்ட நாவுக்கரசர் 'நன்று நீர் புரிந்த வண்ணம், யாவர் இத்தன்மை செய்வார்? என்று எழுந்து சென்று மூத்த திருநாவுக்கரசின் உயிர் நீங்கிய உடம்பினை நோக்கி இறைவன் அருள் புரியும் வண்ணம் 'ஒன்று கொலாம்' என்னும் திருப்பதிகம் பாடி விடந் தீர்த்தருளினார். அந் நிலையில் உறக்கம் நீங்கி எழுவானைப் போன்று உயிர் பெற்றெழுந்த மூத்த திருநாவுக்கரசு, திருநாவுக்கரசு நாயனார் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். திருநாவுக்கரசர் திருநீறளித்தருளினார். அப்பூதி நாயனாரும் அவர் மனைவியாரும் தம் மைந்தன் உயிர் பெற்றெழுந்தமை குறித்து மகிழாமல் நாயனார் திருவமுது செய்தருளத் தாழ்த்தமை குறித்து மனம் வருந்த, அவர்களது வருத்த மறிந்து நாவுக்கரசர் அவர்களோடும் மனைக்கண் சென்று அப்பூதியாரோடும் - அவர் தம் மக்களுடனும் ஒருங்கமர்ந்து திருவமுது செய்தருளினார். பின்பு சில நாள் அங்கிருந்து அப்பூதியடிகளுடன் திருப்பழனப் பெருமானை வழிபட்டுப் பாடிய திருப்பதிகத்தில் 'அஞ்சிப் போய்க் கலிமெலிய அழலோம்பும் அப்பூதி குஞ்சிப் பூவாய் நின்ற சேவடியாய்' என இறைவனையும் அப்பெருமான் சேவடிகளைச் சென்னியிற் கொண்ட அப்பூதியடிகளையும் சிறப்பித்துப் போற்றியுள்ளார். திருநாவுக்கரசர் திருப்பெயரையே ஏத்தி அவர் திருவடிகளே எல்லாம் பொருளுமாம் எனக்கொண்டு போற்றுதலே செந்நெறியாகக் கொண்டு அப்பூதியடிகள் தில்லைமன்றுள் ஆடும் திருவடிகளை அடைந்தார்.

**"உற்றானலன் தவம், தீயினின்றானலன், ஊண்புனலா**
**அற்றானலன் நுகர்வும், திருநாவுக்கரசெனுமோர்**
**சொற்றான் எழுதியுங் கூறியுமே என்றுந் துன்பில்பதம்**
**பெற்றான் ஒருநம்பியப்பூதி யென்னும் பெருந்தகையே"**

எனச் சிவப்பிரகாசர் நால்வர் நான்மணி மாலையில் அப்பூதியடிகளைக் குறித்துப் போற்றியுள்ளமை இங்கு நினைத்தற்குரியதாகும்.

## திருநீலநக்க நாயனார்

காவிரி நாடாகிய சோழநாட்டில் சாத்தமங்கை என்னும் பதியிலே அந்தணர் குலத்தில் தோன்றியவர் திருநீலநக்கர். 'ஒலிபுனல் சூழ் சாத்தமங்கை நீலநக்கற்கடியேன்' எனவரும் திருத்தொணடத் தொகை இவரது ஊர் சாத்தமங்கை எனத் தெளிவாகக் குறித்தல் காணலாம். நீலநக்கராகிய இப் பெருந்தகையார், வேதத்தின் உள்ளுறையாவது சிவபெரு மானையும் சிவனடியார்களையும் அன்பினால் அருச்சித்து வணங்குதலே எனத் தெளிந்து நாள்தோறும் சிவாகம விதிப்படி சிவபூசை செய்து அயவந்தியீசரை வழிபட்டுச் சிவனடியார் களுக்குத் திருவமுது செய்வித்தல் முதலாக எவ்வகைப்பட்ட திருப்பணிகளையும் செய்து வந்தார்.

திருநீலநக்கர் அவ்வாறு ஒழுகும் நிலையில் திருவாதிரை விண்மீன் கூடிய ஒரு நாளிலே சிவபூசையை முடித்துக் கொண்டு சாத்தமங்கையில் அயவந்தி என்னும் திருக்கோயிலிலே எழுந்தருளியுள்ள பெருமானை அருச்சிக்க விரும்பினார். பூசைக்கு வேண்டும் பொருள்களைத் தம் மனைவியார் எடுத்துக்கொண்டு உடன்வரத் திருக்கோயிலையடைந்து அயவந்தி யீசரை முறைப்படி பூசித்து இறைவர் திருமுன் இருந்து திருவெழுத்தினைச் செபித்தார். அப்பொழுது சிலந்தி யொன்று அயவந்தியீசர் திருமேனியில் விழுந்தது. அதுகண்ட நீலநக்கர் மனைவியார், விரைந்து சென்று அதனைப் போக்க வாயினால் ஊதித்துமிந்தார். நாயனார் அச்செயலைக் கண்டு தம் கண்ணைப் புதைத்து 'அறிவிலாதாய்! நீ இவ்வாறு செய்தது ஏன்' என்று வினவ, 'சிலந்தி விழுந்தமையால் ஊதித் துமிந்தேன்' என்றார் மனைவியார். 'நீ சிவலிங்கத்தின் மேல் விழுந்தசிலந்தியை வேறொரு பரிசால் விலக்காமல் முற்பட்டு ஊதித் துமிந்தாய். இத்தகைய அருவருக்குஞ் செய்கை செய்த உன்னையான் இனித் துறந்தேன். நீங்கிவிடு' என்றார் கணவர். மனைவியாரும் அது கேட்டு அஞ்சி ஒரு பக்கம் விலகினார். நீலநக்கர் பூசையை முடித்துக் கொண்டு வீட்டிற்குத் திரும்பி விட்டார். மனைவியார் அஞ்சி ஆலயத்தில் தங்கியிருந்தார். அன்று இரவு நீலநக்கர்

துயிலும்போது அவயந்திப் பெருமான் கனவில் தோன்றித் தம் திருமேனியைக் காட்டி 'உன்மனைவி ஊதித் துமிந்த இடம் தவிர எல்லா இடங்களிலும் சிலந்தியின் கொப்புளம்' என்று சொல்லியருளினார். நீலநக்கர் வணங்கி விழித்தெழுந்து ஆடிப்பாடி நின்று இறைவனது திருவருளை வியந்து உள்ள முருகினார். விடிந்தபின் ஆலயத்திற்குச் சென்று இறைவனை யிறைஞ்சி மனைவியாரையும் உடனழைத்துக் கொண்டு வீட்டிற்குத் திரும்பினார்.

நீலநக்கர் சிவபூசையும் அடியார் பூசையும் செய்து கொண்டு சாத்தமங்கையில் இருக்கும் நாளில், அங்கு எழுந்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரை அடியார் திருக்கூட்டத்துடன் எதிர்கொண்டு வரவேற்றுத் தம்மனைக்கண் திருவமுது செய்வித்து உபசரித்தார். ஆளுடைய பிள்ளையார் விரும்பிய வண்ணம் திருநீலகண்டப் பெரும்பாணரும் அவர் மனைவியார் மதங்க சூளாமணியாரும் இரவில் துயில் கொள்ளத் தம் மனையில் இடம் தரஎண்ணித் தாம் வேத விதிப்படி தீயோம்பும் வேதிகையின் பக்கத்திலேயே அவ்விருவர்க்கும் இடந்தந்துதவினார். அந்நிலையில் வேதிகையிலுள்ள நித்தியாக்கினி முன்னையிலும் மேலாக வலஞ்சுழித்து ஒளி வீசியது. ஆளுடைய பிள்ளையார் அயவந்தி யீசரைப் பாடிப்பரவிய திருப்பதிகத்தில் 'அடிகள் நக்கன்' எனவும்' 'நிறையினார் நீலநக்கன்' எனவும் சிறப்பித்துப் பாராட்டியுள்ளார். ஞானசம்பந்தப் பிள்ளையார்க்கு நண்பராகிய திருநீலநக்க நாயனார் திருஞானசம்பந்தப் பிள்ளையாரது திருமணத்தினைக் காணத் தம் மனைவியாருடன் சென்று அத்திரு மணத்தில் வேத விதிப்படியமைந்த சடங்குகளை முன்னின்று நிகழ்த்தித் திருநல்லூர்ப் பெருமணத்தில் ஈறில் பெருஞ் சோதியினுள் உடன் புகுந்தார் என்பது திருஞானசம்பந்தர் புராணத்திற் கூறப்பெற்றது.

## நமிநந்தியடிகள் நாயனார்

சோழநாட்டில் ஏமப் பேறூரில் அந்தணர் குலத்தில் தோன்றியவர் நமிநந்தியடிகள். நம்பிநந்தி என்னும் பெயரே நமிநந்தி எனத் திரிந்து வழங்கியதெனத் தெரிகிறது. நமிநந்தியடிகள் இரவும் பகலும் பிரியாது சிவப்பெருமானைப் பூசித்து மகிழும் சீலமுடையவர். அவர் பல நாளும் திருவாரூர்க்குச் சென்று புற்றிடங்கொண்ட பெருமானைப் போற்றி வருவார். ஒரு நாள் திருவாரூர்த் திருக்கோயிலின் ஒருபக்கத்தே அமைந்த அரனெறி என்னும் திருக்கோயிலை வழிபடச் சென்றார். அங்கு விளக்கேற்றி வழிபட வேண்டும் என்ற விருப்பம் அவருள்ளத் தெழுந்தது. அப்பொழுது மாலைக்காலம் ஆனமையால்

தம்மூர்க்குச் சென்று எண்ணெய்கொணர எண்ணாது திருவாரூரிலேயே ஒரு வீட்டிற் சென்று விளக்கிற்கு எண்ணெய் வேண்டினார். அவர் சென்று கேட்ட வீடு சமணர்கள் வீடு. அங்குள்ள சமணர்கள் நிமிநந்தியடிகளை நோக்கி, 'கையிலே ஒளி விட்டு விளங்கும் தீயினை யேந்திய உங்கள் இறைவற்கு விளக்கு தேவையற்றது. நெய் இங்கு இல்லை. விளக்கெரிப்பீராகில் நீரைமுகந்து எரிப்பீராக' என்றனர். அது கேட்டுப் பொறாத நமிநந்தியடிகள் அரனெறிப்பெருமான் திருமுன் சென்று வீழ்ந்து வணங்கினார். அப்பொழுது 'நமிநந்தியே! நினது கவலையை மாற்றுக. இதன் அயலேயுள்ள குளத்தின் நீரை முகந்து வந்து வார்த்து விளக்கேற்றுக' என்றதொரு அருள்மொழி விசும்பில் தோன்றியது. அது கேட்டு மகிழ்ந்த நமிநந்தியடிகள், இறைவனருளே இதுவாம் என்றெண்ணிக் குளத்தின் நடுவே புகுந்து நாதர் நாமமாகிய திருவைந் தெழுத்தோதி நீரை முகந்து கொண்டு கரையேறிக் கோயிலையடைந்து உலகத்தார் அதிசயிப்ப அகலில் திரியிட்டு நீர் வார்த்து விளக்கேற்றினார். சோதி விளக்கு ஒன்று ஏற்றுதலும் சுடர்விட்டொளிர்வது கண்டு அமணர் காண நாதரருளால் திருவிளக்குகள் பல விடியுமளவும் நீரால் எரித்தார்.

இவ்வாறு ஆரூர் அரனெறியப்பர்க்கு நாளும் இரவில் நீரால் திருவிளக்கிட்டுத் தம்முடைய ஊராகிய ஏமப்பேறூர்குச் சென்று சிவபூசை முடித்துத் திருவமுது செய்து துயில் கொள்ளும் வழக்கமுடைய ராயிருந்தார். அப்பொழுது தண்டியடிகள் நாயனாரால் சமணர்கள் கலக்கம் விளைந்து அவ்வூரைவிட்டு அகன்றனர். திருவாரூர் நீற்றின் பெருமை பெற்று விளங்கியது. நீதிவளவன் ஆரூர்ப்பெருமானுக்கு நிபந்தம் பல அளித்துப் பங்குனியுத்திரப் பெருவிழாவைச் சிறப்புறச் செய்தற்கு நமிநந்தியடிகள் உறுதுணையாய் விளங்கினார். எல்லாக் குலத்து மக்களும் இறைவனை உடன் சேவித்துச் சென்றார்கள். நமிநந்தியடிகளும் அவர்கள் எல்லாருடனும் உடன்சென்று திருவோலக்கம் கண்டு மகிழ்ந்தார். இறைவர் திரும்பி திருக்கோயிலிற்புக மாலைப்பொழுதாயிற்று. நமிநந்தியடிகள் நள்ளிருளில் தமது ஊரையடைந்து வீட்டினுள்ளே புகாமல் புறக்கடையிலே படுத்துத்துயின்றார். அந்நிலையில் அவர் மனைவியார் வந்து அவரைத் துயிலுணர்த்தி 'வீட்டினுள்ளே எழுந்தருளிச் சிவார்ச்சனையையும் தீவளர்த்தலையும் முடித்துக் கொண்டு பள்ளி கொள்ளலாம்' என்றார். அதுகேட்ட நமிநந்தியடிகள், 'இன்றையதினம் ஆரூர்ப்பெருமான் திருமணலிக்கு எழுந்தருளியபோது யானும் உடன் சேவித்துச் சென்றேன். அக்கூட்டத்தில் எல்லாச் சாதியாரும் கலந்திருந் தமையால் தீட்டுண்டாயிற்று. ஆதலால் நீராடிய பின்னரே மனைக்குள் வருதல் வேண்டும். குளித்தற்குத் தண்ணீர்

கொண்டுவா' என்று சொல்ல மனைவியாரும் விரைந்து சென்றார். அதற்கிடையில் நமிநந்தியடிகளுக்குச் சிறிது உறக்கம் வந்தது. அப்பொழுது வீதிவிடங்கப்பெருமான் கனவில் தோன்றி, 'அன்பனே, திருவாரூரிலே பிறந்தார் எல்லோரும் நம்முடைய கணங்கள். அதை நீகாண்பாய்' என்று சொல்லி மறைந்தருளினார். உறக்கம் நீங்கி விழித்தெழுந்த நமிநந்தியடிகள், தாம் அடியார்களிடையே சாதிவேறுபாடு நினைந்தது தவறென்று உணர்ந்து எழுந்தபடியே வீட்டினுள்ளே சென்று சிவபூசையைமுடித்து மனைவியார்க்கு நிகழ்ந்ததைச் சொல்லினார். பொழுது விடிந்தபின் திருவாரூர்க்குச் சென்றார். அப்பொழுது திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லாரும் சிவசொரூபம் பெற்றவர்களாகத் தோன்றக் கண்டார். 'அடியேன் செய்த பிழையினைப் பொறுத்தருளவேண்டும் என்று ஆரூர்ப் பெருமானை இறைஞ்சிப் போற்றினார். நமிநந்தியடிகள் பின்பு திருவாரூரிலேயே குடிபுகுந்து தம்முடைய திருத்தொண்டுகளைச் செய்து கொண்டிருந்தார். இவ்வாறு சிவனடியார்களுக்கு வேண்டுவன எல்லாம் நியதியாக நெடுங்காலம் செய்திருந்து திருநாவுக்கரசரால் 'தொண்டர்க்கு ஆணி' எனச் சிறப்பிக்கப்பெறும் பேறுபெற்றுத் திருவாரூர்ப் பெருமான் திருவடி நீழலையடைந்தார்.

திருவாரூர்ப்பெருமானை வழிபட்ட திருநாவுக்கரசர் அத்திருக்கோயிலில் நீரால் திருவிளக்கிட்டுப் பங்குனி உத்திரப்பெருவிழாவைச் சிறப்புறச் செய்த நமிநந்தியடிகளாரது திருத்தொண்டு நாடறிந்த தென்பதனை யறிவுறுத்தி அத்திருத் தொண்டுகளைச் செய்த திண்மை மெய்த்தவராகிய நமிநந்தியடிகள் தொண்டர்க் கெல்லாம் ஆணிப்பொன் ஆவார் எனச் சிறப்பித்துப் போற்றும் நிலையில்,

**'ஆராய்ந் தடித்தொண்ட ராணிப்பொன் ஆரூரகத் தடக்கிப்**
**பாரூர் பரிப்பத்தம் பங்குனியுத்திரம் பாற்படுத்தான்**
**நாரூர் நறுமலர் நாதன் அடித்தொண்டன் நம்பிநந்தி**
**நீராற் றிருவிளக் கிட்டமை நீணாடறியு மன்றே' (4-102-2)**

எனவரும் திருவிருத்தத்தை அருளிச் செய்துள்ளார்.

நமிநந்தியடிகள் திருவாரூரிற் சிவனடியார்கள் செய்யும் திருப்பணிக்கெல்லாம் உறுதுணையாயுள்ள செய்தியை,

**'துடிக்கின்ற பாம்பரையார்த்துத் துளங்கா மதியணிந்து**
**முடித்தொண்டராகி முனிவர் பணிசெய்வ தேயுமன்றிப்**
**பொடிக்கொண்டு பூசிப் புகுந்தொண்டர் பாதம் பொறுத்த பொற்பால்**
**அடித்தொண்டன் நந்தியென் பானுளன் ஆரூ ரமுதினுக்கே'**
**(4-102-4)**

எனவரும் திருவிருத்தத்தில் திருநாவுக்கரசர் குறித்துள்ளமை காணலாம்.

நமிநந்தியடிகள் திருவாரூரில் தங்கிய காலத்தில் சமணத்துறவிகளிற் பலர் கொடி, விதானம், பறை, சங்கம், கைவிளக்கு ஆகிய குறைவில்லாத பெருஞ்செல்வத்தைப் பெற்றுத் திருவாரூர்க்குள்ளே வாழ்ந்தனராயினும் நமிநந்தியடிகள் புறப்பட்டுவந்தால் அவ்வமணர்களது செல்வப் பொலிவனைத்தும் திருநீறிட்ட சிவனடியார்களுக்கு முன்னே அகத்திருளும் புறத்திருளும் கெடுமாறுபோன்று விரைந்து கெடும் நிலையில் அவ்வமணர்கள் ஓடிமறைந்தனர். இச்செய்தினை,

**'கொடிகொள் விதானங் கவரி பறைசங்கம் கைவிளக்கோ**
**டிடிவில் பெருஞ்செல்வ மெய்துவ ரெய்தியு மூனமில்லா**
**அடிகளும் ஆரூர் அகத்தின ராயினும் அந்தவளப்**
**பொடிகொண் டணிவார்க் கிருளொக்கும் நந்திபுறப் படிலே'**
**(4-102-6)**

எனவரும் திருப்பாடலில் திருநாவுக்கரசர் குறித்துள்ளமையால்அடிகள் காலத்தை யொட்டித் திருநாவுக்கரசர் திருவாரூரை வழிபட்டார் எனபதனை ஒருவாறு உணர்ந்து கொள்ளலாம்.

திருக்கோளிலியிறைவனை வணங்கிப் பரவும் திருஞானசம்பந்தப்பிள்ளையார், அவ்வூர்ப் பெருமான் நமிநந்தியடிகளுக்கு அருள்புரிந்த திறத்தை.

**'தாவியவ னுடனிருந்தும் காணாத தற்பரனை**
**ஆவிதனி லஞ்சொடுக்கி அங்கணனென் றாதரிக்கும்**
**நாவியல்சீர் நமிநந்தி யடிகளுக்கு நல்குமவன்**
**கோவியலும் பூவெழுகோற் கோளிலியெம் பெருமானே'**
**(1-6-6)**

எனவரும் திருப்பாடலிற் போற்றியுள்ளார். இத்திருப் பாடலின் ஈற்றடியினைக் கூர்ந்து நோக்குங்கால் கோளிலிப் பெருமானாகிய இறைவன் நமிநந்தியடிகளுக்குத் தலைமைச் சிறப்பளிக்கும் நோக்குடன் பூத்தொழிலமைந்த கோலொன்றினை அருளிய திறம் குறிக்கப்பெற்றுள்ளமை புலனாகும்.

**"அருநம்பி நமிநந்தி அடியார்க்கும் அடியேன்'**

எனத்திருத்தொண்டத் தொகையிற் போற்றப் பெறுதலால் இவர் அரசரால் அளிக்கப்பெறும் நம்பி என்னும் பட்டத்தினைப் பெற்றாரெனக் கருதவேண்டியுளது. இவரை 'நம்பிநந்தி' என நாவுக்கரசர் போற்றியுள்ளமையும் இக்கருத்தினை வலியுறுத்துவதாகும். இவர்காலத்தில் தண்டியடிகள் நாயனாரும் திருவாரூரில் திருப்பணி புரிந்திருந்தார் என்பதனைச் சேக்கிழாரடிகள் இவரது

வரலாற்றிற் குறிப்பிடுதலால் இவ்விருவரும் ஒரு காலத்தவர் என்பது நன்கு விளங்கும்.

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

**"வம்பறா வரிவண்டு மணநாற மலரும்**
**மதுமலர்நற் கொன்றையான் அடியலாற் பேணா**
**எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்"**

என நம்பியாரூராற் போற்றப்பெற்ற திருஞான சம்பந்தப் பிள்ளையாரது வரலாறு முன்னர் (பன்னிரு திருமுறை வரலாறு முதற்பகுதியில்) விரிவாக ஆராய்ந்து விளக்கப்பெற்றது.

## ஏயர்கோன்கலிக்காம நாயனார்

சோழநாட்டில் காவிரி வடகரைக் கீழ்பாலுள்ள திருப்பெருமங்கலம் என்னும் பதியில் சோழமன்னர்க்குச் சேனாதிபதித் தொழில்பூண்ட பொன்னிநாட்டு வேளாண்மையிற் சிறந்த ஏயர்கோக்குடியில் தோன்றியவர் கலிக்காமனார் ஆவர். சிவபத்தியிலும் அடியார் பத்தியிலும் சிறந்த இவர் மானக்கஞ்சாற நாயனாரது மகளை மணந்துகொண்ட செய்தி முன்னர் விளக்கப் பெற்றது. ஏயர்கோன் கலிக்காம நாயனார் திருப்புன் கூர்ப்பெருமானுக்குப் பல திருப்பணிகள் புரிந்தார். 'நிதியமாவன நீறுகந்தார் கழல்' என்று சிவபெருமானைத் துதியினாற் பரவித்தொழுது இன்புறுந் தன்மையராய் வாழ்ந்தார். அங்ஙனம் வாழும் நாளில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவபெருமானைப் பரவையாரிடத்தில் தூதுவிட்ட செய்தியைக் கேள்வியுற்று 'ஆண்டவனை அடியான் ஏவும் செயல் நன்று' என வெகுண்டு நம்பியாரூரர் மேற் செற்றங்கொண்டார். அது கேட்டுத் தன் பிழையினையுணர்ந்த வன்றொண்டர் ஆரூரிறைவரைப் போற்றிக் கலிக்காமரது செற்றத்தைத் தீர்த்தருளும்படி வேண்டிக் கொண்டார். சிவபெருமான் அவ்விருவரையும் நண்பராக்கத் திருவுளங்கொண்டு, ஏயர்கோன் கலிக்காமர்க்குச் சூலை நோயினைத்தந்து, வன்றொண்டன் தீர்ப்பினன்றி முந்துற ஒழியாது' என்றருள, அதுகேட்ட கலிக்காமர் 'அவ்வன் றொண்டன் தீர்க்கத் தீர்வதைக்காட்டிலும் அந்நோய் தீராது என்னைவருத்துதலே நன்று' என்றார். சிவபெருமான் வன்றொண்டர் முன்தோன்றி, 'இன்று நம் ஏவலாலே ஏயர்கோன் உற்றசூலை சென்று நீ தீர்ப்பாய்' எனப் பணித்தருளினார். நம்பியாரூரரும் விரைந்து தாம் சூலை நோய் தீர்க்கவருஞ் செய்தியை ஏயர்கோனார்க்கு முந்துறச் சொல்லியனுப்பினார். அதனைக்கேட்ட கலிக்காமர் 'மற்றவன் வந்து தீர்ப்பதன் முன்னம் என்னை நீங்காப் பாதகச் சூலை தன்னை உற்ற இவ்வயிற்றி

னோடும் கிழிப்பேன்' என்று உடைவாளற் கிழித்திட உயிரினோடு சூலையும் தீர்ந்தது.

கலிக்காமர் இறத்தல்கண்டு மனைவியார் உடனுயிர் விடத் துணிந்தார். அப்பொழுது சுந்தரமூர்த்தி சுவாமிகள் அண்மையில் வந்து விட்டார் என்று வந்தோர் சொல்லக் கேட்டுத் தம் கணவர் உயிர் துறந்த செய்தியை மறைத்து நம்பியாரூரரை எதிர் கொள்ளும்படி சுற்றத்தார்களை ஏவினார். அவர்களும் நம்பியாரூரரை எதிர்கொண்டு அழைத்து வந்து ஆசனத்தில் இருத்தி வழிபட்டுப் போற்றினர். அவர்களது வழிபாட்டினை ஏற்றுக்கொண்ட சுந்தரர் 'கலிக்காமனாருடைய சூலையை நீக்கி அவருடன் இருத்தற்கு மிக முயல்கின்றேன்' என்றார். அப்பொழுது கலிக்காமரது மனைவியார் ஏவலால் வீட்டிலுள்ள பணியாளர்கள் வணங்கி நின்று 'சுவாமீ! அவருக்குத் தீங்கெதுவுமில்லை. உள்ளே பள்ளி கொள்கின்றார்' என்றனர். கேட்ட வன்றொண்டார், தீங்கொன்றும் இல்லை யென்றிர்கள். ஆயினும் என் மனம் தெளிவு பெறவில்லை. ஆதலால் அவரை நான் விரைந்து காணுதல் வேண்டும்' என்றார் அது கேட்டு அவர்கள் கலிக்காமனாரைக் காட்டினர். கலிக்காமர் குடர் சொரிந்து உயிர் பொன்றிக் கிடத்தலைக்கண்ட சுந்தரர் 'நிகழ்ந்தது நன்று. யானும் இவர்போல் இறந்தொழிவேன்' என்று குற்றுடைவாளைப் பற்றினார். உடனே இறைவரருளால் கலிக்காமர் உயிர் பெற்றெழுந்து சுந்தரர் கையிலுள்ள வாளைப் பிடித்துக்கொள்ள, ஆரூரர் விழுந்து வணங்கினார். கலிக்காமரும் வாளை விட்டொழித்து நம்பியாரூரர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். இருவரும் எழுந்து ஒருவரொருவரை அன்பினால் தழுவிப் பிரியா நண்பராகித் திருப்புன்கூர்ப் பெருமான் திருவடிகளை வணங்கிப் போற்றினார்கள். நம்பியாரூரருடன் சென்று திருவாரூர்ப் பெருமானை வழிபட்டு அங்குத் தங்கிய ஏயர் கோன் கலிக்காமர் ஆரூரர் இசைவு பெற்றுத் தம்முடைய ஊர்க்குத் திரும்பித் தமக்கேற்ற திருத்தொண்டுகளைப் புரிந்திருந்து சிவபெருமான் திருவடியைச் சேர்ந்து இன்புற்றார்.

## திருமூல நாயனார்

'நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்' என நம்பியாரூரராற் போற்றப்பெற்ற திருமூல நாயனாரது வரலாறு முன்னர் விரிவாக ஆராய்ந்து விளக்கப் பெற்றது.

## தண்டியடிகள் நாயனார்

தண்டியடிகள் என்பவர் திருவாரூர்ப் பிறக்கும் பெருமைத் தவமுடையார். இறைவன் திருவடிகளை மனத்துட்கொண்டு நோக்கும் அகநோக்கேயன்றிப் புறம் நோக்கும் உணர்வினை

விட்டொழித்தார் போன்று பிறந்த பொழுதே கண்காணாத பிறவிக்குருடர். இவர் திருவாரூர்ப் பூங்கோயிலில் தேவாசிரியனை முன் இறைஞ்சி வலம் வந்து காதலாகி நமச்சிவாய நற்பதமே எடுத்தோதித் திருவாரூர்ப் பெருமானடிகள் திருவடிக்கே அன்புடையராய்த் திருத்தொண்டுகள் பலசெய்து வந்தார். ஆரூர்த் திருக்கோயிலின் மேற்புறத்திலுள்ள திருக்குளத்தின் பக்கமெங்கும் சமணர்களுடைய பாழிகள் பெருகிக் குளத்தின் இடம் வரவரக் குறைவடைந்தது. அதனையறிந்த தண்டியடிகள், திருக்குளத்தை முன்போற் பெருகத் தோண்ட எண்ணினார். குளத்தில் தறிநட்டுக் கயிறுகட்டிக் கரையிலும் தறிநட்டு அக் கயிற்றை வலிந்து கட்டி மண்வெட்டியுங் கூடையுங் கொண்டு குளத்திலிறங்கி மண்ணைவெட்டி யெடுத்துக் கயிற்றைப்பற்றி ஏறிக் கரையிலே போடுவாராயினார். இவ்வாறு நாள் தோறும் தண்டியடிகள் குளத்தினைத் தோண்டக் கண்ட சமணர்கள் பொறாது அவரையடைந்து 'மண்ணைத் தோண்டினால் சிற்றுயிர்கள் இறந்துபடும் வருத்தல் வேண்டாம்' என்றனர். அதுகேட்ட தண்டியடிகளார் 'திருவில்லாதவர்களே, இந்தச் சிவத்தொண்டின் பெருமை உங்களுக்குத் தெரிய வருமோ' என்றார். அமணர்கள் அவரை நோக்கி, 'சிந்தித்து இந்த அறத்தினைக் கேளாத நீ செவியும் இழந்தனையோ' என்று இகழ்ந்துரைத்தனர். அது கேட்ட தண்டியடிகள், 'மந்த உணர்வும் விழிக்குருடும் கேளாச் செவியும் உமக்கேயுள்ளன. சிவனுடைய திருவடிகளை யல்லால் வேறு காணேன் யான். அதனை அறிதற்கு நீர் யார்? உங்கள் கண் குருடாகி என் கண்கள் உலகெல்லாம் காண யான் கண்டால் நீர் என் செய்வீர்?' என்றார். அதனைக்கேட்ட சமணர்கள், 'நீ உன் தெய்வத்தருளால் கண் பெற்றாயாகில் யாங்கள் இவ்வூரில் இருக்க மாட்டோம்' என்று சொல்லி அவர் கையிலுள்ள மண் வெட்டியைப் பறித்து, நட்ட தறிகளையும் பிடுங்கி எறிந்தனர். தண்டியடிகள் ஆரூர்ப்பெருமான் திருமுன் சென்று, 'ஐயனே! இன்று அமணர்களால் அவமதிக்கப்பட்டு வருந்தினேன்; இவ் வருத்தத்தைத் தீர்த்தருளல் வேண்டும்' என முறையிட்டுத் தமது மடத்திற்குச் சென்றார். அன்றிரவு ஆரூரிறைவர் அவரது கனவில் தோன்றி, 'தண்டியே, நின் மனக்கவலை தவிர்க. நின்கண்கள் காணவும் அமணர் கண்கள் மறையுமாறும் செய்கின்றோம்' என்று அருள் செய்து, சோழ மன்னன் பால் கனவில் தோன்றி 'தண்டி என்பவன் நமக்குக் குளந்தோண்ட அதற்குச் சமணர்கள் இடையூறு விளைத்தனர். நீ அவனிடத்திலே சென்று அவன் கருத்தை முடிப்பாயாக' என்று பணித்து மறைந்தருளினார்.

வேந்தன் விழித்தெழுந்து இறைவர் திருவருளைப் போற்றிப் பொழுது புலர்ந்ததும் தண்டியடிகளை அமணர்க்கும்

தண்டியடிகளுக்கு மிடையே நிகழ்ந்த அவர்கள் கருத்தையும் அறிந்து கொண்டான். பின்னர் அமணர் தன்னுடன் வரத் தண்டியடிகளாருடன் குளக்கரையை அடைந்து தண்டியடிகளை நோக்கி, 'பெருகுந்தவத்தீர் நீர் சிவனருளாற் கண்பெறுதலைக் காட்டுவீராக' என்றான். அதுகேட்ட தண்டியடிகளார், 'யான் சிவனுக்குப் பொருந்திய அடியேன் என்றால் இன்று என் கண்கள் ஒளி விளங்கப்பெற்று அமணர்கள் தம் கண்களையிழப்பார். அதனால் ஆராய்ந்த மெய்ப்பொருளும் சிவபதமே ஆகும்' என்று சொல்லித் திருவைந்தெழுத்தை எடுத்தோதிக் குளத்தில் மூழ்கிக் கண்ணொளிபெற்று எழுந்தார். அங்கிருந்த அமணர்கள் கண்ணொளியிழந்து வழி தெரியாமல் தடுமாற்ற முற்றார்கள். 'பழுது செய்த அமண் கெட்டது' என்றுணர்ந்த மன்னன், தன் ஏவலாளரைப் பார்த்து, 'தண்டியடிகளோடு ஒட்டிக்கெட்ட சமணர்களைத் திருவாரூரினின்றும் அகன்று போகும்படி துரத்துவீராக' எனப் பணித்துத் திருக்குளத்தின் கரைகளைச் செம்மைபெறக் கட்டித் தண்டியடிகளை வணங்கிச் சென்றான். அகக்கண்ணே யன்றிப் புறக்கண்ணும் பெற்று 'நாட்டமிகு தண்டி' என நம்பியாரூராற் போற்றப்பெறும் சிறப்புவாய்ந்த தண்டியடிகளார் இறைவனைப் போற்றித் திருவைந்தெழுத் தோதித் திருப்பணிகள் பல புரிந்து சிவபதம் அடைந்தார்.

## மூர்க்க நாயனார்

'கற்ற சூதன்' எனக் குறிக்கப்பெற்ற மூர்க்க நாயனார், தொண்டை நாட்டில் பாலாற்றின் வடகரையிலுள்ள திருவேற்காடு என்னும் ஊரில் வேளாளர் மரபிற் பிறந்தவர். 'ஆதி முதல்வர் திருநீற்றின் அடைவே பொருள்' என்றறிந்து சிவனடியார்களுக்கு அறுசுவைப் போனகம் அருத்திப் பின் உண்ணுதலைத் தமது நியமமாகக் கொண்டிருந்தார். நாடோறும் அடியார்களை அமுது செய்விப்பதில் தம்முடைய நிலம் பொருள் யாவும் செலவழிந்தமையால் தாம் முன் கற்றுள்ள சூதாட்டத்தில் ஈடுபட்டு அப்பொருளைக்கொண்டு சிவனடியார்களுக்கு அமுது செய்விக்க எண்ணினார். தம்மூரில் தம்முடன் சூதுக்கு வருவோர் இல்லாமையால் சிவத்தலங்கள் தோறும் சென்று இறைவனைப் பணிந்து சில நாளிற் குடந்தையையடைந்து அங்குள்ள அம்பலத்தே தங்கிச் சூதாடிப்பொருள் தேடி நாள்தோறும் சிவனடியார்களுக்குத் திருவமுதளித்து வந்தார். சூதாடுதலில் வல்ல இவர், முதலாட்டத்தில் தாம் தோற்றுத் தம்மிடமுள்ள பொருளைப் பிறர்கொள்ளச் செய்து, பின்னிகழும் ஆட்டங்களிலெல்லாம் தாமேவென்று தம் வெற்றியை உடன்படாது மறுத்தாரைக் குற்றுடைவாளாற் குத்து மியல்பினராதல்பற்றி மூர்க்கர் என அழைக்கப் பெற்றார்.

மூர்க்கராகிய இவர், சூதினில் வென்ற பொருள்களைத் தாம் தொடாது சிவனடியார்க்கு அமுதாக்குவார் கொள்ளச் செய்து அடியார் திருவமுதுண்டபின் தாம் கடைப்பந்தியிலிருந்து உண்ணும் பழக்கமுடையார். இவ்வாறு பல்லாண்டுகள் சிவனடித் தொண்டு புரிந்த மூர்க்க நாயனார் ஏதங்கள் போயகல இவ்வுலகை விட்டதற்பின் பூதங்கள் இசைபாட ஆடுவார் பதியாகிய சிவலோகத்தை அடைந்தார்.

## சோமாசிமாற நாயனார்

'அமபரான் சோமாசிமாறனுக்கும், அடியேன்' எனப் போற்றப்பெற்ற இவர், சோழ நாட்டில் திருவம்பர் என்னும் ஊரிலே அந்தணர் குலத்திலே தோன்றியவர், சிவபத்தி யுடையராய்ச் சிவனடியார்களுக்குத் திருவமுதளிக்கும் இயல்புடையவர்; உமையொரு பாகனாகிய சிவபெருமானையே முதல்வனெனக் கொண்டு போற்றும் வேள்விகள் பலவற்றை உலகங்கள் ஏழும் உவப்ப விதிப்படி செய்தவர்; "ஈசனுக்கன்பர் என்போர் எக்குலத்தவராயினும் அவர்கள் நம்மை ஆளாகவுடையவர்கள்' என்று உறுதியாகத் தெளிந்தவர்; சிவன் அஞ்செழுத்தும் சித்தந் தெளியவோதும் நித்த நியமம் உடையவர். இவர், சீரும் திருவும் பொலியும் திருவாரூரை அடைந்து, தம்பிரான் தோழராகிய வன்றொண்டர்க்கு அன்பினால் நெருங்கிய நண்பரானார்; அங்குத் தங்கி அவர் தம் திருவடிகளைப் பணிந்து போற்றிய சிறப்பினால் என்றும் நிலவும் சிவலோகத்தில் இன்பம் உற்றார்.

## சாக்கிய நாயனார்

திருச் சங்க மங்கையில் வேளாளர் குடியிற் பிறந்த இவர், எவ்வுயிர்க்கும் அருளுடையராய்ப் பிறவா நிலை பெற விரும்பிக் காஞ்சி நகரத்தையடைந்து புத்தசமயத்தை மேற்கொண்டிருந்தமை பற்றிச் சாக்கியர் என அழைக்கப் பெற்றார். இறைவன் திருவருள் கூடுதலாற் புத்தம் முதலிய புறச் சமயச் சார்புகள் பொருள் அல்ல என்றும் ஈறில் சிவநன்னெறியே பொருளாவ தென்றும் நாட்டும் நல்லுணர்வு கைவரப் பெற்றார். 'செய்யப்படும் வினையும், அவ்வினையைச் செய்கின்ற உயிரும், அவ்வினையின் பயனும், அப்பயனைச் செய்த உயிருக்கே சேர்ப்பிக்கும் இறைவனும் எனச் சைவசமயத்தில் கூறப்பட்ட பொருள் நான்காகும். இப்பொருட் பாகுபாடு சிவ நெறியல்லாத பிறசமயத்தில் இல்லை. உயிர்களை உய்விக்கும் மெய்ப் பொருள் சிவமே. எந்த நிலையில் நின்றாலும் எக்கோலங்கொண்டாலும் சிவனடியினை மறவாது போற்றுதலே உறுதிப் பொருளாகும்" என்று ஆராய்ந்து துணிந்து, தாம்

கொண்ட புத்த சமய வேடத்துடனேயே சிவபெருமானை மறவாது போற்றுவாராயினார்.

அருவமாகியும் உருவமாகியும் உள்ள எல்லாப் பொருள்களுக்கும் காரணமாய் இறைவனுக்குத் திருமேனியாகிய சிவலிங்கத்தின் பெருமையுணர்ந்து நாள் தோறும் அதனைக் கண்டு வழிபட்ட பின்னரே உண்ணுதல் வேண்டும் என விரும்பினார். தாம் இருக்கும் இடத்திற்கு அண்மையில் வெட்ட வெளியிலே அமைந்துள்ள சிவலிங்கத்தினைச் சென்று கண்டு பெரு மகிழ்ச்சி கொண்டவராய் அம்மகிழ்ச்சியின் விளைவாக ஒன்றுந் தோன்றாது அருகிற் கிடந்த செங்கற் சல்லியை எடுத்து அதன் மேல் எறிந்தார். இளம் புதல்வர் இகழ்வனவே செய்தாலும் அச் செயல் தந்தையர்க்கு உவப்பானாற் போன்று, சாக்கியர் செய்த இதுவும் சிவபெருமானுக்கு உவப்பாயிற்று. இறைவன் அவர் அன்பினாலெறிந்தகற்களை நறுமலர்களாகவே ஏற்றுக் கொண்டார். சாக்கியர் அன்று போய் மறுநாள் அங்கு வந்தபொழுது முதல்நாள் தாம் சிவலிங்கத் திருமேனியின்மேற் செங்கல் எறிந்த குறிப்பினை எண்ணி 'நேற்று இந்த எண்ணம் நிகழ்ந்தது இறைவன் திருவருளே' என்று துணிந்து அதனையே தாம் செய்யும் வழிபாடாகக் கருதி எப்பொழுதும் அப்படியே செய்து வந்தார்.

ஒரு நாள் சாக்கியர் அச் செயலை மறந்து உண்ணப் புகுந்தபோது' 'இன்று எம்பெருமானைக் கல்லால் எறிய மறந்து விட்டேனே' என்று எழுந்து விரைந்தோடிச் சிவலிங்கத்தின் திருமுன் சென்று ஆராத வேட்கையினால் ஒரு கல்லை எடுத்து அதன்மேல் எறிந்தார். அவரது அன்பிற்கு உவந்த சிவபெருமான் நெடு விசும்பில் விடை மீது உமையம்மையாருடன் தோன்றியருளினார். அத் தெய்வக் காட்சியைக் கண்ட சாக்கிய நாயனார், தலைமேல் இரு கைகளையும் குவித்து நிலைமிசை வீழ்ந்திறைஞ்சினார். சிவபெருமான் சிவலோகத்தில் தம் பக்கத்தேயிருக்கும் பெருஞ்சிறப்பினை அவர்க்கு அருளி எழுந்தருளினார்.

**"வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கன் கழலே**
**மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கும் அடியேன்"**

என நம்பியாரூரர் சாக்கியனார் செயலைக் குறித்துப் போற்றியுள்ளார். சாக்கியர் தம்மீது எறிந்த சல்லிகளைச் சிவபெருமான் நறுமலர்களாக ஏற்றருளிய திறத்தை,

**"புத்தன் மறவாதோடி, எறிசல்லி புதுமலர்களாக்கினான் காண்**
**(6-52-8)**

*எனவும், கஞ்சி உண்பதன் முன் கல்லெறிந்து வழிபட்ட சாக்கிய நாயர்க்கு இறைவன் வீடு பேறருளியதிறத்தை*

**"கல்லினாலெறிந்து கஞ்சி தாம்உணும் சாக்கினார்**
**நெல்லினார் சோறுணாமே நீள்விசு பாளவைத்தார்"(4-49-6)**

*எனவும், திருநாவுக்கரசர் உளமுவந்து போற்றியுள்ளமை இங்கு நினைக்கத்தகுவதாகும்.*

## சிறப்புலி நாயனார்

*பொன்னி நன்னாட்டில் 'இன்மையாற் சென்றிரந்தார்க்கு இல்லையென்னாது ஈந்து உவக்கும் தன்மையார்' வாழும் திரு ஆக்கூரிலே அந்தணர் குலத்திலே தோன்றியவர் சிறப்புலி நாயனார். 'சீர் கொண்டபுகழ் வள்ளல்' எனச் சிறப்பிக்கப் பெற்ற இப்பெருந்தகையார், சிவனடியார்கள்பாற் பேரன்புடையராய் அடியார்களை எதிர்கொண்டு வணங்கி விரும்புவனவற்றைக் குறைவறக் கொடுத்து மகிழ்பவர். இவர் திருவைந்தெழுத்தோதிச் சிவபெருமானைக் குறித்துச் செய்தற்குரிய வேள்விகள் புரிந்து இடையறாப் பேரன்பால் நல்லறங்கள் பல செய்து சிவபெருமான் திருவடி நீழலையடைந்தார்.*

## சிறுத்தொண்ட நாயனார்

*காவிரித் திருநாட்டில் திருச்செங்காட்டங்குடியில் மாமாத்திரர் குலத்தில் தோன்றியவர் பரஞ்சோதியார். இவர் ஆயுள் வேதக்கலையிலும் வடநூற்கலையிலும் படைக்கலத் தொழிலிலும் நிரம்பிய பயிற்சியுடையவர்; யானை யேற்றம் குதிரை யேற்றம் ஆகிய வற்றிலும் வல்லவர். உள்ளம் நிறை கலைத் துறைகள் ஒழிவின்றிப் பயின்ற வற்றால் சிவன் கழலைச் சிந்தித்துப் போற்றுதலே மெய்ந் நெறியாவதெனத் தெளிந்தவர்; ஈசனடியார்க்குப் பணி செய்தலை இயல்பாகக் கொண்டு மன்னனுக்குச் சேனாதிபதியாய்ப் போர் முனையிற்பகை யரசர்களைப் பொருது வென்று அரசனால் நன்கு மதிக்கப் பெற்றார். இவர், மன்னன் பொருட்டு வடபுலத்திற் படையெடுத்துச் சென்று வாதாவி நகரத்தை அழித்து அங்கிருந்து பலவகை நன்மணிகளையும் செல்வங்களையும் யானை குதிரை முதலியவற்றையும் கைப்பற்றித் தம் வேந்தன் பாற் கொணர்ந்தார். அரசன் இவரது களிற்றுரிமை ஆண்மையினை அதிசயித்துப் புகழ்ந்து பாராட்டினான். அந்நிலையில் பரஞ்சோதியாரை நன்குணர்ந்த அமைச்சர்கள், 'அரசே! இவர்பால் சிவபெருமானது திருத்தொண்டின் வன்மை நன்கு வாய்த்திருத்தலால் இவரைப் போரில் எதிர்க்க வல்லார் இவ்வுலகில் யாருமில்லை' என்றார்கள். பரஞ்சோதியாரைத் தம்பெருமான் திருத்தொண்டர் எனக்*

கேள்வியுற்ற மன்னன், 'உம்பர் பிரான் அடியாரை உணராதே கெட்டொழிந்தேன், என அஞ்சிப்பரஞ்சோதியாரை நோக்கி, 'எம் பெருமானே; எனது பிழையைப் பொறுத்தல்வேண்டும்' என்று இறைஞ்சினான்.

மன்னன் இறைஞ்சுதலும் பரஞ்சோதியாரும் முன் வணங்கி 'அரசே! எனது உரிமைத் தொழிற்கடுத்த பணியினைச் செய்வேன். அதற்கு என்ன தீங்கு' என்றார். அறம்புரி செங்கோலானாகிய வேந்தன், அவருக்கு நிறைந்த நிதிக் குவைகளையும் நீடு விருத்திகளையும் அளித்து வணங்கி, 'நீர் உம்முடைய திருத்தொண்டின் நிலைமையினை யானறியாதபடி கொண்டு நடத்தினீர். இனி எம்முடைய மனக்கருத்துக்கு இசைந்து உமது மெய்ம்மைபுரி செயல் விளங்க நும் விருப்பப்படியே செம்மைநெறித் திருத்தொண்டு செய்வீராக' என விடை கொடுத்தனுப்பினான்.

மன்னவன்பால் விடைபெற்ற பரஞ்சோதியார், தமது பதியாகிய திருச் செங்காட்டங் குடியினையடைந்து கணபதீச்சரத்து இறைவரை யிறைஞ்சிச் சிவநெறித் தொண்டுகளை வழுவாது செய்திருந்தார். திருவெண்காட்டு நங்கையாருடன் மனையறத்தினை நிகழ்த்தி நாள் தோறும் சிவனடியார்களைத் திருவமுது செய்வித்துப் பின்பு தாம் உண்ணுதலை வழக்கமாகக் கொண்டார். பரஞ்சோதியார் சிவனடியார்களை விரும்பி வழிபடுங்கால் அவர் முன் மிகச் சிறியராய்ப் பணிந்து ஒழுகினமையால் சிறுத்தொண்டர் என அழைக்கப் பெற்றார். கணபதீச்சரப் பெருமான் திருவருளால் சிறுத்தொண்டர்க்குத் திருவெண்காட்டு நங்கையார்பால் சீராளதேவர் என்னும் திருமைந்தர் அவதரித்தார். அப்பிள்ளைக்கு ஐந்து வயதடைந்த பொழுது பள்ளியிற் கல்வி பயில வைத்தார். அந்நாளில் திருஞானசம்பந்தப் பிள்ளையார் இறைவனை வழிபடத் திருச் செங்காட்டங்குடிக்கு எழுந்தருளினார். சிறுத்தொண்டர் ஞானசம்பந்தரை எதிர்கொண்டு அழைத்துப் போற்றினார். ஆளுடைய பிள்ளையாரும் பேரன்பிற் சிறந்த சிறுத் தொண்டருடன் நண்பினால் அளவளாவிக் கணபதீச்சரப் பெருமானைத் தாம்பாடிய 'பைங்கோட்டு மலர்ப் புன்னை' என்னும் முதற்குறிப் புடைய திருப்பதிகத்தில் சிறுத்தொண்டரைச் சிறப்பித்துப் பாராட்டினார்.

சிறுத்தொண்டரது மெய்த்தன்மையன்பு நுகர்ந்தருளுதற்கு விரும்பிய கயிலைப்பெருமான், பைரவ சமய அடியாராகத் திருவேடந்தாங்கித் திருச்செங்காட்டங்குடியை யடைந்தார். சிறுத் தொண்டரது மனைவாயிலை நண்ணி, 'தொண்டானோர்க்கு

எந்நாளும் சோறளிக்கும் சிறுத்தொண்டர் இம்மனையினுள் உள்ளாரோ? 'என வினவிநின்றார். அம்மொழியினைக் கேட்ட சந்தனத்தாதியார் முன்வந்து வணங்கி, 'அவர் அடியாரைத் தேடிப்புறத்தே சென்றுள்ளார். எம்மை ஆளாகவுடையவரே! அகத்துள் எழுந்தருள்வீராக' என வேண்டினார். வந்த பைரவர் அவரை நோக்கி, 'மாதர்கள் இருந்த இடத்தில் யாம் தனியே புகமாட்டோம்' என்றார். அது கேட்ட திருவெண்காட்டு நங்கையார் 'இவ்வடியவர் போய்விடுவாரோ' என்று அஞ்சி விரைந்து மனைவாயிலில் வந்து 'எம்பெருமானே! அம்பலவர் அடியாரை அமுது செய்விப்பாராய் அடியார் யாரையும் காணாமல் புறத்தே தேடிச் சென்றுள்ளார்; தேவரீர் இங்கு எழுந்தருளியதனைக் கண்டால் தாம்பெற்ற பெரும்பேறெனக் கொள்வார். இனிச் சிறிதும் தாமதிக்க மாட்டார்; இப்பொழுதே வந்தணைவார், தேவரீர் மனைக்கண் எழுந்தருளியிருப்பீராக' என விண்ணப்பஞ் செய்தார். அதுகேட்ட பைரவர், 'ஒப்பில் மனையறம் புரப்பீர், யாம் உத்தராபதியுள்ளோம். சிறுத் தொண்டரைக் காணவந்தோம். எவ்வகையாலும் அவரின்றி இங்குத் தங்கமாட்டோம். கணபதீச்சரத்தில் ஆத்திமரத்தின் கீழ் இருக்கின்றோம், அவர் வந்தால் நாம் இருந்த செய்தியைச் சொல்வீராக' என்று கூறித் திருவாத்தியை யடைந்து அதன்கீழ் அமர்ந்தருளினார்.

அடியார்களைத் தேடிப் புறத்தே சென்று மீண்ட சிறுத்தொண்டர் அடியார் ஒருவரையும் காணாமையை மனைவியார்க்குச் சொல்லி வருந்தினார். அந்நிலையில் மனைவியார், 'உத்தராபதியாராகிய பைரவ சமய அடியார் ஒருவர் இங்கு வந்து, நாங்கள் இங்கு எழுந்தருளியிருக்கும்படி வேண்ட அதற்கிசையாது கணபதீச்சரத்திலுள்ள திருவாத்தியின் கீழ்ச்சென்று தங்கியுள்ளார்' என்றார். சிறுத்தொண்டர் விருப்பினுடன் விரைந்துசென்று ஆத்தியின் கீழமர்ந்த அடியார் திருவடிகளைப் பணிந்து நின்றார். நின்ற தொண்டரை நோக்கிய பைரவர் 'நீரோ பெரிய சிறுத்தொண்டர்?' என வினவினார். சிறுத்தொண்டர் அவரை வணங்கி, 'பூதிசாதனமுடைய அடியார்களைப் பணிந்து போற்றுதற்குரிய தகுதி நிரம்பப் பெறாதேனாயினும் சிவனடியார்கள் கருணையினால் என்னை அவ்வாறு அழைப்பார்கள். இன்று சிவனடியார்களை அமுது செய்விக்க விரும்பி எங்கும் தேடியும் காணப்பெற்றிலேன். தவத்தால் நும்மைக் கண்டேன். அடியேன் மனையில் எழுந்தருளி அமுது செய்தருளல் வேண்டும்' என்று வேண்டிக் கொண்டார். அதுகேட்ட உத்தராபதியார், சிறுத்தொண்டரை நோக்கி, 'தவச்செல்வரே! உம்மைக் காணும் விருப்புடன் இங்கு வந்தோம்.

யாம் உத்தராபதியோம். எம்மைப் பரிவுடன் உண்பிக்க நும்மால் முடியாது; செய்கை அரியது; ஒண்ணாது' என்று கூறினார். 'தேவரீர் அமுது செய்யும் இயல்பினை அருளிச் செய்யும். விரைந்து உணவு அமைக்கச் செய்வேன். சிவனடியார் கிடைக்கப் பெற்றால் தேட ஒண்ணாதனவும் எளிதிலுளவாகும். அருமையில்லை' என்றார் சிறுத்தொண்டர். அதனைக்கேட்ட பயிரவக்கோலப் பெருமான், 'எம் அன்புக்குரிய தொண்டரே! யாம் ஆறு மாதத்துக்கு ஒரு முறை பசுவைக் கொன்று உண்பது; அதற்கு உரிய நாளும் இந்நாளே யாகும் உம்மால் எம்மை உண்பிக்க முடியாது' என்றார். அது கேட்ட சிறுத்தொண்டர், 'மிகவும் நன்று. மூவகைப்பசு நிரையும் உடையேன். பெரியீர்! நுமக்கு அமுதாகும் பசு எதுவெனத் தெரிவித்தால் யான்போய் அமுது விரைந்தமைத்துக் காலந் தப்பாமே வருவேன்' என்று கைதொழுதார். அவரை நோக்கி பைரவர், 'நாம் உண்ணப் படுக்கும் பசு நரபசு; உண்பது அஞ்சுபிராயத்துள்; உறுப்பில் மறுவில்லாதிருக்குமானால். புண்ணில் வேலெறிந்தாற் போன்று மேலும் சொல்லவேண்டியது ஒன்றுண்டு' என்றார். கேட்ட சிறுத்தொண்டர் 'யாதும் அரியதில்லை. அருளிச் செய்யும்' என்றார். இறைவரும் ஒரு குடிக்கு நல்ல சிறுவன் ஒரு மகனைத் தாதை அரியத் தாய்பிடிக்கும் பொழுது தம்மில் மனமுவந்து குற்றமின்றி அமைத்த கறியினை யாம் இட்டு உண்பது' என மொழிந்தார். அம்மொழியினைக்கேட்ட சிறுத்தொண்டர் 'எம்பெருமான் அமுது செய்யப் பெறில் அதுவும் அரிதன்று' என்று, அடியவர் இசையப் பெற்றகளிப்பால் அவர் திருவடிகளை வணங்கி விரைந்து மனையினை யடைந்தார்.

மனைவாயிலில் கணவர் வருகையை எதிர்நோக்கி நின்ற திருவெண்காட்டு நங்கையார், அவரது மலர்ந்த முகங்கண்டுவந்த அடியாரைப்பற்றி வினவினார். 'ஒரு மகனாய் ஐந்து வயதுடை யனாய் அவயவப் பழுதில்லாதவனாயுள்ள பிள்ளையைத் தாய் பிடிக்க உவந்து பிதா அரிந்து சமைக்கப் பெற்றால் அடியார் திருவமுது செய்தற்கு இசைந்தருளினார்' என்றார் சிறுத் தொண்டர். அதுகேட்ட கற்பிற் சிறந்த மனைவியார், 'பெரிய பயிரவத் தொண்டர் அமுது செய்யப் பெறு வதற்கு இங்கு உரிய வகையால் அமுதமைப்போம்' எனத் தமது இசைவினை முன்னர்ப் புலப்படுத்தி, 'ஒருவனாகி ஒருகுடிக்கு வரும் அச்சிறுவனைப் பெறுவது எவ்வாறு?' என்று வணங்கினார். சிறுத்தொண்டர் மனைவியார்தம் முகம் நோக்கி, 'இத்தன்மையுடைய பிள்ளையை நினைவு நிரம்ப நிதி கொடுத்தால் தருவார் உளரோ? நேர் நின்று தம் பிள்ளையைத் தாமே அரியும் தாய் தந்தையர் இருக்க மாட்டர்கள். ஆகவே யான் உய்ய நீ பெற்றமைந்தனை இங்கு

அழைப்போம்' என்றார். மனைவியார் கணவரை நோக்கி 'நம்மைக் காக்கவரும் மைந்தனைப் பள்ளியிற் சென்று அழைத்து வாரும்' என்றார். சிறுத்தொண்டர் மனமகிழ்ந்து தம் மைந்தர் ஓத அணைந்த பள்ளிக்குச் சென்றார். பாதச்சதங்கை மணி யொலிப்பச் சீராள தேவராகிய பிள்ளை ஓடிவந்து தந்தையைத் தழுவிய நிலையில், சிறுத்தொண்டர் மைந்தனை யெடுத்துக் கொண்டு வீட்டிற்கு விரைந்தார். மைந்தனை எதிர் சென்று வாங்கிய வெண்காட்டு நங்கையார் பிள்ளையைக் குஞ்சிதிருத்தி முகந்துடைத்துத் திருமஞ்சன மாட்டிக் கோலஞ் செய்து கணவர் கையிற்கொடுத்தார்.

பிள்ளையைக் கையிற்கொண்ட சிறுத்தொண்டர், அடியார்க்குக் கறியமுதாம் என்று மைந்தனை உச்சி மோவாது மார்பிலணைத்து முத்தங்கொள்ளாது அடி யார்க்கு அமுதமைக்க அடுக்களையிற் செல்லாது வேறிடத்திற் செல்வாராயினர். ஒன்றிய உள்ளத்தாராகிய சிறுத்தொண்டரும் அவர்தம் மனைவியாரும் தாம் செய்யப்போகும் செயலின் உண்மையினை உலகத்தார் உள்ளவாறு அறியும் உணர்வுடையாரல்லர் என்று கருதி, மறைவிடத்திற் சென் புக்கனர். பிள்ளையைப் பெற்ற தாயார் பாத்திரங்களைக் கழுவிக்கொணர்ந்தார். உலகை வென்ற தந்தையார் பிள்ளையின் தலையைப் பிடித்தார். மெய்த்தாயார் பிள்ளையின் கிண்கிணிக் கால் இரண்டினையும் மடியின் புடையில் இடுக்கிகொண்டார். அதனைக் கண்ட மைந்தன் பெற்றோர் முகம் நோக்கி மகிழ்ந்து நகைத்தனன். தனிமா மகனைத் தந்தையார் கருவிகொண்டு தலையரிவாராய் இருவர் மனமும் பேருவகை யெய்தி அரிய வினைசெய்தார்கள். வெண்காட்டு நங்கையார், அறுத்த தலையின் இறைச்சி திருவமுதுக்கு ஆகாதென்று கழித்து அதனை மறைத்து நீக்கச் சந்தனத்தாதியார் கையில் கொடுத்துவிட்டு மற்றை உறுப்புக்களின் இறைச்சிகளெல்லாவற்றையும் அறுத்துப் பாகம் பண்ணி வேறு கறிகளும் சமைத்துச் சோறும் சமைத்துக் கணவர்க்குத் தெரிவித்தார்.

சிறுத்தொண்டர், ஆர்வத்துடன் விரைந்து சென்று திருவாத்தியின் கீழிருந்த பயிரவரை வணங்கி, தேவரீர் அடியேன்பால் நண்ணி அமுது செய்தருள வேண்டும் என்னும் ஆர்வத்தால் தேவரீர் பசித்தருளக் காலந் தாழ்த்தேனாயினும், தேவரீர் சொல்லிய வண்ணம் திருவமுது சமைத்தேன். எண்ணம் வாய்ப்ப எழுந்தருள வேண்டும்' என வேண்டி, வறியோன் இரு நிதியும் பெற்று வந்தாற்போல அடியவரைத் தம் மனைக்கு அழைத்து வந்தார். வெண்காட்டு நங்கையார் கொணர்ந்த தூய நீரால் அடியார் பாதங்களை விளக்கிய சிறுத்தொண்டர் அந்நீரை

உள்ளும் புறம்பும் தெளித்தார். தூப தீபங் காட்டி வணங்கினார். மனைவியாருடன் அடியவரையிறைஞ்சி நின்று 'திருவமுது படைக்கும் வகை எவ்வாறு' என வினவ 'இனிய அன்னமுடன் கறிகள் எல்லாம் ஒக்கப்படைக்க' என்றார் பயிரவர். அவர் கூறியவண்ணம் திருவெண்காட்டு நங்கையார் பரிகலந்திருத்திப் பாவாடையில் ஏற்றிச் செந்நெற் சோறும் கறியமுதும் படைத்தார். அதனைக்கண்ட பயிரவர் அவரை நோக்கி, 'சொன்ன முறையிற் கொன்ற பசுவினது உறுப்பு எல்லாவற்றையும் கொண்டு சுவை நிரம்பக் கறியாக்கி வைத்தீரோ?' என்றார். 'தலையிறைச்சி திருவமுதுக்கு ஆகாதென்று கழித்து விட்டோம்' என்றார் வெண்காட்டு நங்கையார். 'அதுவும் கூட நாம் உண்பது' என்றார் பயிரவர். அது கேட்டுச் சிறுத்தொண்டரும் மனைவியாரும் திகைத்து நின்றனர். அப்பொழுது சந்தனத் தாதியார், 'அந்தத் தலையிறைச்சி வந்ததொண்டர் அமுது செய்யும் பொழுது நினைக்க வரும் என்று முந்தவே கறியாக்கி வைத்துள்ளேன்' என்று சொல்லி எடுத்துக் கொடுத்தார். திருவெண்காட்டு நங்கையார் முகமலர்ந்து அதனை வாங்கிப் பரிகலத்திற் படைத்தார். அதன்பின் பயிரவர் சிறுத்தொண்டரைப் பார்த்து 'இங்கு நமக்குத் தனியே உண்ண ஒண்ணாது. இறைவனடியார் இப்பக்கத்தே யுள்ளாரை அழைத்து வாரும்' என்றார். கேட்ட சிறுத்தொண்டர் 'அடியார் அமுது செய்ய இடையூறு இதுவோ' என்று வருந்தி, வீட்டின் புறத்தே சென்று பார்த்தார். அடியார் ஒருவரையும் காணாது முகத்தில் வாட்டம் பெருக முதல்வரை வணங்கி 'இகத்தும் பரத்தும் இனியாரைக் காணேன். யானும் திருநீறு இடுவாரைக் கண்டு இடுவேன்' என்றார். அதுகேட்ட பயிரவர் 'உம்மைப்போல நீறிட்டார் உளரோ? நீர் உடன் உண்பீர்' என்று கூறித் திருவெண்காட்டு நங்கையாரை நோக்கி, வேறொரு பரிகலம் இடச்செய்து 'வெம்மையிறைச்சிச் சோறு இதனில் மீட்டுப் படையும்' என்றார். அவரும் அவ்வாறே படைத்தார். உடனமர்ந்த சிறுத்தொண்டர், அடியாரை உண்பிக்க வேண்டித் தாம் உண்ணப் புகுந்தார். அதுகண்ட பயிரவர் அவரைத் தடுத்தருளி, 'ஐயா, யாம் ஆறுமாதம் கழித்து உண்போம், நாம் உண்ணுமளவும் பொறுத்திராது சோறு நாளும் உண்ணும் நீர் முன்பு உண்பது ஏன்? நம்முடன் இருந்துண்ண மகவினைப் பெற்றீராயின் அம்மைந்தனை அழையும்' என்றார். அதனைக்கேட்ட சிறுத்தொண்டர் 'இப்பொழுது அவன் உதவான்' என்றார். 'நாம் இங்கு உண்பது அவன் வந்தால்தான். நாடி அழையும்' என்றார் பயிரவர். அச்சொற் கேட்டுத் தரியாது சிறுத்தொண்டர் மனைவியாரொடும் புறத்தே போய் அழைக்கும் போது சிறுத்தொண்டர் 'மைந்தா வருவாய்' என அழைத்தார். அவர் மனைவியாரும் தலைவர் பணியில் தலைநிற்பவராய்

அழைப்பவர், 'செய்ய மணியே! சீராளா! வாராய். சிவனார் அடியார் யாம் உய்யும் வகையால் உடனுண்ண அழைக்கின்றார்' என்று ஓல மிட்டழைத்தார். அப்பொழுது பரமர் அருளால் பள்ளிக் கூடத்தினின்று ஓடி வருவானைப் போன்று வந்த புதல்வனைத் தாயார் தழுவியெடுத்துச் 'சிவனடியார் அமுது செய்யப் பெற்றோம்' என்னும் மகிழ்ச்சியால் கணவனார் கையிற்கொடுத்தார்.

வந்த மைந்தனை அழைத்துக்கொண்டு அடியாரை அமுது செய்வித்தற்கு உள்ளே புகுந்த சிறுத்தொண்டர் முன்னமே மறைந்தருளிய பயிரவக்கோலத் தொண்டரைக் காணாதவராய்ச் சிந்தை கலங்கித் திகைத்து வீழ்ந்தார்; மனஞ் சுழன்றார். வெந்த இறைச்சிக் கறியமுதினையும் கலத்திற் காணாது வெருவுற்றார். 'செய்ய மேனிக் கருங்குஞ்சிச் செழுங்கஞ்சுகத்துப் பயிரவர் யாம் உய்ய அமுது செய்யாது ஒளித்தது எங்கே?' எனத் தேடி மயக்கங் கொண்டு புறத்திற் சென்று பார்த்தார். அப்பொழுது மறைந்த அம்முதல்வர் உமையம்மையாரோடும் முருகனாகிய குழந்தையுடனும் விடைமீதமர்ந்து 'இனிய கறியும் திரு வமுதும் அமைத்தார்காண எழுந்தருளித் திருவருள் நோக்கம் செய்தருளினார். அன்பின் வென்ற தொண்டராகிய சிறுத்தொண்டரும் அவர் மனைவியாரும் மைந்தரும் தம் முன்னே தோன்றிய பெருமானை என்பும் மனமும் கரைந்துருக நிலமிசை வீழ்ந்து துதித்துப் போற்றினார்கள். சிவபெருமானும் உமா தேவியாரும் முருகவேளும், அங்குத் தம்மை வழிபட்டு நின்ற சிறுத்தொண்டர் அவர் மனைவியார் மகனார் தாதியார் நால்வரையும் தம்மை என்றும் பிரியாது இறைஞ்சியிருக்கும் வண்ணம் உடன் கொண்டு திருக்கயிலையை அடைந்தருளினர்.

சிவனடியார்கள் செய்கின்ற செயல்களை மெல்வினை என்றும் வல்வினையென்றும் இருதிறனாகப் பகுத்துரைப்பர் சான்றோர். இறைவனை வழிபடுதற்கு உலகத்தார் எல்லோராலும் மேற்கொள்ளத் த்க்க அன்பின் வழிப்பட்ட செயல் முறைகள் மெல்வினை எனப்படும். இறைவன் பால் அன்பின் ஊற்றத்தால் தம்மை மறந்து செய்யும் அரிய செயல்கள் வல்வினை எனப்படும். இவ்விரண்டினையும் முறையே பத்தி வைராக்கியம் எனவும் வழங்குதலுண்டு. வரங்கள் தரும் பயிரவ வேடத்தைப் பூண்ட சிவபெருமானுக்குத் கறியமுது சமைக்கும் பொருட்டு இளங்குழந்தை என்று இரங்காமல் சிறுத்தொண்டரும் வெண்காட்டு நங்கையும் ஆகிய தந்தை தாய் இருவரும் தங்கள் கையினாலே பிள்ளையை யறுத்து அடியார்க்கு அமுதாக்கிய இச்செயல், மேற்குறித்த வல்வினையின் பாற்படும். இந்நுட்பம்,

**'வரங்கள் தரும் செய்ய வயிரவர்க்குத் தங்கள்**
**கரங்களினால் அன்று கறியாக்க - இரங்காதே**
**கொல்வினையே செய்யுங் கொடுவினையே யானதனை**
**வல்வினையே என்றதுநான் மற்று' (திருக்களிற்றுப்-18)**

எனத் திருகடவூர் உய்ய வந்த தேவநாயனாரால் விளக்கப் பெற்றுள்ளமை இங்கு நினைக்கத் தகுவதாகும். சிவ பூசைக்கு இடர்விளைத்த தந்தையின் கால்களை வெட்டிய சண்டீசர் செயலும், இறைவனுக்குத் திருவமுதாதற் பொருட்டுத் தாம் கொணர்ந்த படிக்கட்டளைப் பொருள்கள் வயல் வெடிப்பிற் சிந்தினமையால் தமது ஊட்டியை அறுத்த அரிவாட்டயர் செயலும் மேற்குறித்த வல்வினையைச் சார்ந்தன என்பது திருக்களிற்றுப்படியார் 19, 20 ஆம் வெண்பாக்களால் அறியப்படும்.

## சேரமான் பெருமாள் நாயனார்

பதினொராந் திருமுறையாசிரியர்களுள் ஒருவரும் நம்பியாரூரர்க்குத் தோழராய் அவருடன் திருக்கயிலை சார்ந்தவரும் ஆகிய இவரது வரலாறு (இந்நூல் 509-560) ஆம் பக்கங்களில்) முன்னர் விளக்கப் பெற்றது.

## கணநாத நாயனார்

ஆளுடையபிள்ளையார் அவதரித்தருளிய காழிப் பதியிலே அந்தணர் மரபில் தோன்றியவர் கணநாதர். அவர் திருத்தோணியப்பருக்கு நாளும் அன்புடன் நல்ல திருப்பணிகள் செய்பவர்; தம்மை விரும்பி வந்தடைந்தவர்களை நல்ல நந்தவனப் பணி செய்தல், நறுமலர் கொய்தல், மாலை தொடுத்தல், திருமஞ்சனமெடுத்தல், திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், திருவிளக்கிடுதல், திருமுறை எழுதுதல், வாசித்தல் முதலிய திருத்தொண்டுகளிற் பழக்கிச் சிவனடியார்களாக்கி அவர்களுக்கு வேண்டும் வசதிகளைச் செய்து கொடுப்பவர்; இங்ஙனம் மனையறத்திலிருந்து கொண்டு சிவனடியார்களை வழிபடுந் தொழிலினராகிய கணநாதர், திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவடிகளை நாள்தோறும் முப்போதும் விதிப்படி பூசை செய்து போற்றுபவர். ஆளுடைய பிள்ளையாரை வழிபட்டு அலகில் தொண்டருக்கு அறிவளித்தவராகிய கணநாதர், இறைவர் திருவருளால் கயிலைமால்வரையெய்திச் சிவகணங்களுக்கு நாதராம் நிலைபெற்றார்.

## கூற்றுவ நாயனார்

களந்தை என்னும் பதியிலே குறுநிலமன்னர் குடியிலே தோன்றியவர் கூற்றுவ நாயனார். இவர், பகைவர்களைப் போரில்

வென்று சிவபெருமானது திருநாமமாகிய திருவைந்தெழுத்தை நாளும் நவின்று சிவனடியார்களைப் பணிந்தேத்தித் திருத்தொண்டு செய்பவர்; திருவருள் வலியால் அரசர் பலரையும் வென்று நால்வகைச் சேனைகளும் நிரம்பப்பெற்று வீரச்செருக்கின் மேலானார். வேந்தர் பலரொடும் போர் புரிந்து வாகை மாலை புனைந்து அரசர்க் குரிய முடி ஒன்றும் நீங்கலாக வேந்தர்க்குரிய எல்லாச் செல்வங்களும் எய்தினார். உலகங்காக்கும் அரசராகிய கூற்றுவனார் தில்லைவாழந்தணரையடைந்து தமக்கு முடி சூட்டும்படி வேண்டினார். அந்தணர்கள் 'சோழ மன்னர்க்கன்றி வேறு யார்க்கும் நாங்கள் முடிசூட்ட மாட்டோம்' என்று கூறி, தங்களுள் ஒரு குடியை முடியைக் காத்துக் கொள்ளும்படி இருத்திச் சேர நாட்டையடைந்தார்கள்.

ஐயுற்று மனந்தளரும் கூற்றுவனார், தில்லையம்பலப் பெருமானை மனங்கொண்டு 'அடியேன் தனக்கு முடியாக நின் திருவடிப்போதினைப் பெற வேண்டும்' என்று பரவித் துயில்கொண்டார். அந்நிலையில் கூத்தப் பெருமான் அவரது கனவில் தோன்றித் தம்முடைய திருவடியை முடியாகச் சூட்டியருளினார். கூற்றுவனார் அம்பலவர் திருவடிகளை முடியாகத் தாங்கி உலகமெலாம் தனியாட்சி புரிந்து திருத்தலங்களெல்லாம் சென்று சிவபரம் பொருளை வழிபட்டு அரசுபுரிந்து உமையொருபாகர் திருவடியை அடைந்தார்.

## பொய்யடிமையில்லாத புலவர்

'பொய்யடிமை யில்லாத புலவர்க்கும் அடியேன்' என நம்பியாரூரராற் போற்றப் பெற்ற இப்புலவர் பெருமக்கள் திருத்தொண்டத் தொகையிற் குறிக்கப் பெற்ற ஒன்பது திருக்கூட்டத்தாருள் ஒரு திருக்கூட்டத்தார் ஆவர். நம்பியாண்டார் நம்பிகள்,

> **"தரணியிற் பொய்ம்மையிலாத் தமிழ்ச் சங்கமதிற் கபிலர்**
> **பரணர் நக்கீரர்முதல் நாற்பத் தொன்பது பல்புலவோர்**
> **அருள்நமக் கீயுந் திருவால வாயரன் சேவடிக்கே**
> **பொருளமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்களே"**

எனத் திருத்தொண்டர் திருவந்தாதியில் இவர்களைக் குறித்துப் போற்றியுள்ளார். எனவே மதுரைத் திருவாலவாயில் நிலைபெற்ற தமிழ்ச்சங்கத்திலிருந்து திருவாலவாயரன் சேவடிக்கே பொருளமைத்து அகப்பொருட் செய்யுட்களைப் பாடிய சங்கப்புலவர்களாகிய கபிலர் பரணர் நக்கீரர் முதலிய நாற்பத்தொன்பது புலவர்களும் அவர்களைப் போன்று பொய்ப் பொருட்கு அடிமைப்படாது மெய்ப்பொருளாகிய

இறைவனுக்கே அடித்தொண்டு செய்யும் இயல்புடைய புலவர்கள் பலரும் பொய்யடிமையில்லாத புலவர் என நம்பியாரூரராற் போற்றப் பெற்றனர் என்பது வகைநூல் செய்த நம்பியாண்டார் நம்பிகள் கருத்தாதல் நன்கு விளங்கும். நம்பியாரூரர் காலத்திற்கு முன்னிருந்த தமிழ்ச் சங்கப் புலவர்களோடு நம்பியாரூரர் காலத்தும் அவர்க்குப் பின்னும் மெய்ப்பொருள் துணிபுடையராய் இறைவனுக்குத் தொண்டுபட்டிருக்கும் தமிழ்ப் புலவர்கள் எல்லோரும் 'பொய்யடிமை யில்லாத புலவர்' எனத் திருத்தொண்டத் தொகையிற் போற்றப் பெற்றுள்ளார் என்னும் உண்மையினை விரித்துரைக்கும் முறையில் அமைந்தது,

**"செய்யுள் நிகழ் சொற்றெளிவும் செவ்வியநூல் பலநோக்கும்**
**மெய்யுணர்வின் பயனிதுவே, எனத்துணிந்து விளங்கியொளி!**
**மையணியுங் கண்டத்தார் மலரடிக்கே யாளானார்**
**பொய்யடிமை யுல்லாத புலவரெனப் புகழ்மிக்கார்"**

எனவரும் பெரியபுராணச் செய்யுளாகும்.

## புகழ்ச்சோழ நாயனார்

இமயமலையிற் புலி பொறித்து உலகாண்ட வண்டமிழ்ச் சோழர்க்குரிய சோழவள நாட்டிலே உலகில் வளர் அணிக் கெல்லாம் உள்ளுறையூராகத் திகழும் உறையூரிலே சோழர்குடியில் தோன்றியவர் புகழ்ச் சோழர். அவர் உலகமெலாஞ் செங்கோலின் வழிநிற்ப அருமறைச் சைவந்தழைப்ப அரசு புரிந்தார். சிவாலயங்களில் நாள் வழிபாடு செம்மையாக நிகழச் செய்து சிவனடியார்க்கு வேண்டுவன கொடுத்துத் திருநீற்று நெறிமுறையே நாட்டினை ஆட்சிபுரியும் நாளில் கொங்கர்களும் குடநாட்டு வேந்தர்களும் தரும் திறைப் பொருள்களை வாங்கும் பொருட்டுத் தங்கள் குலத்தார்க்கு உரிமையுடைய கருவூரிலே சென்று ஆனிலை யண்ணலையிறைஞ்சித் தங்கள் மாளிகையில் அரியாசனத்தில் வீற்றிருந்தார். அப்பொழுது குடபுல மன்னவர் கொணர்ந்த திறைப்பொருள்களைக் கண்டு திறைகொணர்ந்த அரசர்க்குச் செயலுரிமைத் தொழில் அருளி, அமைச்சர்களை நோக்கி, 'நம்முடைய ஆணைக்கு அடங்காத அரசர்கள் வாழும் அரணங்கள் உளவாயின் தெரிந்து கூறுங்கள்' என்று சொல்லி அங்கே சிலநாட்கள் தங்கியிருந்தார். அப்பொழுது ஒருநாள் சிவகாமியாண்டார் கொண்டு வந்த பூக்களை சிதறிய தம்முடைய யானையையும் பாகர்களையும் கொன்ற எறிபத்த நாயனாரையணைந்து 'என்னையும் கொன்றருளும்' என்று தம்முடைய வாளைக் கொடுத்து சிவத்திருத்தொண்டிலே சிறந்து விளங்கினார்.

அமைச்சர்கள் திறைகொணராத பகையரசனொருவனுளன் என்று புகழ்ச்சோழரையிறைஞ்சி அறிவித்தார்கள். அதுகேட்ட புகழ்ச்சோழர் 'ஆங்கு அவன் யார்?'' என வினவினார். 'அதிகன் அவன், அணித்தாக ஓங்கெயில் சூழ் மலையரணத்துடன் உறை வான்' என்றனர் அமைச்சர். வேந்தர் அமைச்சர்களை நோக்கி, 'ஈங்கு உங்களுக்குத் தடையாக நிற்கும் அரணும் உளதோ? படையுடன் சென்று அவ்வரணத்தைத் துகளாக்கி அழிப்பீராக' எனப் பணித்தார். அமைச்சர்கள் கடல் போன்ற பெருஞ்சேனையுடன் புறப்பட்டுச் சென்று அதிகனது மலையரணைப் பொடியாக்கி அவனுடைய சேனைகளை வளைத்துக் கொண்டார்கள். அதிகன் அஞ்சி ஓடிப்போய்ச் சுரத்தில் ஒளிந்து கொண்டான். சோழரது படைவீரர்களிற் பலர் அதிகனுடைய படைவீரர்களின் தலைகளையும் மற்ற வீரர்கள் நிதிக்குவியல்களையும் யானை குதிரை முதலிய சேனைகளையும் கொண்டு கருவூர்க்கு வந்த சேர்ந்தார்கள்.

புகழ்ச் சோழர், தமக்கு முன்னே படைவீரர் கொணர்ந்த பகைவர் தலைகளின் நடுவே சடைமுடித்தலை ஒன்றிருத்தலைக் கண்டார். கண்டபொழுதே நடுங்கி மனங்கலங்கிக் கண்ணீர் சொரிந்து 'இவ்வுலகில் திருநீற்றின் நெறி புரந்து யான் அரசு புரிந்த முறை மிகவும் நன்று' என வருந்தினார். சீர்தாங்கும் இவர் வேணிச் சிரந்தாங்கி வரக்கண்டும், பார்தாங்க இருந்தேனோ பழிதாங்குவேன் என்று இரங்கினார். ஒன்று செய்யத் துணிந்த அமைச்சரை நோக்கி, 'மன்றில் நடம்புரிவார்தம் வழித் தொண்டின் வழி நாட்டினைக் காத்து அரசளிக்கும்படி என் மைந்தனுக்கு முடிபுனை வீராக' என்று செந்தீவளர்க்கும்படி செய்து திருநீற்றினையணிந்து சடைத்தலையினை ஒரு பொற்கலத்தில் ஏந்தித் தம் முடியிலே தாங்கிகொண்டு தீயினை வலம் வந்த திருவைந்தெழுத்தோதி அத்தீயினுள்ளே புகுந்து இறைவன் திருவடிநிழற்கீழ் அமர்ந்திருந்தார். இச் செய்தி

**'பொழிற் கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழர்க்கடியேன்'**

எனவருந் திருத்தொண்டத் தொகையிற் குறிக்கப் பெற்றுள்ளமை கூர்ந்துணரத் தகுவதாகும்.

## நரசிங்க முனையரைய நாயனார்

நீதிமுறை வழுவாது அரசு புரியும் முனையரையர் குடியிற் பிறந்து திருமுனைப்பாடி நாட்டினைத் திருநாவலூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தவர் நரசிங்கமுனையரையர். இவர் பகைவரைப் போரிற் புறங்கொண்ட பெருவீரர்; சிவனடியார் அடிபணிதலையே அரும்பெரும் பேறெனக்

கொண்டவர்; சிவபெருமான் திருக்கோயில் தோறும் திருச்செல்வம் பெருகத் திருத்தொண்டுகள் பல புரிந்தவர். திருவாதிரை நாள் தோறும் சிவனடியார்களைத் திருவமுது செய்வித்து அவர்கட்குத் தனித்தனியே நூறு பொன் கொடுத்து வந்தார். அவ்வாறு கொடுத்து வரும் நாளில் ஒரு நாள் தூர்த்த வேடமுடைய ஒருவர் திருநீறு அணிந்து அடியார் குழுவிற் சேர்ந்து கொண்டார். அவருடைய தூர்த்த வேடத்தைக் கண்டு அருகே நின்றவர்கள் இகழ்ந்து ஒதுங்கினர். அதுகண்ட நரசிங்கமுனையரையர் அவ்வடியாரை எதிர்சென்று வணங்கி அழைத்துக் கொண்டுபோய் நன்றாக உபசரித்தார். சீலமில்லாதவர்களேயாயினும் திருநீறு அணிந்தவர்களை உலகத்தார் இகழ்ந்து நரகத்தில் வீழாதபடி அவ்வடியார்க்கு இரு நூறு பொன் கொடுத்து அவரை வணங்கி இன்மொழி பகர்ந்து விடை கொடுத்து அனுப்பினார். இவ்வாறு செவ்விய அன்பினில் திருத் தொண்டுகள் பல புரிந்து திருந்திய சிந்தையராகிய நரசிங்கமுனையரையர் சிவபெருமான் திருவடி நீழலையடைந்து மீளாத நிலைபெற்றார்.

இவர் நம்பியாரூரரை மகன்மை முறையிற் பெற்று வளர்த்தமை முன்னர்க் கூறப்பட்டது.

## அதிபத்த நாயனார்

பொன்னி நாட்டில் நாகப்பட்டினத்தில் பரதவர் குலத்தில் தோன்றியவர் அதிபத்தர். பரதவர் தலைவராய்ச் சிவபத்தியிற் சிறந்த இவர், நாள்தோறும் கடலில் மீன் பிடிக்குங்கால் வலையில் அகப்படும் மீன்களில் முதல் மீனை 'இது சிவனுக்கு' என்று அன்பினால் விட்டு வந்தார். இவ்வாறு ஒழுகும் நாளில் பல நாட்களில் ஒவ்வொரு மீனே வலையிலகப்பட அதனைக் கடலிலே விட்டுவந்தார். வலை வளம் குறைந்து வறுமை யெய்தித் தம் சுற்றத்தார்கள் உணவின்றி வருந்தவும் தாம் வருந்தாது நாளும் ஒவ்வொன்றாகக் கிடைத்த மீனை இறைவனுக்கென்றே விட்டு மகிழ்ந்தார்.

இப்படி நிகழும் நாளில் வேறு ஒருநாள் இவருடைய ஏவலராகிய பரதவர்கள் கடலில் வலைவீசியபொழுது உலகெலாம் விலையெனக் கொள்ளத்தக்க நவமணிகளால் உறுப்பமைந்த பொன்மீனொன்று அகப்பட்டது. பரதவர்கள் அதனை எடுத்து 'ஒரு மீன் படுத்தோம்' என்றனர். அதிபத்த நாயனார், ஞாயிறு போன்று ஒளி வீசும் மீனைக் கண்டு 'இது என்னை ஆட்கொண்டருளிய சிவனுக்கேயுரியதாகும், ஆதலால் அவர் திருவடியைச் சேர்க' என்று கடலிலே விட்டார்.

அப்பொழுது சிவபெருமான் விடை மீது விசும்பில் தோன்றியருளி, அஞ்சலிகூப்பி நின்று பணிந்த அதிபத்த நாயனாரைச் சிவலோகத்திலே அடியார்களுடன் அமர்ந்திருக்க அருள் புரிந்து மறைந்தருளினார்.

## கலிக்கம்ப நாயனார்

தில்லையின் மேல்பாலுள்ள திருப்பெண்ணா கடத்திலே வணிகர் குலத்தில் தோன்றியவர் கலிக்கம்ப நாயனார். இவர் அவ்வூரிலுள்ள திருத்தூங்கானை மாடத்து அமர்ந்த பெருமானுக்குத் திருத்தொண்டு செய்பவர்; சிவனடியார்களுக்குத் திருவமுதளித்து வேண்டும் பொருள்களைக் கொடுக்கும் இயல்புடையவர். ஒருநாள் தமது வீட்டிலே திருவமுது செய்யவந்த சிவனடியார் எல்லாரையும் முறைப்படி திருவமுது செய்யத் தொடங்குவித்தற்கு முன்பு தமது மனைவியார் கரக நீர்வார்க்க அவர்களுடைய திருவடிகளை விளக்கினார். அப்பொழுது, முன் தமது இல்லத்திற் பணியாளராயிருந்து பணியினை வெறுத்துச் சிவனடியாரான ஒருவர் வர அவருடைய திருவடிகளையும் விளக்கப் புகுந்தார். மனைவியார் அவ்வடியவரைக்கண்டு 'இவர் நம் வீட்டிற் பணி செய்தவர் போலும்' என்று சிந்தித்தலால் கரக நீர்வார்க்கச் சிறிது நேரம் தாமதித்தார். அது கண்ட கலிக்கம்பர் 'இவள் இச் சிவனடியாருடைய முன்னைய நிலையைக் குறித்து வெள்கி நீர் வாராதொழிந்தாள்' என்று துணிந்து தம் மனைவியார் கையிலுள்ள கரகத்தை வாங்கி வைத்துவிட்டு அக்கையை வாளால் தறித்துக் கரக நீரைத்தாமே எடுத்துக்கொண்டு அவ்வடியார் திருவடிகளை விளக்கி அடியார்கள் அமுது செய்தற்கு வேண்டுவன எல்லாம் ஆர்வத்துடன் செய்து அவ்வடியார்களைத் திருவமுது செய்வித்தார். அடியார் பத்தியின் மேலீட்டால் கலிக்கம்பர் செய்த இச்செயலை, நம்பியாரூரர்

**'கை தடிந்த வரிசிலையான் கலிக்கம்பன்'**

எனத் திருத்தொண்டத் தொகையிற் குறித்துள்ளார். அடியார் வேடமென்று உணராத மனைவியாரது கைதடிந்த கலிக்கம்ப நாயனார் சிவனடித் தொண்டுகள் பல புரிந்து சிவபதம் அடைந்தார்.

## கலிய நாயனார்

தொண்டை நாட்டில் திருவொற்றியூரிலே தயிலவினைத் தொழிலுடைய வணிகர் மரபிலே தோன்றியவர் கலிய நாயனார். கோடிக்கணக்கான செல்வமுடைய இவர் சிவபெருமானுக்கு உரிமைத் திருத்தொண்டில் ஈடுபட்டுத் திருவொற்றியூர்த்

திருக்கோயிலில் உள்ளும் புறம்பும் அல்லும் பகலும் திருவிளக்கிடும் திருத்தொண்டினைச் செய்து வந்தார். இவரது உண்மைத் தொண்டின் பெருமையைப் புலப்படுத்தத் திருவுளங்கொண்ட சிவபெருமான் திருவருளால் இவரது செல்வமனைத்தும் குறைய வறுமை நிலையுண்டாயிற்று. அந்நிலையில் தமது மரபிலுள்ளார் தரும் எண்ணெயை வாங்கி விற்று அதனாற் கிடைத்த பொருளால் தாம் செய்யும் திருவிளக்குப் பணியை வழுவாது செய்தார். பின்பு எண்ணெய் தருவார் கொடாமையால் கூலிக்குச் செக்காடி அக்கூலி கொண்டு விளக்கெரித்தார். வேலையாட்கள் பெருகித் தம்மைக் கூலிக்கு அமர்த்திக்கொள்வார் இல்லாமையால் வீடு முதலிய பொருள்களை விற்றும் முடிவில் தம் மனைவியாரை விற்பதற்கு நகரெங்கும் விலை கூறி வாங்குவாரில்லாமையால் மனந்தளர்ந்தார். திருவிளக்கேற்றும் வேளையில் ஒற்றியூர்த் திருகோயிலை அடைந்து 'திருவிளக்குப் பணி தடைப்படின் இறந்து படுவேன்' எனத்துணிந்து திரியிட்ட அகல்களைப் பரப்பி வைத்து எண்ணெய்க்கு ஈடாகத் தமது உதிரத்தையே நிறைத்தற்குக் கருவி கொண்டு தமது கழுத்தை அரிந்தார். அந்நிலையில் அருட்கடலாகிய சிவபெருமான் விடைமீது தோன்றியருள, உடம்பின் ஊறு நீங்கித் தலைமேற் கைகுவித்து வணங்கி நின்றார். சிவபெருமான் அவரைப் பொற்புடைய சிவபுரியிற் பொலிந்திருக்க அருள் புரிந்தார்.

## சத்தி நாயனார்

சோழ நாட்டில் வரிஞ்சையூரில் வேளாண் மரபில் தோன்றியவர் சத்தி நாயனார். சிவனடிக்குத் தொண்டு புரியும் இவர், சிவனடியார்களை யாரேனும் இகழ்ந்துரைப்பாராயின் அக்கொடியோரது நாக்கை அறுத்தற்கென எப்பொழுதும் கையிற் கத்தியுடன் இருப்பவர் ஆதலாற் 'சத்தியார்' என அழைக்கப் பெற்றார். இவர் அடியார்களை அவமதித்துத் தீமொழி புகன்ற தீயோர் நாக்கினைக் குறட்டாற் பற்றி இழுத்துக் கையிலுள்ள கத்தியினால் அரிதலாகிய ஆண்மைத் திருப்பணியை நெடுங்காலம் அன்பினோடு செய்திருந்து சிவபெருமான் திருவடியை அடைந்தார்.

## ஐயடிகள் காடவர்கோன் நாயனார்

பதினொராந் திருமுறையாசிரியர்களுள் ஒருவரும் பல்லவவேந்தரும் ஆகிய இவரது வரலாறு இந்நூலில் (499-508 ஆம் பக்கங்களில்) முன்னர் விளக்கப் பெற்றது.

## கணம்புல்ல நாயனார்

வடவெள்ளாற்றுத் தென்கரையிலே அமைந்த இருக்குவேளூரிலே அவ்வூர்க் குடிமக்களுக்குத் தலைவராய் விளங்கியவர் கணம்புல்ல நாயனார். கணம் புல்லர் என்பது பிற்காலத்தில் இவர்க்கு உண்டாகிய காரணப்பெயர். இவரது இயற்பெயர் தெரிந்திலது. பெருஞ்செல்வத்தினராகிய இவர் 'எப்பொருளும் ஆவன ஈசர்கழல்' என்று கொண்டவர்; பெருஞ்செல்வம் பெற்ற பயன் இது' வென்று சிவன் திருக்கோயிலில் திருவிளக்கெரிக்கும் பணியினை ஆர்வமுடன் செய்து வந்தார். நெடுங்காலம் சென்று வறுமை யெய்திய நிலையில் தில்லையையடைந்து தம் வீடு முதலியவற்றை விற்ற பொருளைக்கொண்டு திருப்புலீச்சரத் திருக்கோயிலில் திருவிளக்கெரித்து வந்தார். பிறர்பால் இரந்துபொருள் பெற நினைவாது, 'கணம்புல்' என்ற ஒருவகைப் புல்லை அரிந்து விற்று, அதனால் கிடைத்த பொருளைக்கொண்டு நெய் வாங்கி திருவிளக்கேற்றி வந்தார். ஒரு நாள் தாமரிந்த கணம்புல் விலைக்கு விற்காதொழிய, அந்தப் புல்லினையே கொண்டு திருக்கோயிலில் விளக்காக எரித்தார். விளக்கெரிக்கும் யாமம் வரையிலும் அப்புல் விளக்கெரிக்கப் போதாமையால் அதனுடன் தமது திருமுடியையும் சேர்த்து எரித்தார். அப்பொழுது சிவபெருமான் முன்வந்து பேரருள் புரிந்தருளக் கணம் புல்லராகிய அவ்வடியார் முதல்வரை வணங்கிச் சிவலோகத்தை அடைந்தார்.

## காரி நாயனார்

மறையாளர் வாழும் திருக்கடவூரில் தோன்றிய காரியாராகிய இப்பெரியார், வண்டமிழின் துறையான பயன் தெரிந்து சொல் விளங்கிப் பொருள் மறையக் காரிக் கோவையெனத் தமிழ்க்கோவை ஒன்றைத் தம் பெயராற் செய்தமைத்துத் தமிழ்நாட்டு மூவேந்தர்களிடமும் சென்று அவர்கள் மகிழும்படி அதற்குப் பொருள் விரித்துரைத்து அவ்வேந்தர்கள் தந்த பெரும் பொருளைக் கொண்டு சிவபெருமானுக்குத் திருக்கோயில்கள் பல கட்டுவித்தார். நாட்டுமக்கள் யாவரும் மனமுவக்கும்படி செய்யுட்களுக்குச் சுவை விளங்கப் பொருள் கூறிப் பெற்ற பொருள்களைச் சிவனடியார்களுக்கு அளித்து இறைவன் எழுந்தருளிய திருக்கயிலையை மறவாத சிந்தையராய் வாழ்ந்தார். கடல் சூழ்ந்த உலகெங்கும் தமது புகழை நிலைபெறச் செய்த காரி நாயனார், சிவனருளால் வாய்ந்த மனம் போல் உடம்பும் வடகயிலைமலை சேர்ந்தார்.

## நின்றசீர் நெடுமாற நாயனார்

பாண்டிநாட்டிலே மதுரையம்பதியிலே அரசுபுரிந்த கூன்பாண்டியன் சமணர்களது சூழ்ச்சியிலகப்பட்டுச் சமண சமயத்தை மேற்கொண்டு அந்நாளில் ஆளுடைய பிள்ளையார் திருவருளால் சைவசமயத்தை மேற்கொண்டு கூன் நிமிர்ந்து நெடுமாற நாயனார் எனப்பெயர்பெற்ற செய்தி திருஞான சம்பந்தப் பிள்ளையார் வரலாற்றில் விரித்துரைக்கப்பெற்றது. ஆளுடைய பிள்ளையார் அருளால் தென்னாடு சிவம்பெருகச் செங்கோல் செலுத்திய நெடுமாறனார், வட நாட்டிலிருந்து போர் வேண்டி வந்தெதிர்த்த வட புலவேந்தரைச் சோழ நாட்டிலுள்ள நெல்வேலிப் போர்க்களத்திலே சோழ நாட்டிலுள்ள நெல்வேலிப் போர்க்களத்திலே எதிரேற்றுப் பெரும்போர் செய்து பகைப்புலத்தார் வலியிழந்து தோற்றோட வெற்றி மாலை புனைந்தார். நெடுமாறர் நெல்வேலிப் போரில் வெற்றிபெற்ற திறத்தினை,

**'நிறைக்கொண்ட சிந்தையான் நெல்வேலிவென்ற
நின்ற சீர்நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்'**

என நம்பியாரூரர் திருத்தொண்டத் தொகையிற் குறித்துப் போற்றியுள்ளார். வளவர்பிரான் திருமகளாராகிய மங்கையர்க் கரசியாரை மணந்து சிவ பெருமானுக்கேற்ற திருத்தொண்டுகள் புரிந்து அருள் பெருக நெடுங்காலம் அரசளித்த நின்றசீர் நெடுமாற நாயனார் இறைவரருளால் சிவலோகத்தினையெய்தி இன்புற்றார்.

## வாயிலார் நாயனார்

தொண்டை நாட்டிலே மயிலாப்பூரிலே வேளாளர் குலத்திலே வாயிலார் குடியிலே தோன்றியவர் வாயிலார் நாயனர். சிவனடித்தொண்டில் விருப்புடையராகிய இப்பெரியார், மறவாமையால் அமைத்த மனக்கோயிலினுள்ளே இறைவனை இருத்தி ஆண்டான் அடிமை உறவினை யுணரவல்ல ஞானமாகிய திருவிளக்கினை ஏற்றி, அழியாத ஆனந்தமாகிய திருமஞ்சனம் ஆட்டி, அன்பாகிய திருவமுதினை அமைத்து வழிபாடு செய்தலாகிய அகப்பூசையினை நெடுநாட்கள் வழுவாது செய்திருந்து சிவபெருமான் திருவடி நிழற்கீழ்ச் சென்றடைந்தார்.

## முனையடுவார் நாயனார்

இவர், சோழ நாட்டில் திருநீடூரில் வேளாண் குலத்தில் தோன்றியவர்; சிபெருமான் திருவடியில் நிறைந்த பேரன்புடையவர்; பகைவர்களைப் போர் முனையில் வென்று பெற்ற பெருநிதியங்களைச் சிவனடியார்க்கு மாறாதளிக்கும்

வாய்மையுடையார்; போரில் மாற்றார்க்குத் தோற்றவர்கள் தம்மிடம் வந்து துணைவேண்டினால் நடுவு நிலையில் நின்று அவர்களோடு ஆள்வினையாற் கூலிபேசிக்கொண்டு, அவர்களுக்காகப் போர் செய்து பொருள் ஈட்டிச் சிவனடியார்களுக்குச் சொன்ன சொன்னபடியே நிறைய கொடுத்து அவர்களை அறுசுவைக்கறிகளுடன் திருவமுது செய்வித்துக் கொண்டிருந்தார். அதனால் இவருக்கு முனையடுவார் என்னுந் திருப்பெயர் உண்டாயிற்று. இவரது இயற்பெயர் இதுவெனத் தெரியவில்லை. முனையடுவார் நாயனார் நெடுங் காலம் ஈசனடியார்க்கான திருப்பணி புரிந்திருந்து உமையொருபாகர் திருவருளாற் சிவலோகத்துப் பிரியாது உறையும் பெருவாழ்வு பெற்றார்.

## கழற்சிங்க நாயனார்

"கடல்சூழ்ந்த உலகெலாங்காக்கின்ற பெருமான் காடவர்கோன் கழற்சிங்கன் அடியார்க்கும் அடியேன்' என நம்பியாரூரராற் போற்றப்பெற்ற இந்நாயனார், பல்லவர் குலத்திலே தோன்றியவர்; சிவனடியன்றி வேறொன்றை அறிவினிற் குறியாதவர்; வடபுலவேந்தரை வென்று அறநெறியில் நின்று நாடாளும் வேந்தராகிய இவர் ஒரு நாள் திருவாரூரை அடைந்து திருக்கோயிலை வணங்கச் சென்றார். அப்பொழுது திருக்கோயிலை வலம் வந்து திருப்பூ மண்டபத்தை அடைந்த பட்டத்தரசி அங்குக் கீழே வீழ்ந்து கிடந்த மலரொன்றை எடுத்து மோர்ந்தாள். அவள் கையிற் புதுமலரைக் கண்டு அங்கு வந்த செருத்துணையார் என்னும் சிவனடியார் 'இவள் இறைவனுக்குச் சாத்தும் மலரை மோந்தாள்' என்று வெகுண்டு அம்மலரை எடுத்து மோந்த அவள் மூக்கினைக் கத்தியால் அரிந்தார். பட்டத்தரசி கீழே வீழ்ந்து அரற்றினாள். உள்ளே பூங்கோயிலிறைவரைப் பணிந்து வெளியே வந்த கழற்சிங்கர், அரசியின் புலம்பலையறிந்து வந்து மிகவும் வெகுண்டு 'அச்சமின்றி இக்கொடுஞ் செய்கையைச் செய்தார் யார்?' என வினவினார். அருகே நின்ற செருத்துணையார், 'இவள் இறைவர்க்குச் சாத்துதற்குரிய மலரை எடுத்து மோந்தமையால் நானே இப்படிச் செய்தேன்' என்றார். அப்போது கழற்சிங்கர் அவரை நோக்கி, 'பூவை எடுத்த கையையன்றோ முதலில் தடிதல் வேண்டும்?' என்று சொல்லித் தம் உடைவாளை உருவிப் பட்டத்தரசியின் கையைத் தடிந்தார், இத்தகைய அரிய திருத்தொண்டினைச் செய்த கழற்சிங்க நாயனார் சைவ நெறி தழைத்தோங்க அரசாண்டு சிவபெருமான் திருவடி நீழலில் அமர்ந்திருக்கும் பெருவாழ்வு பெற்றார்.

## இடங்கழி நாயனார்

இவர், தில்லையம்பலத்துக்குப் பொன்வேய்ந்த ஆதித்தனுக்கு முன்னோராகச் சோழர் குடியில் தோன்றியவர்; கோனாட்டின் தலைநகராகிய கொடும்பாளூரில் தங்கியிருந்து வேளிர்குலத்து அரசினை ஏற்று ஆட்சி புரிந்தவர்; சைவ நெறி வைதிகத்தின் தருமநெறியொடு தழைப்பத் திருக்கோயில்கள் எங்கும் வழிபாட்டு அர்ச்சனை விதிப்படி நிகழச்செய்தவர்; சிவனடியார்கள் வேண்டுவனவற்றை விரும்பிக்கொடுப்பவர். இவர் அரசுபுரியும் நாளில் சிவனடியார்க்குத் திருவமுதளிக்கும் தவமுடைய அடியார் ஒருவர், உணவமைத்தற்குரியன எங்கும் கிடைக்காமையால் மனம் தளர்ந்து அடியாரை அமுது செய்வித்தலிலுள்ள பேரார்வத்தால் செய்வதறியாது அரசர்க்குரிய நெற் பண்டாரத்திலே நள்ளிரவிற் புகுந்து நெல்லைக் களவு செய்தார். அந்நிலையிற் காவலர்கள் அவரைப்பிடித்து இடங்கழியார் ஆகிய மன்னர் முன் கொண்டு வந்தார்கள். இடங்கழியார், அவரைப்பார்த்து 'நீர் ஏன் நம்முடைய நெற்பண்டாரத்தைக் கவர்ந்தீர்' என வினவினார். அதுகேட்ட அடியவர் 'நான் சிவனடியார்களைத் திருவமுது செய்வித்தற்குப் பொருளில்லாமையால் இவ்வாறு செய்தேன்' என்றார். அதுகேட்டு இரங்கிய இடங்கழி நாயனார் 'எனக்கு இவரன்றோ பண்டாரம்' என்று சொல்லிப்பாராட்டிப் படைத்த நிதிப்பயன் கொள்வாராய், 'சிவனடியார்களெல்லாரும் எனது நெற்பண்டாரம் மாத்திரமன்றி நிதிப் பண்டாரங்களையும் கவர்ந்து கொள்க' என எங்கும் பறையறைவித்தார். அருள் வேந்தராகிய இவர் தண்ணளியால் நெடுங்காலம் திருநீற்றின் ஒளிதழைப்ப அரசுபுரிந்திருந்து சிவபதம் அடைந்தார்.

## செருத்துணைநாயனார்

சோழ நாட்டின் அகநாடுகளுள் ஒன்றாகிய மருகல் நாட்டைச் சேர்ந்த தஞ்சாவூரிலே வேளாளர் குலத்திலே தோன்றியவர் செருத்துணையார். இறைவன் திருவடியில் மெய்யன்புடைய சைவராகிய இவர், திருவாரூரை அடைந்து புற்றிடங்கொண்டாரைக் காலந்தோறும் போற்றித் திருத்தொண்டு புரிந்திருந்தார். அங்ஙனம் இருக்கும் நாளில் பல்லவர் கோக்கழற்சிங்கர் உரிமைப் பெருந்தேவி திருக்கோயிற் பூமண்டபத்தின் கீழ் வீழ்ந்து கிடந்த புதுமலரை எடுத்து மோந்ததைக்கண்டு 'இவள் இறைவர்க்குச் சாத்தும் புதுமலரை மோந்தாள்' என்று கொண்டு அவளது மூக்கை அரிந்தவர். இவ்வாறு உறுதிப் பணிபுரிந்து இறைவர் திருவடி நிழல் அடைந்து இறவா இன்பம் எய்தினார்.

## புகழ்த்துணை நாயனார்

சோழ நாட்டில் அரிசிற்கரைப்புத்தூர் என வழங்கும் செருவிலிபுத்தூரில் சிவமறையோர் குலத்தில் தோன்றியவர் புகழ்த்துணையார். இவர் சிவாகமவிதிப்படி அரிசிற்கரைப் புத்தூரில் இறைவனைப் பூசித்து வந்தார். அக்காலத்திற் பஞ்சம் உண்டாயினமையால் உணவின்றி வாட்டமுற்ற நிலையிலும் 'எம் இறைவனை வழிபடாது விடுவேனல்லேன்' எனனுந் துணிவினராய் அல்லும் பகலும் வழிபட்டு வந்தார். ஒருநாள் இறைவனுக்குத் திருமஞ்சனம் ஆட்டும்பொழுது பசி நோயினாற் கைசோர்ந்து திருமஞ்சனக்குடம் இறைவன் திருமுடிமேல் விழத் திருவடியில் வீழ்ந்து அயர்ந்தார். அப்பொழுது இறைவனருளால் உறக்கம்வர, இறைவன் கனவிலே தோன்றி 'பஞ்சம் நீங்கும் வரையும் நாம் நாடோறும் இங்கு ஒவ்வொரு காசு வைப்போம்' என்று அருள்செய்தார். புகழ்த்துணை நாயனார் துயிலுணர்ந் தெழுந்து பெற்றமுகந்தேறுவார் பீடத்தின்கீழ் ஒரு காசு இருக்கக்கண்டு அதனைக் கைக்கொண்டு மகிழ்ந்தார். அந்நாள் முதல் எந்நாளிலும் அவ்வாறு ஒவ்வொரு காசுபெற்று இறைவனைப் பூசித்துப் பஞ்சம் நீங்கியபின்னும் நெடுநாட்கள் சிவபெருமானுக்குப் பூசனைபுரிந்து புனிதர் அடிநீழல் சேர்ந்தார்.

புகழ்த்துணை நாயனார் அரிசிற்கரைப் புத்தூர் இறைவர்பால் நாடோறும படிக்காசு பெற்று வழி பட்ட இச்செய்தியினை,

**'அலந்த அடியான் அற்றைக் கன்றோர் காசெய்திப்**
**புலர்ந்த காலை மாலை போற்றும் புத்தூரே' (2-63-7)**

என ஞானசம்பந்தப் பிள்ளையாரும்,

**'அகத்தடிமை செய்யும் அந்தணன் தான்**
**அரிசிற்புனல் கொண்டு வந்தாட்டுகின்றான்**
**மிகத்தளர் வெய்திக் குடத்தையுநும்**
**முடிமேல் விழுத்திட்டு வணங்குதலும்**
**வகுத்தவனுக்கு நித்தற்படியும்**
**வருமென்றொறா காசினை நின்றநன்றிப்**
**புகழ்த்துணை கைபுகச் செய்துகந்தீர்**
**பொழிலார் திருப்புத்தூர்ப் புனிதனீரே' (7-9-6)**

எனச் சுந்தரமூர்த்தி சுவாமிகளும் குறித்துப் போற்றியுள்ளார்கள்.

## கோட்புலி நாயனார்

நலம்பெருகும் சோழநாட்டிலே நாட்டியத்தான் குடியில் வேளாண்குலம் பெருக வந்து தோன்றியவர் கோட்புலி நாயனார்.

சோழர் சேனாபதியாராகிய இவர், மன்னன்பால் தாம் ஊதியமாகப் பெற்ற பொருளைக் கொண்டு சிவாலயங்களுக்குத் திருவமுதுக்கென நெல்லை வாங்கி நெற்கூடுகளிற் சேமித்து வைக்குந் திருப்பணியைப் பல காலமாகச் செய்து வந்தார்.

இவ்வாறொழுகும் நாளில், அரசனது ஏவலினால் போர் முனையிற் செல்லும் கோட் புலியார், தம் சுற்றத்தாரை நோக்கி 'இறைவர்க்கு அமுதுபடி வைத்துள்ள இந்நெல்லை எடுத்தல் கூடாது. திருவிரையாக்கலி என்னும் ஆணை' எனத் தனித்தனி சொல்லிச் சென்றார். சிலநாளிலே நாட்டிற் கடும் பஞ்சம் வந்தது. பசியால் வருந்திய சுற்றத்தார்கள் 'நாம் உணவின்றி இறப்பதைவிட இறைவர்க்கு வைத்த நெல்லைக் கொண்டாகிலும் பிழைத்து உயிர் தாங்கியிருந்து பின்னர்க் குற்றந்தீரக் கொடுத்து விடுவோம்' என்று நெற்கூட்டைத் திறந்து நெல்லைச் செலவழித்தார்கள். அரசனுடைய பகைவரைப் போர் முனையில் வென்று அரசன்பால் நிதிக்குவைபெற்று மீண்ட கோட்புலியார், தம் சுற்றத்தார் செய்த தீமையை யுணர்ந்து அவர்கள் அறியாத வகையில் அவர்களைத் தண்டிக்க எண்ணினார். தம் மாளிகையை அடைந்து 'நம் சுற்றத்தார்க் கெல்லாம் ஆடையணிகலன் கொடுக்க அவர்களை அழைத்து வாருங்கள் என்று அவர்களை உள்ளே அழைத்து அவர்களில் எவரும் ஓடிவிடாதபடி வாயிலிற் காவலனை நிறுத்தி வைத்துச் சிவபெருமானுக்குரிய நெல்லயுண்ட தந்தை, தாய், உடன் பிறந்தார், மனைவி, ஏவலர் முதலிய எல்லோரையும் வாளாற்கொன்று அங்குள்ள குழந்தையையும் கொல்லத் துணிந்தார். அப்பொழுது வாயில்காவலன் 'இக் குழந்தை நெல்லினாலாகிய அன்னத்தை யுண்டதன்று, ஒருகுடிக்கு ஒரு பிள்ளையாகிய இதனைக் கொல்லாது அருள் செய்யும்' என வேண்டினான். 'இக்குழந்தை இந்நெல் உண்டவளுடைய முலைப்பாலை உண்டது' என்று அதை மேலே எடுத்தெறிந்து வாளால் இரு துணியாக விழ ஏற்றார். அந்நிலையில் சிவபெருமான் அன்பரெதிலே வெளிப்பட்டுத் தோன்றி 'உன்னுடைய கை வாளால் பிறவிப்பாசம் அறுத்தநின் சுற்றத்தார் பொன்னுலகின் மேலுலகம் புக்கு அணையப் புகழுடைய நீ இந்நிலையே நம்முடன் அணைவாயாக' என அருள் புரிந்து மறைந்தருளினார்.

கோட்புலி நாயனார் ஆகிய இப்பெரியார், நம்பியாரூரரைப் பணிந்து தாம்பெற்ற வனப்பகை, சிங்கடி என்னும் பெண்கள் இருவரையும் பணிப்பெண்களாக ஏற்றருளும்படி வேண்ட, நம்பியாரூரர் அவ்விரு பெண்களையும் தம்முடைய பேரன்புக்குரிய மக்களாக ஏற்றுக் கொண்டு தம்மை அப்பெண்களுக்குத் தந்தையெனக் கூறி மகிழ்ந்தமை முன்னர் விளக்கப்பெற்றது.

'கூடாமன்னரைக் கூட்டத்து வென்ற கொடிறன் கோட்புலி!'
(7-15-10)

எனச் சுந்தரமூர்த்திசுவாமிகள் கோட்புலியாரது போர் வீரத்தைச் சிறப்பித்துள்ளமை இங்கு நினைக்கத் தகுவதாகும்.

## பத்தராய்ப் பணிவார்

ஈசனுக்கே அன்புடைய சிவனடியாரைக் கண்டால் அவருடைய சாதி முதலியன விசாரியாமல் அவர்களை இறைவனெனவே கொண்டாடி, தாய்ப் பசுவின்பின் கன்று சென்றாற் போன்று பெருவிருப்புடன் அணைந்து பணிவுடையராய் இன்னுரை பகரும் இயல்புடையவர்கள்; பேரன்பினால் சிவபெருமானை எவ்விடத்தும் யாவரும் வழிபடக் கண்டால் இனிது மகிழ்ந்து பாவனையால் நோக்கினால் பலர் காணப் பயன்பெறுபவர்; அன்பினால் யாவர்க்கும் மேம்பட்டவர்களாய்ச் சிவபெருமானையும் சிவனடியார்களையும் ஆராத காதலினால் உவகையுடன் விரும்பி வழிபடுபவர்கள்; தம் உடம்பினாற் செய்வினைகள் யாதாயினும் அவ்வினையால் உளவாகும் நற்பயன்களைச் சிவபெருமான் திருவடிக்கே உரிமை செய்து கொடுப்பவர்கள்; சிவபெருமானது புகழ்ச்செயல்களை அறிந்தார் சொல்ல விரும்பிக் கேட்குந் தன்மையராய் இறைவன் திருவடித் தாமரையினைச் சேர்வதற்கு உரியவர்கள்: ஈசனையே பணிந்து உருகி இன்பம் மிகக் களிப்பெய்தி, வாய்தழுதழுப்பக் கண்ணீர் அருவிபோற் சொரிய, மெய்ம்மயிர் சிலிர்ப்ப அன்பினால் விதிர் விதிர்க்கும் குணத்தால் மிக்கவர்கள்; நின்றாலும் இருந்தாலும் கிடந்தாலும் நடந்தாலும் மென்றாலும் துயின்றாலும் விழித்தாலும் மன்றாடும் இறைவன் திருவடிகளை மறவாத உணர்வுடையவர்கள்; சிவபெருமானுக்கு ஆட்பட்ட தம் அடிமைத் திறத்தைப் பிறர்க்குப் புலப்படுத்தி அதனாற் பயன் கொள்ளாத தூய நெஞ்சமுடையவர்கள். மேற் குறித்த எண்பெருங்கு ணங்களாலும் இவ்வுலகினை விளக்கும் பெருமை வாய்ந்த அடியார்களே பத்தராய்ப் பணிவார் ஆகிய திருக்கூட்டத்தாராவர்.

## பரமனையே பாடுவார்

தென் தமிழும் வடமொழியும் ஏனைய திசை மொழியும் ஆகியவற்றில் இறைவனையே பொருளாகக் கொண்டு இயற்றப் பெற்ற இயல் இசைப் பாடல்களை ஒன்றிய மெய்யுணர்வினோடும் இசைகற்கும் வகையால் உள்ளம் உருகிப் பாடும் அடியார்கள் பரமனையே பாடுவார் ஆவர்.

## சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்

படைத்தல் முதலிய ஐந்தொழில் செய்யும் பிரமன் முதலிய ஐம்பெருங் கடவுளர்களும் இருக்கும் ஐவகைத் தாமரைப் பீடங்களையுடைய பதவிகளைக் கடந்து, அட்டாங்க யோகத்துள் இயமம் நியமம் ஆசனம் பிராணாயாமம், பிரத்தியாகாரம் என்னும் ஐந்தினையும் பயின்று சித்தத்தை ஒரு வழி நிறுத்தலாகிய தாரணையால், சுயஞ் சோதியாய் உள்ள சிவம் ஞானஒளிவீசி விளங்கும் நாதாந்தத்தில் சித்தத்தை நிறுத்துதலினாலே சிவத்தினிடத்தே நிலைபெற்ற சித்தத்தை யுடையவர்கள் சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் எனப் போற்றப் பெறுவர். இவர்கள் வேத காரணராகிய அம்பலவர் திருவடித்தொண்டின் வழி நின்று அம்முதல்வரை அடைந்தவராவர்.

## திருவாரூர்ப் பிறந்தார்கள்

அருவமாயும் உருவமாயும் எல்லாப் பொருளாயும் நின்ற பெருமானும் உமையம்மை மணவாளனும் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் திருவாரூர்த் தலத்திலே பிறக்கும்பேறு பெற்றவர்கள் எல்லோரும் திருக்கயிலை வீற்றிருந்த சிவபெருமான் திருக்கணத்தாராவர். அவர்கள் திருவடிகளை வணங்கி ஒன்றிய மனத்தின்னை யுடையார்க்கு உயர்ந்த வீட்டு நெறி அணிமையுடைய தாகும்.

திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லாரும் சிவகண நாதர்கள் என்பதனைச் சிவபெருமான் நமிநந்தியடிகள் நாயனார்க்குப் புலப்படுத்தியருளிய செய்தி முன்னர்க் கூறப்பெற்றது.

## முப்பொழுதுந் திருமேனி தீண்டுவார்

எக்காலத்தும் உயிர்களுக்கு இனிமையே புரிந்தருள் வாராகிய சிவபெருமானது திருவருளினாலே பெருகி உண்மையான சிவாகம ஞான நெறியின்படி வந்த முறைமை தவறாமல் அவ்வக் காலங்கள் தோறும் வழிபாட்டில் ஆசைமிகும் பேரன்புடையராய் நாள்தோறும் காலை நண்பகல் மாலை என்னும் மூன்று காலங்களிலும் திருக்கோயில்களிற் சிவலிங்கத் திருமேனியைத் தீண்டி அருச்சிப்பவர்கள் ஆதிசைவர்களாகிய முனிவர்கள். முப்பொழுதும் இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்கலமாகிய எக்காலத்திலும் வழிவழியாகச் சிவபெருமானது அகம்படித்தொண்டில் விரும்பிய வழிபாட்டு அருச்சனைகள் சிவமறையோர்களுக்கே உரியனவாகும். அப்பெருந்தகை யாளர்களின் பெருமை சொல்லாற் புகழ்தற்கு எளியதன்று.

## முழுநீறு பூசிய முனிவர்

குலப் பிறப்பிற்கேற்ற தலைமையான அறவொழுக்கத்தை உடையவர்களாய்த் தத்துவ நெறியினை நன்குணர்ந்து, நீதி நெறியிற் சிறிதும் தவறாதவர்களாய்த் தொன்றுதொட்டு வரும் மும்மலங்களை அறுத்த வாய்மையையுடைய அருமுனிவர்கள் நியமம் தவறாது செய்யும் நித்தியாக்கினியில் விளைத்தெடுத்த திரு நீற்றினைப் புதிய பாத்திரத்தில் வைத்துக் கொண்டு சிவபெருமானை வணங்கி அவரது திருவருள் வண்ணமாகிய திருநீற்றினை உடல் முழுதும் பூசிக்கொள்வர். இப் பெரியோர்களே முழுநீறு பூசிய முனிவர் எனப் போற்றப் பெறும் திருக்கூட்டத்தவராவார்கள்.

இத்திருநீறு கற்பம், அநுகற்பம், உபகற்பம் என மூவகைப்படும். கன்றீன்ற பசுவின் சாணத்தைச் சத்தியோசாத மந்திரத்தினால் ஏற்றுச் சிவமந்திரங்களால் உண்டாக்கப் பட்ட சிவாக்கினியில் இட்டெடுத்த திருநீறு கற்பம் எனப்படும். காட்டில் உலர்ந்த பசுச் சாணத்தைக் கொண்டுவந்து கோசலத்தை விட்டுப் பிசைந்து அத்திர மந்திரம் ஓதி உண்டையாகப் பிடித்து ஓமத்தீயில் இட்டுச் சிறப்புற வெந்தநீறு அநுகற்பம் எனப்படும். காட்டில் மரங்கள் பற்றி எரிந்தமையால் வெந்த நீறும் கொட்டில் முதலிய இடவகைகள் தீப்பற்றிக்கொள்ள வெந்த நீறும், செங்கற்களைச் சுட்ட தீயினால் விளைந்த நீறும் ஆகிய இவற்றை உண்டையாக்கித் திருமடங்களில் விளங்கும் சிவாக்கினியினால் விதிப்படி நீறாக்கப்பட்டவை உபகற்ப மெனப்படும். இவ்வாறு அமைந்த திருநீற்றினை இறைவன் முன்னும் தீயின் முன்னும் குரு முன்னும் தூய்மையற்ற நிலத்தும் வழிநடக்கும்போதும் அணியாமல் ஓரிடத்து அமைதியாக இருந்து சிந்தாமற் பூசிக்கொள்ளுதல் வேண்டும் என்றும், நீரிற்குழைக்காமல் பொடியாய்ப்பூசுதல், நீரிற் குழைத்துப் பூசமிடத்து மூன்று கீற்றாகவும் பிறைவடிவமாகவும் முக்கோணமாகவும் வட்டமாகவும் பூசுதல் எனத் திருநீறணியும் திறம் பல வகைப்படும் என்றும் கூறுவர் பெரியோர். உடல் முழுவதும் திருநீறு பூசிய முனிவர்களே முழுநீறு பூசிய முனிவர் எனப்போற்றப்பெறுவர்.

## அப்பாலும் அடிச்சார்ந்தார்

சேரசோழ பாண்டியர்களாகிய மூவேந்தர்க்கும் உரிய தமிழ்நாட்டுக்கு அப்பாலுள்ள பிறநாடுகளிற் பிறந்து சிவபெருமான் திருவடிகளை அடைந்தவர்களும், சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய திருத்தொண்டத் தொகையிலே போற்றப்பெற்ற சிவனடியார்கள் வாழ்ந்த காலத்துக்கு முன்னும்

பின்னும் தோன்றிச் சிவபெருமானுடைய திருவடிகளைச் சார்ந்தவர்களும் அப்பாலும் அடிச்சார்ந்தார் என்னும் திருக்கூட்டத்தினராவர்.

## பூசலார் நாயனார்

தொண்டை நாட்டில் திருநின்றவூரிலே மறையவர் குலத்தில் தோன்றியவர் பூசலார் என்னும் பெருந்தகையார். இவர் சிவனடியாராகிய அன்பர்க்கு ஏற்றபணி செய்தலே பிறவிப்பயன் எனக்கொண்டு பொருள்தேடி அடியார்க்கு அளித்து வந்தார். சிவபெருமானுக்குத் திருக்கோயில் அமைத்துப் பணிசெய்ய விரும்பிய இவர், தம்மிடத்துப் பொருள் இல்லாமையால் அதற்குரிய பொருளை வருந்தித் தேடியும் பெற இயலாதவராயினர். இந்நிலையில் மனத்தினாலே சிவபெருமானுக்குத் திருக்கோயில் அமைக்க எண்ணினார். மனத்தின்கண் சிறிதுசிறிதாகப் பெரும்பொருள் சேர்த்தார். திருப்பணிக்கு வேண்டிய கல் மரம் முதலிய சாதனங்களையும் பணிசெய்தற்குரிய தச்சர் முதலிய பணியாளர்களையும் தம்மனத்தில் தேடிக் கொண்டார். நல்லநாள் பார்த்துத் திருக்கோயிற் பணியைத் தம்மனத்தினுள்ளே தொடங்கி இரவிலும் துயிலாமல் அடிப்படை முதல் உபானம் முதலிய வரிசைகளை அமைத்து உரிய அளவுப்படி விமானமும் சிகரமும் அமைத்து அதன் மேல் தூபியும் நட்டனர். சுதைவேலையை முடித்து அக்கோயிலினுள்ளே கிணறு திருக்குளம் மதில்முதலாக எல்லாம் வகுத்தமைத்து இவ்வாறு தம்மனத்தில் உருவாகிய திருக்கோயிலினுள்ளே சிவபெருமானை எழுந்தருளச் செய்வதற்கு கேற்ற நல்ல நாளும் வேளையும் நிச்சயித்தனர்.

இவரது திருப்பணி இவ்வாறு நிகழ்ந்து கொண்டிருக்கும் நிலையில், காடவர்கோனாகிய வேந்தர் பெருமான் காஞ்சி நகரத்திலே இறைவனுக்குத் திருக்கற்றளி அமைத்துத் தன் பெரும் பொருள் முழுவதும் அத்திருக்கோயிற் பூசனைக்கென்று வகுத்துத் தான் அமைத்த கற்றளியிலே சிவபெருமானை எழுந்தருளு வித்தற்குப் பூசலார் மனத்தில் வகுத்த அந்த நாளையே குறித்தனன். பூசலாரது அன்பின் திறத்தை உலகத்தார்க்கு அறிவிக்கத் திருவுளங் கொண்ட சிவபெருமான். அந்த நாளின் முதல் நாளிரவில் காடவர்கோமான் முன் கனிவில் எழுந்தருளி 'நின்ற வூர்ப்பூசல் அன்பன் நெடிதுநாள் நினைந்து செய்த நன்மை நீடு ஆலயத்து நாளை நாம் புகுவோம்; நீ இங்குச் செய்யத் துணிந்த தாபனத்தை நாளைய தினத்தில் வைத்துக் கொள்ளாது பின்னர் மற்றொருநாளிற் செய்வாயாக' என்று பணித்தருளி மறைந்தருளினார்.

பல்லவர்கோன், துயிலுணர்ந்தெழுந்து இறைவர் உளமுவக்கும் வண்ணம் பெரியதிருக்கோயிலை அமைத்த பெருந்தகையாரைச் சென்று காணவிரும்பித் திருநின்றவூரை அடைந்தான். அங்கு அருகணைந்தவர்களை நோக்கி, பூசலார் அமைத்த கோயில் எங்கே உள்ளது? என்று வினவினான். அதுகேட்ட நின்றவூர் மக்கள், 'பூசலார் இவ்வூரிற் கோயில் எதுவும் கட்டவில்லை' என்றனர். மன்னன் அவ்வூர் மறையவர்களை யழைத்து 'பூசலார் யார்' எனக் கேட்டறிந்து, ஆசில் வேதியராகிய அவர் இருக்குமிடத்திற்குத் தானே சென்று அவரை வணங்கி, 'தேவரீர் அமைத்த திருக்கோயில் யாது? அக்கோயிலில் சிவபெருமானை எழுந்தருளச் செய்யும் நாள் இந்த நாள் என்று இறைவர் தெரிவித்தருளத் தெரிந்து உம்மைக்கண்டு பணிதற்கு வந்தேன்' என்றான். பூசலார், அரசன் உரை கேட்டு மருண்டு, 'இறைவர் என்னையும் பொருளாக அருள் செய்தாராயின் அகக்கோயிலின் பெருமை எத்தகையது' என்று தமக்குள்ளே சிந்தித்துத் தாம் மனத்தால் முயன்று செய்த திருக்கோயிலின் அமைப்பினை மன்னனுக்கு விளங்க எடுத்துரைத்தார். அரசன் அதிசயித்துப் பூசலாரை நிலமுறத் தாழ்ந்து வணங்கித் தனது நகருக்குச் சென்றான்.

பூசலார் நாயனார் தாம் கட்டிய மனக்கோயிலிலே குறித்த நற்பொழுதில் சிவபெருமானைத் தாபித்துப் பூசனைகள் எல்லாம் பெருஞ்சிறப்புடன் பல நாட்கள் பேணிச் செய்திருந்து சிவபெருமான் திருவடி நீழலடைந்தார்.

## மங்கையர்க்கரசியார்

'வரிவளையாள் மானி' எனத் திருத்தொண்டத் தொகையிற் குறிக்கப்பெற்ற இவ்வம்மையார், வளவர் திருக்குலத்தில் மணிமுடிச் சோழன் மகளாராகத் தோன்றியவர்; செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள் எனத்தகும் பொலிவுடையார்; பாண்டியர் குலத்துக்கு நேர்ந்த பழியினைத் தீர்த்த தெய்வப் பாவை; திருஞான சம்பந்தப்பிள்ளையார் திருவருளினாலே செந்தமிழ்ப் பாண்டி நாட்டின் புறச்சமய இடர் நீக்கித் திருநீற்றினைப் பரவச்செய்தவர்; புகலிவேந்தராகிய ஆளுடைய பிள்ளையார் தூய திருவாக்கினால், 'மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை' எனத் திருப்பதிகத்திற் சிறப்பித்துப் பாராட்டப் பெறும் பெருந்தவத்தினையுடையார். பாண்டிமா தேவியாராகிய இவ்வம்மையார் தம் கணவர் நின்றசீர் நெடுமாறனாருக்குச் சைவ வழித்துணையாய் நெடுங்காலம் வாழ்ந்து தூயநன்னெறியாகிய சிவநெறியில் நின்று அவரோடுங்கூட ஈசர்திருவடி நிழற்கீழ் அமர்ந்திருக்கும் நற்பேறுபெற்றார்.

ஆளுடைய பிள்ளையார் தாம்பாடிய 'மங்கையர்க் கரசி' என்னும் முதற்குறிப்புடைய திருவாலாய்த் திருப்பதிகத்தின் 1, 3, 5, 7, 9-ஆம் திருப்பாடல்களில் மங்கையர்க்கரசியார் திருவாலவாய்ப் பெருமானைப் பணிந்து போற்றிச் சிவநெறி வளர்த்த சீர்த்தியினை உளமுவந்து பாராட்டியுள்ளமை இங்கு நினைக்கத் தகுவதாகும்.

## நேச நாயனார்

காம்பீலி என்னும் பழம்பதியில் அறுவையர் (சாலியர்) குலத்திலே தோன்றியவர் நேசநாயனார். தங்கள் தொழில் மரபில் மேம்பாடுபெற்ற இந்நாயனார், சிவனடியார் திருவடிகளைச் சென்னியிற் கொண்டு போற்றும் புகழுடையார். இவர் தம்முடைய மனத்தின் செய்கையைச் சிவபிரானது திருவடிமலர்க்கு உரியதாக்கி, வாக்கின் செய்கையைத் திருவைந்தெழுத்துக்கு உரியதாக்கி, கைத்தொழிலின் செய்கையைச் சிவனடியார்களுக்கு ஆக்குவாராகி உடையும் கீளும் கோவணமும் நெய்து, தம்பால்வரும் சிவனடியார் திருவடிகளை இறைஞ்சியேத்தி அரனடிநீழல் சேர்ந்தார்.

இந்நாயனார் அவதரித்த காம்பீலி என்ற ஊர் பல்லாரி ஜில்லாவிலுள்ள காம்பீலி தாலுகாவின் தலைநகரமாகும்.

## கோச் செங்கட் சோழ நாயனார்

தன்னை அடைக்கலம்புக்க புறாவுக்காக அதன் எடைக்குத் தகத்தனது உடம்பினை அரிந்து கொடுத்துத் துலையில் ஏறிய பெருமை வாய்ந்த சிபி மன்னன் தோன்றிய சோழர் குடியினர்க்கு உரிமையுடைய சோழநாட்டிலே காவிரிக்கரையில் சந்திர தீர்த்தத்தின் அருகிற் பெருமரங்கள் நிறைந்த நீண்ட குளிர்ந்த சோலையொன்றுளது. அதன்கண் வெண்ணாவல் மரத்தடியில் வெளிப்பட்டருளிய சிவலிங்கத் திருமேனியைக் கண்டு பெருந்தவத்தையுடைய வெள்ளை யானை தன் துதிக்கையினால் நன்னீரை முகந்து நாள்தோறும் திருமஞ்சனஞ் செய்து மலர்தூவி வழிபாடு செய்தது. அதனால் அவ்விடத்திற்குத் திரு ஆனைக்கா என்னும் பெயருண்டாயிற்று. அங்கே மெய்யுணர்விற் சிறந்த சிலந்தியொன்று இறைவன் திருமுடிமேல் சருகு முதலியன உதிராவண்ணம் தன் வாயின் நூலினால் மேற்கட்டி போன்ற அழகிய பந்தர் அமைத்தது. யானை வழிபடச் சென்றபோது சிலந்தி வாய்நீர்நூலால் அமைத்த அப்பந்தரினைத் தூய்மையற்றதென்று நினைத்துச் சிதைத்தது. அது கண்ட சிலந்தி யானையின் கைசுழன்றமையாற் பந்தர் சிதைந்ததென்றெண்ணி மீளவும் தன்வாய் நூலால் அழகியபந்தர் செய்தது. அதனை மறுநாளும் யானை அழித்துப் போக்கியது. அதுகண்ட சிலந்தி

'இறைவர் திருமுடிமேற் சருகு முதலியன விழாதபடி நான்வருந்தியிழைத்த நூற்பந்தரை இவ்வாறு அழிப்பதோ? என வெகுண்டு யானையின் துதிக்கையினுள்ளே புகுந்து கடித்தது. அந்நிலையில் வருத்தம் பொறாத யானை தன் துதித்கையினை நிலத்தில் மோதி அறைந்து வீழ்ந்திறந்தது. அதன் துதிக்கையினுள்ளே புகுந்து கடித்த சிலந்தியும் உயிர் துறந்தது. ஆனைக்கா இறைவர் அருள் புரியும் நெறியால் அவ்வெள்ளை யானைக்கு வீடுபேறளித் தருளினார்.

அக்காலத்திற் சோழ மன்னாகிய சுபதேவன் என்பான் தன்பட்டத்தரசி கமலவதி என்பவளுடன் திருத்தில்லை சார்ந்து கூத்தப் பெருமானை வழிபட்டிருந்தனன். நெடுங்காலமாக மக்கட் பேறில்லாத அவ்விருவரும் இறைவரை வழிபட்டுப் போற்றிய நிலையில் இறைவர் அவர்கட்கு அருள்புரிந்தார். அதன்பயனாகக் கமலவதி கருவுற்றாள். திருவானைக் காவிற் பெருமானுக்குப் பந்தரிழைத்து வழிபட்ட சிலந்தி சோழன் மனைவி கமலவதியின் கருப்பத்துள் மகவாய்ச் சார்ந்தது. கருமுதிர்ந்து மகப்பெறும் வேளைவந்த போது, 'இன்னும் ஒருநாழிகை கழித்துக் குழந்தைபிறக்குமானால் இக்குழந்தை மூன்றுலகமும் அரசாளும்' எனச் சோதிடர்கள் கூறினார்கள். அச்சொற் கேட்ட கமலவதி 'அவ்வாறு ஒரு நாழிகை கழித்துப் பிள்ளை பிறக்கும்படி என்காலைப் பிணித்துத் தலைகீழாக மேலே தூக்கி நிறுத்துங்கள்' என்று சொல்ல அவ்வாறே செய்தனர். குறித்த வண்ணம் ஒரு நாழிகை கழித்து ஆண் குழந்தை பிறந்தது. கால நீடிப்பால் அக்குழந்தையின் கண்கள் சிவந்திருந்தன. ஈன்ற தாய் அக்குழந்தையைக் கண்டு 'என் கோச் செங்கணானோ' என அருமை தோன்ற அழைத்து உடனே உயிர் நீங்கினாள். மன்னன் தன் குழந்தையைத் தன் உயிரெனக் காத்து வளர்த்து உரிய பருவத்தில் நாடாள் வேந்தனாக மைந்தனுக்கு முடிசூட்டித் தான் தவநெறியைச் சார்ந்து சிவலோகஞ் சார்ந்தான்.

கோச் செங்கட் சோழர், சிபெருமானது திருவருளினாலே முன்னைப் பிறப்பின் உணர்வொடு பிறந்து சைவத் திருநெறி தழைக்கத் தம் நாட்டில் சிவாலயங்கள் பலவற்றைக் கட்டுந் திருப்பணியினை மேற்கொண்டார்; திருவானைக்காவில் தாம் முன்னைப் பிறப்பில் சிலந்தியாக இருந்து இறைவர் திருமுடிமேல் நூலாற் பந்தரிழைத்து அருள் பெற்ற வரலாற்றினை அறிந்தவராதலால், அங்கு இறைவன் வீற்றிருந்தருளும் ஞானச் சார்புடைய வெண்ணாவல் மரத்தினுடனே கூடத் தம்பெருமான் வீற்றிருந்தருளும் நிலையில் அதனைப் பெருந்திருக் கோயிலாக அமைத்தார். அமைச்சர்களை ஏவிச் சோழ நாட்டின் உள்நாடுகள் தோறும் சிவபெருமான் அமர்ந்தருளும் அழகிய திருக்கோயில்கள்

பலவற்றை அமைத்து அக்கோயில்களில் நிகழும் பூசனைக்கு வேண்டிய அமுதுபடி முதலான படித்தரங்களுக்குப் பெரும் பொருள் வகுத்துச் செங்கோல் முறையே நாட்டினை ஆட்சி புரிந்தார். பின்னர் இறைவன் திருநடம் இயற்றும் தில்லைப்பதியை அடைந்து பொன்னம்பலத்தே ஆடல்புரியும் பெருமான் திருவடிகளை வணங்கிப்போற்றி அங்குத் தில்லைவாழந் தணர்களுக்குத் திருமாளிகைகள் கட்டுவித்துப் பின்னும் பல திருப்பணிகளைச் செய்து கொண்டிருந்து தில்லையம்பலவாணர் திருவடிநீழலை அடைந்தார்.

திருவானைக்காவில் தன் வாயின் நூலால் திருநிழற்பந்தர் செய்து வழிபட்ட சிலந்தியைச் சிவபெருமான் சோழர் குலத்திற் கோச்செங்கணானாகப் பிறப்பித் தருளிய இச்செய்தியை,

**"சிலந்தி செங்கட் சோழனாகச் செய்தான்"** **(2-63-7)**

எனத் திருஞானசம்பந்தரும்,

**"சிலந்தியும் ஆனைக்காவிற் றிருநிழற்பந்தர் செய்து**
**உலந்தவ ணிறந்த போதே கோச்செங்கணானுமாகக்**
**கலந்தநீர்க் காவிரிசூழ் சோணாட்டுச் சோழர் தங்கள்**
**குலந்தனிற் பிறப்பித்திட்டார் குறுக்கை வீரட்டனாரே"**
**(4-49-4)**

எனத் திருநாவுக்கரசரும்,

**"தெருண்ட வாயிடை நூல்கொண்டு சிலந்தி**
**சித்திரப் பந்தர் சிக்கென வியற்றச்**
**சுருண்ட செஞ்சடையாய் அது தன்னைச்**
**சோழனாக்கிய தொடர்ச்சிகண் டடைந்தேன்" (7-66-2)**

**"திருவும் வண்மையுந் திண்டிற லரசும்**
**சிலந்தியார் செய்த செய்பணி கண்டு**
**மருவுகோச் செங்கணான் றனக்களித்த**
**வார்த்தைகேட்டு நுன்மலரடி யடைந்தேன்" (7-65-1)**

எனச் சுந்தரமூர்த்தி சுவாமிகளும் போற்றியுள்ளமை காணலாம். திருவம்பர்ப் பெருந்திருக்கோயில், வைகல் மாடக்கோயில், தண்டலை நீணெறி, நன்னிலத்துப் பெருங்கோயில் முதலிய மாடக் கோயில்களைத் தமிழகத்தில் முதன் முதல் கட்டிய பெருமை கோச் செங்கட் சோழர்க்கே உரியதாகும். கோச்செங்கட் சோழநாயனார் தமிழ்நாடு முழுவதும் சிவபெருமானை வழிபடுதற்கென எழுபது மாடக் கோயில்களை அமைத்தார் என்பதும், சிவனடியாராகிய அவர் திருமாலுக்கும் திருநறையூரில் மணிமாடம் என்ற திருக்கோயிலைக் கட்டினார் என்பதும்,

**"இருக்கிலங்கு திருமொழிவாய் எண்தோள் ஈசற்கு
எழில்மாடம் எழுபது செய்து உலகம் ஆண்ட
திருக்குலத்து வளச்சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே"
(பெரிய திருமொழி 6-6-8)**

எனவரும் திருமங்கையாழ்வார் அருளிச் செயலால் அறியப்படும்.

சங்ககாலச் சோழ மன்னருள் ஒருவராகிய கோச் செங்கட்சோழர் சேரமான் கணைக்காலிரும் பொறையை வென்று சிறைப்படுத்தியபொழுது பொய்கையார் என்னும் புலவர் களவழி நாற்பது என்னும் பனுவலைப் பாடிச் சேரனைச் சிறையினின்றும் விடுவித்தார் என்பது, புறநானூறு 74-ஆம் பாடலுக்கமைந்த உரைக் குறிப்பினாலும்,

**"களவழிக் கவிதை பொய்கையுரை செய்ய உதியன்
கால்வழித் தளையை வெட்டியர சிட்டவனும்"**

எனவரும் கலிங்கத்துப் பரணியாலும் உணரப்படும்.

சோழர் குலத்தோன்றலாகிய கோச்செங்கட்சோழர் தமக்குரிய சோழ நாட்டுடன் பாண்டியர்க் குரிய தென்னாட்டையும் கைக்கொண்டு வேப்பமலர் மாலை சூடி ஆட்சி புரிந்தார் என்பது,

**'தென்னவனா யுலகாண்ட செங்கணாற் கடியேன்"**

எனவரும் திருத்தொண்டத் தொகைத் தொடராலும் அதற்கு வகையாகத் திருவந்தாதி பாடிய நம்பியாண்டார் நம்பிகள், 'நிம்ப நறுந்தொங்கற் கோச் செங்கணான்' எனக் குறிப்பிட்டுரைக்கும் அடைமொழியாலும் உய்த்துணரப்படும்.

## திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார்

நடு நாட்டிலே திருவெருக்கத்தம் புலியூரிலே யாழின் வழியே இன்னிசை வளர்க்கும் பெரும் பாணர் குலத்திற் பிறந்தவர் திருநீலகண்ட யாழ்ப்பாணர். இவர் சிவபெருமானுடைய திருப்புகழை யாழிலிட்டு இசைப்பவராகி ஏழிசையில் வல்ல தம் மனைவியார் மதங்க சூளா மணியாருடன் சோழ நாட்டிலுள்ள திருத்தலங்களை யிறைஞ்சிப் பாண்டி நாட்டின் தலைநகராகிய மதுரையையடைந்து திருவாலவாய்த் திருக்கோயில் வாயிலின் முன் நின்று இறைவரது பொருள்சேர் புகழ்த்திறங்களை யாழிலிட்டு இசைத்துப் போற்றினார். அவ்வின்னிசையைக் கேட்டு மகிழ்ந்த ஆலவாய் இறைவர், அன்றிரவு தம் தொண்டர்க்கெல்லாம் கனவில் தோன்றித் திருநீலகண்டப்பெரும் பாணரைத் தமது திருமுன்பு கொண்டு புகும்படி பணித்தருளினார்.

அவ்வாறே பாணனார்க்கும் உணர்த்தியருளினார். இறைவன் பணித்த வண்ணம் திருநீலகண்டப்பாணர் திருவாலவாய்த் திருக்கோயிலுள் இறைவன் திருமுன்பு புகுந்திருந்து அவரது மெய்ப்புகழை யாழிலிட்டு இசைத்துப் போற்றினார். தரையினிற் சீதம் தாக்கில் சந்தயாழ் நரம்பு தளர்ந்து நெகிழும் என்று பாணர்க்குப் பலகையிடும்படி இறைவர் அசரீரி வாக்கினால் அருள் செய்தார். அவ்வாறே தொண்டர்கள் பாணர்க்குப் பொற்பலகை இட்டார்கள். பாணரும் பொற்பலகையில் ஏறியமர்ந்து உமையொருபாகர் வண்ணங்களை உலகெலாம் அறிய இசைத்துப்போற்றினார்.

ஆலவாயிறைவரைப் போற்றி யருள்பெற்ற பெரும் பாணர் பல தலங்களையும் வழிபட்டுத் திருவாரூரை யணைந்து தமது குலமரபின்படி கோயில் வாயிலின் முன் நின்று இறைவர் புகழ்த் திறங்களை யாழிலிட்டு இசைத்தார். பாணரது இன்னிசைக்கு உவந்த ஆரூரண்ணலார், பாணர் உட்சென்று வழிபடுவதற்காக வடதிசையில் வேறொரு வாயில் வகுத்தருளினார். பெரும் பாணர் அவ்வாயிலின் வழியே புகுந்து ஆரூர்த்திரு மூலட்டானத்து அமர்ந்த இறைவர்முன் சென்று வணங்கி மகிழ்ந்தார். பின்பு பல தலங்களையும் பணிந்து போந்து ஆளுடைய பிள்ளையாரை வணங்கும் விருப்புடன் காழிப்பதியை அடைந்தார். திருஞான சம்பந்தப் பிள்ளையார் திருநீலகண்டப் பெரும் பாணர்க்குத் தக்கவாறு சிறப்புச் செய்தருளித் தாம் பாடியருளுந் திருப் பதிகங்களை யாழிலிட்டு இசைத்துத் தம்மைப் பிரியா துடனிருக்கும் பேற்றினை வழங்கியருளினார். அவ்வாறு ஆளுடைய பிள்ளையாருடன் சிவபெருமானுறையும் திருத்தலங்களை வணங்கி இன்னிசைத் திருத்தொண்டு புரிந்து வரும் திருநீலகண்டயாழ்ப்பாணர், தமது மனைவியார் மதங்க சூளாமணியாருடன் திருநல்லூர்ப் பெருமணத்தில் ஆளுடைய பிள்ளையார் திருமணத்தைக் கண்டு அவருடனே கூட அடியார் திருக்கூட்டத்துடன் ஈறில் பெருஞ் சோதியினுள்ளே புகுந்து ஈறிலாப் பேரின்ப வாழ்வு பெற்றார்.

திருநீலகண்ட யாழ்ப்பாணர் வாசித்த யாழ்க்கருவி பதினான்கு நரம்புகளையுடைய 'செம்முறைக் கேள்வி' என்னும் சகோட யாழாகும். ஆசிரியர் சேக்கிழார் திருநீலகண்டப் பெரும்பாணரைச் 'சகோட யாழ்த்தலைவர்' எனக்குறித்துள்ளார். திருவாலவாயிறைவர் திருநீலகண்ட யாழ்ப்பாணருக்கு அருளிய சிறப்பினை ஞானசம்பந்தப் பிள்ளையார் சமணரை வென்று தென்னவன் கூனிமிர்த்தருளியபின் ஆலவாய்ப் பெருமானைப் பரவி பாடிய திருவியமகப் பதிகத்தில்,

**'தக்க பூமனைச் சுற்றக் கருளொடே**
**தார முய்த்தது பாணர்க் கருளொடே'**

என்ற தொடரிற் போற்றிய செய்தி பெரிய புராணத்தில் திருஞானசம்பந்தர் புராணத்தில் விளக்கப் பெற்றது. திருநீலகண்டப் பெரும்பாணர் பத்திமையால் இசைபாட இறைவன் அவர்க்கு அருள் புரிந்த செய்தியை,

**"பாணனிசை பத்திமையாற் பாடுதலும் பரிந்தளித்தான்**
**கோணலிளம் பிறைச் சென்னிக் கோளிலியெம் பெருமானே"**
**(1-62-9)**

எனவரும் தொடரில் ஆளுடைய பிள்ளையார் குறித்துப் போற்றியுள்ளமை காணலாம்

## சடைய நாயனார்

திருநாவலூரிலே ஆதி சைவ மரபிலே தோன்றியவர் சடையனார். இவர் இசை ஞானியாரை மணந்து உலகமெலாம் மெய்ஞ்ஞான ஒளியைப் பரப்பும் நம்பியாரூரை மகவாகப் பெற்றுத் தந்த பெருமையை உடையவர்.

## இசை ஞானியார்

சடைய நாயனாரது உரிமைத் திருமனைவியாராகிய இசை ஞானியம்மையார், சைவ முதல்வராகிய ஆளுடைய நம்பிகளைப் பெற்ற பெருமையுடையவர்; திருவாரூர் இறைவர் திருவடிகளை மறவாத நெஞ்சமுடையவர்.

சுந்தரமூர்த்தி சுவாமிகளின் தாயாராகிய இசை ஞானியார் கமலாபுத்தில் (திருவாரூரில்) கௌதம கோத்திரத்தவரான ஞானசிவாசாரியார் என்பவருடைய மகள் என்று திருவாரூர்க் கல்வெட்டொன்றிற் குறிக்கப் பெற்றுளது. * (*தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி, II பகுதி II எண். 38)

## திருத்தொண்டர் புராணத்திற் போற்றப்பெற்ற நாயன்மார்களின் காலம்

நாயன் என்பது தலைவன் என்ற பொருளில் வழங்கும் சொல். 'நாயனை அடியான் ஏவும் காரியம் நன்று' என இச்சொல்லை இப்பொருளிற் சேக்கிழாரடிகள் வழங்கியுள்ளார். நாயன் என்னும் சொல் உயர்த்தற்கண் விகுதியாகிய ஆர்விகுதியைப்பெற்று நாயனார் என வழங்கியது. நாயனார் என்னும் பெயர் எல்லாம் வல்ல சிவபெருமானைக் குறித்து வழங்கிய சிறப்பினதாகும்.

**'தேயநாதன் சிராப்பள்ளிமேவிய**
**நாயனாரென நம் வினைநாசமே'**

எனத் திருநாவுக்கரசர் சிராப்பள்ளியிறைவரை நாயனார் என்ற பெயராற் போற்றியுள்ளார். தலைமை பற்றிச் சிவபெருமானுக்கு வழங்கிய இப்பெயர் இறைவன்பாற் பேரன்புடையராய்ச் சித்தஞ் சிவமாகப் பெற்ற சிவனடியார்கள் அறுபத்து மூவர்க்கும் உரியதாய் வழங்கப் பெறுவதாயிற்று.

திருத்தொண்டத் தொகையிற் போற்றப்பெறும் நாயன்மார்களாகிய அறுபத்து மூவர் வாழ்ந்தகாலம், கடைச்சங்க காலத்தின் இறுதி முதல் இரண்டாம் நரசிங்க வர்மனாகிய இராசசிங்க பல்லவன் வாழ்ந்த எட்டாம் நூற்றாண்டு முடியவுள்ள காலப்பகுதியாகும்.

**"தென்னவனாயுல காண்ட செங்கணாற் கடியேன்'**

எனப் போற்றப்பெற்ற கோச்செங்கட் சோழர் சங்ககாலத்தில் வாழ்ந்த சோழமன்னர் என்பதும், அவ்வேந்தர் பெருமான் சேரமான் கணைக்காலிரும் பொறையொடு பொருது வென்று அம்மன்னனைக் குடவாயிலிற் சிறைப் படுத்தியவர் என்பதும், பொய்கையார் என்னும் புலவர் சேரமன்னனைச் சிறைவீடு செய்தற்பொருட்டுச் சோழரது போர்க்கள வெற்றியைப் புகழ்ந்து 'களவழி நாற்பது' என்னும் பனுவலைப்பாடினார் என்பதும் குடவாயிலிற் சிறைப்பட்டிருந்த சேரமான் கணைக்காலிரும் பொறை சிறைக்காவலனைத் தண்ணீர் தாவெனக் கேட்டு அவன் காலந்தாழ்த்துக் கொணர அத்தண்ணீரை யுண்ணாது பாடிய 74-ஆம் புறப்பாடலாலும் அதன் அடிக்குறிப்பினாலும் கலிங்கத்துப்பரணி மூவருலா முதலிய பிற்கால வரலாற்று இலக்கியங்களாலும் நன்குணரப்படும்.

கோச்செங்கணான் என்னும் சோழ மன்னனுக்கு 'நல்லடி' என்னும் பெயருடைய மைந்தனொருவன் இருந்தான் என்ற செய்தி திருவாலங்காட்டுச் செப்பேட்டிற் குறிக்கப்பெற்றுள்ளது. நல்லடி என்னும் மன்னனைப் பற்றிய குறிப்பு,

**'நற்றேர்க், கடும்பகட்டியானைச் சோழர் மருகன்**
**நெடுங்கதிர் நெல்லின் வல்லங்கிழவோன்**
**நல்லடியுள்ளானாகவும்'** **(அகம்-356)**

எனப் பரணர் பாடிய அகநானூற்றுப்பாடலிற் காணப்படுகிறது. எனவே கோச்செங்கட் சோழர் சங்க காலத்தவர் என்பது நன்கு விளங்கும். அவ்வேந்தர் பெருமான் தமிழகத்தில் முதன்முதற் கட்டிய மாடக்கோயில்களைப் பின்வந்த தேவார ஆசிரியர்கள் மூவரும் திருமங்கை யாழ்வாரும் குறித்துப் போற்றியுள்ளமை முன்னர்க் கூறப்பெற்றது.

இனி, சண்டீச நாயனார் காலமும் கண்ணப்ப நாயனார் காலமும் தேவார ஆசிரியர்களுக்குப் பன்னூறாண்டுகள் முற்பட்ட தொன்மையனவென்று தெரிகிறது.

'மும்மையாலுலகாண்ட மூர்த்தியார்' எனப் போற்றப்பெற்ற மூர்த்தி நாயனார், பாண்டிநாட்டிற் கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் ஏற்பட்ட களப்பிரர் ஆட்சியில் வாழ்ந்தவ ரென்பதும், இவ்வடியார் மேற்கொண்ட சிவப்பணிக்கு இடர்விளைத்த வடுகக் கருநாடர் மன்னன் தீவினையால் இறந்தொழிய, இம் மூர்த்திநாயனார் பாண்டி நாட்டில் அரசு வீற்றிருந்து மும்மையால் உலகாண்டார் என்பதும் மூர்த்திநாயனார் வரலாற்றால் அறியப்படும். எனவே இவர் வாழ்ந்த காலம் பாண்டிநாட்டிற் களப்பிரர் ஆட்சியொழிந்து கடுங்கோன் என்னும் பாண்டியனது ஆட்சி தொடங்குதற்கு இடையே அமைந்த காலப்பகுதி எனக் கொள்ளுதல் பொருத்தமுடையதாகும்.

திருமூலர், காரைக்காலம்மையார் காலம் கி.பி. ஐந்து ஆறாம் நூற்றாண்டென்பது (இந்நூலில் 530-42,701 ஆம் பக்கங்களில்) முன்னர் விளக்கப்பட்டது.

கணம்புல்லர், சாக்கியர், அமர்நீதியார், தண்டியடிகள், நமிநந்தியடிகள் ஆகிய அடியார்களைத் திருநாவுக்கரசர் பெயர் குறித்துப் போற்றியுள்ளமையாலும், 'கரும்புபிடித்தவர் காயப்பட்டார் அங்கொர் கோடலியால் இரும்பு பிடித்தவர் இன்புறப்பட்டார்' (4-102-5) எனவரும் திருவிருத்தத்தில் எறிபத்த நாயனாரைப்பற்றிய குறிப்பு அமைந்திருத்தலாலும் எறிபத்தர் காலத்தவர் புகழ்ச்சோழ நாயனார் ஆதலாலும் இவ்வெழுவரும் அப்பருக்கு முன் கி.பி. ஆறாம் நூற்றாண்டளவில் இருந்தவர்கள் எனக் கொள்ளலாம்.

கி.பி. ஏழாம் நூற்றாண்டில் நிலவிய திருநாவுக்கரசர் திருஞானசம்பந்தர் ஆகிய இவ்விரு பெருமக்களுடன் சமகாலத்தவராக விளங்கிய நாயன்மார்கள், அப்பூதியடிகள், திருநீலகண்டயாழ்ப்பாணர், திருநீலநக்கர், முருகனார், சிறுத்தொண்டர், குங்குலியக்கலயர், குலச்சிறையார், மங்கையர்க்கரசியார், நின்றசீர் நெடுமாறர் என்போராவர்.

அப்பர் சம்பந்தர் இருவராலும் குறிக்கப்படாமல் சுந்தரரால் மட்டும் குறிக்கப்பட்ட நாயன்மார்களில் ஐயடிகள் காடவர்கோன், கணநாதர், காரியார், அதிபத்தர், கலிக்கம்பர், கலியர், அரிவாட்டாயர், கூற்றுவநாயனார், வாயிலார், முனையடுவார், இடங்கழியார், இயற்பகையார், நேசநாயனார், இளையான்குடி மாறர், மெய்ப் பொருள் நாயனார், திருநாளைப்

போவார், ஏனாதிநாதர், ஆனாயர், உருத்திரபசுபதியார், திருக்குறிப்புத் தொண்டர், மூர்க்கநாயனார், சிறப்புலி நாயனார், திருநீலகண்டக் குயவனார், புகழ்த்துணையார் ஆகிய அடியார்கள் திருநாவுக்கரசர் திருஞான சம்பந்தர் வாழ்ந்த காலப்பகுதியை யொட்டிச் சுந்தர மூர்த்தி சுவாமிகளுக்கு முற்பட்ட காலப்பகுதியில் வாழ்ந்தவர்கள். மேற்குறித்த அடியார்களுள் ஐயடிகள் காடவர் கோனாயனார், (ஐயடிகள் காடவர்கோன் நாயனார்காலம் இதுவென்பது இந்நூலின் கண் முன்னர் விளக்கப் பெற்றது.) கணநாதர் இருவரும் அப்பர் சம்பந்தர் காலத்திற்கும் சுந்தரர் காலத்திற்கும் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்தவர்களாவர்.

நம்பியாரூரர் வரலாற்றுடன் தொடர்புடையவர்களாகிய சடையனார், இசை ஞானியார், நரசிங்க முனையரையர், விறல்மிண்டர், கோட்புலியார், ஏயர் கோன் கலிக்காமர், மானக்கஞ்சாறர், பெருமிழலைக் குறும்பர், சோமாசிமாறர், சேரமான்பெருமாள் ஆகிய நாயன்மார் பதின்மரும், நம்பியாரூரர் காலத்துப் பல்லவவேந்தராகக் குறிக்கப்பெற்ற கழற்சிங்க நாயனாரும் அவர் வரலாற்றுடன் தொடர்புடைய பூசலார், செருத்துணையார் ஆகிய திருத்தொண்டர்களும் சுந்தரர் காலத்தில் வாழ்ந்த நாயன்மார்கள் ஆவர்.

தில்லைவாழந்தணர், பொய்யடிமையில்லாத புலவர், பத்தராய்ப்பணிவார்கள், பரமனையே பாடுவார். சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார், திருவாரூர்ப் பிறந்தார்கள், முப்போதும் திருமேனிதீண்டுவார், முழு நீறுபூசிய முனிவர், அப்பாலும் அடிச்சார்ந்தார் என்னும் தொகையடியார்களாகிய ஒன்பது திருக்கூட்டத்தாரும் திருத்தொண்டத் தொகையருளிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் காலத்திற்கு முன்னும் சுந்தரர் காலத்திலும் அவருடைய காலத்திற்குப் பின்னும் ஆக முக்காலங்களிலும் நிலைபெற்றுவரும் திருத்தொண்டர்களாவர்.

## திருத்தொண்டர் குலம்

சிவபெருமான் திருவடிகளை வழிபட்டு உய்யும் நற்பேறுடைய அருளாளராகிய சிவனடியார்களிடையே குலம்பற்றிய உயர்வுதாழ்வுக்கு இடமில்லை. அவர்கள் எல்லோரும் தாம்பிறந்த பண்டைக்குலத்தின் தொடர்பினை யறுத்து இறைவனுக்குத் தொண்டுபட்ட திருக்குலமாகிய தொண்டக் குலத்தினர் ஆவர். அறுபத்து மூவராகிய நாயன்மார்களில் அந்தணர் முதல் புலையர் ஈறாகவுள்ள எல்லாக்குலத்தவரும் உள்ளார்கள்.

**ஆதிசைவ அந்தணர் நால்வர்:** *புகழ்த்துணைநாயனார், சடையனார், இசை ஞானியார், நம்பியாரூரர்.*

**வேதியர் பன்னிருவர்:** *குங்குலியக்கலயர், முருகனார், உருத்திரபசுபதியார், சண்டேசுரநாயனார், அப்பூதியடிகள், திருநீலநக்கர், நமிநந்தியடிகள், திருஞான சம்பந்தர், சோமாசிமாறர், சிறப்புலி நாயனார், கணநாத நாயனார், பூசலார் நாயனார்.*

**மாமாத்திரர் ஒருவர் :** *சிறுத்தொண்ட நாயனார்.*

**முடிவேந்தர் அறுவர்:** *சேரமான் பெருமாள், புகழ்ச் சோழர், நெடுமாறர், இடங்கரியார், மங்கையர்க்கரசியார், கோச்செங்கட் சோழர்.*

**குறுநிலமன்னர் ஐவர்:** *மெய்ப்பொருள் நாயனார், கூற்றுவநாயனார், நரசிங்கமுனையரையர், ஐயடிகள் காடவர்கோன், கழற்சிங்க நாயனார்.*

**வணிகர் ஐவர்:** *இயற்பகை நாயனார், அமர்நீதி நாயனார், மூர்த்திநாயனார், காரைக்காலம்மையார், கலிக்கம்ப நாயனார்.*

**வேளாளர் பதின்மூவர்:** *இளையான்குடி மாறனார், விறம்மிண்டார், மானக்கஞ்சாறர், அரிவாட்டாயர், திருநாவுக்கரசர், ஏயர்கோன்கலிக்காமர், மூர்க்க நாயனார், சாக்கிய நாயனார், சத்தி நாயனார், வாயிலார் நாயனார், முனையடுவார் நாயனார், செருத்துணை நாயனார், கோட்புலி நாயனார்.*

**இடையர் இருவர்:** *திருமூல நாயனார், ஆனாய நாயனார்.*

*குயவர் - திருநீலகண்ட நாயனார்*

*பாணர் - திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார்*

*பரதவர் - அதிபத்த நாயனார்*

*வேடர் - கண்ணப்ப நாயனார்*

*சான்றார் - ஏனாதிநாத நாயனார்*

*சாலியர் - நேச நாயனார்*

*செக்கார் - கலிய நாயனார்*

*ஏகாலியர் - திருக்குறிப்புத் தொண்ட நாயனார்*

*புலையர் - திருநாளைப் போவார் நாயனார்*

**மரபறியாத அடியார்கள் அறுவர்:** *எறிபத்த நாயனார், குலச்சிறை நாயனார், பெருமிழலைக் குறும்ப நாயனார், தண்டியடிகள் நாயனார், கணம்புல்ல நாயனார், காரி நாயனார்.*

**திருக்கூட்டத்தார் ஒன்பதின்மரில் ஆதிசைவர்:** *முப்போதும் திருமேனி தீண்டுவார்.*

**வேதியர்** - *தில்லை வாழந்தணர்*

**மரபின் அடங்காத திருக்கூட்டத்தார் எழுவர்:** *பொய்யடிமை யில்லாத புலவர், பத்தராய்ப் பணிவார், பரமனையே பாடுவார், சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார், திருவாரூர்ப் பிறந்தார், முழுநீறு பூசிய முனிவர், அப்பாலும் அடிச்சார்ந்தார்.*

## திருத்தொண்டர்கள் வீடுபெற்ற திறம்

*திருத்தொண்டத் தொகையிற் போற்றப் பெற்ற சிவனடியார்கள் குருலிங்க சங்கமங்களை வழிபட்டு முத்தி யடைந்தவர்களாவர். அவர்களுள், குருவருளால் முத்தி பெற்றவர் பன்னிருவர்: சுந்தரமூர்த்தி நாயனார், திருநாவுக்கரசர், குலச்சிறையார், பெருமிழலைக் குறும்பர், அப்பூதியடிகள், திருஞானசம்பந்தர், திருமூலர், சோமாசிமாறர், கணநாதநாயனார், நெடுமாற நாயனார், மங்கையர்க்கரசியார், திருநீலகண்ட யாழ்ப்பாணர்.*

**சிவலிங்கத்தால் முக்தி பெற்றவர் முப்பதின்மர்:** *எறிபத்தர், கண்ணப்பர், குங்குலியக்கலயர், அரிவாட்டாயர், ஆயனார், மூர்த்தியார், முருகர், உருத்திர பசுபதியார், திருநாளைப்போவார், சண்டேசர், திருநீலநக்கர், நமிநந்தியடிகள், ஏயர்கோன் கலிக்காமர், தண்டியடிகள், சாக்கிய நாயனார், சிறப்புலி நாயனார், சேரமான் பெருமாள், கூற்றுவநாயனார், அதிபத்த நாயனார், கலிய நாயனார், ஐயடிகள் காடவர்கோன், கணம்புல்லர், காரிநாயனார், வாயிலார் நாயனார், கழற்சிங்க நாயனார், செருத்துணை நாயனார், புகழ்த் துணை நாயனார், கோட்புலி நாயனார், பூசலார் நாயனார், கோச்செங்கட்சோழ நாயனார்.*

**சிவனடியாரை வழிபட்டு முத்திபெற்றவர் பத்தொன்பதின்மர்:** *திருநீலகண்டர், இயற்பகையார், இளையான் குடிமாறர். மெய்ப்பொருள் நாயனார், விறன்மிண்ட நாயனார், அமர்நீதி நாயனார், ஏனாதிநாத நாயனார், மானக்கஞ்சாற நாயனார், திருக்குறிப்புத் தொண்டர், காரைக்காலம்மையார், மூர்க்க நாயனார், சிறுத் தொண்ட நாயனார், புகழ்ச் சோழ நாயனார், நரசிங்க முனையரையர், கலிக்கம்ப நாயனார், சத்தி நாயனார், முனையடுவார் நாயனார், இடங்கழி நாயனார், நேச நாயனார்.*

## தொகைவகை விரிநூல்களில் முரண்பாடின்மை

*சோழ மன்னனுக்கு அமைச்சராகிய சோக்கிழாரடிகள் உலகியலறியும் நூலுணர்வும் மதிநுட்பமும் நிரம்பப் பெற்ற*

அருளாளர். திருத்தொண்டத்தொகை, திருத்தொண்டர் திருவந்தாதி, திருத்தொண்டர்களைக் குறித்து நாட்டில் வழங்கும் செவிவழிச் செய்திகள், திருமுறைகள் கல்வெட்டுக்கள் என்பவற்றைத் துணையாகக்கொண்டு திருத்தொண்டர் வரலாறுகளைத் தம் நூலில் விரித்துக் கூறியுள்ளார். எனவே திருத்தொண்டர்களைக் குறித்துத் தொகை வகை நூல்களினால் அறிந்துகொள்ள முடியாத செய்திகளும் விளக்கங்களும் இந்நூலில் இடம்பெற்றுள்ளமை காணலாம்.

சுந்தரர் வரலாற்றில் நரசிங்க முனையரையர் நம்பியாரூரரை மைந்தராக ஏற்று வளர்த்த செய்தி,

**“நாதனுக்கூர் நமக்கூர் நரசிங்கமுனையரையன்**
**ஆதரித்தீசனுக்காட் செயுமூ ரணிநாவலூரென்**
**றோதநற்றக்க வன்றொண்டன் ஆரூரன்”**

எனவரும் சுந்தரர் வாய்மொழியால் அறியப்படும்.

மூர்த்தி நாயனார் காலத்திற் பாண்டி நாட்டின் குழப்பநிலை, ‘மும்மையால் உலகாண்ட மூர்த்தி’ என வரும் அடைமொழியாலும், ‘அவந்திரிகுண்டமணாவதின்மாள்வ னென்று... உலகாண்ட ஒண்மூர்த்தி’ என்னும் திருவந்தாதியாலும் உய்த்துணரப்படும்.

மகேந்திர பல்லவனான குணபரன் சைவனானமை அவன் கட்டிய ‘குணபர வீச்சரம்’ என்னும் கோயிற் பெயராலும் திருச்சிராப்பள்ளிக் கல்வெட்டினாலும் துணியப்படும்.

பழையாறையில் அப்பரடிகளது உண்ணா நோன்பின் வரலாறு அவர் அப்பொழுது பாடிய ‘தலையெலாம் பறிக்குஞ் சமண்கையர்’ என்னும் முதற்குறிப்புடைய திருக்குறுந் தொகையால் இனிது புலனாம்.

அப்பூதியடிகள் மைந்தன் மூத்த திருநாவுக்கரசு அப்பரை அமுது செய்விக்க வேண்டிப் படப்பையிற் சென்று வாழைக் குருத்தையரியும் நிலையில் விடந்தீண்டி யிறந்து பின் திருநாவுக்கரசரால் உயிர் பெற்றுய்ந்தமை திருப்பனந்தாள் திருக்கோயிலிலுள்ள திருத்தொண்டத் தொகையடியார் சிற்பங்களில் அப்பூதியடிகள் வரலாறு பற்றிய சிற்ப அமைப்பாலும் அப்பொழுது திருநாவுக்கரசர் திருவாய்மலர்ந் தருளியதாகவுள்ள ‘ஒன்று கொலாம்’ என்னும் திருப்பதிகச் சொற் பொருளமைப்பாலும் இனிதுணரப்படும்.

திருவாரூரில் தண்டியடிகள் நாயனார்க்கும் சமணர்க்கும் நடந்த வாத நிகழ்ச்சி, ‘நாட்டமிகு தண்டிக்கும்’ எனத் திருத்தொண்டத் தொகையில் உள்ள அடைமொழியாலும்,

**'கண்ணார் மணியொன்று மின்றிக் கயிறு பிடித்தரற்குத்**
**தண்ணார் புனற்றடந் தொட்டலுந் தன்னை நகுமமணர்**
**கண்ணாங் கிழப்ப அமணர் கலக்கங்கண் டம்மலர்க்கண்**
**விண்ணா யகனிடைப் பெற்றவன் ஆரூர் விறற்றண்டியே'**

எனவரும் திருவந்தாதியாலும் நன்கு புலனாம்.

மறை வல்ல மாமாத்திர மரபிற் றோன்றிய பரஞ்சோதி யாராகிய சிறுத்தொண்டர் சேனாபதியாக விளங்கிய செய்தி,

**'கன்னவில் தோட் சிறுத்தொண்டன்' (3-63-2)**

**'செருவடி தோட் சிறுத்தொண்டன்' (3-63-7)**

என ஞானசம்பந்தப் பிள்ளையார் சிறுத்தொண்டரது போர் வன்மையைப் பாராட்டுதலால் இனிது விளங்கும்.

சேரமான் பெருமாள் சுந்தரரைச் சந்தித்து அவருடன் பலதலங்களையும் பணிந்து பாண்டி நாட்டிற் பரங்குன்ற மேய பரமனைப் பணிந்த செய்தி,

**'முடியால் உலகாண்ட மூவேந்தர் முன்னே'**

என நம்பியாரூரர் அவ்வூர்த் திருப்பதிகத் திருக்கடைக் காப்பிற் குறிப்பிடுதலால் உணரப்படும்.

ஐயடிகள் காடவர்கோன் நாயனார் தாம் க்ஷேத்திரத் திருவெண்பாவை அருளிச் செய்தற்கு முன் பல்லவ வேந்தராயிருந்து அரசுபுரிந்த செய்தி அவரைக் 'காடவர்கோன்' என நம்பியாரூரர் குறித்த அடை மொழியால் உய்த்துணரப்படும்.

காடவர்கோன் கழற்சிங்கன் வடபுல வேந்தரைப் போரில் வென்றமை, 'கடல் சூழ்ந்த உலகெலாங் காக்கின்ற பெருமான் காடவர்கோன் "கழற்சிங்கன்" என அவ் வேந்தர் பெருமானது உலகங் காத்தல் வன்மையை நம்பியாரூரர் சிறப்பித்துரைத்தலால் நன்குணரப்படும்.

கோட்புலியார் சோழ மன்னனுக்குப் படைத்தலைவராய்ப் போர் மேற் கொண்டு சென்று வென்றமை,

**'கூடாமன்னரைக் கூட்டத்துவென்ற கொடிறன் கோட்புலி சென்னி**
**நாடார் தொல்புகழ் நாட்டியத்தான்குடி'** (7-15-10)

என நம்பியாரூரரும்,

**'குற்ற மறுக்குநங் கோட்புலி'**

என நம்பியாண்டார் நம்பியும் கூறுதலால் புலனாம்.

காஞ்சியிற் கற்றளிகட்டிய காடவர் கோனுக்கு இறைவன் கனவில் தோன்றி அருள் புரிந்தமை காஞ்சிக் கயிலாச நாதர் கோயிற் கல்வெட்டுக் குறிப்புக்களால் உய்த்துணரப்படும்.

மேற்குறித்த இச்செய்திகள் திருத்தொண்டத் தொகையிலும் திருவந்தாதியிலும் குறிப்பாக உணர்த்தப் பெற்று நாட்டில் வெளிப்பட வழங்கிய பழஞ் செய்திகளாதலால் ஆசிரியர் சேக்கிழார் தம் நூலில் இவற்றை விரித்துக் கூறுவாராயினார்.

இனி நம்பி கூற்றுக்கு மாறாகச் சேக்கிழார் சிலவற்றை மாற்றிக் கூறியதாகக் கருதுவாருமுளர். வகை நூலையும் விரிநூலையும் ஒப்பவைத்து நோக்குங்கால் அக்கருத்து தவறாதல் நன்கு புலனாம்.

*(1)* அடியாரது கோவணத்துக்கு ஈடாகத் தன் பெருஞ் செல்வத்தையும் தன்னையும் தன் மனைவியையும் அமர்நீதியார் ஈந்தனர் என நம்பியாண்டார் நம்பி குறித்தனர். அவரால் 'தன் பெருஞ் செல்வமும்' எனக்குறிப்பிட்ட செல்வத்துள், 'தம் பொருளென்ப தம் மக்கள்' என்ற வண்ணம் மக்கட் செல்வமும் அடங்கும் எனவுணர்ந்த சேக்கிழார், அமர்நீதியார் மனைவியார் மைந்தர் ஆகிய மூவரும் அடியார் கோவணத்துக்கு ஈடாகத் துலையில் ஏறினர் என விளக்கமாகக் கூறியுள்ளார். சேக்கிழார் குறித்தவண்ணம் அமர்நீதியார்க்குக் குழந்தையுண்டென்பது, பழையாறை வடதளியில் அமர்நீதியார் மனைவியாருடன் இறைவனை யிறைஞ்சும் நிலையில் அமைந்த சிற்பத்தில் அமர்நீதியார் மனைவியார் தம்மைந்தனாகிய குழந்தையை இரு கைகளிலும் ஏந்திய நிலையிற் காணப்படுவதாலும் இராச ராசேச்சரத்திலுள்ள அமர்நீதியார் சிற்பத்தில் தராசுத் தட்டிலே தாய் தந்தை நடுவில் குழந்தை காணப்படுவதாலும் நன்கு விளங்கும்.

*(2)* திருஞானசம்பந்தர் விடமேறிய பெண்ணை எழுப்பினார் என நம்பியாண்டார் நம்பி குறித்திருக்கவும் எலும்பைப் பெண்ணாக்கியதாகச் சேக்கிழார் மாற்றிக் கூறியுள்ளார் என்பாருமுளர். இக்கருத்து ஏற்புடையதன்று. 'வெய்யவிடம், மேவியிறந்த அயில் வேற்கண் மடகளை வாவென் றழைப்பித்திம் மண்ணுலகில் வாழ்வித்த சீர் நின்ற செம்மைச் செயலுடையான்' என நம்பியாண்டார் நம்பிகள் இச்செய்தியை விரித்துக் கூறியுள்ளார். 'இறந்த மடமகளை வாவென்று அழைப்பித்து இம் மண்ணுலகில் வாழ்வித்த சீர்நின்ற செம்மைச் செயல்' எனக் குறித்தமையால், விடந்தீண்டி இறந்த பெண் அப்பொழுது உடம்புடன் அங்கில்லை யென்பதும் ஆளுடையபிள்ளையார் அப்பெண்ணை வா என்று அழைப்பித்து இம்மண்ணுலகில்

வாழ்வித்தார் என்பதும், எலும்பைப் பெண்ணாக்கிய அற்புத நிகழ்ச்சியையே 'சீர்நின்ற செம்மைச் செயல்' என நம்பியாண்டார்நம்பிகள் சிறப்பித்தார் என்பதும் நன்கு புலனாம்.

(3) மூர்க்க நாயனாரைத் திருவேற் காட்டூர் மன்னர் என நம்பியாண்டார் நம்பி குறித்தது, அவர் அரசர் குடியிற் பிறந்தவர் என்ற கருத்தினாலன்று. வேற் காட்டூர் மன்னர் என்றது அவ்வூரில் அவதரித்த தலைமைச் சிறப்புடையார் என்னும் பிறப்புரிமை பற்றியதாகும். ஞானசம்பந்தர் புகலி மன்னவன் (2-33-11) எனக் குறிக்கப் பெற்றமை கொண்டு அந்தணராகிய அவரை அரசர் மரபினர் எனக் கூற முடியாது. அவ்வாறே வேளாண் மரபின ராகிய செருத்துணை நாயனார் தஞ்சையில் தோன்றிய தலைவர் என்னுங் கருத்தில் 'தஞ்சை மன்னவனாஞ் செருத்துணை' எனத் திருத்தொண்டத் தொகையிற் போற்றப் பெற்றுள்ளமை இங்கு ஒப்பு நோக்கியுணர்தற்குரியதாகும்.

(4) சங்கப் புலவர் 49 பேரே பொய்யடிமையில்லாத புலவர் என்பது நம்பி கூற்று. 'சங்கப்புலவர் என்ற தொடரே சேக்கிழார் காட்டவில்லை. அவர் கூற்றை உற்றுநோக்கின் பொய்யடிமையில்லாத புலவர் ஒருவரோ என்று ஐயுற வேண்டியதாகவுள்ளது" என டாக்டர் இராசமாணிக்கனார் கருதுவர். திருத்தொண்டர் திருவந்தாதியையும் பெரிய புராணத்தையும் இணைத்து நோக்கும் வழி நம்பியின் கருத்தும் சேக்கிழார் கருத்தும் ஒன்றேயென்பது நன்கு விளங்கும்.

**"தரணியிற் பொய்மையிலாத் தமிழ்ச் சங்க மதிற் கபிலர்**
**பரணர் நக்கீரர் முதல் நாற்பத்தொன்பது பல் புலவோர்"(49)**

எனவரும் திருவந்தாதியில் நாற்பத் தொன்பது புலவோர் எனச் சங்கப்புலவரை மட்டும் குறிப்பிடாமல், சங்கப் புலவரல்லாத எண்ணிறந்த ஏனைய புலவர்களையும் உளப்படுத்திப் 'பல்புலவோர்' எனக் குறித்தார் நம்பியாண்டார் நம்பிகள். கபிலர் பரணர் முதலிய சங்கப்புலவர் என்பவர்கள் கடைச்சங்க காலத்தில் இருந்தவர்கள். அவர்களோடு தம்காலத்தில் உள்ளவர்களையும் தமக்கும் பிற்காலத்தில் இனித் தோன்றுபவர்களையும் இணைத்துப்போற்றும் முறையில் சுந்தரராற் குறிக்கப்பட்ட தொகையடியார்களே பொய்யடிமையில்லாத புலவர் என்னும் உண்மையினை நம்பியாண்டாரும் சேக்கிழாரடிகளும் ஒப்ப விளக்கியுள்ளார்கள். கபிலர் பரணர் முதலிய கடைச்சங்கப் புலவர்களை எடுத்துரைத்து அவர்களைப் போன்றுள்ள நிகழ்காலப் புலவர்களையும் எதிர்காலப் புலவர்களையும் இயைத்துக் கூறும் முறையில் 'நாற்பத் தொன்பது பல் புலவோர்' எனக் குறித்தார் நம்பியாண்டார் நம்பிகள். நம்பிகள் வெளிபடக்

கூறிய சங்கப் புலவர்களை மட்டும் தனித் தெடுத்துக்கூறாது முக்காலப் புலவர்களையும் ஒப்பக் கூறும் முறையில் பொய்யடிமை யில்லாத புலவராவார் இத்தன்மையர் எனச் சேக்கிழாரடிகள் விளக்கம் தந்துள்ளார்.

'தரணியிற் பொய்ம்மையில்லாத் தமிழ்ச்சங்க மதிற் கபிலர் பரணர் நக்கீரர் முதல் நாற்பத்தொன்பது பல் புலவோர்' எனப் புலவர் பெயர்களை எண்ணிய நம்பியாண்டார் நம்பிகள், முதலிற் குறித்த சங்கப் புலவர்கள் இன்ப வொழுக்கமாகிய அகத்திணை பற்றிப்பாடிய பாடல்கள் மேற்போக்காக நோக்கும்வழி உலகியல் பற்றிய அகத்திணை யொழுகலாற்றை உணர்த்துவனவாகவும், அன்புநெறிப் பாடல்களாகிய அவற்றைக் கூர்ந்து நோக்கும்வழி எவ்வுயிர்க்கும் இன்பம் நல்கும் அன்புருவாகிய இறைவனையே ஆன்ம நாயகனாகக் கொண்டு அன்புசெய்து அவன் திருவடிகளை யடைதற்குரிய அருள் நெறிக்குத் துணைசெய்வனவாகவும் அமைந்த நுட்பத்தினை,

**"அருள் நமக்கீயும் திருவாலவாயரன் சேவடிக்கே**
**பொருளமைத்தின்பக் கவிபல பாடும் புலவர்களே"**

எனவரும் தொடரிற் குறித்து அப்புலவர் பெருமக்களது சிறப்பியல்பினை இனிது விளக்கியுள்ளார். சங்கப்புலவர்களுக் குரியனவாக நம்பிகள் குறித்த இச்சிறப்பியல்புகளை,

**"நாதமறைதத் தளித்தாரை நடைநூற்பாவில் நவின்றேத்தும்**
**போதமருவிப் பெய்யடிமையில்லாப் புலவர்"**

எனவும்,

**"செய்யுள் நிகழ் சொற்றெளிவும் திருந்தியநூல் பல நோக்கும்**
**மெய்யுணர்வின் பயனிதுவே எனத்துணிந்து விளங்கி யொளிர்**
**மையணியுங் கண்டத்தார் மலரடிக்கே யாளானார்**
**பொய்யடிமை யில்லாத புலவரெனப் புகழ்மிக்கார்"**

எனவும் சேக்கிழாரடிகள் அவ்வாறே எடுத்தாண்டுள்ளமை இங்குக் கூர்ந்து நோக்கத்தகுவதாகும்.

'பொய்யடிமையில்லாத புலவர்' என்னும் இத்தொடர் தனியடியாரைச் சுட்டாது திருக்கூட்டத்தாராகிய தொகை யடியார்களையே சுட்டிய தென்பது, 'கபிலர் பரணர் நக்கீரர் முதல் நாற்பத்தொன்பது பல் புலவோர்' என நம்பியும் அவர் கருத்தையடியொற்றிய நிலையிற் சேக்கிழாரடிகளும் கூறிய விளக்கங்களால் இனிது விளங்கும். இத்தொடர் இக்காலத்தில் ஒரு சிலர் கருதுவது போன்று மாணிக்கவாசகர் போன்ற தனியடியார் ஒருவரைக் குறித்த தொடராக இருந்திருக்குமானால், 'தனியடியார் அறுபத்து மூவர்; தொகையடியார் ஒன்பதின்மர்' என

இந்நாட்டில் நெடுங்காலமாக வழங்கிவரும் வழக்குக்கு மாறாகத் தனியடியார் அறுபத்து நால்வர், தொகையடியார் எண்மர் எனச் சொல்ல வேண்டிய குழப்பநிலை ஏற்பட்டு விடும்.

இரண்டாம் இராசராசசோழன் குடந்தையை யடுத்துத் தன் பெயரால் அமைத்த இராசராசபுரத்தில் கட்டிய இராசராசேச்சரத் திருக்கோயில் விமானத்தில் திருதொண்டத் தொகையடியார் களின் பெயரும் பீடும் பொறித்தமைத்த சிற்பங்களில் 'பொய்யடிமையில்லாத புலவர்' எனக்குறித்த சிற்பத்தில் அடியார்கள் ஒன்பதின்மர் இடம்பெற்றுள்ளனர். நம்பிகள் குறித்த சங்கப்புலவர் நாற்பத்தொன்பதின்மரைச் சுட்டும் முறையில் அமைந்த அச்சிற்பத்தில் ஒன்பதின்மரை வெளிப்பட அமைத்து நாற்பதின்மரை உய்த்துணர வைத்த திறம் வரலாற்று ஆராய்ச்சியாளருக்குப் பெருமகிழ்ச்சி யளிப்பதாகும். இவ்வாறு தொகை வகை, விரியாகிய நூல்களோடும் வரலாற்றுச் சிற்பத்துடனும் ஒப்புநோக்கும்வழி பொய்யடிமை இல்லாத புலவர் என்பார் தொகையடியார்களேயன்றித் தனியடியாரல்லர் என்பது ஐயத்திற் கிடனின்றித் தெளிந்துணரப்பெறும் வரலாற்றுண்மையாதல் காணலாம்.

5. "காரியார் சிவனைப்பாடிக் கயிலை புக்கவர் என்பது நம்பி கூற்று. அவர் மூவேந்தர் மீது கோவை பாடிப் பெற்ற பொருளைக்கொண்டு சிவன் கோயில் கட்டி முத்திபெற்றவர் என்பது சேக்கிழார் கூற்று" என மாறுபாடு காட்டுவர் டாக்டர் இராசமாணிக்கனார்.

**"புல்லன வாகா வகையுலகத்துப் புணர்ந்தனவும்**
**சொல்லினவும்நய மாக்கிச் சுடர்பொற் குவடுதனி**
**வில்லனை வாழ்த்தி விளங்குங்கயிலைபுக் கானென்பராற்**
**கல்லன மாமதிற் சூழ்கட வூரினிற் காரியையே"**

எனவரும் திருவந்தாதியிற் குறிக்கப்பட்ட குறிப்பினை ஆதரவாகக் கொண்டே, காரியார் மூவேந்தர்பாற் கோவைபாடி நயவுரை பகர்ந்து சிவப்பணி புரிந்தார் என்ற செய்தியைச் சேக்கிழாரடிகள் தெளிவுபடுத்தி உள்ளார். இப்பாடலில்,

**"புல்லன ஆகாவகை உலகத்துப் புணர்ந்தனவும்**
**சொல்லினவும் நயமாக்கி'**

என்ற தொடரை உளத்துட்கொண்டு,

**"வண்டமிழின், துறையான பயன்தெரிந்து... ...தமிழ்க் கோவை**
**தம்பெயராற் குலவும்வகை, முறையாலே தொகுத் தமைத்து"**

எனவும், 'சொல்லினவும் நயமாக்கி' என நம்பி கூறியதனை யுளங்கொண்டு,

**"அடுத்த உரை நயமாக்கி"**

**"யாவர்க்கும் மனமுவக்கும் இன்பமொழிப் பயனியம்பி"**

எனவும்,

**'சுடர் பொற்குவடுதனி வில்லனை வாழ்த்தி'**

எனவரும் அந்தாதித் தொடரை மனங்கொண்டு

**"மன்னவர்பாற்பெற்ற நிதிக்குவை கொண்டு........**
**சங்கரனார் இனிதமருந் தானங்கள் பல சமைத்தார்"**

எனவும், 'விளங்குங் கயிலைபுக்கான்' என்னும் நம்பி கூற்றினை அடியொற்றி,

**"வாய்ந்த மனம்போ லுடம்பும் வடகயிலைமலை சேர்ந்தார்"**

எனவும் அருண்மொழித் தேவர் காரி நாயனார் வரலாற்றை விரித்துக் கூறியுள்ளமை காணலாம்.

6. 'தஞ்சை மன்னவனாம் செருத்துணை' எனத் திருத்தொண்டத் தொகையிற் போற்றப்பெற்ற செருத்துணை நாயனார் தோன்றிய திருப்பதியாகிய தஞ்சை என்றது, பிற்காலச் சோழமன்னர்க்குத் தலைநகராயமைந்த வெண்ணிநாட்டுத் தஞ்சையை அன்றெனவும், செருத்துணை நாயனார் பிறந்த தஞ்சை சோழநாட்டின் அக நாடுகளுளொன்றாகிய மருகல் நாட்டைச்சார்ந்த தஞ்சை எனவும் விளக்கும் முறையில்,

**'செழுநீர் மருகல் நன்னாட்ட-மர் தஞ்சைச் செருத்துணையே'**

எனக் குறித்தார் நம்பியாண்டார் நம்பிகள். இக்குறிப்பினை யுளங்கொண்டு,

**'பொன்னிநீர் நாட்டு மருகல் நாட்டுத் தஞ்சாவூர்"**

என ஆசிரியர் சேக்கிழார் குறித்துள்ளமை இங்கு ஒப்பு நோக்கத்தகுவதாகும்.

இனி, கண்ணப்ப நாயனாரைப்பற்றி நக்கீர தேவரும் கல்லாட தேவரும் கூறியவற்றிற்கும் சேக்கிழார் கூறியவற்றிற்கும் **வேறுபாடுகள்** உள்ளன என்றும், 1. கண்ணப்பர் நாடோறும் சிவனைப் பூசித்தமை, 2. அவர் நாயுடனே காளத்தி மலைமீது இறைவன் முன் இருந்தமை, 3. லிங்கத்தின் ஒரே கண்ணில் திண்ணனார் தம் இரு கண்களையும் அப்ப முயன்றமை என்பன பெரிய புராணத்திற்கு மாறாகப் பதினொராந் திருமுறையிற் காணப்படும் வேறுபாடுகள் என்றும் அறிஞர் இராச மாணிக்கனார் அவர்கள் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

*1. கண்ணப்பர் காளத்தியப்பரை வழிபட்ட ஆறு நாட்களில் இறுதிநாளகிய ஆறாம் நாள் நீங்கலாக ஏனைய ஐந்து நாட்களிலும் இடையீடின்றி வழிப்பட செய்தியைக் குறிக்கும் முறையில் 'நாடொறும்' என்று கூறப்பட்டது.*

*2. திண்ணனாருடன் வேட்டை நாயும் காளத்தி மலையிற் சென்றது என்ற செய்தியைச் சேக்கிழாரடிகள் சிறப்பின்மை கருதி வெளிப்படக் கூறாதுவிட்டாலும், இறைவனை வழிபடச் சென்ற சிவகோசரியார், 'இறைச்சி எலும்புடன் இலையும் செருப்படியும் நாயடியும் திருவலகால் மாற்றிய' செய்தியைச் சேக்கிழார் தெளிவாகக் குறித்துள்ளமையால் 'கண்ணப்பருடன் வேட்டை நாயும் சென்றது' எனப் பதினொராந் திரு முறையிலுள்ள அச்செய்தி சேக்கிழார்க்கு உடன்பாடாதல் இனிது புலனாம்.*

*3. லிங்கத்தின் ஒரே கண்ணில் திண்ணனார் தம் இரண்டு கண்களையும் அப்பமுயன்றார் என்று நக்கீரரோ கல்லாடரோ தம் பாடல்களிற் குறிப்பிட்டதாகக் கூறுதற்கு இடமில்லை.*

*முக்கண்ணப்பனாகிய காளத்தியிறைவர், தம் ஒரு கண்ணில் உதிரம் ஒழுக இருந்த நிலைகண்டு மனங்கலங்கிய திண்ணனார், தமது கண்ணொன்றை அம்பினால் இடந்து காளத்தியப்பரது புண்பட்ட கண்ணில் அப்பி உதிரம் நின்றமை கண்டு மனம் மகிழ்ந்த செய்தியினை,*

**'இதுதனைக் கண்ட என்**
**கண்தனை யிடந்து கடவுள் தன் கண்ணுறு**
**புண்ணில் அப்பியுங் காண்பனென்றொரு கண்ணிடைக்**
**கணையது மடுத்துக் கையில் வாங்கி**
**அணைதர அப்பினன் அப்பலும் குருதி**
**நிற்பதொத் துருப்பெறக்கண்டு நெஞ்சுகந்து'**

*என்ற தொடரில் முடித்துக்காட்டி, இறைவரது மற்றைக் கண்ணிலும் அவ்வாறே குருதியொழுகத் தன் மற்றொரு கண்ணைப்பெயர்த்து எடுத்தற்கு முற்பட்ட செய்தியை*

**'மற்றைக் கண்ணிலும் வடிக்கணை மடுத்தனன்'**

*என்ற தொடரினால் நக்கீரர் வேறு பிரித்துக் கூறியுள்ளமையும், இவ்விரு செய்திகளையும்,*

**'முக்கணப்பனுக் கொருகணில் உதிரம்**
**தக்கிணத்திடை யிழிதர அக்கணம்**
**அழுதுவிழுந்து தொழுதெழுந் தரற்றிப்**
**புன்மருந்தாற்றப் போகாதென்று**
**தன்னை மருந்தென்று மலர்க்கண் அப்ப**
**ஒழிந்தது'**

*எனவும்,*

**'மற்றை ஒண்திருநயனம்
பொழிந்த கண்ணீர்க் கலுழிபொங்க
அற்றதென்று மற்றைக் கண்ணையும்
பகழித் தலையால் அகழ'**

எனவும் வரும் தொடர்களில் கல்லாடதேவர் முறையே குறித்துள்ளமையும் இங்குக் கூர்ந்துணரத் தக்கனவாகும்.

சம்பந்தர் பசி வருந்தி அழுதார் என்று பட்டினத்தடிகள் கூறியதை, நீரில் மூழ்கிய தந்தையாரைக் காணாத அச்சத்தால் அழுதார் என்று சேக்கிழாரடிகள் மாற்றி அமைத்தார் என்பர் அறிஞர் இராச மாணிக்கனார். ஆளுடைய பிள்ளையார் அழுததற்குக் காரணம் தந்தையாரைக் காணத அச்சமே எனச் சேக்கிழாரடிகள் கூறவேயில்லை. தந்தையார் குளத்தில் மூழ்கிய நிலையில் அவரைப் பிரிந்துறைதலாற்றாத தனிமை நிலையினைத் தலைக்கீடாகக் கொண்டு ஈசர்கழலிடத்தே முன்னைப் பிறப்பிற் கொண்டுள்ள முன் உணர்வுமூளுதலால் பிரமதீர்த்தக்கரையில் நின்றருளும் பிள்ளையார் அழத்தொடங்கினார் என்ற செய்தியை,

**"மறைமுனிவர் மூழ்குதலு மற்றவரை முற்காணா
திறைதரியா ரெனுநிலைமை தலைக்கீடா ஈசர்கழல்
முறைபுரிந்த முன்னுணர்வு மூளஅழத் தொடங்கினார்
நிறைபுனல் வாவிக்கரையில் நின்றருளும் பிள்ளையார்"**

எனவரும் பாடலில் ஆசிரியர் தெளிவாகக் குறித்து உள்ளார். ஆகவே ஆளுடைய பிள்ளையார் அழுததற்குக் காரணம் தந்தையைப் பிரிந்த அச்சமன்றென்பதும், தந்தையைப் பிரிந்தமை தலைக்கீடாக, ஈசர்கழல் முறை புரிந்த முன்னுணர்வு பிள்ளையார்பால் மூண்டெழுந்தமையே அவர் அழுததற்குக் காரணம் என்பதும் சேக்கிழார் கருத்தாதல் நன்கு புலனாம்.

இனி, ஆளுடைய பிள்ளையார் அழுதமைக்குத் காரணமாகப் பட்டினத்தடிகள் குறித்த பசி என்பது இவ்வுலகில் ஏனைய பிள்ளைகள்பால் இயல்பாகத் தோன்றும் அயர்ச்சியை விளைக்கும் பசியாகாமல் ஞானத்தின் திருவுருவாகிய பிள்ளையாரை மேன்மேல் வளர்த்தற்குரிய மெய்யுணர்வுப் பசியாக அமைந்த திறத்தையும், அப்பசியைத் தணித்தற்கு இறைவரருளால் அம்மையார் குழைத்தளித்த பாலமுதம் வெறும் உடற்பசியைத் தணிக்கும் ஊனப்பாலாகாமல் மெய்யுணர்வு வேட்கையை நிறைவு செய்தற்குரிய ஞானப்பாலாக அமைந்த தன்மையினையும்,

**"தாதையொடு வந்த வேதியச் சிறுவன்
தளர்நடைப் பருவத்து வளர்பசி வருத்த**

**அன்னாயோ வென்றழைப்ப முன்னின்று**
**ஞான போனகத்தருள் அட்டிக் குழைத்த**
**ஆனாத் திரளை அவன்வயின் அருள"**

எனவரும் தொடரில் திருவெண்காட்டடிகள் தெளிவாக விளங்கிய திறம்உணர்ந்து போற்றத் தகுவதாகும். ஆளுடைய பிள்ளையார்க்கு உமையம்மையார் அளித்த ஞானபோனகத் தியல்பினை,

**"மலையரையன் மடப்பாவை**
**நற்கண்ணி அளவிறந்த ஞானத்தை அமிர்தாக்கிப்**
**பொற்கிண்ணத் தருள்புரிந்த போனகம்"**

என நம்பியாண்டார் நம்பிகள் சிறப்பித்துக் கூறியுள்ளமை திருவெண்காட்டடிகள் கருத்திற்கியைந்த சிறந்த விளக்கமாகும்.

ஒன்பதாந் திருமுறையில் நம்பிகாடநம்பி என்பார், சுந்தரரும் சேரமானும் வெள்ளானைமீது இவ்வுடலோடு சென்றனர் எனத் தெளிவாகக் கூறியுள்ளார் என்பர் டாக்டர் இராசமாணிக்கனார். இக்கூற்று ஏற்புடைய தன்றென்பது (இந்நூல் 493-ம் பக்கத்தில்) முன்னர் எடுத்துக் காட்டி விளக்கப்பட்டது.

சேக்கிழாரடிகள் தம் நூலில் புதிய செய்திகள் சிலவற்றைச் சேர்த்துக் கூறினாரன்றோ தொகை வகையாகிய முன்னூல்களின் செய்திகள் சிலவற்றை மாற்றிக் கூறினாரென்றோ எண்ணுதற்குச் சிறிதும் இடமில்லையென்பதும், முன்னோர் நூலின் மொழிவழி நின்று திருத் தொண்டர்களின் மெய்ம்மை வரலாறுகளைத் தம் நூலில் விரித்துக் கூறியுள்ளார் என்பதும் மேல் எடுத்துக் காட்டிய குறிப்புகளால் இனிது விளங்கும்.

## சேக்கிழார் எடுத்தாண்ட முன்னூற் சான்றுகள்

தெய்வப்புலமைச் சேக்கிழார் நாயனார், தாம் இயற்றிய வரலாற்றுக்காப்பியமாகிய திருத்தொண்டர் புராணத்தில், பழந்தமிழ் இலக்கணமாகிய தொல்காப்பியம் முதல் தம் காலத்திற்குச் சிறிது முன் தோன்றிய நூல்களீறாகவுள்ள செந்தமிழ்த் தொன்னூல்களில் கருத்துக்களையும் சொற்பொருள் நலங்களையும் பொன்னேபோற் போற்றி எடுத்தாண்டுள்ளார்.

ஒருவனும் ஒருத்தியும் கூடிவாழும் மனையறத்தின் பயனாக அவ்விருவரையும் பிறப்புத்தோறும் சேர்த்துவைப்பதும், பிரித்து விலக்குவதும் ஆகிய இருவகை ஊழினும், இருவருள்ளமும் எக்காலத்தும் ஒன்றி வாழ்தற்கு உயர்த்தும் நல்லூழின் ஆணையினால் ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் ஓரிடத்து எதிர்ப்பட்டுக் காண்பர் என்பதனை,

**"ஒன்றே வேறே என்றிரு பால்வயின்**
**ஒன்றி யுயர்ந்த பாலது ஆணையின்**
**ஒத்த கிழவனும் கிழத்தியுங் காண்ப" (தொல்-களவு-2)**

எனவரும் நூற்பாவில் தொல்காப்பியர் இனிது விளக்கியுள்ளார். திருவாரூர்ப் பெருமானை வழிபடச் சென்ற நம்பியாரூரராகிய சுந்தரரும் நங்கை பரவையாரும் ஒருவரை யொருவர் முன்னறியாத நிலையில் திருவாரூர்த் திருக்கோயிலில் எதிர்ப்பட்டுக் கண்ணுற்றுக் காதல் கொண்ட திறத்தினை,

**"புற்றிடம் விரும்பினாரைப் போற்றினர் தொழுது செல்வார்**
**சுற்றிய பரிசனங்கள் சூழஆரூடைய நம்பி**
**நற்பெரும் பான்மை கூட்ட நகைபொதிந் திலங்கு செவ்வாய்**
**விற்புரை நுதலின் வேற்கண் விளங்கிழை யவரைக் கண்டார்"**

எனவும்,

**"தண்டரள மணித்தோடுந் தகைத்தோடுங் கடைபிறழும்**
**கெண்டைநெடுங் கண்வியப்பக் கிளரொளிப்பூ ணுரவோனை**
**அண்டர்பிரான் திருவருளால் அயலறியா மனம் விரும்பப்**
**பண்டைவிதி கடைகூட்டப் பரவையாருங் கண்டார்"**

எனவும் வரும் பாடல்களில் சேக்கிழாரடிகள் விரித்துக் கூறியுள்ளார். இவ்வாறு நம்பியாரூரரும் நங்கை பரவையாரும் ஒருவரையொருவர் எதிர்ப்பட்ட முதற்காட்சியிலேயே ஒருவரையொருவர் இன்றியமையாத காதலுடையராதற்கு அவ்விருவரும் முன்னைப் பிறவியிற்பயிலியது கெழீஇய நட்பின் பயனாகிய நல்லூழின் ஆணையே காரணம் என்பதனை, "நற்பெரும்பான்மை கூட்ட" "பண்டை விதிகடை கூட்ட" எனவரும் தொடர்களில் ஆசிரியர் புலப்படுத்தியுள்ளார். 'ஒன்றியுயர்ந்த பால்' எனத் தொல்காப்பியர் குறித்த நல்லூழினையே 'நற்பெரும்பான்மை' எனவும் 'பண்டை விதி' எனவும் சேக்கிழார் குறித்துள்ளமை இங்கு ஒப்பு நோக்கியுணரத் தகுவதாகும்.

மேற்குறித்த இருவகைப் பால்களாகிய இரு வினையின் பயன்களைச் செய்த உயிர்களே நுகரும் வண்ணம் வகுத்து நுகர்வித்தல் தெய்வத்தின் செயலாம் என்பதனைப் 'பால்வரை தெய்வம்' (தொல்-சொல்-கிளவி57) எனவரும் தொடரால் ஆசிரியர் தொல்காப்பிரும் 'வகுத்தான் வகுத்தவகை (திருக்குறள் 377) என்பதனால் திருவள்ளுவரும் தெளிவாகக் குறித்துள்ளார்கள். எனவே ஊழ்வினைதானே வந்து உயிர்களைப் பற்றும் உணர்வுடைய தன்றென்பதும், உயிர்கள் செய்யும் நலன்தீங்குகளாகிய இருவினைகளுக்கேற்ப அவற்றின் பயன்களை

வகுத்து, அவ்வவ்வுயிர்கள் செய்த வினைப்பயன்களை அவ்வவ்வுயிர்களே நுகருமாறு நுகர்விக்கும் முதல்வனொருவன் உளனென்பதும் தொல்காப்பியர் திருவள்ளுவர் முதலிய பண்டைத் தமிழ்ச் சான்றோர் துணிபாதல் புலனாகும். தமிழகத்திற் பன்னெடுங் காலத்திற்கு முன்னரே நிலைபெற்று வழங்கிய இவ்வுண்மையினை,

**"செய் வினையுஞ் செய்வானும் அதன்பயனுஞ் சேர்ப்பானும்**
**மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள் எனக் கொண்டே**
**இவ்வியல்பு சைவநெறி யல்லவற்றுக் கில்லைஎன**
**உய்வகையாற் பொருள்சிவனென் றருளாலே உணர்ந்தறிந்தார்"**

**(பெரிய - சாக்கிய- 5)**

எனவரும் செய்யுளில் சேக்கிழாரடிகள் தெளிளவாக விரித்துரைத்தமை இங்கு ஒப்பு நோக்கத் தகுவதாகும்.

ஆசிரியர் தொல்காப்பியனார் வகுத்துரைத்த தமிழ்ப் பொருளிலக்கண மரபினை அருண்மொழித் தேவராகிய சேக்கிழாரடிகள் தாம் இயற்றிய திருத்தொண்டர் புராணத்தில் ஆங்காங்கே எடுத்தாண்டுள்ளார். திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணத்தில் திருத்தொண்டை நன்னாட்டு நானிலத்து ஐந்திணைவளங்களையும் ஆசிரியர் தெளிவாக எடுத்துக் காட்டி விளக்கியுள்ளமை உணர்ந்து மகிழத்தகுவதாகும்.

காடுறையுலகம், மைவரையுலகம், தீம்புனலுலகம், பெருமணலுலகம் என நிலத்தை நான்காகப் பகுத்து, அந்நால்வகை நிலங்களுக்கும் அகனைந்திணைகளுள் முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்னும் நால்வகை யொழுக்கங்களையும் உரிமை செய்துணர்த்திய தொல்காப்பியர், நிலமில்லாத பாலைத்திணைக்கு,

**"நடுவுநிலைத் திணையேநண்பகல் வேனிலொடு**
**முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே"**

**(தொல் - அகத் - 11)**

எனவரும் நூற்பாவில் இடமும் காலமும் வகுத்துக் கூறியுள்ளார். "முல்லை குறிஞ்சி பாலை மருதம் நெய்தல் எனவரும் ஐந்திணைகளுள் நடுவண் நிற்பதாகிய பாலைத் திணை, நண்பகற்பொழுது வேனிற்காலத்துடன் கூடிய நிலையிற் கருதிச் செல்லும் வழியினை இடமாகவுடையது" என்பது இந் நூற்பாவின் பொருளாகும். எனவே தமிழகத்திற்பாலை என்பதோர் தனி நிலம் இல்லையென்பதும் வேனில் வெப்பத்தால் வளங்குன்றிய வெவ்விய சுரவழியே பாலைத்திணைக்குரிய தென்பதும் தொல்காப்பியனார் கருத்தாதல் பெறப்படும்.

**"வானமூர்ந்த வயங்கொளி மண்டிலம்**
**நெருப்பெனச் சிவந்த உருப்பவி ரங்காட்**
**டிலையில மலர்ந்த முகையி லிலவம்" (அகநானூறு -11)**

எனவரும் பாடல், காடுறையுலகமாகிய முல்லை நிலம் வேனில் வெப்பத்தால் தன்னியல்பு திரிந்து பாலையாயின செய்தியைப் புலப்படுத்துகின்றது.

**"முக்கண்ணான் மூவெயிலும்**
**உடன்றக்கால் முகம்போல வொண்கதிர் தெறுதலிற்**
**சீறருங் கணிச்சியோன் சினவலின் அவ்வெயில்**
**ஏறுபெற் றுதிர்வனபோல் வரைபிளந்து, இயங்குநர்**
**ஆறுகெட விலங்கிய அழலவிர் ஆரிடை" (பாலைக்கலி - 1)**

என்பது, மைவரையுலகமாகிய குறிஞ்சி நிலம் வேனிற் பொழுதிற் கதிரவன் வெம்மையால் தன்னியல்புதிரிந்து பாலையாயின செய்தியைப் புலப்படுத்துகின்றது. இவ்வாறு முல்லையும் குறிஞ்சியும் வேனில் வெப்பத்தால் தம்மியல்பு திரிந்து பாலையாயின வாறுணர்ந்த இளங்கோவடிகள்,

**"வேனலங் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்**
**தானலந் திருகத் தன்மையிற் குன்றி**
**முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து**
**நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்**
**பாலை என்பதோர் படிவங் கொள்ளுங் காலை"**
**(சிலப் - காடுகாண் 62 - 7)**

என வேனிற் பருவத்தே நண்பகற்பொழுதிற் கதிவரன் வெம்மையால் தன்மை திரிந்த சுரத்தினைப் பாலை என்ற பெயராற் குறித்துள்ளார்.

"குறிஞ்சியும் முல்லையும் அடுத்த நிலமே காலம் பற்றிப் பாலையாகும்... ... தொல்காப்பியனார் பாலைக்கு நிலம் வேண்டிற்றிலர். வேண்டாமையின் தெய்வமும் வேண்டிற்றிலர். பிறர் பகவதியையும் ஆதித்தனையும் தெய்வம் என்று வேண்டுவர்" என்பர் இறையனார் களவியலுரையாசிரியர். அவ்வாசியர் குறித்த வண்ணம் பகவதியாகிய கொற்றவையைப் பாலைநிலைத் தெய்வமாக இளங்கோவடிகள் சிலப்பதிகார வேட்டுவவரியிற் போற்றி யுள்ளமையும், முல்லை நிலத் தெய்வமாகிய மாயோனுக்குத் தங்கையும் குறிஞ்சி நிலத்தெய்வமாகிய சேயோனுக்குத் தாயும் ஆகிய கொற்றவை முல்லையுங் குறிஞ்சியும் திரிந்த பாலை நிலத்திற்குத் தெய்வமாதல் பெரிதும் பொருத்த முடைமையும் எண்ணிய சேக்கிழாரடிகள் பாலை நிலத்தெய்வ மாகக் கொற்றவையைக் குறித்துள்ளார். கதிரவன் வெம்மை யினால் கடும்பகற் பொழுதில் அழகிய முல்லை நிலமும் குறிஞ்சி

நிலமும் திரிந்து வளங்குறைந்த சில இடங்கள், காடுகிழாள் ஆகிய பகவதி கோயில்களைத் தன்னத்தே கொண்டு, பாலையென்று பெயர் சொல்லுதற்குரியனவும் தொண்டை நாட்டில் உள்ளன என்பதனை,

**"கோல முல்லையுங் குறிஞ்சியுந் திரிந்தசில் லிடங்கள்**
**நீல வாட்படை நீலிகோட் டங்களும் நிரந்து**
**கால வேனிலிற் கடும்பகற் பொழுதினைப் பற்றிப்**
**பாலை யுஞ்சொல லாவன வுளபரன் முரம்பு"**

எனவரும் பாடலிற் குறித்துள்ளார், இங்ஙனம் பாலை யெனப் பெயர் பெறுவதற்குரிய இடமும் பொழுதுமாகிய இவற்றைக் குறித்துத் தொல்காப்பியனாரும் சங்கப்புலவர்களும் இளங்கோவடிகளும் களவியலுரை ஆசிரியரும் கூறிய கருத்துகள் எல்லாவற்றையும் வரலாற்று முறையில் தொகுத்துரைப்பதாக மேற்குறித்த பெரிய புராணச் செய்யுள் அமைந்திருத்தல் காண்க.

காடுறையுலகமாகிய முல்லை நிலத்திற்கு மாயோனாகிய திருமால் தெய்வம் என்பதனை,

**'மாயோன் மேய காடுறையுலகமும்' (தொல் - அகத் - 5)**

எனவரும் தொல்காப்பியத் தொடர் எடுத்துரைக்கின்றது. இவ்வாறு அருந்தமிழ் நூலாகிய தொல்காப்பித்தில் முல்லை நிலத் தெய்வமாகச் சிறப்பித்து உரைக்கப் பெற்ற செங்கண்மாலால் தொழப் பெற்ற பெருமை வாய்ந்த சிவபெருமான் மகிழ்ந்து வீற்றிருக்குஞ் சீர்த்தி வாய்ந்தது தொண்டை நாட்டில் உள்ள திருமுல்லை வாயில் என்ற திருத்தலம் என்பார்,

**"அங்கண் முல்லையின் தெய்வமென் றருந்தமி ழுரைக்கும்**
**செங்கண் மால்தொழுஞ் சிவன்மகிழ் திருமுல்லை வாயில்"**
**(பெரிய - திருக்குறிப்புக்கள் - 18)**

என்றார் சேக்கிழாரடிகள்.

ஒரு திணைக்கண்ணே நிலைத்து வாழும் மக்கட் பெயர் நிலப்பெயரும் தொழிற்பெயரும் என இரு வகைப்படும். ஆயர் என்பது முல்லை நிலத்தில் வாழ்வாரைக் குறித்து வழங்கும் நிலப் பெயராகும். வேட்டுவர் என்பது வேட்டைத் தொழில் செய்வாரைக் குறித்து வழங்குந் தொழில் பெயராகும், இவையே யன்றிக் குழுப்பற்றியும் மக்களுக்குப் பெயர் அமைதலுண்டு. இப்பெயர் வகையினை,

**"ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர்**
**ஆவயின் வரூஉங் கிழவரு முளரே" (தொல் - அகத்-21)**

எனவரும் நூற்பாவிலும்,

**"நிலப்பெயர் குடிப்பெயர் குழுவின் பெயரே**
**வினைப்பெயர் உடைப்பெயர் பண்புகொள் பெயரே**
**(தொல் - பெயர் -11)**

எனவரும் நூற்பாவிலும் தொல்காப்பியர் விரித்து உரைப்பார். இங்ஙனம் நானில மக்கள் தாம் வாழும் நிலம்பற்றியும் மேற்கொண்ட தொழில் பற்றியும் பெயர் கூறப் பெற்றுப் பல் வேறு குலத்தினராகப் பரவி வாழும் இயல்பினை,

**"ஆய நானிலத் தமைதியில் தத்தமக் கடுத்த**
**மேய செய்தொழில் வேறுபல் குலங்களின் விளங்கித்**
**தீய என்பன கனவிலும் நினைவிலாச் சிந்தைத்**
**தூய மாந்தர் வாழ் தொண்டை நாட்டியல்பு சொல் வரைத்தோ"**
**(பெரிய - திருக்குறிப்பு-47)**

எனத் தொண்டை நாட்டியல்பில் வைத்து அருண்மொழித் தேவர் விளக்கியுள்ளமை அவர் தம் தொன்னூற் பயிற்சியினையும் நாட்டின் நடைமுறையினை நன்குணர்ந்த அவரது உலகியலறிவையும் நன்கு புலப்படுத்துவதாகும்;

வண்புகழ் மூவராகிய சேர சோழ பாண்டியர் என்னும் மூவேந்தர்களால் ஆளப்பெறும் தமிழகத்திலே அவ்வேந்தர்க் குரிய படைவீரர்கள் முறையே பனம்பூவையும் வேப்பம் பூவினையும் ஆத்திப்பூவினையும் தத்தமக்குரிய அடையாளப் பூவாகக் கொண்டனர் என்பது,

**"போந்தை வேம்பே ஆர் எனவரூஉம்**
**மாபெரும் தானையர் மலைந்த பூவும்" (தொல் - புறத் -5)**

எனவரும் தொடராற் புலனாம். நின்றசீர் நெடு மாறனாகிய பாண்டியன் நெல்வேலிச் செருக்களத்தில் வடபுல வேந்தர்களைப் பொருது வென்று வாகைமாலை சூடுபவன், தன் குடிக்குரிய வேப்பமாலையுடன் அதனைச் சூடிக்கொண்டான் என்பதனை,

**"பனைநெடுங்கை மதயானைப் பஞ்சவனார் படைக் குடைந்து**
**முனையழிந்த வடபுலத்து முதல் மன்னர் படைசரியப்**
**புனையுநறுந் தொடைவாகை பூழியர்வேம்புடன் புனைந்து"**

எனவரும் தொடரில் சேக்கிழாரடிகள் குறித்துள்ளார்.

புறத்திணை ஏழனுள் ஒன்றாகிய உழிஞைத்திணைக் குரிய துறைகளுள் 'அகத்தோன் வீழ்ந்த நொச்சி' என நொச்சியை ஒரு துறையாகக் கூறுவர் தொல்காப்பியர். பகைவரது சேனை தன்னகர்ப் புறத்தே சூழ்ந்து முற்றுகையிட்ட நிலையில் அகத்தேயுள்ள மன்னன் தனக்குரிய அரணைக் காத்து நிற்றலாகிய செயல் நொச்சி யெனப்படும் என்பதும், அத்தொழிலில் ஈடுபட்டுள்ள படைவீரர்கள் அதற்கு அடையாளமாக நொச்சிப்

பூவைச் சூடிக் கொள்வர் என்பதும் சங்க இலக்கியங்களால் அறியப்படும் போர்முறையாகும். "நொச்சியாவது காவல்; இதற்கு நொச்சி ஆண்டுச் சூடுதலுங் கொள்க. இக்கருத்தானே "நொச்சி வேலித் தித்தன் உறந்தை" (அகநா - 122) என்றார் சான்றோரும்" என நச்சினார்க்கினியர் தரும் விளக்கம் இங்கு நினைக்கத் தக்கதாகும். புகழ்ச்சோழருடைய பெருஞ்சேனைவீரர்கள் வஞ்சி சூடி அதிகர்கோன் நாட்டின் மேற்சென்று அதிகர்கோனது குறும்பொறையூரை முற்றுகையிட்டு அந்நகரத்தின் மதிலைக் கட்டழித்து அதனைக் காவல் செய்திருந்த நொச்சி வீரர்களை வீழ்த்திய திறத்தினை,

**"முற்றும்பொரு சேனைமுனைத் தலையில்**
**கற்றிண் புரிசைப் பதிகட் டழியப்**
**பற்றுந்துறை நொச்சி பரிந் துடையச்**
**சுற்றும் படை வீரர் துணித்தனரே"** **(பெரிய - புகழ்ச் - 28)**

எனவரும் பாடலில் சேக்கிழார் குறித்துள்ளார். ஆசிரியர் சேக்கிழார் பன்னிருபடல முடையார் கொள்கையின்படி எயில் காத்தலை நொச்சித்திணை எனத் தனியொரு திணையாகக் கொள்ளாமல் தொல்காப்பியர் கொள்கைப்படி உழிஞைத் திணையில் அடங்கிய ஒரு துறையாகவே கொண்டார் என்பது, 'பற்றுந்துறை நொச்சி' எனக் குறித்துள்ளமையால் இனிது விளங்கும்.

காதலனை இழந்த மனைவி தவம்புரிந்தொழுகுதலாகிய முறையினைக் 'காதலன் இழந்த தாபத நிலை' எனக் காஞ்சித் திணைத்துறைகளுள் ஒன்றாகக் கூறுவர் தொல்காப்பியர், மருள் நீக்கியாரது தமக்கையாராகிய திலகவதியார், தமக்குக் கணவராக மணம் பேசிய கலிப்பகையார் திருமணம் நிகழ்தற்கு முன்னே வேந்தற் குற்றுழி வடநாட்டின்மேற் போருக்குச் சென்றவர் போர்க்களத்தில் உயிர் கொடுத்துப் புகழ் கொண்டாராகத் தாமும் உயிர்விடக் கருதினார். 'தம்பியார் உளராகவேண்டும் 'என வைத்த பேரருளால் திலகவதியார் அம்பொன்மணி நூல் தாங்காது அனைத்துயிர்க்கும் அருள்தாங்கி மனைத்தவம் புரிந்தார் ஆதலால் அவர்கொண்ட தவநிலை தொல்காப்பியர் குறித்த தாபத நிலையின் பாற்படும் என்பது விளங்க அவருக்குத் 'தாபதியார்' (பெரிய- திருநாவுக் - 78) என்ற பெயரினைச் சேக்கிழார் படைத்து வழங்கியுள்ளமை கூர்ந்து நோக்கத்தகுவதாகும்.

எல்லாம்வல்ல கடவுளை நாயகனாகவும் உயிராகிய தம்மைத் தலைவியாகவும் கருதி இன்றியமையாத அன்புரிமையினால் கடவுளை விரும்பி வழிபடும் மரபு தொல்காப்பியனார் காலத்திலேயே தமிழகத்தில் நிலைபெற்று வழங்கியதென்பது,

**"காமப் பகுதி கடவுளும் வரையார்**
**ஏனோர் பாங்கினும் எம்மனார் புலவர்"** **(28)**

எனவரும் புறத்திணையியற் சூத்திரத்தால் உய்த்துணரப் படும். திருஞானசம்பந்தப் பிள்ளையார் உமையம்மையார் அளித்த ஞானப்பாலைப் பருகித்தமக்கு அருள்புரிந்த இறைவனைத் தம் தந்தையார்க்கு 'எம்மை இது செய்த பிரான் இவன்' எனக் காட்டும் நிலையிற் பாடியருளிய 'தோடுடைய செவியன்' என்னுந் திருப்பதிகம், பிரமபுரத்துறையும் பெருமானைக் காதலித்த தலைவியொருத்தி தன் உள்ளங்கவர் கள்வனாகிய அம்முதல்வனை நினைந்திரங்கும் நிலையில் அகப் பொருட்டுறை அமையப்பெற்ற தென்பதனையும், இத்திருப்பதிகத்தில் அமைந்துள்ள இனிய தமிழியல் வழக்காகிய அகப்பொருட் குறிப்பினைப் பிள்ளையாரின் தந்தையாகிய சிவபாத விருதயர் ஓர்ந்து உணர்ந்து கொண்டார் என்பதனையும்,

**"தாதையார்க்கு, எம்மையிது செய்தபிரான் இவனன்றே**
**எனவிசைத்தார்'**

எனவும்,

**'கூறு! மருந்தமிழின்பொருளான குறிப்போர்வார்'**

எனவும் வரும் தொடர்களில் ஆசிரியர் குறித்து உள்ளமை, திருமுறை நூல்களில் இறைவனைத் தலைவனாகக் கொண்டமைந்த பாடற் பொருள்களையறிந்து கொள்ளுதற்குரிய சிறந்த விளக்கமாதல் உணர்ந்து மகிழ்தற்குரியதாகும்.

வாகைத்திணையுள் ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் அறுதொழிலிற் சிறந்தோரது வென்றியை 'அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கம்' என்ற தொடரில் தொல்காப்பியர் குறிப்பிடுவர். இத்தொடரினை அடியொற்றி 'அறுதொழிலோர்' எனக் குறித்தார் திருவள்ளுவர். முன்னோர் குறித்த இக்கருத்தினையுளங்கொண்டு,

**"அறுதொழிலின் வைதிக மாநெறி"**
**(பெரிய - சம்பந்தர் - 1158)**

என வேத நெறியைச் சிறப்பிப்பார் சேக்கிழாரடிகள்.

முடியுடை வேந்தருங் குறுநில மன்னரும் முதலாயினோர் ஆடல் பாடல் முதலிய கலைத்திறங்களைக் கண்டுங் கேட்டும் மகிழும் இன்ப விளையாட்டினைப் 'பண்ணைத் தோன்றிய' (தொல் - மெய்ப் - 1) எனவரும் நூற்பாவிற் 'பண்ணை' என்ற சொல்லாற் குறித்தார் தொல்காப்பியர். அச்சொற் பொருளை விளக்கும் முறையில் அமைந்தது.

**'பாடலாடல் இன்னியங்கள் பயிறல் முதலாம் பண்ணையினில்**
**நீடு மினிய விநோதங்கள்"** **(பெரிய - கழறிற் - 154)**

எனவரும் பெரிய புராணத் தொடராகும்.

நிறைமொழி மாந்தராகிய பெரியோர், 'இவ்வாறு ஆகுக' எனத் தமது ஆணையாற் சொல்லப்பட்டு, அவ்வாற்றல் அனைத்தையும் தன்கண் பொதிந்து வைத்துள்ள செறிவுடைய நன்மொழியே மந்திரம் எனப்படும் என்பதனை,

**'நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த**
**மறைமொழி தானே மந்திரம் என்ப'** **(தொல் - செய் - 171)**

எனத் தொல்காப்பியரும், அவரது வாய்மொழியை அடியொற்றி,

**'நிறைமொழி மாந்தர் - பெருமை நிலத்து**
**மறைமொழி காட்டிவிடும்'** **(திருக்குறள் - 28)**

எனத் திருவள்ளுவரும் குறித்துள்ளார்கள். இறைவன் திருவருள் பெற்ற திருஞானசம்பந்தர், 'எந்தை நனிபள்ளியுள்க வினைகெடுதல் ஆணை நமதே' *(2-84-11)* எனவும், 'ஆனசொன் மாலையோதும் அடியார்கள் வானில் அரசாள்வர் ஆணை நமதே' *(2-85-11)* எனவும் தம்மேல் ஆணையிட்டும், 'செய்வினை வந்தெமைத் தீண்டப்பெறா திருநீலகண்டம்' என இறைவனது திருநீலகண்டத்தின் மேல் ஆணையிட்டும் அருளிக் கூறிய மொழிகள், ஆசிரியர் தொல்காப்பியனார்குறித்த மந்திரச் செய்யுள் வகையில் அடங்குவன என்பதனை,

**"ஆயகுறிப் பினில்ஆணை நிகழ அருளிச்செய்து**
**தூயபதிகத் திருக்கடைக் காப்புத் தொடுத்தணிய**
**மேயஅப் பொற்பதி வாழ்பவர்க்கேயன்றி மேவும் அந்நாள்**
**தீய பனிப்பிணி அந்நாடடங்கவும் தீர்ந்ததன்றே'**
**(பெரிய - சம்பந்தர் - 336)**

எனவரும் பாடலில் சேக்கிழார் புலப்படுத்தியுள்ளமை காணலாம்.

பல பிறப்புக்களிலும் நல்லறங்களை விரும்பி நிகழ்த்திய நற்றவத்தின் பயனாகச் செம்மை மனத்துடனே ஐம்புலவுணர் களைத் துறந்து மெய்யுணர்வு பெற்று இறைவன் திருவடி நீழலில் இன்புற்றுறைதலே வீடுபேறாகும் என்பதனை,

**'சேவடி படருஞ் செம்மல் உள்ளமொடு**
**நலம்புரி கொள்கைப் புலம்பிரிந்துறையும் செலவு'**
**(திருமுருகாற் - 62 - 64)**

என நக்கீரர் குறித்துள்ளார். திருநாளைப் போவார்க்குத் தில்லையம்பலவர் வீடுபேறருளிய திறத்தை,

**'வந்தணைந்த திருத்தொண்டர் தம்மைவினை மாசறுத்துச்**
**சுந்தரத் தாமரை புரையுந் துணையடிகள் தொழுதிருக்க**
**அந்தமிலா ஆனந்தப் பெருங்கூத்தர் அருள்புரிந்தார்'**
**(பெரிய - திருநாளைப் - 36)**

எனச் சேக்கிழாரடிகள் குறித்துள்ளமை இவ்வீடுபேற்றின் திறத்தினை விளக்குமுறையில் அமைந்திருத்தல் காணலாம்.

"திருவடியே வீடாயிருக்கும் என்றார்; அது 'தென்னன் பெருந்துறையான், காட்டாதனவெல்லாங் காட்டிச் சிவங்காட்டித் தாட்டாமறை காட்டித் தன் கருணைத் தேன் காட்டி' (திருவாசகம், 180) என்பதனானும் பிறரும் திருவடியைக் கூறுமாற்றானும் உணர்க' எனமேற் காட்டிய திருமுருகாற்றுப்படைத் தொடர்க்கு நச்சினார்க்கினியர் கூறும் விளக்கம் இங்கு நினைக்கத் தகுவதாகும்.

சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த பாண்டியர்களின் தலைநகராகிய மதுரையினை,

**'கண்ணார் கண்ணிக் கடுந்தேர்ச் செழியன்**
**தமிழ் நிலைபெற்ற தாங்கரு மரபின்**
**மகிழ்நனை மறுகின் மதுரை'** **(சிறுபாண் 65 - 67)**

என நல்லூர் நத்தத்தனார் சிறப்பித்துள்ளார், 'கண்ணிற்கு அழகு நிறைந்த முடிமாலையினையும் விரைந்து செல்லும் தேரினையும் உடைய பாண்டியனது தமிழ்மொழி வீற்றிருந்த பொறுத்தற்கரிய பெருமகிழ்ச்சியினைப் பொருந்திய தெருவினை யுடைய மதுரை' என்பது இத் தொடரின் பொருளாகும். தமிழ் நிலைபெற்றிருந் தலால் அந்நகரம் தாங்குதற்கு அரிய மிக்க மகிழ்ச்சியை யுடையதாயிற்று என்பதாம். இவ்வாறு பாண்டியர்க்குரிய மதுரை நகரத்தில் பாண்டியர் நிறுவிய தமிழ்ச்சங்கத்தில் ஆலவாயிறைவர், புலவர்களோடு ஒருங்கிருந்து தமிழ் ஆராய்ந்ததனால் தமிழ் சிறப்பாக நிலைபெற்றிருத்தலும் தமிழைப் பயில்வார் உள்ளத்தே ஈரமுடைமையாகிய அன்பு நிரம்பி மகிழ்ச்சி பெருகுதலும் ஆகிய தன்மையினை,

**'மொய்வைத்த வண்டின் செறிசூழல் முரன்றசந்தின்**
**மைவைத்த சோலை மலயந்தர வந்த மந்த**
**மெய்வைத்த காலும் தரும்; ஞாலமளந்த மேன்மைத்**
**தெய்வத்தமிழும் தரும்; செவ்வி மணஞ்செய் ஈரம்'**

**'சால்பாய மும்மைத் தமிழ் தங்கிய அங்கண்மூதூர்**
**நூல்பாயிடத்தும் உள; நோன்றலை மேதிபாயப்**
**பால்பாய் முலைத்தோய் மதுபங்கயம் பாய எங்குஞ்**
**சேல்பாயிடத்தும் உள; செய்யுண்மிக்கேறு சங்கம்'**

**'மும்மைப் புவனங்களின் மிக்கதன்றே அம்மூதூர்**
**மெய்ம்மைப் பொருளாந் தமிழ்நூலின் விளங்கு வாய்மைச்**
**செம்மைப் பொருளுந் தருவார் திருவால வாயில்**
**எம்மைப் பவந்தீர்ப்பவர் சங்கம் இருந்ததென்றால்'**
**(பெரிய - மூர்த்தி - 3, 5, 7)**

*என மூர்த்தி நாயனார் புராணத்தில் ஆசிரியர் விரித்துக் கூறியுள்ளார்.*

*'அழல் திகழ்ந்து இமைக்கும் அஞ்சுவரு நெடுவேல்' (94) எனவரும் சிறுபாணாற்றுப்படைத் தொடர்க்கு, "தன்னிடத் துறையும் கொற்றவையுடைய கோபத்தின் மிகுதியினாலே தான் விளங்கும் அச்சந் தோன்றும் நெடியவேல்" எனப் பொருளுரைப்பர் நச்சினார்க்கினியர். இங்ஙனம் ஆயுதங்களிற் கொற்றவையிருத்தலை "வென்றி மங்கை வேடர் வில்லின் மீது மேவு பாதம்முன்' சென்று மீளுமாறு போல்வ" (கண்ணப்பர்-69) என உவமையாக ஆசிரியர் குறித்து உள்ளமை ஒப்புநோக்கத் தகுவதாகும்'*

*கடியலூர் உருத்திரங் கண்ணனார் நெடிய குளத்திலே மலர்ந்த செந்தாமரை மலரைக் குறிக்குங்கால்,*

**'நீத்துடை நெடுங்கயந் தீப்பட மலர்ந்த**
**கடவுள் ஒண்பூ' (பெரும்பாண் - 289 - 290)**

*எனக் கூறியுள்ளார். 'நீந்துதற்குரிய பெருக்கினை உடைய நெடிய குளத்திலே நெருப்பின் தோற்றம் நீரிலேயுண்டாகப் பூத்த கடவுள் சூடுதற்குரிய ஒள்ளிய தாமரைப்பூ' என்பது மேற்காட்டிய தொடரின் பொருளாகும். இத்தொடர்ப் பொருளை நினைப்பிக்கும் முறையில் அமைந்தது,*

**'நிரைநெடுங்கயல் நீரிடை நெருப்பெழுந் தனைய**
**விரைநிகழ்ந்த செங்கமலமென் பொய்கை' (உருத்திர -5)**

*எனவரும் பெரிய புராணத் தொடராகும்.*

*'வருணன் மேய பெருமணலுகம்' எனப்படும் நெய்தல் நிலத்து வாழும் மக்கள் தம் சுற்றத்துடன் கூடிச் சுறாமீனின் கொம்பினை நட்டு நெய்தல் நிலத்தெய்வமாகிய வருணனுக்குப் பரவுக் கடன் கொடுத்தலை,*

**"சினைச் சுறவின் கோடு நட்டு**
**மனைச் சேர்த்திய வல்லணங்கினான்**
**மடற் றாழை மலர்மலைந்தும் (பட்டினப் - 86 -88)**

*எனவரும் தொடரிற் கடியலூர் உருத்திரங்கண்ணனார் குறித்துள்ளார். நெய்தனில மக்கள் செய்யும் இவ்வழி பாட்டினை.*

"சுறவமுள் மருப்பு அணங்கு அயர்வன கழிச்சூழல்" (7) எனத் திருக்குறிப்புத் தொண்டர் புராணத்தில் ஆசிரியர் குறித்துள்ளமை காணலாம்.

**'விழவறா வியலா வணத்து'** **(பட்டினப் - 158)**

எனவரும் பட்டினப்பாலைத் தொடரை அடியொற்றி யமைந்தது,

**"விழவறாதன விளங்கொளி மணிநெடு வீதி'**
**(பெரிய - ஏயர் - 3)**

எனவரும் பெரிய புராணத் தொடராகும்.

**'அமரர்ப் பேணியும் ஆவுதி யருத்தியும்**
**நல் லானொடு பகடோம்பியும்**
**நான் மறையோர் புகழ் பரப்பியும்'** **(பட்டினப் 200 - 2)**

எனவரும் பட்டினப்பாலைத் தொடரை நினைவுபடுத்தும் முறையிலமைந்தன, சண்டேசுர நாயனார் புராணத்தில்

**"யாகம் நிலவு சாலைதொறும் மறையோர் ஈந்த அவியுணவின்**
**பாகம் நுகரவரும் மாலும் அயனும்"** **(4)**

எனவும்,

**"தீம்பாலொழுகப் பொழுது தொறும் ஓமதேனுச்**
**செல்வனவும்'** **(5)**

எனவரும் தொடர்களாகும்.

மழை பெய்யும் பருவத்துப் பெய்யாது பொய்க்கு மாயின் மழைத்துளியை உணவாகக் கொள்ளும் வானம்பாடி என்னும் பறவை வாட்டமுற்று வருந்தும் என்பது,

**"தற்பாடிய தளியுணவின், புட்டேம்பபுயல் மாறி**
**(பட்டினப் - 3- 4)**

எனவரும் பட்டினப்பாலைத் தொடரால் அறியப்படும். 'தளியுணவின் புள் தேம்ப' எனவரும் இத்தொடரை,

**'உறையுணவு கொள்ளும் புள்தேம்ப'**
**(பெரிய - சம்பந்தர் - 387)**

எனச் சேக்கிழாரடிகள் எடுத்தாண்டு பொருள் விரித்துள்ளமை அறிந்து மகிழத்தக்கதாகும்.

**'ஊடியால் நலந்தேம்ப ஒடியெறிந்து'** **(கலி - 68)**

எனவரும் கலித்தொகைத் தொடரில் ஒடிய எறிந்து என்பது 'ஒடியெறிந்து' என விகாரமாயிற்று. இங்ஙனம் சிதைந்து வழங்கும் இச்சொற்றொடரை,

**'ஒடியெறிந்து வாரொழுக்கி'** **(கண்ணப்பர் - 75)**

எனக் கண்ணப்ப நாயனார் புராணத்தில் ஆசிரியர் எடுத்தாண்டுள்ளார்.

அகநானூற்றுக் கடவுள் வாழ்த்தில்,

**"கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த்**
**தாரன் மாலையன் மலைந்த கண்ணியன்"**

எனச் சிவபெருமானுக்கு ஓர் விசேடமாக இட்ட தாரும் அழகுக்கு இடும் மார்பின் மாலையும் போர்ப் பூவாக முடியிற் சூடும் கண்ணியும் குறிக்கப் பெற்றன. இத்தொடர்க்குப் பழைய குறிப்புரை யாசிரியர் "இனித் தார் சேர்ப்பதாகவும் மாலை கட்டுவதாகவும் கண்ணி தனித்துத் தொடுப்பதாகவும் இவ்வேறுபாடுகள் என உரைப்பாரும் உளர்" என வேறொரு விளக்கமும் தந்துள்ளார். இவ்வாறே புறநானூற்றுக் கடவுள் வாழ்த்திலும்,

**"கண்ணி கார்நறுங் கொன்றை காமர்**
**வண்ணமார்பிற் றாருங் கொன்றை"**

எனக் கண்ணி தார் என்பன குறிக்கப்பெற்றன. இவ்வாறு நால்வகைப் பூக்களால் தொடுக்கப்படும் மாலைகள் தொடுத்தல் வேறுபட்டாற் பலதிறப் படுதலை முருக நாயனார் புராணத்தில்,

**'கொண்டு வந்து தனியிடத்தி னிருந்து கோக்கும் கோவைகளும்**
**இண்டைச் சுருக்கும் தாமமுடன் இணைக்கும் வாசமாலைகளும்**
**தண்டில் கட்டும் கண்ணிகளும் தாளிற் பிணைக்கும் பிணையல்களும்**
**நுண்டா திரைக்குந் தொடையல்களும் சமைத்து**
**நுடங்கும் நூன்மார்பர்" (9)**

என வரும் செய்யுளில் ஆசிரியர் வகைப்படுத்தி விளக்கியுள்ளார்.

செவ்வானத்தையொத்து விளங்கும் சிவபெருமானது திருமேனியில் மார்பில் அணியப்பெற்று விளங்கும் பன்றிக் கொம்புக்கு அத்தகைய செவ்வானத்திலே விளங்கும் வெண்பிறை உவமையாம் என்பது 'அவ்வான் இலங்கு பிறையன்ன விலங்குவால் வையெயிற்று ... ... ... அந்தணன்' (அகம் - கடவுள் வாழ்த்து) எனவரும் பெருந்தேவனார் பாடலால் அறியப்படும், திண்ணனாரது வேட்டைக் கோலத்தைப் புனைந்து உரைக்கும் ஆசிரியர், திண்ணனார் மார்பில் அணியப் பெற்றுள்ள பன்றிக் கொம்பு வெள்ளிய பிறைச் சந்திரனையொத்து விளங்கிய தோற்றத்தினை,

'ஏனக்கோடு, துண்டப்பிறைபோல்வன தூங்கிட (பெரிய. கண்ணப்பர் - 59) எனக்குறித்துள்ளமை இங்கு ஒப்புநோக்கத் தகுவதாகும்.

அரசர்க்குப் படைவலி சிறந்திருப்பினும் அவரது வெற்றி அறத்தையே முதலாகவுடையது என்பதனை,

**'கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும்**
**நெடுங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சுடைய புகன்மறவரும் என**
**நான்குடன் மாண்டதாயினும் மாண்ட**
**அறநெறி முதற்றே அரசின் கொற்றம்'** **(புறம் 55)**

என்பர் மதுரை மருதன் இளநாகனார். அரசியல் ஆட்சிக்கு அறநெறியே அடிப்படையா யமைதல் வேண்டும் என்னும் இக்கருத்தினை யொட்டி அரசியல் நெறியாற் காக்கத்தக்கது அறநெறியே என்னும் உண்மையினை,

**'அரசியல் நெறியின் வந்த அறநெறி வழாமற் காத்து**
**வரைநெடுந் தோளால் வென்று மாற்றலர் முனைகள் மாற்றி**
**உரைதிறம் பாத நீதி ஓங்கு நீர்மையினில் மிக்கார்**
**திரைசெய் நீர்ச் சடையான் அன்பர் வேடமே சிந்தை செய்வார்'**
**(பெரிய - மெய்ப் -2)**

எனவரும் செய்யுளில் ஆசிரியர் அறிவுறுத்தியுள்ளார்.

ஒரு நாடு எல்லாவளங்களும் பெற்றிருப்பினும் குடிமக்கள்பால் அருளுடன் ஆட்சிபுரியத் தக்கனாகிய வேந்தனைப் பெறாதாயின் அவ்வளங்களாற் சிறிதும் பயனுடையதன்று என்பது,

**'ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே**
**வேந்தமை வில்லாதநாடு'** **(திருக்குறள் - 740)**

எனவரும் திருவள்ளுவர் வாய்மொழியாற் புலனாம். இவ்வுலகில் வாழ்வார்க்கு உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாதன நெல் முதலிய உணவுப் பொருள்களும் நீரும் ஆயினும் அவர்களுக்குப் பகை முதலியவற்றால் வரும் இடர் நீக்கி மன்னுயிர்களைத் தன்னுயிர் போற்பேணிக்காப்பவன் வேந்தனே ஆதலின் அவனே மலர் தலை உலகிற்கு உயிரெனச் சிறந்தவன் ஆவன். இதனை,

**'நெல்லு முயிரன்றே நீரும் உயிரன்றே**
**மன்னன் உயிர்தேத் மலர்தலையுலகம்**
**அதனால், யானுயி ரென்பதறிகை**
**வேன்மிகு தானை வேந்தர்க்குக் கடனே'** **(புறம் - 186)**

எனவரும் பாடலில் மோசிகீரனார் அறிவுறுத்தியுள்ளார். இப்பாடற் பொருளை,

**'மண்ணுக்குயி ராமெனு மன்னவனார்'** **(பெரிய - புகழ்ச் -33)**

என உடன்பாட்டு முகத்தானும்,

**'பன்முறை ஞாலமெல்லாம் பாலித்து ஞாலங்காப்பான்**
**தன்னெடுங் குடைக்கீழ்த் தத்தம் நெறிகளிற் சரித்துவாழும்**
**மன்னரையின்றி வைகு மண்ணுல கெண்ணுங்காலை**
**இன்னுயிரின்றி வைகும் யாக்கையை ஒக்கும் என்பார்'**
**(பெரிய - மூர்த்தி - 29)**

என எதிர்மறை முகத்தானும் ஆசிரியர் எடுத்தாண்டுள்ளமை மனங்கொளத்தக்கதாகும்.

'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு' எனத் தொல்காப்பியனாராற் குறிக்கப் பெற்ற தமிழ் வேந்தர் மூவருள்ளும் சோழரது அரசியல் முறை சிறந்து விளங்கிய திறத்தினை,

**'மண்டிணி கிடக்கைத் தண்டமிழ்க் கிழவர்**
**முரசு முழங்குதானை மூவருள்ளும்**
**அரசெனப்படுவது நினதே பெரும'** **(புறம் 35)**

என வெள்ளைக்குடி நாகனார் சிறப்பித்துள்ளார். தொன்று தொட்டு வரும் இச் சிறப்பினை நினைவு கூர்ந்து புகழ்ச் சோழரைப் போற்றும் முறையில் அமைநதது,

**"முரசங்கொள் கடற்றானை மூவேந்தர் தங்களின்முன்**
**பிரசங்கொள் நறுந்தெரியல் புகழ்ச்சோழர் பெருமையினைப்**
**பரசுங்குற் றேவலினால் அவர்பாதம் பணிந்தேத்தி'**
**(பெரிய - புகழ்ச் - 41)**

எனவரும் பெரிய புராணத் தொடராகும். பருந்துக்கு அஞ்சித் தன்னை அடைக்கலம் புகுந்த புறாவினது வருத்தத்தைப் போக்குதல் வேண்டி அதற்கு ஈடாகத் தன்னுடம்பிணையே அரிந்து கொடுத்துத் தானே துலாத்தட்டில் ஏறிய சிபி என்னும் சோழ மன்னனது சீர்த்தியினை,

**'அவிர்சடை முனிவரு மருளக் கொடுஞ்சிறைக்**
**கூருகிர்ப் பருந்தி னேறுகுறித் தொரீஇத்**
**தன்னகம் புக்க குறுநடைப் புறவின்**
**தபுதி யஞ்சிச் சீரைபுக்க**
**வரையா ஈகை உரவோன்'** **(புறம் - 43)**

எனவும்,

**'புறவுநிறைபுக்குப் பொன்னுலக மேத்தக்**
**குறைவி லுடம்பரிந்த கொற்றவன்'** **(சிலப் - வாழ்த்து - 17)**

எனவும் பண்டைப் புலவர் பெருமக்கள் பாராட்டியதனை உளங்கொண்ட சேக்கிழாரடிகள்,

**'துலையிற் புறவின் நிறையளித்த சோழர்'**
**(பெரிய - கோச்செ -)**

எனச் சோழர் குடியின் பெருமையினைக் குறித்துள்ளார்,

**'புகழெனின் உயிருங் கொடுக்குவர்' (புறம்-182)**

எனவரும் தொடர்ப் பொருளுக்கு இலக்கியமாக அமையும் நிலையில்,

**'மருவார்மேல் மன்னவற்கா மலையப்போங் கலிப்பகையார்**
**பொருவாரும் போர்க்களத்தில் உயிர்கொடுத்துப்**
**புகழ் கொண்டார்' (பெரிய - திருநா-30)**

எனக் கலிப்பகையார் செயலை ஆசிரியர் குறித்து உள்ளமை அறியத்தகுவதாம்.

தமிழ் நாட்டில் முடிபுனைந்து ஆட்சிபுரியும் பெருவேந்தர் களாகச் சேர சோழ பாண்டியர்களாகிய மூவேந்தர் குடியிற் பிறந்தவர்களையே தமிழ்மக்கள் தொன்றுதொட்டுப் போற்றி வந்துள்ளார்கள். இம் மரபு,

**'முடிகெழு வேந்தர் மூவர்க்கும் உரியது'**
**(சிலப்பதிகாரப் பதிகம்)**

எனவும்,

**'முடிமன்னர் மூவரும் காத்தோம்புந் தெய்வ**
**வடபேரிமயமலை' (சிலப் - வாழ்த்துக்-2)**

எனவும் வரும் தொடர்களால் அறியப்படும். சுந்தர மூர்த்தி சுவாமிகள் தாம் திருப்பரங்குன்றத் திறைவனைப் பாடிய பதிகம் சேர சோழ பாண்டியர்களாகிய, முடிவேந்தர் மூவரும் உடனிருந்த காலத்திற்பாடப் பெற்றது என்பதனை,

**'முடியால் உலகாண்ட மூவேந்தர் முன்னே' (7-2-11)**

என அப்பதிகத் திருக்கடைக்காப்பிற் குறிப்பிடுதலும் இம் மரபினை வற்புறுத்துதல் காணலாம். செம்பியனார் செழியர் சேரருடன் சுந்தரர் திருப்பூவணப் பெருமானை வழிபட்டதனைக் கூறும் ஆசிரியர்,

**'வென்றிமுடி வேந்தருடன் போந்தங்கண் மேவினார்'**
**(பெரிய-கழறிற்-99)**

என இம்மரபினை அடியொற்றிக் கூறியுள்ளார். அன்றியும் தமிழகத்தில் மூவேந்தரல்லாத ஏனைக் குறுநில மன்ன ராயினார்க்கு முடியணியும் சிறப்பில்லை யென்பதனை,

**'வென்றிவினையின் மீக்கூர வேந்தர் முனைகள் பலமுருக்கிச்**
**சென்று தும்பைத் துறை முடித்துச் செருவில் வாகைத்**
**திறங் கெழுமி**
**மன்றல்மாலை மிலைந்தவர்தம் வளநாடெல்லாங் கவர்ந்து முடி**
**ஒன்றும் ஒழிய அரசர் திருவெல்லாம் உடையராயினார்'**
**(பெரிய - கூற்றுவ-3)**

*எனக் கூற்றுவ நாயனார் புராணத்தில் தெளிவாகக் குறித்துள்ளமையும் இங்கு எண்ணத்தகுவதாகும்.*

*மகளிர்க்குப் பன்னிரண்டு வயது மணப்பருவம் என்பதனை,*

**'ஈகைவான் கொடியன்னாள் ஈராறாண்டகவையாள்'**
**(சிலப் - மங்கல)**

*எனவரும் தொடரில் இளங்கோவடிகளும்,*

**'அம்முறைப் பன்னிரண்டாண்டள வணைந்து'**
**(பெரிய - சம்பந்தர் - 1091)**

*எனச் சேக்கிழாரடிகளும் குறித்துள்ளமை காணலாம்.*

*மகளிரது கற்புக்கு வடமீனாகிய அருந்ததியை உவமையாகக் கூறுதல் தொன்று தொட்டுவரும் மரபாகும்.*

**'வடமீன்புரையங் கற்பின் மடமொழி' (புறம்-122)**

**'தீதிலா வடமீனின் திறம் இவள் திறம்' (சிலப்-மங்கல)**

**'சாலியொருமீன் தகையாளை' (சிலப்-மங்கல)**

*எனவரும் தொடர்கள் இம்மரபினை அறிவுறுத்துவன.*

**'வடநெடு வானமீனே அனையவர்' (பெரிய - அரிவாட் -13)**

*எனவரும் பெரிய புராணத் தொடரில் இம்மரபு எடுத்தாளப் பெற்றிருத்தல் காணலாம்.*

*கண்ணகியை மணந்து மகிழும் கோவலன் அவளது நலத்தினைப் பாராட்டிக் கூறும் முறையில் அமைந்தது,*

**"அடையார் முனையகத்து அமர்மேம் படுநர்க்குப்**
**படை வழங்குவ தோர் பண்புண்டாகலின்**
**உருவிலாளன் ஒருபெருங் கருப்புவில்**
**இருகரும் புருவமாக ஈக்க" (சிலப் - மனையறம் 42 - 45)**

*எனவரும் சிலப்பதிகாரத் தொடராகும். 'பகைவர் முனையிடத்தே தம்மை மேம்படுத்தும் தறுகண் வீரர்க்குப் படைக்கலம் முதலியன கொடுத்தல் அரசர்க்கு இயல்பாதலால், மன்மதன் போர் செய்தற்கு எடுத்த ஒப்பில்லாத கருப்புவில் ஒன்றையும் கரிய இரண்டு*

புருவங்களாகத் திருத்தித் தருவானாக' என்பது இதன் பொருளாகும். காமனுக்குக் காம நூலும் கரும்பும் ஆகிய இரண்டும் வில்லாயினும் (பூவாகிய) காமநூலினும் கரும்பு வலியதாதலின் முனிவராகிய முரட்பகையை அழித்தற்கு வலிய வில்லே வேண்டுதலின் 'ஒரு பெருங் கருப்பு' வில் என்றார். 'ஒரு பெருங் கருப்புவில் இருகரும் புருவமாக' என்றது, சேம வில்லையுங் கூட்டி; 'வானார்கமழ் மதுவுஞ் சாந்து மேந்தி மதுத்துளித்து வண்டுஞ் சுரும்பு மூசும். தேனார் பூங்கோதாய் நினக்குக் காமன் சிலையிரண்டுஞ் செவ்வனே கோலித்தந்தான், தானாரப்பண்ணித் தடறு நீக்கித்தண் குருதி தோய்த்துத் தகைமை சான்ற, ஊனார்ந்த ஒரிணை அம்புந்தந்தான் என்னை யுளனாக வேண்டினானே' (சீவக - 2065) என்றாராதலின்'' என்பது அடியார்க்கு நல்லார்தரும் விளக்கமாகும். திருமயிலையில் திருஞானசம்பந்தர் திருப்பாடலால் உருப்பெற்றெழுந்த பூம்பாவையின் புருவப் பொலிவினை விளக்குமிடத்து.

**"புருவமென் கொடிகள் பண்டு புரமெரித் தவர்தம் நெற்றி**
**ஒருவிழி எரியின் நீறாய் அருள்பெற உளனாங் காமன்**
**செருவெழுந் தனுவ தொன்றும் சேமவில் லொன்றும் ஆக**
**இருபெருஞ் சிலைகள் முன்கொண் டெழுந்தன போல ஏற்ப"**
**(பெரிய - சம்பந்தர் - 1097)**

எனவரும் பெரிய புராணச் செய்யுள் மேற்குறித்த சிலப்பதிகாரத் தொடர்ப் பொருளை அடியொற்றி அமைந்திருத்தல் உணரத் தகுவதாகும்.

சிலப்பதிகாரம் அரங்கேற்று காதையில்,

**"ஈரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வி" (சிலப். அரங் - 70)**

என இளங்கோவடிகள் பதினான்கு நரம்புடைய சகோடயாழினைக் குறிப்பிடுவர். 'பதினாற் கோவையாகிய சகோடயாழை' என அடியார்க்கு நல்லார் கூறுதலால் சகோடயாழில் பதினான்கு நரம்புகள் கட்டப் பெற்றிருந்தன என்பது தெளியப்படும். சகோடயாழ்த் தலைவராகிய திருநீலகண்ட யாழ்ப்பாணர், திருவாலவாய்த் திருக்கோயிலில் யாழிசைத்த முறையினை,

**"ஆலவா யமர்ந்தார் கோயில் வாயிலை யடைந்து நின்று**
**பாலை யீரேழு கோத்த பண்ணினிற் கருவி வீக்கிக்**
**கோலமாதரித்த பண்ணிற் கைபல முறையு மாராய்ந்**
**தேலவார் குழலாள் பாகர் பாணிகள் யாழி லிட்டார்"**
**(பெரிய - திருநீலகண்ட யாழ்ப் - 2)**

எனவரும் செய்யுளில் சேக்கிழார் குறித்துள்ளார்.

இச் செய்யுளில் 'பாலையீரேழு கோத்த பண்ணினிற்கருவி' என்றது இளங்கோவடிகள் குறித்த 'ஈரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வி' யாகிய சகோட யாழினையே என்பது இத்தொடர்களை ஒப்புநோக்குவார்க்கு இனிது புலனாகும்.

காதலரைப் பிரிந்தோர்க்கு வருத்தம் விளைக்கும் மாலைக்காலத்திற்குப் பேரரசர் இல்லாத நிலையிற் குடிகளைத் துன்புறுத்தும் குறுநில மன்னரை உவமையாகக் கூறும் நிலையில் அமைந்தது,

**'வலம்படுதானை மன்னர்இல்வழிப்**
**புலம்பட விறுத்த விருந்தின் மன்னரின்**
**... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...**
**மல்லன் மூதூர்மாலை வந்திறுத்தென'**
**(சிலப் - அந்திமாலை - 11 - 20)**

எனவரும் தொடராகும். பாண்டி நாட்டினைக் கைப்பற்றி இடர் விளைத்த வடுகக் கருநாடர் மன்னர் இறந்தொழிய, அன்றுமாலைப் பொழுது கழிந்த நிலையைச் சொல்லக் கருதிய ஆசிரியர்,

**"முழுதும் பழுதேபுரி மூர்க்கன் உலந்த போதின்**
**எழுதுங் கொடிபோல்பவர் உட்பட ஏங்கு சுற்றம்**
**அழுதும் புலர்வுற்றது மற்றவன் அன்னமாலைப்**
**பொழுதும் புலர்வுற்றது செங்கதிர் மீது போத"**
**(பெரிய - மூர்த்தி - 26)**

என அம்மன்னனுக்கு அந்திமாலையை உவமையாகக் கூறியுள்ளமை ஒப்பு நோக்கற் பாலதாகும்.

புலியைத் தன்னிடத்தே யுடைய கொடியை யுயர்த்த தேரையுடைய உரவோனாகிய சோழனது கொற்றத் துடனே மழைக்குக் கருப்பத்தைத் தோற்றுவிக்குப் யாகத் தீயினை வளர்க்கின்ற வேள்விச் சாலையிலே மறையோரால் உண்டாக்கப் பட்ட தேவர் உணவின் ஆவிகள் எங்கும் போர்த்தலால் அம்மாடங்கள் மேகந்தவழும் மலைபோலத் தோன்றும் பெருமை வாய்ந்தன சோழ நாட்டில் மங்கல மறையோர்கள் வாழும் ஊர்கள் என்பதனை,

**"உழைப்புலிக் கொடித்தேர் உரவோன் கொற்றமொடு**
**மழைக் கருவுயிர்க்கும் அழற்றிகழ் அட்டில்**
**மறையோர் ஆக்கிய ஆவுதிநறும்புகை**
**இறையுயர் மாடம் எங்கணும் போர்த்து**
**மஞ்சுசூழ் மலையின் மாணந் தோன்றும்**
**மங்கலமறையோர் இருக்கை" (சிலப்-நாடுகாண்-142-148)**

எனவருந் தொடரில் இளங்கோவடிகள் சிறப்பித் துரைக்கின்றார். இளங்கோவடிகள் வாய்மொழியை அடியொற்றித் தொண்டை நாட்டில் மறையவர் வாழும் செழும்பதிகளைச் சிறப்பிக்கும் முறையில் அமைந்தது,

**"தொல்லை நான்மறை முதற்பெருங் கலையொலி துவன்றி**
**இல்லறம் புரிந்தாகுதி வேள்வியில் எழுந்த**
**மல்குதண் புகை மழைதரு முகிற்குலம் பரப்பும்**
**செல்வ மோங்கிய திருமறையவர் செழும்பதிகள்"**
**(பெரிய-திருக்குறிப்பு-29)**

எனவரும் பெரிய புராணச் செய்யுளாகும்.

பாண்டியர்கள் தமிழ் வளர்ச்சி கருதி மூன்று முறை சங்கம் வைத்துத் தமிழாராய்ந்த பெருமையினைக்கருதி அவர்களால் ஆளப்படும் பாண்டிநாட்டினைத் 'தமிழ் நாடு' எனச் சிறப்பாக வழங்கும் வழக்கம் இளங்கோவடிகள் காலத்தில் நிலைபெற்றிருந்த தென்பது,

**'தென்றமிழ் நன்னாட்டுத் தீதுதீர் மதுரைக்கு**
**ஒன்றிய வுள்ளம் உடையேன் ஆகலிற்**
**போதுவல் யானும்' (சிலப்-நாடுகாண்-58-60)**

எனக் கவுந்தியடிகள் கூற்றில் வைத்து அடிகள் கூறுதலால் இனிது புலனாம். இப்பெயர் வழக்கினை,

**'பண்புடைய பாண்டிமா தேவியார் தம்பரிவும்**
**நண்புடைய குலச் சிறையார் பெருமையும் ஞானத்தலைவர்**
**எண்பெருக உரைத்தருள எல்லையில்சீர் வாகீசர்**
**மண்குலவும் தமிழ்நாடு காண்பதற்கு மனங்கொண்டார்'**
**(பெரிய-திருநாவுக்-400)**

எனவரும் பாடலில் சேக்கிழாரடிகள் எடுத்தாண்டு உள்ளமை காணலாம்.

புகார் நகரத்திலிருந்து மதுரைக்கு நடந்து செல்லும் கோவலன், கண்ணகி, கவுந்தியடிகள் என்போர், மருதநில மாகிய சோழ நாட்டினைக் கண்டு இன்புற்றவர்கள் பாண்டி நாட்டிற்குச் செல்லும் வழியில் பாலை நிலமாகிய காட்டினைக் கண்டு வருந்திய செய்தியை நாடுகாண்காதையை அடுத்துள்ள காடு காண்காதையில் இளங்கோவடிகள் விரித்துக்கூறியுள்ளார். இவ்வாறே திருமறைக்காடு என்னும் தலத்தினின்றும் புறப்பட்டுச் சோழ நாட்டுத் தலங்கள் பலவற்றை வணங்கிப் பாண்டி நாட்டின் தலைநகரமாகிய மதுரையை நோக்கிச் சென்றருளும் திருஞான சம்பந்தப் பிள்ளையார், நீர் நாடாகிய சோழ நாட்டு எல்லையைக்

கடந்து பாண்டிநாட்டெல்லையுட் புகுந்து, காட்டினையும் வேடுவர் வாழும் சுரத்தினையிம் கடந்து சென்ற செய்தியை,

**'நீர்நாடு கடந்தருளி நெடும்புறவிற் குறும்புதல்கள்**
**கார்நாடு முகைமுல்லைக் கடிநாறு நிலங்கடந்து**
**போர்நாடுஞ் சிலைமறவர் புன்புலவைப் பிடைபோகிச்**
**சீர்நாடுந் தென்பாண்டி நன்னாடு சென்றணைவார்'**
**(பெரிய-சம்பந்தர்-628)**

எனவரும் பாடலில் சேக்கிழாரடிகள் குறித்துள்ளார்.

கோவலன் கண்ணகி கவுந்தியடிகள் மூவரும் ஐயை கோட்டத்தில் தங்கியிருந்த பொழுது நிகழ்ந்த கொற்றவை விழாவில் வேட்டுவ மகளாகிய சாலினி தெய்வம் ஏற்ப்பெற்று, கணவனோடிருந்த கண்ணகியைச் சுட்டி,

**'இவளோ, கொங்கச் செல்வி குடமலையாட்டி**
**தென்றமிழ்ப் பாவை செய்த தவக்கொழுந்து**
**ஒருமா மணியாய் உலகிற்கோங்கிய**
**திருமாமணி' (சிலப் - வேட்டுவவரி - 47 -50)**

எனப் புகழ்ந்துரைப்பதாகக் கற்புடைத் தெய்வமாகிய கண்ணகிதேவியை இளங்கோவடிகள் பாராட்டிப் போற்றி யுள்ளார். 'தென்றமிழ்ப் பாவை செய்த தவக் கொழுந்து' எனக் கண்ணகியாரைக் குறித்தமைந்த இப்பாராட்டு வண்டமிழ் செய்தவம் நிரம்ப வந்து தோன்றித் திசையனைத்தின் பெருமை யெல்லாம் தென்றிசையேவென்றேற அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல் வழக்கின் துறைவெல்லத் தென்றமிழ் நன்னாட்டில் தெய்வநெறிச் சிவம் பெருக்கிய திருஞான சம்பந்தப் பிள்ளையார்க்கு முற்றிலும் பொருத்த முடையதெனக் கொண்ட சேக்கிழாரடிகள்,

**'தென்தமிழ் நாடுசெய்த செய்தவக்கொழுந்து போல்வார்'**
**(பெரிய - சம்பந்தர் - 750)**

என ஆளுடைய பிள்ளையாரைப் பாராட்டிப் போற்றியுள்ளார்.

மதுரையிலிருந்து வீசும் தென்றலின் சிறப்பினை,

**'மலயத் தோங்கி மதுரையின் வளர்ந்து**
**புலவர் நாவிற் பொருந்திய தென்றல்'**
**(சிலப் - புறஞ்சேரி - 25,26)**

எனத் தமிழின் தோற்ற வளர்ச்சியுடன் இளங்கோவடிகள் இயைத் துரைத்தமையுணர்ந்த சேக்கிழாரடிகள் அத்தென்றலைத் 'தமிழ் மாருதம்' (பெரிய -தடுத்தாட் - 167) எனத் தமிழுடன் இயைத்துப் போற்றுகின்றார். ஞானசம்பந்தப்பிளையார் மதுரைக்கு

எழுந்தருளிய போது தமிழ்த் தென்றல் பிள்ளையாரை எதிர் கொண்டு வரவேற்றதிறத்தினை,

**'செந்தமிழ் மாருதம் எதிர்கொண்டு**
**எம்மருங்குஞ் சேவிப்ப' (பெரிய - சம்பந்தர் - 649)**

எனவரும் தொடரிற் சேக்கிழாரடிகள் புனைந்துரைத்துள்ளார்.

சிலப்பதிகாரம் வேட்டுவ வரியிற் கூறப்படும் சாலினியின் தெய்வக்கோலமும் கண்ணப்ப நாயனார் புராணத்திற் கூறப்படும் தெய்வநிகழ் குறமுதியாள் கோலமும் ஒப்பு நோக்கியுணரத் தக்கனவாகும்.

பரிசனங்கள் சூழ மலைவளங் காணச் செல்லும் செங்குட்டுவனுக்கு,

**'வளமலர்ப் பூம்பொழில் வானவர் மகளிரொடு**
**விளையாட்டு விரும்பிய விறல்வேல் வானவன்**
**- - - - -**
**பெருமால் களிற்றுப் பெயர்வோன் போன்று'**
**(சிலப் - காட்சி - 10, 16)**

என இந்திரனை உவமையாகக் கூறுவர் இளங்கோவடிகள். உறையூரில் அரசு வீற்றிருக்கும் புகழ்ச் சோழர், தங்கள் குலமரபின் முதற்றனியூராங் கருவூரில், மங்கல நாளில் அரசுரிமைச் சுற்றமுடன் வந்தணைந்த உலாத் தோற்றத்தினுக்கு,

**'வானவர்சூழ்**
**இந்திரன் வந்து அமரர்பதி எய்துவான்என எய்தி'**
**(பெரிய - புகழ்ச் - 12)**

என இந்திரனது உலாத் தோற்றத்தைச் சேக்கிழார் உவமை கூறியுள்ளமை இங்கு ஒப்பு நோக்கத் தகுவதாகும்.

வேந்தன் பகைவர் நாட்டின்மேற் படையெடுத்துச் செல்லுதலை வஞ்சித்திணையெனவும், அங்ஙனம் தன்னாட்டின் மேற் படையொடு வந்தவனை நாட்டுக்குரியவன் படையொடு எதிர்சென்று தடுத்துப் பொருதலைக் காஞ்சித் திணையெனவும் கூறுவர். இவற்றுக்கு அடையாளமாக முறையே வஞ்சிப் பூவையும் காஞ்சிப் பூவையும் சூடிக்கொள்ளுதல் புறத்திணை மரபாகும். இங்ஙனம் வஞ்சியும் காஞ்சியும் தம்முள் மாறுபட்ட இருவேறு போர்த்தொழில்களாதலை,

**'தென்றிசை யென்றன் வஞ்சியொடு வடதிசை**
**நின்றெதி ரூன்றிய நீள்பெருங் காஞ்சியும்'**
**(சிலப - காட்சி - 135, 136)**

எனச் செங்குட்டுவன் கூற்றில் வைத்து இளங்கோவடிகள் குறிப்பிடுவர். இக்குறிப்பினை அடியொற்றி அமைந்தது,

**'வளவனார் பெருஞ்சேனை வஞ்சிமலர் மிலைந்தேற**
**அளவிலரணக் குறும்பின் அதிகர்கோன் அடற்படையும்**
**உளநிறை வெஞ்சினந்திருகி உயர்காஞ்சி மிலைந்தேறக்**
**கிளர்கடல்கள் இரண்டென்ன இருபடையும் கிடைத்தனவால்,**
**(பெரிய - புகழ்ச் - 19)**

*எனவரும் பெரிய புராணச் செய்யுளாகும்.*

*மலைவளங் காணச் சென்ற செங்குட்டுவனைக் காணவந்த மலைவாணர்கள்,*

**'யானைவெண் கோடும் அகிலின் குப்பையும்**
**மான்மயிர்க் கவரியும் மதுவின் குடங்களும்**
**சந்தனக் குறையுஞ் சிந்துரக் கட்டியும்'**
- - - -
**'கூவை நூறுங் கொழுங்கொடிக்க வலையும்**
**தெங்கின் பழனுந் தேமாங் கனியும்**
**பைங்கொடிப் படலையும் பலவின் பழங்களும்**
**பீலி மஞ்ஞையும் நாவியின் பிள்ளையும்'**
**(சிலப் - காட்சி 37 - 53)**

*முதலியவற்றைக் கையுறைப் பொருள்களாகக் கொண்டு சென்றதனை இளங்கோவடிகள் குறித்துள்ளமையும், திண்ணனாரது வில் விழாக்காண விரும்பிய வேடர்கள் பொருள் பலகொண்டு வந்த செய்தியை,*

**'மலைபடு மணியும்பொன்னும் தரளமும் வரியின்தோலும்**
**கொலைபுரிகளிற்றுக்கோடும் பீலியின் குவையும் தேனும்**
**தொலைவில்பல் நறவும் ஊனும் பலங்களுங் கிழங்குந்துன்றச்**
**சிலைபயில் வேடர்கொண்டு திசைதொறும் நெருங்கவந்தார்'**
**(பெரிய - கண்ணப்பர் - 30)**

*எனவரும் பாடலிற் சேக்கிழாரடிகள் குறித்துள்ளமையும் ஒப்பு நோக்கத் தக்கனவாம்.*

*செங்குட்டுவன் வடநாட்டின் மேற் படையொடு செல்லுங்கால், அவனுடைய பெருஞ்சேனைகள் மலையும் நிலமும் ஒன்றாகும்படி சென்ற தன்மையினை,*

**'தண்டலைத் தலைவரும் தலைத்தார்ச் சேனையும்**
**வெண்டலைப் புணரியின் விளிம்புசூழ் போத**
**மலைமுதுகு நெளிய நிலைநா டதர்பட**
**உலக மன்னவன் ஒருங்குடன் சென்று'**
**(சிலப் - கால்கோள் - 80-83)**

என இளங்கோவடிகள் குறிப்பிடுவர். இவ்வாறே சேரமான் பெருமாளாகிய வேந்தர் பெருமான் தில்லையம்பலத்தினைப் போற்ற விரும்பி வஞ்சியினின்றும் புறப்பட்டுச் செல்லுங்கால் அவரது பெருஞ் சேனை சென்ற தன்மையினை,

**'மிசையும் அவலும் ஒன்றாக**
**நிரவிப் பரந்த பெருஞ்சேனை நேமிநெளியச்**
**சென்ற னவால்' (பெரிய - கழறிற் -49)**

எனச் சேக்கிழாரடிகள் குறித்துள்ளமையும் காண்க.

செங்குட்டுவன் கண்ணகியார் படிமம் அமைத்தற்குக் கற்கொணர வேண்டி வடநாட்டின்மேற் படையொடு சென்று பகைவரை வென்று பத்தினிக்கல்லொடு மீளா நின்றானாக, அவனைப் பிரிந்த கோப்பெருந்தேவி குறிஞ்சி முதலாக நாலு நிலத்துப் பாணியும் ஓர்த்து உறங்காதேயிருந்த நிலையில், செங்குட்டுவன் வஞ்சியுட் புகுந்தனன் என நீர்ப்படை காதை கூறுகின்றது. இதனால் சேர நாட்டின் தலைநகராகிய வஞ்சி நகரம் குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் ஆகிய நானிலப் பகுதிகளும் அடுத்தடுத்து அமையப்பெற்றது என்பது நன்கு புலனாகும். இவ்வாறு நானில வளங்களும் அடுத்தடுத்து அமையப் பெற்ற மலை நாட்டின் இயற்கையமைப்பினை,

**'திரைசெய் கடலின் பெருவளனும் திருந்து நிலனின்**
**செழுவளனும்**
**வரையின் வளனும் உடன்பெருகி மல்குநாடு மலைநாடு'**
**(பெரிய - விறன் - 1)**

எனவருந் தொடரிற் சேக்கிழாரடிகள் நன்கு விளக்கியுள்ளமை அறிந்து மகிழத்தகுவதாகும்.

இனி, இறையனார் களவியல் என்னும் அகப்பொருள் நூல் ஆலவாயிற் பெருமானடிகளால் அருளிச் செய்யப் பெற்ற தென்பது களவியல் உரை முகத்து விரித்துரைக்கப் பெற்றது. இச்செய்தியினை,

**'திருவால வாயமர்ந்த செழுஞ்சுடரைச் செழும்பொருள்நூல்**
**தருவானை' (பெரிய - திருநாவுக் - 406)**

எனவும்,

**'மெய்ம்மைப் பொருளாந் தமிழ்நூலின் விளங்குவாய்மைச்**
**செம்மைப் பொருளுந் தருவார் திருவாலவாயில்**
**எம்மைப் பவந்தீர்ப்பவர் சங்கம் இருந்தது' (பெரிய - மூர்த்தி - 7)**

எனவும்,

**'நூலின்கட் பொருள்பாடி நூலறிவார்க் கீந்தானை'**
**(பெரிய - சம்பந்தர் - 883)**

எனவும் வருந்தொடர்களில் ஆசிரியர் குறித்துள்ளமை காணலாம்.

"தலைச்சங்கம் இடைச்சங்கம் கடைச்சங்கம் என மூன்று சங்கம் இரீஇயினார் பாண்டியர். அவருள் தலைச்சங்கம் இருந்தார் அகத்தியனாரும் திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும், குன்றெறிந்த முருக வேளும் முரஞ்சியூர் முடிநாகராயரும் நிதியின் கிழவனும் என இத்தொடக்கத்தார் ஐஞ்ஞூற்று நாற்பத்தொன் பதின்மர் என்ப" எனவரும் களவியலுரையில் திரிபுர மெரித்த விரிசடைக் கடவுள் தலைச்சங்கம் புலவராகக் குறிக்கப் பெற்றிருத்தலை யுளங் கொண்ட சேக்கிழார் நாயனார், ஆலவாயிறைவரைத்,

**'தலைச் சங்கப் புலவனார்'** **(பெரிய - சம்பந்தர் - 667)**

எனக் குறித்துப் போற்றியுள்ளார்.

கூடலம்பதியில் நிலைபெற்ற கடைச் சங்கத்தில் திருவால வாயுடையார் ஆகிய இறையனாரும் சங்கப் புலவருள் ஒருவராக எழுந்தருளித் தமிழாராய்ந்தார் என்பது,

**'சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்துமென் சிந்தையுள்ளும்**
**உறைவான் உயர்மதிற்கூடலின் ஆய்ந்தஒண் தீந்தமிழின்துறை**
**(திருக்கோவை)**

எனவரும் மணிவாசகர் வாய்மொழியால் அறியப்படும் இச்செய்தியினை.

**'சென்றணைந்து மதுரையினிற் றிருந்தியநூற் சங்கத்துள்**
**அன்றிருந்து தமிழாராய்ந்தருளிய அங்கணர்'**
**(பெரிய - திருநாவுக் - 403)**

எனச் சேக்கிழாரடிகள் குறித்துப் போற்றி உள்ளமை இங்கு நினைத்தற்குரியதாகும்,

உடும்பு உடல் சிதையப் பறித்து இழுத்த நிலையிலும் தான்வாழும் இடத்தைவிட்டுப் பெயராது உறுதியாகப் பற்றிக்கொள்ளும் தன்மையதாகும். குடும்ப வாழ்க்கையினையே விடாது பற்றிக் கிடக்கும் மக்களுக்கு அளையை விட்டுப்போகாத உடும்பினை உவமையாக எடுத்துரைப்பர் திருத்தக்கதேவர்,

**'தணக்கிறப் பறித்த போதும் தானளை விடுத்தல் செல்லா**
**நிணப்புடை யுடும்ப னாரை யாதினா னீக்க லாகும்'**
**(சீவக - -287)**

என்பது திருத்தக்கதேவர் வாக்காகும். திண்ணனார் திருக்காளத்தி மலையில் குடு.மித்தேவரைக் கண்டு அவரை விட்டுப் பிரியாது நின்ற நிலையினை நாணன் காடனுக்கு எடுத்துரைக்குமிடத்து,

**'அங்கிவன் மலையில்தேவர் தம்மைக் கண்டணைத்துக் கொண்டு**
**வங்கினைப் பற்றிப் போதா வல்லுடும்பென்ன நீங்கான்'**
**(பெரிய - கண்ணப்பர் - 116)**

என இவ்வுவமையை எடுத்தாண்டுள்ளார். வேடுவன் உவமை கூறுங்கால் வாழ்க்கையில் தனக்கு நன்றாகத் தெரிந்த பொருளை உவமை கூறியதாகவுரைத்த ஆசிரியரது புலமைத் திறம் பாராட்டத் தகுவதாகும்.

சரவணப் பொய்கையிற் பதுமப்பாயலிற் பிறந்தோனாகிய முருகப்பெருமானை,

**'பூவுனுட் பிறந்த தோன்றற் புண்ணியன்' (சீவக - 316)**

எனத் திருத்தக்கதேவர் குறிப்பிடுவர்.

**'தாமரை மிசைத் தனிமுதற்குழவி' (பெரிய - சம்பந்தர் 41)**

எனவரும் பெரிய புராணத்தொடர் மேற்குறித்த சீவக சிந்தாமணித் தொடரை அடியொற்றி யமைந்திருத்தல் காணலாம்,

பருந்தும் அதன் நிழலும்போல மிடற்றுப் பாடலும் யாழிசையும் பொருந்தியிருத்தல் வேண்டும் என்பதனை,

**'பருந்தும் நிழலும்போற் பாட்டும் எழாலும்**
**திருந்துதார்ச் சீவகற்கே சேர்ந்தன' (சீவக - 730)**

எனவரும் தொடரில் திருத்தக்கதேவர் குறித்துள்ளார்.

'பருந்து பறக்குமிடத்து முறையே உயர்ந்து அந்நிலத்தின்கண் நின்று ஆய்ந்து பின்னும் அம்முறையே உயர்கின்றாற்போலப் பாடவேண்டுதலின் பாட்டிசைக்குப் பருந்தும், அதனுடன் பிரிவின்றி யிசைந்தயாழிசைக்குப் பருந்தின் நிழலும் உவமையாயின. திருநீலகண்டப் பாணர் மதங்க சூளாமணி யாருடன் பாடி யாழ் வாசித்த பொழுது அவ்விருவரது மிடற்றுப் பாடலும் யாழிசையும் ஒன்றியிசைந்த மாட்சியினை,

**'யாழிலெழும் ஓசையுடன் இருவர் மிடற்றிசை யொன்றி**
**வாழிதிருத்தோணியுளார் மருங்கணையும் மாட்சியினைத்**
**தாழுமிருசிறைப் பறவை படிந்ததனி விசும்பிடைநின்**
**றேழிசைநூற் கந்தருவர் விஞ்சையரும் எடுத்திசைத்தார்'**
**(பெரிய - சம்பந்தர் - 136)**

*எனவரும் பாடலிற் சேக்கிழாரடிகள் விளக்கியுள்ளமை ஒப்புநோக்குதற் குரியதாகும்.*

*சச்சந்தன் மனைவியாகிய விசயை என்பாள் தான் கண்ட தீக்கனாவினைத் தன் கணவனுக்கு எடுத்துரைப்பவள், தான் கண்ட கனாக்களுள் ஒன்றாக அருக தேவர் அமர்ந்தருளும் அசோக மரம் முறிந்து வீழ்ந்ததனைக் கூறுகின்றாள்.*

**'தொத்தணி பிண்டி தொலைந்தற வீழ்ந்தது'** (சீவக-223)

*என அவள் கூறியது போலவே, மதுரையில் வாழும் சமண முனிவர்கள் தாம் கண்ட தீக்கனாக்களைக் கூறுங்கால்,*

**'சீர்மலி அசோகு தன்கீழ் இருந்தநந்தேவர் மேலே**
**வேரொடு சாய்ந்துவீழக் கண்டனம்'**

**(பெரிய - சம்பந்த - 637)**

*எனக் கூறியதாக ஆசிரியர் குறித்துள்ளமை அறியத் தக்கதாகும்.*

*முதலாம் இராசாதி ராசன் சளுக்கியர் மேற்படை யெடுத்துச் சென்று கம்பிலி நகரத்திலிருந்த சாளுக்கியர் மாளிகையைத் தகர்த்து அங்கு வெற்றித் தூண்நிறுவிய செய்தியினை,* * (* S.I. I., V, No. 978; Vol. VIII, No, 199.)

**'கம்பிலிச் சயத்தம்பம் நட்டதும்' (இராசபாரம்பரியம்-பா. 26)**

*எனக் கலிங்கத்துப் பரணியாசிரியர் பாராட்டியுள்ளார். இங்ஙனம் சோழ மன்னர்கள் திசையெங்கும் தம் ஆணை நிலவச் சயத்தம்பம் நாட்டிய சிறப்பினை,*

**'கோல் ஒன்றில் எண்திசை யளவும் ஆணைச்**
**சயத்தம்பம் நாட்டிய வளவர்'** (பெரிய-சத்தி-1)

*எனச் சேக்கிழார் உளமுவந்து பாராட்டியுள்ளார்.*

இதுகாறும் எடுத்துக் காட்டிய குறிப்புக்களால் அருண்மொழித் தேவராகிய சேக்கிழார் நாயனார் பண்டைத் தமிழிலக்கண நூலாகிய தொல்காப்பியம் முதலாகத் தம் காலத்திற்குச் சிறிது முன் தோன்றிய நூல்கள் ஈறாகவுள்ள சிறந்த தமிழ் நூல்களில் நிரம்பிய தேர்ச்சியுடையார் என்பதும், தெய்வப் புலமை வாய்ந்த அப்பெருந்தகையார் தாம் கற்றுணர்ந்த நூல் நயங்களை வரலாற்றுச் செய்திகளுடன் இயைத்து நோக்கித் திருத்தொண்டர் புராணம் என்னும் இவ்வரலாற்றுக் காப்பியத்தை இயற்றியுள்ளார் என்பதும் நன்கு புலனாதல் காணலாம்.



# திருத்தொண்டர் புராணச் சிறப்பு

திருத்தொண்டர் புராணமாகிய இக்காப்பியம், தமிழ் நாடு, தமிழ்மொழி, தமிழ் மக்கள் சிறப்பாக மேற்கொண்டொழுகிய சைவ சமயம் ஆகியவற்றின் தொன்மைச் சிறப்பினையும், தமிழகத்திற் கி. பி. இரண்டாம் நூற்றாண்டு முதல் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு முடியவுள்ள காலப் பகுதியில் நிகழ்ந்த அரசியலாட்சி முறை, மக்களது தெய்வங் கொள்கை யொடு தொடர்புடையனவாய் நிகழ்ந்த சமுதாய வாழ்க்கை நிகழ்ச்சிகள், எல்லோரும் இன்புற்றிருத்தல் வேண்டும் என்னும் உயர்ந்த குறிக்கோளுடையராய் நாடும், மொழியும் சமயமும் வளம்பெறத் தொண்டாற்றி வாழ்ந்த திருவருட் செல்வர்களின் வாழ்க்கை நடைமுறைகள் ஆகிய வரலாற்றுண்மைகளையும் தெளிவாக அறிவுறுத்தும் முறையில் அமைந்த வரலாற்றுக் காப்பியம் என்பது முன்னர் விளக்கப்பெற்றது. சைவசமயச் சான்றோர்களாற் பன்னிரு திருமுறைகள் எனப்போற்றப் பெறும் அருள் நூல்களிற் பன்னிரண்டாந் திருமுறையாக அமைந்த இந்நூல், இதற்கு முன் தோன்றிய ஏனைய பதினொரு திருமுறைகளின் சொற்பொருள் அமைப்பினை அடியொற்றிய தாய், அத்திரு முறைகளின் பொருள் நலங்களை விரித்துரைக்குந் தனிச் சிறப்புடையதாகத் திகழ்கின்றது.

தில்லையம்பலவர் திருவருளால் 'உலகெலாம்' எனத் தோன்றிய அருள் மொழியினை முதலாகக் கொண்டு,

**"உலகெலா முணர்ந் தோதற் கரியவன்**
**நிலவு லாவிய நீர்மலி வேணியன்**
**அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்**
**மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்"**

என அருள்மொழித் தேவராகிய ஆசிரியர் இந்நூலைத் தொடங்கியுள்ளார் என்பது வரலாறு. 'ஆதிபகவன் முதற்றே உலகு' எனத் திருவள்ளுவரும், 'உலகம் உவப்ப' என நக்கீரரும் உலகம் என்பதனை முதலாகக் கொண்டு தம் நூலைத் தொடங்கியுள்ளமை இங்கு ஒப்பு நோக்கத் தகுவதாகும். "உயிர்கள் எல்லாவற்றாலும் மனத்தால் உணர்தற்கும் வாய்மொழிகளால் ஓதுதற்கும் அரியவனும், பிறைச்சந்திரன் உலவுதற்கு இடமாய்க் கங்கை நீர் நிறைந்த சடையுடன் பொருந்திய திருமேனியை யுடையவனும் அளவில்லாத பேரொளிப் பிழம்பாகத் திகழ்பவனும், ஞானமயமான தில்லைச் சிற்றம்பலத்திலே ஆடல்

புரிந்தருள்பவனும் ஆகிய இறைவனுடைய செந்தாமரை மலர்போலும் சிலம் பணிந்த திருவடிகளை வாழ்த்தி வணங்குவோம்' என்பது இத்திருப்பாடலின் பொருளாகும். இச்செய்யுள், தெய்வ வணக்கமும் செயப்படு பொருளும் எய்தவுரைக்கும் தற்சிறப்புப் பாயிரமாய் இந்நூலின் மங்கல வாழ்த்தாக அமைந்துளது. இதன்கண் 'உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன், நிலவு உலாவிய நீர்மலி வேணியன், அலகு இல்சோதியன் அம்பலத்து ஆடுவான்' எனப் பொருளியல்பு உரைத்தலும், 'மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்' என வாழ்த்தும் வணக்கமும் அமைந்திருத்தல் காணலாம். இங்கு உலகு என்றது உயிர்களை, உணர்தல் - மனத்தின் தொழில்; அஃது உயிரறிவாகிய பசுஞானத்தைக் குறித்தது. ஓதுதல் - வாக்கின் தொழில்; அது நூலறிவாகிய பாச ஞானத்தைக் குறித்தது. பசு ஞானத்தாலும் பாச ஞானத்தாலும் பார்த்தற்கரியவன் பரம்பரனாகிய இறைவன் என்பார். 'உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்' என்றார். இதனால் இறைவனது உண்மையியல்பு (சொரூப இலக்கணம்) உணர்த்தப்பட்டது.

**'அரியானை ...யார்க்கும் தெரியாத தத்துவனை' (6 - 1 - 1)**

எனவும்,

**'காண்டற்கரிய கடவுள் கண்டாய்'**

எனவும்,

**'இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்**
**இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே'**

எனவும்,

**'அரிய காட்சிய ராய்த்தம தங்கைசேர்**
**எரியர் ஏறுகந் தேறுவர் கண்டமும்**
**கரியர் காடுறை வாழ்க்கைய ராயினும்**
**பெரியர் ஆரறி வாரவர் பெற்றியே' (3-54-2)**

எனவும், வரும் திருப்பதிகப் பொருளை அறிவுறுத்தும் முறையில் அமைந்தது, 'உலகெலாம் உணர்ந்தோதற்கரியவன்' என்ற தொடராகும். இங்ஙனம் மனத்தால் உணர்தற்கும் வாக்கால் ஓதுதற்கும் அரியனாய் மாற்ற மனங் கடந்து நிற்கும் அம்முதல்வன் தன்னடியார்க்கு எளிவந்து அருள்புரியுங்கால் உருவத் திருமேனி தாங்கி எழுந்தருளுவன் என்பார், 'நிலவுலாவிய நீர்மலி வேணியன்' என்றார். அருமையில் எளிய அழகனாகிய அவன் எவ்வுயிர்க்கும் அருளுடையராய் வாழும் அறவோர் சிந்தையினையே கோயிலாகக் கொண்டு எல்லையற்ற சோதிப்பொருளாய் எழுந்தருளியுள்ளான் என்பார், 'அலகில்

சோதியன்' என்றார். 'நினைப்பவர் மனங் கோயிலாக் கொண்டவன்' எனவும் 'அந்தணர் தஞ் சிந்தையானை' எனவும், சிந்தைதனை மயக்கந் தீர்க்கும் ஏரொளியை' எனவும் 'தூண்டு சுடரனைய சோதி கண்டாய்' எனவும் வரும் அப்பர் அருள்மொழிகளும்,

**'ஏதுக்களாலும் எடுத்தமொழியாலும் மிக்குச்**
**சோதிக்கவேண்டா சுடர்விட்டுளன் எங்கள்சோதி' (3-54-5)**

எனவரும் ஆளுடையபிள்ளையார் அருளுரையும்,

**"ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்சோதி"**

எனவரும் திருவெம்பாவைத் தொடரும் இங்கு நினைக்கத் தக்கனவாகும். 'அரியவன்' என்றதனால் அருவமும், 'வேணியன் ... ... .... அம்பலத்து ஆடுவான்' என்றதனால் உருவமும், 'அலகில் சோதியன்' என்றதனால் அருவுருவமும் என மூவகைத் திருமேனிகளையும் ஒருங்குடையான் இறைவன் எனப் புலப்படுத்தியவாறு.

"அம்பலத்தாடும் துரிய அதிகார சிவனான முழு முதல்வன், உலகெலாம் உணர்ந்தோதற்கரிய சொரூபசிவமாயும், அலகில் சோதிமயமான இலய சிவனாயும், நிலவுலாவிய நீர்மலி வேணியுடைய போக சிவனாயும் நின்றானாதலின், யாம் இவ்வருட் காவிய இலக்கியம் இனிது முடிதற் பொருட் அவன் மலர் சிலம்படியினை வாழ்த்தி வணங்குவாம்" (திராவிடப் பிரகாசிகை) எனச் சபாபதி நாவலர் அவர்கள் இச்செய்யுட் பொருளை விளக்குவர்.

அம்பலவர் அருளால் தோன்றிய 'உலகெலாம்' என்பதில், நாத மாத்திரையாய் எல்லா எழுத்துக்களுக்கும் முதலாகவுள்ள அகரத்துடன் முதலில் உகரமும் இறுதியில் மகரமெய்யும் ஆக அகர உகர மரகங்களாகிய பிரணவத்தின் உருவம் அமைந்திருத்தலும், திருத்தொண்டர் புராணத்தின் முதலில் உள்ள 'உலகெலாம் என்னும் இம் மறைமொழி,

**'சோதி முத்தின் சிவிகைசூழ் வந்துபார்**
**மீது தாழ்ந்து வெண்ணீற்றொளி போற்றிநின்**
**றாதி யாரரு ளாதலின் அஞ்செழுத்**
**தோதி யேறினார் உய்ய வுலகெலாம்' (பெரிய - சம்பந்தர் - 216)**

என இந்நூலின் நடுவிலும்,

**'என்றுமின்பம் பெருகு மியல்பினால்**
**ஒன்றுகாதலித் துள்ளமும் ஓங்கிட**

**மன்றுளார் அடியாரவர் வான்புகழ்**
**நின்ற தெங்கும் நிலவியுலகெலாம்.**

*என இந்நூலின் முடிவிலும் அமைந்திருத்தலும், 'தோடுடைய செவியன்' என ஆளுடைய பிள்ளையாரால் எல்லையிலா மறைமுதல் மெய்யுடன் எடுத்த எழுது மறையாகிய திருமுறை, அருண்மொழித் தேவராகிய சேக்கிழாரடிகளால் 'உலகெலாம்' என நிறைவுசெய்யப்பெற்று முதலும் முடிவும் பிரணவவுருவாய்த் திகழ்தலும், தேவாரம் முதலாகத் திருத்தொண்டர் புராணம் ஈறாகவுள்ள சைவத் திருமுறைகள் பன்னிரண்டும் அருமறைப் பொருளாம் பிரணவ உருவின என்னும் மெய்ம்மையினை 'இனிது புலப்படுத்தல் காணலாம். ஆசிரியர் சேக்கிழார் தில்லையம் பலவர் அருளால் தோன்றிய உலகெலாம் என்னும் மெய்ம் மொழியினைத் தம் நூலின் முதல் இடை கடையாகிய மூவிடங்களிலும் எடுத்தாண்டுள்ளார்.* (*பெரிய புராணத்தில் உலகெலாம் என்ற சொல் பயின்ற இடங்கள்: 1.1, 7.7, 10.15, 18.36, 25.48, 27.371, 30.51, 34.216, 36.641, 34.859, 35.88, 49.16, 75.7 78.40, 7.53,* (ஆக 15 இடங்கள்)

*'அருமறை முதலில் நடுவினில் கடையின் அன்பர் தம் சிந்தையில் அலர்ந்த திருவளர் ஒளிசூழ் திருச்சிற்றம்பல முன்' தோன்றிய திருத்தொண்டர் புராணமாகிய இத்திருமுறையில் திருவைந்தெழுத்தின் பெருமையினையும் திருநீற்றின் சிறப்பினையும் ஆசிரியர் ஆங்காங்கே குறித்துள்ளமை மனங்கொளத் தகுவதாகும்.*

**'இழைத்த அன்பினில் இறைதிரு நீற்றுமெய் யடிமை**
**பிழைத்தி லோமெனிற் பெருந்துலை நேர்நிற்க, என்று**
**மழைத்தடம் பொழில் திருநல்லூர் இறைவரை வணங்கித்**
**தழைத்த அஞ்செழுத் தோதினார் ஏறினார் தட்டில்' (43)**

*என அமர்நீதி நாயனார் புராணத்தும்,*

**'திருக்கயிலைக் குன்றுடையார் திருநீற்றை**
**அஞ்செழுத் தோதிக் கொடுத்தார்' (66)**

**'சொற்றுணை வேதியன் என்னுந் தூமொழி**
**நற்றமிழ் மாலையா 'நமச்சிவாய' என்**
**றற்றமுன் காக்குமைந் தெழுத்தை அன்பொடு**
**பற்றிய உணர்வினாற் பதிகம் பாடினார்' (125)**

*எனத் திருநாவுக்கரசர் புராணத்தும்,*

**'அஞ்செழுத் தோதி ஏறினார்உள்ள உலகெலாம்' (216)**
**'ஒருநாமத் தஞ்செழுத்தும் ஓதி வெண்ணீற்**

றொளிவிளங்குந் திருமேனி தொழுதார் நெஞ்சில்
வருமநாமத் தன்புருகுங் கடலாமென்ன
மாதவரார்ப்பொலி வையம் நிறைந்த தன்றே' (618)

'அழகினுக் கணியாம் வெண்ணீறு அஞ்செழுத்தோதிச் சாத்தி'
(1217)

*எனத் திருஞானசம்பந்தர் புராணத்தும்,*

**'ஏய்ந்த அடிமை சிவனுக்கியான் என்னில் இன்றென் கண்பெற்று**
**வேந்தன் எதிரே திருவாரூர் விரவுஞ் சமணர் கண்ணிழப்பார்**
**ஆய்ந்த பொருளுஞ் சிவபதமே ஆவதென்றே அஞ்செழுத்தை**
**வாய்ந்த தொண்டர் எடுத்தோதி மணிநீர் வாவி மூழ்கினார்' (19)**

*எனத் தண்டியடிகள் நாயனார் புராணத்தும்,*

**'அண்டர்பிரான் திருநாமத் தஞ்செழுத்து மெடுத்தோதி**
**மண்டுதழற் பிழம்பினிடை மகிழ்ந்தருளி உள்புக்கர்' (39)**

*எனப் புகழ்ச் சோழ நாயனார் புராணத்தும்,*

**'விட்ட வெம்பரிச் செவியினிற் புவிமுதல்**
**வேந்தர் தாம் விதியாலே**
**இட்டமாஞ் சிவமந்திர மோதலின்**
**இருவிசும் பெழப் பாய்ந்து**
**மட்டவிழ்ந்தபைந் தெரியல் வன்தொண்டர்மேற்**
**கொண்ட மாதங்கத்தை**
**முட்ட எய்திமுன் வலங்கொண்டு சென்றது**
**மற்றதன் முன்னாக' (36)**

*என வெள்ளானைச் சருக்கத்தும் திருவைந்தெழுத்தின் சிறப்பினை ஆசிரியர் விளக்கியுள்ளமை அறியத் தகுவதாகும்.*

*நம்பியாரூரர் அடியார் கூட்டத்துடன் குருகாவூர்ப் பெருமானை வழிபடச் செல்பவர், வழியிடையில் பசியால் இளைப்புற்றபொழுது, குருகாவூர்க் குழகராகிய இறைவர், மறை வேதியராய்த் தோன்றித் தண்ணீர்ப் பந்தர் அமைத்துப் பொதி சோறுடன் நம்பியாரூரரை எதிர்பார்த்திருந்தாராக, அங்கு அடியார்களுடன் வந்த நம்பியாரூரர் அத்தண்ணீர்ப்பந்தரில் அமரும் போது திருவந்தெழுத்தினை ஓதிக் கொண்டு அமர்ந்தார் என்பதனை,*

**"குருகாவூர் அமர்ந்தருளுங் குழகர்வழி பார்த்திருப்பத்**
**திருவாரூர்த் தம்பிரான் தோழர் திருத்தொண்டருடன்**
**வருவார் அப்பந்தரிடைப் புகுந்து திருமறையவர்பால்**
**பெருகார்வஞ் செலவிருந்தார் 'சிவாயநம' எனப்பேசி"**
**(ஏயர்கோன் -164)**

*எனவரும் பாடலில் ஆசிரியர் கூறியுள்ளார். இத்திருப்பாடலில்,*

**"திருவாய்ப்பொலியச் சிவாயநமவென்று நீறணிந்தேன்"**
**(4-94-6)**

*எனவும்,*

**"வல்லவாறு சிவாயநமஎனா**
**நல்ல மேவிய நாதனடி தொழ" (5-43. ர)**

*எனவும்,*

**"நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநமவெனப் பெற்றேன்"**
**(திருவாசகம் - 552)**

*எனவும் சைவ சமய குரவர்களால் ஓதுமுறையிதுவென அறிவுறுத்தப் பெற்ற சிறப்புடைய மந்திரமாகிய திருவைந் தெழுத்தின் அமைப்பு இனிது விளக்கப் பெற்றுள்ளமை உணர்ந்து போற்றத் தகுவதாகும்.*

*'திருவாளன் திருநீறு' எனவும், 'உறுவது நீற்றின் செல்வம் எனக்கொளும் உள்ளம் மிக்கார்' (பெரிய - தில்லை வாழ் - 6) எனவும், 'ஆய்ந்த மெய்ப்பொருள் நீறு எனவளர்க்கும் அக்காப்பின், ஏய்ந்த மூன்று தீ வளர்த்துளார்' (திரு நீலநக்கர் - 3) எனவும்,*

**"தொன்மைத் திருநீற்றுத் தொண்டின் வழிபாட்டின்**
**நன்மைக்கண் நின்ற நலமென்றுங் குன்றாதார்" (ஏனாதி 3)**

*எனவும்,*

**"விதியினாலே**
**பரவிய திருநீற்றன்பு பாதுகாத் துய்ப்பீர்"**
**(மெய்ப்-22)**

**"தூய்மைத் திருநீற்றடைவே மெய்ப்**
**பொருளென்றறியுந் துணிவினார்" (நமிநந்தி -5)**

*எனவும்,*

**"ஆதிமுதல்வர் திருநீற்றின் அடைவே பொருள்" (மூர்க்க 3)**

*எனவும் திருவருள் வண்ணமாகிய திருநீற்றின் சிறப்பினை ஆசிரியர் இக்காப்பியத்தில் ஆங்காங்கே விளக்கியுள்ளமை காணலாம். இவ்வாறே சிவசாதனமாய் இறைவனது பேரருளின் வெற்றிக்கு அடையாளமாகிய உருத்திராக்கம் மகவெனப் பல்லுயிரனைத்தையும் ஒக்கப்பார்க்கும் செல்வக் கடவுட் டொண்டர்களாகிய சிவனடியார்களுக்குச் சிறப்புடைய அணிகலனாகத் திகழும் தன்மையது என்பதனை,*

**“ஆரங் கண்டிகை ஆடையுங் கந்தையே”**
**(பெரிய - திருக்கூட்டச் - 9)**

*எனவும்,*

**“தூய வெண்ணீறு துதைந்தபொன் மேனியும் தாழ்வடமும்”**
**(பெரிய - திருநாவுக் - 40)**

*எனவும்,*

**“திருக்கழுத் தாரந் தெய்வக் கண்டிகை மாலைசேர”**
**(பெரிய - சம்பந்தர் 1214)**

*எனவும்,*

**“கடிகொள் செங்கமலத் தாதின்**
**செவ்விநீள்தாம மார்பர் திருவடையாள மாலை**
**எவ்வுலகோரும் ஏத்தத்தொழுதுதாம் எடுத்துப் பூண்டார்”**
**(“ 1216)**

*எனவும்,*

**“மிக்கெழும் அன்பர்கள் அன்பு திருமேனி விளைந்ததென**
**அக்குமணியாற்சன்ன வீரமும் ஆரமும் வடமும்**
**கைக்கணிகொள்வளைச் சரியும் அரைக்கடி சூத்திரச்சரியும்**
**தக்கதிருக் காற்சரியும் சாத்திய ஒண்சுடர் தயங்க”**
**(பெரிய - சிறுத் - 32)**

*எனவும் வரும் தொடர்களில் ஆசிரியர் இனிது விளக்கியுள்ளமை காணலாம்.*

*சைவ சமயத்தில் இறைவனையடைதற்குரிய நெறிகளாகச் சரியை கிரியை யோகம் ஞானம் என நால்வகை நெறிகள் வகுக்கப் பெற்றுள்ளன. இந்நால்வகை நெறிகளையும் படிகால் முறையாக மேற்கொண்டு ஞான நெறியினைக் கடைப்பிடித்தொழுகும் சிவஞானிகளாகிய திருத்தொண்டர்கள் உலக மக்கள் உய்தல் வேண்டி மேற்குறித்த நால்வகை நெறிகளுள் ஒன்றினைத் தமக்குச் சிறப்புடைய வாழ்க்கை நெறியாக மேற்கொண்டு வாழ்ந்து காட்டிய வரலாற்று நிகழ்ச்சிகளைச் சேக்கிழாரடிகள் திருதொண்டர் புராணத்தில் விரித்துக் கூறியுள்ளார்.*

**‘ஞானமுதல் நான்குமலர் நற்றிருமந்திரமாலை’**
**(பெரிய - திருமூலர் -26)**

**“நலஞ்சிறந்த ஞான யோகக் கிரியா சரியையெலாம்**
**மலர்ந்தமொழித் திருமூலர்” (பெரிய - திருமூலர் - 28)**

*எனவரும் தொடர்களில் ஞான நெறியினை அடிப்படையாகக் கொண்டு நிகழும் சரியை கிரியை யோகம் ஞானம் எனும் சிறப்புடைய நால்வகை நெறிகளையும் குறித்துள்ளமை காண்க.*

வேதசிவாகமங்களிலும் தேவார திருவாசகம் முதலிய அருள் நூல்களாகிய திருமுறைகளிலும் நிரம்பிய பயிற்சியும் ஈடுபாடும் உடைய சேக்கிழார் அடிகள், வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்கத் தாம் இயற்றிய காப்பியத்தல் உலகியல் வேத நூலொழுக்கமாகிய வைதிக நெறியையும் அதனினும் சிறப்புடையதாகத் தமிழ்ச் சான்றோர்களால் பன்னெடுங் காலமாகப் பேணி வளர்க்கப் பெற்று என்றும் நின்று நிலவும் பெருமை வாய்ந்த மெய்ந் நெறியாகிய சிவநெறியினையும் அந்நெறிகளில் வழுவாதொழுகிச் சிவபெருமான் திருவருளுக் குரியராகிய ஆளுடைய பிள்ளையார், திருநாவுக்கரசர், நம்பியாரூரர், திருமூலர், காரைக்காலம்மையார், ஐயடிகள், காடவர்கோன், சேரமான்பெருமாள் நாயனார் ஆகிய அருளாசிரியர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளிலும் ஏனைய திருத்தொண்டர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளிலும் வைத்து இனிது விளக்கியுள்ளார்.

தமிழகத்திற் சைவ சமயச் சான்றோர்களால் இறைவன் திருவருள் கொண்டு போற்றி வளர்க்கப் பெற்ற சைவசித்தாந்த தத்துவ உண்மைகள் பல இக்காப்பியத்தில் இலக்கியச் சுவையமைய நன்கு விளக்கப்பெற்றுள்ளன.

கன்னி வேட்டைக்குச் சென்ற திண்ணனார் காளத்தி மலையினைக் கண்டு அம்மலைமேல் எழுந்தருளிய குடுமித் தேவரை வழிபடுதல் வேண்டும் என்னும் பெருவேட்கையுடன் நாணனைத் துணையாகக் கொண்டு காளத்தி மலையின் மேல் ஏறிச்சென்ற அன்பின் திறத்தினை,

**"நாணனும் அன்பும் முன்பு நளிர்வரை ஏறத்தாமும்**
**பேணுதத்துவங்கள் என்னும் பெருகுசோபானம் ஏறி**
**ஆணையாம் சிவத்தைச்சார அணைபவர்போல ஐயர்**
**நீணிலை மலையை ஏறி நேர்படச் செல்லும்போதில்"**
**(பெரிய - கண்ணப்பர் - 103)**

எனவரும் பாடலில் ஆசிரியர் விளக்கியுள்ளர். 'தம் தோழனாகிய நாணன் என்பவனும் தாம் குடுமித் தேவர்பால் வைத்த அன்பும் தமக்கு முன்னே குளிர்ந்த மலையின்மேல் ஏறிச்செல்ல, உயிர்களைப் பேணி வளர்க்கும் தத்துவங்கள் என்கின்ற பெருகும் படிகளை ஏறி, அருளே வடிவமாகிய சிவபரம்பொருளைச்சார அணைபவர்களாகிய சிவயோகிகளைப் போல, திண்ணனாராகிய தலைவர் நீண்ட நிலைமையினை யுடைய திருக்காளத்தி மலையின்மேல் ஏறிக் குடுமித்தேவரை நேர்படச் சென்றார்' என்பது இச்செய்யுளிற் குறிக்கப்பெற்ற செய்தியாகும். சுத்தம் அசுத்தம் என்ற இரு வகை மாயையினின்றும் தோன்றிய நிலம்

முதல்சிவம் ஈறாக உள்ள தத்துவங்கள் முப்பத்தாறும் சகல நிலையில் உயிர்களின் அறிவு இச்சை செயல்களின் வளர்ச்சிக்குக் கருவியாய் அவ்வுயிருணர்வுயர்களை வளர்த்தலின் 'பேணுதத் துவங்கள்' எனப்பட்டன. இவை எல்லாவுயிர்களுக்கும் போகத்தைக் கொடுப்பனவாய்ப் பிரளய காலம்வரை நிலைத்திருக்கும் உண்மைப் பொருள்களாதலின் தத்துவம் எனப் பெயர் பெற்றன. நிலம் முதலாகவுள்ள இத்தத்துவங்கள் அனைத்தையுங் கடந்து மேற்சென்று தத்துவங்கடந்த செம்பொருளாகிய இறைவனை அணைதற்கு இத்தத்துவங்கள் படிபோன்று மேன்மேல் விரிவுடையனவாக அமைதலின் 'தத்துவங்கள் என்னும் பெருகு சோபானம்' என்றார். சோபானம் - படி. சிவபரம் பொருளாகிய இறைவன் தனது அருளாகிய சத்தியுடன் நீக்கமின்றி நிற்றலால் சிவமும் சத்தியும் ஒன்றே என்பார் ஆணையாம் சிவம்' என்றார். புறப்பொருளை நோக்காது பேரறிவுமாத்திரமாய் நிற்கின்ற முழுமுதற்பொருளே சிவம் எனவும், அச்சிவம் உயிர்களுக்குப் பசுத்துவத்தை விளக்குதலிற் கொண்டுள்ள அருளே சத்தியெனவும் கூறப்படும். "தன்னை விளக்குவதூஉம் விடயங்களை விளக்குவதூஉம் தானேயாகிய ஞாயிறொன்று தானே விடயங்களை விளக்குழிக் கதிர் எனவும், தன்னை விளக்குழிக் கதிரோன் எனவும் தாதான்மியத்தான் இருதிறப்பட்டு இயைந்து நிற்கும்; அதுபோலப் புறப்பொருளை நோக்கி நிற்கும் நிறையிற் சத்தி எனவும், புறப்பொருளை நோக்காது அறிவு மாத்திரையாய்த் தன்னியல்பின் நிற்பதூஉம், புறப்பொருளை நோக்கி நின்றுணர்த்துவதூஉம் ஆகிய இரண்டியல்புடைய பேரறிவாகிய சைதன்னியம் ஒன்றே, அங்ஙனம் புறப்பொருளை நோக்கி நிற்கும் நிலையிற் சத்தி எனவும், புறப்பொருளை நோக்காது அறிவு மாத்திரையாய் நிற்கும் நிலையிற் சிவம் எனவும் தாதான்மியத்தான் இருதிறப்பட்டு இயைந்து நிற்கும்" எனச் சிவஞான முனிவர் கூறும் விளக்கம் இங்கு நோக்கத்தகுவதாகும். சிவயோகிகள் நிலமுதற் சிவமீறாகிய முப்பத்தாறு தத்துவங்களையும் படிமுறையானே ஏறிக்கடந்து சிவத்தை அணையுமாறுபோலத் திண்ணனாரும் காளத்தி மலையிற் படிவழியே ஏறிச் சென்று குடுமித் தேவரைச் சார்ந்தார் எனச் சைவசித்தாந்தத் தத்துவ உண்மையினை உவமையாக ஆசிரியர் எடுத்தாண்டுள்ள திறம் ஈண்டு உணரத் தகுவதாகும்.

ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களும் உயிர்களை அநாதியே பற்றியுள்ளன என்பதும், முற்றுணர்வும் வரம்பிலாற்றலும் பேரருளும் உடைய இறைவன் உயிர்களை அநாதியே பிணித்துள்ள மலப் பிணிப்பு நீங்க உயிர்களுக்கு உலகு உடல் கருவி நுகர் பொருள்கள் ஆகியவற்றைப் படைத்துக்

கொடுத்து இவ்வுலகில் வாழ்வாங்கு வாழச்செய்து பாசப்பிணிப் பொழித்து மீண்டும் பிறவா நெறியாகிய வீடு பேற்றினைத் தந்தருள்கின்றான் என்பதும், உயிர்கள் தம்மைப் பற்றியுள்ள பாசப் பிணிப்பு அகல அருளேயுருவாகிய ஈசனை அன்பினால் மறவாது வழிபடுதல் வேண்டுமென்பதும் சைவ சித்தாந்த நூற்றுணிபாகும். இதனை,

**'தொழுவார்கள் தம் மும்மை**
**மாமலங்களற வீடருள் தில்லை மல்ல லம்பதியின்**
**எல்லை வணங்கி' (பெரிய தடுத்தாட் - 92)**

எனவும்.

**"தொல்லைவினை, ஆசுடைய மலமூன்றும் அணையவரும்**
**பெரும்பிறவி, மாசுதனை விடக்கழித்து'**
**(பெரிய - திருக்குறிப்பு - 114)**

எனவும்,

**'மருள்பொழி மும்மலஞ் சிதைக்கும் வடிச்சூலம்'**
**(சிறுத்தொண்டர் - 35)**

எனவும், வரும் தொடர்களில் ஆசிரியர் குறித்துள்ளார்.

மேற்குறித்த மூன்று மலங்களும், ஆணவ மலத்துடன் கூடி நின்று அதனைக் கழலும் பக்குவமுடையதாகச் செய்யும் இறைவனது மறைப்புச் சத்தியாகிய திரோதமலத்தினையும் ஆன்மாக்களுக்குத் தனுகரண புவன போகங்களாய்க் காரியப்படும் சுத்தமாயையின் திரட்சியாகிய சுத்ததத்துவங்களையும் கூட்டி மலம் ஐந்து எனப் பகுத்துறைக்கும் வழக்கம் உண்டென்பது,

**'மலங்கள் ஐந்தாற் சுழல்வன் தயிரிற்பொருமத்துறவே'**
**(நீத்தல் விண்ணப்பம் - 29)**

எனவரும் திருவாசகத் தொடரால் அறியப்படும்.

**'தன்பரிசும் வினையிரண்டும் சாருமலம் மூன்றும் அற**
**அன்பு பிழம்பாய்த்திரிவார்' (பெரிய - கண்ணப்பர் - 154)**

எனவும்,

**'இருவினைப்பாச மும்மலக்கல் ஆர்த்தலின்**
**வருபவக் கடலில் வீழ் மாக்கள் ஏறிட**
**அருளுமெய் யஞ்செழுத் தரசை யிக்கடல்**
**ஒருகல்மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ'**
**(திருநாவுக் - 129)**

எனவும் வரும் தொடர்களில் ஐவகை மலங்கள் குறிக்கப் பெற்றுள்ளமை உய்த்துணரத் தகுவதாகும்.

இருவினைகளைச் செய்கின்ற உயிர்களும், அவ்வுயிர்களாற் செய்யப்படும் நன்றுந் தீதுமாகிய வினைகளும் அவ்வினை காரணமாக உயிர்களைச் சேர்தற்குரிய இன்பதுன்பங்களாகிய நுகர்ச்சிகளும், உயிர்கள் செய்த வினைப் பயன்களைச் செய்த உயிர்களே நுகரும்படி நியமித்து நுகரச் செய்பவனாகிய இறைவனும் எனச் சைவசமயச் சான்றோர்களால் ஆராய்ந்து நிச்சயிக்கப் பட்ட பொருள்கள் நான்காகும். இவ்வுண்மையினை,

**'செய்வினையுஞ் செய்வானும் அதன்பயனுங் கொடுப்பானும்**
**மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள் எனக்கொண்டே**
**இவ்வியல்பு சைவநெறி யல்லவற்றுக் கில்லையென**
**உய்வகையாற் பொருள் சிவனென் றருளாலே உணர்ந்தறிந்தார்'**
**(பெரிய-சாக்கிய-5)**

எனச் சாக்கிய நாயனார் இறைவனருளால் உணர்ந்ததாகச் சேக்கிழார் அறிவுறுத்தியுள்ளார். அருண்மொழித்தேவர் சைவ சமயத்தின் துணிபொருளாக அறிவுறுத்திய இப்பொருள் வகையினை,

**'செய்வானுஞ் செய்வினையுஞ் சேர்பயனுஞ் சேர்ப்பானும்**
**உய்வா னுளனென் றுணர்' (திருவருட்பயன்-53)**

என உமாபதி சிவாசாரியார் எடுத்தாண்டுள்ளமை மனங் கொளத்தகுவதாகும். இதன்கண் 'செய்வான்' என்றது இருவினைகளைச் செய்துழல்வானாகிய புருடனை. செய்வினை, உயிர்களாற் செய்யப்படும் நன்றும் தீதும் ஆகிய வினைகள். சேர்பயன் - தாம் செய்த நல்வினை தீவினைகள் காரணமாக உயிர்களைச் சேர்தற்குரிய இன்ப துன்பங்களாகிய நுகர்ச்சிகள். சேர்ப்பவன், உயிர்கள் செய்த இருவினைப் பயன்களைச் செய்த உயிர்களே நுகர்ந்து கழிக்கும்படி நியமித்து நுகரச்செய்பவனாகிய இறைவன். தாம் செய்த நல்வினை தீவினைகளின் பயனைத் தாமே அறிந்து எடுத்துக்கொண்டு நுகரும் உணர்வுவன்மையும் வினைப்பயன்களாகிய இன்பதுன்பங்களில் விருப்பு வெறுப்பற்ற தன்மையும் உயிர்களுக்கு இல்லை. செய்த வினைப்பயன்களைச் செய்த உயிர்களே நுகரும்படி சென்று சேரும் உணர்வு வினைக்கு இல்லை. எனவே உயிர்கள் செய்த வினைப்பயன்களை அவ்வுயிர்களே நுகர்ந்து கழிக்குமாறு வரையறுத்து நுகர்விப்பவன் இறைவன் ஒருவனே என்பது சைவசமயச் சான்றோர் துணிபாகும்.

உயிர்களுக்கு உலகு உடல் கருவி நுகர்பொருள்களைப் படைத்தளிப்பவன் இறைவன் ஆதலால் அவனே எல்லாப் பொருள்களையும் தனக்கு உடைமையாகக் கொண்ட உடையான் என்றும், உலகப் பொருள்கள் யாவும் அவனது உடைமை என்றும்,

உயிர்கள் ஆண்டவனாகிய அம்முதல்வனுக்கு அடிமை யென்றும் உணர்ந்து இறைவனது திருவருளின்வழி அடங்கி நடத்தலே மெய்யுணர்வுடையோர் செயலாகும் இதனை,

**'எப்பொருளும் ஆக்குவான் ஈசனே எனுமுணர்வும்**
**அப்பொருள்தான் ஆளுடையான் அடியார்கள் எனுமறிவும்**
**இப்படியால் இதுவன்றித் தம்மிசைவு கொண்டியலும்**
**துப்புரவில்லார் துணிவு துகளாகச் சூழ்ந்தெழுந்தார்'**
**(பெரிய - சம்பந்தர் - 71)**

எனவும்,

**'தம்மை யுள்ளவா றறிந்தபின் சங்கரற் கடிமை**
**மெய்யம்மையே செயும் விருப்புடன்மிக்கதோ ரன்பால்**
**பொய்ம்மைநீங்கிய பொருளிதுவெனக் கொளும் பொற்பால்**
**செம்மையே புரிமனத்தினார் சிவநேச ரென்பார்'**
**(பெரிய-சம்பந்தர்-1055)**

எனவும் வரும் திருப்பாடல்களில் ஆசிரியர் தெளிவாக அறிவுறுத்தியுள்ளமை உணரத்தகுவதாகும். மேற்குறித்த 'தம்மையுள்ளவாறறிந்தபின்' என்னும் பெரிய புராணச் செய்யுட் பொருளை அடியொற்றிய நிலையில்,

**'தம்மையுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்**
**எம்மையுடைமை யெமையிகழார்-தம்மை**
**உணரார் உணரார் உடங்கியைந்து தம்மிற்**
**புணராமை கேளாம்புறன்'(சிவஞானபோதம்-அவையடக்கம்)**

என மெய்கண்ட தேவர் அவையடக்கங் கூறியுள்ளமை இங்கு ஒப்புநோக்கி யுணரற்பாலதாகும்.

உயிர்கட்கு இருவினையொப்பு உண்டாகிய நிலையில் ஆணவமலம் தனது ஆற்றல் தேய்தற்குரிய துணைக் காரணங்கள் எல்லாவற்றோடும் கூடுதலாகிய மலபரிபாகமும், மலபரிபாகம் காரணமாகச் சத்திநிபாதமும் உளவாகும். 'ஒன்றில் விருப்பும் ஒன்றில் வெறுப்பும் ஆதல் இன்றிப் புண்ணிய பாவம் இரண்டினும் அவற்றின் பயன்களினும் ஒப்ப உவர்ப்பு நிகழ்ந்து விடுவோனது அறிவின்கண் அவ்விருவினையும் அவ்வாறு ஒப்பநிகழ்தலே ஈண்டு இருவினையொப்பு என்பதற்குப் பொருள்'' என்பர் சிவஞான முனிவர். திருஞான சம்பந்தப் பிள்ளையார் திருக்கரத்தால் திருநீறு பூசப்பெற்ற கூன்பாண்டியன் முன்னைவினை நீங்கி இருவினையொப்பு உடையவனாய் இறைவனையறியும் தன்மையினைப் பெற்றான் என்பதனை,

**'தென்னவன் மாறன்தானுஞ் சிரபுரத்தலைவர் தீண்டிப்**
**பொன்னவில் கொன்றையார்தந் திருநீறுபூசப்பெற்று**

**முன்னை வல்வினையும் நீங்கி முதல்வனை யறியுந் தன்மை**
**துன்னினான் வினைகள் ஒத்துத் துலையென நிற்றலாலே'**
**(பெரிய - சம்பந்தர் - 819)**

எனவரும் பாடலில் ஆசிரியர் தெளிவாக விளங்கியுள்ளார்.

மலபரிபாகம் வருமளவும் மலத்திற்கு அநுகூலமாய் நின்று நடத்திய இறைவனது திரோதானசத்தி, மலம் பரிபாகம் எய்திய நிலையில் கருணைமறமாகிய செய்கை மாறிக் கருணை யெனப்படும் முன்னைப் பராசத்தி ரூபமாய் உயிர்கள்மாட்டுப் பதிதலே சத்திநிபாதம் எனப்படும். இறைவனது அருட்சத்தி பக்குவமுடைய உயிர்கள்பாற்பதிதலால் அவ்வுயிர்கள் பாசத் தொடர்பினின்றும் விலகி இறைவன் திருவருளில் தோய்வன. இவ்வுண்மையினை,

**'திங்கள்சேர் சடையார் தம்மைச் சென்றவர்காணா முன்னே**
**அங்கணர் கருணை கூர்ந்த அருள்திரு நோக்கம் எய்தத்**
**தங்கிய பவத்தின்முன்னைச் சார்புவிட்டகல நீங்கிப்**
**பொங்கிய ஒளியினீழல் பொருவிலன்புருவமானார்'**
**(பெரிய - கண்ணப்பர் - 104)**

எனவும்,

**'அந்நிலையில் திருத்தோணி வீற்றிருந்தார் அருள் நோக்கால்**
**முன்னிலைமைத் திருத்தொண்டு முன்னியவர்க்கருள் புரிவான்**
**பொன்மலை வல்லியுந்தாமும் பொருவிடைமேல் எழுந்தருளிச்**
**சென்னியிளம் பிறைதிகழச் செழும்பொய்கை மருங்கணைந்தார்'**
**(பெரிய - சம்பந்தர் - 64)**

எனவும் வரும் திருப்பாடல்களில் ஆசிரியர் புலப்படுத்தி யுள்ளார்.

தாள் + தலை என்னும் இவ்விரு சொற்களும் புணருங்கால் நிலைமொழியீற்றில் நின்ற ளகரமும் வருமொழி முதலில் வந்த தகரமும் தம்மிற் பிரித்தறிய வொண்ணாதவாறு டகரமாகிய ஒரெழுத்தாக ஒன்றுபட்டு நிற்கும். அதுபோல, ஆன்மாவும் சிவமும் அவை எனவும் தான் எனவும் வேறு பிரித்து உணர வொண்ணாதவாறு அவையே தானேயாய்ப் பிரிவற ஒன்றாகிய நிலையில் ஆன்மாவின்கண் நிகழ்வதே சிவாநுபவம். இதனை அறிவுறுத்தும் முறையில் அமைந்தது,

**'தாடலைபோற் கூடியவை தானிகழா வேற்றின்பக்**
**கூடலைநீ ஏகமெனக் கொள்' (74)**

எனவரும் திருவருட் பயனாகும். இவ்விளக்கம்,

**'தங்கள்பெருமான் அடிநீழல் தலையாம் நிலைமை சார்வுற்றார்'**
**(பெரிய -முருக - 13)**

எனவரும் சேக்கிழார் வாக்கினை அடியொற்றி அமைந்திருத்தல் அறியத் தகுவதாகும்.

ஆன்மா சிவத்தோடும் கூடும் நிலையில் ஒன்றாகி உயிர் என்ற பொருள் கெட்டழிவதுமில்லை; இரண்டாகிப் பிரிவதும் இல்லை; இரண்டற்ற நிலையில் அத்துவிதமாய் நின்று அநுபவிக்கும் என்பதனை,

**'ஒன்றாலும் ஒன்றா திரண்டாலும் ஓசையெழா**
**தென்றாலொன் றன்றிரண்டும் இல்'** (75)

எனவரும் திருவருட் பயனில் உமாபதிசிவம் இனிது விளக்கியுள்ளார். சைவசித்தாந்த முத்திநிலை பற்றிய இவ்விளக்கம்,

**'நண்ணரிய சிவானந்த ஞானவடி வேயாகி**
**அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்டவர சமர்ந்திருந்தார்'**
**(பெரிய - திருநாவுக் - 427)**

எனவும்,

**'காதலியைக் கைப்பற்றிக் கொண்டுவலங் கொண்டருளித்**
**தீதகற்ற வந்தருளுந் திருஞானசம்பந்தர்**
**நாதனெழில் வளர்சோதி நண்ணியதனுட் புகுவார்**
**போதநிலை முடிந்தவழிப் புக்கொன்றி யுடனானார்'**
**(பெரிய - சம்பந்தர் - 1235)**

எனவும் அருண்மொழித் தேவர் கூறிய வீடுபேற்றியல் பினை விளக்கும் முறையில் அமைந்திருத்தல் காணலாம்.

இங்ஙனம் திருத்தொண்டர் புராணத்தில் சைவசித்தாந்த நுண்பொருள்கள் பலவற்றை இனிது விளக்கிச் செல்லும் சேக்கிழாரடிகள், சமணம் பௌத்தம் ஆகிய புறச்சமயங்களின் கொள்கைகளையும் ஆங்காங்கே எடுத்துக்காட்டி அவை மக்கள் வாழ்வுக்கு வாயும் நினைக்க மடநெஞ்சுத் தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனாகிய இறைவனை மறந்து தெய்வமுண்டென்னுந் தெளிவின்றி அற முதலியவற்றை மட்டும் வற்புறுத்தும் புறச்சமயங்கள், உயிர்க்குயிராகிய முதல்வன் எல்லையற்ற பேரருளால் உயிர்களுக்குச் செய்துவரும் பேருதவியை மறந்தன. ஆதலால், சமண முதலிய புறச்சமயங்களை 'நன்றியில்லாத சமயம்' என ஆசிரியர் குறித்திருப்பது அறிஞர்களால் ஊன்றி நோக்கத் தக்கதாகும்'

**'நன்றியில் நெறியில் அழுந்திய நாடும்' (பெரிய - சம்பந்தர் - 659)**

என்புழிச் சமண சமயம் 'நன்றியில் நெறி' எனக்குறிக்கப் பெற்றிருத்தல் காணலாம். ஆளுடைய பிள்ளையார் அடியார் திருக்கூட்டத்துடன் திருத்தெளிச் சேரியினை அடைந்தபொழுது

பிள்ளையார் பால் அன்புடைய அடியார்களில் ஒருவர் சாரிபுத்தனுடன் சமயவாதம் நிகழ்த்திய செய்தியினைக் கூறுமிடத்துப் புத்தர் கூறும் கணபங்க வாதத்தை விரிவாக எடுத்துக் காட்டி மறுத்திருப்பது கொண்டு சேக்கிழாரடிகளது தத்துவநூற் புலமையினை நன்கு உணரலாம்.

வடுகக் கருநாடர் மன்னர் பாண்டிய நாட்டைக் கைப்பற்றியதும், பரஞ்சோதியார் பல்லவ வேந்தனது சேனைத்தலைவராய் வடநாட்டின் மேற் படையெடுத்துச் சென்று வாதாவி நகரத்தை யழித்து மீண்டமையும், நின்றசீர் நெடுமாறன் நெல்வேலிப் போர்க்களத்தில் பகைவரை வென்றதும், பிற்காலச் சோழ மன்னர்கள் வடநாட்டிற் சென்று சயத்தம்பம் நாட்டியதும் முதலிய தமிழக வரலாற்றுச் செய்திகளை ஆசிரியர் தம் நூலில் ஆங்காங்கே குறித்திருப்பதும், திருத்தொண்டத் தொகையடியார் களின் வரலாறு கூறும் நிலையில் தம் காலத்திற்கு முன்னுள்ள இலக்கியச் சான்றுகளையும் கல்வெட்டுச் சான்றுகளையும் துணையாகக் கொண்டு உண்மைச் செய்திகளை ஆராய்ந்து கூறியிருப்பதும் ஆசிரியரது வரலாற்றுப் புலமைக்குச் சிறந்த சான்றுகளாகும்.

தேவார ஆசிரியர்கள் மூவரும் தலங்கள் தோறும் சென்று இறைவனை வழிபட்டுத் திருப்பதிகப் பாமாலை பாடி வழிபட்ட செய்தியினை விரித்துரைக்கும் நிலையில் அவர்கள் சென்ற வழியின் அமைப்பு அடுத்தடுத்துள்ள திருத்தலங்கள், அவற்றை யடுத்தமைந்த ஆறுகள், தலபுராணக் குறிப்புக்கள் முதலியனவற்றைக் கற்போர் தெளிவாக அறிந்துகொள்ளும் முறையில் விரித்துக் கூறியிருப்பதுகொண்டு குமரி முதல் இமயம் வரையுள்ள நம் நாட்டின் அமைப்பினை உள்ளவாறு உணர்ந்த அவரது நிலநூற் பயிற்சியினை நன்கு உணரலாம்.

இந்நூலில் ஆனாயர் குழலோசையின் இசை அமைப்பினையும், திருநீலகண்ட யாழ்ப்பாணரது யாழ் வாசிப்பினையும் தேவாரத் திருப்பதிகங்களில் அமைந்த பண்கள் தாளங்கள் ஆகிய இசை நாலங்களையும் விரித்துரைக்கும் பகுதிகள் சேக்கிழாரது இயலிசைப் புலமைக்குச் சான்றாக அமைந்துள்ளன. தேவாரத் திருப்பதிகங்கள் பாடப்பெற்ற செவ்வியினைப் புலப்படுத்தும் நிலையில் அத்திருப்பதிகச் சந்தங்களிலே செய்யுட்களை அமைத்திருத்தலையும் நாடக அமைப்புக் கேற்ற உரையாடல்கள் இக்காப்பியத்தில் ஆங்காங்கே இடம் பெற்றிருத்தலையும் கூர்ந்து நோக்குவோர் இத்திருத்தொண்டர் புராணம் முத்தமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரத்தைப் போன்று அமைந்த இயலிசை நாடகப் பொருட்டொடர் நிலை என்பதனை நன்குணர்வர்.

**'புலன்கொளுவ மனமுகிழ்த்த சுருள்நீங்கி மலர்விக்கும்
கலைபயிலத் தொடாங்குவித்தார்**
**(பெரிய - திருநாவுக் - 20)**

எனக் கல்விப் பயிற்சியின் இயல்பினையும்,

**'சிந்தைமலர்ந்தெழும் உணர்வின் செழுங்கலையின்
திறங்களெலாம் (பெரிய-திருநாவுக்-21)**

என அப்பயிற்சியினால் உளவாம் கலைத் திறங்களையும் உறுப்பு நூல், மருத்து நூல், கட்டிடக்கலை முதலியவற்றையும் இந்நூலில் ஆங்காங்கே ஆசிரியர் குறித்துச் செல்லும் குறிப்புகள் அவரது பல்கலைத் திறத்திற்குச் சிறந்த சான்றாகத் திகழ்கின்றன.

திருத்தொண்டர் புராணத்தின் செய்யுள் தொகை 4253 எனச் சேக்கிழார் புராணம் கூறும். இப்பொழுது 4286 செய்யுட்கள் இந்நூலில் உள்ளன. எனவே 33பாடல்கள் இடைச்செருகலாகப் பின்வந்தோராய் பாடிச் சேர்க்கப் பெற்றன எனக் கருதவேண்டியுளது. திருமலைச் சருக்கத்தில் 9 முதல் 12 வரையுள்ள 5 பாடல்களும் கண்ணப்ப நாயனார் புராணத்தில் 158 முதல் 162 வரையுள்ள பாடல்களும் சருக்கங்களின் முடிவில் அமைந்த கூற்றுவர், கணம்புல்லர், முனையடுவார், கோட்புலியார் புராணங்களில் அடுத்து வரும் புராணங்களுக்குத் தோற்றுவாயாக வுள்ள நான்கு செய்யுட்களும் சில பிரதிகளில் இல்லாமையால் இவை வெள்ளி பாடல்கள் எனக் கருதப் பெறுகின்றன. 4253 செய்யுட்களால் அமைந்த இத்திருத்தொண்டர் புராணத்தில் ஆசிரியர் எடுத்தாண்டுள்ள இயலிசை யாப்பு விகற்பங்கள் நாற்பத்தெட்டாகும். இவை சந்தமலி செந்தமிழ்ப் பாடல்களாகிய தேவாரத் திருப்பதிகங்களின் இயலிசைத் திறத்தில் சேக்கிழர்க்குள்ள ஈடுபாட்டிற்கும் புலமைத் திறத்திற்கும் சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றன.

மனு நீதிச் சோழர் வரலாற்றில் பண்டைத் தமிழ் வேந்தர்களது அறனொடுபுணர்ந்த திறனறி செங்கோல் முறையினையும், தடுத்தாட் கொண்ட புராணத்தில் அக்காலத்தில் நம் நாட்டில் திருவெண்ணெய் நல்லூர் முதலிய ஊர்களில் நிலவிய ஊர்ச் சபைகளின் வழக்கியல் முறையினையும் விரித்துக் கூறியிருப்பது கொண்டு சோழ மன்னர்க்கு அமைச்சராய் விளங்கிய ஆசிரியரது அரசியற் புலமையினை நன்கு உணரலாம். தமிழ்நாட்டின் அகநாடுகளையும் அதனகத்து அடங்கிய ஊர்களையும் தெளிவாகக் குறிக்கும் முறையில்,

**'மருகல் நாட்டுத் தஞ்சாவூர்' மிழலை நாட்டுப் பெருமிழலை'**

**'மழநாட்டுப் பெருமங்கலம்' 'கோனாட்டுக் கொடிநகரம்
கொடும்பாளூர்', 'மேற்கா நாட்டுஆதனூர்' 'சோழர்
நீர்நாட்டிடைக் காவிரிவடகரைக் கீழ்பால் திருப்பெரு
மங்கலம்', வடவெள்ளாற்றுத் தென்கரைப்பால்.....
இருக்கு வேளூர்', பெருந் தொண்டை வளநாடதனில்
.... .... பாலிநதியின் வடபால் நலங்கொள்பதி வேற்காடு'**

*என இவ்வாறு இடஞ்சுட்டி விளக்கும் பகுதிகள் ஆசிரியரது நாடறி புலமையினை அறிந்துகொள்ளுதற்குச் சிறந்த சான்றாக அமைந்துள்ளன.*

*தமிழ்நாட்டில் திருவதிகையினை அடுத்துள்ள சித்த வடமடம், திருநல்லூரில் அமர்நீதி நாயனார் கட்டிய திருமடம், திருப்புகலூரில் முருகநாயனார் திருமடம், திருப்பூந்துருத்தியில் திருநாவுக்கரசர் திருமடம், திருமருகல், திருவாரூர், திருவீழிமிழலை, திருமறைக்காடு, காஞ்சி, காளத்தி, மதுரை, நல்லூர்ப்பெருமணம் முதலிய தலங்களில் அமைந்த திருமடங்கள் ஆகியவற்றைப்பற்றிக் கூறும் குறிப்புக்கள் அக்காலத்தில் திருமடங்களில் தங்கியிருந்து சிவநெறி வளர்த்த திருத்தொண்டர்களின் சைவ சமயத் திருத்தொண்டுகளைப் புலப்படுத்துவனவாகும். சீகாழி, தில்லை, திருவீழிமிழலை, திருவாக்கூர், திருக்கடவூர் முதலிய தலங்களில் வாழும் அந்தணர்களைப்பற்றி ஆசிரியர் கூறும் குறிப்புக்கள் அக்காலத்தில் வேதநெறி தழைத்தோங்க விளங்கிய சீலமுடைய வேதியர்களின் ஒழுகலாற்றினை நன்கு விளக்குவனவாகும்.*

*நம்பியாரூரரை வலிய ஆட்கொள்ள வந்த கிழவேதியர் கோலம் பற்றியும் அமர்நீதி நாயனார்க்கு அருள்புரிய வந்த மறைக்குலத்துப் பிரமசாரியின் வடிவு பற்றியும், திருநீலகண்டக் குயவர்பால் எழுந்தருளிய சிவயோகியார் வடிவு பற்றியும், மானக்கஞ்சாறர்பால் வந்த மாவிரத முனிவர் கோலம் பற்றியும், சிறுத்தொண்டர்பால் எழுந்தருளிய பயிரவ சமய அடியார் கோலம் பற்றியும் சேக்கிழார் சொல்லோவியஞ் செய்து காட்டிய பகுதிகள் அக்காலத்து வாழ்ந்த அகச்சமய அடியார்களின் திருக்கோலப் பொலிவினைக் கற்போர் உளக்கண்ணின் முன் நிறுத்தும் கற்பனைத் திறம் மிக்கன ஆகும்.*

**'தூயவெண்ணீறு துதைந்த பொன்மேனியும் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவருசிந்தையும் நைந்துருகிப்
பாய்வதுபோலன்பு நீர்பொழிகண்ணும் பதிகச்செஞ்சொல்
மேயசெவ்வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே'
(பெரிய - திருநாவுக் - 148)**

எனத் திருநாவுக்கரசரது திருவேடப் பொலிவினை விளக்கிய சேக்கிழார், அப்பெருந்தகையாரது அருள் வேடத்தைக் கண்ட ஆளுடைய பிள்ளையார் தம் நெஞ்சக் கிழியிலே வரைந்து நெடுங்காலமாக வழிபடப் பெற்று வந்த அடியார் திருவேடமே இப்பொழுது திருநாவுக்கரசராகப் புறத்தே உருப்பெற்று எதிரே எழுந்தருளியது என எண்ணி அப்பர் திருவேடத்தினைத் தொழுது மகிழ்ந்த செய்தியினை,

**'சிந்தையிடையறா அன்புந் திருமேனி தனிலசைவும்**
**கந்தைமிகையாங் கருத்தும் கையுழ வாரப்படையும்**
**வந்திழிகண்ணீர் மழையும் வடிவிற்பொலி திருநீறும்**
**அந்தமிலாத் திருவேடத்தரசும் எதிர் வந்தணைய'**
**'கண்டகவுணியக் கன்றும் கருத்திற்பரவு மெய்க்காதல்**
**தொண்டர்திருவேடம் நேரே தோன்றிய தென்னத் தொழுதே'**
**(பெரிய-சம்பந்தர் - 270,271)**

எனவரும் பாடல்களில் விரித்துக் கூறியுள்ளார். இங்ஙனம் மெய்ஞ்ஞானம் கைவரப் பெற்ற ஞானசம்பந்தர் அடியார் திருவேடத்தினையும் திருக்கோயிலையும் அரனெனவே கண்டு தொழுத இவ்வரலாற்றுச் செய்தியை அடிப்படையாகக் கொண்டதே சிவஞான போதத்தில்,

**'செம்மலர் நோன்றாள் சேரலொட்டா**
**அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ**
**மாலற நேயம் மலிந்தவர் வேடமும்**
**ஆலயந்தானும் அரனெனத் தொழுமே'**

எனவரும் பன்னிரண்டாஞ் சூத்திரமாகும். பன்னிரண்டாந் திருமுறையாகிய பெரியபுராணத்தில் அமைந்த அடியார் செய்திகள் சிவஞான போதம் பன்னிரண்டாஞ் சூத்திரப் பொருளுக்குரிய இலக்கியங்களாக அமைந்திருத்தலை யுணர்வோர் பன்னிரு திரு முறைகளின் பயனாக அமைந்ததே சிவஞானபோதம் என்னும் மெய்ம்மையினைத் தெளிவாக உணர்வார்கள்.

மக்களது ஆக்கப் பொருளாய் வழங்கும் மொழி, அதனைத் தாய் மொழியாகக் கொண்ட மக்களது மனவளர்ச்சிக்கு ஏற்ப வளம் பெற்றுயர்வதாகும். என்றுமுள தென்தமிழாகிய நம் தமிழ் மொழியும் செயற்கரிய செய்வாராகிய திருத்தொண்டர்களின் அருள் வாழ்க்கையின் பயனாக அன்பு முதலிய நற்பண்புகளை நிரம்பப் பெற்றதாய், 'ஞாலமளந்த மேன்மைத் தெய்வத் தமிழ்' எனப் பாராட்டிப் போற்றும் பெருஞ்சிறப்பினைப் பெற்றதிறத்தினையும், அக்காலத்தில் ஆட்சி மொழியாய் தமிழ்

விளங்கிய முறையினையும் அருண்மொழித் தேவராகிய சேக்கிழாரடிகள் தாம் இயற்றிய திருத்தொண்டர் புராணத்தில் இனிது விளக்கியுள்ளார். ஆசிரியர் திருத்தொண்டர்களின் வரலாற்றினை விரிக்குமிடங்களில் எல்லாம் தமிழில் உயர்த்தற்கண் விகுதியாகிய ஆர்விகுதியினைப் பெய்து இக்காப்பியத்தினை வேத்தியல் தமிழ் நடையில் அமைத்துள்ள சொல்வனப்பு நல்லிசைப் புலவர்களால் வியந்து பாராட்டுதற்குரியதாகும். காப்பியத்தைப் பயில்வோருள்ளத்தில் அதிர்ச்சியை விளைக்கும் துன்ப நிகழ்ச்சிகளைக் கூறுமிடத்து,

**'பவ்வத்தில் மன்னவன் சொன்னபடி முடித்தார் அப்பதகர்'**
**(திருநாவுக்-124)**

**'பத்திரம் வாங்கித் தான்முன் நினைந்த அப்பரிசே செய்ய'**
**(மெய்ப்-15)**

**'முன்னின்ற பாதகனுந் தன்கருத்தே முற்றுவித்தான்'**
**(ஏனாதி - 40)**

என மங்கல மொழியால் மறைத்துக் கூறுதல் ஆசிரியரது மொழித் திறத்தினை நன்கு விளக்குவதாகும்.

'அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல் வாக்கின் துறை வெல்ல'த் தோன்றிய இக்காப்பியத்தில் தமிழ் மக்களின் சென்ற காலத்தின் பழுதிலாத் திறமும் இனி எதிர்காலத்தின் சிறப்பும் ஆகியவற்றை வரலாற்று முறையில் உணர்ந்து நிகழ்காலச் சமுதாயத்தைத் திருத்தி அமைத்துக்கொள்ளுதற்கேற்ற உயர்ந்த கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன.

தெய்வம் உண்டெனத் தெளிந்த நல்லறிஞர்கள் எத்துணை யிடர்கள் அடுக்கி வந்தாலும் வாழ்க்கையில் பிறர்யார்க்கும் அடிமைப்படாது எவ்வுயிர்க்கும் முதல்வனாகிய இறைவன் ஒருவனுக்கே தொண்டுபட்டு வாழும் உரிமையுணர்வும், தொழில்களில் உயர்வு தாழ்வு கருதாமையும், தாம் பல்வேறு தொழில்களைச் செய்தும் அவற்றால் வரும் ஊதியத்தைத் தமக்கென வைத்துக்கொள்ளாமல் அரனடியார்களாகிய அன்பர்களுக்கு ஈந்துவக்கும் மகிழ்ச்சியும், 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்னும் உயர்ந்த நோக்கத்துடன் வாழ்க்கையில் தாம் கொண்ட குறிக்கோளை உயிரைக் கொடுத்தாயினும் நிறைவேற்றும் உள்ளத்து உரனுடைமையும், நேயமலிந்த அடியார்களை இறைவனெனவே தெளிந்து வழிபடும் தெளிவுடைமையும், இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யும் சால் புடைமையும், இவ்வுலகியலில் நேரும் இடர்களுக்கு உறுதுணையாக இறைவனுளன் என உளம்பொருந்தி இன்ப

துன்பங்களை ஒப்ப அனுபவிக்க இசையும் மனஅமைதியும், அமைதி முறையில் நின்று உண்ணாமை முதலிய நோன்புகளால் உலகில் தீமைகளை எதிர்த்து விலக்கும் திறமும், தவறு செய்வோர் யாவராயினும் விருப்பு வெறுப்பின்றி ஒப்பநாடி அதற்குத் தக ஒறுக்கும் உளத்திட்பத்தினைக் குடிமக்கள் அனைவர் உள்ளத்திலும் நிலைபெறச் செய்யும் வன்மையும், உலகியலிற் பொருளாட்சி யொன்றையே பெரிதென மதியாது அருளாட்சியே சிறந்ததென நிலை நாட்டும் ஆற்றலும், வாழ்வெனும் மையல் விட்டு வறுமையாம் சிறுமை நீக்கிக் குலப்பிரிவுகளாலும் செல்வ வறுமைகளாலும் வேறுபடாது 'ஒன்றே குலம் ஒருவனே தேவனும்' எனவுணர்ந்து எவ்வுயிர்க்கும் நன்றே புரியும் சமநிலைச் சமுதாயத்தை நாட்டில் உருவாக்கும் நெறிமுறைகளும், யாவருடனும் உயர்வாகவும் இனிமையாகவும் உரையாடும் மொழித்திறமும், குமரிமுதல் இமயம் வரை பரவியுள்ள நம் நாட்டில் வடக்குந் தெற்கும் ஒத்த தகுதியுடையனவே எனக்கருதி யொழுகும் ஒருமைப் பாட்டுணர்வும், நாட்டு மக்கள் தமது உலகியற் போகத்தில் நாட்டங்கொண்டு தத்தமக்குரிய கொள்கைகளை மாற்றிக் கொள்ளாமல், தமக்குரிய மொழி, சமயம் ஆகியவற்றைப் பேணிப் போற்று முகத்தால் மற்றவர்கள் மதிக்க வாழ்தல் வேண்டும் என்னும் ஊக்கமும், அரசியல் வளர்ச்சிக்குரிய நீதிகளும், சமய நிந்தனையின்றி எல்லாச் சமயங்களும் தத்தம் வரம்பில் நின்று வளர்தற்கு இடந்தரும் முறையில் அரசியல் ஆட்சி அமைதல் வேண்டும் என்பதும், நல்லோர் திருக்கூட்டம் நாட்டைத் திருத்தி நலம் வழங்கும் என்பதும் ஆகிய உயர்ந்த உண்மைகள் பல இக்காப்பியத்தில் நன்கு விளக்கப்பெற்றுள்ளன.

மக்களது மொழித்திறத்தால் அவர்களது வாழ்க்கை திருந்துதல் உண்டென்பதனைத் திருநீலகண்டக் குயவ நாயனார் புராணத்தில் ஆசிரியர் இனிது விளக்கியுள்ளார்.

**'எம்மைத் தீண்டுவீராயின் திரு நீலகண்டம்'**

எனத் தம் மனைவியார் கூறிய திருவருள் ஆணைக்கு அடங்கி,

**'எம்மை என்றதனால் மற்றைமாதரார் தமையும்**
**என்றன் மனத்தினும் தீண்டேன்'**

என்று உறுதி பூண்ட திருநீலகண்டக் குயவனாரும் அவர் தம் அன்புடைய மனைவியாரும் மெய்யுறு புணர்ச்சியின்றி வளமலி இளமை நீங்கி வடிவுறு மூப்பு வந்து தளர்வொடு சாய்ந்தும் தம்பிரான் திறத்து அன்பு நீங்காமல் இல்வாழ்க்கை நெறியினை இனிது நிகழ்த்திய முறையினையும், அவ்விருவரது தூய அன்பின் திறத்தினைச் சிவபெருமான் சிவயோகியாராக எழுந்தருளி 'ஞாலத்தார் விரும்பியுய்யும் நன்னெறி இதுவாம்' எனக்காட்டிய திறத்தினையும் சேக்கிழார் விரித்துக் கூறும் பகுதி,

**'அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை அஃதும்**
**பிறன்பழிப்ப தில்லாயின் நன்று'**

எனவரும் திருக்குறளுக்குரிய சிறந்த விளக்கவுரை போன்றமைந்திருத்தல் அறிந்து மகிழத் தகுவதாகும்.

முற்காலத் தமிழ் மக்கள் வாழ்க்கையில் அன்பினால் ஒருவனும் ஒருத்தியும் கலந்து வாழும் காதல் வாழ்விலும் கூட உயிர்க்குரியராகிய கடவுட்பற்றே மேம்பட்டு விளங்கிய தென்பதனை,

**'அண்ணலவன் தன்மருங்கே அளவிறந்த காதலினால்**
**உண்ணிறையும் குணம் நான்கும் ஒருபுடைசாய்ந்தன எனினும்**
**வண்ணமலர்க் கருங்கூந்தல் மடக்கொடியை வலிதாக்கிக்**
**கண்ணுதலைத்தொழும் அன்பே கைக்கொண்டு செலவுய்ப்ப'**
**(பெரிய - தடுத்தாட் - 145)**

எனவரும் பாடலில் ஆசிரியர் நன்கு விளக்குகின்றார்.

அன்புடையாரிருவர் ஒருவரையொருவர் இன்றியமையா தாராய்க் கலந்து வாழ்தற்கு ஏக்கற்று வருந்தும் துயர் நிலையிலும், தாம் வாழும் தமிழ் நாட்டையும் தம் தாய்மொழி யாகிய தமிழையும் மறவாது போற்றும் பண்பினராக வாழ்ந்த அக்காலத் தமிழ் மக்களது இயல்பினை,

**'பிறந்ததெங்கள் பிரான்மலயத் திடைச்**
**சிறந்தணைந்தது தெய்வநீர் நாட்டினில்**
**புறம்பணைத்தடம் பொங்கழம் வீசிட**
**மறம் பயின்ற தெங்கோதமிழ் மாருதம்'**
**(பெரிய - தடுத்தாட் - 167)**

என நாவலூர் நம்பியைக் காதலித்த நங்கை பரவையார் தமிழ்த் தென்றலை நோக்கி இரங்கிக் கூறுவதாக அமைந்த பாடலில் சேக்கிழார் புலப்படுத்தியதிறம் கூர்ந்துணரத் தகுவதாகும்.

இந்நூலில், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பியாரூரர், திருமூலர், காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர்கோன், சேரமான் பெருமாள் ஆகிய திருமுறையாசிரியர்களின் வரலாறுகளை விரித்து கூறும் நிலையில் அவ்வாசிரியர்கள் திருவாய் மலர்ந்தருளிய தேவாரப் பதிகங்கள் முதலாகவுள்ள திருமுறைப் பனுவல்களின் சொற்பொருள் நலங்களையும் கருத்துக்களையும் எடுத்துக்கூறும் முறையில் அமைந்த பகுதிகள் அத் திருமுறைகளுக்கு அருண்மொழித்தேவர் அப்பெருமக்கள் திருவடிகளை வணங்கி அவர்தம் திருவருட்டுணை கொண்டு கண்டுணர்த்திய சிறந்த உரை விளக்கங்களாகத் திகழ்கின்றன.

இலக்கியங்களுக்கு அழகுதரும் தன்மை உவமை உருவகம் சிலேடை முதலிய பொருளணிகளையும் மடக்கு முதலிய சொல்லணிகளையும் தன்னகத்தே கொண்டு நவில்தொறும் சுவைமிகப் பயப்பதாய், பத்திச் சுவை ஊற்றெடுத்துப்பாயும் திருவருட்கடலாய், தித்திக்குந் தெள்ளமுதாய்த் திகழும் திருத்தொண்டர் புராணமாகிய செந்தமிழ்க் காப்பியத்தைத் தமிழ் மக்களும் சிறப்பாகத் தமிழ் பயிலும் மாணவர் அனைவரும் ஆர்வமுடன் கற்றுப் பயன் பெறுதல் வேண்டுமெனத் தொண்டர்சீர் பரவுவாராகிய சேக்கிழார் பெருமான் திருவடிகளை இறைஞ்சிப் போற்றுகின்றேன்.

**'என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்**
**ஒன்று காதலித் துள்ளமும் ஓங்கிட**
**மன்றுளாரடியாரவர் வான்புகழ்**
**நின்ற தெங்கும் நிலவியுலகெலாம்'**

**திருச்சிற்றம்பலம்**



## பிற்சேர்க்கை 1

## தாராசுரம் இராசராசேச்சுரத் திருக்கோயிலிலுள்ள திருத்தொண்டத் தொகையடியார்களின் வரலாற்றுச் சிற்பங்கள்

கும்பகோணத்தை அடுத்துத் தென்மேற்கே ஒரு கல் தொலைவில் உள்ளதும் இக்காலத்தில் தாராசுரம் என வழங்கப் பெறுவதும் ஆகிய ஊர், முற்காலத்தில் சோழர் தலைநகரங்களுள் ஒன்றாய் விளங்கிய பழையாறை நகரின் வடகீழ்ப் பகுதியாகும். கி.பி. 1146 முதல் 1163 வரை சோழநாட்டினை ஆட்சிபுரிந்த இரண்டாம் இராசராசசோழன் பழையாறை நகரினை வட கீழ்த்திசையில் மேலும் விரிவடையச் செய்து இராசராசபுரம் எனத் தன் பெயரால் வழங்கும் வண்ணம் அதனைத் தனது தலைநகராகக் கொண்டான். அந்நகரத்தின் வட கீழ்த்திசையில் தன் பெயரால் இராசராசேச்சரம் என்னும் சிவாலயத்தினை அமைத்து, அதன்கண் இராசராசேச்சர முடையாராகிய இறைவரை எழுந்தருளுவித்து நாள் வழிபாடும் திருவிழாக்களும் சிறப்புற நிகழச் செய்தான். இவ்வேந்தனுக்கு அவைக்களப் புலவராக விளங்கிய ஆசிரியர் ஒட்டக் கூத்தர், தக்கனது யாகம் வீரபத்திரக் கடவுளால் அழிக்கப்பட்டபொழுது, உமா தேவியார்க்குப் போர்க்களங் காட்டி அங்கு இறந்தோர் எல்லோர்க்கும் அருள் புரியும் பொருட்டுச் சிவபெருமான் எழுந்தருளினார் எனக்கூறும் நிலையில், இங்குள்ள இராசராசபுரியீசர் எழுந்தருளினார் என்று தாம் இயற்றிய தக்கயாகப் பரணியிற் கூறியிருப்பது இத்திருக் கோயிலின் சிறப்பினை நன்கு புலப்படுத்துவதாகும்.* (*ஆராய்ச்சிப் பேரறிஞர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார் இயற்றிய பிற்காலச் சோழர் சரித்திரம், பகுதி II பக்கம் 115, 116) இரண்டாம் இரராசராச சோழனால் அமைக்கப் பெற்ற இராசராசேச்சரமாகிய மாடக்கோயில் கண்டோர் கண்களையும் கருத்தினையும் ஈர்க்கும் சிற்பத்திறம் வாய்ந்ததாகும். முற்காலத்தில் மன்னர் போற்றும் பெருமையுடன் விளங்கிய அத்திருக்கோயில் இக்காலத்தில் தன் சிறப்பனைத்தும் இழந்து பழுதடைந்து அழிவுற்ற நிலையில் உளது. எனினும் இத்திருக்கோயிலுள்ள கருப்ப இல்லின் புறச்சுவரில் திருத்தொண்டத் தொகை அடியார்களின் வரலாறுகளைப் புலப்படுத்தும் முறையில் அமைக்கப் பெற்றுள்ள சிவனடியார் சிற்பங்களும், திருச்சுற்று மாளிகையிலும் இராசகெம்பீரன்

திருமண்டபத்திலும் அமைந்த அழகிய சிற்பங்களும் இன்றும் அத் திருக்கோயிலின் பழைய பெருமைகளை அறிவுறுத்திக் கொண்டு அதனை அமைத்த இராசராச சோழனுடைய புகழ்த்திறங்களாக நிலைபெற்றுள்ளன.

வரலாற்றுச் சிறப்புடைய இத்திருக்கோயில் விமானத்தின் புறச்சுவரில் அடித்தளத்தின் மேலும் மாடப்புரைகளின் கீழும் ஆக ஆறங்குல உயரம் அமைந்துள்ள அடிப்பக்கத்துப் பட்டியலாகிய நடுப்பத்தியில் தென்கிழக்கு முனையிலிருந்து வடகிழக்கு முனை முடியத் திருத்தொண்டத் தொகை அடியார்களின் வரலாறுகள் கருங்கல்லிற் புடைப்புச் சிற்பங்களாக அமைக்கப் பெற்றுள்ளன. இச் சிற்ப வரிசைக்குமேல் மரச்சட்டம் போன்று அமைந்த கற்பத்தியில் இவற்றுக்குரிய அடியார்களின் பெயரொடு தொடர்ந்த குறிப்புக்கள் தமிழ் எழுத்திற் பொறிக்கப் பெற்றுள்ளன. இச்சிற்பங்களின் இடையே யமைந்த மூலை முடுக்குகளாகிய இடைவெளிகளில் அழகுக்கெனச் செதுக்கப் பெற்ற பூவேலைப் பாடுகளுடன் கூடிய வேறுசில சிற்பங்களும் தெய்வத் திருவுருவங்கள் சிலவும் இடம்பெற்றுள்ளன.

'தில்லைவாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' எனத் திருத்தொண்டத் தொகையில் அடியார்கள் போற்றப் பெற்றுள்ள முறையினை அடியொற்றித் தில்லைவாழந்தணர் என்னும் தொகையடியார் முதலாக, அன்னவனாம் ஆரூரன் எனக் குறிக்கப்பட்ட நம்பியாரூரர் ஆகிய தனியடியார் ஈறாக வமைந்த நாயன்மார்களுக்குரிய சிற்பங்கள் இவ்விமானத்தின் தென்கீழ் மூலை தொடங்கி வடகீழ் மூலை முடியத் தொடர்ச்சியாக அமைக்கப்பெற்றுள்ளன. நம்பியாரூரர் அருளியத் திருத் தொண்டத் தொகையின் பெயர் முறையினை ஒட்டியமைந்த இச் சிற்பங்களின் வரிசையில் அரிவாட்டாயநாயனாரைக் குறித்த சிற்பம் ஒன்று மட்டும் உருத்தெரியாதவாறு சிதைந்துள்ளது. திருநாவுக்கரசரைக் குறித்த சிற்பத்துள் ஒரு பகுதி சிதைய ஒரு பகுதி மட்டுமே சிதையாமல் எஞ்சியுள்ளது. இவற்றுள் ஐம்பது சிற்பங்களுக்குரிய கல்வெட்டுக் குறிப்புக்கள் மட்டும் அழியாதுள்ளன. ஏனைய வற்றின் எழுத்துக்கள் சிதை வுற்றமையால் அக்குறிப்புக்கள் இவை யென்று தெளிவாக அறிதற்கு இயலவில்லை. இவ்வாறு கல்வெட்டுக் குறிப்புக்கள் சிதைந்து மறைந்தாலும் திருத்தொண்டத் தொகையின் வரிசை முறையினை உளங்கொண்டு இச்சிற்பங்களை நோக்குங்கால் இவை இன்ன இன்ன நாயன்மார்க்குரிய சிற்பங்களாகும் எனத் திட்டமாகத் தெரிந்து கொள்ளுதற்குரிய அடையாளங்கள் இச் சிற்பங்களில் தெளிவாகப் புலனாதல் காணலாம்.

மேற்குறித்த சிற்பங்களில் அவற்றின்மேற் பொறிக்கப் பெற்றுள்ள கல்வெட்டுக் குறிப்புக்களைக் கொண்டு இது இன்ன நாயனாரைக் குறித்தது எனத் தெளிவாகக் கூறுதற்குரிய ஐம்பது சிற்பங்களை மட்டும் தென்னிந்தியக் கல்வெட்டுத் துறையினர் வரி ஓவியம் (Line Block) ஆக வரைந்து அவற்றுக்குரிய கல்வெட்டுக் குறிப்புக்களுடன் 1920-ஆண்டின் அறிக்கையில் வெளியிட்டுள்ளார்கள். அறிஞர் பிலியோசா (Jean Filliozat) அவர்கள் தலைமையிற் புதுவை மாநிலத்திற் கலைப்பணி புரியும் பிரஞ்சிந்தியக் கலைக் கழகத்தார், இராசராசபுரத்து இராசராசேச்சரத் திருக்கோயிலில் உள்ள இச்சிற்பங்களைச் சிறந்த முறையில் நிழற்படம் எடுத்துள்ளனர். அவர்கள் எடுத்த நிழற்படங்கள் அவர்களது இசைவு பெற்று அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தாரால் அச்சுப் படங்களாக்கப் பெற்றுத் திருத்தொண்டத் தொகை வரிசையில் இந்நூலில் முதல் முதலாக வெளியிடப் பெற்றுள்ளன.

இச்சிற்பங்களுக்குரிய கல்வெட்டுக் குறிப்புக்கள் பல சிதைவுற்றழிந்த நிலையில், இச் சிற்பங்களிற் குறிக்கப்பட்ட வரலாற்றுச் செய்திகள் இவையெனத் துணிதற்கு இச்சிற்பங்களை நேரிற் கண்டு அறிதல் இன்றியமையாத தாயிற்று. இந் நோக்கத்துடன் இராசசராசபுரத் திருக்கோயிலுக்குச் சென்று அங்குள்ள இந்தச் சிற்பங்களின் அமைப்புக்களைக் கூர்ந்து நோக்கித் திருத்தொண்டத் தொகை, திருத்தொண்டர் திருவந்தாதி, திருத்தொண்டர் புராணம் ஆகிய திருமுறைகளுடன் ஒப்புநோக்கி ஆராய்ந்தபோது இதுவரை விளக்கம் பெறாத செய்திகள் சில நன்கு புலனாயின. இச் சிற்பங்களில் சேரமான் பெருமாள் கதை பற்றிய சிற்பங்களுள் ஒன்றைக் குறித்தும் கல்வெட்டுத் துறையினரும் இக்கால வரலாற்றாராய்ச்சியாளர் சிலரும் எழுதிய குறிப்புக்கள் சில பொருத்தமற்றன என்பது புலனாயிற்று.* (* இச் சிற்பங்களைக் குறித்துத் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி முதல்வர் திரு. K. M. வேங்கடராமையா M.A., B.O.L., அவர்கள் 1961 ஜனவரியில் வெளிவந்த 'திருக்கோயில்' பத்திரிகையில், 'தாராசுரத்து இராசராசேச்சுரம்' என்ற தலைப்பில் வெளியிட்டுள்ள கட்டுரை, இச் சிற்பங்களின் வரிசை முறையினைப் பிறழாது அறிந்து கொள்ளுதற்கு உறுதுணையாக அமைந்துள்ளமை இங்குக் குறிப்பிடத் தகுவதாகும்.) திருத்தொண்டத் தொகையடியார்களின் வரலாற்று நிகழ்ச்சியைக் குறித்தமைந்த இச் சிற்பங்களைக் கூர்ந்து நோக்கியபொழுது இவை தொண்டர்சீர் பரவுவாராகிய சேக்கிழார் நாயனார் காலத்திலேயே வரலாற்று முறையினை ஆராய்ந்து அமைக்கப் பெற்ற தொன்மை வாய்ந்தன என்னும் உண்மை இனிது புலனாயிற்று.

இச் சிற்பங்கள் யாவும், குறித்த அடியாரை மட்டும் குறிப்பிடும் முறையில் தனித் திருவுருவமாக அமைக்கப்படாமல், அத்திருத்தொண்டரது சிறப்புக்குரிய வாழ்க்கை நிகழ்ச்சியினிடையே அவ்வடியவரைக் குறித்துக்காட்டும் முறையில் வரலாற்றுச் சிற்பங்களாக அமைக்கப்பெற்றுள்ளன. இச் சிற்பங்களிற் குறிப்பிடுதற்குரிய நாயனாரது திருவுருவத்துடன் அவரது வாழ்க்கை நிகழ்ச்சியிற் பிணைந்துள்ள பிறரது உருவமும் செயல்களும் செயல்களுக்குரிய சூழ்நிலைகளும் அவரவர் உள்ளக் குறிப்புக்களின் வெளிப்பாடாகிய மெய்ப்பாடுகளுடன் தெளிவாக அமைத்துக்காட்டப் பெற்றுள்ளன. அன்றியும் அவ்வச் சிற்பத்திற் சிறப்பாகக் குறிப்பிடுதற்குரிய திருத்தொண்டரது திருவுருவம் அவருடைய வெவ்வேறு நிகழ்ச்சிகளைக் குறிப்பிடும் நிலையில் நிகழ்ச்சிகள் தோறும் தொடர்ந்து இடம்பெற்றிருத்தலையும், அத்திருத்தொண்டர் வழிபட்ட திருக்கோயிலும் அவர்க்கு அருள்புரியும் நிலையில் இறைவன் அம்மையப்பராக விடை மீது எழுந்தருளிக் காட்சி நல்குதல் ஆகிய சிறப்புடைய நிகழ்ச்சியும் இடம்பெற்றிருத்தலையும் இச் சிற்பங்களிற் காணலாம். திருத்தொண்டத் தொகையிற் போற்றப் பெற்றுள்ள அடியார் வரலாறுகளிற் சிறப்புடைய வரலாற்று நிகழ்ச்சிகளை உருவாக்கிக் காட்டும் முறையில் அமைந்த இச் சிற்பங்கள் சேக்கிழாரடிகள் அருளிய திருத்தொண்டர் புராணமாகிய சொல்லோவியத்துடன் ஒருங்கு வைத்துணரத்தக்க கல்லோவியமாகத் திகழ்கின்றன.

திருத்தொண்டத் தொகையடியார்களைக் குறித்த இச் சிற்பங்களின் நிழற் படங்கள் தில்லை வாழந்தணர் முதலாக உடைய நம்பியாகிய சுந்தரமூர்த்தி நாயனார் ஈறாக 1 முதல் 72 முடியவுள்ள எண் வரிசையில் வெளியிடப்பெற்றுள்ளன வாதலின் அச்சிற்பங்களுக்குரிய விளக்கங்கள் 1 முதல் 72 முடியவுள்ள எண் வரிசையிற் பின்வருமாறு குறிக்கப்பெறும். குறித்த எண் முறைப்படியுள்ள இவ்விளக்கக் குறிப்புக்களையும் இக் குறிப்புக்களுக்குரிய எண்வரிசையிலுள்ள நிழற் படங் களையும் முறையே ஒப்ப வைத்துணருமிடத்து இச்சிற்பங்களை அமைத்த சிற்பியின் வரலாற்றுணர்வும் கலைத்திறமும் இவற்றை முன்னின்று அமைக்க அறிவுறுத்திய சோழ மன்னனது சிவநெறிப்பற்றும் இனிது விளங்கும்.

**(குறிப்பு : இச்சிற்பங்களின் நிழற் படங்கள் தெளிவாக இல்லாத காரணத்தினால் - எங்களது இப்பதிப்பில் இடம் பெறவில்லை என்பதனை வாசகர்களுக்குத் தெளிவுபடுத்திக் கொள்கிறோம். திருக்கோயில் சென்று கண்ணாரக் கண்டு தெளிக.)**

## 1. தில்லைவாழந்தணர்:

*இராச ராசபுரத் திருக்கோயில் விமானத்தின் வெளிப் புரத்தில் அடிப்பக்கத்துப் பட்டியல் பகுதியில் தென்கீழ் முனையிலிருந்து தொடங்கி வடகீழ் முனையில் முடியும் திருத்தொண்டத் தொகையடியார்களின் சிற்ப வரிசையில் தென்கீழ் முனையில் முதலாவதாக அமைந்தது, தில்லை வாழந்தணர்க்குரிய சிற்பமாகும். இதன்கண் வலமிருந்து இடம் முதற்கண் கோயிலும், அதனை நோக்கி முறையே குடையும் சாமரையும் திருவமுதும் தாங்கி நிற்கும் நிலையில் முந்நூலணிந்த அந்தணர் மூவரும் உள்ளமை காணலாம்.*

**'பொங்கிய திருவில்நீடும் பொற்புடைப் பணிகள் ஏந்தி**
**மங்கலத் தொழில்கள் செய்து மறைகளால் துதித்துமற்றும்**
**தங்களுக் கேற்ற பண்பில் தகும்பணி தலைநின் றுய்த்தே**
**அங்கணர் கோயி லுள்ளா அகம்படித் தொண்டு செய்வார்'**

*எனச் சேக்கிழாரடிகள் குறித்த முறையில் கூத்தப் பெருமான் திருக்கோயிலில் அணுக்கத் தொண்டினுக்கு உரியராய் விளங்கும் தில்லைவாழந்தணர்களாகிய திருக்கூட்டத்தனைக் குறித்தமைந்த இச்சிற்பத்தில், ஆயிரவர்க்கு ஒருவர் என்ற கருத்தில் மூவாயிரவரையும் குறிக்க அந்தணர் மூவர் இடம்பெற்றுள்ளமை காணலாம். இவ்வாறே திருப்பனந்தாள் திருக்கோயிலில் உள்ள திருத்தொண்டத் தொகைச் சிற்பவரிசையிலும் தில்லை வாழந்தணரைக் குறிக்கும் கருத்தில் அந்தணர் மூவர் அமர்ந்துள்ளமை ஒப்பு நோக்குதற் குரியதாகும்.*

## 2. திருநீலகண்ட நாயனார்:

*திருநீலகண்டக் குயவரும் அவர் தம் மனைவியாரும் கோலைப் பிடித்துக்கொண்டு திருப்புலீச்சரத் திருக்கோயிலின் முன்னுள்ள திருக்குளத்தில் மூழ்கியெழும் நிலையில் அமைந்தது இச்சிற்பமாகும்.*

## 3. இயற்பகை நாயனார்:

*வலமிருந்து இடம்: தூர்த்த வேடத்துடன் தம் இல்லத்திற்கு எழுந்தருளிய சிவனடியாரை இயற்பகையார் இருகைகளையும் குவித்து வரவேற்றல். "எந்தை எம்பிரான் அடியவர் அணைந்தார் என்று நின்றதோர் இன்ப ஆதரவால், சிந்தை அன்பொடு சென்றெதிர் வணங்கி... ... 'முந்தை என்பெருந் தவத்தினாலன்றோ முனிவர் இங்கெழுந்தருளியது' என்றார்" (பெரிய - இயற் - 5). இடமிருந்து வலம்: இயற்பகையார் தம் மனைவியாரை அடியார்க்கு அளித்தலும் அவர் ஏற்றுக்கொள்ளுதலும். நடுவே*

நிற்பவர் இயற்பகையார் மனைவியார். இயற்பகையார் திருவுருவத்தில் குடுமி வலப்பக்கத்திலும், தூர்த்த வேடத்தின ராகிய அடியார் திருவுருவத்தில் குடுமி இடப் பக்கத்திலும் அவ்விருவரையும் வேறுபடுத்திக் காட்டும் அடையாளங்களாகத் திகழ்தல் காண்க.

அருகில், இறைவன் அம்மையப்பராய் விடைமீது தோன்றி இயற்பகையார்க்கு அருள்புரிதல்.

## 4. இளையான்குடி மாற நாயனார்:

'இளைய மாறன்குடி மாறர் கதை' என இதன் மேற் பொறிக்கப் பெற்றுள்ளது. வலமிருந்து இடம்: இளையான்குடி மாறனார் வயலில் நெல்முளை வாரிக்கொண்டுவர அக்கூடையினை அவர் தம் மனைவியார் எதிர்சென்று வாங்குதல்; அந்நெல்லினைத் திருவமுதாக்கி அம்மையார் பரிகலத்தில் இட்டுப்படைத்து அமுது செய்தருள்க என வேண்டும் நிலையில் அங்கு எழுந்தருளியிருக்கும் அடியவர் சோதியாய் எழுந்து தோன்றுதலும் பின் உமையம்மையாருடன் விடையின் மேல் தோன்றி அருள்புரிதலும். அமர்ந்திருக்கும் அடியார் சோதியாய் எழுந்து மறைந்தார் என்பதனைக் குறிக்கும் அடையாளமாக இச்சிற்பத்தில் அமர்ந்திருக்கும் அடியார் முடிக்கு மேலாகச் சோதிச் சுடர்ப் பிழம்பு பொறிக்கப்பெற்றுள்ளமை காண்க.

## 5. மெய்ப்பொருள் நாயனார்:

வலமிருந்து இடம்: பொய்த்தவ வேடங்கொண்டு புகுந்த முத்தநாதன் தவிசின்மேல் அமர்ந்திருக்க, மெய்ப்பொருள் நாயனார் நிலத்தின்மிசையிருந்து ஆகமப்பொருளை வினவிய நிலையில் முத்தநாதன் புத்தக் கவளியில் மறைத்துவைத்திருந்த வாளினை உருவி மெய்ப்பொருளாரைக் குற்றுதலும், அதுகண்டு பொறாது அவனைக் கொல்லுதற்கு வாட்படையுடன் விரைந்த வாயில் காவலனாகிய தத்தனை நோக்கிய மெய்ப்பொருளார் 'தத்தா நமர்' எனக்கூறித் தம் வலக்கையினால் தடுத்தலும், மன்றுளாடும் திருவடிகளைச் சிந்தித்த மெய்ப்பொருளார்க்கு இறைவன் விடைமேல் அம்மையப்பராகத் தோன்றுதலும்.

## 6. விறன்மிண்ட நாயனார்:

வலமிருந்து இடம்: தேவாசிரிய மண்டபத்துள் அடியார்கள் அமர்ந்திருக்க, நம்பியாரூரர் திருவாரூர்ப் பூங்கோயிலில் இறைவனை வணங்குதற்கு ஒருபால் ஒதுங்கிச் செல்லுதலும், அம்மண்டபத்திலுள்ள அடியார்களில் ஒருவராகிய விறன் மிண்டர் அதனைக் காணுதலும், தேவாசிரிய மண்டபத்தில்

அமர்ந்திருக்கும் அடியார்களுக்குப் பின்புறமாக எழுந்து நிற்கும் முறையில் உள்ள திருவுருவமே விறன்மிண்ட நாயனாரைக் குறிப்பதாகும்.

## 7. அமர்நீதி நாயனார்:

அமர்நீதியார் பிரமசாரியாக வந்த இறைவர் பணித்த வண்ணம் அவரது கோவணத்தினைத் துலையின் (தராசின்) ஒரு தட்டில் வைத்து அதன் மற்றொரு தட்டிலே தம்பாலுள்ள பொன்னோடு நவமணித்திரள் முதலிய பலவகைப் பொருள்களையும் வைத்திடவும் கோவணத்தட்டு நேர் நில்லாது தாழ்ந்தமையால் இறைவரது இசைவு பெற்று மனைவியும் தாமும் அத்துலையினை வலங்கொண்டு ஏறியமர்ந்த நிலையில் துலையின் இரண்டு தட்டுகளும் ஒத்து நேர் நிற்றலும், நல்லூர் இறைவன் அம்மையப்பராக விடையின் மேல் தோன்றி அருள்புரிதலும்,

தராசின் வலப்பக்க முள்ள தட்டில் பொன் முதலிய பொருள்களுடன அமர்நீதியாரும் அவர் மனைவியாரும் அவ்விருவர்க்கும் நடுவே ஒரு குழந்தையும் இருத்தலும், இடப்பக்கமுள்ள தட்டிலே இறைவரது கோவணம் ஒன்று மட்டுமிருத்தலும், அத்தட்டின் அருகே மறைக்குலத்துப் பிரமசாரியின் உருவில் இடக்கையிற் கோலுடன் இறைவன் நிற்கும் கோலமும், அதனையடுத்து மாதொரு பாகராகிய இறைவர் விடைமேல் தோன்றியருளிய கோலமும் இச்சிற்பத்தில் நன்கு புலனாதல் காணலாம்.

## 8. எறிபத்த நாயனார்:

வலமிருந்து இடம்: தம் கையிலுள்ள தண்டில் தொங்கிய பூக்குடலையை யானை பறித்துச் சிதறினமையால் செயலற்று வருந்திய சிவகாமியாண்டார் தம் இரு கைகளையும் உயரத் தூக்கிச் 'சிவதா, சிவதா' என முறையிடுதலும், அதனையறிந்து வெகுண்ட எறிபத்தர் வலக்கையிலுள்ள மழுப்படையினால் யானையையும் பாகர்களையும் துணித்தற்கு முற்படுதலும்.

*(8)* A. எறிபத்தரால் கை துணிக்கப்பட்ட யானையும் அதன் மேல் உள்ள பாகர் இருவரும் மழுவினால் வெட்டுண்டு இறந்து கிடத்தலும் அயலே மழுப்படையுடன் நிற்கும் எறிபத்தரைக் கண்ணுற்ற புகழ்ச் சோழராகிய மன்னர், 'யானை செய்த குற்றத்துக்காக என்னையும் கொன்று தண்டித்தல் வேண்டும்' என்று தம் கையிலுள்ள உடைவாளினை எறிபத்தரிடம் தர, மன்னர் தம்முயிரைத் துறவாதவாறு எறிபத்தர் அவ்வாளினை வாங்கிக் கொள்ளுதலும்.

## 9. ஏனாதிநாத நாயனார்:

இச்சிற்பத்தின் நடுவில் வாட்படையினையும் கேடகத்தினையும் பற்றிய வண்ணம் இரு கைகளையும் தாழவிட்டுக்கொண்டு நிற்பவர் ஏனாதிநாத நாயனார். அவர்க்கு எதிரே என்றுமில்லாத வகையில் தன் நெற்றியில் வெண்ணீறு விளங்குமாறு கேடகத்தினையும் வாட் படையினையும் உயர்த்துப் பிடித்து நிற்பவன் அதிசூரன் என்னும் பகைவன். அருகே இறைவன் அம்மையப்பராக ஏனாதிநாதர்க்குத் தோன்றியருள் புரியுங்கோலம் அமைந்துள்ளமை காணலாம்.

## 10. கண்ணப்ப நாயனார்:

காளத்தியப்பர் வலத்திருக் கண்ணில் உதிரம் ஒழுகிய நிலையில் தமது வலக்கண்ணினை அப்பி மருந்து கைகண்ட கண்ணப்பர், காளத்தியப்பரது இடத்திருக் கண்ணிலும் குருதியொழுகிய நிலையில், அவ்விடத்தினை நேர்பட்டறிய வேண்டித் தமது இடது காலை ஊன்றிக் கொண்டு அம்பினால் தமது இடக் கண்ணினையும் தோண்டி இறைவரது இடத்திருக் கண்ணில் அப்புதற்கு முற்படுதல்.

**'கண்ணுதல் கண்ணில் தங்கண் இடந்தப்பின் காணும் நேர்பா**
**டெண்ணுவார் தம்பிரான் தன் திருக்கண்ணில் இடக் காலூன்றி**
**உள்நிறை விருப்பினோடும் ஒடுதனிப் பகழிகொண்டு**
**திண்ணனார் கண்ணில் ஊன்றத் தரித்திலர் தேவதேவர்**
**(பெரிய - கண்ணப்பர் - 182)**

என வரும் சேக்கிழார் வாய்மொழிக்கு ஏற்ப இச் சிற்பம் அமைந்திருத்தல் அறியத் தகுவதாகும்.

## 11. குங்குலியக் கலய நாயனார்:

திருப்பனந்தாள் தாடகை யீச்சரத்திலுள்ள சிவலிங்கத் திருமேனியின் சாய்வு நீங்க வேந்தன் யானைகளைப் பூட்டியிழுக்கவும் நிமிர்ந்து நேர்படா நிலையில் இளைப்புற்றமை யறிந்து வருந்திய குங்குலியக் கலயனார், 'யானும் இவ்விளைப் புற்று எய்க்கும் இதுபெற வேண்டும்' என்று சிவலிங்கத் திருமேனியொடு பொருந்திய கச்சினைத் தம் கழுத்திற்பூட்டி யிழுத்துச் சிவலிங்கத் திருமேனியை நிமிர்த்தல்.

## 12. மானக்கஞ்சாற நாயனார்:

தம் மகளை ஏயர்கோன் கலிக்காமர்க்குத் திரு மணஞ்செய்து கொடுப்பதாக இசைந்து திருமணம் நிகழ இருக்கும் நாளில், இறைவன் மாவிரத முனிவர் வடிவில் அங்கு வந்து, தம்மை

வணங்கிய மணமகள் கூந்தலை நோக்கி வியந்து 'இது பஞ்சவடிக்கு ஆகும்' என, அது கேட்ட மானக்கஞ்சாறர் தம் மகளது கூந்தலை அரிதல், இச்சிற்பத்தில் இடமிருந்து வலம்: மகளது கூந்தலையரியும் நிலையில் மானக்கஞ்சாறனாரது திருவுருவமும், அவர்க்கு எதிரே அதனைப் பெறுதற் பொருட்டு இரு கைகளையும் ஏந்திய நிலையில் மாவிரத முனிவர் திருவுருவமும், நடுவில் இறைவன் அம்மையப்பராக விடைமேல் தோன்றி அருள் புரியும் திருக்கோலமும் இடம்பெற்றிருத்தல் காணலாம்.

## 13. அரிவாட்டாய நாயனார்:

இறைவனுக்கு அமுதாகத் தாம் கொண்டு சென்ற செந்நெற் போனகமும் மாவடுவும் கமரிற்புகத் தளர்ந்து வீழ்ந்த அரிவாட்டாயர் தமது ஊட்டியினை அரியும் நிலையில் அமைந்த சிற்பம் உருத்தெரியாது சிதைந்துள்ளமையால் படமாக எடுக்கப்பெறவில்லை.

## 14. ஆனாய நாயனார்:

இச்சிற்பத்தின் நடுவில் வேய்ங்குழலிசைக்கும் ஆனாய நாயனாரும், அவரது குழலிசையில் உருகிய நிலையில் பறவை முதலியனவும் அவர் வலப்பக்கத்தில் படமெடுத்தாடும் பாம்பும் அவரது இசையிற் கட்டுப்பட்டு நிற்றலும், இசை விரும்புங் கூத்தனார் உமாதேவியாருடன் விடைமீது எழுந்தருளுதலும் ஆகிய காட்சிகள் இடம்பெற்றுள்ளமை காணலாம்.

## 15. மூர்த்தி நாயனார்:

வலமிருந்து இடம்: திருவாலவாய்க் கோயிலில் சந்தனத் திருத்தொண்டு புரியும் மூர்த்தி நாயனார் வடுகக்கருநாட மன்னன் சந்தனக்கட்டை கிடைக்காதவாறு தம் திருத்தொண்டுக்கு இடையூறு விளைத்த நிலையில் தமது கையின் பணிநிலை மாறதவாறு தம் கையினைச் சந்தனக் கல்லில் தேய்த்தலும், அந்நாளிரவிலே கொடுங்கோல் மன்னன் இறந்தொழிய நாட்டு மக்கள் வேண்டுகோட்கிசைந்து, திருநீரே அபிடேகமாகவும், உருத்திராக்கமே அணிகலனாகவும், சடைமுடியே மணி முடியாகவும் கொண்டு பாண்டிநாட்டின் நற்றவ வேந்தராக அமர்ந்திருத்தலும்.

## 16. முருக நாயனார்:

இடமிருந்து வலம்: முருக நாயனார் இறைவனுக்கு மலர்மாலை தொடுத்தலும், திருப்புகலூர் வர்த்த மானீச் சரத்திலுள்ள பெருமானுக்கு வாசமா மலர்மாலை யணிந்து

வழிபாடு புரிதலும் ஆகிய இருவகை நிலைகள் இச்சிற்பத்தில் அமைக்கப்பெற்றுள்ளன.

## 17. உருத்திர பசுபதி நாயனார்:

வலமிருந்து இடம்: உருத்திர பசுபதியார் பொய்கையில் மார்பளவு நீரில் நின்று உச்சிமேற் கைகுவித்து அருமறைப் பயனாகிய திருவுருத்திரத்தை இடைவிடாது ஓதுதலும் அவர்க்கு எதிரே இறைவன் அம்மையப்பராக விடைமீது எழுந்தருளி அருள் புரிதலும்.

## 18. திருநாளைப் போவார்:

நந்தனார் தில்லையின் எல்லையிலே இறைவன் பணித்த வண்ணம் தில்லைவாழந்தணர்கள் அமைத்த வேள்விக் குண்டத்தில் மூழ்கிப் பழைய உருவொழித்துப் புண்ணியமா முனிவடிவுடன் மார்பில் வெண்ணூல் விளங்க வேணிமுடி கொண்டெழுதல். வலப்பக்கம் இருவரும் இடப்பக்கம் ஒருவரும் ஆக அமைந்த அந்தணர் வடிவங்கள் மூன்றும் மூவாயிரவராகிய தில்லைவாழந்தணரைக் குறிப்பன. அடுத்துள்ளது தில்லைப்பெருங்கோயிலின் தெற்குக் கோபுரவாயில். அதனுட்புறத்தே திருநாளைப் போவராம் மறைமுனிவரை வணங்கி வரவேற்கும் நிலையில் அமைந்தது தில்லை வாழந்தணர் திருவுருவமாகும்.

## 19. திருக்குறிப்புத் தொண்ட நாயனார்:

வலமிருந்து இடம்: கோலூன்றி நிற்பவர் சிவனடியாராக வந்த இறைவர். அவரது ஆடையினைத் துவைத்துத்தரும் கருத்துடன் எதிர் நின்று வாங்குபவர் திருக்குறிப்புத் தொண்டர். எதிர்பாராது பெய்த மழையினால் குறித்த காலத்தில் துவைத்து உலர்த்திக் கொடுக்க இயலாத நிலையினராகிய திருக்குறிப்புத் தொண்டர் தம் தலையைப் பாறையில் மோதப் புகுதலும், அப்பாறையின் மருங்கு திருவேகம்பரது திருக்கை வந்தெழுந்து அவர் தலையினைப் பிடித்தலும் ஆகிய காட்சி அடுத்து அமைக்கப் பெற்றுள்ளது.

## 20. சேய்ஞலூர்ப் பிள்ளையார் கதை:

வலமிருந்து இடம்: சண்டேசர், சிவலிங்கத் திருமேனியின் மேல் பாலாட்டுதலும் அது கண்டு வெகுண்ட தந்தை எச்சதத்தன் பாற்குடத்தைக் காலால் இடறுதலும்.

(20) A. பாற்குடத்தைக் காலால் இடறிய தந்தையின் இருகால்களையும் சண்டேசர் மழுவினால் வெட்டுதலும், அம்மையப்பராகிய இறைவர் தம் சடைமுடி மேலுள்ள கொன்றை மாலையினை வாங்கிப் பிள்ளையார் முடியிற் சூட்டி

அருள்புரிதலும். இச்சிற்பம் 'மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க, வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினால் எறிந்த அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக்கடியேன்'' எனவரும் திருத்தொண்டத் தொகைக்குரிய விளக்கமாக அமைந்துள்ளமை காணலாம்.

## 21. திருநாவுக்கரசு நாயனார்:

அப்பர் நல்லூர் இறைவரால் திருவடி சூட்டப் பெறுதல். அருகே உள்ளது நல்லூர்த் திருக்கோயில். அம்மையப்பராகிய சிவபெருமான் தமது வலத்திருவடியினைத் திருநாவுக்கரசர் முடிமேற் சூட்டியருளுதலும் அந்நிலையில் நாவுக்கரசர் 'நனைந்தனைய திருவடியென் தலைமேல் வைத்தால் நல்லூரெம்பெருமானார் நல்லவாறே' என உளங்குளிர்ந்து பாடி அத்திருவடியினைத் தலைமேற்கொண்டு போற்றும் முறையில் திருநாவுக்கரசர் திருவுருவம் இறைவன் திருவடியின் கீழ் அமைந்திருத்தலும் இச் சிற்பத்தில் நோக்கத்தகும் சிறப்புடைய நிகழ்ச்சியாகும். இந்நிகழ்ச்சி இராசராச புரமாகிய பழையாறையை அடுத்துள்ள திருநல்லூரில் நிகழ்ந்த சிறப்புடைமைபற்றி இங்குக் குறிக்கப்பெற்றிருத்தல் வேண்டும். இச்சிற்பம்,

**"பெருவிர லிறைதா னூன்றப் பிறையெயி றிலங்க வங்காந்**
**தருவரை யனைய தோளான் அரக்கனன் றலறி வீழ்ந்தான்**
**இருவரும் ஒருவனாய வுருவமங் குடைய வள்ளல்**
**திருவடி சுமந்துகொண்டு காண்க நான் திரியுமாறே"**

(4-75-10)

எனவரும் அப்பர் அருண்மொழிக்கு உரிய இலக்கியமாக அமைந்துள்ளமை அறிந்து மகிழ்தற்குரியதாகும்.

## 22. குலச்சிறை நாயனார்:

இடமிருந்து வலம்: குலச்சிறையார், ஆளுடைய பிள்ளையாரும் சமண முனிவர்களும் தத்தம் சமயவுண்மையினை எழுதிய ஏடுகளை வைகைநதியில் இட்ட பொழுது, பிள்ளையார் ஏடு ஆற்றில் எதிர் ஏறிச்செல்லுதலைக் காணுதலும், புனல்வாதில் தோல்வியுற்ற சமணர்கள் கழுவேறக் காணுதலும். (இச்சிற்பத்தில் இடமிருந்து வலமாக முதலிலும் வலமிருந்து இடமாக ஐந்தாம் நிலையிலும் அமைந்துள்ள உருவங்கள் இரண்டும் குலச்சிறை யாரைக் குறிப்பன).

## 23. பெருமிழலைக் குறும்ப நாயனார்:

இதன் கண், நாயனார் சிவயோக நிலையில் அமர்ந்திருக்கும் நிலையிலும், சிவயோக முறையில் பிரமநாடி வழியே கருத்தைச்

செலுத்திக் கபாலநடு மறைமூலந்திறப்ப உயிரைச் செலுத்திக் கயிலையை யடைந்து அம்மையப்பர் திருவடிகளை இறைஞ்சி நிற்கும் நிலையிலும் இருவடிவங்கள் அமைந்துள்ளமை காண்க.

## 24. காரைக்காலம்மையார்:

காரைக்காற் பேயாராகிய அம்மையார், இரு கைகளையும் தரையிலூன்றித் தலையால் நடந்து கயிலாய மலையை நோக்கிச் செல்லுந் திருக்கோலம் இச் சிற்பத்தின் நடுவிலே அமைக்கப் பெற்றிருப்பதும், அம்மையார் தலையால் நடந்து செல்லும் வழி காடும் மலையுமாக அமைந்தமை புலப்பட அதன் இரு பக்கங்களிலும் மான் யானை முதலிய விலங்குகள் அமைக்கப் பெற்றிருப்பதும் காணத்தக்கன.

## 25. அப்பூதியடிகள்:

வலமிருந்து இடம்: (1) அப்பூதியடிகள் தண்ணீர்ப் பந்தரில் வழியிற் செல்வார்க்கு நீர்வார்த்தல்; (2) (நடுவில்) திருநாவுக்கரசர் அமர்ந்திருந்து திருநீறளிக்கும் நிலையில் மேலும் கீழுமாக இருவகைத் திருக்கோலம், (கீழேயுள்ளது மூத்த திருநாவுக்கரசு எங்கே என உளத்தடுமாற்றத்துடன் வினவும் நிலையையும், மேலேயுள்ளது, 'ஒன்றுக்கொலாம்' எனப் பதிகம் பாடி அவன் உயிர் பெற்றெழ இறைவனருளில் திளைத்திருக்கும் நிலையையும் குறிக்கும் முறையில் அமைக்கப் பெற்றிருத்தல் கூடும்); (3) தலைமேற் குவித்த கையினராகி நிற்கும் அப்பூதியடிகள் தாளமிட்டுத் திருப்பதிகம் பாடும் திருநாவுக்கரசருடன் திருப்பழனப் பெருமானைப் பரவிப் போற்றுதல் என இச்சிற்பத்தில் மூவகைக் காட்சிகள் அமைக்கப் பெற்றுள்ளமை காண்க.

## 26. திருநீலநக்க நாயனார்:

திருநீலநக்கர் திருச்சாத்த மங்கைத் திருக்கோயிலில் இறைவனுக்கு வழிபாடு செய்து முடித்துத் திருவைந்தெழுத்தோதி அமர்ந்திருக்கும் நிலையில், சிவலிங்கத் திருமேனியிற் சிலந்தியொன்று விழுதலைக் கண்ட அவர்தம் மனைவியார் அன்புடன் விரைந்து சென்று சிவலிங்கத் திருமேனியில் வாயினால் ஊதித்துமிய, அதுகண்டு பொறாது அனுசிதம் செய்தார் என்று அவரைப் பிடித்து விலக்குதல்.

## 27. நமிநந்தியடிகள்:

வலமிருந்து இடம்: திருவாரூர்த் திருக்குளத்தில் நமிநந்தியடிகள் நீரை முகத்தலும், அந்நீரினால் திருவாரூர் அரனெறித் திருக்கோயிலில் திருவிளக்கேற்றுதலும்.

## 28. ஆளுடைய பிள்ளையார்:

வலமிருந்து இடம்: பிரமதீர்த்தத்தில் மூழ்கிக் கரையேறிய சிவபாதவிருதயர், உமையம்மையார் அளித்த சிவஞானப் பாலைப் பருகிய நிலையிற் பொற்கிண்ணத்துடன் தோன்றிய பிள்ளையாரை நோக்கி, 'நீ யாரளித்த பாலடிசில் உண்டனை? எச்சில் மயங்கிட உனக்கு ஈது இட்டாரைக் காட்டுக' என்று கையிற் சிறிய குச்சியினை எடுத்து அடிக்க ஓங்குதலும், சிவஞானசம்பந்தராகிய பிள்ளையார், 'எம்மையிது செய்தபிரான் இவனன்றே!' என்று திருப்பதிகம் பாடித் தம்முன் விடைமேல் தோன்றிய அம்மையப்பரைத் தந்தையார்க்கு ஒரு திருவிரலாற் சுட்டிக்காட்டுதலும்.

## 29. ஏயர்கோன்கலிக்காம நாயனார்:

வலமிருந்து இடம்: வயிற்று வலியால் வருந்திய ஏயர்கோன்கலிக்காம நாயனார், 'தூதனாய் எம்பிரானை ஏவினான் வந்து தீர்ப்பதன் முன் என்னைப்பற்றி நின்று நீங்காப் பாதகச் சூலைதன்னை உற்ற இவ் வயிற்றினோடுங் கிழிப்பேன், என்று தமது உடைவாளாற் குற்றிக்கொண்டு இறந்துகிடத்தலும், அத்துயர் நிலையினைக் கண்ணுற்ற வன்றொண்டர் 'நானும் இவர்க்கு முன் இறந்தொழிவேன்' எனத்துணிந்து அக்குற்றுடை வாளைப் பற்றித் தம் உயிரைத் துறக்க முற்படும்போது இறைவரருளால் ஏயர்கோன்கலிக்காமர் உயிர்பெற்றெழுந்து வந்து வன்றொண்டர் கையிலுள்ள வாளினைப் பிடித்துக் கொள்ளுதலும்.

## 30. திருமூல நாயனார்:

திருவாவடுதுறைப் பெருமானை இறைஞ்சிய திருமூலர் அங்குள்ள அரச மரத்தின் அடியில் சிவயோக நிலையில் அமர்ந்திருத்தல். இச்சிற்பத்தில் திருமூலர்க்கு இடப்பக்கம் திருவாவடுதுறைத் திருக்கோயிலும், வலப்பக்கம் அரச மரமும் அம்மரத்தடியில் திருமூலரும் இருத்தல் காண்க.

## 31. தண்டியடிகள் நாயனார்:

பிறவிக் குருடராகிய தண்டியடிகள், திருவாரூர்த் திருக்குளத்தினைத் தோண்டும் பணியில் ஈடுபட்டு மண்ணை வெட்டியெடுக்கும் குழியிடத்தே முளையடித்துக் கயிறு கட்டி அக்கயிற்றைப் பற்றிக்கொண்டு மண்ணை அப்புறத்திற்கொண்டு செல்லுதலும், அதுகண்டு பொறாத சமணர்கள் அத்திருப் பணிக்குத் தடையாய் நிற்றலும்.

## 32. மூர்க்க நாயனார்:

*இச்சிற்பத்தில் மேலும் கீழுமாக இரண்டு நிகழ்ச்சிகள் குறிக்கப்பட்டுள்ளன. கீழுள்ள சிற்பம் மூர்க்க நாயனார் சூதாடிப் பொருளீட்டலைக் குறிப்பது. மூர்க்க நாயனார் தாம் சூதாட்டத்தால் ஈட்டிய பொருளைச் சிவனடியார்க்குத் திருவமுதாக்க அளிக்கும் முறையில் அமைந்தது மேலுள்ள சிற்பமாகும்.*

## 33. சோமாசி மாறனார்:

*தம் மனைவியாருடனிருந்து சிவபெருமானைப் போற்றும் வேள்வியைச் செய்தல். இச்சிற்பத்தில் உயர்ந்த ஆசனத்தில் அமர்ந்து வேள்வி செய்பவர் சோமாசி மாறர். அவர்க்கு எதிரே வேள்வித் தீயினை வழிபடும் நிலையில் குவித்த கைகளுடன் மற்றோர் ஆசனத்தில் அமர்ந்திருப்பவர் அவருடைய மனைவியாராவர். இவ்விருவர்க்கும் நடுவே வேள்விக் குண்டத்தில் வேள்வித்தீ சுடர்விட்டு மேலோங்கி யெழுதல் காண்க.*

## 34. சாக்கிய நாயனார்:

*சாக்கியனார் உமையொருபாகனாகிய இறைவனை மறவாது கல்லெறிந்து வழிபடுதல். (சிவலிங்கத் திருமேனியிற் சாக்கியர் கல்லெறிந்து வழிபட்டதனைக் குறிக்கச் சிற்பத்தில் உள்ள சிவலிங்கத் திருமேனியின் மேல் இரண்டு கற்கள் புலப்படும் நிலையில் இச்சிற்பம் அமைக்கப் பெற்றிருத்தல் நோக்குக.).*

## 35. சிறப்புலியாண்டார்:

*இடமிருந்து வலம்: 'சீர்கொண்ட புகழ் வள்ளல்' எனத் திருத்தொண்டத் தொகையிற் சிறப்பிக்கப் பெற்ற சிறப்புலி நாயனார் சிவனடியார்க்குப் பொருள் வழங்குதலும், சிவனடியார் இருவர் அவர் தரும் பொருளை வலக்கையினை நீட்டி வாங்குதலும்.*

## 36. சிறுத்தொண்டர் கதை:

*இத்தலைப்பில் அமைந்த சிற்பத்தில் திருவெண்காட்டு நங்கையார் தம்மைந்தன் சீராளனுடைய கால்கள் இரண்டினையும் பிடித்துக்கொள்ளச் சிறுத்தொண்டர் சீராளன் தலையினைக் கருவி கொண்டு அரிதலும், திருவெண்காட்டு நங்கையார் கறியமுது அமைத்தலும். இதற்கு நேரே மேலுள்ள சிற்பத்தில் திருவெண்காட்டு நங்கையார், 'செய்ய மணியே சீராளா வாராய்; சிவனாரடியார் யாம் உய்யும் வகையால் உடனுண்ண அழைக்கின்றார்' என்று ஓலமிட்டு அழைக்கப் பரமரருளால் பள்ளியினின்று ஓடி வருவான்போல் வந்த சீராளனை இரு*

கைகளால் எடுத்துத் தழுவுதலும். இவ்விருகாட்சியினை அடுத்து அமைந்த சிற்பப்பகுதி இங்குப் படமாக எடுக்கப் பெறவில்லை. விடுபட்ட அப்பகுதியில் கீழுள்ள சிற்பத்தில் சிவனடியார் ஒருவர் அமர்ந்திருத்தலையும் அவர்முன் அன்னமும் கறிகளும் படைக்கப் பெற்றிருத்தலையும், 'நாம் இங்கு உண்பது நும் மைந்தன் வந்தால்; அவனை நாடி அழையும்' என அவ்வடியார் தமது இடக் கையினைக் காட்டி அறிவித்தலையும், அதன் மேலுள்ள சிற்பத்தில் இறைவன் அம்மையப்பராக விடையின்மீது தோன்றி யருள்புரிதலையும் காணலாம்.

## 37. சேரமான் பெருமாள் கதை:

இதன்கண் வலமிருந்து இடம்: சேரமான் பெருமாள் பட்டத்து யானைமேல் அமர்ந்து தனக்குப் பின் ஏவலரொருவர் அமர்ந்து குடைபிடிக்க உரிமை பரிசனர்கள் உடன்வர நகர்வலம் வரும் காட்சியும், இங்ஙனம் யானை மேல் உலாவரும் சேரமான், உவர் ஊறி மேனி வெளுத்த வண்ணானொருவனை நெடுந்தொலைவிற் கண்டு சிவனடியார் எனக்கொண்டு யானையின் கழுத்தினின்றும் இறங்கி நின்று இருகைகளையும் தலைமேற்குவித்துத் தொழ, அதுகண்டு சிந்தை கலங்கிய வண்ணான், 'யாரென்று அடியேனைக் கொண்டது? அடியேன் அடிவண்ணான்' என்று சொல்லி இறைஞ்சி நிற்க, 'அடியேன் அடிச்சேரன்' என்று கூறி நிற்கும் காட்சியும் இதன்கண் இடம் பெற்றுள்ளமை காணலாம். இதன்கண் அடியார் வேடத்தை நினைப்பித்த வண்ணானது உருவம் இங்குள்ள நிழற்படத்தில் எடுக்கப்படாது விடுபட்டது. இச்சிற்பம் பெரியபுராணம் சேரமான் பெருமாள் நாயனார் புராணத்தில் 17,18,19-ஆம் செய்யுட்களிற் கூறப்பட்ட நிகழ்ச்சியினை விளக்கும் முறையில் அமைந்து இருத்தல் அறியத்தகுவதாகும்.

கழறிற்றறிவாராகிய இவர் சேர நாட்டு வேந்தராய் முடி சூட்டப்பெற்றுத் திருவீதியில் உலாவரும் போது உவர் மண்ணூறிய மேனியினையுடைய வண்ணானைக் கண்டு சிவனடியார் வேடம் என்று தொழுத அன்பின் பெருமை குறித்து இவ்வேந்தர் பெருமானுக்கு வண்ணானைக் கும்பிட்டார் * (*S. I. I. Vol. VIII No. 533. என்றதொரு பெயரும் வழங்குவதாயிற்று.)

இனி, இச்சிற்பம் சேரமான் பெருமாள் பாணபத்திரரை வரவேற்ற செய்தியைக் குறிப்பதென்று தென்னிந்தியக் கல்வெட்டுத் துறையினரும் * (*தென்னிந்தியக் கல்வெட்டுத்துறை, 1920-ஆம் ஆண்டு அறிக்கை.) சுந்தரரும் சேரமானும் யானையின் மீது அமர்ந்து திருக்கோயிலுக்கு ஏகியதைக் குறிப்பதென்று

டாக்டர் மா. இராசமாணிக்கனார் அவர்களும்* (*6)பரிய புராண ஆராய்ச்சி, பக்கம் 72, 73.) கருதுவர். திருவாலவாயிறைவர் அருளிய திருமுகத்துடன் வந்த பாணபத்திரர் சேரமான் பெருமாளது அரண்மனையை யடைந்து தாம் வந்த செய்தியை வாயில்காவலர் மூலம் அரசர்க்கு அறிவிக்க அறிந்த சேரமான் மாளிகையின் புறத்தில் எதிர்வந்து பாணபத்திரரை வணங்கி வரவேற்று மாளிகைக்குள் அழைத்துச் சென்றார் எனப் பெரிய புராணம் கூறும்.* (* கழறிற்றறிவார் நாயனார்-செய்யுள் 29, 30) யானையுடன் எதிர் சென்று அழைத்ததாகப் பெரிய புராணத்திற் சேக்கிழரடிகள் கூறவில்லை. இச் சிற்பத்தில் இரண்டு யானைகள் இடம் பெற்றிருத்தலை எண்ணி, ஒரு யானையின் மேல் நம்பியாரூரரும் மற்றொன்றின் மேல் சேரமான் பெருமாளும் செல்லும் நிலையில் அமைந்ததாகக் கருதுதல் இச்சிற்பத்தின் அமைப்பினைக் கூர்ந்து நோக்காமையால் நேர்ந்த பிழையேயாகும். இச் சிற்பத்தில் வலமிருந்து இடமாக முதற்கண் அமைந்த யானையில் சேரமான் உலாவரும் சேய்மைக் காட்சியும், அதனையடுத்து அவ்வேந்தர் பெருமான் யானையை விட்டுக் கீழிறங்கி நிலமிசை நின்று அடியார் வேடத்தைக் கும்பிடும் அண்மைக் காட்சியும் என இருவகை நிகழ்ச்சிகள் இடம் பெற்றுள்ளமை நுணுகி நோக்கி அறியத் தகுவதாகும். சேய்மையில் உள்ள யானையின்மேல் ஏவலான் ஒருவன் பின்னிருந்து குடைபிடிக்க யானையின் பிடரிற்சேரமான் அமர்ந்திருத்தலும், அண்மையில் உள்ள யானையின் மேல் குடைபிடிக்கும் ஏவலன் மட்டும் அமர்ந்திருக்கச் சேரமான் யானையை விட்டுக் கீழிறங்கித் தலைமேற் கைகுவித்து வணங்கி நிற்றலும் ஆகிய வேறுபாட்டினைக் கூர்ந்து நோக்குங்கால் யானையொடு தொடர்ந்த இவ்விரு காட்சிகளும் சேரமான் பெருமாளாகிய ஒருவர் செயலையே குறித்தன என்னும் உண்மை இனிது புலனாகும்.

## 38. கணநாதாண்டார் கதை:

இடமிருந்து வலம்: நீர் கொணரும் அடியார் வடிவம் ஒன்றும், அதனையடுத்து நூற்பொருளைக் கேட்டு நிற்கும் அடியார் வடிவம் ஒன்றும், நூற்பொருளை விரித்துரைக்கும் முறையில் அமர்ந்துள்ள அடியார் உருவம் ஒன்றும், அதனையடுத்து உழவாரமும் கமண்டலமும் கொண்டுள்ள அடியார் உருவமும் அதனையடுத்து நிற்கும் அடியார் உருவமும், அவ்வடியார்களைப் பயிற்றிப் பணிசெய்விக்கும் நிலையிற் கணநாத நாயனார் திருவுருவம் ஒன்றும், அம்மையப்பராய் விடைமேற் றோன்றும் இறைவனைக் கண்டு கைகுவித்து நிற்கும்

நிலையிற் கணநாத நாயனார் திருவுருவம் ஒன்றும் இடம் பெற்றுள்ளமை காண்க.

### 39. கூற்றுவ நாயனார்:

வலமிருந்து இடம்: கூற்றுவ நாயனார் அரசவையில் வீற்றிருத்தல்; கை குவித்த நிலையில் இருவர் எதிரே நிற்க மூவர் அமர்ந்திருத்தல்.

### 40. பொய்யடிமையில்லாத புலவர்:

வலமிருந்து இடம்: திருவாலவாய்த் திருக்கோயிலும் புலவர் ஐவரும், மற்றும் புலவர் நால்வரும் சங்கப் பலகையும் அமைந்திருத்தல் காணலாம்.

திருத்தொண்டத் தொகையிற் 'பொய்யடிமையில்லாத புலவர்' என்றது, சங்கப்புலவர் நாற்பத்தொன்பதின்மர் முதலாகவுள்ள புலவர் பலர் அடங்கிய திருக்கூட்டத்தினை என்பார் "தரணியிற் பொய்ம்மையில்லாத் தமிழ்ச் சங்கமதிற் கபிலர் பரணர் நக்கீரர் முதல் நாற்பத்தொன்பது பல் புலவோர்" எனக் குறித்தார் நம்பியாண்டார் நம்பிகள். நம்பியாண்டார் நம்பி குறித்த நாற்பத் தொன்பதின்மர் ஆகிய புலவர் பெருமக்களைக் குறிக்கும் முறையில் நாற்பத்தொன்பது என்னும் தொகையின் எச்சமாகப் புலவர்கள் திருவுருவம் ஒன்பதும், சென்ற காலத்தவராகிய அப்புலவர்கள் பொய்மையில்லாத் தமிழ்ச் சங்கத்திலிருந்து புலமைத் திருப்பணி புரிந்தவர்கள் என்பது புலப்படச் சங்க மண்டபமும், அப்புலவர் பெருமக்கள் திருவாலவாயரன் சேவடிக்கே பொருளமைத்து இன்பக் கவிபாடும் இயல்பினர் என்பது புலப்படத் திருவாலவாய்த் திருக்கோயிலும் இச்சிற்பத்தில் இடம் பெற்றுள்ளமை காண்க. இதனால், பொய்யடிமையில்லாத புலவர் என்போர் தனியடியாரல்லர் தொகையடியார்களாகிய திருக்கூட்டத்தினரே என்னும் உண்மை நன்கு வலியுறுதல் காணலாம்.

### 41. புகழ்ச் சோழ நாயனார்:

வலமிருந்து இடம்: சேனைத் தலைவர் நால்வர் நிற்கப் புகழ்ச்சோழர் அமர்ந்திருத்தலும், போரில் வெட்டப்பட்ட பகைவர் தலைகள் குவிந்து கிடத்தலும், அத்தலைக் குவியலுள் நெற்றிக் கண்ணும் சடைமுடியும் உள்ள தலையொன்றைப் புகழ்ச் சோழர் நின்று காணுதலும் சடைத் தலையைத் தம்முடிமேற் கொண்டு புகழ்ச் சோழர் தீயிற் புகுதலும், அந்நிலையில் இறைவன் அம்மையப்பராக விடைமேல் தோன்றி அருள் புரிதலும் காணலாம்.

## 42. நரசிங்க முனையரைய நாயனார்:

*வலமிருந்து இடம்: அமைச்சர் ஒருவர் நின்று பொன்களை அள்ளித்தர அப்பொன்களை நரசிங்க முனையரையர் சிவனடியார் அறுவர்க்கு அளித்தல். பொன் பெறும் நிலையில் உள்ள அடியார் திருவுருவங்கள் ஆறும் சைவத்தில் அகச்சமயங்கள் ஆறினையும் மேற்கொண்டொழுகும் அடியார்களைக் குறிக்கும் முறையில் அமைந்தன எனக் கருதுதல் பொருந்தும்.*

## 43. அதிபத்த நாயனார்:

*வலமிருந்து இடம்: அதிபத்தர் ஏவலால் வலைஞர் மூவர் கடலில் வலையினை வீசி மீன் பிடித்தலும், அவ்வலையில் அகப்பட்ட கிடைத்தற்கரிய நவமணி மீனினை வாங்கிய அதிபத்தர், 'இது என்னை யாளுடைய இறைவர்க் குரியதாகும்' எனக் கடலில் விடுதலும், அந்நிலையில் மாதொரு பாகராக விடைமீது எழுந்தருளிய இறைவனைக் கண்டு அதிபத்தர் தலைமேற் கைகுவித்து வணங்கி நிற்றலும் ஆகிய காட்சிகள் இச்சிற்பத்தில் இடம் பெற்றுள்ளமை காணலாம்.*

## 44. கலிக்கம்பாண்டார் கதை:

*வலமிருந்து இடம்: சிவனடியார் மூவர் அமர்ந்திருத்தலும், கலிக்கம்பர் மனைவியார் திருவமுதமைத்து அடியார் திருவடிகளை விளக்கக் கரக நீரளித்தலும், கலிக்கம்பர் அடியார் ஒருவரை ஆசனத்தமர்த்தித் திருவடிகளை விளக்கப் புகும் நிலையில் மனைவியார் அவ்வடியவரைப் பழைய ஏவலாள் எனத்தெரிந்து தண்ணீர் வார்க்கத் தாழ்க்கக் கலி கம்பர் மனைவியின் கையினை வாளினால் தடிதலும், இறைவன் மாதொருபாகராக விடைமேல் வந்தருள் புரிதலும்.*

## 45. கலியநாயனார்:

*வலமிருந்து இடம்: 45-ல் கலியனார் செக்கு ஆட்டுதலும், பொருளின்றி எண்ணெய் கிடைக்கப் பெறாத நிலையிற் கலியனார் திருவொற்றியூர்த் திருக்கோயிலில் அகல் அமைத்துத் திரியிட்டுத் தம் உடம்பின் உதிரத்தால் திருவெளக்கெரிக்க எண்ணித் தமது மிடற்றினைக் கருவியினால் அரியத் தொடங்குதலும். (மிடற்றை அரியப்புகும் கலியனார் திருவுருவத்தின் முன் திருவொற்றியூர்த் திருக்கோயிலும் அக்கோயிலிற் சர விளக்கும் அமைக்கப் பெற்றிருத்தல் காண்க).*

### 46. சத்தியாண்டார்:

இடமிருந்து வலம்: வணங்கிய கையினராய் நிற்கும் சிவனடியாரை இகழ்ந்த ஒருவனது நாவினை வாங்கு தண்டாயமாகிய குறட்டால் வலித்திழுத்துச் சத்தியார் கத்தியால் அரிதலும் அவ்வாண்மைத் திருப்பணியைச் சிவனடியார் மூவர் உடனின்று காணுதலும்,

### 47. ஐயடிகள் காடவர்கோன் நாயனார்:

ஐயடிகள் காடவர்கோன் நாயனார் ஒவ்வொரு திருக்கோயிலின் முன் நின்றும் ஓரோர் வெண்பாப் பாடி இறைவனை வழிபடும் நிலையில் நான்கு சிற்பங்கள் அமைந்துள்ளன. ஐயடிகள் நாற்றிசைகளிலும் உள்ள திருத்தலங்களைப்பாடி வழிபட்டுப் போற்றினார் என்னும் குறிப்புணர இவ்வாறு நான்கு சிற்பங்கள் அமைக்கப் பெற்றிருத்தல் கூடும் எனக் கருத வேண்டியுளது.

### 48. கணம்புலாண்டார்:

வலமிருந்து இடம்: தில்லையிலுள்ள திருப்புலீச்சரத் திருக் கோயிலில் யாமந்தோறும் திருவிளக் கேற்றும் இயல்புடைய கணம்புல்ல நாயனார், தாம் விற்கும் கணம்புல் விலைபோகாத நிலையில் அப்புல்லினையே விளக்காக எரித்தலும், அப்புல்லும் எரிக்கப் போகாத நிலையில் தமது முடிச்சிகையினையே எரித்தலும். (கணம்புல்ல நாயனார்க்கு முன்னே திருப்புலீச் சரத் திருக்கோயிலும் அக்கோயிலின் பின் அங்குப் பூசனைபுரியும் பூசகர் உருவமும் இருத்தல் காண்க.)

### 49. காரியார்:

காரிநானாரைக் குறிக்கும் இச்சிற்பத்தில் ஒரே இயல்புடைய இரு திருவுருவங்கள் அமைக்கப் பெற்றுள்ளன. இவ்விரு வடிவங்களுள் வலமிருந்து இடமாக முன்னுள்ள வடிவத்தில் நாயனாரின் இடதுகை ஏடு போன்றதொரு பொருளைப் பிடித்த நிலையில் நெஞ்சினைச் சார்ந்தும், வலக்கை மேல்நோக்கி மறித்த நிலையிலும் அமைந்துள்ளமையும், அதனையடுத்துள்ள வடிவத்தில் இடதுகை பொருள்விளங்க விரிந்தும் வலக்கை சுட்டுவிரலும் பெருவிரலும் பொருளை விரித்துரைக்கும் முறையில் இணைந்தும் அமைந்துள்ளமையும் இவ்விரு வடிவங்களுக்கிடையே காணப்படும் சிறிய வேறுபாடாகும். இச்சிற்பத்தில் முதலில் உள்ள உருவம், "வண்டமிழின் துறையான பயன் தெரிந்து சொல் விளங்கிப் பொருள் மறையத் தமிழ்க் கோவை பாடிய" திறத்தையும், அடுத்துள்ள வடிவம்

மூவேந்தர்பால் அவர் பயிலுங்கால் அவ்வேந்தர்கள் மகிழும் வகை 'அடுத்த உரை நயமாக்கி' விளக்கிக் கூறும் முறையினையும் புலப்படுத்தும் நிலையிலமைந்த கருத்தியற் சிற்பங்கள் எனக் கொள்ளுதல் பொருந்தும்.

## 50. நெடுமாறனார்:

நின்றசீர் நெடுமாற நாயனார் பரிசனங்களுடன் அரசு வீற்றிருந்தல்.

## 51. வாயிலார்:

வாயிலார் நாயனார், மறவாமையால் அமைந்த மனக் கோயிலினுள் இறைவனை அமர்ந்தருளச் செய்து அகப்பூசை செய்தல்.

## 52. முனையடுவார்:

வலமிருந்து இடம்: முனையடுவார் நாயனார் போரிற் பகைவனொருவனை வேற்படையாற் பொருது அழித்த வீர நிலையிலும், பகைவரை வென்று தாம் பெற்ற பொருளைக் கையிற்கொண்டு ஈசனடியார்க்கு அன்புடன் அளிக்கும் ஈர அன்பின் நிலையிலும் முனையடுவாரைக் குறித்து இருவேறு திருவுருவங்கள் இச்சிற்பத்தில் இடம் பெற்றுள்ளமை காணலாம்.

## 53. கழச்சிங்கனார்:

கழற்சிங்க நாயனார், தம் பட்டத்தரசி திருவாரூர்த் திருக்கோயிற் பூமண்டபத்திற் கீழே கிடந்த மலரொன்றை எடுத்து மோந்தமையறிந்து, அப்பூவினை எடுத்த அவளுடைய கைகளை வாளால் தடிதல்.(இச்சிற்பத்தில் பட்டத்தரசியின் இரு கைகளிலும் வாளின் வெட்டுப் பதிவுகள் புலப்பட அமைக்கப்பட்டமை காண்க).

## 54. இடங்கழியாண்டார்:

வலமிருந்து இடம்: ஆசனத்தில் அமர்ந்திருப்பவர் இடங்கழி நாயனாரகிய வேந்தர். அவர் அருகே நிற்பவர் பறையறையும் ஏவலர். பஞ்ச காலத்தில் இறைவனடியாரை அமுது செய்விக்கும் தமது செயல் தடைப் படாதபடி அன்பரொருவர் அரசர்க்குரிய நெற்கூட்டில் நள்ளிரவில் புகுந்து களவுகொண்டமை யறிந்த இடங்கழி நாயனார், 'இவரன்றோ எனக்குப் பண்டாரம்' எனக்கூறி, என் செல்வமனைத்தும் சிவனடியார்கள் கவர்ந்து கொள்க, எனப் பறையறையச் செய்த வரலாற்றினை விளக்கும் முறையில் இந்தச் சிற்பம் அமைந்திருத்தல் அறியத் தகுவதாகும்.

## 55. செருத்துணையாண்டார்:

வலமிருந்து இடம்: திருவாரூர்த் திருக்கோயிலின் திருப்பூமண்டபத்தில் அடியாரொருவர் அமர்ந்து மலர்மாலை தொடுத்தலும், பல்லவ மன்னன் தேவி அங்குக்கீழே வீழ்ந்து கிடந்த மலரைக் கையால் எடுத்து முகர்தலும், அதுகண்ட செருத்துணை நாயனார் அவளருகே நிற்கும் கணவனாகிய வேந்தன் காண அவளது மூக்கினை அரிதலும்.

## 56. புகழ்த்துணையார்:

புகழ்த்துணை நாயனார், அரிசிற்கரைப் புத்தூர்த் திருக்கோயிலில் இறைவர்க்குத் திருமஞ்சனம் ஆட்டும்போது பசியின் தளர்ச்சியால் திருமஞ்சனக் குடத்தைத் தாங்க மாட்டாமல் இறைவன் முடிமீது வீழ்த்தி வீழ்ந்தயர்தலும், அவ்வயர்ச்சியில் தோன்றிய உறக்கத்திலுளதாகிய கனவில் இறைவன் தோன்றி, 'பஞ்சம் நீங்கும் வரையிலும் நித்தமும் உனக்குப் படிக்காசு தருகின்றோம்' எனப்பணித்த வண்ணம் இடர் நீங்கி எழுந்து நந்தியை நோக்கிச் செல்லுதலும், இறைவரருளால் பலிபீடத்தின் மேல் வைக்கப் பெற்றிருந்த காசினை எடுத்துக் கொள்ளுதலும். (சிவலிங்கத்தின் முடிமீது குடம் விழுந்த தோற்றம் குறிக்கப்பெற்றமை காண்க)

## 57. கோட்புலி நாயனார்:

வலமிருந்து இடம்: கோட்புலியார் தாம் இறைவனுக்கு அமுது படிக்காக வைத்துவிட்டுச் சென்ற நெல்லினை 'திருவிரையாக்கலி' என்னும் ஆணையினை மீறி எடுத்துப் பயன்படுத்திய சுற்றத்தாரைக் கொன்று, தமது குடும்பத்துக்கு ஒரே குழந்தையாய்ப் பால் பருகும் நிலையிலுள்ள பேரனையும் வாளால் வீசுதலும், அந்நிலையிற் சிவபெருமான் அம்மையப்பராய் விடைமீது தோன்றி அருள்புரியக் கண்டு கோட்புலியார் வணங்கி நிற்றலும்.

## 58. பத்தராய்ப் பணிவார்கள்:

இச்சிற்பத்தில் பத்தராய்ப் பணிவார்க்குரிய இயல்புகளைக் குறித்த திருக்கோலங்களில் பத்துத் திருவுருவங்கள் அமைக்கப் பெற்றுள்ளன. அவை முறையே இடமிருந்து வலம்: முதலில் நிற்கும் அடியவர் தம் இரு கைகளிலும் பாத்திரம் ஒன்றினை ஏந்தியுள்ளார். இரண்டாமவர் அப்பாத்திரத்தில் ஒருபிடி வலக்கையிற் பிடித்தெடுக்கின்றார். மூன்றாமவர் வலக்கை ஞான முத்திரையுடன் மார்பில்அணைய இடக்கை தொடைமீது விளங்கத் தியானத்தில் அமர்ந்துள்ளார். நான்காமவர் இரு

கைகளையும் தலைமேற் குவித்து வழிபடுகின்றார். ஐந்தாமவரும் ஆறாமவரும் இருகைகளையும் குவித்து நெஞ்சோடு பொருந்த வைத்து வணங்குகின்றார்கள். ஏழாமவர் சிவலிங்கத்தினை நெற்றிக்கு நேரே வைத்து வழிபடுகின்றார். எட்டாமவர் சிவலிங்கத்தினை நெஞ்சுக்கு நேரே வைத்து வழிபடுகின்றார். ஒன்பதாமவர் தலைமேல் இரு கைகளையும் குவித்து நின்றும் பத்தாமவர் நெஞ்சுக்கு நேரே இரு கைகளையும் குவித்து நின்றும் வணங்குகின்றார்கள்.

திருநாவுக்கரசர் 'பத்துக்கொலாம் அடியார் செய்கை தானே' எனப் பத்தர்க்குரியனவாகக் குறித்த பத்துச் செய்கைகட்கும், சேக்கிழாரடிகள் பத்தராய்ப் பணிவார் புராணத்துள் பத்தர்க்குரிய இயல்புகளாக விரித்துக் கூறியவற்றுக்கும் இச்சிற்பத்தில் அமைக்கப் பெற்ற பத்தர் திருவுருவங்கள் பத்துக்கும் அமைந்த தொடர்பினை ஒப்பு நோக்கியாராய்தல் அறிஞர் கடனாகும்.

## 59. பரமனையே பாடுவார்:

நந்தியும் கோயிலும் அமைந்திருத்தலும், நந்தியின் பின்னே கோயில் முற்றத்தில் இசைவல்லார் மூவர் ஒருங்கு அமர்ந்திருந்து தாளமிட்டுப் பாடுதலும் காணலாம். இச்சிற்பத்தில் பரமனையே பாடுவார்க்கு மூன்று உருவங்கள் அமைக்கப் பெற்றிருத்தலின் நோக்கம், இசை பாடும் அடியார்கள், தமிழ்ப் பாடல்களையும் வடமொழிப் பாடல்களையும் இந்நாட்டில் வழங்கும் பிற திசைமொழிப் பாடல்களையும் பாடும் நிலையில் மூவகையினராக இருத்தலால் சிவனடி பரவும் தெய்வ இசையினைக் கற்றுவல்ல இம்மூவகையினரும் பரமனையே பாடுவார் என்னும் திருக்கூட்டத்தினராகவே போற்றப் பெறுவர் என்பது அறிவித்தற்பொருட்டெனக் கொள்ள வேண்டியுளது, இந்நுட்பம்,

> **"தென்றமிழும் வடகலையும் தேசிகமும் பேசுவன**
> **மன்றினிடை நடம்புரியும் வள்ளலையே பொருளாக**
> **ஒன்றியமெய் யுணர்வோடும் உள்ளுருகிப் பாடுவார்**
> **பன்றியுடன் புட்காணாப் பரமனையே பாடுவார்"**

எனச் சேக்கிழாரடிகள் தரும் விளக்கத்தால் இனிது புலனாதல் காணலாம். "தமிழென்பது வடவெழுத்தொரீஇ வந்த எழுத்தானே கட்டப்பட்ட வாக்கியக் கூறுகளும் இயலிசை நாடகங்களும் என்று சொல்லப்படா நின்ற மூன்று தமிழ்களும்" என விளக்கங் கூறிய சிலப்பதிகார அரும்பத வுரையாசிரியர், "தேசிகம் என்றது - இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வட சொல் என்று சொல்லப்படா நின்ற சொற்பிரயோகம்" எனத் தேசிகத்தைப் பற்றி விளக்குதலால் இந்நாட்டில் தமிழும்

வடமொழியும் அல்லாத இவற்றின் சார்புடையனவாய் வழங்கும் திசைமொழிகளின் இசைப் பாடல்கள் யாவும் இசையாசிரியர்களால் தேசிகம் என வழங்கப்பெற்றன என்னும் உண்மை இனிது புலனாதல் காணலாம்.

## 60. சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்:

வலமிருந்து இடம்: கோயிலும் நந்தியும் பலிபீடமும் அமைந்திருத்தலும், அருகிருந்து பலர் பலவகை வாத்தியங்களை வாசித்தலும், ஆடல் மகள் ஆடுதலும், அடியார் ஒருவர் தெய்வத் திருவுருவத்தினைத் தாங்கிநிற்க, அருகே அடியார் ஒருவர் சாமரை வீசுதலும், முன் இருவர் குடை பிடித்தலும், இத்திருவிழா ஆரவாரம் தமது அருகே அணுகிய நிலையிலும் அடியார் ஒருவர் தம் உள்ளத்தைப் புறத்தே செலுத்தாது சித்தத்தைச் சிவன்பாலே வைத்த சிந்தையாராய்ச் சிவயோகத்தில் அமர்ந்திருத்தலும் காண்க. (சித்தத்தைச் சிவன்பாலே வைத்த அடியார் திருவுருவத்தையடுத்து உள்ளது பிச்சைத்தேவர் (பிக்ஷாடனர்) திருமேனி).

## 61. திருவாரூர்ப் பிறந்தார்கள்:

வலமிருந்து இடம்: திருக்கோயில் முன்றிலில் அடியார் நால்வர் அமர்ந்திருத்தலும், அவர்களது அருகே மரமும் மரத்திற் பறவைகளும் மரத்தினருகே பசுவும் இருத்தலும் காணலாம். திருவாரூரில் வேற்றுமை தெரிந்த நாற்குலத்துப் பிறந்த மக்களேயன்றிப் பசு, பறவை முதலிய மன்னுயிர்களும் சிவகணங்களாகப் போற்றத்தக்க சிறப்புடையன என்னும் உண்மையை இச்சிற்பம் புலப்படுத்துதல் அறியத் தகுவதாகும்.

## 62. முக்காலும் திருமேனி தீண்டுவார்:

இச்சிற்பத்தில், அடியார் ஒருவர் சிவலிங்கப் பெருமானை வழிபாடு செய்யும் முறையில் மூவகைத் தோற்றங்கள் இடம் பெற்றுள்ளன. இம்மூவகைத்திருமேனிகளும் காலை நண்பகல் மாலை என்னும் மூன்று பொழுதுகளிலும் திருக்கோயில்களில் சிவலிங்கத் திருமேனியைத் தீண்டி வழிபடும் திருக்கூட்டத்தாரின் மூவகை நிலைகளைக் குறிக்கும்முறையில் அமைக்கப் பெற்றிருத்தல் காணலாம். இதன்கண் இடமிருந்து வலம்: முதற்கண் உள்ள அடியாரின் திருமுன் முக்காலியின் மேல் அர்க்கிய பாத்திய ஆசமனத்திற்குரிய நன்னீரைக் கொண்ட சங்கு வைக்கப் பெற்றிருத்தலும் அதன்மேலாக மண்டபத்தில் மணியொன்று கட்டப் பெற்றிருத்தலும், முப்போதும் திருமேனி தீண்டுவார் செய்யும் இப்பூசை தனியொருவர் தம்பொருட்டுச் செய்யும் (ஆன்மார்த்த) பூசையைக் குறிக்காமல், அவர் உலகத்தார் பொருட்டுச் செய்யும் (பரார்த்த) பூசையினைக் குறிப்பனவாகும்.

